



தராகுமாரர்களின் குடும்பங்கள்

டுள்ளனர். இவர்கள் வாழும்பகுதிகளில் ஒருசில நச்சுத் தாவரங்களைக் கொணடு நச்சு உருணடைகளைத் தயாரித்துக் கொளகின்றனர். அவற்றை ஓட்ட மில்லாத, நிலையான நீரில் போட்டு நீரை நச்சுப்படுத்தி விடுகின்றனர். நச்சு நீரை உண்ட மீன்கள் மிதக்கத் தொடங்கும்போது அவற்றைப் பிடித்துக்கொள்கின்றனர். இக்காலங்களில் வெடிக்கும் பொருளகளைக் கொணடும மீனைப் பிடிக்கினறனர். இவர்களின் மாய வித்தைச் சடங்குகளிலும் பெரு மளவு தாவரவகைகள் பயன்படுகின்றன. இம்மக்கள் தாவரங்களை மிகுதியான எண்ணிக்கையில் தெரிந்து வைத்திருப்பதுடன் அவற்றைப் பலவகையாகப் பகுத்துக் காணும் முறையினையும் தெரிந்துள்ளனர்; கால்நடைகளையும் மிகுதியாக வளர்க்கிறனர்.

இவர்கள் சமூகத்தில் போட்டி மனப்பான்மை அறவே இல்லை; ஒற்றுமை உணர்வே மிகுதியாக உள்ளது. ஒரு குடும்பத்தினர் செய்யமுடியாத பெரிய வேலை ஏற்படும்போது அண்டைய குடும்பத்தினர் களை அழைக்கின்றனர். அனைவரும் வேலையைப் பகிர்ந்து செய்தபின் பயனடைந்த குடும்பத்தார் மக்காச்சோளத்தைப் புளிக்கவைத்துத் தயாரிக்கும் ஒருவகை மதுவை அனைவருக்கும் கொடுத்து மகிழ கின்றனர்.

உலகப் பழங்குடிகளிலே தராகுமாரர்களின் ஓட்டத்திறனுக்கு ஒத்த பழங்குடியினர் இல்லையென லாம். அப்பாச்சி (Appache) பழங் குடியினரும் மிகச் சிறந்த ஓட்டக்காரர்கள் என்றாலும் அவர்களையும் மிஞ்சுமளவிற்கு இவர்கள் திறன் பெற்றுள்ளனர். கால்நடைகளைப் பல கல்களுக்கப்பால் ஓட்டிச் சென்று மேய்த்து வரவேண்டியுள்ளதால் இளம் பருவத்திலிருந்தே வலிமையான கால்களையும் மனத் திறனையும் வளர்த்துக் கொள்கின்றனர். இவர்கள் ஓடும் விளையாட்டு, பந்தினை அடித்து விரட்டிக் கொண்டே ஓடும் ஆட்டமாகும். இவ்வகை ஆட்டமே இவர்களின் பண்பாட்டில் மிகச்சிறந்த விளையாட்டா கும். பல்வேறு பகுதியிலிருந்து வரும் குழுக்கள் பங்கு பெறும் இவ் வாட்டத்தில் இளைய வயதினர் 80 முதல் 95 கி.மீ. தூரம் வரையில் ஓடி ஆட்டத்தை முடிக்



அலங்கரிப்புடன் தராகுமாரர்கள்

கின்றனர். முப்பது வயதிற்கும் மேற்பட்டவர்கள் பங்குபெறும் ஓட்டம் 256 கி.மீ. முதல 320 கி.மீ வரையில் இருக்கும். முதலில் மணிக்கு 16 கி.மீ வேகத்தில தொடங்கும் இந்த ஓட்டம் பினனர்ப் படிப்படியாகக் குறைந்து 10 கி.மீ. வேகத்திறகுக் குறையும. இரவு நேரங்களில் ஓட்டக்காரர்கள் இருமருங்கிலும் தீப் பந்தம் பிடித்துக்கொணடு ஓடுவர். உணவிற்காக ஓட்டத்தை நிறுத்துவதிலலை. ஓடும்போதே அதனை முடித்துக்கொளகின்றனர். இவவீரர்களை ஆயததம செய்வதில் தெய்வத் தன்மையுறறவன் பெரும்பங்கு பெறுகிறான். இவ்விளையாட்டிறகு முன்னர்ச் சிறந்த பயிற்சியும் உணவு வகைகளும கொடுத்துக் கவனித்துக்கொள்வார். இவ்விளையாட்டின்போது பந்தயப் பணத்தை மிகுதியாகக் கட்டுகின்றனர்.

இம்மக்களுள் பெரும்பாலானோர் கிறித்தவ சமய நெறியைத் தழுவியுளளனர். இவர்களின சிறப்புமிக்க சமயவிழாவானது இயேசுநாதர் உயிர்த்தெழுந்த நாளைக் குறிக்கும் (Easter) விழாவேயாகும். இவ் விழாவின்போது இவர்களின் பண்டைய வழக்கங் களைக் கைவிடாமல் அலங்கரித்துக்கொண்டு விழா வினைக் கொண்டாடுகின்றனர்.

இவர்களின அரசியல் முறை மிக எளிது விரிவாகப் பழங்குடி அரசியலமைப்பு ஏதுமில்லாமல் ஒரு தலைவனை மட்டும் கொண்டுளளனர். இவர் களிடையே எழும் சிக்கல்களை அவரவாகளாகவே தீர்த்துக் கொளகின்றனர். மிகவும் பெரிய சிககலகள மட்டுமே அனைவரின முனனிலையில் தலைவரால தீர்த்து வைக்கப் படுகினறன.

இவர்கள் வாழும பகுதி நாகரிக மக்களின பகுதி களிலிருந்து மிகவும் தனித்திருப்பதால் வேகமான மாற்றங்கள் ஏற்படவிலலை. இப்போது மெக்சிகோ அரசு பல நலத் திட்டஙகளை இப்பகுதிகளிற் செயற படுத்திவருகிறது. சீ.ப.

**தரிசனங்கள்:** இந்தியத்தத்துவ வரலாற்றில தரிசனங்கள் என்று கூறப்படும் ஆறும் வேதத்தை பிர மாணமாகக் கொண்டுள்ளன. நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், மீமாம்சை, வேதாநதம் என பனவே ஆறு தரிசனங்கள். ஒவ்வொரு தரிசனத்துக்கும ஒருதனி நூல் உண்டு. அந்த நூல்கள் சூத்திரங்களால் ஆனவை. அவற்றை இயற்றிய ஆசிரியர்களும் உணடு.

கௌதமர், நியாய சூத்திரங்களின ஆசிரியர் கணாதர் வைசேடிகத்தையும், கபிலர் சாங்கியத்தையும் பதஞ்சலி, யோகத்தையும் செய்மினி மீமாம்சையை யும் பாதராயணர் வேதாந்த சூத்திரத்தையும் தோற்றுவித்தனர் என்று கூறப்படுகின்றது.

நியாயமதத்தை நையாயிகம் என்று கூறுவர். மனிதன் காணும் பொருள, மனத்தில் மட்டுமன்றி வெளியுலகிலும் இருககினறது எனறு நையாயிகர் கருது கின்றனர். நையாயிகர் காட்சியை மட்டும் ஆதார மாகக்கொண்டு இந்த முடிவைக்கொள்ளவிலலை. நையாயிகர் கைக்கொணரும் இரணடாம் பிரமாணமும் மூன்றாம் பிரமாணமும் முறையே கருதலளவையும், உரையளவையும் ஆகும. நான்காம் பிரமாணம் உவமையளவை. மனிதன் முன கணடிராத செடியைத் தேடிக் கண்டுபிடிக்க உதவுவது, அவன் அறிந்த செடி ஒன்றைக் கூறி, முன்காணாத செடிக்கும் அதற்கு முள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் கூறித் தெரிந்து கொளளச் செய்தலாகும். ஆனமாவைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது, அதுஅழியாப் பொருள, அறி வுடைமை அதன சிறப்பியல்பு என்பர் நையாயிகர்.

வைசேடிகரின் அணுக் கொள்கை நையாயிகருக் கும் பொருத்தமானது. பதார்த்தங்களின் தொகை வகையில் இருவருக்கும் வேற்றுமையுணடு. ஆன் மாவுக்கு அறிவு என்பது ஒரு குணம். உடல், மனம் ஆகியவறறின துணையால்தான் அக்குணம் வெளிப் படும். முத்தியில் ஆன்மாவுக்கு எவ்வித இயல்பு மில்லை. உடல, மனம் ஆகியவற்றின் துணையில்லா மலே அறியவல்லவன் இறைவன்.

சாங்கியம் என்ற சொல்லுக்குப் பூரண அறிவு என்பது பொருள். மாற்றம், நிலைபேறு இரண்டும் உண்மை. எது மாற்றம் அடைகின்றதோ அது அறிவுள்ள பொருள் ஆகாது. அறிவு சொரூபமான பொருள் எதுவோ, அது மாற்றம் அடையாது. சாங்கியம் மூலப்பொருளை ஒன்று எனக் கொள்ளாது இரண்டு எனக் கொள்ளத் தலைப்பட்டது. அவ் விரண்டனுள் ஒனறு அறிவே சொரூபமானது. அது சாங்கியத்தில் புருடன் எனக் கூறப்படுகிறது. மற்றது அறிவில்லாதது. அது அசேதனம். அதனைச் சாஙகியர் பிரகிருதி அல்லது பிரதானம என்பர். அந்தப் பிரகிருதி இந்த உலகின் முதற்காரணம். உலகம் தோன்றுவது அந்தப் பிரகிருதியிலிருந்துதான். பின் போய் ஒடுங்குவதும் அந்தப் பிரகிருதியில்தான். பிர கிருதியின் குணங்கள் மூன்று. சத்துவம், இராசதம், தாமதம். சத்துவம் இலேசான தன்மையது. சக்தி, அறிவு, ஒளி போன்ற அனைத்தும் சத்துவகுணம். சத்துவம், தாமசம் என்ற இரண்டையும் இயக்கு வது இராசதகுணமே. தீப்பரவுவதும், காற்று வீசுவதும், மனிதன் புலன்கள மேற் செல்லுவதும இராசதகுணத்தினால்தான். துக்கத்துக்குக் காரணம் இதுவே. தாமசம் இயக்கத்தைத் தடுப்பது. கனம, மந்தம், அயர்வு, மயக்கம், இருள் போன்றவற்றின் காரணம் தாமசம். சத்துவத்துக்கு வெணமை யையும், இராசதத்துக்குச் செம்மையையும், தாம சத்துக்குக் கருமையையும் வண்ணமாகக் கூறுவர். இந்த மூன்று குணஙகளிடையே எதிரெதிரான இயல்புகள் இருந்தாலும் இந்த மாறுபட்ட இமமுக குணங்களும் சேர்ந்து உலகிலுள்ள பொருள்கள அனைத்தையும் உணடுபண்ணுகின்றன. எந்தப் பொரு ளிலும் மூன்றும் சமநிலையில் இருப்பதில்லை. ஏதா வது ஒரு குணம் மேலோங்குவதே, பல்வகைப்பட்ட பொருளகள் உற்பத்தியாவதற்கும் வளர்வதற்கும் காரணமாகும். மூன்றும் சமநிலையில் இருக்கும் பொழுது பரிணாமம் அல்லது மாறுதல பிரகிருதியில் ஏற்படுவதில்லை.

யோகம் தியானத்தை வறபுறுத்துகிறது. சித்த சுத்தி ஏற்பட்டு, நான் எனது என்ற நினைவு அறவே ஒழிதலே யோகமாகும். இச்சித்தசகதியின்பொருட்டுப் படிப்படியாக மேற்கொள்ள வேண்டிய இயமம் முத லான எட்டு விதிகளை யோக மதத்தினர் வகுத்த னர். இயமம் என்பது உயிர்களை வருந்துதல் பொய் பேசுதல், களவாடல், உடைமைகளைப் பெருக்குதல போன்றவற்றைத் தவிர்த்தலாகும். நியமம் இது தகும் என உடன்பாட்டு முகமாக விதிகளை வகுப்பது. தூய்மை, திருப்தி, நல்விழைவு, தத்துவஞான நூல் களைக் கற்றல் இறைவழிபாடு ஆகியவை நியமம். ஆச னம், பிராணாயாமம் ஆகியவை மனம் ஒருநிலைப்படு தற்குச் செய்ய வேண்டியவையாகும் தியானத்தின் பயனாக விளைவதே கடைசி நிலையான சமாதி.

மீமாம்சகர் கடவுளுண்மையைப் பின்வருமாறு மறுக்கின்றனர்: கடவுள் உண்டு எனபதைக் கண காணக் காட்டுவது அரிது. இறைவன் உண்டு என் பதை அநுமான மூலம் நிரூபிக்கலாமே எனறு கூறி னால், பிரத்தியட்சமே அநுமானத்துககும் அடிபபடை என்பது புலனாகும். கடவுள் உண்டு என்று கூறுவ தற்கு வேதவாக்குத்தான் முக்கிய ஆதாரம். வேதத திற்கு மீமாம்சகர் கொடுக்கும் அளவு மதிப்பை வேறு எவருமே கொடுக்கவில்லை. வேதம் சிற்றறிவுடைய மனிதனால் ஆக்கப்பட்டது எனக் கொள்ளின, அதற்கு அப்பரிபூரணத்துவம் ஏற்பட இடம் இல்லை. வேதம் மனிதனால் செய்யப்பட்டது என்பது மீமாம்சகர்க்கு உடன்பாடன்று. வேதம் கடவுளால் செய்யப்பட்டது என்ற கொள்கையையும் அவர்கள் ஏற்பதில்லை: வேதம் யாராலுமே செய்யப்பட்டது அன்று என்பதே

அவர்கள் கொள்கை இதனை உணர்த்தவே அவர்கள் வேதத்தை அபௌருடேயம் என்று கூறுகின்றனர். வேதம் நித்தியம். அது யாராலும் செய்யப்படவில்லை. செய்யப்பட்டது எனக் கொண்டால் தான் செய்தவன் ஒருவன் உள்ளன் என்று கொள்ள வேண்டும். இது மீமாம்சகர் கொள்கை

இந்தியத் தத்துவ ஞானத்திலே மொத்தம் ஆறு பிரமாணங்கள் பேசப்படுகின்றன. அவற்றுள் பிரபாகரர் ஐந்தை மட்டும் ஏற்றுக் கொள்வார். குமாரிலர் ஆறையும் பிரமாணமாகவே ஏற்பர். குமாரிலர் ஏற்கும் இந்த ஆறாம் பிரமாணம் அனுபலப்தி எனப்படும். அபாவம் அல்லது இன்மையை அறியும் வழியே அனுபலப்தி. ஒருபொருள் ஒரு இடத்தில் இல்லை என்பதை எப்படி அறியலாம் என்ற கேள்விக்குத் தரும் விடையை ஒட்டி வேற்றுமை ஏற்படுகிறது. எடுத்துக்காட்டாக மேசை மீது புத்தகம் இல்லை என்பதை எங்ஙனம் அறியமுடியும்? இல்லாத புத்தகத்தைக் காணமுடியாது. ஆகையினால் இல்லாத புத்தகத்தையும் அதே சமயம் அதன் இல்லாமையாகிய அபாவத்தையும் காணுதல் என்பது பொருந்தாது. புத்தகம் இருந்தால் அதை ஒருவன் காண்கிறான் என்று கூறலாம். புத்தகம் இல்லாவிட்டால் அதை ஒருவன் காண்கிறான் என்று கூற முடியாது. ஆனால் அது இல்லாததை ஒருவன் காண்கிறான் என்று கூறத்தான் வேண்டும். அதனால் இந்த இன்மையை அறியும் வழியையும் ஒரு புதுப் பிரமாணமாக்கி அதனை அனுபலப்தி என்று கூறுகின்றனர். இன்மையை உணர்த்த ஒரு தனிப் பிரமாணம் வேண்டாம் என்பதே பிரபாகரின் கருத்து. குமாரிலரும், பிரபாகரும் தமமுள் வேறுபடும் இடங்களுள் சிறப்பான மற்றொன்று திரிபுக் காட்சி. சாலையிலே பகற்பொழுதிலே உந்து வண்டியில் செல்லும்போது எத்தனையோ சமயங்களிலே எதிரிலே தண்ணீர் இருப்பதாகத் தெரிகின்றது. ஆனால் உண்மையில் அங்குத் தண்ணீர் இல்லை. இல்லாத நீர் இருப்பதாகத் தோன்றுவது திரிபுக் காட்சி. இது ஒன்றை மற்றொன்றாகக் காண்பதே திரிபுக்குக் காரணம் என்று குமாரிலரும், இரண்டை வேறுபடுத்தி அறியாததே அதற்குக் காரணம் என்று பிரபாகரரும் கூறுவர்.

மீமாம்சகரின் கருத்துப்படி ஆன்மாக்கள் என்றும் உள்ளவை; எங்கும் நிறைந்தவை. தனு, கரண புவனங்களோடு ஏற்பட்ட தொடர்பே ஆன்மாவுக்குப் பந்தம். உலகோடு ஆன்மாவுக்குள்ள தொடர்பு உண்மையானது. இந்தத் தொடர்பு தேவையற்றது என்பதனை ஆன்மா உணர்வதே முத்தி.

வேதாந்திகளில் அத்வைதிகள் உயிரைப் பற்றிக் கூறுவனவற்றைக் கவனிக்க வேண்டும். ஒரேயொரு மூலப்பொருளாயுள்ள பிரம்மமே பல சீவன்களாகின்றது. கட்டுண்ணாத நிலைதான் பிரமம். அந்தப் பிரமம் கட்டுண்ட நிலையே சீவாத்மாவாகும். ஈசுவரனின் சக்தி என்ற பொருளில் மாயை என்ற சொல் வழங்குகிறது. இந்த மாயைக்கு இரண்டு இயல்புகள் உண்டு. ஒன்று உள்ளதை மறைக்கும் இயல்பு மற்றது அந்த இடத்தில் இல்லாததைத் தோற்றுவிக்கும் இயல்பு. மறைக்குமியல்பு ஆவரணம் எனப்படும். இல்லாததைத் தோற்றுவிக்குமியல்பு விட்சேபம் எனப்படும். மாயை ஆவரண சக்தியினால் பிரமத்தை மறைக்கின்றது. விட்சேப சக்தியினால் உலகத்தைத் தோற்றுவிக்கின்றது. அவித்தை என்பது இந்த உண்மையை அறியாமை. பரமாத்மாவாகிய ஒரு பொருள் சீவாத்மாவாகிய பலவாகக் காணப்படுவதற்கு இந்த அவித்தையே காரணம். இரண்டும் பிரம்மத்திலேயே தோன்றிப் பிரமத்தையே மறைக்கும் ஒரு சக்தி. மாயை சுத்த சத்துவ குணத்தால் மட்டுமே ஆயது. அவித்தை சத்துவ குணம் மட்டுமன்றி இராசத, தாமச குணங்களும் சேர்ந்தது. மாயை ஈசுவரன் தோன்றக் காரணம். அவித்தை சீவர்கள் தோன்றக் காரணம். மாயை ஈசுவரனைப் பாதிப்பதில்லை. ஆனால் அவித்தை சீவர்களைப் பாதிக்கின்றது.

விசிட்டாத்துவைத வேதாந்தத்தினரான இராமானுசர் கருத்துப்படி இந்த உலகையும் உயிர்களையும் இயக்குபவன் இறைவன். உடலை உயிர் இயக்குகிறது. உயிரை இறைவன் இயக்குகிறான். இறைவனைப் பொறுத்தமட்டிலே மனித உயிர்களும் அவனுக்கு உடலாகி விடுகின்றன. மனித உடலை நோக்க உயிராக உள்ளது, இறைவனை நோக்க உடலாகின்றது. உயிர்கள் அனைத்தும், உலகமும் இறைவனது சரீரம். இறைவன் சரீரி.

வேதாந்தியான மத்வரின் கருத்துப்படி ஆன்மா வேறு. இறைவன் வேறு. எல்லாமே வெவ்வேறு

ஈசுவரன், சீவன், சடம் ஆகிய மூன்று பொருள்களும் என்றுமே உள்ளவை என்பது மத்துவரது கொள்கை. இம்முப்பொருள்களைப் போலவே இவற்றுக்கிடையேயுள்ள பேதங்களும் நித்தியமானவை என்கிறார் மத்துவர். சீவனுக்கும் ஈசுவரனுக்குமிடையே உள்ள பேதம் சீவேசுவர பேதம். சடத்துக்கும், ஈசுவரனுக்குமுள்ள பேதம் சட ஈசுவரபேதம். சீவனுக்கும் சடத்துக்குமுள்ள பேதம் சீவசடபேதம். ஒரு சீவனுக்கும், மற்றொரு சீவனுக்குமுள்ள பேதம் சீவ பரசுபர பேதம். ஒரு சடத்துக்கும் மற்றொரு சடத்துக்குமிடையேயுள்ள பேதம் சடபரசுபர பேதம். இரா.கோ.

**துணை நூல்**

RadhaKrishnan,S , Indian Philosophy Vol.2, Blackie & Son Publishers Pvt Ltd , Madras, 1977.

**தரு** 'தரு' என்னும் சொல் தமிழிலக்கணத்தில் கூறப்படும் 'தரவு' என்பதன் மரூஉ. தரவு-தருவு-தரு என்று மாற்றம் பெற்றது. இதனையே, பரதமுனிவர் தாம் இயற்றியுள்ள நாட்டிய சாத்திரத்தில் 'துருவ பதம்' என்று குறிப்பிடுகிறார். அதனால் தரு என்பது மிகப் பழமையான காலந்தொடங்கி இன்றளவும் வழங்கி வருகிற இசைமரபைக் குறிக்கும் பெயராகும் என்பது தெளிவு.

இந்தத் தருக்கள், இசை நாடகங்களிலும், இசை நாட்டிய நாடகங்களிலும், நாட்டிய அரங்குகளிலும் பாடி நடிக்கப்பட்ட உருப்படிகளாகும். தஞ்சையை ஆட்சி செய்த இரகுநாத நாயக்கன், விசய ராகவ நாயக்கன் (கி.பி 1614-1673) ஆகியோர் காலத்தில் அரண்மனை நாட்டிய அரங்குகளில் 'சக்கினி தரு' 'சலாம் தரு' 'துருவ பதம்' ஆகியன நடிக்கப்பட்டதற்கான சான்றுகள் உள்ளன. மேலும், விசயராகவ நாயக்கன் மீது இயற்றப்பட்ட 'சலாம் தரு' இன்று கிடைக்கும் மிகப் பழைய தருவாகும். விசயரங்க சொக்கநாத நாயக்கன் காலத்தில் எழுந்த 'சித்திரகூடமான்மியம்' என்னும் நாட்டிய நாடகம் சிதம்பரத்தில் நடிக்கப்பட்டது. அதில் சக்கினி தருக்களும், சலாம் தருக்களும் ஆடப்பட்டன 'சக்கினி', 'சலாம்' என்பவை நாட்டிய வகைகள். இத்தகைய ஆடல்களுக்குப் பயன்படுத்தும் பாடல்களே 'தரு'க்கள் என்று கூறப்படுகின்றன.

இத்தகைய தருக்கள் கி பி.16 முதல் கி.பி.18-ஆம் நூற்றாண்டு வரை நாட்டிய அரங்குகளில் பாடப்பெற்று மக்களிடையே புகழ்பெற்றிருந்தன. ஆனால், கி.பி.18-ஆம் நூற்றாண்டுக்குப்பின் இந்த நிகழ்ச்சிகளுக்கு மாறாகத் 'தில்லானா'க்கள் இடம்பெற்றதாகச் சிலர் கருதுகிறார்கள். அருணாசலக் கவிராயர் (கி.பி 17நூ) இயற்றிய இராமநாடகக் கீர்த்தனைகளில் பல தருக்களை இயற்றியுள்ளார் அந்தத் தருக்களில் பல்லவி-அனுபல்லவி-சரணம் போன்ற அங்கவேறுபாடுகளுடன் நூல் அச்சாகியுள்ளது. மராட்டிய மன்னன் இரண்டாம் சகசி (கி.பி.1684-1710) பழைய இசைமரபுகளைப் பேணிக் காத்தவருள் ஒருவன். இவனே ஒரு இசைப் புலவனாக விளங்கியதால் பழைமையான முறையில் பல சலாம் தருக்களையும், சக்கினி தருக்களையும் இயற்றியுள்ளான். அவற்றில் பல்லவி-அனுபல்லவி-சரணம் என்ற அங்க வேறுபாடுகள் காணப்படவில்லை.

'தரு' என்பது கி பி. 19-20-ஆம் நூற்றாண்டுகளில் மக்களிடையே செல்வாக்கையிழந்து வழக்கொழிந்தது எனில் மிகையாகாது இன்றுள்ள தருக்களை ஆராயும்போது சிருங்காரம்-பக்தி, மதுரபக்தி ஆகிய சுவைகளைக் காணமுடிகிறது. அவை தெய்வத்தையும்-மனிதரையும் புகழும் உருப்படிகளாகும். தருக்களின் அமைப்பு, எதுகை,மோனை கடைசி எழுத்தில் ஒற்றுமை ஆகியவற்றுடனும், மாத்திரை அளவுகளுடனும் அமைக்கப்பட்டுள்ளது முதலில் உருப்படியும், அதன்பிறகு சொற்கட்டு-சுவரசதிகள்-மீண்டும் சொற்கட்டு ஆகியவற்றுடன் அமைக்கப்பட்டுள்ளது. இத்தகைய தருக்கள் தஞ்சை அரண்மனையில் நடிக்கப்பட்ட நாட்டிய நாடகங்களில் மிகுதியாகக் காணப்படுகின்றன. ந சீ.

**தருக்க சங்கிரகம்**: 'தருக்க சங்கிரகம்' என்பது தருக்க சாத்திரத்தின் சுருக்க நூலாகும். முன்னோர்கள் பலவகையான ஆராய்ச்சிகளைச் செய்து அதன் பயனாக ஒரு சிறந்த வழியைத் தோந்தெடுத்து அதனையே முடிவாகக் கொண்டனா. அந்த முடிவையே 'தரிசனம்' என்றும், 'சாத்திரம்' என்றும் கூறுகின்றனா. அத்தகைய தரிசனங்களில் ஒன்று சொல்லையும் மொழியையும் ஆராய்ச்சி செய்கிறது. அதனை வியாகரண தரிசனம் (இலக்கணம்) என்பர். மற்றொன்று உலகிலுள்ள பொருள்களையும், ஐம்பூதங்களையும் ஆராய்கின்றது. அதனைத் தருக்க சாத்திரம் என்பர் இத்தகைய ஆராய்ச்சிகளின் பயனாக ஆறு வகைப்பிரிவுகள் (தரிசனங்கள்) தோன்றின அவை தருக்கம், மீமாம்சம், சாங்கியம், யோகம், வேதாந்தம், வியாகரணம் என்பன. அவை 'வைதிக தரிசனங்கள்' என்ற பொதுப் பெயரால் குறிக்கப்பெறுகின்றன காரணம் அவை வேதநெறியின் வழிவந்த கருத்துகளைப்பின்பற்றியெழுந்தவை. ஆனால், வேத நெறிக்குப் புறமான கருத்துகளைக் கொண்டெழுந்த சாருவாகம், பௌத்தம், சமணம் போன்ற தரிசனங்களை அவைதிகதரிசனங்கள் என்று கூறுகின்றனர்.

அவற்றுள் தருக்க சாத்திர அடிப்படையில் இரண்டு பிரிவுகளுண்டு. அவை 'நியாய தரிசனம்' என்றும் 'வைசேடிக தரிசனம்' என்றும்பெயர் பெறும். நியாய தரிசனத்தைத் தோற்றுவித்தவா 'கௌதம முனிவர்', வைசேடிக தரிசனத்தைத் தோற்றுவித்தவர் 'கணாதர்' என்னும் முனிவர், நியாய தரிசனம் தோன்றுவதற்கு முற்பட்ட பழமையுடையது வைசேடிக தரிசனம் அவையிரண்டும் பல நூற்றாண்டுகளாகத் தனித்தனியாகவே இயங்கிவந்துள்ளன. பிற்காலத்தில் இவையிரண்டையும் ஏற்றுக்கொண்ட அறிஞர்கள் நியாய வைசேடிக தரிசனங்களின் அடிப்படைக்

கருத்துக்களைக் கொண்டு பல நூல்களை இயற்றி னர். அதனால் அத்தகையவர்களை 'நவீனர்' (புதுக் கொள்கையுடையவர்கள) என்று குறிப்பிடலாயினர். அந்தப் புதிய கொள்கையைத் தழுவியெழுந்த நூல களுள் 'தருக்க சங்கிரக'மும் ஒன்று.

இதனை இயற்றியவர் அன்னம்பட்டர் எனற புல வர். இவர், கி.பி.16-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர்; கௌசிக கோத்திரததினர். இவர் தந்தை 'மேலகிரி திருமலாச் சாரியார்' என்பவர். இவரது பரம்பரையினர் நல்ல சாத்திர அறிவு பெற்ற புலவா கள் ஆவர்.

இந்நூலாசிரியர்அத்துவைத வேதாந்தம்,வியாகர ணம், மீமாமசம் முதலிய நூல்களை ஐயநதிரிபறக கற்றுணர்ந்தவர்.இந்தச் சாத்திரங்களை முறையே பிரம்மேந்திர சரசுவதி,சேட வீரேசுவரர், விசுவநாதன ஆகியோரிடம் கற்றார். இவர்தம் மாணவர்களுள 'மீமாம்சா சூத்திர தீபிகா' எனனும் நூலை எழுதிய 'எல்லுபட்டரும்' ஒருவர். இவர் எழுதிய தருகக சங கிரகமும் அதன் உரையான தருக்க சங்கிரக தீபிகை யுமே இவர் புகழடையக் காரணமாயின. இவர் கற றுணர்ந்த மேலே குறிப்பிட்ட தரிசனஙகளையும் சேர்த்துப் பதினமூன்று நூல்களை இயறறியுளளார். தருக்க சாத்திரத்தில் ஐந்துநூல்களும், மீமாம்சா சாத்திரத்தில் மூனறு நூலகளும், அத்வைத வேதாந்தத்தில் இரணடு நூலகளும், வியாகரண சாத்திரத்தில் இரு நூல்களும் எழுதியுளளார். இவற றைத் தவிர 'சுவர விவேகா' என்ற பெயரில்வேத லட்சணம் பற்றியும் ஒருநூல் இயற்றியுள்ளார்.

இவரியற்றிய தருக்க சஙகிரகத்திற்கு நியாய போதினி, சித்தாந்த சந்திரோதயம், தருக்க சஙகிரக சந்திரிகைபோன்ற பல உரைநூல்களும் அந்த உரை நூல்களுக்குப் பல குறிப்புரை, அரும்பதவுரை போன்ற பல நூல்களும் பல புலவாகளால், பல காலங்களில் இயற்றப்பெற்றுள்ளன. தமிழ், ஆங்கிலம், இந்தி, பிரெஞ்சு, செருமன், சிஙகளம் ஆகிய மொழி களில் இந்த நூல மொழியாக்கம் செய்யப் பட்டு வெளிவந்துளளது. இந்தத் தருக்க சங்கிரகத்தையும் தீபிகையையும் திருவாவடுதுறையாதீனத் தம்பிரான் சிவஞான முனிவர் தமிழில் மொழிபெயர்த்துளளார். மக்கள் விரும்பிப் படிக்கும் நூல்களுள் தருக்க சங்கிர கமுமொனறு. ந.சீ.

**தருக்கவியல்**: காண்க: அளவை இயல்.

**தருப்ப சயனம்**: காண்க: திருப்புல்லாணி.

**தருபன்**: தென்னாப்பிரிக்காவிலுள்ள நேட்டா லின் துறைமுகம். எப். சி. பேர்வெல் (F.C.Farewell) என்பார் தலைமையில் கி.பி.1824-ஆம் ஆண்டு இங்கே ஆங்கிலேயக் குடியேற்றம் ஏற்பட்டது. இவ்விடத் தைச் சூலூ (Zulu) இன மன்னர் சாகா (Shaha) பேர்வெலிடம் ஒப்படைத்தார். இங்கு ஒரு கோட்டை கி.பி 1824-ஆம் ஆண்டுகட்டப்பட்டது. இப்போது அக் கோட்டை அருஙகாட்சியகம் ஆகிவிட்டது. ஆங்கிலத் தளபதி சர் பெஞசமின் தருபன் (Sri Benjamin Durban) என்பார் தென்னாப்பிரிக்காவில தமது நாட்டுக் காகச் செய்த சேவைகளுக்காக அவருடைய பெய ரால் இத்துறைமுகம் தருபன (Durban) என வழங் கப்படலாயிற்று.

தருபனின் பரப்பளவு 245 சதுர கி.மீ. ஆகும். இங்கே பல பூங்காக்கள் உள்ளன. தாவரவியல் தோட்டஙகள் (Botanical Gardens), சேம்சன் பூஙகா, உரோசா மலர்த்தோட்டங்கள், பல நச்சுப் பாம்பு களைக் கொணட பாம்புப் பூங்கா ஆகியவை மிகக் குறிபபிடத்தக்கவை.இஙகே 1979-இல் ஒரு பல்கலைக் கழகம உருவாக்கப்பட்டது. பல அருஙகாட்சியகங் களும் இநதிய, பணடு (Bantu) அஙகாடிகளும இஙகு உளளன. இது கி பி.1855-இல உலகிலேயே சிறந்த துறைமுகமாயிற்று. இஙகிருநது தாதுப பொருள்கள, நிலக்கரி, சருக்கரை, தானியம ஆகியவை ஏற்றுமதி செய்யப்படுகின்றன. மேலும் இஙகிருந்து எணணெய், குழாய் மூலம் சோகன்சுபாக்கிற்குக் கொண்டு செல்லப்படுகிறது.

முதல் உலகப் போருக்குப் பின் இது வானளா விய கட்டடங்களைக் கொண்ட ஓர் எழில் நகரமாக மாறியது. இது தெனனாப்பிரிக்காவின் சருக்கரை, மீன்பிடி தொழிலகளின் தலைமையிடமாகத் திகழ் கிறது; சுற்றுலாமையமாகவும் திகழ்கிறது. இதன மக்கள்தொகை 990,235. இதில் 26 விழுககாடு வெள்ளையர், 38 விழுக்காடு பண்டுக்கள், 32 விழுக் காடு ஆசியர், 4 விழுக்காடு சூலூக்கள் ஆவர். காந்தி அடிகளின் வாழ்க்கை வரலாற்றில் இநநகருக்குச் சிறந்த இடமுணடு. கே.சே.

**தருமசாத்திரம்**: தருமசாத்திரங்களின் அமைப புக்களை இந்து மதத்தில மூன்று வகையாகப் பிரித் துக் கூறுவர். அவையாவன: சூத்திரம், சுலோகம, வியாக்கியானம். முதல் இரணடும் இசுமிருதிகளில் காணப்படும் வடிவங்களாகும். அவை முனிவர்களால இயற்றப்பட்டவை. வேதத்திலுள்ள பொருள்களை முனிவர்கள், தம் மனத்தில் நினைத்து நியதிகளாக ஏற்படுத்தினர். அவைகளே இசுமிருதிகள். இசுமிருதி என்பதற்கு நினைப்பது என்று பொருள். இசுமிருதி களான வேதங்களில் சொன்னவற்றைக் குறித்து அதன்படி செய்தல் என்பது கருத்து.

இசுமிருதிகள் பதினெட்டு வகைப்படும் என்று செவிவழிச் செய்தி கூறுகின்றது. சூத்திரமாகச் செய்யப்பட்ட தரும சாத்திர நூல்கள் கௌதமா, ஆபசுதம்பர், போதாயனர், வசிட்டர், விட்டுணு ஆகியோரால் சிறிய சிறிய குறள் வடிவான வாக்கியங்களால் செய்யப்பட்டவை. சூத்திரங்கள, சுலோகங்களைக்காட்டிலும் பழையன. சுலோகங்கள் கவிவடிவங்களான செய்யுள்களாகும். சுலோகக் காலங்களிலும் சில சூத்திரங்கள் இயற்றப்பட்டன. யாக்ஞவல்கியர் இசுமிருதிகளைப் பின்வருமாறு தொகுததுள்ளார். அவையாவன: மனு, சுத்திரி, விட்டுனு, காரிதர், உசனா, ஆங்கீரசர், யமர், ஆபசுதம்பர், சம்வர்த்தர், சாத்தியாயனர், பிருகசுபதி, பராசரர், வியாசர், சஙகர் லிகிதா, தக்கர், கௌதமர், சாதாதபர், வசிட்டர்.

மனு எனபவர் முதல் இசுமிருதி கருத்தாவாக எல்லோராலும் ஒபபுக் கொளளப்பட்டவர் யாக்ஞவலகியரின் இசுமிருதி ஆசார காண்டம், வியவகார காணடம், பிராயச்சித்த காண்டம் எனறு பிரிக்கப் பட்டுள்ளது. ஆசார காணடம் சமூக, சாதிக கடமைகளைப் பற்றியும், வியவகார காணடம் சமூக, குறறச் சட்டங்களைப்பற்றியும், பிராயசசித்த காணடம் பாவங்களுக்குரிய பிராயச்சித்த முறைகளைப பறறியும் கூறுகினறன. நாரதருடைய இசுமிருதி எல்லா இசுமிருதிகளிலும மிகத் தெளிவாகவும விஞ்ஞான முறைப்படியும் வகுக்கப்பட்டதாகும். அது சமய, சன மார்க்க கருத்துக்களைக் கூறாமல முறறிலும் சட்டக் கருத்துகளையே கூறுகின்றது.

வியாக்கியானம் எனபது, இசுமிருதிகளை அனுசரித்து அவற்றின் உரையாக எழுதப்பட்டது வியாக்கியானஙகளுள் சிறந்தவை மேதாதியும, குலலூகப் பட்டரும் செய்தவையாகும. மிதாச்சரம் எனபது யாகஞவல்கியரின இசுமிருதிக்கு விஞ்ஞானேசுவரர் எழுதிய உரையாகும். இதுவே தென்னிந்தியா, காசி முதலிய இடங்களிலுள்ள இந்துக்களுக்குச் சிறப்பான சட்டம் விஞ்ஞானேசுவரர் சாளுககிய விக்கிரமாதித்தன காலத்தில் கல்யாணபுரத்தில் வசித்த ஒரு துறவி. நிபந்தங்கள் என்பவை இசுமிருதிகளை அனுசரித்துத் தனியாக இயறறப்பட்ட சட்டங்களாகும். அவைகளுள் சிறப்பானது வங்காளத்தில் சட்டமாகவுளளதும் சீமூத வாகனனால இயற்றப்பட்டது மானதாயபாகம பம்பாயிலும் குசராததிலும் சிறப்புச சட்டமாகவுள்ளவை நீலகணடரால் ஏற்பட்ட மாயகம், கமலாகர பட்டரால் ஏற்பட்ட நிருணயசிந்து, விசயநகர சாம்ராசசிய பிரதான மந்திரியான மாதவாசாரியரால் ஏற்பட்ட பராசர மாதவீயம், தேவணபட்டனால் ஏற்பட்ட இசுமிருதிசந்திரிகை, காசியில மித்திர மிச்ரரால் இயற்றப்பட்ட வீரமித்திரோதயம் ஆகியவை ஆகும்.

குபேரன செய்த தத்தக சந்திரிகையும், நந்த பண்டிதன செய்த தததக மீமாமசையும் ஆங்கிலேயர் காலத்தில் ஏறபட்ட நீதி மன்றஙகளில் நடைமுறைப்படுத்தப்பட்டன. சிறப்பான ஆதாரமாக வைத்துக்கொளளப்பட்ட இசுமிருதி முகதாபலம் தெனனிந்தியரான வைத்தியநாத தீட்சிதரால் செய்யப்பட்டதாகும். இரா.கோ.

**தருமநியாயமுறை** எனபது சாதாரணப பேச்சு வழககில் நனனெறிப் பணபையும் (Fairness), மனித நேயததையும (Humanity) உணர்த்தும் ஒரு தொடராகும். இத்தொடருககு யாவரும பின்பற்ற வேணடிய நெறிமுறை எனபதுதான முதலில இருந்த பொருள. ஆனால நீதி செலுத்தும் ஆட்சிமுறையில தருமநியாயம் (Equity) எனபது சட்டததின சொறகளுககு உரிய துலலியமான பொருளை மட்டுமே கொள்ளாமல், அதற்கு மாறாக, நாகரிக சமூகததில் வாழும் மக்களுடைய உரிமைகளைப் பற்றிய நடைமுறைக் கருத்துகளை ஒட்டிய சட்டத்தையும் குறிப்பிட்டது சட்டததுறையில தருமநியாய முறை என்ற தொடர், சட்டத்தின சொற்களுககு உரிய துலலியமான பொருளை மட்டுமே கொளளாமல், அவற்றின பொதுநலத தனமையை மனத்திறகொளளுதல் வேணடுமெனற நெறியைக் குறிபபிடுகிறது.

ஆஙகில நாட்டின வரலாற்றில தரும நியாய முறை எனபது, ஆஙகில நாட்டின பொதுநேர்மைத் தனி மனறத்தால (Chancery Court) ஒபபுக கொளளபபட்ட உரிமைகளையும் நிவாரணஙகளையும (Remedies) குறிப்பிடுகிறது.

இந்தியா ஆங்கிலேயர் ஆட்சிககுள் வந்த காலத்தில இங்கிலாந்தில இருந்தது போனற சட்டநீதி மன்றங்கள (Law Courts) அமைக்கப்பட்டன. அப்போது ஆஙகில நாட்டிலிருநத சட்ட நீதிமனறங்கள், தருமநியாயமுறை மன்றமாக அமைக்கப்பட்டதைப் போல, இந்திய நாட்டின சட்டநீதி மன்றங்களும் தருமநியாயச சட்டத்தைப் பின்பற்றும் நீதிமன்றங்களாக அமைககப்பட்டன. ஆகையால் இந்தியாவிலுளள ஒவ்வொரு சட்டநீதிமன்றமும் (Law Court), எழுதப் பட்ட சட்டத்தை மட்டும் ஆதாரமாகக் கொண்டு நீதி வழங்கும் நீதிமனறமாக மட்டும் இல்லாமல், தவறுகளை நீக்கி, நேர்மை நெறியை அதாவது தருமநியாய சட்டத்தைப் (Equity Law) பினபற்றும் நீதி மன்றமாகவும் (Equity Court) இருக்கிறது.

**தோற்றம்:** தரும நியாய முறை என்ற சட்டத்தை இங்கிலாந்தில் பொது நேர்மைத் தனிமன்றம் பின பற்றித் தீர்ப்பு வழஙகிற்று. பொதுச் சட்டத்தைப் (Common Law) பின்பறறி நீதி வழங்கிய பொதுச் சட்ட நீதிமன்றங்களிலுள்ள (Common Law Courts) சில குறைபாடுகளை நீக்குதற்காக ஆங்கில அரசர்கள் கி.பி. 14-ஆம் நூற்றாண்டில பொது நேர்மைத் தனி மனறத்தை அமைத்தனர். இது ஆங்கிலக் குற்றவியல் சட்ட வழக்குகளை விசாரிக்காமல், ஆங்கிலக் குடிமை இயல் சட்டத்தில் வரும் (Civil Law) பல வழக்கு களை விசாரித்துத் தருமநியாயமுறை விதிகளினபடி, நிவாரணங்களை வழங்கித் தீாப்பளித்தது. ஆகை யால் தருமநியாய முறை அல்லது நேர்மை நெறி என்ற தொடர், பொது நேர்மைத் தனிமன்றத்தை யும், அதனால் பின்பற்றப்படுகிற இயற்கை நீதிச் சட் டத்தையும் குறிப்பிடும் தொடராகவே கையாளப் பட்டது.

**நிவாரணங்கள்:** தனியார் இழைக்கும் தவறுகளுக் குப் புதியவகை நீதி நிவாரணங்களைப் பொது நேர் மைத் தனி மன்றம் அளித்தது. அது அளிக்கும் எலலா நிவாரணங்களிலும் காணப்படும் ஒரு பொதுவான சிறப்பு என்னவென்றால், அதனுடைய நீதிபதி (Chancellor)தவறு செய்தோருக்குத் தம்நேர்முக ஆணையை (Personal mandate) விடுத்து, அதனைத் தவறு செய் தோர் தம் நேரிலேயே நிறைவேற்றுமாறு செய்தற்கு அதிகாரம் பெற்றிருந்தார் என்பதே ஆகும். இம் மன றத்தின் நீதிபதி அரசரின் பெயரில் தீர்ப்பளிததா ராகையால், அவர் விடுக்கும் ஆணைக்கு எவரேனும் கீழ்ப்படியாவிட்டால், அச்செயல் அவமதிப்புக் குற்ற மாகக் கருதப்பட்டுச் (Contempt), சிறைத் தண்ட னைக்குரியதாகும். நீதிபதியின் நேர்முக ஆணையைப் பெறுகிற கட்சியாளர் அதனை நிறைவேற்றியே தீர வேண்டும். ஏதேனுமொரு ஒப்பந்தத்தில் தொடர்பு கொண்டவர் தாம் நிறைவேற்ற வேண்டிய கடமை களைச் செய்யுமாறு அவரைத் தூண்டுதற்கும் இவ் வாணை பயன்பட்டது; அப்பொழுது அதறகுக் குறிப் பிட்ட பணி செய்யப்படுதற்கான தீர்ப்பு (Decree for Specific Performance) என்று பெயர். சட்டத்தின் வழியாக நிவாரணம் பெறமுடியாத (Legal Remedies) அவ்வாணை மிகவும் பயனுடையதாகையால், அது அவற்றில் கையாளப்பட்டது.

**தடையாணை** (Injunction): தருமநியாய நீதிமன் றம் (Equity Court or Chancery Court) விடுக்கும் நேர்முக ஆணையின் மற்றொரு வடிவமே தடை யாணை என்று குறிக்கப்பெறும். அது வழக்கில் பிரதிவாதியானவர் (Defendant) சில செயல்களைச் செய்யாதவாறு தடுத்தற்கும், அல்லது ஒரு செயலைச் செய்யுமாறு ஆணை பிறப்பித்தறகும உரிய ஓர் ஆணையாகும். பிரதிவாதியானவர் வாதியின நிலத் தில் குழிதோணடுதலைத் தடுத்தறகு விடப்படும் ஆணை தடைஆணை (Prohibitory Injunction) என றும், நிலத்தை அதன் முன்னைய நிலைக்குக கொணடு வரும் பொருட்டு, அதில் பிரதிவாதி தோணடிய குழியை அவரே நிரப்புமாறு அவருக்கு விடப்படும் ஆணைக்கு செயலுறுத்துக் கட்டளை (Mandatory Injunction) அல்லது செயலாணை என்றும் பெயா.

**பொதுச் சட்டநீதிமன்றமும், தருமநியாய நீதிமன்ற மும்:** பொதுச் சட்டநீதிமனறததுக்கும் (Common Law Court) தருமநியாய நீதிமனறததுக்கும் (Equity Court) வேறுபாடுகள் உளளன. பொதுச் சட்ட நீதி மன்றத்தின் நீதிபதிகள் வழக்குகளில் அளிக்கும் நிவா ரணங்கள் (Remedies) போதுமானவை எனறு பொது நேர்மைத் தனி மன்ற நீதிபதி எணணினால், அவ வழக்குகளில அவர் நிவாரணம் ஏதும் அளிபபதில்லை. மற்றொரு வேறுபாடு வாதியினுடைய நீதிமன்ற நிவாரணம் பெறும உரிமையைப பற்றி இவ்விருவகை நீதிமன்றங்களும் கொணடுளள கருத்தைப பறறிய தாகும். பொதுச் சட்ட நீதிமனறததில் பிரதிவாதி வேணடும் சட்ட நிவாரணத்தை (Legal Remedy)அதா வது பணநட்ட ஈட்டை மறுக்கக்கூடிய எதிர்தரப்பு வாதம் எதுவும் இல்லையாயின, பிரதிவாதி தேட்கும் நிவாரணம் அளிக்கப்படுதல் வேணடுமென்று பொதுச சட்ட நீதிமன்றம் கருதிற்று. ஆனால, பொதுநேர்மைத் தனிமனற வழக்குகளில அளிககபபட்ட நிவாரணங் களெல்லாம் தனிப்பட்டவைகளாக இருநதன. அதா வது, அதில நீதிபதி,தாம வழககில தொடர்புளள எல லாக் காரணிகளையும் சீர்தூககிப் பார்ததறகும தரும நியாயங்களை ஆராயதற்கும், வாதிவேணடும்; சட்டப்படியான நிவாரணம் பொதுநலனெனனும் கொளகைக்கு உகந்ததாக இருந்தால அப்பொழுது அந்நிவாரணத்தை அவருககு அளிக்காமல விட்டு விடு தற்கும் அல்லது அதை அவருக்கு அளித்தற்கும் தமக்குத் தம்விருப்ப அதிகாரம்(Discretionary Power) இருப்பதாக எண்ணினார். எடுத்துக்காட்டாக ஒரு தொழிற்சாலை ஒரு குடியாளின் நிலத்தினருகில உள்ள காற்றையும் தண்ணீரையும் கெடுத்து, நிலத் துக்கு இடர்ப்பாடு விளைவிப்பதாகக் கருதப்பட்டுத தொழிற்சாலைமீது தருமநியாய நீதிமனறத்தில வழக்குத் தொடரப்பட்டால், அந்நீதிமன்றம அத் தொழிற்சாலை அமைந்துள்ள பகுதி மக்களுக்கு அளிக்கும் நன்மையைக் கருத்திற்கொணடு, தொழிற் சாலைக்குத் தடையாணையை விடுக்கமாட்டாது. அந் நிலையில் வாதி, சட்ட நீதிமன்றத்திலே (Common Law Court), வழக்குத் தொடுத்து, தொழிற்சாலை

யினால் தான் அடையும் இடர்ப்பாடுகளுக்கான இழப்பீட்டைக் கேட்டுப் பெறுதல் வேண்டும்.

தருமநியாய நிவாரணமானது இரக்கத்தின் காரணமாக (grace) அளிக்கப்படுகிறதே தவிர, உரிமையினடிப்படையில அளிக்கப்படவில்லை. இவ்விரக்க நிவாரணத்தைப் பெறுதல் வேண்டுமாயின வாதியானவர், ஒரு செயலினால தனக்குப் பாதிப்பு ஏற்படுதல் கூடுமெனறு உணர்ந்தவுடனேயே, அதாவது, பாதிக்கும் செயல் செய்து முடிக்கப்படும் வரை காத்திராமல், காலங்கடததாமல் கேட்டுப் பெறுதல் வேணடும்.

பொதுச்சட்ட நீதிமனறங்களின முறையற்ற தீர்ப்புகளைச் சீராக்குவதற்காகவே தருமநியாய மன்றம் பலவகை நிவாரணங்களை வழங்கிற்று.

**செயற்பாடு:** இங்கிலாந்தில் கி. பி. 19-ஆம் நூற்றாண்டில் சட்டநீதிமன்றங்களும் தருமநியாய முறை மனறங்களும் ஒன்றாக இணைககப்பட்டன. அமெரிக்க நாட்டிலும் அவ்வாறே இரணடும் இணைக்கப்பட்ட நீதிமன்றங்கள அமைக்கபபட்டன. இந்நீதிமன்றங்கள தருமநியாய முறையில் நிவாரணம் வேணடும் வழக்குகளை விசாரிக்கும்போது, தீர்பபுச சான்றாளர் குழுவின் உதவியுடன் (Jury system) அவற்றை விசாரிப்பதில்லை. இந்தத் தீர்ப்புச் சான றாளர் குழு விசாரிப்பு முறையானது சட்ட வகையான நிவாரணம் (Legal remedies) வேண்டும் வழக்குகளில் தான் கையாளப் படுகிறது.

**சிறப்பும் மதிப்பும்:** தருமநியாய முறைப்படி தீர்ப்பு வழங்குவதென்பது அமெரிக்க நாட்டில் குடிமை உரிமைகளின் (Civil Rights) பாதுகாப்புககு உகந்த ஒரு வலுவான கருவியாகக் கருதப்படுகிறது. தடையாணை நிவாரணமுறை (Injunctive Relief) அமெரிக்க நாட்டின் நீதிமன்றங்களில் கையாளப் படுகிறது. அங்கு வாக்களிக்கும் உரிமை, வீட்டில் அமைதி காத்தல் முதலிய பல தனி ஆள் உரிமைகளெல்லாம் தருமநியாய முறையின் வாயிலாகப் பாதுகாக்கப்படுகின்றன. சட்ட நிவாரணமுறை என்பது பண வடிவத்தில் இழப்பீடு அளிக்கிறது; இது சட்டத்தை ஆராயும்போது அதற்குரிய பொருளை ஒட்டிச் செல்லுகிறது. தருமநியாய முறை எனபது சட்டநிவாரண முறையில் காணப்படாத ஒரு நெகிழ்வு இயல்பை (Flexibility) உடையது. இத் தகைய நெகிழ்வியல்பையுடைய பல நிவாரண முறைகள் நீதிமன்ற முறைகளிலிருந்து தோன்றவே, இக்காலத் தருமநியாய முறை தோன்றிற்று. மிகவும் விரைவாக ஏற்பட்டுவரும் சமூக மாறுதல்களையும், மனித தேவைகளையும் ஆங்கில-அமெரிக்கச் சட்ட அமைப்புகள ஏற்றுக்கொள்ளுமாறு, தருமநியாய முறை நீதிபதிகள் வகுத்துக் கையாணட நிவாரண முறைகள மிகவும் பயனுளளயவையாக இனறும இருககினறன. பா. சு.

**தருமபுத்திரன்:** தருமபுத்திரன எனற பெயருடைய அரசன சங்க காலத்தில வாழ்ந்தவன். அவனைக் கோதமனாா என்ற புலவர் பாடியுளளார். தருமன் பாணடவர்களுள மூததவன. இவன் எம தருமனுக்குப் பிறநததால இவனை அறவோன் மகன என்று கூறுவதுணடு. அந்த முறையில் தருமன என்ற இந்த அரசனையும் கோதமனார், ‘அறவோன மகனே’ எனறு தம்பாட்டில விளித்துளளார். அப்பாட்டில் தருமன் ‘செஙகண மகளிரோடு சிறுதுளி அளைஇ அங்கட்டேறல் ஆயகலத்து உய்ப்ப’ (புறம 366). என வாழ்ந்தது போனறு சுட்டப்படும் நிகழ்ச்சிகள் பாரதத் தருமனுககுப் பேசப் பெற வில்லை. ஆதலால இவன அவனின் வேறானவன.

இவனுக்குப் பாலைக் கோதமனார் என்ற புலவர் நிலையாமைக் கருததுகளைக் கூறுகிறார். காஞ்சித் திணையில் பெருங்காஞ்சித் துறையில, ‘உலக முழுதும் தமது ஒரு மொழியே வைத்து உலகாணட வேந்தரும் தமபுகழை நிறுவி விடடுச் சென்று மாய்ந்தனர். அதனால யான உனக்குக் கூறும் அறிவுரையைக் கேட்பாயாக. நீ நினனுடைய வலிமையைப் பிறர் அறியாத வகையில காததுக கொளக. பிறா கூறும் கூறறுக்களிலுள்ள மெய்மையைத தெரிந்து கொளக. பகற போதில் ஆள வினை புரிக. அவவினை புரிவோருக்கு உதவுக, இரவில் அடுத்த நாள இயற்ற வேணடிய செயலகளை ஆராயக. அவ்வினை ஆற்றுவோரை அதன் கண் செலுத்துக. நின மனையகத்து மகளிர் தரும் தேறலை உணடு மகிழக. சூட்டிறைசசியும புழுக்கலும சோற்றோடு வேணடுபவர்க்கு இலையிலையாகப் படைதது அளித்து நீயும் உண்பாயாக. வெறியாடு களததுப் பலிக்கெனத் தொகுத்த ஆடுகள் தப்பாமல இறப்பது போல உலக வாழ்வில அனைவரும் இறப்பது என்பது பிழைபடா உண்மை என்பதைத் தெளிவாக அறிந்து கொள்க. இவ்வுலகில் செய்வன செய்து நுகாவன நுகர்ந்து நிலலா உலகில் நிலை பெறும் புகழ் நிறுவி மேம்பட்டு வாழ்க’ என அறிவுறுத்துகின்றார். இத்தகைய அறிவுரையைக் கேட்டுச் செம்மாந்து வாழ்ந்தவன தருமன. கு. தி.

**தருமபுர ஆதீனம்:** காண்க: திருமடங்கள்.

**தருமபுரி:** இவ்வூர் தருமபுரி மாவட்டத்தின தலைநகரம். இந்நகரம் சங்க காலத்தில் தகடூ



ஒய்சாளர் கோயில்

எனும் பெயரால் வழங்கப்பட்டது. அதியமான்கள எனும் அரச மரபினரின் தலைநகரமாக விளங்கிய இந்நகரம் வரலாற்றுச் சிறப்பும் பழமையும் வாய்நதது. இங்கு ஒய்சாளர்கள கட்டிய கோயில ஒன்று உள்ளது. தருமபுரியில மாவட்ட அலு வலகங்கள் செயற்படுகினறன. இங்கு அரசு கலைக் கல்லூரியும் அருங்காட்சியகம் ஒனறும் உள்ளன. இந்நகரின மக்கள தொகை 51,164(1981). சு. இரா.

**தருமபுரி மாவட்டம்**: காணக: தமிழ்நாட்டு ஆட்சிப்பிரிவுகள.

**தரும பூதஞானம்**: பணபு அடைமொழியான அறிவு விசிட்டாத்துவைத அறிவாராய்ச்சியியலில ஓர் அடிப்படையான உண்மையாகும். அது இயற் பொருளின் தனமையை விளக்கும். அது மூனறு மேலான உணர்வுகளைத தரவல்லது. ஒன்று அண்டத்துக்குரிய உணர்வு. மற்றொனறு ஆன்மிக உணர்வு. மூனறாவது பிரம்மனைப் பற்றிய உணர்வு. உணர்வானது எப்பொழுதும் அதன அடிப்படையாக ஓர் ஆனமாவை உணர்த்தும். ஞானமானது இயற் பொருளோடும் ஒன்றாது; ஆன்மாவோடும் ஒன் றாது. இயற்பொருளும் ஆன்மாவும் வேறாக இருந் தாலும், பிரிக்க முடியாதவை. இருத்தலும் அறித லும் ஒன்றாயின், அறிவாராய்ச்சி எனபது இருத்த லோடு ஒன்றியிருக்கும். அறிதல் என்பது இருத்த லோடு தொடர்பில்லையானால் ஒத்துக் கொள்ள முடியாது. ஏனென்றால் அது ஐயக் கொள்கைக்கு வழிவகுக்கும். எண்ணம் எப்பொழுதும் இயற் பொருளை அறியமுடியாது. இல்லை என்னும் கொள்கை (Neti method) தூய உணர்வை (Pure consciousness) அதன் தனமையிலிருந்து பிரித்து விடு கிறது. இல்லை என்ற கொளகையானது அறிவை மறுப்பதிலோ இலலை என்று கொளவதிலோ அடங்கி யிருப்பதில்லை. ஒருமைக கொளகை, தத்துவததில் ஐயுறுவதில் தொடங்கி மறுப்பதில் முடிகிறது. ஒருமைக கொளகையானது உளளே இருக்கிற உணர்வு பூர்வமான ஆன்மா, வெளியே இருக்கின்றவற்றை உணாந்து அவை உணமையல்லவென்று கூறி, மன மும் பொய் எனறு கூறுகினறது. இது தான் ஐயக் கொள்கை எனபபடும். மறுத்தல் செய்வதும் ஒரு விதத்தில் ஒரு செயலாகும். அது ஒருவிதமான தோற்றம் எனறு கருதினாலும, உண்மை நிகழ்ச்சி யாகும். ஒருமைக் கொள்கையினருக்குத் தோற்றம் (Illusion) எவ்வாறு ஏற்படுகிறது எனறு கூற இயலவிலலை அவித்தை அதன் காரணம் என்று கூறினால், அவித்தை எவவாறு தோன்றியது என்ற வினா எழும். ஒரு குணம அநதக் குணம் ஏறபடக் காரணமாயிருந்த பொருளை உணர்த்தும். ஒருமைக் கொள்கையானது பொருளை மடடும் குறிபபிட்டு, அதன் தனமையை மறுத்தால், புத்தக் கொள்கை போல அறிவின அடிப்படை, நிகழ்ச்சியுணர்வுகள் மட்டுமே எனற கோட்பாடு (Phenomenalism) அதனை மறுக்கும்.

தருமம் அல்லது குணம், தருமி அல்லது குணம் படைத்தவரைக் குறிக்கும். இவற்றில் ஒனறை மறுத் தால், மற்றொன்றையும் மறுக்க நேரிடும். இத்த கைய மறுப்பானது, அறிவு பெறுதற்குரிய சாதனங் களை மறுக்கிறது. பொருளானது தானே விளஙகும் இயலபினதாயின், அதனை அசடம் (Ajada) என்றும், அது சடத்திலிருந்து வேறுபட்டிருப்பதாகவும் கூற லாம். அது ஆகாயத்தைப் போலும், காலத்தைப் போலும் அமையும். அசடம் என்பது (Ajada) உணர் வாகும். அது உணர்கிற ஆன்மா என்றும், அதன் அறிவு தர்மபூத ஞானமென்றும் சொல்லப்படும். அசடம் (Ajada) எனபது உணர்வுள்ள ஆன்மா. அது எல்லையுள்ளதும் எல்லையில்லாததுமாகும். அது அனுபவத்தில் உணரப்படும் பொருளாகும். அதன் குணம் அறிவு, உணர்வு. அது அடக்கமானது, புத்தி யுடையது. இயல்பான அறிவும் (Susbtantive Intelligence) குணமான அறிவும் (Attributive Intelligence) பிரிக்க முடியாதவை. தரும பூதஞானம் (Dharma-bhuta-Jnana), தானே விளக்கமுடையதாகவும் (Svayam prakasa) பொருள்களை விளக்கும் தன்மையு டையதாகவும் (Artha-Pra kasaka)அமைந்திருக்கிறது.

அது மதி (Mati), பிரக்ஞை (Prajna), செமுசி (Semushi), சம்வித்து (Samvit) எனவும் சொல்லப்படும். அது ஆன்மாவைப்போல் தன்னை உணரும் தன்மையதன்று. சேதனத்திற்கும் (Cetana) சடத்திற்கும் (Jada) இடைநிலையில் அமைந்துள்ளது. அது விளக்குப் போல பொருள்களைக் காட்டும், ஆனால் அதற்குத் தெரியாது. அது ஆன்மாவில் அமர்ந்திருக்கிறது. ஆன்மாவிற்கும் ஞானத்திற்குமுள்ள தொடர்பு விளக்கிற்கும், அதன ஒளிக்கும் உள்ள தொடர்பு போல் அமைந்திருக்கிறது. ஆனமா அறிகின்ற தன்மையது. அது வெறும் புத்திமட்டுமன்று. ஞானம் எனபது தானே தோனறியது. பகுத்தறிவு (Reason), புலக்காட்சி, உணர்வு முதலியன எல்லாம் ஞானத்தினால் விளக்கம் பெறுகினறன. ஆனால், ஞானம் தானே விளக்கம் அளிப்பது. ஞானம் மனதின் மூலமாகச் செயற்படும். இயல்புணர்ச்சிகளிலிருந்து பக்தி, விவேகம் முதலியவை ஈறாக எல்லா உணர்வுகளும-புலக்காட்சி, அனுமானம், சப்தம முதலியவைகளெல்லாம் ஞானததால் நிலைகளில் ஏற்படும் மாற்றங்களாகும். புறஉலகில் காணப்படும் பொருளகளை ஞானத்தினால அறியலாம். உலகக் கணணோட்டத்தில் ஞானம், புலன்கள், மூலமாகப் பொருள்களை அறியச் செய்கிறது.

ஆன்மா சித்து ரூபமானது (Cid-Rupam), ஆன்மா அணு. ஆனால் அதன் உணர்வு பரநது காணப்படுகிறது. ஞானமானது தெரிந்து கொள்ளக் கூடிய நிலையில் கர்மத்தினால் கட்டுணட நிலையில் காணப்படுகிறது. தூங்கும் பொழுது ஞானத்தின் தன்மை, தமோகுணத்தால் (Tamas) ஆளப்படுகிறது. அது முன்பு விளககிற்கு உவமையாகக் கூறப்பட்டது. ஞானம் ஆன்மாவின் உள்ளுறைத் தன்மையாகவும், நிலையான தன்மையாகவும் அமைகிறது. தருமபூதமான ஞானம் கர்மத்தின் தொடர்பால் பொருளைப் போல் சுருஙகுவதும் விரிவதுமாகச் செயற்படுகிறது. நிலையான உணர்வு கர்மத்தினால் மாறுகிறது. பழையபடி முக்திநிலையடையும் பொழுது புலனகளின் பிடியிலிருந்து விடுதலை பெறுகிறது.

ஞானமானது இவ்வாறு மாறுவதும், மாறாமலிருப்பதும், பொருளாக அமைவதும, அதன் குணஙகளாக அமைவதுமாக இருக்கிறது. இரா.கோ.

**துணை நூல்:**

Srinivasachari, P.N., The Philosophy of Visishtadvaita, The Theosophical Society, Adyar, Madras, 1970.

**தருமம்:** தருமம் என்பது வடசொல். இந்தியத் தத்துவ ஞானம் பல்வேறு கருத்துகளில் இந்தச் சொல்லைப் பயன்படுத்துகிறது. 'தர்மம்' என்ற சொல் த்ரு (dhr) என்ற சொல்லிருந்து வந்தது என்று கூறலாம். 'த்ரு'என்றால் ஆதரித்தல் என்று பொருள. எல்லா மனிதர்களையும் ஒன்று சேர்ப்பது தருமம். தருமம் என்பது அறம். அது தனிமனிதனைச் சமூகத்தோடு இணையச் செய்து ஆதரவளிககினறது என்று கூறலாம். அது ஓர் ஒழுங்கு முறை. ஆகையினால அது இன்ப நிலைக்கு மனிதனை அழைத்துச் செல்லும். மனிதன், சமூகம் ஆகிய இரண்டின் நல்ல நிலைமைக்கும் முனனேற்றத்திற்கும் தருமம் தேவை என்று கருதப்படும்.

தருமம் என்ற கருத்து ஓர் ஒழுக்க இயலின் அடிப்படையில் எழுந்தது. ஆகையினால் தருமத்திற்கு மக்கள் பலன் கருதாமல் அடிபணிய வேணடும். சாருவாகரும், இன்பக் கொள்கையினரும அதனைப் புறக்கணிக்கிறார்கள். கடமையைக் கடமைக்காகச் செய்ய வேணடும் என்ற மேனாட்டு அறிஞரான காண்ட்டின் கொள்கையில் தருமம் என்ற கருத்து இருந்தாலும் சில வேற்றுமைகளைக் காணலாம்.

அறிவிற் சிறந்த ஆரியர்கள் மனித இயற்கையின் இரட்டைத் தன்மையைத் தெரிந்திருந்தார்கள். அத்தன்மைகள் தான் என்கினற எணணத்தையும் தன்னுடைய நலத்தையும் கருதுகினறவை. மேலும் பகுத்தறிவு பிறருடைய நனமைகளையும் கவனிககத் தூண்டியது. ஆப்சு (Hobbes) என்ற மேனாட்டு அறிஞர் கூறுகின்றது போல மனிதன் இயற்கையிலே ஒரு சமூகநோக்குப் படைத்தவன். ஆகையினால் ஒழுங்கான வாழ்க்கைக்குத் தான் என்னும் எணணமும் பிறருடன் கொள்ளும் அன்பும் தேவை. தனிமனித நிலை (Personality) அல்லது ஆன்மா, எல்லோரிடத்திலும் அமைந்திருக்கிறது. மனிதாகள் எல்லோரும் தெய்வத்தின் ஓர் அமிசம் என்று மட்டும் கருதாமல் எல்லோரும் தெய்வம் என்றும் கூறலாம். சூரியன், பாத்திரங்களில் இருக்கின்ற தண்ணீரில் பல சூரியன்களாகக் காணப்படுவது போல, ஒரே தெய்வம் பல உருவங்களாகத் தோற்றமளிக்கிறது. ஆகையினால் பிறருடைய இன்பமும், தனது இனபமாகக் கருதுதல் வேணடும். காண்ட்டு (Kant) குறிப்பிட்டதுபோல மனிதர்களை முடிவாகக் கருத வேண்டுமேயொழிய (end) ஒருவரின் சுயநலத்திற்கு ஏற்ற ஒரு துணைக் கருவியாகக் (means) கருதுதல் கூடாது. சமூக நன்மையைககருதுமிடத்துத் தனி மனிதனும் அதனால் நன்மையடைகிறான். எந்த வேலையும் இழிவில்லை என்று மகாத்மாகாந்தியடிகள் கூறுகிறார். மனிதன தனக்குப் பணித்த வேலையைச் செய்யும் பொழுது, எல்லோரும் நன்மையடைய வேண்டும் என்ற எணணத்தில செய்ய வேண்டும். அதுபோலவே சமுதாயமும் தனிப்பட்ட

வரின் நன்மையை மனத்தில் எணண வேணடும். சீவன் முக்தர் கூடச் சமூகச் சேவையைக் கருத்தில கொள்கிறார்கள். செயல் செய்வது தான் ஆன்மா வின் இயற்கைக் குணம். எந்த மனிதனும் செயல் செய்யாமல் ஒரு நிமிட நேரமாவது சுமமா இருகக முடியாது என்பது பகவத்கீதை. தருமததிற்குக் கீழ்ப் படிநது நடந்தால் இம்மையிலும் மறுமையிலும் இன்பம் கிடைககும்.

பல்வேறு வகைப்பட்ட நிலையில் தருமம் வேதத் திலும், இராமாயணம், மகாபாரதம் முதலிய இதி காசஙகளிலும் கூறப்பட்டிருக்கிறது. சிறப்பாகப் பகவத் கீதையில் கூறப்பட்டிருககிறது. கருமத்தை பற்றியும் விவரிக்கப்பட்டுள்ளது. பலன கருதாமல் கடமையைச் செய்ய வேண்டும். எந்தவித பாச உணர்விற்கும் இடம் தரலாகாது. கடமையைச் செய்தால்தான் நிறைவு அல்லது முத்தியடைய முடியும். ஒருவன் கடமையைச் சரியாகச் செய்தலே தருமமாகும். அதுவே இறைவனின் ஆணையுமாகும். ஒருவனுடைய கடமை, அவனுடைய குணத்தினடிப்படையில அமைந் திருக்கிறது.

ஒருவர் தம் கடமையைச் செய்யும்பொழுது சில சமயங்களில் இரணடு முரணபட்ட செயலகளில ஒன்றைமட்டுமே செய்ய வேணடிய கட்டாயம் உரு வாகும். அப்பொழுது பகுத்தறிவு கொண்டு ஆராய்ந்து எந்தச் செயலை முதலில் செய்ய வேண்டுமோ அதனை முதலில் செய்ய வேணடும் அல்லது நல்ல வர்கள் அந்நேரங்களில் எப்படிச் செயதிருப்பார்கள என்று பார்த்து அப்படிச் செயய வேணடும். அதுவும முடியாவிட்டால் மனச் சாட்சிககு வேற்றுமையின்றிச் செயற்பட வேண்டும் என்பது பாரத அறவியல் நூல் களின் துணிபு. இரா.கோ.

**தருமன்:** இவனைத் தருமபுத்திரன எனறும கூறுவர். காட்டிற்கு வேட்டையாடச சென்ற குருகுல வேந்தன் பாணடு என்பான இணைவிழைசசால் களித்திருந்த மானை அம்பெய்து கொனறான். அதுகண்டு கிந்தம முனிவனிட்ட சாபத்தால் மனை மருவி மகப்பேற்றுக்கு வழியினறி நிரயம் புகும் அச்சமுற்றிருந்தான். அதனைப் போக்கக் குந்தியெனற அவன் மனைவி, இளமையில் துருவாச முனிவருக்குப் பணிவிடை செய்ததறகாக அவர் அளித்த ஆறு மந்திரங்களில் ஒன்றாகிய இயமனை அழைக்கும் மநதிரத்தால், அவனை அழைத்துப் பெற்ற மகனே தருமன. பாணடு இறந்த பின் அவன் பெரியதந்தை திருதராட்டிரனால் வளர்க்கப்பெற்றான். தன் தாய்க்கும், தன் இளைய தாய் மாத்திரிக்குமாக மந்திர ஆற்றலில் பிறந்த வீமன, அர்ச்சுனன், நகுலன, சகாதேவன் என்று தம்பிய ரோடு கிருபன் துரோணன் முதலிய குருக்களின் வாயிலாக வில்லாறறல் பெற்றான். கண்ணிழந்த திருதராட்டினன், குலத்து மூத்த மகன் என்ற முறை யில் இளவரசுப் பட்டங்கட்டப் பெற்றான. திருதராட் டினனுக்கு மூத்தமகனாகப் பிறந்த துரியோதனன, தருமன் முதலியோர் வில்லாற்றலோடு பணபுடையர் களாக, அரசு பெறுதற்குரிய வாய்ப்புற்றிருப்பதைப் பொறாது, அவர்களோடு பிணஙகிக் கலாம் விளைத்து அதுவழிக் கொல்ல முனைநதான். ஆயினும் இறவாது வாழ்வதைக் கண்ட திருதராட்டிரன், தன் மகன் மகிழ்ந்து வாழத் தருமன் முதலியவர்களைக் கொல்லத் துணிந்தான். அரக்கு மாளிகையொன்று அமைத்து அதில் வாழச் செய்து தீயிடச் செய்தான். சூழச்சியறிந்த தருமன் அதனின்றும் தப்பி வேத்திர கீயம் என்ற இடத்திறகுச் சென்று வாழ்ந்தான். அங்கு ஆர்ச்சுனன் விற்போட்டியில் வென்று கொணர்ந்த திரௌபதியென்பாளுக்குத் தாயின் சொல்வழித் தானும் கணவனானான். அவளை ஆண்டுக்கு ஒருவன் மனைவியாகக் கொளளவேண்டுமெனறும் ஒருவரோடு அவள வாழ் வழிப்பிறர் அவளைக் காணக்கூடா தென்றும், வியாசன் கூறிய அறிவுரையின்படி, அவ ளோடு அத்தினாபுரம் போந்து, கண்ணன் அருளால் இந்திரப்பிரத்தம் என்ற எழிலுடை நகராக்கி, நாரதர் ஆணை வழி இராசசூய யாகம் செய்து, சாம்ராட்டு எனற பட்டத்தையும் பெற்றுத் தன்னேரில்லாது வாழ்ந்தான. இத்தகைய பேறுகளைப் பெற்றதைக் கணட துரியோதனன் தருமனோடு அவன் தம்பியரை யும் செல்வநிலையினின்றும் தாழ்த்திக் காட்டிலதிரிய விடக்கருதினான். தானும் ஒரு மாளிகை அமைத்து அதைக் காணத் தருமனை அழைத்துச் சூதாட வைத்தான். தன் மாமன் சகுனியைக் கொண்டு தனக் காகச் சூதாட வைத்துத் தோற்கச் செய்து, தருமன் பெற்றிருந்த நாடு முதலிய செல்வம் அனைத்தையும் தனதாககிக் கொண்டான். தனக்கு அடிமையான தருமன் முதலியோரை மானமிழக்கச் செய்தான். அவர்களுக்கு மனைவியாய் அமைந்த திரௌபதியை யும் மன்றில அழைத்துத் துயில் நீககித் துன்புறுத்தி னான. அதுகணடு கடுஞ்சினங் கொணட தம்பியரைப் பொறுமையாக இருக்கப் பணித்தான் தருமன். பாஞ்சாலியின் வேண்டுகோளால் மறுசூதாடித் தன் அரசை மீண்டும் பெறற்குத் துரியோதனன் முதலி யோர் விதிதத வண்ணம் நிபந்தனைகளோடு காட்டிற்குச் சென்றான். தருமன் நிபந்தனைகளைத் தான் ஏறறு வநத வண்ணம் பதின்மூன்று ஆண்டுகள் கழிந்தபின் தனக்குரிய நாட்டினைத் திருப்பித் தருமாறு உலூகனைத் தூதனுப்பினான். அது பயனில் லாது போகக் கண்டு கண்ணனைத் தூதனுப்பினான். போர் முகிழ்த்தால் உற்றார் உறவினரோடு பொர

நேரிடுமென்று நினைந்து அது தவிர்த்து வாழ நினைத்தான். தருமன் மேற்கொணட பொறுமை உடன்பிறந்த, மரியாதை தரும் வீமன் போன்றோரால் பொறுத்துக் கொள்ள முடியாத அளவிற்குப் பெரி தாகும்.

பின்னர்ப் போர்மூணடது முதல் நாட் போரில் விராடன் மக்கள் சுவேதனும் உத்தரனும் இறந்தது கண்டு விராடனோடு துன்பம் பகிர்நதான். பதினெட் டாம நாட்போரில் களம்புகுந்து, துரோணனோடு கடும்போர் புரிந்து, குருவாகிய அவனைக் கொலலக் கூடாதென்பதாலும் கொல்லமுடியாது எனபதாலும் போர்க்களத்தினின்றும போனான். பதினமூனறாம் நாளபோரில் அபிமனனுவைப் போருககனுப்பி அவன் இறந்தது கேட்டுப் பெரிதும் நொந்தான. பதினா றாம் நாள்போரில் துரியோதனனோடு தனகுரு விற்கும் மேனியெல்லாம் அம்பால்துளைத்துக குருதி யொழுகச் செய்தான்.

விசயன் தன் வில்லைப் பழித்தவர் எவராயி னும் அவரைக் கொல்லும் திறன படைத்திருந்தும், தருமன் கன்னனைக் கொல்லாத விசயன வில்லைப் பழிக்க, அவன் தனனைக் கொலல விற்குனிததது கண்டு துறவு மேற்கொள்ள முனைந்தவன. சல்லியன என்ற பேராற்றல் படைத்தவனைக் கொனறவன

போரில் தம்பியர் அனைவரும் மாய்ந்தது கணட துரியோதனன், பொய்கை யொனறில புகுந்து தவ மியற்றிப் பெற விருந்த பெருவலிமையைத் தடை செய்த போது துரியோதனனை அரசேற்றுக் கொளளு மாறு வேண்டினான். இறுதியில திருதராட்டிரனைக் கணடு அவனுக்குரிய மரியாதை செய்து அரசேறறுத் தம்பியரோடு மகிழ்ந்து வாழந்தான். பாரதமென்ற இதிகாசத்திற்குத் தன்னேரில்லாத் தலைவன தருமன்.

தருமன் என்ற பெயரில் வேறு பதினைநது போ இருந்திருக்கின்றனர்.

1) வருணன குமாரன். இவன் மனைவி நிருதி. இவனுககு மகாபயன, பயன் மித்யு எனற ஆணமகக ளும், காக்கை, சேனை, பர்கினி, திருதராட்டன, சுகி என்ற பெண்மக்களும் உணடு. 2) திரேதாயுகத்தில் விட்டுணுவின் பெயர் தருமன். 3) ஓா அரசன். அவன மனைவி குனிநுருதை. 4) ஒரு வணிகன், தாய் தந்தை யர் இறக்கக் குட்டநோயுற்றுப் பசியால் வருந்தி நாகைக் காரோணத்துப் பலிபீடத்திருந்த உணவை உணடு இறைவனருளால் பெருஞ்செல்வம் பெற்று வாழ்ந்தவன். 5) காந்தாரனின் குமரன். இவன் மகன் கிருதன். 6) கேகேயன் மகன். இவன் மகன் நேத்திரன். 7) பிருதுசிரவசுவின் மகன். இவன் மகன் உசநசு. 8) திருக்குறளுக்கு உரை எழுதிய பலருள் ஒருவர் தருமா். 9) அருகன் என்பானின தந்தை. 10) மாநந்தை எனற தாசி சிவபக்தி மேலீட்டால் தான் வளர்த்த கோழிக்கும் குரங்கிற்கும் உருத்திராட்சம் அணிவித்து வருங்கால சிவபிரான் ஒரு வணிகன் போல போந்து இரததின இலிஙகம் காட்டினார். அதனைத் தாசி விழைந்த போது அபபிரான் தம்மோடு மூன்று நாள இருநதால் தருவதாகக் கூறத் தாசியும அவவாறே இருந்து வரும்போது நளளிரவில் வீடு தீப்பற்றிக கொணடது அப்பொழுது அவள குரஙகையும் கோழி யையும் விடுவித்தாள் பின அவவிரத்தின இலிஙகமும் தீயில் வேகக் கண்டு அச்செயதியை வணிகருக்குக கூற, அது கேட்ட வணிகன் தான 'இனிவாழேன' எனறு தீபபுக, அவரும் செட்டியாருக்கு மூன்று நாள அடிமையாக இருக்க இசைந்ததால செட்டியாருடன தீப்புகுந்தார் அப்பொழுது சிவபிரான் தம் உணமை வடிவைக காட்டி முததியளித்தார் அக் குரஙகும் சேவலும தருமன், தாருகன எனற பெய ரில் காசுமீரத்து அரசனும அமைசசனுமாகப் பிறந்த வர் (பிரமோத்தர காணடம). 11) கோதமனார் எனற சஙகப்புலவரால் பாடப பெறறவா. அறவோன மகன் எனற பெயரும உணடு. 12) இயமனுககுரிய ஒரு பெயா.

13) சுபததிரன் எனபவனுடைய மகன. இவன சந்திர சேகரன துறவியானதைக் கேடடுத் தானும துறவியாக நினைநதபோது பிருகுமுனிவன பஞசாட சர மநதிரத்தை உபதேசித்து இலலறததில் இருககச செய்தார். சந்திரசேகரன துறவியாகிச் சித்திவலல பம் பெற்றுத் தருமனிடம் போந்து தன் சித்தி வல்ல பத்தால் இநதிரனை அழைத்தான். தருமன பஞ் சாட்சர மநதிரத்தால் பிரமனை அழைத்தான இதனைக கண்ட சந்திர சேகரன் தருமனைத தன குருவாகக் கொணடு பஞ்சாட்சர மநதிர உபதேசம பெறறான.

14) இவன ஒரு மனு. தககனுடைய பல பெணகளை மணந்தவன. அவர்கள கீர்த்தி, இலக்குமி, துருதி, மேதா, புசுடி, சிரத்தை, கிரியை, வருததி, இலக்சா, மதி, குமாரர், சமன், இராமன், அருடன (பாகவதம்).

15) சமண தீர்த்தஙகரர்களில் பதினைந்தாமவர். தநதை பாறுகோரன் என்பார். தாய் சுப்பிரபை. இவர் மாசி மாதம் சுக்ல பாடித திரியோதசி பூச நட்சத்திரத்தில் பிறந்தவர்; நாற்பது வில உயரம் உடையவர்; பொன்மேனியர்; பத்து இலட்சம் வய துடையவர். இவருக்கு சுதர்மன, கணநாதர், அரிட்ட

சேகரர் முதலிய நாற்பத்து மூவர் மக்கள் பிறந்தனர். இவர் காலத்து வாழ்ந்த அரசர்கள் சுதர்சனர், பல தேவன, புருடசிம்மன், வாசுதேவன், மதுக்கிரீடவன், பிரதிவாத தேவன். இவர் காலத்துச் சக்ரவர்த்தி மக வான சநத்குமாரன் எனபவராவார். கு.தி.

**தருமி:** இவர் ஆதிசைவ மரபில் வந்த சிவமுனி எனபாரின் மகனாவார். இவர் நீதி, நேர்மை வாய்மை, தூய்மை, நல்லொழுக்கம், சிவபக்தி மிக்க வர். திருவாலவாய் எனனும் மதுரையில் கோயில் கொணடெழுந்தருளியுள்ள சொக்கலிஙகப் பெரு மானை நாடோறும் பூசிக்கும் கடப்பாடுடையவர். இவர் மகனுண்டாக வேண்டித் திருமணம் செய்து கொள்ள வேண்டும விருப்பத்தால் இறைவனை (சோமசுந்தரக் கடவுளை) வேணடி நின்றார்.

அப்போது மதுரையை ஆண்ட வங்கிய சூடா மணி பாண்டியர் தம் மனையாளோடு நந்தவனத தில் அமர்ந்திருக்குங்கால், நல்ல மணமொனறு வீச, அது தம் பாணடிமாதேவியின கூந்தலினினறும் வநத தறிந்து, இம மணமானது இவளது கூந்தலுக்கு இயற்கையோ? அன்றிச் செயறகையோ? எனறு ஐயுற்றுத் தனஐயம் தெளியப் பாடவலல புலவருக்குப் பொன்னாயிரம் கொடுபபேனெனறு சொலலிப் பொற்கிழியினைச் சங்க மணடபத்தில தொங்கவிட்டி ருந்தான். வழுதியின் ஐயம் தீர்க்கும் பாடல் பாட வல்ல புலவரிலாமையால அககிழி அறுப்பாரின்றி அப்படியே இருந்தது.

சொக்கலிங்கப் பெருமான, தருமியிடம, 'கொஙகு தேர் வாழ்ககை' எனத் தொடங்கும் பாடலைக் கொடுத்து, 'இதை, நீ பாணடியனிடம் தந்து, பொற் கிழி பெறுக' என அனுப்பினார். அப்பாடலுக்குப் பாண்டியன் இசைய, நக்கீரர் மறுத்தார். உடன் சோமசுந்தரக் கடவுள பாட்டியற்புலவனாகி வந்து, சங்க மண்டபம் புகுந்து, கீரனுடன வாதிட்டார். 'இறைவி என்று உலகம் ஏத்தும் ஞானப் பூங்கோதை யின் கூந்தலுக்கும் செயற்கை மணமே' என்று தருக் குடன் கூறியதால், கீரனை மடுவில் விட்டார். பின்னர்த் தருமி பொற்கிழி பெறறார். இவ்வாறு திருவிளையாடற் புராணம் கூறும்.

பாண்டி நாட்டில் பஞ்சம் ஏற்பட்டது. அதனால துன்பம் அடைந்த தருமி, ஆலவாயணணலையடைநது 'அண்ணலே! இனியும் இவ்வூரிலேயே இருப்பின் இறந்து படுவேன. அதனால் வேற்றூர் சென்று, இது செழுமை யடைந்தபினனர் வருகினறேன. அதுவரை உன்னை எப்படிப் பிரிந்திருப்பேன்' எனத் தொழுது அழுதான். அப்போது, இறைவன், 'அன்பனே! அழாதே. வழுதி பொன்னாயிரம் கொணட கிழியினைச் சஙக மண டபத்தில் தூககினன. இப்பாவினைக் கொடுத்து அத னைப் பெறுதி' எனறு, 'கொஙகுதேர் வாழக்கை' எனத் தொடஙகும் குறறமறற செய்யுளைத் தந்தாா. தருமி சங்கப் புலவாகளிடம் கொடுகக, நக்கீரன குற்றம் கூறவே இறைவன நன்பாட்டுப் புலவனாயச் சங்க மேறி, வாதிட்டு, நககீரனுக்குக் குட்ட நோய் வரச் சாபமிட்டுத் தருமிக்குப் பொறகிழியினை வழங கினார். இது சீகாளததிப்புராணம.

**தருமி[2]:** இவன தான படைத்த பொருளகளை யெல்லாம் சிவாலயத்துக்கும் சிவததொணடுக்கும் அளிதது, கைலை சேர்ந்த ஒரு வேதியன. இவன, சவிதா என்னும சிங்கள தேசத்துச் சிறந்தோன மகனாவன். வீ.சொ.

**தல்கௌசி:** இநதியாவில் கி.பி 1848 முதல 1856 வரை தலைமை ஆளுநராகப் பதவி வகித்த தலகௌசி பிரபு (Lord Dalhousie) சார்சு இராமசே தல்கௌசி எனற பிரபுவின மகனாக கி.பி.1812–இல் இசுகாட்லாந்தில (Scotland) உள்ள தல்கௌசி எனற ஒரு கோட்டையில் பிறநதார். இவர் இநதியாவில பினபறறிய சில கொளகைகளும் செயல்களும் கி.பி.1857–ஆம் ஆணடு இநதியச் சிப்பாய்க் கலகத் திற்கு வழிவகுததன. இநதியாவுக்கு வருவதற்கு முன்னர் இவர் கி.பி.1837-இல இங்கிலாநதின் நாடாளுமன்றக் கீழ்சபைக்குப் பேராளராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார். பிறகு நாட்டின் வணிகக் குழு வுக்குததலைவராகத் தேர்வு பெற்றார்.



தல்கௌசி

தலைமை ஆளுநராக வந்த தல்கௌசி, அப் பொழுது பஞ்சாபில் நடைபெற்றுக் கொண்டிருந்த சீக்கியர் கலகத்தை அடக்கினார். அதனால் மகிழச்சி

யுற்ற ஆங்கில அரசு இவருக்குக் கோமான (Marquess) எனற உயர் பட்டத்தை வழங்கியது. தல்கௌசி பஞ்சாபை ஆஙகில இந்தியாவுடன இணைத்துக் கொண்டார். அடுதது கி.பி.1852-இல இரணடாம் பர்மியப் போரை நடத்தி, அதில் வெற்றி கொண்டதன மூலம் தெறகுப் பர்மாவைத் தம் நாட்டுடன் இணைத்துக் கொண்டார். இந்தியாவில் விளஙகிய குறுநில மன்னாகளின நாடுகளில், ஆங்கிலேய ஆட்சி முறை புகுத்தப்பட்டால், மக்களுக்கு அது நனமை தரும் என்பது இவரது உறுதியான நம்பிக்கை ஆதலால், 'அவகாசியிலிக் கொள்கை' (Doctrine of lapse) என்னும் நாடு சேர்க்கும் முறையை இவர் பின பற்றினார். அதனபடி, வாரிசு இலலாத குறுநில மன்னர்களின் நாடுகள, ஆங்கிலேய இந்தியாவுடன (British India) இணைததுக் கொள்ளப்பட்டன. மேலும் கி.பி.1856-இல் அயோத்தி நாட்டில் ஆட்சிச் சீர்கேடுகள காணப்பட்டதால், அதையும் தம நாட்டுடன் இணைத்தார். ஆட்சி முறையில் பல சிறந்த சீர்திருத்தங்களை இவர் புகுத்தினார் அவற்றின் விளைவாக இந்தியாவில் சாலைகள சீர் செய்யப்பெற்றன; இருப்புப் பாதைகள் போடப்பட்டன; பாலங்கள கட்டபபெறறன; மக்களுக்குப் பயன்படும் கல்விமுறை புகுத்தப்பெற்றது. முனனேற்றமான சீர்திருத்தங்கள பல இவரால கொண்டு வரப்பட்டன. எனினும், மக்கள இவரைப் பெரும பாலும் விரும்பவில்லை. முககியமாகப் பழைமை வாதிகள் இவருடைய சீர்திருத்தங்களைக் கணடு அச்சமடைந்தனர். இவர்மீது ஏற்பட்ட வெறுப்பு கி.பி.1857-இல் சிப்பாய்க் கலகம் தோனறக் காரணமாயிற்று.

தல்கௌசியின் தலைமை ஆளுநர் பதவி கி.பி. 1856-இல் முடிவுறறது. இங்கிலாந்துக்குத் திரும்பிய இவர் தாம் பிறந்த தல்கௌசி கோட்டையிலேயே, கி.பி.1860-ஆம் ஆண்டில காலமானார். தெ.பா.

**தல்கௌசி நகரம்**: கனடாவில உளள முக்கிய நகரங்களுள ஒன்று தல்கௌசி (Dalhousie). இது வடக்கு நியூ பிரன்சுவிக்கு மாநிலத்தின மையப் பகுதியில் அமைந்துள்ளது. இந்நகரம் கனடாவில் இருந்து சுமாா 224 கி.மீ. தொலைவில் உளளது. இரெசுடிகவுசு ஆறும் (Restigouche River), செயின இலாரன்சும இதன் எல்லைகளாக அமைநதுள்ளன.

இந்நகருக்கு கி.பி. 1826-ஆம் ஆண்டு தல்கௌசி நகரம் (Dalhousie) என்று பெயரிடப்பட்டது. கனடாவின் தலைமை ஆளுநராக கி.பி.1819-1828-ஆம் ஆண்டுகளில் பதவி வகித்த ஒனபதாம் கோமான் தல்கௌசியின் நினைவுக்கு அறிகுறியாக இப்பெயர் சூட்டப்பட்டது. இசுகாட்டு (Scots) இனத்தவர் இப்பகுதியில முதனமுதல குடியேறத் தொடஙகினர். நாளடைவில ஆஙகிலேயர் இப்பகுதியில குடிபுகத் தொடஙகினர் இபபோது ஆஙகிலேயரே இநநகரின மக்கள தொகையில் மிகுந்த எணணிக்கையில் உளளனா.

இந்நகர் கி.பி 1905-ஆம ஆண்டு ஒருங்கிணைக்கப்பட்டது இநநகரின முக்கியதொழில்கள கப்பல கட்டுதல, மீனபிடித்தல், செயதித்தாள தயாரித்தல், சோடா, குளோரின தயாரித்தல போனறவையாகும. இநநகரின் மக்கள தொகை 6,255(1980). சு.ஆ.

**தல்லசு** அமெரிக்க ஐக்கிய நாட்டில் தெக்சாசு மாநிலததின இரணடாம் பெருநகரம்; தல்லசு ஆட்சிபபகுதியின தலைமையகம் (Seat of Dallas Country) ஆகும இந்நகரம் அமெரிக்காவின் வடககு மத்திய சமவெளியிலுளள பரநத 'பிரைரிப்' புலவெளிப் பகுதியில திரினிட்டி (Trinity) ஆறறின கரையில் அமைந்துளளது விண்ணை முட்டும அளவிற்கு உயர்ந்த அழகிய கட்டடங்களைத் தனனகததே கொணட எழிலார்ந்த வணிக நகரமாகவும, சிறநத துறைமுகமாகவும் விளஙகும இது, தெகசாசின் முதற பெருநகரான ஊசுடனுககு (Houston) வடமேற்கே ஏறத்தாழ 360 கி.மீ. தொலைவில அமைந்துளளது.




தல்லசு அமைவிடம்

இந்நகரம் வரலாற்றுச் சிறப்பும், பழம் பெருமையும் கொணடது. இரணடாம் உலகப்போருக்குப் பின்னர் இந்நகரம் நான்கு திசைகளிலும் விரிவடைந்து இன்று பரந்துபட்ட நகராகத் திகழ்கிறது. கவர்ச்சியே உருவான இந்நகரம் சுற்றுலாப் பயணியர்களுக்கும் இன்பப்பொழுது போக்குபவர்களுக்கும் விளையாட்டு ஆர்வம் கொண்டோருக்கும் ஒரு சுவர்க்க பூமியாகும்.

தொடக்க காலத்திலிருந்தே இது ஒரு முக்கியமான சந்தை மையமாக உளளது. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மொத்த வணிக மையங்களுள இந்நகரம் மூன்றாம் இடத்தைப் பெறும் சிறப்பிற்குரியது. பூ வேலைப்பாடு கொண்ட கிறித்தவப் பாதிரியார் உடைகள் (Apparel), பரிசுப்பொருளகள, கைவினைப் பொருள்கள் ஆகியவை இங்கு அதிக அளவில் உற்பத்தி செய்யப்படுகின்றன. ஆணடின இருபது வாரங்களில் இங்கு வாணிகக் கணகாட்சிகள (Trade Shows) சீரிய முறையில் நடைபெறுகின்றன. தல்லசு விற்பனை மையம் (Market Centre) ஒன்று, அறுபது எக்டேர் (150 ஏக்கா) கொணட பெருநிலப பரப்பில் இங்கு அமைந்துள்ளது. மிகப்பெரிய மொத்த விலைக்கடைகள் மட்டுமனறிப் பல சில்லறை விலைக் கடைகளும் இம்மையத்தில் உள்ளன.

இந்நகரம் கி.பி. 1870க்குப் பின்னர்ப் பருத்தி வணிகத்தில் சிறப்பிடம் பெற்று விளங்கியது. இது கி.பி. 19-ஆம் நூறறாணடில் அமெரிக்காவிலேயே பெரிய பருதத் வணிக மையமாக விளங்கியது. இங்கு 1960க்குப் பினனர் எணணெய்க் குழுமங்கள பல நிறுவப்பட்டன தல்லசில் ஐந்நூறுக்கு மேறபட்ட எணணெய் நிறுவனங்கள உளளன.

தொழில் துறையில் வியக்கத்தக்க வளர்ச்சியைக் கணடுள்ள இந்நகரம் இரணடாம் உலகப் போருக்குப் பின்னர் விமானங்கள் தயாரிப்பதிலும், மின்னியற் பொருளகள தயாரிப்பதிலும் மேமபட்டு விளங்குகிறது. இங்கு 200க்கு மேறபட்ட அரசாஙகத் துறை அலுவலகஙகளும், அமெரிக்கத் தரைப்படை, ஆகாயப்படை தலைமையகஙகளும், விளம்பர நிறுவனங்கள, திரைப்படத் தயாரிப்பு நிலையஙகள், ஆயுள காப்பீட்டுக் கழகங்கள், வணிகக கழகங்கள், பல நாட்டினைச் சேர்ந்த பாங்குகள், வழக்கு மன்றஙகள் ஆகியனவும் செயற்படுகின்றன. கூட்டாட்சி இருப்பு வங்கியின பதினோராம மாவட்டத் தலை நகராகவும் தல்லசு விளஙகுகின்றது. வேளாண கருவிகள, உரங்கள, பூச்சிமருந்துகள் ஆகியனவும் இங்கு அதிக அளவில் தயாராகின்றன.



தல்லசு நகரம்



விமானங்கள் தயாரிக்கும் இடம்

தல்லசு போக்குவரத்துத் துறையில் பெரிதும் முன்னேறியுள்ளது. நியூயார்க்கு, இலாசு ஏஞ்சல்சு, சிகாகோ, மெகசிகோ ஆகிய பெரு நகரங்களுக்கு மத்தியில் இந்நகரம் அமைந்துள்ளதால விமான, தொடர்வண்டி, சாலைப் போக்குவரத்தில் நல்ல முன்னேற்றம் கண்டுள்ளது. அமெரிக்க நாட்டின் புகழ்மிக்க 'தல்லசு காலைச் செய்தி' (Dallas Morning news) முதலிய சிறந்த செய்தித்தாள்கள் இஙகிருந்து வெளிவருகின்றன. வானொலி, தொலைக்காட்சி நிலையங்களும் இங்குள்ளன.

மிகப் பழமையான பல்கலைக்கழகங்கள முதல் அண்மைக் காலப் புதிய பல்கலைக்கழகங்கள் வரை யில இஙகுள்ளன. இவற்றுள் 1911-இல நிறுவபபட்ட தென்மெதடிசுட்டுபல்கலைக்கழகம், 1955-இல் நிறுவப் பட்ட தலலசு பல்கலைக்கழகம் ஆகியன குறிப்பிடத் தக்கன. பல கிளைகளையும், நடமாடும் நூல் நிலை யங்களையும் தன்னகத்தே கொண்டுள்ள தல்லசு பொது நூலகம் அறுபது மாடிக் கட்டடத்தில் இயஙகு கிறது. இங்கு $1\frac{1}{4}$மிலியனுக்கு மேற்பட்ட நூல்கள உள்ளன. தல்லசு வரலாற்றுப் பேரவை நூலகம், நுண கலை அருங்காட்சியக நூலகம் ஆகியனவும் சிறந்த நூலகங்கள் ஆகும்.

இந்நகரின்கண் புகழ்மிக்க அருங்காட்சியகம், படக்காட்சிச் சாலைகள், இசைக் கழகஙகள் ஆகியன உள்ளன. இங்குத்தான் 1900-இல் தொடங்கப்பட்ட உலகப் புகழ்பெற்ற 'தல்லசு இசைக்குழு (Dallas Symphony) உள்ளது. இலீபார்ககு, ஓயிட்ராக்கு, இலேக்கு, மார்சலிசு முதலான 200க்கு மேறபட்ட கவின்மிகு பூங்காக்களும் இங்குளளன.

இது ஒரு பெருநகராட்சி. இதில் மேயர் ஒரு வரும், எட்டு அங்கத்தினர்களும் உளளனர். பிரயன் என்பாரால் திட்டமிடபபட்ட இந்நகரம் 1931-இல் இருந்தே பெருநகராட்சியாகத் திகழ்கிறது. ம.இ.

**தல்லசு, சான் பாசுடர்:** அமெரிக்காவில் ஐசனோவர் குடியரசுத் தலைவராயிருந்தபோது 1953-59-இல் வெளியுறவு அமைசசராக இருந்தவர் சான் பாசுடர் தல்லசு (John Foster Dulles). இவர் கி.பி.1888-இல்அமெரிக்கத்தலைநகா வாசிஙடனில பிறந்து, பிரின்சுடன் மற்றும் சார்சு வாசிஙடன பல கலைக்கழகங்களில் பயின்றார். இவரது பாட்டனா ரான சான் பாசுடர் என்பவரும் வெளியுறவு அமைச் சராயிருந்தவரே. அவரோடுகூட சில உலக மாநாடு களிலும் இளைஞரான தல்லசு கலந்துகொணடு பயிற்சி பெற்றாா. அப்போது ஒரு புகழவாய்ந்த சட்ட ஆலோசனை நிறுவனம் ஒன்றினையும பாசுடர் தல்லசு நடத்தி வந்தார். எனவே முதலாம் உலகப் போரின முடிவில் நடந்த வொசேலசு சமாதான மாநாட்டில் சட்ட வலலுநர் என்ற முறையில கலந்து கொணடு இழப்பீடு நிருணய ஆணையத்தில(Reparation Commission) சட்ட உறுப்பினராய்ப பணியாறறி னார். ஐ.நா. சபையை நிறுவுவதறகெனக் கூட்டப பட்ட தம்பார்ட்டன ஓக்சு(Dumbarton Oaks)மறறும சான் பிரானசிசுகோ மாநாடுகளிலும் அமெரிகக அரசின் சார்பில் இவா பஙகுகொணடார். அமெரிக்க வெளியுறவுகளில் இவவாறு நிறைநத அனுபவம பெற்றிருநத காரணத்தினால் சப்பானுடனான சமா தான உடன்படிக்கையைத் தயாரிப்பதறகான பேச்சு வார்த்தைப் பணி இவரிடம் ஒப்படைக்கப்பட்டது. சமாதான மாநாட்டைக் கூட்டினால சோவியதது நாட்டையும் அழைகக வேண்டியிருக்குமென்பதால அத்தகைய சருவதேச மாநாட்டைக கூட்டாமலேயே சோவியத்து நாட்டின் எதிர்ப்பையும் புறக்கணித்து சப்பானுடனான சமாதான ஒப்பந்தத்தைத் தலலசு தயாரித்தார்.

இச் சாதனை காரணமாக வெளியுறவு அமைச் சர் பதவி 1953-இல் இவருக்கு அளிக்கப்பட்டது. பொதுவுடைமை நாடுகளைப் பின்வாங்கச் செய்யும் கெடுபிடிக் கொள்கையினை இவர் பின்பற்றலானாா. அமெரிக்காவுக்கும் பொதுவுடைமை நாடுகளுக்கு மிடையிலான உறவுகள் இவரது பேச்சாலும் செயலா



தல்லசு, சான் பாசுட்டர்

லும் மேன் மேலும் பாழ்பட்டுக் கெடுபிடிப் போர் உச்சக் கட்டத்தை எட்டியது. ஆசிய-ஆப்பிரிக்க நாடு களிடையே கூட்டுச் சேரா இயக்கம் அப்பொழுதுதான் எழுச்சியுற்று வந்தது. அந்த இயக்கத்தையும் அதனைச் சார்ந்த நாடுகளையும் பறறி அரசதந்திரத்தை மறந்து, தாறுமாறாகத் தாக்கிப் பேசி, அந்த இயக கத்தையும் தல்லசு பகைத்துக்கொண்டார். மக்கள் சீனாவுக் கெதிராகச் சியாசு-கே-சேககின தைவான் அரசை ஆதரித்துச் சீனாவுடன் ஒரு போருக்கும் தல்லசு தயாரானார். சோவியத்து நாடு பற்றியும் மிகவும் கடுமையாகப் பேசி அணு ஆயுதப் போருக்கும் தனது நாடு தயார் என்று அடிக்கடி அறைகூவல் விடுத்தார்.

முடிவில் புற்றுநோயால் பீடிக்கப்பட்டு 1959 ஏப்பிரலில் தல்லசு பதவியைத் துறந்தார். அடுத்த திங்களிலேயே அவர் இறந்தார். இர.ஆ.

**தலபுராணங்கள்:** தமிழ் மூவேந்தர்களின் ஆட்சி குன்றி வேற்றவர் ஆட்சியும், வேற்று மொழி களும், வேற்றுப் பண்பாடுகளும் தமிழகத்தில் நுழை யத் தலைப்பட்ட காலத்தில் தோன்றியவை தல புராணங்களாகும். பெருங் காப்பியங்களில் நாடு நகரங்களைப் பாராட்டிப் போற்றும் அமைப்புக் காணப்படுகின்றன. அவற்றைத் தலபுராணத் தோற் றத்திற்கு ஓராற்றான் அடித்தளமாகக் கருதலாம். 'ஊரான் ஓர் தேவகுலம்', 'திருக்கோவில் இல்லாத திருவில் ஊரும்', 'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்பன போனற தொடர்களால் ஊர் தோறும் கோயில் இருக்கவேண்டுவதன் இன்றியமை யாமை தெரியவருகினறது. அவ்வவ்வூர்களில் எழுந் தருளியிருக்கும் இறைவனை, அவரவர்களும் தாம் தாம் வணங்குவதோடன்றித் தமக்கு முன்னரும் பலர் வணங்கினர் என்றும், அவர்கள் இம்மண்ணுலகினரே யன்றி விண்ணுலகத்தினருமாவர் என்றும் கருதத் தொடங்கினர். அதற்குக் காரணம் அவ்வவ்விடங் களில் எழுந்தருளியிருக்கும் இறைவனைச் சிறப்பித்த லும், ஆங்காங்கு உள்ள மககள் மேலும் எழுச்சி பெற்று இறைவழிபாடாற்றி உய்ய முயல்வதுமாகும். தலபுராணஙகளில் முதற்கண எழுந்த புராணம் கோயிற் புராணம் என்பர். அதனை அருளியவர் உமாபதி சிவம் ஆவர். அதன்பின் ஆங்காங்கு இருந்த புலவர் பெருமக்களும் திருமடங்களைச் சார்ந்த அரு ளாளர்களும் தலபுராணம் பாடத் தொடஙகினர். திருவொறறியூர்க் கமலை ஞானப்பிரகாசர் திரு வொற்றியூர்ப் புராணத்தையும, சம்பந்த முனிவர் திருவாரூர்ப் புராணத்தையும், அழகிய தேசிகர் திருப் பரங்கிரிப் புராணத்தையும், புராணத் திருமலைநாதர் சிதம்பரப் புராணத்தையும் பாடியுள்ளமை எணணத தக்கதாம். இவை கி.பி. 16-ஆம் நூற்றாண்டிற்கு முன் எழுந்தவை. இவையன்றி கி.பி. 16-ஆம் நூற் றாணடில் தோன்றிய அருணாசலபுராணம், விரிஞ சைப் புராணம் (எல்லப்ப நாவலர்) ஆகியனவும், கி.பி. 17-ஆம் நூற்றாணடில் தோனறிய திருவெண காட்டுப் புராணம், திருச்செங்காட்டுபபுராணம்(சைவ எல்லப்ப நாவலர்) ஆகியனவும், வேதாரணிய புரா ணம, கும்பகோணப் புராணம் (அகோர முனிவர்) ஆகியனவும், திருக்கூவப்புராணமும் (சிவப்பிரகாசர்) குறிப்பிடத்தக்கனவாம். அடுத்து, கி.பி. 18-ஆம் நூற் றாண்டில் தோனறிய திருக்குறறாலப்புராணம் (திரிகூடராசப்பக் கவிராயர்), காஞ்சிப்புராணம் (சிவ ஞானமுனிவா), திருவானைக்காப்புராணம், பேரூர்ப் புராணம், தணிகைப் புராணம் (கச்சியப்பர்) ஆகியன வும், கி.பி. 19-ஆம் நூற்றாணடில் தோனறிய திருப் பெருந்துறைப்புராணம், திருநாகைக காரோணப் புராணம் (திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிளளை) ஆகியனவும் குறிப்பிடத்தக்கனவாம். இத்தல புரா ணங்கள் அனைத்தும் அவ்வத் தலத்தில எழுந்தருளி யுள்ள மூர்த்திச் சிறப்பையும், தீர்த்தச் சிறபபையும், ஊர்ச் சிறப்பையும் விளக்குவனவாம். கு.சு.

**தலாக்கு:** இசுலாமியச் சட்டத்தில 'தலாக்கு'என பது மணமுறிவினை ஏற்படுத்தும் வகையில் அமைந்த ஒன்றாகும். இவ்வகை மணமுறிவில கணவர் மண உற விற்கு முற்றுப்புள்ளி வைக்கிறார். இசுலாமியச சட்டத்தின் கீழ் நீதிமன்றத்தின் இடைமறிப்பு ஏதும் இல்லாமல் எக்காரணங்களும் காட்டாமல் கணவர் விவகாரத்துச் செய்யலாம். இது இசுலாமியர் சட்டத தில் மட்டும் காணப்பெறும் தனித் தன்மையாகும். கணவருக்கு இந்த அதிகாரம் வழங்கப்பட்டிருப்பினும் இது பல வழிகளில் கட்டுப்படுத்தப்படுகிறது.

தலாக்கு என்னும் இசுலாமிய மணமுறிவு மூன்று வகைப்படும். அவையாவன: 1 தலாககு அகசன (Talak Ahasan), 2. தலாகசு கசன் (Talak hasan), 3. தலாக்கு-உல்-பித்தத்து (Talak-ul-biddath).

முதலாவதான தலாககு அகசன் மிகுதியாகப் பயனபடுத்தபபடுவது. இமமுறையில் கணவர் தாம் மணமுறிவு செய்ய எடுத்த முடிவை மறுபரிசீலனை செய்ய வாய்ப்புணடு. தாம அம்முடிவை விரைவாக எடுத்திருப்பின அவா அதனைப் பின்னழிப்புச் (Revocation)செய்யலாம. இவவகை மணமுறிவைக கணவர் தகா (Tuhr) எனனும காலத்தில கூறுதல வேணடும. இரணடு மாதவிடாய்க் காலத்திறகுளள இடை வெளியே தகா (Tuhr) எனபபடும இவவகை மண முறிவில கணவா தம் மனைவியிடம 'மணமுறிவு செய்கிறேன' எனறு தம் எணணத்தினை வெளிப் படையாகக கூறுவார். கணவர் தம் எணணததை வெளிபபடையாகக் கூறுஙகால் மனைவி முனனர்த தான கூறவேண்டுமெனபது இல்லை. ஆனால, இவ வகை மணமுறிவில் கணவர் தம் மனைவியின பெய ரைக கூறி, அவரை மணமுறிவு செயவதாகக கூற வேண்டும். அவர் சொலலும சொற்கள மூலம மண முறிவு ஏற்பட்டதாக அறிவிக்க வேண்டும். கணவர் இவவகையில கூறும் முறைவாய்மொழி மூலமாகவோ எழுததாகவோ அமையலாம். இசுலாமியரில சீயா (Shia) எனற பிரிவினர் உண்டு. சீயாப் பிரிவினருக கான சட்டத்தினபடி இவ்வகை மணமுறிவு எழுத தால அமைந்திருப்பின் அது செல்லுபடியாகாது. சீயா சட்டததில தகுதி வாய்நத இரு சாட்சியின முனனா இவவகை மணமுறிவைக கணவா கூறுதல் வேணடும். தலாக்கு அகசன் எனனும மணமுறிவு இதததது என னும் காலம முடிநத பினனரே உறுதிபபடும. இதத்து எனபது மணமுறிவு கூறிய நாளிலிருநது மூனறு மாத விடாய்க் காலஙகள் ஆகும். இதத்து எனனும காலத தில் கணவர் மனைவியுடன உடலுறவு கொளளுதல கூடாது. அவா அவவாறு உடலுறவு கொண்டால அவா மணமுறிவு குறித்துத் தம மனத்தை மாற்றிக கொண்டதாகவும் மற்றும் மணமுறிவு பினனழிபபுச் செய்யப்பட்டதாகவும் கருதப்படும். இவவகை மண முறிவில கணவர் தம் முடிவை மறுபரிசீலனை செய் யச சீரிய வாய்ப்புக கிடைக்கிறது. எனவே, இம் முறை மணமுறிவே சீரிய முறையாகக் கருதபபடு கிறது.

இரண்டாம் மணமுறிவு முறை தலாக்கு கசன் எனப்படும். இதுவும் சரியான முறையே. ஆனால், மிக வும் சீரிய முறையன்று. இம்முறையில் தலாக்கு தகா என்னும் காலத்தில் கணவரால் சொல்லப்படுகிறது. இரண்டாம் முறையாக அடுத்த தகர் காலத்திலும் தலாக்கு என்னும் மணமுறிவைக் கணவர் மறுபடியும் சொல்லுவார். மூன்றாம் தடவையாக அடுத்து வரும தகர் காலததிலும் தலாக்கு எனனும் மணமுறிவுச் சொல்லைக கணவர் சொலலுவார். மேற்கணட எல லாக் காலகட்டத்திலும கணவர் மனைவியுடன் உட லுறவு கொள்ளுதல கூடாது. மூனறாம் தடைவை யாகக் கணவர் தலாக்கு என்று கூறியவுடன் மண முறிவு உறுதிப்படுகிறது. இம்முறையில கணவர் இததது என்னும காலம முடியும் வரை காததிருகக வேணடியதில்லை. அதற்கு முனனரே மூனறாம் தடவையாகக் கணவர் தலாக்குக் கூறினால் அதனை மணமுறிவு எனக கருதுவதில்லை. கணவருக்குத் தாம் எடுதத முடிவை மறுபரிசீலனை செய்ய வாயபபு இருப்பதால இதனைப் பலர் சரியான மணமுறிவு வகைகளுள ஒனறாகக கருதலாம

மூன்றாம் மணமுறிவு முறை தலாக்கு-உல்-பிதத்து எனப்படும். இசுலாமிய சமய முறையில் மற றும் சித்தாந்தத்தில் இது ஏறறுககொளளப்பட்ட ஒரு முறையனறு. இதனைச சீயாச் சட்டம் ஏற்றுககொள் வதிலலை. ஆனால், சுனனிப் பிரிவினர் இதனைப் பின பற்றுகினறனர். இம்முறை சுனனிப பிரிவினரால சாதாரண முறையாகப் பின்பறறப்படுகிறது. உமை யாதது எனபவர் முடியரசோச்சுஙகால் இம்முறை பழக்கத்திறகுக் கொணடு வரபபட்டது. பிதத்து என பது, தலாக்கு எனறு ஒருமுறை கூறியவுடன மண முறிவு நடைமுறைக்கு வருவதால இது மிகவும அதிக மாகச் சுன்னி பிரிவினரிடத்தில் பரவி வந்தது. இம முறையில் கணவா ஒரு தகர் காலததில 'நான உன் னைப் பின்னழிபபுச செய்ய இயலாத தலாககுச் செய் கிறேன்'(Talak-ul-bain) எனறு கூறல் வேணடும. இவ் வாறே கணவா மூன்றுமுறை தொடர்ந்து 'தலாககு, தலாக்கு தலாக்கு' எனறு கூறினால், அது 'நான் உனனை மணமுறிவு செய்கிறேன', 'நான் உனனை மணமுறிவு செயகிறேன்', 'நான் உனனை மணமுறிவு செய்கிறேன்' எனப் பொருள கொள்ளப்பட்டுப் பின னழிப்புச செய்ய இயலா மணமுறிவு செய்ததாகக கருதபபடும். இவ்வாறாக மூனறு முறை தலாக்குச் சொல்லுதல் திருமணத்தை உடனடியாக மணமுறி வுக்குக்கொணடு செல்வதால்.இதனைத் தலாககு-உல -பெய்ன (பின்னழிப்புச செய்யஇயலா மணமுறிவு)என பர். இம்முறையில கணவர் விரைவாக முடிவெடுத்து மணமுறிவு செய்யக்கூடாது எனபதற்காகக் கடும் கட்டுப்பாடு ஒன்று விதிக்கபபட்டுளளது. மணமுறிவு செய்து பின்னர் அவர் மணமுறிவு செய்த பெண்ணை மணம்புரிய விரும்பினால் அதற்காக ஒரு நடைமுறை ஏற்படுத்தப்பட்டுளளது. மணமுறிவு செய்த பெணணை வேறொருவருக்குத் திருமணம் செய்து வைத்தல் வேண்டும். அவர் அப்பெணணுடன் உடலுறவு கொண்டு திருமணம் நிறைவடைதல் வேண்டும். அதன் பின்னர் அத்திருமணம் முடிவுக்கு வந்த பின்னரே

முதல் கணவர் திருமணம புரிந்து கொள்ளலாம். இவ விதி முறைக்குக் கட்டுப்படாமல் நடக்கும் திருமணங் கள் முறைகேடான (Irregular) திருமணஙகள எனப படும். மணமுறிவு முதலில கூறபபடடுளள முறை களால் கணவரால் சொலலபபட்டால் இநநடைமுறை யைப்பின்பற்ற வேணடியதிலலை. முதலில கூறப்பட்ட இரு முறைகளால் மணமுறிவு செய்து கொணடவர் கள எவ்வித தடையுமினறி மறுமுறையும் திருமணம செய்து கொள்ளலாம். மீ.அ.

**தலாடியர்** (கி.பி. 1834-1970): தலாடியர் எட்வர்டு கி.பி.1884-ஆம் ஆணடு பிறநதார். இளமை யிலேயே கல்வி பயில்வதில் ஆர்வம உள்ளவராகத் திகழ்ந்தார். தமது தொடக்கக்காலத்திலேயே எட் வர்டு தலாடியர் (Edouard Daladıer) பொதுப பணி யில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டாா. பிரானசில் கீழ அவையின் (Chamber of Depties) உறுப்பினராக 1919 -ஆம் ஆண்டு தேர்ந்தெடுககப்பட்டார். அவவவையில 1940-ஆம் ஆணடு வரை ஒரு முககிய சீர்திருதத உறுப் பினராகத் திகழ்ந்தார். பிரானசு அமைசசரவையில் பல சிறந்த பொறுப்புகளை வகித்தார். இரணடு முறை பிரான்சின குடியரசுத் தலைவராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார். இடதுசாரிக் கட்சியின் முக்கிய தலைவராகவும் திகழ்நதார். இதுவே, பிற்காலத்தில் இவருக்குப் பெரும் வெற்றியைத தேடித்தந்தது. இலி யோன் புளூம்சு (Leon Blums) அமைச்சரவையில் இராணுவ அமைச்சராக இருநதார்.



தலாடியர், எட்வர்டு

பழமைப் பற்றுக் கட்சியின் உதவியுடன் 1938-ஆம் ஆண்டு பிரானசின் குடியரசுத் தலைவரானார். இரண்டாம் உலகப்போர்த் தொடக்கத்தில் செரு மணி, போலந்தைத் தாக்கியபோது, தலாடியர் ஆங்கிலேயப் படையுடன் கூட்டுச்சேர்ந்து, செருமனி மீது போர் தொடுத்தார்.

இவர் குடியரசுத் தலைவர் பதவியை 1940-இல் இழந்தார். இருப்பினும் சூன் வரையிலும் அமைச்சர வையில் இடமபெறறிருந்தார். அரசியல கைதியாகச் செருமனுக்கு 1940-ஆம் ஆணடு செப்டம்பரில கைது செய்யப்பட்டு, நாடு கடத்தபபட்டார். அமெரிக்கப படைகளால் 1945-ஆம ஆணடு விடுதலை செய்யப் பட்டார். மீணடும் 1946முதல்1958 ஆம ஆணடு வரை பிரானசின் குடியரசுத் தலைவராக இருநதார். பிரான சின தலைநகரான பாரிசில 1976-ஆம் ஆணடு கால மானார். சு.ஆ.

**தலாய்லாமா** திபெத்தில் கி.பி. 8-ஆம் நூறறாணடில் ஏறபடுத்தப்பெற்ற இலாமா (Lama) சமயத்தின் தலைவர். இலாமா மகாயான புத்த சமயத்தின ஒரு பிரிவு. இலாமாககள துறவிகள். இவர் களே சமயத் தலைவர்களாயினர். இநதத் துறவி களின் தலைவர் தலாய்லாமா (Dalai Lama) எனப்பட்டார். இத்தலைவரை மக்கள் தெய்வமாக மதித்து வணஙகத தொடஙகினர். நாட்டின ஆட்சிக் கும் இவரே தலைவரானார். தலைநகர் இலாசா (Lhasa) நகரின புறத்தே உள்ள குன்றின்மீது கல அரண்மனையில தலாய்லாமா வாழ்கிறார். அரசியல சமயத் தலைவர்கள் தலாய் லாமாவைத் தேர்ந தெடுக்கின்றனர். சிறு குழந்தையாயிருப்பவரைத் தேர்ந்தெடுப்பது அவர்கள் வழக்கம். சீனப் பொது உடைமை அரசு 1944-இல ஆதிக்கம் பெறறுத் திபெத்தைச் சீன ஆட்சியினகீழக் கொணர முயன்று வெற்றி பெற்றது. திபெத்து 1950-இல் சீனாவுக்கு அடிபணிந்தது. தலாய் லாமாவின உளநாட்டு ஆட்சி யில் சீனா தலையிடாதெனறும், திபெத்தின் அயல் நாட்டு அலுவல்களைச் சீனா கவனித்துக்கொள்ளு மென்றும் ஏறபாடு செய்யப்பட்டது.

திபெத்திய வரலாற்றில் 14 தலாய் லாமாக் கள் குறிக்கப் பெற்றுள்ளன. அவாகளின மாணாக் கர்கள அப்பதினானகு பெயர்களையும் 14 உடம்பு கள் பெற்ற ஒரே தலாய் லாமா என்றே கருது கின்றனர். சிறு குழந்தையைத் தலைவராகத் தேர்ந் தெடுப்பதற்கு அக்குழந்தையின் முனனைய ஞானத்தைச் சோதனை செய்து, அககுழந்தை, தானே முன்னர் இருந்த தலாய் லாமா என்பதைக் குறிப்பாலுணர்த்த அதன் அடிப்படையில் அக் குழந்தை புதிய தலாய் லாமாவாகத் தேர்ந்தெடுக் கப்படுவது திபெத்திய மரபாகும்.

முதல் தலாய் லாமாவின் பெயர் காண்டன் துருப்பா (Ganden Truppa–கி.பி.1391–1474). தெ.பா. காண்க: திபெத்து

**துணை நூல்:**


Bell, Sir Charles A., Portrait of the Dalai Lama, London, 1946.


**தலைக்கோட்டைப் போர்:** விசயநகரப் பேரரசர் கிருட்டிணதேவராயருக்குப் பின் அரசாண்ட அச்சுத தேவராயர் காலமான பின் அவருடைய மகன் முதலாம் வெங்கடா, குழந்தையாக இருக்கும்போதே அரியணையில் அமர்த்தப்பட்டான். ஆட்சிப் பொறுப்புகளைக் கவனித்துவந்த திருமலா என்பவர் ஆட்சியைக் கைப்பற்றச் சூழ்ச்சி செய்தார். மக்களும், கோமக்களும் திருமலாவின் கொடிய ஆட்சியை வெறுத்தனர். அத்தருணத்தில் கிருட்டிணதேவராயரின் மருமகன் இராமராயர் ஒரு படையைத் திரட்டித் திருமலாவைத் தோற்கடித்து அவருடைய உறவினரான சதாசிவராயரை கி.பி. 1543–இல் அரியணையிலேற்றினார். சதாசிவராயர் பெயரளவில் அரசராக இருந்தார். இராமராயர், தம் விருப்பம்போல் தமக்கு வேண்டியவர்களையும், உறவினர்களையும் முக்கியப் பதவிகளில் அமர்த்தினார். பல முகமதிய அதிகாரிகளைப் படையிலும், ஆட்சியிலும் அமர்த்திக்கொண்டார். விசயநகரப் பேரரசின் தொடக்கத்திலிருந்தே இராயர்கள் தக்காண சுல்தான்களின் செயல்களில் தலையிட்டதில்லை. ஆனால், முதன்முதலில் இராமராயர், முகமதிய அரசர்களின் அரசியலில் தலையிட்டார். தமது திறமையினாலும், தந்திரத்தாலும், படைவலிமையாலும் மிக வேகமாக வளர்ச்சியுற்றார். அதனால் அவருடைய பகைவர்கள் ஒன்றுசேர்ந்து விசயநகரப் பேரரசின் விதியை முடிவு செய்த தலைக்கோட்டைப் போரில் அவரைக் கொன்றனர்.

அகமது நகர் அரசர் பருகான் நிசாம் சா, கி.பி. 1543–ஆம் ஆண்டு இராமராயருடனும் கோல்கொண்டா அரசருடனும் கூட்டுச் சேர்ந்து கொண்டு பீசப்பூர்மீது படையெடுத்தார். பீசப்பூர் அரசர் தம் திறமையினால் அக்கூட்டணியை உடைத்தார். சில ஆண்டுகள் கழித்து மீண்டும் அகமது நகர் அரசர் இராமராயருடன் சேர்ந்து முட்கல், இரெய்ச்சூர், கோலாப்பூர் போன்ற இடங்களைக் கைப்பற்றிப் பீசப்பூர்க் கோட்டை வரை சென்றார். ஆனால் நிசாம் சாவின் உடல்நிலை மிக மோசமாக இருந்ததால் அகமது நகருக்குத் திரும்பிவிட்டனர். பின்னர்ப் பீசப்பூர் அரசர் அதில்சா கோல்கொண்டா அரசருடனும், இராமராயருடனும் கூட்டுச் சேர்ந்து அகமது நகர்மீது தாக்கிப் பெரும் சேதம் விளைவித்தார். அத்தருணத்தில விசயநகர வீரர்கள் அகமதுநகர் சுலதானின படையிலுள்ள எண்ணற்ற முகமதிய வீரர்களைக் கொன்று குவித்தனர். இறுதியில் அகமது நகர் அரசர், பல இடங்களைக் கொடுத்துச் சமாதானம் செய்துகொண்டார். அதன பிறகு இராமராயரின் நிலை மிகச சிறந்திருந்தது

இந்நிலையில் முகமதிய அரசர்கள இந்து அரசரான இராமராயரின் வளர்சசியைக் கண்டு அஞ்சினர். இராமராயர் செலவாககுடனும் வலிமையுடனும இருப்பது தங்களுக்குத் தீமையாக முடியும் என நினைத்தனர். விசயநகரப் படைவீரர்கள அகமதுநகர் மீது படையெடுத்தபோது முகமதியர்களைக் கடுமையாகத் தாக்கினர். அதறகு வஞ்சம் தீர்த்துக் கொள்ள விரும்பினர். தஙகள வேறறுமைகளை மறநது பீசபபூர், கோல்கொண்டா, அகமதுநகர், பீடார மனனர்கள ஒனறுசேரநது நாலவர் கூட்டணி ஒனறை ஏற்படுத்தினா. பேரார் சுல்தான மட்டும இதில சேரவிலலை.

கூட்டணிப் படை, கிருட்டிணா நதிக்கு வடக்கே சுமார் 35 கி மீ. தொலைவிலுள்ள தலைக்கோட்டை என்னும சிறிய நகருக்கு, கி.பி. 1564–ஆம் ஆணடு திசம்பர் 26–ஆம் நாள வந்துசேர்ந்தது. ஆனால, உணமையில் கிருட்டிணா நதிககுத் தெற்கே 19 கி மீ தொலைவிலுள்ள இரு கிராமஙகளுக்கிடையே (இரக்குசசி–தஙகாடி) சணடை நடந்ததால் இச்சணடைக்கு இரக்குசசி–தங்காடி எனற பெயரும் உண்டு.

எதிரிகள் பெரும்படையுடன் வருவதைக் கேள்விபபட்டு இராமராயரும் போருக்கு வேணடிய ஆயத்தஙகளுடன் வந்தார். இரு தரப்பினரின் படைகளும் பணடைய முறையில் அணிவகுத்து நின்றன. தக்காண சுல்தான்களின் படை அணிவகுப்பில் அலி அதில்சா வலப்புறத்திலும், உசைன் நிசாம் சா நடுப்பகுதியிலும், இப்ரகீம் குதுப்சாவும் அலி பரீத்தும் இடப்புறத்திலும் தலைமை தாங்கினர். துப்பாக்கி வீரர்கள நடுப்பகுதியில் இருந்தனர். விசயநகர அணிவகுப்பில் மையப்பகுதியில் இராமராயருமு, வலப்பகுதியில் இராமராயரின சகோதரர் வெங்கடாத்திரியும், இடப்பகுதியில திருமலாவும் தலைமை தாங்கினர். போர் கி.பி. 1565–ஆம் ஆணடு சனவரி 23–ஆம் நாள் செவ்வாய்க்கிழமை தொடங்கியது. இரு தரப்பினரும் மிகக் கடுமையாகப் போரிட்டனர். அப்பொழுது இராமராயருக்காகப் போரிடட இரு முகமதிய படைத்தளபதிகள் இராமராயரைக் கைவிட்டனர். இராமராயர் எதிரிகளிடம் பிடிபட்டுக் கொல்லப்பட்டார். பீதியுற்ற இந்துப் படைவீரர்கள் நாற்புறமும்

ஓடலாயினர். வெற்றி பெற்ற வீரர்கள் ஓடி வந்தவர்களைத் தொடர்ந்து கொன்றுகொண்டே விசய நகருக்கு வநதனர். இப்போரில் சுமார் நூறாயிரம் வீரர்கள் கொல்லப்பட்டனர். முகமதிய அரசர்கள தங்களுடைய போர்வீரர்கள போரில் கவரும பொருளகளைத தாங்களே வைத்துககொள்ளலாம என்றதனால முகமதிய வீரர்கள விசயநகரததை வரலாறு காணாத அளவிறகு அடியோடு அழித்தனர். சீரும் சிறப்பும் பெற்றுச் செலவங் கொழித்த விசய நகரம் தரைமட்டமாகியது.

இத்தலைககோட்டைப் போா இநதிய வரலாற்றில் நடநத மிக முககியமான போர்களுள ஒனறாகக் கருதப்படுகிறது. இது விசயநகரப பேரரசின படைவலிமையை அடியோடு அழிததது; இழந்த புகழை மீடக முடியாத அளவிறகு அழிவும ஏற்பட்டது. இபபோர் தக்காணத்தில் தலைசிறநது விளஙகிய இநதுப பேரரசின் ஆட்சிக்கு முறறுப்புளளி வைத்தது. அ.சி.

**துணை நூல்கள்:**

**Majumdar, R.C.**, (Ed.), The History and Culture of the Indian People, Vol. VII. The Mughal Empire, Bharatiya Vidya Bhawan, Bombay, 1974.

**Sathianathaiar, R.**, History of India, Vol. II, S. Viswanathan (Printers and Publishers) Pvt. Ltd., Madras, 1976.

**தலைத்தக்கோலம்:** கிரேக்க நாட்டு நிலவியல அறிஞரான தாலமி தககோலத்தைப் பற்றிக் கூறுகின்றார். அவருடைய குறிப்பில் இது 'தகோலா' என்று குறிக்கப்பட்டுளளது. மலேயாவின் மேற்கரையில் கிராபூசநதிக்குத்(Isthumus of Kra) தெற்கே தகோபா மாநிலத்தின் தலைநகராகத்தகோபா என்னும் நகரம் உள்ளது. இந் நகரமே பழைய தலைத்தககோலமாகும் என்று அறிஞர்கள் கருதுகினறனா. அகில வகைகளில் அருமணவன், தககோலி, கிடாரவன் என்பன சிலப்பதிகார உரையில அடியாரககு நலலாரால் கூறப்பட்டுள்ளன. அவறறுள 'தக்கோலி' எனபது தக்கோலத்திலிருந்து தமிழ் நாட்டிற்கு அக்காலத்தில் இறக்குமதி செய்யப்பெற்ற அகில என்று கருதப்படுகினறது. எனவே அவ்வூர் தமிழ்நாட்டுடன தொடர்புகொணடிருநதது என்பது விளங்குகினறது. இத் தக்கோலத்தை முதலாம் இராசேநதிரன வெற்றிகொண்டு தன்னடிப்படுத்தினான் என்று கல்வெட்டுகள் கூறுகினறன. தி.சு.

**தலைமை:** சமூகம் என்பது ஒன்றுடன் ஒன்று தொடர்புள்ள பல மக்கள் குழுக்களைஉள்ளடக்கியது ஆகும். இம் மக்கள் குழுக்கள யாவற்றுள்ளும் தலைமை (Leadership) எனபது முக்கியமானதும மிகச் சிக்கலானதுமான ஒரு செயலாகும். இது ஒரு குழு நிகழச்சியாகும். இது ஆதிக்கம்-பணிவு என்னும் இயல்பூக்கங்களைச் சார்ந்து நிற்கிறது. இதை அனைவரும் ஏற்கும்வகையில விளக்குவது எளிதனறு. ஏனெனில் இதைப்பற்றிய கருத்து வேறுபாடுகள பல உணடு.

ஒவவொரு மனிதனும் சமூகத்திலுளள குழுக்களில் ஓர் உறுப்பினனாக இருந்து அவற்றின செயலகளில் பங்குகொளகிறான ஒருகுழுவிறகும அதில் அங்கம் வகிக்கும் மனிதனுக்குமுள்ள தொடர்பு இரு சார்புடையது ஆகும். தனி மனிதன குழுவைச் சாரநது நிற்கிறான்; குழுவின் செல்வாக்கினால அவனுடைய நடத்தையும் மாறுதலடைகிறது. தன்னுடையதனித்தனமையை மறந்து குழுவிற்குள் இணைநது அதன சொற்படி அவன நடக்கிறான. இவவாறே சில சமயஙகளில் தனி மனிதர்களும் குழுக்களைத் தஙகள் கட்டுப்பாட்டுக்குள கொணாந்து அவறறின்மேல ஆதிககம் செலுததுகின்றனர். குழுவின் சிந்தனைகளையும், உளளக் கிளர்ச்சிகளையும, செயலகளையும் தஙகள் இசைசைப்படி இவர்கள உருவாக்குகினறனர். இவ்வாறு குழுககளினமேல ஆதிககம செலுத்துபவர்கள் அக் குழுக்களின தலைவர்கள் எனப்படுவர்.

குழுக்களுக்குத் தலைவர்கள ஏற்படுவது இயற்கையாகும். ஒனறுபட்டு ஒரு குழுவாகப் பலா தம்மை அமைத்துககொள்ளும்போது அக குழுவைக் கட்டுப்படுத்திஇயஙகவைக்கத் தலைவர்கள தாமே தோனறுவர். தலைவனால குழு நடத்தையைத் தோற்றுவிககவும்,அதைத் தான நினைத்தவாறு மாறறியமைககவும் இயலும். ஆனால், பின்பற்றுவோர் இல்லையேல் தலைவன் என்றொருவன இருக்கவியலாது. குழுககளில் காணப்படும பினபறறுவோர்கள மூவகைப்படுவர் என்று சில சமூகவியலறிஞர்கள குறிப்பிடுகினறனர். அவர்கள 1) இயல்பாகப் பின்பறறுவோாகள. இவர்களுக்குத் தாமே செயறபடும் ஆற்றல் மிகக குறைவு. 2) ஆக்கப் பண்புமிகக பினபற்றுவோர்கள. இவர்களிடம் தலைமை தாங்குவதறகான பணபுகள் பல இருபபினும் தாமே முன்னினறு பொறுப்பேறகத் தயங்குவர். தலைவர்களுடைய வலக் கரங்களாக இவர்கள செயற்படுவர். 3) வேறுசிலர் தமக்குத தலைவனைப் பிடித்திருக்கிறது எனற காரணத்தினாலோ அத்தலைவனைப் பின்பற்றுவது தமக்குச் சில நனமைகளை அளிக்கக்கூடும் எனபதனாலோ பினபற்றுவோர்களாக இருப்பா. ஒரு குழு திறம்படச் செயலாற்றவும், உயர்வாக அமையவும் அதறகொரு தலைவன் இனறியமையாதவனாகிறான். தலைவன குழு வாழ்க்கையின் 'மையம்' போன்றவன். இவன் மற்றவர்களைத் தன் வழியே நடத்திச் செல்கிறான்.

தன் குழுவின் தேவைகளைத் தன்னுடைய ஆற்றல் மூலம் வெளிப்படுத்தி அவற்றை நிறைவேற்ற முயலு பவனும் இவனே.

தலைவருள் சிலர் பிறப்பிலேயே ஆற்றல மிகக வர்களாக இருப்பர். தலைமை எய்துவது இவரைப் போன்றவர்களுக்கு மிக எளிது. வேறு சிலர் அரிய உழைப்பின பயனாகத் தலைமைப் பதவியை எய்து கின்றனர். எப்படியிருப்பினும் தலைவன் என்றொரு வனிருந்தால் அவனிடம் அக்குழுவின பிற உறுப்பினர் கள் போற்றும் பல பண்புகள் இருக்கும் தலைவன் தன் குழுவில் ஒரு சாதாரண உறுப்பினனலலன். பெருமைபடைத்த, மதிப்புமிக்க உறுப்பினனாவான்; இப்பெருமையினாலேயே அவனால் பிறரைத்தனவழிக் குக்கொணர்தல் எளிதாகிறது ஒரு தலைவனின் பணபு களே பெருமளவு அவனை அந்நிலைக்கு உயர்த்தி குழுவை மேற்பார்வையிட்டுக் கட்டுப்படுத்தும் திறனை அவனுக்கு அளிக்கினறன.

**தலைமைக் கோட்பாடுகள்:** தலைமைப் பதவி எவ் வாறு ஒருவனுக்கு அமைகிறது என்பது பற்றிப் பல கோட்பாடுகள் சமூகவியலில காணபபடுகின்றன. அவற்றுள் முக்கியமானவை பின்வருவனவாகும்: 1) தலைவனிடம் பல்வேறு சிறப்பான ஆளுமைப் பண்பு கள் இணைந்து சமநிலையில் காணப்படும். இச் சம நிலையே அவனைத் தலைமை தாங்கத தகுதியுள்ள வனாக்குகிறது. 2) தன்னிடமுளள உளச் சக்திகளனைத் தையும திரட்டிக் குவித்துச் செயற்படும் ஆற்றல் மிகுந்திருத்தலால் ஒருவன தலைமையை அடைகி றான். 3) பின்பற்றுவோரிடததில் காணப்படாத சில பண்புகளைப் பெருமளவில் பெற்றிருத்தலே தலைமைப் பதவியை அவன் அடைவதற்குக் காரண மாக அமைகிறது. 4) குழுவை எதிர்நோககியுள்ள பல்வேறு புதுச் சிக்கல்களை எளிதில் தீர்ககவல்லவனே தலைவனாகிறான். 5) தன்னிடமுள்ள ஒரு குறை பாட்டுக்கு ஈடுகட்ட வேறொரு துறையில் ஆர்வமுடன் செயற்படுவதன் மூலம் ஒருவன் அத்துறையில் தலை மையடைகிறான. 6) தம் தந்தையின் நிலையில் வைத்துத் தலைவன் பிறரால் பினபற்றப்படுகிறான் எனப் பிராய்டு (Freud) கருதுகிறார்.

**தலைமைக்குத் தேவையான சில பண்புகள்:** பல தலைவர்களை ஒப்புநோக்கினால அவர்களிடம் சில பொதுவான பண்புகளையும், குணங்களையும் காண லாம். ஒருவனிடம் குறிப்பிட்ட பண்புகளிருப்பின் அவன் நிச்சயமாகத் தலைவனாவான் என நினைத் தல் தவறாகும். இக்காலச் சமூகவியலறிஞர்கள் பண்புக்கோணத்திலிருந்து தலைமையை நோககாமல், நிலைக்களக் கோணத்திலிருந்து நோக்கி அறிய முற்படு கின்றனர்.

தலைமை என்பது தலைவன் என்னும் ஒரு தனி மனிதனுடைய சிறந்த பண்புகளால் மட்டும் ஏற்படுவ தன்று என்றும், அது ஒரு குழுவின் இப்போதைய நிலை யைப் பொறுத்த பயன் என்றும் கருதும் இக்கருத்து வலியுறுகிறது. குறிப்பிட்ட ஓர் ஆளுமைப் பண பினையோ இணைந்த பல ஆளுமைப் பணபுகளையோ பெற்றிருத்தலினால் மட்டுமே தலைமை எழுவதில்லை. ஒரு நிலைமையில் எல்லா உறுப்பினர்களிடமிருந்தும் தேவைப்படும் ஒத்துழைப்பைப் பெறக்கூடிய சமூகத் தொடர்களிலிருந்தே தலைமை எழுகிறது. உலகத்தி லுள்ள மக்கள் அனைவருமே தலைவர்களாக மாட் டார்கள். சமூக மாற்றங்களையும் முன்னேற்றத்தை யும் சிறந்த தலைவர்கள் தோற்றுவித்துள்ளனர் என்பது உண்மையே. எனினும், வரலாற்றுச் சூழ் நிலை அவர்களுக்கு ஏற்றதாக அமைந்திருந்தால்தான அவர்களால் இவற்றைச் சாதிக்கமுடியும். வரலாற்றுச் சூழ்நிலை சரியாக அமையாததால் சிறந்த மேதை களும் தம்மைப் பின்பற்றுவோரின்றித் தலைமை நிலையை அடைய முடிவதில்லை. குழுவின் நிலைமை மாறுபட்டால் தலைமைப பதவிக்குத் தேவைப்படும் பணபுகளும் மாறுபடும்; தலைவர்களும் மாறலாம். எப்படி இருப்பினும் ஒரு நல்ல மாணபுடைய தலைவன் பொதுவாகப் பினவரும் பணபுகளைப் பெற்றிருப்பான. அவை பின்வருவன:

1) ஒரு நல்ல தலைவன் பொதுவாக அறிவாற் றல் மிக்கவனாக இருப்பான. அவ்வாற்றல் நூலறி வால் அமைவதுண்டு; அல்லது இயற்கையிலேயே உள்ள நுணணறிவால் அமைவதுண்டு. எந்த அளவு அறிவாற்றல் தலைவனிடம் இருக்கவேண்டும் எனபது அவன் நடத்திச்செல்லும் குழுவின் பொது அறிவு நிலையைப் பொறுத்தது (Relative to the Group). பொதுவாகத் தலைவர்கள் தம்மைப் பின்பற்று வோரைக் காட்டிலும் நுண்ணறிவு மிக்கவர்கள். ஆனால், தலைவர்களுடைய நுண்ணறிவு பின்பற்று வோருடைய சராசரி நுண்ணறிவைக் காட்டிலும் மிகவும் அதிகமானதாக இருப்பின அவர்களிடையே தலைமைத்தொடர்பு எழாது என கிப்பு (Gibb)என்ற அறிஞர் குறிபபிடுகிறார்.

2) ஒரு நல்ல தலைவனிடம் அறிவுத் திறனுடன் பல நல்லொழுக்கப் பண்புகளும் அமைந்திருக்கும். நேர்மை, வாய்மை, பிறர் நம்பிக்கை வைக்கக்கூடிய நடத்தை, துணிவு, சூழ்நிலைக்குத் தகுநதவாறு செய லாற்றும் அறிவு நுட்பம், தற்பெருமையினமை, பிறர் நலனில் அக்கறை முதலியன அப்பண்புகளில் சில.

3) சிறந்த தலைவனிடம் போதிய உடல் வலு, உறுதி மனப்பான்மை, தொல்லைகளையும் எதிர்ப்பு

களையும் தாங்கும் திடம், தொடங்கியது முற்றிலும் முடிவு பெறும்வரை அயராமை, தனிப்பட்ட முறையிலும் குழு உறுப்பினர்களின மதிப்பினைப பெற்றிருத்தல், பொறுமை, நெகிழசசி ஆகிய பணபுகளும் அமைந்திருக்கும.

4) ஆதிகக மனப்பான்மை மட்டும் தலைமையை நிலைநிறுத்தப் போதாது. பின்பறறுவோரின் தேவைகளை உணர்ந்து அவாகளின ஒத்துழைப்பைப் பெறும் ஆற்றலும் தலைவாகளிடம இருததல வேணடும். முரட்டு ஆதிக்க மனப்பான்மை கொணட தலைவனுக்குத் தனனுடைய குழுவினரிடமிருந்து எதிாப்புத்தான தோன்றுமேதவிர ஒத்துழைபபுக் கிட்டாது. வெறறியுடன தலைமை தாஙகும ஒருவன தன்னைப பினபற்றுவோரின் மனப்போககுகளை அறிநது அவர்களையும் கலந்தாலோசிதது அவர்களுடைய தேவைகளுககேற்பச் செயறபடுகிறான. எனவே, யாருககுத தலைமைதாங்க விழைகிறானோ அவர்களை ஒரு வழியில் தலைவனே பினபற்றுகிறான.

'ஆதிக்க மனப்போக்கு, துணிநது துரிதமாகச் செயலாற்றும் திறன, சொல வன்மை, எடுத்த செயலை முடிக்கும் திறன, மனவெழுசசிப் பெருக்கம், பிறரிடம் பரிவு, பிறருடன் சேர்நது செயலாற்றும் திறன், பிறரைச் செயறபட வைககும் திறன, அளவற்ற சக்தி பினநிற்பது போனற அடக்கம ஆகியவையே உண்மைத் தலைவனிடம் காணப்படும் பணபுகள்' என ஆலபோர்ட்டு (Allport) எனற அறிஞர் கூறுகிறார்.

**தலைவன் ஆற்றும் பணிகள்:** ஒரு தலைவன தான தலைமைதாஙகும் குழுவிற்காக ஆறறும பணிகள் பலவாகும. குழுக்கள எத்தகையனவாயிருப்பினும் அவற்றின தேவைகள் எத்தனமையனவாயிருப்பினும் அவற்றின தலைவர்களால் கீழே குறிப்பிடபபடும் பணி யாவற்றையும் ஓரளவேனும் ஆற்றவேணடிய தேவை எழும எனறு கிரச்சு (Krech), கிரட்சுபீல்டு (Crutchfield) ஆகிய அறிஞர்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

தலைவன் தன் குழுவைத் திட்டமிட்டு முன்னேற்றப் பாதையில் நடத்திச் செல்கிறான். மாறுபட்ட கருத்துடைய குழு உறுப்பினர்களின ஒத்துழைப்பையும் பெற முயலகிறான. முனனேறறததிற்கான கொள்கைகளை உருவாக்கி வேலைகளைத் திட்டமிட்டு, பாகுபடுத்திப் பலரிடம் ஒப்படைக்கிறான். பலருடைய செயல்களை இணைத்து நெறிப்படுத்துபவனும் தலைவனேயாவான். தலைவனே குழுவிலுள்ள நிபுணன்; அதன் வழிகாட்டி; அதற்கு அறிவுரை வழங்குபவனும் அவனே. குழு மேற்கொளள வேணடிய வழிகளைத் தானாகவோ பிறருடன கலந்தோ வகுப்பவன் தலைவனே. குழுவின நடத்தைத தரம கெடாமல காப்பதும் அவனுடைய பணிகளுள் ஒனறாகும்.

தனனுடைய குழுவிறகும் பிற குழுக்களுக்கும் இடையே எவவாறான தொடர்புகள் ஏற்படவேணடுமென்பதை நிருணயித்து அவற்றைத் தோறறுவிகக முயலுவதும் தலைவனுடைய பணியாகும். குழுவினுள சணடைகளும், சச்சரவுகளும் எழுநதால தலைவன் அவற்றை அகறற முயறசி மேறகொள்கிறான்.

**தலைமையின் வகைகள்:** தலைமை பலவகைப்படும். இயறகையாகவே ஆளப்பிறந்தவர் சிலா உளளனர். வேறு சிலர் உழைப்பால் அநநிலைககு உயருகிறார்கள். சமூகத்தினால அளிககபபட்டதாகவோ, தன்னாலேயே பெறப்பட்டதாகவோ தலைமை அமையக்கூடும. பணடைய சமூகங்களில் சாதி, மரபு, செலவம் போனறவற்றினின்றும் எழும மதிப்பு ஒருவனைத் தலைமைப் பதவிக்குத தகுதியுடையவனாககியது. ஆனால் இனறைய முறபோககுச் சமூகங்களில் ஆற்றல், அருமபெரும பணிகள ஆகியன கொண்ட ஒருவனே தலைமைநிலையை அடைய இயலும். அவ்வாறு அடைவதறகும் குழுவின் பிற உறுப்பினர்களின் ஒப்புதல் தேவைப்படுவதாகும். தம் தொழில்நுட்ப அறிவினாலும், திறனாலும் சிலர் தலைமைப் பதவி பெறுகினறனர். இது 'அறிவுத் தலைமை' எனப்படுகிறது. தோறறம், சொல்வன்மை ஆகியவற்றால் தலைமை அடைந்தோரும் உணடு. இத்தகைய தலைமை 'விருப்பத் தலைமை' எனபபடும். இந்த இருவகைத் தலைமைகளில் முன்னது பின்னதைவிட நிலையானது.

தலைவர்களில் தன்னிசசைத் தலைவர்களும் உணடு; குடியாட்சித் தலைவர்களும உணடு. தன்னிசசைத் தலைவர்கள் பிறரை மிரட்டித் தம் நிலையைக் காத்துக கொள்கினறனர். ஆனால குடியாட்சித தலைவர்கள் தம்மவரால் தேர்ந்தெடுக்கப்பட்டவாகள்; தம்மைப் பினபற்றுவோரைத தாம் செய்யத் தூணடுபவைகளுக்குக் காரணம காட்டி ஒபபுககொளளச் செய்பவர்கள். இவவிரு தலைமைகளில குடியாட்சித் தலைமையே சிறந்தது என கர்ட்டு இலெவின் (Kurt Lewin), ஆணடர்சன் (Anderson) போன்ற அறிஞர்களின் ஆய்வுகள் தெளிவாக்குகினறன. எதேச்சாதிகாரத் தலைவனும் பெரும்பாலும் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவனாகவே தன்னுடைய தலைமையைத் தொடஙகுகிறான். ஆனால் காலம் செல்லச்செல்லத் தன் ஆற்றல் தரும் மயக்கத்தில் தன் விருப்பப்படி செயற்படுகிறான்.



அதிகார வருக்கத் தலைமை

தலைமை நோமுகமாகவோ, மறைமுகமாகவோ செயறபடக்கூடும் தலைமையில்'நிருவாகத தலைமை, கிளர்சசித் தலைமை என இருவகை உணடு. தலை வருள சிலர் பழமைபபற்று மிககவாகள், வேறு சிலா புரட்சி வேணடுப்வாகள. இத்தகையோா பழமை யினால கணட பலனகளையும புறககணிதது மாறு தல்களை உணடாக்க விழைபவர்கள.

இவ்வாறே மசும்தார் (Mazumdar) இதை மரபு சாாநத தலைமை, அதிகாரவருககத் தலைமை,கவர்ச் சித் தலைமை என வகைப்படுததுகிறார்.மரபுசாாநத தலைவா மரபுவழியில தாம பெறுகினற தகுநிலை யின அடிபபடையில அதிகாரததைப் பெறுகிறாா. இந்துச சமூகததிலுளள பாாபபனாகளின தலை மையை இதறகு எடுத்துககாட்டாகக கூறலாம. அதி கார வருக்கத் தலைவா தம் அதிகாரததை உறுப



கவர்ச்சித் தலைமை

பினர் குழுவின்மூலம பெறுகினறாா. அதாவது, தோ தலின மூலமோ நியமனததின மூலமோ பெறுகிறாா ஆனால் கவர்சசி சாாந்த தலைவா தனனுடைய சிறபபான ஆறறலாலும, நறகுணஙகளாலும, வீரப பணபுகளாலும மககளைக கவர்நது அதிகாரததைப பெறுகிறாா. இட்லா, காநதியடிகள, எம ஜி. ராமச சந்திரன் முதலானோா இத்தலைமைககு எடுததுக காட்டாவர். பூ த

**துணை நூல்கள்:**

**Bogardus**, Sociology, Macmillan, NewYork, 1965.
**Gisbert, P**, Fundamentals of Sociology, Orient Longmans Ltd, Bombay, 1965.

**Krech, D, and Crutchfield, R.S**, Theory and Problems of Social Psychology, Mc-Graw Hill Book Co., New York, 1979.

***தலைமைப் பயிற்சி***. நாட்டில ஒவ்வொரு குடிமகனும தனனுடைய கடமையை நனறாகச செய யும் பொழுதுதான அது ஒரு குடியரசாக இருககமுடி யும். கலவி மிகசசிறநத தலைவர்களை உருவாககும வலலமையும், தனமையும படைததது. சமூகததுறை, அரசியல துறை, தொழிறறுறை, கலவிததுறை, பண பாட்டுததுறை போனற வறறிற்கு ஏறற தலைவா களைக் கல்வியால உருவாககமுடியும. எனவே, 'தலை மைப பொறுப்பை ஏறபவாகளுக்குத் தலைசிறந்த கல்வியை அளிககவேணடிய தேவை உளளது மேலும் நலலமுறையில தொழில புரியவும மேனமைமிகக குடி மகனாக விளஙகவும, தனமைகளையும, திறமைகளை யும் பயனபடுத்தி வாழககையை நடததும தனனம பிககை குடிமககளுககு இருககவேணடும தலைவாகள் தம்முடைய காரியஙகளில முன்னோககிச் செயலபுரிய வும, வெற்றியை எட்டிப் பிடிககும தகுதி உடையவர் களாகவும் விளஙகிட உரிய பயிறசி கொடுபபது நனமை பயககும.

**தலைவனின் தனிப் பண்புகள்:** தலைவன என்பவன தன உடனுள்ளோரைப பற்றி நனகு தெரிநது கொண்டவனாகவும் நலலுறவை ஏறபடுததும் பணபு களை உடையவனாகவும் இருததல நலம பயககும. எந்த ஒரு சிககல ஏறபடினும் சிறந்த அறிவு நுட்பத் துடன அதனை அணுகி அந்தச் சிக்கலைத தீாகக வேணடும். மற்றவர்களுடன சமமாகப் பழகும நோக்கம் கொணட தலைவன, மறறவர்களுடன சேர்ந்து விவாதிக்கும்பொழுது நலல வரைமுறை களினபடி நடத்திசசெலல வேணடும் முடிவில் அனைத் துக் கருத்துகளையும் தொகுத்துச் சொலபவராகவும்

செயற்பட வேண்டும. தலைவன் சிறந்த கருத்துகளை உடையனவாகவும் சொல்வன்மை உடையவனாகவும் இருககவேண்டுமென எதிர்பார்ககப்படுகிறான். மனித நேயப் போக்கோடு தலைவன மறறவர்களுக்கு உரிய நலல மதிபபைத் தரவேணடும்.

மேலும், உடனுளளோர்பால் ஒற்றுமை மனப் பான்மையையும் சிறந்த ஒருமைப்பாட்டையும் வளர்க் கும் கடமையும் தலைவனைச் சாரும். கருத்துகள எலலோரும் ஏற்றுக்கொளளக் கூடியவையாக இருத் தல் வேணடும ஏதேனும கருத்து வேறுபாடு இருந் தாலும அதைத தெளிவுபடுத்திப் புரிநதுகொளளச் செய்யலாம. முனனேற்றத்தையும் வெற்றியையும் தேடுவதில முழு குழுவும் முனைப்பாகச் செயறபட வேணடும.

ஆனால், தலைவர்கள அதிகாரப போககுடைய தலைவாகளாக இருத்தல கூடாது. அதிகாரப் போக் குடைய தலைவர்கள தம்முடைய கருத்துககும்செயல களுககுமே முதனமை கொடுப்பார்கள. சில சமயங் களில தலைவாகள செயல்களைநிறைவேறறுவதையே குறிககோளாகக் கொளவதால் மனிதநேயப் போக் கைக கடைப்பிடிக்காதவாகளாகி விடுகிறாாகள. ஆனால், அன்பும மனிதநேயப் போக்கும் இருககும் பொழுதுதான் செயலகளைச் சரிவர நடத்த முடியும்.

வகுப்பறையிலும் கூட அதிகாரப் போக்குடைய வர்களிடம மாணவர்கள வெறுப்பையும பினவாஙகும போககையுமே காட்டுகிறார்கள. மாணவர்கள சிறுவர் களாய இருநதும்கூட அவாகளிடமும் அதிகாரப் போக்கினறிச சமமாகப் பழகுமபோது, ஆசிரியரிடத் தும்கல்வியிடததும் ஒரு விருப்பத்தையும், நாட்டத் தையும் நலல முறையிலான செயற்பாங்கையும் பாாக்க முடிகிறது. எனவே, ஆசிரியர்களபாடங்களை நடத்துவது எவவளவுமுக்கியமோ அவ்வளவு முக்கியம மாணவர்களிடம் நடந்துகொளவதும் முறையும் ஆகும். ஆசிரியர் மாணவா உறவே கலவியில் மேலான நிலைய அடைய ஏதுவானதாகிறது. ஆசிரியர்களின் தோறறமும் அவர்களின் பணபு நலனும் மாணவர் களுக்குக் கவர்சசியுடையதாக இருத்தல நல்லது.

அதிகாரப் போக்குடையவர்கள் தங்களின எண் ணஙகளையே மறறவர்கள பினபறறும்படி எதிர் பார்க்கிறார்கள. மாணவர்கள அடுத்த செயல்முறை என்னவென்று தெரியாத நிலைக்கு ஆளாக்கப்படு கிறார்கள். மாணவர்களுக்குச் சுதநதிரம், விருப்பம், செயலமுறையில் நாட்டம் ஆகியவைகளுக்கு இடமின றிப் போகிறது.

மற்றொரு வகையான தலைவர்கள திறமை மிக்கவர்களாகச் செயற்படத் தவறுகிறார்கள். குழுத் தோழர்களைக் கட்டுப்பாட்டுடனும் கணடிப்புடனும் அவர்தம் வெற்றியும் நோக்கி நடததிச் செலலத் தவறுபவர்களாகிறார்கள். மிகுந்த சுதநதிரம் கொடுப் பவர்கள், தலைவர்கள் எடுக்கவேணடிய முடிவைக் குழுக்களின் உளளோர் பக்கமே விட்டுவிடுவதால் குழப்பமும், ஒற்றுமையின்மையும் ஏற்படுகினறன.

கே.ஆ.

**தலைமை வங்கித் திட்டம்:** இநதியாவில் 14 வணிக வஙகிகள் நாட்டுடைமையாக்கப்பட்டபின், வங்கி முறையைக் கிராமஙகளுக்கு நீட்டிக்க கிளை விரிவாக்கத் திட்டம் ஒனறு எதிர்பார்க்கப்பட்டது. அதனைக் கருத்தில கொணடு பேராசிரியா காட்கில (D.R. Gadgil)தலைமையில் 1968-ஆம் ஆணடு தேசிய கடன் ஆராய்ச்சிக்குழு(National Credit Council Study Group) முதலில் கிளைகள் ஏறபடுத்துவதறகான இட அமைப்பு பற்றிய சாத்தியக் கூறுகளைக்கண்டறிந்தது. அதன்படி தேசிய மயமாக்கப்பட்ட வஙகிகள, உள் நாட்டு வேளாணமை, சிறு தொழில்களின உற்பத்தி ஆற்றல் ஆகியவற்றை மிகுதிப்படுத்தும் எணணத் தோடு இடஙகளைத் தேர்நதெடுத்துச் செயறபடுத்த வேணடும். அவ்வகைப பணிக்கு இநதிய மைய வஙகி யின் ஆளுநர், 1969-இல் நாரிமன (F.K.F. Nariman) தலைமையில் வங்கியாளர் குழு ஒனறு அமைத்துத் தேவையான வங்கி வசதிகளை,வஙகி வசதி குறைவா யுள்ள மாவட்ட, வட்டாரப்பகுதிகளுக்கு ஏற்படுத்து வது பற்றிய திட்டம் ஒன்றை வகுத்துக் கொடுக்கப பணித்தார். அதன அடிப்படையில் இக்குழு தனது அறிக்கையைக் காட்கில் குழுவின அறிக்கையை ஒட் டியே இந்திய மைய வஙகியிடம் அளித்தது.

இதன்பின்னர் இந்திய மைய வஙகி, நாட்டின் 380 மாவட்டஙகளுக்கான தலைமை வஙகித் திட் டத்தை (Lead Bank Scheme) 1969-ஆம் ஆணடு இறுதியில் ஏற்றுக்கொணடது. பாரத மாநில வஙகியும (State Bank of India) அதன் கிளைகளும், நாட்டு டைமையாக்கபபட்ட 14 வணிக வங்கிகளும், 3 தனி யாா வங்கிகளும் ஆகியவற்றிற்குத் தனித்தனியாக மாவட்டஙகள் ஒதுக்கப்பட்டுத் தலைமை வஙகியாகச் செயறபட கேட்டுக் கொள்ளப்பட்டன. மாவட்டங களை ஒதுக்குவதறகுச் சில அடிப்படைக் காரணிகள குறிக்கப்பட்டன. அது வஙகிகளின் அளவு, வங்கிப் பணிகளை ஏற்று நடத்தத் தேவையான நிதி, மாவட் டஙகளின் தன்மை, ஒரு தலைமை வங்கிக்கு மேல் செயறபடும் மாநிலஙகளின தேவை போன்றவற்றை உளளடக்கிய திட்டமாகச் செயல்பட்டது.இததிட்டத் தின் கீழ் 25 வஙகிகள நாட்டின எல்லா மாவட்டங் களிலும் விசாரணை நடத்தி வஙகிகள அமைப்பதற்

குரிய ஏதுக்களை வளரச் செய்யும் பணிகளை ஏற்றுக் கொண்டுள்ளன.

**தலைமை வங்கித் திட்டத்தின் கொள்கைகள்:** ஒவ்வொரு தனி வங்கியும் ஒரு தனி மாவட்டத்தை ஏற்று, அதனுடைய தீவிர வளர்ச்சியில் பங்கு கொள்வதே அடிப்படை நோக்கமாகும். தலைமை வங்கிகள் ஆங்காங்கே மாவட்டங்களிலுள்ள கூட்டுறவு வங்கிகள, வணிக வங்கிகள் பிற நிதி நிறுவனங்களின பணிகளை ஒருங்கிணைத்துச் செயற்படுத்தும் தலைமைப் பொறுப்பை ஏற்று, மாவட்டங்களின் முன்னேற்றத்தில் அக்கறை கொண்டு விளங்க வேண்டும் என்பது எதிர் பார்க்கப்பட்டது. மேற்கொண்ட விசாரணைகளைப் பயன்படுத்தி அப்பகுதிகளின வைப்புத்திறன், கடன் இடைவெளி போன்றவற்றைக் கணக்கிட்டு வைப்புத திறனை மிகுதிப்படுத்தி, கடன் இடைவெளியைக் குறைக்க முயற்சி செய்யவேண்டும்.

தலைமை வங்கி ஒரு குறிப்பிட்ட வட்டாரத்தோடு கொண்டுள்ள நெருங்கிய தொடர்பினால், அப் பகுதியின் வைப்புத் திரட்டப்படுவதோடு, வேளாண்மை, சிறு தொழில் விரிவாக்கத்திற்குத் தேவையான நிதி அளிப்பதற்கும்பயன்படுகின்றது. இவ்வகையான பணிகளில் ஈடுபட்டுள்ள தனி வங்கிகள தாங்கள எடுத்துக் கொண்ட பகுதிகளைப் பற்றிய விரிவான விசாரணைகளை மேற்கொண்டு, அப்பகுதியின் வளத்தை எவ்வாறு பயன்படுத்த இயலும் என்பது குறித்துத் திட்டங்கள் வரைந்து, அவற்றை வட்டார வளர்ச்சியோடு செயற்பட வைக்க வேண்டும். இவ்வகைத் திட்டத்தின் மூலம் பின்வரும் சாதகமான விளைவுகள் எதிர்பார்க்கப்பட்டன: அ) நாடு முழுவதும ஒருங்கிணைக்கப்பட்ட கூட்டுறவை வணிக வங்கி அமைப்புகள் மூலம் செயற்படுத்தல், ஆ) வங்கி விரிவாக்கம், மேற்பார்வை, நெறிப்படுத்துதல் போன்றவை மிகவும் தேர்ச்சியுடையனவாக்குதல், இ) மாவட்ட அளவில் வணிக வங்கிகள், கூட்டுறவுக் கடன் நிறுவனங்கள் அரசு அதிகாரிகளுக்கிடையே நெகிழ்வுள்ள உறவுகளை ஏற்படுத்துதல், ஈ) கடன், வங்கிப் பணிகளைப் பிற பணிகளோடு நெருக்கி இணைத்தல், உ) மாவட்டங்களின் வளர்ச்சியில் காணப்படும் பெரும் இடர்ப்பாடுகளைத் தெரிந்தெடுத்துத் தலைமை வங்கி தகுதியான அமைப்புகளைத் தூண்டிச் செயலில் ஈடுபடுத்தி அவற்றின் குறைகளைத் தீர்க்க வழி செய்தல்.

**தலைமை வங்கித் திட்டத்தின் பணிகள்: விசாரணைகள்** (Surveys): இந்திய மைய வங்கியின் பரிந்துரையின்படி தலைமை வங்கிகள் ஒவ்வொரு மாவட்டத்தையும் பற்றிய விவரங்களைச் சேகரித்து, அதனடிப்படையில் வங்கிக்கிளைகளை ஏற்படுத்தி வைப்புகளைத் திரட்ட வேண்டிய பொறுப்பும் கடன் தொகைகளைப் பற்றி நிருணயிக்கும் பொறுப்பும் கொடுக்கப்பட்டன. அவற்றுள் மொத்த வைப்புகளின் அளவு, வளர்ச்சிக்கேதுவான வழி முறைகள் ஆகியவற்றைத் தெரிந்தெடுத்து அவை எவ்வாறு பொருளாதாரம் முதலிய துறைகளில் பயன்படுகின்றன என்பது குறித்தும் அறிய வேண்டியதாயிற்று. பெரும்பான்மையான தலைமை வங்கிகள் தங்களின முதல் சுற்று விசாரணையை 1970-இல் முடித்துக் கொண்டுள்ளன. மாவட்டங்கள் தோறும் ஆலோசனைக் குழுக்களை ஏற்படுத்தி அவற்றின் கூட்டத்தில நிலைகளில்லாத பகுதிகளில் மையங்கள் ஏற்படுத்த முடிவு செய்யப்பட்டது.

**மாவட்ட ஆலோசனைக் குழுக்கள்** (District Consultative Committee): இந்திய மைய வங்கியின் வற்புறுத்துதலுக்கேற்ப மாவட்டங்களில் ஆலோசனைக் குழுக்கள் அமைக்கப்பட்டன. அவை பினவரும மூன்று சிறப்பான பணிகளை மேற்கொண்டுள்ளன. அ) மாவட்டங்களில் கடன் தேவைப்பட்டோர்கள் முதன்மைத் துறைகளுக்குக் (Priority sector) கடன் அளிப்பது பற்றிய சில முக்கிய முறைகள் பற்றிக் கண்டுபிடித்து அவற்றை வங்கிகளிடையே பரிமாற்றம் செய்தல்; ஆ) அரசுத் திட்டங்களுடன மேலும் சில திட்டங்களை வகுத்து அவற்றுள வங்கியால் உதவக் கூடிய திட்டங்களைத் தேர்ந்தெடுத்து அவற்றிற்கு நிதி உதவி அளித்தல்; இ) முதன்மைத் துறைகளுக்கு நிதி அளிப்பதில் எழுகின்ற இடர்ப்பாடுகளைக் கண்டறிந்து அவற்றைத் தீர்க்கும் தீர்வகமாக அமைதல்.

ஆலோசனைக் குழுக்களின முக்கிய குறிக்கோள வங்கி வளர்ச்சியை மாவட்டங்களில ஏற்படுத்துவதாக உள்ளமையால், அக்குழுக்கள 'வங்கி வளர்ச்சியை அமுல்படுத்தும் மாவட்ட ஆலோசனைக் குழுக்கள்' என்று குறிக்கப்படுகின்றன. உதவி ஆணையர், அல்லது மாவட்ட ஆட்சித் தலைவர் அல்லது மாவட்ட நீதிபதி ஆகியோர் இந்தக் குழுக்களின தலைவர்களாக உள்ளனர். அவர்கள வங்கியின முதன்மை அலுவலர்களாக ஏற்றுக் கொள்ளப்பெற்று நிதி நிறுவனங்கள், அரசு நிறுவனங்கள ஆகியவற்றின உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளப்பெறுவர். ஆலோசனைக் குழுக்களின கூட்டம் ஒழுங்காக வருடத்தில மூன்று முறைகள கூட்டப்பட வேண்டும். மாவட்டக்கடன் திட்டங்கள, ஆண்டுப் பணித் திட்டங்கள ஆகியவை ஒழுங்கு செய்யப்பட்டு அவற்றை நிறைவேற்றும பணியை மாவட்ட ஆலோசனைக்குழு ஏற்றுக் கொள்ள வேண்டும்.

**மாவட்டக் கடன திட்டம்** (District Credit Plan): இது மூன்று முக்கிய துறைகளாகிய தொழில்,

வேளாணமை, வளர்ச்சி போன்ற துறைகளில் திட்டங் களைத் தீட்டி, உரிய காலத்தில் நிறைவேற்றுவதற் குத் தேவையான கடன் அளிப்பது பறறிய திட்டமா கும். இதனை உருவாக்கும்போது மாவட்ட வளர்ச் சித் திட்டம கருத்தில கொளளப்பெற்று உருவாக் கபபடும். முதன் முறையாக ஐந்தாண்டுத் திட்டக் காலததில் மாவட்டக்கடன் திட்டம் உருவாக் கப்பட்டது. அச்காலத்தில் வரையறுக்கப்பட்ட குறிக்கோளகளா கிடையா. தனிப்பட்ட தலைமை வஙகிகள் தாங்களாகச் சில வழிமுறைகளை வரை யறுத்துக் கொணடு தஙகள் மாவட்டங்களுக்குக் கடன் திட்டததை உருவாககின. இரண்டாவது சுற்று மாவட்டக கடன் திட்டம் தயார்செய்வதற்கு இந்திய மைய வங்கி 1980-82-இல சில 'ஒழுங்கு முறைகளை வெளியிட்டது. இதில் மாவட்ட அளவில் பெரும்பான் மையான நிறுவனஙகள் ஈடுபடுத்தப்பட்டன.

மேலும், ஆண்டுப் பணித் திட்டம் (Annual Action Plan) என்ற புதிய கொளகையையும் புகுத்தி யது. திட்டக் காலஙகளைச் சார்ந்து அறிமுகம செய யப்படும் தொடர் ஆண்டுப பணித்திட்டததின மூலம மாவட்டக கடன திட்டம் செயற்பட வேணடிய தாயிற்று. சுருங்கச் சொல்லின் ஆணடுப் பணித திட்டம் என்பது ஓர் ஆணடிற்கான மாவட்டக கடன திட்டமாகும். இவவகையில இரணடாம சுறறுத் திட்டம் 1982-ஆம் ஆணடு திசமபர்த திஙகளிலும, மூன்றாம் சுற்றுத திட்டம் 1983-85 ஆம் ஆணடிலும தயார் செய்யப்பட்டன.

இத்திட்டததைச் செயற்படுத்துவது அரசு நிதி நிறுவனங்களைச் சார்ந்ததாகும். கடன வழஙகுவது மாவட்டத்திலுளள பல நிதி நிறுவனஙகளின பொறுப பிலிருந்தது. மேலெழு நிலை வசதிகள, உதவித் தொகை வழஙகுவது போன்றவையெல்லாம் அரசு நிறுவனங்களின் கீழ் இருந்தன.

**தலைமை வங்கியின் குறைபாடுகள்:** தலைமை வஙகி குறைகளுடன் தொடஙகப்பட்டது. தலைமை வங்கியினைப் பற்றிய கொளகைகளும், பரப்பும் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டமையால் சரியாகச செயற்பட இயலவில்லை. இந்திய மைய வஙகி இத னைக் குறித்து எழுதும பொழுது குறிப்பிடுவது விசா ரணை பற்றிய குறிககோளகள் தவறாகப் புரிந்து கொளளப்பட்டமையால் மாவட்டத்தில தலைமைப் பொறுப்பு சிறப்பாக இல்லை. வங்கிகளிடையே தலைமை வங்கித்திட்டம ஒரு செயற்படும் குறிக் கோளுடன் காணப்படவில்லை. வஙகிக்குழு தலைமை வங்கித் திட்டத்தைப் பற்றி இரணடு மாறான கருத்து களைக் கணடறிந்தது. மாவட்டத் தலைமை வங்கி, மாவட்ட விசாரணையை மேற்கொண்டு, வங்கி செயலாற்றக் கூடிய பகுதிகளைக் கணடறிந்து, அதைப் பற்றிய பட்டியலை வங்கிககிளை தொடங்கு வதற்கு விருப்பம் உள்ளவர்களுக்குக் கொடுப் பது அல்லது தலைமை வஙகியே பிற வங்கி கள் செயற்படாத இடஙகளில் தலைமை வஙகிக் கிளைகளைத் தொடஙகுதல் போனறவை முதன்மை கருத்தாகத் திகழ்ந்தது. இரணடாவதாக, தலைமை வஙகி தனக்குக் குறிககப்பட்ட பகுதிகளில கிளை களை தொடஙக முழு உரிமை பெற்றிருந்தது. இவ் வாறான கருத்து வேறுபாட்டினால் தலைமை வங்கி யைப் பற்றிய பொருள, அதனுடைய தத்துவம், வளர்ச்சி போனறவை பாதிக்கப்பட்டன.

அருகிலுளள மாவட்டங்களையே வஙகிகள் எடுத் துச் செயறபடுத்த வேணடும் என்பது நடைமுறை யில் வெற்றி தரவில்லை. அறிமுகமில்லாத மாவட டஙகளும், மாநிலஙகளும் சில வட்டார வஙகிகளுக்கு ஒதுக்கப்பட்டன. பெரும்பாலான தலைமை வஙகி களால் வட்டார அளவில காணப்பட்ட இசசிக்கல களுககுத தனிக கவனம் செலுத்த இயலவில்லை. மற்றுமொரு இடையூறு, வட்டார வஙகிகள தஙகள் வங்கிப பணி மையஙகளிலிருநது தூரமான பகுதி களில தலைமை மாவட்டஙகள (LEAD DISTRICTS) அமைநதிருப்பதால் புதிய பணியாட்களை அவவிடங் களுககுப் பணியிலமர்த்தல, முனனரே உளளவாகளை இடமாறறம செய்தல் ஆகியவற்றிற்குச் சிரமம உணடாகிறது. அவவிடஙகளில் பேசபபடும மொழி களில் தேர்ச்சி இல்லாமலிருத்தல், பணபாடு கள, மக்களின் விருப்பு, வெறுப்புகள் போன்ற வற்றைப் பற்றிய அறிவில்லாமை (ignorance) போனற வறறால், வஙகித தலைமையகம், தலைமை வஙகி களை மேறபார்வையிடுதல, கட்டுப்படுத்துதல், நெறிப்படுத்துதல் போன்ற பணிகளை மேறகொண்டு சீரிய முறையில் செயல்படுத்த முடிவதிலலை. மேற சொனன இடாப்பாடுகளைத தவிர்க்க, மையப் பணி இடங்களுக்கு வெகு தூரத்தில் மாவட்ட வங்கிகள அமையாமல் பார்த்துக் கொளள வேண்டும்.

சரய்யா (R.C. Saraiya) என்பவர் தலை மையின் கீழ 1969-ஆம் ஆணடில் அமைக்கப்பட்ட வஙகிக்குழு, தலைமை வங்கிகள மாவட்ட விசாரணை மேற்கொளவதறகுத் தேவையான தகுதி பெற இல்லை எனறு குறிப்பிட்டிருந்தது. ஒருஙகிணைக் கப்பட்ட திட்டத்திற்காக மாநில அரசுகள் விசா ரணை மேற்கொணடு செயறபட வேணடும். வஙகிக் குழுத் திட்டம் செயற்படுத்துதலும், வங்கிப் பணி களும் வெவ்வேறானவை எனறு உறுதியாகக் கூறிற்று. எனவே, மாநில அரசுகள்தாம் மாவட்டஙகளின

வளர்ச்சியைப் பற்றித் திட்டமிட வேண்டும். தலைமை வங்கிகளுக்கு இவ்வகைப் பணிகளில் பங்கில்லை என்று திட்டவட்டமாகத் தெரிவிக்கப்பட்டது.

இத்திட்டம் செயற்படுவதில் காணப்பட்ட சில சிக்கல்கள் பற்றிக் குறிப்பிடப்பட்டது. தலைமை வங்கி, வணிக, கூட்டுறவு வங்கிகளின் குறுகிய கால, நீண்ட காலக் கடன் நிதி நிறுவனங்கள், மாநிலத்தின் மாவட்ட அதிகாரிகளை இணைக்கும் அமைப்பாக செயற்படும் என எதிர்பார்க்கப்பட்டது. தலைமை வங்கி பிறர்மீது அதிகாரம் செலுத்த முடியாது என்றும், அவ்வங்கியை எவ்விதக் குறிப்பிட்ட உதவிக்காகவும் அணுக வேண்டிய தேவையில்லை என்றும் குழு தெரிவித்தது மிகவும் தூரமாகவுள்ள தலைமை வங்கிகளில மிகக் குறைந்த அனுபவம் உள்ள வங்கி அதிகாரிகளை நியமிப்பதால் அப்பகுதியில் இருக்கும் பிற வங்கி மேல் அதிகாரிகளிடமிருந்து தேவையான ஆதரவு கிடைப்பது கடினம். மேற்கூறிய இடர்ப்பாடுகளினால் தலைமை வங்கி, தலையாய பங்கை ஏற்பது தவிர்க்கப்படுகிறது.

தலைமை வங்கியைச் செயற்படுத்துவதில் விழிப்புணர்வு தேவை என்றும் குழு கூறியுள்ளது. ஒருபகுதி முன்னேற்றத்திற்கு வங்கி வசதிகள் மட்டுமன்றி பிற மேலெழு நிலை வசதிகளும் தேவைப்படுகின்றன. அவ்வித வசதிகள் அளிக்கப்படாமல் இருக்குங்கால தலைமை வங்கியின் செயலாக்கம் மிகக் குறுகிய அளவிலேயே இருக்கும்.

**தலைமை வங்கித் திட்டத்தின் இப்போதைய நிலை:** தலைமை வங்கித் திட்டம் பற்றிய 380 மாவட்டங்களின் விசாரணை முடிவுகள் 1973–74 ஆம் ஆண்டில வெளி வந்தன. அவற்றுள் 90 விழுக்காடு பின் தங்கிய மாநிலங்களாகிய அசாம், பீகார், மேற்கு வங்காளம், ஒரிசா, உத்தரப் பிரதேசம, மத்திய பிரதேசம் ஆகியவற்றைப் பற்றியதாகும். சில வங்கிகள் ஆழ்ந்த விசாரணைகளை மேற்கொண்டு அவற்றின் விளைவாக வளர்ச்சித் திட்டங்களைச் சில குறிப்பிட்ட பணிகளுக்காக நிறைவேற்றியுள்ளன. அவ்வங்கிகள் மாவட்ட ஆலோசனைக் குழுக்களைத் தொடர்ந்து செயற்படுத்தி வருகின்றன.

குசராத்து, மகாராட்டிரம் ஆகிய மாநிலங்களில தலைமை வங்கித் திட்டம் எவ்வாறு செயற்படுத்தப்பட்டுள்ளது என்று அறிந்து கொள்ள, இந்தியமைய வங்கி, 1975-ஆம் ஆண்டு ஆகஸ்ட்டுத் திங்களில் இரண்டு விசாரணைக் குழுக்களை ஏற்படுத்தியது. அவை, தலைமை வங்கிகள், நுட்பம், பொருளாதார அடிப்படையில் செயற்படும் சில திட்டங்களை முதன்மைத் துறைகளுக்கு 3 முதல் 5ஆண்டுகளுக்குள் செயற்படுத்தப் பரிந்துரைத்தன. இந்தியமைய வங்கி 1976-ஆம் ஆண்டில் ஓர் உயர் சக்திக்குழு (High Power Committee) ஒன்றை ஏற்படுத்தித் தலைமை வங்கித் திட்டத்தின் ஒட்டு மொத்தமான வளர்ச்சியைக் கவனிப்பதற்குச் சில வழிமுறைகளை வகுத்தது.

உயர் சக்திக் குழு குறிப்பிட்டிருந்த வழிமுறையின் படி தலைமை வங்கி மாவட்டக் கடன் திட்டங்களை 3 வருடங்களுக்குச் சேர்ந்தாற் போல் வகுத்தது. இவை தவிர, இத்திட்டங்களை நாட்டின் ஐந்து ஆண்டுத் திட்டங்களுடன் இணைத்து செயற்படும் வண்ணம் அமைத்தன மாவட்ட கடன் திட்டம், எல்லா வகையான கடன் குறியீடுகளையும், மாவட்ட, நிறுவன நிதி அமைப்புகளுக்கும், துறைகளுக்கும் ஏற்ற வகையில் அமைத்தது.

ஒருங்கிணைக்கப்பட்ட ஊரக வளர்ச்சித் திட்டம் (Integrated Rural Development Programme) 1980-ஆம் ஆண்டு புகுத்தப்பட்டது. கடமைகளைப் பிரித்து நிதி வழங்குவதால் தலைமை வங்கிகள் கிராமங்கள் தோறும் நடவடிக்கைகள் எவ்வாறு பிரிக்கப்பட்டுள்ளன என்றும், மாவட்ட, ஊரக அமைப்புகளின் நிதி உதவிகள், கடன் தேவை எவ்வாறு அமைந்துள்ளன என்றும் ஆராய்ந்தது. திட்டங்கள் கண்டு, பணித் திட்டங்களோடு இணைக்கப்பட்டு, வங்கிகளின் குறிப்பிட்ட பணிகளை ஏற்று, மனுக்களைத் தெரிவு செய்து, எதிர்பார்த்த பயனைப் பெற்ற மனுதாரர்களுக்குத் தேவையான கடனை ஒதுக்கீடு செய்வதற்காகத் தலைமை வங்கி, வங்கித் திட்டங்களைத் தயார் செய்யும்படி பணித்தது.

மாவட்டத் திட்டத்தினுள் புகுத்தப்பட்ட அமைப்புகள் யாவும் வெற்றி பெறும் வண்ணம் செயலாக்கப்படவில்லை. இதற்கு அவை சரியாகத் தேர்வு செய்யப்படவில்லை என்றும், மேலெழு நிலை அமைப்புகள் சரியாக அமையவில்லை என்றும் முன்னோக்கிய, பின்னோக்கிய இணைப்புகள் சரிவர இணைக்கப்படவில்லை என்றும் காரணங்கள் கூறப்படுகின்றன. முதல் பணிக்குழு (Working group) ஒன்று 1981-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள்அமைக்கப்பட்டுத் தலைமை வங்கித் திட்டம் செயல்படுவது குறித்து மறுபரிசீலனை செய்து வருகிறது.

மாநில அரசு அதிகாரிகள், வங்கி அதிகாரிகள் போன்றோருக்கு அவ்வப் பொழுது தலைமை வங்கித்திட்டத்தின் கொள்கைகள்,செயலாக்கம் பற்றிக் கூட்டங்கள், விவாதங்கள் போன்றவை அமைக்க உயர் சக்திக்குழு பரிந்துரைத்தது. தேசிய வங்கி மேலாளா அமைப்பு அவ்வப்பொழுது, மாநில, மாவட்ட அள

வில் தலைமை வங்கிகள் எவ்வாறு திட்டங்களை அமைத்துச் செயற்படுகின்றன என்பதைப் பரிசீலிககிறது.

தலைமை வங்கித் திட்டம் வெற்றி பெறப் பல முயறசிகள் மேற் கொள்ளப்பட்டன. அவை: (அ) தலைமை வங்கி தனியாக வங்கி அதிகாரிகளைப் பணியிலமர்த்தி மாவட்டக் கடன் திட்டஙகளோடு இணைத்தல்; ஆ) மாதத்திறகு ஒரு முறை கூடித் தலைமை வங்கி செயல்படும விதம் குறித்து ஆராய்ந்து அதனபடி கடன் திட்டங்களை அமுல செய்தல; இ) மாவட்டக கடன் திட்டங்களைத் தயார் செய்வதில். செயலாக்குவதில் இந்திய மைய வங்கியின ஒத்துழைபபு கிடைக்கிறது. அவ்வப் பொழுது அறிக்கைகள் சமர்ப்பிக்கப்பட்டு அவற்றை செயற்படுத்துதல்; ஈ) வணிக வங்கிகளின் தலைமைச் செயலகம் ஒவ்வொன்றும் தன்னுடைய கிளைகளை மேற்பார்வையிட்டு, குறிப்பிடப்பட்ட நோக்கங்கள் மாவட்டங்களில் செயற்பட்டுளளனவா எனறு ஆராய்ந்து அறிதல்.

மாவட்டங்களில் செயற்படும் வங்கித் திட்டத்தின் மூலமாக நிதித் திரட்டப்பட்டு நகர, ஊரக பகுதிகளில் ஏற்றுக் கொள்ளப்பட்ட திட்டங்களுககு நிதி உத்வியளித்தல் போன்றவற்றிற்கு அரசும், இந்திய மைய வங்கியும் தலைமை வங்கிக்கு முதன்மை கொடுத்து வருகின்றன. தலைமை வங்கித் திட்டம் நன்றாகச் செயற்பட்டால் நாடு முழுவதும் ஒரே வகையான திட்டங்களை ஏற்று நடத்த முடியும் எனபது திண்ணம். க சொ

**துணை நூல்கள்:**

Davar, S R., Law and Practice of Banking, Progressive Corporation Pvt. Ltd., Bombay, 1986.

Desai, Vasant, Indian Banking - Nature and Problems, Himalayan Publishing House, Bombay, 1979.

Bulletin, R.B.I., The Lead Bank Scheme - Progress and Perspectives, R.B.I. Bulletin, Bombay.

**தலையமைப்பியல்:** மனித மூளையின் மேற்பரப்பிலுள்ள மேடு பள்ளங்களுக்கும மனித அறிவு, நடத்தை முறைகளுக்குமுளள தொடர்பைப் பற்றி விளக்க முற்பட்ட முதல் அணுகுமுறையாகத் தலையமைப்பியல் (Phrenology) பிரிவு விளஙகுகிறது. இப் பிரிவைத் தோற்றுவித்தவர் பிரானசு சோசப்பு க்ால் (Franz Joseph Gall) என்னும் செருமானியர். இவர் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின தொடககததில் இவவகை ஆயவுகளில் ஈடுபட்ட உடனேயே மனித மூளையின மேற்பரப்பிலுள்ள இருவகையான திசுப் (Tissue)



1. கணக்கிடுதல் 2. ஒழுங்கு 3. நிறம் 4. பளு 5. அளவு 6. கடப்பாடு 7. விளைவு நேர்வு 8. ஒப்பீடு 9. மனித இயல்பு 10. அறவிருப்பம் 11. கண்ணியம் 12. உறுதியாயிருத்தல் 13. தன் மதிப்பு 14. தொடர்ச்சி 15. தங்கும்போக்கு 16. பெற்றோருடன் அன்பு 17. காதல் 18. உள்ளுரம் 19. மணஉறவு 20. மறப்பண்பு 21. ஒட்டுப் பண்பு 22. விழிப்புடைமை 23. ஒளிமறைவு 24. அழிக்கும் பண்பு 25. உணவுவிருப்பம் 26. கைப்பற்றுதல் 27. பணியும் பண்பு 28. இயல்புநிலை 29. ஆக்கப்பண்பு 30. இசைவு 31. களிப்பு 32. கால அளவு 33. வாழிடம் 34. செயல் நோக்கம் 35. ஏற்கும் பண்பு 36. போலி செய்தல் 37. இறைமை 38. நம்பிக்கை 39. நனவு நிலை 40. பாராட்டுதல் 41. மொழி.

பொருள்களைக் கண்டறிந்தார். மூளையின் மேற் பரப்பிலுள்ள சாம்பல் நிறப் பொருளகள (Grey matter) மிகவும் சுறுசுறுப்பாகச் செயற்படுவன. இவையே மூளையின் செயற்பாட்டிற்கு இன்றியமையாதன எனக் கருதினார். சாம்பல் நிறத் திசுக்களோடு ஒட்டியுள்ள வெள்ளைப் பொருள்கள் (White matter) சாம பல் நிறப் பொருளகளுக்குத துணை நிறகின்றன. கால் கண்டறிந்த இநத உண்மை இன்றும் போற்றத தககதாக உளளது.

இதற்கடுத்து, மூளையின் ஒவவொரு பகுதியும் மனித உடலின் ஒவவொரு பகுதியைக் கவனித்து வருகின்றது என்றும் அதோடு ஒவவொரு பகுதியும் ஒவவோா உளப் பண்பிறகுக காரணமாக உளளது என றும் கருதினார்.

சோசபபு கால் என்பாரின் இக்கருத்துகள சமுதாய அறிவியல் அறிஞர்களைக குறிப்பாக மானிடவியலாரையும், உளவியலாரையும் கவர்ந்தன. இவரது கூற்று உணமையானது என நரம்பியலாரும் ஒப்புக கொணடனர். கால் என்பாரின் அடுத்தகட்ட கருத்துகள் பெரும் விவாதத்திற்குளளாயின இவரது கருத்துப படி மூளையின ஒவ்வொரு பகுதியும ஒவ்வொரு வகையான உளப்பணபினை நிலைநிறுத்திச் செயற் படுத்துகிறது எனபதாகும். எடுததுக்காட்டாக வீரம, அன்பு, கலைத்திறன, பெருமிதம் முதலான ஒவவொரு மனிதப் பண்பும் மூளையின குறிபபிட்ட பகுதியோடு தொடர்புடையது என்று வாதிட்டாா கால். ஒரு குறிப்பிட்ட பகுதி மற்றதைக் காட்டிலும் அளவில பெரியதாக இருந்தால் அப் பகுதிககான பண்பு ஒருவரிடம் மிகுந்திருக்கும் என்றும் கருதினார்.

சோசப்பு கால் எனபாரின் கருத்துகளை மேலும் வலுவுடையதாக்க அவா மாணவர்கள முனைந்து செயற்பட்டனா. அவர்களுள குறிப்பிடத்தக்கவா சான காசுபர் இசுபர்சீம் (Johann Casper Spurzheim). இத்துறையை முதனமுதலில் ஒருமுகப்படுத்தியதால இசுபாசீம் எனபாரே இதன முன்னோடி எனச் சிலர் கூறுவர். இவாதம் குருவின் முயறசியை ஒருமுகப் படுத்தித் தனித்துறையாக வளாபபதற்குப் பல நாடுகள சென்று தலையமைப்பியல் துறை பற்றிய கருத்துகளைப் பேசிவந்தார். இவரது முயற்சியினால் தலையமைப்பியல் பறறிய அறிவியல் பிரானசு, இஙகிலாந்து, அமெரிக்கா முதலான நாடுகளில விரைந்து பரவியது. மனித ஆளுமையை நிருணயிககும் மூளைப் பகுதிகள் எவை எவை என்பதை அறிவதில் பொது மக்கள பேரார்வங் கொண்டனர். சாதகக கலைக்கு இன்றுளள வரவேற்பினைப் போன்று தலையமைப் பியலுக்கு அக்காலத்தில் மேற்கூறிய நாடுகளில் மிகுநத வரவேற்பு இருந்தது. மூளையின் பாகங்களும் அவை எப் பண்புகளுக்கு உரியவை என்ற கருத்தைத் தெரிவிக்கும் மூளை வடிவிலான பொம்மைகள் பெரு மளவில் விற்பனையாயின எப் பணபு வேணடுமெனறு ஒருவர் விரும்புகிறாரோ அப்பகுதியைத தொடர்ந்து கைவிரல்களால தட்டிக்கொடுத்து வந தால் வளரும் என்ற ஒரு நம்பிக்கையும் மககளிடையே பெருகிற்று. ஆணரூ கோம்பு (Andrew Combe) என் பார் எடினபர்ககில் தலையமைப்பியல் இதழ் (Phrenological Journal) ஒன்றை அவர் கி.பி 1847-இல் இறக்கும்வரை நடத்திவந்தார். அமெரிக்காவில 19-ஆம் நூற்றாண்டில் ஆர்சன் பவுலர் (Arson Fowler) இத் துறையைப் பற்றிப் பெருமளவில் எழுதிவந்தாா.

மனித இனஙகளுக்கிடையே உள்ள வேறுபாடுகளைப் பற்றிப் பேசிவந்த அறிஞர்களுக்கும் உளவியற் கூறுகளை ஆராய்நத உளவியலாருக்கும் இத்துறை அறிவு தொடக்கக்காலததில் பெரும் பயனுடையதாய இருந்தது. ஆனால் கி பி. 19-ஆம நூற்றாணடின பிற் காலத்தில் மனித நரம்பு மணடலத்தைப் பறறிய அறிவு, மிகுந்த மேமபாட்டினை அடைந்தபோது கால, இசுபர்சீம் ஆகியோரின் கருத்துகள அறிவியல அடிப்படையில் அமையவிலலை எனபது வெளிப்படையானது இதனால இத்துறையின சிறப்பு அதிலிருந்து மங்கிவிட்டது. ஆனால், மனித மூளையின பலவேறு பகுதிகளுக்கும் மனிதப் பணபுகளுக்கும் உளள தொடர்பினை அறியும் முதல பிரிவாக இது விளஙகுகிறது. கால் கண்டறிநத திசுப் பொருள்களின தனமை இன்றும் அனைவராலும் ஏற்றுக்கொளளப்படுகிறது என்பது குறிபபிடத்தக்கது. சீ.ப.

**தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்:** இவன் பாணடியன் நெடுஞ் செழியன எனவும் குறிக்கப் பெறுவான. ஆரியப் படைகடநத நெடுஞ் செழியனினும் இவன வேறாவான. இவன ஓர் அரசப புலவன. இவன பாடிய வஞ்சினப பாவால் குடிபழி தூற்றுவதை அஞ்சும் செங்கோலாட்சியினன; புலவரைப் போறறும சிறப் பினன்; இரப்போர்ப் புரக்கும் கொடைஞன என்பது போதரும். இதனைப் பாடிய புலவர்கள இடைக்குன்றூர் கிழார், மாங்குடி மருதனார், கல்லாடனார், குட புலவியனார், நககீரர், பரணர், ஆலம்பேரி சாத்தனார், குறுஙகோழியூர் கிழார், பொதும்பில கிழார் மகானார் ஆகியோராவர். யானைக்கட்சேய் மாநதரஞ் சேரலிரும் பொறையைத் தன் இளம் பருவத்திலேயே பொருது சிறைப்படுத்தினான. வேள் எவ்வியின மிழலைக் கூற்றத்தையும் வேளிரின் முத்தூறறுக் கூற்றத்தையும் கைபபறறினான. கூடற் பறந்தலையில சேர சோழ வேந்தாகளைத் தாக்கிப் புறஙகண்டான். பின ஆலங்கானப்

போரில சேரன், செம்பியன, திதியன, எழினி, எருமை யூரன, இருஙகோ வேணமான, பொருநன் என்னும் எழுவரையும் ஒருபகற் பொழுதில முரசொடு வெண் குடையையும அகப்படுத்திக் களவேளவி செயதான. இப்போர் நிகழ்சசியைத் தம் அகப் பாடலில கல்லாட னார், பரணர், மதுரை நககீரர் முதலியோா குறிப் பிட்டுளளனர். மறககள வேளவி செய்ததை விரித்துக் கலலாடனாரும் மாஙகுடிகிழாரும் புறநானூறறில (புறம். 26, 371, 372) பாடியுளளார்கள். மிகக இளம் பருவத்திலே இபபாணடியன் வேம்பின தளிரை உழிஞைப் பவரொடு மிலைந்து ஆலஙகானததில எழுவா நல்வலம் அடககியதை இடைக குனறூர் கிழார் வியந்து பாராட்டுவர் (புறம். 76-79). இவனுக் குக் குடபுலவியனாரும் மாங்குடி மருதனாரும அரசிய லுக்கும் வாழ்வியலுக்கும் வேணடிய அறங்களைக் கூறி யுள்ளனர். பத்துப பாட்டில் ஒன்றான மதுரைக் காஞ் சிக்கு இவனே பாட்டுடைத் தலைவன. அதன ஆசிரிய ரான மாஙகுடி மருதனாா இவன் பணபியலையும ஆட்சிச சிறப்பையும் நாடடு வளததையும் நனகு புலப் படுததியுளளார். இவா இப்பாணடியனை இரவலர்க் குக் களிறு கொடுத்துப் பொற்றாமரைப் பூசசூட்டி நன்கலம் வழங்கினான எனறும், நட்டவர் குடியை உயாத்திச் செறறவர் அரசினை அழிப்பான் என்றும், உயர் நிலை உலகம் அமிழ்தொடு பெறினும சொல் தவறாத நட்பினன் எனறும், பகைவர் மிகப பெரிய ராயினும் அஞசி அடஙகி ஒழுகான என்றும, விழுநிதி பெறினும் பழி ஏலான என்றும் புகழ்ந்துரைப்பர். யாப்பருஙகல விருத்தி மேற்கோள் பாடலான 'பல் யானை மன்னா முருங்க' எனபதும இவன் வரலாற் றின் ஒரு பகுதியைத் தெரிவிக்கும். இரா.சா.

**தலையாலங்கானம்:** சங்ககாலப் பாணடி யர் வரலாற்றில் குறிப்பிடத்தகக சிறப்பு படைத்த ஊர் ஆலங்கானம ஆகும். தலை என்ற சொல் ஆலங் கானத்திற்கு அடைமொழிச் சொல்லாக அமைந்து இவ்வூர் தலையாலங்கானம் எனறும் குறிக்கபபட் டுளளது. இசசொல் அவ்வூரின் தொடக்கப் பகுதி யைக் குறிக்கக்கூடிய சொல்லாக விளங்கியிருக்கலாம். மதுரைக் காஞ்சியின் பாட்டுடைத் தலைவனான பாண்டியன் நெடுஞ்செழியன தனது இள வயதிலேயே இரு பெருவேந்தரோடு ஏழு சிற்றரசர்களைத தலை யாலங்கானத்தில நடைபெறற போரில் முறியடித்து வெற்றிவாகை சூடினான. ஆலஙகானத்தில் நடை பெற்ற போரில் நெடுஞ்செழியன உழிஞைப் பூச்சூடிச் சென்று போரிட்டான் என்று புறப்பாடல் கூறுவ தால் இஙகமைந்திருந்த கோட்டையை முதலில் நெடுஞ்செழியனே சென்று தாக்கியிருக்கவேணடு மெனத் தோனறுகிறது. போருக்கு எழுந்த பாணடிய னோடு சேரன, செம்பியன, திதியன், எழினி, எருமை யூரன, இருங்கோவேணமான, பொருநன என்ற எழு வரும் சேர்ந்து போா புரிநதிருக்கின்றனர். இதில் முதலிருவரும் பெரு வேந்தர்களான சோழனும், சேர னும ஆவாாகள. இப்போரில் நெடுஞ்செழியன மினனுகினற வேறபடையின துணைகொணடு பிறா துணையினறி கினை முழக்கத்துடன ஒரு பகலிலேயே தன் பகைவர்களை வென்று வாகை சூடினான; பகை வரின் முரசு, குடை முதலியவறறைக கைப்பறறிக் களவேள்வி செய்தான எனறு அவனது வீரசசெயல களை நக்கீரர், மாஙகுடி மருதனார், இடைக்குன்றூா கிழார், கல்லாடனாா, குடபுலவியனாா, வெங்கணணி யாா போனற சங்கப் புலவாகள சிறப்பித்துப் பாடி யுளளனர் தலையாலஙகானத்துபபோரில நெடுஞ செழியன வெற்றிவாகை சூடியமையால் தலையாலங் கானத்துச் செரு வெனற நெடுஞ்செழியன் எனறு புலவர்களால் போறறபபெற்றான. மதுரைக்காஞ்சி, நற்றிணை, அகநானூறு போனற பழந தமிழிலககி யத் தொகுதிகளில இவவெறறியின சிறபபு விளககப பெறறுளளது

நெடுஞ்செழியன பெறற இவவெற்றியின் பெரு மையை அவனுக்குப்பின தொளளாயிரம ஆணடு களுக்குப்பிறகு பாணடிய நாடடில ஆட்சிபுரிந்த பாண டிய மனனர்களும் போறறி மகிழந்திருக்கினறனா 9, 10-ஆம நூறறாணடுகளில பாணடிய நாடடில் ஆட்சிபுரிந்த பராநதக வீர நாராயணனின தளவாய் புரம் செப்பேடு பாணடியர்களின பழம் பெருமை களையெல்லாம் தொகுத்துக் கூறுமபோது அதில ஆலஙகானத்து அமாவெனற பெருமையையும பாணடியரது பெருமைகளுள ஒனறாக எடுததுக் கூறு கின்றது. சஙகப பாணடியரின வரலாற்றினை மாற் றும் வகையில் இப்போர் நடைபெற்ற தலையாலங கானம் இன்று தஞ்சை மாவட்டததில் தலையாலங காடு என்ற பெயரில வழங்கி வருகின்றது என்று உ.வே. சாமிநாத அய்யரவர்கள கருதுகினறார் இத் தலையாலஙகாடு பகதியக்கக் காலததில் சிவன் உறையும் தலமாக மாறியுளளது நாயனமார்களால போற்றப்பெறறிருககினறது இவர்களில அபபரும, கபிலதேவநாயனாரும் இவ்வூரைப் பாடியுளளவா களுள குறிப்பிடத்தக்கவர்கள் ஆவாாகள. சேக்கிழா ரும், சம்பந்தா இத்தலத்தினை வணங்கிச் சென்ற தாகப் பெரியபுராணத்தில குறிப்பிடுகின்றார். வெ.வே.

**தலையிடாக் கொள்கை:** காணக: தொன மைப் பொருளியற் கருத்துகள்.

**தலையீடு:** பன்னாட்டுச் சட்டத்தில மிக அதிக மாகப் பயனபடுததப்படும் சொலஇது இதனை, இடையீடு (Intervention) எனறும் கூறுவது உண்டு

பன்னாட்டுச் சட்டம் எல்லா நாடுகளின் இறைமையையும் மதிக்கின்றது. இறைமையின் முக்கிய கூறாகச் 'சுதந்திரம்' கருதப்படுகின்ற காரணத்தால் ஒரு நாட்டின் ஆள்வரைக்கு உட்பட்ட விவகாரங்களை அந்தநாடு மட்டுமே கவனித்துக் கொள்ள வேண்டுமென்றும், அவற்றில் வேறு எந்த நாட்டின் தலையீடும் கூடாது என்றும் பன்னாட்டுச் சட்டம் எடுத்துரைக்கிறது.

இரண்டு நாடுகளுக்கு இடையே உள்ள சிக்கலில் மற்றநாடு இடைநின்றிணைப்பதையோ தன் தூதர்கள் மூலமாக ஆலோசனை தருவதையோ தலையீடு எனக் கருதுவதில்லை. இந்த இரண்டு நிலைகளையும் கடந்து ஒரு நாடு மற்றொரு நாட்டின் சுதந்திரத்தைப் பாதிப்பது போல் நடந்து கொள்ளுமேயானால் அதனைத் தலையீடு என்று கூறலாம். ஒரு நாடு மற்ற நாட்டின்மீது எடுக்கும் இராணுவ நடவடிக்கைகள சுதந்திரத்தைப் பாதிக்கின்ற செயலாகக் கருதப்படுகின்ற காரணத்தால இத்தகைய நடவடிக்கைகளைத் தலையீடு என்று கூறலாம்.

தலையீடுகளைப் பல வகையாகப் பிரிக்கலாம். அவையாவன: உள நாட்டுத் தலையீடு, வெளிநாட்டுத் தலையீடு மற்றும் தண்டனை நோக்குடைய தலையீடு என்பவையாகும்.

**உள்நாட்டுத் தலையீடு**: 'அ' என்ற நாடு ஏற்கெனவே உள்நாட்டுக் கலகத்தில் சிக்கியுள்ள 'ஆ' என்ற நாட்டின் உரிமையுள்ள அரசையோ அதனை எதிர்த்து அமைக்கப்பட்ட எதிர்ப்பாளர் அரசையோ ஊக்குவித்தால அது உளநாட்டுத தலையீடு எனப்படும்.

**வெளிநாட்டுத் தலையீடு**: வெளிநாட்டுத் தலையீடு என்பது ஏற்கெனவே உள்நாட்டுத் தலையீட்டின் காரணமாக இரண்டுக்குமேற்பட்ட நாடுகளுக்கு இடையிலான வெளிநாட்டுஉறவு பாதிக்கப்பட்டிருக்கும போது, அவற்றில்ஏதாவது ஒரு நாட்டினைஆதரிப்பதன வாயிலாக ஒரு நாட்டுக்கு நண்பனாகவும் அதே நேரத்தில்மற்றொரு நாட்டிற்கு எதிரியாவதையும்குறிக்கும்.

எடுத்துக்காட்டு: இரண்டாம் உலகப் போரின் போது செருமனிக்கும், இங்கிலாந்துக்கும் போர் நடந்து கொண்டிருக்கும்போது இத்தாலி நாடு செருமனியை ஆதரித்தன் காரணமாக இங்கிலாந்தின பகை நாடாக மாறியது. இத்தாலியின் இந்த வகைத் தலையீடு வெளிநாட்டுத் தலையீட்டுக்கு ஒரு நல்ல எடுத்துக்காட்டாகும்.

**தண்டனை நோக்குடைய தலையீடு**: ஒரு நாடு பழி வாங்கும் நோக்கோடு போரைத் தவிர வேறு ஏதாவது ஒரு நடவடிக்கையை மற்ற நாட்டின் மீது எடுக்குமேயானால் அத்தகைய நடவடிக்கையைத் தண்டனை நோக்குடைய தலையீடு என்று கூறலாம். எடுத்துக்காட்டாக, ஒரு நாடு தனனோடு செய்து கொண்ட ஒப்பந்தத்தை மீறி விட்டதன காரணமாக அந்த நாட்டின மீது அம் மீறுதலினால பாதிக்கப்பட்ட நாடு தடைவளைப்புச் செய்யுமேயானால இவ்வகைத் தடைவளைப்பு, தண்டனை வகைத தலையீடாகும்.

பொதுவாக ஒரு நாடு ஏனைய நாடுகளின விவகாரங்களில் தலையிடக் கூடாது என்று பன்னாட்டுச் சட்டம் தடைவிதித்திருந்தாலும், கீழக்காணும காலங்கள் நாடுகளுக்குத் தலையீட்டு உரிமை வழங்கும விதிவிலக்கான காலங்களாக அமைகின்றன.

அ. ஐக்கிய நாடுகள் சங்க ஆவணத்தின படியான நாடுகளின 'கூட்டுத் தலையீடு'.

ஆ. வெளி நாட்டில் தன் நாட்டின் மக்கள் உரிமைகளைப் பாதுகாப்பதற்கான தலையீடு.

இ. தனக்கு எதிரான வெளிநாட்டின ஆயுதத் தாக்குதலினின்று தன நாட்டைக் காத்துக் கொள்வதற்கான 'தற் பாதுகாப்பு' நோக்கங் கொண்ட தலையீடு.

ஈ. தன் பாதுகாப்பில் இருக்கும் ஒரு நாட்டின பாதுகாப்பைக் கருதிச் செய்யப்பட்ட தலையீடு.

உ. சட்டம் மீறிய வகையில் ஒரு நாடு மற்றொரு நாட்டின் விவகாரத்தில தலையிடும் போது, அதனை எதிர்க்கும் முகமாகப் பாதிக்கப்பட்ட நாடு, சட்டம மீறிய நாட்டின் மீது செய்கின்ற தலையீடு.

மேற்கண்ட வகையிலான காலங்கள் அனைத்தும் பன்னாட்டுச் சட்டத்தின் படி தலையீடு செய்யத் தகுந்த காலங்கள் ஆகும்.

ம.கா.

**தலைவேட்டை**: இறந்த மூதாதையரை வழிபடவும், வேளாண சடங்குகளில் சடங்குப் பொருளாகப் பயன்படுத்தவும் பழங்குடியினர் அவர்களின் எதிரிகளின் தலைகளை வேட்டையாடும வழக்கத்தைக் கொண்டிருந்தனர். இதுவே, தலைவேட்டை (Head Hunting) எனக் கூறப்படுகிறது.

**உயிர்ப் பொருட் கொள்கையும் தலைவேட்டையும்**: இரத்த இழப்பால் விலங்குகள் உயிரிழப்பதைக் கணணுற்ற பழங்கற்கால மனிதன், உயிருக்கும் இரத்தத்திற்கும் இடையேயுள்ள உறவை உணர்ந்தான். இரத்தத்தில் 'உயிர்ப்புச் சக்தி' இருப்பதாக நம்பிய

மனிதன், சக்தி குன்றிக் காணப்படும் வயதில் முதிர்ந்தோர் மீதும், இறந்து போனவர் மீதும் இரத்தத்தைத் தெளிப்பதன் வழியாக அவர்களை உயிர்ப்பிக்கவியலும் என நம்பத் தலைப்பட்டான். எனவே, இரத்தத்தைப் 'படையல் பொருளாக அளிப்பதை மேற்கொள்ளத் தொடங்கினான். இதைப் போன்றே, உடலின் சில உறுப்புகளும் அவற்றின் சுரப்பிகளும் உயிர்ப்புச் சக்தியைக் கொண்டிருப்பனவாக மனிதன் எண்ணத் தொடங்கினான். எடுத்துக்காட்டாக, தலை, குடல், கல்லீரல், தொப்புள் கொடி, உமிழ்நீர், தோல், நகங்கள், பற்கள் முதலியனவும் உயிர்ப் பொருளை உடையனவாகக் கருதப்பட்டன. இம்மனித உறுப்புகளும் தலையும் உயிர்ப் பொருளை மிகுதியாகக் கொண்டுள்ளதாக நம்பத் தொடங்கியதால் இறந்த மூதாதையர் வழிபாட்டிலும், பயிர்த் தொழிற் சடங்குகளிலும் 'மனிதப்பலி' (Human Sacrifice) தொடர்புடையதாயிற்று. இதையடுத்து தலை வேட்டையாடலும் இணையானதொரு இடத்தைப் பெறலாயிற்று.

**தலை வேட்டைக்கான பயணம்:** பழிவாங்கும் பொருட்டோ, மந்திர-சமயம் சார்ந்த சடங்குகளின் பொருட்டோ தலைவேட்டையாடும் பழங்குடியினர் அதற்கெனத் தலைகளைக் கையகப்படுத்தப் பயணம் மேற்கொள்கின்றனர். இந்தப் பயணம் நன்கு திட்டமிடப்பட்ட பின்னரே மேற்கொள்ளப்படும்.

முதலில் தலைவேட்டையாடத் திரண்டுள்ள குழுவினருள் மூன்றில் ஒரு பகுதியினர் எதிரிகளின் நடவடிக்கைகளை வேவு பார்க்கும் பொருட்டு, எதிரிகளின் குடியிருப்பையொட்டியுள்ள அடர்ந்த காட்டுப் பகுதிக்குச் சற்று முன்பே அனுப்பி வைக்கப்படுகின்றனர். எதிரிக் குடியிருப்பைச் சுற்றியுள்ள பகுதிகளில் மறைவாக, யாரும் அறியா வண்ணம் ஒளிந்திருந்து இவர்கள் எதிரிகளின் நடவடிக்கைகளை மிகுந்த விழிப்புடன் கண்காணிக்கின்றனர். தலை வேட்டைக்கெனத் திரண்டுள்ளோரின் எஞ்சிய பகுதியினர் எதிரிகளின் குடியிருப்புப் பகுதியை, விடியலுக்கு ஒரு மணி நேரம் முன்னதாக அடைகின்றனர். இந் நேரத்திலேயே மனிதர் அயர்ந்து உறங்குவர் என்பதனாலேயே இந்தக் குறிப்பிட்ட காலத்தைத் தேர்வு செய்கின்றனர். உலர்ந்ததும் எளிதில் தீப்பற்றக் கூடியதுமான மரப்பட்டைகளிலிருந்து செய்யப்பட்ட பந்துகளில் நெருப்பு மூட்டி, இந்நெருப்புக் கோளங்களை எதிரிகளின் வீட்டுக் கூரைகளின் மீது வீசுகின்றனர். தீப்பிழம்புகளால் வீட்டின் மூங்கில் கழிகளும் சுவர்களும் வெடித்து விழும் பேரொலிக்கிடையே தலைவேட்டைக்கு வந்துள்ள வீரர்களின் போர்க் கூக்குரலும் சேர்ந்து மிகவும் அஞ்சத்தக்கதொரு சூழலை உருவாக்குகிறது. எதிரிகள் எவரும் தப்பவியலாதவாறு, பாதைகள், ஆற்றங்கரை ஆகிய வற்றில் கூட்டுக் காவலையும் ஏற்படுத்தியிருப்பர். இவற்றையும் மீறி, ஆற்றில் குதித்து, நீந்தி தப்பிச் செல்ல முயல்வோரைக் கொல்லத் தலை வேட்டையாடும் குழுவினருள் ஒரு பகுதியினர் ஆற்றின் நடுவே தோணிகளில் விழிப்புடன் காத்திருப்பர்.

கொழுந்து விட்டெரியும் தீயால் ஆடவர்களையும், பெண்டிரையும் இவர்களால் எளிதில் அடையாளம் கண்டு கொள்ள முடிகிறது. தீப் பிழம்புக்குப் பயந்து வெளியேறும் எதிரிக் கூட்டத்தினரிடையே ஆண்களை மட்டும் ஈட்டியால் குத்தியும், வாளால் வெட்டியும் கொல்கின்றனர். தலை வேட்டையின் போது கைதாக்கப்படும் வயதான பெண்டிர் உடனே கொல்லப்படுகின்றனர்; எஞ்சியுள்ள பெண்டிரும் சிறுவரும் அடிமைகளாக்கப்படுகின்றனர். உயிரோடு கைது செய்யப்பட்ட ஆடவரின் தலைகள் வெட்டப்படுகின்றன. இவ்வாறு அரிய முயற்சிகளுக்குப்பின் கையகப் படுத்தப்பட்ட தலைகளை நெடுங்காலம் வெற்றிச் சின்னங்களாகப் (Trophies) பாதுகாக்கும் எண்ணத்தில், உள்ளிருக்கும் மூளைப்பகுதியைத் 'தலையோட்டின் பெருங்குழி' (Foramen Magnum) வழியே சிறு குச்சியின் துணை கொண்டுவழித்தெடுத்தபின், நெருப்பிலிட்டு வாட்டிப் பதப்படுத்துகின்றனர். இவ்வாறு பதப்படுத்தப்பட்ட தலைகளை 'இளையோர் கூடங்களில்' (Dormitories) குவியல் குவியலாகப் பாதுகாத்து வந்தனர்.

தலைவேட்டையின் போது, சிறிய அளவில் மழை பெய்வதைத் தலைவேட்டையாடுநர் பெரிதும் விரும்புகின்றனர். ஏனெனில், மழை பெய்யும்போது எதிரிகள் இன்னும் சற்று அயர்ந்து உறங்குவர் என்று இவர்கள் நம்புகின்றனர். அதே சமயம், பெய்யும் மழையளவும் மிகுந்து விடக்கூடாது என விரும்புகின்றனர். ஏனெனில், பெரு மழையால் கூரையின் மீது எறியப்படும் நெருப்புப் பந்துகள் கூரையில் தேங்கும் மழைநீரால் ஊறி விடும்; அதனால், எதிரிகளிடமிருந்து ஆவலோடு எதிர்பார்க்கப்படும் கூச்சல், குழப்பத்தைப் பெறவியலாது போய்விடும் என எண்ணுகின்றனர்.

எதிரிகளின் தலையை வெட்டும் முறையில் பல் வேறு குழுவினர் வேறுபடக் காணலாம். சான்றாக, இந்தோனேசியாவின் தயாக்குப் (Dyaks) பழங்குடியினரின் பல பிரிவுகளிடையேயும் வேறுபாடுகள் இருந்தன; கடல் தயாக்குகள் (Sea Dyaks) தலையை வெட்டும்போது கழுத்தையும் சேர்த்தே வெட்டினர். மாறாக, மலைவாழ் தியாக்குகள் (Hill Dyaks) தலை

யைப் பிளந்தும் உடைத்தும் மிகவும் அலட்சியமான முறையில் தலைவேட்டையில் ஈடுபட்டனர்.

**தலைவேட்டை நிகழ்த்தப்படும் காலங்கள்:** பொதுவாகப் பழங்குடியினரின பயிர்கள் நல்ல விளைச்சலைப் பெறுவதிலும், அவர்தம் கால்நடைச் செலவங்களை வளர்ப்பதிலும் தலைவேட்டை நெருங்கிய தொடர்புடையதொன்றாக மதிக்கப்பட்டது. போர்னியோத் தீவின காயன் பழஙகுடியினரிடையே நெல் விளைவிப்பதில் தலைவேட்டையாடும வழக்கம தொடர்புடையதாக இருந்தது அதற்கு மாறாக, சில இந்தோனேசியப் பழங்குடியினர் தாம் யாருடைய தலையை வேட்டையாடிக் கொண்டு வருகின்றாரோ அவர் மறு உலகில தமக்கு அடிமையாவார் என்ற நம்பிக்கையின் அடிபபடையில் இவ்வழக்கத்தை மேற கொணடிருந்தனர். இந்திய நாகர் பழங்குடியினரிடையே நடவுக் காலமும், அறுவடைக் காலமும தலைவேட்டையாடலின் முதனமைப் பருவங்களாகக் கருதப்பட்டன. இவர்கள தம் இளையோர் சடஙகுகளில், ஏற்புச் சடங்குகளின் ஓர் இன்றியமையாக கூறாகத் தாம் அதுவரை பெற்ற போர்ப் பயிறசியைக் காட்டும் மறப் பண்பின் வெளிபபாடாகத்-தலை வேட்டையைக் கைக் கொணடிருந்தனர். எனினும், செழிப்புச் சடங்கில (Fertility rite) வெளிப்படையாகவே இவர்களிடைத்துத் தலைவேட்டை திகழ்ந்து வந்தது எனபது வெளிப்படை.

**பல்வேறு இனக்குழுக்களிடையே தலைவேட்டை:** இந்தியாவின வடகிழக்கு எல்லைப் பகுதியில் (NEFA) வாழும் பல்வேறு நாகர் பழஙகுடியினரிடையே தலைவேட்டையாடும் வழக்கம் இருந்தது. நிலச் செழிப்பு, உடல் செழிப்பு முதலியவற்றைப் பெரிதும் போறறி வந்த நாகர் தலை வேட்டையையும் செழிப்பு வழிபாட்டின் வெளிப்பாடாகவே கொணடிருந்தனர். பயிர் நிலத்திற்குரிய செழிப்பை மனிதத் தலை உணர்த்தி நிற்பதாக உறுதியாக நம்பிய இவர்கள தலைவேட்டையாடலைத் தம் வாழவியலின இன்றியமையாக் கூறாகவே கொணடிருந்தனர். மேலும், தலைவேட்டையினறிச செழிப்புச் சடஙகு முற்றுப் பெற்றதாக இவர்கள எணணுவதில்லை. அதனால், நாகர் தாம் மேறகொண்ட தலைவேட்டையில் பெரும் பொழுதைச் செலவிட்டனா. கையகப்படுத்திய தலைகளைப் பதப்படுத்திப் போர் வெற்றிச் சினனங்களாக (War Trophies) அவற்றைத் தம் இளையோர் கூடஙகளில பாதுகாத்து வந்தனா. அவவாறு கையகப்படுத்தப்படும் தலைகள் தலைவேட்டையாடலில் வெற்றி பெற்ற வீரரின மதிப்பை அவரது சிற்றூரில் உயாத்தி நின்றன. ஏனெனில், அவ்வாறு தலைகளை இளையோர் கூடஙகளில் திரட்டி வைப்பதனால் தம் இனக் குழுவின் செழிப்புத் தன்மையையும், விளைநிலத்தின செழிப்புத் தனமையையும் மிகுதியாக்கவியலும் என இவர்கள நம்பினர்.

பர்மாவின் மேட்டு நிலப் பகுதிகளில வாழும் இடாப் பழங்குடியினர் (Ida) அபின செடியில் மலர்க் கொத்துகள் பூத்துக் குலுஙகுமபோது, மனிதத் தலைகளைப் பெறுதறகெனத் தலைவேட்டைககுக் கிளம்புவர். எதிர்ப்படும் எந்தவொரு வெளியாரின தலையையும் வெட்டிக் கொணடு வருவர். தலைவேட்டையிலிருந்து வெற்றியுடன திரும்பும்போது மககள அவாகளுக்குச் சீரியதொரு வரவேறபளிப்பா.

பிலிப்பைன்சுத தீவில் வாழும் பொன்டாக்குப் (Bontac) பழஙகுடியினர் விதைபபின போதும, நடவின போதும் குறைநதது ஒரு புதிய மனிதத தலையைப பணணையில் நடக்கும் சடஙகில் தவறாது வைகக வேணடும் எனக் கருதினர்.

மனிதப் பலி போனறே தலைவேட்டையும் பயிர்களின வளாசசிககு உதவும் என்று அசாநதிப (Ashanti)பழஙகுடியினர் நமபினா. அதனால் புதிதாகக் கிழங்குகளைத் தோணடியெடுக்கும் பொழுது அககுழியில புதிதாக வேட்டையாடப்பட்ட ஒரு மனிதத தலையை வைப்பதை வழககமாகக் கொணடிருந்தனர். அதன மூலம் மேனமேலும் கிழஙகுகள வெகுவாக வளரும் என இவாகள நம்பினர்.

**தலைவேட்டையும் தசையுண்ணலும்:** நைசீரியாவின தங்கேல் (Tangale) பழஙகுடியினா முழுக்கமுழுகக தலை வேட்டையாளர்களாகவே திகழநதனர். இவர்கள், தலை வேட்டையின்போது தாம் கையகப்படுத்திய எதிரிகளின தலைத் தசையை உணபதில மிகவும விருப்பமுடையவர்கள.

நியூசிலாந்தைச் சேர்ந்த மவோரிப் (Maori) பழஙகுடியினரின் ஒரு பிரிவினரான 'வைக்கத்தோ (Waikato) மக்களும், தரனககி (Taranaki) மக்களும் தாம் வேட்டையாடிப் பெறற மனிதத் தலைகளின தசையை உணடு, எஞ்சிய தலைப் பகுதிகளைப் பதப்படுததி, வெற்றிச் சினனஙகளாகவும் நினைவுப் பொருளகளாகவும பாதுகாத்து வநதனர்.

**தலை வேட்டையின் இன்றைய நிலை:** தலைவேட்டையினபோதும், அதறகு ஈடாக மேற்கொள்ளப்படும் பழிவாங்கும தலைவேட்டையினபோதும் ஏறபடும் உயிரிழப்புகளைத் தவிாக்க இன்றைய ஆட்சியாளர்களால் தலைவேட்டை உலக முழுமையு தடைசெய்யப்பட்டுவிட்டது. இன்று இமமுறை இல்லை என்றே கூறலாம். இந்நிலையில், தலைவேட்டையின வெற்றிக்குப் பின் முனனர் ஆடப்பட்ட தலைவேட்டை

நடனம் அதன பொருளை இழந்த நிலையில் ஒரு பழங்குடி நடனம் என்ற அளவில் இன்றும் ஒரு சில குழுவினரால் ஆடப்பட்டு வருகிறது. சி.ம.

**தவணை நீட்டிப்பு:** திரும்பச் செலுத்தவேண்டிய கடன அல்லது நிதிப் பொறுப்பை ஒத்திப்போடுதல் தவணை நீட்டிப்பு (Moratorium) எனக் குறிப்பிடப்படுகிறது. இதனைத் தொடர்ந்து அரசு 'ஆணை அல்லது சட்டம் பிறப்பிக்கப்படுகின்றது. கடன் தரும் அரசு, கடன் பெற்றிருக்கும் அரசுக்குக் (Debtor Government) கொடுக்கும் தவணையாகும். அதாவது, திரும்பத் தர வேண்டிய கடன்தொகை அல்லது வட்டிவீதம் நீட்டிக்கப்பட்ட அல்லது ஒத்திப் போடப்பட்ட நாள்வரைக்குள கடன் பெற்ற அரசு செலுத்த வேண்டும் என்பதாகும்.

தவணை நீட்டிப்பு, பொதுவாகப் பணமதிப்பு சரியும்போதும் (Monetary Panic), அரசியல் அல்லது தொழில் சம்பந்தப்பட்ட துறைகளில் ஏற்படும். மேலெழுச்சியின்போதும் (Upheaval), நாட்டில் உண்டாகும் போர், பஞ்சம், வெள்ளம், நில நடுக்கம் ஆகியவற்றின்போதும் கையாளப்படும் உத்தியாகும். கடன் திரும்பத் தராமல் இருக்கும்போது சட்டத்திற்குட்பட்டுத் தள்ளிப்போடுவதற்குத் தவணை நீட்டிப்புக் கையாளப்படுகிறது. இதன்படி கடன் பெற்றவர் கடனைத் திரும்பத்தராமல் இருக்கும்போது அதனை முற்றிலுமாக விடுதலை செய்யாமல் கடன் தரும் நாளை ஒத்திப்போடுவது ஆகும்.

உலகம் முழுவதும் இவ்வகைக் கடன் கொள்கை பயன்படுகிறது. வணிகக் கடன்களைத் திரும்பத் தரும் நாளை ஒத்திப்போடுதல் என்ற எண்ணத்துடன் தவணை நீட்டிப்புக் கையாளப்படுகிறது. இவ்வாறு கடன் தவணை நீட்டிக்கப்படும்போது காலக் குறிப்புடன் செயற்படும் மாற்று உண்டியல்கள், வங்கி வைப்புகள், காசோலைகள் போன்றவை பெரும் பாதிப்புக்குள்ளாகின்றன. அவற்றைக் குறிப்பிட்ட காலக்கெடுவுக்குள் திரும்ப வாங்க இயலாது போகின்றது. ஆனால், தனிப்பட்ட குடும்ப அடிப்படையில் பெறப்படுகின்ற கடன்களுக்கு இவ்வகை நீட்டிப்புப் பொருந்தாது. அவை தவணை நீட்டிப்பிற்கு அப்பாற்பட்டவை ஆகின்றன.

முதலாம் உலகப்பெரும்போருக்கு முன்னர்த் தவணை நீட்டிப்புகள் பொது ஆபத்துகள் ஏற்படும் போது மட்டுமே பயன்பட்டன. முதன்முதலில் 1914-ஆம் ஆண்டு போரின் காரணமாக இங்கிலாந்து தவணை நீட்டிப்பைக் கையாண்டது. அந்நாளில் இலண்டனில் மாற்று உண்டியல்களுக்கானபணம் உலகப் போரினால் கிடைப்பது அரிதாயிற்று. செருமனியின் நிதிநிலையைச் சமாளிப்பதற்காக1931-இல் அரசுகளுக்கிடையே உள்ள கடன்களை ஓராணடு தவணை நீட்டிப்பின்மூலம் தள்ளிப் போடவேணடியதாயிற்று. உலகப்பெருமந்தம் ஏற்பட்டபோது அமெரிக்கக் குடியரசுத் தலைவர் பிராங்க்ளின் டி.உருசுவெல்ட்டு(Franklin D.Roosevelt) அமெரிக்கஐக்கிய நாடுகளின் நிதிநிலையைச் சீராக்கும் பொருட்டுத் தவணை நீட்டிப்புச் செய்தார். அதன்படி அமெரிக்க வங்கிகள் தங்களுடைய கடன் பொறுப்பைத் தாமதிக்குமாறு கேட்டுக்கொள்ளப் பட்டன.

இன்றும்கூட இந்தியாவில் 1987-இல் ஏற்பட்ட வறட்சி, பஞ்சம் காரணமாக நிலவரி வாங்குவது ஒத்திப்போடப்பட்டுள்ளது. நாட்டில் ஏற்பட்டபலவித இயற்கை, பொருளாதார, அரசியல் காரணங்களால் தவணை நீட்டிப்பு முறை கையாளப்பட்டுள்ளது. அதன்படி விவசாயிகள் வாங்கிய கடன் திருப்பித் தர வேண்டிய நாள் நீட்டிக்கப்பட்டுள்ளது. க.சொ.

**தவணைப் பொறுப்புகள்:** வங்கியர்களின் பொறுப்புகள் இரு வகைப்படும். அவை முறையே காலப்பொறுப்புகள், தேவைப் பொறுப்புகள் (Demand Liabilities) எனப்படும். வங்கியர்கள் வாடிக்கையாளர்களிடமிருந்து பணம் பெறும்போது, அப்பணத்தை வட்டியுடன் திருப்பித்தர வங்கியர்கள் உடன்படுகின்றனர். எனவே வாடிக்கையாளர்கள் வங்கியில் செலுத்தியுள்ள பணம், வங்கியரைப் பொறுத்தவரை பொறுப்புகளாகும்.

வாடிக்கையாளர்களிடமிருந்து பல்வேறுவழிகளில் அதாவது, சேமிப்புக்கணக்கு, நடப்புக் கணக்கு, தவணை வைப்பு அல்லது நிலைவைப்புக் கணக்கு ஆகிய முறைகளில் வங்கியர் பணம் பெறுகின்றனர். அவற்றுள் மூன்றாம் வகையான தவணை வைப்பு அல்லது நிலைவைப்பு வங்கியரைப் பொறுத்தவரை காலப் பொறுப்பு (Time liabilities)எனப்படும்.

நிலை வைப்பு (காலப்பொறுப்பு) முறையில், ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு வங்கிக்கணக்கில் வாடிக்கையாளர் பணம் செலுத்தி வைப்பார். அக்காலக்கெடு முடிந்தவுடன் வட்டியுடன் வங்கியர் வாடிக்கையாளருக்குப் பணத்தைத் திருப்பிக்கொடுப்பார். ஒவ்வொரு வாடிக்கையாளரும் தம் தேவைக்கேற்பப் பல்வேறு வகையான காலத்திற்குப் பணம் செலுத்தி வைக்கலாம். இந்தியாவில் இக்காலம் குறைந்தது 15 நாட்கள் முதல், கூடுதல் 5 ஆண்டுகள் அல்லது அதற்கு மேலுமாகப் பல்வேறு நிலைகளில் உள்ளது. குறிப்பிட்ட காலம் முடிந்தவுடன்தான் வாடிக்கையாளர் பணத்தைத் திரும்பப் பெற முடியும். எனவே வங்கியர்,அக்கால முதிர்வு நாள்வரை வாடிக்கையாளரிடமிருந்து

பெற்றபணத்தை ஊதியம்தரும்வகையில்முதலீடுசெய திட வாய்ப்புள்ளது. எனவே தான், மற்றவகைக்கணக்கு களுக்கு அளிக்கும வட்டி விகிதத்தை விட நிலைவைப் புக் கணக்குகளுக்கு, வங்கியர் மிகுதியான வட்டி விகி தத்தை வழங்குகின்றனர். அணமை ஆண்டுகளில் இவ்வகை நிலை வைப்புக்கணக்குகள் இந்திய வங்கி களில் நிறைந்த அளவில் வாடிக்கையாளரால் தொடங்கப்படுகின்றன. நிலைவைப்பு தொடஙகப் பட்டவுடன் வங்கியர் வாடிக்கையாளருக்கு ஓர் இரசீது வழங்குகிறாா; அதறகுத் தவணை வைப்பு இரசீது என்பது பெயர். அதில வாடிக்கையாளரின் பெயர், தொகை, காலமுதிர்வுநாள், கணக்குத் தொடஙகப் பட்ட நாள் ஆகிய விவரஙகள் அடங்கி இருக்கும். வாடிககையாளா பணத்தைத்திரும்பப் பெறுவதற்கு இந்தத் தவணை வைப்பு இரசீதை வஙகியரிடம் ஒப் படைக்க வேணடும்.

சாதாரணமாக முதிர்வு நாளுக்குப் பிறகுதான கால வைப்புகளை வங்கியர், வாடிக்கையாளருககுத் திருப்புவர். ஆனால், வாடிக்கையாளர் விருமபினால தவணை முதிர்வு நாளுக்கும் முன்பாகவே பணத்தைத் திரும்பப் பெறலாம். ஆனால, அச்சநதர்பபஙகளில் வஙகியர், வட்டி விகிதத்தில சிறிது பிடித்தம செய்த பிறகே தொகையைத் திரும்ப வழங்குவர். அவ் வட்டி இழப்பிறகு வாடிக்கையாளர் இசைய வேணடும.

பலநேரங்களில் கால வைப்புகள கூட்டுக் கணககு களாக வாடிககையாளர்களால் தொடங்கப்படுகின றன. இரணடு அல்லது அதற்கும மேல் எணணிக்கை யிலான வாடிககையாளர்களின பெயர்களில், வஙகியில கணக்குத் தொடஙகப்படும அதற்குக‘கூட்டுக்கணக்கு’ என்பது பெயர். அவவகைக கணககுகள, வஙகியருக்கு காலக் கூட்டுப்பொறுப்புகளாகும். பணத்தைத் திரும்ப அளிககும்போது, கூட்டுக் கணக்கு வாடிககையாளர் அனைவரிடத்திலுமோ ஒருவரிடமோ தவணை முதிர் வில் வங்கியர் அளிக்க வேணடும்.

வாடிக்கையாளர் விரும்பினால் தவணை வைப் புக் கணக்குகளிலிருந்து கடன் பெறவும் வசதியுணடு. இவவகைக் கடன்கள் வாடிககையாளருக்குப் பொறுப் பாக மாறி விடுகின்றன; அககடனகளுககு வாடிககை யாளர், வங்கியருக்கு வட்டி செலுதத வேணடும். இவ்வகை வட்டி விகிதம் வங்கியர், வாடிககையாள ருக்குத தவணை வைப்பின் மீது அளிக்கும் வட்டி விகிதத்தைவிடக் குறைந்தது 2% கூடுதலாக இருக கும்.

தவணை முதிர்வில் வாடிக்கையாளருக்குத் திரும்ப அளிக்கப்படும் தொகை வட்டியுடன சோநது உரு10,000க்கும் கூடுதலாக இருந்தால, வங்கியர் அத் தொகையைக் கீறலிடப்பட்ட காசோலை அல்லது வரைவோலை மூலமாகத்தான் வழங்கவேண்டும் என மத்திய அரசு ஓர் ஆணை பிறப்பித்துளளது. இந்த விதிமுறை தவணை வைப்புக்கணக்குகளுக்கு மட்டுமே பொருந்தும்; மற்ற வகைக் கணக்குகளுக்குப் பொருந தாது. நா.பெ.சீ.

**தவணை முறை:** பொருள்களை விற்பதில் கையாளப்படும் சிறப்பு விற்பனை முறைகளில தவணை முறை (Instalment System) ஒன்றாகும். விற் பனையைப் பெருககுவதில் இம்முறை பெரிதும் பயன் படுகிறது. நுகர்வோர் தங்களது குறைந்த வருமானத தைக் கொணடு பல ஆணடுகள் தொடர்ந்து பயன் தரத்தக்க பொருளகளைப பெறுவதற்குத் தவணை முறை சிறந்த வழியாகும். எடுத்துககாட்டாக, உரு 2,000 மாத வருமானம் உள்ள ஒருவர் தவணை முறை மூலம உரு.10,000 விலையுள்ள வணணத் தொலைக்காட்சிப பெட்டியினை உடனடியாக உரு. 1,000 முதல் தவணையாகச செலுத்திப் பெற்றிட முடியும். பாக்கியுள்ள தொகைக்கு 19 அல்து 20 மாதங்களுக்கு மாதமொன்றிற்கு உரு 500 வீதம் பணம் செலுத்தவேணடும் இமமுறையில் அவா குறித்த விலையைவிட உரு 500 அல்லது 1, 000 அதிகம் தரவேண்டியிருக்கும. இந்தக கூடுதல விலை, தவணை முறையில தாமதமாகத் தரப்படும் பணத்திறகு வட்டித் தொகையாகும். இம்முறை இல்லையெனில அவர் தமது வருமானததிலிருந்து மாதம் உரு 500 வீதம் 20 மாதங்களுக்குச் சிறுகச் சிறுகச் சேமிதது வைத்துப் பிறகே உரு.10,000 முழுதுமாகக் கொடுத்துப பொருளைப் பெற வேணடியிருககும. அநத 20 மாதங் களில சேமித்த பணத்திற்கு வேறு செலவுகள ஏற பட்டுத் தொலைக்காட்சிப் பெட்டியை வாஙக இயலா மற் போய்விடலாம். மற்றும் அதன விலை முன்பு இருந்ததைவிட அதிகமாகியிருக்கவும் கூடும். பணம் சேமித்து முடிந்தபிறகு அவர் விரும்பும் தொலைக காட்சிப்பெட்டி சநதையில் கிடைப்பதற்கரியதாகவும் போகலாம்.

**தவணை முறையின் பயன்கள்:** தவணை முறை, பயன் தரககூடிய பொருள்கள பலவற்றையும் நுகர் வோர் எளிய முறையில் பெறுவதற்கு வழிவகுக் கிறது. அதனால் சேமிப்பு மறைமுகமாக ஊககுவிக் கப்படுகிறது. முதல் தவணையைச் செலுத்திப் பொருளை வாங்கிவிட்டபிறகு மறறத் தவணை களைச் செலுத்துவதற்குப் பணததை வருமானததிலி ருந்து சேமிக்கும் கட்டாயத்திறகு வாங்கியவர் உளளாகிறார். ஆனால் அதன எதிர்பயனாக முழுத் தொகையையும் சேமிப்பதற்கு முனபாகவே பொரு ளைப் பெறறு அதன் பயனை வாஙகுபவர் அனுப

விகக முடிகிறது. எடுத்துக்காட்டாக, ஒரு மோட்டார் ஓட்டுநர், தவணை முறையில் மோட்டார் வண்டியின் பத்தில் ஒரு பங்கை முதல் தவணையாகக் கட்டி விட்டுப் பொருளைப் பெற்று வந்துவிடலாம். பிறகு அந்த மோட்டார் வண்டியைக் கொண்டே வருமானம் ஈட்டித் தவணைகளைச் செலுத்திககொணடு வந்து விடலாம. மூனறு அல்லது நான்கு ஆணடுகளில் தவணைககாலம் முடிந்தபிறகு வாஙகியவர் அதன முழு உரிமையாளர் ஆகிறார். மோட்டார் வண்டியின ஆயுட்காலம் தவணைக்காலம் முடிந்து பல ஆண்டுகள் நீடிக்குமாதலால் அவர் ஒரு நிலையான வருமானம் பெறுவதற்குத் தவணை முறை உதவியாக அமை கிறது.

எனவேதான், பொருளாதார நிலையில் மேம்பட்டு இருக்கும் அமெரிக்கா போன்ற நாடுகளிலும, நாகரிக முதிர்ச்சி பெற்றுப் பற்பல நவீன வாழ்க்கை வசதிக் கருவிகளை நிரம்பப் பயன்படுத்தும் சப்பான நாட்டி லும தவணை முறை மிகவும் வரவேற்பைப் பெற்றுப் பரவலாகக் கையாளப்படுகிறது. வாழக்கைத தரம (standard of living) ஒரு நாட்டில் ஒருவர் பெறும வருமானத்தைவிட மிகவும் உயர்ந்து விளஙகிக் காணப்படுவதற்குத தவணைக கொளமுதல் முறை யையே காரணமாகக் குறிப்பிட வேணடியிருக்கும். அமெரிக்க நாட்டிற்குப புதிதாக வேலைககுச செல லும் ஒருவர் தனது அலுவலகத்திலிருந்து பெறற வருமான அட்டையைக காட்டி அவரது நிலைக்கேறற வாறு ஒரு மோட்டார் வண்டி, ஒரு பனிப்பெட்டி (Refregirator), தொலைக்காட்சிப் பெட்டி முதலிய யாவற்றையும் தவணை முறையில் பெற்று உயாந்த அமெரிககா வாழும் வாழ்க்கைத்தரததை உடனடி யாக எட்டிவிடலாம். தவணை முறை இல்லையெனில் அவர் வேணடும் பொருளை ஈட்டி அப்பொருளகளை வாஙகுவதறகுப் பல மாதஙகள தாமதமாகலாம.

பொருள்களை விற்பனை செய்பவருககும தவணை முறை உதவுகிறது முழுப்பணத்திறகுப் பொருளகளை விற்பதைவிடத் தவணை முறையில் மிகுந்த அளவில பொருளகளை விற்பனை செய்யமுடிகிறது. அதனால விறபனை பெருகுவதோடு உற்பத்தி பெருகித்தொழில வளமபெற்று வேலைவாய்ப்புகள கூடுதலாகினறன. மிகுந்த உற்பததியினால் உற்பததிச் செலவு குறை கிறது. பொருளாதார மந்தக்காலங்களில் தேஙகிக கிடக்கும் பொருளகளை விற்பதற்குத் தவணை முறை சிறந்த சாதனமாகும்.

**தவணை முறையில் விற்பதற்கேற்ற பொருள்கள்:** தவணை முறையில் விற்பதற்கு எல்லாப் பொருள் களும் ஏற்றவையாகக் கொள்ளமுடியாது. அவை சில சிறப்பியலபுகளைப் பெறறிருத்தல் வேண்டும். முத லாவதாகச் சாதாரண மாத வருவாய் உள்ள ஒருவர் பலமாதங்கள் சேமித்து வாங்கக்கூடிய அளவில் விலை மதிப்புள்ள பொருள்கள மட்டுமே தவணை முறை விற்பனைக்கு ஏற்றவையாகும். மிகக் குறைந்த விலை யுடைய பொருள்களுக்குத் தவணை முறை தேவை யில்லை. இரண்டாவதாகப பெருமபாலோர் உப யோகத்திற்கு விரும்பும் பொருள்களாக அவை இருத்தல வேண்டும். மூன்றாவதாகப் பொருள பல ஆணடுகள தொடர்நது பயன் தரத்தக்கதாக இருத்தல வேண் டும் காலம் நீணடிருநதாலதான் மிகுநத தவணை களில் குறைந்த தவணைத தொகை செலுத்திப் பலரும் பயனடைய இயலும். எனவே இத்தகைய சிறப்பியலபுகளைக் கொண்டிருக்கும தொலைககாட் சிப் பெட்டி,வானொலிப்பெட்டி, மின்விசிறி, தையல பொறி, தட்டெழுத்துப் பொறி, பனிப்பெட்டி, மோட்டாா வணடி, மிதிவணடி, இரும்பு அடுக்கு நிலைப் பெட்டி (Steel Cupboard), அரவைப் பொறி (Grinder) போனற பொருளகள தவணைமுறையில் விற்கப்படுகின்றன. இவற்றைத்தவிரத் தொழில் நிறு வனஙகள விலை அதிகமுளள இயநதிரஙகள, பொறி கள், மின் இயக்கச சாதனஙகள முதலியவற்றைத் தவணை முறையில் வாங்குவதுணடு.

**தவணை முறை விற்பனையின் உட்கூறுகள்:** எழுதது மூலமான ஒப்பந்தத்தின் அடிப்படையிலதான் தவணை முறை விற்பனை செயயப்படுகிறது. அவவொப்பந் தத்தில் விற்பனையாளரும் வாங்குவோரும் கையெழுத் திட்டு உறுதிசெய்து கொள்வார்கள. இதற்கான அச்சிட்ட படிவஙகளை விற்பனை நிறுவனங்கள தயார் செய்துவைத்திருக்கும். ஒப்பநதத்தில தவணை முறையில பொருளின நிருணயிக்கப்பட்ட விலை, முதல் தவணையில் செலுத்தவேணடிய தொகை, எத் தனை தவணைகளில தொகை செலுத்தப்பட வேணடு மென்பது, தவணை இடைவெளி, தவணையைக் குறித்த காலத்தில செலுத்தத் தவறிடின் கட்டவேணடிய அப ராத வட்டித்தொகை (Penal interest), தவணையைத் தொடர்ந்து கட்டத் தவறினால் விற்றவர்க்குளள உரிமை முதலிய இன்றியமையாத விவரஙகள குறிககப் பட்டிருக்கும்.

தவணை முறையில் விறபனை செய்யப்படும் பொருளின் விலை, உடனே முழுபபணம் கொடுதது வாங்கும் விலையைவிட அதிகமாக இருககும். பொரு ளுக்கான அசல விலையுடன வட்டித் தொகையும் சேர்த்து தவணை விலை கணககிடப்படுவதால, அதிகத் தொகை கொடுக்க வேணடிய நிலை ஏற்படு கிறது. ஒவவொரு முறையும் தரப்படும் தவணைத் தொகையுடன் மீதி நிற்கும் நிலுவைத தொகைக்கும ஒரு குறிப்பிட்ட விழுக்காட்டில் வட்டி சேர்த்துக்

கட்டவேண்டும் அல்லது பொருளுக்கான உரொக்க விலையுடன் கணக்கிடப்பட்ட மொத்த வட்டித் தொகையையும் கூட்டி ஒவ்வொரு தவணையிலும் ஒரே சீரான தொகையாகக் கட்டும்படியாகவும் விற்பனை செய்யப்படுவதுண்டு. எடுத்துக்காட்டாக, உரூ. 9,200 ரொக்க விலையுள்ள பொருளுக்குத் தவணைக்கால மொத்த வட்டித் தொகையான உரூ. 800 கூட்டி உரூ. 10,000த்தைப் பத்துத் தவணைகளில் உரூ. 1,000 கட்டும்படியாக விற்பனை செய்யலாம்.எத்தனை தவணைகளில் பொருளை விற்பது என பது பொதுவாகப் பொருளின விலையைப் பொறுத்த தாகும். விலை அதிகமாக உள்ள பொருளகளைத் தவணை எண்ணிக்கையை அதிகரிப்பதன்மூலம் வாங்குபவர்கள் எளிதில் தொகையை செலுத்தும்வகையில் விற்பனை செய்யலாம். பத்துத் தவணைகளில் உரூ. 1,000 வீதம் கொடுத்து வாஙகக்கூடிய பொருளைத் தவணையின் எணணிக்கை இருபதாக அதிகப்படுத்தினால் தவணை ஒன்றிறகு உரூ.5,00 செலுத்தினால் போதுமானதாகிறது. அதனால் அப்பொருளின் விற்பனை பெருக வாய்ப்பு ஏற்படுகிறது.

தவணை இடைவெளி எவ்வாறிருக்கவேணடும என்பதனையும் விறபனையாளர் கருத்தில் கொளள வேண்டும். தவணைத் தொகையை மாத இடைவெளி, காலாண்டு இடைவெளி, அரையாணடு இடைவெளி, ஆண்டு இடைவெளி என ஏதேனும் ஒருவகையில் செலுத்தும்படி விற்பனை செய்யலாம். இடைவெளி குறிப்பது பொருளின் தன்மையையும், வாங்குவோரின் வருமான நிலையையும் பொறுத்து அமைகிறது. மாத வருமானத்தின் துணைக் கொணடு வீட்டிற்குத் தேவையான பொருள்களை வாங்கும்போது மாதத் தவணை சிறந்ததாகும். உழவர்களால் வாஙகப்படும் இயந்திரக் கலப்பை (Tracktor) போன்ற பொருள்களுக்கு அரையாண்டு அல்லது ஆண்டுத் தவணைகள் அவர்கள் விற்கும் விவசாய விளைபொருள்களைக் கொணடு கட்டுவதற்கு வசதியாக அமையும்.

தவணை முறை விற்பனை ஒப்பந்தத்தில் தவணைகளைக் கட்டவேண்டிய காலக்கெடு குறிப்பிடப்பட்டிருக்கும். தவணைத் தொகையைக் குறித்த காலத்திற்குள் கட்டத் தவறினால் தாமதத்திற்கு அபராத வட்டியும் சேர்த்துக் கட்டவேண்டியிருக்கும். தாமதத்தைக் குறைப்பதற்காக அபராத வட்டி கூடுதலான விழுக்காட்டில் குறிப்பிடுவது வழக்கமாகும்.

தொடர்ந்து பொருளை வாங்கியவர் தவணைத் தொகையைக் கட்டத் தவறினால் விற்பனையாளர் நிலுவையாக நிற்கும் தொகையை ஒப்பந்தத்தின் வாயிலாக வழக்காடிப் பெறும் உரிமையைப் பெறுகிறார். இவ்வகையில் தவணைக் கொள்முறை விற்பனை, வாடகைக் கொள்முறை (Hire-purchase) விற்பனை முறையிலிருந்து மாறுபடுகிறது. வாடகைக் கொள்முறை விற்பனையில் வாஙகியவர் கடைசித் தவணையைச் செலுத்தியபிறகே பொருளின் மீதான உரிமை மாற்றப்பட்டு அதன் சொந்தக்காரர் ஆகிறார். அதுவரை விற்பனையாளரே அதன சொந்தக்காரராக விளங்குவார். எனவே வாங்கியவர் தவணையைச் செலுத்தத் தவறினால் அவர் இதுவரை செலுத்திய தவணைகள் பொருளைப் பயன்படுத்தியதற்கான வாடகையாகக் கருதப்பட்டு, விற்றவர் பொருளைத் திரும்பவும் எடுத்துச் சென்றுவிடலாம். ஆனால, தவணைக் கொள்முதல் முறையில வாங்கியவர் முதல் தவணையை செலுத்தியவுடன அவர் பொருளின முழு உரிமையாளர் ஆகிவிடுகிறார். தவணைகள ஒழுங்காகச் செலுத்தப்படாவிடின் விற்றவருக்குப் பொருளின்மீது உரிமை ஏதுமில்லை. அவா அதற்குரிய பணத்தை மட்டுமே வழக்காடிப் பெறமுடியும்.

**தவணைமுறையின் குறைபாடுகள்:** இம்முறையில் குறைந்த வருமானம் உள்ளவர்கள்கூடக் கட்டுப்பாடின்றி ஆடம்பரப் பொருளகளை வாங்குவதற்கு ஊக்குவிக்கப்படுகிறார்கள். தவணைகளை மாத வருமானத்தில் பிடித்தம் செய்வதால தங்கள அடிப்படைத் தேவைகளைப் பெற வருமானம் போதாமல் தொல்லையுற நேரலாம். நுகர்வுப் பொருள்களைப் பெருக்குவதற்கே நாட்டின் பொருளாதார வளங்கள ஒதுக்கப்பட்டு வளர்ச்சித் திட்டங்கள் தேக்கமடைய நேரலாம். வாங்குவோரின் நிதி நிலைமையைக் கருத்திற் கொள்ளாமல் விற்பனையைப் பெருக்கும் நோக்கம் மட்டும கொண்டு செயற்படும்போது வாராக் கடன் மிகுதியாகி வாணிக நிறுவனங்கள் இழப்பு அடைய நேரிடும்.

ஆனால் இவை யாவும் களையக்கூடிய குறைபாடுகளே. தவணை முறையில் மக்களுககும் நாட்டிற்கும் ஏற்படக்கூடிய நன்மைகளை நோக்கும்போது இவை யாவும் பெரிதல்ல என்றே கருதிட வேணடும்.

**தவணை முறை வளர்ச்சிக்கான வழிகள்:** தவணை முறை பெருகுவதற்கு விற்பனை நிறுவனங்களுக்குக் கூடுதல் பணம் தேவைப்படுகிறது. எனவே, வங்கிகள் அத்தகைய நிறுவனங்களுக்கு மிகுந்த நிதி ஒதுக்கீடு செய்தால்தான் இம்முறை வளர்ச்சியுறும். மேலை நாடுகளில் தவணை முறை விற்பனைக்கெனவே தனி நிறுவனங்கள் உள்ளன. வங்கிகள் கூட நுகர்வோரின் பொறுப்பில் முழுத் தொகையையும் விற்பனையாளருக்கு அளித்துவிட்டு வாங்கியவரிடமிருந்து பொருளுக்குரிய பணத்தைத் தவணை முறையில் வட்டியுடன் பெற்றுக்கொள்கின்றன. ஆனால், இத்தகைய சலுகையை வங்கிகள் தங்கள் வாடிக்கையாளருக்கு

மட்டுமே அளிக்கும். இந்தியாவில்கூட வங்கிகள் தவணைமுறையில் பொருள்களை வாங்குவதற்கு இவவகையில உதவி வருகின்றன.

திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சி, மக்களின் வாழ்க்கைத்தரத்தை இநதிய நாட்டில் பெரிதும் உயர்த்துவதற்கு அடிகோலியிருக்கிறது. உயர் மட்டத் தினரால பயனபடுத்தப்படுபவை எனக் கருதப்பட்ட பனிப்பெட்டி, தொலைக்காட்சிப் பெட்டி போன்றவை யாவும் மாத வருமானம் நிலையாக உள்ள நடுத்தரக் குடுமபத்தினரின் அடிப்படைத் தேவைகள் என மதிக்கப்படுகின்றன. தவணை முறை விற்பனைக்கான தனியார் நிறுவனங்களும், வாடிக்கையாளர் தவணை முறையில் பொருள்களைப் பெறுவதற்கு வங்கிகளின நிதியுதவியும் பெருகி வருகின்றன. எனவே, தவணை முறை விற்பனைக்கு ஒரு சிறப்பான எதிர் காலம் இந்திய நாட்டில உள்ளதென உறுதி கொள்வ தில் தவறில்லை. கோ.கோ.

**தவம்:** ஆன்மிக வாழ்வினை இம்மை, மறுமை, வீடு என மூன்றாகச் சமய நூலோர் பிரித்துள்ளனர். இம்மை என்பது மக்கள் வாழ்கின்ற இந்த உலக வாழ்க்கை. மறுமை என்பது தேவர்கள் வாழ்கினற உலகிலுள்ள வாழ்வு. வீடு என்பது இவ்விரண்டினும் சிறந்ததான பேரின்ப வாழ்க்கை. இப்பேரின்ப வாழ்க்கையை அடையச் செய்யும் முயற்சியே தவம் என்று கூறுவது. ஆன்ம வாழ்வு இவ்வுலகத்தோடு முடியவில்லை. இவ்வுலகில் தானெடுத்த உடம்பினை விட்டுப் பிரிந்த ஆன்மா மற்றொருஉடம்பிலோ வேறு உலகத்திலோ தோன்றும் என்பது நம்பிக்கை. இத னைப் பல சமயவாதிகள் ஒத்துக்கொள்கின்றனர். ஆகையினால் இவ்வுலக வாழ்வினுக்காகப் பாடுபடுதல் எவ்வளவு இனறியமையாததோ, அது போலவே மேலுலக வாழ்வினுக்காகப் பாடுபடுதலும் இன்றி யமையாதது. திருவள்ளுவர் பொது நெறியில் நின்று உலக அறங்கள் அனைத்தையும் தொகுத்துக கூறி னார். ஆயிரம் வேள்விகளைச் செய்வதைவிட, ஓர் உயிரைக் கொலலாமை நல்லது என்று கூறுகின்றார். மேலும், தவம் செய்பவர்களதாம் தங்களுடைய கருமஞ் செய்பவர்கள் எனறு கூறுகிறார். தொல்காப் பியரும், மனையறங் காத்த நல்லோரெல்லாம் நாள டைவில் உலக ஆசை தீர்ந்து, உற்றார் உறவினர் மக்கள் சூழ இருந்து தவம் பயிலுதல் வேண்டும் என்று கூறுகிறார்.

வேந்தர்களும் கடைசியில் வீரவுணர்ச்சி குன்றிய காலத்துத் தங்கள் மைந்தர்களுக்கு முடிசூட்டித் தாங்கள் தவம் பயில வேண்டும் என அறநூல்கள் கூறுகினறன.

தவம் மிகப் பெருமையும் பேராற்றலும் வாய்ந்தது. விசுவாமித்திரர் முனிவராவதற்கு முன் னர் மன்னராக இருந்தவர். ஒரு சமயம் வசிட்ட முனிவரோடு மாறுபட்டுத் தோல்வியடைந்தார். தம் பேராண்மையும் படைபலமும் வசிட்டர்முன் சிதறிப் போயின என்று உணர்ந்த விசுவாமித்திரர் தவத்தின பெருமையுணர்ந்து தவநெறியை மேற்கொண்டார். இலங்கைமாநகரத்தைச் சுற்றிப்பார்த்த அனுமானஅந் நகரத்தின் பெருமை எல்லாம் இராவணன் இயற்றிய தவத்தினால் ஏற்பட்டது என்று உணர்ந்து வியந்தான. அது போலவே சூரபதுமனும் பேராற்றலைக் கடுந் தவத்தினால் பெற்றிருந்தான் எனக் கந்தபுராணம் கூறுகிறது. மூர்க்கத் தனமாகக் கடுந்தவம் செய்த அசுரர்களும் வேள்விகளைச் செய்த தேவர்களும் பதவி விரும்பியவர்களே. கடவுளைக் காணும் பேறு பெற்றும் இராவணனும் சூரபதுமனும் ஞானமோட் சத்தை விரும்பாமல பதவி போகஙகளையே விரும்பிப் பெற்றார்கள். முடிவில் அவர்கள் துனபமடைந்தார் கள். பேரின்பத்தையும் அமைதியையும் தருவதே தவத்தின பெருமையென உணரவேணடும்.

தவம் என்பதுஉடலைவருத்திச் சுருக்குவதை முதன் மைப் பொருளாகக் கொண்டது. பலவேறு சமயத் தினர் தவ நெறிகளைப் பலவேறு வகைகளாகக் கூறி யுள்ளார்கள். சமண பௌத்த சமயத்தினரும் தவம் சீலம் முதலியவற்றை வற்புறுத்துகின்றனர். பௌத் தர்கள் இன்னாசெய்யாமையே தவம் எனறு கூறுகினற னர். சமணர்கள், ஐம்புலன்களை அடக்கல், உணமை பேசுதல் முதலியவற்றைத் தவம் என்கின்றனர். உலக மக்கள் துன்பத்தினைத் துடைக்க வழிகண்டு பிடிக்கக் கௌதமபுத்தர் அரச வாழ்கையை உதறித் தள்ளிப் போதிமரத்தின் நிழலில் ஐந்தாண்டுகள் ஊண் உறக்கமின்றித் தவம் இருந்தார் என்று கூறப் படுகிறது. வெளியுலகில தாவி அலையும் மனத்தை அகமுகமாகத் திருப்பி ஓரிடத்தில நிறுத்தி, ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கிப் பசி, களைப்பு, உறக்கம் முதலிய உணர்வில்லாமலிருப்பது தவம் என்று கூறலாம். திருவள்ளுவர் ஐந்தவித்தலைப் பற்றிக் கூறுகினறார். ஆன்றவிந்தடஙகிய சானறோரைப்பற்றிப் புறநானூறு கூறுகின்றது.

தவ நெறியில் நிற்பார் தமக்கு வருந்துன்பததைப் பொறுத்துக் கொள்ளவேண்டும். பிற உயிர்க்குத் தீங்கு செய்யக்கூடாது. தெய்வத்தை அடைவது தவத்தின் நோக்கம் என்பர் சிவநேசச் செல்வர். சிவ பெருமான் தடுத்தாட்கொணட பின்னர்ச் சுந்தர மூர்த்தி திருத்துறையூர்ப் பெருமானை வணங்கித் 'தலைவா நின்னை வேண்டிக்கொள்வேன் தவ நெறியே' என அவ்வூர்ப் பதிகத்துப் பத்துப் பாடலி

லும் வேண்டுகின்றார். யோக நெறியில் நின்று இறைவனை வழிபட்டவர் சுந்தரர் என்பது சைவ சமயச் சான்றோர்கள் கருத்தாகும். ஆகையினால் அவர் வேண்டிக்கொண்ட தவநெறி யோக நெறி தான் என்பது தெளிவாகும். பொதுவாகக் கூறு மிடத்துத் தவம் என்பதும் யோகம் எனபதும் ஒன்றே எனக் கருதலாம். யோகம் என்றால் ஒன்றுதல் என் பது பொருள். ஆனம அறிவு தெய்வப் பேரறிவோடு ஒன்றுதலே யோகம் எனப்படும். உடம்பில் கட்டுணடு உலவும் ஆன்மாவினுக்குச் சாக்கிரம், சொபபனம் சுழுத்தி, துரியம், துரியா தீதம் என ஐந்து வகையான நிலை உணடு. அவறறுள் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி எனனும் மூன்றையும் மனிதர் அனைவரும் அனுபவித்து வருகின்றனர். ஆனால் துரியம், துரியா தீதம் என்ற இரணடும் யோக நெறி கைவந்த ஞானி கள தாம் அனுபவிக்கமுடியும். துரிய நிலையில் ஆன மாவும் பிராணனும் இருக்கும். துரியாதீத நிலையில் ஆன்மாவும் திருவருளுமே இருக்கும். இந்த நிலையில் தான் ஆன்ம அறிவு, தெயவப் பேரறிவோடு ஒன்று பட்டு மெய்ப்பொருள் காட்சியினைப் பெறுகின்றது.

சைவ சித்தாந்த முதல நூலாகிய சிவஞான போதம் எட்டாம் சூத்திரததில், முன்செய்த தவப் பயனாக இறைவனே ஆன்மாக்களுக்குக் குருவாகவந்து உண்மை ஞானத்தைக் கொடுப்பான் என்று கூறுகிறது. அங்கே சரியை, கிரியை, யோகங்களே தவம் எனவும் கூறப்பட்டுள்ளது. சிவாலயத்திற்கும் சிவனடியார்க்கும் தொண்டுசெய்து வழிபடுதலே சரியை என்று கூறலாம். இவ்வாறு தொண்டு செய்தால் மனமாசுஅகன்று தூய வாழ்வு உண்டாகும். அவ்வாறு மனமாசு அகன்றவா கள் ஏதாவது ஒரு திருவுருவத்தின் மூலம் இறைவனை பூசித்தல் கிரியைத் தவமாகும். அபிடேகம், ஆரா தனை, அருச்சனை, நைவேத்தியம் முதலிய பல அங்கங்களோடு புறத்தே வழிபாடு செய்து, அகத்தே யும் அப்பெருமானை நினைத்துப் பூசித்தல் சிவபூசை எனப்படும். யோகம் என்பது ஆசனம், பிராணா யாமம், தியானம் என்ற மூன்று அங்கஙகளாலாகியது. தியானத்தில் நிலைத்திருந்து சமாதிகூட மன உரமும் உடலுறுதியும் வேண்டும். ஆசனமும் பிராணாயா மமும் முறையே உடலுறுதியையும் மன ஊக்கத்தை யும் கொடுக்கும். பின்னர்த் தியானம் சமாதியை அடையச் செய்யும். இவை மூன்றும் சேர்ந்ததே யோகம் எனப்படும். சரியை, கிரியை, யோகம் என்ற மூன்றும் ஞானத்தை அளிக்கும். உலக நன்மைக்காக வும், உண்மை ஞானத்திற்காகவும் செய்யும் முயற்சி களெல்லாம் உண்மையான தவம் ஆகும். இரா.கோ.

**தவிர்த்தல் பயிற்சி:** இதனைத் தவிர்த்தல் ஆக்கநிலையிருத்தம் என்றும், தவிர்த்தல் கற்றல் என்றும் சொல்லலாம். ஓர் உயிரி (Organism) தண்ட னையை விளைவிக்கும் அல்லது துன்பத்தைத தரும தூணடுதலிலிருந்து விலகவும் தவிர்க்கவும் அறிந்து கொளகினற செயல தவிாத்தல் பயிற்சி (Avoidance Training) எனப்படும். விளக்கு சுடுவதைத் தெரிநது கொள்வதையும, மின்சாரம் அதிர்வை ஏறபடுததும எனறு அறிந்து கொண்டு எச்சரிகையாக இருப்ப தையும் சானறாகக் கூறலாம். ஒரு சோதனையில ஒரு நாய்க்கு ஒலியுடன (ஓசையோடு) மின் அதிர்வை யும் கொடுதது ஒரு வேலியைத தாணடக் கறபித தனர். நாய் மின் அதிர்வினினறு தப்பிக்க வேலியைத தாண்ட முயன்று கற்றுக்கொணடது பினனா ஒலியை அல்லது ஓசையை எழுப்பிய உடனேயே நாய வேலி யைத் தாணடியது. காரணம் தவிர்ததல பயிறசியின விளைவேயாகும, ஜி இரா.

**தவிர்ப்பு உறவுமுறை:** நடைமுறையில ஒவ வொரு சமுதாயத்தினரிடையேயும் ஒரு வரையறுக்கப் பட்ட உறவுமுறை காணப்படுகிறது அதன்மூலம் திரு மணம், குடும்பம் முதலான உறவுகளில ஒழுஙகுமுறை ஏற்படுத்தப்படுகிறது. குறிப்பாகத் திருமண அமைப்பில உறவுமுறை மிக நுணுக்கமாகக கவனிககபபடுகிறது. ஏனெனில், ஒருவர் குறிப்பிட்ட ஒரு சிலருடன மட்டுமே மணத்துணையைப் பெற இயலும் எனப தால் மற்றவர்கள அவருக்குத தவிாபபு உறவா கின்றனர். தவிர்ப்பு உறவுமுறை (Avoidance Relationship) மூலம் உறவினாகளுககிடையே நெருஙகிப பழகும் முறையிலும் மணததுணை பெறுவதிலும் ஒரு வரையறை ஏறபடுத்தப்படுகிறது.

**தவிர்ப்பு உறவின் விதிமுறைகள்:** தனி மனிதர் களுக்கிடையே ஏறபடும் உறவின தனமையை நெறிப் படுத்தும் அமைப்பாக உள்ளதே தவிர்ப்பு உறவுமுறை யாகும். பல சமுதாயத்தினரிடையே காணப்படும ஒழுக்கமுடைமை விதி, சகோதர சகோதரியரிடையே நெருங்கிய நட்பு ஏற்படுவதைத் தடுககிறது. இதற்குத் தக்க எடுத்துக்காட்டாகத் திகழ்வது இப்போதைய சமுதாயம் ஆகும். இதில் ஆண்கள பொதுவாக தம் உள்ளார்ந்த எண்ணங்களைப் பற்றித் தம் சகோதரி யரிடம் விவாதிப்பதில்லை. ஆனால், அதேசமயம் அவற்றைப் பற்றி தமக்கு நிச்சயிக்கப்பட்ட பெண் ணுடன் பேசத் தயஙகுவதில்லை. 'இரிப்' பழங்குடி யினர் தம் பெற்றோரின் நேர் உடன்பிறந்தாரின் பிள்ளைகளுடன் நெருங்கி விவாதிப்பதைத் தவிர்க் கின்றனர். அதேசமயம் தம் சகோதரன் மனைவி யிடம் மனம்விட்டு விவாதிக்கின்றனர்.

இரத்தத் தொடர்புடைய உறவினரிடையே நில வும் தவிர்ப்பு விதிமுறைகளுள் சகோதர சகோதரி

யரிடையே உள்ளதவிர்ப்பு உறவுமுறை ஆர்வத்தைத் தூண்டுவதாகஅமைந்துள்ளது. சில மெலனேசியக் குழுவினரிடையே சகோதரசகோதரியர், ஒருவரையொருவர் பெயரிட்டு அழைப்பதோ ஒருவர் இருக்கும் குடிசையில் மறறொருவர் நுழைவதோ தவிர்க்கப்படுகிறது. இலெபர் தீவினரிடையே(Leper's Islanders) பெண் பூப்பெய்தியவுடன்அவள் சகோதரனிடம் இருந்து பிரிக்கப்படுகிறாள். இங்ஙனம் பிரிக்கப்பட்ட பின் என்றாவது சகோதரனும் சகோதரியும் ஒரே பாதையில் சந்திக்க நேர்ந்தால், சகோதரி பாதையைவிட்டு விலகுகிறாள். சகோதரனும் சகோதரியும் ஒருவரையொருவர் பார்த்துக்கொள்வதைத் தவிர்க்கத் தலையைக் குனிந்து கொள்கின்றனர். இங்ஙனம் ஒருவரையொருவர் தவிர்ப்பது இறப்பினபோதும் கடைப்பிடிக்கப்படுகிறது. இருவரில் ஒருவர் இறந்துவிட்டால் மறறவர் இறந்தவர் வீட்டிற்குள் நுழையாமல் வெளியிலிருநதே துக்கம் கடைப்பிடிக்கினறனர்.

திரோபிரியாண்ட்டு தீவினரிடையே ஒரு ஆண், தன் சகோதரியை வேற்று ஆணமகன் கெடுப்பதை அல்லது தன் சகோதரி வேறு ஆண்மகனுடன் காதல் புரிவதைக் காண நேரிட்டால் மூவருமே தற்கொலை செய்துகொள்ளும் நிலை காணப்படுகிறது. சமவெளிப் பழங்குடிகளான குரோ (Crow) அரபாகோ (Arapaho) பழங்குடிகளிடையே சகோதர, சகோதரியர் மனம்விட்டுப் பேசுவது தடை செய்யப்படுகிறது. வெத்தர் (Veddas) பழங்குடியினரிடையேயும் சகோதரன்-சகோதரி ஒரே வீட்டில் தஙகுவதோ, உணவருந்துவதோ தவிர்க்கப்படுகிறது. இவர்களிடையே எவ்வித நெருக்கமும் தடை செய்யப்படுகிறது.

தவிர்ப்பு உறவுமுறையில் மாமியார் விலக்கு அனைத்துச் சமுதாயத்திலும் காணப்படுகிறது. மாமியார்-மருமகன் உறவு பெரும்பாலும் தவிர்ப்பு உறவாக உள்ளது. வெத்தர்களிடையே மாமியார் வீட்டிற்குள் இருக்கும் மருமகன் வீட்டிற்குள் செல்வதற்கு முன், உரத்த குரலில் சத்தமிட்டுத் தனது வரவை அவனது மாமியார்அறியச் செய்கிறான். அவன் தனது மாமியாரிடமிருந்து உணவையோ வேறுஎநதப் பொருளையோ ஏற்பதில்லை. அவன் மனைவி அல்லது மாமனார் முன்னிலையில் மட்டுமே அவன் தன் மாமியாருடன பேச அனுமதிக்கப்படுகிறான். இப்பழங்குடியினரிடையே மாமியார்-மருமகனுக்கு இடையில் ஏற்படும் நெருக்கத்தைக் குறைப்பதன் வழி, பெற்றோருக்கும் அவர்தம் மகன்களுக்குமிடையே ஏற்படக்கூடிய சச்சரவுகள் தவிர்க்கப்படுகின்றன.

மாமியார்-மருமகன் தவிர்ப்பு உறவு ஆப்பிரிக்கா, ஆசுத்திரேலியா முதலான பல பகுதிகளிலும் காணப்படுகிறது. சைபீரியாவின் சில பகுதிகளில் ஒரு பெண்ணுக்கும் அவள் கணவனின் தந்தைக்குமிடையே சமுதாய உறவுகள் தவிர்க்கப்படுகின்றன.

குரோ இந்தியரிடையே, மாமியாரும் மருமகனும் ஒருவருடன் ஒருவர் பேசுவதோ, ஒருவர் பெயரை மற்றவர் கூறுவதோ அனுமதிக்கப் படுவதில்லை. இவர்கள் இருவருள் யாரேனும் ஒருவரது பெயரைக் கூற நேரிட்டால் அப்பெயரை மறைமுகச் சொற்றொடர் வழி குறிப்பிடுகின்றனர். இம்முறை தமிழ்ச் சமுதாயத்திலும் உள்ளது.

நைல் நிலப்பகுதியினைச் சார்ந்த நீக்கிரோக்கள், தம் மாமியார் வசிக்கும் கிராமத்தைக் கடந்துசெலல நேரிட்டால் தாம் செல்லும் பாதையில் தமது மாமியார் குறுக்கிடாமலிருக்கத் தமது வரவை அவர்களுக்கு முன்கூட்டியே அறிவிக்கின்றனர்.

பொதுவாக மாமியார்-மருமகன் தவிர்ப்பு உறவு தேவையற்றதாகக் கருதப்படுகிறது. ஏனெனில் ஒருசில சமுதாயத்திரைத் தவிரப் பிற சமுதாயங்களில் இவர்களிருவரும் சேர்ந்து ஒரேயிடத்தில் வசிப்பதில்லை. எனவே, அவர்களிடையே எவ்வகையான சச்சரவோ நெருக்கமோ உண்டாகும்வாய்ப்பு மிகக் குறைவாக உள்ளது எனலாம். அதே நேரத்தில் மருமகள் தனது மாமியார் வீட்டில் நிரந்தரமாக வாழச்செல்வதால் சச்சரவினைத் தவிர்க்க அவளுக்கும் அவளது மாமனாருக்குமிடையிலான 'உறவு வரையறுக்கப்படுகிறது.

இப்போதுள்ள சமுதாயத்தில் பெரும்பான்மையினரிடையே திருமணமான பெண் பல்வேறு காரணங்களால் தனது கணவனின் பெற்றோருடன் வாழ்வதில்லை. இந்தச் சூழ்நிலையில் இத்தகு தவிர்ப்பு உறவின் தன்மைகள் மாறி வருகின்றன.

தவிர்ப்பு உறவுமுறை சமுதாயத்திற்குச் சமுதாயம் மாறுபடுகிறது. இந்த உறவுமுறையைக் குறித்து வட அமெரிக்காவில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுஅங்குள்ள பெரும்பான்மைப் பழஙகுடியினரிடையேஇத்தகு தவிர்ப்பு விதி காணப்படவில்லை என்பதைத் தெளிவாக்கிஉளளது. மாமியார்-மருமகன் தவிர்ப்பு உறவு பல்வேறு வாதங்களை வெளிக் கொணர்ந்துள்ளது. மாமியார் விலக்கு நடப்பு, தன்னுடைய மகளினால் அதிகப்படுத்தப்படுகிறது.அதைப்போன்றே மருமகனின் விலக்கு நடப்பு, அவன் மனைவியினாலும் அவளுடன் அவன் கொண்டுள்ள தாம்பத்திய உறவைப் பாதிப்பதாலும் அதிகப்படுத்தப்படுகிறது. மருமகன்-மாமியார் தவிர்ப்பு குடும்ப வாழ்க்கையில் எவ்வித முரணபாடும் ஏற்படாமலிருக்க ஓர் விதிமுறையாகக் கையாளப்படு

கிறது. தவிர்ப்பு உறவுமுறையைக் குறித்து மானிட வியலார் பல்வேறு கருத்துகளைக் கூறியுள்ளனர்.

மனித வரலாற்றின் தொடக்க நிலையில், தாய் வழிக் குடும்பத்தில் ஆதிக்கம் செலுத்தும் மாமியார் இல்லத்தில் தன் மனைவியுடன் வாழச் செல்லும கணவன் தன் மாமியாருடன் கொள்ளும் உறவு ஓர் வரையறைக்குட்படுத்தப்படுகிறது அல்லது தவிர்க்கப படுகிறது என்பது தைலர் (Taylor) கருத்து. தவிர்ப்பு உறவுமுறையினை இவர் உறைவிட முறையுடன் தொடர்பு படுத்திக் காட்டியுள்ளார்.

பிரேசர் (Frazer), பிராய்டு (Freud) ஆகிய இரு வரும் தவிர்ப்பு உறவுமுறையினைப் பற்றிக் குறிப பிடும்போது, ஒவ்வாப் பாலுறவைக் குறித்து நிலவும வெறுப்பின் அடிப்படையில் அமைந்ததே இத்தவிர்ப்பு உறவுமுறை என்கின்றனர். தொல பழங்குடியினரான இலங்கை வெத்தாகளிடையேயுள்ள தவிர்ப்பு உறவு, திரோபிரியாணட்டுத் தீவினரிடையே சகோதர-சகோ தரிகளுக்கு இடையிலுள்ள உறவு முதலானவை பிரேச ரின் கூற்றுக்கு அடிப்படையாக அமைந்தவை. தகாப் புணர்ச்சியினைத் தவிர்ப்பதே தவிர்ப்பு உறவுமுறை யின நோக்கம் எனபது இவா வாதம்.

வெவ்வேறு வகையான உறவினரிடையே உண்டா கக்கூடிய பாலின நெருக்கத்தையும், பாலீடுபாட்டை யும் தவிர்க்கவேணடியதன் இன்றியமையாமையினை மையமாகக் கொணடதே தவிர்ப்பு உறவு எனபார் பிராய்டு. இவரது கருத்துப்படி ஒரு சிறுவனோ, சிறு மியோ தம் இளம்பருவத்தில் தாஙகள் முறையானவர் களா இரதத உறவுடையவர்களா எனறு எணணிப் பார்க்காமல் பாலுணர்வு கொள்கினறனர். இத் தகைய உணர்வை அடக்கியாளவும், பாலின விதி முறைகளைக் கடைப்பிடிக்கவும், குடும்பத்தின உறவு கள் நிலையானதாக ஏற்படுத்தவும் உணடானதே தவிர்ப்பு உறவு எனபார் பிராய்டு.

தவிர்ப்பினை ஓர் சமுதாயச் செயலாகக் கருத வேண்டும் என்பாா இராட்கிளிப் பிரௌன் (Radcliffe-Brown). மக்கள் ஒருவரோடொருவர் தொடர்பு கொளளும்போது ஒத்துப்போகவோ, போகாமலிருக கவோ வாய்ப்புண்டு. அதனால், ஒருவருக்கொருவர் இணக்கமாக நடந்துகொள்ள வாய்ப்பில்லாமலும போவதுணடு. இஙஙனம் ஏற்படும் இணக்கமற்ற தனமையைத் தடுக்க உறவினரிடையே நெருக்கமேற் படுவது தடை செய்யப்படுகிறது. இதனால் ஏற்பட் டதே தவிர்ப்பு உறவுமுறை என்பார் இராட்கிளிப் பிரௌன்.

ம.ந.பு.

துணை நூல்கள்:

Fox R , Kinship and Marriage, Penguin, England 1967.

Linton, Ralph., The Study of Man, Appleton-Century Crofts, New York, 1936.

Lowie R., Primitive Society, Routledge and Kegan Paul, London, 1921.

**தழும்பன்:** சஙக இலக்கியத்தால அறியப்படும ஒருவீரன், குறுநில மன்னன. இவனது இயறபெயா அறியவியலவில்லை. போரிற புணபட்ட தழும்புடை மையின் தழுமபன் எனக் காரணபபெயா பெற்றான். பரணர் 'பெரும்புண ஏஎா தழுமபன' (நற. 300) என்று குறிபபிட்டுள்ளார். ஊணூர் எனபது இவனுக குரியதாகும. அவவூரில தஙகிப பாண சுறறததிறகும பிச்சைக்கு வந்தோாக்கும் வரையாது வழங்கிய கொடைஞன் ஆவான. ஒரு தலைவியினது எழில நலததைக் கூறுமபொழுது, பரணா 'வாயமொழித் தழும்பன் ஊணூா அன்ன குவளையுணகண இவள' (புறம. 348) எனறு இவனது ஊரை உவமை காட்டிச சிறபபித்துள்ளார். அதனால் அவவூா ஐம்புல நுகர்ச் சிக்கும் இடனாய்ச் சிறநதிலஙகியது என அறியமுடி கிறது. நககீரர் தம் அகநானூறறுப பாடலில் (227) தழும்பன, தூங்கல் எனனும் புலவராற பாடப பெறற ஓஙகு பெரு நல்லிசை உடையவன் எனறு, பாடி யிருத்தலால், வழுதுணஙகாய் போலும பெரிய தழும பினைப் பெற்ற பெரும் புகழ வாய்ந்தவன என்றும, இவனது மதில சூழநத ஊணூாககு அப்பால மருஙகூாப் பட்டினம் உளளது எனறும் தெகிறது ஆனால் தூஙகல எனனும் புலவர் பாடியதாகக் கூறப்பெறும் பாடல் இப்பொழுது கிடைத்திலது. இவனைப் புகழ்நது பாடிய நககீரர், பரணா தம் பாடல்கள இவன விழுப்புணபட்ட சிறந்த மறவன எனவும வரை யாது வழங்கும் கொடைஞன் எனவும் சிறநத வாயமையாளன எனவும் உணர்த்துகின்றன.

இரா.சா.

**தளர்ந்த முதுமை:** வயோதிகத் தன்மை காரணமாக உடலவலிமை குறைந்து, உளச் செயல் களில்- குறிப்பாக நினைவாற்றல், துடிப்புடன் செயற் படும் தன்மை, சிந்தனைத் தெளிவு போன்றவை குறைந்து காணப்படும் நிலைமை தளாநத முதுமை (Senility) எனப்படும் தளர்ந்த முதுமை என்பது உளப்பிணி சார்நத முதுமையைக் குறிப்பிடுவது ஆகாது. நாற்பது வயது அடைந்தவர்களுக்குப் பார்வை, கேட்டல் ஆகிய புலன்களில் சிறு குறை பாடுகள உண்டாகத் தொடஙகும் முதுமையால் ஒளி யின் பல்வேறு தன்மைகளை உணர்வதும், நீல

நிறத்தை அறிவதும் சிரமமாகிறது. செவி நரம்பணுக் கள் சக்தியை இழப்பதால் முதியோர் பின்னணி ஓசை களைக் கேட்க இயலாமற் போகிறது. அதனால் ஒலி யைச் சரிவரப் புரிந்துகொள்ள இயலுவதில்லை. ஒலி யின்மையும் அமைதியும் தேவையில்லை; மிகுந்த வெளிச்சமும், ஓசையுந்தான் தேவை. அறுபது வயதில 50 விழுக்காடு சுவை உணாவு இழக்கப்பட்டு விடு கிறது. 30 விழுக்காட்டுக்குமேல் மூளை மின் அளவு அலைகளில் மாறுபாடு தோனறுகிறது. நணபர்கள், உறவினர்கள், குழநதைகள போனறோரின் ஆதரவு குறைவதால் கவலை உணடாகிறது. அதனால் தளர்ச்சி ஏற்படுகிறது. ஜி.இரா.

**தளர்நடைப் பருவம்** என்பது குழவி (Child) பிறந்த இரணடு வாரம் முதல் இரணடு ஆணடு வரை உள்ள காலமாகும்(Hurlock, 1975). ஒரு குழவியானது பிறந்த இரணடு ஆணடிற்குள சிறிது சிறிதாகத் தற் சார்புடைய நிலையை (Independence) அடையக் கற்றுக்கொளகிறது.

**தளர்நடைப் பருவத்தில் குழவியின் வளர்ச்சி:** வாழக்கைப் பருவங்களில் தளர்நடைப் பருவத்திலும் பூப்படையும் பருவத்திலுந்தான் (Puberty) ஒரு மனித னுக்கு மிக வேகமான வளர்ச்சி ஏறபடுகிறது. குறிப் பாக, உடல் வளர்ச்சி முதல் ஆணடில் குழவியினு டைய உடல எடை, உடல் உயரத்தின் வீதம் ஆகிய வற்றைக் காட்டிலும் மிகுதியாகக் கூடுகிறது.ஆனால், முதல் ஆண்டு நிறைவு பெற்றதும் இரண்டாம் ஆண டில் இதற்கு நேர்மாறான வழியில் (அதாவது உடல் உயரம் எடையின் வீதத்தைக் காட்டிலும் மிகுகின றது) குழவி வளர்கிறது. இப் பருவத்தில் குழவிகளி டையே உயரத்தைக் காட்டிலும் எடையில் மிகுந்த வேறுபாடுகள் காணப்படுகின்றன. இவ்வேறுபாடு களுக்கு உடற்கூற்றமைப்பும் (Body Build) உணவருந் தும பழக்கங்களும் (Eating Habits) பெரும்பானமை யான காரணமாக இருக்கினறன.

**1) புலனுணர்வு வளர்ச்சி:** பிறந்த மூன்றாம் வாரத்தில் குழவி நகருகினற பொருள்களின்மீது தன்னுடைய கண்களைத் திருப்புகிறது. வெளிச்சம மிகுதியாகும்போது திடுககிடுகிறது. பார்வைத துலங கல்களை (Visual Responses) விடக் கேட்டல் (Auditory) சிறிது தாமதமாகவே நடைபெறுகிறது. இது முதல் மாதததில் முதிர்ச்சியடைகிறது. சில சம யங்களில் குழவிகள ஒலியைக் கேட்கலாம். ஆனால், துலங்காமல் இருந்துவிடுவதுண்டு. ஏனெனில், பிறந்து சில நாள்கள் வரையில் குழந்தையின் மையச் செவி ஒருவகை பனி போன்ற திரவத்தால் (Amnioric Fluid) மூடப்பட்டிருக்கிறது. எனவே, அரைச் செவி டாகக் குழவி இருக்கவேண்டியிருக்கிறது. அதை வெளியில் எடுத்துவிட்டால்தான் ஒலிகளைத் தெளி வாகக் குழந்தைகள கேட்கமுடியும்.

சுவையுணர்வு மற்றப் புலனுணர்ச்சிகளைப் போல் உடனடியாகக் குழந்தையிடம் ஏற்படுவதில்லை. குறைந்தது 7 மாதங்கள் ஆனபிறகுதான் குழந்தைக் குப் பற்பல சுவைகளைப் பகுத்துணரும் ஆற்றல் உண்டாகிறது. மோப்பம் (Olfactory), தட்பவெபபம் (Temperature), தசையியக்கம் (Kinesthetic), தொடு (Touch) புலன் உணர்ச்சி ஆகியவற்றைப் பற்றிச் சிறு குழந்தையிடம் விவரங்கள் கிடைப்பது மிகவும் அரி தாகும். வலியுணர்ச்சியைக் குழநதை தொடக்கத் திலேயே உணரத் தொடங்கிவிடுகிறது. குழந்தையின கூருணர்ச்சி (Sensitivity) முதல வாரத்திலிருந்தே மிகத் தொடங்குகிறது.

**2) தசை இயக்க முதிர்ச்சி:** குழந்தைகள வளர்ந்து முதிர்ச்சியடையும் செயல்முறையில் தசை இயக்க முதிர்ச்சியை ஆராய்ந்தவர்கள் குழநதையிடம் 10 வித மான பிடிப்புகளைக் (Grasping) கவனித்திருக்கின்ற னர். அவை 1) தொடர்புகொள்ள முடியாமை, 2) தொடர்பு கொள்ளுதல், 3) முதிர்ச்சி அடையாத அழுத்தம், 4) நசுக்கல் பிடிப்பு, 5) கைப்பிடிப்பு, 6) உள்ளங்கைப் பிடிப்பு, 7) மேலோங்கிய உள்ளங்கைப் பிடிப்பு, 8) கீழான பிடிப்பு, 9) முன்விரல் பிடிப்பு 10) மேலான முன்விரல் பிடிப்பு என்பவையாகும். குழந்தையின் வயது ஏறக்குறைய ஒன்றரை ஆணடு (60 வாரங்கள்) ஆகும்போது குழநதையின பிடிப்பு முழு மனிதனின் பிடிப்புக்குச் சமமாக இருக்கின்ற தென்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

தவழ்தல் (Crawling), ஊர்ந்து செல்லுதல் (Creeping), நடத்தல் எனறு குழந்தைகள படிப்படி யாகத் தசை இயக்க முதிர்ச்சியில் முன்னேற்றத்தைக் காணபிக்கினறன. செர்லி (Shirley) என்பவரின் ஆராய்ச்சிப்படி குழந்தைகள் நான்கு கட்டங்களில் அடங்குகின்றன. அவை 1) அடியெடுத்து வைக்கத் தொடங்கும் காலம்; 2) உடல் பளுவைக் காலில் தங்கவைத்து உதவியுடன் எழுந்துநிற்கும் காலம்; 3) நடத்திச்செல்லும போது நடக்கும் காலம்; 4) உதவியின்றித் தனியாக நடக்கும் காலம என்பன. எல்லாக் குழந்தைகளும் இந்த நான்கு கட்டங்களுக் குள் அடங்குவதில்லை.

**3) பேசும் திறன் முதிர்ச்சி:** நாள்கள் செல்லச் செல்லக் குழந்தையின் பேச்சு உறுப்புகள் வலிமை யுடன் முதிர்ச்சிபெற்றுப் பக்குவம் அடைகின்றன. எனவே, முறைப்படி ஒலிகளை எழுப்பிப் பேசுவதற் குக் குழந்தைகள் கற்றுக்கொள்கின்றன. சாதாரண

மாகக் குழந்தைகள ஓர் ஆண்டு முடியும்போது பேசுவ தற்குக் கற்கின்றன; ஒனறரை ஆணடில் சுமார் 25 சொற்களைக் கற்கின்றன. ஆனால் இதில் தனிமனித வேறுபாடுகள உணடு.

4) **உள எழுச்சி முதிர்ச்சி**· குழந்தையின் உள எழுச்சி நடத்தைகள், கற்றல் (Learning) மூலமும் பக்குவமடைந்து வருவதன மூலமும் முதிரசசி அடை கின்றன உள எழுசசிகள இயலபாக அமையவில்லை. சில நாளமில்லாச் சுரப்பிகளின நடவடிக்கைகள மிகு வதன் மூலம் உளஎழுசசித துலஙகல் உண்டாக முடி யும். குழந்தைப் பருவத்தில் உள எழுசசிகள நீணட நேரம் நிலைதது நிறபதிலலை. குழநதைகளின உள எழுச்சிகள் வெளிப்படையான செயலகளில் துலஙகச செய்கின்றன. குழந்தை வளரவளரச் சமூகத் தடைகள அக் குழந்தையின வெளிப்படையான துலங்கல்களின் மீது கட்டுபபாடுகளை உணடாக்குகினறன. அதனால, நாளாக ஆகப் பெரியோர்களைப் போனறு உள எழுச்சிகள மெதுவான வெளிபபாடுகளை உணடாக் கும் உள எழுச்சி நிலைகளாக (Moods) மாறுகினறன.

5) **சமூக வளர்ச்சி.** மனிதர்களையும் மறறப பொருளகளையும் குழந்தை, வேறுபாடு கணடறிகினற அனுபவம் ஏறபடும்போதுதான அககுழநதையினசமூக நடத்தை தொடஙகுகிறது. முதல இரணடு ஆணடு காலமவரையில் குழநதைகளின் சமூக நடத்தை ஒரே தன்மையாகத்தான நடைபெறுகிறது. குழநதைகள முதல் மாததில் மனிதாகளின குரலுக்குத் துலஙகு கின்றன. இரணடாம மாதத்தில் பெரியோாகளின கொஞ்சும் குரலைக் கேட்டவுடன் அழுதுகொணடிருக் கும் குழந்தை அழுகையை நிறுத்துகிறது. மூனறாம மாதத்தில் தாயையும் தநதையையும் அடையாளம கண்டுகொளகிறது. நானகு, ஐநது, ஆறு மாதஙகளில் கோபக் குரலகளைப் புரிநதுகொள்கிறது. எட்டாம, ஒனபதாம் மாதங்களில பெரியோாகளின பேசசைத திருப்பிச்சொலல முயலுகிறது. ஓராணடில பெரிய வர்கள் சொல்லும் சொறகளின் பொருளைப் புரிநது துலங்குகிறது. இரணடு வயதாகும்போது பல வழி களிலும் பெரியவர்களோடு குழந்தை ஒததுழைக கிறது. சில குழந்தைகள இரணடாம் ஆணடிலும் புது மனிதர்களைக காணும்போது கூச்சம் கொணடு தஙக ளுடைய தாயாருக்குப் பின்னால் சென்று முகததை மட்டும் மறைத்துககொள்கின்றன; பேசவும் மறுக கினறன.

**தளர்நடைப் பருவத்தில் நேரக்கூடிய இடையூறு கள்:** தாய்பபால் அருந்துவதை நிறுத்துவதினாலும (Weaning), தூக்கப் பழக்கவழக்கங்களில் ஏற்படும் திடீர் மாற்றங்களினாலும் கழிவுப் பொருள்களை அகற்றுவதில் உணடாகும் சிக்கலகளினாலும் குழந்தைகளுக்கு உடல்நிலையில சில இடையூறுகள் உணடாகினறன.

சில பெற்றோர்கள் குழந்தைகளைத் தொடக்கத் தில் மிகவும் கணடிப்பதாலும், சிலர், குழநதைகளை மிகவும் போறறிப் பாதுகாப்பதாலும் குழநதைகளின ஆளுமை பாதிக்கப்படும். வ தே.சா.

**துணை நூல்கள்:**

Hurlock, F.B., Developmental Psychology, Tata McGraw-Hill, New Delhi, 1975.

Shirley, M.M., A Motor Sequence Favours the Maturation Theory, Psychological Bulletine, 28,204-205, 1931.

***தளிச்சேரிப்பெண்டுகள்.*** பிறகாலச் சோழர் களின காலத்தில் பல கோயிலகள எடுககபபட்டு அவற்றின நிருவாகம், மற்றும் திருவிழாக்கள நலல முறையில நடைபெறப் பலவகையானவேலையாட்கள நியமிக்கப்பட்டனா. அவ்வாறு நியமிககப்பட்டவர் களுள தளிசசேரிப்பெணடுகளும ஒரு வகையைச சார்ந தவர்கள. தளிசசேரிபபெண்டுகள பரதததிலும் இசை யிலும கைதோநதிருநதனர். இவாகள நாளதோறும முககாலஙகளிலும கோயிலுக்குப் பணியாற்ற வேணடி யிருநததால் திருககோயிலைச சார்நத இடங்களில வாழநது வந்தமையால் தளிச்சேரிப்பெணடுகள என றும், இறைவனுககுத தொணடு புரிநது வநதமையால தேவரடியாா எனறும நாட்டியததில் வலலுநராக இருநதமையால நாடகக் கணிகையா எனறும் வழஙகப் பெற்றனர்.

தஞ்சாவூாப் பெரிய கோயிலில முதலாம் இராச ராசனின் 29-ஆம் ஆணடுக் கலவெட்டு தளிசசேரிப் பெண்டுகளைப் பறறிய விரிவான விளககம தருகின றது. இராசராசனின் ஆட்சிககுட்பட்ட பலவேறு இடங்களில இருந்த தளிசசேரி பெணடுகள் 400 பேர் களைக் கொணடு வநது தஞசையில் புதிதாகக் குடி யமாத்தினான. இவர்களுககெனறு தென தளிசசேரி, வட தளிச்சேரி எனற இரு புதிய தெருக்களை உரு வாக்கி அஙகு இவர்களைக் குடியமர்த்தினான. இந்த வீடுகளில் மொத்தம 400 தளிசசேரிப்பெணடுகள இருந்தனரெனத் தெரிகிறது. அவாகள எநத ஊரில் இருந்து வநதவாகள் என்பதும், அவாகளுடைய பெயர், வீட்டின எணணிக்கை ஆகியனவும் இககல வெட்டில் கிடைக்கினறன.

தளிச்சேரிப் பெணடுகளுக்கு நிலையாக ஒரு குறிப்பிட்ட நிலம் கொடுக்கப்பட்டது. அதில இருந்து

வருகின்ற நெல்லில ஒவவொருவரும் 100 கலம் நெல் கூலியாகப் பெற்றனர். இத்தகைய நெல் ஆட வல்லான் என்னும் மரக்காலால அளக்கப்பட்டு வந்தது தளிச்சேரிப் பெணடுகள் உயிர் நீத்தால அலலது வேலையைவிட்டு நின்றுவிட்டால் அவர்களுக்குப் பதிலாக வேறு ஆட்களை நியமித்துக் கொணடனர். உயிர் நீத்த தளிச்சேரிப் பெண்களின உறவினர்களைக் குறிப்பாக அந்தப் பணியில் நியமிப்பர். அத்தகைய உறவினர் தகுதியானவராக இல்லாவிட்டால் வேறு தகுதியுள்ள ஆட்களை நியமிப்பார்கள. அவவாறு நியமிக்கப்பட்டவர்கள எல்லாவிதமான சலுகைகளையும் அனுபவிக்க உரிமையுளளவர்கள ஆவர். இத்தகைய தளிசசேரிப் பெணடுகள் பெரியபுராணம் குறிப்பிடுகின்ற சிவத்தலஙகள அனைத்திலும் இருந்துள்ளனர்.

தளிச்சேரிப்பெண்டுகள் பெரிய கோயில்களின பெயரிலும், அரச பரம்பரையைச் சார்நதவர்களின பெயரிலும் தங்கள் பெயரை வைத்திருந்தனர். எடுத்துக்காட்டாகத் திருமூலட்டானம், இராசகேசரி, அருள்மொழி, குந்தவை, சேரமஙகை போன்ற அரச வமிசத்தாரின பெயர்களிலும் இவர்களின பெயர்கள் உள்ளன.

தளிச்சேரிப்பெண்டுகள யாரையும் மணந்து கொள்ளாமையால் பதியிலார் என்றும் சொலலப்பட்டனர். எனினும் சிலர் தாம் விரும்பியவரை மணந்து வாழந்த செய்தி கல்வெட்டில் கிடைககின்றது. திருவொற்றியூரில் இருந்த சதுரன்சதுரி என்பவர் நாகன் பெருங்காடனுடைய இல்லாள் என்று கல்வெட்டுக் கூறுகினறது ஆகவே, பதியிலார் என்று சொல்லப்படுகின்ற தளிசசேரிப் பெண்டுகள் மணம் முடித்துக்கொண்டும் இருந்துள்ளனர் என்பது தெளிவு.

சோழ மன்னர்கள் இசையிலும் நாட்டியத்திலும் வல்ல பதியிலார்க்குத் தலைக்கோல் என்னும் பட்டம் அளித்துச் சிறப்பித்துள்ளனர். 'பதியிலாள் நக்கன அரிங்கமான சமயங்கொண்ட சோழத்தலைக் கோலியும்' எனனும் கல்வெட்டுத் தொடரால் இது விளஙகுகின்றது. கடைச் சங்க நாளில் நாடகக் கணிகையர் நூல்களிற் சொல்லப்பட்டுள்ள முறைவழுவாமல் அவிநயத்தோன்ற அரசவையில் ஆடிக்காட்டி அரசன்பால தலைக்கோற் பட்டமும் பரிசில்களும் இப்பெண்கள் பெற்றுள்ளமை சிலப்பதிகாரத்தில் கூறப்படுகின்றது. அவ்வழக்கம் பிற்காலச் சோழர்களின ஆட்சியிலும் தொடர்ந்து நிலைபெற்றிருந்தது என்பது பல கல்வெட்டுகளின வாயிலாய்ப் புலனாகின்றது.தளிச்சேரிப் பெண்டுகள் சோழர் காலத்தில் மட்டுமன்றி விசய நகர, நாயக்கர்கள் ஆட்சிக் காலங்களிலும் வாழ்ந்துள்ளனர் என்பது தஞ்சைக் கல்வெட்டுகளில் இருந்து தெரியவருகின்றது.

திசு.

***தற்கருத்தேற்றம்***: ஒருவர் தமக்குத் தாமே கருத்தேற்றம் கொடுத்துக் கொள்வது தற்கருத்தேற்றம் எனப்படும். உளவியல் மருத்துவத்தில் தற்கருத்தேற்றம் (Auto Suggestion) ஒரு சிறந்த பஙகை வகிக்கிறது.

ஒருவரிடம் உள்ள குறையைப் போக்கவும் பலக் குறைவைப் போக்கவும் தற்கருத்தேற்றம் பெரிதும் உதவுகிறது. எடுத்துக்காட்டாகத் தன்னமபிக்கையிலலாமல தாழ்வு மனப்பானமை கொணடு, எதிலும வெற்றி பெற முடியாமல வருந்துபவன், 'நான நிச்சயம வெற்றி பெறுவேன, என்னால் எதையும சாதிக்க முடியும். இனி என் வாழ்வில் தோல்வி என பதே கிடையாது. வெற்றி, வெற்றி இனி என் வாழ்வில் எப்போதும், எதிலும் வெற்றி தான' என்று ஆணித்தரமாகத் தனக்குத்தானே கூறிக் கொளள வேணடும். உரக்கக் கூற வேணடியதிலலை. மனததில நினைத்தாலே போதும். ஆனால் ஒரே ஒரு முறை கூறினாலோ நினைத்தாலோ போதாது. நாடோறும இரவு படுத்துத தூங்குமுன மூன்று முறை கூற வேணடும். மறுபடி காலை எழுந்ததும் மூன்று முறை கூற வேணடும். எந்தக் காரியத்தையும் தொடங்குமுன தனக்குள் கூறிக் கொள்ள வேணடும். இப்படிக கூறுவதோடு நிறுத்தாமல்,செயலிலும் அதே நம்பிக்கையோடு ஈடுபட வேண்டும். இவ்வாறு தொடர்ந்து செய்யும் பொழுது தன்னம்பிக்கை மிகுந்து, தாழ்வு மனப்பான்மை அறவே நீஙகிவிடும்.

கல்வியில கவனம் செலுத்த முடியாமல், நாளுக்கு நாள் நினைவுச் சக்தியும், கவனமும குறைந்து வருகிறது; முனபுபோல் படிக்க இயலவிலலை எனக் கவலைப்படும் மாணவ, மாணவியர் எந்த மருத்துவரிடமும் போக வேண்டியதில்லை. ஒருவன 'எனனிடம எந்தக் குறையும் இல்லை. இனறு நான புத்துணர்ச்சியுடன் இருக்கிறேன். என் நினைவுச் சக்தியும், கவனச் சக்தியும் நாடோறும் மிகுநது வருகிறது. எனனால நன்கு கற்க முடியும், சிறநது செயற்பட முடியும்' என்று நாடோறும் தனக்குள கூறி வந்தால் நல்ல பயனைக் காணலாம்.

தற்கருத்தேற்றத்தின் மூலம் பயம், குழப்பம், மறதி, தாழ்வு மனப்பானமை, கோபம் போனற தேவையற்ற குணஙகளை அறவே நீக்குவது மட்டுமன்றித் தைரியம், பலம், தன்னம்பிக்கை, கவனம, நினைவாற்றல் மன நலம் முதலியவற்றையும் உறுதியாகப் பெற முடியும். வாழ்வில் வெற்றி பெற விரும்பும் எவரும் தற்கருத்தேற்றம் பெற்றிட வேணடும்.

ஹே.ந.

**தற்காதல்:** உளவியலின் தந்தை என்று சொல்லப்படும் சிக்மண்ட் பிராய்டு (Sigmund Freud) தற்காதல் (Narcissism) என்ற சொல்லை முதன் முதலாகப் பயன்படுத்தினார்.

கிரேக்க நாட்டுப் புராணத்தில் வரும் நார்சீசன் என்னும் அழகிய இளைஞனைப் பின்னணியாகக் கொண்டு பிறந்தது தற்காதல் என்ற பொருளைத் தரும் நார்சீசன் என்ற சொல். அந்த இளைஞன், தன் அழகிய பிம்பத்தைக் கண்டு மயங்கித் தன் மேலேயே காதல் கொண்டானாம்.

தற்காதல் சிறு குழந்தைகளிடம் இயற்கையாகவே காணப்படுகிறது ஆனால், நாளடைவில், அந்த அன்பைப் பிறர்மேல் செலுத்தக் குழந்தைகள் கற்றுக் கொள்கின்றன ஆனால் சிலரிடம் இந்தக் குணம் ஓரளவு நிலையாகவே அமைந்து விடுகிறது

தற்காதல் உடைய ஒருவன் தன் கவனம் முழுவதையும் தன் மேலேயே செலுத்துவான். அதனால் அவன் தன்னைச் சுற்றியுள்ள மற்றவர்களின் தேவைகளைப் பற்றிக் கவலைப்படுதில்லை.

தற்காதல் உள்ள சிலர் நன்றாகப் பேசுவார்கள்; பிறரிடம் அடிக்கடி குற்றம் கண்டுபிடிப்பார்கள், உள்ளே ஒரு பொருளை வைத்துப் பேசுவார்கள்; ஆனால், அவர்கள் செய்கையில் பெரிதாக ஒன்றும் இருக்காது.

தற்காதல் உடைய பெண் தன் அழகைப் பற்றி மிகவும் பெருமை கொள்வாள். பிறர் அவள் அழகைப் புகழாவிடில் மனமுடைந்து வருந்துவாள்.

தற்காதல் உடைய சிலர், மற்றவர் மத்தியில் இருக்கும்போது, எல்லார் கவனமும் தன் மேலேயே இருக்கும் வரை மகிழ்ச்சியாக இருப்பார்கள். ஆனால், அப்படியில்லாதபோது கோபமும் ஆத்திரமும் கொள்வார்கள்.

தன்னைத் தானே காத்துக் கொள்வதற்கான வழிமுறைகளுள் (Defense Mechanisms) ஒன்றாகத் தற்காதல் கருதப்படுகிறது. அந்த முறையில், சாதாரணமாக எவரும் இதைப் பயன்படுத்துவார்கள். எடுத்துக்காட்டாக ஓர் ஆசிரியர் தம் மாணவர் முன் தமக்கு எல்லாம் தெரிந்ததாகக் காட்டிக் கொள்ளவே விரும்புவார். அவருக்குத் தெரியாத ஒன்றை ஒரு மாணவர் கேட்டு விட்டால், 'புத்திசாலியான உனக்கு இது கூடவா தெரியவில்லை? நீயே இதற்கு விடை தெரிந்து கொண்டு வந்து நாளை சொல்!' என்று தம் அறியாமையை மாணவனுக்குத் தெரியாமல் மறைப்பார். அவரது அறியாமை வெளிப்படுவதற்கு அவரது தற்காதல் இடம் கொடுப்பதில்லை.

தற்காதல், உளச்சிதைவு நோயாளரிடம் மிகுதியாகக் காணப்படுகிறது. இவர்களது எண்ணம் எப்போதும் 'தங்களைச்' சுற்றியே இருக்கும். ஹே ந

**தற்காப்பு உரிமை:** தன்னைப் பாதுகாத்துக் கொள்ளல் என்பது, மற்ற எல்லா விலங்குகளுக்கும் இருப்பதுபோல ஒவ்வொரு மனிதனும் சமூகத்தின் ஓர் அங்கமாக ஆகும்போது குடிமக்களின் உரிமைகளையும் பாதுகாப்பது ஓர் அரசின் கடமையாகும் ஓர் அரசு தன்னால் இவ்வாறான பாதுகாப்பினை அளிக்க இயலாவிடில், தன் குடிமக்களை அவரவர் உரிமைகளைக் காத்துக்கொள்ள அனுமதிக்கும் தமக்கு எதிராக நியாயமற்ற தாக்குதல் நடைபெற்றால் ஒரு குடிமகன், கோழைபோல அஞ்சிஓடத் தேவையில்லை. ஏற்றுக் கொள்ளப்பட்ட வரம்புகளுக்கு உட்பட்டு எதிர்த்துப் போராடலாம். உடலையோ உடைமையையோ பாதுகாத்துக் கொள்ள அவனுக்கு உரிமையுண்டு.

தற்காப்புச் சட்ட விதிகளை மெயின் (Mayne) என்பவர் தொகுத்துரைத்துள்ளார். அவர் கூற்றின்படி (1)சமூகம் தனிப்பட்டவரின் உரிமைகளைப் பாதுகாக்க உத்தரவாதம் அளிக்கிறது. பெரும்பாலான வழக்குகளில் உடல் மற்றும் சொத்தின் மேலான, சட்ட விரோதத் தாக்குதலிலிருந்து பாதுகாக்க அதனால் முடிகிறது (2) எப்போது அரசின் உதவி கிடைக்கிறதோ அப்போது அதனை நாடுதல் வேண்டும். (3) அரசின் உதவியைப் பெறமுடியா நிலையில் தம்மைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டியதனைத்தையும் தனியார் ஒருவர் செய்து கொள்ளலாம். (4) ஆனால், பயன்படுத்தும் வன்முறையானது தன்மீது ஏவப்பட்ட வன்முறையைத் தடுக்க வேண்டிய அளவிற்குத் தக்க விகிதத்தில் இருக்க வேண்டும். அது தண்டிப்பதாக அல்லது பழிவாங்கும் எண்ணத்துடன் செயற்படுவதாக அமையக்கூடாது.

தற்காப்பு உரிமை வரம்பற்ற உரிமையன்று. சில வரம்புகளுக்கு உட்பட்டே இவ்வுரிமையைப் பயன்படுத்த வேண்டும். வரம்புகளாவன. 1) அரசின் பாதுகாப்புக் கிடைக்கும்போது இவ்வுரிமையைப் பயன்படுத்த முடியாது. 2) சூழ்நிலைக்கு ஏற்றவாறு வன்முறையைப் பயன்படுத்த வேண்டும். இவ்வரம்புகள் உரிமையைப் போன்று முக்கியமானவை. ஏனெனில், ஒருவருக்கு அளிக்கப்படுவது தற்காப்பு உரிமையேயன்றித் தண்டிக்கும் உரிமையன்று. மேலும் தற்காப்பு உரிமை, அவ்வாறான தற்காப்பிற்காக இல்லாதபோது ஒரு குற்றத்தை நியாயப்படுத்துவது

ஆகாது. தவிர ஒருவர் தானாக முன்வந்து தாக்கு தலைத் தொடுக்கும்போது அவர் தற்காப்புரிமையை (Right of private defence) வேண்ட முடியாது.

இவ்வாறான தற்காப்பு உரிமையானது தன் பொருளையும், சொத்தினையும் பாதுகாக்க மட்டு மன்றி மற்றவர் உடலையும் சொத்தினையும் பாதுகாககவும பயன்படுததப்படலாம.

இந்தியத் தண்டனைச சட்டத்தின் 96 முதல் 106 வரையிலான பதினொரு பிரிவுகளில் இவ்வுரிமை குறித்த சட்ட விதிகள் உள்ளன. இனி, தற்காப் புரிமையை யாருக்கு எதிராகப பயன்படுததலாம்? எவவரம்புகளுக்குட்பட்டு இதைப் பயன்படுத்தலாம்? எந்த அளவிற்கு இதனைப் பயன்படுத்தலாம்? எப்போது இவ்வுரிமை தொடஙகுகிறது? எவ்வளவு காலம் இவவுரிமை நீடிக்கிறது? எனற வினாக்களுக்கு விடை காணுதலும் இனறியமையாதது.

99-ஆம் பிரிவில் கூறப்பட்டவர்கள் தவிர மற்ற அனைவர் மீதிலும் இவ்வுரிமையைப் பயன் படுத்தலாம. பொது விதியானது 96-ஆம் பிரிவில் கூறப்பட்டுளளது. அதனபடி, தற்காப்பு உரிமையைப் பயன்படுத்தும போது அவர் செயல் குற்றமாகாது. ஒவ்வொருவருககும், 99-ஆம் பிரிவில் கூறபபட்டுளள கட்டுப்பாடுகளுக்கு உடபட்டு முதலாவதாக, மனித உடலைப பாதிககும் எந்தவொரு குற்றத்திற்கும் எதிராக, தன் சொந்த உடலையும் வேறொருவரின் உடலையும், இரணடாவதாக, திருட்டு, கொள்ளைக் குற்றம், அலலது சொததொழிப்பு, அத்துமீறல் குற்றம் முதலியவைகளுககான முயற்சி ஆகியவற்றின் வரையறையினகீழ வருகினற எந்தவொரு குற்றத் திறகும எதிராகத் தன்னுடைய அல்லது மற்ற வருடைய அசையும் அலலது அசையாச் சொததினைப பாதுகாக்க ஓா உரிமை உணடு (பிரிவு 97).

இதிலிருந்து, ஒருவா தனக்கு எதிராகத் தாக்குதல் நடக்கும்போது தன்னையும் தன சொத்தையும் பாது காத்துக் கொளளலாம் எனபதும், உடலைப் பாதிக்கும் சிறு குற்றங்களுக்காக மற்றவர்களையும் அவர்களது சொத்துககளையும் பாதுகாக்கலாம் என்பதும் தெளிவாகினறன. அதுபோல் புத்தி சுவாதீனமற்ற ஒருவர் தாககும்போது தன்னைப் பாது காத்துக் கொளள அவரையும் தாக்க 98-ஆம் பிரிவின கீழ் உரிமையுணடு.

**தற்காப்பு உரிமைக்கான வரம்புகள்:** 99-ஆம் பிரிவு எந்த வரம்புகளுக்கு உட்பட்டுத் தற்காப்பு உரிமை யினை ஒருவர் பயன்படுத்தலாம் என்பதைக் கூறு கிறது. சில சூழ்நிலைகளின் கீழ்ப் பொதுப்பணியாளர் களுக்கு எதிராகத் தற்காப்பு உரிமையைப பயன் படுத்த முடியாது எனறு முதல் வாசகம் கூறுகிறது நல்லெண்ணத்துடன், அலுவல் காரணமாகப் பொதுப பணியாளர் செயறபடுமபோது, குறிப்பிட்ட அவரது செயல் சரியெனக் கூறமுடியாது. எனினுமஅவருக்கு எதிராகத் தற்காப்புரிமை வேணட முடியாது. ஆனால அவரது செயல்கள் சட்ட விரோதமாக இருப்பின் மற்றச் சாதாரண தனியாராகவே கருதப்படுவார். சிறப்புப் பாதுகாப்பினை அவர் பெற முடியாது. அரசின் பணிகள் சுமுகமாக நடைபெற வேணடும் என்ற நோக்கிலே இப்பிரிவு அமைக்கப்பட்டுளளது.

அடுத்த வாசகம், பொது நிருவாகத்தின் உதவியை நாடத் தேவையான கால அவகாசம் இருக்குமபோது தற்காப்பு உரிமை கிடையாது என உரைக்கிறது. இதன்படி தற்காப்பு உரிமை வேணடுபவருக்குத் தாக்குதல் பற்றிய முன் தகவல் இருத்தல வேண்டும். அத்தகவல் சரியானதாகவும் நம்பகமானதாகவும் இருத்தல் வேண்டும். தக்க அதிகாரிகளிடம் தகவல் கொடுக்க வாய்ப்பு இருக்க வேணடும். இவ்வாறான சூழ்நிலைகள் அமைநதிருக்கும் போது ஒருவர் சட்டத்தைத் தன் கையில் எடுத்துக கொள்ள முடியாது. அரசின் உதவியை அவர் நாட வேணடும். ஆனால், தாக்குதல் திடீரெனவும் முனதிட்டமிட்டதாக வும் இருந்தாலும் பொது அதிகாரியின் உதவியை நாட வசதி இல்லாமல இருந்தாலும் அலலது அததகைய உதவி வரக் கால தாமதம் ஆனாலும இவ்வாசகம் பொருந்தாது. அவவமயத்தில் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளத் தேவையானதைச் செய்து கொளளலாம்.

99-ஆம் பிரிவின் நான்காம் வாசகம், தற்காப்புககுத் தேவையானதைவிட அதிகமான ஊறினை ஒருவர் ஏறபடுத்தக் கூடாது எனறு கூறு கிறது. ஒருவர் வீட்டில அததுமீறி நடககிறார் அல்லது இரவில் திருட வருகிறார் என்று வைத்துக் கொண்டால். உடனே அவரது அரிவாள கொணடு தாக்கிக்கொல்வவோ, கொடுங்காயம் விளைவிப்பதோ கூடாது. திருப்பித் தாக்குதல தேவைக்கு அதிகமா இல்லையா என்பதற்கு வழிகாட்ட எவ்வித விதி முறைகளையும் கூறமுடியாது. அது சூழ்நிலை களையும் வழக்கின் விவரங்களையும் பொறுத்தது. ஆள்களின் உடல்வலு, நடத்தை, நேரம, முன் விவகாரம், மற்றச் சூழ்நிலைகளைக் கவனத்தில் கொண்டே இவை தீர்மானிக்கப் படுகின்றன.

**உடல் மற்றும் சொத்து ஆகியவற்றைப் பாதுகாக்க எந்த அளவு ஊறு விளைவிக்கலாம்?** ஒருவர் தம் முடைய உடல், மற்றும் மற்றவருடைய உடல அல்லது சொத்து ஆகியவற்றைக் காத்திட எந்த அளவிற்குத் தாக்குதல் நடத்துபவர் மீது ஊறு

விளைவிக்கலாம் என்பதை இந்தியத் தணடனைச் சட்டத்தின பிரிவுகள 100, 101, 103, 104 ஆகியவை உரைக்கின்றன. இதற்காக ஒருவர் மரணத்தைக்கூட ஏற்படுத்தலாம எனபதைப் பிரிவுகள் 100, 103 ஆகியவை தெரிவிககினறன.

100-ஆம் பிரிவினகீழ் உடலைப் பாதுகாக்கத் தற்காப்பு உரிமை மற்றவர் உயிரைப் பறிக்கக்கூட இடமளிககிறது. எதிரி நடத்தும் தாக்குதலின் விளைவு, கொடுங் காயத்தினை ஏற்படுத்தும் என்ற தக்க அச்சம் இருக்கும்போது எதிரியைக் கொல்ல உரிமையுண்டு. எதிரி தன்னைக் கொல்ல வரும்போது அல்லது கொடுங்காயம் ஏற்படுத்த முனையும்போது அல்லது தாக்குதலின் நோக்கம் கற்பழிப்பு அல்லது இயற்கைக்கு முரணான காமவெறி அல்லது கடத்திச் செல்லல் அலலது சிறைப்படுத்தல் என்றிருக்கும்போது எதிரிக்கு மரணத்தை அல்லது மற்ற எந்த ஊறினை யாவது ஏற்படுத்தலாம். ஆனால் இவ்வுரிமைப் பிரிவு 99-இல் கூறப்பட்டுள்ள வரம்புகளுக்கு உட்பட்டது என்பதை நினைவிற் கொள்ள வேண்டும். தற்காப்பு உரிமை வாதத்தின் அடிப்படையில் மற்றவர் உயிரைப் பறிக்க நியாயப்படுத்த வேண்டுமெனில் கீழ்க்காணும் நிபந்தனைகள் நிறைவேற்றப்பட வேண்டும். முதலாவதாகக் குற்றம் சாட்டப்பட்டவர் அத்தகைய போராட்டத்திற்குக் காரணமாக இருக்கக் கூடாது. இரணடாவதாக, உயிருக்கு அபாயமோ பெருங்காயம் ஏற்படும் நிலையோ இருக்க வேண்டும்.மூன்றாவதாக, தன் பாதுகாப்பிற்கோ தப்பிச் செல்வதற்கோ வழி ஏதும் இருக்கக் கூடாது. மற்றும் உயிரைப் பறிக்கத் தேவை இருக்கவேண்டும். இத்தகைய அச்சம் உண்மையானதாக இருக்க வேண்டும். கற்பனையாக இருக்கக்கூடாது. ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில ஒருவர் கொணடிருந்த அச்சம் உண்மையானதா அன்றா என்பது ஒவவொரு வழக்கின் விவரஙகளையும்,ஆயுதங்களையும் மற்றச் சூழநிலைகளையும பொறுத்தது. அரிவாள், கத்தி போன்ற கூர்மையான ஆயுதங்களால் ஒருவர்தாக்க வருகின்றார்என்றால் அவரது எண்ணம் கொல்ல வருவதுதான எனபதை உறுதிப்படுத்திக் கொள்ளலாம்.

100 ஆம் பிரிவு உடலைப் பாதுகாத்திட மரணத்தைக்கூட ஏற்படுத்தலாம என்று கூறுவதைப் போல 103 வது பிரிவு சொத்திற்கு எதிரான சில குறறங்களுக்குஎதிராகச் சொத்தினைப் பாதுகாத்திட மரணத்தையும் விளைவிககலாம் என்று உரைக்கின்றது. கொள்ளைக் குற்றம் இரவில வீட்டை உடைத்துப் புகுதல், தீ மூலம் சொத்தழிப்பு, தறகாப்பு உரிமையைப பயன்படுத்தாவிட்டால் உயிருக்கு ஆபத்து விளைவிக்கும் திருட்டு, சொத்தழிப்பு, மனை அத்துமீறல் ஆகிய குற்றங்கள் அவை. இப்பிரிவில் கிடைக்கும் உரிமையுஙகூட 99 ஆம் பிரிவில் கூறப்பட்டுள்ள வரம்புகளுக்கு உட்பட்டது.

**தற்காப்பு உரிமை எப்போது தொடங்குகிறது? எவ்வளவு காலம் அது நீடிக்கிறது?** தற்காப்பு உரிமையின தொடக்கத்தினையும்காலவரையறையையும் இந்தியத் தண்டனைச் சட்டத்தின் 102 மறறும் 105 பிரிவுகள எடுததுக கூறுகினறன. பிரிவு 102, உடலைக் குறிதத பாதுகாப்பினையும் பிரிவு 105 சொத்துக குறிதத பாதுகாப்பினையும் கூறுகின்றது. குறற முயறசி அல்லது அச்சுறுத்தல் மூலம் உடலுக்கு அபாயம ஏற படும் என்ற நியாயமான அச்சவுணர்வு எழும்போது உடலுககான பாதுகாப்புரிமை உடனே தொடஙகுகிறது. அத்தகைய அபாய அச்சம் இருககும் வரை இவ்வுரிமை தொடர்நது இருக்கும். முனபு குறிப்பிட்டுள்ளதுபோல அச்சவுணர்வு போதிய காரணததுடன, உண்மையில் இருக்க வேணடும். ஒரு குற்றம் செய்வதறகான ஏற்பாடு மட்டும் போதாது. ஒருவன் தனனிடம் ஓர் ஆயுதம் வைத்திருக்கும் வரை இவ்வுரிமை எழுவதில்லை. ஆனால் தன்னிடம் உளள ஆயுதத்தைப் பயன் படுத்த முனையும்போது தறகாப்புரிமை உடனே எழுகிறது இவ்வாயுதம பறிக்கப் பட்டாலோ நிராயுதபாணியாக அவன ஆக்கப்பட்டாலோஇவவுரிமைமடிநது விடும். தாககபபடுவோம் எனற அச்சவுணர்வு மறையும் போது பாதுகாபபுரிமையும மறைநதுவிடும். இதேபோன்ற சொத்துப் பாதுகாபபுரிமை குறித்த சட்ட விதிகள் 105 ஆம் பிரிவில கூறப்பட்டுள்ளன.

ஆ.ச.

**தற்காப்புக் கல்வி:** நோய் அறிதல, நோய தடுத்தல், நோய்க்குச் சிகிச்சை ஆகியன மருத்துவக் கல்வியாக அமைவது போல எதிபாரா இடர்களுக் கான காரணங்களை அறிதல், அவற்றைத தடுத்தல, அவை நேரும்போது துணைபுரிதல் போன்றவை தற்காப்புக் கல்வியாக விளங்குகினறன. தறகாப்புக கல்வியானது கல்வி ஏற்பாட்டில உடல்நலக கல்வியின ஒரு பகுதியாக உளளது. மேலும் தற்காப்புக் கலவிககும் உடற் கல்விக்கும் அதிகமான தொடர்புண்டு.

எதிர்பாரா இடர்களால் உயிரிழப்பும் உடறபாதிப்பும் ஏற்படுகின்றன. உயிரிழப்பு பெரும் பாதிப்பு. உடற்பாதிப்பு மனப் பாதிப்பாகவும் சமூகப பாதிப்பாகவும் ஏற்பட்டு விடுகிறது. எனவே, அவறறைத் தடுப்பதில்முனனேற்பாடும் அவை நேர்ந்துவிடும்போது பயமின்றிச் செயற்படலும் தற்காப்புக் கல்வியின (Safety Education) பொருளடக்கமாகின்றன.

பள்ளிகளில் 5 வயது முதல் 17 வயது வரையிலான பருவத்தினர் பயில்கின்றனர். இவர்கள பகற் பொழுதுகளில் பெரும்பகுதியைப் பள்ளியில் கழிக்கின

றனர். மேலும் ஓராண்டில் பெரும்பாலான நாள்களில பள்ளியில் வாழ்கினறனர். எனவே, இவர்களின பாது காப்பு பளளியைச் சார்ந்ததாகி விடுகிறது. ஆகவே, பள்ளிகள் இவர்களுக்குத் தற்காப்புக் கல்வி தருவது இன்றியமையாத ஒன்றாகிறது.

பள்ளிப் பருவததினரிடையே இயல்பான சுட்டித் தனமும் துடுக்குத் தனமும், சற்று முரட்டுத் தனமும் காணப்படும். மேலும் ஆாவம், வியப்புக் காரணமாக முன்னெச்சரிக்கையுடன் செயற்படாத தன்மையும் இருக்கும். சிலவேளையில் அறியாமை காரணமாகச் செயறபடவும் செய்வா. இவர்கள பள்ளிப பொழுதில் வகுப்பறைகள், ஆய்வுக்கூடங்களை, விளையாடுமிடங் கள், பள்ளி சார்ந்த பொதுவிடங்கள் அனைத்திலும் இயங்கிக் கொணடிருப்பர். இந்நிலையில் இவர்களுக்கு இடர்கள் நேராதிருக்கத் தறகாப்புக் கல்வி தருவது பொருத்தமுடையதாகும். பள்ளிகளில் மின்சாரம், தீ, வேதிப பொருள்கள போன்றவற்றின் ஆக்கப் பயன் களும் அழிவுச் செயல்களும் தெரிதல் வேண்டும். விளையாடுமிடங்களில் விதிமுறைகளைப் பின்பற்ற வில்லையென்றால ஏறபடும் மோதலகள, பாதிப்புகள போன்றவறறை அறிதல் வேண்டும். இவை பற்றிய கல்வி தற்காப்புக் கலவியாக அமைகிறது.

பொதுவாகப் பள்ளிகளில் மின்சார இணைபபு களில, மினசாரக்கம்பிகளில் கவனத்துடன் இருத்தல் வேண்டும் என்ற கருத்து வேணடும். பள்ளிசசமூகப் பாடிவாழ்க்கை போன்ற வேளைகளில தீயினைப பயன்படுததும்போது தீ பரவாத முறையில் எச்சரிக்கை களை மேற்கொளளல் வேணடும் எனற கருத்து வேணடும். ஆய்வுக்கூடங்களில் வேதிப்பொருள்களின் பெயர் தெரிந்து, இயல்பறிந்து பயன்படுததும தனமை வேண்டும். பள்ளிக் குடிதண்ணீரைப் பயன்படுத்தும் இடங்களில் வழுக்கல் போன்றவை நிகழாத எச்சரிக்கை வேண்டும். இவை தற்காப்புக் கல்வியில இடம்பெறும்.

பள்ளி மாணவர்கள் மிதிவணடிகள் மற்றும் இரட்டைஉருளைவேக வணடிகளைப் பெரிதும் பயன் படுத்துகினறனர். எனவே, சாலைப் போக்குவரத்து விதிமுறைகளை அறிதல், போற்றுதல், பினபற்றுதல் ஆகியவை தற்காப்புக்கல்வியில் இடம்பெறுகின்றன. இன்று பளளிப் பேருந்துகள பல இயங்கிக்கொணடிருக் கின்றன. இவற்றில் கூட்டமிகுதியினால் வரும் கேடுகள் பற்றிய அறிவும் மாணவர்கள் பெற்றிருக்கவேணடும். பளளிப் பேருந்து ஓட்டுநரின் பொறுப்பையுணர்ந்து மாணவர்கள் அவருக்கு ஒத்துழைக்கும் செயலும் தற் காப்புக் கல்வியில் இடம்பெறுகிறது.

பள்ளிப் பருவத்தினரின் வாழ்க்கை வீடு, பள்ளி, சாலைகள் ஆகியவைகளோடு முழுத் தொடர்புள்ளது. பள்ளியில் சாலைகளில் விபத்து நேராதபடி கல்வி தருவதோடு வீடுகளிலும தீ, மினசாரம் போன்றவற் றால் விபத்து நேராதிருக்க வீட்டுத் துப்புரவு, வீட்டுப் பகுதிகளில் ஒழுங்குமுறை ஆகியவை பற்றிய கல்வியும் தறகாப்புக் கல்வியாக அமைகிறது.

தற்காப்புக் கல்வியைப் பாடப்பகுதிகளோடு தொடர்புபடுத்தித் தருதல் வேண்டும். தற்காபபுக் கல்வியில் ‘தற்காப்புப் பயிற்சி பெறுதல்’ சிறப்பிடம் பெறும். தீயணைப்பான்களைப் பயன்படுத்துதல், தீயணைப்பு நிலையஙகளுக்குச் சென்று செய்தி தெரிந்துவரல், சாலைப் போக்குவரத்துக் கட்டுப்பாடு களில் பயிற்சிபெறல், சுற்றுப்புறத் தூய்மை செய்தல் போன்றவை பயிற்சிகளாக விளங்குகின்றன.

மேலைநாட்டுப் பள்ளிகளில தற்காப்புக் கல்வியில் தீ பாதுகாப்பு விதிகள், மிதிவண்டி ஓட்டுதலில் பாது காப்பு முறைகள், பளளிப் பேருந்தில் பயணப் பாது காப்பு நெறிகள், விமானத் தாக்குதலினின்றும் பாது காத்துக்கொள்ளும் முறைகள் ஆகியவற்றில்பயிற்சிகள் கொடுக்கப்படுகின்றன. அழிவுத் தீ ஏற்பட இன்று அதிக வாய்ப்புகள் உள்ளதாலும சாலைப் போக்கு வரத்து நெருக்கடி ஏற்பட்டுள்ளதாலும் உலக நெருக் கடியின் விளைவாக நாடுகளுக்குள் போாகள் மூண்டு விமானத் தாக்குதல்கள் இயல்பாகிவிட்டதாலும் மேலைநாட்டினர் தற்காப்புக் கலவியில் மிக அதிக கவனம் செலுத்துகின்றனர்.

அமெரிக்காவில் தீத்தடுப்பு, தீயணைப்புப் பற்றிப் பள்ளிகளில் கற்றுத் தருகின்றனர். ஆண்டொன்றுக்குக் குறைந்தது 9 முறைகள் ஒத்திகைப் பயிற்சியை ஏற் படுத்துகின்றனர். ஒவ்வோர் ஆணடும் அக்டோபர் 9–ஆம் நாளிலிருந்து தீத்தடுப்பு வாரம் கொண்டாடு கின்றனர். பள்ளிகளில் தீ அணைப்பான் வைத்திருக்க வேண்டுமென்ற சட்டம் உள்ளது. சாலையில் எதிர் பாராஇடர் தடுப்புகளுக்கும், விமானத் தாக்கு தலினின்றும் பாதுகாப்புக்கும் முறையான பயிற்சிகளும் ஒத்திகைப் பயிற்சிகளும் தரப்படுகின்றன.

மேலைநாட்டுப் பள்ளிகள் தற்காப்புக் கல்வியைத் ‘தற்காப்புத்திட்டங்கள்’ வழியே தருகின்றன. பொது வான ‘தற்காப்புத் திட்டம்’ ஒன்றில் விளங்கும் கூறு கள் பின்வருவன: 1) மிகவும் அவசர நேரங்களில் யாது செய்யவேண்டும் என்ற அறிவு பெறுதல், 2) தனி மனிதர் ஒருவர் தம்மையும், பிறரையும் பாதுகாப்ப தற்குத் துணைசெய்யும் திறன்கள் அடைதல், 3) இடர்கள் தொடர்பான பாதுகாப்பு நிலை பற்றிச் சரியான மனப்பான்மை கொள்ளுதல், 4) தீ, மிதிவண்டி மற்றும் பிறவற்றை எச்சரிக்கையுடன் பயன்படுத்து

தலை உணர்ந்து போற்றும் தனமை பெறுதல, 5) மிகவும் அவசரங்குறித்த அறிகுறிகளுக்கு உடனடி யான துலங்கள தெரிதல், 6) இடர்களைத் தடுப்பதில் ஒததுழைப்புச் செய்தல், 7) குழநதைகளின பாதுகாப் பில் பொறுபபுணர்வுடன செயறபடுதல், 8) விபத்து நேர்ந்து விடடபோது தற்குலைவினமை, மனம் சிதறாமை.

பளளிக் காலததே தற்காப்புக் கல்வி மூலம் தொடக்கநிலை முதல் கல்வி பெற்றால் இடர்கள குறையும், மேலும் இடர்கள நேர்நதுவிட்டபோது சரி யான தடுப்புமுறைகள கையாளபபடும். எனவே தற காப்புக்கல்வி மூலம் பளளிப் பருவத்தினா வீடு, சாலை, பள்ளி ஆகியவைகளில எதிர்பாராஇடர்கள் நேராதபடி கல்விபெறுதல் சாலச் சிறப்புடையதாகும் செ.செ.

**தற்கொலை:** மனிதன் கிடைககக கூடிய அனைதது வழிகளையும பயன்படுத்தித் தனனுடைய உடல் நலததைக் காத்து வாழவை நீடிக்க விரும்பு கிறான தன்சக்தியையும, செல்வத்தையும செலவிட்டு நீண்டநாள வாழ முயறசி செயகிறான். சாவை வென றிட அவன் ஆசைப்படுகிறான; கனவும் காணகிறான. சாதாரணமாக ஏற்படுகின்ற சிறிய சிறிய காயங களைக்கூடத தவிர்க்க விருமபுகிறான.

இவ்வுண்மைகள் ஒருபுறம் இருந்தபோதிலும் சிலர் தஙகள வாழ்விறகு அவாகளாகவே ஒரு முடி வைத் தேடிக்கொள்கிறார்கள். அவர்கள தற்கொலை (Suicide) செய்து கொள்கிறாாகள. இவவாறு நடந்து கொளபவர்களின எண்ணிககை சறறுக் குறை வாக இருப்பினும், அது நாளுககு நாள பெருகிக் கொணடே போகிறது. இப்படிப்பட்டவர்கள ஏதேனும ஒருவகையில் இயறகைக்கு மாறானவாகள். வாழக்கை யில் இவர்களுடைய எதிாவினையும் ஒருசில செய்கை களும முறறிலும் மாறுபட்டு இருக்கும்.

தற்கொலை செய்துகொள்வது என்பது உலகில் பொதுவானதும் காலவரையறறதுமாகும. தற்கொலை நிகழாத ஒரு சமுதாயமோ ஒரு குறிப்பிட்ட காலமோ கிடையாது. தற்கொலை எனபது ஒரு தனி ஆள தொடர்பான சம்பவமாக இருந்தபோதிலும் இது ஒரு சமுதாய நிகழ்சசியாகும. ஆகவேதான தற் கொலையை ஒரு சமூகச்சிககலாக உலகம் முழுவதும கருதுகிறார்கள்.

உருத்.எசு. கேவன் (Ruth S. Caven) எனபவர் தற்கொலையை விவரிககும்போது 'வேண்டுமென்று ஒருவனுடைய வாழவை எடுப்பது அல்லது சாவு தன்னை நெருஙகும்போது அதிலிருநது காப்பாற்றிக் கொள்வதற்கு வாய்ப்பிருக்கும்போது தனனைக் காப் பாற்றிக்கொள்ளத் தவறுவது தற்கொலை' எனக் கூறுகிறார்.

தற்கொலை ஒரு சிக்கலான பிரசசினையாகும இதை எணணற்ற வழிகளில் அணுகவும முடியும

சில புகழ்பெறற உளவியல் அறிஞர்கள் மனோ தத்துவ நூல் கருததுப்படி தற்கொலையைப் பற்றி ஆராய்ந்து விவாதிததுள்ளனர். அவர்களுள முககிய மானவா சிக்மெணடு பிராய்டு (Sigmund Freud). எனபவராவார். இவருடைய கருத்துபபடி மனிதன மனத்தில் உயிாவாழ வேணடும் எனற ஆசையும, சாக வேணடும் என்ற விருப்பமும அடிப்படை உணாசசி வேகமாகச் செயறபட்டு மனிதனை எதிர்திசைகளில் இழுத்துககொணடும ஒன்றையொனறு ஆதிககம் செயயச் சணடையிட்டுக் கொணடுமுள்ளன. ஏதேனும் சில காரணங்களால் சாக வேணடுமெனற விருபபம, உயிர் வாழவேணடும் எனற ஆசையை வெற்றி கொளளுமேயானால் மனிதனின் வாழவேணடும் எனற ஆசை குறைந்து பலனறறுப் போய்விடுகிறது. இதன விளைவாகச சாவதுதான் ஒரு சிறநத வழிமுறை எனற முடிவுககு வருகிறான. தறகொலை பற்றி விவரித்துக் கூறும்போது பிராய்டு மூளை, நரமபு கோளாறுகளுக்கான காரணஙகளைக கணடுபிடிகக மனத்தைப் பறறிய ஆராயச்சியின் (PsychoAnalysis) அடிப்படை எணணஙகளுள ஒனறான முழுவதுமாகத் தனனை ஈடுபடுததிக கொளவதைக் குறிபபாகப பயன படுததிக கொளகிறார். முழுவதுமாகத தனனை ஈடு படுத்திககொளவது எனபது மனததிறகுரிய செய முறை. அதனபடி மனிதன ஒரு நோக்கத்துடனோஒரு குறிககோளுடனோ, ஒரு கருததுடனோ மிக நெருங கிய உறவை ஏற்படுததிககொணடு அதறகாக மட்டும வாழவதையே வாழ்க்கை என்றும், அது இலலை யெனில உலகில் மறறவையாவும் பயனற்றவை, பொரு ளற்றவை, மதிப்பறறவை எனறும் கருதுகிறான. தறகொலைக்கு இநத எணணமே காரணியாகி மனிதன தன்னைததானே அழிததுககொளவதோடு தனனை முழுவதுமாக ஈடுபடுத்திக்கொண்டு தற் கொலை செயதுகொள்கிறான்.

சமூகவியல் அறிஞர்களுள பிரான்சு நாட்டைச் சோநத புகழ்பெறற எமிலி தாககீம (EmileDurkheim) என்பவர் தறகொலை பற்றி விரிவாக ஆராய்ச்சி செய்து கருத்துகளைக் கூறியவர்களுள் முக்கியமான வர். சமூகச் சூழ்நிலைகளும், கூட்டான உணர்வுகளும் தான தறகொலைக்கு முக்கிய பொறுப்பு எனபது தர்கீமின கருத்தாகும். இவர் மனிதனின தனிப்பட்ட குணங்களை அடிப்படையாகவைத்துத தற்கொலையை மூனறு விதமாகப் பிரித்துக் கூறுகிறார். அவை

1) தன்முனைப்பு சார் தற்கொலை 2) பொது நலப் பண்பு சார் தற்கொலை 3) முரணபாட்டு நிலை சார் தற்கொலை என்பன.

இந்த அனைத்துவிதமான தற்கொலைகளுக்கும் முக்கிய காரணி சமூக முறிவு, ஒருவனுடைய தனிப்பட்ட குணத்திற்கும சமூகத தேவைக்கும் ஒவ்வாமையும் தவறான பொருத்தமும ஏறபடுமபோது ஒருவன தற்கொலை செய்துகொளகிறான். எப்போது ஒருவன அவனுடைய சமுதாயத்தில் வாழத் தகுதி யிலலாதவன எனறு நினைக்கிறானோ அப்போது அவன தற்கொலை செய்துகொளளத் தூணடிவிடப் படுகிறான.

தன்முனைப்பு சார் தற்கொலை எனபது தற புகழச்சிககும் சுய மரியாதைக்கும் அதிக முககியத் துவம் கொடுப்பவர்கள தற்கொலை செய்துகொள் வதைக குறிப்பதாகும். யாருடனும் அனபு அல்லதுபிரிய மில்லாது தனியாக வாழ்பவர்களதான தறகொலை செய்துகொள்ளும் தனமையுடையவர்கள். அதேபோலத திருமணம் செய்து கொணடு மனைவி, மக்களுடன வாழ்பவர்களைவிடத் திருமணம் செயது கொளளாமல தனியாக இருப்பவர்கள, விதவைகள், மனைவியை இழந்தவாகள போனறவர்களதாம் தற்கொலை செய்துகொளளும் தன்மையுடையவர்கள. அதுபோலக குழநதைப் பர்க்கிய முள்ளவர்களுடன ஒப்பிடும்போது குழநதை இலலாதவர்கள தற்கொலை செயதுகொள ளும் தன்மையுடையவாகளாகவே இருக்கிறாாகள என்று கூறுகிறாா.

இரணடாம் வகையான பொதுநலப் பணபு சார் தறகொலை எனபது ஒரு குழுவுடனோ சமுதா யத்துடனோ மிக நெருஙகிய தொடர்புடைய ஒருவன் அந்தக் குழுவின் நனமைககாகவோ அந்தச் சமுதா யத்திறகாகவோ தற்கொலை செயதுகொளவதாகும். இந்தவகையான தற்கொலைககுச் சிறநத எடுததுக் காட்டாகப் போர் வீராகளின் இறப்பைச் சுட்டிக காட்டுகிறார். பழங்காலத்திய பழககமாகிய ‘உடன கட்டை ஏறுதலை’யும் (Sati) ஓா எடுத்துககாட் டாக தாக்கீம் கூறுகிறார்.

மூன்றாம் வகையானது முரணபட்ட நிலைசாா தற்கொலையாகும். இம்மாதிரியான தறகொலைகள சமூகச் சீர்குலைவுடனும் பதட்ட நிலையுடனும் தொடர்புடையன, வாழ்ககையில் ஏற்படுகினற எதிா பாராதபிளவுஇவ்வகையான தறகொலையில் முடியும். பொருளாதார நிலையில் ஏற்படுகின்ற ஏற்றத்தாழவு களைவைத்து இவ்வகையாகத் தற்கொலையைவிவரிக் கத் தாக்கீம்முயனறுள்ளார். இலட்சாதிபதியாக இருந்த ஒருவனுக்கு எதிர்பாராதவிதமாகப் பொருளாதாரச் சீர்குலைவு ஏற்பட்டால் அவன் தற்கொலை செய்து கொளள முடிவு செய்கிறான். இதறகு அடிப்படைக் காரணம் பொருளாதாரமன்று. ஆனால் அவனுக்கு ஏற்பட்ட பொருளாதார மாறறத்தின் விளைவாக, சமுதாயத்தில் அவன் பெறறிருந்த மதிப்பு, அதன் உறவுமுறை ஆகியவைகளை இழந்துவிடுவதால அதைத் தாங்கிக்கொளள முடியாமல் அவன் தற கொலை செய்துகொளள முடிவு செய்கிறான.

ஒரு மனிதன் தற்கொலை செய்துகொளவதற் குரிய காரணிகளை அடிப்படையாக வைத்துச் சில அறிஞாகள சில தத்துவத்தை முன மொழிந்துளள னர். அவைகளுள் முதலாவதாகக கூறப்படுவது பருவ காலத் தற்கொலைத் தத்துவம். இத் தத்துவப்படி கோடைக் காலஙகளாகிய மே,சூன் மாதஙகளில் தற கொலைகளின் எணணிக்கை மழைக் காலஙகளாகிய திசமபர், சனவரி மாதஙகளில் நிகழ்கினற தற்கொலை களைவிட அதிகமாக இருக்கும. ஆனால், இநத வேறு பாட்டிற்கான காரணம் அந்தக் காலஙகளிலுளள தட்பவெப்பநிலை அனறு என்று தர்ககீம் கூறுகிறாா. ஆனால, உணமையான காரணம் கோடைககாலத்தில் மனிதனின சமூக உறவுகள் அதிகமாக இருப்பதும, மழைககாலங்களில இதுபோனற சமூக உறவுகள குறைவாக இருப்பதும்தான எனறு கூறுகிறார்.

அடுத்தபடியாகத் தறகொலைககு முககிய காரணமாகச்சொலலப்படுகினற மனோநிலை அலலது ஆண, பெண் பாகுபாடு பற்றி விளககம கொடுககும் போது சமூக நிபந்தனையை அடிப்படையாகக் குறிப் பிட்டுக கூறுகிறாா. பெண்களுடன ஒபபிட்டுப் பாாக்கும் போது ஆண்களதான அதிகமாகத் தறகொலை செய்துகொளகிறார்கள என்பது ஒரு கருதது. இதற்கு தர்க்கீம் விளககம் கொடுக்கும்போது பெணகளைவிட ஆணகள்தாம சமூக நிபந்தனைகளால மிகுதியாய்ப் பாதிககபபட்டு இயங்கக்கூடியவர்கள. மனச சோர் வடைநத ஒருவன தறகொலை செய்துகொள்வதற்கு முககிய காரணம அவனுடைய மனச்சோாவு அனறு. ஆனால், சமூக நிபந்தனைக்கு அவன காட்டுகினற அதிகமான உணாச்சிதான காரணம என விளக்கம் கூறுகிறார். தனிப்பட்ட மறறும மனோநிலை தத்துவக் கருத்துகளையும் அவா மறுககிறாா. அவருடைய கருத்துப்படி மனோநிலையும தனிபபட்ட காரணி களும சமூக நிபநதனையின விளைவேயாகும் எனக் கூறுகிறார். அலட்சியம், பகை கோபம், வெறுப்புணர்சசி கள் ஆகியன சமூக நிபந்தனையின வெளிப்பாடேயா கும் என்று கூறுகிறார்.

தறகொலைக்குத் தனிப்பட்ட காரணிகள் சில உள்ளன. முதலாவதாக உளவியல் காரணிகளைப் பற்றி அறிதல அவசியம். மன அமைதி குலைந்தவர் கள அலலது நிதான மனோநிலை இல்லாதவர்கள

தான் அதிகமாகத் தற்கொலை செய்துகொளவதாகக் கூறப்படுகிறது. சில உணர்ச்சிகளும், மனக் கிளர்ச்சி களும் உலகில் பொதுவானவை. ஆனால், சில சமயங் களில் அவை மனிதனின் மனோநிலையை மிகுதியாகப பாதித்துவிடுகின்றன. எடுத்துக் காட்டாக கோபம், பயம்,ஏமாற்றம், வெறுப்பு, கவலை, கட்டாயப்படுத்து தல, பழிவாங்கும் மனப்பான்மை, தாழவு மனப் பான்மை போனறவை மனிதனின் அறிவையும், சீரிய மனோநிலையையும் பாதித்துவிடுகின்றன. சில மனோவியாதிகளும் தற்கொலைக்கு முக்கியக் காரணி யாக விளஙகுகின்றன.

இரண்டாவதாகப் பொருளாதாரக் காரணிகள் உள்ளன. பொருளாதார நிலையில் ஏற்படுகின்ற ஏற்றத் தாழ்வுகள் நேரடியான விளைவுகளை ஏற் படுத்தாவிட்டாலும் மறைமுகமாகத் தற்கொலைக் கான காரணிகளாக விளஙகுகின்றன. பொருளாதார ஏற்றத் தாழ்வின விளைவாக ஒருவனுக்குச் சமுதாய வாழ்வில் ஏற்படுகின்ற இழப்புகளைத் தாங்கிக் கொளள முடியாமல் அவன் தற்கொலை செய்ய முயற்சிசெய்கிறான். அடுத்தவகையில் வேலையில்லாத வர்கள வறுமையின் கொடுமையால் தற்கொலை செய் துகொள்கிறார்கள்.

மூன்றாவதாக, சமூகக் காரணிகள் உள்ளன. தற கொலைக்கான சமூகக் காரணிகளில் மிக முக்கிய மானது குடும்பக் காரணிகள். அதாவது காதல், மணப்பணம், திருமணமுறிவு, பொருத்தமில்லாத குடும்ப வாழ்க்கை, இறப்பு ஆகியவை குறிப்பிடத் தக்கன. இனறைய நாகரிக உலகில் ஆணகளும்,பெண் களும் நெருங்கிப் பழகப் பல வாய்ப்புகள் உளளன. இதன் விளைவாக ஒருவரோடொருவர் காதல் கொள கிறார்கள். சமுதாயத்தில் காணப்படுகின்ற பல்வேறு கட்டுப்பாடுகளின் விளைவாக அவர்களின் காதல் நிறைவேறாவிடில் அதுவே தற்கொலைக்குக் காரணி யாகி விடுகிறது.

இந்தியாவில் இன்றைய முக்கிய சமூகச் சிக்கல் களில் ஒன்றான மணப்பணம் (வரதட்சணை) இளம் பெண்களின தற்கொலைக்கு முக்கிய காரணியாக உளளது எனறு புள்ளி விவரஙகள் கூறுகினறன. அடுத்தபடியாக இந்நாட்டுப் பணபாட்டின்படி திருமணம் என்பது பெற்றோர்களால் உறுதி செய்யப் பட்டு நிறைவு செய்யப்பட வேண்டியது. சில சமயங் களில் கணவன் மனைவியின் குணங்கள அல்லது ஆண், பெண் உறவு பொருத்தமில்லாமல் இருப்பதும தற் கொலைக்கு ஒரு முக்கிய காரணியாக விளங்குகிறது. மாமனார், மாமியாரின கொடுமை தாங்காமல் தற் கொலை செய்துகொள்ளும் இளம் பெண்களின் எண்ணிக்கையும் பெருகிக்கொண்டுதான் இருக்கிறது.

பொதுவாகவே சமுதாயத்தில் பெண்களின் நிலை மோசமாக உளளது மணப்பணம், குழந்தை இல்லாமை, குடும்பத்தில் ஏற்படுகின்ற துன்பங்கள், துயரஙகள அனைத்திறகும், புதிதாக வந்துள்ள மருமகளதான காரணம் என்று குற்றம் சாட்டப்பட்டு அவர்கள் துன் புறுத்தப்படுகினறனர். ஒரு பெண விதவையாகி விட்டால் அப்பெணணிறகு ஏறபடுகின்ற துன்பஙகள் எண்ணற்றவை. இதுவே அவர்களின் தறகொலைக்குக் காரணமாகிறது.

அடுத்தபடியாக சமூக அமைப்பு முறையிலும, பண்பாட்டு ஒழுஙகு முறையிலும ஏற்படுகின்ற மாறு தல்கள் மனிதனின மனநிலையில் மாற்றங்களை ஏற்படுத்தித் தற்கொலைக்குக் காரணியாக விளங்கு கின்றன. நிலையான மறறும் உறுதியான சமூக அமைப்புடனும பண்பாட்டுடனும விளங்கும் சமுதா யத்தில் வாழும மனிதன் மன உறுதியுடனும, மகிழ்ச்சியாகவும வாழ்கிறான். இல்லையெனில் மன அமைதி இல்லாமல் தனனைச் சுற்றி ஏற்படு கின்ற மாற்றஙகளுககு ஈடு கொடுக்க இயலாமல் தனனைத்தானே அழித்துககொளகிறான

இன்றைய வளரும் நாடுகளின முக்கிய சிக்கலான நகரமயமாதல், தொழில்மயமாதல போனறவை தற் கொலைக்குரிய முக்கிய காரணிகளாக உள்ளன. கிராம வாழ்க்கைக்கும், நகர வாழ்க்கைககும் அதிக வேறுபாடுகள உள்ளன. கிராமங்களிலிருந்து பல்வேறு காரணங்களால் நகரத்தில் குடியேறியவர்கள நகர வாழ்க்கைக்கேற்பத் தங்களை மாற்றிக கொள்ள இய லாமல் சுய ஒழுஙகு குலைவுக்கும் மனோநிலை பாதிக் கப்பட்ட நிலைககும் தளளப்பட்டு, செய்வதறியாது நிலை தடுமாறி, தற்கொலை செய்துகொளகிறாாகள.

அடுத்தபடியாக, போர்க்காலஙகளில ஏற்படு கின்ற விளைவுகள தற்கொலைக்கு நேரடிக் காரணி களாக விளங்குகின்றன. போரின விளைவால் ஏற்படு கின்ற பொருளாதார,அரசியல, சமூக மாற்றங்களைத் தாங்கிக்கொள்ள இயலாமல பலர் தற்கொலை செயது கொள்கிறார்கள. மேலும், சிலர் குடும்பத்தலை வனைப் போரில் பறிகொடுத்துவிட்டு அந்த இழப்பைத் தாங்கிக்கொளள இயலாமல் வாழ்வில் வெறுப்புறறுத் தற்கொலை செய்துகொளகிறார்கள்.

நான்காவதாக, உடல் தொடர்பான காரணிகள் உள்ளன. மனிதனின் உடலில ஏற்படுகின்ற நோய் அல்லது பெருந் துனபத்தின் விளைவாகப் பலர் தற் கொலை செய்துகொள்கிறார்கள. இதுபோலப் பல நாள்பட்ட வியாதிகள் அல்லது தீராத நோய்கள், எடுத்துக்காட்டாக, புற்று நோய், பாரிச வாயு நோய். நீரிழிவு நோய், ஆணமையற்ற நிலை, மேலும் சில

வினோதமான நோய்களினால் ஏற்படும் தொடர்ச்சி யான வலியைத தாங்கமுடியாமல் தற்கொலை செய்துகொள்கிறார்கள.

ஆகவே, தற்கொலை தனிப்பட்ட மனிதன தொடாபானதாக இருந்தபோதிலும் அது சமூகத் திற்குப் பெரும் அபாயமாகவிளங்குகிறது.இநத சமூகச் சிக்கலுக்கு முடிவுகட்டவேணடியது அனைவருடைய கடமையாகும். ஆகவே, தறகொலையைக் குறைப்ப தற்கு அல்லது அடியோடு நீக்குவதற்குச் சில அறி வுரைகள் இஙகுக் கூறப்பட்டுள்ளன.

முதலாவதாக, தற்கொலைக்கு மிக முக்கிய காரணியாகக் கருதப்படுகின்ற சமூகச் சீரகுலைவும், பிரிநதுபோன சமூக அமைப்புகளையும் சரிசெய்ய அனைத்து நாடுகளும் எல்லாவிதமான வழிகளையும் பின்பற்றிச் சமூகததில் அமைதியான சூழநிலையை ஏற் படுத்த முயறசி செய்யவேண்டும். சமூகம் போதைப் பொருள்களுககு அடிமையாகும் பழக்கத்தையும, பலாத்காரம் போன்ற சமூகச் சிக்கல்களுக்கும் முடிவு கட்டவேணடும்.

இரண்டாவதாக, பொருளாதார ஏற்றத்தாழ்வு களை அகற்ற முயற்சி செய்ய வேண்டும். வேறு பாடற்ற சமூகம் அமைக்கப் பாடுபட வேணடும்.

மூனறாவதாக, தற்கொலைக்கு எதிராக மதக் கொள்கை பரப்பல்கள் செய்யவேணடும்.

நான்காவதாக, திருமண வாழ்க்கையில் உள்ள மணப்பணம் கொடுத்தல் போன்றவற்றை மாற்றி யமைக்கப் பாடுபட வேண்டும். விதவை மறுமணத்தை ஊக்குவிக்க வேண்டும். சமூகத்தில் மக்கள மனநிறை வோடும் மன அமைதியுடனும் வாழ வழிவகை செய்ய வேணடும். கோ.இரா.

**தற்கொலை முயற்சியும் குற்றவியற் சட்டமும்:** சட்டம் மனித உயிரை மேலாக மதிககிறது. மனிதன் தனக்காக மட்டுமன்றி மனிதர்களால் ஏற்படுத்தப் பட்ட நாட்டிற்காகவும் வாழ வேணடும். ஏனெனில், இடர்வரும் காலத்தில நாடே அவனைப் பாதுகாக் கிறது. தன்னுயிரை மாய்த்தல் குற்றவியல் சட்டத்தின் கீழ்த்தடை செய்யப்பட்டுள்ளது. மனிதன பிற மனிதனை அழித்தால் கொலை என்று கருதப்படுவது போல் தன்னுயிரை அழித்தலும் குற்றமாகவே கருதப் படுகிறது. தற்கொலை புரிந்தவரைத் தணடித்தல் இயலாது; ஏனெனில் தற்கொலை புரிந்தவர் செயலுக் குப் பின்னர் இவ்வுலகில் வாழ மாட்டார். எனவே, தண்டித்தல் இயலாது. எனவே, தற்கொலை செய்ய முயற்சி செய்தல குற்றமாகக் கருதப்பட்டு விலக்கப் பட்டுள்ளது

இந்தியத் தண்டனைச் சட்டத்தின் 309–ஆம் பிரிவு தற்கொலை செய்ய முயற்சி செய்தல் குறித்துக் கூறுகின்றது. அரசு தரப்பினர், 1) குற்றம் சாட்டப் பட்டவரின் செயல் குற்ற முயறசி எனவும்; 2) குற்ற முயற்சி செயல் நடை பெறறது எனவும் மெய்ப்பித் தல் வேண்டும். குற்ற முயற்சியின்போது முழுக் குற்றத்தையும் செய்யும் பொருட்டு மூழ்குதல், தம்மைச் சுடுதல், நஞ்சு அருந்துதல் முதலான செயல் களொன்றில் ஈடுபட்டிருத்தல் வேணடும். எடுத்துக் காட்டாகத் தம்முயிரை மாய்க்கும் பொருட்டு கிணற் றில் விழுபவரைக் கூறலாம். பின்னால் அவர் வேறு ஒருவரால காப்பாற்றப்பட்டால் அவர் தற்கொலை செய்ய முயற்சி செய்தல் என்ற குற்றத்திற்கு ஆளா வார். ஆனால், அவர் தற்கொலை செய்து கொள்ளும் பொருட்டு மனத்தில் எண்ணம் கொண்டு கிணற்றை நோக்கி ஓடிக் கொணடிருக்கும்போது காப்பாறறப் படுவாரானால் அவர் செய்த செயல் குற்ற முயற்சி ஆகாது. ஏனெனில் அவர் இன்னும் முன்னேற்பாடு என்னும் நிலையில்தான் உள்ளார். மேலும், தம் முயிரை மாய்க்கும் பொருட்டு நச்சு விதைகளை அரைத்தலும் குறற முயற்சி ஆகாது. அவரது செயல் முன்னேற்பாடு நிலையில்தான் உள்ளது. அவர் குற்ற முயற்சி செய்வதன் முன்னர்த் தம் எண்ணத்தை அல் லது கருத்தை மாற்றலாம். அவர் தம் செயலுக்காக வருந்தலாம.

சிலவேளைகளில் ஒருசில காரியங்களுக்காக ஒரு சிலர் சத்தியாக்கிரகம் செய்வதும், சாகும்வரை உண்ணாவிரதம் இருப்பதும் உண்டு. அவ்வேளைகளில் அரசு தரப்பினர் அவர்கள்மீது தற்கொலை செயய முயற்சி செய்ததாக வழக்கிடுவர். ஆனால, பல வழக்கு களில் அவவாறு சாகும் வரை உணணா நோன்பிருத் தல் தற்கொலை செய்து கொள்ளும் முயற்சியாகாது எனத் தீர்வு செய்யப்பட்டுளளது.

இஙகிலாந்தில் தற்கொலை செய்து கொள்வோர் நீரில் மூழ்குதல், கயிற்றில் தொங்குதல், தனனைச் சுடுதல் முதலான முறைகளைப் பினபற்றுகின்றனர். மேலும், அந்நாட்டில் தற்கொலை செய்து கொள்ளும் ஏழு பெண்களுள் அறுவர் நீரில் மூழ்கும் முறையில் தற்கொலை செய்துகொள்வதையே பின்பற்றுகினற னர். இந்தியாவில் தற்கொலை செய்துகொள வோரில் ஆண்களும் பெணகளும் சமமான விகிதத்தில் உள்ளனர். இந்தியாவில் தற்கொலை செய்து கொள் வோர் பெரும்பாலும் நீரில் மூழ்கும முறையைப் பின் பற்றுகின்றனர்.

தற்கொலை செய்துகொள்ளும் முயற்சியில், முயற்சி என்னும் செயல் கண்டிப்பாக இருத்தல் வேண்டும். அப்போது தான் அவர் தற்கொலை

செய்து கொள்ள முயற்சி செய்த குற்றம் செய்த வராகக் கருதப்படுவார். வேறு செயல்களுக்காகக் கிணற்றில் குதித்தல், பயத்தால் கிணற்றில் குதித்தல் ஆகியவை தற்கொலை செய்து கொள்ள முயற்சி செய்தது ஆகாது.எடுத்துக்காட்டாக ஒருவர் காவல் துறையினரிடமிருந்து தப்பிக்க வேண்டும் என்ற எண்ணித்தில் கிணற்றில் குதித்தார்; பின்னர்க் காப் பாற்றப்பட்டார். அப்போது அவர் தற்கொலை செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்துடன் கிணற்றில் குதித்தார் என்று மெய்ப்பிக்கப்பட்டால் தான் அக்குற்றம் செய்தவராகக் கருதப்படுவார். அவர் காவல் துறையினரிடமிருந்து தப்பிக்கும் பொருட்டுக் கிணற்றில் குதித்த காரணத்தால் தற் கொலை செய்து கொள்ளும் முயற்சியை மேற் கொண்ட குற்றவாளியாக மாட்டார்.

மேலும், கணவரின் துன்புறுத்தலால் மனைவி வீட்டை விட்டு வெளியேறலாம். அப்போது கணவன துரத்தி வருவதால் தன் கைக்குழந்தையுடன் அவரிட மிருந்து தப்பிக்கும் பொருட்டுக் கிணற்றில் குதித்தா லும் தற்கொலையாகாது. ஏனென்றால் அப்பெண் தற் கொலை செய்து கொள்ளும் எண்ணத்தோடு கிணற் றில் குதிக்கவில்லை. தற்கொலை செய்துகொள்ள வேண்டும் என்ற எண்ணத்தோடு கிணற்றில் குதித் திருந்தால் அது தற்கொலை செய்து கொளளச் செய்த முயற்சி எனப்படும்.

மதத்தின் பெயரால் அல்லது இனத்தின் பெய ரால் சதி (Sati) என்னும் பெயரில் கணவர் இறந்த வுடன் மனைவியும் தம்முயிரை மாய்த்துக் கொள் கிறார். இதுவும் தற்கொலையில் ஒருவகையே. ஆனால், நீதிமன்றங்களால் இச்செயல் செய்ய முயற்சி செய்வோரை மற்றும் தூண்டுபவர்களை இந்தியத் தண்டனைச் சட்டத்தில் கூறப்பட்டுள்ள பிரிவுகளால் தண்டிக்க முடிவதில்லை. , எனவே, சதி என்னும் உடன்கட்டை ஏறுதலைத் தடுத்திட இப் போது நாடாளுமன்றத்தில் இரு அவைகளிலும் ‘சதித் தடுப்பு மசோதா’ நிறைவேற்றப்பட்டுள்ளது. மேலும் சிலர் பூரண-நிலையடைய-நிருவாண நிலையடைய- தம்மை இறைவனுடன் ஒன்றுபடுத்த வேண்டும் என்ற எண்ணத்துடன் தம்முயிரை மாய்த்துக் கொள்கின்ற னர். இதுவும் தற்கொலையே.

சாதாரணமாக, ஏற்கெனவே கூறியது போல், பட்டினிப் போராட்டம் செய்தல் தற்கொலை முயற்சி ஆகாது; பட்டினிப் போராட்டத்தின் பின்னர் உணவுகொள்ளாமல் பல நாள்கள் இருந்தால் உடல் வலுவற்ற நிலையை அடையலாம். இன்னும் சில வேளைகளில் உணவு கொள்ளாமல் அல்லது செலுத் தப்படாமல் இருந்தால் அவர்உயிர் போகும் நிலையை அடையலாம். அப்போது அவர் தற்கொலை முயற்சி செய்ததாகக் கருதப்படுவார்.

தற்கொலை செய்தல் தன்னுயிரை முழுவதுமாக அழித்தல் ஆகும். தன் உடலுறுப்புகளைக் காயப் படுத்துதல், தன்னைத் தானே ஆண்மையிழக்கச் செய்தல் முதலானவை தற்கொலை செய்து கொள் ளும் முயற்சிகள் அல்ல. தற்கொலை செய்து கொள்ள முயற்சி செய்தல் ஒரு பிடியாணை வேண்டாக் குற் றம். அதாவது பிடியாணை இல்லாமலேயே காவல் நிலையப் பொறுப்பு அதிகாரி குற்றம் சாட்டப்பட்ட வரைக் கைது செய்யலாம். இது ஒரு பிணை விடு குற் றம். இக்குற்றத்தை மாநகரக் குற்றவியல் நீதிபதியோ முதல் அல்லது இரண்டாம் வகுப்பு நீதிபதியோ குற்ற விசாரணை செய்யலாம். இக்குற்றம் செய்தோருக்கு மிகுந்த அளவாக ஓராண்டுச் சிறைத் தண்டனையோ தண்டத்தொகையோ இரண்டுமோ விதிக்கலாம். ஆனால், குடும்பத்தில் சரியாகப் பராமரிக்கப்படாத காரணத்தால் அல்லது குடும்பத்தில் ஒருவரை இழந்து விட்ட காரணத்தால் அல்லது அதுபோன்ற காரணங் களால் தற்கொலை செய்து கொள்ள முயற்சி செய் தால் மிகுந்த அளவு சிறைத் தணடனை விதித்தல் நன்றன்று.

இப்போது இந்தியத் தண்டனைச் சட்டத்தில் 309-ஆம் பிரிவு நீடித்திருக்க வேண்டுமா என்பது குறித்துப் பல்வேறு விதமான மாறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. இந்தியக் குடிமகன் வாழ்வதற்கு இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் 19 மற்றும் 21 ஆம் பிரிவுகளில் அடிப்படை உரிமை வழஙகப் பட்டிருப்பதுபோல் அவன தன் உயிரை மாய்த்துக் கொள்வதற்கும் அடிப்படை உரிமை உண்டு என்று வாதிடுவோர், இந்தியத் தணடனைச் சட்டத்தின 309 -ஆம் பிரிவு இந்திய அரசியலமைப்புச் சட்டத்திற்குப் புறம்பானது என்பர். அரசு நாட்டு மக்களின் நலனைப் பாதுகாத்திடுதல் வேண்டும். அவர்களுக்கு உணவு, உடை மற்றும் இன்னோரன்ன அடிப்படைத் தேவை களை அளித்துப் பசி, பட்டினி, வறுமை போன்ற பிணி களிலிருந்து அவர்களைக் காப்பாற்றுதல் அரசின் பொறுப்பு. அக்கடமைகளையும் பொறுப்புகளையும நிறைவேற்ற முடியாத அரசு குடிமக்களை எங்ஙனம் கட்டாயம் வாழ வேண்டும் எனக்கட்டாயப்படுத்து தல் இயலும் என்பது இவர்களின் வாதம். மேலும், தற்கொலையைத் தணடிக்க முடியாததால், தற் கொலைசெய்து கொள்ள முயற்சி செய்தல் பொருத்த மில்லை என்கின்றனர் இவர்கள்.

மேற்கண்ட வாதங்களைப் பம்பாய் உயர்நீதி மன்றம் ஒரு வழக்கில் (1986) ஏற்றுக் கொண்டு தற்

கொலை செய்து கொள்ள முயற்சி செய்தலுக்குத் தண்டனை விதித்தல் அரசியலமைப்புச் சட்டத்திற்குப் புறம்பானது என்று கூறியது. அவ்வழக்கில் காவல் துறை ஆணையர் காவலர் ஒருவர் மீது அலுவலகத்தின் முன்னர்த் தற்கொலை செய்து கொள்ள முயற்சி செய்தாரெனக் குற்றம் சாட்டப்பட்டது. அவர்கைது செய்யப்பட்டார். அவர் மீது குற்றச்சாட்டுக் கொடுக்கப்பட்டது. பம்பாய் உயர்நீதி மன்றம் இந்தியத் தண்டனைச் சட்டத்தின் 309-ஆம் பிரிவின் கீழ், கீழ் நீதிமன்றங்களில் உள்ள எல்லா வழக்கினையும் நிறுத்திடுமாறு ஆணை பிறப்பித்தது. இந்தியத் தண்டனைச் சட்டத்தின் 309-ஆம் பிரிவு இந்திய அரசியலமைப்புச் சட்டத்திற்குப் புறம்பானது எனவும் கூறியது. மீ.அ.

**துணை நூல்கள்:**

**Durkheim Emile**, Suicide- A Study in Sociology, Translated by John A., Spaulding & George Simpson., Edited by George Simposon. Routledge & Kegan Paul Ltd., Broadway House, carter Lane, London, 1951.

**Sharma R.N.**, Indian Social Problems, Media Promoters & Publishers Private Ltd., Bombay, 1989.

**தற்சுட்டுப்பெயர்:** ஒருபெயர்ச் சொல்லுக்குப் பதிலாக இட்டு வழங்கப்பெறும் பிறிதொரு பெயரே பதிலிப்பெயர் (Pronoun) எனப்படும். பதிலிப்பெயர் வகைகளுள் ஒன்றான தற்சுட்டுப்பெயர் (Reflexive Pronoun) வாக்கியத்தின் எழுவாயாகச் (Subject) செயற்படும் பெயர்ச்சொல்லைப் பிரதிபலித்து நிற்கும். 'கண்ணன் தன்னையே வருத்தினான்' என்னும் வாக்கியத்தில் 'தன்' என்னும் வடிவம் கண்ணனுக்குப் பதிலியாக (Substitute) அமையப்பெற்று வாக்கியத்தின் எழுவாயாகிய கண்ணனைப் பிரதிபலிக்கும் வகையில் செயற்படுவதால் தற்சுட்டுப்பெயராகக் கருதப்படுகின்றது.

பதிலிப்பெயர்களின் முன் வடிவம் (Antecedent) பெரும்பாலும் பதிலிப்பெயர்கள் வரும் வாக்கியத்தில் அமைவதில்லை. ஆனால், தற்சுட்டுப் பெயராகிய பதிலிப்பெயரின் முன் வடிவம் தற்சுட்டுப் பெயர் வரும் வாக்கியத்தில் அமையப்பெறும்.

ஆங்கில மொழியில் தற்சுட்டுப்பெயர்கள் மூவிடங்களிலும் அமையப் பெற, தமிழில் இப்பெயர்கள் படர்க்கை இடத்தில் மட்டுமே காணப்படுகின்றன. தமிழில் 'தான்', 'தாம்' என்னும் எழுவாய் வடிவங்களும் 'தன்', 'தம்' என்னும் வேற்றுமை ஏற்கும் வடிவங்களும் தற்சுட்டுப் பெயர்களாகச் செயற்படுகின்றன.

தற்சுட்டுப் பெயர்கள் பால் வேறுபாடின்றி ஒருமை, பன்மையாகிய எண் வேறுபாட்டுடன் அமையப்பெற்றுள்ளன. 'தான்', 'தன்' என்பன ஒருமையிலும் 'தாம்', 'தம்' என்பன பன்மையிலும் செயற்படும். ஓரோவிடத்துப் பன்மைத் தற்சுட்டுப் பெயர்கள் உயர்வு ஒருமையிலும் செயற்படுவதுண்டு. பன்மைத்தற்சுட்டுப் பெயர்கள்உயர்வு ஒருமையில் வழங்கப்பெறுவதால் இக்காலத் தமிழில் 'தாங்கள்', 'தங்கள்' என்னும் வடிவங்கள் பன்மைத் தற்சுட்டுப் பெயர்களாகச் (மக்கள் தங்கள் பொருளை இழந்தார்கள்) செயற்படுகின்றன. படர்க்கைப் பதிலிப்பெயர்களே தமிழில் காலப் போக்கில் தற்சுட்டுப் பெயர்களாகச் செயற்படுகின்றன.

ஆங்கில மொழியின் வாக்கியத்தில் செயலைச் செய்கின்ற எழுவாயும் செயப்படுபொருளும் ஒன்றாக அமையும் நிலையில் செயப்படுபொருளைக் குறிப்பதற்குப் பயன்படும் பதிலிப்பெயரே தற்சுட்டுப் பெயர் எனப்பெறும். தமிழில் எழுவாயினைப் பிரதிபலிக்கும் தற்சுட்டுப் பெயர் எப்போதும் செயப்படுபொருளாக அமைவதில்லை. தற்சுட்டுப் பெயர் தமிழில் பெரும்பாலும் எழுவாய் வடிவத்தின் பினனிடத்ததாக அமைந்துவரும்.

சில சூழல்களில் தற்சுட்டுப் பெயர்களைக் கொண்ட வாக்கியத்தின் வினைப்பயனிலையில் பிரதிபலிப்புத் துணைவினை (கொள்) வரப்பெறுதல் (இராமன் தன்னையே அடித்துக்கொண்டான்) உணடு.

தற்சுட்டுப் பெயர்களாகச் செயற்படும் வடிவங்கள் வலியுறுத்தல் பொருண்மையினைச் சுட்டும் வகையில் ஒரு நிலைச் சொற்களாகச் (Particles) செயற்படுவதுண்டு.'கண்ணன் தான் திருடினான்' என்னும் வாக்கியத்தில் 'தான' என்னும் வடிவம் வலியுறுத்தல் பொருளைச் சுட்டும் ஒரு நிலைச் சொல்லாகச் செயற்படுகின்றது. தமிழில் இடப் பதிலிப்பெயர்களும் (Personal Pronouns) வாக்கியத்தின் எழுவாயினைப் பிரதிபலிக்கும் வகையிலும் அமைவதுணடு. ஏ.ஆ.

**தற்பால் காமம்:** ஆண்பாலினர் தமக்குள் ஒருவரை ஒருவர் காமுற்றுக் கொள்வது தற்பால் காமம் (Homosexuality) எனப்படும். பெணபாலினர் தமக்குள் இவ்வாறு காமுற்றுக் கொள்வதை வேறு பெயரால் குறிப்பிடுவர். அது மகளிற் தற்பால் காமம் (Lesbianism) எனப்படும். பழங்காலக் கிரேக்க, உரோம, பாரசீக, முகம்மதிய நாகரிகங்களில் ஆண்பாலினரின் தற்பால் காமம் ஒப்புதல் அளிக்கப்படாத ஒன்றாக இருந்தது. ஆனால், பிற்காலக் கிரேக்க, உரோம நாகரிகங்களில் தற்பால காம வகையில் பரத்தமை (Homosexual Prostitution) பொதுவாக நிலவி

யது உண்மையில் உரோமில் தாதியர்கள் அடிமைப் பெண்களுடன் காம உறவு கொண்டு வந்தனர். நெதர்லாந்து, தென்மார்க்கு போன்ற நாடுகளில் தற்பால் காமத்தைத் தடை செய்யச் சட்டங்கள் இல்லை. ஆனால், அது சமுதாயத்தால் ஏற்றுக் கொள்ளப்படாத ஒன்றாக இருந்தது. இந்தியச் சமுதாயத்தில் தற்பால காமம் என்பது கைது செய்யப் படுவதற்கும், சிறைத் தண்டனை தருவதற்கும் உட்பட்டதாகும். தற்பால் காமத்தினர் இந்தப் பிறழ் நிலை (Abnormal) நடத்தை உடையவர்களாயினும் வாழ்க்கையை நன்கு அமைத்துக் கொண்டவர்களாக வும், கற்றவர்களாகவும் தங்கள் தொழிலில் வெற்றி உடையவர்களாகவும் காணப்படுகின்றனர். சிலர் இசை போன்ற சில துறைகளில் சிறந்த வல்லுநர் களாகப் புகழ் பெற்றுள்ளனர். மாவீரன் அலெக்சாண்டர், மைககேல் ஏஞ்சலோ, ஆசுகார் ஒய்ல்டு, வொசினியாஉலபு போன்ற வரலாற்றுப் புகழ் பெற்றவர்கள் தற்பால காமம் கொண்டவர்கள் என்று கருதப் படுகின்றனர்.

எதிர்பால் காமம் (Hetrosexuality) என்பது ஒழுங்கான காம நடத்தை. ஆனால், தற்பால் காமம் என்பது ஒரு வகையான மனநோய். ஆகவே, இவ்வகையினர் சிகிச்சைக்குட்பட வேண்டியவர்கள் என்று உளவியல் வல்லுநர்கள் கருதுகின்றனர்.

தற்பால் காமத்தை ஐந்து வகையாகப் பாகுபடுத்துவர். அவை 1. மிதமான தற்பால காமம் (Balant Homosexual), 2. வெறிமிகுந்த தற்பால் காமம் (Desparate Homosexual), 3. இரகசியத் தற்பால காமம் (Secret Homosexual), 4 சூழ்நிலைத் தற்பால காமம் (Situational Homosexual), 5. இரு வகைக் காமம் (Bisexual) எனப்படும்.

**1. மிதமான தற்பால் காமம்:** இவ்வகைக் காமம் பெரும்பாலும் இருபாலாரிடமும் உள்ளது. ஆனால், அது ஆண்பாலாரிடமும் பெண்பாலாரிடமும் வேறுபாடான வகையில் அமைந்திருக்கிறது. ஆண்பாலார் இவ்வகைக் காமத்தில் குழந்தை போன்று உரையாடுவர்; கை, கால் முதலியவற்றைத் தழுவியவாறு விளையாடிக் கொள்வர்; ஒருவரை ஒருவர் கேலி செய்து கொள்வர். பெண்பாலார் இவ்வகைக் காமத்தில் தம்மிடம் மிகுதியான ஆண்தன்மை இருப்பது போலத்தும் உடற்செயல்களால் காட்டிக் கொள்வர்

**2. வெறிமிகுந்த தற்பால் காமம்:** இது ஆண்பாலாரிடம் மட்டும் காணப்படுகிறது. இவ்வகையினர் தம் செயலுக்குப் பொதுக் கழிப்பிடங்களைக் கூடப் பயன்படுத்திக் கொள்கின்றனர். ஆகவே இது பிறவகைத் தற்பால் காமத்தைவிட வெறுக்கத்தக்கதாகக் கருதப் படுகிறது. இவ்வகையினரில் பெரும்பாலோர் திருமணமானவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இயல்பான எதிர்பால் காமம் தரும் இன்பத்தை விட இவ்வகையில் மிகுதியான இன்பம் பெறுவதாக அவர்கள் கூறுகின்றனர்.

**3. இரகசியத் தற்பால் காமம்:** இவ்வகையில் ஆண்பாலினர் திருமணமானவர்கள். இவர்களுடைய மனைவியர் இவர்களின் இரட்டை நடத்தையை அறியாதவர்கள். இவ்வகையினர் சிக்கென்று பிடித்த ஆடையை அணிந்து ஆண்மைத் தோற்றம் பெரிதுங் கொண்டவர்களாகக் காட்டிக் கொள்வர். ஆனால், இவர்கள் இன்பம் அடையும் இச்செயலுக்காகப் பொதுக்கழிப்பிடத்தை நாடுபவர்கள் அல்லர். ஆனால் இவ்வகையினர் வாலிபப்பருவம் முழுவதும் மறைமுகமாகப் பிறருக்குத் தெரியாமல் இதில் ஈடுபடுவர்.

**4. சூழ்நிலைத் தற்பால் காமம்:** சில சூழ்நிலைகள் இருவகைப் பாலினரையும் தற்பால் காமத்தில் ஈடுபடுத்துவதாக அமையும். எடுத்துக் காட்டாகச் சிறையில் இருக்கும் ஆண்பாலாரும், பெண் பாலாரும் எதிர்பால் காமத்தில் ஈடுபட முடியாததால் தற்பால காமத்தில் ஈடுபடுவர். சிறையில் இருக்கும் வரைதான் இவ்வின்பத்தை நாடுவர். விடுதலை அடைந்ததும் எதிர்பால காமத்தையே நாடுவர். சிறைக் கைதியினர் சிலர் தற்பால் காமப் பரத்தைமைத் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். இவர்கள் தற்பால காமம் தரும் இன்பத்தைவிட அதில் கிடைக்கும் பண இலாபத்தையே குறிக்கோளாகக் கொண்டிருப்பார்கள்.

**5 இருபால் காமம்:** இவ்வகையினர் தற்பால காமம், எதிர்பால் காமம் ஆகிய இரண்டிலும் நீண்ட காலமாக ஈடுபட்டவர்கள். பெரும்பாலான வெறிமிகுந்த தற்பால காமத்தினர் (Desparate homosexuals) குறிப்பாகத் திருமணமானவர்கள் இதில் அடங்குவர்.

தற்பால் காமத்தில் ஈடுபடக் கீழ்க்கண்ட நான்கு காரணங்கள் முதன்மையானவை என்று உளவியல் வல்லுநர்கள் கருதுகின்றனர். அவை

1. மரபுவழிப் பண்பியல் மற்றும் நாளமில்லா உட்சுரப்பி சார்ந்த காரணிகள் (Genetic and Hormonal factors),
2. தற்பால் காம அனுபவமும் அதன் ஊக்குவிப்பும் (Homosexual Experiences and their reinforcement),
3. எதிர்பால் காமத்தினிடத்து (Negative Conditioning) வெறுப்பு மனநிலை,

4 பொதுவான சமூகப் பணபாட்டுக் காரணிகள் (General Socio-Cultural factors) எனபபடும.

**1. மரபுவழிப் பண்பியல் மற்றும் நாளமில்லா உட்சுரப்பி சார்ந்த காரணிகள்:** சில உளவியல ஆராயசசியாளர்கள மரபுவழிப் பணபியலும் மறறும் நாளமிலலா உட்சுரப்பி நீரும தறபால் காமததிற்குக் காரணம் எனறு கூறுவர். ஆனால், சில ஆய்வுகள் இம் முடிவுக்கு உடனபாடாக அமையவிலலை. கருவாய் இருந்த காலத்தும், பிறந்த பினனரும் (Prenatal & Postnatal) ஏற்படும் உட்சுரப்பிகளின சரிவிகிதங்களே (Hormonal Balance) பிறகாலததில சரியான காம நடத்தைக்கு அடிப்படையாக அமைகினறன என்று சில ஆய்வுகள் கூறுகினறன. இவை அனைத்தும் முடிந்த முடிவுகள் அலல; மேலும் ஆய்வுக்கு உரியன.

**2. தற்பால் காம அனுபவமும் அதன் ஊக்குவிப்பும்:** தறபால காமம் தரும் இன்ப அனுபவமே இளம் வயதினரை அதில் ஈடுபட வைக்கிறது, மேன்மேலும் ஈடுபட ஊக்குவிக்கிறது. சில சூழ்நிலைகளாலும் (Situations) மற்றும் தறபால் காமத்தில் ஈடுபட உடனபடுபவாகளாலும பெருமபான்மையான இளம வயதினர் தற்பால் காமத்தில ஈடுபடுவதுணடு.

**3. எதிர்பால் காமத்தினிடத்து வெறுப்பு மனநிலை:** எதிர்பால காமம் சிலருககுச் சில நேரஙகளில வெறுப்பை அளிக்கும். எடுத்துக்காட்டாக, ஓர் ஆணோ பெணணோ எதிரபாலினரை அணுகும பொழுது அவர்களால அவமானப்படுத்தபபடுதல் போனற காரணஙகளால் அவர்களுக்கு எதிர்பால் காமத்தில வெறுப்பு ஏற்படும். அதனால் அவர்கள் தற்பால் காமததை நாடுகினறனர், மேலும் அவாகள காம உணர்வைத் தணிக்கத் தற்பால் காமமே பாதுகாப்பான வழிமுறை எனறு நமபுகினறனர். ஒரு தாய் தனனுடைய வயது வந்த மகனையோ மகளையோ எதிர்பாலினரிடம் நட்பாகப் பழகுவதைக் கணடிக்கும் பொழுது அவர்களுக்குத தற்பால காமத்தில் ஈடுபடும மனநிலை தோனறும்.

**4. பொதுவான சமூகப் பண்பாட்டுக் காரணிகள்:** சில சமூகப் பணபாட்டுக் காரணிகள் ஒருவரைத் தற்பால காமத்தில் ஈடுபடத் தூணடும. சில சமுதாயத்தில திருமணத்திற்கு முன் உடல் உறவு எனபது தடை செய்யப்பட்டதாகும். அச் சமுதாயத்தில் உளள இளம் வயதினர் தற்பால் காமத்திலோ தற்காமத்திலோ (Masturbation) ஈடுபடுவர். சில இனத்தில பிறப்பைக் குறைக்கத் தறபால் காமததை ஊக்கமூட்டுவர்.

பரத்தைத் தொழில் நடைபெறும் இடம் மற்றும் பாலுணர்வைத் தூணடும் ஆபாச புத்தகங்கள் விற்பனை செய்யும் இடம் ஆகியவற்றில் வசிக்கும் இளம் வயதினர் இசசூழ்நிலைகளால் தறபால் காமததிறகுத தள்ளப்படுகினறனர். தி.சீ.

**துணை நூலகள:**


Churchill,W., Homosexual behaviour among males: a cross cultural and cross-species investigation, Hawthorne, New York, 1967.

Gagnon, J.H & Simon,W., Sexual conduct, the social sources of human Sexuality, Aldine, Chicago, 1973.

James,C. Coleman., Abnormal Psychology and Modern Life, scott, Foreman and Company, Illinois, 1976.

Masters,W.H, & Johnson,V.E., The Pleasure bond: a new look at sexuality and commitment, Little Brown, Boston, 1975.


**தறுவாய்க் கொள்கை:** மனம், உடல் ஆகிய இரண்டிற்கிடையான தொடர்பு தத்துவச் சிக்கலகளுள தலையானது. மனமே அடிப்படை, மற்றவையெல்லாம அதன் வளாசசியே என்பாரும், பொருளே அடிப்படை, பிறவெல்லாம் அதன் வளர்சசியே என பாரும் ஒருமைக் கொளகையா எனப்படுவர். மனம், உடல் ஆகிய இரணடுமே அடிப்படை உண்மைகள, அவை இரணடும் முரணபட்ட பண்புகளால் சுட்டப்பட்டு அறியப்படுகின்றன என்று கூறுவோரை இருமைக் கொள்கையர் என்று தத்துவ வரலாறு குறிக்கிறது. தத்துவ வரலாறு நெடுகிலும் இருமைக கொளகை பற்றிய குறிப்பிருந்தாலும் பிரஞ்சு நாட்டுத் தத்துவ அறிஞர் தேகார்ட்டு (Descartes) (கி.பி. 1596-1650) எனபவரே இக்கொள்கைக்கு முதன்மையும் முழுமையும் தந்தவராவார்.

காட்சிக்கு உட்படாத நுணபொருள் மனம். காட்சிக்கு வரும் பருப்பொருள உடல், முரணபட்ட பண்புகளாலான இவற்றுக்கிடையே நிலவும நெருக்கமான தொடர்புக்கும் இயக்கத்திற்கும் விளக்கம் காண கி.பி.17-ஆம் நூற்றாணடுத் தததுவ அறிஞாகள் முனைந்து நின்றனர். அவர்களுடைய சிந்தனையால் விளக்கங்கள் பல வெளிவந்தன. அவ்விளக்கங்களுள எதிரியக்கக் கொள்கை (Interactionism), இணையியக்கக் கொள்கை (Parallelism), தறுவாய்க் கொள்கை (Occasionalism) என்பன முதன்மை பெறுகினறன.

மனத்தால் உடலும் உடலால் மனமும் தாக்குறு வதை நடைமுறை வாழ்க்கை காட்டுகிறது. உடலில் ஏற்படும் மாற்றங்களால் மனத்தின் இயக்கமும் உணர்வுகளும் மாறுகின்றன என்பதைப் போதைப் பொருள், மயக்க மருந்து போன்றவற்றை உண்டோரின் அனுபவத்திலிருந்து அறியலாம். அச்சம், சினம், அன்பு, பகை, விருப்பு, வெறுப்புப் போன்ற உணர்வுகள் மனத்தில் ஏற்படும்போது உடல் பாதிக்கப்படுவதையும் (Alspace)அனுபவம் காட்டுகிறது.மன நிலை உடல் இயக்கத்திற்கும் உடல்நிலை மன உணர்வுகட்கும் காரணமாக அமைகின்றன என்பதைக் காட்டும் இவ்வனுபவங்களைக் கொண்டு மனம், உடல் ஆகியவற்றின் இயக்கத்திற்குக் காரண-காரிய நியதியைச் சிலர் கற்பித்தனர். மனம், உடல் இவற்றிடைக் காணப்படும் எதிர்செயல் இயக்கத்திற்கு முதன்மை தந்தவர்கள் காரண-காரிய விளக்கம் கூறினர்; உளவியல் சோதனைகள் சிலவற்றை ஆதாரம் காட்டினர்.

காரண-காரிய நியதியைக் கொண்டு மனம், உடல் ஆகியவற்றின் இயக்கங்கட்கு விளக்கம் கூறுவதில் ஒரு சிக்கல் இருக்கிறது. முற்றிலும் முரணான பண்புகள் உடையவை எவ்வாறு ஒன்றுக்கொன்று காரணமாதல் கூடும் என்பதே அச்சிக்கல். இச்சிக்கலுக்கு முதன்மை தருவோர் இணை இயக்கக் கொள்கையை விளக்கமாக்குகின்றனர். மனமும் உடலும் இணைநேர் கோடுகள் போன்றவை. ஒன்றையொன்று தாக்குமளவு தொடர்பில்லாதவை. உடலில் ஏற்படும் மாற்றமும் அதிர்வும் மனத்தையோ, மனத்தில் ஏற்படும் மாற்றமும் அதிர்வும் உடலையோ பாதிப்பதில்லை. எனவே, மனம், உடல் ஆகிய இரண்டின் இயக்கங்களைக் காரண-காரிய சங்கிலியால் இணைக்க முற்படுவது ஏற்புடையதன்று. சம அளவில் முடுக்கி விடப்பட்ட இரண்டு மணிப்பொறிகள் ஒன்றேபோல் காலம் காட்டும்; ஆனால்,ஒன்றுக்கொன்று காரணமாவதில்லை. நடைமுறை அனுபவமும் சில உளவியற் சோதனைகளும் இணை இயக்கக் கொள்கைக்கு ஆதரவாக அமையவில்லை.

மனமும் உடலும் தொடமுடியாத இணைநேர் கோடுகளாகவும் இல்லை; ஒன்றையொன்று நேரடியாகத் தாக்கி எதிரியக்கம் நடத்தும் காரண-காரியமாகவும் இல்லை என்ற கருத்துடையோர் தறுவாய்க் கொள்கையைத் தந்தனர். முரண்பாடுடைய மனமும் உடலும் எவ்வாறு தொடர்பு கொள்கின்றன என்ற வினா, காரண-காரிய விதியைக்கொண்டு உலகப் பொருள்களையும் நிகழ்ச்சிகளையும் விளக்கமுற்பட்ட தேகார்ட்டின் தத்துவக் கோட்பாட்டில் ஓர் இடைவெளியைக்காட்டுகிறது. இவ்விடைவெளியை நிரப்பும் பொருட்டு மேல்பிரான்சு (கி.பி.1638-1715) என்னும் பிரஞ்சுத்தத்துவ அறிஞர் தறுவாய்க் கொள்கையை உருவாக்கினார். மனமும் உடலும் ஒன்றுக் கொன்று காரணமாக இருப்பதுபோல் தோற்றமளிக்கும்; இது உண்மையன்று. வரையறைக்கு உட்பட்ட எதுவும் முழுமையான காரணமாக எதற்கும் அமையமுடியாது. வரம்பிலா இறைமையின் இயக்கமெனும் காரணப் பேராற்றில் வந்து கலப்பவையே உலகப் பொருள்களும் நிகழ்ச்சிகளும். காரண-காரிய விதியைக் கொண்டு உலகப் பொருள்களையும் நிகழ்ச்சிகளையும் அளவையியல் அடிப்படையில் விளக்க முற்பட்ட தேகார்ட்டின் கொள்கைக்கு மாறானதாகத் தறுவாய்க் கொள்கை அமைகிறது.

இணைநேரியக்கம், எதிரியக்கம் என்ற இரு கொள்கைகளையும் ஒருங்கிணைத்து 'இறைமையின் தலையீடு' என்ற கருத்தைப் புகுத்தித் தறுவாய்க் கொள்கை உருவாக்கப்படுகிறது. இறைமையின் இடையறாத தலையீடுதான் மனத்தின் இயக்கத்தையும் உடலின் இயக்கத்தையும் ஒருங்கிணைக்கிறது. இறைமைச் செயல் என்ற ஒன்றைத் தவிர வேறு இயற்கை விதிகட்கு உட்பட்டு மனமும் உடலும் இயங்குவதில்லை. மனம், உடல் ஆகிய இரண்டின் இயக்கங்களும் இறைமை விருப்பின் விளைவுகளாக அமைகின்றன, ஒன்றுக்கொன்று காரணமாக அமைவதில்லை. உடலில் மாற்றம் ஏற்படும் தறுவாயில் மனத்தில் எண்ணத்தையும் மனத்தில் எண்ணம் எழும் தறுவாயில்உடலில்இயக்கத்தையும் இறைமையின் தலையீடு விளைக்கின்றது.

தறுவாய்க் கொள்கை தரும் விளக்கம் ஓர் ஆன்மிக விளக்கமாக அமைகிறதே தவிர அறிவுச் சோதனைக்கு உட்படுவதாக இல்லை. க.நா.

**தன்கர்க்கு**, வடக்குப் பிரான்சின் முக்கியத் தொழில் நகரமும், துறைமுகமும் ஆகும். இந்நகரம் தோவர் சலசந்தியின் கிழக்குக் கோடியில் பெல்சிய நாட்டு எல்லைக்கு அருகில் கடற்கரையில் அமைந்துள்ளது. பிரான்சு நாட்டின் ஏற்றுமதிப் பொருள்களில் பெருமளவு இத்துறைமுகத்தின் மூலமாகவே செல்கின்றன.

நிலக்கரி மற்றும் தாதுப் பொருள்கள் இறக்குமதியைப் பொறுத்தமட்டில் தன்காக்கு (Dunkırk) பிரான்சு நாட்டிலேயே முதலிடம் வகிக்கின்றது. மொத்த ஏற்றுமதிப் பொருள்களின் அடிப்படையில் பார்த்தால் இத்துறைமுகம் மூன்றாம் இடத்தைப் பெறுகிறது. சுறுசுறுப்புடன் இயங்கிவரும் இத்துறைமுகம் பத்து கி.மீட்டருக்கும் மேற்பட்ட தொலைவு கொண்ட தளத்தைக் கொண்டுள்ளது. இத்தளம் பொருள்களை இறக்க, ஏற்ற வசதியாக உள்ளது.



தனகர்க்குத் துறைமுகம்

பிரான்சு நாட்டின் பெரிய தொழில் நகரமாக விளங்கும் தன்கர்க்கில் எண்ணெய் சுத்திகரிப்பு ஆலைகளும், இரும்பு எஃகுத் தொழிற்சாலையும் உள்ளன. பிரான்சு நாட்டிலுள்ள மிகப் பெரிய இருமபுத் தொழிற்சாலைகள் ஆறுள் இங்குள்ளதும் ஒன்று என பது குறிப்பிடத்தக்கது. இலில்லி, தூர்கோனிஙகு, உரு, பெக்கிசு முதலான வடக்கு மாநிலஙகளில் காணப் படும் தொழில நகரங்கள் தமது ஏற்றுமதிக்கு இத் துறைமுகத்தையே நம்பியுள்ளன. பிரானசின் தொழில வளர்ச்சி மிக்க மாவட்டங்களுள வடக்கு மாவட்ட மும் ஒன்றாக விளங்குவதற்கு தன்கர்க்குத் துறை முகமே குறிப்பிடத்தக்க காரணமாக அமைந்துள்ளது.

**வரலாறு:** பழமைச் சிறப்புக் கொணட இந்நகரத் தில் முன்பு பல போர்களும், முற்றுகைகளும் நடை பெற்றுள்ளன. இந்நகரம் முறையே பருகணடியர், இசு பானியர், ஆங்கிலேயர் முதலானவர்களின் ஆளுகைக்கு முனபு உட்பட்டிருந்தது. தன்கர்க்கிலதான் கி.பி. 1658-ஆம் ஆணடில் ஆங்கிலேயரும், பிரஞ்சுக்காரரும் இசுபானியரைத் தோற்கடித்தனர். அநநிகழ்ச்சிக்குப் பின்னர் இந்நகரம் நிரநதரமாகப் பிரான்சு நாட்டிற்கு உடைமை ஆயிற்று. இந்நகரத்தின் பொருட்டு ஆங்கி லேயருக்கும், பிரஞசுக்காரருக்கும் இடையே கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் பகைமை மூணடது.



தூய மரியன்னை ஆலயம்

கப்பற்படைத் தளமான தனகர்க்கு நகரம் முதலாம் உலகப் பெரும் போரின் போது பேரழிவிறகு உள்ளாயிற்று. இரணடாம் உலகப் போரின் போது இந்நகரம் 1940-ஆம ஆண்டு, மேமாதம், 29-ஆம நாள முதல் சூன மாதம இரணடாம நாள் முடிய செருமானியப் படை வீராகளால சூழபபட்டது. இச் சமயத்தில இஙகுக் கடும போர் நடைபெற்றது; பல் லாயிரக்கணக்கானோர் உயிரிழந்தனர்.

இந்நகரம் 1945-ஆம் ஆணடு நேசப்படையினரின் பிடியில் வீழ்வதற்கு முன்பும் கடுமையான போரைக் கண்டது. இப் போர்களில இந்நகரின 85 விழுககாட்டுப் பகுதி அழிக்கப்பட்டது. இரணடாம உலகப் பெரும் போருக்குப் பினனரே இந்நகரமும், துறைமுகமும் புதுப்பிக்கப்பட்டன. இனறு தனகர்க்குத் துறைமுகம, நவீனப்படுத்தப்பட்டுப் பிரானசின் வாணிக வளர்ச் சிக்குப் பெருந்துணையாக உள்ளது. இந்நகரின் மக்கள தொகை 26,197.

அமெரிக்க ஐக்கிய நாட்டின் சௌத்தகா (Chautauqua) நாட்டுப் பிரிவில், நியூயார்க்கின் தென்மேற் கில் தன்கர்க்கு எனனும் பெயரில மற்றுமோர் நகரம் உள்ளது. ஈரி ஏரிக்கரையில் அமைந்துள்ள இந்நகரம் சிறந்த துறைமுகமாகவும் விளங்குகிறது. விவசாயப் பிரதேசததின் மையப் பகுதியில் இநநகரம் அமைந் துளளது. இப்பகுதியில் எண்ணெய் சுத்திகரிப்புச் செய்யப் பயன்படும் எந்திரம், கொதிகலன் (Boiler),

கப்பல், உந்து வண்டிகள், மின்சாரக்கருவிகள் ஆகியன தயாரிக்கப்படுகின்றன.

பிரான்சு நாட்டின் முக்கிய துறைமுகங்களுள் ஒன்றாக விளங்கும் தன்கர்க்கு, கடந்த சில ஆண்டுகளாக நல்ல முன்னேற்றம் கண்டுள்ளது. ம இ.

**தன் தூண்டுதல்.** உடற்கூறு அமைப்புகளுக்கும் இயக்கங்களுக்கும் உணர்வுகளுக்கும் நேரடித் தொடர்பு இருப்பதாக அறிஞர்கள் கண்டறிந்துள்ளனர் குறிப்பாக, மத்திய நரம்பு மண்டலம், மூளை ஆகியவை உணர்வுத் தூண்டுதல், அதன் அடிப்படையிலான நடத்தை ஆகியவற்றுக்குக் காரணமாக உள்ளன என உடலியல் அறிஞர்கள் கண்டறிந்துள்ளனர்.

**மூளையில் மின் அதிர்வுத் தூண்டுதல்**· மூளையில் மிகமிக மெல்லிய மின் கம்பிகளைப் பொருத்தி மின் அதிர்வுகளை ஏற்படுத்தி, உணர்வுகளைப் பதிவு செய்யும் முறையை அறிவியல் ஆய்வாளர்கள் கண்டறிந்துள்ளனர். அதன் மூலம் மூளையின் சிறு பகுதிகளில் உணர்வுத் தூண்டுதலைச் செய்ய முடியும். அத்தகைய தூண்டுதலினால், குறிப்பிட்ட மூளைப் பகுதிகளின் செயல் முறைகளைக் கண்டறிய முடியும்.

இந்த முறையின் மூலம் மூளையின் பகுதிகளுக்கு மின் சக்தியைச் செலுத்தி மூளையின் செயல் முறையை அறிய முடியும். பிரிட்சு (Fritsch), இட்சிகு (Hitzig) ஆகியோர் கி பி. 1870–இல் இம் முறையில் ஆய்வுகளை நடத்தியுள்ளனர். அண்மைக் காலத்தில் விலடர் பெனபீல்டு (Wilder Penfield–1959) என்னும் நரம்பியல் அறுவை மருத்துவர் இந்த மின் அதிர்வு முறையைக் கொண்டு நினைவாற்றலைத் தூண்ட முடியும் என்று கண்டறிந்துள்ளார். அதாவது, ஒருவருடைய கடந்த காலத்தில் நிகழ்ந்த ஏதேனும் ஒரு நிகழ்ச்சியை இம் முறையின் மூலம் நினைவிற்குக் கொண்டு வர முடியும் என்று கண்டுபிடித்துள்ளார்·

**மூளையின் உணர்வுத் தூண்டுதல்**· சேம்சு ஓலட்சு (James Olds) என்பவர் 1953–ஆம் ஆண்டில் மூளையின் உணர்வலை விளைவுகளை அறிந்து கொள்ள எலிகளின் மீது ஒரு சோதனை நடத்தினார். அவ்வாய்வுகளில் இருந்து உணர்வுத் தூண்டுதல் பெற்ற எலிகளின் உழைப்புத் திறன் மிகுதியானதாகவும், சுறுசுறுப்பும் உழைப்பாற்றலும் தொடர்ந்து நீண்ட நேரம் இருப்பனவாகவும் கண்டறியப்பட்டுள்ளன. சோதனையில் எலிகள் தன் தூண்டுதலைத் தேடி மீண்டும் மீண்டும் பெற்றன. மேலும், தன் தூண்டுதல் பெறும் எலிகள் மிகுந்த வலியையும், அதிர்ச்சிகளையும் பொறுமையுடன் தாங்கிக் கொள்ளும் பவையாக உள்ளன மூளைத் தூண்டுதலில் நல்லதும் தீயதுமான விளைவுகளுக்கு அடிப்படையாக உள்ள தூண்டுதல் நிலையின் இயல்பை விளக்கப் பலவேறு கொள்கைகள் முனைந்துள்ளன. உணர்வுத் தூண்டுதலில் நல்லவிளைவுகளும் தீயவிளைவுகளும் முதன்மையான விளைவுகள் என்று சிலர் கருதுகின்றனர். நல்ல விளைவுகளும் தீயவிளைவுகளும் உணர்வுத் தூண்டுதலினால் செயற்பட விரைந்தெழும் குறிப்பிட்ட இயக்கங்களின் இரண்டாம் நிலையிலான விளைவுகள் என்று ஏனையோர் கருதுகின்றனர். தன் தூண்டுதல் பெறும் விலங்குகள் கடுமையாக உழைக்கவும், மிகுந்த துன்பத்தைத் தாங்கிக் கொள்ளவும், வல்லமையுள்ளனவாகக் காணப்படுகின்றன. தன் தூண்டுதலுக்கு அடிப்படையாக உள்ள உணர்வு நிலை மிகவும் உறுதியும், உந்து ஆற்றலும் உள்ளதென்று ஆய்வுகள் தெளிவு படுத்துகின்றன.

உணர்வுத் தூண்டுதல் மகிழ்ச்சியுடன் கூடிய அனுபவத்தை உருவாக்குவதாகவும், அத்தகைய நன்மை பயக்கும் பகுதிகள் ‘மகிழ்ச்சி நிலைகள்’ என்றும் தொடக்க காலத்தில் கருதப்பட்டன. மனிதர்களின் மூளைத்தூண்டுதல் பற்றிய ஆய்வுகள், பொதுவாக விலங்குகளிடையே காணப்படும் உணர்வுத் தூண்டுதலினால் ஏற்படும் வெறியுணர்வு, மனிதர்களிடையே ஏற்படுவதில்லை என்று தெளிவுபடுத்தியுள்ளன.

வே.ந.

**தன்மயமாதல்:** பண்பாட்டால் வேறுபட்ட பல மக்கள் தாங்கள் குடியேறிய இடத்தில் உள்ள சமூகச் சூழ்நிலைக்கேற்றவாறு தங்களை மாற்றிக் கொண்டு அதனுடன் ஒருங்கிணைந்துவிடுதல் தன்மயமாதல் (Assimilation) எனப்படும்.

தன்மயமாதல் என்பது மனிதன் சமூகத்திற்கேற்றவாறு தன்னை மாற்றிக்கொள்ளும் தன்மையாகும் இச் செயற்பாங்கில் தனி மனிதன் மெதுவாகத் தான் வாழும் சூழ்நிலைக்கேற்பத் தன்னையும் அறியாமலேயே ஐக்கியப்படுத்திக்கொள்கிறான். தன்மயமாதல் என்பது மெதுவாகவும் ஒரே சீராகவும் ஏற்படக்கூடிய செயற்பாங்காகும்.

இது மிகவும் சிக்கலான (Complex) செயற்பாங்காகும். தன்மயமாதல், சமூக மனப்பான்மையில் மாற்றத்தை உருவாக்குகிறது இதுசெயற்பாங்கும் (Process), நிலையும் (State) ஆகும்.

தன்மயமாதல் தனி மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் இடையிலும், கணவன்–மனைவிக்கிடையிலும், குடும்பத்தில் உறவினர்களுக்கிடையிலும், சமூக நிறு

வனங்களுக்கிடையிலும், பணபாடுகளுக்கிடையிலும காணப்படுவதால இது ஒரு சமூக, உளவியல மற்றும பணபாட்டுச் செயறபாஙகாகும்.

**தன்மயமாதலை ஊக்குவிக்கும் காரணிகள்:** அ) **சகிப்புத் தன்மை** இது நெருங்கிய சமூக உறவிறகு இனறியமையாதது நெருங்கிய சமூக உறவு தனமய மாதல ஏற்பட வழி வகுக்கிறது.

**ஆ) சமூக உறவு:** சமூக உறவு வளர்ச்சிக்குத தகுந்தாற்போல் தனமயமாதலின வேகமும் இருககும.

**இ) கலவை** குருதி உறவு தன்மயமாதலை இனனும் விரைவாகச் செயறபட வைக்கும். வெவ வேறு குழுவைச சேர்நத மக்களின் கலப்பு மணஙகள இதறகு வகை செய்யும.

**ஈ) பண்பாட்டு ஒற்றுமை:** இரணடு குழுவின ரிடையே சில பணபாட்டு ஒற்றுமை காணப்படின் அவர்களிடையே அதிகமான சகிப்புத் தனமையும், நெருக்கமும் காணப்படும. இது தனமயமாதலை ஊக்கப்படுத்தும.

**உ) பொருளர்தாரச் சமத்துவம்:** பொருளாதார ஏற்றத்தாழ்வு, மக்களிடையே வெறுப்பு, பொறாமை, முதலியவற்றை ஏற்படுத்தும். அவவாறிலலாமல் பொருளாதாரச் சமத்துவம் காணபபட்டால அது மக்கள வெறுப்பின்றி ஒறறுமையோடுவாழ வழி வகுககும். அதனால் தனமயமாதலுக்குத் தடை ஏறபடாது.

**தன்மயமாதலுக்குத் தடையாகவுள்ள காரணிகள்:** **அ) தப்பெண்ணம்:** தஙகள சமுதாயத்தைப் பற்றி உயர்வான கருத்தும் மற்றவர்களைப் பற்றித தாழ வான எணணமும் கொண்டிருத்தல வெறுப்பையும, கலகத்தையும் உணடு பண்ணும். அதனால, அவர் களிடையே தொடர்பு, நெருககம, சமூக உறவு முதலியவை குறையும். அதன் காரணமாகத் தனமய மாதல தடைப்படும்.

**ஆ) தனிமை:** பெரும்பானமைச் சமுதாயததுடன் ஒன்றி வாழாமல தனியாக வாழுதல் சமூகத்தொடர பையும், உறவையும் தடுக்கிறது. அதனால தனமய மாதல் ஏற்பட வழியிலலை.

**இ) உடற்கூறு வேறுபாடுகள்:** நிறம் மற்றும் உடற்கூறு வேறுபாடுகள மனிதாகளுக்குள் ஏற்றத் தாழ்வுகளை உருவாக்குகிறது. இவை உயர்வு, தாழ்வு மனப்பானமையை உருவாககி நெருங்கிய சமூக உறவைத தடுக்கினறன. அதனால், தன்மய மாதல் ஏற்பட வழியில்லை.

**ஈ) பண்பாட்டு வேறுபாடு:** பண்பாட்டில் காணப் படும் வேறுபாடும, அதனால் மக்களிடையே உரு வாகும் வேற்றுமைகளும தன்மயமாதலுக்குத தடை யாக இருககினறன.

**உ) மேலாதிக்கமும் கீழ்நிலையும்:** சிலா உயர்வு மனப்பானமையால மறற குழுவினைச் சோந்தவாகள மேல் ஆதிககம் செலுத்துகிறார்கள. அதனால, அவர்கள மறறவர்களைச் சமமாக நடத்துவதில்லை. மற்றவர்கள் அடிமையாகவும, கீழநிலையில் வாழவும வேண்டிய சூழ்நிலையில் தனமயமாதல ஏறபட வழி யிலலை.

**ஊ) சமூகச் சுரண்டலும சமூக அநீதியும்:** மகக ளிடையே வெறுப்பு, கலகம, வன்முறை ஆகியவற்றை சமூகச சுரணடல், சமூக அநீதி (Social Exploitation and Social Injustice) முதலியவை தூணடிவிடும். இதனாலும் தன்மயமாதல தடைப்படும்.

தனமயமாதல் ஒரு சிறப்பான சமூகச செயற பாங்காகும. இதனால சமுதாயத்திறகுச சில பயனகள உணடு. தன்மயமாதல், பணபாட்டு ஒற்றுமைக்கு வழிகோலும். தனி மனிதன் மறறும குழுவின ஆளுமையையும (Personality) இது மாற்றி யமைச்கிறது. முழுமையான தனமயமாதல சமூக ஒருமைப்பாட்டை வளர்க்கிறது. சு. சொ.

**துணை நூல்கள்:**

**Bhatia, Hans Raj**, Elements of Social Psychology, Somaiya Publications Pvt. Ltd, Bombay, 1974.

**Sharma, Ram Nath.**, Principles of Sociology, Media Promotprs and oublishers Pvt. Ltd., Bombay, 1982.

**Turner, Jonathon H.**, Sociology, Studying the Human System, Good Year Publishing Company, California, 1978.

***தன்மாத்திரை:*** தைசதாகங்காரத்தினின் றும மனம தோனறிய பினனர், ஒன்றனபின ஒனறாகச் செவி, தோல, கண், நாக்கு, மூக்கு எனனும ஞானேந்திரியங்கள ஐந்தும் அநதத தைசதாகஙகாரத் தினினறும தோனறும. இவை கேட்டல், உறுதல, காணடல, சுவைத்தல், மோத்தல் எனபவற்றிறகுக் கருவியாம. ஓசை முதலியவறறை இவ்வாறு அறிதலின் இவை ஞானேநதிரியம எனபபட்டன. கனமேந்திரியம் எனப்படுபவை. வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம், என்ற ஐந்தும் ஒனறனபின ஒன்றாக வைகாரிக அகங்சாரத்தினினறு தோன்றும்

வாக்கு பேசுதற் கருவி. பாதம் போக்கு, வரவு புரிவதற்குள்ள கருவி பாணி ஏற்றல், இடுதல்களைச் செய்யும் கருவி. உடல் உறுப்புகளை உயிர் அசைத்தற் கெல்லாம் இதுவே கருவியாம். பாயு, கழிவுப் பொருளை விடுதற் கருவி. உபத்தம், இனப் பெருக்கம் செய்தற்குள்ள கருவி. இவையும் வாய், கால் முதலிய உறுப்புகளில் நின்று இச்செயல்களைச் செய்யும் சக்தியைக் குறிப்பனவேயாகும். கன்மேந்திரியங்களின் பின்னர், 'சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம்' என்னும் தன்மாத்திரைகள் ஐந்தும் ஒன்றன்பின் ஒன்றாகப் பூதாதியகங்காரத்தினின்றும் தோன்றும் தன்மாத்திரை என்பது 'பொதுமையில் நிற்றல்' என்னும் பொருளுடையது. அதாவது வல்லோசை அல்லது மெல்லோசை எனச் சிறப்பாய்த் தோன்றாமல் பொதுமையில் நிற்பது சத்த தன்மாத்திரை. அதே, போல வல்லிது அல்லது மெல்லிது எனச் சிறப்பாகத் தோன்றாமல் பொதுமையில் நிற்பது பரிச தன்மாத்திரை. இதுபோலவே ஏனையவற்றையும் உணர வேண்டும். இந்தத் தன்மாத்திரைகளே பஞ்ச பூதங்களுக்கு முதற் காரணமாதலின் இவை சூக்கும பூதம் எனப்படும். சத்தம் முதலிய ஐந்தும் முறையே ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் எனத் தமிழில் சொல்லப்படும். இரா.கோ.

**தன்முனைப்பு**: ஒவ்வொரு தனி மனிதனின் குணநலமும், மூன்று தன்மைகளை உள்ளடக்கியதாக இருக்கிறது என்றும், அவை முறையே, (1) தன்னுணர்வுந்துதல், அதாவது தனிப்பட்ட ஒருவரின் சாதாரண உணர்வு உந்துதல். (2) தன்முனைப்பு, (Ego) அதாவது நான் என்னும் முனைப்பு, (3) தன்முனைப்பின் உச்ச அளவு (Super Ego), அதாவது தன்னொழுக்க நெறி. இவை மூன்றும் தனித்தன்மையுடன் கூடிய, ஆனால் ஒன்றுடன் ஒன்று தொடர்புள்ள உளவியற் செயல் முறைகள் ஆகும் என்று அறிஞர் பிராய்டு (Freud) கூறுகிறார். தன்னுணர்வுந்துதல் என்பது தனியொருவரை ஊக்குவிக்கின்ற இயல்பான அடிப்படை உயிரியல் உந்து ஆற்றல்கள் ஆகும். பசி, தாகம், பாலுணர்வு, மற்றும் உயிர் வாழ்வுக்கு உதவும் அல்லது மகிழ்ச்சி அளிக்கும் அல்லது துயர்துடைக்கும் பிற வேட்கைகள் தன்னுணர்வுந்துதல் ஆகும். தன்னுணர்வுந்துதல் வாழ்க்கை முழுவதும் மாறாததாகவும், வலிமையுடையதாகவும், செயல்திறனுடையதாகவும் இருக்கிறது. ஆனால், அதனுடைய தொடர்ந்த ஒரே சீரான தேவைகள் தன்முனைப்பினால் தூண்டப்பட்டும், கட்டுப்படுத்தப் பட்டும் வெளிப்படுகின்றன. தன்னுணர்வுந்துதலின் செயற்பாடுகள் மனிதன் அறியாவண்ணம், அவனுடைய உணர்வுகளுக்கு அப்பாற்பட்டு நிகழ்வன. தன்முனைப்பு, சமூகம் ஏற்றுக்கொண்ட வரம்புகளுக்குட் பட்டு நிறைவளிக்கும் வகையில் தன்னுணர்வுந்துதலைக் கட்டுப்படுத்திச் செலுத்துகிறது. தன்னுணர்வுந்துதல் போலன்றி தன்முனைப்பின் செயல்கள் மனிதன் உணரத்தக்கவை. தன்முனைப்பு, தனி ஒருவனுக்கு துன்பத்தையோ ஆபத்தையோ அழிவையோ ஏற்படுத்தாத உணர்வுகளின் நல்ல தன்மைகளைக் காணும் ஒரு நிருவாகியைப் போலச் செயற்படுகிறது.

உச்ச அளவு தன்முனைப்பு என்பது, பெற்றோர் சமூகம் ஆகியவற்றிடமிருந்து பெறுகின்ற இலட்சியங்கள், வாழ்வின் பெருமைகள் ஆகிய தனக்கு உள்ளார்ந்த சக்தியாகும் உச்ச அளவுத் தன்முனைப்புத் தன்னொழுக்கப் பகுதியாகும். அது உண்மையைப்போல அல்லாமல் இலட்சியத்தைப் போல தோன்றும். அதாவது எப்படி இருக்கிறது என்பதைவிட எப்படி இருக்க வேண்டும் என்பதை அடிப்படையாகக் கொண்டது. மேலும், தன்னுணர்வுந்துதலின் பாலுணர்வு ஆதிக்க உணர்வு ஆகியவற்றை உச்ச அளவு தன்முனைப்பு, உணர்வுகளை நிறைவு செய்வதை விடுத்து, சமூகம் ஏற்றுக் கொண்ட அறநெறிக் கோட்பாடுகளுக்கு ஏற்பச் செயற்படுமாறு தன்முனைப்பை உந்துகிறது. ஆக, தனி மனிதனின் மூன்று குணநலக் கூறுகளுள் ஒன்றான தன்னுணர்வுந்துதல் மனித இயந்திரத்தை இயக்குகிறது. இரண்டாவதான தன்முனைப்பு அதைப் பாதுகாப்பான வழியில் செலுத்துகிறது மூன்றாவதான உச்ச அளவுத் தன்முனைப்பு, தன்முனைப்பை அறநெறியில் செலுத்தி இலட்சியங்களை நோக்கிச் செயற்பட வைக்கிறது. வே.ந.

**தன்முனைப்பு வாதம்**: 'தற்பற்று' என்பது எல்லா உயிர்களிடத்தும் இயல்பாகவே இருக்கின்ற உணர்ச்சி. தன் உயிரையும் உடைமைகளையும் காத்துக்கொள்ள முயலாத உயிரினமே இல்லை. இம்முயற்சியில் வெற்றி பெறும் உயிரினங்கள் வாழ்கின்றன; வளர்கின்றன. மனித இனமும் அவ்வாறே. கல்வியும், சமூகப் பழக்க வழக்கங்களும் பயிற்சிகளும் மனிதனின் தற்பற்று உணர்ச்சியை ஒழுங்குபடுத்த முயலுகின்றன. சமூக வாழ்க்கை என்ற நிலையில் மனிதன் பிற உயிரினங்களிலிருந்து வேறுபட்டு வாழ்கின்றான். தனி மனிதனுக்கும் அரசியல், சமூகப் பொருளாதார அமைப்புகட்கும் இடையே ஒரு போராட்டம் நிகழ்ந்தவண்ணமிருக்கிறது. அப்போராட்டத்தின் ஆழமும் அழுத்தமும் சூழ்நிலைகளுக்கேற்ப வேறுபட்டாலும், அதனைச் சந்திக்காத தனிமனிதனும் சமுதாயமும் இருக்கமுடியாது. அத்தகு போராட்டச் சூழலில், 'தற்பற்று' என்னும் இயல்புணர்ச்சியின் வெளிப்பாடாகத் தன் முனைப்பு வாதம் கிளைக்கிறது.

தன்னையும் தன் உணர்வுகளையுமே முதன்மையாக்கிப் பிறவற்றையெல்லாம் அவற்றுக்கேற்பப் புனைந

துரைக்கும் கொள்கையைத் தன்முனைப்பு வாதம் என்பர். உலகியல் நடைமுறை, புறப்பொருள் இயல்புகள், சமுதாய ஒழுங்கு போன்றவற்றைப் புறக்கணித்துத் தனிமனித உணர்வுகளைத் தாங்கி நிற்பது இக்கொள்கையின் தனிப்பண்பு. தனிமனித விருப்பும் மகிழ்ச்சியும் வளர்ச்சியும் வாழ்வும் அறவினைகள் அனைத்துக்கும் அடிப்படையாதல் வேண்டும். தன்னையும் தன்னைச் சார்ந்தவற்றையும் முதன்மையாக்கிக் கொண்டே அறக்கோட்பாடுகளை அமைத்துக்கொள்கிறான் மனிதன். 'நான' என்னும் தன்முனைப்பே முதன்மையான உண்மை, பிறவெல்லாம் அதன் உடைமைகள். இக்கருத்தை மையமாகக் கொண்டு அறக்கோட்பாடுகளை உருவாக்க வேண்டுமென்று செருமானிய தத்துவ அறிஞர் இசுடர்னர் (Stirner) கூறுகிறார்.

தற்காப்பு, தன் விருப்பம், தன்வெற்றி, தன்மகிழ்ச்சி என்பவற்றை முன்னிறுத்தித் தனிமனிதனின் முழுமையான வளர்ச்சிக்குத் துணை செய்பவனாக அறக்கோட்பாடுகள் அமைதல்வேண்டும். அரசியல், சமூகப் பொருளாதார அமைப்புகள் யாவும் தனிமனிதப் பாதுகாப்பிற்கும் மகிழ்ச்சிக்கும் வழிக்காட்டிகளாக உருவாதல் வேண்டும். தனிமனித வளர்ச்சிக்கும் மகிழ்ச்சிக்கும் தடையாகும் அறக்கோட்பாடுகளையும் பிற அமைப்புகளையும் மறுக்கவேண்டும் அல்லது மாற்றி அமைக்க வேண்டும். தனி மனிதர்களும் அவர்களுடைய தன் முனைப்புகளும் ஒன்று சேர்வதால் சமுதாயத்தின் தன் முனைப்பு உருவாகிறது. எனவே, சமுதாயத்தின் ஒவ்வோர் அமைப்பிலும் தனிமனிதன் தன்னுடைய வெற்றியையும் மகிழ்ச்சியையும் காண விரும்புகிறான். தன்விருப்பத்தை வெளிப்படுத்தாத அமைப்புகளை மனிதன் வெறுக்கிறான்.

தன்முனைப்பு வாதத்தின் நீட்சியால் சமுதாய ஒழுங்கு சீர் குலையும். சமுதாயத்திற்கும் அதன் அமைப்புகட்கும் முதன்மைதரும் பொதுவுடைமைச் சமுதாயத்தின் தன் முனைப்பு வாதம் இழிவாகக் கருதப்படுகிறது. கார்ல் மார்க்சு, எங்கல்சு போன்ற பொதுவுடைமை வாதிகள் தன்முனைப்பு வாதத்தைக் கடுமையாகச் சாடுகின்றனர்.

சமுதாய ஒழுங்கிற்காகத் தன்முனைப்பால் விளையும் விருப்பு வெறுப்புகளைச்சற்றே ஒதுக்கிப் பொது விதிகளைப் பின்பற்ற வேண்டும். சமுதாய ஒழுங்கு என்ற பெயரால் தனிமனிதன் புறக்கணிக்கப்பட்டால் காலப்போக்கில் சமுதாய அமைப்பே இருக்காது என்பதையும் நினைவு கொள்ளவேண்டும். க.நா.

**தன்வார்,** பீகார் மாநிலத்தில் சோட்டா நாக்பூர் பகுதியில் வாழும் ஒரு பழங்குடி இனத்தவர் இவர்கள் தனுகார் (Dhanuhar) என்றும் குறிக்கப்படுகின்றனர். தன்வார் (Dhanwar) அல்லது தனுகார் என்பதன் பொருள் வேட்டையாடும் மக்கள் என்பதாம். இவர்கள் அண்மைக்காலம் வரை வேட்டையாடி உணவு சேகரித்து வாழும் தொழிலையே முதன்மையாகக் கொண்டிருந்தனர். இன்று இத் தொழிலைத்தவிர வேறுசில தொழில்களையும் கற்றுக் கொண்டுள்ளனர்.

இம்மக்கள், தொன்மை ஆசுத்திரேலிய இனத்தைச் (Proto-Australoid) சேர்ந்தவர்கள். நடுத்தர உயரம், நிமிர்ந்த நெற்றி, நேரான மூக்கு, அலை அலையான (Wavy) தலைமயிர், கரும்பழுப்பு முதல் பழுப்பு நிறம்வரையிலான தோல் நிறம், உடலில் மயிரின் அளவு மிகுதி முதலான பண்புகள் இவர்களை அடையாளம் காட்டக்கூடியவை.

தன்வார் சமூகம் ஓரளவு சிறியதாகையால் இவர்களிடையே அக மண உட்பிரிவுகள் (Endogamous Sects) இல்லை. ஆனால், குலக்குறியின் (Totem) பெயரைக் கொண்டு பல உட்பிரிவுகள் உள்ளன. ஒவ்வொரு குழுவினரும் அவர்களின் குலக்குறியிலிருந்து தோன்றியவர்கள் என எண்ணுவதால் அனைவரும் இரத்த உறவுடையவராகின்றனர். இதனால் ஒவ்வொரு உட்பிரிவும் புறமண அமைப்புடைய குழுவாக (Exogamous Group) விளங்குகிறது. பெரும்பாலான குலக்குறிக் குழுக்கள் விலங்குகள் அல்லது தாவரங்கள் ஆகியவற்றில் ஏதோ ஒன்றை குலக்குறியாகக் கொண்டுள்ளன. ஒவ்வொரு குலக்குறிக் குழுவினரும் அவர்களின் குலக்குறியைக் கொல்வதோ உணணுவதோ இல்லை.

தன்வார்ப் பழங்குடிகளின் பொருளாதாரம் வேட்டையாடுதலையும், உணவு சேகரித்தலையும் அடிப்படையாகக் கொண்டது. அவர்களின் குடியிருப்புகள் பெரும்பாலும் காடுகள் அடர்ந்து உயரமான மலைப் பகுதிகளில் இருப்பதால் வேட்டையாடுவதற்கும் காட்டுப் பொருள்களைச் சேகரிப்பதற்கும் வசதியாக உள்ளன. ஆண்கள் தனியாகவும், தன் குலத்தைச் சார்ந்த பலருடன் குழுவாகவும் வேட்டைக்குச் செல்வர். வேட்டையில் கிடைக்கும் இறைச்சியை அனைவரும் பகிர்ந்துகொள்கின்றனர். பொதுவாகப் பெண்கள் காட்டுப் பொருள்களைச் சேகரிக்கின்றனர். அவை அன்றாட உணவிற்காகப் பயன்படுகின்றன. மேலும், அவற்றுள் சில பொருளகளை வெளியாருக்கு விற்பதன் மூலம் பணம் அல்லது தங்களுக்குத் தேவைப்படும் பொருள்கள் கிடைக்கின்றன.

இன்று இவர்களின் தொழிலில் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன. வேட்டையாடுதலும்

காட்டுப் பொருள்களைச் சேகரித்தலும் மட்டும் இவர்களின் தேவையை நிறைவு செய்யவில்லை என்பதால் பயிரிடுதல், கூலிவேலை செய்தல் முதலானவற்றையும் மேற்கொள்ளத் தொடங்கியுள்ளனர். பெரும்பாலும் காடுகளை அழித்துத் தினை வகைகளையும், சோள வகைகளையும், காய்கறிகளையும் பயிரிடுகின்றனர். இரண்டு, மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு விளைநிலத்தை மாற்றுகின்றனர். இதற்காக வேறொரு காட்டுப் பகுதியை அழித்து வெட்டிய மரங்களை அங்கேயே எரித்துவிடுகின்றனர். இதனால் கிடைக்கும் சாம்பல் மட்டுமே இவர்கள் இடும் உரமாகும். இரண்டு, மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு நிலத்தின் வளம் குறைவதால் இடம் மாறிமாறிப் பயிரிடுகின்றனர்.

இப்பழங்குடிகளின் திருமண முறை சற்று விரிவானதாகும். ஒரு குலத்தவர்கள் வேற்றுக் குலத்தவரையே மணக்கவேண்டும் என்ற முறை உள்ளது. பெரும்பாலும் பெற்றோர்கள் மணமக்களைத் தேர்ந்தெடுத்து திருமணம் செய்யும் முறையே வழக்கிலுள்ளது. திருமணத்திற்கு முன் மணஉறுதி செய்யும் விழாவும், மணமக்கள் சந்தித்துக்கொள்ளும் விழாவும் நடைபெறுகின்றன. திருமணப்பந்தல் செவ்வக வடிவில் அமைக்கவேண்டும் என்பது மரபு. இதில் 7 அல்லது 9 தூண்கள் மூன்று வரிசையில் நடப்படும். பெண்கள் பூப்பெய்தும் காலம் முழு நிலவுக் காலமாக இருக்குமானால் திருமணம் அமாவாசை ஒட்டியநாட்களில் நடைபெறும். பூப்பெய்தும் காலம் அமாவாசை ஒட்டிய நாட்களாக இருந்தால் திருமணம் நடைபெறும் காலம் முழு நிலவுக் காலத்தை ஒட்டி அமையும். திருமணத்தின்போது மணமகன், மணப்பெண் நெற்றியில் ஒருவகை எண்ணெய் தடவியபின்னர் மணநிகழ்ச்சிகள் நிறைவு பெறும். திருமணம் முடிந்தபின்பு மணப்பெண் வீட்டிலும் மணமகன் வீட்டிலும் பல சடங்குகள் நடைபெறுகின்றன.

தன்வார் சமூகத்தில் விதவைகள் மறுமணம் செய்துகொள்ள அனுமதிக்கப்படுகின்றனர். விதவைகள் மறுமணத்தை உண்மையான திருமணமாகக் கருதுவதில்லை. ஒரு பெண் வாழ்நாளில் ஒரு முறையே நெற்றியில் எண்ணெய் தடவி மணம் செய்துகொள்ள முடியும் என்பது இவர்களின் கருத்தாகும். இதனால் மறுமணம் மிக எளிமையாக நடைபெறுகிறது.

குழந்தை பிறந்தபின் தாய் மூன்றாம் நாள் தவிர முதல் ஐந்து நாள்களுக்கு உணவு உட்கொள்வதில்லை. மூன்றாம் நாளில் ஒருவகை திரவ உணவு மட்டும் உள்கொள்வர். ஆறாம் நாள் வீட்டிலுள்ள ஆண்கள் அனைவரும் முகச்சவரம் செய்துகொள்ள வேண்டும்.

தன்வார்ப் பழங்குடியினர் பல தெய்வங்களை வழிபடுகின்றனர். தாக்குர் தியோ (Thakur Deo) என்னும் கடவுள் வேளாண் கடவுளாக வழிபடப்படுகின்றது. தூல்கா தியோ (Dhulha Deo) என்னும் கடவுள் குடும்பக் கடவுளாக வழிபடப்படுகின்றது. இவர்களின் அண்டையப் பழங்குடியினரான கோண்டுப் (Gond) பழங்குடிக் குருமார் ஒருவர் ஆண்டில் இருமுறை தாக்குர் தியோ கடவுளுக்கு வழிபாடுகள் செய்வார். தன்வார் பழங்குடியினர் மிகவும் கடுமையான தீங்குகள் ஏற்படும்போது இத் தெய்வத்திற்கு ஆடு பலியிட்டு வணங்குவர். இவர்கள் ஆவிகளின்பாலும், மாய வித்தையின்பாலும் மிகுந்த நம்பிக்கை கொண்டுள்ளனர். மாய வித்தைச் சடங்குகளைக் கடவுள்களுக்கு வழிபாடு செய்யும் குருமார்களோ, மருத்துவம் புரியும் மனிதர்களோ செய்வர். வாழ்க்கையின் அன்றாட நிகழ்வுகளாக ஏற்படும் உடல்நலக் குறைவு, பயம், பீதி, இயற்கையினால் விளையும் ஆபத்துகள், எதிரிகளால் விளையும் இன்னல்கள் முதலான அனைத்திற்கும் மாய வித்தையின் மூலம் தீர்வுகாண முற்படுகின்றனர்.

இறந்தவர்களைப் புதைக்கும் வழக்கத்தை இவர்கள் கொண்டுள்ளனர். புதைப்பதற்கு முன் பிணத்தொடு புதைகுழியைச் சுற்றி ஏழு முறை வலம் வருவர். புதைப்பதன் மூலம் மக்கள் வாழ்வின நிறைவைக் காண்பதாக இவர்கள் எண்ணுகின்றனர். புதைப்பதன் மூலம் ஒருவருக்கு இறுதித் திருமணம் நடைபெறுவதாகக் கருதுகின்றனர். பிறக்கும்போது மண்ணில் விழும் ஒருவர் இறக்கும்போது அம் மண்ணோடு சேருவது அவர் பிறந்து வளர்ந்த பூமியை மணந்துகொள்வதற்கு இணையானது என்ற கருத்து இவர்களிடையே ஆழ்ந்து நிலைபெற்றுள்ளதால் இறந்தவர்களைப் புதைக்கும் முறையைக் கொண்டுள்ளனர்.

சீ.ப.

**தன் விருப்பாற்றல்:** அறம் செய்யவேண்டும் என்று மேலோர் கூறுவர். ஆனால் அறம் செய்ய வேண்டுமாயின் செய்வோன் என்ன செய்ய நினைக்கிறானோ அச்செயலைத் தேர்ந்தெடுத்து, அதனைச் செய்ய அவனுக்கு உரிய சுதந்திரம் தேவை. சுதந்திரம் இல்லாமல் செயறப்பட்டால் அச்செயல் சரியானது அல்லது தவறானது என்று அறத்தின் அடிப்படையில் மதிப்பிடுவதற்கில்லை. இச்சுதந்திரத்தைத் தன் விருப்பாற்றல் (Freedom of will) எனலாம். இது அறவியலின் அடிக்கோள்களுள் (Postulates) முதன்மையானது. ஆதலின் அறம் தழைக்க மனிதர்கள் அனைவரும் தன் விருப்பாற்றலுடையவர்களாக இருக்க வேண்டியது இன்றியமையாததாகும்.

அறிவியல் முறையில் பார்த்தால் ஒருவனுடைய செயல்கள் அனைத்தும் முழுமையாக நிருணயிக்கப்

பட்டவையே. தன் விருப்பாற்றலுக்கு (Free-will) வழியே இல்லை எனலாம். இந்நிலையினைப் புரிந்து கொள்ள உடல் நூலும் (Physiology), உளநூலும் (Psychology) துணை செய்யும். மனிதனின இயல்பும் அவனது செயல்களும் முன்னமேயே நிருணயிக்கப்பட்டு விட்டதாக இவவிரு அறிவியல்களும் கூறுகின்றன. உடல் நூலின் கணணோட்டத்தில் மனிதனைப் பார்க்கையில் அவன் மனநிலையும், செயல்களும் அவனது உடலின அமைப்பைப் பொறுத்திருக்கின்றன என்பது புலனாம். உடல் நலமற்றவனின் மனநிலை, உடல்நல முடையவனின மனநிலையின்று வேறுபடுகிறது. கேடயச் சுரப்பி (Thyroid) குறைவாகச் சுரந்தால் மூளை மந்தமாகிறது.குண்டிக்காய் அடுத்த சுரப்பி (Adrenal) மிகுதியாகச் சுரந்தால் கோழையாகிறான். உள நூலின் உணர்வு நிலைக்கும் (Consciousness) கீழே உள்ள பகுத்தறிவில்லாத (Non-rational) சச்திகளால் மனிதனின விருப்பாற்றல் (Will), பகுத்தறிவு (Reason),மனச்சான்று (Conscience) ஆகியவை நிருணயிக்கப்படுகின்றன. மனிதன, இயற்கையிலேயே, விலஙகினங்களைப் போல் இயல்புணர்ச்சிகள் (Instincts), உந்து விசையாற்றல் (Impulse) முதலியவற்றால் தூண்டப்பட்டுச் செயற்படுகிறானே தவிர, உண்மையிலேயே அறிவு பூர்வமாகவும், அறத்தின்படியும் செயற்படுவதில்லை. இயற்கையிலேயே அவனது தன்மை விலங்கினங்களின் தன்மையுடன் ஒத்திருக்கிறது. செயல்களுக்கு அடிப்படையாக உள்ள இயற்கைச் சக்திகளின் உண்மை நிலையினை முழுவதும் அறிய இயலாதவாறு பகுத்தறிவு தடையாக உள்ளது. பகுத்தறிவு உளளதநின் அடித்தளத்தில் இருக்கும்இயல புணர்ச்சிகள, உந்துவிசையாற்றல் ஆகியவற்றின் உண்மையை அறிந்துகொள்ள முடியாதவாறு அவற்றை அறிவுக்குப்பொருந்தக் கற்பித்துவிடுகிறது. பகுத்தறிவின் இவ்வேலைக்கும், தன் விருப்பாற்றலுக்கும் என்னதொடர்பு என்ற எண்ணம் எழலாம். தன் விருப்பாற்றலுக்கு இரு கட்டுப் பாடுகள் உள்ளன. ஒன்று, இருவேறு செயலகளின் தகுதிகளை நடுநிலை தவறாது சுதந்திரத்துடன் மதிப்பிடுதல். அதற்குப்பகுத்தறிவு தேவை. இயல்புணர்ச்சிகள, உந்து விசையாறறல் முதலியன விரும்புவதைப் பெறுதற்கு அது வழி வகுக்கும். அவற்றின் அடிமையாகப்பகுத்தறிவு செயற்படாதிருக்க வேண்டும். இரண்டாவதாக, பகுத்தறிவு தெரிவிக்கும் நற்செயலைத் தேர்ந்தெடுக்கக் கூடிய விருப்பாற்றல் தேவை. பகுத்தறிவு சொலவதைவிட்டு இயல்புணர்ச்சிகள், உந்து விசையாற்றல் முதலியவற்றில் மயங்கும் விருப்பாற்றல் ஆக இருக்கக் கூடாது.

மேலே கூறியுள்ள அறிவியலின் நியதிவாதம் (Determinism) சரியானதன்று என்று தன் விருப்பாற்றலை ஆதரிப்பவர்கள் கூறுவர். அவர்களது கருத்தைப் பின்வருமாறு விரித்துரைக்கலாம்: 1) வகைப்படுத்துதல் (Classification), 2) நிகழப் போவதென்னவென்று முன் கூட்டியுரைத்தல (Prediction) ஆகிய இவற்றைச செய்ய, விஞ்ஞானி குறிப்பிட்ட ஒரு பொருளைப் பிரித்து அதன் பகுதிகளைக் காணகிறான். இதுகாறும் தெரிந்திராத அப்பொருளின் பகுதிகள், முன்னமேயே தெரிந்துள்ள பொருளின் பகுதிளை ஒத்திருப்பது புலனாகிறது. ஆதலால், இவ்வாறு தெரிந்திராத பொருளைத் தெரிந்துள்ள பொருளுடன் தொடர்புடையதாக்குகிறான். தான் அறியாத பொருள்கள் பலவற்றிற்கும் இம்முறையைக் கையாண்டு, இதன் மூலம் அவற்றினை வகைப்படுத்தி, இவ்வாறு வகைப்படுத்துதலினால், இவ்வகையான பொருள்கள் அனைத்தும் இயங்கும் முறைமையைத் தன்னிடத்தே கொண்டுள்ள ஒரு வாய்பாடை (Formula)வரைகிறான். அதன் பின், தெரியாதிருக்கும் பொருளை இவ்விலக்கணத்தின கீழ்க் கொணடுவந்து அப்பொருள் குறிப்பிட்ட சூழ் நிலையில் எவ்வாறு இயங்கும் என்று முன்கூட்டியே சொல்கிறான். ஆனால், இம்முறையைச் சரியான தாகக் கருதவேண்டுமெனில, ஒவ்வொரு பொருளையும் மீதி இல்லாதபடி பகுதிகளாகப் பிரித்தெடுக்க முடியும் என்பதையும், அப் பகுதிகளைக் கொணடு வகைப்படுத்த முடியும் என்பதையும் விஞ்ஞானி தன் அடிப்படை நிலையாக எடுத்துக்கொள்ள வேண்டும்.

இரண்டாவதாக, அறிவியல் வருவதுரைத்தல் (Prediction) என்னும் வேலையைச் செய்ய வேணடுமெனில், ஒவவொரு பொருளுக்கும உரிய காரணம், அப்பொருள் எதிலிருந்து உற்பத்தியாகிறதோ அதில முழுமையாக இருககிறது என்பதை விஞ்ஞானி தன் அடிப்படை நிலையாக எடுத்துக் கொள்ள வேணடும்.

சுருங்கச் சொல்லின், அறிவியலுக்குப் பின்வரும் இரண்டு அடிக் கோள்கள உள்ளன:-

1. ஒவ்வொரு பொருளும் எந்தப் பகுதிகளால் ஆக்கப்பட்டதோ அந்தப் பகுதிகளின சேர்க்கையின் மொத்தமேயாகும் அப்பொருளில் அதற்கு மேல் ஒன்றுமில்லை.

2. ஒரு பொருள் எவ்வாறு உற்பததியாகிறது என்று அறிந்து கொணடால், அந்த அறிவின் மூலம் அப்பொருளைப் புரிந்து கொண்டு விளக்க முடியும.

**அறிவியலின் முறையை மனிதனுக்குப் பயன்படுத்த இயலாமை:** அறிவியல் தனது முறையை மனிதர்களுககும் பயன்படுத்த முயல்கிறது. ஆனால் தன் விருப்பாற்றல் உள்ளது என்பவர்கள் இதற்கு உடன்படுவதிலலை. அறிவியல் கூறும் பொருளில் மனிதனின் செயல்களை நிகழ்ச்சிகள் என்று சொல்வதற்கில்லை என்று கூறு

கிறார்கள். மனிதச் செயல் காரணம் உடையது என்பதும், அக்காரணம் அசசெயலை நிருணயித்துள்ளது என்பதும் உண்மையே. அது எவ்வளவிற்குக் காரணம் உடையதோ அல்லது நிருணயிக்கப்பட்டதோ அவ்வளவிற்கு அது அறிவியல் கூறும் பொருளில் நிகழ்ச்சி என்று சொல்லாம். ஆயினும், மனிதச் செயல் முழுமையாகக் காரணத்தினால நிருணயிக்கப்பட்டதாகத் தன் விருப்பாற்றலை ஆதரிப்பவர் ஏற்றுக் கொள்வதில்லை. ஆனால், அறிவியலின் முறை மனிதனைப் புரிந்து கொள்ளக் கையாளும்பொழுது, மனிதச்செயல் முழுமையாகக் காரணம் உடையது என்பதும், அது அக்காரணத்தால் முழுமையாக நிருணயிக்கப்பட்டது என்பதும் உணமை என்று தொடக்கத்திலிருந்தே எடுத்துக் கொணடு வருகிறது அதனால் தான அறிவியல் நியதிவாதத்திலேயே உறுதியாக நிறக வேண்டியுள்ளது. இந்த அறிவியலின் அணுகு முறையை அடிப்படையாகக் கொண்ட நியதிவாதம் தான் கருதும் பொருள அல்லது செயல், எந்த எந்தப் பகுதிகளால் ஆக்கப்பட்டதோ அந்த அந்தப் பகுதிகளின் சேர்க்கையின் மொத்தமேயனறி அதற்குமேல் ஒன்றும் இல்லை எனக் கருதுகிறது. ஆனால், அறிவியலின் இக்கருத்து மனிதனின் விருப்பாற்றலுக்குப் பொருந்தாது எனறு தன் விருப்பாற்றலை ஆதரிபபவர் கூறுவர்.

**அறிவியல் விளக்கத்தை மீறிச் செல்லும் மனிதனின் சிறப்பியல்பு:**அறிவியல் கூறுவதுபோல், ஒரு மனிதனைப் பகுதிகளாகப் பிரிப்பதாகக் கொணடால் ஒவ்வொரு பகுதியையும் ஒவ்வொரு அறிவியல் துறை எடுத்துக் கொண்டு ஆராய்ச்சி செய்து அப்பகுதியைப் பற்றிய செய்தியைக் கொடுக்கும். இவ்வாறு வெவவேறு துறையிலிருந்து கிடைக்கும் செய்திகளைச் சேர்த்துத தொகுத்து ஒன்றாகஅமைததுக் கொணட பினனரும் மனிதனைப் பற்றிய உணமை நன்கு தெரிவதிலலை. அதற்குக் காரணம், மனிதன எந்தப் பகுதிகளால் ஆக்கப்பட்டிருக்கிறானோ அப்பகுதிகளைக் கூட்டிக் கிடைக்கும் மொத்தத்திறகும் அதிகமாக அல்லது மேலாக மனிதன் இருப்பது தான் எனலாம். மனிதனைப் பற்றித் தெரிந்து கொள்ள வேணடுமென்றால், அவனது முழுமையைக் காண வேணடும். ஆனால் அவனது முழுமை, அவனது பகுதிகளின் மொத்தத் தொகைக்கும் மேலானதாகும். ஆனால், அறிவியல் ஒவ்வொரு பொருளையும் அதன் பகுதிகளின் மொத்தத் தொகைக்குச் சமம் என்றும் அதற்கு மேல் இல்லையென்றும் கருதுவதால், அறிவியல் மனிதனைப் பற்றிய முழு உண்மையை அளிக்கத் தவறுவதில் வியப்பில்லை. எந்த அளவிற்கு மனிதன் தன் பகுதிகளின் சேர்க்கையில் மொத்தத்திற்கு அதிகமானவனோ,அந்த அளவிற்கு அவன் அறிவியலின் வலையினின்று தப்புகிறான். ஆதலினால், அவன் எந்த அளவிற்குத் தன் பகுதிகளின் சேர்க்கையில மொத்தத்திற்கு அதிகமானவனோ அந்த அளவிற்கு அவனது செயல்கள் அப்பகுதிகளால் நிருணயிக்கப் படவில்லை. அதாவது, அந்த அளவிற்கு அவனுக்குத் தன் விருப்பாற்றல் உண்டு எனலாம்.

மனிதனின் சிறப்பியல்பைப் பொறுத்தவரையில இஙகுக் கூறியுள்ளது உணமையெனறால், அவனது பல செயல்களைப் பொறுத்த வரையிலும் கூட இது உண்மையாகத் தான் இருக்க வேண்டும். அதற்குக காரணம், அவனது சிறப்பியல்பு தான. அறிவியலின கண்ணோட்டத்தில் நிகழ்ச்சி எனபது எப்படியோ அது போனறே மனிதச் செயலையும் நிகழசசி எனக் கொளளலாம். ஆனால், மேலே விளக்கப்பட்டவாறு அவை நிகழ்ச்சிகளை விட 'அதிகமாக' உள்ளன என்பதை மறுக்க முடியாது. அவை எந்த அளவிற்கு 'அதிகமோ' அந்த அளவிற்கு அறிவியல் அவற்றிற்குப் பொருந்தாது. இவ்வாறு மனிதச் செயல் 'அதிகமான' நிகழச்சியாக இருப்பதால் அச்செயல்கள் புதிதாகப் படைக்கப்பட்டவையாகும். இந்த 'அதிகமான' தனமையின் காரணமாகததான் அவை தன்விருப்பாற்றலுடையவை என்று சொல்லப்படுகின்றன.

ஒருவன் தன்னியல் நிகழ்வையோ(Reflex Action) உந்து விசையாற்றலால் தோன்றும் செயலையோ (Impulsive action) செய்தால் அப்பொழுது அவனுக்குத் தன் விருப்பாற்றல் இருப்பதாகச் சொல்வதறகில்லை. ஆனால், அவன் விருப்பாற்றலால் தோன்றும செயல்களைச் (Willed actions) செய்யும்பொழுது தான் தன் விருப்பாற்றல் உணடு என்று சொல்லப் படுகிறது. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட செயல்களில் எதனைச் செய்ய வேணடும் எனறு அவன நன்கு சிந்தித்து, அச்செயல்களைச் செய்வதால் விளையும் நன்மை தீமைகளையும், தன் கடமை எச செயலைச் செய்வதில உள்ளது எனபதையும் தன் சிந்தனையில் நடுநிலையில் நினறு ஆய்ந்தறிந்த பின்பு தான் எந்தச் செயலைச்செய்வதெனத்தேர்ந்தெடுத்து முடிவு செய்தானென்றால், அப்பொழுது அவனது செயல் விருப்பாற்றலால் தோன்றும் செயல் என்று பெயர் பெறுகிறது. அவ்வாறு முடிவெடுத்தற்கு இரணடு கட்டுப்பாடுகள் உண்டு. அவையாவன: 1) பல்வேறு செயல்களின் தகுதிகளை நடுநிலை தவறாமல் சுதந்திரத்துடன் மதிப்பிடப் பகுத்தறிவு தேவை. இயல்புணர்சசி உந்துவிசையாற்றல் முதலியன விரும்புவதைப் பெறுவதற்கு வழிவகுக்கும். அவற்றின் அடிமையாகப் பகுத்தறிவு செயற்படாதிருக்க வேண்டும். 2) பகுத்தறிவு தெரிவிக்கும் நற்செயலைத் தேர்ந்தெடுக்கக் கூடிய விருப்பாற்றல் தேவை. பகுத்தறிவு சொல்வதைவிடுத்து, இயல்புணர்ச்சிகளிலும் உந்து

விசையாற்றலிலும் மயங்கும் விருப்பாற்றலாக இருக்கக் கூடாது.

இவ்வாறு சிந்தித்துச் செயற்படுவது விருப்பாற்றலால தோன்றும் செயல்கள் எனப்படும். இந்த விருப்பாற்றலால் தோன்றும செயல்களைச் செயயும் பொழுதுதான் செய்பவனுக்குத் தன் விருப்பாற்றல் உண்டு.

இவ்வாறு விருப்பாற்றலால் தோன்றும் செயல்களைச் செய்யும் பொழுது, செய்பவன் இயல்புணர்ச்சிகள், உநதுவிசையாற்றல் ஆகியவற்றின் மேலாணமையினின்று விடுபட்டிருப்பதுடன், தான் சிந்தித்துத் திட்டமிட்டபடி செயற்படுகிறான என்பது தெளிவாகிறது. செய்பவன், அறிவு பூர்வமாகச் செயற் படாதவாறு அவனை அவனது பாதையினின்றும் விலகச் செய்யும் பொருட்டு அவனை மயக்கும் உந்துவிசையாற்றல போன்றவற்றிலிருந்து அவன் தனனை விடுவித்துக் கொள்வதே தன் விருப்பாற்றலாகும். ஆனால், செயல் ஒன்றினாலும், நிருணயிக்கப்படாதிருப்பதில் தான் சுதந்திரம் இருக்கிறதென்று தன முடிவுரிமையில் கருதக்கூடாது. செயல், நடுநிலை வகிக்கும் பகுத்தறிவு சொல்வதைக் கொண்டு நிருணயிக்கப்படுகிறது. இவவாறு செயற்பட ஒருவருக்குத் தேவை, நனகு நிலைத்த குணமாகும். குணத்தைச் செம்மையாக அமைத்துக் கொண்டுள்ளவரால் தான் உந்துவிசையாற்றலுக்கு அடிமையாகாதவாறு செயற்படமுடியும். குணத்தைச் செவ்வனே பெறாதவர்தான் அடிக்கடி உந்துவிசையாற்றலினால் பாதிக்கப்பட்டு, விருப்பாற்றலால் தோன்றும் செயல்களைச் செய்யாதிருப்பார்கள்.

ஒருவன் சிந்தனைகளை மயக்கும் சக்திகளினின்றும், தன் விருப்பாற்றலைப் பிறழச் செய்யும சக்திகளினின்றும் விடுபட்டுச் செயற்பட முடியுமாதலால் தன் விருப்பாற்றல் உண்டு எனலாம்.

**நியதிவாத மறுப்புக் கோட்பாடு:** இது நியதிவாதத்தை முழுமையாக மறுக்கிறது. இது, செயல எதுவும்செய்பவனுக்கு வெளியில் இருப்பனவற்றாலோ அவனுக்குள் இருப்பனவாகிய அவனது விருப்பம் உந்து விசையாற்றல், தேர்ந்தெடுக்கும் திறமை, குணம் முதலியவற்றாலோ நிருணயிக்கப்படவில்லை என்று தெரிகிறது. மனித செயலுக்குக் காரணம் ஒன்றும் கிடையாது. ஆதலின் ஒருவன் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் ஒரு குறிப்பிட்ட செயலைச் செய்த போதிலும், அவன், அதே சூழ்நிலையில் அச்செயலைச் செய்யாது வேறு ஏதேனும் ஒரு செயலைச்செய்திருக்கக் கூடும். செயல் காரணமற்றதாகையால் அது நிருணயிக்கப்படாததாகிறது. ஆதலின் அச்செயல சுதந்திரத்துடன் செய்யப்பட்டதாகப் பேசப்படுகிறது.

இக்கொள்கையைச் சிறந்ததாகக் கருதலாமா என்பதை அறிய ஓர் எடுத்துக் காட்டு தேவைப்படுகிறது. ஒருவன் கைகள் இக்கொள்கையினபடி, சுதந்திரமுடையதென்று கொணடால் அடிக்கடி, மேலும் கீழுமாக, தெற்கும் வடக்குமாக, கிழக்கும் மேற்குமாக, இப்படியும் அப்படியும் ஆக ஆடிககொண்டேயிருக்கினறன. ஆனால் இவ்வியக்கஙகளுக்குக் காரணமாக ஒன்றும் இல்லை. இவை சுதந்திரமுடையன. ‘என் கையின் இந்த இயக்கங்களுக்கு நான் காரணம் ஆகேன். அவை எநத நேரத்தில் எப்படி இயஙகும் என்று எனக்குத் தெரியாது. ஆதலின் அதன் இயக்கத்திற்கும் எனககும் எவ்வித தொடர்பும் இல்லை. எதிர்பாராதபடி, என் கைகள் என அருகில் உள்ளவரைத் தாக்கலாம். ஏன் இப்படித் தாக்கியது என்று காரணம் கேட்டால் என்னால் ஒன்றும் சொல்லஇயலாது’ எனக் கூறின் கையின் இயக்கங்களுக்கு விளக்கமே கிடையாததாகிறது.

இவ்வாறு இயங்குவதைச் சுதந்திரமுடைத்தென்று சொல்வதற்கில்லை என்பதே உணமை. ‘எனது கையின இச்செயல்களுக்கு நான் பொறுப்பேற்க முடியாது. நான் என் விருப்பாற்றலுடன் செயல செய்தேனென றால் தான், செயல் எனனுடையதெனற நிலையிருநதால் தான், நான், அதற்குப் பொறுப்புடையவனாவேன. என்னிடமிருந்து என்னைக் காரணமாகக் கொண்டு, தன் விருப்பாற்றலுடன, செயல பிறக்கவில்லையென்றால் அதற்கு நான் எப்படிப் பொறுப்புடையவனாவேன்’

நியதிவாத மறுப்புக் கோட்பாடு (Indeterminism) அறத்தை அழிக்கும் தனமையுடையது. செயலொன்றும் செய்தோனைச் சாராதிருப்பதால், பொறுப்பு இல்லாமற் போகிறது. நற்செயல செய்தமைக்குப் பாராட்டுதல், பரிசளித்தல், தவறு இழைத்தமைக்கு இகழ்தல், கண்டித்தல், தணடித்தல் முதலியன பொருளற்றன வாகினறன. இவற்றிறகு எவருடைய வாழ்விலும் இடமில்லை எனற நிலை ஏறபடுமாதலால் இக்கொள்கையை எவரும் ஆதரிப்பதற்கில்லை.

முடிவாகக் கூறினால், சுதந்திரத்தை அல்லது தன்விருப்பாற்றலைத்தன் துணிப்பாறறலின (Self-determinism) வாயிலாகக் கொள்வதே சிறப்பும், உண்மையும் உடையதாகும். சி.சா.

**தன்னாட்சி:** தன்னாட்சி என்பது பொதுவாக ஓர் அமைப்பு சுதந்திரமாக இயங்குவதைக் குறிக்கும். அரசியல் அறிவியலில் இச்சொல் ஒரு கூட்டாட்சி அரசில் உள்ள மாநில அலலது பிராந்திய அரசாங்கங்களும், நாட்டின் பொது அரசாங்கமும் மற்றவற்றின்

தலையீடின்றிச் சுதந்தரமாக அவற்றின பணிகளைப் புரியும் உரிமையைக் குறிக்கும்.

கூட்டாட்சி அரசில் (Federal State) வெளிநாட்டு விவகாரம், பாதுகாப்பு, வங்கி போனற நாட்டு அள விலை முதனமை வாயந்த அதிகாரஙகள் மத்திய அரசாஙகத்திடமும், கல்வி, பண்பாடு, சுகாதாரம், வேளாணமை போன்ற அதிகாரங்கள் மாநில அல்லது பிராந்திய அரசாங்கத்திற்கும் கூட்டாடசி விதிமுறைப படி அரசியலமைப்புச் சட்டத்தால பிரிததளிக்கப் படு கினறன. இந்தியா போன்ற நாடுகளில் அரசாஙக அதிகாரஙகள மூவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை மத்திய பட்டியல் (Central List), மாநிலப் பட்டியல (State List), ஒருங்கிணைவுப் பட்டியல் (Concurrent List) ஆகும். கூட்டாட்சி அமைப் பைத் தோற்றுவிததவாகள, மாநில அலலது பிராந் திய அரசாஙகங்களின சுதந்திரத்தைப் (தன்னாட் சியை) (Autonomy) பாதுகாக்கும் பொருட்டு, அந நாட்டின அரசியலமைப்புச சட்டம் எழுதபபட்டதாக வும், நெகிழ்ச்சியுடையதாகவும அமையும்படி செயத னர். மேலும அதிகாரப பிரிவினை தொடர்பாக எழும் சிக்கலைத் தீர்ப்பதற்கு சுதந்திரமாகச் செயற்படும் உச்ச நீதிமனறத்தையும் தோறறுவிதத னர். சுருங்ககூறின, கூட்டாட்சி அமைப்பில உளள மக்கள வேற்றுமையில் ஒற்றுமை காண வேணடும எனறே அரசியல மேதைகள விருமபினர்.

செய்தித் தொடர்பு மற்றும் போக்குவரத்துத துறையில 20-ஆம் நூற்றாணடில் ஏற்பட்ட முன் னேற்றத்தால் உலகம் சிறியதாயிற்று. விளைவு ஒவ வொரு சிக்கலும் தேச முதனமை பெற்றது. இது தவிர, போர், பொருளாதார நெருக்கடி, உச்ச நீதி மனறத் தீர்ப்புகள, மாநிலங்களுக்கு அளிக்கபபடும் மத்திய அரசாஙக நிதியுதவி போனற தேசஅளவிலான முகசிய பொதுக் காரணஙகள மத்திய அரசாங்கத்தின தலையீடு, மாநில அளவில் ஏறபட வழிகோலின. மிகுந்த அதிகாரங்கள் பெற்றிருந்து தனனாட்சி நடை பெற்ற அமெரிக்கக் கூட்டாட்சி அமைப்பில உள்ள மாநிலஅரசாஙகங்களே மத்திய அரசாங்கத்தின் தலை யீட்டால் பாதிக்கப்பட்டு எதிர்ப்புத் தெரிவித்தன. இந தியா போன்ற அரைக் கூட்டாட்சி நாடுகளில மாநில அரசாங்கங்களுக்கு மற்ற நாடுகளைவிட குறைந்த அதிகாரங்களே அளிக்கப்பட்டுள்ளன. அவற்றில் கூட மத்திய அரசாஙகத்தின் தலையீடு1967-க்குப்பின உண ரப்பட்டது. இதனால் மாநில அரசாங்கங்களிடம் இருந்த குறைந்த சுதந்திரமும் பறிபோகத் தொடஙகி யது. எனவே திராவிட முன்னேற்றக் கழகம் போன்ற பிராந்தியக் கட்சிகள் மாநிலங்களுக்கு அதிக அதிகாரங் கள் அளிக்கப்பட்டு மாநில அளவில் தன்னாட்சியும (சுயாட்சி) மத்திய அளவில் கூட்டாட்சியும் அமைய வேணடும என இன்று கோரிககை விடுகின்றன. ஆனால் மாநில அரசாங்க அதிகாரங்களை மததிய அரசாங்கம் எடுத்துக்கொள்வது தடுக்கவும் தவிர்க்க வும்முடியாததாக இன்று உளளது மத்திய அரசாஙகத் தின் அதிகாரங்களில் மாநில அரசாங்கங்கள் தலை யிட இயலாது. எம.ஜ.

**தன்னிச்சையாக:** குற்றமனமில்லாச் செயல் குற்றமென ஆவதிலலை என்பது இயற்றாச் சட்டத் தின் அடிப்படை விதி. குற்றமனம (mens rea) எனற சொல் இந்தியத் தண்டனைச் சட்டத்தில கையாளப படவில்லை ஆயினும், அதன் பொருள தொனிக கின்ற பல்வேறு சொற்களான தன்னிச்சை யாக (Voluntarily), கருத்துடன (Intentinally) கவனக்குறைவுடன் (Negligently), தெரிந்தே (Knowlingly), மோசடியாக (fraudulently) களள மனத்துடன் (dishonesily) முதலான சொறகள கையாளப்பட்டுள்ளன. இந்தியத் தணடனைச் சட்டத தின் 39 ஆம் பிரிவு தனனிசசையாக எனற சொலலின இலக்கணத்தைக் கூறுகிறது இசசொலலின் பொருள கருத்துடன் (intentionally) என்றசொல்லின் பொருளை விடப்பரந்த நோககுடையது

காரியம் ஒன்றைக கருதிச் செய்தல் அல்லது அக் காரியம் குறித்த வழியால விளையும் எனபதைத தெரிந்தோ, காரணத்துடன் நம்பியோ அவவழியில அதைச் செய்தல் ‘தனனிச்சையாகச்’ செய்தல் எனப் படும். (இநதியத் தண்டனைச் சட்டத்தின் 39-ஆம் பிரிவு).

எடுத்துக்காட்டாக, கொள்ளையடிப்பதற்கு வசதியாக இருக்கும் பொருட்டுப் பெரிய நகரம ஒன்றிலுளள குடியிருக்கும் வீடொன்றுக்கு ‘அ’ எனப வர் இரவில தீ வைக்கிறார். இவவாறாக ஒருவரின் மரணத்தை விளைவிக்கிறார். இங்கு மரணம் விளை விககும் உட்கருத்து ‘அ’ என்பவருக்கு இல்லாமலிருக்க லாம்; மற்றும் தமது செய்கையால் மரணம் நேரிட்ட தற்கு வருத்தப்படவும் செய்யலாம். ஆனாலும், பெரும்பாலும் மரணம் விளைவிக்கக்கூடும் என்று அவர் அறிந்திருந்தால், அவா தன்னிச்சையாக மரணம் விளைவித்திருக்கிறார் என்று கருதப்படும்.

சட்டத்தில் தனனிச்சையாக எனறசொல் தம் விருப்பமாக என்ற பொருளைக் குறிப்பதில்லை. ஒரு வர் ஒரு செயலின் விளைவைத் தெரிந்து அல்லது விளைவினை எண்ணத்தில் கொண்டு செயறபடுவதைக் குறிப்பதாகும்.

பொதுவாக மனித உடல் மற்றும் உயிருக்கு எதி ராக இழைக்கப்படும் குற்றங்களின் இலக்கணத்தை

கூறும்போது இச்சொல், இந்தியத் தண்டனைச் சட்டததில பயன்படுத்தப்பட்டுளளது.

எடுத்துக்காட்டாக, அபாயம் விளைவிககக்கூடிய ஆயுதங்கள் மூலம் தனனிசசையாகக் காயம் விளைவித் தலை இந்தியத் தணடனைச் சட்டத்தின் 324-ஆம் பிரிவு தடைசெயகிறது.

மேலும் அபாயம் விளைவிக்கக்கூடிய ஆயுதங்கள மூலம் தன்னிச்சையாகக் கொடுங்காயம் விளைவித் தலைஇந்தியத் தணடனைச் சட்டத்தின் 326 ஆம் பிரிவு தடை செய்கிறது. மீ அ.

**தன்னுண்மைப் பொருள்:** அறிவின் இயலபு பற்றிய ஆராய்ச்சியில ஏற்படும் சில சிக்கல்களுககு விளக்கம் தரத் 'தன்னுணமைப் பொருள்' என்ற கருத்து உருவாக்கப்படுகிறது. அறிவு எதைப்பற்றி அமைகிறது? பொருளைப் பற்றியா? பொருளகள் வெளிப்படுத்தும பண்புகளைப் பற்றியா? பொருளே பண்புகளா? பணபுகளே பொருளகளா? இவ்வினாக் களுக்கு விடைகாண முனைந்த தத்துவ அறிஞர்கள் சிலர், பண்புகள் வேறு, பணபுகளைத் தாங்கிநிற்கும் பொருளகள் வேறு என்று கருதுகின்றனர். பண்பு களின வழியாகப் புலன் அனுபவ எலலைககு வரும் பொருளைத் தோனறும் பொருள எனறும், பணபுகள அனைத்தையும் களைந்தபின் எஞ்சி நிறகும பொரு ளைத் தோனறாப் பொருள என்றும் கூறலாம. பணபு களை மட்டுமே காணும் தகுதி வாய்ந்த புலன்களுக குப் பண்புகளைக் களைந்து தனித்திருக்கும் தனனுண மைப் பொருள் தோன்றாது. இககருததிற்கு முதன் மையும் முழுமையுமான விளக்கம் தந்தவா இம்மானு வேல் காண்ட்டு (கி.பி. 1724-1804) என்னும் செரு மானியத் தத்துவ அறிஞர்.

பொருளகளின எடை, நிறம், தனமை, அமைப்பு, வடிவம் எனபன போன்ற பணபுகளே புலன அனுப வத்திற்கு வருகின்றன. இப்பணபுகளுள் எதுவும தனித்த பண்பாக எங்கும இருப்பதிலலை, ஏதேனும் ஒரு பொருளின் பணபாகவே வெளிப்படுகிறது. சான் றாக, சிகப்பு எனனும் நிறத்தைத் தனித்துக் காண முடியாது. ஏதேனும் ஒருபொருளின் மீதுதான் இந் நிறத்தைக் காணமுடியும். புலனகளால அறியப்படும் இப்பண்புகளை ஒவ்வொன்றாகக் களைந்து அப்பண் புகளைத் தாங்கி நின்ற பொருளை மனம் அனுமானிக் கிறது. மனம் அனுமானிக்கின்ற இப்பண்புத் தாங கியை-பண்புகளைத் தாங்கி நிற்கும் பொருளை-தன னுண்மைப் பொருள் எனபர். இது காட்சிப் பொருள் அன்று; மனத்தால கருதப்படும் பொருள். பணபு களின் வழியாக வெளிப்படும்போது இது புலன்களுக் குத் தோன்றும் பொருள். பணபுகளை அறவே களைந்தபின புலன்களுக்கு இது தோன்றாப் பொருள்.

ஒருவனுடைய அனுபவ அறிவுக்குக் கருப்பொரு ளாகப் பொருள்களின் தோற்றங்களே அமைகின்றன. ஒருபொருள் ஒருவன புலனுக்கு எவ்வெவ்வாறு தோன்றுகின்றதோ அவ்வவ்வாறே அறியப்படுகிறது. இத்தோற்றங்களுக்கு அப்பால் அப்பொருள் உண்மை யில்-தனக்குத்தானே என்ற நிலையில்-எவ்வாறு இருக்கிறது என்பதை ஒருவனால் அறிய முடியாது. புலன்களின் வழியாகத்தான் மனிதன் ஒருபொருளை அறிகிறான். புலன்களோ பொருள்களின் தோற்றங் களைத் தாண்டிச் செல்லும் தகுதியற்றவை. எனவே, பண்புகளைக் கடந்து நிற்கும் தன்னுண்மைப் பொருளை மனிதனால் எவ்வாறு அறியமுடியும்? மனிதனால் அறியமுடியாது என்பதால் தன்னுண்மைப் பொருளை வெற்றுக் கற்பனை என்றுங் கூறிவிடமுடி யாது. தன்னுண்மைப் பொருளின் இருப்பு நிலையை- தன்னுண்மைப் பொருள் உண்டு என்ற நிலையை- அனுமானிக்க முடியும், கருதிப்பார்க்க முடியும்.

மனிதன் குவித்து வைத்திருக்கின்ற அறிவியல், சமூகவியல் அறிவுத் தொகுதி யாவும் பொருள்கள் எவ்வெவ்வாறு தோற்றமளிக்கின்றன என்பதைப் பற்றி விளக்குகின்றனவே தவிர உணமையில் அப் பொருள்கள் தமக்குத்தாமே எனற நிலையில் எவ வாறு இருக்கின்றன என்பதைப் பற்றி விளக்குவன அல்ல. க.நா.

**தன்னுணர்வு:** தன்னைப் பற்றிய எண்ணம் அல்லது பிறரிடமிருந்து தன்னை வேறுபடுத்தி நினைத்துக் கொள்ளும் எணணம் தன்னுணாவு (Self Awareness) எனப்படும். ஒருவர் தனனைத்தானே அறிந்து கொள்ளுதல் அல்லது புரிந்து கொளளுதல் என்பது ஒரு சுவையான பொழுது போக்கு அன்று அது வாழ்வின் முதன்மைத் தேவையாகும். 'தன்னை அறிந்தால் தனக்கொரு கேடில்லை, தன்னை அறியா மல் தானே கெடுகினறான்' என்ற சான்றோர் கூற்று இதனையே விளக்குகிறது.

வருஙகாலத்தைத் திட்டமிடவும், வாழ்க்கை வழி யைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவும் வருங்காலச் சூழ் நிலைகளில் மனிதனுடைய நடத்தை எவ்வாறு அமை யும் என்பதையும் அனைவரும் அறிந்திருத்தல் வேண் டும். இது தனனறிவுக்கு ஒரு நடைமுறை வழிகாட்டி யாக விளங்கும். மக்களுடைய தனி வாழ்வைக் கூர்ந்து கண்காணித்துச் சமூக வரலாறு எழுதி வைக்கப்படுவது போல, பண்பாட்டை வரலாறாக எழுதி வைப்ப தில்லை. மக்களின் கடந்த காலம் சிதறிய நினைவு

களைக் கொண்டே அறியப்படுகிறது. கடந்த கால நிகழ்ச்சிகளையும், கருத்துகளையும் மனிதன் மறந்து விடுவதால் மட்டும் அவை தவறான அல்லது சிதறிய நினைவுகளாவதில்லை. நிகழ்காலத்துடன் கடந்த காலம் ஒத்திருக்குமாறும், பொருந்துமாறும் மனிதன் வாழ்வைத் திருத்திக் கொள்ளலாம்.

மனிதன் தன்னைத் தானே அறிவது வளர்ச்சி முறையின் அடையாளம். பிறந்த குழந்தை நடை பழகுவதைப் போல, பேசிப் பழகுவதைப் போல, பிற ருடன் தொடர்பு கொள்ளப் பழகுவது போல அதே முறையில் தன்னைத் தானே அறிவதையும் மனிதன் கற்கிறான். எனவே குழந்தை உளவியலில் 'வளர்ச்சி' வலியுறுத்தப்படுகிறது. குழந்தை உளவியலின் பெரும் பாலான ஆராய்ச்சிகள் குழந்தைகள் காலப் போக்கில் திறமைகளை எவ்வாறு வளர்த்துக் கொள்கின்றன; சமூகப் பழக்க வழக்கங்களால் எவ்வாறு பாதிக்கப் படுகின்றன என்பவற்றை ஆராய்கின்றன.

மனிதன் தன்னைத் தானே அறிய மாட்டானா? என்ற கேள்வியைக்கேட்கத்தோனறலாம். பொதுவாக அறிய முடியும் என்பதுதான் இதற்கு விடையாக அமையும். ஏனெனில் மனிதனுக்கு என்ன நேர்ந்தது, எத்துடன் அவன் மனநிறைவடைய வேண்டும், அவனு டைய எண்ணங்கள், உணர்வுகள் எனன?என்பனவெல லாம் அவனே அறிவான். ஆனால் தன கடந்த கால வாழ்வின் சில ஆண்டுகளில் தன்னுடைய அனுபவங் களை அல்லது குழந்தைப் பருவ நிகழ்ச்சிகளை நினைவு கூருமாறு ஒருவனைக் கேட்டால் அவன் விவரங் களை உடனே நினைவுக்குக் கொண்டு வருவது கடின மாக இருக்கும். எனவே ஒருவன் தன்னை முழுவது மாக அறிந்துள்ளான் என்று சொல்ல முடியாது. தன்னைப் பற்றிய எல்லாத் தன்மைகளைப் பற்றியும் அவனால் எளிதாக நினைவுக்குக் கொணடுவர முடி யாது. பொதுவாக மனிதனால மறக்கப்பட்ட நினைவுகள் அவனுடைய நிகழ்கால உணாவுகளையும் நடத்தையையும் பாதித்த போதிலும் அவை தனனு ணர்வு நிலையை எட்டமாட்டா. இத்தகைய தன்னு ணர்வு நிலைக்கு உட்படாத தன்மையின பகுதியை அறிஞர் பிராய்டு சிந்தனை உணாவுக்கப்பாறபட்ட நிலை என்கிறார். அவருடைய கொளகைப்படி 'தன்மை' என்பது மிகப் பழமையான பாலுணர்வு மற்றும் மேலாண்மைப் போக்கின் ஆதாரம், கற்ற நீதி நெறிமுறைகள் பற்றிய மிகுந்த உணர்வு, தன்னுணர்வு ஆகியவற்றினால் ஆனதாகும். எனவே முதலில் கூறிய அடிப்படை மிருக உணர்வுகளும், மிகுதியான மனச்சாட்சித் தன்னுணர்வு அடிப்படை யும், சிந்தனைக்கப்பாற்பட்ட உணர்வுநிலையின் அடிப்படை என்பது பிராய்டின் கருத்தாகும். மனப் பகுப்பாய்வு மருத்துவமுறையில் பயன்படுத்தப்படும் 'கட்டற்ற தொடர்புகள்','கனவுப் பகுப்பாய்வு' முத லான சிறப்பு முறைகள் மட்டுமே 'தன்மை' யின் இத் தகைய சிந்தனை உணர்வற்ற நிலையை அறிய உதவக் கூடும் தன்னுணர்வு அல்லது தன்மை அறியும் தன விழிப்பு நிலையின் பல்வேறு அளவுகள் பற்றி பிராய் டின் கொள்கை புகழ் வாய்ந்தது. ஏனெனில் அது பெரும்பாலோரின் உணர்வாற்றல் அனுப வத்தின் பிரதிபலிப்பாக உள்ளது.

சுருங்கக் கூறவேண்டுமானால் ஒவ்வொரு மனித னும் தன்னைப் பிறரிடமிருந்து வேறுபடுத்திக் கொள ளும் தனித்தனமையையும் தன்னுடைய சொந்த அனுபவங்களின் முழுமை அலலது செறிவு எணணத் தையும் காலத்தின் தொடர்ச்சியுடன் வளர்த்துக் கொண்டுள்ளான்.மனிதன் தன்னுடைய முன் அனுபவத் தாலுண்டான தனித்தன்மையை வைத்துக் கொணடு அதனையொட்டி வாழ்வை அமைத்துக் கொண்டுள் ளான். மற்றவர்களுடைய எண்ணங்களைத்தன்னுடன் ஒப்பிட்டு அனுபவங்கள ஒத்தியலவதாகக் கருதிக் கொண்டு மனிதன் தன்னுணர்வு உள்ளனாகவும், தன் விழிப்பு நிலை உடையவனாகவும் வாழ்ந்து வரு கிறான். வே.ந.

**தன்னுணர்வுக் கொள்கை:** தன்னுணர்வு என்ற சொல் பல பொருள்களைக் கொண்டுள்ளது. மேனாட்டுத் தத்துவத்தில் தனமை என்பது பல்வகை யாக விளக்கப்பட்டுள்ளது. ஒருவரே உடல் பெற்றவ ராகவும், மிருக இயலபு பெற்றவராகவும், அறிவு பெற்றவராகவும், சமூகப் பணபுடையவராகவும் விளங்குகிறார். உணர்வு என்னுஞ் சொல், ஆன்ம ஒடுக்கம் (Self-Suppression), ஆன்ம தியாகம் (Self-Sacrifice) என்னும் பொருள்களைத் தருகிறது.

சைர நெய்க்கு என்ற சிலர், ஒரு தனிபபட்டவரின சிறந்த நன்மை இன்பமே என்பர். ஆதலின் தன் னுணர்வு பெறுவது என்புது மிகுதியாக இன்பத்தை அடைவது எனப் பொருள்படும். இவர்களுடைய கீழ்த் தரமான ஆசை, வெறி ஆகியவற்றைச் சிற்றின்ப வேட்கையினர் (Epicurians) சிலர் கண்டித்தாலும், அறநூல் வகையில் இன்பமே சிறந்த நலம் என்னும் இக் கொள்கையை (Hedenism) ஆதரித்தனர்.

மனித அறிவை ஆனமாவின் உண்மையான வெளிப்பாடாகக் கருதினால், தன்னுணர்வு என்பது, அறிவுபெற்று உணர்ச்சிகளையும் விருப்பங்களையும் அடக்கித் தன்னடக்கம், தியாக மனப்பான்மை ஆகிய வற்றைப் பெறுவதாகும் என நல்லதில் நம்பிக்கையற் றோரும் (Cynic), இன்ப துன்ப நடுநிலைக் கோட் பாட்டினரும் (Stoics) கூறியுள்ளனர். அரிசுடாட்டில்

எனனும் தத்துவஞானி 'இன்பமே சிறந்தது, இவ் இன்பம் நற்பண்புடன் வாழும் வாழ்க்கையால் ஏற்படுவது' என்றுரைத்தார்.

பிறருக்கு உதவி செய்வதையே சிறந்ததெனக் கருதுவோர் தனனுணர்வைச் சிறந்த நன்மை எனக் கருதமாட்டார்கள், பிறர் உணர்வுக்கு அடங்கிய தன்னுணர்வுச் செயலே நறசெயல் எனக் கருதுவர். இக் கருத்தே இந்தியத் தத்துவத்திலும் சர்வ முத்தி அல்லது எல்லோரும் வீடு பெறுதல் என்ற கொள்கைக்கு இடமளித்துள்ளது.

உபநிடதங்களின நோக்கம் முத்தி பெறுவதாகும். முக்தி என்பது அடையப்பெறும் ஒன்றனறு. ஆன்மாவின் நித்தியமான தனமையே முத்தி அல்லது தன்னுணர்வாகும். இதை அறிவதைத் தடுப்பது அஞ்ஞானம். அஞ்ஞானத்தை ஞானத்தால் நீக்கினால் இருப்பது தன்னுணர்வு.

ஒரு செயல் நால்வகையான பலன்களை அளிக்க வல்லது. தன்னுணர்வு அல்லது முத்தி இந் நால்வகைப் பலன்களைப் பெற்றதன்று. ஆன்மா அடையப்பட்ட ஒன்றன்று; உற்பத்தி செய்யப்பட்டதன்று; தூய்மை அடைந்ததன்று; மாற்றமடைந்ததன்று. தன்னுணர்வு என்பது, ஞானத்தால் அஞ்ஞானத்தை நீக்குவது என அத்துவைதம் கூறுகிறது.

விசிட்டாத்துவைதம் போன்ற கடவுட் கொள்கையில், தன்னுணர்வு ஞானத்தால் பெறப்பட்டு, ஆன்மா தன்னைக் கடவுளைச் சார்ந்ததாக அறிகினறது எனக் கூறப்படுகின்றது. இந்நிலை யடைந்த ஒரு சீவன், கடவுளின் தன்மைகளையறிந்து பத்தி வயப்பட்டு முத்தி நிலையடைகிறான். கடவுட் கொள்கையுடைய சமயங்களில், தன்னுணர்வு முத்தி நிலைக்குக் கீழ்ப் பட்டது.

நியாய, வைசேடிக சமயங்களில், ஆன்மாவைக் குணங்களற்றதாக, உணர்வற்றதாக அறிவதே தன்னுணர்வாகும். சாங்கிய, யோக மதங்களில், ஆன்மா (புருடன்), பிரகிருதியினின்றும் வேறுபட்டது; பிறப்பு, இறப்பற்றது; மாற்றமடையாதது; நிலையானது என்றறிவதே தன்னுணர்வாகும்.

பலன் விரும்பாக் கருமம், கரும-யோகம் ஆகியவற்றைச் செய்து மனத்தூய்மையடைநது, பத்தி யோகத்தால் ஒரு நோக்கம் பெற்றுப் பின், ஞான யோகத்தால் சீவன் தன்னுணர்வை யடைய இயலும் என்பது சங்கரரின் கூற்று. தன்னுணர்வு பெறறவரே சீவன் முக்தராவர். தன்னுணர்வு மட்டிலும் பெற்ற ஒரு சீவன் மறுபிறவி எடுக்கிறான் என விசிட்டாத்துவைதம் கூறுகிறது. ஜி.வி.ச.

**தன்னுறுதி இயல்பு** என்பது ஒருவர் மற்றவர்களுடைய உரிமைகளைப் பறிக்காமல் அவற்றிற்குரிய மரியாதை அளித்து, தம்முடைய உரிமைகளை அஞ்சாமல் நிலைநாட்டுவது ஆகும். தன்னுறுதி இயல்பு என்பது ஓர் ஆளுமைப் பணபாகும். இப் பண்பு நிறைந்தவர்களுக்கு வலுவான ஆளுமை இருப்பதாகச் சொல்லப்படுகிறது. இப் பண்பு குறைந்து காணப்படுபவர்களது ஆளுமை வலிமை குன்றியதாக இருக்கும். ஆனால் இத் தன்னுறுதி இயல்பைத் தகுந்த பயிற்சி மூலம் நன்கு வளர்க்கலாம். இதனால் ஒருவரது ஆளுமை வலிமையடையும்.

தன்னுறுதி இயலபு பயிற்சி முதன்முதலில் ஆண்ட்ரூ சால்டர் (Andrew Salter)என்பவரால் அறிமுகப்படுத்தப்பட்டு சோசப் உல்பே (Joseph Wolpe),அர்னால்ட் லாசரசு (Arnold Lazarus) முதலியோரால் பெரிதும் பயனபடுத்தப்பட்டுப் பரப்பப்பட்டது. இப் பயிற்சி மூன்று இலக்குகளைக் கொண்டது. அவை 1) தன்னுடைய உரிமைகளைப் பறறி நன்கு தெரிந்து கொளவது; 2) தன்னுறுதி, தன்னுறுதியின்மை, எதிர்ப்புத் தன்மை ஆகிய மூன்றையும யாவை என்று ஒன்றுக்கொன்று வேறுபடுத்தித் தெரிந்துகொள்வது; 3)சொல் திறம் மற்றும் அனைத்துத் திறனகளையும் வளர்க்கக் கற்றுக் கொள்வது ஆகும்.

தன்னுறுதி இயல்புப் பயிற்சியில பொதுவாகப் பயிற்சியாளர் எந்தச் சூழ்நிலைகளில பொருந்தி அமையாத துலங்கலகளை வெளிப்படுத்துகிறாரோ அந்த சூழ்நிலைகளைக் குறித்துக்கொள்ளல் வேணடும். பின்னர் அவரை அந்தச் சூழநிலைகளில் எங்ஙனம் நடக்கிறார் என்று படம் எடுத்து அல்லது ஒலிப்பதிவு செய்து அதைக் கூராய்வு செய்யவேண்டும்.

தன்னுறுதி இயல்பு பயிற்சியில் ஐந்துவித செய்முறைகள் கையாளப்படுகின்றன. அவை: 1) நேரடியான அல்லது மறைமுக மாதிரி மூலம் தன்னுறுதித் துலங்கல்களை வளர்த்துக்கொள்வது எப்படி எனறு கற்றுத் தருவது, 2) நடத்தை ஒத்திகை, பங்கு வகித்தல் மூலம் புதிய தன்னுறுதித் துலங்கல்களை வெளிக்கொணருதல், 3) இவ்வாறு தோன்றிய புதிய துலங்கல்களைத் தகுந்தவாறு எடுத்துச்சொல்லி, திருத்தி, செப்பனிடவும் வலுப்படுததவும் செய்தல். 4) தன்னுறுதி நடத்தையுடன் போட்டியிடும் பிறழ்வு எண்ணங்களை நல்லவிதமாக மாற்றியமைத்து தன்னுறுதி இயலபைப பேணிக் காக்கும் எணணங்களாக்குதல். 5) பயிற்சியாளரைப் பாதிக்கும் சூழ்நிலையிலேயே பயிற்சியாளரை அழைத்துச் சென்று தன்னுறுதி நடத்தையை வளர்க்கச்செய்தல்.

தன்னுறுதி இயல்பு பயிற்சி 1) உளவழி நரம்புத் தளர்ச்சியைக் கட்டுப்படுத்தவும் 2) திறனில் குறைவு

ஏற்படுமாயின் அதைத் தீர்த்துச் சீராக்கவும் ஆக இரு விதங்களில் பயன்படுகிறது. வ.தே.சா.

**துணை நூல்:**

Gambrill, E D., Behaviour Modification, Jossey-Bass Publishers, Sanfrancisco. 1975.

**தன்னேமாற்றம்** ஒரு தனிமனிதன் கவலையிலிருந்தும அச்சத்திலிருந்தும் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள பல தற்காப்பு முறைகளைக் கையாளுகின்றான். பெரும்பாலும் இத் தற்காப்புக் கருவிகள நனவிலி உளளத்தினால் இயக்கப்படுகின்றன என உளப்பகுப்பு வல்லுநரான சிக்மணட் பிராய்டு கருதினார். இத் தற்காப்புக் கருவிகள், எவ்வகையிலும் மனிதனைத் தாக்கவிருக்கும் இன்னலின உணமையான நிலையை மாற்றியமைபபதிலலை. ஆனால அவை அந்த இன்னலைப் பற்றி மனிதன் கொணடுளள நோக்கை மாற்றியமைக்கின்றன. இவ்வாறு மனிதன தன்னுடைய நோக்கை மாற்றியமைக்கும்போது ஓரளவிற்குத் தனனைத்தானே ஏமாற்றிக்கொளள நேரிடும். அதற்குத் தன்னேமாற்றம (Self Deception) என்று பெயர்.

புறத்தே இருக்கும் அபாயத்திலிருந்து தன்னைக் காப்பாற்றிக கொள்ளும் தற்காப்புக கருவிகளில ஒருவகையான தன்னேமாறறததில மனிதன் சில சமயங்களில் நடப்பவை உண்மையல்ல எனறு உண்மைநிலையை மறுப்பான். எடுத்துககாட்டாக ஒரு தாய் தன் குழந்தை சாவுபபடுக்கையில் இருககையில தன் குழந்தைக்கு ஏதும குறையில்லை என்று கூறுவது ஆகும். அத் தாயக்குக் குழந்தையின மோசமான உடல்நிலையைப் பறறியும், ஆயுள முடிவைப் பறறியும் மருத்துவர் கூறியிருந்தாலும் அத தாய் அதை ஏற்க மறுப்பாள. ஏனெனில் குழந்தை தனனைவிட்டுப் பிரிந்துவிடுமோ, அங்ஙனம் பிரிந்துவிட்டால் அப் பிரிவின் துயரம் தன்னை எங்ஙனம் ஆட்டிப் படைக்குமோ என்ற அச்சத்தினால மருத்துவரின சொற களை ஏற்காமல் தன் குழந்தைக்கு நோய் ஏதும இல்லையென்று பிடிவாதமாக நினைப்பாள.

தனனேமாற்றம் சில சமயஙகளில் உளப் போராட்டங்களால் ஏற்படுகிறது.உளப் போராட்டஙகளைச் சமாளிக்க, தான் எனற உணர்வு பற்பல தற்காப்புக் கருவிகளைப் பயனபடுத்துகினறது. அவற்றுள் தன்னேமாற்றததிற்கு முக்கியமான காரணமாக இருப்பவை நசுக்குதல், காரணங் கற்பித்தல். புறத தோற்றம் முதலியவை ஆகும்.

மனிதப் பற்றுக் கோட்பாடு உளவியல் வல்லுனரான காால் ரோசர்சின (Carl Rogers) கருத்துப்படி இருவகை உள்ளுயிாகள இருக்கின்றன. அவை: 1) உண்மையான உள்ளுயிர், 2) உயர்குறிக் கொண்ட கருத்தியலான உளளுயிர் என்பன. இவ விரு உளளுயிர்களும் ஒன்றுக்கொனறு முரணாக இருக்குமபோது அலலது உண்மையான உள்ளுயிர், இயற்பொருள உலகுடன முரணாக இருக்கும்போது மனிதனின் உள்ளம் அமைதியற்ற நிலையில இருக்கச செயயும். இந்த அமைதியற்ற நிலையிலிருநது மனிதன் தனனை ஒருசில வகைகளில விடுவித்துககொளள முயலுகிறான. அவற்றுள ஒன்றுதான தனனேமாறறம் ஆகும. உரோசாசின எணணப்படி மனிதன தனனுடைய உணமையான உள்ளுயிரின நிலையை உயர்குறிக் கொணட கருத்தியலான உள்ளுயிர் நிலைக்கு ஏறறிக் கொணடு உண்மையாக அவ்வாறு இலலாமல இருநதால் அவன தனனைத்தானே ஏமாற்றிககொள்கின்றான எனறு பொருள.

தன்னேமாற்றம் என்பது ஒரு மனிதன் தனனை மிக உயர்வாக நினைத்து அவவாறு நடக்காமல இருததலை மட்டும குறிககாது அதறகு மாறாக ஒருவன் தன்னுள இருக்கும நற்பணபுகளை அறியாமல தன்னைத்தானே குறைத்துக்கொணடு நடந்தாலும் தனனேமாற்றம் ஏறபடுகிறது எனலாம். தனனேமாற்றம மிக நீணட காலம் ஒருவனிடம காணப் பட்டால் அவனுககு நாளடைவில உளசசிக்கல ஏற படும என்பதில ஓர் ஐயமும இலலை. வ.தே.சா.

**தன்னைத்தானே வருத்தும் பிறழ்நிலை,** என்னும கருதுகோளுக்கு மூலகாரணமானவா இலியோபோலடு வான் சாசர் மசோசு (Leopold Von Sacher Masoch) எனனும் ஆசுத்திரிய நாட்டு நாவலாசிரியராவார். இவா கி.பி. 1885-இல் எழுதிய நாவலொன்றில சில கதைமாந்தர்களிடம் இத்தனமை காணப்பட்டது. அதாவது அவர்கள் தம்மீது துன்பத்தை ஏற்படுத்தும் பெண்களை விருமபினர். அவர்கள தம்மைத்தாமே தாழ்த்திக் கொணடு பெணகளின் காலடியில் கிடநது காமவேட்கைக் கொண்டனர். சரியாகச் சொலவதானால் தம் உடல்மீது ஏற்படுத்தப்படும் காயம், வலி மற்றும் தணடனை அனுபவித்தல் வழியாகப்பெறும காமத் தணிப்புதான தன்னைத்தானே வருத்தும் பிறழ்நிலை (Masochism) எனப்படுகிறது. இக்காலத்தில இக்கருதுகோளுக்குப பல்வேறு பொருள்கள் இருப்பினும் அது பொதுவான துன்பததைக் குறிக்கின்றது.

சாதாரணமாகத் தன்னைத்தானே வருததும் பிறழ்நிலையினைப பிறரைத் துனபுறுத்தும் இயல

புடன் இணைத்துப் பிறரையும் தன்னையும வருத்தும் பிறழ்நிலை என்று சொலலப்படுகினறது.

பாலுணாவு பற்றி எதிர்மறை மனப்பாஙகு கொண்டுள்ள ஆணகளும், பாலுணர்வில பினதங்கிய உணர்வுள்ளோரும் இத்தகைய பிறழநிலையைப் பெற்றிருக்கின்றனர். தமமீது முழுக் கட்டுப்பாடறற மனச் சிதைவு நோயாளரும், மன நோயாளரும் இதற்கு அடிமையாகின்றனர்.

உடலை அலலது அங்கங்களை இறுகக் கடடுதல், காலால் மிதித்தல, மெனமையாகக் குரல்வளையை நசுக்குதல், அடித்தல, மிலாரினால விளாசுதல், ஊசிகளைக கொணடு குத்துதல போனற பல்வேறுவகைத துன்ப உணாவுகளால் உடலை வருத்திக் கற்பனையாகக் காமஇன்பம் பெறுவது தன்னைத்தானே வருத்தும் பிறழ்நிலைச் செயல்களுள அடங்கும். ஈசுட்டு என்பார் இத்தகைய நடததையுடைய பெண்ணைப் பற்றிக் கூறியுள்ளார். ஓா இளம்பெண தனது கை, கால், மாாபகஙகள போனற இடங்களில் அடிக்கடி வெட்டி அஙகெல்லாம் தோலுக்கடியில் ஊசிகளைச் செருகி வைப்பாளாம். இக்காயஙகளி லிருந்து கொட்டும குருதியைப் பார்க்கும் போதும் வலியை உணரும்போதும் அவளுக்கு உணமையான பாலுணர்வு இனப அனுபவம் ஏற்பட்டு ஒருவித விடுதலை உணர்வு கிடைத்திருக்கிறது. இத்தகைய தன்னைத் தானே வருத்தும பிறழ்நிலை ஆணகளைக் காட்டிலும் பெண்களிடம் மிகுந்து காணப்படுவதாக ஆய்வுகள் கூறுகின்றன. துன்பத்தில் பாலுணாவு தொடர்பான ஒரு கீழ்ப்படியுநதனமை பெணகளின பண்பாட்டுக் குணமாக இருப்பது இதற்குக் காரணமாக இருக்கலாம்.

தன்னைத்தானே வருத்தும் பிறழநிலைக்கு அடிப்படைக் காரணஙகள் சில உளளன. அவை பினவருவன:

1) பாலுணர்விற்காகத் தன்னைத்தானே வருத்திக்கொளளுதல், ஒருவர் தன் வாழவைப்பற்றிக் கொண்டுள்ள மனப்பாங்கின காரணமாகத் தன்னைத் தானே வருத்திக்கொளளும் பிறழ்நிலையின ஒரு வெளிப்பாடாகும். இத்தகையோர் வாழ்வில் பிடிப்பினைத் தகர்த்திடும் துன்பக் களியாட்டங்கள், மற்றும தன் இழிவுச் செயல்களில் மூழ்கியமையின காரணமாக வாழ்வில் பெரும ஏமாற்றங்களைச் சந்திததிருக் கக்கூடும். பாலுணர்வு பற்றி குற்ற மனப்பானமை, ஏமாற்றம், அவமானம் ஆகிய உணர்வுகளைக் கொண்டுள்ளோருக்குத் தன்னைத்தானே வருத்தும் பிறழ்நிலை ஏற்படும். இத்தகைய நேரங்களில் இவர்கள் துன்பத்தை அனுபவித்து அதன்வழியாகப் பாலுணர்வு இன்பத்தினைத் தேடிக்கொள்கின்றனர். அதாவது குற்ற உணர்வுடைய நடத்தைகக்கு, அது நிகழுமுன்னரே அதற்கான விலையைக் கொடுத்துவிடுகின்றனர். இங்கே அவர் கொடுமையை அனுபவிக்க விரும்புகிறார் என்பதன்று ஆனால் பாலுணர்வு இன்பததிற்கான வழியைத் திறந்திடுகின்றார் என்பதே கருத்தாகும்

2) இளமையில் துன்ப அனுபவத்தினைத் தரும நிகழ்ச்சிகளின் பயனாக ஏற்படும் தன்னைத்தானே வருத்தும் பிறழ்நிலை பாலுணர்வுக் கிளர்ச்சி மற்றும் இன்பவுணர்வுடன் தொடர்புபடுத்தப்படுகினறது. சான்றாக, முதலாவது குழந்தைப் பிறப்பினபோது தமக்கு ஏற்பட்ட காட்டுத்தனமான வலியையும் துனபத்தையும் தாய் தம் மகளிடம் மிகுதியாக் வருணிப்பது அவ் இளம்பெண்ணின் மனத்தில் பாலுணர்வு என்றாலே வலி, துனபம் எனறு பதிநதுவிடுகினறது. அடுத்து அப்பெண்ணிற்கு ஏற்படும் சுயஇன்ப அனுபவத்தின் வலி, தாய் சொன்ன அனுபவததை மேலும் வலிமையூட்டுகின்றது.

3. தன்னைத்தானே வருத்தும் பிறழ்நிலை பாலுணர்வு இனபத்தினைப் பெருக்கும் செயலாகின்றது. பெண்களிடம் காணப்படும் தன்னைத்தானே வருத்தும் காமநடத்தை பாலுணர்வு செய்கைகளின் உளக் கிளர்ச்சித் தூண்டலாக அமைந்து, பாலுணர்வு இன்பத்தின் உச்சக்கட்ட நிறைவைப் பெற உதவுகிறது. இத்தகைய உணர்வினைத்தான் 'ஆணின கைகளுக்குள் கசங்குதல்' அல்லது 'முத்த மழையினால் மூச்சடைத்துப் போதல்' என்னும் விருப்பச் சொற்றொடர்கள் குறிக்கின்றன. தன்னைத்தானே வருத்தும் காமச் செயல்கள் ஒருபோதும் இரணத்தை உண்டு பண்ணுவதில்லை. மாறாக, தடுத்திடப்பட்ட அல்லது பிறழ்வுச் செயல்களின் வழியாகக் கிளர்ச்சியினைத தூண்டிவிடும் தூண்டல்களாகித் துன்பமும் தவறான பயன்பாடும் ஓர் இயற்கை நாடகமாகின்றது. இங்கும் இளமைக்கால துனப அனுபவங்கள ஒரு காரணமாக அமைகின்றன.

4. பிறரைத் துன்புறுத்தும் உளக்கிடக்கை தன்னைத்தானே வருத்தும் பிறழ்நிலையின் எதிர்மறை மறிவினையாக உருவாகின்றது. இவ்வகைப் பிறழ்நிலை உளப்பகுப்பாய்வுக் கொள்கையினரால பெரிதும் வலியுறுத்தப்படுகிறது நீதிநெறிக் கொள்கைகளைக் கற்பது பிறரைத் துன்புறுத்தும் தன்மையினைக் கீழே அழுக்கிவிடுவதோடு தன்னைத்தானே வருத்திக்கொள்ளும் பிறழ்நிலை இயல்புடைய சமய மனப்பாங்கு வளர்ந்திட உதவுகின்றது. இந்தச் சமய உணர்வு, அழுக்கப்பட்ட பிறரை வருத்தும் தன்மை

யினைக் கட்டுக்குள் வைத்திடும் வண்ணம் விரிவாக வளருகின்றது. இவ்விதம், ஒருவன் தான் துன்புறுத் தப்படும் நிலைக்காக ஏங்கி நிற்கின்றான். ஏனெனில் இந்த உணர்வுகள்தாம் பாலுணர்வு இன்ப நடத் தைக்கு அவனை இட்டுச்செல்கின்றன. இருப்பினும் எப்போதாவது அமுக்கி வைக்கப்பட்ட உணர்வுகள் மேலெழுந்து தன்னைத்தானே வருத்தும் பிறழ்நிலை யாளன் பிறரை வருத்தும் இயல்பினனாக மாறி அவ னின் பாலுணர்வுக் கூட்டாளியைக் கொலையோ உடலுறுப்புகளைச் சிதைத்திடவோ செய்கின்றான.

கி.இரா.

**துணை நூல்கள்:**

Coleman, J.C., Abnormal Psychology and Modern Life (3rd Indian Edition), D P. Taraporewala Sons & Co. Pvt. Ltd, Bombay, 1972

Shanmugam T.E., Abnormal Psychology, Tata Mc. Graw-Hill Publishing Co-Pvt. Ltd, NewDelhi, 1981.

**தன்னைத் தானே வளர்த்துக் கொள்ளும் நிலை:** பொருளாதார முன்னேற்றத்திற்குப் பல காரணங்களும், இயல்புகளும் உண்டு. முன்னேற் றம் நிகழ்ந்து கொண்டிருக்கும்போது ஒன்றோ டொன்று தொடர்புடைய பல காரணிகளின் செய லைக் காணலாம். பொருளாதார, பொருளாதாரச் சார்பற்ற காரணிகள் பொருளாதார முன்னேற்றத் தின் போக்கை நிருணயிப்பதில் மிகச் சிறப்பான இடம் பெறுகின்றன. பொருளாதார, சமுதாய நிலையக் (Institutional) காரணிகள் பொருளாதார வளர்ச்சி யில் ஆற்றும் பங்கின் அடிப்படையில் பொருளாதார வளர்ச்சி நிலைகளை அறிஞர் பெருமக்கள் பலர் விளக்கியுள்ளனர்.

பொருளாதார வளர்ச்சி நிலைகளை வேட்டைப் பருவம் (Hunting stage), ஆயர் பாடிப் பருவம் (Pastoral stage), வேளாணமைப் பருவம் (Agricultural stage), தொழிற் பருவம் (Industrial Stage) எனப் பல நிலைகளில் ஆடம் சுமித்து (Adam Smith) விளக்கு கிறார். அடிமை நிலை, ஆயர்பாடிப் பருவம், வேளாணமை நிலை, பொறிசெய் நிலை, வாணிக நிலை என்று பிரடரிக் இரிசித்து (Frederick Ristl) விளக்குகிறார்; பண்டமாற்றுப் பொருளாதாரம், பணப் பொருளாதாரம், கடன் பொருளாதாரம் என்று கில்டி பிராண்டு (Hilde brand) வகைப்படுத்தி விளக்குகிறார்; நிலப்பண்ணை முறை (Feudalism), முதலாளித்துவம் (Capitalism), சமதரும பொருளா தாரம் (Socialism), பொது உடைமைப் பொருளா தாரம் (Communism) என்று காரல் மார்க்சு (Karl Marx) வகைப்படுத்தி விளக்குகிறார். இந்த அடிப்படை யில் ஐக்கிய அமெரிக்க நாட்டுப் பேராசிரியரான உரோசுதோ (W.W. Rostow) பொருளாதார வளர்ச்சி நிலைகளை 1. பழைமை நிலை (Traditional Stage), 2. எழு நிலைக்கு முன்னோடி நிலை (Stage of Preconditions to take off stage), 3. எழு நிலை (Take-off stage), 4. முதிர்ச்சியை நோக்கிச் செல் லும்நிலை (Stage of Divine to maturity) அல்லது தன்னைத் தானேவளர்த்துக் கொள்ளும் நிலை (Stage of self-sustained growth), 5. முதிர்ச்சி நிலை அல்லது பேரளவு நுகர்வுநிலை (High mass consumption stage) என விளக்கியுள்ளார்.

ஏழ்மையும், அறியாமையும் நாடு முழுவதிலும் பல்கிப் பெருகி நின்று, செல்வர்கள் விருப்பபபடி செயல்களும் நிகழ்ந்து மக்கள் பெருமளவில் பெருகியும் மடிந்தும் உள்ள பழைமை நிலையிலிருந்து மாறுபட்டு வளர்ச்சிக்குத் தேவையான பக்குவத்தை எழு நிலை யின் முன்னோடி நிலையில் பொருளாதாரம் பெறு கிறது. போக்குவரத்துத் துறையில் சமுதாயக் கட்ட மைப்பு, மூலதனத்திரட்சி, பெருகிவரும் மக்களின் தொழில்களுக்கு ஈடு செய்யும் அளவுக்கு வேளாணமை யில் உற்பத்திப் பெருககம், மூலதனப் பெருக்கம், இறக்குமதி அதிகரிப்பு போன்ற பல மாற்றங்கள் விரைவாக ஏறபடுகின்றன. இவற்றின விளைவாகப் பொருளாதாரம் உந்து நிலை, கீழிலிருந்து மேல் எம்பிச் செலலும் நிலை, எழு நிலை (Take-Off Stage) என்று சொல்லப்படும் மிகவும் இன்றியமையாத ஒரு பொருளாதார நிலையை அடைகிறது. எழு நிலை யில முதலீட்டு விகிதம் கூடுகிறது; முதனமைத் துறை கள் அல்லது முன்னோடித் துறைகள் (leading sectors) விரைவாக வளர்ச்சி பெற்றுப் பிற்சேர்க்கை வளர்ச்சித் துறைகள (supplementary growth sectors), பெறப் பட்ட வளர்ச்சித் துறைகள (derived growth sectors) ஆகியவற்றின் வளர்ச்சிக்குத் துணை நிற்கின்றன; அரசியல், சமுதாய நிலைக் காரணிகளில தீவிரமான மாற்றங்கள நிகழுகின்றன. பாதையில் ஓடிக் கொண் டிருக்கும் ஒரு விமானம் பேரளவு உந்து ஆற்றலைத் தோற்றுவித்துக் கொண்டு தரையிலிருந்து மேலெழும் பிச் செல்வதைப் போன்று பொருளாதாரம் வறுமை என்னும் நச்சுக் கழலை உடைத்துக் கொணடு பொரு ளாதார முன்னேற்றப் பாதையில்செல்லத் தொடஙகு கிறது. இந்நிலையை அடைந்த பின் பொருளாதாரம் தன்னைத் தானே வளர்த்துக் கொள்ளும் நிலையை அடைகிறது என்பது உரோசுசோ (W.W.Rostow) என்பவரின் கருத்து.

**தன்னைத் தானே வளர்த்துக் கொள்ளும் நிலை:** நாட்டின் மூலவளங்கள் யாவும் மிகச் சிறப்பான முறையில் புதுமையான தொழில் நுட்ப அடிப்படையில் பயன்படுத்தப்படும் நிலை இது. எழு நிலையின் முடிவில் பொருளாதாரம் அடையும் இந்நிலையில் தன்னைத் தானே வளர்த்துக் கொள்ளும் நிலையைப் பொருளாதாரம் பெறுகிறது; வளர்சசிக்கான உள்ளாற்றல்கள் எல்லாம் எவ்விதச் சிரமமும் இல்லாமல் தோன்றிச் செயற்படுகின்றன; முதலீட்டு விகிதம் நாட்டு வருமானத்தில் 10 முதல் 20 விழுக்காடு அளவிற்கு அதிகரிக்கிறது; மக்கட் பெருக்க விளைவையும மிஞ்சியதாகப் பண்டங்கள், பணிகள ஆகியவற்றின் உற்பத்திப் பெருக்கம் அமைகிறது; உழைப்பாளர்களின் உற்பத்தித் திறன் பேரளவில் பெருகுகிறது; வேளாண்மைத் துறையைக் காட்டிலும் தொழில் துறை சிறப்பான இடத்தைப் பெறுகிறது; தொழில் துறையில் ஈடுபடும் மக்களின் விழுக்காட்டளவு மிக விரைவாக அதிகரிக்கிறது; மூலதனக்காரர்களைக் காட்டிலும், தொழில் முனைவோரைக் காட்டிலும் மேலாண்மை வகுப்பினர் (Managerial class) மிகுதியான சிறப்பிடத்தைப் பெறுகிறார்கள். தன்னைத் தானே வளர்த்துக் கொள்ளும் நிலையின் கால அளவு ஏறத்தாழ அறுபது ஆணடுகளாக இருக்கும் என்பது உரோசுதோ அவர்களின் கருத்து.

இந்நிலையின் இறுதிக் கட்டத்தில மூன்று விதமான சிறப்பான மாற்றங்கள் நிகழும் என்று உரோசுதோ (Rostow) குறிப்பிடுகிறார். முதலாவதாக, உழைக்கும் இனத்தின் திறனில்மாறுதல் ஏற்படும். திறம்பட்ட உழைப்பாளர்களின் எணணிக்கை பெருகுவதோடு, தொழிலாளர்களின் நாட்டங்கள், பழக்க வழக்கங்கள், நுகர்வு அளவுகள், நுகர்வு அமைப்புகள் ஆகிய எல்லாவற்றிலும் மாற்றங்கள் நிகழுகினறன. தொழிலாளர்களும் ஏனையோரும் பேரளவில நகர்ப் பகுதிகளுக்கு இடம் பெயருகின்றனர். இரணடாவதாக, தலைமையின் பண்புகளில் மாற்றங்கள் நிகழும். பரம்பரை பரம்பரையாக வரும் முதலாளிகளிடமிருந்து திறமையும் பயிற்சியும் பெற்ற நிருவாகிகள் தொழில்களின் தலைமைப் பொறுப்பேற்கிறார்கள. நிருவாகத்தில் தொழிலாளர்களும் பங்கேற்கும் நிலை தோன்றுகிறது. மூனறாவதாக, சமுதாயத்தின் எணணங்களில் மாற்றங்கள் நிகழ்கின்றன. தொழில் வளர்ச்சியின் மீது மக்களுக்கு இருந்த மோகம் குறைந்து வேறு ஏதாவது புதுமைகளைச் செய்ய வேண்டும் என்ற சிந்தனை ஓட்டம் சமுதாயத்தில தோன்றுகின்றது.

தன்னைத் தானே வளர்த்துக் கொள்ளும் நிலையின் இறுதிக் கட்டத்தில் செல்வச் செழிப்பு மிகுந்த பேரளவு நுகர்வு நிலையைப் பொருளாதாரம அடைகிறது. தொழிலாளர்களின் உற்பத்தித் திறன் பல்கிப் பெருகி, மக்கள் புதுமை வசதி வாயப்புகளுடன நகாப் பகுதிகளில் ஏராளமான அளவில் பணடங்களையும் பணிகளையும் நுகர்ந்து நல வாழ்வு வாழ்வதை விருமபுகின்றனர். என்.எஸ்.பா.

***தனி அரசு முறை:*** அரசின் அமைப்பு அடிப்படையில் தனி அரசு முறை (Unitory government), கூட்டரசு முறை (Federal government) என இரு வகைப்படுத்துவர். நாடு தழுவிய அளவிலான எலலா விதமான அதிகாரங்களையும் ஒரே அரசு பெற்றிருக்கும் நிலையைத் தனி அரசு முறை என்றும், பல அரசுகள் தங்களின் தனித் தன்மையை இழந்து விடாமல தம் பொது நலன் கருதி தங்களுககுள் ஒரு மைய அமைப்பை உருவாக்கி அதன் மூலம் எலலா அரசுகளும் ஏற்றுக் கொள்ளத் தக்க பொதுவான விதிமுறைகளை ஏற்படுத்திச் செயற்படும ஒரு நிலையைக் கூட்டரசு முறை என்றும் குறிப்பிடுவர்.

தனி அரசு அமைப்பில் நாடு முழுவதிற்கும் ஓர் அரசு செயற்படும் நாடு முழுவதிற்குமான எல்லா விதமான அதிகாரங்களையும் பெற்றுள்ளதாக இவ்வரசு செயற்படும்; இந்த அரசு அமைப்பில் உளள சட்ட மன்றமும் (Legislature), நிருவாகத்துறையும (Executive), நீதித் துறையும் (Judiciary) தலைமை நிலையை வகித்து வருபவைகளாக இருக்கும்.நிருவாக வசதிக்காக நாட்டைப் பல மாநிலங்களாகப் பிரிக்க ஒவ்வொரு மாநிலத்திலும் ஓர் அரசு அமைப்பு இருக்கலாம்; அல்லது நாட்டைப் பல நிலப் பகுதிகளாகப் பிரித்து அவற்றை ஆளும் நிருவாகக் குழுக்கள இருககலாம். ஆனால் இத்தகைய மாநில அரசுகளுடன் அல்லது நிருவாகக் குழுக்களுடன் மைய அரசு அதிகாரங்களைப் பகிாந்து கொள்வதில்லை. இவ்வமைப்புகள் யாவும் மைய அரசின் கட்டுப்பாட்டிறகுட்பட்ட துணை அமைப்புகளாகவே செயற்படும் நிலை இருக்கும்.நாட்டுக்குத தேவையான எல்லாவகையான சட்டஙகளையும் மைய அரசே அமைத்துச் செயற்படுகிறது.

நாட்டின் நிலப்பரப்பு குறுகியதாக இருந்தால் தனி அரசு முறை மிகவும் பொருத்தமானதாக இருக்கும் என்று சிலர் குறிப்பிடுகிறாாகள.

ஒற்றுமையும் உறுதிப்பாடும் இம் முறையில் காணப்படும். மக்கள் ஒருசில அலலது பல அரசுகளுக்கு நன்றியுடன் இருக்க முயலும்போது தோன்றும் சிக்கல்கள் இவ்வமைப்பில் இல்லை. ஒரே அரசாக இருப்பதால் மக்கள் அவ்வரசின் மீது எளிதில் பற்று

டையவர்களாக இருக்க முடியும். கொள்கைகளிலும் கோட்பாடுகளிலும் அரசு மாற்றங்களைப் புகுதத விரும்பினால் ஒரே அரசாக இருககின்ற காரணத்தால அது எளிதாக இயலும். நிருவாக முடிவுகளை விரைவாக எடுகக முடிவதால் நிருவாகம சீராகவும் எளிதாகவும் சிக்கலின்றியும் செயற்பட வாய்ப்புகள் உணடு. யாரும் எளிதில் புரிந்து கொள்ளத் தக்க இவ் அரசு முறையில அரசின் அங்கங்கள் பல இலலாதிருப்பதால் நிருவாகச் செலவுகள இம்முறையில குறைவாக இருக்கும் வாய்ப்புகளும் உண்டு.

தனி அரசு அமைப்பில் பல நன்மைகள் இருந்தாலும் பல குறைகளும் உண்டு. தலைமையில் உளளவர்கள் பதவிக்கும் அதிகாரத்திற்கும் ஆசைப்பட்டு விடடால் நாடு முழுவதிலும் பல குறைகள தோன்றி விரும்பத் தகாத நிலைகள தோனறி விடலாம். மேலும் நாட்டின பலபகுதிகளிலும் வளங்களும்,தேவைகளும், மக்களின பண்பாடுகளும், இவை போனற பலவும் ஒரே மாதிரியாக இருக்கும வாய்ப்புகள் மிகவும் குறைவு. உளளூர்த் தேவைகள இம்முறையில் நிறைவேற்றப்படாமல போகலாம. உளளூரில அலலது அந்தநத நிலப் பகுதிகளில் உள்ள மக்களின திறமைகளும் முழு அளவில பயனபடுத்தப படாமல போவதற்கும் இம்முறையில் வாய்ப்பு உணடு. அரசு இருக்கும் இடத்தில ஏதாவது ஒரு கலகம அலலது போர் தோனறினால நாட்டின முழு நிருவாகமும் கேடுறும் வாய்ப்பும் இம முறையில் மிகுதியும் உண்டு. இந்தியா போன்ற பெரிய நாடுகளுககுத் தனி அரசு முறை பொருந்தாது எனக் குறிப்பிடுவா.

என.எஸ.பா.

**தனிஆள் வருமான வரி**: ஒருவர் வருமானததைப் பெறுவதற்கு அரசும் அதன பஙகை ஆறறியிருககிறது என்பது உட்கருதது. அரசு ஆககித தநதிருககும் சமுதாயப் பொருளாதாரக் கட்டமைபபுககளினாலும் (Social and economic infrastructure) தனி ஆளகள அவரவர்கள் தகுதி, திறமை, வசதி,வாய்ப்புக ளுககேற்ப வருமானத்தைப் பெறுகிறாாகள. எனவே, வருமானத்திற்கு வரி விதிக்கப் பெறுவதும், வருமானம கட்டக் கூட வளர் விகிதத்தில(At progressive Rates)வரிவிதிக்கப் பெறுவதும் முறையே எனறு குறிப்பிடப்படுகிறது.

வருமான வரியில் தனிஆள வருமான வரி(Personal income tax), நிறுவனஙகளின வருமான வரி (Corporate tax), வேளாணமை வருமான வரி (Agricultural income tax) எனப் பலவகையுணடு.

இந்திய வரலாற்றில் திருப்பு முனையாக அமைந்த சிப்பாய்க் கலகம் என்ற மாபெரும் வரலாற்று நிகழ்ச்சியின் விளைவாக அரசுககு ஏற்பட்ட நிதி நெருக்கடியைத் தவிாக்க கி பி. 1860-இல் சர்சேம்சு வில்சன (Sir James Wilson)எனபவரால் முதன் முதலில் வருமான வரி விதிக்கப் பெற்றது. அதற்குப்பின பல கால கட்டங்களில் இவ்வரியை மாற்றியமைத்து பிரிட்டிசு ஆட்சியினர் வரி விதிதத னா. இநதிய விடுதலைக்குப் பினமைய அரசால விதிக்கப்படும் நேர்முக வரிகளுள் குறிககததக்க வரியாக வருமான வரி கருதப்படுகிறது இவ வரியை மைய அரசு விதித்து வசூலித்து நிகர வசூல தொகையை நிதிக் குழுவின் பரிந்துரைகளின அடிப்படையில மைய, மாநில அரசுகள் பகிர்நது பெறறுக கொள்கின்றன.

**இருவகைகள்**: தனிஆள் வருமான வரி இந்தியாவில மட்டுமல்லாமல் உலகின பல நாடுகளிலும் மிகச் சிறப்பானதொரு வரியாக விளஙகுகிறது. தனிஆளகள தாஙகள பெறும வருமானததிலிருநது செலுததும் வரியே தனிஆள வருமான வரி. தனிஆள வருமான வரியை ஒவ்வொரு தனிஆளும் தனிஆள (Idividual) என்ற அடிப்படையிலும், இந்துக கூட்டுக குடும்பததின தலைவர் (Kartha of Hindu Undivided family) என்ற அடிப்படையிலும் செலுத்துவதற்கு வாய்ப்புகள உண்டு.

தனிஆள் வருமான வரியை 1) தனிஆள்கள், 2) பிரிக்கப்படாத இநது வளர்ச்சிக் கூட்டுக குடும்பஙகள, 3) தனிஆளகளின் சஙகங்கள் (Associations of persons) 4) பதிவு செயயப்படாத நிறுவனஙகள (Unregistered firms), 5) செயற்கையான நியாய மேலாண்மை பெறற தனிஆள்கள (Artificial-Judicial persons) மீது அரசு விதிக்கிறது. சமய அறக் கட்டளைகள் (Religious Trusts), கொடை அறக் கட்டளைகள (Charitable trusts) ஆகியவைகளுக்கு இவ வரியிலிருநது விலக்குத் தரப்பட்டிருக்கிறது.

**விலக்குகள்**: வருமான வரி விதிக்கும்போது பல வகையானவிலக்குகள் அலலது தள்ளுபடிகள் தரப்படுகினறன. நீணட காலச் சேமிப்புகளை மேற்கொள்ள மக்களைத் தூணடுவதே இத் தளளுபடிகளைத் தருவதன் நோக்கம. எடுத்துக்காட்டாக, ஆயுள் காப்பீட்டுப் பிரீமியம் (Life Insurance Premium), சேம நலச் சேமிப்புக்குச் செலுத்தும தொகை (Provident fund), திரள் கால வைப்புக்களுக்காகச் செலுத்தும் தொகை (Cumulative deposits) போன்ற நீண்டகாலச் சேமிப்புகளுக்குத் தள்ளுபடிச் சலுகைகள் தரப்படுகின்றன. இவ்வாறு கொடுக்கப்படும் தள்ளுபடித் தொகைக்கும் ஓர் எல்லை உண்டு. அதாவது, மேற் குறிப்பிட்ட இனங்களிலான நீணட காலச் சேமிப்புகளில் முதல் ரூ. 6000/-க்கு 100 விழுக்காடுவரி விலக்கு

உண்டு. நீண்டகாலச் சேமிப்பில் முதல் ரூ. 6000/-க்கு மிகுதியான தொகைகளுக்கு வரி விலக்குத் தரப்படும் விகிதமும் தொகையும் பலவகையாக மாறுபடுகின்றன.

வங்கிகளில் வைத்திருக்கும் வைப்புகள் (Deposits with banks), நிறுமங்களின் சரி ஒப்புரவு மூலதனங்கள் (Equity capital), ஏற்றுக் கொள்ளப்பட்ட பங்குகளின் மீதான முதலீடு (Investment in Equity in companies), யூனிட்டுகளின் (Units) மீதான முதலீடுகள் போன்றவற்றினால் பெறும் வருமானத்தில் ஒரு குறிப்பிட்ட அளவு வரை வரித் தள்ளுபடி தரப்படுகிறது. இத்தகைய முதலீடுகளின் அளவை மிகுதியாக்குவதே இச் செயலின் அடிப்படை நோக்கம். இவை தவிர வரி விதிக்கத் தக்க வருமானத்தைக் கணக்கிடும்போது, மூலதன ஆதாயங்களையும் கணக்கிடுவது கிடையாது.

**வருமானத்தை மதிப்பிடல்:** வருமானத்தை மொத்த, நிகர வருமானமென இருவகைப்படுத்தலாம். நிகர வருமானத்தின் மீதே வருமான வரி விதிக்கப் பெறுகிறது. மாதச் சம்பளம் பெறுபவர்களின் மொத்த வருமானத்தில் 'நிலையான கழிவு'த் (Standard deduction) தொகையையும், அவர்கள் பல வழிகளில் சேமித்திருக்கும் தொகையின் அடிப்படையில் பல்வேறு விகிதங்களில் கழித்துக் கொண்டும் நிகர வருமானத்தை மதிப்பிடுவர். ஒருசில நாடுகளில் வரி செலுத்துவோருக்கும், அவரது குடும்ப உறுப்பினர்களுக்கும் ஆகும் மருத்துவச் செலவுகளையும் மொத்த வருமானத்திலிருந்து கழித்துக் கொண்டு நிகர வருமானத்தைக் கணக்கிடுகின்றனர். ஒருசில நாடுகளில் உழைத்துப் பெறும் வருவாய் (Earned income), உழைக்காமல் பெறும் வருவாய் (Unearned income) ஆகியவற்றுகிடையே உள்ள வேறுபாடுகளையும் நிகர வருவாயைக் கணக்கிடும்போது கருத்தில் கொள்கின்றனர்.

**அடுக்கு முறை:** வருமான வரி விதிப்பில் அடுக்குமுறை (Slab system) கையாளப்படுகிறது. குறிப்பிட்ட அளவு வருமானத்திற்கு வரி விலக்கு உண்டு. அதற்கு மேல் உள்ள வருமானத்தைப் பல அடுக்குகளாக வகைப்படுத்தி வளர் விகிதத்தில் வரி விதிக்கப்படுகிறது. எடுத்துக்காட்டாக, ஒருவரின் நிகர வருமானம் ரூ. 50,000/- என்று கருதிக் கொண்டால் கற்பனையான ஓர் அடுக்குமுறையைக் கீழே உள்ளதைப் போன்று அமைக்கலாம்.

ரூ. 1/- முதல் ரூ. 10,000 வரை- வருமான வரி இல்லை. ரூ. 10,000/- முதல் ரூ.15,000 வரை (ரூ.5,000/-க்கு)5% வரி. ரூ. 15,000/-முதல் ரூ. 25,000 வரை (ரூ 10,000/-க்கு) 10% வரி. ரூ. 25,000/-முதல் ரூ. 50,000 வரை (ரூ. 25,000/-க்கு) 15% வரி. இம்முறையில் ரூ. 50,000/- நிகர வருமானம் பெறுபவர் செலுத்தும் வருமான வரியின் அளவு ரூ. 4,250/- (0 + 250 + 1000 + 3000).

**மிகைவரி (Surtax):** வருமான வரி செலுத்துபவர்களை வரிக்கு வரி (tax on tax) எனப்படும் வரியையும் செலுத்தும்படி அரசு குறிப்பிடலாம். மிகை வரி விகிதம் 10% என்றிருக்குமானால் ரூ. 4250/- + ரூ. 425/- ஆக மொத்த வரி அமைகிறது. இவ் அடுக்கு முறை வருமான வரிவிதிப்பு அரசின் நிதி, பொருளாதாரக் கொள்கைகளுக்கு ஏற்ப மாறுவதும் உண்டு.

**வருமானம் பெறும் காலம்:** வருமான வரி விதிப்பிற்குரிய வருமானத்தைக் கணக்கிடும் போது, ஓராண்டுக் காலம் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது. ஏப்ரல் திங்கள் முதல் நாள் தொடங்கி மார்ச்சுத் திங்கள் 31 ஆம் நாள் முடியும் நிதி ஆண்டுக் கால அளவை அடிப்படையாகக் கொண்டு வரி விதிக்கத் தக்க வருமானம் மதிப்பிடப்படுகிறது. ஆனால் இந்தியாவில் பல வகையான சமூகத்தவர்களும், நம்பிக்கையுள்ளவர்களும் இருப்பதால் வரி விதிக்கத் தக்க வருமானத்தை மதிப்பிடுவதற்கான ஓராண்டுக் காலத்தின் தொடக்கத்தையும், முடிவையும் வருமானம் பெறுபவர்களின் வசதிக்கேற்ப மாற்றியமைத்துக் கொள்ள வாய்ப்புகளும் உண்டு.

**வரியைச் செலுத்தும் முறை:** வருமான வரியைச் செலுத்தப் பலமுறைகள் உண்டு. ஓராண்டுக்கு ஒரு முறையோ, மாத வருமானக்காரர்கள் மாதந் தோறுமோ, ஒருசில தவணைகளிலோ வருமான வரியைச் செலுத்தலாம். ஆனால், வருமானத்தைக் காட்டும் விண்ணப்பத்தை (Return of income) அதற்குரிய காலத்தில் அதிகாரிகளிடம் கொடுக்கும் முனனர் வருமான வரியை முழுமையாகச் செலுத்தியிருக்க வேண்டும். எவ்வளவு வரி செலுத்த வேண்டுமோ அதற்கு மிகுதியான அளவில் வரியைச் செலுத்தியிருந்தால் வருமானத்தைக் காட்டும் விண்ணப்பத்தைப் பரிசீலிக்கும் அதிகாரிகள், கூடுதலாகச் செலுத்தப்பட்ட தொகையைச் செலுத்தியவருக்குத் திருப்பிச் செலுத்துவர்.

**முன் வரி:** குறிப்பிட்ட அளவுக்கு மிக்க வருமானமுடையவர்கள் முந்திய ஆண்டு அல்லது ஆண்டுகள் வருமானத்தின் அடிப்படையில் முன் வரியைச் (Advance tax) செலுத்திவிட வேண்டும் என்ற முறையும் இந்தியாவில் கையாளப் பெறுகிறது.

**வருமான வரியைச் செலுத்தும் முறை:** தோற்றுவாய்ப் பிடித்தம், வருமானம் பெறும்போதே செலுத்

தும் திட்டம், தற்காலிக மதிப்பீட்டின அடிப்படையில் செலுத்தும் திட்டம், இறுதியான மதிப்பீட்டின் அடிப் படையில் செலுத்துதல் எனப் பல வழிகளில வருமான வரியைச் செலுத்தலாம். வருமானததைப் பெறும் போதே அதற்குரிய வரியைச் செலுத்துவதையும், மாத ஊதியம் பெறுபவர்களுககு அவ்வூதியத்தைக் கொடுப்பவர்கள, கொடுககுமபோதே அதற்குரிய வருமான வரியைப் பிடித்தம் செய்து கொணடு அரசுககுச் செலுத்துவதையும் தோற்றுவாய்ப் பிடித்தம் (deduction at source) என்பர். வருமானம பெறும் போதே, முன் ஆண்டின வருமானத்தை அடிப்படை யாகக் கொண்டு, நடப்பு ஆண்டிற்கான வருமான வரியை மொத்தமாகவோ, சிறு சிறு தவணைகளிலோ செலுத்தலாம். இதனை வருமானம் பெறும போதே செலுத்தலாம். இதனை வருமானம பெறும் போதே செலுத்தும் முறை (Pay as you earn scheme) எனபர். முந்திய ஆணடின வருமானத்தை அடிப்படையாகக் கொண்டு வருமான வரி அதிகாரிகள தறகாலிக வரி மதிப்பீட்டை அறிவிப்பார்கள. அதன் அடிப் படையில் செலுத்துதல் (Provisional assesment) என்பர். வரி அதிகாரிகளின இறுதியான மதிப்பீட்டின் படி செலுத்த வேண்டிய வரியைச செலுத்துவதை இறுதியான மதிப்பீட்டின் அடிப்படையில் செலுத் துதல் (Payment on Final assesment) எனபர்.

**இந்தியாவில் தனிநபர் வருமான வரி:** இநதியாவில் உச்ச அளவு வரிவிகிதம் ஒரு காலத்தில் 97.5 விழுக் காடாக இருந்தது. இதைப்பற்றி ஆய்வு செய்த நீதிபதி வாஞ்சு இது மிகவும் கூடுதல் என்று குறிப்பிட்டு இதனை மாற்றியமைக்கப் பல பரிந்துரைகளைக் குறிப்பிட்டார். இவ் உயர் விகிதம் படிப்படியாகக் குறைக்கப்பட்டு 1985-86 ஆம் ஆணடுக்கான வரவு செலவுத் திட்டத்தில் 50 விழுக்காடாகக் குறைககப் பட்டது. 1985-86-ஆம் ஆணடு வரவு செலவுததிட்டத தில் மிகை வரி (Surcharge) நீக்கப்பட்டது. இந்திய நாட்டில் நிலவிய வறட்சியைக் கருத்தில் கொணடு வறட்சி நிவாரணப்பணிகளுக்காக 1987-88 ஆம ஆணடுக்கான வரவு செலவுத் திட்டத்தில உரூ.50.000 வருமானத்திற்கும் கூடுதலாக வருமானம் பெறுபவர் களுக்கு வருமானவரி மேல்வரி (Surcharge) ஓராண்டு காலத்திற்கு மட்டும் எனறு உறுதி மொழியுடன புகுத்தப்பட்டது. ஆனால் 1988-89ஆம ஆண்டுககான வரவு செலவுத் திட்டத்திலும இவஉபரி வரி தொடர்ந்து இருக்கும் என்று அறிவிககப் பட்டிருக் கிறது.

1985-86-ஆம் ஆணடிற்கான வரவுசெலவுத் திட் டத்தின்படி வருமானவரி விகிதஙகளும் வரிவிதிக்கத தக்க அடிப்படைகளும் கீழே தரப்பட்டிருக்கினறன.

இந்தியாவில் வருமானவரி விகிதஙகள்
(1985-86 ஆம ஆண்டு வரவு செலவுத் திட்டத்தின்படி)

| வரி அடிப்படை (வரி விதிக்கத தகக ஆண்டு நிகர வருமானம்) (உரூபாயில்) | வருமான வரி விகிதம் (விழுககாட்டில்) |
|---|---|
| உரூ. 18,001 முதல் உரூ 25,000 வரை | 25 |
| உரூ. 25,001 முதல் உரூ. 50,000 வரை | 30 |
| உரூ 50,001 முதல் உரூ. 1,00,00 வரை | 40 |
| உரூ. 1,00,001 க்கு மேல் | 50 |

**வரிபற்றிய கருத்துகள்:** 1) சமதததுவ விதிக்கும் (Principle of equity) வரி தாங்கும திறன்படி வரி விதித்தல் எனற நியதிககும் உகந்தது, 2) வரி நிலைப் பாட்டைக் காணபது எளிது, 3) செலவ, வருமான ஏற்றத் தாழவைக் குறைக்கப் பயனபடுகிறது, 4) பொருளாதார உறுதித் தன்மை, வேலை வாயப்புப் பெருக்கம் ஆகியவறறிறகுத் துணை செயகிறது, 5) வரி விதிகளுககு (Canons of taxation) உட்படடது, 6) நுகர்வின அளவைககேடுறச் செய்யாது, 7) மககளுககு நாட்டு உணர்வை உணடாக்குகிறது போனற பல குறிப்புகள் இவ் வரி விதிப்பிறகு ஆதரவாகக் குறிப பிடப்படுகின்றன. அதேசமயம், 1) சேமிப்பைக் கெடுக கிறது, 2) வரி ஏய்ப்பிற்கும் ஊழலுக்கும வழி வகுக் கிறது, 3) தவறாக வழிப்படுத்திக் கருப்புப் பொரு ளாதாரம் தோன்ற வழி வகுக்கிறது, 4) நேர்மைக குத் தண்டனை போனறிருக்கிறது எனற பல குறிப் புகள இவ்வரிககு எதிராகக் குறிப்பிடப்படுகினறன.

இநதிய நாட்டைப் பொறுதத மட்டில் வருமான வரி அமைப்பில குறைகள பல இருப்பதால அவற்றைக் களைதல வேணடும் என்பதோடு வரிச் சட்டங்களை எளிமையானவையாககி, வழக்குமனறங களை நாடினாலும், வரி அதிகாரிகளின முடிவு சரியானதாகவும், நேர்மையானதாகவும் இருககும் என்று மக்கள நம்பும அளவிற்கு நேர்மையைப் புகுத்திச் செயற்படுவது நனறு எனறு குறிப்பிடுவா பலர்.

என.எஸ்.பா.

***தனி உரிமை அதிகாரங்கள்:*** ஒரு நாட்டின இறைமையாளர் பொதுநலனுக்காகச் சட்டத்தின் ஆதரவினறியும, சில சமயங்களில சட்டத்திற்கு எதிராகவும் தன கருத்துப்படி செயலாற்றும அதி காரமே தனிஉரிமை அதிகாரமாகும என சான லாக்கு போன்ற அறிஞர்கள விளக்குகின்றனர். இச்சொற் றொடர் பிரிட்டனின் அரசியலமைப்பு வரலாற்றில்

ஒரு முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது உரோமானிய வரலாறறில தனிஉரிமை அதிகாரம என்பது முதலில வாக்களிககும உரிமையைக குறிக்கின்றது.

பிரிட்டன் ஒரு குடியரசறற மக்களாட்சி நாடு. ஏனென்றால மன்னராட்சி, அரசியலமைபபிற்குட் பட்டு அஙகுத் தொடாகிறது. மன்னரலுவலகததின (Crown) அதிகாரங்கள சட்ட அதிகாரங்கள (Statutory Powers), தனி உரிமை அதிகாரங்கள (Prerogative Powers) என இருவகைப்படும். பாராளுமன்ற சட்டங்கள மூலம மனனரலுவலகததிறகுக் கிடைத்த வைகளே சட்ட அதிகாரங்களாகும். பிரிட்டனில் நீதி மனறஙகளால் அஙகீகரிக்கப்பட்ட அரசியலமைப்பு மரபுகள பொதுச் சட்டம் அலலது பொது நீதி என குறிக்கபபடுகிறது அதன மூலம முனனா மனனருக கும், பினனர் மன்னரலுவலகத்திற்கும கிடைத்த அதிகாரஙகளே தனிஉரிமை அதிகாரஙகளாகும.

நிலமானிய முறை (Feudalism) பிரிட்டனில் இருந்தபோது பிரபுக்களின மீது மனனருக்கு அளிக்கப் பட்ட உரிமைகளே இவை. பின்னா முழு மனன ராட்சி (absolute monarchy) யில இவை வளர்நது வலுப்பெற்று, மனனர் அதிகாரத்தில் பாராளுமன்ற தலையீடு இலலாதவரை தொடாந்தன. பதினேழாம் நூற்றாணடில, ஒரு புறம் மனனர் இவற்றைத் தன்ன கத்தே வைத்துக்கொள்ளவும், மற்றொருபுறம பாராளுமன்றம் இவற்றைத் தன் கட்டுபபாட்டுக்குள கொண்டு வரவும் போராடினா. இப்போராட்டததில் பாராளுமனறமே வெற்றி பெற்றது. கி.பி. 1628-ஆம் ஆணடின் உரிமைகள் விணணபபம் (Petition of Rights) மூலம சில அதிகாரங்களை மனனர் இழந தாா. கி பி. 1689-இன் உரிமைகள சட்டப்பசாவும் (Bill of Rights)கி.பி.1701-இன் அரசுரிமை நிருணயச் சட்டமும் (Act of Settlement) மன்னரின் சில அதி காரஙகளை மட்டுமனறி மனனர் பதவி யாருககு என பதிலும் பாராளுமனறம தலையிட வழிகோலின. கி.பி. 1714-ஆம் ஆணடிற்குப்பின் முதலாம் சார்சு மன்னர் கால முதல-மந்திரிகளின ஆலோசனையின படி இவ் வதிகாரஙகள் மனனரால அனுபவிக்கப்பட்டன. மேலும் காலப்போககில் மக்களாட்சியின வளாச்சிக் கேற்ப மீதமிருந்த மன்னரின தனிஉரிமை அதிகாரங களும் மனனர் அலுவலகத்தை அடைநது விட்டன.

இவற்றை வெளிநாட்டு விவகாரங்கள,உள்நாட்டு விவகாரங்கள் தொடாபானவை என இருவகைப் படுத்தலாம். முதல வகையில போர் அல்லது சமாதானம் செய்தல், அயல் நாடுகளிடம் செய்த உடனபடிக்கைகளை ஏறறுககொள்ளல், புதியநாடு களுக்கு ஒப்புதல் அளித்தல் போன்ற அதிகாரங்கள அடங்கும. பாராளுமன்றத்தைக் கூட்டல் மற்றும் கலைத்தல், பாராளுமன்றததால நிறைவேற்றப்பட்ட மசோதாக்களுக்கு ஒப்புதல் அளித்தல, பிரபுககளவை யில் புதிய பிரபுக்களை (Peers) நியமித்தல, அரசாங்க ஊழியர்களை நியமித்தல் மற்றும பணி நீக்கம் செய் தல, குற்றவாளிகளின் தணடனையைக குறைத்தல அலலது மன்னிததல போன்ற பல அதிகாரங்கள இரண்டாம் வகையிலடங்கும்.

வாலடர் பேசாட்டு (Walter Bagehot) எனற அறிஞன் மன்னரை அரசாங்கத்தின அலங்காரப் பகுதி எனறும் அமைசசரவையைச் செயலாற்றும் பகுதி எனறும் கி பி 19-ஆம நூற்றாணடிலேயே கூறி யுள்ளார். அக் கூறறுப்படியே இனறு தனிஉரிமை அதிகாரங்களனைத்தும் மன்னருககுப் பதிலாக மந்திரி களால அதிலும் குறிப்பாக, தலைமை அமைச்சரிடம் உள்ளன. எனினும் மன்னரிடம் அமைச்சர்கள் கலந்து ஆலோசிக்கவேணடிய உரிமையும(Right to be Consulted) ஊக்குவிக்கும் உரிமையும் (Right to encourage) அமைச்சாகளை எசசரிககும உரிமையும உளளன. இவற்றின மூலம பட்டறிவும, ஆற்றலும், நாட்டு பத்தியும் நிரமபிய மன்னர் அமைச்சர்களுக்குச் சிறசில சமயஙகளில் வழிகாட்டலாம. எனினும எதிலும இறுதி முடிவு அமைச்சாகளால, அதிலும குறிப்பாக தலைமை அமைசசரால எடுககபபடுகிறது. அதற்கு அமைச்சரவையே பாராளுமனறத்திற்கும மற்றும் மக்களுக்கும் மக்களாட்சித் தததுவ அடிப்படையில பொறுப்புடையதாக உளளது எம.ந.

**தனிக்கூறு ஆய்வுமுறை**: சமூகத்திலுள்ள ஏதேனும ஒரு நிகழ்ச்சியை விளக்கமாகவும், முழுமை யாகவும் ஆராய்வது தனிக்கூறு ஆய்வு முறை (Case Study Method) எனப்படும. இது சமூகவியல் ஆய்வு முறைகளில் முதனமையான ஒனறாகும். இது ஒரு மனிதனைப் பற்றியோ, ஒரு குழுவைப் பற்றியோ, ஒரு நிகழ்ச்சி அலலது ஒரு நிலையமைப்பைப் பற்றியோ, ஒரு சூழ்நிலையைப பற்றியோ நனகு நுட்பமாக ஆராயும் முறையாகும.எடுததுககாட்டாக அரசுத்துறையில பல பேருந்து நிறுவனஙகள உள்ளன. அவற்றில் ஒரு நிறுவனததை விரிவாக ஆராயவது தனிக்கூறு ஆய்வுமுறையாகும. அதுபோலவே சமூகத் திலுள்ள மகிழச்சியற்ற ஒரு குடும்பம், மகிழச்சியான ஒரு குடும்பம், ஒரு சமுதாயம், ஒரு நிலையமைப்பு போன்றவறறையும் தனிக்கூறு ஆயவினமூலம் அறிய லாம்.

ஒரு முழுத் தொகுதியை மூனறு வழிகளில் ஆராய்ந்து அதைப்பற்றிப் பொதுவான முடிவுகளை ஏற்படுத்தலாம். 1) அதிலுள்ள கூறுகள அனைததை

யும் ஒன்றுவிடாமல ஆராயலாம். 2) அதன கூறுகளில் சிலவற்றை மாதிரியாக (Sample) எடுத்துககொண்டு ஆராயலாம் 3) ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோற்றைக் கொண்டு பதம்பார்ப்பது போல ஒரே ஒரு கூற்றை மட்டும் எடுத்துக் கொண்டு ஆராயலாம். இவற்றில மூன்றாவது முறையே தனிக்கூறு ஆய்வு முறையாகும்.

இம்முறையின் மூலம் ஒரு கூற்றைக்கொணடு அது சேர்ந்துளள முழுத் தொகுதியையும் பற்றிப் பொது முடிவுகள ஏறபடுத்தபபடுகின்றன. இது ஒரு சிக்கலான பணி. ஆகவே முழுத தொகுதியின சிறப்பியல்புகளை எடுத்துக்காட்டக் கூடிய ஒரு கூற்றை இனஙகண்டு அதை ஆய்வுக்கு எடுத்துக்கொளள வேணடும். அத்தகைய கூற்றை இனங் காணபதே இந்த ஆய்வுமுறையில ஒரு குறிப்பிடத்தக்க பகுதியாகும்.இதற்கு ஆய்வாளருககு நிறைந்த அறிவும் முறையான ஆய்வுப் பயிற்சியும் இருததல் இன்றியமையாதது எடுததுக்காட்டாக ஊரகச் சமூகத்தை ஆராய்கின்ற ஆய்வாளர் ஒரு சரியான (Typical) கிராமத்தை இனஙகணடு அதைத் தனிக்கூறறு ஆய்விற்கு உட்படுத்தி ஊரகச் சமூகத்தைப் பற்றிய பொது முடிவுகளை ஏற்படுத்த வேண்டும.

பொதுவாக ஒரு தனி மனிதனை அலலது ஒரு குழுவினை அலலது நிகழவினை மட்டும் ஆயவு செய்வதைப் பொறுத்துப் பொதுவான முடிவுகள ஏறபடுவதில்லை. ஆனால் ஒரு பொது முடிவினை நிரூபிப்பதற்கு இவ்வாறான தனிக்கூறு ஆய்வுமுறையைப் பயனபடுத்தலாம். அதாவது இந்த ஆய்வுமுறை அனுமானஙகளுக்கு (Hypothesis) ஒரு மூலாதாரமாகவோ பொது முடிவிற்கு ஓர் எடுத்துக்காட்டாகவோ விளஙகுகிறது.

ஒரு பெரிய கூட்டத்தினரிடமிருநது சேகரித்து ஒழுஙகுபடுத்தப்பட்ட தரவுகளின் அடிப்படையிலேயே பொதுவான முடிவுகள் மிகுந்த அளவு ஏற்படுகின்றன. ஆனால் அபபெரிய கூட்டத்தினரிடமிருந்து தரவுகளைத் திரட்டுவதற்கு மிகுதியான செலவுகள் உண்டாகும். மேலும் திரட்டப்பட்ட தரவுகளின் சராசரியைக் கணிப்பது அலலது பிற புள்ளியியல் கணக்கீடுகளின் கூடுதல்களைக் கணடுபிடிப்பது எளிதன்று. எனவே அனுமானஙகளைச் சோதனை செய்வதற்குத் தனிக்கூறு ஆய்வு சிறந்த வழியாகக் கருதப்படுகிறது. ஒரு சிறந்த தனிக்கூறு ஆய்வு சரியான பொது முடிவுகளைத தரும் என்பது திணணம். எடுத்துககாட்டாக சிறார் குற்றத்திற்கும் (Juvenile Delinquency) சிதைந்த இல்லததிற்கும் (Broken Home) ஒரு நெருங்கிய தொடர்புணடு என்பதற்கான பல சான்றுகள் உள்ளன. இதில் எவ்வாறு சிதைந்த இல்லம் குற்றத்தைத் தூண்டுவதற்குக் காரணமாகிறது என்பதற்கான தெளிவான விளக்கத்தை ஒரு தனிக்கூறு ஆயவினால் தர இயலும்.

மேலும் ஆய்வுக் கள உறறுநோககலில (Field Observation) தனிக்கூறு ஆய்வுமுறையே பொதுவாகப் பயன படுத்தப்படுகிறது. ஏனெனில ஆய்வு செயயப் படுகினற பொருளைப்பற்றி முழுமையான விளக்கங களை இந்த ஆய்வு முறையே அளிக்கிறது. இநத ஆய்வு முறையில் ஆய்வாளர் பங்குகொளளும உறறு நோக்கல் முறையையோ (Participant Observation), பஙகுகொளளாத உற்றுநோக்கல் முறையையோ (Non-Participant) பயனபடுததலாம்.

கடநதகாலத்தில நடநத நிகழசசிகளைப் பற்றியதாகத தனிககூறு ஆய்வு இருப்பின ஆய்வாளா அந்த நிகழச்சிக்குத் தொடர்பான அனைத்துக் குறிப்புகளையும நன்கு ஆராயவேணடும். மேலும அபபகுதியில் உளள அனைத்து மககளையும காணவேணடும. எடுத்துக்காட்டாக ஓர் ஊரில் இருபது ஆணடுகளுக்கு முனனர் வளாந்துளள ஒரு சமய இயககததைப்பறறி ஆராய விரும்பினால் ஆய்வாளர் அநத ஊருககுக் கட்டாயம் செலலவேணடும். பினனா அநத ஊரிலுளள முதியோர்களிடம் அந்தச் சமய இயககத்தைப் பறறி நனகுவிசாரிககவேணடும். மேலும் அநத ஊரைப பறறிய குறிப்புகள, பழைய நாளிதழகள ஆகியவறறைச சேகரித்துத் தொடர்பான தகவல்களை அறியவேணடும். இவை சமய இயககத்தைத் தோற்றுவித்தவர் களையும், அதில் பஙகுகொணட உறுப்பினாகளையும் பற்றிய விவரங்களைக் கூறலாம். பூ.த.

**துணை நூல்கள்:**


**Cohen, Bruce. J.,** Theory and Problems of Introduction to Sociology, McGraw Hill Book Company, Newyork, 1979.

**Lin, Nan,** Foundations of Social Research, Mc Graw Hill Book Company, NewYork, 1976.


**தனிச்செய்யுட் சிந்தாமணி** எனபது 1908-ஆம் ஆண்டு வெளிவந்த திரட்டு நூல். இது சென்ற நூற்றாண்டில் திரட்டி வெளியிடப்பெற்ற 'தனிப் பாடற் திரட்டு' எனனும் தொகைநூலை ஒத்தது; புலவர் பலரால் தனி நூலாகவனறிப பல்வேறு சமயங்களில் பாடப்பெற்ற தனிப்பாக்களைக் கொணடது. இவற்றுட் பெரும்பாலன அவ்வப் புலவர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளோடு தொடர்புடையவை. இவையெல்லாம் செவிவழியாக வந்த தமிழ்ச செலவங்களாம்; கற்றாரும மற்றாரும் போறறிப் பாராட்டும் தகைமையன; எல்லார் உளளங்களையும்

கொளளை கொண்டு நிறபன. சொலலழகு,பொருட் பொலிவு, உவமை முதலிய அணிநயஙகள வாயககப் பெற்றன.

தனிசசெயயுட் சிநதாமணியில் ஏற்கெனவே நூல களில் வந்துளள தனிப்பாடல நிலையிலுளள பாடல களும் தரப்பட்டுளளன. 'திருவாககுஞ் செயகருமங் கைகூட்டும்' எனறு தொடஙகும் வெணபா இத திரட்டு நூலின காப்புச செய்யுள ஆகும். இது பதி னோராந திருமுறைப் பிரபநதஙகளுள ஒனறான, கபிலதேவ நாயனார் அருளிய 'மூததநாயனார் திரு விரட்டை மணிமாலை'யின் முதற் பாடல. இதனை அடுத்துவரும பாடலும் இத்திருமுறையின முதலி லுளள திருவால வாயுடையார், பாணபததிரருக்குப பொருளதரும்படி சேரமான் பெருமாள நாயனா ருககு எழுதிய 'மதிமலி புரிசை மாடக் கூடல' எனத தொடஙகும திருமுகப் பாசுரமாம. மூனறாவதாக வுளளது இறையனாா பாடிய 'கொஙகுதேர் வாழ்க்கை' எனத் தொடங்கும குறுநதொகைப் பாடல். இஙஙனமே திருமுருகாறறுபபடையின ஈற் றில காணும முருகன துதியான வெணபாக்கள் பத்துள முதல ஏழு வெணபாககள நககீரர் தனிப் பாடலகளாகத தரபபட்டுளளன பட்டினத்துப பிளளையாா பாடிய பொதுத் தனிபபாடலகளுள 'காதறற ஊசி' பறறிய பாடலும், அவா தம் தாயாருககுத் தகனக் கிரியை செயதபோது பாடிய பாடலகளும தரப்பட்டுளளன. இவவாறாக முன் வந்த நூலகள சிலவறறில காணும தனிககருத துரைக்கும ஒருசில பாடலகளையும தொகுபபாசிரி யர் இதில சோத்துளளாா. இவையெலலாம அவவப் புலவா வாழவில நேர்நத சில நிகழசசிகளின வெளிப பாடுகளாதலின தனிப்பாடலகளாகக கருதப பட்டுளளன எனலாம்.

இத்தொகுப்பினைத திரட்டி அமைததவர் மு.ரா கந்தசாமிக் கவிராயா. இவா சேறறூர் சமசுதான வித்துவான; மதுரைத தமிழச சஙகப் புலவருள் ஒரு வர்; மதுரை 'விவேகபாநு'ப் பத்திரிகையின ஆசிரி யர். இவருககு இததொகுபபினை ஆக்குதறகு ஊகக மளித்து, அச்சிடுதறகுப பொருளுதவியும் புரிநதவா பொருட்செல்வர் முறையூர் பழ. சணமுகம செட்டி யார் ஆவர். இநநூலுக்கு அப்பொழுது செந்தமிழப் பத்திராதிபராயிருந்த மு இராகவையஙகார்முகவுரை தநதுள்ளார். இவர் இந்நூலின அமைப்பும் சிறப்பும குறித்து எழுதியவை வருமாறு:

'இந்நூல் நினைத்த பாடல்களையெலலாம் தரு தறகேற்பத் 'தனிச் செய்யுட் சிநதாமணி' எனற பெயர் புனைநதிருத்தல் பொருத்தமாம். இதனுள சங்க காலத்தும் அதன் பிறகாலத்தும் விளஙகிய புல வர்கள பாடலகளோடு இப்போதுளள வித்துவான கள பலா கவிகளும் சேர்த்து வெளியிடப்பட்டிருக் கினறன இவையெலலாம் பேருழைப்புடன் தெரிந தெடுககப்பட்டவைகளாம. இபபாடலகள இயறறிய புலவாகளின் சரித்திரக குறிபபுகளும தெரிநத வரைச சுருககமாக அதனதன தலைப்பில எழுதப் பட்டுளளன. இநநூலில இக்காலப்புலவர் பாடல களை இறுதியில தொகுததிருத்தல, இக்கால மக்களும பினனோர்களும அறிந்து மகிழதற்கும பேருதவியாம் எனபது சொலல வேணடா. இஙஙன மாக இததனிச செய்யுட் சிந்தாமணியில தொகுக்கப் பெறற பாடற்றொகை மொததத்தில 3815-ஆம் இவை பாடிய வெவவேறாய புலவர் தொகை180ககு மேலாம இத்தனிப் பாசுரஙகள் அவவவவிடங் களுககு ஏறறனவாகவும படிப்பவர் மனத்தைத் கவரத் தக்கனவாகவும விளஙகுதலை ஒவவொரு வரும தாமே அறிநது கொளளககூடும் எனபது திணணம (முகவுரை பக.5.).

இசசிநதாமணியிலுள்ள 3815 பாடல்களுள முற பட்டு வாழ்நத புலவா 159 போ பாடிய பாடலகள் 3036 ஏனைய 779 பாடலகள தொகுப்பாசிரியர் காலதது வாழநதிருந்த 23 புலவாகளின பாடல்கள. இருபத்து மூவருள தமிழத தததா எனனும அருமைப் பேரால் குறிபபிடபபெறும மகாமகோபாததியாய உ.வே.சாமிநாதையா பாடலகளை முனவைத்து ஏனையர் பாடலகளைத் தந்துளளாா.

இத்தொகுப்பில அடஙகாதன பல உளவாதலை யும் தொகுப்பாசிரியா மு.ரா. கந்தசாமிக் கவிராயா கணடார்; அவறறையெல்லாம தொகுத்து இரண டாம் பாகம வெளியிட வேணடும் எனறு கருதினாா; எனவே, இநநூலைத் 'தனிச செய்யுட் சிநதாமணி' - முதறபாகம் எனறு குறிததுளளாா.

'பதிப்பிட்டு முடிநத பினனா நககீரா, கமபநாட் டாழவார், புகழேநதிப் புலவா, ஒட்டக்கூததா, பொய்யாமொழிப் புலவர், இரட்டையர், காள மேகப்புலவர் முதலிய பணடைத தமிழப் புலவர் கள் பாககள நூறறுககணககாகக் கிடைத்தன. தற காலத் தமிழ விததுவானகள் பாககளோ ஆயிரக கணக்கில் வந்து குவிநதுளளன. இவையனைத்தையும ஒரே புத்தகமாக்க முடியாமையால முடிநதவறறை முதறபாகம ஆக வெளியிட்டுளளோம. இப்போது கிடைத்த கவிகளுடன இனனுஞ் சோவன சேர்தது அவறறை இரணடாம் பாகமாகக கூடிய விரைவில் வெளியிட நிச்சயித்துளளோம. வித்துவ சிகாமணிகள தங்கள் தஙகளபாலுளள தனிபபாடலகளை எமக் கனுப்பி உதவுவாாகளாயின அது மிகப் பேருதவி

யாகும்' என்பது தொகுப்பாசிரியரின் பதிப்புரையில் காணும் செய்தி. இதன்படி இரண்டாம் பாகம் சிந்தா மணிக்கு வெளிவாராமலே போயிற்று. கவிராயர் தொகுத்து வைத்திருந்த பாடல்களும உலகிற்குப் பயன்படாது ஒழிந்தனபோலும். மு.ச.

**தனித் தமிழ் இயக்கம்**: மொழி மனிதன் பிறரொடு கலந்து வாழப்பயனபடுகிறது. வளர்சசி அடைந்த மொழிகளில் இலக்கண இலக்கிய வளங களும் நிரம்பியிருக்கும். அத்தகைய மொழிகள பல உலகில் உளளன. நம் நாட்டிலும் பல மொழிகள் உள்ளன. அவற்றுள் தென் இந்தியாவில் பேசப் பெறு கின்ற மொழிகள் 'திராவிட மொழிக் குடும்பத்தை'ச் சார்ந்தவை. அம்மொழிகளுள் தொன்மையானது, தாய்மையாகக் கொள்ளக் கூடியது தமிழாகும். அதில் பிற மொழி கலவாது காக்க எழுந்த இயக்கமே 'தனித் தமிழ் இயக்க' மாகும்.

தமிழ் மொழி மூவாயிரம் ஆண்டுகளுக்கு மேற் பட்ட இலக்கிய வளம் வாய்ந்தது. பழமையான இலக் கணமாகிய தொல்காப்பியத்திலும் பின்வந்த சஙக இலக்கியங்களிலும் தமிழின் தனித்தன்மையினையும் பண்பினையும் காண முடியும். சங்க இலக்கியங்களில் ஒருசில வேற்று மொழிச் சொற்கள் இருப்பினும் அவை விரல்விட்டு எணணக் கூடியவையாகும்.

பிற்காலத்தில் வேற்றுநாட்டு அரசியல் படை யெடுப்பு மட்டுமனறிச் சமய, சமுதாய நுழைவு களாலும் வடக்கிருந்து வந்த வடமொழியாகிய சமசு கிருதம் தமிழ் மொழியில் புகுந்தது. எனினும் தெலுங்கு, கனனடம், மலையாளம் போனறு, அவ் வடமொழி தமிழில் அதிகமாகக் கலக்கவிலலை. களப் பிரர் காலமாகிய கி.பி.3 முதல் 6–ஆம் நூறறாண்டு வரையிலான காலத்திலும பிற்காலச் சோழர் காலத் திலும் வடமொழி சமய, வாழ்வியல் வகைகளில அதிகமாகக் கலந்த போதிலும, அது அடுத்தடுத்து ஒதுக்கப்பெற்றது.

சென்ற நூற்றாண்டில் சமயம் வளர்க்க மேலை நாட்டிலிருந்து வந்த காலடுவெல் பெருமகனார் இத் திராவிட மொழிகளை ஆராய்ந்து ஒப்பிலக்கண நூலை எழுதினார். அதில் பிற மொழிகள்–சிறப்பாக ஆரிய மொழி, திராவிட மொழிகளில் கலந்தமை காட்டி, தமிழின தனித்தியங்கும் தன்மையினை விளக்கியுள்ளார். (Dravidian Languages Independent of Sanskrit –1956 ed. P. 40–52). திராவிட மொழி கள் வடமொழி இனறியே தனித்தியங்கவலலன என்றே தனித்தலைப்பிட்டு, அவற்றை விளக்கிக் காட்டியதோடு, தமிழ் வடமொழியின்றியே தனித் தியங்கிச் சிறப்புறும் என்பதனை திட்டமாகப் கூறியும் உளளார். ('Tamil can readily dispense with the greater part or the whole of the Sanskrit, and by dispensing with it rises to a pure and more refind style– p. 47). இது தனித்தமிழ் இயக்கததுககு வித்து எனலாம்.

இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலே தமிழ நாட்டில் அரசியல் மறுமலர்ச்சி அடிப்படையில் ஓர் எழுச்சி அமைந்தது. தொடர்ந்து நீதிக்கட்சி ஆட்சி யில் அமர்ந்தபோதும், பின், ஈ.வே. இராமசாமிப் பெரியார் போன்றோர் சமுதாயப புரட்சி கண்ட போதும் அவற்றின் வேகம் மொழியிலும் தாக்க ஆரம் பித்தது. அதுவே பின் தனித்தமிழ் இயக்கம் எனப பெயர்பெற்றது. தததம வடமொழிப் பெயர்களைத் தமிழ்ப் பெயராக மாற்றி அமைத்துக் கொண்டவர் சிலர். 'சூரியநாராயண சாத்திரியார்' 'பரிதிமாற் கலைஞ'ரானார். சுவாமி வேதாசலம் 'மறைமலை அடிக'ளானார். இந்த வகையில பெயர் மாற்றமின்றி எழுதுவது பேசுவது அனைத்திலும் தனித தமிழச் சொற்களே இடமபெற வேண்டும் என்று சிலர் துணிந் தனர். அவர்களுள் முன் நினறவா சுவாமி வேதா சலம் என்னும் மறைமலை அடிகளாவர். நாவலர் சோமசுந்தர பாரதியார் போன்ற அறிஞர்களும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வ. சுப்பையாப் பிள்ளை போனற செயலர்களும் இந்த இயககததில் தீவிரமாகப் பங்கு கொணடனர். பெரியார ஈ.வே.ரா. போன்றவர்கள் இந்த இயக்கத்தில அவ்வளவாக ஈடு படவில்லை எனலாம்.

பின், இராசகோபாலாச்சாரியார் அவர்கள முதலமைச்சரான காலை கட்டாய இந்தியைப் புகுத தியபோது அனைவரும் ஒன்று திரணடு எதிர்த்தனர். அந்த எதிர்ப்பின் காரணத்தாலும் 'தனித்தமிழ இயக்கம்' தலை நிமிர்நது நினறது. தனி மனிதா பெயர்களும் சில ஊர்ப் பெயாகளும் பண்டைத் தமிழ்ப் பெயர்களாக மாற்றப் பெற்றன. பழந்தமிழப் பெயர்களைத் தத்தம் மக்களுக்கும் மனைகளுககும சிலர் இட்டு மகிழ்ந்தனர். எனினும், இந்த இயக்கம் பொது மக்கள இயக்கமாக மாறவில்லையாதலால நாட்டில நிலைத்துக் கால் கொள்ளவில்லை. அறிஞா சிலரும் அவரைச் சாாந்தோரும் தனித்தமிழ்ச் சொற் களை அழைபபிதழ போன்றவற்றிலும் பிறவறறிலும் பயன்படுத்தி வருகிறார்கள்.

பொதுவாக இந்த இயக்கம் நிலைத்துக் கால் கொள்ளாவிடினும் இன்று நாட்டின் பல ஊர்ப் பெயர்கள் பழந்தமிழ் பெயர்களைப் பெற்றுவரு கின்றன. மக்களுள் சிலர் நல்ல பழந்தமிழ்ப் பெயர் களை மக்களுக்கு இட்டு அழைக்கின்றனர். உரை நடை, கவிதை இலக்கியங்கள் ஓரளவு தனித்தமிழ்

மரபைப் பின்பற்றுகின்றன. என்றாலும் முற்றும் இந்த இயக்கம் வெற்றிபெற்றது என்று சொல்ல இயலாது.

அண்மையில் தமிழில் வடமொழியையேயன்றி ஆங்கிலத்தையும் கலந்து கதைகளும் பிறவும் எழுதப் பெறுகின்றன. அவற்றை வெளியிடும் இதழ்களே இலட்சக் கணக்கில் விற்பனையாகின்றன. அறிஞர்களும் அதுபற்றிக் கவலைப்படுவதில்லை. கவிஞர்களும் புதுக்கவிதை அமைப்பதில் எத்தனையோ வேற்று மொழிச் சொற்களைப் பயன்படுத்துகின்றனர். தமிழ் வளர்க்கும் அரசாங்க அறிக்கைகளும் தனித் தமிழில் இல்லை. எனவே, இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலே வீறுற்றுப் பரவிய இந்தத் 'தனித் தமிழ் இயக்கம்' இந்த நூற்றாண்டின் இறுதியிலே மற்றொரு இருண்ட கால நிலையினை எய்துமோ என்ற அச்சம் உண்டாகிறது. ஆயினும் கால்டுவெல்லும் பிற அறிஞர்களும் காட்டியபடி, தமிழ் என்றும் தன் தனித்தன்மை கெடாது விளங்கும் என்பது உறுதி. அ.மு.ப.

**தனித்துவம்:** தனி மனிதச் சுதந்திரத்தையும் தனி முயற்சியையும் ஆதரிப்பது தனித்துவம் (Individualism) எனப்படுகிறது. இது கூட்டு முயற்சிக்கும். அதிகாரத் தன்மைக்கும் எதிரான கொள்கையாகும், சமூகம், அரசியல், சமயம் முதலிய துறைகளில் கட்டுப்பாடும், வெளியுதவியும் உதவாது என்பது தனித்துவத்தின் கொள்கையாகும்.

நல்ல பயனை அளிக்கின்ற செயலெல்லாம் நற்செயலே என்றும் துன்பம் தருகின்ற செயலெல்லாம் தீய செயலே என்றும் கூறுகின்ற பயனெறி முறைக் கோட்பாடு (Utilitarianism) தனித்துவத்தின் ஒரு பகுதியாகும். தம் விருப்பம் போல் நடப்பதைப் பிறர் தடுக்காத வரையில் மனிதர்கள் அனைவரையும் தம் விருப்பம்போல் நடக்கவிட்டுவிட வேண்டும் எனப் பென்தாம் (Bentham) என்ற அறிஞர் கூறுகிறார். இவ்வாறு ஒவ்வொரு மனிதரும் அவரவர் விருப்பத்தை நாடும்போது அனைத்து மனிதர்களும் அனைவருடைய விருப்பத்தையும் நாடுவார்கள் என்று அவர் நம்புகிறார்.

எந்தவொரு மனிதனும் பொது நலத்திற்குக் கட்டுப்பட்டுத் தன் சுதந்திரத்தைப் பயன்படுத்த வேண்டும் எனத் தனித்துவவாதிகளில் சிலர் ஒப்புக் கொள்கின்றனர். இருப்பினும் சமூகம், அரசியல் ஆகிய துறைகளில் எவ்வாறு அதிகாரம் செலுத்தப் பட வேண்டும், எவ்வகையில் சுதந்திரம் அனுமதிக்கப் பட வேண்டும் என்பதற்கான விளக்கங்களை அவர்கள் கூறவில்லை. ஆனால், பயனெறிமுறைக் கோட்பாட்டைப் பின்பற்றிய தனித்துவவாதியாகச் சான் இசுடுவர்ட்டு மில (John Stuwart Mill) தாம் எழுதிய 'விடுதலை' என்ற கட்டுரையில் இவை பற்றிப் பின் வருமாறு விளக்குகிறார்.

ஒரு செயலின் பலன் அச்செயலைச் செய்பவனை மட்டுமே சார்ந்ததாயிருந்தால அச்செயலைக் கட்டுப்படுத்த வேண்டியதில்லை. ஆனால், செயலின் பலன் பிறரைச் சார்ந்ததாயிருந்தால் அச்செயல் அதிகாரத்திற்குக் கட்டுப்பட்டது. ஒரு சமூகமோ, அரசாங்கமோ ஒருவனை ஓர் அறிவாளியாகவோ, அறிவிலியாகவோ ஆக்க முடியாது. இது தனி மனிதனையே சார்ந்தது. பொதுவாக மக்கள் அனைவரும் தம்தம் மனம் போலத் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொண்டால் சமூகமும, அரசாங்கமும் முன்னேற்றமடையும். ஒருவனுடைய எண்ணங்களும் பேச்சுக்களும் கட்டுப்படுத்தப்படும்போது அவனுடைய ஆளுமை (Personality) வளர்ச்சியும தடைபடுகிறது. ஓர் அரசாங்கம் செய்கின்ற குற்றங்களையும், குறைகளையும் எடுத்துக் காட்டும் உரிமை மக்களுக்கு இருந்தால் அங்கு மக்களாட்சிச் செம்மையாக நடைபெறும். மேலும், இவ்வாறு வாக்குவாதங்கள செய்யும் பொழுது தவறுகள் நீங்கி உண்மை வெளிப்பட வாய்ப்புண்டு. எனவே, அரசாங்கம் தனி மனிதனுடைய சுதந்திரத்தைத் தடுக்கக்கூடாது என மில் கூறுகிறார்.

மில்லின் கருத்துகளில் சில நியாயமெனத் தோன்றினாலும் அவர் கூறுவதை முற்றிலும் ஏற்றுக கொள்ள இயலாது. எந்தவொரு செயலையும செய்பவனை மட்டும் சார்ந்துள்ளதா அல்லது பிறரையும் சார்ந்துள்ளதா என வரையறை செய்ய இயலாது. பெரும்பாலும் பிறரையும் சார்ந்தே உள்ளது. ஒருவனுக்குப் பேச்சுரிமை அளிக்கப்படும் போது அவன் பிறரைப் பழிக்காமலும், தூற்றாமலும், புறக்கணித்துப் பேசாமலும் இருக்கவேண்டும் மேலும், அரசாங்கத்திற்கு எதிராகப் பிறரைத் தூண்டாமல் இருக்கவேண்டும். எனவே, ஒரு மனிதனுடைய பேச்சுரிமை குறிப்பிட்ட கட்டுப்பாட்டிற்கு உட்பட்டு இருத்தல் நியாயமாகும்.

எட்பர்ட் இசுபென்சர் (Herbert Spencer) என்ற சமூகவியலறிஞர் படிமலர்ச்சிக் கோட்பாட்டின் (Evolutionary Theory) மூலம் தனித்துவத்தைப் பற்றி விவரிக்கிறார். 'அனைத்து உயிரினங்களும் உயிர் வாழ்வதற்கு ஓயாது போராடிக்கொண்டிருக்கின்றன. அப்போராட்டத்தில் வெற்றி பெற்றுத் தப்பிப் பிழைக்கின்றவை வாழத் தகுதியாகின்றன. இது இயற்கையின் விதியாகும். அரசாங்கத்தின் நோக்

கழும் இயற்கை விதியை ஆதரிப்பதாகும். எதிரிகள் வெளியிலிருந்து தாக்காதவாறு பாதுகாப்பதும், மக்கள் தமக்குள் செய்து கொள்ளும் பொருளாதார ஒப்பந்தத்தை மீறினால் தண்டிப்பதும அரசின் கடமையாகும். இவ்விரு கடமைகளைத் தவிர்த்துப் பிற பணிகளில் அரசாங்கம் தலையிடுதல கூடாது. இதற்கு மாறாகச் சமூகத்தில் தகுதியற்றவர்களைத் தகுதியுள்ளவர்களோடு சமமாக்குவது பெரிய குறற மாகும். தடையற்ற போட்டியே மக்கள அனை வருககும் சுதந்திரம் அளித்துப் பொதுநலத்தைக காக்கின்ற வழியாகும். எனவே, பொருளாதாரத துறையில் அரசாங்கம் தலையிடுதல் கூடாது. தனித் துவமே அஙகு மேலோஙகி இருக்க வேண்டும் என இவர் கூறுகிறார்.

இசுபென்சருடைய தனித்துவக் கொளகை களிலும் பல சிக்கல்கள் உளளன. ஏனெனில் இவருடைய படிமலர்ச்சிக் கோட்பாடு நிரூபிககப் பட்ட உண்மையன்று. எனவே, இதை ஆதாரமாகக் கொணடு தனித்துவத்தை விளக்குவது தவறாகும். மேலும மக்களை வாழத் தகுதியுளளவர், தகுதி யற்றவா எனப்பகுத்துக் கூறுதலும் இயலாது. படி மலர்ச்சிக் கொள்கைவாதிகளும் இதுபற்றி விவர மாகக் கூறவிலலை. தடையறற போட்டியே அனை வருக்கும் சுதந்திரம அளிக்கின்ற பொதுநலம என்பதும் தவறு. தகுதியற்றவர்களையும், தகுதியுளள வர்களையும சரிசமமாக்குவது தவறு எனறால் தடை யறற போட்டியின் மூலம் வலியோரையும், மெலி யோரையும் சமமாக்குவதும் தவறாகும்.

அரசாங்கத்தின் கடமை வெளி எதிரிகள் தாக்காதவாறு பாதுகாப்பதும், குற்றங்களைத் தண்டிப்பதிலும் மட்டும் அடங்கி விடுவதில்லை; மக்கள் அனைவருக்கும் நியாயம் அளிப்பதிலும அடங்கியுளளது. இதற்கு அரசாங்கம் பொருளா தாரத் துறையில் தலையிடுவது இனறியமையாத தாகிறது.

எனவே, அதிகாரத்தை அதிகமாகத் தடுப்பதும், சுதந்திரத்தை அதிகமாகக் கொடுப்பதும் தவறாகும். அரசாங்கத்தின் அதிகாரம் அளவாக இருப்பதுடன மனிதனுக்குச் சுதநதிரமும் இனறியமையாதது என்பதையே தனித்துவத்தின் கொளகையாக மனிதன் கொள்ளவேணடும். பூ. த.

**தனிநாயக அடிகள்:** தமிழின் சிறப்பை 20-ஆம் நூற்றாண்டில், பாரறியச் செய்த பெருமைக்குரியவர்களுள் தவத்திரு தனிநாயக அடிக ளார் ஒருவராவார். இலங்கை, யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த தனிநாயகம் கத்தோலிக்கக் கிறித்தவச் சமயத்தினர். இவர் கி பி. 1913-ஆம ஆணடு பிறந தார்.

பள்ளிப் பருவத்திலேயே கல்வியிற் சிறந்து விளங்கினார். குருவாகச் சேவை செய்ய எணணிக் கொழுமபில் உள்ள குரு மடத்தில் சேர்ந்தார். பின னர் உரோமையிலுள்ள குருத்துவக் கலலூரிககுச் சென்று இறையியல் பயினறார.இறையியலில டாக்டர் பட்டமும் (Doctor of Divinity) பெற்றார். இவர் 1938 மார்ச், 19-இல குருவாகத் திருநிலைப்படுததப் பட்டார்.

பினனர்த தமிழகம் வநது தூத்துக்குடி மறை மாவட்டத்தில் உளள வடக்கன் குளத்தில உள்ள உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியப் பணி புரிநதாா. அதன் பின அணணாமலைப் பலகலைக் கழகத்தில சேர்ந்து தமிழ முதுகலைப் பட்டமும், 'பழந்தமிழ இலககியத்தில இயற்கை' எனனும தலைப்பில ஆய்வு செய்து எம்.லிட். பட்டமும் பெற்றார். பின்னா இலங்கைப் பல்கலைக கழகத்தின கலவித் துறையில விரிவுரையாளராகப் பணியாறறினார். அதனபின 1961-இல் மலேசியப் பலகலைக கழகத்தின் இநதியப பிரிவுக்குத் தலைவராகப் பொறுப்பேற்றுப் பணிபுரிந்து 1969-இல ஓய்வு பெற்றார்

தமிழ், ஆஙகிலம், இத்தாலி, இலத்தீன், பிரஞ்சு இசுபானிசு, செருமன் ஆகிய மொழிகளில் புலமை பெற்றிருநத தனிநாயக அடிகளாருக்கு ஈபுரு, கிரீககு, சமசுகிருதம், போர்த்துகிசு, உருசியன, மலாய், சிஙக ளம் ஆகிய மொழிகளும் தெரியும். இவர்தம பன மொழிப்புலமை, தாயமொழியாம தமிழமீது கொண டிருந்த பற்றினைச் சற்றும குனறததிலது.

பனமுறை உலகச் சுற்றுப்பயணஙகளை மேற் கொண்டு ஆங்காஙகுள்ள பல்கலைக கழகங்களில சொற்பொழிவாறறியுளளார். தமிழின் புகழை, உல கெஙகும் தம் சொற்பொழிவுகளின வாயிலாக அறி வித்த தமிழ்த தூதுவராக விளஙகினார். உலக நாடு களில உள்ள அறிஞர்கட்குத் தமிழைக கற்கும் ஆர் வத்தைத் தூணடிப் பல்கலைக் கழகப் பாடத்திட்டத் தில தமிழைச் சேர்க்குமாறும்,தமிழ் பற்றி ஆய்வுசெய் தற்குரிய வாய்ப்புகளை ஏற்படுத்துமாறும் செய்தார்.

அனைத்துலகத் தமிழ் ஆய்வு மன்றத்திற்கு (1964-International Association of Tamil Research) அடிப் படையிட்டோருள் இவரே முதல்வர். அம்மனறத்தின சார்பில் முதல் உலகத் தமிழ் மாநாட்டை 1966-இல் கோலாலம்பூரில் நடத்திய சிறப்பும் இவருக்குரிய தாகும். சென்னை, பாரிசு, யாழ்ப்பாணம் முதலிய

இடங்களில பின்னர் நடைபெற்ற மாநாடுகளில் இவர் தம் பங்கும் பணியும் போற்றத்தக்கன.

கிறித்தவ இலக்கிய வளர்ச்சியை நோக்கித் தூத்துக்குடியில் தமிழ் இலக்கியக்கழகம் என்ற நூல் வெளியீட்டு நிறுவனத்தைத தொடஙகினார். அது இப்பொழுது திருச்சியில இயங்கி வருகிறது. தமிழ் மொழி, தமிழப் பண்பாடு பற்றிய ஆய்வியல் கட்டுரைகளைத் தாங்கி வந்த தமிழ்ப் பண்பாடு (Tamil Culture) என்னும் காலாண்டு இதழை 1952-இல் தொடங்கித் தமிழ்ப் பண்பாட்டுக் கழகத்தின்(Academy of Tamil Culture) வழியாக வெளிவருமாறு செய்து, 1967 வரை அவரே அதன் முதன்மையாசிரியராய்ப் பணியாற்றினார். பின்னர் அவ்விதழின் வேறாகத் தொடங்கப்பட்ட இதழுககு (Journal of Tamil Studies) 1969 வரை இவரே முதன்மையாசிரியராய் இருந்தார்.

இவரது டாக்டர் பட்ட ஆய்வு நூல் (The Carthaginian Clergy) 1942-இல் வெளியிடப்பட்டது. எம்.லிட். பட்டத்திற்கான ஆய்வு நூல் 'தமிழ் நூலகளில் இயற்கை' (Nature Poetry in Tamil) என்னும் தலைப்பிலும், பின்னர் 'நிலமும் செய்யுளும்' (Landscape and Poetry) என்னும் தலைப்பிலும் வெளிவந்துள்ளன. 'தமிழ்த்தூது' என்னும் நூல் இவர்தம் திறனாய்வுக் கட்டுரைகளைக் கொணடதாகும். 'ஒன்றே உலகம்' இவர் மேற்கொண்ட பயணம் பற்றிய நூலாகும். இவர்,மேலும் பல ஆங்கில நூல்களையும் எழுதியுள்ளார். தமிழ்-போர்ச்சுக்கிய அகராதியை (The Tamil Portuguese Dictionary of Proenca,1679) புகைப்படப் பதிப்பாக முனனுரையுடன் வெளியிட்டுள்ளார். சிறந்து விளங்கிய இவர் 1980-இல் காலமானார். சூ.இ.

**தனி நிறுமம்,** குறைந்த அளவு இருவரையும், உயர்ந்த அளவு ஐம்பது பேர்களையும் உறுப்பினர்களாகக் கொண்டுள்ளது. நிறுமத்தில் வேலை பார்த்தவர்களையும், வேலையில் இருப்பவர்களையும் மேற்கூறிய உயர்ந்த அளவில் சேர்த்துக்கொள்ளக் கூடாது. இந்நிறுமத்தின் பஙகுகளை மாற்றித்தர இயலாது. பொதுமக்களுக்கு இந்நிறுமத்தின பங்குகள், கடனீட்டுப் பத்திரங்கள (Debentures) போன்றவை வழங்கப்படுவதிலலை. இதன் உறுப்பினர்கள் பெரும்பாலும் ஒரு குடும்பத்தைச் சார்ந்தவர்கள அலலது அவர்களின் உறவினர்கள அல்லது அவர்களின நெருங்கிய நணபர்கள ஆவார்கள். எனவேதான் மேற்கூறிய நிபந்தனைகள் விதிக்கப்பட்டுள்ளன. இஙகு உறுப்பினர்கள ஒருவரையொருவர் நன்கறிந்திருப்பதால சட்டம் இதன் நிருவாகத்தில் அவ்வளவாகத் தலையிடுவதிலலை. இத்தகைய நிறுமஙகள் தம் பெயர்களின் இறுதியில் 'தனி வரையறுத்தது' (Private Limited) என்ற சொற்களை அவசியம் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

**பொது நிறுமத்திற்கும் தனி நிறுமத்திற்கும் உள்ள வேறுபாடுகள்:** 1) தனி நிறுமத்தை அமைப்பதற்குக் குறைந்தது இரண்டு உறுப்பினர்களும், கூடிய அளவு ஐம்பது உறுப்பினர்களுக்கு மிகாமலும் இருந்தால் போதும. ஆனால் பொது நிறுமத்திற்குக் குறைந்த அளவு ஏழு உறுப்பினர்கள வேணடும். மேலவரமபு இல்லை. எவ்வளவு உறுப்பினர்கள் வேண்டுமானாலும் சேர்த்துக்கொள்ளப்படலாம். 2) தனி நிறுமத்தில் பங்குகள் பொதுமக்களுக்கு வழங்கப்படுவதில்லை. ஆனால் பொது நிறுமததின் நோக்கமே பொதுமக்களுக்குப் பங்குகள் வழங்குவதுதான. 3) தனி நிறுமத்தில் பங்குகளை மாற்றித்தர முடியாது அதாவது ஒருவர், தன் பங்கை மற்றவருக்கு மாற்றித் தர முடியாது. ஆனால், பொது நிறுமத்தின் உறுப்பினர்கள் தம் பங்கை மற்றவர்களுக்கு மாற்றித் தந்திடலாம. 4) தனி நிறுமம் (Private Company) பதிவுச் சான்று பெற்றவுடனே தன் தொழிலைத் தொடங்கிவிடலாம். நிறுமப் பதிவாளரிடமிருந்து தொழில் தொடக்கச் சான்றிதழ் பெற்ற பின்னரே பொது நிறுமம் தொழில் தொடங்கலாம். 5) தனி நிறுமத்தில் குறைந்த அளவு இரண்டு இயக்குநர்களும் பொது நிறுமத்தில் குறைந்த அளவு மூனறு இயககுநர்களும் இருக்கவேண்டும். 6) தனி நிறுமத்தில் நிறுமத்தின் முதற்கூட்டமான சட்டமுறைக் கூட்டம் (Statutory Meeting) நடத்தவேண்டிய அவசியமில்லை. பொது நிறுமம் இக்கூட்டத்தைக் கட்டாயம் நடத்தவேணடும். 7) தனி நிறுமத்தின்மீது அரசின் கண்காணிப்பும் கட்டுப்பாடும் மிகுதியாக இல்லை. ஆனால பொது நிறுமத்தின் நடவடிக்கைகளை நிறுமச் சட்ட நிருவாகத்துறை நுணுக்கமாகக் கண்காணித்துவருகிறது. மேலும் நிறுமச் சட்டம் விதிக்கும் கட்டுப்பாடுகள எண்ணிக்கையில் பல. 8) தனி நிறுமத்தின் பங்குகள் பங்கு மாற்றுச் சந்தையில் விற்கப்படுவதில்லை. பொது நிறுமத்தின் பங்குகளைப் பங்குச் சந்தையில வாங்குவதும் விற்பதும் உணடு.

**தனி நிறுமத்தின் தனியுரிமை:** மேறகூறிய ஒப்பு நோக்குகளினால் பொது நிறுமததைவிடத் தனி நிறுமம் சில சிறப்புரிமைகளையும், தனிச் சலுகைகளையும் பெற்றுள்ளது தெரியவருகின்றது. தனி நிறுமத்திற்குக் குறைந்த அளவு உறுப்பினர்கள் இருந்தால் போதும். இரண்டு இயக்குநர்கள் போதும். அவர்களின் ஒப்புதலை நிறுமம் பதிவாளருக்கு அனுப்ப வேண்டிய அவசியமில்லை. பதிவாளரிடம் தகவல

றிக்கை அல்லது அதற்குப் பதிலாக உள்ள அறிக்கை முதலியவற்றை ஒப்படைக்க வேண்டிய கட்டாய மில்லாமல் பதிவுச் சான்றிதழ் வந்தவுடனே தொழி லைத் தொடங்கலாம். பங்குகளின் வகை, குறைந்த அளவு பங்கெடுப்பு, பங்கு ஒதுக்கீடு போன்றவை மீது தனி நிறுமத்தில் எவ்விதக் கட்டுப்பாடும் இல்லை. நிறுமத்தின் முதற்கூட்டமான சட்டமுறைக் கூட்டம் நடத்தவேண்டிய இன்றியமையாமையில்லை. விகித அளவு வாக்குரிமை இல்லாத பங்குகளை அது வெளியிடலாம். கூட்டம் நடத்துதல், ஓட்டுரிமை, இயக்குநர்களை வேலைக்கு அமர்த்துதல், இயக்குநர் களை முறைப்படி ஓய்வு பெறச்செய்தல், இயக்குநர் களுக்குக் கடன் வழங்குதல், நிருவாக முகவர்களை அமர்த்துதல், நிருவாக ஊதியம் வழங்குதல் போன்ற றவை மீதுள்ள கூட்டுப்பாடுகள் தனி நிறுமத்திற்குப் பொருந்தா. எனவே, தனி நிறுமம் ஒருபுறம் கூட்டுப் பங்கு நிறுமத்தின் சிறப்புக்கூறுகளான சட்டத்தோற் றம், நிரந்தரமான இயக்கம், வரையறுக்கப்பட்ட பொறுப்பு போன்றவைகளை அனுபவித்துக் கொண் டிருக்கிறது. மறுபுறம் பொது நிறுமங்களின் மீதுள்ள கட்டுப்பாடுகளிலிருந்து விடுபட்டு உள்ளது. எனவே, பல விதங்களில் பொது நிறுமத்தைவிடத் தனிநிறுமம் தனி உரிமைகள்பல பெற்றுச் சிறந்து விளங்குகிறது.

**தனி நிறுமத்தைப் பொது நிறுமமாக மாற்றுதல்:** தனி நிறுமத்தைப் பொது நிறுமமாக மாற்றுவதற் குக் கீழ்க்காணபவற்றைச் செய்ய வேண்டும்.

1) தனி நிறுமம் என்ற முறையில் தன்மீது விதிக் கப்பட்டிருக்கும் மூன்று வரையறைகளை நீக்கும் வண்ணம் தன் செயல்முறை விதிகளைத் திருத்திய மைப்பதற்காக அதுசிறப்புத் தீர்மானம் ஒன்று இயற்ற வேண்டும்.

2) இச் சிறப்புத் தீர்மானம் இயற்றப்படும் அன்றே அது தனி நிறுமமாக இயங்குவது நீங்கிப் பொது நிறுமமாக இயங்கத் தொடங்குகிறது. 3) தன் செயல்முறை விதிகளில் பொது நிறுமத்திற்கு ஒவ்வா மல் இருக்கிற ஏனைய விதிகளையும் தக்கவாறு மாற் றியமைக்க வேண்டும். 4) தன் பெயரிலிருந்து 'வரை யறுத்தது' என்ற சொல்லுக்கு முன்னேயுள்ள 'தனி' என்ற சொல்லை அகற்றவேண்டும்.5) தன் உறுப்பினர் கள் எழுவருக்குக் குறைவாக இருந்தால் குறைந்தது அந்த அளவுக்காவது உறுப்பினர் எண்ணிக்கையை உயர்த்த வேண்டும். அதுபோலவே இயக்குநர் எண் ணிக்கையையும் மூன்றாக உயர்த்தவேண்டும். 6) மேற் கூறிய தீர்மானம் இயற்றப்பட்ட 30 நாள்களுக்குள் அ)அத்தீர்மானத்தின் அச்சிடப்பெற்ற அல்லது தட்டச் சால் எழுதப்பெற்ற நகல் ஒன்றையும், ஆ) நிறுமச் சட்டத்தின் அட்டவணை இரண்டின் I, II ஆம் பகுதி கள் குறிப்பிடும் செய்திகளைத் தாங்கிய தகவலறிக்கை (prospectus) அட்டவணை IV இன் முதற்பகுதி குறிப் பிடும் செய்திகளைத் தாங்கிய 'தகவலறிக்கைக்குப் பதிலான அறிக்கை' (Statement in Lieu of prospectus) களில் ஒன்றையும் பதிவாளரிடம் தாக்கல் செய்ய வேண்டும். நிறுமப் பதிவாளர் அந்த ஆவணங் களை ஆராய்ந்து அந்த நிறுமத்தின் கூட்டுருவாக்கச் சான்றிதழில் தக்க மாற்றங்களைச் செய்து தருவார்.

**பொது நிறுமத்தைத் தனி நிறுமமாக மாற்றுதல்:** பங்கு முதலையும் ஐம்பது பேருக்கு மிகாத உறுப் பினர்களையும் கொண்டுள்ள ஒரு பொது நிறுமம் தன்னைத் தனி நிறுமமாக மாற்றிக்கொள்ள வேண்டு மானால் கீழ்வரும் நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். 1) தனி நிறுமங்கள்மீது பொதுப்படை யாக விதிக்கப்படும் மூன்று வரையறைகளைத் தன் செயல்முறை விதிகளும் கொண்டிருக்குமாறு அவற்றை மாற்றி அமைக்கவேண்டும். அ) தன் பங்கு களை உரிமை மாற்றம் செய்வதற்கான வரை யறை, ஆ) எப்பொழுதும் உறுப்பினர்கள் 50பேருக்கு மிகாமல் இருக்க வேண்டும் என்ற வரம்பு, இ) தன் பங்குகளையோ கடனீட்டுப் பத்திரங்களையோ எடுத்துக்கொள்ளுமாறு பொது மக்களுக்கு அழைப்பு விடுப்பதற்குத் தடை என்னும் இத்திருத்தங்களை யும், மாற்றங்களையும் செய்வதற்காகத் தன் பேரவைக் கூட்டத்தில் சிறப்புத் தீர்மானம் இயற்ற வேண்டும். 2) தன் பெயரில் 'தனி' என்ற சொல் 'வரையறுத்த' என்னும்சொல்லுக்கு முன்பாக வரு மாறு அதைத் திருத்தியமைக்க வேண்டும். குறிப் பாக இந்த மாற்றத்தைத் தன் அமைப்புமுறை ஏட்டி லுள்ள பெயர்ச்சரத்தில் செய்ய வேண்டும். 3) தனி நிறுமமாகத் தன்னை மாற்றிக் கொள்வதற்கு மைய அரசின் இசைவைப் பெறவேண்டும். அதைப் பெறும்வரை தன்னைத் தனி நிறுமமாக மாற்றிக் கொள்வதற்காக இயற்றிய தீர்மானம் நடை முறைக்கு வராது. எனவே, அந்நிறுமம் சிறப்புத் தீர் மானம் இயற்றிய மூன்று மாதங்களுக்குள் மைய அரசின் இசைவு கோரி, அதற்குரிய கட்டணத்தையும் செலுத்தி ஒரு விண்ணப்பம் செய்ய வேண்டும். அவ் விண்ணப்பத்தில், 1) மேற்கூறிய சிறப்புத் தீர்மானம் இயற்றிய சிறப்புப் பேரவைக் கூட்ட (Extraordinary General Meeting) நடவடிக்கைக் குறிப்பின் நகல், 2) 25-க்கு மேற்பட்ட பங்காளர் இந்த மாற்றத்தை ஆதரித்து வாக்களிக்காதிருப்பின் அவர்கள் அனை வரின் எழுத்து மூலமான இசைவு ஆகியவற்றை இணைக்கவேண்டும். இம்மாற்றத்திற்குப் பங்காளர் களிடையே உடன்பாடு இருக்கிறது என்றால் மைய அரசு உடனே இசைவு தரும். இவ் இசைவு பெற்ற

ஒரு மாததிறகுள அந்நிறுமம் திருத்தப்பெற்ற தன செய்முறை விதிகளின் அச்சிட்ட படி ஒன்றை நிறுமப் பதிவாளரிடம் சேர்க்கச் செய்யவேணடும். மேலும் சிறப்புத் தீமானம் இயற்றப்பட்ட முப்பது நாள் களுக்குள அத்தீமானத்தின அசசிட்ட அல்லது தட் டச்சால் எழுதப்பட்ட படி ஒன்றையும் பதிவாளரிடம் அளிக்கச் செய்யவேணடும். கே.என்.இரா.

**துணை நூல்:**

**Ashok K. Bagrial,** Company Law, Vikas Publishing House Pvt.Ltd., New Delhi, 1982.

*தனிப்பாடற்றிரட்டு:* காளமேகப்புலவர், ஔவையார், திருவள்ளுவர், கம்பர் முதலிய பெரும புலவர்கள் பலவேறு நிலைகளில் பாடியனவாக வழஙகிய தனிப்பாடல்களை எல்லாம் ஒருங்கு சேர்த்து முதலில 'தனிப் பாடற்றிரட்டு' என்னும் பெயரால் வெளியிட்டவர் சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த இரு பெரும் புலவர்கள். அவர்கள திலலையம்பூரிச சந்திர சேகர கவிராச பணடிதரும் காஞ்சீபுரம் வித்துவான கச்சபாலய அய்யரும ஆவர். இத்திரட்டினை ஆக்கு வதறகு இவர்களுக்கு ஊக்கம் தநது உதவியவர் இராமநாதபுரம் சமசுதானம் பொன்னுசாமித் தேவர் ஆவார். தேவரவர்கள் திருக்குறள - பரிமேலழகர் உரை, திருக்கோவையார் உரை முதலிய நூல்கள வெளிவருவதற்கு முதற காரணமாய் அமைந்தவர் எனபது இங்குக் குறிப்பிடத்தகும்.

இத்தனிப்பாடற்றிரட்டு கி.பி. 1862-ஆம் ஆணடு முதற்புத்தகம், இரண்டாம புத்தகம் என இரு தொகுதிகளாக வெளிவந்தது. பெரும் புலவர் கோ. சபாபதி முதலியார் இதறகுச் சிறப்புப் பாயிரம் பாடி யுளளார். இதற்குச் சாத்துக்கவிகள் பாடியளித்தவர் நால்வர். அவர்கள திருத்தணிகை விசாகப் பெருமாளையர், காஞ்சிபுரம் சபாபதி முதலியார், அட்டாவதானம் வீராசாமிச செட்டியார், கூடலூர் இரிசப்ப உபாத்தியாயர் என்போர்.

இத்திரட்டு நூலில் புலவர்தம் பாக்களின் மூல பாடம் மட்டும் ஒருங்குதரப்பட்டுளளனவேயன்றி அவற்றைப் பாடிய சூழநிலை முதலியன விளக்கப் பெறவில்லை. பாடல்களும் சீர்முறைப்படிப் பிரிக்கப் படாமல் அடிவரையறை செய்யப்பட்டுக் காண்கின் றன. முதற் புத்தகத்தில் 1248 பாடல்களும் இரண் டாம் புத்தகத்தில் 850 பாடல்களும் காணப்படுகின றன. செயயுளகராதியும் நூலிறுதியில் தந்துள்ளனர்.

இதற்கு அடுத்தபடியாக கி.பி.1873 இல் காஞ்சி புரம் வா. வரதராசுலு நாயுடு பதிப்பு வந்தது; காஞ்சி புரம் இயற்றமிழ விளக்க அச்சுக்கூடத்தில் அச்சிடப் பெற்றது. இதில், 'இராமநாதபுரம் சமசுதானம் பொனனுசாமித் தேவர் அனுமதியினால் தில்லை யம்பூர் கவிராச பணடிதரும் காஞ்சிபுரம் வித்துவான் கச்சபாலய அய்யரும் பரிசோதித்து வெளியிட்ட பிர திக்கு இணங்க இப்பதிப்பு அமைந்துள்ளது' என்னும் குறிப்புக் காணப்படுகிறது. எனவே, இது முதற பதிப்பை அப்படியே பினபற்றி வந்த பதிப்பு என்பது பெறப்படும்.

இதன்பின் கி.பி.1877-78-இல் சென்னைக் கலாரத் நாகரப் பதிப்பு இரு பாகங்களாக வந்தது. இப்பதிப் பில் பாடல் பாடிய சூழ்நிலைகள் தரப்பட்டுளளன. அத்துடன் அருஞ்சொல் விளக்கமும் அங்கங்கே பாடல்களை அடுத்துத் தரப்பட்டுள்ளது.

மேலும் இந்த நூற்றாண்டில் கி.பி. 1884-இல் திருவெண்காடு ஆறுமுக சுவாமிகளால் ஒரு பதிப்பு வந்துள்ளது. இதில் முதற்பதிப்பைப் பின்பறறியதோடு சில பாடல்களை மிகுதியாகச் சேர்த்தும் வெளியிட் டுள்ளார். இதன் மறுபதிபபு கி.பி. 1887-இலும் வந்தது.

இதன்பின் பல வித்துவான்களின உரையுடன கூடிய பதிப்புகள 20-ஆம் நூற்றாணடில் வந்தன. இவற்றுள் முற்பட வைத்துக் கூறத்தக்கது காஞ்சிபுரம மகாவித்துவான் இராமசாமி நாயுடு என்பவரால செய்யப்பட்ட உரையுடன் கூடிய பதிப்பு. இப் பதிப் பில் (1911) ஒவ்வொரு புலவர் பாடிய பாடல்களின முன்பாக அவவப் புலவரின் வரலாறு கிட்டிய வரையி லான செய்திகளுடன் உரைநடையில தரப்பட்டிருக கிறது. பாடலகளின் தொடக்கத்தில பாடல் பாடிய சூழ்நிலை பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. பாடல களை எல்லாம் சீர்முறைப்படிப் பிரித்து அழகுற அச சிட்டுளளனர். அதன்பின் பதவுரை, விளக்கவுரைகள் ஒவ்வொரு பாடலுக்கும் காணப்படுகின்றன. இரு பாகமாய் அமைநத இந்நூல்களில் முதற்கண நூலுள் அமைந்த முறையில் புலவர் பெயர்களும் அவர் பாடிய பாடல் தொகையும் அவை தொடங்கும் பக்க எணணும் தரப்பட்டுள்ளன. அடுத்துச் செய்யுளகராதி யும் சேர்க்கப்பட்டிருக்கிறது. இவ்வுரைப் பதிப்புகள 1926-ஆம் ஆண்டிலும் பின்னரும் சில பதிப்புகளைப் பெற்றன.

இதனை அடுத்துச் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க உரைப்பதிப்பு 1939-ஆம் ஆண்டு சென்னை இரததின நாயகர் சன்சு வெளியிட்ட பதிப்பு. முறபதிப்புகள் போலவே இரண்டு பாகங்களாக இத்திரட்டு நூல் வந்துள்ளது. இதற்கு உரையெழுதி உதவியவர்

தமிழ்ப் பேராசிரியரும் தாகூர் சட்ட விரிவுரையாளரு மாகிய திருநெல்வேலி கா. சுப்பிரமணிய பிள்ளையவர் களாவர். இவர் புலவர் பாடிய பாடல்களை வர லாற்று முறைக்குத் தக்கபடி மாற்றி வைத்து அடைவு செய்துள்ளார். பாடங்கள் பல திருத்தங்களைப் பெற் றன. யாவரும் எளிதில் படிக்கும் வண்ணம் தேவையான குறிப்புகள் முதலியவற்றைச் சுருக்க மாகவும் எளிமையாகவும் அமைத்துள்ளார். முதற் பாகத்தில் கி.பி. 17-ஆம் நூற்றாண்டு வரைத் திகழ்ந்த புலவர் பாக்களும் தொகுத்துத் தரப்பட்டுள் ளன. இவற்றில் முறையே 870, 865 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இதுவும் மேலும் சில பதிப்புகளைப் பெற்றுள்ளது.

இவ்வாறாகத் தனிப்பாடல் திரட்டு மூலமாகவும் உரையுடனும் பல பதிப்புகள் பெற்றமை இந்நூலைப் பலரும் விரும்பிப் படித்துப் போற்றினர் என்பதை எடுத்துக்காட்டும்.

இத்தனிப்பாடல் திரட்டு நூலை மேலும் விரிவு படுத்தி வெளியிட்ட முயற்சி ஒன்றும் குறிப்பிடத் தக்கது. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் கருப்பக்கிளர் சு.அ. இராமசாமிப் புலவரைக் கொண்டு பழைய தனிப்பாடல் திரட்டு நூலுக்குப் புத்துரை கண்டு வெளியிட்டனர். அதோடு சென்ற நூற் றாண்டிலும் இந்நூற்றாண்டிலும் வாழ்ந்த புலவரும் வாழ்பவருமாகிய புலவர் பாடல்களையும் தொகுத்து ஐந்து தொகுதிகளாக வெளியிட்டுள்ளனர். இவற் றுள் 550-க்கும் மேற்பட்ட புலவர்களின் தனிப்பாடல் கள் ஏறத்தாழ 5000-க்கு மேல் தரப்பட்டுள்ளன.

தனிப்பாடல் என்னும் பெயருடன் சில ஏடுகள் சென்னை அரசாங்கக் கீழ்த்திசைச் சுவடி நிலையம், தஞ்சாவூர் சரபோசி மகாராசாவின் சரசுவதி மகால் நூல் நிலையம் போன்ற சுவடி நிலையங்களில் உள் ளன. இவற்றையெல்லாம் ஆராய்ந்து பார்ப்பின் தனிப்பாடல்கள் மேலும் பலவாம். கி.பி. 1867-இல் புலவர் ச. பாலசுந்தரனார் சரசுவதி மகால் ஏடுகளை ஆராய்ந்து இதுவரை வெளிவராத 216 பாடல்களைத் 'தனிப்பாடற்றிரட்டு' என உரையுடன் பதிப்பித்துள்ளார். புலவர் பாடிய பாயிரக்கவிகள், சாற்றுக்கவிகள், சாசனப் பாடல்கள் போன்றவற்றை யும் தனிப்பாடல்களாகக் கருதித் தொகுத்துப் பார்ப்பின் தனிப்பாடல்கள் பலலாயிரக்கணக்காக அமையும். மு.ச.

***தனிமகனார்***: இவர் சங்க காலப் புலவருள் ஒருவராவர். இவர்தம் இயற்பெயர் தெரியவில்லை. இவர் பாடிய ஒரே பாடல் நற்றிணை 153 ஆக இடம் பெற்றுள்ளது. பாலைத் திணையில் பிரிவிடை மெலிந்த தலைவி கூற்றில் இப்பாடலைப் புலவர் அமைத்துள்ளார். கீழ்க்கடலில் நீரை முகந்து மேற் றிசை சென்று இருண்டு, உலகம் விளங்கக் கம்மாளர் செம்பினாற் செய்த பானையைக் கடைந்தாற்போல் மின்னி எங்கும் மழைபொழிந்த மேகம், தெற்குப் பக்கம் சென்று ஒழிந்தாற்போலத் தலைவியின் நெஞ் சம், அவளிடம் தங்காமல் தலைவனிடம் சென் றொழிந்தது. அதனால், வெஞ்சினப் பகைவேந்தன் அலைத்தலின் கலங்கி ஊரில் வாழும் குடிமக்கள் எல் லாம் குடியோடு நீங்கிய பாழ்பட்ட நகரத்தைக் காவல் கொண்டிருந்த தனிமகனைப் போல அவ ளுடம்பு காக்கப்படும் தன்மையுடையதாயிற்று என் பதுவே அவர் பாடிய பாடற் கருத்தாகும். தலைவி தன் உடலைக் காத்தமைக்குப் 'பாழ் காத்திருந்த தனிமகன் போன்றே' என உவமை கூறிய திறத்தால் அவ்வுவமைத் தொடராலேயே தனிமகனார் என இப்புலவர் பெயர் பெறுவாராயினார். இது போலவே செம்புலப் பெயனீரார், விட்ட குதிரையார், ஓரேருழ வனார் முதலிய புலவர்களும் சங்க காலத்தில் உவ மைச் சிறப்பால் பெயர் பெற்றவர்களாவர்.

இரா.சா.

***தனிமொழி***: ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒரு மனிதன் பேசும் பேச்சின் தொகுதியே தனிமொழி எனப்படும். சிலரிடம் இரண்டு தனிமொழிகள் காணப் படுகின்றன. எனினும் இவ்விரு தனிமொழிகள் பற்றிய இணையான அறிவு இவர்களிடம் அமையப் பெற்றுள் ளதா என்பது சிக்கலாகவே உள்ளது. பல தனிமொழி களின் சேர்க்கையே மொழி என்பதால் தனிமொழி (idiolect) பற்றிய ஆய்வுக்கு முதலிடம் கொடுக்கப்பட் டுள்ளது. ஒரு மொழியின் குறிப்பிட்ட சில தனிமொழி களை ஆய்வு செய்வதன் வாயிலாக அம்மொழியினைத் தெரிந்து கொள்ளுதல் இயலும்.

ஒருவரின் தனிமொழியை நன்கு ஆராயின் அது பேசுவோரின் நடை வேறுபாடு, சமூக நிலையில் அவருடைய பங்கு ஆகியவற்றிற்கேற்ப வேறுபட்டமை வது தெரிய வரும். பேச்சு நடை என்பது கேட்போ ரின் தகுதிக்கும் எண்ணிக்கைக்கும் ஏற்ற முறையில் அமைய, பேச்சுமுறையோ பேசுகின்றவர் சமுதாயத் தில் எந்த நிலையிலிருந்து பேசுகின்றார் என்பதனை அடியொற்றி அமையும்.

ஒருவரின் தனிமொழியை இன்னொருவர் புரிந்து கொள்ளும் நிலையில், இருவரின் தனிமொழிகளுக் கிடையே புரிதிறன் (mutual intelligibility) காணப்படுகின்றது எனவும் ஒருவர் பேசுவதை இன் னொருவர் புரிந்து கொள்ள இயலாத நிலையில் இரு வரின் தனிமொழிகளுக்கிடையே புரிதிறன் காணப் பெறவில்லை எனவும் கூறலாம்.

ஒற்றுமைக்கூறுகள் பெரிதும் காணப்பெறுகின்ற பல தனிமொழிகள இணைந்து ஒரு கிளைமொழி (dialect) அமையப்பெறுகினறது. ஈணடுத் தனிமனிதப் பேச்சு வழக்கில் கருததுப்பரிமாற்றத்திற்கு ஏறபச் சில வேறுபாடுகள் நீககப்பெற்று, பொதுவாகத் திக ழும் பெருமபானமையான ஒற்றுமையின் அடிப்படை யில அவை ஒருஙகிணைந்து ஒரு கிளைமொழி என்ற நிலையினைப் பெறுகின்றன. கிளைமொழியைப் போன்றே மொழியும் ஒறறுமைக் கூறுகள் காணப் பெறும் பல தனிமொழிகள இணைநதே அமையப் பெறுகின்றது. கிளைமொழியில உள்ள தனிமொழி களுககிடையே காணப்பெறும் ஒறறுமைக் கூறுகளைக் காட்டிலும் ஒரு மொழியின கண்ணுளள தனிமொழி களுக்கிடையே மிகக் குறைந்த அளவு ஒறறுமைக கூறுகளே காணப்படும். இங்ஙனம தனிமொழிகளுக கிடையே காணப்பெறும புரிதிறனுககு அடிப்படை யாக அமையும் ஒற்றுமைக கூறுகளை அடியொற் றியே மொழி, கிளைமொழி எனற பாகுபாடு அமையப் பெறுகின்றது.

மொழியினகண காணப்பெறும் தனிமொழிகள பெரும்பாலும் ஒனறுக்கொனறு புரிதிறன் உடையன வாக அமைநது நேரடித தொடாபுடைய சங்கிலித் தொடா போல் அமையப் பெற்றிருககும். பெரும் பான்மையான தனிமொழி இணைகள் புரிதிறன பெரிதும் உடையனவாக அமையும் நிலையில் ஒரு கிளைமொழியில் நெகிழசசி மிகவும குறைவாக இருக கும். ஏ.ஆ.

**துணை நூல்கள:**

**Hall, Rodert, A.J**, Idiolect and Linguistic Super -Ego, 'Studia Linguistica', Vol. 5, 1951.

**Hockett, C.F.**, A course in Modern Linguistics, Oxford Publication co, New Delhi, 1958.

***தனியார் உரிமைக் கொள்கை:*** அரசியல் நூலில ஆயவு செய்யப்படுகிற பல குறிப்பிடததக்க கேள்விகளுள, "அரசாங்கத்தின கடமைகளின எல்லை அல்லது வரமபு யாது?" என்ற கேளவியும ஒன்றாகும்; இந்தககேளவி பற்றி இங்கிலாந்தில கி.பி.18-ஆம் நூற்றாணடில ஆராயப்பட்டபோது தோன்றிய ஒரு கொளகையே தனியார் உரிமைக் கொள்கை (Individualism) ஆகும். பொருள்களைச் செய்தல, விற்றல், வாங்குதல, தொழிலகளை நடத துதல் முதலிய அரசியலலாத துறைகளிலுள்ள செயல்களிலெல்லாம் அரசாஙகம் தலையிடாமல், அவற்றையெல்லாம் தனியார்களே திட்டம் செய்து நடத்தும் படியாக விட்டுவிடுதல் வேண்டுமெனபதே இக்கொளகையின் சாரமாகும்.

**இக்கொள்கையின் தோற்றம்:** ஐரோப்பாவில் கி.பி.16-ஆம் நூற்றாண்டில் தோன்றிய தேசிய அரசுகளில் அரசர்கள வரமபற்ற அதிகாரங்களைச் செலுத்தி வாழ்வின் எலலாத் துறைகளிலுமுள்ள செயலகளைக கட்டுப்படுததினர். ஆகையால ஆளு வோரின நலன்களுக்கும் குடிகளின் நலனகளுககு மிடையேயுளள வேறுபாடு நனகு உணரபபட்டது. மக்களுடைய நலன் சார்பாகக் கருத்துகளும கிளர்ச் சியும் தோனறின. அககிளர்ச்சியின்போது, மககள் நலன் சார்பாக இயற்கையின் சட்டம என்ற கொள்கை சுட்டிக காட்டப்பட்டது. அக்கொள கையை கி.பி.17-ஆம நூற்றாணடில் சான் இலாக்கு (John Locke) என்ற ஆஙகிலச் சிநதனையாளா விரித துரைத்து மனிதனுடைய இயறகையான, உளளார்நத உரிமைகளே அரசாங்கததின செயலகளுக்கான எல்லைகளை அலலது வரமபுகளை ஏற்படுத்துகின றன எனறு குறிப்பிட்டார். இலாக்கு குறிப்பிட்ட இநத விளககமே கி.பி.18-ஆம் நூறறாணடில் யாவ ராலும் ஒப்புக்கொள்ளப்பட்டு, அதுவே கி.பி.19-ஆம நூற்றாணடில தனியார் உரிமைக் கொளகைக்கு ஒரு தத்துவ இயல்புடைய சான்றாக அலலது தோறறு வாயாக ஆயிறறு. இககொள்கை கி.பி.18-ஆம நூற்றாணடுககு முன்னர் இருநத அரசின விரிவான அதிகாரககொளகைக்கு ஓா எதிர்பபுக் கொள கையாகத் தோன்றிற்று. வாணிகத துறையில பல வகையான கட்டுபபாடுகளை விதிககும அரசாஙகச் சட்டங்கள இருந்தன. கபபல போககுவரவுச்சட்டம, தானியச் சட்டம், சுங்கவரிச் சட்டஙகள முதலியன வெலலாம தடையற்ற வாணிகக கொளகைக்குத் (Free Trade) தடையாக இருநதன. இசசூழநிலையில புதிய இயநதிரங்கள கணடுபிடிக்கப்பட்டு நூற்பு, நெசவு முதலியவறறில இயநதிரங்கள் கையாளப்பட் டுப் பெருமளவில ஒரேமாதிரியான பொருளகள குறைந்த காலத்தில் செய்து குவிககப்பட்டன. இஙகி லாந்துக்குக் குடியேறற நாடுகள கிடைக்கவே அவற் றில் ஆஙகிலப் பொருளகளை விற்கவும், கச்சாப் பொருளை வாங்கவும சநதைகள் தோனறின. இச சூழ்நிலைகளில் அரசாஙகததின கட்டுப்பாடுகளும் சட்டதிட்டங்களும், மூலதன வசதியுடைய தனியார் கள் தங்கள விருப்பம்போல தொழிலகளைத் தொடங்கி நடததுதற்கும, வாணிகம் செயதற்கும் தடையாக இருந்தன. இதனை உணர்ந்த சிநதனை யாளாகள் பொருளாதாரத் துறையில் அரசாங்கம தலையிடுதல் கூடாதென்று கருதி இக்கோட்பாட்டை வகுத்தனர்.

**கொள்கையிலுள்ள கருத்துகள்:** தனியாா உரிமைக் கொளகையை (Individualism or laisser faire) விளக் கிச் சான இசுடுவேர்ட்டு மில (John Stuart Mill) 'விடுதலையைப் பற்றி' (On Liberty) என்ற தம்

நூலில் கூறும்போது மனிதர்கள் கூட்டாகவோ, தனித்தனியாகவோ, தங்களில் எவருடைய செயலி லும் சுதந்திரத்திலும் தலையிடுதற்கு ஒரே காரணம் தான் இருத்தல் கூடுமென்றால் அது அவருடைய தற் காப்புக்கு மட்டுமே ஆகும் என்றும், ஒருவர்மீது அர சாஙக அதிகாரம் கையாளப்படுதற்குரிய ஒரே கார ணம் அவா மற்றவருக்குத் தீங்கு செய்யாமல் தடுத்தல் என்பதுதான என்றும், ஒவ்வொருவரும் தமமைப் பொறுத்த செயலகளிலெலலாம முழுமையான, வரம் பற்ற சுதநதிரமுடையவரென்றும், ஒவ்வொருவரும் தம் உடம்பையும் அறிவையும பொறுத்தவரை தலைமை அதிகாரமுடையவரென்றும், எவருக்கும் கட்டுப்பட்டவரலலர் என்றும கூறினார். ஏறக்குறைய இவைபோன்ற கருத்துகளை எர்பர்ட்டு இசுபென சரும் (Herbert Spencer) கூறினார். அவருடைய கருதது தனியார்களை வெளிநாட்டுப் பகைவாகளிட மிருந்தும, உளநாட்டுப பகைவாகளிடமிருந்தும் காப் பாற்றுதல எனற பணியையும், தனியார்கள தமக்குள செய்துகொளளும் ஒப்பந்தஙகள் சட்டப்படி நிறை வேறறப்படுமாறு செய்தல எனற பணியையும மட் டுமே அரசாஙகம செய்தல் வேணடும்; இவற்றைத் தவிர அரசாங்கம் வேறெந்தப் பணியையும் செய்த லாகாது எனபதாகும.

**இக் கொள்கைக்குச் சார்பான மூன்று வாதங்கள்:** ஒனறு தனியார் உரிமைக் கொள்கைககுச சாாபாகக் கூறப்படும் ஒழுக்க இயலான வாதம் (Ethical Argument). இக்கொளகையானது தனியாருடைய முழு ஒழுக்க வளர்ச்சிக்கு மிகவும் ஏற்றது என்பதே ஆகும். மற்றொன்று, ஒவவொருவரும் தம வாழக்கையைத் தம் கருததுகளுக்கு இயைய உருவாக்கிக் கொள்ளும் சுதந்திரத்தைப் பெற்றிருத்தல வேண்டும; இச் சுதந திரமும் அவா அரசாங்கத்தின தலையீடோ, பிறரின தலையீடோ இலலாமல் தறசார்பும் (Self - reliance), தன் முயற்சியும் உடையவராக இருத்தல் வேண்டும். இக் கொள்கையின சார்பாக உயிரியலிலிருந்து 'தகுதி உடையது நிலைத்து வாழும்' என்ற ஒரு சொற் றொடரை (The survival of the fittest as a phrase) எர்பர்ட்டு இசுபெனசர் கூறுகிறாா:தாழந்த உயிரினங களில் ஒவ்வொன்றும் வாழ்க்கைப் போராட்டததில் ஈடுபட்டு, அதில் வெற்றி பெறுவதே நீடித்து வாழ்வது போல, மனித இனத்திலும் அரசாஙகததின தேவை யற்ற தலையீடும், கட்டுப்பாடும இனறி ஒவவொரு வரும் தத்தம் திறமைகளைத தாமே வளர்த்துக் கொளளவும், வாழவும் சுதநதிரம் இருநதால மனித ருள் வாழ்வதற்குத் தக்க திறமையும் வசதியும் படைத்தவர் வாழ்வர்; மற்றவர் வாழ இயலா நிலைக் குத் தள்ளபபடுவர். பிறிதொன்று பொருளியல சார் புானதாகும். பொருளியல் சார்பாக இச் கொள்கைக் குக் கூறப்படும் சான்றும் வலுவானதாகும். ஒவ் வொருவரும் தமக்குகநத நலனைத் தாமே நன்கு அறியவும், அதறகுகந்த வழியைப் பின்பற்றவும் வலலவராயிருக்கிறார். பொருளாதாரத் துறையில அரசாங்கத்தின தலையீடு இல்லாமல் சுதநதிரமான போட்டி இருக்குமானால, நுகாவோர் பொருள் களுக்கும் பணிகளுககும் நிறைய தேவையை உண டாக்குவர்; உற்பத்தியாளர்கள் இத் தேவையை நிறைவு செய்வதற்கு முயற்சி செய்வர்; நுகாவோருக் கும் உற்பத்தியாளருக்குமிடையே நிலவும் இபபோட்டி யின் காரணமாகத் தரமான பொருள்கள மலிவான விலையில் கிடைக்கும். இம்மூவகைக் காரணஙகளும் அரசாஙகம் தனியார் சுதந்திரததில தலையிடாமலி ருத்தல வேண்டுமெனற கருத்தை வலியுறுத்தின. ஆடம் சுமித்து (Adam Smith)எனற பொருளாதாரப் பேராசிரியரும அரசாஙகம் பொருளாதாரத் துறை யில் தலையிடுதல சரியனறு என்று கூறினார்.

**கொள்கை செயற்படுதலும், அதன் விளைவுகளும்.** தனியார் உரிமைக கொளகை இஙகிலாந்தில ஏறக் குறைய ஒரு நூற்றாணடுக் காலத்துக்கு (கி.பி. 1750 முதல் கி.பி. 1850 வரை) பொருளாதாரத் துறையில கடைப்பிடிக்கப்பட்டது. பழைய வணிக இயல கொள்கை (Mercantilism) கைவிடப்பட்டது. பிரிட்ட னுடைய அமெரிககாவிலிருந்த குடியேறற நாடுகள கி.பி. 1780-இல சுதந்திரம் பெற்றுவிடவே, வணிக இயல் கோட்பாடும் மதிப்பிழந்தது. இயந்திரஙகள வாயிலாகப் பொருளகளை உற்பத்தி செயயும் ஆலைத் தொழில் முறை பெறுகிற்று. தொழிலதிபர் களும், வணிகாகளும, முதலாளிகளும் அரசியல செல வாக்குப் பெறவே, அரசாஙகம் தொழில மீதும், வாணிகத்தின மீதும் இருந்த கட்டுப்பாடுகளையெல லாம் சிறிதுசிறிதாக நீக்கிற்று. சுங்க வரிகள் கி.பி. 1784-86-இல குறைக்கப்பட்டன. கப்பல போக்குவர வுச் சட்டம கி.பி. 1796-இல் தளர்த்தப்பட்டு கி.பி. 1849-இல் முற்றிலும் நீக்கப்பட்டது. தானியச் சட் டஙகள கி.பி. 1846-இல் தள்ளுபடி செய்யப்பட்டன. இந்திய வாணிகம் யாவருக்கும் உரியதாக கி.பி. 1813-இல் ஆக்கப்பட்டது.

பொருளாதாரத் துறையில் இத்தகைய நல்ல பல விளைவுகள் ஏற்பட்டபோதிலும், தனியார் உரி மைக்கொள்கையினால் நாளாவட்டத்தில பல சமூகச சீர் கேடுகளும் தீங்குகளுமுணடாயின. இககொளகை யினால் பயனடைநதோர் முதல்வளம உடையவர் களே,முதல் வசதி இல்லாதோர் வயிற்றுப் பிழைப்புக காக ஆலை முதலாளிகளிடம் எநத அளவு ஊதியத துக்கும, எந்தச் சூழ்நிலையிலும் வேலை செய்யவேண டிய அவல நிலையிலிருநதனர். நீண்ட நேரப் பணி, போதிய ஊதியமின்மை, இடர்ப்பாடான, நல்வாழ

வற்ற தொழிற்சாலைகள், 8 அல்லது 9 வயதுச் சிறுவர், சிறுமியரும் வேலையிலமர்த்தப்பட்ட கொடுமை முதலிய தீங்குகளெல்லாம் தொழிலாளர் நிலை பற்றிய அரசாஙக ஆய்வுக் குழுக்களின் அறிக்கைகளில் காணப்பட்டன.

இக்கொள்கையின் நன்மைகளும் தீமைகளும் இக்கொள்கையிலிருந்து 'சமநிலைக் கொள்கை' (Socialism) என்ற எதிர்நிலைக் கொள்கையைத் தோற்றுவித்தன. தன முயற்சி என்ற சீரிய பணபை இக்கொள்கை வலியுறுத்தி, அதை அழிககாத அளவில்தான சமூக அலலது அரசாங்கத்தின செயல் இருத்தல் வேண்டுமென்ற உண்மையைச் சுட்டிக் காட்டிற்று. பா.கு.

**துணை நூல்கள்:**


**Joad, C.E M.,** Introduction to Modern Political Theory, Oxford, 1924.

**Sidgwick, H ,** The Development of European Polity, Macmillan, 1903.

**Wilson, F.G.,** The Elements of Modern Politics, Mc Graw-Hill, 1936.


***தனியார் துறை:*** ஒரு நாட்டின் பொருளாதார முனனேற்றத்தில் வேளாணமை தொழில், வங்கியியல் ஆகியன பெரும பங்கு வகிக்கின்றன. சோவியத்து உருசியா, மக்கள சீனா போன்ற சில பொதுவுடைமை நாடுகளைத் தவிர, மறற நாடுகளில வேளாண்மை தனியார் துறையில் தான் இயங்கி வருகிறது. ஆனால், தொழில்கள், உள்நாட்டு, அயல் நாட்டு வாணிகம், வங்கியியல் போன்றவற்றில் பொதுத் துறையும் (Public Sector), தனியார் துறையும் (Private sector) தம் பங்கை ஆற்றி வருகினறன.

தனியார் துறை என்பது தனி மனிதனுக்குச் சொந்தமான நிறுவனம் என இனிக் கருத முடியாது. தனியார் துறைக்கும சமுதாய நோக்கமும், சமுதாயக் கடமைகளும் உள்ளன. பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான ஊக்கத்தினையும், தூணடுதல்கலளயும, தனியார் துறை மேற்கொள்ள வேணடியுள்ளது. தலை சிறந்த தொழில் வல்லுநாகளைக கவனத்தில ஈர்ப்பது தொழிலில் கிடைக்கும் இலாபம் மட்டும் அல்ல; மற்ற முககிய அமிசங்களும் அதில அடங்கி உளளன. விடா முயற்சி, உற்பத்தியில் ஏற்படும் மகிழ்ச்சி (Jay of Creation), பெருமையினை அடைய வேண்டும் என்ற ஆவல், போட்டி மனப்பான்மை போன்றனவும் காரணங்களாகின்றன.

**இந்தியாவில் தனியார் துறை**· தொடக்கக் காலஇந்தியத் தொழில் வளர்ச்சியில் தனியார் துறை முக்கியப் பங்கினை ஆற்றியது பெரும் முதலீடு சிறநத நிருவாகம், தீர்ககதரிசனம், விளைவுகளை எதிர் நோக்கி ஏற்றுக் கொள்ளும் மனத்திட்பம், இடாப் பாட்டை ஏற்று அலலது தவிர்த்துத் தொழிலில் முனனேறும விடாமுயற்சி போன்ற பல குணங்களை இந்தியாவில் தொடக்கக் காலத் தொழில் முனைவோர்கள் (Entreprenuers) பெற்றிருந்தனா.

இந்தியாவில் சிறந்த தொழில்களாகக் கருதப்படும் பருத்தி நூற்பாலை, சணல் தொழிறசாலை, இரும்பு எஃகுத் தொழிற்சாலை போனறவற்றைத் தொடங்கித் திறம்பட நிருவகித்து, இநதியத் தொழில் வளாசசிக்கு அடிகோலியது தனியார் துறையே எனத்துணிநது கூறலாம். பருத்தித் துணி உற்பத்தி செயயும் 55 நாடுகளில் ஐக்கிய அமெரிக்கா, மக்கள் சீனா ஆகியவற்றுக்கு அடுத்து இந்தியா மூனறாம் இடத்தைப பெற்றுளளது. ஆணடு உற்பததி, தொழிலாளர்கள எண்ணிக்கை ஆகியவற்றில் எதை எடுத்துக் கொணடாலும் பருத்தி நூற்பாலை, சிறப்பாக அமைந்த தொழிலகளில முதலிடத்தைப பெறுகிறது. பருத்தித் துணி ஏற்றுமதி வணிகத்தில உலகில் இநதியா இரணடாம் இடததை வகிககிறது. இவ்வளவு சிறப்பு வாய்ந்த இத்தொழில தனியார் துறையின் பங்குக்கு ஒரு சிறநத எடுததுக்காட்டாகும்.

இரும்பு எஃகுத் தொழில் நாட்டின் விரைவான தொழிற்புரட்சிக்குஅடிப்படையாகத் திகழ்கிறது. இநதியஆங்கில அரசுக்கு அடிமைப்பட்ட காலத்திலேயே, 1908-ஆம் ஆணடு, அப்போது சாக்ச்சி (Sakchi) என்றும இப்போது சாம்செட்பூர் என்றும் சொலலப்படும் இடத்தில் 'டாட்டா இரும்பு எஃகுத் தொழிற்சாலை' நிறுவப்பட்டது. இதுவே, இநதியாவில மட்டுமன்றி ஆசியக கணடத்திலேயே இரும்பு எஃகுத தொழிற்சாலை ஏற்பட அடிப்படையாக இருந்தது. இது சே.என. டாடா எனனும் பணம் படைத்த, பார்சி இனத்தைச் சேர்ந்தவரால தொடங்கப்பட்டது. இந் நிறுவனம் திறம்பட வளர்ந்தது. பல இடஙகளில கரி, இரும்பு, கனிவள ஆராயச்சி நடத்தி, பரின (G.Parin), வெட்டு (G.M. Weld) போனற சிறந்த பொறியியல வலலுநர்களின் துணையோடு சே.என். டாடாவின முயற்சியால் உணடான இந்தியாவின முதல் இரும்பு எஃகுத் தொழிற்சாலை, இனறு தனியாா துறை, பொதுத் துறை ஆகியவற்றில் இரும்பு எஃகுத் தொழிற்சாலைகள, ஆசிய நாடுகளில தோன்ற ஒரு முன்னோடியாக விளங்குகிறது.

சணல் தொழில் இந்தியப் பொருளாதாரத்தில் முக்கிய பங்கு வகிககிறது. இந்தியாவுககுக் கிடைக்கும் மொத்த அயல்நாட்டுச் செலாவணியில சணல தொழில் 20 விழுக்காடு பெற்றுத் தருகிறது. உலகில் உள்ள மொத்தச் சணல் தொழில தறிகளில் 58 விழுக்காடு இந்தியாவில் உளளன. உலகில் பயனபடுத்தப் படும் 3 மிலியன் கணடி சணல் பொருள்களில், இந்தியா 40 விழுக்காட்டிற்கும் மேல் அளிககிறது. சணல் உற்பத்தி, வழங்கல் ஆகியவற்றில் அரசாங்கப் பங்கே இலலை எனலாம். அனைத்தும் இந்திய சணல் ஆலைகள் சங்கத்தால் (Indian Jute Mills Association) நிருவகிக்கப்பட்டு வருகின்றன. எனவே, சணல் தொழில் இந்தியாவில முழுதும் தனியார் துறையிலேயே உள்ளது

மற்றும் இரசாயனப் பொருள்கள் உற்பத்தி, சர்க்கரை ஆலைகள், காகிதச் தொழிற் சாலைகள, கண்ணாடித் தொழில் ஆகியவற்றிலும் தனியார் துறை சிறப்பான பங்கை ஆற்றி வருகிறது.

பல தொழில் கொள்கைகள் மூலம் தனியார் துறைக்கும் பொதுத துறைக்கும் உரிய பணிகளை இந்திய அரசு வரையறுத்துள்ளது. தனியார்துறைக்கு அரசாங்கம், அந்நியப் போட்டியிலிருந்து பாதுகாப்புக் கருவூலத் தூணடுகோல்கள் (Fixed incentives), எளிய கடன்கள (Cheap loans) போன்ற அடிப் படை வசதிகளை அளித்துள்ளது. தனியார் துறை வளர்ச்சிக்கு இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி (Industiral Development Bank of India), ஆயுள காப்பு நிறுவனம் (Life Insurance Corporation), இந்தியத்தொழில்கள் முதலீட்டு நிறுவனம் (Industrial Credit and Investment) போன்ற நிறுவனஙகள் மிக்க நிதி உதவியை அளித்துளளன. இவவளவு சலுகைகளும், நிதி உதவியும் பெற்றும், தனியாா துறை தன் பங்கைச் சரியாகச் செய்யவில்லை என ஒரு கருத்து நிலவுகிறது. கடந்த திட்டக் காலங்களில், தனியார் துறை பெற்ற கடன் மற்ற உதவிகள் அளவிற்கும், அது நாட்டிற்குச் செய்த பணிக்கும் சரியான தொடர்பு இல்லை என்று சிலர் குற்றம சாட்டுகின்றனர்.

**முக்கியமான குற்றச்சாட்டுகள்:** தொழில்கள தொடங்க உரிமை கொடுத்த பினனும் தொழில்கள் தொடஙக தனியார் துறை காலத் தாமதம் செய்கிறது என இந்திய மைய (Reserve Bank of India) வங்கியின் அறிக்கை கூறுகிறது.

மிகுதியான வருமானத்தைத் (Surplus income) தொழில் மேம்பாட்டுக்குப் பயன்படுத்தாமல், மற்ற நிறுவனங்களின் சொத்துகளை வாங்குவதிலும் சொத்துகளைக் குவிப்பதிலும (Wealth Accumulation) தனியார் துறை மிகுநத கவனம செலுத்து கிறது.

அரசாஙகத்தின் கடன் மற்றும், கருவூலத் தூணடுகோல்களையும், சலுகைகளையும மிக்க அளவில் பெறறு, உணமையான, நியாயமான சிறு தொழில்களின வளர்ச்சியைத் தனியார் துறை தடை செய்கிறது.

உணவுத் தானிய வணிகத்தில் தனியார் துறையின வணிகப் போககு மிகவும கணடிக்கத் தககதாக உளளது. வெளளம், மழை, வறட்சி போனற தேசத் துயாகளை இயறகை அளிதத நல வாயப்பாகக் கருதி, தனியார் துறை கொளளை இலாபம அடிக் கிறது.

ஒரு நாட்டின வளர்ச்சியில் தனியார் துறைக்கும் பொதுத் துறைக்கும உரிய பஙகும் கடமையும் உள ளன. ஒன்றுக்கு ஒன்று போட்டி அமைப்பு ஆகாது. விரைந்த பொருளாதார வளாச்சி, மக்கள நல வாழவு, நாட்டு மேம்பாடு ஆகியவற்றைக கருத்தில கொணடு, தனியாா துறையும், பொதுத துறையும் தோளோடு தோளள நின்று செயற்படவேணடும்.

ந.து.

**துணை நூல்கள்:**

Kuchtal, S C., Industrial Economy of India, Chaitanya Publishing House, Allahabad, 1985.

Seth, M L., Theory and Practice of Economic Planning, S. Chand & Co., New Delhi, 1984.

Sivayya, K.V., and V.B.M. Das., Indian Industrial Economics, S. Chand & Co. Ltd, New Delhi, 1986.

***தனியாள் உளவியல்:*** உளவியலில பல பிரிவுகள் உள்ளன. அவற்றுள் ஒன்று 'தனியாள் உளவியல'. இது ஆல்பிரெட் ஆட்லர் (Alfred Adler–கி.பி 1872–1937) என்பவரால் அளிக்கப்பட்டது. ஆளுமையின் கோட்பாடுகளுக்குள் (Pesonality theories) தனியாள் உளவியல் முக்கியமான ஒனறாகும்.

ஆட்லர், உளவியலின் தந்தை எனச் சொல்லப் படும் சிக்மண்டு பிராயிடின் (Sigmund Freud) மாணவர். ஆனால் ஆட்லரால் பிராய்டின் பல விளக்கங்களை ஒப்புக் கொள்ள முடியவில்லை. பிராய்டின

உளப்பகுப்பாய்வுக் கோட்பாட்டில பால் உணர் வுக்குப பெரிய முககியததுவம் கொடுககபபடுவது தேவையற்றது என ஆட்லர் கருதினார். எனவே, ஆட்லா பிராய்டின் கொள்கைகளுககு மாற்றாகச் சிலவற்றைத் தொகுத்தா. அதுவே 'தனியாள் உள வியல்' (Individual Psychology) எனப்படுகிறது.

தனியாள உளவியல், பிராய்டின் கோட்பாடு போனறு அததுணை விரிவானதன்று. பொதுவாக, மனிதனின செயல்களையும், மனிதன பிறக்கும்போது செயலற்ற நிலையில் இருநது பின வாழ்வில வெற்றி பெற எதையும் சிறந்த முறையில் செய்ய வேண்டும் எனறு முயலுவதையும அவனது 'தனியாள் உளவியல' படம் பிடித்துக் காட்டுகிறது.

மனிதனின தனித்தன்மையை உளவியல் முறை யில ஆராய்ந்த ஆட்லர், அவனது ஆளுமையை முழு மையான ஒன்றாகக் கணடார். ஒவவொரு மனி தனிடமும் தன் ஐக்கியம் (Self unity), மேன்மைத் தனமை (Perfection), குறிக்கோள முதலியன உணடு எனபதை வற்புறுத்திக் கூறுகிறார் ஆட்லர்.

'தான முனனேற வேண்டும், பிறரை விட மேம் பட்ட நிலையில இருக்க வேண்டும' என்ற எணணத் தால் ஏற்படும் அவனது நம்பிக்கையோடு கூடிய முயறசி தான் மனிதனை இயக்கும் ஆறறல என கிறார் ஆட்லர்.

ஆளுமையின ஒற்றுமை ஒரு மனிதனின முயற்சி யால ஏறபடுகிறது. அதுபோல, மன அடிப்படை யிலான எலலா நிகழ்சசிகளும், ஒவ்வொரு மனிதனின் தனித்தன்மை பொருந்திய உருவாககும சக்தியால் உருவாக்கப்படுகினறன. ஒருவன் மேன்மை பெற வேண்டும் எனறு விரும்புவானாயின், அவன மனமே அவன் எணணததை வெளிப்படுததும். இங்ஙனம, தனியாள் உளவியலில் உடலைவிட மனததிற்கு மிகக முக்கியத்துவம் அளிககப்பட்டுள்ளது.

மேமபட்ட நிலைககாக முயற்சிசெய்யும் மனநிலை, சிறு வயதில் ஏற்பட்ட குறைபாடுள்ள, முழுமை பெறாத, தாழ்ந்த நிலையின் காரணத்தால தோனறு வதாகக் கூறப்படுசிறது. குழநதைகள பிறந்தவுடன தத்தம் தேவைகளைக்கூட நிறைவு செய்து கொளள முடியாமல், பிறரையே நம்பி இருப்பதால, அவர் களிடம் தாழ்வு மனப்பானமை தோன்றுகிறது. எனவே, ஒவ்வொருவரும், தமது தாழ்வு மனப்பான மையையும், செயலற்ற நிலையையும் போக்கவும் மிகுந்தசக்தியும், மேன்மையான நிலையும் பெற வும் பெருமுயற்சி செய்கிறார்கள்.

ஒருவனது நிகழ்கால வாழ்க்கை, அவனது வருங் கால மேமபட்ட நிலையின எதிர்பாாப்பின்படி அமை கிறது. ஒருவன் எதிர்பார்த்தபடி, அவன வாழவில் எலலாமே நடபபதில்லை. ஆனாலும், எதிர்பார்பபது வாழ்க்கைககு ஒரு நோக்கமாக அமைகிறது. இப்படி அமையும பலவேறு நோக்கஙகளே வாழவை வழி நடத்திச் செல்கினறன.

இவ்வாறு, மேம்பட்ட நிலையை நாட வேணடும எனற மனநிலை, சமூகத்தின் நடுவில அவனது தனி வாழ்வை வெளிப்படுத்துவதாகவும், தன்அமைதியைத் தேடுவதாகவும் அமைகிறது. ஒவவொருவரும வாழ்க கையில மேம்படத தம் அனுபவத்தின்படி தமககே உரிய ஒரு வழிமுறையை வகுத்துக் கொளகின்றனர். இதனை ஆட்லர் வாழ்ககைப் போக்கு (Style of Life) எனகிறார்.

மனிதனின தனித்தன்மையையும் ஆக்க உணா வையும் வளாக்கும் முககியமான பொறுப்பு அவன் குடும்பத்தாரையே சாரும் எனகிறார் ஆட்லர். ஒரு வனது ஆளுமை வளர்ச்சியில முக்கியமான பஙகு பெற்றோருடையது எனற பிராயடின கூற்றை மறுக கும் ஆட்லர், பெற்றோர் மட்டுமனறிக் குடும்பததி லுளள மற்ற எல்லோருக்குமே அவன வளர்சசியில் பஙகு உணடு எனகிறாா. இரண்டு பெற்றோர் ஒரே மாதிரியாக இருநதாலும், அவர்களுள ஒரு பெற் றோரின் ஒரே குழநதையும், மறு பெறறோரின ஐந்து குழநதைகளுள நடுக குழநதையும ஒரே மாதிரியான ஆளுமை பெறுவதில்லை; மிகவும் வெவ்வேறாகவே இருப்பார்கள எனறு கூறுகிறார். ஒருவனது பிறபபு எணணிற்கு (Order of Birth) மிக்க முக்கியத்துவம கொடுக்கும ஆட்லர், அவனது குழநதைப் பருவத்தில் ஏற்படும் நிகழச்சிகளும், சகோதர–சகோதரிகளுக் குள் ஏற்படும் பொறாமை, பூசல்களும் அவனது வாழ்வில் நன்மை பயக்கவோ தீமை உணடாககவோ பெரிதும் காரணமாகினறன எனகிறார்.

குழந்தைகளிடம் தவறான வாழ்க்கைப்போக்கு ஏற்படப் பெறறோரின் வளர்ப்பு முறையும் ஒரு காரணமாகும். மிகுதியாகச சலுகை காட்டுவதால் குழந்தை பொறுப்புடையவனாகவும், சுதந்திரமாக வும் வளர்வது தடுக்கபபடுகிறது. அவன் தன்னலம் கருதுபவனாகவும், பிறர் ஆதரவின கீழ் இருப்பவனா கவும் வளர்கிறான்.

பெற்றோரால வெறுத்து ஒதுக்கப்பட்ட குழந்தை வாழ்வில சுதந்திரமாக வாழப் பழகு கிறான். ஆனால, பெற்றோர் மேல ஏற்பட்ட வெறுப்பின் காரணமாகச் சமுதாயத்தின மேல வெறுப்புக் கொண்டு, அதனை எதிர்தது, வழி முறை

களை மீறி வாழ முற்படுகிறான். அவன் திருடுதல் போன்ற தீய பழக்கஙகளையும் மேற் கொள்கிறான.

சிறு வயதில் தஙகள சூழ்நிலையைச் சரிவரப் புரிந்து கொள்ளாவிடில், சீரான வழியில் வாழக்கைப் போக்கு அமைவதில்லை. இதுவே பல மன நோய் களுக்கும் வித்தாகிறது என்கிறார் ஆட்லா.

ஆட்லரின தனியாள் உளவியல், அறிவியல் அடிப் படையின்றி அனுபவத்தையே அடிப்படையாகக கொண்டிருப்பதாகப் பிற உளவியல் வலலுநர் களால கணடனம் செய்யப்பட்டிருக்கிறது. எனினும், அவர் கருத்துகள படிப்பறிவற்ற மக்களுக்கும் எளிதில் புரியும் வண்ணம், மனிதனின செயலகளுககு விளக்கம் கூறுவதாக அமைந்துள்ளன. இனறும் பல அன்றாடச் சிக்கலகளைத் தீர்க்கப் பலராலும் தனி யாள உளவியல பயன்படுததப் படுகிறது. அது மட்டு மனறி, இன்று வெளிவநது கொண்டிருககும் வேறு பல ஆளுமைக கோட்பாடுகளுககும் இது ஓர் அடிப் படையாக அமைந்துள்ளது. ஹே.ந.

**தனியாள் . கொள்கை** என்பது அண்மைக் காலத்தில் வளர்ச்சி பெற்ற ஒரு கொள்கையாகும. இக்கொள்கையின அடிபபடைக் கருத்தினை ஒருவா முற்காலச் சிந்தனைப் போக்கிலேயே காணமுடிகிறது. எனறாலும், கி.பி. 17, 18-ஆம் நூறறாணடிற்குப் பின்னர்த்தான் இக்கொள்கை வளர்சசி பெற்ற ஒன றாகக் கருதப்படுகிறது. சமுதாயத்திலும சமுதாய நிகழவுகளிலும் தனியாளின் முக்கியததுவத்தை வலி யுறுத்துவதால் இககொளகை தனியாள கொளகை எனப் பெயர் பெற்றது எனலாம். சமுதாயததில 'மநதைப்'ப் போக்கு மிகுந்து தனியாளின முக்கியத்து வம் பெரிதும குறைந்துபோன நிலையில, இதனை எதிர்த்துத் தனியாளின் தனமையை, வலிமையை, சிறப்பினை வெளிப்படுததும் நோக்காக இசசிந்தனை எழுந்தது. இத்தகைய தனியாள் கொளகை எவ் வாறு பலவேறு அறிஞாகளால விளககப்படுகின்றது? எவவாறு பலவேறு இயல்களில எடுததாளபபடு கின்றது? மேலைநாட்டு மெய்ப்பொருளியலில இதன் பங்கு என்ன? இக்காலத்தில இதன வளாச்சி எவ வாறு அமைந்துளளது என்பன பற்றி ஆராயநதறிதல இனறியமையாதது.

**தனியாள் கொள்கை** என்பது பற்றிப் பல்வேறு அறிஞர்கள் பலவாறு விளக்கியுளளனர். இராபர்ட்டு ஒர்த்து பிராங்கு எனபவர், சமயக் கலைக்களஞ்சியத் தில், தனியாள் கொளகை என்பது தனிப்பட்டோரின விருப்புகள், உரிமைகள், முயற்சிகள, நலவிருப்புப் போன்றவற்றைச் சமயம், அரசியல், பொருளாதாரம், சமுதாயவாழ்வு ஆகியவற்றில் இணைக்கும் கொள்கை என விளக்குகிறார் சார்சு எச் மீட்டு என்பார், தனி யாள் கொளகை என்பது அரசியலிலும் அறிவியலி லும் பயன்படுத்தப்படும் ஒரு கருத்து எனச்சமயம மற் றும் அறவியல் அகராதியில் விளக்குகிறார். அதனபடி ஒரு சமுதாயத்தின் நனமை என்பது அச்சமுதாயத் தில் அங்கம் வகிககும தனிப்பட்டோர் நன்மைகளின் கூட்டேயாகும். தனியாள கொள்கை என்பது சமுதாயக் கொள்கையை எதிர்த்து எழுநத கருத்தே யாகும் என்கிறார் மீட்டு. மெயப்பொருளியல் அக ராதி, தனியாள் கொளகை எனபது தனி மனிதனை முக்கியப்படுத்தும் ஒரு கொளகை எனக் குறிப்பிடு கிறது. அதாவது தனி ஆளைக் கூட்டமைப்பிற்கு எதி ராகவும் சமுதாய விருப்புகளைத் தனிஆள விருப் புக்கு ஆட்படுத்தும் ஒருவித இயககமாகவும விளககு கிறது. தனியாள கொளகை எனபது, சமுதாய நலனைப் போனறு தனிப்பட்டோரின சுதந்திரமும் முக்கியமான ஒனறு என்ற நமபிக்கையாகும. இவ வகையில தனிப்பட்டோரை முககியப்படுததும் எநத வித அறவியல், பொருளாதார, அரசியல் கொள்கை களும் தனியாள் கொள்கையாகும என உலகப புத்தக அகராதி விளககுகிறது.

**தனியாள் கொள்கையும் பிற இயல்களும்:** தனி யாள கொளகை என்பது சமூகவியல, சமயம, அரசியல், பொருளாதாரம்,அறிவியல் மற்றும் மெயப் பொருயலில் போனற பல இயல்களிலும இடம்பெறு கிறது. குறிப்பாகச் சமுதாய நலனிற்குத தனிமனித நலனை முககியப்படுததும் வகையில் சமூகவியலிலும உலக மீட்பிற்குத் தனிமனித மீட்பின் முக்கியத்துவத் தைக கூறித் தனியாளின மேன்மையை முக்கியப் படுத்துவதனால் சமயத்திலும தனியாள கொளகை எடுத்தாளபபடுகிறது எனலாம். நாடு தனிப்பட்டோ ருக்காக உள்ளது தனிப்பட்டோரைச் சாாநது உள்ளது அதனால தனிமனித சுதநதிரத்தில நாடு கூடுமானவரையில குறுககிடக்கூடாது என்று கூறுவத னால் அரசியலிலும், அரசோ நாடோ எல்லாவித தொழில வணிக முயற்சிகளையும தன்வசம வைத்துக கொள்ளாது தனிப்பட்டோரின் முயறசிகளை ஆத ரிக்க வேணடும் எனறு குறிபபிடுவதனால் அரசியல பொருளாதாரத்திலும தனியாள கொள்கையின தாக்கததைக் காண முடிகிறது. மேலும எல்லாவித அறநெறிகளும்,பண்புகளும், கடமைகளும் தனிப்பட்ட வாகளிடமிருந்தே தொடக்கம் பெறுகின்றன. மேலும் தனிப்பட்டோர் விருப்புகளின் மொத்தமே சமுதாய விருப்பாகும என வலியுறுததுவதனால அறவியலிலும் தனியாளின் முக்கியத்துவம் புலப்படு கிறது. 'சிறப்பு மனிதன்', தனியாள்-சமுதாய வேறு

பாடு, தனியாளின பரிதாபநிலை போன்ற பல்வேறு கோணங்களில் சிந்தனையாளர்களால் எடுத்தாளப் படுவதாலும மெய்ப்பொருளியலிலும் தனியாள் கொளகை இடம்பெறுவதை அறியலாம். மேலை நாட்டு மெய்பபொருளியற் சிந்தனையில் தனியாள கொளகையின இடம் எனன என்பதையும் அறிதல் வேணடும்.

**மேலைநாட்டு மெய்ப்பொருளியலில் தனியாள் கொள்கை**: மேலைநாட்டு மெயபபொருளியல் வர லாற்றில தனியாள கொள்கையின் சுவட்டினை முற காலத்திலிருந்தே காணமுடிகிறது. எடுத்துக்காட்டா கப் பிளேட்டோவின் அரசியல் மெய்ப்பொருளியலில தனியாளின முக்கியத்துவம குறிப்பிடப்படுகிறது. நாட்டிற்கும், தனிமனிதனுக்கும் உள்ள உறவைப பற்றிக் கூறும்பொழுது அவர் தனிமனிதனைச் சாாந்தே நாடு இருக்கிறது என்கிறார். அதனால் தனிமனிதன்தான நாட்டிற்கு முதலில வருபவன என வாதாடுகிறார் பிளேட்டோ. மேலும தனிப் பட்டோரின பல தேவைகளை நிறைவு செய்ய இருப் பதே அரசு எனறார்.

அரிசுடாட்டில் எனற முற்காலச் சிந்தனையாளர் தனிமனினுக்கும் நாட்டிற்கும் உள்ள உறவை மிக நெருக்கப்படுத்திக் காட்டுகிறார். இவரது கருத்துப் படி எந்த ஒரு தனிமனிதனும் தன தேவைகள் அனைத்தையும தானே நிறைவு செய்துகொளள முடியாது. இதற்கு மாறாகக் கூறுபவன் பேயாகவோ கடவுளாகவோ தான் இருக்கமுடியும். ஆகவே, தனி யாள் ஒரு சமுதாயததில அங்கம வகிப்பவனாகத் தான் இருக்கமுடியும் எனகிறார்.

பிற்காலச் சிந்தனையாளாகளுள எகல எனபவர் தனிமனிதனைப் பற்றிக் குறிப்பிடுகிறாா. தனிமனித னுக்கும் நாட்டிறகுமிடையே குடும்பம், சமுதாயம் என்ற இருப்புகளைக் கொண்டு வருகிறார். திருமணத்தின்மூலம் தனிப்பட்டோர் இருவர் ஒன றாக அதனால ஒரு குடும்பம் உருவாகிறது. இக் குடும்பத்தில் உள்ள தனிப்பட்டோர், இதனைப் போன்ற பல குடும்பங்களின தனிபட்டவரோடு அதாவது, மக்கள் சமுதாயத்துடன் உறவு கொளகின றனர். இந்தத் தனிப்பட்டோர் தங்கள் வாழ்க்கை முறையை வகுத்துககொணடு, நோக்கங்களை ஏற் படுத்திக்கொளகின்றனர். இம்முறையில் நாடு என பது குடும்பம் மற்றும் மக்கள் சமுதாயத்தின் ஒருமைப்பாடே என்பது இவர் கருத்து. நாடு என் பது பொது நினைவுத் தனமை போன்றது. இதில் அங்கம் வகிக்கும் தனியாள் எந்த அளவிற்குத் தன் நினைவு கொணடுள்ளானோ அதே அளவிற்குத்தான் ஒரு பொது நினைவுத் தன்மையின அங்கம் என உணரவேண்டும் என்கிறார் எகல்.

தனி மனித சுதந்திரம் பற்றி சே.எசு.மில் என்ற பிற்காலச சிந்தனையானர் விளக்கும்பொழுது தனி யாள் கொள்கை பற்றிக் குறிப்பிடுகிறார். எந்த ஒரு அரசும் தனி மனித சுதநதிரத்தில கீழ்க்காணும மூனறு காரணங்கள் இருக்கும்பொழுது குறுக்கிடக் கூடாது. 1) தனிமனிதன் குறிப்பிட்ட காரியத்தை நல்ல முறையில் செய்யமுடியும் என்கிறபொழுது; 2) அரசு குறிப்பிட்ட காரியத்தைத் தனிமனிதன் நல்லமுறையில் செய்யமுடியும்பொழுது, தனிப்பட் டோரின வளர்ச்சி மற்றும் கல்வி ஆகியவற்றை அவர் களே செய்துகொள்வது விரும்பப்படத்தக்கது. 3) அரசிறகுத் தேவையிலலாமல் மிகுந்த அதிகாரம் வந்துசேரும் அபாயம ஏற்படும் பொழுது. இவ்வகை யில் சுதநதிரத்தைப் பற்றிய மில்லினவாதமதனியாள கொள்கை வாதமாகவே அமைகிறது.

இக்கால மெய்ப்பொருளியற் சிந்தனையில் தனி யாள் கொளகைக்கருத்து மிகுதியும் இடம் பெறுவது இருத்தற கொளகையில்தான். தனியாளின இருத்தல் நிலையை ஆதாரமாகக் கொண்டு இச்சிந்தனை அமை கிறது. புதிய இருத்தற் கொள்கையின் தந்தை எனக் கருதப்படும் கீர்கககார்டு (Kierkeegaard) எனபவர் 'கூட்டம்' அல்லது 'பொது' என்ற கருத்தை எதிர்த்துத் தனியாள கருத்தை வலியுறுத்துகிறார். பொதுக் கொளகை எனபது, தனியாளின முக்கியத்துவததைக் குறைத்துச் சுதந்திரததைக் கட்டுப்படுத்தி, அவனது பொறுப்புகளைக் குறைக்கின்ற காரணத்தால உண்மையிலலாத ஒன்று என்கிறார்.

கீர்க்ககார்டு 'கூட்டம்' என்று குறிப்பிடுவதை நீட்சே 'மந்தை' என விளககுகிறார். இந்த மநதை தனியாளின் வாழ்க்கையைப் பெரிதும் கட்டுபபடுத்து கிறது. இப்போககுத தனிமனிதனை ஒரு முழுமை யின சிறுபகுதியாக மட்டும்தான இருகக அனுமதிக் கிறது என்கிறார். இந்தக் கருத்தே எய்டகரின (Heideggor) சிந்தனையிலும் வெளிப்படுகிறது. இவர் இந்தக் 'கூட்டம்', 'மந்தை' என்னும் கருத்தை 'அவர்கள்' என்று விளக்குகிறார். இநத 'அவர்கள்' தனியாளின் தெரிந்தெடுக்கும தன்மையைப் பறித்து அவனது பொறுப்புகளைக் குறைத்து, அவனை மிகச் சாதாரண நிலைக்குக் கொணடுவந்து, அவ னது வாழ்க்கை முறை, ஒழுக்கநெறி ஆகியவற்றை வகுக்கின்றனர் என்கிறார். மேலும், தனியாளுககும் 'அவர்களுக்கும்' உள்ள உறவைப் பற்றிக் கூறும் பொழுது, இச்சிக்கலான உறவு தவிர்க்கப்பட முடி யாதது. ஆனால் இவ்வுறவு தனியாளை அவனது உணமைத் தனமையிலிருந்து பெரிதும் பிரிககிறது. அவன் பிறரால் ஆளப்படும் தன்மையை ஏற்படுத்து கிறது. என்றாலும் இம்முரண்பாடான உறவிற்குத் தனிமனிதனே காரணம் என்கிறார் எய்டகர்.

பியூபரி, மார்சல் (Marcel) போன்றவர்கள் தனியாளை முக்கியப்படுத்தும் இச்சிந்தனைப் போக்கிலிருந்து சிறிது மாறுபட்டுத் தனிப்பட்டோரிடையே உள்ள உறவைப் பற்றி எடுத்துக் கூறுகிறார்கள.

தனியாளின் பொறுப்புகள், தெரிந்தெடுக்கும் சுதந்திரம் அதனுடன் தொடர்ந்து வரும் விளைவுகளை ஏற்கவேண்டிய கட்டாயம என்று பல வாறாகத் தனியாளின் நிலையை விவரிக்கும் சாத்தர் (Sartre) தனியாளுக்கும் பிறருக்கும் உள்ள உறவு பாதுகாக்கப்படவேணடிய ஒன்று என்கிறார். தனியாளின் சுதந்திரம் பிறரின் சுதந்திரத்திற்குத் தடையாக இருககக்கூடாது என்று கூறுவதன மூலம் சாத்தர் தனியாளருக்கும் சமுதாயத்திற்குமிடையே நலவுறவை ஏற்படுத்த முயல்கிறார். இவவாறாக மேலை நாட்டு மெய்ப்பொருளியல் வரலாற்றில் இடம்பெற்ற தனியாள் கொள்கை, இக்காலத்தில் பலவேறு கோணங்களில வளர்ச்சியடைந்துளளது.

**தனியாள் கொள்கையின் இக்கால வளர்ச்சி.** தனியாள் கொள்கை இக்கால மெய்ப்பொருளியல் சிந்தனையாளர்களால் பெரிதும் எடுத்தாளப்படுகினறது. முழுமைக் கொள்கைக்கும் தனியாள் கொளகைக்கும் உள்ள வேறுபாடுகள புதிய காலச் சிந்தனையாளர்களால பெரிதும் விவாதிக்கப்படுகின்றன. எஃப்.ஏ. எய்க்கு, கே.ஆர்.பாப்பர் (K.R.Popper) போன்றவர்கள இக்கொளகையைப் பெரிதும் மேன்மையுறச் செய்தவர்களாவர். இவர்களது கருத்துப்படி 'திட்டமிட்ட சமுதாயத்தில' உள்ளதாகக் கருதப்படும் கொடுமைகளை எதிர்க்கும் கருவியாக இக்கொள்கை கருதப்படுகிறது.

மிகப் புதிய காலத்தில் இக்கொளகையைப் பற்றிப் பெரிதும் வாதாடியவர்களுள, கே.டபிள்யு. என்.வாட்கின்சு(K.W.N.Watkins)எனபவர் குறிப்பிடத்தக்கவராவார். தனியாள கொள்கையின் தேவையைப் பற்றிக் கூறும் பொழுது சமுதாயத்தின வளர்ச்சி, நடைபெறும் நிகழ்ச்சிகள், இவற்றின் விளககம் ஆகியவை பின்வரும் இரணடு காரணங்களிலிருந்து பெறப்படுகினறன என்று விளக்குகிறார். அ) இதில ஈடுபடுகின்ற தனிப்பட்டோரின் நடவடிககைகளை ஆளுகின்ற கொளகைகள். ஆ) அவர்களின் சூழலைப் பற்றிய விளக்கங்கள். இவவகையில் சமுதாயத்தைப் புரிந்துகொள்வதற்குத் தனியாள கொளகை மிகவும் தேவைப்படுகிறது எனகிறார் வாட்கின்சு. இது எப்படியென்றால், தனித்தனி உற்பத்தியாளரும், நுகர்வோரும் எவ்வகையில் ஒரு பெரிய அளவிலான சந்தைக்குக் காரணமாயிருக்கிறார்களோ அது போலவே என எடுத்துக்காட்டுத் தருகிறார். இவவாறாக வளர்ந்து வந்த தனியாள் கொள்கையானது இப்பொழுது வழிமுறையியல தனியாள் கொள்கை எனவும் வளர்ச்சி பெற்றுள்ளது.

**தனியாள் கொள்கையில் ஏற்பட்ட மாற்றங்கள்:** தனியாள் கொள்கையின் மையக கருத்தைப் புரிநது கொள்வதற்கு இக்கொள்கையில் ஏற்பட்ட நானகு வகையான மாற்றங்கள் தரப்படுகினறன.

**அ) விளக்க நிலைகள்:** சமுதாயத்தில் ஏறபடும் நிகழ்ச்சிகளுககு மிகப்பரந்த பெரிய அளவில் தரும் விளக்கம் சில சமயஙகளில் உண்மையானதாகவும் தகவல தருவதாகவும் இருக்கும என முதலில் தனியாள் கொள்கையாளர் கருதினர். ஆனால், மிகச் சிறிய நுணுக்கமான அளவுடைய (தனிமனிதர் அளவு) விளக்கந்தான இந்நிகழ்ச்சிகளை நனகு புரிந்து கொள்ள உதவுகிறது எனப் பினனர் வழிமுறையியல் தனியாள் கொளகையாளர் வலியுறுத்துகின்றனர்.

**ஆ) பெயர் தெரியாத தனிப்பட்டோர்:** சமுதாய நிகழ்வுகளுக்குக் காரணமாக அதில ஈடுபட்ட, குறிப்பிட்ட சில தனிப்பட்டவர்களைக் காட்டுவது கடினமான காரியம் எனக கருதினர், தனியாள் கொள்கையினர். சமுதாயத்தில் ஏறபடும் சில நிகழ்ச்சிகளுக்கு விளக்கந் தேடி, அதன அடிப்படைக் காரணங்களை அலசினாலும் சில சமயங்களில பெயாதெரியாத தனிப்பட்டோர் இவற்றிற்குக காரணமாய் விளங்குவதைக் காணலாம் எனகினறனர் வழிமுறையியல் தனியாள கொளகையினா.

**இ) எண்ணப்படாத விளைவுகள்:** சமுதாயநிகழ்வுகள் வேணடும எனறோ தெரிநதோ தனிப்பட்டோரால் ஏற்படுத்தப்படுகினறன என்று கூறுவது மிகக் கடினம் எனகின்றனர் தனியாள கொள்கையினர். சமுதாய நிகழச்சிகள என்பவை அதில ஈடுபடும் பல மனிதர்களின செயற்பாட்டின எணணப்படாத விளைவுகளே என்ற கருத்தை வழிமுறையியல தனியாள கொளகையினா எதிாப்பதிலலை.

**ஈ) விலக்குகள:** சில தனியாள கொள்கையினர் பிற கொளகைகளுடன் ஒத்துப் போகும் நோக்குடன மேலும் சில மாறுதல்களை இக் கொள்கையில் ஏற்படுத்தியுளளனர். அதன்படி, தனிப்பட்ட விளககஙகளுக்குட்படாத சில சமுதாய நிகழ்சசிகளும் அனுமதிக்கப்படுகின்றன. இவை இரண்டு வகைப்படுகினறன. அ) புள்ளியியலபடி விளக்கப்படும் நிகழ்ச்சிகள். ஆ) தொடர்புடைய தனிப்பட்ட பகுதிகளின் சமூகச் செயற்பாடு. இந்த இரணடாம வகைக்கு எடுத்துக்காட்டாக, உடல்உறவுகொள்ளும் தம்பதிகளின் உடல்சார்ந்த கூட்டு, சமயக் கூட்டங்களின் பரவசப்பாட்டு போன்றவற்றை வாட்கின்சு

குறிப்பிடுகிறார். ஆனால் இந்த விலக்குகளைத் தனியாள கொள்கையினர் ஏற்பதில்லை.

**வழிமுறையியல் தனியாள் கொள்கை:** வளர்ச்சியடைந்த தனியாள கொள்கையானவழி முறையியல் தனியாள் கொளகையினைப் பற்றிய பின்வரும் ஐந்துவிதமான வாதங்களை வாட்கின்சு தருகிறார்.

**இயல் கடந்த நிலை வாதங்கள்:** அ) சமுதாயம் உண்மையிலே மக்களை மட்டும் கொண்டுள்ளது என்ற அனுமானந்தான் வழிமுறையியல் தனியாள் கொள்கையின் இருத்தல் இயல் ஆதாரம். சமுதாயப் 'பொருள்கள்' தனிப்பட்டவர்களால் 'உருவாக்கப் படுகின்றன' என்று கூடச் சொல்லலாம். இருந்த போதிலும தனியாளின் செயல்கள், சிந்தனைப் போக்கு ஆகியவற்றை ஆளுவது சமுதாயச் சட்டமே என்பதைத் தனியாள கொள்கையின் இருத்தல் இயல் நம்பத் தயங்கினாலும்,அதுதான் உண்மை. ஆ) தனித்தனியானவர்கள் தம்தம் பொருள் வசதிகளைக் கூட்டாகச் சேர்த்து சமுதாய நிகழ்ச்சிகளை ஏற்படுத்துகின்றனர். இதனை வாட்கின்சு 'இயல் கடந்த நிலைப் பொது இடம்'என்பதாகக் குறிப்பிடுகிறார். இவரது கருத்துப்படி தனிப்பட்டவர்கள் மீது சமுதாயப் போக்கு என்ற ஒனறு எங்கிருந்தோ திணிக்கப்படுதில்லை.

**அறிவாராய்ச்சியியல் வாதங்கள்** இ) சமுதாய நிகழ்வுகளை, தன்மைகளை மொத்தமாக விளக்கவோ முனகூட்டிக் கூறவோ மற்றும் கட்டுப்படுத்தவோ ஒருவர் அறிந்திருந்தாலும் அவைகளைத் தனியாள் செயற்பாடுகளின கூட்டாகக் காண வில்லை என்றால், அவைகளைப் பற்றி அவர் சரியாகப் புரிந்து கொண்டதாகக் கூறமுடியாது என்கிறார் வாட்கின்சு.

ஈ) இயல்நிலையில் இருக்கின்ற தனிப்பட்டவர்களின் அனுபவ பூர்வமான நம்பிக்கைகளின் அடிப்படையில்தான, இயல் நிலை கடந்து இருக்கும் சமுதாய அமைப்பு என்பதனைப் பற்றிய விளக்க உரை அறிவைப் பெறமுடியும்.

**மொழியியல் வாதம்:** உ) தனியாள கொள்கைப் படி விளக்க உரையில் பயன்படுத்தப்படும் எல்லாக் கருத்துகளும் தனிமனித விருப்புகள், செயல்கள், எண்ணங்கள் என்ற முறையில் விவரமாகப் பகுப்பாய்வு செய்து விளக்குவனவாக இருக்கவேண்டும். இக்கருத்தினை வழிமுறையியல் தனியாள் கொள்கையின மையக்கருத்தாக வாட்கின்சு ஏற்கவில்லை. என்றாலும், பின்னர் இதனை விளக்கும் பொழுது தம்மை அறியாமலே இக்கருத்தினை ஏற்கிறார். எடுத்துக்காட்டாக 'யூத குலம் கூட்டாக வாழக் கூடியது' என்ற வாக்கியம் ஒரு தனியாள் கொள்கையாளருக்கு அனுபவ பூர்வமாக பொருள் உள்ளதாக வேண்டுமெனறால் – 'யூதர்கள பொதுவாக யூதர்களை மணப்பார்கள்' என்ற பொருள் படி பெயர் தெரியாத தனியாள் பற்றிய வாக்கியமாக அமையவேணடும் எனற கருத்தினை வாட்கின்சு ஏற்கிறார். ஆக, சமுதாய வழக்குகளுக்குரிய மிகச் சரியான பொருளைப் புரிந்து கொளள வேண்டுமானால் அவற்றைத் தனித்தனியாக விளக்கவேணடும் என்றமேக்சு வீபரின் கருத்தை வாட்கினசு ஆதரிக்கிறார்.

**தனியாள கொள்கையின் குறைபாடுகள்:** சமுதாயத்தில் ஏற்படும் முக்கிய நிகழ்ச்சிகள அனைத்தும் தனிப்பட்டோரின் செயற்பாட்டின் விளைவே என்ற தனியாள் கொள்கைக் கருத்து இதன குறைபாடாகக் கருதப்படுகிறது. காரியத்தின மொத்த விளைவைப் பாராது அதன் காரணத்தைத் தனிப்படுத்துவது சரியானதாக இல்லை எனப் பல அறிஞர்கள கருதுகினறனர்.

சமுதாய வழக்குகளுக்கு எப்பொழுதுமே 'ஏன்'? 'எப்படி?' என்ற விளக்கங்களையே தனியாள கொள்கை தர முயல்வதால், சமுதாய வழக்குகளை உளவியல் வழக்குகளைக் கொண்டு மாற்றிச் சமுதாயச் சட்டத்தை உளவியற் சட்டமாகக் குறைத்துவிடுகின்றது என்ற குறையும் இக்கொள்கைக்கு எதிராகக் கூறப்படுகிறது.

இவவாறாகத் தனியாள் கொள்கை என்பது, பொதுவாக 'மந்தை'ப் போககை எதிர்தது எழுந்த கொள்கையாகவும், தனியாளைத் தனிப்படுத்தும் கொள்கையாக அல்லாமல் சமுதாயத்தில் தனியாளின் சிறப்புத்தன்மையை வெளிப்படுத்தும் கொள்கையாகவும் அமைகிறது. மேலும் இககொள்கை தனிப்பட்டோர் ஒருவருக்கொருவர் கொள்ளும் நல்லுறவினையும் வலியுறுத்துகினறது. தனியாள கொளகை சமுதாயம் என்னும் உணமையை மறுப்பதில்லை.இக் கொள்கைப்படி தனியாளின் செயற்பாட்டிற்கும் வளர்ச்சிக்கும் உதவுகின்ற களமாகவே சமுதாயம் கருதப்படுகின்றது. இவ்வாறு தனியாள் கொள்கை என்பது, தனி மனிதர்களின் முயற்சி, பகுத்தறிவு, சுதந்திரம், தன்நினைவு, ஆக்கபூர்வ சிநதனை ஆகியவற்றைச் சமூக நிகழ்வுகளுக்குக காரணமாக முக்கியப்படுத்தும் கொள்கையாகத் திகழ்கிறது. சுருங்கச் சொன்னால தனியாள் கொள்கை என்பது, அதன் மிகச் சிறந்த குணங்களில்,முறைப்படுத்தப்பட்ட சமுதாயத்தின் உற்பத்திப் பொருளேயாகும். பா.ஜோ.

துணை நூல்கள்:

George H. Mead, 'Individualism', in S. Mathews and G. Birney Smith, eds. A Dictionary of Religion and Ethics, London, 1921.

Macquarrie John, Existentialism, Penguin Book, New York, 1977.

Munitz, K., Milton (Ed.), A Modern Introduction to Ethics, The Free Press of Glencoe, New York, 1961.

Stumpf Enoch Samuel, Socrates to Sartre, A History of Philosophy, Mc. Graw Hill Book Company, New York, 1975.

***தனியாள் விபத்துக் காப்பீடு***: விபத்தினால் இறப்பு அல்லது உறுப்பிழப்பு ஏற்பட்டால் காப்பீடு பெறுபவருக்கோ அவருடைய சட்டப்படியான பிரதிநிதிக்கோ பணம் செலுத்துவதாகக் காப்பீடு அளிப்பவர் அளிக்கும் உறுதிமொழிதான தனியாள் விபத்துக் காப்பீடு (Personal Accident Insurance) ஒப்பந்தம் ஆகும். விபத்து என்ற சொல்லை விளக்குவது கடினம். விபத்து என்பது எப்பொழுது ஏற்படுமென்று எவராலும் சொல்லமுடியாது. ஒருவர் வேண்டுமென்றே ஓடும் இரயிலில் விழுந்து இறப்பாரானால் அது விபத்து அன்று. ஆனால் அவர் இரயிலில் பயணம் செய்துகொண்டிருக்கும்போது தற்செயலாக நழுவி விழுந்து இறந்துவிட்டால் அல்லது காயமடைந்தால் அது விபத்தாகும்.

தனியாள் விபத்துக் காப்பீடு, ஆயுள் காப்பீடு போல் தோன்றினாலும் இதில் ஈட்டுறுதி ஒப்பந்தம் இல்லை. விபத்து ஏற்பட்டால் திட்ட ஆவணத்தில் குறிப்பிடப்பட்டுள்ள பணம் கிடைக்கும். விபத்திற்குக் காரணமாக இருந்தவர் ஏதாவது பணம் கொடுத்தால் அதைக் காப்பீடு நிறுமம், தான் தந்திடும் இழப்பீட்டுப் பணத்தில் கழித்துக்கொள்ள முடியாது. அதேபோல் மாற்றமர் அடைமான உரிமையும் (Subrogation) இழப்பீடு தந்துவிட்ட பின்னர்ப் பெறமுடியாது. மற்றக் காப்பீடு வலியுறுத்தப்படுவதைப் போல் இதுவும் வலியுறுத்தப்படுகிறது. காப்பீட்டின் பொதுக் கோட்பாடுகளான நன்னம்பிக்கை, காப்பீடு செய்யத்தக்க நலன் போன்றவை இதற்கும் பொருந்தும். அணமைக் காரணம் இங்கு அவசியம் இருக்கவேண்டும். விபத்து நேரடியாக ஏற்பட்டு இறப்பில் முடிந்தால் காப்பீடு நிறுவனம் பொறுப்பேற்கும். இறப்பு தொற்று நோயினால் ஏற்பட்டாலும், விபத்தினால் ஏற்பட்டாலும் விபத்தினால் முடமாக்கப்பட்டாலும் காப்பீடு நிறுவனம் இழப்பீடு தரவேண்டும். மேலும் நோய் விபத்தினால் இருக்க வேண்டும். அவ்வாறில்லாமல் விபத்து ஏற்படுவதற்கு முன்பே அவருக்கு நோய் இருந்தாலும் அல்லது முடமாக இருந்து விபத்து ஏற்பட்டதும் இறந்துவிட்டாலும் காப்பீடு நிறுவனம் இழப்பீடு தரவேண்டிய அவசியமில்லை. ஒருவர் மது அருந்தியுள்ளபோது ஏற்பட்ட விபத்திற்கும், உயிருக்கு ஆபத்து விளைவிக்கும் தொழிலில் ஈடுபட்டிருக்கும்போது ஏற்பட்ட விபத்திற்கும் காப்பீடு நிறுவனம் பொறுப்பாகாது.

கே என்.இரா.

துணை நூல்கள்:

Ahmad, M M., and Khan, M.A , Theory and Practice of Insurance in India, Educational Book House, Aligarah, 1985.

Kuchhal, M.C., Mercantise Law, Vikas Publishing House Pvt. Ltd , New Delhi, 1981.

***தனியாளும் சமூகமும்***: குழந்தை பிறக்கும் பொழுது ஒரு சதைப் பிண்டமாகத்தான் இருக்கிறது. உயிர் இருக்குமே தவிர அதனால் பகுத்தறிந்து இயங்க முடியாது. நாள்கள் செல்லச் செல்லத்தான் வளர்ச்சியடைகிறது. வளர்ச்சி அடைய அடையச் சமூகமயமாதலின் வாயிலாக அக்குழந்தையைப் பயனுள்ள ஒரு மனிதனாக மாற்றலாம்.

ஒரு குழந்தை மக்களோடும் பொருள்களோடும் கொண்டுள்ள தொடர்பால் சமூகத்தோடு தன்னை இணைத்துக்கொள்கிறது அக்குழந்தைக்கு ஒரு சமூகச் சூழ்நிலையைச் சுற்றியிருக்கின்ற மக்களும் பொருள்களும் உண்டாக்கிக் கொடுக்கின்றனர்.

பிறந்த குழந்தை சுற்றுப்புறச் சூழ்நிலையை அறியும் மன நிலையில் இருப்பதில்லை. முதலில் தன்னைச் சுற்றியுள்ள பொருள்களை உணரத் தொடங்குகிறது. படிப்படியாகச் சுற்றியுள்ள மக்களை உணரத் தொடங்குகிறது. மக்களுள் முதலில் தன்னைப் பெற்றெடுத்த தாயைக் கண்டு கொள்கிறது. பின்னர்த் தந்தையைக் கண்டு கொள்கிறது. இவர்கள் அக் குழந்தைக்கு உலகை அறிமுகப்படுத்துகிறார்கள். சமூகவியல் அறிஞர்களும் உளவியல் அறிஞர்களும் குழந்தையின் இந்தத் தொடக்க கட்டம், மிகவும் சிக்கலான ஒன்றாகும் என்று வருணித்துள்ளனர்.

தாய், தந்தை என்ற குறுகிய வட்டத்திலிருந்து படிப்படியாகக் குடும்பத்திலுள்ள உறவினர்கள், பின்னர் விளையாட்டுப் பருவக் குழந்தைகள்

பள்ளித் தோழர்கள், ஆசிரியர்கள, நணபர்கள் பின்னர் வெளியிலுள்ளவர்கள ஆகியோரை அறிகின்றனர். இவர்கள் எலலோரும் ஒரு தனிமனிதனைச் சமூகமயமாக்கினாலும் முதனிலைக குழு என்று குறிப்பிடப்படுகின்ற குடுமபம்தான முககியபஙகு வகிக்கின்றது.

வளருகினற குழந்தைக்குக் குடும்பத்தில் இடும் கட்டளைகள மூலமும், பினனர் நண்பர்கள், வெளியாள்கள ஆகியோரோடு பழகுவதன மூலமும் சமூகததின் நிலையை நனறாக உணர்ந்து கொளள முடிகிறது.

''தனிமனிதன் சமூகமயமாதலுக்குச் சமூகம தான ஒரு காரணி'' என சார்சு மீடு (George H. Mead) என்ற அறிஞர் கூறியுள்ளார். இது போன்ற கருத்தையே தாக்கீம் (Durkheim) என்ற அறிஞரும் தெளிவுபடுத்துகினறார். 'தனிமனிதன், தான சாாந்திருககினற குழுவை வைத்துத்தான சமூகத்தில் உருவாக்கப்படுகினறான்' எனகிறார். சம்னரின (Sumner) நாட்டவர் வழக்குக் கோட்பாட்டிலும் இது.தெளிவாக விளக்கப்பட்டுளளது.

தனி 'மனிதன் முதிாசசி அடைய அடைய ஆளுமைககு உடபடுகிறான. கிம்பால யஙகு (Kinball Young) என்ற அறிஞரின் கூற்றுப்படி ஆளுமை என்பது மககள் கடைப்பிடிக்கும் பழக்கங்கள் மனோநிலை, எணணங்கள ஆகியனவாகும், எனலாம். எனினும், சுறறுப்புறச் சூழ்நிலைகளும் தனிமனிதனின் ஆளுமையைத் தீர்மானிக்கும் ஒனறு எனப் பல ஆராய்ச்சியாளர்கள தெளிவுபடுத்துகினறனர்.

மனிதனின் ஆளுமையைப் பாகுபடுத்தும் முயற்சி வெற்றி பெறவில்லை. எனினும் கிரேக்க அறிஞன இப்போகிரட்டசு (Hippo Crates) மக்களை நான்கு வகையாகப் பிரிக்கிறார். அவை தைரியம் மிக்கவர்கள், கோழைத்தனம் மிக்கவர்கள, வருந்திக்கொண்டே இருப்பவர்கள், கோபப்பட்டுக் கொணடேயிருப்பவர்கள என்பனவாகும். யுஙகு (Jung) என்பவர் மக்களைப் புறப்பொருளகளிடம அக்கறை காட்டுபவர்கள, அகப் பொருளகளிடம் அக்கறை காட்டுபவர்கள் என இருவகையாகப் பிரிக்கிறார்.

ஒவ்வொரு சமூகத்திலும் உள்ள பண்பாட்டிற் கேற்றபடி மனிதனின் ஆளுமையும் மாறுபடுகின்றது. உருத்து பெனிடிக்டு (Ruth Benedict) என்ற அறிஞர், பணபாட்டின்படி மக்களை இரு வகையாகப் பிரிக்கிறார். முதல்வகை மக்கள் தன்னடக்கத்தோடும், நிதானமாகவும், ஒத்துழைப்புமனபபானமையோடும் நடந்து கொளகிறவர். மற்றொரு வகையினா எழுச்சி மிக்கவர்களாகத் தனனடக்கமிலலாமல அதேசமயம தகுதி பார்ப்பவர்களாகத தனித்தனமை யோடும்,போட்டி மனப்பானமை மிக்கவர்களாகவும் விளங்குபவர் எனகிறார்.

சமூகத்தில் நிருணயிக்கப்பட்ட நெறிகளுக்கும் பழக்க வழக்கங்களுக்கும் ஒரு மனிதன கட்டுபபட்டு நடக்கவேணடும் என எதிாபார்க்கப்படுகிறது. சில சூழ்நிலைகளில் அவ்வாறு அவன நடகக இயலாமற் போகலாம். அதன பொருள் அவன சமூகத்தை விட்டு விலகிச் செல்கிறான என்பதாகும். அதன் காரணமாகக் குறறம் செய்யும் குழுககளுடன அவன தொடாபு வைத்துககொளள வாய்ப்பு ஏற்படுகின்றது. அவன் அவவாறு விலகிச் செல்வதற்கான சூழ்நிலைகளை ஏற்படுத்துவதும சமூகந்தான எனபது வெளிபபடை. ஆகவே, அவன் சமூகத்தை விட்டு விலகிச செலவதற்குச சமூகமும் ஒரு காரணமாக அமைகினறது எனலாம. தனி மனிதனின மனத்தில உதிக்கின்ற போராட்டந்தான பின்னா அவன சமூகத்தோடு தொடாகின்ற போராட்டத்திற்கு அடிப்படையாக அமைகின்றது.

பணபாடு மிக்க ஒரு சமூகம் சிக்கல்கள் நிறைந்ததாகவே காணப்படும். சமூகததிலுள்ள ஒருவனுககுக குடும்பத்தில் கற்பிக்கப்படுவதறகும், அவனிடம் உலகம் எதிர்பார்ப்பதறகும் இடைவெளி காணப்படுகின்றது. ஒரே செயலுககு அவன் சாாந்திருக்கினற பல குழுக்கள பலவிதமான விளக்கங்கள கொடுத்துக்கொணடேயிருககும். அதறகிடையில சமூகத்தில புதிய சிந்தனைகளும், புதிய மாறறங்களும் நிகழும். இச்சூழ்நிலைகளை உணாந்து நடநதுகொளபவாகள சமூகத்தோடு ஒன்றிச் செலவார்கள். மேறகணட சூழநிலைக்கேறபத் தம்மை மாற்றிககொளள இயலவில்லையெனில அவர்கள குறறவாளிகளாகவும், நரம்பு நோய் பிடித்தவாகளாகவும, கலகக்காரர்களாகவும மாறுவதோடன்றி அகால மரணமும அடைகினறனர். சமூகத்தோடு அவர்கள் தொடுக்கினற போரில் அவர்கள் தோற்றுவிடுகினறனர்.

பணடைய சமூகங்களை நோக்கும்போது சமூகத்துடன் தனி மனிதன தொடர்நத போர் மிகவும் குறைவாகவே காணப்பட்டது. சிலசமயம் முறறிலும் இல்லாமலும் இருந்திருக்கிறது. சமூகத்திலுளள குழுக்கள் ஒன்றாக இணைந்து செயற்பட்டதே அதற்குக் காரணம் எனலாம். பண்டைய சமூகங்களில் சமூகத்தை ஒழுங்குபடுத்தும் பணிகளை விடச் சமூகத்தின் - இணைப்புத்தான் முக்கியமாகக்

கருதப்பட்டது. மேலைநாட்டு நாகரிகத்தோடு இச் சமூகங்கள் தொடர்பு ஏற்படுத்திக்கொண்ட பின்னர்த் தான் தனிமனிதன் நிலைகுலைந்து போனான் என்று பல மானிடவியல் ஆராய்ச்சிகள் கூறுகின்றன.

தாமசு என்பவரின் ஆராய்ச்சிப்படி போலந்து சமூகம் அமைதியான வாழ்க்கைமுறை கொண்ட தாகும். எளிமையாக மக்கள் வாழ்ந்துவந்தனர். அவர் கள் எளிமையான வாழ்க்கை முறையிலிருந்து சிக்கல் நிறைந்த நகர நாகரிக வாழ்க்கை முறைக்குத் தம்மை மாற்றிக்கொண்ட பின்னர்த்தான் தனிமனி தச் சீர்குலைவுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

சிக்கல் நிறைந்த வாழ்க்கையும் அத்துடன் இணைந்த சிக்கல்களும் தனி மனித மனநிலை முறி வுக்குக் காரணமாக அமைகின்றன. மனநிலை பாதிக் கப்பட்டவர்களின் புள்ளி விவரங்களைப் பார்க்கிற போது அவர்கள் வேளாண்மைச் சமூகத்தைவிடத் தொழில் சமூகத்தில் மிகுதியாகவும் கிராமப் பகுதியை விட நகரப் பகுதிகளில் மிகுதியாகவும் காணப்பட்டமை தெரியவருகின்றது. இராபர்ட்டு பேரிசு (Robert E.L Farris) வாரன் தன்கம் (H. Warren Dunham) ஆகி யோர்களின் ஆராய்ச்சிப்படி நகரப் பகுதிகளில் மன நிலை பாதிக்கப்பட்டவர்களின் அளவு இடத்திற் கேற்ப மாறுபட்டிருப்பது தெரியவருகிறது. சேரிப் பகுதிகளில் மனநிலை பாதிக்கப்பட்டவர்கள் மிகுதி யாகக் காணப்படுகின்றனர்.

தனி மனிதனைக் கட்டுப்படுத்தும் உரிமை சமூ கத்திற்கு உள்ளது. இதைச் சமூகக் கட்டுப்பாடு என்று சொல்வார்கள். இராசு (E.A. Ross) என்ற அறிஞர் தான் முதன்முதலில் 'சமூகக் கட்டுப்பாடு' பற்றி விரிவாக ஆராய்ந்துள்ளார். சமூகக் கட்டுப்பாட்டிற் குப் பலவித காரணிகள் காணப்படுகின்றன. அவை பொதுக்கருத்து, சட்டம், நம்பிக்கை, சமூகப் பிரேரணை, சமயம், எண்ணங்கள், சடங்குகள், கலை, ஆளுமை ஆகியவையாம். கேயெசு (Hayes) என்ற அறிஞர் சமூகக் கட்டுப்பாட்டிற்குப் பலமான ஒரு வழி வகுப்பது கல்வியாகும் என்றும் அதைச்செயற்படுத்து வது குடும்பம் என்றும் கூறுகின்றார்.

இதிலுள்ள உண்மை, தனி மனிதனுக்கும் சமூகத் திற்குமுள்ள உறவு எப்பொழுதும் தொடர்ந்து கொண்டேயிருக்கிறது என்பதாகும். மனிதனால் தனித்து வாழ முடிவதில்லை. பிறரோடு கூடி வாழும் இயல்பை அவனால் கைவிட்டுவிட முடியாது. மனித னுடைய தேவைகள் ஒரு மனிதனால் தனித்துநின்று நிறைவேற்றப்பட முடியாதவைகளாக அமைந்திருப் பதால் பிறரைச் சார்ந்து அவர்களுடன் சேர்ந்து வாழ வேண்டிய கட்டாயத்திற்கு உட்படுகிறான்.

ஒருவனிடம் மனித குணங்களும் இயல்புகளும் ஏற்பட வேண்டுமானால் அவன் சமூகத்தில், சமூக உறவுகள் நிலவும் ஏதாவதொரு குழுவில் வாழ்ந்தாக வேண்டும். அந்த வாய்ப்பு ஏற்படாமற்போனால் அவன் மனித குணங்களுடன் விளங்க முடியாது. மேலும் ஒருவன் 'தான் யார்' என்பதை உணரவும் சமூகத்தொடர்பு அவசியம் தேவைப்படுகிறது. 'தான் யார்',? 'எந்தப் பாலினத்தைச் சார்ந்தவன்?' என்ற உணர்வு பெறவும் சமூகத்தொடர்பு தேவைப்படு கிறது. அறிவு வளர்ச்சியடையவும், உணர்ச்சிகள் பக்குவம் பெறவும் சமூகத் தொடர்பு உதவுகிறது. இவ்வாறு மனிதனுக்குச் சமூகம் மிக இன்றியமை யாத காரணியாகிறது.

மனிதர்கள் ஏன் பிறரோடு கூடிப் பழகிச் சமூக உறவுகளை ஏற்படுத்திக்கொள்கிறார்கள்? ஏன் தங்க ளுக்குள் சமூகம் என்ற ஓர் அமைப்பை உருவாக்கிக் கொள்கிறார்கள்? இவ்வினாக்களுக்கு விடை 'மனிதத் தேவைகள்' என்பதாகும். அத் தேவை களின் காரணமாகத்தான் மனிதர்கள் தங்களுக்குள் சமூகம் என்ற அமைப்பை அமைத்துக்கொண்டு கூடி வாழ்கிறார்கள். தனி மனிதனின் தேவைகளே சமூகம் என்ற அமைப்பு ஏற்படக் காரணம் என்று பிளேட்டோ (Plato) கூறுகிறார்.

சமூகத்தை ஓர் உயிரினத்திற்கு நிகராகக் கருதும் எர்பர்ட்டு இசுபென்சர் (Herbert Spencer) போன்ற வர்கள் ஓர் உயிரினம் உயிர்வாழ உயிர்மங்கள் (Cells) எப்படித் தேவையோ அவ்வாறே சமூகம் நிலைத் திட மக்கள் தேவை என்று கூறுகிறார். எஸ்.ஜெ.

**துணை நூல்கள்:**

Lindesmith, Alfred R., and Anselm L., Stranss, The Study of Human Intension, Holt Rinehart and Winston, New York. 1973.

Marshall, W.A., etal, The Seven Ages of Man, Los Altos, Catıf, Wılliam Kaufaren, 1973.

Samuel Koening, Men and Society., The Basic Teachings of Sociology, Barnes & Noble, Inc., New York, 1957.

***தனி வங்கி முறை***: பல விதமான வைப்பு களின் வடிவங்களில் குறைந்த வட்டி விகிதங்களில் கடன்களையும் பல்வகை நிதிகளையும் பெற்று அதிக மான வட்டி விகிதங்களில் பல விதமான கடன் களைக் கொடுத்தும், உண்டியல்களைக் கழிவு செய் தும், பிற வங்கிப் பணிகளையும் ஆற்றிச் செயற்

படும் நிதி நிறுவனத்தை வங்கி எனபர். வங்கிகளில் மைய வங்கி (Central Bank), வணிக வங்கி (Commercial Bank), பரிமாற்ற வங்கி (Exchange Bank), தொழில் வஙகி (Industrial Bank), கூட்டுறவு வஙகி (Cooperative Bank), சேமிப்பு வங்கி (Savings Bank) எனப பல வகையுண்டு. வங்கி அமைப்பின் அடிப் படையில வஙகிகளைத் தனி வங்கி முறை (Unit Banking), கிளை வஙகி முறை (Branch Banking), தொகுப்பு வங்கி முறை (Group Banking), தொடர் வங்கி முறை (Chain Banking) எனப் பலவகைப் படுத்துவர்.

கிளைகள் (Branches) எவையும இல்லாமல் ஒவ வொரு வங்கியும் தனித்து இயங்கும் தனமையுடைய தாயின் அந்த அமைப்பைத் தனி வங்கி முறை என பர். இவ வங்கிகள் ஒவவொனறுக்கும மூலதனம், இடம், இயக்குநர் குழு, சட்டஙகள், விதிமுறைகள போனறவை எல்லாம் தனிததனியாக இருக்கும். ஐக்கிய அமெரிக்க நாட்டில் நிகழ்நத உள்நாட்டுப் போருக்குப் பின இம்முறை அந்த நாட்டில் தோன றிப் புகழ் பெறத் தொடஙகியது. வங்கித் தொழி லைத் திறமபட நடத்தவும், சருவாதீனப் போக்கு உருவாவதைத் தவிர்க்கவும இம்முறை சிறந்த தெனக் கருதப்பட்டது.

**சிறப்புகள்:** குறிப்பிட்ட நிலப் பகுதியின மூலதன மும் பிற விவரஙகளும் அப் பகுதியின் வளர்ச்சிக்கே பயன்படுத்தப்படுவதால் இமமுறை வட்டார வளர்ச்சியைப் பேணுகிறது என்று குறிப்பிடலாம். ஒவ்வொரு நிலப் பகுதியும் பல வழிகளில் தனித் தன்மைகளைப் பெற்றிருக்கலாம். எனவே, அப் பகுதியின் தேவைகள, வளர்ச்சி வாய்பபுகள, சிககல் கள ஆகியவை எல்லாம் தனித் தன்மை உடை யனவாக இருக்கலாம். தனி வங்கி முறையில் உள்ள வங்கியாளாகள (Bankers) அந்தந்தப் பகுதி யைச் சேர்ந்தவர்களாக இருப்பார்களாதலால் நிலைமைக்கேறபச் சிறப்பாகப் பணியாற்ற வாய்ப்பு கள் உள்ளன. சிறு அளவில் இருப்பதாலும், வங்கி யின் செயல் திறன் நடவடிககைகள பற்றி வாடிக்கையாளர்களுககும முழுஅளவில் தெரிந்திருப் பதாலும், தவறுகளும, மோசடிகளும் தவிர்ககப் பட்டு நேர்மையான நிருவாகத்தைப்பெறும் வாய்ப்பு கள் இம் முறையில் மிகுதியாக உணடு. கிளை வஙகி முறையில் இருப்பதாகச் சொல்லப்படும கால தாமதம், சிகப்பு நாடாமுறை (Red tapism), உள் ளூர்த் தேவைகளின் புறக்கணிப்பு, சீரற்ற வட்டார வளர்ச்சி, சருவாதீன அமைப்புத்தோனறும் வாய்ப்பு, தவறுகளும் மோசடிகளும் நிகழுவதற்கான வாய்ப்பு கள் போன்ற குறைகள் தனிவங்கி முறையில் இலலை.

**குறைகள்:** இக்காலத்தில் நிகழும் போளவு வங்கி நடவடிக்கைகளை மேற்கொள்ள இவ வங்கி முறை யில் வாய்ப்புகள் இல்லாதிருப்பதால் இலாபத்தின் அளவு குறைவாக இருக்கும்; இடர்களைத் தாஙகிக் கொள்ளும் தன்மையும் இவ வங்கிகளுககு மிகவும் குறைவாகவே இருக்கும். மூலதனப் பற்றாச்குறை, நாடு தழுவிய அளவில் வங்கி நடவடிக்கைகளை மேற் கொளள இயலாமை, பொருளாதாரக் காரணிகளுக் கேறபப் பண நடவடிககைகளை மேற்கொளள இயலாமை போன்றவை இம்முறையில உள்ள பிற குறைகளாகும். செல்வமும் செலவாககும் படைதத ஒருசிலரின் நன்மைக்காக மட்டும் செயற்படத் தக்க விரும்பத் தகாத நிலைகள் தோனறிவிடலாம். தர மும் தகுதியும் இலலாமல அதே நேரததில் வலிமை யும் வனமையும் கொணட உளளூர்க்காரர்கள கடன கேட்கும் போது, வங்கியாளர்கள் மறுபபதால் அதன மூலம் பல விதமான உளளூா எதிர்ப்புகளை எதிர் நோக்க வேண்டிய சூழநிலைகளும் உருவாகலாம.

என்.எஸ்.பா.

**துணை நூல்கள**


**பாலசுப்பிரமணியன், என்.எஸ்**, பணம், பாஙகு, பன் னாட்டு வாணிகம, உமா பப்ளிகேஷனஸ, மதுரை, 1987,

**Vaish, M.C.**, Monetary Theory, Retan Prakash Mandir, Agra, 1975.


***தனிவாக்கியம்*** சொற்களின் தொகுதியே வாக்கியம் எனச் சொல்லப்படுகிறது. வாககியங்கள் பல வகைபபடும். அவற்றில் ஒன்று தனி வாககிய மாகும். ஒரே ஒரு வினையை அல்லது வினைமுற்றை ஏற்று வரும் வாக்கியம் தனி வாக்கியம் என்று சொல லப்படும். எடுத்துக் காட்டாக, 1) இராமன வந்தான எனபதில் வந்தான் என்னும் ஒரே ஒரு வினை முறறே வந்துள்ளது. இராமன் என்பது எழுவாயாகும். தனி வாக்கியங்களில் செயப்படு பொருளும் எழுவாயோடு சேர்ந்து வருவதையும் காணலாம். 2) இராமன கண்ணனை அடித்தான். வாக்கியம் 2-இல கணணன் செயப்படு பொருளாகவும், இராமன் எழுவாயாக வும் அடித்தான் பயனிலையாகவும் வருகினறன.

பொதுவாக, எலலா மொழிகளிலும் ஒரு வாக் கியத்தில பெயர்ச் சொல் தொடர், வினைச்சொல் தொடர் என இரணடு தொடர்கள் காணப்படும். தமிழில் வாக்கியம் 1 இல் இராமன் என்பது பெயர்ச் சொல் தொடராகவும், வநதான் எனபது வினைச் சொல் தொடராகவும உளளன. ஆனால் தமிழில, ஒரே வாககியத்தில இரண்டு பெயர்ச்சொல் தொடர் ரும் இருக்கும்.

3) அவன் இராமன். பெயரும பெயரும் ஏற்று வாக்கியமாக வருவதை வாக்கியம 3-இல் காண லாம். உண்மையிலே 3-ஆம் வாக்கியத்தின் புதை நிலை அமைப்பைப் பார்த்தால் அவன் இராமன் ஆவான, என்ற அமைப்புக் கிடைக்கிறது. வாக்கியம 4-இல் ஆவான என்பது இணைப்புச் சொல்லாகும். இதுபோன்ற வாக்கியங்களை ஆங்கில மொழியிலும் மலையாள மொழியிலும் காணப்படுகின்றன.

5) அவன் இராமன் ஆணு (மலையாளம்)

6) He is Rama (ஆங்கிலம)

ஆஙகிலததில் is என்னும சொல்லும் மலையாளத்தில் ஆணு எனனும சொல்லும் தமிழில் ஆவான என்னும் சொல்லும் இணைப்புச சொலலாகச்(Copula) செயற் படுவதைக காணலாம். இணைப்புச் சொலலும் வினைச் சொல்லாகவே செயற்படுகின்றது.

ஒரு சொல்லே தனிவாக்கியமாக அமைதலும் உண்டு. ஓடு எனபது ஒரு தனி வாக்கியமாகும். இலக் கணப்படி நீ ஓடுவாய் என்று இருக்க வேண்டும். ஆதலின ஓடு என்னும் ஏவல் ஒருமை வினை முறறில ஆய் என்னும் விகுதி கெட்டது என இலககணம கூறும். பேச்சு வழக்கில் ஓடுவாய் எனற வடிவமே இல்லை. எழுத்திலும் அதற்கு இடம் இல்லை எனறே கூறலாம்.

எனவே, ஓடு என்பதே வாக்கிய வடிவம் என லாம். ஒருவன் தன் முனனிலையாக நிறகும மற றொருவனுக்குக கூறும் சொற்றொடர் இது. முன நின்றானுக்கு ஏவலை உணர்த்தும்போது ‘நீ’ எனறு குறித்துக கூறுவது மிகையாகும். ஆதலின ஓடு என்ற சொல் மட்டும் நின்று தனி வாககியமாக வழங்கு கின்றது.

இதற்கு அடுத்த நிலையில வளர்நது அமைந்த வாக்கியம் தான் எழுவாயும பயனிலையாகவும் இரண்டு சொற்கள் தொடாந்த எளிய வாக்கிய மாகும். பல சொற்கள தொடரும் எளிய வாக்கியங் களை ஆராயின் அங்கும் எழுவாயும் பயனிலையு மாகிய இரு சொற்களே வாக்கிய அமைப்பிற்கு இன்றியமையாதனவாக விளஙகும். மறறச சொற கள எழுவாய்க்கோ பயனிலைக்கோ இரண டிற்குமோ அடையாக நிற்பன. இவவாறு அமையும் வாககியங்களை முழு வாக்கியஙகள என்றும மற்ற வாககியஙகளைக் குறை வாக்கியஙகள் எனறும் புளூம்பீல்டு பாகுபாடு செய்கிறார்.

தமிழில் தனி வாககியங்களை இணைக்க எச்சங் கள் பயனபடுத்தப்படுகின்றன. எச்சஙகளைப் பயன் படுத்தித் தனி வாக்கியங்கள் தொடர் வாக் கியமாக அமைக்கப்படுகினறன. எடுத்துக் காட்டாக இராமன் வந்தான். இராமன பாடமபடித்தான. என்னும் இரு தனி வாககியங்கள், இராமன வந்து பாடம் படித்தான் என்னும் தொடர் வாக்கியமாக மாற்றமைப்புப் பெறுகின்றது. வே.சா.அ.

**தனி விலக்குரிமை**: சட்டம் சட்டப் பொறுப் பிலிருந்து விலக்களிபபதின் மூலமாகச் சிலருக்கு விலக் குரிமை அளிக்கிறது. ‘சட்டத்தின் முன அனைவரும சமம்’ எனற கொளகையினைக் கடைப்பிடிககினற நாடுகள கூட இநத விலககுரிமையினைச் சிலருக்கு வழஙகுகிறது. ஒரு காலததில் அரசர்களுக்கு மட்டுமே அளிக்கப்பட்டிருந்த இநத உரிமை, இன்று ஒரு நாட் டின் இறைமையானது எந்தப் பொறுபபில உளளவா களிடத்திலெலலாம நிலவுவதாகச் சட்டம காட்டு கிறதோ அவர்களுக்கெல்லாம் வழங்கப்படுகிறது. எனவே தனி விலக்குரிமை (Immunity) இககாலத்தில் தொழில அடிபபடையிலேயே தரப்படுகிறதாதலின ஒரு தனி ஆளின் உரிமையாக இது கருதப்படுவ தில்லை.

எடுத்துக்காட்டாக, குடியரசுத் தலைவரின தனி விலக்குரிமையையும் நாடாளுமனறம் மற்றும சட்ட மன்ற உறுப்பினாகளின தனி விலககுரிமையையும் குறிப்பிடலாம. இவர்களுக்குத் தரப்பட்டிருக்கினற தனி விலக்குரிமையானது முழுமையான தனி விலக் குரிமையன்று. சில வகையான வழக்குகளுக்காகச் சில குறிப்பிட்ட நேரங்களில் மட்டுமே இவர்களுக்குச் சட்டப் பொறுப்பிலிருநது விலக்கு அளிககப்பட்டிருக கின்றது.

அரசியலமைபபுச் சட்டததின் 194 ஆம பிரிவு ஒரு சட்டமனறத்தின் உறுப்பினர் சட்ட மன றத்தில் பேசிய பேச்சுகளுக்காகவோ அவா சட்டமன்றத்தில எநத வகையில் வாககளித்தார் என்பது குறித்தோ எந்த நீதிமனறத்திலும் வழக்குத் தொடர முடியாது என்று கூறுகிறது. எனவே, இது சட்டமனற உறுப்பினர்களின் தனி விலக்குரிமை ஆகிறது.

அரசியலமைப்புச் சட்டத்தின 361-ஆம் பிரிவு இந்தியக குடியரசுத் தலைவா, மாநில ஆளுநா, இராசபிரமுகர் ஆகியோருக்குச் சட்டப்படியான தனிவிலககுரிமையைப் பற்றிக் கூறுகிறது இதன்படி ஒருநாட்டின் குடியரசுத் தலைவரை அலலது ஒரு மாநிலத்தின் ஆளுநரை ஒரு குற்றவியல வழக் குக்காகக் கைது செய்ய முடியாது. இது மேற்கணட பதவிக்கு அவர்கள வந்ததிலிருந்து அப்பதவிக காலம் முடியும் வரையிலேயே பொருந்தும். ஏற்கெனவே அவர்கள் மீது வழக்கு ஏதாயினும் இருக்குமேயா

னால் அது அவர்களது பதவிக் காலம் வரை நிறுத்தி வைக்கப்பட்டு அவர்கள் பதவிககாலம் முடிந்த பின்னர்த் தொடரும்.

இது போலவே, நீதிபதிகள தஙகள் தொழில் முறையில் பேசிய சொற்களையும் செய்த செயல்களையும் எதிர்த்து எந்த நீதிமன்றத்திலும் வழக்குத் தொடர முடியாது. ஏனெனில மேற்கணட செயல்களுக்கான தனிவிலக்குரிமையை நீதிபதிகள் பெற்றிருக்கினறார்கள.

'சுதந்திரம்' எனபது இறைமையின் இனறியமை யாத கூறாகக் கருதப்படுவதால ஒரு நாட்டின் இறைமையைக் காட்டுகின்ற எந்த ஒருவரையும் அல்லது பொருளையும் அயல் நாட்டு நீதிமன்றஙகள கூடத் தன் ஆளவரைக்குள சேர்த்துக் கொளவது இல்லை.

எடுத்துக்காட்டாக: ஆஙகில நீதிமன்றத்தில இந்தியக் குடியரசுத் தலைவரை வழக்கு ஒன்றில தரப்பினராகச சேர்க்கப்படுமானல குடியரசுத் தலைவரின் தனிவிலக்குரிமையைக கருத்திறகொணடு அந்த வழககின் மீது தனக்கு ஆளவரை இலலை எனறு கூறிவிடும். அவரை நீதிமன்றததிறகு வர வழைப்பதற்கான ஆணை எதுவும் அனுப்பாது. ஏனெனில அவர் ஆங்கில அரசிக்கு இணையான வராக ஆங்கிலச் சட்டஙகளால கருதப்படுகிறார.

ஆங்கில அரசி தனிவிலக்குரிமை பெற்று விளங் குவதால் அவருககுச் சமமான குடியரசுத் தலை வரும் தனிவிலக்குரிமை பெற்றவராகத தீர்மானிக் கப்படுகிறார். அரசி வழக்கின் ஒரு தரபபினராக விளங்கும் போது நீதிமன்றம் அந்த வழக்கு தனது ஆளவரைக்குள் இல்லாத ஒனறாகத் தீர்மானிப்பது போலவே இநதியக் குடியரசுத் தலைவருக்கு எதி ரான இந்த வழக்கும் அநத நீதிமன்றத்தின ஆள வரைக்குள வாராத ஒன்றாகக் கருதப்படுகிறது.

இது போலவே வெளிநாட்டுத் தூதர்களும், வெளி நாட்டுஅரசுக கப்பலகளும கூடப் பனனாட்டு சட்டத் தின கீழத் தனிவிலக்குரிமை பெற்று விளங்குகினறன.

ஓர் 'இறைமை ஆற்றல்' மற்றொரு இறைமை ஆற்றலைத் தனது ஆள்நில வரையின கீழ்க் கொணடு வருவதில்லை எனற கொளகையும், ஒரு நாடு மற்ற நாட்டுடன எப்படி நடந்து கொள்ள வேணடுமோ அது போலவே ஏனைய நாடுகள அந்த நாட்டுடன் நடந்து கொளளும் என்ற கருததும், 'இறைமை உரிமை' கொண்ட நாடுகளுக்கு எதிராக ஓர் அயல் நாட்டு நீதிமன்றம் தன் தீர்ப்பினை நிறைவேற்ற முடியாது என்னும் கருத்தும் கொண்டே பன் னாட்டுச சட்டம் சிலருக்குத் தனிவிலக்குரிமை நல் குகிறது. ம.கா.

**தனுசு:** மார்கழி மாதம சூரியன் கடந்துவரும் இராசியைத் தனுசு என்று குறிப்பிடுவர். தனுசு என்பதற்குக் கார்முகம, வில், சராசரம் என்ற பெயர்களும் உண்டு. தனுசு இராசியில் இடம்பெறும விண்மீன்கள மூலம், பூராடம், உத்திராடத்தின் முதற் பாகம் என்பவை ஆகும். பறவை ஒன்றை அம்பால வீழத்த வேடன ஒருவன குறிவைப்பதுபோல் இநத விணமீன கூட்டம் காட்சியளித்ததால் முனனோர் தனுசு (விலல) என்று பெயரிட்டனர். வேடனோ விலங்கின உடலும் மனிதத் தலையும் உடையவன். அடுத்த இராசியாகிய மகரத்தில் திருவோணம் என்ற நட்சத்திரம் அமையும். அதனைச் சிறகோணம எனறும குறிப்பர். அதன் பொருள சிறகுடையது எனபதாகும். எனவே, வேடன் அமபெய்யும் கருத்து வலுப்பெறுகிறது. தனுசு எனனும வீட்டில் சநதிரன நிற்க ஒருவா பிறந்தால் அவர் தனுசு இராசியில் பிறந்தவர் எனப்படுவார். இலக்கினம் அல்லது பிறந்த நேரம் தனுசில் அமைந்தால தனுசு இலக்கினம் என்று கூறுவர். தனுசு எனபது வியாழனுக்குரிய வீடு; அதில் அவன் ஆட்சிபெற்றிருப்பதாக நூல்கள் கூறும். தனுசு இலக்கினத்தில் பிறந்தவர்களுக்குச் செவ்வாயும் சூரிய னும் நல்ல பலனைத் தரும். செவவாய் ஐந்துக்கு அதிபதி; சூரியன் ஒன்பதுக்கு அதிபதி. எனவே பஞ சமாதிபதி, பாககியாதிபதி என்ற முறையில் அவை நறகோள ஆயின. எட்டாம் இடத்திற்குரிய தீமை சநதிரனுக்கு இல்லை. சனி இரணடாம் இடததிறகு அதிபதியாவதால் கொல்லான். சுக்கிரனும் புதனும் கொல்லும் உரிமை கொணடவாகள. தனுசு இலக கினத்தில பிறந்தபோது சூரியனும் புதனும் எங்கே னும் கூடி நின்றால் அல்லது ஒருவரையொருவர் பார்த்து நின்றால் அரசயோகங்களை அடைவதுண்டு. தனுசு இலக்கினத்தில பிறந்தோர் ஒரு நிறுவனததை வளர்த்துப் பெரிதாக்கும் ஆற்றல் பெற்றிருப்பர் என்று சோதிட நூல் குறிப்பிடும். தே.ஆ.

**தனுசுகோடி**, தமிழ்நாட்டில் இராமநாதபுரம் மாவட்டத்தின தெனகிழக்கில இராமனின் புண்ணியத் தலமான இராமேசுவரத் தீவின தெனகிழக்குக கோடியில் அமைநதிருந்த நகரம். பல நாடுகளின சுற்றுலாப் பயணிகளால பெரிதும் கவரப்பட்ட சிறந்த சுற்றுலாத் தலமாகவும், சிறநத மீன்பிடித் துறையாகவும் விளஙகிய இந்நகரம் 1964–ஆம் ஆணடில் வீசிய பெரும் புயலினால இம்மியளவும் அடையாளம் காண முடியாத அளவிற்கு அழிக்கப் பட்டுவிட்டது. இந்துக்களின் புண்ணியத்தலஙகளில்

இதுவும் சிறந்ததாக இருநதது. இராமன் பெயரால தீர்த்தக்கட்டம் இருநததாகத தெரிகிறது. இராமன இலஙகை செல்ல நெடுங்கடலைக் கடக்க வழிதரும படி வருணனை நோக்கித் தவங்கிடநதும வருணன வாராமையால் சீறறமுறறுத தன விலலை வளைததுச சுடுசரம் துரநத இடம் இதுவாதலால இது தனுசு கோடி எனறு பெயாபெற்றதாகப பெரியோா கூறுவர். தனுசுகோடி எனற பெயா வடமொழிச் சொல்லான 'தனுசு' எனபதிலிருநது தோனறியது. தனுசு என்பதற்கு 'வில' எனறும் 'கோடி' எனபதற்கு ஓரம அலலது கடைசி எனபதும பொருளாகும. அதாவது இராமேசுவரத் தீவு ஒரு வில்லைப் போனறு அமைநதிருபபதாகவும அதன (தனுசு) ஒரு ஓரம (கோடி) தான தனுசுகோடி எனபதாகவும அறியபபடுகிறது தனுசுகோடிக்குச் 'சேது' எனற மற்றொரு பெயரும உணடு. சேது என்பதறகுப் பாலம் எனபது பொருள. இங்கு இரா மனால இலஙகையை அடைவதறகு ஒரு பாலம அமைக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. அதனமூலம இலஙகை சென்று திரும்பிய இராமன தனுது விலலின் கடைசிபபகுதியால இந்தப பாலததை அழித்து விட்டதாகவும் சமயககதைகள் கூறுகினறன. இராமன் இலஙகையிலிருநது திரும்புமபோது தனது புட்ப விமானத்தில தன்னுடன வநத சீதையிடம் இநத இடததைக (தனுசுகோடியை) காட்டி இது 'சேதுபநதம்' எனறும, மூனறு உலகத்தாராலும வணங்ககககூடிய புணணிய இடமாகும் என்றும, மேலும இது பல பெரிய பாவஙகளை விரட்டக கூடிய இடமுமாகும எனறும கூறுவதாக இராமா யணம படைத்த வால்மீகி இநத இடத்தைப் பறறிக் கூறுகிறாா. தனுசுகோடி பற்றிப்பல சமசுகிருத நூல்களும் தமிழ் நூல்களும கோடிட்டுக காட்டு கின்றன. தனுசுகோடியில குளிப்பது ஒரு புணணிய மாகக கருதப்பட்டது. இதற்கு முககிய காரணம இந்த இடத்திலதான முககிய கடல்களான வங்காள விரிகுடாவும், இநதியபபெருஙகடலும சந்திககினறன.

தனுசுகோடியை அடைய நிலமாாககமாக வழி யில்லை. இது ஒரு சிறந்த தீவாகக் காட்சியளித்த தோடலலாமல ஒரு சிறந்த துறைமுகமாகவும காணபபட்டது. இந்திய-இலங்கை விருபபபபடி 1914-ஆம் ஆணடு மாாசசு மாதம் 1-ஆம தேதி இது ஒரு துறைமுகமாகத் தொடஙகி வைககப் பட்டது. இதுஇநதியாவுககும் இலஙகைக்குமிடையே உள்ள ஒரு முக்கிய நுழைவாயிலாகக் கருதப்பட்டது. இத் துறைமுகம பயணிகள மற்றும் சரககுக் கப்பல போககுவரத்து மூலமாக இலங்கையின் தலைமன்னா ருடன்தொடர்புகொணடிருந்தது. பயணிகள் கப்பல 2மணி நேரத்தில் தனுசுகோடியிருநது தலைமன்னார் சென்றது. தெனனிநதியாவின முககிய பொருள கள இதனவழியாக இலஙகைககு அனுபபபபட்டு அஙகிருந்து மற்ற வெளிநாடுகளுககு அனுப்பப பட்டன

இராமேசுவரத்திலிருந்துதெறகே 19கி மீ தொலை வில ஒரு தொடர்வணடி நிலையம் இருநதது. இராம நாதபுரம வழியாக வரும் இரயிலபாதை கடைசி யாக இஙகு முடியுமபடி அமைக்கப்பட்டிருநதது ஆனால, 1964-ஆம ஆண்டின புயலில சிககித் தனுசு கோடித தொடாவணடிப் பாதை அடிததுச செலலப பட்டது மட்டுமலலாமல மககளால இனறும மறகக முடியாத ஒரு பெரிய பேரிழப்பான தொடர்வணடி விபததும ஏறபட்டது. இந்த விபததில ஒரே பெட்டி யில பயணம்செயத பெஙகளூரைச சேரநத 13 மருத்துவாகள் மாணடனா.

மேலும் சுஙக இலாககா அலுவலகம், தபால -தந்தி அலுவலகம, பொதுத் தொலைபேசி நிலை. யம, இரண்டு மருததுவமனைகள, மேல்நிலை தொடக்கபபளளி,பயணிகள தஙகும வடுதி, சததிரங கள, இரணடு பொழுதுபோககு மையஙகள, விநாயகர் கோயில், காவல நிலையம, துறைமுகப் பாதுகாவல் நிலையம, கப்பல் செபபனிடும் பட்டறை, பஞசாயத்து அலுவலகம் போன்ற முக்கிய அரசு அலுவலகஙகளும், பொதுநல மையங களும் தனுசுகோடியில செயறபட்டு வநதன. இவ விடத்தில், இறந்தவாகளை எரியூட்டிய சாமபலை எடுத்துவந்து கடலநீரில கரைப்பதை மக்கள் இன்றும் அவாகள சமயததின் ஒரு புனித நெறி யாகக் கடைபபிடித்து வருகினறனா. பா.ஜெ.

**தனைனா இந்தியர்** வட அமெரிகக இந்தியப் பழஙகுடியினருள ஒரு பிரிவினர். இவர்கள தெற்கு அலாசுகா (Alaska) பகுதியிலுள்ள கிளாக்கு ஏரிப் பகுதியிலும குக்கு காலவாய்ப (Cook Inlet) பகுதியிலும் வாழகின்றனர். தனைனா (Tanaina) என்ற சொலலிற்கு 'மக்கள்' எனபது பொருளாகும. இவர்கள கனைகோட்டனா (Knaiakhotana) எனறும் சொல்லப்படுவர்.

இவர்கள வாழும பகுதி உயரம் மிகுந்த மலைப் பகுதியாகும். இப்பகுதி கடலோரத்தில உளளதால மலையின் செஙகுத்தான பாறைகள கடலிலிருந்து எழுநது நிற்பதுபோல காணப்படும். கடலும் மலை யும் ஒனறுசோந்து பகுதியாக இருப்பதால் இவர் களின பொருளாதாரம் கடலில கிடைக்கும் மீன களையும், காடுகளில் கிடைக்கும் வேட்டை விலஙகு

களையும் சார்ந்துளளது. இவர்கள் உணவிற்காகப் பலவகை மீனகளைப் பிடிக்கின்றனர்; கிளிஞ்சல் மீன்களை (Shell Fish) விரும்பிப் பிடிக்கின்றனர்; மலைப்பகுதிகளில் வாழும் ஒருவகை ஆடுகளையும், எலி, கலைமானகளையும் வேட்டையாடி உண கின்றனர்.

இப் பழஙகுடிகள் பல பிரிவினராகப் பாகுபட் டுள்ளனர். ஒவவொரு பிரிவும் புறமண முறையைக கொணட இரு பெருங் கூட்டஙகளாகப் (Moiety) பிரிகிறது. ஒரு கூட்டத்தைச் சோந்தோா அவர் களுக்குள மணம் செய்துகொளவதிலலை சமூகம் இரணடு புறமணக் குழுக்களாகப் பிரிக்கப்படுவது போனறே சமூகத தகுதி அடிபபடையில மக்கள் சாதாரண மக்களெனறும் (Commoners), உயர்குடி யினர்(Nobles)என்றும் இரு வகையினராக உளளனர்.

கிராமஙகள் பொதுவாகக் குறைந்த எணணிக கையுடைய குடும்பங்களைக் கொணடுள்ளன. வீடு களின அமைப்பு மிகவும் வியககததகக முறையில் உளளது. நிலையான வீடுகள், மிக நீண்டவை. வீடுகளைப் பாதியளவு பூமிக்குள் புதைந்துளளவாறு கட்டுகினறனர். அதனால் இப்பகுதியில நிலவும கடுமையான குளிரிலிருந்து பாதுகாப்பாக வாழ முடிகிறது. கோடைக காலஙகளில சிறிய குடில்களை பூமிக்குமேல் கட்டிக்கொளகின்றனர். மீன் பிடிக்கச் செல்லுமபோது தொலைதூரப பகுதிகளில் தஙகி யிருந்து திரும்ப வேணடியுள்ளதால் இடைககாலக் குடிசைகளை மிக எளிய முறையில கட்டிக் கொள கின்றனர். பிடிக்கும் மீனகளை உலர வைப்பதற் கெனறு புகையை நிரப்பிக் காப்பதற்கு ஏற்ற அள விலும் குடிசைகளைக் கட்டுவா. பொருளகளை ஒரு பகுதியிலிருந்து வேறொரு பகுதிக்கு எடுத்துச் செலல எசுக்கிமோககள பயனபடுத்தும் சிலட்சு (Sledge) போன்ற வணடிகளைப் பயன்படுத்துகின்றனர்.

ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒரு தலைவர் உள் ளார். இவர் பெரும்பாலும் சமூகச் செயல்களில் மக்களுக்கு அறிவுரை கூறுபவராகவே செயற்படு கிறார். அண்டைப் பழங்குடிகளுடன் போரிடும் போதும் மற்றக குழுவினரிடமிருநது பொருள்களைக் கொள்ளையடிக்கும்போதும் மட்டுமே உண்மையான தலைவனும் அவனுக்குதவியாகச் சில உறுப்பினர் களும் நியமிக்கப்படுகின்றனர்.

வடஅமெரிக்க இந்தியப் பழங்குடிகளிடையே நடைபெறும விரயச் சடங்கு (Potlatch)இவர்களிடை யேயும் நடைபெறுகிறது. இச் சடங்கில் ஒருவர் தம் இனத்தவா அனைவரையும் அழைததுச் சிறப்பான முறையில் விருந்து வைத்து அன்பளிபபு களைத் தருவார். இது அவரவர் தகுதியைக் காட் டும் அளவில நடைபெறும. சிலா இசசடஙகினை அண்மைக்காலத்தில இறந்த உறவினருக்காகச் செய்வர். சிலர் குடுமபத்தில் பிரிந்தவர்கள ஒன்று சேரும் நிகழச்சிக்காகச் செய்வர். சிலா திருமணத தின்போதும் மகன் முதனமுதலில் வேட்டைககுச் செலலும்போதும் விரயச் சடங்கினை நடத்துவர். நிகழசசி எவவகையாக இருப்பினும் இச்சடஙகின் அடிப்படை அவரவரின் தகுதியை வெளிப்படுத்து வதேயாகும்.

இப் பழங்குடிகள் உலகிலுளள ஒவ்வொரு உயி ருளள பொருளிலும் இயல்பிறந்த இயற்கையின் ஆற்றல் (Supernatural Power) உளளதென்று நம்பு கின்றனர். இந்த ஒவவொரு பொருளையும் காக்கும் ஆவி ஒன்றுளளது எனக் கருதுகின்றனா. இநத ஆவி களோடு தொடர்புகொணடு நலல பலனகளைப் பெறத் தெய்வத்தன்மையுற்றவர்களால் (Shamen) மட்டுமே முடியும் எனறு இவர்கள நம்புவதால் தெய்வத்தன்மையுறறவர்களுக்கு மிகுநத மதிப்பும் மரியாதையும் கொடுககப்படுகினறன. சீ.ப.

**தா** மேல அணணத்தின நுனியை நாக்கு அழுத்திவரும் ஒலியும் பிறகுஉடனேயே வாய் அங்காந்து தொடாநது ஒலிததால் வரும் ஒலியும சேர்நது இநத ஒலி உணடாகிறது. த, ஆ எனற இரணடிற்கும் உரிய குறிப்பைப் பாாகக.

**பொருள்:** 'தா' எனபது ஓரெழுத்தொரு மொழியாகத் தனிப்பட்டு வழஙகும்பொழுது 'கொடு' எனற பொருளில வருகிறது ஈ, தா, கொடு எனறு மூன்று சொறகளின் இடையில இருககும இநதச் சொல இணை யான நிலையில இருககும இருவரில ஒருவர் மற்றவரைக் கொடுஎனக கேட் பதைக் குறிககும். இது தொல்காபபியா காலநிலை.

பெயர்ச் சொலலாக வருமபொழுது வலிமை, வருததம், கேடு, குற்றம, பகை, குறை எனற பொருளகளைக கொடுககும்.

வா-வரு எனறு ஆவதைப் போல தா-தரு எனறு மாறி வினையின் அடியாகவும் வழஙகும். இது பயன்படுததப்படும் சூழநிலைக்கொபபப் பல பொருள்களை அளிக்கவலலது. ஆசிரியர் மாணவரிடையே அறிவுறுததல; மனையவா-விருந்தினருக்கு அளித்தல்; மனனர்-படையினா இடையில கிடைககும்படி செயதல, நூல் இயற்றுதல, பொருள பெறுதல், அழைத் தல் எனப் பலவாறாகப் பொருள தருகினறது. இறநத காலததைக் காட் டும் இடைநிலைக் குறியாக மொழியியல நூலாா த்+ஆன எனறு பிரிததுப பொருள கூறுவாா. துணைவினையாகவும் 'தரு' என்பது, போதரு,திரிதரு என்று வழங்கும்.

**வரிவடிவம்:** இதன் வடிவம் தகரத்துக்கு நேர்நத முறையிலேயே அமை யும். ஆகாரம வலப்புறம் இழுககப்பட்ட கோட்டிலிருந்து கீழே இழுககப் பட்டுப் பிறகு தனியாகப் பிரிந்துவரல் ஆயிற்று .. ... ...

கி.பி. முதல் நூற்றாண்டு வரை குகைக் கலவெட்டுகளில .. ... [illegible]

கி.பி. 2-ஆம்அல்லது 3-ஆம நூற்றாண்டில அரச்சலூரில் கண்டபடி . [illegible]

கி.பி. 5-ஆம் நூற்றாண்டில் செங்கம வட்டத்துச் சோமாசிமாறன வட் டெழுத்துக் கல்வெட்டில (இது தமிழுக்கு அமையும).. .. ... [illegible]

கி.பி.7-ஆம் நூறறாண்டில் பலலவ மகேந்திரவாமனின வல்லம்கலவெட் டில . ... ... [illegible]

கி பி. 8-ஆம் நூற்றாண்டில் இரணடாம் பல்லவ பரமேச்சுவரவர்மனின திருவதிகைக் கல்வெட்டில்... ... ... [illegible]

கி.பி. 9–இலிருந்து 12–ஆம் நூற்றாணடு வரை தஞ்சை இராச ராசன கல்வெட்டு... ... .. தா

திருவாலங்காடு இராசேநதிரன் கல்வெட்டு, மூன்றாம் குலோத்துங் கன் காலக் கல்வெட்டுகள் வரை.... ... ... தா

கி.பி. 13–ஆம் நூற்றாண்டிலிருந்து 14–ஆம் நூற்றாணடு வரை குன்றத்தூர் இராசநாராயண சம்புவராயர் கல்வெட்டுகள வரை. ..

விசயநகர காலத்தில்அதாவது கி.பி. 14–ஆம் நூற்றாண்டு முடிவி லிருந்து இக்காலம் முடிய ... ... ... தா

வட்டெழுத்தில் தகரத்துக்குரிய குறிப்பே இதற்கும் பொருந்தும். ஐந் தாம் நூற்றாண்டில் வட்டெழுத்தின் உருவம் தோன்றத் தொடங்கிற்று. ... ... ...

கி.பி. 4–ஆம் நூற்றாணடு இருளப்பட்டிக் கல்வெட்டு. .. ...

கி.பி.5, 6, 7, 8, 9-ஆம் நூற்றாணடு செங்கம் நடு கற்கள... ..

கி.பி. 10–ஆம நூற்றாண்டு தளவாய்புரம் பாண்டியர் செப்பேடு. ...

கே.ஜி.கி.

**தாக்க முனைதல்:** தாக்கமுனைதல் என்னும் குற்றம் மனித உடலைப் பாதிக்கும் குற்றஙகளுள் ஒன்று. சாதாரணமாக ஒருவர் மற்றவரது உடலில் காயம் விளைவித்தால்தான் 'தாககியதாக', தாக்க முனைநததாகக் (Assault) கருதுவது இயலபு. ஆனால, சட்டத்தில் தாகக முனைதல் என்னும் செயலுக்கு ஒருவர் மறறவரது உடலைத் தொட்டி ருக்க வேண்டும் எனபதில்லை. தாக்க முனைதல் என்னும் செயல் சொல்லால் அல்லது செயலால நிகழலாம். இநதியத் தண்டனைச் சட்டததின் 351 ஆம் பிரிவு தாக்க முனைதலின் இலக்கணத்தைக் கூறித்தடை செய்கிறது.

வன்முறை தம்மீது பயன்படுத்தக்கூடும் என எதிர் நிறபவர் அஞ்சும்படி வேண்டுமென்றே எவர் ஒருவர் ஒரு சைகை அலலது ஆயத்தம் செய்கிறாரோ அவர் தாகக முனைதல் என்ற குற்றம் இழைத்தவர் ஆவார்.

சொற்களால் மட்டுமே தாக்குதல் ஏற்படாது. ஆனால், ஒருவருடைய சைகைகளை அல்லது முன் னேற்பாடுகளைத் தாக்குதலாக ஆக்கும் அளவிற்கு, அவர் பயன்படுத்தும் சொற்கள், அவருடைய சைகை கள் அல்லது முன்னேற்பாடுகள் இருக்கலாம். இக கோட்பாடு பின்வரும் சில எடுத்துக்காட்டுகளால் விளங்கும்.

1. 'அ' என்பவர் 'ஔ' என்பவரைத் தாக்கப் போகிறார் என்று 'ஔ' என்பவரை நம்ப வைக்கும் உட்கருத்துடன் அல்லது அவர் பெருமபாலும் நம்பக் கூடும் என்ற எணணத்துடன் 'அ' 'ஔ' வை நோககிக் கை முட்டியை ஆட்டுகிறார். இச்செயல் 'தாக்க முனைதல்' என்னும் குற்றமாகும்.

2. 'ஔ' என்பவரை நாய் தாக்கும்படி செய் யப்போகிறார் எனறு 'ஔ'வை நம்ப வைக்கும் உட் கருத்துடன், அல்லது அவர் அநேகமாக நம்பக்கூடு மென்ற எண்ணத்துடன ஒரு கடிநாயின வாய் மூடியை 'அ' என்பவர் அவிழ்த்துவிடத் தொடங்கு கிறார். 'அ' 'ஔ' என்பவர் மீது தாக்க முனைதல் என்னும் குற்றம் செய்தவராகிறார்.

3. 'நான் உன்னை அடிக்கப் போகிறேன்' என்று 'ஔ' எனபவரிடம் சொல்லிக்கொண்டே 'அ' என்ப வர் ஒரு தடியை எடுக்கிறார். இங்கு 'அ' பயன்படுத திய சொற்கள் சாதாரணச் சூழ்நிலைகளில் குற்ற மாகாதென்றாலும், இங்கு வேறு சூழ்நிலையான சைகையோடு சேர்ந்து தாக்க முனைதல் என்னும் குற்றமாகக் கருதப்படும்.

சாதாரணச் சூழ்நிலைகளில் அச்சுறுத்தல் மட்டும தாக்கமுனைதல் என்னும் குற்றமாகி விடாது. ஆனால், அதனைச் சொல் வடிவத்தில மாற்றும் போது, அடுத்தவர் மனத்தில் குற்றமுற வன்முறை யைப் பயன்படுத்தப் போகிறார் என்ற எணணத்தை ஏற்படுத்தும்போது அது தாக்க முனைதல் என்னும்

குற்றமாகிறது. தாக்க முனைதல் என்னும் குற்றச் சாட்டிற்குக் குற்றம் சாட்டப்பட்டவர் அடுத்தவர் மீது உடற்காயம் ஏற்படுத்த வேண்டுமென்பதில்லை. எதிர் நிற்பவர் அஞ்சும்படி சைகை அல்லது ஆயத தம் செய்தல மட்டுமே போதும். எடுத்துக்காட்டாகக குண்டுகள நிரம்பிய துப்பாக்கியை எதிரில் நிறபவா மீது அவர் அஞ்சும்படி குறி வைபபது தாக்க முனை தல் ஆகும.

குற்றவியல் சட்டத்தின்கண ஒருவரைத் தாகக முனைதற குற்றத்திற்கு ஆட்படுத்த இரு கூறுகள பொருந்தியிருக்க வேணடும. அவையாவன: 1. சைகையோ ஆயத்தமோ அடுத்தவா முனனிலை யில் ஒருவர் செய்வது, 2. செய்பவா உட்கருத் துடனோ தெரிந்தோ செயற்படுதல்.

தாக்க முனைதற் குறறம் சாட்டப்பட்ட ஒரு வர் குற்றம் புரிநததாகக் கூறப்பட்ட வேளையில் தாக்கும திடம் பெற்றிருத்தல் வேண்டும். எடுததுக் காட்டாக ஓடிக கொணடிருக்கும் புகை வணடியில சைகை மூலம் ஒருவர் புகைவணடி நிலையத்தில் நிற்பவரைத் தாக்குவேன் என்று கூறுதல தாகக முனைதல் என்னும் குற்றத்தின் பாற்படாது.மேலும் இராணுவப் பயிற்சி நடநது கொணடிருககும் இராணுவ வீரர் ஒருவர், மற்றவரைத் தாககுவேன என்று கூறும்போதும் அநத இராணுவ வீரரைத் தாக்க முனைதல என்னும் குறறத்திறகு உளளாக்க முடியாது.

தாக்க முனைதல் குற்றத்திற்கு ஒருவரைத் தண் டிக்க வேணடுமெனில கீழ்க்காணும் கூறுகள் மெய்பபிக்கப்பட வேணடும். 1. குற்றம் சாட்டப் பட்டவர் வனமுறைத் தாக்கு புரிவதற்காகச சைகை அல்லது முன்னேற்பாடு செய்தாா, 2. அச் செயல் குற்ற முறையிடுபவா முனனிலையில் நடைபெற்றது, 3. அவர் உட்கருத்துடன் அல்லது அறிவுடன் அல்லது தெரிநதே செயறபட்டாா, 4. அவர் வன்முறை தம் மீது பயன் படுத்தபபடும் எனக்குற்ற முறையிடுபவர் அஞ்சும்படி வேண்டு மென்றே அசசெயலைச் செய்தார், 5. அச்செய்கை யால் அலலது முன்னேற்பாட்டால் குற்ற முறையிடு பவர் அஞ்சினார்.

தாக்க முனைதற் குற்றத்திற்குக் குற்றமுறை யிடுபவர் ஆத்திர மூட்டாத வேளைகளில் உயர்ந்த அளவாக மூன்று மாத மெய்க் காவல் சிறைத தணடனையோ ஒரு நூறு உரூபாய் தண்டத் தொகையோ இரணடுமோ விதிக்கலாம்.

குற்ற முறையிடுபவர் ஆத்திரமூட்டிய காரணத் தால குறறவாளி தாக்க முனைதல குற்றம் செய் திருப்பின உயர்ந்த அளவாக ஒருமாதம் சிறைத் தண்டனையோ உரூபாய் இருநூறு தணடத் தொகையோ இரண்டுமோ விதிக்கலாம்.

பொது ஊழியாகள தஙகள் பணியைச் செய்ய விடாமல் தடுத்திடத் தாக்க முனைதலும் தடை செய்யபபட்டுள்ளது. பெண்ணை மானபஙகப்படுத் தும் பொருட்டுத் தாக்க முனைதலும் குற்றமே. இந்தியத தணடனைச் சட்டததினபடி பொது ஊழியரை, அவர் கடமையைச் செய்வதிலிருந்து தடுப்பதற்காகத் தாக்க முனைதற் குற்றத்திறகு உயர்நத அளவாக இரண்டாண்டுகள் சிறைத் தண டனை அல்லது தண்டத்தொகை அல்லது இரணடும் விதிக்கலாம் பெணணின் மானததிறகுப் பஙகம் ஏற் படுத்தும் உட்கருத்துடன தாகக முனைதல் குற் றத்திற்கும் முனகூறிய அளவே தணடனை விதிக்க லாம். கடுமையாக ஆத்திர மூட்டப்பட்டதனாலன்றி ஒருவரை அவமானப்படுத்தும் உட்கருத்துடன்தாக்க முனைதலுக்கும் உயர்ந்த அளவாக மேற்கூறிய தண டனை விதிக்கலாம். ஒருவர் கொண்டு செல்லும் பொருளைத் திருட முயலுமபோது தாக்க முனை தலுக்கும் இதே அளவு தணடனையை விதிக்கலாம். அதே போன்று ஒருவரைச் சட்ட விரோதமாக அடைத்து வைக்க முயலும்போது தாக்க முனை தலுக்கும மேற்கூறிய தணடனையை விதிக்கலாம.

சாதாரணத் தாக்க முனைதற குற்றம் பிடி யாணை வேணடுங் குற்றம. இது ஒரு பிணை விடு குற்றம். எந்தக குறறவியல நீதிபதியும் குற்ற விசா ரணை செய்யலாம்.

பொது ஊழியரைப் பணியைச செய்யவிடாது தாக்க முனைதல்,பெணணின மானத்திற்குப் பஙகம் ஏற்படுத்தும உட்கருத்துடன தாக்க முனைதல, ஒருவர் கொணடு செலலும் பொருளைத் திருட முயலும் போது தாக்க முனைதல மறறும் ஒரு வரைச் சட்ட விரோதமாக அடைதது வைக்க முய லும போது தாகக முனைதல் முதலிய குறறங்கள் பிடியாணை வேண்டாக் குற்றங்கள. தாகக முனை தல் குறித்த அனைத்துக் குற்றங்களும் பிணைவிடு குறறங்கள. எல்லாக் குற்றவியல நீதிபதிகளும் குற்ற விசாரணை செய்யலாம்.

தாக்க முனைதல என்னும் செயலுக்காக அச் செயலால் துன்படைநதவர் குறறவியல் வழக்குத் தொடருவதோடலலாமல உரிமையியல் நீதிமன்றங் களில் தீங்கீடும் வேண்டலாம். ஏனெனில், தாக்க முனைதல் என்னும் செயல் குற்றச் செயலாகவும், மனிதருக்கு எதிராக இழைக்கப்படும் தீங்காகவும்

கொள்ளப்படுகிறது. தீஙகியற சட்டததிறகும் (Law of Tort) ஏற்கெனவே கணடுணர்நத இலககணஙகள பொருந்தும். தாகக முனைதல், காயமேற்படுத்துதல, மற்றும் தவறான சிறைவைப்பு முதலியன மனிதர் களுககு எதிராக இழைககப்படும தீங்குகளாகும்.

தாக்க முனைதல் எனனும் தீஙகிறகு ஒரு வரைப் பொறுப்பாககும் போது அவர் அத்தீஙகைப் புரியும் நிலையில இருகக வேணடும். 'இராணுவ வீரர் இப்பொழுது மட்டும பயிறசி நேரம் இல்லை யெனறால உனனிடமிருந்து இந்தச் சொற்களைக் கேட்டுக கொணடிருக்க மாட்டேன்' என்று கூறி விட்டு வாளில கைவைததால அது தாககமுனைதல் எனனும் தீங்காகாது.

கி.பி.1840-ஆம் ஆணடு தீர்வு செயயபபட்ட வழக்கில் குணடுகள இடப்படாத துப்பாக்கியை வைததுக் குறிவைத்தல் தீங்காகாது என முடிவு செய்யபபட்டது. ஆனால், இது நல்ல முடிவனறு என வாதிடுவோரும உண்டு. எதிர்வாதி வாதியைத் தாக்க முனையும் போது மூனறாம ஆள ஒருவர் தடுப்பதால் வாதி மீது அடிவிழுவது தடுககப்படு கிறது. அப்போது எதிர்வாதிமீது வாதி தீஙகிடு வேணடி வழக்குத் தொடரும் போது மூனறாம் ஆள இடைமறித்து விட்டாா என்று எதிாவாதம் கூறுவது நீதிமனறத்தால அனுமதிக்கப்பட மாட்டாது.

மீ.அ.

**தாக்கர்சே பல்கலைக் கழகம்**· மகாராட் டிர மாநிலத்தில பம்பாய் நகரில் பெணகளுககாக இப் பலகலைக்கழகம் நிறுவப்பட்டது. முதன முதலில் இப் பல்கலைக்கழகம் 1916-ஆம ஆணடு டாகடா டி.கே. காாவே (Dr.D K. Karve)எனபவரால நிறுவப் பட்டது. தோக்கியோவிலுள்ள (Tokyo) பெணகள் பல்கலைக்கழகத்தை மாதிரியாகக கொணடு நிறுவப பட்ட இப் பலகலைக்கழகததிற்கு 1920-இல வளளல சர். விததால்தாசு தாக்கர்சே (Sir. Vithaldas Thackersey) உரூ. 1.5 மிலியன் அவர் தாயாரின நினைவாக நன்கொடை அளிதது இதன வளாசசிககு வித்திட்டார் அதனால் இப்பல்கலைககழகம திருமதி நத்திபாய் தாமோதர் தாககாசே (Shreemathi Nathibai Damodar Thackersey) பல்கலைக்கழகம் எனப் பெயரிடப்பட்டது.

இப் பல்கலைக்கழகத்தின் மைய வளாகம் பம் பாய் நகரில் அமைந்துள்ளது. இதன் வளர்ச்சிககாக மகாராட்டிர அரசு புறநகர்ப் பகுதியில் 21 ஏககர் நிலத்தை ஒதுக்கியுள்ளது. இங்குமனையியல் கல்லூரி, பல்தொழில் நுட்பக் கல்லூரி (Polytechnic), மருந்தி யல் (Pharmacy) கல்லூரி, நூலகம, மாணவர் விடுதி கள முதலானவை உள்ளன. பம்பாய நகரிலிருந்து 150 கி மீ. தூரத்திலுளள புனே நகரிலும ஒரு வளா கம் ஏற்படுத்தப்பட்டுள்ளது இது மகரிசி கார்வே வித்யாவிகார் (Maharishi Karve Vidyavihar) என்னும் பெயரில அமைநதுளளது. இஙகுக் கலைததுறைகள் மனையியல முதலானவறறைக் கறபிபபதறகு மூன்று கல்லூரிகள உளளன. இப் பலகலைக்கழகத தில 20ககும மேறபட்ட கலலூரிகள இணைப்புரிமை பெற்றுச செயற்படுகினறன.

மகாராட்டிர் அரசு 1951-இல் இப பலகலைக கழகத்திற்கு ஏற்பாணை வழஙகியது. இப் பல்கலைக் கழகம் பெண்கள் கல்வியில மாதிரி நிறுவனமாகச் செயற்படுவதில் தனனை ஈடுபடுததிக கொணடது. இதன இரணடு குறிககோளகள, தாய்மொழியில கலவியறிவினைப் பயிற்றுவிததலும் சமூகததில ஆண், பெண் பங்குப் பணிகள தொடாபான பல துறை யறிவுகளைப் பயிறறுவிததலுமாகும்

தாக்கர்சே பலகலைககழத்தில கலை (Arts), கல்வியியல், கவின் கலைகள (Fine Arts), மனையியல, நூலகவியல, செவிலியா கலவி (Nursing), சமுதாய அறிவியல முதலான புலஙகள் உளளன இதனகண் பல துறைகள இயஙகுகின்றன. இந்தி, குசராத்தி, மராத்தி, ஆஙகிலம், சமசுகிருதம், வணிகவியல, பொருளியல், சமூகவியல், உளவியல், புவியியல,உடற் கலவியியல, நோயியல், நுணணுயிரியல (Micro-biology), உணவுத் தொழில்நுட்பம் (Food Technology), மருந்தியல் (Pharmacy), குழந்தை வளர்ப்பு, மனை மேலாண்மையியல, உணவும் ஊட்ட உணவும், இசையியல், கலையும வணணந தீட்டலும, உடை கள தயார்ததல், நெசவுத் தொழிலும் உடைகளும் (Textiles and Clothing) முதலானதுறைகள் உள்ளன. அறிவியல அல்லாத அனைத்துத் துறைகளிலும் பயிற்றுமொழிகள குசராத்தி, மராத்தி, இந்தி ஆகியனவாம.

இஙகுப் புகுமுக வகுப்பு இல்லை மாணவியர்கள் இளம் பட்டப்படிப்பு முதல ஆராய்ச்சிப் பட்டஙகள் வரை பயின்று பட்டஙகள் பெறலாம். மாணவியாகள தனிப்பட்ட முறையில பயினறும (Private Study), பட்டஙகள பெற இஙகு வாய்ப்புள்ளது. ஒருசில பாடஙகளில குறிப்பிட்ட காலம் கல்லூரியில தங்கிப் பயிற்சி பெற்றபின்னர்த் தனிப்பட்ட முறையில் பயினறு பட்டம் பெறலாம்.

பட்டப் படிபபுகள தவிர்த்து இங்குப் பட்டயப் படிப்புகளும (Diplomas), சான்றிதழ்ப் படிப்புகளும் வழஙகப்படுகினறன. இப் பலகலைக்கழகத்தில தொடர்கல்வியும் முதியோர் கல்வியும் வழங்கும் பொருட்டு ஒரு துறை ஏற்படுத்தப்பட்டுள்ளது. இதில்

மக்களதொகையியல் பற்றி ஆராயும பிரிவும் செயற் படுகினறது இததுறை பலவேறு இடஙகளில மாண வியாகளுக்கு விரிவுரைகள வழங்குதல், குறுகிய காலககலவி வழஙகுதல, பட்டயப்படிப்பு, சான்றிதழப் படிப்பு முதலானவற்றை வழஙகுதல் முதலான பணி களைச் செய்கிறது.

இப் பல்கலைக்கழகத்தில ஏறககுறைய இரணடு இலட்சம் நூலகளைக் கொணட சிறந்த நூலகம ஒன்றும உளளது ஒவவொரு வளாகத்திலும கிளை நூலகங்களும் உள்ளன. பெணகள மட்டுமே பயின றாலும இப் பல்கலைக்கழகத்தில தேசிய மாணவர் படை, விளையாட்டுத் துறை, நாட்டு நலப் பணித் துறை முதலானவை நனகு செயறபடுகின்றன.

சீ.ப.

**தாக்கரே வில்லியம் மேக்பீசு:** இவர் கி.பி. 19-ஆம் நூறறாணடைச் சேர்நத, புகழபெறற ஆங்கிலப் புதின ஆசிரியர். இவர் கலகததாவில கிழக் கிநதிய வணிகக் குழுவில பணியாறறிய இருச்சு மாணடு (Richmond) என்பாரின மகனாக கி.பி. 1811-ஆம் ஆணடு பிறந்தார். இவா தம மூனறாம வயதிலேயே தந்தையை இழநதார். அதனால இஙகி லாந்தில் தம தாயின அரவணைபபில இவா வளர்ந தாா. இலணடன மாநகரில பளளிப்படிபபை நிறைவு செய்தபின கேம்பிரிட்சுப் பல்கலைக்கழகத் திரினிட்டி கல்லூரியில (Trinity College) சேர்நதாா. அஙகுப் பட்டம் பெறாமலே வெளியேறி, சட்டம படிககத் தொடஙகினாா. அதனையும தொடராமல இடை யில படிப்பை நிறுத்திவிட்டாா. இவரிடம் இயல்பாக அமைநத எழுததாற்றல பிற துறைகளில ஆாவம செலுதத இவருககுத் தடையாக அமைந்தது என லாம்.



தாக்கரேவிலலியம் மேக்பீசு

தாக்கரே வில்லியம் மேகபீசு(Thackeray William Makepiece) ஆஙகில இலக்கியஙகளையும திறனாயவு நூலகளையும ஆழ்ந்து பயினறு, அக்காலத்தில புகழ பெற்ற கவிஞர்களாக விளஙகிய கதே (Goethe), தென்னிசன (Tennyson) ஆகியோருடன நட்புக கொணடிருநதார் இவர் தமது 21-ஆம் வயதில சொந்தமாக ஓர் இதழ் தொடஙகினாா. இதழியல அனுபவமினமையால ஓராணடிற்கு மேல அதனை நடத்த முடியாமல பெரும இழப்புடன இதழை நிறுததிவிட்டாா. நலிவடைநத பொருளாதாரச் சூழநிலையில கி.பி. 1836-ஆம ஆணடு பாரீசு நகரில 'இசுபெலலா சா'(Isbella Shaw) என்பாரை மணநது கொணடார், குடுமபததை நடதத வேணடிய கட்டாயத்தால மீணடும் இதழியல் துறையில ஈடு பட்டாா; பல்வேறு ஆஙகில இதழ்களின செய்தி யாளராகப் பணிபுரிந்தாா; குறைந்த வருவாயுடன தமது உயர்நத எழுத்தாறறலை வெளிப்படுதத முடி யாமல் அவதியுற்றாா; இதறகிடையில மனநோயால பாதிக்கப்பட்ட மனைவியைப பிரிந்து வாழ வேணடிய அவலநிலை ஏற்பட்டது. எனினும், இவா தொடர்நது எழுதது வேலையை மேறகொணடார். இவர் தம கட்டுரைகள் யாவராலும புகழப்பட்டு இவரது எழுததாறறல இஙகிலாந்து முழுவதும் பரவத் தொடங்கியது.

இவா எழுதிய முதல் நூலாகக் 'கேதரின' (Catherine)எனற சிறுபுதினம கி பி.1839-ஆம ஆணடு வெளிவந்தது அதன பினனர் கி.பி 1848-ஆம் ஆணடு இவருடைய புகழ பெற்ற 'பகட்டுச சநதை' (Vanity Fair) எனனும் புதினம வெளியாயிறறு. கதைத் தலைவன இலலாமலேயே உயர் வகுப பாரின தனனலப் போககை விரிவாகவும், எளளல சுவையோடும் விளககுவது இபபுதினத்தின தனித் தன்மையாகும். இந்நூல தமிழிலும மொழி பெயர்ப்புச் செயயப்பட்டுளளது. மனம் போன போக்கில வாழும ஓா இளைஞனின் தானதோனறித் தனமான வாழவை இவருடைய 'பெண்டெனிசு வரலாறு' (The History of Pendennis) எனற புதினம் சித்திரிக்கிறது. புதிய வரவுகள (The New Comes), உலகில அவன பாதை (His way through the world), எனறி எசுமாணடு (Henry Esmond) போனறவை இவருடைய தலை சிறநத புதினங்களாகும். பொதுவாக, இவாதம் புதினங கள் அனைத்தும் நடுத்தர, உயாதர வகுபபாரின வாழ்நிலையைச் சித்திரிப்பனவாக அமைநதுள்ளன.

இவர் ஐககிய அமெரிக்க நாடுகளுக்கும் ஐரோப்பிய நாடுகளுக்கும் பலமுறை பயணம் செயது பலவேறு இலக்கியச் சொறபொழிவு களை நிகழ்த்தியுள்ளார். இப்பொழிவுகள்

தனித்தனி நூல்களாகவும் வெளிவநதுளளன. சாாலசு டிக்கனசுக்கு நிகரானவராக, இனனுஞ சிலராால அவரினும் மேம்பட்டவராக இவர் கருதப படுகிறாா. அககால நிலையில தோனறிய முதல் சமூக மேம்படுத்துநராக இவரைத் திறனாய்வாளா கருதுவர். இவர் கி பி 1863-ஆம் ஆண்டு மறைந்தார்.

சா. உ.

**தாக்கா.** இநதியாவில மேற்கு வங்கத்திற்கு அணமையில, மத்திய வங்கதேசத்தில் உள்ள தாக்கா (Dacca) வங்கதேசத்தின் தலைநகர். மேலும இது ஒரு சிறந்த தொழில் மையம். நகரின் பழைய பிரிவு சதார்கட்டு என்று சொல்லப்படுகிறது. இங்கே மாவட்டத்தின முக்கிய கடைகள் உளளன.




தாககா அமைவிடம்

தாக்காவின மக்கள் தொகை 34,40,147(1981). பல நூற்றாணடுப் பழைமை வாய்ந்த மசூதிகளும் சதார்கட்டில் உள்ளன. இஙகே ஏழைகள் கூட்டங் கூட்டமாகக் குடிசைகளில் வாழ்கின்றனர். இங்கேயுளள மககள் தொகையில் நடுத்தர வருக்கத்தினரும் செலவரும் கூடுதலாக இருக்கின்றனர். தாககாவிற்கு வடக்கே இரம்னா நகரம் இருக்கிறது. இங்கேதான் தாக்கா பல்கலைக்கழகம் உளளது. இவ்விடத்தில் கவினபெறு பூங்காவும் கடைகளும உள்ளன.

தாக்கா மையப்பகுதியில இருப்பதால் இது நாட்டின் முக்கிய வணிகத் தொழில் மையமாக மாறிற்று. இந்நகரத்தின் பல பகுதிகளில பல தொழிற்சாலைகள் உள்ளன. பருத்தி ஆடைகள, கணணாடி, தோல, உலோகங்கள், சர்க்கரை, சணல் ஆகியவை இஙகே உற்பத்தி செய்யப்படுகினறன.



தாக்காவிலுள்ள நட்சத்திர மசூதி

தெற்கு ஆசியாவிலிருந்து சிலர் இங்கே வந்து கி.பி.600-இல் குடியேறினர். இந்நகரம் கி.பி.1608-இல் வஙகத்தின தலைநகராகியது. அப்போது மொகலாயர் இதை ஆட்சி செய்தனர். பினனர் கி.பி.1700-ஆம் ஆணடின மத்திய பகுதியில் இது ஆங்கிலேயர் ஆட்சிக்குள் அடங்கியது. இந்தியாவும் பாகிசுத்தானும் 1947-இல் பிரிந்தபோது தாக்கா கீழைப் பாகிசுததானில் இருநதது. வங்கதேசம் 1971-இல் தனிநாடாக ஆகியபோது தாக்கா அதன் தலைநகராயிற்று. இன்றுவரை இது அதன தலைநகராகத் தொடர்ந்து இருந்துவருகிறது.

கே. சே.

**தாக்கும் நடத்தை:** 'தாக்குதல்' என்ற சொல்லிற்குப் பலரும் பலவாறு பொருள் கொள்கின்றனர். தாக்குதல் என்ற சொல்லில் அடங்கும் பல்வேறு நடத்தைகளைக் கவனித்தால் அது புலப்படும். பிறரை வருந்தச் செய்யும்செயலினைத் தாககுதல எனனுஞ்சொல குறிக்கும். தாக்குதல் எனபது ஓர் இலக்கினைத் துன்புறுத்தும் வாய்மொழியான அல்லது உடலாலான நடத்தையென வரையறை செய்யப்படுகிறது. அது கெடுதலையும் அழிவையும் விளைவிப்பதனால்தான அது தாக்குதல் எனப்படுகின்றது.

**கருவியாகும் தாக்குதலும் பகைமைத் தாக்குதலும்:** பலவேறு வகையான தாக்குதலகள் உளளன. அவை களின் வேறுபாடுகளைக் காணவேணடும் உணவிற காக வேட்டையாடுவது, மனிதர்களைக் கொல்லும் கூலிக் - கொலையாளிகளின நடத்தை ஆகியன தாக்குதல நடததையிலிருநது வேறுபட்டனவாகும. இதனைத் தறகாப்பு அல்லது கொடூரச செயல எனலாம. இநத நிகழ்சசிகளில தாககுவோர் தாக்கப்படுபவருக்குத துனபம அலலது அழிவினை ஏற்படுத்துகினறனா. முதலாம் வகைத தாககுதல கருவியாகும தாக்குதல் எனப்படும். ஏனெனில, அத்தகைய தாககுதலின நோக்கம் பணம் அலலது உணவினைப பெறுவதேயாகும். தாககுதல ஒரு கருவியாக மட்டுமே பயனபடுததபபடுகிறது. வெறுபபு அல்லது கொடூர உணர்வின அடிபபடையில ஏற்படும் தாக்குதல பகைமைத் தாக்குதல எனப் படும். இதில ஏதோ ஒருவகைக காயம ஏறபடுததுவதே தலையாய காரணமாக இருக்கிறது. கோபத்தின் காரணமாக ஒருவர் மறறொருவரைத் துனபுறுததும்படி நேரலாம். சில விரும்பத்தகாத நிகழசசிகள ஒருவருககு ஏறபடும்போது அவர் பகைமைத் தாககுதல் உணாவிறகு ஆளாகினறாா. ஒரு வேணடாத்தகாத சூழலிலிருந்து தப்பிததுககொளள அலலது ஓர் அபாய நிலையிலிருநது தப்பித்துக கொளள மேறகொள்ளபபடுவது தற்காப்புத் தாககுதலாகும்

தாக்குதல மனநிலை எப்படி வருகினறது? தாக்கும் மனநிலை ஒரே தனமையாகத தோனறுவதிலலை. சிகமணடு பிராயடு, கோணாாடு இலாரன்சு ஆகியோரின் கூற்றுப்படி தன் நிலை நிலைநாட்டுதல, வெற்றியடைய முயறசி செயதல, கட்டுப்பாடறற சுதநதிரம் பெறறிட முயற்சி செய்தல போனற நடத்தைகளில் நிகழகின்ற தாககுதல நடத்தையின ஒவவொரு வடிவததிலும் ஓா உநது சகதி செயறபடுகிறது. இநதத தாக்கும் தனமை அல்லது திறன உடலினுளளேயே தோனறிவலுப்பெறறு வந்து முடிவில் உடலிலிருந்து வெளியேறத் தொடர்ந்து முயற்சி செய்கிறது. இநதத் தாக்குந் தன்மையினை விளையாட்டுகள வழியாகவோ ஒரு பொயயான தாக்குதல் வழியாகவோ வெளியேற்றிட வேண்டும. இலலையெனில, அது திடீரென வன்முறையாக மாறும விளைவினைக கொண்டதாகும்.

தாக்கும உநதுதல இருப்பதாகச் சொல்லப்படும் கருத்தினைச் சிலா ஏற்பதில்லை. அதுபோலவே தாக்கும் தன்மை தேஙகிக் கிடக்கும் இடமாக மனிதர்கள இருககினறனா எனனும கருததினையும் ஆராய்ச்சியாளர்கள ஐயப்படுகின்றனர். தாக்கும் தன்மை ஓர் அனுபவிககததகுநத நிகழசசியென்று சிலா கருதுவதினால அவர்கள் பிறரைத தாக்க முற படுகினறனர். தாககுவதனால ஏதோவொரு நன்மை கிடைக்கிறது எனபதனால சிலா பிறரைத் தாககுகினறனா ஒருவர் கடுஙகோபததுடன் இருககுமபோதலலாது பிற நேரஙகளில் பிறரைத் துனபுறுத்தச் செலலும தாக்கும தனமை அவர் உடலினுள குடைநது கொணடிருபபதற்கு வாயபபில்லை.

'தாக்கும உளளுணர்வு' இருப்பதாகக் கூறப்படும் கருத்தினை அதுபறறி ஆராய்ந்த ஆராயசசியாளர்கள மறுக்கினறனா பிறரைத துன்புறுத்த அலலது அழித்திட நினைககினற பிறவிககுணம மனிதர்கள அலலது விலஙகுகள எவருக்குமிலலை. ஒருவரிடம் இருப்பனவெல்லாம உடலியல அல்லது உளவியல சாாபு இயக்கஙகளே. இந்த இயக்கஙகள் செயற்படத தொடஙகும் முனனா வெளியுலகுத தூணடுதல ஒனறினால தககமுறையில் தூணடிடப்படவேணடும. இத்தகைய இயககங்களுள் சில பிறவியிலேயே ஒருவர் பெற்றது; மறறவை அவா கற்று அறிந்தவையாகும.

கருவியாகும தாககுதல ஒருவா ஏற்கெனவே கறறுககொணடுளளனவற்றால பாதிககப்படுகிறது. பாராட்டுப்பெறும செயலகளையே ஒருவர் மீணடும மீணடும் செய்ய விழைகினறார். சமூகத்தில மதிப்பு, பணம, அலலது பிறரின உடனபாடு ஆகியவற்றைப பெற்றிடத் தாககுதல உதவுமாயின ஒருவா தாக்கும் மனப்பான்மையினைத் தொடாந்து கைக்கொளள விழைவா. பிறரைத் துனபுறுத்தும் கொடுமையுடையவர்கள அவவாறு கொடுமையுடையவர்களாக இருப்பதறகுக் காரணம் அவர்களைக் காட்டிலும தாழ்நதோரை அச்சுறுததுவதன வாயிலாக அவாகள் விரும்பியதைப் பெற முடிவதேயாகும். வனமுறையாளாகள தனனிசசைபபடி இருபபதற்குக காரணம அத் தன்னிசசை அவாகளுககுக சூழலில ஓர் உயர்ந்த நிலையினைப் பெற்றுததருவதேயாகும்.

துன்பம் விளைவிததலையே தலையாய நோக்கமாகக கொணட பகைமைத் தாககுதல ஒரு கலப்படத்தன்மை வாய்ந்ததாகும. பிறரைத் துன்புறுததுவது இன்பமாக இருப்பதாகக் கற்றுககொணடதனால் சிலா தாக்கும் இயல்பினராக இருக்கின்றனா. இந்த மகிழசசியினை விருமபும்போது வெறுப்பு இல்லாவிடினும்கூட அவர்கள பிறருக்குக் கசையடி கொடுக்கின்றனர். விரும்பத்தகாத அனுபவம ஏற்பட்டதன் விளைவாகக் கோபமாக இருக்கும்போது ஒருவர் மிக்க உளக்கிளர்ச்சியுடன பகைமைத் தாக்குதல் மனநிலையினைப் பெறுகிறார். இந்த மனநிலை ஏற்படக் காரணம் உயிரியல பணபுக் காரணமாக அவர் இதனை வளர்த்துக் கொண்டிருப்பதேயாகும்.

இருப்பினும் இதிலும் 'கறறல' மிக இனறியமையாத தாக உளளது. ஒருவர் கோபம் காரணமாகப் பிறரைத் தாக்குமபோது அதனால் பிறருக்குத் துன் பம் விளைகினறதே எனறு வருந்தாமல மகிழசசி யுறுவது மீணடும் பகைமைத தாககுதல் உணடா வதற்கு ஏதுவாகும்.

பிறரைத் தாககிட ஏற்படும் சந்தர்ப்பம், அப் போது பிறாபடும் துனபத்தைக் கணடு ஒருவர் உணரும் வெற்றி ஆகியன மேலும் தாக்கிடும் மன நிலையினைப் பெற ஊக்கமூட்டுவதாக அமைகின் றன என ஆராயச்சிகள வலியுறுத்துகினறன. ஆனால, நிச்சயமாகத் தாககும் இயலபு உளககிளாச்சியினை வெளிப்படுத்தும் அடிப்படையில செயறபடுவதா காது.

**விடை காணல்:** தாக்கும் இயலபு இன்று உலகில் மிக முக்கியத்துவம் வாய்ந்த செயலாகும. உளவிய லாளருக்கு விடப்பட்ட மிகப்பெரிய அறைகூவல அதனைப் புரிநதுகொளவதும் குறைப்பதும கட்டுப் படுத்துவதுமாகும். தாக்கும நிலை ஏறபடுவதைக் குறைத்திட ஒரு வழி, கோபததினையும் தாககத தூணடும விரும்பத்தகாத நிகழ்ச்சிகளின எணணிக்கை யையும் குறைத்திட முயல்வதாகும். ஒருவா கோப மாக இருக்கும்போது கட்டுப்பாட்டுடன இருக்கவேண் டும். மனககிளாசசியினால் தூணடப்படும்போது அழிவுச் செயலகளில ஈடுபடாது மக்கள தஙகள சிக்கல்களைப் பயனுளள வழியில தீாத்துக கொளளக் கற்றுக்கொள்ள வேணடும. எலலாவற்றையுமவிடத தாக்கும் நடததையினை ஊக்கமூட்டுவதையோ பாராட்டுவதையோ மக்கள் கைவிட வேணடும.

கி.இரா

**தாக்வில், அலெக்சி (கி.பி. 1805-1859):** இவா பிரானசு நாட்டு முற்போக்கு அரசியலவாதியும் எழுததாளரும் ஆவாா. இவர் கி.பி. 1848-ஆம் ஆணடுப் புரட்சிககுப் பின அரசியலில முககிய பங்கு வகித்தார். பினனர், கி.பி. 1849-ஆம் ஆணடில் அலெக்சி தாக்வில் (Alexısde Tocqueville) வெளி யுறவுக் கொள்கை அமைச்சராக இருந்தார். இவா மனிதகுல சுதநதிரத்தை- ஆதரிதத . போதிலும், பெரும்பான்மையினரின ஆதிக்கத்தைக் கணடு அஞ்சினார். அமெரிக்காவில தணடனைச சட்டத தைப் பற்றி ஆராய்ந்து வரப் பிரெஞ்சு அரசாஙகம் அனுப்பிய குழுவைப்பற்றிய இவர்தம் கருத்துகள் 'அமெரிக்காவில் சனநாயகம்' (Democracy ın America) எனனும் நூலில் இடம்பெற்றுளளன. இந நூல் பிரெஞ்சு மொழியில் இருபாகங்களைக் கொணட நூலாக கி.பி. 1836-ஆம் ஆணடு வெளியிடப்பட்டது. ஆங்கில மொழியில நான்கு பாகங்களைக் கொண்ட



அலெக்சி தாக்வில்

நூலாக கி.பி 1835-40-இல மொழிபெயர்க்கப்பட்டுள ளது. இந்நூல முதல்தரமான அரசியல இலக்கிய மாகக் கருதப்படுகிறது இந்நூலின தனிப் புதுமை யுடைய உளநோக்கு மற்றும் அறிவு விளககம் காரண மாக இனறும் பயனுடையதாக உள்ளது. இநநூலில சனநாயக அரசியல், சமூக அமைப்பு ஆகியவறறின நிறைகுறைகள் விவாதிக்கப்பட்டுளளன. அதேநேரத் தில இது சனநாயக மரபை ஆதரிதது எதிர்காலத் தில் அதனுடைய உய்வும வெறறியும் குறித்து எடுத்தியம்புகிறது. இவருடைய பிற நூலகள: பழைய ஆட்சியும புரட்சியும்' (the old Regime and the Revolutıon) இது கி.பி 1856-இல ஆங்கில மொழியில பெயர்தெழுதப்பட்டுளளது. இநநூல் பிரெஞ்சுப் புரட்சிக்கு முன் தொடஙகிய பல நிலைகள், புரட்சிக்குப் பினபும தொடாகினறன என்பதை வலியுறுத்துகிறது. இவரது 'நினைவலைகள' (The Recollectıons of Alexıs Tocquevılle) கி பி 1893-இல் பிரெஞ்சு மொழியில் வெளியிடப்பட்டுளளது. இதை 1896-இல அலெகசாணடர் தெக்சினா-டி-மேடாசு என்பவா ஆஙகிலத்தில் மொழி பெயர்ததுளளார். மற் றும இவரது பல நூல்களும், கடிதப் போக்குவரத்து மற்றும பயணக்குறிப்புகள ஆகியனவும் ஆங்கிலத்தில வெளியிடப்பட்டுள்ளன.

இ.தி

**தாகுபன்:** தாகுபன்பிலிப்பைன்சு நாட்டிலுள்ள இலூயிசன் எனனும் மாநிலத்தில் அமைநதுள்ள ஒரு நகரம். இது பிலிப்பைன்சுத் தலைநகரான மணிலா விற்கு வடக்கே 270 கி.மீ. தொலைவில உள்ளது. ஆப்பிரிக்காவிற்கு கி.பி. 1590-ஆம் ஆண்டு வநத இசு பானியர்களால் (Spaniards) ஏற்படுத்தப்பட்டு தாக் னோட்டன் எனப்பட்ட இடமே பின்னர்த் தாகு பன் (Dagupan) எனப்பட்டது. இரண்டாம் உலகப்

போரின்போது சப்பான 1941-இல மணிலாவை நோக்கி முன்னேறியபொழுது முதலில் தாகுபனைக் கைப்பற்றியது. நேச நாடுகளின் படையினால் 1945-இல் இந்நகர் மீட்கப்பட்டு விட்டது. பிலிப் பைனசு 1947-இல் குடியரசாகியபின தாகுபன் ஒரு முககிய நகரமாயிற்று.

அக்னோ நதி, பிலிப்பைனசின் தேசிய இருப்புப் பாதை, இலிங்கேயன் வளைகுடா ஆகியவை சநதிக் கும் இடத்தில் இந்நகர் அமைந்திருக்கினறது. இதன இருப்பிடமே இது ஒரு வணிக மையமாகத் திகழவும் காரணமாக இருககின்றது. இந்நகர் இதன மீனபிடி குளஙகளுக்குப் பெயர் பெற்றதாகும்.

தாகுபன் ஒரு துறைமுக நகரம். பல காலமா கவே இந்நகர் கொப்பரை, தானியஙகள், சருக் கரை, அரிசி, புகையிலை போனற பொருளகளின வாணிக மையமாகத் திகழ்நதிருக்கினறது. இத்துறை முகத்திலிருந்து மீன், அரிசி, தானியஙகள், சருககரை, கொப்பரை, உப்பு, புகையிலை முதலிய பொருள்களை ஏற்றுமதி செய்யப்படுகினறன. இந்நகரின் மக்கள் தொகை 89,000 (1970). ஆ.செ.

***தாகூர்கள்***: சீனாவின் மங்கோலிய இனமக்க ளான தாகூர்கள் (Dagurs) எனபவாகள் மஞ்சூரியா வில் வாழ்ந்து வருகினறனர். இம்மக்கள் குளளமான வர்கள. கூடிய அளவு உயரம் ஐநது அடி ஆறு அங் குலத்திற்கு மேல் இல்லை. தட்டையான முகமும், சப்பை மூக்கும் கருப்புநிற முடியும் உடையவாகள. இவர்களது நிறம் மஞ்சள.

தாகூர் என்னும் பெயர் முதலில கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே வரலாற்று ஆதாரச் சான்றுகளில இடம் பெற்றுள்ளது. இச்சம யத்தில் இவர்கள் அமூர் ஆற்றுச் சமவெளியில வாழ்ந்து கொணடிருந்தனர். உருசியாவிலிருந்து வந்து சீனாவில குடியேறிய உருசியர்கள தாகூர் களைக் கிறித்துவ மதத்திற்கு மாற்றுவதற்கு முயன றனர். திருச்சபை அஙகுச் சமயப் பரபபாளாகளை அனுப்பியது. ஆனால் சீன அரசு தாகூர்களிடையே உருசியர்களின் செலவாககுப் பரவுவதைத் தடுக்க எணணி அவர்களை வேறு இடங்களில குடியேறற முயன்றது.

இவர்கள, கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் இறுதியில் அமூர் சமவெளிப்பகுதியிலிருந்து வெளி யேறி நொன்னி ஆற்றுக்குத் தெற்கே சென்றனர். 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தாகூர்களில் பெருமபாலானோர் கெய்லங்கியாங்கு மாநிலத்தில் கெய்லர் என்னும் நகரத்தைச் சுற்றியுள்ள பகுதிகளி லும் சிச்சிகாயர்க் (Ch i. Chi. ha - erb) நகரின அருகிலுள்ள நெனசியாஙகுச் சமவெளியிலும வாழ்ந் தனர்.

மஞ்சுககள், சீனர்கள் ஆகியோருடன தொடர்பு கொளளும் முன தொடக்ககாலத்தில் காடுகளில வேட்டையாடுவதும் கால்நடை வளர்ப்பதும் இவர் களது முக்கிய தொழிலாக இருந்து வந்தது.

20-ஆம் நூற்றாணடில் இவர்கள் கிராமங களில் தஙகி நிலையான வாழ்க்கை வாழத் தொடங் கினர். பயிர்தொழில செய்ய முற்பட்டனர். தானி யங்கள், காய்கறிகள போனறவை பயிரிடப்பட்டன. கால்நடை வளர்ப்பு, கோழி, பன்றி, குதிரை போன்றவற்றை வளர்த்தல் இவர்களுடைய பிற தொழில்களாகும்.

இம்மக்களிடையே பொதுக குடிமரபுக் குழு முறை (Clan system) வழக்கததிலிருககின்றது. ஒரு கிராமத்தில் வாழும் மக்கள அனைவரும் உறவினரே. வெளியார் வந்து வசிக்க விரும்பினால் கிராமத் தாரின அனுமதி பெறறபினனரே தங்க வேணடும்.

ஒரு சில கிராமங்கள் சேர்ந்த கூட்டம் ஆலா என்று சொல்லப்படுகினறது. ஓர் ஆலாவில் வாழும் மக்கள அனைவரும் ஒரே குடிவழியைச் சேர்ந்தவர் களாகக் கருதுகின்றனர். ஆகவே, அந்த ஆலாவிற்குள் ளேயே மணம் முடிபபது தடை செய்யப்பட்டிருக் கின்றது. தாகூர்களிடையே குல முதல்வர்களை வழி படும் வழக்கம் இருந்தது. இம்மக்கள் மாயவித்தை, சூனியம் ஆகியவற்றை உட்கூறுகளாகக கொண்ட சாமனிசம் (Shamanısm) என்னும் மதத்தைச் சேர்ந்தவர்கள். சிலர் பௌத்த மதத்தைப் பின்பற்று கின்றனர். தாகூர்களால் பேசப்படும் மொழி தாகூர் மொழி எனச் சொல்லப் படுகினறது. இது மங்கோலிய மொழித் தொகுதியின ஒரு சிறுபானமை மொழி யாகும். ஆ.செ.

***தாசன்***: தாசன் கனடா நாட்டின் யூகன (Yukon) எனற மாநிலத்திலுளள ஒரு முக்கிய நகரம். கனடாவின மணணூல் சுற்றாய்வுத்துறை இயக்கு நராக இருந்த சார்சு.எம். தாசன யூகன் பகுதியில் முதன் முதலில ஆய்வுகள் நடத்தினார். அவரது பெய ராலேயே இநநகரம் தாசன் (Dawson) என்று சொல் லப்படுகிறது.

தாசன் நகரம் யூகன் ஆறும் கொலாண்டைக்கு ஆறும் கூடும் இடத்தில் யூகன ஆறறின் வடகரையில அமைநதுள்ளது. இப்பகுதியில் கி.பி. 19-ஆம் நூற றாண்டின் இறுதியில் தங்கப்படுகைகள் கணடுபிடிக்



தாசன் நகரம்

கப்பட்டபொழுது ஐரோப்பியர்கள் போட்டிபோட்டுக் கொண்டு இங்குக் குடியேறத் தொடங்கினர். தாசன பன்மொழியாளர்கள் வாழும் ஒரு முக்கிய எல்லைப்புற நகரமாகும். யூகன மாநிலம் கி.பி. 1898–ஆம் ஆண்டு அமைக்கப்பட்டபொழுது தாசன், மாநிலத் தலைநகரமாகியது. தாசன் கனடாவின் மற்ற முக்கிய நகரஙகளுடன சாலைவழியாகவும், விமானப் போக்குவரத்து மூலமாகவும் இணைக்கப் பட்டுள்ளது.

தங்கச் சுரங்கம் நிறைந்த யூகன் பகுதியில் 20–ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து தங்கச் சுரங்கங்களில் தங்கம் கிடைப்பது மிகவும் குறையத் தொடங்கியது. அதன் காரணமாகத் தாசனின் சிறப்புக் குறையலாயிற்று. இரண்டாம் உலகப் போருக்குப்பின் மாநிலத்தின் முனனேற்றத்தில் தாசனின் பங்கு அறவே இல்லை. ஆகவே, கி.பி. 1953–இல் தாசனுக்குப் பதிலாக ஒயிட் கார்சு என்னும் நகரம் மாநிலத்தின் தலைநகராக்கப்பட்டது. தாசன் பகுதியில் 1966–ஆம் ஆண்டு இயங்கிவந்த கடைசிச் சுரங்கமும் மூடப்பட்டுவிட்டது.

தாசன் பகுதியில் குளிர்காலத்தில் மிகக்கடுமையான குளிர்நிலவும். குளிரின் காரணமாக இப்பகுதியில் வாழும் மக்கள பலர் குளிர்காலத்தில வெளியிடங்களுக்குச் செல்வது வழக்கம். இச்சமயங்களில் பொருளாதார நடவடிக்கைகள் தடைப்பட்டுவிடும். வெயில் நிறைந்த கோடைக்காலங்களில தாசன் நகரைச் சுற்றிலும் காய்கறிகளும் வண்ணமலர்களும் பயிர் செய்யப்படுகின்றன. இது ஒரு சுற்றுலா மையமாகத் திகழ்கின்றது. இந்நகரில் பல நவீன வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

ஆ.செ.

**தாசுகண்டு:** இது உசுபெக்குச் சோவியத்துச் சமதருமக் குடியரசின் தலைநகரமாகும். இது உருசியாவின் நானகாம் பெரிய நகரம். மாசுக்கோ, இலெனின்கிராடு, கீவு ஆகியவை மற்ற மூன்று பெரிய நகரங்களாகும்.

தாசுகண்டு (Tashkent) சர்சிக்குப் பள்ளத்தாக்கிற்கு மேற்கே உள்ள சத்கல் மலைகளில் உள்ளது. சர்சிக்கு ஆற்றின் ஓடைகள் இங்கே ஓடுகின்றன. இது கி.மு. 2–ஆம் நூற்றாண்டிலோ, முதலாம் நூற்றாண்டிலோ தேர்ன்றியிருக்கலாம். இதனுடைய மற்றப் பெயர்கள் சாட்சு, சேக்கண்டு, சக்கணடு, பினகண்டு ஆகியவை. தாசுகணடு எனறால கற்கிராமம் எனப்பொருளபடும். இச்சொல் கி.பி. 11–ஆம் நூற்றாண்டிலிருந்து வழக்கில் இருக்கிறது.



தாசுகண்டு நகரக் கடைத்தெரு

இந்நகரம் ஒரு சிறந்த வணிக மையமாகும். குறிப்பாக கைத்தொழிலுக்குச் சிறந்த இடம் இது. இந்நகரம் ஐரோப்பாவிற்குச் செல்லும் ஒட்டகப் பாதைகளில் உளது. இந்நகரத்தை முதன்முதலில் அராபியர் கி.பி 8–ஆம் நூற்றாண்டில் வென்றனர். பிறகு பல முசுலீம் மன்னர்கள் ஆதிக்கத்தின் கீழ் இது இருந்தது.

இது கி.பி. 13–ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மங்கோலியர்கள் ஆட்சியின் கீழ்க் கொணரப்பட்டது. பிறகு தைமூர் இதை ஆண்டார். அவருக்குப் பிறகு இதுதனி நாடாக இயஙகியது. கோகண்டு நாட்டை ஆண்ட கானேட்டுகளின பேரரசுக்குள் இது கி.பி. 1814–இல் கொணரப்பட்டது. பின்னர் கி.பி.1865–இல் துருக்கியர்களால் கைப்பற்றப்பட்டபோது 70,000 மக்கள் வாழ்கின்ற ஒரு சுவர் நகரமாக இருந்தது. இது உருசியாவுடன் வாணிகத் தொடர்பும் கொண்டிருந்தது. துருக்கித்தானத்தின் நிருவாக மையமாக கி.பி.1867–இல் இது ஆகியது. புதுப்பொலிவும் இதற்குக் கிடைத்தது.

இந்நகரில் 1917–நவம்பரில் ஏற்பட்ட இராணுவக் கிளர்ச்சியின் விளைவாகச் சோவியத்துகளின ஆட்சி ஏற்பட்டது. சோவியத்துகளின் தலைநகராக இது 1924 வரைஇருந்து மீண்டும் 1930–இல் அவர்களின தலைநகராகியது.



தாசுகண்டில் பருத்தி வேளாண்மை

இன்று தாசுகண்டு, மைய சோவியத்து ஆசியாவின் பொருளாதார, பண்பாட்டு மையமாகத் திகழ்கிறது. பஞ்சாலைகள் பல இங்கே உள்ளன. கல்வி மையமாகவும் இது திகழ்கிறது. இஙகு1920–இல் ஒரு பல்கலைக்கழகம் நிறுவப்பட்டது.இது1943–இலிருநது ஓர் அறிவியல் மையமாகவும் திகழ்கிறது. நாவாய்ப் பொது நூலகமும், ஒன்பது நாடக, நடனஅரஙகுகளும், கலை அரண்மனை ஒனறும் இங்குளளன. பல அருஙகாட்சியகஙகளும், பூங்காக்களும், விளையாட்டு மைதானங்களும் இஙகுளளன.

இங்கே 1966–இல் புவி அதிர்ச்சி ஏற்பட்டதன் விளைவாக 30,000 மக்கள் வீடிழநதனர். இபபோது இந்நகரம் புதுப் பொலிவுடன விளங்குகிறது. இலெனின நவீன அருங்காட்சியகம் சுாண்போரை வியப்பில ஆழ்த்தக்கூடிய ஒரு புதிய கட்டடமாகும். மேலும்இங்கு கி.பி.15,16–ஆம்நூற்றாண்டைச்சார்ந்த பல சமய நினைவுச் சின்னங்கள உள்ளன. இஙகு வாழும் மக்களில் 41 விழுக்காடு உருசியர்கள. 37 விழுக்காடு உசுபெக்கு இனத்தவர்கள். தாதர்கள், யூதர்கள், உக்கிரேனியர்கள் ஆகியோர் சிறுபானமையினர். இந்நகரின் மக்கள்தொகை 1,689,000 (1977).

இங்குத்தான் இந்தியத் தலைமை அமைச்சர் இலாலபகதூர் சாத்திரியும் பாகிசுத்தான் அதிபர் அயூப்கானும சோவியத்துத் தலைமையமைச்சர் கோசிசின்னும்1966-ஆம்ஆண்டு சந்தித்துத்தாசுகண்டு ஒப்பந்தத்தைச் செய்து கொண்டு இந்தியாவிற்கும் பாகிசுத்தானுக்குமிடையே ஒரு நல்ல உறவை ஏற்படுத்தித் தந்தனர். இவ்வொப்பந்தத்தில் கையெழுத்திட்ட சிலமணி நேரங்களில் இலால்பகதூர் சாத்திரி மாரடைப்பால் இங்குக் காலமானார். இவ்வாறு இது இந்திய வரலாற்றிலும் இடம் பெறுகிறது. கே சே.

**தாசுமகால்** ஆக்கிராவை ஒட்டி ஓடும் யமுனை ஆற்றின தென்கரையில் அழகிய வெண பளிங்குக் கறகளால் கட்டப்பட்டுள்ள நினைவுச் சின்னம். இதனை மொகலாயப் பேரரசா சாசகான் தம் மனைவி அருசுமத்துபானு பேகம் எனகிற மும்தாசு மகாலின் நினைவாகக் கட்டினாா. சாசகானின மனைவி மும் தாசுமகால் கி.பி.1631–ஆம் ஆண்டு, பர்கான்பூர் என்னுமிடத்தில் தமது 39–ஆம் வயதில், 14–ஆம் குழந்தையை ஈன்றெடுக்குமபோது இறந்தார். தமது பாசமிக்க மனைவியின மறைவால மிகவும வாடிய மனனர் சாசகான மும்தாசுமகாலின ஞாபகச்சினனமாக ஓர் அழகிய அழியாத, சின்னத்தை வெள்ளை நிறப் பளிங்குக் கற்களால் இவ்வுலகின் உயர்சிறப்பில் ஒன்றாகத் திகழுமாறு கட்டிவைத்தார். மும் தாசுமகால் என்னும் சொல்லுக்கு அரணமனையின அணிகலன எனபது பொருள். இசசின்னம் கண்ட மகிழ்ச்சியாலேயே சாசகான் தம் மனைவி இறநதும் மேலும் 35 ஆண்டுகள் மறு மணம் செயயாமல வாழ்ந்தார்.

கட்டடக் கலையில ஆர்வங்கொண்ட சாசகான, இந்தக்கட்டடத்தைக் கட்டிமுடிக்க கி.பி.17–ஆம நூற்றாண்டிலேயே 3கோடி உரூபாய் செலவு செயதார். இநதியா, பாரசீகம், மத்திய ஆசியா, பிரான்சு மற்றும் இத்தாலியக கட்டடக கலை வல்லுநர்களை உள்ளடக்கிய சுமார் 20,000 பேர் இக்கட்டடத்தை எழுப்ப வேலை செய்தார்கள். இத்தகைய சிறப்பு வாய்ந்த கட்டடம் கட்டிமுடிககப்பட 21 ஆணடுகள் ஆயின. இக் கட்டடம் கி.பி. 1632–ஆம் ஆண்டு தொடங்கப்பெற்று கி.பி.1653–இல் முடிககப்பட்டது. தாசுமகால போன்ற கட்டடம் பெண்ணுககு, எந்நாட்டிலும், எக்காலத்திலும் நிறுவப்பெறாத ஓர் அரிய நினைவுச் சின்னமாக விளங்குகிறது. இந்த முயற்சியால சாசகானின் அரசுககருவூலம் பொருளற்ற நிலையை அடைந்த போதிலும் தாசுமதால் பாரத நாட்டின் கட்டடக் கலைக்கும், குறிப்பாக இந்திய-இசுலாமியக் கட்டடக்கலையின் செழிப்புக்கும் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. இதைக் கட்டுதலில சாசகானுடன் முன்னின்று நடத்தி முடித்த பெருமை பாரசீக நாட்டைச் சேர்ந்த உசுதாத்து இசாத்து என்பவரைச் சாரும். இவர் இதற்காக கி.பி.17–ஆம் நூற்றாண்டிலேயே மாதம் உரூபாய் 1000 ஊதியமாகப் பெற்றார். இக்கட்டடத்தைத் திட்டமிட்டவர் வெனிசு நகரத்து வெரோனியோ என்று கூறுவர். ஆனால், இக்கட்டடம் முக்கராமத்துகான், அப்துல்கரீம் என்


தாசுமகால்

பவர்களின மேற்பார்வையில் கட்டி முடிக்கப்பட்ட தாகக கூறப்படுவதும உண்டு உலகிலேயே எங்கும் காணமுடியாத ஈடு இணையற்றது எனறு பெர்குசன எனபாரும், இது ஓர் ஐரோப்பிய – ஆசிய ஒருங கிணைப்பினால் தோன்றிய சிறநத படைப்பு எனறு சுமித்து (Smith) என்பாரும் கூறுகின்றனர். 'காத லுக்காக வடிககப்பட்டதில உலகிலேயே சிறநதது' என்றும், 'கலலினால் வடிக்கப்பட்ட காதலகாவியம்' என்றும், 'பளிங்குச் சொர்க்கம' எனவும் 'அழியாத தெய்வீகக் கணணீர்' எனவும் பலவாறு தாசுமகால புகழப்படுகின்றது.

முதலில மும்தாசின் உடல் பருககாம்பூரில உள்ள செய்னாபாதுத் தோட்டத்தில அடககம செயயப் பட்டது. ஆறு மாதங்கள் கழித்து, ஆக்ராவில இராசா மான்சிங் எனபவருக்குச் சொநதமான இடததைச் சாசகான வாங்கி அங்கே மும்தாசின் கல்லறைககு முதலில் அடிக்கலகட்டு மானத்தைத் தொடஙகினார். இந்த அடிக் கட்டடத்திற்கு மட்டும் 5 இலட்சம் உருபாய் செலவானது. தாசுமகால், முழுக்க முழுகக இந்தியக் கட்டடக் கலையாக விளங்கவில்லை. இது அரேபிய வடிவ இயல்பையும், அழகமைப்பையும் ஒத்து அமையப்பெற்றது. முழுமையாக இசுலாமியக் கலைமணம் வீசுவதைக் காணலாம்.

**தாசுமகால் கட்டட அமைப்பு** தாசுமகால் நீண்ட சதுர அமைப்பையுடைய வடக்கு, தெறகாக அமைக்கப்பட்டுள்ள கட்டடம் ஆகும். இது மூனறு பிரிவுகளாகப் பிரிககப்பட்டுளளது. நடுவில் அமைந துள்ள தோட்டம் வடக்கு, தெற்காக இரண்டு சிறிய நீளசதுரப் பிரிவைக் கொணடதாகும. தெற்கில் மணறபாறையினாலான நுழைவாயிலும, நதியின் ஓரமுளள வடக்குப் பகுதியில் வீறார்நத கலலறை மாடமும் இதன மேறகு கிழக்காக ஒரே அமைப்பை யுடைய இரண்டு கட்டடங்களாக ஒரு மசூதியும அதன கிளைககட்டடமும் முறையே காணப்படுகின றன. முக்கியக் கட்டடத்தைச சுற்றி சிவப்பு மணற் பாறையால் கட்டப்பட்ட எல்லைச் சுவரும் அதன் ஒவ்வொரு மூலையிலும் எணகோண அமைப்பை யுடைய கூடார மணடபச் சிறு தூபியும் மேலும சிவப்பு மணற்பாறைச் சுவரின் வெளியில் சில துணைக் கட்டடங்களாக முறையே தொழுவமும், காப்பாளர்களின இருப்பிடமும் காணப்படுகின்றன.

முழு கட்டடமும் பேகம் மும்தாசின் நினைவுச் சின்னமாக எழுப்பபபட்டதே. இக கட்டடத்தின வடபகுதி முகலாயக் கட்டடக் கலையின் எடுத்துக் காட்டாக விளங்குகிறது. இதில் அமைக்கப்பட்ட ஒரே அமைப்பையுடைய இரண்டு கட்டடங்களான

மருதியும, அதன் தொடர் அமைப்பும் மும்தாசின் கல்லறையை நோக்குவதாக அமைந்திருக்கின்றன. இந்த இரண்டு கட்டடங்களும் சிவப்பு சிகிரி மணற் பாறையால் பளிங்கினால கொண்ட முகட்டு அமைப்பையும், இக்கட்டடத்தின தலங்கள 'பியட்டுரா-தூரா' என்று சொல்லக்கூடிய விலையுயர்ந்த அளவற்ற நவரத்தினங்களால அமைக்கப்பெற்ற அழகு அமைப்புகளையும் கொண்டதாக விளங்குகின்றன. இதன கல்லறை மாடம் மட்டும் 7மீட்டர் நீளமுள்ள பளிங்குப் பீடத்தினமேல நிறபதாகக காட்சியளிககிறது. இது நான்கு முகப்புத் தோற்றங்களையும, வளைந்த மூலைப் பகுதிகளையும ஒவவொரு முகப்புத் தோற்றத்தின் மேலும் 33மீ.உயரம கொண்ட அழகான வளைவைக் கொண்டதாகவும அமைந்துள்ளது. இந்த நான்கு வளைவுகளினமேல குமிழ வடிவமுடைய இரட்டைக் கவிமாடம் போன்ற அமைப்பு காணப்படுகிறது. இக்கல்லறைக் கட்டடத்தின் வானவரை வனப்பானது, ஒவ்வொரு வளைவின மேலும, கோபுரத்தின் கவிமாடத்திலுள்ள மூலையின மேலும அமைந்து சிறககிறது. பளிங்குப பீடத்தின ஒவவொரு மூலையிலும் மூன்று அடுக்குகளைக கொண்ட பள்ளிவாயில தூபி அமைக்கப்பட்டு இதன கீழ்ப்பக்கம கல்லறையின பளிங்குக் கறகளால் அமைக்கப்பட்ட பகுதியின்மேல் இணைவதாகக காணப்படுகிறது. கல்லறைக் கட்டடத்தின உளபகுதி எண்கோண வடிவமான அறையைக் கொணடு பூ வேலைப்பாடுகளுடன் அழகுபடுத்தப்பட்டு மும்தாசு மகால் மறறும் சாசகானின நினைவுச சின்னங்களைக் கொணடுள்ளது. பளிங்குக் கல்லறை முழுவதுமான 'பியட்டுரா-தூரா' (Pietra-dura) என்ற அழகு வேலைப்பாடுகளைக கொண்டதாக முற்றிலும் மிக நேர்த்தியான, விலையுயர்ந்த நவரத்தினங்கள் பதித்த பளிங்குததிரையால மூடப்பட்டுளளது. இத்தகைய அழகுவாய்ந்த கட்டடத்தின அடியில் நிலப்பகுதியில் மும்தாசு மகாலின் சவபபெட்டி வைக்கப்பட்டுள்ளது.

ஏராளமான விலையுயர்ந்த நவரத்தினங்களைப் பதித்துப் பளிங்கினால் கட்டப்பட்ட இம்மகால் காலையிலும், மலையிலும், இரவிலும் பல்வேறு நிறங்களைக் காட்டுகிறது. இயற்கையழகும், செயற்கையழகும் கலந்து உயர்ந்தமுறையில் தாசுமகால விளங்குகிறது. பா.ஜெ.

**துணை நூல்கள்:**


**Allan, J. & Didwell., The Cambridge Shorter History of India, S.Chand & Co,Ltd., New Delhi, 3rd Reprint, 1979.**

**Sir George Dunbar, Bt., A History of India, Neeraj Publishing House, Delhi. 1981.**


**தாசுமேனியா** ஆசுத்திரேலியாக் கண்டத்தைச் சேர்ந்த மாநிலம். இத்தீவு ஆசுத்திரேலியாவிலிருந்து பாசு (Bass) நீர் இணைப்பினால் பிரிக்கப்பட்டுள்ளது. தெறகு பசிபிககு மாக்கடலில ஆசுத்திரேலியாவுக்குத தெற்கில இருக்கும தாசுமேனியாவில (Tasmania), புரூனி (Bruni), பர்னோ (Furneaux), அண்டாசு (Hunters), மக்வாரி (Macquarie)முதலிய தீவுகள அடங்கும். இதன் பரப்பு 68,331ச.கி மீ மக்கள் தொகை 427,300(1981) இததீவின நடுப்பகுதி உயரமானது மேற்கு மலைத் தொடர் இதன் வழியே செல்லுகின்றது. இங்குப் பாயும ஆறுகளாவன: ஆர்தர் (Arthur), கார்டன (Garden), தொவெண்டு (Derwent), தேமா (Tamar) இங்குப் பல ஏரிகளும் உண்டு. இங்கே விளையும் முககிய பொருளகள: ஆப்பிள், கோதுமை, ஓட்சு தானியம், உருளைக் கிழங்கு முதலியனவாம்.சுரங்கத் தொழிலும், காகிதத் தொழிலும், மரவேலைகளும் சிறப்பாக நடைபெறுகினறன. காடுகள இங்கு மிகுதியாக உணடு. பாறபணணைத் தொழிலும் சிறபபாக நடைபெறுகின்றது. உலோக வேலைப பொருளகளும் துணி வகைகளும் உற்பத்தி செயயப்படுகின்றன. கம்பளித தொழிலுக்காக ஆடுகள வளர்க்கப் பெறுகினறன, அணமைக்காலத்தில இத்தீவில் செமபு, துத்தநாகம், தகரம், ஈயம் முதலிய கனிப்பொருளகள் கிடைக்கின்றன.




தாசுமேனியா அமைவிடம்

**வரலாறு:** தாசுமன் (Tasman) என்ற தச்சு மாலுமி (Dutch sailor) கி.பி. 1642-இல் இத்தீவைக் கண்டுபிடித்தார். அவருடைய பெயரால் இது தாசு



தெர்வெண்டு ஆறு-தாசுமேனியா

மன எனறு குறிக்கப்படுகிறது. ஆங்கிலேயர் கி.பி. 1803-இல இதைக் கைப்பற்றினர். சிறிது சிறிதாக இங்குப பொறுபபாட்சி (Responsible government) ஏற்பட வழிவகுக்கபபெற்றது இத்தீவில் கி.பி. 1856 -இல் முழுப் பொறுப்பாட்சி ஏற்பட்டது. பிறகு 1901 -இல் மறற மாநிலங்களுடன இதையும சோத்து ஆசுத திரேலியப் பொது நலக் கூட்டரசு (British Commonwealth of Australia) அமைக்கப்பட்டது. தெ.பா.

**தாடகை:** இராமாயணத்தில வரும் பாத்திர மாகிய தாடகை பால காண்டத்தில அறிமுகமா கிறாள். விசுவாமித்திர முனிவர் இராம இலக்குவர் களை வேளவி காக்கக் கூட்டிச் செல்லும் வழியில காமனாச்சிரமத்தில் தங்குகின்றனர். அங்கிருந்து புறப்பட்டுச் செல்லும் பொழுது வழியில் கொடிய பாலைநிலம் ஒன்றைக் காணகினறனர். இந்நிலம் பாலையானது ஏன என இராமன் வினவ அச்சமயம முனிவர் தாடகையின வரலாற்றைக கூறுகின்றார்.

இயக்கர் குலத்தில் பிறந்த சற்சரன என்னும் வலியவனுக்கு சுகேது எனனும் தூயவன் பிறந்தான். அவன மகப்பேறின்மையால் வருந்திப் பிரமனை நோககித் தவம் செய்தான். தவத்துக்கிரஙகிய பிர மன் உனக்குப் புதல்வாகளைப் பெறும் பேறு இல்லை. ஒரு பெண மட்டும் பிறப்பாள் என்றான. அதன்படியே திருமகளபோல் அழகுடன் ஒரு பெண பிறந்து வளர்ந்து சிறந்தாள். அவளே தாடகை. அவளைச் சுந்தன என்பவனுக்கு மணம் செய்து கொடுத்தான். அவர்கள காமனும் இரதியும் போல இன்பம் துய்த்தனர். அவர்கட்டு மாரீசன், சுவாகு என இரு புதல்வர்கள் பிறநதனர். அவர்கள் மாயை, வஞ்சனை ஆகியவற்றில் வல்லவர்கள்.

தந்தையாகிய சுந்தன் செருக்குற்று அகத்தியன் உறையும் ஆச்சிரமத்தின் மீது மரங்களை எடுத்து வீசினான. தவ முனிவன சினமுடன் நோககு அவன் உடல் சாம்பலானது. அதுகேட்ட தாடகை தன் மககளுடன் முனிவனின் இருககையடைந்தாள. முனி வனைக கொனறழிப்போம் என அவர்கள ஆரவாரம் செய்து நின்றனர். அவர்களது தன்மை கணட முனி வன் இழிதொழில் அரக்கர்களாவீர்கள எனச சபித் தார்.

அரக்கராக மாறிய மாரீசனும் சுவாகுவும் பாதலம புகுந்து அங்கிருந்த சுமாலியிடம் அவனது மக்கள்போல வாழ்ந்து வந்தனர். சுமாலி இரா வணனது தாய்வழிப்பாட்டன் ஆதலால் இலஙகைக் குச் சென்று இராவணனின் மாமன்மார் என்னும் சலுகை பெற்றனர்.

மக்களைப் பிரிநத தாடகை இவ்வனத்தில் கொடுமை பல செய்து திரிகினறாள. அவள என் வேள்வியைத் தடுக்க நினைககின்றாள. ஆகவே அவளை அழிப்பது உனகடன் என முனிவர் கூறி னார். அவர் கூறி முடிப்பதற்குள் கோர வடிவமொடு தாடகை எதிர்ப்பட்டாள். மூவரையும் அழித்து

விடுவதாக அச்சுறுத்தினாள். அவளைப் பெண் எனக் கருதி இராமன் அம்புவிடத் தயங்கினான். முனி வரோ இவள் பெண்ணல்லள்-கொடியவள்-தருமத் தின பகை, கண் முன்னர்த் தோனறும் கூற்று, இவளை அழிப்பதுவே உனக்குரிய செயல எனறார். அதற்குள தாடகை இராமன் மீது சூலத்தை ஏவி னாள். இராமன் அம்பு அதைப் பொடியாக்கியது. அவள் வீசிய கல்மாரியை இராமன அம்பு மழையால் தடுத்தான். சாபம் போன்ற இராமபாணம் வைரம் போன்ற திண்ணிய தாடகையின் மார்பினூடு புகுந்து உருவிச் சென்றது. தாடகை வீழ்ந்தாள். இராவணனது வெற்றிக்கொடி அறுந்து வீழ்ந்தது போல வீழ்ந்தாள எனக் கம்பர் கூறுகினறார்.

ஜி.ஆர்.கி.

**தாடைமானி** மனித உடலளவுகளை எடுக்கப் பயன்படும் கருவிகளுள் ஒன்று. குறிப்பாக முக அளவு களையும் மண்டையோட்டின சில பகுதிகளையும் அளவிட உதவும் இக்கருவி மானிட உடலளவையிய லில் (Anthropometry) மிகுதியாகப் பயன்படுத்தப்படு கிறது. மனித உடல்களின் அளவுகள் இன்றைய மருத்துவத் துறை, போக்குவரத்துத் துறை ஆகிய வற்றில் மிகப் பரவலாகப் பயன்படுத்தப் படுகினறது. அதனோடு கல்விசார் நிலையில் பல பயன்பாட்டிற் காக மனித உடலின் அளவுகள் தேவைப்படுகின்றன.

தாடைமானி (Goniometer) தடித்த அடித்தளத் தையும் நகரக்கூடிய முள்ளையும் (Needle) இதனோடு இணைந்த கோணமானியையும் (Protractor) பெற் றுள்ளது. தாடைமானி எளியநிலையில் பயன்படுத் தப்படும் போது அதனுடன் வேறு எந்தக் கருவியை யும் இணைக்கத் தேவையில்லை. ஒருசில கோணங் களை அளக்கும்போது நகரும் இடுக்கு மானி யோடோ (Sliding Caliper) விரியும் இடுக்குமானி யோடோ (Spreading Caliper) இணைத்து அளக் கலாம். இவற்றோடு இணைக்கும்வகையில் தாடை மானியின் பின்புறம் மேற்கூறிய இடுக்குமானிக ளோடு இணைக்க வசதியுண்டு.

தாடைமானியைக் கொண்டு உயிருடன் உள்ள ஒருவரையோ இறந்தவர்களின் மண்டையோட்டி னையோ அளக்க முடியும். மானிட உடலளவையிய லில் ஒருசில கருவிகள் மட்டுமே உயிருள்ள மனிதர் களை அளக்கப் பயன்படுத்தப்படுகின்றன. ஒருசில கருவிகள் இறந்தவர்களின் எலும்புக் கூடுகளையும் மண்டையோடுகளையும் மட்டுமே அளக்கப் பயன் படுத்தப்படுகின்றன. ஒன்றிற்காக வடிவமைக்கப் பட்ட கருவி மற்றொரு நிலையில் பயன்படுத்தப் படும்போது அளவில் துல்லியத் தன்மை வெகுவாகப்




தாடைமானி

பாதிக்கப்படுகிறது. ஆனால், தாடைமானி எலும்புக் கூடுகளையும் உயிருடனுள்ள மனிதர்களையும் அளக்கப் பயன்படுத்தப்படுகிறது.

உயிருடன் உள்ளவர்களிடமிருந்துகீழ்வரும் அளவு களைப் பெற இக்கருவி பயன்படுகிறது. மேல் முகத் தின் உருவமைப்புக் கோணம் (Upper Facial Profile Angle) மனித இனங்களுக்கிடையே மாறுபடுகிறது. மேல்முகத்தின் கோணம் மூக்கு வேரின் (Nasion) அளவைப் பொறுத்தும், மேல்வாயிலுள்ள முனனம், பற்களின்கீழ்ப் பகுதி (Prosthion), கண, காது ஈறுகள் ஆகியவற்றின் நேர்க்கோட்டுக் கோணம் (Eye-Ear Plane)ஆகியற்றைப் பொறுத்தும் அமைகிறது. ஆகவே, மேல் முகத்தின் உருவமைப்புக் கோணம் கண்டு பிடிக்கத் தாடைமானியின் ஒரு முனையை மூக்கு வேரிலும் மறுமுனையை விரித்து மேல்வாயின் முன்னம் பற்களின் ஈற்றின் கீழ்ப்பகுதியிலும் வைத் தால் கிடைக்கும்.

இதைப்போன்று முகவடிவினை அமைக்கும் (Facial Profile) பல கோணங்களை இக்கருவி மூலம் கண்டறியலாம். குறிப்பாக மண்டையோடுகளி லிருந்து முகத்தின் முழு உருவத்தின கோணத்தையும் (Total Facial Profile Angle), மூக்கமைப்புக்

கோணத்தையும் (Nasal Profile Angle), மேலண்ண உருவத்தின் கோணத்தையும்(Alveolar Profile Angle) அளக்கலாம். இதனைக் கொண்டு முகத்தில் ஒவ்வொரு பகுதியின் அமைப்பு மிகக் குறுகியதா, குறுகியதா, நடுத்தரமானதா, அகன்றதா, மிகஅகன்றதா எனபன போன்ற பண்புகளைக் காணமுடியும்.

கே.நி.

***தாண்டகம்:*** ஒற்றும் குற்றுகரமும் நீக்கி நான்கெழுத்து முதல் இருபதெழுத்து ஈறாகப் பகுத்துரைக்கப்பட்ட பதினொரு நிலத்துஐவகை அடிகளிடத்தும் கழிநெடிலடிக்குரிய மேலெல்லையாகிய இருபதெழுத்தெனனும் வரையறையைத் தாண்டி வருவது தாண்டகம் ஆகும். இவ்வாறு வரும்தாண்டகங்களதேவாரப் பதிகங்களினும் பிற உள வேனும் அவை பண்ணொடுகூடிய இசைப்பாடல்கள் ஆதலின் இவ்யாபபு வகையின் வேறாயின.

இவ்யாப்பு வகை தொல்காப்பியர் கருத்தினபடி எண்சீரான் வந்த கொச்சக ஒருபோகு ஆகும். இப்பாவகையில் ஒன்று, இரணடு, ஐந்து, ஆறாம் சீர்கள பெரும்பாலும் காய்ச்சீர்களாகவும், சிறுபான்மையாச்சீர், விளச்சீர்களாகவும் வரும். நான்காம் சீரும் எட்டாம் சீரும் தேமாவாக நிற்கும். மூன்றாம் ஏழாம் சீர்கள் பெரும்பாலும் தேமாவாகவும் சிறுபான்மை புளிமாவாகவும் வரும்.

இச்செய்யுள் வகையை முதனமுதல் பாடியருளியவர் திருநாவுக்கரசர் ஆவர். ஆதலின அவர் 'தாண்டகச் சதுரர்' எனவும், 'தாண்டக வேந்தர்' எனவும் போற்றப்பெற்றார். இப்பாவகையின கடவுளையோ அன்றி மனிதரையோ பாடுபொருளாகப் புகழ்நது பாடுவனவாகும்.

திருமஙகையாழ்வார் திருநெடுந்தாணடகம், திருக்குறுந்தாண்டகம் என்ற இருவகை யாப்பிலும் பாடியுள்ளார். இவற்றுள் திருநெடுந்தாண்டகம் திருநாவுக்கரசரின திருத்தாணட யாப்போடு ஒத்ததாகும். திருக்குறுந்தாண்டகம் என்பது இருபது எழுத்திற்கு உட்பட்ட எழுத்துகளாலாய அடிகளையுடையதாகும். மேற்கூறிய தாண்டகப் பாவினினறும் குறுகியது ஆதலின் இது திருக்குறுந்தாணடகம் எனப் பெயர்பெற்றது.

யாபபருஙகல விருத்தியில் காணப்படும் தாண்டகத்தின் இலக்கணம் வடமொழித் தாணடக யாப்பினை அடியொட்டி எழுந்ததாகும். திருநாவுக்கரசரும், திருமங்கையாழ்வாரும் பாடியிருக்கும் பாடல்கள் தமிழ் யாப்பின் வழி வந்தவையாகும். கு.சு.

***தாண்டவங்கள்:*** தாண்டவம் என்பது 'தாண்டுதல்' என்னும் சொல்லின அடிப்படையாக அமைந்த ஆடற்கலைச் சொல்லாகும். தமிழநோக்கில் அதனை ஆராய்கையில, தாவுகை செலுத்துகை வெற்றி முதலிய பொருணமையுடன விளக்கங் காணலாம். வடசொல்லாகக காணின அதற்கேற்பவும் புராண விளக்கம் காணலாம்.

திருக்கயிலையில் சிவனது திருமுனனர்ச் சிவ தாணடவங்களையே எப்போதும் மனத்தகத்தே சிந்தித்தவராய்த் தெய்வ நலப்பிழம்பாய் விளங்கியவர் 'தண்டு' எனும் பெருமுனிவர். அவரால் பெரிதும் விளக்கமுற்ற கவினகலையாதலின் இது முதற்கண 'தணடுவம்' எனபபட்டது, பிறகு 'தணடுவம்' என்பதே 'தாண்டவம' என வழஙகலாயிற்று. இது புராண வல்லுநர்கள தரும் விளக்கமாகும். செவிவழிச் செய்திப்படி தணடு முனிவரே சிவனது கட்டளைக்கிணங்கப் பரத முனிவருக்குத் தாணடவத்தைப் போதித்தார் எனறும, பின்பு வழிவழியே அந்தக கலை மக்களுககுக கிட்டலாயிற்று எனறும் கூறுவர். தணடு முனிவரே சிவனுக்கு அணுககநிலையில் விளங்கிய நந்தியம்பெருமான் எனறும் கருதுவர்.

**ஆடலும் தாண்டவமும் இலாசியமும்:** ஆடல வகைகள் பலவாகும; அவறறுள் சிவன தொடாபிலே அமைநது, விறுவிறுப்பும கடுமையும் உடையதாய் ஆடவாச் சார்புடையது தாணடவமாகும். பார்வதி தொடர்பிலே நளினமும் மெல்லியலபுமுடைதாய் மகளிர்ச் சார்புடையது இலாசியமாகும். இலாசியம் என்பதைத் 'தக்கம்' எனறுங கூறுவர்; தாட்சாயணி எனும் பிராட்டியைப் பெற்ற தககனால இயற்றப்பட்டமை குறித்து இதனைத் 'தக்கம்' என்று குறிப்பிடலாயினர். தாண்டவம் என்பது குதித்த வண்ணம் படபடப்புடன் நின்றாடும் நிலையினது; இலாசியம் எனபது பாவஙகள பிடிக்கும் நிலையில் அமைவது. சொக்கம் எனனும் சுத்தநிருத்தமே தாணடவம் எனறும், தக்கம் என்னும இலலிதலாசியமே தழைவு எனறும் சாத்தனாா அருளிய 'கூத்து நூல்' விளக்கங்கூறும. இவ்வாறான இரு பகுப்பு ஆடல்களும்சேர்ந்து சிறந்த ஆடற்கலையாகப் போற்றப்பெற்று, 'நாட்டியம' எனவும் 'கூத்து' எனவும் மக்களிடையே நனகு அறிமுகமாயின.

**கலைநோக்கும் அமைப்புக் கூறுகளும்:** நாட்டியக் கலை (பரதக்கலை) வாயிலாக அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நானகு உறுதிப் பொருள்களுமே கிட்டும் என நாட்டிய சாத்திரம் கூறும்; அதுகொணடு இநதக் கலைக்குத் தத்துவ நோக்கும் சமயச் சார்பும் அமைந்து, கவின கலைகளுள இது ஏற்றம்

பெற்றது. இந்நிலையில் ஆடறகலையின் ஆன்மா வாகத் தாண்டவம் கருதப்பெற்று, இந்நாட்டுப பணபாடடுக் கருவூலமாகத திகழ்கினறது. இவவா றான நிலையையுடைய இதற்கென அமைந்த படி நிலைகள உணடு.

மககளின ஆனம நாட்டத்தைப் பெறும் வகை யில தாணடவம் பற்றிய சிநதனைகள, சிறப்பாகப் புராணச சிநதனைகள தோனறி வளரலாயின. சம யச சானறோர்களின எணணஙகள நாட்டில பரவு வதற்கேறப அவவக்காலத்திலும நாடாணட மன்னா களும வளளல்களும ஆககமும் ஊககமும் நல்கி வந் தனர்; எணணஙகள் பதிவுகளாக எழுத்துருவம் பெற்ற நிலையில, அடுதத வளாசசிக கட்டமாக அவற்றை மக்களிடையே ஈடுபாட்டுடன வளாககக கவினகலைகளின தேவை உணரபபட்டது. அவவாற றான சிவன் முதலிய தெய்வங்களின ஆடல களெலலாம் ஓவிய வடிவிலும் சிற்ப வடிவிலும் நாட் டிய வடிவிலும நாட்டில ஆர்வமுடன வரவேறபைப பெறறன. அததகைய பககுவமான சூழலில ஓவ வோா ஆடலுக்கும முறையான இலககண விதிக ளும் அமைநது, அவை தவிரககவியலாத காலததின தேவைகளாயின. நாட்டிய நூலகள தோன்றியமை யால் நாட்டியககலை சமயமும் தததுவமும் உணாத தும ஒருவகை அறிவியற் கலையாகவே மதிககப் படுகினறது எனலாம்.

தாணடவக கலையின அமைப்புக் கூறுகள சிநத னைக்கு எழுசசி தருபவை. பொதுவாகவே, ஆடற கலை இலயமாகிய தாளவொழுஙகினைச் சிறபபு அஙகமாகக கொணடது. அதிலும, தாணடவம விறுவிறுப்பான தாளக கட்டினையே இனறியமை யாத உயிரோடடமாகக கொணடது. தாணடவ அமைப்பினை இலாசியத்துடன ஒப்பிடடு விளகக முனைகையில சாததனாாதம கூத்த நூலில, 'தணடு வக்கூதது தாளததின ஒவவொரு தட்டிலும் சுணடிச் சுணடித் தாவித் தாவிப் பொஙகும்; தகககக் கூத்தோ தாளத்தின ஒவவொரு தட்டிலும சாயந்து சாய்ந்து தழைநது தழைநது குழையும. சொக்கக கூததில ஆஙகிக இயக்கங்கள் தம்முள கடினமாகப் புணா வுற்றுக களிவெறி மீறி துளளும; தகககக் கூததில இயகக இயலபுகளின இணைப்பு இழுமென விழுமிய வகையில இழைநது இழைநது நெளியும். சொககத தில் முககிளைகளும தமமில விறுவிறுப்புடன விறுக கும்; தக்கத்தில முககிளைகளும் ஒபபுமை கொணடு வளையும். இவவாறான தக்கமும சொக்கமும தம் முள தழுவி நடைபெறுவது கூதது' (பக. 356) என உரையாசிரியர் விளககிக் கூறுதல் காணக. இவவாறே பல கோணங்களில தாணடவ நுணுககச் செயதி களை அவா கூறிச செல்கிறார்.

சுருககமாகப் பரத முனிவர் குறிப்பிட்ட கரணங களைக் கொணடு ஆகமததில குறிப்பிடப்பெருந் தாண்டவங்களை இனங்கணடு கொளளலாம அதறகுக கூததுநூல போனற நூல்களின பயிற்சி தேவைப்படும; நூற்பயிற்சியுடன தொனமையான தாணடவச் சிற்பங்களையும் காணகையில, தாணட வததிலே கால கை முகம் இடுபபு முதலிய அஙகங கள் மனத்தினவழி விறுவிறுப்புடன் செயறபட வேணடிய முறையான இயககங கொள்ளவேணடிய அமைப்பின பாஙகு புலப்படும, முழவு முதலிய இசைககருவிகள அவவியக்கத்திற்குத் துணை நிற்கும் போக்கும பிடிபடும.

**தோற்றமும் வகைகளும்**· சிவபெருமான, உமை யமமை, கணணன, விநாயகன், முருகன, திருமகள முதலிய தெயவங்கள ஆடலபுரிநதுள்ளன. எனினும, சிவபெருமானுடைய ஆடலே பெரிதும் சிறப்புடைய தாகக் கருதபபடுகினறது தாணடவங காரண மாகக் கொண்ட சிவனது சிறப்பினை ஆடல் வலலான், தாணடவன, ஆனநத தாணடவன, தாணடவமூாத்தி, கூத்தன, கூததப்பிரான முதலிய திருப்பெயர்கள உணர்ததும். நடனக் கலைககு நாயகனாகப் போறறுவதறகேறப அவனே பலவேறு தாணடவங்களை ஆடியுளளான இதனைப் புராணக் குறிப்புகள பலவற்றால் உணரலாம. தாணடவத் தோற்றத்திறகு இயைபான புராணச சிறப்பினைத் தாருகவன நிகழச்சி புலப்படுததும்; அது வருமாறு.

அண்ட சராசரஙகளிடையே உயர் பேராற்றல் (மகத்தான சக்தி) எது எனபது பற்றித் தாருகவன முனிவர்கள பெரிதும் தருககமுறையில முனைநது சிந்திககலாயினர் தாம் கொணட கடுந் தவத்தின ஆற்றலே பேராற்றல் என முடிவு கட்டியவர்களாயத தவத்திலும் அதற்கு வலிமை சேர்க்கும் வேளவியி லும் நாட்டஞ் செலுத்தினர். அநநிலையில் சிவபரம் பொருளின பேராற்றலையும் முறையாக மதியாமல அகந்தை கொணடிருநதனர்; வேளவிபுரியவும் தொடங்கினர். இதனையுணாந்த சிவனும் திரு மாலும் காமதேவனது துணையைக் கொண்டு, அந்தத் தாருகவன முனிவர்களுக்குச சரியான பாடம புகட்டத் திட்டமிட்டனா; அவவாற்றான சிவன பிசசையெடுக்கும் (பிட்சாடணர்) வடிவினரா யும், திருமால மோகினி வடிவினராயும் அங்குச சென்று, முனிவர்களின வேள்வியை அழிக்கக கரு தினர். மோகினியின் பேரெழில வடிவத்திலே முனி புஙகவர்கள மதிமயஙகியவர்களாய், ஒவ்வொரு வரும் மோகினியைத் திருமணங்கொளளவும் தம வயமாக்கவும முயனறு அலமந்தனா. சிவனது பிட் சாடணர் வடிவத்தின அழகிலே-நிருவாணக கோலத்

திலே- முனிவர்களின் மனைவியர் தம்மை மறந்து ஈடுபட்டவர்களாய்த் தம் உயிரனைய கற்பையும் இழக்கலாயினர். இத்தகைய அவச் சூழலையுணர்ந்த முனிவர்கள், தம்மை வேள்வி செய்யவொட்டாமல் தடுத்தும் அவமானப்படுத்தியும் நின்ற சிவனையும் திருமாலையும் சாம்பலாகப் போகும்படி சபித்த னர்; சாபம் பலியாமற் போகவே, சிவனையழிக்க வேண்டி அபிசார வேள்வியைப் புரியத் தொடங் னர். வேள்வியிலிருந்து உடுக்கை, மான், வேள்வித்தீ, யானை, புலி, சிங்கம், நாகம் முதலியவற்றைத் தோற்றுவித்துச் சிவன்மேல் ஏவினர். அவற்றை யெல்லாம் மிக எளியனவாகக் கொண்டு, தான் ஆடல் புரிந்துகொணடே சிவன் கட்டுக்குள் அடக்க முற்பட்டான். உடுக்கையையும் மானையும் வேள் வித்தீயையும் கையிலேந்திக் கொண்டும், நாகத்தைக் கழுத்தில் அணிந்துகொண்டும், புலி சிங்கம் யானை ஆகியவறறைக் கொன்று அவற்றின் தோல்களை ஆடையாகப் போர்த்திக் கொண்டும் ஆடல் புரிந் தான். தம் கடுமுயறசி பலியாமற் போகவே, கடை சியில முயலகன் எனும் கொடிய அசுரனை இறை வனிடம் முனிவர்கள ஏவினர். அவவிறைவனோ, முயலகனைக் கீழே தள்ளி அவன்மீது நின்ற கோலத் திலும் ஆடலைத் தொடர்நதான்; உலகமுய்யக் காட்சியளிக்கலானான். இந்த அழகிய ஆடலே தாண்டவம் எனப்பெயா பெறலாயிற்று. இந்தத் தாணடவம் சமயவுணர்வுடைய அடியவாகள் போற்றும் வகையில் சிவனால் பல்வேறு காலங்களில் பல்வேறு நோக்கிலே சிற்சில மாற்றஙகளுடன் ஆடப் பட்டது. இது பறறிய செய்திகள புராணங்களாலும் வரலாற்றாலும் அறியக் கிடக்கின்றன.

தேவர்களின் வேணடுகோளுக்கிணங்கவும், பதஞ சலி-வியாக்கிரபாத முனிவர்களின வேணடுகோளுக் கிணங்கவும் இநதத்தாணடவம இசைக் கருவிகளுடன ஆடப்பட்டது.

களிற்றுரி போர்த்து ஆடிய தாண்டவம் தாருக முனிவர்களின வேள்வித தொடர்பில நிகழ்த்திய சிவனது தாணடவம் என்பது ஒரு புறமிருக்க, அத னையே வேறொரு நிகழ்ச்சித் தொடர்பாக ஆடிய சிவதாணடவமாகப் புராணம் கூறும். கசமுகன் என்னும் யானை முக அசுரன் பிரமனை வேணடி நெடுஙகாலம் தவம்புரிநது, சிவபெருமானைத் தவிர வேறு யாராலும் வெலலுதற்கரிய ஆணமையும் ஆயு ளும பெற்றுப், பிறகு ஆணவங் கொணடு மூவுலகை யும அடிமைப்படுத்திக் கொடுமைககு உள்ளாக கினான்; அச்சூழலில் யாவரும் அஞ்சிப் பதற்றமுற் றுச் சிவனிடம் முறையிட்டனர். அவனும் அவர் களுக்கு அடைக்கலந் தந்து, யானைமுக அசுரனின் தோலையுரித்துப் போர்த்துத் தாண்டவமாடி நின் றான்; அதனால் அனைவர் துயரமும் நீங்கியது. இதனைக் கந்தபுராணம் (6:13, 145: 6:13, 146) கூறும். இதனையே தியான சுலோகமாகக் கொண்டு, சிற்பிகள் கச சம்மார தாண்டவத்தைச் சிற்பத்தில் வடிக்க முற்பட்டனர் எனலாம்.

சிவன் புரிந்த தாணடவங்களுள் பணடுதொட் டுச் சிறப்பான தாண்டவமாக விளஙகுவது திரிபுர தகனத் தாணடவமாகும். இதனைக கலிததொகைக் கடவுள் வாழத்தினால அறியலாம். முனிவாகளுக கும் அடியவர்களுக்கும் பெருநதுன்பந் தந்துகொண டிருந்தனர் திரிபுர அசுராகள. தாரகாட்சன கமலாட் சன் வித்துன்மாலி எனும் அவவசுரர்களை வீழ்த்து வதற்காக, அவர்களின் பொன வெளளி இருப்புக கோட்டைகளைத்திரிபுரங்களை அழிககக் கருதினான சிவன. அவற்றை எரித்துச சாம்பலாக்கியவணணம், உமையம்மையின உதவியுடன் சிவன ஆடிய ஆடல்கள கொடு கொட்டி, பாணடரங்கம, காபாலம் எனப் பெயா பெற்றன. சிவன எட்டுத் தோள்களுடைய வனாய்த்-திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளாய்க் காட்சியளித்தமை மக்களிடையே சிந்தனையைப் பெரிதும் தூணடியது. இறைவன தன தாணட வத்தை இயற்றுகையில் உலகப் பொருள்கள் அனைத்தையும் அழித்துககொணடே அவன கைகொட்டி ஆடினான, இதுவே 'கொடுகொட்டி' எனலாயிற்று. அஙஙனம் அழிததவற்றின வெண சாம்பலைப் பூசியாடும் ஆடலே 'பாணடரங்கம்' என லாயிற்று. தலையோடு முதலிய எலும்புகளை ஏந்தியும் தாங்கியும் நின்றாடும் ஆடலே 'காபாலம்' எனலாயிற்று என்பர். அத்தகைய ஆடலினபோது அமைந்த பறையோசை, திருநீற்றுப்பொலிவு, புலித் தோலாடை, கொன்றை மாலை, தலையோடு போன றவை சிவனது தாணடவம் பறறித் தெளிவாக அறிந்துகொளள வாய்ப்பாகும். இவ்வாறான கருத்துகளைக் கலித்தொகைக கடவுள வாழ்த்துப் பகுதி உணர்த்துதல காணக. திரிபுரங்களை அழிக்கப் பெரிய தேரில் அம்மையுடன ஆடிய இறைவனது தாண்டவம் மிக வியப்பை விளைவிப்பதாகும். ஆடும் போது உடம்பு சிறிதும் அசையவிலலையாம்! வீரச் சுவை வெளிப்படுத்துவதாகிய மெய்ப்பாடு தோனற நின்ற நிலையில், அதாவது 'இசுதானகம்' எனற சமநிலையிலிருநத வணணம் சிவன தன் புன்னகை யால் திரிபுரஙகளை எரித்து அழித்துளளான். எனவே, இந்தத் தாணடவம் பாவதாண்டவம அல்லது திரி புர சங்கார தாண்டவம் எனப் பெயர்கொண்டது. இத்தாணடவத்தைச் சிலப்பதிகாரமும் போற்றிக் கூறுகிறது. அந்நூலின் இருவேறு இடங்களில இத் தாணடவம் பற்றிய குறிப்புகள் உளளன. முதலாவ தாகக் கடலாடு காதையில் (39-45) காணக. அதனால்,



பாரதி (பைரவி) ஆடிய பாரதியரங்கமாகிய சுடலை யில், திரிபுரங்களை அழிக்கவேண்டுமென்று பணிந்து நின்ற தேவர்கள் காரணமாக அவற்றை எரித்தருளி னான என்பதும், உமையவளை ஒரு பாற கொண்ட வனாகவும் சிவன் தன கொடுகொட்டியாடலை ஆட முடியும் எனபதும் அறியலாகும். அடுத்ததாக இத் தாண்டவத்தின் பெருமையை உணர்த்தும் வகையில் நடுகற் காதையில் ஒரு நுணுக்கமான குறிப்பு உள்ளது. கூத்தச் சாககையர் ஆடுவதாக வரும கொட்டிச்சேதம் பற்றிக் குறிப்பிடுகையில, சிவன் அதனை ஆடுகையில் சிலம்பு ஒலியிடவும், கையில மைந்த உடுக்கை ஓசையிடவும், கண் ஆயிரககணக கான திருக்குறிப்புகளை உணாத்தவுமான அமைப்பு உள்ளது, எனினும், தன் கணவனுடன் தானும இயைந்து ஆடாமல அருகிலுள்ள உமையவள அசை வின்றிக் காணப்படுகிறாளாம்; பாடகம் எனற காலணி பதையாமலும், சூடகம் என்ற கையணி அசையாமலும், இடையிலுள்ள மேகலை ஒலியாம லும், மார்பு அசையாமலும், நீண்ட குழை ஆடா மலும், அழகிய கூந்தல் அவிழாமலும் இருக்கிறா ளாம் (சிலப். நடுகல். 67-75). கொடு கொட்டியும கொட்டிச் சேதமும் ஒரே ஆடலின் வேறுபெயர் கள் என்பர். இந்த ஆடலை ஆராய்கையில், சிவ னுக்கு ஒத்தியங்க வேண்டிய இறைவி எதற்காக அச்சமும் வியப்புங் கொண்டு ஒதுங்கிய வணணம அசைவின்றியிருக்கிறாள எனற கேள்வி எழும. கலித் தொகையில் இறைவனது ஆடலுககேற்பத தாளமிடுகின்ற பொறுப்பேற்ற உமையவள இஙகு இவ்வாறு இருப்பதன் நோக்கம் என்ன?

உயிர்கள் மாட்டமைநத பேரருள காரண மாகவே ஆணவம் கனமம மாயையாகிய மலங்களை நீககஞ் செய்து இறைவன திரிபுரமெரிக்கும்-எரிதத -நிலையில தாணடவமாடுகினறான். யாவும் ஒடுங கும் பேரூழிக் காலத்தில் அயாந்து இளைப்பாறும உயிர்களை மீட்டும, வினைக்கேறபப் படைததல காத்தல அழித்தல மறைததல அருளல் ஆகிய ஐந தொழில்களை இறைவன புரிகினறான், அந்தச செயலெலலாம் உணாததும் அருளினது இயக்கமே திருககூத்தாக வெளிபபடுகிறது எனபது கலைநுட்ப உண்மைதான. எனினும, ஊழிப் பேரழிவுச் செயலை நினைககினறபோது உமையவள பேரருட் பிழமபாக விளஙகுபவள்-செயலற்று விடுகிறாள, அதாவது, அசைவற்றுக் காணப்படுகிறாள என்று கொடடிச சேததததில இளஙகோவடிகள சுடடிப் பெற வைக் கிறார். இதனையே, கலிததொகையில சிவனது ஆடலுககு உமையவள சீர், தூககு, பாணி தரு வாளோ? எனறு கேளவிக குறியில நிறுத்துகிறாா அச்செயயுளாசிரியா. அதறகு விடையாகத 'தரமாட் டாள்' எனற எதிாமறைப பொருளும் உணடாகி விடுகிறது தன நாயகன குறிப்பிறகேறப ஒழுகும உமையவள் ஒருதலையாகத் 'தருவாள' எனற உடன பாட்டுப் பொருளும் ஈணடு உணடாகிவிடுகிறது. இத் தகைய முறையில் கருத்தினை உய்த்துணருமாறு புலவாகள பாடியுள்ளனர்.

திரிபுர சம்மார தாணடவம் பெருமையை யுணர்நத அருளாளர்கள திருமுறைகளிலும் பிற்கால இலககியஙகளிலும் அதனைப் போறறிப பாடியுள்ள னர். நலலாட்சியையும் கலைமாட்சியையுங கொணட மாமனனர்களும் சமயவுணர்வுடையவர்களாய்த் திரி புர சம்மாரத்தினை மனததுட் கொணடு, வெறறி நலகும் தெய்வமான திரிபுராந்தக மூாததியை வணங்கிப போறறினா இநத வியத்தகு மூாத்தி யிடம பெரிதும ஈடுபாடு கொணட சோழமனனன இராசராசன தான் எடுப்பிததுள்ள தஞசை இராச ராசேச்சுரத்தில் (பெரிய கோயிலில்) இம்மூாததிககுத் தனிச்சிறபபளிததுள்ளான. பெரிய கோயிலில தீட்டப பெற்ற-வரலாற்றுப்புகழபெற்ற-ஓவியஙகளுள திரிபுர சம்மார நிகழ்ச்சியும் சிறப்பிடம் பெற்றுள்ளது.

திரிபுரமெரிககும் விரிசடைக் கடவுளின் தோற் றத்தில், பகைவர்களைத் துச்சமாகக் கருதி இகழ்ந்து போாதொடுக்கும் வேளையிலே வீரமும வெகுளியும (திருமுகத்தே) கொப்புளித்து நிற்பதைக கணடு யாரும் வியந்து நிற்பர், கொடுமையை எதிர்த்து வெற்றிகொள்ள வேண்டுமென்ற தனனம்பிக்கை யையும துணிச்சலையும் இதனால பெறுவர். இந்தத் தாணடவத்தில ஈடுபாடு கொண்ட கலை

வல்லுநர்கள இதற்குச் சிறப்பான இலக்கண விதிகள் அமைத்துள்ளனர். சிவபெருமான் உலக உயிர்களின்மீது கொண்ட கருணையினால், அவவுயிர்களை வதைக்கும் பகைவர்களைச் சாடக் கருதி ஆடுகையில் எவ்வாறான அங்க அமைப்புகள் இடங்கொணடன எனபதைச் சில நாட்டிய நூல்கள விளக்கிக் கூறுகின்றன. நுதலவிழித தாண்டவமாகக் காணும் சாத்தனார் இதன ஒருவகைக் காட்சியைக் குறிப்பிடுகிறார்; உரையாசிரியர் அதனை விளக்குகையில், 'பினகால் பின்புறமாய் வீச்சுறறுச சூசித்துப் பெருவிரலினமீது நிற்ப, முனகால் குதித்தூக்கின் மேல் முடக்குறறு முழங்கால் முன்னேறி நிற்ப, வட்டிடை திருக்கி, மார்பகம் ஏற்றி, நிமிர்ந்த முகத்தில் இமை விழிகள் துடிப்ப, செவ்வாய் முனைப்புற்றுச் சினநது சீறிச் சிரிப்ப, இடக்கையில் ஒன்று பின்வாங்கி ஓங்கி மூவிலைச் சூலத்தைப் பிடிப்ப, மற்றோர் இடக்கை முன நீட்டி மலைவில்லை வளைப்ப, வலக்கையில் ஒன்று மழுக்கனலை நேர்முகமாய் நீட்ட, மற்றொரு வலக்கை வில்நாணைச் செவிமிசை ஈர்ப்ப, முக்கணணன் முப்புரததிலும் மூண்டு எரிமுழங்கி, அவை அழியும்படி தன் தீவிழி யாம் நுதற்கண நெருப்பை இறைவன ஏவுதல் நுதல் விழித் தாண்டவத்துள ஒன்றாம்' (பக். 310) எனக் கூறுதல் காணக.

இவ்வாறே சிவபெருமான ஆடிய தாணடவங்கள பலவாகும். ஆகமங்களில அறுபத்து நான்கு தாணடவங்கள் (அட்டாட்ட மூர்த்தங்கள) கூறப்பட்டுள என. எனினும், மக்களுககுப் பெரிதும் அறிமுகமாக உள்ளவை ஏழு தாண்டவஙகளேயாகும். அவை, ஆனந்த தாணடவம், ஊர்த்துவ தாணடவம், காளிகா தாணடவம, சதுர தாணடவம, சம்மார தாணடவம், சந்தியா தாணடவம, திரிபுர தாணடவம் ஆகும். சிலா ஏழுவகைத தாணடவஙகளாகக் காளிகாதாணடவம், கௌரி தாணடவம், சந்தியா தாண்டவம், சங்கார தாணடவம், திரிபுர தாணடவம், ஊர்த்துவ தாணடவம், ஆனந்த தாணடவம் ஆகியவற்றைக் கூறுவர். இவறறைப் பின்பற்றித் திருப்புத்தூர்ப் புராணம் சில நுணகுறிப்புகளைப் புலப்படுத்தும். அந்தப புராணப்படி திருநெல்வேலித் தாம்பிர சபையிலே காளிகாதாணடவம் அல்லது முனிதாண்டவம் படைத்தலைக் குறிக்கும்; திருப்புத்தூர்ச் சிறசபையிலும் மதுரை வெளளியம்பலத்திலும் முறையே கௌரிதாண்டவமும் சந்தியா தாண்டவமும் காத்தலைக் குறிக்கும; இருணட நள்ளிரவிலே சங்காரதாணடவம் அழித்தலைக் குறிக்கும்; திருக்குற்றாலம் சித்திர சபையில் திரிபுர தாண்டவம் மறைத்தலைக் குறிக்கும்; திலலைப் பொன்னம்பலத்தில் ஆனந்த தாணடவம் ஐந்தொழிலையும் குறிக்கும் என்பது அறியலாகும. மேலும், ஏழுவகைத் தாணடவத்தில் குறிப்பிடப் பெறும் காளிகா தாணடவத்தைக் காளி தாண்டவம் எனக் கருதுதல் கூடாது. படைத்தல் செயலைக் குறிக்கும்காளிகாதாணடவம் வேறு, அருட்செயலைக் குறிக்கும் காளி தாண்டவம் வேறு எனக் கொள்ளுதல் வேணடும்.

சிவபெருமான் உயிர்களின உய்விற்காகச் செய்தருளுவது பஞ்ச கிருத்தியம் எனப்படும் ஐந்து செயல்களாகும். ஆகவே அவர் செய்யும் தாணடவமும் ஐந்தாகத்தானே இருக்க வேணடும்! ஏழாக இருப்பது ஏன? இதறகுரிய காரணத்தை மயிலை சீனி. வேங்கடசாமி கூறுகின்றார். ஐஞ்செயலையும், தனித்தனியே காட்டுகின்ற தாண்டவங்கள் ஐந்து ஐஞ்செயலையும் ஒருஙகே செய்கிற ஆனநத தாண்டவம் ஒன்று. ஐஞ்செயல்களில் ஒன்றான காத்தல் செயலைச் செய்யும் கடவுள உயிர்கள் செய்கின்ற நலவினை தீவினை என்னும் இருவினைக்குத் தக்கபடி இன்பங்காத்தல். துன்பததினின்றும் காத்தல் என்று இரண்டு வகையில் காத்தல் செயல்களைச் செய்கிறார். அந்தவகையில் காத்தல் தொழில இரண்டாக, ஐந்தொழில் ஆறு ஆகிறது. ஐஞ்செயல்களையும் ஒன்றாகச் செய்யும் ஆனந்த தாண்டவத்தையும் சேர்க்கத் தாணடவம் ஏழாயின என்ற கருத்து இயைபுடன் சிந்திக்கத்தக்கது.

கலைவல்லலாரின மற்றொரு நோக்கில், தாணடவங்களுள் தில்லையுள் ஆடிய ஆனந்தமாநடமும் (பஞ்சகிருத்திய தாண்டவமும்), திருவாலங்காட்டில் ஆடிய ஊர்த்துவ தாண்டவமும் மிகச் சிறப்பாகக் கருதப்படும். நாட்டிய நூலில் கூறப்படும் புயங்கத் திராசிதம் எனும் கரணமே ஆனந்த தாணடவம் என்பது சிறப்புடைய குறிப்பாகும். இவ்வாறே கரண வேறுபாட்டினாலே தாண்டவ வேறுபாட்டினை ஆராய்நது இனங்காப்பது உணடு. ஆனந்த தாண்டவம் உச்சச் சிறப்புடையதாகலின் அதனை மக்கள் உணர்ந்து உய்யுமாறு அனைத்துச் சிறப்புடைய சிவன் கோயில்களிலும் சிவகாமியம்மை யுடன் கூடிய நடராசப் பெருமானுக்குச் சிறப்பிடந் தந்துள்ளமை போற்றற்குரியது.

உமையம்மையின கூறாகத் தோன்றிய காளி முனைந்து ஆடுகையில் சினந்தெழுந்த சிவன தன் ஒரு காலை உயரத் தூக்கி 'ஊர்த்துவ தாண்டவம்' ஆடினான்; அன்றியும், சிவனது ஆடலின்போது குழையொன்று நழுவி விழ, அதனைப் பிறர் காணாது வாறு தன் திருவடியால் எடுத்து அணிந்துகொள்ள ஆடியதே இதுவெனவும் கூறுதல் உண்டு.

கார்க்கோடகன் என்ற நாக அரசனும், அனந்தர் என்னும் முஞ்சிகேச முனிவரும் விரும்பிய நிலையில் திருவருளால் ஊர்த்துவ தாண்டவத்தைக்கண்டு வீடுபெற்றனர் என்ற புராணக் குறிப்பும் உண்டு.

காளியோடாடிய ஊர்த்துவ தாண்டவத்தின் சிறப்பினை நக்கீர தேவர் உணர்ந்து தாம் பாடியருளிய கயிலைபாதி காளத்திபாதி அந்தாதியில் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

சங்கார தாண்டவம் அல்லது சம்மார தாண்டவம் சிவனது அளப்பரும் பேராற்றலைப் புலப்படுத்துவதாகும். இதனை ஊழித்திருக் கூத்தாகவும் அந்தி நிருத்தமாகவும் கொள்ளுதல் உண்டு. அன்றியும், சங்காரதாண்டவம் வேறு, பிரளயதாண்டவம் வேறு எனக் கருதுவதும் உண்டு. சிலர் சம்மார தாண்டவம் மார்க்கண்டேயருக்காகக் காலனை வதைக்கு முகத்தான் சிவன ஆடியது என்றும் சிறப்பாகக் கூறுவர்.

திருவிளையாடற் புராணத்திலே கலைவல்ல பாண்டியனுக்காகச் சிவன் கால்மாறியாடி அவனது கவலையைப் போக்கியதைக் காணலாம்; அவ்வகையில் அந்தத் தாண்டவம் கால்மாறியாடிய தாண்டவமாகக் கருதப்பெறும்.

தாண்டவம் புரியும் இறைவனுக்கு நான்கு, ஆறு, எட்டு, பத்து, ஆயிரம் கைகள உள்ளனவாக அருளாளர்கள் தம் மனக் கற்பனைக்கேற்பப பாடுவர்; சிற்பிகளும் அக்குறிப்பினை மனத்துட்கொண்டு சிலைகளை அமைப்பர். திருக்கைகள பலவாகச சுட்டுங் குறிப்பினால், விண்ணே இறைவனுக்கு உடலாகவும் திசைகளே கைகளாகவும் கொள்ளுதல் தகும்.

கலைவிளக்கந் தரும் பாங்கினில், இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவங்களும் இசைநாதச் சிறப்புடன போறறுவர். தாண்டவங்கள் குரல் துத்தம் கைக்கிளை உழை இளி விளரி தாரம் ஆகிய ஏழிசைகளினின்றும் தோன்றியவை எனக் கொண்டு, அவற்றிற்குக் கலைநோக்கிலே மெய்ப் பொருளியல விளக்கந் தருதலும் உண்டு. இத்தகைய சிறப்புடைய எழுவகைத் தாண்டவம் ஒருபுறமிருக்க, இறைவனைத் துவாதசதாண்டவச் சிறப்பினனாகக் கருதிப் பன்னிரண்டு தாண்டவங்களைப் போற்றிக் கூறுவதும் உண்டு. இக்கருத்தினையொட்டிச் சாரங்க தேவர் ஆடல்வல்லானின் வியத்தகு தாண்டவங்களைத் தேர்ந்தெடுத்து, ஆனந்த தாண்டவம், சந்தியா தாண்டவம், சிருங்கார தாண்டவம், திரிபுர தாண்டவம், ஊர்த்துவ தாண்டவம், முனிதாண்டவம்,சங்கார தாண்டவம், உக்கிர தாண்டவம், பூதத் தாண்டவம், பிரளய தாண்டவம், புசங்க தாண்டவம், சுத்த தாண்டவம் எனப் பன்னிரண்டாய் இயம்புவர்.

அருளாளர்கள் சிலர் ஆண்டவனின் ஆடல்களையெல்லாம் ஐவகைத் தாண்டவங்களுள அடக்கி, அவை அற்புதத் தாண்டவம், அநவரத தாண்டவம், ஆனந்த தாண்டவம், பிரளய தாண்டவம், சங்கார தாண்டவம் எனக் கூறிச் செல்வர். தாண்டவத்தை வகைப்படுத்தும் அடியவர்கள் சிலர், பஞ்சகிருத்திய தாண்டவம், அகோர தாண்டவம், ஊர்த்துவ தாண்டவம், ஆச்சரிய தாண்டவம், ஆனந்த சௌந்தரிய தாண்டவம் எனப் பல்வகைப்படும் என்று கூறுவர். இவ்வாறு தாண்டவங்களின் எண்ணிக்கை அவ்வக்காலத்திலும் புராணவுணர்வு கொண்ட சமயப் பெரியவர்களால் மாறுபடலாயிற்று.

பரத நூற் கருத்துப்படி சிவன் ஆடிய தாண்டவங்கள் 108 என்றும், அவை அந்தி வேளையில் ஆடப்பட்டன என்றும் அறியலாம். இத்தகைய தாண்டவங்களின் நுணுகூறுகளைப் (கரணங்களை) பரத சூடாமணி, பரத சார சங்கிரகம், கூத்தநூல், ஆடல் வல்லான முதலிய நூல்களில் காணலாம். அவ்வாறு காண்கையில் கலைவல்லார்களின் கற்பனை எவ்வாறெல்லாம் விரிந்து சென்று சிவதாண்டவத்திற்குக் கலைநேர்த்தியும் பெருமையும் உண்டாக்கியுள்ளதென அறியலாம்.

தாண்டவத்தின் புலப் பாடானது அசைவு அல்லது இயக்கம் என்பதில் அமைந்துள்ளது. ஒரு பம்பரம் தன் ஆட்டத்தினால அல்லது சுழறசியினால் சிறப்பினைக் கொளகிறது; ஆட்டம் ஓய்தலால்—விசை தளர்தலால—அது நில்லாது விழுந்து விடுகிறது. அதுபோலவே இறைவனும் இறைவனால் இயக்கப்படும் பொருள்களுமாகும். இவ்வுலகமும் அனைத்து அண்ட கோளங்களும் அவற்றினூடே போலியும் அணுக்களும் இயக்கமுற ஒரு பேராற்றல் முனைந்து செயற்படுகிறது. அந்த உந்து சக்தி அநாதி காலமாய் இருந்து கொண்டிருக்கிறது. வியத்தகு அந்த ஆற்றலின இயக்கமே சைவச் சான்றோர்களால் பரம் பொருளின் ஆடல—ஆடல் வல்லானின் தாண்டவம் —என நம்பப்படுகிறது. அறிவியல் நோக்கில அதுவே 'அணுவில் தாண்டவம்' என்று கருதப்படுகிறது. இந்த உண்மை அறிவியலார்க்கும் ஒப்புக் கொளளக் கூடிய நிலைமையிலமைநத உலகப் பெரும் புதிராக இருந்து வருகிறது. இந்த இயக்கம் என்று தோன்றியது என்பது யாருக்கும் தெரியாது. அது அநாதி காலமாய்த் தன் நியதிக்கு உட்பட்ட நிலையில் கால தத்துவம் உள்ள வரையிலும் அல்லது அப்பாலும் இருந்து கொண்டுதான் இருக்கும். அத்தகைய

நியதியில் சிறிது பிறழ்ந்தாலும் அண்டங்கள் அனைத்தும் துகள் துகளாகச் சிதறிப் போகும் என்பதும் நம்பிக்கை.

சமய மக்களது ஒன்றிய கற்பனைக்கும் அறிவுக்கும தத்துவத்துக்கும் அப்பாற்பட்ட ஒரு நியதியான அந்தச் சிவ தாணடவத்தை-நடராச தத்துவத்தைச் -சமயக் குறிக்கோளுக்காகப் பலரும் காணும்படி கலை வண்ணத் திருவுருவமாகக் கணடு அருட் செல்வர்கள் காட்டியுள்ளனர். அந்தத் திருவுருவத்தில ஒன்றிய நிலையில் தாம் கணட அருளநுபவங்களைத் தத்துவக் கூறுகளாகக் கூறி வருகினறனர் சமய ஞானிகள்.

எண்ணற்ற பிறவிகளில் ஆன்மாக்கள வினைச் சுழலில் பிறப்பதும் வினைபுரிவதும இறப்பதும், மீண்டும் பிறபபதுமான தொடர்ந்த சுழற்சியிலே அல்லலுற்று அலமந்து தவிக்கினறன. முடிவில்லாத இநதச் சுழற்சியினின்றும் ஆன்மாக்களை மீட்கவும், அவ்வாற்றான அவற்றுககு ஓரளவு ஓயவு தருவதற்காகவுமே இறைவன் தன திருவருள் நோககில சங்கார தாணடவம் புரிநது வருகிறான என்பர். சிவன ஆடியருளிய தாணடவங்கள் காலத்திற்கும் இடத்திற்கும் ஏற்பப் பலவேறு நோக்கங்களைக் கொணடவையாகும். அனைத்தையும் விரிக்கிற் பெருகுமாதலின, ஈண்டு ஐந்தொழிலியற்றும் ஆனந்த தாணடவம் பற்றிச் சிறிது காணலாம்.

சிவன் ஆனந்த மாநடனம் புரிகையில அவனது ஊன்றிய வலக்கால் முயலகன எனும் அசுரன மீது பதிநதிருககும். முயலகன் ஆன்மாவின அறியாமைக்கு அறிகுறி. சகச மலமாகிய ஆணவம் இனறேல ஆன்மா எளிதாகப் பரமனிடம் அடைககலம் பெறவும், அவன் தரும் பேரினப வெள்ளத்தில் இடையறாமல் திளைக்கவும் வாய்ப்பாகலாம. ஆனால, ஆன்மாவின நிலை அவவாறு அனறு. ஆனமாவின சிறறறிவை மறைத்து மயககிப் பேரின்பங கொளளாமற் செய்வதும் ஒருவகையில் இறைவனின் அருள நிகழ்ச்சியாகவே அமைந்து விடுகிறது. காரணம், ஆன்மா தன் வினையை அநுபவித்துத் தீர்ப்பதறகு இவவாறான ஏற்பாடு வாய்ப்பளிககும் என்பதே. வினை தீர்நத நிலையில ஆன்மாவிடுதலை பெறவும் பேரின்பங் கொள்ளவும் அடிப்படையாக, இறைவனது ஊன்றிய திருவடி இநத மறைப்பைப் குறிக்கும் என்பர். இறைவனது தூக்கிய திருவடி-குஞசித பாதம்-அருளுக்கு அடையாளமாக வீசியெடுத்து நிற்கும். இதன் நிழலில் ஆன்மா தங்கி இன்புறும் என்றும், இதுவே முத்தி என்றும் சாத்திரங்கள் குறிப்பிடும். 'எடுத்திட்ட பாதமன்றோ நன்மை ஆட்கொண்டதே' என்ற திருமுறை வாக்கும் ஈண்டுச் சிந்திக்கத் தக்கது.

கங்கை கொணட சோழபுரத்துக் கோபுரத்தில் கிழக்கு நோக்கி அமைந்திருக்கும் நடராசத் திருவுருவத்திலே தூக்கிய திருவடியின் கீழே காரைக்காலம்மையாரின் திருவுருவம் அமைந்திருப்பதும் இயைபுடன் நினைவு கூரத்தக்கது.

பொதுவாக நடராசத் திருவுருவத்தில் நான்கு திருக்கைகள் உள்ளன. மேலும், அப்பரடிகளின் திருவாக்கிற் கேறப 'எணடோள வீசி நினறாடும் பிரானா'கவும் தாண்டவ மூர்த்தி எட்டுத் திருக்கைகளுடன் விளங்குதல் உணடு. சந்தியா தாணடவம் ஆடுகையில் சிவபெருமான் நான்கு கைகள எட்டுக் கைகளேயன்றிப் பத்துக் கைகளுடனும் விளங்குவதும் உணடு. இவ்வாறு வெவ்வேறு அமைப்பில் தாணட வ மூர்த்தியின் திருவுருவத்தைக் காண்பர்; அநநிலையில் தத்துவப் பொருத்தத்தையும் இயைபாகக் கூறிவருகின்றனர், கைகளைப்பொறுத்தவரையில் அவற்றைத திசைகளாகவே கொள்வது தத்துவ மரபாகும்.

ஆடல் வல்லானின் திருவுருவம் உலகத்தில் பல்லோரின் நாட்டத்தைக் கவர்ந்துள்ளது. அதன் தத்துவ உட்கிடை வியத்தகு சிறப்புடையது; அது வருமாறு; இறைவனுடைய நான்கு கைகளுள வலப்புறப் பின்கை பிரணவ ஒலியை வெளிப்படுத்தும் ஓர் உடுக்கையை (படைப்பின் அறிகுறியாக) ஏந்தி நிற்கும். வலப்புற முன்கை உள்ளங்கை தெரியுமாறு அபய முத்திரை காட்டி நிற்கும்; உயிர்களை அஞ்சாமல் தன்பால் அடைககலப்படுத்துங் குறிப்பாக இது அமைந்துளளது. இடப்புறப் பின்கை அனற்சுடரை ஏந்தி நிற்கும்; இது அழித்தலைக் குறிக்கும் (இதே அனற்சுடர், சங்கார தாணடவத் திருமேனியைக் கலைஞர்கள் அமைக்கையில் வலப்புறப் பினகையிலே பொருத்திக் காட்டுவர் எனபது குறிப்பிடத் தககது; காரணம் அந்தத் தாணடவத்தில் அழித்தலே வலங்கொண்டு அமைதல் வேண்டும் என்பதாகும்)' இடப்புற முன்கை மார்பையொட்டிக் குறுக்காக வீசிக் கைவிரலொன்றால் திருவடியைச் சுட்டிக்காட்டும், உயிர்களின் ஆனம ஈடேற்றத்துககு வழி கோலுங் குறிப்பு இதுவாகும். நடராசத் திருவடிவப் பின்னணியில் ஒரு வட்டமான திருவாசியும், அதன் விளிம்பில் ஐம்பத்தொரு சுடர்களும் அமைந்திருக்கும். திருவாசியின் உட்பொருள் ஓங்காரம் என்பதும், இந்தப் பிரபஞ்சம முழுவதுமே இறைவனுக்கு ஆடரங்கு என்பதும், ஐம்பத்தொரு சுடர்கள் மானுட அறிவுக்கு அடிப்படையான பேச்சுக்குக் காரணமான ஐம்பத்தொரு எழுத்துகள் என்பதும் உய்த்துணரத தக்கவை. இந்த ஆனந்த தாண்டவம் தில்லையம் பதியில் நிகழ்கிறது என்பர். ஐம்பூதத்தலங்களில் வான தலமாகிய தில்லைச் சிற்றம்பலத்தை ஞான ஆகாசம்

என்றும், சிதாகாசம் என்றும், சிற்பர வியோமம் என்றும் சமய ஞானியர் கூறிக் காட்டுவர். இந்தத் தாண்டவம் படைப்பிற்கு முன்னும் இருந்தது; பிரளயத்திற்குப் பின்னும் இருப்பது என்பது நுணுகிய தத்துவமாகும்.

ஆனந்த தாண்டவ மூர்த்தத்தில் பிரணவத்துடன் கூடிய திருவைந் தெழுத்தைப் பொருத்திக் காட்டித் தத்துவம் உரைப்பர்; அதனில் 'சிவாய நம' என்னும் மந்திரத்தையும் ஐந்தொழிலமைப்பையும் விளக்கிக் காட்டுவார் மனவாசகங் கடந்தார். உடுக்கையாகிய துடியை ஏந்திய கை 'சி' என்னும் எழுத்தையும், வீசிய கையாகிய கய அத்தம் (Gaja Hasta) 'வ' என்னும் எழுத்தையும், அபய முத்திரையுள்ள கை 'ய' என்னும் எழுத்தையும், தீச்சுடரை ஏந்திய கை 'ந' என்னும் எழுத்தையும், முயலகன் என்பவன் 'ம' என்னும் எழுத்தையும் குறிக்கும்.

சிவபெருமான் எல்லாருடைய இதயக் குகையிலும் தாண்டவமாடிக் கொண்டிருக்கிறார். அசபா நடனம் என்னும் ஒருவகையில் சமய ஞானிகள் இதனை யுணர்த்துவர். இதய அசைவே நடராசப் பெருமானது தாண்டவம் என்பதை யுணர்ந்து தெளிந்தால், மனிதன் தன் இதயக் குகையிலும், உயிர்க்குயிரிலும் அந்தப் பெருமான் ஆடிக்கொண்டும் அனைத்தையும் ஆட்டுவித்துக் கொண்டுமிருக்கின்ற சூக்குமப் பொருள் புரியலாகும். அந்த நிலையில் தான், புறத்தே காண்கின்ற ஆனந்த தாண்டவத் தோற்றம் பொருளுடையதாகத் - தத்துவப் பெரும் பொருள் விளக்கமாகத்–தோன்றி மகிழ்விக்கும். சுருங்கக்கூறின் ஆனந்த தாண்டவம் பிண்டத்திலும் அண்டத்திலுமாக நடந்து கொண்டிருக்கிறது என்பதே தாண்டவத் தத்துவத்தின் ஒரு வகை நுண் விளக்கமாகும். மேலும், யோக நெறிப் பார்வையில் இந்த மண்ணுலகமே ஒரு புருட வடிவம்; இடை கலை நாடி இமயம்; பிங்கலை நாடி இலங்கை; ஒடுகின்ற சுழிமுனை நாடி தில்லைச் சிற்றம்பலம். அங்கிருந்து சிவ பரம்பொருள் அல்லும் பகலும் ஆடிக் கொண்டே அனைத்துயிர்களையும் உய்விக்கிறது என்பதும் ஒரு வகையில் தத்துவ நுண் விளக்கமாகும்.

கூத்தப் பெருமானை அக மார்க்கத்திற் கண்டும் புறமார்க்கத்திற் கண்டும் சுவைத்த நிலையில் தம் அருளனுபவங்களைச் சமய ஞானியரும் சித்தரும் யோகியரும் உலக நலங்குறித்து விண்டுரைத்துள்ளனர். அவர்களுள் திருமூலர் மிகச் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர். அவர் இறைவனது தாண்டவத்தைப் பல்வேறு கோணங்களில் கண்டு மகிழ்ந்து தம் திருமந்திரம் வாயிலாக உணர்த்தியுள்ளார். அவர் நோக்கிலே சிவ தாண்டவம் மிகமிக வியக்கத்தக்கது. அண்ட பிண்ட சராசரங்களெல்லாம் சிவன் திருமேனி எங்கும் அவனது அருளாற்றலாகிய சிவசக்தி; எங்கும் அவன் ஆடுகின்ற களமாகிய திருச்சிற்றம்பலம்; இயங்குபவை நிற்பவையாகிய எல்லாப் பொருள்களிடத்தும் சிவன் விளங்குவதால் எங்கும் விளங்குவது அவனது அருள் தாண்டவமே எனக் கூறி, அந்தத் திருக் கூத்தினைச் சிவானந்தக் கூத்து, சுந்தரக் கூத்து, பொற்பதிக் கூத்து, பொற்றிலைக் கூத்து, அற்புதக் கூத்து என்று ஐவகையாகக் குறிப்பிட்டுச் சொல்கிறார். அவையெல்லாம் அன்னவர் தம் உள்ளுணர்வால் கண்டனுபவித்து விண்டுள்ள தத்துவப் பெட்டகங்களாகும். அவற்றையெல்லாம் நுணுகி நுணுகி ஆராய்ந்தால் தாண்டவத் தத்துவம் இனிது புலனாகும்.

இவ்வாறான தத்துவ நுண்பொருள்களையெல்லாம் கண்டு தெளிவதற்கு முதற்படியாக எல்லாத் திருமுறை நூல்களையும், சைவ சமய ஞானியர்களின் பிற நூல்களையும் பயின்று அனுபவங் கொள்ளுதல் நன்று. செ.வை.

***தாண்டவராய சுவாமிகள்***: இவர் தஞ்சை மாவட்டத்திலுள்ள நன்னிலத்தில் வாழ்ந்த தமிழறிஞர். இவர் வேதாந்த நூல்களில் பெரிதும் ஈடுபாடு கொண்டவர்; வட மொழியிலும் சிறந்த புலமையாளர். 'கைவல்லிய நவநீதம்' என்ற சிறந்த அத்துவைத அறிவு நூல் இவர் இயற்றியது. இந்நூல் தத்துவ விளக்கப் படலம், சந்தேகம் தெளிதற் படலம் என்னும் இரு பிரிவுகளுடன் அமைந்துள்ளது. இந்நூலுக்குப் பிறைசை அருணாசல அடிகள், ஈசூர் சச்சிதனாந்த அடிகள், சிதம்பரம் பொன்னம்பல அடிகள் முதலிய பலரும் உரை எழுதியுள்ளனர். இவருடைய ஆசிரியர் நாராயண குரு. சா.உ.

***தாண்டவராய நாவலர்***: இவர்தொண்டை நாட்டில் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர். இவர் திருமயிலை யமகவந்தாதி, சிங்காரவேலர் வெண்பா, சிங்காரவேலர் பிள்ளைத் தமிழ் என்னும் நூல்களை இயற்றியுள்ளார். சிங்காரவேலர் பிள்ளைத்தமிழைத் திருமயிலைப் பிள்ளைத் தமிழ் என்றும் குறிப்பிடுவர். இந்நூல் மயிலாப்பூரில் வாழ்ந்த பெருஞ்செல்வர் பூம்பாவை வேலப்ப முதலியாரின் உதவியோடு சக ஆண்டு 1768-ஆம் ஆண்டு அரங்கேற்றப் பெற்றதாகத் தெரிகிறது. இச்செய்தியை உறுதிப்படுத்தும் குறிப்பொன்று இந்நூலினுள் 'சிறுதேர்ப் பருவம்' என்னும் பகுதியில் அகச் சான்றாக அமைந்துள்ளது. சோழ நாட்டில் வாழ்ந்த அம்பலவாணக் கவிராயர் இவருடைய திருமயிலை யமகவந்தாதியை வியந்து பாராட்டியுள்ளார். சா.உ.

**தாண்டவராய முதலியார்**: இவர் தொண்டை நாட்டைச் சேர்ந்த வில்லியம்பாக்கம் எனனும ஊரில் வாழ்நத தமிழறிஞர். இவர் 19-ஆம் நூற்றாண்டில் வாழ்நதவர். இளமையிலேயே இவர்தம் தநதையார் மறைந்துவிட்டார். எனினும் இவர் அயராது அந்தகக் கவி வீரராகவ முதலியாரின் மரபில் தோனறிய வேலப்ப தேசிகரிடம் தமிழ பயினறாா. பினனர், புதுவை விசுவநாதபிள்ளை, வித்துவான இராமானுச முதலியார், தொல்காப்பியம வரதபப முதலியார், சீகாழி வடுகநாதத் தம்பிரான ஆகியோரிடம் தமிழ் பயின்று புலமையடைநதார். இவர் ஆங்கிலம், வடமொழி, தெலுங்கு, கனனடம், மராத்தி, உருது முதலிய மொழிகளிலும் புலமை பெற்றிருந்தார். சென்னை அரசுக் கலலூரியில தமிழ ஆசிரியராகப் பணிபுரிநதார். அககல்லூரியில கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகரும் இவருடன தமிழாசிரியராக இருந்துவநதார். இவர் தம பலதுறைப புலமையால கி பி. 1843-ஆம ஆணடு செங்கறபட்டு மாவட்ட நீதிமனறத் தலைவராகப பொறுபபேற்றாா. முதனமுதலில பஞ்சதநதிரக கதைகளை உரை நடையில் மராத்தியிலிருநது தமிழுக்கு இவா மொழி பெயர்ததார். இவர் காலததுக்கு முன தமிழில் பஞ்ச தநதிரக கதைகள செய்யுள வடிவில வழஙகப்பெறறு வநதன. இவர் கதாமஞ்சரி, இலககண வினா விடை, திருத்தணிகைமாலை முதலிய நூல்களையும எழுதியுளளார். இவர் சிறநத பதிப்பாசிரியராகவும விளஙகினாா. இவர் பதிப்பித்த நூலகளுள திவாகரம், சூடாமணி நிகணடு, சதுரகராதி போனறவை குறிப்பிடத்தககன. இவா கி.பி. 1850-ஆம ஆணடு மறைநதாா. சா.உ.

**தாண்டன் சாக்குவிசு** (கி.பி. 1759-1794) பிரஞ்சு அரசியல்வாதி. இவா கி.பி. 1789-இல தொடங்கிய பிரஞ்சுப் புரட்சியில் பஙகேற்றவர். ஆாடிசு-சூர் ஆபி எனனுமிடததில கி.பி. 1759-ஆம ஆணடு அக்டோபர் 26-ஆம நாள பிறநதாா. சாககுவிசு தாணடன (Jacquvis Taodon) மேரி மெடலின காமசு ஆகிய இருவரின மகன். திராயிசில் கி.பி. 1773 முதல 1780 வரை கல்வி பயினறார். பாரீசில கி.பி. 1780-இல சடடப் படிப்பினை முடிததார். பின வழக்கறிஞரானார். அணடாய்னெட்டு சாாபெணடியர் எனபவர் இவர் மனைவியார். குடியாட்சிக கோட்பாட்டில் ஆழ்ந்த பற்றுடையவா. தீவிரக கிளர்ச்சி மூலம் மன்னராட்சிக்கு முடிவுகட்ட எணணியவர். கார்டிலியர் சஙகத் தலைவராயிருந்தவர். பதினாறாம் உலூயி மனனரும், அவர்தம் குடும்பத்தினரும் கி.பி. 1791-இல் புரட்சியாளர்களிடமிருந்து தப்பியோடியபோது தடுக்கப்பட்டு பாரிசுக்குக கொணடுவரப்பட்டு அரசியலமைப்பினை ஏற்குமாறு செய்யப்பட்டனர். அரசியல் காரணங்களுக்காக இவர் கி.பி. 1791-இல கைது செய்யப்பட்டபோது இலண்டனுக்குத் தப்பியோடினார். அவ்வாணடு திசம்பரில தாயகம் திரும்பினார் பின்னர்ககிராணடியர்கள என்னும் பிரிவினருடன தொடர்பு கொணடார். அத்தொடர்பு கி பி. 1793 வரை நீடித்தது. மனனர் கி.பி. 1792-இல் சிறைப்படுத்தப் பெற்றார் அவர்தம் ஆட்சி கைப்பற்றப் பட்டது. இவர் நிதியமைச்சரானார். பினனாப் பிரான்சில அஞசத்தக்க கொடிய ஆட்சி தொடஙகியபோது அவர் முன்னணியில நினறார். ஆனால் இவா தமது போக்கினை மாற்றிக்கொளள முறபட்டார். பொதுப பாதுகாப்புக குழு அமைக்கப்படட பினனா வெளிநாட்டுத தொடர்புகளின்றி உளநாட்டில் நிலைமையை மாற்றியமைக்க ஆதரவளித்தார். உரோபசுபியர், (Rohespiorre) இவருககெதிராகச் சதி செய்தாா. அதனால கைதுசெயயபபட்ட இவா புரட்சித் தீர்ப்பு மன்றததின முன நிறுத்தப்பட்டார். இவர் மரண தணடனை பெற்று கி பி. 1794-இல உயிரிழநதாா. மா.கா

**தாண்டைக்கு, இ.எல்.**(கி பி 1874- 1949), புகழ்மிக்க அமெரிக்கக் கல்வி உளவியலறிஞர்; கொலம்பியாப் பல்கலைக்கழத்தில ஆசிரியர் பயிறசிக் கல்லூரியை அமைக்க அடிகோலியவா. தாணடைககு (Edward Lee Thorndike), ஆர்வர்டு பலகலைக் கழகத்தில கல்வி பெற்றாா. இவர்தம் ஆசிரியரான விலலியம் சேம்சு (William James) எனபவரின செலவாககு இவரிடம அதிகமாக விளஙகியது. எனவே, அதன்மூலம் கறறல தொடாபான சோதனைகளில ஈடுபட்டார். தொடக்கத்தில விலஙகுகள கற்கும திறனை அறிய சோதனைகள் செயதார். தாமே உருவாககிய கருவிகள, சிக்கலறைப் பெட்டிகள் மூலம் பூனைகள், நாய்கள ஆகியவைகளைக கொணடு சோதனைகளைத தொடர்நதார். இச் சோதனைகள மூலம் கணடவறறை கி.பி. 1898-இல 'விலங்குகளின நுணணறிவு' எனற ஆய்வுரை மூலம வெளியிட்டார். இவரது ஆய்வு வழிப்படட கற்றல் கருததுகள, அமெரிக்கக் கற்றல உளவியல வளாசசியில சிறப்பிடம பெறறன; ஏறத்தாழ 50ஆணடுகள இவறறின் செலவாக்கு நிலைத்தன.

கொலம்பியா ஆசிரியர் கல்லூரியில கி.பி. 1899-இலிருந்து இவர் ஆசிரியராகப் பணியாற்றினார். அபபோது 'மனிதர் கற்றல்', 'நுணணறிவு', 'பயிறசி மாற்றம்', 'அளவிடுதல்' ஆகியவற்றில் மிகவும் ஈடுபட்டார். மனிதா கற்றலில, கறறலின வளர்ச்சியை வரைபட விளக்கமாகத தநதார். இதனமூலம் கற்றலில உசச நிலை வளர்ச்சி, தளர்வுறு நிலை ஆகியவற்றை வயதுடன் ஒப்பிட்டுவிளககினார். நுண்ணறிவு

எனபதில் கல்வியாளர் உளவியலார் ஒருமைக் கருத்துடன் விளஙக முனையும் போது இவர் நுண்ணறிவு என்பதை ஒருமையில் கூறுவதைவிடப் பன்மையில சொல்லுதல் பயன்தரும் எனக் குறிப்பிட்டுக் கருத்தியல நுண்ணறிவு (Abst act Intelligence), கருவி சார் நுண்ணறிவு (Mechanical Intelligence), சமூக நுணணறிவு (Social Inter igence) என்னும் மூவகையைத் தந்தார். மேலும் கற்றலில்பயிற்சி மாற்றம் ஏற்பட ஒத்த கூறுகள் கோட்பாடு (Theory of Identical Elements) எனபதனைக் குறிப்பிட்டார். இதனை ஒரு பாடத்திலிருந்தோ அனுபவத்திலிருந்தோ மற்றொன்றுக்குப் பயிற்சி மாற்றம் ஏற்பட வேணடுமாயின இவவிரணடுக்கு மிடையே பொதுவான 'ஒத்த கூறுகள்' இருத்தல இன்றியமையாதது. மேலும அக்கூறுகள் பொருள் பற்றியனவாகவோ. முறைகள் பற்றியனவாகவோ இருககலாம என விளககினார். ஆய்வுக் கட்டுரை ஒன்றின் மூலம் 1909-இல் 'கையெழுத்துகளை' அளவிடும் அளவுகோல் முறையொனறைத் தந்து அளவிடுதலில் புதிய போககைத் தொடஙகிவைத்தார்.

பல ஆய்வுகளை நடத்திய பின்னர் இவர் தம் கற்றல கொளகையை, கற்றல் முறையைத் தந்துள ளார். இவரது கற்றல் கொளகை 'தூணடல் துலஙகல' தொடர்புக கொள்கையாகும். கற்றல முறையோ 'முயனறு தவறிக கற்றல் முறை' யாகும். கருவிசார் ஆககநிலையுறுத்தல (Instrumental Conditioning) மூலம் இவற்றை அரசன செய்தாா.

கறறலின இயல்பை விளக்கப் பல சோதனைகளைச் செயதபின கற்றல் விதிகளைத் தந்துள்ளார். அவறறையும் ஆதார விதிகள், வழிநிலை விதிகள் என வகைப்படுததியுள்ளார். இவர்தம் ஆதார விதிகளாக அமைவன ஆயத்த விதி, பயிற்சி விதி, விளைவு விதி, உடைமை விதி என்பனவாகும். இவ்விதிகளில பொதிந்துளள கருத்துகளில சுட்டிக்காட்டத்தக்கன: 1) கற்றலுக்கான ஆயத்த நிலையால கற்றல் பெரிது பெறும். 2) தூண்டல்-துலஙகல் தொடர்பானது பயிற்சியால் வலிவு பெறும்; பயிற்சியின்மையால் மெலிவு பெறும் 3) மனநிறைவு தருபவை இணைப்புப் பெறும; மற்றவை துணடிப்புப் பெறும் எனபவையாகும்.

இவர், 1930-க்குப் பின்னர் வெளியிட்டவற்றுள் முன்னரே இவர் தந்த கற்றல் விதிகள்பற்றியகருத்துகளை வேண்டிய அளவு மாற்றமைவு செய்துள்ளார்.

கல்வி உளவியலில் இவர்தம் கண்டுபிடிப்புகளால் கிடைத்த 'கொடை' குறிப்பிடத்தக்கது. அவற்றில் சில: 1) இளமையில் அறிவு வளர்ச்சி மிகுதி. 2) கற்றல திறன வயது மிகுதியாக ஆகக் கூடுகிறது. 3)கற்றல் வல்லமையின் உச்சநிலை(Maximum Level) பொதுவாக 22 வயதாக விளங்கும் 4) கறபதற்கான அடிப்படை, தூணடல-துலஙகல் தொடாபுகளை உருவாக்கலே ஆகும். 5) சிக்கற சூழலில் தனியொருவன், வாய்ப்பு நேர்ந்து சரியான விளைவைப் பெறும் வரை தனது இருபபு நடத்தைகளைப பயனபடுததுகிறான். 6) விலஙகுகளைப் பொறுத்தவரை கண்மூடிததனமான தட்டுததடுமாறிக் கறறல் நிகழுகிறது. ஆனால் மனிதர் கற்றலின் கணமூடித்தன அளவு மிகவும் குறைவு. 7) நுண்ணறிவில் கருத்தியல் சார்ந்த, கருவிகள் சார்நத, சமூகம் சார்ந்த வகைகள உளளன. 8) பனமுறைப் பயிறசி (Drill) எனபது மனிதரிடம் மிகப பெரிதளவு பயன்தராது. 9) கறறலில பயிறசி மாறறம் ஒத்த கூறுகள உளளனவகளில நிகழும். 10) பணபுக் கூறுகளைத தக்க அளவுகோல்கள மூலம் அளவிடமுடியும் எனபவையாகும்.

இவர், தாம் கண்டறிந்தவறறைப படைப்புகளாக வெளியிட்டுளளார். மேலும் 507 நூல்களை எழுதிச் சிறந்த படைபபாளியாகவும விளஙகினார். கலவி உளவியலின சிறப்புப் பகுதிகளில இவர்தம் சோதனைக் கருத்துகள முனனோடிக் கருத்துகளாக அமைநதுளளன. பினவந்த உளவியலாருக்குத துணை செய்யும் முறையில இவர்தம் உளவியல சோதனைக கணடுபிடிபபுகள விளஙகின. வாழநத 75 ஆணடுகளில முழுமையாகத் தம்மை கலவி உளவியலுக்கே ஈடுபடுத்திக்கொண்ட கல்வி உளவியலார் இவராவார்.

செ.செ.

**தாத்துவிகங்கள்:** சிவம முதல் பிருதிவி முடியச் சொல்லப்பட்ட முப்பத்தாறும் 'தத்துவங்கள்; மூலப்பொருள்கள்'. எனவே, அவற்றால ஆகிய காரியஙகள் பலவும் 'தாத்துவிகம்' எனறு கூறப்படும. தத்துவங்களின் கூறாகிய தாத்துவிகஙகள் அறுபது. பிருதிவியின கூறு. எலும்பு, தசை, மயிா, தோல், நரம்பு எனனும் ஐந்தும அப்புவின் கூறு. சிறுநீா, இரத்தம், சிலேத்துமம, வியர்வை, சுக்கிலம் என்னும் ஐந்தும் தேயுவின் கூறு. இருதயத்தில் வெப்பம, பசித்தீ, கணணில் வெப்பம், உடம்பில் வெப்பம், பைத்தியம' என்னும் ஐநதும வாயுவின் கூறு. உதானன், பிராணன், அபானன, சமானன, வியானன, நாகன, கூர்மன், கிருகலன், தேவதத்தன், தனஞசயன் என்னும் வாயுக்கள பத்தும், ஆகாயத்தின் கூறு சுத்தி, அலம்புடை, இடை, பிங்கலை, கழுமுறை, காந்தாரி, குருதை, சங்கினி, இகுவை, புருடன என்ற நாடிகள பத்தும், கன்மேந்திரியங்களில விடயங்கள் வசனம், கமனம், உபாதானம், விசர்க்கம,

ஆனந்தம் என்னும் ஐந்தும், ஞானேந்திரியங்களின் விடயங்கள் சத்தம, பரிசம், ரூபம், ரசம், கந்தம என னும் ஐந்தும், அகங்காரத்தின் கூறு. தைசதம, வைசாரிகம், பூதாதி என்னும் மூன்றும், காமம், குரோதம், உலோபம், மோகம், மதம எனனும் குற றம் ஐந்தும் குணத்தின் கூறு. சாத்துவிகம், இராச தம், தாமதம், வாக்கு நான்கு, அவை சூககுமை, பைசந்தி, மத்திமை, வைகரி தத்துவம் முப்பத்தா றுடன் தாத்துவிகம் அறுபதும கூடக கருவிகள் தொண்ணுறாகும்.

'தத்துவம் இருபத்து நான்கே' எனக கூறுகினற மதங்களும், கருவிகள் தொண்ணூற்றாறு எனபதனை ஒத்துக் கொள்கின்றன. இரா.கோ.

**தாதாசி கொண்டதேவு:** மராட்டிய மாவீரன் சிவாசியின் இளமைக் காலப் பாதுகாவலராக விளங கியவர் தாதாசி கொணடதேவு (Dadaji Kond-Dev) ஆவார். சிவாசியின தந்தை சாசிபான்சுலே எனபவ ராவார். இவரது தாய் சிசபாய் எனபவராவார். சிவாசியையும, அவரது தாயையும் விட்டு, அவரது தந்தை கி.பி. 1636-இல் துக்காபாய் என்ற தனது இரணடாம் மனைவியுடன், பீசப்பூா சுலதானிடம பணியாற்றச சென்றுவிட்டார். சிறுவனாயிருந்த சிவாசியையும அவரது தாயையும் தாதாசி கொணட தேவு பாதுகாதது ஆதரவு அளிதது வநதார். அது சமயம் தாதாசி கொணடதேவு பூனா மாவட்டத்தை நிர்வகித்து வந்தார். இவரது பாதுகாபபில் இருந்து வந்த சிவாசியின தாய், தனது மகனைச் சிறந்த இலட்சியவாதியாக வளர்ப்பதில் தனது முழுககவனத் தைச் செலுத்தி வந்தாள். இவளது இம் முயறசிக்குத் தாதாசி கொணடதேவும் உறுதுணையாக இருந்து வந்தார். தாதாசி கொணடதேவு, சிவாசிக்குக்குதிரை யேற்றம், போர் முறை, நிாவாக முறை ஆகிய வற்றில் சிறந்த பயிறசியை நல்கினாா. பின்னைய காலங்களில், சிவாசி, பாரம்பரியக் கொள்கைகளின் பால் மதிப்பு கொணடமைக்கும், இந்து சமயததின் பால், பிடிப்புப் கொண்டமைக்கும், விவசாயப் பெருங குடி மக்கள்பால பாசம் கொணடமைக்கும், தாதாசி கொணடதேவின் தாக்கமே காரணமாகும். தாதாசி கொண்டதேவு சிவாசிக்கு ஒரு நல்ல பயிறசியாளராக மட்டும் விளங்காது, சிறந்த உணர்வுகளைப பெருக் கெடுக்கச் செய்தும வழிகாட்டி ஊறறாகவும் விளஙகி னார். தாதாசி கொண்டதேவு தொடக்க நாளில் சிவாசியின் தந்தை சாசி பானசுலேயின் விசுவாசமிகக ஊழியராயிருந்தார். எனவே, தாதாசி கொண்டதேவு சிவாசியின் தன்மனப்போக்கு நடவடிக்கைகளையும், சுதந்திரப் போக்கினையும் ஆதரிக்கவில்லை. தாதாசி கொண்டதேவு, கி.பி. 1647-இல் இறந்துவிட்டார். இதன்பின் கி பி.1680-இல சிவாசி இறக்கும்வரை அவ ரது எழுச்சியும், சாதனையும தடையிலலாமல் வளாந்துகொணடேயிருந்தன. அ.க.

**தாதாபாய் நௌரோசி,** இந்தியாவின பழம் பெரும்முதியவர் எனஅனபுடன குறிககப்படுகிறார். மக்கள இவரை 'இநதிய தேசிய இயக்கத்தின் தந்தை' எனக கூறி மதிப்பும மரியாதையும் கொடுத்தார்கள். இந்திய தேசிய காஙகிரசின தொடக்கக்காலத்தி லிருநதே தொடர்பு கொணடு, இறககும வரையில (1917 வரை), அதறகாகப பாடுபட்ட முதல இந்தியர் இவரேயாவார். தாயநாட்டிறகாக 61 ஆணடுகள் இநதியாவிலும், இஙகிலாநதிலும் இரவு பகல் பாராது, தனனலமினறிப பாடுபட்டார். இவரது தொண்டினைப் பாராட்டும் வகையில இநதிய தேசிய காஙகிரசு மாநாட்டிறகுத தலைவராக மும் முறை (1886, 1893, 1906 ஆணடுகளில்) இவரைத் தோந்தெடுத்தனா.



தாதாபாய் நௌரோசி

தாதாபாய் நௌரோசி கி.பி. 1825-ஆம் ஆணடு பம்பாயில, தம் பெற்றோர்க்கு ஒரே குழந்தை யாகப் பிறந்தார். இவர் தநதை நௌரோசி பலன்சி தோர்தி; தாய் மானெகபாய். தந்தை ஓர் எளிய பாாசி புரோகிதர். தம்முடைய நான்காம் வயதில தநதையை இழந்தார். இவர்தம் பதினோராம் வய தில் குலபாய் எனற ஏழு வயதுப் பெண்ணை மணம் செய்து வைத்தனர்.

தாதாபாய், சுதேசக் கல்விச் சங்கத்தா பளளி யில கல்வி பயின்றுபல பரிசுகளைப் பெற்றார். பின் னர், பம்பாய் எலபின்சுடன கல்லூரியில கலவி பயின் றார் .இவரது கல்வித்திறனைக் கண்ட பம்பாய் உயர்

நீதிமன்ற நீதிபதி சர் எர்சுகின் பெர்ரி இவருக்கு இங்கிலாந்து சென்று கல்வி பயில்வதற்குப் பண உதவி செய்வதாகக் கூறினார். ஆனால், இவர் இங்கிலாந்து சென்றால் கிறித்தவராக மாறிவிடுவார் என அஞ்சி இவர்தம் உறவினர்கள் அதைத் தடுத்து விட்டனர்.

எல்பினசுடன் உயர்நிலைப்பள்ளியில் கி.பி. 1851-ஆம் ஆண்டு உதவித் தலைமை ஆசிரியராக அமர்த்தப் பெற்றார். எல்பின்சுடன் கலலூரியில் கி.பி.1853-ஆம் ஆண்டு கணித உதவிப் பேராசிரியராக நியமிக்கப்பட்டார். வணிகம் செய்யும் பொருட்டு கி.பி. 1855-ஆம் ஆண்டு பேராசிரியர் பதவியை விட்டு விலகி இலண்டனுக்குச் சென்றார். அங்கு இந்தியரும் ஆங்கிலேயரும் நெருங்கிப் பழகித் தங்கள் கருத்துகளைப் பரிமாறிக கொள்ளுவதற்காக கி.பி. 1867-இல் இலணடன் இந்தியர் சங்கத்தைத் தொடங்கினார். இச்சங்கம் 50 ஆண்டுகளுக்கு மேல் தாதாபாய் நௌரோசியின் தலைமையில் பயனுள்ள கருத்துப் பரப்புதலைச் செய்தது. இலண்டன் பல்கலைக் கழகக் கல்லூரியில் குசராத்து மொழிப் பேராசிரியராகச் சிலகாலம் பணியாற்றினார். பரோடாவின திவானாக கி.பி. 1874-ஆம் ஆண்டு பணியாற்றினார். பின் கி.பி. 1875-இல் பம்பாய் நகராட்சியின் உறுப்பினரானார். வணிகத்தில் இழப்பு ஏற்பட்டதால் கி.பி. 1881-ஆம் ஆண்டு வணிக நிறுவனத்தை மூடிவிட்டு இந்தியா வந்தார். பம்பாய் மாநிலச் சட்டமன்றக் குழுவில் 1885-ஆம் ஆண்டில் கூடுதல் உறுப்பினராக நியமிக்கப்பட்டார். இங்கிலாந்தில் நடைபெறும் தேர்தலில் போட்டியிட்டுப் பாராளுமன்ற உறுப்பினராக விரும்பினார். முதலில வெற்றிபெற முடியாவிட்டாலும் பின்னர்த் தேர்தலில் 'இலிபரல்' கட்சியின் உறுபினராக வெற்றி பெற்றுப் பொதுமக்கள் அவை (House of Commons) உறுப்பினரானார். இங்கிலாந்து நாட்டின் பாராளுமன்ற உறுப்பினராக கி.பி. 1892-ஆம் ஆண்டு முதல் 1895-ஆம் ஆணடு வரை இருந்தார்.

இந்திய தேசிய காங்கிரசு மாநாட்டிற்கு (1893)த் தலைமையேற்க இஙகிலாநதிலிருந்து இந்தியா வந்தார். பம்பாய் நகர மக்கள, அரசர்களும பொறாமை கொள்ளும் அளவிற்கு உவகைபொங்க வரவேற்பளித்தனர். பம்பாய் ஆளுநரும், நீதிபதிகளும், உயர் அதிகாரிகளும் அவரை வாழ்ததி வரவேறறனர். பினனர் இவர் பம்பாயிலிருந்து இலாகூர் சென்றபோது ஒவவோர் இரயில் நிலையத்திலும் மக்கள இரவு பகல பாராது கூடியிருந்து வாழ்த்தி வணங்கிப் பார்த்து மகிழ்ந்தனர்.

இவரது வாழ்க்கையின் தொடக்கக் காலத்தில் ஆங்கிலேயர் ஆட்சியினால் இந்தியாவிற்கு நன்மை ஏற்படுமென நம்பினார். ஆனால பிற்கால வாழ்ககையில் அவ்வெண்ணத்தை மாற்றிக்கொணடாா. இநதியாவின் நிலையை இஙகிலாநது மக்களுககுக் கட்டுரை வாயிலாகவும், சொறபொழிவு மூலமும எடுத்துரைத்தார். ஆஙகிலேயரின் பொருளாதாரச் சுரண்டலே இந்தியாவின் ஏழைமைக்குக காரணம என்றார். ஆஙகிலேயர்கள தஙகள மூலதனத்தை இந்தியாவில் பயன்படுத்தி இந்தியர்களைப் போட்டியிட முடியாமல் செயது வணிகத்தில் கொள்ளை இலாபம் பெற்றதைச் சுட்டிக்காட்டினாா. இந்தியாவிலுள்ள எலலா உயர் பதவிகளிலும் ஐரோபபியா களே நேரடியாகவும் மறைமுகமாகவும் அமாநதிருந்தனர். அவர்கள ஓய்வு பெற்று இநதியாவை விடடகன்றபோது இந்தியாவில் பெறற பணத்தையும், அறிவையும், அனுபவத்தையும் எடுத்துச் செனறது இந நாட்டிற்குப் பேரிழப்பாகும் என்றார்.

தாதாபாய் நௌரோசி அயராது உழைககக் கூடிய மாமனிதர். மதி நுட்பமும நாவனமையும் படைத்தவர்;ஆங்கிலக் கலவி உருவாக்கியமாமேதை; பம்பாய்ப் பல்கலைக்கழகம் 1916-ஆம ஆணடு இவருக்குச் 'சட்டத்தில் முனைவர்' (Doctor of Laws) என்ற பட்டம் வழங்கியது. நாட்டுபபறறு மிகுநதவராகவும், நல்லவராகவும், வல்லவராகவும இவா விளங்கினார். அ.சி.

**பொருளியற் கோட்பாடு** தாதாபாய் நௌரோசியின் சிறப்பு மிக்க, சீரிய பொருளாதாரக கருத்து என்பது அவரின் 'வெளியேற்றக் கோட்பாடு' (Drain theory) ஆகும். இந்தியாவின் வறுமையைப் பறறி முதன் முதலில் ஆய்வு செய்த அறிஞரும் இவரே. இந்தியாவின தேசிய வருமானததையும், தனிநபா வருமானத்தையும் கணக்கிட்டு இந்தியாவின பொருளவளத்தையும், மனித வளத்தையும எப்படி ஆங்கில அரசு சுரண்டிக்கொழுத்தது என்பதைப் புள்ளி விவரங்களின் மூலம் பறை சாறறியவர். இஙகிலாநது நாட்டின உற்பத்தியாளர்கள, வணிகர்கள, ஆட்சிப் பணி அதிகாரிகள், இராணுவ அதிகாரிகள இநதியாவின் செல்வத்தை ஆண்டுதோறும் எடுத்துச் செலகிறார்கள் என்பதை வெளியிட்டார். தாதாபாயின் வல்லாணமை எதிாப்புக் கோட்பாடுஎப்சன(Hebson), இலெனின (Lenin) வழிமொழி ஏகாதிபததிய கோட்பாட்டிற்கு முன்னோடியாக அமைந்துள்ளது என ஆய்வாளர்களால கருதப்படுகிறது.

ஆங்கில வல்லாணமை சமுதாய, சமய, நிற காரணங்களுக்காக அமெரிக்கா, கனடா, ஆசுதிரேலியா போன்ற நாடுகளில் கடைபிடிககப்பட்ட பொருளாதார கொள்கைகளைச் சுட்டிக்காட்டி இந்தியா

வில் ஆங்கில வல்லாண்மை கடைப்பிடித்த பொருளாதாரச சுரண்டல் தன்மையை விளக்கி ஆங்கில அரசின் இரட்டை வேடத்தை உலகிறகு உணர்த்தினார். மேற்கூறிய ஐரோப்பியநாடுகளில் ஆங்கில வல்லாண்மை பல பொருளாதாரச சலுகைகளை அளித்தது. ஆசியாவில தஙகளுடைய அரசியல அதிகாரத்தை நிலைநிறுத்துவதற்காக ஆங்கில அரசு செய்த சூழ்ச்சிகளையும் விவரிததார். இநதியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட பொருளகள, ஆண்டுதோறும் இந்தியாவில் முதலீடு செய்யபபட்ட பிரிட்டிசு மூலதனததின் அளவு, அம்மூலதனத்தின மூலம் பெற்ற இலாபத்தை மீணடும் இநதியாவில் முதலீடு செயயாமை போன்ற செயல்களைச் சுட்டிக் காட்டி பிரிட்டிசு ஆங்கில அரசு இந்தியாவைக் கொள்ளையடிக்கிறது எனறு கூறினார். தனியார்கள் தஙகள்முதலீட்டின் மூலம் இங்கிலாநதிறகு அனுப்பிய பணம,இந்தியாவில் பணிபுரிந்து கொணடு இங்கிலாந்து நாட்டில் இருக்கும குடும்பத்திற்காக அனுப்பிய பணம், பல்வேறு அரசு பணிகளில் பணியாறறியவாகள் தனிப்பட்ட சேமிப்பை (Personal Savings) வெளிநாட்டில முதலீடு செய்தது போனற நடவடிக்கைகள காரணமாக இநதியாவின் செலவநிலை சீரழிக்கப்பட்டது. மேலும, இநதியாவில் பணியாற்றிய வெள்ளை அதிகாரிகளும், வணிகர்களும், மற்றவாகளும் தஙகளுடைய நுகாவுக்காக இங்கிலாந்தில தயாரிக்கப்பட்ட பொருள்களை வாஙகியதன் காரணமாக இநதியாவுக்கு ஏற்பட்ட இழபபையும், இங்கிலாந்துக்கு ஏற்பட்ட இலாபத்தையும் விளக்கினார்.

அக்காலத்தில் இந்தியாவிலிருந்து தனியாட்கள மூலமாகவும், குடும்பத்தின் மூலமாகவும் எடுததுச் செல்லப்பட்ட பணத்தின மதிப்பு" பத்து இலட்சம் பவுணடுகள் (Pounds) ஆகும் எனக் கணக்கிட்டார். இந்தியா கட்டிய கப்பத்தைப் பற்றியும்(Tributes) பல புளளி விவரச் சான்றுகளுடன் விவரித்தாா. இஙகிலாந்து அரசு இந்தியாவின நிருவாகத்தை கி.பி.1858 –ஆம் ஆணடு நேரடியாக ஏறறபோது கிழக்கிந்திய வணிகக்குழு 70 மில்லியன் பவுன கடனாக வைத்திருநதது. இங்கிலாந்து அரசு இதை இநதியக் கடனாகவே பினனால் அறிவித்து விட்டது தாதாபாய் நௌரோசி இக்கடன் எப்படி ஏற்பட்டது எனற வினாவை எழுப்பி, கிழக்கிந்திய வணிகக்குழு தன சுரணடலால் 150 மில்லியன பவுனிறகு மேல் கப்பமாக எடுத்துச் சென்றுவிட்டு 70 மில்லியன் பவுன்களைக் கடனாக வைத்துவிட்டது என்று குமுறினார். மேலும் இந்தக்கடனுக்காக இந்தியா இங்கிலாநதிற்கு வட்டியும் செலுத்த வேண்டியிருநதது. பொதுக் கடன் என்ற அமைப்பே பிரிட்டிசு வல்லாணமை வாதிகளால் சூழ்ச்சியாகவும், தநதிரமாகவும் திணிக்கப்பட்ட அமைப்பு என்றும் கூறினார்.

கிழக்கிந்திய வணிகக்குழு ஆப்கானிசுதான், சைனா போனற நாடுகளின மீது நடத்திய போர்களால்தான் இநதியாவிற்குக் கடன ஏற்பட்டது என்பதையும் எடுத்துக் கூறினார். இந்தியாவின் ஏற்றுமதி, இறக்குமதி புளளி விவரங்களையும் முதன முதலில் சேகரித்துப் பொருளாதாரச் சுரணடல் தன்மையைத் தெளிவுபடுத்தினார். அதுபோனறு இநதியாவில் புகைவணடிப் போக்குவரத்து அமைக்க ஆங்கில அரசின முதலாளிகள அளித்த கடன் முதலீடுகளுக்கு, இநதிய அரசு உத்திரவாதமும அளித்தது. புகைவண்டிப போக்குவரத்தின மூலம் இலாபத்தோடு வட்டியையும் இங்கிலாநதிற்கு எடுத்துச் சென்றனர் எனவே, புகைவண்டிப் போக்குவரத்து பொருளாதார மறுமலர்ச்சிக்கு வழிவகுத்ததை விட இங்கிலாந்தின சுரணடலுக்கே வழிகோலுகிறது என்று கூறினார்.

இந்தியாவில் பொதுநிதியியல் (Public finance) ஏற்படுத்திய விளைவுகளைப் பற்றித் தாதாபாய் ஆங்கில அரசு வரிகளின் மூலமும், பொதுச் செலவின மூலமும் எப்படிச் செல்வச் செழிப்பை அள்ளிச் செல்கிறது என விவரித்தார். இந்தியாவின் பொதுநிதியியலில் கபபம் (Tributes) நிலவருவாய் (Land Revenue) உப்பு, தீர்வை (Excise), இறக்குமதி, ஏற்றுமதி போனற வரிகள் அடிப்படை வருவாயாக அரசிற்குக் கிடைத்தன. நில வருவாய் மூலம்தான 50 விழுக்காட்டிற்கு மேல் அரசிற்கு வருமானம் கிடைததது. ஏழைகள் மிகுதியாக வாழும் இந்தியாவில் கிராமப் பொருளாதாரம் நிலவருவாயின் மூலம் மேலும் கிராமங்களை ஏழையாக்கி இருப்பதைச் சுட்டிக் காட்டினார்.

இதுபோன்றே பொதுச்செலவில்மொத்தச்செலவு அமைப்பில் 42 விழுக்காடு இராணுவத்திற்காகச் செலவிடப்பட்டது என்ற புளளிவிவரம் இந்தியாவின் பொது நிதியியல் ஏற்படுத்திய தாக்கங்கள தாதாபாயின் ஆழ்ந்த சிந்தனைத் திறனால் வெளிக்கொணரப்பட்டன. வரிச்சுமை (Tax burden)உலகிலேயே இந்தியாவில்தான மிகுதியாக இருக்கிறது என்பதையும் உப்பு வரியின் (Salt Tax) கொடுமையைப் பற்றியும் எடுத்துரைத்தார். பின்னர், 1940–ஆம் ஆணடு காநதியால் நடத்தப்பட்ட உப்பு சத்தியாகிரகத்திற்கு தாதாபாயின் கருத்தும் ஒரு காரணமாகும். அழகான வாதத்திறமையால் அவருக்கே உரித்தான ஆங்கிலத்தில் வரிக்கொடுமையைப் பற்றி விளக்கிக் கூறினார். மக்கள் மீதுவரி விதிப்பதற்கும் (Taxing the

People) வரிக்கொடுமையால் ஏற்படும் குருதிக் கசிவிற்கும் (Bleeding the People) உள்ள வேறுபாட்டை விளக்கி,'இங்கிலாந்து நாட்டில் அரசு வரிவிதிக்கிறது, ஆனால் இந்திய நாட்டில வரிக்கொடுமையால மக்கள மீது குருதிக்கசிவை ஏறபடுத்துகிறது' எனறு கூறினார்.

தாதாபாய். இஙகிலாந்து அரசு ஆணடுதோறும தேசிய வருமானத்தைப் பற்றியும், தனிநபர் வருமானத்தைப் பறறியும் புள்ளி விவரங்களைச் சேகரித்து வெளியிட வேணடுமென்று வலியுறுத்தினார். இப்புள்ளி விவரஙகள் இந்தியாவின் பொருளாதார ஏற்றத்தாழ்வையும, வறுமையையும வெளிப்படுததும என்றும் நம்பினார. தாதாபாய் வலியுறுத்தியும் அரசு மெத்தனமாய் இருந்தது. அரசும், அரசு சாதனங்களால் மட்டுமே சேகரிககக்கூடிய புள்ளி விவரங்களைத் தனது தளறாத, அயராத பணியின் மூலம் தாதாபாய் சேகரித்தார். பல மாநிலங்களில நிலவி வந்த பல்வேறு இனறியமையாப் பொருளகளின் விலைகளைப் பற்றியும் சேகரித்தார். அதுபோன்றே ஒவ்வொரு மாவட்டததிலும் பயிரான நிலங்களின் அளவையும் எடுத்துக் கொணடார். ஓர் ஏக்கருக்கு எவ்வளவு விளைகிறது என்பதையும் குறித்தார். இப்படிச்சேகரித்த அரிய புள்ளி விவரங்களின மூலம் தேசிய வருமானத்தையும், தனிநபர் வருமானததையும கணக்கிட்டார. தாதாபாயின் புள்ளி விவரப்படி கி.பி.1870-ஆம் ஆணடில் இந்தியாவின் தனிநபர் ஆணடு வருமானம் (Percapita annual income of India) ஏறக்குறைய உரு.20 முதல் 40 வரை இருக்கலாம் எனக் குறிப்பிட்டார். தனிநபர் வருமானம் உரு. 20 எனறு குறிப்பிட்டபின் பிரிட்டிசு அரசு பல புள்ளி விவரஙகளைச் சேகரித்து ஏறக்குறைய அதே முடிவிற்குத்தான் வந்தது.

தாதாபாய் இவ்வாறு தம் பொருளாதாரச் சிந்தனைத் திறனாய்வு மூலம் ஆங்கில அரசின சுரணடலுக்கு எதிராக ஓர் அறிவார்ந்த இயக்கத்திற்கு அடிகோலியவர் எனலாம். இநதிய உபகணடத்திறகுள் இரண்டு இந்தியா உளளன. ஒனறு செலவ இந்தியா, மற்றொன்று ஏழை இநதியா. செல்வ இந்தியாவில் ஆங்கில அதிகாரிகளும், முதலாளிகளும் சுகமாக வாழ்கின்றனர். இநதச் செல்வ இந்தியா ஏழை இந்தியாவைச் சுரண்டிக் கொணடிருக்கிறது. ஆங்கில இந்தியாவில் இருக்கும வெளளையர்கள், ஏழை இந்தியாவில் இருககும் விவசாயிகள், உழைப்பாளர்கள் ஆகியோர்களைச் சுரண்டிக் கொண்டுள்ளனர் என்றும் கூறினார்.

ஆங்கில அரசு, இந்தியாவில் இங்கிலாந்து நாட்டின் பொருளாதார அறிஞர்களால் வலியுறுத்தப்படும் முற்போக்குக் கொள்கைக்கு எதிராகச் (Liberal Policy) செயல்படுகிறது எனச் சுட்டிக் காட்டினார். இநதியாவின் மீது நடத்தப்படும் பொருளாதாரச் சுரணடலை உடனடியாக நிறுததிவிட வேணடுமெனறு பல பரிநதுரைகளை அரசின் கவனத்திறகுக கொணடு வநதார் அவையாவன: இநதியாவில் உற்பத்தி செய்யப்படும பொருளகள இந்திய மக்களின் நுகர்வுககாகவும், முதலீட்டிற்காகவும் பயன்படுத்தப்பட வேண்டும்; ஆஙகில வல்லாணமை உருவாக்கிய பொதுக்கடனைக் குறைக்க வேணடும்; ஆஙகிலஅரசின் நிருவாகச் செலவுகள பெருமளவில் குறைக்கப்பட வேண்டும்; இந்தியாவின வருமானத்திலிருநது இஙகிலாந்து நாட்டிறகு எடுததுச் செலலப்படும் ஊதியம், ஓய்வூதியம் (Pension) முதலியவற்றிற்குக் கட்டுப்பாடு விதிக்கவேண்டும; இந்தியாவில் செய்யவேணடிய முதலீட்டுக்கு (investment) அரசு கடன் உறுதி அளிக்க வேண்டும்;இந்தியாவில் உள்ளவேலை வாய்ப்புகளில் இந்தியருககே முதலிடம் அளிக்க வேணடும்; பொது நிருமாணப் பணிகளுக்காகத் (Public works) தேவையான மூலதனத்தை அரசு ஒதுக்க வேணடும; பயிரிடப்படாமல் இருக்கும ஏராளமான நிலங்களைப் பயிரிடுவதற்கு மூலதன உதவி (Capital Assistance) செய்யப்பட வேண்டும்.

தேசிய அளவில் தொடக்கப் பள்ளியிலிருந்து கல்லூரிக் கலவி வரை இந்திய மக்களின் அறியாமையைப் போக்குவதற்காக ஒரு பெரும் கலவித்திட்டம் தீட்டப்படவேண்டும். இவ்வாறு பல அரிய கருத்துகளையும் வழிமுறைகளையும் ஆங்கில அரசுக்குப் பல அறிக்கைகள ஆய்வுக் கட்டுரையின் மூலம் தாதாபாய் எடுத்துரைத்தார்.

இந்தியச் சிந்தனை வானில் தாதாபாயின் பொருளாதாரச் சிந்தனைகள் என்றும் நிலைத்து நிற்கககூடியவை. காரணம் அவர்தம் பொருளாதாரச் சிநதனைகள் இந்திய தேசிய உணர்வுக்கும், சுதேசி பொருளாதாரக் கொளகைக்கும் அடிப்படைகளாக அமைந்தன. ஆங்கில வல்லாணமை சுரணடலைச சான்றுகளுடன் உலகிற்கு விஞ்ஞான பொருளியல் கண்ணோட்டததோடு வெளிப்படுத்தியவர் தாதாபாய். ஆங்கிலப் பொருளாதாரக் கொள்கைகளை திறனாய்வு செய்து மாற்றுயோசனைத் திட்டத்தையும் தந்தவர் தாதாபாய் நௌரோசி ஆவார்.எனவே தாதாபாய் இந்திய அரசியல் பொருளாதாரத்தின தந்தையெனக(Father of Indian Political Economy) கருதப்படுகிறார். மு.நா

**துணை நூல்கள்:**

Ganguli,B.N., Indian Economic Thought, Ninteenth

Century Prespectives, Tata Mc-Graw-Hill Publishing Co-Ltd., New Delhi, 1976

Naoroji, Dadabhai, Poverty and UnBritish Rule in India, Publication division-Ministry of Information and Broadcasting Government of India, 1962.

Singh, V.B., From Naoroji to Nehru, Six Essays in Indian Economic thought, Macmillan Company of India Ltd, New Delhi, 1975.

**தாந்தே அலிகிரி**(கி.பி. 1265-1321): இவர் இத்தாலி நாட்டினர்; சிறந்தத தத்துவக் கவிஞர். இவரது இல்லற வாழ்க்கை மகிழ்ச்சிக்குரியதாக அமையவில்லை. அதனால் மெய்ப்பொருள் துறையில் தன்னை முழுக்க ஈடுபடுத்திக்கொண்டார். சிறிது காலம் பிளாரன்சு என்ற நகரில் பொது வாழ்க்கையிலும் ஈடுபட்டிருந்தார். நகரசபை அதிகாரியாகவும் பணியாற்றினார். அரசியலிலும் வெறுப்படைந்த தாந்தே தம்மை முழுமையாக இலக்கியத் துறையில் ஈடுபடுத்திக் கொண்டார். அவர்தம் இலக்கியப் படைப்புகள் பலவாகும். அவர் இயற்றிய தன்னுணர்ச்சிப் பாடல்கள் (Lyric Poems) பாராட்டுக்குரியவை. 'களியாட்டு' அல்லது 'பெருவிருந்து' (The Convio or Banquet) என்பது தாந்தேயின் முழுமை பெறாத மெய்ப்பொருள் கட்டுரைத் தொகுதியாகும். அதில் 14 ஆய்வுக் கட்டுரைகள் உள்ளன. அரிசுடாட்டில் முதலிய பல்வேறு அறிஞர்களின் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட ஆய்வுக் கட்டுரைகளாகும் இவை. இக் கட்டுரைகள் கி.பி.1304-1308 காலப் பகுதியில் எழுதப்பட்டவை. மற்றொரு முழுமை பெறாத நெடிய கட்டுரை 'சாதாரணமான சொல்வன்மை பற்றி' (De Vulgari Eloquentio) என்ற தலைப்புடையதாகும். இவர்தம் முழுமைபெற்ற கவிதைகள் நடைநயத்தோடு வினா விடை முறையில் அமைந்தனவாகும். 'தனி மன்னராட்சி' (The Monarchia) என்னும் இலத்தீன் மொழி கட்டுரையானது (கி.பி. 1309-1312) உலகப் பேரரசு பற்றியும் அரசுக்கும், போப்புக்கும் உள்ள உறவு பற்றியும் ஆராய்வதாகும்.

தாந்தேக்குப் பெரும்புகழ் ஈட்டித் தந்தது 'தெய்வீக இன்பியல்' (Divina Commedia) என்னும் பெருங் காப்பியமாகும். இந்நூலில் அருட்பண்பின் சிறப்பு (Grace) விதந்து கூறப்படுகிறது. இக்காப்பியம் கி.பி.1307-இல் தொடங்கி அவர்தம் மறைவுக்கு முன்னர் (கி.பி.1321) முடிக்கப் பெற்றிருக்கலாம். இது அடிதோறும் 11 அசைகளுடன் கூடிய யாப்படி 9 கொண்ட செய்யுளால் இயன்றது; இயைபுத் தொடையில் அமைந்தது. இதில் நகரம், கழுவாய், துறக்கம் (Inferno, Purgatorio, Paradiso) என்னும் மூன்று பகுதிகள் விளக்கப்பெற்றுள்ளன. ஒரு கூம்பு வடிவப் புனல் (Funnel) போலச்சித்திரிக்கப்பட்டுள்ள நகரத்தில் பாவிகள் தத்தம் தரத்திற்கேற்பத் தங்கும் படியான வளையங்கள் பல உள்ளன. கழுவாய் என்னும் மலையினகண் தம் பாவத்தை நினைந்து வருந்தும் பாவிகள் பல குழுக்களாக அமர்ந்துள்ளனர். மலையுச்சியில் இகவரம் (பூலோக சொர்க்கம்) அமைந்துள்ளது. தாந்தே, தம் காதலி பியாட்ரிசை (Beatrice) அங்கேதான் சந்திக்கிறார். தம் காப்பியப் பயணத்தில் நரகத்திற்கும் அதனின்று நீங்குதற்குரிய கழுவாய்க்கும் சென்று இழந்த தன் நண்பர்களையும் முன்னைய பகைவர்களையும் சந்தித்து உரையாடுகிறார். அழகும், ஒளியும், இசையும் நிறைந்ததாகத் துறக்கப் பேருலகு சித்திரிக்கப்படுகிறது. இக் காப்பியத்தில் தாந்தேயின் பரந்து விளங்கும் தத்துவ அறிவும் அறநெறி போதனையும் ஒளிவிடுவதோடு படிமக் காட்சி, மேற்கோள் கதைகள், வானவியல், இயற்கை அறிவியல், வரலாறு முதலியன நிறைந்து காணப்படுகின்றன.

ஆங்கில இலக்கியத்தில் தாந்தேயைப் பற்றி முதலில் குறிப்பிட்டவர் சாசர் (Chaucer) என்பவர். ஆங்கிலப் பெருங்கவிஞர் மில்டன் (Milton) போன்றோரும் இவரைப் பெரிதும் புகழ்ந்துள்ளனர். ஒரேசு வால்போல் (Horace Wal Pole) என்பார் இவர் தம் காப்பியத்தை இகழ்ந்துள்ளார் எனினும் 19-ஆம் நூற்றாண்டில் சிறந்து விளங்கிய பைரன், செல்லி முதலிய கவிஞர்கள் தாந்தேயை வானளாவப் புகழ்ந்துள்ளனர்.

பொன்.பா.

**தாபரி**: தாபரி (கி.பி 839-923) அரேபிய நாட்டின் சிறந்த வரலாற்று ஆசிரியரும் சமய இயல் அறிஞரும் ஆவார். அரேபியாவின் இலிவி (Livy) எனப் போற்றப்படும் இவர் பாரசீக நாட்டில் காசுப்பியன் கடலின் தென்கரையிலுள்ள தபரிசுத்தானம் (Tabaristan) என்னும் மலைகள் நிறைந்த மாவட்டத்தில் அமுல் (Amul) என்னுமிடத்தில் பிறந்தார். தாபரி (abu-Ja'far Muhammad ibn-Jarir al-Tapari) குழந்தைப் பருவத்திலேயே கல்வியில் சிறந்து விளங்கினார். இவர்தம் ஏழாம் வயதில் திருக்குரானை மனனம் செய்து ஒப்புவித்தார். இவர் அறிஞராக வேண்டுமென்று கருதி பாரசீகம், ஈராக்கு, சிரியா, எகிப்து ஆகிய நாடுகளுக்குச் சென்றார். இவர் கி.பி. 902-903-இல் பாக்தாதுக்குத் திரும்பி வந்து அந்நகரிலேயே தங்கிவிட்டார். அங்குத் தலைமை அமைச்சரின் மகனுக்கு ஆசிரியராகவும், சட்டம், மரபு ஆகியவற்றைக் கற்பிப்பவராகவும் இருந்தார்.

செல்வத்தைப பற்றி சிறிதும் கவலைப்படாத இவர் தமக்கு அளிககப்பட்ட பல உயர் பதவிகளை ஏற்க மறுத்து இலக்கியப் பணிக்காகத் தம்மை உரிமைப் படுத்திக கொணடார். இவர் நாற்பது ஆணடுகள் நாளதோறும 40 பககம் எழுதினார் எனக் கூறப்படு வதிலிருநது இவருடைய கடும் உழைப்பையும் ஆா வத்தையுமம அறியலாம்.

**நூல்கள்:** இவர் எழுதியுள்ள நூலகளில் மிகச் சிறநதது அனலசு (Annals) என்று சுருக்கமாகக் கூறப்படும உலக வரலாறாகும். 'அப்பாசிலர்கள, அரசர்கள ஆகியோரின வரலாறு' (Ta'rikh al-Rusul W-al-Mulk, The History of the Apostles and Kings) என்னும் இதில் உலகத்தின தோற்றத திலிருந்து கி.பி 915 சூலை வரையிலான வரலாறு விரிவாகவும் துல்லியமாகவும எழுதபபட்டுள்ளது. இந் நூலில் பத்தில ஒருபங்கே இப்பொழுது கிடைக கிறது. அரேபிய மொழியில் முதனமுதலில் எழுதப் பட்ட வரலாற்று நூல் இதுவாகும. பினனர்த் தோன றிய வரலாற்று நூலகளுககு இது மிகச சிறநத சானறாகப் பயன்படுகிறது. இது இசிராவிற்குப் (Hijirah) பினனா ஒவ்வோர் ஆணடாகத் தொடர்நது எழுதப்பட்டுளளது. கலிபா முதலாம் மனசூர் (கி.பி. 961-76) காலததில அவருடைய அமைச்சா பாலமி Balami) கி.பி. 963-இல இந்நூலைச் சுருக்கிப் பாரசீக மொழியில் வெளியிட்டார்.

அடுத்து இவருடையசிறநத நூலாகக் கருதப்படு வது தபசீா (Tafsir or Jami al-Bayan fi Tafsir al-Quran) என்னும் திருககுரானின உரையாகும். இதனை இவர் விரிவாக எழுதியுளளதால பினனர்த் தோனறிய பல உரைகளுககு இது வழிகாட்டியாக அமைநதுளளது.

முகமமது நபிகளின காலதது நிகழ்சசிகளைப்(Hadith) பற்றி இவர் எழுதியுள்ள நூல் (Ta'rikh al-ridjal) மிகச்சிறந்த சான்றாகப் பயன்படுகிறது. இது இவருடைய வரலாற்று நூலுககுப் பிற்சேர்க்கையாக அமைந்துள்ளது. இசுலாமியச்சட்டம், மரபுகள பறறி இவர் எழுதியுளளவை (Works on Islamic Law and Tradition) குறிப்பிடததக்கவை. மேலும் இவர் கவிதை, இலக்கணம், அகராதி, ஒழுகக நூலகள, கணிதம், மருத்துவம் ஆகிய துறைகளிலும் சிறந்து விளஙகினார். சி.இரெ.

**துணை நூல்கள்:**


**Ameer Ali Syed, A Short History of the Saracens, Macmillian and Company Ltd., New York, 1961.**

**Hitti. K, Philip, History of the Arabs, The Macmillan Press Ltd, London, 1974.**


**தாபுன் மண்டையோடு:** மனிதப் படிமலர்ச் சியைக் காட்டும் பல மணடையோடுகள உலகின பல பகுதிகளிலிருந்து கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவை ஒவ்வொன்றும் வெவ்றே காலத்தைச் சேர்ந்த னவாகவும், மனிதப் படிமலர்ச்சியின பலவேறு நிலை களைக் காட்டுவனவாகவும் உளளன. மனிதனின பழமலர்ச்சியில நியாண்டர்தால் மனிதன(Neanderthal Man) வளர்ச்சியுற்ற மனித வகையாகக் கருதப் படுகின்றான். இம் மனித வகையின் மணடையோடு கள் இசுரேலில் மவுணட் கார்மல் (Mount Carmel) என்னும் ஊரில் தாபுன் (Tabun), இசுகுல் (Skhul) என்னும் இரணடு குகைகளில கணடெடுக்கப்பட்டன. ஆங்கில, அமெரிக்க அறிஞர்கள கூட்டாகச் சேர்ந்து 1929-1934-ஆம் ஆணடில் மேறகொணட அகழாய்வின போது இம் மண்டையோடுகள் கிடைத்தன. இதன மூலம் மனிதப் படிமலர்ச்சி பற்றிய சில இனறிய மையாக் கருத்துகள் தெளிவாயின.

தாபுன் குகையில் கணடெடுக்கபபட்ட மண்டையோடு 41,000 ஆண்டுகளுக்கு முனனர் வாழந்த மனித வகையினைக் காட்டுவதாக உளளது. இது நியாண டர்தால் மனித வகையென உடல்சார் மானிடவிய லாரால் (Physical Anthropologists) முடிவு செய்யப் பட்டது. இசுகுல் குகையில் கணடெடுக்கப்பட்ட மண்டையோட்டின் காலம் தாபுன குகை மணடையோட்டின் காலமெனறு ஒருசிலர் கூறுவர். சிலர் இதை மறுத்துக் கூறுவர். பினனவர்களின் மதிப்பீட்டினபடி இக்குகையில் கணடெடுக்கப்பட்ட தாவரவினஙகளின் புதைபடிவஙகளைக் (Fossils) கொண்டு இதன காலம் கி.மு. 28,500 என்பர்.

இசுரேலில் கிடைத்த இவ்வகை மண்டையோடு மேற்கு ஐரோப்பிய நியாணடர்தால் மணடையோடு களையே பெரிதும் சார்நதுள்ளன. ஒருசில பணபு களில் சிறிய அளவில் வேறுபாடுகள் இருந்தாலும் மேற்கு ஐரோப்பிய மணடையோடுகளைப் போனறே இவையும் தடித்த கண் புருவங்களைக் கொண டுள்ளன; எடுப்பான மோவாயைக் கொணடிருகக வில்லை. ஆனால், ஐரோபபிய மணடையோடுகள வலிமையான மனித இனத்தைச் சேர்ந்தவையாக இருக்கின்றன. இசுரேலில் கணடெடுக்கப்பட்ட தாபுன், இசுகுல் மண்டையோடுகள ஓரளவு வலிமை குறைந்த இனத்தையே காட்டுகினறன.

இசுகுல் மணடையோடுகள் இக்கால மனித வகையினை மிக நெருங்கியனவாகக் காணப்படுகின்



தாபுன் மண்டையோடுகள்

றன. இக்குகையில கணடெடுக்கப்பட்ட மண்டை யோடுகளுக்கும் தாபுன குகை மணடையோடுகளுக்கும் உள்ள வேறுபாடுகள அககால இனத்தவர்களிடையே ஏற்பட்ட இனக்கலப்பு விளைவால நிகழ்நதவைஎனச சில மானிடவியலார கருதுவர். மனிதனுககு மிக நெருங்கிய நியாண்டர்தால மனித இனம ஐரோப் பாவில் இருநததைப் போன்று இசுரேல பகுதிகளில இல்லையென்று அறியமுடிகிறது. இவவிரணடு பகுதி களிலும்உள்ள வேறுபாடு ஐரோப்பிய, இசுரேலியப பகுதிகளின் மண்டையோடுகளைத தனிததனி இன மாகப் பிரிக்கவேண்டிய பண்புகளைக காட்டவிலலை எனலாம். புறச் சூழலும் வாழ்க்கை அமைப்பிற்கு ஏற்பவும் உருவான மாற்றங்களே இவையென அறிய முடிகிறது. சீ.ப.

**தாம்சன், எட்வர்டு எர்பர்ட்டு** அமெரிகக ஐக்கிய நாட்டுத் தொலலியல அறிஞா. தாமசன எட்வர்டு எாபர்ட்டு (Thompson, Edward Herbert) கி.பி. 1856–ஆம் ஆணடு வொாசெசுடரில் உள்ள மாசு (Mass) எனனுமிடததில பிறநதார். இவா மாயா நாகரிகத்தை ஆய்வுகள செயதார். சிச்சன இட்சா (Chichen Itza) எனனும் இடத்தைக்கள ஆய்வு கள செய்து இந்நகரத்தின தொன்மையையும் சமயச் சிறப்பையும் வெளிப்படுத்தினார்.

இவா தொலலியலில சிறந்த பயிற்சி பெற்றிருக்க வில்லை எனினும் அருமபொருட்களைச சேகரிப் பதில் மிகுந்த ஆாவம காட்டினார். மாயா நாகரிகத தைக குறித்த ஓர் ஆயவுக் கட்டுரையை இவர் கி.பி. 1879–ஆம் ஆணடு வெளியிட்டார். தாமசனை அமெரிகக ஐக்கிய நாடு மெக்சிகோவிலுள்ள மெரிடா (Merida) வின பேராளராக கி.பி. 1885–இல நியமித் தது. மெக்சிகோவிறகு வந்தபின இவா மாயா நாகரி கததை ஆய்வு செயயும பணியில் தீவிரமாக ஈடுபட டார். மாயா இநதியாகளுடன கலநதுரையாடி அவர் களின மொழி, பழகக வழக்கங்கள ஆகியவற்றை இவா அறிந்து கொணடாா. இந்நட்பினால மாயா மக்களின தொனமையான பணபாட்டை ஓரளவு இவர் அறிய முடிந்தது. இம்மக்களின உதவியுடன அகழாய்வுகளையும் இவர் மேற்கொணடார். சிச்சன இட்சா நகரை ஆய்நததுடன் அங்கிருநத உயரமான கூமபுக் கோபுரத்தையும் இவர் ஆயவிறகு எடுத்துக் கொண்டார். சுவர் ஓவியங்கள, சமய நிகழச்சிகள நடக்கும இடம், கோயில் ஆகியவற்றை இந்நகரில இவர் கணடுபிடித்தார். பல ஆண்டுகளாகத் தொல லியல் அறிஞர்கள ஊக்கமளிககாமல் இருநத சிச்சன இட்சாப்புனிதா கிணற்றை இவர் நீரகழாய்வு செய தார். இதனால் இவரது புகழ் பரவியது. சிச்சன இட் சாவில் இருந்த இந்தப் புனித கிணறு ஓர் ஏரி

போனற அமைப்பை உடையது. பெணகள், இளைஞர் கள் ஆகியோர் உயிர்த் தியாகம் செய்த புதைவிட மாக இக்கிணறு பழங்காலத்தில் இருந்ததாக மரபுக் கதைகள் கூறுகினறன. இவர்கள் இக்கிணற்றில் வசித்து வந்த மழைக் கடவுளின் சினத்தைப் போக்கு வதற்காக உயிர்த் தியாகம் செய்தனர் எனக கூறப் படுகிறது. தாம்சன இங்கு நீர் அகழாய்வுகள் மேற் கொள்ளப் பாசுடன் (Bostan) நகருக்குச் சென்று தேவையான கருவிகளைப் பெற்றும் நீர் அகழாய்வு எங்ஙனம் மேற்கொளள வேணடும் என அறியப்பயிற்சிகள் பெற்றும் வந்தார். இககிணற்றில் இவர் பல எலும்புக்கூடுகளையும், பொன்னால ஆன பொருள்களையும் அகழ்ந்தெடுத்தார். மெக்சிகோ அரசாங்கம் இவரது செயல்களை விரும்பவிலலை. எனவே இவர் சிச்சன் இட்சாவிலிருந்து வெளியேறி னார். இவர் தனது கள ஆய்வுகள குறித்து நூல் ஒன்றை 1932–ஆம் ஆணடு வெளியிட்டார். இவர் பிளைன்பீல்டு (Plainfield) என்னுமிடத்தில் 1935–ஆம் ஆணடு உயிர் நீத்தார். சு.இரா.

**தாம்சன், சேம்சு (கி.பி.1700-1748):** சேம்சு தாம்சன் (Thomson, James)எனபார், இசுகாட்லாந்து இங்கிலாந்து எல்லையில் உள்ள எட்னாம் (Ednam) என்னும் ஊரில் ஒரு கிறிததவப் பாதிரியாரின் மகனா கப் பிறநதார். எடின்பரோ பல்கலைக் கழகத்தில் கல்வி கற்றார். அதே பலகலைக் கழகத்தில் தம்மை ஒரு கவிஞர் எனறு நிலைநாட்டிக் கொணடாா; மாலட்டு (Mallet)என்னும் நண்பர் ஒருவரால் ஊக்க மூட்டப் பெற்று கி.பி. 1725-இல் இலண்டன மாநக ருக்கு வந்து சேர்ந்தார்.



தாம்சன், சேம்சு

'கூதிர் காலப் பருவம்' (Winter The first of the Seasons) என்னும் வசன கவிதையினை கி.பி. 1726 –1730–ஆம் ஆணடுகளில் தொடர்சசியாக எழுதி வந் தார்; டாகடர் ஆர்பத்நாட்டு, கிரே, அலெகசாண டர் போப்பு (Dr. Arbuthnot, gray Alexander, Pope) முதலிய கவிஞர்களுடன் தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டார்; இலிட்டில்டன் (Littleton) பிரபுவின் செலவாக்கைப் பயன்படுத்திச்'சினெக்யூர்' (Sinecure) என்னும் பதவியினைப் பெற்றுக் கொணடார். வேலை எதுவுமினறி அரசாங்கத்தில சம்பளம் மட் டும் பெற்றுச் கொள்ளும்மதிப்பிற்குரிய பதவிககுச் 'சினெக்யூர்' என்பது பெயர். புகழ் பெற்ற ஆஙகிலக் கவிஞா 'இசுபென்சர்' (Spenser) இராணி எலிசபெத் தின காலத்தில் இந்தப் பதவியில் இருந்தவர் எனபது குறிப்பிடத் தக்கது.

அரசாங்க வழக்கறிஞர் ஒருவரின் மகன 'சாாலசு தால்பட்டு' (Charles Talbot) எனபாருக்கு ஆசிரிய ராக அமைந்து, பிரானசு, இததாலி மற்றும் பிற ஐரோப்பிய நாடுகளில் பயணம் செய்தாா. 'உரிமை' (Liberty) எனனும் தலைப்பில கி.பி. 1735–1736–இல் ஒரு நீளமான நாட்டுப் பற்றுக கவிதையினை வெளி யிட்டார். இநதக் கவிதையானது, உரோம், கிரீசு, பிரிட்டன் முதலிய நாடுகளில பலகாலமாக முன் னேறி வந்த உரிமை பற்றிய வரலாற்றை விளககு வதாக அமைந்துள்ளது.

'சோபோனிசா' (Sophonisba), 'அகமம்னான' (Agamemon), 'எட்வர்டும் எலினோராவும்' (Edward and Eleanora), 'தாஙரெட்டும் சிகிசுமுநதாவும்' (Toncred and Sigismunda), 'கொரியோலேனசு' (Coriolanus) முதலிய துன்பியல நாடகஙகளை எழுதியுளளார். தாம்சனும மாலட்டும் சேர்நது கி.பி. 1704–இல் 'ஆலபிரெடு' (Alfred) என்னும் வேடதாரி நாடகத்தை (Masque) நடித்தனர்; இத னைத் தாம்சனே எழுதியிருககக கூடும் எனக கருதப் படுகிறது: தமது மரணத்திற்கு முனனர் கி.பி. 1748 –இல 'சோம்பேறிக் கோட்டை' (The Castle of Indolence) எனனும ஒரு கவிதையினை வெளியிட் டார். இசுபென்சா முறைச் செய்யுட் பத்தியிலமைந்த (Spenserian Shanza) இந்தக் கவிதையில் இநதக கவிஞரின சோம்பல் பரிகசித்துக காட்டப்படுகிறது.

இவர்தம் மரணத்தின பின்னர் 'இரிச்சுமாந்து சர்ச்'சில் (Richmond Church) புதைககப்பட்டாா. இவருடைய 'பருவகாலம்' (The Seasons) எனனும் கவிதை மிகக செலவாககுப் பெறறுத திகழநதது; அலெக்சாணடர் போபபின் நகரத தனமை (Urban) வாய்நத கவிதையிலிருந்து இவாதம் கவிதை நடை யிலும் பொருளிலும் வேறுபட்டதாகத் திகழ்ந்தது. மில்ட்டனுக்குப் பின்னால் வெளிப்புற இயறகை யினைச் சித்திரித்துக் காட்டும் முதற் கவிஞர் இவரே என்று இயற்கைக் கவிஞா 'வேர்ட்சுவொர்த்தால்' (Wordsworth) பாராட்டப் பெற்றார். எனினும் இவர்தம் செயற்கையான சொல்லாட்சியைக்

கவிஞர் தென்னிசன் (Tennyson) கண்டித்துள்ளார். பிற்காலத்தில் 'தர்னர்' (Turner) என்பார் இவர்தம் கவிதையால் ஈர்க்கப் பெற்றவராகிப போற்றிப் புகழ்ந்தார். தாம் வாழ்ந்த பகுதியின இயறகைக் காட்சிகளை நேர்முக வருணனை செய்து எழுதுவது இவர்தம் கவிதையின சிறப்பாகும். பொன்.பா.

## தாம்சன், பிரான்சிசு (கி.பி.1859-1907).

தாம்சன் பிரான்சிசு (Thompson, Francis) எனபவர், ஓர் உரோமன் கத்தோலிகக மருத்துவரின் மகனா வார்; இஙகிலாந்து இலங்காசயா பகுதியிலுள்ள 'பிரெசுடன்' (Preston) எனனும் ஊரிற பிறந்தார்; 'உசா கல்லூரியில' (Ushaw College) கல்வி கற்றார்; தாம் கிறித்தவப் பாதிரியாராக வேணடுமெனக கருதியிருந்தார்; ஆனால், அந்தத் தொழிலுககுரிய வராகத் தேர்நதெடுககப்படவில்லை. தாம் மருத்துவ ராவதற்கும் தம்மைத் தகுதிப்படுததிக் கொளள வில்லை; தம் இல்லத்தை கி.பி. 1885-இல துறநது சென்று எங்கும் நிலையற்றவராக மூனறாணடுகள அலைநது திரிநதாா; இலணடன் மாநகரில கஞ்சா போதையிற் கட்டுணடு சில காலம வாழநதாா; விலபிரட்டு, அலைசு (Wilfrid and Alice) என் பவர்களால் நல்வழிக்குக் கொணடுவரப்பட்டார்; அவர்களால் இலக்கிய உலகின் ஒப்புதலும கிடைக கப் பெற்றார்; இலணடன் மாநகரத்து விடுதிகளி லும், சசெக்குசு மறறும் வேல்சு (Sussex and Wales) பகுதியின் சமய மடங்களிலும் தம் வாழககையை ஒருவாறு அமைத்துக் கொணடார். இறுதிக காலம் வரையிலும் திருமணமும் செய்து கொள்ளவில்லை; கஞ்சா போதையிலிருந்து விடுபடவும் இல்லை. பின னால் காசநோயால தாக்குணடு இளஸ்மக் காலத்தி லேயே மரணமடைந்தார்.



தாம்சன், பிரான்சிசு

'துறக்க உலகத்து வேட்டைநாய' (The Houd of Heaven), 'கடவுள் மாநிலம்' (The Kingdom of God) என்னும் இவருடைய இரண்டு கவிதைகளும் மிக வும புகழ் பெறறவையாகும். இவா கி பி. 1893, 1895, 1897-ஆம் ஆணடுகளில் மூன்று செய்யுள் தொகுதி நூல்களை வெளியிட்டார். 'மெய்னெலலின மெர்ரி இங்கிலாந்து' (Maynell's Merry England) எனனும இதழில் இலக்கியத் திறனாய்வுக கட்டுரைகளை வெளியிட்டாா. இவர்தம் மெனமையான படைப்பு களனைத்தும் மிகுந்த கறபனை ஆற்றலும ஆழநத சமய அநுபவங்களும் உடையனவாக உளளன.

இவர்தம கவிதைகளுள சில அலங்காரம் மிககன வாகவும, கடுமையானவையாகவும், பிற மூலஙகளி னினறும் பெறபபட்டனவாகவும் உள்ளன. செலலி, திருவெனசி, கிராசா (Shelley, De Quency, Crawshaw) முதலிய கவிஞாதம் செலவாக்கை இவர்தம கவிதைகளில காணலாம். இலககியத திறனாய்வாள ரைக் காட்டிலும் கத்தோலிக்க வாசகர்களே இவர்தம் கவிதைகளை நனகறிந்தவாகளாக உளளனா.

வேட்டை நாயானது எபபடிக் குறுமுயலைத் தவறாது பற்றி விடுகின்றதோ அதுபோலக கர்தத ரும் பாவிகளைத் துரத்தி வந்து தேடிப் பிடித்து இரட்சித்துக் கடைததேற்றியே தீரவாா எனனும் கருத் தில் 'வானக வேட்டைநாய்'(The Hound of Heaven) எனனும் கவிதை பாடப்பெற்றுள்ளது. ஆங்கிலப் பேராசிரியா சீனிவாச இராகவன், இநதக் கவிதை யினைத் தமிழில மொழி பெயர்த்துள்ளார். 'வசநத ருதுவில் தோய்ந்தது வருடம' என்று அந்தப் பாடல தொடங்குகிறது. பொன.பா.

## தாம்செனன், கிறிசுடியன் சூர்செனசன்

தேனியநாட்டுத்தொல்லியல் அறிஞர். தாம்சன,கிறிசு டியன் சூர்செனசன் (Thomsen, Christian Jurgensen) கோபன்கேகன் என்னும் நகரில் கி.பி.1788-ஆம ஆண்டு பிறந்தார். இவர் வரலாற்றுக்கு முறபட்ட காலத்தைக் கற்காலம் (Stone age), செப்புக் காலம் (Bronze Age), இரும்புக் காலம (Iron Age) எனப பிரித்தார். எனவே இவர் மிகப் புகழ்பெற்ற தொல்லியல் அறிஞராகக் கருதப்படுகிறாா. ஐரோப்பாவில் பழங்கால மனிதனின் தொழிலநுட்ப வளர்ச்சியை அடிப்படையாகக் கொணடு இக் காலத்தை அவர் பிரித்தார். இக்காலப் பாகுபாடே ஐரோப்பாவில் முதன்முதலாக வரலாற்றுக்கு முற் பட்ட காலத்தைக் காலக்கணிப்புகள செய்ய உதவியது. இவர் பிரித்த இமமுறை இந்நூற்றாண் டிலும் தொலலியல் அறிஞர்களால் பின்பற்றப்



தாம்சன், கிறிசுடியன் சூர்கென்சன

படுகிறது. தாம்சென் தென்மார்க்கின் கோபன்கேகன நகரிலுள்ள தேசிய அருங்காட்சியகத்தின் காப்பாள ராக கி.பி.1816 முதல் கி.பி.1865 வரை பணியாற்றி னார். இவ்வருங்காட்சியகத்தில் இருந்த இசுகாண்டி நேவிய அரும்பொருட்களை இவர் பிரித்து ஒழுங்கு படுத்த முனைந்த பொழுது வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கும் எண்ணம் இவருக்கு ஏற்பட்டது. இவ்வரும் பொருட்களைப் பிரிக்கும் பணியை இவர் 20 ஆண்டுகள் மேற் கொண்டார். தாம்சென் கி.பி.1865-ஆம் ஆண்டு கோபன்கேகனில் உயிர் நீத்தார். சு.இரா.

**தாம்பியர்லாந்து:** ஆசுத்திரேலியாவின் வட மேற்குக் கடலோரத்தில் உள்ள இம் மூந்நீரகம் மேற்கு ஆசுத்திரேலிய மாநிலத்தைச் சேர்ந்த ஒரு பகுதியாகும். இதற்கு மேற்கில் திமோர் கடல் (Timor Sea) உள்ளது. ஆங்கிலேயக் கடல் மாலுமி வில்லியம் தாம்பியர் (William Dampier) என்பவரின் நினைவுக்கு அறிகுறியாக இப்பகுதி தாம்பியர்லாந்து (Dampier Land) எனக் குறிக்கப்படலாயிற்று. இவர் தான் கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் இறுதியில் மேற்கு ஆசுத்திரேலியா கடலோரப் பகுதிக்கு முதன் முதல் வந்து ஆய்வுகள் நடத்தியவர். தாம்பியர் துறைமுகத்தின் வழியாக 1981-82-ஆம் ஆண்டில் 88,058 கப்பல்கள் அனுப்பப்பட்டன. தெ.பா.

**தாம்பியர் வில்லியம்:** (கி. பி. 1652-1715) இவர் இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்தவர்; நூலாசிரிய ராகவும், வீரச் செயலராகவும், புதுக்கடல் வழி காண்பவராகவும் விளங்கினார்; கடற்கொள்ளை யிலும் ஈடுபட்டார். இவர் கி.பி. 1652-ஆம் ஆண்டில் சாமர்சட்டு மாநிலத்தில் கிழக்கு கோக்கர் என்ற ஊரில் பிறந்தவர். குத்தகைக்குப் பயிரிட்டுப் பிழைக்கும் ஓர் ஏழைக் குடியானவரின் மகனாகப் பிறந்து, தம் ஏழாம் வயதிலேயே தந்தையை இழந் தார். இவரை நிலச்சுவான்தாரர்களும், ஊர்ப் பெரியவர்களும் படிக்க வைத்தனர். தம் 16-ஆம் வயதில் கப்பல் கட்டும் வேலையில் சேர்ந்த தாம்பியர் வில்லியம் (Dampier William) மத்திய அமெரிக்காவில் சில காலம் தங்கிய பின்னர் கி.பி.1679-ஆம் ஆண்டில் கடற்கொள்ளைக்காரர் கூட்டத்திலே சேர்ந்தார்.



தாம்பியர் வில்லியம்

அட்லாண்டிக்குக் கடற்கரைப் பகுதிகளில் நிறையக் கொள்ளையடித்ததோடு 'சீயரா லியோனி' எனற தென்மார்க்கு நாட்டின் கப்பலையும் கைப்பற்றினார். நியூபவுண்டுலாந்து, சமய்கா போன்ற இடங்களுக்கு கப்பலில் பயணம் செய்ததோடு, நிக்கோபார் மற்றும் சுமத்ரா ஆகிய பகுதிகளுக்குப் படகுகளிலும் பயணம் செய்தார். கொள்ளைக்காரர்களின் முகாம் பிளவு பட்டபோது, இவரும் ஒரு சிலரும் பசிபிக்குப் பெருங் கடலைக் கடந்து பிலிப்பைன்சு தீவுகளை அடைந்து கி.பி.1691-ஆம் ஆண்டில் இங்கிலாந்து திரும்பினார்.

கப்பற்படை ஆட்சிக்குழு ஆசுத்திரேலியக் கடற் கரைப்பகுதிகளைக் கண்டறியும் பொருட்டு கி.பி. 1699-ஆம் ஆண்டில் இவரை அனுப்பியது. ஆசுத்தி ரேலியக் கடற்கரைப் பகுதிகளையும் நியூகினியாவை யும் ஆராய்ந்து வைகியூ என்ற தீவையும் மேற்கு நியூகினியாவையும் பிரிக்கின்ற 'தாம்பியர் கடல் இடுக்கு' ஆசுத்திரேலிய வடமேற்குக் கடற்ரை யிலடங்கிய 'தாம்பியர் தீவுத்தொகுதிகள்' ஆகியவை களைக் கண்டறிந்தார். எனினும் தாம் பயணம் செய்த கப்பல் பழுதடைந்துவிட்டபடியால், அசன்சன்

தீவில் அதை விட்டுவிட்டு வந்துவிட்டாா. எனவே கப்பற் படைக்கு இவா தகுதியறறவர் எனக கப்பற படை நீதிமனறம் குற்றஞசாட்டியது. மீணடும் கி பி. 1703 முதல் 1707 முடியவும், 1708 முதல 1711 முடிய வும் இரணடு தடவைகள வாணிகத்தை முனனிட்டு உலகைச் சுற்றிக் கடறபயணததை மேறகொணடார். இப்பயணங்களினால பயனேதும் இவருக்குக் கிடைகக விலலை.

இவர் எழுதிய ஆஙகில நூலகளுள மிகவும புகழ் பெற்றது 'உலகைச் சுற்றி ஒரு புதிய கடற பயணம்' (A New Voyage Round the World). இது கி பி. 1697-இல் எழுதப்பெற்றது. இவா எழுதியுளள மற்ற நூல்களும் இவருடைய காலத்தில் வாழ்நதவாகளுக கும், பிற்காலத்தியவாகளுக்கும அறிவியல கண ணோட்டத்துடன் சிறந்த வழிகாட்டிகளாக விளஙகு கின்றன.

இவர் ஆற்றிய தொண்டுகளை முனனிட்டு இவா நினைவாக இந்தியாவுககும சீனாவுக்கும் இடையிலுள்ள மாநிலங்கள மறறும் தீவுகளுககும, ஆசுத்திரேலியப பகுதிகளுக்கும இவருடைய பெயர் இடப்பட்டுளளது. எடுத்துக் காட்டாக, மேறகு ஆசுத் திரேலிய வடமேறகுக் கடறகரைத தீவுததொகுதிகள், இந்தியப பெருஙகடலுககும் கிஙசவுணடுககும இடையே ஆசுத்திரேலியாவைச் சேர்நத ஒரு தீப கற்பம், பாபுவா தீவுக்கும் வைகியூவிறகும இடையி லுள்ள கடலிடுககுகள, நியூபிரிட்டனிலுளள மேற்குத தீவுகளையும், உம்பாயையும பிரிககும கடலிடுககு கள ஆகியவைகளுககு 'விலலியம் தாம்பியா' எனற பெயரே இடபபட்டுளளது.

இவர் கி.பி. 1715-ஆம் ஆணடு மார்ச்சுத திங களில் இலண்டனில் காலமானாா. பொன.சு.

**தாம்ரலிப்தி,** தொனமையான துறைமுகப பட்டினமாக விளஙகிய நகரம். இநநகரம் இபபொழுது வஙகாள மாநிலத்தில மிட்னாப்பூர் மாவட்டத்தில அமைந்துளளது. தாம்ரலிப்தியின் (Tamralipti) இனறைய பெயர் தம்லூக்கு (Tamluk)எனபது ஆகும. தாமரலிபதி பாலிமொழியில் தாம்லிட்டி (Tamlitti) என்றும கூறப்படும். இந்நகரம ஊக்ளி ஆற்றின துணையாறான உரூப நாராயணன் ஆறறுக்குத் தெற கில் அமைநதுள்ளது. பணடைக காலத்தில் இந்நகரம் முக்கிய துறைமுகப்பட்டினமாக விளஙகியது. இந் நகரத்தைப் பற்றி மகாபாரதம் குறிப்பிடுகிறது. சமண மதச்சான்றுகளில் இந்நகரம் வஙகத்தின தலைநகர மாக விளஙகியமை கூறப்பட்டுள்ளது. இலங்கையின் மகாவம்சம் என்னும் பௌத்தநூலில் விசயன் என் னும் மன்னன் இந்நகரிலிருந்தே தனது படைகளுடன இலஙகைக்குச் சென்று அங்குக் குடியிருப்புகளை நிறுவியதாகக் கூறப்பட்டுளளது. அசோகா தம் சமயப பரப்பாளர்களை இநநகரில இருநதே போதிமரததின கிளை ஒனறைக கொடுத்து இலஙகைக்கு அனுப்பிவைததாா. பணடைக காலத தில் தெனகிழககாசிய நாடுகளுக்கு இநதிய வணிகா இந்நகரிலிருநதே செனறனர். தாலமி (Ptolemy) இந் நகரைத் தாமலைட்சு (Tamalites) எனக குறிப்பிட்டுள்ளார். இரகுவமசம் எனனும நூலில இநநகரததின அமைவிடம் கூறப்பட்டுளளது. அதன்படி இந்நகரம கபிசா ஆறறின கரையில அமைநதிருநதது. தணடின (Dandin) என்பவா தம் முடைய தசகுமாரசரிதத்தில இநநகரத்தில் பிநது வாசினி (Binduvasini) எனனும கோயிலொனறு இருநததைக குறிப்பிட்டுளளாா. சீனநாட்டுப் பயணி கள இக்கோயிலைக் காண வந்ததாவும அவர் கூறி யுளளாா. சீனப பயணியான பாகியான இந்நகருக்கு வருகைபுரிநதார். சமபாவிற்கு (Champa) 50 யோசனை கிழக்கில இநநகரம அமைநதிருந்ததாக அவர் குறிப்பிட்டுளளாா. பாகியான இததுறைமுகப பட்டினததிலிருநதே இலஙகைக்குச செனறாா. இவரை அடுதது வநத சீனபபயணி யுவான்சுவாஙகு இநநகரின பரபபளவைக கூறியுளளாா. இநநகரம ஏறககுறைய 400 கி.மீ. (250 மைல) சுற்றளவு உடை யது. கடற்கரையின் அருகில உளள இப்பகுதி தாழ் நிலமும் ஈரப்பதமும் கொணடு விளஙகியது. இந நகரத்தைக் கடல்வழியும் தரைவழியும இணைததன என்று யுவானசுவாங்கு தமதுகுறிப்பில் கூறியுளளாா. இநநகரில பத்துப பௌதத மடாலயஙகளும் அசோகரின கற்றூண ஒன்றும இருந்தன எனக் கூறப்படுகிறது.

கடல் வாணிகததில இந்நகரம் (கி.பி. 4-ஆம் நூற்றாண்டு முதல 12-ஆம் நூற்றாணடு வரை) தலைசிறந்து விளஙகியமையைக கதாசரித சாகரம எனனும் நூல் குறிப்பிடுகிறது. இந்நகரததிற்கு அயோததி நகரிலிருந்து வந்த மூனறு சகோதரா கள வாணிகம் செயது பொருளீட்டியமை குறிததுக் கல்வெட்டொன்று கூறுகிறது. இட்சிஙகு (Itsing) என னும் சீனப்பயணி இங்கிருநத ஒரு பௌத்த மடால யத்தில் தஙகினார். இமமடாலயம் பாரகா (Baraha) எனக் கூறபபட்டது. யுவான சுவாஙகும் இஙகிருநத சில பௌத்தக கோயிலகளைப் பற்றிக் கூறியுளளாா.

தாமரலிப்தியில கள ஆய்வுகளில பல தொனமை யான பொருளகள் கிடைததன. இங்கு 1940-ஆம் ஆணடு மாதிரிக் குழிகள தோணடப்பட்டன. அகழாய்வுகள் 1954-55-ஆம் ஆணடுகளில் இஙகு நடத்தப்பட்டன. இவவகழாய்வுகளின மூலம் இந நகரின் தொன்மை வெளிபபட்டது. இநநகரம் புதிய

கற்காலத்திலிருந்து இன்றுவரை சிறந்த நகரமாக விளங்கியமை இதன்மூலம வெளிப்பட்டது.இககாலங களுககுஇடையில பல இடைவெளிகள காணப்படுகின் றன.இஙகுக் கிடைத்த புதிய கற்காலக் கைககோடரி யுடன நனறாகச்சுடப்படாத மட்கலன்கள கிடைததன. இதுமுதல் பண்பாட்டுக் காலமாகும் இரணடாம் பண் பாட்டுக் காலம் கி.மு. 300 அலலது கி.மு. 200-இல தொடஙகபபட்டது. இக்கால கட்டத்தில் சுஙகர் கலை மரபைச் சார்ந்த சுடுமண பொமமை கிடைத தது. செம்பு நாணயஙகளும் வடககத்திய பளபளப் பான கறுப்பு மட்பாணடஙகளும் இககால மண ணடுக்குகளில கிடைத்தன. மூனறாம் பணபாட்டுக் காலத்தில இநநகரம மிகச் சிறநத துறைமுகப்பட்டின மாக விளங்கியது மேற்கு நாடுகளுககும் இந்நகரத் திலிருந்து வாணிகம நடநதது. இஙகுக் கிடைத்த உரோமானிய உரௌலட்டட்டு மட்கலனகள இந் நகரம் உரோமாபுரியுடன் வாணிகம நடத்தியமையை வெளிப்படுததுகிறது. இவை கி.பி. 1,2-ஆம நூற றாண்டைச் சார்ந்தவை.கட்டடஙகளின சிதைவுகளும இககால மணணடுக்குகளில வெளிப்பட்டன. நான காம் பணபாட்டுக காலம குசானர், குப்தர்களின் காலமாகும். இப்பண்பாட்டுக காலத்தில அழகான சுடுமண பொம்மைகள கிடைத்தன.

இககாலததிறகுப்பின இநநகரின வரலாறறைச் சரியாக அறிய முடியவிலலை. இருப்பினும், பால (Pala) சேன் (Sena) மரபினர் காலததைச சாாந்த சில சிற்பஙகள இங்குக் கிடைத்துள்ளன. அகழாயவுக குழிகளில்மேல் மணணடுக்குகளில் கிடைத்த பொருள களின காலம் கி.பி. 18, 19-ஆம் நூற்றாணடைச் சார்ந்ததாகும்.

பணடைக காலத்தில கடற்கரையில இருநத இந் நகரம் இப்பொழுது கஙகைச் சமவெளியில கடற்கரை யிலிருந்து 97 கி.மீ. தொலைவில் அமைந்துளளது. இவ்வூரில காளி கோயில ஒனறு உளளது. தம்லூககு நகரம் கி.பி. 1864-ஆம் ஆணடு முதல் நகராண்மை யாகச் செயற்பட்டு வருகிறது. இநநகரின் அருகில் ஓடும் ஆற்றில் படகுப் போக்குவரத்து நடைபெறு கிறது. இந்நகரம் விளைபொருளகள விற்கும் சநதை நகரமாகவும் இரசாயன உறபத்தி, இயநதிரக் கருவி கள் செய்யும் தொழிற் சாலைகள கொணட தொழில் நகரமாகவும் உள்ளது. இநநகரத்தின மக்கள் தொகை 29,367 (1981). சு.இரா.

**தாமசியசு, கிரிசுடியன் (கி.பி. 1655-1728)** என்பவர் செருமானிய மெய்யறிவாளர். இவர் இலெயிப்சிகு (Leipzig) என்னுமிடத்தில் பிறந்தார். இவர் தந்தை சேக்கவ தாமசியசு எனபவா அரிசு டாட்டிலின் தத்துவத்தைப் பின்பற்றியவர். கிரிசுடி யன் தத்துவமும் சட்டமும் இலெயிப்சிகுப் பலகலைக் கழகத்தில படித்து முடித்த பின், கி.பி. 1682-ஆம ஆணடு இலெயிபசிகு எனனுமிடத்தில விரிவுரை நிகழ்ததினார். இவர் ஏலோ (Hallo) என்னும் பல் கலைக் கழகத்தை நிறுவுவதற்குத் துணை செய்தார். இவர் கி.பி. 1694-ஆம் ஆண்டு சட்டத்துறையின பேராசிரியரானார்.

தாமசியசு தம் தந்தையையும் கிரோட்டியசு (Crotious), பியுபெண்டார்பு (Peufendorb) எனபவர் களையும பினபற்றி இயற்கை விதிகளை(Natural Law) அறிநது கொணடார் இவர் சட்டத்திறகுச் சமய சித்தாநதத தொடர்பிலலாமல ஓா அடிப்படையை ஏறபடுததினார். பியுபெணடார்பைப் பினபற்றிச் சட்டத்தின் பிறப்பிடமானது உலூதர் கொளகைப்படி வெளிப்பாடு (Revelation) அனறு எனறு கூறினார். சட்டமெனபது பொதுஅறிவுத் தொடர்பானது மட்டு மல்லாமல் எலலாச சமயங்களிலும் காணபபடும் உண்மையுமாகும். மேலும பல கருத்துகள் அநத நாட்டினுடைய வரலாற்றுச சிறப்பின அடிப்படையில எழுந்தவையாகும். தாமசியசு விவிலியத்தின் விளக கததையும், கடவுளின் விதிகளையும் கூறுவதற்கு எல் லோருக்கும் உரிமை உண்டு எனறு கூறினாா. இவர் சமய வெறியினைக் குறை கூறினார்; சமயக் கொள கையில், நம்பிக்கையில் கருதது வேறுபாட்டைப் பொறுததுக் கொண்டார்; சமயவட்டத் தலைவா ஆட்சிக்குட்பட்ட ஆலோசனைக் குழுவின உரிமை களை எதிர்த்தார்; கோயில் அரசின ஆளுகைக்குட் பட்டிருப்பதால பல தவறுகள் ஏற்படுகினறன என றார்.

இவர் தத்துவத்தைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது தத்துவம் செயல்தன்மை வாய்ந்ததாகவும், மனித னைப் பற்றியும், அவனுடைய தேவைகளைப் பறறி யும் சிந்திப்பதாகவும் இருக்கவேண்டுமென்றாா. அரிசு டாட்டிலின் சமயநுணுக்க முறை வாழக்கைககுத் துணைபுரியவில்லை என்றும், அவருடைய முறை அரசி யல்வாதிகளையும, அரசியல சூழ்ச்சிக்காரர்களையும், பணித்துறைக் குழுவினரையும் தோற்றுவித்தன என் றும் இவா கருதினார். செயல்திறம் வாய்ந்த சிறந்த கல்வியாளர்கள நாட்டிற்குத் தேவை என்றும், அத னைத் தம் கல்வித் திட்டந்தான் உருவாக்க முடியும் என்றும் கூறினார். தாமசியசு பல நூல்கள வெளியிட் டார். அவை கலவியின் நோக்கங்களை விவரித்தன. அவற்றுள் நல்ல நூல்களைத் தேர்ந்து திரட்டி உரு வாக்கி இவர் வெளியிட்டார். இவர் வகுப்பு வாதக் கொள்கைகளை வெறுத்தார். தத்துவம் எப்பொழு தும் அனுபவத்தில் கண்டறிந்த உணமைகளின் அடிப் படையில் அமைய வேண்டுமேயொழியச் சமயசித் தாந்த வெளியீட்டின் அடிப்படையில் அமையக்

கூடாது என்பது இவர் கருத்து. இவர் தத்துவக் கொள்கையில் இயற்கைச் சித்தாநதம், இயக்கநூல், கணிதம் முதலியவைகள அமைந்திருக்க வேணடும் என்றார். கடவுளின இருத்தலைப் பகுத்தறிவின் துணைக் கொணடு மெய்ப்பித்தலை இவர் ஆதரிககவிலலை. கிறித்துவ ஒழுக்கவியல பகுததறிவிற்குப் பொருத்தமான அனபின அடிப்படையில அமைந்திருக்க வேண்டும். அனபுதான் அடிப்படையான உணர்விறகுக் காரணம். மனிதனுடைய எண்ணததிற்கும் பகுததறிவிற்கும் தொடர்பிருக்காது. தீமைகளின் தொடக்கமே எணணங்கள என்று இவர் கூறினார்.

தாமசியசுக்கு கி.பி. 1694-ஆம் ஆணடு சமய தததுவக் கருத்துககளில் குழப்பமான சூழநிலை ஏறபட்டது. அதாவது சில கடவுள பறறுணர்சசியுள்ளவர்களின் தூணடுதலினால, நலல குணஙகளும் உணமையும் கடவுளின் அருள இருநதால தான் ஏற்படுமெனறும், இல்லாவிட்டால் மனிதன தீமையுடையவனாகிவிடுவான என்றும இவர் கருதினார். இவர் கி.பி. 1905-ஆம ஆணடு புதிய திருப்பம் ஏற்பட்டு மனித நன்மைகள் இயறகையாகவே ஏற்படும் என்று கருதினார். தாமசியசு (Thomasius) புலன்கடநத நுண் பொருள ஆராய்ச்சியில இரணடு நூலகள வெளியிட்டார். இரா.கோ.

**தாமசு அகியுனசு (கி.பி. 1224-1274)** இத்தாலியிலுள்ள உரோக்காசெககா (Roccasecca) என னும் ஊரில் பிறநதார். இவர் தநதை பெயர் இலாண டோல்போ (Londolfo), தாயார் தியோடோரா (Theodora of Aquina). இவர் சிறு வயதாகயிருநத பொழுது பெனடிக்டைன துறவிகளிடம் படிததார்; பிறகு நேபபிள்சிலுளள பல்கலைக் கழகத்தில படித்தார். இவர் தத்துவமும், சமய சிததாந்தமும பாரிசில் படித்தார். அகியுனசு பத்தாண்டுகள் உரோமாபுரியின் அருகில கழித்தார். தாமசு அகியுனசு (Thomas Aquinas, St.) கி.பி. 1274-ஆம் ஆண்டு பாசநோவா (Fossanova) எனனுமிடத்தில இறந்தார். தாமசு அகியுனசு எழுதியவை கி.பி. 1252 முதல கி.பி. 1273 வரை வெளியிடப்பட்டன.

தாமசு அகியுனசின் கருத்துப்படி நம்பிக்கை (Faith) நடுத்தரமாக அமைகிறது. புறஉலகில் உள்ள தன தன்மையை (Realistic) மனிதன அறிவுப்புலன்களின் வாயிலாக அறிகிறான். ஒவவொருவருக்கும் சிவப்புநிறப் பூக்களும், மிருகஙகளின் கூச்சலும் குளிர்ந்த காற்றும் எளிதில புலனாகும். உள்ளே இருக்கின்ற புலன் அனுபவங்களினால புரிந்துகொள்ள இயலும். பல்வேறு பதிவுகளினால் பொருளகளை அறியலாம்.

**பொருளும் உருவமும்.** இயற்கைப் பொருளகளும அவறறின் உருவங்களும சோநது காணப்படும போது நான்குவித மாறறங்களைக் காணலாம். அவைகளில ஏற்படும் மாறறஙகளில ஒனறு இடம, இரணடாவது அளவு, மூன்றாவது நிறம், நானகாவது உருவம்.

**இடமும் காலமும்:** அகியுனசின இயற்கைத் தத்துவத்தில் அரிசுடாட்டிலின தூணடுதல் காணப்படும. நெருப்பின இடம மேலேயும், பூமியின இடம கீழேயும காணப்படும. காலத்தை 'முனனாலும்' 'பினனாலும்' எனற சொறகளால உணரலாம.மனிதனைப பறறித தெரிந்துகொளளுதல அகியுனசின தததுவததில சிறப பிடம வகிககிறது.

விருப்பாற்றலில அகியுனசு இரணடுவிதமான செயறபாடுகளைப் பறறிக கூறுகிறார். முதலாவதாக, அடிப்படையான இயறகையான ஆதரிககும போககு, நலல மனிதாகள, நீதியானவைகள, அமைதி, ஆகியவறறிடம் இயற்கையாகவே விருபபம ஏற்படும. இரணடாவதாக, விருபபாறறல பொருளை நோக்கியோ பொருளை நீக்கியோ செலலும இத்தகைய போக்கு புத்தியின தீாமானபபடி செலலும. மனிதன சில செயல்களில் சுதநதிரமாகச செயறபடுகினறான.

**ஆன்மா:** மனிதனின சில செயல்கள் மிருகங்களின செயலகள போல் இருக்கின்றன. ஆனால் புத்திக் கூர்மையும் விருப்பாறறல்களும் அத்தகைய செயலகளைச் செமமைப்படுததுகின்றன. ஆனமாவானது மனிதனின உண்மையான ஒரு பகுதியாகும். அது தூயது; நிததியமானது. ஒவ்வொரு பகுத்தறிவுடைய ஆனமாவும இறைவனால் படைககப்பட்டது. படைப்பில மனிதர்களுடைய பஙகும் சோந்திருக்கிறது எனறு அகியுனசு கூறுகிறார்.

புலன் கடந்த நுண்பொருள் ஆராய்ச்சியில் இவருக்குப் பெரிதும் ஈடுபாடுணடு. இவர் கருத்துப்படி புலன் கடந்த நுணபொருள ஆராய்சசியானது, பொதுவாக உண்மைப் பொருளை அறிய முற்படுவதும், மேலான காரணத்தைக் கணடுபிடிப்பதுமாகும். கடவுள முதறகொணடு கீழான பொருளகள் ஈறாக எல்லாம் அறிவுடைப் பொருளாகும். உணமையையும நேர்மையையும இறைவனிடமும் உயிர்ப்பொருளகளிலும் காணலாம.

**தத்துவமும் கடவுளும்:** அகியுனசு காரணத்திலிருந்து காரியத்தையும், காரியத்திலிருந்து காரணத்தையும் ஆராயத் தொடங்கினார். எல்லாப பொருள்களும் தோன்றுவதற்கு ஒரு காரணம இருக்கவேணடும் என்று இவர் கூறினார். எல்லாப் பொருள்களும் நிறைவுடையனவல்ல. ஆகையினால் அவைகளை

இயக்க ஒரு நிறைவுடைய பொருள் தேவை. பொருள்கள் எல்லாம் கூட்டுச்சேர்ந்து அதன் விளைவாகத் தோன்றியவை. ஆகையினால் கூட்டுச்சார்பற்ற, செயற்கையல்லாத ஒரு பொருள் தேவை. அதன் சக்திக்குட்பட்டு மற்றவைகள் இயங்கும் என்று இவர் கூறினார்.

**தீமை** (Evil): தீமை ஏற்படுகிறது எனின், நல்ல குணம்படைத்த கடவுள் ஏன் தீமை நடப்பதைத் தடுக்கவில்லை? ஒரு விதத்தில் தீமை ஏற்படுவதால், நன்மைகள் மிகுதியாகும். எடுத்துக்காட்டாக மிருகங்கள் இறக்கவில்லையென்றால், சிங்கம் வாழமுடியாது. கொடுங்கோல் மன்னர்கள் கொலைகள் செய்யாவிட்டால், வீரமரணம் தியாகிகளுக்குக் கிட்டாது.

**இயற்கை விதி**: அகியுனசின் அறஇயலானது ஓர் இயற்கையான கொள்கையின் அடிப்படையில் அமைந்தது. நல்லதையே செய்யவேண்டுமென்பதும், அதனையே நாட்டமாகக் கொள்ளல் வேண்டும் என்பதும், தீமையைத் தவிர்க்க வேண்டும் என்பதும் அவர் கொள்கை. மனிதனுக்கு இயற்கையாக மூன்று விதமான விருப்பங்கள் உள்ளன. ஒன்று தன்னைப் பேணிக்காத்தல். இரண்டாவது உடலுறவு கொள்ளுதலும், தன்னுடைய சந்ததிகளைக் காப்பாற்றுதலும். மூன்றாவது மனிதனின் பகுத்தறிவினால் எல்லோருடைய நன்மையைக் கருதுதலும், அறியாமையைப் போக்குதலுமாகும்.

மனச்சான்று என்பது புத்தி கூர்மையான தீர்ப்பு ஆகும். அது ஒரு செயலானது அல்லது உணர்வானது நல்லதா கெட்டதா, செய்யலாமா செய்யக்கூடாதா என்று முடிவு செய்யும். மனச் சான்று என்பது நல்லதைச் செய்யத் தூண்டுகின்ற உள்ளே இருக்கின்ற வழிகாட்டி (Guide) என்பது அகியுனசின் கருத்து. நற்செயலையும் அழகையும் பற்றிக் குறிப்பிடும்பொழுது இரண்டும் ஒன்று என்றும், நல்லது என்பது எல்லோரும் விரும்புவதென்றும், அழகு என்பது காண்போருக்கு இன்பமளிப்பதென்றும் குறிப்பிடுகின்றார். அழகின் மூன்று சிறப்பியல்புகளாவன நேர்மை, பொருத்தமாக அமைதல், மிகுந்த அறிவு என்பனவையாகும். இவர் இரண்டுவிதமாக அழகைப் பற்றிக் கூறுகிறார். ஒன்று ஆன்மிகமானது. மற்றொன்று சரீரத் தொடர்பானது.

இவர் கத்தோலிக்க அறிவாளிகள் வரிசையில் சிறப்பிடம் வகித்தார். ஆனால், எல்லாக் கத்தோலிக்கரும் இவரது கருத்துகளை ஒத்துக் கொண்டார் என்று கூறமுடியாது. இவர் கி.பி. 1274–ஆம் ஆண்டு மறைந்தார்.

இரா.கோ.

**துணை நூல்கள்:**


**Anderson, J.F.**, An Introduction to the Metaphysics of St. Thomas Aquinas, Chicago, 1953.

**Bourne, V.J.**, Aquinas: Search for Wisdom, Milwankee, 1965.

**Chenu, M.D.**, Towards Understanding St. Thomas, Chicago, 1964.


## தாமசு பெக்கெட்டு (கி.பி. 1118-1170):

'இலண்டன் தாமசு' எனச் சம காலத்தவரால் அறியப்பெற்ற தூய பெக்கெட்டு தாமசு, இரண்டாம் என்றி மன்னர் இங்கிலாந்தில் அரியணையிலிருந்த போது காண்டர்பரி கத்தோலிக்கத் திருச்சபையின் தலைமைக் குருவாகவும், நாட்டின் முதலமைச்சராகவும் பணியாற்றியவர். திருச்சபையிலும், ஆட்சியிலும் பல சீர்திருத்தங்களைக் கொண்டுவர முயன்று அரசருக்குப் பகைவராகிக் கொலை செய்யப்பட்டுத் தியாகி ஆனவர்.

தாமசு பெக்கெட்டு (Thomas Becket) இலண்டன் நகரத்தில் கி.பி. 1118-ஆம் ஆண்டில் நார்மண்டி வணிகப் பெருமகனார் கில்பெர்ட்டுக்கும், நார்மானியர் இனத்தைச் சேர்ந்த கேயன் பகுதி குடிமகளுக்கும் மகனாகப் பிறந்தவர். இவர் 10வயதுச் சிறுவனாக இருந்தபோது சர்ரே மண்டலத்திலுள்ள மெர்ட்டன் பிரைமரி பள்ளியில் சேர்க்கப்பட்டார். பின்னர் ஆக்சுபோர்டு, பாரிசு பல்கலைக்கழகங்களில் பயின்றார். காண்டர்பரி தலைமைக் குரு இவரைக் கிறித்தவச் சட்டம் பயின்று வருமாறு இத்தாலி நாட்டிலுள்ள பொலோனா பல்கலைக்கழகத்திற்கு அனுப்பினார்.

தாமசு பெக்கெட்டு தம் 21-ஆம் வயதில் படிப்பு முடிந்து திரும்பியதும் கி.பி. 1142–ஆம் ஆண்டுவரை வாணிகத்தில் ஈடுபட்டுப் பெரும்பொருள் ஈட்டினார். பின்னர் இலண்டனில் சமயத் தொடர்புள்ள பல்வேறு பணிகளில் ஈடுபட்டார். இரண்டாம் என்றி மன்னர் கி.பி. 1155–ஆம் ஆண்டில் இவருக்கு முதலமைச்சர் பதவியைத் தந்தார். இவர் மன்னருக்கு உற்ற தோழராகவும், ஆடம்பரப் பிரியராகவும் வாழ்ந்தார். இவர் கி.பி. 1162–ஆம் ஆண்டில் சமயத் தலைமைக் குருவாக மெய்யுணர்வு நீராட்டுச் சடங்கைப் பெற்றுப் பொறுப்பேற்றதும் எளிய வாழ்க்கையை மேற்கொண்டதுடன் கிறித்தவச் சங்கத்திற்காகவும் மக்களின் உரிமைகளுக்காகவும் பாடுபட்டார். இதனால் இவருக்கும் மன்னருக்குமிடையே மனக்கசப்பு ஏற்பட்டுப் பிரான்சுக்கு ஓடவேண்டியதாயிற்று. எனினும், கி.பி. 1170–இல் மீண்டும்

இலண்டன திரும்பிவந்து அரசரின் நண்பரானார்; தலைமைக'குரு பதவியைப் பெற்றார். ஆனால அரசரைவெளிபபடையாகவே எதிாககத தொடஙகி னார்.

தாமசு பெக்கெட்டு உருவத்தில உயரமாக வும், ஒலலியாகவும், அழகாகவும் இருப்பார், தலை மயிர் மிகக் கருமையாக இருககும். கூர்மையான பார்வை பெற்றவர். குழப்பந்தருகிற சிக்கலகளை யும எளிதில புரிநதுகொளபவா; வியககததக்க நினைவாறறல உளளவர்; ஏழைகளிடம இரக்கம் காடடத தவறாதவா; முடியாடசியை வலுபபடுத தும எணணம கொணடவர்; போபபாணடவரின நனமதிப்பைப பெற்றவா.

இவரின ஏறறத்தையும செலவாககையும பொறுக்க இயலாத நிலையில மனனா தம அரசவை யில 'இநதத துரோகியைததொலைகக இநதச சபை யில வீரா எவரும இலலையா' என வெளிபபடையா கவே தூணடுதல் வினாவை எழுபபினார். உடனே நான்கு பிரபுககள் காணடாபரிக்குச் சென்று அவர் திருசசபையில் பிரார்த்தனை செயதுகொணடிருநத சமயததில கி.பி.1170-ஆம ஆணடு திசமபாத திஙகள 29-ஆம் நாளில கொலை செய்தனர். இவர் இறநத பிறகு கி.பி. 1172-இல 'புனிதா குழு'வில சோககப பட்டுத தகக மரியாதைககு உரியவரானார். காண டர்பரியில் இவர் நினைவாக ஒரு கோயிலும கட்டப்பட்டது. நாளடைவில இககோயில பனனாட டுப புனிதப பயணிகளின முககிய இடமாகவும விளங் கிக்கொணடு வருகிறது. இவா கொலை செய்யப பட்ட நாளையும மேனாட்டவர் ஒரு முக்கிய நாளாக வும கருதுகினறனர்.

இவரின வாழக்கை தொடாபான சானறுகளை இராபாட்சன் எனபவா திரடடித் 'தாமசு பெக கெட்டின வரலாறு' எனத் தொகுத்து வெளியிட்டுள ளார் மேலும் டி எசு எலியட்டின 'திருசசபையில ஒரு கொலை'யும(1935), சீன அனோவிலலியின 'பெக கெட்'டும(1960), செலவிமைதானசின 'காணடாபரி யின் தலைமைக குரு புனித தாமசு பெககெட்'டும (1965) மிகத் தெளிவாக இவர் வாழ்ககை வர லாறறையும், இவா கொணடிருந்த புரட்சிகரமான சீர்திருத்தக் கொளகைகளையும இவருடைய காலத தில் திருசசபைக்கும் அரசுக்குமிடையே இருநத உறவுமுறைகளையும் விளக்குகினறன. பொன.சு.

**தாமசு ரோ,சர் (கி.பி.1581-1644)** இங்கிலாநது நாட்டைச் சேர்நத இவர் சிறநத அரசியல் செய லாட்சித் திறம் படைத்தவர். சர் தாமசு ரோ (Sir Thomas Roe) இங்கிலாநதில் எசக்சு(Essex)மாவட்டத் தில இலோலேட்டன எனற ஊரில கி.பி. 1581-ஆம ஆண்டில் பிறநதாா. எலிசபெத்துப் பேரரசியாரின காலததிலேயே அரசவையில பணிபுரியும வாயப்பைப பெறறார். இவா முதலாம சேம்சு, முதலாம சாா லசு ஆகிய மனனாகளின காலததில தாம ஒரு சிறநத அரசியல திறம் படைத்தவா எனபதை நிலைநாட்டி னார். சேம்சு மனனா இவரின அறிவையும அனுப வத்தையும் பாராட்டிச 'சா' எனற பட்டததை வழங கினார்.

தாமசுரோ, கி பி 1610-ஆம ஆணடில அமேசான, ஓரினாகோ பகுதிகளுககுக் கடறபயணம் செய்தாா. அப்பகுதிகளில தஙகம கிடைபபதாகக் கேளவிபபடடு மறுமுறையும பயணததை மேறகொணடாா. இவா கி.பி 1614-ஆம ஆணடில தாம ஓர்தது (Damworteh) தொகுதியினசாாபில நாடாளுமனற உறுபபினராகத தேர்நதெடுககபபட்டாா. இஙகிலாநது மனனா முத லாம் சேமசு கி.பி.1615-ஆம் ஆணடில் இவரை ஒரு தூதராகப பணியமர்ததி இந்தியாவுககு அனுப்பி னாா. இவர் சூரத்தை அடைநது பினனா அஙகிருநது மொகலாயப பேரரசர் சகாஙகீரைச சநதிககவேணடி ஆசுமீா செனறாா. மூனறாணடுகள வரை சகாங கீரின் விருந்தாளியாக அரணமனையிலேயே தஙகி யிருநதாா பேரரசிடமிருநது ஆங்கிலேயாகள இந்திய சூரததில பணடசாலைகள அமைக்கும உரிமததைப பெறறாா.

இவரால எழுதபபடட நாடகுறிபபேடுகள் மொகலாய மனனாகளின அரசவையைப பறறியும, நாட்டில வாழநத பெருமககளைப் பற்றியும துலலிய மாகக் கூறுகினறன. அரசர்களின ஆடமபர வாழ்ககை, பிரபுககள கலநதுகொணட முககியமான விழாக்கள், உழவாகளின பெருநதுனபஙகள, ஆபதது நிரம்பிய பெருஞசாலைகள, இலஞசமும் திறமை யினமையும உளள சுயாட்சிமுறை ஆகியன பற்றி மிக விளககமாகக கூறிச்செனறாா. 'மொகலாயப் பேரரசில எழுதப்பட்ட சட்டஙகளே இலலை, அரச ரின தீாப்புககு எதிாப்பு இலலை,மாநில அரசுகளைக் கட்டுப்படுதத மைய அரசால இயலவிலலை; ஒரு பிரபு இறந்தவுடன் அவா சொத்துகள பேரரசருக்கே உரிய ஆயின, தகுதி இல்லாவிட்டாலகூட வேணடிய வாகளுககெலலாம பதவிகள் தரபபட்டன, சகாங கீா செருக்கு உளளவர் அலலர்; எப்பொழுதும குடி போதையில் இருப்பவா; வணிகர்கள் துறைமுகங களில தொலலைகளுககு ஆளாகிறாாகள' எனறெல லாம எழுதி வைததுளளாா.

மொகலாயப் பேரரசர் சகாஙகீருடன ஒரு வாணிக உடனபடிக்கையைச் செயதுகொணடு ஆஙகி லேயர் இநதியாவிற்கு வருவதறகு ஏதுவான வழி

களை வகுத்துத் தந்து பிற்காலத்தில் ஆங்கிலேயரின் மேலாதிக்கம் இநதியாவில பரவுவதற்கு அடிப்படை யாகச் செயற்பட்டார்.

இவர் கி.பி.1621-ஆம் ஆணடில் துருக்கிககுச் சென்று அங்கும ஆஙகிலேயர்கள் வாணிகம் செயய வேணடிய அனுமதியைப் பெற்றுப் பணடசாலை களை அமைப்பதற்கான உரிமத்தைப் பெற்றார். பினனர் இங்கிலாந்து திருமபி அஙகிருநது கான் சுடாணடிநோபிளுக்கு அரசுத் தூதுவராகச் சென் றார். இவருடைய இநதியப் பயணக் குறிப்புகள கி.பி.1625-ஆம் ஆணடில் புத்தகமாக வெளியிடப்பட் டன. இவர் கி.பி.1628-ஆம் ஆணடில பிரித்தானிய அரசப் பேரவைக்கு உறுப்பினராகத் தேர்ந்தெடுக் கப்பட்டார். ஆக்சுபோர்டு பலகலைக்கழகத்தின் சார் பில் கி.பி.1640-ஆம் ஆணடில நாடாளுமன்ற உறுப் பினரானார். நுணபுலமிக்க சர் தாமசுரோ கி.பி.1644 -ஆம் ஆண்டில் காலமானார். பொன்.சு.

**தாமசு வில்லியம் ஐசக்கு (கி.பி.1863-1947),** ஓர் அமெரிக்கச் சமூகவியல் அறிஞர் ஆவார். இவர் சமூக உளவியல் துறையில் ஆற்றிய பங்கு குறிப் பிடத் தக்கது. வில்லியம் ஐசக்கு தாமசு (William Issac Thomas) வர்சீனியாவிலுள்ள (Virginia) உருசல் மாவட்டத்தில் 1863-இல் பிறந்தார். இவர் சிகாகோ பல்கலைககழகத்தில கி.பி.1896-ஆம் ஆண்டு சமூக வியலில் முனைவர் பட்டம் பெறறார். இஙகு இவர் கி.பி.1894 முதல் சமூகவியல் பேராசிரியராகப் பணி யாற்றினார். ஆனால், செய்தித்தாள ஊழல் தீர்ப் பின காரணமாக கி.பி.1918-ஆம் ஆணடு பல்கலைக் கழகத்திலிருந்து நீக்கப்பட்டார். சில ஆணடுகள சமூக ஆய்வு மையத்திலும், ஆர்வாடு பலகலைககழகத திலும் பணியாற்றிய பின்னர், தனியார் நிறுவனங களின் உதவியுடன் பல ஆய்வுப் பணிகளை மேற் கொணடார். இவர் கி.பி.1922-இல அமெரிககச் சமூகவியல் கழகத்தின தலைவரானார்.



தாமசு வில்லியம் ஐசக்கு

சமூக உளவியலைப பற்றி இவர் எழுதிய 'சமூகத் தோற்றம் பற்றிய ஆதார நூல்' (Source Book of Social origins-1909) புகழ் வாய்நததாகும். இவர், 'ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும வாழுகின்ற போலந்து நாட்டு வேளாணமையினா' (The Polish Peasant in Europe and America, 1918-21) எனற நூலைப் பிளாரியன் சினானிக்கு (Florian Znaniecki) என்பவருடன இணைந்து 5 பாகஙகளாக வெளியிட் டார்.

இவர் அறிவியல அடிப்படையிலான பயிற்சி முறைக்கும், செயலறிவுசாா ஆயவிற்கும (Empirical Research) முதனமை அளிததார். மனிதனுக் கும் அவனுடைய சுற்றுப்புறச சூழலுககும இடை யிலான உறவுகளைஇவர் தம் கோட்பாடுகளில் விவரித் துள்ளார். குறிப்பிட்ட சூழ்நிலையில் மனிதன செயற படுகின்ற முறை அவனுடைய முற்கால பட்டறி வினையும் (Experience), நிகழகாலப பட்டறிவினை யும் பொறுத்தது எனக கூறுகிறாா. ஆனால, இவா தமக்கென்று தனிக் கோட்பாட்டினையோ சமூக வியல் முறைகளையோ கொணடிருக்கவிலலை. பாலின வேறுபாடுகள, இடப்பெயர்வு, குறறம், சமூக நிலையமைப்புப போனற பிரிவுகளில் இவர் மிகுநத கவனம் செலுத்தினார்.

இவர் கி.பி.1947-ஆம் ஆணடு கலிபோர்னியா விலுளள பெருககிலி (Berkely) என்னுமிடத்தில தமமுடைய 84-ஆம வயதில இறந்தாா. பூ.த.

**தாமதக் கட்டணம்.** தாமதக கட்டணம் (Demurrage) என்பது சரக்குகளை ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் எடுத்துச செல்லவில்லை என்றால சரக்கேற்றி (Carriers) சரக்கு எடுத்துச செலபவரிடம தனககுரிய கட்டணத்திற்கு மேல வசூல் செய்திடும் தனிக கட்டணமாகும். இது சரககேற்றிகளின வகையைப் பொறுத்து வேறுபடுகிறது. பொதுவாகத தாமதக் கட்டணம், இரயிலவே சரககுகள மற்றும் பேருந்து (Lorry), ஆகாய விமானம் போனற சரக கேற்றிகளுக்குத தான வசூலிககபபடுகினறன. எனறா லும், இரயிலவே வசூலிககும தாமதக கட்டணம தான வெளியாருக்குத் தெரியும்படி அமைந்துளளது. இதற்குக் காரணம் ஏனைய சரக்கேற்றிகளின மூலம ஏற்றிச் செலலப்படும சரககின அளவை விட இரயிலவே மூலம் ஏறறிச செல்லப்படும் சரககின அளவுதான மிகவும் கூடுதலாக உளளது. இரயில் வேயைப் பொறுத்தமட்டில் தாமதக கட்டணம், சரக் கேறறிப் பெட்டிகளில் (Wagons), சரககு ஏற்றிட அலலது சரககு இறக்கிட சாதாரணமாகத் தரப்படும் கால அளவிற்கு மேற்பட்டால சரககு அனுப்புநர் அலலது சரக்குப் பெறுநரிடமிருந்து வசூலிககும் கட்

டணமாகும். பொதுவாகச் சரக்குகளை ஏற்றிட அல்லது இறக்கிட 5 மணிக்கால அளவு அனுமதிக்கப் பட்டுள்ளது. இக்கால அளவு மீறப்படும்போது தாமதக் கட்டணம் மேற்கொண்டாகும் நேரத்திற் கேற்ப வசூலிக்கப்படுகிறது.

ஒரு சரக்கேற்றும் பெட்டி சரக்கேற்றுவதற்காகக் காத்திருந்து அதைப் பயன்படுத்தா விட்டால் அதற்குத் தாமதக் கட்டணம் அதற்குரிய காலத் திற்கு அதாவது சரக்குப் பெட்டி வந்தது முதல் சரக் கேற்றும் ஆணை இரத்தானது வரை உள்ள காலத் திற்கு வசூலிக்கப்படும். சரக்கேற்றும் அலுவலகத்தின் பணி நேரம் எல்லா இடங்களிலும் ஒன்றாக இருப்ப தில்லை. மேலும் பணி நேரத்தை அந்தந்த இரயில் வேக்கள் தெரிவிக்கின்றன. சில நிலையங்களில் பணி நேரம் காலை 7 மணியிலிருந்து மாலை 6 மணி வரையுள்ளது. பணிப்பளு மிகுதியாக இருந்தால் பணி நேரம் இரவு 8 அல்லது 10 மணி வரை நீட்டிக்கப் படும். சரக்கு ஏற்றிட அல்லது இறக்கிட அனுமதிக்கப் பட்டுள்ள காலமான 5 மணிகள் ஒரு குறிப்பிட்ட சரக்கு நிலையத்தின் பணி நேரமாக இருக்கலாம். ஒரே நாளில் 5 மணிகளைச் செலவழிக்கவில்லை யென்றால் மீதியுள்ள நேரத்தை மறுநாளில் பயன் படுத்தலாம்.

குடியரசு நாள், விடுதலை நாள், ஞாயிற்றுக் கிழமைகள் போன்ற விடுமுறை நாள்களுக்கும் தாமதக் கட்டணம் வசூலிக்கப்படும். காரணம் தாமதக் கட்டணம் வசூலிக்கப்படுவதே சரக்கேற்றிப் பெட்டியை விரைவில் அங்கிருந்து அகற்றுவதற்குத் தான். மேலும் சரக்கேற்றும் பெட்டிகளில் குறிப்பிடப் பட்டுள்ள கொள்ளளவுக்குத் தான் கட்டணம் வசூலிக் கப்படுகிறது. உண்மையான உளவிற்கு அன்று. தாமதக் கட்டணம் பெறும் நோக்கம் சரக்குப் பெட்டி களின் பயன்படுத்தும் திறனை அதிகரிக்கச் செய்வது வும், வணிகர்கள் மிகுதியான அங்காடி இலாபம் பெற்றிட அதை ஒரு சேமிப்புக் கிடங்காகக் கருதக் கூடாது என்பதுவுமாகும்.

இதன் செயலாக்கமாகப் பல சரக்கு நிலையங் களில் தாமதக் கட்டணம் வசூலிக்கத் 'தொலை நோக்கு வீதம்' (Telescope Rate) என்ற முறை பயன் படுத்தப்படுகிறது. இதனால் சரக்குப் பெட்டி நீண்ட நாள் நிலையத்தில் தங்கத் தங்கத் தாமதக் கட்டணம் கூடுதலாகும்.

ஆனால், ஒரு சரக்கேற்றுப் பெட்டி சரக்கேற்று வதற்காகவும் அல்லது இறக்குவதற்காகவும் நிறுத்தப் படும் 5 மணி நேரத்தில், சரக்கேற்ற அல்லது இறக்க முடியாத நிலையில் சரக்கேற்றுப் பெட்டி ஓரிடத்தில் நிற்குமானால் அதற்குத் தாமதக் கட்டணம் வசூ லிக்க முடியாது.

**தாமதக் கட்டண விகிதம்:** தாவர எண்ணெய் (Vegetable Oil) ஏற்றிச் செல்லும் பெட்டியைத் தவிர மீதமுள்ள வகைகளுக்கு ஒரு நாளைக்கு அல் லது ஒரு மணிக்கு ஒரு கண்டிக்கு (tonne) 38 பைசாக்கள் தாமதக் கட்டணம் செலுத்த வேண் டும். 45 காசுகள் இரண்டாம் நாளைக்கும், 60 காசு கள் மூன்று அல்லது பின் தொடரும் நாள்களுக்கும் வசூலிக்கப்படும். தாவர எண்ணெய்க்கு முதல் 24 மணிக்கு ஒரு கண்டிக்கு 60 காசுகளும், அடுத்த 24 மணிக்கு ஒரு கண்டிக்கு ஒரு உருபாயும், பின் தொட ரும் நாள்களுக்கு இரண்டு உருபாயும் தாமதக் கட்டண மாக வசூலிக்கப்படுகின்றன. சில இரயில்வேக்களில் அனுமதிக்கப்பட்ட 5 மணிகளுக்குத் தாமதக்கட்டணம் இல்லை. தாமதமான முதல் நாளைக்கு ஒரு மணிக்கு ஒரு கண்டிக்கு 60 காசுகளும், இரண்டாம்நாளுக்கு 80 காசுகளும், மூன்றாம் நாள் அல்லது பின் தொடரும் நாள்களுக்கு ஒரு ரூபாயும் தாமதக் கட்டணமாகச் செலுத்தப்பட வேண்டும்.

இரயில்வேக்களை விடுத்து ஏனைய சரக்கேற்றி களான கப்பல், ஆகாய விமானம், சரக்கேற்றும் பேருந்து நிறுவனம் போன்றவைகளும் தாமதக் கட்டணம் வசூலிக்கின்றன. ஆனால், அவை ஒவ் வொன்றும் ஒரு விகிதத்தைக் கையாளுகின்றன. அவை தாமதக் கட்டணம் வசூலிக்கும் நோக்கம் வாடிக்கையாளர்கள் சரக்குகளைத் தங்கள் நிலையத் தில் மிகுந்த நாள்கள் கிடப்பில் போடுவதைத் தடுத்த லேயாகும். கே. என். இரா.

**துணை நூல்:**

Kapoor, N D, Elements of Mercantile Law, Sultan Chand & Co, New Delhi, 1983

***தாமப்பல் கண்ணனார்***: சங்கப் புலவருள் ஒருவராகிய இவர் பார்ப்பன மரபினர். காஞ்சிக்கு மேற்கில் உள்ள தாமல் என்னும் ஊரினர். இவ்வூர் கல்வெட்டுகளில் தாமர் என்று வழங்குகின்றதென் றும், ஆதலின் தாமர்ப்பல் கண்ணனாரென இவர் பெயர் இருக்கவேண்டுமென்றும், ஏடெழுதியோர் தவறாகத் தாமற்பல் கண்ணனார் என எழுதிவிட்ட னர் என்றும், பல்கண்ணனார் என்னும் இந்திரனைக் குறிக்கும் பெயர் இவருக்குப் பெயராக அமைந்திருக்க லாம் என்றும் ஔவை. துரைசாமிப்பிள்ளை கருதுவர். தாமப்பல் கண்ணனார் என்பது டாக்டர் உ.வே.சாமி நாதையர் கொண்ட பாடம். இவர் பாடிய ஒரே பாடல் புறநானூற்றின் 43-ஆம் பாடலாக இடம் பெற்றுள்ளது. இப்பாடல் சுட்டும் ஒருசிறு நிகழ்ச்சி

மாவளத்தான் எனனும் சோழமன்னன, தாமப்பல் கண்ணனார் எனனும் புலவர் ஆகிய இருவர்தம் சீரிய பணபுநலங்களை அறிய வாய்ப்பாகிறது.

சோழன நலஙகிள்ளியினதம்பி மாவளத்தானும தாமப்பலகண்ணனாரும் வட்டாடும்போது ஒரு வட்டு தாமப்பல் கணணனாரையறியாமல் அவர்கீழ் மறைய, அதனைப் பினனர் அறிந்த மாவளததான சினந்து அவரை வட்டினாலெறிநதான. புலவர். வெகுணடு, 'புறவிற்காகத துலைபுக்க உரவோன மருக, மறவர் பெரும, கைவண தோனறால், நின் செயலால் நினகுடிப் பிறப்பில ஐயமுறுகினறேன; ஆத்திமாலையணிந்த நின முன்னோா எலலாம் பார்ப்பார் நோவன செய்யலா. வட்டெறிநத செயல நினககழகிதோ' என வெறுத்துக் கூறிவிட்டார். புலவர் வெகுண்டுரைத்த தவற்றினை வளவன உளங கொளளாது, தான் பிழை செய்தது போல நனி நாணினான் என்றும், பிழைத்தவரைப் பொறுக்கும தலைமைப் பண்பு சோழர் குடியினர்க்கு எளிதாம் போலும் என்றும் பாராட்டிக் கூறிப் புலவர் தம் பிழைக்கு வருந்திப் பின் காவிரியாறறு மணலினும சிறகக நின் ஆயுள்' என வாழ்த்தினார். உயர்நத பண்பினை உணர்த்தும் இவர் பாடல நீதிப்பாடல் எனப் போற்றத்தகும். இரா.சா.

**தாமன்:** தாமனும் பிந்தியாசும, உரோம நாட்டில் சைரக்கூசு நகரில கி.மு 4–ஆம் நூறறாண டில் வாழ்ந்து உண்மையான நட்புக்கு உலகத்திற்கே ஓர் எடுத்துக்காட்டாக விளங்கியவர்கள. உரோம் நாட்டுப் பேசசாளா சிசரோவின கூற்றுபபடி, தாம னும பிந்தியாசும் (Damon and Phintias) பிததோ கோரசு என்ற மெய்ப்பொருள அறிஞரின் மாணவா கள், நட்புக்கு இலக்கணமானவர்கள; அவாசீடர்களில இவவிருவரும அடஙகுவா. பிந்தியாசு, பிதியாசு என றும் சொலலப்படுவார்.

இவர்களுள பிந்தியாசு எனபர் சைரக்கூசுப் பட்டணத்தின் கொடுஙகோலன முதலாம் தையோனி சியசு எனபவருககு எதிராகப் புரட்சி செயதகாரணத் தால் சிறையில அடைக்கப்பட்டு மரண தண்டனை யும் விதிககப்பட்டாா. மரண தணடனை நிறை வேற்றப்படுதற்கு முனனாத் தாமதமது வீட்டிறகுச சென்று மனைவி, குழந்தைகளைக் கடைசியாகப் பார்த்துவிட்டு அவாகளுக்கு வேணடிய ஏற்பாடுகளை யும் செய்துவிட்டு வருவதாக முதலாம் தையோனிசிய சிடம சிறப்பு அனுமதியை வேணடினார். அனுமதி அளிக்கப்பட்டுப் பிந்தியாசுவாராமற் போனால அதே தணடனையை ஏற்றுக்கொளளககூடிய ஒருவரை ஒப்படைத்துவிட்டுப் போகுமாறு பணிககப்பட்டது. இநதப் பொறுப்பை ஏற்றுககொள்ள அனைவரும் தயங்கினர். ஆனால் தாமன என்ற ஒரு நணபர் இச் சிறைவாசத்தையும் மரண தணடனையையும் தம் ஆருயிா நண்பருக்காக ஏற்றுக்கொணடார். பிந்தி யாசுககு 6 மணி நேரம அனுமதி அளிககப்பட்டது. எனினும 4 மணி நேரத்திற்குளளாகவே திரும்பி வருவதாகக கூறிப் பிந்தியாசு தம் இல்லத்திறகுச் சென்றாா. மரண தணடனை நாளும நெருங்கிறறு. பிநதியாசு குறிப்பிட்ட நாளில வநதுசேரவிலலை. தாமன மரண மேடைக்கு அழைததுச் செல்லப்பட் டார். பிநதியாசு தம நணபரை விடுவிதது மரண தண்டனையை ஏறறுக் கொளளக குறித்த நேரத்தில புறப்பட்டாா. ஆனால வழியிலே அடைமழை பெய்த தாலும் கடகக வேணடிய ஆற்றில் வெளளப் பெருக் கெடுத்ததாலும இவருடைய குதிரை தடுமாறி ஓடி இறநதுவிட்டதாலும வேறு ஒரு குதிரையை அமாத் திககொணடு காறறிலும் கடுமையானவேகத்தில மரண மேடையை நெருங்கிப் பிநதியாசு தம் அருமை நணபர் தாமனின கரங்களில் ஓடிததாவினார். மரண தணடனையை நிறைவேறற வேணடிய சரியான நேரமும் அதுதான. ஒரு மணிததுளி தாமதிததிருந் தாலும் தாமனின உயிா பிரிநதிருக்கும. மரண மேடையிலே இருநத தாமன தன அருமை நணபரின மனைவி மககளின நலனை விரும்பி யவராய் நணபா வாராமல இருக்கவேணடும; மரண தணடனையும் நிறைவேறறப்பட வேண டும்; நணபர் குடும்பத்துடன வாழவேணடும் அவருக் காக உயிர்விடுகிற வாய்ப்புத தமக்குக கிடைகக வேண்டும் என ஆசை கொணடாா. இருவரும ஒரு வருககாக மற்றொருவா மரண தண்டனையை அனுப விப்பதாக மனமுவநது தையோனிசியசிடம் கெஞ்சி னார்கள. இந்த இக்கட்டான நிலையில் என்ன செய்வதென்று புரியாத ஆட்சியாளன இவாகளின ஆழ்ந்த நட்பைக் கணடு நெஞ்சுருகி மனனித்து விடு தலை செய்து ஆச்சரியப்படத்தகக, மேனமைமிகு இவர்களின நட்பு வட்டததில் தனனையும மூனறாம ஒருவனாகச் சேர்த்துக்கொள்ளும பொருட்டு மன றாடினான்.

அமெரிக்காவில் வாசிஙடனில் கி.பி. 1864–ஆம் ஆணடிலிருந்து 'பிநதியாசு வீரர்கள' எனற ஒரு சகோ தரத் தத்துவச் சங்கம செயற்பட்டுககொணடு வரு கிறது. வரலாற்றிலே இடமபெறுமபடி தம் இனிய நணபரைக் காபபாற்றக் குறிப்பிட்ட நேரத்தில வந்த பிந்தியாசு, நணபன வாராவிட்டாலும நண் பருக்காக உயிரைவிடவும தயாா நிலையில் மரண மேடையில் நினறிருநத தாமன் ஆகிய நணபாகள் இவ்வுலகம் உளளளவுககும் உண்மைக்கும் நட்புக்கும் எடுத்துககாட்டாக நிற்பவர்களாவர். பொன்.சு.

**தாமான் தோன்றிக்கோன்:** தோன்றி மலைக்குரிய இம்மன்னனது இயற்பெயா தாமன என்பது. அப்பெயர் தாமான் என நீண்டு வழங்கலா யிற்று. தோனறிமலை திண்டுகல்லுக்கு மேறகில் பதி னைநது கல் தொலைவிலுளளது. இம்மலை இழுமென இழிதரும் அருவியையும் வான்தோய உயா உச்சியை யும் உடையது எனப் புறநானூற்றின 399-ஆம பாடல் புகலும். தாமான் தோன்றிக் கோனைப் பாடிய ஐயூர் முடவனார், சோழன குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனையும் பாணடியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியையும் பாடியிருத்தலின இவன அவர் கள் வாழ்நத காலத்தவன எனக் கருதலாம இவனைப் பற்றிய குறிப்பு ஐயூா முடவனார் பாடிய புறநானூறு 399-ஆம் பாடலில மட்டுமே காணப்படுகிறது இப பாடல் கிணைஞன் கூற்றாக அமைந்து இவனது கைவணமையைப பாராட்டுகிறது. கிள்ளிவளவனைத் தவிரப் பிறர்பாற் சென்று பொருள்பெறேன எனறி ருந்த ஐயூர் முடவனாா, 'தாமான தோனறிக்கோன அறவருள சிறநத அறவன; மறவருள் சிறந்த மற வன; மளளருள் சிறநத மளளன; தொலலோர் மர பில் வந்தவன' எனப் பிறர் புகழக் கேட்டுத் தம் கிணையை முழககி அங்குச் சென்று தேரிற பூட்டி ஓட்ட நலல பகடு வேணட, அவன் உடனே ஆனிரை களை ஊர்தியோடு நல்கினான்' எனறு பரிசில விடை என்னும துறையில் கிணைஞன கூற்றாகப் பாடி இவ னது கொடைநலம் புகழ்வா. இரா.சா.

**தாமிரபருணி:** பொருநை ஆறு எனப்பட்ட தண்பொருனை ஆற்றின பெயரே சிதைந்து தாமிர பருணி எனறாயிற்று இது தெனபாணடி நாட்டில் மேற்கு மலைத் தொடரிலுள்ள பொதிகைமலை அல் லது அகத்தியர் மலையில (உயரம் 6132 அடி) தோன்றி 120 கி.மீ. ஓடிப் புன்னைக் காயல் எனனு மிடத்தில் மன்னார் குடாக் கடலில் கலககிறது. பொதிகை மலைமீது இவ்வாறு 24 கி.மீ. ஓடிய பின னர்த் திருநெல்வேலி மாவட்டத்தின் சமவெளிப் பகுதியில் 96கி.மீ. பாய்கிறது. இம்மாவட்டத்திலுளள அம்பை, திருநெலவேலி, சீ வைகுண்டம், திருச்செந் தூர் வட்டங்களில 5000 ச. கி.மீ. பரப்பு நிலப்பகு தியை இந்த ஆறு செழிப்பாக்குகிறது. இந்நதியின நீர் முழுவதும் மக்களால் பயன்படுத்தப்பட்டுவிடுகிறது.

**பழைமை:** இந்த ஆறு வியாசபாரதத்திலும், வால் மீகியின இராமாயணத்திலும், காளிதாசரின் இரகு வமிசத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளது. வராக மிகிர ரும் இதுபற்றிக் கூறியுள்ளார். மேலைநாட்டு வர லாற்று அறிஞர்களான மெகசுதனீசும் (கி.மு. 302), பெரிப்புளூசு எனனும் நூலும் (கி.பி. 80), தாலமியும் (கி.பி. 150), அசோகரின் (கி.மு. 273-232) கல்வெட்டு களும் புத்தசமய அறிஞர்களின நூல்களும இநத ஆற்றினைத் 'தாம்ப பனனி' எனக குறிககினறன. பணடைக் காலத்தில ஈழத்தீவிற்குத் 'தாமப பனனி' எனற பெயர் வழஙகிற்று எனறும், அநநாட்டவர் தென தமிழ் நாட்டில் குடியேறி வாழத தொடஙகிய பொழுது, தஙகளுடைய நாட்டின நினைவாக இந்நதி குத் 'தாமப பன்னி' எனப் பெயரிட்டனர் எனறும், அதுவே தாமிரவருணி என மாறிற்று எனறும சிலா கருதுகினறனர். பணடைத் தமிழ் நூல்களிலும் இது பொருநை, பொருநல், தணபொருநை, தண பொருந தம் எனப் பல பெயாகளில் வழஙகப்பட்டுளள மையைக் காணலாம.

**துணை ஆறுகள்:** பொதிகை மலையில இவவாற் றுடன பேயாறு, உளளாறு, பாமபாறு, காரியாறு கௌடலையாறு, மயிலாறு, சோவையாறு ஆகிய துணை ஆறுகள சேர்நது இது பேராறாகத திருநெல வேலி மாவட்டத்திற்குள நுழைகிறது. சமவெளிப பகுதியில் இதனுடன கலல்டைக் குறிச்சிக்கு அருகில மணிமுத்தாறும் கோரையாறும், திருபபுடை மருதூா அருகில் வராக நதியும், தருவை எனனும ஊரின அரு கில பசசையாறும், சீவலப்பேரி அலலது முககூடல் அருகில் சித்திரா நதி அலலது சிற்றாறும கலககின றன.

**அருவிகளும், அணைகளும்:** தாமிரவருணி செல் லும் வழியிலுளள 30 மீ உயரமுள்ள 'வானதீர்த்தம் அல்லது பாவதீர்த்தம்' குறிப்பிடத்தக்கது. கீழ ணைக்கு அருகில 'கலியாண தீாத்தம' எனனும அருவி 100 மீ. உயரத்திலிருநது விழுகிறது. இத னைப் 'பாப விநாசம்' அலலது 'பாப நாசம' எனவும குறிப்பிடுவர். இதில் 1942-இல் கட்டப்பட்ட பாப நாசம் அணை 5500. க. அடி கொளளளவு உடை யது. இதிலிருந்து 9 கி மீ. தொலைவிலுள்ள கீழணை யிலிருநது பாபநாசம நீாமினவிசை நிலையததிற்கு நீர் கொணடு செலலப்பட்டு மினசாரம் உணடாககப் படுகிறது.

**பேரூர்கள்:** தாமிரபருணி பாயும் பகுதியிலுள்ள பேரூாகளில் அம்மை வட்டத்திலுளள பாபநாசம், அம்பாசமுத்திரம், திருப்புடைமருதூர், சேரன மாதேவி; திருநெல்வேலி வட்டததிலுளள திருநெல் வேலி மாநகர், செப்பறை, சீவலப்பேரி அலலது முக் கூடல, திருட்டினாபுரம, ஆதித்தநலலூர், சீ வைகுண டம் வட்டத்திலுளள சீவை குணடம், ஆழ்வார் திரு நகரி, கொற்கை, திருச்செந்தூர் வட்டததிலுளள திருசசெநதூர் அல்லது திருச்சீரலைவாய்; தென்காசி வட்டத்திலுள்ள தென்காசி நகர், திருக்குற்றாலம் ஆகியவை குறிப்பிடத்தக்கவை. சி.இரெ.

**துணை நூல்கள்:**

**பெருமாள், கோ.வே**, பொருநை வளம், திருநெலவேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1977.

Rao, K.L., Indias' Water Wealth, Orient Longman Limited, New Delhi, 1975.

***தாமினிக்கா***, கரீபியன் கடலில, காற்று வரு திசையில அமைந்துள்ள தீவாகும். இதன் கிழக்கில் அட்லாண்டிக்கு மாககடலும், மேறகில கரீபியன் கடலும் காணப்படுகின்றன. வடக்கே காணப்படும் குவாடிலோபு (Guadeloupe), மாரிகலான்டே (Marie Galante) ஆகிய பிரெஞ்சுத் தீவுகளுக்கும், தெற்கில் உள்ள மாட்டினீக்குவுக்கும் (Martinique) இடையில அமைநதுள்ளது. தாமினிக்கா (Dominica) முதனமுத லில கொலம்பசினால கண்டுபிடிக்கப்பட்டது.

பிரெஞ்சுக் குடியேற்றமாக இருந்த தாமினிக்கா, கி.பி. 18-ஆம் நூற்றாணடில நடைபெற்றுவநத ஆங கில-பிரெஞ்சுப் போட்டி முடிவுற்ற பின் கி.பி. 1805-இல் பிரிட்டானியர் வசமாகியதுடன் அதிலிருந்து பிரிட்டானிய ஆட்சிக்குட்பட்ட நிலப்பகுதியாக (Possesion) இருந்து வந்தது. மேற்கு இந்தியத் தீவு களின் கூட்டமைபபில் (Federation) (1958–62 காலத தில்) சேர்நதிருந்தது. பிறகு 1967-இல் பிரிட்டனுடன உள்நாட்டுச் செய்திகளைத் தீர்மானிக்கவலல, தன் னாதிக்கத்தகுதி கொணட சுதந்திரமான ஒரு மாநில மாக இணைந்தது. சுதந்திரக் குடியரசாக 1978 நவம்பர் மாதம் 3ஆம நாளனறு மாற்றம் பெறறது. ஆனால் வெளிநாட்டுச் செய்திகளுக்கும் பாதுகாப்புச் செய்திகளுக்கும் பிரிட்டனே பொறுப்பாக இருந்தது.



தாமினிக்காவின் தெற்குக்கடற்கரை

நாட்டின வடக்கு, தெற்காக மிக அடர்த்தியான காடுகளைக் கொண்ட மலைப்பகுதி அமைந்துள்ளது. இதில் உறபத்தியாகும் இலாயூ (Layou), குவானறி (Quanery) ஆறுகள் முறையே மேறகாகவும, கிழக்கா கவும் பாய்கின்றன. இங்கு மிகஉயரமான மலைத் தொடரான தையாபிளாட்டின (Diablotin) 1447மீ உயரமுடையது.

எரிமலை நிலைவுருவத்தோற்றத்தைக் கொண்ட இத்தீவின பரப்பு 751 ச கி.மீ. கொதி நீருற்றுக்கள (Hot Springs), எரிமலை வாய்கள (Volcanic vents) தெனபகுதியில் காணபபடும். கடல மட்டத்துக்கு மேல 800மீ. அளவில காணப்படும் கொதி நீர் ஏரியும் (Boiling Lake) இடையிடையே செயறபடுகினற கந்தக நீரூற்றுகளும (Sulfur geyser) சிறபபான நில வுருவங்களாகும்.

மலைப்பகுதிகளில் மழைவீழ்ச்சி சராசரி 250 அங குலமாகவும், கரையோரப் பகுதிகளில் 70 அங்குல மாகவும் இருக்கினறது. ஆணடுச் சராசரி வெபப நிலை 80°F (27°C). மிக வெப்பமுளள மாதமான செப்டம்பரில் 82°F (28°C) ஆகவும், மிகக் குளிருளள மாதமான பிபபிரவரியில் 77°F (25°C) ஆகவும் உள ளது.

நாட்டின் மொத்த மக்கள்தொகை 74,859(1981) ஆகும். தலைசிறந்த நகரமாக உரோசா (Roseau) விளங்குவதுடன 20,000க்கு மேற்பட்ட குடியிருப பாளர்களையும கொணடுள்ளது. பொது நல நாடு களில் ஒன்றான தாமினிக்காவின் மககள் தொகை நெருக்கம சதுர மைலுக்கு 259 (1984) ஆகும். மொத்த மக்கள தொகையில 46 விழுக்காட்டினர் நகரங்களில் காணப்படுகின்றனர். ஆங்கிலம் அலுவல் மொழியாக விளங்குகின்றது. தேசிய உறபத்தி 761 மிலியன் அமெரிக்கத் தாலர்களாகும் (1982). கறுப்பு இனத்தவர்கள பெருமபானமையினராக உளளனா. கலப்பின மக்கள, வெளளை நிறத்தவர் மற்றும் ஆசிய நாட்டவர் சிறுபானமையினராகக் காணப்படுகினற னர். மொத்த மக்கள் தொகையில் 80 விழுககாட்டினர் உரோமன் கத்தோலிக்க மதத்தினைச் சோந்தவர் களாக உளளனர்.

வளமான மண் அமைப்பை இந்நாடு கொண்டிருப்ப தனால் வேளாண்மையும குறிப்பாக வெப்பமண்டலப் பழவகைகளும் தலையாய பொருளாதார நடவடிக்கை யாக உள்ளன. எலுமிச்சம் பழச்சாறு (Lime Juice), எலுமிசசை எண்ணெய்(Oil), மதுபானம் தயாரித்தல், சவர்க்காரம், பழங்கள், பதனிடல் ஆகியவை முதன் மைத் தொழிலாக இடம் பெறுகிறது. உணவு வகைகள், குளிகை, புகையிலை, துணி வகைகள், இயந்திரங்கள்

ஆகியவை இறககுமதி செயயப்படுகினறன. காடுகள மிக்க அளவில் வளத்தைக கொணடிருபபதனால் சநதைப்படுத்தககூடியஅளவுககுவெட்டுமரதொழில விருத்தி பெறறுளளது. இநநாட்டில் மிக்க அளவில் வாழையும(Bananas)தேஙகாயும உற்பத்தி செயயபபடு கினறன; சுறறுலாப் பயணிகளைக கவரும் அழகிய நாடாகவிருககினறது. வெளிநாடுகளுடன சருவதேச முறையில கடல வழியாகவும, ஆகாய வழியா கவும் தொடாபுகள வளாசசியடைநதுளளன. நாட்டின தலா மொதததேசிய உறபத்தி 761அமெரிக்கததாலர் (1982)களாக இருநதது. எஸ.அ.நோ.

***தாமினிகன்குடியரசு:*** கரீபியனகடலில்அமைநதுளள இததீவு கி.பி. 1492 திசமபா 2-ஆம் நாளன்று கொலமபசினால் கணடுபிடிககப்படடதன பின, நீணட காலமாக இசுபானியோலா(Hispaniola)எனப பெயர் பெற்றிருநதது. தாமினிகன குடியரசில (Dominican Republic) கி.பி 1496-இல் கொலமபசின சகோதரனான பார்த்தலோமியு எனபவனால சாந்தோ தொமிஙகோ(Santo Domingo)எனும நகரம் நிறுவப் பெற்றது. இத்தீவின கிழககுப பகுதியில 2/3 பகுதி நிலபபரப்பைக கொணடது தாமினிகன் குடியரசாகும். ஏனைய மேறகுப் பகுதி எயிட்டி (Haiti) எனப்படும. புதிய நாடுகள் கண்டுபிடிக்கப்பட்டு, இசுபானியரினால குடியமர்ததப்பட்ட தொடககப் பகுதிகளுள இதுவும ஒனறு.

மேற்குப் பகுதியில அமைநதிருக்கும எயிட்டிக் குடியரசு பிரெஞ்சுக்காரரால கைப்பறறபபட்டு அவாகளால மக்கள குடியேறறம் செயயபபெற்றது. சாநதோ தொமிஙகோ கி பி 1795-இல பிரெஞ்சுக காரருககு விட்டுக கொடுககப்பட்டது. ஆனால், கி பி. 1808இல தாமினிகன மக்கள கிளாநதெழுநது புகழ வாயநத பாலோ இனகாடோப் (Palo Hincado) போரில, பிரெஞ்சு ஆட்சியின ஆதிககததை முடிவுக குக கொணடு வநதனா. தலைநகரமான சாநதோ தொமிஙகோ கைப்பற்றபபட்டதுடன பிரிததானியக கடறபடையின உதவியுடன பிரெஞ்சுககாரர் சமர சத்தின பேரில் விட்டுககொடுககக கட்டாயப்படுததப் பட்டதனால குடியேறறம மீணடும இசுபானியா வசமாகியது.

இககாலததிலிருநது கி.பி.1821 வரை சுதநதிர மாக இருநதாலும், எயிடடி படையெடுத்து இந நாட்டைக கைப்பறறி கி.பி. 1844-வரை தனது ஆட்சியினகீழ வைததிருநதது. எயிட்டியின ஆட்சி கி பி. 1844-இல முடிவுக்குக கொணடுவரப்பட்டு தாமினிகன குடியரசு நிறுவப்பட்டதுடன அதறகென அரசியல சட்டமும் வரையறுககபபட்டது இககுடியரசு கி.பி.




தாமினிகன் குடியரசு அமைவிடம்



சாந்தோ தொமிங்கோ நகரம



சாந்தோ தொமிஙகோவிலுளள
கொலம்பசு சிலையும் புனித ஆலயமும்

1850-இல பிரிட்டனால் முதனமுதலாக ஏற்றுக்கொள ளப்பட்டது. அமெரிக்கக் கடற்படையினால 1916-24 ஆணடுக் காலத்தில் கைப்பற்றப்பட்டு அவர்களின் ஆதிக்கத்தின்கீழ் இருந்தது. தலைநகரம் சாநதோ தொமிங்கோவில இருந்து 1936-இல் கியாதது துயிலோவுககு (Ciudad Trujillo) மாற்றப்படடது. சாந்தோ தொமிஙகோவே மீண்டும 1961-இல் தலை நகரமாயிற்று.

இககுடியரசின நிலப்பரப்பு 48,442 சதுர கி.மீ. மொத்த மக்களதொகை 1981கணிபபினபடி 5,647,977 ஆகும். 1983-இல் இது 6.3 மிலியன் மககளைக் கொணடிருந்தது. மககள தொகை நெருக்கம் சதுரக் கிலோ மீட்டருககு 122 போ (சதுர மைலுக்கு 317 பேர்). மககளில 60 விழுக்காட்டினா சிறறூர்களில வாழ்கினறனர். ஏனையோா நகரஙகளில வாழ்கினற னர். மொத்த மக்களதொகையில 47 விழுக்காடு 15 வயதுக்குக கீழப்பட்டவர்களாகவும், 65 விழுககாடு எழுதப்படிக்கத் தெரிந்தவர்களாகவும் (Literacy) உளளனா. நாட்டு மக்களில் இசுபானிய மரபினர் ஒரு பகுதியாக இருந்தாலும், ஆப்பிரிகக, ஐரோப்பிய மககள தொகையில் இரத்தக் கலப்புக் கொணட கலப்பு இனமாக இருப்பது குறிப்பிடத்தக்கது. மொத்த மக்கள தொகையில் முலாத்தோ (Mullatto) இனம் 73 விழுககாடு, வெள்ளை நிறத்தவர் 16 விழுக் காடு, கறுப்பு இனம் 11 விழுக்காடு. மககளதொகை யில் 90 விழுக்காட்டினர் உரோமன கத்தோலிகக மதத்தினைச் சேர்நதவர்கள்.

வெப்ப மணடிலககரையோரக் காலநிலையைக் கொணடது இது. மழை வீழ்சசி பெருமபாலும கோடைக்காலங்களில மே தொடங்கி நவம்பா வரை பரநதுள்ளது. வடககிலும் கிழககிலும் மழை வீழ்ச்சியினளவு மிகுதி. சராசரி மழைவீழசசி ஆண டொன்றிறகு 50 அங்குல மாகும (1400 மி.மீ.). பெரும் புயல்களின் தாக்கம் சூன-நவமபர் காலங் களில இடம் பெறுகினறது

கனிப்பொருள்களான அலுமினிய மண வகை (Bauxite), வெள்ளி, விழுப்பொன (Platinum), தங்கம், நிககல் ஆகியவை கிடைககின்றன. 152,250 கண்டி அலு மினியம 1982-இல் உற்பத்தி செய்யபபட்டது. தலையாய கைததொழில் தயாரிப்புகளாகச் சருக் கரை, பருத்தி, செயறகைப்பட்டுத் துணிகள், சிமெணடு குடிவகைகள, வெணசுருட்டு, செருப்பு ஆகியவை காணப்படுகின்றன. இவற்றுடன் வருமானம தரும துறையாகச் சுற்றுலாத்துறையும் அமைந்துள்ளது. வருகை தந்த சுற்றுலாப் பயணிகளின எணணிக்கை 1981-இல-613,774 ஆக இருந்தது. மொதத தேசிய உற்பத்தி தலா 1140 (1980) அமெரிக்கத் தாலர்கள்,



கரும்பு வேளாண்மை

வேளாணமை செழிப்புள்ளதாக இருக்கிறது. கரும்புப் பயிர்செய்கை தலைமையான தொழில. தென்கிழக்குப் பகுதியில பெரிய கரும்புத் தோட்டங்கள் காணப்படுகினறன. கருமபேயன்றிக் கொக்கோ, வாழை, நிலக்கடலை, புகையிலை, காப்பி என்பனவும பயிரிடப்படுகின்றன. கால்நடை வளர்ப்புத் தலைசிறந்த தொழிலாக இடம் பெறுகின்றது. எஸ்.அ.நோ.

**தாமோதர் பள்ளத்தாக்குக் கழகம்:** துறைகள் (Departments), பொதுக் கழகங்கள (Public Corporations), தன்னிச்சை ஒழுங்குபடுத்தும் ஆணையங்கள (Independent Regulatory Commissions) ஆகியவை அரசாங்கத்தின் பணிகளைச் செயற்படுத்துவதற்காக ஏற்படுத்தப்பட்ட நிருவாக அமைப்புகளாகும். இவற்றுள் பொதுக்கழகங்கள், வணிகத் தொடர்புள்ள பொருளாதார நிறுவனங்களை அரசு ஏற்றுச் செயற்படுத்துவதற்காக ஏற்படுத்தப்பட்டவை. 'ஒவ்வொரு பொதுக் கழகமும் சட்டமுறையிலமைந்த ஒரு மனிதன்' என்று பேராசிரியர் கேராவும், 'பலர் ஒருங்கிணைந்து ஒருவராகச் செயலாற்றுவதறகாக ஏற்பட்ட ஓர் அமைப்பு' என்று பிபினரும் குறிப்பிடும் பொதுக்கழகங்கள, வணிக சுதந்திரத்துடனும், அரசின் கட்டுப்பாட்டுடனும் செயற்படுவதற்கு வழிகள் வகுக்கப்பட்டுள்ளன. இப்பொதுக் கழகங்கள அரசின் முழு உடைமையாகவும், தனிப்பட்ட சட்டங்களின் அடிப்படையிலும், சட்டம சம்பந்தப்பட்ட பொருளகளுக்குத் தனி அமைப்புகளாகவும, பொதுவாக நிதி விவகாரங்களில் தனித்து இயங்கும் சுதந்திரம் பெற்ற அமைப்புகளாகவும் செயறபடுகினறன.

அமெரிக்காவில் முதன்முதலாக 1904-ஆம் ஆணடு பனாமா இருப்புப் பாதைக் கழகம (Panama Rail Road Company) என்ற பொதுக் கழகம் ஏற்படுத்தப் பட்டது. இலணடன துறைமுக அதிகாரக்குழு (Port of London Authority) எனற பொதுககழகம் இஙகிலாந்தில் ஏற்படுத்தப்பட்ட முதல் பொதுக கழகமாகும். இப்பொதுக் கழகம் 1908-ஆம் ஆணடு ஏறபடுத்தப்பட்டது. இந்தியா சுதநதிரம அடைவதற்கு முன்பு ஏறபடுத்தபபடட ஒரே பொதுக்கழகம் 1934 -ஆம ஆண்டில் ஏறபடுத்தப்படட மைய வங்கி (Reserve Bank) ஆகும். இநதியா சுதநதிரம அடைந்ததற்குப் பிறகு ஏற்படுததப்பட்ட முதல் பொதுக்கழகம் 1948-ஆம் ஆணடு நிறுவபபட்ட புனாவாழவு நிதிக் கழகம (Rehabilitation Finance Corporation) ஆகும். இதைத் தொடர்நது அநத ஆணடிலேயே தாமோதர் பளளத்தாககுக் கழகமும (Damodar Valley Corporation) ஏற்படுத்தப்பட்டது.

பல்வேறு நாடுகளில செயறபடுகின்ற பொதுக் கழகங்கள் வணிக இயலபான நிறுவனங்களை மேற்பார்வை செயவதற்காகவோ, ஒனறுககு மேறபட்ட குறிக்கோளுடன ஒரு குறிப்பிட்ட பகுதியின முனனேற்றத்திற்காகவோ ஏறபடுத்தபபட்டவை. பொதுவுடைமை, பொதுபபொறுப்பு, வணிக நிருவாகம் ஆகிய மூனறும் இப்பொதுக கழகஙகளுககு வழஙகப் பட்டுளளன.

**பணிகள்:** தாமோதர் பளளத்தாக்குக கழகம், அமெரிககாவிலுளள தென்னசிப் பளளத்தாக்கு அதிகாரக் குழுவின (Tennessee Valley Authority) குறிககோள்கள், அமைப்பு, அதிகாரஙகள் ஆகியவற்றைப பின்பற்றி ஒருகுறிப்பிட்ட பகுதியின் முன்னேற்றத திற்காகவும், ஒனறுக்கு மேறபட்ட குறிக்கோளுடன் இயஙகவும் ஏற்படுத்தப்பட்டது. இக்கழகம் பீகார், மேற்கு வங்காளம் ஆகிய மாநிலஙகளின முனனேற்றத்திற்காக, அரசின் சட்டத்தால் அமைககபபட்டது. இவ்விருமாநிலஙகளும இக்கழகததிற்குத் தேவையான நிதியை வழஙகியுள்ளன. நடுவண் அரசின் ஒப்புதலுடன் பொதுமக்களிடமிருந்து நிதிக்கடன வாஙகவும், நிலஙகள் வாங்கவும், அவற்றை ஈடாக வைத்து வஙகிகளிலிருந்து பணம பெறவும் இது அதிகாரங்களைப் பெற்றுள்ளது. இவ்விரு மாநிலஙகளில் பாசன வசதியைப் பெருக்கியும், மின்விசை வசதி செய்து

தந்தும், வெள்ளப் பெருக்கத்தைத் தடைசெய்து வெள்ளப் பாதுகாப்பு அளித்தும் இக்கழகம் வருமானத்தை ஈட்டுகிறது. இக்கழகம் ஊதியம் அடைந்தால், தனியார் நிறுவனங்களைப் போல் இதுவும் வருமான வரிக்கு உட்பட்டதாகும். தேய்மான நிதி, நெருக்கடி நிதி போன்றவற்றை ஒதுக்கிய பிறகு கிடைக்கும் நிகர ஊதியத்தை அல்லது பற்றாக்குறையை இரு மாநிலங்களும் முதலீட்டின் பங்கு வீதத்தின் அடிப்படையில் பகிர்ந்துகொள்ளுகின்றன.

**அமைப்பு**: நடுவண் அரசாங்கம் இக்கழகத்தின் தலைவரையும், இரு உறுப்பினர்களையும் பங்குபெறும் மாநில அரசுகளைக் கலந்தாலோசித்து அமர்த்துகின்றது. உறுப்பினர்களின் பதவிக்காலம் சட்ட அடிப்படையில் வரையறுக்கப்படாததால் ஓர் உறுப்பினரை பதவியினின்று விலக்கவோ, அப்போதைக்கு நீக்கவோ முடியும். இக்கழகத்தின் நிருவாகத்தைக் கவனிக்கக் கூடிய முக்கிய அதிகாரிகளான செயலாளரையும், நிதி ஆலோசகரையும், ஒரு துணைச் செயலாளரையும், இரண்டு உதவிசார் செயலாளர்களையும் நடுவண் அரசு நியமிக்கிறது.

செயலாளர்தான் இக்கழகத்தின் தலைமை நிருவாக அதிகாரி (Managing Director) ஆவார். இக்கழகம் நிதி ஆலோசகரைக் கலந்தாலோசித்துக் குறிப்பிட்ட படிவத்தில் வரவு செலவுத் திட்டத்தைத் தயாரிக்கிறது. இக்கழகத்தின் நிதியாண்டு அக்டோபர் மாதம் தொடங்குகிறது. கழகத்தின் வரவு செலவுத் திட்டம் அதில் பங்கு பெறும் மாநில அரசுகளின் சட்டமன்றங்களுக்கு அளிக்கப்படவேண்டும். இக்கழகத்திற்கென்று ஒரு தணிக்கைத்துறை உள்ளதால் இக்கழகத்தின் கணக்குகள் இந்தியத் தணிக்கைத் துறைத் தலைவரது தணிக்கைக்குட்பட்டனவல்ல. இக்கழகம், நடுவண் அமைச்சரவையின் பாசன மின் அமைச்சகத்துடன் இணைக்கப்பட்டுள்ளது.

**கட்டுப்பாடுகள்**: பொதுக் கொள்கை வகுப்பதில் மட்டும் நடுவண் அரசிற்கும், பங்கு பெறும் மாநில அரசுகளின் கட்டுப்பாட்டிற்கும் உட்பட்டுச் செயற்படும் இக்கழகம், பிற எல்லாத் துறைகளிலும் தன்னுரிமை கொண்டு செயற்படுகிறது. இக்கழகம் பொறுப்புடன் செயற்படுவதற்கு நடுவண் அரசும், பங்குபெறும் மாநில அரசுகளும் பின்வரும் முறையில் கட்டுப்பாட்டைச் செலுத்துகின்றன. முதலாவதாக இக்கழத்தின் பெருந்தலைவரையும் (Chairman), இரு உறுப்பினர்களையும் பங்கு பெறும் மாநில அரசுகளைக் கலந்து ஆலோசித்து நியமனம் செய்வதன் வாயிலாகவும், இக்கழகத்தின் செயலாளரையும், உதவிச் செயலாளரையும், இரு உதவி சார் செயலாளரையும் நிருவாக அமைப்பில் நடுவண் அரசு அமர்த்துவதன் வாயிலாகவும், நிதி ஆலோசகரை நடுவண் அரசு நியமித்து அவரது மேற்பார்வையில் வரவு செலவுத் திட்டம் தயாரிக்கப்படுதலின் வாயிலாகவும் இக்கழகத்தின்மீது கட்டுப்பாடு செய்யப்படுகிறது. இரண்டாவதாக இக்கழகம், பங்குபெறும் மாநில அரசுகளின் சட்டமன்றங்களுக்கு ஒவ்வொரு அக்டோபர் மாதமும் வரவு செலவுத் திட்டத்தைத் தயாரித்து அளிக்க வேண்டும். அவ்வாறு அளிக்கப்படும் வரவு செலவுத் திட்டத்தை மாநிலச் சட்டமன்றங்கள் ஆய்வுசெய்து, சரியான முறையில் இக்கழகம் பணத்தைச் செலவழித்திருக்கின்றதா என்பதை அவை கண்காணிப்பதன் வழியாக இக்கழகத்தைக் கட்டுப்பாடு செய்கின்றன. மூன்றாவதாக இக்கழகத்திற்கு எல்லாத் துறைகளிலும் அறிவுரை வழங்குவதற்கென நடுவண் அரசு அறிவுரைக் குழுக்களை (Advisory Councils) நியமிக்கிறது. கழகத்தின் பணிகளை ஆய்வு செய்வதற்கென ஒரு தொழில்நுட்பக் குழுவையும் பங்குபெறும் மாநில அரசுகள் அமர்த்துகின்றன. இக்குழுக்களின்மூலமாக நடுவண் அரசும், பங்கு பெறும் மாநில அரசுகளும் இக்கழகத்தைக் கட்டுப்பாடு செய்கின்றன. நான்காவதாகப் பங்குபெறும் மாநில அரசுகள் கழகம் செய்யும் பணிகளைக் குறித்து விவாதிப்பதற்கென அவ்வப்போது மாநில மாநாடுகளைக் கூட்டி இக்கழகத்தைக் கட்டுப்பாடுசெய்கிறது. ஐந்தாவதாகக் கழகம் முதலீடு செய்வதற்கும், கடன் வாங்குவதற்கும் நடுவண் அரசின் உடன்பாடு தேவை. இவ்வாறு உடன்பாடு வழங்குவதன் வாயிலாக நடுவண் அரசு இக்கழகத்தைக் கட்டுப்பாடு செய்கிறது. கடைசியாகப் பாசனக் கால்வாய்கள் அமைப்பது சம்பந்தப்பட்ட பணிகளைப் பங்குபெறும் மாநில அரசின் ஒப்புதலுடன் தான் செய்யமுடியும். தகுந்த காரணமில்லாமல் இவ்வொப்புதல் மறுக்கப்பட்டால், இக்கழகத்திற்கும், அது சம்பந்தப்பட்ட அரசுகளுக்குமிடையே எழும் வழக்குகள் இந்தியத் தலைமை நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியால் நியமிக்கப்படும் நடுவரது முடிவுக்கு விடப்படும்.

'அரசுத்தொழில் நிறுவனங்களின் திறமை அறிக்கை'யில் (Report on the Efficient Conduct of State Enterprises) தாமோதர் பள்ளத்தாக்குக் கழகமானது, மத்திய மற்றும் மாநில அரசுகளின் அதிக அளவு தலையீட்டுக்குள்ளாகியிருக்கிறது என்றும், இக்கழகத்தின் நிருவாகத்தில் தொழிலாளர்களுக்குப் பங்கு இல்லாத நிலை உள்ளதென்றும், வேண்டியவர்களுக்கு ஆதரவு அளிப்பதாலும் எழக்கூடிய குறைபாடுகளை அகற்றத் தகுந்த வழிமுறைகள் இல்லை

என்றும், அமெரிக்காவிலுளள தென்னசிப் பளளத் தாக்கு அதிகாரக குழுவிறகு உள்ளது போல இது செயறபடும் பகுதிகளிலுள்ள மக்களுககு இக்கழகம பொறுப்புள்ளதாக அமையவிலலை எனறும் கூறபபடு கிறது. மேற்கூறிய குறைபாடுகள நீக்கப்பட்டால இக்கழகம் சிறநத முறையில செயற்பட இயலும.

கே.பா.

**துணை நூல்கள்:**


Gorwala, A.D , Report on the Efficient Conduct of State Enterprises, Delhi, 1961.

Tyagi,A.R., Public Administration, Atma Ram & Sons, Delhi, 1974.


## தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டம்.

மேற்கு வஙகாள மாநிலத்தை வளப்படுத்தும் பகீரதி நதியின துணைநதிதான தாமோதா நதி. மயூராட்சி, கங்கசப்தி, உரூபநாராயண் ஆகிய நதிகள பகீரதியின துணை நதிகளாகும். இப்பகீரதி நதியைததான கல கத்தா முகததுவாரப் பகுதியில ஊக்ளி நதி எனற பெயரிட்டு வழஙகுகின்றனா. பீகார், வங்காளம ஆகிய இரு மாநிலங்கள வழியே வளைந்துசெனறு ஊக்ளி நதியின் முகத்துவாரததில சஙகமமாகும் தாமோதர் நதி அகனற பளளத்தாக்கை ஏற்படுதது கின்றது. இது சோட்டா நாக்பூர் குனறுகளில தோன்றுகிறது. இதன் பிறப்பிடததிலிருநது ஊக்ளி வரை இதன மொத்த நீளம 848 கி.மீ.

மேற்கு வங்காளத்தில் இதனைத் 'துயரநதி' (River Sorrow) என்றே கூறுகின்றனர். ஏனெனில் சீனாவில ஓயாஙகோ (Ho Yang Ho) நதி அதன ஓட்டத்தை அடிக்கடி மாற்றுவதன் மூலம் அழிவை ஏற்படுத்துவதுபோலத் தாமோதர் நதியும் பீகார, வங்காள மாநிலங்களுககுப் பெருத்த அழிவை வெள் ளப் பெருக்கால் ஏறபடுத்தி வருகிறது. இதனைக கட்டுப்படுத்த முடியாததனால் மழைக்காலஙகளில் ஏறத்தாழ 18,000 சதுரக கிலோ மீட்டர் நிலப் பரப் பளவிற்கு இதனால் எப்போதும் ஆபத்து ஏறபடு கிறது. வெள்ளத்தினால் ஏறபடும் அழிவைக் கடடுப் படுத்த வேணடியும், இன்னும் பல்வேறு நோக்கங்க ளுடனும் அமெரிக்கக் குடியரசுத் தலைவா எப்.டி. உரூசுவெல்ட்டு காலத்தில இதுபோனற 'தென்னசி' (Tennesse) நதியின சிக்கல்களைச் சமாளிக்க நிறுவப்பட்ட 'தென்னசிப் பளளத்தாக்கு அமைப்பை (Tennesse Valley Authority) முன்மாதிரியாக வைத்து 1948-ஆம் ஆணடில் 'தாமோதர் பளளத்தாககுக் கழகம்' (Damodar Valley Corporation) என்னும் நிறுவனத்தை ஏற்படுத்தினார்கள். நீர்ப்பாசன வசதிகளுக்காகவும், வீணாகிவிடும நீரை ஒழுங்கு முறைப்படுத்துவதற்காகவும், மினதிறன உற்பத்திக காகவும பல குறிக்கோளகளை நிறைவேற்றவே இவ் வாணையம் ஏற்படுத்தப்பட்டது அது மட்டுமனறி தாமோதர் பள்ளத்தாககில நீா, நிலத் தாதுப் பொருளகள வளம் மிகுநதிருப்பதால் இவறறை முழு மையாகப் பயனபடுத்துவதே தாமோதா பள ளத்தாக்குப் பலநோக்குத் திட்டக் குறிககோளாகும.

**திட்டம:** தாமோதா பளளத் தாக்குத திட்டத்தில மொத்தம்எட்டுப்பெரும்அணைககடடுகள அடங்கும். பராக்கா துணை ஆற்றின குறுக்கே 1) மைததான (Maithon), 2) பாலபகாடி (Palpahadi), 3) திலயா (Tilya) அணைக்கட்டுகளும், தாமோதர் நதியின குறுக்கே 4)பஞ்சட்டுககுனறு (Panchatt Hill),5) ஆயா (Ayer) 6)பூமோ (Bumo) அணைககட்டுகளும்,கோனார் (Konar) துணை ஆற்றின குறுக்கே 7) கோனாா (Konar), 8) புக்காரோ (Bukaro) அணைககட்டுகளும் கட்டப்பட்டும முடிக்கப்பட்டும வருகினறன. இவை மட்டுமன்றி மூனறு மினதிறன உறபததி நிலையங களும், துர்க்காபூா பெரும் நீாப்பாசன அணைககட டும், பொக்காரோ மினஆக்க நிலையமும் தாமோ தா பளளத்தாக்குக கழகததினகீழ அமைநது செயற் படும பலநோககுத் திட்ட நிறுவனஙகளாகும. தாமோதா பளளத்தாக்குத் திட்டத்தின பணிகள முழுவதும கட்டி முடிக்கபபட 86 கோடி உரூபாய் செலவாகும் எனக் கணக்கிடப்பட்டுளளது ஆண டொன்றுக்கு 1180 மெ வா. மினசாரம உற்பததி செய்யும் திறன கொணடவை இந்நிலையங்கள. இம் முழுத் திட்டததினால வேளாணமைக்குப் பயனபடும் நிலத்தின பரப்பளவு 10,26,000 ஏககா நிலமாகும. அதுமட்டுமன்றி 137 கி.மீ. நீளமான இதன் கால வாய் துர்காபூர், கலகத்தா நகரஙகளுககிடையே போககுவரத்துககுப்பயன்படும்படியாகவும் இருக்கும். எடுத்துக்காட்டாக முதல கட்டததில் முழுவதும் காரைக்கட்டால (Concrate) கட்டி முடிககபபட்ட பராகக அணையின நீளம் 1147 அடி; உயரம் 112 அடி; நீர்த் தேக்கப்பரப்பு 26 சதுர மைல்கள.

பீகார், வஙகாளம் ஆகிய இரு மாநிலஙகளையும் சேர்த்துப் பயனடையக்கூடிய மொத்த நிலப்பரப்பு 24, 235 சதுர கி.மீ. ஆகும். மூனறு மின் உற்பத்தி நிலையஙகள: 1) பொககாரோ, 2) சந்திராபுரம, 3) துர்காபூர் என்பவை.

**தில்யா அணை:** இந்த அணை கோதர்மா (Kodarma) புகைவண்டி நிலையத்திற்கு அருகில கட் டப்பட்டுளளது இது இரு பக்கங்களிலும் முழுக்காரைக் கட்டால் ஆனது. இதன் நீளம் 1200 அடி; உயரம்

99 அடி. இவ்வணை நீரின் பரப்பளவு 3,20,000 ஏக்கர். (Acres.).

**கோனார் அணை:** பீகாரில் அசாரிபாக்கு (Hazari Bagh) மாவட்டத்தில் உள்ள கோனார் அணையின் நீர்ப் பரப்பளவு 17,300 ஏக்கர். 27 ச.கி.மீ. நீளத்திற்கு நீர் பரவுகிறது. அணையின் உயரம் 160 அடி; நீளம் 848 அடி; ஆனால் காரைக்கட்டும், மண் கட்டும் சேர்ந்து மொத்த நீளம் 3515மீ. இவ்வணை 1954-இல் கட்டிமுடிக்கப்பட்டது.

**மைத்தான் அணை:** இது பராக்கா நதியில் அமைக்கப்பட்டுள்ளது. அசன்சால் தொடர்வண்டி நிலையத்திற்கு 25.5கி.மீ.கல்தொலைவிலுள்ளது.உயரம் 48.8மீ. நீளம் 612மீ. குறிப்பாக மைத்தான் அணை வெள்ளத்தடுப்பு நோக்கத்திற்காகக் கட்டப்பட்ட அணையாகும். இவ்வணையின்கீழ் மின் உற்பத்தி நிலையம் ஒன்றுள்ளது. இங்கு 60,000 கி.வா. மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது. அணையின் இரு மருங்கிலும் 4453மீ. நீளத்திற்குத் தடுப்புச் சுவர்கள் கட்டப்பட்டுள்ளன.

**பஞ்சட்டுக் குன்று அணை:** பீகார் மாநிலத்தில் தாமோதர் நதியின் குறுக்கே தன்பாது (Dhanbad) மாவட்டத்தில் பஞ்சட்டு குன்று அணை கட்டப்பட்டுள்ளது. வெள்ளத் தடுப்புக்காகவும் மின்சாரம் உற்பத்திக்காகவும் கட்டப்பட்ட இவ்வணையின் மண் தடுப்புச்சுவர் நீளம் 2166மீ. காரைக்கட்டுக் கட்டுமானம் உயரம் 40.5மீ. நீளம் 368மீ. இரு பக்கங்களிலும் 4210மீ. நீளத்திற்குத் தடுப்புச் சுவர்கள் (Dykes) உள்ளன. நீர்ப்பரப்பு 12,14,000 ஏக்கர் (Acre). 40,000 கி.வா. மின்திறன் உற்பத்தி செய்யவல்லது. இது 1956-இல் தொடங்கப்பட்டது.

**தேனுகாட்டு அணை:** மத்திய அரசு, பீகார், வங்காள அரசுகளுக்கிடையே ஏற்பட்ட வேளாண்மை, மின்சாரத் துறைகளுக்கான உடன்பாடு காரணமாக தேனுகாட்டு (Tenughat) என்னும் அணையும் தாமோதர் நதியின் குறுக்கே கட்டப்படுகிறது. இவ்வணையிலிருந்து பெறப்படும் நீர் 'போசிது' (Bhojudih) என்னும் இடத்தில் தேக்கப்பெற்று அணை அமைக்கப்பட்டுள்ளது.

**துர்காபூர் அணை:** தாமோதர் நதியின் குறுக்கே துர்காபூரிலிருந்து 1.5கி.மீ. தொலைவிலும், அசன்சாலியிலிருந்து 40கி.மீ. தொலைவிலும் துர்காபூர் அணை (Durgapur Dam) அமைந்துள்ளது. 692மீ. நீளமும் 11.5மீ. உயரமும் உடையது இவ்வணை. இவ்வணைக்கு வலப்புறக் கால்வாயின் மூலம் 136கி.மீ. தொலைவு கல்கத்தாவிற்கு இராணிகஞ்சிலிருந்து நிலக்கரி கொண்டு செல்லப் போக்குவரத்துக்கும் பயன்படுகிறது தாமோதர் நதியின் நீர்.

**துர்காபூர் மின் உற்பத்தி நிலையம்:** இந்நிலையம் 32 கோடி உருபாய் செலவில் கட்டி முடிக்கப்பட்டுள்ளது. இந்நிலையம் மூலம் 150,000 கி.வா. மின்சாரம் உற்பத்தியாகிறது.

**பொக்காரோ நீர்மின் உற்பத்தி நிலையம்:** இது கோனார் நதியில் உள்ள கோனார் அணைக்கட்டிற்கு அப்பால் பொக்காரோவிலிருந்து 12 கல் தொலைவில் அசாரிபாக் மாவட்டத்தில் பீகார் மாநிலத்தில் அமைந்துள்ளது. இது 1953-இல் தொடங்கப்பட்டது. மின் ஆக்கத் திறன் 1,63,000 கி.வா. ஆகும். சாம்செட்பூர் இராபூர்-தாட்டா நிறுவனத் தொழிற்சாலைகள், காட்சிலா(Ghatsila) என்னுமிடத்திலுள்ள தாமிரச் சுரங்கம், வங்கம், பீகார் இரும்பு, நிலக்கரிச் சுரங்கங்கள், அசன்லால், சிந்திரி (Sindri), கல்கத்தா தொழிற்சாலைகள் அனைத்துக்கும் பொக்காரோ மின் நிலையத்தின் மின்சாரம் மிகவும் பயன்படுகிறது.

மேற்குறிப்பிட்ட அணைக்கட்டு, மின்நிலையத் திட்டங்கள் அனைத்தும் தொடங்கப்பட்டபோது மைய அரசாங்கமும், பீகார், வங்காள அரசாங்கங்களின் சார்பாளர்களும் தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டத்தை நிறைவேற்றத் தொடங்கினர். பல்வேறு திட்டங்கள் முடிந்துள்ளன.

ஆனால், 1963-ஆம் ஆண்டு முதற்கொண்டு நிருவாகத்திறமை, செலவுக்குறைப்பு ஆகியவற்றைக் கருத்திற்கொண்டு தா.ப.திட்ட அதிகாரம் வங்காள அரசுக்கு மாற்றப்பட்டது. மின் உற்பத்தித் திறன் அதிகாரம் முழுதும் மைத்தான் அணை நிலையக் கட்டுப்பாட்டிற்கு மாற்றப்பட்டது. மொத்தத்தில் தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டம் பீகார், வங்காளம் மாநிலங்களுக்கு ஒரு பெரும் அருட்கொடையாக இருப்பதாகவே கருதப்படல்வேண்டும். ஹ.அ.

**தாமோதரம் பிள்ளை, சி.வை., (கி.பி. 1832 1901)** இவர் ஈழநாட்டில், சிறுப்பிட்டி என்ற ஊரில் 12.9. 1832-இல் பிறந்தார். தந்தை வைரவநாத பிள்ளை. குலம், வேளாளர் குலம். சமயம், சைவம். படிப்பும் பதவியும்: சிறுவயதில் இவர் பட்டுக்கோட்டையில் உள்ள பள்ளியில் பயின்றார்; சுன்னாகம் முத்துக்குமாரக் கவிராயரிடம் தமிழ் இலக்கண-இலக்கியங்களைக் கற்றார். சென்னைப் பல்கலைக்கழகத்தில் அது

தொடங்கப்பட்ட கி பி.1857-இல் முதன்முதல் பி ஏ. பட்டம் பெறறவருள இவரும் ஒருவர். பினபு பி.எல. பட்டமும் பெறறாா இவர் முதலில, கோபபாய ஆசிரியர் பயிறசிக கல்லூரியிலே ஆசிரியராகவும, பினனர்த் 'தினவர்த்தமானி'யின் இதழாசிரியராகவும இருந்தார். களளிககோட்டை அரசினா கலலூரித தலைமையாசிரியராக கி பி.1857-இல பணிபுரிநதாா. பினனர்ச செனனை அரசியல வரவுசெலவுக் கணக்கு நிலையத தலைவராகவும பணிபுரிந்தாா. அபபோது இவர், தம் அலுவலகத் தலைவராற் பெரிதும பாராட்டப்பெற்றார். சிலகாலம வழக்கறிஞராகவும இருந்தார் புதுககோட்டை உயாநிலை நீதிமன்ற நீதித்தலைவராக கி பி.1887 முதல் இருநது அற நிலை தவறாது தொணடாறறினாா.



தாமோதரம் பிளளை, சி.வை.

**தமிழ்த் தொண்டு**` இவர் தமிழுககுச் செய்த தொணடுகள் பல. அவற்றுள சில குறிபபிடத்தககன. ஆங்கில மோகத்தால மயஙகிக கிடந்த அக்காலத தில் தமிழ்மொழியைப புறக்கணிப்பார் எவராயினும் அவரைத் துணிந்து கணடித்தார். கல்லூரிப் படிப்பின் போது தமிழெடுத்துப் படிப்போருக்கு மதுரைத் தமிழ்ச் சங்கத் தேர்வு நடத்தி அதில் வெற்றி பெறற வருக்குத் தம் செலவில பரிசுகள வழஙகி ஊககப் படுத்தினார். அத்தகைய மாணவர்களை வருவிததுக் கட்டுரை எழுதப் பணித்தார்; பாட்டியற்றச் சொலலி அவாதம் தகுதிக்கேறபப் பாராட்டும் பரிசும் தந்தார். அவவாறு பரிசு பெற்றவருள ஒருவர் வி.கோ. சூரிய நாராயண சாத்திரியார். 'தாமோ தரம்பிளளை சாலபெடுத்துச் சாற்றஎவர் தாமோ தரமுடை யார்' எனறு வி.கோ. சூரிய நாராயண சாத்திரியாரால பாராட்டப்பெறறவர் இவர்.

**தலையாய பதிப்புப் பணி**. தமபாலிருந்த ஆங் கிலப் புலமையையும், ஆராயசசித திறனையும தமிழ வளர்ச்சிககுப பயன்படுததினாா சி.வை. தாமோதரம பிளளை. பனையோலையில கிட நத அரிய பல தமிழ ஏடுகளில ஒருசிலவறறைப பெரு முயறசியுடன படித்துப் பல ஏடுகளுடன ஒபபிட்டுப,பாட வேறுபாடு களுடன முதனமுதலாக அச்சிட்ட பெருமை இவருக்கே உரியது 'பனையோலை ஏடுகளைப புறக கணிததால, அரிய தமிழ நூலகள அழிநதுவிடும எனறு பெருங கவலைகொணடு முதன்முதலில குர லெழுப்பிய பெருநதகை இவா. தமிழ மொழியைத் 'தாய'எனறு வணங்கிப் போறறுமளவுக்கு உணாசசி ஊட்டியவா.

'சங்கம் மரீஇய நூலகளுள சில இபபோது தானும்கிடைப்பது சமுசயம் எததனையோ திவ்ய மதுர கிரநதஙகள காலாநதரத்தில ஒனறனபின ஒனறாய அழிகின்றன. சீமானகளே! இவவாறு இறந தொழியும் நூலகளில உஙகளுககுச சறறாவது கிருபை பிறககவிலலையா? ஆசசரியம! ஆசசரியம! அயலான அழியக் காணகிலும மனம தளுமபுகின்றதே. தமிழ மாது நம் தாய் அலலவா? இவள அழிய நமக்குஎன எனறுவாளா இருககினறீாகளா?'எனபது இவா கூறறு. இதனால தமிழ் மொழியினமீது இவா கொணட அள விலாப் பறறுப் புலனாகின்றது இவா பதிபபிதத நூல்கள் நீதிநெறி விளக்கவுரை, வீரசோழியம(கி.பி. 1889), தணிகைப புராணம, (கி பி.1883), தொலகாப் பியப் பொருளதிகாரம் (கி பி.1885), கலித்தொகை (கி.பி.1887), இலக்கண விளககம், சூளாமனி (கி.பி. 1889), தொல்காப்பியச சொலலதிகாரம் சேனா வரையம், தொல்காப்பிய எழுததததிகாரம நச்சினாாக் கினியம் முதலானவை இவறறை இவரேமுதனமுதல பதிப்பித்தார். இவர் எழுதிவெளியிட்டவற்றுள் சூளா மணி வசனம, சைவ மகததுவம், நட்சத்திர மாலை, ஆதியாகம கீர்த்தனம் ஆகியவை குறிப்பிடத்தகுவன இவருடைய பதிப்புரைகளிலும முன்னுரைகளிலும் இவரது சிறநத ஆராய்ச்சித் திறனையும, திட்ப நுட்ப அறிவையும, உவமை முதலான அணிநயஙகளையும, நகைச்சுவையையும காணலாம். 'உதய தாரகை' எனற இதழின் ஆசிரியராகவும் இவர் இருநதுள ளார்.

**பாராட்டும் பெற்ற சிறப்பும்:** இவரைக் குமார சுவாமிப் புலவர், 'ஏட்டிலிருநத அருநதமிழ் நூல களௌனைப் பலவும் தீட்டி வழுககளைந தசசினிலாக கும் செநதமிழ்சேர் தாமோத ரேநதிரன' எனறு பாராட்டுவர். 'பழநதமிழ இலககிய வெளியீட்டுககுக கால்கொணடவர் ஆறுமுக நாவலா; சுவர் எழுபபி யவர் தாமோதரம பிள்ளை' எனபது திரு.வி.க.

கூற்று. ஐம்பெருங் காப்பியத்தை நீக்கி, ஏனைய வற்றைச் 'சிறுகாப்பியம்' என்று முதன்முதல் பெயர் கொடுத்தவர் சி.வை.தா. என்கின்றார் மு. அருணாசலம். கலித்தொகையை முதன்முத லில் பதிப்பித்தபோது அதன் முன்னுரையில் இவர், 'நல்லந்துவனார் கலித்தொகை' என்று குறிப்பிட்டுள் ளார். கோத்தவர் பெயரிலேயே இங்ஙனம் குறிக்க லாம் போல் தோன்றுகின்றது என்பர் அறிஞர். 'வீர சோழியம்' எனும் இலக்கண நூலைப் பதிப்பித்து அதன் முன்னுரையில் 'தமிழ், வட மொழியிலிருந்து வந்தது' என்பார் கூற்றை வன்மையாக மறுத்துள் ளமை பலராலும் போற்றுதற்குரியது.

**நட்பும் பண்பும்**: சி.வை. தாமோதரம் பிள்ளை அக்காலத்தில் திருவாவடுதுறை ஆதீனத் தலைவராய் விளங்கிய சுப்பிரமணிய தேசிகரிடமும், டாக்டர் உ.வே. சாமிநாதையரிடமும், பூண்டி அரங்கநாத முதலியாரிடமும், வேதநாயகம் பிள்ளையிடமும் பெரு நட்புடையவராய்த் திகழ்ந்தார். உ.வே.சா. போன் றோர் பதிப்புத்துறையில் ஈடுபாடு கொள்ளுதற்கு சி.வை.தா. காரணம் எனலாம். சுன்னாகம அ. குமாரசுவாமிப் புலவரைக் கொண்டு யாழ்ப்பாணத திலே கீரி மலையிலுள்ள சிவபெருமான்மீது 'நகுலேச ரூஞ்சல்' என்றதொரு நூலைச் செய்வித்து ஆண்டு தோறும் ஒரு விழா நடந்துவர மூலப்பொருளும் தந்தவர் சி.வை.தா. மறைமலையடிகளார், கொழும்பு சென்றபோது உதவியோருள் இவரும் ஒருவர். இத் தகு நல்ல தமிழ்ப் பேரறிஞர் 1.1.1901-இல் சால மானார். இவருடைய மகனார் 'அழகுசுந்தரம்' என் னும் 'கிங்சுபெரி' யாவார். சைவ சித்தாந்த மகா சமாசம் வெளியிட்ட 'சங்க இலக்கியப்' பதிப்பைத திரு.வி.க. நினைவாக வெளியிடச் சிலர் விரும்பிய போது திரு.வி.க. 'இந்தப் பதிப்பைத் தாமோதரம பிள்ளை நினைவுக்கு அர்ப்பணம் செய்யுங்கள்' என்றா ரெனில் சி.வை.தா. பெருமை புலனாதல கண்கூடு. தமிழுலகில் சி.வை.தா.வுக்கு நிலைத்ததோர் இட முண்டு. ச.சா.

**தாமோதரன், ஜி.ஆர்**: டாக்டர் ஜி.ஆர்.டி. (G.R. Damodaran) தமது வாழ்வில் 50 ஆண்டுகள தொடர்ந்து கல்வி வளர்ச்சி, மாணவர்களின நலன, ஆசிரியரின் சிறப்பு ஆகியவற்றிற்குத் தம்மை அாப் பணித்து வாழ்ந்தவர்; தமிழ் பயிற்று மொழியாக வருவதற்குக் கலைக்கதிர் என்ற அறிவியல மாத இதழ நடத்தியும், பயிறறுமொழிக் கருத்தரஙகுகள நடத்தியும், பயிற்றுமொழிக் கட்டுரைகள பலவற்றை எழுதியும் ஆறறிய தொணடு மிகப் பெரியதாகும். இவர் கல்வித்துறைக்கும், தொழில நுணுக்கத் துறைக்கும் ஆற்றியுள்ள சேவை கற்றவாகளாலும், மற்றவாகளாலும் பாராட்டத்தக்கது. இவருடைய வாழ்க்கை நல்லதொரு வழிகாட்டி.



தாமோதரன், ஜி.ஆர்.

இந்திய நாட்டில் இனறு ஊரளவிற்குத் தொழிற் கல்வி நிலையஙகள பெருகி வருகினறன.ஆனால, அந் நிய ஆட்சி வேரூனறி இருந்த காலத்தில, அதாவது 60 ஆண்டுகளுக்கு முன்பு, இநதிய இளைஞாகள தொழிறபயிற்சி பெறவேணடும் என்று கற்பனை செய்வதுகூட அரிது அககாலததிலேயே இநத அருமையான கருததைக் கற்பனை செயததோடு செயலமுறை வடிவமும கொடுததுப பொதுக்கல்வி, பொறியியற் கல்வி, தொழிற்பயிற்சி ஆகியனவறறிற்கு வழிவகுக்கும் பூ.சாகோ அறநிலையத்தை 1926-இல் தோறறுவித்த பூ.சா கோ. சகோதரர்கள நால்வருள திவான்பகதூர் அரஙகசாமி நாயுடு எனற பெரியாாக் கும், திருமதி கிருட்டிணம்மாளுக்கும் மூத்த புதலவ ராக 1914-ஆம் ஆண்டு கோவை, பூளைமேடு என்ற ஊரில தோனறினாா. இவரோடு கோவிந்த ராசலு, வெங்கடேசலு, வரதராசலு ஆகிய மூனறு ஆண்களும், இலட்சுமி அம்மாள், உருககுமணி அம மாள என்ற இரணடு பெணகளும் பிறந்தனர். ஜி ஆா.டி. அவாகள வட ஆர்க்காடு மாவட்டத்தில் ஆம்பூர்க்கு அணமையிலுள்ள கார்க்கூர் என்ற ஊரி னைச் சார்ந்த பெருநிலக்கிழார் புலலல சஙகரயய நாயுடு என்பவரின மகள உருக்குமணி அமமையார் அவர்களைத் தம் வாழ்க்கைத் துணைவியாக ஏற்று

இலலறம் எனும் நல்லறம் நடததினார். இவர்களுககு ஜி.ஆர்.டி. நிறுவனஙகளின நிருவாக இயககுநராக உளள விதயபிரகாசு, ஜி ஆர் டி. அறககட்டளையின் நிருவாக அறஙகாவலரும, கலைககதிா ஆசிரியரு மான டாகடா பதமனாபன எனனும புதலவர் இரு வர் உளளனர்.

டாக்டா ஜி.ஆர். தாமோதரன் இங்கி லாந்தில கல்வி கறறு மின பொறியியல, இயந திரவியல ஆகிய இரணடு துறைகளில பொறியியல பட்டம பெறறு 1943-இல இநதிய நாடு திரும்பி பூ.சா.கோ. அறநிலையைத் தொழில மற்றும கலவி நிறுவனங்களின் நெறியாளா பொறுபபை ஏறறாா. அனறு முதல இவா வாழநாளவரை (10.1 86) பூ.சா.கோ அறநிலைய நிறுவனஙகளில ஏற்பட்ட வளர்ச்சியும் புதுமைகளும் கணககில அடஙகா.

டாக்டா. தாமோதரன அவாகள பனமுக ஆளு மைப் பண்புடையாளர். இவர் பொறியாளா, ஆசிரி யா, எழுததாளர், நிருவாகி, சமூகப பணியாளா, பததிரிகை ஆசிரியர், தொழிலமேதை, பொது வாழவுத தொணடர், கலவியாளர் எனறு பல துறை களில சிறந்து விளஙகினாா.

பூ.சா.கோ. அறக்கட்டளை நிறுவனங்களின் நெறியாளராய, பூ.சா.கோ. கலைக் கலலூரியில, முதன முதலவராய, பூ.சா.கோ. பொறியியற் கல லூரியில முதலவராய், சென்னைப் பலகலைக்கழகத தின துணைவேநதராய், கலைககதிர் ஆசிரியராய்த திகழ்ந்த தாமோதரன மிகப் பல பொதுப் பொறுப்புகளை ஏற்றுத் தொணடாறறியவா அவையாவன: 1) கோவை உறபததித திறன. குழு, கோவை நிருவாகிகள குழு, 2) தொழில நுட்பக கலவிமுறை அமைபபினை மாறறி அமைக்கவென இந்திய அரசு அமைத்த சிறப்புக் குழு, 3) இநதியப் பொறியாளா கழகம் தமிழ்நாடு மையம், 4) பொறியியல மற்றும் நிருவாகததுறைக கல்வி, பாடததிட்டக குழுககள, சென்னைப் பல கலைககழகம, 5) பளளிக கலவியின புதிய அமைப புக்கும், தொழிற்பளளிகளுக்கும் உளள தொடர்பு கள பறறி ஆராயவென இந்தியத் தொழிலநுட்பக கலவி வாரியம அமைத்த துணைககுழு, 6) கோவை மாவட்டக் கலலூரிகளின் சமூகப்பணிச சஙகஙகளின கூட்டமைப்பு, 7) பூ.சா.கோ. அறநிலைய நிருவாகக குழு, 8) ஜி.ஆர்.டி. அறக்கட்டளை, 9) அனைத்திந் திய நிருவாக இயல் நுணுக்க வாரியம் மேறபார்வை பறறி ஆராயவென அமைந்த துணைக்குழு, 10) இந் திய மொழிகளில் அறிவியல் இதழ்களை வளர்த்தற குரிய நெறிமுறைகள் காணும் வல்லுநர் குழு, 10) கல்லூரித் தமிழ்க்குழு, 11) மததிய கல்வி ஆலோசனை வாரியம், 12) அகில இநதியத தொழிலநுட்பக கலவிக குழு, 13) மாநிலத்தொழிலநுட்பக் கலவி வாரியம என பன போனற பல குழுககளின் தலைவராக விளஙகிச சிறப்பாகச செயறபட்டார்.

இந்தியப் பாராளுமனற மககள சபை (1952-57), தமிழக மேலவை (1958-70), (1974-1978) ஆகியவற றின உறுபபினராகவும், மேலும முபபதுககும மேற பட்ட மாநில, இநதிய, உலக அளவில கலவி மறறும தொழில சாாநத குழுககள பலவறறின உறுபபின ராகவும் இருநதுளளாா.

கலைக்கதிா (அறிவியல தொழிலநுட்ப மாத இதழ), கலைககதிா அசசகம், ஜி ஆர்.டி. அறககட டளை, ஜி ஆர்.டி. ஆராயசசி மையம முதலியவறறின நிறுவனராகத திகழநதாா. மினனணு (Electron) அறிவியலின விளைவு, காலககனிவு, கலவியும தொழிலும், சில சிநதனைகள, அறிவியல தமிழ, தெயவிகப் பணிககு ஒரு காணிக்கை முதலிய தமிழ நூலகளையும, Teacher in You, Evaluation and grading, Listen to a Leader in Education போன்ற ஆஙகில நூலகள சிலவற்றையும எழுதியுளளாா.

கலவித் துறையிலும், தொழில வளர்சசித் துறை யிலும பெரும் தொணடாறறிய டாகடா ஜி.ஆா. தாமோதரன உலகின பல நாடுகளில பல காலங களில நடைபெற்ற கலவி, தொழில தொடர்பான மாநாடுகள, ஆய்வுககுழுககள் போனறவறறில பஙகு பெறற பெரியவர்.

பொறியியற் கலலூரியின முதலவராக இருந்து கணணும கருத்துமாகக காத்துநினற இவர், பல் தொழிற் கலலூரி, கலைக் கலலூரி, மேலநிலைப் பளளி, தொடககநிலைப் பளளிகள ஆகியவற்றின நெறியாளராகவும், தாளாளராகவும் இருநதுவந தார். அவையெலாம் இனறு தமிழகத்தின சிறந்த கலவி நிறுவனஙகளாகத் திகழகின்றனவெனறால அதறகு முழுக காரணமாக அமைநதவர் டாக்டா ஜி.ஆா. தாமோதரன ஆவாா. பூ சா.கோ. கலைக் கலலூரியில எம்.எசு சி., எம் ஏ., ஆராயசசி வகுப்புக் கள் இடம்பெறுவதறகு இவர் மேறகொணட முயற்சி கள மிகவும் போற்றத்தககவை. கலைக கலலூரிககு வேண்டிய கட்டட வசதிகளைப் பெருக்கியதறகு இவருடைய பேராாவமே காரணமாகும்.

இலாபம கருதாமல் அறிவியல் மாத இதழாகிய 'கலைக்கதிரை'த் தொடாந்து நடததி வநதது ஒன்றே இவருடைய தமிழ்ப் பற்றுக்கும், மக்களி டையே அறிவியல் அறிவு வளரவேணடும் எனற எண

ணத்திற்கும் போதுமான சான்றாகும். தமிழில் அறிவியல் நூல்கள வருவதற்கான பல்வேறு வழிகளில் உழைத்த இப்பெரியார் 1986-ஆம் ஆண்டு காலமானார். தா.ப.

**தாமோதரனார்:** சங்கப் புலவர்களுள் ஒருவர். உறையூர் மருத்துவன் தாமோதரனார் என ஒரு புலவர் காணப்படுகிறார். இவர் பாடிய பாடல்கள் அகநானூற்றிலும் (133, 257), புறநானூற்றிலும் (60, 170, 321) ஆக 5 பாடல்கள் கிடைத்துள்ளன. இப்புலவர் தாமோதரனாரினும் வேறாகக் கருதப்பெறுவர். தாமோதரனார் பாடியதாகக் குறுந்தொகை 92-ஆம் பாடல் ஒன்று மட்டுமே உள்ளது. குறுந்தொகை 195-ஆம் பாடலின் ஆசிரியர் தேரதரன் எனக் குறிக்கப் பட்டுள்ளது. ஆனால், அதற்குப் பாடவேறுபாடாகத் தாமோதரன் என்ற பெயர் காணப்படுவதை எடுத்துக்கொண்டால் இவர் பாடியவை இருபாடல் எனக் கொள்ளலாம்.

'தாமோதரனார் என்பது தெய்வத்தால் வந்த பெயர்; இதனால் இவர் குடும்பத்தினர் திருமாலின் அடியவராகக் கருதப்படுகின்றனர்' என்று டாக்டர் உ.வே.சா. கூறுவர். காமமிகக கழிபடர் கிளவியாற பொழுது கண்டு தலைவி கூறியதாக அமைந்த குறுந தொகை 92-ஆம் பாடல'ஞாயிறு மறைந்த மாலைப் பொழுதில் கடம்ப மரத்திலுள்ள குஞ்சுகளின் வாயில் இரையூட்டப் பறவைகள் வானத்து விரைந்து பறந்து செல்கின்றன; அவை இரங்கத்தக்கன' எனறு கூறும் குறுந்தொகை 195-ஆம் பாடல், 'தாம் பிரியுங்காலத்தில் பாவை போனறிருந்த அழகிய மேனி இப்பொழுது அழகு கெட்டமையை உணராராய்த் தலைவர் மாலைப்போதில் எஙகுத் தங்கியுள்ளாரோ எனக் கூறித் தலைவி மெலிகின்றாளெனக் கூறுவதாக அமைந்துள்ளது. இவ்விரு பாடலும் ஞாயிறு மறையும் மாலைப் பொழுதினைப் புனைகின்றன. இரா.சா.

**தாய்பே:** இது ஒரு சீன நகரம்; தைவானின் தலைநகர். தாய்பே (Taipei) சீனக் குடியரசின் தலைநகராகவும் சிறிது காலம் இருந்தது. தைவான் (Taiwan) தீவில் இநநகரம் அமைந்துள்ளது. செஞ் சீனாவிலிருந்து 193 கி.மீ. தொலைவில் தெற்கில் உள்ளது. மாசேதுங்கு ஆட்சியைக் கைப்பற்றியதும் 1949-ஆம் ஆண்டிலேயே அப்பொழுது கே.எம்.டி (கோமின்டாங்கு) ஆட்சியில் தலைவராக இருந்த சியாங்கே சேக்கு, சீனாவை விட்டகன்று தைவான தீவில் தமது ஆட்சியைத்தாய்பே நகருக்கு மாற்றிக் கொணடார். தாய்பே நகரம் நான்கு புறஙகளிலும் மலைகளினால் சூழப்பட்டுள்ளது. தாய்பேக்கு 30 கி.மீ. அருகில் சில்லூங்கு (Shilung) எனனும் இடத்தில்



தாய்பே நகரவீதி

முக்கிய துறைமுகம் அமைந்துள்ளது. இந்நகரம் 1957-ஆம் ஆணடிற்கு முன்பு தைவான் பிரதம மாகாணத்தின தலைநகராகவும் விளஙகியுள்ளது. இப்பிரதம மாகாணத்தின தலைநகர் 1957-ஆம் ஆணடிறகுப் பினனரே சூஙசிஙகிறகு (Chung Hsing) மாற்றப்பட்டது. 1983-ஆம் ஆணடுக் கணககுப்படி தாய்பே தலைநகரின் மக்களதொகை 2.4 மிலியன ஆகும். இவர்களுள் பெரும்பாலோர் சீனா பொதுவுடைமைக குடியரசாக மாறியவுடன் சியாஙகேசேக்குடன் தைவான் தீவுக்கும், தாய்பே தலைநகருககும் குடியேறியவர்களே.

கடந்த நூற்றாணடிலேயே (கி.பி. 19) சூலுங்கு, தான்சூயி (Tan shui) ஆகிய துறைமுகஙகள் வழியாகச் சிறு கப்பல்கள், பெரும் படகுகள மூலமாகச் சீனர்கள தாய்பே நகரை அடைந்து வந்தனா. தாய்பே நகரமும் தைவான் தீவும கி.பி. 1895-ஆம் ஆண்டில் பெற்ற போர் வெற்றிகாரணமாக சப்பானியர் வசமாயின. இரண்டாம் உலகபபோருக்குப் பிறகு மீணடும் சீனாவிடம ஒபபடைக்கப்பட்டது. தைவான் தீவின் பழைய பெயர் 'பாாமோசா' (Formosa) ஆகும்.

தாய்பே 1957-ஆம் ஆண்டிற்கு முன்னர்ச் சிறு நகரமாகவே இருந்தது. தலைநகரை நிருவாகம் செய்த நகராட்சிக்கு உட்பட்ட நகரின் பரப்பளவு 42 கி.மீ. ஆக இருந்தது. தாய்பேயின் பரப்பளவு 1957-ஆம் ஆண்டிற்குப் பிறகு 168 கி.மீ. ஆகப் பெருகியது. தாய்



தாய்பேயில் சீனக் குடியரசு தினவிழா

பேயில் சூவின் 6 சிறு உட்பகுதி நகரங்கள் அடங்கியுள்ளன. அவை 1) சீலின (Shı-lin), 2) பேய்தோ (Peitou), 3) நேகூ (Nei-hu), 4) நான்சியாங்கு (Nan-chiang), 5) முச்சா (Mu-cha), 6) சீசிங்மேய் (Ching mei).

இன்றைய நிலையில் தாய்பே ஒரு பெரும் தொழிற்சாலை நகரமாகும். பஞ்சு, துணி ஆலைகள், மின்னியல் கருவி உற்பத்திக் கூடங்கள, பொருள்கள் பதனிடும் தொழிற்சாலைகள், கப்பல் கட்டும் களங்கள்,விசை ஈருருளி(Motor Cycle), இரப்பர் பொருள்கள் ஆகியன செய்யும் பெரும் தொழிறசாலைகள பற்பல நிறுவப்பட்டு இயங்கி வருகின்றன. தலைநகரான தாய்பேயில்தான் சீனக் குடியரசுத் தலைவரின் மாளிகை உள்ளது.

நாட்டின் முக்கிய நெடுஞ்சாலைகள் இஙகுக் கூடுகின்றன. தாய்பே நகரில் சஙசான் (Shung shan) என்னும பகுதியில் நாட்டின் பனனாட்டு விமானத்தளம் ஒன்று உள்ளது.

தட்பவெப்ப நிலையைப் பொறுத்தவரையில் தீவிலும், தலைநகரிலும் மிதமான தட்ப வெப்ப நிலையே காணப்படுகிறது. கோடைக் காலத்தில் மாலை வேளைகளில் பசுமையான ஈரக்காற்று வீசுவதுண்டு. மார்ச்சு-சூன், நவம்பர்-சனவரி மாதங்களில் தலைநகரிலும் நாட்டிலும், சராசரி 83 அங்குலத்திற்குக் குறையாமல் மழை பெய்கிறது.

தாய்பேயில் 1968-ஆம் ஆணடு முதல், 5 வயது முதற கொண்டு 9 ஆணடுகளுக்குக கட்டாயக் கல்வி நடைமுறையில உளளது தாயபேயில 100 பளளிகளும, 40 உயர்நிலைப் பள்ளிகளும 20 உயர் கல்விக கலலூரிகளும் நிறுவபபட்டுள்ளன.

தாய்பேயின் பகுதியான 'யாங மின் சான' (Yang-Mın-Shan) எனனுமிடத்தில வெப்ப நீருறறுகள் உளளன.இவை தாய்பே நகர மககளின பொழுது போக்காக உளளது.

தாய்பே நகரில கிறித்தவத் திருசசபையும், சஙகஙகளும் (Chruches and Missıons) நிறைந்துள்ளன. அவற்றுள அமெரிக்கக கிறித்தவததூயவாதிகள் சமய அமைப்பு (American Purıtanıcal Mıssıon) குறிபபிடத்தக்கதாகும். எச.அ.

**தாய்மாமனாட்சி**: பெரும்பாலான சமுதாயஙகளில் குடும்பத்தின அதிகாரம், தந்தை அலலது தாயிடததில் உளளது. ஒருசில சமுதாயததில் ஒரு குடும்பத்தின் முடிவெடுக்கும் அதிகாரம், குடும்பத்தை நடத்தும் பொறுபபு முதலானவை தாயமாமனிடத்தில உளளது. இவவித அமைப்பையே தாய்மாமனாட்சி(Avuncupotestality)எனக் கூறுவர். இத்தகைய அமைப்புப் பொதுவாகத் தாய்வழிச் (Matrılıny) சமுதாயத்தில காணப்படுகிறது. எ-டு. நவாசோ இநதியர்கள, நைசீரியாவின திவ் (Tıv) மக்கள், அரேபிய தீபகற்பத்தின் பெடோயினசு (Bedouins), அமேசானின் முனடுருகுவினர்.

தாய்வழிக் குழுவினரிடையே, தாயின் சகோதரனால், தாயின உயாநிலை அதிகாரம் மேலும் செலவாக்கடைகிறது. தாய்மாமனாட்சி, ஒரு காலவழி வந்த குழுவினருடன நெருங்கிய தொடர்பு கொணடுள்ளது. தாய்மாமன் உறைவிடத்தில் தாயின சகோதரன் புதலவர்களும், சகோதரியின் புதலவர்களுமே குடும்பத்தின் கருவாகத திகழ்கின்றனர். சகோதரியின புதல்வர்கள் தஙகள தநதையுடைய தாயின சகோதரன இல்லத்தில் பிறந்து வளர்நதாலும், சிறிது காலத்திற்குப் பின் தம் தாயின் சொந்தச் சகோதரர் இல்லத்தில் வாழத் தொடங்குகினறனர்.

தாயிடநதங்கல் முறையில், பெணகளை அவர்கள் கணவரின் ஆதிக்கத்திலிருநது விடுவித்த போதிலும் அவர்களை ஆண்களின ஆதிக்கத்திலிருந்து முழுமையாக விடுவிக்கவில்லை என்பதற்குத் தக்க சான்றாகத் திகழுவது தாய்மாமனாட்சி எனலாம். மாமனாட்சி முறையில் தாய்மாமனின் சகோதரியின் சொத்து, உடைமை முதலான அனைத்து விவகாரஙகளிலும் தாய்மாமனே முடிவு எடுக்கும் உரிமையுடையவ

னாய்த் திகழ்கிறான்.ஒரு குடும்பத்தில்பிறக்கும் ஆண் குழந்தைகள் அவர்களின் தாயமாமன வீட்டிறகுக் கொணடு செல்லப்பட்டு வளர்க்கபபடுகின்றனா. இதற்குத் தகுநத எடுத்துக்காட்டாக வடமேற்குப் பசிபிக்குப் பகுதியைச் சாாநத 'திலிங்கித்து' (Tilngit) பழங்குடியினர் திகழ்கின்றனர். இவர்களிடையே தாய் மாமன் வீட்டில் வளரும் இளைஞர்கள திருமணத் திற்குப் பின்பும் தமது மனைவியுடன அஙகேயே தமது வாழக்கையைத் தொடருகின்றனர். இஙஙனம தாய்கால்வழி கொணட சமுதாயத்தினரிடையேயுளள ஆண்களின அதிகார நிலையால இசசமுதாயம் மிக வும் நிலையுற்றதாக உள்ளது. ஆணகள் ஆதிக்கம் மிகுந்துளள தாய்வழிச சமுதாயத்திலுள்ள ஆடவர் தம் ஆண் மக்கள மீது தாம கொண்டுளள கட்டுப பாட்டினைத் தம் மனைவியின் உறவினரிடம விட்டுத் தரத் தயங்குகின்றனா. மேலும், திருமணத்திற்குப் பின் புதல்வியாகளைவிடத் தஙகள தஙகள் புதலவர் களே தங்களைவிட்டுப் பிரிய வேணடியுள்ளனர் எனும் உண்மையினை ஏற்றுககொளள மறுககினறனர்.

தாய்மாமனாட்சிக்குத் தகக சான்றாகத் திகழ வது கேரளாவிலுளள நாயா குடும்பங்களாகும். இக் குடும்பங்களில் ஆண்கள் தங்கள சொநத வீட் டில் தொடர்ந்து தஙகுவதில்லை. அவவபபோது தம் மனைவியின் இல்லத்திற்குச் செனறு வருகினறனா. தாயின் பொறுப்பில் பிளளைகள வளருவதால் அவர் களைப் பற்றி இந்த ஆண்கள சற்றும் கவலைப்படுவ தில்லை. அதே சமயத்தில் தமது சகோதரியின புதல் வர்களையும் புதல்வியர்களையும் தகுநத பாசத்துட னும் நேசத்துடனும் கவனிததுக்கொள்கின்றனர். இத னால், தாய்மாமன என்ற முறையில அவர்களைத தம் முழுக் கட்டுப்பாட்டில வைத்துக் கொளவதும் கடினமாக இருப்பதில்லை.

தாய்வழிச் சமுதாயத்தில் தாய்மாமனாட்சி முறைமூலம் ஆண்கள் முக்கிய பஙகேற்பதைப் போல் தந்தைவழிச் சமுதாயத்தில பெண்கள் முக்கிய பங கேற்கவோ கட்டுப்படுத்தவோ இயலுவதில்லை.

தாய்மாமனாட்சியில், சகோதரியின் புதல்வர்கள் மணமான பின்பும் தங்கள மாமன் இல்லத்தில் தங்கி விடுகிறார்கள். இவர்களுக்குப் பிறக்கும் மகனும் தாய்மாமன் வீட்டில் தங்குகிறான். இது அவன் மண மான பின்பும் தொடாகிறது. இதற்கு மாறாக, இவர் களின் மகள் தன் தந்தையின் சகோதரி மகனை மணக்கும்போது தன் தாய் வீட்டிலேயே தங்கிவிடு கிறாள். தன் மாமியார் வீட்டிற்கு இவள் செல்வ தில்லை.

தாய்வழிச் சமுதாயத்தில் தந்தைவழி உற வினரைவிடத் தாய்வழி உறவினருக்கே முதலிடம் அளிககபபடுகிறது எனபதறகுத தகுநத சானறாகத திகழ்கிறது தாய்மாமனாட்சி என்றும் கூறலாம. தாய்வழிச சமுதாயத்தினரிடையே ஏறபடும சச்சரவு களுக்குத் தாய்மாமன ஆட்சியே சிறநத தீாவாக விளஙகுகிறது.

தாய்மாமனாட்சி முறை தாய்வழிச் சமுதாயத் தினருடன நெருங்கிய தொடாபுடையது எனறு மார்கன் (Morgan), பகோபென் (Bachofen) ஆகி யோர் கூறுவர். ஒருசில தநதை வழிச சமுதாயததி லும், பிற சமுதாயஙகளிலும தாயமாமனாட்சி நிலவு வதற்குக் காரணம, இதற்கு முனனர் இச சமுதாயங களில் நிலவியிருந்த தாய்வழிச் சமுதாய அமைப்பு அழியாமல எஞ்சியிருப்பதே எனறு இவர்கள கூறுவர்.

ம.ந.பு.

**தாய்மை இயல்பூக்கம்**: தாய்மை நடததை தாய்மை இயலபூக்கததினால் தோன்றுகிறது. பாரம பரியமாக வரும் நடததையை இயலபூக்கம் எனறு கூறுவர். இயல்பூக்கம் வெளிபபடுவதற்கு கலவி, பயிற்சி எதுவும் தேவைபிலலை அது தன்னிசசையாக வெளிப்படுகிறது.

வாழ்க்கையின் எல்லாச் செயலகளும குறிப்பிட்ட நோக்கத்துடனே அமைகினறன. இயலபூக்கமே மனித னுடைய நோக்கத்திற்கும் நடததைககும் மிருகஙக ளுடைய நடத்தைக்கும் அடிபபடையானது எனறார் வில்லியம்மெகடூகல (William Mc, Dougall). அவர் விவரித்த பல இயல்பூககஙகளுள ஒனறு தாய்மை இயல்பூக்கம் ஆகும்.

எல்லா இயலபூககங்களும் குழந்தை பிறநதவுடன செயறபடத தொடங்குவதில்லை தக்க வளர்சசி பெற்றவுடன தோனறத தொடங்குகினறன தாய்மை இயல்பூக்கமும் (Maternal instinct) உடல் தக்க வளர்சசி பெற்றதும் வெளிபடுகிறது. இது ஓர் இனத்தைக் (Species) காககு உதவுகிறது என்கிறார் மெகடூகல்.

தாய்மை இயல்பூக்கம் காரணமாக, இயற்கை யாகவேபெணகளிடம் குழந்தைப் பேற்றில் விருப்பம் தோன்றுகிறது. அதற்காக எத்தனை நோவையும, தொல்லைகளையும அவர்கள பொறுத்துக் கொள கிறார்கள். தம குழந்தைகளின் மேல இயற்கையாக அன்பு செலுத்துவதுடன, தம் குழந்தைகளின நல னுக்காக எதையும் தியாகம் செய்யவும் விருப்பமுடை யவராக இருப்பதைக் காணலாம்.

குட்டி போட்டுப் பாலூட்டும் பிராணிகளிடம் (Mammals) உள்ள ஒரு தனித் தன்மை, கருத்தரித்த

போது, அவற்றின் உடம்பில் பால் சுரத்தலாகும். இது உடலியல இயலபூக்கத்தினால் ஏற்படுகிறது.புழு, பறவை போன்றவை கூடுகட்டுவதும், குரஙகுகள குட்டிகளைத் தூக்கிச் செல்வதும் தாய்மை இயல்பூக் கத்தினால் ஏறபடும் செயல்களே. உடலில புரோலக் டின (Prolactın) என்ற சுரப்பி (Hormone) சுரபபதால் தாய்மை நடத்தை தோன்றுகிறது.

மிருகங்களைப் பொறுத்தவரை, எல்லா இயல்பூக் கங்களிலும் தாயமை இயலபூக்கமே மிக முக்கியமான தாகும். தாய்மை இயலபூக்கததினால் தோன்றும் நடத்தையான 'பிறந்த குழந்தையினைப் பாதுகாக் கும்' நடத்தை, பசி, தாகம், பாலுணர்வு (Sex)முதலிய இயலபூக்கங்களை விட மிகுந்த சிறப்பு வாய்நததாகக் கருதப்படுகிறது.

அந்தந்த இனததைப் பொறுத்துத் தாயமை நடத்தை வேறுபடுகிறது. இதில் ஒரே இனத்தில் உளள பலரிடமும் வேறுபாடுகள் காணப்படுகின்றன. முக்கியமாக மனிதர்களில தாய்மை நடத்தை பெரி தும் வேறுபட்டுக் காணப்படுகிறது. பால சுரப்பது உடலியலால் இயககப்படுவது எனறாலும், இதுவும அவரவர் மன நிலையைப் பொறுத்தே தோன்றுகிறது. குழந்தை பிறந்தவுடன் பால சுரக்காமல் போவது அவர்களது விருப்பமற்ற மனநிலையால்தான் எனறு கூறப்படுகிறது.

குழந்தை வளர்ப்பும் தாய்மைஇயல்பூககத்தினால அமைவது என்றாலும், வளர்ப்பு முறை அவரவர் அனுபவம், சமூகப் பழக்க வழக்கம் போன்றவற்றால மாறுபடுகிறது.

முனபு இயலபூக்கம் மனிதனின நடத்தைக்கு ஒரு முக்கிய காரணமாகக் கருதப்பட்டது. ஆயினும், இப் போது மனிதனின் எந்த ஒரு நடத்தையும் பாரம்பரி யமாக மட்டும் தோன்றுவதில்லை அவனது கல்வியும் பயிற்சியும், அவன்தன எல்லா நடத்தைகளையும் தாக்குகின்றன என்பதால் இயல்பூக்கம் மனிதனின் நடத்தையைக் குறிபபிடப் பயன்படுத்தப்படுவ திலலை. மிருகங்களின நடத்தையைக குறிப்பிட மட்டுமே பயன்படுகிறது. எனவே, இயல்பூக்கம் எனற சொல்லுக்குப் பதிலாக உடலியல் உநதுதல்(Physıolo- gical Drive) எனற சொல் பயன்படுததப்படுகிறது.

இக்காலத்தில், பெணகளின் தாய்மை நடத்தை மற்ற உயிரினஙகளைப் போல் உடலியலின இயலபூக் கத்தினால் அமைகிறது என்ற கருத்தைப் பலர் ஒப்புக் கொளவதிலலை. தாய்மை நடத்தை சமூகத் தின் உநதும் சக்தியால்(Social Drive) தோன்றுகிறது என்றே கூறுகிறார்கள். எனவே தாய்மை இயல்பூக் கம் என்ற சொல் மிருகஙகளுக்கே பொருந்தும.

ஹே.ந.

**துணை நூல்கள்:**

Cheris Kramaral and Paula. A., Treichler, A Feminist Dıctıonary, Pandora Press, Boston, 1985,

Vernon, M.D., Human Motıvatıon, Cambridge University Press, 1971.

**தாய்மொழி**: உலகில் பிறநத ஒவ்வொருவரும் ஒவ்வோர் உயிரும் மிக உயர்ந்த நிலையில் வைத்துப் போற்றுவது தாயையே. இநத நிலையில் மக்கள் வாழவை நலமாக்கும-வளரச் செயயும் எதையும் தாய்க்குச சமமாக எணணுவது இயல்பாகும். எனவே தான 'தாய்மொழி' 'தாய்நாடு' என்று மொழியை யும் நாட்டையும போறறுகினறனர்.

'மொழி' மனிதன் பிறரொடு கலந்து வாழக் கருவியாக அமைகின்றது. தான பிறந்தது முதலில் அன்னையோடு பேசுகின்ற மொழியையே 'தாய் மொழி' என்பர். பிறந்ததும மழலை மொழியில பேசுவதே தாய்மொழி எனப்படுகிறது. இன்றைய உலகில், பல நாட்டவரும் பல மொழியினரும் மிக அதிகமாக நெருங்கிக் கலந்து பழகும் பான்மையில் ஒருவர் பல்வேறு மொழிகளைக் கற்பினும், ஒவ் வொருவருக்கும் 'தாய்மொழி' என்ற ஒன்றிடம் தனிப்பற்று உணடு. ஆஙகிலத்தில் வல்லவரான காந்தி அடிகள் தம் வாழ்வு நூலைத் தம் தாய்மொழி யாம் 'குசராத்தி'யிலே எழுதினார். உலகப் புகழ் பெறற கீதாஞ்சலியைக் கவிஞர் தாகூர் முதலில் தாய்மொழியாகிய'வங்க'மொழியிலேயே எழுதினார். ஒருவர் தம்மை மறந்த நிலையிலும், தாம மாறுபட்ட நிலையிலும் அவாதம உளள அடித்தளத்தில் உரு வாகுவதே தாய்மொழி.

குழந்தையுடன் முதனமுதல் அவள் தாயே பழகி, அக்குழந்தைக்குப் பேசக கற்றுக் கொடுக்கிறாள.அது இயல்பாக அவர்தம் தாய் மொழியாகவே இருக்கும். தாய் வழியே பின்னர் தந்தை, உற்றார், மற்றாரை உணரும் அந்தக் குழந்தைக்கு இளமையில் தாய் கற்றுத் தந்த அந்த மொழியே தாயமொழியாக அமையும். எனவே, அந்த வகையில் மனிதன என்றும் போற்ற வேண்டுவது தாய் தந்த 'தாய்மொழி' யேயாகும்.

அ.மு.ப

**தாய்லாந்து (சயாம்)**: தாய்லாந்து(அ)சயாம் தெனகிழக்காசிய நாடுகளின் மையப் பகுதியாக



தாய்லாந்து அமைவிடம்

விளங்குகிறது. சயாமைச் சுற்றியுள்ள நாடுகள் அனைத்தும் ஐரோப்பியர்களால் வென்று அடிமைப் படுத்தபபட்டன. ஆனால சயாம் மட்டும் விடுதலை நாடாகவே இருநதது.

இந்தோ-சீனாவில மேலாண்மை பெற்றிருநத பிரெஞ்சுககாரர்களுககும், பாமா, மலாயாவில மேலாணமை பெறறிருநத ஆங்கிலேயாகளுககும இடையே குடியேற்ற நாடுகளைப் பெறுவதில ஏற்பட்ட போட்டியில, இவ்விரு பேரரசுகளுக்குமிடையே இடைப்படு நாடாகச் (Buffer state) சயாம் செயற பட்டது. இரு பேரரசுக்குமிடையே இருநத போட்டி மனப்பான்மையைப பயனபடுத்திச சயாமின் அரசாகள தொடர்ந்து தஙகளது விடுதலைத தனமையை நிலைநாட்டினர்.

சயாம் பல்வேறு இனமககளைக கொணட நாடாகும். பெரும்பான்மையான தாய் (Thai)இனத்தவருடன், இலாவோசு இனத்தவர் (Laotians), வியட்நாமியர்கள (Vietnamese), கம்போடியர்கள (Cambodians), மலாயாகள (Malays) போன்ற சிறுபான்மை இனத்தவரும் வாழ்கினறனர். இவர்களுடன சீனர்களும் குறிப்பிடத்தகக எணணிக்கையில உளளனா. சயாமின் முக்கிய உணவுப் பொருள் அரிசியாகும. மக்களில் பெரும்பாலோர் வேளாணமைத் தொழிலில்



தாய்லாந்துப் பெண்



பரம்பரை நடனம்

ஈடுபட்டுள்ளனர். வணிகம சீனாகளின பொறுப்பில உள்ளது

சயாமை நில அமைப்பின்படி மூன்று பிரிவு களாகப பிரிககலாம். தென்மேறகுப் பகுதி வளமான பகுதியாகும். சயாமின இனறைய தலைநகரான பாங்காககு இப்பகுதியில உளளது. வடககிலும வட மேற்கிலும மலைகளும் பள்ளத்தாககுகளும அமைந துள்ளன. பள்ளததாக்குப் பகுதிகளில மககள தொகை குறைவாகவே உளளது.

தாயலாந்து முடியாட்சியினகீழ் உளளது. மனன ரால நியமிக்கபபட்ட அதிகாரிகளின துணைக்கொணடு ஆடசி நிருவாகம நடத்தபபடுகிறது மைய மாநிலங களின ஆளுநாகள அரசரால நியமிககப்படுகின்றனா. தொலை தூரத்திலுள்ள மாநிலங்கள ஓரளவு விடு தலையுணர்வோடு செயற்படுகினறன. சட்டமனறம இருநதாலும் அரசரிடமே அதிகாரஙகள அனைததும குவிக்கப்பட்டிருந்தன. உள்நாட்டின் அரசியல் நிலை,

பர்மியப்படையெடுப்பு கி.பி.18 ஆம்நூற்றாணடில தாயலாநதின் விடுதலைக்கு இடையூறு அளிப்பதாக அமைந்தது. அயுததியா (Ayuthia)கி.பி.1767-இல் கைப் பற்றப்பட்டு தீககிரையாககப்பட்டது. அதேநேரத்தில் பர்மாவினமீது சீனர்கள் படையெடுததனர். இந நிலையைப் பயனபடுததி அயுத்தியாவைச் சயாமியர் மீட்டனர் இப்போதைய சயாமிய அரசு வமிசம் கி.பி 1782-இல்இருந்துஆட்சிபுரியத்தொடஙகியது.அதி லிருந்து பாஙகாக்குசயாமியத் தலைநகராகியது. பாரசீகத்திலிருந்து சப்பான் வரையிலுமிருநத பகுதிகளில் 1930-ஆம் ஆணடில் ஐரோப்பியர்களின மேலாண மைக்கு உட்படாத நாடாகத் திகழந்தது தாய்லாந்து மட்டுமேயாகும.

தாய்லாந்தின அரசாகளுள ஒருவரான நானகாம் இராமர் காலத்தில்பிரிட்டானிய மேலாணமை தாய் லாந்தில் உறுதியடைந்தது. இஙகிலாந்துடன் நட்பு முறையில வணிக ஒப்பநதம் கி.பி 1855-இல் செயது கொள்ளப்பட்டது. பினனா இத்தகைய ஒபபந்தங்கள பிரானசு, அமெரிக்கா, தெனமார்க்கு, போர்ச்சுகல முதலிய நாடுகளுடனும் செய்து கொளளப்பட்டது.



எருமையைக் கொணடு உழவு செய்தல்



பாங்காக்கிலுள்ள புத்தர் கோயில்

அயலநாட்டுப் படையெடுப்பு ஆகியவற்றிற்குத் தக்கவாறு அரசரின் கட்டுப்பாடு அமைந்திருந்தது. பர்மா, கமபோடியா, மங்கோலியா படையெடுப்பு களின் போது அரசரின நிலை வலிமை குறைந்த தாக மாறியது.

நானகாம் இராமருக்குப் பின் ஆட்சிக்கு வந்த சுல்லா லாங்கோன (1868-1910) (Chula long korn) காலத்தில் நிருவாகத துறையில் சீர்திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன. இளைஞர்கள் மேலை நாடு களுக்கு அனுப்பப்பட்டுப் பயிற்சி பெறறனர்.

சுல்லா லாங்கோனுக்குப் பிறகு 1910-இல் பதவிக்கு வந்த மகாவச்சிரவுத்து (Mahavajıravudh) 1917-இல் முதல் உலகபபோரில். பிரிட்டன், பிரானசு ஆகிய அரசுத் தூதர்களின் ஆலோசனையின்படி சயாமை ஈடுபடுத்தினார். சயாமியப்படை பிரான்சுக்கு அனுப்பப்பட்டது. படை அனுப்பியதற்குப் பலனாகச்சர்வதேச சங்கத்தில் தாய்லாந்துக்குப் பிரதிநிதித்துவம் கிடைக்கப்பிரிட்டனும் பிரான்சுய காரணமாயிருந்தன. இவர் 1922-இல இறந்தவுடன் இவர் இளைய சகோதரன பிரசாதிபோகு (Prajathıbogh) அரசரானார். அரசராட்சியில் மாறுதல் வேணடி இளைஞர்களில் பலர் கிளர்ச்சி செய்ததின் காரணமாக 1932-இல் பிரிதி பானமியாங்கு (Pridı phonam-yong) என்பவரிடம்ஆட்சிப் பொறுப்பு ஒப்படைக்கப் பட்டது. புதிய நிருவாகக் குழுவின் தலைவராகப் பியா மனோபகான் (Pyo Manobhogan) என்பவர் நியமிக்கப்பட்டார். புதிய அரசியல் அமைப்பு அறிவிக்கப்பட்டது. இவருடைய ஆட்சிக் கெதிராக நடைபெற்ற கிளர்ச்சியை அடக்கிச் சர்வாதிகார ஆட்சியைத தோற்றுவித்தார். சட்டமன்றம் கலைக்கப்பட்டது.

இதை எதிர்த்து 1933-இல் திடீர்க்கிளர்ச்சிசெய்து பியாமனோபகான் நீக்கப்பட்டுப் பியாபகோல் (Pya Bahol)அடுத்த தலைமை அமைச்சரானார். பியாபகோலும் பிரிதியும் மககளிடையே செல்வாக்குப பெற்றுத் திகழ்ந்தனர்.

இனறியமையா சிககல்கள எவற்றையும புதிய அரசாங்கத்தால் தீாக்க இயலவில்லை. தீவிரமான பொருளாதாரத திட்டத்தைப் பிரிதி வற்புறுத்திய போது பிபுன சங்ராம (Pıbun Songgram) போன்றவா பிரிதி பொதுவுடைமைவாதி எனற கருததைப் பரப்பினா. சட்டமனறம் இயற்றிய சட்டமுன் வரைவுகளை அரசர்புறககணிததலால அவர்1935-இலபதவி துறக்கும்படி நேரிட்டது. அவர்தம 10 வயது தம்பியான ஆனந்த மகிதோல அரசராக்கப்படடார். பகோலின் அரசாஙகம் நாளடைவில செலவாக்கிழந்தது. பிபுனும் பிரிதியும் புதிய அமைச்சரவையை அமைத்தனா.

புதியஅமைச்சரவையில பிபுன்பிரதமராகவும் பிரிதி நிதி அமைச்சராகவும் பதிவியேற்றனா. விரைவில பிபுன் சர்வாதிகாரியைப் போன்று செயற்படத தொடங்கினார். சயாமின பெயர் 1939-இல் தாய் லாந்து என மாற்றப்பட்டது.

பிரெஞ்சுக்காரர்களைச் சயாமிய மக்கள் பெரிதும் வெறுத்தனர். இரணடாம உலகப் போர் தொடங



தாய்லாந்து கடைத்தெரு



யானைகள மரங்களை எடுததுச்செல்லுதல்

கியதும் சயாமும் சப்பானும் 1940-இல் நட்புறவு உடன்படிக்கை ஒன்றைச் செய்து கொணடன. பிரிட்டானிய மலாயாவைத் தாக்கத் தாய்லாந்தின வழியாகச சப்பானியப் படைகள செல்ல அனுமதி வழங்கப்பட்டது. அமெரிக்காமீதும, பிரிட்டன மீதும் தாய்லாந்து 1942-இல போர் தொடுத்தது. இதைப் பிரிதி கணடித்துப் பதவி விலகினார். வடக்குத் தாய லாந்தில் மேலைநாடுகளுக்கு ஆதரவாகப் புதிய அரசாங்கம் அமைக்க அவர் மேறகொணட முயறசிகள பலனளிகக விலலை. சிறுவராக இருநத அரசரின் காப பாளராக அரசாங்கம் பிரிதியை நியமிததைப பயன படுத்தி அமெரிக்காவிலும் பிரிட்டனிலும் செயறபட்டு வந்த தாய்லாநது விடுதலை இயககஙகளோடு அவா மறை முகமாகத தொடர்பு வைததிருநதாா. அரசாங கத்தைப் பிரிதியும அவரது ஆதரவாளாகளும 1944 -இல கைப்பற்றினா.

சட்டமனறத் தேர்தலகளில் 1946-இல பிரிதியின ஆதரவாளர்கள் பெரும்பானமை இடஙகளைக் கைப் பற்றினர். புதிய அரசியலமைபபு உருவாககபபட்டது. ஆனால் பிரிதியின சனநாயகக கொளகைகளை வலச் சாரிகள எதிர்த்தனா. அமெரிக்க ஆதரவோடு உள்நாட்டில் குழப்பம் ஏற்படுத்தினர். அரசா ஆனநத மகிதோல 1946-இல கொலையுணடாா. கொலை யோடு பிரிதியைத தொடாபுபடுத்தி வலச்சாரிகள பேசினர். அதனால் பிரிதி தன பதவியைத துறநது



படகுக் குடில்-தாய்லாந்து

தம்ரோங்கு நவசவாத்து (Thamrong Nawasawat) எனபவரிடம் பதவியை ஒப்படைத்தார். ஆனந்தரது தம்பியான பூமிபான அடுநதெட்டு (Phumiphon Adundet) அடுத்த அரசரானார். மீணடும் அர சாங்கம் 1947-இல கவிழககப்பட்டு பிபுன சஙகராம் தலைமை அமைச்சரானார். பிரிதியும அவரது தோழர்களும் கைது செய்யபபட்டனர். சிறையில பிரிதி 1948-இல் கொலை செயயப்பட்டார். பினனர் பிபுன், 1948 முதல 1957 வரை ஆட்சிப் பெறுப் பிலிருநதாா. புதிய அரசியலமைப்பு உருவாக்கபபட்டு, 1949-இல தேர்தல்கள நடைபெறறன. புதிய கட்சி யாகத் தோன்றிய சனநாயகக் கட்சிபெரும்பான்மை இடங்களைக் கைப்பறறியது. அதை விருமபாத பிபுன் அரசாஙகத்தையும் சட்ட மனறத்தையும், 1951-இல கலைத்தாா. மீணடும் புதிய அரசியலமைபபு உருவாக்கப்பட்டு ஒரே அவையைக் கொண்ட பாராளுமன்றம் கூட்டபபட்டது.

நீண்டகாலம் பிபுனின் சர்வாதிகாரம் நடைபெற இயலவிலலை. இறுதியில் தனம் கிட்டிகாசோன் (Thanom Kittikachorn) முறையான தலைமை அமைசசராகப் பதவி ஏற்றார். இவரும 1958-இல விரட்டபபட்டாா. சாரித்தனாரதது (Sarit Thanarat) அதிகாரத்தைக் கைப்பறறினார். சாரித்து 1963-இல இறந்தவுடன கிட்டி காசோன மீணடும் தலைமை அமைச்சரானார். எஸ.அ.

**தாயங்கண்ணனார்:** இவர் சங்கப் புலவருள ஒருவா. தாயன் எனபாாககு மகனாதலின இவா தாயஙகணணனார் எனப் பெயா பெறறார். தாயங கண்ணனாரின ஊர் எருககாட்டூர் ஆதலின் இவர் எருக் காட்டூர்த் தாயஙகணணனாா என்றும் கூறப் பட்டார். இவவிருவரும் ஒருவரா வேறா எனபது தெரியவில்லை எனபர் உ.வே சா வேறெனபர் ஔவை. துரைசாமிப்பிள்ளை. வையாபுரிப் பிளளை யும் பி. நாராயணசாமி ஐயரும் ஒருவராகவே கருது வர். இவர் பாடியனவாக நறறிணையில் ஒனறு (219) குறுநதொகையில் ஒனறு (319) அகநானூற்றில ஏழு (105, 132, 149, 213, 237, 319, 357), புறநானூறறில் இரணடு (356, 397) ஆக 11 பாடலகள கிடைத துள்ளன. இவர் பெயர்க்குப் பாட வேறுபாடாகத் தையங்கணணனாா என்பதும் கதையங் கணணனார் என்பதும் காணப்படுகினறன. புறநானூற்றின் 356-ஆம் பாடலைப் பாடியவர் கதையஙகண்ணனார் எனறே ஔவை. துரைசாமிப்பிளளை கொள்வர்.

கடலிற் பெரும்மீன் கொள்ளும் சிறுகுடிப் பரத வர் இரவில படகில மாட்டிய விளக்கு இளஞாயிற் றொளிபோல் தோனறுதல் (நற.219), மாலைக்காலத் தில் மழை பொழியுமபோது கலைமான மடப்பிணை யைத் தழுவிக் காட்டின் புதரில் மறைவதையும், களிறு பிடியொடு மேகம் சூழ்ந்த மலையைச் சேர் வதையும் சுட்டுதல் (குறு 319), எழினியின் மறவர் பாலை வெம்முனை கடந்து ஆனிரை கவர்தல (அகம்.105), கரடி புற்றாஞ் சோற்றை வெறுத்து இருப்பைப்பூ உணணுதல், சேரலரது சுளவியாறறில யவனர் பொன்னொடு வந்து கறியொடு பெயர்தல, சேரனது பொற்படிமத்தைப் பாணடியன பொருது கவர்தல், மதுரைகவு மேற்கே உளள முருகன் உறை யும் பரங்குனறசசிறப்பு (அகம்.149), தொணடையா வேஙகடமும் சேரரது கொல்லி மலையும சோழரது காவிரியும் உறையூரும பாராட்டப்பெறுதல் (அகம. 213,237), பாலையில் காக்கைக் கூட்டம் ஆலமரததில் தங்கி ஆறலைக் களவர் வில்லால மாய்த்த பிணத் தைத் தினறல்(அகம்.319), புலிப்பிணவின் வயா நோய போக்க ஆணபுலி யானையை வலம்படத் தொலைசசி, பாறை சிவப்புற ஈர்த்து வருதல (அகம. 357), காடு வாழ்த்தினைப் பாடுதல் (புறம்.356), குரவின முதிர்ந்த அரும்புக்கு அரவின எயிற்றை உவமை காட்டுதல (அகம் 237), கிளளிவளவனின வீரத்தையும் கொடை யையும் பாராட்டுதல் (புறம்.397) முதலிய செயதிகள இப்புலவர்தம் பாக்களால் அறியப்பெறும். இரா.சா.

**தாயங்கண்ணியார்:** சஙககாலப் புலவருள் ஒருவர். தாயங்கண்ணனார் என்பதற்குப் பெணபாற் பெயர் போலத் தாயங்கணணியார் எனனும் பெயா தோன்றுகிறது. கணணியார் எனபது இயறபெயர் என்பதும் தாயன் எனபானுக்கு மகளாதலின் தாயங கண்ணியார் எனப்பட்டார் என்பதும் ஔவை. துரை சாமிப்பிள்ளையின் கருத்தாகும். முடத்தாமக் கணணி யார் என்றாற்போல இவாபெயரும் கண்ணியாரென நிற்றலின் இவரை ஆண்பாலராகக் கருதுவோரும் உண்டு என்றும் அவர் குறிப்பர். இவர் பாடிய ஒரே பாடல் புறநானூற்றில 250-ஆம் பாடலாக இடம் பெற்றுளளது. பொதுவியல் திணையில் தாபத நிலைத் துறை அமைய இவர் அப்பாடலை அமைத்துளளார். கணவன வாழ்நதபோது இல்லம் பொலிவுற்றுத் திகழ்ந்ததையும், அவன மாய்ந்தபின அது பொலி வற்றுக் கிடந்ததையும் இவர் சித்திரிததுளளாா. மணம் கமழும் கொழுநதுவை அடிசிலை இரவலர்கட்கு அளவிறந்து நல்கியமையின, அவர்கள வறுமைத் துயர் நீங்கிக கண்ணீரும் கம்பலையுமினறி உவகை யுடன, முன்றிலில் உள்ள தணணரும் பந்தரில குழுமி யிருந்ததால இல்லம் கணவன இருநதபோது வளமுறக காட்சியளித்தது; அவன் பெருங்காடு முன்னிய பின அவவிலலம் கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி அல்லியரியாகிய உணவுண்ணும் மனைவியுடன செழிப் பற்றுப் புலலென்று காட்சியளித்தது என்பது அப் புறப்பாடலின் கருத்தாகும். கணவனையிழநத

காரிகை கூந்தல் நீக்கிக் குறுந்தொடி களைந்து, அல்லியுணவு உண்டனள என்று சங்க கால மரபை இப்பாடலின வாயிலாகத் தாயங்கணணியார் அறிவிக்கின்றார். இரா சா.

**தாயாட்சிக் குடும்பம்:** ஒரு குடும்பத்தின் தலைமைப் பொறுப்பும், நிருவாகம் செய்யும் அதிகாரமும் தாயிடம் அமைந்திருநதால அக் குடுமபம் தாயாட்சிக் குடுமபம (Matriarchal Family) எனப்படும். ஆணகள பெணகளுக்குக் கீழப்படிந்து இருப்பர். பெணகளே குடுமபத்தை நிருவகிப்பவர்களாகவும் சொத்திறகு உரிமையாளர்களாகவும இருப்பர் சொத்துரிமை தாயிடமிருநது பெணகளுக்குப்போகும். இந்த வகையில தாயாட்சிக் குடும்பம தாய்தாயக் குடும்பமாக (Matrilineal Family) அமைகிறது.

இத் தாயாட்சிக் குடும்பப் பழக்க முறைகள பழஙகாலக் குடும்ப அமைப்பில இருநததாக மாாகன (L H.Morgan), பேசசோபன (Bachofen) போனற அறிஞர்கள கூறுகின்றனர். பழஙகாலததில் மனிதன ஒரு திட்டமறற நிலையில் வாழ்நதான. எனினும், தாயாட்சிக் குடும்ப முறையே குடும்பத்தின பழமையான முறை எனப் பேசசோபன் கூறுகிறார். அமெரிக்க மானிடவியலின தந்தை எனச சொல்லப்படும் மார்கன திட்டமற்ற நிலையிலிருநது ஒரு தாரமணம் (Monogamy) வரையிலுமாகப பல நிலைகளில் குடும்பம் அமைந்திருந்ததாகக் கூறுகிறார்.

**முக்கிய பண்புகள:** 1) குடுமபத்தில தாயின மூலமே குல முறை கூறப்படும். ஏனெனில, தநதையின நிலை ஓர் எண்ணத்தின அடிப்படையில் உருவாகிறது. ஆனால் தாயின் நிலை ஓா உணமை நிகழச்சியின் அடிபபடையில உருவாகிறது எனக கருதப்படுகிறது. 2) திருமண உறவுகள நிலைபேறற்றவை. குடும்பத்தில் கணவன் சிறிது காலமே தங்கிச் செல்பவராக இருக்கலாம். 3) குழந்தைகள் மனைவி அல்லது மனைவியின் உறவினர்கள இலலத்திலேயே வளாக்கப்படுகிறார்கள். 4) இக் குடும்பம் தாய்-தாயக் குடும்பமாகவும் இருக்கும். இதில் சொத்துரிமை தாயின் மூலமாக மட்டுமனறிப் பெணகளுக்கு மட்டுமே உரிமையுடையதாகவும் அமையும். மேலும் குல முறை தாய் வழியில் தொடரும.

வேட்டையாடுதல் அல்லது பல இடங்களில சுற்றித் திரிகின்ற வாழ்க்கையை மேறகொள்கினற பணடைய மக்களிடையே தாயாட்சிக் குடுமப முறையே இருந்துவந்துள்ளது. அக குடும்பங்களில் தநதை வேட்டையாடுவதற்காகத் தொலைவிடஙகளுக்குச் சென்று வரலாம். எனவே அவர் நாள்தோறும் வீட்டுக்குச் சொல்லவியலாது. மிகுதியான நாளகள் வெளியிலேயே தஙக நேரிடும். இவ்வாறு தநதை இலலாத காலஙகளில குடுமபததை நிருவகிக்கும் பொறுப்பு மனைவியையே சாருகிறது மிகுதியான நாளகளில் அவளே குடும்பத் தலைவியாக இருக்க வேணடிய சூழ்நிலை ஏற்படுகிறது தொடக்கக்காலக் குடும்ப அமைப்பு முறை தாயாட்சிக குடுமபமாகவே இருந்தது எனறும், பினனர் வேளாணமை முனனேறறமும் ஆண்களின ஆதிக்கமும் தந்தையாட்சிக் குடும்பம் உருவாகக காரணமாக அமைந்தன என்றும் பிரிபால்டு (Briffault) என்ற அறிஞர் கூறுகிறார்.

வட அமெரிகக இநதியர்களும்,இந்தியாவிலுளள சில பகுதியினரும தாயாட்சிக குடுமப முறையையே பினபற்றுகினறனா. காசி (Khasi) போனற மலையினக் குடுமபஙகளில மனைவியிடமே குடும்பச் சொததுரிமை உளளது. இருபபினும் தாயாட்சி அலலது தாய வழிக் குடும்ப அமைபபுகள இதுபோ னற மலையின மககளிடம ஒரே தன்மையதாக இருப்பதில்லை. இந்தியாவில கேரளாவிலுளள நாயர்கள, அசாமிலுளள காசிகள், காரோக்கள (Garos) போன்றோரிடம் தாயவழி மரபு காணபபடுகிறது. ஆனால, காசிக்குடுமப அமைப்பு காரோக் குடுமப அமைப்பியிலிருநது மாறுபடுகிறது. காசிகள தாயகத்துக (Matrilocal) குடும்ப அமைப்பு முறையையும் தாயவழி மரபினையும் பினபற்றுகினறனா. சொத்துரிமை பெண்களினவழியில பெணகளுககு மட்டுமே அளிககப்படுகிறது. ஆயினும், அவர்களுடைய குடுமபச் சொத்தைப் பிரிக்க வியலாது காரோககளிடம தாய் வழி மரபும் தாயகத்துக குடுமப அமைப்பு முறையும் காணப்படுகின்றன. சொத்து பெணகளின் மரபு வழியாகவே செல்கிறது. ஆனால், அனைததுப் பெண உறுப்பினர்களாலும் குடும்பச் சொததைப் பங்கிட்டுக் கொளள இயலாது. பெற்றோர்களால் வாரிசாக நியமிககப்படும மக்களுள ஒருவரே சொத்திற்கு உரிமையுடையவராவா. இக் குடுமபங்களில் பெண்கள் சொத்துரிமை உடையவராக இருந்தாலும் அக் குடும்பம் கணவராலேயே நிருவகிக்கப்படுகிறது. காணக: குடும்பம் பூ.த.

**தாயின்பி, அர்னால்டு** (கி.பி. 1812-1883) இங்கிலாந்தில் வாழந்த ஒரு சமூகச் சீர்திருததவாதி. இவர் ஒரு பொருளாதார-வரலாறறு அறிஞரும ஆவார். இவர் இலண்டனில கி.பி.1852-இல் பிறந்தார் இவர் ஆக்சுபோர்டிலுளள (Oxford) பேலியல (Balliol) கலலூரியில பயினறு, கி.பி. 1878-இல் அக் கல்லூரியிலேயே விரிவுரையாளராகவும பணியாற்றினார்.

அர்னால்டு தாயினபி (Arnold Toynbee) ஏழைப் பாட்டாளி மககளுக்கு வீடுகள, நூல் நிலை

யஙகள், பூங்காக்கள் போன்றவை கிடைக்க அரும் பாடுபட்டார். அதன் நினைவாக இஙகு இவருக்கு ஒரு நினைவாலயம் அமைக்கப்பட்டுள்ளது. பாட்டாளி களிடம் இவர் நகராட்சிப் பொதுவுடைமைத் (Municilpal Socialism) தத்துவத்தைக் கூறியதுடன அவர்களிடையே தொழிற்சங்கங்கள், கூட்டுறவு இயக் கங்கள் முதலியன வளர்ச்சியடைய உறுதுணையாக இருந்தார். இவர், நாட்டிலுள்ள பொருளாதாரத் திட்டங்கள் வரலாற்றுச் சூழ்நிலைகளுக்கு ஏற்றன வாக இருக்கவேண்டுமென வலியுறுத்துகிறார்.

இங்கிலாந்தில் கி.பி.18–ஆம் நூற்றாண்டில் நடை பெறற தொழிறபுரட்சி பற்றிய இவர்தம் விரிவுரை கள மதிக்கததக்கனவாக விளங்கின. இவை கி.பி. 1884–இல் 'தொழிற்புரட்சி' (Industrial Revolution) என்ற தலைப்பில் நூலாக வெளிடப்பட்டன. இவர் தொழிற்புரட்சியை ஒரு தனிப்பெரும் வரலாற்று நிகழ்சசியாகக் கூறுகிறார். தொழிற புரட்சி' என்ற சொலலை உருவாக்கியவரும இவரே ஆவார்.

இவர் விம்பில்டன் (Wimbledon) என்னுமிடத்தில் கி.பி.1883–இல உயிர்நீத்தார். பூ.த.

**தாயின்பி, ஆர்னால்டு சோசபு (கி.பி. 1889–1975)** ஒரு சிறந்த ஆங்கிலேய வரலாறறறிஞர். இலணடனநகரில் கி.பி. 1889–இல் பிறந்த ஆானாலடு சோசபு தாயின்பி (Arnold Joseph Toynbee) ஆக்சு போர்டிலுளள பேலியல் (Balliol) கல்லூரியில் பயின றார்; பண்டைய இலக்கியங்களை நன்கு கற்றார்; கிரீசிலஉள்ள ஏதென்சுநகருக்குச் சென்று தொல்லியல் கறறார். இரண்டு பெரும் உலகப்போர்கள நடந்த காலத்தில இவர் இஙகிலாந்தின அயலநாட்டு அமைச் சரவையில் பணிபுரிந்தார். இவர் 1919–ஆம் ஆணடும் பினனர் 1946–ஆம் ஆண்டும் நடந்த பாரிசு அமைதி மாநாடுகளில இங்கிலாந்தின் பேராளராகப் பணி யாற்றினார். இலண்டன் பலகலைக்கழகத்தில் 1919 முதல் 1924 வரை வரலாற்றுப் பேராசிரியராக விளங் கினார். பின்னர் 1925 முதல் 1935 வரை இலணடனி லுள்ள பன்னாட்டு உறவுகள நிறுவனத்தின இயக்குந ராகப் பணியாற்றினார். பன்னாட்டு உறவுச் செய திகள தொடர்பான ஒரு புகழபெற்ற காலமுறை வெளியீட்டின் பதிப்பாசிரியராக 1920 முதல 1946 வரை தொணடாற்றினார்.

தாயின்பிக்கு மிக்க புகழ் தந்தது இவருடைய 'வரலாறு–ஓர் ஆய்வு' (A Study of History) என்னும் 12 தொகுதிகளடஙகிய ஒரு பெரும் நூலாகும். இது 1934 முதல 1961 வரை உளள ஆணடுக் காலத்தில் வெளியிடப்பட்டது. இத் தொகுதிகளைச்சாமர்வெல் (Somervel) என்னும் அறிஞர் சுருக்கி இரண்டு தொகுதிகளாக எழுதியுள்ளார். மானிட வரலாற்றில் மிகவும் இக்கட்டான நிலைமைகளில் ஏற்பட்ட அறைகூவல் உணர்ச்சி (Challenge) மானிட சமூகத் தின் வளர்ச்சிக்கு வழிவகுத்துள்ளது என்ற கருத்தை வரலாற்று முறையில் விளக்கிய பெருமை தாயின் பிக்கு உரியது. இடுக்கணகள் எந்த அளவுககு வீறு கொணடு சமாளிக்கப்பட்டனவோ அந்த அளவுக்கு ஒவவொரு சமுதாயமும் வளர்ச்சி பெற்றுளளது என்பது பேரறிஞர் தாயின்பியின் கோட்பாடு,மேலும் நாகரிக வளர்ச்சியில் ஆன்மிகக் கருத்துப் பெருக்கத் தின் தாககம் மிகுதியாக உளளது எனபதையும் தாயின்பி வலியுறுத்தினார். ஒரு தெயவிக அரசினை நோக்கி வரலாறு நடைபோடுகிறது என்பதும் இவர் கருத்தாகும். இவர் தமது நூலில் 26 உலக நாகரிகங களை ஆயவு செய்துளளார். அவற்றுள் 16 மறைந்து போனவை; மூனறு தடைப்படுத்தப்பட்டவை, எஞ்சிய வற்றை ஐநது பிரிவுகளாக விளக்கியுளளார். அவை 1) மேலை நாகரிகம், 2) பண்டைய கிறித்தவ நாகரி கம், 3) இசுலாமிய நாகரிகம்,4) இந்து நாகரிகம்,5) தூரக்கிழக்கு நாகரிகம எனபனவாம். தாயினபியின் கோட்பாடுகளை ஏற்றுக் கொள்ளாதவர் பலர் உளர். பொதுவாக, இவர் பல செய்திகளை மிகைப் படுத்திக் கூறியுள்ளார் எனறு சிலர் கருதுவர். இவர் காட்டும் மேறகோளகள தவறான அடிபபடையில எழுந்தவை எனற கருத்தும நிலவுகிறது. நாகரிக வளர்ச்சியில் சமயத்துககு அளவுகடந்த இடத்தைத் தருகிறாா என்றும் இவரைப் பறறிக கூறப் பட்டுளளது.

தாயின்பி 1948–இல் வெளியிட்ட 'நாகரிகம் ஒரு சோதனைக் கட்டத்தில் உளளது' (Civilization on Trial) என்ற நூலும், 1953–இல் வெளியிட்ட 'உலகமும் மேற்கு நாடுகளும்' (The World and the West) என்ற நூலும பல வாதப் பிரதிவாதங்களை எழுப்பின. இவா 1967–இல வெளியிட்ட 'அறிமுகங கள்' (Acquaintances) என்ற நூல பல முககிய தலை வர்களைச் சிறப்பிகினறது. இவர் எழுதிப் போந்த 'கிழக்கிலிருந்து மேற்கு'(East to West–1967),'உலகைச் சுற்றி ஒரு பயணம் (A Journey Round the World, 1958) எனனும இரண்டும் சிறந்த பயண நூலகள. இவருடைய இறுதி நூலான 'மனித சமுதாயமும தாய் பூமியும், (Manking and Mother earth) என்னும் நூல் 1976–இல வெளியிடப்பட்டது. இவ் வாறு ஓய்வின்றி உழைத்துப் பல வரலாற்று நூல களை அளித்த மாமேதை தாயின்பி 1975–இல கால மானார். தெ.பா.

**துணை நூல்கள்:**

Gargan E.T. (ed)., The Intent of Toynbee 's History, Loyola University Press, 1961.

**தாயுமானவர்**: தமிழகத்தின் நடுவில் காவிரிக் கரையிலே உள்ள திருச்சிராப்பள்ளி மலைக்கோயி லில் வீற்றிருந்தருளும் இறைவனுடைய பெயர் தாயு மானவா என்பதாகும். ஒரு பெண்ணின மகப்பேற்றுக் கெனத் துணைபுரியப் புறப்பட்டுவரும் தாய், வர முடியா வகையில் காவிரியின் வெள்ளப் பெருக்குத் தடை செய்ய, இந்த இறைவனே தாயாகச் சென்று மகப்பேறு கண்டு துணை செய்து தேற்றி வநதமை யால் இவ்விறைவனுக்குத் 'தாயுமானவர்' எனப் பெயர் வந்ததாகத் தல புராணம் கூறும். திருச்சியிலும் அதன் சுற்றுவட்டாரத்திலும் உள்ள இவ்விறைவனிடம் பற்றும் பாசமும் பக்தியும் கொண் டவர்கள் தம் பிள்ளைகளை அப்பெயரிட்டு அழைப் பர். அத்தகைய முறையில் வந்தவரே மூன்று நூற் றாண்டுகளுக்கு முன வாழ்ந்து தெய்வ இலககியம் தந்த தாயுமானவர்.

சோழ நாட்டிலே திருமறைக்காடு எனும் வேதா ரணியத்தில் வாழ்ந்த சைவ வேளாளர் மரபினைச் சார்ந்த கேடிலியப்பப் பிள்ளையின மகனார் தாயு மானவர். கேடிலியப்பப்பிள்ளை கல்வி அறிவு ஒழுக்கங் களில் சிறந்து விளங்கிய காரணத்தால அக்காலத் தில் திருச்சியில் ஆட்சிபுரிந்த விசய இரகுநாத சொக் கலிங்க நாயக்கர் அவரை அழைத்துத தம் அரசாங் கத்தில் பெருங்கணக்கராக அமைத்துக் கொணடார். அவருக்குச் சிவசிதம்பரம் எனற மகன் பிறந்தபோதிலும், அவரை மகப்பேறு அற்ற தம் தமையனாருக்குத் தத்தாகக் கொடுத்துவிட்டார். பின் திருச்சியில் தாயுமானவரை மகப்பேறு வேணடி வழிபட்டபின் மற்றொரு ஆண் குழந்தை பிறக்க அதற்குத் தாயுமானவர் எனப் பெயரிட்டார்.

தாயுமானவர் இளமையிலேயே கலை பல கற்று வட மொழியிலும் தமிழிலும வல்லவரானார். தந்தைக்குப்பின் இவர் அரசப் பணியில் இருந்தாரே னும், இவர் உள்ளம் இறைவன்பால் ஈர்க்கப் பெறத் தமக்கு வழிகாட்ட ஞானகுருவைத் தேடிக்கொண்டி ருந்தார். இந்நிலையில் திருமூலர் மரபில் வந்த மௌனகுரு தேசிகரை ஒருநாள் இவர்காண, அவ ரைப் பற்றிக் கொண்டு அவர் சீடராகி மெய்யறிவும் யோகநிலையும் வளரப்பெற்றார். ஆசிரியரைப்பற்றி, 'மௌனகுரு வணக்கம்' என்ற பதிகமும் பாடியுள் ளார். அதில் தம் குரு திருமூலர் மரபில் வந்தவர் என்பதைக் குறித்துள்ளார்.

இவர்தம் யோகநிலை அறிந்த அரசனும் இவ ருக்கு ஆவன செய்தானாயினும், அவன் சிலநாளில் மறைய, இவர் அங்கிருந்து தம் மாணவர் குழாத்து டன் புறப்பட்டு இராமநாதபுரம் அடைந்தார். தம் தமையனார் சொற்படி, தமக்கு மணவாழ்வில் விருப்பமின்றேனும, 'மட்டுவார் குழலி' எனற மங கையை மணந்து, சிலநாள் இல்லற வாழவில் இருந்து 'கனகசபாபதி' என்னும மகனையும பெறறார். பின மனைவி மறைய தூய துறவறததை மேற்கொண டார்.

பின திருச்சிராப்பள்ளி மௌனகுரு மடத்தைச சார்நது, கி.பி. 1644-ஆம ஆணடு முதல அதன தலை வராக இருந்து, ஞான நிட்டையுற்று, இறுதியில இராமநாதபுரம் சென்று, அங்கு கி.பி 1662 தைத திங்கள 28-ஆம் நாள விசாகத்தன்று இறைநிலை யுற்றார். இவர் சமாதி அடைந்த இடததில் சமாதி ஒன்றும மறைந்த நாளகுறித்த கலவெட்டு ஒனறும உணடு எனபர். (இவ்வரலாறு சைவ சிததாநத நூற்பதிப்புக் கழக 1966-ஆம ஆண்டு வெளியீட்டி லிருநது எடுக்கப்பெற்றது).

இவர் பாடல்கள உயர் தரத்தன. சிறப்பாகச் சைவ சமயத்தின அடிப்படையில இவர் பாடல்கள அமையினும் சமரச நோககுளளவையாகவும வேதாந்த சித்தாந்தக் கருத்துகள அமைந்தனவாக வும் பல பாடல்கள உளளன. இவர்தம பாடல தொகுப்பில் அமைந்த முதறபாடலாகிய 'அஙகிங கெனாதபடி' எனற பாடலே இவர்தம சமரச உணர் வுக்கு எடுத்துக்காட்டாக அமையும். பல பாடலகள இறைவனைப் பறறியனவாயினும் 'மலைவளர் காதலி' 'அகிலாண்ட நாயகி' 'பெரிய நாயகி' முத லிய பதிகங்கள உமையம்மையாரைப் பற்றியனவா கவும் அமைகின்றன. இரண்டு அடிகளாலாகிய கண ணிகள் பல இவர் இயற்றியுளளார். 'பராபரக் கண்ணி' அனைவரும் எளிதில படித்தறிந்து கொளளத் தக்கது. 'அன்பர்பணி செய்யஎனை ஆளாககி விட்டு விட்டால், இன்பநிலை தானே வநது எயதும் பரா பரமே' (பராபர-155) எனபன போனறவை இவர்தம் எளிமைக்குச் சானறாவன.

இவர் ஐம்பத்தாறு தலைப்புகளில பலவகைப் பாடல்களைப் பாடியுளளார். சில உயர்நத தத்துவக கருத்துகளைக் கொணடவை. சில பாடலகள் சித் தாந்தம் வேதாந்தம் எனற இருவகையிலும் பொருள கொளள அமைவன. இவர்தம் பாடலகளைத திரு வாசகத்துக்கு அடுத்துத் தமிழநாட்டவர் போற்றிய பரவுவர்.

சைவத் தமிழ் இலக்கியங்களுள் மிகச் சிறந்த ஒருசிலவற்றில இவர்தம் பாடலகளும் இடம்பெறும். அதேபோலச் சைவ அடியவர் வரிசையிலே தாயுமான வருக்குச் சீரிய இடம் உணடு. அ.மு.ப.

**தார்சிலிங்கு**: தார்சிலிங்கு மேற்கு வங்காளத் திலுள்ள மிக அழகிய கோடைவாழ் நகரமாகும.

இலாமா மொழியில் 'தோர்சி' (Dorje) எனப்பட்ட இது தார்சிலிங்கு (Darjeeling) என மருவியது. இந் நகரம் கல்கத்தாவிலிருந்து 663 கி.மீ. தொலைவில் 2248 மீ. உயரத்தில் உள்ளது. சிலிகுரியிலிருந்து (Siliguri) 84 கி.மீ. தொலைவில் உள்ளது. 238 மீ. உயரத்திலுள்ள மலையிலிருந்து (Observatory Hill) எல்லா இடங்களையும் நன்றாகப் பார்க்கலாம். வானம் தெளிவாக இருக்கும் காலங்களில் எவரசுட்டு மலைமுடியையும் கஞ்சின்சுங்காவையும் (Kanchenjunga) காணலாம். இதன் மக்கள் தொகை 40,405 (1961).


தார்சிலிங்கு நகரம்

இங்குள்ள பிரிச்சு குன்றில் (Birch Hill) இயற்கையாகவே அமைந்துள்ள அழகிய பூங்கா உள்ளது. இக் குன்றில் மலையேறுவதற்கான பயிற்சி நிலையமும் (Institute of Mountaineering) அமைக்கப்பட்டுள்ளது. இங்குள்ள கி.பி. 1806-ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்ட இலாயிட்சு பூங்கா (Lloyd Botanical Garden) சிறப்பு வாய்ந்தது. இங்குக் கல்கத்தாப் பல்கலைக் கழகத்துடன் இணைக்கப்பட்ட மூன்று கல்லூரிகளும், ஓர் அரும்பொருட்காட்சியகமும் (Natural History Museum) உள்ளன.

**மாவட்டம்:** தார்சிலிங்கு நகரைத் தலைநகராகக் கொண்டு அதன் பெயரிலேயே ஒரு மாவட்டம் உள்ளது. இம்மாவட்டத்தில் பல்வேறு பருவ காலங்களைக் காணலாம். ஆண்டிற்கு 100 அங்குலத்திற்கு மேல் மழை பெய்கிறது. காடுகள் அடர்ந்துள்ள இங்கு விலையுயர்ந்த மரங்கள் கிடைக்கின்றன. இதன் முக்கிய விளைபொருள் தேயிலை. சின்கோனா (Cinchona) மரம் மிகுதியாக உள்ளதால் முங்போ (Mungpo) என்னுமிடத்தில் குனைன் (Quinine) தொழிற்சாலை ஒன்று உள்ளது. ஏலக்காய் 300 முதல் 1600 மீ. வரை உயரமுள்ள இடங்களில் விளைகிறது. சமவெளியில் 1600 மீ. வரை உயரமுள்ள பகுதிகளில் நெல் பயிரிடப்படுகிறது. இங்குள்ள நகரங்கள் சிலிகுரி, காலிம்பாங்கு (Kalimpong), குர்சியாங்கு (Kurseong) முதலியன. இம்மாவட்டத்திலுள்ள முக்கிய ஆறுகள் மெசி (Mechi), பாலாசன் (Balasan), மகாநதி, திசுதா (Tista) முதலியவையாகும். சி.இரெ.

**துணை நூல்கள்:**

The Imperial Gazetteer of India, Today and Tomorrow, Printers and Publishers, New Delhi, 1908.

**தார்செட்டுப் பண்பாடு,** கிரீன்லாந்து, கனடாவையொட்டிய கிழக்கு வடதுருவப் பகுதி, நியூபவுண்டுலாந்துப் பகுதி (New Foundland) முதலான இடங்களில் காணப்பட்ட மிகத் தொன்மையான பண்பாடாகும். இது கி.மு. 300 முதல் கி.பி. 1300-ஆம் ஆண்டு வரை சிறப்புற்றிருந்ததாகக் கூறப்படுகிறது. தார்செட்டுப் பண்பாடு என்னும் பெயர் பப்பின்தீவில் (Baffin Island) தார்செட்டு முனை (Dorset Cape) என்னுமிடத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வின் மூலம் கண்டறியப்பட்டதால் இப்பெயர் வழங்கப் பெறலாயிற்று.

தார்செட்டுப் பண்பாட்டைப் பற்றிப் பல கொள்கைகள் நிலவுகின்றன. அவற்றுள் சில: 1) இப்பண்பாடு அலாசுகாவிலோ (Alaska) வடதுருவத்தின் மேற்குப் பகுதியிலோ தோன்றியிருக்க வேண்டும். 2) இப்பண்பாடு வடதுருவப் பகுதியின் மிகத் தொன்மையான பண்பாட்டிலிருந்தோ கனடாவின் தென் பகுதிகளில் மரமடர்ந்த காட்டுப் பகுதிகளைச் சேர்ந்த அமெரிக்க இந்தியர்களின் பண்பாட்டிலிருந்தோ தோன்றியிருக்கவேண்டும். இப்பண்பாடு உண்மையில் எசுக்கிமோ பண்பாட்டிலிருந்து தோன்றியது. கிழக்கு வடதுருவப் பகுதிகளில் இதனைத் தார்செட்டுப் பண்பாட்டிற்கு முந்திய நிலை (Pre-Dorset) என்று குறிப்பிடலாம் எனப் பலவாறு இப்பண்பாட்டின் தோற்றத்தைப் பற்றி ஆய்வாளர் குறிப்பிடுவர்.

தார்செட்டு மக்கள் உணவிற்குப் பெரும்பான்மையாகக் கடலில் வாழும் பாலூட்டிகளையும், கடல் நாய்களையும் நம்பியிருந்தனர். நிலத்தில் வாழ்ந்த பாலூட்டிகளையும் பறவைகள், மீன்கள் முதலானவற்றையும் பிடித்து உண்டனர். இவர்கள் நாய்களை வளர்க்கத் தெரியாதவர்களாக இருந்ததால் கையால் இழுக்கும் வண்டிகளைப் (Hand Steds) பயன்படுத்தினர்.



இவர்களின் குடியிருப்புகள பெரும்பாலும் கடற்கரை ஓரங்களில் மட்டுமே கணடெடுக்கப்பட்டுள்ளன. மக்கள அனைவரும் ஒனறாகக் கூடும் பொது வீடுகளும் கோடையில் தோலினால் கட்டப்படும் கூடார வீடுகளும் பயனபடுத்தப்பட்டனவென்று தெரிகிறது. இப்பகுதிகளில கணடெடுக்கப்பட்ட தரவுகளினபடி இம்மக்கள பருவத்திற்குப் பருவம் இடமபெயரும் நாடோடிகளாக வாழ்ந்திருந்தனர் எனபது புலனாகிறது.

இவர்கள் பயன்படுத்திய எறிஈட்டி (Harpoon) கத்தி வகைகள, விளக்குகள், சீவுவதற்குப் பயனபடுத்திய கற்கருவிகள் முதலானவை அனைத்தும் தனித்தன்மை வாய்ந்தனவாக உள்ளன. இங்குக் கிடைத்த ஆபரணங்கள் மரம், எலும்பு, தந்தம் முதலானவற்றால் செய்யப் பட்டிருந்தன.சித்திர வேலைப்பாடுகள மிகுதியாகக் காணப்படவில்லை. ஒருசில ஆபரணங்களில் மனித உருவங்கள் இயற்கையாகவோ கலை நயத்தோடோ செதுக்கப்பட்டிருந்தன.

தார்செட்டுப் பண்பாடு எப்போது அழிந்தது என்பது பற்றித் தெளிவாகக் குறிப்பிட முடியவில்லைஎனலாம். எவ்வாறு இருப்பினும் துலே (Thule) மக்கள அலாசுக்காப் (Alaska) பகுதியிலிருந்து இங்கு வந்து குடியேறியபின்னரே இப்பணபாடு மறைந்திருககவேண்டுமெனத் தெரிகிறது. இவ்விரு மக்களுக்கிடையில் தொடர்பு இருந்ததற்கான அறிகுறிகள் கிடைததுள்ளன. காலநிலையில் (Climate) ஏற்பட்ட மாற்றங்களே தார்செட்டுப் பண்பாட்டின் அழிவிற்குக் காரணமாக இருந்திருக்கலாம் எனத் தெரிகிறது.

இம்மக்களின் செல்வாககுக கனடா,கிரீனலாநது முதலான பகுதி மக்களிடையே எந்த அளவிறகுப் பரவி இருநதது என்பதும, இம்மக்களின் வழிததோனறலகளாக எசுக்கிமோவினர் (Eskimos) இருநதிருக்கலாம எனபதும் ஆய்வுக்குரியனவாக உளளன. எசுக்கிமோவினருள் ஒரு குழுவினர் கொண்டுளள பொருளகள தார்சேபண்பாடடு மக்கள பயனபடுததிய கருவிகளை மிகவும் ஒத்துள்ளமையால் இவவாறு எணணத தோனறுகிறது. சீ.ப.

## தார்சே, சார்சு அமோசு (கி பி. 1868-1931)

மூத்த அமெரிக்க மானிடவியலறிஞர்; அமெரிகக மானிடவியலின் வளாச்சிக்குப பெரும் பணியாற்றியவர். தாாசே (George Amos Dorsey) அமெரிககாவில் ஒகியோ மாகாணத்தில ஈபரான் (Hebron) எனனுமிடத்தில் கி.பி. 1868-இல் பிறநதாா கலலூரிப் படிபபுக்குப் பின் மானிடவியலில ஆாவங்கொணடு அதைப் பயின்றார். படிக்குங காலத்திலேயே அமெரிகக இந்தியப் பழஙகுடிகளின பணபாட்டையறியப பல களப்பணிகளை மேறகொண்டாா.

அமெரிககப பலகலைக்கழகத்தில மானிடவியலில டாக்டர் பட்டம பெற்ற முதல மாணவர் எனனும பெருமையைத் தார்சே பெறறார். இவா கி.பி. 1894-இல் ஆர்வர்டுப் (Harvard) பல்கலைக் கழகத்தில இப்பட்டத்தைப் பெற்றார்.

மானிடவியலில் தார்சேயின குறிப்பிடததக்க பங்கு, பல இனக்குழுவியல ஆயவுகளை (Ethnographic Studies) மேறகொணடு பலவேறு பணபாடுகளைப் பறறித தரவுகளைச் சேகரித்ததாகும. குறிபபாக அமெரிக்க இந்தியர்களுள மந்தான (Mandan) பழங்குடியினரைப் பறறிய இவரது ஆயவு சிறபபானதாகும. இவா எழுதிய இரணடு நூல்களள என்றும் நிலைத்திருக்கக்கூடியவை. அவை. 1) நாம் ஏன மனிதர்களைப் போனறு நடநதுகொள்கிறோம் (Why we Behave like Human Beings, 1925) 2) மனிதனின் சொநதச் செயலே நாகரிகம் (Man's Own Show: Civilization, 1931).

தார்சே சிக்காகோ இயறகை வரலாற்றியல் அருங காட்சியகத்தில் சிறிது காலம் பணிபுரிநதபோது அங்குப் பழங்குடிகளின் பணபாட்டை விளக்கும் பல காட்சிக்கூடங்களை அமைத்தார். இசுபானிய விவகாரங்களைத் (Spanish Affairs) தீர்ப்பதற்காக 1919-இல் நடைபெற்ற பாரீசு அமைதி மாநாட்டில் அமெரிக்கக் குடியரசுத் தலைவர் உட்ரோ விலசனுக்குத் தார்சே துணைபுரிந்தார். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் பல்வேறு இனக்குழுவினரிடையே ஏற்பட்ட சிக்கல்களைத் தீர்த்து வைபபதில் மானிடவியலார்

பெரும் பஙகாற்றியுள்ளனர் எனபதறகுத் தார்சேயும் ஓர் எடுததுககாட்டாவாா. சீ.ப.

**தார்சே, சேம்சு ஓவன்,** அமெரிக்க மானிட வியல் அறிஞா. இனக்குழு மொழியியல், இனக்குழு வியல (Ethnography) முதலான துறைகளில் பல புதிய ஆயவுகளை மேறகொணடு சிறப்புப் பெறறவா. தாாசே (James Owen Dorsey) அமெரிககாவில் பாலடி மோர் (Baltimore) என்னுமிடததில கி.பி. 1842-இல் பிறந்தாா.

முதன முதலில் கிறித்தவ சமய நெறி பரப்பும் இயக்கததில ஈடுபட்டிருந்தபோது பொனகா (Ponca) பழஙகுடியினரின புதுமையான பழக்க வழககஙகளைக கணடு அவர்களை ஆராய முற்பட்டார். இவாகளின மொழியை விரைநது கறறதன் மூலம் பழஙகுடிகளின பணபாட்டை ஆராய்வதில் பேரார்வம் கொண டார். அதன்பினனா அமெரிகக இனக்குழு ஒபபாய வியல் துறை (Bureau of American Ethnology) கி.பி 1879-இல் ஏற்படுததப்பட்டபோது இவா அதன் முன னோடி உறுபபினர்களுள ஒருவரானாா.

களப்பணி மேறகொணடு ஆராய்வதில பெரும் பெயர் பெறறவர் தாாசே. சியோவா (Sioua), ஓமகா (Omaha) பழங்குடிகளையும், தககோட்டா (Dakota) பழங்குடிகளையும் ஆராய்ந்த இவர் பணபாட்டின அறிதிறக் கோலம் (Cognitive Pattern) மொழியின கண வெளிப்படுவதை உணர்ந்தார். அதன் மூலம் இனக்குழு மொழியியலில(Ethnolinguistics) பல ஆய்வு கள் மேறகொள்ள வேணடியதன் தேவையை உணர்த்தி னார். இவர் எழுதிய முதன்மையான நூலகளுள சில: ஓமகா சமூகவியல (Omaha Sociology, கி.பி 1884), ஓசேசு மரபுகள (Osage Traditions, கி பி.1888) சியோவா சமூகவியல் (Siouan Sociology, கி.பி. 1897) முதலானவை. இவர் வாசிங்டனில் கி.பி. 1895-இல் இறந்தார். சீ.ப.

**தார்ட்டு மூர்,** தென்மேற்கு இஙகிலாந்தில் உள்ள ஒரு காட்டுப் பகுதி. இதனமத்தியில ஏறத்தாழ 50,000 ஏக்கரில் அமைநதுளள காட்டுப் பகுதியானது இஙகிலாந்து நாட்டின் மனனர் குடும்பத்துக்கு உரிமை யுடையது. இப்பகுதியில் இரும்பு, பித்தளை முதலிய உலோகப் பொருள்கள் கிடைக்கினறன. தார்ட்டு மூரில் (Dartmoor) 305 முதல் 610 மீட்டர் உயரத் திற்கு மலைப்பாங்கான பகுதியும் உள்ளது. செழிப் பான பகுதியில் ஆடுகளும் குதிரைகளும் மிகுதியாக வளர்க்கப்படுகின்றன. இலீ மோர் என்ற இடத்தில் களிமண் கிடைக்கிறது. இப்பகுதியில்ஏறத்தாழ260 மீ. உயரத்தில் ஒரு வானிலை ஆராய்ச்சி நிலையம் அமைந்துள்ளது. பிரினசுடன் என்ற இடத்திற்கு அணமையில அமைந்துளள தாாட்டுமூர் சிறைசசாலை கி.பி. 1809-இ ல நிறுவப்பெற்றது. இஙகு கி.பி. 1812 -ஆம் ஆணடுப் போரில அமெரிக்க நாட்டின சிறைக் கைதிகள அடைககப்பட்டனா.

தார்ட்டுமூர்ப் பகுதியில் உள்ள நீர்நிலைகளில மீன்வளம் மிகுநது காணப்படுகிறது. சாக்சன இனதத வர் இப்பகுதியில வாழந்தனா எனபதறகுப பல சானறு கள உளளன. தேசியப் பூஙகா ஒன்று அமைக்கப் பட்டு இதன இயற்கை அழகு பாதுகாக்கப்படுகிறது.



தார்ட்டுமூர்க் குதிரைகள

காட்டுப் பகுதிகளிலிருந்து குதிரைக் குட்டிகளைப் பிடித்துச் சநதையில வணிகர்கள விற்கின்றனர். பனிப் பாறைகள் உளள பகுதியும இப்பகுதியில் உணடு.

அமெரிக்கப் போாக் கைதிகள கி.பி. 1812–ஆம் ஆண்டில் நடைபெற்ற போரில தார்ட்டுமூர்ச் சிறைச் சாலையில் அடைததுவைக்கபபட்ட நேரத்தில கல கத்தில் ஈடுபட்டனர். இப்போர் முடிந்து கென்ட்டு என்ற நகரில் ஏறபட்ட ஒப்பந்தத்திற்குப் பிறகும சிறையில் அடைத்துவைத்திருந்தபடியால, கி.பி. 1815 ஏப்பிரல 6–ஆம் நாள் தார்ட்டுமூர்ச் சிறையி லிருந்த 5,542 போாக்கைதிகள மீணடும கலகத்தில ஈடுபட்டனா. கலகத்தை அடக்கச் சிறை அதிகாரி ஆங்கிலேயப் படைகளை அழைத்துக கலகததில் ஈடுபட்ட அமெரிககக் கைதிகளைச் சுடுமாறு பணித் தார். அதனால 60 கைதிகள் இறந்தனர்.

இச்சிறை நிகழ்ச்சியின் காரணங்களை ஆராய அமைக்கப்பட்ட குழு, சிறை அதிகாரி குற்றமற்றவர் என்று தீர்ப்பளித்தது.ஆனால் துப்பாக்கிச் சூடு நடந் ததைக் கண்டித்தது. இஙகிலாந்து, கலகத்தில் காய மடைந்தவாகளுக்கு நிதிஉதவி அளித்தது.

தார்ட்டுமூர்ச் சிறையிலிருந்து எஞ்சிய சிறைக் கைதிகள் கி.பி 1815 ஏப்பிரல் மாத இறுதிக்குள் விடு

தலைபெற்றனர். இந்தச் செய்திகளைத் தொகுப்பாகத தார்ட்டுமூர்ச் சிறைநிகழச்சி எனறு வரலாற்றில குறிப் பிடுகின்றனர். தா.எ.

**தார்ட்டுமௌத்து**: இது கனடா நாட்டில் உள்ள நோவாசுகோசியா (Novascotia) எனற பகுதி யில் உள்ள நகரம். ஆலிபாகசு (Halifax) துறைமுகம், தாாட்டுமௌத்து (Dartmouth) நகரின் அருகில் இருக் கிறது. இஙகிலாநதிலிருநது கி.பி. 1750-இல் குடி யேறிய மககள அமைதத நகரம் தாாட்டுமௌதது ஆகும். இது கி.பி. 1873 வரை ஒரு சிறு நகரமாக இருநது, கி.பி. 1961-இல ஒரு பெரிய நகரமாக வளாசசியடைந்து, இனறு கனடாவில ஒரு முக்கிய நக ராகத திகழகினறது. போக்குவரத்து அமைபபுகள, வசதிகள் மிகுதியாக இருப்பதால, வாணிகத்தில் சிறந்து விளஙகுகினறது. நோவாசுகோசியா மாநிலத் தில் பல பொருள்களை அதிகமான அளவில் உற் பத்தி செய்யும் முககிய நகரமாக இது விளங்குகின் றது. எணணெயக கிணறுகளும், இரும்புத் தொழிற் சாலைகளும மிகுதியாக உளளன. இரண்டாம் உலகப் போரின பொழுது, தார்ட்டுமௌத்துப் பகுதியிலிருந்த படையினரால நோவாசுகோசியாப் பகுதியானது, போரின் அழிவிலிருநது காபபாற்றப்பட்டது. கடல ஆராய்ச்சி நிலையம், கபபல் கட்டும தொழிற்சாலை, கப்பலகளைப் பழுதுபார்க்கும் தொழிறசாலைகள ஆகியவை உளளன. குறிப்பாக, 1968-க்குப் பிறகு, திட்டமிட்ட வகையில் நகரின பல பகுதிகள வளர்சசி யடைநதுளளன.

நோவாசுகோசியாவின் ஆளுநராக இருந்த எட் வர்டு காரனவாலிசு கி.பி. 1750-இல 350 மக்கள் குடி யேறியிருநத இபபகுதியின வளர்ச்சிக்கு மிகவும் உதவி செய்தார். ஆதிகுடியினரான செவ்விந்தியர் பலா கி.பி. 1751-இல் கொலை செயயப்பட்டனர்.

ஆலிபாக்சு நகரத்தோடு தார்ட்டுமௌததுப் பகுதியினை இணைக்கும் பாலம் 1955-இல் கட்டி முடிக்கப்பெற்றது. தார்ட்டுமௌத்தின மககள தொகை 62,277(1981). தா.எ.

**தார்த்தாரியர்**: பெரும்பாலும் துருக்கி மொழி பேசும், இசுலாமிய சமயத்தைப் பின்பற்றும் தார்த் தாரியர் (Tartars or Tatars), ஐரோப்பிய உருசியா, மத்திய ஆசியா, சைபீரியா ஆகிய பகுதிகளில் வாழ் கிறார்கள். உருசியாவில் ஓல்கா (Volga) ஆறு பாயும் பகுதிகளின் நடுவிலும், அதன் துணை ஆறா கிய காமா (Kama) பாயும் பகுதிகளின் நடுவிலும், யூரல் மலைகளுக்குக் கிழக்குப் பகுதிகளிலும், தென் சைபீரியாவிலும், மொத்தம் 5,000,000 தார்த்தாரியர் வாழ்கிறார்கள் (1970). முன்பு, தார்த்தாரியர் என்ற சொல, ஆசிய புலவெளிகள (Asian Steppes), பாலை வனம ஆகியவற்றைச் சேர்ந்த அனைத்து நாடோடி யினரையுமே குறிககப பயனபட்டது. தாாததாரியர் எனனும பெயர் கி.பி. 5-ஆம நூற்றாணடில், வட கிழககு கோபியில (Gobi) வாழ்நது, பிறகு கி.பி. 9 -ஆம் நூற்றாணடில் கீட்டனசு (Khitans) எனபவா களின ஆககிரமிப்புக்குப் பிறகு, தெறகு நோககி இடம் பெயாநது, மஙகோலியப பேரரசை உருவாக் கிய 'தா-தா மங்கோலியர்' (Ta-ta Mongols) எனற பெயரிலிருநதே வந்தது.

கிழக்கு ஐரோபபாவில கி பி 13-ஆம் நூற்றாண டில் நுழைந்த செஙகிசுகானின் (Genghiskhan) படை யில் தார்த்தாரியரும் ஒரு பகுதியினா. செஙகிசு கானின் பேரரசு உடைநதபோது, அளவற்ற துருக்கியர் மங்கோலியப் படைப்பிரிவில் இணைநது, தார்த்தாரியர் என்ற பெயரைப் பெறறனர். இநதத 'தஙகப் படைத் தொகுதி' (Golden Horde) கி.பி. 15-ஆம் நூற்றாணடில சிதறுணடது. இம்மககள வாழ்ந்த பகுதிகள உருசியப் பகுதியாக கி.பி.16-ஆம நூறறாணடில் மாறியது. கிரிமியா (Crimea) மட்டும் துருக்கியரிடம் 300 ஆணடுகள் இருந்து உருசியா வசம் கி.பி. 1783-இல வந்தது

உருசியாவில உள்ள தார்த்தாரியர்களை பல பெருந்தொகுதியினராகப பிரிக்கலாம். காசன (Kazan) தாாத்தாரியா, ஐரோப்பிய உருசியாவிலும் போலந்திலும் உளளவர்கள். ஓலகா ஆறறுப பகுதியில் கி.பி. 13-ஆம நூற்றாணடில் குடியேறிய கிப்சாக்கு (Kipchaks) வழியில் வநதவர்கள். பழைய பல்கேரியரும் பினனிசு (Finnish) கிரிமியாவில் இருநத இத்தாலியரும் கிரேககாகளுடன் கலந்துவிட்டனா. வேளாண்மை, தோட்ட வேலை ஆகியவை இவாகளு டைய தொழிலகள. உழைப்பிறகும், நோமைககும் பெயர்பெற்றவர்கள். காகசசு தார்த்தாரியா (Tartars of Caucasia) மேல குபான (Upper Kuban), கீழ் குமா (Lower Kuma), குரா (The Kura), தோபோல்சுகிலிருந்து (Tobolsk) தோம்சககு வரை யிலுள்ள பகுதி, ஆலடாய் (Altai) ஆகிய பகுதிகளில வாழ்கிறார்கள். தார்த்தாரியரிடையே பல பிரிவுகள உளளன.

ஓல்கா நதிபபகுதியில் தார்த்தாரிய நாகரிகம் மிகவும் வளர்ச்சியுறறிருந்தது. ஆனால், கி.பி. 1552 -இல் பயஙகர நான்காம ஐவான்(Ivan IV the Terrible), காசன் இனத்தை வெற்றிகொணட பிறகு இந் நாகரிகம் நசுங்கியது. இந்நிலை கி.பி. 19-ஆம் நூற் றாண்டுவரை நீடித்தது. புரட்சிக்குப் பிறகு, சோவி யத்து உருசியா 1917-ஆம் ஆண்டு, தார்த்தாரியரை 'ஒரு பேரினமக்களாக, (Major Etntic Group) ஏற்றுப்

பொது உடைமைக் கொள்கையின் வரையறைகளுக்கிணங்கத் தார்த்தாரியப் பணபாட்டைப்பாதுகாக்கலாயிற்று.

தார்த்தாரிய மொழி, ஆலடயிக்கு (Altaic)மொழிக்குடும்பத்தைச் சேர்நத துருக்கிய மொழிகளுள ஒனறு. இதிற் காணப்படும் சொற்கள, வரலாறறில் பல கூட்டத்தினர் தார்த்தாரிய இனம் ஏற்படுவதற்குக் காரணமானதை நினைவூட்டுகின்றன. 'ஓல்கா தாரத்தர்' (Volga Tatar) எனற காசன தார்த்தாரியரின் (Kazan Tatars) மொழி, தகுதி வாய்ந்த இலகக்கிய மொழியாகக் கருதப்படுகிறது. தார்த்தாரியர்கள சனனி முசுலீம்கள் (Sunnite Muslims) ஆவா.

**மக்கள் தொகை:** சோவியத்து உருசியாவில் உள்ள 5 மிலியன் தார்ததாரியரில் 25 விழுக்காட்டினர் தார்த்தாரிய இன அடிப்படையில் அமைந்துள்ள ஒரே அரசியல் பிரிவான 'தாரததாரியக் குடியரசில' உள்ளனர். மறறவாகள உருசியாவின பிறபகுதிகளில பரவலாக வாழ்கினறனர். ஓலகா சமவெளியில 600,000., யூரல பகுதியில் 1,600,000, மேற்குச் சைபீரியாவில் 1,50,000, காசுகிசுத்தானிலும் (Kazkhstan), மத்திய ஆசியாவிலும் 800,000, கார்னோ-ஆலடாய (Gorno Altai) எனற தன்னாட்சிப் பகுதியில 50,000 எனப் பரவியுளளனர். சோவியத்து ஒனறியத்தில உள்ள தார்த்தாரியர் நகரங்களிலும் கிராமங்களிலும் எண்ணிக்கையில் சரிசமமாக உளளனர். ஐரோப்பிய உருசியாவின் நகரப் பகுதிகளில் 'குறிப்பிடத்தக்க சிறுபானமைபினராக' (Significant Minority) உள்ளனர்.

மொத்தம் இரண்டுலட்சம் எணணிக்கையுளள கிரிமியன் தார்த்தாரியர், இரணடாம் உலகப் போரில் செருமானியப் படைகளுடன் உடனபாடு கொணடிருந்தனர் எனக் குற்றம் சாட்டப்பட்டுத் தண்டனையாகச் சமூக உரிமைகள பறிக்கப்பட்டு, மத்திய ஆசியாவிறகு விரட்டப்பட்டனர். கிரிமியன் குடியரசு 1945-இல் அழிக்கப்பட்டது. பிரதமர் குருசேவின் 'இசுடாலின்மய-அழிப்புத் திட்டப்படி' (de-Stalinization Programme)நாடுகடத்தப்பட்டவர்கள், 1956-இல் உசுபெக்கித்தானில் சமூக உரிமைகளைத் திரும்பப் பெற்றாலும், கிரிமியாவுக்குத் திரும்ப அனுமதிக்கப்படவில்லை. கிரிமியா 1954-இல் உக்ரேன் எசு.எசு.ஆர். உடன் சேர்க்கப்பட்டது. அதை எதிர்த்த தார்த்தாரியர்கள அடக்கப்பட்டனர். தி.செ.

**தார்தனல்சு:** ஏசியன் கடலையும், மார்மாராக் (Marmara) கடலையும் இணைக்கும் கடற்கால் 64 கி.மீ. நீளமும் 1 முதல் $6\frac{1}{2}$ கி.மீ. அகலமும் உடையது. அதே நேரத்தில் ஐரோப்பியத் துருக்கியின் காலிப்போலி முந்நீரகத்தை ஆசியத் துருக்கியிலிருந்து பிரிக்கிறது பணடைக் காலததில் இது 'எல்லாசுபாணடு' (Helles Pont) எனப் பெயாபெற்றிருந்தது. ஆசியாவின கடற்கரையில் அமைநத தார்டேன்லசு என்னும் கிரேக்க நகரத்தில இருநது இப்போதைய பெயராகிய தாரதனல்சு (Dardanelles) உருவாயிற்று. கருஙகடல மற்றும் மத்திய தரைக்கடல் இடையே கப்பல் போக்குவரத்தைக கட்டுப்படுத்தியதால், தார்தனல்சு மறறும் போசுபோரசு கடற்கால்கள் வரலாறறின் தொடக்கத்திலிருந்தே முக்கிய இராணுவத்தலமாகக் கருதப்படுகின்றன. எலலாசு பாணடுக்கு மேறகாகப் பணடைய திராய் நகரம செழிபபுற்று விளஙகியது. முதலாம் சர்சீசு (Xerxes) கி.மு. 481-இல் இக்கடற்காலைப் படகுகளாலானபாலம் கொணடு கடந்தார். அதுபோலவே மாவீரன அலெகசாணடர் கி மு. 334-இல் இக்கடற்காலைக் கடந்தான்.

பைசாணடியன் மற்றும் உதுமானியப் பேரரசுகள் இருந்த காலம் வரை இநதக கடறகாலகள கானசுடாணடி நோபிளின பாதுகாப்பிறகுப பயனபட்டன. தார்தனலசு கி.பி. 1402-இல் சுல்தான முதலாம் பச்சசேப்புக கைவசமாயிற்று. உருசியாவின் கருங்கடலையொட்டிய விரிவாக்கம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் உதுமானியப் பேரரசை வலுவிழககச செய்தது. இக்கொளகை மேலை நாடுகளின கவலையை அதிகரித்தது. முககியமாக இங்கிலாநதும் பிரானசும் கி பி. 1841 முதல ஒன்றாக இணைந்து, உருசியா இப்பகுதியில் தன்னுடைய ஆதிககத்தை நிலைநாட்ட அல்லது சிறப்புரிமைகள பெற இயலாமற் செய்தன. பிரான்சு, உருசியா, ஆசுத்திரியா, பிரசியா ஆகியவை கி பி. 1841-ஆம் ஆணடு இக்கடற்காலை அமைதிக்காலஙகளில் துருககியப் போாக கப்பல்கள் தவிர மறறப் போாக்கபபலகளுககு மூடிவிட ஒப்புக்கொண்டன. இந்த ஒப்பநதம் வழக்கமான முறையில் கிரிமியன போருக்கு முடிவில கூட்டப்பட்ட பாரிசு மாநாட்டில் உறுதிப்படுத்தப்பட்டது. கொள்கை முறையில் இந்த ஒபபநதம் முதல் உலகப் போர் வரை நீடித்திருந்தது முதல் உலகப் போரின் பொழுது காலிப்போலியில் நடந்த போா தோலவியுற்ற போதும் முடிவாகத் துருக்கி வீழச்சியுற்றது நேசநாடுகளின் கப்பற்படை 1918-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள இக்கடற்கால வழியாகச் சென்று கான்சுடாண்டி நோபிளைக் கைப்பற்றியது. இலாசேன (Lausanne) உடன்படிக்கையின்படி (1923) இப்பகுதி துருக்கியிடமே ஒப்படைக்கப்பட்டது. ஆயினும் இராணுவத் தளவாடங்கள அற்ற பகுதியாக இது இருக்க வேணடுமென்று முடிவுசெய்யப்பட்டது. இருப்பினும் இரகசியமாகத் துருக்கி விரைவில் இப்பகுதியை இராணுவத்தால் பலப்படுத்தியது. மாண்டிரோ (Mon-

treux) ஒப்பந்தப்படி 1936-இல் துருக்கிக்கு இப்பகுதிகளும் முறையாக அளிக்கப்பட்டன. இந்த ஒப்பந்தம் துருக்கியால் முக்கியமாக இரண்டாம் உலகப் போரின்போது 1945-ஆம் ஆண்டு சனவரி வரை செயற்படுத்தப்பட்டது. அப்போர் நிகழ்ந்து கொண்டிருந்தபோது சோவியத்து உருசியாவுக்கு நேசநாடுகள் துருப்புகளையும் மற்ற இறையியமையாப் பொருள்களையும் அனுப்பத் தடையற்ற வழிதேவைப்பட்டதால மாண்டிரோ ஒப்பந்தம், அதற்குத் தக்க வகையில் திருத்தி அமைக்கப்பெற்றது. இ.தி.

***தார்பி:*** அமெரிக்காவில பிலடெல்பியாவின் (Philadelphia) தென்மேற்கு எல்லையில தெலாவர் (Delaware) ஆற்றுக்கு அருகே அமைந்துள்ள தார்பி (Darby) தெலாவா பிரிவில் உள்ள 'பரோ' (Borough) தகுதியுடைய நகரம் ஆகும். இது தொழில முக்கியத்துவம் வாய்ந்த நகரம் அன்று என்றாலும் சில தொழில்கள் மட்டும நடைபெறுகின்றன. விளக்குகள உற்பத்திசெய்தல இந்நகரத்தின பொருளாதார நிலையின அடிப்படையாகும். பாலடிமோர், ஒகியோ இருப்புப்பாதை, மற்றும் பென்சிலவேனியா இருப்புப பாதை ஆகியவை தார்பியுடன் இணைந்துள்ளன.

'நண்பாகள்' (Friends) என்று சொல்லப்பட்டோரில் எட்டுப்போ சேர்ந்து கி.பி. 1682-ஆம் ஆண்டு தார்பியை உருவாக்கினர். அவர்கள பிலடெல்பியாவில உள்ள குவாக்காகள்(Quakers) என்ற கிறித்தவசமயப பிரிவினர். இது கி.பி.853-இலஅமெரிக்காவுடன ஒருங்கிணைக்கப்பட்டது என்றாலும், 1900-க்குப் பிறகே முன்னேற்றங் கண்டது. குவாக்கர்கள தார்பி நூல் நிலைய நிறுவனத்தை (The Darby Library Company) கி.பி. 1743-ஆம் ஆண்டு உருவாக்கினர். அமெரிக்காவின் பழமை வாய்ந்த நூல நிலையங்களுள ஒன்றான அது இன்றும் உள்ளது. 'நண்பர்கள கூடும் இல்லம்' (Friends Meeting House) கி.பி. 1701-இல கட்டப்பட்ட கட்டடம் ஒன்று இருந்த இடத்தில், கி.பி. 1815-இல் கட்டப்பட்டது.

தாவர இயல் அறிஞரான சான பார்ட்ரம் (John Bartram) என்பவர் தார்பிக்கு அருகில கி.பி. 1699-ஆம் ஆண்டு பிறந்தார். தார்பி நகரத்தை ஒரு மேயரும், நிர்வாகக் குழுவும் நிர்வகிக்கின்றனர். இதன மக்கள தொகை 13,729 (1970). தி.செ.

***தார்பி, வில்லியம் (கி.பி. 1775–1854).*** தார்பி வில்லியம் அமெரிக்கப் புவியியலாளர் ஆவார். பெனசில்வேனியா மாநிலத்தில், தாபின் (Dauphin) என்னும் பெயர் பெறும் இலங்காசுடர் (Lancaster) வட்டத்தில் கி.பி. 1775-ஆம ஆண்டு பிறந்தார். தானே கல்வி கற்றுக் கொண்ட தார்பி, வில்லியம் (Darby, william) தம் 18-ஆம் வயதில பள்ளியில சேர்ந்தார் மிசிசிப்பி (Mississippi) மாநிலத்தில உள்ள 'நாட்செசு'(Natchez)என்ற இடத்தில கி.பி. 1799-இல பருத்தி விளைவிப்பவரானார். ஆனால், கி பி. 1804-ஆம் ஆண்டு, அவருடைய நிறுவனம நெருப்புப் பற்றி அழிந்தது. பிறகு, அமெரிக்க அரசுத் துறையில ஒரு துணை நில அளவையாளராக (Deputy Surveyer) ஆக்கப்பட்டார். உலூசியானாவின (Louisiana) பல பகுதிகளுக்கும் சென்று, தம் சொந்தச் செலவிலேயே ஆய்வுகளை மேற்கொண்டு, உலூசியானாவின வரைபடம ஒன்று தயாரித்தார். ஆங்கிலேயர் கி.பி. 1814-15-இல் உலூசியானாவைக் கைப்பற்ற முனைந்த போது, அங்குப் போர் புரிந்த தளபதி ஆண்டுரு சேக்சன (Gen. Andrew Jackson) கீழ்ச் செயற்பட்ட நில அமைப்பு ஆய்வுப பணியாளர்களுள் (Topographical Staff) ஒருவராகச சேர்ந்தார்

இவர் செய்து முடித்த ஆய்வு அளவீடுகளை உலூசியானா அதிகாரிகள வெளியிடாமையினால், இவா பிலடெல்பியாவுக்குச(Pihladelphia) சென்றார். அங்கே, சான மெலிசு (John Melish) என்பவர், தார்பியின 'உலூசியானா மாநிலத்தின ஒரு புவியியல் விளக்கம்' (A Geographical Description of the State of Lousiana) என்ற நூலை கி.பி. 1816-17-இல வெளியிட்டார். பின்னர், கி.பி 1818-ல அமெரிக்காவுக்கும் கனடாவுக்கும் இடையிலான எல்லைக் கோட்டை அளவிடவும், நிர்ணயிக்கவும இவர்மிகவும் உதவினார். புரூக்கு (Brooke) என்பவரின 'பொதுப் புவியியல அகராதி'யைத் (1762) தொகுத்து மறு பார்வையிடப் பட்ட மூன்று பதிப்புகளை கி பி 1823,1827,1843 ஆகிய ஆண்டுகளில் வெளியிட்டார். தியோடார் துவைட்டு (Theodore Dwight)என்பவருடன சேர்ந்து கி.பி. 1830-இல 'ஐக்கிய நாடுகளின புவியியல அகராதி' (அமெரிக்கா) (The United States Gazetteer)என்ற நூலைப் பதிப்பித்தார். தார்பி, கி.பி. 1854-ஆம் ஆண்டு வாசிங்டனில் உயிர் துறந்தார். தி.செ.

***தார்லிங்கு மலைத்தொடர்:*** ஆசுத்திரேலியாவில பெரிய மேட்டுநிலப்பகுதியில் உள்ள குறைந்த உயரமுடையதோா மலைத்தொடா ஆகும். நியூ சவுத்வேல்சின் ஆளுநராகவிருந்த சர் இராலப்பு தார்லிங்கு (Sir Ralph Darling) என்பாரின் நினைவாக கி.பி. 1827-இல இம்மலைத் தொடருக்கு அவருடைய பெயர் சூட்டப்பட்டது. மேற்கு ஆசுத்திரேலியாவின் தலைநகரான பெர்த்திலிருந்து (Perth) உள்நாட்டுப் பகுதியில இது அமைந்துள்ளது. இது இயற்கையாக அமைந்த மலைத்தொடர்

அன்று. தொடர்ச்சியாக இருந்த உயரமான பாறைகள் அரிப்பின் காரணமாக இடைவெளி ஏற்பட்டுத் தொடராகக் காட்சியளிக்கிறது. இம்மலைத் தொடர் இந்நாட்டின் தென்மேற்குக் கடற்கரைக்கு இணையாக வடக்கே மூர் ஆற்றிலிருந்து தெற்கே பிரிட்சுடவுன் (Bridgetown) வரை 320 கி.மீ. நீளமுள்ளது. இதன் சராசரி உயரம் 270 மீ. இத்தொடரின் உயர்ந்த சிகரங்களான கோக்குமலை (Mount Coke) 582 மீ. உயரமும்; சோலசு மலை ஏறத்தாழ 600 மீ. உயரமும்; தேல் மலை (Mount Dale) 590 மீ. உயரமும் உள்ளன. இங்குள்ள கானிங்கு அணையிலிருந்து (Canning Dam) பெர்த்து நகருக்குத் தண்ணீர் வழங்கப்படுகிறது. இம்மலைத்தொடரின் மிக உயரமான இடம் ஏறத்தாழ 12.30 மீ. உயரம் உள்ளது. பெர்த்துக்கு அருகிலுள்ள சான் பாரசுடு தேசியப் பூங்கா (John Forest National Park) உயர்ந்தவகை மரங்கள் நிறைந்த பூங்கா ஆகும். இங்கு மரங்களிலிருந்து பல தைலங்கள் வடித்தெடுக்கப்படுவதுடன், யூகலிப்டசு மரத்திலிருந்து மரக்கரி தயாரிக்கப்படுகிறது. இப்பகுதியில் இரும்புத் தாதும், பாக்சைட்டும் கிடைக்கின்றன. சி.இரெ.

**தார்வார்** கருநாடக மாநிலத்தில் தார்வார் மாவட்டத்தின் தலைநகரம். வட்டமும் (Taluk) தார்வார் என்றே கூறப்படுகிறது. முன்னர் இது பம்பாய் மாநிலத்தின் தெற்கு மாவட்டமாக இருந்துவந்தது. இது,பம்பாய்க்குத் தென்கிழக்கில் 470 கி.மீ. தொலைவிலும்,கோவாவுக்குக்கிழக்கில்130 கி.மீ. தொலைவிலுமுள்ள ஒரு குறிப்பிடத்தக்க தொடர்வணடி சந்திப்பு மையமாகும் இதன் வடக்கில் பெல்காம், பிசாப்பூர் மாவட்டங்களும், கிழக்கில் ஆந்திர மாநிலமும், துங்கபத்திரை ஆறும்,தெற்கில் மைசூரும் மேற்கே வடக்குக் கனரா மாவட்டமும் எல்லைகளாக உள்ளன. தென் வடக்கில் இதன் மிகுந்த அளவு நீளம்186கி.மீ;உயர்ந்த அளவு அகலம் 123 கி.மீ. இந்நகரத்தின் மக்கள் தொகை 5,26,493 (1981).

இப்பகுதியில் பருவநிலை உடல் நலத்திற்கு ஏற்றதாக உள்ளது. திசம்பர், சனவரி மாதங்களில் குளிர் மிகுந்தும், பிப்ருவரி முதல் ஏப்பிரல்வரை வெப்பம் மிகுதியாகவும் உள்ளது. இம்மாவட்டத்தில் பெரிய ஆறுகள் இல்லையென்றாலும் 7 சிற்றாறுகள் ஓடுகின்றன. அவற்றுள் 6 கிழக்கு நோக்கி ஓடி வங்காள விரிகுடாவிலும், ஒன்று மேற்கு மலைத்தொடரைக் கடந்துசென்று அரபிக்கடலிலும் கலக்கின்றன. மலபிரபா ஆறு இதன் வட எல்லையில் 32 கி.மீ. தொலைவு ஓடுகிறது. பென்னிகல்லா ஆறு கூப்பிளி நகரிலிருந்து 32 கி.மீ. தொலைவில் தோன்றி,வடக்கு நோக்கிப் பாய்ந்து இதன் சமவெளிப் பகுதியைத் தாண்டி, மலபிரபா ஆற்றுடன் சேர்கிறது. இதன் தென்கிழக்கு எல்லையில் ஓடும் துங்கபத்திரை இம் மாவட்டத்தைப் பெல்லாரி மாவட்டத்திலிருந்து பிரிக்கிறது. மற்றும் இங்கு வர்தா, குமுதவதி முதலிய சிற்றாறுகளும் பாய்கின்றன.

இம்மாவட்டத்தின் சமவெளிப் பகுதியின் ஒரு பகுதியில் கறுப்பு மண் பூமியும், அதன்பின்னர் மைசூர் வரைச் செம்மண நிலமும், மேறகில் சிறிய குன்றுகளும் உள்ளன. கறுப்பு மண நிலம் பருத்திச் சாகுபடிக்கு மிகவும் ஏறறது. இம்மாவட்டத்தில் நெல், கோதுமை, துவரை முதலிய பருப்பு வகைகள், பருத்தி, எண்ணெய் வித்துகள ஆகியவை விளைகின்றன. காடுகளில் தேக்கு முதலான பல்வகை மரஙகள் உள்ளன. இப்பகுதியில வாழை, எலுமிச்சை, முந்திரி, மா, கோவா, ஆப்பிள், தென்னை, அத்தி முதலியன பயிரிடப்படுகின்றன.காடுகளில் புலி, சிறுத்தை ,கறுப்புக் கரடி, காட்டெருமை, புள்ளிமான, கலைமான, ஓநாய், கழுதைப்புலி, காட்டுப்பன்றி முதலான விலங்குகளும் பல்வகைப் பறவைகளும் உள்ளன.

இங்குள்ள மக்களுள் பெரும்பாலோர் இலிங்காயத சமயத்தைச் சேர்ந்தவர்கள். சமண சமயத்தைத் தழுவியிருநத இவர்கள கி.பி.12–ஆம் நூற்றாண்டில் பசவர் (Basav) என்பவரால் இலிஙகாயத்துகளாக மாற்றப்பட்டனர். இவர்கள தங்களுடைய மார்பில் சிவனுடைய இலிஙக உருவத்தை அணிந்திருந்ததால் இப்பெயர் பெற்றனர். பசவர், சாதி வேறுபாட்டிற்கு எதிராக இப் பிரிவைத் தோற்றுவித்தார். இம் மாவட்டத்தில் உரோமன் கத்தோலிக்கரும், பார்சிகளும், குசராத்திகளும் உள்ளனர். இங்குள்ள மக்களின் முககிய தொழில வேளாண்மையும், நெசவும் ஆகும்.

தார்வார் நகரம் இப் பகுதியிலேயே மிகப் பழைய நகரமாகும். இந்நகரமும், அதன் கோட்டையும் மரங்கள் அடர்ந்த பகுதியில் மறைவாக உள்ளன. இக் கோட்டை கி.பி.1403-இல் விசயநகரப் பேரரசில காட்டுத்துறை அலுவலராகவிருந்த தாா இராவு (Dhar Rao) என்பவரால் கட்டப்பட்டது. பிசப்பூர் சுல்தான் ஆதில் சா கி.பி.1573-இல் இதனை முற்றுகையிட்டு 6 மாதங்களுக்குப் பின் கைப்பற்றித் தன் நாட்டுடன் இணைத்துக்கொண்டார். மொகலாயப் பேரரசர் அவுரங்கசீப்பு கி.பி.1685-இல் இதனைக் கைப்பற்றினார். இது கி.பி.1753-இல் மராட்டியரின் வசமாயிற்று. பின்னா அவர்களிடமிருந்து மைசூர் மன்னர் ஐதா அலி கைப்பற்றிக்கொண்டார். ஆங்கிலேயர் இதனைக் கி.பி.1791-இல் மீட்டு மராட்டியரிடம் அளித்தனர். மராட்டிய பீசுவாவின் மேலாணமை

கி.பி. 1818-இல் வீழச்சியடைந்ததும் இது ஆங்கிலேய ருக்கு உட்பட்டது. பம்பாயமாநிலத்தின ஒரு பகுதி யாக விளங்கிய இது, பின்னர்க் கருநாடக மாநிலத் துடன இணைக்கப்பட்டது. இம்மாவட்டத்திலுள்ள பிற குறிப்பிடத்தக்க நகரங்கள கூப்பிளி, இராமி பென்னூர், நருகுண்டு, நவலகுணடு ஆகியவையாகும்.
சி.இரெ.

*தார்வின்*: இது ஆசுத்திரேலிய வடபகுதியின தலைநகரமாகவும், அதன் நிருவாக மையமாகவும், ஒரே துறைமுக நகரமாகவும் விளங்குகின்றது. தார் வின் நகரின் (Darwin) மக்கள்தொகை 63,900 (1984). இந்நகரம் ஆசுத்திரேலியாவுக்கும், ஆசிய நாடு களுக்கும இடையிலான விமானப் போக்குவரத்தின் சிறந்த மையமாக உள்ளது. இது துறைமுக நகர மாதலால் உளநாட்டு நகரங்களுடன நெடுஞ்சாலை களால் இணைக்கப்பட்டுள்ளது. இதன் தென்கிழக் கில் பிர்தூம் (Birdum) வரையிலான சாலை 509 கி.மீ. நீளமும் தெற்கில் அலைசு சுபிரிங்சு (Alice Springs) வரையிலான சாலை 1027 கி.மீ. நீளமும் உளளன. பர்கிலி (Barkly) நெடுஞ்சாலை தார்வின் நகரையும் குயூன்சுலாந்தையும் இணைக்கிறது. இங்கு உளநாட்டுப் போக்குவரத்திறகான விமான நிலைய மும், அயல்நாட்டுப் பயணத்திற்கான பன்னாட்டு விமான நிலையமும் உளளது. மேலும், இங்கு விமா னப்படைத தளமும் பிற படை நிலையங்களும்இருக் கின்றன.

இது வெப்பமண்டலப் பகுதியில் அமைந்துள்ள தால், இதன சராசரி வெப்பநிலை 28°செ (82°6 பா.) இங்கு ஆணடில் இரணடு பருவகாலஙகளே உள்ளன. ஏப்பிரல் முதல் அக்டோபர் வரை வறணட காலம்; நவம்பர் முதல மார்ச்சு வரை மழைக்காலம். அகண்ட தெருக்களைக் கொணட இவ் அழகிய நக ரத்தில அரசு நிருவாகக் கட்டடங்கள, வணிக நிலையங்கள ஆகியவை மேட்டுநிலப் பகுதியில் கட்டப்பட்டுள்ளன. தாழ்வான பகுதியில் மக்கள் வாழும் இல்லங்களும், தாவரவியல பூங்காக்களும், மனமகிழ் மன்றஙகளும, துறைமுகமும, பழங்குடி யினரின் கலைப்பொருளகள நிறைந்த அரும் பொருட்காட்சியகமும் உளளன. இந்நகருக்கு உல் லாசப் பயணிகள வேட்டையாடவும, ஒளிப்படம் எடுககவும் வருகின்றனர். மிகப்பெரிய முதலைகள், எருமைகள், பல விநோதமான பறவைகள, அருகி விட்ட விலங்குகள ஆகியவை அவர்களைக் கவரு கின்றன. மீன் பிடிப்பதும் இங்குச் சிறந்த பொழுது போக்கு. இங்குள்ள பழங்குடியினரைப் பற்றி அறிநதுகொள்ளவும் அவர்களுடைய கலைப்பொருள் களைக் காணவும் அயல்நாட்டினர் வருகின்றனர்.

**வரலாறு**: சான் இலார்ட்டு இசுடோக்சு (John Lort Stokes) என்பார் கி.பி.1839-இல் ஆசுத்திரேலி யாவின் வடபகுதியில் ஒரு துறைமுகத்தைக் கண்டு பிடிதது ஆராய்ந்து அதற்குத் தாவரவியல அறிஞர் சார்லசு தாாவின் (Charles Darwin) நினைவாகத் தார்வின துறைமுகம் எனப் பெயரிட்டார். ஏனெ னில், இவரும் தார்வினும் கப்பலில் ஒன்றாகப் பயணம் செய்தவர்கள். அதனருகில் கி.பி.1869-இல் ஒரு நகரம் ஏற்படுத்தப்பட்டு, அபபொழுது இங்கி லாந்தின் தலைமை அமைச்சராகவிருநத பாமர் சுடன் (Palmerston) பெயரால அந்நகரம குறிக்கப் பட்டது. தார்வின் நகரம் என்ற பெயர் 1911-இல் இடப்பட்டது. இப்பகுதியில தங்கம் கண்டுபிடிக்கப் பட்டதும் மக்கள பெருமளவில குடியேறினர். இந் நகருக்கு அருகிலேயே யுரேனியமும் செம்பும் வெட்டி யெடுக்கப்படுகின்றன. இரணடாம் உலகப்போரின போது இத்துறைமுகம் நேசநாடுகளின் சிறந்த கப்பல்தளமாக விளஙகியது சப்பானியா 1942-இல் இந்நகரின்மீது கடுமையானத தாக்குதல் நடத்தி 243 பேரைக் கொன்று, இநநகரை அழித்தனா. போருக குப் பினனர் இது புதுப்பிககப்பட்டது. 'இரம்' காடு (Rum Jungle) என்னுமிடததில 1952-இல் யுரேனியம் வெட்டியெடுககத் தொடங்கியதிலிருந்து இந்நகரம் மேலும் விரிவடைந்தது. இநநகரததில் 1974-இல் மிகப்பெரிய புயறகாற்று வீசி நகரை அழித்தது. எனவே, இது மீண்டும் புதுப்பிக்கப்பட்டுப் பல புதிய கட்டடங்களும் கட்டப்பட்டன.
சி.இரெ.

*தாரக மந்திரம்*: சைவ சித்தாநதத்தில் தாரக மந்திரமாக விளங்குவது ஐந்தெழுத்தாகும. இதனைப் பஞ்சாட்சரம எனறும் மூலமந்திரம என்றும் கூறுவதுண்டு சி,வ,ய,ந,ம எனற ஐந்து எழுத்துகளே திருவைநதெழுத்தாகும். இறைவனது திருப்பெயர்களுள் ஒன்றான நமசிவய என்பதில உள்ள எழுத்துகளே இத்திருவைந் தெழுத்தாகும். திருப் பெயர் மாறி திருமந்திரமாகிய எழுத்துகளாக உளது. எழுத்துகளுக்கு உள்ள மதிப்பு அவ்வெழுத்து கள் உணர்த்துவனவற்றைப் பொறுததிருக்கிறது. இவவெழுத்துகளால் குறிக்கப்படுவன·

'சி' சிவபெருமானையும், 'வ' திருவருளையும் 'ய' ஆன்மாவையும், 'ந' திரோதான சத்தியையும் 'ம' மலத்தையும் குறிக்கும்.

சிவாகமஙகளும், வேதஙகளும, திருமுறைகளும் மெய்கண்ட சாத்திரங்களும் திருஐந்தெழுத்தின் உண்மையைப் பற்றிப் பேசுகினறன. அதாவது, சிவ பெருமானின சிறப்பையும் அவனது அருளையும், ஆன்மாவின் தன்மையையும், மலத்தினுடைய இயல பையும், மறைப்பாற்றலையும் மலத்தின பிடியி

விருந்து ஆன்மாவை விடுவிதது இறைவனது திருவடி எய்த உதவும் திருவருளினையும் திருஐந்தெழுத்துக குறிப்பிடுகிறது.

இம்மந்திரத்தைக் குருவினிடம் உபதேசமாகப் பெறறு அதன் பொருளினையுணாந்து விதிப்படி எண்ணுதல் வேண்டும்.

சாதகர் எய்தியுள்ள பக்குவ நிலையின் வேறு பாடுகளைப் பொறுத்து திருவைந்தெழுத்தில் ஐந்து வகையுணடு. அவை முறையே பருமை (துலாம), நுண்மை (சூக்குமம்), காரணம், மகாகாரணம், மகா மனு எனபனவாகும்.

பரிய திருஐந்தெழுத்து என்பது திரோதான சத்தி யைக் குறிக்கும் நகரத்தை முதலிலும், ஆன்மாவைக் குறிக்கும் யகரத்தை இறுதியிலும் வைத்து 'நமசிவய என்று எணணுவதாகும். இது முத்திபெற விரும்பு வோருக்கு ஏற்றதன்று.

'சிவய நம' என்பது நுண் திருவைந்தெழுத் தாகும். இது சிவனைக் குறிக்கும் சிகரத்தையும், திரு வருளைக் குறிக்கும் வகரத்தையும் முதலிலும், திரோ தான சத்தியைக் குறிக்கும் நகரத்தையும் மலத் தைக் குறிக்கும்மகரத்தையும் இறுதியிலும் கொண டுள்ளது. இவ்விருபகுப்பிற்கும் இடையிலுள்ளது ஆன்மாவைக் குறிக்கும் யகரமாகும்.

'சிவயவசி' என்பது காரண பஞ்சாக்கரம் எனப் படும். 'சிவ சிவ' என்பது மகா காரண பஞ்சாக்கரம் எனப்படும். இதில் 'ய' எனபதால குறிக்கப்படும் ஆன்மா 'வ' என்பதால் குறிக்கப்படும். அருளிலே கலந்து ஒடுங்கியிருக்க அருளும் சிவமுமாகிய வகாரம் சிகாரம் ஆகியவை மட்டும் விளங்குகின்றன.

'சி' என்பதே மகாமனு என்பதாகும். மகா காரண பஞ்சாக்கரமாகிய வகார சிகாரம் இரண்டி னுள், வகாரமாகிய அருளைத் தன்னிடத்தில் கலந்து அடக்கிக் கொண்டு சிகாரமாகிய சிவன் மட்டும் தனித்திருப்பதே மகாமனு என்பதாகும்.

மந்திர எழுத்துகளை எண்ணும்முறை ஓதுதல் (உரை), ஒலித்தல் (மந்தம்), ஒடுங்குதல் (மானதம்) என மூவகைப்படும். அவற்றுள், ஓதுதல் எனப்படுவது, தன் செவிக்குக் கேட்பது மட்டுமின்றி மற்றவர்களுக் கும் கேட்குமாறு எண்ணுதலாகும். ஒலித்தல் என்பது தனக்கு மட்டும் கேட்குமாறு திருவைந்தெழுத்தை ஒலித்தல். எழுத்துகளை மனத்தால் நினைத்திருப்ப தற்குப் பெயர் ஒடுங்குதலாகும். இது எவர் செவிக் கும் கேளாதவாறு எண்ணுதலாகும்.

மேலே கூறப்பட்டுள்ள ஐவகை மந்திர எழுத்து களில 'நமசிவய' என்று கணித்தலால அருளை நாட இயலாது போகும். ஆனால், 'சிவய நம' என எணணி னால் அருளை நாடமுடியும். எவவாறெனில் நகரமும் மகரமும் முதலில நிற்பது பிறபபியலாகிய உலகிய லைக குறிப்பதாகவும், சிகரமும் வகரமும் முதலில நிறபது சிறபபியல்பாகிய திருவடியின்பத்தைக குறிப் பதாகவும்உளளதால தான் எனறு மேலோர் கூறுவர்.

சிவமுதலாக உளள திருஐந்தெழுத்தை இடை விடாது எணணினால், அருளானது ஆன்மாவிட மிருந்து மலத்தை நீககி, அதனைச் சிவனடி சேர்க்கும். ஆயினும், ஞானம் விளங்கி, ஆன்மா சிவபெரு மானைக் கண்ட பொழுதும், அதனை மலவாசனை தாக்காமல் இருக்காது. அதாவது, பெருங்காயம் வைத்திருநத பாத்திரத்தில், அப்பெருங்காயத்தை முழுவதும் எடுததுப் பயன்படுத்திய பின்னரும, அதன் வாசனை அப்பாத்திரத்தை விட்டகலாது மெலிதாய் வீசுவது போல் மலம் சிவஞானிகளையும சிறிதளவு தாக்கும். அப்பொழுது அவர்கள திருஐநதெழுத்தை எண்ணினால் மலவாசனை தாககாதொழியும். அந்த ஞானிகள்எய்தியுளள உயர்நிலையிலிருந்து அவர்களை நீக்கவும் இயலாதொழியும். எஸ்.ச.

**தாரகன்** என்னும பெயரோடு பல அசுரவீரர் கள் வடமொழி இதிகாச புராணஙகளில் பேசப்படு கின்றனர். அவர்களுள் கந்தபுராணம், இராமாயணம், தேவீபாகவதம், சிவமகாபுராணம, சிவரகசியம், திரு வதிகைப் புராணம் ஆகியவற்றில் குறிப்பிடப்படுபவர் கள பற்றிய செய்திகள வருமாறு: கநதபுராணத்தில் குறிக்கப்படும் தாருகன், காசிபனுக்கும் மாயைககும் யானைமுகததோடு தோன்றியவன். இவன் பட்ட ணம் மாயாபுரம், மனைவி சௌரி, மகன் அதிசூரன். ஒரு காலத்தில் திருமாலுடன் போர் புரிந்து அவர் ஏவிய சக்கரத்தை மார்பணியாகக கொண்டவன். முருகப் பெருமான தம்பியாகிய வீரவாகு தேவரைச் சூரபன்மன் தம்பியாகிய இவன எதிர்த்துப் போரிட் டான. தோற்றோடுவது போல நடித்துக் கிரவுஞச மலைக்குள் ஓடி வீரவாகு தேவரையும் பூதகணங் களையும் மயககி வீழ்த்தி வெளியில வந்து வெறறி முழக்கம் செய்தான். முருகப் பெருமான் ஞான வேலால் கிரவுஞ்சமாகிய மாய மலையைப் பிளந்து அவர்களை மீட்டார். மீண்டும் பல மாயம் செய்து முருகப் பெருமானுடைய ஞான வேலால் தன வடிவு நீங்கப் பெற்றான். பினனர் ஐயனார் வாகனமாக மாறினான் என உபதேசக் காண்டம் கூறும். மற்றும் சில புராணங்கள் இராமாயணத்தில் பேசப்பெறும் அகம்பனனாகப் பிறந்தான் எனவும் கூறுகின்றன. இவ்வகம்பணன் கரனுக்கு மந்திரியாகவும் விளங்கி

னான். இலக்குவனால் கொல்லப் பெற்ற அசுரர்களில் தாருகன் என்பவனும் ஒருவனாகப் பேசப்பெறுகின றான்

தேவீபாகவதத்தில் பேசப் பெறும் தாரகன் பெண்ணால் அல்லாமல் யாராலும் வெல்லப் பெறாத வரத்தைப் பெற்றவன். உலகிற்குத் தொல்லை தந்த இவனை இறைவி காளியாகத் தோன்றி அழித்தாள்.

சிவபுராணம், சிவரகசியம், திருவதிகைப் புரா ணம் ஆகியவற்றுள் தாரகன் என்பான் பேசப்படுகின றான். இவன் திரிபுர அசுரர்களாக விளங்கிய கம லாட்சன், தாரகாட்சன், வித்துமாலி ஆகிய மூவருக் குத் தந்தையாவான். இவன் மனைவி பெயர் தாரகி.

பாரதத்தில் கிருட்டிணனுடைய சாரதியாகத் தாரகன் ஒருவன் பேசப் பெறுகிறான்

இவ்வாறு தாரகன் என்னும் பெயரோடு பலர் இருந்ததாகப் புராண இதிகாசங்கள் கூறுகின்றன.

சு.சு.

**தாரகை மாலை:** இது தொண்ணூற்றாறு சிறுபிரபந்த வகைகளுள் ஒன்று பாட்டியல் நூல்களுள் இதன் இலக்கணம் கூறப்பட்டுள்ளது போரின்போது முதலில் செல்லும் படைக்குத் தூசிப்படை என்பது பெயராகும். அத்தூசிப் படையைப் புகழ்ந்து பல்வேறு நிலைகளில் பாடப்பெற்ற ஒன்பது பாக்கள் கொண்ட நூலாகும். 'ஓதுசந்தத்தாலுரைத்தல் ஒண் தாரகை மாலை' என வெண்பாப் பாட்டியல் (32) கூறுகிறது. மேலும் கற்புடை மகளிரின் மேம்பாடு களைப் பற்றிக் கூறுவதும் தாரகை மாலையேயாம் என இலக்கண விளக்கப்பாட்டியல், முத்து வீரியம், முதலிய நூல்கள் கூறுகின்றன. 'வகுப்பால் கற்புடை மகளிர்க்குள்ள, தகைத் திறம் கூறுதல் தாரகை மாலை' என்பது இலக்கண விளக்கப் பாட்டியல் நூற் பாவாகும். இப்பிரபந்த வகை இக்காலத்து மிக அருகிக் காணப்படுகின்றது.

இரா.ச.

**தாரமங்கலம்,** தமிழ்நாட்டில் சேலம் மாவட்டம் ஓமலூர் வட்டத்திலுள்ள வரலாற்றுப் புகழ்மிக்க பதி கெட்டி முதலிகள் என்னும் அரச மரபினரின் தலைமை சான்ற நகரம். தாரமங்கலத்தில் கைலாசநாதர் கோயில், இளமீசுவரர் கோயில், பத்திரகாளி கோயில், வரதராசர் கோயில் முதலானகோயில்கள் உள்ளன. இவற்றுள் கைலாசநாதர் கோயில் கலையழகு மிக்க சிற்பங்களைக் கொண்டு விளங்குகிறது. கைலாசநாதர் கோயிலில் காணப்படும் எழிலார்ந்த கலைப் படைப்பு களுக்காகவே தாரமங்கலம் புகழ் பெறுகின்றது.


கைலாசநாதர் கோயில்

ஓமலூரிலிருந்து 10 கி.மீ. தொலைவில் அமைந் துள்ள இத்தலத்திற்குச் சேலத்திலிருந்து பேருந்து வசதியுள்ளது. இக்கோயிலின் இறைவர் மேற்கு நோக்கி உள்ளமை இக்கோயிலின் தனிச்சிறப்பாகும்.

கைலாசநாதர் கோயிலின் நுழைவாயிலில் 5 நிலைகள் கொண்ட அழகிய கோபுரம் உள்ளது. இக் கோயிலின் உட்புறம் உள்ள இருடிபத்தினி, இரதி -மன்மதன், தேரை இழுக்கும் கிளி, யாழி (அதன் வாயிலுள்ள பெரிய உருண்டைக்கல்), இராமன் வாலியைக் கொல்லும் காட்சி முதலான சிற்பங்கள் உள்ளன. விதானத்தில் பொருத்தப்பட்டுள்ள கல் சங்கிலி, 35க்கும் மேற்பட்ட சிற்பங்கள் ஆகியவை கவர்ச்சிமிக்கவை சுற்று மதில் கோபுரம் கி.பி. 17-ஆம் நூற்றாண்டினதாகக் காணப்பட்டபோதிலும் இச்சிற்பங்கள் கி.பி.13-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வையாகும்.

இக்கோயிலின் நுழைவாயிலில் உள்ள வேங்கை மரத்திலான மாபெரும் கதவும், நிலையும் இவற்றில் வடிக்கப்பட்டுள்ள விட்டுணுவின் அவதாரங்களும் கண்ணனின் திருவிளையாடல்களும் கருத்தைக் கவர்கின்றன. மகாமண்டபக் கதவிலும் சூரசம் காரத்தை விளக்கும் 24 சிற்பத் தொகுதிகள் கெட்டி முதலிகளின் கலைத்திறத்தைப் பறைசாற்று கின்றன. இத்திருக்கோயிலினுள் கெட்டி முதலிகள் சிலரின் உருவங்கள் தம் அரசியுடன் நிற்கும் பாணி யில் வடிக்கப்பட்டுள்ளன. கெட்டி முதலியாரது தங்கை ஒருத்தியின் திருவுருவம் அழகே உருவாக உரு வாக்கப்பட்டுள்ளது.

கோயிலின் பின்புறம் 180 ச.மீ. இல அமைந்துள்ள நேர்த்தியான தெப்பக்குளம உள்ளது. இதன் நடுவில் 16 கல் மண்டபம் ஒன்று உள்ளது. இவை சிற்ப வேலைப்பாடுகள் மிக்கவை. இப்பெரியகுளத்தின் வடபுறம் இதே அமைப்பிலான மற்றொரு சிறுகுளமும் உள்ளது.

கைலாசநாதர் கோயிலுக்குக் காலத்தால் முற்பட்ட இளமீசுவரர் கோயில் இந்நகரில காணப்படுகிறது. போசள சாளுக்கிய கலைப்பாணியைக கொண்டு இக்கோயில் விளங்குகிறது.

கைலாசநாதர் கோயிலிலும், இளமேசுவரர் கோயிலிலும் பாண்டியர், போசளர், விசயநகரத்தார் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. விசயநகர சதாசிவரின் கி.பி.1544-ஆம் ஆண்டினதான கல்வெட்டு வணங்காமுடிக் கெட்டிமுதலியார், வணஙகாமுடி சமுத்திரம் என்னும் ஊரினைப் பிராமணர்களுக்கு வழங்கியதைக் குறிப்பிடுகின்றது. விசயநகர வேந்தருக்கு அடங்கிய சிற்றரசரான கெட்டி முதலிகள் பின்னர் மதுரை நாயக்கரது மேலாண்மையை ஏற்றுக் கொணடனர். பின்னர் மைசூரின் தொட்டதேவராயர், கந்திரவ நரசராசன் (கி.பி.1641) ஆகியோரின படையெடுப்பில் தாரமங்கலம் கைப்பற்றப்பட்டது. கொங்கு நாடு கி.பி.1688-89-இல் சிக்கராசாவால் மீண்டும் கைப்பற்றப்பட்டபோது கெட்டி முதலிகளின் ஆட்சி முடிவுற்றது.

கெட்டி முதலிகளால கட்டப்பட்ட தாரமஙகலம் கோட்டை அழிந்துவிட்டது. இவர்கள் பவானி, பேரூர், சேலம், சேந்தமங்கலம், நாமககல், பரமத்தி, அனந்தகிரி, ஓமலூர் முதலான இடங்களில கோட்டைகளை அமைத்தனர்; சங்ககிரிக் கோட்டையிலுள்ள கோயிலும் ஓமலூர் கோட்டையிலுள்ள சிவன் கோயிலும், திருமால் கோயிலுமஆத்தூர்க் கோட்டையிலுள்ள பெருமாள் கோயிலும், பவானி சஙகமேசுவரர் கோயிலும் கெட்டி முதலியார்களின் படைப்புகளே ஆகும். சேருடன் ஆண்ட கெட்டி முதலிகளின் ஆட்சிப்பகுதி (கி.பி.12-ஆம் நூற்றாணடு முதல் கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் இறுதி வரை) கிழக்கே தலைவாசல் முதல் மேற்கே தாராபுரம் வரையிலும் தெற்கே கரூர் வரையிலும் பரவியிருந்தது. கெட்டி முதலிகளின் இராச முத்திரை வண்ணத்தடுக்கும், வாடா மாலையும் ஆகும். இவ் இரண்டுடன் புலி, வில், இணைக்கயல் ஆகியனவும் பொறிக்கப்பட்டுள்ளன. அமரகுந்தியும் இவர்களது தலைநகரங்களுள் ஒன்று. இன்றைய தாரமங்கலம் 36 பேரூராட்சி ஆகும். இவ் ஊரின் மக்களதொகை 14,934(1981).

ம.இ.

*தாராசந்து* (கி.பி. 1888–1973) இந்திய வரலாற்றறிஞர். இந்திய மக்கள் வரலாற்றுச் சுருக்கம, இந்தியப் பண்பாட்டில இசுலாமியத் தாககம் முதலிய நூல்களை ஆஙகிலத்தில எழுதிய தாராசந்து சிறந்த கல்விமான்களுள ஒருவர். இவர் 1947–48-ஆம் ஆண்டில் அலகாபாத்து பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராகப் பணியாற்றினார். பிறகு 1951 வரை இந்திய நடுவண் அரசில கலவித்துறை ஆலோசகராகவும், செயலாளராகவும் பணியாற்றினார். அனைத்து இந்திய இந்திய வரலாற்றுக கழகத்தின தலைவராகவும், 1951 முதல் 1956 வரை தெகிரான் (Teheran) நாட்டின் இந்தியத் தூதுவராகவும் அரும்பணியாற்றினார்.

தெ.பா.

*தாராசுரம்* தஞ்சை மாவட்டத்தில கும்பகோணத்திற்கு அருகிலுள்ள ஊர். தஞ்சை-கும்பகோணம் நெடுஞ்சாலையில் கும்பகோணத்திலிருந்து 5 கி.மீ தொலைவிலுள்ள இவ்வூரில அமைந்துள்ள ஐராவதேசுவரர் கோயில பிற்காலச சோழர் கட்டடக் கலைக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகத் திகழ்கின்றது.

தாராசுரம் கல்வெட்டுகளில் 'இராசராசபுரம்' என்று குறிக்கப்படுகின்றது. இதுவே பிற்காலத்தில் 'தாராசுரம்' என்று மருவி வழஙகப்பட்டுவருகின்றது. தஞ்சை, கங்கைகொணட சோழபுரம ஆகியன சோழர்களின் தலைநகராக விளங்கியது போன்று சிறிது காலம் தாராசுரமும் சோழர்களின தலைநகராக இருந்துள்ளது. அப்பொழுது பழையாறு, முழையூர், பட்டீசுவரம், திருச்சத்திமுற்றம, சோழமாளிகை ஆரியபபடையூர், தாராசுரம் ஆகியன உள்ளடஙகிய பேரூரே தாராசுரம் என்று கொள்ளலாம். சுந்தர சோழன், முதலாம் இராசேந்திரன முதலிய அரசர்கள் சில ஆணடுகள இங்கு வீற்றிருந்து ஆட்சி செய்தனர். இவர்களின் காலத்தில எடுக்கப்பட்ட அரண்மனைப்பகுதிகள இங்கு இருந்துள்ளன. இவற்றைக் கண்டறியத் தமிழநாடு தொல்பொருள் துறை பழையாறையில் அகழாய்வைச் செயதனர். அகழாய்வில அரண்மனை இருந்ததற்கான பல தடயங்கள் கிடைத்துள்ளன. அந்நகரின ஒரு பகுதியே இபபோதுள்ள தாராசுரம் என்ற ஊர். தக்கயாகப் பரணி என்னும் நூலில் தாராசுரம் பற்றிப் பல குறிப்புகள காணப்படுகின்றன.

இவ்வூரிலுள்ள ஐராவதேசுவரம் கோயிலை இரண்டாம் இராசராசன் எடுப்பித்து தன பெயராலே 'இராசராசேச்சுரம்' எனப் பெயரிட்டான். இராசராசேச்சுவரம் என்ற பெயர் பிற்காலத்தில் மருவி ஐராவதேசுவரம் என வழங்கி வந்தது. இக்

கோயில் விமானம் தஞ்சைப் பெரிய கோயில, கங்கைக் கொண்ட சோளீசுரம போன்ற கோயில் விமானங்களைப் போனறு அமைக்கபபட்டுள்ளது. இதன விமானம் ஐந்து தளஙகளைக கொண்டது மேலே வட்டமான கிரீவமும, சிகரமும் உளளன இககோயில கருவறை, அாத்தமணடபம, முகமணடபம, இராசகம, பீரதி திருமணடபம், பலிபீடம் ஆகியவறறைக கொணடுளளது. இங்குளள முனமணடபத்தில 'இராசகமபீரன திருமணடபம' எனற கலவெட்டு பொறிககப்பட்டுளளது. இநத மணடபம் தோ போனற அமைப்புடையது. இரண்டு பக்கஙகளிலும இரணடு குதிரைகள உளளன. அவறறின பினனால் இரண்டு சக்கரஙகள உளளன. குதிரைகள் தேரை இழுத்துச்செல்வது போல இநத மணடபம அமைககப பட்டுளளது.



இக்கோயில் அதிட்டானச் சுவர்ப் பகுதியில் பெரியபுராணம் குறிபபிடும் 63 நாயன்மார்களின் சிற்பங்கள வரிச் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. இச்சிறபங்களுககு மேல் அச்சிற்பங்களின் பெயர்கள கல்வெட்டாய் வெட்டப்பட்டுள்ளன. அது போன்றே தேவகோட்டஙகளிலுள்ள சிறபஙகளின் பெயரும் தேவகோட்டத்தின மேல் பகுதியில் வெட்டி வைககப்பட்டிருக்கின்றன. வரி சிறபங்கள் கருவறை, மணடபம் ஆகியவற்றின அதிட்டானங்களிலுள்ளன. அப்பர், கணணப்பநாயனார் போன்றவர்களின வரலாறுகள சிற்பங்களாய் அமைக்கப்பட்டுள்ளன. திருசுற்று சுவர்களின் கீழ்ப்பகுதியில் 108 பரத நாட்டிய கர்ணஙகள் சிற்பங்களாக வடிக்கப்பட்டுள்ளன. திருசுற்றின, பல பகுதிகள இடிந்துள்ளன. இதை மததிய தொலலியல் துறையினர் மீணடும் புதிதாகக கட்டியுள்ளனர். மற்றப் பகுதிகளையும இதைப போனறு பழமை கெடாமல புதுபபித்துக் கொணடு வருகினறனா.



முன்புறம் காணப்படும் பலிபீடம் அழகான முறையில் அமைநதுளளது பலிபீடத்தின மேல செலலப் படிககட்டுகள உளளன. இநதப்படிககட்டுகளைத் தட்டினால சப்தசுர ஓசைகளைக் கேட்கலாம. இதத கைய ஓசை வருகின்ற காரணததால இப்படிககட்டுகள பாடுமபடிகள எனறு சொல்லப்படுகினறன.

இககோயிலுககு இரணடு கோபுரஙகள உளளன வெளிககோபுரம தனிச்சிறப்புடையது. இதன மேல பகுதி இடிந்து காணப்படுகின்றது இக்கோபுரததின் தலைவாயிலைச் சுறறியுள்ள புறச் சுவர்களில தேவக கோட்டஙகள உளளன. இத்தேவக கோட்டஙகளில சிறபஙகள வைக்கப்பட்டிருக்கின்றன. ஆனால இப்போது சில சிறபஙகள மட்டும காணபபடுகினறன. ஒவவொரு தேவக்கோட்டத்திலும அதிலிருநத சிறபத்தின் பெயா அதன மேல பகுதியில வெடடப்படடுளளது. மொத்தம் 36 தேவக்கோட்டஙகளும் அவறறின் பெயாகளும் இஙகு உளளன.

இக்கோயில் சிறபஙகள் மிகவும நுணுககமான முறையில் செதுககப்பட்டுளளன. தெனமுகக் கடவுள, கசசம்காரமூர்த்தி, பிட்சாடனர் போனறவை குறிப்பிடத் தக்க சிறபஙகளாகும இக்கோயில சிறபபான சிற்பக்கலை, கட்டடக கலை ஆகியன கொண்டு விளங்குகினறது. வெளியிலுள்ள 'தேவநாயகி அம்மன

கோயில' மூன்றாம் குலோததுஙகன காலத்தில் எடுக் கப்படடது.

இநதியத் தொல்லியல பரப்பாய்வுத் துறையி னா இககோயிலைப் பழுது பார்த்து வருகினறனா; பெருமபாலானவை புதுபபிக்கப்பட்டுளளன. இரண்டு கோபுரஙகளுககு இடைபபட்ட பகுதியில் இததுறை யினா அகழாய்வு செயதுள்ளனர். இவ் அகழாயவில பல கட்டடப்பகுதிகள வெளிக்கொணடு வரப்பட்டுள ளன. இஙகு ஒரு மண்டபம் இருந்துள்ளது என்பதைக கணடறிநதுளளனர். இநத அகழாய்வு மேலும தொடர்கின்றது. இககோயிலின் சுற்றுப புறசசுவ ரினைப் பழுது பாாத்துப் புதுப்பிக்குமபொழுது எழுததுகள பொறிககபபட்ட திருமேனி ஒனறும சோழர்கால நாணயஙகளும் கிடைத்தன. இககோயி லின அருகில அம்மன கோயிலொனறும் உளளது.

தாராசுரம் சிற்றூராக இருபபினும் பட்டு நெச விற்குப் புகழ்பெறற ஊராக இது விளஙகுகிறது. இவ வூரின அருகில் காவிரி ஆறு ஓடுகினறது இவ்வூரின மக கள தொகை8,962(1981). தி.சு.

**தாரா சூக்கோ (கி.பி. 1614-1659):** இவர் மொகலாயப் பேரரசர் சாசகானின மூத்த புதல்வர். இவா தாயார் மும்தாசு மகால். தந்தையின அன் பிறகு உகந்தவர். சாசகான இவரைத தமக்குப் பின மனனராககப் பெரிதும் விருமபினார். ஆனால் அது நடைபெறவில்லை. தாரா பஞ்சாப்பின ஆளுநராக இருந்து வநதார். இவா ஔரஙகசீப்புக்குத் தொல்லை கள கொடுத்து வந்ததால் இவரிடையே தீராபபகை மூண்டது இவர் தம் தந்தையின் செல்வக் குழநதை யாகப் பெரும்பாலும அரணமனையிலேயே வளர்ந்து வந்ததால, சிறநத படைத தலைவராகவோ, நிரு வாகியாகவோ வர முடியவில்லை. பரந்த மனப் பான்மையும், எம்மதமும் சம்மதமென்ற கொள்கை யும் கொணடவர்.

சாசகான கி.பி. 1657-இல நோய்வாய்ப்படவே தாரா, சூசா, ஔரஙகசீப்பு, முராது ஆகிய அவ ருடைய நானகு புதல்வாகளும், அரசுரிமைக்காகப் போட்டியிட்டனர். தாராவின புதல்வா சுலைமான சூக்கோ, சூசாவைக காசிககருகில் தோற்கடிததார். ஔரஙகசீப்பு தந்திரத்தாள் முராதைத தன் வசப் படுத்திக் கொண்டு, தக்காணத்திலிருந்து ஆகராவை நோக்கி முன்னேறி வந்தார். சாமுகார் என்னுமிடத் தில் தாராவுக்கும் ஔரஙகசீபபுக்கும் கடும்போர் நடந்ததில ஔரஙகசீப்பு வெற்றி பெற்றாா. பின் ஆக்ராவை முற்றுகையிட்டுக் கோட்டையைக் கைப் பற்றி, தந்தையைச்சிறையில் வைத்தார். இதற்கிடை யில் தாரா தில்லியை விட்டு இலாசாவிற்குச (Lasa) சென்றார். ஔரஙகசீப்பு தில்லியை அடைந்து முடி சூட்டிக் கொணடார். தாரா அகமதாபாத்துககுச் சென்று படையைத் திரட்டிக்கொணடு வந்தபொழுது ஆசுமீர் என்னுமிடத்தில் கடும்போர் நடநதது. ஔரஙகசீப்பு வென்றார். தாரா தப்பி ஓடினார். தாரா மீணடும் படையெடுக்க முறபட்டார். ஆனால் தம அன்பு மனைவி இறக்கவே மனமுடைந்து போய், முனனர் தம்மால் காப்பாற்றப்பட்ட ஆப்கானிய படை வீரர் ஒருவர் வீட்டில் விருந்தினராகத் தங்கி னார். அவர் இவரைக் காட்டிக் கொடுக்க, இவரை ஔரஙகசீப்பின ஆட்கள கைப்பறறித் திலலிககுக் கொணடு சென்றனர். ஔரஙகசீப்பு இசுலாமிய சமயத் தலைவர்களின ஆதரவுடன் இவரைக் கொலை செய்தார் (1659).

தாரா போர்த் திறமையற்றவர் எனினும் பண புள்ளவர். அக்பரைப் போலச் சமயச் சகிப்புத் தன்மை கொணடவா. சூபி நூலகள, புதிய ஏறபாடு, தால மட்டு ஆகியவறறைக கற்றார். அதாவண வேதத்தை யும், உபநிடதங்களையும் பாரசீக மொழியில் மொழி பெயர்த்தார். இவருடைய 'இரு கடல கலப்பு' என்ற நூல் இசுலாமையும் இந்து சமயத்தையும் பறறிய ஆராயச்சி நூலாகும். பல அறிஞாகளுககு ஆதரவு அளித்தார். பல்வேறுபட்ட சமயங்களிடையே ஒறறு மையைக காண முறபட்டார். இலேனபூல(Lanepoole) கூறுவதைப் போல, 'தாரா சூக்கோ இந்திய அரச ராக இருபபதை விட ஒரு கவிஞராக அலலது வேதாந்தியாக இருககத் தகுதியானவா' ஆவார். தி.கை.

**தாராப்பூர்:** இவ்வூர் மகாராட்டிர மாநிலததில் பம்பாய் நகருககு வடககில் 100 கி.மீ. தொலைவி லுள்ளது. இநதியாவில் முதனமுதலாக ஏறபடுததப் பட்ட அணுமின நிலையம் (The Tarapur Atomic Power Station) இங்கு இருக்கிறது. அமெரிகக ஐக்கிய நாடுகளிலுள்ள மின்சாரக் குழுமம் ஒன்று (General Electric Company of U.S.A) இதனை அமைத்துக் கொடுத்துளளது. 1969 அக்டோபரில தொடஙகப் பட்ட இதில் 200 மெகாவாட்டுத் திறன் கொணட இரு இயந்திரங்கள மொத்தம் 400 மெகாவாட்டு மின்சாரத்தை உற்பத்தி செயகின்றன. இங்குச்செலவு செய்தது போக மீதி 380 மெகாவாட்டு மினசாரம் குசராத்து, மகாராட்டிர மாநிலஙகளுககு அனுப்பப் படுகிறது. நீர் கொதிகலன் முறையில் மின்சாரம் தயாரிக்கப்படும் இதில் அமெரிககாவிலிருநது இறக்கு மதி செய்யப்படும் வலிமையூட்டப்பட்ட யுரேனியம் (enriched Uranium) பயன்படுத்தப்படுகிறது. இங்கு மினசாரம உற்பத்தி செய்யப்படுவதுடன் புளுடோ

னியமும் (Plutonium) தயாரிக்கப்படுகிறது உலகில் இம்முறையில அமைக்கபபட்டுளள அணுமின் நிலையஙகளோடு ஒப்பிடத்தக்க உயர்நத திறனை இது பெற்றுள்ளது. 1977-இல் இத்தகைய நிலையஙகளின திறன் உலக சராசரி 56.5 விழுககாடாக இருந்த பொழுது இம் மின்நிலையததின திறன அதறகு முந்திய 3 ஆணடுகளின சராசரி 58 விழுககாடாக இருந்தது குறிப்பிடத்தக்கது. உலகிலேயே இது முதன் முதவில் ஏற்படுத்தப்பட்ட கொதிகலன் முறையாகையால் இப்போது ஏறபடுத்தபபட்டுளள கொதிகலன் களோடு ஒப்பிட்டுப் பார்க்கையில இதில மீணடும் எரிபொருள இடுவதில (Refueling) காலததாழச்சி மிகுதியும் உளளது. இப்பொழுது இதில பல சீதிருத்தஙகளைச் செய்து அது 150 நாளகளிலிருந்து 68 நாளகளாகக குறைக்கப்பட்டுள்ளது. இதறகுத தேவையான எரிபொருளை அமெரிகக ஐக்கிய நாடுகளிடமிருந்து தொடர்ந்து பெற முடியுமா என ஐயம எழுந்துள்ளதால இதில வேறு ஏதேனும எரிபொருளைப் பயனபடுதத முடியுமா என அணுசக்திததுறை (Department of Atomic Energy) சிநதிகக வேணடிய நிலை ஏறபட்டுள்ளது. சி.இரெ.

**தாராபாய் (கி பி. 1675-1761):** இந்திய மாநிலமான மகாராட்டிரத்தில அம்பிராவ மோகிதே என்பவரின மகளாகப் பிறந்த தாராபாய் சத்திரபதி சிவாசியின இளைய மகனான இராசாராமின மனைவியாவார். முகலாயப பேரரசா ஔரங்கசீப்பு மராததியரின கோட்டைகளைக் கைபபறறி வந்தபொழுது, இராயகா கோட்டையை அவர் பிடித்தவுடன் இராசாராம் தாராபாயுடன விசால கருககுச் சென்றார். அஙகிருநது தானமட்டும் செஞ்சிககுப் பயணமானார். தாராபாய, புதுச்சேரிக்குக் கப்பலில் சென்று அங்கிருநது தம் கணவனிடம் போயச் சேர்ந்தார். செஞ்சியைக் கி.பி. 1691-இல முகலாயா கைப்பற்றினா. மகாராட்டிரததிறகுத் தப்பிச்சென்ற இராசாராம் கி பி. 1700-ஆம் ஆணடு தான இறககுமவரை முகலாயருடன் பல போர்கள் செய்தாா. கணவன இறநதபின தாராபாய், தன் மகனை இரணடாம் சிவாசி என அறிவித்துப் பட்டமும சூட்டினார். மகன் சிறுவனாக இருந்தமையால பாதுகாவலராக ஆட்சிசெய்தார். இராசாராமின இரணடாம் மனைவியான இராசசபாயையும், அவள மகன இரண்டாம் சாமபாசியையும் தாராபாய் கைது செய்தார். மராட்டியரைக கூட்டி, முகலாயருக்கு எதிராகத் தூணடி, மத்திய இந்தியாவிலுள்ள சிரோன்சு (Sironj), மாணடசார் (Mandasor) ஆகிய பகுதிகளைக கொள்ளையிடச் செயதார். தாமே போாவீரனைப போல உடையணிந்து, போர்க்களம் சென்று, போர் புரிநது, போர்வீரர்களைப் போல எளிய வாழ்ககை நடத்தினாா; முகலாயரை வென்று பல இழநத கோட்டைகளை மீட்டார், ஔரங்கசீபபின மரணத்திற்குப்பின பூனா நகரை மீட்டாா. சாமபாசியின மூத்த மகனான சாகுவை (Sahu) கி.பி. 1707-ல ஔரஙகசீப்பின இரணடாம மகனான ஆசம் சா (Azam Shah) விடுதலை செயதாா. தாராபாயின படைததலைவரான தனாசி சாகுவுடன் சோநதுகொணடாா. சாகுவுககும தாராபாயுககும் கி.பி. 1708-ஆம ஆணடு சனவரி 12-ஆம நாள கேத் (Khed) எனனுமிடததில நடைபெறற போரில சாகு வெற்றிபெறறு சதாராவில மராட்டிய மனனராகப பட்டம சூட்டிககொணடான.

கிருட்டிணாவின கிளைநதியான வார்னா(Warna) வுககுத தெறகேயுளள பகுதியைத தாராபாயுககுச் சாகு தர ஒபபுககொணடாா. ஆனால், அதைததாராபாய மறுததுவிட்டார். இதனால ஆத்திரங கொணட சாகு அவள இருநத இரஙகனா(Rangna)கோட்டையை முற்றுகையிட்டு விரட்டினாா. ஆனால், தாராபாய வேறுசில மராததியத தலைவர்களின ஆதரவுடன இழந்த பனகாலா கோட்டையை மீட்டார். கோலகாபூரைத (Kolhaur) தலைநகராக்கிக கொணடு ஆட்சிபுரிநதார் சாகுவின தளபதியான தானாசி இறந்ததும அவா மகனான சந்திரசென சாகுவை விட்டுவிட்டு கி.பி 1711-ஆம் ஆணடு தாராபாயிடம் வந்து சேர்நதாா

பேசுவா பாலாசி விசுவநாதர் கி.பி.1712-ஆம ஆணடு தாராபாயை எதிாககுமாறு இராசசபாயையும, அவள ஆதரவாளாகளையும கேட்டுககொணடார். தாராபாய தாககப்பட்டுச் சிறை பிடிககபபட்டார். இரணடாம் சாமபாசி கொல்லாபுரததில முடி சூட்டிககொண்டார். சாகு இறபபதறகுமுன தன வாரிசாக இரண்டாம் சிவாசியின் மகனான இராமராசாவைத் தேர்நதெடுததாா. இராமராசாவைப் பறறிப பல மராத்தியத் தலைவர்கள அறிந்திருககவேயிலலை. ஆயினும் கி.பி 1750-ஆம் ஆணடு சனவரி மாதம் இராமராசா சத்திரபதியாக முடிசூட்டிக்கொணடாா. அவர் திறமையறறு விளஙகியதாலும், பேசுவாவின் கைப்பொம்மையாக இருநததாலும, அவரைத் தாராபாயும பல மராத்தியத தலைவாகளும் வெறுத்தனர். தன் ஆட்சிக்குள இராமராசாவை வைகக தாராபாய பெரும்பாடு பட்டதால அவளை இராமராசா வெறுததார். அவரைச் சிறைசெய்யும முயறசியில் தாராபாய் தோல்வியுறறார். ஆததிரம் கொணட தாராபாய, இராமராசா இரண்டாம் சிவாசியின உணமையான மகனில்லை எனறு அறிவிததாள.

பேசுவாவின மேலாண்மைவலுத்தது. பாலாசிபாசிராவு நிருவாக மையத்தைச் சதாராவிலிருந்து பூனா

விற்கு மாற்றினார். ஆனால், தாராபாயையும் இராம ராசாவையும் சதாராவிலேயே தங்கச்செயதார். இதை விருமபாத தாராபாய் அரசருக்கும், பேசுவா விற்கும எதிரான நடவடிககைகளில் ஈடுபட்டார். அவர் கி பி.1751-52-ஆம் ஆணடுகளில மேற்கொணட எலலாச் சதி நடவடிககைகளையும் பேசுவா முறியடித் தார். வேறு வழியினறித் தாராபாய் அடங்கிப்போக நேரிட்டது. தம் 86-ஆம் வயதில் கி.பி.1761-ஆம் ஆணடு தாராபாய் இறந்தார். வெ.பா.

**தாராபுரம்** தமிழ்நாட்டில் பெரியார் மாவட்டத் திலுளள நகரமும், வட்டமும் ஆகும். இவ்வட்டத்தில் மே மாதம் தென்மேற்குப் பருவக் காற்றால் மழை பெய்கிறது. தாராபுரம் வட்டம், பாலக்காட்டுக் கணவாய்க்கு நேர் எதிரில் அமைந்துள்ளதால் காற்று மிக வேகமாக வீசும். அப்பொழுது பருவநிலை நன்றாக இருக்கும். நவம்பர் முதல் பிப்ருவரி வரை வடகிழக்குப் பருவக்காற்றால் இங்கு மழை பெய்யும், குளிர்காற்று வீசும். இப்பகுதியில் மழை குறைவாகை யால் அடிக்கடி பஞ்சம் ஏற்படும். இங்கு அமிராவதி நீர்த்தேக்கம், பவானிசாகர் நீர்த்தேக்கம் ஆகியவை ஏற்பட்டபினனர் நீர்வளம் பெருகியுள்ளது. இப் பகுதியில் கறகளும், மணலும் நிறைந்திருப்பதால் மண்வளம் குறைவாகவே உளளது. தென்பகுதியில் சுண்ணாம்புக் கல மிகுதி. நெல், வாழை, கரும்பு, பருத்தி, சோளம்,எள், துவரை, புகையிலை ஆகியவை பயிரிடப்படுகினறன.

இவ்வட்டத்திலுள்ள சிறந்த நகரஙகளுள் ஒன்றான தாராபுரம் இதன் தலைநகராகும். வட மொழியில் 'தாரா' என்றால ஆடை என்றும், 'புரம்' என்றால் நகர் எனறும் பொருளபடும். வடமொழியில் இது விராடபுரம், அதாவது விராட மனனனின் நகா எனவும் குறிப்பிடப்பட்டது. எனவே பஞ்சபாணடவர் கள இங்கு மறைந்து வாழ்நதுவந்தனர் எனவும் கூறு வர்.இந்நகரின் மக்களதொகை 42,269(1981). அமரா வதி ஆற்றின் அருகில் இதன் பழைய கோட்டையின சிதைவுகளைக் காணலாம். பழைய நகரம் அழிந்த தால் கி.பி.1799-இல புதிய நகரம் ஏற்படுததப் பட்டது. இந்நகர் கி.பி 1828-இல் கோவை மாவட்டத துடன்இது இணைக்கப்பட்டது.இப்பொழுது பெரியார் மாவட்டத்தில் இது இணைக்கப்பட்டுளளது. சோழா கள ஆட்சியில பராந்தகபுரம் எனப்பட்ட இது, கொங்கு சோழர்களின் தலைநகராக விளங்கியது. இதன் அணமையிலுள்ள குறிஞ்சிவாடி என்னும் ஊரில் பாண்டியர், விசயநகர மன்னர்கள் ஆகியோ ரின் கல்வெட்டுகள் உள்ளன.

இவ் வட்டத்தில் உள்ள முக்கிய நகரம் பேரூர் ஆகும். இதன் வடக்கில் 34 கி.மீ. தொலைவில் காங் கேயம் என்னும் நகரம் உள்ளது. சிவமலையிலுள்ள முருகனின் பெயர் காங்கேயன் என்பதால் இவ்வூர் காங்கேயம் எனப்பட்டது. கொங்கு சோழர்கள், பாண்டியர்கள் ஆட்சியில் இவ்வூர் வளம்மிக்கதாக இருந்திருக்கவேணடும். ஏனெனில் பல்வகைக் கோயில் கள் அவர்களால் இஙகு எழுப்பப்பட்டுள்ளன. வேறு எந்த வட்டத்திலும் இல்லாத அளவிற்கு அவ்விரு மரபினரின் கல்வெட்டுகள இங்குக் காணப்படு கின்றன. இங்குள்ள பழைய சிவன் கோயிலில் கல் வெட்டுகள பல உள. காங்கேயம் உயர்ந்தவகைப் பசுக்களுக்குப் பெயர்பெறறது.

இவ்வட்டத்திலுள்ள முத்தூா, காங்கேயத்திற்கு வடகிழக்கில் 33கி.மீ. தொலைவில் உள்ளது. இங்கு 800 ஆண்டுகளுக்கு முன் குலோத்துங்க சோழனால் கட்டப்பட்ட சிவன்கோயில ஒன்று உள்ளது. அதில் எழுந்தருளியிருக்கும் இறைவனுக்குக் குலோத்துங்க சோழீச்சுவர உடையார் என்பது பெயர். காங்கேயத் திலிருந்து 15 கி.மீ. தொலைவிலுள்ள பாடியூர் பண்டைக்காலத்தில் விலையுயர்ந்த இளம்பச்சை வைரக்கல்லுக்குப் பெயர் பெற்றது. இக் கற்கள் இவ்வூரில் எடுக்கப்பட்டு உரோமாபுரிக்கு மிகுந்த அள வில் அனுப்பப்பட்டன. இதனைப் பிளினி குறிப்பிட்டு கடல்பச்சை நிறக்கல மிகச் சிறந்தது என எழுதியுள ளார். இவ வட்டத்திலுளள பிற குறிப்பிடத்தக்க நகரஙகள பரஞ்சேர்வழி, பழயகோட்டை, சங்க ராண்டாம் பாளையம், சிவன்மலை, வெள்ளைக் கோயில முதலியன. சி.இரெ.

**தாரு பியர் அண்டாயின்**(கி பி. 1767-1829) பிரான்சு நாட்டு அரசியல்வாதி. இவர் பிரான்சில் உளள மாணட்பிலலர் என்னுமிடத்தில் கி.பி.1767-ஆம் ஆண்டு சனவரி 12-ஆம் நாள் பிறநதார். இவர் முறையான கலவி பயின்ற பிறகு பிராசின் போர்ப் படை நிருவாகத்தில் கி.பி. 1784-இல் சேர்ந்தார். இவருடைய நிருவாகத் திறமை பேரரசர் நெப் போலியன் போனபார்ட்டை வெகுவாகக கவர்ந்தது. எனவே, இவர் பேரரசர் நெப்போலியனின் நம்பிக் கைக்குப் பாத்திரமானார். சிறிது காலம் சுவிட்சர் லாந்து நாட்டுப் போர்ப்படை உணவு பொறுப்பாள ராக இருந்தார். அப்பதவியைக கி.பி.1799-ஆம் ஆண்டு வகித்துவநதார். பிறகு கி.பி.1801-இல வெளி நாட்டு உறவு, போர் அமைச்சகத்தின் மேலாண்மைச் செயலாளர் ஆகிய பொறுப்புகளை ஏற்றுக் கொண்டார். இப்பதவியின் பணியினைச் செவ்வனே செய்ததினால கி.பி.1802-இல் இவர் பேராயத்தில் அங்கத்தினராக நியமிக்கப்பட்டார். தாரு பியர் அண்ட்டாயினை (Daru Piere Antoine) நெப்போலி

யன் கி.பி.1805-ஆம ஆண்டு சூலை மாததநில பிரான்சு நாட்டு மன்ற உறுப்பினராகவும், தனது பேரரசர் மாளிகையில் பொதுச் சேவைகளின மேற் பார்வையாளராகவும் நியமித்தார். இவறறுடன தாரு பியர் அணடாயின பிரான்சு நாட்டின போர்த் துறை நிருவாகத்திலும் கி.பி.1806-ஆம் ஆணடு அக் டோபா வரை மிக முக்கியப் பங்கு வகித்தா. இவர் கி.பி. 1805, 1806, 1807, 1809 ஆகிய ஆணடு களில் போர் நடவடிக்கைகளில் தீவிரமாக ஈடு பட்டார். மேற்சொன்ன போா நடவடிககையினால் பிரசியா தோற்கடிக்கப்பட்டு கி.பி.1807-இல பிரான்சு, தில்சிட்டு உடன படிக்கையைப் பிரசியாவுடன ஏற படுத்திக்கொண்டது. இந்த உடன்படிக்கையினபடி பிரசியாவின் சார் மன்னர் ஆங்கிலேய நாட்டுப பொருள்களை வாஙகுவதில்லை என ஒப்புக்கொண டார் இநத உடன்படிக்கையின செயலாககத்தை மேற பார்வையாளராக இருந்து தாரு பியா அணடாயின கவனித்துக் கொணடார். எனவே, இவர் பிரானசு நாட்டு அரசாஙகத்தில் ,தலைமைச செயலாளராக கி.பி.1811 ஏப்பிரல் 17-ஆம் தேதி நியமிக்கப்பட்டாா.

தாரு, பேரரசா நெப்போலியனுடைய போர் முறைகளைப் பினபற்றினாா.ஆங்கிலேய நாட்டுககெதி ராகக் கி.பி.1812,1813-ஆம் ஆணடுகளில நெப்போலி யன் போனபாாட்டு போர் தொடுத்த போது தாரு, நெப்போலியனைப் பின் தொடாநது போாப் படையை நடத்தினார். பிறகு கி.பி.1813-ஆம ஆணடு நவம்பர் மாததநில போா நிருவாகத துறையில அமைச்சரானார். நெப்போலியன் கி.பி.1814-இல தனது பேரரசர் பதவியைத துறநதபோது இவரும ஓய்வுபெற எணணினார். ஆனால இவா போாபபடை யின தலைவராகவும் மேறபார்வையாளராகவும் நிய மிக்கபபட் டார். இருந்தபோதிலும் நெபபோலிய னுடைய 100 நாள சிறைவாசத்தினபோது பிரானசு நாட்டின மந்திரிசபையில போர் அமைச்சராகத் தொடர்ந்து பணியாற்றினார். மறுபடியும் நெப் போலியன பிரான்சைக கைப்பறறியபோது தாரு பிரபுக்கள் சபையில் சேர்த்துக கொளளப்பட்டார். இச்சபையில இவா அரசரின் கொளகைகளை ஆதரிககாதவர்களை எதிர்த்தார். இவர் மிலான எனனுமிடததில கி.பி.1829-இல இறந்தார். தி.கை.

**தாரை:** தாரை எனற பெயர் படைத்தவர்மூவர். இவருள ஒருத்தி பிரககுபதிக்கு மனைவியாய இருந்து சந்திரன் என்ற குருவின சீடனால் கற்பழிக்கப்பெறறு அதன் வாயிலாகப் புதனை ஈனறவள. பிரககுபதி புதனைத் தன் மகன் என்று உரிமை கொணடாடிய போது பிரமன் உணமையறிந்து சநதிரனின் மகனே அவன எனறு கூறி ஒப்படைத்தபோது தன புல்லொ முக்கம் புலப்பட நின்றவள.

2 தாரை என்பவள் இரவிவனமனுககு மகளாய்ப் பிறந்து துச்சயராசனுக்கு மனைவியாகித் தனனொடு பிறநத வீரை எனபவள் யானையால கொல்லபபட் டாள எனபதைக கேட்டு அரணமனையின் மேன மாடததினினறும் வீழ்ந்து உயிர் துறநது அடுதத பிறப்பில மாதவியாகப் பிறந்தவள.

3. தாரை எனபவள தேவாசுராகள கடல கடைநதபோது வெளிப்பட்ட அமுதத்தோடு பிறநத வள, கனனியா எழுவருள் ஒருத்தியாகப் பேசப் பெற்றவள; கடல கடையத் துணைநினற வாலிககு மனைவியானவள, அஙகதன எனபாளைப பயந்தவள, இராமன் சுக்கிரீவனோடு நட்புற்று வாலியைக் கொல வதாகக கூறி அவனைப் போருககழைக்குமாறு கூறச் சுக்கிரீவன ஆரவாரித்துப் போருககழைததது கேட்டு பொருதற்குப புறப்பட்ட வாலியைப் போருக்குப போகாது தழுவித் தடுககவும் அவன அவள சொல்லைக கேளாது சினத்தால அவள கூந்தல் தீயு மாறு உயிர்ககப் பெறறவள. வாலி அவள தடுப் பதைத் தவிாதது ‘விடுவிடு’ எனறு கூறி அவன உயிர் குடித்து மீளவதாகக் கூறியபோது முனனா வாலியின வலிககுத தோறறவன மீணடும் போருக கழைபபதை நோககின அவன தலை ஆறறல பெற றிருகக வாயபபிலலை எனறும், வேறு ஒரு துணை பெற்றிருகக வேணடுமெனறும கூறித தடுததவள; வாலி தனனைக் கொலல யாராலும் முடியாதெனறு பல காரணஙகளைக கூறிக கலஙகா திருககக கூற அவனுககு மேலும் ஒனறு கூற அஞ்சி வாளா இருநத வள; வாலி இராமனால கொலலபபெற்ற செயதி அறிந்து ஓடிபபோநது அவன மேனியில வீழநது புரணடு அழுது இரஙகி, விம்மி உருகித தலைக்குமேல கைவைதது அவன மலை மாாபில கோதையாய்க கிடநதவள. அவனைப் பலவாறு விளிததுப பிண மாகக் கிடககும் அவனைக் காண அஞ்சியதாக உரைத்தவள; தன்னையும் தன்னோடு அழைததுக கொள்ள வேண்டியும், தனனிடம் ஒரு புலவியும் காட்டாது வாழ்ந்ததைச் சுட்டிக் கணவனும் மனைவி யும் உடலுயிராயின உயிா போனபின உடல வாழ்வ தெவ்வாறு என்று கேட்டுக் கடல் கடைந்து அமிழது கொடுத்த நன்றி மறந்து கூற்றம் உயிர் கொணட தெவ்வாறு என்றும்,சிவனைத் திசைதோறும செனறு தவறாது மலரிட்டும் அவன வணஙகாது கிடப்பது எங்ஙனம் என்றும் தான பலவாறு புலம்பக் கணடும் பேசாதிருந்தது முறையோ என்றும்,தான உயிரென் றும் தனனை உடலென்றும் கூறியதும் தன்னை அவன மறந்ததில்லை யாதலின நெஞ்சத்துளளாள என்று

கூறியதும் மெய்யானால் அம்பு அவன நெஞசு துளைத்துத் தன்னைத் துளைக்காதது எவ்வாறு என் றும், அமுதுணட தேவர்கள நன்றிக் கடனுக்காவது எதிர்கொளளப் போந்தாரோ என்றும் புலம்பி, மகன் அஙகதனை நோக்கித் தம்பியினபகைகொணட பணபால் தந்தை அழிநததனைக் கூறித் தம் வாழ்வு கெட்டதைச் சுட்டிப் பின்னர் அவளருகிருநத மாருதி ஏவ ஆண்டிருந்த மகளிரால் அவள வாழிடததிறகு அழைததுச்செலலப்பெற்றவள். கு.தி.

**தால் ஏரி**: இநதியாவில் சம்மு-காசுமீர் மாநிலத் தில் சிரீ நகருககு வட கிழக்கில் இவவேரி அமைந் துள்ளது. இது வடக்குத தெற்காக 8 கி.மீ. நீளத்திற கும் கிழக்கு மேறகாக 3 .கி.மீ. அகலத்திற்கும் பரவி இருககின்றது. சில இடங்களில ஆழம் மிகுதியாகவும் சில இடங்களில் குறைவாகவும் இருக்கின்றது.ஆனால் எல்லாப் பகுதிகளும் தூய்மையான தெளிநத நீராகக் காட்சி அளிக்கின்றது. தால் ஏரியின் (Dal Lake) மூன்று பக்கங்களிலும் உயர்ந்த மலைகள பினனணி யாகக் காட்சி அளிககின்றன. அநத மலைகளின அடி வாரஙகளில தில்லிப் பேரரசர்கள் நிறுவிய பழத தோட்டஙகள, எணணற்ற சிறிய கிராமங்கள, புகழ பெற்ற கோடைக்கால அரணமனைகள் அமைந்துள ளன. இந்த ஏரியும், சீலம் நதியும் சுணட்-இ-குல என் னும் கால்வாய மூலம் இணைக்கப்படுகினறன. தாமரை மலாகளும், சிங்கரா தாவரங்களும் இநத ஏரியை அழகுபடுத்துகினறன. பல இடஙகளில் தாமரை இலைகள ஏரியை மறைத்திருப்பது பசசைக் கம்பளம் விரித்தது போல் காணப்படுகினறது. அதன் மீது வாத்து, நீரககோழி ஆகியவை அங்குமிஙகுமாக, ஓடித் திரிந்து கொணடிருக்கினறன. இநத ஏரியில இருககினற சிஙகாரா என்னும் தாவரத்திலிருந்து கிடைக்கின்ற பருப்பு அரசாங்கத்திற்கு வருவாய்த் தரக கூடியதாக உள்ளது.

சிரீநகரை நிறுவிய இரண்டாம் பிரவர்சேனாவின் காலத்தில 'மார்சாலா' (அனபு அரஙகம்) எனறழைக் கப்பட்ட 'சாலிமர்' பழஙகால காசுமீர்த் தோட்டக் கலைக்குச் சான்றாக விளங்குகினறது. இது மொக லாய மனனர்களின இன்பப் பொழுது போக்கு இட மாக விளங்கியது. 520 மீ. நீளமும் 380 மீ. அகலமும், உள்ள இததோட்டம் நான்கு அடுக்குகளாக அமைக கப்பட்டுள்ளது. அழகுமிக்க கருஙகல் மேடை மொகலாய மன்னர்களின் விருந்து மண்டபமாக இருந்தது.

இந்த ஏரியின் மேற்குக் கடற்கரையில் சாசகான ஆட்சிக் காலத்தில் கட்டப்பட்ட அசட்பால் மசூதி உள்ளது. நிசாத், நாசிம், சாலிமார்த தோட்டம் ஆகியவை தால் ஏரியின் கரையில் அமைந்துள்ள மிகச் சிறந்த நகரங்களாகும். இந்த ஏரியிலுளள படகு வீடுகள் எலலா வசதிகளும் கொணடனவாக உள்ளன. இங்கு நடக்தும நீர் விளையாட்டுகள, படகுப் போட்டி விளையாட்டுகள உலகப் புகழ்ப் பெற்றவையாகும். ஆணடுதோறும் ஆயிரக்கணககான சுற்றுலாப் பயணிகள் தால் ஏரியின அழகை கணடு களிக்கினறார்கள. காசுமீரின மக்களதொகையில ஏறக்குறைய பாதிபேர் இநத ஏரியைச் சுற்றி வாழ கினறனா. தி.கை.

**துணை நூல்கள்:**


**Fredreric Drew**, Jammu and Kashmır Terrıtorıes, New Delhı, 1976

**Somanath Dhar**, India The Land and the people, New Delhi

**Wake Held, W.**, Hıstory of Kashmir and Kashmırıs, Delhı, 1975.


**தால் கிரென் (கி.பி. 1809-1870)**, அமெரிககக கடற்படைத தலைவா; அமெரிககாவில உளள பிலெ டெலபியா மாநிலத்தில் கி.பி. 1809-ஆம் ஆணடு பிறந்தார். தால கிரென் (Dahl Gren) இளமையில கல்வி பயினற பிறகு தம் 17-ஆம் வயதில (1826) அமெரிககக் கடறபடையிற் சேர்நதார். அமெரிக்க உள்நாட்டுப் போரில் படைவீரர்கள இவர் தலைமை யில் தெற்கு அட்லாண்டிககில் மிகப் பெரும அளவில



தால கிரென

பங்கு கொண்டனர். ஆனால், இவருடைய பணி படைத்தலைவர் எனபதைவிட ஓர் அறிவியல அதி காரி என்பதே குறிப்பிடததக்கது இவா கணித இய லில் மிகவும் தேர்ச்சி பெற்றவராக இருந்ததனால் கடற்கரை அளவாய்வாளராக கி.பி. 1834-ஆம் ஆண்டு நியமனம பெற்றார். இவருடைய திறமை

யின காரணமாக கி.பி. 1847-இல இவா பீரங்கிப படைத துறைககு மாற்றப்பட்டார்.

தால கிரென பீரஙகிப் படைததுறையில மிகுநத அனுபவத்திற்குப பிறகு, எளிதாக அதே நேரததில வேகமாகத துளைககும் துப்பாககி ஒனறைக் கணடு பிடிததார் இது இவா புகழ பரவக காரணமாக இருந்தது. இந்தத் துபபாககி, 'உவாககார நீாபபுட்டி' (Soda Water bottle) வடிவததில இருநதது. எனவே, இதை எளிதாகப்பயனபடுதத முடிநதது அமெரிகக உளநாட்டுப போரில இநதத துபபாககி மிகுதியாகப பயனபடுததப் பெறறது. பிறகு பல வருடஙகளுககு அமெரிககக கடறபரையில பயனபடுததபபடடது

தாலகிரேன, தான கணடுபிடிதத துபபாககியை முதன முதலில கி.பி. 1857-ஆம ஆணடு கபபலில ஏறறித தாமே இயககிக காட்டினாா. பிறகு சில மாலுமிகளுககுப் பயிறசியும கொடுத்தாா. இவா கி.பி 1859-ஆம ஆணடு வரை தமமுடைய கவனத்தின கீழத துபபாக்கி ஏநதிய கபபலகளை இயககச செய்தாா. சோதனை அளவில, இநதத் துபபாககிகள வெவ்வேறு நிலைகளில, அவறறின வெளி அமைபபில பல துளைகள் செயது அதன் மூலம அழுத்தம் பிறப பொருளகளின மீது எவ்வாறு செயற படுகிறது எனபதை அறிய நடததியது முதல சோதனை ஆகும அமெரிககாவில உளநாடடுப போா ஏறபடடபோது, இவா வாசிஙடன் கபபற படையில பீரஙகிப் படைப பணியில இருநதாா. கூட்டாட்சி ஆதரவாளராக இருநத இவா, பீரஙகிப படையில இருநது பணி விலகாத மூனறு மிகக் குறிப பிடத்தகக அதிகாரிகளில ஒருவா. இவா அபபோது ஒரு படைப் பிரிவின பொறுபபாளராக இருநதாா. ஆனால, கபபல படைத் தளபதிதான் மறறவாகளுககு ஆணையிடும தகுதி பெற்றவராக இருநதாா. அமெரிககக குடியரசுத் தலைவர் ஆபரகாம லிஙகன தாலகிரெனை எப்படியாவது படைததளபதி பதவியில் தக்க வைத்துக்கொளள விருமபினாா. ஆகையால அதறகென 'அமெரிககக காங்கிரசில' தனிச் சட்டம் கொணடு வநது, தாலகிரென அந்தப பதவியில் நீடிக்கத் தகுதியுடையவராககினார் இவாவாசிஙடன கபபல படைததலைவராக இருநதபோது கி.பி. 1870-ஆம் ஆண்டு இயற்கை எய்தினார். தி.கை

**தால்சுடாய்**: இலியோ தால்சுடாய் (Leo Tolstoy) (கி.பி. 1828-1910), உருசியாவின தலை சிறந்த எழுததாளரும், ஒழுக்கச் சிந்தனையாளரும், சமூகச் சீதிருததக்காரரும் ஆவார். இவருடைய சிறுகதைகளும், நவீனஙகளும் இலக்கிய உலகில் சிறந்த படைப்புகளாகத திகழகின்றன.



தாலசுடாய

இவர் கி பி 1828 உருசியாவிலுளள துலா (Tula) மாநிலத்தில எசுநாயா போலியானா (Yasnaya Polyana) எனனுமிடத்தில, செலவமிகக சீமான குடும்பததில பிறநதார் தமது ஆறாம வயதில தாயையும, ஒனபதாம் வயதில தநதையையும இழநதாா. எனவே இவரும, இவருடன பிறநதவாகளும உறவினர்களால, சமயப பறறு உள்ளவர்களாக வளாககப பட்டனா தமது 16-ஆம வயதில, கி.பி. 1844-இல காசன பலகலைக கழகததில (Kazan University) சோநது முதலில மொழியும, பினனாச சட்டமும் பயினறாா. பிரெஞ்சு மெய்யறிவாளரான உரூசோவின கருத்துகளால கவரப்பட்ட இவா ஏட்டுக கல்வியை விரும்பாது கி.பி 1847-இல படடம எதுவும பெறாமலேயே ஊா திரும்பினாா. படையில அதிகாரியாகப் பணிபுரிநது வநத தனனுடைய தமையன நிகோலாய் (Nicolai) உடன் சோந்து, காகசசு (Caucasus) சென்று, போரில ஈடுபட்டாா. அப்பொழுது தான 'ஒரு தாககுதல்' (A Raid) எனனும நூலை எழுதினார் அதறகு முன்னரே, புனிதபீட்டர்சுபாககில் இருந்த காலததில், 'குழநதைப பருவம' (Childhood) எனனும் நூலை வெளியிட்டு மககளுடைய பாராட்டுகளைப் பெற்றிருந்தார். பினனர் கி.பி 1854-இல் 'பிளளைபபருவம' (Boyhood) எனனும நூலையும்; கி பி 1856-இல 'இளமை' (Youth) என்னும நூலையும எழுதினாா. இவா கிரிமியப் போரில் பெறற பட்டறிவை 'செவசுடபோல கதைகள' (Savastopol Stories 1855-56-இல) வாயிலாக வெளியிட்டார். இவர் கி.பி. 1858-இல் எசுநாயா போலியானா

திரும்பி, பண்ணையைமேற்பார்வை செய்துவந்தார். அக்காலத்தில் அவர் செர்மெனி, பிரான்சு, சுவிட்சர் லாந்து, பெல்சியம், இங்கிலாந்து ஆகிய நாடுகளுக்குச் சென்று, அந்நாடுகளிலிருந்த கல்விமுறையை அறிந்து வந்து, தன்னுடைய ஊரில் ஒரு பள்ளியைத் தொடங்கி புரட்சிக்கரமான முறையில் கல்வி கற்பித்தார். ஆனால் உடல்நலம் சரியில்லாததால் ஓர் ஆண்டிற்குப் பிறகு அதைக் கைவிட்டார்.

இலியோ தால்சுடாய் கி.பி. 1862-இல் சோபியா பெர்சு (Sophia Behrs) என்னும் 18 வயதான நங்கையைக் காதல் திருமணம் செய்து கொண்டார். இவருடைய வாழ்க்கையில் மகிழ்ச்சியான இக்காலத்தில் (கி.பி.1865-69-இல்) 'போரும் அமைதியும்' (War and Peace) என்னும் நூல் பிறந்தது. உலகிலேயே சிறந்த நவீனங்களுள் ஒன்றான இக்காப்பியத்தில் இவருடைய அறிவின் முதிர்ச்சியைக் காணலாம். தன்னுடைய இரண்டாவது நவீனமான 'அன்னா கரீனா'வை (Anna Kharenia) கி.பி. 1873 மார்ச்சில் எழுதத் தொடங்கி கி.பி. 1875-77-இல் வெளியிட்டார். இவருக்கு மிகவும் சோதனையாகவிருந்த இக்காலத்தில் இந்நூலை மிகச் சிறப்பாகப் படைத்தார்.

இவருடைய உள்ளத்தில் கி.பி. 1884-இல் ஆன்மீக, சமய மாற்றம் நிகழ்ந்த சமயத்தைப் பற்றி கீழ்க்காணும் நூல்களை எழுதினார்.

1) 'ஓர் ஒப்புதல்' (A Confession, 1882),2)'இருட்டின் வலிமை' (The Power of Darkness, 1889), 3) 'கடவுளின் அரசு உன் உள்ளே இருக்கின்றது' (The Kingdom of God is within You,1894), 4) 'உயிர்ப்பித்தெழுதல்' (Resurrection, 1899-1900), 5)'நற்செய்திகளை படிப்பது எப்படி? (How to read the Gospel, 1896), 6) 'சமயம் என்றால் என்ன?' (What is Releigion 1902), 7) 'குருமார்களுக்கு ஒரு வேண்டுகோள்' (An appeal to Clergy, 1882) வேறு பல நூல்களும், கட்டுரைகளும் இவரால் எழுதப்பட்டன.

தன்னுடைய இறுதி காலத்தில் இவர் வீட்டையும், செல்வத்தையும் துறந்து விவசாயிகளுடன் எளிய வாழ்க்கை வாழ விரும்பினார். இவருக்கும் இவருடைய மனைவிக்கும் இடையே தொடர்ந்து நடந்து வந்த போராட்டத்தின் விளைவாக மன அமைதியை இழந்துத் துன்பப்பட்டார். அதனால் தன்னுடைய 82-ஆம் வயதில், 1910 அக்டோபர் 20-இல் வீட்டை விட்டு வெளியேறினார். உடல்நலம் குன்றிய இவர் நவம்பர் 9-இல் அசுடபோவோ (Astapovo) என்னுமிடத்தில் புகைவண்டி நிலையத்தில் உயிர்துறந்தார். இவர் மறைந்தாலும், இறவாத புகழுடைய இலக்கியப் படைப்புகள் காலத்தை வென்று இவருடைய புகழைப் பரப்பிக் கொண்டிருக்கின்றன. சி.இரெ.

**துணை நூல்கள்:**

**Christian, R.F.,** Tolstoy, A Critical Introduction, Cambridge University, Press, 1969.

**Knoules, A.V. (Earnest),** Tolstoy, The Critical Heritage, Routledge and Kegan Paul, London, 1978

**Simmons J. Earnste,** Tolstoy, Routledge and Kegan Paul in association with Blackie, London, 1973.

***தால்சுடாய், அலிக்சியே கான்சுடாண்டினோவிச்சு*:** இவர் சோவியத்து நாட்டு நாவலாசிரியர்; நாடக ஆசிரியர்; கவிஞர். புனித பீட்டர்சு பர்க்கு நகரில் இவர் கி.பி. 1817-ஆம் ஆண்டு பிறந்தார். தால்சுடாய், அலிக்சியே கான்சுடாண்டினோவிச்சு (Tolstoy Alexei Konstantinovich) இரண்டாம் அலெக்சாண்டருடைய நண்பர். உருசிய நாட்டுச் சக்கரவர்த்தியின் மெய்க்காப்பாளராக இவர் பணியமர்த்தம் செய்யப்பட்டபோது அதை மறுத்துவிட்டு அரசவை வேட்டையாளன் (Court huntsman) என்ற பதவியிலேயே மனநிறைவு கொண்டு நீடித்தார். சோவியத்து நாட்டு வரலாற்றின் அடிப்படையில் எழுந்த இவருடைய கதைப் பாடல்கள் புகழ் வாய்ந்தவை. இவருடைய வரலாற்றுப் புதினங்களில் இளவரசர் செரிபிரானி (Prince Serbryany), கொடியோன் ஐவானின் மரணம் (The Death of the Ivan the Terrible) ஆகிய இவ்விரண்டும் குறிப்பிடத்தக்கவை.



தால்சுட்டாய், அலிக்சியே கான்சுடாண்டினோ விச்சு

இவருடைய 'உருசியச் சக்கரவர்த்தி பியோடர்' நாடகமும் 'உருசிய சக்கரவர்த்தி போரிசு' நாடகமும் பல ஆண்டுகளாகத் தணிகைக் குழுவின் தடையுத்தர வில் இருந்தன. 'உருசியச் சக்கரவர்த்தி பியோடர்' நாடகத்தில் கருணையுள்ளம் படைத்த பியோடா சிக்கலான அரசியலின் விளைவால நன்மைகளைச் செய்ய முடியாமல வருந்துவதைக் காட்டுகிறார். இவா எழுதிய 'வேதாளம்' (Dragon) என்ற கதை கி.பி. 14-16-ஆம் நூற்றாண்டுகளில இத்தாலியில் ஏற்பட்ட மறுமலாச்சியைக காட்டுகிறது. இவா பல எள்ளல் நாடகங்களையும் எழுதியுள்ளார்.

தாலசுடாய் உறுதிமிக்க மேலைநாட்டுவாதி யாக விளங்கினார். ஏனைய உருசிய எழுத்தாளர் களை விட இவா சுதந்திரம் மற்றும மனிதத தகுதி குறித்த மேலைநாட்டு நம்பிக்கைகளை வர வேற்றார். இவருடைய மிகச்சிறந்த பாடல தொகுதி யான'புனித சானதமாசீன'(St.John Damascene)கலை யின் சுதந்திரம குறித்து வற்புறுத்துகிறது. இவ ருடைய 'கதாநாயகன போடோககு' (Hero Potok) எனும் கதை மாசுககோவின் கொடுங்கோனமையை எதிர்ப்பதுடன தீவிரவாதத்தில அடங்கியுள்ள அறி வுக்குப் புறம்பானவைகளையும சாடுகிறது.

இவர் கி.பி.1875-ஆம் ஆண்டு மறைந்தார். இவர் அககாலத்தில விளங்கிய சமூகக கொள்கைக் குழு எதனுடனும தொடர்பு கொணடிராததால கடுமை யாகத தாக்கி எழுதப்பட்டார் இருப்பினும் இவ ருடைய மனிதநேயப பண்புகள், உயர்ந்த குறிக கோள்கள், படைப்புகளின அழகியல் போன்றவை இவருக்குச சோவியத்து இலக்கிய வரலாற்றில் உயர்நத இடத்தை அளிக்கவிலலை. சா.உ.

**தால்சுடாய், அலிக்சியே நிக்காலைய விச்சு.** வரலாற்றுப் புதினங்கள எழுதிய முன்னணிச சோவியத்து எழுத்தாளர்களுள இவரும ஒருவர். புகழ பெற்ற சோவியத்து நாவலாசிரியர் இலியோ தால் சுடாயின் உறவினர். இவர் கி.பி. 1883-ஆம ஆண்டு சாமரா மாநிலத்தில் சாசு நவுக்கா எனனும்சிற்றூரில பிறந்தார். பீட்டர்சுபர்கு தொழில நுட்பக் கலலூரி யில் இவர் பட்ட வகுப்புப் படித்துக் கொணடிருந்த போது படைப்பிலக்கிய ஆர்வத்தால் படிப்பைத் தொடரமுடியாமல் நிறுத்திக் கொண்டார்.

தால்சுடாய. (Alexi Nikolaevich Tolstoy) தன னுடைய தன்னுணர்ச்சிப் பாடல் தொகுப்பை வெளி யிடுவதன வாயிலாக 1907-ஆம் ஆண்டு எழுத்துலகப் பணியைத் தொடங்கினார். இரணடாம் உலகப் போரில் இவர் செயல்திறம் மிக்க இதழாசிரியராக வும் வீரம் செறிந்த போர்க்கதைகளை எழுதும்



தால்சுடாய் அலிக்சியே நிக்காலைய விச்சு

உயர்ந்த எழுத்தாளராகவும் விளங்கினார். இவ ருடைய நாவல்கள சோவியத்து உளவியல சார் மெய்ம்மையின (Psychological realism) அடிப்படை யில் அமைந்திருப்பதால இவர் சோவியத்து நாவல இலக்கிய வரலாற்றில சிறப்பான இடத்தைப் பெற் றுள்ளார். சோவியத்து ஆட்சியாளர்களால் இவர் நாடு கடத்தப்பட்டபோது பாரிசு மாநகரில தங்கி யிருந்தார். அங்கிருந்து இவா படைத்தளித்த இலக்கி யங்கள யாவும் சோவியத்து நாட்டின சிக்கல்களையே மையமாகக் கொணடிருந்தன. இவருடைய இரணடு படைப்புகள இரணடு முறை தொடர்ந்து இசுடா லின (Stalin) பரிசைப் பெற்றன.

இவர் இந்நூற்றாண்டின் இருபதுகளில மிகச் சிறந்த கதைகள எழுதினார். அவற்றுள அயிலிடா (Aelita), இயந்திரங்களின புரட்சி (The Revolt of the machines), பொறிஞர் காவினசுவின நிமிர்மாலை வட்டம் (Engineer Gavin's Hyperboloid), அசூர் மாநகரங்கள (Azure Cities) போன்றவை குறிப்பிடத் தக்கவை. இவருடைய படைப்புகளுள முதனமையான இடம் பெறும் நாவல 'கலவாரிக்குப் போகும் பெருஞ் சாலை' (Road to Calvary) ஆகும். இந்நாவலை 1921-இல தொடங்கி 1941-இல நிறைவு செய்தார். சோவியத்துச் சமுதாயத்தின் உணமையான படப் பிடிப்பாக இந்நாவல இன்றும் போற்றப் பெற்று வருகிறது. புரட்சிக் காலத்தைச் சித்திரிக்கும் பெருமைமிகு பீட்டர் (Peter the great) எனனும் இவருடைய படைப்பு மிகச் சிறந்த வரலாற்றுப புதினமாகக் கருதப்படுகிறது. பொதுவாக இவருடைய படைப்புகள் அனைத்துமே சார் மன்னன காலத்தில் பிரபுத்துவம் சிதையத தொடங்கிய போக்குகளைக் காட்டுகின்றன. சோவியத்து நாட்டின் நாட்டுப்புற இலக்கியங்களை அரிதின் முயன்று திரட்டி இவர் வெளியிட்டுள்ளார். மாணவ சமுதாயத்திற்காக உலக இலக்கிய வரலாறு குறித்து இவர் எளிய நடையில் நூல்கள பல எழுதியுள்ளார்.

இவர் சோவியத்து அரசாங்கத்தில் தலைமைச் சோவியத்து உறுப்பினராகவும் இருந்துள்ளார். இவர் மிகச் சிறந்த சொற்பொழிவாளராகவும் விளங்கியவர். உலக சமாதானத்துக்கு இவருடைய சொற்பொழிவுகள் இன்றும் வழிகாட்டுவனவாக அமைந்துள்ளன என்பர். இவர் 1945-ஆம் ஆண்டு மறைந்தார்.
சா.உ.

**தால்டன் கல்வித் திட்டம்**, செல்வி எலன் பார்க்கர்சுடு என்னும் கல்வியாளரால் (கி.பி. 1887–1973) உருவாக்கப்பட்டது. இவர் அமெரிக்க ஐக்கிய நாட்டைச் சேர்ந்தவர். பார்க்கர்சுடு (Helen Parkhurt) இந்தத் திட்டத்தைத் தால்டன் திட்டத்தில் கல்வி என்ற மூலநூலில் (1922) விவரித்துள்ளார். இந்நூல் ஆங்கிலத்தில் வெளிவந்த இரண்டு ஆண்டுகளுக்குள் எட்டு மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு இத்திட்டம் செருமனி, இந்தியா, சீனா, சப்பான் உட்பட உலகில் பல நாடுகளிலும் பள்ளிகளில் மேற்கொள்ளப்பட்டது.

மரபுவழிப் பள்ளிகளில் பாடவேளை, வகுப்பறை, மற்றும் ஆசிரியர் சார்ந்த பயிற்றுமுறையால் மாணவரின் ஆர்வம், தான்தொடங்காற்றல் (Initiative), பொறுப்புணர்வு ஆகியவை காலப்போக்கில் மரத்து விடுவதை இவர் கண்டார். மாணவர்களை வெறும் மெழுகாகவும் பாடம் மற்றும் பள்ளி அனுபவங்களை அம் மெழுகில் பதியும் அச்சாகவும் கொள்ளும் உருவம் இதன் அடிப்படையாக இருப்பதைப் பார்க்கர்சுடு உணர்ந்தார். மேலும் மரபுவழிப் பயிற்றுமுறை, கற்கும் பாங்கு, வேகம் ஆகியவற்றில் மாணவரிடையே விரவிக் காணும் தனியாள் வேறுபாடுகளைப் புறக்கணித்து, எல்லோரையும் ஒரே அச்சில் வார்த்தெடுக்க முற்படும் இயந்திர கதி கொண்டது என்பதையும் உணர்ந்தார்.

அச்சமற்ற, ஆர்வம் மிக்க, தான்தொடங்காற்றல் நிறைந்த மாணவர்களை உருவாக்கும் ஒரு கல்வித் திட்டத்தை வரைந்து அமைக்க அவாக் கொண்டார் பார்க்கர்சுடு. எட்கார் சேம்சு சுவிப்டு எழுதிய 'உருவாகும் மனித மனம்' (Mind in the Making) என்ற ஆங்கில நூல் பார்க்கர்சுடின் 'கல்வியியல் ஆய்வுக் கூடம்' என்னும் கருத்திற்கு வித்திட்டது. 'ஆசிரியரின் பணி மாணவரை இயந்திர கதியில் பயிற்றுவிப்பது அன்று; தாமாக அறிவைத் தேடிச் சேகரித்து, உரையாடித் தெளிவுபெறும் பாங்கில் அவர்களை ஊக்குவிப்பதாகும்' என்ற சுவிப்டின் கருத்து பார்க்கர்சுடின் 'கல்வியியல் ஆய்வுக்கூட'த்தின் அடிப்படையாகும்.

பார்க்கர்சுடின் முதல் கல்வியியல் ஆய்வுக்கூடம் 1911–ஆம் ஆண்டு உருக்கொண்டது; 1913–ஆம் ஆண்டு முழுமை பெற்றது. அதன் நோக்கங்கள் பள்ளி அமைப்பும் இயக்கமும் மாணவருக்கு மிகுதியான சுதந்திரம் அளிக்க வேண்டும்; பள்ளிச் சூழல் பல்வேறு பாடங்களுக்கும் இயைபுடையதாக அமைய வேண்டும்; ஒவ்வோர் ஆசிரியரும் ஒரு குறிப்பிட்ட பாடத்தில் தேர்ச்சியுற்றவராக இருத்தல் வேண்டும்; சிறப்பாக மாணவரிடையே விரவிக்காணும் தனியாள் வேறுபாடுகளைக் கவனத்திற் கொண்டு மீத்திறன் கொண்ட மாணவரும், திறன் குறைந்த மாணவரும் முன்னேறுவதற்குச் சம வாய்ப்புகள் வழங்கப்பட வேண்டும் என்பனவாகும். பார்க்கர்சுடும் அவர்தம் துணை ஆசிரியர்களும் அடுத்தஇரண்டு ஆண்டுகளில், மரபுவழிப் பள்ளிகளில் வழக்கிலிருக்கும் பாடவேளை சார்ந்த அமைப்பையும் இயக்கத்தையும் விடுத்து முற்றிலும் மாணவர் தாமாக முன்வந்து அமையும் குழுமையப் பயிற்றுமுறையைக் கண்டு செயலாக்கினர். அடுத்த ஓர் ஆண்டில் தனித்தனியாக இயங்கி வந்த இக்குழுக்கள் இடைவினை (Interaction) ஆற்றும் ஒரு வழிமுறையையும் பார்க்கர்சுடு வகுத்தார்.

வகுப்பறை அளவில் பார்க்கர்சுடு நடத்திவந்த இக் கல்வியியல் ஆய்வுக்கூடம் முதன்முதலில் 1919-ஆம் ஆண்டு ஒரு முழுப்பள்ளி அளவில் மேற்கொள்ளப்பட்டது. திருமதி மர்ரே கிரேன் ஊனமுற்ற குழந்தைகளுக்காகப் பெர்க்சயர் என்ற இடத்தில் நடத்திவந்த பள்ளியை மேன்மையுறச் செய்யப் பார்க்கர்சுடின் ஆலோசனைகளை நாடினார். பார்க்கர்சுடு தம் திட்டத்தையும் அதன் சிறப்புகளையும் அவரிடம் எடுத்துக்கூற அது அங்கு மேற்கொள்ளப்பட்டது.

பெர்க்சயரில் பார்க்கர்சுடின் கல்வியியல் ஆய்வுக்கூடத் திட்டம் பெருவெற்றி பெற்றது. அதன் விளைவாகத் திருமதி. கிரேன் மசாசுசெட்சு மாநிலத்திலுள்ள தம் சொந்த ஊரான தால்டனில் ஒரு பெரிய உயர்நிலைப் பள்ளியில் இத்திட்டத்தை மேற்கொள்ளத் துணிந்தார். அதுவரை 'கல்வியியல் ஆய்வுக்கூடம்' என்று தாம் வழங்கிவந்த இத்திட்டத்திற்குப் பார்க்கர்சுடு 'தால்டன் ஆய்வுக்கூடத் திட்டம்' (Dalton Laboratory Plan) என்று பெயர் சூட்டினார்.

**கொள்கை:** மாணவரின் சுதந்திரம் தால்டன் ஆய்வுத்திட்டத்தின் முதல் கொள்கையாகும். மாணவன் தான் விரும்பிய பாடத்தை, விரும்பிய பாங்கில், விரும்பும் நேரம்வரை புற இடையூறுகள் ஏதுமின்றிக் கற்க இத்திட்டம் வழி வகுக்கிறது.

குழுக்களின் இடைவினை (Interaction of Groups) இத்திட்டத்தின் இரண்டாம் கொள்கையாகும்,

தால்டன் திட்டத்தில் மாணவன தனனையறியா மலேயே ஒரு குழுவின உறுப்பினனாகிப் பழகுதறகுரிய சூழ்நிலை உருவாக்கித் தரப்படுகிறது

தாலடன் திட்டத்தில மாணவனின பணி அளவும் அவன எயத வேணடிய தர அளவும அவனது சொந்தப் பொறுப்பாகச சுட்டி விடப்படுகின்றன. அவற்றை அவன், தன் பாஙகில தன் வேகத்தில் அடைய அனுமதிக்கபபடுகிறான அவனுடைய அடைவுக்கு (Achievement) அவனே பொறுபபேறகும்போது உள்ளுறை அறிவாக்கத் திறனகள மட்டுமன்றி அவனது மதிப்பீடும் திறனும் உளள உறுதியும் தூணடப் படுகின்றன. அவை தூண்டப்படுவதற்கு ஆணடின் தொடககத்திலேயே அவன கற்கவேணடிய பாடம் முழுவதும் அவன்முன வைககப்படுதல வேண்டும். அப்போதுதான் அவனுக்குத் தான கடக்க வேணடிய முழுத் தொலைவும், திஙகள் மற்றும் வாரந்தோறும் தாணடவேணடிய படிகளும் தெளிவாகப் புலப்படும். அதன் மூலம் திட்டமிட்டுச செயலாறறும் திறனும், முடிவுககேற்ப வழியையும் முயறசி அளவையும் வகுககுந திறனும் அவனிடம் வளாகினறன.

தால்டன திட்டம மாணவனை மையமாகக் கொணடது; ஆசிரியரையோ பாடத்திட்டத்தையோ பாடவேளையையோ அன்று பாடத்திட்டம் எனபது இலக்கை அடைய உதவும் ஒரு கருவியே அனறி அதுவே இலக்காகி விடமுடியாது. அதுபோல, ஆசிரியரும் கற்றல் நிகழவதற்கு ஓா ஊக்கியே; அவர் ஒரு நாளுமே கற்றல வினையின மையமாகி விடமுடியாது. கற்றலின் மையச் சிக்கல் மாணவனது சிக்கல்; ஆசிரியரது அன்று. எனவே, தால்டன் திட்டத்தின் முதல் படி மாணவன தன்னுடைய மையச் சிக்கலை அணுகி அடைவதிலுள்ள இடையூறுகளை நீக்குவதே ஆகும்.

அதாவது தாலடன திட்டத்தில மாணவனுக்கு அவனது இலககு ஆணடின தொடககத்திலேயே தெளிவாக்கபபடுகிறது. கறறல அவனது சிககலாகவும் பொறுப்பாகவும் சுட்டிவிடப்படுகிறது. இதை அவன் உணருமவழியில உளள இடையூறுகள நீக்கப் பட்டு அவன தன் இலக்கை அடைவதற்கு இயல்பூக்கம் அளிக்கும் ஒரு சூழநிலை உருவாககித் தரப்படுகிறது.பாடப்பொருளகளை அன்றி, இச்சூழ்நிலையில அவன் பெறும் அனுபவங்களே திட்டத்தின மையமாக அமைகின்றன. இவவாறு மாணவனையே மையமாகக் கொண்டு பல்வேறு பாடங்களும் ஒன்றோடொன்று கோவையாகப் பின்னிப் பிணைந்த பாங்கில் கற்பிக்கப்படுகின்றன. அதனால் முழுமையான மனித அனுபவஙகளைத் துண்டாடி அவறறை ஒனறோடொன்று தொடர்பற்ற பாடத்திட்டஙகளாகக் கற்பித்துவந்த வழக்கம் ஒழிக்கப்பட்டு, பாடத்திட்டங்களின் ஊடே உயிரோட்டமாகச் செல்லும் முழுமையான அனுபவம் கற்பதற்குரிய பொருளாகிறது. வாழ்வும் கல்வியும ஒரே உயிரோட்டமெனபது மாணவனால் உணரப்படுகிறது.

**செயலாக்கம்:** தால்டன் திட்டததைச செயலாக்கப் பாடத்திட்டத்தை அல்லது மாணவர்களை வகுப்புவாரியாகப் பிரித்து அமைபபதைத் தவிர்க்க வேண்டியதில்லை. இததிட்டத்தில் ஒவவொரு மாணவனும் ஒரு வகுப்பின உறுப்பினனாகக் கொள்ளப்படுகிறான். ஒவ்வொரு வகுப்பிற்கும் ஓர் உசச அளவும் குறைந்த அளவும் எல்லையிட்ட பாடத்திட்டம் மேற் கொளளப்படுகிறது. இந்தப பாடத்திட்டம் ஒரு பணி ஒப்பந்தமாகப் பிரிக்கப்படுகிறது. ஒவ்வொரு மாணவனும் இந்தப் பணியை அந்த வகுப்பில் தேர்ச்சி பெறுவதற்குரிய விதியாக ஏற்று ஆணடுத் தொடக்கத்தில அந்த ஒப்பந்தத்தில் கையொபபம் இடுகிறான். இப்பணி திங்களவாரியாகவும், பாடவாரியாகவும் பகுக்கப்படுகிறது. பணியை ஒரு வரையறுக்கப் பட்ட காலஎல்லைக்கேற்பவும் தர அளவைககேறபவும் முடிப்பது இனி மாணவனின பொறுபபாகச் சுட்டி விடப்படுகிறது. பல்வேறு பாடஙகளிலும குறிப்பிட்ட பணிகளை உரிய காலஎலலை மறறும் தரஅளவை ஒப்ப முடிப்பது வறபுறுததப்படுகிறது.

இத்திட்டத்தில பளளியில் வகுப்புகளாக இருக்கும் அறைகள் பாடததிட்டத்தில் கணட பாடஙகள் ஒவ்வொன்றுக்கும் உரிய 'ஆய்வுக் களஙகளாக' மாற்றி அமைக்கப்படும். ஒவ்வொரு பாடத்திற்குரிய ஓர் ஆய்வுக்களத்திலும் அப்பாடத்தில் தேர்ந்த ஓர் ஆசிரியர் இருப்பார். ஒவ்வொரு பாடத்திற்கும் உரிய நூல்கள் பொது நூலகத்திலிருந்து இந்தத் தனிப்பாட ஆய்வுக்களங்களுக்குப் பிரித்து வழஙகப்படும். மாணவ, மாணவியர் விரும்பும்நேரததில் விரும்பிய பாடத்தை, அதற்குரிய ஆய்வுக்களத்திற்குச சென்று தனித்தும், கூட்டாகவும் மற்றும் ஆசிரியர் உதவியுடனும் விரும்பும்வரை பயிலலாம். ஆர்வம் மிக்க பாடஙகளில மிகையான நேரம் செலவிட்டு ஆர்வம் குறைந்த பாடங்களைப் புறக்கணிக்கும் போக்கு, ஒவவொரு பாடத்திற்கும உரிய பணி ஒப்பநதத்தில கண்டுள்ள உச்ச மற்றும் குறைந்த தரஅளவை எல்லைகளால் கட்டுப்படுத்தப்படுகிறது. அதேசமயத்தில் மாணவர்களுக்கு அவ்வப்போது வெவவேறு பாடஙகளில் தோன்றும் ஆர்வம், செயற்கையான பாடவேளைக் கட்டுப்பாடுகளால் இடையூறு ஏதுமின்றி, இயல்பூக்கமாகிக் கற்றல் முனைவுக்கு வலுவூட்டுகிறது.

தால்டன் திட்டத்தின் சிறந்த ஒரு பகுதி மாணவர் அவ்வப்போது ஆற்றி முடிக்கும் பணிப்புகள் (Assignments). அவற்றின் தரத்தை ஆசிரியர் மதிப்

பிடடுப் பதிவு செய்யும் தனியாள தேர்சசிவரைபடம் (Individual Progress Graph), ஒவவொரு மாணவ னும் தன பயிறசிநேரததை வெவவேறு பாடங்களில அவன அடையும் தேர்ச்சிககேறபப் பஙகீடு செய்து எலலாப் பாடஙகளிலும் ஓரளவு சீரான முனனேறறம் பெற உதவுகிறது. இதேமுறை எல்லா மாணவர் களும் எல்லாப் பாடஙகளிலும் ஓரளவு சமவாயப்பும் தேர்ச்சியும் பெற வழிவகுக்கிறது த.இரா.

**துணை நூல்கள்:**


Lynch, A J., The Rise and Progress of the Dalton Plan, George Philip & Son Ltd., London, 1926.

Parkhurst, H Education on the Dalton Plan, G. Bell & Sons Ltd., London, 1922.


**தால்டெக்கு இந்தியர்**: மத்திய மெகசிகோ மேட்டு நிலஙகளில கி.பி. 900 முதல 1200 வரை நனகு கோலோசசி வாழநத அமெரிகக இநதியா களுள ஒரு குடியினரே தாலடெக்கு இநதியர் (Toltec Indians) இவர்களின வாழககை முறையும மொழி யும அசுதெககு (Aztec) மக்களைப் பெருமளவு மாற் றின. அசுதெககுகள் தால்டெககு மககளின பண பாட்டைப் பினபற்றத தொடஙகினா. அவவாறே யுககாடன பகுதியைச சேர்நத மாயா (Maya) மகக ளிடமும இவர்களின பணபாடு பெரும் செலவாககுப பெற்றது. மாயா நாகரிகததைச சேர்நத சிசசன இட்சா (Chichen Itza) நகரத்திலுள்ள முககிய கட்ட டஙகள தாலடெககு மககளின கட்டடககலையோடு தொடர்புடையனவாகக காணப்படுகினறன.

மெக்சிகோ பகுதிககு நாகரிகததைக் கொணடு வநதவர்கள தாலடெககு மககளே எனற கருதது, அசுதெக்குகளின தொன்மக் கதைகளில பல இடங களில இடம்பெறறுளளது. இககதைகளஇவாகளைத் தொனமை வீரர்கள எனறும சிறபபித்துக கூறுகின றன.

இப்போதைய மெக்சிகோ நகரிலிருந்து 95 கி.மீ. தொலைவில துலா (Tula) எனற தலைநகரைத் தொடகக காலத்தில மிகச் சிறபபாக அமைதத வாகள தாலடெக்குகளே. அதனால 'தாலடெககு' என்ற சொலலுககுத் 'துலா நகர மககள' எனற ஒரு பொருளும உணடு. காலத்தால அழிநதுவநத இநநக ரின சிதைநத காட்சி இதன அமைப்பையும கட்டடக கலையின பாணியையும் அறிநதுகொளள உதவுகிறது. இநநகரில பலபிரமிடுகள் உளளன. தாலடெக்குகளின் செலவாககு மத்திய மெக்சிகோவிலும் துலா நகரப பகுதியைச் சுறறிலும விரைநது பரவிறறு. குறிப்பாக கி.பி. 10-ஆம் நூற்றாணடில தாலடெக்குப் பண் பாட்டின வளர்சசி அதன உசசநிலைககுச் செனறது. இககாலத்தில தாலடெககுகளின உலோக வேலைப் பாடுகள், மனிதாகளின உருவச்சிலைகள, கட்டட வகைகள முதலானவை உயரிய நிலையில இருநதன. சிசசிமககு (Chichimec) எனனும் நாடோடிக கூட்டத தினர் கி.பி 12-ஆம் நூறறாணடின தொடககததில மததிய மெக்சிகோவிலிருநத தால்டெககுகளின முக் கிய இடஙகளைத் தகாதது விட்டனா. இநநாடோடிக் கூட்டததினருள அசுதெக்குகளும (Aztecs) அடஙகு வர். சீ.ப.

**தால்மன், பிரெடரிக் கிறித்தோபர். (கி.பி. 1785-1860)** செருமனியின ஐககியததிறகாகப் பாடு பட்டவர். முற்போககுக கருத்துககொணட செருமன வரலாற்று ஆசிரியர். பிரெடரிக் கிறித்தோபர் தால் மன (Fredrich Christopher Dahlmann) கி பி. 1785 -ஆம் ஆணடில மேறகுச் செருமனியில் உளள வைமார் (Weimar) எனனுமிடததில பிறந்தார். கி பி. 1812 -ஆம் ஆணடில் இசுலெசுவிக்கு கோமகனாட்சிப் பகுதி யில உளள கீயல (Kiel)பலகலைக் கழகத்தில வரலாற றுப் பேராசிரியராக நியமிக்கபபட்டார். தேனியர்கள பெருமபானமையாக இருநத இசுலெசுவிகு(Schleswig), செருமானியர் மிகுதியாக இருநத ஆலசுடைன (Halstein) முதலிய பகுதிகளைத தேனிய அரசுடன இணைபபதைத் தடுககுமபடி செருமனிக் கூட்டமைப் புக்கு வேணடுகோள் விடுததால இவா கீயல பலக லைக கழகத்திலிருநது வெளியேற வேணடியவரா னார்.



தால்மன, பிரெடரிக கிறிததோபர்

இவர் கி பி. 1829-இல கோட்டிங்கள(Gottingen) பலகலைக்கழகத்தில் பணிக்கமாந்தா. இமமுறபோக் குக கருத்தின் அடிப்படையில் கி பி 1833-இல தீட் டப்பட்ட அனோவர் (Hanover) அரசியலமைப்புத் திட்டததை வரைவதில் இவர் பஙகு கொணடாா,

'சூழ்நிலைகளின அடிப்படையில் உருவாக்கப்பெறும் அரசியல்' (Politics Based on Circumstances) எனற நூலை வெளியிட்டார் அதன வாயிலாக இவர் தமது எழுத்து ஆற்றலை வெளிப்படுத்தினார். அரசர் எர்ன சுட்டு அகசுடசு (King Ernest Augustus) கி.பி. 1837-இல் அனோவர் அரசியலமைப்புத் திட்டத்தை மறுத்தார். அச்சமயம் தாலமனும அவரோடு சேர்ந்த ஆறு பேராசிரியர்களும சேர்நதனர். புகழ்மிக்க ஏழுபேராசிரியர்களுடைய எதிாப்புக்கு இவர் தலைமை தாஙகினார். இவருடைய எதிர்ப்புக்கு மக்களுடைய் ஆதரவு பெருமளவு கிடைத்தது. ஆயினும் இவருடைய செயலுக்காக இவர் பதவியிலிருந்து நீக்கப்பட்டார். அதுமட்டுமனறி அனோவரிலிருநது நாடுகடத்தவும் பட்டார்.

அதன் பிறகு இவர் சில ஆணடுகளைச் சீனா(Jena) இலீப்சிக்கு (Leepzeg) ஆகிய இடங்களில் கழித்தார். பிரசியா நாட்டு அரசரான நான்காம் பிரெடரிக்கு வில்லியம் இவரைப் பான்(Bonn)பல்கலைக் கழகத்தில பேராசிரியராக கி.பி. 1842-இல நியமித்தார. இவர் தமது ஆங்கிலப்புரட்சி (English Revolution) என்ற நூலையும் கி.பி.1844-இல் எழுதினார். ஆங்கில அரசியலமைப்பின் மேன்மையை இவர் உணர்ந்து அதனிடம் தாம் கொணடிருந்த பறறை வெளிப்படுத்தியுளளார்.

பிரசியா உட்படச் செருமனி நாடுகள பலவற்றில் கி.பி. 1848-இல புரட்சி ஏற்பட்டு முறபோககு அரசியலமைப்புகள அறிவிக்கப்பட்டன. பிரசியாவின தலைமையின்கீழ்ச் செருமனியை இணைக்க வேணடும் என்பது இவரது கொளகையாகும். இவருடைய கருத்துகள் பெரும்பாலும் ஏறறுக்கொளளப்பட்டன. அரசியலமைப்புச் சட்டம் நிறைவேறியது. அதனுடைய முக்கிய கூறுகளுள ஒனறு அடிபபடை உரிமைகள் பற்றிய அதன அறிவிப்பு. அதில தால்மனுடைய கருத்துகளான பேச்சுரிமை, சமய சுதந்திரம, சட்டத திற்குமுன் அனைவரும் சமம் என்பனவாகிய கருத்துகள இடம் பெறறன. மறறொன்று வரமபுக்குட்பட்ட முடியாட்சியாகும். அதுவும ஏற்றுககொளளப்பட்ட முடியாட்சியாகும. ஐககியச் செருமனியை ஆளும் பொறுப்பு பிரசியா மன்னருக்கே அளிக்க வேணடும் என்ற இவரது கருத்தும ஏறறுககொளளப்பட்டது. பிரசிய மன்னர் அத்திட்டத்தை ஏற்றுககொளள மறுத்தபோது அத்திட்டம கைவிடப்பட்டது. ஐககியச் செருமனித திட்டமும் சீர்குலைநதது.

பிரசியா தனது தலைமையின கீழான செருமனி அரசர்களின் கூட்டமைப்புத் திட்டம் ஒன்றை கி.பி. 1849-இல் வெளிப்படுததியது. விரும்பிய செருமனி அரசர்கள அதில் சேரலாம் என அறிவிககப்பட்டது. பெர்லின நகரில் அதையொட்டி மாநாடு நடததபபட்டது. அனோவர் மற்றும் சாக்சனி மட்டுமே இததிட்டத்தை ஆதரிப்பதாகத தெரிநதது. இதை மூவரசர் சஙகம் எனபர். அரசியலமைபபுததிட்டம ஒன்றைத் தீட்ட இமமூனறு அரசாகளும் வாககுறுதி அளித்தனர். அவவாககுறுதியின் விளைவாகக் கோதா (Gotha) கட்சி எனபபட்ட தேசிய தலைவர்களுடைய ஆதரவு கிட்டியது தால்மன அத்தலைவர்களுள் ஒருவராவார். பல சிற்றரசுகள பிரசியாவுடன் சேர்ந்தன. புதிய தேசியசபை ஒனறைக் கூட்ட வேணடும் எனறு முனமொழிந்தபோது, அததிட்டத்திறகு எலலாச் செருமனிக் கூட்டமைப்புககளின ஆதரவும அவசியம் எனப் பிரசியாவின தலைமையை விருமபாத சில அரசுகள கூறின. ஆனால, பிரசியா அதைப் புறக்கணிததது. அதனால் மூவரரசாஙகமும் முடிவுற்றது. ஆயினும திட்டபபடி தேசிய சபைக்குப் பிரசியா தேர்தலை நடத்தியது தோந்தெடுக்கப்பட்டவர்களுள் ஒருவர் தால்மன். பிரதிநிதிகள எர்பர்ட்டில் (Erfurt) கூடியதால் அதனை எர்பர்ட்டுப் பாராளுமன்றம் என பர். இது கி.பி. 1850-இல கூடியது. தால்மன் அக்கூட்டத்தில கலந்துகொண்டார். மேலும 1849-50-இல் பிரசியப்பாரரளுமன்றததிலும் இடம் பெறறிருந்தார். இவ்விரு சபைகளும் பிற்போக்குக் கருததின அடிப்படையில் அமைக்கப்பட்டிருந்தன. அவறறிற்குப் பெருதத அதிகாரஙகளும் இல்லை. ஆயினும முறபோககுக் கருத்துக கொணட தாலமன் அவற்றின் உறுபபினராக இருந்தார் எனபதை உணரும்போது ஆசசரியமாக இருககிறது பினனர் இவர் அரசியலிலிருநது முற்றும் விலகி எஞசிய நாளகளை அமைதியாகக கழிததார். அவா கி பி. 1860-ஆம் ஆணடு திசம்பர் திஙகள 5-ஆம் நாள பான நகரில் உயிர் நீத்தார். தி.ஆர்.இ.

**தால்மேசியா**: ஐரோப்பாவில் யூகோசுலாவியாவின மேறகுப் பகுதியில் உள்ள மாநிலம். மலைகளும பாறைகளும அடர்ந்த இடமாகும். ஏட்ரியாட்டிக கடலையொட்டி வடமேறகில இசுதிரியன முந்நீரகத்திலிருந்து தெனகிழககில கோட்டார் வளைகுடா (Gulf of Kotor) வரை அமைந்துளளது.

இசுலாவ(Slav)இனததைச் சேர்ந்த மக்கள இஙகு வசிககினறனர். உரோமன் கததோலிககர்களும், செர்பியர்களும், இத்தாலியர்களும இஙகுளளனர். செர்போ-கிரோசிய (Serbo-Croatian) மொழிக்கு இலத்தீனிலும் (Latin), சிரில்லிக்கிலும் (Cyrillic) வரிவடிவம் உளளது. ஆயினும் வெளிநாட்டுப் பயணிகளும் வணிகர்களும் மிதியாகப் புழங்குவதால பல மொழி பேசுபவர்கள் இங்குக் காணபபடுகினறனர். அவை இத்தாலி, செருமனி, பிரெஞ்சு, ஆங்கில மொழிகளாகும்.

தால்மேசியாவின் தட்பவெப்ப நிலை மக்கள் வாழ்க்கைக்கு ஏற்றதாக உள்ளது. குளிர் காலத்திலும் கோடைக் காலத்திலுமுள்ள மிதமான தட்பவெப்ப நிலை சுற்றுலாப் பயணிகளை ஈர்க்கிறது.

தால்மேசியாவின் இயற்கையமைப்பின் காரண மாக வேளாண்மை மிகச் சிறப்பாக இருப்பதற்கான சாத்தியக்கூறுகள் இல்லை. தினாரிக்கு ஆல்ப்சுமலை பெரும்பகுதியை அகப்படுத்திக் கொண்டிருப்பதால் மிகச்சிறிய பகுதிகளில் மட்டுமே வேளாண்மை நடை பெறுகிறது. மற்ற மத்தியதரைக்கடல் நாட்டு மக் களைப் போலவே தால்மேசியர்களும் திராட்சை, ஆலிவு, அத்தி, ஆரஞ்சுப்பழங்களைப் பயிர்செய்கின்ற னர். திராட்சை இரசமும், ஆலிவு எண்ணெயும் முக்கிய வாணிகப் பொருள்களாக விளங்குகின்றன.

கடற்கரையையொட்டிய பகுதியாதலால் கப்பல் கட்டும் தொழிலும், மீன் பிடித்தலும் முக்கியமான தொழில்களாகும். இரண்டாம் உலகப்போருக்குப் பின் தொழில்வளம் பெருகத் தொடங்கியது. துணி நெய்தல், அலுமினியப் பொருள்கள் தயாரித்தல், சிமிண்டுத்தகடு (Asbestos), நெகிழி-(plasti) ஆகிய பொருள்கள் தயார் செய்தல், மின் சாதனங்கள், எஃகுப் பொருள்கள் தயாரித்தல் ஆகியவை முக்கிய தொழில்களாக மேற்கொள்ளப்பட்டன. இசுபிலிட்டு (Split), ஓமிசு (Omis) ஆகிய நகரங்களில் சிமிண்டுத் தொழிற்சாலைகள ஏற்பட்டன.

தால்மேசியாவின முக்கிய ஏற்றுமதிப் பொருள் கப்பல்களாகும். மத்தியதரைக்கடலில் நடைபெறும் வாணிகத்தில கி.பி. 1400-ஆம் ஆண்டிலிருந்தே தால மேசியக் கப்பலகள முக்கிய பங்கு வகித்து வந்தன. அம்மாலுமிகளும் சிறப்புற்றிருந்தனர். ஆப்சுபர்க்கு (Hapsburg) வமிசத்தினரின கடறபடை கி.பி.19-ஆம் நூற்றாண்டில் தால்மேசிய மாலுமிகளாலேயே செலுத்தப்பட்டு வந்தது. இசுபிலிட்டு, இரிசிகா (Rjjika), பூலா (Pula) ஆகிய நகரங்களில் தயாரிக் கப்பட்ட கப்பல்களை ஏற்றுமதி செய்வதன்மூலம் யூகோசுலாவியாவிற்குச சிறந்த வருமானம் கிடைத்து வருகிறது.

தால்மேசியா தரை, கடல், வான வழிகளால் ஐரோப்பாவின முக்கிய பகுதிகளுடன் இணைக்கப் பட்டுள்ளது. ஐரோப்பாவின மிக முக்கியமான வாசத தலங்களில (Resort) இதுவுமொன்று. தால்மேசியா முழுவதையும் 1965-இல் அமைககப்பட்ட பெரும் சாலைவழியானது இணைக்கிறது. இயற்கைக் காட்சி கள் கண்ணுககு நிறைவைத் தருகின்றன. சுற்றுலாப் பயணிகளுக்கு வசதியாக யூகோசுலாவிய அரசாங் கம் பல சிற்றுண்டிச்சாலைகள், உணவு விடுதிகள் மற்றும் தங்குமிடங்கள் ஆகியவற்றை ஏற்படுத்தியுள் ளது. ஒவ்வோர் ஆண்டும் குறைந்த அளவு 125மிலி யன் தாலர்கள் உலலாசப் பயணிகளிடமிருந்து யூகோ சுலாவிய அரசாங்கம் பெறுகிறது.

தால்மேசியாவில் பல முக்கிய நகரங்கள் வர லாற்று முக்கியத்துவம் உடையவை. அவற்றுள் முதன்மையானது சடர் (Zadar). இது உரோமானியர் வாழ்ந்த பகுதியாகும். தெருக்கள் யாவும் அவர்களின் முறையிலேயே அமைக்கப்பட்டுள்ளன. இங்குச் சிறந்த தொல்பொருள் காப்பகம் உள்ளது. இங்கு கி.பி.13 -ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கிறித்தவக் கோயில் (Cathedral) உரோமானியப் பாணியில் கட்டப்பட் டுள்ளது. சடருக்கு வடக்கேயுள்ள 'நின' (Nin) மத்திய காலத்தில் இருந்த ஊரோசியாவின் முதல் தலை நகராகும். இங்குளள புனித சிலுவை ஆலயம் (Holy Gross Church) கி.பி.11-ஆம் நூற்றாண்டிலிருந்து குரோசியக் கட்டடக்கலைக்குச் சிறந்த சான்றாக விளங்குகிறது. திராசிர் (Trogir)என்ற நகரம் கி.மு.3 -ஆம் நூற்றாண்டில கிரேக்கர்களால் உருவாககப்பட் டது; உரோமானியர் காலத்தில் மிகவும் சிறந்து விளங்கியது. திராசிருக்குத் தெறகிலுளள சோலின் (Solin) எனற நகரம் வரலாற்றுச் சிறப்புடையது. இங்குத்தான உரோமப் பேரரசர் தயக்கிளீசியன (Diocletein-கி.பி.284-305) பிறந்தார். பழங்கால நாகரிகத்தின் சின்னங்கள இனறும் இஙகுப் பாதுகாக் கப்படுகின்றன. இசுபிலிட்டு (Split) நகரில் இம் மனன ரின் அரணமனை உள்ளது. இது 25,000 சதுர மீட்டர் பரப்பளவில் சுற்றுச் சுவர்களினால் பாதுகாக்கப்பட் டது. எகிப்திலிருந்து கருஙகற்களும், வெள்ளைச் சல வைக் கற்களும் மற்றும் விலையுயர்ந்த பொருளகளும் கொண்டு கட்டப்பட்டது இந்த அரண்மனை. இது அழிவுற்றுப் பலமுறை திருத்தியமைக்கப்பட்டது. எனி னும் பழமையான கதவுகள, சுவர்கள், கோயில், சமாதி ஆகியவை இனறும் காணப்படுகின்றன. உலகப் புகழ் பெற்ற சிறபியான 'இவான் மெசுட்ராவிக்கு' வின் (Ivan Mestrovic) படைப்புகள் இங்குப் போற்றிப பாதுகாக்கப்படுகின்றன.

தால்மேசியத் தீவுகளுள அழகானவை 'உவார்' (Hvar), 'கார்குலா' (Korcula) ஆகியவையாகும். இதில் உரோமானியப் பாணியில் அமைககப்பட்ட கோயில், புனித மார்க் (St.Mark) என்னுமிடத்தில உள்ளது. இதில் தைடியன (Titian), தின்டோரிடோ (Tintoretto), பெல்லினீ (Bellini) ஆகியோர் வரைந்த சித்திரங்கள உள்ளன.

தால்மேசியாவின தெனபகுதியில முக்கியத்துவம வாய்ந்தது 'துபிரோனிக்கு' (Dubrornik) ஆகும். மத்தியகால நகரமான இது பெரிய சுவரால் பாது

காக்கப்படுகிறது. இதன் முக்கிய வீதி சலவைக்கல் லால் அமைக்கப்பட்டது. மறுமலர்ச்சிக் காலக் கட்டடக்கலையை விளக்கும்வண்ணம் அதன் இருபுறமும் வீடுகள் அமைந்துள்ளன. கோடைக்காலத்தில் இசை விழாக்களும் களியாட்டங்களும் நடைபெறுவதால் உலகெங்கிலுமிருந்து பயணிகள் வருகின்றனர்.

தால்மேசியாவின் ஆதிக்குடிகள் இல்லிரியன் (Ilyrian) இந்தோ-ஐரோப்பியர் (Indo-Europeans) ஆகியோராவர். ஒரு பிரிவினர் தால்மெடே (Dalmatae) எனப்பட்டனர். இதிலிருந்தே தால்மேசியா என்ற பெயர் ஏற்பட்டது. கிரேக்கக் குடியேற்றம் கி.மு. 4-ஆம் நூற்றாண்டில் ஏற்பட்டது. இது கி.மு. முதல் நூற்றாண்டிலிருந்து கி.பி.5-ஆம் நூற்றாண்டு வரை உரோமானிய ஆட்சிக்குட்பட்டிருந்தது. எனவே, பல வகையிலும் முன்னேற்றம் காணப்பட்டது. உரோமானியர் வீழ்ச்சிக்குப்பின் இது உரோமானியப்படைத் தலைவர்களின் போர்க்களமாயிற்று. இறுதியில் பேரரசர் சசுதினியன் (Justinian- கி.பி. 527-565) கோத்துக்களைத் தோற்கடித்துத் தால்மேசியாவைப் பைசாண்டியப் பேரரசுடன் இணைத்தார்.

இக்காலத்தில் அங்கு வாழும் இசுலா இனத்தவர் கி.பி.6-7-ஆம் நூற்றாண்டுகளில் அங்குக் குடியேறினர். சார்லிமேன் கி.பி.9-ஆம் நூற்றாண்டில் தால்மேசியாவின் வடபகுதியைத் தன் ஆதிக்கத்திற்குக் கொண்டுவந்தார். குரோசியா கி.பி.10-ஆம் நூற்றாண்டில்தான் இசுலாவ் இனத்தவரின் ஆட்சிக்குட்பட்டது. 'நின்' (Nin) தலைநகராயிற்று.

மாகியர்கள் (Magyars) கி.பி.1102-ஆம் ஆண்டு குரோசியாவைத்தோற்கடித்துஅதனுடன் இணைந்த தால்மேசியாவை அங்கேரி அரசுடன் இணைத்தனர்.

வியன்னாமாநாட்டில்(கி.பி.1815)ஆப்சுபர்க்குபேரரசு தால்மேசியாவைப் பெற்றது. ஆனால், குரோசியப் பகுதிகள் அங்கேரியப் பேரரசுடனேயே தங்கின. குரோசிய தேசிய தலைவர்கள் கி.பி.19-ஆம் நூற்றாண்டில் குரோசியா, தால்மேசியா, இசுலாவோனியா மூன்றையும் இணைத்து ஒரு சுதந்திர நாடாக யூகோசுலாவியா என மாற்ற விரும்பினர். அதன்படி 1918-ஆம் ஆண்டுஏற்படுத்தப்பட்ட யூகோசுலாவிய அமைப்பில் தால்மேசியாவின் பெரும்பகுதி இணைக்கப்பட்டுள்ளது. இரண்டாம் உலகப் போரின்போது தால்மேசியாவை அகப்படுத்திய இத்தாலி தன்னிருவாகத்தை ஏற்படுத்தியது. ஆனால், போரின் முடிவில் மீண்டும் யூகோசுலாவிய ஆதிக்கத்தின் கீழ் தால்மேசியா வந்தது. அந்நிலையே இப்போதும் உள்ளது.

வெ.பா.

**தாலமி:** கிளாடியசு தாலமேயசு (Claudius Ptolemaes) அல்லது தாலமி (Ptolemy) புகழ்மிக்க வானவியல் ஆராய்ச்சியாளர்; கணக்கியல் வல்லுநர்; புவியியல் வல்லுநர். இவருடைய ஆராய்ச்சிகளும் நூல்களும் இவருக்குப் பின்வந்த தலைமுறையினரிடம் செல்வாக்குப் பெற்றன.

இவருடைய முந்திய வாழ்க்கையைப் பற்றிய விவரங்கள் எவையும்கிடைத்தில. இவர் குறித்து வைத்துள்ள வானவியல் பற்றிய குறிப்புகளைக் கொண்டு இவர் கி.பி. 2-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரெனக் கூறுகின்றனர். இவர் தாலமெயிசு எர்மியை (Ptolemais Hermil) என்ற எல்லனிசுடிக்கு நகரத்தில் பிறந்தவர் எனப் பைசாண்டிய நகரத்தைச் சார்ந்த தியோடரசு மெலிடெனியோடா (Theodorus Meliteniota) கூறுகிறார். இவர்தம் பணியின் பெரும் பகுதியை அலெக்சாந்திரியாவில் கி.பி. 127 முதல் 145 வரை நடத்தியுள்ளார். இவர் கி.பி. 151-ஆம் ஆண்டு வரை சுறுசுறுப்பாகச்செயற்பட்டு வந்துள்ளார். தமது ஆராய்ச்சிகள், தமக்கு முன்தோன்றிய வானியல் வல்லுநர்களின் கருத்துகள் ஆகியவற்றின் அடிப்படையில், படைப்பின் முழுத்தொகுதியின் மையமாகஉலகம்விளங்குகிறது என்ற கருத்தை வலியுறுத்தியுள்ளார். இந்தப் புரட்சிகரமான, தவறான கருத்து ஏறத்தாழ 1300 ஆண்டுகள் வானியல் பற்றிய கருத்தைக் கட்டுப்படுத்தி வந்தது. இவருடைய கருத்துகள் ஓமெகாசு ஆசுட்ரோனோமசு, பெரிய வானியல் வல்லுநர் (Homegas Astronomos, The Great Astronomer) என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளன. கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் அரபு வானியல் வல்லுநர்கள் இந்தப் புத்தகத்தைக்குறிப்பிடும்போது மெசெசுட்டே (Majiste) என்று குறிப்பிட்டுள்ளனர். கிரேக்க மொழியில் மெசெசுடே என்பது உறுதிமிகு என்னும் பொருளைத் தரும் பின்னர் அல் என்ற சுட்டுச் சொல்லைச் சேர்த்து 'அல் மாசெசுட்டு' (Al Magist) என்று குறிப்பிட்டனர். இன்று அது அல்மாசெசுட்டு என்ற பெயரில் குறிப்பிடப்பட்டு வருகிறது. இந்நூல் 13 புத்தகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொன்றும் ஒரு வானியல் கருத்தை விளக்குகிறது. இது ஒரு கலைக்களஞ்சியமாக வானியலாரால் பயன்படுத்தப்படுகிறது. கிரேக்க வானியல் கண்டுபிடிப்புகளின் சாரம் என்றும் இதைக் கூறலாம். இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ள முறையைத் தாலமிக்கு முறை (Ptolemaic System) என்பர்.

கணக்கியல் பற்றிய நூல்களையும் இவர் ஆக்கியுள்ளார். புதிய உருக் கணக்கியல்களையும் (Theorems), வடிவியல்களையும் உருவாக்கியுள்ளார். இவர் எழுதிய கணக்கியல் பற்றிய நூல்கள் பிளானிசுபெரி

யம் (PlanisPhaerium), பிளானிடரி ஐபோதெசிசு (Planetary Hypothesis) என்பனவாகும். பொறித்துறை பற்றிய நூல்களும் எழுதியுள்ளார். ஒரு நாட்காட்டியைத் தயாரித்துள்ளார். அப்டிகா (Optica) என்ற நூலில் ஒளி பற்றிய காட்சிகளைக் கூறியுள்ளார். இதில் ஒளிப் பாதை மாற்றம் பற்றி எழுதியுள்ளார்.

தாலமி சிறந்த புவியியல் வல்லுநர்களுள் ஒருவராகவும் கருதப்படுகிறார். புவியியலுக்கு ஒரு வழிகாட்டி (Guide to Geography) என்ற நூலை ஆக்கியுள்ளார். அது எட்டுப் புத்தகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. வரைபடங்களைத் தயாரிப்பதைப் பற்றிய செய்திகளையும் ஆப்பிரிக்கா, ஆசியா, ஐரோப்பா ஆகிய கண்டங்களிலுள்ள இடங்களின் பட்டியலையும் அதில் தந்துள்ளார். அதில் பல கூறுகள் உள்ளன. எடுத்துக்காட்டாக நில நடுக்கோடு வடக்கே தொலை தூரம் தள்ளிக் குறிக்கப்பட்டுள்ளது. மக்கள், வெப்பநிலை, இயற்கை வளங்கள் ஆகியவற்றைப் பற்றிய குறிப்புகள் அதிலில்லை. ஆயினும் வரலாற்று நோக்குடன் பார்க்குமிடத்து அது மிக முக்கியமானதாகத் தோன்றுகிறது. பின் தலைமுறையினர்களுக்கு அது பெரும் பயனை அளித்தது. எடுத்துக்காட்டாக அதில் ஆசிய கண்டம் அப்போதைய மக்கள் அறிந்திருந்ததைக் காட்டிலும் மிகுந்த அளவு பரவியுள்ளது என்று தாலமி கூறியிருந்தார். அதனால் மேற்கு நோக்கிச் சென்றால் ஆசியாவை அடையமுடியும் என்று கொலம்பசு கொண்டிருந்த கருத்து மேலும் வலுவடைந்தது. அதன்பயனாக அமெரிக்கா கண்டுபிடிக்கப்பட்டது. தாலமி தனது 72-ஆம் வயதில் உயிர்நீத்தார்.

**முதலாம் தாலமி:** இவர் அலெக்சாந்தரின் படைத்தலைவர்களுள் ஒருவர். முதலாம் தாலமி (Ptolemy I Soter) கி.மு.367-366இல் மாசிடோனியாவில் பிறந்தார். அலெக்சாந்தரின்கீழ் பல போர்களில், சிறப்பாகப் பாரசீகப் படையெடுப்பில், பெரும் பங்கு கொண்டிருந்தார். சீலம் (Jhelum) நதியில் மாசிடோனியக் கப்பற்படைக்குத் தலைமை தாங்கினார். அலெக்சாந்தரின் வற்புறுத்தலின்பேரில் பாரசீகப் பெண்ணை மணந்துகொண்டு அலெக்சாந்தரின் கிழக்கு மேற்கு இணைப்புக்குத் துணைநின்றார். அலெக்சாந்தரின் மறைவிற்குப் பிறகு எகிப்துக்கு ஆளுநராகப் (Satrap) பொறுப்பேற்றார். இவர் கி.மு. 323 முதல் 283 வரை எகிப்தை ஆண்டார். இவர் கி.மு.305-இல் தம்மை மன்னராக அறிவித்துக் கொண்டார். திருமணம் மற்றும் உடன்பாடுகள் வாயிலாகச் சைப்ரசு, சைரீன போன்ற பகுதிகளைப் பெற்று எகிப்தின் எல்லையை விரிவுபடுத்தினார். எகிப்திய மக்களைத் திருப்திபடுத்தும் வகையில் சாரபீசு வழிபாட்டைத் (Sarapis Cult) தொடங்கினார். இது கிரேக்க சமயத்தையும் எகிப்திய சமயத்தையும் இணைத்து உருவாக்கப்பட்ட சமயமாகும். எகிப்தியக் கோயில்களுக்குப் பொருளை வாரி வழங்கினார். அருங்காட்சியகம் ஒன்றை அமைத்து அறிஞர்களும் கலைஞர்களும் அங்குப்பணி செய்வதற்கு வழி வகுத்தார். ஒரு பெரிய நூலகத்தை அமைத்தார். அலெக்சாந்தருடைய உடலை எகிப்தில் அடக்கம் செய்து அலெக்சாந்தர் வழிபாட்டைத் தொடங்கினார் எல்லனிசுடிக்கு அரசர்களைத் தெய்வமாக மாற்றி அவர்களை வழிபாட்டிற்குரியவர்களாக மாற்றியமைக்கும் கருத்து இதனுடன் தொடங்கியதாகும். அரச வழிபாட்டு முறை ஒரு புதிய சகாப்தத்தையே தொடங்கியது எனலாம். தாலமி இறந்த பிறகு அவரைக் கடவுள்நிலைக்கு உயர்த்தி வழிபட்டனர்.

தாலமி ஒரு சிறந்த எழுத்தாளர். அலெக்சாந்தர் படையெடுப்புகள் பற்றிய வரலாற்றுச் சார்புடைய நூலை இவர் படைத்துள்ளார். அந்நூல் கிடைக்கவில்லையென்றாலும் அந்நூலில் பெரும்பகுதி அர்ரியனின் (Arrian) படைப்பில் காணக்கிடக்கிறது

**இரண்டாம் தாலமி (பிளாடெல்பசு- Philadelphus).** இவர் முதலாம் தாலமியின் மகன். எகிப்து நாட்டை கி.மு.285 முதல் 246 வரை ஆண்டார். இவர் கி.மு 308-இல் காசில (Cos) பிறந்தார். சில ஆண்டுகள் தந்தையுடன் சேர்ந்து ஆட்சி செலுத்தினார். பின்னர் கி.மு.283-82-இல் தான் மட்டுமே ஆட்சி செய்யத்தொடங்கினார். உயிருடனிருக்கும் போது அரசரை வழிபடும் எல்லனிசுடிக்கு வழிபாட்டு முறையை எகிப்தில் முதல்முறையாகக் கொண்டுவந்த மாசிடோனிய அரசர் இவரேயாவார். இவர் ஒரு சிறந்த போர்வீரர். எகிப்தின் மேலாண்மையைச் சிரியா, சிறிய ஆசியா, ஈசியக் கடற்பகுதி, எத்தியோப்பியா, அரேபியா ஆகிய இடங்களில் நிலைநாட்டினார். இந்தியாவுடனும் உரோமாபுரியுடனும் அரசியல் மற்றும் வாணிகத்தொடர்புகளைக் கொண்டிருந்தார். நாட்டில் வேளாண்மையைப் பெருக்கினார். கிரேக்க மற்றும் எகிப்திய சமயங்களில் அக்கறை காட்டினார். தன்னுடைய பெற்றோர்கள், மனைவி, சகோதரி மற்றும் தனக்கும் தெய்வத்திற்குரிய நிலையை அளிக்கவேண்டும் என்று வற்புறுத்தி அந்நிலையைப் பெற்றார். இந்த வழிபாட்டு முறையை உரோமானியப் பேரரசர்கள் பிற்காலத்தில் கடைப்பிடிக்கலாயினர். இவர் காலத்தில் கலையும் அறிவியலும் வளர்ந்தன. இவர் புலவர்களையும் அறிஞர்களையும் போற்றினார். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் காலி மாக்கசும் (Calli Machus), தியோகிரிடிசும் (Theocrites) ஆவார்

குழுக்களிடையே ஒற்றுமை உணர்வு மேலும் மிகுதியாக்கப்படுகிறது.

சனவரி மாதம் முதல் குடியிருப்புகளின் அருகில் மேய்ச்சல் புல் குறைநது விடுவதால் ஆற்றின் தாழ் படுகைப் பகுதிக்குள் சென்று கால்நடைகளை மேய்க்கினறனர். காற்றுத் தடைகளை மட்டும் அமைத்துக் கொண்டு மேய்ச்சல் இளைஞர்களும் கால்நடைகளும் அப்பருவத்தைக் கழிக்கினறனர்.

திங்காவினர் வாழும் பகுதி இயற்கை வளம் மிக வும் மிகுதியானதலல என்பதால் இவர்களின பொருள் சார் பண்பாடு (Material Culture) எளிமையானது. வீடுகள் மண்ணால் கட்டப்பட்டு கூரை வேயப்படு கின்றன. பானைகள், கூடைகள், குடுக்கைகள முதலா னவையே முதன்மையான வீட்டுப் பொருள்களாகும். கருவிகளின எணணிக்கைக் குறைவு. ஆடைகள் கம்பளி களால் ஆனவை. ஆட்டுத்தோல், மாட்டுத்தோல முதலானவையும் பயனபடுத்தப்படுகின்றன.

இவர்களின குறிப்பிடத்தக்க உணவு தினைக்கூழ் ஆகும். பால் இவர்களது இரண்டாம் முக்கிய உணவு. காய் கறிகளையும் உடன் சேர்ததுக் கொள்கின்றனர். மேய்ச்சல் காலங்களில் இளைஞர்களின்சிறப்பு உணவு தயிர்.

திங்கா குழுவினர் அனைவரையும் மூன்று வட் டாரப் பிரிவுகளாகப் பகுக்கலாம். ஆனால், இவர்கள பல குலங்களாகப் (Clans) பாகுபடுகினறனர். ஒவ வொனறும் தனித்தனி குலக்குறிகளைக் (Totems) கொணடுள்ளது. இந்தக் குலங்கள் அனைத்தும சமய குருககள குலம் (Priestly Clan) என்றும் பொதுமககள குலம் என்றும் இருவகைப்படும். முனனவர்கள பானி (Bany) என்றும், பினனவர்கள கிக்கு (Kic) எனறும் குறிக்கப்படுவர். சமயக் குருக்கள் குலத்தவாகளே பழங்குடி நிலஙகளுக்குப் பொறுப்பாவர். இதனாலேயே இவர்கள் அதிகார அமைப்பிலும் முதன்மை பெற் றுளளனர். பல மனைவி மணமுறையைப பெற்றவர் கள் இவர்கள்.

இவர்களின் சமயத்தில் சிறப்பு வகையான மீன் பிடி எறிஈட்டி (Master of the Fishing Spear) புகழ் வாய்ந்தது. சமய குருக்கள் குலத்தவர்கள் இவ் வகை எறிஈட்டியைப் பெற்றிருப்பர். இக் குலத்தவர் களுள் தெய்வத் தன்மை பெற்றவர் மிகுந்த நோய் வாய்ப்பட்டிருக்கும்போது உயிருடன புதைக்குமாறு கேட்டுக் கொளவார். இவ்வாறு செய்வதால் தம் குலம் பாதிக்கப்படாது எனறும் இன்னலகளைத் தாஙக முடியும் என்றும் நம்புகின்றனர். சீ.ப.

**திசியூசு:** கிரீசின் ஒருபகுதியான அட்டிக்காவில் (Attica) வழங்கிவரும் புராணக்கதைகளில் வரும் ஒரு தலைவன் திசியூசு (Theseus). பழம்பெரும் கிரேக்க நகரங்களுள் ஒன்றான ஆதென்சையும் அதைசசுற்றி யிருந்த பகுதியையும் அட்டிக்கா என்று கூறினர். ஆதென்சை ஒரு சமயம் ஈசியசு (Aegeus) என்ற அரசன் ஆண்டு வந்தான. அவனுக்கும் ஈத்ரா (Aethra) எனற பெணணுக்கும் பிறநதவன், திசியூசு என்பர். சிலர் ஈத்ராவுககும கடற்கடவுளான போசைடனுக்கும் (Poseidon) பிறந்தவன என்பர். ஈத்ரா என்பவா ஆர் காலிசில் உளள திரோசென் (Troezen) எனனும் ஊரின் அரசனான பித்தியூசு (Pitheus) வின மகள். ஈசியசுககு நெடுஙகாலம் குழந்தை பிறககவில்லை. எனவே பித்தியூசு தனது மகனின வழியாக அவனுக்குக் குழநதைப்பேறு ஏற்பட அனுமதி வழஙகியதாகக் கதையில் கூறப்படுகிறது. திசியூசு வாலிபப் பருவம் அடைந்த பிறகு அவனைஆதெனசுக்கு ஈதரா அனுபபி வைத்தாா. போகும வழியில் அவன பல வீரச் செயலகளைப் புரிந்தான. கோரிநது நிலசசந்தியில் (Isthumus of Corinth) சினிசு (Sinis) என்பவனைக் கொன்றான. சினிசு தனது வழியில் வந்தவர்களை இரணடு தேவதாரு (Pine) மரஙகளுக்கு இடையே இட்டு கிழிததுககொலலுவது வழக்கம்.அடுத்துகிரோம் யோணியன் பனறியைக (Crommyonion sow) கொன றான; சிரோன் (Sciron) என்ற கொடியவனை மலைப பாறையிலிருந்து தூக்கியெறிந்து அழித்தான். தனது விருநதினர்கள தன் காலகளைக் கழுவும போது அவாகளைக் கடலுக்குள் உதைத்துத் தள்ளிக கொல வது அவனது வழக்கம். தனது ஒரே படுக்கையில தூஙக வருபவர்களை இரண்டாகப் பிளந்து கொன்று வந்த புரோகிரசுதசு (Procrustes) என்பவனை வாளால் கொன்றான்.

ஆதென்சு வநதபோது தனது தநதையார் ஒரு மநதிரக்காரியை மணம் செய்து கொணடிருப்பதைக் கணடான். தந்தை அடையாளம் கண்டுகொள்வதற்கு முன்பு அவள அடையாளம் கணடுகொண்டு திசியூ சுவை நஞ்சிட்டுக் கொல்ல முயன்றாள. இறுதியில அவன தந்தை அவனை அடையாளம் கண்டுகொணடு அவனைத் தனது வாரிசாக ஏற்றுக் கொணடான. ஈசியசின சகோதரருடைய பிளளைகள தோற்றுவித்த சூழ்ச்சியை முறியடித்தான. மாரதானில் இருநத நெருப்புக்கக்கும் காளையை ஒடுககினான். பினனாப் பாதி மனித உருவத்தையும் பாதி காளை உருவத்தை யும கொணட மினோடர் (Minotaur) என்ற கிரீட்டு நாட்டு மனிதனை அழித்தான. தானவெற்றிபெற்று வர நேர்ந்தால் தனனுடைய கபபலில் கருப்புக் கொடி பறப்பதற்குப் பதிலாக வெள்ளைக்கொடி பறக்கும் எனறு தன் தந்தையிடம் சொலலிவிட்டு கிரீட்டுக்குச் சென்றான். ஆனால் திரும்பும்போது அதை மறந்து



திசியூசு மினோடடரை அழித்தல்

விட்டுக் கொடியை மாற்றாமல் இருநதுவிட்டான். கருப்புக் கொடியைக் கணணுற்ற ஈசியசு தனது மகன இறந்துவிட்டதாக எண்ணி அக்ரோபாலிசில் (Acro polis) இருந்து கீழே குதித்து உயிரை மாய்த்துக் கொணடான. அதன் பிறகு திசியூசு அட்டிக்காவின எல்லா வகுப்புகளையும் ஒன்றாக இணைதது ஒரே அரசின கீழ்க் கொணடுவர முற்பட்டான. பினனா அட்டிக்காவை விரிவு படுத்தும முயறசியை மேற் கொணடான. கோரிநது நிலசந்தி வரை அட்டிககா வின எல்லையை விரிவுப் படுத்தினான. இசுத்துமிய (Isthumian) விளையாட்டுகளில் போசைடன கட வுளைப் பெருமைப்படுத்தும் வகையில் சில விளை யாட்டுகளைச சேர்ததான. அமேசான் (Amazon) இளவரசியான அணடியோப்பைக் கவர்நது வந்தான். அதனால அவனுககும அமேசோனியாகளுக்கும் இடையே நடந்த சணடையில அணடியோப்பு அவன பக்கத்தில் போரிட்டு மடிநதான. அர்கோனாடிக (Argonautic) படையெடுப்பிலும காலிதோனியாப் பன்றி வேட்டையிலும் (Colydonian boar hunt) அவன கலந்துகொணடான். இலாப்பிடசு (Lappites) அரச ரான பிரித்தோசு (Pirituous) திசியூசுவின ஆநிரை யைக் கவர்ந்து சென்றபோது அவனிடம் போருக்குச் சென்றான். இருவரும போரககளததில சநதித்த போது ஒருவரை ஒருவர் வியநது பாராட்டினர். அது முதல இருவரும் நெருஙகிய நணபர்களானார்கள். எலன (Helen) எனபவரைத் திசியூசு கவாந்து செல் வதற்கு பிரித்தோசு உதவினான. பிரித்தோசுடன பெர்சிபோன் (Persephone) எனபவளைக காப்பாற்ற நரகலோகம் சென்றான. அஙகுச் சிறையிலிடப்பட்ட போது எராக்ளீசு (Heracles) என்ற வீரன அவனை விடுவித்தான. ஊர் திரும்பியபோது நாட்டில் பழைய அரச குடும்பத்தைச் சார்ந்த ஒருவன் கிளர்சசியில் ஈடுபட்டான். அவனால தோலவியடையவே சைரசுக குச சென்றான. சைரசுமனனன அவனைக் கடலில தாக்கி எறிநது கொனறான். தெலபி தெய்வமொழி யின படி அவனுடைய எலுமபுகள அட்டிக்காவிற்குக் கொணடுவரப்பட்டு அஙகு அடககம செய்யப்பட்டன அவனுடைய நினைவாக ஒவவோர் ஆணடும் கிரீசில அக்டோபர் மாதம 9ஆம் தேதி ஒரு விழா எடுக்கப படுகிறது. அதறகுத் தீசியா (Thesia) என்பது பெயா. அதுவனறி ஒவவொரு மாதமும 8ஆம் நாள புனித நாளாக அஙகுக கருதப்படுகிறது. தி ஆ.இரா.

**திசுவான் பழங்குடி** தென ஆபபிரிககாவில போட்சுவானாப பகுதியில வாழும் தொனமைக் குடி யினர். இவர்கள வாழும பகுதி கலகாரிப பாலைவனத் திறகு அருகாமையில உளளது. இப பகுதி தொனனாப பிரிககாவின கிமபாலி நகரம முதல தெறகில ஒக்க வாஙகோ வடிநிலம (Okavango Basin) வரை பரவி யுளளது. இபபகுதியில திசுவான பழஙகுடியினா ஏறக் குறைய 20 இடஙகளில வாழ்கினறனா.

திசுவான் (Tswan) பழஙகுடியினர் பல நூற் றாணடுகளுககு முனனர், பணடு (Bantu) மொழி பேசும் பழங்குடிகளிடமிருநது பிரிநதவாகள எனக கூறிககொளவர். இவாகளின பெயரோடு தொடர் புடைய திசுவானா (Tswana) எனனும சொல ஒரு வரிடமிருநது பிரிதல எனனும் பொருளுடையது. இவர்கள பிற பழஙகுடிகளிடமிருநது முறறிலும மாறு பட்டவாகளாக உளளனர். இவாகளுககெனற பண



திசுவான் பெண்

பாட்டையும் வாழக்கை முறையையும் கொணடுளள னா.

திசுவான் பழங்குடியினரின சமூகம் தந்தைவழி (Patrilineage) அமைப்புடையது. ஒரு கால்வழியைச் சேர்ந்த நெருங்கிய குடும்பத்தினா அனைவரும ஒரே பகுதியில் வாழ்கினறனர். சொத்துரிமை, குடும்ப அதிகாரம் அனைத்தும ஆண்மககள் வழிச் செல்கிறது. ஒவ்வொரு குடியிருப்பிலும் உள்ள மூத்தவர் ஒருவர் அவர்களின் சமுதாயச் சிக்கலகளைத் தீாத்துவைக்கும பொறுப்பினைக் கொண்டுள்ளார். தொடககக் காலத்தில் இவர்களின பகுதிகளுக்கு வந்து குடியேறிய பிற இன மக்களையும வழிநடத்தும் பொறுபபினை இவர்கள கொண்டிருந்தனர்.

இளம் வயதிலிருந்து பருவமடையும் வயதினைப் பெறும அனைவரும் ஏறபுச் சடங்கினைச் (Initiation Ceremony) செய்துகொள்ள வேணடும். இச சடஙகு முடிந்தபினபே ஒருவர் சமுதாயத்தில திருமணம, போர்ப் படையில சேருதல் முதலான எநத ஒரு செயலையும் செய்யமுடியும். இவர்களின சமுதாய அமைபபிலும் வாழகை முறையிலும் கி.பி. 19-ஆம் நூற்றாணடுககுப் பின் பெரும் மாற்றங்கள நிகழந்துள்ளன. இதறகுக காரணம வெளளையாகளின் குடியேற்றமும் அவர்களின் மேலாணமையுமாகும. கிறிததவ சமய நெறிகளை ஏற்றுக்கொள்ள முறபட்டதனாலும மரபுசார்நத பல சமுதாய நெறிமுறைகள மாற்றம பெற்றன.

பலமண முறையைக கொண்டிருநத இவாகள இப்போது ஒருதுணை மணமுறையைப (Monogemy) பினபறறுகின்றனர். வெளளையர்களின மேலாணமையினால் பெருமளவு விளைநிலஙகளை இழநத இவர்கள், முழுவதுமாக வேளாண்மையை நமபியிருகக முடியவிலலை. நகர்ப் புறங்களிலும் தொழிற் பகுதிகளிலும் கூலிவேலை செயது வாழகினறனா. ஆணடில் குறிப்பிட்ட சில பருவஙகளில் மட்டுமே வேளாணமையை மேற் கொளகின்றனர். பினனர்த தொழிற் பகுதிகளில நிரந்தரமாகத் தஙகிவேலை செய்கினறனா. ஆணடில் இரு முறை வெளியில தங்கிப் பொருளீட்ட வேணடியவர்களாக உள்ளனர்.

இன ஒதுக்கீட்டுக் கொளகையின (Apartheid Policy) மூலம் இவர்கள் பல நிலைகளில இன்னலுறறுள்ளனர். வாழ்வின் அனைத்து நிலையிலும் தனிமைப்படுத்தப்பட்டவர்களாக உள்ளனா. வெளளையர்களின் அதிகார வெறி இவர்களின கிராம அளவிலான அரசியல் அமைபபையும் கலைத்து விட்டது.

போட்சுவானா மக்கள 1966-இல்விடுதலைபெறற பின்னரே இவர்களின் அடிப்படைத் தேவைகள் பல ஈடேறறப்பட்டன. இன்று இவாகள் தொழில்துறை மிகுந்துவரும்போட்சுவானாவில் செழிப்புறறு வருகினறனர். குறிப்பாகச் சுரங்கத்தொழில் இவர்களுக்குப் பெரும் வேலைவாய்ப்பினை ஏற்படுத்தியுளளது. சி.ப.

**திட்டக் காலம்:** திட்டமிட்ட வளர்ச்சியைப் பெற ஏறத்தாழ எல்லா நாடுகளும் முயன்று வருகினறன. திட்டத்தை வரைதல், ஏறறுககொளளுதல, நிறைவேறறுதல் ஆகியவறறுக்கான கால அளவைத் திட்டக் காலம் (Plan period) எனலாம. இக் கால அளவு ஓராணடாகவோ அதற்கு மிகுதியாகவோ,குறைவாகவோ இருககலாம் ஓராணடாக இருப்பின ஓராணடுத் திட்டம் எனறும், ஐந்தாண்டுகளாக இருப்பின ஐந்தாணடுத் திட்டம் என்றும் பெயர் பெறும். இந்தியாவில் ஒருசில ஓராண்டுத் திட்டங்களும் பல ஐந்தாணடுத் திட்டங்களும் நிறைவேற்றப பட்டிருக்கினறன. சோவியத்து உருசியாவில் ஏழாண்டுத் திட்டங்கள் நிறைவேற்றபபட்டிருக்கின்றன.இவை தவிர 15 முதல் 20 அல்லது 25 ஆண்டுகளுக்கான தொலை நோக்குத் திட்டஙகளும் (Perspective Plans) வரையப் பெறறு நிறைவேற்றப்பட்டிருக்கினறன. என.எஸ்.பா.

**திட்டத்துய்மன்:** மகாபாரதக் கதையில் பாஞ்சால நாட்டரசன் துருபதன் என்பவன்தன் மகன் திட்டத்துய்மன. துருபதன யாகசேனன் எனறும் கூறப்படுவான்; திட்டததுய்மனின் பிறப்பிறகுக் கீழ்க் காணும் வரலாறு கூறப்படுவதுண்டு.

அஙகிவேச முனிவரிடத்தில் துரோணருடன யாக சேனனும் வில்வித்தையைக் கற்றுவந்தான. தனககு அரசாட்சி, கிடைத்த பின்னர் நாட்டில பாதியைத் துரோணருக்குப் பங்கிட்டுக் கொடுப்பதாக யாக சேனன துரோணரிடம் வாக்குறுதி கொடுத்திருந்தான. பின், ஒரு காலத்தில் அத்துரோணர் தம் குழநதைக்கு ஊட்டும் பாலுக்காகப் பசுவேணடுமெனறு வேண்டி யாகசேனனை அணுகினாா. யாகசேனன் அவரை அறியாதவனபோல் அவையில் அவரை அவமானப்படுததி விட்டான. தன மாணாககனைக் கொணடு அவனை வெனறு கட்டிக் கொணரச் செய்வதுடன் அவன அரசையும் கைக்கொள்வதாக அப்போது துரோணர் சபதம் செயதார். அவவாறே தன் மாணவனான அருசசுனனைக் கொணடு தம் சபதத்தைத் துரோணர் நிறைவேற்றிக்கொணடாா. அது முதல் யாகசேனன மிக்க வருத்தமுற்றான். விலலிற சிறநத துரோணரை கொல்வதறகு ஒரு மகனும், அருசசனனது பேராண் மையைப்போற்றி அவனை மணகக ஒரு மகளையும் பெற வேணடுமென்று புத்திரகாம யாகஞ் செய்

விததான் யாகேசனன. உபயாசன, யாசன எனற இரணடு தவமுனிவர்களைக கொணடு சிறப்பாக வேளவி செய்தான அமுதத்தை வேளவித் தீயிற பெய்து உபயாச முனிவர் ஒரு மகனைத் தோறறுவித தார். 'வலையம் பிறழ முடிதயஙக மணிககுணடலம் பேர் அழகெறிப்பச் சிலையும கையும மெய்யும வயந் திகழபோர் வயிரக கவசமுமாய்' யாகசேனன உளளங களிக்குமாறு ஒரு பெரிய தேரினமீது திட்டத்துயமன் தோனறினான். துரோணருக்குச சீடனாகவும கூற்று வனாகவும இவன பிறநதிருககிறான எனறு வானஒலி எழுந்தது. இவன அக்கினியம்சம பொருநதியவன். யாகசேனனின் விருப்பபடி முனிவாகள பெணமகவை உணடாக்க வேள்வியமுதைத் தீயிலிட்டார்கள். திரு மகளை நிகர்த்த அழகினை உடைய திரௌபதி அதில தோன்றினாள.

அக்காலத்து விலலாசிரியர்களுள சிறந்தவர் துரோணரே ஆவார். திட்டத்துயமன் அவரிடம சென்று தனக்கு விலவித்தையைக கற்பிகக வேணடு மென்று வேணடிக கொணடான. திட்டத துய்மனால் தான தனககு அழிவு நேரிடும என்பதை உணர்ந திருந்தும் அவனுக்கு விலவிததையையும் கணைப் பயிறசியினையும் துரோணர் கற்றுத தந்தார்.

திட்டததுயமனுககுத் திரௌபதியைத தவிர சிகண்டி எனற உடனபிறப்பும் உணடு. காசிராசனின் மகளான அம்பையே சிகணடியாகப பிறப்பெடுததுவந துளளாள். இவளே பேராற்றல் பெறறு வீடுமனைப் பாரதப் போரில அழிகக வநதவள. திட்டததுய் மனுக்கு ஒரு மகனுணடு எனறும் அவன் பெயர் திருட்டகேது என்றும சிரிவிட்டுணுபுராணம் குறிப் பிடும்.

பாரதப் போரில் பாணடவர் தானைதலைவனா கத் திட்டத்துயமன் செயல பட்டான்; பதினெட்டு நாள் போர் நடந்தது; பதினானகாம் நாள போரில் துரோணர் திட்டத்துய்மனின தநதை துருபதனைக் கொனறு விடுகிறார். மறுநாள் போரில துரோணரை கொல்வேன் என்று திட்டத்துய்மன வஞ்சினம் கூறு கிறான்.

கண்ணபிரான் தெரிவித்தபடி, 'போரில் வெல்லும் வன்கண்மை மிகுதியும் உடைய அசுவத்தாமா என் னும் யானையை வீமன அழித்துவிட்டான' எனறு தருமர் கூறுகினறார். துரோணா தன மகன் அசுவத் தாமா இறந்துவிட்டதாகக் கருதிக கையிலெடுத்த வில்லையும் அம்பையும் போட்டுவிட்டு நினற சமயத் தில் திட்டத்துய்மன் அம்பெய்து விடுகிறான். இவவாறு பதினைந்தாம் நாள் போரில் துரோணர் உயிரிழக் கிறார்.

போா முடிவின்போது இறைவனிடமிருந்து பெறற பாணடவியமென்ற படைககலத்தைக் கொண்டு, உறஙகிக கொணடிருந்த படைத் தலை வனாகிய திட்டத்துய்மனை அசுவததாமன அழித்து விடுகிறான. இரா.பா.

**திட்டமிட்ட பொருளாதாரம்**: அஙகாடி விருப்பு வெறுப்புகளுக்கேற்பப் பண்டஙகளின உற பததி, வருமானப் பகிாவு ஆகியவற்றைப் பெறுவதன மூலமாகப் பொருளாதார வளர்சசி அடையலாம. மையப்படுத்தப்பட்ட திட்ட அமைபபின் வழியில் மூலவளங்களையும் முதலீடுகளையும் முறைபபடுத்து வதன மூலமாகவும் பொருளாதார வளாசசியை பெற லாம். ஒரு நாடு இநத இரணடு வழிகளிலும பொரு ளாதார முனனேற்ற முயறசியில ஈடுபடலாம். முனனதைத் திட்டமிடாப பொருளாதாரம் (Unplanned Economy) எனறும, பினனதைத் திட்டமிட்ட பொருளாதாரம் (Planned Economy) எனறும் குறிப் பிடுவர்.

திட்டமிடாப் பொருளாதாரம் அரசின் தலையீடு ஏதுமினறி அஙகாடி இயநதிர அமைபபைச் சார்ந்து இயஙகும் நிலை இருக்கும் குறிப்பிட்டஒரு பொருளை அல்லது பொருட்களை நுகாவோர் நுகர விரும்பும் போது அதன் தேவை மிகுகிறது, தேவைப் பெருக் கம விலையை ஏறறுகிறது; விலை உயர்வு நிறைநத இலாபத்தைத தருகிறது எனவே, தொழில முயல வோர் அபபணடததை அல்லது பணடஙகளை உற் பத்தி செய்வா. இதைப் போனறு, அங்காடித்தேவை குறைநதால உறபததியும் பகிர்வும் குறைநதுவிடும். இமமுறையில வளாசசியைப் பெற முடியும எனறா லும் தவிர்க்க முடியாத ஒருசில ஏற்றத்தாழவுகள் தோன்றுகின்றன. விலைகள, வேலை நிலைகள ஆகிய வைகளில் தோன்றும் ஏற்றத்தாழ்வுகள மக்களிடையே மன நிறைவினமையையும், ஏமாறறத்தையும் ஏற் படுத்துகின்றன. மேலும் இம்முறையில் விரைவான பொருளாதார வளர்ச்சியைப பெறுவதும் இயலாது.

திட்டமிட்ட பொருளாதாரததையே பெரும பாலான நாடுகள விரும்புகின்றன. சமுதாய நலனைப் பெறுதல், ஏற்றத தாழ்வுகளைக் குறைத்தல், கிடைத் தற்கரிய மூலவளஙகளைச் சீராகப் பகிர்ந்து பயன் படுத்துதல, எல்லோருக்கும் வேலை வாய்பபுகளை அளித்தல, பொருளாதார அமைப்பையே மாற்றி யமைத்தல், அயல் வாணித்தைக் கட்டுப்படுத்துதல, நிதி வசதிகளைப் பெருக்குதல், நிதி அமைப்புக்களை உருவாக்குதல் போனற பல நோக்கங்களைத திட்ட மிட்ட பொருளாதாரத்தில் எளிதில் நிறைவேற்ற வாய்ப்புகள் உணடு,

வேளாண்மை சார்ந்த நாடுகளிலும், பன்னாட்டு வாணிகததைப் பேரளவில் சார்நதுள்ள நாடுகளிலும் நிலைபெறாத்தனமை பேரளவில இருககின்றது எனபதாலும், தானியஙகும் தனமையுடைய அங்காடி அமைப்பின நன்மைகளைப் பெற முடியாது என்பதாலும், அதிகார வருக்கமும் சிவப்புநாடா முறையும் தலை விரித்தாடும் நிலை இருக்கும என்பதாலும், சுதந்திரததின மீது கட்டுப்பாடுகள இருக்கும் எனபதாலும, எதேச்சாதிகாரத தன்மையைத் தோற்றுவிதது விடலாம என்பதாலும், அதிகாரிகளின தேவை அளவுககு மேறபட்டு இருக்கும் என்பதாலும், திட்டமிட்ட பொருளாதாரம தேவையிலலை எனறு மறுபபவர்களும் உணடு. ஆனால் விரைவான பொருளாதார முனனேறறததைப் பெறுவதறகும், பொருளாதாரத் திறனைச் சமமாகப் பங்கிடுவதற்கும் வசதியாக இருக்கும எனபதாலும், உறுதியான முனனேறறத்தைப் பெற முடியும் எனபதாலும்; அயல் நாட்டு வாணிகத்தை முறைப்படுத்தி, தேவையறற போட்டிகளைத் தவிர்த்து, உச்ச அளவிலான சமுதாய நனமைகளைப் பெறத திட்டமிட்ட பொருளாதாரமே சாலச் சிறந்தது எனற கருத்து பலராலும் ஏறறுக் கொளளபபட்டிருக்கிறது. என் எஸ்.பா.

**திட்டமிட்டுக் கற்றல்.** பாரத நாடு, பறபல துறைகளிலும் முன்னேற்றம் கண்டு வருகின்றது. அத்தகைய முனனேற்றத்திற்காக, அநதந்தத் துறை வல்லுநர்கள், அறிஞர்களைக கொண்டு திட்டஙகள் தீட்டித் திட்டமிட்டபடி செயறபட்டு வருகினறனர். முனனேறறம் எதுவாயினும் அதனை அடைவதற்குத் திட்டமிடுவது என்பது முதனமையானதாகும். அதுபோலக கற்றலிலும திட்டமிட்டுக் கற்றல எனபது இனறியமையாதது. அதிலும் குறிப்பாக முறைசாராக் கல்வியில (Non-Formal Education) திட்டமிட்டுக கறறலில் (Programmed Learning) உளள வழிமுறைகள சிறப்பானவை.

**முறைசாராக் கல்வியின் சிறப்பு:** நாட்டு முன்னேறறத்திற்குத் தடைக் கற்களாக இருப்ப வறறுள ஒனறு வறுமை; மற்றொன்று அறியாமை வறுமையை அகற்ற அரசு பல்வேறு வளர்ச்சித் திட்டஙகளைத் திட்டமிட்டுச் செயற்படுத்தி வருகின்றது. அறியாமை என்பது கல்வி அறியாமையைக குறிப்பதாக அமைகினறது. கலவியானது முறைசார் கலவி (Formal Education), முறைசாராக் கல்வி என இரு பிரிவாகச் செயற்பட்டு வருகினறது. உலக வங்கி அறிக்கைப்படி கல்விக்கு முதனமை அளிக்கப்படவிலலையெனறால் கி.பி. 2000-இல உலகில் பாதி அளவு அதாவது 54.8 விழுக்காடு அளவு 15 வயது முதல் 19வரை உளள கல்வியறிவற்றவர்கள் இந்தியாவிலதான் இருப்பார்கள், எனற தகவல் மிகவும் அச்சுறுத்துவதாக உளளது. எனவே, முறை சாராக் கல்வியில் வயதுவநதோர் கல்விக்கு மிகுநத சிறப்பு அளிககப்படுகிறது. திட்டமிட்டுக கற்றலில் வழிமுறைகளைக கண்டு, அதனபடி செயறபடுத்துவது, நல்லதொரு இலக்கை அடைவதற்கும் துணை புரியும். மேலும், முறைசாராக் கல்வியில் பஙகேற்கும் கறபவர்கள இன்று பெரும்பாலும் ஊக்கம குன்றி, வறுமைப் பிடியில் சிககித்தவிப்பவர்கள. அவர்களை ஊககுவிக்கவும, அவர்கள் இச்சைபபடி, அவர்கள் தேர்நதெடுத்துளள கால அளவுப்படி அவர்களாகவே முனனேறத் திட்டமிட்டுக் கற்றல தத்துவம் உதவி புரிகினறது.

**திட்டமிட்டுக் கற்றலின் இன்றியமையாமை:** எடுத்துககாட்டாக, ஒரு கட்டடம் எழுப்ப வேணடுமென்றால, அதற்கான திட்டம் தீட்டி அதனபடி கட்டி முடிக்கவேணடும். அதுபோலக் கறபிபபதில், திட்டமிட்டுக் கற்றலானது எதிரபார்க்கினற வெற்றியைப் பெறுவதற்கு உதவியாக இருககவல்லது. திட்டமிடப்படாத கற்றலானது தெளிவறற ஒரு குழப்பமான கலவியறிவையே உண்டாககும. எனவே, திட்டமிட்டுக கற்றலும், அதன வழிமுறைகளும், அதறகுரிய கலவித் திட்டததைச் சிறபபுக்குரியதாககும என்பதில ஐயமில்லை.

**திட்டத்திற்கான பொருள்:** திட்டத்திறகான பொருள் திட்டமிட்டுக கறறலில செயற்படுத்த வேணடிய பணிகளை அறிவுறுத்துவதாக அமைகினறது. ஒவ்வொரு வழிமுறைகளும் திட்டத்திற்கான பொருளை அடிப்படையாகக் கொணடதாகவும், என்னென்ன இலக்குகளை அடையவேணடும் எனறு அறிவுறுத்தும் வழிகாட்டியாகவும் அமைகினறது. கட்டடம் அமைவதறகுரிய அடிபபடை அமைத்தல் போன்று திட்டத்தைச் செயறபடுத்தத திட்டத்திற்கான பொருள் இனறியமையாததாகும்.

**திட்டப் பகுதிகள்:** எந்தெநத இடஙகளில் யார் யாருக்குச் செயற்படுத்தப்பட உளளது என்பதையும் திட்டத்திறகான பொருளையும் மனதில்கொணடு முடிவு செய்தல் வேணடும். ஏனென்றால், அளிககப்படும் கலவியானது இடததிறகேற்ற கல்வியாக இருபபதோடல்லாமல் மக்களுக்குத் தேவையான, தொடர்புளள கல்வியாகவும இருப்பதற்குத் திட்டப் பகுதிக்கான தேர்வானது உதவியாக இருக்கும்.

திட்டப்பகுதித் தேர்வுக்கு அடுத்ததாக அப்பகுதி மக்களின் தேவைகள, விருப்பங்களை ஆய்வுகள் Basic Needs Survey/Village Information Schedule) மூலமாக அறிதல் வேணடும். அத்துடன் அப்பகுதியி

லுள்ள மககளின சமூகப் பொருளாதார, சிககல்கள், நலவாழவு சுறறுப்புறச் சூழநிலை போன்ற செயதி கள ஆகியவற்றையும் அறிதல வேணடும்.

மேறகணட ஆயவுகளின மூலம அறிநத மககளின தேவைகள், உறஙகிக் கிடக்கும விருப்பஙகளை அடிப படையாகக் கொணடு, பாடப் பொருளைத் தயாரித தல வேணடும். அத்தகைய பாடபபொருளானது மககளின வாழக்கைக்கேற்ற 'வாழக்கைக் கலவியாக' அமைவதற்கு உதவுவதாக இருக்கும்.

பாடப்பொருளகளை அடிப்படையாகக் கொணட முதல் நூலகளைத (Primer Book) தயாரிததல வேண்டும். அந்த முதல் நூலானது மிகவும் எளிமை யுடன், தெளிவாகவும் இருததல வேண்டும் அத துடன் எளிதானவறறிலிருந்து கடினமானவற்றைக கற்பித்தலாக அமைதல வேண்டும். மேலும் பாடப்- பொருளை எளிதாக அறிநதுகொளவதறகுரிய கற்பிக் கும் சாதனங்களைத் தயாரித்தல் வேணடும். எடுத்துக் காட்டாக 'வீடு' எனற சொல்லைச சொலலிக் கொடுப்பதற்கு ஒரு சிறிய அளவு அட்டை எடுததுக கொணடு ஒருபுறத்தில 'வீடு' பட அமைப்பை ஒட்டு தல் வேண்டும். மற்றொரு புறததில 'வீடு' என்ற எழுத்துகளைக கொட்டை எழுத்தில எழுதவேணடும். கற்போர்கக 'வீடு' என்ற படமும், அதறகுரிய எழுத்துகளும் அறிந்துகொளள உதவியாக இருககும். அதற்குப் பட எழுத்து முறை என்பது பெயர். இது போல் பல்வேறு சாதனஙகளை உருவாககலாம.

சுகாதாரக் கேடுகள், சுற்றுபபுறத தூயமை மேலும் இதுபோனற பலவேறு செயதிகளை உணாத தப் படசுருள் மறறும் பலவேறு சாதனஙகளைப் பயன்படுததிக் கொள்ளலாம்

கற்றுககொள்ளக்கூடிய கருததுகளைக கறபவர் கள் புரியக் கூடிய வகையில வகுதது, பகுத்து தனித் தனி பிரிவுகள அல்லது துணடுகளாகப் பிரித்து எழுது தல் வேண்டும்.

ஒவ்வொரு பகுதிகளையும் ஒவவொரு பக்கத்திற்கு ஒன்றாக எழுதுதல் வேண்டும். கறபவர்கள ஒவவொரு பகுதிகளாகக் கற்றுக் கொளளுதல் வேண்டும். அதா வது ஒரு பகுதி முடிந்தபிறகு மற்றொரு பகுதியைக் கறக வேணடும்.

ஒவவொரு பகுதி முடிந்தபிறகும் அதனையொட்டி அப்பகுதியைச் சார்ந்து கேள்விகள் கொடுக்கப்படுதல் வேண்டும். அதற்குரிய விடைகளைக் கடைசிப் பக்கத் தில் கொடுக்கவேணடும்.

முதலில கறபவர்கள, படிததபிறகு அதனைச் சாாநத கேளவிக்குப் பதில கூறுவதறகு ஆர்வம காட்டுவாாகள அவர்கள கூறியவை சரியானவையா அல்லது தவறானவையா எனபதைக் கடைசிப் பககத் தில பார்த்துத் தெரிநது கொளவார்கள.

**திட்டமிட்டுக் கற்றலின் இன்றியமையாமை:** கருத்து பகுககபபட்டுக படிபபடியாக சிறிய கருத்தாகவும, எளிய கருத்தாகவும் வடிக்கப்பட்டுக் கற்பவாகளுக்குக கொடுககபபடுகினறது. கறபவருககு இதனால சோர்வு ஏற்படுவதில்லை. இதன அடிப்படையில கற்பவருககுத தாமாக ஊககம (Motivation) பிறக்கினறது. கறப வருக்கு விடை உடனுக்குடன கிடைப்பதனால கறறுக கொளவதில ஊககம பிறக்கினறது தொடர்பு கொள ளுதல் என்ற கருததின அடிப்படையில காணும் பொழுது கறறுக்கொளபவருககு, தான அடைநது வரும் முனனேற்றம் உடனுக்குடன் புலப்படுகிறது. திட்டமிட்டுக் கறறலை வயதுவந்தோர் தொடர் கலவியில உளள கற்போர்களுக்கு மட்டுமே பயன படுத்த முடியும்.

மேறகூறிய கருததுகள திட்டமிட்டுக் கறறலுககு மிகவும் பயனபடுபவையாகும. திட்டமிட்டுக் கறற லானது வயதுவந்தோர் தொடர்கல்வி கறபோா களுக்குப் பயனபடககூடியது மட்டுமல்லாது, கற போர்களை ஊககபபடுததக கூடியதாகவும், ஆாவப் படுத்தக கூடியதாகவும் இருப்பது குறிப்பிடததக்கது.

இரா.ஜெ.

**திட்டமிடுதல்:** நாட்டில உள்ள ஒவ்வொரு வரும் முனனேறுகிறார்கள் என்றால் நாடு முனனேறு கிறது எனற கொள்கையின அடிப்படையில முதலாளித் துவப் பொருளாதார அமைப்பு செயல்பட்டது எனவே, முதலாளித்துவப பொருளாதார அமைப்பில எவ்விதத் தடைகளும் இனறி நாட்டின பணடஙகள, பணிகள, உற்பத்தி, பகிர்வு போனறவை தனியாரால மேற்கொளளப்பட்டு வந்தன. நுகர்வோரின தேவை களைஅங்காடி மூலம் அறிநது தொழில முயலவோர்கள உற்பத்தி, பகிர்வுப் பணிகளில ஈடுபட்டனர். பொருளா தார நடவடிக்கைகளில் தலையிடாமல காவல் பணி களை மட்டும் அரசு மேற்கொணடு வந்தது. ஆனால், இவவமைப்பில் வாணிகச சூழல தோன்றுவதையும், செலவ, வருமானப் பங்கீட்டில முனைப்பான ஏற்றத் தாழ்வுகள ஏறபடுவதையும இததகைய பொருளா தார அமைப்புகளால தடைசெய்ய இயலவில்லை. எனவே, தலையிடாக் கொள்கையைத் தவிர்த்துப் பொருளாதார முன்னேற்றம் பெற அரசு தலையிட வேணடும் என்ற கருத்து வலுப்பெற்று பொருளா தார வளர்ச்சிக்குத் திட்டமிடுதல என்ற சிநதனை பரவியது.

உற்பத்தி, பரிமாற்றம் ஆகியவற்றில் தனியார் நடவடிக்கைகளைக் கட்டுப்பாட்டிற்குள் அல்லது மேற்பார்வையில் செயற்படுத்துவதைத் திட்டமிடுதல் என்று பேராசிரியர் இராபின்சு (Prof. Robbins) குறிப்பிடுகிறார். பொருளாதார மூலவளங்களைப் பயன்படுத்துவதிலும், அமைப்பதிலும் பொதுத் துறை அதிகாரங்களின் செயல்களை விரிவாக்குதல் திட்டமிடுதல் என்பதன் உள்ளார்ந்த கருத்து என்று எப். சுவிக்கு (F. Sweig) குறிப்பிடுகிறார். பொதுத் துறை அதிகாரங்கள் பொருளாதார முன்னுரிமைகளை வேண்டுமென்றே தேர்ந்தெடுப்பதைத் திட்டமிடுதல் என்று குறிப்பிடலாம் என்பது திருமதி பார்பரா ஊட்டன் (Mrs Barbara Wooton) கருத்து. குறிப்பிட்ட கால அளவிற்குள் பொதுமக்களின் விருப்பங்களை நிறைவேற்றுவதில் உச்ச அளவு மனநிறைவைப் பெறும் நோக்கத்துடன் நாட்டில் கிடைக்கும் மூலவளங்களைப்பயன்படுத்துவதில் அந்த நாட்டில் உள்ள தனியார் அமைப்புகளையும், தொழில்களையும் ஒரே அமைப்பில் ஒருங்கிணைந்த அங்கங்களாகக் கருதிச் செயல்படும் ஒரு பொருளாதார அமைப்பைத் திட்டமிடுதல்என்று குறிப்பிடலாம் என்பது உலூயிஉலோர் துவின் (Lewis Lordwin) கருத்து. ஒரு நாட்டில் இருக்கும்எல்லாவிதமான பொருளாதார அமைப்புகளையும் ஒன்றோடொன்று இணைந்து செயல்படச் செய்யும் அமைப்பைத் திட்டமிடுதல் என்பார் மோரிசு தாபு (Maurice Dobb). எதை உற்பத்தி செய்ய வேண்டும். எந்த அளவுக்கு உற்பத்தி செய்யவேண்டும், யாருக்கு அது எம்முறையில் பகிர்ந்தளிக்கப்பட வேண்டும் என்பன போன்றவற்றில் நாடு முழுவதிலிருந்து பெறும் புள்ளி விவரங்களின் அடிப்படையில் மிகவும் இன்றியமையாத முடிவுகளை மேற்கொள்ளுவதைத் திட்டமிடுதல் (Planning) என்று குறிப்பிடலாம் என திக்கின்சன் (Dickinson) குறிப்பிடுகிறார்.

சோவியத் உருசிய நாடு அதன் விரைவான பொருளாதார முன்னேற்றத்திற்காகத் திட்டமிடுதல் என்ற முறையை 1928-ஆம் ஆண்டில் பயன்படுத்தத்தொடங்கியதிலிருந்து பிற நாடுகளிலும் இம்முறை புகழடையத் தொடங்கியது. இரண்டாம் உலகப் பெரும் போர் தொடங்கியதைத் தொடர்ந்து உண்டான உலகப் பெருமந்தம், விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறவேண்டும் என்ற வளரும் நாடுகளின் பேரவா ஆகியவை 'திட்டமிடுதலை' மிகவும் இன்றியமையாத ஒன்றாகக் கிவிட்டன.

ஒரு நாட்டின் தேவைகள் மிகுதி; அவற்றை நிறைவேற்றுவதற்குரிய மூல வளங்களின் அளவு பறாக் குறையாகவே உள்ளது. இந்நிலையில் கிடைக்கும் மூலவளங்களையெல்லாம் ஒருங்கிணைத்து ஒரு மைய அமைப்பின் மூலம் செயல்பட்டுச் சிறப்பாகப் பயன்படுத்தி விரும்பிய விளைவைப் பெற முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. இம்மைய அமைப்பு வழி வகுத்துக் கொடுப்பதே திட்டமிடுதல். முதலாளித்துவப் பொருளாதார அமைப்புகளிலும் குறிப்பிட்ட வகை நோக்கங்களை நிறைவேற்றவும் குறிப்பிட்ட குறிக்கோள்களை அடையவும் ஓரளவுக்காவது திட்டமிட்டு அரசுகள் செயலாற்றுகின்றன. மையக் கட்டுப்பாட்டின்கீழ்ச் செயல்படுதல், கிடைக்கும் மூலவளங்களை நன்கு தெரிந்து விரும்பும் வழிகளில் பயன்படுத்துதல், உச்ச அளவு சமுதாய நலத்தைப் பெறுவதே நோக்கமாகக் கொண்டிருத்தல், ஒன்றோடொன்று இணக்கமாக இணைந்து செயல்படுவதன் மூலம் வீண் விரயங்களைத் தவிர்த்தல், விரைவான பொருளாதார வளர்ச்சியைப் பெற முயலுதல் போன்றவை திட்டமிடுதலின் அடிப்படைகளாகும்.

தெளிவான நோக்கங்களையும் இலக்குகளையும் பெற்றிருத்தல், மைய அதிகாரத்திற்குக் கட்டுப்பட்டுச் செயலாற்றுதல், விரிவான போக்கைப் பெற்றிருத்தல், தக்க முறையில் மூலவளங்களைப் பங்கிடுதல், நேர்மையான பங்கீட்டு முறையைக் கையாளுதல், சமுதாய நீதியுடன் கூடிய முன்னேற்ற முயற்சிகளை மேற்கொள்ளுதல் போன்றவை திட்டமிடுதலின் இயல்புகள்.

வளர்ச்சிக்கு வழிகாட்டித் தொலை நோக்குடன் செயற்படுதல், சமூக விரோதிகளின் மீது கட்டுப்பாடு, உற்பத்தி, பகிர்வில் கட்டுப்பாடு; செல்வ, வருமான, ஏற்றத்தாழ்வைப் படிப்படியாகக் குறைத்து அழித்தல், இயற்கை மூலவளங்களின் பேரழிவைத் தவிர்த்தல், சமுதாயத்தில் அமைதியை ஏற்படுத்துதல், வளர்ச்சியில் எல்லோருக்கும் பங்கு உணர்வை ஏற்படுத்துதல், வாணிகச் சூழல்களின் தீய விளைவுகளைத் தவிர்த்தல் போன்றவை திட்டமிடுதலை மேன்மேலும் கட்டாயமானதாக்குகின்றன.

என்.எஸ் பா.

**திட்டமிடுதலின் வகைகள்:** திட்டமிடுதலைப் பல அடிப்படைகளில் வகைப்படுத்துதல் மரபு. பொருளாதார அமைப்பின் அடிப்படையில் கட்டமைப்புத் திட்டமிடுதல் (Structural Planning), செயல் நிலைத் திட்டமிடுதல் (Functional Planning), சமதருமத் திட்டமிடுதல் (Socialist Planning), முதலாளித்துவத் திட்டமிடுதல் (Capitalist Planning), மையப்படுத்தப்பட்ட திட்டமிடுதல் (Centralised Planning), பரவலாக்கப்பட்ட திட்டமிடுதல் (Decentralised Planning), மக்களாட்சி முறைத் திட்டமிடுதல் (Democratic Planning), சர்வாதிபத்தியத்மி

திட்டமிடுதல (Totalitarian Planning), நெறிப்படுத்தித்திட்டமிடுதல (Planning by direction), தூண்டிவிடப்படும் திட்டமிடுதல (Planning by inducement), என்று வகைப்படுத்துவர் காலத்தின் அடிப்படையில நிலையான திட்டமிடுதல (Permanent Planning) அவசரநிலைத் திட்டமிடுதல (Emergency Planning), தொலைநோக்குத் திட்டமிடுதல (Perspective, Planning), குறுகிய காலத் திட்டமிடுதல் (Shore term Planning) என்று வகைப்படுத்தலாம். பொருளாதார நிலப்பரப்பின் அடிப்படையில வட்டாரத் திட்டமிடுதல (Regional Planning), நாட்டுத் திட்டமிடுதல (National Planning), பன்னாட்டுத் திட்டமிடுதல (International Planning) என்றும் வகைப்படுத்தலாம்

**மக்களாட்சிமுறைத் திட்டமிடுதல்**; பெரும்பான்மை மக்களின் ஆதரவின் அடிப்படையில் அமையும் அரசிற்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரத்தின் அடிப்படையில் இத் திட்டம் அமைகிறது மக்களுக்காக, மக்களால் அமைக்கப்படும் இத் திட்டத்தின் நோக்கங்களும், இலக்குகளும், முறைகளும் பிற இயல்புகளும் மாநில, மையச் சட்டமன்றங்களால நிருணயிக்கப் பெற்று, எவ்விதமான திணிப்பும் இலலாத முறையில செயல்படுத்தப்படுகிறது. இத்திட்டத்தை, சுட்டிக்காட்டுமவகைத் திட்டமிடுதல் (Indicative Planning), தூண்டிவிடும் திட்டமிடுதல (Planning by inducement) என்றும் குறிப்பிடுவர்.

மக்களாட்சி முறையின் அடிப்படைகளில திட்டத்திற்கு இறுதி வடிவம் கொடுத்து, பணவாக்கக் கொள்கை (Monetary Policy), வாணிகக் கொள்கை (Commercial Policy), நிதிநிலைக் கொள்கை (Fiscal Policy) போன்றவைகளின் மூலம் நிபுணர்களின் கருத்துக்களையும் கேட்டறிந்து திட்டங்கள் நிறைவேறறப்படுகின்றன. மேலும் பணவாக்க வாணிக நிதிநிலைக் கொள்கைகள் பேரளவில எதிர்பார்க்கும் மாற்றங்களைத் தோற்றுவிக்கத் தக்கவை அலல என்றும், தேவை, அளிப்பு ஆகியவைகளுக்கிடையே சமநிலையைப் பெறுதல எளிதன்று என்றும், குறைவளர்ச்சியுடைய நாடுகளின் விரைவான முன்னேற்றத்திற்கு ஏற்றதல்ல என்றும் இம்முறையின் குறைகளாகக் குறிப்பிடப்படுகின்றன.

**சர்வாதிபத்தியத் திட்டமிடுதல்**: கட்டளையிடும் பொருளாதார அமைப்பில உள்ள திட்டமிடுதலைச் சர்வாதிபத்தியத் திட்டமிடுதல எனலாம். இப் பொருளாதார அமைப்பில் அரசுக்கே எலலா அதிகாரங்களும் உண்டு. மக்களுக்கான தேவைகளை முதலில் நிருணயித்துக் கொண்டு அவற்றை நிறைவேற்றுவதற்கான எலலா முயற்சிகளையும் அரசே மேற்கொள்கிறது. உற்பத்தியும், பகிர்வும அரசாங்கத்தாலே நிருணயிக்கப்படுகின்றன.

இத்தகைய திட்டமிடுதலை ஆட்சி மேலாண்மைக் கொள்கையுடைய திட்டமிடுதல் (Authoritarian Planning), சமதரும அமைப்புத் திட்டமிடுதல Socialist Planning), நெறிப்படுத்தும் திட்டமிடுதல (Planning by Direction), கட்டளையிடும் திட்டமிடுதல (Pianning by Command) என்றும் குறிப்பிடுவர்

உற்பத்தி மூலவளங்களைத் திறம்படப் பயன்படுத்துதல், சீரான பகிர்வை மேற்கொள்ளுதல் ஆகிய பணிகளை அரசுகளே மேற்கொள்வதால தோன்றும் இலாபம் எலலாம அரசின் கருவூலத்திற்கே செலகின்றது. கலவி, பொது நல வாழவு, மருத்துவம், வீட்டு வசதி, மின இணைப்பு, தொலை பேசித் தொடர்பு, உணவு போன்றவற்றை மக்களுக்கு இலவசமாக அலலது மிகக் குறைவான விலையில கிடைக்கும் வண்ணம அரசு செயலபடுகிறது பற்றாக்குறை எதிலும் இலலை என்ற நிலையை ஏற்படுத்தவும், பாதுகாப்பு இன்மை என்ற விருமபத்தகாத நிலையைப் போக்கவும அரசு பாடுபடுகிறது பொது மக்களுக்கு இடையூறு ஏற்படா வண்ணம மிகுந்த அளவில பொருளாதாரச் சுதந்திரத்தை எலலா மக்களும அனுபவிக்கும் வண்ணம அரசு செயலபடுகிறது.

இம்முறை துலலியமானது; வெற்றி வாய்ப்பு மிகுதியாக உள்ளது என்றாலும வலுவான மைய அரசு இருத்தல்,நிலைமைக்கேற்பத் தக்க முடிவுகளை விரைவாக எடுத்துச் செயறபடுதல, நெகிழ்ச்சித் தன்மை இருத்தல ஆகியவை இத்திட்டத்தின் வெற்றிக்கு அடிப்படையாகும். இவை பெருமபாலும இலலை. மேலும், ஒரு வகைப்படுத்தப்பட்ட பண்டங்களையும், பணிகளையும மட்டுமே மக்கள நுகர்வதும விரும்பத் தக்கதல்ல என்பர் சிலா. அதிகாரிகளுக்குத் தடையற்ற உரிமைகளையும், சிறப்பிடத்தையும இம முறையில கொடுத்திருப்பதால் அது ஒருசில நேரங்களில, ஊழலுக்கும், திறமை இன்மைக்கும வழி வகுத்து விடலாம.

**மையப்படுத்தப்பட்ட திட்டமிடுதல்**. திட்டத்தை வரைதல், ஏற்றுக் கொள்ளுதல, நிறைவேற்றுதல், மேற்பார்வையிடுதல ஆகியவற்றை மைய நிலையில உள்ள அதிகாரம (Authority) ஏற்றுக் கொள்ளும் அமைப்பை மையப்படுத்தப்பட்ட திட்டமிடுதல என்பர்.

செல்வத்தையும், பொருளாதாரத் திறனையும் விரும்பத்தக்க முறையில பயன்படுத்துவதற்கு இவ்

வகைத் திட்டமிடுதல் சாலச் சிறந்தது. நெகிழ்வின்மை என்பது இத்திட்ட அமைப்பின் பெரும் குறை.

**பரவலாக்கப்பட்ட திட்டமிடுதல்:** திட்டத்தை வரைதல், ஏற்றுக் கொள்ளுதல், நிறைவேற்றுதல் ஆகியவற்றில் வட்டார அளவிலான அமைப்புகளும், உள்ளூர்த் தொழில் முயல்வோர்களும், பொதுவாக உள்ளூர் மக்களும் சிறப்பான அளவில் பங்கேற்கும் வகையிலான திட்டமிடுதலைப் பரவலாக்கப்பட்ட திட்டமிடுதல் என்பர். இவ்வகைத் திட்டமிடுதலை அடிமட்டத்திலிருந்து ஆக்கப் பெறும் திட்டமிடுதல் (Planning from below) என்றும் குறிப்பிடுவர். இத் திட்டமிடுதலை ஏற்றுக் கொண்டிருக்கும் நாடு களில் கலப்புப் பொருளாதார அமைப்பு இருக் கும் வாய்ப்பு உண்டு. நாடு தழுவிய மிகவும் இன்றி யமையாதனவற்றிலும், மிகவும் சிறப்பான துறைகளின் வளர்ச்சிபற்றியும் உள்ள தீர்மானங்களையெல்லாம் மைய அமைப்பு மேற்கொண்டு செயற்படுத்தும். பிற முடிவுகளையெல்லாம் அடி மட்டங்களில் உள்ள அமைப்புகளும் மக்களும் மேற்கொள்வர். இங்கி லாந்து, பிரான்சு ஆகியவை இவ்வகைத் திட்டமிடு தலை மேற்கொள்கின்றன.

பயிற்சியும், திறமையும், வசதியும் உள்ளவர்கள் நாடு தழுவிய சிக்கல்களில் முடிவுகளை மேற்கொண் டாலும், உள்ளூர்த் தேவைகளையும், உள்ளூரின் உள ளாற்றல்களை மதிப்பிடுவதையும், உள்ளூர் அமைப்பு களும் மக்களும் சரியான மதிப்பிட்டு, திட்டமிட்ட வளர்ச்சியைப் பெற இம்முறை வழிவகுக்கிறது. ஆனால் எந்த அளவுக்கு உள்ளூர் அமைப்புகள் திறம் படச் செயல்பட முடியும் என்பது ஒரு வினாவாகவே அமைந்து விடுகிறது. நாடு முழுவதிற்கும் திட்டமிடப் படுவதால் மையப்படுத்தப்பட்ட திட்டமிடுதலே சாலச் சிறந்தது என்று கூறுபவரும் உண்டு.

**பருப்பொருட்சார் திட்டமிடுதல்:** பருப் பொருட் களின் (சடப் பண்டங்களின்) அடிப்படையில் திட்டங் கள் வரையப் பெற்று நிறைவேற்றப்படுமானால் அத னைப் பருப்பொருள்சார் திட்டமிடுதல் என்பர். இதில் மனிதர்கள், பண்டங்கள் ஆகியவற்றின் கணக்கில் மூலவளங்கள் கணிக்கப் பெறுகின்றன; பகிரப்படுகின் றன; உற்பத்தி மதிப்பிடப்பெறுகின்றன. இம்முறை ஓரளவுக்குச் சிக்கலானது; வரைவதும் நிறைவேற்று வதும் எளிதன்று.

**நிதிசார் திட்டமிடுதல்:** நிதி அடிப்படையில் திட் டங்கள் வரையப் பெற்று, நிறைவேற்றப்படுவதை நிதிசார் திட்டமிடுதல் என்பர். மூலவளங்களின் தொகுப்பு, பகிர்வு, உற்பத்தி ஆகியவை நிதி யின் (பணத்தின்) அடிப்படையில் இம் முறையில் குறிப்பிடப்படுகின்றது. பணத் தொடர்பற்ற துறை வளரும் நாடுகளில் பெருமளவில் உள்ளன. இது இம் முறையை நன்கு பயன்படுத்த முடியாமல் ஆக்கும் பெரும் குறைகளுள் ஒன்று.

பருப் பொருள் சார் திட்டமும், நிதிசார் திட்ட மும் ஒன்றுக்கொன்று எதிரானவையல்ல, இணை யானவை. எனவே, இரண்டையும் தனித் தனியாகச் செயற்படுத்த முடியாது என்று குறிப்பிடுவர் பலர்.

**குறுகிய காலத் திட்டம்:** குறுகிய கால அளவிற்கு என அமைக்கப்படும் திட்டம் குறுகிய காலத் திட்டம் ஆகும். இக் குறுகிய கால அளவு ஓராண்டாகவோ, அதற்கு கூடுதலாகவோ, குறைவாகவோ அமையலாம். மேலும், நீண்ட காலத் திட்டத்தின் ஓர் உறுப்பாக வும் இத்திட்டம் அமையலாம் அல்லது நிறைவான தொரு தனித் திட்டமாகவும் இருக்கலாம். திட்டக் காலம் ஓராண்டு எனின், அது ஓராண்டுத் திட்டம், ஐந்தாண்டுகள் எனின் அது ஐந்தாண்டுத் திட்டம் எனப்படும்.

**நீண்ட காலத் திட்டமிடுதல்:** (காண்க: தொலை நோக்குத் திட்டம்)

**வட்டாரத் திட்டமிடுதல்:** ஒவ்வொரு நாட்டை யும் நிலப்பரப்பின் அடிப்படையில் அல்லது பிற அடிப் படையில் பல பகுதிகளாகப் பிரிக்கலாம். ஒவ்வொரு பகுதியும் வட்டம் அல்லது வட்டாரம் எனப்படு கிறது. ஒவ்வொரு வட்டத்திற்கும் திட்டத்தை வரைந்து, ஏற்றுக் கொண்டு, நிறைவேற்றுவதை வட் டாரத் திட்டமிடுதல் என்பர். இதனை இருவழிகளில் குறிப்பிடுவர்.

**(1) பொருளாதார முன்னேற்றத்திற்கான தனியான தொரு திட்டம்:** ஏதாவது ஒரு பயனுள்ள பேரளவி லான பொதுப் பணியை அவ்வட்டார மக்களின் முன் னேற்றத்திற்கெனத் தொடங்கி நிறைவேற்றலாம். ஐக்கிய அமெரிக்க நாட்டில் நிறைவேற்றப்பட்ட தென்னசிப் பள்ளத்தாக்குத் திட்டத்தை (Tennessee Valley Scheme) இதற்கோர் எடுத்துக்காட்டாகக் குறிப்பிடலாம். தென்னசி நதிப் படுகையிலும், அதனையொட்டியும் உள்ள நிலப் பரப்புகளில் உள்ள இயற்கை வளங்களைப் பெருக்கியும், சிக்கனமாகப் பயன்படுத்தியும் நாட்டு மக்களின் பொதுவான சமு தாயம் பொருளாதார முன்னேற்றத்திற்கு பயன் படுத்துவதே இத்திட்டத்தின் அடிப்படை நோக்க மாகும் என்று பிரசிடெனட் ரூசுவெலட்டு (President Roosevelt) குறிப்பிட்டிருக்கிறார்.

**(2) வட்டார அளவில் அதிகாரத்தைப் பரவலாக்கு தல்:** திட்டத்தை வரைதல், ஏற்றுக் கொள்ளுதல், நிறைவேற்றுதல் ஆகியவற்றில் நாட்டு அளவில் இருக் கும் அதிகாரத்தைப் பரவலாக்கி அந்தந்தப் பகுதி

மக்களுக்கும் கொடுத்து அவர்களைக் கொண்டே திட்டத்தைத் தீட்டி நிறைவேற்றுதல் என்ற பொருளிலும் வட்டாரத் திட்டமிடுதலைக் குறிப்பிடுவர். விரைவான வளர்ச்சியைப் பெறவும், ஏற்றத்தாழ்வுகளைக் குறைப்பதற்கும் இவ்வகைத் திட்டம் பயன் தரத் தக்கது.

**தேசியத் திட்டமிடுதல்:** (காண்க: தனிக்கட்டுரை)

**பன்னாட்டுத் திட்டமிடுதல்:** உலக நாடுகள் எல்லாம் ஒன்றாக இணைந்து ஓர் அலகாகச் (One Unit) செயல்பட்டால் அந்நிலையில் ஆக்கப் பெறும் திட்டத்தைப் பன்னாட்டுத் திட்டமிடுதல் அல்லது உலகத் திட்டமிடுதல் எனலாம். இதற்கான வாய்ப்புகள் மிகவும் குறைவு.

**தொடர்பு திட்டம்:** (காண்க. தனிக்கட்டுரை)

என.எஸ.பா.

**துணை நூல்கள்:**

Jhingan, M.L., The Economics of Development and Planning, Vikas Publishing House Pvt, Ltd, New Delhi, 1978.

Seth, M.L., Theory and Practice of Economic Planning, S. Chand & Co, New Delhi, 1977.

***திடீர்ச் செலவின நிதி*** என்பது இந்தியப் பாராளுமன்றச் சட்டத்தினால் நிறுவப்பட்டுள்ள இந்திய அரசாங்கத்தின் எதிர்பாராத செலவுகளைச் சரிகட்டுவதற்காக இருக்கின்ற ஒரு முன்பண நிதி (imprest cash) ஆகும். திடீர்ச்செலவின நிதியில், அதனை நிறுவும் பாராளுமன்றச் சட்டத்தின்படி விதிக்கப்படுகின்ற பணத்தொகைகள் அவ்வப்போது செலுத்தப்பட்டு, இந்த நிதி முழுவதும் குடியரசுத் தலைவர் வசம் வைக்கப்பட்டிருக்கும். எதிர்பாராத திடீரெனச் சில செலவுகளை இந்திய அரசாங்கம் செய்ய வேண்டுமாயின், அச்செலவினங்களுக்குப் பாராளுமன்றத்தின் சட்டப்படியான ஒப்புதல் (Authorisation) வழங்கும் வரை அரசாங்கம் காத்திராமல், அச்செலவுகளுக்கு வேண்டிய பணத்தை முன்பணமாகக் குடியரசுத் தலைவர் திடீர்ச் செலவின நிதியிலிருந்து (Contingency Fund) எடுத்து வழங்கலாம். இந்திய அரசாங்கத்துக்குத் திடீர்ச் செலவினநிதி இருப்பதுபோல ஒவ்வொரு மாநிலத்துக்கும் அதன் ஆளுநர்வசம் திடீர்ச்செலவின நிதி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. (இந்திய அரசியலமைப்புச் சட்டப்பிரிவுகள் 267(1), 267(2). இந்த நிதி தோன்றுவதற்கான காரணம், அரசாங்கத்தால் மக்களிடமிருந்து வாங்கப்படும் ஒவ்வொரு வரிக்கும் பாராளுமன்றம் தனது சட்டத்தின் படியாக ஆணை அல்லது ஒப்புதல் வழங்குதல் வேண்டுமென்ற அரசியலமைப்பு விதி இருப்பதுபோல அரசாங்கம் திரள் நிதியிலிருந்து எடுத்துச் செய்யும் ஒவ்வொரு செலவினத்துக்கும் பாராளுமன்றச் சட்டத்தின் ஆணை இருத்தல் வேண்டுமென்ற விதி இருக்கிறது. இந்த விதிகளைப் பின்பற்றியே மைய, மாநில அரசாங்கங்கள் தத்தம் ஆண்டு வரவுசெலவுத் திட்டங்களை வரைந்து, அதில் கூறியுள்ள ஒவ்வொரு ஆட்சித் துறைக்குமுரிய ஆண்டுச் செலவினங்களை (Grants) சட்டமன்றத்தின் முன்னர் வைத்து, அதன் ஆய்வுக்கும், வாக்கெடுப்புக்கும் விட்டுச் செலவுத் தொகைகளைப் பெறுகின்றன. இவ்வாறு சட்டமன்ற வாக்கெடுப்பின்படி ஒவ்வொரு ஆட்சித்துறைக்கும் அளிக்கப்படும் செலவுத்தொகை அத்துறையின் ஆண்டுச் செலவுக்குப் போதுமானதாக இல்லாத நிலை தோன்றுமாயினும் அல்லது நடப்பு நிதி ஆண்டில் ஏதேனும் ஒரு புதிய செலவினம் தோன்றுமாயினும், வரவுசெலவுத் திட்டத்தில் சேர்க்கப்படாத புதிய செலவினத்துக்குக் கூடுதலான செலவுத்தொகை தேவைப்படுமாயினும், குடியரசுத் தலைவர் இந்திய அரசாங்கத்தின் வழியாகவும், மாநில ஆளுநர் மாநில அரசாங்கத்தின் வாயிலாகவும் தேவைப்படும் கூடுதல் செலவினங்களுக்காக அச்சட்டமன்றத்தின் முன்னர் செலவுக்கேட்பு (Demand) கொண்டு வருவதற்கு ஏற்பாடு செய்கிறார். இவ்வாறு கொண்டுவரப்படும் செலவுக்கேட்பைப் பாராளுமன்றம் ஆய்ந்து, ஏற்று, ஆணை வழங்குமுன் அதற்குரிய செலவை முன்பணமாகத் திடீர்ச்செலவின நிதியிலிருந்து எடுத்துச் செலவு செய்தற்கு அரசியலமைப்புச் சட்டம் வழி செய்துள்ளது (பிரிவு 115). இதேபோல மாநில திடீர்ச்செலவின நிதியும் ஏற்படுத்தப்பட்டுள்ளது (பிரிவு 205). திடீர்ச்செலவின நிதி 15 கோடி ரூபாய்களோடு, 1950-ஆம் ஆண்டின் திடீர்ச்செலவின நிதிச் சட்டத்தின்படி (Contingency Fund Act, 1950) நிறுவப்பட்டது.

பா.கு.

***திடீர்ப்புரட்சி*** என்பது ஏதேனுமொரு அரசாங்க அல்லது இராணுவப் பதவியிலிருப்பவர் எதிர்பாராத சூழ்நிலையில் வல்லந்தத்தைப் பின்பற்றித் திடீரென்று நாட்டின் அரசாங்கத்தை நிறுவுகின்ற செயல் ஆகும். திடீர்ப்புரட்சிகளைப் (Coupd' Etat) பெரும்பாலும் நாட்டின் இராணுவ தளபதிகளே நிறைவேற்றியுள்ளனரென்று பண்டைக் கால வரலாறும் இக்கால வரலாறும் காட்டுகின்றன.

திடீர்ப் புரட்சியைத் திட்டமிட்டு நடத்துபவர்கள் நாட்டு அரசாங்கத்தின்மீது தம் கட்டுப்பாட்டை நிறு

வும் பொருட்டுப் பொதுவாக அரசாங்கக் கட்டடங்களையும், இருப்புப் பாதை வசதிகளையும்,வானொலி நிலையங்களையும், மின்சார நிலையங்களையும், குடிநீர் வாரிய நிலையங்களையும் கைப்பற்றுதல் வழக்கம். வாழ்க்கைக்கு இன்றியமையாத பணி நிலையங்களைக் கைப்பற்றினால், அரசியலதிகாரத்தைக் கைப்பற்றுதல் எளிது.

திடீர்ப்புரட்சியும், புரட்சி என்பதும் ஒன்று அல்ல. திடீர்ப்புரட்சி என்பது, அரசாங்கத்தின் உயர் நிலையிலிருக்கும் அதிகாரிகளால் நடத்தப்படுகிறது; இதில் பொது மக்கள் கலந்துகொள்வதில்லை. புரட்சி (Revolution) என்பதில் சமூக மக்கள் யாவரும் கலந்து கொள்ளுகிறார்கள்.

பொதுவாக வல்லாண்மை ஆட்சியை நடத்திய சருவாதிகாரிகள் யாவருமே திடீர்ப் புரட்சி செய்தே அதிகாரத்தைக் கைப்பற்றியவர்கள். வரலாற்றிலிருந்து பல திடீர்ப் புரட்சிகளுக்கான எடுத்துக்காட்டுகள் கிடைக்கின்றன. பிரான்சு நாட்டில் மூன்றாம்நெப்போலியன் கி.பி.1851-இல் திடீர்ப்புரட்சி செய்து அதிகாரத்தைக் கைப்பற்றினார். இத்தாலியில் 1922-இல் முசோலினி திடீர்ப் புரட்சியின் வழியாகக் குடியாட்சி அரசாங்கத்தை நீக்கிவிட்டுத் தம் பாசிசக் கட்சி அரசாங்கத்தை நிறுவினார். போலந்து நாட்டில் 1928-இல் திடீர்ப் புரட்சி செய்து பிலசுட்சுகி ஆட்சியைக் கைப்பற்றினார். செக்கோசுலோவோகியா நாட்டில் 1948-இல் பொதுவுடைமைக் கட்சியினர் திடீர்ப் புரட்சியின் வாயிலாக ஆட்சியைக் கைப்பற்றினர். தென் அமெரிக்க அர்செண்டினா நாட்டில் பெரான் என்பாரின் இராணுவ சருவாதிகாரத்துக்கு எதிராக ஓர் இயக்கம் 1955-இல் திடீர்ப் புரட்சி செய்தது. இராக்கு நாட்டில் 1958-இல் குடியரசு இயக்கம் ஒன்று வலுவடைந்து திடீர்ப் புரட்சி செய்து அரசாங்கத்தை மாற்றிற்று. பாகிசுத்தான் நாட்டிலும், பர்மா நாட்டிலும் (1958) இராணுவத் தளபதிகள் திடீர்ப் புரட்சிகளை வெற்றியுடன் நடத்தி அரசாங்கத்தைக் கைப்பற்றினர்.

திடீர்ப் புரட்சி முறையின் வழியாக ஆட்சியைக் கைப்பற்றுதல் மனிதனுடைய சுதந்திரப் பற்று உணர்வுக்கும், சமூகச் சட்டத்துக்குக் கட்டுப்படும் அவனுடைய இயல்புக்கும் மாறானதென்று அரிசுடாட்டில் முதலிய சிந்தனையாளரும், குடியாட்சிச் சிந்தனையாளர்களும் கூறி, இம்முறையை ஒதுக்கியுள்ளனர். திடீர்ப் புரட்சியாளருடைய ஆட்சி நல்ல பல சமூகப் பணிகளை நிறைவேற்றினாலும், அவர்களுடைய அதிகாரமானது வல்லந்தத்தைச் சார்ந்துள்ளதே அன்றி, மக்களுடைய விருப்பத்தைச் சார்ந்திருக்கவில்லை.

பா.சு.

**திண்டிவனம்** தமிழ்நாட்டில் தென்னார்க்காடு மாவட்டத்தில் விழுப்புரத்திற்கும் சென்னைக்குமிடையே உள்ள ஓர் இருப்புப்பாதை நிலையம். இது ஒரு வட்டத்தின் (Taluk) தலைநகரம். இதன் பரப்பு ஏறத்தாழ 1450 ச.கி.மீ. இது பண்டைக் காலத்தில் ஓய்மா நாட்டைச் சேர்ந்திருந்தது. இதை ஒட்டியுள்ள கிடங்கில் என்ற ஊர் முற்காலத்தில் அரண்களால் சூழப்பெற்றிருந்தது. இதன் சிதைவுகளை இன்றும் காணலாம்.

திந்துருணி என்ற சொல்லிலிருந்து திண்டிவனம் என்ற பெயர் வந்ததாகக் கூறுவர். திருந்துருனி என்பது புளிய மரத்தைக் குறிக்கும். இப்பகுதி முன்பு புளிய மரக்காடாக இருந்ததால் இப்பெயர் பெற்றது.

சம வெளிப்பகுதியான திண்டிவனத்தின் கடலோரம் மணற்பாங்கானது. சதுப்பு நிலத்தில் இவ்வூர் அமைந்துள்ளது. இதன் மேற்குப்பகுதியில் குன்றுகள் உள்ளன. வரலாற்றுப் புகழ்பெற்ற செஞ்சிக்குச் செல்பவர்கள் திண்டிவனம் வழியாகப் போக வேண்டும். இது ஒரு வாணிக மையம். நிலக்கடலை வாணிகம் சிறப்புப் பெற்றுள்ளது. இங்கு நகராட்சி மன்றமும், ஒரு கல்லூரியும், பல உயர் நிலைப் பள்ளிகளும் கைத்தொழிற் பள்ளிகளும் இருக்கின்றன. தமிழ்நாட்டு அரசின் நிலக்கடலை ஆய்வு மையம் ஒன்றும் இங்குச் செயல்படுகிறது.

தெ.பா.

**திண்ணைப் பள்ளி**: பழங்காலத்தில் மாணவர் கல்வி பயின்ற இடங்கள் திண்ணைப் பள்ளிக்கூடங்கள் எனப்படுகின்றன. அத்தகைய திண்ணைப் பள்ளிக் கூடங்களின் அமைப்பு, மாணவர் பயின்ற முறை, ஆசிரியர் கற்பித்தமுறை, கற்பாடங்கள் கற்பித்த முறைகள் ஆகியவை பற்றிய செய்திகள் அறிந்து இன்புறுதற்கு உரியன.

**திண்ணைப் பள்ளிகூடங்கள்:** கிராமந்தோறும் இருந்த பள்ளிக்கூடங்களைத் திண்ணைப் பள்ளிக்கூடங்கள் என்று கூறுவர். அப்பள்ளிக் கூடங்கள் பெரும்பாலும் ஆசிரியர் வீட்டின் திண்ணையில் அமைந்திருந்ததால் அவற்றைத் திண்ணைப் பள்ளிக்கூடங்கள் என்றனர். இவற்றைத் தெற்றிப் பாடசாலைகள் என்றும் கூறுவதுண்டு. தெற்றி என்பது திண்ணையைக் குறிக்கும். இப்பள்ளிக்கூடங்கள் ஆசிரியர் வீட்டுத்திண்ணைகளிலேயன்றி ஊரில் உள்ள பொதுவான இடத்தில் பெரிய மரத்தின் அடியில் மேடை போன்று அமைத்து அதில் நடைபெறுவதும் உண்டு. அதனை ஊர் அம்பலம் என்றும் கூறுவர். அவ்வம்பத்திலும் அம்பலத்தில் அமைந்துள்ள தெற்றிகளிலும் திண்ணைப் பள்ளிக்கூடங்கள் நடைபெற்றன. இத்திண்ணைப் பள்ளிக்கூடங்களைக் குருகுலம் என்றும்

குறித்தனர். குருகுலம் என்பது ஆசிரியர் எழுந்தருளியுள்ள கோயில் எனப் பொருள்படும். இத்தகைய பள்ளிகள் ஊர் தோறும் இருந்தன.

**ஆசிரியர்:** பழங்காலத்தில் ஆசிரியர்கள் கணக்காயர் என்றும் வழங்கப்பட்டனர். கணக்கு என்பது நூலின் பெயர். கணக்காயர் என்றால பல நூல் தொகுதியை உடையவர் என்பது பொருள். இவர்கள் பல நூல்களையும் கற்று ஆய்ந்து தம மனத்துள்ளே தொகுத்து வைப்பவர்கள். இவர்களை 'அளக்கலாகா அளவும பொருளும்' உடையவர் என்று கூறுவர். ஆசிரியர்களைத் தெய்வமாகவே எண்ணி வழிபட்டார்கள். 'எழுத்தறிவித்தவன் இறைவனாகும்' என்று வெற்றி வேற்கை கூறுகின்றது. இவர்கள் கல்வி கற்பித்தலோடு ஊரில் நடைபெறும் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் இன்றியமையாதவர்களாகக் கருதப்பட்டனர். 'மங்கல மாகி இன்றியமையாது யாவரும் மகிழ்ந்து மேற்கொள்ள விளங்கும் மலர்களை' ஆசிரியர்களுக்கு உவமையாகக் கூறியிருக்கின்றார்கள்.

**பள்ளிக்கூடங்கள்:** இயற்கையாக உள்ள மரத்தடியிலும் வனங்களிலும் சென்று மிகப் பழங்காலத்து மாணவர் கல்வி கற்றனர். மரத்தடியில் இருந்த பள்ளிக் கூடங்கள் நாளடைவில் சிறு குடிசைகளாக மாறின. பின் ஆசிரியர்களின் வீட்டுத் திண்ணைகளே பள்ளிக்கூடங்களாக மாறின. ஒரு ஆசிரியரிடத்துப் பல மாணவர்கள் சேர்ந்து பாடம் கேட்கும் வழக்கம் தொன்று தொட்டே இருந்து வந்தது. அம்மாணவர்களை ஒரு சாலை மாணாக்கர் என்றழைத்தார்கள். மாணாக்கர் என்பது மாணவர்; சாலை என்பது பள்ளிக்கூடம்.

**பாடங்கள்:** திண்ணைப் பள்ளிக்கூடங்களில் ஆசிரியர்கள் வெறும் படிப்போடு மட்டுமன்றி மாணவர்களுடைய ஒழுக்கத்தையும் வரம்பு செய்து திருத்தி வந்தார்கள். மாணவர்களிடையே எவ்வடிப்படையிலும் வேறுபாடு இல்லை. யாவரும் சமமாகவே கல்வி கற்றனர். ஈட்டிய செல்வங்களை நல்ல வழியில பயன்படுத்தி வாழும நிலையை உண்டாக்குவது கல்வியே என்று கருதினர். அரண்மனையில் பிறந்த அரசகுமாரனும் பள்ளிக்கூடத்தில் சாணையிடப் பட்டால் தான் பிற்காலத்தில் ஒளிவீசித் திகழ்வான என்று கருதினர்.

**பயிற்றுமுறை:** திண்ணைப் பள்ளிகளில் மாணவர் தம் ஐந்தாம் வயதிலிருந்து கற்கத் தொடங்கினர். தாய் தந்தையர் தம் மக்களை ஆசிரியரிடம் அடைக்கலமாக ஒப்படைத்தனர். விசயதசமி அன்று மாணவர்களைப் பள்ளிகளில் சேர்ப்பது மரபு. மாணவர் முதலில் தமிழெழுத்தை எழுதத் தொடங்கியே கற்கத் தொடங்கினர். எழுதத் தொடங்கும் போதே 'ஓம் நமச்சிவாய' என்றாவது 'ஓம் நமோ நாராயணாய' என்றாவது எழுதத் தொடங்குவது வழக்கம் பின் ஓலைச்சுவடி ஏட்டினமீது மஞ்சளைப் பூசிக்கொடுத்து மாணவனை வாசிக்கச் செய்வார்கள். ஆசிரியர் நெடுங்கணக்கைச் சொல்லிக் கொடுக்க மாணவன் அதனைப் பின்பற்றிச் சொல்லுவான். இவ்வாறு ஆசிரியர் ஒன்றைச் சொல்ல, அதை மாணவர் பலரும் சேர்ந்து சொல்வதை முறை வைப்பதென்று கூறுவர். ஆசிரியர்களுக்குப் பதிலாகச் சில நேரங்களில் சட்டாம் பிள்ளை முறைவைப்பதுண்டு. எழுத்துப் பயிற்சிக்குப் பிறகு மாணவர் ஒவ்வொரு சுவடியாகப் படிக்கத் தொடங்கும் காலம் சிறப்பாகக் கொண்டாடப்படும். சுவடித் தொடக்கமென்று இதனைச் சொல்வார்கள்.

சுவடிகளிலுள்ள எழுத்துகள் செவ்வனே தெரிவதற்காகச் சுவடியில வசம்பு, மஞ்சள், மணத்தக்காளி இலைச் சாறு அல்லது ஊமத்தை இலைச்சாறு, மாவிலைக்கரி, தர்ப்பைக் கரி முதலியவற்றைக் கூட்டிச் செய்த மையைத் தடவிப் படிப்பார்கள். இத்தகைய மை எழுத்துகளை விளக்கமாகக் காட்டுவதோடு கண்ணுக்குக் குளிர்ச்சியையும் தரும்.

ஆசிரியர் சொல்வதைப் பிள்ளைகள் தொடர்ந்து கூறும்போது பலவகை வேறுபாடு உடைய ஒலிகளும் ஒன்றுகூடிக் கேட்கும். அவ்வோசையைப் பல தவளைகள் சேர்ந்து சத்தமிடுதலுக்கு உவமையாகக் கம்பர், 'கல்வியிற்றிகழ் கணக்காயர் கம்பலை, பலவிதச் சிறாரெனப் பகர்வ பல்லரி' என்று கூறுகிறார்.

மாணவர்கள் முதலில மணலில எழுதிப் பழகுவார்கள். அதனால அவர்களுடைய எழுத்துகள் வரிசையாகவும் நன்றாகவும அமையும். ஆசிரியர் முதலில தரையில எழுத அதன் மேல பிள்ளைகள் விளம்புவார்கள். பிறகு தாமே எழுதிப் பழகுவர்.

**மனனப் பயிற்சி:** அக்காலத்தில அடிப்படையான நூல்கள் எல்லாம் பிள்ளைகளுக்கு மனனமாக இருக்கும். தமிழில் நிகண்டு, நன்னூல், காரிகை, தண்டியலங்காரம், நீதிநூல்கள் முதலியன பாடமாக இருக்கும். கணிதத்தில் கீழ்வாயிலக்கம், மேல வாயிலக்கம், குழிமாற்று முதலிய பலவகை வாய்ப்பாடுகள் பாடமாக வேண்டும்.

பள்ளிக்கூட மாணவர்கள் தமக்குத் தெரிந்த பாடங்களை அடிக்கடி சிந்தித்து வருவார்கள். பலர் ஒருங்கு கூடிக் கேள்விகள் கேட்டும் விடைகள் கூறியும் கற்று வந்தார்கள். இதனால் அவர்களுடைய கல்வி எந்த வேளையிலும் தடையின்றி விளங்கியது. புத்தகத்தின் துணையின்றியும் குறிப்புகளின் துணையின்றியும் ஒரு

பொருளைப் பற்றிப் பேசுவதும், ஒரு செய்யுளுக்குப் பொருள கூறுவதும், ஒரு செய்தியுள்ள இடங்களைச் சொல்வதும் அவர்களுக்கு எளிதாக இருந்தது.

**சுவடிகள்:** மாணவாகள் தஙகள சுவடிகளை மிகவும் நன்றாக வைத்திருப்பார்கள். இளம் மாணவர்களுக்கு ஆசிரியர் ஓலையை வாரி ஒழுங்காக நறுக்கித் துளையிட்டுக் கயிறு கோத்துத் தருவார். ஏனையோர் தாங்களே செய்துகொளள வேணடும். பனை ஏடு, சீதாளபத்திரம் முதலியவறறில் எழுதுவது வழக்கம. மேலே சட்டமாகப் பனை மட்டையின் காம்பை நறுக்கிக் கோப்பாாகள. ஏடுகளில் இரட்டைத் துளை யிட்டு ஒரு துளையில செம்புக் கம்பி அல்லது மூங்கிற் குசசியைச் செருகிக் கட்டுவார்கள.

**எழுதுதல்:** ஓலையில் எழுதுவதறகுரிய கருவியை எழுத்தாணி என்றனர். மடக்கெழுத்தாணி, வாரெழுத்தாணி, குணடெழுத்தாணி எனப் பலவகை எழுத்தாணிகள் உணடு. ஒருபககம் ஓலையை வாருவதற்குக கத்தியும் மறுபககம் எழுதுவதற்கு எழுத்தாணியும் அமைந்த எழுத்தாணிகளும் உணடு.

எழுதுபவர்கள் எழுத்தாணியை வலக்கையிற பிடிதது்க் கொணடு இடக்கையில ஏடடைப் பிடித் திருப்பார்கள். எழுதும போது இடது கைபெரு விரல நகத்தில் சிறிதளவு பளளஞ்செய்து அந்த இடத தில் எழுத்தாணியைச் சார்த்திக கொணடு எழுது வார்கள். மாணவாகளுக்கு எழுதும் பழககம் நன்றாக உண்டாக வேணடுமெனறு ஆசிரியர்கள் ஒவ்வொரு நாளும் அவாகளைத தனித்தனியே ஏடுகளில் தாம மேலே எழுதி அதைப் போல் எழுதிவரச சொல்வார்கள். இதற்குச் சட்டம் எனறு பெயர்.

**கலந்துரையாடல்:** கல்வியில் கலந்துரையாடல இத் திணணைப் பளளிகளில் இருந்தது. பள்ளிக்கூடத்தில மாணவன் நூலபயிலும் இயல்பை விளக்க வநத பழைய நூற்பா ஒனறு 'வினாதல் வினாயவை விடுத் தல் எனறிவை கடனாகச் கொளினே மடநனி இகக் கும்' என்று முடிக்கினறது.

**தண்டனைகள்:** திணணைப் பளளிக்கூடத்தில பிளளைகள அடைந்த தணடனைகள பல. இவை பிற் காலத்தில் குறைந்த அறிவுடைய ஆசிரியர்களால் மேற் கொள்ளப்பட்டன. மிகப் பழங்காலததில திணணைப் பளளிகளில் ஆசிரியர் மாணவர்களை அன்பினால வழிப்படுத்தினர்; செம்மையாகக் கல்வி புகட்டினர்.

எஸ்.த.

**துணை நூல்கள்:**

**ஔவையார்,**–கொற்கை வேந்தன், ராஜம, வெளியீடு முதற் பதிப்பு சென்னை, 1959.

**சாமிநாதையர், உ.வே,**–நல்லுரைக் கோவை (முதற் பாகம்), ஸ்ரீதியாகராச விலாச வெளியீடு,-1958.

**பவணந்தி முனிவர்,**–நன்னூல்,–சிதம்பர சைவப் பிரகாச வித்தியாசாலை, 1957.

**திணை:** 'மண் திணிந்த நிலனும்' (புறம்.2), 'திணிமணல் அடைகரை' (குறு.165) போன்ற தொடர் களால் திண, திணி, திணை என உருவாகும் சொல் வடிவை அறியலாம். திணணிதான நிலத்தையே முதலில திணை என்னும் சொல் குறித்தது என்பது இதனால் புலனாகிறது. திணை என்னும் சொல்லால், 'பல்திணை' (பொரு 221), 'ஐம்பால் திணை' (மது. 326) என நிலத்தைச் சுட்டிய சங்கப் பாடல்கள் பல வாகும். தொல்காப்பியத்திலும் 'திணைதொறும் மரீஇய திணை நிலைப் பெயரே' (966) எனனும் போது அது நிலத்தையே குறிக்கிறது. பிறகு இச்சொல அந் நிலத்திற் பிறந்த குலத்தினரை, குடியினரைக் குறிகக லாயிற்று. 'வானதிணைப் புரையோர்' (குற்றமில லாத உயர்நத குலத்திற் பிறநத உயாநதோர்–நச்சர் குறி.205), 'இத்திணைப் பிறத்தல' (இக்குடியில பிறத் தல் குறு.45), விழுத்திணை-சிறநத குடி (புறம்.27,159) என்னும் ஆட்சிகளைக் கணலாம். 'மூத்த விழுத்திணை' (புறம்.24), 'வசையில் விழுததிணை, (புறம் 159) என் னும் அடைமொழிகளும் இவவுண்மையைக் காட்டும். இனி அம மக்களின் ஒழுக்கத்தையும் இசசொல குறித் தது. மலைபடுகடாத்தில 'தொலதிணை மூதூர்' (401) என வருமிடத்தில் 'பழையதாகிய உயர்நத ஒழுககத் திணையுடைய பழைய ஊர்கள்'' எனறு நசசினார்க் கினியர் உரையெழுதுகிறார். தொல்காப்பியத்தில இலக்கணக் கலைச்சொல்லாகவும இலக்கியக் கலைச் சொலலாகவுமே இது பெரிதும் பயன்படுகிறது. அறிவு ஒழுக்கஙகளால் சிறந்த மக்களைச் சுட்டும் சொற்கள் உயர்திணை என்றும் மக்களல்லாத அனைத்தையும சுட்டும் சொற்கள் அஃறிணை எனறும் பாகுபடுத்தும போது திணை எனபது இலக்கணக் கலைச் சொலலா கிறது. ஆயினும் பொருளதிகாரத்தில் இது பெரிதும் இலக்கியக் கலைச் சொல்லாகவே ஆளப்படுகிறது.

**திணை இலக்கியக் கலைச்சொல்:** திணை என்பதற் குரிய அகராதிப் பொருள்கள் மேற்காட்டியவாறு பல நிலையின. அச்சொலலே ஒரு கலைச் சொல்லாகும் போது (Literary term) இலக்கிய அடிப்படை வகை மையைச் சுட்டுகிறது. முற்கூறிய அகராதிப் பொருள் களின் வழியேதான் இக்கலைச சொல உருவாகியுள தெனினும், இவ்விரிநத பரந்த ஆழமான பொருளுக்கு இடமளித்தபின், முனனைய பொருள்கள் அதனுள் அடங்கிவிடுகின்றன. வெளிப் போநத பொருள இலக் கிய வகைமையேயாகும்.

அகத்திணை மருங்கின் அரிலதப உணர்நதோர்
புறத்திணை இலககணம் திறப்படக் கிளப்பின . (1002)

என்னும்போது அகததிணை எனபது ஒரு வகைமை என்பதும் அவவகை பற்றிக் குற்றமறத தெரிநது கொண்டவர்களுககுப் புறததிணை எனற வகைமையின் இலக்கணம எளிதிறபுலனாகும் எனபதும உணர்த்தப்படுகினறன. இங்கே திணை, செய்யுளை வகைப்படுத்த வருதலை நினைவிற் கொள்ள வேண்டும்.

புறத்திணை மருஙகின பொருந்தின அல்லது
அகத்திணை மருங்கின் அளவுதல இலவே (1001)

'சுட்டி ஒருவரது பெயரைக் கூறுதல் புறத்திணைப் பகுதியில் மட்டுமே வரும்' என்றது அகத்திணையுள இடம் பெறுகின்ற புறப் பகுதியில வரினும் வரலாம, அல்லாமல் அகப்பகுதியில் ஒருதலையாக வாராது என உணர்த்துதலாகும இது வகைமைப் பாட்டின நுட்ப மொனறையும் உணர்த்துகிறது ஒருவரது இயற்பெயர் முதலியன சுட்டப்பட்டு விட்டால அது அகம் என்ற வகைமைப் பாட்டை விட்டு விலகிவிடுகிறது. அகத் திணைப் பாடலில வரக்கூடாது எனறும அகத் திணைப் பகுதியுள் வரக்கூடாது எனறும கூறும் இரு விளக்கங்களும் 'அகம்' என்ற வகைமையின தனமையையே சுட்டி நிற்கின்றன.

கைக்கிளை முதலாப் பெருநதிணை இறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப (947)

என்னும்போது அகத்திணையின உள்வகைகள் ஏழும் கூடத் திணை எனவே பாகுபாடு செய்யப் படுதலைக் குறிப்பதாகிறது. முற்படக் கிளந்த இவை மட்டுமனறிப் பிற்படக் கிளநத புறம பறறிய ஏழுதிணைகளும உள வென்பதும் பெறப் படுகிறது. 'நடுவண ஐநதிணை நடுவணது ஒழிய' (948)எனறால் இடையிலுள்ள ஐந்து வகைகளுள் நடுவிலுள்ள பாலைத திணை நீஙக, எஞ்சிய நான்கும் தத்தமக்கு என நிலம்பெறும என்பதும், அதாவது அவ்வந் நிலததின் பெயராலதான அவை வகைமைப் படுத்தப்பட்டுளளன எனபதும் புலனாகின்றன. எனினும், அவை இஙகு இலக்கிய வகைமைகள ஆன பிறகு, அவறறைக் கொணடு இவ வையகம் பாகுபடுத்தப் பட்டிருப்பதாகக் கூறபபடுகிறது. இலக்கியக் கலைச் சொல்லான பின், அதறகுத் தனிச் சிறப்புக் கொடுத்துத் தொல்காப்பியர் கூறுந்திறனை இதிற் காணலாம்.

புணர்தல் பிரிதல் இருத்தல இரங்கல்
ஊடல் இவற்றின நிமித்தம் என்றிவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே (960)

அகத்திணைப் பாடல்களின உரிப்பொருள, இத்தகைய மககளின காதலுறவுகளாகும். நிலமக்களின வாழ்க்கைச் செயறபாடுகளே இஙஙனம் பாடு பொருளாகின்றன. 'திணை மயக்குறுதலும் கடிநிலை இலவே, நிலன் ஒருங்கு மயங்குதல இனறெனமொழிப' (958) என்பது இவ்வகப் பாடலகளில் ஒரு திணைக்குரிய செய்தி (கருவும் உரியும்) பிற திணைகளில் மயங்கியும் வரலாம என்றும், நிலம மட்டும் மயஙகாது எனறும் அதாவது ஒரு பாடலில் இரண்டு நிலம் மயங்கி வராதெனறும குறிப்பிடப்படுகிறது. இப்பாடலகள் நில அடிப்படையில் தோனறியவை என்பதற்குத் தக்க சான்றாகிறது.

உள்ளுறை உவமம் ஏனை உவமம் எனத்
தள்ளாதாகும் திணை உணர் வகையே (992)

உவமைகளிரண்டும் கருப்பொருளை அடிப்படையாகக கொணடு பிறப்பன வாதலால, அவை ஒரு பாடலில் இடம்பெறும் முறையை வைத்துககொணடு இப்பாடல் இன்ன திணையென்று தப்பாமல் வகைமைப் படுத்திவிடலாம். எனவே, வகைமைப் பாட்டையே 'திணை' குறிக்கிறது. மக்கள் வாழ்வு பற்றிய இலக்கியமனைததையும் 'திணை' எனற பொதுப் பெயரால முதலில் சுட்டினார். அவற்றுள் காதல பற்றியனவும மரபுகளுக் குட்பட்டனவுமானவற்றை அகத்திணை என்றும் பிறவறறைப் புறத்திணை என்றும் பகுததனா. அவை இரணடின உள்வகைகளையும் கைககிளைத் திணை, பெருந்திணை, வெட்சித் திணை,வஞ்சித் திணை என இவ்வாறு திணைப் பெயராலேயே குறிப்பிட்டார். இவை யாவும் மேனமேலும் பாடல்களை வகைமைப படுத்தும முயற்சியையே சுட்டுகின்றன.

அகப்புறப் பாடல்களுககுத் 'திணை'ப் பெயர் எவ்வாறு வந்தது? அவை நிலம் பற்றியன. குறிஞ்சி நில மக்கள் பாடிய பாடல்களில அந்நிலக் கருப் பொருள்களே இடம் பெறறன. அந்நில மக்களின வேட்டையாடலும தினைப்புனம் காத்தலுமாகிய பழக்கங்களே பாடு பொருளாயின. களவு வாழக்கை மலைவாழ் மக்களிடம் மேலோஙகிக காணப்பட்டதால, குறிஞ்சித் திணை பெரிதும் களவுத் திணையே யாயிற்று. மருத நில மக்கள பயிர் செய்து பண்டமாறறில தலைமை பெறறுச் செல்வக் குடியினராய் வாழந்ததால ஆங்குக் கலை ஆடல பாடல்கள பரவ, பரத்தமையும வாழ்வின் ஒரு பகுதியாயிற்று அம் மருத நிலக் கருப்பொருளகள் இடம் பெற்றதுடன், முற்கூறிய பரத்தை வாழவுத் தொடர்பான நிகழ்சசிகள் பெரிதும் இடம் பெற்றன. அவை வாயமொழி இலக்கியங்களாக இருநதபோது, இஙஙனம் நிலத்துக

குச் சொந்தமான பாடல்களாய், மக்கள் ஒழுகலாற் றைக் குறிப்பனவாய் இருந்தமையால்தான் பிறகு வரிவடிவ இலக்கியமானபோதும் அதே நிலம், குடி மக்கள் ஒழுகலாறு இவற்றினடிப்படையிலான பாடல் களாய் உருவாயின. இதிலிருந்து 'திணை' என்பதற் குரிய முன்னைய அகராதிப் பொருளகளே, அது தமிழிலுள்ள அடிப்படையான இலக்கிய வகைமை களின் பெயராதற்கு உதவின என்பதும் உறுதிப்படு கிறது.

**அகத்திணை, புறத்திணை விளக்கம்:** திணை என் பது அகத்திணை புறத்திணை என்ற இரண்டு வகை மைகளின் பொதுப் பெயராகும். அகத்திணை என்பது அகம் பற்றிய செய்யுள்கள் அல்லது இலக்கியம் ஆகும்.

அகம் புறம் என்பன யாவை? திணை இங்ஙனம் பிரிக்கப்படுவதன் அடிப்படை யாது? 'அகப் பொரு ளாவது போக நுகர்ச்சியாகலான் அதனான் ஆய பயன் தானே அறிதலின் அகம் என்றார். புறப் பொருளாவது மறஞ் செய்தலும் அறஞ் செய்தலும் ஆகலான் அவற்றான் ஆய பயன் பிறர்க்குப் புலனா தலின் புறம் என்றார்' என்று இளம்பூரணர் விளக்கு கின்றார். அவரைப் பின்பற்றி நச்சினார்க்கினியர் சிறிது விரிவான விளக்கம் தருகிறார்.

'ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம், அக் கூட்டத்தின் பின் னர் அவ்விருவரும் ஒருவர்க் கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவ தோர் பொருளாதலின அதனை அகம் என்றார். எனவே, அகத்தே நிகழகின்ற இன்பத்திற்கு அகமென றது ஓர் ஆகுபெயராம். இதனை ஒழிந்தன ஒத்த அன் புடையார் தாமேயன்றி எல்லார்க்கும் துய்த்துணரப் படுதலானும், இவை இவ்வாறிருந்ததெனப் பிறருக்குக் கூறப்படுதலானும் அவை புறமெனவே படும்' என்பது நச்சினார்க்கினியம். இவற்றிலிருந்து அகம் புறம் என்ற பகுப்புகள் மக்கள் மன உணர்ச்சி, ஒழுக்கம், இவற்றை அடிப்படையாகக் கொணடு, அவற்றை உணர்த்தும் இலக்கிய வகைமைகளுக்குப் பெயராயின என்று உணரலாம். சேவியர் தனி நாயக அடிகளார் தம் 'பழந்தமிழ் இலக்கியத்தில் இயறகை'பற்றிய ஆங் கில நூலில் தரும் விளக்கம் வருமாறு: 'தமிழிலக்கி யத்தில் இது அடிப்படையான பிரிவாகும். உளவியல் மற்றும் மன அனுபவ நிலைகள பற்றிய அடிப்படை யில் இப்பிரிவு செய்யப்பட்டுள்ளது. அகம் என்றால் 'உட்புறம்', 'வெளிப்புறம்' எனப் பொருளபடும் புறத் திற்கு இது மறுதலையானது. மிக உட்புறமான, தனிப் பட்டதான, நேரே வெளிப்படக் கூற முடியாத மனித அனுபவங்கள் அகத்தினுள அமைகின்றன. அதாவது காதலும் அதன் பல நிலைகளுமாகும். இங் ஙனம் உள்ளார்ந்த உட்புறமான அனுபவங்களல்லாத அனைத்தும் புறம் என வகைபபடுத்தப்பட்டன. காதல் பாட்டு அகமாகவும், நீதி, கையறுநிலை, புகழு ரைப் பாட்டுகளாகிய பிற அனைத்தும் புறமாகவும் அமைகின்றன.' முற்கூறிய உரையாசிரியர்கள் வழி யிலேயே, இவ்விளக்கம் இக்காலத்திற்கேறப எழுதப் பட்டுள்ளது. பேராசிரியர் வ.சுப. மாணிக்கம் அகம் என்றால் வீடு எனக் கொண்டு விளக்கம் தருகிறார். அவர் தம் 'தமிழ்க் காதல்' நூலில் தரும் விளக்கம் வருமாறு. 'அகத்திணை என்ற தொடரில் 'அகம்' என னும் சொல்லுக்கு இயல்பான பொருள வீடு அல்லது குடும்பம் ஆகும். காதலே அகத்திணை நுதலுவது. அகத்திணை மாந்தரெல்லாம் ஒரு வீட்டுறுப்பினர் களே. . காதலர் தம் உள்ளப் புணர்ச்சி அவ்விலக்கி யத்தின் உயிர்க் கூறு. உள்ளம் என்னும் பொருளும் அகச் சொல்லுக்கு இயல்பாக இருத்தலின் அகத திணை என்று இலக்கியக குறியீடு வைத்தனர்'. இது காறும் பாாத்த விளக்கங்கள அனைத்தும் பாட்டுப் பொருளால் வகைமைப் படுத்தப்பட்ட பாங்கையே உள்ளடக்கியன. இனி திறன், மரபு அடிப்படையிலும் அவை பாகுபடுத்தப்பட்டுளளமையை எண்ணிககாண லாம்.

பேராசிரியர் மு. வரதராசனார் சங்க இலக்கியம் பல்வகை நிலஙகளில் பாடப்பட்டு வந்த நாட்டுப் பாடல்களின் இலக்கிய வடிவங்கள் என்றும் அகப் பாடல்களைப் பெயர் குறிப்பிடாமலும் புறப்பாடல் களைப் பெயர் சுட்டியும் பாடுதற்குக் காரணம் நாட் டுப் பாடல் வழிவந்த மரபே என்றும் தம தமிழ் இலக் கிய வரலாற்றில் குறிக்கின்றார்.

புறநானூற்றில் பேகன் தன் மனைவி கணணகி யைப் பிரிந்துறைவது பற்றிய பாடல்கள குடும்பப் பாடல்களேயாயினும் புறமென வகைமை செய்யப் பட்டுள்ளன நக்கணணையாரின காதல பாடலகள புறத்தில் கோக்கப்பட்டுளளன. நெடுநல்வாடை அகப் பாடலேயாயினும் 'சுட்டி ஒருவர்ப் பெயர்' தெரித லால் புறமென ஐயம் தோற்றுவிக்கப்பட்டுள்ளது. இதை நோக்கும்போது பொருளால மட்டுமனறி, திறன் உத்தி மரபுகளாலும் அகம் புறம் எனக் கருதப் பட்டமை புலனாகிறது.

எனவே, பெயர் வெளிப்படத் தெரியாமல், மறை வாகப் பொதிந்திருப்பதை அகம் என்றும, அப்பெயர் முதலியன வெளிப்படப் புனையப்பட்டவற்றைப் 'புறம்' என்றும் கருதுமாறும் இதன் வளர்ச்சி நிலை யுளது. முதற்கண் அகத்தை வரையறைப் படுத்திக்

கொண்டு, பிறகு ஓரியலில் மட்டும் புறத்தை விளக்கு கிறார் தொலகாப்பியர். இதிலிருந்து 'அகம்' என ஒன்றை வரையறைப் படுத்திக கொணடு, பிறகு அக மல்லாதவற்றையும் அகத்திற்குரிய மரபுகளில விலகியவற்றையும புறம் என வகுத்தமையும புலனா கிறது.

**அகத்திணை வகைகள்:** அகத்திணை கைககிளை, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல, பாலை, பெருந் திணை என ஏழு வகைகளை உடையதாகும். இவற் றுள் முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனபன நான் கும் முறையே காடு, மலை, வயல, கடல் சார்நத பகுதிகளாகும். பாலைக்குத் தனிநிலம் இன்று. காடு, மலைப பகுதிகளின எல்லையோரத்தில, கோடை காலததே வறட்சியுற்றுப் பாலையாக மாறும் நிலம் மீண்டும் மழைக் காலத்தில் தணமை யுற்று விளங்கும். எனவே. முல்லை, குறிஞ்சி சாாநத நிலப பகுதிகளே காலததை ஒட்டிப் பாலை எனப் பட்டன. தகா ஒழுகலாறுகள் என்ற நிலையில கைக கிளைக்கும் பெருந்திணைக்கும் நிலம் வகுக்கப்பட வில்லை.

அகத்திணை சார்ந்த பாடல்கள் முதல, கரு உரிப்பொருள எனற அடிப்படை உடையன. முதல என்பது நிலமும், பொழுதும் ஆகும. கரு என்பது அவ்வந்நிலத்திற்குரிய தெய்வம், மக்கள, உணவு, விலஙகு, பறவை, மரம் செடி கொடி போன்றவற றைக் குறிக்கும். உரிப்பொருள் என்பன புணர்தல், பிரிதல், இருததல, இரங்கல், ஊடல இவற்றின நிமித் தம் எனப்பட்ட மக்களின் காதல் ஒழுக்கச செய்தி களாகும். இவற்றைப் புனைவதே அகததிணை இலக் கியமாகும்.

**புறத்திணை வகைகள:** புறத்திணை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண என ஏழு வகைப் படுத்தப்பட்டுளளது. இவற்றுள் முன்னைய நானகும் போர் வகைகள பற்றியன. வெட்சி என்பது ஆனிரை கவாதலும் மீட்டலும் பற்றிய போராகும். பிற்காலத்தில் இதனை இரண்டு வகைகளாக்கி வெட்சி கரந்தை எனப் பிரித் தனர். வஞ்சி எனபது நிலத்தைக் கவர்தலும அதைப் பகைவரிடமிருந்து காத்தலும் பற்றிய போராகும். இதனையும் பிற்காலத்தில் இரணடு பிரிவுகளாக்கி விட்டனா. நிலத்தைக் கவரும போர் வஞ்சி எனவும் அதைத் தடுத்து நிறுத்தும் போர் காஞசி எனவும வகுக்கப்பட்டன. உழிஞை எனபது பெரிய கோட்டை கொத்தளஙகளுள்ள தலைநகரஙகளில நடக்கும மதில போராகும். இதனையும் பிறகாலத்தில இரணடு பிரிவுகளாககி விட்டனர். மதிலைத் தாக்கும் போர் உழிஞை எனவும், அதைத் தடுத்துக் காக்கும் போா நொச்சி எனவும் பிரிக்கப்பட்டன. தொலகாப்பியர் கரநதை, நொச்சி என்பனவறறை உட்துறைகளாகவே சுட்டினாா. அவை பினபு மேறகாட்டியவாறு தனித் திணைகளாககப்பட்டன. தும்பை எனபது மனனா கள் ததம் வலிமையை நிலைநாட்டுவானவேணடி நேருக்கு நோ நினறு போருக்காகவே செய்யும கடும சண்டையாகும. தொலகாப்பியர் கருத்துபபடி வாகை என்பது, போரிலேற்படும் வெறறியினையும வாழ்ககை யில் பிறரினும மேமபடும வெற்றிகளையும் குறிக்கும். காஞ்சி போரினாலேறபடும இரஙகலையும் மறறும் பொதுவான அவலம் பறறிய இரஙகலையும் பாடுவ தாகும. பாடாண எனபது, கொடை, அளி, செங கோல், வீரம முதலிய சிறப்புகளைப புனைவதாகும. தொலகாப்பியர் புறததிணை ஏழு என வகை செய்த வறறைப் பிறகாலத்தாா பனனிரணடு என அதிகப் படுத்தினா. வெட்சி, கரந்தை, வஞசி, காஞசி, உழிஞை, நொச்சி, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல, கைக்கிளை, பெருநதிணை என்பன அவை.

அகமும் புறமுமாய் அமைந்த பழநதமிழ்ப் பாடல்களைச் சங்க இலக்கியம் எனக குறிபபது காலப் பின்னணியையும் சமுதாயச சூழ்நிலையும் பற்றிய பெயரேயாகும்; திணை இலக்கியம் எனபதே வகைமை பறறிய பொருத்தமான பெயராகும்,

இராம.பெரி.

***திணைமாலை நூற்றைம்பது.*** இந்நூல் பதினெண கீழ்க்கணக்கு நூல்களுள ஒனறு; அகப் பொருளைப் பாடுபொருளாகக் கொணடது. இது ஏலாதி நூலினைசசெய்த கணிமேதாவியாராற் செய யப்பெற்றது இவரை மதுரைத் தமிழாசிரியர் மாக்கா யனார் மாணாக்கர் என்று கூறுவர். இந்நூலாசிரிய ருக்குக் கணிமேதை என மற்றொரு பெயா உண டெனப் பாயிரச செயயுளால் அறிய முடிகினறது. இந்நூலில் குறிஞ்சி, நெய்தல், பாலை, முலலை, மரு தம் எனத திணைவைப்பு அமைக்கப்பெறறுளளது. திணைக்கு முப்பது பாடல்களாக 150 பாடலகளால் இநநூல் அமைககப்பெறறுளளது. எனறாலும் குறிஞ்சி, நெயதல், முல்லை ஆகிய திணைகள் ஒவ் வொன்றும் ஒவவொரு மிகைப் பாடலைக் கொண டுளளன. அதனால், இந்நூலின கூடுதல பாடல் எண ணிக்கை 153 ஆகும். இவற்றுள் 152 பாடலகள் நேரிசை வெண்பாக்களால் இயன்றவை. ஒரு பாடல மட்டும இனனிசை வெணபாவால் இயனறது. உடன் போக்கிற்சென்ற தலைவனையுந் தலைவியையும் தேடிச் சென்ற செவிலிககு வழியில் எதிாபட்ட ஓரா

டவனும அவன் துணைவியும் அவர்களைக் கணட தாகக கூறும பாட்டில் 'வெஞ்சுடரன்னானை யான் கணடேன்,கணடாளாம தண்சுட ரன்னாளைத்தான்' எனபதிலிருந்து ஆசிரியரின மனநிலையை அறியலாம. மேலும், இந்நூலின் 'இம்மையிற் செய்தது இம்மையி லேயே பயனளிக்கும்' என்னும் கருத்து சிந்திக்கத் தககது. நச்சினாாக்கினியர் தொல்காப்பிய உரையில் பலவிடத்தும் இந்நூலை மேற்கோள் காட்டியிருப்ப தாலும், மாணிக்கவாசகர் தம் திருச்சிற்றம்பலக் கோவையாரில் இந்நூற் சொலலையும் பொருளை யும் எடுத்தாளுதலாலும் இந்நூலின் பெருமை புல னாகினறது.

இநநூலுககுப் பழைய உரையொனறு கிடைத் துள்ளது. விளககமும் சிறபபும் கொணடமைநத அவ் வுரை 127 பாடல்கள் வரை கிடைத்துளளது. அவ் வுரையோடு மூலததையும் சோத்து 1908-இல ரா. ராகவையஙகார் வெளியிட்டுள்ளார். மு.செ.

**திணைமொழி ஐம்பது,** பதினெணகீழ்க் கணக்கு நூலகளுள் ஒனறு; அக வொழுக்கம பற்றி யது. இது சாத்தநதையார் மகனார் கணணன சேந்தனார் என்னும் நலலிசைப புலவரால இயற்றப் பட்டது. டாகடர் உ.வே. சாமிநாத ஐயர் இநநூலா சிரியர் சாததநதையாரின் புதல்வா எனவும் சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளியைப் பாடிய சாத் தந்தையாரே கணணஞ் சேந்தனாரின தந்தையார் எனவும் கூறுவர். இநநூலுள குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்ற திணைவைப்பு முறை பினபற்றப்பட்டுள்ளது. ஒவ்வொரு திணைககும் பத்துப் பாடலகளாக ஐம்பது பாடல்கள உள்ளன. வெணபாக்களால இயனற இந்நூல் நாற்பத்தாறு இனனிசை வெணபாக்களையும் நான்கு நேரிசை வெணபாக்களையும் கொணடது. இதிலுள்ள பாடல கள எதுகை மோனை முதலியவற்றைப் பெரும பானமை பெற்றும் தெளளிய இனனோசை வாய்ந் தும் பொருள் புலப்பாடு சிறந்தும் தோன்றுதலின இந்நூலில் சங்க இலககியச் சாயல் மிகுதியும் தென் படுகினறது எனபர்.

'கணம்' 'சித்திரம்', 'வித்தகம்', 'குணம்', 'பவமை' போனற மிகச்சில வடசொற்களே இதன் கண பயின்றுள்ளன. இந்நூலில 'கணமுகை கையெ னக் காந்தள கவின மணமுகை யெனறெணணி மந்தி கொணடாடும் விறன மலைநாட' எனவும 'பலவின் பழம் பெற்ற பைங்கட் கடுவன் எலவென் றிணை பயிரு மேகல் சூழ்வெறபன' எனவும் ஆங்காங்கே உளளுறை நலஞ்சானற பாடலகள பல காணப்படு கின்றன. இந்நூலின் பாடல்கள் பல, தொலகாப்பிய உரையில் பலவிடத்தும் எடுத்தாளப்பட்டுளளமை இதன் சிறப்பைக் காட்டுகின்றது.

இந்நூலுக்குப் பழைய உரையொனறு உள்ளது. இவவுரையில் பதசாரம், உள்ளுறை, இலக்கண விளக் கம்போன்றவைஇடம்பெறவில்லை.அதுஎளியபொழிப் புரையாக அமைந்துளளது. இவ்வுரையோடு மூலத்தை யும சேர்த்து 1918-ஆம் ஆணடில் சோமசுந்தர தேசிகரும், 1922-ஆம் ஆண்டில் மணி திருநாவுக் கரசு முதலியாரும் பதிப்பித்துள்ளனர். மு.செ.

**தித்தன்:** அகநானூற்றில் பரணர் தித்தனைச் சோழநாட்டு உறநதை நகர்க் காவலனாகச் சித்திரித் துளளார். 'பரத்தையிற் பிரிந்து வநத தலைமகறகுக் கிழத்தி உரைத்தது' எனற துறையில மருதத் திணைப் பாடலாகப் பரணரின இப்பாட்டு அமைந்துளளது இப் பாடலால் சோழநாட்டின் தலைநகராகிய உறந்தை நகர்க் காவலனாக இம்மனனன் போற்றப்படுகின றான். ஆமபல் மாலை அணிந்தவளும், கூரிய பட்டை தீட்டிய வளைகள அணிநத முன்கையினை உடைய வளும், இழையணிநத பருத்த தோள்களைப் பெறற வளும் ஆகிய எழில் அமைந்த நங்கை 'ஐயை' என பாளின் தநதையே இத்திததன ஆவான். வன்மை மிக்க மனனனாகக் கொடை வளஞ்சிறந்தோனாக இவன் விளங்கியமையால 'மாவண் தித்தன்' எனப் போற்றப்படுகின்றான்.

மேலும், அகநானூற்று மணிமிடைபவளப்பகுதிக கண் அமைநதுள்ள 122-ஆம்பாடலிலும் இம்மன னனைப் பற்றிய செய்தி இடம் பெறறுளளது. இப்பாட லைப் பரணர் குறிஞ்சித் திணைப் பாடலாகப்பாடியுள் ளார். 'தலைமகன் சிறைப்புறத்தானாக, தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள சொற்றது-தோழி சொல் எடுப்பத் தலைமகள் சொல்லியதூஉம் ஆம்' என்று துறை அமைக்கப்பட்டுள்ளது. அதில் நொச்சிக் செடிகளை வேலியாக அமைத்த உறந்தை நகர் என வும், அந்த நகரத்தின் தலைவன் தித்தன் எனவும் சுட்டியுள்ளார். நொசசி வேலித் தித்தன'உறநதை' என்பது பரணர் வாக்காகும்.

இவனை, காவிரி பாயும் சோழ வள நாட்டின் தலைநகராகிய உறந்தையினைத் தன் தலைநகராகக் கொண்டு அரசோச்சிய சிறநத வள்ளன்மை மிக்க கொடையாளி எனவும் பேராண்மைமிக்க வீரன என வும் அறியலாம். எழிலார்நத ஐயை என்பாள இவன் அருமை மகள் ஆவாள். கி.கோ.

**தித்தன் வெளியன்:** அகநானூற்றில 152 ஆம் பாடலிலும். 226-ஆம் பாடலிலும் குறிப்பிடப் படுபவன இவன் தித்தன் என்ற மன்னனிலிருநது

வேறுபட்டவுனா அல்லது அவனே இவவாறு குறிக கப்படுகின்றானா என்ற ஐயம் எழுகினறது.

பரணர் பாடிய அகம-152 ஆம் பாடலில 'தித் தன வெளியன' எனற குறிப்பு இடம்பெறறுளளது. அடிக்கடிப் பிறர் மீது போா தொடுதது நாட்டைப் பெருக்குவதால சினம் மாறாது இத்தலைவனும இவ னது தானையும் காணபபடுகினறனர்; ஆகையால 'சினங்கெழு தானைத் தித்தன வெளியன' என அடை மொழி புணர்த்து வழங்கப்படுகின்றான

அடுத்துப் பரணர் பாடிய 'தித்தன வெளியன் உறந்தை நாள் அவை' எனற குறிப்பு (அகம்.226) இடம்பெற்றுளளது. 'தித்தன வெளியன்' உறநதை யில் அரசோச்சுங்கால அவனது நாள அவையில அடிக்கப்படும கிணைபபறை ஒலி கேட்டு அஞ்சிப் பகை மனனர் வெருணடு ஓடுவர் எனற குறிபபு காட்டப்பட்டுளளது. இதனால இததித்தன் வெளியன் பேராணமை மிக்க போராளியாகக் கருதப்பட்டான. உறநதை குறிப்பிடப்படுவது தித்தனும், திததன வெளியனும் ஒருவரே என எணணுதறகிடமாயுள் ளது. கி.கோ.

***திதியன்:*** இவன் சஙக காலக் குறுநிலமனனருள் ஒருவன்; ஐமபெருவேளிருள ஒருவனாகவும கருதப்படு கின்றான. இவனைப் பறறிய குறிப்புகள அகநானூற றுப் பாடலகளில் காணப்படுகினறன. (36,45,126,145 196, 262, 331. பொதியிற செலவன தித்தன என அகநானூற்று 25-ஆம பாடலும் 322-ஆம் பாடலும் கூறுகின்றன. அகநானூறறு 36-ஆம பாடலொனறில தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன வெற்றிச் சிறப்பு கூறப்படுகிறது. அவனுடன போருடன்று தோற்ற மன்னாகள வரிசையில 'சினங் கெழு திதியனும, இடம் பெறுகின்றான். சேரல் செம் பியன் சினங்கெழு திதியன, எழினி, எருமை யூரன இருங்கோ வேண்மான், இயல்தேர்ப் பொருநன் எனற ஏழு மன்னர்களின ஆற்றலை அடக்கி ஆலங் கானத்தே அமர் கடந்து அட்டான் ஆற்றலமிக்க நெடுஞ்செழியன்' என்று அம்மன்னன் குறிககப்படு கின்றான். மேலும், அகம். 45-ஆம பாடல் குறிப்பில 'அன்னி குறுக்கைப் பறநதலையில் திதியன-புனனை மரத்தினை வெட்டி வீழத்தியபோது வயிரியர் ஆர்ப் பரித்தனர்' என்ற செய்தி இடம்பெற்றுளளது. 'திதிய னொடு பொருத அன்னி போல விளிகுவை கொல் லோ நீயே' எனற செய்தி அகம்-126-ஆம் பாடலில இடம் பெற்றுள்ளது. இதே குறிப்பினை 145-ஆம் பாடலில்-கயமனாரும் சுட்டியுள்ளார். 'பெருஞ்சீர் அன்னிக் குறுக்கைப் பறந்தலை-திதியன் தொல்நிலை முழு முதல் துமியப் பண்ணிய நன்னர் மெல் இணாப் புனனை போல' என்று மேலும் சுட்டிக் கூறி முன னர்க் கூறிய செய்தியினை உறுதிசெய்கின்றார்.

மேலும், அகநானூற்றில் (196) பரணரின பாடல் மிகச் சிறந்த வரலாற்றுப் பெட்டகமாக அமைந் துள்ளது. 'ஒனறுமொழிக் கோசாக் கொன்று முரண் போகிய கடுந்தேர்த் திதியன் அழுந்தை' எனற குறிப்பு நோக்கறபாலது. இதனைப் போலவே அகம் 262-ஆம எணணுளள பாடலிலும் பரணர் விளக்கமாக இச் செய்தியினைக் கூறியுள்ளார். பசுக்கள பயிற்றினை மேய்ந்து அழித்துவிட்டமையால் ஆதன் எனபான மிஞிலியின கணகளைப் பிடுஙகிக் குருடாக்கிவிட்டான. இசசெயலைக் கணடு பொறாத மிஞிலியின மகள் அனனி உணணாது உறஙகாது நீதி கிடைக்கும்வரை நோனபிருப்பேன் என்று கூறி உணணா நோன்பு நோறகத் தொடஙகினள் இச்செயதியினைக குறும பியன் மூலமாக அறிநத 'திதியன்' அவ்வாறு மிஞிலி யின் கணகளைப் பெயர்த்த கோசர்களை அழிதது அவர்களின உயிர் செகுத்து முறை செய்தான். இவ் வாறு முறை செயது காபபாற்றிய திதியன செயல் அன்னி மிஞிலிககுச் சினம் மாறச செய்ததோடு பெரு மகிழ்வு எய்தவும செய்தது. இவவாறு திதியன முறை செய்து காப்பாற்றும மன்னனாக விளங கினான என அறியலாம்.

மேலும இத்திதியன அகம். 331-ஆம பாடலில் குறிககபபடுமபோது இசைவல்ல பாணர்கட்கு இலலை யெனனாது பலகலமும உதவும அறவோன எனச் சுட்டப்படுகினறான். இத்துணைச செயதிகளும ஐம் பெரு வேளிருள் ஒருவனாகிய திதியன பற்றியே அமைநதுள்ளன. மேலும, 'பொதியிற் செலவன பொலநதோத் திதியன்' என அகம் 25-ஆம் பாடலில ஒல்லையூா தந்த பூதப் பாணடியன பாடியுளளான. இவன போரில் புறஙகொடா வெற்றிவீரன எனவும், விலலோர் உழவன் எனவும குறிபபிடப்பட்டுளளான. 'பொருநர் செல் சமம் கடந்த விலகெழு தடககைப் பொதியிற் செல்வன்-பொலந்தேர்த் திதியன்' எனப் பரணரால் அகம். 322-ஆம் பாடலில் போற்றப்பட் டுள்ளான். கி.கோ.

***திப்பு சுல்தான்*** மைசூர்ச் சுல்தானாக விளங கிய ஐதர் அலி எனபவரின் மகனாகத் தேவனகல்வி என்னுமிடத்தில் திப்புசுல்தான் கி.பி. 1753-ஆம் ஆண டில் பிறந்தார். ஆங்கிலேயரின் கடும் எதிரியாகத் திகழ்ந்தவர். தம் தந்தையாருடன் சேர்நது ஆஙகி லேயருக்கு எதிராகக் கி.பி. 1767 முதல் 1769 வரை நடைபெறற முதல் மைசூர்ப் போரில் போரிட்டார். அப் போரில் அவர்களிருவரும் பெற்ற வெற்றி காரண மாகத் திப்பு சென்னையின் சுற்றுப்புறப் பகுதிகளைத்

தாக்கி ஆங்கிலேயரை அச்சுறுத்தினார். அதனால், ஆங்கிலேயர் ஐதருடன் உடன்படிககை செய்து கொள்ள வேணடியவராயினர்.



திப்பு சுல்தான

இரண்டாம் மைசூர்ப் போரில் (கி.பி. 1780-1784) இவர் பங்கு மகததானது. அப்போரின தொடக்க நிலையில் தன தந்தைக்குப் பேருதவி புரிந்தார். ஐதர் அலி கி பி. 1782, திசம்பர்த் திஙகள ஏழாம் நாள் புறறுநோயால் பாதிக்கப்பட்டுக் கால மான பின்னர்த் திப்பு தொடர்ந்து போரில் ஈடுபட்டார். அவ்வமையம் மாத்யூ எனபவர் தலைமையி லான ஆங்கிலேயப் படையைத் தோற்கடித்தாா. ஆங்கிலேயர் சீரங்கப்பட்டினத்தையும் மஙகளூரையும் நெருக்கினர். ஆயினும் கி.பி. 1783-ஆம் ஆணடு மே மாதம் மங்களூர்' திப்பு வசமாயிற்று. இருப்பினும் இலாங்கு எனனும் ஆங்கிலத் தளபதி கரூர், திண்டுக்கல் ஆகிய பகுதிகளைக கைப்பற்றினாா. மற்றொரு ஆங்கிலத் தளபதியான படைத்தலைவர் புல்லாட்டன் திப்புவுக்குச் சொநதமான பாலக்காடு, கோயம்புத்தூர் ஆகிய இடங்களைக கி.பி. 1783 நவம்பரில் கைப்பற்றினார். மேலும் திப்புவின் தலைநகரான சீரங்கபபட்டினத்தையும் தாக்கத் தலைப்பட்டார். இந்நிலையில் பிரான்சுக்கும், பிரிட்டனுக்கும் இடையில் ஐரோப்பாவில ஏற்பட்ட அமைதி உடன்பாடு காரணமாகவும், தொடர்ந்த போர்களினால உண டான களைப்புக் காரணமாகவும் ஆங்கிலேயரின சென்னை ஆளுநர் மககார்த்தனே உடன்பாட்டினை நாடினார். எனவே கி.பி. 1784, மேததிங்கள் 11-ஆம் நாள் மங்களூர் உடன்படிக்கை ஏற்பட்டது. இரு சாராரும் தாம் கைப்பற்றிய பகுதிகளைத் திரும்ப மற்றவரிடம் வழங்கினர்.

அதன்பின்னர்த திப்பு மராட்டியர்களின் எதிர்ப்புகளைச் சமாளிக்க வேண்டியவரானார். அவர்களுடைய எதிர்ப்புகளைக் கி.பி. 1786-க்குள்ளாகச் சமாளித்துத் தமமுடைய மேலாண்மையை ஏற்றுக் கொள்ளச் செய்தார். மேலும கிருட்டிணா, துஙக பத்திரா ஆகிய நதிகளுக்கு இடைப்பட்ட பகுதியில் தம்முடைய இறைமையை நிலைநாட்டிக் கொண்டார். அத்துடன் நர்குண்ட்டு தலைவனைக் கட்டுப் படுத்தினாா. கிட்டூர் என்னும் பகுதியையும் கைப் பற்றிக்கொண்டு விரிநிலைக் கோட்பாடுதனைப் பின் பினபற்றலானாா.

ஆங்கிலத் தலைமை ஆளுநரான காரன்வாலிசு காலத்தில் (கி பி. 1786-1793) நிலைமை மாறலாயிற்று. அவர் திப்புவின் குணவியல்புகளையும், கோட்பாடுகளையும் நன்குணர்ந்திருந்தார். எனவே, பிற இந்திய மன்னர்கள் திப்புவுக்குத் தமது ஆதரவினை நல்காவண்ணம் கவனித்துககொண்டார். ஐதராபாத்து நிசாமுடன் கி.பி. 1766-இல் ஆங்கிலேயர் கொண்டிருந்த உறவுதனைக் காரணமகாட்டி அவர் திப்புவுக்கு எதிராகச் செயற்பட்டு மைசூரில தன நிலையை வலுவாக்கிக் கொள்ள விழைந்தபோது, திப்பு கி.பி. 1790 முதல 1792 வரை நடைபெற்ற மூன்றாம் மைசூர்ப் போரில் ஈடுபடவேண்டியவரானார். அந்நிலையில திருவாங்கூர் மன்னர் ஆங்கிலேயரின் நண்பராகையால, கி.பி. 1788-இல் திப்புவுக்கு எதிராக ஆங்கிலேயர் அவருக்கும் படையுதவி வழங்கினா. இராம வர்மா, தச்சுக்காரர்களிடமிருந்து கி.பி. 1789-இல கிரங்கனூர் மற்றும் ஆயக்கோட்டைப் பகுதிகளை விலைக்கு வாங்கினமையால் மைசூரின் பாதுகாப்பிற்குப் பங்கமேறபட்டது. திப்பு அவற்றைத் தம் ஆதரவாளரான திருவாஙகூர்த் தலைவர் ஒருவரிடம் ஒப்படைக்க வற்புறுத்தினார். அதனை எதிர்த்துக் காரன்வாலிசு திருவாஙகூர் மன்னருக்குப் படையுதவி வழஙகினார். எனவே, திப்பு வெகுணடெழுநதார். இந்நிலையில் திப்புவுககு எதிராகக் கி.பி. 1790 சூன் முதல்நாள் மராட்டியரும கி.பி. 1790, சூலை நான்காம் நாள் நிசாமும் ஆங்கிலேயருடன் உடனபடிக்கை செயதுகொண்டனர். எனவே, திப்பு பிரான்சின் உதவியை நாடினார். ஆனால், அப்போது பிரானசில் ஏற்பட்ட புரட்சி காரணமாக அவர்தம் எதிர்பார்ப்புகள பலனளிக்கவிலலை. எனவே, மூனறாம் மைசூர்ப் போரில் திப்பு தோலவியைத் தழுவினார். அதனால் கி.பி. 1792, மார்சசில் ஏற்பட்ட சீரங்கப்பட்டினம் உடன்படிக்கைப்படி திப்பு தனது ஆட்சிப் பகுதியில் பாதியை இழக்கவேணடியவரானார். போர் இழப்பீட்டுத் தொகையாக $3\frac{1}{2}$ கோடி உருபாய்களை ஆங்கிலேயருக்குத் தரவேணடியவரானார். ஆங்கிலேயர் குடகு, மலபார், திண்டுக்கல், பாரமால் ஆகிய

வற்றையும், மராத்தியர் மைசூரின வடமேற்குப் பகுதியையும், நிசாம் மைசூரின் வடகிழக்குப் பகுதியையும் பெறறனர். மேலும், தம் இரு புதலவா களையும் பணயக கைதிகளாக ஆஙகிலேயரிடம் திப்பு ஒப்படைத்தார்.

ஆனால், திப்பு துவணடுவிடவில்லை. ஐரோப்பா வில் ஆங்கிலேயருக்கும், பிரானசுககுமிடையிலான எதிர்ப்புகளைத் தமக்குச் சாதகமாக ஆககிக்கொண டார். பிரான்சின் உதவியைப் பெற்று ஆங்கிலேயரை எதிர்க்கத் துணிந்தார். மூன்றாம் மைசூாப் போருக் குப்பின தமது ஆடசித்துறையையும, ஆட்சிப் பகுதி களையும் சீராக்கினார் மக்கள ஆதரவுடன ஆங்கிலே யருக்குக் கொடுக்கபபடவேணடிய பணததைக கொடுததுத் தமது மக்களை மீட்டுககொணடாா. படைக்கலனகளைப் பெருககினார். கோட்டைகளை வலுப்படுத்தினார். நானகாம் மைசூாப் போா கி.பி. 1799–இல் ஏற்பட்டது. ஆங்கிலத தலைமை ஆளுந ரான வெலலெசுலி காலத்தில(கி.பி.1793–1805) ஐதரா பாத்து நவாபுடன் ஆஙகிலேயா செய்து கொணட துணைப்படை ஒப்பந்தம் காரணமாக அவர்கள திப்பு வைக் கட்டுப்படுத்த முனைந்தனர். ஆர்தர் வெல்லெ சுலி எனனும் படைத்தளபதியுடன போரிட்டு கி.பி. 1799-இல திப்பு வீரமரணமடைந்தார். மைசூர் ஆங்கிலேயர் வசமாயிற்று. திப்புவின குடுமபத்தினா வேலூர்க் கோட்டையில் சிறை வைக்கப்பட்டனர். ஆங்கிலேயருக்கு எதிராகப் பணியாற்றிய ஒரு தூண வீழ்நதது.

ஆட்சித்துறைப் பணபும், ஒழுக்கமும், மேம்பாடும் உடையவரான திபபு சிறநத நிருவாகி, கடும உழைப் பாளி. எதிரிகளான ஆஙகிலேயருக்கு அவர் கொடூர மானவராயிருந்தார். தொடக்கம தொட்டு இறுதி வரை ஆஙகிலேயருக்கு எதிராகவே செயறபட்டுப் போரிட்டு மடிநதாா. ஆஙகிலேயா அவரைக்கணடு அஞ்சி நடுங்கினர். எதிரிகளிடம் கொடுமை மிக்கவ ராகச் செயறபட்டார். உருது, பாரசீகம, கன்னடம் ஆகிய மொழிகளில திறம்பபட பேசும் ஆற்றல கொண்டிருநத திப்பு கலவிமானாகத திகழநதார். தமக்கென ஒரு நூல்நிலையத்தைக கொணடிருந் தார். நாணயஙகள பல சிறப்பாக அவரால வெளி யிடப்பட்டன. தீர்ககமான முடிவுகளையும, மனத திணமையையும் பெற்றிருந்தார். அவர் தமக்குச் சாதக மான உத்திகள அனைத்தையும் தவறாது பயன படுத்திக்கொணடார். பக்திமான், ஆயினும் சிலசமயங களில் சமயப் பொறையுடையினின்றும் வழுவினாா. வலிமையையும், சூழ்ச்சியையும் அதிகம பெற்றிருநத ஆங்கிலேயரைத் தனியொரு மனிதராக நினறு எதிர்த் தமை அவரது வீரத்தினைப் பறைசாற்றும். அவர் பல போாகளில ஈடுபட்டபோதிலும் நாட்டின செழிப்பி னையும், வேளாண மேம்பாட்டினையும் கவனிததுக் கொணடிருநதார். மா.கா.

**திப்புத் தோளார்** இவர் சஙகப் புலவர்களுள ஒருவர் இப்புலவா குறுந்தொகை கடவுள வாழத தினை அடுத்து நூலின முதற செயயுளாக அமைந துள்ள 'செங் களம படககொன்று அவுணர்த தேயதத' எனத்தொடஙகும் அரிய பாடலை இயற்றியவரா வார். திபபுத் தோளார் எனனும பெயர் உறுப்பினால அமைநத பெயராகக் கருதபபடுகிறது. இவர் பெயர் தீப்புததேளார் எனறு சில ஏடுகளில காணப்படுவ தாகப் பதிபபாசிரியா டாக்டா உ வே. சாமிநாதையா காட்டியுள்ளார். குறிஞசித் திணையில அமைநத இவாபாடல் 'தோழி கையுறை மறுததது' எனற துறையில் அமைந்துளளது சேய ஆகிய முருகபபெரு மான அமாநதமலையினை'சேயோன மேய மைவரை' என்று தொலகாப்பியர் குறிபபிட்டுளளார். ஆனால, 'திப்புத்தோளாா' சேயோன குன்றினைச் செந்நிறக் குனறாகக் கணடு காட்டியுளளார். அவுணாகளை அழித்தமையால அவாகள உடலினின்றும பாயநத குருதி போாககளத்தினைச் செஙகளமாக்கியது. அவு ணர் உடற் குருதி தோயநத அமபாதலின் அது செங கோல் அம்பாக ஆயிற்று. எதிரிகளின உடலில் தன் கோட்டைப் பாய்ச்சி அவவீராகளை அழித்தமையால் யானையின கோடு செங்கோடு ஆயிற்று. குறிஞ்சி நிலம காநதள பூவின் பகுதியால செநநிறக் காட்சியே மிககுள்ளதாயிற்று. எஙகும செந்நிறமும் பசுமை நிற மும கலநது ஒளிரும் இந்நிலத்தே உறையும் எங கட்கு, தலைவன் கொணாநத வணணக் கையுறை தேவையிலலை எனறு தோழி அதனை மறுத்துக் கூறியதாக அமைநத குறிபபு நுட்பம் மிககு விளங்கு கிறது. கி.கோ

**திப்ருகார்ப் பல்கலைக் கழகம்,** அசாம் மாநிலததில தொடஙகப்பட்ட இரணடாம பல்கலைக் கழகம். இது 1965–ஆம் ஆணடு நிறுவப்பட்டது. இப் பலகலைக கழகத்தின நோக்கம் வாழ்வியல், அறிவி யல, மருத்துவம், தொழிலநுட்பம் முதலான பலவேறு துறைகளின அறிவை அனைவருக்கும் வழங்குவ தாகும்., திபருகார்ப் (Dibruhar) பல்கலைக்கழகம் பிரம்மபுத்திரா ஆற்றஙகரையில அமைக்கப்பட்டுள் ளது. இதன ஆளுகை (Jurisdiction) இலக்கிமபூர் (Lakhimpur), திப்ருகார், சிப்சாகர் (Sibsagar) முத லான மாவட்டஙகளைக் கொணடுள்ளது.

திப்ருகார்ப் பலகலைக்கழகம் கற்பிததல், இணைப் புரிமை (Affiliation)வழஙகுதல, ஆராய்ச்சி முதலான

வற்றை முதனமைப் பணிகளாகக் கொண்டுள்ளது. இப்பல்கலைக்கழகத்தின் இணைப்புரிமை பெற்ற கல லூரிகள் 55-க்கும் மேலுள்ளன. அவற்றுள் பல கல் லூரிகளில் இளம்பட்டப் படிப்புக்கு முந்தைய படிப் பும் (Pre-Degree Course) வழங்கப்படுகிறது.

இப்பல்கலைக் கழகத்தில் கலை, வணிகவியல், மருததுவம், அறிவியல் முதலான புலஙகள உள்ளன. இதனகண அசாமிய மொழி, ஆங்கிலம், வரலாறு, அரசியல், மானிடவியல், வணிகவியல், பொருளியல், கல்வியியல, சமூகவியல், புள்ளியியல், கணிதவியல், இயற்பியல, மண்ணியல், வேதியியல், மருத்துவம், 'பெட்ரோலியத்' தொழில்நுட்பம் முதலான துறை கள உள்ளன. மாணவர்கள் அசாமிய மொழியிலும் ஆங்கிலத்திலும் பயில வசதியுண்டு. இஙகுக் கறபிக்கப் படும் பல பாடஙகளில் பெரும்பாலானவற்றில ஆராய்ச்சிப் பட்டங்கள பெற வசதியுணடு.

திப்ருகார்ப் பல்கலைக்கழகத்தில தனிப்பட்ட முறையில் பயிலும் (Private Studies) வசதி உண்டு. பெரும்பாலும் அசாமிய மொழி, ஆங்கிலம், பொருளி யல், வரலாறு, அரசியல், கணிதவியல் முதலான துறைகளில் மட்டுமே பயிலமுடியும். இது தவிர்த்து ஆசிரியர் பயிறசிக்கான ஓராணடுச் சானறிதழ்ப் படிப்பையும் நலகுகிறது.பெட்ரோலியத் தொழிலநுட் பம் தொடர்பான பல பிரிவுகளிலும், மருததுவததில பல பிரிவுகளிலும் பட்டயப் படிப்பினை (Diploma Course) இப் பல்கலைக் கழகம் வழஙகுகிறது.

இங்கு மானிடவியல், மணணியல், மருத்துவம், தொழில் நுட்பம் முதலான துறைகளுக்குச் சிறநத ஆய்வுக்கூடஙகள் உளளன. சறறேறக்குறைய ஒரு இலட்சம் நூல்களைக கொணட நூலகம் உள்ளது. மாணவர்கள் கலவி சாராத் துறைகளான விளை யாட்டு, நாட்டு நலப் பணித்திட்டம் முதலானவற் றில் ஈடுபட இஙகு வசதிகள் உளளன. சீ.ப.

**திப்ருகார் மாவட்டம்**: அசாமில் உளள 'திப்ரு' எனனும் நதி இலட்சுமிபூர் மாவட்டத்தின் தென பகுதி யில் கிழக்கிலிருநது மேற்கே செல்லுகிறது. பிரம்ம புத்திரா நதிககு இணையாக ஏறத்தாழ 150 கி.மீ. சென்று அந்நதிக்கு அருகிலுள்ள ஒரு நகரத்திற்கு அணமையில பிரம்மபுத்திரா நதியுடன் (Brammapudhra River) கலக்கின்றது. அநத நகரம் இநத நதியின பெயராலேயே 'திப்ருகார்(Dibrugarh)என குறிககப் படுகிறது.

திப்ருகார், திப்ருகார் மாவட்டத்தின தலைநகராக விளஙகுகிறது. அசாம் மாநிலத்திலுள்ள இந்நகரம் திப்ரு நதியின இடது கரையில அமைந்துள்ளது. திப்ரு




திப்ருகார் அமைவிடம்

கார் மாவட்டம் 7023 சதுர கி.மீ. பரப்பளவு உள்ளது திப்ரூகர் நகரின் மக்கள்தொகை 80,348 (1981)ஆகும். கல்கத்தாவிலிருந்து சிறு நீராவிக் கப்பல்கள் இநநகர் வரை செல்கின்றன.இரண்டு தொடர்வண்டிப் பாதை கள் சந்திக்கும் இடமாகவும் இந்நகர் இருக்கிறது.

அசாம் சமவெளியில உளள மிகச்சிறந்த இடங் களில ஒன்றாகத் திப்ரூகர் அமைந்திருக்கிறது. பனியோ மழையோ இல்லாத ஒரு தெளிவான நாளில அந்நக ரிலிருநது பார்க்கும்போது குன்றுகளும் அதைச் சார்ந்த பகுதிகளும் மிகக் கவர்ச்சியாகத் தோறற மளிககும். இஙகு மிக அதிகமாக மழை பெயவதால் குளிர்காற்று வீசுகிறது. இங்கு ஒரு பெரிய சிறைச் சாலை உள்ளது. அதிலுள்ள கைதிகள் மூஙகில,பிரம்பு தொடர்பான வேலைகளில் ஈடுபடுகிறார்கள. திப்ரு கர் கி.பி. 1887-இல் ஒரு நகராட்சியாகியது. இநநக ரம திப்ரூகர் மாவட்டத்தின முக்கிய வணிக இடமாக விளஙகுகிறது மேலும் அரசு அலுவலகங்கள, மாதா கோவில், மருத்துவ மனைகள, ஒரு பழைய கோட்டை ஆகியவையும் உளளன. இங்குளள மக்களுக்குப போதுமான உணவுப் பொருளகளை இமமாவட்டத் தில பயிரிட முடியவில்லை. பெருமளவு தானியஙகள, எணணெய், உப்பு,துணிவகைகள் மறறுமுள்ளபொருள கள கல்கத்தாவிலிருந்து கொணடுவரப்படுகின்றன. இங்குள்ள மார்வாரிகளே பெரும் வணிகர்களாகத் திகழ்கினறனர். திப்ரு நதியின் வெள்ளம் இந்நகரின் கரையை உடைத்ததால் இங்குள்ள வணிகர்கள தங்கள்

கடைகளை நகரின் உட்பகுதிக்குக் கொண்டு சென்று விட்டனர். இங்குப் பல கல்லூரிகளும், உயர்நிலைப் பள்ளிகளும், அச்சகங்களும் உள்ளன. இங்கு நாளிதழ களும் வெளியிடப்படுகின்றன. திப்ருகார்ப் பலகலைக் கழகம் கி.பி. 1965-ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டு, அத்துடன் பலகல்லூரிகள் இணைக்கப்பட்டுள்ளன. இங்குள்ள விமான நிலையத்திற்கு மோகன்பாரி' என்று பெயரிடப்பட்டுள்ளது. திப்ருகாரில பட்டுத் தொழிற்சாலையும உள்ளது. உல்லாசப் பயணிகளுக் கெனப் பெரியஉணவு விடுதிகளும், தங்கும விடுதிகளும் உள்ளன.

திப்ருகார் மாவட்டம்பிரம்மபுத்திரா நதியின இரு புறங்களையும் தன்னகத்தே கொண்டுள்ளது. இங்குப் பல தேயிலைத் தோட்டங்கள் உள்ளன. இத் தோட் டங்களில் வேலைசெய்ய அதிகமான மக்கள் வந்து குடியேறியுள்ளனர். அதனால், மக்களதொகை இப் பகுதியில் அதிகமாக உள்ளது. இங்குள்ள இருப்புப் பாதை சிட்டகாங்குத் துறைமுகத்துடன் இணைக்கப் பட்டுள்ளது. மார்கெரிட்டாவின் நிலக்கரியும, திகபா யில் கிடைக்கும் எண்ணெயும் பிரம்மபுத்திரா நதிக்குப புகைவண்டி மூலம் கொண்டு வரப்படுகின்றன. அ.சி.

**திபெத்து** மிகுந்த அளவில் மக்கள் தொகையை உடைய மிக உயரமான மலைநாடு. மத்திய ஆசி யாவின் தென்பகுதியில் உள்ள திபெத்து (Tibet) 79° முதல் 84° வரையிலுள்ள அட்சக் கோடுகளுக்கு இடையில் அமைந்துள்ளது. கடல் மட்டத்தினின்றும் ஏறத்தாழ 5200 மீ. உயரத்தில் இருக்கின்றது. அந் நாடு கிழக்கிலும் வடக்கிலும சீனாவையும், மேற்கில இந்தியாவின ஒரு மாநிலமான காசுமீரத்தையும், தெற்கில நேபாள நாட்டினையும் தன்னுடைய எல்லை நாடுகளாகக்கொண்டுள்ளது. பெரும்பாலான நிலப்பரப்பு விஷளாசலுக்குப் பயனற்றதாய், பாறை கள் நிறைந்ததாய் இருக்கின்றது. எஞ்சியுள்ள நிலப் பகுதியானது ஆண்டில எட்டு மாதம வரை பனியால மூடப்பட்டிருக்கும். பள்ளத்தாக்கும் நிலவெளிப்பகுதி களும் சுமார் 4000 மீட்டருக்கும மேலான உயரத் தில உள்ளன. இந்நாட்டின பெரும்பாலான மலைத் தொடர்கள கிழக்கு மேற்காகச் செல்லுகின்றன. திபெத்தினவடபகுதியில் குன்லுன மலைத் தொடரும், தெற்கில் இமயமலைத் தொடரும் அமைந்துள்ளன. இங்கு எண்ணற்ற உப்புநீர் ஏரிகள உண்டு. மிக உயரமான எவரெசுடு சிகரம நேபாளத்தின எல்லைக் கருகில உள்ளது. குறுகிய கோடையும், குளிர் மிக்க குளிர் காலமும் உண்டு. மழை மிகக் குறைவு. இதன பரப்பு 12216 சதுர கி.மீ. மக்கள தொகை, 18,92,392 (1982).

திபெத்தின் கிழக்குப் பகுதியில உற்பத்தியாகும் சாங்போ எனனும நதி பிரபுத்திரா நதியின் தோற்றத் திற்குக் காரணமாக உள்ளது. சாங்போவின உற்பத் தித் தலத்திற்கு அருகில்தான் இந்நதியின உற்பத்திக் தலமும் அமைந்துள்ளது. அந்நதி மேற்கு நோக்கி ஓடி இந்தியத் துணைக்கண்டத்திற்குள செல்கின்றது. சாங்போநதிபாயும் பகுதி காடுகளடர்ந்தும்வளமுடை



*தலய்லாமா அரண்மனை*

யதாகவும் காணப்படுகின்றது. சட்லிசு, சால்வீன் ஆகிய நதிகள இங்கு உறபத்தியாகின்றன. இங்குளள ஆறுகள் மக்களுக்கு மிகுந்த அளவில் பயன்தரக் கூடியனவல்ல.

நெல், பார்லி போன்றவை பயிராகின்றன. உருளைக்கிழங்கு, ஆப்பிள, காய்கறிகள் ஆகியனவும் பயிரிடப்படுகின்றன. ஆடு மாடுகள, ஒட்டகங்கள, குதிரைகள், பன்றிகள் போன்ற மிருகங்கள் வளர்க்கப்படுகின்றன. உள்நாட்டுக் கைத்தொழில்களைத் தவிர பிற ஆலைத் தொழில்கள் மிகுதியாக இல்லை. திபெத்து தாதுவளம் நிரம்பப் பெற்றுள்ள ஒரு நாடு. ஆயினும் அவை பயன்படுத்தப்படுவதில்லை. வடக்கு மற்றும வடக்கிழக்கிலுள்ள ஆற்றுப்படுகைகளில் தங்கம் கிடைக்கின்றது. வெள்ளி, செம்பு, இரும்பு, துத்தநாகம், பாதரசம், கந்தகம், பொட்டாசியம் போன்ற பொருள்கள இங்குக் கிடைக்கின்றன. துணி நெய்தல், கம்பள நெசவு மற்றும உலோகத் தொழில் ஆகியவை மக்களின் பொருளாதாரத்திற்குத் துணை நிற்கின்றன. ஏற்றுமதியை விட இறக்குமதிப் பொருள்களே மிகுதி. தங்கம், தோல் மற்றும் கம்பள நெசவுப் பொருள்கள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. பஞ்சு, பட்டு, அரிசி, தேயிலை மற்றும் நாளதோறும் தேவைப்படும் பல பொருள்கள் இறக்குமதி செய்யப்படுகின்றன.

நாட்டின் பல பகுதிகளும் இணைக்கப்படவில்லை; இருப்புப்பாதைகள் இல்லை; நன்கு பராமரிக்கப்பட்ட சாலைகளும மிகுதியாக இல்லை. எனினும் பேருந்துகள செல்வதறகேற்ற சாலைகள் உண்டு. சிக்காங்-சீனப் பெருஞ்சாலை, சிஙகை-சீனப் பெருஞ்சாலை ஆகியன 1954-இல் சீனாவினால் உருவாக்கப்பட்டுச் சீனாவுடனான தொடாபுகள மிகுதியாக்கப் பட்டன.



இலாசாவிலுள்ள அரண்மனை

திபெத்தின் தலைநகர் இலாசா (Lhasa). இது சுமார் 50,0000 மக்களைக் கொண்டுள்ள ஒரு நகா. இங்குளள விமானதளம் மூலம் உலகின பல இடங்கள் தொடர்புபடுத்தப்பட்டுள்ளன. திபெததின் தெனகிழக்குப் பகுதியில் அமைந்துள்ள இந்நகர் நீணட காலமாக அயலார் தொடர்பினறி ஒதுக்க நிலையில் இருநதது. இனறு திபெத்து தனது நிலையில சற்று மாற்றமடைநதுள்ளது. இலாசா நகரை சுரான்ட்சான் காமபோ என்ற மனனன் கி.பி. 7-ஆம் நூற்றாணடளவில் நிறுவினான். கியான்ட்சி எனபது மறறொரு முக்கிய நகரமாகும். இங்கு சுமார் 10,000 மககள வாழ்கின்றனர்.



திபெத்துப் பெண்கள்

திபெத்தியர் குள்ளமான உருவ அமைப்பினை உடையவர்கள். தோற்றத்தில் சீனர்களை ஒத்திருக்கின்றனர். ஆனால மஞசள் நிறத்திற்குப் பதில சற்றுச் சிவந்த நிறமுடையவர்கள. கருநிற முடிதனைக் கொண்டுள்ளனர். கடும் உழைப்பாளிகள். பழைமையில் நம்பிக்கை உடையவர்கள.

பௌத்தமும், ஆவி வழிபாடும் ஒருங்கிணைக்கப்பட்ட தனித்தன்மையுடைய சமய முறை அங்கு நிலவுகிறது. மகாயான பௌத்த சமயக் கோட்பாடுகள் அங்குப் பெரிதும் விரவிக்கிடக்கினறன. திபெத்து நாட்டின் பல பகுதிகளிலும் எணணற்ற பௌத்த

மடாலயங்கள உள்ளன. அவறறுள் இலாமாக்கள் என்னும் துறவிகள உறைகினறனர். தெக்சான என் னும் அரசன் காலத்தில் கி.பி 747-இல் திபெத்துக்கு வருகை புரிந்த பதும சம்பவர் என்பவர் இலாமா சமயத்தை உருவாக்கினார். இந்தியா மற்றும் சீனர் களுடனான தொடர்பு காரணமாகப் பௌத்தசமயம் அங்கு வலுப்பெற்றது கி.பி. 7-ஆம் நூற்றாணடில திபெத்தில் அரசோச்சிய காமபோ எனனும் மன்ன னின் சீன மற்றும் நேபாள மனைவியர் இருவரும் பௌத்த சமயத்தினராயிருந்ததால் பௌததம் மன்ன ரது ஆதரவினைப் பெற்றுத் தழைக்கலாயிற்று. இன் றும் அங்கு அக்கோட்பாடுகளே பினபற்றபபடுகின்றன.

தலாய் லாமா என்பவரே திபெததின ஆட்சித துறைத் தலைவர். அவரது அரண்மனை இலாசாவுக் கருகில அமைந்துள்ளது தலாய் லாமாப் பதவி பரம் பரை உரிமை உடையதல்ல. தலாய லாமா இறநத வுடன் அவரது வாரிசினைத் தோந்தெடுக்கும முறை மக்களின நமபிக்கையின் அடிப்படையில எழுநத ஒரு வியபபுக்குரிய செயலாகும. தலாய் லாமா இறநத வுடன் அவருடைய ஆவியானது புதிதாகப் பிறககும் குழந்தையொன்றின உடலுக்குள் புகுநதகொள்ளு வதாகத் திபெத்தியர் நமபுகினறனர். எனவே, தலாய் லாமா இறந்ததும அவரால பயனபடுததப்பட்ட, விரும்பப்பட்ட பொருளகளையெல்லாம ஒரு தட்டில வைத்து, எநதக் குழநதையின் உடலில தலாய் இலா மாவின் ஆவி புகுநது இருக்கினறதென நமபுகிறார் களோ அநதக் குழநதையின முன வைப்பா. அக் குழநதை தேர்நதெடுககும் பொருளகளைக் கொணடு, அக்குழநதையைத் தலாய் இலாமாவாகத் தோவு செய்வா. இறந்துவிட்ட தலாய் இலாமாவின ஆவியே அக்குழந்தையைப் பொருள்களைத் தெரிநதெடுககத தூண்டுவதாகவும நம்பி அம் முறையைக் கையாளு கின்றனர்.

தலாய் இலாமாவின ஆட்சியதிகாரம் மைய திபெத்தைத் தவிர பிறபகுதிகளில வலுப் பெற் றிருக்க விலலை. தசிலாமா என்பவா திபெத்தின ஆன மீகப் பணிகளின தலைவராகத் திகழ்கிறார். தசிலன்போ எனனுமிடததிலுள்ள மடாலயத தலை வராக அவர் விளஙகுகினறார். அரசியல மறறும பொருளாதாரப பணிகளைப் பஞ்சன்லாமா மேற் கொண்டுள்ளார்.

கி.பி. 7-ஆம் நூற்றாணடு முதல 17-ஆம் நூற் றாணடு வரை திபெத்து தன்னாட்சியுரிமையுடைய பகுதியாகத் திகழ்நதது. 7-ஆம் நூறறாணடில் அங்கு ஆட்சிபுரிந்த காம்போ எனற மனனர் காலத்தில திபெத்து பலவழிகளில் மேம்பட்டுச் சிறப்புறலாயிற்று, அம்மனனன சீனா மற்றும் நேபாள இளவரசிகளை மணந்து அந்நாடுகளுடன் நெருக்கமான உறவு களைக கொணடிருந்தான. அதன காரணமாக இந்திய மறறும சீனப பணபாடுகள திபெததில வேரூன்றலாயின பௌத்தம செலவாககுப பெறறது. திபெத்திய எழுதது முறை உருவாக்கபபட்டது. இநதியாவுடனான தொடர்பு காரணமாகக் கலவித துறையில திபெத்து முனனேறியது. அதனைத் தொடர்நது இராலபச்சான எனனும ஆட்சியாளர் காலத்தில பௌதத சமய நூறகள பல திபெத்திய மொழிககு மாற்றம செய்யப்பட்டன. இநதியாவில அப்போதிருநத நாளநதா மறறும விககிரமசீலா பல கலைககழகஙகளுடன அவாகள நெருஙகிய தொடர்பு கொணடிருநதனர்

இநதியாவில வஙகததில ஆட்சிசெயத பாலர்கள எனற ஆட்சியாளாகளின ஆட்சி, முகமதியா மேலாணமை காரணமாகப் பினனடைநதபோது அஙகிருந்த பௌததர்களின நிலை பாதிபபிறகுள்ளா யிறறு. பௌத்தத் துறவிகள திபெத்துககுத் தப்பி யோடினர். அங்குப் புகலிடம பெற்ற அவாகள பௌத்த சமயத்திற்கு வலுவூட்டினர் தொடர்நது காசுமீரிலிருந்து சிற்பிகள திபெததுககுள ஊடுருவித் தமது செலவாககைப் பெருககிக கொணடனர். மேலும, திபெத்தில சிற்பம,ஓவியம் ஆகியவை வளரத தலைப்பட்டன. குப்ளாயகான் எனற சீனப பேரரச னால கி.பி. 1253-இல திபெத்துப் படையெடுப்பு நிகழ்ததப்பட்டு அதன கிழக்குப் பகுதி சீனாவின் ஆளுகையின கீழ வநதது பினனர் கி.பி. 1368-இல் சீனக்கட்டுப்பாடு நீககபபட்டது அதனபினபு கி.பி.17 -ஆம் நூறறாணடு வரை திபெத்தில தனனிச்சையான அரசே நிலவியது. தலாய்லாமாவின கட்டுப்பாட்டி லான ஆட்சி கி.பி. 1641-இல தொடங்கிச் சிறிது காலம் நீடித்தது. மீணடும் சீனாவின் மேலாணமை கி.பி. 1720-இல திபெததில நிறுவப்பட்டது. தலாய் லாமா பெயரளவு ஆட்சியாளராகச் செயற்பட்ட போது சீன அரசின் அதிகாரிகளே உணமையான ஆட்சியாளாகளாயிருநதனர். மேலும், அவ்வமயம் உளநாட்டில தலாய்லாமா, பஞசனலாமா ஆகிய தலைவர்களுக்கிடையே போட்டிகள எழுந்தன. ஆனால கி.பி. 18-ஆம் நூற்றாணடில சீனாவின் ஒதுக்கக கோட்பாட்டில் மாற்றஙகள ஏற்பட்டபோது சீனக் கட்டுப்பாட்டிலிருந்த திபெத்தின நிலையும பாதிப்பிற்கு உள்ளாயிற்று. இந்தியாவில மேலோங் கிக் கொணடிருந்த ஆங்கிலக் கிழக்கிநதிய நிறுவனத் தின கவனம் திபெத்தின் மீது திரும்பியது.

வாரன் ஏசுடிஙகசு கி.பி. 1774-இல் இநதியாவின் தலைமை ஆளுநராகப் பொறுப்பேறறபின போகிள எனனும் ஆங்கிலத் தூதுவரை திபெத்துககு அனுப்பி னார். ஆங்கிலேயருடன திபெதது வாணிகத

தொடர்பு கொள்ள வேண்டுமென அவர் எடுததுக் கொணட முயறசிகள பலனளிக்கவில்லை. ஆயினும, ஆங்கிலேயருடனான நட்புறவு வளரலாயிற்று.ஆனால, கி.பி 1792-இல் நேபாளம் திபெததின் மீது படையெடுக்க ஆஙகிலப்படை உதவி செய்தபோது அவ்வுற வில் விரிசல் ஏற்பட்டது. எனவே, திபெததியர் மீணடும ஒதுஙகி வாழத் தலைபபட்டனர். இநநிலை 20-ஆம் நூறறாண்டு வரை நீடிததது. உருசியாவின விரிநிலைக கோட்பாடு காரணமாகத் திபெத்து அந் நாட்டின கட்டுப்பாட்டிற்குள வருதலைத் தடை செய்தலின் பொருட்டுக கர்சானபிரபு ஆங்கிலப்படை ஒன்றினை அங்கு அனுப்பினாா. அதனால், திபெதது இந்திய உறவுகள மீணடும ஏற்பட்டன. பின்னர் 1906-இல பிரிட்டனும், 1907-இல உருசியாவும் திபெததின் தனிததன்மையை ஒப்புக் கொணடன. இருப்பினும சீனபபடைகளும் அதிகாரிகளும திபெத்தைவிட்டு வெளியேறவில்லை. தனனுடைய ஆளுமையினகீழ் தக்கவைததுககொளவதில் சீனா கவ னம் செலுததியது. சீனாவில் 1911-இல ஏறபட்ட புரட்சி காரணமாகத் திபெத்தியர் தம்மைச் சீனாவின கட்டுப்பாடுகளிலிருநது விடுவிததுக் கொணடனர். ஆயினும சீனத் தூதுவர் ஒருவர் இலாசாவில்(Lhasa) இருக்குமாறு அனுமதிக்கப்பட்டார். இதறகிடையில் 1944-இல் சீனாவில் பொதுவுடைமை அரசு ஏறபட்ட போது சீனக்கட்டுப்பாடுகள திபெததில மீண்டும வற் புறுததப்படடன. திபெத்து 1950-இல் சீன மேலாண மையை ஏறக வேணடியதாயிறறு. இநநாடு 1951-இல ஐககிய நாட்டவையில தனது நிலையை எடுத்தியம் பியதுடன, மா சே துங் தலைமையிலான சீன அரசு டன ஓர் உடனபடிக்கையையும் செய்து கொண டது. உளநாட்டில தலாய்லாமாவுக்கும், பஞ்சன லாமாவுக்கும் இடையிலான அரசியல போட்டிகள பறறிய சிககல் தீர்த்துவைககப்பட்டது. அவ்வாண்டி லேயே திபெதது சீனப்பகுதியாக அறிவிககப்பட்டது. தலாய்லாமாவும, பஞ்சன லாமாவும பிரதிநிதிகளாக ஏற்கப்பட்டனர். இருப்பினும பொதுவுடைமைக் கோட்பாடுகளின் அடிபபடையில் திபெததில்சீர்திருத் தங்களை ஏற்படுத்த வழிவகுக்கப்பட்ட போது சிக்கல்கள எழுநதன. தலாய் லாமா 1959-இல திபெத்திலிருநது இந்தியாவுககுத் தப்பியோடினார். பினனர் அமைதி ஏற்பட்டது. இன்றும் அரசியல் சிக்கல்கள் அங்கு மிகுந்துள்ளன. மா.கா.

## திம்ம கவி கூசி மஞ்சி (கி.பி. 1684-1757):

ஆந்திர நாட்டில் பிடாபுரம் அருகில் உள்ள கந்தராட எனனும் கிராமத்தில் கூசிமஞ்சி திம்ம கவி பிறந்தார். அந்தணர் குலத்தில் ஆர்வேல நியோகி, மரபில கௌணடினியகோத்திரத்தில் பிறந்த கங்கன்ன இவர் தநதையார். இவர் தாயாா பெயர் கலச்சம்மா. இவர் தம் உடனபிறந்தாரான சிஙகனன சககனன சூரன்ன என்பவர்களும புலமைமிக்கவர்களே. இவர் களில்சக்கனன சானகி பரிணயம்,சநதிரரேகாவிலாபம முதலிய பல காவியங்களைப் படைததவர்; வைணவ பக்தர். திமமன்ன சைவப் பறறுடையர். தம் இறுதி நாளகளில் சன்னியாசம் பெறறுச் 'சிவராம தீர்த்தர்' எனற தீட்சை நாமம் பெற்றார் எனத் தெரிகிறது. இவர் மனைவி பெயா புச்சம்மா. தெந்து லூரி லிங் கனாராத்திரியிடம் சிவ தீட்சை பெற்ற திம்மனன தம் நூல்களை இறைவனுக்கே படையல் செய்துள் ளார். பிடாபுரம் சமசுதான மனனா மாதவராயர் 'கவிசார்வபௌமம்'எனறும் பட்டம் வழஙகிச் சிறப்பித தார்.

மாபெரும கவிஞராகப் புகழபெற்ற கூசிமஞ்சி திம்மகவி பல காவியஙகளும், சகதங்களும், ஒரு இலக்கண நூலும் இயற்றியுள்ளார். அவற்றுள நீலா சுநதரி பரிணயம், அச்சதெனுகு ராமாயணம் இரணடும் வடமொழித் தற்சமச் சொற்கள் கலவாத தூய தெலுங்குச் சொற்களைப் பயனபடுத்தி எழுதப்பட் டனவாகும். அசச தெனுகு நடையில தற்பவச் சொற களும, பிராகிருதச் சொற்களும மிகுதியும் இருக்கும இநநடையில் திம்ம கவி சிறப்புற்ற கவிஞராகப் புகழ் பெற்றிருந்தார்

**கூசி மஞ்சி திம்ம கவி இயற்றிய நூல்கள்:** 1) உருக்குமணி பரிணயம. இது ஐநது அத்தியாயங். களை உடைய காப்பியம். கணணன் கதை கூறுவது. 2) ராசசேகர விலாசம். இக்காவியம திருத்தொணடர் புராணத்திலுளள இயறபகை நாயனார் கதையைத் தழுவியதாகும். 3) நீலா சுந்தரி பரிணயம்; இக்காவி யம் அச்சதெனுகு நடையில மூன்று அத்தியாயஙகளில் படைக்கப்பட்டுளளது. பாகவதத்தில் வரும் உசா பரிணயக்கதையைத் தழுவியது. கவிதை நடை சிறப்பு டன் அமைந்துள்ளது. 4) அச்சதெனுகு ராமாயணம. இதுவும் அச்சதெனுகு நடையில் சுருககமாக இராமா யணக் கதையைக காவியப் பாங்கில் பாடுகிறது. 5) சாரங்க சரித்திர இக்கதை தெலுங்கு மக்களிடையே புகழபெற்றது. வடநாட்டு ஒன்பது சித்தர்களுள ஒருவ ராகிய சௌரங்கியின் கதையைத் தழுவியது. தன்னை விழைந்த சிற்றன்னையை ஏற்க மறுத்ததால் கோள் மூட்டப்பட்டுக் கை கால் வெட்டப்பட்ட சாரங்கதரன சித்தனாகிய கதை சுவைபடக்காவியமாக்கப்பட்டுள் ளது. 6. இரசிகசன மனோபிராமம்.ஏழு அத்தியாயங் களில் ஆயிரம் பாடல்களில் இயனற சுவைமிக்க கதைகளை இணைத்துப படைக்கப்பட்ட காப்பியம். 7.சிவ லீலாமகாத்மியம். சிவன் திருவிளையாடலைக் கூறும் சிறிய காவியம். 8) சகல லட்சணசார சங்கிரகம்,

இலக்கண நூல் பல இலக்கிய மேற்கோளகளுடன நன காராயநது படைக்கப்பட்ட சிறந்த நூலாகும் 9) குககுடேசுவர சதகம் பீடாபுரத்திலுளள குக்குடேசுவர சுவாமியின பேரில் எழுதப்பட்ட சதகம தம காலத திய அனுபவங்களை அழகிய கவிதை வடிவில் தந்துள ளாா. 10) சர்பபபுர மகாத்மியம-மூனறததியாயஙகள உளள சிறு காவியம. 11) சாகர சஙகமகாத்மியம் சிறு காவியம், 12) கிருட்டிண தணடகம். 13) சிரவிபவ சதகம். 14) பார்க்க சதகம் 15) சிம்மாசல மகாத மியம். கூசி மஞசி திம்ம கவியை அவர் மரபினா அனை வரும் மிகவும் மதித்துப் பாராட்டினா. சைவமதப் பற்றுடைய வரேனும பிற மதஙகளையும சமமாகப் பாவிககும் பணபுடையாளர். இவர் தம் நூலகளை மன்னர்கட்குப படைககாமல் இறைவனுக்கே படைத் தளித்த பக்தராகவும், சாததிரப புலைமைமிககவராக வும கவியரசராகவும் திகழந்த சிறப்புடையவா.

மு.கு.ஜ.

***திம்மப்பையா***: முனிய திம்மப்பையா எனனும் இவா கனனடத்துப் பெரும்புலவர்களுள் ஒருவா. நான காம வகுபபு வரை மட்டுமே படிததிருந்தும், தம் புலமையாலும், கலவி ஆர்வத்தாலும் கலலூரிப் பேரா சிரியராக வாழககையில உயாநதவர். கனனட இலக் கிய உலகுக்கு இவா ஆறறிய தொணடு குறிபபிடத் தக்கது. கவிராச மாாககமெனும முதல கன்னட நூலிறகு இவர் எழுதியுளள உரை இன்றளவிலும வலலுநாகளால் போறறப்படுகிறது. கனனட மகக ளால ஆதி கவியென்று போற்றப் பெறும மகா கவி பமபனின் பாரதத்தில திமமப்பையா பெறறிருந்த புலமை வலலுநர்களையும் வியப்படையச செய்திருக கிறது.

இன்றைய தென கன்னட மாவட்டததுப் பணடு வாள்வட்டததின முனிய எனனும சிறு கிராமத தில் கி.பி. 1888 ஆம் ஆணடு திமமப்பையா பிறந் தாா. தந்தை கேசவ பட்டு, அநதக் கிராமததில் பெரும நிலக்கிழாா. யாரும எதிரில்லாமல வாழ்ந்த குடும்பம அரசரையே எதிாத்துக கொணடதால் பொருளாதார முறையில் அழிவைத் தேடிக் கொணடது திம்மப்பையா பிறநதபோது நல்ல நிலையில் இருநத குடும்பம், படிப்படியாக இறங்கி ஏழ்மை நிலையை அடைநதது. திமமப்பையாவின் தொடக்கக் கலவி அதே கிராமத் தில்தான் நடநதது. கனனடமும், வடமொழியும் நன் றாகக் கற்றார். தொடக்க நிலைக கல்வியோடு அவர் பள்ளிப் படிப்புத் தடைபட்டு விட்டது.

இளைஞரான திம்மப்பையா, படிப்பையும தொடர வழியில்லாமல, வறுமை காரணமாக 1906-இல் வீட்டைத் துறந்து திருவனந்தபுரததைச் சோந் தார். அஙகு மற்றவர்களின் சிறு சிறு உதவியுடன மகாராசா சமசுகிருதக் கல்லூரியில் பயினறாா. அங்கும தொடர முடியாமல மைசூர் சென்றாா. அங்கே மற்ற அந்தணாகள வீட்டில உணடு கொணடு 'சஙகீத கலாநிதி' யெனப் பெயர் பெற்றிருந்த வாசு தேவாச்சாரியாரிடம் இசை பயினறார். வேறு தொலலைகளால அங்கும் நீடிக்க இயலாமல, வீட்டைத் துறந்து நானகு வருடஙகளுககுபபின 1906 இல் ஊருககுத திரும்பினார். அங்குக் கிராமங்களில கதா காலட்சேபம செய்யத தொடஙகினார் யடச கானக கலையையும் பயின்றார் பிறகு மங்களூரில கதாகாலட் சேபம் செயது கொணடிருக்கும்போது சில நலல மககளின் உதவியால் மங்களூா கனரா உயர்நிலைப பளளியில் கனனடப புலவராக 1914 இல நியமனம பெற்றார் 'கனனட கோகிலெ' எனனும் பத்திரிகையைத 1914 இல தொடஙகினார் இவருககு 1916 இல திருமணம நடந்தது. செயின்ட்டு அலோ சியசு கலலூரியில 1918 இல கனனடப் பேராசிரியராக நியமிககப்பட்டாா. அதிலிருந்து 1948 வரை ஏறத தாழ முப்பது ஆணடுககாலம அதே கலலூரியில பணி புரிநதார்.

வறுமையில வாழ்ந்தாலும தமமை முழுமையாக இலககியப பணிக்கு அர்ப்பணிததுக் கொணடவர், திம்மபபையா. இவர் சிறநத எழுத்தாளராகவும், சிறநத புலமை படைத்தவராகவும் திகழநதார். மேலுமிவர் 1931-ல கனனட இலககிய மாநாட்டின தலைமை யேற்றார். இது மிகப் பெரிய இலக்கியவாதிகளுககே கிடைக்கும் அரிய வாய்ப்பு. இவர் அனறு தலைமை யேற்று ஆறறிய தலைமையுரை இனறளவிலும் பெருமையாகப் பேசபபடுகிறது. திமமப்பையா 1948-ல ஓயவு பெறறாா. ஆனால் அவரது ஓயவு வாழககை இனிதாகக் கழியவிலலை. இருதய நோயினால பீடிக கப்பட்டார். இவர் 1948இல உயர் மருததுவ உதவிக் காக சென்னைககுச் சென்று அங்குத் தம் மகனுடன தஙகினார். சிறிது காலம் நோயிலிருநது விடுபட்டது போல் தோனறினாலும் அவர் முழுமையாகக குண மடையவிலலை. இவர் 1950-ஆம் ஆணடு சனவரியில சென்னையிலேயே காலமானார்.

திம்மப்பய்யா ஏறத்தாழ 18 நூலகள் இயறறி யுள்ளார் அவை பெரும்பாலும ஆய்வு நூலகளேயா கும் இவரைப் பற்றி இது காறும் மூன்று நூலகள வெளிவந்துள்ளன. சி.இரா.

***திமாசாப் பழங்குடிகள்***: அசாம் மாநிலத் தின் வட கச்சார் மலைப் பகுதிகளிலும் நாகாலாந்தி லும் மிக அதிக மக்கள்தொகையுடன் வாழ்பவாகளே திமாசாப் (Dimasa) பழங்குடியினராவர். வட கசசார்

(Cachar) மலைகளிலும், மிகிர் (Mikir) மலைப் பகுதி களிலும் இரண்டு இலட்சததிற்கும் அதிகமான திமா சாககள் வாழகின்றனர். இம்மக்கள் தடித்த உதடுகள, பெரிய மூக்கு, தூக்கலான கன்ன எலும்புகள் ஆகிய அமைப்புகளோடு நல்ல உடற்கட்டுடன் விளங்கு கின்றனா. பெண்கள சற்றுப் பருத்தவர்கள்.

சீனாவின் யாங்-டீசு-கியாங் (Yang-tse-Kiang), ஓயாஙகோ (Howangho) போனற நதிக்கரைகளில வாழ்ந்த திபேத்தோ பர்மிய இனமான போரோ (Boro) என்னும் இனத்தைச் சேர்ந்தவர்களாகத் திமாசாக்கள் கருதபபடுகினறனர். அஙகிருந்து வந்த போரோ இனத்தவர்கள அசாம், வங்காளம, நாகா லாந்து ஆகிய பகுதிகளுக்குச சென்று குடியேறினர். வட கசசார் மலைகளில குடியேறிய கச்சாரிகள் தங களைத் திமாசாக்கள் என அழைத்துககொணடனர்.

திமாசாப் பழஙகுடியினர் தஙகள் பெயாகுறித்து ஒரு மரபுக் கதைஙயக் கூறுவர். பாண்டவர்களுள, இரணடாமவனான பீமன் இடிம்பா (Hidimba) எனும் தேவதையுடன சேர்ந்து கடோத்கசன் எனும் புதல்வனைப் பெற்றான் எனறும், அவன பின்வழியி னரே திமாசாக்கள என்றும், இடிம்பாபூர் என்பதே திமாமபூர் என்றானதென்றும், திமாசா என்ற சொல் இடிம்பா எனற தேவதையின பெயரிலிருந்தே உரு வானதெனறும் கூறிக்கொள்வர்.

மலை மடிப்புகளுக்கு இடையில் உள்ள தாழ்வான பகுதிகளில் கிராமஙகளை அமைததுள்ளனர். ஒவ வொரு கிராமத்திலும் திறநதவெளியில் சறறு உயர மான இடத்தில் ‘நாட்ரங்கு’ (Nodrang) என்னும இளையவர் கூடம் உளளது. இக்கூடததில் இளைஞா கள் சமுதாய அமைப்பையும் அவர்களது பணபாட் டையும் கற்றுக்கொளவதுடன, அதனைப் பொழுது போககும் கலையரங்காகவும் பயனபடுத்துகின்றனர். இங்குப் பெணகள் அனுமதிக்கப்படுவதிலலை.

ஆடவர் வேட்டியையும், பக்ரி (Pagri) எனும் மேலாடையையும்அணிகின்றனர்.பெணடிர் எரிசிலககு (Erisilk)எனும நார் வகையில் நெய்யப்பட்ட இரணடு ஆடைகளை அணிகினறர். இவ்வகை ஆடை, கைக் குழந்தையைப் பெண்கள் நாள முழுவதும் முதுகில் கட்டிச் சுமக்க உதவியாக உள்ளது. புகை பிடிக்கும் பழக்கம் இம்மக்களிடம் மிகுதியாக உள்ளது. சிறிது காலத்திறகு முன்புவரை அபினியையும் இவாகள் பயன் படுத்தி வந்தனர். குடிப்பழக்கத்தில் திமாசாக்கள் நாகர்களைக் காட்டிலும் மிகக் குறைந்த நாட்டமுள் ளவர்கள். விருந்து, திருமணம், பண்டிகை, மரணம் போனற நிகழ்ச்சிகளின்போது மது அருந்துகினறனர். திமாசாக்கள் வீரமும், சிறநத போர்த்திறமும் மிக்க வர்கள். ஆஙகிலேயரின படைகளில திமாசா வீரர்கள் பெருமளவில சேர்த்துக கொள்ளப்பட்டனர்.

திமாசா மக்களில் இநது மததததைப பின்பறறா தவர்கள் நாய, பூனை, குரங்கு, பாமபு போன்றவை தவிரப் பிற விலங்குகள அனைத்தையும் உணகினற னர். இவர்களது செலவம் ஒரு வீட்டிலுள்ள எருமை களின எணணிககையின் அடிப்படையில கணககிடப் படுகிறது. மணப்பெணணுக்கு அளிக்கப்படும பரிசம எருமைகளாகவே அளிக்கப்படுகிறது. வட கசசார் மலைப பகுதிகளில் உளள திமாசாக்கள பேச்சு வார்த்தை மூலமாகவே திருமணததை நடததுகினற னர். ஆனால, மிகிா மலைப்பகுதிகளில வாழும திமாசா இளைஞர்களும் பெணகளும் தஙகளுககு விருப்பமான மணத் துணையைத் தோநதெடுததுப பழகி மணந்துகொளவதில் பெரிதும ஆாவம காட்டு கின்றனர். இம்மக்களிடையே சிறுவர் திருமணம நடத்தப்படுவதில்லை. பிற பழஙகுடியினருடன மணம் செய்பவர்கள சமூகத்திலிருந்து நீக்கப்படுகினறனர்.

பலதுணை மணம் (Polygamy) இவாகளிடையே அரிது. மணவிலக்கு எளிது. மணவிலக்குப் பெற விரும பும் கணவன, அவன கொடுதத மணப்பெண் பணத்தை இழந்துவிட வேண்டும். அதேபோல மண விலக்குப பெற மனைவி முனவரும்போது அவளபெற்ற பரிசத்தைத் திரும்பச் செலுத்தவேண்டும. விதவைமறு மணம் ஆதரிக்கப்படுகிறது. அணணன மனைவி விதவையானால தமபி மணந்துகொள்ளலாம். ஆனால் தம்பியின மனைவி விதவையானால் அணணன மணந்துகொளளக் கூடாது. அதேபோல ஒருவர் இறந்த மனைவியின் தஙகையைமணந்து கொளள லாம்.

திமாசாககளின சமுதாயத்தில் குலமுறை(Clans) குறிப்பிடத் தக்கதாகும். தநதைவழிக் குலங்கள் நாற் பது பிரிவுகளும், தாய்வழிக குலங்கள நாறபத் திரணடு பிரிவுகளும் உள்ளன. ஒரு குலததைச சேர்ந் தவர் வேற்றுக் குலத்தவரையே மணககவேண்டும். ஆனால், ஒரு தந்தை தனனுடைய தாயின் வழியிலி ருந்து ஒரு மருமகளை ஏடுத்துககொளளலாம். திமா சாக்கள் இம்முறைகளை அனுசரிப்பதில் மிகவும் கண்டிப்பாக உள்ளனர். இம்முறைகளை மீறுபவர்கள சமூகத்திலிருந்து நீக்கப்படுவார்கள்.

திமாசாக்களின் கிராம நிருவாக அமைப்பு கச் சாரி மனனர்கள் காலம்முதலே சிறப்பாக அமைந்து நடத்தப்பட்டு வந்துள்ளது. அவ்வமைப்பு இன்றும் பல கிராமஙகளில் செயற்படுத்தப்பட்டு வருகிறது. கிராமத்தலைவர் குணங்கு (Kunang) என்று குறிக் கப்படுகிறார். கிராமத்திலுள்ள ஆடவருள மிகவும்

முதிய, வயதுடையவர் இப்பதவியை வகித்து வந்தனா. ஆனால், இககாலததில் முதியவருள அறிவும் அனுபவமுமுடைய ஒருவா 'குணங்கு' ஆகத் தோந்தெடுக்கப்படுகிறார். சண்டை சச்சரவுகள, பொது வழக்குகள, பணடிகைகள் போன்றவற்றில் இறுதியான முடிவு கிராமத்தலைவரால் எடுக்கப்படுகிறது. பெரிய கிராமங்களில குணஙகுககு உதவியாகத 'திலெக்கு' (Dilek) எனறழைக்கப்படும உதவிக கிராமத்தலைவர் ஒருவர் நியமிக்கபபடுகிறார். கிராமததில செல்வாககு மிககவர்கள 'தவ்லதது' (Daulathu) எனும் மூனறாம் நிலைக் கிராமத் தலைவாகளாக நியமிககப்படுகினறனா. ஒரே கிராமததில ஒனறுககும மேற்பட்ட தவலத்துகள் நியமிக்கபபடுவதுணடு. நீதி வழஙகுவதில கிராமத தலைவருககு உதவுவதே தவலத்துகளின முக்கியமான பணி. திலெக்கும, தவலத்துகளும கிராமத்திலுள்ள பெரியோர்களால் தேர்ந்தெடுககப்படுகினறனர்.

ஒவ்வொரு கிராமத்திலும் நானகு அமைசசர்கள உளளனா. இவர்கள மநதிரிகள (Mantri) எனறழைக்கப்படுகினறனர். பொது நிகழ்சசிகளுக்கான பணிகளும், அவசரகாலப் பொறுப்புகளும், கிராமததிறகு வரும அரசியல பிரமுகர்கள, அதிகாரிகள ஆகியோரை வரவேறறு உதவும் பணிகளும் இவாகளிடம் ஒப்படைக்கப்படுகினறன. இவை தவிரக் கிராமத் தலைவருககு அவரது பல்வேறு பணிகளிலும மநதிரிகள ஆலோசனை கூறி உதவுகினறனர். மநதிரிகளின உதவிககாகப் பத்து முதல இருபத்தைநது இளைஞர்கள தெரிவு செய்யப்படுகின்றனா. இவ் வுதவியாளாகள அங்சியோபுககு (Hangseobukhu) எனறழைக்கப்படுகினறனா.

கிராம நிருவாகத்தின அடிப்படை உறுப்பினா சலைரோ (Jalairao) எனறழைக்கப்படுகினறனா. மணமுடிந்த ஒவவொரு ஆடவரும ஒரு சலைரோ ஆவாா. வெளிப் பண்பாட்டுத் தொடாபு, இப்போதைய அரசியல் அமைப்பு ஆகியவற்றின விளைவாகப் பல கிராமங்களில இந்த நிருவாக அமைப்பு தளர்ந்து காணப்படுகிறது. சில கிராமங்களில் சில பதவிகள கைவிடப்பட்டுவிட்டன.

வேளாண்மையே திமாசாக்களின் முக்கிய தொழில. நெல, மககாச்சோளம், வாழை, பருத்தி, மிளகாய், கடுகு, கத்தரி, வெணடை, பரஙகி போன்றவறறைப் பயிரிடுகின்றனர். காடுகளில இடம்விட்டு இடம்பெயரும் (Shifting Cultivation) வேளாணமையையும் குறைந்த அளவில் செய்கினறனர். காட்டுக் கனிகளையும கிழங்குகளையும் சேகரிப்பது, மூங்கில் மரங்கள் போன்ற வனப்பொருள்களைச் சேகரிப்பது, நூற்பு, நெசவு, பட்டு வளர்ப்பு, கோழி மற்றும் கால நடைகள் வளர்ப்பு ஆகியவை திமாசாக்களின துணைத் தொழிலகளாகும். வேட்டையாடுவதில திமாசா ஆணகள ஈடுபடுகின்றனர். ஏனைய பழஙகுடிகளில காணப்படுவதுபோல் கூட்டமாகச் சென்று வேட்டையாடும பழககம் இவர்களிடமில்லை. தனியாக அல்லது ஒரு குடும்பத்தைச் சேர்நதவர்கள் மட்டுமே வேட்டைககுச செலகினறனர். மீன பிடிப்பதில ஆடவரும், பெணடிரும சேர்நதே ஈடுபடுகினறனா. வேட்டையாடுவதற்கு ஈட்டி, அம்புகளுடனஇப்போது துப்பாககிகளும் பயனபடுத்தப்படுகிறன.

ஒருவர் இறந்தவுடன அவரது தலை அருகே ஒரு சேவல பலியிடப்படுகிறது. இறந்தவா மறு உலகுக்குச் செலலும்போது அவருக்கு உறுதுணையாகச சேவலும செல்லும என நமபபபடுகிறது இறநதவாகளை எரிக்கினறனர். மரணததிற்குப் பினபான பிற சடஙகுகள ஏழாம் நாளிலிருந்து ஓராணடுககுள செய்து முடிககப்படுகினறன.

திமாசாககளின் வழிபாட்டில் பத்துக் கடவுளகள உள்ளனர். அவர்களுள தலையாய கடவுள அலவராசா (Alow Raja) என்று குறிக்கப்படுகிறார். சாணடைசாவ் (Iontaizao) எனும் மதகுரு வழிபாடுகளை நடத்துகிறார். முற்காலத்தில ஆண்டொனறுக்குக் குறைநதது ஒரு நரபலியாவது கொடுககப்பட்டு வந்ததெனறு கூறுகினறனர். நரபலி கொடுக்கும் வழக்கம இபபோதில்லை. ஒவவொரு கிராமத்திறகும் தனித் தேவதை உளளது. ஆண்டுதோறும் கிராம தேவதைகளின வழிபாடு நடககிறது. நோய்களை விரட்டவும், இயறகை இன்னலகளைப் போக்கவும்கூடச் சிறபபுப பூசைகள செய்யப்படுகின்றன.

கிராமத்தில் அவ்வப்போது நடைபெறும் சமூக வழிபாட்டுக்கான பணிகளைக் கவனிப்பது எபெய்சாகோ (Hebaisagao) வின கடமையாகும். இவரையும் பெரியோர்களே தோந்தெடுக்கினறனர்.

புசு (Busu) என்று குறிக்கப்படும் அறுவடைத் திருவிழா ஆணடுதோறும் அறுவடைககுப்பின மூன்று நாளகள முதல் ஐநது நாள்கள் வரை கொணடாடப்படுகிறது. இப்பணடிகை நாளகளில் வழககமான பணிகள் அனைததும் நிறுத்தப்படுகின்றன. திமாசாககளின ஆணடு வருமானததில பெரும்பகுதி இப்பணடிகைககே செலவிடப்படுகிறது. முதல் நாள விழாவைப புசு சடைபா (Busu Sataiba) எனக கூறுகின்றனா. சடைபா என்றால் கொல்லுதல எனறு பொருள. இந்நாளில எருமையையும் பனறிகளையும் கொனறு பொது விருந்து படைக்கினறனா; மக்கள் அரிசிப்பானம் அருந்தி மகிழகினறனர். கிராமத்தலைவன் வீட்டின முன நின்று பக்திபபாடல்களைப் பாடுகின்றனர். இர

வில் பொது இடத்தில் இளைஞரும் பெண்டிரும் பாடி ஆடுகின்றனர். இரவு முழுவதும் பலவகை நடனங்க ளாடிக் கிராம தேவதைகளை வணங்குகின்றனர்.

இரண்டாம் நாள விழா 'பசுகாபா' (BasuGaba) என்றழைக்கப்படுகிறது. இது பெரியோரைப் போற் றும் விழாவாகும்.

இறுதிநாள் விழா 'பசு கெர்பா' (Busu Gerba) என்னும் பொது வழிபாட்டு விழாவாகும். இந்நாளில் கிராமமக்கள் அனைவரும் சேர்ந்து பொது வழிபாடு நடத்துகின்றனர். விருந்தினர் யாரையும் இநநாளில் ஊருக்குள அனுமதிப்பதிலலை. அதேபோல் ஊரில் உள்ள யாரும் வெளியே செலவதுமில்லை. விருநதினர் கள் மூலம் ஊருக்குள வரும் தீய ஆவிகளை விரட்டவே இவவழிபாடு நடத்தப்படுகிறது. ப.இரா.

**துணை நூல்கள்:**

**Barkataki, S.**, Tribes of Assam National Book Trust of India, New Delhi, 1969.

**Danda Dipali, G.**, Among the Dimasa of Assam: An Athnographic Study, Sterling Publishers Private Ltd., New Delhi, 1978.

**தியடோசியசு, முதலாம் (மகா) (கி.பி. 379-395)**உரோமானியப் பேரரசராகத் திகழ்ந்த இவர் கி.பி. 347இல் இசுபெயின நாட்டில் கௌகா எனனு மிடத்தில் பெரும் நிலச்சீமான் குடும்பத்தில் பிறந் தவர். இவர் தந்தையார் தியடோசியசு (Theodosius) உரோமானியப் படையில் தளபதியாயிருந்தார். முத லாம் வாகலெண்டினியன் காலத்தில் பி.கி. 367 முதல் 369 வரை பிரிட்டனைச் சாகசனியரிடமிருந்து திரும்பக் கைப்பற்றும் பணியில்தன தந்தையார் ஈடுபட்டிருந்த போது அவருக்குத் துணை நினறார். இவருடைய தந் தையார் 375-இல் கொல்லப்பட்டபோது தியடோ சியசு, இசுபெயினுக்குத் திரும்பினார். அங்கு ஐலியா பிளாசிலலாவைத திருமணம் செய்துகொண்டார். பின்னர் 379-ஆம் ஆணடு சனவரியில் பேரரசர் கிரே சியன என்பவரால் பேரரசின கூட்டாட்சியாளராக அறிவிக்கப்பட்டார்.

பேரரசின் கிழக்குப் பகுதியின் ஆட்சியாளராகப் பொறுபபேற்றிருந்த போது இவர் தான்யூப்புப் பகுதி யில் பரவியிருந்த கீழைக் கோத்துகளைச் சமாளிப்ப தில் கவனம் செலுத்தினார். படைத்துறைச் சட்டங் களைக் கடுமையாக்கினார். படைக்கு அதிக வீரர் கள் சேர்க்கப்பட்டனர். கடும் நடவடிக்கைகளுக்குப் பின னர் கி.பி. 382 அக்டோபரில் கீழைக்கோத்துகளுடன் இவர் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார். அதன்



தியடோசியசு, முதலாம்

விளைவாகக் கீழைக் கோத்துகள தானயூபு மற்றும் பால்கன் பிரதேசங்களுக்கு இடைப்பட்ட பகுதியில் குடியேற அனுமதிக்கப்பட்டனர். அவர்கள் பேரரசின் மேலாண்மையை ஏற்றுக் கொண்டார்கள். அவருடைய தனித்த ஆற்றல்களின் வாயிலாக இறுதிவரைக் கோத்துகளைக் கட்டுப்படுத்தி வைததிருந்தார். கிரேசியனை மாக்சிமசுகி.பி. 382இல் கொன்று ஆட்சி யைக் கைப்பற்றிக்கொண்டார். ஆகவே, தியடோசியசு மாக்சி மசுவுடன் போர் நடத்தி அவரை 388-இல் வெனறு கிரேசியனின் புதல்வரான இரண்டாம் வாலெண்டினியனைப் பேரரசராக ஆக்கினார்.

இவர் சமயத்துறையில் அதிக ஈடுபாடுகொணடிருந் தார். இலத்தீன்கிறித்தவ சமயத்தை நாட்டில் ஏற் றுக்கொளளப்பட்ட சமயமாக்கினார். கானசுடாண்டி நோபிளில் இவர் கூட்டிய சமயக்குழுக் கூட்டங்களின் வாயிலாகவும், சட்டங்களின் மூலமாகவும் இலத்தீன் கிறித்தவக் கோட்பாடுகள வரையறைக்குட்படுத்தப் பட்டன. இவர், 389-இல் உரோம் நகருக்கு வருகை தந்தார். அதனையொட்டி 390-இல்தெசலோனிகாவில் ஏற்பட்ட புரட்சி காரணமாக ஏறத்தாழ 3000 பேர் கொலை செய்யப்பட்டனர். அதன விளைவாக அவர் மிலானில் புனித அம்புரோசைக் காண அனுமதிக்கப் படவில்லை. மீண்டும் 391-இல் கிறித்துவ எதிர்ப்பாளர் களுக்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்தினார்.

இரண்டாம் வாலெண்டினியன் திடீரென கி.பி.392 -இல் மரணமடைந்ததால் அர்போகரசுடு என்றும் பிராங்கியத் தளபதி,யூசினியசு என்னும் பேராசிரியரை உரோமானியப் பேரரசராக அறிவிப்புச் செய்தார். இதனால் எழுந்த சிக்கல்களைத் தீர்க்க மேற்கொண்ட முயற்சிகள் பலனளிக்கவில்லை. மேலும் அர்போக

ரசுடு பெற்ற வெற்றிகளின விளைவாக இத்தாலி, இசு பெயின ஆகிய பகுதிகள் 393-இல் யூசினியசுவின ஆட்சிக்குட்பட்டன.

யூசினியசுவின வலுததாக்குதலை விருமபாத தியடோசியசு யூசினியசுவின மீது கி.பி. 394-இல போர் தொடுத்தார். அப்போரில தியடோசியசு தொடக் கத்தில தோலவிகணட போதிலும கி.பி. 394 செப்டம பா 5-இல வெற்றிகணடார். யூசினியசு சிரச்சேதம் செய்யப்பட்டாா. ஆரபோகரசுடு தற்கொலை செய்து கொண்டார். ஒனறுபட்ட உரோமானியப் பேரரசுக்குத் தியடோசியசு ஆட்சியாளரானார். அவா கி.பி.395-இல் காலமானாா.

**தியடோசியசு இரண்டாம்,** கிழக்கு உரோமப் பேரரசர் மகா தியடோசியசின (Theodosius)பெயரா. இவா கி.பி. 401, ஏபபிரல 10-இல கான்சுடாணடி நோபிளில் பிறந்தார். அாகாடியசு மறறும யூடோக் சியா ஆகியோர் மகன். இவா கி.பி. 402-ஆம் ஆணடு சனவரி 10-ஆம் நாள இளவரசுப் பட்டம் பெற்றார். 408-ஆம் ஆணடு மே மாதம் முதலநாள் பேரரசரானார். இவரது இளமைப் பருவம காரண மாகச் சிறிது காலத்திற்கு அந்திமியசு எனபவா பகர ஆளுநராகச் செயற்பட்டார். இவருடைய உடனபிறந தாள் பல்சேரியா கி.பி 414 முதல இவருடைய பகர ஆளுநராகப் பணிபுரிந்தார். வளாபபுமுறை காரண மாகத தியடோசியசு நற்குணஙகளும், சமயப் பறறும் நிரமபியவராகக காணப்பட்டார். சமயக கோட்பாடு கள இவரைப் பெரிதும் கவர்ந்தன. சிறந்த படிப்பாளி யாகவும் இவர் திகழந்தாா.

இவரது ஆட்சிக்காலத்தில் கி.பி. 429-இல ஆப்பிரிக் காவில தமது மேலாணமையை நிலைநாட்ட முயன்ற வாணடல்கள் எனற காட்டுமிராணடிப் பிரிவினர் மீதும், 434-க்குப் பின் தானயூபுப் பகுதியில் வலுப் பெற்ற அட்டிலலா எனற கூனத் (Hun) தலைவரின மீதும் தனனுடைய முழுக் கவனததையும செலுதத வேணடியவரானாா. ஆயினும், இவாதம ஆபபிரிக்கப் படையெடுப்புகள் பலனளிககவிலலை. அட்டிலலா எனபவரை அடக்க கி.பி. 443 முதல் 447 வரை இவர் மேற்கொணட முயறசிகளும் பயனறறவையாயிருந் தன. கானசுடாண்டி நோபிளில பாட்ரியார்க்கு என்னும் சமயத்தலைவர் பதவிககு கி.பி.428-இல இவரால் நியமிககபபட்ட நெசுட்டோரியசு என்ப வரும் இவருக்கு இடையூறாகவே விளஙகினார். இருப் பினும் இவருடைய பொதுநலப் பணிகள் சிறப்புடன் திகழந்தன.

இவா 425-இல் கான்சுடாண்டிநோபிள் பல்கலைக் கழகததை உருவாக்கினார். அந்நகரினைச் சுற்றி கி.பி.447-இல்கோட்டையொன்றினை எழுப்பினார். ஒனபதாண்டுகள் கடும் முயற்சிகளுக்குப் பின் கி.பி 438-இல் தியடோசியசின் சட்டத்தொகுப்புகளை வெளியிட்டார்.

இவருக்கு ஒரு மகனும், இரு பெணமக்களும் இருந்தனர் ஆனால மகன இளவயதிலேயே கால மாகிவிட்டான். இவா வேட்டையாடுகையில ஏற்பட்ட விபத்து ஒன்றுக்கு ஆளாகி கி பி.450, சூலைத் திஙகள, 28-ஆம நாள் காலமானாா். மா கா.

***தியாகராசச் செட்டியார், கருமுத்து:*** கல்வி யுலகிலஅனைவராலும் 'கலைத்தந்தை' எனப் போற் றப்பெறும் கருமுத்து தியாகராசச செட்டியாா பசும பொன முத்துராமலிஙகம மாவட்டம, ஆத்திககாடு தெற்கூரில 16.6 1983-ஆம நாள தோனறினாா. இவா தநதையார் கரு.முதது ககருப்பன செட்டியாா; தாயார் வினைதீா்த்தாள் ஆச்சி. இவருடன பிறநதோா மூவர் ஆண் மககள; அறுவா பெண மக்கள. இவாகள அனை வரிலும இளையவர் தியாகராசர்.



தியாகராசச் செட்டியார், கருமுத்து

இவர் மதுரைச சேதுபதி உயர்நிலைப் பளளியில கலவி பெற்றார். பினனாளில நீதிக்கட்சியின தலை வராக விளஙகிய சர்.பி.டி.இராசன இவருடன் பயின றவா. தியாகராசரின கலவி கொழுமபில் புனித தாமசு கலலூரியில் எட்டு ஆண்டுகள தொடர்ந்தது. அக்காலத்திலேயே யாழ்ப்பாணத்து நலலூாச் சிற. கைலாச பிள்ளையிடம சைவசித்தாந்தம பயினறார் தமது 17-ஆம் வயதில செலவி. விசாலாட்சியைத் திரு மணம் புரிநதுகொணடார். தம்முடன 37 ஆணடுகள மனையறம் நடத்தி மாண்புற்ற மனைவியாரின் நினை வாக ஆத்திக்காடு தெற்கூரில ஓர் உயர்நிலைப் பளளியை நிறுவினார்.

தியாகராசர் கொழும்பில் 'மார்னிங்குஇசுடார்' என்ற ஆங்கில நாளேட்டில் இரண்டு ஆண்டுகள் செய்தியாளராகப் பணியாற்றினார். அங்கு இந்தியத் தொழிலாளர் சிக்கலில் கருத்துச் செலுத்தி, அதுபற்றி, 1916-ஆம் ஆண்டு, சென்னை ஆளுநர் பெண்ட்லண்டு பிரபுவிற்கு, இவர் எழுதிய கடிதம், சென்னை ஆவணக்காப்பகத்தில் வைக்கப்பட்டுள்ளது இவர் இலங்கையில் தொழிற்சங்க இயக்கம் தொடங்கி, 7 ஆண்டுகள் தோட்டத் தொழிலாளர் தலைவராக இருந்து போராட்டம் நடத்தினார். அதன் விளை வாகத் தொழிலாளர்களுக்குப் பல உரிமைகள் வழங் கப்பட்டன.

தியாகராசர் மதுரையில், மதுரை ஆலையிலிருந்து வெளியேற்றப்பட்ட தொழிலாளர்களின் நலன் கருதி 1924-ஆம் ஆண்டு சிரீ மீனாட்சி ஆலையை நிறுவினார். பின்னர் மணப்பாறையில் தியாகராசா ஆலையை நிறுவினார். கோவை, சேலம், கோவில்பட்டி, விருது நகர், திருச்சூர் ஆகிய நகரங்களில் ஆலைகளை வாங்கி நடத்தினார். மதுரையின் எல்லைகளில் புதிய ஆலைகள் நான்கை அமைத்து நடத்தினார். கேரள மாநிலத்தில் மூன்று ஆலைகளை நடத்தினார். தமிழ கத்தில் இவர்போல் 16 ஆலைகளை நடத்தியோர் வேறு எவருமிலர். இக்காரணம் பற்றி, இவர் ஆலை யரசர் எனப் புகழப்பெற்றார்.

ஆலைத்தொழில் மட்டுமன்றித் தமிழகத்தில் வங்கித் தொழிலின் வாயிலாகப் பல தொழில்களை யும் வளர்த்த பெருமை தியாகராசருக்கு உண்டு. அவர் 1943-ஆம் ஆண்டு மதுரை வங்கியை நிறுவி னார். 1959-ஆம் ஆண்டு மதுரை வங்கி, அட்டவணை யில் (Scheduled Bank) சேர்க்கப்படும் தகுதிபெற்று உயர்ந்தது.

தமிழகத்து மாணவர்களின் உயர்கல்வியில்பேரார் வம் காட்டிய தியாகராசர் 1949-ஆம் ஆண்டு மதுரை யில் தியாகராசர் கல்லூரியை நிறுவினார். 1958-ஆம் ஆண்டு அது முதுகலை கற்பிக்கும் கல்லூரியாக உயர்ந் தது. இன்று மதுரை காமராசர் பல்கலைக்கழகப் பகுதியில் கூடுதலான முதுகலை, முதுநிலை அறிவியல் வகுப்புகளும், ஆராய்ச்சித் துறைகளும் உடைய தன் னாட்சிக் கல்லூரியாக உயர்ந்துள்ளது. இது 1987-ஆம் ஆண்டு தன்னாட்சியுரிமை பெற்றுள்ளது.

தியாகராசர் 1956-ஆம் ஆண்டு 'தியாகராசர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி'யை நிறுவினார். மதுரை மாவட்டத்தில் தோன்றிய முதல் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி இதுவேயாகும். இக்கல்லூரியைச் சார்ந்த தாக ஓர் உயர்நிலைப் பள்ளியை நிறுவினார் தமது கல்விக் கொடையின் அரும்பெருஞ் சாதனையாக 1958-ஆம் ஆண்டில் தியாகராசர் பொறியியற் கல் லூரியை நிறுவினார். திருப்பரங்குன்றின் சாரலில் ஒருகோடி ரூபாய்க்கு மேற்பட்ட செலவில் இக்கல் லூரியை அமைத்தார். பலதுறைப் பொறியியற் கல்வி யோடு, பயன்பாட்டு அறிவியற் கல்வியும், முதுநிலைக் கணிப்பானியற் கல்வியும் இங்குக் கற்பிக்கப்படுகின் றன.

பல துறையிலும் உயர்கல்வி வளரவேண்டும் என்ற பெருநோக்குக் கொண்ட தியாகராசர் 1961-ஆம் ஆண்டு தியாகராசர் மேலாண்மைக் கல்லூரியை (Thiagarajar College of Management) நிறுவினார். மேலாண்மையியலில் முதுநிலை கல்வி முழுநேரமாக வும், பகுதி நேரமாகவும் இங்குக்கற்பிக்கப்படுகின்றது. தியாகராசரின் கல்வியார்வமும் கல்விப் பெரும்பணி யும் சிறப்பானவை. சேலத்தில் பலதொழிற்பள்ளிகள் நிறுவினார். திருச்சூரில் அழகப்பர் பலதொழிற் பள்ளி யின் பொறுப்பை மேற்கொண்டு நடத்தினார். தெற் கூரில் மகளிர் உயர்நிலைப் பள்ளியையும் மதுரையில் இரண்டு உயர்நிலைப் பள்ளிகளும் நிறுவினார். இத் துணைக்கல்வி நிறுவனங்களையும் தமதுசொந்த நிதியி லிருந்து நிறுவி நடத்திவந்தார்.

தொழில் வளர்ச்சி, கல்வி வளர்ச்சி ஆகியவற்றின் வாயிலாக மட்டுமன்றி நாளிதழ்ப்பணி வாயிலாகவும் தமிழகத்திற்குப் பெருநன்மைசெய்தவர் கலைத்தந்தை தியாகராசர். 'தமிழ்நாடு' நாளிதழின் பொறுப்பை 1951-ஆம் ஆண்டு மேற்கொண்டு நடத்தினார். கலப் பில்லாத தூய,எளிய தமிழ் நடையில் செய்திகளைத் தாங்கி வெளிவந்த அந்நாளிதழ், பிற நாளிதழ்களும் மற்ற இதழ்களும் தமது மொழிநடையைச் செப்பம் செய்துகொள்வதற்குத் தூண்டுகோலாகவும் வழி காட்டியாகவும் இருந்தது.

தியாகராசர் கல்விக் கொடையாளர் மட்டுமல்லர்; தாமே புலமையிற் சிறந்தவர் சங்க இலக்கியம், திருக் குறள், திருவாசகம்,மற்ற சைவத்திருமுறைகள் ஆகிய வற்றில் ஆழ்ந்த பயிற்சியுடையவர்.நெறியான வாழ்க் கையும் கடுமையான உழைப்பும் பிறரையும் கண்டிப் பாகப் பணியில் ஈடுபடச்செய்யும் இயல்பும் உடைய வர்; அஞ்சாநெஞ்சர். தம் கொள்கையில் உறுதியும் துணிவும் உடையவர். செய்வன யாவும் திருத்தமும் பொருத்தமும் உறச் செய்யும் பான்மையர். இவர் 1975-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 29- ஆம் நாள் திருக்குற்றாலத்தில் மறைந்தார். சுப.அ.

**தியாகராசச் செட்டியார், சி.:** இவர் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ள பூவா

ளூர் என்னும் ஊரில், கி.பி. 1826-ஆம் ஆணடு சிதம பரம் செட்டியாரின முதல மகனாகப் பிறந்தார் தொடக்கக் கலவிக்குப் பினனர் மேலும் கலவி கற்க விரும்பிய இவர், திரிசிரபுரம் மகாவித்துவான மீனாட்சி சுந்தரம் பிளளையிடம தனியே மாணவ ராகப் பயின்றார். தம் ஆசிரியரோடு உடனுறைநது கற்கும் வாய்ப்பினைப் பெற்ற இவர், இலக்கிய இலக்கணப் பயிறசி பெற்றுச் சிறந்த புலமையும கவி இயற்றும் திறமும் விளஙகப் பெற்றாா. அவரிடம கலவி பயினற போதே இவா தம் ஆசிரியர் மீது 100 செய்யுளகளை இயற்றி அவரைப் போற்றினார்.

தொடக்கத்தில திரிசிரபுரம, திருவரஙகம ஆகிய இடங்களிலுள்ள பளளிகளில் பணிபுரிநத இவர் பின்னர்த் தம் ஓய்வு பெறும் காலம் வரை குடநதை அரசினர் கலலூரியில தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றினாா. திருசசிராப்பளளி விருத்தாசலம் செட்டியார் மகள செல்லம்மாள எனபவரை மணந தார்.

ஆறுமுக நாவலரோடு தொடாபு கொணடு விளங்கிய இவர், அவர் பாட இருநத அளகாபுரி உமையம்மை பிள்ளைத் தமிழை இவரே பாடுமாறு அவரே ஏற்பாடு செய்யும் அளவு சிறப்பினைப் பெற றார். தம் ஆசிரியர் மீனாட்சி சுந்தரம் பிளளை பாடிய வாட்போக்கிக கலம்பகததை, அவவூருக்குச சென்று அரஙகேற்றுமாறு ஆசிரியராலேயே பணிககப் பெறறு, அரங்கேறறிச் சிறப்பெய்தினார்.

இவா, தம் மாணவர்களுககுப் பாடம் பயிற்று வதில் சிறந்த திறம் பெற்று விளங்கினாா. தமிழுககுக குறைவு உணடாகும்படி மேற்கொளளப பெறும் எந்த முயற்சியையும் இவர் ஏறகாததுடன அதனைத் தயங்காமல் கணடிக்கவும் செய்தார். செலவாக்குளள வழக்கறிஞர் ஒருவா நனனூலில் பாதியளவுக்கு மேல் நூற்பாக்களை விடுததும், மேறகோளகளைப் பொருத்தமினறிக் குறைத்தும் வெளியிட்டு, அந் நூலைப் பாடமாகக முயன்றார். அதனை மறுத்து விட்ட இவா, அந்த வழக்கறிஞரைச் சந்திததபோது கடுமையாகக் கணடிக்கவும செய்தார். இவர் திருச்சி யில் வாழநதபோது, அரசுச் செலவாக்குடைய ஓா ஆஙகிலேயப் பாதிரியார், திருக்குறளை மேலோட்ட மாகப் படிததுவிட்டு, தாம் விருமபியவாறு சில திருத்தங்கள் செய்து அவறறை ஏற்குமாறு வேணடிச் செட்டியாரிடம் வநதார். அதனை அறிநத இவா, அவரோடு பேசவும் விரும்பாது வீட்டி னுட் செனறு விட்டார். திருவானைக்காவில இப்புலவரின் அன்பர் ஒருவர், திருவாசகத்திறகு உரை எழுதுமாறு பலமுறை வேணடியும், இசை யாது மறுத்துவிட்டார். தமிழப் பறறும் ஆர்வ மும மிககொண்டு, சிறநத ஒழுககம் சானறவராய வாழந்த செட்டியார் கி.பி. 1888-ஆம் ஆணடுக் கால மானாா. இவருக்குப் பின்னர், டாக்டர் உ.வே. சாமி நாதையர், குடந்தைக் கல்லூரியில இவர் ஆற்றி வநத பணியில நியமிக்கப பெற்றாா. அபபணி செட்டியாரின பரிந்துரையால் டாக்டர். உ.வே சாமி நாதையர்ககுக் கிடைத்தது. அநநனறியை மறவாது பிறகாலத்தில சாமிநாதையர் தம் இல்லததிறகுத் தியாகராச விலாசம் என்று பெயரிட்டாா. மேலும வித்துவான தியாகராசச் செட்டியார் என்ற பெயரில இவரது வாழககை வரலாறறை நூலாகவும் வெளி யிட்டுளளார்.

அ.மா.ப.

***தியாகராச சுவாமிகள்:*** இவா தமிழகததில கி.பி. 18-ஆம நூற்றாணடிலும், 19-ஆம நூறறாணடி லும் வாழ்நது சஙகீத மும்மூர்த்திகள எனச சிறப பிககப் பெற்ற மூவருள தியாகையா எனப்பெயா பெறும இவர், இநதிய இசை உலகில பெற்றுளள சிறப்பிடமும், மேல நாட்டு இசையுலகில பீதோவன் பெற்றுளள சிறப்பிடமும் ஒததநிலையில உளளன வெனக் கூறலாம்.

தியாகையர் கி.பி. 1767-ஆம ஆணடில் திருவாரூ ரில் பிறந்து, திருவையாற்றில வாழந்து மறைநத வராவாா. இவவிரு ஊர்களும் தஞ்சை மாவடடத தைச் சார்நதவை.

தியாகையா தம் தந்தையார் இராமப் பிரமமத் திடம் தெலுங்கு, சமசுகிருதம் ஆகிய மொழிகளை யும், இசையையும் கறறார். புரந்தரதாசர், விசய கோபாலா ஆகியோர் பாடலகளைத் தாயாரிடம கற்றார். பின்னர்த் திருவையாறறில சோநதி வெங கட்ரமண தாசரிடம் இசை பயின்றார்.

தியாகையருக்கு வீணை மீட்டவும தெரியும. தியாகையரின படைப்புகளில் கனராகபஞ்ச ரததினக் கிருதிகளும், திவ்விய நாம கீர்த்தனைகளும், உறசவ மரபுக் கீர்த்தனைகளும்,சடராக ரத்தின மாலிகாவும், இசை நாடகஙகளாகிய பிரகலாத பகத விசயம், நௌக சரிதம், சீதாராம விசயம் ஆகியனவும் குறிப் பிடத்தக்கன.

இவாதம் இசை நாடகங்களிலும், திவ்விய நாம கீர்த்தனைகளிலும், உறசவ மரபுக கீர்த்தனைகளி லும் நாட்டுப்புற இசை இடம்பெற்றிருப்பது மனங கொள்ளத்தககது.

நாட்டை, கௌளை, ஆரபி, சீரீ, வராளி ஆகிய இராகங்களில் இவர் இயற்றியுள்ள கீர்த்தனைகளே

பஞ்சரத்தினக் கீர்த்தனைகள எனப்படும். தியாகை யர் இவறறை உஞ்சவிருத்திப் பசனையினபோது பாடி வருவது வழக்கம்

தியாகையர் வாரம் ஒருமுறை தம் மாணவர் களோடு கீர்த்தனைகளைப் பாடிக்கொணடு திருவை யாற்று வீதிகளின வழியே செலவார். மக்கள அவ ருக்கு அரிசி வழங்குவர். ஒருநாளில் அவா பெறும அரிசி வாரம முழுவதும அவருக்கும, அவருடைய மாணவர்கள், விருநதாளிகள அனைவர்க்கும் போது மானதாக இருககும். அவரது எளிய வாழ்வுக்கும், இசைப் பணிககும் திருவையாற்று மக்கள் அவருக்கு அளித்துவநத ஆதரவுக்கும், அவரை அவர்கள் தெய்வ மெனப் போறறியமைக்கும் இநநிகழ்ச்சி சான்றாகும்.

கிருதி எனற சிறந்த இசை வடிவத்தை முழுமை யாக்கியவா தியாகையரே. இசை உருப்படிகளில சஙகதிகள் சிறந்தோங்க வழி காட்டியவரும் இவரே.

தியாகப் பிரம்மம் இயற்றிய சாகித்தியஙகள் 24,000 என்பர். ஆனால, அவற்றில் இப்போது கிடைத்திருப்பவை சுமார் 1000.

ஓர் இராகததின அழகுகள் அனைத்தையும ஒரே ஒரு சாகிததியத்தில செறிவாக அமைதது, அதறகு ஒரு கனததைக் கொடுத்து அமைப்பதறகு மாறாக, ஒரு ராகத்தின் பலவேறு அம்சங்களையும் பலவேறு சாகித்தியங்களில தோனறும்படி அமைத்திருப்பது இவர்தம் தனிப்பாணி. இது இசை கற்கும் மாணவர் களுககும, ஆய்வாளர்களுககும இராகத்தினுடைய பல்வேறு அம்சங்களையும் முழுமையாக அறிய உதவு கிறது.

இவரே சில புதிய இராகஙகளைப் படைத்தளித துளளார். 'நிதி சால சுகமா?'-எனத் தொடங்கும சாகித்தியமும், அது இயற்றப்பட்ட வரலாறும - தியாகையரின தன்மான உணர்வுக்கும், கலைச செருக்கிற்கும் எடுத்துக்காட்டாக விளஙகுகின்றன.

'மரிமரி நின்னு'-எனத் தொடங்கும் சாகிததியத் தைத தஞ்சை மராத்திய மன்னா அரணமனையில் வித்துவானகள முன்னிலையில் இவர் எட்டு மணி நேரம் பாடினார் எனனும் வரலாறறுக் குறிப்பு இவ ரது வியத்தகு படைப்பாற்றலுக்கும், கற்பனைக்கும் சிறந்த சான்றாகும்.

சித்தியடைந்த நாள : 6.1.1847
(தை மாதம் புசிய பகுள பஞ்சமி)

இவர், கி.பி. 1847-ஆம் ஆண்டு, தம் 80-ஆம் வயதில் காலமானார். இவரது சமாதிக்கோயில் திருவையாற்றில் காவிரியின வடகரையில் அமைந் துள்ளது ஆண்டுதோறும் தை மாதம் பூச நட்சத் திரம் கூடிய பகுள பஞ்சமி அன்று ஆராதனை இவ ரது சமாதியில் நடைபெறுகிறது. நூற்றுக்கணககான இசைக்கலைஞர்கள் இவரது சமாதியில் கூடி இவர் தம சாகித்தியங்களைப் பாடிஅஞ்சலி செலுத்துகின றனர். திருவையாற்றில் காவிரிக்கரையில் நடக்கும் இவவிழா இனறு உலகளாவிய அறிமுகம் பெறறிருக கிறது. சொ.ச.

**தியாகராச பாகவதர், எம்.கே.:** இவர் தமிழகததுக் கலைஞர்களுள் சிறநது விளங்கியவரா வார். இவர் நாடகம், திரைப்படம், இசையரஙகு ஆகிய துறைகளிலும் சிறப்பிடம் பெற்றுத் திகழநதாா.



தியாகராச பாகவதர், எம்.கே.

தஞசையில் 1904-ஆம ஆணடு கிருட்டிணமூாத்தி ஆசாரி, மாணிக்கததமமாள ஆகியோருக்கு முதன் மைந்தராகப் பிறந்தார். உடன பிறநதோர் எணம வராவர். இவர் பாட்டனார் பெயர் முதது வீராசாரி என்பதாகும். பாட்டனார், தந்தையார் ஆகியோர் தம் பெயரின ஆங்கில முதலெழுததுகளைத் (M.K.) தம் பெயருக்கு முன்னால் அமைத்துக்கொண்டார். தஞ்சாவூர்க் காணடாமணி பத்தரின் மகள கமலத்தை மணந்தார். இவர்தம் மக்கள் மூவரில் இருவர் பெண டிர், ஒருவர் ஆண.

எம்.கே. தியாகராச பாகவதரின் தந்தையாரும் சிறந்த பாடகராகவும், நாடக நடிகராகவும் விளங் கியவர். தொடக்க காலத்தில பாகவதர் கோடை யிடி இராமசாமி பத்தரிடம் வழிபாட்டுப் பாடல் களைக் கற்றுக்கொணடார். திருச்சி கோபாலய்யர் போன்றோரிடம் முறையாக இசை பயின்ற இவர் இளம்வயதிலேயே அரங்கில பாடத்தொடங்கினார்.

இவருடைய இசைச்சிறப்பாலும், இனிய குரல் வளத்தாலும் கவரப்பெற்ற மக்கள் 'கந்தர்வகான', 'ஏழிசை மன்னர்' போன்ற சிறப்புப் பட்டங்களை வழங்கிப் பாராட்டினர். கலைநிகழ்ச்சிக்காக இலங்கை சென்று வந்தபிறகு இவரது புகழ் மேலும் பரவத் தொடங்கியது.

முறையாக இசை அறிவுபெற்றுப் பக்திப்பாடல்களை பாடிவந்த பாகவதர் பின்னர் நாடகத் துறையில் நுழைந்தார். பவளக்கொடி, அரிச்சந்திரா போன்ற நாடகங்கள் இவருக்கு நாடகப் புகழைத் தந்தன. நாடகத்துறையில் சிறந்து விளங்கிய இவர், திரையுலகு சென்றார். சிந்தாமணி, அரிதாசு, சத்திய சீலன், சாரங்கதாரா, அம்பிகாபதி, அசோக்குமார், சிவகவி முதலிய திரைப்படங்கள், திரையுலகில் இவருக்குப் பெரும்புகழ் ஈட்டித்தந்தன. பாகவதரின் பாடல்களுக்காகவே இவர்தம் திரைப்படங்கள் ஓடின என்னுமளவிற்கு இவர்தம் இசையும் நடிப்பும் விளங்கின.

பாகவதர் திரைப்படங்களில் இரண்டரைக் கட்டை சுருதியிலும், இசை அரங்க நிகழ்ச்சிகளில் நான்கு கட்டைச் சுருதியிலும் பாடுவார். பாகவதரின் பாட்டை ஒருமுறை கேட்டவர்கள் தாமே அதனைப் பாடும் அளவிற்கு அவர்கள்பால் பதியும் வண்ணம் பாடும் ஆற்றல் உடையவராக விளங்கினார். இவர் பாடிய திரைப் பாடல்கள் அனைத்தும் சிறப்பானவை என்றாலும் 'அம்பாள் கடைக்கண்பார்', 'சொப்பன வாழ்வில் மகிழ்ந்தே', 'மன்மத லீலையை வென்றார் உண்டோ' போன்ற பாடல்கள் இன்றும் கேட்போரைக் கவர்வனவாக உள்ளன. இவர் காலத்தில், 'பாகவதரைப் போலப் பாட வேண்டும்' என்று பாட முயன்றோர் பலர்.

இவரது தமிழிசை ஆர்வத்தால் இராசா சர். அண்ணாமலை செட்டியாருக்கு இவர்பால் பற்று ஏற்பட்டது. திரைப்படத் துறையில் என்.எசு.கிருட்டிணன் இவருக்கு நெருங்கிய நண்பராவார்.

சிறு தழும்புள்ள அகன்ற நெற்றியும், அதில் மணம்வீசும் சவ்வாதுப் பொட்டும், பொன்னிற மேனியும் கழுத்தளவு படர்ந்த சுருள்முடியும், கழுத்தை அலங்கரிக்கும் விசிறி மடிப்புத் துண்டும், முழுக்கைப் பட்டுச் சட்டையும்,பெரிய கரை யமைந்த பட்டு வேட்டியும், பிறரை ஈர்க்கும் அழகிய நீண்ட விழிகளும் எம்.கே. தியாகராச பாகவதரின் புறத் தோற்றமாக அமைந்து அழகுசெய்தன.

சென்னையிலிருந்த தம்வீட்டிற்கு இந்திய அரசப் பேராளர் (Viceroy) மேதகு மௌண்ட்டுபேட்டன் பிரபுவை அழைத்து விருந்து வைத்து, இரண்டாம் உலகப்போர் அழிவால ஏற்பட்ட துயர்துடைக்க நிதியுதவி அளித்தார்.

தெய்வபக்தி மிக்க பாகவதர், சமயபுரம் மாரியம்மனிடம் மிக்க ஈடுபாடு கொண்டிருந்தார். அம்மனுக்கு விலையுயர்ந்த வைரத்தோடும் பிறவும அளித்து வழிபட்டார். திருச்சி வாகநேரியை அடுத்து, உய்யக்கொண்டான் கால்வாய்க் கரையிலமைந்த குழுமியாண்டவர் கோயிலுக்கு அடிக்கடி சென்று பாடுவார். குழுமிசாமி என்னும் சித்தருக்குத் திருச்சியில் சிவன் கோயில் ஒன்று கட்டித் தந்தார்.

பெரும்புகழோடு திரையுலகில் முடிசூடா மன்னரென விளங்கிய இவர் இலெட்சுமிகாந்தன் கொலை வழக்கில் குற்றம் சாட்டப் பெற்றுக் கலைவாணர் என்.எசு. கிருட்டிணனோடு சிறைபுக நேர்ந்தது. உச்ச நீதி மன்றத்தால் விடுதலை செய்யப் பெற்ற பாகவதரின் உள்ளமும் உடலும் நலிவுற்றன.

இவர்தம் ஐம்பத்தோராம் வயதில் கண் நோயினால் பார்வை பாதிக்கப்பட்டுத் தஞ்சை, புன்னைநல்லூர் மாரியம்மன் கோவிலில் குடும்பத்தோடு வந்து ஓய்வாக மூன்று மாத காலம் தங்கியிருந்தார். ஒருவாறு உடல்நிலை தேறியதும் மீண்டும் அமரகவி என்னும் திரைப்படத்தில் நடிக்கச் சென்றார். கண் நோய் மிகுந்து பார்வை முழுவதுமாகக் கெட்டது. அத்திரைப்படம் தயாரித்து முடிவடையுமுன் பாகவதர் 1956-ஆம் ஆண்டில் சென்னையில் காலமானார். எம்.கே. தியாகராச பாகவதரின் கலைத்தொண்டினைப் பெருமைப் படுத்தும் வகையில் திருச்சியில் குளிர்சாதனம் அமைக்கப்பட்ட கலையரங்கம் ஒன்றை நகராட்சியினர் உருவாக்கி அதற்கு அவர் பெயரைச் சூட்டியுள்ளனர். இரா.குரு.

**தியாகராச லீலை** என்பது திருவாரூரைப் பற்றி மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை வடமொழி நூலிலிருந்து மொழி பெயர்த்துப் பாடிய ஒரு நூலாகும். மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் மாணவர் வித்துவான் தியாகராசச் செட்டியார் ஆவர். அவர் குடும்பத்தினரோடு பிள்ளையவர்கள் நெருங்கிய பழக்கமுடையவராயிருந்தார்கள். ஒருசமயம் செட்டியாரின் சிறிய தந்தையாருடன் மீனாட்சி சுந்தரம் பிள்ளையும் திருவாரூர் சென்றார்.இப்புலவர் பெருமானின் வருகையை அறிந்த திருவாரூர்ப் பெருமக்கள் திருவாரூரைப் பற்றிப் பிள்ளையவர்கள் வாயிலாய் ஒருநூல் இயற்ற வேண்டும் என்று விரும்பினர். அவ்வேண்டுகோளை ஏற்றுத் தியாகராசலீலை என்

னும் நூலை இயற்றினார். திருவாரூர்த் தியா கேசப பெருமான 360 திருவிளையாடலகள இயற்றி னாராம். அவறறை விரிவாகப் பாடக் கருதி மிகச் சிறந்த அளவில நாட்டுபபடலம, நகரப்படலம முதலியவற்றைப் பாடினாா. வடநூலிலிருந்து மூலப் பகுதியின் மொழிபெயர்ப்பு 13 சருக்கங்களுக் கும் 14-ஆம் சருககத்தின ஒரு பகுதிக்குமே கிடைத் தது. அதற்கு மேல் மிக முயனறும் எஞசிய பகுதி யின மொழி பெயர்ப்புக் கிடைககவிலலையாதலின் இந்நூல குறை நூலாகவே வெளியிடப்பட்டது. இது மீனாட்சி சுந்தரம பிளளைக்கு ஒரு பெருங் குறையாக இருந்ததாகவே அவருடைய வரலாற்றி லிருந்து தெரியலாம. இநநூலில மொததம் 699 விருததப்பாககள உளளன. சோழநாட்டுச் சிறப்பு, திருவாரூர்ப் பெருமை முதலியன மிகச் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன. பெருங் காப்பிய இலக்கணம் பொருந்த இநநூலைத தம இளமைப் பருவத்தில மிகவும் முயனறு இயற்றினார். சைவ சித்தாநதக கருத்துகள, பலவகை அணிநயங்கள் நிறைநத இநநூல திருவாரூாப் பெருமானைக் காப்பியத தலைவனாகக கொணடு பாடப்பெறற சிறநத நூலாகும். இந்நூலில், எவவிடத்திலும மீனாட்சி சுந்தரம பிள்ளையின புலமைத திறம் சிறப்பாக விளங்குதலைக் காணலாம் இரா.ச.

**தியாகராயர், பிட்டி**: தியாகராயர் சென்னை யில பழைய வணணாரப் பேட்டையில் கி.பி. 1852 -இல பிறநதார். தநதையாா பெயா அய்யப்பா செட்டி எனபதாகும். இவர் சாாசு நகா உயாநிலைப் பள்ளியில பயின்று, மாநிலக கல்லூரியில் சோநதார். கணிதத்தை முதனமைப் பாடமாகக் கொணடு கி.பி.


தியாகராயர், பிட்டி.

1876-இல் இளஙகலைப் பட்டம் (B.A.) பெற்றார். பல்வேறு மொழிகளைச் சிறப்பாகப் பேசும் ஆற்றல் வாய்ந்தவராகவும் விளங்கினார்.

பட்டப்படிப்பை முடித்த பின்னர்த் தம் தந்தை யின் தொழிலான தோல், அவுரி முதலிய வாணிகத் தில் இறங்கிப் பெரும் பொருள் ஈட்டினார்.

நெசவுத தொழிலுக்கு ஊக்கம் அளித்திடும் வகையில் தணடையார் பேட்டையில் தம்வீட்டருகே பெரிய நெசவுத் தொழிறசாலை ஒனறினை ஏற் படுததினார். இவருடைய நெசவு ஆலையில் உரு வாககப்பட்ட துணிகள, சென்னையில 1909-இல் நடைபெற்ற அனைத்திநதிய கைதததறிப் போட்டி யில் மிக நேர்தியானவை, மிகச சிறப்பானவை எனத் தோநதெடுக்கப்பட்டுப் பரிசுகளைப் பெற்றன.

**காங்கிரசில்**: முதல் முறையாகச் செனனையில் கி பி 1887-இல நடைபெற்ற மூனறாம் அனைத் திநதிய காஙகிரசு மாநாட்டிற்கு முழு ஒத்துழைபபை அளித்ததுடன் 200 ரூபாய நிதியும வழங்கினாா. சென்னையில கி.பி 1914 வரை நடந்த இந்திய தேசிய காஙகிரசு மாநாடுகளில் முழுப பொறுப்பை யும் ஏறறாா.

**பட்டங்கள்**: சர் தியாகராயருக்கு இராவபகதூர். திவான பகதூர், மாவீரன் (சாநைட்டு குடு) முதலிய பட்டஙகளை முறையே 1909, 1918, 1921 ஆகிய ஆணடுகளில அரசு வழஙகியது.

**மாநகராட்சி** செனனை மாநகராட்சியின உறுப்பின ராக கி.பி. 19-ஆம நூறறாணடின இறுதியில் தோந் தெடுககப்பட்டவா, 1923 வரை தொடர்நது அப்பத வியை மேறகொணடிருநதாா. உடல நலக் குறைவு காரணமாக 1923-இல அப்பதவியைவிட்டு விலகினார். இவா நாற்பதாணடுகள சென்னை நகரின்வளாச்சிக்குத் தம் பணியினைச் செய்தாா; நான்கு ஆணடுகள மாநக ராட்சியின் அரசுச் சார்பற்ற தலைவராகப் பணியாற றினார்; சென்னைச் சட்டமனறததின கூடுதல் உறுப் பினராக 1910-இல ஆனாா. இவர் 1920-இல் பெரும் பானமை வாக்குகளுடன சட்டமனறத்திற்குத் தோந தெடுககபபட்டார். அரசிடம ஊதியம் பெறும் பதவி யைவிடக் கௌரவமான மாநகராட்சித் தலைவர் பதவியே உயாந்தது எனக் கருதி முதல் அமைச்சா பதவியினை ஏறக விருமபவிலலை. செனனை மாநக ராட்சியின தோந்தெடுககபபட்ட முதல் தலைவர் இவரேயாவார்.

**தென்னிந்திய வணிகச்சபை**: தென்னிந்திய வணி கச்சபையினை நிறுவியவர்களுள இவரும் ஒருவர்,

இவர் 1910-ஆம் ஆண்டு முதல் 1921 வரை தொடர்ந்து அதன் தலைவராகப் பணியாற்றினார்.

**நீதிக்கட்சி**: திராவிடப்பெருங்குடிமக்கள சமுதாயப் பொருளாதார அரசியல் துறையில் அடிமைப்பட்டுக் கிடநத நிலையினை அகற்ற இவர் டி.எம். நாயா, டாக்டர் சி. நடேசன், பனகல் அரசர் முதலானோ ருடன் கலந்து ஆலோசித்து, 1916-ஆம் ஆணடு நவம் பரில் சென்னையில் கூடிப் பார்ப்பனரல்லாதார் நல னுக்காகத் திட்டமிட்டாா. தென்னிநதிய நல உரி மைச் சங்கம் என்னும் பெயரால் அரசியல கட்சி ஒனறு தோற்றுவிககப்பட்டது தென்னிந்திய நல உரி மைச் சங்கத்தின் பெயரால் 1916-ஆம் ஆண்டு அன்னிபெசண்டின உளநாட்டுச் சுய ஆட்சி இயக்கத் தைக் கணடித்து அறிககை வெளியிட்டாா.

**சமுதாயப் பணிகள்**: இவர் ஏழைகளுக்குத் திருமணம் செய்துவைத்தார்; நூற்றுக்கும் மேற்பட்டோர் ஒரே நேரத்தில் திருமணம மேற்கொள்ளும் முறையை அறிமுகம் செய்துவைத்தார். தாது ஆணடில் பஞ்சம் ஏறபட்டு மக்கள வாடிய போது மக்களின் பசிப்பிணி போககிட உணவு வழஙகினார்; தாழ்த்தப்பட்டோர் பல்வேறு சாதிப்பெயர்களில இழிவாக அழைக்கப் பெற்ற நிலையினை மாற்றி 'ஆதி திராவிடர்' என்று அழைக்கச செய்தார்; எட்வாடு இளவரசரின 1922 -ஆம் ஆணடு வருகையின போது கலவரங்கள் ஏற்பட் டுச் சேரிப் பகுதியில் வாழ்ந்தோா பாதிக்கப்பட்ட வேளையில் கல் இலலங்களைப் போன்ற வீடுகள் அமைககச் செய்தார். இப்பணியில் டி. சுநதர் ராவ் என்பவா இவருக்கு உறுதுணையாய் விளங்கி னார். முதன் முதலில் 1920-இல் மாநகராட்சிப் பணி யில் மாணவர்களுக்கு இவா மதிய உணவு இலவசமாக வழங்கிட வகைசெய்தார். முதலில் நான்கு பள்ளி களில் புகுத்தப்பட்ட இத்திட்டம் 1921-இல மேலும விரிவு செய்யப்பட்டது. பச்சையப்பன அறக்கட்டளை யின் அறங்காவலராக கி.பி. 1887-இல் நியமிககப்பட் டார். அன்று முதல் இறுதிக காலம் வரையில அதன் அறங்காவலராக விளங்கினார். பச்சையப்பன் அறக் கட்டளையின் தலைவராக 1909-இல் நியமிக்கப்பட் டார். கல்விப் பணியில் இவருடைய சேவை அளவிடற் கரியது. மாணவர்கள் தொழிற் கலவி பெறவேண்டும் என்பதை வாழ்நாள் முழுவதும் வலியுறுத்தி வந்தார். இனறைய கல்வி முறையின் சீர்திருத்தத்தை அன்றே இவர் வலியுறுத்தித் தொழிற் கல்வியின் முககியத் துவத்தை எடுத்துக்கூறியதை இவருடைய சட்டமன்ற உரைகளில் காணலாம். சென்னை நகரின் தூய் மைக் கேட்டிற்கு எடுத்துக்காட்டாக விளங்கிய கூவம் சீர்திருத்தம் பற்றிச் சட்டமன்றத்தில் வலியுறுத்திய வர் இவர் என்பது நினைவு கூரத்தக்கது.

**இதழ்கள்**: தமிழ், தெலுங்கு, ஆஙகிலம் ஆகிய மூன்று மொழிகளிலும் செய்தித் தாளகள் வெளியிட்ட பெருமையும் இவருக்குண்டு. திராவிடன எனற ஏட் டினை 1917-ஆம ஆண்டு சூன் 1-ஆம் தேதியிலும் ஆந்திரப்பிரகாசிகா என்னும தெலுங்கு ஏட்டினை 1917-ஆணடு சூன் 10-ஆம் நாளிலும், நீதி (Justice) எனனும் ஆஙகில ஏட்டினை 1917-ஆம ஆணடு பிப்பிரவரி 26-இலும் அச்சிட்டு வெளியிட்டார். நீதி எனற இந்த ஏட்டின் பெயராலேயே தெனனிநதிய நல உரிமைச் சஙகம, 'நீதிக்கட்சி' எனறு பெயர் பெற் றது குறிப்பிடத்தக்கது.

**சட்டமன்றப் பணிகள்**: சட்டமன்றத்தில் நீதிக் கட்சியின சமுதாய நலச சட்டஙகள் நிறைவேறுவதில் பெரும்பஙகு வகித்துளளாா. செனனைப் பலகலைக் கழகத்தின தனனாட்சியை விரிவுபடுத்துதல, இநது சமய, அறக்கட்டளை நிறுவனங்களைப் பாதுகாககச் சட்டம் நிறைவேற்றுதல,கூட்டுறவுத் திருததச் சட்டம் நிறைவேற்றுதல் ஆகியவற்றிலும் பெரும் பங்கு வகித் துள்ளார் எனபதனைச சட்டமன்றக் குறிபபேடுகள வாயிலாக அறியலாம்.

**மறைவு**: சர் தியாகராயர், 1925-இல மறைந்தார். சர் சி.பி. இராமசுவாமி சட்டமனறத்தில் இரங்கல் தீர்மானத்தை முன மொழிந்து பேசுகையில் மக்கள் இயக்கததை உருவாககியவர்களுள ஒருவர் இவர்எனறு இவரைப் பாராட்டினார். இவர் அரசியல் எதிரிகளி டத்தும் அன்போடு பழகினார். தியாகராயரின் முழு உருவச்சிலையினை 1931 அக்டோபர் 31-இல் பெரட ரின் இசுடாலின என்னும ஆங்கிலேய ஆளுநர் திறந்து வைததார். 'வெளளுடைவேந்தர்' எனறு சிறப்பிததுக் கூறப் பெற்ற தியாகராயரின் பெயரால் விளங்கி வருபவற்றுள குறிப்பிடத தக்கவை தியாகராயர் பள்ளியும் கல்லூரியும் ஆகும். ந.க.ம.

***தியூடர்கள்*** **(கி.பி. 1485-1603)**: தியூடர்களின் ஆட்சிக் காலம் இங்கிலாந்தின் வரலாற்றில் மிக முக் கியமான இடததைப் பெறுகிறது. இத்தியூடர் களின (Tudors) காலத்தில்தான் இடைக்காலப் பண்புகள் மாறி இக்காலப் பண்புகள் அரசியல், பொருளாதாரம், கலை, சமயம் மற்றும் பல துறைகளிலும் பரவின. இவர்களின் ஆட்சியில் எங்குப் பார்த்தாலும் ஒரு விழிப்புணர்ச்சி காணப் பட்டது. அதனால், நாடு முன்னேற்றப் பாதையில் விரைந்து செல்லத் தொடஙகியது. தேசியம் (Nationalism) மலர்ந்தது. கலைத் துறையில் மறுமலர்ச்சி இலக்கியங்கள் தோன்றின. சமயத் துறையில் சீர் திருத்த இயக்கம் (Reformation) எழுநதது. சுருங்கக்

கூறின் தியூடர்களின் காலத்திலிருந்துதான் இங்கிலாந்தின் புதிய வரலாறு தொடங்குகிறது எனலாம்.

தியூடர் வமிசத்தின் முதலாம் மன்னன் ஏழாம் என்றி (Henry VII) கி.பி. 1585-இல் பாசுவொர்த்து (Bosworth) என்ற இடத்தில் இரிச்சர்டு மன்னனை வீழ்த்தி அரசு கட்டிலேறி, கி.பி. 1529 வரை ஆட்சி செய்தார். ஏழாம் என்றி, யார்க்கு (York) அரச குடும்ப நங்கையை மணந்து, அரசுக் குடும்பங்களின் பரம்பரைப் பகையை ஒழித்து, நாட்டில் அமைதியையும் நேச உறவையும் நிலைநாட்டினார்.

ஏழாம் என்றியைத் தொடர்ந்து கி.பி. 1529 முதல் 1547 வரை எட்டாம் என்றி ஆட்சி செய்தார். இவரைப் பின் தொடர்ந்து ஆறாம் எட்வர்டு (Edward VI) அரசரானார். அப்போது எட்வர்டுக்கு வயது ஒன்பது. ஆகவே, எட்வர்டினால் ஆட்சியை நிருவகிக்க முடியாது என்பதால் ஆட்சிப் பொறுப்பு காப்பாளரிடத்தில் ஒப்படைக்கப்பட்டது. ஆனால், எட்வர்டு கி.பி. 1553-இல் இறந்தமையால், அவருடைய மாற்றாந்தாய் வழி தமக்கை மேரி (Mary)அரசப் பொறுப்பேற்றார். அவரது ஆட்சி கி.பி. 1558 வரை நீடித்தது. அவரைப் பின்தொடர்ந்து கி.பி. 1558-இல் மேரியின் மாற்றாந்தாய் வழித் தங்கை எலிசபெத்து (Elizabeth) ஆட்சிப் பீடத்தில் அமர்ந்தார். இவரே தியூடர் வமிசத்தின் கடைசி அரசியாவார்.

தியூடர் மன்னர்கள், தங்கள் ஆட்சிக் காலத்தில் உள்நாட்டில் அமைதியை நன்கு நிலைநாட்டினர். வேல்சிலும் (Wales) இசுகாட்லாந்திலும் (Scotland) ஓயாது துன்பங்களைக் கொடுத்து வந்த பிரபுக்கள் அறவே ஒழிக்கப்பட்டனர். வேல்சின் கலகக்காரர்களை ஒடுக்க மேலை நீதிமன்றத்தையும் (Council of the West) இசுகாட்லாந்தில் பிரபுகளை ஒடுக்க வட நீதிமன்றத்தையும் (Council of the North) இவர்கள் ஏற்படுத்தினார்கள். மேலும், இவர்கள் தனி ஆணைப் பேரறிவிப்புகள் (Proclamations) மூலம் தாங்களாகவே சட்டங்களை உருவாக்கினார்கள்; விண்மீன் மண்டப நீதிமன்றம் (Star Chamber Court) போன்ற தனிப்பட்ட நீதிமன்றங்களைக் கொண்டு, தங்கள் விருப்பம்போல் நீதி வழங்கினர்; பிரபுக்களை ஒடுக்கினர்; அதே நேரத்தில் பெரும்பான்மையான மக்களின் நலத்தைக் கருத்திற் கொண்டே தங்கள் அதிகாரங்களைச் செலுத்தினர். இவர்களின் ஆட்சி மக்கள் நலன் கருதிய வல்லரசு (Benevolent Despotism) என்று சொல்லப்படுகிறது.

ஆங்கிலப் பாராளுமன்றத்தின் வளர்ச்சிக்குத் தியூடர்கள் பேருதவி செய்துள்ளனர். அவர்களுள் ஒருவரான எட்டாம் என்றி பாராளுமன்றத்தின் சிற்பி எனக் கூறப்படுகிறார். அவர் காலத்தில் சமயச் சீர்திருத்தம் கொணடு வரப் பாராளுமன்றம் பயன்படுத்தப்பட்டது. பொதுவாகத் தியூடர் காலப் பாராளுமன்றங்கள் தியூட மன்னர்களின் விருப்பங்களை நிறைவேற்றிவைத்தன. அதே நேரத்தில் இப் பாராளுமன்றம் மன்னர்களைத் தட்டிக் கேட்க வேண்டிய சூழ்நிலையில் தட்டியும் கேட்டது.

தியூடர் மன்னர்கள், பழைய நிலமானிய பிரபுக்களையும், சமயம் சார்ந்த பிரபுக்களையும், பிரபுக்களின் சபையிலிருந்து ஒழித்து,அவர்களுக்கு மாறாகப் புதிய இனப் பிரபுக்களை அமர்த்தினர். அதன் விளைவாகப் புதிய உயர் வகுப்பு (New Aristocracy) என்ற இனம் இங்கிலாந்தில் உருவாகியது.

எட்டாம் என்றி (Henry VIII) தனது மறுமணத்திற்கு அனுமதி தர மறுத்த போப்பாண்டவருடைய அதிகாரங்களை நீக்கி, இஙகிலாந்தில சமயச் சீர்திருத்த இயக்கம் தோன்றக் காரணமாயிருந்தார்.

தியூடர்கள் காலத்தில் கிழக்கிந்திய வணிகக்குழு (East India Company), இலெவாண்டு குழு (Levant Compang) போன்ற வணிகக் குழுக்கள் தோன்றி அப்போது அரசாண்ட எலிசபெத்து (Queen Elizabeth) அரசியிடம் உரிமைச் சாசனங்களைப் பெற்று அயல் நாடுகளுடன் வணிகம் செய்யத் தொடங்கின. நாட்டின் செல்வநிலை உயரவும் அரசின் வருமானம் வளரவும் இக்குழுக்கள் பெரிதும் உதவின.

எலிசபெத்தின் காலத்தில் நாட்டில் கைத்தொழில் பெரிதும் வளர்ந்தது. வெளிநாடுகளிலிருந்து சமயத் துன்புறுத்தல் காரணமாக (Prosecution) இங்கிலாந்திற்கு வந்தவர்கள் பல கைத்தொழில் இரகசியங்களைக் கற்றுக் கொடுத்தனர். தியூடர்களின் காலத்தில் கைத்தொழில் மட்டுமன்றி, வேளாண்மையும் நன்கு வளர்ச்சியுற்றது. புதிய வேளாண்மை முறைகள் பல இடங்களில் கையாளப் பட்டன.

எலிசபெத்து ஆட்சியில், இயல், இசை, நாடகம் என்ற முத்துறைகளிலும் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டது. புகழ் பெற்ற நாடக ஆசிரியர் சேக்சுபியர் (Shakespeare) இவரது காலத்தில் தான் வாழ்ந்தார்.

இவர் காலம் இசை, நடன, கட்டடக் கலைகள் நன்கு வளர்ச்சியுற்ற ஒரு பொற்காலமாகத் திகழ்ந்தது. இவர் காலத்து இங்கிலாந்து ஒரு பாடும் பறவைகளின் கூடு (Nest of Singing Birds) என்று கூறும் படி திகழ்ந்தது. சி.சி.

**தியூப்ளே**, கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் இந்தியாவில் அமைக்கப்பட்ட பிரெஞ்சுக் குடியேற்றங்

களின ஆட்சித் தலைவராயிருந்தவர். இவர் பிரான்சில இலாண்ட்டு ரசீசு எனனுமிடத்தில் 1696-ஆம ஆணடு திசம்பரில பிறந்தார். பிரான்சிசு தியூப்ளே (Dupleix) எனபவர் இவர்தம் தந்தை யாா. பிரெஞ்சு அரசில் அவா பணிபுரிந்தாா. தியூப்ளே இந்தியாவுக்கு கி.பி. 1715-இல வந்து பிரெஞ்சுக் கிழககிந்திய நிறுவனத்தின் பணியில் சேர்ந் தார். இவர் தந்தையாரின் அரசியல் செலவாக்குக் காரணமாக கி.பி. 1721-இல் புதுசசேரி பிரஞ்சு ஆளு நர் குழுவில் உறுப்பினரானார். இவரிடம் காணப் பட்ட சுயமுயற்சி மற்றும் ஆட்சித்திறன் காரணமாக கி.பி. 1731-இல் சந்திர நாகூரிலிருந்த பிரெஞ்சுப் பணடசாலையில் மேலாளராக நியமிக்கப்பட்டார். இவரது நிருவாகத் திறமை மற்றும் ஆளுமைபபண்பு காரணமாக கி.பி. 1742-இல் இந்தியாவில பிரெஞ்சுப் பகுதிகளின் பொது ஆளுநராக நியமிக்கப்பட்டார். ஐரோப்பாவில் கி.பி. 1743-இல் ஆசுத்திரிய வாரி சுரிமைப் போர் ஏற்பட்ட போது இநதியாவில் ஆங்கி லேயருக்கு எதிராகப் போரிட்டுப் பிரெஞ்சு ஆதிக் கத்தை நிலைநாட்ட முற்பட்டார். அதனால் கி.பி. 1746 முதல் கி.பி. 1748 வரை முதல கருநாடகப் போரில் ஈடுபட்டார். அவ்வமயம் லாபோர்தனே என் னும் பிரெஞ்சுக் கடற்படைத் தளபதியின் உதவி யுடன் சென்னையை முறறுகையிட்டு கி.பி. 1746 செப்டம்பரில் அதனைக் கைப்பற்றினார். பினனர்ப் புனித தாவீது கோட்டையைக் கைப்பற்ற முனைந்து தோல்வி கண்டார். எய்லா சேப்பல் உடன் படிக்கைப்படி கி.பி. 1749-இல் சென்னை ஆங்கிலே யருக்குத் திருப்பித் தரப்பட்டது.



தியூப்ளே

இவர் கி.பி. 1748 முதல் கி.பி. 1754 வரை நடை பெற்ற இரண்டாம் கருநாடகப் போரிலும் பங்கேற் றார். அதில் தியூப்ளேவின் முயற்சிகள் பயனளிக்க வில்லை. பல வழிகளில் தோல்வி கண்ட இவர் கி.பி. 1754-இல் தாயகத்திற்குத் திரும்ப அழைத்துக் கொள் ளப்பட்டார்.

தியூப்ளே ஒரு சிறநத ஆட்சியாளர், அரசியல சூழச்சி மிககவர். ஆனால, படைக்கலப பணபோ, பிறருடன ஒருங்கிணைந்து செயறபடும இயலபோ அற்றவர். இநதியச் சிறறரசர்களுடன உடன படிக்கைகளை செய்துகொணடு ஆஙகிலேயரை இநதி யாவில வேரூன்றாது தடுத்துப் பிரெஞ்சு அர சினை உருவாக்க முதனமுறையாக முயனறவா இவரே. இநதியாகளின படை வலிமையினமையைப பயன்படுத்திககொணடு இந்தியப் பகுதிகளைக் கட் டுப்படுத்திய முதல் பிரெஞ்சுககாரரும தியூபளேதான் தம் இளமை, எதிர்காலம மற்றும வாழக்கை முழு வதையும் தாயகததின மேனமைக்காகவே அளிததார். பணப் பறறாக்குறை, பிரெஞ்சு அரசு இவா தேவை களை நிறைவு செயயாமை போனற காரணஙகளால இவர்தம திட்டஙகள் வெறறிபெறாது பயனற்றுப போயின. ஆங்கில வீரரான இராபர்ட்டு கிளைவுடன ஒப்பிடுகையில் தியூப்ளே திறமையறறவராகவே காணப்பட்டார். ஆயினும் வியககத்தகக கோடபாடு களைப் பின்பற்றிப பிரானசு நாடடின் பெருமையை நிலைநாட்ட முற்பட்டார். இவா இந்தியச் சிறறரசர் களின மதிபபினைப் பெறறிருநதாா.

ஆனந்தரஙகம் பிள்ளை எனற இநதியச செயலர் மற்றும் மொழி பெயாப்பாளர் எழுதிய நாட்குறிப்பு களின மூலம இவரைப்பறறிய பல செயதிகளை உணரலாம். தாயகம் சென்ற (1754) இவரது இறுதிக் காலம் இருள் சூழ்நததாக இருநதது. இவா கி.பி. 1763-ஆம் ஆணடுக் காலமானாா. மா.கா.

**தியூரின்,** 45.4° தீர்ககக் கோட்டிலும 7.41° அட்சக் கோட்டிலும் அமைந்துள்ள ஓர் இததாலிய நகரம், போ நதியின வடகரையில அமைநதுள்ளது. அககுசுதுவா தெளரிநோரம் என்ற பழங்கால உரோ மானிய நகரின் அமைவிடத்திலேயே இந்நகரமும உள்ளது. பிரானசு நாட்டின எல்லையின் கிழக்கில் 86 கி.மீ. தொலைவிலுளள இநநகரம் நீணட, அகனற தெருக்களைக் கொணடுள்ளது; அழகிய வேலைப் பாடமைந்த கட்டடங்களை உடையது. ஆல்ப்சு மலையை நோக்கியுளள தியூரின் நகரின கோடை கால வெப்பநிலை மிகவுமவிருப்பப்படக் கூடியதாகும்.

இத்தாலியப் பெரு நகரங்களுள் ஒன்றான தியூ ரின் மிக முககியமான வணிகத் தலமாகும். ஏறத் தாழ 100,000 மக்கள் தொகையை உடையது. பேருந்து உற்பத்தித் தொழிற்சாலைகள இஙகு மிகுதி.

உரோமானியர் காலத்தில் மிக முக்கியமான படைக்கலப் பகுதியாக இது விளங்கிறறு. இப்பகுதி யில் உரோமானியர் ஏறத்தாழ 7மீ. உயரமுளள

மதிலை எழுப்பியிருந்தனர். அதன் இடிபாடுகளை இன்றும் காணலாம். இங்கு கி.பி.1492 க்கும் கி.பி. 1498க்கும் இடைப்பட்ட காலத்தில் கட்டப்பட்ட கோத்து அமைப்பு முறையிலான தேவாலயத்தின் சித்திர வேலைப்பாடுகள் எழில்மிக்கவை. இங்கிருந்த புகழ்மிக்க, வனப்புடைய பல கட்டடங்கள் இரண்டாம் உலகப்போரின் போது பெருஞ் சேதத்திற்குள்ளாக்கப்பட்டன. இந்நகரமே பீடுமாண்ட்டுப் பிரிவின் தலைநகராகவும், பின்னர்ச் சார்டீனியப் பேரரசின் தலைநகராகவும் திகழ்ந்தது. விக்டர் இம்மானுவேல் கி.பி. 1861க்கும் கி.பி.1864க்கும் இடைப்பட்ட காலத்தில் பேரரசராயிருந்தபோது ஒருமைப்படுத்தப்பட்ட இத்தாலியின் தலைமை நகராகவும் விளங்கிற்று. இந்நகரிலுள்ள தியூரின் பல்கலைக்கழகம் கி.பி. 1404 -இல் நிறுவப்பட்டது. தியூரின் நகரின் பெருமைக்கு மேலும் பெருமை சேர்ப்பது அங்குள்ள தொல் பொருள் அருங் காட்சியகமாகும். அங்கு மறுமலர்ச்சி இயக்கக் கலைஞர்களான இரபீல், இலியோனார்டா டாவின்சி, மைக்கேல் ஆஞ்சலோ போன்றோரின் வரைபடங்களுக்கான வரிக்கோட்டுப் படங்கள் உள்ளன. மா.கா.

**தியூவே(சான்)**, அமெரிக்கத் தத்துவ மேதையும், உளவியல் வல்லுநரும் கல்வியாளருமாவர். இவர் கி.பி.1859-ஆம் ஆண்டு பர்லிங்டனில பிறந்தார். இளமைக் கல்விக்குப் பின கி.பி. 1879-இல் வெர்மாண்ட்டு பல்கலைக்கழகத்தில் பட்டம் பெற்றார். பென்சில வேனியாவில் கி.பி. 1881-ஆம் ஆணடு வரை ஆசிரியராகப் பணியாற்றினார். சானசு காப்பின்சு பலகலைக் கழகத்தில கி.பி.1884-இல் முதுகலைப பட்டம் பெற்றார் இவர் கி.பி. 1887 முதல கி.பி.1889 வரை மினசோட்டா,கி.பி.1889 முதல கி.பி.1894 வரை மிச்சிகன் பல்கலைக்கழகம் ஆகியவற்றில் தத்துவ இயல் போதகராகத்திகழ்ந்தார். பின்னா 1904வரை சிகாகோ பல்கலைக் கழகத்தில் பணி புரிந்தார். அங்கு1896-இல் சிகாகோ ஆய்வுக்கூடப் பள்ளியை நிறுவி அதன் இயக்குநராகச் செயறபட்டார். கொலம்பியாப் பல் கலைக் கழகத்தில் 1904 முதல் 1930 வரை தத்துவ இயல் பேராசிரியராக விளங்கினார்.

தியூவி, சான் (Dewey John) அமெரிக்க உளவியல் கழகம், தத்துவ இயல் கழகம் மற்றும் அமெரிக்கப் பல்கலைக் கழகப் பேராசிரியர்கள் கழகம் ஆகிய அமைப்புகளுடன நெருங்கிய தொடர்பு கொணடிருந தார். பீக்கிங்குப் பல்கலைக் கழகத்தில1919,1931 ஆகிய இரு ஆண்டுகளிலும் கல்வித் துறைப்பேராசிரியராகப் பணியாற்றினார். துருக்கிய அரசின் வேண்டுகோளுக் கிணங்கி 1924-இல் துருக்கிக்குச் சென்று அங்குத்



தேசிய பளளிகளின் சீர்திருத்ததிற்கும் ஒருங கிணைப்புக்கும் துணைசெயதார்.

கல்விச் சீர்திருத்தத்தில் நாட்டமுற்றிருந்த இவர், கல்வியின் நோக்கம், தரம, பயனீட்டு அடிப்படைகள் ஆகியவை உளவியலைப் பினனணியாகக் கொணடிருக்க வேண்டுமென்ற கருத்தை வலியுறுத்தினார். குழந்தைகளின மனம மறறும் உடல் வளர்ச்சிகளின் அடிப்படையில் அவர்களின் தேவைகளை நிறைவு செய்யக்கூடியதாய்க் கல்வி அமைதல் வேண்டுமென்பது இவர் கருத்து. செயல்திட்டம், வழிமுறை, மற்றும் முன்னேற்றம் ஆகியவை கல்விப் பணியின் முக்கிய கூறுகளென்று இவர் கருதினார். அனுபவம் வாயிலாகத் தெரியாதனவற்றைத் தெரிந்துகொள்ள வேண்டுமெனற உந்துதல் ஏற்படுகையில் கல்வியின் முக்கியத்துவம் உணரப்படும் என்பது இவருடைய கோட்பாடு. அத்தகைய சூழல் உருவாக்கப்பட்ட பின்னர்ப் புகட்டப்படும் கல்வி பெரிதும் பயன் தரத்தக்கது என்றார். சமகாலத்திய சமுதாயக் கூறுகள, வளர்ச்சிப் படிகள், ஆக்கப்பணிகள் ஆகியவற்றினைப் பின்பற்றிக் கல்வித்துறையில் மாற்றங்கள் மேற்கொள்ளப் படவேண்டுமெனத் தெரிவித்தார். சமுதாயத்தின் பொது வளர்ச்சிக்குக் கல்வியே அடிப்படை என்பது இவரது சித்தாந்தம். நடைமுறைக்கு ஒத்ததாய், பயில்வோரின் மனநிலைக்கேற்ப அனுபவங்களுக்கு வாய்ப்பளிக்கக் கூடியதாய் நினைவாற்றலுக்கு முக்கியத்துவம் தரக்கூடியதாய்ச், சோதனைக் களத்தில் பரிசோதனைக்கு உட்படுத்தத் தக்கதாய்க் கல்வி அமைய வேண்டுமென இவர் கருத்துத் தெரிவித்தார்.

மனவியல், உளவியலில் எதிர்விளைவுக் கோட்பாடு, மனவியல மறு பரிசீலனை, பள்ளியும் சமுதாயமும், குழந்தையும் பாடத்திட்டமும், மக்களாட்சியும் கல்வியும் போனறவை இவருடைய முக்கியமான ஆங்கிலப் படைப்புகளாகும். இவர் 1952-இல் காலமானார். மா.கா.

**திரட்டு நூல்கள்**: 'திரட்டு' என்பது பல வேறிடங்களிலு பலவாறு சிதறிக கிடநதவற்றை இன மாக ஒருஙகு சேர்த்து வைதத எனப்பொருளபடும். திரட்டு நூலகள் என்னுமபோது வெவவேறான புலவா பாடலகளைப் பொருளடைவில ஒருசேரககோத்து அமைத்தவை எனலாம். தொகை, கொத்து, துணா, மஞ்சரி, கோவை, மாலை, முறை முதலிய பெயர் களாலும் திரட்டுநூலகள சுடடப்பெறும. இவ்வகை யான திரட்டுகள மூவகையில அமையலாம். புலவா பலர் பாடிய பாடலகளை ஒருஙகு திரட்டுதல ஒரு வகை. புலவர் ஒருவர் பாடிய நூலகள் முதலியவற றைத் தொகுத்தல மறறொரு வகை. தெய்வம், மக்கள், முதலாகப் பலவேறுபொருளகளின் அடிப் படையில் கோததல் பிறிதொரு வகை.

பணடைத் தமிழச் சானறோர் தொகுதது அமைத்த பாடல் தொகுதிகளே சஙகததொகை நூலகள்; அவற்றைப் 'பழந்தனிப பாடற்றிரட்டு' என்னலாம். எட்டுத்தொகை, பததுப்பாட்டு எனபன சங்ககாலப் புலவர் பலர் பாடிய பாடலகளின திரட்டே எனபது உலகம் நனகு அறிந்தது. இவை அகம், புறம் எனனும் பொருள வகையிலும், பாடல் களின் அடிவரையறை கொணடும், பாடல வகைமை யினாலும் திரட்டப்பட்டுளளன. குறுநதொகை, நற றிணை, ஐஙகுறுநூறு, அகநானூறு என்பவை அகப் பொருள் பற்றிய அகவறபாடலகளின் தொகுபபு. அடிவரையறையினால் இவை நாற்பெருந்தொகுதிக ளாயின. எட்டுத்தொகையில புறப்பொருள பறறி யவை பதிற்றுப்பத்து, பரிபாடல, புறநானூறு என்னும் மூன்றும் ஆம்; பத்துப்பாட்டு அகமும் புறமும் இணைந்தவை; கலித்தொகையும் பரிபாடலும் பாடல் வகையினால் அமைந்த அகப்புறத் தொகை களாம.

இவவாறே பிறகாலத்தும் இனறு வரையிலும பற்பல சூழலில் புலவர் பாடிய பாடலகள பலவாம். இத்தகு தனிச செய்யுட்களுள பல வரலாற்று நிகழ்ச் சிகள் குறித்தும் கதைகளைக் குறித்தும் கதை சார்ந்த நிகழ்ச்சிகளைககுறித்தும் தோனறியன. தெய் வம பற்றியும் அரசா முதலிய பெருமக்களைக் குறித தும் எழுந்தன பல. இவையெல்லாம் செவி வழியா கப போற்றப்பட்டும ஏடுகளில் எழுதிப் பேணப்பட் டும் வழங்கி வநதன. இவற்றை நெடுஙகாலத்திறகுப் பினவநத ஒருவராலோ பலராலோ தனிநூலகளாகத தொகுக்கப்பெறும் நிலை தோனறுகிறது.

பதினெனகீழ்க்கணக்கு நூல்களுள நாலடியார் ஒரு திரட்டு நூலாகும். எணணாயிரம் சமண முனி வாகள் பாடிய வெணபாக்களில் 400 பாடல்கள் வைகை நதியின் எதிா சென்று நிலைத்தன என்பது செவிவழிச செயதி. இவறறை 40 அதிகாரங்களாகப் பதுமனார் வகுத்தார். இது நீதிபறறிய தொகை நூல்; அறம, பொருள, இன்பம் எனனும் பாகுபாட் டினைப் பின்பறறியது. அகம, புறம் எனனும சஙகப் பாடல திரட்டிறகு மாறுபட்ட பொருணமையில அமைந்துள்ளது இது

இதனை அடுத்து வநதவை சமயச் சாாபானவை. சைவத் திருமுறைகளும் வைணவர் கொணடாடும நாலாயிரத திவவியப பிரபந்தமும ஒருவகையில் திரட்டு நூலகளைச் சாரும், சைவத திருமுறைகளுள் முதலபதினொனறையும திரட்டியவர் நம்பியாணடார் நமபிகள். திவவியப பிரபநதத்தைத் திரட்டியவா சிரீமந நாதமுனிகள. இவற்றைத தனிபபாடல் திரட் டினின்றும வேறுபட்ட நூலகளின திரட்டு எனக் கொளளலாம்.

ஒனபதாந் திருமுறையும் பதினொனறாந் திரு முறையும, திவவியப் பிரபந்தததில இயற்பாவும திரட்டு நூலகளே எனபது மிகத தெளிவாக விளங கும். திருமாளிகைத் தேவர் முதல சேதிராயர் ஈறாக ஒனபதினமர் இயற்றியருளியதே ஒனபதாம் திரு முறை. பதினோராந்திருமுறையும் திருவாலவாயுடை யார் முதல் நம்பியாண்டார் நமபிகள ஈறாகப் பன னிருவர் செய்த நாறபது சிற்றிலக்கியஙகள் அடஙகி யது எனவே, இதற்குப 'பிரபநத மாலை' எனனும ஒரு பெயரும் உணடு. இயற்பாவில முதலாழ்வாா மூவா முதலாகத் திருவரஙகததமுதனாா ஈறாக எழு வர் அருளிய பதினொரு பிரபந்தஙகள் உள.

மேலே சுட்டிய சமய நூல்களிலிருநது பாடல களைத் தெரிநதெடுத்துத திரட்டிய நூல்கள சிலவும் பின்னாத் தோனறின. அவற்றுள முதலாவதாகக் குறிப்பிடத்தக்கது 'சஙகர நாராயணத் திரட்டு'. இத னைத் தொகுத்தவர் தத்துவ தேசிகர் சந்தானததில 35-ஆம் சந்தானமாகிய சுயம்பிரகாச யோகியார் ஆவாா. இவர் தேவாரம், திருவாய்மொழிகளிலிருந்து 1,100 பாடல்களை எடுத்து 52 அதிகாரமாகப பகுத் துத் தந்துள்ளார்

சிவாலய முனிவர் பொருட்டுத் தேவாரத் திரு முறைகளிலிருநது அகத்தியர் திரட்டியவை 'அகத்தி யர் தேவாரத திரட்டு' எனனும் பாராயண நூலா கும். இதுபோன்றே நாடோறும்ஓதும நோக்கத்துடன் அமைநதது திவவியப் பிரபந்தஙகளிலிருநது மணவாள மாமுனிகள் திரட்டியருளிய 'நித்தியாநு சநதானம்' என்னும் திரட்டு நூல். இவை கடவுள் வணக்கமாக அமைந்த திரட்டு நூலகள ஆகும்,

இனி, சமயத் தத்துவம் சார்பாக வந்த திரட்டு நூல்கள் நோக்கத்தகும். இவற்றுள் முற்படக் கூறத் தக்கது 'திருமுறைத்திரட்டு'. சைவ சித்தாந்த செம் பொருளை விளக்கும் தேவாரப் பாடல்களைத் தெரிந் தெடுத்து உமாபதிசிவாசசாரியாரால் தொகுக்கப் பெற்றது இந்நூல். இதில் பதிமுதுநிலை, உயிரளவை நிலை, இருணமலநிலை, அருளதுநிலை, அருளுரு நிலை, அருளும் நெறி, உயிர் வணக்கம், இனபுறு நிலை, அஞ்செழுத்தருள்நிலை, அணைநதோர் தனமை எனப் பத்து அதிகாரங்களில் 99 திருப்பாடல் கள் தொகுக்கப்பெற்றுளளன.

சொரூபானந்தர் கி.பி. 16–ஆம் நூற்றாண்டில் திரட்டியது 'சிவப்பிரகாசப் பெருந்திரட்டு'. இவர்தம் சீடர் தத்துவராயர் திரட்டியது 'சிவப்பிரகாசக் குறுந்திரட்டு'. இத்திரட்டு நூல்கள் கலைக்கட்டளை, அனுபவக் கட்டளை. எனனும் இருபெரும் பிரிவுகள் கொணடவை. இவற்றுள 28 இயல்களும் 218 அதி காரங்களும் உள. 137 நூல்களிலிருந்து திரட்டப் பெற்ற வேதாநத தத்துவம் சார்ந்த 2813 பாடல்கள் இவறறில் உள,

இலக்கணத் திரட்டுநூல் எனனும் தகைமைய பனனிரு படலமும், பனனிரு பாட்டியலும். இவை புலவர் பலர் இயற்றிய நூற்பாக்களின திரட்டாய் அமைந்தவை.இவ்வாறேஇலக்கணத்தொகை நூலகள சில அண்மைககாலததும் வெளிவந்துள்ளன.எடுததுக் காட்டாக, இலக்கணத் தொகை–சொல், இலக்கணத் தொகை–யாபபு, பாட்டியல் என்பவற்றைக் கூறலாம்.

புறத்திரட்டு கி.பி. 15–ஆம் நூற்றாண்டில்இடைப் பகுதியில் திரட்டபபெற்றது எனக கருதப்படுவது. இது இலக்கியப் பாடல்களின் தொகுப்பு. சஙகப் பாடலகள் முதல் கம்பரது இராமாவதாரம் ஈறாக வந்த இலக்கியங்களிலிருந்து தெரிவுசெய்யப்பட்டுள்ள பாடல்கள் இதில் உள்ளன. இப்புறத்திரட்டு வள்ளு வரது முப்பாலின் அமைப்பைப் பினபற்றியது. நூலின பெரும்பகுதி மட்டுமன்றி அதிகார அடைவிலும் குற ளாசிரியர் வகுதத நெறியையே இத்திரட்டு நூல் பின பற்றியுள்ளது. திருக்குறளின அறிவுச் செலவத்தை மேலும் பெருக்குவதற்காகத் தொகுக்கப்பெற்ற தமிழ்ச் செலவம் என்று இதனைக் கூறலாம். இதற்கு நீதித்திரட்டு, பிரசங்கா பரணம் எனனும் பெயர் களும் உண்டு. புறத்திரட்டுச் சுருககம் என ஒரு தொகுப்பும் காணப்படுகிறது.

இத்திரட்டின் அறத்துப்பாலில் 45 அதிகாரங்களும் 673 செய்யுள்களும் உள; பொருட்பாலில் 86 அதி காரங்களும் 1032 செய்யுள்களும் உள்ளன. புறத் திரட்டுச் சுருக்கத்திலுளள காமத்துப்பாலில் கைக் கிளைததிணைப் பொருளாக 65 செய்யுள்கள் உள. இவற்றையும் சேர்க்க 1570 செய்யுளகள் இத்திரட்டில் தொகுக்கப்பெற்றுள்ளன என்பது தெரியவரும். இத் திரட்டினால் பினனாளில் மறைந்துபோன பல நூல் களைப் பற்றிய விவரங்கள தெரியவருகினறன.

குறிப்பிட்ட சூழலுக்கு ஏற்பப் புலவர் பலர் பாடிய செய்யுள்களைச் சூழல் விளக்கத்துடன் தரும் தொகுப்பு நூல் 'தமிழ் நாவலர் சரிதை'. இது கி.பி.17 -ஆம் நூற்றாண்டில் தோன்றியதாகலாம். இது போனறே 'அருந்தமிழ்த் திரட்டு' என ஒரு நூல் தஞ்சைச் சரசுவதிமகால் நூல் நிலையத்தில் சுவடி யாய் உள்ளது. மேலும் தனிப்பாடற்றிரட்டு என்னும் பெயருடன் சில ஏடுகளும் சுவடி நூலகங்களில உள.

இராமநாதபுரம் சமசுதானம் பொன்னுசாமித் தேவரின் தூண்டுதலால் தில்லையம்பூர்ச் சந்திர சேகர பணடிதரும் காஞ்சீபுரம் கச்சபாலய அய்யரும் தொகுத்த நூல் (கி பி. 1862) 'தனிப்பாடற்றிரட்டு' என வழங்கப்படுகிறது. இத்திரட்டு நூல மூலமாக வும் உரையுடனும் பல பதிப்புகளைப் பெற்றுள்ளது. ஒளவையார், கம்பர் முதலியோர் பாடிய பாடல்கள் அவ்வப்புலவர் வரலாற்றுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவை.

மதுரைத் தமிழ்ச் சங்கத்தை நிறுவிய பெரியார் பாணடித்துரைத் தேவர் 'பனனூற்றிரட்டு' என னும் பெயரால (கி.பி.1898) ஒரு திரட்டு நூலினை வெளியிட்டுள்ளார். இது புறத்திரட்டுப் போன்ற தொரு இலக்கியத் திரட்டாகும். இது அறத்துப் பால், பொருட்பால் எனனும் இருபகுதிகள கொண் டது; 54 அதிகாரங்கள் என்னும் பகுப்பு உளது. நீதிநூல், காவியம் முதலிய பல தமிழ நூல்களி லிருந்து திரட்டப்பெற்ற பாடல்களை இத்தொகுப் பிற் காணலாம்.

புலவர் பலர் பாடிய வண்ணங்கள் தொகுக்கப் பெற்று 'வண்ணத்திரட்டு' என நூலாக அமைக்கப் பட்டுள்ளது. இதுபோன்றே கோவை முதலிய பிரபந் தங்களிலுள்ள செய்யுள்கள தொகுக்கப்பெற்றுக் 'கோவைக் கொத்து' முதலியனவாகப் பெயரிடப் பட்டுள்ள நூல்களும் சில உள. புராண நூல்கள முதலியவற்றிலுள்ள தோத்திரங்களை ஒருங்கு திரட் டியஒருநூல் (1899) 'சிவபுராணாதி தோத்திர மஞ்சரி' என வழங்கப்படுகிறது. சமசுதானங்களின் தலைவர் களாக விளங்கிய சிற்றரசர் சிலர் பேரில் அமைந்த பாடல்களைக் கொண்ட திரட்டு நூல்கள் சில உள. ஊற்றுமலைத் தனிப்பாடல் திரட்டு, வடகரையாதிக் கன் சரித்திரம் போல்வன அத்தகையன.

திலலையம்பூரச் சந்திரசேகர கவிராச பணடிதர் திரட்டித் தநத தனிபபாடற்றிரட்டுப் போலவே முற்காலச் சமகாலப் புலவர்களின பாடல் திரட்டாக மதுரை மு.ரா. கநதசாமிக் கவிராயா 'தனிச் செய்யுட் சிநதாமணி' எனனும் தொகைநூல் ஒன்று வெளியிட்டாா (கி.பி 1908). பேராசிரியர் மு. இராக வையஙகார் 'பெருநதொகை' என்னும திரட்டு நூலினை கி.பி. 1936-இல் வெளியிட்டார். இது கடவுள் வாழ்த்தியல, அறவியல், பொருளியல என னும் முப்பெரும் பகுப்பினை யுடையது. இத்திரட்டு நூல தமிழ நாவலர் சரிதை முறையையும தனிப் பாடறறிரட்டு முறையையும் பினபறறியது. இலககிய வரலாறு முதலியவற்றிறகுப் பயனபடவேணடும் என்னும் நோககில் அமைநதது. 2214 பாடலகள கொணடது.

பெரும்புலவர் பலருடைய பாடல்களையும் நூல களையும் ஒருஙகு தொகுத்துத் தரும திரட்டு நூல் களும் தனிப்படக் குறிக்கத் தகுந்தவை. குமரகுரு பரர், சிவப்பிரகாசா, சிவஞானமுனிவா, தாயுமான சுவாமிகள, பட்டினத்துப் பிள்ளையாா, குணஙகுடி மசுதான சாகிபு முதலியோர் பாடியுள்ளவை அவர வா பெயரால் திரட்டு நூலகளாக வெளிவந்துள்ளன.

'சந்நிதி முறை' என வழங்குவனவும் திரட்டு நூல்களே. திருப்போரூரச் சநநிதி முறை, திருத் தணிகைச் சந்நிதி முறை, திருவரஙகச சநநிதிமுறை முதலியன எடுத்துக்காட்டுகளாம்.

தமிழக அரசின தமிழ வளர்ச்சித் துறை வெளி யிட்டு வரும் தமிழநூல் விவர அட்டவணைத் தொகுதிகளில் 'திரட்டுநூலகள' என ஒரு பகுதி காணப்படுகிறது. அப்பகுதிகளை நோக்கின் இன்னும் எத்தனையோ வகையான திரட்டுநூலகள் வெளி வந்துள்ளமை தெரியவரும மு.ச,

**திரண்ட உடலமைப்பு**: உடலமைப்பிற்கும் ஆளுமைககும் நெருஙகிய தொடர்பிருப்பதாக நம்பி வந்தனர். முகக்குறியியல (Physiognomy)எனற துறை யும்வளரலாயிற்று. மனிதர்களுடைய உயரம், எடை, உயரத்திற்கும் எடைக்கும உள்ள விகிதம், தலையின சுற்றளவு, கையின நீளம போன்றவைகளைக கொணடு மனிதனின் குணநலன்களைக் கூறவும் தலைப்பட்டனர். கிரேக்க மருத்துவர் இப்போகிரட் டிசு இரணடு அடிப்படை விதிகளின் உதவியால் உடலமைப்பைக் குறிப்பிட்டார். பினனர்க் கிரசுமர் மூனறு வகையாக உடலமைப்பை விவரித்தார். அதனைத் தொடர்ந்து வில்லியம் செல்டன் என்னும் கொலம்பியாப் பல்கலைக் கழக மருத்துவர் 4000 கல்லூரி மாணவர்களின முன்பகுதி, பக்கவாட்டம், பின்பகுதி ஆகியவறறின நிருவாணப் படங்களைக கொணடு, திரணட உடலமைப்பினர், இடைநிலை யினா, மெலிந்த உடலமைப்பினர் எனறு மூவகை யாகப் பாகுபடுத்திக் கூறினாா. திரணட உடலமைப் புக கொணடவாகள உருணட வடிவமும், மென்மை யான தசையமைப்பும் பெரிய வயிறும் உளள உட லமைப்பைக் கொணடவர்கள். செலடன் உடலமைப பினை மூன்று எணணுளள குறியீடு மூலம் விளக கு கிறார்; அதாவது 111 என்ற எண்ணிலிருந்து 777 எண் வரையிலான குறியீட்டைக் குறிபபிடுகிறாா. முதல் எண 1 குறைநத அளவையும், 4 சராசரி அளவையும் 7 அதிக அளவையும் குறிக்கும. சான றாக, திரண்ட உடலமைப்புக கொணடவரை 711 எனறும, இடைநிலையினரை 171 என்றும, மெலிநத உடலமைப்புக் கொணடவரை 117 எனறும், சராசரி யான உடலமைபபு உளளவரை 444 எனறும் குறிப் பிடுகிறார். ஜி.இரா.

**துணை நூல்**

**Jozefcohen (Ed)**, Personality Assessment, Eyewitness Series in Psychology-Ran McNally & Co, Chicago, 1969.

**திரபால்கர்** ஐரோப்பாவிலுளள ஐபீரிய முநநீரகத்தின் தெனமேற்குக் கரையில அமைந்துளள ஒரு நில முனையாகும. இது இசுபெயின நாட்டில கேடிசுககும் (cadiz), சிபரால்டர் (Gibraltar) நீர்




போரின் நிலைகள்- அக்.21,1805 நண்பகல்

இணைப்புக்கும் இடையிலுள்ளது. திரபால்கருக்கு (Trafalgar) மேற்கே சற்றுத் தூரத்தில் கி.பி. 1805-ஆம் ஆண்டில் அக்டோபர் 21-ஆம் நாளன்று நடைபெற்ற கப்பற் சண்டையின் காரணமாக வரலாற்றுச் சிறப்பை இது எய்தியது.

பிரான்சுக்கும் இங்கிலாந்துக்கும் இடையே கி.பி. 1803-இல் மீண்டும் போர் மூண்டது. அதுசமயம் நெப்போலியன் பிரான்சு நாட்டரசைக் கட்டுப்படுத்தி வந்தார். போரின் தொடக்ககாலத்தில் நெப்போலியனுடைய முழுக் கவனமும் இங்கிலாந்தின்மீது படையெடுத்துச் செல்வதைப் பற்றி இருந்தது. இங்கிலாந்தை வெற்றி கண்டுவிட்டால் ஐரோப்பாவில் தமது ஆதிக்கத்தை நிலைநாட்டுவது எளிதாகும் என்று எண்ணினார். அத்திட்டத்தை நிறைவேற்றும் பொருட்டுப் பொலோனுக்கு (Boulogne) அருகே ஒரு பெரிய படையைச் சேகரித்தார். சேகரிக்கப்பட்ட 1,00,000 வீரர்களை இங்கிலாந்து அழைத்துச்செல்ல 2.000 படகுகளைக் கட்டினார். ஆங்கிலக் கால்வாயில் ஆங்கிலேயர்கள் கடலாதிக்கம் பெற்றிருந்த காரணத்தால் அவரது எண்ணம் தடைப்பட்டது. பிரஞ்சுக் கப்பற்படை நான்கு மையங்களில் சிதறிக் கிடந்தது. அம்மையங்கள் 1) பிரெசுட்டு (Brest), 2) தூலூன் (Toulon), 3) உரோச்போர்ட்டு (Rochefort) 4) பெர்ரோல் (Ferrol) என்பவையாகும். இத் துறைமுகங்களை ஆங்கிலக் கப்பற்படை முற்றுகையிட்டிருந்தது. சிதறுண்டு கிடந்த கப்பற்படை முற்றுகையை உடைத்துவிட்டு ஆங்கிலக் கால்வாயை ஒரு சில காலம் கட்டுப்படுத்தினால் ஒழிய நெப்போலியனுடைய திட்டம் வெற்றி பெற வாய்ப்பில்லை. இசுபெயின் கி.பி. 1805-இல் பிரான்சுடன் சேர்ந்தது. அப்போது நெப்போலியன் புதிய திட்டம் ஒன்றை வகுத்தார். இசுபெயின் மற்றும் பிரஞ்சுக் கப்பற்படைகள் மேற்கு இந்தியத் தீவுகளுக்குச் செல்லவேண்டும் என்றும், ஆங்கிலப்படை அத் தீவுகளைக் காக்க ஆங்கிலக் கால்வாயை விட்டு அவற்றைப் பின்தொடர நேர்ந்தால் தக்க சமயத்தில் வேகமாகத் திரும்பிவந்து ஆங்கிலக் கால்வாயைப் பிரஞ்சு நிலப்படை கடக்கும் வரை காத்து நிற்கவேண்டும் என்றும் கூறினார். அத்திட்டத்தின்படி பிரெஞ்சுக் கப்பற்படைத் தலைவர் வில்லனுவா (Villeneuve), தூலூனை விட்டுப் புறப்பட்டு, வழியில் கேடிசில் இருந்த இசுபானியப் படையுடன் சேர்ந்து மேற்கிந்தியத் தீவுகளை நோக்கிப் புறப்பட்டார். ஆங்கிலப் படைத் தலைவர் நெல்சன் அத்தீவுகளைக் காக்க அவற்றைப் பின்தொடர்ந்தார். தக்கநேரத்தில் திட்டப்படி வில்லனுவா ஐரோப்பா நோக்கிப் புறப்பட்டார். நெல்சன் வெகுவிரைவில் நிலைமையைப் புரிந்துகொண்டு வேகமாகச் செல்லக்கூடிய கப்பல் ஒன்றை இங்கிலாந்துக்கு உரிய காலத்தில் அனுப்பி ஆங்கிலக் கப்பல்களை எச்சரிக்கைப்படுத்திவிட்டுத் தாமும் இங்கிலாந்து நோக்கிப் புறப்பட்டார். அதனால் நெப்போலியனுடைய திட்டம் தோல்வியடைந்தது. வில்லனூவா கொரன்னாவிற்குச் (Corunna) சென்றுவிட்டார். பின்னர் அதைவிடுத்துத் தெற்கு நோக்கிச்சென்று கேடிசை அடைந்தார். நெப்போலியனுடைய தூண்டுதல் காரணமாகவும் தமது பதவி பறிபோகும் என்ற பயத்தாலும் வில்லனூவா கேடிசை விட்டு வெளியேறி, நேபிள்சில் பிரான்சு மேற்கொண்ட போர் நடவடிக்கைகளுக்கு ஆதரவு அளிக்க முற்பட்டார். திரபால்கர் முனைக்கு மேற்கே அவரை வழிமறித்து நெல்சன் போரிடும்படி செய்தார்.

வில்லனூவாவின் 33 கப்பல்களைக் கொண்ட கப்பற்படை 8கி.மீ நீளத்திற்கு வடக்குநோக்கிஒரேவரிசையில் நிறுத்தப் பட்டிருந்ததை நெல்சன் கண்டார். நெல்சன் 27 கப்பல்களைக் கொண்ட தமது படையை இரண்டு வரிசைகளில் நிறுத்தி வைத்தார். அவற்றுள் ஒன்று கூத்பெர்ட்டு காலிங்கு உடின் (Cuthbert Colljngwood) தலைமையில் செயற்பட்டது காலிங்உடு 'இராயல் சாவரின' (Royal Sovereign)என்ற கப்பலிலிருந்து தம்கீழிருந்த 15 கப்பல்களுக்குக் கட்டளைகள் இட்டுவந்தார். நெல்சன் 'வெற்றி' (Victory)என்ற கப்பலை நடத்தினார். இவர் மொத்தம் 12 கப்பல்களை நடத்திச் சென்றார். காலிங்குஉடு அக்டோபர் 21-ஆம் நாள் நடுப் பகலுக்குள் பிராங்கோ இசுபானியப் படையின் பின்னணியில் இருந்த 16 கப்பல்களுடன் போரிடத்தொடங்கினார். பகைவரின் படையின்மையம் மற்றும் முன்னணிப் பகுதிகளை நெல்சன்தாக்கினார். அந்த வரிசையிலதான் வில்லனூவா தமது 'புசென்டோர்' (Bucentaure) கப்பலில் ஏறிக்கொண்டு போர் நடத்திவந்தார். நெல்சனுடைய கப்பல்களின் பெரும் பகுதி வில்லனூவாவின் படையை ஊடுருவிச் சென்று அதனைச் சீரழித்தது. அந்நேரத்தில் பியாரி துமனுவார், (Pierre Dumanoir) தலைமையிலான பகைவருடைய ஆறு கப்பல்களை முதல் தாக்குதலின்போது புறக்கணித்துவிட்டார். அவை அன்று மாலை 3.30 மணி அளவில் திரும்பிவந்து வில்லனூவாவிற்கு உதவி செய்யலாயின. அவ உதவி பெருந்த அளவில் இல்லாமையால் அம்முயற்சி தோல்விகண்டது. காலிங்குஉடு பின்னணியை முழுமையாகஅழித்து விட்டார். வில்லனூவா சிறைப்பட்டார். அவர் 19அல்லது 20 கப்பல்களை இழந்தார். அவை ஆங்கிலப் படையிடம் சரணடைந்தன;14,000 வீரர்களையும் இழந்தார்; அவர்களுள் பாதிப் பேர் சிறைப்பட்டனர். நெல்சன் போரின்போது படுகாயமுற்று மாலை 4.30 மணியளவில் உயிரிழந்தார். அதற்குள் தம படை வெற்றிபெறுவது திண்ணம் என்பதை அவர் அறிந்து

விட்டமையால் மனநிறைவோடு உயிர்நீத்தார். ஆங்கிலேயர் பக்கத்தில 1,500 வீரர்கள பாதிக்கபபட்டனர். அவர்களுள சிலர் இறந்துவிட்டனர்; வேறுசிலர் காயமுற்றனர். அவர்கள ஒரு கப்பலைக்கூட இழக்கவில்லை. இப்போரின காரணமாக நெப்போலியன் இஙகிலாந்தின் மீது படையெடுத்துச் செல்லும திட்டத்தை முழுமையாகக கைவிடடுவிட்டார். பிரஞ்சுக கப்பற்படைப் பலத்தை இப்போர் அழித்துவிட்டது. தி.அர.இரா.

**திரமிள சங்கம்**: சமண அறவோர்கள மனித குலம் அனைத்தும் கலவி வளம் பெறறு அறிவொளி வீசிடப் பளளிகள அமைததவர்கள; மனிதகுலம் தூய வாழ்க்கையை மேற்கொளள அறவுரை பகர்ந்தவாகள. சமண முனிவர்கள ஓரிடத்தில் நிலைத்து வாழாமல் ஊரூராகச் சென்று அறவுரைகள பகர்நது சமயத்தை வளர்த்து வந்தமையைக கலவெட்டுகளாலும, சமய இலக்கியஙகளாலும் அறியமுடிகிறது. இச்சமண முனிவாகள ஆஙகாங்கே சங்கங்கள் அமைத்துச் சமயத்தை வளாதது வந்தனர். இனறும சமணச் சஙகஙகள உள்ளன. இவாகள் விளம்பரததை விரும்பாத காரணத்தால இவாகளைப் பறறிய செய்திகள மிகுதியாக வெளிவருவதில்லை.

தமிழகத்தில ஆரியா வருகைக்கு முனனா வாழ்நத மககள் 'திரமிளர்' அல்லது 'திராவிடர்' என்பதை வரலாற்று ஆசிரியர்கள ஒப்புக்கொளகின றனர். அம்மக்களுக்குப் பகவான இடப தேவர் முதன் முதல எழுததுகளும் வரிவடிவங்களும் அமைத்தருளினார். அவையே பிராமி எழுத்தாகும் அவ்வெழுத்துக்களே இன்று தமிழ் எழுத்துகள் என்று கூறப்படுகின்றன.

சமண முனிவாகளின கூட்டத்திறகுசசஙகம் என்பது பெயர். ஆதி காலததில சமண சஙகம ஒரே கூட்டமாக இருந்தது அதற்கு மூல சஙகம் என்று பெயர். பிறகு சங்கம பெரிதாக வளர்ந்து விட்டது, ஆகவே, அது நான்கு பிரிவாகப் பிரிககப்பட்டு நந்தி கணம், சேனகணம், சிமமகணம், தேவகணம எனறு பெயர் இடப்பட்டது. பிற்காலததில் நந்தி சஙகத்திலிருநது திரமிள சங்கம் அல்லது திராவிட சஙகம் என்னும் ஒரு பிரிவு ஏற்பட்டதாகச் சாசனங்களால் அறியலாம்.

வச்சிர நந்தி எனபவர் விக்கிரம ஆண்டு 526-இல் (கி.பி.470-இல) திராவிட சங்கத்தை ஏற்படுத்தினார் என்று தரிசன சாரம் என்னும் நூலில் தேவசேனர் என்பவர் எழுதியிருக்கிறார் எனறு கூறுவர்.

தென்னாட்டில் ஆரியர் வருகை அதிகரித்து வரவே கி.பி.முதல் நூற்றாண்டில் வாழ்ந்த குந்த குந்தாசாரியார் திராவிடர்களுக்கு விழிப்புணாச்சியை உண்டாக்க வேண்டித் திராவிட சங்கம் ஒனறை நிறுவினாா. அத்திராவிட சஙகமே கி.பி.4-ஆம நூறறாணடில் வச்சிர நநதி மாமுனிவரால் புதுப்பிக்கப்பெற்று வளாநது வநதது.

தென்னாட்டில் மிகப் புகழவாய்ந்த சங்கமாக இருந்தது திரமிள சஙகம், இசசஙகத்தைச் சார்ந்தவாகள முதலில் தீபஙகுடியைச் சார்ந்தவர்களாக இருந்தார்கள. இவர்கள தமிழரேயாயினும் தமிழ் கன்னடம், வடமொழி ஆகிய மொழிகளில புலமையுடையவாகளாய் விளஙகினாாகள். இத்திரமிள சங்கத்தைச் சார்ந்தவர் குணபத்திர முனிவர். இவர் தம் ஆசிரியராகிய சினசேனரால தொடஙகப்பட்டுசசெம்பாதி முடிவுபெற்ற மகாபுராணத்தின பிற்பாகமாகிய உத்தர புராணத்தை இயற்றியவர். இவ்வுத்தர புராணம் கி.பி. 897-இல் இயற்றி முற்றுப் பெற்றதாகும்.

குணபத்திர முனிக்குப்பின் குமரசேனரெனறொருவரும் அவர்க்குப்பின் சிந்தாமணியாசிரியரும் அவர்கபின் சிரீவாத்த தேவரும இருந்தார்கள். சிரீவர்த்த தேவர் சூளாமணியை இயற்றிய தோலா மொழித் தேவர். இச்செய்திகளால சமணர்கள் தமிழகத்தில் சங்கஙகள நிறுவிததம் சமயத்தை வளர்த்து வந்தனர் என்பது தெளிவாகத் தெரிகிறது. இச்சங்கங்களில திரமிளசஙகம் மிகவும் புகழபெற்றதாகவிளஙகிவநதது என்பதும் புலபபடுகிறது. சு.சு.

**திரவிலியான், சர் சார்சு, ஆட்டோ** இஙகிலாந்து நாட்டின் அரசியல அறிஞரும், வரலாற்றாசிரியருமவார். இவர் இஙகிலாநதில இலீசுட்டர் (Leicestershire) மாவட்டத்தில், உரோத்லி தெம்பிள (Rothley Temple) என்னும் ஊரில் கி பி. 1838-இல் பிறந்தார். இவர் தாய் அனனாமூர் மெகாலே (Hannah More Macaula) எனற பெணமணி, இவள் சிறந்த வரலாற்றறிஞரான தாமசு பேபிங்டன் மெக்காலேயின் சகோதரியாவாள். திராவிலியனின தந்தை சர் சார்லசு எட்வர்டு திரவிலியான் ஒரு சிறந்த அரசியல நிபுணர். சார்சு ஆட்டோ திரவிலியான் (Sır George otto Ttrevelyan) கேமபிரிட்சில் உள்ள ஆரோ, திரிநிட்டி (Trınıy) கல்லூரிகளில் பயினறு நாட்டுச் சேவைக்குத் தம்மைத் தயார் செய்து கொணடார். இவர் தநதை இந்தியாவுக்கு வநதபொழுது - கி.பி.1862-இல் அவருடைய செயலாளராக திரவிலியான் பணியேற்றார். இரண்டு ஆணடுகளுககுப் பிறகு தாய்நாடு திரும்பிய இவர் கி.பி.1865 முதல் 1886 வரை பாராளுமனற உறுப்பினராகப் பணியாற்றினார். தாராளவாதக்கொள்கையையே இவர் பின்பற்றினார். அயர்லாந்து நாட்டு அலுவல்களைக் கவனிக்கும் ஒரு

செயலாளராக இவர் அமைச்சரவையிலும் பணிபுரிந்தார் (கி.பி.1882 முதல் 1884). வேறு சில பொறுப்பான பதவிகளும் இவரைத் தேடிவந்தன. மகளிர் வாக்குரிமை, வேளாண் தொழிலாளர் வாக்குரிமை முதலிய முற்போக்குக் கொள்கைகளை இவர் தீவிரமாக ஆதரித்தார். இவர் ஓர் அரசியல்வாதியாக இருந்ததுடன வரலாற்றறிஞராகவும் இருந்தார். இவர் சில முக்கியமான வரலாற்று நூல்கள் எழுதியுள்ளார்.

இவர்தம் பிள்ளைகள் மூவரும் தந்தையைப் போலவே சிறப்பான வாழ்க்கை வாழ்ந்தவர்கள். நார்த்தம்பர்லாந்தில் 1928 ஆம் ஆணடில் இவர் காலமானார். தெ.பா.

**திரவிலியான், சார்சு மெக்காலே** ஆங்கிலேய வரலாற்றறிஞர். இவர் இங்கிலாந்தில் வெல்காம்பே (Welcombe) என்ற ஊரில் கி.பி.1876-இல் சார்சு ஆட்டோ திரவிலியானின் (த.க.) இளைய மகனாகப் பிறந்தார். ஆரோ (Harrow) கலலூரியில் கல்வி பயிலும்போது, இவருக்கும் சர் வின்சுட்டன் சர்ச்சிலுக்கும் இடையே நெருங்கிய நட்பு ஏற்பட்டது. இளமையிலேயே திரவிலியானுக்கு (Trevelyan George Maccaulay) வரலாறு எழுத வேண்டுமென்ற நாட்டம் மிகுதியாக இருந்தது. இவர் 1927 முதல் 1951 வரை கேம்பிரிட்சிலும் (Cambridge), திரிநிட்டிக் கல்லூரியிலும் (Trinity College) வரலாற்றுப் பேராசிரியராகப் பணியாற்றினார். வரலாற்று நூல்கள் எழுதுவதை இவர் முக்கிய பணியாகக் கொணடார். சமயத் துறையில், இறைவன உண்டு என்றோ இல்லை என்றோ கூறாத ஒரு பிரிவைச் சேர்ந்திருந்தார். அரசியலைப் பொறுத்தவரை இவர் தாராளவாதப் போக்கை ஆதரித்தார். காலம் என்ற பெரு வெள்ளத்தில மனிதன் மிகவும் அற்பமானவன் என்ற கருத்து இவரிடம் வேரூன்றியிருந்தது. இவர் எழுதியள்ள வரலாற்று நூல்களில் உளள உரைநடை, சில



திரவிலியான், சார்சு மெக்காலே

இடங்களில் செய்யுள் நடையாக இருக்கும். வரலாற்றறிஞர்களுள் முன்னணியில் நிறபவர்களில இவரும் ஒருவர். இவர் எழுதிய நூல்களா மிகப் பலவாம்.

அரும்பெரும் வரலாற்று நூல்களை ஆக்கித் தந்த இப்பெரியார் 1962-இல் கேம்பிரிட்சில் காலமானர். தெ.பா.

**திரள் நிதி** அரசியல் சட்ட விதியின்படி அரசு நிதியில் சேர்க்கப்படுகிறது. மைய, மாநில அரசுகளின் வரவுகள் அனைத்தும் இத்திரள் நிதியில் அடங்கும். வரிகள், வரிகள் அல்லாத வழியில் அரசுக்குக் கிடைத்த வருவாய்கள் (Tax and Non-tax Revenue), கருவூலச் சீட்டுகள (Treasury Bills) அல்லது வழித்துறைக் கடன்கள் (Ways and Means) மூலம் திரட்டிய தொகை ஆகிய யாவும் இந்நிதியில் அடங்கும். இந்திய அரசியல் சட்டத்தின் 112-ஆம் விதிப்படி ஆண்டு வரவு செலவுகள் ஆகியவறறின் மதிப்பீட்டைப் பற்றிய அவ்வாண்டின் நிதியறிக்கையை ஒவ்வொரு நிதியாண்டும் நாடாளுமன்றத்தின இரு அவைகளிலும், மாநிலங்களில் சட்டமன்றங்களிலும் அளிக்க வேண்டும். இவ்வாறு ஒவ்வோர் ஆண்டும் அளிக்கப்படும் வரவு செலவுத் திட்டத்தில் (மைய அரசிலும், மாநில அரசிலும்) திரள் நிதியானது (Consolidated Fund) முதன்மையாகக் கருதப்படுகிறது. அதாவது, மைய, மாநில அரசுகளுக்குக் கிடைத்த அனைத்துத் தொகைகளும், அவ்வரசுகளுக்குச் சொந்தமான அனைத்துப் பணத் தொகைகளும் இந்நிதியில் அடங்கும்.

**திரள்நிதியின் பொறுப்பில் கடன் வாங்குதல்:** இந்திய அரசுக்கு மிக்க நிதி தேவைப்படும்போது, அது தனது திரள்நிதியைப் பணயமாக அல்லது பொறுப்பாக வைத்துப் (Security) பாராளுமன்றச் சட்டத்தின் வழியாக விதிக்கிற வரம்புகளுக்குட்பட்டுக் கடன்களை எழுப்பவும், தான் எழுப்பும் கடன்களுக்கு ஏற்ற பொறுப்புகளைக் கடன் வழங்குவோருக்கு அளிக்கவும் அதிகாரம் பெற்றிருக்கிறது (அரசியலமைப்புப் பிரிவு 292). அதுபோலவே, மாநில அரசுக்கும் தனது திரள் நிதியின் பொறுப்பில் மாநிலச் சட்டமன்றம் விதிக்கும் வரம்புகளுக்குட்பட்டுக் கடன்களை எழுப்புதற்கு அதிகாரம் உள்ளது (293(1). இந்திய அரசாங்கம் தனது திரள் நிதியிலிருந்து எந்த ஒரு மாநில அரசாங்கத்துக்கும் கடனகளை வழங்குதல் கூடும் (பிரிவு 293 (2). ஆனால், எந்த ஒரு மாநில அரசாங்கத்தாலும் திருப்பிச் செலுத்தப்பட வேண்டிய கடன் மீதியிருந்தால், அந்த மாநில அரசாங்கம் இநதிய அரசாங்கத்தின் முன் இசைவு இல்

லாமல் கடன் எழுப்புதல் இயலாது (பிரிவு 293 (3)' இநதிய அரசாங்கத்தினால அல்லது அதன் சார்பாக வாங்கப்படுகிற மற்றெலலா அரசாஙகத் தொகை களும் இந்திய அரசின் பொதுக்கணககில் அல்லது அரசின் கணக்கில் (Public Account) வரவு வைக்கப் படுதல் வேணடும். இதுபோலவே மாநில அரசாங்கக் கணக்கும் இருக்கிறது. அரசாங்கச் சட்டத்தின் அதி காரத்தின அடிப்படையில் அலலாமல் எநத ஒரு வரி யும் வாங்கப்படுதலும், வரிப் பணங்களடஙகிய திரள் நிதியிலிருநது செலவுக்கு ஒதுக்கப்படுதலும் இயலா (பிரிவுகள் 265, 266 (3)). இந்த விதிகள் மாநில அர சாங்கத்துக்கும் பொருந்தும்.

இவ்வாறு இத் திரள் நிதியிலிருந்துதான் அரசு அனைத்துச் செலவுகளையும் மேற்கொள்கிறது. இந்திய மைய அரசில் குடியரசுத் தலைவரின் பரிந துரையும், மாநிலஙகளில் ஆளுநரின பரிந்துரையும இன்றி அரசு மானியத்திற்கான எந்தக் கோரிககையும் இத்திரள நிதியில் செய்யப்படமுடியாது. இத்திரளநிதி யிலிருந்து அரசு மேறகொளளும செலவானது வாக் கெடுப்புக்கு உட்பட்டது, உட்படாதது என இரு வகைப்படும். வாக்கெடுப்புக்கு உட்படாத வகைகளை நாடாளுமன்றம், சட்டமன்றம் விவாதிக்கலாம். ஆனால் அவற்றின்மீது வாக்களிக்க முடியாது. இச் செலவுகள் கட்டாயமாகச் செய்யப்பட வேணடுவன என்பதால் இவை நாடாளுமன்ற அல்லது மாநிலச் சட்டமன்றங்களின் வாக்கெடுப்பிற்கு உட்பட்டவை யல்ல. இவை சாட்டப்பட்ட செலவுகள (Charged Item of Expenditure) எனப்படும். மேலும் சாட்டு தலின்படி செய்யப்படும் செலவுகளும் வாக்கெடுப் பின்படி செய்யப்படும செலவினஙகளைப் போலவே அரசாங்க வரவு செலவுத் திட்டத்திலும், அரசாஙகக் கணக்கிலும் காட்டப்பட்டிருத்தல் வேணடும. இவ் வாறு சாட்டப்பட்ட செலவுகள பின்வருவன: 1) குடியரசுத் தலைவர், மாநில ஆளுநர் ஆகியோரின ஊதியம், படி, 2) நாடாளுமன்றத்தின தலைவர், சட்டசபைத் தலைவர், இவற்றின் துணைத்தலைவர் கள், மேலவைத் தலைவர், துணைத் தலைவர்கள் ஆகியோரின ஊதியங்கள், படிகள், 3) இந்திய மைய மாநில அரசுகளின் கடன செலவுகள் (Debt Charges), 4) இந்தியத் தலைமை நீதிமன்றம், உயர்நீதி மன்றம் ஆகியவற்றின் நீதிபதிகளின் ஊதியங்கள், படிகள், ஓய்வூதியங்கள, மைய அரசின் கணக்குத் தணிக்கை அதிகாரி (Comptroller and Auditor General), மாநில அரசின் தலைமைக் கணக்கு அதிகாரி (Accountant General) ஆகியோரின் ஊதியம், படி, ஓய்வூதியம், 6) ஒரு நீதிமன்றத்தின் அல்லது உப நீதிமன்றத்தின் தீர்ப்பு அல்லது கட்டளை அல்லது தாக்கீதை நிறை வேற்றுவதற்குத் தேவைப்படும் தொகைகள், 7) இந் தியத் தொகுக்கப்பட்ட நிதியின்மீது (Consolidated Fund of India) அரசியல சட்டத்தினால அலலது நாடாளுமனறததில, சட்டமனறத்தில இயற்றப்பட்ட சட்டத்தினால சுமத்தப்பட்டதென அறிவிககப் பட்ட பிற செலவினங்கள முதலியனவாகும. பிரிட் டானியப்பாராளுமன்ற ஆட்சியில் சாட்டபபடும் செல வினங்களுக்கு வழி செயயப்பட்டிருப்பதுபோல் இந்தி யப் பாராளுமனற முறை ஆட்சியிலும் திரள நிதியில் சாட்டப்படும் செலவினஙகளுக்கு வழி செய்யப் பட்டுள்ளது.

வாக்கெடுப்பிற்கு உட்பட்ட அரசுச செலவினங் கள் ஒவவோர் ஆணடு நிதித் தொடரினபோதும இந்திய நாடாளுமனறத்திலும், மாநிலச் சட்டமன்றங களிலும் விவாதிக்கப்பட்டு வாககெடுப்பு நடைபெறும். அவவாறு வாக்களிக்கப்பட்ட துறைகள், இனஙகளுக கான செலவுகள மட்டுமதான இததிரள நிதியிலி ருந்து அரசால் பயனபடுத்த முடியும. வாககெடுப் பிறகு உட்பட்ட, உட்படாத இருவகைகளிலும் செய்யப்படும் மொத்தச் செலவினங்களைக் காட்டு வதே செலவு ஒதுக்கீட்டுச் சட்டம் (Appropriation Act) எனப்படுகிறது.

**திரள நிதியின் வகைகள்:** இத் திரள நிதியானது இரண்டு பெரிய பிரிவுகளைக் கொண்டது. ஒரு பிரிவு நடப்புச் செலவையும் (Revenue Current Expenditure), அதை ஈடுசெய்யும் வரவினங்களான வரி, வரியல லாத வருவாய்களையும் (Tax and non-tax Revenues) குறிக்கும். மற்றொரு பகுதி மூலதனச் செலவுகளையும (Capital Expenditure), அவற்றைச் சரிககட்டக் கடன வாங்குதலையும் (கடன் வரவினங்களாக Ways andMeans Sources; and Loans and Debts) குறிககும். இவ்விரணடு பிரிவுகளும் மேலும் பல உட்பிரிவு களாக முனனேற்றச் செலவு (Development Expend ture), முன்னேறறமல்லாத செலவு (Non-development Expenditure) என்றும், ஐந்தாண்டுத் திட்டம செயற் படுத்தப்பட்டதிலிருந்து திட்டச் செலவு (Plan Expenditure), திட்டத்தில் சேராத செலவு (Non-plan Expenditure) எனறும் பலவறறைக் கொண்டுள்ளன.

இதில நடப்புச்செலவு அல்லது வருவாய்ச செலவு என்பது ஒவவோர் ஆண்டும், ஒவவொரு துறையிலும் ஆக்கப்பணிகளையும், சேவைகளுக்காகக் கொடுக்கும் ஊதியத்தையும முக்கியமாகக குறிககிறது. இது திரும் பத் திரும்பச் செயயக்கூடிய செலவினைக குறிபபதால் குறுகிய பயன்பாட்டையே அளிக்கும. மேலும் 1952 -ஆம்ஆணடுக்குப்பின்னர் ஒரு இலட்சம் உருபாய்க்கும் குறைவான மதிப்பீட்டை உடைய திட்டங்களுக்கு ஆகும் செலவினஙகளும் இவவருவாய்ச் செலவில்

சேர்த்துக் கொள்ளப்பட்டன. மூலதனச் செல வினங்கள் என்பது பெரும்பாலும் கட்டுமானப் பணிகள், இயந்திரங்கள் வாங்குவது போன்ற நீண்டகாலப் பொருளாதாரப் பயன்பாட்டுச் செல வினங்களைக் குறிக்கும். இவற்றிற்காகும் செலவினங் கள் வருவாய்ச் செலவில் எஞ்சியது போக, மீதிக் கடனிலிருந்துசரிக்கட்டப்படுகின்றன. எந்தெந்தச்செல வுகள் நடப்பு இனங்களில் அடங்கும், எவையெவை மூலதன இனங்களில் அடங்கும் என்பது நாட்டுக்கு நாடு சிறிது வேறுபடுகிறது. இதைப்பற்றிய அறிஞர் களின் கருத்துகளும் நாட்டுக்கு நாடுவேறுபடுகின்றன.

முன்னேற்றச் செலவு என்பது அரசு, நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்காக மேற்கொள்ளப் படும் செலவுகளைக் குறிக்கிறது. எடுத்துக்காட்டாக வேளாண்மை, தொழில்கள், பொது ஊழிய நிறுவனங் கள் ஆகியவற்றின் மொத்தத் தொகுதி அல்லது நாட்டின் உள்ளமைப்புக்குத் தேவையான கட்டுமானப் பணி அமைப்புகள் (infrastructure) முதலிய இனங் களுக்கு மேற்கொள்ளப்படும் செலவுகளால் பொரு ளாதார வளமும் பயன்பாடும் நாட்டு வருமானமும் அதிகரிக்கிறது. அதனால் அரசாங்கத்துக்கும் வருவாய் கிடைக்கும். முன்னேற்றமல்லாத செலவு என்பது காவல் துறை, உள்நாட்டு நிருவாகச் செலவு, அரசு ஊழியர்களுக்கு ஓய்வூதியம் போன்ற செலவுகளைக் குறிக்கிறது. இவற்றால் அரசு கருவூலத்துக்கு வரு வாயோ, நாட்டுப் பொருளாதாரத்தில் முன்னேற் றமோ உண்டாக வாய்ப்பில்லை.

திட்டச் செலவு, திட்டத்தில் சேராத செலவு என்ற சொற்றொடர்கள் தெளிவாக இல்லை என்ற கருத்து இன்றும் தொடர்ந்து வருகிறது. ஏனென் றால் திட்டச்செலவு என்பது இந்திய மைய, மாநில அரசுகள் ஒவ்வொரு நிதியாண்டும் அந்த ஆண்டுத் திட்டத்துக்கென ஒரு செலவுப்பட்டியலைத் தயாரிக் கின்றன. அதன்படி நடப்பு ஆண்டில் திட்டத்தின்கீழ் வரும் துறைகள், இனங்கள் ஆகியவற்றிற்காக மேற் கொள்ளப்படும் செலவுகள் திட்டச் செலவுகள் எனப் படும். மேலும் மாநில அரசின் திட்டச் செயலானது மைய அரசால் ஒப்புதல் அளிக்கப்படுவதாலும், திட்டச் செலவுகளுக்கென மைய அரசு குறிப்பிட்ட தொகையை(திட்டங்களுக்கு ஏற்றவாறு) ஒவ்வொரு மாநிலத்துக்கும் ஒதுக்கீடு செய்வதாலும், சில சம யங்களில் அந்நடப்பு ஆண்டில் முன்னுரிமையற்ற முன் னேற்றமில்லாத பணிகளும் மாநில அரசுகளால் திட்டப் பணியின்கீழ் மேற்கொள்ளப்படுகின்றன. நடப்பு ஆண்டு முடிந்ததும் குறிப்பிட்ட திட் டப் பணி,வரும் ஆண்டிலும் தொடர்ந்தால் அல்லது முந்தைய ஆண்டில் திட்டப் பணியாக இருந்த இனங் களுக்காக ஆன செலவு அல்லது பராமரிக்க ஒதுக் கீடு செய்யப்பட்ட தொகை நடப்பு ஆண்டில், திட் டத்தில் சேராத செலவு எனக் குறிப்பிடப்படுகிறது. மேலும், திட்டப் பணிகளுக்கு அரசு முன்னுரிமை கொடுப்பதால் சில சமயங்களில் முன்னேற்றப் பணி கள் பின்னுக்குத் தள்ளப்படுவதும் உண்டு. பெரும் பாலும் திட்டச் செலவுகளில் அரசியல் பின்னணி நிலவுவதால் அது அரசார்ந்த ஊழலுக்கும், பொருளாதார முன்னேற்ற ஒத்திவைப்பு ஏற்படுவ தற்கும் வழிவகை செய்கிறது.

இவ்வாறாகத் திரள்நிதியில் அடங்கும் அரசின் வரவினங்களும், செலவினங்களும் தான் இந்திய நாட்டின் எதிர்கால நிதிப் பொருளாதாரத்தையே நிருணயிக்கின்றன என்று கூறினாலும் அது மிகை யாகாது. மேலும் இத் திரள் நிதியின் வருவாய் அரசின் செலவுகளுக்கு மேற்படுமேயானால் அதை அந்த நடப்பு ஆண்டின் உபரி வரவுசெலவுத் திட்டம் என்றும், வருவாய் செலவுக்குக் குறையுமேயானால் அதைப் பற்றாக்குறை வரவுசெலவுத் திட்டம் என் றும் மதிப்பிடுகின்றனர். இத்திரள் நிதியின் உபரி அல்லது பற்றாக்குறையை வைத்து, மொத்த இந்திய மைய மாநில அரசுகளின் வரவுசெலவுத் திட்டத்தை அந்த நடப்பு ஆண்டில் மதிப்பீடு செய்ய முடிகிறது.

கா.தி.இ.

**துணை நூல்கள்:**

Dhavaraj, K., Finnancial Administration in India- vora & Co., Publishers pvt.'Ltd., Bombay, 1974.

Ojha, P.D., Principles and practice of public Finan ce and Financial Administration in India, vora &Co , Publishres pvt. Ltd., Bombay, 1980.

***திரள் பெயர்***: பொதுப்பெயர்களை (Common Nouns) எண்ணப்பெறும் தன்மையினை அடிப்படை யாகக் கொண்டு எண்ணப்படு பெயர்கள் (Count Nouns) எனவும் இயலும். எண்ணப்படு பெயர்களை எண்ணுதல் (இரண்டு மாடுகள், ஒரு மரம்) இயலும். திரள்பெயர்கள் குறிப்பிட்ட உருவ அமைப்பினைக் கொண்டிருப்பதில்லை யாதலின் (நெய், நீதி) இவற்றை எண்ண முடிவதில்லை.

தமிழ் மொழியில் திரள்பெயர்கள் ஒருமை- பன்மை எண்வேறுபாடின்றி அமையும். மேலும் இவை எண்ணப்படு பெயர்களைப் போன்று எண்ணடை களால் சிறப்பிக்கப் பெறுவதில்லை. சான்றாக 'இரண்டு வண்டிகள்' என்பதனைப் போன்று 'ஒரு நெய்' எனக் கூறப்படுவதில்லை.

திரள பெயர்களில் எண வேறுபாடு இன்மையால் இவை பன்மை உருபினை ஏற்பதிலலை. எனினும் இவற்றின் வேறுபட்ட வகைகளைச் சுட்டும் சூழலில இவை பன்மை உருபுகளை ஏற்பதுணடு; எண ணடைகளால சிறப்பிக்கப் பெறுதலும உணடு. இரண்டு வகையான எணணையைக குறிக்குமிடத்துத் தமிழில 'இரணடு எண்ணெய்கள' எனக் குறிபபிடு தல உணடு.

திரள பெயர்கள் நுணபொருள் பெயர்களாகவும் பருப்பொருள் பெயாகளாகவும் அமையப்பெறும். தமிழில 'நீதி' 'குறறம்' போல்வன நுணபொருளைக் குறிககும் திரள்பெயர்களாகவும் 'நெய்', 'இருமபு' போல்வன பருப்பொருளகளைக குறிககும் திரள பெயர்களாகவும அமைந்துளளன. ஏ.ஆ.

**துணை நூல்கள்:**

**Andronov, M., The Standard Grammar of Mordern and Classical Tamil, New Century Book House, Madras, 1969.**

**Jan Svartvik , A Grammar of Contemporary English, London, 1972.**

***திராட்சாராமா*** ஆந்திரப் பிரதேசத்தில் கோதா வரி சமவெளிப் பகுதியில அமைந்துள்ள ஓர் ஊர். கோயிற கட்டடக் கலைச் சிறப்புப் பெற்ற இவ்வூரில பீமேசுவரன் எனனும் கோயில் உளளது. கீழைச் சாளுக்கிய அரசர் பீமன் என்பவரின் பெயரால் பீமேசுவரன் எனக் கூறப்படும் இக்கோயில சிற்பங களுக்குச் சிறப்புபெற்ற கோயிலாகும். இக்கோயிலின உள்ளே வடிவமைக்கப்பட்டுள்ள சிறு கோயில் ஒனறு மாதிரிக் கோயிலமைப்பில் கட்டடக் கலைஞ ரால கட்டப்பட்டுள்ளது. பீமேசுவரன கோயிலில உள்ள ஏழு இருடிகளின் சிறபங்கள் குறிப்பிடத் தக்கவை. ஏழு இருடிகள் ஒன்றாகக் காணப்படும் அமைப்பு மிக அரிதானதாகும். இக்கோயிலின தூண களில் பல அழகிய சிற்பங்கள செதுக்கப்பட்டுள்ளன. கோலாட்டம எனப்படும் நாட்டுபபுற ஆட்டம் இஙகுச் செதுககப்பட்டுளளதும் குறிப்பிடத்தக்கது. இககோயிலின மிகப்பெரிய நநதி மிக அழகுடையது. சு.இரா.



திராட்சாராமா–சிறு கோயில்

***திராட்சுக்கி*** **(1879-1940):** திராட்சுக்கி 1879-ஆம் ஆணடு உக்ரேன் மாகாணத்தில் பிறந்த ஓர் உருசிய அரசியல்வாதியாவார். இவரதுஇயற் பெயா இலெவ டெவிடோவிச் பிரான்சுடைன் (Lev Davydovich Bronstein) என்பதாகும். காரல் மார்கசின் சிநதனை யால்கவரப் பட்டுத் தமமை உருசியாவின் தீவிரவாத இயக்கததில இணைத்துக கொண்டவர். இலெனின, கார்க்கி போன்ற புரட்சியாளர்களுடன மிகக ஈடு பாடு கொணடிருந்தார்.இத்தகைய நடவடிக்கையால் அப்போதைய அரசு இவரைக் கைது செய்து கி.பி. 1898-இல சைபீரியாவிற்கு நாடு கடத்தியது. 1920-ஆம ஆணடில் அங்கிருந்து தப்பித் 'திராட்சுக்கி' (Trotsky) என்ற பெயரில போலி பயண இசைவுச்சீட்டு தயாரித்து இஙகிலாந்து சென்றாா. முதல உலகப்போர்க் காலத் தில், சுவிட்சர்லாநது, செருமனி ஆகிய நாடுகளுக்குச் சென்றார் இப்போரை மிகுதியும் கண்டிததுப் பிர சாரம செய்தார். பின்னர்ப் பிரானசு நாட்டிலும் இவர் நசிசுலவோ (Nisheslavo) எனற வார இதழில் போரினை எதிர்தது எழுதி வந்தார். அஙகிருந்து விரட்டப்பட்டு 1917-இல நியூயார்க்கு போய்ச்சேர்நது அங்கு நேவிமிர் (Navy mir) எனும் இதழினை நடத்தி வநதார். உருசியப் புரட்சி 1917-இல தொடங்கிய சமயத்தில் உருசியா போய்சசேர்ந்து அதில் பெரும் பங்காற்றினார். விப்ரியடு (Vperiod) என்னும் இதழில் உருசியப் பொதுவுடைமையாளர்களை (Bolshevik) ஆதரித்து எழுதி வந்தார். வகுப்புப் பிரி வினையற்ற சமுதாயம் உருவாக வேணடும் என இவர் விரும்பினார்; சார் கொடுங்கோலாட்சி ஒழியவும், மக்களாட்சி அமையவும் பெரிதும் விழைந்தார். உருசிய நாட்டில தான் உலகி லேயே முதன்முதலாகத தொழிலாளர் ஆட்சி முறை உருவாகும் என்று இவர் முன்னரே கூறினார். இலெனின அரசாங்கத்தில் அவருக்கு அடுத்த நிலை



திராட்சுக்கி

யில் இருந்து பல உதவிகளைச் செய்தார். இவர் வெளி விவகார உயர் அதிகாரியாகவும் போர் உயர் அதிகாரியாகவும் சோவியத்துப் பொது உடைமைக் கட்சி ஆட்சிக்குழு (Politburo) உறுப்பினராசவும் இருந்தார்; சிவப்புப்படை ஒன்றை உருவாக்கிச் சீர்நிலையில் வைத்திருந்தார். மேலும் இவர் பிரெசுட்-லிட்டோவ்சுக்கு (Brest-litovsk) மாநாட்டிற்கு உருசியப் பிரதிநிதியாகச் சென்று உருசிய-செர்மானியப் போர் முடிவு ஒப்பந்தம் செய்தது குறிப்பிடத்தக்கது. இலெனினின் மறைவிற்குப் பின் 1924-இல் இசுட்டாலின்கை ஓங்கிய சமயத்தில், இசுட்டாலின் தமக்கு எதிராகச் சூழ்ச்சி செய்ததாகக் குற்றம் சாட்டி திராட்சுக்கியைப் போர் அதிகாரிப் பதவியினின்றும் நீக்கினர். பின்னர்ப் பொது உடைமைக்கட்சியிலிருந்தும் இவர் நீக்கப்பட்டார். அதன் விளைவாகத் திராட்சுக்கி இசுடாலினையும் அவர் அரசாங்கத்தையும் எதிர்த்தும் கண்டித்தும் பல புத்தகங்களையும் சுவடிகளையும் எழுதினார். இவர் 1929-இல் உருசியாவிலிருந்து துரத்தப்பட்டுத் துருக்கியில் 4 ஆண்டுக் காலம் தங்கினார். பின்னர்ப் பிரான்சிலும் நார்வேயிலும்தங்கி இசுட்டாலினை எதிர்த்து எழுதி வந்தார். தீகோரிவைரோ (Diego Rivera) என்பாரது அழைப்புக்கிணங்க மெக்சிகோ சென்றார். இவர் 1940-ஆம் ஆண்டு மெக்சிகோ நகரத்தில் சாக்யூ வான்டென் திரெசுடு (Jacques Van den Dreschd) என்பவனால் கொல்லப்பட்டார். இவர் தம் சுயசரிதை, உருசியப் புரட்சி வரலாறு முதலிய நூல்களை எழுதியுள்ளார். ஜே.இர.

**திராட்டர், வில்பிரடு (கி.பி. 1872-1939)** இங்கிலாந்திலுள்ள கோல்போர்டு (Coleford) என்னுமிடத்தில் கி.பி. 1172-ஆம் ஆண்டு பிறந்தார். இவர் ஒரு புகழ்மிக்க அறுவை மருத்துவ அறிஞராகவும் சமூகவியல் அறிஞராகவும் விளங்கினார்.

வில்பிரடு திராட்டர் (Wilfred Trotter) 1901-இல் இஙகிலாந்திலுள்ள மருத்துவக் கல்லூரியில் சேர்ந்து மருத்துவப் பட்டம் பெற்றார். இவர் 1906-இல் இலண்டனிலுள்ள பல்கலைக்கழக மருத்துவமனையில் அறுவை மருத்துவ அறிஞராகப் பணியிற் சேர்ந்தார். பின்னர் அங்கு 1935-இல் அறுவை மருத்துவப் பிரிவின் பேராசிரியரானார். இவர் தனியாகப் பெரிய மருத்துவமனை ஒனறினை நிறுவி மருத்துவச் சேவையும் செய்துவநதார். மேலும், இவர் 1928 முதல் 1932 வரை ஐந்தாம் சார்சு மனனரின் மதிப்பியல் மருத்துவராகவும் பணியாற்றியுள்ளார்.

இவர் தோலிலுள்ள உணர்வுத் திசுக்களை இயல்பு நிலைக்குக் கொணர்விப்பதில சிறந்த மருத்துவ அறிஞராகத் திகழ்ந்தார். இவர் மனிதனுடைய கூடிவாழும் இயல்பினையும் நடத்தை முறையையும் பற்றிப் பல ஆய்வுகள் மேற்கொண்டார். இவர் 1908-இல் விலங்குகளுக்கும் மனிதனுக்கும் உள்ள கும்பல் நடத்தைகளையும் அவற்றால் நிகழக்கூடிய விளைவுகளையும் பற்றிக் கட்டுரைகள் வெளியிட்டார். முதலாம் உலகப்போரின்போது (1916)'அமைதி மற்றும் போர்க் காலங்களில் குழு இயலபூக்கங்கள்' (Instincts of the Herd in Peace and War) என்ற இவர்தம் நூல வெளியிடப்பட்டது. பின்னர் முதலாம் உலகப் போரின்போது போர் வீரர்களிடையே ஏற்பட்ட சமூக-உள மாற்றங்களை ஆராய்ந்து அவற்றின் முடிவினையும் இணைத்து அந்நூலை 1919-இல் மறுபதிப்புச் செய்தார். இநநூலில் குழு இயல்பூக்கங்களே (group Interests) வன்முறைகளைத் தூண்டுகின்றன எனறு கூறியுள்ளார். எனவே, போர் நிறுத்தததை விரும்பும் அனைத்துத் தரப்பினரிடையேயும் இந்நூல் பெருமதிப்புப் பெற்றது இருப்பினும் பிற அறிஞர்களால் பிற்காலத்தில் குழுநடத்தையைப் பற்றி நடந்தபட்ட செயலறிவுசார் ஆய்வுகளால் திராட்டரின் விளக்கக் கோட்பாடுகள் மறுக்கப்பட்டன. இவர் 1939-இல் மறைந்தார். பூ.த.

***திராய்:*** இது ஆசியா மைனரிலிருந்த ஒரு பழைய நகரம். தார்டனல்சு (Dardanelles) நீர் இணைப்புக்குத் தென்கிழக்கில் 7 கி.மீ. தொலைவில் இப்போதைய துருக்கியில் உள்ள இசார்லிக்கு(Hissarlick) என்ற மேடான நிலப்பரப்பில் இது அமைக்கப்பட்டிருந்தது.

செயுசு (Zeus) என்பவர் மகன் தர்டானசு (Dardanus) என்பவரால் திராய் (Troy) நகரம் தோற்றுவிக்கப்பட்டதென்றும், பத்து ஆண்டுகளின் முற்றுகைக்குப் பிறகு அகேயர்களால் (Achaeans



திராய் நகர அமைவிடம

இது அழிக்கப்பட்டது என்றும் புராணஙகள வாயி லாக அறியமுடிகிறது.

செருமானியப் பேரறிஞா எயின்ரீக சிலிமென் (Heinrich Schliemann)கி.பி. 1870-ஆம் ஆணடு முதன் முதலாகத் திராய் அமைக்கபபட்டிருநத இடஙகளில அகழவாராய்ச்சியைத தொடஙகினாா. அவர் மூன றாம் ஆண்டு அகழவாராயசசியைச செயது கொண் டிருநதபோது (1873)ஓமா எனற கிரேக்கக் கவிஞரின காவியத்தில் வரும அரசன பிரையாம் (Priam) எனப வருடையது எனறு நமபப்படுகினற ஒரு தஙகப புதையலைக கணடுபிடிததார் அநத இடததில ஒன்பதுக்குக் குறையாத நகரஙகள் சிதைநது எஞ்சிக் கிடந்ததையும அவா கணடுபிடித்தார். கிரேககக கவி ஞர் ஓமர் (Homer) எழுதிய இலியது (Iliad) என்னும காப்பியததில் வரும் திராய் நகரம் ஆறாவதாகக கணடு பிடிக்கப்பட்ட நகரம எனறு கருதுகினறனா. அகேயாகளின படையெடுப்புகளுப் பிறகு கி.மு. 1240-இல் திராய் நகரம வீழ்ச்சியடைநதது என்று புதைபொருள ஆராயசசியாளர்கள் கூறுகினறனா.

ஓமா காவியத்தில வரும் அரசன் பிரையாம் என்பவரின் நகரமான திராய் மிகசசிறியதா கவும் சுமார் 220 மீட்டர் அகலமுள்ளதாகவும் இருந் தது. இங்குள்ள மேடான நிலப்பரப்பில அநேக மாடி களைக் கொண்ட பெரிய அரண்மனை ஒன்று இருந தது. அதறகு மூனறு வாசற்படிகள் இருநதன. கிரேக்கர்கள திராய நகரததில நிகழ்த்திய போா ஓமர் இயற்றிய இலியது, ஒடிசி (Odyssey) ஆகிய இரணடு காப்பியங்களுககும் கருப்பொருளாகத திகழ்கிறது. இலியது எனனும் பெயா இலியன எனற சொலலிலிருந்து பிறநதது. இலியன எனற சொல திராய் நகரததின பல பெயாகளில் ஒனறாகும். இச் சொல்லும திராய் நகரத்தைத் தோறறுவித்த இலசு (Llus) என்பவாபெயரினினறும பிறந்த சொல்லாகும.


திராய் நகர அகழாயவு

திராய் மககளுககும கிரேக்கர்களுக்கும் நடநத துரோசன் போர் (Trojan War) இஙகுத்தான் நடை பெறறதென்று இலியது காப்பியத்திலிருநது அறிய லாம். இசுபார்ட்டா (Sparta) நாட்டு அரசன் மினி லாசு (Menelaus) எனபவரின மனைவி எலன (Helen) என்பவளைத் திராய் இளவரசனான பாரிசு தன் நாட் டுக்குக் கடத்திச்சென்றான். அதனால போா ஏறபட் டது. எலனை மீட்பதற்காக மினிலாசு தன் சகோதர னானஆர்காசு நாட்டுஅரசன் அகமெமனான மூலமாக அகேயர் இளவரசர்களுடைய உதவியைப் பெற்றான். பிறகு மினிலாசு ஒரு படையுடன் திராய் நகரை அடைந் தான். கிரேக்கர்களுக்கும் துரோசனகளுக்கும் நடந்த போரில் அககேயர்கள் திராய் நகரத்தைத்தாககும் போது அதன் அரசன பிரையாமும் அவன் மனைவி ஏக்யூபாவும் (Hecuba) தம் புதல்வர் களுடன் செயுசு ஆலயத்தில் சரணடைந்தனர். இறுதி யில் பிரையாம் கொல்லப்பட்டான.

ஓமருடைய இலியது என்ற காவியம் திராய் நகர முற்றுகையில் தொடங்கி எக்டர் (Hector) என்ற துரோசன் இளவரசனின் ஈமச்சடங்குகளில் முடிவடைகிறது. திராயின் வீழ்ச்சியைப்பற்றி ஓமர் கூறவில்லை. மற்றக் கிரேக்க ஆசிரியர்களுடைய நூல்களில் இந் நிகழ்ச்சி விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

ஓமரின் மற்றொரு காவியமான ஒடிசியின் காப்பியத் தலைவனான இதாக்கா (Ithaca) நாட்டுமன்னன் ஒடிசியசு, தன் மனைவியை விட்டுப் பிரிந்து கிரேக்கப் படையில் சேர்ந்து பத்து ஆண்டுகள் திராய்ப் போரில் ஈடுபட்டிருந்தான. இவனுடைய யுக்தியினால் கிரேக்கர்கள் வெற்றி கண்டனர். திராய் நகரம் வீழ்ந்தது. அகேயர்கள் திராயில் நுழைந்த போது திராய் இளவரசன் பாரிசு ஏற்கெனவே இறந்து விட்டான் என்று கிரேக்கக் கவிஞர் ஓமர் கூறுகிறார்.

அ.கே.

**திராய்சுக் குகைக்** கற்கால மனிதனின் பண்பாட்டை விளக்கும் பல செய்திகளைக் கொண்டுள்ளது.இக்குகை தெற்குப் பிரான்சில 1914-ஆம் ஆண்டு கண்டுபிடிக்கப்பட்டது. இங்கு வரையப்பட்டுள்ள ஓவியங்களும், செதுக்கப்பட்டுள்ள சித்திரங்களும் கடைப் பழங்கற்காலத்தைச் (Late Palaeolithic) சேர்ந்தவை. இவ்வகை ஓவியங்கள் பிரான்கோ கேண்டபிரியன் (Franco-Cantabrian) என்ற ஓவிய வகையைச் சேர்ந்தவை. இவ்வகை ஓவியங்கள் தென மேற்குப் பிரான்சிலும், வடக்கு இசுபெயினிலும் (Spain) உள்ள சுண்ணாம்புக்கல் குகைகளில் மட்டுமே வரையப்பட்டுள்ளன.



திராய்சு குகை

திராய்சுக்(Trois Fereres) குகையில் விலங்குகளும் மனிதர்களும் அரை உருவமாகவும், முழு உருவமாகவும் வரையப்பட்டுள்ளன. பிரான்கோ கேண்டபிரியன் வகையைச் சேர்ந்த ஓவியங்களைத் தவிரப் பழங் கற்காலத்தின் ஒரு பிரிவுக் காலத்தைச்(Aurignacian) சேர்ந்த ஓவியங்களும் பிரெஞ்சு நாட்டிலுள்ள இலா மாடிலீன் (La Madeleine) என்னுமிடத்திற் காணப் படும் படிவங்கள் காட்டும் கற்காலஞ் சார்ந்த (Magdalenian) ஓவியங்களும் குகையின் உட்பக்கச் சுவரில் காணப்படுகின்றன.



சூனியவாதியின ஓவியம்

குகையின் முகப்பில இரணடு சிங்கங்களின் தலைகள் சித்திரிக்கப்பட்டுள்ளன. குகையின உட்பக்கத்திலுள்ள அனைத்து வகைகளையும் பார்கும் போது பல்வேறு வகைப்பட்ட விலங்குகள பொறிக்கப்பட்டுள்ளன. இவ்வகைச் கண்ணாம்புக் குகைகளில் மனித உருவங்கள இல்லையென்றாலும் திராய்சுக் குகையில் குறைந்த அளவில் மனித உருவங்கள் முழுவதுமாகவோ அரைகுறையாகவோ வரையப் பட்டுள்ளன. குறிப்பாக மந்திரம், சூனியம் முதலான வற்றைச் செய்யும் தோற்றத்தில் மனித உருவங்கள் வரையப்பட்டுள்ளன. இக குகையில் மொத்தம் 280 உருவங்கள் வரையப்பட்டுள்ளன. இப்பெரும் எண ணிக்கையில் உள்ள குகையாக இது விளஙகுவதால் பழைய கற்கால மனிதனின் வாழ்ககைமுறையை

அறியவும அவனது கலைத்திறனை அறியவும் உதவு கிறது.

இங்குள்ள ஓர் ஓவியம் சூனியவாதியின உருவத்தை விளக்குவதாக உளளது. இது அனைத்து ஓவியங களைக் காட்டிலும் பெரியது. இதன உயரம் 4 மீ. இந்த ஓவியத்தின நோககம் என்ன என்பதை ஆய வாளர்கள ஒருமித்த கருத்துடன கூறவில்லை. விலங் குகள், மனிதர்கள் முதலானோரை அடிப்பகுதியில் கொணடுள்ளதால் இவை அனைததையும் இயககும உயரிய ஆவி உண்டெனபதைக காட்டுவதாக உள ளது எனறும், விலஙகுகளைக் கொல்லும் வலல மையை மனிதன் கொணடுளளான எனபதும் உய்த துணரக கூடியதாக உளளது. சீ.ப.

***திராவிடப் பிரகாசிகை:*** இப்பெயரில் திரா விடம என்பது தமிழமொழியைச் சுட்டும், 'பிரகா சிகை' எனபது விளககத்தையுடையது எனப பொருளபடும். ஆகவே, தமிழ்மொழியிலுளள இலக் கிய இலக்கணம் முதலிய நூல்கள பற்றிய செயதி களைத் தரும் நூல இது எனபது பெறப்படும். இந நூலைத் 'தமிழ் வரலாறு' எனறும் ஆசிரியர் குறிப பிடுகிறார். 'திராவிடப் பிரகாசிகை எனனும் தனனை நேர்தரும தமிழ் வாலாறு சாற்றுவலால்' என்றும், 'தமிழ் வரலாறு தகைபெற எடுத்திணடு அமைவுறக கூறுதற்கமர்தந்து' எனறும் வரும பாயிரப் பகுதிகள இதனை விளககும. வடமொழியிலும் வலலவராகிய இவர் அநநாளைய சூழலுககு ஏறபத 'திராவிடப் பிரகாசிகை' எனறு பெயர் சூட்டினார் போலும்.

இநநூலை ஆககிய ஆசிரியர் இலஙகை யாழப் பாணப் பகுதியிலுளள வடகோவையில் தோனறிய சபாபதி நாவலர் ஆவர். இவா பிறநதது கி.பி.1844; மறைந்தது 1903. இவா வேளாள மரபினா; நீர்வேலிச் சஙகரபண்டிதரிடம வடமொழி தெனமொழிகளைக கறறு நிறைந்த புலமை பெறறார்; இருமொழிகளி லும் உளள இலககிய இலக்கணம், தருககம, சித்தாந தம், வேதாந்தம் ஆகியவறறில் சிறநத பயிற்சியுடை யராய்த் திகழ்நதார்; அவையோா வியக்கப பேசும் பேச்சாற்றல் உடையவராய விளஙகினாா. இவரு டைய வாழவில் பெரும்பகுதியும் தமிழ நாட்டில கழிந்தது. திருவாவடுதுறை ஆதீனம் சுப்பிரமணிய தேசிக சுவாமிகள இவருக்கு 'நாவலர்' எனனும் பட்டம் சூட்டிச் சிறப்பித்தார். இவர் செய்யுளிலும் உரைநடையிலும இயற்றிய தமிழ் நூல்கள பல. வட மொழியிலிருந்து மொழிபெயர்த்து ஆக்கிய நூலகளும் உள. எல்லாவற்றினும் மேலாக இவர் இயற்றிய திரா விடப் பிரகாசிகையே தமிழறிஞர் சிந்தனையில் முன் னிறகிறது.

திராவிடப் பிரகாசிகை நூல ஐந்து இயல்களா கப்பகுக்கபபட்டுளளது.அவையாவன' தமிழின தெய் வப்பழமை மரபியல, இலக்கண மரபியல், இலக்கிய மரபியல், சாத்திர மரபியல், ஒழிபியல். முதல இய லில தமிழ மொழியின் இயல்பு, தமிழின தெய்வ மாட்சி, தமிழ் என்னும் பெயா வந்த காரணம்,தமிழ் வழஙகு நிலம், செநதமிழ் நாடு. வடமொழி தென மொழி ஒற்றுமை வேறறுமை முதலியன பற்றி விவ ரித்துளளார்.

இலக்கண மரபியலில் அகததியம, தொல்காப் பியம் முதலாகச் சிவஞான முனிவரின பாயிர விருத்தி ஈறாக வநதுளள இலககண நூல வரலாறு தநதுள்ளாா. தொலகாப்பியததைக குறித்தும் அதன உரையாசிரியர்களின திறன்குறித்தும மிகவும் விரி வாக ஆராய்ந்துளளாா.

இலக்கிய மரபியலில திருமுறை இலக்கியம், சஙக இலககியம், காவிய இலககியம, புராண இலக்கியம, இதிகாச இலக்கியம், பலவகைப் பிரபநத இலக்கியம் எனப் பகுத்து ஆராயநதுளளாா. திருக்குறள ஆராய்ச்சியும 'அகரமுதல' என்னும் முதறகுறளின விருததியுரையும இபபகுதியில் தனிப் படக கூறத்தக்கன. அருட்பிரகாச வளளலாா இரா மலிஙக சுவாமிகளின பாடலகளைத திருவருடபா அனறு என மறுக்கிறாா. இது அந்நாளில நடநத அருட்பா-மருட்பா விவாதத்தின விளைவைக காட் டும.

சாததிர மரபியலில அட்டாதச வித்தை, வைதிக சாத்திரம, வேதாந்த சாததிரம், ஐக்கியவாத சைவ சாத்திரம், சிததாநத சாததிரம ஆகியவை விளக்கப பட்டுளளன. சரியை, கிரியை யோகம், ஞானம என னும் நாறபாதத தெளிவும் தந்துளளார். சிவஞான போதச் செமபொருளை மிக விரிவாக விளககியுள் ளாா.

ஒழிபியலில கல்விச் சிறப்பு, கற்பிக்கும நலலா சிரியா இயலபு, நன்மாணாக்கா இயலபு, கறகும முறை, கறகும் நூலமுறை, கலவியறிவின் பயன என பலவை விளக்கப்பட்டுளளன.

ஒவவொரு நூலையும் அதன பொருளவகை, ஆசிரியர், தோனறிய காலம், நூலின் பொருட் பாகு பாடு, பிற நூலகளோடுள்ள தொடர்பு எனனும முறையில் ஆராய்ந்து எழுதியுள்ளார். தமிழநூல மேற்கோள்களோடும பல இடங்களில வடமொழி நூலகளிலிருந்தும் மேற்கோள காட்டி விளககம தருவது ஆசிரியரின இருமொழிப் புலமைககுச் சான் றாகும். இவருடைய உரைநடை இறையனார் கள வியல் பொருளுரை தந்த நககீரரின நற்றமிழ நடை

யினையும் சிவஞான முனிவரின பெருமித நடையினை யும் ஒத்து இலங்குகிறது. இடையிடையே சிற்சில சொற்களின் பொருளையும் விளக்கிச் செல்வது ஆசி ரியரின் தமிழ்நடையைப் புரிந்து கொள்ள உதவு கிறது. பிறர் கருத்துகளை எடுத்து மறுத்துரைத்துத் தம் கொள்கையை நிலைநாட்டி உரைக்கும் இடங் களும் பல. பிறர் கூற்றை மறுத்துரைக்கும் இடங் களில சேனாவரையர் செல்லும் நெறியில், 'மாறு படும் பழிப்புரையேயன்றி நியாயவுரை ஆகாமை தெற்றெனவுணர்க', 'சழக்குரையே யாமன்றி வழக் குரையாகாதென்க' 'சிறுமகார்க்கும் நகையினை நிறுத்தும் என்க' என்றாற் போனறு கூறிச் செல்கின் றார்.

சென்ற நூற்றாண்டின் இறுதியில தோன்றிய இந்நூலுள அதுவரை வெளிவந்த நூல்களை ஆதார மாகக் கொண்டு இவ்வரலாற்று நூலை ஆசிரியர் படைத்துள்ளார். தமிழ் வரலாற்று நூல்களுள இது முறபட வைத்துப் போற்றத்தக்க பெருநூல் ஆகும்.

இந்நூலின் முதற் பதிப்பு ஆசிரியர் வாழ்ந்த காலத்திலேயே கி.பி.1899-இல் வெளிவந்தது. பின னர் இதன இரண்டாம் பதிப்பை நூலாசிரியரின் மரு கர் ஆ.சிவகுருநாதபிளளை 1927-இல் வெளியிட்டார். இதற்குப்பின் மூன்றாம பதிப்பை 1960-இல் சைவ சித் தாந்த நூறபதிப்பு கழகத்தார வெளியிட்டுள்ளனர். இப்பதிப்பில் எளிதில் பொருள் விளஙகாத சொற் றொடர்களைப் பிரித்தும், மேறகோட்பாக்களைச் சீர்பிரித்து அடிவரையறைதோனறும் படி அமைத்தும் தந்துள்ளனர். முதற்கண்ணுள்ள பொருளட்டவணை நூற்பொருளகளை எளிதில் கணடுகொள்ளத் துணை செய்கிறது.

மு ச.

**திராவிட மொழிகள்:** தனிமொழிகளை வர லாற்று அடிப்படையில், அதாவது ஒரு மூல மொழி யிலிருந்து தோன்றியிருக்க வேணடும் எனறகருத் தின அடிப்படையில் ஒன்று சோப்பதை மொழிக குடும்பம் என்று மொழியியலாளர் கூறுவர். அப்படியே உலகிலுள்ள எல்லாமொழிகளையும் இரு பத்தாறுக்கும் மேற்பட்ட மொழிக் குடும்பஙகளாகப் பிரித்துளளார்கள். அந்த மொழிக் குடும்பஙகளுள தமிழ், மலையாளம், கன்னடம், தெலுஙகு போன்ற இருபதுக்கும் மேற்பட்ட மொழிகள் அடங்கிய மொழி களையே திராவிட மொழிகள என்று மொழியிய லாளர்கள் குறிப்பிடுகிறார்கள்.

**இந்தியாவில் மொழிக் குடும்பங்கள்:** திராவிட மொழிகள் முக்கியமாகத் தெனனிந்தியாவிலும், சிறு பான்மை மத்திய இந்தியாவிலும், வஙகத்தின் ஓரத்தி லும் நேபாள எல்லையிலும், பாகிசுத்தானப் பகுதி யிலமைந்த பலுசிசுத்தானத்திலும் பேசப்படுகினறன.

திராவிட மொழிகள் இந்தியத்துணைக் கண்டத் தில் வழஙகும் நான்கு மொழிக் குடும்பங்களுள் ஒன்று. இந்தி, குசராத்தி, அசாமீசு போன்ற மொழி கள் இந்திய-ஆரிய மொழிக் குடும்பம் என்று சிறப் பாகவும், இந்திய-ஐரோப்பிய மொழிக் குடும்பம் என்று பொதுவாகவும் வழங்குவன. போடோ, இராகா மொழிகள் போன்றவை அடங்கிய திபேத் திய-பர்மிய மொழிக் குடுமபம்,சந்தாலி, கோ போன் றவை ஆசுடிரிக்கு அல்லது ஆசுட்டுரோ-ஏசியாடிக்கு மொழிக் குடும்பம் என வழங்கப்பெறும். இந்தியா வின் மக்கள் தொகையில் இநதிய-ஆரிய மொழிக் குடும்பத்தைச் சார்ந்தவர்கள் 73 விழுக்காடும் திராவிட மொழிக் குடும்பத்தைச் சார்ந்தவர்கள 24.4 விழுககாடும் ஆசுடிரிக்கு மொழிக் குடும்பததைச் சார்ந்தவர்கள 15 விழுக்காடும் திபேத்திய-பர்மிய மொழிகளைச் சார்ந்தவர்கள 0.73 விழுக்காடும உள்ளனர். இந்திய ஆரிய மொழிக குடும்பத்தை யும திராவிடமொழிக் குடும்பத்தையும் சார்ந்த மொழிகள் மட்டுமே இந்திய அரசியல சாசனத்தில குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அவற்றில் தமிழ், மலை யாளம், கனனடம, தெலுங்கு ஆகிய நான்குமட்டுமே திராவிட மொழிக் குடுமபத்துக்கு உரியவை.

திராவிட மொழி பேசுவோர் இந்திய மக்கள தொகையில் ஏறத்தாழ 11 கோடி ஆவர். திராவிட மொழிகளில் தெலுஙகு மொழி மட்டும ஏறததாழ 3 கோடியே 80 இலட்சம் மக்களால் பேசப்பட்டு மக்கள் தொகையில் முதல இடத்தையும், தமிழ் ஏறததாழ 1 கோடியே 95 இலட்சம் மக்களால் பேசப்பட்டு இரணடாம் இடத்தையும, கன்னடம் ஏறததாழ 1 கோடியே 75 இலட்சம் மக்களாலும பேசபபட்டு மூன்றாம் இடத்தையும, மலையாளம் 1 கோடியே 70 இலட்சம் மக்களால பேசப்பட்டு நான காம் இடத்தையும வகிக்கின்றன. ஏனைய மொழி களை இலட்சக் கணக்கானவரும் நூறறுக்கணககான வரும் பேசுகிறார்கள்.

**மொழிக் குடும்பஅறிவு:** பொதுவாக இந்தியாவில் பல மொழிகள உள. மொழியியல் நோக்கில அவை ஒன்றுக்கொனறு வேறுபட்டவை எனபதை உணாந்து பல இந்திய மொழிக்களுக்குத் தனித்தனி இலக்கணம குறைந்தது ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே எழுதப் பட்டது. ஆனால் வரலாற்று நோக்கில, இநதிய மொழிகள் எல்லாம் ஒரே இனத்தைச் சார்ந்த வையா? பல இனத்தில அடங்குபவையா? எனற கேள்வியை முககியமானதாக அறிஞர்கள் கருத

விலலை. ஆனாலும இந்தியாவில வழங்கும எல்லா மொழிகளும வடமொழியிலிருநது தோனறியிருகக வேணடும எனறு சில அறிஞர்களும பொதுமக்களும நமபி வந்தார்கள். ஆனால திராவிட மொழி இலக் கண அறிஞர்கள் திராவிட மொழிச் சொற்கள எலலாவற்றையும் வடமொழியிலிருநது தோனறிய தாகக் கருத முடியாது எனறு குறிப்பிடடதன மூலம் திராவிட மொழிகள வடமொழியிலிருநது பிறந்திருகக முடியாது எனபதைக குறிபபாக உணர்த்தி யுள்ளாாகள ஆயினும் மொழிக குடுமபம் எனற கருதது மேலநாட்டவர் தொடர்பால வந்தது.

மேலைநாட்டாா தொடர்பு ஏற்பட்ட பிறகு தான திராவிட மொழிகள தனிககுடுமபததைச் சார்ந்தவை எனறும், அவறறிற்கும வடமொழிககும தாய-சேய் உறவு கிடையாது எனறும திட்டவட்டமாக உணரப பட்டது. முதன முதலில கி.பி.1816-இல பிரானசில எலலீசு எனபவா செநதமிழ், கொடுந்தமிழ, இலககியத் தெலுஙகு, கொச்சைத தெலுங்கு, பழஙகனனடம, மலையாளம, துளு, குடகு ஆகியவறறைத தென னிநதியாவின கிளை மொழிகள என்று குறிபபிட்டார். அவரே மாலட்டோ என்று இன்று சொல்லபபடுகிற இராசுமகல மொழியும தமிழ, தெலுஙகு மொழி களோடு ஒத்து இருப்பதையுமசுட்டிக காட்டியுள்ளாா. மாலட்டோ மொழியும் தெனனிந்திய மொழிகளோடு ஒற்றுமை கொணடுளளது எனபதன் மூலம அவை நிலப்பரப்பை ஒட்டிய பெயா ஆகாமல உறவு அடிப படையில அமைநதது எனபதை மறைமுகமாகப் புலப் படுத்திச சென்று விட்டார். எனவே மொழிகளை ஓா இனமாகவோ, மொழிக் குடுமபமாகவோ கருது வதறகு அவை வழஙகும நிலபபரபபில் தொடர் பகுதியாக இருகக வேணடும எனபது முககியமன்று, அவைகளுக்கு இடையே மொழி அமைபபில ஒலிகளி லும் இலககணக கூறுகளிலும சொற்களிலும ஒற் றுமை இருப்பதே அவசியம் எனற கருத்தும் தெளி வாகியது. இந்த நிலையில கி.பி 1856-இல இராபர்ட்டு காலடுவெல் எனற அயர்லாந்து நாட்டில பிறந்து தமிழகததுக்கு வநத கிறிததவப் பாதிரியாரே தெனனிந்தியத் திராவிட மொழிகளின ஒப்பிலக் கணம் எனற நூல் எழுதி அதில இந்த மொழிகளைத் திராவிட மொழிகள எனறு குறிப்பிட வேணடியதன் அவசியததையும் விளக்கியுள்ளார். அதனால அவருக் குப் பினனரே, தமிழ் மலையாளம் போனற மொழி களைத் திராவிட மொழிகள எனறு வழஙகும நிலை ஏறபட்டது.

**திராவிட மொழிகளின் எண்ணிக்கை:** எல்லீசு கருத் துப்படி தமிழ, தெலுங்கு மலையாளம், கனனடம், குடகு, துளு, மால்ட்டோ ஆகிய ஏழு மொழிகளே திராவிடமொழிக் குடும்பத்தில் அடங்கும. கால்டுவெல் புதிதாகக கோடா, தோடா, கொணடி, கூயி, குறுகு ஆகிய மொழிகளும திராவிட மொழிக் குடுமபத்தைச் சேர்நதவை எனறு உறுதியாக நமபினாா. பிராகூயி மொழி திராவிட மொழிக் குடுமபததோடு தொடா புடையது எனபதில அவருக்கு ஐயம இருநததால அது பறறிப பிறசேர்ககையில விவரிததுள்ளாா எனறாலும் காலடுவெல கருத்துப்படி திராவிட மொழிகள பதினமூனறு எனலாம.

விநதிய மலைபபகுதியில கி.பி. 19-ஆம நூற் றாணடின இறுதியில சில புதிய மொழிகள இருபபது கணடு பிடிககபபட்டு, அவை திராவிட மொழிக குடுமபத்தைச சோநதவை என்பதும தெளிவுபடுத தபபட்டது. இநத நூறறாணடின ஐமபது அறுபது களில திராவிடமொழி ஆராயசசி தீவிரமடைநதது. அது ஒபபிலககண ஆராயசசியிலும, இலக்கிய மொழி களின வரலாறறு ஆராயச்சியிலும பழஙகுடி மககள ஆராய்சசியிலும முனனேறறம ஏறபட வழிவகுததது. எனவே, திராவிட மொழிகளின எணணிக்கை 22 எனக கணககிடபபட்டுள்ளது. அவறறில மததிய இந தியாவில பேசபபடும மொழிகளான கொணடா, பெஙகோ, மணடா, கூவி, கொலாடு, நாயககி. பாஜி, கதபா, கோயா ஆகியவை திராவிட மொழிகளாகக கருதப்படுகினறன இந்த 22 மொழிகளின அடிப்படை யில் எழுபதுகளில திராவிடமொழி ஒப்பிலககணம எழுதது (ஒலியனியல) பெயா, வினை எனறு மூனறு பிரிவுகளாகப பிரிதது எழுதபபட்டுள்ளது. ஆனால அதறகுப பிறகு தெனனிநதியாவிலும மத்திய இந தியாவிலும (மதநிய பிரதேசம, மகாராட்டிரா) வேறு சில மொழிகளும இருபபதாக அறிஞாகள கணடு அநத மொழிகளுககும இலககணம எழுதியுள் ளாாகள. ஆனால, அவறறை வேறு மொழிகளின கிளைமொழிகளாகக கருதலாமா? எனறு வருணனை நிலையிலும வரலாறறு நிலையிலும முடிவு காண விலலை. எனறாலும் திராவிட மொழி எனறு பேசும போது அவைபறறித் தெரிநது கொள்ள வேணடும். நீலகிரிப பகுதியில வழஙகும இருளா, பனியா, காட்டு நாயக்கா, குறும்பா, கசபா ஆகிய மொழிகளும், கரு நாடகததில வழஙகும் கொரகா, பெட்டகுறும்பா மொழியும், கேரளாவில வழஙகும் காடர் மொழியும் திராவிட மொழிக குடும்பததைச் சார்நதவை என பதில ஐயமிலலை. அப்படியே மததிய இநதியாவிலும் திராவிட மொழிக குடுமபததைச் சோநத ஒன றிரணடு பறறிய குறிப்புகள் மட்டுமே ஆய்வாளர்கள வெளியிட்டுள்ளார்கள். எனவே, திராவிட மொழிக் குடும்ப மொழிகளின எணணிக்கையை வரையறுகக முடியவில்லை. ஆனாலும் ஒப்பிலக்கண ஆராய்ச்சியில 22 மொழிகளே பேசப்படுவதால அவை தாம் இங்கு விளககப்படுகினறன.

**திராவிட மொழிகளும் அவை வழங்கும் நிலப்பரப்பும் வரலாறும்:** தமிழ் மொழியே திராவிட மொழிகளில் பழமையானது. அதற்கு மட்டும் கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட எழுத்துச்சான்றும், இலக்கியமும் உளளன. தமிழ்மொழி இன்றையதமிழ் நாட்டில் பெரும்பான்மையான மககளால் பேசப்படுவதோடு பிற மாநிலஙகளிலும் பேசப்படுகிறது மேலும இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், பர்மா, இநதோனேசியா, பிசித்தீவு, மொரீசியசு ஆகிய நாடுகளிலும் தென ஆப்பிரிக்கா, பிரிட்டிசு கயானா, மடகாசுகர் திரினிடாடு போன்ற நாடுகளிலும் தமிழ் பேசுவோர் வாழ்கினறனர், இநதியாவில் மட்டும் ஏறத்தாழ 3 கோடியே 5 இலட்சத்து அறுபதாயிரம் மக்களும் இலஙகையில சுமார் 2 இலட்சம் மக்களும் தமிழ் பேசுகினறனர்.

தெலுங்கு மொழி இன்றைய ஆந்திரப பிரதேசத்தில பெரும்பான்மையான மக்களால பேசப்படுகிறது. மேலும் தமிழ்நாடு, கருநாடகம ஆகிய மாநிலஙகளிலும் கணிசமான எணணிக்கையில் தெலுங்குபேசுவோா உளளார்கள. இநத மொழியே திராவிட மொழிகளில் மிக்க எணணிக்கையினரால் பேசப்படுகிறது. இதுவும் மலேசியா, தெனனாப்பிரிககா ஆகிய நாடுகளில பேசப்படுகிறது. தெலுஙகு மொழியின மிகப் பழமையான எழுத்துச் சானறு கி.பி 576-இல் காணப்படுகிற கல்வெட்டே. ஆனால இலக்கியம் 11-ஆம நூறறாணடிலிருந்து தொடர்ந்து கிடைக்கிறது.

கன்னடமொழி இன்றைய கருநாடக மாநிலத்தில் பெரும்பான்மையான மக்களால் பேசப்படுகிறது. வரலாற்றுப் பழமையில தமிழ மொழிக்கு அடுத்த இடத்தை இது பெறுகிறது. இதனுடைய மிகப் பழைய எழுத்துச் சானறு கி.பி. 450-ஐச சார்ந்தது. ஆனால் இலக்கியம் கி.பி.9-ஆம் நூற்றாணடின் மத்தியிலிருந்து கிடைக்கிறது.

மலையாளம், இன்றைய கேரளாவில் பெரும் பகுதியினரால் பேசப்படுகிறது. இன்று இந்தியாவில் எல்லா மாநிலங்களிலும மலையாளம் பேசுவோர் காணப்படுகிறார்கள். இம்மொழியின மிகப் பழமையான எழுத்துச் சானறு கி.பி. 9-ஆம் நூற்றாணடைச் சார்ந்தது. இலக்கியம் கி.பி.10-ஆம் நூற்றாணடிலிருந்து படைக்கப்பட்டு வருகிறது.

இந்த நான்கு மொழிகள் தவிர ஏனைய மொழிகளுக்கு பழைய எழுத்துச் சான்று எதுவும் இல்லை. கோத்த மொழி நீலகிரி மலையில் வாழும்ஏறக்குறைய 900 மக்களால் பேசப்படுகிறது. தோடா நீலகிரிப் பகுதியில் 800க்கு மேற்பட்ட மக்களால் பேசப்படும் மொழியாகும். குடகு மொழி கருநாடக மாநிலத்தில குடகு மாவட்டத்தில் வாழும் பெரும்பான்மையான மக்களால், ஏறத்தாழ 80,000 மக்களால் பேசப்படுகிறது. துளு மொழி கருநாடகத்தில் மங்களூர்ப் பகுதியிலும் கேரளத்தில் காசாகோடு பகுதியிலும் ஏறத்தாழ 9,40,000 மக்களால பேசபபடுகிறது.

கோணடி மொழி ஆந்திரத்தில் கமமம் அதிலாபாத்து மாவட்டங்களிலும், மகாராட்டிரத்தில், வார்தா, இராக்பூர், சியோனி ஆகிய பகுதிகளிலும மத்திய பிரதேசத்தில் சர்தா போனற இடங்களிலும் ஒரிசாவில் சில பகுதிகளிலும் ஏறத்தாழப் பதினைந்து இலட்சம் மக்களால் பேசப்படுகிறது. திராவிடப் பழங குடியினரின் மொழிகளில இந்த மொழியே மிகுதியான மக்களால் பேசப்படுகிறது.

கூயி மொழி ஒரிசா மாநிலத்தில் மகாநதியை ஒட்டிய பகுதியிலும் தெறகுப் பகுதியிலும் சுமார் 5,10,000 மக்களால் பேசப்படுகிறது. கூவி மொழி கஞ்சம், காளகத்தி, கோரபுட்டு ஆகிய ஒரிசாப் பகுதியிலும், ஆந்திராவில விசாகப்பட்டிணம் பகுதியிலும் ஏறத்தாழ 1,90,000 மக்களால பேசப்படுகிறது, கோயா மொழி ஒரிசாவில் கோரபுட்டு மாவட்டத்திலும் ஆந்திராவில்வாரங்கல், கமமம, கோதாவரியின மேற்கு, கிழக்குப் பகுதிகளிலும, மத்திய பிரதேசத்தில் பசுதார் மாவட்டப பகுதியிலும வாழும் 1,40,000 மககளால் பயன்படுத்தப்படுகிறது. கொலாமி மொழி ஆந்திரப் பிரதேசத்தில் அதிலாபாத்து மாவட்டத்திலும்,மகாராட்டிததில்வார்தாமாவட்டத்திலும்ஏறத்தாழ 50,000 மக்களால் பேசப்படுகிறது. பர்சி மொழி மத்திய பிரதேசத்தில் பல்தார் மாவட்டத்தில ஏறத்தாழ 20,000 மக்களால் பேசப்படுகிறது. கொண்டா மொழியைச் சிலர் கூயி எனறும் குறிப்பிடுவர். இம் மொழி விசாகப்பட்டணம், சிரீகாகுளம் ஆகிய ஆந்திரப் பிரதேச மாவட்டங்களிலும், ஒரிசாவில் கோராபுட்டு மாவட்டத்திலும் ஏறத்தாழ 13,000 மக்களால் பேசப்படுகிறது. ஆந்திராவில் சிரீகாகுளம் மாவட்டத்திலும் ஒரிசாவில் ஒரு பகுதியிலும் கதபா மொழி8,000 மக்களால் பயன்படுத்தப்படுகிறது. ஒரிசாவில் பேசப்படும் மொழி எலலாரி என்று கூறபபடினும் அதனைக் கதபாவின் கிளைமொழி என்றே கருதுகின்றனர்.

நாயக்கி மொழி மகாராட்டிராவில் சந்தா, பெரார் ஆகிய பகுதிகளில ஏறத்தாழ 1,500 மக்களால் பேசப்படுகிறது. ஒரிசாவில் உள்ள கோராபுட்டு மாவட்டத்திலும் தசமநதபூர்ப் பகுதியிலும், காலகணடிப் பகுதியிலும் உள்ள ஏறத்தாழ 1,300மக்களால் பேசப்படும் மொழியே பெங்கோ மொழி. மண்டா மொழி ஒரிசாவின் கோராபுட்டு மாவட்டத்தில வாழும் பழங்குடியினரால் பேசப்படுகிறது. குறுகி மொழி மத்தியபிரதேசத்தில் சோட்டா நாகபுரியிலும்,

இராஞ்சியை ஒட்டிய பகுதியிலும், பீகார், ஒரிசா ஆகிய மாநிலப் பகுதிகளிலும் வழங்கப்படுகிறது. இம்மொழி ஏறத்தாழ 11,32,000 மக்களால் பேசப்படுவதாகும் மேற்கு வங்காளத்தில் இராசமகால் மலைப் பகுதியிலும் பீகாரில் சந்தால்பாகனாப் பகுதியிலும் ஏறத்தாழ 90,000 மக்களால் பேசப்படும் மொழியே மால்டோ ஆகும்.

பாகிசுத்தானில் பலுசிசுத்தான பகுதியிலும், சிந்துப் பகுதியிலும் உள்ள மலைப் பாங்கான பகுதிகளில் நாடோடி மக்களாய் வாழும் 3,00,000 மக்களால் பேசப்படும் மொழியே பிராகூயி.

**பிரிவுகள்** ஒரு மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளை இரண்டு விதமாகப் பிரிக்கும் முறை காணப்படுகிறது. ஒன்று பண்பாட்டை ஒட்டியது, மற்றொன்று வரலாற்றை ஒட்டியது.

திராவிட மொழிகளைப் பொறுத்த வரையில் கால்டுவெல் தான் முதன்முதலில் திருந்திய மொழிகள் என்றும், திருந்தா மொழிகள் என்றும் பிரித்துப் பேசியுள்ளார். திருந்தா மொழிகள் எனப்படுபவை பேச்சு மொழியாக மட்டும் இருந்து, எழுத்துவடிவம் இல்லாமலும், இலக்கியங்களைப் பெறாமலும் இருப்பவை. எனவே, அவை செம்மை செய்யப்படாதவை. அந்த மொழிகள் பற்றிப்பிறர் அறியாமலும் இருப்பார்கள். மேலும் அம்மொழி பேசும் மக்கள் பழங்குடி மக்களாய், நாகரிகம் அடையாத மக்களாக இன்றும் இருப்பவர்கள். இந்தக் கருத்துப்படி கால்டுவெல் ஏற்றுக்கொண்ட 12 மொழிகளில் தோடா, கோட்டா, கோண்டி, கூயி, மால்ட்டோ, குறுகி ஆகிய ஆறும் திருந்தா மொழிகள் ஆகும்.

திருந்திய மொழிகள் எனப்படுபவை எழுத்து வடிவம் பெற்று இலக்கிய வளம் பெற்றவை. மேலும் அவற்றுக்கெனத் தனி இலக்கணமும் உடையவை. இந்த முறையில் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய நான்கும் திருந்திய மொழிகள் என்பதில் கருத்து வேறுபாடு இல்லை துளுவும் குடகும் எழுத்து வடிவமும் இலக்கியமும் பெறவில்லையாவிட்டாலும் கால்டுவெல் அவற்றைத் திருந்திய மொழிகளின் பட்டியலில் சேர்த்து அவை பற்றிக் கூறியுள்ளது குறிப்பிடத் தகுந்தது. பொதுவாக அந்த இரண்டு மொழி பேசும் மக்களும் நாகரிகத்தில் சிறந்தவர்கள். பழங்குடி மக்கள் அல்லர் என்பதே அவர்கள் திருந்திய மொழியினர் எனக் கருதுவதற்குக் காரணம். துளு மொழிக்குத் தனி வரிவடிவம் (எழுத்து) இல்லாவிட்டாலும் கன்னடமொழி எழுத்துகளைப் பயன்படுத்தி கிறித்துவப் பாதிரிகள் நூல் வெளியிட்டதும், மொழி திருத்தமுற இருப்பதும் கால்டுவெல் திருந்திய மொழியாகக் கருதக் காரணமாயின ஆனால் குடகைத் திருந்திய மொழியாகக் குறிப்பிட்டாலும் அது பற்றித் தமக்கு ஐயம் இருப்பதாகவே கால்டுவெல் குறிப்பிட்டுள்ளார்.

கால்டுவெல் இந்த இரண்டு மொழிகளையும் திருந்திய மொழிகளாக நினைக்கக் காரணம், அம்மொழி பேசும் மக்கள், தமிழர் கன்னடியர் போன்று நாகரிகத்திலும் பண்பாட்டிலும் சிறந்திருந்தனர் என்பதே.

வரலாற்றை ஒட்டிப் பிரிக்கப்படுவதற்கு உட்பிரிவு என்று பெயர். அது மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளுக்கே, மொழி அமைப்பில் ஒற்றுமை அடிப்படையில் செய்யப்படுவது அதிகமான ஒற்றுமை இருந்தால் அவை தனி உட்பிரிவு சேர்ந்தவை என்றும், ஓரளவு ஒற்றுமை இருந்தால் உட்பிரிவைச் சேர்ந்தவை என்றும் கொள்ளப்படும். இந்த ஒற்றுமைக்கு அந்த மொழிகளில் ஏற்பட்ட வரலாற்று மாற்றங்களே காரணம் எனவே தான் உட்பிரிவு என்பது வரலாற்றை அடிப்படையாகக் கொண்டது என்று கருதப்படுகிறது. மேலும் இந்த உட்பிரிவுகள் மீட்டுருவாக்கத்துக்கும் உதவுகின்றன. நில அடிப்படையில் அடுத்தடுத்தில்லாத இரு உட்பிரிவுகளில் காணப்படும் ஒரு மொழிக் கூறு தொன் மொழியில் இருந்திருக்க வேண்டும் என்று மீட்டுருவாக்கம் செய்யும்போது கொள்கிறார்கள்.

கால்டுவெல் அமைப்பு ஒற்றுமை அடிப்படையில் சில மொழிகள் நெருங்கிய உறவு உடையன; சில தூரத்து உறவு உடையன என்று மட்டுமேவிளக்கியுள்ளார். எடுத்துக்காட்டாக, தமிழும் மலையாளமும் நெருங்கிய உறவு உடையன என்றும், தமிழும் தெலுங்கும் தூரத்து உறவு உடையன என்றும் குறிப்பிட்டுள்ளார் ஐம்பதுகளில் சரியான உட்பிரிவு பற்றித் தெளிவு ஏற்பட்டது தென்திராவிடம், நடுத்திராவிடம், வடதிராவிடம் என்று மூன்று பெரும் உட்பிரிவுகளாகத் திராவிட மொழிகளைப் பிரிப்பது எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்படுகிறது. ஆனாலும், சில மொழிகள் எந்தப் பிரிவைச் சார்ந்தவை என்பதிலும் உட்பிரிவிலும் சில கருத்து வேறுபாடுகள் இன்றும் காணப்படுகின்றன. தெலுங்கு மொழியைத் தென் திராவிடத்தைச் சார்ந்தது என 1960–வரை எண்ணினார்கள். கிருட்டிண மூர்த்தி என்பார் 1965–இல் தெலுங்கு நடுத்திராவிடத்தைச் சார்ந்தது என்று பல காரணங்களைக் கொண்டு நிறுவிய பிறகு இன்று அது எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்படுகிறது.

தென் திராவிடத்தில் தமிழ், மலையாளம், குடகு, கோட்டா, தோடா, கன்னடம், துளு ஆகிய

மொழிகளும், நடுத் திராவிடத்தில தெலுஙகு, கோண்டி, கொணடா, பெஙகோ, மண்டா, கூயி, கூவி, கொலாமி, நாயகி, பர்சி, கதபா ஆகியவை களும், வட-திராவிடத்தில குறுவர், மால்ட்டோ, பிரா கூயி ஆகிய மொழிகளும் அடஙகும்.

தென திராவிடத்தில தமிழ் மலையாளம், இரண டும் சிறு உட்பிரிவுகள், கோட்டாவும, தோடாவும மறறொரு பிரிவு. தமிழ், மலையாளம், குடகு ஆகிய மூன்றும் சேர்ந்தவை தமிழ்-குடகு எனறும், தமிழ் மலையாளம், குடகு, கோட்டா, தோடா, ஆகியவற றைத் தமிழ்-தோடா பிரிவு எனறும் குறிப்பிடலாம். நடுத்திராவிடத்தில கொணடி,கொணடா, பெஙகோ, மண்டா, கூயி, கூவி ஆகியவை நடு உட்பிரிவுகளா கவும்,கொலாமி, நாய்கி, பாாசி, கதபா ஆகியவை மறறொரு உட்பிரிவாகவும் பிரிப்பார்கள். தெலுங்கு முன் உட் பிரிவோடு நெருஙகிய உறவு உடையது. வடதிராவிடத்தில குறுகி மாலட்டோ ஆகியவை ஓா உட்பிரிவில் அடஙகும்

தொல திராவிடத்தில் ஐந்து, ஆறு ஆகிய இரணடு பெயர்களும், வேறு சில சொற்களும் சகரத்தில (*சை/ந/து), (*சாறு) தொடஙகியிருகக வேணடும எனறு கருதப்படுகிறது. ஆனால, தொல திராவிட மொழிகள அனைத்திலும சகரம் இலலாமல காணப படுவதால் சகரம தொல் திராவிடத்திலேயே மறைந திருக்க வேணடும என்றும், தென திராவிட மொழி களில் ஏற்பட்ட ஒரு பொதுவான ஒலிமாறறம் என றும் கருதப்படுகிறது உயாதிணையில் பெணபாலைக் குறிப்பதற்கு 'அவள' எனறு தனிச்சுட்டுப பெயரும, வினை முறறில பெணபாலுக்கென அா/ஆள (வந்த னள்/வந்தாள்) என்ற தனி விகுதியும் தெனதிராவிட மொழிகளில காணப்படுகின்றன. ஆனால் நடுததிரா விடத்திலும் வடதிராவிடததிலும ஒருமையில் ஆண பாலைக் (உயாதிணைப் பெணணையும, அஃறிணை ஒருமையையும) குறிகக ஒரு விகுதியும இருப்பதால தொல்திராவிடத்தில ஆணபால, ஆணலலாதபால் ஆகிய இரணடு பாலே இருந்திருக்க வேணடும் என றும, தென திராவிடத்தில காணப்படும உயா திணைப் பெண்பால ஒரு பொது மாறறததால ஏற்பட்டது என்றும் கருதப்படுகிறது. இநத மாற்றம் தொல் தென் திராவிடத்தில நடைபெறறிருகக வேணடும். இறந்த காலத்தை உணர்தத இ,நத,தத, த் ஆகிய நானகு விகுதிகள உளளதும தென் திரா விடத்தின் மற்றொரு சிறப்பாகும். அணி, இதழ், தோள், ஒளி, வாழை போன்ற 200க்கு மேறபட்ட சொற்கள் தென் திராவிட மொழிகளில மட்டுமே காணப்படுகினறன. இப்படிப்பட்டகாரணத்தாலஒன றாக இருந்த மொழிகள தனித்தனி மொழிகளாகக காலப் போக்கில பிரிநதிருக்கும் எனக் கருதலாம.

தென் திராவிட மொழிகளில் துளு முதலில் பிரிய, மற்றவை சிலகாலம் ஒனறாக இருந்திருக்க வேணடும. அதறகுக் காரணம துளு மொழியின் தனித்தன்மையும் ஏனைய மொழிகளிடையே காணப் படும் ஒற்றுமையுமே ஆகும். எடுத்துக்காட்டாக, தொல் திராவிட மொழியில் *கள்/*ள் என்ற இரண்டு விகுதிகள் அஃறிணைப் பன்மையை உணாத்த இருந் திருக்க வேண்டும் என்று ஒப்பிலக்கணக் கோட் பாட்டின்படி முடிவு செய்யப்பட்டுள்ளது. அந்த இரண்டு விகுதிகளும் துளுவில் மட்டுமே காணப்பட (பிலிக்ளு 'புலிகள்', ஆணிளு 'ஆணிகள்'), பிற தென திராவிட மொழிகளில் கள விகுதி மட்டுமே உள ளது ஆகையால் *ள் எனற விகுதி துளு நீங்கிய மற்றத தெனதிராவிட மொழிகளில் மறைந்தது ஒரு மாற்றமாகும் மரம போனறு மகரமெய்யில முடியும் சொற்களில் -த்த- என்பது (தமிழ் இலககண மரபுப் படி அத்து எனபது) வேறறுமை உருபுக்கு முனனால சாரியையாக வரும். அந்தச் சாரியை துளு மொழி யில் ஆறாம் வேற்றுமைக்குப் பின்னே மட்டும் (மர 'மரம்' - மரத்த 'மரத்தினது') காணப்படுகிறது. ஏனைய தென் திராவிட மொழிகளில பிற வேற் றுமை உருபுக்குப் பின்னும காணப்படுகிறது. கன்னட மொழியில ஏழாம் வேற்றுமை (மரதலலி 'மரத்தில்') மூன்றாம் வேற்றுமை (மரதிந்த 'மரத். தால்') உருபுகளுக்குப் பின்னரும, குடகு மொழியில் ஏழாம் வேறறுமை (மரத்லி/'மரத்தில்') ஐந்தாம் வேறறுமை (மரத்திஞ்சி 'மரததிலிருந்து') இரணடாம வேறறுமை (மரத்ன 'மரத்தை')மூன்றாம் வேற்றுமை (மரத்தொண்டி 'மரத்தால்') ஆகியவற்றின பின்னரும் அந்தச் சாரியை காணப்படுகிறது. தமிழுக்கும் இது பொருநதும்.

எனவே ஆறாம் வேறறுமை முன்னர் மட்டும் அல்லாமல பிற வேற்றுமை உருபு வரும் போதும் சாரியை சேர்பபது, கனனடம முதலான தென்திரா விட மொழிகளில் ஏறபட்ட மாறறம் ஆகும். இநத மாறறத்தை ஒபபிலக்கணத்தில் தொல்தமிழ-மலை யாளம் - குடகு - கோட்டா - தோடா- கனனடம் காலத்தில் நடைபெறறிருக்க வேணடும. இந்த உட் பிரிவிலிருநது,அடுத்துக் கனனடம் பிரிநதிருகக வேண டும. அபபோது கனனடத்தில மட்டும சில மாறறங கள ஏற்பட்டன. தமிழ், மலையாளம், குடகு, கோட்டா, தோடா மொழிகளிலும், நடுததிராவிடத் திலும் வகரத்தில் தொடஙகும சொறகள் (வணடி, வேறு, விளககு) கனனடத்தில பகரமாக (பணடி, பேறு, பிளக்கு)மாறி விட்டன. பகர முதலான சொறகள் (பால், பத்து, பளளி) கனனடததில ஹகர மாக (ஹாலு, ஹத்து, ஹள்ளி) மாறிவிட்டன. அஃறி ணைப் பன்மை வினைமுற்று விகுதியாக-அன எனறு

தமிழ் முதலான மொழிகளில இருபபது (வந்தன) கன்னடத்தில் அவு என்று (பந்தவு) மாறி விட்டது. இவை கன்னட மொழிககே உரிய சிறப்பு மாறறங களா. அதே சமயத்தில தமிழ, மலையாளம், குடகு, கோட்டா, தோடா ஆகிய மொழிகளில் மட்டும் சில மாறறங்கள ஏறபட்டன. இரண்டாம் வேற றுமை உருபுக்கு முன்னர் -த்த்- சாரியை சேர்ப்பது இந்த மொழிகளிற காணபபட (தமிழில மரததை எனபது மலையாளத்தில் மரத்தை எனறும தோடா வில் மெணத்ன் எனறும் குடகில மரதன என்றும உளளது) கனனடத்தில் மரவனறு எனறு வழங்கு கிறது.

எனவே கனனடம் பிரிந்த பிறகு இநத ஐநது மொழிகளிலும் ஏறபட்ட மாற்றஙகளாக இவறறைக் கொளளலாம். அதாவது, கனனடம் தனியே சில மாற்றஙகளையும் தமிழ, மலையாளம, குடகு கோட்டா, தோடா ஆகிய மொழிகள வேறு சில மாற்றங்களையும் பெற்று விட்டன. எனவே தான், கனனடம் மொழி அமைபபில தனித்தனமை பெற்றது. இந்த உட்பிரிவிலிருந்துகோட்டா-தோடா ஆகியவை ஓர் உள் உட்பிரிவாகப் பிரிந்திருக்க வேண்டும. தமிழ, மலையாளம், குடகு ஆகிய மூன்று மொழிகளிலும மூவிடப் பன்மைப பெயர்களில்-கள விகுதி சேர்நது காணப்படுவதால (தமிழில் நாங்கள, நீஙகள, தாங் கள் எனறு இருபபதைப போலவே மலையாளத்தில முறையே ஞாஙகள, நீஙஙள், தாஙஙள் எனறும் குட கில் எஙக, நிங்க, தங்க எனறும் வடிவங்கள உள்ளன) இநத மொழிகள் மட்டும் சில மாற்றஙகளைப் பெற, கோட்டாவும், தோடாவும் வேறுசில மாறறங களைப் பெறறுத் தனித்துவம் அடைந்தன. பிறகு குடகு சில மாற்றங்களையும், தமிழும் மலையாளமும் சேர்நது சில மாற்றஙகளையும பெற்றிருகக வேண டும்.

சொல்லுக்கு முதலில் வரும் ககரம் அடுத்து இகரத்தையே எகரத்தையோ பெற்று அதறகுப் பிறகு டகரமோ, ணகரமோ, ளகரமோ வாராதிருககு மானால் அநதக் ககரம் சகரமாக மாறும. குடகு மொழியில் மாறவில்லை என்பதறகு அநத மொழியி லிருந்தும் எடுத்துக்காட்டுகள் சேர்க்கப்பட்டுள்ளன.

| தமிழ் | மலையாளம | குடகு | கனனடம் |
|---|---|---|---|
| செவி | செவி | கெவி | கிவி |
| செய் 'நிலம்' | செயி | கெத்தெ | கெய் |
| சிறை | சிர | – | கெர |
| சிரி | சிரி | – | கிரி |

சொலலின முதல் உயிர் எகரமாகவும் ஒகரமா கவும் இருப்பது அகரத்தை முதலாக உடைய ஆகக விகுதி பெற்றால தமிழிலும் மலையாளத்திலும் இகர மாகவும் உகரமாகவும மாறிவிடும்.

| தமிழ் | மலையாளம | கனனடம |
|---|---|---|
| குயவன | குயவன | கோவ |
| குடககு (மேற்கு) | குடகம் | கொடகு |
| விளங்கு | விளங்ஙு | பெளகு |
| விரவு | விரவுக | பொசு |

எணணுப் பெயர்களில தமிழும் மலையாளமும் மட்டும ஒரு தனிமாற்றததைப் பெறறுளளன. ஒனப தோடு வரும் போது, பத்து வரிசையில (இருபது, முபபது) நூறு எனற வடிவமும் (தொணணூறு எனபது ஒனபது பத்தைக குறிக்கும்), நூறு வரிசையில ஆயிரம எனற வடிவமும (தொளாயிரம்) இநத இரணடு மொழியில மட்டுமே காணப்படுகிறது.

| | 90 | 900 |
|---|---|---|
| தமிழ | தொணணூறு | தொளாயிரம |
| குடகு | தொப்பதி | ஒம்பயநூறு |
| தோடா | ஏனபா | வினபோநூா |
| கனனடம | தொம்பத்து | ஒம்பய்நூறு |

இனனும் இதுபோலப் பல மாற்றங்கள பொதுவாகக காணப்படுவதால் தமிழும் மலையாளமும ஓர் உள் உட்பிரிவாகக் கருதபபடுகினறன.

பொதுவாகத தமிழின ஒரு கிளை-அதாவது சேர நாட்டில் வழங்கிய தமிழே பிற்காலத்தில் மலை யாள மொழியாகத் திரிந்தது எனறு கருதப்படுகிறது காலடுவெல் கூடப் பழங்காலத்திலேயே மலையாளம தமிழிலிருநது கிளைத்து எழுந்ததாகக் குறிப்பிட்டா லும் மகளாகக கருத முடியாது என்றும் சகோதரி யாகக் கருதலாமெனறும் குறிப்பிட்டுளளாா. ஆனால தமிழ இலக்கிய உலகிலும், மககளிடையேயும் மலை யாளம் தமிழிலிருந்து தோனறிய மொழியாகக் கருதப் படுகிறது. வரலாற்று நோக்கில ஆராய்நத போது இடைக் காலத் தமிழில (கி.பி. 9-10-ஆம் நூற்றாணடு களில) ஏற்பட்ட மாறறம் மலையாளத்திலும் காணப் படுவது அறிய முடிகிறது. சொல்லுக்கு இடையில் ஐகாரம் அல்லது யகரம் வந்து அடுத்து நத் அல்லது த்த் வநதால் அது ஞ்ச் அல்லது ச்ச் ஆகிவிடும்.

| இடைக் காலத் தமிழ் | மலையாளம |
|---|---|
| ஐந்து ஐஞ்சு/அஞ்சு | அஞ்சு |
| ஆய்த்தி ஆய்ச்சி | ஆச்சி |
| இடைத்தி இடைச்சி | இடச்சி |
| படித்து படிச்சு | படிச்சு |
| அடைத்து அடைசசு | அடச்சு |

மகன என்ற சொல் மான் (கோமகன் கோமான் பெருமகன பெருமான்) ஆனது போல மகார் எனற சொல் மார் என்று மாறி உயர்திணைப் பன்மை விகுதியாக இடைக் காலத் தமிழிலும் மலையாளத திலும் வழஙகுகிறது தாய்மார் தோழிமார் என்று தமிழிலும், குமரன்மார் அரண்மார் எனறு மலையா ளத்திலும் பயன்படுத்தப்படுகிறது. ஆனாலும் தமிழில இல்லாத ஒருசில பழமையான வடிவஙகள் மலையா ளத்தில் இனறும் பாதுகாக்கப்படுகின்றன. எடுத்துக் காட்டாக முன்னிலைப் பனமையின் பெயரான நீயிர் அல்லது நீம் என்பதன் வேற்றுமை ஏற்கும் வடிவ மாகத் தொல்காப்பியத்திலேயே நும் என்பது வழங்க, மலையாளத்தில் நிம்-எனற வடிவம் பன்மை விகுதி யோடு சேர்நது (நிங்ஙள்) பயன்படுகிறது. சா எனற வினைச்சொல் இறந்த காலத்தில் தமிழில் சத்து என்பதற்குப் பதிலாகச் செத்து எனறு மாற மலை யாளத்தில் சத்து எனறே உள்ளது. முதியவனைக் குறிக்கும் சொல் முதுவர், முதியர் எனறு காணப்பட பிற திராவிட மொழிகளில இருப்பதைப் போலவே மலையாளத்தில முதுக்கர், முதுக்கன் எனற வடிவங கள் உள்ளன.

இப்படிப்பட்ட வடிவஙகளைக் கொணடு மலை யாள அறிஞர்கள் மலையாளம் தொல் திராவிடத்தி லிருந்து நேரே தனிமொழியாகப் பிரிநதிருககவேண டும் என்று கூறிவருகினறார்கள். அதாவது மேலே கூறியபடி மலையாள மொழி, கன்னடம், குடகு, தோட்டா, கோடா ஆகிய மொழிகளோடு சோநது பல மாற்றங்களைப் பெறறிருக்கிறது என்பதைப புறககணித்துவிட்டார்கள். எனவே மலையாளம் தனி மொழியாகப் பிரிந்த முறையை மரக்கிளை வடிவத் தில் விளக்கமுடியாது எனறு குறிப்பிட்டு, மலை யாளம் காலந்தோறும் எப்படிப புதியப் பணபுகளைப் பெற்றுத் தனிமொழியாக உருப்பெற்றது என்று சமூக மொழியியல நோக்கில் விளக்க முயன்றுள ளார்கள்.

தமிழ், மலையாளத்திலிருந்து இன்று பண்பு களில் மாறுபட்டுள்ளது. மூக்கொலிக்குப் பிறகு வரும வல்லினம் மூக்கொலியாக மாறிவிடும். (தேங்காய் > தேங்காய, வந்து > வந்நு, ஒனறு > ஒந்நு). மலையா ளம் நிறைய வடமொழிச் சொறகளைக கடன் வாங கியமையால் வட்டெழுத்தை நீக்கி ஆரிய எழுத்து என்ற எழுத்து முறையை அமைத்துக் கொணடது. இதில் க,ச,ட,த,ப, ஆகிய வல்லொலிகளுக்கு வட மொழியில் இருப்பதைப் போலவே நானகு நானகு ஒலிகளும் அவறறிற்குரிய எழுத்துகளும் பெறறுள ளது. அதுபோலவே வடமொழியில் உளள எல்லா ஒலிகளுககும தனித்தனி எழுத்து உணடு. தமிழின் நகரம் னகரம் என்ற இரண்டு ஒலிகளின வரிவடிவ மும் இதில் ஒரே எழுத்தில அமைகிறது.

இதே முறையில் நடுத் திராவிட மொழிகளும் வடதிராவிட மொழிகளும் பிரிநத விதத்தை மொழி அமைப்பு அடிப்படையில் திராவிட மொழி ஒப்பிலக் கண நூல் விரிவாக விளக்கியுளளது. அநத அடிப்படையில் திராவிடமொழிகட்கு இடையிலான உறவையும் அவை பிரிநத வரலாற்றையும் கீழ்க் காணுமாறு விளக்கலாம.

**தமிழ்மொழி வரலாறு:** மொழி வரலாறு, பிற வர லாற்றைப் போலவே தொலவரலாறு (Pre-history), சான்று ஆதார வரலாறு (Recorded history) என்று இரணடு வகைப்படும. தொல்வரலாறு என்பது அந்த மொழியைச் சேர்நத மொழிக் குடும்பத்தின மூலமொழியாகக கருதப்படும தொன்மொழி யிலிருநது (Proto-language) பிரிநது தனித் தன்மை வளர்ந்த வரலாற்றைச சுட்டும். அந்த வரலாறு மிகப் பழைய சானறுக்குரிய கால கட்டத்தோடு நின்று விடும். அதிலிருந்து இனறு வரை மொழியில ஏற்பட்ட மாற்றததை விளக்கு வதே சான்று ஆதார வரலாறு எனறும், சிறப்பாக வரலாறு எனறும் சொல்லப்படுகிறது. தொல் வரலாற்று மாற்றங்களை ஒப்பிலககண முறை மூலமே அறிந்துகொளள முடியும.

தமிழில் இதுவரை கிடைத்துளள மிகப் பழைய எழுத்துச் சானறு பிராமி எழுத்தில் பெரும்பாலும் குகைகளிலும் சிறுபான்மை. சமவெளிப் பகுதியிலும் எழுதப்பட்ட கல்வெட்டுகளே. எழுபதுக்கும் மேற் பட்ட அப்படிப்பட்ட கலவெட்டுகள் கி.மு. 3-ஆம் நூற்றாணடிலிருநது கி.பி. 2-ஆம் நூறறாணடு வரை கிடைக்கின்றன. எனவே, தொல் திராவிட காலத்தி லிருந்து கி.மு. 3-ஆம் நூற்றாணடு வரை தமிழில் ஏற்பட்ட மாற்றங்களே தொல் வரலாற்றுக்குரியவை யாகும். கி.மு.3-ஆம் நூற்றாண்டிலிருநது இன்றுவரை நடந்தமாற்றஙகளே சானறு ஆதாரவரலாறு ஆகும. இங்கு மொழியில் ஏற்பட்ட எல்லா மாற்றஙகளுக் கும் கல்வெட்டுகள், இலக்கண, இலக்கிய நூல்கள்



தொல் திராவிடம்
வட திராவிடம்
நடுத் திராவிடம்
தென் திராவிடம்
பிராகுயி
மால்ட்டோ
குருக்
கடபா
பார்ஜி
நாய்க்கி
கொலாமி
கூயி
குயி
மண்டா
பெங்கோ
கொண்டா
கோண்டி
தெலுங்கு
துளு
கன்னடம்
தோடா
கோட்டா
குடகு
மலையாளம்
தமிழ்

ஆகியவற்றிலிருந்து சான்று காட்டமுடியும். ஆனால் மொழியியல் நோக்கில் பார்க்கும்போது நூல் சான்று முழுமையான மாற்றத்தை விளக்குவனவாக அமை யாது என்பது குறிப்பிடத் தகுந்தது.எடுத்துக்காட்டாக நீங்கள் என்ற வடிவம் அப்பர் தேவாரத்திலும் நீம் என்ற வடிவம் சீவகசிந்தாமணியிலும் வந்துள்ளன. உண்மையில் நீம் என்ற வடிவத்தில் கள் என்ற பன்மை விகுதி சேர்த்து உண்டான சொலலே நீங்கள் என்பது. எனவே ஆதாரஙகளை அடிப்படையாகக கொண்டு மட்டும மொழி வரலாற்றை விளக்க முடி யாது. மாற்றம் பற்றித் தெளிவான அறிவும் வேண்டும்.

**தொல் வரலாறு:** தமிழ் மொழி திராவிட மொழிக் குடும்பத்தில் தென் திராவிட உட்பிரிவைச் சார்ந்தது. தென்திராவிடமொழிகளிலும் மலையாளத் தோடும் நெருங்கிய தொடர்பு உடையது. தமிழும் மலையாளமும பிற தென்திராவிடமொழிகளிலிருந்து சில மாற்றங்களால் வேறுபட்டுத் தனித்துநிற்கின்றன. எடுத்துக்காட்டாகச்சொல்லுக்குமுதலில் ககரம்வந்து அதை அடுத்து இ, ஈ,எ,ஏ, ஆகிய நான்கு முன்னுயிர் கள் இருந்து அதைத் தொடர்ந்து ட,ண,ள ஆகிய நாமடி ஒலிகள் வாராவிட்டால் அந்தக் ககரம் சகர மாகத் தமிழிலும், மலையாளத்திலும் மட்டுமே மாறி விட்டது. செவி எனற சொல் கிவி என்று தோடா, கோடா,கனனடம், குடகு,துளு போன்ற மொழிகளில் காணப்பட, தமிழிலும் மலையாளத்திலும் மட்டுமே செவி என்று காணப்படுகிறது. கிளி என்ற சொல் ககரத்தைத் தொடர்ந்து இகரம் வநதும், அதை அடுத்து ளகர நாமடி ஒலி வருவதால மாறாமல் உள்ளது. எண்ணுப் பெயர்களில் பத்து வரிசையில் (இருபது, முப்பது) என்பது பத்து என்று கூறுமபோது நூறு (அதாவது தொண்ணூறு) என்ற வடிவமும், நூறு வரிசையில் ஒன்பது நூறு என்று கூறுமபோது ஆயிரம் (அதாவது தொள்ளாயிரம்) என்ற வடிவமும் இந்த இரணடு மொழிகளில் மட்டுமே காணப்படுவ தால், பத்து என்பது நூறு எனறும், நூறு என்பது ஆயிரம் என்றும் மாறியது தமிழ் மலையாளம் ஆகிய இரண்டுக்குமே உரிய மாற்றம் ஆகும். இவை தொல் தமிழ் மலையாளம் என்ற கால கட்டத்தில் ஏறபட் டிருக்க வேணடும். எனவே இதைத் தமிழின் தொல் வரலாற்றுக்குரிய மாறறமாகக் கருத வேணடும். தமிழையும் திராவிட மொழிகளையும் ஒப்பிட்டு நோக்கும்போது தமிழில மட்டும் வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்டு ஏற்பட்ட மாற்றஙகளை அறிநது கொள்ள முடிகிறது. முன்னிலைப்பன்மை பதிலீட்டுப் பெயரின் வேற்றுமை ஏற்கும் வடிவமாக நும் எனற வடிவமே தமிழைப் பொறுத்த வரையில் பழமையானது. ஆனால் பிராகூயி மொழி தவிர ஏனைய மொழிகளில் (மலையாளம் 'நிஙஙள்', நிம், கோட்டா, கோடா, தோடா, கனனடம், 'நிம்', குடகு, 'நீங்க', துளு 'நீங்களெ) இகரமே காணப்படு கிறது. மேலும், எழுவாயாகப் பயன்படும்போது 'நீம்' எனற வடிவமே தொல் திராவிடத்தில் பயன படுத்தப்பட்டிருக்க வேண்டும் எனறு ஒப்பிலக்கண ஆய்வாளர் கூறுவர். எனவே, இங்கு இகரம் உகர மாக மாறியது தமிழில் தொல் வரலாற்றில் ஏற் பட்ட மாற்றம் ஆகும். சா (தல்) எனற வினைச் சொல் இறந்தகால, விகுதியை ஏற்கும்போது தமிழ் தவிர ஏனைய மொழிகளில் சகரமாக மாறத் தமி ழில் செகரமாக (செத்து) மாறியுள்ளது. இஙகு அகரம் எகரமாகத் திரிந்தது தமிழின் தொலவர லாறு காலத்தில் ஏற்பட்ட மாற்றம ஆகும்.

இப்படிப்பட்ட மாற்றஙகள் மொழி அமைப்பு நோக்கில் பிற திராவிட மொழிகளிலிருந்து-குறிப் பாக நெருஙகிய உறவுடைய மலையாள மொழியி லிருந்து தனித் தன்மைக்கு வழிவகுத்தன, பின்னர் இலக்கியம், இலக்கணம் படைக்கப்பட்டதால் தமிழ சொல்வளம் நிறைந்து பழைமைக் கூறுகள் பாது காக்கப்பட்டுத் திராவிட மொழிக் குடுமபத்தில் தலை யாய சிறப்பைப் பெற்றுவிட்டது.

**வரலாற்றுக்காலம்.** மேலே குறிப்பிட்டுள்ளது போல் இன்று வரை கிடைக்கும் ஆதாரங்களினபடி கி.மு. 3-ஆம நூற்றாண்டு முதல் தமிழ் மொழிக்குச் சானறு ஆதாரங்கள் உள்ளன. எனவே மொழி வரலாற்றுக் காலத்தை மூன்று பெரும் பிரிவாகப் பிரித்து விளக்கு கிறார்கள்.

1. **பழந்தமிழ்க் காலம்:** கி.மு.3-ஆம் நூற்றாணடு முதல் கி.பி.5-ஆம் நூற்றாண்டு வரை. குகைக் கல்வெட்டுகள, தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, திருக்குறள் சிலப்பதிகாரம், மணிமேகலை, பதினென் கீழ்க்கணககு நூல்கள்.

2. **இடைத் தமிழ்க் காலம்:** கி.பி.5-ஆம் நூற் றாணடு முதல் கி.பி.17-ஆம் நூற்றாண்டு வரை. கலவெட்டுகள், இந்தக்கால கட்டத் தில் எழுந்த இலக்கிய இலக்கணஙகள.

3. **புதுத்தமிழ்க்காலம்:** கி.பி.18-ஆம் நூற்றாணடு முதல் இன்று வரை.

**பழந்தமிழ்:** இதை இலக்கிய நோக்கில் சங்க காலம் என்று சிலர் குறிப்பிடுகிறார்கள். ஆனால் இதில் பிராமி-தமிழ்க்கல்வெட்டுகளும் அடங்கியுள்ளன. அவை மொழிப்பணபு இலக்கிய மொழிப் பண்புக

ளோடு வேறுபட்டுள்ளன. எனறாலும அவையே எழுதப்பட்ட காலததின நேரடிச் சானறுகளாக உள்ளதால அவறறைப் பறறித் தெரிநது கொளவது இன்றியமையாததாகும

பிராமித் தமிழ்க்கல்வெட்டில ஔகார எழுதது காணப்படவிலலை. பிராமி எழுததுகளைப் பயன படுத்தியிருந்தாலும் தமிழ் மொழி தேவையிலலாத எழுத்துகளை நீக்கிவிட்டு தமிழில ஒலியனகளுக்குரிய எழுத்துகளை ஆக்கிக் கொணடது சிறப்பான பண பாகும். கல்வெட்டுகளில இரணடு வேறுபட்ட உயிர் களின மயக்கஙகள (அஉ, இஅ போனறவை)மிகுதி யாகக் காணப்படுகினறன இலககணக கூறுகளில இறந்தகால விகுதிகள், பெயரெசச விகுதிகள், வினை யெசச விகுதிகள, வேறறுமை உருபுகள ஆகியவை தமிழுக்கு உரியவையே கலவெட்டுகளில் பயனபடுத் தப்பட்டுளளன.

சஙக இலக்கிய மொழியைப் பொறுத்தவரையில பல சிறப்புப் பணபுகள உள்ளன. 1) பெருமபானமை யும அஃறிணைப் பன்மை விகுதியான-கல விகுதி. மிகச் சிறுபான்மையே பெயாச சொறகளில காணப் படுவது. எடுத்துக்காட்டாக அகநானூறறில் இரணடு முறை மட்டுமே கள விகுதி வநதுள்ளது. 2) முனனிலைப் பனமை பதிலீட்டுப் பெயராக நீயிர் அல்லது அதன திரிந்த வடிவமாகிய நீர் எனபதே பயினறுளளது. 3) மகர ஈறறு அஃறிணைப பெயர்கள மூன்றாம் வேற்றுமை உருபாகிய-ஒடு வரும்போது அத்துச் சாரியை சோக்காமை, நெஞ்சம-நெஞச மொடு; காலம-காலமொடு முதலியன. 4) சங்கத தமிழில் இலக்கணமுறையில் இறநத காலம், இறப்பல காலம எனறு இரணடே இருந்தன. இனறு எதிர்காலத்துக்குப் பயன் படுததபபடும விகுதிகளே நிகழ்காலத்துக்கும் எதிர்காலத்துககும் உரியனவாக அனறு கையாளப்பட்டன. 5) நகரமும னகரமும வேற்றுநிலை வழக்கில் வந்து ஒலியனாக உளளன. வெரிந ‘முதுகு’, வரின ‘வந்தால்’ என்ற சொற்களுள வேற்றுநிலை வழக்கில் உளளன. 6) உயிரளபெடை மிகுதியாக உள்ளமை. உயிரெழுத்தை இறுதியாக உடைய சொற்களும் முதலாக உடைய சொற களும் சேரும்போது உடமபடுமெய் வராமல் அள பெடையாக மாறுகினறன. தழு + இ > தழுவி என்று வராமல் தழு இ எனறு அளபெடையாக வந்துள்ளது.

சங்கத்தமிழின் மொழி அமைப்பில் காணப்படும் வேறுபாட்டை ஒட்டி முனபழநதமிழ்க் காலம், பினபழநதமிழ்ககாலம் எனறு இரணடு உட்பிரிவாகப் பிரித்துப் பேசப்படுகிறது. தொலகாப்பியம், பததுப் பாட்டு, எட்டுத்தொகை நூல்களில கலித்தொகை, பரிபாடல, நீஙகியவை முனபழநதமிழ நூலகளாக வும், கலிததொகை, பரிபாடல, திருக்குறள, சிலப் பதிகாரம, மணிமேகலை, பதினெனகீழக்கணககு நூல்கள ஆகியவை, பின்பழநதமிழக காலததுககு உரிய நூலகளாகவும் கொளளபபடுகினறன.

**முன்பழந்தமிழ்**: தொலகாப்பியம கூறிய மொழி அமைப்பிலிருநது சஙக இலக்கிய மொழி அமைப்பு மாறுபட்டுள்ளது எனவே தொலகாப்பியத் தமிழி லிருநது சஙகத்தமிழ் எப்படி மாறியுளளது எனறு அறிநது கொளவது நலலது 1) சகரத்தில் தொடங குமம சொறகள முனபழநதமிழக காலத்தில பயிலப் பட்டுளளன சவட்டு, சடை, சணபகம ஆகியவை அகநானூறு, பதிற்றுப்பத்து, புறநானூறு, குறுந தொகை ஆகிய நூலகளில வந்துளளன. 2) ஞமலி-‘நாய்’, ஞரல- ‘ஒள’ ஆகிய ஞகரததில தொடஙகும சொறகள் நறறிணை, புறநானூறு, குறுநதொகை, பதிறறுப்பதது ஆகியவற்றில பயனபடுத்தபபட்டுள ளன. 3) இப்படியே ஞி (ஞிமிலி), ய (யவனா), யூ, யூயம், யூகம (கருஙகுரஙகு) ஆகியவை சொலலுககு முதலில முனபழந்தமிழில வநதுளளன. 4) நீயிர் எனற முனனிலை, பனமை பதிலீட்டுப பெயா நீா எனறு மாறிவிட்டதறகும சஙக இலககியஙகள சானறு பகர்கினறன. 5) எதிர்மறைப் பெயரெசசம செய்யா எனற வாயபாட்டோடு செயயாத எனற வாயபாடும வழக்குக்கு வநதுவிட்டது கெடாத துப்பு எனறு புறநானூறறிலும அறியாத புரிசை எனறு கலித்தொகையிலும் காணலாம. 6) தொல காபபியம் குறிப்பிடாத அன எனற தன்மை ஒருமை பதிலீட்டு வினைமுற்று விகுதி புதிதாகச் சங்க இலக் கியஙகளில் இடம பெறறுளளது. கைவிடுகலன் ‘கைவிட மாட்டேன’ எனறு அகநானூறறிலும உரைத்தனன ‘உரைத்தேன்’ எனறு புறநானூறறி லும், கூறுவன ‘கூறுவேன்’ எனறு நற்றிணையிலும வந்துளளவை எடுததுககாட்டுகளாக அமையும்.

**பின்பழநதமிழக் காலம**: சைகாரததை முதலாக உடைய சொற்கள் (சையம் ‘மலை’ – பரிபாடல) சைவம், சைமிலி - மணிமேகலை இந்தக கால கட் டத்திலதான் வழஙகத் தொடஙகின. 2) யகரததை அடுத்து வரும் இரட்டித்த தகரமெய சகரமாக மாறிவநதுள்ளது (ஆய்ததி > ஆயசசி - கலிததொகை, சிலப்பதிகாரம, நகைத்தி > நகைசசி - சிலபபதிகாரம) அண்ணமயமாதல் (Palatalization) எனற ஒலி மாற்ற மாகும். பிற்காலததில் இது வேறு பல சொற்களி லும ஏறபட்டு ஓர் ஒழுஙகான ஒலிமாற்றமாக அமைநதுவிட்டது.

தனமை ஒருமை பதிலீட்டுப் பெயராக முனபழந தமிழில் வழஙகிய யான எனற வடிவத்தோடு பின

பழந்தமிழில நான என்ற, புதிய வடிவம் காணப்படு கிறது. இது 'நாம்' எனற தனமைப் பன்மை வடிவத் திற்கு ஏறப ஒப்புமையாக்கத்தால் உணடாக்கப்பட்ட வடிவம் ஆகும். இது பிற்காலத்தில பெருவழக்கு பெற்றுவிட்டது.

பலர்பால் பெயாகளில் பல சிறப்பு ஒருமையாக (Honorific singular) மாறிவிட்டதால் உணமை யான பன்மையை உணர்த்துவதற்கு அஃறிணைச் சொற்களில் சேர்க்கப்படும் - கள இரணடாவது விகுதியாக - இரட்டைப் பனமை விகுதியாகப் பயனபடுத்தபபட்டது. அரசர்கள், ஐவாகள, கேளிர் கள என்ற வடிவங்கள கலிததொகையிலும், பூரியர் கள் என்ற வடிவம் குறளிலும், சிறுமியர்கள என்ற வடிவம் சிலம்பிலும் வந்துள்ளன. இதனால் - கள் என்ற வடிவம மட்டும் பலர்பால விகுதியாக பரி பாடலிலும் (வாளிகள் 'வாளை உடையவர்கள'), சிலம்பிலும், மேகலையிலும் (நோன்பிகள் 'நோன்பு இருப்பவர்கள') வழங்கியுள்ளன. இதனால் இடைக் காலத்தில - கள விகுதி பலர்பால் விகுதிகளில் ஒன் றாகச சோத்து நனனூல் (277) கூறியுள்ளது. இடைககாலத்தில் பெருவழக்கு ஆகி இடைக்கால இலககணங்களில் குறிக்கப்படும் -கிறு, -கினறு -என்ற இடைநிலைகள் முதலில பரிபாடலிலும்(சேர்க்கின்ற), சிலம்பிலும் (ஒசனிக்கின்ற, ஊாகினற), மேகலையி லும (ஆளகின்றோர்) பயினறுள்ளது ஓர் இலக்கண மாற்றம ஆகும்.

**இடைக்காலத்தமிழ்:** இடைககாலத்தில் 12 நூற் றாண்டுகள் அடங்கியுள்ளதாலும், மொழிவளர்ச்சி யில சில படி நிலைகள காணபபடுவதாலும் இதை மூன்று பெரும்பிரிவாகப் பிரிக்கலாம். தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் பல்லவர் காலம, சோழர் காலம், நாயக்கர் காலம் என்று பிரிததுள்ளாா. அப்படி இலலாமல மொழியியல் நோக்கில் முன் இடைததமிழ, நடு இடைத்தமிழ், பின் இடைத்தமிழ் என்று பிரித்தும் விளககலாம். பலலவர் காலம்(கி.பி. 6-ஆம் நூற்றாண்டு முதல கி.பி. 8-ஆம் நூற் றாண்டு முடிய) பக்தி இலக்கியங்கள், வழிபாட்டுப் பாடலகள மிகுநத காலம் என்றும் சோழர் காலம் (கி.பி. 9-ஆம் நூற்றாண்டு முதல் 12-ஆம் நூற்றாணடு முடிய) காப்பியஙகளும இலக்கண நூலகளும நிறைந்த காலம் என்றும் கொளளலாம். நாயக்கர் காலம (கி.பி. 13-ஆம் நூற்றாணடு முதல் 17-ஆம் நூற்றாணடு முடிய) என்பது பாணடியர்கள், முகம்மதியர்கள் போனற பல அரசுகள் உண்மையில் ஆண்ட காலமாகும். இந்தக் காலம் தனிப் பாடல களும் சிற்றிலக்கியங்களும் மிகுதியான காலம் என றும கூறலாம.

**முன் இடைத்தமிழ்:** மொழி அமைப்பைப் பொறுத்த வரையில ஒலியன நிலையில் நகரமும் னகரமும் ஒனறாக இணைந்துவிட்டது. எழுத்துத் தமிழில தனித்தனி வரி வடிவம் இருந்தாலும் நகரம் சொல்லுக்கு இடையில் தகரத்துககு முன வரும் போது (பந்து, வந்து) மட்டுமே நகரமாக உச்சரிக்கப் பட்டிருககவேணடும் எனறு ஊகிக்க வேண்டியிருக் கிறது. கல்வெட்டுகளில் நகரம் னகரமாக பல இடஙகளில சொல்லுக்கு முன்னும், இடையும, பின னும் எழுதப்பட்டுள்ளமை அதறகு ஒரு சான்றாகக் கொள்ளலாம்.

எண்ணுப் பெயர்களில் ஐந்து என்பது அஞ்சு என்று மாறியும் நான்கு என்பது நாலு என்று மாறி யும் தேவாரத்தில் காணப்படுகின்றன. பெயாச் சொற்களில்-அன்-சாரியை (ஒன்றனை, அதனை) போய் இன் சாரியையே இப்பொழுது பெருவழக காக ஆகி விட்டது. பதிலீட்டுப் பெயர்கள எல்லாம் இரட்டைப் பன்மை விகுதி பெற்று நாஙகள், எங்கள், நீஙகள், உங்கள், தாங்கள, தஙகள் என்ற வடிவஙகள் கையாளப்பட்டன. வினைமுற்றுகளிலும் அன் சாரியையும், குறில உயிரும் வினை விகுதியாகப் (வந்தனென, வந்தனிர், வந்தனள)பயினறலை நெடில் உயிர் மட்டுமே பெற்றுப் பெருமளவில் (வந்தேன், வநதீர், வந்தாள்) இலக்கியத்தில் கையாளப்பட்டன. பலவின்பால் விகுதியாக வழஙகிய-வ (வருவ, 'வரு வன',) காரணவினை விகுதியாகப் பகுதியுடன் சோந்து (செய்வி, ஓடுவி, காண்பி) பெரிதும் கையாளப்பட்டன.

இலக்கியத்திலும் வடமொழிச் சொற்கள நிறைய புகுந்தன. அர்ச்சி, துதி, சிந்தி, கோவி போன்ற வினைச் சொற்களும் மந்திரம், பத்தி (பக்தி), தரி சனம் போன்ற பெயர்ச் சொற்களும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. தேவாரத்தில இறைவன் வட மொழியும் தமிழும் ஆனனா எனச் (வடமொழியும் தெனதமிழும் மறைகள் நான்கும ஆனலன் காண்- அபபர் தேவாரம்) சிறப்பிககப்பட்டபின் வீரசோழி யம் போன்ற இலககண நூல்கள தமிழ இலக்கணத தையே வடமொழி இலக்கண நோக்கில விளக்கும் முயற்சியில் இறங்கி விட்டன. அந்த முயற்சி முழு வெற்றி பெறாவிட்டாலும், தமிழ்மொழி வட மொழிச் செல்வாககுக்கு உடபட்டுவிட்டது எனப தைக் காட்டுவதாகக் கொளளலாம்.

**நடு இடைத்தமிழ்:** இந்தக காலகட்டத்தில் எழுந்த நனனூல் கூறிய எழுத்துகளின் பிறப்பிலிருந்து ஒரு பெரிய ஒலிமாற்றத்தைப் புரிந்து கொளள முடி கிறது. தொலகாப்பியர் றகரத்தை வல்லொலியாக

அடைப்பொலியாகவே வருணித்துள்ளார். அதாவது 'அணரிநுணிநா அன்னம் ஒற்ற' எனறு தொல்காபபி யா கூறுவதால இனறைய ஒலியியலாரும வலலொலி எனறே விளககுகிறாாகள. அதறகேறபவே திற என் பது த்த் என்று மறறொரு வலலொலியாக (காறறு > காத்து, மாறறு > மாதது), கலவெட்டுத தமிழிலும் காணப்படுகிறது, வீரசோழியமும இநத மாறறததைக குறிப்பிட்டுள்ளது நன்னூலாா 'அண ணம நுனிநா நனியுறில ற,ன வரும' என்று வருணித் திருப்பது அவர் காலததில் ஆடொலி (Trill) ஆக மாறிவிட்டது எனபதற்குச சான்றாகும. இதனால இது நகர ஒலியொடு எதுகையிலும் செயயுளில வழஙகத தொடஙகி விட்டது. எனவே றகரம் வல் லொலியாக இருந்து ஆடொலியாக மாறியது சோழா காலத்தில் ஏற்படட ஒலி மாற்றமாகக் கொள்ள லாம். இதனால அறம, மறம போனற சொற்கள மறைநது தருமம், வீரம போனற வடமொழிச சொற்களும புகுந்தன. அதாவது ஒலிமாறறம சொற் களஞ்சியததிலும் மாற்றததை ஏறபடுததி விட்டமை புலப்படுகிறது

பேச்சுமொழியில இனனொரு வகை மாறறம் ஏற்பட்டிருக்க வேணடும எனபதைக் கலவெட்டு மொழியால அறிய முடிகிறது. சொல்லின இரணடா வது அசையில எழுத்து மொழியில் முதலெழுத்தை அடுத்துவரும் இரணடாவது உயிர்மெய் எழுதது அகரம் இருந்து முதல் அசையில் இகரமோ (இறகு, சிலை) உகரமோ (உலகம், குடம்) இருநதா லும் அவை முறையே எகரமாகவும் (எறகு, செலை) ஒகரமாகவும் (ஒலகம், கொடம்) மாறிவிடும். இநத மாறறஙகள முதன முதலில சோழா காலக் கல வெட்டுகளில பதிவு செய்யப்படடுள்ளதால இநதக காலத்தில உயிரெழுததுகளில ஏறபட்ட ஒலிமாற்றம் விளஙகும். மொழியியல நோககில பிளவும் (Split), இணைவும (Merger) ஏற்பட்டதாக விளக்குவாாகள.

சொலலுக்கு இறுதியில ச; ஞகரத்துககுப் பிறகு வரும் உகரம் இகரமாகவும் (கடிஞ்சு>கடிஞ்சி) சொலலுக்கு இடையில யகரத்தை அடுத்து வரும இகரம் அகரமாகவும் (ஞாயிறு>ஞாயறு; வயிறு> வயறு) மாறுவதும் இரண்டு மெய்களுக்கு முனனால வரும யகரம் கெடுவதும் (வாய்க்கால>வாககால்; மேய்ந்த>மேநத) சொலலின வடிவத்தில் ஏறபடும் மாற்றமாவதால உருமாற்றம் எனபபடும.

பல்லவா காலததில் வி,பி என்ற விகுதிகள் ஈரே வல் வினை விகுதியாக இருந்த முறை குறைந்து செயலென எச்சத்தோடு செய், வை, பண்ணு ஆகிய வற்றைத் துணைவினைகளாகப் பயனபடுததும் பழக கம் மிகுந்தது (ஒடுவி>ஒட வை; ஒடச்செய, ஒடப் பண்ணு) ஓர் இலககண மாறறம் ஆகும்.

சொறகளஞ்சியத்தில் வடமொழிச் செலவாககு இக்காலததில மேலும் பெருகியது எனறாலும, எழுதது எணணிககையில் மாற்றம் ஏறபடவிலலை இஙகு வடமொழி இலக்கண மரபைப் புகுததிய வீர சோழியம கூட, செயயுளில வடவெழுததைத தவிாககவேணடுமஎனறும் அது குறறமிலலாத உறுபபு எனறும் கூறியுளளது குறிபபிடத தகுந்தது.

**பின் இடைத் தமிழ்**: கல்வெடடுத தமிழ் மூலமே றற என்பது ணண எனற ஒலிமாற்றம இநதககால கட்டத்தில ஏறபட்டது எனறு அறிநதுகொளள முடி கிறது ஒனறு, கொனறு எனற வடிவஙகள 16-ஆம நூறறாணடுக கல்வெடடுகளில முறையே ஒணணு, கொணணு எனறு வநதுளளன. இது உருமாறறம ஆனாலும இதறகு அடிபபடையானது னற்>ணண என்ற ஒலிமாறறம ஆகும். ஒலிமாறறமாக இருபப தால் இன்றைய பேசசுத்தமிழில னற எனறு எழுதது மொழியில உளள சொறகள ணண எனறு உச்சரிககப படுகினறன. இந்த மாறறததில இனனொரு கட்டுப பாடும காணபபடுகிறது னற எனபதறகு முனனால குறில் வநதால /ணண்/ எனறு ஆகும்; நெடில வந தால /ண/ என்றுதான மாறும. முககூடறபளளுவில தோனறுகிறது எனற வினைமுறறு தோணுது' எனறு வநதுளளது னற > ணன எனற மாற்றததுககு மட் டும் இலலாமல இலககண மாறறம ஒனறு ஏற்பட் டுளளதறகும் சானறாக உள்ளது நிகழகால விகுதி களில உருவததில ஏறபட்ட மாற்றமே. அது 'கிற்' எனற நிகழகால விகுதி இற (செயகிற > செய்யிற; தூஙகுகிற > தூஙகிற) எனறும ற் எனறும (போகிற > போற) எனறு மாறியதோடு அஃறிணை வினை முறறில முழுவதும மறைநதுவிட்டது எனபதையும் 'தோணுது' எனற அந்தச் சொல புலபபடுததுகிறது இந்த மாற்றம இனறைய பேசசுமொழியிலும் நீடித்து வநதுளளது.

சொற்களஞ்சியத்தில் தெலுங்கு, கனனடம் போன்ற அணடைமொழிச சொற்களோடு பாரசீகம், உருது ஆகிய மொழிகளின சொறகளும் இநதக் கால கட்டத்தில புகுந்தன தெலுஙகு, கன னட மொழிச் சொறகள முன்னரே ஒனறிரணடு கட னாளபபட்டு இருந்தாலும் நாயக்கா காலததில் தான நிறைய கடன் வாஙகப்பட்டிருக்க வேணடும். சென்னைப் பலகலைக கழகப் பேரகராதி அக்கடா, ரவிககை, கொலுசு, கந்தை, சநதடி போனற 325 சொற்களைத தெலுஙகுச் சொற்களாகப் பதிவு செய்துளளது. அட்டிகை, சமாளி கெமபு போனற

38 கன்னடச் சொற்கள் தமிழில் கலந்துள்ளதாகப் பேரகராதி கொடுத்துள்ளது. இலக்கியத்தில் வட மொழிச் சொற்களின் எண்ணிக்கை மிகுந்து விட்டது. இதனால் இலக்கியத் தமிழிலும் எழுத்து எண்ணிக்கை இந்தக் காலத்தில்தான் உயர்ந்தது.

முதன் முதலில் 15-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அருணகிரிநாதரின் திருப்புகழில் ஸ, ஷ, ஜ, ஹ, க்ஷ, ஸ்ரீ ஆகிய ஆறு கிரந்த எழுத்துகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தாயுமானவர் இயற்றிய பாடல்களிலும் இந்த எழுத்துகள் கையாளப்பட்டன. இன்றும் இந்த எழுத்துகளில் ஜ, ஷ, ஸ, ஹ ஆகியவை இன்றைய இலக்கிய வகையான நாவல், சிறுகதை, கட்டுரை ஆகியவற்றில் வழங்கப்படுவதால் தமிழ் எழுத்துகளின் எண்ணிக்கையில் நாயக்கர் காலத்தில் மாற்றம் ஏற்பட்டதாகக் கருதலாம்.

**இக்காலத் தமிழ்**: 18-ஆம் நூற்றாண்டிலிருந்து இன்று வரையுள்ள காலகட்டமே இக்காலத் தமிழ் எனப்படும். இங்கும் 20-ஆம் நூற்றாண்டுத் தமிழை, குறிப்பாக 1947-இல் நாடு விடுதலை பெற்று சுதந்திர நாடாக அமைந்தபிறகு மொழியில் பல மாற்றங்கள் ஏற்பட்டுள்ளதால் இருபதாம் நூற்றாண்டுத் தமிழைத் தனிகால கட்டமாகக் கருதுவது சிறப்பாகும்.

இந்தக் கால கட்டத்தில் தமிழகம் மட்டும் அல்லாமல் இந்தியாவும் வெளிநாட்டார் – மேலைநாட்டார் ஆட்சியின் கீழ்ச் சென்றது. ஆங்கிலேய ஆட்சி வாழ்க்கை முறையிலும் இலக்கியத் துறையிலும், சமூகத் துறையிலும் பெரும் மாற்றங்களை ஏற்படுத்தி விட்டது. ஆலைகளுள் அச்சு இயந்திரம் அறிமுகப்படுத்தப்பட்டது ஒரு பெரிய மாற்றம் ஆகும். இதுவே பல மாற்றங்கள் ஏற்படக் காரணமாய் அமைந்தது. மொழியைப் பொறுத்தவரையில் சிறப்பாகக் குறிக்கத் தகுந்த மாற்றம் உரைநடை இலக்கியத் தகுதி பெற்றது. இதனால் நவீனம், சிறுகதை என்ற புதிய இலக்கிய வகை உருவெடுத்தன. இதனால் மொழியிலும் மாற்றம் ஏற்பட்டுவிட்டது. தமிழுக்கு முதன் முதலாகப் பிற மொழியில் – அதுவும் மேலைநாட்டுமொழியில் இலக்கணம் எழுதப்பட்டது. மேலைநாட்டவர் தமிழிலும் இலக்கணம் எழுதினார்கள்.இதனால் தமிழின் ஒலி அமைப்பில் சிறு கூறுகள் தெளிவுபடுத்தப்பட்டன.

முதன் முதலாக வல்லின எழுத்துகள் சொல்லுக்கு முதலிலும் இடையிலும் இரட்டித்து வரும்போது அதிர்விலா (Voiceless) ஒலியாகவும், இடையில் மெல்லினத்துக்குப் பிறகு வரும்போது அதிர்வுடை ஒலியாகவும் இரண்டு உயிர்களுக்கு இடையே வரும்போது உரசொலியாகவும் உச்சரிக்கப்படுகின்றன என்ற உண்மை மேலைநாட்டார்இலக்கணம்எழுதிய பிறகே தெளிவு ஆயிற்று. இந்த உச்சரிப்பு முறை பழங்காலத்திலிருந்தே இருந்திருக்கவேண்டும் என்று கால்டுவெல் குறிப்பிட்டாலும் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் தமிழ்ச் சொற்கள் பிறமொழியில் கல்வெட்டுகளில் எழுதியுள்ளதை அடிப்படையாகக் கொண்டு பிற்காலத்தது என்றே கருதுகிறார்.

பிறமொழிச் சொற்கள் குறைவாகக் கடன்வாங்கப் பட்டதால் சொல்லுக்கு முதலிலும் கடைசியிலும் வரும் எழுத்துகளில்மாற்றம் ஏற்பட்டன. ர,ல, ஆகியவை சொல்லுக்கு முதலில் வரலாயின. புதிய மெய் மயக்கங்களும் தோன்றின.

எழுத்து வரி வடிவத்தில், எகர வரிசையில் குறிலும் வடிவ வேறுபாடு செய்யப்பட்டது. இன்று எகரமாக – குறிலாக எழுதப்பட்டு, இடத்துக்கு ஏற்றாற் போல் குறிலும், நெடிலுமாக வாசிக்கப்பட்டது. அப்படியே இன்றைய குறில் ஒகரமும் குறிலும் நெடிலுமாகப் படிக்கப்பட்டது. வீரமாமுனிவர் இதில் சிறு திருத்தம் செய்து குறிலையும், நெடிலையும் வடிவத்தில் வேறுபடுத்தினார். அதையொட்டி நெடில் எகரம் சாய்வு கோடுசேர்க்கப்பட்டும் < ஏ > என்றும் ஒகரம் சுழிக்கப்பட்டு < ஒ என்றும் எழுதப்பட்டு பழைய வடிவங்கள் குறில்களாகக் கையாளப்பட்டு வருகின்றன.

**இருபதாம் நூற்றாண்டு**: இது தமிழின் மறுமலர்ச்சிக் காலமாகக் கருதப்படுகிறது. நாட்டில் கல்வி அறிவு பெருகுவதால் படித்தவர் எண்ணிக்கை கூடி வருகிறது. அதனால் தமிழில் பல புதிய துறைகள் ஏற்பட்டு மொழியில் நெகிழ்ச்சி ஏற்பட்டுவிட்டது. செய்தித்தாள்கள், மாத,வார பத்திரிகைகள் தோன்றி பலதரப்பட்ட வாசகர்களின் தேவைகளை நிறைவு செய்ய வேண்டியிருப்பதால் பேச்சு மொழியின் செல்வாக்கும் பெருகி வருகிறது. இதனால் பேச்சு மொழியில் மட்டும் வழங்கிய பல சொற்கள் எழுத்து மொழியில் நுழைந்தன. சொற்கள் தனித்தனிச்சொற்களாக அச்சிடப்படுவதால் இரண்டு சொற்களுக்கு இடையே வரும் பதப்புணர்ச்சி விதிகள் மிகுதியாகப் பயன்படுத்தப்படுவதில்லை. வாக்கிய அமைப்பிலும் மாற்றம் ஏற்பட்டு விட்டது. எழுவாய்,பயனிலை இல்லாத குறை வாக்கியங்கள் மிகுதியாகக் கையாளப்படுகின்றன. (சென்னையில் ஒரே பரபரப்பு, இன்று எட்டு மணிக்குப் பாராட்டு) பிறமொழி, சிறப்பாக ஆங்கில மொழிச் செல்வாக்கும் மிகுதி என்று கருதப்படுகிறது. இந்த நிலையில் மொழி அமைப்பில் குறிப்பாக ஒலி, ஒலியன், உருபன் போன்றவற்றில் இருப

தாம் நூற்றாண்டுத் தமிழில் ஏற்பட்ட மாற்றங்கள் சில குறிப்பிடததகுநதவை.

பேச்சு மொழியில் பிறமொழிச் செல்வாககினால அதிர்வுடைய வல்லொலிகள ஒலியனகளாக அமைநது விட்டன சொல்லுக்கு இறுதியில வரும மெலலொலி கள் முழுமையாக உசசரிககப்படாததால அதறகு முன் வரும் உயிரொலிகள மூகினச் சாயல பெற்று ஒலியன நிலை அடைந்துள்ளன. வந்தா (எனபது மூக்கினச் சாயலைக குறிககும) 'வநதான', 'வநதா', 'வந்தாள்' என்ற இணைகளால மூக்கினச் சாயல பெற்ற உயிரும் பெறாத உயிரும் ஒலியனகளாக அமைந்து விட்டன.

சொல்லியல் நிலையில 'அவாகள்' எனபது சிறப் புப் பெயருக்குப் பினனால் சிறப்பு ஒருமையாகக கொள்ளப்படுகிறது (வரதராசன அவாகள) உயா திணைப் பெயாகளும் மகரத்தில முடிந்தால் 'அதது' என்னும் சாரியை பெறுகினறன (கார்மேகம்-காா மேகத்தை). 'இன்' எனபது ஆறாம வேற்றுமைப பொருளில் மிகுதியாகக் (வீட்டின விலை, நாட்டின உயர்வு) கையாளப்படுகிறது இப்படிப் பல மாற்றங களை பெற்று 20-ஆம நூற்றாணடுத் தமிழ, வர லாற்றில் தனிக் கால கட்டத்தைச் சேர்நததாகக் கருதப்படும தனமை பெற்றுவிட்டது. செ.வை.ச.

**தமிழ் இலக்கிய வரலாறு.** தமிழில இனறு கிடைக்கும் நூல்களுள் பழமை மிக்கது தொல் காப்பியம் என்னும் இலககண நூலாகும். இந்நூலின காலம் கி.மு.3-ஆம் நூற்றாணடெனபது அறிஞா பலரின கருத்தாகும். அக்காலத்திலிருநது இனறு வரையிலான இருபத்து மூன்று நூற்றாணடுகளில தமிழ்மொழி பல துறைகளில் வளர்ந்திருக்கிறது.

தொல்காப்பியம், எழுத்ததிகாரம், சொலலதி காரம், பொருளதிகாரம் என்ற மூன்று அதிகாரங் களை உடையது. ஒவ்வோரதிகாரமும் ஒன்பது இயல களைப் பெற்றுள்ளது. எழுத்துக்கும் சொலலுக்கும் இலக்கணம் கூறியதோடு வாழ்க்கைக்குரிய பொரு ளிலக்கணத்தையும் கூறியிருப்பது தொல்காப்பியத் தின் தனிப்பெருஞ் சிறப்பாகும்.

**சங்க இலக்கியம்:** சங்க இலக்கியம் பத்துப் பாட்டும் எட்டுததொகையுமாகிய பதினெட்டு நூல களாகும். திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப் படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப் படை. மலைபடுகடாம் என்னும் ஐநது ஆற்றுப்படை நூல்களையும், முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட் டினப்பாலை ஆகிய மூன்று அகப்பொருள நூல்களை யும், மதுரைக்காஞ்சிஎன்னும் புறப்பொருள நூலையும், பத்துப்பாட்டில் காணலாம். நெடுநல்வாடையை அக மென்று சிலரும், புறமென்று சிலரும் எண்ணுவா. அளவிற் பெரிய மதுரைக் காஞ்சி எழுநூற்று எணபத் திரணடு அடிகளை உடையது. திருமுருகாற்றுப்படை யில முருகனின ஆறுபடை வீடுகள, பொருநராற்றுப படையில கரிகாலனின வெற்றி, கொடை மேம பாடுகள, சிறுபாணாற்றுப்படையில் மூவேநதரும் கடையெழு வள்ளல்களும் மறைநத பினறை ஈகை யறம் பேணும் நல்லியககோடன இயல்பு, பெரும் பாணாற்றுப்படையில தொணடைமான இளந்திரை யனின செஙகோனமை, முலலைப்பாட்டில் கார்காலக் காட்சி, மதுரைக காஞ்சியில மதுரை நகர் மாணபு கள, நெடுநலவாடையில வாடைக் கால இயல்புகள், குறிஞ்சிப்பாட்டில் காதற களவின் சிறப்பு, பட்டினப் பாலையில புகாாநகரப் பெருமை, மலைபடுகடாததில் நன்னனது மலைநாட்டின சிறபபு ஆகியவை கூறப் பெறும.

எட்டுத்தொகையில், நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய ஐந்து அகநூல்களும், பதிற்றுப்பதது, புறநானூறு ஆகிய இரு புறநூலகளும், அகம, புறம் இரணடும் கூறும பரிபாடலும் அடங்கும. இநநூல்கள பணடைததமிழ் வேநதர், குறுநில மனனாகளின வெற்றி வீறுகள, கொடைமடப்பணபு, குடிபுரக்கும செயல ஆகியவற்றையும், நானிலஙகளிலும் வாழ்நத மக்களின இல்லறம, செயதொழில, கலவி கலை மேம்பாடுகள, வாழ்க்கை நீதிகள ஆகியவற்றையும் பேரூாச் சிறப்புகளையும் வரலாற்று நிகழச்சிகளையும் விளககுவனவாகும்

**சிலப்பதிகாரமும் மணிமேகலையும்:** சஙககாலம எனபது கி மு. 5-ஆம நூற்றாணடிலிருந்து கி பி.2-ஆம நூற்றாணடு வரையிலான காலப்பகுதி எனபர். இவவிலக்கியஙகளை அடுதது கி.பி. 2-ஆம் நூற் றாணடு அளவில சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இரு காப்பியஙகள தோனறின. சிலபபதி காரம கறபுக்கடம் பூணட கணணகியின வரலாறு கூறும தொடர்நிலைச் செய்யுள. புகார்க் காண்டம, மதுரைக் காணடம், வஞ்சிக காணடம் எனற மூனறு காணடஙகளில் அமைநத முப்பது காதைகள அற ளைத் தமிழக நிலையை அழகுற விளக்குகினறன. அரைசியல பிழைததோாககு அறம் கூற்றாகும், உரை சால் பததினியை உயர்நதோர் ஏத்துவர், ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்ற மூனறு செய்திகளுக் குரியதாக இளஙகோவடிகள இந்நூலை இயற்றிய தாகப் பதிகம் கூறும். கடல்சூழ் இலங்கைக கயவாகு வேநதன் (கி பி.114-136) கணணகி விழாவிற்கு வந்த மையினைச் சிலப்பதிகாரம் குறிப்பதால, இநநூலின் காலம் கி பி. இரணடு என்பது ஐயமின்றி அறியப் படும். அரசக் குடியினரையே காப்பியத் தலைமக்க ளாக்கிப் பாடும் மரபை மாற்றி வணிக குமரனின கதை கூறியமையால இந்நூலைக் குடிமக்கள காப்

பியம் எனப்போறறுவர் தெ.பொ. மீனாட்சி சுந்தர னார். கோவலனுககும மாதவிக்கும தோன்றிய மணி மேகலையின வரலாற்றைக கூறும் மணிமேகலை சிலப்பதிகாரம் போலவே முப்பது காதைகளையுடை யது. எனினும், இந்நூலாசிரியரான சீத்தலைச்சாதத னாா இதனைப் பௌத்த சமயக் காப்பியமாகவே புனைநதுள்ளார். மதுவிலக்கு, பிறப்பால் உயர்வு தாழவு கருதவேணடாமை, பசிப்பிணி நீககுதலாகிய தலையாய அறங்கள் முதலியவற்றை மணிமேகலை சிறபபுறக் கூறுகின்றது.

**நீதிநூல்கள்:** சங்க கால அக, புறப் பனுவல் களில் இடையிடையே நீதிக் கருத்துகள கூறப்பெறும். நீதிகளைக் கூறுதற்கெனறே அறநூலகள் இயற்றப பெற்றமையினைக் கி பி. 2-ஆம் நூற்றாணடிலிருந்து காணலாம. பதினெண கீழ்க்கணக்கைச் சாாநத அற நூலகள் பதினொன்றில் திருக்குறள் காலப் பழமை யும், பெருமையும் மிக்கது; உலகப் பொதுமறை, பெய்யா மொழி எனற சிறப்புப் பெயர்களுடையது குறள் வெணபா யாப்பில் 1330 பாக்களைப் பெற் றது. அறததுப்பால், பொருட்பால், காமத்துப் பால் எனற மூனறு பகுப்புடையது.

பதினெணகீழ்க்கணக்கு நூலகளில் திருககுறள் உளளிட்ட அறம் கூறும் நூலகள பதினொனறு; அகப்பொருள பற்றியன ஆறு; போாச் செயலாகிய புறப்பொருள கூறுவது ஒனறு. இந நூல்கள சஙக காலத்திற்குப் பினவநத சமூக வாழ்வை விளக்குகின றன. அறநூலகளுள திருககுறளை அடுத்துச் சிறப்புக் குரிய நூல் நாலடியாராகும.

**பக்தி இலக்கியம்:** பலலவர்கள தமிழகத்தை ஆணட காலததிலிருநது சைவம், வைணவம், சம ணம், பௌத்தம் ஆகிய சமயங்கள் தததம கொளகை களை மக்களிடையே பரபபப பெருமுயறசி மேற் கொணடன. திருஞானசமபநதர் பாணடிவேநதனைச சைவசமயம் புகச செய்தாா. திருநாவுக்கரசர் பல் லவ வேந்தனைச் சைவம் புகச் செய்தார். மூவர் தேவாரமும, மாணிக்கவாசகரின திருவாசகமும், திருக்கோவையாரும், திருமாளிகைத்தேவர் முதலான ஒனபதின்மர் பாடிய திருவிசைப்பாவும, திருப்பல்லாண டும், திருமூலரின திருமந்திரமும், திருவாலவாயுடை யார் முதலான பன்னிருவர் பாடிய நாற்பது நூல களும், சேக்கிழார் பாடிய பெரியபுராணமும் பனனிரு திருமுறைகளாகப் பிற்காலச் சோழராட்சியில வகுக் கபபெற்றன. இததோத்திர நூல்களுள திருமந்திரம் சாத்திரம் எனவும் தகுவது. பெரியபுராணம் காப்பிய அமைதிகள் நிறைந்தது. சைவசமயம் தோத்திர நூல் களையும் படைத்தது. மெய்கணட சாத்திரம் எனப் படும் பதினான்கு நூலகளைப் பெரியோர் சைவ உல கிற்கு நல்கினர். அவற்றுள் பனனிரண்டு நூற்பாக் களையும, எடுத்துக்காட்டு வெண்பாக்கள் எண்பத் தொனறையும கொண்ட மெய்கணடாரின சிவஞான போதம் தலைமை சான்றது.

வைணவ சமய நெறிகளையும், திருமாலின பெருமைகளையும், திருப்பதிகளின் சிறப்பையும் பன னிரு ஆழ்வார்களின் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் இனிது எடுத்துரைக்கின்றது. நம்மாழ்வார் ஆழ்வார் களுள ஓஙகி உயர்நத புகழினர். திராவிட வேதம எனப்படும் திருவாயமொழி இசைத்தவர். குலசேகரர் பாடிய பெருமாள திருமொழியும், ஆண்டாளின திருப்பாவையும், பெரியாழ்வார் திருமொழியும் தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருப்பள்ளி யெழுச்சியும்,திருமங்கை மனனரின தாணடகமும் பக் திச்சுவையும தமிழசசுவையும கலந்து பிசைநத கவி யமுதாகும். நாதமுனிகள கி பி 11ஆம நூற்றாண டில ஆழ்வார்களின பாசுரஙகளைத்தொகுத்தளித்தவ ராவார். வைணவ இலககியத்தின் முடிமணியாகவும், தமிழக காப்பியஙகளுள் பெருமை மிக்கதாகவும விளஙகும் கமப இராமாயணம் தனது முன்னூலான வானமீகத்தினும் உயர்ந்த கற்பனையும் கவிதை நய மும் பெற்றது. கம்பா வான்மீகததின் சில பகுதி களைத் தமிழா் நாகரிக மரபிறகேற்ப மாற்றியமைத துள்ளார். ஆழ்வார்கள கணட இராமனின் வடிவை யும கம்பராமாயணததிறகாணலாம. ஆறு காணடங களையும பதினாரயிரததிறகு மேற்பட்ட பாடல் களையுமுடையது. இநநூலின காலம் கி.பி. 9-ஆம் நூற்றாணடு எனறு சிலரும்,கி.பி.12-ஆம் நூறறாணடு என்று வேறு சிலரும கூறுவர். கி.பி. 14-ஆம் நூற றாண்டில தோன்றிய வில்லிபாரதமும குறிப்பிடத் தக்க வைணவக் காப்பியமாகும்.

சமணமும், பௌத்தமும் தமிழகத்திற்கு வெளியே தோனறிய சமயங்கள எனினும, ஒரு காலநிலையில அவை தமிழக மககள் வாழ்வோடு கலநது இலக்கிய, இலக்கண வளர்ச்சிக்குத் துணைபுரிநதுள்ளன. பௌத் தம் கி.மு. 3-ஆம் நூற்றாணடில் தமிழகம் போநதது. மணிமேகலை, குணடலகேசி, விம்பசார கதை, சித் தாநதத் தொகை,அபிதம்மாவதாரம், வீர சோழியம ஆகியன தமிழுக்குப் பௌத்தாகளின் நனகொடை கள. இவறறுள் வீரசோழியம ஓர் ஐந்திலக்கண நூலா கும். கி.மு 3-ஆம் நூற்றாண்டிலேயே தமிழகம் புகுந்த சமணசமயம், சிலப்பதிகாரம், சீவகசிநதா மணி, வளையாபதி ஆகிய பெருங்காப்பியங்களை யும், உதயணகுமார காவியம், நாககுமார காவியம், யசோதர காவியம, சூளாமணி, நீலகேசி ஆகிய சிறு காப்பியங்களையும், கொங்குவேளின் பெருங்கதை யையும், அவிநயம், யாபபருங்கலம், யாப்பருங்கலக காரிகை, நன்னூல, நேமிநாதம், நம்பியகப்பொருள, தண்டியலங்காரம், வச்சணநதிமாலை ஆகிய இலக்

கண நூலககளையும், பல சிறறிலககிய நூல்களையும உரைநடை நூல்களையும, நிகணடுகளையும தமிழுக களித்தது. பொஙகுபலசமயமெனனும் நதிகளெலலரம தமிழ்ப் பைஙகூழைப பனனெடுஙகாலம் தழைககச் செயதன என்பது இலக்கிய வரலாறறுணமையாகும்.

தமிழில கி பி 13-ஆம் நூறறாணடிலிருநது தல புராணஙகள தோன்றின பரஞசோதி முனிவரின திருவிளையாடறபுராணம,சிவஞான முனிவரின காஞ சிப்புராணம, கசசியப்ப முனிவரின தணிகை புராணம ஆகியன குறிப்பிடத்தக்கன.

**சிற்றிலக்கியம்:** சமய உணாவும், தமைப்புரநத கொடையாளிகளைப் போறறும் நனறியுணாவும காரணமாக அளவாற சிறிய இலக்கியஙகள் பலப்பல தமிழ மொழிக்கண தோன்றின.அந்தாதி, உலா, கலம் பகம,குறம, கோவை, தூது,பரணி, பள்ளு, பிளளைத் தமிழ ஆகியவற்றின இலககணததைப் பாடடியல நூலகள கூறும் திருக்கைலாய ஞான உலா, மூவ ருலா, நநதிக கலம்பகம, திருக்குற்றாலக குறவஞசி, திருச்சிறறம்பலக் கோவையார், தஞ்சைவாணன கோவை, தமிழவிடுதூது, கலிங்கததுபபரணி, முக கூடற் பள்ளு, மீனாட்சியம்மைப் பிள்ளைத் தமிழ ஆகி யன கறபார் நெஞசு பிணிக்கும் தன்மையன

**உரையும் உரைநடையும்:** தமிழ உரைநூல்களுள பழமை வாய்நதது இறையனார் களவியல் உரையே. உரையாசிரியாகளுள் தொல்காப்பியம் முழுமைககும் உரை வரைநத இளமபூரணர் குறிபபிடததக்கவா. இவரையடுத்துப் பேராசிரியர், சேனாவரையர், நசசினாாக்கினியா, கலலாடா, தெய்வச்சிலையார் அடியார்ககு நலலாா, மணககுடவா, பரிமேலழகா ஆகியோா சிறபபுமிக்க உரையெழுதிய பெருமைக் குரியர். வடமொழிக் கலப்புமிக்க 'மணிப்பிரவாள நடை கி.பி. 14,15-ஆம் நூற்றாணடுகளில வளர்க்கப் பட்டிருந்ததுது. திவவியப் பிரபந்த உரையாசிரியர்கள இநநடையைப் பெரிதும் போறறியுள்ளனர். உரை காணும் முயற்சியிலிருந்து தனியே உரைநடையில எழுதுகின்ற மரபை ஐரோப்பியர் வருகையே தோறறு வித்தது வீரமாமுனிவர் தமிழ் உரைநடையின தந்தை எனறு போறறப்படுவர்.தமிழ நெடுங்கணககில் எழுத்துச் சீர்திருத்தமும் செய்தவர் ஆறுமுக நாவ லர், இராமலிங்க அடிகள, மாயூரம வேதநாயகம பிள்ளை, உ வே.சாமிநாத ஐயர், பரிதிமாற்கலைஞர், திரு வி.கலியாணசுந்தரனார், மறைமலையடிகளாா ஆகியோர் தமிழ் உரை நடை வளர்ச்சிக்குத் தக்க பணியாற்றியோா ஆவர்.

**கிறித்தவர் தமிழ்த் தொணடு:** தமிழகத்திற்கு அசசுக் கருவிகள் கொணாந்து தமிழில அசசியற்றிய பணி, எழுத்துச் சீர்திருத்தம், ஒப்பிலக்கண வரைவு, மொழிபெயர்ப்பு, அறிவியல துறைகளில் தமிழைப் புகுத்தியமை, உரைநடை வளர்சசி எனப் பல்துறைப் பணிகளையும் செய்து தமிழிற்குப் பெருமை சேர்த் தனா ஐரோப்பியா. வீரமாமுனிவர், ஜி.யு போப் (G U. Pope),காலடுவெல், இராபாட்-டி-நொபிலி, சீகனபாலகு, எலலிசுசு, இரேனியசு ஆகியோரைப பின பறறித் தமிழகக கிறிததவாகளான வேதநாயகம பிளளை, கிருட்டிணபிளளை, வேதநாயக சாததிரி யார் ஆகியோர் செயத தொணடும விழுமியதாகும.

**இசுலாமியர் தமிழ்த்தொண்டு:** உமறுப்புலவரின சீறாபபுராணம் 92 படலஙகளையும், 5027 திருவிருத தஙகளையும உடையது இது கி பி. 17 ஆம நூற றாணடுக காப்பியமாகும. அந்தாதி, அமமானை, ஆறறுப்படை, கோவை, பிள்ளைத தமிழ ஆகிய சிற்றி லககியஙகளைப புனைநததோடு இசுலாம் தமிழப்புல வர்கள, படைப்போர், ஜனசாத்து, நாமா, கிசா, மசலா ஆகிய புதிய இலக்கிய வகைகளையும படைத தனர். குணஙகுடி மசுத்தான சாகிபு அருளிய பாடல கள ஞானப் பனுவலகளுககு நலல எடுததுககாட்டாய இலஙகுகினறன.கி பி 17,18-ஆம நூறறாண்டுகளில, தமிழில உருது, அரபு, பாரசீகச சொறகளும வந்து கலநதன.

**இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்'** இருபதாம நூற்றாணடுத் தமிழ புதுமை பல படைததது கவிதை, வசனகவிதை, புதுக்கவிதை, புதினம சிறு கதை, நாடகம, திறனாயவு எனப பல துறைகளில வேகமான வளர்சசியைக் காடடத தொடஙகிறறு விடுதலையைப பாடுபொருளாக 'அமைததுச் சுபபிர மணிய பாரதியார் பாடிய பாடலகள எளிமை, இனிமை, உணர்சசி ஆகியன நிறைந்து கலலாதார் உள்ளததையும தொட்டன. கடவுட் பற்றுக்குச் சம மாக நாடடுபபற்றும கவிதைப் பொருளாயிற்று. பாரதியாரை அடியொறறிப் புரடசிக் கவிஞர் பாரதி தாசன, கவிமணி தேசிகவிநாயகம பிளளை, நாமக கல இராமலிங்கம் பிள்ளை, சுத்தானநத பாரதி முதலியோா எளிய நடையில கவிதை புனைநதனா. இவர்களைத் தொடர்நது சுரதா, முடியரசன், வாணி தாசன முதலியோா நலல படைப்புகளைத தநதுள ளனா. தமிழக கவிதையுலகில மேலைக் காற்றின் தாககம இநநூற்றாணடிலேயே இடமபெறறது. அதனால் புதுக்கவிதைப் பூககள தோனறின. ந.பிசச மூர்த்தி, சி.சு.செலலப்பா முதலியோரால வளாநத புதுக்கவிதைத் துறையில, ஞானககூத்தன், தமிழ் நாடன, சி.மணி போனறோா பல படைப்புகளைத் தந்துள்ளனா.

தமிழில் தோனறிய முதல புதினம் மாயூரம் வேதநாயகம் பிள்ளையின் பிரதாப முதலியார் சரித் திரமாகும். இதன் பின்பு இராசமயயரின் கமலாம் பாள் சரித்திரம், மாதவையாவின பதமாவதி சரித திரம் ஆகியன தோனறின. துப்பறியும் புதினங்கள, மொழிபெயர்ப்புப் புதினங்கள் ஆகியனவும இந்நூற் றாண்டுத் தொடக்கத்தில் வெளிவந்தன. புதினததை

இலக்கியமாக வளர்த்த பெருமை, கல்கி, மு வரதரா சனாா, அகிலன், நா.பார்த்தசாரதி, செகசிற்பியன், வ.ரா, விந்தன், வேங்கடரமணி, நீல. பத்மநாபன் ஆகியோரைச் சாரும். வரலாற்றுப் புதினங்களுள கலகியைத் தொடாந்து சாண்டிலயன், கோவி. மணி சேகரன ஆகியோர் பல நூல்களை எழுதியுளளனா.

வீரமாமுனிவரால தொடங்கி வைக்கப்பெறற சிறுகதையுகம் இன்று மிக வளர்நதுள்ளது. தாணட வராய முதலியாரின பஞச தந்திரககதைகள், வீரா சாமி செட்டியாரின விநோதரச மஞ்சரி ஆகியன தொடக்க காலத்தன. வ வே.சு.ஐயரின 'குளததங கரை அரசமரம்' படைப்புலகில் ஒரு திருப்பததை ஏற்படுத்திய கதை எனலாம. புதுமைப்பித்தன, கு ப. இராசகோபாலன், மௌனி, ந.பிச்சமூாததி, பி எல். இராமையா, இலா.ச.இராமாமிர்தம, கு.அழகிரிசாமி, செயகாநதன் போன்றோா சிறநத சிறுகதைச் சிற்பி கள.

இசைத்தமிழ் வளர்ச்சிககு அருணகிரியார்,முததுத் தாண்டவர், அருணாசலககவிராயா எனற மும்மூர்ததி களைத் தொடர்நது, கோபாலகிருட்டிண பாரதி யார், அணணாமலை ரெட்டியார், வேதநாயகம் பிளளை ஆகியோர் குறிப்பிடத்தக்க தொணடாற்றிய பெருமையினர். நாடகத் துறையில சஙகரதாசு சுவா மிகள், பம்மல சம்பந்த முதலியார், டி.கே. சணமுகம், நவாபு இராசமாணிக்கம் முதலியோர் சிறநத தொணடாறறியுள்ளனர். கு.வெ.பா.

**கன்னடமொழி**: திராவிட மொழிகளின முதன் மையான மொழிகளுள கன்னடமும் ஒன்று. கருநாடக மாநிலத்திலும் அதைச் சுறறியுளள பகுதி களிலும் இம்மொழி பேசப்படுகிறது. கனனட மொழியை 1981-ஆம் ஆணடு கணக்கெடுப்பின்படி மொத்தம் 3,70,43,451 பேர் பேசுகின்றனர். இம மொழி மிகுந்த சமூக, வட்டார கிளை மொழிகளை உடையது. சில கனனடக்கிளைமொழிகள் கருநாடக மாநிலத்திற்கு வெளியேயும் பேசப்பட்டு வரு கின்றன. திராவிட மொழிகளுள இது இரணடாம பழமையான மொழியாக விளஙகுகிறது. இம் மொழி யின் முதல எழுத்து வடிவசசானறு கி.பி. 450-ஐச் சார்ந்தது. கருநாடக மாநிலததில் துளு, குடகு ஆகிய வேறு இரு திராவிட மொழிகளும் பேசபபட்டு வருகினறன. இம்மாநிலத்திலுள்ள தட்சிண கன்னட மாவட்டத்தில் இந்தோ ஆரியன் மொழிக் குடும்பத் தைச் சேர்ந்த கொங்கணி மொழியும் மக்கள் சில ரால் பேசப்பட்டு வருகிறது.

'கன்னடம்', 'கருநாடகம்' என்ற இரு சொற் களுமே மொழியையும் நாட்டையும் குறிக்க ஒன றிற்கு ஒன்றாக மாறியும் சில நேரங்களில பயன்படுத் தப்படுகின்றன. 'கருநாடகம்' என்ற மூலவடிவம் கர்-நாடு அதாவது கருமையான நாடு என்ற பொரு ளுடையது எனறு டாக்டர் குணடெர்டு குறிப்பிடு கிறார். ஆனால பிற அறிஞாகள கரு-நாடு எனக் கொண்டு அது 'உயாநத நாடு' என்று பொருள்தரு வதாகக் கூறுவர். இசசொல சமசுகிருத மயமாக்கப் பட்டு கனனடம் என மாறியதாகக் கருதுவர். இந்திய இலக்கணவியலார் கன்னடம் என்பது கருநாடகம் எனபதன தறபவம் அலலது தூய்மை யறற வடிவம் எனறு கூறுவர்.

**கன்னட மொழியின் படிநிலைகள்**: ஆய்வாளர்கள் பொதுவாகக் கனனட மொழியின வரலாறறை மூனறு நிலைகளாக வகைப்படுததுவர் அவை: 1) பழங்கனனடம் (Holakannada), 2) இடைக் கனனடம (nadukannada) 3)புதுக்கனனடம்(Hosakannada) சில ஆய்வாளர்கள் முன பழங்கனனடம எனற நிலையும இருநததாகக கருதுவர். நரசிமமாச்சாரியர் என்பவர் தன்னுடைய நூலிலகன்னடமொழியின் வரலாற்றை முனபழங கன்னடம், பழஙகனனடம், புதுக்கனன டம எனறு மூனறு நிலைகளில வரையறை செய் கிறார் கிடடெல (Kittel) என்பாா கன்னட ஆங்கில அகராதியின முன்னுரையில முனபழங்கனனடம் என பதை மறுத்து உயர் தனிககாலம் (Classical Period) இடைக்காலம், இககாலம் என்று மூவகைப்படுத்து வா.கி.பி.7-ஆம் நூற்றாணடின இறுதிவரைமுனபழங் காலம் எனபர். இது மிகவும் சிறப்புடைய காலமா கும. பற்பல இலககண விநோதங்கள இக்காலத்தில நடந்துளளமை குறித்துக் குறிப்புகள இருப்பினும் அவை கிடைக்கவிலலை கிட்டெலலின் கூற்றுப்படி பழஙகன்னடம மிக ஒழுங்கமைவுடனும் நேர்த்தியுட னும் திருநதிய வடிவோடும் இருந்தது புதுக் கன்ன டம எனபது இககாலக் கனனட உரைநடையையும் மக்களின் பேச்சுவழக்கையும் குறிப்பதாகும். எனவே பழஙகனனடத்தையும புதுக் கனனடத்தையும் இணைக்கும் ஓர் 'இடைககாலம' எனற வரையறை மிகவும் தேவையான ஒனறாகும். கிட்டெலின கருத் துப்படிகி பி.16-ஆம் நூற்றாணடு முதல இடைக்கனன டம் இன்றைய கன்னட மொழியின பணபைப் பெறத் தொடங்கியது. இநத மாறுபாட்டினை மிகச் சிறப்பாக வைணவக் கவிதைகளில காணலாம். இக காலக் கனனடத்தில் உரைநடைககும் பேச்சு வழக் கிற்கும் மிகக் குறைநத வேறுபாடே காணப்படு கிறது. எழுத்து வழக்கில் வடசொல் மிகுதியாகக் காணப்படுகிறது. குறிப்பாக, சமயம், அறிவியல தொடர்பான கலைச்சொற்கள வடமொழியிலிருநது பிரிகக முடியாத வகையில் ஒன்றாகியுளளன. பழைய சொல வடிவஙகள இக்காலத்தில் பலமாற்றங்களைக் கணடுளளன. பெரும்பாலான வினைப் பினனொட் டுகள சில வகைகளில மாற்றியமைககபபடடுளளன. சிற்சில பெயர்ச் சொல்லின பின்னொட்டுகளும் மறு

எ-டு.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. | ஏனு(e:n+) 'நான்' | என-னு(en-a-n+) 'என்னை' | என-ட எங்-கு(en-k+) 'என்னால்' 'எனக்கு' | என்ன-த்து(enna-tt+) 'என்னிடமிருந்து' | என்ன 'என்' | என-டு(ena-t+) 'என்னிடம்' |
| 2. | நம 'நாம்' | நம-னு 'நம்மை' | நம-ட நங்-கு 'நம்மால்' 'நமக்கு' | நம்ம-த்து 'நம்மிடமிருந்து' | 'நம்ம' 'நம்' | நம-டு 'நம்மிடம்' |
| 3. | இ 'நீ' | இன்ன-னு/இன-னு 'உன்னை' | இன்ன-ட/ நிங்கு/இங்கு இன-ட 'உன்னால்' 'உனக்கு' | நின்னத்து/இன்னத்து 'உன்னிடமிருந்து' | நின்ன/இன்ன 'உன்' | இன்னடு/இனடு 'உன்னிடம்' |
| 4. | தானு(ta:n+) 'தான்' | தன்னு 'தன்னை' | தன-ட தங்கு 'தன்னால்' 'தனக்கு' | தன்னத்து 'தன்னிடமிருந்து' | தன்ன 'தன்' | தன-டு 'தன்னிடம்' |
| 5. | அவு 'அது' | அவெனு 'அதை' | அய்-ட அய்கு 'அதால்' 'அதற்கு' | அய்த்து 'அதிலிருந்து' | அய்-த 'அதன்' | அய்-டு 'அதில்' |
| 6. | நிங்க்ளு 'நீங்கள்' | நிங்க்ளெனு 'உங்களை' | நிங்க்ளெட நிங்க்ளெகு 'உங்களால்' 'உங்களுக்கு' | நிங்க்ளெத்து 'உங்களிடமிருந்து | நிங்க்ளென 'உங்கள்' | நிங்க்ளெடு 'உங்களிடம்' |
| 7. | உந்து(Undu) 'இது' | உந்தெனு/உனெனு 'இதை' | உந்தெட/ உந்தெகு/ நெட்ட நெக்கு 'இதாவ்' 'இதற்கு' | உந்தெத்து/நெத்து 'இதிலிருந்து' | உந்தெத/ நெத்த 'இதன்' | உந்தெடு/நெட்டு 'இதில்' |
| 8. | மூளு 'இங்கு' | — | — — | முள்து 'இங்கிருந்து' | முள்த 'இவ்விடத்தின்' | — |
| 9. | அவ்ளு 'அங்கு' | — | — — | அள்து 'அங்கிருந்து' | அள்த 'அவ்விடத்தின்' | — |
| 10. | ஒளு 'ஏங்கு' | — | — — | ஒள்து 'எங்கிருந்து' | ஒள்த 'எவ்விடத்தின்' | — |

துளு மொழியிலுள்ள வினைச்சொற்களின அமைப்பில் குறிப்பிடத் தகுந்த சிறப்புகள் சில உளளன. தன்வினையைப் பிறவினையாக்க -பு எனற விகுதி இணைக் கப்படுகிறது

எ-டு.

| பொளெ(bole) ஒளி 'இரு' | 'வளர்(தல)' | பொளெபு ஒளிபு | 'வளர்(த்தல)' 'இருதது' |
|---|---|---|---|

ஒரு வினையைக் காரண வினையாக்க -ஓ அல்லது -போ என்ற விகுதி பார்ப்பனா துளுவிலும் ஆ அல்லது பா எனற விகுதி மறறையோர் துளுவிலும உளளன. எ-டு.

| ஓது(o.du) | 'படி' | ஓதோ/ஓத்போ<br>ஓதா/ஓதபா | 'படிகக வை'<br>" |
|---|---|---|---|
| பூளு(bu lu) | விழு | பூளோ/பூளபோ<br>பூளா/பூள்பா | 'விழ வை'<br>" |

ஏவல் வினைமுற்றில முனனிலை ஒருமையையுணாத்த -ல எனற விகுதியும முன னிலைப் பன்மையினைக காட்ட -லெ எனற விகுதியும இமமொழியில உளளன. எ-டு.

| போ-ல | 'நீ போ' | போ-லெ | 'நீஙகள போவுஙகள' |
|---|---|---|---|
| ப-ல(ba-la) | 'நீ வா' | ப-லெ | 'நீங்கள் வாருஙகள' |
| கட்ல | 'நீ கட்டு' | கட்-லெ | 'நீஙகள கட்டுஙகள' |

எதிர்மறை வினைமுற்றில் -அ அலலது -அய் எனற விகுதி எலலாப் பாலகட்கும விகுதிகளின் முன்னா வருகிறது எ-டு:

| கலபயெ(Kalp-ay-E) | 'படியேன' | கலபய 'படியோம' |
|---|---|---|
| கலபய | 'படியாய' | கலபயரு 'படியீர்' |
| கல்பயெ(Kalp-ay-e) | 'படியான' | கலபயெரு 'படியாா' |
| கலபயளு | 'படியாள | |
| கல்பநது(Kalpand+) | 'படியா' | கலபய 'அவை படியா' |

காலங்காட்டும வினைமுற்றுகள 1) இறநதகால வினைமுறறு, 2) நிகழ்வெதிா கால வினைமுறறு, 3) எதிர்கால வினைமுற்று என அமைகினறன. இறநதகால வினை முற்று நிகழ இறந்தது (Immediate Past), முன்பே இறந்தது (Distant Past) என அமைந்துளளது.

துளு மொழியில நாட்டுப்புறப பாடலகளும் நாட்டுப் புறக் கதைகளும உள்ளன. மலையாள எழுத்துகள கி.பி.19-ஆம நூற்றாண்டுவரை இம் மொழிக்குப பயனபடுத தப்பட்டன. கனனட எழுத்துகளை கி.பி.1842 முதல் பயன்படுத்தி வருகினறனர். தனிபபட எழுத்துகளினமையின இம் மொழியில இலககியஙகள பெருமளவில தோற றம் பெறவில்லை. இவர்களுடைய நாட்டுப் புறப் பாடல்கள இயற்கை ஈடுபாட்டைப் பலப்புடுத்துகின்றன. சொற் சுருககம் வாயந்த இவர்களுடைய பழமொழிகள தத்துவ வளம நிரமபியவை. ஆர்.பா.

**துணை நூல்கள்:**

**Caldwell, Robert**, A Comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages University of Madras, Madras, 1956.

**Emeneau, M B**, The South Dravidian Languages JAOS, 87:365-413, 1967.

**Shankara Bhat, D N**, Descriptive Analysis of Tulu, Deccan College, Poona, 1967.

**Subrahmanyam, P.S.**, The Position of Tulu in Dravidian, Indian Linguistics, 29.47-65, 1968.

***திராவிட மொழியியல்:*** இந்தியாவில் காணப் பெறும் நான்கு மொழிக் குடும்பங்களுள் திராவிட மொழிக் குடும்பம் ஒன்றாகும். இம்மொழிக் குடும்பத்தினைச் சார்ந்த மொழிகளின் அமைப்பினை விவரிக்கும் பகுதியே திராவிட மொழியியல் (Dravidian Linguistics) எனப்படும். இந்தியமொழிக் குடும்பங்களுள் திராவிட மொழிக் குடும்பமே மிகவும் தொன்மையானது எனவும் இக்குடும்பத்தினைச் சார்ந்த மொழிகளைப் பேசுவோர் இந்தியா முழுவதும் பரவியிருந்தனர் எனவும் கருதப்படுகிறது.

**திராவிட மொழிகள்.** தமிழ், மலையாளம், குடகு, கோட்டா, தோடா, கன்னடம், துளு, தெலுங்கு, கோண்டி, கோண்டா, பெங்கோ, மண்டா, கூயி, கூவி, கொலாமி, நாய்க்கி, பார்சி, கடபா, குரூக்கு, மால்ட்டோ, பிராகூயி ஆகியன திராவிட மொழிக ளாகக் கருதப்படுகின்றன. படகா, கோயா, இருளா, எருகலா போன்றவை கிளைமொழிகளாகக் கருதப் படுகின்றன. சிலர் தனி மொழியாகக் கருதுவதனைச் சிலர் கிளைமொழியாகவும், சிலர் கிளைமொழியாகக் கருதுவதனைச் சிலர் தனிமொழியாகவும் கருதுவதால் அறிஞர்களிடையே திராவிட மொழிகளின் எண்ணிக்கையில் வேறுபாடு காணப்படுகிறது.

திராவிட மொழிகள் அவை வழங்கும் இடத்தை அடிப்படையாகக் கொண்டும், அம்மொழிகளின் மொழிக்கூறுகளில் ஏற்பட்டுள்ள மாற்றங்களின் பொதுமைப் பண்பினை அடிப்படையாகக் கொண்டும், அம்மொழிகளுக்கிடையே காணப்பெறும் அடிப் படைப் பண்புகளை அடியொற்றியும் தென்திராவிட மொழிகள் (South Dravidian Languages) எனவும், நடுத்திராவிட மொழிகள் (Central Dravidian Languages) எனவும், வடதிராவிட மொழிகள் (North Dravidian Languages) எனவும் பகுக்கப்பட்டுள்ளன. தமிழ், மலையாளம், குடகு, கோட்டா, தோடா, கன்னடம், துளு என்பன தென்திராவிட மொழி களாகவும், தெலுங்கு, கோண்டி, கோண்டா, பெங்கோ, மண்டா, கூயி, கூவி, கொலாமி, நாய்க்கி, பர்சி, கடபா என்பன நடுத்திராவிட மொழிகளாக வும், குரூக்கு, மால்ட்டோ, பிராகூயி என்பன வடதிராவிட மொழிகளாகவும் கருதப்படுகின்றன

திராவிட மொழிகளைத் திருந்திய மொழிகள் எனவும் திருந்தா மொழிகள் எனவும் இருவகையா கக் கால்டுவெல் பாகுபாடு செய்துள்ளார். திராவிட மொழிகளுள், தமிழ், தெலுங்கு, கன்னடம், மலை யாளம், துளு, குடகு ஆகியவை திருந்திய மொழி கள் எனக் கால்டுவெல் குறிப்பிட்டுள்ளார்.

தமிழ் மொழி தமிழ்நாட்டிலும், இலங்கை, பர்மா, இந்தோனேசியா, மலேசியா, சிங்கப்பூர், மொரீசியசு, பிசி (Fiji) போன்ற இடங்களிலும், மலையாள மொழி கேரளாவிலும், குடகு மொழி மைசூரிலும், கோட்டா, தோடா ஆகிய மொழிகள் நீலகிரியிலும், கன்னட மொழி மைசூர் மாநிலத்தி லும் மராத்தி நாட்டின் தென்பகுதியிலும், துளு மொழி மங்களூர்ப் பகுதியிலும் பேசப்படுகின்றன. தெலுங்கு மொழி ஆந்திர மாநிலத்திலும், கோண்டி மொழி நடுஇந்தியக் காட்டுப் பகுதிகளிலும், கோண்டா மொழி ஆந்திர மாநில எல்லையோரப் பகுதிகளிலும், பெங்கோ, மண்டா ஆகிய மொழிகள் ஒரிசாவிலுள்ள கோரபுட்டு மாவட்டத்திலும், கூயி மொழி ஒரிசாவிலும், கூவி மொழி ஒரிசா, ஆந்திரா ஆகியவற்றின் சில பகுதிகளிலும், கொலாமி மொழி மத்திய பிரதேசத்திலும், நாய்க்கி மொழி மத்திய பிரதேசப் பகுதிகளிலும், மராத்தி நாட்டுப் பகுதிகளி லும், பர்சி மொழி மத்திய பிரதேசப் பகுதிகளி லும், கடபா மொழி ஒரிசாவிலும் மத்திய பிரதேசப் பகுதிகளிலும் பேசப்படுகின்றன.

ஒராவோன் என்று குறிப்பிடப்பெறும் குரூக்கு மொழி பீகார், அசாம், வங்காளம், மத்திய பிர தேசம் ஆகியவற்றின் சில பகுதிகளிலும் மால்ட்டோ மொழி பீகார், வங்காளம் ஆகியவற்றின் சில பகுதி களிலும், பிராகூயி பாகிசுத்தான் நாட்டில் பலுச்சிசுத் தான பகுதிகளிலும் பேசப்படுகின்றன.

**திராவிட மொழிகளின் அமைப்பு**

**ஒலியனியல்:** மூலத்திராவிட மொழியில் ஐந்து உயிர்கள் அமைந்துள்ளன. இவற்றுள் முன்னுயிர் இரண்டும் (இ,எ) பின்னுயிர் இரண்டும் (உ,ஒ) நடு விடத்தாழ் உயிர் ஒன்றும் (அ) காணப்படுகின்றன. திராவிட மொழிகளில் உயிர் நீட்சி (Vowel Length) ஒலியன் தன்மையதாகும். மூலத் திராவிட மொழியில் காணப்பெறாத ஐ,ஔ ஆகியன கூட்டொலிகளாகக் (அ+இ=ஐ, அ+உ=ஔ) கருதப்படுகின்றன. பெரும்

பானமையான திராவிட மொழிகளில் உகரமும சில மொழிகளில் இகரமும அகரமும் ஒலிததுணையாகச் செயறபடுகின்றன

தமிழும, மலையாளததிலும காணபபெறும இகரமும உகரமும பெருமபானமையான இடஙகளில முறையே எகர, ஒகரமாகக் கனனடம, துளு, தெலுஙகு ஆகிய மொழிகளில (இலை>எலெ, உலை>ஒலெ) மாற்றமபெறுகினறன பெரும்பானமை யான திராவிட மொழிகளில் மூவிடப பெயாகளின எழுவாய வடிவஙகள வேறறுமையுருபினை ஏறகும் போதும (யான>என), சில வினையடிகள ஒட்டுக களை ஏற்கும் போதும காண>கண(டான), சில பெயர்ச் சொறகளிலிருநது வினைகள ஆக்கம் பெறுமபோதும (மீன>மின) சில பெயரடையடிகளில இருநது பெயாகளஆககம பெறும்போதும (கார> கரு) முதலசையில காணப்பெறும நெடில உயிா குறில உயிராக மாறறம் பெறுகின்றது.

சில வினைசசொறகளின அடிச்சொற்கள தொழிறபெயர்களாகச் செயறபடுஙகால அவற்றின் முதலசையிலுள்ள குறறுயிா நெட்டுயிராக (கெடு> கேடு; படு>பாடு) மாறறம பெறுகினறது பல திரா விட மொழிகளில குறிபபாகத தெலுஙகில உயி ரொலி இயைபு (harmonic sequence of vowels) காணப்படுகினறது. இரு உயிரொலிகள இணைநது வரும நிலையில விட்டிசையைத (hiatus) தவிர்க்க எலலாத திராவிட மொழிகளிலும் உடமபடுமெய் பயனபடுததபபடுகினறது

மூலத்திராவிட மொழியில க,ச,ட்,த்,ப,ற். என னும ஒலிப்பிலாத் தடையொலிகளும, ஞ,ண,ந,ம் எனனும் மூககொலிகளும் ய,ா,ல,வ,ழ,ள எனனும இடையின ஒலிகளும மெயயொலியனகளாக அமை யப் பெறறுள்ளன.

மூலததிராவிடக ககர ஒலி இ,ஈ,எ,ஏ, ஆகிய முன னுயிர்களை அடுதது வருமபோது தமிழ, தெலுஙகு, மலையாளமபோனற மொழிகளில இடையணணச சகர ஒலியாக (கிவி>செவி) மாறறம பெறுகினறது. மூலத் திராவிடக ககர ஒலி குருககு, மாலட்டோ, பிராகூயி போன்ற மொழிகளில இ,ஈ எனனும் இரு உயிர்கள தவிர்ந்த பிற உயிரொலிகளை அடுதது வரும்போது உரசொலியாக (Kan>Xan) (Khan எனறு எழுதப்படும) மாறறம் பெறுகினறது. மூலத திராவிட மொழியிலுள்ள மொழி முதல சகரம தென் திராவிட மொழிகளில (சணில்>அணில) கெட்டுவிடு கினறது. தெலுஙகு, கோணடா, கூவி, கூயி, பெஙகோ போனறமொழிகளில ஒலி இடம்பெயர்தல (Metathesis) பெரிதும (தமிழ: வரை தெலுஙகு: வராயி>ராயி) காணப்படுகினறது.

மூலத்திராவிட மொழி அசையின வாயபாடு (மெய்) நெடில உயிர் (மெய) என இருந்திருக்கலாம.

**உருபனியல்:** திராவிட மொழிகள் ஒட்டுநிலை மொழிகளாக (agglutinative languages) அமைந்துள ளன. அடிசசொல்லுடன சொலலாகக உருபுகளையும (derivational affix) சொலதிரிபு உருபுகளையும (inflectional affix) இணைப்பதன வாயிலாகச் சொற் கள அமையப பெறறுளளன. திராவிட மொழிகளின் அடிசசொறகள் பொதுவாக ஓரசைச் சொறகளாக அமைநதுளளன. மரபிலககண நூலகள நாலவகைச் சொறகள எனக் குறிப்பிட்டாலும திராவிட மொழி களில பெயர், வினை, பெயரடை, வினையடை, ஒரு நிலைசசொல (particle) என ஐநது சொல்வகைகள காணபபடுகினறன.

திராவிட மொழிகளில் பெயர்சசொறகள வேற் றுமை உருபினை ஏறறு வருகினறன. திராவிட மொழிகளில பெயாசசொறகளின அமைபபு 'அடிச சொல±எண/பால குறியீடு' எனற முறையில அமைந்துள்ளது. மூலததிராவிட மொழியில ஆண பால, ஆணபால அலலாதன, பலாபால, பலவினபால எனனும நாலவகைப பால்பகுப்பே அமையபபெறறி ருநதது. பெரும்பானமையான திராவிட மொழி களில காணபபெறும் பெணபால பிறகால வளாசசி யாகும. திராவிட மொழிகளில் ஒருமை, பனமை என இருவகை எண பகுப்புக காணபபடுகின்றது. வடதிரா விட மொழிகளிலும தெனதிராவிட மொழிகளிலும பனமையை உணாததப பலவின்பால் விகுதி கட்டாய மாக இணைக்கப்பட வேணடியதிலலை. ஆனால நடுததிராவிட மொழிகளில இவவுருபு கட்டாயமாக இணைககபபடல் வேணடும்.

பெரும்பானமையான திராவிட மொழிகளில ஒரே விதமான எணணுப் பெயாகளே காணப்படுகின் றன. மூலத்திராவிட மொழியில் காணப்பெறும் அனைத்து வேற்றுமைகளும் எலலாத் திராவிட மொழிகளிலும் காணபபடுகினறன. பெயாசசொற் கள் வேற்றுமை உருபினை ஏறகுஙகால் பெரும்பா லும் சாரியை பெறறு வருவதுணடு.

திராவிட மொழிகளில வினையடிகள கால உருபு களை ஏறறு வருகினறன. வினைச்சொற்களின அமைப்பு 'வினையடி±தனவினை/பிறவினை/இயககு வினை விகுதி கால ± விகுதி, எதிர்மறைவிகுதி+இட விகுதி+எண-பால விகுதி' என ஒனறோடொனறு ஒட்டி ஒட்டு நிலையாக அமைநது நிறகின்றன. திரா விட மொழிகளில் பெரும்பாலும் வினைப்பகுதியே ஏவல ஒருமையாகச் செயறபடுகினறன. வினைச சொற்கள முறறு வினை எனவும எசசவினை எனவும்

வகைபபடுத்தப்பட்டுள்ளன. திராவிட மொழிகளின வினைகளில வினைப பொருளகள (moods), வினைமை (aspect), வினைச் செயகை (voice) ஆகிய கூறுகள அமைநது வருவதுணடு. பெருமபானமையான நடுத் திராவிட மொழிகளில இறநதகால இடைநிலையு டன் எதிாமறை இடைநிலையும் இணைந்து வினை யமைப்புகள காணப்படுகினறன.

திராவிட மொழிகளில பெயரடைகளும் வினை யடைகளும் இவை சிறப்பித்து வரும பெயா, வினை களோடு எண, பால இயைபு கொணடு விளங்குவ தில்லை; மேலும் இவை காலங்காட்டுவதும் இல்லை. அடிச்சொல்லோ, அன்றி அடிச்சொல்லுடன விகுதி கள இணையப்பெற்றோ, திராவிட மொழிகளில பெயரடைகளும் வினையடைகளும் அமையப் பெற் றுளளன. சொல்திரிபு உருபுகளை ஏறறுவாரா அடிச சொறகளே ஒருநிலைச் சொறகள எனப்படும். அனைததுத திராவிட மொழிகளிலும ஒருநிலைச சொறகள் தொடர்நிலையில பொருளவேறுபாடு செய்வனவாக அமைந்துளளன.

**தொடரியல்:** திராவிடமொழிகளின வாக்கியத்தில் எழுவாய் முதலிலும, பயனிலை இறுதியிலும், செயப் படுபொருள இவற்றிடையேயும் இடம்பெறும. வாக் கியங்கள் தனிவாககியஙகள் எனவும, கலவை வாக் கியங்கள் எனவும் இருவகையாக அமையப்பெற்றுள் ளன. பயனிலையாக அமையும் வினைமுறறு வடிவம் எழுவாயோடு எண-பால் இயைபு கொண்டு விளங் கும். வினைச சொற்கள் மட்டுமன்றிப் பெயர்ச்சொற களும் திராவிட மொழிகளில் பயனிலையாக அமை வதுணடு.

திராவிட மொழிகளில பெயரடைகள் பெயர்ச் சொற்களுக்கு முன்னிடத்தனவாக அமைந்து பெயர்த் தொடரின உறுப்பாக விளங்குகின்றன. வினைய டைத் தொடர்கள் தனித்தியஙகும் ஆற்றல்பெற்றன. வினையடைகள பெயரடைகளைச் சிறப்பிக்கும் நிலை யில் இவை பெயர்த தொடரின் ஒரு பகுதியாகவே செயறபடும். ஆங்கில மொழியிலுள்ள இணைப்புப் பதிலிப்பெயருக்குப் (relative pronoun) பதிலாகத் திராவிட மொழிகளில் பெயரெச்சஙகளே பெரிதும் பயன்படுத்தப்படுகின்றன; சில சூழலகளில வினை யாலணையும் பெயரும்பயன்படுத்தப்பெறுவது உணடு.

திராவிட மொழிகளில் தொடர்களில் அமைந் துள்ள சொற்களுக்கிடையேயுள்ள உறவு உருபன் களை அடிப்படையாகக் கொண்டு அமையப்பெற் றுள்ளமையால் சொற்களின் அமைப்புமுறை நெகிழ்ச் சியுடையதாக அமைந்துள்ளது. எனவே, ஒருதொடரி லுளள சொற்களை மாற்றியமைத்தாலும் பொருள் மாறுபடுவதில்லை.

**திராவிட மொழிகளின் ஆய்வு:** ஒப்புமையுடைய மொழிகளை ஒரு குடும்பமாகக் கருதி அவற்றை ஒப் பிட்டு ஆயவு செயயும் முறை முதனமுதலில ஐரோப் பாவில் தோன்றியது. திராவிட மொழிகளை ஒப்பீடு செய்யும நிலையில முதலில தமிழ, மலையாளம், தெலுஙகு, கனனடம் ஆகிய மொழிகளே ஒப்பிடப் பெற்றன. எலலிசு எனபவர் கி.பி. 1816-இல தமிழ, மலையாளம, கன்னடம், தெலுஙகு ஆகிய வற்றுக்கிடையே காணப்பெறும ஒற்றுமைக் கூறு களைச் சுட்டிககாட்டி இவை ஒரே மொழிக் குடும் பததினைச் சாரநதவை என்று நிறுவினாா. சமசுக கிருத மொழியை ஆயவுசெயத இராசுக்கு என்பார் சமசுக்கிருத மொழியில காணப்பெற்ற திராவிட மொழிச் சொறகளை மலபார் மொழிச் சொற்கள் என்று குறிப்பிட்டார். கி.பி. 1884-இல இலாசர், வில்லியமகேரி, இசுடீவன்சன் (Stevenson) ஆகியோர் தென்னிந்திய மொழிகள் தனிக் குடும்பத்தினைச சார்ந்தவை எனறு குறிப்பிடடனர்.

காட்சன் என்பவர் கி பி. 1856-இல வட இந்தியப் பகுதிகளிலுளள பழஙகுடி மக்களின் பேச்சிலுள்ள சொற்களை ஆயந்து அவறறைத் தென்னிந்திய மொழிகளுககுரியன என்று சுட்டிக்காட்டினார்; அந்த ஆணடிலேயே காலடுவெல 'திராவிட மொழிகளின் ஒப் பிலக்கணம' எனனும நூலை வெளியிட்டுத் திராவிட மொழி ஒப்பியல ஆயவுத்துறைககு வலுவானதொரு அடிப்படையை அமைத்தார். அவருடைய ஒப்பாய்வு பெரிதும் தெனதிராவிட மொழிகளை அடியொற் றியே அமையபபெற்றுளளது. கால்டுவெல, மாக்சு முல்லர், சுகிரேடர் போன்றோர் திராவிட மொழி கள் சித்திய மொழிகளோடு தொடர்புடையன என்று குறிப்பிட் டனர்.

கிரியர்சன் கி.பி 1894-இல இந்திய மொழிகள் பற்றிய ஆய்வினை மேறகொணட நிலையில் அவர் உதவியாளர் சுடெனனோ (Stenknow) 1906-இல் திரா விட மொழிகள் பற்றிய கருத்துகளை வெளியிட்ட போது திராவிட மொழிகளின் ஒப்பாய்வு புத்துயிர் பெறத் தொடங்கியது. இக் களஆய்வின நான்காம் பகுதியில் திராவிட, முணடா மொழிகள இடம்பெற் றன. ஈண்டுக் கால்டுவெல குறிப்பிட்ட பனனிரண்டு மொழிகளோடு கொலாமி, நாய்க்கியை இணைத்துத் திராவிட மொழிகள் பதினான்கு எனக் குறிப்பிட் டனர். சுடென்னோ திராவிட மொழிகளைத் தமிழ்த் தொகுதி, தெலுங்குத் தொகுதி எனப் பகுத்தமையே திராவிட மொழிகளைப் பினனர் தென்திராவிட மொழிகள் எனவும் நடுத் திராவிட மொழிகள் எனவும் பகுப்பதற்கு அடிப்படையாக அமைந்தது. அதன் பின்னர்த் திராவிட மொழிகளின்

கிளைமொழிகள பற்றிய ஆய்வுகள பல மேறகொள் ளப்பட்டன, பிட் செரால்டு (Fiterzald) என்பவா 1913-இல கூயி மொழியினைத் திராவிட மொழிக குடும்பத்தின் கிளைமொழியாக நிறுவினார். தாமசு பரோ (Thomas Burrow) 1950-இல பாசி, பெஙகோ ஆகிய மொழிகளை ஆயநது அவறறைத திராவிட மொழிக் குடும்பததின தனிக் கிளைமொழிகளாக நிறுவினாா. பரோவின துணையாளர் பட்டாச சார்யா, கோணடா, கடபா ஆகியவற்றைத தனி மொழிகளாக நிறுவினாா. அககால கட்டததில் திராவிட மொழிகளைத் தெனதிராவிட மொழி கள, நடுத்திராவிட மொழிகள, வட திராவிட மொழிகள எனப் பகுத்தாயவு செய்யும நிலை தோனறியது.

திராவிட மொழிகளின் ஒலியியல, சொலலியல ஆய்வு சிறப்பாக வளாசசி பெற்ற போதிலும், தொட ரியல ஆய்வு சிறப்பாக அமையவிலலை என்று கூற லாம். ஏ.ஆ.

**துணை நூல்கள்:**

Agesthialingom, and Kumarasami Raja, N. (Edrs), Dravidian Linguistics (Seminar Papers), Annamalai Nagar, 1969.

Androeov, M., Dravidian Languages, Nauka Publishing House, Moscow, 1970.

Bloch, J., The Grammatical Structure of Dravidian Languages, Poona, 1956.

***திராவிடர்*** தெனனிந்தியாவில் தொன்று தொட்டு வாழ்ந்து வருகின்றவாகள திராவிடாகள ஆவார்கள். திராவிடர் என்னும் சொலவழககு மனு தரும நூலிலேயே காணப்படுகிறது இநதிய மக்கள அனைவரும் ஆசிரியர்-திராவிடர் எனனும இரு பகுப் புக்குள் அடககப்பட்டார்கள் எனபதும் ஓர் உணமை யாகும்.

'தமிழ்' மொழி கி.மு. 5000ககு முறபட்டது என்றும், அந்தத் தமிழ் எனனும சொல் திரிநது திரா விடம் என்றாகியது என்றும மொழிநூல் வலலார் தெரிவிக்கின்றனர். 'தமிழ்-தமிழம-தமிளம -த்ரமிளம -த்ரமிடம் - த்ரவிடம் - திராவிடம்' என்னும் படிப் படியான வளர்ச்சியை உறுதிப்படுத்துகின்றனர். திரா விடம் எனறால் தமிழ், தெலுங்கு, கனனடம், மலை யாளம், துளு ஆகியவற்றை இணைத்துக் குறிக்கும் சொல்லாகக் கருதப்படுகிறது. மேற்கணட மொழி களைப் பேசியோர் அனைவரும் திராவிடர் எனபதை யும ஆராயச்சியாளர்கள அனைவரும ஒப்புககொள கின்றனா.

தமிழா எனபது மொழியடிபபடையில அமைந்த பெயராகவும், திராவிடர் எனபது இனப்பெயராகவும கொளளபபடுகினறன. யுவான் சுவாங்கு போன்றவா களும் திராவிட நாட்டைப் பறறிய குறிபபுகளைத தநதுளளனர். முதனமுதலில் தமிழ, தமிழர், தமிழ கம் ஆகியவறறைக குறிக்கப் பயனபட்ட திராவிடம் என்னும் சொல, பினனாத் தெனமொழிக குடுமபத் தைக குறிபபதாகப பலராலும கொளளப்படுகிறது.

திராவிடாதம தொனமையும் பழமைநிலையும குறித்து மூனறு வகையான கருத்துகள நிலவுகின றன. 1) எகிபதியாககும மஙகோலியர்க்கும திரா விடாக்கும பழகக வழக்கஙகள சிலவற்றில் உள்ள ஒற்றுமைக் கூறுகளை மட்டுமே கொணடு எகிபது, மங்கோலியா போனற பகுதிகளே திராவிடரின் தாய கம எனக கூறுகினறனர். ஆயினும், பிற்கால ஆராய்சசி யாளாகள இநத ஒற்றுமைகள தறசெயலானவையே எனறு அறுதியிட்டு உரைககினறனர். 2) வேறு சிலர், மத்திய தரைககடற் பகுதிகளே திராவிடரின தாயகம எனறு கருதுகினறனர். மெசபடோமியா, பாபிலோனியா, சுமேரியா முதலிய மததிய தரைக கடல நாடுகளில உளள மககளின பணபாடும திரா விடர்தம் பணபாடும பல கூறுகளில ஒததிருபப தால இந்த முடிவுககு அவர்கள வருகினறனர். 3) மேற்கு ஆசிய மக்களாகிய 'மிட்டானி' 'ஈலமைட்டு' 'காஸைட்டு' முதலியோரின மொழிகட்கும திராவிட மொழிகட்கும இடையே உளள சில ஒற்றுமைகளைக் கொணடு திராவிடா தாயகம அதுவே எனனும் கொளகையை வலியுறுததுகினறனர். கடவுள வழி பாடு, கோயிலமைபபு, கோயிலகளில தேவரடியாா கூட்டததை நியமிப்பது முதலியவற்றில தமிழருக்கும் சுமேரியருக்குமிடையில சில ஒறறுமைகள் காணபபடு கினறன. பாம்பு வழிபாடு, கலலறைக குழிக கட்டிடங கள ஆகியவற்றில் தெனனிநதிய வழக்கஙகள மத்திய தரைககடல நாடுகளை ஒததுளளன. பாலததீனம், சைப்பிரசு முதலிய இடங்களில உளள பிணக்குழி களில கணடெடுககப்பட்ட பொருளகளைப் போலவே நெலலை மாவட்ட ஆதிசச நலலூரில் காணப்பட்ட முதுமக்கள தாழிகளிலும் பொனனால செய்த தலைக கட்டுகள, வாய்மூடிகள் முதலியவை காணப்பட்டுள என. மேலும முருகக் கடவுளின கைவேல், இரும்புக கொடிப்பட்டம், வெணகலத்தாலான கோழி உருவம் ஆகியவையும கிடைத்துளளன ஆனால் இவை பாலத் தீனம், சைப்பிரசு நாட்டுப் புதைகுழிகளில் காணப் படவில்லை. எனவே, ஒரு சில ஒற்றுமைக கூறுகளை மட்டுமே வைத்துக்கொண்டு குடிவழிகளை முடிவு

செய்ய இயலாது. தெனனிந்தியாவோடு நெடுங்கால மாகவே உரோமானியாகள போன்ற வெளிநாட்டவா பலர் கொணடிருந்த வணிகத் தொடாபுகளால இப்பொருளகள ஆங்குச செனறிருகக வாயப்புணடு. எனவே, திராவிடர்கள மததிய தரைககடல நாடுகளில இருநது தெனனகம நோக்கி வநதனா என பதை அறுதியிட்டுக கூற முடியவிலலை.

இந்நிலையில தமிழாகளின தாயகம் குமரிக்கணடமே எனபதைப பல ஆயவாளர்கள உறுதிபபடுததுகினறனா. 'இலெமூரியாவே மனித இனத்தின தொட்டில' (Lemuria is the Cradle of Mankind) எனறு எக்கேல எனனும மேலைநாட்டறிஞா கூறுகினறாா.

கி.மு. 200ககு முறபட்ட காலத்திலேயே முதற சங்கம் இருநத மதுரையும, இடைசசங்கம இருநத கபாடபுரமும் கடலால கொளளப்பட்டன. 'பஃறுளி யாறறுடன பனமலை யடுககத்துக குமரிக கோடும கொடுஙகடல கொளள' எனனும சிலப்பதிகார வரியும் இதனைத தெளிவுபடுத்தும.

குமரிநாட்டுத தமிழரின காலம் கி.மு. 5000ககு முறபட்டதாகும. ஆரியர் வருகை கி.மு 1500ஐ ஒட்டி அமைவதாகும. ஆரியா வடபுலம வநத காலத்தில திராவிடாகள வடபுலமெஙகும் பரவியிருந்தனா. பிறகு ஏறபட்ட நெருககடிகளால தெனபகுதி நோககித தளளப்பட்டனா 'ஆரியா வருகைககு முன இநதியா முழுவதும இருநதவர்கள திராவிடாகளே' எனறு எகபர்டு, இரிசிலி போனறோர் வலியுறுத்துகினறனர். இருக்குவேதம் உருவான காலததிலேயே சமசுகிருதம் பேசிய மககளுள கணிசமான பகுதியினர் திராவிட இனததவராகவே இருநதனா எனகிறாா கிலபர்ட்டு சிலேட்டர்.

சிநதுவெளி நாகரிகம குறித்தும் தெளிவுபடுததிக்கொளள வேணடும. காலததால முநதிய சிநதுவெளி நாகரிகம 5000 ஆணடுகட்கு முநதிய திராவிட நாகரிகமே என்றும அது இநதியாவின நாகரிக வளாசசியையே எடுததுககாட்டுகிறது என றும் அறிஞாகள கூறுகினறனர் சிநதுவெளி நாகரிகத்தின பெருமையை உணாநத ஈராசுப பாதிரியாா 'இசுபெயின நாட்டிலிருந்து வநதுளள ஒரு திராவிடனே நான' எனபதிலிருநது திராவிடாதம் கலை, நாகரிகம ஆகியவை இசுபெயின், இததாலி, எகிபது, கிரேககம ஆகிய நாடுகளில எலலாம பரவியிருநதன எனபதை உணரலாம. மேலும், சிநதுவெளி நாகரிகம குமரி முனை மககளோடு தொடாபுடையது எனபர் ஈராசுப் பாதிரியாா.

குமரிக்கணடத் தமிழாகள வடககு நோக்கிப் பரவிச்செனறு சிநதுச்சமவெளியிலும் குடியேறி அங்கு நாகரிகத்தை நிலைநாட்டினர். அதன் பின இவர்கள பலுச்சித்தான,சுமேரியா, எகிப்து போனற பகுதிகட்குச் செனறு நாகரிகம் பரப்பினர்.

வடபகுதிக கணவாய் வழியாக ஆரியர்கள் நுழைநது வடபுலததில தஙகி திராவிடர்களை வென்றும அவாகளோடு ஒனறியும் புது நாகரிகத்தைத் தோறறுவித்தனர். ஆனால, தென்பகுதித திராவிட மக்கள கடைசிவரைத் தம் தனிததன்மையைக் காதது நினறனா. திராவிடாகள தெனகிழக்குக் கடறகரை நாடுகளில் மட்டும அலலாமல கஙகை வரை பரவிய தெனனிந்தியப் பெருநிலப்பரப்பு வரையும் பரவி ஆணடு வந்தார்கள என்று காலடுவெல குறிப்பிடுவாா.

திராவிடர்தம சமயக் கருத்துகள ஆரியர்களின கருத்துகளுககு மாறுபட்டவையே. திராவிடர்தம் பூசைமுறையும, ஆரியர்தம ஓமம வளர்பபு முறையும் முறறிலும வேறுபட்டிருபபதைக் காணலாம். தாலி கட்டும முறை, மஞசள, குஙகுமம் இட்டுக கொளளுதல, இறைவழிபாட்டின பொழுது தேஙகாய் உடைத்தல, சடஙகுகளினபோது தாம்பூலம அளித்தல் முதலிய சிலவும திராவிடப பழககஙகள எனலாம. மேலும் அரிசி, மீன, இறைச்சி போனறவறறை விரும்பி உண்ணல இவர்தம உணவுபபழககஙகளாகும் சகுனம பாாத்தலும திராவிடர்களிடம் காணபபட்ட வழககமாகும.

ஒருகாலத்தில தென்பகுதியில் வாழநத பிராமணர், தமிழா ஆகிய அனைவருமே திராவிடர் எனக் குறிக்கபபட்டனர் கால்டுவெல காலததில பிராமணர்களை ஆரியா எனனும் சொல குறிக்குமெனபதும பிராமணரலலாதாரைத் திராவிடர் எனனும சொல குறிக்குமெனபதுமாகிய ஒரு வழக்கு நடைமுறைக்கு வநதது

திராடவிடாகள் தஙகள மீது படையெடுத்து வநத ஆரியாகளோடு கடும்போர் புரிய வேணடியிருநதது. இசசெய்தி இருக்கு வேதத்திலேயே பல சுலோகஙகளில உளளது எனறு மசூம்தாரும், இராமாயணக் கதை என்பதே ஆரியர்கள தெனனிந்திய தசயூககள அல்லது திராவிடாகளமீது படையெடுத்து வெறறி பெறறதைச் சித்திரித்துக காட்டுவதாகும் என்று சிதமபரம பிளளையும குறிப்பிடுவா. இதனைப் பி டி. சீனிவாசயயஙகாரும் உறுதிப்படுத்துகிறார். ஆரியர்களுள சுமசுகிருதம் பேசியவர்கள மட்டும இநதியாவின மேறகுக் கணவாய் வழியாக நுழைந்து வட இநதியாவை அடைநதாாகள. அங்குத தஙகளைவிட முனனேறறமான திராவிடர்களைக கணடு அவாகளிடமிருநது பல நாகரிகங்களைக் கற்றுக் கொணடனர் என எச்.சி. வெல்சு குறிப்பிடுகிறார். திராவிட

நாகரிகம எனும் பழம பெருமையினைத தென்னாட்டு மக்கள் காத்துவருவதாக விவேகானந்தர் குறிபபிடு கிறார்.

திராவிடர்தம மொழி, இந்திய-ஐரோப்பிய மொழிகட்கும் சிததிய இனத்தைச சேர்ந்த மொழி கட்கும் முறபட்டதாகும்.

திராவிட நாகரிகம் எனபது தனிததன்மை படைத்தது. ஆரிய நாகரிகத்திலிருந்தும வேறுபட்டது. எனினும, நாளடைவில இருவாதம் பழகக வழக்கஙகள, கொளகைகள் முதலியவை கலந்து போயிருக்கின்றன. 'புலால உணணாமை' எனனும் கோட்பாடு இனம் மாறி இடம மாறிவிட்டதாகவே தெரிகிறது தென்னிநதிய நாகரிகம் அடிபபடை அமைப்பில திராவிடரது நாகரிகமாகஇருப்பினும் சில துறைகளில ஆரியாதம் கருததுகளும் சேரபபெறறுச் சில மாற்றஙகளை அடைந்துளளது.

இப்போது திராவிடர் எனனும சொலவழககு மொழியால, மாநில எல்லைகளால, உணாவுகளால மாறிப்போயவிட்டது எனறாலும, அதன தொன்மைச் சிறப்பையும, வரலாறறுப் பினனணியையும் உலக அரஙகில் அதறகென உளள இடத்தையும் யாரும மாறறிவிட முடியாது. மு.த.

***திரான்சில் வேனியா***: ஐரோப்பாவில உருமேனியா (Rumania) நாட்டின நடுப்பகுதியில உளள ஒரு மாநிலம. இதன பரபபு 55,146 ச.கி மீ. திரான சில்வேனியா (Tran-syl-vania) 305 முதல் 488மீட்டர் உயரமுளள ஒரு பீடபூமிப் பகுதி இதைத் தெறகில திரான்சிலவேனியா ஆலப்சு, இவாலேசியாபபகுதியினின்றும் கிழககில் காாப்பேததியன மலைததொடர், மோலடேவியா புனோவினா பகுதிகளினின்றும பிரிககினறன. உருமேனியாவில மிகவும் சிறப்பு வாய்நத முன்னேற்றப் பகுதிகளில் திரானசிலவேனியாவும் ஒனறாகும். மூர்சூல் (Muresul) ஆறும், தானயூபு நதியின வேறு சில கிளை ஆறுகளும இப்பகுதியை வளப்படுத்துகின்றன. பல தாதுப்பொருள்கள இப்பகுதியில கிடைக்கின்றன. பழுபபு நிலககரி, இரும்பு, ஈயம், மஙகனம், தஙகம், செமபு, உபபு, கநதகம், எரிவளி முதலியன இங்கே கிடைபபதால பல்வேறு தொழில்கள வளர்சசி அடைந்துளளன. இரும்பு எஃகு, இரசாயனப பொருள்கள, துணி வகைகள முதலிய தொழிற்சாலைகள சிறப்பாகக குறிப்பிடத்தக்கன. வேளாணமை, ஆடு மாடு வளர்த்தல, மது தயாரித்தல், பழ வகைகள உறபத்தி ஆகியனவும் நடைபெறுகின்றன.

இங்கு அங்கேரிய (Hungarians) மக்களும் செருமானியரும் குறிப்பிடத்தகக சிறுபான்மையினராக



திரான்சிலவேனியா ஆப்பிள பணணை

வாழ்கின்றனர். தவிரச சில யூதர்களும் சிப்சி (Gipsies) களும இருக்கினறனா.

**வரலாறு**: இபபொழுது திரான்சிலவேனியா எனப்படும பகுதி முறகாலததில தேசிய பேரரசு (Dacian Kingdom) எனப்பெயர் பெறறிருந்தது. உரோமானியர் இதை வெனறு, கி.பி 107-இல் தமது பேரரசின் ஒரு மாநிலப் பகுதியாககினர். பிறகு கி பி. 271-இல் இது விசிகாதியரின (Visi-Goths) கீழவந்தது. பினனர், கி.பி. 10-ஆம நூறறாணடு வரை, ஹுணர்கள் (Huns), கெபிடேயர்கள (The Gepidae) அவாரியர் (Avars), இசுலாவியர் (Slavs) முதலிய பலரின் படையெடுசசிகள இஙகு ஏற்பட்டன. கி.பி.10-ஆம் நூறறாணடில மாகியா இனத்தவர் (Magyar tribes) முதன் முதலாக இஙகுப் புகுந்தனா. முதலாம இசுடீபன (Stephen)எனற மனனன் இப்பகுதியை அங்கேரிய முடியாட்சியின்கீழ்க கொண்டுவநதான். செருமானியக் குடியேற்றஙகள கி பி. 12,13ஆம நூற்றாணடுகளில் இங்கு ஏற்பட்டன. வாலேசியர் (Wallachians) எனப் பெயா பெற்ற உருமேனிய இனததவர், கி.பி 1222 -இல் இங்கு இருந்தனர்.

துருககியர், கி.பி 16-ஆம் நூற்றாணடில் மத்திய அஙகேரியை வென்றபின, திரானசில்வேனியா ஓரளவு விடுதலை பெற்றது. இங்கு மேலாணமை செலுத்த ஆசுத்திரியரும் துருக்கியரும் இரண்டு நூற்றாண்டுகள் தம்மிடையே போட்டியிட்டனர். இசுடீபாபன்க்சுகே (Stephen Bocskay) எனபவன் கி.பி. 1604

-இல்ஆசுத்திரிய ஆட்சியை எதிர்த்து ஒரு புரட்சிக் கலபகம் செய்தான். ஆசுத்திரியப் பேரரசர் அவனை கி.பி. 1606–இல் ஓர் இளவரசன் என்று ஏற்றுக்கொண்டார். ஆசுத்திரியாவின் மேலாண்மை கி.பி.1711-இல் திரான்சில் வேனியா முழுவதும் ஏற்பட்டது. இளவரசர்களுக்குப் பதிலாக ஆசுத்திரிய ஆளுநர்களின் ஆட்சி அங்கு அமைந்தது. உருமேனியர்களின் கிளர்ச்சி அடிக்கடி ஏற்பட்டு வந்தது அங்கேரியர், கி.பி.1848-இல் தமது விடுதலையை அறிவித்தபொழுது, அவர்கள் நடத்திய கலகங்களை அடக்க, ஆசுத்திரிய–உருசியப் படையினருக்கு உருமேனியர் உதவினர். திரான்சில் வேனியா, கி.பி.1867-இல் அங்கேரியின் ஒரு பகுதியாக ஆக்கப்பட்டது. முதலாம் உலகப் போருக்குப்பின் திரான்சில்வேனியாவிலிருந்த உருமேனியர் உருமேனியா நாட்டுடன் ஒன்று சேர்வதை விரும்பிக் கலகங்கள் செய்தனர். உருமேனியா, திரான்சில்வேனியாவைக் கைப்பற்றிக் கொண்டது. பின்னர், 1920-இல்ஏற்பட்ட உடன்படிக்கைப்படி அங்கேரி, திரான்சில்வேனியாவை, உருமேனியாவிற்கு வழங்கியது. இரண்டாம் உலகப்போர்க் காலத்தில், (1940–இல்) அங்கேரி வடக்குத் திரான்சில் வேனியாவைக் கைப்பற்றியது போருக்குப்பிறகு அதைத் திருப்பிக் கொடுத்து விட்டது.

தெ.பா.

***திரான்சுகாகேசியா***: இது சோவியத்துச் சமஉடைமை ஒன்றியக் குடியரசில் அடங்கியுள்ள குடியரசுகளுள் ஒன்றாக இருந்தது. வடக்கே பெரியகாகசசு மலைத் தொடரும், தெற்கே துருக்கி, ஈரான் நாடுகளும், மேற்கே கருங்கடலும், கிழக்கே காசுபியன் கடலும் இதன் எல்லைகளாக அமைந்துள்ளன. இதன் பரப்பளவு 186100ச. கி.மீ. காகசசு மலைத் தொடரிலுள்ள பனிக்கட்டிப் பாளங்களால் மூடப்பட்ட சிகரங்களைக் கொண்ட எரிமலைகள் 500மீ. உயரம் வரை உள்ளன.

**மக்கள்தொகை**: உருசியாவில் 1970-இல் எடுக்கப்பட்ட மக்கள்தொகைக் கணக்கீட்டின்படி, திரான்சுகாகேசியாவில் (Transcaucasia) வசிக்கும் மக்கள் தொகை 22,800,000ஆகும். பெரும்பாலான மக்கள் முக்கிய நகரங்களாகிய பக்கு (Baku), எரவான் போன்ற இடங்களில் வாழ்கின்றனர்.

**பொருளாதாரம்**: பெரிய காகசசு, சிறிய காகசசு ஆகிய மலைகளுக்கிடையேயுள்ள திரான்சுகாகேசியா என்று சொல்லப்படும் பள்ளத்தாக்கு இலிக்ட்சி மலைகளால் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்படுகிறது. மேற்குப் பகுதித் தாழ்ந்த நிலத்திற்குக் கொகிதா என்றும், கிழக்குப் பகுதித் தாழ்ந்த நிலத்திற்கு குரா ஆராசு என்றும் பெயரிடப்பட்டுள்ளது. கொகிதாப் குதியின் மிதமான தட்பவெப்ப நிலை தேயிலையும், பழவகைகளும் பயிர் செய்யத் துணைபுரிகிறது. கிழக்குப் பகுதியில் உழவுத்தொழில் செய்ய வேண்டிய நிலை உள்ளது. குராஆராசில் எண்ணெய்க் கிணறுகள் கொண்ட அடுக்குமலைகளும், பீடபூமிகளும், உள்ளன. மங்கனம், செம்புப் போன்ற தாதுப் பொருள்கள் பெருமளவில் கிடைக்கின்றன. சார்சியாப் பகுதியில் கற்களும், தர்பாசு என்ற சிவப்புக் கற்களும் மிகுதியாகக் கிடைக்கின்றன. இது வெண்கல வேலைப்பாட்டிற்கும் புகழ்பெற்ற இடம். இங்குள்ள சத்துப்புக்கள் கரைந்த நீர் ஊற்றுகள் புகழ்பெற்றவை. திரான்சுகாகேசிய மலைத்தொடரில் உள்ள ஒசெரோசேவான் என்ற ஏரியிலிருந்து மிகுந்து வெளியாகும் நீர் இராசதான் ஆற்றில் பெருகி ஓடி பல மின்நிலையங்களில் மின்சாரம் உற்பத்தி செய்யப் பயன்படுகிறது. ஆர்மேனியப் பகுதியில் உழவுத் தொழிலுக்கும் இந்நீர் பயன்படுத்தப்படுகிறது.

**வரலாறு**: பண்டைய காலத்திலிருந்து இப் பகுதி ஐரோப்பாவிற்கும், ஆசியாவிற்கும் ஒரு பெரும் தொடர்பாக அமைந்துள்ளது. மெசபடோமியா நாகரிகம் இதன் வழியாக வடக்கே பரவியது.

ஆர்மேனியா, சார்சியா, அசர்பெய்சான் ஆகிய இடங்களை ஒன்று சேர்த்து 1918-இல் திரான்சுகாகேசியா கூட்டரசுக் குடியரசு நிறுவப்பட்டது. ஆனால் அடிப்படை வேற்றுமை காரணமாக அவை உடனே தனிக்குடியரசுகளாகப் பிரிந்தன. இம்மூன்றும் 1922 -இல் மறுபடியும் ஒன்று கூடித் திரான்சுகாகேசியா கூட்டமைப்புச் சமுதாயக் குடியரசை நிறுவி, உருசிய நாட்டின் ஒரு பகுதியாயிற்று. பின்னர் ஏற்பட்ட அரசியலமைப்பு மாறுதலின்படி, 1936-இல் திரான்சுகாகேசியக் குடியரசு மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. அவையாவன: (1)ஆர்மீனியன் சோவியத்துச் சமஉடைமைக் குடியரசு (2) அசர்பைசான் சோவியத்துச் சமஉடைமைக் குடியரசு 3)சார்சியன் சோவியத்துச் சமஉடைமைக் குடியரசு.

கி.பி.

***திரான்சுசார்டன்***: ஆசியாவின் தென்மேற்குப் பகுதியிலுள்ள ஒரு நாடு. இது சார்டன் என்று சொல்லப்படுகிறது. இந்நாடு சார்டன் நதியினால் பாலத்தீனத்திலிருந்து பிரிக்கப்படுகிறது. சார்டன் நதி எர்மன் (Herman) மலைச்சரிவுகளில் தோன்றிக் கலிலிக் கடல் (Sea of Galilee), இரிப்ட்டு பள்ளத்தாக்கு (Rift Valley) ஆகியவைகளின் வழியாகச் சென்று சாக் கடலில் (Dead Sea) கலக்கிறது. சார்டன் வற்றாத நதி. இந்நாட்டின் ஆவணப் பெயர் (Official Name) அசிமைடு சார்டன் அரசு (The Hashemite Kingdom




திரானசுசார்டன் அமைவிடம்

of Jordan) எனப்படும். தலைநகரம் அம்மன் (Amman) இதன் பரப்பளவு 354,830 ச.கி.மீ. வடக்கே சிரியாவும் (Syria), வடகிழக்கே ஈராககும் (Iraq), கிழக கும் தெற்கும் சௌதி அரேபியாவும் (Saudi Arabia), மேறகே இசுரேலும் (Israel) எலலைப்புற நாடுகளாம்.

திரான்சுசார்டனின் பெரும்பகுதி பாலைவனம்; பல குன்றுகளும் கரடுமுரடான மலைகளும் நிறைந் துள்ளன. மழையே கிடையாது, கோடைக் காலததில பகல்நேரம் வெப்பமாகவும், இரவு நேரம குளிர்சசி யாகவும் இருக்கும. மாரிக்காலத்தில மிகவும் குளிாசசி யாக இருக்கும் மலைகள்மீதும் சமவெளியிலும அடிக் கடி பனி மூடியிருக்கும். வடமேறகுத் திரானசுசாாடன பகுதி வளமான பகுதியாகும். இஙகுக் கோதுமை, பாாலி, திராட்சை ஆகியவை பயிரிடபபடுகின்றன. ஆடு, மாடுகள் வளர்க்கப்படுகின்றன. ஆலிவ் எண்ணெய் தயாரிப்பு, துணி நெசவு, புகையிலையிலிருந்து பல பொருள்களைத் தயாரித்தல் ஆகிய தொழிற்சாலை களில மக்கள் வேலை செய்கின்றனர். எரியகி (Phosphates), மர உப்பு (Potash) போன்ற தாதுப்பொருள களும்கிடைக்கின்றன. தெற்குப் பகுதியில் எணணெய்க கிணறுகள் உள்ளன. சுற்றுலாப் பயணிகள (Tourists) 2,50,000க்கு மேல் (1971-கணக்கினபடி) இங்கு வநதுள ளார்கள். தலைநகராகிய அம்மனிலிருந்து நாட்டின் பல இடங்களுக்குப் பயணிகள செல்கினறனா. புகை வணடி மூலமாக அம்மனிலிருந்து அணமை நாடாகிய சிரியாவுக்குச் (Syria) செல்கின்றனர்.

இஙகு அராபியர்கள் வாழ்ந்து வருகினறனர். அவர்களில முசுலிம் அராபியாகள, கிறித்தவ அராபி யர்கள, இவர்களுக்குச் சமமாகச் சிர்காசியனசு (Circassians) இனத்தாா ஆகியவர்கள அடஙகுவர். அராபியா களுள பெரும்பாலோா பிதெளனசு (Bedouins) அல்லது நாடோடிகள. நிலையாக வாழவதற்கு வீடுகள இலலாததால இவாகள தஙகளுடைய ஆடு, மாடுகளு டன புதிய புல்வெளியைத் தேடி ஊர் ஊராகச் செல்வா.

**பழங்காலத்தில் சார்டன்**· விவிலிய நூலில (The Bible) சார்டன அடிக்கடி குறிபபிடபபடுகிறது. இசு ரேல் குழந்தைகள், சார்டனிலிருந்து வெளியேற்றப் பட்டு 'உறுதி கூறும் நிலம்' (Promised Land) எனப் படும் பாலத்தீனத்திறகு அழைததுச செல்லபபட்ட னர் என்பா. கிரேக்கர்களும் உரோமானியர்களும எகிப்தியர்களும வெவ்வேறு காலஙகளில இந்த இடத் தைத் கையகப்படுததிக் கொணடனர். ஏறக்குறைய 450 ஆணடுகளுககு முன உதுமானியத் (Ottoman) துருக்கியாகளுடைய மேலாணமையின கீழ இது இருநதது. முதலாம் உலகப்போர் வரை இது துருககி நாட்டின பகுதியாக இருந்தது.

திரானசுசார்டன் 1921-இல தோற்றுவிக்கப்பட் டது. எசாவின் (Hejah) முனனாளைய அரசனின இரண்டாம் மகனும, இராககின அரசன் பைசலின மூத்த சகோதரனுமான (Second Son of the Ex-king of Hejah and Elder Brother of King Faisal of Iraq) எமிர் அப்துலலா இபுஉசெயின (Emir Abdullah Ibu Hussain) எனபவர் பிரிட்டனின பாதுகாப்புடன ஆட்சி செய்தார். தலைநகர் அம்மனில் ஆஙகிலப பிரதிநிதி ஒருவா இருநதாா. ஆஙகில விமானப படையொனறு நிறுத்தி வைக்கப்பட்டது. சார்டன கி.பி. 1946 வரை ஆங்கில அரசுககுட்பட்டு ஆளப் பட்டது. அதே ஆணடில செயதுகொணட உடன படிக்கையினபடி திரானசு சாாடன ஒரு விடுதலை நாடு என்று இங்கிலாந்து ஏற்றுக் கொணடது.

புதிய குடியரசு நாடாக 1948-இல் இசுரேல் உருவாவதைச் சாாடன் அரசு எதிாத்தது. இசு ரேல் சார்டன் எல்லைகளில போர் நடந்து கொண்டேயிருநதது. பின 1950-இலிருநது போர் மும்முரமாக இல்லை. சமாதானம் செய்து கொளளப் பட்டது. அதன விளைவாகச் செருசலம் நகரம் இவவிரு நாடுகளுக்கிடையே பிரித்துக் கொள்ளபபட்டது.

அரசியலமைப்பின் அடிபபடையில் முடியாட்சி சாாடனில் நிறுவப்பட்டது. உசெயின் கி.பி. 1953 -இல் சார்டனின் மன்னரானார். சார்டனின ஆளவை மன்றம் சிறப்புடையவர் மன்றம் (House of

Notables) எனப்பட்டது. மன்னரால் தேர்ந்தெடுக்கப்பட்ட 30 பேர்கள் இதில் உறுப்பினர்களாக இருந்தனர். பேராளர் சபையில் (House of Representatives) மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட 60 பேர்கள் உறுப்பினர்களாக இருந்தனர்.

திரான்சுசார்டன கி.பி. 1958-இல் அரேபியக் கூட்டு நாடுகளிலுளள ஈராக்குடன் சேர்ந்தது. ஆனால் ஓராண்டுக்குள ஈராக்கு அரசாங்கத்தை ஒரு புரட்சி தூக்கியெறிநதது. ஆகவே அதன் உறவைச் சார்டன் முறித்துக்கொண்டது. சார்டன் எட்டு மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டது. அவை அம்மன் (Amman), இர்பித்து (Irbid), பல்கா (Balga), கராககு (Karak), மனன் (Maan), செருசலம் (Jerusalem), எப்ரன் (Hebron), நப்லசு (Nablus) என்பவையாகும். இதிலுள்ள கடைசி மூன்று மாவட்டங்களுக்கும் மொத்தமாக மேலை வங்கி (West Bank) எனப்பெயரிட்டனர்.

சார்டன் கி.பி. 1967-இல் நடந்த ஆறு நாட் போரில் நான்காம நாளில இசுரேலால் தோற்கடிக்கப்பட்டது. இப்பொழுது திரான்சுசார்டனில் எடோம் (Edom), கிலீட்டு (Gilead), மோ ஆப் (Moab), முதலிய பகுதிகளும், பழைய பாலத்தீனத்தின் சில பகுதிகளும் அடங்கியுள்ளன.

அசிமைடு சார்டானிய அரசின் மக்கள்தொகை (1982-ஆம் ஆண்டுக்குரிய கணக்கினபடி) சோர்டான் ஆற்றுக்குக் கிழக்குப்பகுதியில் 2.25 மிலியனும்; மேற்குப் பகுதியில் 1.25 மிலியனும் ஆகும். அ.கே.

***திரான்சுவால்***: தென் ஆப்பிரிக்கக் குடியரசின் வடகிழக்குப்பகுதியிலுள்ள ஒரு மாநிலம் திரான்சுவால் (Transvaal), வால் (Vaal) நதியைக் கடந்து சென்று தோன்றுவிக்கப்பட்ட மாநிலம் ஆதலால் திரான்சுவால் எனப்பெயர் பெற்றது. இதன நிலப் பரப்பு 262, 499 சதுரக் கிலோ மீட்டர்; மக்கள் தொகை 8,350,500 (1980) தலைநகரம் பிரிட்டோரியா (Pretoria). இது தென் ஆப்பிரிக்கக் குடியரசின் தலை நகரங்களுள் ஒன்றாகும். இதன பெரும்பகுதி வெல்டு (Veld) என்கிற புல்வெளி நிறைந்த பீடபூமி. இது தெற்கில் விட்வாட்டர்சுடாண்டு (Witwatersrand) மலைத்தொடரை ஒட்டி உயர்ந்துள்ளது. இம்மலைத் தொடர் ஆப்பிரிக்க மொழியில் வெள்ளைத் தண்ணீர் மலைத்தொடர் (White Water ridge) என்று பொருள் படும். இலிம்போபோ (Limpopo), வால் (Vaal) ஆகியவை முக்கிய ஆறுகளாகும் பெரும்பான்மைப் பழங்குடிகள் பாண்டுக்கள் (Bantus) என்பவர்கள். இங்குத் தாதுவளம் மிகுதி. முக்கிய தொழில் தங்கச் சுரங்கங்களிலிருந்து தங்கத்தை வெட்டி எடுத்தல். உலகில் பொன் மிகுதியாகக் கிடைக்கும் இடங்களில் இதுவே முதன்மையானது. தலைநகரான பிரிட்டோரியாவுக்கு அருகில் வைரம் கிடைககிறது. மற்றும் உரேனியம், நிலக்கரி, வெள்ளி முதலியனவும் கிடைக்கின்றன. உழவு தொழில் சுரங்கத தொழிலுக்கு அடுத்ததாகும்.

ஆஙகிலேயர்கள் கி.பி. 19-ஆம் நூறறாண்டின் தொடக்கத்தில் (1815) கேப் குடியேற்றத்தில (Cape Colony) ஆட்சி செய்தபோது, அவாகளுக்கு முன் அங்குக் குடியேறிய 25,000 தசசுக்காரர்கள வேளாண்மை செய்து வந்தனர். தச்சுக் குடியேறிகளைப் போயர்கள் (Boers) எனறு பிரித்தானியர்கள் குறிப்பிட்டனர். தஙகளை ஆஙகிலேயர்கள் அடக்கி ஆளவதைப போயர்கள் விரும்பவிலலை

ஆங்கிலேயர்கள் கி.பி. 1833-இல் தங்கள ஆதிக்கத்தின்கீழ உளள இடஙகளில் அடிமை வாணிகத்தை ஒழித்ததால், போயர்கள ஆங்கில அரசை விரும்பவில்லை. ஆகவே, போயர்கள கேப் குடியிருப்பிலிருந்து வெளியேறினர். போயர்கள கி.பி. 1836-லிருந்து 1856 வரை கேப் குடியிருப்பிலிருந்து வெளியேறி வடகிழக்குத் திசையாக நடந்து சென்ற நிகழ்ச்சியைப பெரிய நீணடதூரப்பயணம (The Great Trek) என்றுகுறிப்பிடுகின்றனர். வெகுதூரப் பயணம் செய்த போயர்கள் திரான்சுவால, ஆரஞ்சுச் சுதந்திர நாடு (Orange Free State) ஆகியவற்றைத் தோற்றுவித்தனர்.

திரான்சுவாலில் வசித்து வந்த போயர்களை அண்டையில் உள்ள சூலு (Nulu) மரபினர் தாக்கி வந்தார்கள். போயர்கள தஙகளைப் பாதுகாத்துக் கொள்ள ஆங்கிலேயர் உதவியை நாடினர். ஆங்கிலேயர் கி.பி. 1877-இல திரான்சுவாலைத் தஙகளுடைய ஆதிக்கத்தினகீழ்சேர்த்துககொணடதாக அறிவித்தனர். அதோடு சூலு மரபினரையும் தோற்கடித்தனர். நான்காண்டுகளுக்குப் பின்கி.பி. (1881) திரான்சுவாலில் போயர்கள் தங்களுடைய சுதந்திரத்தைத் திரும்பிப் பெறக் கிளர்சசியில் ஈடுபட்டு மசூபா மலையில் இருந்த பிரித்தானியப் படையைப் புறங்காட்டி ஓடச் செய்தனர். பிரிட்டோரியாவில் நடந்தகூட்டத்தின்விளைவாக இஙகிலாந்தின பிரதமர் கிளாடுசுடன் (Gladstone) திரானசுவாலுக்குச் சுதந்திரம் வழங்கினார். திரான்சுவால் ஒரு குடியரசு நாடாகியது. இதனையே தென் ஆப்பிரிக்கக் குடியரசு என்றனர்.

திரான்சுவாலில் கி.பி. 1883-இல் தங்கச் சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. திரான்சுவாலில் தங்கச் சுரங்கங்களின் மையமாகிய சோகனசுபர்க்குகு (Johannesburg) ஆயிரக்கணக்கான பிரித்தானியர்கள வந்து சுரங்க வேலையில் ஈடுபட்டனர். திரான்சுவா

லின மககள தொகையில் கி பி 1896-ஆம் ஆண்டில 50 விழுக்காட்டிறகு மேல் ஆஙகிலேயர் இருந்தனா.புதிய தாகக குடியேறிய ஆங்கிலேயர்களைப போயாகள விரும்பவிலலை. போயர்கள அவாகளை 'உயிட்லாணடர்கள்' (Uitlanders) அல்லது'வெளிநிலததாா' (Outlanders) எனறு குறிபபிட்டனர். திரானசுவா லின் குடியரசுத தலைவா பாலகுரூகர் (Paul Krugar) அவர்களுககு எலலா அரசுரிமையையும வழஙக மறுத தார். அவாகளிடமிருந்து சுங்க வரியை வசூலிததாா. நாளுககுநாள நிலைமை மோசமாகியது. வெளி நிலததார் கேப குடியேறறத்தின பிரதமா சிசில ரோட்சு (Cecil Rhodes) எனபவருடன இரகசியமா கப பேசித் திரானசுவாலில புரட்சி செயயத் திட்டமிட்டனா. புரட்சியாளாகளுக்கு உதவி செயயத தயா ராக இருநத ஆஙகிலப படை சேமசன (Jameson) தலைமையில திரானசுவாலின எலலையைக் கடநத போது போயாகள சேம்சனைக் கைது செய்தனா. சிசில ரோட்சு கேப குடியேற்றததின பிரதமா பதவியைத் துறநதார்.

திரான்சுவாலின குடியரசுத தலைவா வெளி நிலத்தார்களுக்கு மிகவும தொந்தரவுகள் கொடுத தார். திரானசுவாலில் வசித்து வநத 20,000 ககும மேற்பட்ட ஆஙகிலேயர்கள ஒரு மனுவை இஙகிலாநது அரசி விகடோரியாவிடம் கொடுத்தனா. அதன் விளைவாக கி பி. 1891-இல் பிளொயெமபோன்டீனில (Bloemfontein)மகாநாடு கூட்டபபெற்று வெளி நிலத்தார்களுக்குககுடிமககள உரிமைகளைக கொடுக்க வேண்டுமெனபது வறபுறுத்தப்பட்டது. ஆனால, குருகர் (Kruger) மறுத்தாா. இவா கேப குடியேறறததிலுளள ஆங்கிலேய ஆதிக்கததை ஏற்றுககொளளவும மறுத்தாா. ஆங்கில அரசு தன் படைகளைக் கேப் குடியேற்றத்தில் குவிப்பதைக் கண்ட குருகா போா தொடுத்தாா. இநதப் போரை ஆஙகிலேயா போயர் போா என்று குறிப்பிட்டனர். இந்தப் போர் கி பி. 1899-ஆம் ஆண்டு அகடோபர் 11-ஆம் நாள தென ஆப்பிரிககக் குடியரசு எனகிற திரானசுவாலுககும இஙகிலாந்துக்கும் இடையே நடைபெற்றது.ஆரஞ்சுச சுதந்திர அரசில உளள போயர்கள திரானசுவாலிலுளள போயர்களுடன் சேர்ந்து போர் செயதனர். போயர்கள் நேட்டால்மீது படையெடுத்து 'இலேடீசுமித்தை' (Ladysmith) முற்றுகையிட்டனர். ஆனால், திரான்சுவாலின் தலைநகர் பிரிட்டோரியா மற்றும் சோகன்சுபர்க்கு, பிளோயெம்போன்டீன நகரஙகள ஆங்கிலேயர்களால் கைப்பற்றபபட்டன. திரானசுவாலும் ஆரஞ்சுச் சுதந்திரநாடும் பிரித்தானியப் பகுதியோடு இணைக்கப்பட்டன. இந்தப் போா 1900 செப்டம்பர் மாதத்தில் முடிவடைந்தது போயர்கள் சரணடைந்தனர். போயர்களுடைய தலைவர்களான இசுமட்சு (Smuts), டீ வெட் (DeWet), போதா (Botha) ஆகியோா கொரிலலாப் போரைச செயதனர் அவாகளும 1902-மாாச்சில சரணடைநதனா. அதே ஆணடு மே மாதததில வீரிநிககிஙகு உடனபடிககை (Vereeniging Treaty) செயதுகொளளபபட்டு ஆஙகில அரசின மேலாணமையைத் திரானசுவாலிலும் ஆரஞ்சுச் சுதநதிர அரசிலும வசித்த போயாகள ஏற றுக் கொணடனா ஆஙகிலேயாகள அநநாடுகளுககுத் தனனாட்சியைக கொடுததுப போயர்களுடன நட்பாக வாழநதனா. அ கே.

**திரிகடுகம்**: இது பதினெணகீழ்க் கணக்கில் இடம பெறறுளள ஒரு நூலாகும். சுககு, மிளகு, திபபிலி ஆகிய மூனறு மருநதுப பொருளகளால் ஆன சூரணம் எவ்வாறு உடல நோயை நீககுமோ அவவாறே இந நூலின பாடல ஒவவொனறிலும அமைநதுளள மூனறு அறககருததுககளும உளள நோயை நீக்கும் தனமையன வாகும. இவவரிசையில சிறுபஞசமூலம, ஏலாதி எனற நூல்கள அமைநதுளளன அவை பெயர் அமைந்துளள வகையிலும், நீதிக கருததுகளை அமைததுக் கூறும முறையிலும மிகுதியும ஒப்புமையுடையனவாகும திரிகடுகம சுககு மிளகு திபபிலி எனபது திவாகரமாகும.இபபெயர் இககாரணததால அமைநததாகும் உலகில்கடுகம உடலின நோயமாறறும், அலகு இல்அக நோய அகறறும - நிலை கொள திரிகடுகம் எனனும திகழ தமிழ்ச சஙகம, மருவு நலலாதன மருநது' எனற பாயிரச செய்யுளே மேறகணட கருத திறகு அரணாக அமைநதுளளது. இநநூலில உளள ஒவ்வொரு பாடலிலும மூனறு மூனறு கருததுகளை ஒரு பொதுக கருததொடு பொருத்திக் கூறும் முறை போறறுதறகுரியதாகும் பொதுககருத்து, பாவின ஈற்றடியில சுட்டிக் கூறபபடும மூன்றாம் அடியின ஈறு இம்மூனறும, இவை மூனறும், இம்மூவா, இவர் மூவா என மூனறு எனறும எணணுததொகைச சொற்களில முடிவுறும இவவாறு இநநூலின அமைப்பு ஒரு குறிப்பிட்ட முறையில அமைநதுளளது இந நூலின தனிச் சிறபபாகும. திருக்குறள, நாலடியாா, நானமணிக்கடிகை முதலிய நூறகருத்துகள இந்நூலில மிகுதியும் எடுத்தாளபபடுகினறன. இனியவை நாறபது - திரிகடுகம் ஆகிய இருநூலகளும் மிகுதியும ஒப்புமைப் பொருணமையுடையவைகளாக விளஙகு கினறன. இந்நூல் உலக வழக்கில் பயினறு வரும் சில பழமொழிகளை எடுததாணடுள்ளது.

திரிகடுகம் இயறறிய ஆசிரியா நலலாதனார் ஆவார். ஆதனார் எனற இயறபெயரோடு 'நல்' எனற அடைமொழி புணர்த்து நல்லாதனார் என்று வழஙகபபெறறார். நல்லச்சுதனார், நல்லழிசியார், நலலுருத்திரனார் என்னும பெயர்கள இவவகையில

அமைந்தனவாகும். இவர் வைணவ சமயத்தைச் சார்ந்தவர் என்பதனைக் கடவுள் வாழ்த்துப் பாவினால் அறிய முடிகிறது. இவ்வாசிரியர் திருநெல்வேலி மாவட்டத்தினைச் சார்ந்த 'திருத்து' எனனும் ஊரினர் எனத் தெரிகிறது. இவர் போர்த் திறமை மிக்கவர் என்பதனைச் 'செரு அடு தோள் நல்லாதன' என்னும் பாயிர அடி குறிக்கின்றது.

இந்நூல் பாயிரம் நீக்கி நூறு செய்யுட்களைக் கொணடுள்ளது. 'திரிகடுகம் – ஐ இருபது ஆகும்' என்று பிரபந்த தீபிகை சுட்டிக் கூறும் இந்நூல முழுமைககும் பழைய உரை ஒன்று அமைந்துள்ளது. அவ்வுரை செய்யுட் பொருளைத் தெளிவாகப் பொழிப்புரை வடிவில் தந்துள்ளது. மருந்துபோல பயன்படும் இவ்வறநூல் எல்லோர்வாழ்விலும் ஏற்றம் பெறும் நூலாகும். கி.கோ.

**திரிகூடராசப்பக் கவிராயர்**, தென்காசியை அடுத்த மேலகரம் என்ற ஊரில் சைவ வேளாளர் குலத்தில் கி.பி. 18–ஆம் நூற்றாணடில் தோன்றிய தமிழ்ப் பெரும்புலவர் ஆவார். இவர் திருவாவடுதுறை ஆதீனத் தலைவர் சுப்பிரமணிய சுவாமிகளின் மரபு வழியினர்; இளமையிலேயே சொல்லணி பொருளணி விளஙகக் கவிபாடும் திறமுடையவர்; குறவஞ்சி நூல்களின் முன்னோடியாக விளங்கும் திருக்குற்றாலக் குறவஞ்சியை இயற்றிப் பெரும் புகழ் படைத்த செம்மல்; குற்றாலத்தில் எழுந்தருளியுள்ள குற்றால நாதர் மீது அளவுகடந்த பக்தியுடையவர்.

மதுரையை நாயக்க மன்னர்கள் ஆட்சி செய்த காலத்தில் வாழந்தவர் இவர். முத்துவிசயரங்கசொக்க நாத நாயக்கர் என்ற அரசர் முன்னிலையில் அவர் வேண்டுகோளுக்கிணங்கிப் பாடிய குறவஞ்சி நூலை அரங்கேற்றம் செய்த இவர் 'திருக்குற்றால நாதர் கோயில் வித்துவான்' என்ற சிறப்புப் பட்டப் பெயர் பெற்றார். இவர்தம் குடும்பத்தினருக்கு இன்றும் இக் கோயிலில் மரியாதை வழங்கப்படுகிறது. இந்நூலின் நினைவுக் குறியாக நன்செய் நிலம் முற்றூட்டாக வழங்கப்பட்டது. அந்நிலம் இருக்குமிடம் இன்றும் 'குறவஞ்சி மேடு' என்று கூறப்படுகிறது. நாயக்க மன்னர் இந்நிலம் குறித்துச் செப்பேட்டில் எழுதிக் கொடுத்த பத்திரம் இனறும் இவருடைய வழியினருக்குப் பெண்வழிக் காணியாக இருந்து வருகின்றது.

இவரை ஆதரித்த வள்ளல்களுள் சொக்கம்பட்டிக் குறுநில மன்னர் சின்னணஞ்சாத் தேவரும் ஒருவர். குறவஞ்சி நூலில் இக்குறுநில மன்னனைப் புகழந்து பாராட்டித் தம் நன்றியறிதலைத் தெரிவித்துள்ளார்.

இப்புலவரின் வழிமரபினர் இன்றும் தஙகள் பெயருக்குப்பின் கவிராயர் என்றும் ராயர் என்றும் இணைத்துக்கொண்டு அககவியின் குடி வழியினர் எனப் பெருமையுடன் கூறிக் கொளகின்றனர்.

இந்நூலாசிரியர் குறவஞ்சி நீஙகலாக 14 நூல்கள இயற்றியுள்ளார். தலபுராணம், மாலை, சிலேடை வெண்பா, யமக அந்தாதி, உலா, ஊடல், பரம் பொருள் மாலை, கோவை, குழல் வாய்மொழி மாலை, கோமளமாலை, வெணபா அநதாதி, பிள்ளைத்தமிழ், நன்னகர் வெணபா ஆகிய சிற்றிலக்கிய நூல்கள் அனைத்திலும் திருக்குற்றாலத்தை அடைமொழியாககியுள்ளார்.

திருக்குறறாலக் குறவஞ்சி ஒரு நாட்டிய நாடகமாக நடிக்கப் பெறலால இவ்வாசிரியர் ஒரு நாடகப் புலவராகவும் விளங்கினாா எனலாம. பி.தெ.

***திரிகோணமலை***: இலங்கைத்தீவின வடகிழக்குக் கடறகரையில் திரிகோணமலை விரிகுடாவிலுள்ள ஒரு முந்நீரகப் பகுதியில் திரிகோணமலை (Triconmalee) அமைந்துள்ளது. உலகிலுளள சிறந்த மிகப்பெரிய இயறகைத் துறைமுகஙகளுள் திரிகோணமலையும் ஒன்றாகும். பண்டைய காலத்திலேயே தமிழர்கள் குடியேறிய ஓர் முககிய குடியேறற நாடு இது. இங்கு ஆயிரம் தூணகள் கொண்ட ஒரு மாபெரும் கோயிலைத் தமிழர்கள் கட்டினர்.

**ஐரோப்பியர் வருகை**: முதன்முதலாக திரிகோணமலை நகரத்திற்குள கி.பி. 17–ஆம் நூற்றாண்டில் வந்த ஐரோப்பியாகள் போர்ச்சுகீசியர் ஆவர். இவர்கள் தமிழர்கள் கட்டிய ஆயிரம் தூண்களைக் கொணட கோயிலை இடித்துத் தரைமட்டமாக்கி, அதன் கற்களைக் கொண்டு தஙகள பாதுகாப்பிற்காக ஒரு கோட்டையைக் கட்டினர். கடல் வலிமை வாய்ந்த எல்லா ஐரோப்பிய நாடுகளின் கவனத்தையும் இவவழகிய இயறகைத் துறைமுகம் ஈர்த்தது. எனவே தச்சுககாரர்கள, பிரெஞ்சுக்காரர்கள, ஆங்கிலேயர்கள் ஆகியோரிடம் கைமாறி மாறி இறுதியில் கி பி. 1795–இல் ஆங்கிலேயர் வசம் வந்தது.

இரண்டாம் உலகபபோரில சிங்கப்பூர் சப்பானியர் வசமானதும், திரிகோணமலை ஆங்கிலேயரது கப்பற்படைத தளமாக முககியத்துவம் பெற்று விளஙகியது. இங்குச் சப்பானியரால 1942–ஆம் ஆண்டு குணடு வீசப்பட்டது. இலங்கை சுதநதிரமடைந்த பிறகும்கூட, 1957 வரை ஆஙகிலேயர் இத்துறை முகததைத் தஙகளுக்குப் பயன்படுத்திக் கொணடனர். பிறகு வணிகத் துறையில் இத்துறைமுகத்தின் சிறப்புக் குறையலாயிற்று. மறுபடியும் இத்துறைமுகம் 1960 முதல் சிறப்படைந்தது. இலஙகையின் தலைநகரமும் முக்கிய துறைமுகமுமான கொழும்பில் நெருக்கடியும், தொழிலாளர் சிக்கல்களும் மிகுநததனால்

இலஙகையின வணிகம் திரிகோணமலைத் துறைமுகம் வழியாக நடைபெறலாயிற்று.

இருப்புப்பாதை முடிவிடமாகத் திரிகோணமலை யுள்ளது. இவவிடம இலஙகையின மறற எல்லாப் பகுதிகளுடனும் நல்ல சாலைகளால் இணைக்கப் பட்டுள்ளது திரிகோண மலையின வடக்கேயுளள புல் மேடை எனற இடததில மிக்க அளவில 'இலம னைட்டு' எனற தாதுபபொருள கிடைக்கிறது. இதன் அளவு ஏறக்குறைய 4,000,000 கணடிகளாகும் என மதிப்பிடப்பட்டுள்ளது.

திரிகோணமலையின் பரப்பளவு 2714 ச.கி.மீ. இதன் மக்களதொகை 44,913 (1981). கி.பி.

**திரிசங்கு,** சூரியகுலத்தின பிரிவான இட்சுவாகு வமிசத்தில் தோனறிய மனனன். இவன் இயற்பெயர் 'நிருக்தி' என்று அரிவம்சம் என்னும் நூலில் காணப் படுகிறது. இவன் தந்தை 'பிருது' எனபவன். தந்தை பெயர் திரிபநதனன் என்றும் இவர்மனைவி பெயர் சத்திய வதி என்றும் கூறப்பட்டுள்ளது. திரிசங்கு தன் குலநெறியினபடி நீதியுடன ஆணடு வநதான. தன பூத உடலுடன சுவர்க்கம் செல்லவேணடும் எனற ஆசை இவனுக்குத் தோன்றியது. அதனால், குலகுரு வசிட்டமுனிவரையடுத்துத் தன விருப்பத்தைக் கூறி னான். அதைக் கேட்ட வசிட்டர் 'உடலுடன் சுவர்க் கம் செலல இயலாது' என்றும், அத்தகைய ஆசை இனி வேண்டாம் என்றும் அறிவுரை கூறினார. குரு வால் தணிக்கப்பட்டும் இவனது ஆசை தணியாமை யால்,வசிட்டரின புதல்வர்களையடுததுத் தன் ஆவலை வெளியிட்டான.அவர்களும்தம் தந்தை கூறியதனையே கூறித் தஙகளால் அச்செயல் செய்ய இயலாமை யினைத தெரிவித்தனர் அதைக்கேட்ட திரிசஙகு ஏமாற்றமடைநதவனாய், அவர்களிடம் மீணடும் மீணடும் தன் விருப்பததை நிறைவேற்றுமாறு கூறி வற்புறுத்தினான். அதைக் கேட்ட வசிட்டரின் புதல் வர்கள் துடுக்காகப் பேசிய மனனனைச்சணடாளனாகு மாறு சபித்தனர். அதனால் திரிசங்கு சணடாளனாக மாறி மனம் வருநதினான். ஆயினும், தன் விருப் பத்தை நிறைவேற்ற விருமபி வசிட்டரின எதிரியாக விளங்கும் விசுவாமித்திரரை அடுத்தான். தன் குலப் பெருமை அறிநத விசுவாமித்திரரிடம், குலகுரு தன விருப்பத்தை நிறைவேறறாததுடன் சாபமிட்டதை யும், அதனால தனக்கு ஏறபட்ட அவமானத்தையும் கூறினான். விசுவாமித்திரர் அவனுடைய தோற்றத் தையும் நிலையையும் கணடு வருந்தினார். ஒரு காலத்தில் மனனனாகஇருந்தவராதலின் ஒருசத்திரிய மன்னனுக்கு ஏற்பட்ட அவமானத்தை மாற்ற விரும்பி னார். தம்மிடம் அடைக்கலமாக வந்தவனை ஏற்றுக் கொணடு, அவனை உடலுடன சுவர்க்கம் அனுப்புவ தாக வாக்களித்தார். அதற்குரிய யாகத்தை அதன மரபு பிழையாமல் செய்தார். யாகத்திற்குரிய 'அவி யைக்' கொடுக்கத் தேவர்களை அழைத்தார். ஆனால் தேவர்கள் அந்த அவியைப் பெற வரவிலலை. அத னால விசுவாமித்திரர் கோபஙகொணடார். பலகால மாகத் தவஞ்செய்த புணணிய பலத்தினால் உடலு டன திரிசஙகுவைச் சுவர்க்கததிறகு அனுப்பினார். இரித்துவிக்குகள பார்த்துககொணடிருக்கும்போதே 'திரிசஙகு' சுவர்க்கத்தை அடைநதான. அதைக கணட தேவேந்திரன, 'திரிசஙகுவே திரும்பிப்போ. குரு சாபமடைநதவன சுவர்க் கததிலிருக்கத் தகுதியற்ற வன். தலைகீழாய்ப்பூமியில வீழக!' எனறு சபித்தான. அதனால திரிசங்கு தலைகீழாகப் பூமியில் விழுநது கொணடிருக்கும்போது 'முனிவா பெருமானே! என னைக் காப்பாற்றக கடவீர்! எனறு கூறிக்கொணடே பூமியை நோக்கி வந்தான். அதைக கணட விசுவா மித்திரர் சினஙகொணடு தம் தவ வலிமையால், 'அப்படியே நில்' எனப பணித்ததுடன புதிய உலகை, படைக்கத் தொடஙகினார. முதலில் தெற்குத் திசை யில் சப்த இருடிகளையும் மறறொரு நட்சத்திர மணடலத்தையும் படைததார். மற்றுமோர் இந்தி ரனையும, தேவர்களையும படைக்க எண்ணியவரா யிருக்கத் தேவர்கள், விசுவாமிததிரரிடம மிகுந்த வணக்கமாயக் குருசாபம் பெறறவர் சுவர்ககத்தில இருக்கத் தகுதியற்றவர் என்று கூறி அவரை அமைதி அடையச செய்தனர். ஆனால் 'எனது வாக்கைப் பொய்ப்பிகக இடஙகொடேன்' எனறு முனிவர் கூறிய துடன, இநதத் திரிசஙகுவின சுவர்ககமும, தம்மால படைக்கப்பட்டவைகளும் இவவுலகம் உளளவரை நிலைததிருககவும், திரிசங்கு என்றுமே தலைகீழாகத தேவனைப்போல இருக்கவும், தேவர்களும் முனிவர் களும அனுககிரகம் செய்யவேணடும எனறு முனிவர் கூற அப்படியே இருக்கத் தேவர்களும, முனிவர்களும் இசைந்தனர். சுவர்க்கத்திற்கும பூமிககும இடையில் திரிசங்குவின சுவர்ககம் இருககிறது என்று இராமாய ணம கூறுகிறது. இரணடும கெட்ட நிலையில் இருக் கும் செயலகளுககுத் திரிசஙகுவின சுவர்க்கத்தை எடுத்துக்காட்டாகக கூறும் வழககம் மககளிடம் இனறுமுளளது. என.சீ.

**திரிசடை:** இராமாயண காப்பியத்தில் சீதைக்குத்துணைபுரியும் ஒரு பாத்திரம. இராவணன் தம்பி வீடணன் மகள. இராவணன் சீதையைக் கவர்ந்து செனறு அசோகவனத்தில் சிறைவைத்த போது காவலாக இருந்த அரக்கியருள் இவளும் ஒருததி. இவள் மற்றைய அரக்கியர்களைப்போல் சீதையை மருட்டித் தொல்லை கொடுக்காமல் ஆறு தல் கூறித் தேற்றும் தோழியாக இருநதவள். சீதை

அசோகவனத்தில் நெடுங்காலம் இருந்ததால் தன்னை மீட்பார் இலாமையையும், தன் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் நீடு நினைந்து துன்புற்று உழலும்போது, அரககியர் அனைவரும் காவல் மறந்து உறங்கக் கணட சீதை, தனக்கு அன்பினால் தாயினும் இனிய திரிசடையைத் 'தூயவளே' என்று விளித்துத் தன் புருவம் கண முதலியவற்றின் இடப் பகுதி துடிப்பதைக் கூறி, இராமன் முனிவனோடு மிதிலை புகுந்தபோது இவ்வாறு துடித்ததையும், அவ் வாறே இராமன் பெற்ற நாட்டைப் பரதன் பெற்ற காலத்தும், இராவணன் தன்னை வவ்விய காலத்தும் வலந் துடித்ததையும் கூறி, அதன் பயன் எதுவாகும் என்றும் சீதையால் வினவப் பெற்றவள். திரிசடை அது நல்ல சகுனமென்றும் அவள் இராமனைக் கண்டடைதல் உறுதியென்றும் தேற்றியதோடு பொன் வண்டொன்று அப்போது சீதை காதில் பேசிப் போயதைச் சுட்டி அது இராமனிடத்திருந்து நற் செய்தி வருமென்பதற்கு அறிகுறி என்றும், இராவ ணன் தன் தலைமுழுதும் எண்ணெய் தேய்த்துக் கொண்டு கழுதையும் பேயும் பூட்டிய தேரில் ஏறிச் செவ்வாடை அணிந்து தென் திசை சென்றதாகத் தானொரு கனவுகண்டதாகவும், அது தவறாது வாய்க்குமென்றதுடன் தொடர்ந்து தான கண்ட பல உற்பாதச் செய்திகளைக் கூறியவள். இராவணன் போற்றிய முத்தீ ஒருசேர அவிந்ததாகவும், அரண் மனையில் இடிவிழுநததாகவும், பெண் யானைகள் மதநீர் உகுத்ததாகவும், முரசஙகள் முழக்குவாரின்றி முழங்கியதாகவும், மேகக்கூட்டமில்லாத வானத்தில் இடி முழஙகியதாகவும், விண்மீன்கள எல்லாம் உதிர்ந்தனவாகவும், இரவில் கதிரவன் ஒளிர்ந்து வெளிப்பட்டதாகவும், வீரர்கள் சூடிய கற்பக மலர் மாலைகள் புலால் நாற்றம் வீசியதாகவும். இலஙகை யும் அது சூழ்ந்த மதிலும் சுழலவும், கறபகக்காடெல லாம் எரிந்து கரியவும், விளக்கணைந்து இருள் சூழ வும், சந்திரன் பிறைபடவும், அதன்வழி மீன் கணம் தோன்றவும், மேகங்கள் குருதி மழை பொழியவும், கதை, சக்கரம், வாள, வில போன்ற படைக் கருவி கள இடிமுழக்கம் போன்று ஒன்றோடு ஒன்று மோதிப் போரிடவும், மங்கல மகளிரின் தாலி ஒருவா அறுககா மலே கீழே விழவும், மண்டோதரியின் கூர்ந்த பின் னல் பிரிநது வீழ்ந்து அருகிருந்த விளககில பறறிக் கொணடு எரியவும் தான் கணடதாகக் கூறி, இரண்டு சிஙகங்கள் ஒரு பெரிய மலையில் புலிக் கூட்டத்தை யும் பெரிய யானைக் கூட்டத்தையும் வளைத்துப் பெரும் பிணக் காடாக ஆகுமாறு கொல்வதாக வும், அவ் வனத்திலிருந்த ஒரு மயில அச்சிங்கங்கள் வாழிடம் புக்கதாவும், ஆயிரமாகக் கொளுத்தப் பெற்ற ஒரு விளக்கை ஏந்திச் சிவந்த நிறமுடையாள் ஒருத்தி இராவணன் மனையினினறும் நீங்கி வீடணன மனை புக்கதாகவும் அப்பொழுது சீதை துயில் உணர்த்தியதாகவும் கூற, சீதை மேலும் துயின்று அக்கனாவின் முடிவைக் கூறுமாறு வேண்ட மேலும் துயின்றவள்.

அரக்கியர் எல்லோரும் துயிலச் சீதை தன் தனிமை நினைந்து புலம்ப இராவணன ஆண்டுப் புகுந்து சீதையிடம் பலவாறு உடன்படுமாறு பேசிப் பயனில்லாது போக அரக்கியரிடைச் சீதையை எவ் வாறேனும் உடன் பட வைக்குமாறு கூறி அகன்ற பின், தெருட்டிய அரக்கியர்களை வாளா இருக்கச் செய்து சீதையிடம் அன்று தண்ட கனவை நினைவு படுத்திப் பேதுறுவது பிழையென்றுகூறித் தேற்றிய வள். அரக்கியரையும் வாளா இருக்கச் செய்து சீதை உயிர் விடாதிருக்கச் செய்தவள்.

இராமனுக்கும் இராவணனுக்கும் போர் நிகழும் காலத்தில் இந்திரசித்து என்பான் பிரமாத்திரத் தால் இராமன் பக்கத்தார் அனைவரையும் உயிர் போகச் செய்ய, இராமனும் அவ்வம்பின் அதிர்ச்சி யால் உணர்வின்றிப் போக, அதுகாலை இராவணன் சீதையைப் புட்பகத்திருத்திக் களத்தினைக் காட்டி இராமன் முதலியோர் மாண்டமைக் கூறிச் சீதை வேறு வழியின்மையால் தன் விருப்பிற்கு உடன்பட வேணடுமென்றதைக் குறிப்பின் உணர்த்தியபோது, பேரவலம் பட்டுச் சீதை புலம்பக் கண்ட திரிசடை, அருகிருந்த அரக்கியர் பலரை விலகுமாறு ஏவிச் சீதையைத் தழுவி அவள் செவியில், அன்று இராவ ணன மாயமான விட்டதையும், மாயமாகச் சன கனை உருவாக்கியதையும், நாகபாசம் பிணித்த போது பலர் முன்னும் உயிர் ஒய்ந்திருந்து உய்ந்ததையும் நினைவுபடுத்தி, அதுவும் ஒரு மாயம் எனறு கூறித் தான் அன்று கண்டு கூறிய கன வையும் நிமித்தங்களையும் நினைவுபடுத்தி, சீதை பெற்ற கற்பையும, அரக்கர் பாவத்தையும், இராமன வீரத்தையும் நினைவுப்படுத்திச சோர்ந்து போகா திருக்கச் சொன்னவள். அன்றியும்இராமன மேனியில் அம்பின் ஊறு எதுவும் இல்லாமையும் சுட்டி இலக்கு வன் முகம் ஒளிர்வதையும் சுட்டி, மாருதி அவள் கொடுத்த வரத்தால உயிர் உலவான் என்பதையும் பிரமாத்திரத்தின் செய்கை அத்தகையது எனபதை யும், மஙகலம் இழந்த மகளிரைப் புட்பகம் சுமக்காது என்பதையும் கூறித் துன்புற வேண்டாமென்று ஏது காட்டித் தேற்றியவள். குதி.

**திரித்துக் கூறல்:** செல்லுபடியாகக் கூடிய ஒப்பநதம் ஒன்றில் இருவர், ஈடுபட வேண்டுமானால் அங்கே தனனிச்சையான இசைவு இருக்கவேண்டும். அநத இசைவும், மோசடி, திரித்துக் கூறல, வலுக்

கட்டாயம, தகாநிலை வற்புறுத்தல இனறி இருக்க வேண்டும். திரிததுக்கூறல, (Misrepresentation) மூலம் ஒபபந்தம ஒனறு ஏறபடின, யாரிடம் திரித்துக் கூறப பட்டதோ, அவர் விருப்பத்தின பேரில் அநத ஒப்பந் தம் செலலுபடியாகலாம. அவா அவ்வொப்பநததததை தவிர்த்தும் விடலாம எனவே ஏறபட்ட ஒபபந்தத் தினைத் தவிா தகு ஒப்பநதம (Voidable Contrat) எனபர்.

திரித்துக கூறல எனபது பறறி இநதிய ஒபபந்தச் சட்டததின பிரிவு 18 கூறுகினறது திரிததுக கூறுதல் எனபது ஒனறைப பற்றிச் சாதாரணமாகக கூறுதல அனறு, அதன தன்மை பறறி அடிததுக கூறுதல ஆகும். அதததகைய கூறறு அந்தச் சூழ்நிலையில தேவையறற தொனறாகும. 'இருககினற ஒரு பொருளைப் பறககிறது' எனறு கூறினால அது திரித்துககூறுதல ஆகும

**தேவையற்ற செயதி.** வாதி ஒரு கபபல் குறிதது எதிர்வாதியுடன ஒபபந்தததில் ஈடுபட்டார். அககப் பல 2800 கணடி எடை கொளளும எனறு வாதி கூறினாா. அவர் அநதக கபபலைப் பார்ததது கூட கிடையாது. ஆனால் உண்மையில் கபபல 300 கணடி கொளளும். ஏறபட்ட ஒபபநதம தவிாதகு ஒப்பநதம் எனறும் எதிாவாதியின தெரிவினால ஒபபநதம தவிர் தகு நிலையினது எனறும நீதிமனறம் கூறியது

மிகவும் முககியமான இடததில இருநது ஆதாரப் படி பெறறுக கொளளபபடும் தகவல தேவையான தகவல ஆகும இதததகைய தகவல செவிவழிச செய்தி யாகவோ இரணடாம் தரமுடைய செய்தியாகவோ இருததல கூடாது. எடுத்துககாட்டாக, மோகனலால எதிர் குஙகாசி பருததி ஆலை(MohanlalVs SriGungaji Cotten Mills Co, 1900 4 Cal WN 369) எனற வழக கில B எனபவர், வாதியிடம C எனபவாதான ஒரு குறிப்பிட்ட கமபெனியின இயககுநராவார் எனறு தமககுக் கிடைதத, சுதத முதலதரத தகவல் ஆதா ரததினபடி கூறினார். இநதத் தகவல பொயயா யிறறு அவா தேவையின பொருட்டே வாதியிடம இதததகைய தகவலினைக கொடுததுளளாா எனறு நீதிமனறம் கூறியது. எனவே தேவையின பொருட்டுத் திரித்துககூறுதல நடைபெறுமேயானால, யாரிடம திரிததுக கூறபபட்டதோ அவா ஒப்பநதததினைத் தவிாதகு நிலைககு உளளாககலாம.

**கடமை தவறுதல்** 'அ' எனபவரும 'இ' எனபவரும் ஒப்பந்தத்தில ஈடுபட்டனா. 'அ' ஓா ஒபபந்தப் பத் திரததைக் கொடுத்து 'இ'யிடம கையொப்பத்தினைப பெற்றுக் கொணடாா. 'இ' யும் தாஙகள முன்னர்ப் பேசிய பொருள குறித்தே ஒபபநதப் பததிரம் பேசு கின்றது எனறிருந்தார். ஆனால அந்தப் பத்திரம 'இ' யின சொததுக்களை அவர் பிடியில இருந்து விடுவிக்கும் பததிரம. இதையறிநதவுடன 'அ' மீது வழககுத் தொடுத்தார். இஙகு 'அ' நமபிககைக்குப் பாத்திரமாகச செயறபடவேணடியவா 'இ' யிடம் உணமையைச சொலலாமல மோசடியான செயலைச் செய்தாா; தம் கடமையில் இருநது தவறினாா. எனவே அவர் பொறுபபாளி ஆவா எனறும, ஒப்பந தம 'இ' யின விருபபததின பேரில தவிாதகு ஒப்பந தம ஆகலாம எனறும் கூறப்பட்டது

**தவறான ஆசை வார்த்தைகள** ஒபபநததின ஒரு தரப்பினர் எவவளவு வெகுளிததனமாக இருப்பினும ஒபபநதப பொருள குறித்துத தவறாகக (திரிததுக) கூறப்படும வார்ததைகள மறு தரபபினா ஒபபநதத தில் ஈடுபட வேணடும எனற ஆசையைத தூணடும வணணம அமையுமேயானால அவை திரிததுக கூறல் எனபதின பாறபடும.

தொவி (எ) பீக்கு (Derry Vs Peek) எனனும் வழக்கில எதிாவாதிகள், பாராளுமனறம, நீராவியின சகதியால மின வணடியை ஓட்டுவதறகு அனுமதி வழஙகிவிட்டது எனறு நலலெமுறையில எணணி அவ வாறே நம்பிககையுடன விளமபரமும் செய்து கம பெனியின பஙகுகளை விற்பனை செயதனா எனினும பாராளுமனறம் சில விதிகளுக்கு உட்பட்டுச செயற பட வேணடி இருநததால மேறகூறியவாறு அனுமதி வழங்கவிலலை பஙகுகளை வாங்கியவர்கள (வாதி கள) எதிர்வாதிகள மீது வழககுத் தொடுத் தனா வழககினைத் தீர விசாரணைககு எடுத் துக் கொணட பிரபுக்கள சபை எதிாவாதிகள சொலலியது வெகுளித்தனமான, களளமிலலாத கூறறுகள எனறும, ஆகவே அவர்கள பொறுப பாளிகள் ஆகமாட்டாாகள எனறுமதீாபபுக்கூறியது. அதனையே அவர்கள கவனக் குறைவினால் கூறி யிருப்பின பொறுப்பு நிலையில வைககபபடுவாாகள. 'செய்தக்க செய்யாமை யானும கெடும்' என்பார் செநநாப் புலவர் ஒரு பொருள குறித்து எப்படி இல்லாத ஒனறைக் கட்டிச் சொனனால, திரிபு என்று கூறப்படுமோ அதைப போல அப்பொருள குறிதது, ஒப்பநதம ஏற்படும் காலை அப்பொருளின நிலை, தன்மைகள, அளவு முதலியவை குறிததும் கூற வேணடும் இல்லையெனில உணமை நிலையினை மறைததுக கூறியதாக ஆகலாம (Suggestio falsi; Suppressio Veri) உணமையை உரைககாது விடுவதும கட்டுக்கதைபோலக் கட்டுரை ஆகலாம். ஏனெனில் உணமையை உரைக்க வேணடும் எனபது சட்டம தரபபினர்கள மீது ஏற்றிச் சொலலும் கடமை ஆகும். எடுத்துக்காட்டாக ஆா எதிாகைல சானட்டு (R Vs

Kylsant 1932 (1) K.B.442) என்ற வழக்கில்' ஒரு நிறுமத்தின் திட்ட அறிவிப்பு, தாங்கள் ஒவ்வோர் ஆண்டும் நிறுமத்தின் பங்கு வாங்கியவர்களுக்குப் பங்கின் ஆதாயம் வழங்குவதாகக் குறிப்பிட்டது. ஆனால், உண்மையில் நிறுமம் பல ஆண்டுகளாக இலாபமே ஈட்டவில்லை. இழப்பில் நடத்தப்பட்டு வந்தது. உலகப் போரின் சமயத்தில் மட்டுமே இலாபம் கிடைத்தது. அதனையே பங்குதாரர்களுக்கு நிறுமம் பங்காதாயமாகப் பங்கிட்டு வழங்கியது. மேலெழுந்த வாரியாகத் திட்ட அறிவிப்பினைப் படிப்பவர்களுக்கு இவை எல்லாம் தெரியவாய்ப்பு இல்லை. கம்பெனி இலாபத்துடன்நடப்பதுபோலவும், பங்குதாரர்களுக்குப் பங்காதாயம் வழங்குவது போலவும் மட்டுமே தோன்றும். இதனை உண்மை நிலையை மறைத்ததன் மூலம் திரித்துக் கூறல் என்பர்.

இதைப் போலவே காசி அகமதுயார்க்கான எதிர் அப்துல்கனிகான் (Haji Ahmad Yarkhan Vs Abdul Gani KhanA(IR 1937 Nag 270) என்ற வழக்கில், திருமணம் குறித்து உடன்பாடு ஒன்று ஏற்பட்டது. ஆனால், திருமணப் பெண்ணிற்கு அடிக்கடி காக்காய் வலிப்பு வரும் என்ற உண்மை மறைக்கப்பட்டுச் சொல்லாமல் விடப்பட்டது. எனவே, ஏற்பட்ட உடன்பாடு, தவிர்தகு நிலையது என்று கூறப்பட்டது.

**கருப்பொருள் குறித்த உண்மைகள்:** ஒப்பந்தத்தின் முக்கிய கருப்பொருள் குறித்துத் திரித்துக் கூறப்பட்டு இருப்பின், ஒப்பந்தம் செல்லாது. நடைமுறை வாணிகத்தில் கூறப்படும் சில சொகுசுச் சொற்களோ, சொல் அலங்காரங்களோ, ஒப்பந்தத்தை அத்தகைய நிலைக்கு இட்டுச் செல்லாது

**ஆசையூட்டல்:** திரித்துக் கூறப்பட்ட வார்த்தைகளின் மீது நம்பிக்கையுடன் ஆசை ஏற்பட்டு வாதியானவர் எதிர்வாதியுடன் ஒப்பந்தத்தில் ஈடுபட்டிருக்க வேண்டும். ஆசை வார்த்தைகள் கூறப்படாவிட்டால் ஒப்பந்தத்தில் இசைவுடன் ஈடுபட்டிருக்க மாட்டார் என்ற அளவுக்கு அந்த வார்த்தைகள் வாதியைத் தூண்டி இருக்க வேண்டும். இதுபற்றி ஒப்பந்தச் சட்டப்பிரிவு 19 கூறுகின்றது. தன் சாதாரண திறமை மற்றும் அறிவினைப் பயன்படுத்தி வாதியால், எதிர்வாதியின் கூற்றுகளின் உண்மை நிலையினை அறிந்து கொள்ள முடியும் என்ற நிலையில், வாதி திரித்துக்கூறல் பற்றி நீதிமன்றத்தில் எடுத்துச் சொல்ல அனுமதிக்கப்பட மாட்டார் என்று பிரிவு 19-இன் விதி விலக்குக் கூறுகின்றது. மோகிரிபிபி எதிர் தர்மதாசுகோசு (Mohiribibi Vs. Dharmodas Ghose (1903) 30 I.A. 114) என்ற வழக்கில் எதிர்வாதி இளவல், தம் வயது பற்றித் திரித்துக்கூறிப் பொய் உரைத்து, ஒப்பந்தம் ஒன்றில் வாதியுடன் ஈடுபட்டார். இந்த வழக்கில் இளவல்களுடன் செய்து கொள்ளும் ஒப்பந்தம் செல்லாது என்று நீதிமன்றம் கூறியது. இதுவே இந்தியச் சட்டத்தின் நிலையாகவும் ஆங்கிலச் சட்டத்தின் நிலையாகவும் உள்ளது.

பொய்யுரை ஊட்டம் பெறும்போது முன்னர்ச் சொன்ன பொய் உரைமீது ஏற்பட்ட ஒப்பந்தம் செல்லும். சுமித் எதிர் ஆசுபோர்ன் (Smith Vs Osborne) என்ற வழக்கில் வாதி பொய்யுரைத்து எதிர் வாதியுடன் ஒப்பந்தம் ஒன்றில் ஈடுபட்டார். சிலநாள்களில், வாதி கூறியபடியே நிகழ்ச்சிகள் நடந்தன. அவரிடம் உரிமை மாற்றம் செய்யக் கூடிய சொத்துகள் வந்தடைந்தன. அப்போது வாதி தாம் ஒப்பந்தத்தில் ஈடுபடும்போது பொய்யுரைத்ததாகவும், இப்பொழுதுதான் உண்மையில் சொத்துகள் வந்து சேர்ந்தாகவும், எனவே, தாம் ஈடுபட்ட ஒப்பந்தம் செல்லாது என்றும் கூறி எதிர்வாதி மீது வழக்குத் தொடுத்தார். வழக்கினை விசாரித்த நீதிமன்றம், தாம் முன்னர் உரைத்த கூற்றுகளைப் பொய் என்ற அடிப்படையில் தள்ளிவிட ஒருவர் தடுக்கப்படுகிறார். இதனை முன்னுக்குப்பின் முரண்பட்ட பேசுதல்; முரண் தடை என்று சட்டம் பெக்கார்டு எதிர் சியர்சு (Pecard Vs Sears) என்ற வழக்கின் அடிப்படையில் கூறுகின்றது. முன்னர் செய்த கூற்றுகள் உறுதியூட்டப்படும் பொழுது அவையே நின்று நிலவும். ஒப்பந்தத்தைத் தள்ளிவிட இயலாது என்றும், அவை எதிர்வாதியின் விருப்பப்படி தவிர்தகு ஒப்பந்தமாகும் என்றும் நீதிமன்றம் கூறியது. இதனைச் சொத்து உரிமை மாற்றுச் சட்டத்தின் பிரிவு 432 உம் கூறுகின்றது.

தி.ஆ.இ.

**திரிபிடகம்:** பௌத்தர்களின் வேதநூலாக விளங்குவது திரிபிடகம். விநயபிடகம், சுத்தபிடகம், அபிதம்மபிடகம் என்னும் மூன்று பிடகங்களின் தொகுதியைத்தான் திரிபிடகம் என்றும், பிடகத்திரயம் என்றும் வழங்குவர். பிடகம் என்ற பாலிச் சொல்லின் நேர்பொருள் கூடை என்பதாகும். புத்தர் பிரான் போதனைகள் பொதிந்துள்ள ஏடுகள் அடங்கிய கூடை என்ற பொருளில் பிடகம் என்ற சொல் பயிலப்பெற்றது. இதே சொல்லிற்கு 'மரபு வழி வருதல்' என்ற பொருளையும் கூறுவர். வேதம் தலைமுறை தலைமுறையாக ஓதப்பெற்று வந்தது. புத்தர்பிரான் பரிநிருவாணம் எய்தியதும், இராசகிருகத்தில் அசாதசத்துரு என்னும் அரசனால் கூட்டப்பெற்ற தேரர்களின் முதற்சங்கம், இப்பிடகங்களைத் தொகை வகை செய்தது. ஆண்டிலும் அனுபவத்திலும் மிக்க உபாலி விநயபிடகத்தையும், புத்தரிடம் அன்பு மிக்க சீடராகிய ஆனந்தர் சுத்த பிடகத்தையும், அறிவில் முதிர்ந்த மகாகாசிபர் அபிதம்ம பிட

கத்தையும் நினைவிலிருநது ஒப்பிததனா எனறும அவற்றை 'மகாதேராகள புததவசனமாக ஏறறுக கொண்டனர் எனறும சொலலப்படுகிறது. திரிபிடகங்களில புத்தரினபோதனைகளுடன அவாதம் சீடர்களின சிநதனைகளும அனுபவஙகளும் வரலாறுகளும் கலந்து காணப்படுகினறன.

இலஙகையினை கி.மு. முதலாம் நூற்றாண்டில் ஆண்ட வட்டகாமணி எனனும அரசன ஆதரவில் கூடிய பௌதத சஙகம் பிடகங்களுககு எழுதது வடிவம் தநதது.

விநயபிடகம பிக்குகளும பிக்குணிகளும அனறாடம் கடைபபிடித்தற்குரிய நெறிமுறைகளையும் ஒழுகலாறுகளையும விரித்துக் கூறுவது. விநயம- ஒழுக்கம், சீலம். புத்த சங்கததை நடததுதற்குரிய விதிமுறைகள இப்பிடகததில் இடமபெறறன. இதனுள சுத்த விபாஙகம், கந்தகம, பரிவாரம, பாதிமோக்கம் என்ற நான்கு நூலகள் அடங்கியுள்ளன. அவற்றுள முதல நூல பாராசிகம, பாசிததியம் எனனும இரு பிரிவுகளையும், இரணடாம் நூல மகாவக்கம், சுலலவககம் எனனும் இரு பகுதிகளையும் கொணடிருத்தல் சுட்டத்தக்கது பன்னிரு சார்புகளின விளக்கம் இப்பிடகத்திலதான முதன் முதல் காணப்படுகிறது.

விநயபிடகததையும் அதன் உரைகளையும் பின் பற்றுவோரை வைபாடிகர் என்று கூறுதல் உணடு.

சுத்தபிடகம் இரணடாவதாக எணணபபெறுவது. சூத்திரம் என்ற வடசொல் பாலிமொழியில் சுதத என்று வழஙகும். இசசொலலிற்கு நூற்பா எனற பொருளுடன மூலகாரணம் எனற பொருளும் உணடு. இப் பிடகத்தைப் பெரிதும் பின்பற்றுவோர் சௌத்திராந்திகர் எனப் பெயர் பெறுவர் புத்தரின அடிப் படைக் கொள்கைகளுக்கு ஆதாரமான பல்வகை உரையாடலகளும், போதனைகளும், கதைகளும், செய்யுள்களும் இப்பிடகத்தில் நிறைய உள்ளன. இப் பிடகம் தீகநிகாயம், மச்சிம நிகாயம், சம்யுத்த நிகாயம், அங்குத்தர நிகாயம், குத்தக நிகாயம் என்னும் ஐந்து தொகுதிகளைக் கொண்டது. அவற்றுள் அளவினாற் பெரியவை, சம அளவின, சிறியன என்ற வகையில் தீகம் (தீர்க்கம்) ,மச்சிமம் (மத்திமம்), குத்தகம் என்ற பகுதிகள் தொகுக்கப்பெறறுளளன. தீக நிகாயத்தில் பிரமசாலச்சுத்தம் முதலிய 34 சுத்தங்களும், மச்சிம நிகாயத்தில் 150 சுத்தங்களும் அடஙகியுள்ளன. சம்யுத்த என்பது தொகுதி என்ற பொருளையும் நிகாயம்-பிரிவு என்ற பொருளையும் தருதலின், சம்யுத்த நிகாயம் என்பது தொகுதி தொகுதியாக இனப்படுத்தப்பெற்ற புத்த சிந்தனைகளின் பேழையாகத் திகழவது இதனகண சகாதவககம், நிதான வக்கம், கந்தகவககம், சளாயதனவககம், மகாவககம் எனனும் ஐநது தொகுதிகள அடஙகியுளளன.

அங்குத்தர நிகாயம எனற சுத்தபிடகப்பகுதி ஏகுத்தர நிகாயம எனறும வழங்கபபெறும எணணலங்காரம் பொருநதப புத்தரின சிநதனைகள இப் பிடகப் பகுதியில இயம்பப்பெறறன ஏகநிபாதம முதல் ஏகாதசக நிபாதம் வரை உளளவை ஒனறு முதல பதினொனறு வரை ஏறு வரிசையில எண அணி தோனற அமைநதிருததல நோககததககது.

குத்தக நிகாயம் மிகவும சிறபபு வாயநதது இதன்கண குத்தகபாடம், தமமபதம, உதானம, இதிவுததகம், சுத்தநிபாதம், விமானபாதம, விமான வதது, பேதவதது, தேரகாதா, தேரீகாதா, சாதகக் கதைகள, மகாநிதேசம், சுல்லநித்தேசம், 'படிசம பிதாமககம, அவதானம், புததவமிசம, சரியாபிடகம எனனும் பதினாறு பனுவல்கள பொதிநதுளளன.

அவற்றுள, குததபாடம் எனபது அளவினாற சிறிய போதனைகளும் பாடலகளும் அடஙகிய நூலாகும். தொடகக நிலையில உளள மாணவாகளுககு வினாவிடை முறையில புத்தரின போதனைகளைப புகட்டும பாலபாடமாக இந்நூல திகழ்கிறது.

எடுத்துககாட்டு. ஒனறு எனறால என்ன? மககள யாக்கை உணவின பிணடம. இரணடு எனறால என்ன? நாமரூபம் (அருஉருவம) மூனறு-மூவகை வேதனைகள, நானகு- வாயமைகள நானகு, ஐந்து- கந்தங்கள ஐந்து, ஆறு- அறுவகையான ஆயதனஙகள (வாயிலகள-ஐம்பொறிகளும் மனமும). இஙஙனம பல செய்திகள வினாவிடையாக விளஙகுவன. இல லறத்தின சிறப்பும் கணவன, மனைவி, மககள முதலியோரின கடமைகளும குறிதத சுவையான செய்திகள குத்தகபாடததின முதற்கண உளள மஙகல சுதததத்தில கூறபபெற்றன.

எளிய, இனிய சிறுசிறு பாக்களில புததரின பொன் மொழிகளைத் தாங்கி நிற்பது தம்மபதம். (காணக. தனிக்கட்டுரை)

பொதுமக்கள் புரிந்துகொள்ளும்வகையிலகருத்து விளக்கமாகப் புத்தர்பிரான் வெளியிட்ட கதைகள் உதானம எனற தொகைநூலில இடம் பெற்றன. புத்தர்பிரான் 'இவ்வாறு கூறினார்' எனறு பொருள் படும் வகையில் அவர் போதனைகளைத் திரட்டித் தரும் நூல் 'இதிவுத்தகம' எனப்படும். அடுத்து வரும் சுத்தநிபாதத்தில் ஐவகை வக்கஙகள் உள்ளன. அவற்றால் புத்தர் வாழ்ந்த காலத்தின் சமுதாய, பொருளாதார, சமய நிலைகளை நன்கு அறியலாம்.

நல்வினை புரிந்தோர் மறுமையில் பெறும் தேவர் உலக வாழ்வினை விளக்கும் கற்பனைக் கதைகளை விமானவத்து என்ற நூலிற் காணலாம். வினைப் பயனையும் மரணத்தின்பின் மனித நிலையினையும் பேதவத்து என்ற பிடகப் பகுதி பேசுகிறது. புத்தர் காலத்தைச் சார்ந்த மகாதேரர்கள் பலர் பாடிய பனுவல் தேரகாதா என்று வழங்கப்பெறுகிறது. 73 தேரிகளினால் பாடப்பெற்றது தேரிகாதா எனப் படும். உயிர்களிடம்கொண்ட பெருங்கருணைத் திறத் தினால் புத்தர்பிரான் எடுத்த பல்வகைப் பிறப்பு களை விளக்கும் சாதகம், சரியாபிடகம் என்ற பகுதி கள் பாமர மக்களுக்குப் புத்தரின் நெறியை விளக்கும் நோக்கில் பின்னர்எழுந்தவை. சொற்பொருள் விளக் கமாக வருபவைமகாநித்தேசம், சுல்லநித்தேசம் என்பன. படிசம்பிதாமக்கம் என்னும் பகுதியில் நான்கு வாய்மைகள், சீலம், சமாதி, பிரஞ்ஞை என்பன பற்றியும், பிரபஞ்சங்களின் அமைப்பியல் பற்றியும் பேசப்பெற்றன. புத்தவமிசம் எனனும் பனுவலில் கௌதமபுத்தரின் காலத்திற்கு முற்பட்ட 24 புத்தர்களின் வரலாறு இடம்பெற்றது. பௌத்த சான்றோர் நிகழ்த்திய அற்புதங்களும் அருஞ்செயல் களும் அவதானம் என்ற பகுதியில் காணலாம்.

திரிபிடகத்தில் மூன்றாவதாக உள்ளது அபிதம்ம பிடகம் ஆகும். 'அபிதம்ம' என்ற பாலிச் சொல் தத் துவம் என்ற பொருள் பயப்பது; பெரும்பான்மையும் வினாவிடை முறையில் அமைந்தது இப்பிடகம். இதனுள் ஏழு பகுதிகள் அடங்கியுள்ளன. தம்மசங் கணி என்னும் முதற் பகுதியில்காமதாது, உருபதாது அருபதாது ஆகிய மூவகைப்பட்ட அண்ட அமைபபிய லும், விபாங்கம் என்னும் நூலில் ஐவகைக் கந்தங களின் விளக்கமும், கதாவத்துவில் சமய, தத்துவச் சொற்போர்களும் அடங்கியுள்ளன. மனிதனின உள வியலை விரித்துக்கூறும் புத்கல பஞ்ஞத்தில் மக்களை ஒன்றுமுதல் பத்துவரை பல இனங்களாக வகைப படுத்தியிருத்தல் சுட்டுதற்கு உரியது. உலகப் பொருள களை 37 தாதுகளாகப் பகுத்து ஆராயும் பிடகப் பகுதி தாதுகதா எனப்படும். இரட்டைக் கருத்துகளின் தொகுதியாக யமகம் விளங்குகிறது. பல்வகைப் பொருள்களுக்கிடையே காணப்படும் 24 தொடர்பு முறைகளைப் பட்டாணம் என்ற இறுதிப பகுதி எடுத்துரைக்கிறது.

இதுகாறும் கூறிய வகையினால் திரிபிடகங்களின அமைப்பும் உள்ளடக்கமும் ஒருவாறு புலனாகும். இவை பெரும்பாலும் தேரவாத பௌத்தர் எனப்படும் ஈன யான பௌத்தர்களால் பெரிதும் பயிலப்பெறுவன. மகாயான பௌத்தருள் ஒரு பிரிவினராகிய யோகா சாரர், யோகாசார பூமிசாத்திரம் முதல வித்திய மாத்திர சித்தி வரை எண்ணப்படும் பன்னிரு சாத் திரங்களையும் அபிதமம பிடகமாகவும், அபிதம்ம சூத்திரம் முதலிய ஆறு நூல்களையும் சூத்திர பிடக மாகவும் ஏற்றனர். இவை யாவும் புத்தர் காலத் திற்கு மிகவும் பிற்பட்டுப் பல்வேறு போதி சத்துவர் களினாலும் அளவை நூல் வலலாராலும் உருவாக்கப் பெற்றவையாகும். சோ.ந.க.

**திரிபுக் காட்சிகள்** என்பது புலன் காட்சியில் நிகழும் பிழையாகும். இருக்கும் ஒன்றிற்குப் பதிலாக இல்லாத ஒனறினைப் புலன் காணபதாகும். ஓரடை யாளத்திற்குத் தவறான பொருள் கொள்ளுவதாகும். திரிபுக் காட்சி என்பது புலன காட்சி பற்றிய ஒரு வரின் தனிப்பட்ட அல்லது சொநத தவறினைக் குறிப் பதில்லை, மாறாகச் சிலவகைப் பொருள்களைத் தவறாகப் புலன்காட்சி செய்யும்-பெரும்பான்மை யானவரிடையே காணும் பொதுவான தன்மையாகும். இருளில் பழுதைக் கயிறறைப் பார்த்துப் பாம்பென மிரளுவது திரிபுக் காட்சிக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். இது ஒரு சாராருக்கேயன்றி அனைவருக்கும் ஏற படும் தவறே. இரவு நேரத்தில் கைவரிசையைக் காட்டி விட்டு ஓடும் கொள்ளைக்காரன், ஒவவொரு விளக்குக் கம்பத்தையும் ஒரு காவலராகக் கருதிஅஞ்சி மிரளுவது திரிபுக் காட்சியே ஆகும். திரிபுக் காட்சிகள் நான்கு வகைப்படும்: அவையாவன:

1. புலனுறுப்புகளின் விசித்திரத் தன்மையினால் ஏற்படும் திரிபுக் காட்சிகள். சில நேரங்களில் இல் லாத பொருள்களை இருப்பதாகக் கணடிடும் தன மையினைப் புலனுறுப்புகள பெற்றிருக்கின்றன. ஒரு பச்சைத் தாளினைக் கொஞ்சநேரம் பார்த்துவிட்டுச் சிவப்புத்தாளினை உடனே ஒருவர் பார்த்தால் சிவப்பு மேலும் சிவப்பாகத் தோனறும். இந்த மிகுதி யான சிவப்பு ஒருவர் கணகளின விசிததிரததினால் ஏற்படும் ஒரு திரிபுக் காட்சியாகும். கண்ணின விழித் திரையின் கூம்புகள் ஒரு நிறத்தைச் சிறிதுநேரம் பார்த்தபின் களைத்துப்போவதோடு அது சமநிலைக் குத் திரும்புமுன் முனபு கண்டதற்கு எதிரான நிறத்தைக் காணும் தன்மையைப் பெறறிருக்கிறது. இதைப்போன்ற ஒரு மேறகோளினைச் சுவைப் புல னிலிருந்தும் காட்டலாம். தித்திப்பான ஒன்றை உணடவுடன், போதியஅளவு சாக்கரை இடப்பட்ட தேநீரை ஒருவர் அருந்துவாரானால அது அவருககு இனிப்பதிலலை. இநத இனிப்புக் குறைவைத் திரிபுச சுவை உணர்ச்சி எனலாம்.

2. ஆயதத நிலை காரணமாக ஏற்படும் திரிபுக காட்சிகள: ஏதேனும் ஒன்றை ஆவலுடன எதிர் நோககியிருக்கும் ஒருவர் அதனைப் போலவேயுள்ள

மற்றைய பொருள்களைக் காண விரும்பும் பொருளாகவே தவறாக எண்ணிவிடுவர். ஒரு வெள்ளிக் காசினை ஒருவர் இழந்துவிட்டால் உடன் கண்ணில படும் ஒவ்வொரு சிறிய வட்டவடிவப் பொருளும இழந்துவிட்ட காசாகவே அவருக்குத் தோன்றும். சில வகைப் புலனுணர்ச்சியை வரவேற்க மனத்தளவில ஒருவர் ஆயத்தமாக இருப்பதே இதற்குக் காரணமாகும். அதனால், இந்தப் புலனுணர்ச்சியை ஒத்திருக்கும் புலனுணர்ச்சிகள் யாவும் மற்றவற்றைவிட மேம பட்டனவாய்க் காணப்படும.

**3. பிழையான குறிப்புகளினால் ஏற்படும் திரிபுக் காட்சிகள்:** இரண்டு பொருள்கள் ஒன்றினையொன்று ஒத்திருப்பதினால ஒன்று மற்றொன்றாகத் தவறாகக் கருதப்படுகிறது. ஒருவர் எதனையும் அறிந்துகொள்வதில் பொதுவாக ஓர் அவசரத்தன்மையைக் காட்டுவாரானால, பொருள்களிலிருந்து கிடைக்கும எல்லாக் குறிப்புகளையும கவனமாக ஆராயாமல அதனின ஒரு பகுதியைப் பார்த்துவிட்டு மற்றதை மனத்தளவில் முடிவு செய்து கொள்ளுவார். ஒருவர் கவனத்தை ஈர்க்கும் பொருளின ஒரு பகுதி அவருக்குத் தெரிந்த வேறொன்றினை ஒத்திருக்குமாயின இத்தவறு நிகழுகின்றது. இத்தகைய திரிபுக் காட்சி படிக்கும்போது ஏற்படுவதுண்டு. ஒரு சொல்லை உச்சரிக்கும்போது அச்சொல்லின எல்லா எழுத்துகளையும ஒருவர் கவனிப்பதில்லை முதல்சில எழுத்துகளை மட்டும பார்க்கிறார். மற்றவற்றை மனத்தளவில நிரப்பிக் கொள்கிறார். இத்தகைய உத்தேசங்கள் பெரும்பாலும் அச்சொற்கள் அமைந்துள்ள, படிக்கும் பொருளின இடச்சூழல காரணமாகச் சரியாக வந்துவிடுகின்றன. ஆனால, ஒருவருக்குத் தெரிந்த ஒரு சொல அவருக்குப் பழக்கமான சொலலினை ஒத்திருக்கும்போது இத்தகைய திரிபுக் காட்சி தோன்றுகிறது.

**4. காணவேண்டிய உண்மைப்பொருளை பிறவற்றிலிருந்து பிரித்தறியும்போது ஏற்படும்பிழையினால் விளையும் திரிபுக்காட்சிகள்:** புலனுணர்வுகள் கூட்டமாக நிகழ்கின்றன. இக்கூட்டத்திலிருந்து ஒன்றைப்பொறுக்கியெடுத்து ஒருவர் காணுகிறார். ஆனால ஒருவர் தாம் விரும்பும் புலனுணர்ச்சியைப் பிரித்தெடுத்து, அதன பின்னணியிலிருந்து விலக்கிக் காண்பது எளிதன்று. மனத்தின இக்குறைபாடு சில திரிபுக்காட்சிகள் ஏற்பட வழி கோலுகின்றது. எடுத்துக்காட்டாக, அகலத்திலிருந்து உயரத்தைப் பிரிப்பது கடினமாகும். பருத்த மனிதன அவனின உண்மை உயரத்தைவிடக் குள்ளமாகவும், ஒல்லியானவன உண்மைக்கதிக உயரமாகவும் காணப்படுவதற்கு இதுதான் காரணம். கட்டடக் கலையில இத்தகைய திரிபுக் காட்சிகளைச் சிற்பிகள் பயன்படுத்துகின்றனர். நீண்ட பல தூண்களை அமைப்பதின் மூலம் அகலமானகட்டடங்களை உயரமாகத் தோன்றச் செய்யலாம். சோதனைக் கூடங்களில் இத்தகைய திரிபுக் காட்சிகள் கையாளப்படுவதற்குச் சான்றாக உருவ-எடை திரிபுக் காட்சியினைச் சொல்லலாம். சிறிதும் பெரிதுமான இரண்டு அட்டைப்பெட்டிகளில ஒரே அளவு எடையினை வைத்துவிட்டு, பின்னர் இந்த அமைப்புப் பற்றி அறியாத ஒருவரை பெட்டிகளைத் தூக்கிப்பார்த்து எது பளுவானது எனத் தீர்மானிக்கச் சொன்னால் அவர் பெரிய பெட்டியே பளுவானதெனச் சொல்வார். ஏனெனில, எடையிலிருந்து உருவத்தைப் பிரிக்க இயலாதவராய்ப் பெட்டியின அளவிற்கேற்றாற்போல் அது பளுவாக இருக்குமென்று தம்மையறியாமலே நம்பிவிடுகிறார். எனவே, பெட்டியினைத் தூக்குவதற்கு மிகவும் முயற்சிசெய்கிறார். இரண்டு பெட்டிகளையும தூக்குவதற்கு அவர் மேற்கொள்ளும் முயற்சியைப் பார்த்தால் சிறியபெட்டி மிகப் பளுவுடையதாகத்தோன்றும். கி.இரா.

**துணை நூல்கள்:**

**Adinarayan**, S P., The Human Mind, Hutchinson University Library, London, 1962.

**Boaz, G.D.**, General Psychology, Gunalaya, Madras, 1957.

***திரிபுணர்வு*** என்பது ஒருவனுடைய தவறான நம்பிக்கை அல்லது மருட்சி அல்லது மயக்கமாகும். இந்த நம்பிக்கை அல்லது மருட்சியைக் காரண காரிய விளக்கத்தினாலோ உண்மைகளை எடுத்துக்காட்டுவதாலோ மாற்ற முடியாது. மனநலக் கோளாறுகள் உள்ள பலரிடம இத்தகைய திரிபுணர்வுகள் (Delusions) இருக்கும.

இத திரிபுணர்வு அல்லது மருட்சி முக்கியமாக இருவகைப்படும அவை. 1) மேதகைமை பற்றிய திரிபுணர்வு (Delusions of Grandeur) அதாவது உருச் சிதைந்த நம்பிக்கை சாதாரணமாக ஆளுமைக் (Personality) குறைபாடுள்ளவன தன ஆற்றல, புகழ், செல்வம் குறித்து இயல்புக்கு மாறாக மிகையான மதிப்பீடு செய்துகொண்டிருப்பான. இந்தவகைத் திரிபுணர்வு பேதைமை உணர்வு, பாதுகாப்பின்மை அல்லது தாழ்வு மனப்பான்மை காரணமாக அமைகிறது. திரிபுணர்வின உட்பொருளாகவுள்ள மிகைப்படுத்தப்பட்ட உணர்வு, உண்மை அறியும் தன்மையைத் தடுக்கிறது. முந்தைய ஏமாற்றம அல்லது பாதுகாப்பின்மைகளின் வெளிப்பாடாகவே மேதகைமைத் திரிபுணர்வு விளங்குகிறது. தன்னைக் கடவுள் என்று கூறிக்கொள்வதன் மூலம் அதாவது தன்னுடைய திரிபுணர்வினால திரிபுணர்வு நோயாளி தன்னுடைய

தாஙகமுடியாத உண்மையான துன்பங்களிலிருந்து தப்பித்துக் கொள்கிறான. அவன் தன்னைக் கடவுள் என்று கருதிக்கொளவதன் மூலம் குறையுள்ள அவன் நிறையுள்ளவனாகிறான்; தாஙகமுடியாத தாழ்வுணர்வுடையவன் சிறந்த நிலையை எய்துகிறான்; அச்சமுள்ளவன் பாதுகாப்புள்ளவனாகிறான. மனத்தளவில அவன் இந்த நிலைகளை அடைய முடிகிறது. இத்தகைய திரிபுணாவு உள்ளவர்கள் தம்மைத் தவறாக மிகுந்த வலிமைமிக்கவராகக் கருதிக் கொள்கினறனர்.

2) 'அடக்கமுறைத் திரிபுணாவுகள (Delusions of Persecution) இரணடாம் வகையாகும். இவ்வுணர்வுள்ளவன் தான பிறருடைய தொல்லைகளுக்கும் துன்பங்களுக்கும இகழ்ச்சிகளுக்கும் ஆளாவதாகத் தவறாக உணர்கிறான். அறிவுப் பிறழ்வு ஏற்பட்ட ஒருவனின் உருசசிதைந்த நமபிக்கையே இவ்வகைத் திரிபுணர்வுகள். இத்திரிபுணர்வுகளால் தான பிறரால் நசுக்கப்படுவதாக ஏமாற்றப்படுவதாக, தாக்கப்படுவதாக இவன உணர்வான.

இத்தகைய திரிபுணர்வு குறிப்பாக நீணட நாள் மன நோயாளிகளிடையே காணப்படுகிறது. தன்னுடைய குணநலனைச் சரிப்படுத்திக் கொள்ள முடியாத நிலையில் எழுகினற தனனிறைவற்ற தனமை சூழநிலையின ஒவவாப பகைமையாக வெளிப்படும். உண்மைகளைத் தவறாக முடிவுசெயவது அடக்குமுறைத் திரிபுணாவு ஏற்பட வழிசெய்கிறது. வெற்றிககுத் தேவைப்படும் தகுதிகள் இலலாமல வெற்றியை விருமபும் பேராசையும், தோல்வியை ஏற்றுக்கொளளும் திறனின்மையும் நினைந்து ஏஙகும் தன்மை, அவ நமபிக்கை, ஐயப்பாடு, தவறாகப பொருள கொளளுதல், மனக்கசப்படைதல, நசுக்கப்படும் கருத்துகள் ஆகியவற்றிறகு வழிவகுக்கும். அடஙகுமுறைத் திரிபுணர்வு பொறுப்பைத் தட்டிக் கழிததல், அச்சத்திலிருநது விடுபடுதல முதலியவற்றை அனுமதிக்கிறது.

மேதகைமைத் திரிபுணர்வும், அடக்கு முறைத் திரிபுணர்வும் ஒரேவிதமான பயனைக் கொணடுள்ளதாலும் ஒனறையொனறு ஈடு செய்வதாலும் அவை ஒன்றுடன் ஒனறு தொடர்பு கொணடுள்ளமை இயல்பே. மேதகைமைத திரிபுணர்வினால நோயாளி மனத்தளவில் தன்னை மிக உயாத்திக் கொண்டு தன்னுடைய முனைப்பு அல்லது தோற்றத்தைப் பெரிதுபடுத்திக் கொள்கிறான்.

அடக்கு முறைத் திரிபுணர்வினால் நோயாளி தன் தன்மானத்துக்கு ஒவவாதவறறை உதறித்தளளி விலக்குவதுடன அத் தன்மைகளை மற்றவர்களின் மேல் சார்த்தி தன் மன உளச்சல்களிலிருநது விடுபடுகிறான். இவ்வகைத் திரிபுணர்வுகள் நாட்பட்ட மனநோயாளிகளிடமே காணபபடும். - வே.ந.

***திரிபுரா***: இந்தியக் குடியரசின் வடகிழக்குக் கோடியில் அமைநதுள்ள மாநிலம திரிபுரா (Tripura); பரப்பு 10543 ச கி மீ. கிழக்குப் பக்கம் அசாமின உலுசை மலைப்பாதையும் (Lushai hill tract of Assam), வடக்கு, மேறகு, தெறகு ஆகிய பக்கஙகளில் வங்களாதேச நாடும இதன எல்லைகளாகும். இதன் பெரும்பகுதி குன்றாகவும (Hilly) முககியமாகககுறுங காடாகவும் (Jungle) இருக்கினறன. ஆணடிற்கு ஏறத்தாழ 250 செ. மீ. க்கு மேல் மழை பெயகிறது. மக்கள் தொகை 20,60,189 (1981). தலைநகர் அகர்தாலா (Agartala).




திரிபுரா அமைவிடம்

இது ஒரு மிகப் பழமையான நாடு. இது 1947, அக்டோபா 15-ந் தேதி இநதிய ஒனறியத்தில் சேருவதற்குமுன் மனனர்களால 1300 ஆணடுகளாக ஆட்சி செய்யப்பட்டு வந்தது. திரிபுரா 1956. செப்டம்பர் முதல் தேதி மாநிலஙகளின் சீரமைப்புடன் ஒன்றிய பிரதேசமாக மாறியது இது 1972, சனவரி 21-ஆந் தேதி ஒரு மாநிலமாக நிறுவப்பட்டது. ஆட்சியின வசதியின் பொருட்டு இது 10 வட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை: 1) சாதர் (Sadar), 2) கௌவாய் (Khowai), 3) கைலாசாகர் (Kailasahar), 4) தாமநகர் (Dharmanagar), 5) சோனமுரா (Sonamura), 6) உதைபூர் (Udaipur), 7) பெலோனியா (Belonia),

8) கமல்பூர் (Kamalpur), 9) சப்ரூம் (Sabroom), 10) அமர்பூர் (Amarpur).

இங்கு 60 அங்கத்தினர்கள் கொண்ட ஒரு சட்ட மன்றம் இருக்கிறது மக்கள் சபையில் இரண்டு பேரா ளர் இருக்கின்றனர். மேலசபைக்கு ஒருவர் நியமனம் செய்யப்பட்டிருக்கிறார்.

வேளாண்மை முக்கிய தொழில். அரிசி, சணல், பருத்தி, தேயிலை, பழங்கள் பயிராகின்றன. ஆண்டு தோறும் 326 000 கண்டி (1975)அரிசியும், 5376 எகடா நிலத்திலிருந்து 2,958,000கிலோ தேயிலையும்உற்பத்தி செய்யப்படுகின்றன காடுகளிலிருந்துதேக்கு, விறகு, அடுப்புக்கரி ஆகியவை கிடைக்கின்றன மின்இணைப்பு 150 கிராமங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ளது சாலை களின் நீளம் 1580 மீ (1971) அதில் 736 மீ கற்களால் உறுதி செய்த சாலைகளாகும். தர்மநகருக்கும், கல் காளிகாட்டுக்கும் (Kalkalighat) இடையே ஒரு புகை வண்டி நிலையம் இருக்கிறது. ஒரு விமான நிலைய மும் இருக்கிறது அ.கே

**திரிபுராந்தக மூர்த்தி**: சிவபெருமான் எடுத்த பல வடிவங்களுள் திரிபுராந்தக மூர்த்தி வடிவம் குறிப்பிடத்தக்கது.

**புராண வரலாறு**: முன்னொரு காலத்தில் தார காட்சன் என்பவனின் புதல்வர்களாகிய தாரகாட் சன், கமலாட்சன், வித்யுன் மாலி என்னும் அசுரர் கள் மூவரும் பெருந்தவம் புரிந்து, பறந்து திரிந்து உலவும் தன்மையுடைய பொன், வெள்ளி, இரும்பு என்ற உலோகத்தால் அமைந்த மூன்று பெரும் கோட்டைகளைப் பெற்றனர். அவற்றைக் கொண்டு அம்மூவரும் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் பெரும் கொடுமைகள் புரிந்துவந்தனர். அவர்களின் செருக்கை அடக்கி, அவர்களை அழிக்கச் சிவபெருமான் திரு வுளம் கொண்டு தேவர்கள் எல்லாரும் படைகளாவும் சூரிய, சந்திரர்கள் சக்கரமாகவும் உலகம் தேராகவும் அமைய, அத்தேரின்மீது ஏறித் திரிபுர அசுரர்கள் மீது போர்செய்யப் புறப்பட்டார். அப்போது தேவர் கள் எல்லோரும் இவர் நம்முடைய துணையைக் கொண்டன்றோ போர்புரியச் செல்கின்றார் என எண்ணிச் செருக்குற்றனர் இதையறிந்த சிவபெரு மான் தேவர்களின் அறியாமையை நினைத்துச் சிறிது புன்முறுவல் தோன்றச் சிரித்தார். அச்சிரிப்பினா லேயே திரிபுரங்களும் அழிந்தன இவ்வாறு சிவபெரு மான் திரிபுரங்களை அழியச் செய்தருளிய நிலையே திரிபுராந்தக மூர்த்தம் எனப்படும்.

சிவபெருமான் திரிபுரங்களை எரித்தருளிய வீரச் செயல் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. பரிபாடலில் இறைவன் 'முப் புரம் எரித்த விரிசடைக் கடவுள்' என்று கூறப்பட் டுள்ளான். புறநானூற்றுப் பாடல் ஒன்று (புறம், 55) திரிபுரம் எரித்தவரும் நஞ்சுண்டவரும் சந்திரனைச் சூடியவரும் ஆகிய சிவபெருமான் எனக் குறிப்பிடு கின்றது. கலித்தொகையிலும் சிலப்பதிகாரத்திலும்





திரிபுராந்தக மூர்த்தி

திரிபுரமெரித்த வரலாறு உள்ளது. தேவாரத் திருப் பதிகங்களில் திரிபுரம் எரித்த செயல் விரிவாகக் காணப்படுகின்றது. திரிபுரத்தைப் பற்றியும், திரிபுர மெரித்த காரணம் பற்றியும், வில்லைப்பற்றியும், வில்லின் நாண் பற்றியும, தேரைப் பற்றியும், திரி புரத்தை அழித்தவரைப் பற்றியும், தேவர்களுக்கும் அடியவர்களுக்கும் அருளியது பற்றியும் தேவாரம் விரிவாக எடுத்துரைக்கிறது.

சிவபெருமானுடைய பல்வேறு வடிவங்களைப் பற்றி கி.பி. 7-ஆம் நூற்றாண்டிலிருந்து 9-ஆம் நூற் றாண்டு வரை ஆட்சி செய்த பல்லவ, பாண்டிய மன்னர்களின் செப்பேடுகளும், கல்வெட்டுகளும் கூறு கின்றன. மன்னர்களை இறைவனுடன ஒப்பிட்டுப் பேசுகின்றன. திரிபுராந்தகரின் வடிவம் மன்னர்கள் போரில் வெற்றி பெறுவதற்கும், வெற்றிபெற ஊக்க மளித்தற்கும் காரணம் ஆக இருந்தது என்பதைக் கல வெட்டுகளின் வாயிலாக அறியலாம். பல்லவ மன்ன னான சிம்மவர்மன் காலத்தைச் சேர்ந்த பள்ளன் கோயில் செப்பேடு பல்லவ மன்னர்களின் முன்னோ னான அசுவத்தாமன திரிபுரங்களை எரித்த திரி புராந்தகரின் வடிவமாகக் கருதப்படுகிறான என்று கூறுகிறது. இராசசிம்மன் தன் விரோதிகளின் நகரைத் திரிபுராந்தகர் எரித்தது போல அழித்துப் பரமேசு வரன என்ற பட்டம் பெற்றிருந்தான் எனக் கல வெட்டுகள் கூறுகின்றன.பாண்டிய மன்னனான நெடுஞ் சடையனின சீவரமங்கலச செப்பேடுகள இறைவன் 'பினாகபாணி'யாக நின்று அசுரர்களை அழித்த வரலாறு கூறுகின்றன. வீர நாராயணனின தளவாய்ப் புரச் செப்பேடுகள அவனுடைய தமையன வர குணன் பினாகபாணியான இறைவனை எப்பொழு தும் தொழுபவன் எனபதைப் 'பிளளைப்பிறை சடைக் கணிந்த பினாகபாணி எமபெருமானை உள்ளத்தில் இனிது நிறுவி உலகங் காக்கின்ற நாளில்' எனக் குறிப்பிடுகின்றன. பினாகபாணி என்பது வில்லேந்திய திரிபுராந்தகரையே குறிக்கும். சோழ மன்னர்கள் காலத்தில்தான் திரிபுராந்தகரைச சிற்பங்களிலும், செப்புத் திருமேனிகளாகவும் பெருமளவில் காண லாம். இராசகேசரி சுந்தர சோழன் என்ற இரண் டாம் பராந்தகன 'ஆற்றலில திரிபுரம் எரித்த விரி சடைக் கடவுளான சிவபெருமானுக்குச் சமமானவன்; பகை மன்னரின் வலியை அழித்தவன்; குடிமக்களைத் தன் நற்குணங்களால வசீகரித்துக்கொணடு ஆழிசூழ் உலகை ஆணடவன்' என ஆனைமங்கலசசெப்பேடு கள் கூறுகின்றன.

**சிற்பங்கள்:** மாமல்லபுரத்தில் முப்புரம் எரித்த இறைவன இரணடுவிதமாகக் காட்டப்பட்டுள் ளார். கடற்கரைக் கோயிலின் வடக்குச் சுவரில முப் புரம் எரிக்கத் தேர்மீதேறி, விற்பிடித்து வீரச்சமர் புரியும் தோற்றமாக அது விளங்குகிறது. மற் றொன்று பலிபீடத்தின் அருகிலுள்ள கொடித்தூண் பகுதியில் ஒருபுறம் உளள உருவத்தில் நான்கு திருக் கரங்கள் உளளன. கீழ்க்கரம் நீண்ட காம்பையுடைய மழுவை ஏந்தி நிற்க மற்றொரு கரத்தில ஒரு வில்லைச சிவன பிடித்திருக்கிறார். வலக்கரங்களுள்



திரிபுராந்தக மூர்த்தி

ஒன்று சூலத்தையும் மறறொன்று அமபையும் பிடித துளளன. காஞ்சிபுரம கைலாசநாதர்கோயிலிலே வடக குச சுவரில திரிபுராநதகரின சிற்பம காணப்படுகிறது. சிவபெருமான தேரில ஏறிசசெலவது போன்ற காட்சி சித்திரிககபபட்டுளளது தேரினருகே துர்க்கையும், வலபபுறததிலே திரிபுர பைரவியும அமாநத நிலையில் காணபபடுகிறாாகள. பலலவா காலச சிற்பககலைககு இவை எடுத்துககாட்டாகும்

முற்காலச சோழா காலக கோயிலகளில தேவ கோட்டஙகளில திரிபுராந்தகரின திருவுருவததைக காணலாம. இருக்கு வேளிர்களின தலைநகரான கொடுமபாளூரில உளள கோயிலின விமானததில சிவபெருமான முபபுரத்தையும அழிததபினனா காலை மடிதது விலலைக கையிலே ஏநதி வேகமாகச சுழனறு ஆடுகினற நிலையில ஒரு சிறபம உளளது. தஞ்சைப பெருஙகோயில கருவறையின மேலநிலைகளில் ஏறககுறைய 30 திரிபுராநதகா சிறபஙகள காணப்படுகினறன திரிபுராநதகரின புராண வரலாறறினைத தொடா சிறபஙகளாகவும காணலாம். திரிபுர அசுரர்கள சிவபக்தி உடையவாகள. தலையில எப்பொழுதும் சிவலிஙகததைச சுமந்து கொணடிருபபவாகள. தம்மிடம ஈடுபாடு கொண்டவாகளைச் சிவபெருமான அழிககத தயஙகுவாா எனக கருதித திருமால புத்தா வடிவம் எடுத்து சைவ நெறியில இருககும் அவர்களை மாறறுகிறார்

திரிபுரததைத் தான சிவபெருமான அழிததாரே தவிரச் சிவபகதி கொணட அசுரர்களுள் இருவரைத தம் வாயிற்காவலராகவும, ஒருவனைத தான ஆடும்பொழுது குடமுழா எனற இசைககருவி வாசிபபவனாகவும கொணடு அவாகளுககு அருளசெயதாா. இதே வரலாறறைக கருவறையில சுறறியுளள திருசசுற்றில ஓவியமாகவும தஞசைக கோயிலில காணலாம. தாராசுரம் கோயிலிலும இதுபோனற சிற்பத தொடா காணபபடுகிறது பிறகாலச சோழா கலைப பணிககு எடுத்துககாட்டாகச சிதமபரம் கோயிலில கோபுரஙகளில திரிபுராநதகா, தேவியுடன வில்லேநதி நிற்கும கோலத்தைக காணலாம் நாயக்கா காலததில தூணகளில திரிபுராந்தகரின சிறபத்தை அமைக்கும வழககம காணலாம.

**செப்புத் திருமேனிகள்.** சோழா காலத்திலேதான திரிபுராநதகரின செப்புத திருமேனிகள் மிகுநத அளவில் காணப்படுகினறன சோழர்காலக் கலவெட்டுகளில இததிருமேனி 'திரிபுரவிசயர்' 'திரிபுவனசுநதரா' எனக் குறிககப்படுகிறது. திருநல்லம் எனப்பெறும் கோனேரிராசபுரம்கோயிலுக்குச செம்பியனமாதேவி



திரிபுராந்தகமூர்த்தி தேரின மீது செல்லும்காட்சி(பிறகாலச சோழர் சிற்பம்)



திரிபுராந்தகரும் இறைவியும்

பல தானங்களை அளித்தாள். அதில் திரிபுராந்தகரையும்தேவியையும் செப்புத் திருமேனியாகச் செய்தளித்து வழிபாட்டிற்காகத் தானமளித்திருக்கிறாள். இன்றும்அத்திருமேனி வழிபாட்டில் உள்ளது. தஞ்சைக் கோயில் கல்வெட்டு 'தஞ்சை அழகர்'என்ற திருமேனி செய்தளிக்கப்பெற்றதாகக் குறிப்பிடுகிறது. இது திரிபுராந்தகர் திருமேனியாக இருக்கலாம் என வரலாற்றுஅறிஞர்கள் கருதுகின்றனர்.தஞ்சை மாவட்டத்தில்முதலாம் குலோத்துங்க சோழனுடையகாலத்துத் திரிபுராந்தகர் திருமேனி ஒன்று காணப்படுகிறது. இத்திருமேனியின் பீடத்தில் இதனுடைய வழிபாட்டிற்காகச் சோழப்பேரரையன் என்பவனால் நிலம் தானம் அளிக்கப்பட்ட கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. பிற்காலத்தில் இவ்வாறு திரிபுராந்தகர் திருமேனி வடிப்பது குறைந்துவிட்டது. பண்டைய மன்னர்களுடைய வெற்றிக்கு ஊக்கம் கொடுக்கும் வகையில் திரிபுராந்தகரின் வரலாறு அமைந்திருந்ததால் கலை மற்றும் வரலாற்றில் திரிபுராந்தக மூர்த்தியின் திருஉருவம் ஒரு சிறப்பிடம் பெற்றுத் திகழ்கிறது எனலாம். கி.ஶ்ரீ.

**திரிபுவாதம்** என்பது காரல் மார்க்சு வகுத்த அரசியல் வகையான சமநிலைக் கொள்கையினின்றும் வேறுபட்டு, அவருக்குப் பிற்பட்ட காலத்தில் இலெனின், இசுட்டாலின், மா சே துங்கு, டிட்டோ (Titto) முதலியோரும், கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் சமநிலைச் சமூகத்தை நிறுவுதற்காக வேறு பலரும் எடுத்துக் கூறிய அணுகுமுறைகளைக் குறிப்பதாகும். காரல் மார்க்சு கூறிய பொதுவுடைமைக் கோட்பாட்டில் பொருளியல் தருக்கவாதம், வரலாற்றைப் பற்றிய பொருளாதார விளக்கம், மிகை மதிப்புக் கோட்பாடு, வருக்கப் போராட்டம், தொழிலாளர் வருக்கத்தின் வல்லாட்சி, அரசின் மறைவு முதலிய கருத்துகள் காணப்படுகின்றன (காண்க: காரல் மார்க்சு). காரல் மார்க்சு, சமநிலைப் புரட்சிகள் கடந்தகால வரலாற்றில் நடந்தது மட்டுமல்லாமல், எதிர்காலத்திலும் நடக்குமென்று கூறினார். ஆகையால் சமநிலைக் கொள்கையானது, புரட்சிக் கொள்கைக்கும் (Revolutionist doctrine) திரிபுவாதத்துக்கு மிடையே (Revisionism) தொடர்ந்து மாறி மாறிச் செல்லும் இயல்புடையது என்பது மார்க்சின் தருக்க இயலிலிருந்து அறியப்படுகிறது.

மார்க்சின் காலத்திற்குப் பினனர், அவருடைய கருத்துகளை ஏற்றோர் பரிணாம முறைச் சமநிலையாளர் (Evolutionary School of Socialists) எனவும், புரட்சிவகைச் சமநிலையாளர் (Revolutionary School of Socialists) எனவும் பிரிக்கப்பட்டனர்.

இலெனின், இசுட்டாலின, மா சே துங்கு முதலியோரும், கி.பி.19-ஆம் நூற்றாண்டில் பிரெஞ்சுத் தொழிலாளர் இயக்கத் தலைவராகிய சார்சசு சோரல் என்பவரும் வகுத்த தொழிற்சங்கக் கோட்பாட்டினைக் கொண்டோர், வன்செயற் புரட்சி என்னும் அணுகுமுறையில் சமநிலைக் குறிக்கோளை அடைய முயன்றனர். புதிய சமநிலைச் சமூகத்தினுடைய அடித்தளமாகவும், இப்புதிய சமூக அமைப்பை உருவாக்குவதற்கு ஏற்ற ஒரு கருவியாகவும் தொழிற் சங்கங்களின் கூட்டமைப்பு இருக்கிறது என்று கூறும் ஒரு சமூகக் கொள்கையே தொழிற்சங்கக் கோட்பாடு (Syndicalism) ஆகும். (காண்க: சமநிலைக் கோட்பாடு.) இக்கொள்கை வல்லந்தப் புரட்சி, வேலை நிறுத்தம், இயந்திரங்களை உடைத்தல் போன்ற முறைகளை ஆதரிக்கிறது.

**காட்சுகி கூறிய கருத்து**: வயதுவந்தோர் வாக்குரிமை வழியாகத் தொழிலாளர் வருக்கமானது அரசாங்கத்தைக் கட்டுப்படுத்துதல் வேண்டுமென்றுதான் மார்க்சு வகுத்த சமநிலைக் கொள்கைக்குப் பொருள் கொள்ளுதல்வேண்டுமென்று காரல்காட்சுகி என்பவர்

(கி.பி. 1853-1938) கூறி, அவர் இலெனின் நடத்திய போல்சுவிச அரசாங்கத்தை வல்லந்த ஆட்சியை நடத்தும் சிறுபான்மைக் கட்சியின் ஆட்சி என்று கண்டனம் செய்தார். இலெனின் காட்சுகியை ஒரு திரிபுவாதி (Revisionist) என்று வெறுத்தார் (காண்க. கார்ல் காட்சுகி).

**கூட்டுடைமைத் தத்துவம்**: தொழிற்சங்கக் கொள்கையாளரும், உருசியப் போல்சுவிசக்குக் கட்சியாரும் பின்பற்றிய வல்லந்த முறைகளை மறுத்து, படிப்படியான, அரசியலமைப்புக்கு ஏற்ற அமைதியான முறைகளில் சமநிலைச் சமூகத்தை உருவாக்குதல் வேண்டுமென்று கூறியவர்களுள் கூட்டுடைமைத் தத்துவச் சமநிலையாளரும் (Collective Socialists) கழகமுறைச் சமநிலையாளரும் (Guild Socialists) குறிப்பிடத்தக்கவர்களாவர். கூட்டுடைமையின் ஒரு வடிவமாக ஆங்கில நாட்டிலிருந்த பேபியன் சமநிலைக் கழகத்தையும் (Fabian Socialistic Society) தொழிலடிப்படையில் பாராளுமன்றத்தில் பிரதிநிதித்துவம் வழங்கப்படுதல் வேண்டுமென்று கூறிய கழகமுறைச் சமநிலையாளரையும் கருதலாம். (காண்க: பேபியன் சமநிலைக் கொள்கை, காண்க: கழகமுறைச் சமநிலைக்கொள்கை).

**இலெனின் வகுத்த திரிபுவாதம்.** முதலாளித்துவத்தின் இறுதிக்கட்டமே ஏகாதிபத்தியம் ஆகுமென்று (Imperialism) மார்க்சு கூறிய கருத்துக்கு முழு வடிவம் கொடுத்தவர் இலெனின் ஆவர். எனவே தான் இலெனின் கொள்கை என்பது ஏகாதிபத்தியக் காலத்திலும், தொழிலாளர் புரட்சிக் காலத்திலும் தோன்றிய மார்க்சியக் கொள்கை ஆகும். மார்க்சு பொதுவுடைமைத் தத்துவமானது மிகவும் தொழில்வளர்ச்சி பெற்ற நாட்டிலேதான் தோன்றுதல் இயலும் என்று கருதினார். இக்கருத்தை இலெனின் மாற்றி, பொதுவுடைமைப் புரட்சி உருசியா போன்ற நிலமானிய முறையிலிருந்த ஒரு நாட்டில்தான் தோன்றும் என்று கூறி, அதற்கு ஆதரவாக, அவர் தாம் 1917-இல் உருசியாவில் நடத்திய புரட்சிக்கு உருசிய வேளாண் வகுப்பாருடைய ஆதரவைப் பெற்றதையும், அதன் பொருட்டு அவர் வேளாண் உற்பத்தி முறையில் சமநிலைக் கொள்கையைப் புகுத்தாமல் விட்டுவிட்டதையும் சுட்டிக்காட்டினார். மேலும், அவர் ஒரு பன்னாட்டுக்கொள்கையாக இருந்த மார்க்சிய சமநிலை கொள்கைக்குத் தேசியவகையானதோர் விளக்கத்தை (National Explanation) அளித்தார். உருசியா ஒரு தொழிலாளர் நாடு என்ற வகையில் உருவாகி, தேசிய ஆதாரத்தில் சமநிலைக்கொள்கை கடைப்பிடிக்கப்படுதல் வேண்டுமென்று அவர் மார்க்சின் பொதுவுடைமைக் கருத்துக்கு ஒரு புதிய விளக்கம் அளித்தார். எல்லா நாடுகளிலும் சமநிலைக் கொள்கை ஒரே சீராக நிலைபெறுதலியலாது என்றும், ஆனால் நாளாவட்டத்தில் எல்லா நாடுகளும் ஏதாவதொரு வழியைப் பின்பற்றிச் சமநிலைக் கொள்கையை ஏற்றுக் கொள்ளுதல் கூடுமென்றும் அவர் மார்க்சின் கொள்கைகளை விளக்கினார். மேலும், மார்க்சு தொழிலாளர் வருக்கத்தின் வல்லாட்சி என்னும் கருத்தைத் தம் பொதுவுடைமைக் கொள்கையில் கூறினார். இலெனின் இக்கருத்தும் நடைமுறைப்படுத்தப்படும்போது, அது கட்சியின் வல்லாட்சியாகவே இருக்கும் என்று கூறினார். இலெனின் இவ்வாறு கூறியதும் மார்க்சியக் கருத்தினின்று தோன்றிய கரு திரிபுவாதமேயாகும். இலெனினுடைய திரிபுவாதத்தின்படி பொதுவுடைமைக் கட்சியே தொழிலாளர் வகுப்பின் பின்னணியாக அமைந்து, அது குடியாட்சி இயல்புடைய அதிகாரக் குவிப்பு என்ற விதியின்படி செயற்படும். மேலும், இலெனின் 1920-இல் வகுத்த புதிய பொருளாதாரக் கொள்கையும் திரிபுவாதத்தின் ஒரு பகுதியே ஆகும். இக்கொள்கையில் இலெனின் முதலாளித்துவக் கொள்கைகள் சிலவற்றை ஏற்று, தனியார் தம் முயற்சியைத் தூண்டவல்ல சில கூறிய முறைகளைச் சில வரம்புகளுக்குட்பட்டு அளித்தார். இவ்வாறு இலெனின் பல வகைகளில் மார்க்சியக் கருத்துகளை விட்டு விலகிச் சென்றாலும், அவர் மார்க்சு கூறிய தருக்கவாதப் பொருளியல், வருக்கப் போராட்டம், இறுதி வெற்றி தொழிலாளரைச் சேர்தல் என்ற கருத்துகளை மாற்றாமல் பின்பற்றி, நாட்டிற்கு ஒரு தலைமை இடத்தை உருவாக்கினார்.

**இசுடாலின் பின்பற்றிய திரிபுவாதம்:** இசுடாலின் தொழிலாளர் புரட்சி என்ற கருத்தை ஆதரித்தாராயினும், அவர் இலெனின் பின்பற்றிய 'குடியாட்சி இயல்புடைய அதிகாரக்குவிப்பு' என்ற கருத்தைப் பின்பற்றாமல், கட்சியினுள் கண்டிக்கும் உரிமை கையாளப்படுதலைத் தடுத்தார். மேலும் இவர் கட்சிச் சருவாதிகாரத்தை வலுவாக நிறுவி, கட்சியினுள் எந்த எதிர்ப்பும் தோன்றாதபடி அதைத் தம் முழுக் கட்டுப்பாட்டில் வைத்தார் இவர் கடைப்பிடித்த திரிபுவாதக் கொள்கையே, 'ஒரு நாட்டின் சமநிலைக் கொள்கை' என்பதாகும். இவருடைய நேர்முக ஆட்சி உருசியாவில் உறுதியாக நிலைபெறுதற்கு உதவும்பொருட்டு, இவருடைய ஆட்சிக்காலத்தில் பல ஐந்தாண்டுப் பொருளாதாரத் திட்டங்கள் வெற்றியாகக் கொண்டு வரப்பட்டு நிறைவேற்றப்பட்டன. அதிகாரக் குவிப்புடைய எதேச்சாதிகாரமே சம நிலைக் கொள்கையை வெற்றியாக நிறைவேற்றுவதற்கு உதவியாக இருக்கும் என்பது இவருடைய கருத்து. இவர் பொதுவுடைமைக் கொள்கையை விட தேசிய கொள்கையே வலுவானதென்று நம்பினார்.

**திட்டோ:** (Tito) இரண்டாம் உலகப்போருக்குப் பின கிழக்கு ஐரோப்பாவில் உருசியா பொது வுடைமை நாடுகளின் தனித் தலைமைத்துவம் ஏற் றதை ஊகோசுலேவியா நாட்டின் பொதுவுடைமைக் கட்சித் தலைவர் திட்டோ ஏற்றுககொள்ள மறுத் தார். ஒரு வலுவான தேசியவாதியாகிய திட்டோ தம் நாட்டில் பொதுவுடைமைக் கொள்கையைப் பின் பற்றினாலும், அயல் நாடாகிய உருசியாவின் பொது வுடைமைத் தலைமையை ஏற்றுககொளள மறுத்த காரணத்தால் அவர் ஒரு திரிபுவாதியாகக் கருதப்படு கிறார்.

**மா சே துங்கு பின்பற்றிய மார்க்சியக் கருத்து:** சீனா வில் தேசியப் படைகளைத் தோற்கடித்தபின 1949 -இல் தங்களுடைய ஆட்சியை நிறுவிய சீனப் பொது வுடைமைக் கட்சியின் தலைவர் மாசேதுங்கு மார்க் சையும், இலெனினையும் பின்பற்றி நிலமானிய முறை, முதலாளித்துவ முறை, ஏகாதிபத்தியம முதலியவை களை வலுவாக எதிர்த்த தோடல்லாமல், வேளாண தொழிலாளரைப் புரட்சிக்குரிய ஒரு வலுவான கருவியாக மாற்றினார். உருசியாவில் வேளாண மையில் கூட்டுப்பணணை முறை கையாளப்பட்டது. சீனாவில் மாசேதுங்கின் ஆட்சியில ஒருவா தாமே நிலத்தைப் பயிரிடுவாராயின அவருக்கு நிலம் வைத் துக்கொள்ளும் உரிமை வழஙகப்பட்டது. இநதக் குடி யானவ உரிமை முறை (Peasant propritorship) உரு சிய பொதுவுடைமைக் கருததினினறும் மாறுபட்டதா கும். சீனாவில மாவோவின் ஆட்சியினால தோனறியிருக் கும பொதுவுடைமைக் கொள்கை, ஊரகத தொழி லாளருடைய பொதுவுடைமைக் கொளகை (Communism of the Rural Proleptariat) ஆகும் இது மார்கசு கூறிய நகரிய ஆலைத் தொழிலாளருடைய பொது வுடைமை முறையினின்றும் வேறுபட்ட தாகையினால் மாவோவை ஒரு திரிபுவாதியாகக் கொளவர். மாவோ தாம் எழுதிய 'ஒரு புதியவகைக் குடியாட்சி' (A New Democracy) என்ற நூலில 'நிலமானியப் பிரபுகக ளுக்கும், முதலாளிகளுக்கும் எதிராக, குடியாடசி இயல்புடைய வல்லாட்சியே மக்களால நிறுவப் படுதல் வேணடும்' எனறு கூறுகிறாா. அவர் கொள்கைப் பரப்பு முதலிய முறைகளால பொது வுடைமைக் கருத்துகளைப் பரப்பி, எதிரிகளைத் தம் கட்சியில் இழுத்துககொளளும் முறையைக் கடைப் பிடித்தாரே தவிர, இசுடாலின் செய்ததைப் போல எதிரிகளை ஒழித்துவிடவிலலை. அவருடைய கட்சி யில் ஊரக, நகரியத் தொழிலாளா மட்டுமல்லாமல், நடுத்தர வகுப்பாரும் சேர்த்துககொளளப்பட்டிருநத னர். மாவோவும் இலெனினைப் போலக் கட்சிச சரு வாதிகாரம் தவிர்கக இயலாததெனறும், அதுவே சம நிலைக் கொள்கையை நிலைநிறுத்த வலலதெனறும் உறுதியாகக் கூறினார்.

மார்க்சிய சமநிலைக் கொள்கையைச் செயற் படுத்தும் வழிகளில் பல நாடுகளுககிடையே பல வேறுபாடுகள காணப்பட்டாலும், அக்கொள்கையின் மையக் கருத்தில் வேறுபாடு காணப்படவில்லை; தனியார் உடைமை முறையை ஒழித்து, சமூகத்தவர் அனைவருக்கும் பயனுளள வகையில பொருளாதார உற்பத்திக் காரணிகளும் பங்கீட்டு முறையும் சமூகத் தின் உடைமைகளாக இருத்தலவேணடு மெனற மையக் கருத்தைச் சமநிலைக் கொள்கையை ஏற றுள்ள நாடுகள் அனைததும் பினபற்றுகின்றன.

பா.சு.

**துணை நூல்கள்:**


Alfred, G. Meyer., Leninism, Cambridge, Massachussetts, 1957.

Gustan. A Weher., Dialectical Materialism (English Translation by Peter Heathn), London, 1959.


***திரிபோலி*** இலெபனான (Lebanon) நாட்டில உளள ஒரு குறிப்பிடத்தக்க நகரம். இது ஏறத்தாழ கி. மு. 700-ஆம ஆணடில நிறுவப் பெற்றது. பொயனீசிய நகரங்களான (Phoenician Cities) தயர் (Tyre), சிடான (Sidon), அரதூசு (Aradus)



திரிபோலியிலுள்ள உப்பு ஏரி

ஆகிய மூனறும் ஒரு கூட்டு அமைத்துக் கொணடு, திரிபோலியைத் (Tripoli) தலைநகராகக் கொணடி ருநதன பிறகு, செலயூசிடு (Seleucid) பேரர சுக் காலததிலும் இநநகரம் சிறப்புற்று விளஙகியது. அரேபியர் இதை கி.பி. 638-இல் கைப்பற்றிக் கொண்டனர். சிலுவைப் போர்கள் காலத்தில (கி.பி. 1109) இந்நகரம சிலுவை வீரர்களால் கைப்பற்றப்

பெற்றது. அம்முற்றுகையின்போது திரிபோலியிலிருந்த ஒரு பெரிய நூலகம் அழிவுற்றது. எகிபதிய சுலதான் கி.பி. 1289-இல இந்நகரை வசபபடுத்தினான. பிறகு இந்நகர் புதிதாகக் கட்டப்பெறறது. ஆங்கிலேயா துருக்கியரிடமிருநது 1918-இல திரிபோலியைக் கைபபற்றினா. இரணடு ஆணடுகளுககுப் பிறகு (1920-இல்) திரிபோலி இலெபனானின ஒரு பகுதியாயிற்று. மக்களதொகை 175,000 (1984).

**திரிபோலி** (2) வட ஆபபிரிககாவில் உள்ள இலிபியா (Libya) நாட்டின தலைநகா. மத்தியதரைக் கடல துறைமுகமான திரிபோலி (Tripoli) இலிபியா நாட்டின வடமேற்கில் ஒரு சிறந்த வாணிகத தலமாகவும தொழில் நகரமாகவும் விளங்குகிறது.



திரிபோலியிலுள்ள பழைய அரண்மனை

இந்நகர் கி.மு. 7-ஆம நூற்றாணடில பொயனீசரால் நிறுவப்பட்டிருக்ககககூடும் என்று தெரிகிறது. உரோமானியர் கி.மு. முதல நூற்றாணடில இந்நகரைக கைப்பற்றினர். அவர்கள வீழச்சிக்குப் பிறகு கி.பி 5-ஆம் நூற்றாண்டில வாணடலர் (Vandals) களும், 7-ஆம் நூற்றாணடில் அரேபியரும் இநநகரைக் கைப்பறறினர். திரிபோலி கி.பி. 1510-இல் இசுபானியரின் (Spaniards) கீழ்வந்தது, பிறகு உதுமானியத் துருக்கியின மேலாணமைஇங்குஏற்பட்டது.இநநகரில கடற்கொளளைக் கூட்டத்தினர் குழுமி,கப்பல்களைத் தாககிக் கொளளையடிககும தொழிலில ஈடுபட்டனர். இவாகளுடைய இககொடுநதொழிலை அமெரிககா 1801-5-ஆம் ஆணடுகளில நடத்திய போர் மூலம் முடிவுறச் செய்தது. திரிபோலி 1911-இல் இத்தாலிக்கு உரித்தாகியது. பிறகு, இத்தாலியக் குடியேற்ற நாடாகிய இலிபியாவின் தலைநகராகியது. இரணடாம் உலகப் போர்க் காலத்தில ஆங்கிலேயர் இதனைக் கைப்பற்றினா (1943). இலிபியா நாடு 1951-இல் விடுதலை பெறற தனிநாடாகியது. இதன தலைநகரான திரிபோலியின் மக்கள தொகை 980,000 (1982)

இஙகுப் புகையிலைப் பொருட்கள, துணி வகைகள் தயாரித்தல், உணவு பதனிடுதல் முதலிய தொழிலகள சிறப்பாக நடைபெறுகினறன. உரோமானிய காலத்துச் சுவர்களின அழிபாடுகளையும், உரோமப்பேரரசர் மார்ககசு அரீலியசின (Marcus Aurelius) வளைவுச் சினனததையும் திரிபோலியில காணலாம். தெ.பா.

**திரினிடாடு**: கரீபியன கடலில அமைந்துள்ள மேற்கிந்தியத தீவுகளுள் ஒன்று திரினிடாடு (Trinidad). இத்தீவு தென்அமெரிக்காவுக்கு மிக அருகில உளளது. கிறிசுதபர் கொலம்பசு எனபவா கி.பி.1498-ஆம் ஆணடு திரினிடாடு தீவைக கணடுபிடிததார். இதிலிருந்து ஏறக்குறைய முந்நூறு ஆணடுகள இது இசுபெயினின் (Spain)மேலாண்மையின கீழிருந்தது. இங்கிலாந்து கி.பி.1797-இல் இத்தீவைக் கைப்பற்றியது. திரினிடாடின்மீது இங்கிலாந்து கொண்டிருந்த உரிமை கி.பி 1802-இல சொணடுவரப்பட்ட அமியெனசு உடனபடிககையினால்(Tread& Amiens)உறுதி செய்யப்பட்டது. திரினிடாடும் அருகில் உள்ள சிறிய




திரினிடாடு அமைவிடம்

தீவான தெபாகோவும் ஒரே குடியேற்றமாகக் கி.பி. 1888-ஆம் ஆண்டு இணைக்கப்பட்டன. திரினிடாடு தெபாகோ மற்றும் சில சிறிய தீவுகள் சேர்ந்த பகுதி கி.பி.1962-இல் ஒரே விடுதலை நாடாக அறிவிக்கப் பட்டது. இதன் தலைநகரம் போர்ட்டு இசுபெயின் (Port of Spain).

திரினிடாடு ஒரு வெப்பமண்டலப்பகுதி (tropical). மேற்கிந்தியத் தீவுகளிலேயே மிகவும் வளமானது திரினிடாடு. மக்களுள் 20 விழுக்காடு வேளாண்மை யில் ஈடுபட்டிருக்கின்றனர். பாறைஎண்ணை, சருக் கரை, தேங்காய், கொக்கோ, ஆரஞ்சு, திராட்சை ஆகியவை திரினிடாடின் குறிப்பிடத்தக்க ஏற்றுமதிப் பொருள்களாகும். எண்ணெய்சுத்திகரிப்பு இங்கு நடைபெறும் சிறந்த தொழில். இங்குப் புகைக்கீல் (asphalt) மிகப் பேரளவில் கிடைக்கின்றது. திரினி டாடு ஒரு சுற்றுலா மையமாகவும் திகழ்கிறது.

திரினிடாடின் மக்களில் பெருமபான்மையினர் ஆப்பிரிக்கர்கள் (47%). கிழக்கிந்தியர்கள், ஐரோப் பியர்கள், சீனர்கள், கலப்பு இனத்தவர் போன்றவர் களும் வாழ்கின்றனர். ஆப்பிரிக்கர்களும் கலப்பு இனத் தவரும் கத்தோலிக்கர்கள். கிழக்கிந்தியர்கள் இந்து, முசுலீம் மதங்களைப் பின்பற்றுகின்றனர்.

திரினிடாடில் கலவிக்கு மிகச்சிறந்த இடம் கொடுக்கப்படுகிறது. தொடக்கக் கல்வியும் மேல் நிலைக் கல்வியும் இலவசம். மேற்கிந்தியத் தீவுகளின் பல்கலைக்கழகத்தின் வேளாணமைத்துறை, பொறி யியல்துறை, கலைத்துறை ஆகியவை திரினிடாடில் இயங்குகின்றன. திரினிடாடின் பரப்பு 4828ச.கி.மீ. மக்கள் தொகை 1,016,239 (1980). ஆ.செ.

**திருக்கச்சி அனேகதங்காவதம்**:தொண்டை நாட்டுச் சைவத் திருப்பதிகளுள் நான்காம் பதி இது. 'கச்சி' என்பது காஞ்சிபுரத்தைக் குறிக்கும். காஞ்சி புரத்தில் தேவாரப் பாடல் பெற்ற தனிக்கோயில் ஆதலின் 'திருக்கச்சி அனேகதங்காவதம்' எனப்பட் டது. அனேகதம்-யானை. விநாயகப் பெருமான், காஞ்சியை அடைநது, இஙகுத் தம் பெயர் பெற அனேகமேச்சுரர் எனற பெயரில் இலிங்கம் அமைதது வழிபட்டுத் தம்மை எணணுவார் செயல்களை முடிக கவும், எண்ணாதார் செயல்களுக்கு ஊறு விளைவிக் கவும் வரம் பெற்றதுடன், இறைவன அருளியவாறு இரணியபுரத்தின் அசுரரை வெனறு, அவர்களது கருவுள்ளே அவர்கள் சக்தியாகிய வலலபையை வாங்கி மணந்து வீற்றிருந்தருளும் வரலாறு, காஞ சிப் புராணம் அனேகதஙகாப் படலத்துள உளளது. விநாயகர் தவிரக் குபேரனும் வழிபட்ட தலமாகும். 'அங்கண அமர்' எனும் பெரியபுராணப் பாடல் (3346) இத்தலத்தைக் குறிப்பிடுகின்றது. இத்தலத் தைப் பற்றிச் சுந்தரர் பாடிய தேவாரப் பதிகம் 'தேனெய் புரிநதுழல் செஞசடை' என்பதாம். இப் பதிகம் மிக இனிய-எளிய தாளவொத்துடன் சிறுவர் சிறுமியரும் பாடி ஆடி மகிழத்தக்கவகையில அமைந துள்ளது. இப்பதிகத்தில் சுட்டப்படும் 'ஆணையுரித் தான் வயல்' என்பது, கோயிலுக்கு மேற்கே உள்ளது. இத்தலம், திருக்கச்சி ஏகம்பத்திற்குத் தென்மேற்கில், புத்தேரித் தெருவுக்கு மேற்கில் வயல்வெளியில் உள் ளது. வடநாட்டிலும் இப்பெயர் பெற்ற தலம் ஒனறு உணடு ஆதலின அதனின்றும் வேறுபடுத்தத் 'திருக் கச்சி' என அடைமொழியுடன கூறப்படுகின்றது. இறைவன் பெயர்:அனேகதங்காவதேசுவரர், இறைவி: காமாட்சியம்மை. ச.சா.

**திருக்கச்சி ஏகம்பம்**: செங்கற்பட்டு மாவட்டத் தின் தலைநகரம் காஞ்சிபுரம். இவ்வூரின்கண உள்ள சிவன் திருக்கோயிலே 'திருக்கச்சி ஏகம்பம்' ஆகும். இக்கோயில், காஞ்சிபுரம் புகைவணடி நிலையத்திற்கு மேற்கே 2கி.மீ. தொலைவில் உள்ளது. 'ஆம்புரம்' என்பது வடசொல். அது தமிழில் 'ஆம்பரம்' என்று வரும். 'ஆம்பரம்' என்பது 'ஏகம்'என்ற சொல்லொடு புணர்ந்து வடமொழி விதிப்படி 'ஏகாமபரம்' ஆயிற்று என்றும், அதுவே 'ஏகம்பம்', 'கம்பம்' என மருவிற்று என்றும் கூறுவர் சிலர். கம்பம்-நடுக்கம். இறைவி நடுங்கியதால இப்பெயர் பெற்றிருக்கலாம். கம்பை யாற்றின் கரையில் உள்ளதால், கம்பை என்பது கம்பம் என்று ஆகியிருக்கலாம். ஏகாமிரம்-ஒற்றை மாமரம். 'ஏகாமிரம்' என்பது'ஏகம்பம்' எனறு மருவி யிருக்கலாம். மறைகள மாவுருவாய் வழிபட்ட தலம் இது.

இத்தலத்தின பிரமன், திருமால, உருத்திரர் பூசித்த இலிங்கங்கள் உளளன. அவை முறையே வெள்ளைக் கமபம், கள்ளக் கம்பம், நல்ல கம்பம் என்ற பெயர்களால் வழஙகப்படுகின்றன. இவர்கள தவிர, வண்டாசுரன, வாலி ஆகியோரும் வழிபட்ட திருமயானம், வாலீச்சுரம் முதலாயினவும் உணடு. இவை தவிரத் திருக்கச்சபாலயம், காரோணம், பணா தரீச்சுரம், சுரகரீசம், பராசரீசம், வீட்டகாசம், மாணீச்சரம், உருத்திர கோடி, மகா சாத்தன் தளி முதலாயினவும் உணடு. இது, பிருதிவித் தலம். கயி லாயத்தினின்றும் இங்கு எழுந்தருளிய பார்வதி, இறைவனை அடைதறபொருட்டுத் தவம் செயத னள். எணணான்கு அறங்களையும் வழுவாது இயற் றினள். கம்பையாறறில்,ஒற்றை மாமரத்தடியில் மண லால் சிவலிஙகம் அமைத்து வழிபட்டனள். இறைவன் அருளால், ஆற்று நீர் பெருகிவரக் கம்பித்து, இறை

வனைத் தழுவினள் இதனால், அவளின் வளைத் தழும்பும முலைத தழும்புபும இறைவன, திருமேனியில ஏற றருளினன் என்பது புராணவரலாறு 'முததி தரும நகரேழனுள முககியமாம முதற காஞ்சி' எனபதற் கேற்ப முததி தரும நகா ஏழில முதனமையானது இது இஙகே காமாடசிககுத தனிதத கோயில உணடு. இககோயில தெறகு வாயிலில ஆயிரககால மணடபத்தின முனபுறம 'விகட சக்கர விநாயகா' கோயில் உளளது 'குமரக கோட்டம' எனபபடும குமாரக் கடவுள கோயிலும உணடு.

திருவொற்றியூரைவிட்டுப் புறபபட்ட சுநதரா, சஙகிலியாாககு அளித்த உறுதிமொழியை மீறினமை யால, தம் இரு கண ஒளியும் இழநது, பல தலஙகட் கும சென்று பணிநது, காஞசிபுரம வநதார். இஙகே திருவேகமபமுடையானை வணஙகியபோது அபபெரு மான திருவருளால இடக்கண ஒளிமட்டும பெற்றார். அபபோது பாடிய பதிகம 'ஆலநதான உகநது அமுது செய்தானை' எனபது. ஒவவொரு பாடடின இறுதி யிலும 'காணக் கண அடியேன் பெறற வாறே'என்று உருகிப பாடுகின்றாா. சேத்திர வெணபாககள பாடிய ஐயடிகள காடவாகோன ஆட்சி செய்த தலம. இவ ரும, திருககுறிபபுத் தொணட நாயனாா, சாககிய நாயனாா ஆகியோரும் இறைவன அருள பெறற தலம. இறைவன: ஏகாமபர நாதா, பெரிய கமபா தழுவக் குழைநத நாதா, இறைவி. காமாட்சி யமமை, ஏலவார் குழலி. விநாயகா: விகட சககர விநாயகா. முருகன: மாவடிக கநதன். மரம. மா. புண்ணிய நீா: சிவகஙகை, கமபாநதி ஆகியன. இறைவன் சநநிதி, கிழக்கு நோககியது, கோபுர வாயில தெறகில உளளது.

இக் கச்சி ஏகாம்பரததிறகு மட்டும் பனனிரு பதி கங்கள உளளன. சம்பந்தா், அப்பா, சுநதரா இம் மூவராலும் பாடப பெறற சிறப்பு, இத்தலத்திறகு உண்டு. இவை தவிர இததலததைப் பறறிய நூல கள திருவாவடுதுறை ஆதீனத்து மாதவச சிவஞான யோகிகளின் காஞசிப் புராணம், கச்சியப்ப முனிவா பாடிய காஞ்சிப் புராணம் இரணடாம் காணடம: கசசி ஆனநத ருத்திரேசர் வணடு விடு தூது, இரட்டையரின ஏகாம்பரநாதர் உலா, பட்டினத் தார் திருவேகம்பமுடையார் திருவநதாதி, மாதவச் சிவஞான யோகிகளின கச்சி ஆனந்தருத்திரேசா பதி கம், திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு, திருவேகமபா யமக அநதாதி, காஞ்சிக்கலித்துறைப் புராணம், காமகோட்டப் புராணம் எனப பல நூலகள்.

பணடைக காலததில் தொணடை மண்டலத தின் தலைநகர் காஞ்சிபுரம். இதையாணட புகழ் பெற்ற மனனர்களில தொணடைமான இளநதிரை யன் ஒருவன.

இஙகுளள ஏகாம்பரேசுவரம் தவிரத திருவெஃகா, திருமேறறளி, கசசபேசுவரம கோயிலகள கி பி. 7-ஆம் நூறறாணடிற்கும முறபடடவை. எனினும அழிவினறி உளளன. பிறகாலததில கலலால புதுபபிக கபபட்டுளளன.

மகேநதிரவர்மன காலததுக் கோயில ஒனறில தூணகள சில, அககாலததுக கலவெட்டுகளுடன, ஏகாமபரேசுவரா கோயிலில உளளன இவ்ஏகாமபர நாதா கோயில, விசயநகர அரசர்கள காலத்தில புதுபபிககப்பட்டுப பெருககபபடடவை இககோயிலின தெனகோபுரம் கிருடடிணதேவராயரால கட்டபபட் டது. ஒனபது நிலைகள கொண்ட இக்கோபுரம, தெனனாட்டின் பெரிய கோபுரஙகளில ஒனறு இதன எதிரே அமைநத கலியாண மணடபம், கோயிலில உளள ஆமை மணடபம் விசயநகர அரசர்களின காலததவை. கோயிலின உடபுறம் கருவறையை யடுதத பகுதிகள மூனறாம குலோத்துஙக சோழன காலததவை. உளளிருககும பழமையான ஏகாமபர லிங்கம, மணறகலலாலானது. ஏகாமபர நாதா கோயி லின வெளிமதிலகி பி.1799-இல ஆட்சன எனபவரால புதுப்பிககபபடடது அதில, புத்தர் சிலைகளும் சோநதுவிட்டன. இசசிலையில சிலபகுதிகளில மகேந திரன காலத்து எழுததுகள சிலவும விசயநகரச் சினனஙகள சிலவும காணப்படுகினறன முன மணட பத்தில உளள ஒரு சிலை,கரிகாலன்உருவம எனபா, அதறகுத தாடி உளளது.

**கல்வெட்டுகள்:** (1) திருக்கோயிலுககு முனனால இருபபது மேறகு நோககிய மயானேசுவரர் கோயில. இதில மட்டும 15 கலவெட்டுகள படி எடுத்துளளனா. அவறறுள் காகதீய கணபதி (கி பி.1250); சோழ மன் னருள உத்தமன, இராசராசன, இராசாதிராசன குலோத்துஙகன, 2-ஆம் இராசராசன ஆகியோர்; விசயகணட கோபாலன, விசயநகர சதாசிவன ஆகி யோா கலவெட்டுகள உளளன. நாரதர் சநநிதியில புக்கராயன் (கி பி 1406)கலவெட்டுகள் மூனறு உள ளன ஆயிரககால மணடபத்தில் வடமொழி சுலோ கம செதுக்கபபட்டுளளது. சபாநாயகா கோயிலில சமர கோலாகலன (கி பி 1469) கலவெட்டு உளளது. இராயர் மணடபத்தில் கமபண உடையார் ஆனநத ஆணடுக் கலவெட்டு உளளது. காமாட்சி அம்மன கோயில கல்வெட்டில் அச்சுதராயன(கி.பி.1534) படை யெடுத்து வெறறிகணடு, கோயிலுககு எட்டு ஊர்கள கொடுத்த செய்தி கூறபபடுகின்றது கோபுரத்தில விசயநகர மல்லிகார்ச்சுனன் (கி.பி.1456) கலவெட்டு

உள்ளது. இக்கல்வெட்டுகளால் அறியலாகும் செய்தி களிற் சில. உத்தம சோழனது கல்வெட்டில் 'வீர ராணியார்' அவன் தேவி எனறுகுறிப்பிடுகிறது. முதல் இராசராச சோழன 27-ஆம் ஆட்சியாண்டில் ஒரு மாறன தேவடிகளால் ஐநது கழஞ்சுப் பொன் படை யலுக்காகக கோயில் கருவூலத்தில் சேர்ககப்பட்டது. பாண்டிய புவனேசுவரன் சமர கோலாகலன், கி.பி. 1469-இல், பூசைக்கு வேண்டிய நிவந்தங்களுக்குப் பாண்டிய நாட்டில் உள்ள இரணடு ஊர்களைவழங்கி யுள்ளான. காகதீய அரசன் கணபதி காலததில், அமைச்சன் சாமந்தக போசனால் ஒரு சிற்றூர் அளிக் கப்பட்டது. புலியூர்க கோட்டத்து வலலங்கிழான், நந்தாவிளககு எரிக்க ஏற்பாடு செயதான். காஞ்சி புரத்து உடையார், சில நிவநதம் அளித்துள்ளனர். சளுக்கிய நாராயணன் மனுமசித்தரசன 1000 குழி நிலமளித்துளளான. இவை தவிர விளக்கு எரிக்கப் பயன்படும் வகையில் பால்தரும பசுக்களையும் தான மாகச் சிலர் அளித்துள்ளனர். ச.சா.

**திருக்கச்சி நம்பி,** இராமானுசரால் தம் ஆசார்யர்களுள் ஒருவராக அபிமானிக்கப்பெற்ற வரும், ஆளவநதாருடைய அநதரஙக சீடர்களுள் ஒருவருமாவார். பூவிருந்தவல்லி என்னும் ஊரில வைசிய குலத்தில வீரராகவருக்கும் கமலைக்கும் நான காவது மைந்தராய்ப் பிறநதார். 'கசேந்திர தாசா' எனபது இவரது பிளளைத் திருநாமமாகும். தாம் தொண்டு செய்து வந்த பார்க்கவரான திருமழிசை யாழவார் அருளால் பிறநததமையாலே தந்தையாா இவருக்குப் 'பார்க்கவபரியர்' எனறும் பெயரிட் டார். ஆளவந்தார் இவருககு அளிதத பெயர் 'பேரரு ளான தாசா' எனபதாகும். கச்சியில் வாழ்ந்தமை யால் திருக்கச்சி நம்பி, காஞசிமுனி, காஞ்சிபூரணர் என்றும் வழஙகப்பட்டார். இவர் காஞசிவரதராசப் பெருமாளுககுத திருவால வட்டத திருத்தொணடு-விசிறி வீசுதல்செய்துகொண்டிருந்தார். அபபெருமாள் தம்சிலையாக விளங்கும ஆச்சை நிலையைககடந்து இவரோடு, உரையாடிக் கொணடிருநதார் என்று கூறப்படுகிறது. அநதிமக்காலததில வீடுபேற்றை விருமபிய நம்பிககு 'நீர் விசிறி வீசினீர். நான உம் மோடு பேசினேன. இரணடுக்கும சரியாயிற்று. ஓர் பரமபாகவதரின் அனபினைப் பெற்றாலே உமக்கு வீடுபேறு' எனறு வரதன கூறிவிட்டாா என்றும், அதற்குப் பின மாறுவேடததுடன இவா திருக்கோட் டியூர் நம்பியிடம் மாடுமேயக்கும் தொண்டு செய்து 'நம்பையல்' எனறு அவரால் அனபு கூரப்பெறறு அதுவே காரணமாக வரதனிடம வீடுபேறு பெற் றார் என்று இவரது வரலாறு கூறுகிறது.

இராமானுசா இவரிடம் சீடராக விளங்க ஆசைப் பட்டார். நம்பி அதறகு மறுத்துவிட்டாா. இவா உண்ட கலத்திலே உண்ணவேணும் என்று ஆசைப் பட்டார் இராமானுசா. அதை இராமானுசரின் மனைவியார் நிறைவேறாமல் செய்துவிட்டார். 'தேவப்பெருமாளிடமிருந்து 1) நாமே பரதததுவம, 2) நம்சமயம் பேதமுடையதே, 3) உபாயம் சரணா கதியே, 4) இறுதிக்கால நினைவு தேவையில்லை, 5) இவ்வுடம்பின் முடிவிலே வீடுபேறு, 6) பெரிய நம்பிகளை ஆசாரியனாக அடையவேணும் எனற இநத ஆறு தொடர்களைப் பெற்றுத் திருக்கச்சி நமபி கள இராமானுசரிடம் தெரிவித்து வைணவ சமய நெறியின் உட்பொருளை உறுதிப்படுத்தினார். தேவப் பெருமாளைப் பறறிய எட்டு சுலோகஙகள கொணட 'தேவராசாட்டகம' எனனும் துதிநூல இவர் அருளிச செய்ததாகும். எஸ். கி.

**திருக்கச்சி நெறிக் காரைக்காடு:** தொணடை நாட்டுச் சைவத் திருப்பதிகளுள ஐந்தாம பதி இது. செங்கற்பட்டு மாவட்டம் காஞ்சிபுரத்தில் உளளது ஆதலின 'கசசி' என்னும அடைமொழி பெறறது. நெறி-சித்தி. காரை-ஒருவகை மரம. காரை மரம் அடர்நத காட்டில் இருப்பதாலும், அங்குச் சேர்நத வர்க்குச் சித்தி தருவதாலும் இப்பெயர் பெற்றது. 'சத்திய விரதத் தானம்' என்ற வேறுபெயரும் உண்டு. 'சத்திய விரதஙகாரைத் தருவனம் செறித லாலே, சித்தி சேர்ந்தவர்ககு நலகும் திருநெறிக காரைக் காடு' எனபது காஞசிப்புராணம். இப்புரா ணத்தில் வரும் 'திருநெறிக காரைப் படலத'தில் பல செய்திகள கூறப்படுகின்றன. பிரமகறபத்தில் ஆறாவது மன்வந்தரத்தில சிவி என்ற இநதிரன, வாழ்க்கையில் வெறுப்புற்று, தன் ஆசிரியர் வியாழன அருளுரைப்படி இங்கு வநது வழிபட்டு வீடுபேறு எயதி னான். எனவே இத்தலததிற்கு 'இநதிரபுரம' என்ற பெயரும் உணடு. மதிக்கும தாரைக்கும் பிறநத புதன், இஙகு வநது, கிரகநிலை பெறறான. இங்குத் தனக்குரிய வாரநாளில் முழுகி வழிபட்டோர்க்கு வீடுபேறும், வேணடும் வரமும் தரும்படி இறைவனை வேணடி, அவவாறே வரமும் பெறறான. இத்தலம இப்போது, 'திருக காலீசுவரன் கோயில' என வழங கப்படுகின்றது. சம்பந்தர் பதிகம் இத்தலததிற்கு உண்டு ('வாரணவு முலைமஙகை'). இறைவன்: காரைத் திருநாதர், சததிய விரதீசா. இறைவி: காமாட்சி, காரார் குழலம்மை. புணணிய நீர்: இந் திர தீர்த்தம. இதில புதனகிழமை நீராடி வழிபடுதல் சிறப்பு என்பர். ச.சா.

**திருக்கச்சி மேற்றளி:** தொணடைநாட்டுச் சைவத் திருப்பதிகளுள் இரண்டாம் பதி இது. காஞ்சி புரம் திருவேகம்பத்திற்குத் தென்மேற்கில கற்சாலை

வழியில் சிறிது தொலைவில் உள்ளது. இதற்குத 'திருமேற்றளி', 'காஞ்சி மேறறளி' எனற வேறு பெயர்களும உணடு. சேககிழார் 'திருமேற்றளி'(2899) எனபர். சிவ சாரூபம பெறும் பொருட்டுத திருமால இங்கு வழிபட்டுச் சம்பநதா பாடியருளிய பதிகம் கேட்டதனால் சிவன அருளவழி அதனை அடைநத னா எனறு காஞ்சிப் புராணம 'திருமேற்றளிப படலம்' கூறும். பதிகம் கேட்டு உருகிய திருமால, சிவ லிஙக உருவமாக 'ஓத உருகீசா' ஆனார் இது ஒரு தனிச சநநிதியாக உளளது தல நாயகராகிய திரு மேற்றளி ஈசுவரா சநநிதி வேறாக உளளது. இது மேற்கு நோககியது. இவவிரு சந்நிதிகளுககும கிழககே சமபநதர் கோயிலும், அதற்கு மேறகில் இவர் பாடலை உற்றுக கேட்ட முததீசமூாததி கோயிலும் உள்ளன. காஞ்சிபுரத்தில இப் பகுதிககுப் 'பிளளையார் பாளையம' எனபது பெயர். சம்பந தரின் 'நொநதா ஒணசுடரே' என்ற பதிகமும, அப்ப ரின் 'பறையது பாடி' எனற பதிகமும் ஆகிய இரணடு பதிகங்கள இததலததிறகு உரியன இறைவன' திரு மேற்றளிநாதர். இறைவி. காமாட்சி. ச.சா.

***திருக்கச்சூர்***, தமிழநாட்டில செஙகற்பட்டு மாவட்டத்தில திருவளளூர் செலலும் சாலையில சிங்கபெருமாள கோயிலுக்கு 1 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள ஊா. இவவூரில மருநதீசுவரர், விருந தீசுவரர், இரநதீசுவரர் எனற மூனறு கோயிலகள உளளன. இம்மூன்று கோயிலிலும எழுநதருளியுள்ள இறைவனைச சுநதரர் பாடியுளளார்.

**மருந்தீசுவரர் சந்நிதி** இவவூரிலுளள ஔசதகிரி மலையடிவாரத்தில் இக கோயில் உள்ளது இறைவன: மருந்தீசுவரர். இறைவி: இருணீககித தாயாா. தேவேந்திரனுக்கு உற்ற நோயை நீக்க அசுவினி தேவதைகள மருந்து தேடி இவ்வூருககு வந்தபோது ஔசதகிரியிலிருந்து அரிய மூலிகைகளைப பெற்று தேவேந்திரனின நோயைப்போககினா என்பதுபுராண வரலாறு. இக்கோயிலில் பல சிறு தெய்வஙகளின சநநிதிகள உள. இரு கால வழிபாடு நடைபெறு கிறது. இக்கோயிலின ஆணடு வருமானம் உரூ. 7,329 ஆகும். வழியில் இரநதிட்ட ஈசுவரன கோயில உள ளது.

**விருந்தீசுவரர் சந்நிதி** சுநதரர் பசியால் வாடிய போது சிவபெருமான் வீடுதோறும் சென்று பிச்சை யெடுத்து அடியவர்களுககு உணவளிதத இடம். எனவே இறைவன் விருந்திட்ட ஈசுவரர் என வழஙகப் படுகிறாா. இறைவி: அஞ்சனாபசி. தீர்த்தம்: கூர்ம தீர்த்தம் அமுதம்'திரணடு வருவதறகாகத் திருமால் ஆமையாக இருந்து வழிபட்ட தலமென்பது மக்கள் நம்பிக்கை. நாலு கால வழிபாடு இங்கு நடைபெறு கிறது இக்கோயிலில சித்திரைத திருவிழாவும், மாா கழி மாதம ஆருதரா தரிசனமும நடைபெறுகின்றன. இக் கோயிலுக்குச் சொநதமாக 24 ஏக்கா நிலம் உளளது. இக் கோயிலின ஆணடு வருமானம உரூ. 4,263 ஆகும. அ.இரா.

***திருக்கச்சூர் - ஆலக்கோயில்*** தொணடை நாட்டுச சைவத் திருப்பதிகளுள இருபத்தாறாம பதி இது கசசபம் - ஆமை. 'கசசபம ஊா' எனபது 'கச்சூர்' எனபபட்டது. திருமால, அமுதம பெறும பொருட்டுக் கச்சபமாய் (ஆமை) இருநது வழிபட்ட தலமாகலின 'கச்சூர்' எனபபட்டது. கசசூா-ஊர்ப பெயர். ஆலககோயில-கோயிற் பெயா. 'ஆல' - தல மரம. எனவே 'ஆலக கோயில' எனலாயிறறு. விததி யாதரர் பூசித்த தலம்.

சுநதரர், திருககழுக்குன்றத்தை வழிபட்டபின, இத திருக்கசசூர் ஆலக்கோயில அடைநது இறைவனை வணங்கிக் கோயிற புறததே தஙகியிருநதார். திரு வமுது படைககும தொணடர்கள வராமையினால சுநதரர் பசியால களைப்புறறார். அதுகணட சிவ பெருமான, அவாமுன அந்தணனாய்த் தோனறி, 'அனனப் பிச்சை எடுத்து உமககு அளிக்கிறேன; எங் கும செலலாமல் இஙகேயே இரும' எனறு கூறிவிட்டு, அவவூரில வீடுதோறும் செனறு பிசசை வாஙகிவநது நமபியாரூரர்க்கு அளிததான். அவரும் உணவருநதி உவநதிருந்தபோது இறைவன் மறைந்தருளினன. வநதவன எமபெருமானே எனறு உணாநது, அவனின திருவருட்டிறததை நினைநது 'முதுவாய ஓரி கதற' என்னும பதிகம பாடினார். சுநதரர் பாடலபெறற இத்தலத்தை, 'ஆடகமாம மதிலபுடைசூழ் ஆலக கோயில' என்று போறறுவர் சேககிழாா. இககோயி லுக்கு மேற்கே 'ஔடத கிரி' எனற ஒரு மலை உணடு. அதன அடிவாரததில திருமாலுககு (அமுதம்) மருந்தளிதத மருந்தீசர் எழுநதருளியுள்ளார். அங குள்ள இறைவி இருளநீக்கித் தாயார். சுந்தரருககு விருந்தளித்திட்ட இலிஙகமூாததி, கோயிலில காட்சி தருகினறார். மலையின மேல விருந்திட்ட நாதர் கோயில் உள்ளது. 'மலைமேல மருநதே' என்பது நம்பியாரூரர் பாடல் கோயில் செலலும வழியில தாலமூல விநாயகர் கோயில உளளது. தொணடை நாட்டில உளள தியாகராசா சந்நிதி பலவற்றுள இது வும் ஒனறு. தல இறைவன: விருநதிட்ட நாதர் (வர தர், ஈசுவரர்). இறைவி. அஞ்சனாட்சி (உமை) புண ணிய நீர்: கூாம தீாததம. மரம:ஆல். தியாகர்: அமுதத தியாகர். ச.சா.

***திருக்கஞ்சனூர்***: சோழநாட்டுச் சைவத திருப் பதிகளுள் ஒன்று இது. நரசிஙகன பேட்டைப புகை

வணடி நிலையத்திலிருந்து ஒரு கல் தொலைவில் உள்ளது. காவிரியின வடகரையில் உள்ளது. பிரமன் வழிபட்டது ஆதலின 'கஞ்சனூர' எனப்பட்டது. அக்கினியும வழிபட்டான். இவ்வூரில் நடராசர்-சிவகாமி திருவுருவங்கள் கலலில் வடித்தெடுக்கப்பட்ட திருமேனிகளாகும். அரதத்த சிவாசாரியார், சைவ சமயத்தின உயர்வை நிறுவிய இடம் இது. அவர்க்கெனத் தனியே ஒரு கோயிலும் உணடு. அப்பர் பாடிய பதிகம் இதற்கு உணடு. இறைவன: அக்கினீசுவரர். இறைவி: கற்பக நாயகி. புண்ணிய நீர்: அக்கினி தீர்த்தம். ச.ச.ர.

**திருக்கடம்பந்துறை:** சோழநாட்டுச் சைவத் திருப்பதிகளுள் ஒன்று. கடம்பு-ஒருவகை மரம். கடம்ப மரங்கள மிகுந்துள்ளமையால் 'கடம்பந்துறை' எனப்பட்டது. இபபோது 'கடம்பர் கோயில' எனவழஙகப்படுகின்றது திருச்சி மாவட்டம குளித்தலைப் புகைவணடி நிலையத்திலிருந்து வடமேற்கே ஒன்றரைக்கல் தொலைவில உள்ளது. கணணுவ முனிவர்கரும அமரர்களுககும் சிவபெருமான கடமப வனத்தில் தோன்றிக் காட்சியருளிய இடம் எனபர். திருநாவுக்கரசர், திருப்பழையாறையில் முதல்வனைத் தொழுது போறறி இன்புற்றபின், காவிரியின இரு கரையிலுமுள்ள தலஙகள் பலவற்றிற்கும் சென்று, இறைவனைத் தொழுது பாடினார். அவற்றுள் இதுவும் ஒன்று. அப்பர் பாடிய பதிகம் இதறகுண்டு. 'முறறி வாமுலை யாளிவ ளாகிலும்' என்று இவா பாடியது, செவிலி கூறறில் அமைந்ததாம. 'கடமபந்துறைச் சிவபெருமானை வழிபட்டால், செயத மேலை வல்வினைகள கெடும்' எனகினறாா அப்பர். இறைவன: கடம்பவனநாதேசுவரர். இறைவி: முற்றிலா முலையம்மை. மரம்: கடம்பு. புணணிய நீர்: காவிரி. ச.சா.

**திருக்கடவூர்** (திருக்கடவூா வீரட்டானம்) சைவத திருப்பதிகளுள் ஒன்று. தஞ்சை மாவட்டத்தில மாயவரம்-தரங்கம்பாடிப் புகைவணடிப் பாதையில் திருக்கடவூர் நிலையம் உளளது. இது, காவிரித தென்கரைத் தலஙகளில 47-ஆம் தலம. சாவின அசசததைக் கடக்க அருளும் திருப்பதி ஆதலின் 'கடவூா' எனப்பட்டது. திருமால் முதலானோா தூயதோர் இடத்தில உண்ணவேண்டுமென்று அமுதகடத்தை இங்குக் கொண்டுவநது வைத்தமையால் 'கடபுரி' அல்லது 'கடவூர்' எனப்பட்டது எனபர். அட்ட வீரட்டானங்களில் இதுவும் ஒன்று. மார்ககணடரைக் காத்தற் பொருட்டுக் கூற்றுவனை உதைத்தருளிய வீரம் நிகழ்ந்த தலம். எனவே, 'வீரட்டானம்' ஆயிற்று. இதனைக் 'கரிதரு காலனைச் சாடினாலும்' (சம்பந்தர்), 'மார்க்கண்டர்க்காக அன்று காலனை உதைப்பர்போலும் கடவூர் வீரட்டனாரே' (அப்பா), 'கொன்றாய் காலன் உயிர்கொடுத்தாய் மறையோனுக்கு' (சுந்தரர்) எனவரும் தேவார அடிகளால் அறியலாம். இதற்கு ஏற்பக் கால சங்காரமூர்த்தி தனியே எழுந்தருளியிருக்கிறார். அவர் சந்நிதிக்கு எதிரில், அருளபெற்ற இயமனது உருவம் உள்ளது. பரஞ்சோதியார், தம் திருவிளையாடற் பராணத்தில், 'சிறுவனுக் காயுள் ஈந்த சேவகப் பெருமான்' எனறு பாடுவர். காலனைக் காலால் உதைத்த இடம் ஆதலின ஒனபது கோள்களும தம் வலியிழநதன ஆகையால் இஙகு 'நவக்கிரகக் கோயில்' இல்லை.

ஏழு கன்னியர், துர்ககை ஆகியோர் வழிபட்டுப் பேறு பெறற இடம். இங்குத் தோன்றிய குங்கிலியக் கலய நாயனார், வறுமையுறறபோதும மனம தளராமல, தம மனைவியின் தாலியை விற்று, அதனால குங்கிலியம் வாங்கி இறைவன் திருத்தொண்டினைத் தவறாது செய்து அருளபெற்றார், காரி நாயனார்: இவ்வூரில் தோனறி அரசன்பாற் சென்று, பொருள பெற்றுப் பல திருப்பணிகள புரிநது இறைவன அருள பெற்றார். சம்பநதரும அபபரும் ஒருசேர ஈணடு வந்து, சிவபெருமானை வணஙகிக் குஙகிலியக் கலயர் திருமடத்தில் தஙகியிருநத பெருமை, இப்பதிக்கு உரியது. இவ்விருவர் பதிகங்கள தவிரச் சுந்தரர் பாடிய பதிகமும் உணடு. இத்தலத்தைப் பறறிய தேவாரப் பதிகம் ஐநதாகும். (சம்ப.1; அப்பர். 3, சுந்த. 1). 'பொன்னி நாட்டின ஏயந்தசீர் மறையோா வாழும எயிற பதி' எனச் சேககிழார் சிறப்பிபபர். அருணகிரி நாதரின திருப்புகழும இதற்கு உணடு. ('ஏட்டின் விதிப்படி'). இறைவன: அமிாதகடேசர். இறைவி; அபிராமி அமமை. தலப் பிளளையாா: களள வாரணப் பிளளையாா. மரம்: வில்வம்; சாதிமுல்லைக கொடியும உரியது புணணிய நீர்: அமிர்த புட்கரணி, கால தீர்த்தம், மார்க்கண்டேய தீர்த்தம். மககள தம, அறுபதாம் ஆண்டு விழாவை இத்தலத்திற்கு வந்து சிறபபுறக் கொணடாடுவர் கோயில, மேற்கு நோக்கிய வாயிலையுடையது இறைவி கோயில தனியே கிழக்கு நோககி உளளது ஆணடுதோறும சித்திரைத திஙகளில பெரிய திருவிழா நடைபெறும.

இககோயிலில கலவெட்டுகள பல காணப் படுகின்றன. அவை, பல்வேறு அரச காலத்தன. குறிப்பிடத்தக்கோர்: சோழ மனனருள முதலாம இராசராசன், முதலாம் இராசேநதிரன, முதற் குலோத்துஙகன், விக்கிரம சோழன் இரணடாம் இராசாதிராசன், மூனறாம் குலோத்துங்கன், மூன்றாம் இராசராசன, பாணடியருள மாறவர்மன் திரிபுவனச் சக்கரவாத்தி, எம்மணடலமும் கொண்டருளிய குலசேகர தேவன், கோனே

ரினமை கொணடான், பெருமான சுந்தர பாண்டியன்; விசயநகர வேநதருள கிருட்டிணதேவராயா, வீர விருப்பணண உடையாா இககலவெடடுகளில இறை வனின பெயர்களாகத 'திருவீரட்டானததுப பெரு மான் அடிகள', 'திருவீரட்டானமுடைய பரமசுவாமி', 'காலகால தேவா' எனபவை காணபபடுகின்றன. சித்திரைத் திஙகளில நடைபெறும் எடடுநாள பெரு விழாவிற்காக முதலாம இராசேநதிர சோழனின 18–ஆம ஆட்சியாணடில், இராசராச மூவேநத வேளான நிலம் அளித்திருந்தான திருமடம். முதற் குலோத துஙகசோழன காலத்தில (கி பி 1070–1120) மாாக கணடேயர் மடம ஒனறு இருநதது அதில மறையில வல்ல சிவயோகிகள பதினமருககு உணவு அளிகக மடபபுறமாக ஒனறேமுககால வேலி நிலம் அளிககப் பட்டிருநதது.

இக்கோயிலில் திருச்சிறறம்பல வேலைககாரன திருமணடபம ஒனறு இருநதது. திருக்கடவூர் சபை யாா இமமணடபததில கூட்டஙகூடுவது வழக்கம. இதுதவிரக் 'குலோததுஙகசசோழன திருவெடுத்துக கட்டி' எனற மணடபமும் இருநதது. இதிலும சபை கூடும். அரையர் இராசராச தேவராகிய வாணதரையர் இககோயிலில் இராசராச ஈசுவரரை எழுநதருளித திருந்த செய்தியை மூனறாம் குலோத்துஙக சோழனின கலவெட்டு உணர்த்தும். ஆபத்து சகாயன என்ற பிராமணன இககோயிலைப பழுது பார்த தான என்னும் செயதியைக கிருட்டிணராயா காலக கலவெட்டு குறிபபிடுகின்றது. பாணடி நாட்டார் ஒருவர் பளளியறைக்குச சிம்மாசனம கொடுத்துளளார். வீராநதப் பல்லவரையா எனனும் புலவரின விருப பப்படி மூன்றாம் குலோத்துங்கசோழன இககோயில நட்டுவநிலைப பொறுபபைப பாரசிவன் பொனனா னகிய கால விநோத நிருததப பெருமானுககு வழஙகி னான. இக்கடவூா முதலாம இராசேநதிரசோழன காலத்தில உயயக் கொணடாா வளநாட்டு அமபா நாட்டைசசேர்நதது என்றும், முதற குலோததுஙகன காலத்தில இராசநாராயண வளநாட்டு அம்பர் நாட்டைச் சாாநதது என்றும், மூன்றாம குலோத்துஙகன் காலத்தில் சயஙகொணட சோழ வளநாடடு அமபா நாட்டைச சார்நதது எனறும இக்கோயில கலவெட்டுகளால அறியமுடிகினறது. ச சா.

**திருக்கடவூர் மயானம்**: காவிரித் தென் கரைச் சிவத்தலஙகளுள் 48-ஆம் தலம் இது திருக கடவூருக்குக் கிழக்கே ஒரு கல தொலைவில உளளது (பார்க்க: திருககடவூர்). சிவபெருமான ஒரு காலத் தில பிரமனை எரித்து நீறாக்கி அவனை மீண்டும உயிாப்பித்துப் படைப்புத் தொழிலை அருளியதால் இததலம் 'மயானம்' எனப்பட்டது. மாாக்கணடர் பொருட்டுக் காலனைக் காலால உதைததருளிய இடம்; சாவின் அச்சததைக கடத்தறகுரிய தலம் ஆதலின 'கடவூர்' எனபபட்டது இப்போது 'மயானம் என்பது மெய்ஞ்ஞானம' என வழஙகப்படுகினறது இறைவன. பிரமபுரீசா, பெரிய பெருமான அடிகள. இறைவி மலாககுழல மினனமமை புணணிய நீா: காசித தீாத்தம. இஙகிருந்ததுதான திருககடவூா வீரட்டானேசுவராக்குத திருமஞசனம கொணடு செலலப்படுகினறது பஙகுனித திஙகளில சுக்கில பட்சததில, அசுவினியில, மககள பலா இஙகே நீராடக் கூடுவா. சமபநதா, அப்பா, சுநதரா ஆகிய மூவா பாடிய பதிகஙகள இததலததிறகு உணடு. இஙகுக கலவெட்டுகள் உணடு. வீணை மீடடவும, மறை ஓதவும, சிரீருத்திரம சொலலவும திட்டமிடபபடடது சுஙகம் தவிாதத முதற் குலோததுஙகன் காலததில நிலம அளிககபபட்டது, தீாவை விதிககபபடடது. நநதவனம, தோட்டததிற்கு ஆட்கள் அமாததபபட்டனா. கலவெட்டுகளில் 'திருமயானமுடைய பெருமான்' என இறைவன குறிபபிடபபடுகினறான.

ச.சா.

**திருக்கடிகுளம்**: இது காவிரியின தென் கரையிலுளள 109–ஆம பாடல பெற்ற தலமாகும. கற்பக விநாயகர் இஙகுளள பெருமானைப் பூசிதது மாம பழம பெறறதால கறபகனார் கோயில எனறும இவ வூரை மக்கள குறிப்பிடுகினறனா. கறபகனாா குளம, கறபகநாதா கோயில எனறும வேறு பெயர்கள உள. திருத்துறைப பூணடி நிலையததிலிருநது 17. கி.மீ. தொலைவில இவவூா உள்ளது. இஙகுளள பெருமான பெயா கறபகேசுவரா, கறபகநாயகா என பன. இறைவி பெயா சௌநதர நாயகி ஆகும. தென மேறகு மூலையில கோயிலுககு வெளியே கற பக விநாயகா இருககிறாா. தீர்த்தம் கடிககுளம் என பது விநாயக தீர்ததம எனறும கூறுவா. சமபந்த மூாததி சுவாமிகள பதிகம மாத்திரம இத்தலததிற் குணடு. தலமரம பலா ஆகும.

காாததிகார்சசுனன எனற அசுரன கறபகலிங கத்தைப் பிரதிட்டை செய்தான் எனபது புராண வரலாறு. கோதணடராமா சநநிதியும் சுவாமி கோவிலுககு அருகிலிருககிறது. தஞசையை ஆணட மனனர்கள கரையஙகாடு என்ற ஊரை இககோயில் பராமரிப்புககாகக கொடுத்தனர்; மறறும பல ஊர் களிலும நிலஙகள் உளளன. இக்கோயில பரபபளவு 11.52 ஏக்கர் ஆகும. அணமையில திருப்பணி நன்கு செயயப் பெறறுக் குடமுழுக்கும நிகழநதிருககிறது. இததலததிறகு மேற்கே இரணடு கி.மீ. தொலைவில் இடுமபாவனம் எனற தலம் இருக்கிறது. திருததுறைப் பூண்டியிலிருந்து வேதாரணியம் செலலும சாலை மூலமாகவும் இவவூருககுச் செலலலாம். பேருநது வசதிகளும் உள்ளன.

'வள்ளலை மருவித் தம், கண்கள் ஆர்தரக்கண்டு நம்கடிக் குளத்து உறைதரு கற்பகத்தைப், பண்கள் ஆர்தரப் பாடுவார் கேடிலர் பழியிலர் புகழ் ஆமே' என்பது இக்கடிக்குளத்துறை பெருமானைப் பற்றிச் சம்பந்தர் பாடிய பாடலின் ஒரு பகுதியாகும்.

இரா.ச.

*திருக்கடிகை:* சென்னைக்கு வடமேற்கே ஏறத்தாழ 7,2 கி.மீ.தொலைவில் உள்ள வைணவத் தலம் திருக்கடிகை. இது 'கடிகாசலம்' என்றும், 'சோளசிங்கபுரம்' என்றும் வழங்கப்படுகிறது. 'கடிகா' என்ற வடமொழிச் சொல் 'நாழிகை'என்று பொருள் படும். இவ்வூரில் ஒருவர் ஒரு நாழிகை காலம் தங்கியிருந்தாலே அவருக்கு முத்தி சித்திக்கும் என்பது பற்றிக் 'கடிகாசலம்' என்ற பெயர் இவ்வூருக்கு அமைந்தது என்பர். இத்தலத்தைப் பாடிய பிள்ளைப் பெருமாளய்யங்காரும் 'நேரே ஒரு கடிகையும் மனமே! உள்ளுகிலாய் முத்தி தருகடிகை மாயவனைத் தான்' என்றார்.

இங்குள்ள ஒரு பெரியமலைமேல் மூலவருக்கு ஒரு கோவிலும், மலைக்கு கீழேஉற்சவருக்கு ஒரு கோவிலும் உள்ளன. கீழேயுள்ள கோவிலில பக்தவத்சலப் பெருமாள் உற்சவராக எழுந்தருளியிருக்கிறார். இவர் 'தக்கான்' என்றும் குறிக்கப்படுகிறார். மலைமேல் மூலமூர்த்தியான யோக நரசிம்மர் அமிர்தவல்லி நாச்சியாரோடு வீற்றிருந்த திருக்கோலத்தில் காட்சியளிக்கிறார். இம்மலை சுமார் 167மீ. உயரம் உள்ளது. அருகிலுள்ள சிறிய மலையில் ஆஞ்சநேயர் சந்நிதி உளளது. ஆஞசநேயர் கையில் சங்கு சக்கரங்களோடு சேவை நல்குகிறாா.

இங்கு 'தக்கான் குளம்' என்ற பெயரில் ஒரு குளம் உள்ளது. இதன கரையில் இத்தலத்து ஆசாரியரான தொட்டாசாரியர் என்பவருக்கு, காஞ்சிபுரம் வரதராசப் பெருமாள ஒரு சமயம் தமது கருட சேவையைக் காட்டியருளினார் எனறு பெரியோர் கூறுவர். இது ஒரு விசேடமான பிரார்த்தனைத் தலமாகும். மணவாளமாமுனிகள் என்ற ஆசாரியரின சீடரான எறுமபியப்பா என்பவரின் அவதாரத்தலமான 'எறும்பி' என்ற கிராமம் இத்தலத்திறகு ஒருகல தொலைவில் உள்ளது.

பேயாழ்வாரும், திருமங்கையாழவாரும் இத்தலத்தைப் பாடியுள்ளனர். பேயாழ்வார் 'வணடு வனங்கிளரும் நீள்சோலை வண்பூங கடிகை'எனறார். திருமங்கையாழ்வார் 'தக்கானைக கடிகைத் தடங் குன்றின மிகையிருந்த அக்காரக் கனியை அடைந்துய்ந்து போனேன' என்றார். தக்கான்-தகவுடையவன்; அதாவது மிகவும் கிருபை புரியுமவன. இத்தலத்து எம்பெருமானை 'அக்காரக்கனி' எனகிறார் ஆழ்வார். அக்காரம் என்று கருப்பஞ் சாற்றுக்குப் பெயர். அதனைச் செடியின் நிலையில் வைத்து,அதில் நின்றும் ஒரு கனி தோன்றினால் அது எவ்வளவு இனிமையாயிருக்குமோ அவ்வளவு இனிமையானவன் இத்தலத்து எம்பெருமான் என்றுகூற வந்த ஆழ்வார் 'அக்காரக்கனி' என்றார். சிறிய திருமடலிலும் திருமங்கையாழ்வார் 'காரார் குடந்தை கடிகை' என்று இத்தலத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

கே ஜி.கி.

*திருக்கடித்தானம்:* திருவல்லாவிலிருந்து கோட்டயம் சாலையில் சுமார் எட்டுக் கிலோமீட்டரில் உள்ள செஙகணச்சேரியை அடைநது, அங்கிருந்து கிழக்கே நான்கு கிலோமீட்டர் சென்றால் இத்தலத்தை அடையலாம். இத்தலத்தில் அற்புத நாராயணன் கற்பகவலலித் தாயாருடன் நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியிருக்கிறான். உருககுமாங்கதன் என்ற அரசன் ஆட்சி செய்த இடம் இது. நம்மாழ்வார் திருவாய்மொழி எட்டாம்பத்து ஆறாம் திருவாய்மொழியில் இத்தலத்தைப் பாடியுள்ளார். இத்தலத்தை, 'செலவர்கள் வாழும் திருக்கடித்தானம' என்று போறறுகிறார் ஆழ்வார். இத்தலத்து எம்பெருமானை நினைக்கும்தோறும் இனியனாய் இருக்கிறான் எனபதை 'உள்ளுநதோறும் தித்திப்பான்' என்கிறார் ஆழ்வார். திருக்கடித்தானத்தைக் கோயிலாகக் கொண்ட எம்பெருமான் அவரது நெஞ்சையும் கோயிலாகக் கொணடு விளங்குகிறானாம். இத்தலத்து இறைவனைத் துதித்தால் இடர்களெல்லாம் நிலைகுலைந்து போகும் என்கிறார் ஆழ்வார். 'வானவர்தாம் வந்து நணணு திருககடித்தான நகரே' என்று வைகுநதத்தில விளங்குபவர்களும் இத்தலத்துக்கு வந்து இந்த எம்பெருமானை அனுபவிக்க ஆசைப்படுகின்றனராம். அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் எனற ஆசாரியர் தமது 'ஆசாரிய இருதயம்' எனற நூலில 'இத்தலத்து எம்பெருமானிடம் சிறந்து விளங்கும் குணம் செய்ந்நனறியறிதல' எனகிறார். ஆழ்வார் நெஞ்சில் வசித்தலாகிற பேற்றைப் பெறுவதற்காகவே திருக்கடித்தானத்தில் எழுந்தருளியிருத்தலாகிற உபாயத்தை மேறகொண்டானாம். ஆழவார் உளளத்தில் எழுநதருளியிருத்தலைப் பெற்றான். ஆனால், திருக்கடித்தானத்தில் எழுந்தருளியிருத்தலில விருப்பம் எமபெருமானுக்குக குறையவிலலையாம் பேற்றைப் பெற்ற பின்பும் அதறகுக் காரணமான சாதனத்தில் விருப்பம் குறையாமலிருத்தலால் செயந்நனறியறிதலாகிற குணம இந்த எம்பெருமானிடம் விளங்குவதாக அருளினார் அழகிய மணவாளப் பெருமாள நாயனார்.

எஸ் கி

*திருக்கடைமுடி:* இது சோழ நாட்டிலுளள தேவாரப் பாடல பெற்ற தலங்களுள் ஒன்று. தஞ்சை

மாவட்டத்தில் ஆனநதத் தாணடவபுரம் என்னும் தொடர் வணடி நிலையத்திலிருநது வடகிழககே 3½ கி.மீ.தொலைவிலுள்ளது இக்காலத்தே இத்தலம் கீழூர் என்று வழஙகப்படுகிறது. செமபொனார் கோயில எனனும் ஊரிலிருநது 5 கி.மீ. கடந்து இவ வூரினை அடையலாம். இங்குப் பிரமன வழிபட்டுப் பேறடைந்தான எனபது கூறப்படுகிறது இறைவன் பெயர் சடைமுடி நாதர், இறைவி பெயர் அபிராமி அம்மை. இங்குள்ள தீர்ததம் கருணா தீர்த்தம் எனப் படும். திருஞானசம்பநதா ஒரு பதிகம்பாடி இத்தலத் திறைவனைப் பரவியுள்ளார். இத்தலத்தின இயறகை எழிலினைச சமபந்தர், ‘கொடி புலகு மலரொடு குளிர்சுனை நீர், கடிபுலகு வளநகர் கடமுடி' என்று அழகுறக் காட்டியுளளார். இத்தலத்தினைக் குறிப் பிடுங்கால் இது, கோயில படிககுக் கிழக்கே 3கி.மீ. தொலையில் உளள செனனம பூணடியேயாகும என்று கூறுபவர்களும் உளர். அ.மா.ப.

**திருக்கண்டங்கடி நகர்**: வடநாட்டுத் திருப் பதிகள் பனனிரணடனுள இதுவும ஒன்று. கணடம் எனனுமிவவளவே இததிருபபதியின பெயராகும. ‘கடி' எனனும் சொல சிறப்புப் பொருளில வநதது. ‘கணடத்து உறை புருடோத்தமன்' எனறு பெரியாழ் வாா அருளுவதிலிருந்தும், பிளளைப பெருமாளய்யங் காா இத்தலத்தைப் பறறிய பாடலில ‘கணடத்தாய்' என்று எம்பெருமானை விளிப்பதிலிருந்தும் ‘கணடம்' என்பதே இத்திருப்பதியின பெயா என அறியலாம். இத்தலம் ‘தேவப்பிரயாகை' எனறும் வழஙகப்படும. இருடிகேசத்திலிருந்து பத்திரிநாத்து போகும் வழியில சுமாா 72 கி.மீ. தொலைவில் இத்தலம் உளளது; கடல் மட்டத்திலிருந்து 567 மீ. உயரத்தில உள ளது. இங்கு புருடோத்தமன் புண்டரீகவலலித் தாயா ருடன் நினற திருககோலததில காட்சியளிககிறான. இஙகு அளகநநதா, பாகீரதி இவறறின சஙகமம ஏற் படுகிறது. இது ஆதிகஙகையாகப் போற்றபபடும புணணியத்தலமாகும. இத்தலத்தைப் பாடிய பெரி யாழ்வாா தமது பதினொரு பாடலகளிலும் ‘கஙகை யின கரைமேல கணடமென்னும் கடிநகர்' எனறு கங்கையின் தொடர்பால இத்தலமபெருமைபெறற தைக் காட்டியுளளார். புருடோத்தமப் பெருமாள இஙகு விளஙகுகிறாா என்பதை ‘எம்புருடோத்தம னிருக்கை' எனறு காட்டினார் பெரியாழ்வாா.

‘ஏதேனும் ஒரு குளத்தில் நீராடுபவர்கள அந்த நீரைக் கங்கையாக நினைத்து ‘கங்கை கஙகை' என்று உச்சரித்தால் உடனே அவாகளுடைய பாபஙகளை யெல்லாம் போக்கும்படியான பெருமை பெறற கஙகையின் கரையில் கணடமென்னும சிறந்த நகரம் விளங்குகினறது' என்பார் பெரியாழ்வார். எஸ.கி.

**திருக்கண்டியூர்**: இவவூருக்குக கணடனபுரம், திரிமூாத்திசேத்திரம் என்னும் வேறு பெயாகளும உணடு. இது தஞ்சை மாவட்டத்தில காவிரியாற றின் தெனகரையில் உளளது; தஞசை-திருவையாறு பெருவழியில், தஞ்சைப் புகைவணடி நிலையத்தி லிருநது 9 கி.மீ. தொலைவில அமைநதுளளது.

இங்குச் சைவ நாயனமார்களாலும் வைணவ ஆழவார்களாலும பாடபபெறற சைவத திருக்கோயி லும் வைணவத திருககோயிலும் உளளன சைவத திருக்கோயில் எடடு வீரடடானக் கோயில்களுள் ஒன்று. தமக்கும் சிவபிரானைப போன்று ஐநது தலைகள இருநததமை கருதித் தருக்கித திரிநத பிரம தேவனின தலையொன்றினை அறுதது, தாம முழு முதற் கடவுள எனறு உலகோாக்குச் சிவபிரான உணர்த்தியதாகிய வீரம் நிகழநததால், இககோயில ‘திருக்கணடியூா வீரட்டம்' என வழஙகப பெறுகின் றது என்பர் சைவர். இது சூரிய பூசை நிகழும் கோயில்களுள ஒனறாகும. இபபூசை ஆணடுதோறும மாசித் திங்கள 13-ஆம நாளிலிருந்து 15-ஆம் நாள வரை நிகழும். இககோயிலில் எழுந்தருளியிருககும் இறைவன் பெயர் வீரடடேசர்; இறைவி பெயர் மஙகள நாயகி. இஙகுப் பலலவ அரசன் விசய நிருப துங்க விககிரம வாமன, முதலாம் இராசேநதிர சோழன் ஆகியோர் காலததுக கலவெட்டுகள் காணப படுகின்றன.

இஙகுளள வைணவத் திருக்கோயில் நூற்றி யெட்டுத் திருககோயிலகளுள் ஒனறாகும். கோயிலின இராசகோபுரம் மூன்று தளங்களை உடையது. விமானம மலாந்த தாமரை மலர்போல் அமைப் புடையது, இதனால இது ‘கிரீதி விமானம்' எனப்படு கிறது இறைவன பெயர் கமலநாதன்; இறைவி பெயர் கமலவலலி. இஙகுச் சக்கரத்தாழ்வாருக்குச் சிறுகோயிலொன்று உளளது. சச்கரத்தின் மறுபுறம் இலக்குமி நரசிம்மன் திருமேனி உளளது. கபாலதீர்த் தம, புதுமதீர்த்தம் ஆகியன இஙகுளளன. இவறறின் அருகில காவிரியின கிளையான குடமுருட்டியாறு ஓடுகினறது. பிரமனின் மண்டையோடு கையோடு ஒட்டப்பெற்று, இரந்து திரியுமாறு பிரமன் சிவனுக்கு அளித்த சாபத்தைத் திருமால ஒழிததமையால் (கணடனம செய்தமையால) இவ்வூர் கணடியூர் என வழஙகப்பெறுகின்றது என்பது வைணவ மரபு. இவ வூரில் பிரமனுக்குத் தனிககோயில் உளளது. இவ வூரின் பெருமை பிரமமாணட புராணத்தில எட்டு இயல்களில கூறபபெற்றுள்ளது. பெ.சு.

**திருக்கண்ணங்குடி**: இது திருவாரூர்-நாகை சாலையில் சிக்கலுக்கும் கீவளூருக்கும் இடையேயுள்ள ஆழியூர் என்ற இடததிற்குத் தெற்கே ஒரு கல

தொலைவில் உள்ள ஊர் ஆகும். இங்குச் சியாமள மேனிப்பெருமாள் அரவிந்த வல்லித் தாயாருடன் உத்பலவிமானத்தில் நின்ற திருக்கோலத்தில் விளங்கு கிறார். கிழக்கே திருமுக மண்டலத்துடன் விளங்கும் இந்த எம்பெருமான் பிருகு முனிவருக்கு வெளிப் பட்டருளினார் என்று தலபுராணம் கூறும். இங்குள்ள தீர்த்தம் சிரீவண என்பதாகும். திருமங்கையாழ்வார் தமது பெரிய திருமொழி ஒன்பதாம் பத்து முதல் திருமொழியில் இந்தப் பெருமானைப் பாடிப்பரவி யுள்ளார்.

'தானுகந்த ஊரெல்லாம் தன்தாள் பாடி' என் கிறபடியே பெருமான் தலங்கள் அனைத்திலும் புக்கு அநுபவித்துக் கவிபாடி அடிமை செய்ய வேணுமென்று ஆசைகொண்ட திருமங்கையாழ்வாருக்கு எம்பெரு மான், தான் திருக்கண்ணங்குடியிலே நிற்கிற நிலையைக் காட்டிக் கொடுக்க, அந்த அநுபவத்தை 'வங்க மாமுந்நீர்' என்று தொடங்கி, பத்துப் பாட்டு களிலே அருளிச் செய்துள்ளார். ஆழ்வார் அதன் படியே திருக்கண்ணங்குடிப் பதிகத்தில் அவ்வூரின் சிறப்பு, அங்குள்ளோரது பெருமை, திருக்கண்ணங்குடி எம்பெருமானின் மேன்மை ஆகியவை பற்றிப் பேசி மகிழ்கிறார்.

திருவரங்கநாதனின் கோபுரம் பிராகாரம் முத லிய திருப்பணிகளைச் செய்வதற்காகக் கொணரப் பட்ட, புத்த விக்கிரகம் ஒருவரும் அறியாமலிருக்க ஒருநாளிரவு புதைத்து வைக்கப்பட்டிருந்த தலம் இதுவே எனக் கூறப்படுகிறது. 'ஊறாக்கிணறு, உறங் காப்புளி, காயாமரம், தோலாவழக்கு, திருக்கண்ணங் குடி' என்பது பழமொழி. பிள்ளைப் பெருமாளையங் கார் தம் நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதியில், திருக்கண்ணங்குடி எம்பெருமான் தம்மனத்தை வாழு மிடமாகக் கொண்டான் என்பதை 'எண்ணங்குடியாய் இருந்தான் நின்றான் கிடந்தான் கண்ணங்குடியான்' என்று குறிப்பிட்டுள்ளார். எஸ்.கி.

**திருக்கண்ணபுரம்:** இது வைணவத் திருப் பதிகள் 108-இல் ஒன்று. இங்குச் சௌரிராசப் பெருமாள் கண்ணபுர நாயகியுடன் நின்ற திருக் கோலத்தில் விளங்குகின்றார். பெருமாள் இப் பதியில் முனிவருக்கு வெளிப்பட்டருளினார் என்பது ஐதிகம். இத்திருத்தலம் திருவரங்கத்துக்குக் கிழக்கே யிருக்கையால் 'கீழைவீடு' என்று சிறப்பாகக் குறிக் கப்படும். உற்சவப் பெருமாள் கன்னியாதானம் வாங்கக் கையேந்திய நிலையில் காட்சியளிக்கிறார். கிருமிகண்டசோழன் இவ்வூரில் உள்ள ஆறுமதில் களையும் இடித்து, ஏழாவது மதிலையும் அழிக்கப்புக, திருக்கண்ணபுரத்தரையர் பெருமாளைக் கோபித்து 'இன்னமும் பேசாதிருக்கிறாயா?' என்று கூறித் தம் கையிலிருந்த தாளத்தை எம்பெருமான் திருமுகத் தில் எறிந்தார். அப்போது சௌரிப்பெருமாள் கிருமி கண்டசோழனை அழிக்கத் திருவுள்ளங் கொண்டார். அரையர் எறிந்த தாளம் பட்ட இடத்தில் அந்த அடையாளம் இப்போதும் எம்பெருமான் திருமுகத் தில் விளங்குகிறது என்பதாக இவர் வரலாறு கூறு கிறது.

நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார் ஆகியோர் இத் தலத்தைப் பாடிப்பரவியுள்ளார்கள். இத்தலத்தில் திருமங்கையாழ்வார் மந்திரசித்தி பெற்றாராதலால், நூறு பாட்டுகள் கொண்ட பெரிய திருமொழி எட்டாம் பத்து முழுவதையும் திருக்கண்ணபுரத் தெம்பெருமானுக்கே பாமாலையாகச் சூட்டினார். இவ்வாழ்வார் அவ்வூரிலுள்ளாரை 'கலையிலங்கு மொழியாளர்' என்கிறார். அதாவது அங்குள்ளோர், அன்றாட வாழ்க்கையில் பொதுவாகப் பேசும் பேச் சிலும் சாத்திரப் பொருள் நுட்பங்கள் நிறைந்திருக் குமாம். 'கண்ணபுரத்தம்மான்', 'கண்ணபுரத்தமுது' 'கணபுரத்தென் கருமணி' என்று ஆழ்வார்கள் சௌரிப்பெருமானிடம் மிகவும் ஈடுபட்டு ஆசையோடு அழைக்கிறார்கள்.

திருமங்கையாழ்வார் 'கண்ணபுரத்துறை அம் மானே! அடியேன் உனக்கே உரியவன் வேறொரு வருக்கு உரியனல்லேன். எட்டெழுத்து மந்திரத்தைக் கற்ற நான் வேறொருவரைத் தஞ்சமாகப் பற்றி யிருப்பாரோடு சம்பந்தம் உடையேனல்லேன் என் றும், உன் அடியார்க்கு அடிமையாகயிருப்பவன்' என் றும் திருமாலடியார் கடைப்பிடிக்க வேண்டிய கொள்கையை உணர்த்துகிறார். 'திருக்கண்ணபுரத் தாதியானை அடைந்தார்க்கு அல்லலில்லை' என் கிறார் நம்மாழ்வார். எஸ்.கி.

**திருக்கண்ணமங்கை:** இது வைணவத்திருப் பதிகள் 108-இல் ஒன்றாகும்; கும்பகோணம்-திரு வாரூர்ச் சாலையில் திருவாரூருக்கு வடக்கே மூன்று கல் தொலைவில் உள்ளது. இங்குப் பக்தவச்சலப் பெருமாள் அபிடேகவல்லித் தாயாருடன், நின்றதிருக் கோலத்தில் காட்சியளிக்கிறார். இங்குள்ள தாயார் சந்நிதியில் தேன்கூடு ஒன்று உள்ளது. இருடிகள் தேனீக்களாயிருந்து எம்பெருமானைத் தேனால் ஆராதிப்பதாகப் புராணம் கூறுகிறது. இத்தலத்தில் தோன்றிய திருக்கண்ணமங்கையாண்டான் என்ற ஆசாரியர் 'எம்பெருமானே வீடுபேறடைய உபாய மாவான்' என்று உறுதிபூண்டு, வீடுபேற்றிற்காகத்

தாம் முயல்வதினின்றும் நீங்கி, இவ்வூர்ப் பெருமான் சந்நிதியில் தொண்டு செய்து வாழ்ந்து வந்தார். இங்குள்ள தீர்த்தம் தரிசன புட்கரணி எனப்படும். பெருமாள் இத்தலத்தில் வருணனுக்கு வெளிப்பட்டருளினார் என்று புராணங் கூறுகிறது.

திருமங்கையாழ்வார் இத்தலத்தைப் பாடிப் பரவியுள்ளார். 'கண்களாரளவும் நின்று கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே' என்று ஆழ்வார் சொல்லுமளவுக்கு எம்பெருமான் ஆழ்வாருக்கு அருள் புரிந்தான். மிக்க அருள்புரிந்த இந்த எம்பெருமானுக்குச் சிறப்பாகத் திருநாமமாலை சூட்ட எண்ணிய ஆழ்வார் 'பெரும்புறக் கடலை' என்று தொடங்கி அற்புதச் சொல்லாட்சியால் பாடி மகிழ்கிறார். இப்பதிகத்தை ஆழ்ந்த பொருள் பொதிந்த அடுக்கு மொழிகளாலே அழகுறப்பாடி முடித்தபின், இத்திருமொழியின் ஆழ்பொருள்களை அறியவேண்டும் என்னும் முகக்குறிப்பைத் திருக்கண்ணமங்கை எம்பெருமானின் திருமுகத்திலே கண்ட ஆழ்வார் 'வெண்சங்கமொன்றேந்திய கண்ணா! நினதனக்கும் குறிப்பாகில் கற்கலாம் கவியின் பொருள்தானே' என்று அருளிச் செய்தார். எஸ்.கி.

**திருக்கண்ணார் கோயில்:** சோழநாட்டிலுள்ள தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்று. புள்ளிருக்குவேளூர் ஆகிய வைத்தீசுவரன் கோயிலுக்குத் தென்கிழக்கே 3கி.மீ. தொலைவில் இத்தலம் உள்ளது. இது இக்காலத்தில் குறுமாணக்குடி என்று வழங்கப்படுகிறது. இத்தலத்திறைவனைத் திருஞான சம்பந்தர் பதிகம் பாடிப் பரவியுள்ளார். இறைவன் பெயர் கண்ணாயிர நாதர்; இறைவி பெயர் முருகுவார் கோதை இங்கு இந்திர தீர்த்தம் உள்ளது. இத்தலத்து இறைவனை வழிபட்டு இந்திரன் தன் சாபம் நீங்கி ஆயிரம் கண் பெற்றான் எனக் கூறப்படுகிறது. வாமனாவதார நிலையில் திருமால், மாவலியிடம் மூவடி மண்ணினை இரந்து பெற்றுப் பின் ஓரடியால் உலகளந்தார், செருக்குற்றிருந்த அவர்தம் செருக்கினை ஒடுக்கிய சிவபெருமானை வழிபட்டுத் திருமால் அருள் பெற்ற சிறப்புடையது இத் தலம். அதனால், இத்தலம் குறுமாணிக்குடி எனப்பட்டது. அதுவே, குறுமாணக்குடி என மருவி இக்காலத்தில் வழங்கப்படுகிறது. இந்திரன் சாப நீக்கம்பெற்ற செய்தியினை, 'முன்னொரு காலத்து இந்திரன் உற்ற முனிசாபம், பின்னொரு நாள் அவ்விண்ணவர் ஏத்தப் பெயர்வு எய்தித் தன்னருளால் கண்ணாயிரம் ஈந்தோன்' என்ற பகுதியாலும் (தேவா. திருஞான. 1-101-7), திருமால் பற்றிய செய்தியினை, 'வானோரைச் செறுமாவலி பால் சென்று உலகெல்லாம் அளவிட்ட, குறுமாண உருவன் தற்குறியாக் கொண்டாடும் கூறுமா கண்டன்' என்ற பகுதியாலும் (தேவா. திருஞான. 1-101-5) ஞானசம்பந்தர் புலப்படுத்தியுள்ளார். அ.மா.ப.

**திருக்கயிலாய ஞான உலா** என்பது சேரமான் பெருமாள் நாயனாரால் இயற்றப்பெற்று திருக்கயிலையில் இறைவன் திருமுன்னர் அரங்கேற்றப் பட்ட ஒரு சிறந்த நூல் எனப் பெரியபுராணம் கூறுகிறது. இறைவனே திருக்கயிலையில் இந்நூலை நேரே கேட்டதாகவும் தமிழின் இனிய ஓசை கயிலாயம் வரை மணம் பரப்பியதாகவும் ஆன்றோர் கூறுவர். இச்சிறப்பு இவ்வுலாவுக்கே தனிப்பட்ட ஏற்றம் தருவதாகும். கயிலையில் பாடப்பட்ட இவ்வுலாவை நேரில் கேட்ட மாசாத்தனார் என்னும் தெய்வம் சோழ நாட்டில் திருப்பிடவூருக்கு வந்து இந்நூலை உலகவருக்கு அறிவுறுத்தியது என்பதையும் பெரிய புராணமே கூறுகிறது. இவ்வளவு பெருமை கருதியே இவ்வுலாவை ஆன்றோர்கள் பதினோராம் திருமுறையுள் சேர்த்து வழிபாட்டுக்குரிய தோத்திர நூல்களுள் ஒன்றாக அமைத்தனர்.

உலா என்பது தமிழிலுள்ள தொண்ணூற்றாறு பிரபந்தவகைகளுள் ஒன்றாகும். இது பேதை முதல் பேரிளம் பெண் ஈறாக உள்ள எழுவகைப் பருவ மகளிர் தத்தம் பக்குவத்திற்கேற்ப உலாப் போகும் தலைவனைக் கண்டு காதல் கொண்ட செய்திகளைக் கவிநயம் அமையக் கூறும் பகுதிகளடங்கியதாகும். உலாப் பிரபந்தங்களுள் காலத்தால் முற்பட்டது இதுவொன்றே. அதனாலேயே இதற்கு 'ஆதியுலா' என்று மற்றொரு பெயரும் உண்டு.

மாலொடு நான்முகனும் தேடித் தேடொணாத பரம்பொருளின் பெருமையை வியந்து ஒரு சமயம் தேவர்கள் அப்பெருமானின் காட்சியை நேரே தந்தருளுமாறு வேண்டினர். இறைவனும் அருள்கூர்ந்து எல்லாச் சிறந்த அணிகளையும் பூண்டு திருவுலாப் போந்தருளினான். இவ்வாறு சுந்தர வேடத்துடன் பெருத்த ஆரவாரத்தோடு இறைவன் உலாப் போந்த பெருமையைச் சிறப்பாக இந்நூல் கூறுகிறது. அவ்வமயம் முறையே பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் ஆகிய ஏழு பருவ மகளிரும் இறைவனாகிய தலைவனைக் கண்கள் கூரக் கண்டனர். அவ்வாறு கண்டதோடு அமையாது அவரவர்கள் தங்கள் தங்கள் எண்ணங்களை வெளிப்படுத்தும் பான்மையில் இவ்வுலா மிகவும் நயமுற அமைந்துள்ளது. இவ்வெழுநிலைப் பெண்டிரும் தங்கள் விளையாட்டு அல்லது மேற்கொண்ட செயலை மறந்து தலைவனின் பேரழகில் மனத்தைப்

பறிகொடுத்து மெய்ம்மறந்து நிற்கும் திறம், அதனால் வெளிப் போந்த செய்திகள், மேம்பாடு முதலியன அழகுற இந்நூலில் காணப்படுகின்றன.

இந்நூல் கலிவெண்பா யாப்பில் அமைந்துள்ளது. 197 கண்ணிகளையும் இறுதியில் ஒரு நாலடி வெண்பாவினையும் கொண்டது. அரிவைப் பருவப் பெண்ணொருத்தி தன்னை அலங்கரித்துக் கொண்டு வீணை வாசிக்கத் தொடங்கினாள். அவ்வமயம் 'பரஞ்சோதி கேடலா மால் விடையில் தோன்றுதலும்-கூடிய இன்னிசையும் இப் பிறப்பும் பேணும் இருந்தமிழும் மன்னிய வீணையும் கைவிட்டு நலம் தோற்ற' செய்தியை மிக அழகாகச் சேரமான் பெருமாள் நாயனார் விளக்குகின்றார். 'கண் அவனை அல்லது காணா; செவி அவனது எண்ணருஞ்சீர் அல்லது இசை கொள்ளா; அண்ணல் கழலடி அல்லது கை தொழா' என்னும் அடிகள் பேரிளம் பெண் தலைவனைக் கண்டு இன்புற்ற நிலையை விளக்கும் பகுதியாகும். இவை பக்திப் பெருக்கையும் இறைவனிடத்து அடியார் மேற்கொள்ள வேண்டிய ஈடுபாட்டினையும் பொதுப்பட விவரிக்கும் திறங்கள் மிகவும் போற்றற்பாலனவாம். மேலும் திருக்குறளை மேற்கோளாக ஆளுதல் முதலிய பல சிறப்பு நலங்களும் இந்நூலில் ஆங்காங்கே மிளிர்கின்றன. இவ்வுலாவில் பலவிடங்களிலும் இறைவனாய தலைவனின் பெருமையை எடுத்துக்கூறி உயிராகிய தலைவி அவன்பால் பக்தி செலுத்தி ஈடுபடவேண்டிய அவசியத்தை அழகு பொருந்தக் கூறும் விதம் படித்துப் படித்து இன்புறத் தக்கதாம். இந்நூலின் காலம் சுந்தரமூர்த்தி நாயனாரின் காலமாகிய கி.பி. 7-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியும் 8-ஆம் நூற்றாண்டின் தொடக்கமும் ஆகும் என ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். இரா.ச.

**திருக்கரம்பனூர்**: திருவரங்கத்திற்கு வடக்கே சுமார் 5 கிலோமீட்டரில் உள்ள வைணவத்தலம் திருக்கரம்பனூர். கால்நடையாகக் கொள்ளிடத்தைக் கடந்தும் செல்லலாம். இது கதம்பசேத்திரம் என்றும், உத்தமர் கோவில் என்றும் வழங்கப்படும். இத்தலத்தில் புருடோத்தமன் பூருணவல்லித் தாயாருடன் கிழக்கே திருமுகமண்டலத்தோடு புசங்கசயனத்தில் எழுந்தருளியிருக்கிறான். இங்கு கதம்ப முனிவருக்கு இவர் கண்கண்டவர். இந்தசந்நிதியின் பிராகாரத்திலேயே பிரமன், சரஸ்வதி, சிவன், பார்வதி முதலான தெய்வங்களுக்கும் கோயில்கள் உள்ளன. திருமங்கையாழ்வார் திருவரங்கத்தைப் பாடி வரும்போது இத்தலத்தையும் 'கரம்பனூர் உத்தமனை' என்று பாடியுள்ளார். இவ்விடத்திற்கு வியாக்கியானம் அருளும் பெரியவாச்சான்பிள்ளை 'வழிக் கரையிலே திருவாசலுக்கு ஒரு கதவு இடாதே வந்து கிடக்கிறவனை' என்று சுவையாக அருளினார். உத்தமர் கோவில் எல்லோரும் சென்று வரும்படி மத்திய இடத்தில் இருப்பதால், கதவு திருக்காப்பிடப்பட்டுப் பின் நீக்க முடியாதபடி இறைவனை வந்து சேவித்துச் செல்வார் மிகுந்திருப்பராம். எம்பெருமான் உதாரனாகையாலே கதவிட்டு அடைத்துக் கொள்ளாமல் தன்னை அண்டினார்க்குத் தன்னையே கொடுத்துக் கொண்டு, கிருபை பண்ணிக் கொண்டே கிடக்கிறான் போலும். 'சிலமாதவஞ்செய்தும், தீவேள்வி வேட்டும், பலமாநதியில் படிந்தும், உலகில் பரம்பநூல் கற்றும் பயனில்லை நெஞ்சே! கரம்பனூர் உத்தமன்பேர் கல்' என்று திருக்கரம்பனூரில் உறையும் உத்தமனின் திருநாமத்தை ஓதி உய்யுமாறு அருளினார் பிள்ளைப் பெருமாளய்யங்கார். எஸ்.கி.

**திருக்கரவீரம்** (கரையபுரம்) தேவாரம் பெற்ற சைவத்தலங்களுள் ஒன்று. தஞ்சை மாவட்டம் திருவாரூருக்கு மேற்கே 11கி. மீட்டரில் உள்ளது. இறைவன் பெயர் கரவீரநாதர்; இறைவி பெயர் பிரத்தியட்சமின்னம்மை. திருஞான சம்பந்தர் பதினொரு பாடல்கள் பாடியுள்ளார். தம்மைத் தொழுவாரின் தீவினைகளைத் தாமே ஏற்று, அவர்கட்கு வீடுபேறு அருளக் கூடியவன் என்பதை உணர்த்தும் வகையில், இறைவன் கறைபடிந்த கண்டனாகக் காட்சியளிக்கின்றான் எனத் திருஞான சம்பந்தர் குறிப்பிடுகின்றார். பெ.சு.

**திருக்கருக்குடி**: இவ்வூர் இக்காலத்தில் மருதாந்த நல்லூர் என வழங்கப்படுகின்றது. கும்பகோணத்திற்குத் தென்கிழக்கில் 5 கி.மீ. தொலைவில் காவிரியாற்றின் தென்கரையில் உள்ளது. தேவாரப் பாடல் பெற்ற திருக்கலயநல்லூர் இங்கிருந்து 2கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரிலுள்ள சைவத் திருக்கோயில் பிரமன், இராமன் முதலியோர் வழிபட்ட பெருமை உடையது. இறைவன் பெயர் சற்குணநாதர். இறைவி பெயர் சருவாலங்கிருத மின்னம்மை. இவ்வூரின் புனிதத் தன்மையும் இயற்கை வளமும், 'வையகம் தொழு கருக்குடி', 'மஞ்சுறு பொழில் வளமலி கருக்குடி' என்னும் திருஞான சம்பந்தரின் மொழிவழிப் புலனாகின்றன. திரிபுவன சக்கரவர்த்தி இராசராச தேவனின் இரண்டாம் ஆட்சியாண்டில் செதுக்கப்பட்ட கல்வெட்டொன்று இக்கோயிலில் காணப்படுகின்றது. பெ.சு.

**திருக்கருகாவூர்**: இது சோழ நாட்டில் காவிரிக்குத் தென்கரையிலுள்ள பாடல் பெற்ற தலங்களுள் 18 ஆவதாக விளங்குகின்றது. இத்தலத்திற்குச் சம்பந்தர் கௌசிகப்பண்பதிகம் ஒன்றும் திருநாவுக்கரசர் திருத்தாண்டகப் பதிகம் ஒன்றும் உள்ளன. ஆதரவற்ற பெண் ஒருத்திக்கு இறைவி மருத்துவம் பார்த்துக் காத்தபடியால் இவ்வூருக்குத் திரக்கரு

காவூா எனப் பெயா ஏற்பட்டது. மக்கள் திருக்களா வூர் என - இபபோது இவவூரை வழஙகுகினறனர். மாதவிவனம, முல்லைவனம, காபபபுரி என வேறு பெயர்களும் உள இஙகுளள இறைவன பெயா முல்லைவன நாதர், முல்லைவனேசுவரர், மாதவி வனேசுவரர், கருப்பபுரீசுவரர், கருகாவூர்க கறபகம் என்பனவாம். கலவெட்டில இவவூரிறைவன பெயா திருக்கருகாவூர் மகாதேவர், திருககருகாவூர் ஆழ வார், திருக்கருகாவூா நாயனாா, திருமுலலைவன முடைய மாதேவா எனக காணப் பெறுகினறது. இத தலம் தஞ்சை மாவட்டம பாவநாசததிலிருநது தெற்கே 6 கி.மீ. தொலைவிலிருககிறது. இவவூரி லுளள விநாயகா கறபகப் பிளளையார் எனக் குறிக கப் பெறுகிறார். இஙகு மணலாலான சுயம்புலிஙகத தில் முலலைக் கொடி சுறறியிருக்கும் அடையாளம உண்டு. இறைவி பெயா கருமபனையாள, காப்ப ரட்சகி, கருக்காத்த நாயகி எனபனவாம். இஙகுத தீர்ததம் பாற்குளம, சத்தியகூபம், பிரமதீர்த்தம, வெட்டாறு எனபனவாம. வெட்டாறறின தெனகரை யில இக்கோயிலுளளது. தலமரம் முல்லைககொடி. இங்குப் பல கல்வெட்டுகளுள்ளன அவறறில்வடகரை பாம்பூா நாட்டுத தேவதானம திருக்குடமூககின பால் கருகாவூர், நித்த வினோதவளநாட்டு ஆவூர்க கூற்றத்துத் திருக்கருகாவூா எனப் பலவாறு இததலம குறிக்கப்பெறுகிறது. இஙகுச் சநதிரன, பிரமன, கௌதமர், சஙகுகர்ணன் முதலியோர் வழிபட்டுப பேறு பெற்றதாகப் புராண வரலாறு கூறுகிறது. இத் தலத்தம்மையை உணமையனபோடு வழிபட்டு வந் தால சுகபபிரசவம், நனமக்கட்பேறு முதலியன வாய்க்கும் இதுஒருவரப்பிரசாதத் தலம. மககள வந்து வணஙகித் தஙகள குறை நீஙகிச செலகினறனர் திருக்கருகாவூர், திரு அவளிவநல்லூர், திருஅரதைப் பெரும்பாழி, திருஇருமபூளை, திருககொளளம்பூதூர் என்னும் பஞ்ச ஆரணியத் தலங்களுள இதுவும் ஒன றாம். 'தில்லைவனம காசி திருவாரூா மாயூரம முல்லைவனம் கூடல முதுகுனறம் – நெலலைகளர் காஞ்சி கழுக்குனறம் மறைககா டருணை காளத்தி, வாஞ்சியமெண முத்தி வரும்' எனற தருமை ஆதீன குரு முதல்வர் குருஞான சம்பந்தர் வாககுப்படி இம் முல்லைவனமாய திருக்கருகாவூா முததிதரும தலங் களுள் ஒனறாயும் விளஙகுகிறது இரா.ச.

**திருக்கருப்பறியலூர்:** இவ்வூர் தஞசை மாவட்டம் வைத்தீசுவரன கோயில இரயிலடிககு வட மேற்கில் 8 கி.மீ தொலைவில உளளது. திருஞான சம்பந்தரும சுநதரரும இவ்வூர் பறறி ஒவ்வொரு பதி கம் பாடியுள்ளனா. இவவூர்ச் சைவக் கோயில் தேவா ரத்தில 'கொகுடிக்கோயில்' எனக் குறிக்கபபடுகினறது. முலலைக்கொடியைத் தலக்கொடியாக உடைமையா லும அமைப்பு கொகுடிக்கோயில் வகையைச் சோநத தாலும் இககோயில இப்பெயர் பெற்றது. இறைவன பெயர் குற்றமபொறுத்த நாதா. இறைவி பெயர் கோல்வளை நாயகி. பூதவடிவில தனமுனனர் நினறு கொணடிருநத சிவபெருமானை மதியாது, இந்திரன் வச்சிராயுதத்தை அவர்மேல் வீசினான, பின தன குறறத்தைப் பொருத்தருள வேணடினான. இறை வனும் அககுறறததைப பொறுததருளி, குறறம பொறுத்த நாதா என்னும பெயர் பெற்றார். இக் கோயிலில இநதிரதீாத்தம் உளளது. பெ சு.

**திருக்கருவிலி**: திருநாவுககரசா தம திருக்குறுந தொகையில 'திருக்கருவிலிக கொட்டிட்டை' என இவவூரைக் குறிபபிடுகினறாா. இவ்வூா தஞ்சை மாவட்டம நாசசியாா கோயிலுககுக் கிழககே 10 கி. மீட்டரில் உளளது முறபிறவியில செய்த வினை காரணமாக எயதும கரு (பிறப்பு) இல்லாதவாறு அருளும் சிவபெருமான உறையும ஊராதலின, இவ வூா இப்பெயர் பெற்றது. இவவூரில எழுந்தருளியுளள சிவன பெயா சற்குண நாயகா; இறைவி பெயா சருவாங்க நாயகி பெ.சு.

**திருக்கலய நல்லூர்**: இது தேவாரப பாடல பெறற தலஙகளுள ஒன்று. காவிரியின் தெற்குப் பகுதியிலுளள தேவாரத தலஙகளுள இது 68–ஆம தலமாகும இது கும்பகோணம நீடாமஙகலம சாலை யில் குமபகோணததிலிருந்து தெனகிழக்கே 5 கி.மீ தொலைவில அமைநதுளளது. இககாலத்தில இவ வூா சாககோட்டை எனறு வழஙகப் பெறுகிறது. அரிசிலாற்றின தெனகரையில உளள இத்தலததில திருககோயில சிறியதாக அமைந்துளளது திருககோயி லின அருகே, தாமரைப் பொயகை உளளது. இஙகு அரிசிலாறு தீர்த்தமாக விளஙகுகிறது.

இவவூா, கலநலலூா எனப்பட்டதற்கு வெவ்வேறு காரணம புராண மரபில கூறபபடுகினறன. அமிர் தம் பெற முயனற தேவாகள, அதனைப் பெறற மகிழச்சியினால் களிப்புறறுப் பூசிதத தலம் இதுவென் பது கூறப்படுகிறது. உலக முடிவுக் காலத்தில உண டாகிய ஊழிப் பெரு வெளளத்தில, உயிாகள அனைததையும அடைநதிருந்த கலயம செனறு தஙகிய இடமாதலின இவ்வூர் திருவென்னும் அடை மொழி சேர்ககப்படடுத திருக்கலய நல்லூா எனப் பட்டது எனறு கூறுவா. இத்தலத்திலுளள இறைவன பெயர் அமிர்தகலா நாதர். அவர் அமிாத கலை ஈசுரர் எனவும் கூறப் பெறுவா. இறைவியின்பெயா அமிர்தவலலி அம்மை எனபதாகும்

இததலத்திறைவனைச் சுந்தரமூாத்தி நாயனார் 'குரும்பை முலை மலர்க்குழலி' எனத் தொடஙகும

பதிகம் பாடிப் பரவியுள்ளார். இத்தலத்தில் மறைய வர் பலர் வாழ்ந்து தொண்டுபுரிந்த செய்தியினைச் 'செம்மை மறையோர் திருக்கலய நல்லூர்' என்று (பெ.பு. ஏயர்.66) சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார். சுந்தரர் தாம் பாடிய இவ்வூர்ப் பதிகத்தில், சைவ சமயத் தொடர்பான பல புராணச் செய்தி களைப் பாடல் தோறும் இயைத்துப் பாடியுள் ளமை குறிப்பிடத்தக்கதாகும். அச்செய்திகள் கந்த புராணம், காஞ்சிப்புராணம், இராமாயண உத்தர காண்டம், இலிங்கபுராணம், பெரியபுராணம் முதலிய நூல்களில் இடம்பெற்றுள்ளனவாகும். இறைவனை விரும்பித் தவமிருந்த உமையம்மையை மணந்தமை, சலந்தரனை அழித்து அச்சக்கரத்தைத் திருமாலுக் கருளியமை, தக்கன் வேள்வி அழித்தமை, தாதை தாள் தடிந்த சண்டேசுரநாயனாருக்கு அருளியமை, உமாதேவி விளையாட்டாக இறைவன் கண்ணை மூட, அதனால் உலகனைத்தும் இருள்பட, முக்கண் ணால் உலகிற்கு ஒளி வழங்கியமை, சிவனை மதி யாது அப்பெருமான் வீற்றிருந்த இமயமலையைப் பெயர்க்க முனைந்த இராவணன் வலியடங்கக்கால் பெருவிரலால் மலையை அழுத்தியமை, தாரகனை அழித்த முருகனை மகனாகக் கொண்டு விளங்கியமை, மன்மதன் உடல் அழியக்கண் விழித்தமை, திரிபுரம் அழித்தமை முதலிய புராணச் செய்திகளைப் பாடல் தோறும் அமைத்துப் பாடியுள்ளார். கலயநல்லூர் இயற்கை அழகு தவழ அமைந்துள்ள காட்சியினை, 'அரும்பருகே சுரும்பருவ அறுபதம் பண்பாட, அணி மயில்கள் நடமாடும் அணிபொழில்சூழ் அயலின், கரும் பருகே கருங்குவளை கண்வளரும் கழனிக் கமலங்கள் முகமலரும் கலயநல்லூர்' என்று பாடியிருப்பது இன் பம் மிகுவிப்பதாக உள்ளது. இத்தலத்திற்கு நான் முகன் வந்து வழிபட்டுச் சிறப்புற்றான் என்றும் கூறு கின்றனர். பெ.சு.

**திருக்கலிக்காமூர்**: இது காவிரியின் தென்கரை யில் அமைந்த தலங்களில் ஒன்று. இப்போது அன்னப் பன்பேட்டை என்று வழங்கப்படுகின்றது. சீகாழி புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கே ஒன்பது கல் தொலைவில் உள்ள தென் திரு முல்லைவாயிலுக்குத் தென்மேற்கே மூன்று கல் தொலைவில் உள்ளது. உப்பனாற்றைக் கடந்து சென்று தலத்தினை அடை தல் வேண்டும். திருவெண்காட்டிலிருந்தும் இவ்வூருக் குச் செல்லலாம். இறைவன் பெயர் சுந்தரேசர். இறைவி அழகம்மை. அழகுவனமுலையம்மை என்றும் கூறப்படும். பராசர முனிவர் பூசை செய்த தலம் என்று கூறுகின்றனர்.

இத்தலம் திருஞான சம்பந்தரால் பாடப்பெற்ற சிறப்புடையது. இதனை 'வளமார் கலிக்காமூர்' 'கார் அரவக் கடல் சூழ வாழும் பதி' என ஞான சம்பந் தர் சிறப்பித்துக் கூறுகின்றார்.

'ஆவியுள் நீங்கலன், ஆதிமூர்த்தி, அமரர் பெரு மான்' என இத்தல இறைவனைச் சம்பந்தர் பாடு கின்றார். ஜி.ஆர்.கி.

**திருக்கழிப்பாலை**: இது தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்று. இங்குள்ள திருக்கோயில் பண்டு தில்லைக்குத்தென்கிழக்கில்11கி.மீதொலைவில் கொள்ளிடத்தின் வடகரையில் இருந்தது. கொள்ளிட ஆற்று வெள்ளத்தால் அது இடிந்துபோயிற்று. சைவப் பெருமக்கள் அக்கோயில் கற்களைக் கொண்டு வந்து சிவபுரிக்குத் தென்பால் கோயில் கட்டி இறைவனை எழுந்தருவித்துள்ளனர். அவ்விடம் தில்லையினின்றும் 5 கி.மீ. தொலைவிலுள்ள திருநல் வாயில் என்னும் சிவபுரிக்கோயிலுக்கு அருகே தனிக்கோயிலாகத் திகழ் கிறது. இத்தலம் மூவர் தேவாரமும் பெற்ற சிறப் புடையதாகும். இங்குள்ள இறைவன் பெயர்:பால் வண்ணநாதர்; இறைவி பெயர்:வேதநாயகி. சிறிய கோயிலாக அமைந்துள்ள இதன்கண் விளங்கும் இலிருங்கத் திருமேனி சற்றே வெண்ணிறங் கொண்டு திகழ்கிறது.

மயில்களாலும் சோலை, கடிநாறு பூஞ்சோலை கமழ்ந்து நாறும் கழிப்பாலை என வரும் அப்பரடிகள் தேவாரம் இப்பதியின் சோலை வளம் உணர்த்தும். கண் நலம் கவரும் கழிப்பாலை, பாய்புனல்சூழ் கழிப் பாலை எனச் சம்பந்தரும் இத்தலத்தின் நில நீர் வளங்களைப் பாடுகின்றார். சுந்தரர் இதனைக் கரும்பாரும் கழனிக் கழிப்பாலை, கடற் சாரும் கழனிக் கழிப்பாலை என்று சிறப்பித்துள்ளார். கடல் சாரும் என்ற குறிப்பு இவ்வூர் கடற் கரைகளை அடுத்தது என்ற எண்ணத்தை உண்டாக்கும். கலங் கள் வந்துலவும் கழிப்பாலை எனச் சம்பந்தர் கூறு வது அதனை உறுதிப்படுத்தும். ஜி.ஆர்.கி.

**திருக்கழுக்குன்றம்**: இது தொண்டை நாட்டி லுள்ள 32 தலங்களுள் 28 ஆவதாகும். இத்தலத்திற் குச் சம்பந்தர் குறிஞ்சிப் பண் ஒன்று, அப்பர் திருத் தாண்டகம் ஒன்று, சுந்தரர் நட்டபாடைப்பண் ஒன்று ஆக 3 பதிகங்கள் உள்ளன. வேதங்கள் மலையாய் இறைவனைத் தாங்கியுள்ளதால் இம்மலை வேதகிரி, வேதாசலம் எனப் பெயர் பெறும். இம்மலை மேல் உள்ள இறைவன் பெயர் வேதகிரீசுவரர், வேதபுரீ சுவரர்; இறைவி பெயர் பெண்ணினல்லாள், மலைச் சொக்கநாயகி என்பதாம். மலையின் அடிவாரத்தி லும் ஒரு கோயிலிருக்கிறது. அங்குள்ள இறைவன் பெயர் பக்தவத்சலர்; இறைவி பெயர் திரிபுரசுந்தரி.

இத்தலம் செஙகற்பட்டிலிருநது தெனகிழககே 15 கி.மீ. தொலைவிலுளளது உகநதோறும் 2 கழுகுகள் இஙகுளள பெருமானைப் பூசிததுப் பேறு பெறறுளள தாதலின இவவூருககே திருககழுககுனறம என்னும பெயர் ஏறபடலாயிறறு அதறகேறப இப்போதும நாளதோறும நடுபபகலில சடாயு, சமபாதி எனனும் கழுகுகளின வழித தோனறலகளாய இரணடு கழுகு கள வநது உணவுணடு செலகினறன பணடாரம் ஒருவர் உணவு கொடுதது வருகிறார். மலையிலுளள கோயில குடைககோயில, அஙகுச சுவாகளின சிவ பராககிரம வரலாறுகள் செதுககபபட்டுளளன. இங குளள தீரததம படசி தீர்த்தம என்பதாம 12 ஆணடு



திருககழுககுனறம

களுக்கொரு முறை சஙகு ஒனறு இத்தீர்த்தத்திலிருநது உற்பததியாகிறது. ஆதலின் சஙகு தீர்த்தம் என மற றொரு பெயரும வழங்குகிறது இத்தலம மாணிகக வாசகருக்குத் தரிசனம கொடுத்த தலமாகும. அதனா லேயே திருக்கழுக்குனறப் பதிகததை இஙகுப் பாடி யுள்ளார். அதில 'கணககிலாத திருககோலம நீவந்து காட்டினாய கழுக் குனறிலே' என்று குறிததுள் ளார். மூவரும இங்கு வந்து தஙகிவழிபட்ட இடம் இப்போதும் மூவர் பேட்டை எனனும் பெயரால் வழஙகப் பெறுகிறது. நந்திதேவர், இந்திரன், கோடி உருத்திரா முதலியோா இங்குள்ள பெருமானைப் பூசித்துப் பேறு பெறறதாகப் புராண வரலாறு கூறும இககோயிலில பல கலவெட்டுகள உளளன. இது செயஙகொணட சோழமணடலம், களததூாக கோட்டம, திருககழுககுனறம, களத்தூர்க் கோட டம், களததூர் நாடு, உலகளந்த சோழபுரம, திருக்கழுக்குனறம் எனப பலவாறு பலவேறு காலங களில் வழஙகப்பட்டிருக்கினறது நிலககொடை, திரு விழா எடுததல, பழுது பார்த்தல், தானம் வழஙகல முதலிய பலவேறு காரணஙகளுக்குரிய கல்வெட்டுகள இஙகுப பல உளளன 17-ஆம் நூறறாணடில தசககு காரர் பற்றிய செய்திகளும (கி.பி. 17-ஆம நூற றாணடு) குனறின ஒருகால மணடபததில கீழததாழ வாரத்தில பொறிககபபட்டுளளன. அநதகக்கவி வீர ராகவ முதலியாரால் இயறறபபட்ட புராணம் ஒனறும் இததலததிறகுளளது. உடல் நலிவுற்றோா இஙகுத தஙகி இமமலைக காறறை நுகாநது தங்களநலிவைப் போககிக கொளகினறனா. இரா ச.

**திருக்கள்வனூர்:** காஞ்சீபுரம் காமாட்சியமமன கோவிலுககுள இந்தச் சந்நிதி உளளது. ஆதிவராகப் பெருமாள அஞ்சிலைவலலி நாசசியாரோடு நினற திருககோலத்தில் மேறகே திருமுகமணடலத்துடன காட்சியளிக்கிறாா. திருமங்கையாழ்வார் இத்தலதது எம்பெருமானைக் 'களவா' என்று விளிக்கிறார்.

பிள்ளைப் பெருமாளய்யங்கார், 'எம்பெருமானே! நெடுங்காலமாக உனக்கு அடிமைப் பட்டிருப்பதாகிற ஆன்மாவை எனக்கே உரித்தென்று கருதியுள்ள என்னைக் 'கள்வன்' என்று கூறவேண்டியிருக்க, அங்ஙனம் கூறாமல் உன்னைக் கள்வன் என்று அழைப்பது என்ன காரணம் கொண்டோ?' என்கிறார். எஸ்.கி.

**திருக்கள்ளில்:** இது தேவாரப் பாடல்பெற்ற தொண்டை நாட்டுத் தலங்களுள் ஒன்று. சென்னையிலிருந்து திருக்காளத்தி செல்லும் வழியில் உள்ள பெரிய பாளையத்திற்குச் சிறிது முன்னால், 6கி.மீ. சென்று, கண்ணிப்புத்தூர் வழியாக மேலும் 3கி.மீ. சென்று இப்பதியினை அடையலாம். சென்னையினின்று 35 கி.மீ.தொலைவில் அமைந்துள்ள இத்தலத்தினைப் பேருந்தில் சென்று சேரலாம். இத்தலம் இக்காலத்தில் திருக்கள்ளம், திருக்கண்டலம் என்று வழங்கப்படுகிறது. இங்குள்ள இறைவன் பெயர் சிவானந்தர்; இறைவி பெயர் ஆனந்தவல்லி அம்மை; தீர்த்தம் சிரீநந்தி தீர்த்தம்.

இத்தலம் பிருகு முனிவர் பூசித்துப் பேறு பெற்றது என்று கூறுகின்றனர்.

'கரையார் பொன்புனல் வேலிக்கள்ளில்' என்பதால் இங்குள்ள ஆற்றின் பெருமை புலனாகின்றது. 'கடியார் பூம்பொழிற் சோலைக் கள்ளில்' என்னும் தேவாரத்தொடர் அப்பதியின் வளம் காட்டும். இப்பதிக்குத் திருஞான சம்பந்தரின் பதிகம் உள்ளது.

ஜி.ஆர்.கி.

**திருக்களர்:** இது தேவாரப்பாடல் பெற்ற தலங்களுள் ஒன்று. இத்தலக் கோயில் களர் நிலத்தில் அமைந்ததால் திருக்களர் என்னும் பெயர்பெற்றது. இது காவிரியின் வடகரையில் அமைந்த தலம். தஞ்சை மாவட்டத்திலுள்ள மன்னார்குடி திருத்துறைப்பூண்டிச் சாலை வழிச்செனறு இதனை அடையலாம்.

இறைவன் பெயர் களர்முளைநாதர். அடைந்தார்க்கு அருள் நாதர் எனறும் கூறுவர். திருஞான சம்பந்தர் தம்முடைய பதிகத்தில் பாடல்தோறும் 'அடைந்தார்க்கருளாயே' என இறைவன் பெயரை குறிப்பாகப் புலப்படுத்தியுள்ளார். இறைவியின் பெயர் அமுதவல்லி. தலமரம் பாரிசாதம். அதனால், இத்தலத்தைப் பாரிசாதவனம் எனறும் கூறுவர். தீர்த்தம் துருவாச தீர்த்தம். இக்கோயிலிலுளள 14 கல்வெட்டுகள் படி எடுக்கப்பட்டுளளன; இங்கு 5 செப்பேடுகள் கிடைத்துள்ளன.

இத்தலம் துருவாச முனிவர் வழிபட்ட சிறப்புடையது. இங்கு அம்முனிவருக்குச் சிலை அமைக்கப் பட்டுள்ளது.

இத்தலம் நீர்வளம், சோலைப்பொலிவு, வயல் வளம், மதில் அழகு, தேரோடும் வீதி, விழாச் சிறப்பு ஆகியவை பெற்றிருந்தது என்பதைத் திருஞான சம்பந்தரின் பாடல் குறிப்பிடுகின்றது. மாடமாளிகைகளும் செல்வச் செழிப்பும் பெற்ற பதியாக இருந்துள்ளது.

'பாடவல்ல நன்மைந்தரோடு', 'பணணியாழ் பயில்கினற மங்கையர் பாடலொடு ஆடல் ஆரவாழ பதி', 'பக்தர்கள் பாட்டொடும்பல பணிகள பேணிய' எனனும் தேவாரத் தொடாகள இத்தலததில் இனனிசை வளர்ந்து சிறந்த தனமையைச் சுட்டுவன இத்தலத்திற்குத் தல புராணம் உள்ளது. ஜி.ஆர்.கி.

**திருக்கற்குடி:** இது தேவாரப் பாடல பெற்ற தலங்களுள் ஒன்று. இத்தலம் இன்று உய்யக்கொண்டான் மலை என்று வழங்கப்படுகின்றது. நநதிவர்ம பல்லவன் திருப்பணி செய்த கோயில் ஆதலால் நந்திவர்ம மங்கலம் எனக் கல்வெட்டுகளில் இத்தலத்தின் பெயர் காணப்படுகிறது. இத்தலம் திருச்சிராப்பள்ளிக்குத் தென்மேற்கில் 1 கி.மீ. தொலைவிலுள்ளது. திருச்சியிலிருந்து நகரப் பேருந்து வழியே செனறு இதனை அடையலாம். இறைவனின் சந்நிதி மேற்கு நோக்கியது. அம்மைக்கு இரணடு சந்நிதிகள் உண்டு.

இறைவனின் பெயர் உச்சிநாதர், முத்தீசர், கற்பக நாதர், உச்சிவனநாதர், உய்யகொண்ட நாயனார், விழுமியார், விழுமிய தேவர், விழுமிய நாயனார் எனப் பலவாறு கலவெட்டுகளிலும் புராணஙகளிலும் இடம்பெற்றுளளது. இறைவியின பெயர் அஞ்சனாட்சி. தீர்த்தங்கள் பொன்னொளி ஓடை, ஞான வாவி, எண்கோணக்கிணறு முதலியனவாகும். மார்க்கணடேயர் வழிபட்டு அருளபெற்றதாகக கூறப்படுகிறது. முனிவர்கட்கு இறைவன் குருமூர்த்தியாக இருந்து விழுப்பொருள உபதேசம் செய்த தலம் இங்குக் கரனும் ஈழநாட்டரசனும் வழிபட்டதாகச் கூறுவர்.

இத்தலம், இராசராசன் காலத்தில் பாண்டிய குலாசனி வளநாட்டுஇராசாசிரயச் சதுாவேதி மங்கலத்துக் கற்குடி எனவும், மலலிகார்ச்சுன மகாராசா காலத்து இராசகம்பீர வளநாட்டு பிரமதேயமான உய்யக் கொண்டான் திருமலை எனவும் கலவெட்டுகளில் பெயர் கூறப்பட்டுள்ளது 'காமருவார் பொழில சூழும் கற்குடி மாமலை' என ஞானசம்பந்தர் பாச

விருத்தாசலத்திற்குப் போகவேண்டும்' என்று கூறிச் சுந்தரர்க்குத் துணையாகத் தாமும் அவ்வூர் எல்லை வரை உடன் சென்று பின் மறைந்தார். அந்தணரைக் காணாத சுந்தரர் வந்தவர் பெருமானே என அறிந்து, 'வடிவுடை மழுவேந்தி மதகரியுரி போர்த்துப், பொடியணி திருமேனிப் புரிகுழ லுமையோடும் கொடியணி நெடுமாடக் கூடலையாற்றூரில், அடிகளிவ் வழிபோந்த அதிசயமறியேனே' என்னும் திருப்பதிகத்தைப் பாடி வணங்கினார். சுந்தரருக்குச் செல்லும் நெறியைக் காட்டியதால் இத்தலத்திலுள்ள இறைவன் நெறிகாட்டு நாயகர் எனப் பெயர் பெற்றார். மு.செ.

**திருக்கேதாரம்** இமயமலைத் தொடரிலுள்ள புகழ்பெற்ற சைவத்திருப்பதி. இத்திருத்தலம் ககர்வால் மாவட்டத்தின் மேற்கெல்லையில் பத்திரிநாத்திற்கு மேற்கே, கடல்மட்டத்திற்குமேல் 3585 மீ. உயரத்திலுள்ளது. இக்கோயிலுக்கு அண்மையில் கேதாரநாத சிகரம் உள்ளது. அருகில் கங்கையாறு பாய்கின்றது. இத்திருத்தலத்திற்குப் போகும் வழியில் மமதம், துங்கம், உருத்திரம், கோமேசுவரம் என்னும் நான்கு சிவத்தலங்கள் உள்ளன. இங்கு எழுந்தருளியிருக்கும் இறைவன் பெயர் கேதாரேசுவரன்; இறைவி பெயர் கேதார கௌரி. கேதாரம் என்ற சொல்லுக்குப் பிரமரந்திரத்தில் இருந்து வடியும் அமிர்ததாரை என்றுபொருள்கூறுவர். இவ்வடமொழிச்சொல்லிற்கு, கே-தலை; 'தாரா-மனைவி எனப் பொருள் கொண்டு, சிவபெருமான் செஞ்சடையில் கங்காதேவியைத் தாங்கிப் பூவுலகத்திற்கு நீரைத் தருவது என்று கூறுவதும் உண்டு.

ஆதிசங்கரர் கேதார நாதனை இங்குப் பிரதிட்டை செய்தார் என்பர். பிருங்கி முனிவர் அம்மையைப் பிரித்து அப்பனை மட்டும் வலம் வந்து வழிபாடு செய்ய அம்மையார் நோன்பிருந்து இடப்பாகம் பெற்ற தலம் இது. அநிருத்தியன், நளன், உழை, (உசா) பாண்டவர் முதலியோர் இங்கு இறைவனை வழிபட்டுள்ளனர். திருஞான சம்பந்த சுவாமிகளும், சுந்தர மூர்த்தி சுவாமிகளும் பதிகம் பாடியுள்ளனர். அப்பர் சுவாமிகள் அடைவுத் திருத்தாண்டகத்தில் 'இந்த மாதனம் கயிலைமலை கேதாரம் காளத்தி கழுக்குன்றம் கண்ணார் அண்ணா' எனப் போற்றியுள்ளார்.

இத்தலத்தில் இறைவன் பாறை வடிவில் சுயம்பு லிங்கமாக அமைந்திருக்கிறான். கோயில் ஒன்றன்பின் ஒன்றாக மூன்று அறைகளைக் கொண்டது. இலிங்க மூர்த்தம் கடைசி அறையில் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளது. இலிங்க வட்டத்தின் குறுக்களவு ஆறடியாகும். தமிழ் நாட்டில், பெண்கள் மிக்க சிறப்பினதாகக் கொண்டு தீபாவளிக்குப் பின்னர் நோற்கப்படுவதாகிய கேதார கௌரி விரதம் இத்தலத்து இறைவி நோற்ற நோன்பாகும்.

இக்கோயில் உறைபனி மண்டலத்தில் அமைந்துள்ளதால் சித்திரைத் திங்களில் கோயிலைத் திறந்து ஐப்பசித் திங்களில் மூடிவிடுவர். இக்காரணத்தால் தான் வானவர் ஆறுமாதமும் மக்கள் ஆறுமாதமும் இறைவனை வழிபடுவதாகக் கூறுவர். பக்தர்கள் இலிங்கத்தின்மீது வெண்ணெயைத் தடவி ஆலிங்கனம் செய்து கொள்வது மரபாகப் போற்றப்பெறுகின்றது. சாதி வேறுபாடற்ற நிலையில் மக்கள் தாமேநீராட்டி மலர்தூவி இறைவனை வழிபடுதலை இங்குக் காணலாம். மு.செ.

**திருக்கேதீச்சரம்** இலங்கையிலுள்ள புகழ்பெற்ற சைவத்தலம். தலை மன்னாருக்குக் கிழக்கில் 8 கி.மீ. தூரத்தில் பாலாவியாற்றின் கரையில் மாதோட்டம் என்னுமிடத்தில் இக்கோயில் அமைந்திருக்கின்றது. இறைவன் கேதீச்சுவரர் எனவும் இறைவி கௌரியம்மை எனவும் பெயர் பெறுவர். இத்தலம், மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றும் சிறப்புற வாய்க்கப் பெற்றது.

சூரபன்மனுடைய மனைவியின் பாட்டனும் விசுவகன்மாவுடைய தந்தையுமான மாதுவட்டா என்பவர் உண்டாக்கி வாழ்ந்தது இந்நகர் என்றும், பிருகு முனிவர் இங்குள்ள கோயிலை வழிபட்டுள்ளார் என்றும் மாலியவான் என்னும் அசுரன் வழிபட்டுப் பேறு பெற்றான் என்றும் கூறப்படுகிறது. திருஞான சம்பந்த மூர்த்திகளும், சுந்தரமூர்த்திசுவாமிகளும் இவ்விறைவன்மீது தேவாரங்களைப் பாடியுள்ளனர்.

இக்கோயில் அமைந்துள்ள மாதோட்ட நகர் பண்டைய தமிழ் மன்னரின் தலைநகராகவும் துறைமுகமாகவும் விளக்கமுற்றது. போர்ச்சுகீசியர், தச்சுக்காரர் வருகையால் இந்நகரமும் கோயிலும் கி.பி. 16-ஆம்நூற்றாண்டுக்குப்பின் அழிந்தன. கோயில் இருந்த இடத்தைக் கண்டுபிடிப்பதிலும் அதன் வரலாற்றைத் தொகுப்பதிலும் சர் பொன். இராமநாதன் பெருமுயற்சி செய்தார். அவர் பழுதடைந்த நிலையில் இக்கோயிலை கி.பி.1894-ஆம் ஆண்டு சூன் திங்களில் கண்டுபிடித்தார். இத்தலத்தைப் புதுப்பிக்க யாழ்ப்பாணத்துப் பெரியவர் ஆறுமுக நாவலர் பெருமுயற்சியினை மேற்கொண்டார். இப்போதுள்ள கோயில் 1903-ஆம் ஆண்டு சூன் திங்களில் கட்டியதாகும். இதுவும் பழுதடைந்ததால் 1948-ஆம் ஆண்டில் இலங்கை வாழ் இந்துக்கள் ஒன்றுசேர்ந்து திருக்கேதீச்சர ஆலயத் திருப்பணிச் சபையை நிறுவினர்.

இச்சபை கோயில் அமைப்பில எந்தவித மாறறமும் செய்யாது திருப்பணியைச் செய்தது. மு செ.

**திருக்கைச் சினம்**: இது சோழ நாட்டிலுள்ள தேவாரப் பாடல பெற்ற தலஙகளுள் ஒனறு, தஞசை மாவட்டத்தில, திருவாரூருக்குத் தெறகிலுள்ளது. இத்தலம திருநெலலிக்கா எனனும் பாடல பெறற தலத்திற்கு அருகிலுள்ளது இதனைத் திருத்துறைப் பூணடியிலிருநதும செனறடையலாம். இவவூர் இக காலத்தில் கச்சனம எனறு வழஙகப்படுகிறது. இநதிரன மணலால் இலிஙகம் அமைத்து வழிபடட பினனா, அதனை எடுக்க முயனறபோது அவனது கை அடையாளம் இலிஙகத் திருமேனியில அழுநதிக காணப்பட்டது எனறும், அக கைச்சினனம கொண டுள்ளமையால இறைவன கைச் சினன நாதர் என வழஙகப் பெறறார் என்றும், அபபெயரே கைசசினம் எனறாகியது எனறும தலவரலாறு கூறுகிறது. இததல வரலாற்றினை மெயபபிக்குமவகையில இனறும அங குள்ள இலிஙகத் திருமேனியில அடையாளம உளளது என்று கூறுகின்றனர். இஙகுள்ள இறைவன பெயா கைசசின நாதேசுவரர், இறைவி பெயர் வெளவ்ளை நாயகி. இநதிர தீர்த்தம இஙகுளளது. கோஙகிலவ மரம் தலமரமாகும. கோயிலினுள்ளிருக்கும கோங கிலவ மரத்தினடியில் கோஙகிலவு வன நாதா என்னும் பெயரில திருமேனிவைத்து வழிபடப் பெறு கிறது. இதனை நோககுஙகால தொடககத்தில இப பகுதி கோங்கிலவ மரஙகள மிகக வனமாக இருந திருக்கலாம் என்பதும், அதன் அடிப்படையில இறை வன் அப்பெயரால வழிபடப் பெறறாா எனபதும், பினனா அதனருகே கைசசினன நாதா தோற்றுவிககப பெற்று வழிபட்டு வரப் பெறுகிறார் என்பதும புலனா தல் கூடும். இத்தலத்தினைத் திருஞான சமபநதா பாடியுள்ளார். அதில, 'நெய்யுலாம் மூவிலை வேல ஏந்தி, நிவநதொளிசோ, கையுடையான மேவியுறை கோயில் கைச்சினமே' எனறு இவ்வூரக கோயிலைக் குறிப்பிட்டுச் சிறப்பித்துளளாா. பதிகப் பயன் கூறும இறுதிப் பாடலில, அபபதிகம் பயினறார் எயதும், பயனை, 'விணணவராய் ஓங்கி வியனுலகம ஆள வாரே' எனக காட்டியுளளார். இத்திருக்கோயில இனறு மதுரை ஆதீனத்தைச் சார்நததாயுளளது. இத்தலத்திற்கு அச்சிடப் பெறற தலவரலாறு உணடு. அ.மா.ப.

**திருக்கொட்டையூர்** கும்பகோணத்திறகு மேற் கில் 3 கி மீ. தொலைவில் உளளது. விலவாரணியம எனபது இதன் வேறுபெயர். இவவூருக்கு மேறகே 3 கி.மீ. தொலைவில் சுவாமிமலை இருககின்றது.

ஆமணக்குக கொட்டைச் செடியின கீழிருநது இறைவா தோன்றினமையால இவவூா கொட்டையூா எனபபடுகிறது. 'கொட்டையூரில செயத பாவம கட்டையோடே' எனபது பழமொழி.

இது சைவபபதியாகும; அபபா பாடிய பெருமை உடையது. இஙகுளள சிவன கோடிலிஙகேசுவரர், கோடியப்பா் எனறுசொலலப்படுகினறாா. கோடீச சுரம எனபது கோவிலின பெயா. கோடி இலிஙக முளளதாகக காட்சி கொடுததால கோடிலிஙகேசு வரர் எனபபட்டார். பெரிய இலிஙகத்தில பல சிறிய இலிங்கஙகள உளளன. இறைவி பெயர் பநதாடு நாயகி. இஙகுளள திருமால நவநீத கிருட்டிணன என்று கூறபபடுகிறாா. இங்குக காவிரி பாயவதால உழவுதொழில சிறநதுளளது. திருவலஞ சுழியில காவிரியில இறஙகிய ஏரணட முனிவா இஙகு வெளி வநதாரெனக கூறுவா. ஏரணட முனிவருக்கு இஙகுக கோவில் உளளது. இங்குளள விநாயகர் கோடி விநாயகர் எனபபடுவார். 'வள்ளலார் இல்லம்' எனற அநாதை இலலமும பள்ளியும் இஙகு உளளன. மா.இரா.

**திருக்கொடி மாடச்செங்குன்றூர்**: காணக: திருசசெங்கோடு.

**திருக்கொடுங்குன்றம்**: பாணடி நாட்டின் கண உளள திருத்தலம். இது பிரானமலை எனறு சொலலப்படுகிறது. கடையெழு வளளலகளுள ஒருவ னாகிய பாரி மனனன வாழநத பறம்புமலை எனப் படுவதும இம்மலைப் பகுதியாகும். இதனகண உளள சிவனார் ஆலயம் குன்றக்குடி திருவணணாமலை ஆதீன ஆட்சிக்குட்பட்டது. உயரமான மலையாக இது விளஙகுகிறது. காரைககுடி நகருககு வட மேற்கே 40 கி.மீ தொலைவில் இம்மலை உளளது. இயற்கையெழில கொஞசும் மலையாக இது திகழ கிறது. பல சுனைகள் இதனபால் உளளன. மகோ தர முனிவனும் ஆதிசேடனும் வழிபட்ட தலமாக இது போற்றப்படுகிறது. மலையின மேல் வீரபத்திரர் கோயில உள்ளது. அதற்கும மேலே சிவபிரான கோயில அமைநதுளளது. கணணையும் கருத்தையும் கவரும் சிற்ப வேலைபபாடுகளை இககோயிலில் காணலாம். மூலவருக்குப பினபுறம் அம்மையபபர் மணககோலத்துடன் காட்சியளிபபது குறிப்பிடத தக்கது முருகன் சந்நிதி சிறப்புடன உள்ளது. தேனும் தினைமாவும இககோயிலில படைக்கப் பெறும் பொருள்கள. இறைவன, கொடுங்குனற நாதர்; இறைவி, குயிலமுதவல்லி. சுநதர தீர்த்தமும் உள ளது.

திருஞானசம்பநதர் பாடிய தேவாரப் பதிகம் திருக்கொடுஙகுனறத்தைச சிறப்பிக்கின்றது. நட்ட

பாடைப் பணணில் இப்பதிகப் பாடல்கள் பாடப் பெற்றுள்ளன.

பாண்டியன் நின்ற சீர் நெடுமாறன் ஆட்சிக் காலத்தில் சைவசமயம் நலிவுற்றுச் சமணசமயம் செல்வாக்குப் பெற்றிருந்தது. பாண்டியன் தேவி மங்கையர்க்கரசியார் சைவ நெறியினைப் போற்றி வந்தவர். அமைச்சர் குலச்சிறையார் என்பவரும் சைவ நெறியினராய் இருந்தார். இவ்விருவர்தம் வேண்டுகோளை ஏற்றுத் திருஞானசம்பந்தர் திரு நாவுக்கரசரிடம் விடைபெற்றுக் கொண்டு சோழ நாட்டுத் திருமறைக் காட்டிலிருந்து புறப்பட்டு மதுரை நோக்கிப் பயணம் மேற்கொணடார். சோழ நாட்டு எல்லையைக் கடந்தபின் முதன் முதலில் பாண்டி நாட்டிற்குரிய திருக்கொடுங்குன்றம் என்னும் இப்பதிக்குச் சம்பந்தர் வந்தார் என்று சேககிழார் தாம் இயற்றிய பெரியபுராணத்தில் குறிப்பிடுகின றார். இவ்வகையில திருக்கொடுங்குனறம் தமிழகத் தின் சமய வரலாற்றில் சிறப்பிடம் பெறறு விளங்கு கிறது.

அந்நாளில் புதுக்கோட்டையிலிருந்து வெள்ளாறு தாண்டிச் செட்டிநாட்டுப் பகுதிகளின வழியாகத் திருக்கொடுங்குன்றத்திற்குச் செல்லும் பாதை காடு கள் நிறைந்தனவாக இருந்தது.இடையிடையே மக்கள வாழும் ஊர்களும் இருந்தன எனபது குறிப்பிடத் தக்கது. இர.கி.

**திருக்கொண்டீச்சரம்:** சோழநாட்டில் காவிரி யாற்றின் தென்கரையில் உள்ள 127 சைவத்தலங் களுள் ஒன்று. தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த நன்னிலம் வட்டத்தில் உள்ளது இவவூர். இது நன் னிலம் புகைவண்டி நிலையத்திற்கு மேறகே 2 கி.மீ. தொலைவில் காவிரியின் கிளையாகிய முடிகொண டான் ஆற்றின் தென்கரையில் உளளது; தேவாரப் பாடல் பெற்ற தலம். வில்வாரணியம் எனவும் இத் தலம் சொல்லப்படுகிறது. சைவசமய குரவர் நால்வ ருள் ஒருவராகிய திருநாவுக்கரசர் இத்தலத்தில் எழுநதருளியிருக்கும் பசுபதி நாதரை இரு பதிகங் களில் போற்றியுள்ளார்.

காமதேனு இறைவனைப் பூசித்து வழிபட்ட தலம் என்ற சிறப்புடையது இவ்வூர். மேலும், பசு வடிவு கொண்டு உமையம்மை இறைவனைத் தேடி வருமபொழுது கொம்பினால் மணணைக் கிளறியமை யால் கொம்புபட்டுச் சிவலிங்கத்திலிருந்து குருதி வெளிப்பட்டதாகவும், உடன் தனது பாலை இட்டுக் காயத்தை ஆறறி இறைவனை வழிபட்டதாகவும் வரலாறு கூறப்படுகிறது. இன்றும் சிவலிங்கத்தின் மேல் வடு காணப்படுகிறது என்பர். இங்குள்ள சிவன் கோயில் சிறிய அமைப்புடன அழகாக உளளது. இத னைச் சுற்றி அகழிபோல் ஒரு குளம உள்ளது. இக் குளம திருப்பாற்குளம் எனச் சொலலப்படுகிறது. இக்கோயிலில உளள இறைவன பெயர் பசுபதிநாதர். இறைவியின் பெயர் சாந்த நாயகி.

விசயநகர வேந்தர் கிருட்டிணதேவராயர் உதய கிரிக் கோட்டையைக்கைபபற்றி அதனகண இருந்த திருமலைராகுத்தராயரைச் சிறை பிடித்த செய்தி யைத் தெரிவிக்கும் கல்வெட்டு இக்கோயிலில் உள ளது.

இத்தலத்தைப் பற்றிய பதிக வரலாறு கிடைக்கப் பெறவில்லை. நீர்வளம் மிக்க வயல்கள், பொழில்கள் ஆகியவற்றைக் கொணடு விளஙகும் இத்தலத்தின் சிறபபைத் திருநாவுக்கரசர் குறிப்பிடுகிறார். இன றும் இவவூர் வளம நிறைந்ததாக விளஙகுகிறது. சேணுயர் மாடம் நீடு திருககொணடீச்சரம் என்று இங்குளள கோயிற சிறபபை நாவரசர் நவில்கின றார்.

திருக்கொண்டீச்சரத்து இறைவனை நோக்கிப் பாடபபெற்ற பாடல்களின செய்திகள் பிறவியிலிருநது வீடு பெற வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றன.

'ஐம்பொறிகளின செயலைப் பொறுக்கமுடிய வில்லை. இவையும் தொணணூற்றாறு தததுவங களும என்னைச் சோர்வடையச் செயகின்றன. இவ வுடம்பு நடுக்கடலில் உடைந்துவிடும் மரககலம் போனறது. பெண்டிருடன் வாழும் வாழவே மெய் யெனறு எணணி உன்னை எண்ணாமலும நணணா மலும் இருந்து விட்டேன். உடம்பெனனும் குடிசையி லிருந்து உயிர் பிரியும் பொழுதும் உன்னை அறியாத வனாய் உள்ள நான் திருநினற செம்மை நெறியில் செல்லும் வழியறியேன. பாலனாய்க் கழிந்த நாளி லும், மாதர் மேலனாய்க் கழிநத நாளிலும், மெலிவும் மூப்பும் உற்றுக் கைககோல் ஏநதி மூனறு காலுக்குத தக்கவனாகிக் கழிந்த நாளிலும் உயிர்த்துணையாகிய உனனைக் குறியாகக் கொளளுதல் இல்லாமல் கெட் டேன்' எனறு நாவரசர் இப்பதியின் இறைவனிடம் கூறுவது நினைத்தற்குரியது. இர.கி.

**திருக்கொள்ளம்பூதூர்:** தஞ்சை மாவட்டம், கொரடாசசேரி-குடவாசல் பாதையில் உளளது. இவ்வூர் குடவாசலுக்குத தென்கிழக்கே ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் உளளது. திருக்களம்பூர் எனச் சொல்லப்பெறும் இத்தலம் வெட்டாற்றங்கரையில் உள்ளது. வில்வவனம் என்ற பெயரும் இதற்குணடு. அகத்திய காவேரி எனவும் முளளியாறு எனவும் வெட்டாறு கூறப் பெறுகிறது. கூவிளம்பூதூர்

என்பது கொள்ளம்பூதூர் எனறு மருவி வழங்கப் பெறுகிறது என்பர். மதுரையில் அனல், புனல் வாதஙகளில் சமணரை வெனறு திரும்பிய திருஞான சம்பந்தர் இங்கு வந்தபொழுது ஆறு பெருக்கெடுத்தோடியது. ஆற்றைக்கடததறகுரிய பரிசிலைச் செலுத்துவாரில்லை. கரையில கட்டப்பட்டிருந்த பரிசிலை அவிழ்த்து விட்டு அதில அடியாருடன் ஏறிக்கொணடு, 'கொட்டமே கமழும கொளளம் பூதூர்' என்று தொடங்கிப் பாடல்தோறும், 'செல்ல உநதுக' எனறு குறிபபுடன சம்பநதர் பாடினார். பரிசில்கள் தாமே நகாநது ஆறறின அக்கரையில் சேர்ந்தன எனபது வரலாறு. பெரியபுராணததில இவவரலாற்றைக் காணலாம். ஆணடு தோறும் ஐப்பசி அமாவாசையில் இவவரலாறறைக் குறிககும விழா நடைபெறுகின்றது. இத்தலம இவவகையில பாடலபெற்றத்தலமாகத் திகழ்கிறது இததலத்து இறைவன வில்வனேசுவரர்; இறைவி சௌநதராம பிகை.

'கொளளமபூதூரில் வாசனைப் பொருள்கள கமழ்கினறன; தெனனை மரஙகள சூழநதுளளன; குவளை மலர்களும்,கொன்றை மலர்களும் நிறைந்துள ளன, ஓடங்கள வநதணைகினறன; ஆறு வந்தணைகின்றது; குரஙகுகள மிகுதியாக உள்ளன; பருவரால் மீனகள் உகளுகினறன. கழனிகள் நிறைநதுளளன', என்று சமபந்தர் இவவூரின நிலவளததையும நீா வளத்தையும மொழிகின்றார்.

'நட்டம் ஆடிய நமபன, வெணமை தவள நீறணி தலைவன, நினற புனசடை நிமலன், ஆடல பேணிய அடிகள், ஏறு தாங்கிய இறைவன, அரககனைச செறற ஆதி, இருவர் காணபரியான், தேரமண செறற செலவன்', என இறைவனைப் போறறிப் பரவுகினறார் சம்பந்தர்.

நாவலமே கோலாகக் கொணடு பரிசிலைச் செலுத்தி ஆற்றைக் கடந்து கரைசேர்ந்த நிகழச்சி வியத்தற்குரிய ஒனறாக உளளது; சம்பநதரின இறையுணர்வின் சிறப்பைக் காட்டுகிறது. தொண்டர்தம அன்பு, இறைவனின அருள் ஆகியவை இநநிகழசசியால் விளக்க முறுகின்றன. இர.கி.

**திருக்கொள்ளிக்காடு**: தஞசை மாவட்டத்தில் திருவாரூர் திருத்துறைப்பூணடிச் சாலையிலுள்ள திருநெலலிக்காவல என்ற ஊருக்குத் தெனமேறகே 4.கி.மீ. தொலைவில் உள்ளது இத்தலம். இதனைத் தீக்கடவுள்வழிபட்ட தலம் என்பர். கொள்ளி எனபது தீ எனறு பொருள்படும். மேற்கு நோக்கிய சிறிய கோயில் இங்குள்ளது. இக்கோயிலில சனிபகவானுக்கென ஒரு சந்நிதி உள்ளது. திருஞானசம்பந்தரால் பாடப் பெற்ற திருத்தலமாக விளங்குகிறது இது காந்தார பஞ்சமப் பண்ணிலமைநத ஒரு பதிகத்தால இத்தலச் சிறப்புப் பாடப் பெறறுளளது. இத்தலத்து இறைவன் அக்கினிபுரீசுவரர்; இறைவி, பஞசின் மெல்லடியாள்

'நிணம்படுசுடலையில் நீறுபூசி நிறபார்; பேய்களுடன சேர்நது ஆடுவார்; வெணதலை ஓட்டில் பலிச சோறு உணபார்; எனினும பெருங்குணம் உடையவர்; தமது தொணடன மார்க்கண்டேயனுக்காகக கூற்றினை உதைத்தவா; வானவாக்காகத் தம் மிடற றினகண் நஞ்சினை வைததுக் கொணடவர், மததம, வனனி, கொனறை ஆகிய மலர்களை அணிநது கொணடவர்; அடிமை கொணடு எம்மை ஆளபவ ராயினும கோவணம அணிபவா; விலலால் மூவெயிலை எரித்தவர், மஞ்சுதோய் கயிலையில உமையம்மையுடன் மகிழநதிருப்பவர்; யானையின தோலைப் போர்ததுக கொணடவா; கஙகை நதியையும் மதியையும் தம் சென்னியில் ஏற்றவர்' எனறு ஆர்வததுடன் குறிப்பிடும சம்பநதர், தாமவீற்றிருககும கயிலைமலையைத் தனது தோளால் இராவணன எடுத்தபொழுது தம காலத் திருவிரலால் அவன முயற்சியைத்தடுததமையை நவிலகினறார். 'தம்மைப் படுததனர்', என அறிநது சாமவேதத்தால இராவணன இறைவரைப் பரவினான். அதனைக் கேட்டு மகிழ்ந்த இறைவா அவனை விடுவிததுடன அவனுக்கு வாள ஒனறினைப் பரிசாக வழஙகினாா' எனற செயதியைத தெரிவிப்பதன வாயிலாக இறைவரின வீரம, ஈரம் ஆகிய இரு பண்புகளையும் இயமபும் சம்பநதா திறம் காணததககது. அறிவுககு எட்டாத இறைவர் அனபுககு எட்டுபவர் எனற கருததை அயனும மாலும இறைவாதம் அடிமுடி தேடி அயர்நத செய்தியைக் கூறி விளக்குகினறாா சமபநதர். சம்பநதர் பதிகச் செய்திகள இத்தல இறைவர்தம எளிமை, அருளதனமை, ஆறறல ஆகியவற்றை விளக்குவனவாக உள்ளன. இர கி

**திருக்கோட்டாறு**: இது, தேவாரப் பாடல பெற்ற, காவிரியின் தெனகரைத் திருத்தலங்களுள ஐமபதது மூனறாவதாகும. இபபோது 'கொட்டாரம' எனப்படும் இவவூா திருநளளாறு புகைவணடி நிலையத்தினின்றும் வடமேறகே 5 கி.மீ. தொலைவிலும், அமபகாததூர் புகைவணடி நிலையததினினறும் வடகிழக்கே 3 கி.மீ. தொலைவிலும இளையானகுடிக்கு மேறகே 3 கி மீ. தொலைவிலும உளளது.

'ஐராவதம்' பூசித்துபபேறு பெற்றமையால் இத்தலதது இறைவனுக்கு 'ஐராவதேசுவரர்' எனறு பெயர். அமமை; வணடமர் பூஙகுழலி. தீர்த்தம்; ஐராவத தீர்த்தம். 'கருந்தடங்கணணின்... 'எனவும்

'வேதியன் விண்ணவர்......' எனவும் தொடங்கும் திருஞான சம்பந்தரின் இரண்டு பதிகங்கள் இதற்கு உண்டு. ஐராவதமாகிய வெள்ளையானை பூசித்த செய்தியினைச் சீகாமரப்பண்ணில் அமைந்த 'கருந் தடங்கண்ணின்' எனத் தொடங்கும் பதிகப் பாட லில், சம்பந்தர் குறிப்பிடுகின்றார். வீ.சொ.

**திருக்கோட்டியூர்** வைணவர் கொண்டாடும் நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்று ;பாண்டிய நாட் டில் இருப்பது; திருப்புத்தூர் - சிவகங்கைச் சாலை யில் திருப்புத்தூருக்கு அப்பால் 9½கி.மீ. தொலைவில் உள்ளது.

இரணியன் மூவுலகையும் ஆண்ட காலத்தில் தேவர்கள் அவனை அழிப்பதற்குரிய வழியினைத் திரளாகக் (கோட்டியாக) கூடிச் சிந்தித்த இடமாத லின் இவ்வூருக்குக் 'கோஷ்டீபுரம்' என்னும் வட மொழிப் பெயர் உண்டாயிற்று. அதுவே, கோட்டி யூர் எனத் தமிழில் வழங்குகிறது.

பெரியாழ்வார், கண்ணன் பிறந்த ஆயர்பாடி யாக இவ்வூரினைக் கருதிப் போற்றிய சிறப்பு இதற்கு உண்டு. மேலும், வைணவப் பெரியோர்களுள் ஒருவ ரான திருக்கோட்டியூர் நம்பி பிறந்தருளிய பெருமை யும் இவ்வூரினைச் சாரும்.

இங்குள்ள கோயில் பெரியது. பல தளங்களைக் கொண்டது. இங்குப் பெருமான் கிடத்தல், நிற்றல், இருத்தல் ஆகிய மூவகைக் கோலங்களிலும் காட்சி தருகிறான். அடித்தளத்தில் கிடந்த கோலத்தில் பள்ளிகொண்ட பெருமாளும், இடைத்தளத்தில் நின்ற கோலத்தில் சௌமிய நாராயணப் பெருமா ளும், மேல்தளத்தில் இருந்த கோலத்தில் வைகுண்ட நாதனும் கோயில் கொண்டுள்ளனர். இவற்றோடு தரைமட்டத்தில் கிருட்டிணன் நடனக் கோலத்தில் திகழ்கிறான். இத்திருக்கோயிலின் வடக்குக் கோபுர வாயிலில் இருபக்கங்களிலும் இரணியனோடு சிங்கப் பிரான் போர் செய்யும் உருவம் ஒன்றும், இரணிய னைக் கொல்லும் உருவம் ஒன்றும் அழகிய சிற்பங் களாக அமைந்துள்ளன. இராமானுசர் திருக்கோட்டி யூர் நம்பியிடத்துத் திருமந்திரத்தைக் கேட்டு, விமா னத்தின் மீது ஏறியிருந்து பலருக்கும் அதுவரை தெரி யாமல் மறைவாக இருந்த அதனைத் தம் ஆசிரியரின் ஆணையையும் மீறி உரக்கச் சொல்லி அனைவரும் கேட்டு உய்யுமாறு வெளியிட்டருளினார். அதன் அடையாளமாக எம்பெருமானார் திருவுருவம் கோபுரத்தின்மேலே அமைக்கப்பெற்றிருக்கிறது.

இத்திருப்பதியினைப் பெரியாழ்வார், திருமங்கை யாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார்,திருமழிசை யாழ்வார் ஆகியோர் போற்றிப் பாடியுள்ளனர். அடியார் உயர்வையும், போற்றாது திரிவார் தாழ் வையும் 'நாவகாரியம்' என்னும் திருமொழியிலும், திருமங்கையாழ்வார் அங்குப் பெருமான் தன்பால் சார்ந்தார்க்குத் தன்னை உடைமையாக்கிக் கொண்டு எழுந்தருளியுள்ள நிலையை 'எங்கள்' என்னும் திரு மொழியிலும் சிறப்பாகப் பாடியுள்ளனர். பெரியாழ் வார் காலத்தில் மதுரையை ஆண்ட சீமாறன் சீவல்லபனுக்கு அமைச்சராய் இருந்த செல்வநம்பி திருக்கோட்டியூர்ப் பெருமானுக்குச் சேவை புரிந் துள்ளான் என்பது பெரியாழ்வார் திருமொழி யிலிருந்து (4: 4: 8) தெரியவருகிறது. தெ.ஞா.

**திருக்கோட்டியூர் நம்பி** இராமானுசரின் ஆசிரியர் ஐவருள் ஒருவர். ஆளவந்தார் சீடர்களுள் தலைமையானவர். இவர் ஆளவந்தார் பிறந்து பதி னோராண்டுகள் சென்றபின் கி.பி. 987-இல் திருக் கோட்டியூரில் பிறந்தார். பெரியாழ்வாருக்கு நெருக்க மானவராக விளங்கிய செல்வ நம்பியின் மரபிலே வந்தவர். இவரது திருப்பெயர் குருகேசன் (திருக் குருகைப்பிரான்) என்பதாகும்.மறையவர் குலத்தைச் சார்ந்தவர்.

இவர் இராமானுசருக்குத் திருமந்திரத்தையும் அதன் பொருளையும் அறிவுறுத்தியவர்; அதன் பொருட்டுஇராமானுசரைப் பதினெட்டு முறை திருக் கோட்டியூருக்கு நடக்கச் செய்தவர் ;தாம் அறிவுறுத்தும் மந்திரத்தை வேறு எவருக்கும் சொல்லிவிடக்கூடாது என்று உறுதிமொழி பெற்றுப் பின்னரே இராமானுச ருக்குத் திருமந்திரப் பொருளைத் தெரிவித்தவர். இராமானுசர் தம் பெருங்கருணையினாலே ஆசிரிய ரின் ஆணையையும் மீறி, 'நமக்கு நரகம் வந்தாலும் வரட்டும்; பலர் உய்யவேண்டும்'என்னும் கருத்தோடு கோயில் கோபுரத்தின் மீது ஏறிநின்று பலர்க்கும் திரு மந்திரப் பொருளை வெளியிட்டார். இவர் அதனைக் கண்டு இராமானுசரின் பேரருளை உணர்ந்து வியப்ப டைந்து அவரை 'எம்பெருமானாரே' என்று அழைத்து அணைத்துக்கொண்டார். மேலும் இவரே அவருக்குச் சரம சுலோகத்தின் பொருளையும் சொல்லிவைத்துத் தக்கவர்களுக்குச் சொல்லவும் பணித்தருளினார்.

திருமலையாண்டானை எம்பெருமானாருக்குத் திருவாய்மொழியைக் கற்பிக்கும்படி பணித்தவர் இப் பெருந்தகையேயாவார். சில பாசுரங்களுக்கு இராமா னுசர் புதிய விளக்கங்களைத் திருமாலையாண்டா னிடம் கற்கும்போது தெரிவித்தார். திருமலையாண் டானுக்கு அவ்விளக்கங்கள் ஆளவந்தாரிடம் கேட் டறியாதனவாக இருந்தன. எம்பெருமானார் தாமே புதிய பொருள்களைக் கற்பித்துச் சொல்கிறார் என்று

கருதிய அவர் திருவாயமொழி சொல்லிககொடுப்ப தனை நிறுததினாா அப்பொழுது, இவர் திருமலை யாண்டானுக்கு எம்பெருமானார் பெருமைகளை எடுததுச் சொலலி மறுபடியும பாடம சொலவதைத் தொடஙகுமாறு செய்தார்.

திருவரஙகத்தில உள்ளார் எமபெருமானாருககு உணவில் நஞ்சுஇட்டமையால அவர் பட்டினி கிடந தாா. அதனைக கேளவிபபட்டுத திருக்கோட்டியூரி லிருந்து விரைநது வநது எமபெருமானார் சீடாகளுள கிடாமபியாச்சானுககே அவா திருமேனியில பரிவு உள்ளதைக் கண்டறிநது அவரை அவருக்கு மடைப் பள்ளித் தொணடு செயயும்படி பணித்தாா.

இவருக்குத் தெறகாழவான என்னும மைநதா ஒருவரும, தேவகிபிராட்டியாா எனனும மகள ஒருத்தியும் இருந்தனா. இவ்விருவரும இராமானுச ருக்கு அடியவர்களாக விளஙகினர். திருககோட்டியூா நமபிகள் நூற்றைநது ஆண்டுகள வாழ்நதவா எனபா.

தெ.ஞா

**திருக்கோட்டூர்** தேவாரப்பாடல பெறறதலங களுள் ஒனறு; தஞசாவூா மாவட்டததில் திருத்துறைப் பூணடிப் புகைவணடி நிலையததிலிருநது வடமேற் கில $14\frac{1}{2}$கி.மீ. தொலைவில் உள்ளது. இது காவிரித தெனகரைத் தலஙகளுள் ஒனறு. சோழர் காலக் கல் வெட்டுகள இதனை 'நெனமலி நாட்டிலுள்ள கோட் டூா' எனறு குறிப்பிடுகினறன.

இவ்வூரில இரு கோவிலகள உள்ளன. மேற்கில் உள்ள கோவில் திருஞான சமபநதரால் பாடப பெற்றது. இங்கு எழுநதருளியுள்ள இறைவன பெயர் கொழுந்துநாதர். 'கொழுநதாண்டார்', 'மூலத்தானவுடையார்,' 'கொழுநதீசுவர சுவாமி' என்று காலநதோறும வேறுபட்ட பெயாகளைக் கலவெட்டுகள குறிப்பிடுகினறன இறைவி பெயர் தேன்மொழிப்பாவை. வனனி இதன் தலமரம்.

தேவர்களும் குச்சர முனிவர்களும் இங்குள்ள இறைவனை வழிபட்டுப் பேறு எய்தினர் எனத தேவாரம் குறிப்பிடுகினறது. இவ்வூா, மாளிகை கோபுரம், கூடம், மணி அரண, சாலை, பொன மண்டபம், மதில, பொழில முதலியன கொணடு சிறப்புடன விளஙகியதாகச் சமபநதா (திருக்கோட் டூர்:7) குறிப்பிடுகினறார். இஙகுள்ள கோவிலில் 23 கல்வெட்டுகள படியெடுககப்பட்டுள்ளன. அவற்றுள் பெரும்பாலன சோழர் காலத்தவை.

மா.இரா.

**திருக்கோடி**: பாடல்பெற்ற தேவாரததலங் களுள ஒன்றாகிய இது இக்காலத்தில் குழகர் கோயில என வழஙகப்பெறுகினறது. இது தஞ்சாவூர் மாவட்டததில திருமறைககாட்டிற்குத தெறகில $9\frac{1}{2}$ கி.மீ. தொலைவில உள்ளது. இவவூருக்குத தெற்கில $1\frac{1}{2}$கி மீ இல கோடிககரை என்னும் கடல்துறை இருக கினறது.

இவ்வூர் ஒரு சைவத் திருத்தலமாகும. தேவர் கள் உணடு எஞசிய அமுதத்தை வாயு, விணணில் எடுத்துச செலகையில சிறிது கீழே விழுநதது, கீழே விழுநத அமுதம் இலிஙக உருவாய அமைநதது இத னால இறைவன அமிர்தகடேசர் எனறு பெயர் பெறுகிறார். இறைவி பெயர் மையார் தடஙகணணி. இஙகுள்ள புனித தீாததம அமுதவாாி.

சுந்தரர், சேரமான் பெருமாள நாயனாருடன வந்து இத்தலததை வணஙகினாா. கடறகாறறு வீசும் கரையில இறைவன தனிததிருபபதைக கணடு சுநதரா வருநதிப் பாடிய தேவாரப் பதிகம உளளது. 'குரவம பொழில சூழ்தரு கோடி' (திருககோடிக குழகா:6) எனறு சுநதரர் இவவூரைக குறிப்பிடுவாா. இஙகுக் கோயில கொணடுள்ள முருகனுக்கு ஒரு திரு முகமும ஆறு திருக்கரஙகளும இருக்கினறன கடற் கரையில உள்ள சிததர் ஆசிரமத்தில மராட்டிய மொழியில ஒரு கல்வெட்டுளளது.

மா இரா.

**திருக்கோடிகா**: சோழ நாட்டில காவிரி வட கரையில உளள திருபபதி. இது தஞசை மாவட்டத்தில திருவிடைமருதூர் அருகே உளளது இது காவிரி வட கரைத் தலஙகளுள முபபததேழாவது ஆகும. இதனை முக்கோடி முனிவர் வழிபட்ட தலம் எனபர். கோவி லுக்கு வடககே சிருஙக தீாத்தம இருக்கிறது இதன பெயர்க் காரணம புலப்படவிலலை. இது திரிகோடி அதாவது மூனறு கோடி இருடிகள பூசிதத காரணத் தால இபபெயா பெறறது எனபர். திருக்கோடிகாவில சோலைக் கோவில உணடு இது திருக்கோடிக்காவல எனவும் வழஙகபபடும.

இத்திருக்கோவிலில் முற்காலத்துப் பல்லவர்களுள் நந்திப் போததரையன், விசய நிருபதுங்க விக்கிரம வர்மன எனபவர்களுடைய கல்வெட்டுகளும, பிற் காலப் பலலவர்களுள கோபபெருஞ்சிஙதேவர் காலத்துக கல்வெட்டுகளும், முத்தரையர்களுள் இளங்கோ முத்தரையர் காலத்துக் கல்வெட்டுகளும, பாண்டியர்களுள் மாறன சடையன காலத்துக் கல்வெட்டுகளும், சோழ மனனாகளுள், மதுரை கொணட கோப்பர கேசரிவர்மன், முதலாம் இராச ராச சோழன், முதற்குலோத்துங்கன், விக்கிரம சோழன், மூனறாம் குலோத்துஙகன என்பவர்

களுடைய கல்வெட்டுகளும் ஆக ஐம்பது கல்வெட்டு கள் இருக்கின்றன.

இத்திருக்கோவில், திருவிசைப்பா பதிகம் பாடிய கண்டராதித்த சோழ தேவரது மனைவியா ராகிய செம்பியன் மாதேவியாரால் கற்றளியாக ஆக்கப்பெற்ற பெருஞ்சிறப்புடையது. இவ்வம்மை யார் இக்கோவிலைக் கட்டுவதற்கு முன்பு இங்கிருந்த இருபத்தாறு கல்வெட்டுகளைப் பெரிதும் பாதுகாத் தார். அவற்றைத் தாம் கட்டிய கோவிலில் செதுக்கி வைத்தார். இங்கு எழுந்தருளியிருக்கும் இறைவர் திருக்கோடி காவல் பெருமாள், திருக்கோடிகாவல் மகாதேவர், திருக்கோடிகாவுடையார் என்னும் பெயர்களால் கூறப்பெற்றுள்ளார். இக்கோவில் திருச் சுற்று மாளிகை விக்கிரமசோழ தேவரால் கட்டப் பெற்றதாகும். அதில் விக்கிரம சோழன் திருமாளிகை என எழுதப் பெற்றுள்ளது.

இவ்வூர் முதலாம் இராசராசன் காலத்தில் (ஐந்தாம் ஆண்டுக் கல்வெட்டு) வடகரை நல்லாற் றூர் நாட்டுத் திருக்கோடி காவல் எனவும், கோப் பெருஞ்சிங்கன் காலத்தில் விருதராச பயங்கர , வள நாட்டு நல்லாற்றூர் நாட்டுத் திருக்கோடிகா எனவும் கூறப்பெற்றுள்ளது. நந்திப் போத்தரையர் என்னும் முற்காலப் பல்லவர் கல்வெட்டினால் இக்கோவிலில் சிறு நங்கை ஈச்சரம் எனனும் பெயருள்ள கோவில் ஒன்று உண்டு என்று கூறப்பெற்றுள்ளது. திருக்கோடி காவிற்குக் கண்ணமங்கலம் என்னும வேறு பெயரும் உண்டு.

கோபுரத்தின் வாசல் இடப் பக்கத்தில் புதுவை புரி பிள்ளைப் பெருமாள் மகனார் சடையரைப் பற் றிய பாடல்கள் இருக்கின்றன. அ.ஆ.

***திருக்கோலக்கா:*** இது திருத்தாளமுடையார் கோயில்எனவும் வழங்கப்படுகிறது; தஞ்சாவூர் மாவட் டத்தில் சீர்காழியிலிருந்து மேற்கில் 1.கி.மீ. தொலை வில் உள்ளது. திருககோலக்காவிற்கும் சீர்காழிப் புகைவணடி நிலையத்திற்கும் இடையில் கழுமல வாய்க்கால் ஓடுகிறது. இலந்தைவனம் நிறைநததால் இத்தலம் திருக்கோலக்கா என்று பெயர் பெற்றது என்று திரு.வி.க. குறிப்பிடுவார்.

இது தேவாரப் பாடல்பெற்ற ஒரு தலம். திரு ஞானசம்பந்தரும், சுந்தரரும் பாடிய பதிகங்கள உள் ளன. உமாதேவியின் அருள்பெற்றதும் ஞான சம் பந்தர் முதன்முதலில் இன்னிசை பாடி வழிபட்ட தலமிது. இங்குத் தான அவர் 'மடையில் வாளை பாய' என்ற தக்க ராகப் பதிகத்தைக் கைகொட்டிப் பாடினார். பிள்ளைப் பெருமானின் பிஞ்சுக் கைகள் தாங்கமாட்டாதென்று இறைவன் அவருக்கு ஐந் தெழுத்து எழுதிய பொற்றாளம் கொடுத்தருளினான். அம்மை அதற்கு ஓசை கொடுத்தாள். தாளம் கொடுத்த இறைவன் திருத்தாளமுடையார் என்றும் ஓசை கொடுத்த அம்மை ஓசை கொடுத்த நாயகி என்றும் பெயர்பெற்றனர். மா.இரா.

***திருக்கோவலூர்*** தென்னார்க்காடு மாவட்ட தில் தென்பெண்ணை ஆற்றின் தென்கரையில் அமைந் துள்ளது. வடகரையில் திருவறையணிநலலூர் உள் ளது இங்குப் புகைவண்டி நிலையம் உண்டு. விழுப் புரத்திலிருந்தும், திருவண்ணாமலையிலிருந்தும் நல்ல சாலை வசதி உள்ளது.

கோபாலனாகிய திருமால் எழுந்தருளியிருக்கும் தலமாதலால் கோவலூர் எனறு பெயர் அமைந்த தென்று திரு.வி.க. குறிப்பிடுவார். இது மிகப் பழமை யான ஊர். இந்நகரைக் 'கோவல' எனறு அகநானூறு (35) குறிக்கின்றது. இது திருமுனைப்பாடி அல்லது 'மலாடு' என்னும் நாட்டின் தலைநகராக இருந்தது. இந்நாட்டை ஆண்டவர்கள் மலாடர் எனச் சொல்லப் பட்டனர். இம்மனனர்களுள் மலையமான திருமுடிக் காரி சிறந்தவன.

திருஞானசமபந்தரும், திருநாவுக்கரசரும் இவ் வூர்ச் சிவனைப் போற்றிப் பதிகங்கள பாடியுளளனர். மெய்ப்பொருள் நாயனார் இதனைத் தலைநகராகக் கொண்டு ஆணடார எனறு பெரிய புராணம கூறு கின்றது இவ்வூர் மேலூர், கீழூர் என இரு பிரிவு களைக் கொண்டுள்ளது மேலூரே திருக்கோயிலூர் என இன்று வழங்கி வருகின்றது. இங்கு இடைக்கழி என்னும் பெருமாள கோவில் உள்ளது. திரிவிக்கிரமன் அல்லது உலகளந்த பெருமாள எனபது இறைவன் பெயர். திருமால் நின்ற கோலத்தில் அருளபுரிகின் றார். பூஙகோவல் நாச்சியார் எனபது அம்மை பெயர். இது ஐந்தாம் கிருட்டிண சேத்திரம ஆகும். முதல் மூனறு ஆழ்வார்களும் இங்குத்தான் சந்தித்துக் கொண்டதாகக் கதை வழங்குகினறது. கீழூர்ப் பகுதி யில் வீரட்டானக் கோவில் உள்ளது. சிவபெரு மானின் அட்டவீரட்டானக் கோவில்களுள இதுவுமொனறு. சிவபெருமான் இஙகுத்தான் அந்தகாசுரனை அழித்த தாகப் புராணம் கூறுகிறது. இறைவன் பெயர் வீரட் டேசுவரர். இறைவி பெயர் பிருகந் நாயகி அல்லது சிவானந்தவல்லி. மூலவர் ஏழு அடி உயரமுள்ள சுயம்புலிங்கம். உற்சவ மூர்த்தியான அந்தகாசுர சம் கார மூர்த்திக்கு இருபுறத்திலும் சுந்தரமூர்த்தி நாய னார், மெய்ப்பொருள நாயனார் ஆகியோரின் திரு வுருவங்கள் உள்ளன.

தென்பெண்ணை ஆற்றின் நடுவில் உள்ள கபிலக் குன்றின் மீதும் ஒரு சிறிய கோவில் காணப்படுகிறது. சங்கப்புலவர் கபிலர் இக்குன்றில் தான் தீமூட்டி உயிர்நீத்தார் எனக் கூறப்படுகிறது இதற்கு ஆதார மாகத் திருக்கோவலூர் வீரட்டானேசுவரர் கோவி லில் ஒரு கல்வெட்டுள்ளது. மா.இரா.

**திருக்கோவையார்**: 'கோவை' என்பது அகப் பொருள் பற்றிய நூல். பல பொருள் பற்றிய கருத்துக் களை இணைத்துச் செய்யப்பெறும் நூல்கள் ஆசாரக் கோவை, மும்மணிக்கோவை போன்றவை பல இருப் பினும், 'கோவை' என்று தனியாகக் கூறும்போது இச்சொல் அகப்பொருள் பற்றிய நூல் ஒன்றையே குறிக்கும் சிறு பிரபந்தங்களுள் கோவை என்பதும் ஒன்று. திருக்கோவையார் இந்தப் பிரிவில் அடங்கும். இதற்குத் 'திருச்சிற்றம்பலக் கோவையார்' என்றும் பெயர் உண்டு. பிற கோவைகளெல்லாம் பாட்டுடைத் தலைவன் பெயரொடு இணைந்தோ வேறு பெயர் களோடு இணைந்தோ நின்று 'கோவை' யாகக் கூறப் பெறினும், இந்நூல்மட்டும் இதன் தொன்மையும் சிறப்பும் கருதி 'திரு' என்னும் அடைமொழியும் சிறப் புப் பொருளைத் தரும் 'ஆர்' விகுதியும் பெற்றுத் திருக்கோவையார் எனப் போற்றப் பெறுகின்றது.

இத்திருக்கோவையாரை இயற்றியவர் திருவாச கம் பாடிய மாணிக்கவாசகர். 'பாவை பாடிய வாயால் கோவை பாடுக' என்று இறைவன் கட்டளை யிட, அவர் மொழிப்படி இத்திருக்கோவையாரை மாணிக்கவாசகர் பாடினார் என்பர். இவர் தம் திரு வாசகத்தே அமைந்த 'திருவெம்பாவை' என்ற பாவை யும் பிறவும் இவர் தம்மைத் தலைவியாகக் கொண்டு, தலைவனாம் இறைவனை எண்ணிப் பாடியனவாக அமைகின்றன. அவற்றை ஒட்டியே, முழுநூலாக இதைப்பாட வேண்டும் என இறைவன் ஆணையிட் டனன் போலும்.

மாணிக்கவாசகர் காலம் பற்றி இருவேறு கருத்து கள் உள்ளன. இவர் சங்க காலத்துக்குப் பின்னும் தேவாரம் பாடிய மூவருக்கு முன்னும் மூன்று அல்லது நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்தவரெனவும், மூவருக் கும் பிற்பட்டவர் எனவும் இருவேறு கருத்துகள் உள்ளன. எனினும் முன்னதே ஏற்புடைத்தாகும் என் பது ஆய்வாளர் முடிவு. இக்கோவையாரில் 306, 327 ஆம் பாடல்களில் வரகுணன் பற்றிய குறிப்பு வருவ தால், பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த பாண்டி யன் வரகுணனை இது குறிக்கும் என்றும் எனவே இவர் மூவருக்குப் பின் பத்தாம் நூற் றாண்டில் வாழ்ந்தவர் என்றும் கூறுவர். மேலும் பாமுறையாலும் பிறதொடர்களாலும் இக்கொள் கையினை வலியுறுத்துவர். எனினும் ஆய்ந்து நோக் கின் மூவருக்கு முந்தியும் சங்ககாலத்துக்குப் பிந்தி யும் தமிழக வரலாற்றில் குறிக்கப்பெறும் இருண்ட காலத்தில் காரைக்காலம்மையார், கோச்செங்கட் சோழர் போன்றோர் வாழ்ந்த காலத்தை ஒட்டி வாழ்ந்தவர் என்பது வலியுறுத்தப்பெறும். அந்த இருண்ட காலத்தில் 'வரகுணன்' என்று ஒருவன் வாழ்ந்திருக்க மாட்டான் என்று எப்படிச் சொல்ல முடியும்? அக்காலத்தில் எண்ண முடியாத எத் தனையோ மாறுபாடுகள் நிகழ்ந்துள்ளன. சங்ககால இலக்கிய அமைப்புக்கும் பின் தெளிந்த தேவார காலத்து இலக்கிய அமைப்புக்கும் பெரும் வேறுபாடு கள் உள்ளன எனவே மாணிக்கவாசகர்தம் பாவகை கள் அந்த இருண்டகால இலக்கிய மாற்றத்தால் அமைந்தவை எனக் கொள்ளலாம் மேலும் மாணிக்க வாசகர் புத்தரை வாதில் வென்றவர் எனப் பெறுவ தாலும் மகாவம்சம் இதைக் குறிப்பதாலும் தமிழ கத்தே புத்தசமயம் தலைதூக்கிய கி.பி. 3-ஆம் 4-ஆம் நூற்றாண்டில் இவர் வாழ்ந்தார் என்பது பொருந்தும். மலையாளச் செப்புப்பட்டயம் ஒன்று கி பி. 3-ஆம் நூற்றாண்டில் இவர் இந்தியக் கிறித்தவ ரைச் சைவராக்கினார் என்று குறிப்பிடுகிறது. எனவே, மாணிக்கவாசகர் கி.பி 3 அல்லது 4-ஆம் நூற்றாண்டினர் என்பது உறுதி செய்யப் பெறுகின்றமையின் இத்திருக்கோவையாரும் அக் காலத்ததேயாகும்.

சிலர் மாணிக்கவாசகர் இத்திருக்கோவையாரை இயற்றவில்லை எனவும் சிவபாதத்தியர் என்பார் ஒருவர் எழுதினார் எனவும் கூறுவர். ஆயி னும் அவர்தம் கூற்றுக்கு ஆதாரம் இல்லை. மேலும் திருக்கோவையாரில் வரும் தில்லைக் கூத்தனைப் பற் றிய பல தொடர்கள் கற்போர்க்குத் திருவாசகத்தை நினைவூட்டுகின்றன. வேறு அடைமொழி இன்றி 'திரு' ஒன்றினாலேயே இரண்டும் குறிக்கப் பெறுவ தும் எண்ணத்தக்கது மற்றும் திருவாசகத்தில் குறிக் கப்பெறும் பல முக்கிய தலங்கள் இதிலும் குறிக்கப் பெறுகின்றன. கழுக்குன்று (107) குற்றாலம் (94,135) ஈங்கோய்மலை (113) திருப்பனையூர்(137) பரங்குன்று (144,178,279,292) இடைமருது, ஏகம்பம், வாஞ்சியம் (268) திருப்பூவணம் (300,338) ஆகிய தலங்கள் இத் திருச்சிற்றம்பலக் கோவையில் குறிக்கப்பெறுகின்றன. எனவே, இதை மணிவாசகர் இயற்றினார் எனக் கொள்ளலே பொருந்தும். இந்நூல் சைவத் திருமுறை களுள் எட்டாம் திருமுறையில் திருவாசகத்தொடு இணைக்கப்பெற்று உள்ளமை இக்கருத்தினை உறுதி யாக்கும்.

இனி, இக்கோவை பாவமைப்பில் பிறவற்றொடு ஒத்ததாக இருப்பினும் பின் வந்த பல கோவைகளி

லும் வேறுபட்டுளளதைக காணலாம. வைபபு முறை யிலும துறைஅமைப்பிலும் இது வேறுபட்டுளளது. இயறகைப் புணாசசி, இடநதலைப்பாடு, பாஙகற கூட்டம் எனற நிலைமாறி இடந்தலைப்பாடு பின வருகினறது, அதுவும ஒரே பாட்டுடன முடிகினறது வணடோச்சி மருங்கணைதலும நாணிக்கண புதைத லும பாஙகா கூட்டததில உளளன. தழைமறுத தலுக்குப பல துறைகள (91–104) உளளன. சிலதுறை களின பெயர்கள மாறுபடடுளளன. இனனும பல வகையிலும வேறுபாடுகள காணலாம இநநூல முதல வந்த காரணததாலே பினவநத இலக்கண இலககிய அமைதிகளுககுச சறறு மாறுபடுவது இயற கையே

இத் திருக்கோவையார் வெறும காமநூல அன்று எனவும, கற்போா உளததுககு ஏற்ப, இதுவே வேத மாகவும, சிவாகமமாகவும, இலக்கணநூலாகவும, இலக்கியநூலாகவும அமையும எனவும கூறுவர். திரு வாசகததைப போனறே இதுவும திருவுடை நூலா கும. காணக எட்டாம திருமுறை. அ.மு.ப.

***திருக்கோழம்பம்***. தஞசாவூர் மாவட்டததில நரசிஙகம் பேட்டை புகைவணடி நிலையததிலிருநது தெனகிழககே 3 கி.மீ. தொலைவில உளளது இவ வூா. திருநாவுககரசரும, திருஞானசமபநதரும இவ வூரைச சிறபபிததுப பாடியுளளனா. இறைவன கோகிலேசுவரா, இறைவி சவுந்திர நாயகி. சநதசு எனற கந்தருவன தேவேநதிரன சாபம காரணமாகக் குயிலாகத திரிநது, இஙகு வநது இறைவனை வழி பட்டுச சாப நீக்கம பெறறதாகத் தலவரலாறு கூறு கிறது பி.தெ.

***திருக்கோளிலி*** எனும சைவத் திருபபதி தஞசாவூர் மாவட்டததில உளளது. இதன் மறறொரு பெயர் திருககுவளையாகும. கீழவேளூா புகைவணடி நிலையததிலிருநது தெறகே 11கி.மீ. தொலைவில் இவ வூர் உளளது இது ஏழு விடங்கத் தலஙகளுள ஒனறு. தேவார மூவரும பாடிய ஊர். இஙகுளள கோயில இறைவன பெயர் கோளிலிநாதர்; இறைவி வணட மா குழலமமை, இககோயிலில வரலாற்றுக் குறிப்பு அடங்கிய கலவெட்டுகள உள. குணடையூர்க கிழார் எனற புலவாககு மதுரைச சொக்கநாதர் மீனாட்சி யம்மையுடன இஙகுக் காட்சி தநதார் எனக கூறுவா. பி.தெ.

***திருக்கோளூர்*** நவதிருப்பதிகளுள ஒன்றாகும்; பாணடிய நாட்டு வைணவத திருத்தலஙகளுள் ஒன்று. திருநெல்வேலிப் புகைவணடி நிலையத்திலிருநது 30 கி.மீ. கிழக்கே அமைந்த சிற்றூர். நம்மாழவார் திரு வாய்மொழியில ஆறாமபத்து ஏழாநதிருமொழியில 11 பாடலகள இவ்வூரின சிறப்புக் குறிததுப பாடியுள ளாா. எட்டாம் பதது மூனறாந் திருமொழியில ஒரு பாட்டு இவவூா பறறியதாகும். இளமான புகுமூா நலவளஞ்சோ பழனத் திருககோளூர், செல்வம மல்கி அவன கிடநத திருககோளூர் எனறு இயறகை வளத தையும் திருமாலின கிடநத வணணத்தையும நம்மாழ் வாா பாடலகளில காணலாம். தென்திசை திலகம னைய திருக்கோளூரில மதுரகவியாழ்வார் நமமாழ வாரை வழிபட்டபின இங்கு எழுநதருளினார் எனபது குரு பரமபரைச் செயதி நம்மாழ்வார் அவதரிதத திருபபுளியஙகுடி அருகே அமைநத ஊர் திருக் கோளூா. மாடஙகள நிறைநத இவவூரில மாடஙகளில் கொடிகள கட்டப்பட்டிருநதனவாக நம்மாழவார் குறிததுளளார்.

நவநிதிகளும ஒளிநதுகிடந்தன என்று குபேரனி டம கோள சொலலபபட்டதால இவவூா திருககோளூ ராயிறறு எனபர். தாமிரவருணி ஆற்றஙகரையில அமைநத இவவைணவத் தலத்தின எழுந்தருளியுளள திருமாலின பெயர் வைத்தமாநிதி; தாயார் பெயா கோளூாவலலி. சீகர விமானமுளள இக்கோயிலின தீர்ததம குபேர தீாததமாகும. பி.தெ.

***திருச்சக்கரப்பள்ளி***. தேவாரப் பாடல்பெறற இததலம தஞசை மாவட்டத்தில காவிரித் தென கரையில உளளது. குமபகோணம்–தஞசாவூர் தொடர் வணடிப் பாதையில் ஐயமபேட்டை நிலை யத்திற்கு மேற்கே $1\frac{1}{2}$ கி.மீ. தொலைவில உளளது. ஐயமபேட்டை எனவும் வழங்குவர். இநதிர குமர னாகிய சயநதன் பூசித்தது. திருமால் சிவனை வழி பட்டுச் சக்கரம பெறறதனால சச்கரப்பள்ளி எனறு பெயா பெறறது எனபா

இறைவன 'சக்கரவாகீசுரர்' எனவும் 'ஆலந்துறை ஈசுவரர்' எனவும வழஙகப்படுவர். இறைவியைததேவ நாயகி எனவும் அல்லியின கோதை எனவும் கூறுவர். இலிங்கபுராணம் முதலியவற்றில் சிறப்பித்துச் சொல் லப்பட்ட ஏழு பதிகளுள் இதுவும்ஒன்று இககோயிற் கல்வெட்டுகளில இவவூர், குலோத்துஙக சோழ வளநாட்டு, விளநாட்டு, இராசேந்திர சோழ சதுர் வேதி மங்கலம் எனறு குறிக்கப் பெற்றுள்ளது. அ.ஆ.

***திருச்சத்திமுற்றம்*** தேவாரச் சிறப்புப்பெறற சோழநாட்டுப பதியாகும். கும்பகோணத்திலிருந்து தெனமேறகே 6 கி.மீ.தொலைவில உள்ளது. இதுசக்தி வீற்றிருக்கும் முற்றத்தையுடையவூர். திருவால் பொலிந்த ஊர்.ஆதலின் திருச்சத்தி முற்றம் ஆயிற்று. இவ்வூர்க் கோயிலில் எழுந்தருளி யிருப்பவர் சிவக்

கொழுநதீசர்; அனனை பெரியநாயகி. திருநாவுக்கர சர் 4-ஆம் திருமுறையில் இவவூா குறிதது ஒரு பதிகம பாடியுளளாா். பி.தெ.

**திருச்சாத்த மங்கை** காவிரியின தெனகரையில் தஞசை மாவட்டத்தில திருநளளாற்றுக்குத் தெனமேற்கே உளளது. இககாலத்தில் சீயாத்த மஙகை எனவும்,செய்யாத்தமஙகை எனவும வழஙகப பெறுகிறது. இங்குள்ள கோவிலின பெயா அயவநதி பிரமனால பூசிக்கப் பெற்ற காரணம பற்றி அயவநதி எனனும் பெயர் ஏற்பட்டதெனபா.

இது திருநீலநக்க நாயனார் தோனறிய திருபபதி. அயவந்தியில அமாநது அடியாரது அரநதை கெடுத தருளும இறைவனைக்'கறறவா சாததமஙகை நகர் கைதொழச செய்த பாவம அறறவர் நாளும ஏதத அயவந்தி அமர்ந்தவனே' எனறு திருஞான சம்பநதா பாடுகிறார். திருஞான சமபந்தா இப்பதிககு எழுந தருளியபோது திருநீலநககர் அவரை வரவேறறு அவருடைய நட்பைப பெறறது இப்பதியிலதான. சமபநதரும் 'அடிகள நககன பரவ அயவநதி அமாநதவனே', எனத் திருநீலநக்கரைப் பாராட்டியுளளாா. திருநீலநக்க நாயனார், திருஞான சமபநத மூர்ததிகளோடு வநத திருநீலகணட பெருமபாணர்க்கு வேளவிச சாலையில தங்க இடம் கொடுத்துச் சிறப்பிததது இததலத்திலேயே என்று பெரியபுராணம கூறும.

இககோயிலில குலோத்துஙக சோழ தேவா, இராசராச தேவா, காலஙகளில செதுககப்பெற்ற ஆறு கலவெட்டுகளும் ஒரு தமிழச் செயயுளுமாக ஏழு கல்வெட்டுகள இருக்கினறன. கலவெட்டுகளில இவவூரின பெயா சாததமங்கலம, சாத்தமஙகை எனறும் திருககோயிலின பெயர் அயவநதி எனறும. இறைவரின பெயர் அயவநதி உடையார் எனறும குறிககப் பெறறுளளன. அ ஆ.

**திருச்சாய்க்காடு** தஞசை மாவட்டததில சீர்காழிக்குக் கிழககே காவிரியின வடகரையிலுளளது, பூமபுகார் நகரததைச சார்ந்தது, திருச்சாயககாடு ஆகும. தேவாரததில் பூமபுகார்ச் சாயககாடு எனவும், காவிரிப பூமபட்டினத்துச் சாயக்காடு எனவும் இப்பதி குறிக்கப்படுகிறது. இக்காலததில சாயாவனம் எனபது இதன பெயா.

ஆதி சேடனது நாகமணி ஒளிவீசியதால் இப பெயா பெறறது என்பர். சாய் எனபதறகுத் தமிழில கோரை எனபது பொருள். கோரைககாடு செறிநத இப்பகுதி சாய்ககாடு எனறு பெயர் பெற்றது. இத் திருக்கோயிலில் எழுந்தருளியுளள இறைவன் அமுதேசுவரர். இயறபகைநாயனாா தம மனைவியை இஙகு அழைததுககொணடு வநது இறைவனோடு வழி அனுபபியதாகப பெரியபுராணம கூறும. இதறகுச் சமபநதா பதிகம இரணடு, அப்பர் பதிகம இரணடு, ஆக நானகு பதிகஙகள இருககினறன இததலததை ஐயடிகள காடவர்கோன நாயனார் பாடியுளளாா.

இததிருககோயிலில விககிரம சோழதேவன, கோனேரினமை கொணடான, மூனறாங குலோததுஙக சோழன, திரிபுவன சககரவாத்தி இராசராச தேவன, திரிபுவன சக்கரவர்ததி வீரராசேநதிர சோழதேவன, மாறவாமன திரிபுவன சககரவாததி சுநதரபாணடிய தேவன ஆகியோா காலஙகளில் பொறிககபபெறற கலவெட்டுகள இருக்கினறன. அ.ஆ.

**திருச்சானூர்** கீழைத திருபபதிககு அருகில சுவாணமுகி எனனும பொன முகலி ஆறறஙகரையில் உளளது. முனனாளில் இராசேநதிர சோழ மணடலததுத திருவேங்கடக் கோட்டத்துக குடவூர் நாட்டில திருசசானூா இருநதது எனபா. இவ்வூரின பெயர் திருச்சுகனூா எனறும, சிததிரதானூர் எனறும சிதைநது வழஙகபபடுகிறது. திருசசுகனூரில் இப்போது சிறநது விளங்குவது அலாமேல மஙகையின கோயிலாகும. ஆயினும் பழஙகாலததில திபபலாதீசுரம எனனும சிவாலயமும அங்குச் சிறநதிருந்ததாகத் தெரிகிறது. திருபபதி மலையில கோயில கொணடுளள வேஙகடாசலபதியின தேவியாகிய அலாமேலமஙகையின திருககோயில இககாலததில இஙகுச் சிறப்புறறு விளஙகுவதால அலாமேலு மஙகைபுரம எனனும பெயரும் உணடு.

பதும சரோவரம எனற குளம உணடு. அதில ஒரு பதுமமலரின்மேல் பதமாவதி காட்சியளிததததாகக் கூறுவர். திருப்பதிககு வரும பக்தாகள இஙகும் வநது செல்வது வழக்கம். அ ஆ.

**திருச்சித்திரக் கூடம்**, சோழநாட்டில அமைந்துள்ள வைணவத திருபபதிகளுள் ஒனறு இது சிதம்பரம் நடராசபபெருமான திருககோவில திரு முறறத்திற்கு அருகில உளளது. இங்குக் கோவிநதராசப பெருமான கிடநத கோலத்தில் கிழககு நோக்கிய திரு முகமணடலததோடு காட்சி நலகுகிறான. தாயார் பெயர் புணடரீகவல்லி.

இத்திருவிணணகரத்தைப போறறிக் குலசேகராழ்வார் 'அஙகண் நெடுமதிள' எனனும் ஒரு திருமொழியும், திருமங்கையாழ்வார் 'ஊனவாட', 'வாட மருதிடை' எனனும இரு திருமொழிகளும பாடியுளளார். மேலும், திருமங்கையாழ்வார் தம் பெரிய திருமடலில இததிருப்பதியில எழுந்தருளியுள்ள பெருமானைத்

'தென்தில்லைச் சித்திரக் கூடத்தென் செல்வனை' என்று குறித்துள்ளார். பெரியாழ்வார் திருமொழியில் வரும் 'பொற்றிகழ் சித்திரகூடப் பொருப்பினில்' என்னும் பாடலை இத்திருப்பதியைப் பற்றியதாகச் சிலர் குறித்துள்ளனர். ஆனால், அப்பாட்டில் தில்லைத் திருச்சித்திரக்கூடம் சுட்டப்படவில்லை. அந்நாளில் இராமன் கான்போந்து தங்கியிருந்த சித்திரக்கூடத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியினையே தெரிவிக்கிறது அப்பாடல் ஆதலின் அதனை இத்திருப்பதிக்குரிய பாட்டாகக் கொள்ள இயலாது.

இத்திருக்கோயில், பெருமான் தேவரும்,முனிவரும் சூழக் கொலு வீற்றிருக்கும் அவைக்களம் ஆகும். இப்பெருமான் தில்லை மூவாயிரவர்க்குக் காட்சி கொடுத்தவன் என்பர்.

குலசேகரப் பெருமாள் அயோத்தியைத் துறந்து கானகம் புகுந்து சித்திரக் கூடத்தில் தங்கிய சக்கரவர்த்தித் திருமகன் இராமபிரானையே தில்லை மரங்கள் சூழ்ந்த இத்திருப்பதியில் கண்டு மகிழ்ந்தார். தம் திருமொழியில் இராமன் தயரதன் மகனாகப் பிறந்தது முதல் இறுதியில் தன் உலகம் புக்கது வரை நடந்த நிகழ்ச்சிகளைப் பாடியுள்ளார்.

வடநாட்டுச் சித்திரக்கூடம்போல இயற்கையழகு நிறைந்து காணப்பெற்றமையால் இதனையும் சித்திரக்கூடம் என்று குறித்தனர். இது தில்லையில் அமைந்திருத்தலின் அதிலிருந்து இதனை வேறுபிரித்துக் காட்டத் தில்லை என்னும் அடைமொழி சேர்த்துத் தில்லைச் சித்திரக்கூடம் எனவும் வழங்குவர்.

இங்கிருந்த கோவிந்தராசப்பெருமான் திருவுருவத்தை இரண்டாம் குலோத்துங்கன் பெயர்த்துக் கடலில் எறிந்தான். இராமானுசரால் அத்திருவுருவம் மீண்டும் அங்கே அமைக்கப்பட்டது என்பது வரலாறு.

தெ.ஞா.

**திருச்சிராப்பள்ளி**: தமிழ்நாட்டிலுள்ள குறிப்பிடத்தக்க நகரங்களுள் ஒன்று திருச்சிராப்பள்ளி. இந்நகரம் தமிழ்நாட்டின் மையப்பகுதியில் அமைந்துள்ளதால் தமிழ்நாட்டின் இதயம் என மக்கள் குறிப்பிடுவர். இப்பகுதியில் பழைய கற்காலத்திற்கும் புதிய கற்காலத்திற்கும் இடையிலுள்ள நுண்கருவிகளைப் பயன்படுத்திய காலத்தைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்ததற்கான தடயங்கள் திருச்சிராப்பள்ளியில் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையினரால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இந்நுண் கருவிகளின் காலம் ஏறத்தாழ கி.மு.3000ஆண்டாகும். இக் கண்டுபிடிப்பிலிருந்து கி.மு.3000 ஆண்டிலேயே திருச்சிரப்பள்ளியில் மக்கள் வாழத் தொடங்கி விட்டனர் என அறியலாம்.

சங்க இலக்கியங்களில் திருச்சிராப்பள்ளியைப் பற்றிய குறிப்புகள் காணப்படவில்லை. ஆனால், கடைச்சங்க நூல்களுள் ஒன்றாகிய அகநானூற்றில், 'கறங்கிசை விழவின் உறந்தைக் குணாது-நெடும் பெருங் குன்றம்', என்று உறையூர்க்குக் கிழக்கே ஒரு குன்று கூறப்பட்டுள்ளது. அதன் பெயர் அது அமைப் துள்ள ஊரின் பெயர் அப்பாடலில் குறிக்கப்படவில்லை. சைவ சமய குரவர்களாகிய திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் அக்குன்றின்மேல் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள சிவபெருமான் மீது பாடியுள்ள பதிகங்களிலேதான் சிராப்பள்ளி என்ற பெயர் காணப்படுகிறது.

கி.பி.7-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆட்சி புரிந்த பல்லவ வேந்தனாகிய முதலாம் மகேந்திரவர்மன் சிராப்பள்ளிப்பெருங்குன்றைக் குடைந்து சிவபெருமானுக்குக் கோயிலெடுப்பித்தான். வடமொழியில் சிறந்த புலமை பெற்றிருந்த அவ்வேந்தன் எட்டுச் சுலோகங்கள் இயற்றி அவற்றைத் தான் எடுப்பித்த சிராப்பள்ளிச் சிவன் கோயிலில் பொறித்துள்ளான். அச்சுலோகங்களில் தான் புறச்சமயத்திலிருந்து திரும்பிச் சிவநெறியைக் கடைப்பிடித்துச் சைவனாகியதையும் குறிப்பிட்டுள்ளான். அச்செய்திகளை நுணுகி நோக்குமிடத்து, அம்மன்னனது ஆட்சியின் பிற்பகுதியிலேதான் சிராப்பள்ளிக்குன்றின் மீது சிவாலயம்அமைக்கப் பெற்றிருத்தல் வேண்டும்' என்பதும், அதற்கு முன்னர் அவன் சமண சமயத்தை தழுவியிருந்த காலத்தில் அங்கே சிவாலயம் இருந்திலது என்பதும் நன்கு புலனாகின்றன.

சிராப்பள்ளிக் குன்றின் மேலுள்ள உச்சிப் பிள்ளையார் கோயிலுக்குப் பின்புறம் பல முனிவர்களின் கற்படுக்கைகள் தலையணைகளோடு இருத்தலை இன்றும்காணலாம். அத்தலையணைகளில் அவற்றைப் பயன்படுத்திய சமண முனிவர்களின் பெயர்கள் வரையப் பெற்றிருக்கின்றன. அவ்வெழுத்துகளைக் கொண்டு அவற்றின் காலத்தை கி.பி. 5-ஆம் நூற்றாண்டெனக் கொள்ளலாம். எனவே, கி.பி 5-ஆம் நூற்றாண்டில் குன்றின்மேல் சில சமண முனிவர்கள் தங்கித் தவம்புரிந்து கொண்டிருந்தனர் என அறியலாம். அவர்களுள் 'சிரா' என்ற முனிவர் ஒருவர் இருந்தமை அங்குள்ள கல்வெட்டுகளால் அறியப்படுகின்றது. அம்முனிவர் அத்தவப் பள்ளியின் தலைவராய் இருந்தமைப்பற்றி அது சிராப்பள்ளி என்று முதலில் வழங்கத் தொடங்கி, அவர் காலத்திற்குப் பின்னரும் அப்பெயரோடு நின்று நிலவுவதாயிற்று.

சைவ சமய குரவர்களாகிய திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும தம் காலத்தில் வழங்கி வந்த சிராப்பளளி என்ற அப்பெயரைத்தாம் அக்கோயிலிற் பாடியருளிய பதிகங்களிற் குறிப்பிட்டுச் சொல்லுவாராயினர் ஆகவே சிரா எனற சமண முனிவரது தவப்பள்ளியின பெயராயிருநத சிராப்பள்ளி எனபது, பின்னர் முதலாம மகேநதிரவர்மன் அங்கு எடுபபிதத சிவன கோயிலின பெயராக மாறிவிட்டமை அறியததக்கது. அக்கோயிலின் பெயரே பினனாத் 'திரு' என்ற அடைமொழி சேர்க்கப்பட்டு 'திருச்சிராபபள்ளி' எனறு நகரின பெயராக மாறிவிட்டது.

திருச்சிராப்பளளி மேற குகைக்கோயிலில் முதலாம் இராசராச சோழனின பதினாறாம் ஆட்சி ஆணடுக் (கி பி 1001) கல்வெட்டு ஒனறு உள்ளது அககல்வெட்டு விககிரமசிஙக மூவேநத வேளான எனபவன விளத்தூர் நாட்டு ஆலஙகுடியில நிலம் விலைக்கு வாங்கி அதனை உறையூர்க கூற்றத்துச் சிற்றம்பரிலுள்ள சிராப்பளளிக கோயிலுக்கு அளித்தனன என்று கூறுகிறது. அதனை ஆராயுமிடத்து, அததலைவனால இறையிலி நிலம வழஙகபபெற்ற சிவன் கோயில் சிராப்பளளி என்னும பெயருடையது என்பதும், அககோயில அமைநதுளள நகர் சிற்றமபர் எனனும பெயருடையது எனபதும, அந்நகர் உறையூர்க் கூறறத்திலுள்ளது எனபதும நனகு புலனாகும். முதலாம வரகுண பாணடியனது ஆட்சியின பதினொன்றாம் ஆணடு கி.பி. 9-ஆம நூற றாணடின முற்பகுதியில் அக்கோயிலிற் பொறிககபபெற்றுளள வேறொரு கல்வெட்டும ஊரைப் பற்றிக் குறிப்பிடும பொழுது, சிற்றம்பா நகர் எனவும், சிறறமபர பதி எனவும் குறிப்பிடுகிறது. தமிழ்நாட்டில் அமபா, இனனம்பர், நலலம்பார் எனற ஊாகள இருததலைப பலா அறிவா. அவவூர்களைப் போல் சிறறமபா எனற ஊரும் இருந்துள்ளது. இககாலத்தில அவவூரின பெயா மறைந்தொழிந்தது எனினும, அவவூர் திருசசிராபபளளி எனனும் பெயருடன இபபொழுதும் நிலவி வருகிறது.

இதுகாறும் கூறியதிலிருந்து பணடைக் காலததில் சிராபபளளி எனபது, சிரா எனற சமண முனிவரது தவப்பள்ளியின பெயராயிருந்ததெனபதும், பிறகு பல்லவ வேந்தனாகிய முதலாம் மகேநதிரவர்மன அதனை இடித்துவிட்டு அஙகு எடுப்பித்த சிவன் கோயிலின பெயராயிறறெனபதும, அதனபினனர் அத்திருக் கோயில் அமைந்துள்ள நகரின பெயராக வழஙகி வருகின்றதெனபதும், கோயிலின பெயர் நகரின் பெயராகப் போய்விட்டமையின 'சிறறம்பர்' எனனும் அந் நகரின பழைய பெயர் மறைந்துவிட்டதென்பதும நன்கு விளஙகும். அது மட்டுமன்றித் திருச்சிராபபளளி என்ற பெயர் ஓர் ஊரின் தலைவனுக்கும் இருந்ததெனபது வீரபாணடியனின சிவகாசிசசெபபேட்டின மூலம் அறியப்படுகிறது. அச்செப்பேட்டில் பெண் யானையை வலமாக நடத்திச் சென்றவன முளளி இராட்டிரத்தில் குலக்கிராமம் என்ற ஊரின தலைவன் எனறும, அவன் பெயர் 'திருச்சிராப்பள்ளி' எனறும் குறிபபிடப்பட்டுள்ளது.

திருசசிராப்பளளி பல்லவ, சோழ, பாணடிய மன்னர்களின ஆளுகையினகீழ் கி பி. 7-ஆம் நூற்றாணடிலிருந்து 12-ஆம நூறறாணடின் இறுதிவரை இருந்தது. போசளர்களின் ஆடசியின் கீழ் கி.பி.13-ஆம நூற்றாணடில வநதது. போசளாகள திருசசிராப்பள்ளியை அடுதத கணணனூரில் தலைநகர் அமைததுச் சோழ நாடடின் பகுதியை ஆளத் தொடஙகினர்.

பாணடிய மன்னன் முதலாம சடையவாமன் சுநதர பாணடியன (கி.பி. 1251-71) போசளரைத தாககி அனனோர் ஆட்சிககுட்பட்டிருநத சோணாட்டுப் பகுதியைத தனனடிப்படுதத எணணினான. அதனை நிறைவேறறும் பொருட்டுப பெருமபடையுடன் சென்று அபபோசளர்ககுரிய நகரமாகத திருச்சிராப்பளளிக்குப பக்கததிலிருநத கணணனூராக கொப்பத்தை முற்றுகையிடடு வெற்றி பெற்றான. போசளர்கள மூனறாம் இராசராச சோழன காலமுதல் தமககுரியதாக வைத்திருநத கணணனூர்க் கொப்பத்தை இழந்தனர்.

திருநெலவேலி மாவட்டத்தில சேரன்மாதேவியிலுள்ள முதலாம மாறவர்மன குலசேகர பாணடியனின் இருபதாம் ஆட்சி ஆணடுக் கலவெட்டு (கி பி. 1288) இவன மலைநாடு, சோழ நாடு, ஈழநாடு, தொணடை நாடு எனபவற்றை வெனறனன் எனறு குறிப்பிடுகிறது. சோழநாடு, நடுநாடு, தொணடை நாடுகளிலுள்ள பல ஊர்களில் இவன கலவெட்டுகள் காணப்படுகினறன. எனவே, அந்நாடுகள எலலாம இவன் ஆட்சிககுட்பட்டிருநதன எனபதும தேற்றம. திருசசிராப்பளளி சோழ நாட்டில் இருநதமையால. இவனது ஆட்சிக காலத்தில (கி.பி. 1269 முதல் 1311 வரை) இவனுடைய ஆளுகையின கீழிருந்தது.

திருச்சிராப்பளளி விசய நகரப் பேரரசின் ஆளுகையின கீழ கி பி 14-ஆம் நூற்றாணடில் வந்தது. விசயநகரப் பேரரசன் இரணடாம தேராயன் இறந்ததும கலிஙகத்து மன்னன கபிலேசுவர கசபதி விசய நகரப் பேரரசின பல இடங்களையும் கைப்பற்றி, இறுதியில் திருச்சிராப்பளளியையும் கைப்பற்றினான். கலிஙக மன்னன் கபிலேசுர கசபதிக்குப் பிறகு (கி.பி. 1463-64) சாளுவ நரசிமமனின ஆட்சி காவிரியின

வடகரையோடு தடைப்பட்டு நினறுவிட்டது. அவனுக்குப் பிறகு விசயநகரப் பேரரசை முறை கேடாகக் கைபபற்றி அரசாணட நரசநாயககன கி.பி. 1496-இல் தன ஆதிக்கத்தைக் கன்னியாகுமரி வரை பரப்பினான்.

விசயநகரப் பேரரசுக்குப் பினனா ஆட்சி செலுத்திய விசுவநாத நாயக்கன காலததில (கி பி. 1659–1682) திருச்சிராப்பளளி மதுரை நாயக்காகளின தலைநகரமாக்கப்பட்டது. முசுலீமகளும, மராட்டியர்களும திருச்சிராபபளளியின மேல் படையெடுத்தனா. இருசுதுமகான எனற முசுலீம் நாடோடி ஒருவன கி.பி. 1682–இல திருசசிராப்பளளியைக் கைபபறறி நாயக்கரினஅரியணையில் இரணடாணடுகள அமர்ந்து ஆண்டான். சொக்கநாத நாயக்கன் ஆடசியின இறுதியில மைசூர்ப் படைகள் திருச்சிராப்பள்ளியை முறறுகையிட்டன ஆனால, செஞ்சி, தஞ்சாவூா, மராட்டிய மனனரின துணையைக் கொண்டு சொக்கநாதன் மைசூர்ப படைகளைத திருசசிராப்பளளியிலிருநது விரட்டினான்.

விசயரங்க சொக்கநாதனின மனைவி மீனாட்சி கி.பி. 1732–இல அரியணை ஏறினாள. இவள் காலததில ஆர்க்காட்டுநவாபின மகள சப்தரலியும், மருமகன சந்தாசாகிபும் திருசசிராப்பளளியின மேல் படையெடுத்தனர். மீனாட்சி தன்னுடைய உரிமை முழுவதையும் கி.பி 1736-இல சந்தாசாகிபிடம் ஒப்படைத தாள். திருசசிராப்பளளி சந்தாசாகிபின ஆட்சியின கீழ் வநதது.

தியூபளேயும, சந்தாசாகிபும், முசாபர்சஙகும் கி.பி 1749-இல ஒனறாகக் கூடி அனவாருதீனகானை ஆமபூரில் போரில கொனறார்கள். அன்வாருதீனகான மகன முகமதலி திருச்சிராப்பளளிககு ஓடிவிட்டான. அவனைத் துரததிக கொணடு பிரெஞ்சுப்படையொன்று திருச்சிராப்பள்ளியை நோககி வநதது. இப் போர்ஆஙகிலேயருககுமபிரெஞ்சுககாரருக்குமிடையே நடநதது. திருசசிராப்பள்ளியை நோககி விரைந்த பிரெஞ்சு அணிகள் தஞ்சாவூரிலேயே களைததுப போயின. அதே சமயம ஆஙகிலேயரின் துணையைப் பெறற முகமது அலியின எதிரப்பும் கடுமையாயிற்று. ஆஙகிலேயரின படைவலி முழுவதும தன வசம் வந்து அடையும வரையில் முகமது அலி பிரெஞ்சுக் காரரிடம சமாதானப்பேச்சுப் பேசிக் காலம்தாழத்தி வந்தான. அவனுடைய தந்திரத்தைத் தியூப்ளே கி.பி. 1751–ஆம் ஆணடு மே மாதம தான் நன்கு உணர்ந்தான். உடனே தானும்இலா என்பவன தலைமையில் திருச்சிராப்பளளியை நோக்கி ஒரு படையை ஏவினான். திருச்சிராப்பள்ளி முற்றுகை நீடித்துக் கொண்டே போயிறறு. ஆங்கிலேயருககு மைசூர், தஞ்சாவூர் மனனர்களும், மராட்டியத் தலைவன முராரிராவும படைததுணையை அனுப்பிவைததனா. இராபாட்கிளைவு வங்கத்திலிருந்து ஆஙகிலப் படை ஒனறைத் தமிழகததை நோககி கொணடு வந்து ஆர்க்காட்டை முறறுகையிட்டுக கைபபறறிக கொணடான். அவனிடமிருநது தன தலைநகரை மீட்டுக் கொளவதறகாகச் சந்தாசாகிபு ஆர்க்காட்டுச் சேனை ஒனறை அனுப்பினான. கிளைவு கி பி 1751-இல் வெறறி பெற்றான பிரெஞ்சுப் படைத்தலைவன இலா ஆஙகிலேயரின வெற்றியைக கணடு திருவரஙகத திறகு ஓடி ஒளிந்தான. திருவரஙகததை வளைததுக் கொள்ளுமாறு கிளைவு ஆணையிட்டான. இலாவும அவனுடைய படையினரும ஆஙகிலேயரால சிறை பிடிககப்பட்டனா. சநதாசாகிபுவின தலை தரையில உருணடது தியூபளே ஏஙகி நினறான தியூபளே எடுததமுயறசியைத் தளாதத மனமிலலாதவனாய் மீணடுமகி பி 1752–ஆம ஆணடு திருசசிராப்பள்ளியை முறறுகையிடடான

மேறகூறிய வரலாறறு நிகழ்சசிகளுககுப பின்னா கி பி. 1801–ஆம ஆணடில திருச்சிராபபளளி ஆஙகிலேயரின ஆட்சியின கீழ வநதது இநதியா 1947-ஆம ஆணடு ஆகசுட்டுத திஙகள 15-ஆம நாள சுதநதிரம அடைநத பினனாத தமிழநாட்டின் மாவட்டங்களில் ஒனறாகத திருசசிராபபளளி திகழநது வருகிறது திருசசிராப்பளளியிலும் அதனைச் சுறறியுள்ள இடஙகளிலும் வரலாறு கூறும கல வெட்டுகளும, கோயில்களும, சிறபஙகளும், உலோகத திருமேனிகளும, வணண ஓவியஙகளும், கட்டடஙகளும மலிநது இருப்பதை இன்றும கணடு இனபுறலாம்.

இநநகரம் இனறு திருசசி என்றுமகூறப்படுகிறது. மாவட்டத்தின பெயரும இதே பெயரில அமைநதுளளது. இங்குளள மலைககோட்டை சுற்றுலாப் பயணிகளின மனததைக் கவரும் வகையில நகரின நடுவில அமைந்துளளது. இந்நகருககு அருகில் காவிரி ஓடுகினறது இந்நகரின வடககில் திருவரங்கம கோயில உளளது. இந்நகரம் தொழில வளர்ச்சி மிகக நகரமாகும. இந்நகரில் இந்தியப் படைப் பிரிவு ஒனறும, துப்பாக்கித தொழிற்சாலையும் கொதிகலன தயாரிப்பு நிறுவனமும உளளன. திருச்சிராப்பளளியின மககள் தொகை 607,815 (1981). இதில பொனமலை, திருவரஙகம்,தூவாக்குடி ஆகியவை அடங்கும். அ.அ.

**திருச்சிராப்பள்ளி மாவட்டம்**: காண்க; தமிழ் நாட்டு ஆட்சிப்பிரிவுகள்.

**திருச்சிவபுரம்**: தஞ்சை மாவட்டத்தில் கும்ப கோணத்துக்குத் தென்கிழக்கே காவிரிககுத தென

பது தேவருக்குப் பெருமை தரக்கூடியதே தவிரச் சிறுமை தரக்கூடியது அன்று. தேவர் அகப்பொருள் பாடியிருப்பதற்கு நாலடியார் போன்று இளமைத் துறவை வற்புறுத்தாத அவருடைய நோக்கம் காரணமாகும். ஓடும் குதிரையைச் சிறிது தூரம் ஓட விட்டுப் பின்னர் இழுத்துப் பிடிப்பது போல மனிதனை அவன் போக்கில் விட்டுப் பின்னர் உறுதி பயக்கும் உண்மைகளைக் காட்டுகிறார்.

திருத்தக்க தேவர் தமக்கு முன்பிருந்தோர் கூறிய கருத்துகளை ஆண்டுள்ளார். இவர் கூறும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்கள் திருவள்ளுவரைப் பின்பற்றிக் கூறப்பட்டவை. சிந்தாமணியில் பல செய்யுட்கள் திருக்குறளின் விளக்கமாக அமைந்துள்ளன.

இவர் முதலில் எழுதிய நூல் நரி விருத்தம். அடுத்துத் தம் ஆசிரியரின் ஆசியோடு எழுதியது சீவக சிந்தாமணி. சீவக சிந்தாமணியில் மொத்தம் 13 இலம்பகங்களும், 3145 செய்யுட்களும் உள்ளன. தமிழ்க் காப்பிய உலகில் காப்பியத்தின் போக்கில் புதுமை கண்டவர் திருத்தக்க தேவர். விருத்த யாப்பில் முதலில் காப்பியம் படைத்த பெருமை தேவருக்கே உரியது. ஆசிரியர் ஒரே வகையான விருத்தப் பாக்களையும் அமைக்கவில்லை. பொருளுக்கேற்றபடி வேறுவேறு சந்தங்களை அமைத்துக் கொண்டு பாடியிருக்கிறார். காப்பியத்தைத் தொடங்கும் முறையிலும் கூடப் புதுமையைப் புகுத்தியிருக்கிறார்.

பெருங்காப்பியம் இயற்றுவோருக்கு இருக்க வேண்டிய நினைவாற்றல் திருத்தக்க தேவருக்கு மிகுதியாக இருக்கிறது. காப்பிய நிகழ்ச்சிகள் ஒன்றுடன் ஒன்று தொடர்புடையனவாக அமைக்கப்பட்டுள்ளன. சீவகசிந்தாமணியின் ஓசை நயமும், எளிய உவமைகளும், எண் சுவைகளும் திருத்தக்க தேவரின் புலமைக்குச் சான்றாக அமைகின்றன. காப்பியத்தில் காணப்படும் அறநெறிகளும், அறவுரைகளும், உலக நீதிகளும் ஆசிரியரின் தூய உள்ளத்தையும், மக்கட் சமுதாயத்தின் மீது அவர் கொண்டிருந்த அக்கறையையும் புலப்படுத்துகின்றன. சு.சு.

**திருத்தண்கா** வைணவர்களுடைய நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்று; தொண்டைநாட்டு திவ்விய தேசங்கள் இருபத்திரண்டினுள் ஒன்று. இது காஞ்சிபுரம் எனும் நகரத்தில் அமைந்துள்ளது. காஞ்சிபுரம் பேருந்து நிலையத்திலிருந்து சுமார் ஒரு கி.மீ. கிழக்கில் உள்ளது. திரு - சிறப்புப் பொருந்திய; தண் குளிர்ந்த; கா–சோலை; குளிர்ந்த சோலைகள் சூழப்பெற்ற திருத்தலம் என்பது பற்றித் திருத்தண்கா எனப் பெயர் பெற்றது. இங்குக் கோயில் கொண்டுள்ள எம்பெருமானுக்கு விளக்கொளி என்று திருநாமம். வடமொழியில் தீபப் பிரகாசர் என வழங்குவர்.

பிரமன் திருமாலைக் காண வேண்டி யாகம் செய்த போது அதைக் கெடுக்க வந்த அசுரர்கள் உலகம் முழுவதையும் இருட்செய்ய எம்பெருமான் அங்கு ஒரு பேரொளியாகத் தோன்றி அதனைப் போக்கினான். இதனால் அங்குக் கோயில் கொண்டுள்ள எம்பெருமானுக்கு விளக்கொளி என்று பெயர் ஏற்பட்டது. திருமங்கை ஆழ்வார், ‘என்னையாளுடையீசனை எம்பெருமான் தன்னை யாம் சென்று காண்டும் தண்காவிலே’ (பெரிய திருமொழி 10-1-2) என்றும், ‘விளக்கொளியை மரதகத்தைத் திருத்தண்காவில்’ (திருநெடுந்தாண்டகம் 14) என்றும் இத்தலத்தைப் பாடியுள்ளார். வைணவ ஆசாரியர்களுள் வேதாந்த தேசிகர், பிரதிவாதி பயங்கரம் அண்ணல் ஆகியோர் பிறந்தது இத்தலத்திலேயே. புகழ் பெற்ற அத்துவித அறிஞரான அப்பய்ய தீட்சிதர் என்பவரும் இத்தலத்திலே பிறந்தவர். எம்.ந.

**திருத்தண்கால்** வைணவர்களுடைய நூற்றெட்டுத் திருத்தலங்களுள் ஒன்று. பாண்டி நாட்டுத் திருப்பதிகள் பதினெட்டினுள் ஒன்றான இது சிரீவில்லிபுத்தூருக்கு அருகில் உள்ளது. எம்பெருமான் எழுந்தருளியுள்ள கோவில் சற்று உயரமான இடத்தில் இரண்டு அடுக்காக அமைந்துள்ளது. கீழே கிடந்த திருக்கோலத்திலும் மேலே நின்ற திருக்கோலத்திலும் எம்பெருமான் எழுந்தருளியிருக்கின்றான். தண்- குளிர்ந்த; கால்–காற்று; இத்தலத்து எம்பெருமான், குளிர்ந்த காற்றுப்போலே இனிமையான வடிவத்தோடு எழுந்தருளியிருக்கிறபடியால் இத்தலத்திற்கே தண்கால் என்ற பெயர் ஏற்பட்டது. இங்குள்ள இறைவன் தண்காலப்பன்; இறைவி அன்னநாயகித்தாயார். திருமங்கை ஆழ்வார் ‘திருத்தண்காலூரானை’ என்றும் ‘ஆங்கே தண்காலும் தண்குடந்தை நகரும்பாடி’ என்றும் இத்தலத்தைப் பாடியுள்ளார். பூதத்தாழ்வாரும் இத்தலத்தைப் பாடியுள்ளார். எம்.ந.

**திருத்தண்டலை நீள்நெறி:** தண்டலை என்பது இன்று தண்டலைச் சேரியென வழங்கப்படுகின்றது. தண்டலை என்பது ஊரின் பெயர். இங்குள்ள கோயிலின் பெயர் நீள்நெறி. எனவே, திருத்தண்டலை நீள் நெறியாயிற்று.

தஞ்சை மாவட்டத்தில் மணலி புகைவண்டி நிலையத்திற்கு அருகில் 3 கி.மீ. தூரத்தில் இருக்கிறது.

காவிரித தெனகரைத தலஙகளுள் இது 110–ஆம் தலமாகும. இறைவர் நீளநெறி நாதர் இறைவியின திருபபெயா ஞானாமபிகை. குருந்தமரம தலவிருட்ச மாக உளளது. தீர்ததம் ஓமகத தீாததம.

இது ஆமை அவதாரஙகொணட ,திருமால செருக் குற்றுக கடலைக கலககச சிவபெருமான அதன் செருககை அடககி, அதன ஓடடை அணிநதருளிய பதி கோச்செஙகட் சோழரால கட்டப்பெறற மாடக கோயில்களுள இதுவும ஒனறு. இச்செயதி, 'செம்பியன கோச்செஙகண நிருபா தணடலை நீணெறி காண மினே' எனனும இவவூர்ககுரிய சமபநதா பதிக அடி களால விளஙகும

அருகில கணமஙகலததிலே தோனறிய தாய நாயனாா சிவபெருமானுககுத தாம படைககக கொணடு வநத செநநெல்லரிசி, மாவடு, செஙகீரை எனனுமிவை கீழே சிநதக் கணடாா் பதைபதைதது அரிவாளைக் கழுததிற பூடடி அரிய முறபடுகையில சிவபெருமானுடைய திருவருளைப பெறறாா. அது முதல அரிவாட்டாய நாயனாா எனனும காரணப பெயா பெறறாா. அவர் இத்தலததில முததியடைந் தாா நீளநெறிக கோயிலில அரிவாட்டாய நாய னார் அவரது மனைவியார் ஆகியோரின் படிமஙகள இருக்கினறன

தணடலையாரைத தலைவராகக கொணடு 'தணடலையாா சதகம்' எனற நூல வெளிவநதுள ளது. இதனைப பாடியவா படிககாசுப் புலவா. பல நீதிக கருத்துகளை உளளடககிய நூல. இததலந திறகு ஞானசமபநதா பதிகம ஒனறுளளது இரா.பா.

**திருத்தணிகை** செஙகறபட்டு மாவடடததில உள்ளதோரூா. இவவட்டத்தின பெயரும திருத் தணிகை எனறே கூறப்படுகிறது இது முருகனின அறு படை வீடுகளுள ஒனறு முருகன சூரனை வெனறு போர் வினை தணிநதபின இஙகுளள குனறினமீது வளளி தெய்வானையுடன வீறறிருநதாா. கோபம தணிநதமையால திருததணிகை எனறும, செருததணி யெனறும இவவூர் கூறபபடுகிறது. இவவூரின நடுவில உளள குனறினமீது கோயில உளளது. குனறில உளள சுனையின பெயா நீலோறபலசசுனை எனப தாகும். எனவே, இககுனறு உறபலகிரி எனறும, கல லாரகிரி எனறும கூறபபடுகிறது. அப்பா தமது தேவாரத்தில இதனைக் கன மலிநத கழுநீாககுனறம எனக் குறிப்பிடுகிறார். புராணஙகளில இவவூா கல லாரம (செஙகழுநீர்), கநதாசலம், கணிகவெறபு, செங்கலவகிரி, குருகிரி, சீபரிபூர ணகிரி, நீலகிரி என றும் குறிப்பிடபபட்டுளளது. முருகன இஙகிருநது இம்மை மறுமைப பயனகளை ஒரு கணத்தில் வழஙகு வதால கணிகவெறபெனறும நலனகளை அருளுவ தால சீபரிபூரணகிரி எனறும பெயாபெறறது எனப் புராணஙகள இயமபும அகத்தியா இஙகிருநதே முரு கனிடம தமிழ கற்றார் எனறும கூறுவா'



இநதிரன இஙகுளள முருகனை வழிபட ஒரு தீர்ததம அமைத்தான. இது இநதிரநீலச சுனை எனறும, செஙகழுநீரோடை எனறும வழஙகபபடு கிறது இச சுனை நீரே இன்றளவும முருகனுககு மஞசனமாட்டப பயனபடுததபபடுகிறது. தணிகைப புராணம, இநதிரபுராணம் ஆகிய நூல்களில இச சுனையில மூன்று வேளைகளில ஒவவொரு அருங்கு வளைமலருவதாகக் கூறபபட்டுளளது இப்பொழுது இம்மலர் மலருவதிலலை. இத தீாததததைத தவிர ஏழுமுனிவர் சுனை, குமாரதீர்ததம, சரவண தீர்ததம நநதியாறு, நாககசுனை போனற சுனைகளும இஙகுள ளன. அருணகிரிநாதரும திருததணிகை முருகன குறித்துப் பாடியுளளாா இஙகுள்ள வினாயகா ஆபத்துசகாய விநாயகா எனனும் பெயருடையவா. முருகன வளளியை மணகக யானையாக வநது உதவி செயதமையால அவா இவ்வாறு கூறப்படுகிறார். விநாயகரின சநநிதி முருகன சநநிதிககு வடககிலுள ளது. இஙகு ஆணடுதோறும் மககள வநது முருகனை வழிபடுகினறனர். பல திருவிழாககளும விழாககளும அடிககடி நிகழ்கினறன. மாசி மாதததிலும் ஆடி மாதததிலும் இஙகு இலட்சக்கணககில மககள வரு கினறனா. ஆடி மாதத்தில கார்த்திகையில நடககும ஆடித திருவிழாவினபொழுது மககள முருகனுக்குக காவடி எடுக்கும் விழா மிகசசிறபபுப பெறறதாகும். குன்றினமீதுளள முருகன் கோயிலுக்குக் கிழககிலும, மேறகிலும நடைபாதைகள உளளன. குன்றினமீதே பல சத்திரஙகளும மடங்களும் கடைகளும உளளன.

குனறிற்குத் தெற்கில் வண்டிகள் செல்லப் பாதை அமைக்கப்பட்டுள்ளது. இக் குன்றைச் சுற்றி ஊர் அமைநதுள்ளது. மலையின கீழ்ப்புறத்திலும் குளங் களும் மடங்களும் சத்திரங்களும் நிறைந்துள்ளன. இநது அறநிலையத் துறையின் கண்காணிப்பில் இக் கோயில் உள்ளது. பயணிகள் தங்கப் பல சத்திரங் களும் விடுதிகளும கோயிலின் நிருவாகத்தாரால் பராமரிக்கப்பட்டு வருகின்றன.

திருத்தணிகை சென்னையிலிருந்து அரக்கோணம் -பம்பாய் தொடர்வண்டிப் பாதையில் அமைந்துள் ளது. அரக்கோணத்திலிருந்து வடக்காக 16 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள இவ்வூருக்கு மின்சார இருப்புப்பாதை அமைக்கப்பட்டுள்ளது. இவ்வூருக்குச் செல்லச் சாலை வசதிகளும் உள்ளன. இங்கிருந்து திருவள்ளூர், அரக்கோணம், வேலூர், சென்னை, சோளிங்கபுரம், சித்தூர், திருப்பதி, புத்தூர் ஆகிய ஊர்களுக்கும் பேருந்துகள் செல்கின்றன. இவ்வூரைச் சுற்றிப் பல சிற்றூர்கள் அமைந்துள்ளன. இவ்வூரின் கிழக்கில் நந்தியாறு ஒன்று பாய்கிறது. இங்கு அகத் தியர் வழிபட்டதாகக் கூறப்படும் ஆறுமுகப்பெரு மான் கோயில் ஒன்று உள்ளது. இவ்வாற்றின் கரை யில் அமைந்துள்ள பிறிதொரு கோயில் வீரட்டா னேசுவரர் கோயிலாகும்.

அமைப்புடையது. கருவறையின் விமானம் வரை இவ வமைப்புக காணப்படுகிறது. கருவறையின் பக்கச்சுவர் களிலும் பினசுவரிலும் மாடக குழிகள காணப்படுகின றன. இவறறின் இரு பக்கங்களிலும சுவருடன்கூடிய தூண அமைப்புக காணப்படுகிறது. மாடககுழிகளின மேல் இலாட வடிவ உரு அமைபபுக் காணப்படுகிறது. மூலவர் வீரட்டானேசுவரர் எனப்படுகிறார். இலிங்கம் கருவறையின் உள காணபபடுகிறது. பெரும்பாலான மாடக்குழிகளில் இறைச சிற்பங்கள் காணப்பட விலலை. கருவறையின முன அருததமண்டபம், இடை கழி, மகாமணடபம் ஆகியவை உளளன. மகாமணட பம் நானகு தூணகளைப பெற்றுளளது இங்குள்ள ஏழுகனனிமார், சிவன, கணேசா, சூரியன, துவார பாலகர், சணடிகேசுவரர் சிறபங்கள பலலவா காலச் சிற்பங்கள் ஆகும மாடக்குழிகளில தட்சிணாமூர்ததி, கணேசா, திருமால, பிரமன, துாககை முதலியோர் சிற்பஙகள உளளன.

திருத்தணிகையில கலவிககூடஙகளும் அரசு அலு வலகஙகளும் கலலூரி ஒனறும உளளன. இங்கு நெச வாலை ஒன்றும் உளளது. ஆந்திரா, தமிழ்நாடு எல்லையில இவவூா அமைந்துளளதால் வாணிக மைய மாகவும் இது விளஙகுகிறது இவ்வூரின மககள தொகை 24,455 (1981). சு இரா.



வீரட்டானேசுவரர் கோயில்

வீரட்டானேசுவரர் கோயில் பலலவ அரசன் அபராசிதவாமனின் காலத்தைச் சார்நதது. பல்லவர் கட்டடக்கலைக்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டாக விளஙகும இக்கோயில் பல்லவரின் இறுதிக் கால மான கி.பி. 7-ஆம் நூற்றாணடைச் சார்ந்தது. இன்று கவனிபபாரற்றுக் கிடககும் இககோயிலின் கருவறை கசபிரத்தம் (தூங்கானை) அல்லது இலாட வடிவ

**திருத்தலைச்சங்காடு,** தேவாரப் புகழ் பெறற சிவத்தலம ஆகும். மயிலாடுதுறையிலிருநது தரங்கம்பாடிக்குச் செல்லும் புகைவணடிப் பாதை யில ஆக்கூர் புகை வண்டி நிலையத்திலிருந்து வட கிழககே 5 கி.மீ. தொலைவில் உள்ளது இவ்வூர். காவிரியாற்றின் தென்கரையில அமைநத சிவததலங் களுள் ஒன்று. இவ்வூரில் கோயில் கொணடருளிய

இறைவன் பெயர் சஙகருணாதேசுவரர். இறைவியின பெயர் சௌநதிரநாயகி. காவிரியாறே தீர்த்தமாக அமைகிறது இது|திருமால சிவபெருமானைவழிபட்டுப் பாஞ்ச சனனியம் எனும் சங்கைப பெறற ஊர்.

திருஞான சமபநதர் இவ்வூர் பற்றிப் பாடிய தேவாரப் பாடல்கள இரணடாம் திருமுறையில இடம்பெறறுள. சோழா காலக் கலவெட்டுகள் பத்து இவவூாக கோயிலில உள. இவவூர் திருவேள்விக்குடி மகாதேவர்ககுப் பூதானம செயயப்பட்டது சிலப்பதி காரத்தில அடைக்காலக காதையில இவவூா தலைச செஙகானம் என்று குறிககப்பட்டுளளமையால் இதன பழமை விளங்கும.

பி.தெ.

**திருத்தாமனார்**: தாமன் எனனும் இயற்பெய ருடைய இவா சிறப்புக் கருதித 'திரு' எனறும் அடை யும் ஆரைக் கிளவியும பெறறுத திருததாமனார் என வழஙகப் பெற்றார். இவர் பாடியதாகப் புறநா னூறறு 398-ஆம பாடலொனறே கிடைத்துளளது. அப்பாடலில சில அடிகள் சீர் சிதைநது காணபபடு கினறன. சேரமான வஞசனின் கொடைத் திறத்தை இப்புலவர் அப்பாடலில் சிறப்பித்துளளார். வஞச னைப் 'பாயறகோவே' என விளித்துளளமையின அவன் பாயல் நாட்டுக்குரியவன் என்பதறியப்படும. இபபாயல் நாடு வயனாடு எனறாகி இப்போது வைநாடு என வழஙகுகிறது எனறு புறம 398 ஆம பாடல முனனுரையில் ஔவை துரைசாமிப்பிளளை குறிபபிடுவர். இவா பாடல் பாடாணடிணையில கடைநிலை எனனுந துறையில அமைநதுளளது. சேவற் கோழி கூவும விடியலில தடாரியை இயககும இளைஞனுக்கு வாய்மொழியிற சிறநத வஞசன பரி சில நல்கினான. இவன சீரியாழைக் கடனறிநதியக கும பாணனுக்கும பரிசில வழஙகுபவன. இளைஞன இடையில அணிநதிருநத பழைய ஆடையைக் களைநது தான உடுத்தியிருந்த சிறநத ஆடையை, இவன் நலகினான; தேறல அளிததான; தன உண கலத்திலுளள உணவைச் சுறறத்திறகு விருபபொடு வழஙகினான; தன மார்பிற் பூணட முத்தாரத்தைக் கொடுத்தான.இபபுலவர் நகைவர்குறுகின அல்லது பகைவர் குறுக இயலாது எனறு கூறி வஞ்சனின கொடையையும வீரததையும் ஒருஙகே சிறப்பிததுள ளாா.

இரா.சா.

**திருத்திலதைப்பதி**: இது தேவாரபபாடல பெற்ற தலஙகளுள் ஒனறு திருஞான சமபநத சுவாமி கள இரணடாம் திருமுறையில் இத்தல இறைவனைப பாடிப்பரவியுள்ளாா. இராமனும், இலககுவனும தசரதனுக்கு எள்ளும் நீரும் இறைத்த இடமாதலால இத்தலம் இப்பெயர் பெற்றது எனபர். திலதம் எனபது எளளைக குறிக்கும். பேரளத்திலிருந்து தென் மேறகே 5½.கி.மீ தொலைவில் அரிசிலாற்றின தென கரையில சிதலைபபதி உளளது. இசசிதலைப்பதிக்கு 1கி.மீ.தொலைவில திருத்திலதைப்பதி அமைநதுள ளது. காவிரிக்குத் தெனகரையில உளள சிவத்தலங களில் இதுவும் ஒனறு.

இஙகுளள கோயிலின பெயா மதிமுததம். இறை வன் பெயர் மதிமுத்தனாா முத்தீசர் எனறும் கூறு வர். பதிக இறுதி, திலதை மதிமுததர் மேல் எனறு அமைந்துளளது. இறைவி பெயர் பொறகொடி நாயகி, பொறகொடியம்மை என்றும் கூறுவர் தலவிருட்சம மநதாரம ஆகும தீர்ததம சநதிர தீாததம. சூரியன இககோயிலில் எழுநதருளியுளள பெருமானை வழி பட்டுப் பேறுபெறறான. இதனைப 'புரவி ஏழும் மணி பூணடியங்கும கொடித் தேரினான, பரவி நினறு வழிபாடு செயயும பரமேட்டியூர்' எனறு தேவாரம குறிககினறது. இவவூரின தலபுராணததை நாகலிஙகம்பிளளை எனபாா இயறறி அச்சேற்றியுள ளாா.

பி.தெ.

**திருத்தினை நகர்** தேவாரப்பாடல பெறற திருத்தலம்;இனறு தீர்தத நகர் எனறு சொலல பெறுகிறது. ஏழாந திருமுறையான சுநதரமூாத்தி சுவாமிகளின தேவாரத்தில் இததிருப்பதி குறித்து ஒரு பதிகம் காணபபெறுகிறது இவ்வூர் சிதமபரததி லிருநது கூடலூாககுப் போகும இருப்புப்பாதையில அமைநத புதுசசத்திரம எனும புகைவணடி நிலையத் திறகு வடமேற்கே 5.கி.மீ. தொலைவில உளளது.

ஆதி திராவிட இனத்தைச சோந்த பெரியான் எனற சிவபகதன நிலததை உழுதுகொணடிந்தபோது சிவபெருமான சஙகமா போல அங்குத் தோனறி அனனம் கேடடார். அபபோது அசசிவபக்தர் தம் ஊருககுச் சென்று அனனம கொணடு வருவதாககூ கூறிச் சென்றார். அவர் வருமுன அவா உழுது போட்ட நிலததில தினை விளைநது கிடநதது. அற புதம நிகழததிய இறைவன மறைநது விட்டாா. தினை இறைவன அருளால விளைநது பழுததமை யால திருத்தினை நகா எனற பெயர் இவவூருக்கு அமைந்தது. இங்கு எழுநதருளியுளள இறைவன சிவக கொழுந்தீசர்; இறைவி இளஙகொமபனனாள. தல விருட்சம கொனறை. இக்கோயிலில் உள்ள தட்சிணா மூர்த்தி திருப்படிவத்துக்கருகே உளள கல்வெட்டு கோனேரினமை கொணடான காலத்தது. திருத் தினை நகா் பெருமானுக்கு 50 வேலி நிலம அளித்த செய்தி இதில உளளது.

மூனறாம் குலோத்துங்க சோழன, சடாவர்மன திரிபுவனச் சக்கரவர்ததி சுந்தர பாணடியன, கிருட் டிண தேவராயர், பல்லவன் கோப்பெருஞசிஙகன

காலக் கல்வெட்டுகள் இவ்வூரில உள. இவ்வூர்க்கோயி லில் அய்யன் அங்காரகன மண்டபம் உள்ளது. திரு நாவுக்கரசு சுவாமிகளுக்குத் திருவிழா இங்கு நடை பெறுகிறது. இக்கோயிலில் கோதண்டராமன் சந்நிதி யும் உள்ளது. 'செந்நெலார் வயல் திருத்தினை நக ருட் சிவககொழுந்தினைச் செனறடை மனனே'என று சுந்தரர் இவ்வூர் வளத்தைச் சிறப்பிக்கிறார். பி.தெ.

*திருத்துருத்தி*: தஞ்சாவூர் மாவட்டத்தில் மயி லாடுதுறையிலிருந்து கும்பகோணம் செல்லும் வழி யில் இன்று குத்தாலம் என்னும் பெயருடன வழஙகும் சிவத்தலமே திருத்துருத்தியாகும். பழங்காலத்தில் காவிரியாறு இரண்டாகப் பிரிந்து இவ்வூரின இருபுற மும் சென்றமையால் திருத்துருத்தி என்று இவவூா பெயர் பெற்றது. காவிரி இப்போது ஆலயத்திற்கு வடக்கே ஓடுகின்றது. இத்தலத்தின் விருட்சம் உத் தாலம். உத்தாலவனம் என்னும் பெயர் குத்தாலம் என மருவியது. இத்தலத்து இறைவன் பெயர் சொன்னவாறறிவார். இறைவியின் பெயா அரும் பனன வனமுலையாள. இத்தலத்தில் இறைவி இறை வனை வழிபட, இறைவன் காட்சியளித்து இறைவி யின் கையைப்பற்ற, அம்மையார் வணங்கி 'விதிப்படி மணம் செய்து கொளள வேண்டும்' எனறு கூற, இறைவன், 'இவ்வுலகின விதியினை யாமே விதித் தோம். அவ்விதிப்படி யாம் நடப்போம்' என்று மொழிந்து இறைவியை மணந்தமையால சொன்ன வாறறிவார் ஆனார் என்பர். அக்கினி தனனால் தீண்டப்பெறும் பொருள்யாவும் அழிவுறுதலால் உல கத்தவர் தன்னைப் பழித்தலைப் போக்கிககொளள இத்தலத்தில் வந்து தவம் செய்ததாகப் புராணம் கூறும். இத்தலம் சோழன ஒருவனின மனைவியுற்ற தொழுநோயைத் துடைத்தது; வருணன் உற்ற பிணி போக்கியது; காமன் இறைவன மீது மலரமபு தொடுத்த குற்றம் நீக்கியது; காசிபன், ஆங்கிரசன கௌதமன், மார்க்கண்டன, வசிட்டன, புலத்தியன், அகத்தியன் ஆகிய முனிவர் எழுவர்க்கும் சீவனமுத்தி நல்கியது; கதிரவனுக்கு இழந்த அதிகாரத்தைத் தந் தது; உருத்திரசன்மன் எனற அந்தணனுக்கு இத் தலம் தன் பெருமையை உணர்த்தியது என்று தல புராணம் இத்தலத்திற்குரிய சிறப்புகளைக் கூறும். சுந்தரமூர்த்தி நாயனாருக்கு உடலில் உறற பிணியை இக்கோயிலின் பதுமதீர்த்தம் அகலச் செய்தது. 'சொனனவாறறிவார் துருத்தியார்'என்றுசுந்தரர் பாடு வார்.திருஞானசம்பந்தர் அருளிய தனிப்பதிகம் ஒன்று, இத்தலத்தை வேள்விக் குடியுடன் இணைத்துப்பாடியு பதிகமொன்றும, திருநாவுக்கரசர் அருளிய பதிகம் ஒனறும். சுந்தரர் வேள்விக்குடியுடன் இணைத்துப் பாடிய பதிகமொனறும், உளளன. மகாவித்துவான் 1602 விருத்தங்களாற் புனைந்த தலபுராணமொனறு இத்தலத்தின் பெருமையுரைக்கின்றது. 'திருத்துருத்தி மேயானைத் தித்திக்கும் சிவபதத்தை' என்பது மாணிக்கவாசகர் மொழியாகும். கு.வெ.பா.

*திருத்துறையூர்*, தேவாரப்பாடல் பெற்ற தலங்களுள் ஒன்று. இவவூரை இப்போது மக்கள் திருத் தளூர் என்று கூறுகின்றனர். தெனனார்க்காடு மாவட்டத்தில் கடலூரிலிருந்து விழுப்புரம் செல் லும் இருப்புப் பாதையில் அமைந்த திருத்தளூர் புகைவணடி நிலையத்திற்கு மேற்கே 3 கி.மீ.தூரத்தில் இவ்வூர் உளளது. இவவூர்க் கோயில் சந்நிதி மேற்கு முகமாக அமைந்துள்ளது. இறைவனின் பெயர் துறை யூர் நாதர். இறைவியின் பெயர் பூங்கோதை நாயகி. பெண்ணையாறு இத்தலத் தீர்த்தமாகும்.

சுந்தரமூர்ததி நாயனார் திருவெணணெய் நல் லூரிலிருந்து திருத்துறையூர் வநது இறைவனிடம தவநெறி வேண்டினார் இது'துறையூர்த் தலைவா உன்னை வேண்டிக் கொள்வேன் தவநெறியே' என்று பதிகம் பாடியருளிய இடம். கனனிப் பெணகள மூழ்கி விளையாடும் ஒரு துறையைச் சார்ந்த ஊர் திருத்துறையூர் எனறு ஊர்ப் பெயர்க்காரணம் காட்டி யுள்ளார். பெணணையாற்றின வடகரையில இவவூர் உள்ளது. சைவ சமய சந்தான ஆசாரியர்களுள ஒரு வரான அருள்நந்தி சிவாச்சாரியார் இவ்வூரில்தான தோன்றினார். பஞ்ச பாண்டவருள் ஒருவரான பீமனும், நவக்கோளகளுள்ஒன்றான சூரியனும இங குள்ள இறைவனை வழிப்பட்டுளளனர் எனத் தல வரலாறு கூறுகிறது.

இககோவில கல்வெட்டுகளில் இறைவன பெயர் தவநெறி ஆளுடையார் எனக் குறிக்கப்பட்டுளளது. சோழா காலக் கல்வெட்டிலும் நாயக்கர் காலக் கல் வெட்டிலும இவ்வூர் திருத்துறையூர் எனறே குறிக கப்பட்டுளளது. இராச நாராயணச் சமபுவராயன காலக் கலவெட்டுகளும் இவ்வூாக் கோயிலில உள. பி.தெ

*திருத்தெங்கூர்* தஞ்சாவூா மாவட்டததிலுளள சைவத் திருப்பதியாகும் திருவாரூருக்குத் தெற்கே 16 கி.மீ தொலைவிலும், திருநெலலிக்காவுக்குத் தெறகே 1 கி.மீ. தூரத்திலும் இத்தலம் இருக்கிறது. இது, காவிரித் தெனகரைத் தலஙகளுள் 116-ஆம் தல மாகும்.

ஊரின் பெயர் தெஙகூர் என்றே சமபநதர் தேவாரத்தில் காணப்படுகிறது. சுந்தரர் ஊர்த் தொகையில தேஙகூர் என்று குறிப்பிட்டுளளார். 'நாஙகூருறைவாய் தேங்கூர் நகராய் நல்லூர் நம் பானே' என்பது அவர் வாக்கு. தலபுராணத்திலும்

தேஙகூர் என்று இவவூர் வழஙகப்பெறுவதால இதுவே சரியான பெயராக இருககவேணடும.

இறைவரின திருபபெயா வெளளிமலைநாதர். இவவூர்த திருபபதிகததின ஒவவொரு பாடலிலும் 'வெளளியஙகுன்றமர்நதாரே' எனறு இறைவா திருப் பெயரைக குறிபபிட்டுளளாா சம்பநதா. இறைவி யாரின திருபபெயா பெரியநாயகி. தீாததம சிவ கஙகைத் தீர்ததம்.

திருமகளும நவககோளஙகளும பூசித்துப பேறு எயதினா திருமகள வழிபட்ட இலிஙகம அததிரு மகள சநநிதிக்கு எதிரில இருககினறது. இதறகு ஞான சமபநதா பதிகம் ஒனறு உளளது. நவககிரகஙகள பூசித்தனவெனச சொல்லபபடும் இலிஙகஙகளும் உணடு. திருச்சுறறில ஒனபது இலிஙகஙகள காணப படுகினறன.

இவ்வூரிலிருநது ஐநது கல்வெட்டுகள் படியெடுக் கபபட்டுளளன. அவறறுள சோழாகட்கு நானகும பாணடியாக்கு ஒனறும உள. இககலவெட்டுகளில இறைவன பெயா வெளளையன குனறமுடையார் எனறு குறிக்கப்பட்டுளளது. இரா.பா.

***திருத்தெளிச் சேரி***: இததலம தேவாரப பாடல பெறற தலஙகளுள் ஒனறாகும. காரைககால புகைவண்டி நிலையததிலிருநது வடமேறகே 1கி மீ. தூரத்திலுள்ளது. காவிரிக்குத் தெனகரையிலுள ள 50–ஆம தலமாகும்.

இறைவனின் பெயர் பாாவதீசுரர். இறைவி பெயர் சததியம்மை. தீாததம சகதி தீர்ததம.பஙகுனி மூனறாம் நாள முதல பதது நாட்களுககுச் சூரியனு டைய கிரணஙகள சுவாமிமேல விழுகினறன.

இவ்வூருக்கு அணமையில போதிமஙகை எனனும் ஊர் இருககினறது. அவவூரில பௌத்தர்கள வசிதது வந்தனர். அவ்வூர் வழியாக ஞான சமபந்தரின அடியார் கூட்டம 'பரசமய கோளரி வந்தார்' எனறு முத்துச் சினனங்களை ஊதிச சென்றது. அதைப் பொறாத பௌத்தாகள தடுத்தனா. அப்பொழுது தேவாரத திருமுறையெழுதும சம்பந்த சரணாலயர் 'புத்தர் சமணகழுக் கையர் ..' எனத் தொடஙகும் பஞ்சாட்சரப் பதிகத் திருப்பாட்டை ஓத, பௌததர் கள தலைவனான புத்தநந்தி தலையில இடிவிழுநது இறநதான். மீணடும் பௌத்தர்கள் சாரிபுததனைத் தலைவனாகக் கொணடு வாதிறகு வநதனா. சமபநத சரணாலயர், ஞானசம்பந்தர் முனனிலையில அவர் களை வாதில் வென்று சைவர் ஆக்கினார் எனபது வரலாறு. கோயில மேற்குப் பார்த்த சந்நிதியை உடையது. இத்தலத்திற்குச் சம்பந்தர் பாடல் உண்டு. இரா.பா.

***திருத்தெற்றி அம்பலம்*** வைணவாகளுடைய நூறறெட்டுத் தலங்களுள ஒனறான இது சோழநாட டுததலஙகள நாறபதினுள அடஙகும் இது சீாகாழிககுக கிழககே 8 கி மீ தூரததில அமைநதுளளது இஙகே செங்கணமால எனற திருநாமம உடைய எமபெரு மான நானகு திருககரஙகளுடன கிடநத திருககோலத தில உளளான இறைவியின பெயா செஙகமலவலலி நாசசியாா. இததலத்தைத் திருமஙகை ஆழவாாபத துபபாசுரங்களால (பெரிய திருமொழி 4-4) பாடியுள ளார் இப்பத்துப் பாசுரங்களிலும் முன இரணடு வரி களில இவவூா எமபெருமானையும், பின இரணடு வரிகளில இவவூரின வளததையும திருமஙகையாழ வாா மிக அழகுறப பாடியுளளது குறிபபிடததக்கது எம ந

***திருத்தென்குடித்திட்டை:*** தஞசாவூா மாவட டத்தில தஞ்சைநகாககு அருகில தஞசாவூா மிலட்டூர் வழியில அமைநதுளளது திருததெனகுடிததிட்டை எனனும சிறறூா. இவவூர் ஒரு சைவத்தலம் சிதம பரம், திருககழுககுனறம, திருவணணாமலை, திரு வாரூர், திருவையாறு முதலிய இருபததெட்டு சுயம புததலஙகளுள இததலமும ஒனறாகும. வடமொழி யில அமைநத காநத புராணததின சனதகுமார சஙகிதையில இததலததின சிறப்புகள் கூறபபடு கினறன. அபபுராணம் சிவபெருமானது ஐநதெழுத்து மநதிரத்தின நூறறு இருபது பிரிவுகளையும, அவை சிவபெருமானின திருமேனி உறுப்புகளாய அமையும சிறப்பினையும் கூறுகினறது. ஆதிசைவர் முதலான ஐநதுவித சைவர்களின இலககணஙகள, கோயிலொ ழுகு முறைகள, தெய்வஙகளைப போற்றி வழிபடற் குரிய மந்திரங்கள ஆகியனவும இப்புராணத்தில கூறப படுகினறன. வெளளம் மிக்க காலததில சிறு திட்டாக விளஙகிய இபபகுதியில் சிவபெருமான சுயமபுவாக வெளிப்பட்டு அனபாகளைக் காத்தாா எனறு கூறுகினறனர்.

இத்தலததில் தாயின் சாபம் நீஙக யமனும, பிரம்ம வித்துக்களுள சிறந்தவராக வசிட்டரும், தநதையின் சாபத்தால் ஏறபட்ட பாமபுருவம் நீஙக முருகனும், பிரமன தலையைக கிளளிய குற்றம் நீஙகப பைர வரும்,இழநத படைப்பாறறலை மீணடும பெறப பிர மனும்,மதுகைடபர்களை வதம் செய்தவினை ஒழியத திருமாலும் தவம் செய்தனர் எனபர். சுமாலி என பவனது இரதம் அழுந்தியமையால் இப்பதி இரதபுரி என்றும் பெயர் பெறுமெனபர் இத்தலத்தின தீர்த்தம் 'சூலதீர்த்தம்' என்ற பெயருடையது. இறை வன் பசுபதீசுவரர்; இறைவி உலகநாயகி.

கு வெ.பா,

*திருத்தென் குரங்காடுதுறை:* இது, பாடல் பெற்ற, காவிரியின் தென்கரைத் திருத்தலங்களுள 31-ஆம் தலமாகும். காவிரியின் தென்கரையில் இருப்பதால் 'தென்குரங்காடுதுறை' எனப்பெயர் பெற்றது (காவிரியில் வடகரையில் இருப்பது 'வட குரங்காடு துறை'.) இப்போது, அது 'ஆடுதுறை' என்றே சொல்லப்படுகிறது. கும்பகோணத்தினின்றும் மயிலாடுதுறை செல்லும் வழியில்,இது திருவிடைமருதூருக்குக்கிழக்கே 4 கி.மீ. தொலைவில் புகைவண்டி நிலையத்துடன் உள்ளது; வடகுரங்காடுதுறைக்கு வடகிழக்கில் உள்ளது; வாலி, சுக்கிரீவன பூசித்துப் பேறு பெறறதலம்; மிருகணடுமகரிசி பூசித்தது. சுவாமி பெயர் ஆபத்சகாயர், ஆபத்சகாயேசுவரர். அம்பிகையின் பெயர் பவளக் கொடியம்மை, வண்டார் கருமென்குழல் மஙகை. தீர்த்தம், காவிரி. உத்தம சோழனின் தாய் செம்பியன மாதேவி, இக்கோயிலைக் கற்றளியாக எடுப்பித்தார். இதனை, இக்கோயிலிலுள்ள கல்வெட்டு கூறுகின்றது.

இக்கோயிலில், பாண்டியர்கள் கல்வெட்டு 2, சோழர் கல்வெட்டு 13 ஆக 15 கல்வெட்டுகள உள்ளன. இவை படியெடுக்கப்பட்டும் உளளன. இதில் உள்ள ஒரு கல்வெட்டில் இவ்வூருக்கு அணமையில் உள்ள மருத்துவக்குடி இடம் பெறறுள்ளது. இது, கல்வெட்டில் குறிக்கப்படும்போது, பூபாலகுலவலலி நாட்டுத் திரைமூர் நாட்டுத் திருக் குரங்காடுதுறை என்று பேசப்படுகிறது. இங்கு, வாழைகள் சிறப்பு.இச் சிவத்தலத்திற்கு, 'பரவக்கெடும் வல்வினை ..' எனத் தொடங்கும் திருஞான சம்பந்தா திருப்பதிகம் ஒன றும், 'இரங்காவன் மனத்தார்களியஙகு ..' எனத தொடங்கும் திருநாவுக்கரசர் திருககுறுநதொகை ஒன்றும், ஆக இரண்டு பதிகஙகள இருக்கினறன.

ஞானசம்பந்தரின பதிகம் 2-ஆம் திருப்பாட்டில அம்மை பெயர், 'வணடார் கருமென குழல மஙகை' என்று குறிப்பிடப்பட்டிருப்பது காணத்தக்கது.

வீ.சொ.

*திருத்தேவனார் தொகை* வைணவாகளுடைய நூற்றெட்டுத் திருத்தலஙகளுள ஒனறு. சோழநாட்டில் சீர்காழிக்குக் கிழக்கே 6 கி.மீ. தொலைவில் உள்ளது. துருவாச முனிவர் சாபத்தால இழந்த செல்வங்களை எல்லாம் திரும்பப பெறுவதறகாகத் தேவர்கள் எல்லோரும் இங்குக் கூடி ஆலோசனை செய்தனரெனப் புராண வரலாறு கூறுகிறது. அதனால், இத்தலத்திற்குத் திருத்தேவனார் தொகை என்பது பெயராயிற்று. இஙகுக கோயில் கொணடுளள எம்பெருமானுக்கு மாதவப் பெருமாள் எனறும, தாயாருககுக் கடல்மகள நாச்சியார் என்றும் திருநாமம். இத்தலத்தைத் திருமங்கை ஆழ்வார் பத்துப் பாசுரங்களால (பெரிய திருமொழி 4-1) பாடியுள்ளார்.

எம்.ந.

*திருத்தேவூர்* தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள தேவாரப் பாடல் பெற்ற தலமாகும். கீழ்வேளூர்ப் புகைவணடி நிலையத்திறகுத் தெற்கே 3 கி.மீ. தொலைவில் இவ்வூர் உளளது. இஙகுள்ள கோயில் ஆதீச்சுரம் எனப்படும். இது ஒரு கட்டு மலைககோயில. இறைவன் தேவபுரீசர். இறைவி மதுர மொழியம்மை. தலமரம் வாழை. திருஞானசமபந்தா இவவூா குறித்து இரணடு பதிகம் பாடியுளளார். சடாவர்மன் சுநதர பாண்டியன காலக் கல்வெட்டுகள் இங்கு உள.

பி.தெ.

*திருத்தொண்டத் தொகை:* இதுசுந்தரரால் அருளப்பெறறது. பதினொரு திருப்பாடல்களை யுடைய இப்பதிகம் ஏழாம் திருமுறையில் இடமபெற றுள்ளது. திருவாரூர்த தேவாசிரிய மணடபததே வீறறிருநத அடியார் பெருமககளைக கணட சுநதரர், இவர்கட்கு அடிமையாகும் நாள எந்நாளோ? என னும மனக்கருததுடன ஒருவாறு ஒதுஙகித திருக் கோயிலின் உட்சென்று இறைவனை வணஙகினாா. இவாதம் குறிப்பு இதுவாக, அஙகிருநத விறல்மிண்டர் அடியவர்களினின்றும் ஒதுங்கிச் செல்லும் அடிமைத் திறன தவறெனக கருத, அக்குறிபபைத திருவருளால உணாநத சுந்தரா அடியவர் பெருமையினை எவ் வளவில அறிநது எவ்வாறு பாடுகேன்? என, இறைவன அடியவர் பெருமையினை உணர்த்தித் 'தில்லை வாழ அநதணர்' என அடியெடுததுக் கொடுததார். அவ்வருட் பெருக்கால் எழுநததே இததிருத்தொண டத் தொகையாகும.

இததிருததொணடத் தொகை 'தொகை' எனவும இதனை ஒட்டி எழுநத நமபியாணடாா நம்பியின திருத்தொணடர் திருவநதாதி 'வகை' எனவும, இவ விரணடையும பறறி எழுநத திருதத்தொண்டர் புராணம் 'விரி' எனவும குறிக்கப்பெறும். சுநதரரின தோற்றம் இததிருததொணடத் தொகை எழுதறகே யாம எனபா சேக்கிழார்.

இத்திருததொண்டத் தொகையில போறறப் பெறறிருக்கும அடியவர் இருவகையினா. அவர்கள தொகையடியார் எனறும், தனியடியார் என்றும் குறிக்கபபெறுவர். தனியடியாராகக் காணபபடுபவர் அறுபதது மூவராவா. தொகையடியாராகக காணப் படுபவா ஒனபதினமர் ஆவா. இவர்களைப் பாராட்டிப் போற்றும் பாஙகு பல்திறத்தனவாகும். அடியவர் களின் பெயர் மட்டிலுமே எடுத்துப போற்றுதலும்

உணடு அவா தோனறிய ஊருடன இணைததும, அவா செயத அரும செயலுடன இணைததும அவா தம் குறிககோளுடன இணைததும பலவாறு போற்றப்பெறறுள்ளனா.

தம் காப்பியத தலைவராய சுநதரரின தோறறததைத திருமலைசசருககம எனும பகுதியில அமைததுக கூறிய சேககிழாா, இத திருததொணடத தொகையில காணும பதினொரு பாடலகளில அமைந்த முதற்குறிப்புகளையே பதினொரு சருககங்களின பெயாகளாக அமைதது, நிறைவாக அவர் பேரினபப பெருவாழவு பெறற பகுதியை வெள்ளானைச சருககம என அமைததுப பதினமூனறு சருககங்களில தம காபபியததை நிறைவு செயதுள்ளாா

திருத்தொணடத தொகையின பாடலதொறும அமைந்த நிறைவுத தொடா 'ஆரூரன ஆரூரில அமமானுககு ஆளே' எனபதாகும கு.சு.

***திருத்தொண்டர் திருவந்தாதி***: திருததொணடத தொகையில காணும் திருத்தொணடாதம் வரலாற்றுக குறிபபினை இநநூல சுருஙகக கூறுகினறது கட்டளைக கலிததுறையால ஆயது; அநதாதித தொடை அமைய நிற்பது.

திருததொணடர் வரலாறறினைத தொகை, வகை, விரியாய்க் கூறும நூலகளுள இது வகை நூலாய் அமைநதுள்ளது. இதனை அருளியவர் நம்பியாணடார் நம்பிகள என்பா. திருநாரையூர்ப பொலலாப் பிள்ளையாரிடத்துப பததிமை பூணடு ஒழுகியவர் இவா, அபபெருமானின் அருளால திருத்தொணடர் தம் பெருமையையும் இநநூல செய்யும அருமையையும் பெற்றாா. திருததொணடத் தொகையின வழிநூலாகிய இநநூலையும் துணைககொணடே சேக்கிழார் தம் திருததொணடா புராணததை அருளினர். இந்நூல் எண்பததொரு பாடல்களை உடையது. திருததொணடத தொகையின பாடலதொறும 'ஆரூரன ஆரூரில அம்மானுக்கு ஆளே' என வரும் இறுதித தொடரை நினைவுகூர்நத இவர், தம திருவநதாதியிலும் அவவச சருக்கந்தொறும அடியாாகளின வரலாற்றைக கூறியபின சுந்தராதம வரலாற்று நிகழ்ச்சிகளைக் குறிததுப் போறறியுள்ளாா்.

அடியவர் ஒவ்வொருவரையும் ஒவ்வொரு பாடலால நினைவு கூரும் இவர் அப்பரடிகள, ஞானசம்பந்தர், சேரமான பெருமாள் நாயனார், கோசசெங்கட்சோழர் ஆகிய நாலவருக்கும் மட்டில இரணடிரணடு பாடலகளில் அவர்களின வரலாறுகளை நினைவு கூரகின்றார். ஒருபாடல் திருத்தொணடத் தொகையில காணும தனியடியாா, தொகையடியாா ஆகியோாகளைக குறிககினறது ஒரு பாடல திருநதொண்டத தொகைப பாடலகளின முதறகுறிப பினை அடுககிக கூறுகினறது ஒருபாடல இநநூலைப் பயிலவாாககு வரும பயனைக குறிபபிடுகினறது இநநூல பதினோராம திருமுறையைச சாாநததாகும கு சு.

***திருத்தொண்டர் புராணம்***: காணக: பெரிய புராணம

***திருத்தொண்டர் மாலை*** ஒரு வெணபாவின பினனீரடிகளாக ஒரு திருககுறளை அமைதது, அவவெணபாவின முனனீரடிகளில, யாதானுமொரு புராண, வரலாறறு நிகழசசிகளைச சானறாக அமைதது, அககுறளை விளககிப பாடும் மரபு பிறகாலததில தோனறியது அவவகையிலமைநத நூலகளுள ஒனறு திருததொணடா மாலை இதன பாடலகள வெணபாககளால் ஆயினமையால இதனைத திருத்தொணடா வெணபா எனறும சிலா கூறுவா இநநூல, புதுவையைச சோநத குமாரபாரதி எனபவரால் இயற்றப பெறறது எனறு கூறுகினறனா பெரியபுராணததிலுள்ள நாயனமாா ஒவவொருவா வாழவிலும, அமைநது காணும நீதியினை ஒரு திருககுறளோடு பொருநத அமைதது, அவவகையில 100 வெணபாககளால இதனை இயறறியுள்ளாா பெரிய புராணததில இடமபெறற நாயனமாாகள வரிசையில நூலை அமைததிருபபதால, குறள வரிசையில நூல அமையவிலலை. இதன காலம கி பி 19 ஆம நூறறாணடின பிறபகுதியாகும அ மா.ப.

***திருதராட்டிரன்*** சநதிர வமிசதது மனனருள சந்தனு எனபானும ஒருவன இவன முதல மனைவியாகிய கஙகையிடம் தேவவிரதன (வீடுமா) எனபானும இரணடாம மனைவியாகிய பரிமளகநதியினிடம சிததிராஙகதன, விசிததிர வீரியன எனனும இரணடு குமாரர்களும பிறநதனர். தேவவிரதன தநதையின பொருட்டுக் கடுமையான விரதம மேறகொணடு திருமணமின்றி, பிரம சாரியாகவே இருநது விட்டான சிததிராஙகதன காட்டில வேட்டையாடுகையில ஒரு கநதருவனால கொலையுண்டு இறநதான விசிததிர வீரியன் காசிமனனனின புதலவியரான அமபிகையையும் அம்பாலிகையையும் மணந்தான. மககட்பேறு அடைவதற்குள விசித்திரவீரியன விணணுலகு அடைநதான். வியாச முனிவரின் அருளால் அம்பிகையினிடததில் திருதராட்டிரனும் அம்பாலிகையினிடததில பாணடுவும் தோனறினர். திருதராட்டிரன பிறககும் போதே குருடனாகப் பிறந்தான; குருடனாக இருநத

படியால் தம்பி பாண்டுவின் உதவியுடனே குருநாட்டை ஆண்டு வந்தான்.

காந்தாரநாட்டு அரசன் சுபாலன் மகள் காந்தாரியைத் திருதராட்டிரன் மணம் புரிந்தான். காந்தாரி உருத்திரனை வணங்கிப் பெரும்பேறு பெற்றவள். கணவனுக்கு இல்லாத கண் தனக்கும் வேண்டாம் எனக் கூறித் தன்னுடைய கண்பார்வை தெரியாதவாறு கண்ணைத் துணியால் கட்டி மறைத்துக் கொண்டாள். காந்தாரியுடன் பிறந்த பத்துக்கன்னியர்களையும் திருதராட்டிரன் மணந்து கொண்டான்.' காந்தாரியின் சகோதரன் சகுனியாவான். திருதராட்டிரன் மனைவி காந்தாரிக்குத் துரியோதனன் முதலாக துட்பராசயன் ஈறாக நூறு ஆண்மக்கள் வியாசர் அருளால் பிறந்தனர். அவர்களே கௌரவர்கள் எனச் சொல்லப்பட்டார்கள். துச்சளையென்ற பெண்மகளும் உண்டு. திருதராட்டிரனுக்கும் வணிகப் பெண்ணொருத்திக்கும் பிறந்த மகன் உயுத்துசு என்றழைக்கப்பட்டான்.

பாண்டு இறந்த பிறகு தன் மக்களோடு பாண்டவர்களையும் சேர்த்துக் கல்வி, படைக்கலப் பயிற்சி போன்றவற்றைக் கற்க ஏற்பாடு செய்தான். தீய குணங்கள் நிறைந்த துரியோதனன் பாண்டவர்களுடன் முரண்பட்டு, அவர்களைப் பல வழிகளில் துன்புறுத்தி வந்தான். துரியோதனன் மேலுள்ள அன்பால் அவனைத் தட்டி வளர்க்காமல் துரியோதனன் சூழ்ச்சிகளுக்கு இவனும் உடந்தையாக இருந்தான்.

இந்திரப் பிரத்தத்திலிருந்து பாண்டவர்களை அழைத்துவந்து சகுனியுடன் சூதாடச் சூழ்ச்சி நடத்தினான் துரியோதனன். திருதராட்டிரனும் இதற்கு ஆதரவாகவே இருந்தான். சூதாட்டத்தில் பாண்டவர்கள் அடிமைப்பட்டு நாட்டையிழந்து வனவாசம் சென்றனர். வனவாசம் முடிந்து வரும் பாண்டவர்கள் மனம்மாறி மறுபடியும் வனவாசம் மேற்கொள்ள, சஞ்சயன் என்பவன் மூலம் திருதராட்டிரன் தூது போக்கி முயற்சி செய்தான். பாண்டவர்கள் உரிமை வேண்டிப் பாரதப் போரில் ஈடுபட்டனர். போர் நிகழ்ச்சிகளைச் சஞ்சயன் திருதராட்டிரனுக்கு நாள் தோறும் தெரிவித்து வந்தான். பதினெட்டு நாள் போர் தொடர்ந்து நடைபெற்றது. போரில் துரியோதனன் இறந்த செய்தியினை அறிந்த திருதராட்டிரன் மனம் சோர்கின்றான். எனினும் தன்னை நாடிவந்த தருமனுக்கு முடிசூட்டிவிட்டுச் சில ஆண்டுகள் தருமபுத்திரனுடன் இருந்துவந்தான்.

பின் தவவாழ்வை வேண்டிக் காந்தாரியுடனும் குந்தவியுடனும் வியாசரை நாடிச் சென்றான். விதுரனும் சஞ்சயனும் திருதராட்டிரனுடனே சென்றனர். வியாசரிடம் தீட்சை பெற்றுச் சதயூபன் என்ற முனிவர் ஆசிரமத்திற்கு இவர்கள் திரும்பினர். அந்த ஆசிரமத்திலேயே தவவாழ்வை மேற்கொண்டனர்.

இவ்வாறு கானக வாழ்க்கையில் இருக்கும்போது ஒருநாள் காட்டுத்தீ சூழ்ந்துகொள்கிறது. சஞ்சயனைத் தப்பிச் செல்லும்படி திருதராட்டிரன் கூறுகிறான். நீர், நெருப்பு, காற்று, உண்ணாமை இவற்றால் நேரும் மரணம் தவசிகளுக்கு உரியதாகும் என்று சஞ்சயன் எடுத்துரைக்கிறான். திருதராட்டிரனும் காந்தாரியும் குந்தவியும் கிழக்கு முகமாக உட்கார்ந்து காட்டுத் தீயில் அழிந்து, மேலான வாழ்வைப் பெறுகின்றனர். திருதராட்டிரன் இறந்த விவரத்தை மற்றவர்களுக்குத் தெரிவித்து விட்டுச் சஞ்சயன் தவஞ்செய்வதற்காக இமயமலைச் சாரலுக்குச் செல்கிறான். இறப்பிற்குப் பின் குபேரனின் இயக்கர் தலைவனாக இருக்கப்போகும் செய்தியினைத் திருதராட்டிரன் நாரதர் மூலம் அறிந்திருந்தான்.

இரா.பா.

**திருந்து தேவன்குடி** என்னும் திருவூரில் அமைந்த திருக்கோவில், திருவிடைமருதூர்ப் புகைவண்டி நிலையத்திலிருந்து 6 கி.மீ. தொலைவில் உள்ளது. கும்பகோணத்திற்குத் தென்கிழக்கே ஆறு கி.மீ. தூரத்திலுள்ள திருவியலூருக்குச் சென்று அங்கிருந்து வடக்கே ஒரு கி.மீ. சென்று இக்கோவிலை அடையலாம். நண்டு பூசித்த திருக்கோவில் ஆதலால் நண்டாங்கோவில் என மக்கள் வழங்குகின்றார்கள். திருந்துதேவன்குடி என்னும் ஊர் இக்காலத்தில் இல்லை. கோவில் மாத்திரமே உள்ளது. ஊர் இருந்த இடம் நன்செய் நிலங்களாக உள்ளது. கோவிலைச் சுற்றி மூன்று பக்கமும் அகழிகள் உள்ளன. கருவேல மரக் காட்டில் உள்ள பெரிய சிவாலயம் இடிபாடுகளுடன் விளங்குகின்றது. சுவாமி, அம்பாள், கருவறைகள், முன்மண்டபம் ஆகியன மட்டுமே இப்பொழுது உள்ளன.

தேனும் வண்டும் இசைபாடும் தேவன்குடி என்ற தேவாரத் தொடருக்கேற்பத் தேனீக்களின் ஒலி இடையறாது கேட்டுக்கொண்டே இருக்கின்றது. சுவாமி சுயம்புமூர்த்தி; நண்டுக்கு அருள்புரிந்த பெருமையை உடையவர். இந்த வரலாற்றுக் குறிப்பினை முன் மண்டபத் தூணில் அமைத்திருக்கின்றார்கள். இந்திரன் நாடோறும் இத்தலத்தினைச் சூழ்ந்த அகழியில் பூத்த ஆயிரத்தெட்டுத் தாமரை மலர்களைக்கொண்டு இறைவனை அருச்சித்து வழிபட்டு வந்தான். நாடோறும் ஒருபூக் குறைவதைக் கண்ட இந்திரன் காரணம் புரியாது அகழியைத் தானே காவல் புரிந்தான். ஒரு

தாமரை மலா நீரில அமிழவதையும, அதை அடுததுக குமிழியாயத தோனறுவதையும கண்டான. பின அத் தாமரை இறைவன திருமுடிமேல் இருப்பது காணப் பட்டது. இது எவவாறு நிகழகினறது என்றறிய விருமபிய இந்திரனுககு நணடொனறு தமமையும் விநாயகரையும தாமரை மலரால் வழிபடுவதையும இறைவன தெரிவிததாா. நணடுககு முத்தி கொடுத ததை நினைவுகூர இலிஙகததில நணடுககருளபுரிநத துளை இருககிறது. மழை வேணடுங காலங்களில் விசேட அபிடேகம செயது இத்துளையைத தணணீ ரால் நிரப்பினால மழைபெயயும் எனபது கூறபபடுகி றது ஒரு நிறபபசுககளின பாலபததுக்கலம அபிடேகம செயதால சிவலிங்கததின முடியில ஒரு பொன நணடு ஊாநது வெளியில் வநது காட்சி தரும எனறு கூறு கினறனா. இபபாணலிஙகம முனபக்கம வெட்டுணடது போலும் பாதியாகக காட்சி தருகினறது. ஒரு அரசன் நோயால் துனபப்படுகையில இவவூர் இறைவர் விருத் தர் போல வநது நோயைக குணப்படுதததி மேலும உளள நோயககும மருந்து தருவதாகச் சொல்லி இலிஙகம புதைத்துளள இடத்தை வெட்டச செய்த போது இரத்தம பீறிடடு இலிஙகம் தோனற, அரசன திருப்பணி செயதான. திருசசுறறில பெரியா நஙகை மருநதுச் செடிகள நிறைய உளளன. அருமருந் தம்மை, அபூர்வநாயகி எனற இரு அமமை சநநிதி கள உளளன சு. சு.

**திருநணா**: இது கொஙகு நாட்டிலுள்ள பாடல் பெறற ஏழு தலஙகளுள் ஒன்று. இத்தலத்தை வழி படுவோர்க்கு யாதொரு தீங்கும நணணாது. ஆதலின, நணா எனற காரணப் பெயர் ஏறபட்டது அததுடன் திரு எனனும அடைமொழி சோத்துத திருநணா எனறாயிறறு. இத் தலததிறகுத தலவிருட்சம் இலந்தை. ஆகவே பதரிவனம் எனறும ஒரு பெய ருணடு. (பதரி-இலந்தை). பவானியாறு காவிரியொடு கலக்கும் இடமாதலின மக்கள் இவவூரைப் பவானி யெனறே இப்பொழுது வழஙகுகினறனர். மேலும் பவானி கூடல எனறும ஒரு பெயர் வழங்கப் பெறு கிறது. ஈரோட்டிலிருந்து 15கி மீ. தொலைவில இவ்வூர் உள்ளது. சங்க நூல்களுள பவானியாறு வாணி என்று வழங்கப் பெறுகிறது. வானி எனபது பின்னர் வாணி என்று வழஙகிற்றாதலின அருணகிரிநாதர் 'திருவாணி கூடற் பெருமாளே' என இத்தல முருகனைப் போற் றிப் பாடியுள்ளார்.

இத்தலத்திற்குச் சம்பந்தர் பதிகம் ஒனறு மட்டும் உணடு. இத் தலப் பெருமான் பெயர் சங்க முகநாதர். அம்பிகை பெயர் வேதநாயகி அம்மை. விசுவாமித் திரர், குபேரன், பராசர முனிவர் முதலியோர் இத் தலத்தினை வழிபட்டுப் பேறு பெற்றனர் என இவ் வூாத தல புராணம கூறுகிறது. பவானி நதியும காவிரி நதியும் கூடுமிடததில திருக்கோயில அமைந துளளது அமுதநதி எனபபடும் ஒரு தீாத்தம பூமி அடியிலிருநது இவவிடததுக கலப்பதாகவும அதனால பவானி முககூடல எனற பெயா வழஙகலாயிறறு என வும் ஆனறோா கூறுவா. இநத சஙகமுகத்துறை ஒரு புணணியத தீாததமாகும் இயற்கைக காட்சிகளும நிறைநதுளளன.

செட்டி பாளையம விததுவான வாசுதேவ முதலி யாா எனபவா 100 ஆணடுகளுககு முன இவவூருககுத் தலபுராணம ஒனறு இயறறியிருககிறார் அது 18 சருக் கஙகளையுடையது, 901 பாடலகளையுடையது. அந் நூல இபபோது கிடைபபது அருமை

'புலியும் மானும, அலலாத சாதிகளும அம கழல மேல கை கூபப அடியார் கூடிச, செலலா அரு நெறிக்கே செலல அருள புரியும்திருநணாவே' எனபது சமபநதர் திருவாக்கு.

ஆங்கிலேயர் ஆட்சிக காலததில் ஒரு ஆஙகில அதிகாரிக்கு இததல அமமன கனவில தோனறி ஒரு ஆபததினின்றும காப்பாற்றியதால் அவனால அன் பளிபபாகக் கொடுககப் பெறற பலலககு ஒனறு இப போதும் உளளது இவவாறு பல சிறப்புகளைக் கொணடது இத தலமாகும். இரா.ச.

**திருநல்லம்** எனற திருவூா கோனேரிராயபுரம எனறு இப்பொழுது வழஙகப் பெறுகின்றது. கோனேரினமைகொணடான எனற கோமான பெய ரிலே எழுநத ஊர்கள பல அவற்றுள ஒனறு இவவூர். கும்பகோணம்-காரைக்கால வழியில் இது புதூருககுத தெறகே மூன்று கிலோமீட்டரில் இருக்கிறது; ஆடு துறைக்கு அருகே உளளது; திருவிடைமருதூருககுத தென்கிழக்கிலுள்ளது.

'நாதன் மேவிய நலலம் நகாதொழப் போதுமின' எனஅப்பரடிகள அழைபபார். 'நமையாள்வான நல்லம் நகரானே' என ஞானசமபந்தர் கூறுகின்றார். இறை வர் உமாமகேசர்; இறைவி மங்களநாயகி. சுவாமியும் அம்மனும் ஒருவரை ஒருவர் பார்க்குமாறு சநநிதி அமைந்திருப்பது இக்கோவிலின்தனிச்சிறப்பு.இது உமா தேவியும் தேவர்களும் பூசித்த தலம். சோழப் பேர ரசியான செம்பியன் மாதேவியார் இவ்வாலயத் திருப் பணிகள் செய்திருககின்றார்கள. இந்த அரசியார் வழிபடுவதையும் இக்கோவிலில் சிற்ப வடிவத்தில் காணலாம். சண்டேசுரரிடம் வணங்க வரும்போது மேற்புறச் சுவரில் கண்டராதித்த சோழரது சிலை அமைக்கப்பட்டுள்ளது.

இங்குள்ள நடராசர் மிகமிகப் பெரிய வடிவத்தினர். திருவாசியுடன் சேர்த்து எட்டடி உயரத்தில் இருப்பதோடு மட்டுமல்லாமல் என்று வந்தாய் என்று அழைக்கும் சாந்தம் நிறைந்த திருமுகமும் புன்னகை இதழும் தூக்கிய திருவடியும் அருட்கையும் சிறிதும் வளைவு நெளிவுகள் இல்லாமல் இருப்பதைக் கண்டு அகமகிழலாம். பொதுவாக மக்களின் காலையோ கையையோ தடவிப் பார்த்தால்மேலிருந்துகீழேதடவினால் மென்மையாகவழவழவென்றிருக்கும்; கீழிருந்து மேல்நோக்கித் தடவினால் சொரசொரவென்றிருக்கும். இந்த நுட்பத்தைக் கூடச் சிற்பி இத்திருவடிவத்தில் காட்டி இருக்கின்றான். ஒரு மெல்லிய ஆடையை தூக்கிய திருவடியின் பேரில் மேலிருந்து கீழும் கீழிருந்து மேலுமாக ஓடவிட்டுப் பார்த்தால் இதன் உண்மை அறியலாம்.

இந்த நடராசர் வடிவத்திற்குப் பக்கத்தில் திரிபுராந்தகர் வடிவம் அமைந்திருக்கின்றது. மூன்றரை அடி உயரத்தில் நல்ல வாளிப்பாக அமைந்த உருவம். ஒரு காலை அழுத்தமாக ஊன்றி மற்றொரு காலை வளைத்து நிற்கின்ற நிலையில் உடலை வளைத்துத் தலையை நிமிர்த்திப் புன்னகை தவழ வடிவத்தைச் சிற்பி அமைத்துள்ளான். மணக்கோல நாதரும் சிறப்புடன் விளங்குகின்றார். இக்கோவில் கல்வெட்டு, ஆலயப் பணியாளர்களுக்குத் திட்டமிட்ட ஊதியம் அளித்தல் முதலிய அமைப்புகளைக் கூறுகின்றது. இசை உலகில் பெயர்பெற்ற கோனேரிராசபுரம் வைத்தா என்பவர் இவ்வூரினரே. சு.சு.

**திருநல்லூர்** தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணம்–தஞ்சாவூர் பேருந்து வழியில் வாழைப்பழக் கடை என்னும் ஊருக்குத் தென்மேற்கே ஒரு கிலோ மீட்டர் தொலைவில் இருக்கும் தேவாரத் திருப்பாடல்பெற்ற திருவூராகும். இவ்வூரைக் குறித்த வரலாறுகள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் திருப்பதிகங்களாலும் பெரியபுராணத்தாலும் கமலை வைத்தியநாத தேசிகரால் இயற்றப்பெற்ற திருநல்லூர்ப்புராணத்தாலும் கல்வெட்டுகளாலும் அறியக் கிடக்கின்றன. திருக்கயிலாயம் என்று சிறப்பித்துக் கூறும் திருவூர்களுள் இதுவும் ஒன்று.

கோச்செங்கட் சோழன் திருப்பணியாகிய மாடக் கோவில் இங்குளது. இத்திருக்கோவிலில் விளங்கும் பெருமான், பொன் மயமான ஒளியோடு திகழ்கின்றார். மூன்று மணிக்கு ஒருமுறை நிறம் மாறி ஐந்து வண்ணங்களோடு காட்சியளிக்கும் இப்பெருமான் பஞ்சவருணேசுவரர் என்னும்பெயர் பெற்றார். அகத்தியருக்குத் திருமணக் கோலக் காட்சி தந்தருளிய தலங்களுள் இதுவும் ஒன்று. மூலதானத்திற்குப் பின்புறம் இறைவன் சுதையுருவில் மணவாளக் கோலத்தோடு விளங்குவதையும், இரு புறங்களிலும் பிரமன் திருமால் ஆகியோர் வழிபடுதலையும், ஒருபக்கத்தில் அகத்தியர் தரிசிப்பதையும் காணலாம். இறைவர் திருப்பெயர் கலியாணசுந்தரர். பிருங்கி முனிவர் வண்டு வடிவத்தோடு வழிபட்ட காரணத்தால் உண்டானதுளைகள் இலிங்கத்தில் உள்ளன. கவசம் போட்டுத்தான் இங்கு அபிடேகம் செய்யப்படுகிறது. பழச்சாறுகளின் அபிடேகம் இம்மூர்த்திக்கு உகந்ததாகும். அப்பரடிகளுக்கு இறைவன் திருவடிசூட்டிய திருத்தலமாதலால் இங்குத் திருமால் கோவில்களைப் போல திருவடிகளைத் தலையில் சூட்டித் திருநீறு வழங்கப்படுகிறது.

பழையாறை வணிகராகிய அமர்நீதி நாயனார் இங்கு மாசிமகத் திருநாளில் திருமடம் கட்டித் திருவிழாக் காலங்களில் அடியாருக்கு அமுதளிப்பார். இறைவன் பிரமசாரி கோலமாக வந்து தனது கோவணத்தைப் பாதுகாக்குமாறு கொடுத்த பின் அதனை மறைத்து அக்கோவணத்திற்கீடாகத் துலாத் தட்டில் தன் பொருளோடும் குடும்பத்தோடும் தானும் ஏறஅத்துலாத்தட்டு விமானமாக, அவர் திருவருள் பெற்ற திருவூர். அம்பிகை திரிபுரசுந்தரி, பர்வத சுந்தரி, கலியாணசுந்தரி என வழங்கப்பெறுவார். அமர்நீதி நாயனார் திருமடம், குந்தி தேவிக்காக ஏழு கடலும் வந்த சத்த சாகரத்திருக் குளக் கரையில் இருக்கின்றது. கடல் என்ற பெயருக்கேற்ப இத்திருக் குளத்திலிருந்து எடுக்கப்பெற்ற சங்கு திருக்கோவில் வழிபாட்டில் இருக்கிறது. சந்நிதியில் துவார பால கருக்குப் பதிலாகப் பலிபீடங்களும் காசிவிநாயகர் முருகப் பெருமான் திருவடிவங்களும் இங்குக் காணத் தக்கவை. அமர்நீதி நாயனார் திருவடிவங்களையும் காணலாம். 'வடபாற் கயிலையும் தென்பால் நல்லூரும் இறைவன் வாழிடமே' எனத் திருநாவுக்கரசரால் பாராட்டப்பெற்ற திருவூர் நல்லூராகும். சு.சு.

**திருநல்லூர்ப்புராணம்**: காண்க: நல்லூர்ப் புராணம்.

**திருநல்லூர்ப் பெருமணம்**: இது சோழ நாட்டில் காவிரியின் வடகரையில் உள்ள ஐந்தாம் தலமாகும்; கொள்ளிடம் புகைவண்டி நிலையத்திலிருந்து 5 கி.மீ. தூரத்திலுள்ளது. பிரமன் சீர்காழிக்கு வரும்போது இடையிலிருந்த இவ்வூரின் பெருமையினை அறிந்து நல்லூர் என அழைத்தார் என்று வரலாறு கூறுகிறது. நல்லூர் என்பது ஊரின் பெயர். பெருமணம் என்பது இவ்வூரிலுள்ள திருக்கோயிலின் பெயராகும். இங்குள்ள சுவாமியின் பெயர் சிவலோகத் தியாகர்; அம்பிகையின் பெயர் திருவெண்ணீற்று மையம்மை என்பதாம். திருஞான சம்பந்தரின் மனைவியார் பிறந்த ஊர் ஆதலின் ஆச்சாள்புரம் என்ற

பெயரும் ஏறபட்டது. அது இககாலதது ஆசசாபுரம எனப் பலராலுமு வழங்கப் பெறுகிறது. திருஞான சம்பந்தருக்குத் திருமணம இத் திருத்தலததிலதான நிகழ்நதது திருமணததிற்கு வந்திருநத திருநீலநககா, முருக நாயனார், திருநீலகணட யாழ்பபாணர், சிவ பாத இருதயர், மணப பெணணின தநதையாராய நம்பாணடாா நமபி, முததுச சிவிகை தாங்கியோா மற்றும் திருமணததிற்கு வநதிருந்தோா யாவரும ஒருசேரச் சோதியுள கலநது முததி பெறறனா. சமபந் தரும் மனைவியுடன சோதியுள கலநதாா. அவ்வாறு சோதியுள கலநதது வைகாசி மாதம மூல நனனாளி லாகும. இபபோதும் சமபந்தா முததி பெறற விழா ஆச்சாபுரத்தில சிறபபாகக கொணடாடபபடுகிறது. இததலத்திறகு 'நல்லூாப் பெருமணம்' எனற, தொடககமுடைய சமபந்தர் பதிகம ஒனறு மட்டும உணடு. 'அனபுறு சிநதையராகி யடியவா, நனபுறு நல்லூர்ப் பெருமணம மேவி நினறு, இனபுறும எநதை இணையடி ஏத்துவாா, துன்புறு வாரல்லா தொணடு செயவாரே' எனபது இவவூாப பதிகத்திலுள்ள ஓர் அருமைப பாடலாகும திருககோயிலின முனபு பஞ சாககர தீாத்தமும எடடுத் திககுகளிலும எட்டுத தீர்ததஙகளுமுளளன திருமணத்திறகு வநதவர்களுக கெலலாம முததியளிதத பெருமையை நினைத்து, துறை மஙகலம சிவபபிரகாச சுவாமிகள தாம் பாடிய நாலவா நானமணி மாலையில 'சமபநதர் திருமணத தின போது பந்தற் காலைப பிடிததுக் கொணடாவது நிற்கும் நிலை தமககுக் கிடைத்திருநதால எளிதாக முத்திப் பேறு சிததிததிருக்குமே' என நயம அமை யப பாடி ஏஙகுகிறாா இததலத் திருககோயில தரும புர ஆதீனப் பராமரிப்பின கீழ இருநது வருகினறது.

இரா ச.

**திருநள்ளாறு**: இது சோழ நாட்டிலுளள காவிரித் தென கரைத் தலஙகளுள ஒனறு. பேரளம் காரைககால புகைவணடிப பாதையில உளள திருநள ளாறு நிலையததிலிருநது ½ கி.மீ. தூரத்தில இத தலம் உள்ளது. பேருநது வசதிகளும் பல ஊாகளிலி ருந்து வர வாயபபாக உளளன. வடக்கே வாஞசி யாறும் தெறகே அரிசிலாறும் பாய நடுவே இத்தலம இருத்தலின இதறகு நளளாறு என்னும் பெயர் ஏற் படலாயிற்று.

இத்தலத்திறகுச் சமபநதர் பதிகஙகள நான்கும திருநாவுக்கரசர் பதிகங்கள இரணடும் சுந்தரர் பதிகம ஒன்றும் ஆக ஏழு பதிகஙகள உளளன. சுவாமி பெயா தர்ப்பாரணியேசுவரா, நளளாறர் என்பன. அம்மை பெயர் போகமார்தத பூண் முலையம்மை எனபதாம். இதற்கு ஆதிபுரி, தாப்பாரணியம், நகவிடங்கபுரம், நளேச்சுரம் முதலிய பல பெயர்கள உள. பிரமதேவா, நளன, கலிங்க அரசன் முதலிய பலர் வழிபட்டுப் பேறு பெற்ற தலம் ஆகும. 'நளளாறு என நமவினை நாசமே' எனபது அப்பர் பெருமான திருவாககு. இஙகுச சனி பகவான கோயில சிறபபுமிக்கது. எப போதும் மககள வநது இஙகு வழிபடுத தஙகள சனி தோடத்தைப போககிக கொளவா. தருப்பைதான இததல விருட்சம. அருணகிரியாா திருபபுகழும இத்தலததிறகு உணடு தியாகராசருககுரிய ஏழு விடஙகத தலஙகளுள இது இரணடாம தலமாகும. இங்குளள தியாகா பெயா நகவிடஙகத் தியாகா என பதாம இவா செயயும நடனம உன் மத்த நடனம எனறு கூறுவர்

திருஞான சமபநத மூர்ததி சுவாமிகள மதுரை யில அமணாகளை வாதில வெலல முறபட்ட போது அனலவாதம நிகழந்தது அபபோது முனனரே திரு நளளாறறில பாடிய 'போகமார்தத பூணமுலை யாள்' எனத தொடஙகும பதிகத்தைய ஏட்டில எழுதி எரிகிற தீயில இட்டார்கள அந்த ஏடு எரிய விலலை. சமணாகள் இடட ஏடு எரிநதது. அதனால இத் திருநளளாறறுப் பதிகததிற்குப் பசசைப பதிகம் எனவும் பெயர் வாயததது.

திருநளளாறு மததிய தர ஊராகும. இஙகுளள கோயிலில திருககோயில் அமைப்புகள, பரிவாரத தெய்வங்கள முதலியன மிக நனமுறையில உளளன. தீாததஙகளும பல உளளன. நித்திய வழிபாடுகளும விழாக்களும் நனகு நடைபெற்று வருகினறன. இத் திருககோயில தருமபுர ஆதீன ஆட்சியின் கீழ் உள ளது.

இரா.ச.

**திருநறையூர்**. வைணவர்களுடைய நூற றெட்டுத் திருததலஙகளுள ஒனறான இததலம் சோழ நாட்டுத் தலஙகள நாறபதினுள அடஙகும. இததலம கும்பகோணததிற்குக கிழககே 8 கி.மீ. தூரததிலுள ளது திருமாலுடன் ஊடல கொணட திருமகள இத தலத்திற்கு வந்து, தவமபுரிந்து கொணடிருந்த மேதாவி மகரிசிக்கு வளர்ப்புப் பெணணாக வஞசுள வலலி எனும் பெயருடன வளர்நதுவர, திருமாலும இஙகே வநது அவளை மணம புரிந்துகொண்டார். மேதாவி மகரிசியின விருபபபபடியே அவளுக்குப் பல வகைகளில் முதல உரிமைகளை அளிததாா. அதற கேறப, இனறும எம்பொருமான வீதிப்புறபபாடுகள கணடருளும்போது வஞசுளவலலித் தாயாா முனனே எழுநதருள, அவருககுப பின்னே தான பெருமாள எழுநதருளகிறாா. இத்தலத்து எமபெருமான திரு மஙகை ஆழவாருககுச சஙகு சக்கர முததிரை அளித் தார் எனபது ஐதிகம எனவே, இததலதது எமபெரு மானை அவர் நூற்றுப்பத்துப் பாசுரங்களால

பெரிய திருமொழி 6-4 முதல 7-3 வரை) பாடியுள் ளார். நறுமணம மிக்க இடம் என்பதால் நறையூர் எனப்பட்டது. வடமொழியில இத்தலத்தைச் சுகநத புரி எனபர். எம்.ந.

**திருநறையூர்ச் சித்தீச்சரம்**: இத்தலம் கும்ப கோணத்திலிருநது 9 கி.மீ. தொலைவில உளளது. ஊர்ப் பெயர் திருநறையூா. கோயிலின் பெயா சித் தீசசரம. இது சோணாட்டுககாவிரித் தென்கரைத் தலஙகளுள 65-ஆம் தலமாகும். சிததர்கள பூசித்துப் பேறு பெற்றமையின் சித்தீசசரம் எனப் பெயர் பெற் றது. சுவாமி பெயர், சிதநாதேசுவரர். அம்பிகை யின பெயர் அழகமமை. கோயிலுக்கு வடக்கில பிரம தீர்த்தம் இருக்கிறது. தேனசித்தி தீர்த்தம் என்ற ஒரு தீர்த்தமும் உண்டு. பிளளையாருக்கு ஆணட பிளளை யார் எனபது பெயர். இங்குளள பிட்சாடனர் சிறப பான வழிபாட்டுககுரியவா.

இத்திருத்தலத்தினைத் திருஞானசம்பந்தர் மூனறு திருப்பதிகஙகளாலும், சுநதரமூர்ததி நாயனார் ஒரு திருப்பதிகத்தாலும் பாடியுள்ளாா. ஆக நானகு திருப்பதிகங்கள உளளன. இததிருத்தலத்தில் குபே ரன், தேவர்கள், கந்தருவர்கள் முதலானோரும் வழி பட்டுப் பேறு பெறறுளளனர். இவ்வூர், கல்வெட்டு களில சத்திரிய சிகாமணி வளநாட்டுத் திருநறையூர் நாட்டுத திருநறையூர், அருணமொழித் தேவ வள நாட்டுத்திருநறையூா, குலோத்துங்க சோழ வளநாட் டுத் திருநறையூர், பஞசவன மா தேவியான சதுா வேதி மஙகலத்துத திருநறையூா எனக குறிபபிடப படுகினறது. இவை இவ்வூாக் கோயிலிலுள்ள 24 கல் வெட்டுகளிலும் காணக் கிடைக்கின்றன. மறறும பல அரிய செய்திகள இககல்வெட்டுகள மூலம அறிய முடி கினறன. சிததநாதேசுவரமுடைய தேவா, சிததநா தேசவரமுடையார் என இறைவன் பெயா குறிககப படுகின்றது. சோழமனனாகள, முதலாம இராச ராசன, இரணடாம் வீரராசேந்திரன, முதலாம குலோத்துங்கன, இரணடாம் குலோததுங்கன, மூன றாம் குலோத்துஙகன, விக்கிரமசோழன, இரணடாம இராசராசன, இரணடாம் இராசாதிராசன ஆகி யோர் இவறறில இடம பெற்றுள்ளனா.

பிட்சாடண சுவாமிக்குத் திருவமுதுக்காக 30 பொன்னை ஒரு சிவப்பிராமணர் தநத செய்தியும், மணணி நாட்டுக் கருப்பூருடையார் என்பார் நிலம் விட்டு அதன் வருவாய் கொணடு, சிவவழிபாட்டிறகு வரும் சிவயோகியர்கட்கு உணவளிகக ஏற்பாடு செய்த செய்தியும், விளக்குக்காக நிலம் விட்ட செய்தியும், நிவேதனத்துக்காக நிலம், பொன் ஆகி யவை தந்த செய்தியும், பிடாரி கோயிலுககு நிலம் விட்ட செய்தியும் கல்வெட்டால் தெரியவருகின்றன. வீ.சொ.

**திருநன்னிலம்**: இத்தலம், தஞ்சாவூர் மாவட் டம், நன்னிலம் புகைவணடி நிலையத்தினின்றும் மேறகே 3 கி.மீ. தொலைவிலுளள திருக்கொணடீச் சரத்தினின்றும் மேற்கே 3 கி.மீ. தொலைவில உள ளது; திருவாஞ்சியம் எனனும் தலததிறகுக் கிழக்கே உளளது. இது சோழ நாட்டுக் காவிரியின் தென் கரைத் தலஙகளுள 71-ஆம் தலமாகும். மதுவனம் எனறு வழஙகப்படும் இது மாடக் கோயில்களுள் ஒனறு, கோச் செஙகட்சோழன் திருப்பணி செயத பெருங்கோயில்களுள ஒனறு.யானை ஏற முடியாதபடி படிகள் அமைத்துக் கட்டப்படுவது பெருங் கோயில் எனப்படும். இதனை, 'கோசசெஙகணான செய் கோயில நாடிய நனனிலத்துப் பெருங்கோயில', என்றும், 'பொன்னி நனனீர்த்துறை வனறிகழ செம் பியர்கோன் நரபதி நனனிலத்துப் பெருஙகோயில் நயநதவனே' எனறும் சுநதரர் பாடிய (11,10) திருப் பாட்டுகளில காணலாம். சுவாமி, கட்டு மலை போல உள்ள சந்நிதியில எழுநதருளியிருககின்றார். இது சூரியன பூசித்துப பேறு பெறற தலம்.

சுவாமி பெயர் மதுவனேசுவரர், பிரகாசநாதர் பிரகேசுரர் முதலியன. அமமன பெயர் மதுவன நாயகி, பிரகாச நாயகி, பிரகேசுவரி முதலியன. கோயிலுக்கு வடகிழககில் பிரமதீர்த்தம இருககிறது.

சுந்தரமூர்த்தி நாயனாா பாடியருளிய பதிகம் இதறகு ஒன்று உணடு. இறைவன 'பாண்டரஙகம்' என்னும் கூத்தினை உடையவன் எனபதனையும், இறநதவர்பிணஙகளையுடைய இடுகாடே அரஙகமாக ஆடுகினற சிறந்த நடனத்தை யுடையவன என்பதனை யும் மற்றும பல சிறப்புகளையும் சுந்தரர் குறிப்பிட் டுள்ளார். வீ.சொ.

**திருநனிபள்ளி**: 'புஞ்சை' என்று இப்போது வழஙகப் பெறும் இத்தலம், தஞசை மாவட்டம் மயிலாடுதுறைக்கு வடகிழககே 13கி.மீ தொலைவிலும் செம்பொன்னார்கோயில் புகைவண்டி நிலையத்திறகு கிழககில் 5 கி.மீ. தொலைவிலும் உளளது. நாயன் மார்களால் பாடபெறற சோணாட்டுத் தலங்களுள் காவேரிக்குத் தென்கரையில் விளங்கும் 43-ஆம் தல மாகும.

சுவாமி பெயர் நற்றுணையப்பர். இறைவியின் பெயர் பர்வதராசபுத்திரி. கோபுரவாயில கிழக்கு நோக்கியது. திருக்குளம் கோயிலுககு வடபாலுள்ள சொர்ண தீர்த்தம். இக்கோயிலின வடக்குத் திருச்

சுற்றிலுள்ள ஏழு கன்னியர் சிறப்பு வழிபாட்டுக்கு உரியவாகள் அம்பிகை தெற்கு நோக்கிய வண்ணம் எழுந்தருளியுள்ளாள் இக்கோயிலுள்ள இவ்வூரில் தான், திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாருடைய தாயார் பகவதியார் அவதரித்தார்கள்

இத்திருத்தலம், திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவராலும் பாடப்பெற்றதாகும் பியந்தைக் காந்தாரப் பண்ணில், 'காரைகள் கூகை முல்லை' எனத் தொடங்கும் திருக்கடைக் காப்பினைத் திருஞான சம்பந்தரும், திருநேரிசையாக, 'முற்றுணையாயினானை' எனத் தொடங்கும் தேவாரத்தினை அப்பரடிகளும், 'ஆதியன் ஆதிரையன்' எனத் தொடங்கும் திருப்பாட்டினைச் சுந்தரரும் பாடியருளியுள்ளனர் இவற்றின் கருத்தினைப் பொதுவாகக் கூறுமிடத்து, இங்கு நலமிகு தொண்டர்கள் நாளும் புதுமலர் கொண்டும் அடிபரவல் செய்கின்றனர் என்பதும், அவர்தம் துன்ப வினைகள் நீங்கிடப் பெறுவர் என்பதும் ஆகும் ஞானசம்பந்தர் பாடும்போது ஆணையிட்டுக் கூறுகின்றார் இவர் தமது தந்தையார் சிவபாத இருதயருடைய தோள்மீது அமர்ந்து பாடியதாக வரலாறு கூறுகிறது.

திருமகள் நீங்காது நிலைபெற்று உறையும் ஊராதலானும், மாதொரு பாகனான செல்வப் பரம்பொருள் விரும்பி வீற்றிருக்கும் இடமாதலினாலும் இப்பெயர் பெற்றது 'திருநனிபள்ளி' என்பர் இவ்வூர் ஒரு கால் பாலையாக இருந்து பின்பு நெய்தலாக மாறியதாக ஒரு குறிப்பு, சைவசித்தாந்த சாத்திர நூல்கள் 14-இல் ஒன்றாகிய திருக்களிற்றுப் படியாரில் காணக் கிடக்கிறது. அப்பருக்குக் கொடுத்த நஞ்சு கலந்த உணவு அமுதாக மாறிய செய்தி, 'வஞ்சனை பாற்சோறாக்கி வழக்கிலா அமணர் தந்த, நஞ்சமுது ஆக்குவித்தார் நனிபள்ளி அடிகளாரே' என்பதால் தெரிகின்றது பெரிய புராணத்தில் சேக்கிழார், 'தேனருங் கொன்றையினார் திருநனிபள்ளியினைச் சாரச் செல்வார்' எனவும், 'பாலைவயல் திருநனிபள்ளி' எனவும், 'நனிபள்ளி உள்குவார்' எனவும், 'நனிபள்ளி அமர்ந்த பிரான்' எனவும், இதனைக் கூறுகின்றார்.

வீ.சொ.

**திருநாகேச்சுரம்**, தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்று இது மயிலாடுதுறை-கும்பகோணம் புகைவண்டிப் பாதையில் உள்ள ஒரு நிலையம் இறைவர், சண்பகாரணியர், இறைவி, குன்றமுலை நாயகி

இத்திருக்கோயில் சம்பந்தர் தேவாரப் பதிகங்கள் 2, நாவுக்கரசர் தேவாரப் பதிகங்கள் 3, சுந்தரர் தேவாரப்பதிகம் 1 ஆக ஆறு திருப்பதிகங்களைக் கொண்டு மூவரும் பாடும் சிறப்புப் பெற்றது

'குயிலும் மயிலும் பயிலும்' அழகும், 'வயல் நாற்றலும் கயல் பாய்தலும்' ஆகிய வளமும், 'குருந்து குரவம் செருந்தி குவளை முல்லை மாதவி' ஆகியவை மலரும் வனப்பும் நெஞ்சங்கவரும் வகையில் பதிகங்களில் பாடப்பட்டுள்ளன.

'ஐந்தலை அரவின் பணிகொண்டான் நாகேச்சுவரமே' எனவரும் நாவுக்கரசர் குறுந்தொகைக் குறிப்புக் கொண்டு, இக்கோயில் ஐந்தலைப் பாம்பால் வழிபாடு செய்யப்பட்டதால் இப்பெயர் பெற்றது என்பர் நாகேச்சுரத்தின்மேல் கொண்ட பெரும் பற்றால் சேக்கிழார் தாம் பிறந்த குன்றத்தூரில் நாகேச்சுரம் எனத் திருக்கோயில் எடுத்த செய்தி இதன் பெருமையைக் காட்டும்

இத்திருக்கோயிலில் கண்டராதித்தசோழன், இராசராசசோழன் இராசேந்திர சோழன் ஆகியோர் கல்வெட்டுகள் உள. காவிரி வெள்ளத்தால் அழிந்த கால்வாயைச் சீர்செய்த விக்கிரமசிங்கப் பல்லவராயன் செய்தி ஒரு கல்வெட்டால் விளங்குகிறது இவ்வூர் 'உய்யக் கொண்டான் வளநாட்டு நிரைமூர்நாட்டு விண்ணகரான திருநாகேச்சுரம்' என்று கல்வெட்டில் சொல்லப்பட்டமை அறியத்தக்கது. இரா இ

**திருநாகை.** இது தஞ்சாவூருக்குக் கிழக்கே சுமார் 80 கி.மீ தொலைவில் உள்ள கடற்கரைப் பட்டினம்; இன்று நாகப்பட்டினம் என்று வழங்கப்படுகிறது, கிழக்கே வங்காளக்கடாக்கடலும் தெற்கே வேளாங்கண்ணியும், மேற்கே கீவளூரும், வடக்கே நாகூரும் கொண்ட துறைமுகப்பட்டினம். இங்குக் கலங்கரை விளக்கம் இருக்கிறது கடற்கரைக்கு ஏறத்தாழ 3 கி மீ. தொலைவில் கடலில் கப்பல்கள் நிற்கும் பயணிகள் படகில் சென்று மீள்வர். கப்பல் மூலம் போர்ச்சுகீசியர்கள் இங்கு வந்துகுடியேறிய பின்னர், அவர்களிடமிருந்து டச்சுக்காரர்கள் கி பி 1660-இல் இதனைக் கைக்கொண்டனர். இது கி பி 1781-இல் ஆங்கிலேயர் வசம் வந்தது தஞ்சையை மராத்திய மன்னர் ஆண்டபோது சுமார் 47 ஆண்டுக்காலம் (கி பி 1799-1845) இது தஞ்சை மாவட்டத்தின் தலைநகராக விளங்கியது

இது சைவ நூல்களில் திருநாகைக் காரோணம் எனவும், வைணவ நூல்களில் திருநாகை எனவும், மேல்நாட்டுப் பயணிகளான, தாலமி எனபவரால் 'நிக்கௌவா' எனவும், இட்சிங்கு என்பவரால் 'நகவதனா' எனவும், மார்க்கோபோலோ என்பவரால் 'பட்டன' எனவும், இரசுதுத்தீன் என்பவரால் 'மலிபட்டன்' எனவும், பௌத்த நூல்களில் 'நாகை' எனவும், 'நாகநகர்' எனவும் வழங்கப்பெறுகின்றது

தமமசசேததி சாசனம ஒனறில இது 'நவுட்டப பட்டனா' எனக குறிககப்பட்டுளளது

இது, மலாயா, சிஙகபபூா ஆகிய நாடுகளோடு இனறளவும கபபல மூலம போககுவரததுக கொணடது மலாயா நாட்டினினறும வநத பௌத தாகள இஙகே தஙகியிருநதபோது தஙகள அரசா களான சைலேநதிராகள தநத பொருளுதவியுடன பௌததக கோயிலகளைக கட்டினா அதனால நாகையில பௌதத மதம தழைததோஙகியது பினனா வநத சோழமனனாகளான முதலாம இராச ராசனும முதலாம இராசேநதிரனும முறையே 'இராசராசப பெருமபளளி', 'இராசேநதிர சோழப பெருமபளளி' எனும இரணடு பௌதத கோயில களைக கட்டித தநது பௌததாகளுககு ஆதரவு அளிததனா. யானைமஙகலம முதலான ஊாகளையும நிவநதமாக அளிததுளளனா.

மாாககோபோலோவின குறிபபுபபடி இஙகு ஒரு சீனக் கோயில இருநததாகத தெரிகிறது இது சீனக கோபுரம எனறு சொலலப்பட்டுக கரை நோககி வரும கபபலகட்குக கலஙகரை விளககமாகவும இருந துளளது பினனா இது இடிககபபட்டு, அஙகுக கட்டிடம கட்டபபட்டதாகத தெரிகினறது முனனா விளஙகிய ஒரு கோயில சூடாமணிவாமன நினை வாகச் 'சூடாமணி வாம விகாரம' எனறு வழங கபபட்டது. இஙகிருநத புததா கோயில ஒனறிலிருநத தஙகப புததா சிலையினைத திருமஙகையாழவாா எனச சிறபபிககப பெறும நீலன எனபாா எடுததுச சென்றாா அதனைக கொணடு, திருவரஙகததிலுளள அரஙகநாதப பெருமாள கோயில விமானததிறகுப பொறறகடு வேய்நதாா நாகையில இருநத புதத விகாரததில இபபோது நீதிமனறம இருநதது எனபா தமிழசசெமமல மறைமலையடிகளாா பிறநத ஊர் இதுவாகும அவருககுப புகைவணடி நிலையததருகே சிலையெடுததுளளனா. வீ.செ

**திருநாகைக் காரோணம்**: இததலம தஞசை மாவட்டத்திலுளள நாகைப்பட்டினம புகை வணடி நிலையததிலிருநது வடககே 1 கி மீ தொலை விலுளளதாகும திருககோயில கிழககு நோககிய வாயிலையுடையது. இது கடலநாகைக காரோணம எனவும வழஙகப பெறும

இது காவிரியின தெனகரைத தலஙகளுள 82-ஆம தலமாகும. சுவாமி பெயர், ஆதிபுராணேசுவரா, காயாரோகணேசுவரா எனறும, அமபிகையின பெயர் நீலாயதாட்சி எனறும கூறுவர் தீாததஙகள தேவ தீர்த்தம, சாவதீர்ததம எனபபடும புணடரீக தீாத தம, அக்கினி தீர்ததம எனபபடும காகதீாததம, பிரம தீர்ததம், முனிதீர்த்தம், வசசிரதீர்ததம ஆகி யவை தலவிருட்சம், மாமரம இத்தலததிறகுத திரு ஞானசமபநதா பதிகம் 2 திருநாவுககரசா பதிகம 4 சுநதரா பதிகம 1 ஆக 7 பதிகஙகள உளளன. ஆகவே, இது மூவர் பாடிய சிறபபுடையது திரிசிர புரம மகாவிததுவான மீனாட்சி 'சுநதரமபிளளை அவாகளால பாடபபட்ட 'திருநாகைக காரோணப புராணம' எனனும தலபுராணம் இதறகு உணடு. அது அறிஞாகளால பாராட்டபபட்ட சிறநத நூல.

ஆதிசேடனாகிய நாகராசன பூசிததமையால நாகை எனப பெயா பெறறது. புணடரீக மகரிசியா னவா, கணணுவ மகரிசியின ஆறறுபபடுததலை ஏறறு நாகை வநது, தேவ தீாததததில மூழகி, இவ விறைவனை வழிபட்டு வநதார் இறைவன இவருககு இருமுறை காட்சி தந்தாா. மூனறாம முறையாக இவரை உடமபாகிய காயததோடு இறைவன பறறிக கொணடதால (ஆரோகணஞ் செயது கொணட தால) இவருககுக காயாரோகணேசுவரா எனனும பெயா வநதது அபபெயர் மருவிக காரோணம எனறாயிறறு அதிபதத நாயனாா, இககோயிலை அடுததுளள கடலில நாளும வலைவீசி, பிடிபடும மீனகளுள ஒனறைச சிவனுககெனறே கடலில விடு வது வழககம ஒருநாள நவரததின ஒளியுடன கூடிய ஒரு மீனே கிடைககு அதனைச சிவனுககு எனறே மீணடும கடலில விட்டாா வறுமையிலும சிவபபற றுக கொணடமையின அதிபதத நாயனாா பேறு பெறறாா. இசசெயலுககுக கடல காரணமாக இருந தமையின இவவூா கடனாகைககாரோணம எனப பெயா பெறறது போலும.

சுநதரமூாததி நாயனாா இவவிறைவனை வழி பட்டுப பதிகம பாடினார். அதனால அவருககுப பொனனும நவமணிகளும திருவாபரணஙகளும பட்டு ஆடைகள், குதிரை, உடைவாள முதலியனவும கிடைததன அதனால, சுநதரமூாததி நாயனாா பரவை நாசசியாருடன தியாகராசருககுமுன எழுந தருளியுளளாா

இது சபதவிடஙகத தலஙகளுள ஒனறு. இஙகு எழுநதருளியுளள விடஙகருககுச 'சுந்தரவிடஙகத தியாகா' எனபது பெயர் தேவேந்திரனுககு இடை யூறியறறிய சமபாசுரன முதலான அசுராகளைக கொனறு, தேவேநதிரனிடமிருநத இசசுநதரவிடங கரைச சிவனருளாறபெறறு வநது, இத்தலததில எழுந்தருளச் செயதவா சாலீசுக மகாராசனாவா. அதனால இதறகுச சுநதர விடஙகததலம எனறும் பெயர் உணடு. இத தியாகா, அலைபோனற நடனம எனததககு தரஙக நடனம புரிவா.

கோயிலின வாயிலருகே உளள விநாயருககு நாகா பரண விநாயகா எனறும, உளளே எழுநதருளியிருக கும் பிளளையாருககு மாவடிப்பிளளையாா எனறும பெயா. காஞசி காமாடசி, மதுரை மீனாட்சி, காசி விசாலாட்சி எனற வரிசையில நாகை நீலாயதாட்சி இடம் பெறறுச சிறநது விளஙகுகினறாள.

தச்சுக்காராகட்குத் தஞசை விசயராகவ நாயகக மன்னாகள இவவூரை வழஙகிய செயதியினைக கூறும கலவெடடுகள காணப்படுகினறன. இக கோயிலைப் பறறிய செயதிகள இக் கலவெட்டு களில் வரவிலலை சில கலவெடடுகள இககோயிலில உளளன, இதில ஏழு கலவெட்டுகள வெளிவநதுள ளன. வீ.சொ.

**திருநாட்டியத்தான்குடி** தஞசை மாவட் டத்தைச் சாாநத பழமையானதோா ஊர். தேவாரப் பாடல பெற்ற தலஙகளுள ஒனறு. இங்குத் தொடா வண்டி நிலையம் உள்ளது.

நாயனமாா அறுபததுமூவருள ஒருவராகிய கோடபுலிநாயனாா பிறநத ஊா இது. சுநதரா திரு வாரூாககு வநது புறறிடங்கொணட பெருமானை வணஙகியிருநத நாளில், அநநாள சோழவேநதனின் படைத் தலைவராக விளஙகிய கோட்புலியாரது அழைப்பையேறறுத் திருநாட்டியத்தான குடி சோந தார். கோட்புலியாாககுச சிஙகடி, வனப்பகை எனப புதல்வியர் இருவர் இருநதனா. அவாகளை அடிமை கொணடருள வேணடுமெனச் சுநதரரைக கோட் புலியாா வேண்டினாா. அவாதம அனபை ஏறறு அம மக்களை 'எனமககள இவாகள' எனப போறறினாா. தாம பாடிய தேவாரத்திருபபதிகஙகளில கோட் புலியாரைக் 'கூடாமனனரைக கூட்டதது வெனற கொடிறன கோட்புலி' எனறும, சேடார் பூஙகுழற சிங்கடியப்பன' 'வனப பகையப்பன', 'சிஙகடி தநதை' எனறும் பாடினாா. இறைவனை 'நாட்டியததான் குடி நம்பி'எனநாவில் தேனூறப் பாடினார். இறை வர். இரததினகிரிநாதா; இறைவி மலர்மஙகை நாயகி. இரா.இ

**திருநாரணையங்கார்**(கி.பி 1961-1947) இவா தெணபாணடி நாட்டில எதிாகோட்டை எனனும சிற றூரில் கல்வி அறிவு ஒழுக்கஙகளால சிறநத அப்பனை யங்கார், செஙகமலவலலி எனபார்க்கு அருமநத மக னாய்ப் பிறந்தார். இளமையில் இராமநாதபுரத தில் சேதுசமசுதானப் புலவராய் விளஙகிய சதாவ தானம் முததுசாமி ஐயங்கார் அவர்களிடம் தமிழ் இலக்கிய இலககணஙகளும, பநதல குடிவிததுவான வேஙகடாசாரியரிடம வடமொழி வியாகரணமும ஐயம் திரிபறக கற்றார். பினனர் விததுவான் சீனி வாசாசாரியார்பால வைணவ சமய சாததிரஙகளை களையும் நனகு கற்றுத் தோநதாா. அனறியும மந திரம, மருததுவம. சோதிடம, தருககம் பல்சமயப புலமை முதலியவறறிலும் தோநதாா.

இவரது ஆழந்த பலகலைப புலமையையும அடககம ஒழுககம முதலிய நறபணபுகளையும அரு கிருநது அறிநத தமிழ வளளலாகிய பாலவநததம சமீநதாா பொன. பாணடிததுரைததேவர் அவாகள இவரைத தம ஆத்தான விததுவானாக உவநதேற றுககொணடாா. பினனாத தேவரவாகள மதுரையில 24 5 1901-இல நானகாம தமிழச சஙகததை நிறுவி, அதறகு இவரையே தலைமையாசிரியராக நியமித தாா. அபபொறுபபை இவா தம இறுதி நாள வரை ஏறததாழ நாறபதாணடுகள திறமபட ஏறறு நடததி வநதாா சஙகததின சார்பில நடததபபெறற கலலூ ரியில் திருககுறள,கமபராமாயணம, தொலகாபபியம, சஙக நூலகள முதலியவறறைப் பாடமாகக கறபிதது, மாணாககரது நனமதிபபைப பெறறாா. இவருடைய மாணவாகள பலா சிறநத புலவாகளாகவும், ஆசிரி யர்களாகவும, ஆராயசசியாளாகளாகவும விளஙகி இவரது பெருமையைப் பறை சாறறி வருவாராயினர்.

மேலும், இவர் தமிழ்சசஙகத்தின மேலாளராகவும் சஙக மாத இதழாகிய 'செநத மிழ' எனனும பத்திரி கையின ஆசிரியராகவும (36 ஆணடுகள) பொறுப் பேறறு அதனைத் திறம்பட நடததினார். இவர் எழுதி வெளியிட்டுளள பல ஆராய்ச்சிக கட்டுரைகள இவருடைய பலகலைத தோசசியையும நடுநிலை மையையும் வாத நேர்மையையும் உணமையை எடுத் துரைபபதில மேறகொணட அஞசா நெஞசத்தையும நுணமாண நுழைபுலத்தையும நன்கு வெளியிடுவன. இவா ஆராயநது பதிப்பித்து வெளியிட்ட நூலகள அநுமான விளக்கம, பாணடியம, மாறனலஙகாரம், பழமொழி (முதல200), அணடகோளவிருத்தி, அமிாத ரஞசனி, சாதக சநதிரிகை (வெணபா யாப்பு), பன னூற்றிரட்டு முதலியன இதததகைய பெருமை வாயநத சான்றோருக்குப் பல இடங்களிலிருந்து பொருளும பாராட்டும பரிசுகளும் கிடைத்தமை அருமையனறு இஙகிலாநது இளவரசா இவருககு இரட்டைச சாலவை போாததித தஙகத்தோடாவை யும பதக்கததையும வழஙகினார். செனனை மாநில ஆளுநா சர் முகமது உசுமான சாகிபு இவருக்கு உரூ. 1500/-அடஙகிய பொறகிழியும சாலவையும அளித் தார். சண்முக இராசேசுவர சேதுபதி பொறபதகக மும் பட்டும பரிசும் அளிததார். எணபததாறு ஆணடு களாகத தமிழவானில ஒளிாநது கொணடிருநத இப் பேரொளி 19.7 47-இல மறைநது தமிழ்மக்களை ஆராத்துயரததில ஆழ்ததியது. ரா.இ.

**திருநாராயணபுரம்.** பெங்களூர் – மைசூர் புகைவண்டிப் பாதையில் பாண்டவபுரா என்ற இடத்திலிருந்து 12 கல் தொலைவில் உள்ள திருத்தலம் இது. திருநாராயணன் யதுகிரி நாச்சியாருடன் இங்கு நின்ற திருக்கோலத்தில் விளங்குகிறார். இங்குக் கருடனுக்குக் காட்சி அளித்தார். உற்சவருக்கு இராமப்பிரியர், செல்வப்பிள்ளை, சம்பத்குமாரர் என்ற பெயர்கள் அமைந்துள்ளன. நஞ்சீயர் என்ற ஆசாரியரின் பிறப்பிடம் இது. தட்சிண பதரிகாசிரமம் என்ற பெயரும் இதற்கு உண்டு. பங்குனி மாதம வைரமுடி உற்சவம் இங்குச் சிறப்பாக நடைபெறுகிறது. நூற்றெட்டுத் திருத்தலக் கணக்கில் இத்தலம் சேராவிடினும்சிரீராமானுசர் விரும்பிய இடமாக விளங்குகிறது. தலப்பயணமாகச் சிரீரங்கப்பட்டணம் வந்தடைந்த இராமனுசர், திருமண கிடைக்காமையால் கலங்கி நின்றார். எம்பெருமான் அவரது கனவில தோனறித 'திருநாராயண புரததில் வெள்ளை மண இருக்கிறது நானும் அங்கு வாழ்கிறேன். பூமியில புதைந்திருக்கும என்னையெடுத்துப் பிரதிட்டை செய்து அங்குளள காட்டை நாடாக்கித் 'திருநாராயணபுரம்' என்ற திருநாமத்தையும் அளிப்பீர' என்று அருளினான். அதன் படியே இராமானுசர் அங்குச் சென்று 'விட்டுணுவர்த்தனன் என்னும் அரசனின துணைகொண்டு திருநாராயணபுரத்தை ஏறபடுத்தி, திருநாராயணனைப் பிரதிட்டை செய்தார். எம்பெருமானுக்கு உற்சவ மூர்த்தி இல்லாமையால் மிகவும மனம கலங்கினார் இராமானுசர். திருநாராயணன் அவா கனவில தோன்றி 'இராமப்பிரியா' என்று புகழ் பெறற தமது உறசவ மூர்த்தி திலலி அரசனின அரணமனையில இருப்பதாக அருளினான. இராமனுசா திலலி சென்று திலலி அரசனிடம் இதனைத தெரிவிக்க, அவனும 'இங்கு இருந்தால் உமது பெருமாளை நீர் அழைததுக்கொளளும்' என்று சொல்ல, 'செல்வப்பிளளாய! வாராய' என்று பேரனபோடு இராமனுசா அழைக்க, அரசனுடைய பெணணின பளளியறையிலிருநத இராமப்பிரியர் பரபரப்போடு வந்து இராமானுசரின் மடியில் ஏறி அமர்ந்தா. திலலி அரசனால விடை கொடுக்கப்பெற்ற இராமானுசர் உற்சவமூர்ததியான செல்வப்பிள்ளையை அழைத்துக்கொணடு யாதவகிரியாகிற திருநாராயணபுரம் வநது பிரதிட்டை செய்தார். செல்வப்பிள்ளையின்மீது ஆராத காதல கொணடிருந்த தில்லி அரசனின் பெண அவரைத் தேடித் திருநாராயணபுரம வந்து எம்பெருமானோடு கலந்தாள். இனறும் அனைவரும் காணுமபடி திருநாராயணன் திருவடியில ஆச்சாரூபமாக எழுநதருளியிருக்கிறாள. எஸ.கி.

**திருநாரையூர்:** சிதம்பரத்தில் இருநது காட்டு மனனார் கோயிலுககுச் செல்லும் சாலையில 15 கி.மீ. தொலைவில் உள்ளது இவ்வூர். இங்குக் கோயில் கொண்ட இறைவர் பெயர் சுந்தரேசுவரர்; இறைவி பெயர் திரிபுரசுந்தரி. இஙகுப் பொல்லாப் பிள்ளையார்க்குத் தனி மணடபம் உண்டு. பொல்லா (பொள்ளா)- உளிகொணடு வேலை செய்யப்படாத-தானேஉருவமைநத-பிள்ளையார் பொலலாப் பிள்ளையார் எனப்பட்டார். இப்பிளளையார் திருவருளால் பாடப்பட்டது சிவஞான போதம் என்னும் சிறப்பு மிக்க மெய்ப்பொருள் நூல். அதனை அருளியவர் மெய்கணட தேவர்.

திருத்தொணடர் திருவந்தாதி பாடியவரும தேவாரத் திருமுறைகளை அடஙகல் செய்தவருமாகிய நமபியாண்டார் நம்பிகள இவவூரினர் இவர் திருவுருவும, தேவாரததைத் திரட்டுவதறகு உதவிய இராசராச சோழன திருவுருவும் இத்திருக்கோயில மாமணடபத்தில் உள.

குலோததுஙக சோழன், விககிரம சோழன் கோப்பெருஞ்சிஙகன ஆகியோர் கலவெட்டுகள இக் கோயிலில் உள. இககோயிலுக்கு ஞானசமபந்தர் பாடிய பதிகஙகள 3, நாவுக்கரசா பதிகங்கள 2 ஆக ஐந்து பதிகஙகள உள. ஞானசமபநதர் 'செல்வத் திருநாரையூா' என ஒருபதிக முழுவதும் பாடுகினறார் (2.86). 'தேம்புனல சூழதிகழ மாமடுவிற்றிருநாரையூர்' என இதன நீர்வளததைக் குறிப்பிடுகிறார் (3.102.1). நாரை வழிபாடு செயததால் நாரையூர் எனபபட்டது எனபதை 'வெளிசெய்த வழிபாடு மேவினானை' எனபதால குறிபபிடுகிறாா நாவுக்கரசர். வெளி எனபது வெண்ணிறத்ததாம் நாரை (6 74:10) இபபதிகம் முழுவதும 'நாரையூர் நன்னகரில கணடேன நானே' எனக் கூறிக களிப்புறுகிறார் நாவுக்கரசர். இரா.இ.

**திருநாலூர் மயானம்:** கும்பகோணத்திற்குத் தெனகிழககில் 16 கி மீ. தொலைவில உளளது திருநாலூா. திருநாலூரைச சார்ந்து அமைநத சுடுகாட்டுக் கோட்டம் (மயானம்) திருநாலூா மயானமாகும். இவவாறு மயானக் கோயிலகள பேரூர்களைச சாா்ந்து இருநதமை 'திருககடவூா மயானம' எனனும் தேவாரத் திருப்பதிகம் பெற்ற இடமுணமையாலும் புலப்படும.

இறைவன திருப்பெயர், பலாசவனநாதர். இறைவி திருபபெயா, பெரியநாயகி. கலவெட்டில் இறைவர் திருமயானததுப் பரம சுவாமி, மூலத்தானத்து மகாதேவர், பிரமீசுரத்து மகாதேவா எனக் குறிக்கப் பெறுகிறார். 'நாலூா மயானதது நமபான்' என்கிறார் ஞானசமபந்தா (2.46)

ஞானசம்பநதா அரதைப் பெருமபாழி முதலிய திருக்கோயிலகளை வழிபட்டுப் பினனர் நாலூர்

மயானத்திற்கு வந்து வணங்கிப் பதிகம் பாடினார். 'நாடுஞ் சிறப்போவா நாலூர் மயானம்', 'நல்லார் தொழுதேத்தும் நாலூா மயானம்', 'ஞானததரா சென்றேத்தும் நாலூா மயானம', 'நணபார் குணத் தோர்கள் நாலூா மயானம', 'நாலுமறையோது நாலூர் மயானம்' என அவ்வூரவர் நலலியல் சிறப்பு களையும், 'நத்தின் ஒலியோவா நாலூர் மயானம்' 'நறையாா பொழிலபுடைசூழ் நாலூா மயானம்' என அவ்வூா நிலபுலவளஙகளையும் பாடுகிறாா.

நாலூர், 'வானவன் மாதேவி சதுாவேதி மங கலம' எனப் பெயர் பெற்றிருநததும், அவவூரில ஊரவை ஒனறு இருநததும, திருக்கச்சீ சுரத்துப் பெருமாள், காமபரமேசுரத்துப் பெருமாள, திருநாரா யண விணணகரம் முதலிய கோயில்கள இருந்தமை யும் கல்வெட்டுகளால் அறியபபடுகினறன. இஙகுளள கலவெட்டுகள 23 எனறும இவை 10 முதல 13-ஆம் நூற்றாணடு வரை உளள காலத்தைச் சார்நதவை என்றும கூறுவர். இரா.இ.

**திருநாவலூர்:** 'விழுப்புரம்–திருசசி' புகை வண டிச் சாலையில் இருநதை என்னும் நிலையத்திற்குக் கிழக்கே 4 கி.மீ. தொலைவில உளளது திருநாவலூர். புகழ்மிக்க இவ்வூரின பெயர் இப்பொழுது திருநாமநல லூர் என வழஙகுகின்றது.

தேவாரம் பாடிய மூவருள் ஒருவராம் சுந்தரா பிறந்த பேறமைந்தது இவ்வூா. 'நாவலூராளி' என னும் பெயரைச் சுந்தராக்கு வழஙகிய பெருமை மிக்க ஊர் இதுவேயாகும். சுந்தரர்க்கு இவவூாத திருக் கோயிலின வெளிச்சுற்றில் தென்கீழ்ப் பகுதியில் தனிக்கோயில் உண்டு. தொணடீச்சுரம எனபது திரு நாவலூர்க் கோயிலின் பெயர்.

நாவலேசுவரரே வெணணெய் நல்லூரில வந்து தம்மை ஆட்கொண்டாா எனறும், அவர் தம்மை நாவன்மை காட்டி ஆட்கொண்டார் என்றும் சுநதரர் பாடுகிறார்.

'நாதனுக்கு ஊர்'; 'நமக்கு ஊா'; 'நரசிஙக முனையரையன் ஆதரித்து ஈசனுக்கு ஆட்செய்யும ஊர்','அணி நாவலூர்' எனறும் சுந்தரர் நயந்து பாடு வர். பதிகம் முழுவதும் 'நம்மூர்' என்று கூறுதல் சுந்த ரர் தம் ஊர்ப் பற்றினைப புலப்படுத்தும,

முதலாம் பாரந்தகன, முதலாம் இராசராசன, இராசாதித்தன் ஆகிய சோழவேந்தா கல்வெட்டுகள் இவ்வூர்க் கோயிலில் இடமபெறறுளளன. பேரூர்க் கிழவன் புள்ளி பட்டணசாமி எனபவன திருமணட பம், திருவாசல திருத்தொண்டு செய்த செய்தியும கல்வெட்டில் உளளது. இரா.இ.

**திருநாவாய்:** இவ்வூர் சேரநாட்டில் உளள வைணவத திருத்தலங்களுள ஒனறு. இது பாரதப் புழை என்னும ஆறறின கரையில உளள ஒரு சிறறூர். தெனனிநதியப புகைவணடித் தடததில எடககுளம நிலையத்திலிருந்து $1\frac{1}{2}$ கி மீ தொலைவில இருக்கிறது.

இங்கு எழுந்தருளியுளள பெருமானுக்கு நாரா யணன எனபதும, பெருமாட்டிககு மலர்மஙகை நாச்சியார் எனபதும திருப்பெயாகள ஆகும். நாராய ணன தெறகு நோககிக் காட்சியளிககிறான. இவனை 'நாவாய் முகுந்தன்' எனறும் பிராட்டியைச 'சிறு தேவி நாச்சியார்' என்றும் மக்கள குறிக்கினறனா இங்குப் பெருமான, இலக்குமிக்கும் கயேந்திரனுககும வெளிபபட்டு அருள்புரிநதான எனபர்.

பெருமான் வீறறிருநத திருக்கோலத்தில திகழ கிறான எனபது நெடுஙகாலமாக நிலவி வரும கருத்து. ஆனால், இன்று நினற கோலத்திலேயே காணபபடுகிறான.

இத்திருபபதியினைத் திருமங்கைமனனன தமது பெரிய திரு மொழியில, 'தூய வாய புளளூர்நது (6:8 3) எனறும, 'கம்ப மாகளிறு' (10 1.9) எனறும தொடஙகும் இரு பாசுரஙகளில குறிததுளளார். இத திருப்பதியைப போற்றி நமமாழ்வாா, 'அறுககும வினை' (திருவாய்மொழி: 9.8) எனனும் ஒரு திரு வாய்மொழி பாடியுளளாா. இத்திருவாயமொழி சிறப்பாகப் போறறப்பெறுவது. இதனைப் 'பெரிய முதலியார் திருமொழி' (நாதமுனிகள் உகந்த திரு வாய் மொழி) எனபர்.

இத்திருக்கோயில மலாச்சோலைகளினிடையே அமைநதது. 'வெறித்தண மலர்ச்சோலைகள் சூழ்திரு நாவாய்', 'சோலைகள சூழ திருநாவாய்', 'நீளார் மலர்சசோலைகளசூழ்திருநாவாய', 'வணடார் மலர்ச சோலைகள சூழ்திருநாவாய்', 'கொநதார் மலர்ச் சோலைகள சூழ்திருநாவாய்' எனனும் பாசுரத் தொடாகளால் இதனை அறியலாம.

'நவையில் திருநாரணனசேர் திருநாவாய்', 'மணாளன் மலர் மஙகைக்கும மணமடநதைக்கும' எனனும பாசுரத் தொடர்களில் இத்திருததலப் பெருமான பெயரும், பிராட்டி பெயரும இடம் பெற றுளளன. தெ.ஞா.

**திருநாவுக்கரசு நாயனார்:** காணக: அப்பா.

**திநாவுக்கரசு முதலியார், மணி:** இவர் தொண்டை நாட்டைச சார்நத செங்கறபட்டு

மாவட்டத்தில மணிமஙகலம எனனும ஊரில கி.பி.1888-ஆம் ஆணடு பிறந்தவர் இவா பூவை கலியாணசுந்தர முதலியாரிடமும மறைமலையடிகளாரிடமும கலவி பயினறார். சென்னை வேப்பேரி எசு.பி.சி உயாநிலைப்பள்ளியில் துணைத தமிழாசிரியராகவும சென்னை முததியாலுப்பேட்டை உயாநிலைப் பள்ளியில தலைமைத் தமிழாசிரியராகவும் பணியாற்றினாா. பின்னர்ச் சென்னைப் பசசையபபன கலலூரியில் தமிழ்ப் பேராசிரியராகவும் சென்னைப பல்கலைக் கழகத் தேர்வாளராகவும் பணிபுரிநதார்

பல்வேறு சபைகளை நிறுவிச சைவ சமய வளர்ச்சிக்குததுணை நின்றார். சென்னையில் 'பால சைவ சபை'யையும் 'சித்தாந்தப் பிரகாசசபை'யையும நிறுவினார். மணிமங்கலத்தில் 'வாகீசா சபை'யைத தோறறுவித்தார். வாலாசாபாத்தில 'மாணிக்கவாசகா சபை' யைத் தோற்றுவித்தார். இலககிய இதழாக வெளிவந்து கொணடிருக்கும் 'செந்தமிழச் செலவி' எனனும மாத இதழினைச் சைவ சித்தாநத நூறபதிப்புக கழகத்தார் தோறறுவிக்க இவரே மூலகாரணமாக இருநதார். 'தமிழரசு' என்னும் வார இதழுக்கும் இவர் ஆசிரியராக இருந்தார்.

இவருடைய இளவலாகிய திருஞான சமபநத முதலியார், பாரிப்பாக்கம் கணணப்ப முதலியார், மயிலை சிவமுத்து முதலியோா இவருடைய மாணவாகளுள குறிப்பிடத் தக்கவர்கள. தனித்தமிழ வித்துவான் தேர்வு தோனறக் காரணமானவர்களுள இவரும் ஒருவர். மாணவர்கட்குபபயனபடும் வகையில எளிய நடையில் அறநெறிவிளக்கம், புலவா கதை, திருக்கணணப்பர், குமணன, இராசராசன, சணபக வலலி முதலிய உரைநடை நூலகளை இவா எழுதியுளளார். சிறந்த சீர்திருத்தவாதியாக வாழந்த இவா 1931-ஆம் ஆணடு மறைந்தார். சா.உ.

**திருநாளைப் போவார் நாயனார்.** சைவ நாயன்மாா அறுபத்து மூவருள ஒருவராம் இவர் கொளளிடக் கரையில் உள்ள ஆதனூர் என்னும் ஊரில புலையர் குலத்தில தோன்றியவா. இவரது இயற் பெயர் நந்தன். இவர் சிவன கழலில் உணமையான அன்பு செலுத்துபவர்; பிறந்தது முதல பிரான கழல எணணுவதன்றி அயல ஒனறும் நினையாதவர். அவ்வூரில் இவர் மானியமாக விடப்பட்ட நிலத்தில் உணவு விளைவித்துணபார்; சிவாலயங்களுக்குப் பேரிகை முதலிய கருவிகளுக்குத் தோலும், வீணைககும் யாழுக்கும் நரம்பும், அருசசனைக்குக் கோரோசனையும் கொடுப்பதனைத் தமது கடமையாகக் கொண்டார்; திருக்கோயிலின் புற வாயிலில் நினறு பேரன்பினால் சிவனைப் போற்றிஆடியும் பாடியும மகிழவார்.

ஒருநாள திருப்புன்கூர் சென்று சிவலோக நாதனைபபாடிப் பரவ நினைததார். பெருமானும அவவிருப்பத்திறகு இசைநதருளித தம திருமுன உளள நநதி தேவரைச் சிறிது விலகச் செய்து தமது திருமேனியைத தரிசிக்கச் செய்தாா. அருள வடிவை நேரே கணடு கும்பிடடு மகிழநத நநதனார் திருக் குளம தோணடிப் பணிசெயதாா. இவவாறு பல தலஙகளைக கணடு வணஙகிய நந்தனாாககுத திருத தில்லை மனறினைக கணடு தொழப் பெருஙகாதல உணடாயிறறு இரவு முழுவதும கணணுறஙகாத நநதனார் 'நாளைப் போவேன' எனறு அடிககடி கூறி வநதாா அதனால் அவருககு 'நாளைப போவாா' எனனும் பெயர் உணடாயிறறு

ஒருநாள தில்லையைக் கணடு தரிசிககும் பெரு விருப்பம் தமமைப் பிடிததுத் தளள ஆதனூரைவிட்டுத் தில்லையின எலலையைஇவர் அடைந்தார்; அஙகு வேளவிப் புகையும், அநதணா வேதம ஓதும இடஙகளும் கணடாா; தமது குலததினை நினைநது அப பதியின்கண புக அஞசினார்; மதிறபுறததே நினறு உளளுருகினார். அபபதியினை வலம வநதவா; இவவாறு இரவு பகல் வலம் வநதாா; மைவணணத் திருமிடற்று இறைவனைக் காணபது எவவண்ணம என ஏங்கினாா. இனனல தரும இழி பிறவி இது, அமபலததைக காணத தடை ஆயிறறே என வருநதித் துயில கொணட இவரது கனவில கூததப்பிரான முறுவலுடன தோனறி 'இப்பிறவி நீஙக எரியினிடை நீர்மூழ்கி முபபுரிநூலமாாபருடன என்னை அடைவாயாக' என அருளினார் வேளவித தீ அமைக்கும்படி தில்லைவாழ அநதணாக்கும் கனவின்கண் கூறினாா.

அதுகேட்ட அநதணர்கள விழிதது எழுந்து வியப்பும் அச்சமும் எயதிப் பிரான கட்டளையினை உணர்ந்து திருநாளைப் போவாரை அணுகி, 'ஐயரே! அம்பலவன அருள கட்டளைப்படி வேள்வித்தீ அமைததுத் தரவநதோம' என்றனர். தொணடரும் இறையருள நினைநது 'நான உய்நதேன்' எனத் தொழுதார். தென திசையின் மதிற்புறத்து அமைக்கப்பபட்ட தீக குழியினை அடைநது திருவருளை நினைந்து வலம் வநது அதனுட் புகுந்தார். புணணிய முனி வடிவினராய் மெய்யில வெணணூல் விளஙக எழுந்த கோலம் செம்மலா மேல வீற்றிருக்கும் பிரமன போல இருநதது. தில்லைவாழ அநதணர்கள கைதொழுதனர். அவர்களுடன் சென்று கோபுர தரிசனம் செய்து கோயிலுட் புகுநதார். இறைவன் திருமுன்பு எயதியவர் அருட் சோதியிற் கலந்தார். அது கண்டு அநதணர் வியநதார். அரு முனிவர் துதி செய்தார். இவவாறு ஆனந்தக் கூத்தரால ஆட்கொளளப்பட்டார்.

இவரது வரலாறு கோபால கிருட்டிண பாரதியாரால் இசை நாடகமாகப் பட்டுள்ளது நந்தனாரின் பக்தி, தூய்மை, ஈடுபாடு ஆகியவை அந்நூலில் நனகு காட்டப்பட்டுள்ளன எனினும் நாடக அமைதி கருதிப் பண்ணையார் முதலிய பாத்திரங்கள் புதிய தாகக் கற்பனை செய்யப்பட்டுள்ளன ஜி ஆர்.கி.

***திருநின்றவூர்*** தொண்டைநாட்டு வைணவத் திருத்தலங்கள் இருபத்திரண்டினுள் ஒன்று இத்தலம் சென்னைக்கும் திருவள்ளூருக்குமிடையே சென்னையிலிருந்து 31 கி மீ. தொலைவிலமைந்துள்ளது. இன்று திருவள்ளூர் எனப்படுகிறது. திருமாலுடன் ஊடல் கொண்ட திருமகள் அவனை விட்டு பிரிந்து வந்து, இவ்விடத்தில் விரும்பி வாழ்ந்தமையால் திரு நின்ற ஊர் எனப்பட்டது வடமொழியில் இத்தலம் 'சீனிவாச சேத்திரம்' எனப்படுகிறது. திருமங்கை ஆழ்வார் இத்தலத்து எம்பெருமானை இரண்டு பாசுரங்களால் (பெரிய திருமொழி 2 5 2, 7 10.5) பாடியுள்ளார். 'மற்ற திவ்ய தேசங்களுக்குப் பத்துப்பத்தாகப் பாசுரம் பாடிய ஆழ்வார், தம நாதனுக்கு மட்டும் இரண்டே பாசுரங்கள் பாடியிருக்கிறாரே!' என்று திரு (பிராட்டி) திகைத்து நின்ற ஊர் ஆதலின் திருநின்றவூர் என்று பெயர் ஏற்பட்டது என்றும் கூறுவர். இத்தலத்து எம்பெருமானுக்குப் பக்தவத்சலன் என்றும் தாயாருக்கு 'என்னைப் பெற்ற தாயார்' என்றும் திருநாமம். இங்குள்ள விமானம் உற்பல விமானமாகும். எம ந.

***திருநின்றியூர்***: மயிலாடுதுறையில் இருந்து சீர்காழிக்குச் செல்லும் சாலையில் 10 கி மீ. தொலைவில் உள்ள பழைமையான ஊர். இவ்வூர், தேவாரத் திருப்பாடல் பெறும்பேறு பெற்றது. திருஞானசம்பந்தரும் சுந்தரமூர்த்தியாரும் பதிகங்கள் பாடியுள்ளனர்.

திருக்கோயில் கொண்ட இறைவர், 'இலட்சுமிபுரீசுவரர்' என்றும், 'மகாலட்சுமிநாதர்' என்றும் வழங்கப் பெறுவர். அம்மை, உலக நாயகி. தீர்த்தம் மகாலட்சுமி தீர்த்தம் எனப்படும்.

திருமகள் வழிபட்டு நிலைபெற்ற சிறப்பால் இப்பெயர் பெற்றது என்பது தலவரலாறு சோழவேந்தன் ஒருவன் திருவிளக்கிட்டு நாள்தோறும் வழிபட்டு வந்தான் என்றும், அவன் கொண்டு வந்த திரி ஒரு நாள் நின்று விட்டதால் இலிங்கத்தினின்று ஓர் ஒளி தோன்றி வழிபாட்டுக்குத் தடையின்றி உதவியதென்றும், அதனால் 'திரிநின்றியூர்' என்று பெயராகி இவ்வாறு மாறியதென்றும் கூறும் செய்தி வழக்கில் உண்டு.

பொழிலும் பொய்கையும், வயலும் வளமுமாக இவ்வூர் விளங்கும் சிறப்பை ஞானசம்பந்தர் பாடியுள்ளார் 'ஏழெழுநூறு இருமபனுவல் ஈன்றவன் திருநாவினுக்கரையன்' என்னும் செய்தியையும், பரசுராமன் செய்த கொடை பற்றிய செய்தியையும் இவ்வூர்ப் பதிகத்தில் சுந்தரர் குறித்துள்ளார் திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராசதேவனின் கி பி.15-ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று இக்கோயிலில் உள்ளது. இரா இ

***திருநீடூர்*** இது தஞ்சை மாவட்டத்தில் மயிலாடுதுறையிலிருந்து 4 கி.மீ.தொலைவில் திகழும் தேவாரத் திருப்பாடல் பெற்ற திருவூராகும் இவ்வூரைக் குறித்த வரலாறு திருமுறைகளிலும், அகநானூற்றிலும், இவ்வூர்த் திருக்கோவிலிலுள்ள கல்வெட்டுகளிலும், நானூறு பாடல்கொண்ட வடமலைப் பிள்ளையன் என்பவரால் செய்யப்பெற்ற திருநீடூர்த் தல புராணத்திலும் பேசப் பெறுகிறது. ஊழிககாலத்திலும் அழியாதிருந்த சிறப்புப் பற்றி நீடூர் எனப் பெயர் பெற்றது என்று தல புராணம் கூறுகின்றது.

அப்பர், சுந்தரர் திருப்பதிகங்களும் பெரிய புராணமும் இவ்வூரின் வயல் வளத்தைப் பெரிதும் பாராட்டுகின்றன. பழந்தமிழ் நூல்களுள் ஒன்றான அகநானூற்றிலும் வேள் எவ்விக்கு உரிய ஊரர்க இவ்வூர் பேசப்படுகின்றது. 'யாழிசை மறுகின் நீடூர் கிழவோன், வாய் வாள் எவ்வி' (அகம்.266). இவ்வாறு பரணர் பாடும் பகுதி யாழிசை முழுங்கும் வீதிகளையுடைய நீடூருக்கு உரியவன் வாள் வெற்றியையுடைய வேள் எவ்வி' எனக் கூறுகின்றது. சிறந்த வீரராகிய முனையடுவார் நாயனார் இத்திருவூரில் வாழ்ந்த வேளாளத் திருமகனாவார்.

மயிலாடுதுறையிலிருந்து நகரப் பேருந்தில் சென்றும் சென்னை மயிலாடுதுறைப் புகைவண்டிப் பாதையில் நீடூர் புகைவண்டி நிலையத்தில் இறங்கியும் இவ்வூரை அடையலாம். சைவ மெய்யன்பர்கள் வாழ்ந்த சிவத்தலமாகிய இவ்வூரில் இப்பொழுது முகமதியப் பெருமக்கள் மிகுதியாக வாழ்கின்றார்கள்.

இவ்வூர் திருக்கோயில் திருவாயிலில் மிகப் பழைய மகிழ மரம் உள்ளது. முனையடுவார் நாயனார் திருவடிவத்தையும் இங்குக் காணலாம. இறைவன் திருப்பெயர் கானதீர்த்த சங்கரர், சோமநாதர், பாடியாடிய தேவர் என்பனவாம். இறைவி திருப்பெயர் வேயுறு தோளியம்மை, ஆதிகாந்தியம்மை, வேதநாயகி என்பனவாம். மண்ணால் அமைந்த சிவலிங்க வடிவு இங்கு அமைந்துள்ளது இந்திரன், சந்திரன், பத்திரகாளி, நண்டு, சூரியன், செம்பியன் முதலானோர் வழிபட்ட வரலாறுகள் பொறிக்கப்பட்டுள்ளன. சூரிய சந்திர தீர்த்தங்களும் இந்திரன், பத்திரகாளி, முனிவர்,

வருணன் முதலியோர் பெயரால் விளங்கும் தீர்த்தங்களும் உள்ளன.

இத்திருக்கோயில் கல்வெட்டுகள் இரண்டாம் இராசராசன், மூன்றாம் இராசராசன் காலத்தன. இக் கல்வெட்டுகள் யாப்பருங்கலக்காரிகை ஆசிரியரின் பெயரை 'அமிதசாகரர்'என்று குறிப்பிடுகின்றன. மேலும்,அவற்றில் மன்னர்கள் இத்திருக்கோவிலுக்குச் செய்த பணிகள் கூறப்பெற்றுள்ளன. சு.சு.

**திருநீர்மலை:** இது நீர்மை குன்றாமலை. நீரால் சூழப்பெற்ற மலை நீர்மலை என்றும் கூறலாம். திருமங்கையாழ்வார் பாடல் நோக்கில் நீல வண்ணன் சேவை சாதிக்கும் மலையாதலால் நீர்மலை என்றும் வழங்கப் பெற்றதாகக் கருதலாம். 'நீர் வண்ணன் நீர் மலைக்கே' (திருமங்கை. தாண்டகம்–11).

இது தொண்டை நாட்டு வைணவத் திருப்பதிகளுள் ஒன்று. செங்கற்பட்டு மாவட்டம் பல்லாவரத்திலிருந்து 5 கி.மீ. தொலைவில் இது அமைந்துள்ளது. இறைவன் நீலமுகில் வண்ணன்; இறைவி அணிமாமலர் மங்கைத் தாயார். இவர்கள் மலையடிவாரக் கோயிலில் குடி கொண்டுள்ளனர். மலையின் மேல் அரங்கநாதன் திருவரங்கநாயகிக் கோயில் உள்ளது. இங்கு இறைவன் நிற்றல், இருத்தல், கிடத்தல்,நடத்தல் ஆகிய நான்கு நிலைகளிலும் காட்சி தருவதை, 'நின்றான்,இருந்தான் கிடந்தான் நடந்தார்க்கு இடம் மாமலை யாவது நீர்மலையே' (பெரிய திருமொழி 2-4-1) எனத் திருமங்கையாழ்வார் பாடிப் பரவுகின்றார். கீழுள்ள தீர்த்தம் மணிகர்ணிகாத் தீர்த்தம் ஆகும். சயனம் மாணிக்க சயனம்; விமானம் தோயகிரி விமானம். இத் திருத்தலத்தைத் திருமங்கையாழ்வாரும் பூதத்தாழ்வாரும் பாடியுள்ளனர். இத்திருத்தலம், 'சேடார் பொழில்சூழ் திருநீர்மலை' (பெரிய திருமொழி 6-8-21), 'புலங்கள் பொருநீர் புட்குழி பாடும், போதுமோ நீர்மலைக் கென்னும்' (பெரியதிருமொழி 6-7-8) என்னும்ஆழ்வார் பாசுரங்களால் வழி நீர்வளம், நிலவளம் மிக்கது என்பது அறியப்பெறுகின்றது. பொன்.சௌ.

**திருநீரகம்:** காஞ்சிபுரத்துத் திருவூரகத்தில் அமைந்திருக்கும் வைணவத் திருத்தலங்களுள் இதுவும் ஒன்றாகும். தொண்டை நாட்டு வைணவத் திருப்பதிகளுள் இது இடம் பெறுகிறது. காஞ்சிபுரம் உலகளந்த பெருமாள் சந்நிதிக்குத் தென்மேற்கே $1\frac{1}{2}$ கி.மீ. தொலைவில் இது உள்ளது. இறைவன் சகதீசப் பெருமாள்; இறைவி திருமங்கைவல்லித் தாயார். நின்ற திருக்கோலத்தில் திருமால் காட்சி தருமிடம் இது. திருமங்கையாழ்வார் பாடல் (திருநெடுந்தாண்டகம். 8) பெற்ற திருத்தலம் இது. பொன்.சௌ.

**திருநீலக்குடி** என்னும் திருவூரானது தென்னலக்குடி என்னும் பெயரோடு தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணத்திலிருந்து காரைக்கால் செல்லும் பேருந்து வழியில் திருநாகேசுவரத்திலிருந்து, 3 கி.மீ. தென்கிழக்கில் உள்ளது. ஆடுதுறை வடமட்டம் பேருந்து வழியில் ஆடுதுறையிலிருந்து 3 கி.மீ. தொலைவு. கோவில் சாலை ஓரம் தனித்துள்ளது. ஆடுதுறை புகைவண்டி நிலையத்திற்கு மூன்று கிலோமீட்டரிலும் திருவிடைமருதூர் புகை வண்டி நிலையத்திற்குத் தென்கிழக்கே நான்கு கிலோமீட்டரிலும் இருக்கின்றது.

இங்குள்ள இறைவர் திருப்பெயர் நல்லநாயகர், மனோகரநாத சுவாமி. திருநீலகண்டேசுரர் என்றும் இவரைக்கூறுவார்கள். திருநீலகண்டேசுரர் வீற்றிருக்கும் திருவூராதலால் திருநீலக்குடி என்னும் பெயர் பெற்றது. இறைவி பக்தாபிட்டப் பிரதாயகி, ஒப்பிலா முலையம்மை, அழகாம்பிகை என்னும் பெயர்களோடு எழுந்தருளி இருக்கின்றாள்.

தலமரம் வில்வம். பலாமரம் ஒன்று இருக்கின்றது. மூல இலிங்கத்திற்குச் சிறப்பு நாட்களில் எண்ணெய்க் காப்பு நடைபெறும். ஒவ்வொரு தடவையும் $2\frac{1}{2}$ இலிட்டர் எண்ணெய் தேய்ப்பார்கள். எண்ணெய் முழுதும் சுவாமிபினுள்ளே சுவறிவிடும்.

சுவாமி கோவிலின் இடப்புறத்தில் அம்பாள் சந்நிதிகள் இரண்டும் சேர்ந்தாற்போல் உள்ளன. முதல் அம்பாள் தக்கன் மகள் (சிறிய வடிவம்). மற்ற அம்பிகை ஒப்பிலா முலையம்மை; பெரிய திரு வடிவம். பிரமன் வழிபட்ட இலிங்கம் தனிக் கோவிலாக உள்ளது. மார்க்கண்டேயர் வழிபட்ட திருவூர் இது.

தக்கனுடைய மகள் இந்தத் திருவூருக்கு வந்து ஐந்து வில்வங்களின் அடியில் சுவாமி எழுந்தருளி இருக்கக்கண்டு பூசித்தார். அவரே சுவாமிக்குத் தைலம் சாத்தித் திருமுழுக்காட்டினார். பஞ்ச வில்வங்களின் அடியில் பெருமான் இருந்தபடியால் பஞ்சவில்வாரணியம் என்னும் சிறப்புப்பெயர் பெற்றது.

முன்பு இங்குச்சித்திரா பௌர்ணமித் திருவிழா சிறப்புடன் நடந்துள்ளது. 1) திருநீல்க்குடி, 2) விட்டலூர், 3) இலந்துறை, 4) ஏனாதிமங்கலம், 5) திரிபுவனம், 6) திருவிடைமருதூர், 7) மருத்துவக்குடி ஆகிய ஏழு ஊர்களுக்கு இறைவர் எழுந்தருளுவார். இப்பொழுது இவ்விழா நடைபெறுவதில்லை.

திருநாவுககரசர் இத்திருவூாப் பதிகததில 'கலலி னோடெனைப் பூட்டி அமணகையா, ஒலலைநீர்புக நூககி என வாககினால நீலககுடி அரன, நலலன நாமம நவிறறி உயநதேன்' எனத தல வரலாற்றுக குறிப்பு வைததுப பாடுகின்றாா சு.சு.

**திருநீல கண்ட நாயனார்**: திருத்தொணடத் தொகையில நமபி ஆரூரா முதன் முதலாகப பாராட் டியசிறபபுடையவா திருநீலகணடக்குயவனார். அடியார் களை அவாகள குலததுடன் இணைத்துப பேசுதல மரபன்று எனினும இபபெயருடையவாகள இருவர் இருத்தலால வேறுபடுததி உணர்தற பொருட்டுத திருநீலகணடக் குயவனாா எனவும், திருநீலகணடததுப பாணனாா எனவும போறறபபட்டனர்

இவா தில்லைபபதியில தோனறியவர். வேட்கோ வர் குலத்தில் பிறந்தவர். இவர் திருநீலகணடததின கண் கொணட பேரன்பினால் அத்திருபபெயரை இடையறாது ஓதும இயலபினா. எனவே, இவர் திரு நீலகணடர் எனனும பெயர் பெறறாா. இவா பொய கடிநத புனிதா; அடியார்க்குப பணி செய்யும விருபபி னா, அடியார்களுக்குஉணகலமாகிய திருவோட்டினை நலகுதலைக் கடமையாகக் கொணடவா; இளமை மிகுதியினால் இன்பத துறைககு எளியரானாா.

ஒருநாள பரததையை அணைநது தம மனைவி யாரையும அணுகிய நிலையில அவவம்மையாா எம்மைத் தீணடுவீராகில திருநீலகணடம எனறு ஆணையிட்டார். அதுகேடட நாயனாா 'எமமை' எனறதனால மற்றை மாதராா தமமையும மனத தாலும் தீணடேன எனறு உறுதிகூறினார். அன்று முதல அவர்கள உடனுறைவினறி அதனை அயலவர் அறியாவணணம் வாழநதனா. ஆணடு பலவும செலல முதுமை வநது எயதியது. அவாகளது தூய ஒழுக்க நிலையை உலகததவாக்கு உணாததத் திரு உளளங கொணடார் இறைவன. சிவயோகியின வேடங கொணடு திருநீலகணடரை அணுகி இத்திருவோட்டி னைப் பாது காத்துப் பின தருக எனறாா. நாள பல சென்றபின மீணடும வந்து முன்பு தநத ஓட்டினை வேண்டினாா இறைவன் திருவருளால அது மறைந் தது. பல இடங்களிலும தேடித திகைபபுற்ற நாய னார் அதனினும சிறப்புற்ற வேறு ஒனறைத தருவ தாகக் கூறினார். அவ்வோடு காணாமல ஒழிநதது என்று கூறககேட்ட யோகி அதனை நமபாத வராகி அது உணமையாயின் அவர்தம மைந்தனைப பற்றிக் குளததினில் மூழ்கிச் சத்தியம் செய்ய வேண்டும எனறார். அதற்கு நாயானாா அவர்கசு மகப்போறு இல்லை எனறு வருந்திக் கூற மனைவியின் கரம் பிடித்தாகிலும் சததியம செயதல் வேணடும எனறார் இறைவன. அதறகுத திருநீலகணடர் தங் களுககுள ஒரு சபதமுளளதால அதுவும இயலாது எனக் கூறச் சிவயோகிகள் இவவழககினைத் தில்லை வாழ் அநதணாா கூடும பேரவையில சொலவதாகக கூறிச சென்றார்.

வழக்கினைக கேட்ட அநதணாகள ஆணடவன தநத திருவோட்டினைக் காணாமல் போககியது உணமையானால அவா விருப்பப்படி தம மனைவி யுடன நீரில மூழகி உறுதி கூறுதலே முறை எனறனா. அதுகேடட அடியார் 'பொருநதிய வகையிலஅதனைச செய்வேன' எனறு மூஙகில கோலின ஒருமுனையைத தாமும மறறொரு முனையினைத தம மனைவியாரும் பற்றிககொளளக குளததில மூழகும்போது சிவயோகி யாா, மாதினைத் தீணடி உடன மூழகுதல வேணடும எனறார். அபபோது பாரோர் கேட்கத் தம செயகை சொலலி மூழ்கினார் பழுதிலாத நாயனார். குளததி னினறும எழுமபோது இருவரும் வியப்புறும் இளமை யுடன திகழந்தனா. இநத அதிசயத்தைக் கரைதனி லிருநத அனைவரும் கணடனா சிவயோகியாா மறைநதார். இறைவன அமமை அப்பராக விடை மேல் தோன்றி 'ஐமபுலனகளையும் வெனற சிறப் புடைய அவாகளை எனறும தம்பால் இளமையுடன இருக்க' அருள்புரிநதாா இருவரும திருததொணடில ஈடுபட்டு நீஙகா இளமையுடன நிறைவான பேரினபம அடைநதனா. 'மாது சொன்ன சூளால 'இளமை துறகக வலலேன அலலேன' எனறு இவரது சிறப் பினைப பெருநதுறவியாகிய பட்டினததாா வியநது பாடுகினறார். ஜி.ஆர்.கி.

**திருநீலகண்ட யாழ்ப்பாணர்**: இவா நடு நாட்டில திரு எருககததம புலியூரில யாழ மீட்டி இசை பாடும் பாணா மரபில வநதவர். இவரும இவரது மனைவியாராகிய மதஙக சூளாமணியாரும சோழ நாட்டுத தலஙகளைப் பாடிப பரவிப் பாணடி நாடு அடைநது ஆலவாய அணணலைப போற்றினர். இவரது இசை கேட்டு மகிழநத இறைவன தம தொணடர் கனவில தோன்றிப் பாணரைத் திருமுனபு அழைதது வரும்படி பணித்தார்; பாணாகளும இதனை உணர்ததினார். இறைவன் பணிதத வணணம் பாணர் கோயிலை அடைநது இறைவனை வணங்கிப பாடிப் பணிநதாா. இவர்ககுப பலகை இடும்படி அசரீரி கூறத்தொண்டாகள பொறபலகை இட்டனர். அதனபின் பல தலஙகளை வழிபட்ட பாணா ஆரூரை அடைநதாா, இன்னிசை யாழ் மீட்டி இறைவனைப் போறறினாா, இசைக்குவநத இறைவன இவர்க்கு வடதிசையில வாயில ஒனறு வகுத்தருளினான். பினனர், திருஞான சமபந்தரை வணஙகும் பெருவிருப்புடன சீகாழியை அடைந தார். திருஞான சமபந்தரும் இவாக்குத தகக சிறப்

பருளித் தம்முடனிருந்து தாம் பாடும் பதிகங்களை யாழிலிட்டு இசைக்கும் பேறு அருளினார்.

தருமபுரத்தினில் திருஞான சம்பந்தர் 'மாதர் மடப்பிடி' என்னும் பதிகம் பாடினார். அதனைப் பாணர் இசைக்க முயன்றார். அது பூதலத்தோர் கண்டத்தும் கலத்தினிலும், உலகத்தவர் புகலும் நாத இசை முயற்சிகளிலும்அடங்காதது. ஆதலின் அது யாழ் வழி அடங்காததாயிற்று. அப்போது பாணர்தம் யாழினை ஒடித்து எறியமுயன்றார். அதுகண்ட சம்பந் தப்பிரான் 'ஐயரே' என அன்புடன் உரைத்து அவரைத்தடுத்துத் திருவருளின் பெருமை எல்லாம் இக்கருவியின் அளவு படுமோ, இந்த யாழினைக கொண்டே பதிக இசை வாசிப்பீர் என வாழ்த்தி அருளினார். திருநள்ளாற்றில் சம்பந்தர் 'போக மார்த்த பூண் முலையாள்' என்னும் ஒப்பற்ற திருப் பதிகத்தைத் திருத்தாளம் கொண்டு பாட அவர் பணித்தபோது பெரும் பாணரும் யாழில் அதனைப் பாடிச் சிறப்பித்தார். இவ்வாறு யாழிசை மீட்டித் தொண்டு செய்த திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவரது துணைவியாரும் திருநல்லூர்ப் பெருமணத் தில் திருஞான சம்பந்தரின் திருமணத்தைக் கண்டு அவருடனும், அடியார்களுடனும்ஈறில் பெருஞ்சோதி யில் புகுந்து பேரின்பப் பெருவாழ்வு பெற்றனர்.

ஜி.ஆர்.கி.

**திருநெடுங்களம்** சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள 8- ஆம் சிவத்தலமாகும். இது தஞ்சை-திருச்சி இருப்புப் பாதையில் சோழகம்பட்டி புகைவண்டி நிலையத்திலிருந்து தெறகே 4 கி.மீ. தொலைவிலுள்ளது. திருச்சியிலிருநது பேருநது வசதி யுமுண்டு. இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தரின் ஒரு பதிகம் மட்டும் உண்டு. இறைவன பெயா நித்திய சுந்தரர்; இறைவி பெயர் ஒப்பிலா நாயகி. கல்வெட்டு களில் இத்தலப் பெருமானைப் பறறித் திருநெடுங களமுடைய நாயனார், நெடுங்களமுடையாா, உல காணடேசுவரமுடையார், களந்தை நாயகர், திரு நெடுங்களமுடைய தமபிரானார், நிழலாா சோலை வளமுடைய நாயனார், திருநெடுங்களத்து ஆள்வாா என்று பல பெயர்கள் காணப்படுகின்றன. இத்தலத் தில் 34 கல்வெட்டுகளுள்ளன. சுநதர பாணடியன், கரிகாலன, சீவல்லப தேவன, இராசகேசரிவர்மன, இராசராசன மூன்றாம,ஒய்சள வீரராமதேவா, திரி புவன வீரதேவன, பரகேசரிவர்மன, விசயநகர அரசர், நாயக்க மன்னர் முதலியோர்களஆட்சியில மைந்த கல்வெட்டுகள் காணப்பெறுகினறன. கோயி லுக்குப் பொன, நிலம், நெல அளித்தமை பற்றியும் விளக்கீடு செய்தமை பறறியும் பல செய்திகள தெரிய வருகின்றன. இங்குள்ள தீர்த்தம சுநதர தீர்த்தம் என்பதாம். இக்காலத்து மக்கள் இவ்வூரை திருநெட் டாங்குளம் என வழங்குகின்றனர். சமபந்தர் பாடிய பாடல் ஒவ்வொன்றும 'இடர்களையாய் நெடுங்களம் மேயவனே' என்றே முடிகிறது. ஆதலின் மக்கள் தங்களுக்குள்ள துன்பம் தீர்த்துக்கொள்ள இப்பதி கத்தை நாள்தோறும ஓதி இறைவனை வழிபடுகின்ற னர்; நலமும பெறுகின்றனர். ஆகவே,இப்பதிகத்திற்கு 'இடர்களையும் பதிகம்' எனப் பெயராயிற்று. ''துஞ் சலில்லா வாய்மொழியால் தோத்திரம் நினனடியே, நெஞ்சில் வைப்பார் இடர் களையாய் நெடுங்களம் மேயவனே' என்று கூறும் பகுதியிலிருந்து சம்பநதப் பெருமான் மக்கள்பொருட்டு நன்மை அருளப் பெரு மானிடம் வேணடுவதைத் தெரிந்துகொளளலாம்.

இரா.ச.

**திருநெய்த்தானம்** காவிரியின் வடகரையிலுளள சோழ நாட்டுப் பாடல பெற்ற சிவத் தலங்களுள் 52 -ஆம் தலமாகும். தஞ்சைப் புகை வண்டி நிலையத்தி லிருந்து வடக்கே 15கி.மீ. தொலைவிலும் திருவையாற் றிலிருநது மேற்கே 2கி.மீ. தொலைவிலும் இவவூருள ளது. இத்தலததிற்குத் திருஞான சம்பந்தர் அருளிய தேவாரப் பதிகம் ஒன்றும் திருநாவுக்கரசர் அருளிய பதி கங்கள் ஐந்தும் ஆக ஆறு பதிகங்கள் உளளன. அருண கிரிநாதர் திருப்புகழும் இத்தலத்திற்கு ஒனறுண்டு. திருவையாற்றில் நிகழும் ஏழூர் விழாவில் திருநெய்த் தானம் ஏழாம் தலமாகும். இஙகிருந்து பல மணடபப் படிகளையும் பெறறு ஏழூர் மூர்த்திகளும் (திருவை யாறு, திருப்பழனம், திருவேதிகுடி, திருச்சோற்றுத் துறை, திருக்கணடியூர், திருப்பூந்துருத்தி, திருநெய்த் தானம) பவனி வரும் காட்சி கணகொள்ளாக்காட்சி யாகும் இத்தலத்திறைவன பெயர் நெய்யாடியப்பர்; இறைவி பெயர் வாலாம்பிகை அம்மை. இத்தலத்தில் கலைமகள் முதலிய பலர் வழிபட்டு நறபேறு அடைந் தனர் எனப் புராண வரலாறு கூறும். இத்தலத்தில் கல்வெட்டுகள பல உள்ளன அவறறிலிருந்து இக் கோவிலுக்கு நித்திய வழிபாடுகளும் விழாக்களும் நடைபெறப் பலா கொடுத்த நிவநதங்கள் பற்றிப் பல உணமைகள் தெரிய வருகினறன. ஆதித்த சோழன காலத்தில் கொடும்பாளூர் தலைவன் ஆன விக்கி அண்ணனுக்குச சோழன, சேரன முதலியோர் சேர்நது 'செம்பியன தமிழவேள' என்ற பட்டததைக் கொடுத்த செய்தி ஒரு கல்வெட்டிலிருநது தெரிய வருகிறது. பிறகாலத்தும் இக்கோயிலுக்குப் பலர் நிலக்கொடை முதலியவற்றைச செய்துளளனர். இத் தலப் பெருமானைப் பற்றி ஒட்டக்கூத்தரும் புகழேந் திப் புலவரும் பாடிய தனிப்பாடல்களும் உளளன. அப்பர் பெருமான ஒரு செயயுளில கணநேரத்தில் மறையத் தக்க இவவுடலைச் சதமாக நினைத்து

'அனைத்துலகும் ஆளலாம் எனறு பேசும் அகங்காரம தவிர் நெஞ்சே' என்று நெஞசை இடித்துக் கூறும் திறம் மிகவும் சிறந்ததாய உளளது இவவாறு பல அரிய அறவுரைகள இததலத தேவாரத் திருப்பதிகங களிலுளளன. இரா ச.

***திருநெல்லிக்கா***: சோழ நாட்டில காவிரியின தெனகரையிலுள்ள பாடல பெற்ற 117-ஆம் சிவத் தலமாகும். திருவாரூா திருததுறைபபூணடி இருப்புப் பாதையில் திருநெல்லிககாவல புகைவணடி நிலையத திலிநது ½ கி.மீ தொலைவில இவவூர் உளளது. பேருந்து வசதிகளும் இவ்வூா செலவதறகு வாயப பாக உள்ளன. இத்தலததுககுரிய தலவிருட்சம் நெல்லிமரம் ஆதலின,திருநெலலிக்கா எனப பெயருண டாயிறறு. மககள இப்போது திருநெலலிக்காவல என வழங்குகின்றனர் இத்தலததின வேறு பெயர்கள அருணநகரம, சகியாமலகபுரம, பிரமதீர்த்தபுரம, குட்டரோககரம், மங்களாபுரம், சர்வோததமபுரம், அனநதபுரம், பஞசாட்சரபுரம, பஞசதீாததபுரம, பஞ்சகூடபுரம, அமிர்த வித்தியாபுரம் முதலிய பல. இத்தலதது இறைவன பெயா நெலலிவன நாதா; இறைவி பெயா மஙகளநாயகி. கலவெட்டில ஆமல கேசுவரி எனறு காணப்பெறுகிறது. இததலம,கோயில அமைப்புகள யாவும பெறறுச் சிறநது விளஙகுகிறது. இஙகுளள பெருமானுககும ஆமலக மகாலிஙகம, அமிர்தலிங்கம, மஙகளலிஙகம முதலிய பல பெயர் கள வழஙகப் பெறுகின்றன. இங்குளள தீாததஙகளுள தலை சிறநதவை சூரிய தீர்த்தம, பிரம தீாததம, சக்கரதீாததம், உரோகநிவாரண தீர்ததம, சந்திர தீர்த்தம் எனபன. தேவர் உலகிலுள்ள கறபகதருவே நெலலி மரமாக இஙகுத தோனறிறறு. ஆதலின, இஙகுளள பெருமான வேணடுவோா வேணடுவதை ஈவான எனறு மக்கள நமபிககையுடன வழிபட்டுத் தஙகள துனபம் தீர்ததுக் கொளகினறனா. ஆணடு தோறும் மாசிமாதம் 18-ஆம நாள் முதல் ஒரு வாரம் மாலை நேரத்தில சூரிய ஒளி இத்தல மூல லிங்கத் தின மீது படுகிறது. சூரியன வழிபடுகிறான என மக்கள கருதுகினறனர். இவவாறு சூரிய ஒளி மூலவர் மீது படும் தலங்கள மிகச் சிலவே. அவறறுள இத் தலமும ஒனறு பிரமன், திருமால முதலிய பலரும வழிபட்டுப் பேறு பெறறதாகப் புராணம் கூறும். இத்தலத்திற்குத் திருஞான சமபந்தா பதிகம ஒனறு மாத்திரம் உளளது. அபபரும சுநதரரும சேத்திரக் கோவையிலும் நாட்டுத் தொகையிலும இத்தலத் தைக் குறிப்பிட்டுள்ளனர். தனிப் பதிகமாகக் கிடைக் கவிலலை. அணமையில் செலவர்கள பலரின திருப் பணிகளையும் பெற்று இத்தலம் சிறந்து விளஙகு கிறது. இக்கோவிலில் 8 தமிழ்க் கலவெட்டுகள உள ளன. அவை நிலம் வழங்கியது. விளக்கெரிக்கப் பொருள் வழஙகியது முதலியன பற்றிக் கூறுகினறன. நலல குறிக்கோளுடையவர்கள் தொழத் தகக பெரு மான் நெலலி வன நாதன் என்பதனை, 'குறியால குறி கொணடவர் போயக குறுகும நெறியான நெலலிக் காவுள நிலாயவனே' என்று சமபநதா அரு ளிய திருவாககால உணர்நது இன்புறலாம இரா.ச.

***திருநெல்வாயில்*** சோழ நாட்டிலுளள பாடல பெறற தலஙகளுள காவிரிக்கு வடகரையி லுள்ள 3-ஆம் தலமாகும் இததலம் சிதமபரததிறகுத தெனகிழக்கில் 5 கி மீ. தொலைவிலுளளது அண ணாமலை நகரிலிருந்து 3 கி.மீ தொலைவிலிருக்கிறது இத்தலத்திறகுத் திருஞான சம்பநதர் பதிகம ஒன றுணடு. அதில ஒவவொரு பாடலும 'நெலவாயிலார் மறையோதியார் எமதுச்சியாரே' எனறே முடிகிறது இததலததிறைவன பெயா உசசிநாதா. இறைவி பெயர் கனகாம்பிகை மக்கள இத்தலததை இப போது சிவபுரி என வழஙகுகினறனர். இததலத்திற்கு அருணகிரிநாதர் இயற்றிய திருப்புகழும ஒனறுணடு. சிவபுரிமானமியம் எனத தல வரலாறும ஒனறுணடு. அதிலிருந்து இததலத்தில வசிட்டர், திருமால அருசசுனன முதலியோர் பெருமானை வழிபட்டு நனனிலையுறறனா எனறு தெரிகிறது இத தலத்தினை இடப்பெயாசசி செயது மககள கட்டி யிருககினறனா எனபது தெரிகிறது. இஙகு 3 கல வெட்டுகள உளளன ஒரு கலவெட்டில கிருட்டிணபப நாயக்கர் நலத்திறகாகச சிதம்பரம் அபிடேகபுரம அககிரகாரததிறகுக காரியததாா கோனேரி செட்டி யாா எனபவர் 25 மா நிலம் கொடுத்த செயதி தெரி கிறது. இரா.ச

***திருநெல்வாயில் அரத்துறை*** நடுநாட்டி லுளள 22 சிவத்தலஙகளுள முதல் தலமாகும. இது பெணணாடததிலிருநது தெனமேறகே 6 கி. மீ. தொலைவில உளளது. நிவா எனற பெயருளள வட வெளளாறறின கரையிலுளள ஒரு சிறநத சிவத்தல மாகும். இறைவன பெயா அரததுறை நாதர்; இறைவி பெயர் ஆனந்தநாயகி. சம்பநதர் இவவூருககு வரும் பொழுது தம தநதையார் தோளிலிருநது இறஙகி நடநது வநதார். அது பொறாத பெருமான அவவூர் அந்தணர்களுக்கு முத்துச் சிவிகை, முததுக குடை, முத்துச் சினனஙகள முதலியவற்றைக் கொடுக் கும்படி கனவில கட்டளையிட்டாா. அவறறை ஏற றுககொள்ளும்படி சமபந்தருக்கும் கனவிலேயே அருள் பாலித்தார் அவவாறே திருக்கோயிலில முனனரே அப்பொருள்களையும் வரவழைத்திருககச் செய்தாா. அந்தணர்களும் பெருமான கட்டளைபபடியே சமபந தரை எதிாகொணடு சென்று முத்துச்சிவிகை முதலி யவற்றைக் கொடுக்க, பெருமான கருணை மேலீட்டை

வியந்து சம்பந்தர் 'எந்தையீசன் எம்பெருமான்' என்னும் திருப்பதிகத்தைப் பாடியருளினார். இத்தலத்திற்குச் சம்பந்தர் பதிகம் 1, அப்பர் பதிகம் 1, சுந்தரர் பதிகம் 1 ஆக 3 திருப்பதிகங்கள் உள்ளன. அருணகிரிநாதர் பாடிய திருப்புகழும் இத்தலத்திற்குண்டு. அத்திருப்புகழில் முத்துச் சிவிகை முதலியன கொடுத்தது பற்றியும் குறிப்பிடுகிறார். திருக்கோயில் முன் சேர, சோழ, பாண்டிய இலிங்கங்கள் உள்ளன. இத்தலத்துறை பெருமானை, சுந்தரர் பாடித் துதிக்கும் பொழுது 'நல்வாயில் சென்றார் நடந்தார், உடுத்தார் நரைத்தார் இறந்தார் என்று நானிலத்தில், சொல்லாய்க் கழிகின்றது அறிந்து அடியேன் தொடர்ந்தேன் உய்யப்போவதோர் சூழல் சொல்லே' என்று யாக்கை நிலையாமையை எடுத்துக் கூறி இறைவனை வணங்குவதன் நோக்கத்தை எடுத்துக் கூறும் திறம் யாவரையும் மனம் நெகிழவைப்பதாகும். இரா.ச.

*திருநெல்வெண்ணெய்*: தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்று. இது நடுநாட்டுத் தலங்களுள் ஒனறாகப் போற்றப்படுகிறது. உளுந்தூர்ப் பேட்டைப் புகைவண்டி நிலையத்திலிருந்து மேற்கே 6½ கி. மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. இக்காலத்தில் இத்தலம் நெய்வெணை என்று சொல்லப்படுகிறது. இங்குளள இறைவன் பெயர் வெண்ணெயப்பர்; இறைவி பெயர் நீலமலர்க்கண்ணி. இஙகுப் பெண்ணையாறே தீர்த்தமாக அமைகிறது. திருஞான சம்பந்தர் இத்தலத்தினை ஒரு பதிகம் பாடிப் பரவியுளளார். அதில் இவ்வூரை அவர் 'நெல்வெணணெய்' என்று குறிப்பிட்டுள்ளார். பதிகப்பாடல் அனைத்தும், இரண்டாமடி மடக்காய் மூன்றாம் அடியில் அமைந்து, அதன் முற்பகுதியாக உள்ளது. 'நிலமல்கு தொல்புகழ் வெண்ணெயீசனை நலமல்கு ஞான சம்பந்தன, நலமல்கு ஞானசம்பந்தன் செந்தமிழ், சொல்மல்குவார் துயரிலரே' என்பது அப்பதிகததின் ஈற்றுப் பாடலாகும். இடையிலுள்ள இரண்டடிகளில் மடக்கு அமைநதுள்ளதனைக் காணலாம். அ.மா.ப.

*திருநெல்வேலி கட்டபொம்மான் மாவட்டம்*: காணக: தமிழ்நாட்டு ஆட்சிப் பிரிவுகள்.

*திருப்பட்டீச்சுரம்* என்பது சோழ நாட்டில் காவிரியின் தென்கரையிலுள்ள பாடல் பெற்ற தலங்களுள் 23ஆம் தலமாகும். இத்தலம் கும்பகோணத்துக்கு அடுத்த தாராசுரம் புகைவண்டி நிலையத்திலிருந்து தென் மேற்கில் 3 கி.மீ. தொலைவில் இருக்கிறது. காமதேனுவின் குமரிகளுள ஒன்றாகிய பட்டி என்னும் பசு பூசித்த தலமாதலின் பட்டீச்சுரம் எனப் பெயர் பெற்றது. கோயில் தூண் ஒன்றில் பட்டிப்பசு தன் முலைக் காம்பிலிருந்து பொழியும பாலைப் பெருமானுக்கு அபிடேகித்து வழிபடுவது போனற ஒரு சிலையைக் காணலாம். திருஞான சம்பந்தர் பதிகம் ஒன்று மாத்திரம் இத்தலத்திற்குள்ளது. அவர்தம் திருப்பாடல்களில் 'மடைக்கயல் வயற்கொள் மழபாடி நகர் நீடு பழையாறை யதனுள், படைக் கொருகரத்தன் மிகு பட்டீச்சுரம் ஏத்த வினைற்றுமே' என்று பழையாறையைச் சேர்ந்த மழபாடி என்றே இத்தலத்தைக் குறிபபிடுகிறார். ஆகவே மழபாடி என்றும் இத்தலத்திற்கு வேறு ஒரு பெயருண்டு என்று தெரிகிறது. முற்காலத்துச்சோழர்கள இப்பழையாறையில்தான் முடிசூடும் வழக்கத்தை மேற்கொணடிருந்ததால் முடிகொண்ட சோழபுரம் என்றும இத்தலத்திற்கு வேறு ஒரு பெயருமுணடு. தேவி இங்குத் தவம் செய்ததால் தேவிவனம், சக்திவனம் முதலிய பெயர்களும் உள. இங்குள்ள சுவாமி பெயர் பட்டீசசரர், பட்டீசா. பட்டியப்பர், தேனுபுரீச்சுரர் முதலியன. கல்வெட்டில் பட்டீசுர நாயனார் என்று காணப் பெறுகிறது. அம்மையின் பெயர் பலவளைநாயகி, பால்வளை நாயகி, ஞானாமபிகை முதலியனவாம. இவவூர்த் தலவிருட்சம் வன்னிமரம். தீர்த்தம் ஞானவாவி, கோடி தீர்ததம் முதலியன. சோழன மாளிகை என்ற இடத்திலிருந்த காவல் தெயவமாகிய துர்க்கையம் மனைக் கொண்டு வந்து இக் கோவிலில பிரதிட்டை செய்துள்ளதாக வரலாறறாசிரியர்கள் கூறுகினறனர். அதனால், இநதத் துர்க்கைககுக் கோட்டை வாயில துர்க்கை என்று பெயா வழஙகப்பெறுகிறது. இத்தலத்தைப் பட்டி என்னும் பசு, மாளவ தேசத்துத் தர்ம சர்மா என்னும் அந்தணன், காம்பிலி தேச அரசனான சித்திர சேனன, விசுவாமித்திரர், இராமா முதலியோர் வழிபட்டுப் பேறு பெறறனர். திருஞான சம்பந்தர் இத்தலத்திறகு வரும்போது கடும வெயிலாயிருந்தமையால் பெருமான் பூதஙகளை ஏவி முததுப பந்தரைக் கொடுததுப் பிடித்து வரச் செய்தாா. மேலும் சம்பந்தா வருகையைக காணப் பெருமான கட்டளைபபடி நந்தி விலகியுளளதாக வரலாறுண்டு. இங்கு இப்போதும நந்தி விலகியே இருக்கிறது. தஞ்சை அரசரிடம் அமைச்சராய் இருந்த கோவிநத தீட்சிதர் என்பவர் இததலததைவழி பட்டதோடனறி அம்மன கோயில் திருப்பணிகளையும் செய்தார். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவாகள் பட்டீசுரம் ஆறுமுகததா பிள்ளை வேணடியவாறு இததலததிறகு ஒரு சிறந்த புராணம் பாடியுளளாா. இது ஒரு பழமையான திருக்கோயில். இதில் இடை இடையே சில திருப்பணிகளும் நடைபெற்றுளளன. சிறப வேலைப்பாடுகள மலிநது காணப் பெறுகினறன. இக் கோவிலில் பல கலவெட்டுகள் உளளன. அவை நிலக் கொடை கொடுத்தது பற்றியும், திருஞான சம்பந்தர் மடம், திருநாவுக்கரசா மடம்,

திருமூலதேவா திருமடம பறறியும மற்றும பல செயதி களையும கூறுகினறன. இரா ச.

**திருப்பதி** 'பதி' எனனும சொலலின பொருள் ஊர் எனபது ஆகும தெயவத தொடர்பான பெயா களுக்கெலலாம அடைமொழியாகத 'திரு' எனற சொல்லைச் சேர்ப்பது தமிழ மரபு எனவே, 'திருப் பதி' என்பது தெயவத் தொடர்புடைய ஊாகளை யெல்லாம பொதுவாகக் குறிககும எனறாலும் சிறப்பாகத் திருமாலுககுரிய ஊர்களை நூறறெட டுத் திருப்பதிகள்' எனற வழககு குறிததலைக காண லாம். இப்படித திருமாலுககுச சிறபபாக உரிய நூற றெட்டுத் திருபபதிகளுள பெருஞ்சிறபபு வாயநத தென ஒரு பதியின பெயா 'திருபபதி' எனறே வழங கப்பெறுகிறது. தமிழக வைணவாகள வடநாட்டுத திருபபதிகள எனக குறிககும் திருமாலுக்குரிய திவவிய தேசஙகள பனனிரணடனுள இது முதலாவதாகக குறிக்கப்பெறுகினறது.

பொதுவாகத் தெயவத் திருப்பணியை மேற கொணட பயணிகள் அனைவரும் அடிவாரததில உளள ஊரையும் வேஙகடமலையையும ஒனறாகக கொணடு திருபபதி எனறே வழங்குகினறனா.



திருப்பதி

பண்டைக்காலததில் மிகச் சிற்றூராய் இது இருந்தநாளில், மலையும் அடிவாரத்திலுள்ள ஊரும் திருப்பதி எனறு ஒன்றாகவே கருதப்பட்டு வநதிருக்க லாம். ஆனால, இக்காலத்தில் மலையும் ஊரும் சிறப் பாகப் பெருகி வளர்ந்துவிட்டமையால் மலை 'திரு மலை' எனறும அடிவாரததிலுளள ஊர் 'திருப்பதி' என்றும தனித்தனியே பிரிததுக் கருதப்பெறுகினறன

ஏறககுறைய கி பி. 6-ஆம நூறறாண்டு முதல் 8-ஆம் நூறறாணடு வரையிலான காலத்தில வாழ்ந்த ஆழவாாகளால திருபபதியும் திருமலையும 'வேஙக டம', 'திருவேஙகடம' எனற பெயரில் பாடப்பெற்றி ருத்தலை அறியலாம. அவ்வாறு போறறிப் பாடப் பெற்ற (மஙகளா சாசனம செயயப்பெற்ற) திருவேஙக டம பறறிய பாசுரங்கள 213 நாலாயிரத் திவ்வியப் பிரபநததததில இடமபெறறுளளன. திருப்பதி திரு மலைககு மும்முறை வந்த இராமானுசரால் இவ வூரும மலையும் இவறறினகண அமைநதுளள கோயில களும சிறபபுப் பெறலாயின.

திருமலை, திருவேங்கடம, திருப்பதி எனறெல லாம குறிப்பிடபபெறும் இஙகுக கோயில கொண டிருககும பெருமாள திருநாமம் திருவேங்கடத தான, சீநிவாசன எனபனவாகும; தாயார் பெயா அலமேலுமங்கைத் தாயாா. பெருமாள நினறகோலத தில் உளளார். கிழக்கே திருமுகமணடலம அமைந்த பெருமாள திருக்கோயில விமானம ஆனநதநிலைய விமானமாகும. திருப்பதி அடிவாரத்திலிருந்து திரு மலை சன்னதிககுச் செல்லபபடிகள கொணட நடை பாதையும, உநது வணடிகள செனறு வரத தனிததனி சாலைகளும உள்ளன. இத்தலத்தில சுவாமி புட் கரணி முதலிய 18 தீர்த்தஙகள உள்ளன. திருமலை மீது திருவேஙகடமுடையார் மட்டுமே உளளாா. திரு மலை அடிவாரததிலிருந்து 3 கி.மீ. தொலைவி லுள்ள திருசசானூரில அலா மேல் மஙகைத் தாயாா சநநிதி உளளது. அடிவாரததிலுளள கீழைததிருப்பதி யில கோவிநதராசப பெருமாள கோயில, இராமா கோயில் முதலியன உளளன. திருமாலையே பாடிய ஆழ்வார்களுள, தொண்டரடிப் பொடியாழவார் தவிர, ஏனைய ஆழவார்கள திருவேஙகடமுடையா னைப் பரவிப் பாடியுள்ளனர். திருப்பதியையும திரு வேங்கடமுடையானையும பற்றித் தமிழில் பல இலக கியஙகள தோன்றியுளளன.

தமிழிலக்கியஙகளில திருப்பதி உள்ளிட்ட மலை பணடுதொடடே தமிழகத்தின் வடவெலலையாகக் குறிக்கப்பெற்றுள்ளது. இந்திய உரிமைக்குப் பின் நிகழ்நத மொழி வழி மாநிலப் பிரிவினைகள் போது திருப்பதி ஆந்திர மாநிலத்தின் பகுதியாக அமைந ததது. திருப்பதியிலும், திருப்பதியைச சார்ந்த கோயில் பகுதிகளிலும் தமிழ்க் கல்வெட்டுகள் பலவற்றை இன்றும் காணலாம்.

இன்று இந்த ஊரில் திருமலை-திருப்பதி தேவத் தானத்தாரின உதவியினால் கல்விக் கூடஙகள் பல

தோன்றிச் சிறந்துள்ளன. பொறியியல், வேளாண்மை, மருத்துவம், சமசுகிருதம், கிழக்கியல் மொழிகள் முதலிய பல சிறப்புக் கல்லூரிகளும், திருவேங்கடவன் பலகலைக்கழகமும் இங்கு இடம்பெற்றுள்ளன.

இந்தியாவின் எப்பகுதிக்கும் செல்லத்தக்கவாறு திருப்பதி-இரேணிகுண்டா இருப்புப் பாதை இணைக் கப்பெற்றுள்ளது. தமிழ்நாடு, கருநாடக மாநிலங் களை இணைக்கும் பெரும் பேருந்து நிலையமொன் றும் இங்கு அமைக்கப்பட்டுள்ளது. விழவு அறா ஊராக, தெய்வ மையமாக இது விளங்கி வருகின் றது. பொன்.செள.

***திருப்பதி சுவாமிகள்:*** இவர் 20-ஆம் நூற் றாண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்தவர்; பிறந்த ஊர் இராமநாதபுரம் மாவட்டம், திருச்சுழி வட்டத் தில் உள்ள வேடநத்தம் என்னும் சிற்றூர் இவரது இயற்பெயர் நாகப்ப நாயக்கர். இவர்தம் தந்தை யார் பெயரும் இதுவே. இவர் தமையனார் பெயர் திருப்பதி. அதனால் இவர் சின்னத் திருப்பதி என குறிக்கப்பட்டுக் காலப் போக்கில் திருப்பதி என்று வழங்கப்பட்டார். இவர் வீர வைணவராகவும் வேதாந்தியாகவும் விளங்கினமையால் மக்கள் இவ ரைத் திருப்பதி சுவாமிகள் என்று பெருமையுடன் சொன்னார்கள். இவருக்கு ஒரு சகோதரியும் உண்டு. இவர் மனைவியின் பெயர் வீரம்மாள். இவருக்கு ஒரு மகன் உண்டு.

இவர் தமிழ்க்கல்வி நன்கு கற்றவர். உழவர் குடும்பத்தில் பிறந்த இவர் நல்ல வணிகராகவும் விளங்கினார். இவர் வைணவ சமய நூல்களில் நலல தேர்ச்சி உடையவர். விசிட்டாத்துவைதியாக வாழ்ந்த இவர் சிறந்த வேதாந்தியாக மாறினார். வேதாந்த நூல்களாகிய கைவல்ய நவநீதம், விசாரசந்திரோத யம், விருத்திப் பிரவாகரம்,கீதை முதலியவற்றில் ஆழ்ந்த அறிவுடையவர்.சுருங்கக் கூறின்,இவர் சிறந்த தத்துவஞானியாக விளங்கினார். இவர் காலத்தில் வாழ்ந்த சீவன் முத்தராகிய சணமுகானந்த சுவாமி கள் என்ற தத்துவஞானியிடம் இவர் முறையாகத் தத்துவ சாத்திரங்களைக் கேட்டறிந்தாா. இம் மகானைத் தமது ஊருக்குக் கூட்டி வந்து பலருக்கும் தத்துவ அறிவைப் புகட்டினார். ஊர் மக்கள இவர் பால் பேரீடுபாடு கொணடிருந்தனர். கொலலாமை, புலால் உணணாமை ஆகியவை இவர் மேற்கொணட பேரறங்கள். இவர் 1958-இல் காலமானார். பா.ம.

**திருப்பதி சுவாமிகள்[2]** (கி.பி. 1873-1937) கொங்கு நாட்டின் தவஞானிகளுள் ஒருவர். பல ஞான நூல் களின் ஆசிரியராக விளங்கியதுடன சிறந்த உரையாசி ரியராகவும் திகழ்ந்தவர். ஞான வள்ளல் திருப்பதி சுவாமிகள் திருச்சி மாவட்டம், கரூர்ப் பகுதியில் பல மெய்யன்பர்களுக்கு அருளுரை புரிந்துள்ளார். ஆதி சங்கரரின் அத்துவிதக் கொள்கையில் பெரிதும் ஈடுபாடு கொண்டவர்.

இவர் திருச்சி மாவட்டம், அரவக்குறிச்சியில் கி.பி 1873-ஆம் ஆண்டு சுப்பிரமணிய முத்தரையருக்கும், வெள்ளையம்மாளுக்கும் மகனாகப் பிறந்தார்; தெய்வசிகாமணிக் குருக்களிடம் கல்வி பயின்றார்; இளமை முதற்கொண்டே விநாயகர் மீது பக்தி கொண்டிருந்தார்; பின்னர்த் தஞ்சை மாவட்டம், திருவையாற்றில் உள்ள பிரும்மசிரீ சுயம்பிரகாச சிவா னந்த சுவாமிகளிடம் ஞான அறிவுரை பெற்றுப் பல அரிய ஞான நூல்களைப் பயின்றார். இவர் திருமணம் செய்துகொள்ளவில்லை.

அரவக்குறிச்சி திரும்பிய சுவாமிகள அங்குத் தங்கிப் பலருக்கு நல்லறிவுரை புரிந்தார்; திருவெஞ்ச மாக்கூடல், கரூர், வேலூர், பினனர், குமரி முதல் இமயம் வரை உள்ள புனிதத் தலங்களுக்கு யாத்திரை சென்றார்; வட இந்தியாவில் பல முனிவர்களிடமும் ஞானிகளிடம் பழகி உணமையின இரகசியத்தை நன குணர்ந்தார்.

இவர், 1929-இல காசியாத்திரை மேற்கொண டார். இறுதியாக திருச்சி மாவட்டம், குளித்தலை யில் உளள கடம்பர் கோயிலில் தங்கி அனபாகளுக்கு அறிவுரை செயதார். இவர் 1937-இல் பரிபூரண சச்சிதானந்த சிவப்பிரகாச மோன சாசுவத நிர் விகற்ப சமாதியில் அமர்நதார். இவருக்குக் கடம்பா கோயிலில் சமாதி அமைக்கப்பட்டுளளது.

இவர் பல நூலகளை இயற்றியுள்ளார். அவை சிரீவித்யா கீதை, பக்திநெறி, பழமொழிப் போதம், தட்சிணாமூர்த்தி தோத்திரம், திருநாமமாலை, ஞான லோகம் என்னும் யுக்தி சாகரம், முத்தி நெறி, சதா சிவ பிரும்ம தோத்திரம, தேவி தோததிரம், விவேக சிதநிரம், தத்தாத்திரேயர் தோத்திரம், மாரியம்மன் தாலாட்டு முதலியனவாகும். 'குருமானமியம்' என் னும் சிறு நூலையும் பாடியுளளார். தமிழிலும வட மொழியிலும் தேர்சசிபெற்ற சுவாமிகள 'திருமுரு காற்றுப்படை'க்கு சிறந்த உரை ஒனறினையும் செய்துள்ளார். ம.இ.

***திருப்பந்தணை நல்லூர்:*** இது சோழநாட் டில் காவிரி ஆற்றின் வடகரையிலுளள தேவாரப் பாடல் பெறற தலங்களுள் ஒன்றாகும். இதனை 35-ஆம் தலமாகக் குறிப்பர். இது சோழநாட்டுக் குத்தாலத்திலிருந்து வட கிழக்கே 6கல் தொலைவி லுளளது. இத்தலத்திற்குச் சம்பந்தர் பதிகம் ஒன்றும்,

இடம பெறறுள்ள இந்நூலகம் ஆய்வாளர்களுக்கு பேருதவியாகத் திகழ்ந்து வருகிறது. அரிய ஏட்டுச சுவடிகள் பலவும் இங்கே பாதுகாக்கப் பெற்று வரு கினறன.

தருமையாதீனத் திருமடம் மற்றும் திருக்கோயில் களின சார்பில சென்னையில் சமயம பரப்பு நிலை யம் இயஙகி வருகிறது. தலைநகரில வாழும மக்க ளுக்குச் சமய விழிப்புணாச்சியை இந்நிலையம ஏற படுத்தி வருகிறது. சேரிவாழ் மக்களுக்கு அறிவு கொளுத்துதல், நோயாளிகளை மருத்துவ மனைகளில் சென்று கண்டு ஆறுதல் கூறி உதவுதல், சிறைக் கைதி களைச் சந்தித்து அறிவுணாவு ஊட்டுதல் முதலிய பணிகளையும் இந்நிலையம செய்து வருகிறது. இங்கு 'சச்சிதானந்தம் பிள்ளை சதாபிடேக நினைவு அப்பர் குருகுலம்' ஒன்றும் இயங்கி வருகிறது.

தேவாரத் திருமுறைப் பாடல்களை இசைத் தட்டுகளில் பதிவு செய்து வழங்கிய பெருமையும் இவ்வாதீனத்திற்கு உரியது. ஆணடுதோறும நடை பெறும் ஆதீன குரு முதல்வர் குருபூசைத் திருநாளை ஒட்டிப் பத்து நாட்களுக்குத் திருநெறிய தெய்வத தமிழ் மாநாடு ஒன்று சிறப்பாக நடத்தப் பெற்று வருகிறது.

இவ்வாறு தருமையாதீனம் கடந்த 450 ஆணடு களுக்கும் மேலாகச் சைவத்திற்கும் தமிழுக்கும் பெருந் தொண்டாற்றி வருகிறது. சா.உ.

**திருவண்ணாமலை ஆதீனம், குன்றக்குடி:** தெய்வமணம் கமழும் தென்னாட்டில ஞான நெறியைப் பினபற்றிச் சுத்தாத்துவித சைவ சித்தாந் தக் கொள்கையை மேற்கொணடுள்ள ஆதீனங்களுள குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனமும் ஒன்று. சிவ பெருமான் நந்திதேவருக்கு உபதேசித்த சிவஞான போதம், மரபு வழி சந்தான குரவராகிய மெய் கணட தேவருக்கும், அருணந்தி சிவாச்சாரியாருக் கும் கிடைத்தது. அருணந்தி சிவாச்சாரியாரிட மிருந்து இந்த ஆதீன முதற்பெருங்குரவராகிய தெய்வ சிகாமணி தேசிகருக்குக் கிடைத்தது.

முதறபெருங்குரவர் தெய்வசிகாமணி தேசிகர் திருவண்ணாமலைப் பதியில் ஆதி சைவ மரபில் தோன்றினார்; இளமைப் பருவத்திலேயே சிவபரம் பொருளின் அருளினைப் பெற்றார். அவ்வருள் உணர்த்தியவண்ணம் அருணந்தி சிவாச்சாரியாரை நாடித்திருத்துறையூருக்குச்சென்றார். அருணந்திசிவாச் சாரியாரிடம் இறைவன் கனவில் தோன்றி, 'தெய்வ சிகாமணி திருவண்ணாமலையிலிருந்து உன்னை நாடி வருகின்றான்; அவனுக்கு ஞானோபதேசம் செய்வா யாக' எனக் கூறி மறைந்தார். திருத்துறையூர் சென்ற தெய்வசிகாமணிக்கு, அவரை எதிர்பார்த்திருந்த அருணந்தி சிவாச்சாரியார் ஞானோபதேசம் செய் தருளினார். ஞானோபதேசம் பெறற தெய்வசிகாமணி தேசிகர், இறைவனே சுயம்புவாகத தமது ஆத்மார்ந்த பூசைக்கு எழுநதருள வேணடுமென விரும்பி ஞானாசி ரியரிடம் விணணப்பித்தார். அருணநதி சிவாச்சாரி யாரின் கட்டளைபபடி திருக்காளததிக்குச சென்று இறைவனை வழிபட்டுத திளைதது இறைவன திரு முனனர் வீழ்நதார், தமமை மறந்தார் அதுபோது இறைவன 'அனப, நாம் திருககோயிலருகே உள்ள புறறில சிவலிங்க வடிவில திகழகினறோம. அஙகு வருக' எனறு உணாததியருளி மறைநதார். ஞானப பெருஙகுரவர் அவ்வாறே அஙகு எழுநதோடிச சென்று காளததியப்பா சிவலிஙக வடிவில் திகழ்வதைக் கண டாா; பரவசமுற்றார். அப்பெருமானே இன்று ஆதீன மடாலயத்தில எழுந்தருளியிருககும் காளத்திநாதர்.

குரு முதல்வர் காளத்தி விட்டுத் திருவணணா மலை சென்றடைநதாா. அங்கு அவா விளைவித்த வியப்பூட்டும் நிகழ்வுகள் பல. ஒரு நாள் மன்னன் திருவீதி உலாப் போந்தான், படைகளும் புரவிகளும் அவனைச் சூழந்து வந்தன. அபபோது அவனது பட்டத்துப் புரவி துடிதுடிதது வீழநதது; உயிரிழநதது. அபபோது மனனன் எதிரே தெய்வசிகாமணி தேசிகர் காட்சியளிததார். மன்னன் அவரடி மலரில வீழந்து வணங்கினான. பெருஙகுரவர் முறுவல் பூத்துத் திருவைநதெழுததோதித் திருநீற்றைப புரவியின மீது தெளித்தார்; புரவி உயிா பெற்றெழுந்தது இநத வரலாறு திருவணணாமலைத் திருக்கோயிலில் சிறப வடிவங்களாகச் செதுக்கப் பெற்றுள்ளதை இன்றும் காணலாம். இவவாறு பல நிகழநதுள்ளன. இப்பெருங குரவர் தமது அருமைச் சீடர்களுக்குச் சிவஞான போததசதை உபதேசித்துத் திருவணணாமலைப் பதியி லேயே குருமூர்த்தமாயினார் அத்திருக்கயிலாய மரபே திருவண்ணாமலை ஆதீன குருமரபு.

திருவண்ணாமலையில் கி.பி. 14-ஆம நூற்றாண டில் ஞானப் பெருங்குரவராம் திருபபெருநதிரு தெய்வசிகாமணி தேசிகரால் இந்த ஆதீனம் தோற்று விக்கப் பெற்றது. இந்தக குருமரபில வந்த பெரியோர் கள சைவமும் தமிழும் இரு கண்களாகக் கொணடு போற்றி வளர்த்து வந்துள்ளனர் நூல்களும் உரை களும் வடமொழி நூல்களும் இயறறி உலகுக்கு அருளியுள்ளார்கள். இவர்கள சைவ சித்தாந்த சமயமே முடிந்த முடிபான சமயம் எனக்கொண்டொழுகிய வர்கள்.

**நாகலிங்க தேசிகர் 17-ஆம் குருமூர்த்திகள்:** இவர் திருவண்ணாமலையிலிருந்து தென் தமிழ் நாட்டிற்குத் திருத்தலப் பயணம் செய்தார். திரு

முதுகுன்றம், தில்லை, மயிலாடுதுறை, திருவாரூர், திருப்பெருந்துறை, திருவாடானை, காளையார் கோயில் முதலிய திருத்தலங்களை வழிபட்டுத் திருச் சுழியல் திருத்தலத்துக்கு எழுந்தருளினார். அதுகேட்ட இராமநாதபுரம் மன்னர் மகிழ்ந்து வந்து குருமூர்த்தி களை வணங்கினார். குருமூர்த்திகள் இராமேச்சுரம் செல்ல விரும்பினார்; மன்னர் அதற்கு ஆவன செய் தார். குருமூர்த்திகள், அரசரும் ஏவலரும் புடை சூழ, இராமேச்சுரம் சென்று வழிபாடு செய்து திரும்பி னார். அது போது மன்னர் தமது பகுதியிலேயே குரு மூர்த்திகள் தங்கியிருந்து அருளாட்சி செய்ய வேண்டி விண்ணப்பித்தார், பொன்னும் மணியும் காணிக்கை யாக்கினார். குருமூர்த்திகள் மன்னரின் வேண்டு கோளை ஏற்றுத் தம் சீடர்களில் ஒருவரான குமர சாமி தேசிகரைக் குருபீடத்தில் அமர்த்தி விட்டுத் தாம் திருவண்ணாமலைப் பதிக்குச் சென்றார். குமர சாமி தேசிகர், பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட் டம் பிரான்மலையிலிருந்து தமது அருளாட்சியைத் தொடங்கினார். இவ்வாறு இந்த ஆதீனம் திரு வண்ணாமலையிலிருந்து ஏறத்தாழ கி.பி. 16-ஆம் நூற்றாண்டின் இறுதிக் காலத்தில் பிரான்மலை யில் அமைந்தது.

பிரான்மலையிலிருந்து இந்த மரபு தொடர்ந்து முப்பதாம் குருமூர்த்திகளாகிய இரண்டாம் திருச்சிற் றம்பல தேசிகர் காலம் வரை அருளாட்சி புரிந்து வந் தது. இவ்வாதீனம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டு இறுதி இருபதாண்டுகளில் சிவகங்கைச் சீமையை ஆண்ட மருது பாண்டியர் காலத்தில் குன்றக்குடியில் அமைந் தது. காளத்தியப்பரையும் குன்றக்குடி மடா லயத்தில் எழுந்தருளவித்தனர். அன்றுமுதல் 31-ஆம் குருமூர்த்திகள் மருத நாயக தேசிகர் காலம் முதல- திருவண்ணாமலை ஆதீன மடாலயம் குன்றக்குடியில் திகழ்ந்து வருகின்றது.

**பெரிய ஆறுமுக தேசிகர் 38-ஆம் மகாசந்நி தானம்:** இவர் காலத்தில் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் இவ்வாதீனம் மிகச் சிறந்து விளங்கியது. ஆதீனத் தம்பிரான் சபாபதி முனிவர் இங்கிருந்து பெரும்பணி செய்தார். இப்பொழுதுள்ள ஆதீன மடாலயம் சபா பதித் தம்பிரானால் கட்டுவிக்கப் பெற்றது. யாழ்ப் பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் குன்றக்குடிக்கு வந்தார். குருமூர்த்திகள் அவருக்குச் சிவிகை ஊர்வலம் செய்வித்துப் பாராட்டி மகிழ்ந்தார்; வேம்பத்தூர் சிலேடைப்புலி பிச்சு அய்யரைக் கொண்டு குன்றக்குடி சண்முக நாதருக்கு உலா நூல் இயற்றுவித்தார். பெரியபுராணத்திற்கு உரையெழுதிய ஆறுமுகத் தம்பி ரான் இவர் காலத்தவர்.

**ஆறுமுக தேசிகர் 39-ஆம் மகா சந்நிதானம் (கி.பி. 19-ஆம் நூ.)** இவர் மகா வித்துவானாகத் திகழ்ந்தவர். இவர் திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடத் தில் பயின்ற மாணாக்கர்; தமிழ்ப் புலவர்களையும் சைவப் புலவர்களையும் போற்றிப் புரந்தவர்; நெஞ்சையள்ளும் சிலப்பதிகார ஏடு தேடி வந்த தமிழ்த் தாத்தா உ.வே. சாமிநாத அய்யருக்குச் சிலப் பதிகாரத்தின் சிறந்த ஏட்டுப்படி தந்து உதவியவர், தெய்வசிகாமணி நான்மணி மாலை முதலிய நூல் களைப் பதிப்பித்தவர்.

**தாண்டவராய தேசிகர் 40-ஆம் குருமூர்த்திகள்:** இவர் சிறந்த கொடை வள்ளல்; வருவாயைச் சிந்தி யாது வாரி வழங்கியவர்.

**நடராச தேசிகர் 41-ஆம் மகா சந்நிதானம் (கி.பி. 1902-1905)** இவர் புண்ணிய சீலர்; இவர் திருமடத்துச் சொத்துகளைக் காக்கவும் வளரச் செய்யவும் அயராது உழைத்தார்; வெளியார் கைப்பற்றியிருந்த திரு மடத்துச் சொத்துகளையும் திருக்கோயிற் சொத்து களையும் மீட்டார்; குன்றக்குடி சண்முகநாதருக்கு நவ ரத்தின கிரீடம் செய்து அணிவித்தார்.

**அண்ணாமலைதேசிகர் 42ஆம் மகா சந்நிதானம்** (கி.பி. 1905-1928): இவர் சிறந்த சித்தர்; ஞானி; உணவை வெறுத்து மௌன மூர்த்தியாய்ப் பல காலம் வாழ்ந்தார்.

**பொன்னம்பல தேசிகர் 43ஆம் மகா சந்நிதானம்** கி.பி. 1928-1946): இவர் நிருவாகத் தொடர்பான வழக்குகள் பலவற்றில் வெற்றி பெற்றார். இவர் குன்றக்குடி சண்முகநாதர் கோயில் திருக்குடநீராட்டுச் செய்தார். பிரான்மலை, திருக்கோளக்குடி, திருப்புத் தூர்ச் சிவாலயங்களுக்கு வெள்ளி இடப வாகனம் செய்வித்தார். திருப்புத்தூர்த் திருக்கோயில் பைரவ மூர்த்திக்குக் குதிரை வாகனம் செய்வித்தார். ஆதீ னத் திருக்கோயில்களுக்குத் திருவாபரணங்கள் பல செய்வித்தார்.

**ஆறுமுக தேசிகர் 44ஆம் மகா சந்நிதானம்** (கி.பி. 1946-1952): இவர் சிலகாலமே அருளாட்சி புரிந்தார்.

**ஞானப் பிரகாசர்** (கி.பி. 16 ஆம் நூற்றாண்டு). இம்முனிவர் பிறந்த யாழ்ப்பாணம் நல்லூரைச் சேர்ந்தவர். இவர் வடநாடு சென்று கடல் போலப் பரந்த வடமொழி நூலறிவும் தருக்க நூலறிவும் பெற்றார் இந்த ஆதீனத்தை அடைந்து சந்நியாசம் பெற்றுச் சிவாகமங்களை ஓதியுணர்ந்தார். பின் சிதம் பரம் அடைந்து தங்கிப் பணி செய்தார். சிதம்பரத் தில் ஒரு திருக்குளமும் அதனருகில் திருமடங்களும் அமைப்பித்தார். இத்திருக்குளம் 'ஞானப்பிரகாசர் குளம்' என்று வழங்கப் பெறுகின்றது.

ஞானப்பிரகாசர் சிவஞான சித்தியாருக்குச் சிறந்த உரை செய்துள்ளார். இந்த உரை அறிஞர்களால் போற்றப் பெறும் சிறந்த உரையாகும். மேலும், சிவஞான போத விருத்தி, சித்தாந்த சிகாமணி, பிரமாண தீபிகை, பிரசாத தீபிகை போன்றவற்றை இவர் வடமொழியில் இயற்றினார்.

**சங்கரலிங்க முனிவர்** (கி.பி. 18 ஆம் நூற்றாண்டின் பிற்பாதி): இவர் ஞானக் கடலாகத் திகழ்ந்தவர். மருதுபாண்டியரது அவைக்களப் புலவர்களாய்த் திகழ்ந்த 40 புலவர்களுள் பலர் இவர் தம் மாணாக்கர்கள். 'நாற்கவி விலாசம்' 'மெய்த்தவ ஞான பூரணம்' எனப் புலவர்களால் இவர்போற்றிப்புகழப்பெற்றவர்.

சிவகங்கைச் சீமையை ஆண்ட மருதுபாண்டியரால் போற்றி வணங்கப் பெற்ற புனிதர் இவர். மருதுபாண்டியருக்கு உண்டான பிளவை நோய் குன்றக்குடி முருகனால் நலமாயிற்று. அவர், முருகனை வழிபடக் குன்றக்குடி வந்தார்; அத்திருக்கோயிலைப் போற்றிவரும் சங்கரலிங்க முனிவரைக் கண்டார்; அளவிறந்த பொற்காசுகளை முனிவர் திருவடியில் வைத்து வணங்கினார். முனிவர் அதனை ஏற்க மறுத்துவிட்டார். மருதுபாண்டியர் அப்பொன்னைக் கொண்டு ஒரு கிராமத்தை ஏற்படுத்திச் 'செம்பொன் மாறி' எனப் பெயரிட்டுக் காளத்தியப்பருக்குக் காணிக்கையாக்கினார்; குன்றக்குடி சண்முகநாதர் திருக்கோயிலை இப்போதுள்ள பெரிய அளவில் திருப்பணி செய்வித்தார்; சாந்துப் புலவரைக் கொண்டு 'மயூரகிரிக் கோவை' நூலை இயற்றுவித்தார்.

**ஆறுமுகத் தம்பிரான்** (கி.பி. 19 ஆம் நூற்றாண்டு): இப் பெரியார் மகாவித்துவான; பெரிய புராணம் முழுவதற்கும் உரை எழுதியவர். இந்த உரை மிகச்சிறந்த உரையெனப் பின்வந்த பெரிய புராண உரைகாரர்களால் போற்றப் பெறுகிறது.

**குமாரசாமி முனிவர்:** இவர் இந்த ஆதீனக் குரு முதல்வர் பற்றி, தெய்வசிகாமணி நானமணி மாலை முதலிய அரிய பாமாலைகள் இயற்றியவர்.

**சபாபதித் தம்பிரான்:** இப் பெரியார் ஆதீனத்தின் பொறுப்பாளராக இருந்து அரும்பணி செய்தவர். இப்போதுள்ள பெரிய அளவில் உள்ள திருமடக் கட்டடங்களை எடுப்பித்தவர்; கும்பகோணத்திற்கு அருகில் உள்ள நிலங்களை வாங்கியவர்; ஆதீனத்தைப் பொருட் செழிப்புடையதாக்கிய பெருமையர்.

**இராமலிங்கத் தம்பிரான்:** ஆதீனச் சொத்துகளை வளர்த்தார். பிரான்மலைப் பகுதியில் மாணிக்கவல்லி, அபிராம வல்லி, சொர்ணவல்லி, அமிர்தவல்லி, மரகதவல்லி என்னும் பெயர்கள் கொண்ட ஐந்து தோப்புகளை உண்டாக்கினார்; காசுமீர், நேபாளம் முதலிய நாடுகளுக்குச் சென்று அங்குத் தேடிய பொருள்களைக் கொண்டு திருக்கோளக்குடி, பள்ளப்பட்டி ஆகிய ஊர்களில் கட்டளை மடம் கட்டுவித்தார்; திருக்கோளக்குடித் தலபுராணம் இயற்றுவித்தார். மேலும் அமிர்தலிங்கத் தம்பிரான், சரவண சுவாமிகள், வேலாயுதத் தம்பிரான், தியாகராசத் தம்பிரான், கைலாசத் தம்பிரான் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

**ஆதீனப் புலவர்கள்:** வெண்பாப் புலிக் கவிராயர், வீரபத்திரக் கவிராயர், கணேச பண்டிதர் முதலாயினோர் ஆதீனப் புலவர்களாயிருந்து அணி செய்துள்ளனர்.

சாந்துப் புலவர், யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர், மகாவித்துவான் வேம்பத்தூர் பிச்சு அய்யர் முதலிய பெரும்புலவர்கள் பலர் ஆதீனத்தால் பாராட்டப் பெற்றுள்ளனர்.

**ஆதீனமரபு விளக்கம்:** திருமடத்தை அணுகிய அடியவர் முதலில் 'பூப்பிளளை' எனப் பெறுவார். அவர் ஓரிரண்டு ஆண்டுகள் மடாலயத்தில் பல பணிகள் செய்து உயர்வார். அவர் 'தவசிப்பிள்ளை' யாவார். அவர்களுள் இல்லற நெறி நிற்போர் ஆதீனத்தின் ஆதரவாளராகவும் சீடராகவும் இருந்து பணி செய்வார்; துறவு நெறி நிற்போர் துவராடை வழங்கப்பெற்றுக் 'குட்டி' என்றழைக்கப் பெறுவார். 'குட்டி', அனுபவம் பெற, நாடுகள சுற்றி யாத்திரை செல்வதறகுக் குருமூர்த்திகளின் அருளாசி பெற்று வெளியிற் செல்வார், நாடுகள சுற்றியும் தவத்தால் தம்மை உயர்த்திக் கொண்டும் உலகவர்தம் உடற் பிணியும் அறியாமைப் பிணியும் நீங்கும் தொண்டுகளில் ஈடுபட்டும் சைவசித்தாந்தச் செந்நெறி பரப்பி ஆதீனக் குருமூர்த்தியின அருட் புகழ் பரப்பிப் பாத காணிக்கைகள் பெற்றுப்பெற்ற பொருளைத் தமதென எண்ணாமல, மடாலயம் வந்து குருமூர்த்திக்குக் காணிக்கையாக்கியும்'பரதேசி முத்திரை' என்னும் மரியாதை பெறுவார். அத்தகு மரியாதை பெற்றவர் அந்தப் பெருமையில் மயங்காமல் தம்பிரான அடியவராய்ச் சில நாள்திகழ்வார்; அதனபின அவர் 'தம்பிரானாவார்.அதன்பின 'பெரிய பூசைத் தம்பிரா'னாவார்; சிவபூசை செய்யும் பேற்றினால் ஆணவம் ஒடுங்கி குருமூர்த்தி திருவடியில் தனமனம் ஒடுங்கும் நிலை பெற்றோர் 'ஒடுக்கத் தம்பிரா' னாவார். குருமூர்த்தி சார்பினால் குருமூர்த்திகுரிய அடையாளம் யாவும் தன்னளவில் தோன்றும் சிறப்புடையார் சினன

பட்டம் என்னும் சிறப்புடையவராவார்; அதன் பின குருமூர்த்திகளாவார்

**இரண்டாம் அருணாசல தேசிகர் 45-ஆம் மகா சந்நிதானம்**: இவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் என அழைக்கப்படுகிறார். இவர் 1949-இல் இவ்வா தீனத்தின் சின்ன பட்டமாகி1952-இலமகா சந்நிதான மாக எழுந்தருளினார் இவர் தமிழகத்தின் தலைசிறந்த சொற்பொழிவாளர்களுள் ஒருவர்; இவர் எப்பொருள பற்றியும் ஏற்றமுறப் பேசும் திறனுடையவா; இது வரை 35நூலகள் எழுதியுள்ளார் (1988): தத்துவச் சிந்தனையாளர்; சமுதாயச் சிறபி; இலஙகை சிஙகப்பூர், மலேசியா, தாய்லாநது, இநதோசீனா, சோவியத்து ஒன்றியம, சபபான, கொரியா, ஆங்காங்கு, செஞ்சீனா முதலிய நாடுகளுக்குச சென்று தமிழ நெறி பரப்பி வந்த தகைமையாளா. சமய நெறி யினமூலமாகச் சமநிலைச் சமுதாயம் அமைக்க முடியும் என்னும் நம்பிக்கையும்விருப்பார்வமும் கொண்டவர்.

இவர் 1952-இல் அருளநெறித் திருக்கூட்டம் என்னும் முற்போக்கான சமய இயக்கத்தைத் தொடஙகினார். இது நாடு தழுவிய இயக்கமாயிறறு. இதன் வழித திருககோயிலகளில தமிழ மொழி அருச் சனை நடைபெறச் செயதார்; தீணடாமையும சாதி வேற்றுமையும் நீஙக இந்த இயக்கம தொடர்நது பணி செய்து வருகிறது. பினனர்1955 இல் அருளநெறி திருப் பணி மனறம் தோற்றுவிததார். இநத அமைப்பின் மூலம தொடக்கப் பளளி 3, நடுநிலைப் பள்ளிகள 4, உயர்நிலைப் பளளிகள 3, மேலநிலைப பளளிகள 3 மொத்தம் 13 பளளிகளும் கல்லூரி ஒனறும (திரு வள்ளுவர் கல்லூரி, பாவநாசம, நெலலை மாவட்டம) நடைபெற்று வருகின்றன. இந்திய அரசு சமூக நலக குழு உறுப்பினராக இருநது (1960) பணியாறறியுள ளார். திருப்புத்தூர்த் தமிழச்சஙகத்தை 1967-இல திருபபுத்தூரில் அமைத்தார். தமிழகத் திருமடஙகளின் தலைவாகளை உறுப்பினர்களாகக் கொணட தமிழ நாடு தெய்விகப் பேரவையின் தலைவராக (1969-1976 அமாந்து அரும்பணியாற்றினார் தமிழ்நாடு சட்ட மேலவை உறுப்பினராக (1969-1976) அமர்நது சிறந்த பணி செய்தார். திருககுறள நெறியை மக்களி டையே பரப்பும் வகையில் ‘திருக்குறட் பேரவை’ இயக்கத்தை 1973-இல் தொடஙகி நாடு தழுவிய அளவில் நடத்தி வருகிறார். இவர்தம் திருக்குறள் பணியினைப் பாராட்டித் தமிழ்நாடு அரசு 1986-இல இவருக்குத் ‘திருவளளுவர் விருது’ வழஙகியது. அனறி யும் 1977-இல குன்றக்குடி கிராமத் திட்டக்குழு அமைத்துச்சிற்றூர் மக்களின வறுமை நீக்கும் பணியை இவர் மேற்கொண்டுள்ளார். இந்தக் கிராமத் திட்டப் பணியை இப்போது பசும்பொன முத்துராமலிஙகம மாவடட அளவிலும் பிற மாவட்டஙகளிலும செயற படுத்தி வருகிறார். குமரி மாவட்டம், மணடைக் காட்டில 1982-இல் நிகழ்நத கலவரத்தில் இவர் தம் உயிருக்கும் அஞ்சாது மேறகொணட அமைதிப் பணி வரலாறறுப் புகழ் வாய்ந்தது. இராமநாதபுரம் இனக கலவரம் (1981) புளியஙகுடி இனக்கலவரம் (1982) முதலியவறறில மேற்கொணட இவரது அமைதிப் பணி மக்களிடையே நலலுணர்வையும பெரும்பயனை யும் தோற்றுவிததது.

இநத அமைதிப பணிகளை மேற்கொணடபோது கிடைத்த பட்டறிவினால ‘திருவருட் பேரவை’ எனற அமைப்பை 1982-இல தோறறுவித்தா. நாட்டில நிலவும் எலலாச் சமயஙகளையும் சாாந்த மதிப்பு மிக்க உறுப்பினர்களைக கொணடது திருவருட் பேரவை. இநத அமைப்புத தமிழகத்தின பெருநகரங கள் பலவறறில அமைநதுளளது.

தீண்டாமை ஒழிப்பு, சாதி வேறுபாடற்ற சமு தாய அமைப்பு, வறுமையற்ற சமுதாய அமைப்பு, தமிழ வளாசசி, தாய்மொழி அருசசனை, பெணகள முன்னேற்றம், எல்லோருக்கும் கல்வி, சிறறூா மக்களி டையே அறிவியல் வளர்ச்சி, சமயங்களிடையே இணககம், மனிதகுல ஒருமைப்பாடு முதலிய பல்வேறு துறைகளில் இவராற்றியுளள பணிகள கணக்கி லடங்கா; விரிககிற் பெரும.

திருப்புத்தூரில் திருமுறை விழாவும், பிரானமலை (பறம்புமலை)யில வளளல பாரி விழாவும் நடததி வருகிறார். இவவிழாக்களிலும் ஆதீனம எடுக்கும பிற விழாக்களிலும் இவரால பாராட்டிச் சிறப் பிககப் பெறற புலவர்கள, அறிஞர்கள், கலைஞாகள பெருமக்கள் நூற்றுக்கணககானவர்களாவார்.

திருககோயில்களின சொத்துகள பலவற்றை இவர் மீட்டுளளாா, சொத்துகளின வருவாயைப் பெருக்கி யுள்ளார்; குன்றக்குடி சணமுகநாதர் கோயிலைப் புதுப்பித்து 1979-இல திருக்குட நீராட்டு விழா நடத்தினார்; குனறக்குடி மருதாபுரிக் குளத்தைத் தூயமைப்படுத்தினார், தேனாசசியம்மன் கோயிலைப் புதுபிதது 1988-இல் திருக்குட நீராட்டு நடத்தினார். திருப்புத்தூர், பிரான்மலைக் கோயில்கள் திருப்பணிகள செய்யப் பெற்றன. ஆதீனத் திருக்கோயிகள அனைத் தும் பேணப் பெற்றுத் தூய்மைப் பொலிவுடன விளஙகு கினறன; அவைகளில் நாட் பூசனைகளும் திருவிழாக் களும் சிறப்பாக நடைபெற்று வருகினறன., மரு ப.

**மதுரை திருஞானசம்பந்தர் ஆதீனம்**: மதுரை ஆதீனம், 7-ஆம நூற்றாண்டில், இற்றைக்கு ஆயிரத்து நானூறு ஆணடுகளுக்கு முன்பு, சீகாழியில தோனறி

அருளிய தமிழ்த் திருஞானசம்பந்த சுவாமிகளால் நிறுவியருளப் பெற்ற ஆதீனமாகும்.

தமிழ்த் திருஞானசம்பந்த சுவாமிகள் சைவ சமயகுரவா நால்வருள முதல்வர். சைவ சமயத்தை யும், திருநீறறின பெருமையையும் ஐநதெழுத்து மந திரததின் சகதியையும், தமிழ் மொழியின அருமை பெருமைகளையும் உலகெஙகும பரப்பியருளிய பெரு மகனார் திருஞானசம்பந்த சுவாமிகள்.

கி.பி. 7-ஆம் நூறறாணடில் தமிழத் திருஞானசம் பந்த சுவாமிகளால தொடஙகப்பெற்ற மதுரை ஆதீ னத்தில், இதுவரை 291 குருமகா சநநிதானஙகள அருளாட்சி புரிந்திருககிறார்கள். இப்போது எழுந்த ருளியிருக்கும குருமகா சந்நிதானம உலோக குரு 292-ஆம பீடாதிபதி திருப்பெருந்திரு அருணகிரிநாத சிரீஞானசம்பந்த தேசிக பரமாசசாரிய சுவாமிகள். இவர் தஞ்சைமாவட்டம் சீர்காழியைச் சேர்நதவர்

இவர்தம் குருநாதர் திருப்பெருந்திரு சோமசுந்தர சிரீ ஞானசம்பநததேசிக பரமாச்சாரிய சுவாமிகள ஆவி உலக ஆராய்சசியில் வலலவராகத் திகழ்ந்த வர்கள.

இப்போது அருளாட்சிப் பீடத்தில் எழுந்தருளி யிருக்கும் குருமகா சநநிதானம் உலோக குரு திருப் பெருநதிரு அருணகிரிநாத சிரீ ஞானசமபந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் தத்துவப்பாடத்தில் பட்ட மேறபடிப்பு (எம் ஏ.,) பயினறவாகள; எழுசசி மிகுந்த பேச்சாளரும் எழுத்தாளரும் சிந்தனைச் செயலாள ரும ஆவார்கள; சைவ சித்தாநததத்தில் மிகுந்த புலமை உடையவர்கள்; சிவபூசையில் அழுத்தம் மிக உடையவர்கள்.

அமெரிக்க ஐககிய நாட்டிற்கும, ஐரோப்பிய நாடுகளான இஙகிலாந்து, பிரானசு ஆகிய நாடுகளுக் கும் 1984-ஆம் ஆண்டு சென்று அங்குள்ள தமிழப் பொதுமக்களிடையே சைவ சமயத்தையும, தமிழப் பற்றையும் பரப்பினார்கள்.

மலேசியத் திருநாட்டுக்கு இவாகள் 1987-ஆம் ஆண்டு செனறு, அஙகுப் பல மாநிலஙகளில் உளள சிவாலயஙகளில சைவ சித்தாந்த விளக்கவுரை நிகழ்த்தினார்கள். அநநாட்டில் ஆயிரக்கணககான சைவப் பெருமககளுக்குச் சிவ தீட்சையும் சிவபூசையும் அருளினார்கள்.

அதனபினனர், இவர்கள் அதே ஆணடில் சீன நாட் டிற்கும்செனறு சைவ சமயத்தையும் இசுலாம் மார்க் கத்தையும் இணைத்து உரை நிகழ்த்தினார்கள்.

மேலும் ஆஙகாங்குசிங்கப்பூர் ஆகிய நாடுகளுக்கும் செனறு, சைவ சமயம் பரப்பிப் பலருக்குச் சிவ தீட்சை செயவித்தார்கள. உலகெங்கும் சைவ சமயத் தின செந்நெறியைச் சிறப்பாகப் பரப்பிட வேண்டும் என்பதும், அனைதது மத மககளிடையே ஒற்றுமை நிலவச் செய்ய வேணடும் எனபதும் ஆதீனத்தின் தலையாயகொளகையாகும்.

உலகத்தில் உள்ள எல்லா மதஙகளைச் சார்ந்த மக்களுக்கும இறைவன் ஒருவனே. எனவே, எல்லோ ரும் சகோதர சகோதரிகள என்கின்ற அடிப்படை யில், இசுலாம் மாாக்க மேடைகளிலும் எழுந்தருளி, சைவ சித்தாந்தம்,திருககுர்-ஆன்-திருஞான சம்பந்தர், நபிகள் நாயகம் – இப்படிபபட்ட நிலையில – ஒப்பு வமைகளோடு அருளுரை நிகழ்த்தி மிகப் பெரிய புரட்சியை உருவாக்கி - நாட்டில் அமைதியான வாழ் வுக்கு வழி ஏற்படுத்தி வருகிறார்கள. சைவ சித்தாந் தத்தின் கடுமைத் தனமையை எளிமைப்படுததிப் பாமரமக்களும் எளிதில் புரிநது கொளளும் வகையில் விளககம் அளிப்பதில் வலலவர்கள்.

இவாகளின் ஆட்சியில் ஆ?னத்தின் சொத்துகள் பல மீட்கப்பட்டு ஆதீன வருவாய மிகுந்துளளது. மராமததுப் பணிகள, புதிய கட்டடஙகள் கட்டுவது போன்ற திருப்பணிகளும் தொடர்நது நடந்து கொண்டிருககின்றன.

தஞ்சை மாவட்டத்தில் நான்கு பெரிய சிவால யங்கள இவர்களுடைய அருளாட்சியில இயங்கி வரு கின்றன. 1) அருளமிகு பன்னகா பரமேசுவர சுவாமி திருககோயில, பன்னத்தெரு,2)அருள்மிகு கைச்சினனே சுவர சுவாமி திருக்கோயில, கைச்சினனம், 3) அருள் மிகு அக்கினீசுவரசுவாமி திருக்கோயில், கஞ்சனூர், 4) அருள்மிகு சாட்சிநாத சுவாமி திருக்கோயில், திருப் புறம்பியம்.

மேலும், மதுரை அருளமிகு மீனாட்சி சுநதரேசு வரர் ஆலயம், இராமேசுவரம அருளமிகு இராமநாத சுவாமி ஆலயம் ஆகியவை 1865-ஆம் ஆணடு வரை மதுரை ஆதீனத்தின் அருளாட்சிக்குட்பட்டு இயங்கி வநதன. அதன் பினனர் அபபோதிருந்த மகாசநநி தானஙகள தாங்களாகவே முன வநது,இந்த இரணடு ஆலயங்களையும் அரசாஙகத்திடம் ஒப்படைதது விட்டனர்.

288ஆம குருமகா சந்நிதானம் அவர்கள் ஆட்சிக் காலத்தில் வடலூர் வளளல இராமலிங்க சுவாமிகள, ஆதீனத்திற்குப் பலமுறை வருகைதந்து நலல தொடர்பினை வைத்திருந்தார்கள.

இராமநாதபுரம் அரசர் பாசுகர சேதுபதி முதல் அனைத்து மனனர்களும் மதுரை ஆதீனத்தின் சீடர் கள்; மகா சநநிதானஙகளிடம் மிகுந்த பகதியும் பாசமும் கொணடவர்கள். இஙகிலாந்து அரசுக்கும் மதுரை ஆதீனத்துக்கும் நெருங்கிய தொடர்பு இருநத காரணத்தால், 289ஆம குருமகா சந்நிதானம் அவர்களுக்கு 'இராவ்பகதூர்' எனற சிறப்புப் பட் டத்தை இங்கிலாநது அரசு வழங்கியது. ஆதீனத்திற்கு வேண்டிய 'பாதுகாப்பு ஆயுதஙகள்' அரசாங்கததால் வழங்கப்பட்டன. மகா சநநிதானங்களுக்கு நிலை யான பாதுகாபபு வழஙகப்பெற்றது என்பதும் குறிப் பிடத் தக்க ஒனறாகும்.

முடிபாக, மதுரை ஆதீனத்தை நிறுவியருளிய குருமுதல்வர் தமிழ்த் திருஞானசம்பந்த சுவாமிகள் முதல் அனைத்துக் குருமகாசந்நிதானங்களும் மிகச சிறந்த மேதைகளாக, ஆறறல் பெற்றவர்களாக பனமொழிப் புலவர்களாக, ஞானிகளாகத் திகழ்ந்து வருகிறார்கள் என்பது இவவாதீனத்தின சிறப்பமச மாகும.

**திருப்பனந்தாள் காசி மடம்:** தஞசை மாவட்டம் திருவிடைமருதூர் வட்டம் திருப்பனந்தாளில் சிரீ காசிமடம் உள்ளது. இது சிற்றிலக்கியவேந்தரும மாபெரும் அருளாளரும் ஆகிய குமரகுருபரசுவாமி களால் காசியில் நிறுவப்பெற்ற குமாரசாமி மடத்தின கிளை மடமாகத் தோன்றியது. இதனை நிறுவியவர் ஆறாம் பட்டம் தில்லைநாயக சுவாமிகள ஆவார். இப்போது காசிமடததின் கிளை மடமாகக் காசி குமாரசுவாமி மடம் விளங்குகிறது.

சிரீ வைகுணடத்தில் அவதரித்து, திருச்செந தூர் முருகன் அருளால் மூங்கை நீங்கப்பெற்றுக் கந தர் கலிவெண்பாப்பாடி, தலயாத்திரை மேற் கொண்டு, மதுரையில் மீனாட்சியம்மை பிளளைத் தமிழ் பாடுங்கால் அம்பிகையால் முத்தாரம அணிவிக் கப் பெற்று, தருமையாதீனம் நான்காம் குருமூர்த்தி யான மாசிலாமணிதேசிகரால் ஆட்கொள்ளப்பெற்று, அவர்பால் ஞானோபதேசம் பெற்று, காசியில் ஔரங்கசீபின் மகன் பாதுசாவின் அவைக்குச் சிங கத்தின் மீதிவர்ந்து சென்று உபய கருடன் வட்ட மிட்டுக் காட்டிய இடமெலலாம் தரப்பெற்றுக் குமார சாமி மடம் அமைத்து, அறம் பல செய்து வடஇந் தியாவில் தமிழின் அருமையை நிறுவிய குமர குரு பரசுவாமிகள் இத்திருமடத்தின் முதலாம் அதிபா ஆவார். அவர் இயற்றிய 16 சிற்றிலக்கியங்களுள் கந்தர்கலிவெண்பா முதல் 14 நூல்கள் இப்போது கிடைக்கின்றன.

காசியில் உள்ள கேதாரீசுவரர் கோயிலைக் கற் றளியாககியவர்களும் இவர்களே. அக்கோயிலும் கேதாரகட்டமும் சிரீ காசிமடத்திற்குச் சொந்த மானவையேயாகும்.

2-ஆம்பட்டம் திருப்பெருந்திரு சொககநாத முனி வர். 3-ஆம் பட்டம் அருணாசல முனிவர், 4-ஆம் பட்டம் அமபலவாண முனிவா, 5-ஆம் பட்டம் சடை யபப முனிவர் 6-ஆம் பட்டம் தில்லை நாயகசுவாமிகள் (திருப்பனந்தாளில காசிமடத்தை நிறுவியவா). இவ்வைவரும் காசி குமாரசாமி மடத்தில அரு ளாட்சி புரிந்தவர்கள. கி பி. 1720 முதல 1756 வரை. 7-ஆம் பட்டம் குமரகுருபர சுவாமிகள் (1756-1790).

இவர் திருப்பெயரும நிறுவனர் பெயரானதால், இவர் காலத்திலிருநது நிறுவனா ஆதி குமரகுருபரர் எனப் பெற்றார். இநத எழுவரும் காசியில கஙகாப் பிரவேசம் செய்தவாகள.

கயிலை மாமுனிவர் திருப்பெருந்திரு காசிவாசி முத்துகுமாரசுவாமித் தம்பிரான சுவாமிகள 1972 முதல் 21-ஆம அதிபராக எழுந்தருளி அருளாட்சி புரிந்து வருகிறார்கள. காசிமடம் அதிபர்களுள் கயி லாய யாததிரை மேற்கொணடவர்கள இவாகளே.

காசிமடததின் அதிபாகள பழுதத தமிழ்ப் புலமை பாலிக்கப் பெற்றவாகள; எசமான சுவாமிகள் என மக்களால் மரியாதையுடன் அழைக்கப் பெறுபவர் கள; தஞ்சை மராட்டிய மனனர்களால மதிககப் பெற்றவர்கள. திருக்கயிலாய பரம்பரைத் தருமையா தீனம் திருக்கூட்டத் தமபிரானகளுள ஒருவரே காசி மடம் அதிபராக வரும மரபுளளது. காசிமடததின அதிபர் திருக்கயிலாயபரம்பரைத் தருமபுர ஆதீன அடி யார் திருக்கூட்டததில் தலைமைத் தம்பிரான் ஆவார்.

காசி குமாரசுவாமி மடத்துடன, இராமேசுவரம், சிதம்பரம், ஆச்சிராமம் முதலிய இடஙகளிலும் இதன கிளை மடங்கள் உள்ளன. திபேத்தில் மோரங் கியில் இதன கிளை இருந்ததாகவும், ஒரு உருத்திராக் கக்காடு சொந்தமாக இருநததாகவும் தெரியவரு கிறது.

தென்னிந்தியாவிலிருந்து காசிக்கு கி.பி.18,19-ஆம் நூறறாண்டுகளில் யாத்திரை மேற்கொள்வோர் காசிமடத்தில் தொகையைச் செலுத்திக் காசி குமார சுவாமி மடத்தில் பெறறுககொளளும் முறை இருந் தது. இந்தியாவில் முதன் முதலாகப் பயணக் காசோலை வஙகி முறையை இததிருமடம் நிகழ்த்தி யது எனலாம்.

காசிமடத்தின் அறக்கட்டளைகளின் வாயிலாக எண்ணற்ற நற்பணிகள் இமயம் முதல் குமரி வரை

நிகழ்ந்து வருகின்றன. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தஞ்சை இராசராச அபயகுலசேகரன் நினைவு சித்தாந்தப் பரிசுகள்,இலக்கண நூற்பரிசுகள், திருமுறைப் பரிசுகள் முதலிய பல பரிசுகள் அளிக்க இத்திருமடம் நிதிகள் அளித்துள்ளது. அப்பல்கலைக் கழகவாயிலாக அடக்கவிலையின் நான்கிலொரு பங்கு விலையில் தமிழ் நூல்களை அச்சிட்டுப் பரப்ப மாபெரும் நிதியமாக 120 ஏக்கர் நிலம் ஒதுக்கப் பெற்றுள்ளது.

காசிமடத்தில் பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி, திருக்குறள் பதிப்பு நிதிகளின் வாயிலாகப் பல நூல் கள் வெளியிடப் பெறுகின்றன. சரித்திர நூல்கள், சமய நூல்கள் பலவும் வெளியிடப் பெறுகின்றன. அவையாவும் அடக்க விலைக்கே தரப்பெறுகின்றன. 20-ஆம் அதிபர், பதிப்பு, கோயில், சமுதாயப்பணி முதலியவற்றிற்காக 533 அறக்கட்டளைகளை நிறு வினார்கள். அவற்றின் அக்காலத் தொகை மதிப்பு ரூ.1,15,995 ஆகும். அவ்வகைகட்காக 21-ஆம் அதிபர் கயிலை மாமுனிவர் காசிவாசி முத்துக்குமாரசுவா மித் தம்பிரான் சுவாமிகள் இதுவரை 127 தருமங் கள் நிறுவியுள்ளார்கள். அவற்றின் தொகை மதிப்பு உரூ.7,56,730 ஆகும்.

தமிழ் வளர்ச்சிக்காகவும், தமிழிலக்கியவளர்ச்சிக் காகவும் திருப்பனந்தாளில் சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கலலூரி நிறுவப்பெற்றுள்ளது.

குமரகுருபர சுவாமிகள அவதாரத் தலமாகிய சிரீவைகுண்டத்தில் குமரகுருபர சுவாமிகள கலைக் கல்லூரி நிறுவப்பெற்றுள்ளது.

அனனதான மடம் எனறே ஆன்றோர் புகழும் வண்ணம் கேதாரம முதல குமரி வரை 281 அன்ன தானக் கட்டளைகள் நிறுவப்பெற்றுளளன.

காசிப் பல்கலைக் கழகத்தில் சித்தாநத இருக்கை அமைத்து ஆய்வுகளும் சொற்பொழிவுகளும் நிகழ்த்தப் பெறுகினறன. தமிழ் வளர்ச்சிக்காகவும், சைவ மேம்பாட்டுககாவும் சிரீகுமரகுருபரர் என்னும் திங்களிதழ் நடத்தப் பெறுகின்றது.

கல்விப் பணிகள், கோயிற் பணிகள், பதிப்புப் பணிகள, சமுதாயப் பணிகள, சமயப் பணிகள் ஆகிய வகைகளில் முழுமையாக ஈடுபடுத்திக் கொணடு தமி ழுக்குப் பெருமை செய்யும் திருமடம் திருப்பனநதாள காசிமடம் ஆகும். கு.சு.

**ஞானியார் மடாலயம்** என்பது திருக்கயி லாய பரம்பரைத் திருககோவலூர் ஆதீனததைச் சார்ந்த திருமடமாகும். இதன் தலைமைத் தானம் திருக்கோவலூரில் உள்ளது. அங்குத்தான் இவ்வா தீனத்தின் முதற் குருமூர்த்தியாகிய திருப்பெருந்திரு ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் ஞானச் செங்கோல் ஓச்சி வந்தார்கள. இவர்கள் இறைவன் திருவருளால் சித்திகள் பல கைவரப் பெற்று நீர் மேல் நடத்தல் முதலிய பல செயற்கருஞ் செய்கைகள் செய்த ஞானியாவார்கள். இவர் நிட்டானுபூதி சாரம், சதுர்லிங்க சதகோத்திர சதகம், ஆசைச் சோடச மாலை, மேன்மைப்பதிகம் முதலிய 31 நூல் கள் இயற்றியுள்ளார். இவர்தம் குருநாதர் திரு வருணை குகை நமசிவாயர் பரம்பரையில் வந்த ஆறாம் குருநாதர் ஆவார். ஆகவே, இமமடாலயம் தோன்றிய காலம் கி.பி.17-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதிஎனனலாம அவா திருக்கோவலூர், திருப் பாதிரிபபுலியூர், ஆரணி, திருமுதுகுன்றம், வணடிப் பாளையம், சிவகுன்றம் ஆகிய இடங்களில் முருகப் பெருமான திருக்கோவில்களை நிறுவி மக்களைப் பத்தி நெறியில் ஈடுபடச் செய்தார். . இவவாதீனத் தின் கிளைகள் திருப்பாதிரிப்புலியூர், ஆரணி, திரு முதுகுனறம் ஆகிய இடஙகளில் உள்ளன. அவர் 97 ஆணடுகள வாழ்நது திருக்கோவலூரில் சமாதி ஆனார். பின்னர் வந்தவாகள யாவரும் திருப்பாதிரிப் புலியூர் மடத்திலேயே தங்கினார்கள். ஆதலின், அவர் கள் சமாதிகள் யாவும் திருப்பாதிரிப்புலியூரிலுளளன. இம்மடாலயம் வீர சைவ மரபைப் பரப்புவதாகும்.

இரண்டாங் குருமூர்த்திகள சிவ சணமுக மெய்ஞ் ஞான சிவாச்சாரிய சுவாமிகள. அவாகள் முருகரந தாதி முதலிய 7 நூல்கள இயறறி, 63 ஆண்டுகள பட்டமேற்று ஞானசசெஙகோல ஓசசியபின் சமாதி யானாகள். இச்சுவாமிகளைச் சணமுக ஞனியார் என்றும் கூறுவா. இவர் காலத்தில தான் ஞானியார் மடாலயம் எனனும் பெயா ஏற்பட்டது. மூன்றாங குரு நாதர் சிவசணமுக சங்கண வசவமெய்ஞ்ஞான சிவா சாரிய சுவாமிகள. இவா 16 ஆண்டுகள பட்டமேற் றுப் பீடத்தமாந்திருநதார்கள். நான்காம குருமூர்ததி கள சிவசணமுக பரசிவ மெயஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள ஆவர். இவர்கள 41 ஆண்டுகள ஞானச் செங்கோல் ஓச்சியபின சமாதியானார்கள.

ஐந்தாங குருமூர்த்திகள கி.பி.1873-ஆம ஆண்டில் பிறநதார்கள். இளமையிலேயே தமிழ், ஆஙகிலம, தெலுங்கு, வடமொழி முதலிய மொழிகளில புலமை பெற்றார்கள. பெற்றோர் அண்ணாமலை அயயர், பார்வதி அம்மையாா. இவர்கள தம் 16-ஆம் வயதில் பட்டம் ஏற்றார்கள; 1942-இல் தம் 69-ஆம் ஆணடில் சமாதியானாாகள. குரு வணக்கம, ஞான தேசிக மாலை, திலகவதியம்மை துதி ஆகியவை இவர்கள பாடி

யவை.இவர்கள் வேங்கடம் முதல குமரி வரை சிறுபல் லககிலேயே (மேனா) சென்று அங்கங்குச் சமயச் சொற் பொழிவுகளாற்றிச் சமய ஞானத்தைப் பரப்பிய சிறந்த ஞானியாவார். (காணக: தனிககட்டுரை).

ஆறாங குருமூர்த்திகள சிவசண்முக சத்திய ஞான சிவாசாரிய சுவாமிகள பட்டமேறறு 9 ஆணடுகளி ருந்து சமாதியானாாகள். ஏழாங் குருமூாத்திகள சிவ சணமுக ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் ஆவர். அவர்கள் 36 ஆணடுகள் ஞானச் செஙகோ லோச்சியபின திருவருட் கலப்புற்றார்கள.

இப்போது எட்டாம் குருநாதராய 1986-குன முதல் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமி கள், ஞனபீடத்தமர்ந்து தமிழும் சைவமும தழைக்கத தொண்டுகள ஆற்றிக்கொணடிருககிறார்கள்.

இரா.ச.

**சாத்தலிங்க அடிகளார் மடம் பேரூராதீனம்:** திருப்பேரூர் கொங்கு நாட்டிலுளள திருத்தலங் களுள் சிறப்பு மிகுந்த தலமாகத் திகழகிறது. இப்பேரூரை நமபியாரூரரும், சேக்கிழார் பெரு மானும் சஙகச் சான்றோரில் சிலரும் சிறபபித்துப் பாடியுள்ளனர். தொழிற துறையில் சிறந்து விளஙகும் கோவை மாநகருக்கு மேற்கே இத்தலம் உளளது. இத்தலததில் முநநூறு ஆணடுகட்குமுன தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் தோன்றி எழுந்தருளியிருநது மடமமைததுத் தவம் புரிநதுளளார்.

மெய்கணட மரபில் வந்த திருவாவடுதுறையா தீனக் குரு முதலவர் நமச்சிவாய தேசிகரின மாணவராக இளைய பட்டத்தில் இருநது சிவ நெறியை வளர்த்து வடககே சீசைலம் வரையில தம் கொள்கையைப் பரப்பி, வீரசைவ நெறியில பல திரு மடங்களைத் தோற்றுவித்தவா சிவப்பிரகாசர். சிவப் பிரகாசரின மாணவராக முழுஞான வீரராகத திகழந் தவர் தவத்திரு. சாந்தலிங்க அடிகளார். இவர் துறை மங்கலம் சிவப்பிரகாசர் தொடர்புடன மயிலம பொம்மபுர ஆதீனம் இரணடாம் பட்டம் சிவஞான பாலய சுவாமிகளைக் கண்டு போற்றிச் சிவப்பிர காசரின் தஙகையைத் திருமணம் கொணடார்.

சாந்தலிங்கர் எந்த வகையாலோ இல்லறச்சீர் முற்றலுற்றுச சொந்த உணர்வால் துறவு மேற் கொணடார். கொங்குவள நாட்டில் சீலத்தர் போற்றத் திருமடம் ஒன்று அமைத்தார். சோறு சமைப்போன், துகிற்பணி செய்வோன் முதலிய திருத்தொண்டு செய்யும், அடியவர் குழாங்களா கிய மாணவர்கள் பலர் திருமடத்தில் தங்கி அருள நெறியை வளர்த்துச் செமபொருள காணும் திறத்தினர் ஆயினர். இவ்வகையில் திருப்பேரூராதீன மாகிய சாந்தலிஙக சுவாமிகள திருமடம், கிழக்குக் கடற்கரைக்கும் மேறகு மலைத்தொடர்க்கும் இடைப் பட்ட தமிழகததில சிவஞானப் பயிர் வளர்தத சிறப்புக்குரியது.

சாந்தலிஙகர் அருளிய கொலைமறுத்தல்-வைராக் கிய சதகம்-வைராக்கிய தீபம-அவிரோத உநதியார் ஆகிய நூலகள் வேதாந்த சித்தாந்தத திருமடங்கள் ஏற்றுப் போற்றுவனவாக விளஙகுகினறன. சமயக் காழ்ப்பை நீக்கி ஒருமையுணர்வை உணடாக்கும் வகையில் அமைநத நூலாக அவிரோத உந்தியார் விளங்குகிறது.

இவ்வாதீனம், சீகணடபரமசிவனை முதலாக வைத்து எணணபபெறும் திருககயிலாய பரம்பரையில் தோனறிய மெயகணட சநதானக்கொடிவழியில் அமைநததாகும. சாந்தலிஙக சுவாமிகளால் தோற்று விககப்பட்ட இநத ஆதீனம அவருக்குப்பினனர், இராமலிஙக சுவாமிகள, சச்சி தானநத சுவாமிகள், மௌன சுவாமிகள், மாணிக்க சுவாமிகள், ஆறுமுக சுவாமிகள ஆகியோரை ஆதீனத்தலைவர்களாகக கொணடு, தொணடு புரிந்து வந்தது. இநத ஆதீனம இப்பொழுது 1967-ஆம ஆண்டில் அருளாட்சி ஏற்றுளள சாநதலிஙக இராமசுவாமி அடிகளாா தலைமையில் தம சமய சமுதாயத் தமிழத தொணடினைத் தொடர்ந்து செயது வருகிறது.

சாந்தலிங்கர் தம்முடன அடியவர்களையும், மாணாககர்களையும இருககச செயது தவமியற்றி அருளுரை வழஙகி வந்தார் பிற சமயததினர்ககும சைவ சமய மேனமையினை விளக்கிச் சைவச் செந் நெறியினை வளர்தது வநதார். இதனை அவர் அரு ளிய 'கொலை மறுத்தல' என்னும் நூலால் அறிய லாம். இவருக்குபின இத்திருமடம் அனனியமதத்தினர் ஆட்சியாலும, அனபர்களின கவனக்குறைவாலும் சிறப்புக் குன்றியிருநதது. சமயச் சானறோர் பலர் இவர் சமாதி நிலையத்தையும் தவச் சாலையையும் பாதுகாத்துப் போற்றினர். பிறகாலத்தில் வந்த அரு ளாளர்கள மீண்டும் திருமடத்தை வளப்படுத்தினர். இப்பணியில குறிப்பிடததக்கவர் தவத்திரு. இரா மலிஙக சுவாமிகள ஆவார்.

**திருமடத்தின் மறுமலர்ச்சி.** கோயம்புத்தூர் காவல் ஆய்வாளர் பொனனுரங்க முதலியார் தம் கனவில் சாந்தலிஙக அடிகளார் தோன்றி எமது நிலையத்தைப் பேணுக எனத் தெரிவித்தபடி பொன்னுரங்க முதலியார் பேரூர் வந்து சமாதிக் கோயிலையும், தவச் சாலையையும் விரிவு படுத்தி யுள்ளார்.

இராமலிங்க சுவாமிகள் 'சமாதிக் கோயிலின் முன் மண்டபத்தை அன்பர்கள் உதவியால் அமைத்துள்ளார். திருமடத்தில் கம்பஞ்சோறு கலந்த நீரைச் வழிச் செல்வார்க்குப் பசிதீர வழங்கியுள்ளார். திருமடத்தையும், அதனைச் சார்ந்த இடங்களையும் விரிவாக்கியுள்ளார். இவர்கள் ஞான சமாதி அடைந்தபின் சச்சிதானந்த சுவாமிகள் திருமடத்தின் பணிகளை மேற்கொண்டுள்ளார். இவரது காலத்தில் சமாதிக் கோயிலின் மூன்றாம் மண்டபம் உருவாயிற்று. இவருக்குத் துணையாகச் சட்டைநாதத் தம்பிரான் பணியாற்றியுள்ளார். இவருக்குப்பின் மௌன சுவாமிகள் திருமடத்தின் தலைவராக இருந்துள்ளார். இவர் பேரூர்ப் பட்டிப்பெருமான் கோயில் குடமுழுக்கினை அன்பர்களின் பொருள் உதவியால் பல்லாயிரம் உருபாய்ச் செலவில் நிறைவேற்றியிருக்கிறார்.

இவருக்குபின் சமயத் தொண்டர்களும், பொன்னூரங்கமுதலியாரும்சிரவை கௌமார மடாலயத்தை நிறுவிய இராமானந்த சுவாமிகளைத் தலைவராக இருக்க வேண்டுமென வேண்டினர். ஆனால் அவர்கள் ஞானச் செல்வராகிய சாந்தலிங்கரது உயர்வை எண்ணித் தாம் தலைமை ஏற்காமல் அவர் தம் அடியவர்களில் ஒருவரான ஆறுமுக சுவாமிகளைச் சமாதிப் பணிகளைச் செய்யுமாறு பணித்தார். தவத்திரு. இராமானந்த அடிகளார் கௌமார மடத்தில் சமயநெறி வளர்ச்சிக்குரிய அடியவர்களை உருவாக்கினார். அவர்கட்குச் சமய குரவர்களின பெயர்களைச் சூட்டினார். அவர்களில் ஒருவர் மாணிக்க சுவாமிகள். துறவுணர்வு மிக்க மாணிக்க சுவாமிகள் குருநாதரின் ஆணைப்படி திருமடத்தின் பொறுப்பேற்றுச் சாந்தலிங்கர் திருமடத்தினை வளப்படுத்த எண்ணினார். ஆறுமுக சுவாமிகளின் துணையுடன் கொங்கு நாட்டின் பல பகுதிகட்கும் சென்று திருமடத்தின் பெருமையை உணர்த்தி அன்பர்களிடையே நன்கொடை பெற்றுத் திருமடத்தை விரிவாக்கினார். சாந்தலிங்க அடிகளார் ஞான சமாதி அடைந்த மாசி மகந்தோறும் குருபூசை விழாவை மிகச் சிறப்பாக நடத்தினார். திருமடத்துடன் சாதுக்களும் சான்றோர்களும் தொடர்பு கொண்டனர். மாணிக்க சுவாமிகளின முயற்சியால் அன்பர்கள் நிலமும் பொருளும் தந்தனர். மடத்தில் ஆண்டு விழாக்கள் நடத்துவதற்காக நிலையான மிகப் பெரிய ஓட்டுக்கொட்டகை ஒன்றனை மாணிக்க சுவாமிகள் அமைத்தார்களா. அது இப்பொழுது வருவாய் தரும் வாய்ப்புடையதாக அமைந்துள்ளது.

மாணிக்க சுவாமிகள் தமக்கு உடல் தளர்வு ஏற்பட்டவுடன் தம்முடன் இருந்த ஆறுமுக சுவாமிகளிடம் திருமடத்தின் உரிமைகளை ஒப்படைத்து 1938-ஆம் ஆண்டு மார்கழித் திங்கள் திருவாதிரை நாளில் இறைவனடி எய்தினார். ஆறுமுக சுவாமிகள் திருமடத்தின் வளர்ச்சிக்கான பணிகளில் அறுபதாண்டு கட்குமேல் ஈடுபட்ட அருளாளராவர்.

ஆறுமுக சுவாமிகளுக்கு வயது முதிர்ந்ததனால் இராமானந்த சுவாமிகளின் திருவுளக் குறிப்பறிந்து முதலிபாளையம் இராமானந்த மடம் தவத்திரு. சிவராம சுவாமிகளின் இசைவுடன் அவருடைய திருமகனாகிய இராமசாமி அடிகளைத் திருமடத்தின் இளைய பட்டமாகத் தேர்ந் தெடுத்தார்கள். அப்பொழுது அவர், மயிலம் தவத்திரு சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரியில் பயின்று வந்தார். மயிலம் பொம்மபுரம் 18-ஆம் பட்டம் தவத்திரு சிவஞான பாலய சுவாமிகளின் தொடர்பு கிடைத்தது. விரோதி ஆண்டு மாசித் திங்கள் 20-ஆம் நாளில் மயிலம் பொம்மபுர ஆதீனம் பதினெட்டாம் பட்டம் தவத்திரு சிவஞான பாலய சுவாமிகள் இராமசாமி அடிகளுக்கு வீரசைவ தீட்சை செய்து வைத்தார்கள், இராமசாமி அடிகளின் அயரா உழைப்பினாலும் அன்பர்களின் உதவியாலும் திருமடத்தின் பொருள்வளமும் அறச் செயல்களும் நாள்தோறும் வளர்ந்துவரலாயின.

**திருமடத்தின் பணிகள்:** திருமடத்தினைச் சார்ந்த அன்பர்கட்குச் சமய நெறியினை விளக்குவதற்காக 1916-ஆம் ஆண்டு தவத்திரு சிதம்பர மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகளாலும், மற்றும் பல பெரியார்களாலும் 'சத்வித்யா சன்மார்க்க சங்கம்' தோற்றுவிக்கப்பட்டது. அதன் சார்பில் சங்கத்தில் வாரந்தோறும் ஞாயிற்றுக்கிழமை 3 மணிக்குச் சொற்பொழிவுகள் நடைபெறும். இச்சங்கத்தினால் கோவை நகரில் சமய உணர்வு அரும்பியது.

**திருமடத்தின் கல்விப் பணி:** திருமடம் சமயப் பணியும், சமூகப் பணியாகக் கல்விப் பணியும் ஆற்றி வந்துள்ளது. மடத்தின் சார்பில் 1951-இல் உயர்நிலைத் தொடக்கப்பள்ளி தொடங்கப்பெற்றது. சென்னைப் பல்கலைக் கழக ஒப்புதலுடன் 26.5.1953-இல் தமிழ்க் கல்லூரி தொடங்கப் பெற்றது. அன்று பேரூப் பட்டிப் பெருமான் கோயிலில் தவத்திரு சிவஞான பாலய சுவாமிகள். குன்றக்குடி அடிகளார் முதலியோர் முன்னிலையில் முதன் முதலாகத் தமிழில் அருச்சனை செய்யப்பெற்றது. காட்டம்பட்டி முதலிபாளையத்தில் 1958-இல் சாந்தலிங்க அடிகளார் பெயரில் ஓர் உயர்நிலைத் தொடக்கப்பள்ளியும், 1969-இல் பேரூரில உயர்நிலைப் பள்ளியும் 1977-இல் மழலையர் பள்ளியும் தொடங்கப்பெற்றன. இவ்வாதீனம் தமிழகத் திருமடங்களை ஒருங்கிணைக்

கும் பணியினை மேற்கொண்டது. துறவியர் பேரவை ஒன்றை உருவாக்கிய பெருமை இதற்குரியதே.

பேரூராதீனத்தின் பணியால் கொஙகு நாடடில் சிவநெறி வளர்ச்சி மேலோங்கியது. திருமடததின சார்பில நிறுவப்பெறற சத்விதயா சனமாாகஈ சங கம் சிவநெறிப் பணபுகளையும், செநதமிழ உணா வினையும வளர்த்து வருகிறது. வே.செ.

**சிரீ இராமகிருட்டிண மடம்:** காலததின் தேவைக் கேற்ப அவதார புருடர்கள தோனறிக காலததின தேவையை நிறைவு செயகிறாாகள. கி.பி. 18-ஆம் நூறறாணடிறகுத் தேவையான அவதார புருடரைப் பற்றிச்சுவாமிவிவேகானந்தர்கீழவருமாறுகூறுகிறார்.

'சஙகரருடைய அற்புதமான அறிவும், சைதன யருடைய ஆசசரியமான பரந்த இதயமும் கொணடு ஒவவோா உட்சமயததிலும ஒரே கடவுள செயற படுவதைக் காணகினறவரும, எலலாவறறிலும கட வுளைக காணக கூடியவரும், ஏழைகளுக்காகவும், பல மிலலாதவாகளுக்காகவும, இழிந்த சாதியினருககாக வும், தாழ்த்தப்பட்டவாகளுககாகவும், இந்தியாவிலும், வெளியிலும, உலகத்தில் உள்ள ஒவவொருவருக்காக வும்அழுகினற இதயத்தைப் படைத்தவரும, உலகத்தில் ஒனறோடு ஒன்று போராடிக் கொணடிருககும் சமயங கள் அனைததின உட்கருத்தையும் தமது பேரறிவால அறிநது கொண்டு, அவற்றை ஒறறுமைபபடுததும பேரறிவு நிறைந்தவரும், இந்தியாவில் மட்டு மன்றி இந்தியாவிற்கு வெளியிலும் அறபுதமான ஒற்றுமையையும் அறிவையும் உணர்சசியையும் சமப் படுத்தும் உலக சமயத்தை உருவாக்கும் ஆறறல் நிறைநதவருமான ஒருவர் பிறப்பதற்குரிய காலம கனிநதது. அத்தகைய மனிதர் (சிரீ இராமகிருட்டிண னர்) பிறநதார்'.

சிரீ இராமகிருட்டிணர் கி.பி.1836-ஆம் ஆணடில் பிறந்தாா.

**உலகமும் இந்தியாவும்:** அவருடைய தலைமைச் சீடரான சுவாமி விவேகானந்தா கி.பி. 1893-இல் அமெரிக்காவில சிகாகோவில் நடந்த சருவ சமயப் பேரவையில் இநது சமயத்தின் திரட்சியாக விளங்கிய சிரீ இராமகிருட்டிணரின் குரலை எதிரொலித்தார். அது அமெரிக்க, ஐரோப்பிய மக்களின மனத்தில் புதிய உற்சாகத்தையும் சிந்தனையையும் எழுப்பியது. இந்தி யாவின் மீதும் சமயத்தின் மீதும் புதிய பெருமையைப் படர வைததது. அடிமையாகக் கிடந்த இந்தியர்கள மதிப்பும் உற்சாகமும் கொண்டனர். இந்தியா முழு வதும் ஒரு புதிய நம்பிக்கை அலை எழுந்தது.

**சிரீ இராமகிருட்டிண மடம், சங்கம் தோற்றம்:** அமெரிக்காவிலிருந்து இந்தியா திரும்பிய விவேகானந் தர் சிரீ இராமகிட்டிணரின புத்தம் புதிய எழுசசிமிக்க கொளகைகளை உளளடக்கி, 'ஆத்மாவிற்குமோட்சம்' உலக மக்களுககு நன்மை' எனற திரணட கருத்தின் கீழ் உலக மக்கள அனைவரும் ஆன்மிகப் பேரின்பம பெறுவதற்கும், அநதப் பேரினபத்தை உலக மக்களுக் குச் சேவை செயவதன மூலம் பெறுவதறகும சிரீ இராமகிருட்டிணசஙகம் எனனும அமைப்பைச் சிரீ இராமகிருட்டிணரின் பெயரால கி பி 1897-ஆம ஆணடு மே மாதம 1-ஆம தேதி தொடஙகினார். சிரீ இராம கிருட்டிண மடம் எனற அமைப்பை கி.பி. 1899-ஆம ஆணடு தொடஙகினார்.

மடம் என்பது முழுமையான ஆன்மிகப் பணிக்கா கவே அமைக்கபபட்டதாகும். பிரமசாரிகளைச் சேர்க்கவும், பயிறசிதரவும, சந்நியாசிகளாக்கவும் சிரீ இராமகிருட்டிணரின வழிபாடு, விழாககள் ஆகிய வறறை நடததவும, அவருடைய உபதேசங்களைப் பரப்பவும் இராமகிருட்டிண மடம் ஏற்படுததபபட்டது.

சிரீ இராமகிருட்டிண சஙகம் நாடு முழுவதும் மக்களுககுக் கல்விப பணி, மருத்துவப் பணி புரியவும், ஏழைப் பிள்ளைகளுககான அநாதை இலலஙகள் நடத தவும், புயல, வெளளம், நெருப்பு, நோய் ஆகியவை களால் பாதிபபு ஏற்படும பொழுது ஏழை மக்களுக்கு எலலா உதவிகளையும் செயது துயா தவிர்ககவும் அமைந்தது

**சென்னையில் சிரீ இராமகிருட்டிண மடம்:** முதலில கல்கத்தாவில சிரீ இராமகிருட்டிண மடமும் சஙகமும் அமைக்கப்பட்டன. சுவாமி விவேகானநதா அமெரிக் காவிலிருநது இந்தியா திருமபியபோது முதலில தமிழ நாட்டிறகே வநதாா. சென்னையில ஒனபது நாளகள தஙகி எங்கும் இராமகிருட்டிணரையும, வேதாந்தத் தையும், நாட்டுப் பறறையும் பறறிய கொளகை களை முழஙகினார். சென்னை நகரமே அவருடைய முழக்கஙகளாலும், அவருடைய இருப்பாலும் பெரும் வலிமையும் உற்சாகமும் பெற்றது. இவை தொடாநது செயற்படச் சென்னை நகரில் ஓா அமைப்பை உண டாக்கும்படி சென்னை மக்கள் பலரும அவரிடம் வேண்டுகோள் விடுத்தனர். அவரும் மிகவும் மகிழ்ந்து அப்படியே செயவதறகுத தகுதி வாயந்த சிரீ இராம கிருட்டிணரின நேர்சீடா ஒருவரை அனுப்புவதாகக் கூறிச் சென்றார். சில நாட்களில், அனுமனைப்போல் சிரீ இராமகிருட்டிணருககுச் சேவை புரிந்தவரும், சிரீ இராமகிருட்டிணரின் பெயரையே தன் சந்நியாசப் பெயராகச் சேர்த்துப் பெரும் பாக்கியம் பெற்றவரும், ஆழ்ந்த வேதாந்தியும், தலைசிறநத பக்தருமான சுவாமி இராமகிருட்டிணானந்தரை சென்னையில சிரீ இராமகிருட்டிண மடத்தைத் தொடஙக அனுப்பி னார்.

சுவாமி இராமகிருட்டிணானந்தர் கி.பி.1897-ஆம் ஆண்டு சென்னை வந்தடைந்தார். சென்னையில் இப்போது 'விவேகானந்தர் இல்லம்' என்று வழங்கப்படுகின்ற வீடு இருக்கும் தெருவில், ஒரு மாடி வீட்டில் சிரீ இராமகிருட்டிணமடம் தொடங்கப்பட்டது. பிறகு விவேகானந்தர் இல்லத்தின் ஒரு பகுதியில் செயற்பட்டது. இப்போது மயிலாப்பூரில் சிரீ இராமகிருட்டிண மடச் சாலை எனப்படும் சாலையில் உள்ள இடத்தில் 1907-இல் கட்டப்பட்ட சொந்தக் கட்டடத்திற்கு மாற்றப்பட்டது. அன்று முதல் தமிழகத்தில் ஆன்மிகப் பணியிலும், கல்வி, மருத்துவப் பணிகள் செய்வதிலும், சமய நூல்களைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளியிடுவதிலும் மடம் பெரும் பங்காற்றி வருகின்றது.

**தமிழ்நாட்டில் சிரீ இராமகிருட்டிண மடம் சங்கங்கள்:** தமிழ் நாட்டில் இப்போது செனனை, காஞ்சி புரம், செங்கற்பட்டுநாட்டறம்பள்ளி, சேலம், கோயமுத்தூர், ஊட்டி, மதுரை ஆகிய இடங்களில் இராமகிருட்டிண மடமும் சங்கமும சேவை செய்து வருகின்றன. சென்னையில் சிரீ இராமகிருட்டிண மடம், தகுதி வாய்ந்த ஏழைப் பிள்ளைகளுக்கு உணவும் தங்குமிடமும் தொழிற் கல்வியும் தருகிறது. சிரீ இராமகிருட்டிணர் மாணவர் இல்லமும்,விவேகானந்தா கல்லூரியும், இம்மடத்தின் சார்பில் நடைபெறுகினறன. சிரீஇராமகிருட்டிண மாணவர் இல்லத்தின் கிளையாகச் செங்கற்பட்டு மாவட்டத்தில் மல்லியங்கரணை எனற கிராமத்தில் ஏழை மாணவர்களுக்கு, மிகுதியாக அரிசன மாணவர்களுக்கெல்லாம் பள்ளியும் விடுதியும் நடத்தப்படுகின்றன.

சென்னை, மயிலாப்பூர், நாட்டறம்பள்ளி, சேலம் ஆகிய மடங்களில் மருத்துவ சேவை செய்யப்படுகிறது. சென்னை மயிலாப்பூர் மடமும், நாட்டறம்பள்ளி மடமும், நெடுந்தொலைவில உள்ள மருத்துவ வசதிகள உடனடியாக எளிதாகக் கிடைக்கப் பெறாத ஏழைகளுக்காக நடமாடும் மருத்துவமனைகளை நடத்துகின்றன.

**சென்னை இராமகிருட்டிண மடத்தின் பணிகள்:** சென்னை மயிலையிலுள்ள சிரீ இராமகிருட்டிண மடம் தமிழகத்தில் சிரீ இராமகிருட்டிணரின் கொளகைகளைப் பரப்புவதிலும், ஆன்மிகச் சேவைகளைச் செய்வதிலும், மருத்துவமனை நடததுதல் முதலான மற்றச் சேவைகள் செய்வதிலும் முக்கிய பங்கை வகிக்கிறது. ஆணடுதோறும், சிரீ இராமகிருட்டிணா, அன்னை சாரதா தேவியார், சுவாமி விவேகானந்தரின பிறந்த தின விழாக்கள் சிறப்பாகக் கொணடாடப்படுகின்றன. சுவாமி விவேகானந்தரின் பிறநத நாளை இந்திய அரசு தேசிய இளைஞர் நாளாக அறிவித்த பிறகு ஒவ்வோா் ஆண்டும் சனவரி 12-ஆம் நாள விவேகானந்தர் பிறந்தநாள் விழா, இளைஞர் அனைவருடைய மனத்திலும், விவேகானந்தரின் முழக்கங்களும், சேவைமயமான அவருடைய நிகழ்ச்சிகளும் நன்கு பதியும் படியாக்க் கொண்டாடப் படுகிறது. ஊர்வலங்கள், சொற்பொழிவுகள், கட்டுரை, ஓவியப் போட்டிகள், மாறுவேடப் போட்டிகள், இளைஞர் மாநாடுகள் முதலியன புதிய அமைப்போடும் உற்சாகத்தோடும் நடத்தப்படுகின்றன.

ஆண்டிற்கு ஒரு முறை மூன்று நாள்கள் தமிழகம் முழுவதிலுமிருந்து வந்து நூறறுக்கணக்கானபக்தர்கள மூன்று நாளகள் தங்கிப் பெரிதும் பயன்பெறும் அந்தர் யோகம் ஆணடு தோறும் நடத்தப்படுகிறது.

**சிரீ இராமகிருட்டிண விசயம்:** மடத்தின மூலம் கடந்த 68ஆணடுகளாகச் சிரீ இராமகிருட்டிண விசயம் என்ற தலைசிறந்த ஆன்மிக மாத இதழ நடத்தப்பட்டு வருகிறது. அதில் இளைஞர் முதல் முதியவர் வரை விரும்பிப் படிக்கும் சிரீ இராமகிருட்டிணர், சுவாமி விவேகானந்தா, அன்னை சாரதாதேவியார் பற்றிய வரலாறுகளும், அவர்களின் உபதேசங்களும் இந்து சமயம், உலக சமயங்களின் சாத்திரங்களும செய்திகளும் சிறப்பாக வெளியிடப்படுகின்றன.

இம்மடம், சிரீ இராமகிருட்டிணர் நூற்றாண்டு விழா நூல்நிலையம் எனற பெயரில் சிறந்த நூல்கள அடங்கிய நூல்நிலையம் ஒன்றையும் நடத்தி வருகிறது.

**நூல் வெளியீடு:** சென்னை சிரீ இராமகிருட்டிண மடத்தின் மிகச் சிறந்த பணியாகத் திகழ்வது நூல வெளியீட்டுப் பணியும் விற்பனைப் பணியுமாகும். தமிழ், ஆங்கிலம், தெலுங்கு ஆகிய மொழிகளில் சமய நூல்கள இங்கு வெளியிடபபடுகின்றன. வேதங்கள, உபநிடதங்கள், சிரீ இராமகிட்டிணர், விவேகானந்தர் உபதேசங்கள, வாழககை வரலாறுகள் முதலியன மிக முக்கியமான நூலகளாகும். சிரீ இராமகிருட்டிணரின வங்காள மொழியில் அமைநத உபதேசங்களைத் தமிழில மொழிபெயர்த்து, 'சிரீ இராமகிருட்டிணரின் அமுத மொழிகள்' என்ற பெயரில் மூன்று பகுதிகளாக இரணடாயிரத்திற்கும் மேறபட்ட பககங்களில் அழகுற அமையும்படி வெளியிடப்பட்டுள்ளது. 'சுவாமி விவேகானந்தரின ஞான தீபம்' என்பது, 16 தொகுதிகளாக மிகச் சிறந்த தமிழில் படிப்பவர் மனம் கொள்ளைகொள்ளும் நடையில ஒவ்வொரு பகுதியும் 400 பக்கத்திற்குக் குறையாமல் வெளியிடப்பட்டுளளது.

**சிரீ இராமகிருட்டிண—விவேகானந்தப் பேரவை:** சென்னை சிரீ இராமகிருட்டிண மடம் மற்றொரு

சிறந்த சேவையையும செய்து வருகிறது. தமிழ்நாடு முழுவதும் நூற்றுக்கும் மேறபடட சிரீ இராம கிருட்டிணர் சங்கம, விவேகானந்தா மன்றம, சிரீ சாரதா சங்கம் என்றபெயர்களில தனித்தனிச சஙகங களா அமைக்கப்பட்டு, அவைசிரீ இராமகிருட்டிணா, விவேகானந்தரின உபதேசப்படி ஆனமிகப் பணிகளை யும், மனிதகுலச் சேவைகளையும் செய்து வருகினறன. இவை அனைத்தையும் சென்னை மயிலையிலுள்ள சிரீ இராமகிருட்டிண மடம், தமிழநாடு சிரீ இராம கிருட்டிண-விவேகானநதப் பேரவை என்னும ஓர் அமைப்பிற்குள் இணைதது, அவைகளின செயலகளில் பங்கு கொணடு அவைகளுக்கு வழிகாட்டி வளர்த்து வருகிறது. இநத அமைப்பிலுளள சஙகங்கள், ஐமப திற்கும் மேற்பட்ட பளளிகளைத் தமிழ்நாடு முழுவதும் நடத்தி வருகின்றன. சிரீ இராமகிருட்டிணர், விவே கானந்தர், சாரதா தேவி ஆகியோரின பிறநத நாள விழாக்களைக் கொணடாடுவதிலும், அவர்களின உப தேசஙகளைச் சொறபொழிவுகள, கலை நிகழ்ச்சிகள, நாடகங்கள், வழிபாடுகள ஆகியவை மூலமும தமிழ் நாட்டு மக்களிடையே, குறிப்பாகச சிறுவர்களிடையே யும இளைஞர்களிடையேயும் பரப்புவதிலும் இந்தச் சங்கங்கள் பெரும் பணியாற்றி வருகினறன. ஏ.சு.

**சூரியனார் கோயிலாதீனம்:** இது தமிழகத்திலிருந்து வந்த பதினெட்டுச் சைவ ஆதீனங்களுள சிறந்த ஒனறாகும். சீகண்ட பரமேசுரர், கந்த பர பரமாச்சாரியார், வாமதேவ முனிவர், நீலகண்ட சிவாச்சாரியார், விசுவேசுவர சிவாச்சாரியார், சதாசிவ சிவாச்சாரியார் ஆகியோர் வழிவந்த வர் சிவாக்கிர யோகிகள். சதாசிவ சிவாச்சாரியாரிடம் சிவாக்கிர யோகிகள தீக்கை பெற்றரர். இவரே சூரியனார் கோயிலாதீனத்தை நிறுவியவர் ஆவர். இவர் சமகாலத்தவர் திருவாவடுதுறை ஆதீனத்தை நிறுவிய நமச்சிவாய மூர்த்திகள். இவவாதீனம் சீகணட மூர்த்தி வழிவந்தாலும், கந்தப் பெருமானாா வாயி லாக இப்பரம்பரை தீக்கை முறையைப் பரப்பி வந்த தால இவ்வாதீனத்தைக் கந்த பரம்பரை என்றும் வாமதேவ முனி மரபு என்றும் கூறுவது வழக்கம். சிவாக்கிர யோகிகளைச் சிவக்கொழுந்து சிவாச்சாரி யார் எனவும் கூறும் வழக்கமுணடு. இவ்வா தீனத்திற்கு வழிபடு கடவுள் சீகாளத்தீசுவார் ஆவர். இவ்வாதீனத்தின் பிரமாண நூல்கள் தேவிகாலோத் தரம், சர்வ ஞானோத்தரம் என்பன. சிவாக்கிர யோகிகள் காலம் கி.பி. 16-ஆம் நூற்றாண்டு ஆதலின, இவ்வாதீனமும் அக்காலத்தியதே. சிவாக்கிர யோகி களிடம் தஞ்சையையாண்ட சரபோசி மன்னர் மிகவும் ஈடுபாடு கொண்டிருந்தாரென்றும், அவரே பல நிவந் தங்கள் இவ்வாதீனத்திற்கு வழஙகினாரென்றும், வைணவர்கள் சிவாக்கிர யோகிகளிடம் வாதிட்டுத் தோற்றனரென்றும் இவ்வாதீன வரலாறு கூறுகின் றது. இவ்வாதீனம் சைவ சிததாந்தக் கொள்கையை நிலைநாட்டிப் பரப்பி வநததாயினும் அக்கொளகை யில பிடிப்புடைய பிராமணத் துறவிகளும் இவ்வாதீன பரம்பரையிலிடம் பெற்றிருக்கின்றனர். பதினானகாம பட்டதது எழுந்தருளியிருந்தவர் மீனாட்சி சுநதர ஞான தேசிகர் ஆவர். அவா சிறநத ஞானி; பல நூல்களையும் இயறறியுளளார்; மாணவாகள பலரை யும் உருவாக்கியுளளார்.

சிவாக்கிரமாலை எனனும் பதினொரு பாடல களைக் கொண்ட நூல் நாடோறும சந்நிதியில வழி பாட்டு நூலாகப் பயனபட்டு வருகிறது. இப்போது இவ்வாதீனத்தின் இருப்பததாறாம் பட்டதில எழுந தருளியிருப்பவர் தெய்வ சிகாமணி தேசிக பரமாச் சாரிய சுவாமிகள் ஆவர். இது தனிப்பட்ட ஆதீனமா யினும் இப்போது திருவாவடுதுறை ஆட்சிக்குள இயங்கி வருகிறது. இரா.ச.

**சிவஞான பாலய சுவாமிகள் மடம்:** கைலா யத்தில் சிவபெருமானிடம் தொண்டராக இருந் தவர் சஙகுகன்னர். சிவபெருமான் அவரை நோககி உலகில சென்று 'அனபர்களுக்குச் சிவாகம நெறிகளை உபதேசிப்பாயாக' என்று கட்டளையிட் டார். புதுவைக்கு அணமையிலுள்ள கடலில விபூதி உருத்திராட்சம, சிவலிங்கம், கௌபீனம, கலலாடை சடைமுடி ஆகியவறறுடன் பத்து வயதுடைய பால யதினராய்ச் சஙகுகன்னர் தோன்றி, அண்மையிலுள்ள பொம்மபுரததில தங்கியிருந்து தக்கவர்களுக்குச் சிவாகமஙகளை உபதேசித்ததுடன, வீரசைவ சமய நெறிகளையும் உணர்த்தினார்; அஙகுச் சில காலம் தங்கியிருந்தார். பின்பு பெருமுக்கல் மலையை அடைந்து அங்குள்ள சித்தர்களுககு உபதேசம் புரிநது மயிலத்தைத் தம் இடமாகக் கொண்டு, பால வயதின ராயச் சித்து விளங்க இருந்தபடியால் இவருக்குப் பாலசித்தர் எனற பெயரும், பொம்மபுரத்தில் இவர் தங்கியிருந்த இடததிற்குப் பாலசித்தர் மடம் என்ற பெயரும் உணடாயின.

இவர் பல ஆணடுகள மயிலத்தில் முருகனை நோககித் தவமிருந்தார். அக்காலத்தில் சிதம்பரம் பச்சைகநத தேசிகர் மரபில் வந்த அம்மவை என்பவர் மகபபேறில்லாமலிருநது வந்தார். அவர் பாலசித்தர் கருத்தின்படி அவர் உணணச் சதுரக் களளிப் பாலைக் கறந்து கொடுத்துவநதார். ஒருநாள் அவர் கொடுத்த பாற்பிரசாதத்தால் உதித்த ஞானப் புதல்வர் பால சித்தரின் அருகிருந்து தொண்டு செய்து கொணடு வந்தார்.

பின்னர்ப் பாலசித்தர் சிவிகையில் இவர்ந்து பல இடஙகளுக்கும் சென்று சைவ சமயத்தைப் பரப்பி

மீண்டும் மயிலத்தை அடைந்தவர்,முருகனை நோக்கி, 'எம்மால் ஏற்படுத்தப்பெற்ற இத்திருமடத்தில் அடியேனுடைய சீட பரம்பரையினர் ஆச்சாரியபீடேகம் பெற்று மாணாக்கர்களுக்கு ஞானோபதேசம் புரிந்து கொண்டு விளங்கும் படி தங்களின் திருவருளைப் பதிவித்தல வேணடும்' என வேணடிக் கொணடார். முருகன அவ்வாறே பாலசித்தரின் சீட பரம்பரையினராகியஅம்மவையின் புதல்வருக்கு ஆச்சாரியாபிடேகம் செய்வித்துத் தம்முடைய அமிசத்தில் ஓர் அமிசம் பதியுமாறும் செயதார். இவரே, சிவஞான பாலய சுவாமிகள் ஆவர். அவ்வாறு பினவரும் ஞானாசிரியர்களுக்கும் அமையுமாறு கட்டளையிட்டார். பின்னர்ப் பாலசித்தர் முருகன் திருக்கோயிலின் தென்பால ஆனி மாதம் திருவாதிரை நாளில் சீவ சமாதி கூடி அருள் உருவானார்.

சிவஞான பாலய சுவாமிகள் அதுகண்டு வியப்புற்று முருகப் பெருமானையும் தம் ஞானாசிரியரையும் ஒன்றாகக் கண்டு வணங்கினார். பின்னர் மயிலம் திருக்கோயிலிலும் பொம்மபுரத்திலும் நடைபெற வேண்டிய அறங்களை இவர் செவ்வனே செய்துவந்தார். சிவஞான பாலய தேசிகர் செயற்கரிய செயல்களைத் தம் தவ வன்மையால் செய்து வந்தார். மயிலந் திருக்கோயிலுக்கு மயூராசல புராணமும், அருணகிரி நாதர் பாடிய திருப்புகழும், வேலய்ய சுவாமிகள் பாடிய மயிலத்து உலாவும், இலக்கண விளக்கம் வைத்தியநாத தேசிகர் பாடிய மயிலம் முருகன் பிள்ளைத் தமிழும், தண்டபாணி சுவாமிகள் பாடிய கலம்பகமும், பண்ருட்டி மணி அப்பாவு அய்யர் பாடிய நூல்களும் உண்டு. பிற்காலத்தில் தோன்றிய சதாசிவ சிவஞானிமீது பாசவதைப் பரணி என்ற நூலை வைத்தியநாததேசிகர் பாடியிருக்கிறார். இவையெல்லாம் இத்திருமடம் செய்த தமிழ் தொண்டாகும். இத்திருமடம் தமிழ்ப் புலவர்களை ஆதரித்து வந்தது என்பது இதனால் விளங்கும்.

இத்திருமடத்தில் அவ்வப்போது குருமார்களாக வந்தவர்கள் பல அரிய செயல்களைச் செய்துளளார்கள். இம்மடத்தின் 15-ஆம் பட்டம் சுவாமிகள் மயிலத்தில இராசகோபுரம் கட்டியிருக்கிறார்கள். 16-ஆம் பட்டம் சுவாமிகள் மயிலம் கோவிலில் கல் திருப்பணி மூலம் , மண்டபங்களைக் கட்டியதோடு தங்கத்தினாலும வெள்ளியினாலும் மயில், குதிரை ஆகிய வாகனங்களைச் செய்துமுள்ளார்கள். பொம்மபுர மடத்தைச் சீர்திருத்தி மேல்மாடியும் அமைத்திருக்கிறார்கள். இவர்கள் பல அரிய காரியங்களைச் செய்திருக்கிறார்கள். 17-ஆம் பட்டம் சுவாமிகள் மயிலத்தில பூந்தோட்டத்திறகுச் சுற்று மதில் அமைத்திருக்கிறார்கள. 18-ஆம் பட்டம் சுவாமிகள் மயிலததில் முருகப்பெருமானுக்குத் திருத்தேரும், பல அரிய விலையுயர்ந்த திரு ஆபரணங்களும் செய்திருக்கிறார்கள்; பல விளை நிலஙகளையும் வாங்கினார்கள்; சிவப்பிரகாச சுவாமிகள் செந்தமிழ்நூல்களை அச்சிட்டார்கள்; தமிழ்க்கல்லூரியையும் உயர்நிலைப் பள்ளியையும் அமைத்தார்கள்; தேவாரப் பாடசாலை அமைத்தார்கள். இவர் காலத்தில் திருமடமும் திருக்கோயிலும் சிறப்புற்று விளங்கின. இப்பொழுது அருளாட்சி புரிநது வரும் 19-ஆம் பட்டம் சுவாமிகள முன்னவர் செயது வந்த அறங்களைத் தவறாமல செய்து வருவதோடு பல நற்செயல்களையும் ஆற்றி வருகிறார்கள. பூத வாகனம், நாகவாகனம், யானை வாகனம் ஆகியவைகளை வெள்ளியில் அமைத்துளளார்கள; இரு பெரிய மண்டபஙகளைக் கட்டியிருக்கிறார்கள. சமய வகுப்பு திருமடத்தில் நடைபெற்று வருகின்றது. காண்க: சிவஞான பாலய சுவாமிகள். வீ.கு.

**சிருங்கேரி மடம்:** இது அத்துவைதக் கோட்பாட்டினை உருவாக்கிய ஆதி சங்கரரால் (கி.பி. 788-820) துஙகா ஆற்றின் கரையில உருவாக்கப் பட்ட மடம். சிருங்கேரி என்னும் ஊரில் அமைந்துள்ளதால் சிருங்கேரி மடம் எனப்பட்டது. சாரதா எனனும் சரசுவதியின் ஆலயமெனக் கருதப்படும் இம்மடம் சாரதா பீடம் எனப்படுகிறது. தமிழகத்தில் காஞ்சியிலும், குசராத்தில் துவாரகையிலும், ஒரிசாவில் பூரி என்னுமிடத்திலும், இமயச் சாரலில பத்ரிநாத்திலும் இவரால் உருவாக்கப்பட்ட பிற மடங்களைப்போல் இம்மடமும் புகழுவாய்ந்த தொன்றாகும்.

இந்து சமயத்துடன், வைதிக நெறிகளையும் இந்துக்களிடையே மீண்டும் வலுப்பெறச் செய்யும் நோக்குடன் இம்மடம் தோற்றுவிக்கப்பட்டது.

இம்மடத்தினை நிருவகித்தற் பொருட்டுச் சுரேசுவராசிரியர் என்ற தம்முடைய மாணவரை முதல பீடாதிபதியாக ஆதிசங்கரர் நியமனம் செய்தார். அவருக்குப்பின்னர் வழி வழியாகப் பீடாதிபதியொருவராலேயே இம்மடம் நிருவகிக்கப்படுகின்றது. இப் பீடாதிபதிகள் கி.பி. 14-ஆம் நூற்றாண்டு முதல் அரசியலோடு தம்மைப் பிணைத்துக் கொண்டனர். குறிப்பாக வித்தியாசரன் சுவாமிகள், சங்கமசகோதரர்களுக்கு உதவி செய்து துங்கபத்திரை ஆற்றின் கரையில் இந்து தருமத்தை நிலைநாட்டும் பொருட்டு விசயநகரப் பேரரசு உருவாக வழிகோலினார். சமயத்தை அரசியலுடன் பின்னிப் பிணைத்த அப்பீடாதிபதிகளுக்குக் 'கருநாடக சிம்மாசன பிரதிட்டாபனாசாரியார்' என்ற பட்டம் உணடு.

அரசியலில் அவர்கள் கொண்ட தொடர்பு காரணமாக இம்மடத்தின் நிருவாக அமைப்பு

சானறு கூறுபவாகள் வயது வந்தவர்களாயும பூரண மனநிலை உடையராயும இருத்தல வேணடும். அவ வாறு சானறு கூறுபவர்கள் இலலாத நேரஙகளில செய்யப்படும திருமணங்கள் இலலாநிலைத்திருமணங கள அல்ல. அவை முறைகேடான (ırregular) திரு மணங்களாகும்.

மேலும், இசுலாமியர் சட்டத்தில தடுக்கப்பட்ட உறவுமுறையால் பிணைக்கபபட்டுளளோர் திருமணம் செய்து கொளளுதல் கூடாது. இரத்த உறவால் கீழ்க்காணும் உறவினர்கள திருமணம் செய்து கொள்வது தடுக்கபபட்டுளளது. இவவகைத்திருமணங கள இல்லா நிலையன ஆகும் அ) தாய் மறறும மகன், ஆ)பாட்டி மற்றும் பேரன, இ)சகோதரர் மற்றும் சகோதரி, ஈ) தநதையுடன பிறந்த ஆண அல்லது தாயுடன் பிறந்த ஆண மறறும் உடன் பிறந தாரின் மகள், உ) உடனபிறநதார் மகளமற்றும் பெற்றோருடன பிறந்தவள.

இன உறவால் அலலது திருமணம் மூலம் உளள உறவால் கீழ்க்காணுபவாகளிடையே திருமணம செய வது தடை செயயப்பட்டுளளது. அ) மனைவியின அம்மா அல்லது பாட்டி, ஆ) மனைவியின மகள அல்லது பேத்தி, இ) தந்தையின அலலது தநதைவழி மூதாதையோரின மனைவி, ஈ) மகனின மனைவி அலலது மகனின மகனின மனைவி அலலது மகளின் மகனின மனைவி.

இவையன்றி இசுலாமியச சட்டத்தில் முதா திரு மணம் என்ற தற்காலிகத் திருமணம் (Muta Marr age) என்ற வகைத் திருமணமும உணடு. இத் திரு மணத்தைப் பொறுத்த வரையில்மணக் கொடையின அளவு வரையறுக்கப்பட்டிருத்தல் வேணடும். அவ் வாறு வரையறுக்கப்படாவிட்டால் இத்திருமணம் இல்லா நிலையது ஆகிவிடும். திருமண நிறைவு வினை முழுமையாகாவிடில் மணககொடையின அரைப் பகுதியை அளித்தாலே போதும. தற்காலிகத் திரு மணத்தில தாமபத்திய உறவின காலம் வரையறுக் கப்படாமலஇருந்தால், தரபபினா இருவரும் இசுலாமி யராக இருப்பின, அத்திருமணம சாதாரண நிலை யான திருமணமாகக் கருதப்படும. குறித்த காலம் முடிவடைந்ததும் தற்காலிகத் திருமணமும் முடிவுக்கு வநதுவிடும்.

இசுலாமியத் திருமணங்களைச் செல்லுநிலைத் திருமணங்கள், இல்லாநிலைத் திருமணங்கள், முறை கேடான திருமணங்கள எனறு முப்பிரிவினில் அடக் கலாம்.

செல்லுநிலைத் திருமணத்தால தரபபினரிடையே உரிமைகளும கடமைகளும் ஏற்படுகினறன. கண வரும் மனைவியும சோந்து வாழும் இலலறத்தில மனைவியைப் பராமரித்தல் கணவரின கடமையா கிறது. மனைவி தனனுடன சேர்ந்து வாழும உரிமையைக கணவன பெறுகிறான. ஒருவா இறநது விடுஙகால மறறவருககு இசுலாமிய இறங குரிமைச சட்டத்தின்படி சொத்துகள சேர்நது விடும உரிமை கிடைககிறது.

இல்லா நிலைத் திருமணம் (Void marrıage) ஒரு திருமணமனறு. அது ஒரு காமககிழத்தியா கூட்டுறவு (Concubınage) என்றே கூறபபடுகிறது. இமமுறையில பிறக்கும் குழநதைகள முறையிலா மணபபிறபபின கீழ்ப் பிறந்த குழநதைகள என்றே கருதப்படுகினற னர். திருமணத் தரப்பினரிடம ஒப்பநதம் செயயும தகுதி இலலா நிலையில் அல்லது அவாகளிடத்தில ஒப்பந்தம் ஏறபடா நிலையில அலலது அவாகள தடுக கப்பட்ட உறவு முறைப் பிணைபபால் பிணைககப பட்டிருக்கும் நிலையில் நடைபெறும் திருமணஙகள இல்லா நிலையன ஆகும்.

சில தற்காலிகத தகுதியின்மைகளால ஒரு திரு மணம் முறைகேடான திருமணம என்று சொல லப்படலாம், ஓர் இசுலாமியர் தமக்கு ஏற்கெனவே நான்கு மனைவியர் இருக்குஙகால் ஐந்தாவ தாக மற்றொரு பெண்ணைத் திருமணம செய்யும போது, ஐந்தாம் பெணணுடன் செய்த திருமணம் முறைகேடான திருமணம் எனப்படுகிறது. இத்திரு மணம் நடைபெறுவதால உடலுறவு ஏற்படும வரை விளைவுகள எதுவும் ஏறபடுவதிலலை. உடலுறவு ஏற்பட்டவுடன் சட்டம் இத்திருமணம் குறிததுச சாதகமான நிலையைப் பினபற்றுகிறது.

கிறித்தவர்களைப் பொறுத்த வரையில் கிறித்த வர் திருமணச் சட்டம் 1872 நடைமுறையில உளளது. இச்சட்டத்தின கீழ்த திருமணத்தைப் பங்குத் தந்தையோசமய வலலுநரோ திருமணப்பதிவாளரோ திருமணம் செய்விக்க அஙகீகாரம் பெற்றவரோ நடத்தி வைக்கலாம். இச்சட்டம் திருமணத் தரப்பின ரில் ஒருவரோ அல்லது இருவருமோ கிறித்தவர் களாக இருக்கும் போது பொருநதும. சமய வல்லுநா திருமணத்தை நடத்துங்கால பல நடைமுறைகளைப் பின்பற்ற வேண்டும். திருமணம் நடைபெறுவதற்கு முன்னர் அக்கருத்தோடு கூடிய அறிவிககை தந்திருத் தல் வேணடும். அதனை விளம்பரப்படுத்தியிருத் தலும், தரப்பினருள் ஒருவர் உறுதிமொழி அளித் திருத்தலும் வேண்டும். அதன் பின்னரே அவர், தாம விரும்பும்முறையில் சான்றளிப்பவர் இருவர் முன்னர்த் திருமணம் செய்வித்தல் வேண்டும். இவர் செயயும திருமணங்களைக் கட்டாயம் பதிவு செய்தல் வேண டும்.

திருமணப் பதிவாளர் முனனா நடைபெறும் திருமண முறையிலும் மேற்கண்ட நடைமுறைகள் பின்பற்றப்பட வேண்டும். ஆனால், உறுதிமொழி அளித்த பின் பதிவாளர் அதறகாகச் சானறிதழை வழங்குதல வேணடும். திருமணத் தரப்பினர் எம முறையையும் சடங்கையும் பினபற்றலாம். திருமணம் பதிவாளா, சானறளிப்பவர் இருவர் ஆகியோர் முன னர் நடை பெறுதல் வேண்டும். திருமணத தரப்பி னர்உறுதி மொழிகள எடுததுக கொளளுதல் 'நான் திரு/செல்வி . திரு/செல்வி . என் பவரைத திருமணம் செய்து கொள்ளச் சட்டப் படியான தடைகளெவையும் இலலை எனபதை நான அறிவேன நானஇங்கிருககும சானறளிப்பவர் முன்னால் . எனபவரைச் சட்டபபடியான கணவ ராக/ மனைவியாக ஏற்றுக கொளகிறேன்' எனற படிவத்தில உறுதி மொழி எடுத்துக கொளளுதல வேண்டும். இமமுறையில திருமணம் செய்தால கட் டாயம் பதிவு செய்யப்படல் வேண்டும்.

இந்தியக் கிறித்தவர்கள சாதாரண நடைமுறை களைப் பின்பற்றாமல் திருமணத்தை நடததலாம். அதாவது அறிவிககை, உறுதி மொழி போனறவை தேவை இலலை. இத்திருமணததைத் திருமணம செய்ய அஙகீகரிக்கப்பட்டவர் அலலது உரிமம் பெற்ற வர் நடத்தலாம். மதிப்பு மிகுநத சான்றளிககும் இருவர் முனனர் இத்திருமணத்தை நடத்துதலவேண டும. அப்பொழுது மணமக்கள்உறுதிமொழி எடுத்துக் கொள்ள வேண்டும். நான இஙகுக் கூடியிருப்போா முனனிலையில் தேவனின் முன்னால் இயேசு கிறித்து வின பேரால் .... இவரைச் சட்டப்படியான கணவ ராக/மனைவியாக ஏற்றுக கொளகிறேன. இரு பத்தைந்து காசுகளைப் பெற்றுக் கொணடு உரிமம பெற்றவர் திருமணச் சான்றிதழை வழஙகுதல வேண டும். இத்திருமணத்தைப் பதிவு செயது கொள்ளுதல இன்றியமையாதது.

இவை தவிரத் தனிமுறை திருமணச் சட்டம் 1954-ஆம் ஆணடு நடைமுறையில் உளளது. பல்வேறு சமயத்தைச் சார்ந்தவர்களும் இச்சட்டத்தின் கீழ்த் திருமணம் செய்துகொள்ளலாம. இம்முறையில் திரு மணம் செய்து கொள்ளப் பல்வேறான நடைமுறை களைப் பின்பற்ற வேண்டும். குறிப்பிட்ட படிவத்தில் திருமணத் தரப்பினர் திருமணப் பதிவாளருக்கு அறி விக்கை தருதல் வேண்டும். தரப்பினர் ஒருவர் பதி வாளரின் அதிகார எலலைக்குள் குறைந்த அளவு 30 நாள்கள் குடியிருநதிருக்க வேண்டும். அவரால் தான் அறிவிக்கை தரப்படல் வேண்டும். அறிவிக்கைப் புத்தகத்தில் அந்த அறிவிக்கையைப் பதிவு செய்தல் வேண்டும். அப்புத்தகத்தை யாரும் தகுந்த நேரத் தில் ஆய்வு செய்யலாம். அந்த அறிவிக்கையின் படி (True copy) பதிவாளர் அலுவலகததில பலரும் பாாககக் கூடிய பகுதியில் ஒட்டப்படும. திருமணத தரப்பினர், பதிவாளர் அலுவலக எலலைககுள நிலை யாக வாழ்ககை நடத்தாதபோது அவா அறிவிககை யின நகலைத் திருமணத் தரப்பினர் நிலையாக வாழு மிடத்தின பதிவாளருககு அனுப்புவார். அந்தப பதி வாளர் அநத அறிவிககையைத் தம் அலுவலகததின் அறிவிப்புப் பலகையில் போட்டு விளம்பரப்படுதது வார். மறுபபுக் கருத்துக் கூற 30 நாளகள காலக் கெடு உணடு. மறுப்புக கிடைக்கப் பெற் றால அதிலிருநது முப்பது நாளகளுக்குள பதிவாளர் விசாரணை நடததுதல வேணடும. ஆட்சேபணை சரி தான எனப பதிவாளர் முடிவு செயதால் தரபபினர் மாவட்ட நீதிபதியிடம மேலமுறையீடு செயயலாம். மாவட்ட நீதிபதி செயயும முடிவே இறுதி முடிவா கும்.

மறுப்பு இலலாத போது அறிவிக்கை கொடுத்ததி லிருந்து முப்பது நாளகளுக்குப்பினனாத திருமணத்தை நடத்தி வைக்கலாம. கணவன 21 வயதையும மனைவி 18 வயதையும் அடைநது விட்டதாகவும் தடை செய்யபபட்ட முறையால பிணைககபபட வில்லை எனவும் உறுதிமொழி கூறபபட்டுச சானறு கூறுபவர் மூவர் முனனர்த் திருமணம செய்து கொள ளலாம. பினனர்ச் சானறு கூறுபவா மூவரும் மணமக களும் கையொப்பமிடல வேணடும. அவர்கள உறுதி மொழியும் எடுததுக் கொள்ளுதல வேணடும. மீ.அ

**துணைநூல்கள்**

**Anderson, Walfred A. and Parker, Frederick, B**, Society. Its Organization and Operation, Affiliated East-West Press Pvt. Ltd, New Delhi, 1966.

**Hoebel. E. Adamson.**, Man in the Primitive World, McGraw-Hill Book Company, New York, 1949.

**Majumdar, D.N. and Madan, T.N**, An Introduction to Social Anthropology, Asia Publishing House, Bombay, 1956.

**Murdock, George Peter.**, Social Structure, The Free Press, New York, 1965

***திருமண முறிவு:*** ஓர் ஆணும், பெணணும் இறுதிவரை நீடித்து நிற்கக் கூடிய உறுதியான இணைப்பை வைத்துக்கொள்வது திருமணம் எனப் படும். இந்த இணைப்பு குழந்தைகள பிறந்தவுடனோ பெற்றோர் என்ற நிலை ஏற்பட்டவுடனோ முடிநது விடுவதில்லை. வாழக்கையின் இறுதிவரை நீடித்து

நிற்கக்கூடியது. இத்திருமண வாழ்க்கையில் ஏதேனும் சூழ்நிலை காரணமாகக் கணவன்மனைவியின் உறவில் விரிசல்கள் ஏற்படலாம். சிலநேரங்களில் திருமணத்தின் மூலம் ஏற்பட்ட இணைப்பு நிரந்தரமாகக் கூடச் சிதைவதற்கு வாய்ப்புண்டு.

இவ்வாறு திருமணத்தின் மூலம் ஏற்பட்ட இணைப்பை முழுவதுமாகச் சட்ட அடிப்படையில் ஓர் ஆணோ பெண்ணோ முறித்துக்கொள்ளுதல் திருமண முறிவு (Divorce) எனப்படும். இது மணமுறிவுத் தொடர்பான நீதிமன்ற ஆணையாகும். இது ஒரு கணவனும் மனைவியும் தங்களுக்குள் கொண்டிருந்த நம்பிக்கைகளை முறித்துக்கொள்ளுதலாகும். இதை இவ்விருவரின் உறவுகள் தோல்வியடைந்ததற்காக அரசு வழங்கும் சான்றிதழ் எனக்கூடச் சொல்லலாம். மேலும்,இதன்மூலம் இவர்கள் இருவரும் மறுபடியும் வேறு திருமணம் செய்துகொள்வதற்கு அரசும், சட்டமும் இடமளிக்கின்றன.

திருமண முறிவு என்பது பிரிந்து வாழுதல், கைவிடுதல், விலக்கு ஆகியவற்றிலிருந்து வேறுபடுகிறது.

**பிரிந்து வாழுதல்:** இது திருமண முறிவுக்கு முந்தைய நிலையாக இருக்கலாம். இது கணவனுக்கும், மனைவிக்கும் இடையே ஏற்படுகின்ற கோபங்கள் குறைவதற்கு அப்போதைக்கு ஏற்ற ஒரு நிலையாகும்; அல்லது திருமண முறிவு ஏற்படாமல் சட்டப்படி கணவனும் மனைவியும் பிரிந்து வாழுகின்ற நிலையாகும். கணவன் அல்லது மனைவியின் உடல் நிலை, பாதுகாப்பு, இன்பம் போன்றவை பாதிக்கப்படுவதால் பொதுவாகத்திருமண உறவில் வெறுப்பு ஏற்படுகிறது. அதனால் இருவரும் பிரிந்து வாழுகின்ற சூழ்நிலை ஏற்படுகிறது. பிரிந்து வாழுவதால் குழந்தைகளைப் பொறுத்தவரை, பெற்றோர்களிடமிருந்து பெறும் அன்பை இழக்க நேரிடும். திருமண முறிவு பெற்றவர்களோ, கணவன் அல்லது மனைவியை இழந்தவர்களோ மறுமணம் செய்துகொள்ள இயலும். ஆனால் பிரிந்து வாழுபவர்களால் மறுமணம் செய்துகொள்ள இயலாது. இந்து திருமணச்சட்டம், 1955-இன்கீழ், சட்டப்படி பிரிந்து வாழுவதற்கு வசதி அளிக்கப்படுகிறது. பிறர் மனைவியைப் புணர்தல், கொடுமை செய்தல், கைவிடுதல் மத மாற்றம், தீராத நோய், துறவு மேற்கொண்டிருத்தல் ஆகியவற்றிற்கான பிரிவு 13(1) (2)-இன் சட்டப்படி பிரிந்து வாழுவதற்கு வழிகள உள்ளன. அமெரிக்கா போன்ற மேலைநாடுகளில் பிரிந்து வாழுதல் எண்ணிக்கையில் மிகுதியாக நடைபெறுகிறது.

**கைவிடுதல்:** இதை ஏழைகளின் திருமண முறிவு எனச் சொல்லலாம். கணவனோ மனைவியோ ஒருவர் கூட்டுறவின்றி ஒருவர் எந்தவித ஒப்புதலோ காரணமோ இன்றிப் பிரிதல் கைவிடுதல் என்னும் குற்றமாகும். இது கோபம் அல்லது அதையொத்த காரணங்களினால் கணவனோ மனைவியோ அப்போதைக்கு ஒருவரைவிட்டு ஒருவர் பிரிந்திருப்பது ஆகும். கணவன் அல்லது மனைவி ஒருவர் கூட்டுறவின்றி ஒருவர் பிரிவதென்பது தொலைதூரத்தில் பிரிந்திருக்க வேண்டுமென்ற அவசியமில்லை; ஒரே வீட்டில் தனித்தனியாகப் பிரிந்திருந்தால்கூட அதுவும் கைவிடுதலேயாகும். குறைந்த பொருளாதார வசதியுடையவர்களே மிகுந்த அளவு கைவிட்டுவிடுவதாகப் பல ஆய்வுகள் கூறுகின்றன இந்து திருமணச் சட்டம் பிரிவு 13 (1) (ஆ) மற்றும் பிரிவு 10 (1)-இன்படி கைவிடப்பட்டவர்கள் திருமண முறிவு கோருவதற்கு உரிமையுண்டு.

**விலக்கு:** பலாத்காரம் செய்தல், கொடுமைப் படுத்துதல், வலுக்கட்டாயமாக உடலுறவு கொள்ளுதல், இருதார மணவாழ்க்கை வாழுதல் போன்ற குற்றங்களை உடைய திருமணங்களுக்கு விலக்கு அளிப்பதற்கு நீதிமன்றத்திற்கு அதிகாரம் உண்டு. திருமணத்தைச் செல்லாததாக்குகின்ற ஒரு சட்டச் செயலே விலக்கு எனப்படும். பொதுவாக 1) ஏமாற்றித் திருமணம் செய்துகொள்ளுதல், 2) இருதார மணம், 3) சட்ட வரையறைக்குக் குறைந்த வயதில் திருமணம் செய்துகொளளுதல் ஆகிய காரணங்களுக்காகத் திருமண விலக்கு அளிக்கப்படுகிறது. திருமணத்தைச் செல்லாததாக்குவதற்கு இந்து திருமணச் சட்டத்தில் வழியுண்டு. திருமணச் சட்டம் பிரிவு 12-இன்படி ஒரு கணவனோ மனைவியோ குழநதை பெறும் தகுதியின்மை, மனநலமினமை, பைத்தியம் அல்லது காக்காய் வலிப்பு நோயால் பாதிக்கப்பட்டிருத்தல், வலுக்கட்டாயமாகவோ ஏமாற்றியோ திருமணம் செய்துகொள்ளல், திருமணத்தின்போது பிறரால் தாய்மை அடைந்திருத்தல முதலிய காரணங்களுக்காகத் திருமண விலக்கு கோரி மனுச் செய்யலாம்.

**இந்தியாவில் திருமண முறிவு:** வேத காலத்தில் திருமண முறிவு இருந்ததற்கான குறிப்புகளே இல்லை. ஆனால் நாரதர் (Narada), கவுடில்யர் (Kautilya), மனு (Manu)மற்றும் பிறர் 1) பாலுணர்வற்ற நிலை, 2) வெளியே சொல்லவியலாத உடல் நோய்கள் அல்லது குறைகள், 3) தீய குணம, 4), சாதியிலிருந்து விலகுதல், 5) ஒருவருக் கொருவர் பகை ஆகிய காரணங்களுக்காகக் கணவன்-மனைவியர் பிரிந்து வாழலாம் எனக் கூறியுள்ளனர்.எனினும், இந்துக்கள் திருமண முறிவைச் சமூகக் குற்றமாகக் கருதி ஏற்றுக்கொள்வதில்லை. இந்துப் பெண்கள்

குடும்பம் என்ற பெயரிலும், குழநதைகளின் நலன பொருட்டும் அனைத்து வகைகளிலும் அடக்கபபடு கின்றனர். திருமணத்தின் புனிதத் தன்மையின்மீது சட்டம் தலையிட்டால் திருமணம் என்ற நிறுவனமே சிதைந்துவிடும் என்ற விவாதம் பொதுவாக உண்டு. இப் பின்னணியில் இந்து திருமணச் சட்டம, 1955, பலவகையான திருத்தப் பேராணைகளுடன்கொண்டு வரப்பட்டது.

இந்து திருமணச் சட்டம் 1955-இனபடி இநதச் சட்டம நடைமுறைக்கு வருவதற்கு முனனரோ, பின்னரோ திருமணம் நடநதிருநதால் கணவனோ மனைவியோ சிற்சில காரணங்களை அடிபபடையாகக் கொணடு நீதிமன்றததிடம் மண முறிவுககு மனுச் செயய உரிமையுணடு

**இந்து திருமணச் சட்டத்தில் திருமண முறிவு:** இந்து திருமணச் சட்டம் 1955, பிரிவு 13 (1)-இன படி இச்சட்டம் நடைமுறைக்கு வருவதற்கு முனனர் அல்லது பின்னர் நடைபெற்ற திருமணமொனறைக் கணவன், மனைவி ஆகிய இருவரில ஒருவர் கீழக் காணும் காரணங்களில ஒன்றைக்கொணடு கலைத்திட மனுச் செயயலாம். அவையாவன:

1) திருமணத்திற்குப் பிறகு கணவன மனைவியை அல்லது மனைவி கணவனைவிட்டு அயலார் ஒருவருடன் தம்மிசசையாகக் காமுறு புணர்ச்சியில் ஈடுபட்டால்; அல்லது 2) திருமணத்திற்குப் பிறகு மனுதாரரை எதிர் மனுதாரர் கொடுமையாக நடத்தினால்; அலலது 3) மனு தாக்கல செய்யப்படுவதற்கு முன தொடர்ந்தாற்போல் இரண்டாணடுகளுக்குக குறைவில்லாமல் மனுதாரரை எதிர்மனுதாரர் கைவிட்டிருநதால்; அலலது 4) எதிர்மனுதாரர் இந்து சமயத்தை விடுத்து வேற்றுச் சமயத்தைத தழுவினால; அல்லது 5) எதிர் மனுதாரர் குணப்படுதத முடியாததும் தொடர்நது அல்லது விட்டுவிட்டுத துன்பத்திற்கு உள்ளாக்குவதுமான பைத்திய நிலைக்கு உட்பட்டிருந்தால (இதுபோனற சூழநிலைகளில மனுதாரர் எதிர் மனுதாரருடன் சோந்து வாழுதலை எவரும் எதிாபார்க்க முடியாது), 6) எதிர் மனுதாரர் கொடியதும் குணப்படுத்தவியலாததுமான தொழு நோயால பீடிக்கப்பட்டிருந்தால, அலலது 7)எதிர் மனுதாரர் எளிதில் தொற்றிப் பரவக்கூடிய பால்வினை நோய் கொண்டிருநதால்; அல்லது 8) எதிர்மனுதாரர் துறவறம மேற்கொண்டிருநதால்; அல்லது 9) எதிா மனுதாரரைப் பற்றி அறிந்திருக்க வேண்டியவா எவரும் கடந்த ஏழு ஆணடுகளாக அவர் உயிரோடு இருப்பதாகக் கேள்விப்படாதிருந்தால.

இக்கூறுகள இச்சட்டம் நடைமுறைக்கு வருவதற்கு முன்னர் நடந்த திருமணத்திறகும், பினனர் நடந்த திருமணததிற்கும் பொருந்தும்.

மேலும், இந்து திருமணச் சட்டம் ஒத்திசைவின் அடிப்படையில திருமண முறிவு நடைபெற வழிவகுக்கிறது 1976-ஆம் ஆணடு நடந்த ஒரு திருத்தத்தின படி, சட்டப்பிரிவு 13 ஆ. (1)-இனபடி திருமணமொன்றைத் திருமணத் தரப்பினர் இருவரும் இசைந்து கலைக்ககோரி மாவட்ட நீதிமன்றததில் மனுச் செய்யலாம. மனுச் செய்வதற்குரிய காரணஙகளாக அவர்கள் இருவரும் தனித்தனியே பிரிநதுறைவதையும், இனி இணைநது வாழ வழியில்லையெனபதையும் இருவரும் மணமொத்துத் திருமணக் கலைப்பிற்கு உடனபடுகிறோம் என்பதையும் காட்டலாம். திருமணம், இசசட்டம் நடைமுறைக்கு வருவதற்கு முன நிகழ்ந்திருப்பினும் அல்லது பினனர் நிகழந்திருப்பினும் அவர்கள மனுச் செயயஉரிமையுணடு.

ஒரு கணவன மனைவியர் பிரிவு 14(1)-இனபடி திருமணம் முடிநத ஓராணடிற்குள்ளாகத திருமண முறிவு பெற மனுச் செயய இயலாது. ஆனால், உட்பிரிவு (1)-இன்கீழ கணவன் மனைவி திருமணம முடிநத ஓராணடுககுள திருமண முறிவு கோரி மனுச் செயய முடியாதெனினும் திருமணம முடிந்த ஓராணடிற்குள கணவனோ மனைவியோ 1)அயல் புணர்ச்சி 2) கைவிடுதல், 3) கொடுமையிழைப்புபபோனற குறறங்களை இழைத்திருக்கும்போது அதனால பாதிக்கப்பட்ட தரப்பினர் திருமணம் முடிநத ஓராணடிற குள்ளும் திருமண முறிவு கோரி மனுச் செய்யலாம்.

திருமண முறிவு பற்றியதீாப்பாணை பிறந்த பினனா மேலவழககுச் செய்யாமலோ, மேலவழககு தளளப்பட்டோ இருநதால தமபதிகள் இருவரும் ஆணையிடப்பட்ட தேதியிலிருநது ஓராணடு கழிந்தபினனர் மீண்டும் திருமணம் செய்துகொள்ளலாம. திருமண முறிவு வழக்கை இரகசியமாக விசாரணை செய்ய வேண்டுமெனக் கணவனோ மனைவியோ கோரினாலும் நீதிபதி அப்படிச செய்வதே நல்லது எனக் கருதினாலும் விசாரணை இரகசியமாக நடைபெறும். விசாரணை விவரங்களை நீதிபதி அனுமதியினறி எவரும் அச்சிடவும் வெளியிடவும் கூடாது.

திருமண முறிவு வழக்குச சமயத்தில் கணவனோ மனைவியோ சீவனாம்சம கோரி மனுச் செய்யலாம. திருமண முறிவு பற்றிய வழக்கில் குறிப்பிட்ட வயது அடையாத குழந்தைகளின் பாதுகாப்பு, கலவி, கவனிபபுத்தொடாபாக நீதிபதி நியாயமெனக் கருதும் ஆணைகளை அப்போதைக்கப்போது பிறப்பிக்கலாம்.

இந்து மதம் மட்டுமன்றிக் கிறித்தவம், இசுலாம் முதலிய மதங்களும் திருமண முறிவை ஏற்றுக் கொண்டு அதற்கு வழிவகுத்துள்ளன.

**கிறித்தவரிடையே திருமண முறிவு:** இந்திய திருமண முறிவுச் சட்டம், 1869, கிறித்தவர்களுடைய திருமண முறிவு பற்றிய விதிகளைக் கூறுகிறது. திருமணத்தின் பின்னர் மனைவி அயல் புணர்ச்சி செய்ததாகத் திருமண முறிவு கோரி கணவன் மாவட்ட நீதிமன்றத்திலோ உயர்நீதி மன்றத்திலோ மனுச் செய்யலாம். ஆனால் மனைவி தன் கணவன் அயல்புணர்ச்சி செய்தான் என்னும் காரணத்தை மட்டும் கூறித் திருமண முறிவு மனுச்செய்ய இயலாது. அவள் மனுச் செய்வதற்குச் சட்டம் 10-ஆம் பிரிவின் படி 1) கணவன் கிறித்தவ மதத்தை விட்டுவிட்டு வேறொரு பெண்ணைத் திருமணம் செய்துகொண்டான்; 2) திருமணம் செய்யத் தடையான உறவு முறையாளுடன் அயல் புணர்ச்சி செய்துள்ளான் என்பன போன்ற சில காரணங்களைத் தரவேண்டும்.

திருமண முறிவு மனுவை மாவட்ட நீதிமன்றம் தள்ளிவிட்டால் அந்த மனுவை உயர்நீதிமன்றத்தில் கொடுக்கலாம். நீதிமன்றம் முதலாவதாகத் தற்காலிக ஆணையே (Decreenisi) அளிக்கும். ஆறு மாதங்களுக்குக் குறையாத காலத்தை நீதிமன்றம் குறிப்பிடும். குறிப்பிட்ட காலத்துக்குமுன்னர் எவரும் தக்க காரணம் காட்டி ஆணையை நீக்குமாறு கேட்கலாம். திருமண முறிவுக்கு மனுச் செய்தவர் தற்காலிக ஆணை பெற்றபின்னர் நியாயமான காலத்திற்குள் முடிவான ஆணையை அளிக்கக் கேட்காதிருந்தால் வழக்கு தள்ளுபடி செய்யப்படும்.

மாவட்ட நீதிபதி இடும் ஆணை உயர்நீதிமன்றத்தால் உறுதி செய்யப்பட வேண்டும்.

கணவனோ, மனைவியோ தங்கள் திருமண முறிவைச் செல்லாதது என்று கூறுமாறு மாவட்ட நீதிமன்றத்தில் அல்லது உயர்நீதி மனறத்தில் மனுச் செய்யலாம். அதற்காகப் பின்வரும் காரணங்களைக் கூறலாம். அவை: 1) எதிர்தரப்பினர் திருமணம் செய்யும்போது ஆண்மையற்றவர்; 2) இருதரப்பினரும் தடுக்கப்பட்ட உறவுமுறையினர்; 3) திருமணம் செய்யும்போது இரு தரப்பினரில் எவரேனும் பைத்தியம் அல்லது முட்டாள்; 4) திருமணத்தின்போது மணமகனுக்கோ, மணமகளுக்கோ சட்டப்படி வேறு மணமாகியிருந்து, அந்த மனைவியோ கணவனோ உயிருடனிருந்தால்; 5) திருமணம் செய்யப் பலவந்தமாகவோ, ஏமாற்றியோ ஒப்புதல் பெறப்பட்டது என்பனவாகும்.

மணமக்களில் ஒருவர், தம்மை மற்றவர் எவ்வித நியாயமான காரணமுமின்றி இரண்டு ஆண்டுகள் அல்லது அதற்கு மிகுதியாகக் கைவிட்டுவிட்டார் என்றோ அயல்புணர்ச்சி செய்தாரென்றோ, கொடுமைப்படுத்துகிறார் என்றோ கூறிச் சட்டப்படி பிரிந்து வாழ்தலைக் கேட்கலாம்.

இந்திய திருமண முறிவுச் சட்டப்படித் திருமண முறிவு பெற இருதரப்பினரும் கிறித்தவராயிருக்க வேண்டியதில்லை. ஆனால் இருவரும் இந்தியக் குடிகளாயிருக்கவேண்டும். இந்தச் சட்டப்படித் திருமண முறிவு ஆணை பெற இருவரும் இந்தியாவில் மணம் செய்திருக்க வேண்டும்.

திருமணத்தின்போது இருவரில் ஒருவரேனும் பருவம் (Puberty) அடையாதிருந்து அதனால் கலவி நடைபெறாதிருந்தால் ஓராண்டு காத்திராமலே திருமண முறிவு ஆணை பெறலாம்.

உரோமன் கத்தோலிக்கச் சடங்குகளுடன் உரோமன் கத்தோலிக்கர் திருமணம் செய்துகொண்டிருந்தால் அவர்களுக்கு இச்சட்டம் அமலாகாது.

**இசுலாமியரிடையேத் திருமண முறிவு:** இம்மதத்தில் கணவன எவ்விதக் காரணமுமின்றித் திருமண முறிவு செய்துகொள்ளலாம். திருமண முறிவு செய்வதாகத் தெளிவாகச் சொன்னால மட்டும் போதுமானது. வாயால் பேச இயலாதவர் மட்டுமே எழுத்து மூலம தெரிவிக்கவேண்டும். இவர்களுடைய திருமண முறிவு அரபு மொழியில் இருக்கவேண்டும் என்றும், 'தலாக்கு' (Talak) என்னும் சொல் பயன்படுத்தப்பட வேண்டும் என்றும் கூறுவர். இசுலாமியத் திருமண முறிவுச் சட்டம், 1939-இல் நடைமுறைக்குக் கொணடுவரப்பட்டது. இது இசுலாமியப்பெண்கள் நீதிமன்றத்தின் மூலமாக எந்தக் காரணங்களுக்காகத் திருமண முறிவு பெறலாம் என்பதைக் குறிக்கிறது.

ஒரு இசுலாமிய மனைவி மதம் மாறினாலும் மதத்தைத் துறந்தாலும் அதனால் திருமணம் முறிவாகாது. ஆனால் பின்வரும் காரணங்களுக்காக நீதிமன்றத்தில் மனுச் செய்யலாம். 1) 4 ஆணடுகளாகக் கணவனைப் பற்றிய தகவல் இல்லை; 2) 2 ஆண்டுகளாகக் கணவன்-மனைவியைக் கவனிக்கவிலலை; 3) 7 ஆண்டுகள் அல்லது மிகுதியான காலத்துச் சிறைத் தண்டனை கணவன் பெற்றுள்ளான்; 4) 3 ஆண்டுக் காலம் கணவன், கணவனாக நடந்துகொளளவில்லை; 5) கணவன மணமான காலத்தில் ஆண்மையற்றவன்; இப்போதும் அப்படியே; 6) கணவன் 2 ஆண்டுகளாகப் பைத்தியம் அல்லது பெரு நோயுடையவன்; 7) கணவன கொடுமைப்படுத்தினான் ஆகியன.

தலாக்குக் கூறித் திருமண முறிவு செய்யும் கணவன அந்தசமயம் சட்டப்படி திருமண வயதுடையவனாக வும், பைத்தியமில்லாதவனகாவும் இருக்க வேணடும். திருமண முறிவு செய்வதாகச் சொல்லிய பினனர் கணவன் மனைவி என்ற உறவு மறைநதுவிடும. ஒரு வருக்கொருவர் சொத்துரிமை இல்லாமல ஆகிவிடும.

**நடைமுறைச் சிக்கல்கள்:** சடட அடிபபடையில் திருமண முறிவு எனபது ஓர் எளிய நிகழ்ச்சியைப் போலத் தோன்றினாலும் நடைமுறை வாழ்க்கையில் இதனுடைய விளைவுகள் மிகக கொடியனவாகும இது சமூகத்தில முதனமையான சிககலாகக் கருதப் படுகிறது. ஒரு குடும்பம சிதைநதுபோவதற்கு இதுவே குறிப்பிடத்தகக காரணியாக அமைகிறது. மேலும் இது சமூகத்திலும், மனிதாகளிடையேயும பலபின விளைவுகளை ஏற்படுத்துகிறது. மேலை நாடு களில் மிகுதியாக ஏற்படும் இந்த ஆபத்தான திருமண முறிவுகள் இதையே காட்டுனறன.

திருமண முறிவின்மூலம் திருமண வாழக்கையில ஏற்படுகின்ற சிககலகள மிகுந்த அளவு முடிவில்லா தவை. பொதுவாகத் திருமணத்திற்கு முன்னர் மண மக்களிடையே ஏற்படுகின்ற அளவறற எதிாப்பாாப புகளே திருமண முறிவுக்கு அடிபபடைக காரண மாக அமைகின்றன. அநத எதிர்ப்பார்ப்புகள மண மக்களுடைய எதிர்காலச் சமூகத் தகுநிலை, பாலின உறவு, செல்வாக்கு, நல்ல உடலநிலை, வேலைப் பாதுகாப்பு, நல்ல கணவன்-மனைவிக்கான பாஙகு ஆகியவற்றைப் பொறுத்துள்ளன. எனவே பல காதல் திருமணஙகள்கூட திருமண முறிவிறகு உட்படுகின றன. திருமணத்திற்கு முனனா காதலாகள தஙக ளுக்கு எந்தவித எதிர்ப்புகளும், தடைகளும் வநதா லும் தங்களுடைய அனபில், காதலில மாறறம் ஏற் படப் போவதில்லை என நம்புகினறனா. ஆனால நடைமுறை வாழ்க்கைக்கு வரும்போது அவை ஒத்து வராமல பிரிநதோ, திருமண முறிவு பெற்றோ வாழ வேண்டிய சூழநிலை ஏற்படுகிறது.

திருமண முறிவால் சிதைந்த குடும்பஙகளிலுள்ள குழநதைகள சமூகத்தை மிகுதியாக வெறுக்கினறன. ஏனெனில் இக்குடும்பங்களிலுள்ள குழந்தைகள் வாழ்க் கையில் ஒரு நிலையான, அமைதியறற சூழநிலை யையே சந்திக்க நேரிடுகின்றன. இதனால் உணாவுக் கோளாறுகள், மனநிலைச் சீர்ககேடு, நடத்தைச் சிக்கலகள், உடல்நலக் குறைவு போனறவை ஏற்படு வதாக உளவியலறிஞர்கள் கூறுகினறனர். மேலும் குழநதைகளுக்குத் தேவையான சமூகமயமாதல் பண்பு, கலவி, சமூக, பொருளாதார ஆதரவு குறை வதால் அவர்களுடைய எதிர்காலம் மிகுதியாகக் கேடுறுகிறது.

திருமண முறிவு பெணகளுக்கு அவர்களிடையே ஒருவிடுதலை உணாவை வளர்ப்பதுடன கணவனுடன சம உரிமையுடையவராக நினைக்கச செய்தாலும நீதிமனறத்தால் இது எளிதில வழங்கப்படுவதில்லை. திருமண முறிவால குடும்பம சிதைவுறும் என்ற கருத்தை நீதிமன்றத்தால மறுக்க வியலாது. மேலும் குடுமப வாழ்க்கையில பெரிய கேடுகள விளையக கூடும எனபதால திருமண முறிவிறகுத் தம்பதிகளும மிக எளிதில உடனபடுவதிலலை. கணவனும, மனை வியும மீணடும இணைவதறகான முயறசிகளே மேற கொளளப்படுகினறன. தவிர்ககவியலாத சூழ்நிலை களிலும், கணவனும மனைவியும் மிகுநத அளவில திருமண முறிவை விரும்புமபோதும மட்டுமே நடை பெறுகிறது.

அமெரிககா போனற நாடுகளில் மூனறில ஒரு பங்கு திருமணம திருமண முறிவில முடிவடைவ தாகச் சில கணககெடுப்புகள கூறுகினறன ஆனால் இநதியாவைப் பொறுததவரை திருமண முறிவு விகி தம் மிகக குறைவுதான அணமைக்காலச சட்ட திட்டஙகளும, பெணகள கலவியும் இந்தத் திருமண முறிவு விகிதம உயருவதற்குக் காரணமாக அமைந் தாலும இவை நகர்ப்புறங்களில மிகுநியாக நடநது வருகினறன. ஏனெனில் இந்துக்களைப் பொறுத்த வரை திருமண முறிவு என்பது ஒரு புதிய கருததே ஆகும. திருமணம இந்துககளிடையே நலல வாழக் கைக்கான இணைபபாக, உறவாகக கருதப்படு கிறது. ஓா இந்துக் கணவனுக்கும மனைவிககும உளள உறவு இறப்புவரை மடடுமனறி அதறகுப பினனர் உளள பல பிறப்புகளிலும தொடரககூடிய ஒனறு எனக் கருதுகினறனா. இனறும திருமணம் ஒரு புனிதமான, மாறறமுடியாத உறவாகவே மதிக்கப் படுகிறது எனவே கணவன-மனைவியரிடையே வேறு பட்ட பல கருத்துகள் இருப்பினும பெருமளவு ஒன றாகவே இணைநது வாழ்ந்து வருகினறனா பூ.த.

**துணை நூல்கள்:**

Pothen, a, Divorce: Its Causes and Consequences in Hindu Society, Shakthi Books, India, 1986.

Scarpitti, Frank R., Social Problems, Holt, Rinchart and Winston Inc., New York, 1974.

***திருமணிக் கூடம்***: சோழநாட்டு வைணவத திருப்பதிகளுள் ஒன்று. தஞ்சை மாவட்ட சீகாழி புகைவணடி நிலையத்திலிருந்து கிழக்கே ஏறக்குறைய 8 கி.மீ. தொலைவில் உளளது. இஙகுக் கோயில கொணடுள்ள இறைவன் மணிக்கூட நாயகன; தாயார் திருமாமகள. பொன் விமானம்; தீர்த்தம்

சந்திர புட்கரணி. இறைவன் இங்கு நின்ற திருக் காலத்தில் காட்சி தருகிறான்.

திருமங்கையாழ்வாரின 'தூம்புடை' என்னும் பதிகம் திருமணிக கூடத்து நாயகனைப் பற்றியதா கும் (பெரிய திருமொழி. 4-5 தூம்புடை பதிகம்).

காவிரி நீர் வளமும், பொழின் மணமும் சோலைக் கனிகளும், கமழ் தென்றலும் விளஙகுகின்ற ஊர் திருமணிக் கூடம் ஆகும. இஙகு மறைவேளவி யும் மறவோா போரும் நிகழ்ந்த சமுதாயச் சூழ நிலையை வடபுலத்து வேந்தர்களையும் தென்னாட்டு மன்னாகளையும் வெனறு சோழமனனா விளங்கிய சிறப்பை, ஆழவார் குறிப்பிட்டுளளார்.

மணிக்கூட நாயகனைப பணிநது தொழுதால் மணணுலக இனபமும் விண்ணுலகப் பேறும பெறுவர் என்பதனை ஆழவார், 'பொஙகுநீ குலக மாண்டு, பொனனுல காணடு, பின்னும், வெஙகதிர்ப் பரிதி வட்டத தூடுபோய விளங்கு வாரே' எனறு கூறுவர்.

பொன் செள.

**திருமணி மாடக்கோயில்**· நூற்றெட்டு வைணவத் திருப்பதிகளுள் இதுவும் ஒன்று. சோழ நாட்டுத திருநாஙகூரைச் சோநத ஆறு திருப்பதி களுள ஒனறாக அமைநதுள்ளது. சீர்காழியிலிருநது ஐநது கல தொலைவில் உளளது, திருநாங்கூரைச் சாாந்தது. ஒரு புளியநதோப்பில அமைநதுளளது. இறைவன் பெயா நந்தாவிளக்குப் பெருமாள; தாயார் பெயா புணடரீகவலலி இறைவன் நரநாரா யணன். பிரணவ விமானத்தில விளங்கும கோயில கொண்டுளள பெருமாள நினற கோலததில் உளளார். இங்குளள தீர்த்தம இந்திர புட்கரணி எனபபடும். இத்திருப்பதிப பெருமானைத் திருமஙகையாழ்வார் மட்டுமே போற்றிப் பாடியுளளாா. அப்பாடல்கள பெரிய திருமொழியில் (பெரிய திருமொழி. 3-4 நந்தாவிளக்கு) அமைந்துள்ளன. பெரிய திருமடலிலும் இவ்விறைவன் பற்றிய குறிப்பு வருகிறது

பொன். செள.

**திருமந்திரம்**· இநநூல் பனனிரு சைவத்திரு முறைகளில் பத்தாவதாகும் மூவாயிரம பாடல்களை யும ஒன்பது தந்திரஙகளையும் கொணடது, திருமூல ரால் இயற்றப்பட்டது. முதல் தந்திரம் உபதேசம் முதல களளுண்ணாமை ஈறாகப் பல உண்மைப் பொருள்களை எடுத்து விளக்குகிறது உபதேசப் பகுதியில பதி, பசு, பாசம் எனனும் மூன்றும் அநாதி நிததியப்பொருள எனறு விளக்கபபடுகிறது. அவற் றுள பதியைப் பசு,பாசம் அணுகாதென்கின்றது.பாசம் ஒடுஙகிப் பதியை அடையப பசுக்களுககு ஆசாரியனு டைய உதவி தேவை என்கின்றது. ஆசாரியர் உண்மை ஞானத்தை உணர்த்துபவர். அவ்வாசாரி சிவமேயாய் மூன்று காலத்தியல்பையும் சிவலோகத் தையும், சிவயோகத்தையும், சிவபோகத்தையும தமககுளளே தாங்கிக் காண்பவர் பாலினுள நெய போல் குருவுபதேசத்தை உணர்பவர்களே முத்தாகள ஞானம தோன்ற வழி குருவைக் காணடல, அவர் பெயர் சொல்லல, அவர் வார்த்தைகளைக் கேட்டல, அவர் திருவுருவததைச் சிந்தித்தல முதலியன வ.

அதனமேல் நிலையாமைகளைக் கூறுகிறது. மகளிர் இழிவு, கல்வியின உயர்வு, ஐந்தெழுத்துணமை ஆகிய வறறை விளககும் வகையில் முதல் தந்திரம் அற வழி அனைததையும் கூறியுள்ளது

இரணடாம தந்திரம் அகத்தியம் முதல 25 பிரிவு களை உடையது இதில் கல்வி, கேள்வி ஆகியவற்றால திருவருள் கைவரப்பெற்று, சிவனே மெயப்பொருள எனறு உணரவேணடும எனகின்றாா. உலகப் பொருளகள அனைததும் சிவனை அறிந்துகொளளத் துணையாகும் இறையுணமையை எடுத்து விளககு வதே அகததியம. அதனமேல எட்டுவீரட்டத்தையும விளக்குகிறாா. அதனமேல முபபுர அழிவு உணமையை விளககும் போது அதுபுறசெயல் அன்றெனபதைத தெளிவாகக் குறிககிறார். சிவபெருமானின அருவுரு வத் திருமேனிச சிறப்பு, இறைவனின முழுமுதற றனமை இவறறை எடுத்துககாட்டுகிறார். ஐநதொழி லைச செய்பவனும் இறைவனே. கருவிலும உடனி ருநது காப்பவன அவனே. இமமுறையில் இரணடாம தநதிரம மெய்ப்பொருளை விளககுகினறமையைக் காணலாம.

மூனறாம் தநதிரம் 21 பிரிவுகளையுடையது. ஆன மாக்கட்கு இனபநிலையினை அருளுவது. சிவன சிவை இவாகளது தன்மை உலகியலோடு ஒப்பிட்டுக் காட் டப்படுகிறது. ஆனமா தவநிலை மேறகொளளவேண டும். தவநிலை அட்டாங்கயோகததால் கைகூடும். யோகம் பயிற்சி வயத்தான வருவது யோகபபயிற்சி கைவரப் பெறறவரே இறைநிலையை எளிதில உணா வர். யோகமுயற்சியால இறைவனமாட்டுக காத லுண்டாகும் எனகினறார். யோகபபயிற்சியால உடல் திடம அடையும. அதனுள நிலைத்து இருக கும் நிலையெய்தும. வாழநாள சிறககும் வழிவகை களும் காணலாம் அதன்மேல், காற்றுச் செல்லும் வழிவகைகளைக் கூறுகிறார். மேல அமிழ் தூறறம ஏற்படும். திஙகள நிலையில தங்கித் திளைத்து சிவமேயாகுவா என்கினறார். இதுவே ஆன்மா அடை யும் மெயயினபம். மெய்யினபமாவது உடலை உறுதி யாக வைத்துக்கொணடு உள்ளத்தை வளாறபிரா

னாகிய சிவன்பால் செலுத்தி, பளளத்து வெள்ளம் போல பதியவைத்து நலவாழ்வு பெறுவதாகும. இவ வுணமையை எடுத்து விளககுவதே மூனறாம் தநதிர மாகும்.

நான்காம் தந்திரம் முழுவதிலும சக்கரங்களும மந்திரஙகளுமே கூறபபடும. இது அசபை முதலாக நவாக்கரி முடிய 13 பிரிவுகளையுடையது ஆனமா தனனைச சிவனுககு அடிமையாகக வேண்டும் அடிமையாக்குவதே உணமையுணர வழிவகுப்ப தாகும. இதறகு மூல மநதிரம் திருவைந்தெழுத்தே. முனனர் கூறியுளளது ஊமை எழுததாகிய அசபை யாம. அதனபின சக்கரஙகளுள முதனமையான சக்கரமாகிய திருவமபலச் சக்கரம் குறிபபிடப்படு கிறது அதறகுரிய உயிாமந்திரம் ‘சிவய நம’ எனனும திருவைநதெழுத்தேயாகும. அதுவே ஆதி மந்திரம. அடுத்து திருவருளம்மையின சககரம். அதனமேல் ஆதார ஆதேயம இனனதெனச சுட்டப்படுகிறது. முடிவாக நவாககரி சககரததைக் கூறி நான்காம தநதிரம் முடிகிறது

ஐந்தாம் தந்திரம் சுத்தசைவம் முதல உட்சமயம் ஈறாகிய 23 பிரிவுகளை உடையது. சரியை முதலாய நால்வகை நெறிகளையும அறம என்று கூறிச்சமய உணமைகளை விளக்குகிறது. சைவாகள மேற்கொள வது சித்தாநத சைவச் செநநெறியேயாம. இதனை அகச்சமயம, புறச்சமயம், புறப்புறச்சமயம எனறு மூவகைப் படுத்தி முடிவாகச சித்தாநத சைவமே சமயஙகடந்த பெருநெறியும் ஆகும எனறு முடிப் பார். சிவப்பேற்றின அடிப்படை நெறியை எடுத்து விளககுவதே ஐந்தாம் தந்திரம். நால்வகைச் சைவம், நால்வகை நெறி, நாலவகைத் தொண்டு, அத்தொண டால் பெறும் பேறு, புறச்சமயப் புனமை, அகசசமய நெறி ஆகிய இவறறை ஒன்றன்பின் ஒனறாக வகைப் படுத்திக் கூறுகிறது.

ஆறாம் தநதிரம் சிவநெறியை அடைய எணணு பவர்கட்கு உறுதுணையாய வநது அருளசெய்பவர் சிவகுருவேயாவர் என்கிறது. இத்தந்திரம சிவகுரு தரிசனம் முதல பக்குவன ஈறாகப் பதினானகு பகுப்பு களையுடையது. சிவபெருமான ஐம்புலவேடரிற பட் டுழலும் ஆருயிர்களைச் செவ்விநோககி மீட்பதற்கு எழுந்தருளும் தோற்றமே சிவகுருவின தோற்ற மாகும். இத்தந்திரம் குருவே சிவம் என்று வற்புறுத்து கின்றது. துறவு நெறி, ஞானவேடநெறி, இவறறை விளக்குவதோடு அவ்வேடமும் இன்னதெனச் சுட்டு கிறது. ஞானவேடம் எனபது அடியாா வேடமே. சித்தராவாரும் அடியவரே. சிவவேடம் என்பது உட லுக்கன்று உயிருக்கேயாம். சிவவேடத்திற்குத் தகுதி யில்லாதோர் அவ்வேடர். அவரைக் குருவெனக் கொளவார் குழிவீழ்வர். ஆகவே, நற்குருவால திரு வடிஞானம் உணடாகும் எனறு ஆறாநதநதிரம விளக்குகின்றது.

ஏழாம தந்திரம் ஆறாதாரம் முதல இதோப தேசம ஈறாகிய 38 பிரிவுகளை உடையது. இது முத்திப் பேற்று நெறியை விளக்குகிறது சிவலிங்க வழி பாடடின மேனமையினைச சிறக்க எடுத்து விளககு கிறது இத்தநதிரம் சிவலிங்க வழிபாட்டுககுச சிறப பாக உடம்பிடைக காணப்படும் ஆறு ஆதாரங களும் அவறறின வழிகளும உணமையுணரும் நிலை யில தூய்மையாக இருகக வேண்டும். ஆறாதாரம, ஆறு அத்துவா எனபதே அவவிரு நெறிகளாகும. அதனமேல அணடலிஙகம், பிணடஇஙகம, சதாசிவ லிஙகம, ஆனமலிஙகம, ஞானலிஙகம, சிவலிங்கம் என னும சிறநத அறுவகை இலிஙகஙகளின இயலபினை உணர்தல வேணடும் சிவபூசையின் பெருமபேறாகச சிவகுருவின பூசை உணடாகும இம்முறையில் ஏழாந தந்திரம் முழுவதும் சிவலிங்க வழிபாடே கூறப்படு கின்றது

எட்டாம் தந்திரம் உடலிற் பஞ்சபேதம முதல சோதனை ஈறாக 43 பிரிவுகளையுடையது. உடலின பாகுபாடே உடலிற பஞ்சபேதமாம். ஐவகை உடற பாகுபாட்டினை விளக்கி, உடம்பு அடையும பேறு களும கூறி, மேல அழியுந தனமைகளையும கூறு கிறது. அதன்மேல அவததையினை விளககுகிறது. பின் அறிவு தோன்றும நிலை விளககப்படுகிறது. மேல், அறுவேறு முடிபுகள் வெளிபபடும. வெளிப் படவே, விரவுதலால் பதி, பசு, பாசம வேறனமை தெளியப்படும பின முககுறறம் புலனாகும. பின முபபதம, முப்பரம், முத்துரியம, மும்முததி, மும்மை யிலககணம ஆகிய நெறிகளை விளககுகிறது. இதனை விளங்கிக கொணடால் சிவனியல்பு புல னாகும். புலனான நிலையில புகலிடம கிடைக்கும். புகலிடம் கிடைத்த நிலையில் மலநீககமுறும. உறவே பத்தியுணடாகும். பத்தி முதிாவே முததி எனபது. முத்தியின முடிவே செயலற்ற நிலை. இதுவே சோதனையாகும். ஆகவே, இவவெட்டாந் தநதிரம் பத்தியின முதிாவாம முத்தியின முடிநத நிலையை முனனிட்டு விளககுகிறது எனலாம். ஆக, இத்தந திரம வலியுறுத்துவது முத்தி நிலையேயாகும்.

ஒன்பதாம் தந்திரம் குருமடதரிசனம முதல் சர் வவியாபி ஈறாக 22 பகுப்புக்களையுடையது. இத்தந் திரம் அணைந்தோா தன்மை பேசுகிறது. சிததாநத சைவர் உறைகின்ற இடமே மடம் எனறு குறிக்கப் படுகிறது. குருமடஙகண்டவரே குருவினைக் கண்ட வர் ஆவார். இத்தந்திரம் சித்தர் நெறிகளைப் பல பரிபாடைகளால் விளககிச் செல்கிறது. இத தநதிரம்

சிறப்பாக விளககுவது குருநெறியினையாம் மும் மலம் நீஙகி, சிவனிலை எயதி, ஓஙகார உணமை தெரிநது, மேல நமசிவய என்னும ஐந்தெழுதது உணமையுணர்ந்து, அதனமேல் சிவயநம என்னும சூக்கும பஞசாடசரததை அறிநது, அதன பினனர் சிவயசிவ எனனும அதிசூக்கும பஞசாட்சரததின உணமையினை உணரும நெறிகளை விளககிக கூறு கிறது. இநநெறிகளை முறையாக உணர்நதோரே அமபலவாணரின ஐநதொழிற கூத்தின உணமை நெறியினை உணாவா எனறு கூறி நூல் முடிகினறது. திருமூலதேவர் ஒனபது ஆகமஙகளிற் கணடுளள கருததுகளைததான ஒன்பது தநதிரமாகப் பகுத துப் பாடியுளளாா எனபதை அவரே 'அந்திமதிபுனை அரனடி நாடொறும, சிநதைசெயது ஆகமம செப்ப லுற்றேனே' எனறு கூறியுளளது கொணடு துணிய லாம்.

ஆகமஙகள் 28 இறைவனால அருளப் பெற்றவை. ஆயினும, நநதியமபெருமான சிரீகணட உருததிரா பால பெற்ற 9 ஆகமஙகளைத் திருமூலா முதலிய எட்டுச சீடாகட்கும உபதேசித்தருளினார்.

இவவாறு, முதல் தநதிரம் காரண ஆகமததின் சாரமாகவும, இரணடாம தநதிரம காமிக ஆகமத தில சாரமாகவும, மூனறாம தநதிரம வீராகமத்தின சாரமாகவும், நானகாம் தநதிரம சிநதியாகமததின சாரமாகவும, ஐநதாம தநதிரம வாதுளாகமததின சாரமாகவும், ஆறாம தநதிரம வியாமளாகமததின சாரமாகவும, ஏழாம தநதிரம் காலோத்திராகமத தின் சாரமாகவும, எடடாம தநதிரம சுபபிரபேதாக மததின சாரமாகவும, ஒன்பதாம் தநதிரம் மகுடாக மத்தின சாரமாகவும அமைநதிருககினறன என்பர் அறிஞா.

திருமநதிரம ஆகமத்தின சாரமாயினும திரு மூலா அதனைத தமிழிலேயே ஆக்கியுளளார் என பதை, 'எனனை நன்றாக இறைவன படைததனன, தனனை நனறாகத் தமிழ் செயயுமாறே' 'மூலன உரைசெய்த மூவாயிரந தமிழ' எனற அவா திருமந திர வாக்கினாலும உணரலாம. சொ.சி.

**திருமயிலாடுதுறை.** இது சோழநாட்டில காவிரியின் தெனகரையிலுளள 39- ஆம் சிவத் தல மாகும். சிதம்பரம் தஞசாவூர் இருப்புப் பாதையின இடையே மயிலாடுதுறை சநதிப்பு இருக்கிறது. இச் சந்திப்பிலிருந்து 3 கி.மீ. தொலைவில கோயில் இருக் கிறது. பேருந்து வசதிகளும உளளன. சமபநதா 2 பதிகஙகளும் திருநாவுக்கரசர் பதிகமொன்றும இததலத்துக்குணடு. அருணகிரிநாதர் திருபபுகழும் இத்தலத்திறகுளளது. சுவாமிபெயர் மாயூரநாதர், மயிலாடுதுறையார், மயிலாடுதுறையரன், மயிலாடு துறையுடைய நாயகர், பிரமலிங்கம், வளளலாா, அஞசொலாளுமை பஙகன் முதலியனவாம. அம பிகையின் பெயர் அஞ்சலநாயகி, அபயாம்பிகை, அஞசொலாள, அபயப்பிரதாமபிகை, அஞ்சலை, மயிலமமை முதலியனவாம. காவிரியில இடபதீாத் தம் விசேடம; பிரமதீாததம், அகத்திய தீர்ததம முதலிய பல உளளன. துலாமுழுககு ஐப்பசி மாதம 'மிகவும சிறப்புடையது கடைமுழுககு முடமுழுககு முதலிய நீராடற் சிறப்பும இத்தலத்திற்குணடு. தல விருட்சம மாமரமாகும. ஆதலின சூதவனம எனற பெயரும் இத்தலத்திற்குணடு. அம்மை மயிலுருக கொணடு இறைவனை வழிபட்ட தலமா கும். அமமையின வேணடுகோட்படி இறைவன் மயிலுருக்கொணடு தாணடவமாடினார். அதற்குக கௌரி தாணடவம எனபது பெயராகும். விழாக் காலத்தில இத்தாண்டவம இப்பொழதும ஆடப படுகிறது

திலீபன, பிரமன, தக்கன, உமையமமை முதலிய பலரால் வழிபடப்பெற்ற சிறந்த தலம இது. இக் கோயிலில் 16 கல்வெட்டுகள் உளளன முதற குலோத்துங்கன, இரணடாம் இராசாதிராசன, மூன்றாம் குலோத்துஙகன, மூனறாம இராசாதி ராசன், சடையவாமன சுநதரபாணடியன முதலிய அரசர்கள பலர் இக்கோவிலைப் போறறிபுளளனா. மயூரநாதர் கோவிலுககுத் தெனபுறம் ஐயாறப்பா திருக்கோவிலுமுளளது. முதலாம் குலோத்துங்கன் சுங்கம தவிர்த்த சோழன எனறு இஙகுளள கல கல்வெட்டிலிருநது அழைக்கப்பட்ட வரலாறு தெரி கிறது இஙகு விக்கிரம சோழன் திருமடம ஒனறு முனடு. ஐயாறப்பா பிரதிட்டை செய்த விவரம முதலிய உணமைகளைத் தெரிநது கொளளலாம. ஐயஙகொணட சோழ வளநாட்டுத் திருவழுந்தூர் நாட்டுக் குலோத்துங்க சோழன குறறாலமாகிய திருவையாறுடையார் என்று திருவையாறுடைய நாயகா கோயிலிலுள்ள ஒரு கல்வெட்டால் தெரிநது கொளளலாம. பலா நிலம, பொன முதலிய அளித்த செய்திகள கலவெட்டுகளிலிருந்து புலனாகின்றன. 'மயிலாடுதுறையை, நெஞ்சு ஒன்றி நினைந்து எழு வாராமேல், துஞ்சும பிணியாயின தானே', எனபது திருஞான சமபநதா திருவாககாகும. இததிருக கோயில் இப்போது திருவாடுவடுதுறை ஆதீனத்தின பராமரிப்பில இருநதுவருகிறது. இரா.ச.

**திருமயேந்திரப்பள்ளி:** திருமயேநதிரப் பளளி சோழ நாட்டுத் திருத்தலஙகளுள ஒனறு. இது காவிரியின வடக்கிலும கொள்ளிடத்திற்குத் தெற் கிலும் அமைநதுளள தலமாகும். தஞ்சை மாவட்டத்

தில் கொள்ளிடம் புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கே 4½ கி.மீ. தொலைவில் ஆச்சாள புரம் என்ற ஊர் உள்ளது.ஆச்சாளபுரத்திற்கு வடகிழக்கே 6 கி மீ தொலைவில திருமயேநதிரப் பள்ளி அமைந்துள்ளது. இறைவர் பெயர் 'திருமேனி அழகர்' என்றும் இறைவி பெயர் 'வடிவாம்பிகை' என்றும காணப்படுகின்றன. இவ்வூர் இறைவரை ஞானசமபந்தர் வழிபட்டுப் போற்றியுள்ளார். ஞானசமபந்தர் மிகுதியான பதிகங்களால இத்தல இறைவனைப் பாடியுள்ளமையால் இத்தல இறைவனபால் அவர் கொணடிருநத ஈடு பாட்டை உணரலாம். சு.சா

**திருமருகல்**· இவ்வூர் சோழநாட்டுத திருத தலங்களுள் ஒன்று. தஞ்சை மாவட்டததிலுள்ள திருப்புகலூருக்குத தென்கிழககே 5 கி.மீ.தொலைவில திருமருகல் அமைநதுள்ளது. இவவூர் இறைவா 'மாணிககவண்ணீசுவரா' எனவும் 'மாணிககவண்ணா' எனவும் வழஙகபபடுகிறார். இறைவி பெயா 'வண்டு வாா குழலமமை' என்பது

திருஞான சமபநதரும, திருநாவுககரசரும் இவ வூர் இறைவரைப் போற்றியுள்ளனர். ஞானசமபந தருடைய வரலாற்றில அறபுதம நிகழததிய இடங களுள் ஒன்றாக இவவூர் காணப்படுகின்றது. ஒரு வணிகன தன தாயமாமன் பெணகளுள் ஒருத்தியைத திருமணம செய்விபபதாகக கூறி, மருகனை ஏமாற்றி ஏழு பெணகளை வேற்றவருககு மணம் செய்து கொடுதது விட்டான். அதனால இரககம கொணட எட்டாம் பெண தநதையும் ஊராரும் அறியாத வண்ணம அவவணிகனோடு வேற்றூருக்குச் சென்று திருமணம செயதுகொள்ளும் கருத்தோடு புறப்பட்டு வந்து கொணடிருநதாள. திருமருகலில அவவணி கனைப் பாமபு தீணட அவன இறநதுபோனான. அககன்னி பெரிதும் அழுது புலமபுவதை அவவழியாக வநத ஞானசமபநதர் கேட்டு அவவிடத்திற்கு விரைந்து சென்றார். அபபெண்ணின் அவல நிலையைக் கேள்வியுற்று இறைவன மீது பதிகம் பாடி அவ்வணிகன உயிர் பெற்று எழுமாறு செயதாா. அவாகள இருவருக்கும் திருமணம செயவித்தார் என பது பெரியபுராணத்தால அறியப்படும் செய்தியாகும். சு.சா

**திருமலாச்சாரியார் (தாள்ளபாக, கி பி. 1458-1548)**· ஆந்திர நாட்டில தமிழக வைணவ சம்பிரதாயததை அறிமுகப் படுத்தியவர்களுள குறிப்பிடத் தக்கவர் தாள்ளபாக அன்னமாசசாரியார் (கி.பி. 1408-1503) ஆவார். கீர்த்தனையிலக்கியத்தின முதல வர் இவரே. இவரது இரண்டாம் மனைவி அக்கலாம்பா. இவாகட்குப் பிறந்த புதல்வரே தாள்ளபாக பெத்த திருமலாச்சாரியார் ஆவர். இவர் தொண்ணூறாண்டுகள் வாழ்நதார். பழுத்த வேதாநதியான இவா வைணவ மதத்தைப் பரபபுவதில் சிறநத பங காற்றினார். மன்னர்களைபபாட மறுத்த கவிஞா ஆகையால சிரீ கிருட்டிணதேவராயா இவரை ஆதரிககவில்லை. அசசுதராயா இவருககு பூணடி, 'சஙகம கோலம் முதலிய கிராமஙகளைத தானமாகத் தந் தார். இவர் காவனூரா, மருவாகரை, குபபம், கிழங குன்றம, மனனசமுததிரம, இராயலபாடு, சோமயாசுலபள்ளி, கததமுவாரிபள்ளி, எர்ரகுணடபள்ளி, பலவிபுரம், கணடதிம்மாபுரம, பூணடி, சஙகம கோலம ஆகிய கிராமஙகளை மானியம பெற்றும அவற்றை எல்லாம திருப்பதி வெஙகடேசுவரருககே அாப்பணித்து விட்ட அறநெறிச் செலவா ஆவாா. வெங்கடேசுவரருக்குப பற்பல பூசைகட்கு ஏற்பாடு செயதார் சுவாமி புட்கரணி பழுது பார்ததுப் படிக கட்டுகள கட்டி வைததார். மணடபஙகள கட்டுவித தார். தம தநதையார் அன்னமயயாவின சஙகீத தனஙகள அனைததையும செப்புததகடுகளில செதுககுவிததுப பாதுகாககவும, அவற்றைத திருபபதி கோவிலில ஓர் அறைகட்டிப பாதுகாககவும ஏற்பாடு செயதாா. இவரது சீடாகளான சிரீபதி தொன ன்யயா, குலசேகர புர பலவி பட்டுரயயா ஆகியோரும் பல இறைபணி செயவதற்குத தூணடு கோலாக இருநதாா.

கிருட்டிணதேவராயரை அரசு கட்டிலேறச செய்த மநதிரி திம்மரசுவுக்கு இவர் உற்ற நணபராகத திகழ்நதார், சிறந்த கலவிமானாகவும இசைக்கலை வித்தகராகவும திகழநதார். இவரது எதிரி இவரை வாளால வீசபபோய அது பூமாலையாக விழுநததாக ஓர் அற்புத வரலாறு கூறப்படுகிறது.

இவா தம தநதையைப போலவே கீர்த்தனைகளும காவியஙகளும கவிதைகளும் பல யாததுள்ளாா.

**இவர் படைப்புக்கள்:**1) சிருஙகார சஙகீர்த்தனைகள்-சிரீ வெஙகடேசுவரர் மேல அகததுறையிலமைந்த பாடல்கள. 2. அத்தியாத்தும் சஙகீர்த் தனைகள - சிரீ வெங்கடேசுவரர் மேல ஆனமிகப் பாடல்கள, 3) வைராககிய வசன கீதங்கள-தத்துவச் சிறப்புடைய வசன கவிதைகள, 4) சிருஙகார தணடகம், 5) சக்ரவாள மஞ்சரி, 6) சிருஙகார விருத்தசதகம், 7) சிரீ வெங்கடேசோதாகரணம், 8) நீதிச் சதகம-அறநெறி கூறும் நூறு பாடல்கள் கொண்ட நூல கவிதைச் சிறப்புடன் மிளிரும். அக கால சமூகத்தைப் பிரதிபலிக்கும் அறநூலாகும். 9) இரேபறகாரமுலு-இநநூல் இலக்கணத்தைச் சார்ந்தது தெலுஙகு மொழியில ரகரம, றகரம இரண்டுமே இக்காலததில் ஒலிவேற்றுமையன்றி இணைந்து விட்டன. திருமலாச்சாரியா காலத்தில எநதச்சொல்

ரகரம், எந்தச் சொல் றகரம் என்ற மயக்கம் இருந்தது. அதனைப் போக்க அகராதி போலத் தொகுத்து அளித்த சிறந்த நூல். 10) பகவத்கீதை தெலுங்கு வசனம்-பகவத்கீதைக்குத் தெலுங்கு மொழியில் வசனமாக உரை இயற்றியுள்ள சிறந்த நூல். 11) துவிபத அரிவமிசம்-திருமாலின் அவதாரங்களைக் கூறும் இந்நூல் இப்போது கிடைக்கவில்லை.

மு.க.ஜ.

***திருமலை***: காண்க: திருப்பதி

***திருமலை நாயக்கர் (கி.பி.1623-1659)***: காண்க: நாயக்க மன்னர்கள்.

***திருமலைநாயக்கர் அரண்மனை*** மதுரையிலுள்ள நாயக்கர் அரண்மனை. திருமலைநாயக்கர் திருச்சியில் இருந்த தம் தலைநகரை மதுரைக்கு மாற்றியபின்பு தாமும் தமது அரசுச் சுற்றமும் வாழ்வதற்காகவும் நாட்டை ஆள்வதற்காகவும் கி.பி.1636–இல் இவ் வரண்மனையைக் கட்டி முடித்தார். தென்னிந்தியாவில் இன்றுள்ள பழமையான அரண்மனைகளுள் இதுவே மிகச் சிறப்பு வாய்ந்ததாகும். இதனை இத்தாலிய நாட்டுச் சிற்பியின் துணைகொண்டு உருவாக்கியதாகக் கூறுகின்றனர். இந்திய நாட்டு வைதிக சமயக் கட்டடக்கலையும் இசுலாமியர் கட்டடக்கலையும் இணைந்து கலந்த கலவையாக இந்த அரண்மனை விளங்குகின்றது. உயர்ந்தும் பருத்தும் நிற்கும் பெருந்தூண்களும் அவற்றிலிருந்து தொங்கும் போதிகைகளும் அவை தாங்கும் கம்பீரமான கூடங்களும் அவற்றுள் விளங்கும் அழகிய வளைவுகளும் காண்பார் மனத்தைக் கவர்ந்திழுப்பவையாய் உள்ளன. அரைத்த சுண்ணாம்பில் கடுக்காய், வெல்லச்சாறு விட்டு இக் கட்டடப்பூச்சு உருவாக்கப் பெற்றுள்ளது. தூளாக்கி அரைத்த 'வெள்ளைக்கல், சுண்ணாம்புப் பூச்சுகளின்மீது முட்டையின் வெள்ளைப் பகுதியைத் தேய்த்து இதன் தூண்களும் சுவரும் வழவழப்பாயும் பளபளப்பாயும் மெருகேற்றப் பெற்றிருக்கின்றன. இவ் வரண்மனையின் விதானங்களிலும் மேற்சுவர்களிலும் மிக நுண்ணிய முறையில் சுதை உருவங்களும், மலர்த் தோரணங்களும், பிற வேலைப்பாடுகளும் காணப்படுகின்றன.

இப்போது ஐந்து ஏக்கர் ஐயாயிரத்துப் பத்துச் சதுர அடிப்பரப்பளவில் விளங்கும் இவ் வரண்மனை தொடக்கக்காலத்தில் இதனைவிட நான்கு மடங்கு பெரியதாக விளங்கியிருக்கின்றது. திருமலைநாயக்கரின் பேரன் அவரது காலத்திற்குப் பின்பு மதுரையிலிருந்து தலைநகரைத் திருச்சிக்கு மாற்றியதால் இவ் வரண்மனையின் சிறப்புக் குன்றியது. பிற்காலத்தில் இது பேணுவாரற்றுக் கிடந்தது. பிற பகுதிகள் அழிவிற்குள்ளாகி இப்போதுள்ள பகுதி மட்டும் எஞ்சி நிற்கின்றது. இன்று எஞ்சியுள்ள அரண்மனைப் பகுதிகள் நாயக்கரின் அரசவை, நாடகசாலை,பள்ளியறை, பூசையறை என்ற பகுதிகளாகும். நாடகசாலை தமிழ்நாட்டில் அமைந்த பழம் நாடகசாலைகளில் மிக அழகிய நுட்பமான சுதை வேலைப்பாடு கொண்டதாகும். இவ் வரண்மனையில் இப்போது சிறிதும் பெரிதுமாக இருநூற்று நாற்பத்தெட்டுத் தூண்கள் உள்ளன.

நாயக்கர் காலத்தில் இவ் வரண்மனைப்பகுதிகள் சொர்க்க விலாசம், இரெங்கவிலாசம் என்ற இரண்டு பெரும் பிரிவுகளைக் கொண்டிருந்தன. சொர்க்க விலாசத்தில் திருமலைநாயக்கரும், இரெங்க விலாசத்தில் அவர் தம்பி முத்தியாலு நாயக்கரும் வாழ்ந்துள்ளனர். இவ்விரண்டு விலாசங்களைச் சூழ்ந்து பாதிமதில் என்ற பெரும் மதில் ஒன்று எடுக்கப்பெற்றிருந்தது. இது கிழக்கு மேற்காக முந்நூறு மீட்டர் அளவும் வடக்கு தெற்காக இருநூற்று இருபது மீட்டர் அளவும் கொண்டிருந்தது. இரெங்கவிலாசம் என்ற பகுதி அரண்மனையின் வடகிழக்குப் பகுதியாக விளங்கிற்று. அதன் தென்கிழக்கே அரண்மனையின் பழைய நுழைவாயில் அமைந்திருந்தது. அதனைக் கடந்து வரும்போது 'நவபதுகானா' என்றுசொல்லப்பட்ட பதினெட்டு வகையான இசைக்கருவிகள் வைக்கும் இடமிருந்தது. அதற்குத் தெற்கே முத்தியாலு நாயக்கரின் வாழ்விடமும் 'சந்திரிகை மேடை' என்றுசொல்லப்பட்ட மேடை ஒன்றும் நாயக்கரின் குலதெய்வமான இராசராசேசுவரி கோயிலும் இருந்தன. இப்போது இந்த இரெங்கவிலாசம் இருந்த பகுதியில் மிஞ்சியுள்ளது மிக உயரமாகக் கனத்த நிலையில் விளங்கும் பத்துத்தூண்கள் மட்டுமேயாகும். இவற்றைக் கடந்து வந்தால் திருமலைநாயக்கர் அமர்ந்து ஆட்சிபுரிந்த அரசுகட்டிலிருந்த அரசவைப் பகுதியினையும், அதன் முன்னர் அமைந்த பெரிய முற்றத்தினையும் காணலாம். இவ் வரசவையின் தென்மேற்கே பூசையறையும் வடக்கே நாடகசாலையும் பள்ளியறையும் உள்ளன. இக் கட்டடங்களுக்கு மேல் திசையிலேயே அழிந்துபோன வசந்தவாவி, அந்தப்புரம், அரச அதிகாரிகள் வாழ்ந்த மனைகள், யானை, சேவல் ஆகியவற்றின் போர்களைக் காணுமிடங்கள், படைக்கலன்கள், முரசுகள் வைக்கும் இடங்கள், தோட்டங்கள் முதலியன இருந்தன.

இவ் வரண்மனையில் நாயக்கர் காலத்தில் நவராத்திரி விழா, செங்கோல் விழாப் போன்ற பெருவிழாக்கள் சிறப்பாக நடைபெற்றுள்ளன. சேத்திரைய போன்ற தெலுங்குப் புலவர்கள் இங்குள்ள

அரசவைக்கு வந்து திருமலைநாயக்கரிடம் பாடிப் பரிசில்கள் பெற்றிருக்கின்றனர். இராபர்ட்-டி நொபிலி போன்ற புகழ்பெற்ற கிறித்தவத் துறவிகள் நாயக்க ருக்கு மேலைநாட்டுப் பொருள்களை அன்பாக அளித்து அவரிடம் பரிசிலும், கிறித்தவத்தை நாயக் கர் நாட்டில் பரப்ப வாய்ப்பும் பெற்றுத் திரும்பி இருக்கின்றனர்.

இவ் வரண்மனை வெள்ளையர் காலத்தில் அச்சுக்கூடமாகவும், மாவட்ட ஆட்சியர் அலுவலக மாகவும் அண்மைக்காலம் வரை நீதிமன்றமாகவும் பயன்படுத்தப்பட்டிருக்கின்றது. சென்னையில் கி.பி. 1882-இல் ஆளுநராக விளங்கிய நேப்பியரால் சுமார் இரண்டரை இலட்சம் உருபாய் வரை செலவிடப் பெற்று அரண்மனையின் இப்போதுள்ள பகுதிகள் பாதுகாக்கப் பெற்றிருக்கின்றன. அதன்பின்பு 1971-இலிருந்து தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை இவ் வரண்மனையை வரலாற்றுச் சின்னமாக எடுத்துக்கொண்டு இதன் எழிலையும் பழமையையும் பெருமையையும் பேணிக் காத்து வரு கின்றது.

வெ.வே.

**திருமலைபுரம்** பாண்டிய நாட்டில் தென் காசிக்கருகிலுள்ள கடைய நல்லூர் இரயிலடியி லிருந்து 8 கி.மீ. தொலைவிலுள்ள ஊர். பாண்டியர் காலத்துக்(சுமார் கி.பி. 8-ஆம் நூற்றாண்டின்)குடை வரைக் கோயில் வாயிலாக இவ்வூர் புகழ் பெறு கிறது. இது, இவ்வூரில் அமைந்த 'வண்ணச்சிப் பாறை' எனும் குன்றில் குடையப்பட்டுள்ளது. இது, மண்டகப்பட்டு, தளவானூர், மாமண்டூர்ஆகிய இடங் களில் உள்ள மகேந்திரவர்ம பல்லவனின் குடை வரைகளை ஒத்துள்ளது. இதன் தூண்கள் பருத்தும்


குடைவரைக் கோயில் முகப்பு

எளிமையானவைகளாயும் காணப்படுகின்றன. அக் காலத்தில் வாகடகர், பல்லவர், இராட்டிரகூடர் ஆகியோரின் கட்டடங்களில் பெரிதும் செதுக்கப் படும் மதங்கமகரங்களை இக்குடைவரைத் தூண்களி லும் காணலாம். அம்மகரத்தின் முற்பகுதி யானை வடிவிலும் (மதங்கம்), பிற்பகுதி மகரமீன் வடிவிலும் செதுக்கப்படும். மகரமீனின் வால்பகுதி அழகிய கருக்கு வேலைப்பாடுகளைக் (designs) கொண் டது.

இக்குடைவரையில் ஒரு முன் மண்டபமும், அதன் பின்னே ஒரு கருவறையும் உள்ளன. கருவறை நுழைவாயிலின் இரு மருங்கிலும் துவார பாலகர் களின் புடைப்புச் சிற்பங்கள் உள்ளன. எதிர்ச் சுவ ரில் விநாயகர், திருமால், நடராசர் ஆகியோரின் சிற் பங்களும், நடராசருக்கு எதிரே பிரமனின் சிற்ப மும் புடைப்புச் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள் ளன. துவாரபாலகர்களுக்கு இரு கரங்களும், தெய்வச் சிற்பங்களுக்கு நாற்கரங்களும் உள்ளன. இங்குள்ள நடராசர் சதுர தாண்டவ நிலையில் காட்டப்பட்டுள் ளார்.


குடைவரையின் கருவறை

இக்குடைவரையின் மண்டபத்துக் கூரையிலும் சுவரிலும் அழகிய வண்ண ஓவியங்கள் வரையப் பட்டிருந்தன. அவை இன்று பெரிதும் அழிந்துபோன நிலையில் உள்ளன. சிற்பங்களின்மீதும் வண்ணம் பூசப்பட்டிருந்ததற்கான சுவடுகள் உள்ளன. இக் கவின்மிகு ஓவியங்களையும், அவற்றின் சிறப்புத் தன்மையையும் 1935-இல் முதன்முதலாகக் கண்டு பிடித்து, உலகறியச் செய்தவர் துபுராய் (M.Jouveau Dubreuil) என்ற பிரெஞ்சு அறிஞராவார். இவரே சித்தன்னவாசல் குடைவரையிலும், காஞ்சிக் கைலாச

நாதர் கோயிலிலுமுள்ள வண்ண ஓவியங்களைக் கண்டுபிடித்து உலகறியச் செய்தவராவார். திருமலைபுரத்து வண்ண ஓவியங்களில் காணப்படும் தேவ கணங்களும், சிங்கம், வாத்துகள முதலியனவும், மலர்களும், பிற வேலைபபாடுகளும் பெரிதும் அசந்தா, சித்தன்னவாசல் ஓவியஙகளை ஒத்துள்ளன என்பார் அறிஞர் துபுராய். இன்று இககுடைவரை இந்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையினரின் மேற்பார்வையில் நன்கு பராமரிக்கப்பட்டு வருகிறது. இரா.வே

**திருமலையாண்டான்**: இவர் ஆளவந்தாரின மாணவர்; இராமானுசரின் ஞானாசிரியர்களுள் ஒருவர்; நம்மாழவார் அருளிய திருவாய்மொழிப் பாசுரங்களுககு விரிவான விளக்கங்களைத் திருமலையாணடானிடம் நேரில கேட்டு மகிழந்தவர் இராமானுசர். இவரது பிறப்பிடம் அழகர்கோவில். பின்னர் இவர் திருவரங்கத்தையே தமது வாழ்விடமாகக் கொணடாா. இவா ஞானபூரணர் எனறும் மாலாதரர் எனறும பெருமையாக அழைக்கப்பட்டார். நா.பா.

**திருமலை வெண்பா**: இது திருக்குறளை ஈற்றுப் பகுதியாகக் கொணடவெணபா. முன்னிரு அடிகளில், ஒருகுறளின் கருத்தை விளககும் பாஙகில், கதை, வரலாறு, புராண நிகழ்ச்சிகளுள் ஒனறைக் கொணடு பாடப்பெறற வெணபா நூலகள் பல தோன்றின. அவவகையிலமைந்த நூல்களுள ஒனறு திருமலை வெண்பா என்னும் நூலாகும். திருக்குறளின அதிகாரம ஒவவொனறிலிருந்தும் ஒரு குறளைத தோநது, அதன அடிகளை ஈற்றிரணடு அடிகளாகக் கொண்ட வெணபாக்களால் இநநூல அமைக்கபபட்டுளளது. மேலும் இது, திருமலைக் கொழுநது பிளளையன் என்பவரை முனனிலைப் படுததிப பாடப் பட்டுள்ளது. அவர் கி பி.16-ஆம் நூறறாணடின பிற பகுதியில் திருநெலவேலிச் சீமையை ஆணட வட மலையப்பப் பிள்ளையனுக்குப் பின் வந்தவராவாா. இந்நூலின சில பாடல்கள் புறத்திரட்டுசசுருக்கம்என னும நூலில் இடம்பெற்றுள்ளன எனறும, அதனால இந்நூல், கி.பி 17-ஆம் நூறறாணடின் பிற்பகுதியைச சார்ந்ததாகும் என்றும் திரு. மு.அருணாசலம குறிப பிட்டுள்ளார். நூலாசிரியர் முதலிய பிற செய்திகள அறியக்கூடவிலலை. 'உளளுவதெல்லாம்' எனனும் திருக்குறளை விளக்கும் வகையில், பாரத நிகழச்சி ஒனறை மேற்கோளாககித் 'தூசு துரோபதைபால சோர்வு கணடும பாணடவர்கோன, மாசினம் விட்டான திருமலைக் கொழுந்தே' என்று இதன்கண பாடப் பட்டுளளது. வெகுளியினை உள்ளாதான உயர்விறகுக காட்டப்பட்ட இசசெய்தியினைப் பொருத்தமுடையதெனக் கருதாது குறை கூறிய திறனாய்வாளர்களும் உளா. அ மா.ப.

**திருமழபாடி**: காவிரியின வடகரையிலுள்ள சோழநாட்டுத் திருத்தலங்களுள 54-ஆம் தலம் மழபாடி. இது திருச்சி மாவட்டத்தில் உள்ளது. திருச்சியிலிருந்து திருமானூர் செல்லும் பாதையில் 50 கி மீ. கிழக்கே உள்ளது; திருவையாற்றுக்கு வட மேற்கே 8 கி மீ. தொலைவிலுளது. கொள்ளிடத்தின வடகரையில் உள்ளது இவ்வூர். இறைவனுடைய திருப்பெயர் வைரத்தூண் நாதர் (வச்சிரதம்பேசுவரர்), இறைவியின் திருப்பெயா அழகாம்பிகை

திருஞான சம்பநதா 3 பதிகங்களும, திருநாவுக்கரசா 2 பதிகங்களும், சுந்தரமூர்த்தி நாயனாா 1 பதிகமும் பாடியுளளனர். 'மறை நான்கும் ஓலமிட்டு வரமேற்கும் மழபாடி வயிரத்தூணே' என்பர் அப பரடிகள்.

இததலத்திறகுப் பஙகுனி மாதத்தில் திருவையாற்றிலிருந்து ஐயாறப்பரும் நந்திதேவரும வருகினறனர். நந்திதேவருக்குத் திருககலயாணம் நடககின்றது. நந்திதேவா அவா மனைவி சுயசை ஆகியோர் சிலைகள கோவிலில் இருககினறன.

சுந்தரா திருவாலமபொழிலில் இரவு தஙகிய பொழுது இறைவன அவருடைய கனவில தோனறி, 'மழபாடியில் வருவதற்கு நினைகக மறநதனையோ' எனறு அருளத துயிலெழுநது மழபாடிபோந்து இறைவனைப பாடினார் எனப அககுறிப்புத் தோனற அவருடைய பதிகத்தில் ஒவ்வொரு பாடலிலும 'இனி யாரை நினைககேனே' என்று அமைநதுளளமை காணலாம்.

இறைவன மழுஏநதி ஆடுதலின மழுஆடி மழ பாடி ஆயிறறு எனறும, மழவாகள வாழநதமையின மழபாடி ஆயிற்று என்றும் பெயர்க காரணம் சுட்டுவர். அ வி

**திருமழிசை**: இது ஒரு வைணவத் தலம்; செஙகற்பட்டு மாவட்டம சிரீபெரும்புதூர் வட்டததில உள்ளது. இது பனனிரு ஆழவாாகளுள் ஒருவராகிய திருமழிசையாழ்வார் பிறநத இடமாகும் இஙகுத் திருமாலுக்குக் கோயில் கட்டப்பட்டிருப்பதுடன திருமழிசை யாழ்வருக்கும் ஒரு கோயில் உளளது. இஙகுச் சிவன கோயில் ஒனறும உண்டு. இவவூர் நெசவுத் தொழிலுக்குப் பெயர்பெறறது. வேளாணமையும சிறப்பாக நடைபெறுகிறது. இஙகு அரசினர் உயர் நிலைப் பளளி ஒனறும உளளது. வைணவ அடியார்கள் இனறும இத்தலததிறகுச் சென்று சேவிப்பதைப் பெருமையாகக கருதுகிறார்கள், சா.உ.

**திருமழிசை ஆழ்வார்:** தைத் திங்கள் மக நாளில் சக்கரத் தாழ்வானின் அமிசமாகப் பார்க்கவி முனிவரின் மகனாய்த் திருமழிசையில் தோன்றி, திருவாளன் என்பவனால் வளர்க்கப் பெற்றவர் இவர். இந்தச் செய்தி ஆழ்வார்கள் பற்றிய வரலாற்றுக் கருத்துகளைத் தரும் குருபரம்பரை, தேசிகப் பிரபந்தம், திவ்யசூரி சரிதம் முதலியவற்றில் அமைந்துள்ளது. இவர்க்குப் பக்தி சாரர் என்னும் பெயரும் உண்டு. இவர்க்குக் குழந்தைப் பருவத்தில் பால் அளித்து வந்த இடையன் ஒருவனின் மகன் கணிகண்ணன் என்பான் இவர்பால் அன்பு கொண்டு சீடன் ஆயினன.

ஆறுதரிசனம், புத்தம், சமணம், சைவம் முதலிய சமயக் கொள்கைகளைக் கற்றுத் தெளிந்து வைணவத்தின் சிறப்பை இவர் நிலை நாட்டினார். யோகம், பக்தி ஆகிய இரு நெறிகளையும் இவர் பின்பற்றினார். இவர் காலத்தவராகக் கருதப்பெறும பொய்கை ஆழ்வார் இவாக்கு யோகநெறியைப் புகட்டியதாகவும் அதனால் இவர் பன்னூறு ஆண்டுகள் யோகத்தில் இருந்ததாகவும் திவ்விய சூரி சரிதம் கூறும். இவரைத் திருமூலரோடு ஒப்பிடுவர்.

இவர்பால் திருமாலுக்கு இருந்த ஈடுபாடும், அரசனைத் துச்சமெனக் கருதும் இவர்தம் வைராக்கிய உள்ளமும் புலப்படுத்தவல்ல நிகழ்ச்சி ஒனறு இவர் வாழ்வில் நிகழ்ந்ததாக இவர் பற்றிய வரலாறு கூறுகிறது.

**ஆழ்வார் அருளிச் செயல்கள்:** இவர் பாடியன இரு பிரபந்தஙகள். அவை நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் அமைந்துள. திருச்சந்த விருத்தம், நானமுகன் திருவநதாதி என்பனவே அவை. திருச்சந்த விருத்தம் 120 சந்தக் கலிவிருத்தததில் அமைநதுளது அதில் சித்தர்கள் பாடற்போக்கு காணப்பெறுகிறது. இவரது யோகத் தெளிவைப் புலப்படுத்தவல்லது இந்தப் பிரபந்தம். இவர்தம் திருச்சந்த விருத்தப பாடல், திருமால் இவர் உளளத்தில் புகுநது பரவிய யோக நிலையை உணர்த்தவல்லது. அப்படியே நானமுகன திருவந்தாதி இவர்தம் பக்திச் சிறப்பைப் புலப்படுத்தவலலது; 100 வெணபாக்களால் அமைநதது. ‘பக்தி உழவன’ என்ற புதியதொரு சொலலாட்சியை இந்நூலில் தநதுள்ளார் ஆழ்வார். அனறியும் திருக்குறளில் இவர்க்கிருந்த ஈடுபாடும் புலப்படக் காணலாம்.

திருக்குடந்தை எமபெருமானிடத்து இவர் ஆர்வத்தினர். இத்தகு ஆர்வத்திற்கு ஆளான ஆராவமுதன் காத்துத் தலைமை பூண்டலால் தனககே உரித்தான ‘பிரான்’ என்னும் பட்டததை இவர்க்கு அளித்து, அவர்பால் அன்பின் ஆழத்தால் அமைந்த ஆழ்வார்’ என்னும் பட்டத்தைத் தான பெற்றுக் கொண்டார். அதனால் ‘ஆராவமுத ஆழ்வான்’ என பது திருக்குடந்தைத் திருமாளிகையில் குடிகொணடிருக்கும் திருமாலின் பெயராகவும் திருமழிசைப் பிரான் என்பது இவர்க்குப் பெயராகவும் அமையலாயின

இன்னும், பிற மதங்களை மறுக்கவல்ல வாதம் பல எப்போதும் செய்து கொணடிருப்பவர் இவர்; அத்தகு கருத்துடைய பிரபந்தங்களைப் பாடிக் கொணடும் இருப்பார். அதனால வைணவச சான்றோா இவரை ‘உறையிலிடாதவர்’ (பகைவரைத் தகர்ப்பதற்காக உருவின வாளை எப்போதும உறையிலிடாதவர் போன்றவா) என்று போற்றிப்பாராட்டி உரைப்பர்.

பௌதத, சமண, சைவ சமயஙகளை மறுத்து இவா உரைப்பதிலிருந்தும் முதல மூனறு ஆழ்வார்களாகிய பொய்கையார், பூதத்தார், பேயாழ்வாா வாழ்ந்த காலத்தவர் இவர் எனறு கருதப் பெறுவதாலும், இவர் சீடராகிய கணிகண்ணனால வைணவனாக மாறியவன் இரணடாம நந்திவாம பல்லவனாக (கி.பி. 731–794) இருககககூடும என ஊகிபபதாலும் இவரது காலம் கி.பி எடடாம் நூற்றாணடு எனக் கூறலாம். பொன்.சௌ.

**திருமறைக்காடு:** சோழநாட்டில காவிரியின தென்கரையிலுள்ள சிவததலங்களுள 125–ஆம தலம் திருமறைக்காடு; தஞசை மாவட்டத்தின தென கோடியில் உள்ளது. இன்று வழஙகும் பெயர் வேதாரணியம. இங்குப் புகைவண்டி நிலையம உளளது. திருத்துறைப்பூண்டியிலிருநது 35 கி.மீ. தொலைவில கடற்கரையில அமைநதுளளது.

இறைவன் திருப்பெயர் மறைக்காட்டீசர்; இறைவி திருப்பெயர் யாழைப் பழித்த மொழியமமை. நானகு வேதஙகளும் வழிபட்டுப் பேறுபெற்ற இடம் ஆன தால் மறைக்காடு எனற பெயா ஏறபட்டது. தூய தமிழ்ப் பெயரை வடமொழிப் படுத்தி வேதாரணியம் எனறு இன்று வழஙகுகினறனர்.

இது சப்தவிடங்கத் தலங்களுள ஒனறு. புவனி விடஙகர். பிருங்க நடனம். கோயில் மிகப் பெரியது. அப்பர் சுவாமிகளும சம்பநத மூர்ததிகளும் அறைக கதவைத் திறக்கவும் அடைககவும பாடிய தலம். சேரமான் பெருமாள நாயனாா சுந்தரமூாத்தி நாயனாருடன் சென்று இறைவனைத் தரிசித்த தலம. இறைவனும் அம்மையும் திருமணக் கோலத்தில நினறு அருளபுரிகின்றார்கள்.

தாஙகி நிறகிறார். வலப்பக்கம் நான்கு திருக்கைகளில் சக்கரம், கததி, புட்பம், அமபு ஆகியவறறையும், இடப்பக்கம நானகு திருக்கைகளில சஙகம, வில, கேடயம், கதை ஆகியவற்றையும் ஏநதிய வணணம விளஙகுகின்றார் இநத எம்பெருமானைபபாடிய திருமஙகையாழ்வார் 'செமபொனிலஙகு வலஙகை வாளி திண்சிலை தணடொடு சஙகம ஒளவாள, உம பரிருசுடராழியோடு கேடகம் ஒண்மலா பற்றி எறறே' என்று எம்பெருமான தம திருக்கைகளில எட்டு ஆயுதஙகளைத் தாஙகிநிற்பதை அனுபவித்தாா. பேயாழவாரும் திருமஙகையாழவாரும இததலத்தை மஙகளாசாசனம செய்துளளனா.ஒவவொரு திவவியதேசத்தையும் அநுபவிதத திருமஙகையாழ்வாா அத்தலததிறகான பதிகஙகளில 'பிரிதி சென்றடை நெஞ்சே'. 'நைமிசாரணியத்துள எநதாய்', 'எவவுளகிடநதானே' எனறு இவ்வகையில் ஒவவொரு பாசுரத்தின முடிவிலும முத்திரையாகக கூறிவழிபடுவது வழககம. அதேபோல இத்தலத்திறகான பதிகத்தின் ஒவவொரு பாட்டு முடிவிலும் 'அடடபுயகரத்தேனெனறாரே' எனறு குறிபபிட்டுளளாா.

நாயகியின நிலையையடைநத திருமஙகையாழவார் இத்தலத்து எமபெருமானைச் சேவித்தாா அவருக்கு எஙகும் கணடறியாத திருக்கோலமாயிருந்தது. அப்பெருமானை இன்னானென்று அறிவதறகாக 'அருகிருந்தாரை இபபெரியவர் யார் கொல' எனறு கேட்க, அதறகு எம்பெருமான தானே 'நான அட்டபுயகரததேன்' எனறு மறுமொழி கூற, ஆழவார் நாயகி அருகிருநத தம்தோழிகளிடம் அவராா கொல?' எனறு கேட்டேன்; 'அட்டபுயகரததேன' என்று எம்பெருமான கூறினான எனறு சொலலுவதாக இப்பதிகம் அமைநதுளளது. எஸ கி.

**திருவடகுரங்காடுதுறை** எனனும் இத்திருவூர் தஞசை மாவட்டம் பாபநாசம வட்டத்தில காவிரியின் வடகரையில அமைந்துளளது. கும்பகோணம மயிலாடுதுறைப் பேருநது வழியில உளள ஆடுதுறை தென் குரஙகாடுதுறைஇதுசுக்கிரீவன் வழிபட்டதிருவூர். கும்பகோணத்திலிருநது திருவையாறு போகும் வழியில் திருவையாற்றிலிருநது பததுக கிலோமீட்டர் தூரததில உளளது. வாலி வழிபட்ட திருவூா வட குரங்காடுதுறை. ஆடுதுறைப் பெருமாள கோவில என்பது கோவிலுக்கருகில பேருநது நிறகுமிடமாகும்.

வாலியார் வழிபட்ட இத்திருக்கோவிற் சிறபபைத திருஞானசம்பநதர் அருளிச் செய்கின்றார். வழிபபோக்காக வந்த கருபபவதியாகிய ஒரு செட்டிப் பெண்ணுக்காகத் தென்னஙகுலையை வளையச் செய்து இளநீர் பறித்துச் சீவித்தநது தாகவிடாய் போககிய கருணையாளா இததிருவூரில வாழ்பெருமான. இக்காரணம் பறறி இறைவருககுக் குலைவணங்கீசா எனகிற திருப்பெயா வழஙகலாயிற்று தயாநிதேசுவரா, அழகுமுடிநாதர் எனபனவாகிய திருப்பெயாகளுமுள என இவ்வாறு அருள்பெற்ற பெணணின திருவடிவம மகாமணடபததில இருககினறது. அருதத மணடபத்தில கற்றூண ஒனறில வாலி வழிபட்ட வரலாறு சிறபபாகக் காட்டப் பெறறுளளது சிட்டுக்குருவி ஒனறு பழிபட்டு முததியடைநத திருவூா இதுவாகும். கருப்பககிரக விமானத்திலுள்ள சுதைச் சிறபஙகள வாலி வழிபட்டகாட்சி, செட்டிப் பெண்ணுககு இறைவாதென்னைமரததை வளையசசெய்து இளநீா சீவித்தநத காட்சி, சிட்டுக்குருவி வழிபடும காட்சி முதலியவறறை எடுததுககாட்டுவன.

இங்கு நடராசப பெருமான மூலவராகச் சிவகாமியோடு சிறந்த சிறப நலனகள தோனற விளஙகுகினறாா; இறைவி திருப்பெயர் அழகு சடைமுடி அம்மை இவவூாக கோவிலில சோழ மன்னாகளுள கோப்பரகேசரிவாமன, பாணடியன் தலைகொணட பரகேசரிவர்மன், முதலாம் இராசராசன், முதலாம இராசேந்திரன, மூன்றாஙகுலோத்துஙகன, திரிபுவனச சக்கரவாத்தி விககிரம பாணடியன் ஆகியோர்கள காலக் கலவெட்டுகள விளஙகுகினறன. சு.சு.

**திருவடி அரங்கசாமி முதலியார்:** தொணடை மணடலத்தைச் சார்நத பொனவிளைகளததூரில கி.பி 1886–ஆம ஆணடில பிறநத இவர் சிறநத தமிழப புலமையும் ஆட்சித திறனும் சிறந்து விளஙகினாா.

சென்னைக கிறிததவக கலலூரியில தம் பட்டப் படிபபை முடிதத இவா, அககாலச் சென்னை மாகாண வருவாயததுறையில பணி மேறகொணடு, துணை ஆட்சியர் பதவியில சிறநது விளங்கினார். பினனாச் சென்னை நகர உணவுப பஙகீட்டுத்துறைத தலைமை அலுவலராகவும், மாவட்டத் தனி அலுவலராகவும், இலஙகை பர்மா அகதிகள நல்வாழவுத துறை அதிகாரியாகவும் பணியாறறினார். இவர்தம பணிகளைப் பாராட்டி அனறைய அரசாங்கம இவருக்கு 'இராவ் பகதூர்ப' பட்டம வழஙகிப பாராட்டியது.

பிரமஞான சஙக உறுப்பினராகத திகழ்ந்த இவர் தவத்திரு ஞானியாரடிகளின் மாணவராகவும் விளஙகினார்; சென்னைச் சைவ சித்தாநத சபையின செயலராகப் பணியாற்றியுளளார்.

தமிழ்ப புலமையும சைவ உணர்வும் சான்ற ஆதிலட்சுமி அமமையார் என்பவரை மனைவியாகப்



திருவடிஅரங்கசாமி முதலியார்

பெற்ற இவருக்கு இரு பெண்மக்களும் ஓர் ஆண்மகனும் உள்ளனர். இவர், தம் ஓய்வுக்காலத்தில், பழனியில், 'திருவடி' என்றோர் சிற்றில் அமைத்துக்கொண்டு வாழ்ந்தபோது, அங்குத் தமிழிலக்கிய மன்றம் உருவாகிச் சிறக்கப் பல்லாற்றானும் துணைபுரிந்தார். இவர், 'திருவடி ஐயர்' என்றே அன்பர் பலராலும் போற்றப் பெற்றார். எளிய மக்கள் உணர்ந்துகொள்ளும் வகையில் சிவஞான போதத்திற்கு ஓர் உரை எழுதிப் பதிப்பித்துள்ளார். இவர் 1971-ஆம் ஆண்டு சென்னையில் காலமானார். அ.மா.ப.

**திருவண்ணாமலை:** இது வடார்க்காடு மாவட்டத்திலுள்ள புகழ்பெற்ற சைவத்தலம். ஐம்பூதத் தலங்களில் இது நெருப்புத் தலமாகத் திகழ்கிறது. இத்திருநகர் வட்டத் தலைநகரமாகவும் விளங்குகிறது. இந்நகரின் மக்கள்தொகை 89,462 (1981).

திருமாலும் நான்முகனும் எட்ட முடியாத வகையில் சிவலிங்கத் திருமேனியில் சிவபெருமான் ஒளியுருவாய் நின்ற காரணத்தால் அண்ண முடியாத எட்ட முடியாத என்னும் பொருள்பட 'அண்ணாமலை' என்னும் பெயர் பெற்றது. இத்திருத்தலம் அருணகிரி, அருணமலை, அருணாசலம், அருணை, சோணகிரி, சோணாசலம் என்னும் பெயர்களாலும் குறிக்கப்பெறும். இத்தலத்து இறைவன் அண்ணாமலையாரைத் திருவண்ணாமலை ஆண்டார், திருவண்ணாமலை உடையார், திருவண்ணாமலை ஆழ்வார், திருவண்ணாமலை மகாதேவர், அண்ணா நாட்டு உடையார் என்று பலவாறு கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இறைவியின் திருப்பெயர் உண்ணாமுலையம்மை. இவரைத் திருக்காம கோட்டமுடைய தம்பிராட்டியார் என்றும், உலகுடைய பெருமாள் நம்பிராட்டியார் என்றும் கல்வெட்டுகள் குறிக்கின்றன. இத்தலத்தின் புனித மரம் மகிழ மரம்.



கோயில் குளமும் கோபுரமும்-திருவண்ணாமலை

தமிழ்நாட்டுப் பெரிய கோயில்களுள் இதுவும் ஒன்று. 'மண்ணார்ந்தன அருவித் திரள் மழலைம் முழவதிரும் அண்ணாமலை தொழுவார் வினை வழுவா வண்ணம் அறுமே' (தேவாரம்) என்று திருஞானசம்பந்தர் போற்றியுள்ளார். இத்திருக்கோயில் 24 ஏக்கர் பரப்புடையது. இதில் 6 திருச்சுற்றுகளும் 9 கோபுரங்களும் அமைந்துள்ளன. இங்குள்ள ஆயிரங்கால் மண்டபத்தைக் கிருட்டிண தேவராயர் கட்டியதாகக் கூறுவர். இம்மண்டபத்தின் கீழே நாயக்கர் காலச் சிற்பங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. பிடாரி கோயிலில் தனித்தனிக் கற்களில் ஏழு மாதர்களின் திருவுருவச் சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இக்கோயிலின் இரண்டாம் திருச்சுற்றின் மாளிகை விதானத்தில் பல்வேறு பூ வேலைப்பாடுகள் நிறைந்த ஓவியங்கள் காணப்படுகின்றன. மலையின் பின்புறத்திலுள்ள எழுத்து மண்டபத்தில் திருப்பாற் கடலைக் கடையும்

காட்சி, சிவபெருமான் உமாதேவியாரை மணந்து கொள்ளும் காட்சி, கண்ணன் கோபியர்களுடன் விளங்கும் காட்சி போன்றவை ஓவியமாக எழுதப்பட்டுள்ளன. இங்கு முருகப்பெருமான் வள்ளி நாயகியை மணந்து கொள்ளும் வரலாறும் ஓவியமாகத் தீட்டப் பெற்றுள்ளது. கோயிலில் அமைந்த திருச்சுற்றின் தென்பகுதியில் 63 நாயன்மார்களின் திருவுருவங்கள் ஓவியங்களாகத் தீட்டப்பெற்றுள்ளன.

திருக்கோயிலினுள் கம்பத்திளையனார் சந்நிதிக்குத் தெற்கே சிவகங்கைத் தீர்த்தம் அமைந்துள்ளது. பிரம தீர்த்தம் காலபைரவர் சந்நிதிக்கு எதிரேயுள்ளது. இவ்விரு தீர்த்தங்களிலும் சுவாமி தீர்த்தவாரி நடைபெறுகின்றது.



கோயில் கோபுரங்கள்-திருவண்ணாமலை

இத்திருக்கோயிலில் கார்த்திகைத் திருவிழா, பங்குனித் திருவிழா, தைத்திருவிழா போன்றவை மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றன. கார்த்திகைத் தீபப் பெருவிழா 13 நாள்கள் நடைபெறும். இதில் 3 நாள்கள் துர்க்கை அம்மன் கோயிலிலும், 10 நாள்கள் அண்ணாமலையார் கோயிலிலும் நடைபெறும். மலையின் உச்சியில் பெருஞ்சோதி ஏற்றுவர். இராசேந்திர சோழன் காலத்தில் கார்த்திகைத் திருவிழாவும், பங்குனித் திருவிழாவும் சிறப்பாக நடைபெற்றுள்ளன. மூன்றாம் குலோத்துங்க மன்னர் காலத்தில் அவ்விரு விழாக்களுடன் தை மாதத்தில் ஒரு திருவிழாவும் நடைபெற்றுள்ளது. அக்காலத்திலும் கார்த்திகைத் திருவிழாவே முதன்மை வாய்ந்ததாக விளங்கியுள்ளது.

இத்தலத்தில் முருகப்பெருமானால் செபமாலை அளிக்கப் பெற்று, உபதேசமும் செய்யப்பெற்று ஆட்கொள்ளப்பட்ட சிறப்புடையார் அருணகிரிநாதராவார். இவருக்கு 'முத்தைத் தரு பத்தித் திருநகை' என்ற திருப்புகழுக்கு முருகனே அடி எடுத்துக் கொடுத்ததாகக் கூறுவர்.

இரமண மகரிசி திருச்சுழியிலிருந்து இங்கு வந்து தவம்புரிந்து ஞானம் பெற்றார். அவருடைய உறைவிடமே இன்று இரமணாசிரமமாக விளங்கி வருகிறது. இத்திருத்தலத்தில் சேசாத்திரி சாமிகள் ஆசிரமம், ஈசானியமடம், அறுபத்து மூவர் மடம், வீரசைவ மடம் முதலியனவும் இயங்கிவருகின்றன. தேவாரமும் திருப்புகழும் மட்டுமன்றி இவ்வூரின் பெயரால் இயற்றப்பட்டுள்ள கலம்பகம், பிள்ளைத் தமிழ், சதகம், அந்தாதி முதலியனவும் இத்தலத்தின் பெருமைகளை விரிவாகப் பேசுகின்றன. சா.உ.

**திருவண்ணாமலை ஆதீனம்**: காண்க: திருமடங்கள்.

**திருவண்பரிசாரம்**: மலைநாட்டுத் திருப்பதிகளில் யாத்திரை செய்ய விரும்புபவர்கள் திருக்குறுங்குடியிலிருந்து நாகர்கோயில் வழியில் செல்லும் போது திருவண்பரிசாரமே முதன்முதலாகச் சேவிக்கத் தக்கமலைநாட்டுத் திருப்பதியாகும். இத்தலத்தில் திருவாழ்மார்பன், கமலவல்லி நாச்சியாருடன் இந்திர கல்யாண விமானத்தில் வீற்றிருந்த திருக்கோலத்தில் சேவை நல்குகிறான். இது நம்மாழ்வாரின் தாயார் உடைய நங்கை தோன்றிய திருத்தலம். உடையநங்கை இந்த எம்பெருமானின் அருளாலேயே நம்மாழ்வாரைப் பெற்றாள். இத்தலம் மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றுள் ஒன்று. மலைநாட்டுத் திருப்பதிகளுள் இத்தலத்தில் மட்டும் நம்மாழ்வாரின் அழகிய விக்கிரகம் உள்ளது. ஆழ்வா

ருக்கு இங்கு உற்சவமும் நடைபெறுகிறது.இந்த ஊரில் நம்மாழ்வார் நூல்நிலையம் ஒன்றும் உள்ளது. 'வருவார் செல்வார் வண்பரிசாரம்' என்கிறார் ஆழ்வார். இத்தலத்து எம்பெருமானைச் சேவித்துத் தாங்கள் விரும்பும் பயனைப் பெற,பலர் வருவாரும் செல்வாருமாயிருப்பராம். எம்பெருமான் இரணியனைச் சம்காரம் செய்துவிட்டுச் சினக்குறிப்பொடு இருந்தபோது இலட்சுமியும் பயந்து தவம் செய்ய வந்ததாகவும், பிரகலாதனின் வேண்டுகோளுக்கிணங்கிச் சாந்தமான வடிவுடன் இலட்சுமியைத் தேடிவர, இலட்சுமியும் ஆனந்தமடைந்து எம்பெருமானின் திருமார்பில் 'நித்யவாசம்' செய்ததாகவும், அதனால், இந்த எம்பெருமானுக்கு 'திருவாழ்மார்பன்' என்ற திருநாமம் ஏற்பட்டதாகவும் கூறப்படுகிறது.

திருவாய்மொழி 8 ஆம்பத்து 3-ஆம் பதிகமாகிய 'அங்கு மிங்கும்' பதிகத்தில் ஏழாம் பாட்டில் 'வருவார் செல்வார் வண்பரிசாரத்திருந்த எம் திருவாழ் மார்பற்கு' என்று இருப்பதொன்றே இத்தலத்திற்குப் பாடலாகும். ஏனைய பாட்டுகளில் இத்தலத்தின் திருநாமம் பொறிக்கப்பட்டிலதாயினும் இப்பதிகம் முழுவதும் திருவண்பரிசாரத் திருப்பதியையே மங்களாசாசனம் செய்வதாக முன்னை ஆசாரியர்களின் திருவுள்ளமாகும். எஸ்.கி.

**திருவண்புருடோத்தமம்**: சீர்காழியிலிருந்து சுமார் ஏழு கி.மீ.தொலைவில் உள்ள திவ்யதேசம் திருவண்புருடோத்தமம். திருநாங்கூர் பதினொரு திவ்வியதேசங்களுள் இதுவும் ஒன்றாகும். புருடோத்தமப் பெருமாள் புருடோத்தம நாயகியுடன் நின்ற திருக்கோலத்தில் விளங்குகிறார். இங்கு உபமன்யுவிற்குப் பிரத்யட்சம். புருடர்கள் அனைவரிலும் எல்லா வற்றாலும் சிறந்தவனான புருடோத்தமன் எழுந்தருளியிருக்கும் சிறந்த நகரானது பற்றி இத்தலம் 'திருவண்புருடோத்தமம்' என்று பெயர் பெற்றது.

பெரிய திருமொழி நான்காம் பத்து, இரண்டாம் திருமொழியான 'கம்பமாகடல்' என்று தொடங்கும் திருமொழியில் இத்தலத்தைப் பற்றிப் பாடியுள்ளார் திருமங்கையாழ்வார். 'மா, பலா, வாழை, சண்பகம், குருக்கத்தி, பாக்கு ஆகியவற்றால் சூழப்பட்ட அழகிய சோலைகளையுடையது இத்தலம்' என்கிறார் ஆழ்வார். மயில்கள் நடனமாட, அதற்கு ஈடாக வண்டுகள் இசைபாடிட அச்சோலைகள் விளங்குகின்றனவாம், 'பகலவன் ஒளி மறைக்கும் மாடமாளிகை சூழ்தரு நாங்கூர் வண்புருடோத்தமம்' என்று சூரிய கிரணங்களை மறைக்கும்படியான மண்டபங்களையும் மாளிகைகளையும் கொண்டதாக வருணிக்கிறார் ஆழ்வார்.

இத்தலத்தை அனுபவிக்கின்ற பிள்ளைப் பெருமாளய்யங்கார் 'சாய்ந்த திருவரங்கம் தண்வேங்கடம், குடந்தை, ஏய்ந்த திருமாலிருஞ் சோலை-பூந்துவரை, வண்புருடோத்தமமாம் வானவர்க்கும் வானவனாம், ஒண் புருடோத்தமன்றனூர்' என்பதால் தேவாதி தேவனாகிய அழகிய புருடோத்தமன் உறையும் இடங்கள் திருவரங்கம், திருவேங்கடம், குடந்தை, திருமாலிருஞ்சோலை, துவாரகை, வண் புருடோத்தமம் ஆகியவை என்கிறார். எஸ்.கி.

**திருவண்வண்டூர்**: திருவனந்தபுரத்திலிருந்து கொல்லம் வழியாக எர்ணாகுளம் செல்லும் புகைவண்டிப் பாதையில் உள்ள செங்கண்ணூர் நிலையத்திற்கு வடக்கே ஏறத்தாழ ஆறு கி.மீ. உள்ள திவ்விய தேசம் திருவண்வண்டூர். இங்கு வேதாவய விமானத்தில் பாம்பணையப்பன் கமலவல்லி நாச்சியாரோடு நின்ற திருக்கோலத்தில் காட்சி கொடுக்கிறான். இங்கு நாரதருக்கும் மார்க்கண்டேயருக்கும் இப்பெருமான் வெளிப்பட்டருளியுள்ளான்.இத்தலம் நகுலனால் பிரதிட்டை செய்யப் பட்டதாகத் தல வரலாறு கூறுகிறது. திருவமுண்டூர் என்று இத்தலம் இப்போது சொல்லப்படுகிறது.

நம்மாழ்வார் திருவாய்மொழி ஆறாம் பத்து முதல் பதிகத்தில் இங்குள்ள எம்பெருமானை மங்களாசாசனம் செய்கிறார். ஆழ்வார் தாமான தன்மையை இழந்து பெண் தன்மை பெற்று நாரை அன்னம், குயில், கிளி முதலான பறவைகளை இந்த எம்பெருமான் பக்கலிலே தூது விடுகிறார். எம்பெருமான் ஆழ்வாருக்குக் காட்சி தந்தருளுவதற்காகப் பதரி வரும்போது வழியிடையே திருவண்வண்டூர் நேர்பட்டதாகவும், அவ்வூரில் செல்வம் மிக்கிருக்கையாலே எம்பெருமான் அதில் ஈடுபட்டு அங்கேயே இருந்து விட்டதாகவும் நினைத்து ஆழ்வார் தூதுவிடுகிறாராகையாலே அந்த எம்பெருமானைச் 'சிறந்த செல்வம் மல்கு திருவண்வண்டூருறையும் பெருமான்' என்றார். 'மாறில் போரரக்கன் மதிள் நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகனார்க்கு என்னையும் உள்ளென்மின்களே' என்று இத்தலத்து எம்பெருமானை இராவண வதம் செய்தருளிய பெருவீரனான இராமனாகக் கண்டு தூதுவிட்ட ஆழ்வார் 'எமது தலைவரான திருவண்வண்டூர்ப் பெருமாள் பெண் பிறந்தார் காரியமெல்லாம் செய்து தலைக்கட்டி விட்டோமென்றிருப்பர். அப்படியின்றியே, அவனால் காக்கப்படவேண்டிய வகுப்பிலே நானொருத்தி விடுபட்டிருக்கிறேன் என்று சொல்லுங்கோள்'என்று சில வண்டுகளைத் தூது விடுகிறார்.

திருவண்வண்டூரில் விளங்கும் தேவாதிதேவனே எல்லாவற்றையும் படைத்த இறைவன் என்று

பிளளைப் பெருமாளையஙகார் அருளுகிறாா.

எஸ.கி.

*திருவதிகை* தேவாரப பாடல பெறற திருத் தலம்; தெனனாாக்காடு மாவட்டத்தில கடலூருக கருகே உளளது. இது பணணுருட்டி புகைவணடி நிலை யததிலிருநது தெனமேற்கே 2 கி.மீ. தொலைவில உளளது. இது கெடில நதிக்கரையில அமைநத ஊா. அதியரைய மஙகை என்பது இவவூரின முழுப் பெயர். இப்பெயரே மருவி அதிகையாகித திரு எனும் அடை மொழி பெறறுத் திருவதிகையாயிறறு

சிவபெருமானின் அட்டவீரட்டத்தலங்களுளஒனறு. இறைவன பெயா வீரட்டானேசுவரா, இறைவி பெரிய நாயகி. சிவபெருமான புன்னகையால முப புரம் எரித்த இடம் இதுவாகும. கோயிலுககு வீரட் டானம் எனறு பெயா. இறைவனுக்கும் இறைவிககும திருமணம் இஙகு நடைபெற்றதாகக கூறுவர். இநத நமபிக்கை அடிப்படையில வெளியூா மககள இக் கோயிலில திருமணம நிகழத்துவா. சிவன கோயி லுக்கு வலப்புறம் அமமனகோயில உளளது. இக கோயிலில் இருகோபுரஙகளும ஒரு விமானமும் அமைநதுளளன. விமான நிழல் தரையில வீழவ தில்லை. பல்லவர், பாணடியர், நாயக்கா காலச் சிற பஙகளும் கட்டடக் கலை நுட்பஙகளும காணககிடைக கினறன. மகேநதிரவாம பல்லவன பாடலிபுத்திரததி லிருந்த சமணக்கோயிலை இடித்துக கொணடு வந்து, குணபரேசசுரம் எனும பெயரில சிவனகோயில் கட்டினான. கோயிலினுள் சக்கர தீர்ததம் எனற குளமும் குலதீாத்தம எனற கிணறும் உள. தலமரம கொனறையாகும். கருவறையிலுளள இலிஙகம பதி னாறு பட்டைகளை உடையது.

அப்பரடிகளுக்குச சூலை நோய் தீர்நத இடம் திருவதிகையே. 'கூறறாயினவாறு' எனும பதிகம இஙகுப் பாடப்பட்டது. அவா பதினாறு பதிகஙகள பாடியுள்ளார். திலகவதியாரும திருநாவுக்கரசரும தஙகிய மடமும் பூங்காவனமும் இன்றும் இஙகு உள. ஞானசம்பந்தர் ஒரு பதிகமும சுநதரா ஒரு பதிகமும் பாடியுளளனர். இஙகுள்ள முருகனை அருணகிரியாா தமது திருப்புகழில பாடியுளளாா. இஙகு 96 கல வெட்டுகள உள. சைவ சித்தாந்த நூலான உணமை விளக்கம இயற்றிய மனவாசகங்கடந்தாா இவவூரி னர். இவவூர் பற்றி உலா, புராணம மானமியம் போன்ற நூல்கள தோன்றியுளளன. பாரததத்தில் இவ்வூர் பற்றிய குறிபபு வநதுளளது. தமிழகத்தி லேயே முதன் முதலாகத் தேவாரப்பாடல பெறற பெருமைக்கு உரிய பதி திருவதிகை. பி.தெ.

*திருவயிந்திரபுரம்:* திருப்பாதிரிப் புலியூா இரயில் நிலையத்திலிருநது மேறகே 5கி.மீ தொலைவில இந்த நகரம் உளளது. 'திருவகீநதிர புரம்' என்று இபபோது சொல்லப்படுகிறது. இப போது, தென்னார்க்காடு மாவட்டமாக உளள பகுதி தான முனபு 'நடுநாடு' எனப் பேசபபட்டுளளது நடு நாட்டு வைணவத திருத்தலஙகள இரணடு. ஒனறு இது மறறொனறு திருககோவலூர் ஆகும்.

ஆதிசேடன வழிபட்டு வந்த பாதாள கஙகை தீர்த்தம, கோயிலில உளள கிணறாக உளளது. கரு டன கொணடு வந்த விரசா நதி தீாத்தம கோவி லுககு வெளியே கருட நதியாக ஓடிககொணடுளளது இன்றும் கிணற்று நீராகிய சேட தீாத்தம நிவேதனத் திறகும், கருட நதி திருமஞசனத்திற்கும பயனபடுத் தபபடுகினறன.

கோவிலை ஒட்டியுள்ள மலையின மேல அயக கிரீவர் (பரிமுகப் பெருமாள) சநநிதி உளளது. வட கலைச் சமபிரதாய வைணவ ஆசசாரியராகிய வேதாந்த தேசிகா, இங்குத தவம செயது அயககிரீ வா அருளையும கருடன அருளையும பெறறுளளாா இந்த ஆச்சாரியார் நாற்பது ஆணடுகளாக வாழந்து வந்த திருமாளிகையும், தீாத்தம எடுததுககொணட கிணறும இன்றும இஙகு உளளது. கோவிலுக்குள இருககும தேசிகா சநநிதி மிகவும சிறப்பு வாயநதது. தேசிகா இததலததிலிருந்துதான எலலாப் பிரபந்தங களையும் அருளிச் செயதாா.

திருமஙகை ஆழ்வார், இங்குக கோயில கொணடு எழுந்தருளிய பெருமாளுககுக கொடுத்த 'தெயவ நாயகன' எனற பெயாதான இனறும வழஙகுகிறது

'வையம் ஏழும உணடு ஆலிலை வைகிய மாய வன், அடியவர்கு மெயயனாகிய தெயவநாயகன இடம் மெயதகுவனச்சாரல, மொய்கொள மாதவி சணபகம் இயஙகிய முல்லையங கொடி ஆட, செயய தாமரைச் செழும்பணை திகழதரு, திருவயீநதிர புரமே' எனபது திருமஙகை ஆழ்வாரின் பெரிய திரு மொழிப் பாசுரம். வேதாநத தேசிகரின பிரபநதத்தில 'உயர்ந்த நீஉனனை எம்முடன கலந்தனை, அயிந்தை மாநகரில் அமாந்தனை எமககாய்' என வருகிறது. மு.இரா.

*திருவரங்கத்தமுதனார்:* சோழ நாட்டில் திருவரஙகததில தோனறியருளியவா திருவரஙகத் தமுதனார். இவருடைய தந்தையின் பெயா அணியரங் கததமுதனாா. இவருடைய குடி மூங்கிற்குடி. இவா பஙகுனி அத்த நாளில தோனறியவர். இவர் காலம் கி பி.1100-1208 எனறு அறிஞர் பெருமக்கள கருதுவா.

திருவரங்கம் சென்று அங்கே வாழ்ந்து வந்ததோடு அரங்கநாதனுக்குத் திருநந்தவனத் திருப்பணி செய்து வந்தமையினால் அடியார் எல்லோரும் இவரைப் 'பெரிய கோவில் நம்பி' என்று அழைத்துப் போற்றி வந்தனர்.

வைணவ உலகின் பேரொளியாகிய உடையவர் எனப்படும் இராமானுசர் காலத்தின் பிற்பகுதியினர் திருவரங்கத்தமுதனார். இராமானுசர் இவரைத் திருத்திப் பணிகொள்ள எண்ணங்கொண்டு தம் சீடராகிய கூரத்தாழ்வானை நியமித்தார். கூரத்தாழ்வாரும் அமுதனாரின் அஞ்ஞான இருள் நீக்கி ஞானச் சுடர் ஏற்றினார். இவரை எம்பெருமானார் கீழ்க் கொண்டு சோபபித்தார். அவரும் இவரை ஏற்றுக் கொண்டு சமய சாத்திரங்களை எல்லாம் நன்கு போதித்தார். இருவரும் இணக்கமாய் ஒன்று பட்டிருந் தனர். இவர் தம் கடமைகளையெல்லாம் கூரத்தாழ் வாரிடம் கொடுத்து விட்டு ஒதுங்கி நின்றார்.

இராமானுசர் இவரிடத்தில் இரக்கங்கொண்டு இறைவன் திருமுன்னர்த் தினமும் பாசுரம் பாடும் திருப்பெருமாள் அரையரைக் கூப்பிட்டு, 'இன்று முத லாக இயற்பாவை நீங்கள் சேவிக்க வேண்டாம். அமு தனாரே சேவிக்கட்டும்' என்று கட்டளை இட அதன் படி அமுதனார் இயற்பா சேவிக்கும் நாளில் எல்லாம் அரையருக்குச் செய்யும் மரியாதை வரிசையெல்லாம் அமுதனார்க்குச் செய்யப்பெற்றன. அன்று முதல் இன்றும் அச்சிறப்பு அமுதனார் வழிமுறையினருக்கு நடைபெற்று வருகின்றது.

திருவரங்கத்தமுதனார் இராமானுசர் மீது பிர பந்தம் பாடிக்காட்ட, இராமானுசர் அதைக் கிழித்து எறிந்துவிட்டு உமக்கு ஆசாரியராகிய கூரத்தாழ் வாரையும் ஆழ்வார்களையும் திவ்விய தேசங் களையும் பற்றிப் பிரபந்தம் செய்யும் என்று கட்ட ளையிட, வைணவத் திருப்பதிகளையும் ஆழ்வார் களையும் குறிப்பிட்டு 'இராமானுசர் நூற்றந்தாதி' பாடினார் அமுதனார் இதைப் பார்த்து இராமா னுசர் மிகவும் மனம் மகிழ்ந்தார். இவருடைய வாக்கு அமுத வாக்காக இருந்தமையின் இவருக்கு அமுத னார் என்ற அரிய திருநாமத்தை வழங்கினார் இராமானுசர். அது முதல் 'பெரியகோயில் நம்பி' என்ற இயற்பெயர் மாறி, திருவரங்கத்தமுதனார் என்று வழங்கலாயிற்று.

இவருடைய வழிமுறையினர் திருவரங்கத்தில் வடக்குச் சித்திரை வீதியில் குடியிருந்து கோயிற் சிறப்புகளை இன்றைக்கும் பெற்று வருகின்றனர்.

இராமானுச நூற்றந்தாதி சொற்சுவையும் பொருட்சுவையும் மிக்கது. நாலாயிரத்துக்குச் சம மான பெருமை இதற்குண்டு. திருமடல்கள் இரண் டையும் இரண்டே பாடல்களாக்கி, இந்நூற்றந்தாதி நூற்றெட்டுப் பாடல்களையும் சேர்த்து நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் எனக் கணக்கிடுகின்ற மரபும் உண்டு. அ. வி.

**திருவரங்கம்,** தமிழ்நாட்டில் திருச்சிராப்பள்ளிக்கு வடக்கில் ஆறு கி. மீ. தொலைவில் காவிரியாற்றிற் கும் கொள்ளிடம் ஆற்றிற்கும் இடையில் அமைந் துள்ள புனிததலம், திருமால் எழுந்தருளியிருக்கும் 108 திருத்தலங்களுள் முதன்மையானது ஆழ்வார் களால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற இப்பகுதி யினைத் தென்னாட்டவரும் வடநாட்டவரும் புண் ணியத்தலமாகக் கருதி வழிபடுகின்றனர்.

சீரங்க மகாத்மியம் என்னும் திருவரங்கத் தல புராணம், கோயிலொழுகு, நாலாயிரத் திவ்வியப்பிர பந்தம், திருவரங்கக் கோயில் கல்வெட்டுகள் ஆகியன திருவரங்கத்தின் வரலாற்றையும் பெருமையையும் செப்புகின்றன. வைணவ சமயத்தின் வளர்ப்புப் பண்ணைகளுள் ஒன்றாகத் திகழும் திருவரங்கக் கோயில் பெரிய கோவில் எனவும் சொல்லப்படு கிறது. அரங்கம் கோயில், போக மண்டபம், பூலோக வைகுந்தம் முதலான பெயர்களாலும் இத்தலம் குறிக்கப்பெறுகிறது. இத்திருக்கோயிலின்கண் அரங் கன், துயில் கொண்டுள்ள (கிடந்த கோலம்)கோலத் தில் காட்சி தருகிறார். இவர் அழகிய மணவாளன் அரங்கன், அரங்கநாதன், பெரிய பெருமாள் முத லான பெயர்களாலும் சொல்லப்பெறுகிறார். இத் திருக்கோயிலில் ஏழு திருச்சுற்றுகளும் 21 கோபுரங் களும் உள்ளன. கருவறையைச் சூழ்ந்துள்ள சுவர் நீங்கலாக இங்கு ஏழு பெருமதில்கள் உள்ளன. ஆசி யாவிலேயே மிகப்பெரிய கோபுரம் ('236') எனனும் பெருமைக்குரிய தெற்குவாயில் இராசகோபுரம் திரு வரங்கத்திற்குப் புதிய அழகினைத் தந்துள்ளது. அசசுத ராயரால் கி.பி.16-ஆம் நூற்றாண்டில் தொடங்கப் பட்டு 400 ஆண்டுகளாக மொட்டைக் கோபுரமாகத் திகழ்ந்த இதனைக் கட்டிய பெருமை அகோபில மடத்துச் சீயர்பெருமான் தவத்திரு அழகிய சிங் கரைச் சாரும். ஏறத்தாழ ஒன்றரைக்கோடி உரு பாய் செலவில் எட்டு ஆண்டுகளில் முடிக்கப்பெற்ற வானுயர்ந்த இக்கோபுரம் 13 நிலைகளையும் 236 அடி உயரத்தையும் கொண்டதாக அமைந்துள்ளது இதன் குடமுழுக்குவிழா25.3.1987,புதன்கிழமையன்று நடைபெற்றது. திருவரங்கத்தில் திருமழிசை ஆழ் வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், மதுரகவி ஆழ்வார் முதலான 45 சந்நிதிகள் உள்ளன. விசய ரங்கசொக்கநாத நாயக்கர் மண்டபம், சேசராயர் மண்டபம் முதலான 18 மண்டபங்கள் உள்ளன.

கிள்ளி என்ற சோழமரபில் வந்த கிளிச்சோழன் இக்கோயிலை அமைத்ததாகக் கோயிலொழுகு கூறும். பின்னர் இரண்டாம் இராசேந்திர சோழனின் மகனான இராசமகேந்திரன் (கி.பி.1060–1063) இரண்டாம் திருச்சுற்று மதிலைக் கட்டினான். இது இராசமகேந்திரன் திருவீதி எனச் சொல்லப்பெறுகிறது. இவனது ஆட்சிக்காலத்தில் வைணவ ஆச்சாரியார்களான நாதமுனி, உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி, ஆளவந்தார் ஆகியோர் திருவரங்கத்தில் இறைபணி புரிந்துவந்தனர். நந்த சோழன், குலசேகரப் பெருமாள், திருமங்கை மன்னன், அகளங்கனான விக்கிரம சோழன், முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன், முதலாம் குலோத்துங்க சோழன், போசளர், விசயநகரத்தார், தஞ்சை-மதுரை நாயக்கர் முதலானோர் இக்கோயிலுக்குப் பல திருப்பணிகளைப் புரிந்துள்ளனர். அவற்றுள் சுந்தர பாண்டியன் இறைவர் சந்நிதிக்குப் பொன் வேய்ந்ததுடன் பெருமதிப்புள்ள மணிகளையும் முத்துக்களையும் இறைவருக்குத் தானமளித்துள்ளான். சொக்கநாத நாயக்க மன்னரும் பல திருப்பணிகளைச் செய்தார்.

மாலிக்காபூரின் படையெழுச்சியால்(கி.பி.1311) இக்கோயில் சில காலம் இன்னலுக்குள்ளாயிற்று. பின்னர், குமாரகம்பணரின் பெருமுயற்சியால் இங்கு மீண்டும் பூசைகள் குறைவறநடைபெற்றன. ஐதர்அலி கி.பி.1781-இலும், திப்புசுல்தான் கி.பி. 1790–இலும் திருவரங்கத்தைக்கைப்பற்றினர்.கருநாடகப் போர்களின் விளைவாகத் திருவரங்கம் சந்தாசாகிபின் பொறுப்பில்வந்தது. பின்னர் ஆங்கிலேயரின் ஆதிக்கத்திற்கு உட்பட்டது.

அகநானூறு, சிலப்பதிகாரம் முதலான பழந்தமிழ் இலக்கியங்களிலும் ஆழ்வார்களின் பாடல்களிலும், வேதாந்த தேசிகர் இயற்றிய தேசிகப் பிரபந்தம் முதலான இலக்கியங்களிலும் அரங்கனின் பெருமை பேசப்படுகின்றது. முதலாழ்வார் மூவரும் மற்றையோரில் எண்மரும் 245 பாசுரங்களில் திருவரங்கத்தைப் பாடிப் பரவியுள்ளனர். அண்மையில் வெளியிடப்பட்ட ‘திருவரங்கக் கோயில் கல்வெட்டுகள்’ எனும் நூல் (இந்திய அரசு வெளியீடு) தமிழகத்தை ஆண்ட மன்னர்கள் திருவரங்கத்திற்குச் செய்த பணிகள் பற்றிக் குறிப்பிடுகின்றன.

திருவரங்கக் கோயிலில் பல சிற்பங்களும், செப்புத் திருமேனிகளும், மரப்பாவைகளும், தந்தச் சிற்பங்களும், ஓவியங்களும் காணப்படுகின்றன. போசள வேந்தன் வீரராமநாதன் காலத்தில் கட்டப்பட்ட வேணுகோபாலர் கோயிலில் கண்ணைக் கவரும் கற்சிற்பங்கள் பல உள்ளன. இச்சந்நிதியின் முன் மண்டபத்தில் விதானத்தின் நடுவே தீட்டப்பட்டுள்ள வேணுகோபாலனின் ஓவியம் எழில்மிக்க படைப்பா



ஆயிரக்கால் மண்டபத்தின் ஒரு தேற்றம்-திருவரங்கம்

கும். நடுவில் கண்ணன் குழலூதுகிறான். அவனைச் சுற்றிலும் கோகுலத்துக் கோபியர் எழிலாக நடம் புரிகின்றனர். இதனைப்போன்று முற்கால விசயநகர வேந்தரது எழிலார்ந்த ஓவியங்களும் இம்மண்டபத்தினை அணி செய்கின்றன. இத் திருக்கோயிலில் ஆலிலையில் அமர்ந்த கண்ணன், காளியன் என்ற பாம்பின்மீது நடனமாடும் கண்ணன், பெருமாள், நாச்சியார் ஆகியோரைச் சித்திரிக்கும் பிற்கால விசய நகரத்தார் ஓவியங்களும் கண்ணைக் கவரும் பான்மையினவாகும். திருவரங்கத்துக் கோயிலிலுள்ள திருமலைநாயக்கரின் உருவமும், முத்து விசயரங்க சொக்கநாதரின் உருவமும் தந்தச் சிற்பங்களுக்கோர் அணிகலன்களாக உள்ளன. குறிப்பாக அதிலும் சிறப்பாக 5’ உயரத்திலான சொக்கநாதர், அவர்தம் அரசி, அவர் மகன் ஆகியோரின் தந்தச் சிற்பம் இந்தியாவின் மிக உயரமான தந்தச் சிற்பமாகவும் தொன்மை மிக்க ஒன்றாகவும் விளங்குகிறது. திருவரங்க வீதிகளில் நிறுத்தப்பட்டுள்ள மிகப் பெரிய கற்றூண்கள் பார்ப்பவரை வியப்பில் ஆழ்த்துகின்றன.

திருவரங்கக் கோயிலிலுள்ள நூலகத்தில் பழமை மிக்க இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட ஓலைச்சுவடிகளும் நூல்களும் உள்ளன. இங்குள்ள கோயில் அருங்காட்சியகத்தில் இரண்டாம் தேவராயர், மல்லிகார்ச்சுனர், வீரப்பிரதாபதேவர் முதலானோரின் செப்புப் பட்டயங்களும், தமிழக வேந்தர், பிறநாட்டினர் காசுகளும் உண்டியலிலிருந்து கிடைத்த சப்பான், ஆசுத்திரேலியா, அரேபியா, கென்யா, கொரியா,



ஆயிரக்கால் மண்டபத்தின் உட்பகுதி-திருவரங்கம்

பிரான்சு, சீனா, பிலிப்பைன்சு முதலான வெளிநாட்டினரின் காகிதப் பணங்களும் (Currency), பல அரிய பொருள்களும் சேகரித்து வைக்கப்பட்டுள்ளன.

திருவரங்கம் ஒரு நகராட்சி. இங்கு ஆண்கள், பெண்கள் மேனிலைப் பள்ளிகளும், அரசு அலுவலகங்களும் உள்ளன.

திருவரங்கத்தில் ஆண்டு முழுவதும் விழாக்களும் சிறப்பு வழிபாடுகளும் நடக்கும். குறிப்பாக 365 நாட்களில் 322 நாட்கள் விழா நடைபெறுகின்றது. இவற்றுள் கோடைத் திருநாள் (பூச்சாத்துத் திருநாள்), சிரீராம நவமி, சித்திரைப் பிரமோற்சவம், வைகாசி வசந்தோற்சவம், ஆனி பவித்திரோற்சவம், நவராத்திரி, ஐப்பசித் திருமஞ்சனம், வைகுந்த ஏகாதசி, தெப்பத்திருவிழா (மாசி) ஆகிய விழாக்கள்குறிப்பிடத்தக்கனவாகும். மார்கழியில் நடைபெறும் வைகுந்த ஏகாதசியின்போது சொர்க்கவாசல் திறக்கப்படுவது ஒரு முக்கிய நிகழ்ச்சி. திருவரங்கத்தின் கீழ்ப்புறம்தான் புகழ்மிக்க திருவானைக்காக்கோவில் உள்ளது. திருவரங்கத்தின் மக்கள்தொகை 64,055 (1981). ம.இ.

**திருவரிமேய விண்ணகரம்**: வைணவத் திருத்தலங்கள் சோழநாட்டில் நாற்பது இருக்கின்றன. அவற்றுள் ஒன்று இதுவாகும். சீர்காழிக்குக் கிழக்கே 8 கி.மீ. தொலைவில் உள்ளது இவ்வூர். திருமங்கை ஆழ்வாரால் பாடப்பெற்ற கோயில் இவ்வூரில் உள்ளது. கோயிலில் அர்ச்சாவதாரமாக எழுந்தருளியுள்ள பெருமாள் 'குடமாடு கூத்தன்' என்று சொல்லப்படுகின்றார்.

திருமங்கையாழ்வார், 'குன்றதனால் மழை தடுத்துக் குடமாடு கூத்தன் குலவுமிடம்...அரிமேய விண்ணகரம்' என்று தமது பெரிய திருமொழியில் பாடியுள்ளார்.

திருநாங்கூர்ப் பகுதியைச் சேர்ந்துள்ள பதினோரு திருப்பதிகளுள் இதுவும் ஒன்று.

நம்மாழ்வார் பாடிய பாண்டி நாட்டுத் திருப்பதிகள் நவதிருப்பதிகள் (ஒன்பது) என்று சொல்லப்படுவது போலத் திருமங்கை ஆழ்வார் பாடிய சோழ நாட்டுத் திருப்பதிகளுள் இந்தப் பதினொன்றும் ஒரு பகுதியைச் சேர்ந்ததாகும். திருநாங்கூர்ப் பகுதி எனப்படும் இந்தப் பதினோரு திருத்தலங்களுள் நாங்கூரும் ஒன்றாக விளங்குகிறது.

'விண்ணகரம்' என்பது பெருமாள் கோயிலுக்கு இடப்பட்ட ஒரு சிறப்புப் பெயராகும். வைகுந்த விண்ணகரம், சீராம விண்ணகரம். நந்திபுர விண்ணகரம் என்ற பெயர்கள் இக்கருத்தினை வலியுறுத்தும்.

'அரி' என்பதற்குத் திருமால் என்றும் பொருள் உண்டு; சிங்கம் என்றும் பொருள் உண்டு. திருமால் நரசிங்க வடிவமாக வந்து இரணியனை ஒழித்ததைத் திருமங்கை ஆழ்வார் இத்தலத்துப் பதிகத்துள் சிறப்பித்துப் பாடுகின்றார். அதனால் 'அரிமேய விண்ணகரம்' என்ற பெயர் வந்திருக்கலாம். 'ஓடாத வாளரியின் உருவமது கொண்டு அன்று உலப்பில் மிகு பெருவரத்த இரணியனைப் பற்றி, வாடாத வள்ளுகிரால் பிளந்து அவன் தன்மகனுக்கு அருள் செய்தான் வாழும் இடம் .. 'அரிமேய விண்ணகரம்' என்பது பெரிய திருமொழிப் பாசுரப் பகுதி.

தை அமாவாசைக்கு மறுநாள் கருட சேவை இங்கு நடைபெறுவது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. திருமங்கை ஆழ்வார் பாடல்கள் பத்து மட்டும் கொண்டது இத்திருத்தலம். மு.இரா.

**திருவருட்பயன்** என்னும் நூல் சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் எட்டாவதாகும். இதன் ஆசிரியர் உமாபதி சிவாசாரியார் ஆவார். இவர் சித்தாந்த சாத்திரங்களுள் எட்டு நூல்களை இயற்றியிருக்கிறார். அவை சித்தாந்த அட்டகம் எனப் பெயர் பெறும்.

இத் திருவருட்பயன் பத்து அதிகாரங்களைக் கொண்டது. முதல் ஐந்து அதிகாரங்கள் திரு

வருளைப் பற்றியும் பின் ஐந்து அதிகாரங்கள் திரு வருளின் பயனைப் பற்றியும் கூறுவன. அவ்வதிகாரங் கள் பதிமுதுநிலை, உயிரது நிலை, இருண்மல நிலை, அருளது நிலை, அருளுரு நிலை, அறியும் நெறி, உயிர் விளக்கம், இன்புறு நிலை, அஞ்செழுத் தருள் நிலை, அணைந்தோர் தன்மை என்பனவாம். ஒவ்வோரதிகாரத்திற்குப் பத்துக் குறள்கள் வீதம் மொத்தம் நூறு குறள்களைக் கொண்டுள்ளது. கடவுள் வணக்கமாக வேறு ஒரு குறளும் உண்டு. திருக்குறளில் அறம், பொருள், இன்பம் என முப்பால் கள் கூறப்பட்டுள்ளன. ஆதலின் நான்காவதாகிய வீட்டுப்பாலை விளக்கி இந்நூல் செய்யப்பட்டது என ஆன்றோர் கூறுவர். திருக்குறளில் குறிப்பாக வீடு பற்றிக் கூறினாலும் இத்திருவருட்பயன் விளக்க மாக வீட்டைப் பற்றியே கூறுகிறது. ஆதலின், இதனை வீட்டுப்பால் என்று கூறும் வழக்கமும் உண்டு. திருவள்ளுவர் 'அகர முதல' என்று தொடங் குவது போன்றே திருவருட் பயனாசிரியரும் 'அகர வுயிர்போல் அறிவாகி எங்கும் நிகரில் இறை நிற்கும் நிறைந்து' என்றே நூலைத் தொடங்குகிறார். திரு முறைகளிலிருந்து எடுத்த சாத்திர உண்மைகளை விளக்கிக் கூறி இறைவன் திருவருளாகிய பயனை உயிர்கள் பெறத் தெளிவாக வழி வகைகளை எடுத் துக் கூறும் நூல் ஆதலின் இது திருவருட்பயன் என் னும் பெயருடையதாயிற்று. இந்நூலுக்கு நிரம்ப அழகிய தேசிகர் என்னும் புலவர் எழுதிய சிறந்த உரை ஒன்றும் உண்டு. இந்நூல் ஏற்பட்ட காலம் கி.பி. 14-ஆம் நூற்றாண்டாகும்.

இறைவனை வழிபட்டால் அவன் நன்மையைத் (முத்தியின்பத்தை) தருவான். வழிபடாவிடில் நன் மையைத் தரமாட்டான். அவ்வாறாயின் இறைவன் தன்னை வழிபட்டவரிடம் விருப்பும் வழிபடாத வரிடம் வெறுப்பும் உள்ளவனோ எனில் அத்தகைய வஞ்சக எண்ணம் கொண்டவனல்லன். 'சலமிலன்' என்பது வஞ்சகமில்லாதவன் என்பதைக் குறிக்கும். சங்கரன் என்றால் தம்மை அடைந்தோர்க்கு நன் மையைச் செய்பவன் என்பது பொருளாம். ஆகவே, இறைவன் எல்லாருக்கும் நன்மை செய்யக் காத்துள் ளான். ஆதலின், அவனை நெருங்கி வழிபடுவது நம் கடமை என்பதை ஒரு குறள் நன்கு விளக்குகிறது. 'நலமிலன் நண்ணார்க்கு; நண்ணினர்க்கு நல்லன்; சல மிலன் பேர்சங் கரன்' (9) என்னும் குறளில் இக் கருத்துகளைக் காணலாம்.

இறைவனிடம் ஒருவன் பக்தி பூண்டு ஒழுகி னால் அவனுடைய சுமைகள் எல்லாவற்றையும் தானே எடுத்துச் சுமப்பான். அடியவனுக்கு ஒரு துன் பமும் கொடுக்க மாட்டான். ஆகவே, அத்தகைய திருவருளைப் பெற உயிர்கள் முயல வேண்டும் என ஒரு குறளில் ஆசிரியர் கூறுகிறார்.

ஆதலால், மக்கள் அவனையே கதி எனக் கொண்டு அவனிடம் எல்லாவற்றையும் ஒப்படைத்து விட்டால் அவன் முழுப் பொறுப்பினையும் ஏற்றுக் கொள் வான் என்ற சரணாகதித் தத்துவம் இக்குறளில் மிக மேலாக விளக்கப்படுகிறது. இவை போன்றே மற் றைய குறள்களும் திருவருட் பயனில் சிறந்த பொருள்களைக் கொண்டுள்ளன. அ.ச.

**திருவருட்பா** என்னும் பெயர், திரு + அருள் + பா எனப் பிரிந்து அருளால் பாடப்பெற்ற பாக் கள் என்றும், அருளைப் பெற்ற அருளாளரால், பிற ரும் அருளைப் பெறவேண்டிப் பாடப்பெற்ற பாக்கள் என்றும் பொருள்படும். திரு என்பது தெய்வத் தன்மை. இவற்றைப் பாடியவர் திருவருட் பிரகாச வள்ளலார் என்னும் சிதம்பரம் இராமலிங்கசுவாமி கள். சுவாமிகள் பற்பல காலங்களிலும் பாடிய பாடல்களை அவர் மாணவர் தொழுவூர் வேலாயுத முதலியார் தொகுத்து, அவற்றை ஆறு திருமுறை களாக வகுத்தார். சுவாமிகள் முதல் ஐந்து திரு முறைகளையே வெளியிட இசைவு நல்கினார். முதல் நான்கு திருமுறைகளும் ஒரு பதிப்பாக கி.பி. 1867-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டன. ஐந்தாம் திரு முறை கி.பி. 1880-ஆம் ஆண்டு வெளியிடப் பெற்றது. ஆறாம் திருமுறை சோடசாவதானம் தி.க. சுப்பராய செட்டியாரால் கி.பி. 1885-ஆம் ஆண்டு வெளியிடப் பெற்றது. சுவாமிகளின் மருகர் பொன்னேரி சுந்தரம் பிள்ளை ஆறு திருமுறைகளும் சேர்ந்த பதிப்பை கி.பி. 1892-ஆம் ஆண்டு வெளியிட்டார். அதனையே, பின்பு கிடைத்த பாடல்கள் சிலவற்றையும் சேர்த்துப் பிருங்கி மாநகரம் இராமசாமி முதலியார் 1896-ஆம் ஆண்டி லும், சமரச பசனை ச.மு. கந்தசாமிபிள்ளை 1924 -ஆம் ஆண்டிலும் வெளியிட்டனர். சென்னைச் சன் மார்க்க சங்கம் 1932, 1942-ஆம் ஆண்டுகளில் இரண்டு பதிப்புகள் வெளியிட்டது. பின்னர் ஆ. பால கிருட்டிணபிள்ளை ஆறு திருமுறைகளையும் பன்னி ரண்டு பாகங்களாக 1931-ஆம் ஆண்டு முதல் 1958 -ஆம் ஆண்டு வரையிலான காலப் பகுதியில் வெளி யிட்டார். பின்னர், சன்மார்க்க தேசிகன் என்னும் ஊரன் அடிகள் 1972-ஆம் ஆண்டில் இந்த ஆறு திரு முறைகளையும் வரலாற்று முறையில் அடைவு செய்து வெளியிட்டார். முன்பு வந்த பதிப்புகளில் ஆறாம் திருமுறையில் அடங்கியும், பாலகிருட்டிண பிள்ளையால் தனி நூல்களாக வெளியிடப்பட்டும் உள்ள, சுவாமிகளின் உரைநடைப் படைப்புகளை ஊரன் அடிகள் ஒரே தொகுதியாக 1978-ஆம் ஆண்டு வெளியிட்டார்.

திருவருட்பாவில் அடங்கிய பாக்களின் தொகை இப்பதிப்புகள தோறும் வேறுபடுகின்றது. ஆ. பால கிருஷ்ணபிள்ளை பெரிதும் முயன்று, திருநதிய பதிப்பு வெளியிட்டமையால், அவர் தொகுத்துள்ள பாக்களின எண்ணிக்கையாகிய 6011 எனபதை முடிவான தாகக் கொளளலாம. அவற்றுள்ளும இரணடு முறை அச்சாகியுள்ள பாடல்கள் 41 எனறு ஊரன அடிகள சுட்டிக் காட்டுகினறார். ஊரன அடிகள 5818 பாக களே ஆறு திருமுறைகளைச சேர்ந்தவை என்று காட்டியுளளார். இப்பாக்களுள இசைப்பாக்களும் சில உள.

இராமலிங்க சுவாமிகள தமது ஒன்பதாம வயது தொடஙகி, ஞானசிததி எயதிய ஐம்பத்தொன றாம வயது வரை பாடிய பாக்களும, எழுதிய உரைநடைப் பகுதிகளும அவரது வாழ்வின அனுப வம் முழுவதையும் வெளிபபடுத்துவதுடன அவர் உலக மனிதஇனத்திறகு வழஙகிய பொதுநெறியின சாத்திர மாகவும விளங்குகினறன. அவர் சைவராக வாழத தொடங்கி, சமயம் கடநத ஞானியாக வளாந்து, இறைவனால் அருளாற்றல் வழஙகப் பெற்று, தமது ஊனுடம்பே படிப்படியாக ஞான உடம்பாக மாறப் பெற்று மரணம் இல்லாப் பெருவாழ்வு நிலையை எய தினார். அந்த நிலையை எஙஙனம் தாம பெறறா எனபதைத் திருவருட்பாவில விளககமாகக கூறுகின் றார். அதனை அடைந்த படிநிலைதோறும் தாம் பெற்ற ஆனமிக அனுபவங்களைச் சிறநத இலககிய வடிவ வெளிப்பாடான பாககளால வெளியிடுகின றார். அத்துடன மககள அநத அனுபவஙகளையும அருளாற்றலையும, மரணம இலலாப பெருவாழவை யும, எவவாறு தம்மைப் போலவே அடையலாம் எனபதறகுரிய வழியை வகுத்தும தொகுததும விரித் தும் இப்பாக்களின் வாயிலாகவும், உரைநடைப் படைப்புகளாலும கூறுகின்றாா. அவர், தமது ஆனமிக அனுபவங்களை வெளியிடும பாககள் 'அருளியல கவிதை' (Mystic Poerry)வகையைச் சாரும் நெறியை உணர்ததும பாக்களும, உரைநடையும, சாத்திரம ஆகும் இவவிரணடு வகையையும் தழுவிய தோததி ரங்கள் பலவும் திருவருட்பாவில் உள.

இராமலிங்க சுவாமிகள் சமயம் கடந்த ஞானி யாக வளர்நது, அவ்வளர்ச்சியில் பெற்ற அனுபவத் தைப் பிறமககளுக்கும் உரியதாக்க விருமபி, வகுத்து வழங்கிய நெறி ஒரு 'புதுச் சமயநெறி அனறு; பொது நெறி. இதற்கு அவர் அளித்த பெயர் சுத்த சனமார்க் கம் என்பதாகும் அதனை, அதன் தன்மையும ஆறற லும் பயனும் கருதி, முறையே பொதுநெறி, அருள் நெறி, ஒளிநெறி எனவும் அவர் வழங்கினார். பொது நெறியாவது, உலகில் இதுவரை தோன்றிப் பரவி வளர்ந்து வரும சமயங்கள, தத்துவங்கள ஆகிய வற்றுக்கு இச்சனமார்ககம் பொதுவாக உள ளமை ஆகும. இச்சனமார்க்கததிறகு ஆற்றலாகச சுவாமிகளால கண்டு, அடைநது, உரைக்கப் படுவது அருளாறறல ஆகும. அவவாற்றலைப் பெற் றுத் தருவதாதலின், சன்மாாக்கம் அருளநெறி எனப் பட்டது. அதன் பயனாகிய ஞானம், மனிதரின ஆன் மாவை ஒளிமயம ஆககி, அதேசமயம் அவரது உட லையும் ஒளியுடமபு ஆககுகினறது. ஆதலின் அச்சன் மாாக்கம் ஒளிநெறி எனப்பட்டது.

வள்ளலார் வடலூரில சத்திய ஞானசபையை அமைத்து, அதறகு வருமாறு மககளுககு அறிவித்த 'சபை விளமபரததில' பினவருமாறு குறிபபிடுகின றார்: 'சத்திய அறிவால அறியப்படுகினற உணமைக கடவுள ஒருவரே, அகம் புறம் முதலிய எவவிடத் தும நீககமினறி நிறைநத சுதத மெயயறிவு எனனும பூரணப் பொது வெளியில, அறிவார் அறியும் வண ணஙகள எலலாமாகி விளஙகுகின்றார். அவ்வாறு விளஙகுகினற ஒருவரே ஆகிய கடவுளை, இவவுல கிடத்தே சீவர்கள அறிநது, அனபு செயது, அருளை அடைந்து, அழிவில்லாத சத்திய சுக பூரணப பெரு வாழவு பெறறு வாழாமல், பலவேறு கற்பனைகளால் பலவேறு சமயஙகளிலும், பலவேறு மதஙகளிலும, பலவேறு மார்ககங்களிலும. பலவேறு இலட்சியங களைக கொணடு, நெடுஙகாலம பிறநது பிறந்து, அவத்தை வசத்தாகளாகிச சிறறறிவுமினறி, விரைநது விரைநது பலவேறு ஆபத்துக்களினால துன்பததில ஆழந்து வீணே இறநது போகினறாாகள.

'இனி இச்சீவர்கள உணமை அறிவு, உணமை அன்பு, உணமை இரக்கம் முதலிய நற் குணஙகளைப் பெற்று நற்செய்கை உடையராய், எல்லாச் சமயங களுக்கும், எலலா மதஙகளுக்கும், எலலா மாாக்கங களுக்கும் உணமைப் பொதுநெறியாய விளஙகும் சுதத சனமார்க்கத்தைப பெற்றுப் பெரு நலத்தையும் பெருஙகளிப்பையும் அடைந்து வாழும பொருட்டு, மேறகுறித்த உணமைக் கடவுள தாமே திருவுளளங கொணடு, சுத்த சன்மார்ககத்தின முக்கிய இலட்சிய மாகிய உண்மை விளக்கம் செய்கினற ஓர் ஞான சபையை இங்கே தமது திருவருட் சமமதத்தால இயற்றுவிதது, இக்காலம தொடஙகி அளவு குறிக கப்படாத நெடுங்காலம், அளவு குறிக்கப்படாத அற புத சித்துக்கள் எலலாம விளஙக, யாமே அமர்நது விளையாடுகினறோம் எனனும் திருககுறிப்பை வெளிப் படுத்தி அருட்பெருஞ்சோதியராய்வீறறிருககின்றார்.

வள்ளலாரின சுத்த சனமார்ககம் இதுவரை சமய மதஙகளால குறிககப்படும் பெயர், அடையாளம்,

கோயில், மூர்த்தி, தலம், தீர்த்தம், சடங்கு, வழி பாட்டு முறை முதலியவற்றைச் சார்பாகக் கொணட தன்று.சுத்த சன்மார்ககம் இவற்றையெல்லாம கடந் தது, இச்சுதத சன்மார்க்கத்தில இறைவனின் திருப் பெயர் அருட்பெருஞ்சோதி எனறு குறிக்கப்படுகிறது.

வளளலார் குறிகக்கும் சமரச சுத்த சிவசன்மார்க் கம் எனனும பெயரில் சிவ என்னும் பெயர் வருவ தால் இநநெறி சமய, மத, சாாபுடைய நெறி அல லது சைவ மதச சார்புடைய நெறி எனறு சிலர் ஐயுறலாம். வளளலாா சிவ எனனும பெயரை மட்டு மன்றி, சைவ சமயத தொடர்புடைய இன்னும சில பெயர்களையும் சுதத சனமார்க்க நெறியின பல கருத்துகளுக்கு வழங்கியுள்ளார் ஆனால், அவறறிற் குச் சைவத்தில வழஙகும பொருள அவரால அப்படியே கொள்ளப்படவலலை. அவர் வேறு பொருள்களை வழங்கியுள்ளார்.

'பிளளைப் பெரு விண்ணப்பம' எனனும் பகுதி யில் 'கருணையும் சிவமே பொருள் எனக காணும் காட்சியும பெறுக மற்றெல்லாம் மருள நெறி என நீ எனக்கு அறிவித்த வண்ணமே பெறறிருக்கிறேன' என்றும், 'தோழிககு உரிமை கிளத்தல்' எனனும் பகு தியில் 'சிவமயமே வேறிலை எல்லாம்' எனறும வள ளலார் குறிப்பிடுவது கொண்டு ஒருவரேயாகிய உண மைக் கடவுளையே இவர் சிவம் எனனும் பெயரால் குறிப்பிடுகினறாரே அனறிச் சைவ சமயத்தின இலட் சியமாகிய சிவனை அன்று எனறு ஒருவாறறியலாம்.

சுத்த சன்மார்க்கம் பொது நெறி என்பது கூறப் பட்டது அது எங்ஙனம்பொதுவாக உள்ளது என்பத னைத்திருவருட்பாவை அடியொற்றிக்காணலாம்.பொ துத் தன்மை எனனும் கருத்தை வளளலார் எவ்வாறு கையாள்கின்றார் என்பதை முதற்கண தெளிவாக உணரவேண்டும். வள்ளலார் 'பொதுவில் நடம்புரியும அரசு' என்று இறைவனைக் குறிபபிடுவார். பொது நடமிடுகின்ற புண்ணியப் பொருளே' என்றும் பாடு வார். அருட்பெருஞ்சோதி அகவலில் 'பொதுவுணாவு உணரும்போது அலால் பிரித்தே அது எனில் தோனறா அருட்பெருஞசோதி' என்றும் 'உளவினில அறிநதாலொழிய மற்று அளககின அளவினில் அளவா அருட்பெருஞ்சோதி' என்றும் குறிப்பிடுகிறார். இவற்றால 'பொது' என்னும் சொல இறைவனாகிய உணமையைக் குறிககும்போது, உணமை ஒனறே யாதலால் அனைத்துச சமயஙகளுக்கும, அனைத்துத் தத்துவங்களுககும் இலட்சியமாக விளஙகுபவர் ஒரே இறைவனே எனனும்கருத்தை உடையது என அறிய லாம். இதனை 'எச்சமயத் தெய்வமுந தானஎன நிறைந்த தெய்வம்' எனற வள்ளலாரது வாக்கால் உணரலாம்.

வளளலார் கணட பொது நெறியாகிய சுததசன் மார்ககம் அனைத்துச் சமயத் தத்துவங்களுக்கும் உரிய கடவுள் ஒருவரே எனக் கொள்ளுவதால, இச் சன்மார்க்கம் பொது நெறியாகிறது. அதுமட்டுமன்றி, பொது நெறி என்பதில் வள்ளலார் பொதிநதுள்ள கருத்துகள இன்னும் உணடு. அவற்றுள தலைமை யானது, இதுவரை உலகில் வழஙகி வந்துளள சமயஙகள, தததுவஙகள ஆகியவற்றிற்கு ஒரு கூர் தலற வளர்ச்சியாகச (Evolutionary Development) சுத்த சனமார்ககம் தோன்றுகிறது என்பதே. இவ்வாறு ஏற்கெனவே உளள நெறிகளின இயல பான வளர்சசியாகச சுத்த சனமார்க்கம் அமைவ தால, இரண்டு தனமைகள அதில பொருந்தியிருககும. ஒனறு, ஏற்கெனவே உளள சமயத் தத்துவஙகளின சாயல் அதில இருக்கும். அதாவது, அநநெறிகளுக்கு மாறானதன்று சுத்த சன்மாாககம், ஆனால, அந நெறிகளில சொலலப்படாத கருத்துகள, கொளகை கள, இலட்சியங்கள, அனுபவஙகள ஆகியவை சுத்த சனமார்ககத்தில் உளளன. ஆதலால சுத்த சன்மாாக் கம மேற்குறிபபிட்ட நெறிகளைக் கடந்தது என உணருதல் வேணடும். மறறொனறு, ஏற்கெனவே உள்ள நெறிகளுள் முரணபட்டனவாக உளளனவற றுக்குச் சுத்த சன்மாாக்கத்தின் உதவியால் சமரசம் காணலாம் எனபது. இவ்விரணடாலும் உலகம் அடையும் பயன், தேககமடைந்திருக்கின்ற சமய நெறி, தத்துவ நெறி ஆகியவறறை மேலும் தேங்க விடாமல் வளாப்பதும, சமயத் தத்துவங்களுக்கு இடையே உள்ள முரணபாடு காரணமாக நிலவி வரும் வேறுபாடடுணர்சசி, பகைமை, பூசல் ஆகிய வறறை நீககி மாநதரிடையே சகோதர உணர்வையும நட்புணர்வையும் வளாபபதும் ஆகும். இப்பயனை வளளலாா ஒருமைப்பாட்டுரிமை எனக குறிப்பிடு கின்றார். கருத்து விளககத்தின பொருட்டு அதனை அனைத்துலக ஒருமைப்பாட்டுரிமை எனக் கொளள லாம். இவவொருமைப்பாட்டுணர்வு மனிதர்க ளிடையே மட்டும் நிலவினால்போதாது என்று வளள லார் கருதினார். உலக உயிர்கள் அனைத்திடத்தும் இதை நிலவச் செயவதே அரிய பெரிய செயலாகும்; பெரிய குறிக்கோளும் ஆகும். இந்தக் குறிக்கோள என்றும் முடிவடையாத குறிக்கோளுமாகும். அதற கான முயறசிகள் தொடர்நது நடை பெற்றுக் கொணடே இருக்க வேணடும். அவவாறு நடைபெற வளளலாருடைய இலட்சியம் இன்னும் விரிந்து பெருகி யுள்ளது. அவர் உலகிலுளள அனைத்து உயிாக ளோடும் மாந்தர் தமது ஒருமைப்பாட்டை உணர வேண்டும் என்று விரும்புகின்றார். ஆதலின் தாம் கண்ட ஒருமைப்பட்டிற்கு மனித நேய ஒருமைப்பாடு என்று பெயரிடாமல் ஆன்மநேய ஒருமைப்பாடு என்று பெயரிடுகின்றார். ஆகவே அவர் நெறி உலகனைத

தையும தழுவுகிறது ஆதலின் அதனைப பொது நெறி எனக் குறிப்பிட்டார். பொது நெறி என்பதில மற்றும் ஒரு கருத்தையும வளளலாா பொதிந்து வைத்துளளாா். அது, சமயம ஒவவொனறின் வாயி லாகவும், தத்துவம் ஒவ்வொன்றின வாயிலாகவும், தனிததனியாக அறியபபடும் இறையியல் உணமை களையும், அனுபவங்களையும் சுதத சன்மாாகக நெறியில உளளோர் ஒருஙகே அறிநதடைதல கூடும் என்பது. அவவாறு அறிவதற்கு உதவுவது, சன்மார்க்க நெறிப்படி முயலவதால் பெறுகினற இறைவனது அருளாறறலே ஆகும். இஙகுச சுத்த சனமாாககம என்பது பொது நெறி எனபதற்கு ஏறப, மறற நெறி களில் சென்று, மாந்தர் முரணபட்டும மாறுபட்டும இடர்ப்படாமல, அந்நெறிகளின அனுபவஙகளை எலலாம் தானே தருகிறது என்பதே கருத வேணடு வதாகும். இதனை, வளளலாா அருள விளகக மாலை என்னும பகுதியில் குறிபபிட்டுளளாா.

இத்தகைய பொது நெறியாகிய சுத்த சனமார்க கத்தைக கணட வள்ளலாா அதுவரையுளள சமய தததுவ நெறிகளை அவறறின மாட்டாமை குறித் துச் சுட்டுவதும் சாடுவதும கணடிபபதும மறுப்பதும் இயற்கையே. அதனாற்றான திருவருட்பாவில பலவிடங்களிலும சமய, தத்துவ நெறிகளைப் பொய் என அவா குறிப்பிடுகினறார்; சில இடங்களில் அவற்றை வனமையாகக கணடிததலும செய்கின றார், கடுமையான சொற்களையும பயன்படுத்து கிறார். அருள்விளக்க மாலை என்னும் பகுதியில சமயஙகள எலலாம, அதாவது சமய நிறுவனஙகள எலலாம் ‘கொள்ளை வினைக கூட்டுறவால கூட்டி யவை’ எனச் சாடுதினறாா. சமயத்தாரின கூட்டத் தில சொலலப்படுகின்ற கலைகள் பயனற்றன என றும், அவை காட்டுகின்ற கதிகளும் சாட்சிகளும் காட்சி தருகின்ற கடவுளர்களும சிறுபிளளை விளை யாட்டு எனறும் கூறுகின்றார்.

உலகினரைப் பார்த்துக் கூறும் ‘மரணமிலாப பெருவாழ்வு’ எனனும் பகுதியில், ‘பொறிததமதம் சமயமெலாம பொய் பொய்யே அவற்றில புகுதாதீர், சிவம் ஒனறே பொருள எனக கணடறிமின்’ என்று கூறுகினறார். சமய நெறிகளில புகவேண்டா, சுத்த சன்மார்க்க நெறி ஒனறையே பினபற்றுங்கள என்று வேண்டுகினறார். இங்குச் சிவம் எனற பெயரைக் கடவுளுககுப் பொதுப் பெயராக அவர் வழஙகு கிறார்.

மதங்களை எல்லாம் முழுவதும் மாற்றி ஒருநிலை யாக்குமாறு இறைவன தமக்கு ஆணையிட்டதாகக் கூறுகின்றார். மேலும், இறைவன் இப் பெருஞ் செயலைச் செய்தற்குரிய அருளாற்றலைத் தமககுக் கொடுத்தான எனக கூறும ஒரு பாடலில் சமய நெறி களில கூறப்படும் சடஙகுகளை வெறும் கறபனையே என்று சாடுகினறார். அவற்றின கருத்தினைக கருதாது வெறும சடஙகை மட்டும செயகினற வழககததைச் சாடுகினறாா. அச்சடஙகுகளை எலலாம் நீக்கிச் சுத்த சனமாாக்கத்திறகு வந்து உலகம் வாழந் தோஙக வேணடும எனபதற்காக இறைவன தமக்கு அவவரு ளாற்றலை வழஙகினான என்று கூறுகினறாா.

**சுத்த சன்மார்க்க நெறியின் பயன்:** அது இவவுலக வாழககையின பினனா அடையப்படுவதனறு அப்பயன் சுததசனமாாகக நெறியினால் அடையபபடும் அரு ளாற்றலும, ஒளியுடமபுப்பேறும், இறைவன தரும் அரு ளாறறலால் எலலாம செய்கினற சிததியும் ஆகும என்று வளளலாா வகுததுரைககினறார். பிற சமயஙக ளெலலாம், மனிதா பெறத் தகுந்த மேலநிலையைப் பரம்எனறு கூறி, அதை இவ்வுலக வாழ்வின் பின்னரே யடையமுடியுமென்று வகுத்துரைத் திருக்க, வளள லார் மனிதா பெறத்தகுநத மேலநிலை இதுதான என்று மேற்குறித்த ஒளியுடம்புபபேறு முதலிய வறறைச சுட்டி, அந்தப பரவாழ்வினை இப்பிறவியி லேயே பெறலாம் எனறு துணிநதுரைககினறார். அவவாறு மனிதா பெறுவதற்குப் பணி செயவதே தாம் உலகிடைப் பிறநததன நோக்கம் எனறு தம வாழக்கை நோக்கததைத தெளிவுபடுத்துகிறாா. அது இறைவன திருவளளம எனகினறார். உலகந் தழுவிய இப்பெரும பணியைப் புரிவதறகாகவே அவர் சனமாாக்க சஙகத்தைத் தோற்றுவித்தார். மறுபிறவியில் நறகதி பெறலாம எனறோ, பரமாகிய மேல்நிலை, உலகவாழ்வின பினனர் வரும் எனறோ எண்ணியிருக்கினறவர்களெலலாம் ஏமாறுகினறவர் கள. இப்பிறவியின பயனை இபபோதே பெறறுக கொள்ளாமல இறந்துபோக இருககிறார்கள. சுத்த சனமார்கக நெறியைப் பினபறறத் தொடங்குகினற வரையில், அவரைச் ‘செத்தார்’ எனறு கொளவது தவறில்லை. ஏனெனில், சுத்த சன்மாாக்கம் ஒன்றே இப்பிறவியில வந்தே தீரக்கூடிய இறப்பினைத் தடுக் கக்கூடியது, பிற சமய நெறிகளில் அதற்கான வழி துறை இல்லை எனறு கூறுகின்றாா. ஆகவே, உலக மக்களைச் சன்மார்க்க நெறிக்குக் கொணடு வரவேண டும் எனபது அவரது கருதது.

கீர்த்தனைப் பகுதி, வளளலாரின புற-உடல் ஒளி யுடம்பாகிச் சாவாமை பெற்றதையும, இறையனுபவ அமுதினை அருநதி அருந்தி அவரது அகமாகிய சித்தம சிவமயம், அதாவது ஒளிமயம் ஆகியதையும் குறிப்பிடுகின்றது. அன்றியும ‘அருட்சோதி ஆனேன் என்று அறையப்பா முரசு’ என்றும், ‘என்னைத் தானாக்கிய சோதி’ எனறும், ‘தான், நான எனும்

பேதம் தன்னைத் தவிர்த்தான்' என்றும், 'தாம் இறைவனே ஆகிய' அனுபத்தைக் குறிப்பிடுகின்றார்.

சைவ சித்தாந்தக் கொள்கைகளை எடுத்தாளும் வள்ளலார், அவற்றை ஓரிடத்திலும் மறுக்கவில்லை. சைவ சமயத்தில் வழங்கும் பொன்னம்பலம், திருச் சிற்றம்பலம், சிற்சபை, சிதம்பரம், மணிமன்றுமுதலிய வற்றிற்குச் சைவ பரமாக உள்ள பொருளை விடுத்து, சுத்த சன்மார்க்க அனுபவங்களைக் குறிக்கும் பொருளை ஏற்றிக் கையாள்கின்றார். சைவத்தில் இவை அனைத்தும் தில்லைப் பொன்னம்பலத்தையே குறிக்கும். வள்ளலாரோ,

'கண்டமெலாம்கடந்துநின்றே அகண்டமதாய்அதுவும்
கடந்த வெளியாய் அதுவும் கடந்த தனி வெளியாம்
ஒண் தகு சிற் றம்பலத்தே எல்லாம் வல்லவராய்
ஓங்குகின்ற தனிக் கடவுள்'

என்ற பாடற்பகுதியில், சைவத்தில் குறிக்கப்பட்ட தைக் காட்டிலும் உயர்ந்த ஓர் அநுபவம் வாய்ப்ப தாகிய ஆன்ம உணர்வு நிலையைச் சிற்றம்பலம் என்ற பெயராற் குறிப்பிடுகின்றார். இதை ஞான சபை என்றும் வழங்குகின்றார். இதன் புற அடை யாளமாக வடலூரில் அவர் அமைத்த வழிபாட்டி டமே சத்திய ஞானசபை. வடலூர்ச் சத்திய ஞான சபையில், ஞானசபை நடுவாக விளங்கச் சிற்சபை யும் பொற்சபையும் அதன் உறுப்புகளாக, முறையே அதன் இடப்புறத்திலும் வலப்புறத்திலும் உள்ளன. வள்ளலார் தம் அருளியல் அனுபவங்களை வகைப் படுத்தி, அவற்றை முறையே சிற்சபை நடனம் பொற்சபை நடனம், ஞானசபை நடனம் என்று வழங்குகின்றார். வள்ளலார் புறத்தில் கண்ட அனு பவங்கள் அல்ல இவை. அவருடைய அக அனுபவங் கள் ஆகும். இறைவன் ஒளிவடிவினனாய், ஆன்மாவின் மிக உயர்ந்த அனுபவ இடமாகிய புருவ மத்தி முதல், தலை நடு வரை உள்ள இடங்களில் விளங்கித் தோன்றும் அனுபவம் அளிக்கிறான், இவ்வனுபவத் தையே சபை நடனம் என்று வள்ளலார் குறிக்கின் றார். அண்டம்(அகிலம்) போலவே பிண்டம் (உடம்பு) என்ற கொள்கை வள்ளலாரது நெறி, அனுபவம் ஆகியவற்றிற்கு அடிப்படையாக விளங்குகிறது. அண் டத்தில் அகம் அக்கினி, அதுபோலப் பிண்டத்திலும் அகம் எனப்படுவது ஆன்மா. கடவுள் பிரகாசம் அண்டத்தின் அகமாகிய அக்கினியிலும், பிண்டத்தின் அகமாகிய ஆன்மாவிலும் காரிய நிலையில் உள்ளது. அதேசமயம், அண்டத்தில் பரமாகாயத்திலும், பிண் டத்தில் புருவமத்தியிலும் காரண நிலையில் உள்ளது. காரணம் என்பது சபை. காரியம் என்பது நடனம். 'அகமாகிய ஆன்மப் பிரகாசமே ஞானசபை; அந்தப் பிரகாசத்துக்கு உள்ளிருக்கும் பிரகாசம் கடவுள்; அந்த உள்ளொளியின் அசைவு-நடம்-இதை ஞானா காச நடனம் என்றும், அசைவு அற்றதே நடராசர் என்றும் ஆனந்த நடனம் என்றும் சொல்லுகிறது... மேற்குறித்த பிரகாசமே சபை ஆகவும், அதன் உள் ளொளியே பதியாகவும் மக்கள் வணங்க வேண்டும் என்று இசைப்பாவில் விளக்குவார் வள்ளலார்.

மனிதர், தம்முள்ளே உள்ளொளியாக விளங்கும் அருட்பெருஞ் சோதி யிறைவனைக் காண்பதற்குச் சுத்த சன்மார்க்கம் வகுக்கும் வழி எளிமையானது; இயற்கையானது. மக்களது இயற்கைப் பண்புகளுள் ஒன்றாகிய இரக்கத்தைச் செயற்படுத்துவதே அந்த வழி. எந்த வேறுபாடும் கருதாமல் மக்களும் பிற உயிர்களும் பசி, நோய், அச்சம், பகைவர், பிற துன் பங்கள் ஆகியவற்றால் அடையும் துயரை நீக்கி அவர்க்கு மகிழ்ச்சியையும் ஆறுதலையும் அளிப்பதால் மக்களிடையே நல்லுறவும் நட்பும் வளர்ந்து, படிப் படியாக ஆன்மநேயமாக, பெருங்கருணையாக மல ரும். அதே ஆன்மநேயத்தைப் பக்தி நெறியில் இறை வனிடம் செலுத்தி, அத்துடன் நில்லாமல், உடம் பினுள் விளங்கும் இறைவனைக் காணும் முயற்சி யாகத் தியானம் பயின்றால் ஆன்மநேயம் வழிகாட்ட, யோகசித்தி மிக எளிதாகக் கைகூடும். அதற்கென வாசி பயில வேண்டுவதில்லை. படிப்படியாகக் கரு ணைத் தொண்டை விரிவுபடுத்தி 'ஆருயிருக்கு எல் லாம் நான் அன்பு செயல் வேண்டும்' என்றும், 'ஒத் தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும் ஒருமை யுளராகி உலகியல் நடத்தல் வேண்டும்' என்றும் விரும்பிப் பணி செய்தால், அந்த ஆன்மநேயம், இறைவனது அருளாற்றலைப் பெற வழிவகுக்கும். அருளாற்றல் கிடைத்தால், அது அருள் அனுபவத் தைத் தந்து, ஆன்மநேயத்தை மேலும் வளர்க்கும். இவ்விரண்டும் ஒன்றை ஒன்று வளர்த்துக்கொண்டே செல்லும்; செல்ல, வள்ளலார் கூறும் உயர்ந்த ஆன் மிக அனுபவங்கள் வாய்க்கும்.

மனிதப்பிறவி முடியும்முன் அருளைப் பெற்று, அதனால் இறவாத உடம்பும் அருள் வாழ்வாகிய பெருவாழ்வும் பெறுவதே திருவருட்பா மனிதர்க்கு முன் நிறுத்தும் குறிக்கோளாகும். வள்ளலார் இச்சித் தியினைப் பெற்றார் என்பது 'சித்திநிலை முழுவதும் கொடுத்து, மூவாமல் சகமேல் இருக்கப் புரிந்தாயே, தாயே என்னைத் தந்தாயே' என்னும் திருவருட்பா அடிகளால் நன்கு விளங்கும். சுப.அ.

**துணை நூல்கள்:**

**சிவஞானம்**, **மா.பொ.**, வள்ளலார் கண்ட ஒருமைப் பாடு, இன்பநிலையம், மயிலாப்பூர், சென்னை, 1963.

**Annamalai, S.P.,** The Life and Techings of St. Ramalingar, Bharathiya Vidya Bhavan, Bombay, 1973.

**Suddhanantha Bharathiar,** Mahatma Ramalingam and his revelations, Bharatha Sakthi Nilayam, Pondicherry, 1936.

**Thulasiram, T.R.,** Arutperunjothi and deathless body, 2 Volumes, University of Madras, 1980.

**Vanmikanathan, G.,** Pathway to God tread by Rama linga Swamigal, Bharatiya Vidya Bhavan, Bombay, 1976.

***திருவல்லம்***: இது தொணடை நாட்டுத் தலங களுள் பத்தாவதாகும். இத்தலத்திற்குச் சம்பந்தா பதிகம் ஒன்று வியாழக்குறிஞ்சிப பணணில் உளளது. இதற்கு விலவாரணியம் எனவும் ஒரு பெயருண்டு தீக்காலி என்னும் ஓர் அவுணன் வழிபட்டுப் பேறு பெற்றதால் தீக்காலிவல்லம் என்ற பெயர் ஏறபட்டது. விநாயகர் அம்மையப்பரை வலம வநது மாங கனி பெற்ற வரலாற்றை ஒட்டி இத்தலத்திற்குத் திருவலம் எனற பெயர் வாய்த்தது எனறும பெயாக் காரணம் கூறுவர். இறைவன் பெயர் வல்லநாதர், இறைவி பெயர் வலலாம்பிகை. இது பாலாற்றின் துணைநதியான நிவா நதியின் மேற்குக் கரையில உள்ளது. பொன்னை, நுகா என்னும் வேறு பெயா களும் இந்நதிக்கு உள்ளன. நந்தி சுவாமியை நோக காமல் ஆற்றை நோக்கிக் கொண்டிருக்கிறது. இது மிகப்பழமையான கோயில. மிகவும்சிதைந்த நிலையி லிருந்த இக்கோயிலை, ஞானமூர்த்தி என்னும் துறவி அர்த்தமணடபம் முதலியவற்றைச் சகம் 1236 (கி.பி. 1314-இல்) கட்டினார் என்று கலவெட்டுக் கூறுகிறது. அதேபோன்று இப்போதும சிவானந்த மௌனசாமி கள என்னும் ஒரு துறவியே இக்கோயிலை நன்கு திருப்பணிகள செய்து முடித்துளளாா. திருக்கோயில மிக நனனிலையிலுளளது. நவக்கிரகங்கள, வல்லா ளன் முதலியோர் வழிபட்டுப் பேறு பெற்றதாக வரலாறு கூறும். அந்தணன ஒருவன ஆண்மகப்பேறு வாய்க்காமல் பெண் மககளையே மிகுதியாகப் பெற் றான். அவர்களைச் சிவத் தொண்டிலீடு படுததி னான. அவர்கள இறையருளால் உய்தி பெற்றனர் என்பதை 'நல்வினைப் பயன் செய், மாதர் தோன் றிய மரபுடை மறையவர் வல்லம், பூதி சாதனம் போற்றிய பொற்பினால் விளங்கும்' என்னும் பெரிய புராணச் செய்யுளால் தெரியலாம். இக்கோயிலில 38 கல்வெட்டுகள் உள்ளன. செயஙகொண்ட சோழ மண்டலத்துப் படுவூர்க் கோட்டத்துப் பெரும் பாணப் பாடியில் மீயரை நாடு என்ற கரை வழி நாட்டில் உள்ள தீக்காலி வலலம் என்ற வாணபுரம் என்று இவ வூர் கல்வெட்டில் குறிக்கப் பெறுகிறது. அங்கு இக கோயில் இராசராசேச்சுரம் எனக் காணப்பெறுகிறது. இராசராசேச்சுரம உடைய நாயனார் எனப பெரு மான குறிககப் பெறுகிறார். இவவூரில் பல்லவர்கால முதற் கொண்டு வாழ்நத அரசர்கள, குறுநிலமனனர் கள முதலியோா பல நிவந்தஙகள அளித்த செய்தி கள கலவெட்டுகளிற் காணப பெறுகின்றன. திருபபதி யம எனற சொல்லாட்சி முதலிற காணபபெறும் கல்வெட்டும் இங்கேதானுளளது இது ஒரு மிகப் பழமையான சிவத்தலம கந்தபுராணத்தில போற் றப் பெறும் வளளிபடர் சாரலாய வளளிமலை இத் தலததுககு அருகிலேயே உளளது. இரா ச.

***திருவல்லவாழ்***: ஆழவார்களால பாடப் பெற்ற வைணவத் திருத்தலஙகள 108-இல் மலை நாட்டுத் திருப்பதிகள 13. அவைகளுள திருவல்லவாழ் என்னும் திருத்தலமும் ஒன்றாகும்.

இன்றுளள கேரள மாநிலந்தான் மலைநாடு எனக் குறிக்கப்பட்டது. கேரளாவில, கொசசி எர்ணாகுளம் தொடர் வணடிப் பாதையில திரு வல்லா என்ற இரயிலவே நிலையம் உள்ளது. இங கிருந்து 5 கி மீ. தொலைவில, பெருமாள சந்நிதி உளளது. இதற்கு வடககே 5 கி.மீ. தொலைவில 'திருமாறன்விளை' எனனுமவைணவத்தலம உள்ளது.

கோலப் பிரான, திருவாழ்மார்பன எனறு பெரு மாளுக்கும், செலவத் திருககொழுநது நாச்சியார் என்று தாயாருககும், தூய தமிழ்ப பெயர்களே வழஙகுகினறன.

**சிறப்பு**: பமபா நதிக்கரை, கண்டாகர்ண தீர்த் தம், சதுரஙக கோல விமானம், சுதர்சன சககர அமைப்பு முதலியன இக்கோயிலின் சிறப்புகளாகும. கொடிக்கம்பம் தங்கத் தகட்டால் வேயப்பட்டிருப் பது, இக்கோயிலை மேலும் அழகு செய்கிறது. இங்கு எழுந்தருளிய பெருமான், நம்மாழ்வார், திருமங்கை ஆழவார் ஆகிய இருவரால் பாசுரங்கள பாடி வணங்கப் பெறறுளளார். 'மறைவலார் குறைவிலார் உறையும் ஊர் வலல வாழ்' என்றும், 'அந்தமாய் ஆதியாய் ஆதிககும் ஆதியாய் ஆயனாய் மைந்தனார் வல்லவாழ்' என்றும் திருமஙகை ஆழ்வாரால் இத் திருத்தலம் போற்றப்படுகிறது. 'பொன்திகழ் புன்னை மகிழ் புது மாதவி மீதணவி, தெனறல் மணங கம ழும் திருவல்லவாழ் நகர்' எனவும, 'பச்சிலை நீள கமுகும் பலவும் தெங்கும் வாழைகளும் மச்சணி மாடங்கள் மீதணவும் தண திருவல்லவாழ' எனவும் 'ஓத நெடுந்தடத்துள் உயர் தாமரை செங்கழுநீர்

மும் சிறப்புற்றதால் திருவோணம் ஆயிற்று. இவவிரு நட்சத்திரங்களும் தெய்வ அமிசம் பொருந்தியதால திரு எனற அடைமொழி பெற்றன. மார்கழி மாதம் திருவாதிரை மிகவும் சிறப்பாகக் கொணடாடப்படுவ துணடு. 'கார் தரு சோலைக் கபாலீச்சரம் அமர்ந் தான் ஆதிரைநாள்' என்று ஞானசம்பந்தர் குறிப் பிடுவாா. நந்தனார், மாாகழி மாதம திருவாதிரை நாள் வரப்போகுது எனறு மகிழ்நத செய்தியைப் புராணங்களால் அறியலாம. மாாகழித திருவா திரை நிறைமதி நாள. பெரும்பாலும் தமிழநாட்டில் நிறைமதி நாள சிறப்பான நாளாகக் கருதப்பட்டு வநதது. மார்கழித் திருவாதிரை, தைப்பூசம், பஙகுனி உத்திரம், சிததிரைச் சித்திரை, வைகாசி விசாகம் கார்த்திகைததிருக்கார்த்திகை, ஆவணி அவிட்டம் முத லியவற்றைக் குறிப்பிடலாம. திருவாதிரைக்குரிய கோள் இராகு என்பதாகும. திருவாதிரையில ஒருவர் பிறந்தால், அவர் பிறந்த திசை இராகு திசை எனறு கணிககத் தொடங்குவர். ஆதிரை, முப்பூரம் கேட்டை, விசாகம், பரணி போனற நட்சத்திரங் களில ஒருவர்நோயவாய்ப்பட்டால் பாம்பின் வாய்த தேரையாவார் எனறு நூல்கள் குறிப்பிடும். சிவன ருள் இருப்பின் நலம்பெறுவர் என்று கூறுவதும் உணடு. இதுபோன்ற எண்ணம் ஞானசம்பந்தர் காலத்திலும் இருந்தது. எனவே கோளறு திருப்பதி கம் பாடும்போது ஒன்பதோடு ஒன்றோடு ஏழு பதி னெட்டொடு ஆறும் உடனாய நாள்கள அவைதாம் அன்பொடு நல்லநல்ல என்பார். ஒன்பதோடு ஒனறு பத்து. அது மகம். ஒன்பதோடு ஏழு; பதினாறு; அது விசாகம். பதினெட்டு கேட்டை; ஆறும் என்பது திரு வாதிரையைக் குறிப்பிடும். ஆதிரையான என்று சிவ னைக் குறிப்பிடுவது மிகவும் பழமையான வழக்கம். ஆதிரை என்று பெணகளுககும் ஆதிரையான் என்று ஆண்களுக்கும் பெயரிடுவதை ஆராய்ந்து பார்க்க லாம. தே.ஆ.

**திருவாதிரை நோன்பு**: திருவாதிரை நோன்பு என்பது மாாகழி மாதம் முழுமதி நாளில் சைவர் களால கொணடாடப் பெறுவதாகும். இந்நாள சிவ னுக்கு உகந்ததாகும். ஆதிரை முதலவன் என்றும் ஆதிரையான் என்றும் சிவனைச் சிறப்பிப்பர்.

இந்நோன்பு சிதம்பரத்தில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பெறுகின்றது. சூரிய உதயத்திற்கு முன்பாகக் கிழககுத் திசை நோக்கி நுனிவாழையிலை இட்டு அதில் பழம், வெறறிலை, பாக்கு, செவந் திப்பூ, நோன்புக் கயிறு, களி ஆகியவற்றை வைத்து வழிபடுவர். ஒறறைப் படை எண்ணிக்கையில் காய் கறி வகைகளை ஒரு சேர இட்டுச் சமைத்து உண்பர். பூசை முடிந்ததும் மூத்த மங்கல மகளிர் இளைய மங்கல மகளிர்க்கும், மூத்த மங்கல மகளிர்க்கு அவர் தம் கணவனும் நோன்புக கயிற்றினைக்கையில கட்டு வர். மணமான பெண்களே இந்த நோன்பு நோற்பர். கணவன இறந்த பினனா இதனை மேற்கொளள மாட்டார்கள

நடுத்தர வயதுக்கு மேறபட்டவர்களே விரதம் இருப்பர். இந்தநாளில எவ்வளவு கோவிலகளைத தரிசனம் செய்ய முடியுமோ, அவவளவு கோயில்கட் குச் சென்று நடராசப் பெருமானை வழிபடுவா. சிவாலயங்கள எஙகும திருவாதிரைத் திருநாள் சிறப் பாகக் கொணடாடப பெறும் அனறு நடராச மூர்ததி வீதிஉலாவநது மக்களுககுக் காட்சியளிப்பார்.

இந்த நோன்பில உணவுப பொருளான, 'களி' சிறப்பிடம பெறும. இதனை, 'ஆதிரைக்களி' என்று கூறுவர்.

சங்கர சஙகிதை எனனும் நூலின ஏழாம் காண்டமான உபதேச காணடத்தில் திருவாதிரை நோனபின் பெருமை கூறப்பட்டுள்ளது. இக்காண டத்தைக் கோனேரியப்ப முதலியார் தமிழில் நாலா யிரத்து முந்நூறு பாடல்களில் மொழி பெயர்த்துள ளார். அதனை கி.பி.15ஆம் நூறறாணடில் ஞான வரோதயரும் மொழிபெயர்த்துளளார்.

இந்த நோன்பு நோற்பவரின கணவனுககும, இந்நாளில் பிறநத உயிர்களுக்கும், நீண்ட ஆயுளும செல்வமும் ஞானமும் கிட்டும எனற நமபிக்கை காணப்படுகினறது. இரா.குரு.

**திருவாப்பனூர்**: இது பாணடி நாட்டிலுள்ள தேவாரப் பாடல பெற்ற தலங்களுள ஒன்று. மதுரை மீனாட்சி அம்மன் கோயிலுக்கருகே, வைகை யாற்றின வடகரையில் இததலம் அமைநதுள்ளது. இத்தலம் திருவாப்புடையார் கோயில் என வழஙகப படுகிறது. இறைவன, சோழாநதகன எனனும் பாண டிய மனனன் ஒருவனுக்காக, ஆப்பு ஒனறில் வெளிப் பட்டருளினர் என்றும, அதனால் இத்தலம் ஆப்பனூா எனப்பட்டதென்றும் கூறுகினறனா. இங்குளள இறைவன் பெயர் ஆப்புடையார்; இறைவி பெயா குரவம் கமழ் குழலி. இறைவனுக்கு அனன வினோ தன், இடபுரேசுவர் என்ற பெயர்களும் உளளன. ஓர் அருச்சுகர் உலையில் அரிசியாகப் பெய்த மணலைச் சோறாக ஆககியருளியமையால் அன்ன வினோதன எனப்பட்டார் என்று கூறுகின்றனர். திருஞான சம்பந்தர் இத்தலத்தினைப் பதிகம் பாடிப் பரவி யுள்ளார். அதில் அவர் இறைவனை ஆப்பனூரான் எனறே குறிப்பிட்டுள்ளார். இத்தலத்திறைவியின் பெயரைக் 'குரவங கமழ் குழலாள் குடி கொண்டு

நின்று' எனனும் பாடல தொடரில ஞான சம்பந்தர் குறிப்பாகக் காட்டியுள்ளார் (திருஞான. தேவா. 1-88-2). மேலும், ஆப்பனூர், வைகையாற் றின் கரையில அழகுற அமைந்துள்ள சிறப்பினை 'அநதணபுனல் வைகை அணி ஆப்பனூர்' எனனும் தொடரால் விளக்கியுளளார் (திருஞான. தேவா. 1-88-11). இத்தலத்திற்கான தலபுராணத்தினைத் திருப்பூவணம் கந்தசாமிப் புலவா இயற்றியுள்ளார்.

அ.மா.ப.

**திருவாப்பாடி** சோழநாட்டிலுள்ள தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள ஒன்று. இதன் அருகே திருப் பனந்தாள என்னும் தலம் உள்ளது. இத்தலத்திற்குக் கும்பகோணத்திலிருநது பேருந்துவழியே செலலலாம். ஆடுதுறை தொடா வணடி நிலையத்திலிருந்து 13கி.மீ தொலைவில் உள்ள இத்தலம் மணணியாற்றின் தென்கரையில அமைந்துளளது. இறைவன் பெயர் பாலுகநத நாதர்; இறைவி பெயா பெரியநாயகி. இறைவன பெயர்க் காரணமாகப் பின்வரும் செய்தி மரபு வழிக் கூறப்படுகிறது. இடையன் ஒருவன பால கறநது எடுத்துச் செலலுகையில் ஒரு குறிப்பட்ட இடத்தில காலிடறி விழப் பால் சிந்தியது கண்டு வருந்தினான். பல நாள் இவவாறு நிகழ்ந்தமையால் சினங்கொணடவன் தன கையிலிருந்த கத்தியினை அவ்விடம் நோககி எறிந்தான. கத்தி பட்ட இடத் தில் இரத்தம் கசிநது பெருகக் கணட அவன் வியநது போறறினான். அங்கிருந்த இலிஙகத் திருமேனியைப் பாலுகந்த நாதர் எனறு கொணடு போறறி வழிபட் டான.

இத்தலத்தில் சணடீச நாயனாா வழிபட்டுப் பேறு பெற்றாா. இத் தலத்தினைப் பாடிப் பரவிய திரு நாவுக்கரசர் தம் பாடலொனறில் சணடீசா வழிபட் டுப் பயன்பெற்ற குறிப்பினைக 'கணடவன் தாதை பாய்வான காலற எறியக் கணடு, தண்டியார்க் கருள்கள் செய்த தலைவர் ஆப்பாடியாரே' எனறு சுட்டியுளளார் (திருநா. 4-48-4). அவர் பதிகப் பாடல்தோறும் இறைவனை 'ஆப்பாடியாரே' என்றே குறித்துப் போற்றியுளளார். இப்பதிகத்தில் இறைவன் இயல்புகளைக் கூறுஙகால, 'ஆதியும் அறிவுமாகி அறிவினும செறிவுமாகிச் சோதியும் சுடருமாகித் தூநெறிக் கொருவனாகி' என்றும், 'சிந் தையும் தெளிவுமாகித் தெளிவினுட் சிவமுமாகி' என றும் பிறவாறும் கூறியிருப்பது அறிந்தினபுறத்தகக தாகும. அததி மரம் இத்தல மரமாகும். ஐயடிகள காடவாகோன, இத்தலத்தினைக கொளளிடத்தின தென் திரு ஆப்பாடி' எனறு குறிப்பிட்டுளளார்.

அ.மா.ப.

**திருவாமாத்தூர்:** இது நடு நாட்டுத் தலங கள் 22 இல இருபத்தொன்றாம தலமாகும். இத் தலத்திற்குச் சமபந்தர் சீகாமரப் பண்ணில் இருபதி கங்களும், திருநாவுக்கரசர் திருக்குறுநதொகை, திருத் தாண்டகம் என வகைக்கொவவொன்றாக இரு பதிகங களும், சுந்தரர் தொலலிக்கௌவாணப் பண ஒனறு மாக ஐநது பதிகஙகளுமுள்ளன. இத்தலம் விழுபபுரத திற்கு வடமேற்கில் 7 கி.மீ. தொலைவிலுள்ளது. ஆ எனபது பசு அது உயிரைக் குறிக்கும். பசுக்களுக்குத் தாயாக இருந்து இறைவன் அருள் பாலிககும் தல மாதலின் இதறகு ஆமாத்தூா எனப் பெயர் ஏறபட் டது என்று அறிஞர் கூறுவர். இறைவன் பெயர் அழ கர், அழகு காதலர்; இறைவி பெயர் அழகிய நாயகி, முத்தைவெனற முறுவலாள் என்பதாம். அருணகிரி நாதர் இங்குளள அம்மையைத தம் திருப்புகழில் முத் தார் நகை அழகுடையார் எனக் குறிப்பிடுகிறார் இங்குத் தீர்த்தம் பம்பையாறு. தல விருட்சம வன்னி யாகும். பிருங்கி முனிவர் இறைவனையே வழிபடும் நியமமுளளவர். இறைவன் அர்த்தநாரீச வடிவனா யிருந்தபோது, வண்டுருவெடுத்துத் துளைத்துச் சிவனை மாத்திரம் வலம் வந்து வழிபட்டார். அத னால அமமை சினந்து வனனிமரமாகுமாறு சாப மிட்டார். பின்னர் அமமையை வழிபட்டு அசசாப நீக்கம் பெற்றார் என்பது தலவரலாறு. இராமர் வழிபட்டதால் இங்குளள பெருமானுக்கு அபிரா மேசர் எனற பெயரும் உண்டு. சுந்தரர் சகமாககத் தினர், யோக நெறியினர் என்று கூறுவதற்கேற்ப இத் தலப்பாடலில் 'நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலே ஓர் நால்விரல்' என்று அருளியிருப்பது சிநதித்து மகிழத் தக்க செய்தியாகும. இரட்டைப் புலவர்கள் இத்தலப பெருமானைப் புகழ்ந்து கலமபகம் பாடிப் பரவியுளள னர். புலவர் புராணம் பாடிய வணணசசரபம் தணட பாணி சுவாமிகள் இவ்வூரிலேயே தங்கிப் பினனர்ச சமாதியுமடைந்துள்ளார். முதல் இராசராசன, முத லாம் இராசேந்திரன், வீரராசேநதிரன், முதலாம் குலோத்துங்கன் ஆகியோர் கல்வெட்டுகள இத்தலத்தி லுளளன. கல்வெட்டுகளில திருவாமாத்தூர் உடைய பெருமானடிகள், திருவாமாத்தூர் ஆழ்வார், திருவா மாத்தூர் ஆளுடையார் அழகிய தேவர், திருவாமாத தூர் உடைய பரமசுவாமி என்பன இறைவன பெயர்களாகக் காணப்பெறுகினறன. அருவா நாட்டு மீய் வழி வாவலூர் நாட்டுத தேவதானம திருவா மாத்தூர், கஙகை கொணட சோழவள நாட்டுப் பனையூர் நாட்டுத் தேவதானம் திருவாமாத்தூர், இராசராச வளநாட்டுப்பனையூர் நாட்டு வாவலூர் நாட்டுத் தேவதானம் திருவாமாத்தூர் எனப் பல வேறு காலங்களில் இவ்வூர் பற்றிக் கலவெட்டுகள் குறிப்பிட்டுளளன. திருப்பதியம் பாட, திருவிளக்கு எரிக்க, வழிபாட்டுக்கெனப் பல நிவந்தங்கள் விட் டது பற்றி இக்கல்வெட்டுகள் தெரிவிக்கினறன.

இவ்வூர்க் கல்வெட்டில் 16 குருடர்களைத்திருப்பதியம் பாடச் செய்து அதற்கு நிவநதம் விட்ட செய்தி காணப் பெறுகினறது. அக்குருடர்களுக்குக கண காட்டுவார் இருவரும் நியமிககப் பெற்ற செய்தியும் காணப் பெறுகிறது. ஆகவே, முற்காலத்துத திருக் கோவிலகளில உறுப்புக் குறைவுளளவர்களையும் பணி கொடுத்து ஆட்கொணட செயதி அறிநது மகிழத் தக்கது. இரா.ச.

**திருவாமூர்**: ‘தெய்வநெறிச் சிவம் பெருக்கும திருவாமூர் திருவாமூா’ எனச சேக்கிழார் பெருமா னால புகழப்பெற்ற இவவூா தெனனாரககாடுமாவட் டத்தில் பணணுருட்டிக்கு அணமையில் உளளது. இத னைத் திருமுனைபபாடி நாட்டில உளளதாகப் பெரிய புராணம் குறிபபிடடுளளது இதனை நடு நாடு என வும் குறிபபதுணடு. தெனபெணணையாற்றால பயன பெறும் பகுதி இது.

திருவாமூா சைவ சமய குரவர் நாலவருள் திரு நாவுக்கரசர் எனவும, அப்பர் எனவும பெயா பெறும் மருள்நீக்கியார் அவதரித்த ஊா. இவ்வூரின பெயரில் திரு இருந்தபோதிலும இவ்வூருககுத தேவாரம் இலலை. இவவூரில சைவர்கள நிரம்பி யிருந்ததாகப பெரியபுராணம் கூறுகிறது. கோயி லில் முதற் குலோத்துஙகன காலததுக் கலவெட்டு கள உணடு. அப்பரடிகள பிறந்த பஙகுனி மாதத்து உரோகிணி விணமீன கூடிய நனனாளிலும், அவர் முத்தியடைநத சித்திரைச் சதயநாளிலும இவவூரில் அப்பருக்கு விழாககள் நடைபெறுகினறன.

திருநாவுககரசரின் தமக்கையாராகிய திலகவதி யாரின் திருமணம் நிச்சயிககபபட்டு நின்றுபோய விட்டமையால் இவவூர் வேளாளாகள தம் வீட்டுப் பெண்ணுக்கு மாப்பிளளையை நிசசயித்த அனறே மணம் முடிககும் வழககத்தினைக் கொணடிருககின்ற னர். பெரியபுராண நிகழ்ச்சி இவ்வூா வேளாளர் சமூ கத்தினரை எவ்வளவு பாதித்திருக்கிறது எனபதற்கு இதனை ஒரு சான்றாகக் கொளளலாம்.

இவ்வூர் இறைவன பெயர் பசுபதீசுவரர், இறைவி திரிபுர சுநதரி.

இவ்வூரின பெயரைத் திருவாமூர் எனவும், திரு +ஆமூா எனவும் கொளளலாம். ஆமூர் என்ற பெயரில தமிழகததில் பல ஊர்கள உளளன. சொ.ச.

**திருவாய்ப்பாடி**; ‘கோகுலம்’ என்று சொல் லப்படும் திருவாய்பபாடியில் எமபெருமான் கணணன உருக்குமணி, சத்தியபாமை ஆகிய பிராட்டிமார் களுடன் நின்ற திருககோலத்தில் காட்சியளிககிறான. பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார் ஆகிய மூவரும இத்தலத்தைப் பாடியுள்ளனர்.

கணணன் அவதரித்தபோது திருவாயப்பாடியின நிலையை அநுபவிககினற பெரியாழ்வாா ‘உறியை முறறதது உருட்டி நின்றிடுவார், நறுநெய பால் தயிா நன்றாகத தூவுவாா, செறிமென கூநதல் அவிழத் திளைத்து எஙகும், அறிவழிநதனர் ஆய்ப்பாடி ஆயரே’ என்று ‘திருவாய்பபாடியிலுளள இடையர்கள கணணன் பிறநத மகிழச்சி உளளடஙகாமல நெய யும பாலும தயிரும இருககிற உறிகளை அறுத்துக் கொண்டு வந்து முறறத்திலே உருட்டிவிட்டு ஆடினார் கள. நெய், பால, தயிர் ஆகியவற்றைத் தானம் செய் தாாகள சிலர். தலைமுடி அவிழ்நததும் தெரியாமல கூத்தாடினாாகள சிலா. ஆகஇப்படி ஆய்பபாடி முழுவ தும்இனனதுதான செயவதெனறு தெரியாமல் உன்மத் தரானாாகள்’ எனறு வருணிககிறார். ஆயப்பாடியில, கணணன் ஊதின குழலோசை மேலுலகத்தளவும் பரநது சென்றதாம. அதனைக கேட்ட தேவாகளனை வரும் ஆய்ப்பாடிக்கே திரணடு வநது, ஒருவரை ஒரு வர் நெருககி நின்று குழலோசையை நனகு பருகி, கணணன் செனற இடஙகளுக்கெல்லாம் தாங்களும் பின செனறனராம. இவவாறு கண்ணன குழலோசை யின விநதையைக் காட்டுகிறார் பெரியாழ்வாா. ஆணடாள ‘சீர்மல்கும்ஆயப்பாடி’ எனறாள். அதாவது இவவூரின செலவம் வழிந்து போய் வைகுநதத்தளவும் சென்று வெளளமிடும்படி ஆய்ப்பாடியின சீர்மை உளள தாம். கணணனிடம் ஈடுபட்ட ஆணடாள் ‘ஆயப் பாடிக்கே என்னை உய்த்திடுமின்’ எனறு கண்ணனோடு வாழும் ஆய்ப்பாடி வாழவுககே ஆசைப்படுகிறாள். எஸ.கி.

**திருவாய்மூர்**: இது சோழமண்டலத்தில் உளளது. நாகப்பட்டினம் வட்டததில் புகழ்மிக்க முருகக் கோட்டஙகளுள ஒனறாகிய எட்டுக குடிககு மிக அணமையில உளளது இவவூர். இது சத்தவிடங கத் தலங்களுள் ஒன்று இவ்வூருக்கு அணமையில் உளள பெரிய நகரம் திருவாரூர்.

அப்பர், சமபநதர் இருவரும் வழிபட்ட தலம் இது. இவ்வூர் இறைவன பெயர் வாய்மூர் நாதர்; இறைவி பெயர் பாலினும் நன்மொழியாள தலமரம் பலா. இஙகுளள தீர்த்தம் சூரியதீர்த்தம். அப்பரடி கள், திருமறைக்காட்டு (வேதாரணியம) இறைவன திருவாயமூர்க்குத் தம்மை வா என்று அழைத்தார் எனறு தம் திருக்குறுந்தொகைப் பதிகப பாடல ஒன்றில் குறிப்பிடுகிறார். அவா இவ்வூர் இறைவனைப் பற்றிப் பாடிய திருத் தாணடகத்தில சிவபெருமா னுடைய முழு உருவத்தையும் வருணித்துள்ளார்; ‘வாய்மூர் அடிகளை நான கண்டவாறே’ என்று ஒவ் வொரு பாட்டின் இறுதியிலும குறிப்பிடப்படும

தமது தேவாரப் பதிகத்தில் சிவபெருமானது புறத்தோற்றம், அவரது உடுப்பு, கையில் வைத்துள்ள பொருள்கள் முதலிய எல்லாவற்றையும் பட்டியலிட்டுக் காட்டியுள்ளார். அந்தப் பட்டியல் வரலாற்று உண்மை ஒன்றைப் புலப்படுத்துவதால் அது மிகவும் பயனுடையதாகிறது. மேற்கண்ட திருத்தாண்டகத்தில் 'மெல்லியலும் விநாயகனும் தோன்றக் கண்டேன்' எனக் குறிப்பிடுகிறார் அப்பர்.

நரசிம்மவர்மனின் தளபதியாய் கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் நடந்த வாதாபிப் போருக்குச் சென்ற பரஞ்சோதியார் (சிறுத்தொண்டர்) கணபதியைக் கொண்டுவந்து திருச்செங்காட்டான்குடியில் (நன்னிலம் வட்டம்) கடவுள்மங்கலம் செய்ததாக வரலாறு. வாதாபி கொண்டது கி.பி. 642. அதற்குப்பின் சில ஆண்டுகள் கழித்தே பரஞ்சோதியார் சிறுத்தொண்டரானதும், திருச்செங்காட்டங்குடியில் வாதாபி கணபதியைக் கடவுள் மங்கலம் செய்ததும் ஆகும். அப்பர் மறைவு கி.பி. 655. அப்பர் தம் வாழ்நாளின் கடைசிக் காலத்தில் திருப்புகலூரில் தங்கி உழவாரப் பணி செய்தார் என்பது வரலாறு. ஆகவே அப்பரடிகள் விநாயகனைச் சிவபெருமான் கையில் கண்டதாகப் பாடியிருப்பதிலிருந்து வாதாபி கணபதி தமிழகத்திற்கு வருமுன்னரே விநாயகர் வணக்கம் தமிழகத்தில் இருந்திருக்கவேண்டும் என்று கொள்ளத் திருவாய்மூர்த் தேவாரம் இடந் தருகிறது. சொ.ச.

**திருவாய்மொழி**: திருவாய்மொழி பன்னிரண்டு ஆழ்வார்களுள் ஒருவராகிய நம்மாழ்வாரால் இயற்றப்பட்டது. நம்மாழ்வார் இயற்றிய நூல்கள் திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய்மொழி என்பன. இவை ஆழ்வார்கள் அருளிச்செய்த நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்துள் அடங்கும். பெருமாள் திருவடிகளைத் தேடும் அடியவர்க்கு இது கருவியாக இருப்பது.

வாய்மொழி என்னும் தொடர் வேதத்தினைக் குறிப்பது. வேதப்பொருளைச் சுட்டி நிற்பதால் திருவாய் மொழி என்று பெயர் இட்டார். இதனை வைணவச் சான்றோர்கள் தமிழ்மறை என்று கூறுவர். திருவாய்மொழி அந்தாதி யாப்பினால் ஆக்கப்பட்டுள்ளது; ஆசிரியவிருத்தம், தரவுகொச்சகக் கலிப்பா முதலிய பாவகைகளால் இயற்றப்பட்டுள்ளது. இது ஆயிரம் பாடல்களைக் கொண்டது; நூறு நூறு பாடல்கள் கொண்ட பத்துப் பத்துகளை உடையது. ஒவ்வொரு பத்திலும் பத்துப் பதிகங்கள் உள்ளன. ஒவ்வொரு பதிகமும் ஒரு திருவாய்மொழி என்று பெயர் பெறுகிறது.

திருவாய்மொழியில் நம்மாழ்வார் வைணவ சமயத் தத்துவ உண்மைகளான சித்து (அறிவுடைப் பொருள்), அசித்து (அறிவற்ற பொருள்), ஈசுவரன் என்னும் மூன்றன் தன்மைகளைக் கூறியுள்ளார்; தாம் பெற்ற இறையனுபவத்தையும் கூறியிருக்கிறார்.

முதற்பத்து எனப்படும் முதல் நூறு பாடல்களால் இறைவன் எல்லா நல்ல பண்புகளின் உருவமாக விளங்குகிறான் என்கிறார். இறைவனுடைய திருவடித் தொண்டே கிடைத்தற்கரிய பேறு என்கிறார். மனம், மொழி, மெய்களால் அவனுடைய தொண்டினைச் செய்வது புருடார்த்தமாகும் என்கிறார்.

இரண்டாம் பத்தில் இறைவனுடைய தொண்டுக்குத் தடையாக இருக்கும் இவ்வுலகத் தொடர்பினை அழித்து அடியார் கூட்டத்தில் சேர்வது நலம் என்கிறார். இவருக்குப் பரமபதம் சேர்வதற்குக் கூட ஆசையில்லை. இறைவன் தொண்டுக்கே தாம் இங்கு இருப்பதாகக் கூறுகிறார்.

மூன்றாம் பத்தில் இறைவனுக்குச் செய்யும் தொண்டில் உள்ள ஆசையைக் கண்ட எம்பெருமான் திருமலையில் தான் எழுந்தருளியிருக்கும் திருக்காட்சியைத் தமக்கு காட்டினான் என்கிறார். அதனைக் கண்டு, எம்பெருமான் திருவடியார்களுக்கும் வழுவில்லாது தொண்டு செய்ய வேண்டும் என முயல்கிறார்.

நான்காம் பத்தில் நாராயணனின் திருவடிகளே புருடார்த்தத்துக்குத் துணை என்பதை உணர்ந்தார். அதற்குத் தடையாயிருப்பன உலக இன்பங்களும் கைவல்யங்களும் என்பதை உணர்த்துகிறார். ஐம்புலன்களால் அனுபவிக்கும் இன்பம் தேடத் தகாத சிற்றின்பமே என்பதையும் உணர்த்துகிறார்.

ஐந்தாம் பத்தில் தாம் விரும்பியதைப் பெறுவதற்கும் விருப்பமில்லாதவற்றை நீக்குவதற்கும் வழியாக இறைவன் தன் திருவடிகளைத் தந்தான் என்று கூறுகிறார். அந்தத் திருவடிகளில் சரணமடைகிறார்.

ஆறாம் பத்தில் அவனே தக்க துணையினைச் சேர்ப்பவனாகத் திருமகள் புருடாகாரமாக விளங்க, அதனை ஏற்றுச் சொல்கிறார்.

ஏழாம் பத்தில் இறைவனையே இவ்வாறு துணைக் கொண்டிருந்தும் தம் எண்ணம் விரைவில் நிறைவேறாமையால் துயரமடைகிறார். திருவேங்கடவன் திருவடிகளைப் பெரிய பிராட்டியாராகிய திருமகள் முன்னிலையில்பற்றி விண்ணப்பஞ்செய்தும் தம்

வேண்டுதல் நிறைவேறாமையாலே தம்மைக் கைவிட்டு விடுவானோ என்று அஞ்சினார். இறைவனுடைய திருக்கோலத்தைக் கண்ணாரக்கண்டு அனுபவிக்க வேண்டும் என்னும் பதற்றத்தை உடையவரானார். தமக்கு வினை, உடல், ஐம்புலன்கள் முதலானவற்றை யெல்லாம் கொடுத்து உலகப் பொருள்களில் தம் மனத்தைப் படியவிட்டுத் தம்மிடம் வரவொட்டாமல் இறைவன் தடுப்பதாக எண்ணினார். இறைவன் பின் காட்சி தந்தான். அவன் காட்சி ஆனம அனுபவமாக இருந்தது. புறத்தேயும் பிரானைக் காணவேண்டும் என்று எண்ணித் தம்மைத் தலைவியாகவும் இறைவனைத் தலைவனாகவும் கருதித் தலைவனைப் பிரிந்த தலைவி நிலையில் இருந்து கூறுகிறார்.

எட்டாம் பத்தில் தமக்குக் கிடைத்த ஆனம அனுபவம் தம் புறக் கண்களுக்கும் கிட்ட வேண்டும் என்று விரும்பினார். அவனுடைய காட்சி மாயையாக இருந்தது. இறைவன் தன்னைக் காட்டி மறைப்பதற்குக் காரணம் தமக்கு ஆன்மாவிலும் ஆன்மாவோடு தொடர்புடைய பொருள்களிலும் ஆசை இன்னும் அறாமையே என்பதை உணர்ந்து கூறுகிறார்.

ஒன்பதாம் பத்தில் தமக்கு இறைவன் மீதன்றிப் பிறிதோர் பொருள் மீது ஆசையில்லை என அறுதியிடுகிறார். இவ்வாறு ஆசை அற்றபின்பும் தம்மை அவன் காக்காமல் மறைவது ஏன் என்று ஐயங்கொள்கிறார். இறைவன் தான் நாராயணன் என்றும், எல்லா ஆற்றல்களையும் உடையவன் என்றும், ஆழ்வாருடைய விருப்பங்களைத் தான் நிறைவேற்றுவேன் என்றும் கூறினான். ஆகவே, நம்மாழ்வார் அவனுடைய எல்லையற்ற உயர்ந்த குணங்களில் மனம் பறி கொடுத்து உருகிப் பாடுகிறார்.

பத்தாம் பத்தில் இறைவன் ஆழ்வாருடைய ஆற்றாமையைக் கண்டு திருமோகூரில் வந்து தங்கி, இவருக்கு மாறாத பேரின்பப் பெருநிலையை அடையும் வழியையும் காட்டி, இவர் வேண்டியபடி அப்பேற்றினை அருளினான் என்று கூறுகிறார்.

இப்பத்துப் பத்துகளிலும் நம்மாழ்வார் இறைவனுடைய முதன்மையினையும் பேரருட்டிறத்தினையும் எளிமையினையும் அனுபவித்து மகிழ்ந்தவராய்த் தாமான தன்மையின் நின்று பேசுவதும் உண்டு. தாமான தன்மை அழிந்து ஒரு தலைவியின் நிலையை அடைந்து, மகிழ்ந்து கூறும் கூற்று மாறி, ஆற்றாமையால் கூறும் கூற்றுகளும் உண்டு. நம்மாழ்வார் இறைவனை மனம் வாக்குக் காயங்களால் அனுபவிக்க விரும்பியதன் விளைவு இது.

திருவாய்மொழியில் அகத்துறைப் பாடல்களில் தலைவியின் கூற்றாகவும் தாய்க்கூற்றாகவும் தோழி கூற்றாகவும் கூற்றுகள் அமைந்துள்ளன. தலைவி கூற்றாகப் பதினேழு பதிகங்களும், தாய் கூற்றாக ஏழு பதிகங்களும் தோழி கூற்றாக மூன்று பதிகங்களும் உள்ளன. தலைவி கூற்றாக வருவனவற்றுள் தலைவி தூது அனுப்புவதாக நான்கு பதிகங்கள் அமைந்துள்ளன. தலைவி அன்னம், கிளி, குயில், குருகு, கொக்கு, தும்பி, நாரை, பாவை, புதாவினம், புள், பூவை, மகன்றில், வண்டு ஆகிய உயிருள்ளபொருள்களையும் நெஞ்சு, முகில், வாடை ஆகிய உயிரற்ற பொருள்களையும் தூதாக அனுப்புகிறாள்.

திருமந்திரம் மூன்று சொற்களுடையதாக இருப்பதால் அகத்துறைப் பாசுரங்களும் மூவகைக் கூற்றுகளாகக் கூறப்படுகின்றன என்பர்.

நம்மாழ்வார் அகப்பொருட் பாசுரங்களாலும் வேத விழுப்பொருளையே விளக்குகிறார். அகப்பொருட் பாசுரங்களில் உட்பொருளாக விளங்குவனவற்றை அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் ஆசாரிய இருதயம்' என்னும் நூலில் எடுத்துக்காட்டியுள்ளார். தோழியின் பாத்திரம் இறைவனோடு ஆன்மாக்களை ஒன்றுபடுத்தவல்ல சான்றோர்களைக் குறிக்கிறது. தாயப்பாத்திரம் இறைவனை அடைய வேண்டும் என்னும் மன உறுதியைக் குறிக்கிறது. தலைவியாகக் கூறப்படுவது ஆன்மாக்களை. தலைவி தலைவனிடத்துத் தூதாக அனுப்பும் பறவை முதலாயின ஆசாரியனைக் குறிக்கின்றன. நம்மாழ்வார் இந்நூலில் வைணவ சமய உண்மைகளைத் தெளிவாக எடுத்து மொழிகிறார்

வைணவ சமய உண்மைகள் தத்துவம், இதம், புருடார்த்தம் என்ற மூன்று பிரிவுகளாகக் கூறப்படுகின்றன. தத்துவம் என்பது இறைத் தத்துவம், உயிர்த்தத்துவம், பிரகிருதித் தத்துவம் என்ற மூன்று பிரிவுகளை உடையது அவை ஈசுவரன், சித்து, அசித்து என்றும் வழங்குகின்றன. சித்து என்பது உயிர். அசித்து உயிரற்ற பொருள். இதுவே பிரகிருதி எனப்படுகிறது. இதம் என்பது மனிதர்கள் இறைவனை அடையும் நெறியாகும். புருடார்த்தம் மனிதனால் வேண்டப்படுவது

இவ்வைந்து பொருள்களும் திருவாய்மொழியில் விளக்கம் பெறுகின்றன. நம்மாழ்வார் நாராயணனே பரம்பொருள் என்கிறார். அது மெய்யானது; (சத்தியம்), பொய்யற்றது; கால எல்லையைக் கடந்தது. பரம்பொருள் அறிவு மயமானது; குற்றமற்ற தூய அறிவு அது. நிறைந்த ஞானமூர்த்தி', 'மிக்க ஞான மூர்த்தி' என்றெல்லாம் பரம்பொருளைப் போற்றுகிறார். இறைவன் இன்ப மயமானவன் என்கிறார்

நம்மாழ்வார். 'உயாவற உயர்நலம் உடையவன்' என் பார். கால் உள்ளவரை அனுபவித்தாலும் அனுபவத் திற்கு அப்பாற்பட்டு மனத்தாலும் சொல்லாலும் அளந்தறிய மட்டாதபடி உயர்ந்துகொண்டே இருக் கும் இன்பம் அது. அவ்வினபப் பணபு நிலையானது; அழிவில்லாதது.

இறைவன் இவ்வுலகத் தோறறத்திற்கு முதற் காரணமாகவும், துணைக்காரணமாகவும் நிமித்த காரணமாகவும் இருக்கிறான. உயிரானது உடல் இயங்குவதற்கு ஆதாரமாக இருப்பதுபோல இறைவன இவ்வுலக இயக்கத்திற்கு ஆதாரமாக இருக்கிறான். இறைவனே அனைத்தையும் தரித்துத் தாரகனாக இருக்கிறான். அவனே இதனைக் காக்கிறான். நம் மாழ்வார் 'உடல்மிசை உயிரெனக் கரநதெங்கும் பரந்துளன்' எனறு இதனை உணர்த்துகிறார்.

இறைவன் படைத்தல் காத்தல் அழித்தல் என் னும் மூன்று தொழிலைச் செய்து வருகி றான். இறைவன மூலப் பிரகிருதியிலிருந்துஉலகைப் படைக்கிறான். அவன் தானே இவ்வுலகமாகப் பரநது நினறாலும் தனனிடமிருந்து இவ்வுலகம் தோன்றி னாலும் தான் சற்றும் தன் தன்மையிலிருந்து குறை யாதவன. இறைவன் உயிர்களை உய்விக்க வேண்டும் என்னும் அருளின் காரணமாகவே படைப்புத் தொழிலை மேற்கொளகிறான். படைத்த பொருள் களைக் காப்பதும் அவன கடமை. பயிருக்கு நீர் போல எல்லா உயிர்களிலும் நுழைநது காத்து வரு கிறான். உயிர்தோறும் உள்ளுறு பொருளாக (அந்தர் யாமியாய்) நின்று காத்து வருகிறான. சாத்திரங்கள பலவற்றை உருவாக்கி உலகிற்கு நல்வழி காட்டித் தீமைகளிலிருந்து காக்கிறான். உலகில் தீமைகள தலைதூக்கும் காலங்களிலெலலாம் உலகில் வந்து அவதரித்து உலகை நலியவிடாமல் காக்கிறான். பிரளய ஆபத்திலிருந்து உலகை வராகமாய அவ தாரம் எடுத்துக் காத்தான்.

நம்மாழ்வாரின் திருவாய்மொழியைப் பாராட்டிப் பல நூல்கள் எழுந்துள்ளன. அவற்றுள் சில அதன் விளக்கமாக அமைந்துள்ளன. நம்மாழ் வாரின சீடராய் இருந்த மதுரகவிகள் 'கண்ணி நுண் சிறுத்தாமபு' என்னும் 10 பாடல்கள் அடங்கிய நூலை இயற்றியுள்ளார். மணவாளமா முனிகள் 'திருவாய்மொழி நூற்றந்தாதி' எனனும் நூலை இயற்றியுள்ளார். அழகிய மணவாளப் பெரு மாள் நாயனார் 'ஆசாரிய இருதயம்' என்னும் நூலை ஆக்கியுள்ளார். இவை தவிர வடமொழியிலும் திரா விட வேதோபநிசத் சங்கதி, திராவிட வேதோபநிசத் தாத்பரிய ரத்தினாவலி என்னும் நூல்கள் தோன்றி யுள்ளன. தெலுங்கிலும் 'ஆந்திர கீவாண சகசரம' எனனும் நூல் எழுந்துள்ளது. இதுபோலக் கனனடத் திலும் தோன்றியுள்ளது

திருவாய்மொழியின் சிறப்புகளை அதறகுத் தோன்றிய உரைகள் எடுத்துக் கூறுகின்றன. திருக் குருகைப் பிரானபிள்ளை என்பவர் 'ஆறாயிரப்படி' எனனும் வியாக்கியானத்தை ஆககியுள்ளார். நஞ் சீயர் 'ஒனபதினாயிரப் படி' என்னும் வியாக்கியான மும், வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர் 'பனனீரா யிரப்படி' எனனும் வியாக்கியானமும், பெரியவாச் சான் பிள்ளை 'இருபத்து நாலாயிரப்படி' என்னும வியாக்கியானமும், வடக்குத் திருவீதிப்பிள்ளை 'முப்பத்தாறாயிரப்படி' எனனும் வியாக்கியானமும ஆக்கியுளளனர். முப்பத்தாறாயிரப்படி ஈடு என்றும் வழங்குகிறது. இவை திருவாய் மொழியை நனகு உணாந்து கொள்ள உதவுகின்றன. ந.மா.

**துணை நூல்கள்:**

திருக்கோனேரி தாச்யை, திருவாய்மொழி வாசக மாலை என்னும் விவரண சதகம், தஞசை சரசுவதி மகால் நூலகம், 1952.

**புருடோத்தம நாயுடு, பு ரா.,** ஆசாரிய ஹிருதய மூலம, மணவாள மாமுனிகள் அருளிச்செயத வியாக்கி யானத்தின தமிழாக்கம், சென்னைப் பல்கலைக் கழகம், 1965.

**புருடோத்தம நாயுடு, பு ரா.,** திருவாய்மொழி ஈட்டின தமிழாககம், சென்னைப் பலகலைக்கழகம, (10 தொகுதிகள), சென்னை

**மயிலை மாதவதாசன்,** நாலாயிர திவவியப பிரபந்தம், மணலி இலட்சுமணசாமி முதலியார் ஸ்பெசிபிக் எணடோமெண்ட், சென்னை, 1962.

## திருவாய் மொழிப்பிள்ளை

**திருவாய் மொழிப்பிள்ளை:** இவர் வைணவ சமய ஆச்சாரியர்களுள ஒருவர். மதுரைப பககத்தில் உள்ள குந்தை என்ற ஊரைப் பிறப்பிடமாகக் கொண்டவர். திகழக் கிடந்தான திருநாவீறுடைய பிரான் தாசா அண்ணார் எனற பெரியவரைத் தகப் பனாராகப் பெற்றவர். பிள்ளை உலோகாச்சாரியர் என்ற ஆச்சாரியரால இளமையிலேயே திரு இலச சினை பொறிக்கப்பட்டவர். இவர் தாயார், பிளளை உலோகாச்சாரியரை ஆச்சாரியராகக் கொண்டிருந்த தால், இவருக்கு அந்த ஆச்சாரியர் தொடர்பு பிள ளைப் பிராயத்திலே கிடைத்துவிட்டது இவருக்கு

ஆச்சாரியராக அமைந்தவர்கள், கூர குலோத்தம தாசர், நாலூர்ப் பிள்ளை, நாலூராச்சான் பிள்ளை, விளாஞ்சோலைப் பிள்ளை, அழகிய மணவாளப் பெருமாள நாயனார் ஆகியோா ஆவர்.

இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் திருமலை ஆழ்வார். நம்மாழ்வார் பிறநத வைகாசி விசாக நட்சத்திரத்தில் இவர் பிறந்தமையால 'சடகோப தாசர்' எனறும் சொல்லப்பட்டார். ஆழ்வார் திரு நகரி ஊரை நனகு திருததிக கோயிலைப் புதுப்பித்து, நம்மாழ்வார் திருவுருவத்தை அங்கு அமைத்து, யாவரும் வழிபடும் பணியை குறிக்கோளாகக கொணடு இதய பூர்வமாகச செய்தார்; அஙகேயே (ஆழ்வார் திருநகரி) தமக்கு இருப்பிடம் அமைத்துக கொண்டு, ஆழ்வார் அருளிய திருவாய் மொழியையே நாளும் பாராயணம் செய்து கொணடு வாழ்ந்தார், அதனால் 'திருவாய் மொழிப்பிள்ளை' எனப் பெரி யோாகளால் சொல்லப்பட்டார்; பெரியாழ்வார் திருமொழிக்கு வியாக்கியானம் ஒன்று செய்துள்ளார்.

பிராமண குலத்தினராய இவர், தாழந்த குலத்தினராய 'விளாஞசோலைப் பிளளை' என்ப வர்க்குப் பணிவிடை செய்து, அவருக்கு இறுதிச சடங்கினையும் செய்திருப்பது, 'குலந்தாஙகு சாதிகள் நாலிலும் கீழிழிந்து எத்தனை நலநதான இலாத சணடாள சணடாளராகிலும், வலநதாஙகு சக்கரதது அணணல் மணிவணணற்கு ஆள் என்று உள் கலந தார் அவர் எம் அடிகளே' எனற நம்மாழ்வார் திரு வாய்மொழியை அப்படியே வாழ்ககையில் நடை முறைப்படுத்திய பணபாளர் எனத தெரிகிறது. அத னால், திருவாய்மொழிப் பிள்ளை என்பது, சொல லாலும் செயலாலும் இவருக்குப் பொருநதும. 'தீதற்ற ஞானத் திருவாய மொழிப பிள்ளை', என் றும், 'தேசம் திகழும திருவாய்மொழிப் பிளளை', எனறும் தம் சீடராகிய மணவாள மாமுனிகள் தம் ஆர்த்திப் பிரபந்தத்தில் இவரைப் போறறுகினறார்'. மணவாள மாமுனிகள இவரை ஆசசாரியராக ஏற றுக் கொணடமையை, 'எநதை திருவாய் மொழிப் பிள்ளையின் னருளால், வந்த உபதேச மார்ககத்தைச -சிநதை செய்து, பினனவரும் கற்க உபதேசமாயப் பேசுகின்றேன மன்னிய சீர் வெண்பாவில வைந்து' என்று உபதேச ரத்தின மாலையில உறுதிப் படுத்து கின்றார்.

இவரது வாழ்க்கையின இடைக்காலததில, மதுரை அரசப் பேராளராக இருநது அரசப் பதவி சுகத்தையும் அனுபவிததுள்ளார். இவ்வுலகியல் வாழ்க் கையினினறும் இவரைத் திருத்தி ஆனமிக நெறிககுச் செலுத்தியவா கூரகுலோத்தமதாசர் ஆவா.

மு இரா.

**திருவாரூர்** காவிரியாற்றின் தெனகரையில அமைந்துளளது. இவ்வூரில பிறந்தாலே முக்தி கிடைக கும் எனபதும் இவ்வூரின் தீர்த்தங்களில் நீராடினால, தேவருலகிலுள்ள அனைததுத் தீர்த்தங்களிலும் நீரா டியதற்குச் சமமெனபதும் நம்பிக்கை.

திருவாரூர், காரைக்குடி, தஞசாவூர், நாகப்பட்டி னம், மயிலாடுதுறை ஆகிய தொடர்வணடித் தடங் களை சநதிக்குமிடமாக விளஙகுகிறது. தொடா வணடி நிலையத்திலிருநது திருவாரூர்க் கோவில 3 கி.மீ வடக்கில அமைந்துளளது.

திருவாரூா மனுநீதிச் சோழனின தலைநகர் என் பது வரலாறு. இதறகு கி.பி.1123-ஆம் ஆண்டுக் கல வெட்டுக் கூறும்'பூலோக ராசசியம்செய்கிற ஆர்ய புத் திரன் மநு' என்ற செய்தியைச் சான்றாகக் கூறலாம்

திருவாரூர், சமய குரவர்களாலும், சேக்கிழா ராலும் பாடப் பெற்ற சிறபபுடையது. இவ்வூர்த் தொடாபாகக் கமலாலயச சிறப்பு, திருவாரூாப புராணம், தேரூர்ந்த சோழபுராணம், தியாகராச லீலை, திருவாரூர் நானமணிமாலை, தியாகராசா பள்ளு, தியாகராசர் கழிநெடில், திருவாரூர்ககோவை, தியாகராசர் குறவஞ்சி, திருவாரூர் பன்மணிமாலை, கமலாமபிகை பிளளைத்தமிழ், திருவாரூா மாலை, கமலாம்பிகைமாலை, திருவாரூா ஒருதுறைக்கோவை, திருவாரூா உலா ஆகிய நூலகள வெளிவந்துளளன. இத்தலம் பற்றிப பல வடமொழி நூலகளும கீர்த தனைகளும் உளளன.

கடாரம் கொண்ட சோழமன்னன் இராசேந திரன் பெயரால கடாரங்கொண்டான என்ற ஊா திருவாரூருககு அருகில உளளது. திருக்குளமாகிய கமலாலயததின தெனகரையில சோழ அரணமனை யின ஒரு பகுதி காணப்படுகிறது.

திருவாரூருககு வன்மீகநாதபுரம, கநதபுரம், கலி செலா நகரம், அநதரகேசபுரம், ஆடகேசபுரம், கம லாலயபுரம், பராசக்திபுரம், சமற்காபுரம், சேததிர வரபுரம், தேவயாகபுரம், முசுகுந்தபுரம், மூவர்தார புரம் போனற வேறு பெயாகளும உணடு.

திருவாரூாக்கோவில தெற்கு வடககாக ஏறக்குறைய 228 மீட்டரும, கிழககு மேறகாக ஏறக்குறைய 288மீட் டரும் கொணடுள்ளது. கோவில், குளம், நநதவனம ஆகிய மூன்றும ஏறக்குறைய 100 ஏக்கரில் அமைந துளளன. இஙகு எழுந்தருளியுள்ள இறைவன் பெயர் தியாகராசர்; இறைவி கமலாம்பாள. மார்கழித் திரு வாதிரை நாளில தியாகராச சுவாமிகளின இடப் பாதமும், பஙகுனி உத்திரத்தில் வலப்பாதமும பக தர்களால் தரிசிக்கபபடுகினறன.



தியாகராசர் கோயிலும் கமலாலயக்குளமும் – திருவாரூர்

கமலாம்பாள் சந்நிதி தனிக்கொடி மரம், நந்தி, பலிபீடம் ஆகியவற்றைக் கொண்டுள்ளது. கோயிலின் மையத்தில் முக்திக் கிணறு அமைந்துள்ளது.

கமலாலயம் எனப்படும் திருக்குளம் 64 கட்டங்களைக் கொண்டுள்ளது. இக்குளக்கரையில் திருக்குறள் பயிற்சி நிலையமும், பல திருமண மண்டபங்களும் வழக்குரைஞர்கள் குடியிருப்பும் உள்ளன.

இறைவன் ஆண்டுக் கொருமுறை தெற்கிலிருக்கும் மணலிக்கு எழுந்தருளுகிறான். இறைவனுக்குச் செய்யப்படும் மாலை வழிபாடாகிய திருவந்திக்காப்பு என்னும் வழிபாடு குறிப்பிடத்தக்கது. இறைவனுக்குப் பஞ்சமுக வாத்தியம் என்னும் தோற்கருவி முழக்கப்படுகிறது. இது நடுவில் ஒன்றும், சுற்றி நான்குமாக ஐந்து மத்தள அமைப்பைக் கொண்டது.



தியாகராசர் கோயிலின் ஒரு தோற்றம்

திருவாரூர், திருமால், திருமகள், பிரமன், கலைமகள், எமன் போன்றோரால் வழிபடப் பெற்றுள்ளது. பிரமனுக்குத் தனிக்கோவில் அமைந்துள்ளது. மேலும், இக்கோவிலில் ஏழு கோபுரங்கள் உள்ளன. ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து பார்த்தால் ஏழு கோபுரங்களும் தெரிகின்றன.

திருவாரூர்த் தேர் உயரத்திலும் சுற்றளவிலும் முதன்மையானது. இத்தேரில் மூன்று அடுக்குமாலையுடனும் பூவோடும் தியாகேசர் திருவீதி வலம் வருவார்.

திருவாரூரில் சுந்தரமூர்த்திநாயனார் மடம், குருபூசை மடம், நாட்டுக்கோட்டை நகரத்தார் மடம் தட்சிணாமூர்த்தி சுவாமிகள் மடம் ஆகிய மடங்கள் உள்ளன.

திருவாரூரின் பெரிய விழாவாகப் பங்குனி உத்திர விழா நடைபெறுகின்றது. வசந்த உற்சவம், விசாகத் திருநாள், சீராளன் கறி ஏறுபடி, சிவசக்தி ஐக்கிய பாவனை விழா, கேதாரி வழிபாடு, அட்டதுர்க்கைத் திருவிழா, திருவெம்பாவை விழா, சிவராத்திரி விழா ஆகியவையும் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன.

திருவாரூரில் மூன்று நாள்கள் நடைபெறும் தெப்பத் திருவிழாவில் புகழ்பெற்ற கருநாடக இசைக் கலைஞர்கள் பங்கேற்பர். இசை மும்மூர்த்திகளான தியாகராச சுவாமிகள், சியாமா சாத்திரிகள், முத்துசாமி தீட்சிதர் ஆகிய இம்மூவரும் பிறந்த ஊரான திருவாரூரில் நினைவில்லங்கள் கட்டப்பட்டுள்ளன.

ஏழை மாணவர்களுக்கு உதவ ஒரு கருணை இல்லம் இவ்வூரில் அமைந்துள்ளது. இயற்றமிழ்ப்


மனுநீதிச் சோழன் மைந்தன்மீது தேர் செலுத்தும் பாங்கில் அமைந்த கோயில்

பயிறறகம் என்ற அமைப்பு தனித்தமிழை வளாப பதில மிகுந்த ஆர்வத்துடன் செயற்பட்டு வருகிறது. இவவூரில் மூனறு உயர்நிலைப் பளளிகளும், ஒரு கல் லூரியும் உளளன. தமிழ்த்தென்றல திரு வி.கலியாண சுந்தரனார் திருவாரூரில் பிறநததை நினைவிற் கொணடு இக்கலலூரிக்கு திரு வி.க. அரசுக் கலைக் கலலூரி எனப் பெயரிடப்பட்டுள்ளது.

திருவாரூரில அமைந்துளள காநதி சமாதான நிறுவனம் என்ற அமைப்பு ஏழை எளிய மககளுக்குப் பயனபடும் வகையில் பல சிறந்த திட்டஙகளைக கொண்டு செயற்படுகிறது. இவ்வூரில் வடபாதிமங கலம் சர்க்கரை ஆலை நிறுவனததின தலைமையகம் அமைநதுள்ளது. மேலும், இவ்வூரில் ஒரு பெரும் நெல் அவித்தல் அரைத்தல் தொழிற்சாலை உளளது. எனினும், திருவாரூர் வேளாண்மையையே சிறப்புத் தொழிலாகக் கொண்டுள்ளது. அர.க.

**திருவாலங்காடு** செங்கற்பட்டு மாவட்டத் தில் திருத்தணி வட்டத்தில் உள்ளதோரூர் திருவாலங் காடு சென்னையிலிருந்து மேற்காக 60கி.மீ. தொலை வில் அமைந்துள்ளது. இவ்வூர் கோயிற் கட்டடக் கலைச் சிறப்பும் தொல்லிற் சிறப்பும் பெற்ற ஊரா கும். இங்குள்ள சிவன் கோயிலின் மூல்வர் வடாரணீ சுவரா எனப்படுகிறார். மூலவரைக் குறித்து காரைக கால அம்மையாரும், பட்டினத்தாா, அருணகிரி நாதா ஆகியோரும், அபபர், சுநதரா, சமபநதர், திருமூலர் 'பரஞ்சோதி, சேககிழார் ஆகியோரும புகழநது பாடியுளளனா. ஆடலவல்லானின ஐநது சபைகளுள ஒனறாக விளஙகும் இரத்தின சபையை இவ்வூா பெறறுததிகழகிறது. ஆடலவல்லானின தாணடவஙகளில் ஊர்த்துவ தாணடவத்திற்கு இவ் வூர் புகழ் பெறறது. காரைககால் அம்மையார் இங கிருநதபடியே இறைவனைப புகழநது திருவாலங காடு மூத்த திருப்பதிகததைப் பாடினாா.


இராசேந்திர சோழனின் செப்பேடு

கோயிற் சிறபபுப் பெற்ற இவவூா தொல்லியற் சிறப்பும் பெறறது இவவூரில் பழங கற்காலக் கருவி கள பல கிடைததுளளன. இவ்வூருக்கு அருகில உளள திருவளளூர் வட்டததில உளள பலவேறு ஊாகளி லும் பழங்கற்காலக் கருவிகள கிடைத்துள்ளன எனவே, இவவூரில பழஙகற்கால மனிதனின நடவடிக் கைகள இருநதுளளன எனபது தெரிய வருகிறது. இங்குக் கைககோடரிகள, கிழிப்பான போனற கருவி கள கிடைததுளளன. இவவூரில் பெருஙகற்காலச் சின்னங்களும் மலிநதுளளன. தாழிகள, கல்திட்டை போன்றவை காணப்படுகின்றன. இவ்வூரில் உளள பெருஙகற்காலக் கல்திட்டை குறிப்பிடத்தகக ஒனறா கும். இரணடு பெருஙகற்பலகைகளை நிறுத்தி அதன மீது ஒரு கற்பலகையைப் படுக்கவைத்துளளனர். நிலத் தில் மேலிருந்து இவ்விரண்டு கற்பலகைகளின உயரம் ஏறக்குறைய 3மீ.ஆகும். இங்குப் பெருங்கறகாலமக்கள்

வாழ்நத நத்தப் பகுதியில கறுப்பு, சிவப்பு மட்கல ஓடுகள காணப்படுகினறன.

திருவாலஙகாடு பல்வேறு அரசர்களின காலத்தில சிறபபுப் பெறறு விளஙகியது. பல்லவர், சோழர், பாணடியா, விசயநகரப பேரரசர்கள ஆகியோா தம காலத்தில் இங்குளள கோயிலுககுப பல தானங்களை அளித்துள்ளனர். அவர்களுடைய கலவெட்டுகள கோயிலின சுவாகளில் காணபபடுகினறன. இககோயிலுக்குச் சோழப் பேரரசா முதலாம் இராசேநதிரன பழையனூர் என்னும ஊரைத தேவதானமாக அளித்த செய்தியைத் திருவாலஙகாட்டுச செப்பேடுகள் கூறுகின்றன.

**திருவாலங்காட்டுச் செப்பேடுகள்:** திருவாலஙகாட்டுச செப்பேட்டை அளித்த சோழ அரசன முதலாம இராசேந்திரன் ஆவான. இசசெபபேடு கி பி 1018-ஆம ஆணடு அளிக்கப்பட்டது. இசசெப்பேடு திருவாலங்காட்டுக் கோயிலில கணடுபிடிககப் பட்டது இது31 செப்பேடுகளை உடையது. இச்செப்பேடுகளை ஒரு தடித்த வளையத்தால இணைததுள ளனர். இசசெப்பேடுகள சோழ அரச மரபு வழிப பட்டியலை முழுமையாகத தெரிவிககின்றன. இது சோழ அரசர்களின் வெற்றிகளையும் முதலாம் இராசேநதிர சோழனின வெறறிகளையும் குறிப்பிடுகின்றது. திருவாலஙகாட்டுக் கோயிலுககுப் பழையனூர் என்னும் ஊரைச் தேவதானமாக அளிதத செய்தியை இச் செப்பேடுகள் தெரிவிககின்றன. இக்செப்பேடுகள இப்பொழுது சென்னை அரசு அருங்காட்சியகத்தில் வைககப்பட்டுளளன.



இராசேந்திர சோழனின் செப்பேடு

‘திருவாலஙகாட்டு நடராசா ஊர்த்துவ தாணடவர் எனபபடுகிறார். இப்படிமததைத் தவிரப் பிறிதொரு நடராசர் படிமம் உலகப புகழ்பெற்றதாகும. இபபடிமம் இப்பொழுது சென்னை அரசு அருஙகாட்சியகத்தில உளளது. இப்படிமம் கி பி.11-ஆம் நூறறாண்டைச் சார்ந்தது. சோழர் காலப் படிமஙகளில் மிக நேர்த்தியானது என இது புகழபபடுகிறது. நடராசா படிமததில பிரபாவளி உடைநதுளளது முயலகன மீது ஆடும் நிலையில நடராசா காணப்படுகிறார் இப்படிமத்தைத் தவிரச சோமசுகந்தா, கணணப்ப நாயனார், வீரபததிரர் போன்ற படிமஙகளும் இவவூரிலிருந்து எடுக்கப்பட்டு இபபொழுது சென்னை அருங்காட்சியகததில உளளன.

பண்டைச் சிறப்புப் பெறற திருவாலஙகாட்டில இப்பொழுது கூட்டுறவுச் சர்க்கரை ஆலை ஒனறு உளளது. சென்னையிலிருந்து அரககோணம செல்லும தொடாவணடிப் பாதை திருவாலங்காட்டுத் தொடாவண்டி நிலையத்தின வழியாகச் செலகிறது ஆஙகிலேயா ஆட்சிக் காலததில இவ்வூர் வடஆர்க்காடு மாவட்டதிலும், பின்னர்ச் சித்தூர் மாவட்டததிலும் இணைநதிருநதது. திருத்தணி வட்டததில 1960-ஆம ஆணடு இணைககப்பட்டஇவவூரில்ஓா உயாநிலைப் பளளியும, பஞசாயத்து அலுவலகமும் உள்ளன. இவவூரின அருகில பழையனூா என்னும ஊர் உள்ளது. இபபழையனூா வரலாறறுச சிறபபு பெற்ற ஊராகும். இவவூரில் கைலாசநாதர் கோயிலும, தழுவக் குழைந்தஈசுவரர் கோயிலும் உளளன. (காண்க.ஆலஙகாடு). சு.இரா.

*திருவாலம்பொழில்*: இது காவிரிககுத் தென கரையிலுள்ள தேவாரப்பாடல பெறற தலங்களில 10-ஆம் தலமாகும் இவவூருககுத் திருநாவுக்கரசர் திருத தாணடகம்ஒருபதிகம் மட்டும உளளது பதிகத்திலும் 9 பாடல்களே உளளன எஞசியது மறைநதது போலும். இத்தலம் திருக்கணடியூரிலிருந்து திருக்காட்டுப் பளளிக்குப் போகும் பெரு வழியில் திருபபூநதுருத்தியிலிருந்து 2 கி மீ. தொலைவிலுள்ளது. இககோயிலுளள ஊருககுத் தென் பரம்பைக்குடி எனறும், இக்கோயிலுக்குத் திருவாலம் பொழில் எனறும் பெயா வழஙகி வந்ததாகத் ‘தென பரமபைக் குடியின மேய திருவாலம் பொழிலானைச் சிநதி நெஞசே’ எனறு கூறும் தேவாரப் பகுதியிலிருநது தெரிநது கொளளலாம. இப்போது மக்கள திருவாலம் பொழில் எனபதனையே சிதைத்து திருவிளாமபொழில எனறு ஊருக்குப் பெயராகக் கூறி வருகினறனர். இஙகுள்ள இறைவன் பெயா ஆனமநாதர்; இறைவி பெயா ஞானாமபிகை. தலவிருட்சம் ஆலமரம். இது கோயிலின வெளியே உள்ளது திருஞானசமபந்தர் மேடு என ஒரு பகுதி கோயிலுக்கு முன சிறிது தூரத்

தில் இருக்கிறது. கோயில் வெளிப்புறத்தைக் காட்டி லும் உட்பக்கம் தாழ்நதுள்ளது. கலவெட்டுகள சுவர் களின் அடிப்பக்கத்தில் புதைந்துள்ளனவாகக் காணப் படுகின்றன. இது அட்டவசுக்கள பூசித்த தலம். சுந்தரமூர்த்தி நாயனாரும திருவாலம்பொழில் வந்து இரவு துயின்ற போது மழபாடி நாதர் கனவில் தோன்றி 'மழ பாடிவர மறந்தனையோ' என்று கேட்டதால் உடனே காவிரியைக கடந்து திருமழ பாடிக்குச் சென்றார் என்று பெரியபுராணம் கூறு கிறது. ஆனால், திருவாலம்பொழிலில சுந்தரர் பாடிய யனவாகத் தேவாரம் இல்லை திருநாவுக்கரசர் இத் தலத்தில் பாடிய பாடல்களில் பல உண்மைகளைக் குறிப்பிடுகிறார். இறைவன் 'வாரமதாம் அடியார்க்கு வாரம் ஆகி வஞ்சனை செய்வார்க்கு எனறும் வஞ் சனாகும்' எனவும், 'தொடர்ந்து தன பொன்னடியே பேணுவாரைச் செல்லாத நெறி செலுத்த வலலான' என்றும் கூறுவன பல உள. அவையாவும படித்தறிந்து கடைப்பிடித்துச் சிறக்க வாழ வழிகோலுவன.

இரா.ச.

**திருவாலித் திருநகரி:** ஆழ்வார்களால பாடப் பெற்ற வைணவத் தலங்கள 108. அவற்றுள் சோழநாட்டுத் திருப்பதிகள் 40-உள ஒன்று திருவாலி. இதனைத் திருவாலித் திருநகரி எனறும் உரைப்பர் வைணவப் பெரியார்கள. சீர்காழிக்கும் தென்கிழக்கே 9½ கி மீ. தொலைவில்உள்ளது இததிருவாலி. ஆழவார் களின் கால வரிசையில் இறுதியில நிற்கும் திருமஙகை ஆழ்வாரால் பாடல பெற்ற தலம. ஆழ்வார் பிறந்த குறையலூரைப் பக்கத்தில் கொணடுளள இடமும், அவர் மனைவியார் குமுதவல்லி வளர்ந்த இடமும் இதுவே.

திருநகரி என்ற ஊர் திருவாலியினின்றும 5 கி.மீ. தொலைவில் உள்ளது. இதற்கு 1 கி.மீ. தொலைவில வேதராசபுரம் என்றஊர் உள்ளது. இங்குத் தான் திருமங்கை ஆழ்வார் வேடு பறிசெய்து, பெருமாளி டம் மந்திரப் பொருள் பெற்றார். அதற்குப் பிறகு தான் 'வாடினேன் வாடி' என்று நாராயணா நாமம் பாடத் தொடங்கினார். 'வயலாளி மணவாளன்' என்று பாடப்பட்ட பெருமாள, திருநகரியிலும், 'சிந் தனைக்கும் இனியாய்' என்று பாடப்பட்ட பெரு மாள், வேதராசபுரத்திலும் இருப்பதால் இம் மூன்றை யும் ஒன்றாகக் கணக்கிடுவர் வைணவ சம்பிர தாயிகள்.

எம்பெருமானைத் திருமகள் ஆலிங்கனம் செய்து கொணட இடமாதலால் 'திருவாலி' எனப் பெயர் பெற்றது. திருமாலும் திருமகளும் மணககோலமாகக காட்சியளித்த இடம், இப்போது வேதராசபுரம் என்று கூறப்படும் ஊராகும். இப்போது மூன்றாக உள்ள ஊர்கள, திருமங்கை ஆழ்வார் வாழ்க்கை நிகழ்ச்சியில் ஒனறாகக் காணப்படுவதால் 'திருவாலித் திருநகரி' என்று சொல்வதே பொருத்தமாக உள்ளது.

'வந்துனது அடியேன் மனம் புகுந்தாய் புகுந்ததற் பின வணங்கும் என் சிந்தனைக்கு இனியாய், திருவே, என்னாருயிரே அந்தளிர் அணியார் அசோகின இளந் தளிர்கள் கலந்து, அவை எங்கும் செந்தழல புரையும் திருவாலி அம்மானே! என்பது ஆழ்வாா பாடிய திரு வாலி நகர்ப் பாசுரம். இதன் இயறகை வளத்தையும் சேர்த்துச் சிறப்பித்து இவர் பாடியபாசுரஙகள் நாற் பது. 'ஆலி நகர்க்கதிபதியே' என்பது குலசேகராழ் வார் பாசுரத் தொ:_ர்.

மணவாள மாமுனிகள, இந்நகருக்கு வநதபோது பாடிய பாடல் ஆழவாரது வாழ்க்கை நிகழ்ச்சியை மேலும்விளக்குகிறது. இதுவோ'திருவாசு ஈதோ மணங் கொல்லை, இதுவோ எழிலாலி எனும் ஊர் 'இதுவோ தான், வெட்டும் கலியன வெருட்டி நெடுமாலை. எட்டெழுத்தும் கொணட இடம்' என்பது மாமுனி கள் பிரபநதப் பாசுரம. பிளளைப் பெருமாள அய்யங் கார், தமது நூற்றெட்டுத் திருப்பதி அநதாதியில 'சுழன்று போம் வாயுவினைக் காட்டாமல், தீர்த்தம் உழனறு போய் ஆடாமல உயந்தேன்–அழன்று பெரு வாலி காலன, பரகாலன போற்றும் திருவாலி மாய னையே சேர்ந்து', எனறு, திருமஙகை ஆழ்வாரோடு இணைத்து வைதது இத்தலப பெருமையைப் பாடி யுள்ளார்.

மு.இரா.

**திருவாலியமுதனார்:** சைவத்திருமுறைகள பன்னிரண்டு ஆகும. அவற்றுள, ஒன்பது சைவப் பெரு மக்கள் அருளிய நூல்கள ஒன்பதாம் திருமுறை எனப் பெறும். திருவிசைப்பா எனவும் இது வழங்கப்பெறும். இவர் நான்கு திருவிசைப்பாப் பதிகங்கள் இயறறியுள் ளார். இவர் திருவிசைப்பா அருளிய ஆசிரியாகளுள் ஏழாமவராகத் திகழ்கின்றாா. திருமயிலை இவர் பிறந்த ஊர். சோழ நாட்டில் உள்ள சீர்காழிப் பகு திக்குப் பக்கத்தில் உள்ளது திருவாலி நகர். இவ்வூரில் கோயில் கொண்டிருக்கும்பெருமாளுக்கு அமுதன் என் பது பெயர். இவரது பெற்றோர்கள் திருவாலி அமு தனாரிடத்தில் மிகுந்த பத்தி பூண்டவராக இருந்தத னால் தம் குழந்தைக்கு அப்பெயரை வைத்திருந்தாா கள். இவ்வாசிரியர் தம்திருவிசைப்பா திருக்கடைக்காப் புச் செய்யுளில், தம்மை 'மயிலை மனனன்' என்றும், 'அந்தணன' என்றும், 'மறைவல திருவாலி' என்றும் குறிப்பிடுவதால், இவர் அநதணர் மரபைச் சேர்ந்த வர் என்பது உறுதிப்படுகிறது. பிறப்பிடம் மயிலாப் பூர் எனபதும் தெளிவாகிறது. இவருடைய பெயரும்

இவரது பாடலின அமைபபும இவர் வைணவர் என்பதைக் காட்டுகினறன.

திருவிசைப்பா மூனறாம பதிகததில 5ஆம் பாட லில் 'எடுத்த பாதம்','மழலைச் சிலம்பு' என்று வரும் தொடர்கள் இவரது காலத்தைக் காணபதறகு உதவு கினறன. முதல இராசராச சோழனால (கி.பி. 985 -1014)தஞ்சைப் பெரிய கோயிலில் கைஙகரியங்களுக் காக நியமிக்கப்பட்ட உருததிர கணிகையர் சிலருக்கு 'எடுதத பாதம்' 'மழலைச சிலம்பு' என்பன பெயராக வழங்கப் படுவதை ஒரு கலவெட்டுக குறிப்பிடுகிறது. அதனால், அமுதனார் காலம் கி.பி. 985-1014-ஆம் காலத்திற்கு முறபட்டது எனறு கூறலாம்.

**பாடிய பதிகங்கள்:** வைணவ சமயத்தினராய் இருநத இவருககுச சிதம்பரம நடராசப் பெருமா னிடம் அதிக ஈடுபாடு வநததனால், 'கோயில்' என் னும் சிதம்பரததைப் பறறியே நான்கு திருவிசைப் பாக்களைப் பாடியுள்ளாா. திருப்பாணாழ்வார் பாடி யுள்ள அமலனாதிபிரான பிரபநதத்துள பாதாதி கேச வருணனை உள்ளது அதனை ஒட்டியே அமுத னாரும், நடராசப் பெருமான மேல் பாதாதி கேச மாகப் பாடியுளளார். 'செயய பாதம வந்தென் சிந்தை யுளளிடங் கொணடனவே' எனறும் 'உநதி வான்சுழி என உளளத்து உளளிடங் கொணட னவே' என்றும், 'உதரபநதனம் என் உளளத்து இடங கொண்டனவே' என்றும், 'பிறைக கொள் செனனி யனறேபிரியாது எனனுள் நினறனவே' எனறும் வரும் தொடர்கள், அமுதனாா திருச்சிறறமபலத தானை எப்படி அனுபவிததுள்ளாா எனபதைக் காட்டுகின்றன. திருவரங்கநாததனை, திருப்பாணாழ வார்அனுபவித்த ஆனந்தஉணர்வினை நினைவுபடுத்து கின்றன இத்தொடர்கள. தொணடரடிப் பொடிஆழ வார், திருவரஙக நாதனை மட்டுமே பாடி அனுப வித்தது போல, இவர் திருச்சிற்றம்பல நாதனை மட் டுமே பாடியுளளார்.

பக்தர்கள் நாயக நாயகி பாவத்தில் இறைவனை அனுபவ ஆனந்தம் காணபது ஒரு சிறந்த உறவு உணர்வு முறையாகும். அத்தகைய பாவனைப் பாடல் கள் இவ்வாசிரியரது கோயில் பதிகத்தில சிறப்பாகத் தோனறுகின்றன. 'அறிவும் மிக்க நன நாணமும் நிறைமையும் ஆசையும் இங்குள்ள, உறவும் பெறற நற்றாயொடு தந்தையும் உடன் பிறந்தவரோடும், பிரிய விட்டு உனை அடைந்தனன் எனறு கொள', என்று பாடுகிறார். இது, 'அன்னையையும் அத்தனை யும் அன்றே நீத்தாள' என்ற அப்பர் பாடலை நினைவு படுத்துகிறது தில்லைப் பதியைத் 'தென்னன் தமிழும் இசையும் கலந்த சிற்றம்பலம் தன்னுள் பொன்னும் மணியும் நிரந்த தலம்' எனறு சிறப்பித் தும் பாடுகின்றார் அமுதனார்.

'பாலினை இன்னமுதை, பரமாய பரஞ்சுடரைச் சேலுகளும் வயல் சூழ் தில்லை மாநகர்ச்சிற்றம்பலதது ஏலுடை எம் இறையை என்று கொல் காணபதுவே' என்ற இவரது ஏக்க உணர்வுத தொடர், 'திருச்சித திர கூடந்தன்னுள் எங்கள் தனிமுதல்வனை எம் பெருமான் தன்னை என்று கொலோ கணகுளிரக் காணும் நாளே' என்ற குலசேகராழ்வாா பாசுரப் பகு தியை நினைவூட்டுகிறது. மு இரா.

***திருவாலீசுவரம்*** தமிழ்நாட்டில திருநெல் வேலி மாவட்டத்தில் திருநெலவேலியிலிருந்து48 கி.மீ. தொலைவில் அமைந்துளள ஊர். இதுகோயிற கட்ட டக்கலைச் சிறப்புப் பெறறது இவ ஊரிலுளளவாலீசு வரன் கோயில் கி பி.10-ஆம் நூறறாணடில் சோழர் களால கட்டப்பட்டது. இராசராச சோழனின் காலத தைச் சார்ந்த இக் கோயில் பிற சோழர் கோயில களின் அமைப்பை உடையது. இஙகுள்ள தேவி ஆல யம் பிறகாலத்தில கட்டப்பட்டது இது கி பி.12 அல்லது 13-ஆம் நூற்றாணடைச் சார்ந்தது. கரு வறையின் மேல் உளள விமானம் மிக உயரமான அமைப்பில் காணப்படாமல் நடுநிலை உயரம் பெற்



திருவாலீசுவரம்

றுளளது. இராசராசசோழன் கட்டிய தஞ்சைப் பெரு வுடையார் கோயிலமைப்பில் காணபபடும் தூண அமைப்புகள், மாடக்குழிகள், வளைவுகள் போன்ற அமைப்பில் இக்கோயில் ஒரு முனமாதிரியாக உள் ளது. இங்குச் சிவன் பல்வேறு வடிவங்களில் காணப் படுகிறார்.

இங்குள்ள இரிடபாந்தகர், கங்காதரர், நடராசர், இரிடபருத்திரன,அர்த்தநாரீசுவரர், தட்சிணாமூர்த்தி

போன்ற சிற்பங்கள் குறிப்பிடத்தக்கவை. இராச ராச சோழனின் முதற்கட்ட கோயிற் கலைக்குச் சிறநத எடுத்துக்காட்டாக இக்கோயில் அமைந் துளளது. சு.இரா.

***திருவாவடுதுறை***: தேவாரச் சிறப்புப் பெற்ற சிவத்தலம் இது. தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்ப கோணத்திலிருந்து மயிலாடுதுறை செல்லும் வழியில் 19 கி.மீ.தொலைவில் உள்ளது. திரு ஆஅடுதுறை என் பதே திருவாவடுதுறையாயிற்று. ஆ-பசு. சிவபெரு மான் கட்டளையால் உமாதேவி பசு வடிவம பெற் றுக் காவிரிக் கரையோரம் அமைநத இவ்விடத்திற்கு வந்து பெருமானை வழிபாடு செய்து முன உருப் பெற்றதால 'திரு' என்னும் அடைமொழியுடன் இவ வூர்ப் பெயர் வழங்கலாயிற்று என்பது புராண நம் பிக்கை. திருமூலர், திருமாளிகைத் தேவர் போன றோர் போகநாத சித்தரிடம் உபதேசம் பெற்றுத் தொண்டு புரிந்து அருள் பெற்ற இடம் திருவாவடு துறையாகும். திருவிசைப்பாப் பாடிய ஒன்பதினமருள முதலாமவரான திருமாளிகைத் தேவர் முதலாக நவகோடி சித்தர்கள வாழந்து பல வியத்தகு செயல் கள் நிகழ்த்திய இடம் இவவூராதலின் இவ்வூருக்கு நவகோடி சித்தாபுரம் எனனும் மற்றொரு பெயரு முண்டு. திருஞான சம்பந்தர் தம் தநதையார் வேள்வி செய்யச் சிவபெருமானைப் பாடி ஆயிரம் பொன் பெற்ற இடமும் இதுவேயாகும். தமது கட் டளைப்படி தேவர்கள் படர்நத அரச மரங்களாகத் தோன்றி விளஙகச் சிவபெருமான அவற்றின நிழலில் எழுந்தருளினார் எனபர். மகப்பேறு கருதி வநது வழி பட்ட முசுகுந்தப் பேரரசனுக்கு இத்தலத்தைத் திரு வாரூராகவும தம்மைத் தியாகேசராகவும் காட்டிப் புத்திரப்பேறு அளித்து புத்திரத் தியாகர் எனனும் திருப்பெயரும் பெற்ற இறைவன் விளங்கும் ஊர் திருவாவடுதுறை.

தம்மைப் போற்றிய தருமதேவதையைக் காளை யூர்தியாகக் கொண்டதுடன் திருமுறை அரசமர நிழ லில் கோயில் கொணடிருக்கும்படிக்கு வரமளிதத ஊர். தேவர்களும் முனிவர்களும் செய்த வேணடு கோளுக்கு இரங்கிப் போதியம்பலத்தில் இறைவன் மகாதாண்டவம் புரிநத இடம் இதுவாகும். முனிவர் கள் பலர் இஙகு ஞானஉபதேசம் பெற்றுளளனர். அந்தணர் பலர் வேதம் படித்த ஊர். சித்தர்கள் அட்டமா சித்தி பெற்ற ஊர். சித்தர் பலர் இன்றும் இவ்வூரில் வாழ்வதாக ஐதிகம் உணடு. திருக்கயிலாய பரம்பரையைச் சேர்ந்த ஆதீனம் கி.பி.15-ஆம் நூற் றாண்டில் நிறுவப்பெற்றுத் தமிழ்த் தத்துவ, இலக்கண நூல்கள் பல தோன்றிய இடம். பி.தெ.

***திருவாவடுதுறை ஆதீனம்***: காண்க: திரு மடங்கள்.

***திருவாவினன்குடி*** என்னும் திருவூரின் சிறப்பு வரலாறுகள், பதிற்றுப் பத்து, அகநானூறு, திருமுருகாற்றுப்படை, சிலப்பதிகாரம், திருப்புகழ, பாலசுப்பிரமணியக் கவிராயர் இயற்றியதலபுராணம, கந்தபுராணம், வையாபுரிப்பளளு, பழனி பிள்ளைத தமிழ், தணடபாணி சுவாமிகள், மாம்பழக்கவிராயர் பாடல்கள் முதலியவற்றால் அறியக் கிடக்கினறன. ஆவி என்பான ஒரு குறுநில மன்னன். இவன மலை பொதினி. பதிறறுப்பத்தில் வேளாவிக்கோ குறிப்பிடப் படுகிறான. இம்மரபினனானவையாவிக் கோப்பெரும் பேகன் வள்ளலாவான. ஆவினன்குடி இவன ஊர். வையாபுரி இவன நாடு என அறியப்படுகிறது. திருமுரு காற்றுப்படையில முருகப்பெருமானின மூன்றாம் படைவீடாகச் சிறப்பித்த திருவாவினனகுடியில தேவர் சபையைக் கூட்டித் தேவர்களுககெலலாம் தலைவனாக முருகப் பெருமானமர்ந்து காட்சி தரும சிறப்பை நக்கீரா விவரிககின்றார். அகநானூற்றில 'நெடுவேளாவிப் பொன்னுடை நெடுநகர்ப் பொதினி' எனறும், 'நெடுவேளாவி யறுகோட்டு யானைப் பொதினி' என்றும கூறப்பட்டுளளது. அருணகிரி யாா, 'நல்லகாவூர் நாட்டிலுளள திருவாவிண்குடி' சேரமான் பாடிய நல்லகாவூர் நாட்டிலவிளஙகும் திரு வாவினன்குடி, பழனித் திருவாவினன்குடி, பணபுதரும திருவாவினனகுடி எனப் போறறுகினறார். சிலப்பதி காரத்தில் 'பொதினி' எனவும், 'வேளாவிககோ மாளிகை காட்டி' எனவும் கூறப்பெறறுள்ளது.

இததிருவாவினனகுடி பழனி மலை அடிவாரத் தில் இருக்கின்றது. மதுரையிலிருந்து நூறு கிலோ மீட்டர். அணணா மாவட்டம் திணடுக்கலலிருநது பேருந்து வசதிகளும் புகைவணடி வசதிகளும் உள ளன. திருசசி, திண்டுககல, கோவை முதலிய இடஙகளிலிருந்து நல்ல சாலை உளது. திணடுக்கல், பாலக காடு செலலும் புகைவணடிப் பாதையிலுளளது புராண வரலாறறின் படி திரு என்பது திருமகளையும் ஆ வென்பது காமதேனுவையும் இனன் எனபது சூரியனையும், கு எனபது பூமியையும், டி என்பது அக்கினியையும் குறிபபதால் இநத ஐவரும் பூசித்தது திருவாவினன் குடி என்பர். திருக்கயிலையில் நார தர் தந்த மாதுளங்கனியைச் சிவபெருமான், கண பதி முருகனாகிய பிள்ளைகளை நோக்கி உங்களில யார் முதலில் உலகை வலம் வருகினறார்களோ அவருக்கு இப்பழம் எனறு கூறினார். எலலாமாகிய அம்மையும் அப்பனையும வலம் வந்து கணபதி பழத் தைப் பெற்றுவிட அதன்பின மயிலின் மீது உலகைச் சுற்றி மீணட முருகன் அதனைக் கண்டு முனிநது

இத்திருவாவினன்குடியில வந்து அமர்ந்தார். பின்பு பழனி மலையில் நினறு அருள புரிந்தருளுகினறார். ஆவினனகுடி அமர்ந்த முருகவேளை உமாதேவியாா மார்புற அணைத்து 'உன்னையனறி மாதுளங கனிக்குச் சுவையுமுணடோ' என உலகறியக் காட்டிய தாகப் புராணம் கூறுகினறது.

இத் திருவாவினனகுடிக குழநதை வேலரை மயில மீதமர்நத நிலையில காணலாம். இககோவில முன்புதான் பஙகுனி உத்திர விழாச சிறபபுற நடைபெறுகினறது. இடும்பாசுரன் காவடியாகக கட்டிக் கொணடு வந்த சிவகிரி சததிகிரியாகிய குனறு களை இருககச்செய்து அதனமீது ஞானத் தண்டினை ஊனறி ஞான தணடாயுதபாணியாக முருகன விளஙகு கின்றான. மாபெரும சித்தரான போகரமைத்த நவ பாடாணத திருமேனி தான பஞசாமிர்த விபூதி அபி டேகங்களைக் கொணடருளும பழனிப பெருமான. பழனி மலை நூற்றைமபது அடி உயரமும் படிகள அறுநூற்றுத் தொணணூறறேழும உடையது. இஙகு வரும் அடியார்கள சணமுக நதியில் நீராடிப் பெரி யாவுடையார் கோவிலை வழிபட்டு வரும வழியில் பெரியநாயகிக் கோவிலை வழிபட்டுச சரவணப் பொயகையில் நீராடிப் பின்பு திருவாவினன்குடியில் குழந்தை வேலரை வழிபட்டுப் பாதளநாயகரை வழிபட்டு மலைஏறத தொடஙகுவாாகள. முப்பதிற்கு மேற்பட்ட மணடபங்களைக் கடநது சேர விநாய கரைவழிபடடு அஙகுளள தூணில விளங்கும சேர மான்பெருமானையும் வழிபட்டு நாயக்கா மணடபம், வைசியர் மண்டபம, பரத வேல மணடபம ஆகிய வற்றைக் கடந்து பழனியாணடவரை வழிபடுகினறார் கள். இங்குளள மலைக்கொழுநதீசர், போகர் சநநிதி, அம்பிகை சநநிதி, இடும்பன் சநநிதி முதலியவறறை வழிபட்டு அடியார்கள மகிழ்கின்றார்கள். சு.சு.

**திருவாவூர்:** இது சோழநாட்டுச் சைவத் திருத் தலங்களுள் ஒன்று. தலத்தின் பெயர் ஆவூர். இங குளள கோயிலின் பெயர் பசுபதீச்சரம். இருடிகளும் இநதிரனும் பசுக்களும் இறைவனை இங்கு வழிபட்டுச் சிறப்புற்றனரெனச் சொல்லப்படுகிறது. இறைவன பெயர் பசுபதீசர்; இறைவியின பெயர் மஙகள நாயகி. இங்கமைந்த பொய்கை பிரமதீர்த்தம். இவ வூர் கும்பகோணத்திறகுத தெனமேற்கே 14½கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. கோயில் கருவறையின மேல்தளத்தில் அமைந்த கலவெட்டு ஒனறு மூன்றாம் இராசேந்திர சோழனின் காலத்தில் வெட்டப்பட்டது என்று தெரிகிறது. அம்மன்னனின் மூன்றாம் ஆட்சி யாணடில் நித்தவினோத வளநாட்டு ஆவூர்க் கூற்றத் துப் பசுபதி ஈச்சரம் உடையார் கோயிலுக்கு நிலங கள் அளித்த செய்தி காணப்படுகிறது. இது திருஞான சம்பந்தரால் பாராட்டப் பெறற பழம்பதி இது விணணுயர் மாளிகை, மாடவீதி, விரைகமழ் சோலை நிறைநத ஊர்; தெஙகுயா சோலை சேர் ஆலை சாலி திளைக்கும் விளைவயல் சேரும பொயகைப் பஙகய மங்கை விரும்பும ஆவூர் எனறெல்லாம் இயறகை வளம் பெற்றுத திகழந்ததைச சம்பந்தர் குறிபபிடுகிறாா. பத்தியும இசையும பொங்கி நிறைநத ஊரா தலின பணணியல பாடலறாத ஆவூர், 'புரிகுழலார் சுவடு ஒற்றி நிறகப் பாவியல பாடலறாத ஆவூா' எனறெல் லாம் பாடுவது ஊரின நிறைவை எடுத்துக்காட்டும். தே.ஆ.

**திருவாழி பரப்பினான் கூத்தன்** தமிழகத துத் திருககோயிலகளில் பொறிககப்பட்டுளள கல் வெட்டுகளால அறியப பெறும ஒரு தமிழப் புலவர். இப்புலவா சிந்துப் பிரபந்தம் ஒன்று பாடியமைக் காகப் பொத்தப்பி நாட்டை ஆணட சோழ மனனன திருக்காளததித் தேவன எனபவன வள்ளுவப் பாக் கம் எனற ஊரை முற்றூட்டாக அளித்துள்ளான இச்செய்தி, காஞ்சிபுரத்திலுள்ள வரதராசப் பெரு மான் திருககோயில திருமஞ்சன மணடபத்தின மேற்குத் திருமதிலில் பொறிககப்பட்டுளளது. அக்கல வெட்டு மூன்றாம் இராசராச சோழனின 21-ஆம் ஆண்டில் பொறிக்கப்பட்டுளளமையால, இப்புலவா அம்மனனன ஆட்சிபுரிந்த கி.பி.13-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராவார். பொத்தப்பிச் சோழன், 'திருவாழி பரப்பினான சநதி' என்ற பெயரில் திருநீர் மலைக் குச் சில கட்டளைகள செயய நிவந்தங்கள் அளித்த செய்தி பிறிதொரு கல்வெட்டால அறியப்படுகிறது. 'திருவாழி பரப்பினான்' எனனும பெயாத தொடரை ஆராயநதவாகள, அதறகுத திருமால நெறியை எஙகும் நிலவச் செய்தவன எனப பொருள் கொள் கின்றனர். அஙஙனமாயின் கூதததன எனபது புலவரின இயறபெயராகவும் திருவாழி பரப்பினான் எனபது அவர்தம் சமயத் தொணடால பெற்ற சிறப்புப் பெய ராகவும கொளளல் கூடும். பொதுவாகக் கூததன் எனனும் பெயர் சைவ நெறியினைப பினபறறுவோர் கொளளும் பெயராகும். இவற்றையெல்லாம் ஒருங்கு நோககுங்கால, கூத்தன் எனனும் சிவ சமயப் பெயர் தாங்கிய ஒரு புலவர் திருமால் நெறி பரப்பும் பண பினராகத் திகழ்ந்தார் என்பது புலனாகும்.

இப்புலவர் பாடிய சிந்துப் பிரபந்தம் திருக்கச்சி யில் கோயில கொணடுளள திருமால மீது பாடப பெற்றதாகும். அந்நூல் இக்காலத்தில் கிடைகக விலலை. தமிழில சிந்து என்னும் சிற்றிலக்கிய வகை கி.பி.13-ஆம் நூற்றாணடில் விளங்கியதற்கு இப்புலவர் சிந்து பாடிய செய்தி கூறும் கல்வெட்டு சானறா கிறது. அ.மா.ப.

**திருவாளொளி புற்றூர்:** இது காவிரிக்கு வட கரையிலுள்ள 26 ஆம் சிவத் தலம். இத்தலத்திற்குச் சம்பந்தர் பதிகங்கள் தக்கராகம் பியந்தைக் காந் தாரப் பண்களுடையவை இரண்டும், சுந்தரர் தக் கேசிப் பதிகம் ஒன்றும் உள்ளன. ஒரு சமயம் இத்தலத் துப் பெருமானை அருச்சுனன் வழிபட்டான். அவன் வழிபாட்டுக்கு உகந்த பெருமான் அவன் வாளை அருகிலிருந்த புற்றில் ஒளித்து வைத்தார். பின்னர் அவன் அத்தினாபுரி திரும்பும்போது அதனைத்திருப்பி அளித்தாரெனவும் அதனால் இத்தலத்துக்குத் திரு வாளொளி புற்றூர் என்ற பெயரேற்பட்டது எனவும் காரணம் கூறுவர். மக்கள் இப்போது இவ்வூரைத் திருவாளப் புத்தூர் என்றே வழங்குகின்றனர். திரு வாழ்கொளி புத்தூர், திருவாள் ஒளிபுத்தூர் எனவும் இவ்வூர்ப் பெயர் நூல் வழக்காறுகளில் உள்ளன. இத் தலத்து இறைவன் பெயர் மாணிக்கவண்ணர். இறைவி பெயர் வண்டார்பூங்குழலி ஆகும். மாணிக்கம் மிக்க ஒளியுள்ளதாதலின் வாள் ஒளிபுத்தூர் என்பதற்குப் பெயர்க் காரணம் கூறுவர் (வாள்ஒளி-மிக்கஒளி). அரதனபுரம் என்ற பெயரும் இவ்வூருக்குண்டு. திரு மால் இம்மாணிக்க இலிங்கத்தை நிறுவி வழிபட்ட தாகப் புராண வரலாறு. வண்டும் பூசித்துப் பேறு பெற்றதாகப் புராணம் கூறும். 'உன்கரவாள் நின்ற வாகையின் அயல்புற்று ஒளித்தான்' என்பது புராண வாக்கு. இவ்வூர் அருகில் மண்ணியாறு பாய்கிறது. 'தண்ணீர் மண்ணிக் கரையானை' என்பது சுந்தரர் வாக்கு. சுந்தரமூர்த்தி சுவாமிகள் இத்தலத் திருப் பதிகத்தினிறுதிப் பாடலில் தன்னை, 'தமிழூரன் வன் றொண் டன்சடையன் காதலன் வனப்பகையப்பன்' எனவும் கூறிக் கொள்வது அறிந்து மகிழத் தக்கது. 'வாழ்கொளிபுத்தூர் மாணிக்கத்தை மறந்து என் நினைக்கேனே' என்று பாடல் தோறும் சுந்தரர் உருகிப் பாடுகிறார். இத்தலம் வைத்தீசுரன் கோயிலி லிருந்து 8 கி.மீ. தொலைவில் உள்ளது. இரா.ச.

**திருவாறன் விளை:** திருவாறன் விளை மலைநாட்டிலுள்ள வைணவத் திருப்பதிகளுள் ஒனறு. இதனை ஆறன்முளை என்றும் கூறுவர். இவ்வூர் கேரள மாநிலத்தில் திருச்செங்குன்றூருக்குக் கிழக்கே கால்வாய் வழியாக 6½கி.மீ. தொலைவில் உள்ளது. இக்கோவிலின் இறைவன் திருக்குறளப்பன்; தாயார் பத்மாசனி நாச்சியார். இத்திருக்கோயில் கோபுரம் வாமன விமானம் என்று சொல்லப்படுகிறது. இங் குள்ள தீர்த்தம் வேதவியாச தீர்த்தம் எனப்படும். பம்பா நதியையும், வடக்கு முகமாக நின்ற திருமா லின் திருக்கோலத்தையும் இங்குக் காணலாம். இவ் வாறு மூர்த்தி, தலம், தீர்த்தம் என முப்பெருமை கொண்ட இத்தலச் சிறப்பு பற்றித் திருவாய் மொழி ஏழாம்பத்தில், பத்தாந்திருவாய் மொழி 'இன்பம் பயக்க' பதிகத்தில் 'அணிபொழில் சூழ் திருவாறன் விளை', 'நீடு மதில் திருவாறன் விளை', 'வயல்சூழ் திருவாறன்விளை' என்றெல்லாம் சிறப்பித்துப் பாடி யுள்ளார் நம்மாழ்வார். எம்.சீ.

**திருவான்மியூர்:** சென்னையிலிருந்து தென் கிழக்கே 13கி.மீ. தொலைவிலும், மயிலாப்பூரி லிருந்து தெற்கே 6½கி.மீ. தொலைவிலுமாகத் திருவான்மியூர் அமைந்துள்ளது.

வான்மீகி முனிவர் வழிபாடாற்றிப் பேறுபெற்ற தலமாகலின் திருவான்மியூர் எனப் பெயர் பெற்றது என்பர். தேவர்கள பாற்கடல் கடைந்து அமுதம் பெற்று அவ்வமுதத்தால் உருவாக்கி வழிபட்ட சிவ லிங்கம் இங்கே உள்ள மூர்த்தி. இதுபற்றி அமிர்த புரி என்றும் இவ்வூர் வழங்கப் பெறும். இறைவர்– மருந்தீசர்; இறைவி–சொக்கநாயகி; திரிபுரசுந்தரி எனவும் கூறப்படுவாள்.

இங்குள்ள இலிங்கம் சிறிது சாய்ந்து காணப்படு கின்றது. இலிங்கத்தின் மேற்பகுதியில் மாட்டின குளம்பு பதிந்தாற் போன்ற வடு ஒன்று தோன்று கிறது. காமதேனு வழிபட்டுத் தனது பாலை இலிங் கத்தின் மீது சொரிந்தபோது அதன் குளம்பு பட்டத னால் ஏற்பட்ட தழும்பு என்பர்.

தலத்தின் மேற்புற மாட வீதியில் வானமீகி முனிவர் கோயில் உள்ளது. கோயில் மூலட்டானம் மேற்கு நோக்கியும் கோபுரவாயில் கிழக்குநோக்கியும் உள்ளன. தலமரம் வன்னிமரம். இத்தலத்தில் சனம நாசனி, பாபநாசனி, காமநாசனி ஞானதாயினி, மோட்சதாயினி என்னும் ஐந்து தீர்த்தங்கள இருந் தனவெனக் கூறுகின்றனர். இப்பொழுது இரணடு குளங்களும் ஒரு கிணறும் மட்டுமே உளளன.

இங்குள்ள தியாகர் ஆடும் தியாகர். ஒவ்வொரு பௌர்ணமி யன்றும் தியாகர் நடனவிழா நடை பெறும். பங்குனித் திங்கள் நடைபெறும் பிரமோற்சவ நடனம் பெருஞ் சிறப்புடையது.

இத்தலத்தை வழிபட இராசேந்திர சோழன் பல முறை வந்துள்ளான். கருவறை சோழர்காலக் கட்ட டம். யானை படுத்திருப்பது போல இருககும். தலத் தின் வடக்கே 1கி.மீ. தூரத்தில பாம்பன் சுவாமிகளின் சமாதி உள்ளது. இத்தலத்திற்குத் திருஞான சம்பந் தர் பாடிய பதிகம் இரணடும் அப்பர் பாடிய பதிகம் ஒன்றும் உளளன. இததலத்து முருகன் மீது அருண கிரிநாதர் பாடிய திருப்புகழ் ஒன்றுளது. ச.ச.

**திருவானைக்கா:** திருச்சிக்கு வடக்கே 5 கி.மீ. தொலைவிலும் திருவரங்கத்திற்குக் கிழக்கே 2 கி.மீ.

தொலைவிலும் திருவானைககா எனற தலம அமைந துளளது. இது பாடல பெறற சிவததலம பஞசபூதத தலஙகளுள இது அபபுததலம் கோயிற கருவறை தரைமடடத்திறகும தாழநதிருபபதால மூலட்டா னத்துச் சிறிய இலிஙகம ஆணடின் பெரும் பகுதிக காலம நீரால் சூழப் பெற்றிருக்கும்

தலமரம் வெணணாவல. அதன காரணமாகச் சம்புகேசுவரம் எனற பெயரும் இத்தலத்திறகுணடு (சம்பு – நாவல) இறைவா – சமபுநாதர், சமபுலிங கம; இறைவி – அகிலாணடநாயகி புடபதநதன, மாலியவான எனற சிவபிரானின கணநாதா இருவா சாபக் கேட்டால யானையாகவும், சிலநதியாகவும மாறி இத்தலததில பிறநது இறைவனை வழிபட்ட னா.

யானை பூவும் நீரும் கொணர்ந்து வழிபட்டது சிலநதி மரததிலிருநது சருகுகள இறைவன்மீது உதிரா வணணம் தன நூலால பந்தா அமைத்தது. யானை இப்பநதரை ஒடடடை என அழிககச் சிலந்தி யானை யின நாசியிற் செலல இரணடும் இறநது தஙகள உண்மை வடிவஙகளை யடைநதனவென்று புராணம் கூறும்

இதுபற்றியே இதற்கு 'யானைககா' எனறு பெய ரேற்பட்டதாம். சிலநதியான மாலியவான சோழ மன்னனாகப் பிறநது மீணடும் சிவததொண்டு புரிந தான எனறு தமிழநூலகள கூறும். இவரே 'எணடோ ளீசற்கு எழிலமாடம் எழுபது செய்து உலகமாண்ட கோசசெஙகணான' என்ற கோச்செஙகட் சோழ நாய னார். அபபரும் சம்பநதரும இத்தலததைப் பாடி யுளளனர். கோசசெஙகணானுககுப் பிறகு வநத சோழாகளும், பாணடிய, ஒயசள, விசயநகர, நாயகக மனனாகளும் திருப்பணி செய்துளளனா. இஙகுக் கல வெட்டுகள நிறைய உளளன. அவை நிறையச் செய்தி கள் தருகினறன. இததலத்தைப பற்றிக் காளமேகப் புலவர் திருவானைக்கா உலாவும், கசசியப்ப முனிவா திருவானைக்காப் புராணமும பாடியுள்ளனா. பரண தேவ நாயனாரின் சிவபெருமான திருவந்தாதியிலும் ஐயடிகள் காடவா கோனின சேத்திரத் திருவெணபா விலும இத்தலம் பற்றிய செய்திகளைக காணலாம்.

ச.ச.

**திருவிக்கிரமங்கலம்** கேரள மாநிலத்தின் தலைநகரமான திருவனந்தபுரத்திற்குக் கிழககில் 5 கி.மீ. தொலைவில் அமைந்துளள ஊர். இதுகோயிற் கட்டடக் கலைச சிறப்புப் பெறறது இஙகுளள சிவன கோயில் கி.பி. 11-ஆம நூற்றாண்டைச் சாாநதது. கேரள கலைப்பாணியைச் சார்ந்த இக்கோயிலின கரு வறை ஒரு மேடை மீது அமைக்கப்பட்டு அதன் மேல் ஏறிச் செல்லப் படிக்கட்டுகள் அமைககப்பட்டுள்ளன.



திருவிக்கிரமஙகலக் கோயில

படிக்கட்டுகளின் ஓரப்பகுதியில கைப்பிடிச் சுவரில அழகான மகரத்தின தலை வடிவமைககப்பட் டுளளது அதன மற்றொரு பகுதி பூவேலைபபாடு களுடன உள்ளது. இக்கோயிலின சிற்பஙகள அழகு வாயந்தவை இசைக கலைஞர்களின் சிற்பங்கள் மிக நோததியானவை. இஙகுளள துவார பாலகரின் சிற் பஙகள மிகச சீரிய முறையில வனபபுடன செதுககப் பட்டுள்ளன.

சு இரா

**திருவிசைப்பா:** பனனிரு திருமுறைகளில் ஒனப தாந திருமுறையாகும். திருமாளிகைத் தேவர் முத லாகச சேதிராயர் ஈறாக ஒனபதின்மர் பாடிய இருபததெட்டுத் திருப்பதிகஙகளைத் திருவிசைபபா என்பா. திருவிசைபபா மாலை என்று இதறகு மற் றொரு பெயரும் உணடு. இறைவனைப் போற்றும் இசைநலம் வாய்ந்த பாக்களாதலின 'திரு' எனும் அடைமொழி பெற்று திருவிசைப்பா எனும் பெயர் பெற்றது. இத்திருமுறையின இறுதியில் அமைந்த இருபத்தொன்பதாம் திருப்பதிகம் இறைவனுககுப் பல்லாண்டு பாடும் பாஙகில் அமைந்திருத்தலின் 'திருப் பல்லாண்டு' எனுஞ் சிறப்புப் பெயர் பெற்றுள்ளது. முந்நூற்றொரு பாடல்களைக் கொணட இத்திரு விசைப்பா சிவபெருமான் கோயில் வழிபாட்டில ஓதப் பெறும பஞ்சபுராணஙகளில ஒனறாகத் திகழகிறது.

சோழர் ஆட்சிக் கால இலக்கியமாக விளங்கும் திருவிசைப்பாப் பதிகங்களைப் பாடிய சிவனடியார்கள முதலாம் ஆதித்த சோழன முதலாகக் கங்கை கொண்ட சோழன ஈறாகவுள்ள சோழ மன்னர்களின ஆட்சிக் காலங்களில் வாழ்ந்தவர்கள் ஆவர். சிவபரம பொருளை வழிபட்டுப் போற்றும் போற்றிப் பாடல களே திருவிசைப்பா ஆகும். சிவநெறியினால் தமிழ் வேந்தர் பெற்ற வெற்றியையும, அவவெற்றியின விளைவாகத் தமிழகத்தார் பெற்ற அமைதிநிலையையும், அக்காலச் சைவ சமயத்தின உயர்ச்சியையும் விளக்கும் திருவருள் இலக்கியமாகத் திருவிசைபபா விளங்குகிறது.

திருவிசைப்பாத தொடர்கள் மக்கட் பெயர்களாக முதலாம இராசராச சோழன் காலத்தில் வழங்கி வந்துள்ளன. திருக்கோயில்களில ஆடல், பாடல நிகழத்தும் பெணகளிற சிலா, நீறணி பவளக குன்றம், எடுத்த பாதம், மழலைச் சிலம்பு எனறு திருவிசைப்பாத் தொடர்களைப் பெயர்களாக அமைதது்க்கொண்டனர். திருவிசைப்பாவால விளைநத மககள் வழக்கம் இதுவாகும்.

திருவாவடுதுறை, திருச்சிற்றம்பலம், திருவீழிமிழலை, திருவிடைக் கழி, திருக்களநதையாதித்தேச்சுரம், திருக்கீழககோட்டூர் மணியம்பலம், திருமுகத்தலை, திரைலோக்கியசுந்தரம், கஙகைகொணட சோழேச்சுரம், திருப்பூவணம், திருச்சாட்டியக்குடி, தஞ்சை இராசராசேசசுரம, திருவிடைமருது, திருவாரூர் எனப் பதினானகு சிவத்தலஙகளைப் பற்றிய திருப்பதிகங்களே திருவிசைபபா. அவறறுள் தில்லைச் சிற்றம்பலத்திற்கு மட்டும் பதினாறு திருப்பதிகங்கள் உள. ஏனைய பதினமூன்று திருத்தலஙகளும் ஒவ்வொரு திருப்பதிகங்களைக் கொணடுளளன.

திருமாளிகைத் தேவர், சேந்தனாா, கருவூர்த் தேவா, நமபிகாடவநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தமர், சேதிராயர் ஆகிய ஒனபதின்மரே இத்திருமுறை பாடிய புலவர்கள ஆவர். திருமாளிகைத்தேவர் பாடிய பதிகம் நான்கு; சேந்தனார் பாடிய பதிகம் நானகு; கருவூர்த் தேவர் பதிகங்கள் பத்து; நம்பிகாடவநம்பி பதிகங்கள் இரண்டு; கணடராதித்தா பதிகம, வேணாட்டடிகள் பதிகம், திருவாலியமுதனார் பதிகம் 4, புருடோத்தமர் பதிகம் 2, சேதிராயர் பதிகம் 1 ஆக 29 பதிகங்கள் உள. இவற்றின் தொகை 365 பாடல்கள எனினும் இன்று கிடைப்பவை 301 பாடல்களேயாம். பூந்துருத்தி நம்பிகாடவநம்பி பாடிய திருவாரூர்த் திருவிசைப்பாப் பதிகத்தில் இப்போது இரண்டு பாடல் களே காணப்படுகின்றன.

காந்தாரம், புறநீர்மை, சாளரபாணி, நட்டராகம், இநதளம், பஞசமம் ஆகிய பண்கள் இத்திருமுறையில காணப்பட்டதாகப் பழைய பாடல் ஒன்று கூறுகின்றது பி.தெ.

**திருவிடவெந்தை**: செனனையிலிருநது மகாபலிபுரம் செல்லும் பாதையில அமைந்துளள திருத்தலம் திருவிடவெந்தை. இத்தலத்தில எழுந்தருளிய வராகப் பெருமான தம் தேவியை இடபபக்கத்தில் கொண்டிருப்பதால் இத்தலத்திறகுத் 'திரு இட எந்தை' எனப பொருள தரும் திருவிடவெநதை எனற பெயர் வழங்கப் பெற்றதென்பா. வைணவ மரபில் கூறப் பெறும் 108 திருப்பதிகளுள இத்திருத் தலத்தில மட்டும் எம் பெருமான வராக ரூபமாய் விளஙகுவது காணத தக்கது. பெருமானின் இடத் தோள்புறம் திலவல்லி நாசசியார் வீற்றிருககச சேவை சாதிககிறார். பெருமானின் திருப்பெயர் நித்ய கலயாணர்; தாயார் கோமளவல்லி நாச்சியார். கல்யாண விமானம் அமைந்துள்ளது; கலயாண தீர்த்தம் புகழ பெற்றது, கிழககே திருமுகங்காட்டி, நின்ற திருககோலத்தில வீற்றிருக்கும் பெருமான மார்க்கணடனுக்குத் திருக்கோலம் காட்டினாா என்பது புராண நம்பிக்கை. காலவ முனிவரின் பெணகள் 360 பேரையும் நாளுக்கொருவராக மணம புரிந்ததால் நித்திய கல்யாணர் ஆயினா எனபா.

திருமங்கையாழ்வாரால மங்களா சாசனம் செய்யப்பட்ட திருத்தலம் இது. 13 திருப்பாசுரங்களைப் பாடி மகிழ்நதுள்ளாா ஆழவாா. 'ஏத்துவார் மனத் துள்ளான்இட வெநதை மேவிய வெமபிரான்' என்று பரவும் திருமஙகையாழ்வாா. 'திவளும் வெண்மதி' எனறு தொடங்கும் பாசுரத்தில் 'திருவிடவெந்தை எந்தை பிரானே' என அவன குணஙகளில ஈடுபட்டுப் பாடி மகிழ்கினறார். இப் பாசுரம் அகத்துறை மரபில் பாடப்பெறறது. நாயகன நாயகி பாவத்தில் தாமான தன்மையிழந்து பிராட்டி நிலையை ஏறிட்டுக கொணடவராய்த் திருவிடவெநதை எம்பெருமான் தாள் நயநதுகிடககினறார். அவள் நிலை கணடு அவளை அவன திருவடிகளிலே கிடத்தி, 'இவள் திறத்து நீ செய்ய நினைததிருக்கிறது என?' எனகிற திருத்தாயார் பாசுரததினாலே தமககுப் பிறநத தசையைப் பேசுகிறார் திருமஙகையாழ்வார். தி.லீ.

**திருவிடைச்சுரம்**: இது தேவாரப்பாடல் பெற்ற தலஙகளுள் ஒன்று 'எரிவளர் இனமணி புனமணி சாரல் இடைச்சுரம்' 'ஏனமும் பிணையலும் எழில் திகழ் சாரல் இடைச்சுரம்' எனத் திருஞான சம்பந்தரால் பாடப்பெற்ற தலம் திருவிடைச்சுரம்.

செங்கற்பட்டு மாவட்டத்தில் செஙகற்பட்டி லிருந்து திருப்போரூர்க்குப் போகும் வழியில் எட்டுக் கி.மீ. சென்று அங்கிருந்து வடககே ஒரு கி.மீ.சென றால் இவ்வூரினைஅடையலாம்.

இது மலைகளுக்கிடையே கல்சுரத்தில் அமைந திருத்தலின இபபெயா பெற்றது சனத்குமார முனிவரும் கௌதமரும வழிபட்ட தலம இது. மூலலிங்கம் பிரதி பலிக்கக் கூடிய மரகதலிங்கம் இறைவன-இடைச்சுர நாதர், ஞானபுரீசுரா; இறைவி-இமய மடக்கொடி யம்மை. தீர்த்தம்-மதுர தீரத்தம், இது இநதிர தீர்த் தம எனபடும.

கல்வெட்டில சயஙகொணட சோழ மணடலத் தில களத்தூர்க கோட்டததிலுளள திருவிடைசசுரம எனறு இத்தலம் குறிப்பிடப்பட்டுளளது.

இங்குச் சனனபுரீசுரா கோயில ஒன்று உள்ளது. கோவர்த்தன அம்பாள் திருககாமக கோட்டமுடைய பெரியநாசசியாா உருவம் நிறுவப் பெருநதணடிலத்தி லுள்ள கருப்பக்கிருகம கட்டப்பட்டதையும் கல வெட்டுக் கூறுகிறது. மகாமணடலேசுவர குமார சலகராச திருமலைய தேவ மகாராயரால் விளககுக் காகவும் படையலுககாகவும் நிலம்கொடுககப்பட்டது.

ச ச.

**திருவிடைமருதூர்**: இன்று தஞ்சாவூர் மாவட்டத்தில் குமபகோணத்துக்கும ஆடுதுறைககும இடையில் திருவிடைமருதூர் இரயில் நிலையம் உளது. இவ்வூர் காவிரியின தெனகரையில் உளளது; சம்பந்தர், அப்பர், சுந்தரர் மூவராலும் பாடப்பெற்ற தலம் இது. இது மருதமரங்கள காரணமாகப பெயர் பெற்ற ஊராகும்.

இத்தலம் மத்தியார்ச்சுனம் எனவும் வழஙகப் பெறும். வடக்கே சிரீபருபபதமாகிய மலலிகாாச்சுன மும, தெற்கே அம்பாசமுத்திரத்திற்கு அருகிலுள்ள திருப்புடைமருதூராகிய புடார்ச்சுனமும் விளஙக இவற்றின இடையில இது விளஙகுதலின் இப்பெயர் பெற்றது (அர்ச்சுனம-மருது) இத்தலத்தை வழி பட்டோர் உமாதேவியார், விநாயகா, முருகன், விட்டுணு, காளி, இலக்குமி, சரசுவதி, வேதஙகள், மூன்று கோடி உருத்திரர்கள, பன்னிரு சூரியா, வசிட்டர், அயிராவணமெனனும் யானை, சிவவாக்கி யர், கபிலர், அகத்தியா, வரகுணதேவர், பட்டினத தடிகள் முதலியோர். வரகுணதேவ பாண்டிய மன்ன னுக்குப் பிரமகத்தி நீங்கிய தலம். இப்பிரமகத்தி இரணடாம் கீழ்க்கோபுரத்து வாயிலில் வலப பக்கத் தில் இருக்கின்றது கிழக்கு வாயிலில் பட்டினத்தடி களும், மேற்கு வாயிலில பத்திரகிரியாரும் எழுநதருளி யிருந்தனர்.

அம்மை மௌனமாயிருநது தவம் செய்த மூகாமபிகை சந்நிதி, அம்பாள கோயில வாசலில் தனியே இருக்கின்றது

தைப்பூச விழா இஙகு மிகச சிறப்பாக நடை பெறுமு. இததலததிற்கு மருதவனம் எனற பெயரு முண்டு. இங்கு 149 கலவெட்டுகள உளளன. இவை பராந்தகன 1 (கி பி.905-947), குலோத்துஙகன 3 வரையிலுளள சோழர் காலத்திலும, வரகுணன, சுந்தரபாண்டியன முதலிய பாண்டிய மனனர்கள காலத்திலும வெட்டபபட்டவை. அரசியல் நிலையில இவ்வூருககு வீரசோழபுரம் எனற பெயா வழஙகி யிருநதது. பட்டினததார் திருவிடைமருதூர் மும மணிககோவை எனற ஒரு சிறறிலக்கியம் பாடியுள ளார், கருவூரத் தேவர் பாடலும உணடு. பல சிறறி லககியங்கள இககோயில தொடர்பாக எழுநதுள்ளன.

ச.ச

**திருவிண்ணகர்**: திருமால உவபபுடன எழுந தருளியுளள திருததலஙகள 108-இல் 48-ஆம் திருபபதி யாகத் திகழவது, குடநதையிலிருநது கிழக்கே 6½கி.மீ. தொலைவில திருநாகேசசுரம புகைவணடி நிலை யததிற்கு அருகில் உளள ஒப்பிலியப்பன கோயில அலலதுஉபபிலியப்பன் கோயில என மருவி வழஙகும திருவிணணகா ஆகும். ஆழவாாகள மஙகளாசாசனம செயத பகுதிகளை விணணகரம எனறு வழஙகுகினற வழககுணடு. மண்ணகரம, விண்ணகரம் என முறையே இவ்வுலகத திருத்தலங்களையும், வைகுநததததையும் குறிப்பிடுவா. இப்பதி விணணகரம் அனறு; திரு விணணகர் ஆகும. தஞ்சை மாவட்டத திருவேங்கடம் எனறே அடியாா இதனை வழிபடுவர்.

தனக்கு ஒப்பு இல்லா அபபன என்று பாராட்டும படி ஒப்பிலியப்பன திருவீற்றிருக்கும இப்பதி காலப் போக்கில் உபபிலியப்பன என மருவ பெருமாளுககு உப்பு இல்லாத நிவேதனம் படைககும் மரபையும் உருவாக்கி விட்டனர். பெருமாள திருநாமம் உப்பிலி யபபன. தாயார் திருநாமம பூமிதேவி நாசசியாா. விமானம விட்டுணு விமானமாகும். ஆர்த்தி புட்கரணி திருககுளப் பெயர். கிழக்கு நோககிய திருமுகமுடன நினற திருககோலத்து வீற்றிருக்கும பெருமாள, மார்ககணடருககும, பெரிய திருவடிக்கும் காவேரிக கும, தருமதேவதைக்கும் திருநலம் காட்டியருளி னார் எனபது மரபுவழி நம்பிககை.

அபபன் ஒப்பார் இலலாத அப்பனாய் ஓஙகி உயர்நது கம்பீரமாய்த் தோற்றமளிக்கிறார். இடை யில் பொன்னாடை; சஙகு, சக்கரம்; ஒரு திருக்கரம் அரையில் பொருந்த மற்றொரு திருககரம் மார்க் கணடேயர் திருமகளைக் கனனிகாதானம் செயது

கொடுக்க ஏறற்நனும முறையில் விளங்குகிறது. மூல வா கிழககு நோக்கப பூதேவியார் வடக்கு நோக்கு வார். தாயாருக்குத் தனிச்சந்நிதி இல்லை, இங்கு முடிப் பிரார்த்தனை செய்வோர் மிகப்பலர். ஒப்பிலி யபபர் வேணட முழுதும் தரும் அருளாளர்.

திருமங்கையாழ்வார், நம்மாழவார், பேயாழ் வார், பொயகையாழ்வார் ஆகியோர் மங்களாசாச னம் செய்த 47 திருப்பாசுரங்களைப் பெற்ற திருத் தலம் இது. தி.வீ.

*திருவித்துவக் கோடு:* பாலக்காட்டிலிருந்து சோரனூா சென்று அதன் அருகிலிருக்கும் பட்டாம் பிப் புகைவண்டி நிலையத்தில் இறங்கித் தெற்குத் திசையில் 1½கி மீ. தொலைவு சென்றால் திருவித் துவக் கோட்டினை அடையலாம். மலைநாட்டுத் திருத்தலம். பாரதப்புழை ஆற்றங்கரை மேல திருக் கோயில் அமைந்துள்ளது. கோயிலுக்குள நுழைந் தால் சிவன் கோயில் எதிர்ப்படும் அதற்குப் பின புறம் விட்டுணு சந்நிதி இருக்கின்றது.

பெருமான் திருநாமம் உய்ய வந்த பெருமாள். தாயார் வித்துவக் கோட்டு வல்லி. தத்துவ காஞ்சன விமானம் அமைந்துள்ளது. சக்கர தீர்த்தம் திருக் குளப் பெயராம். தெற்கு நோக்கிய திருமுகமுடன் நின்ற கோலத்தில பெருமாள் காட்சி தருகினறார். அம்பரீடருக்கு அருள் புரிநதவர் என்பது புராண வரலாறு. குலசேகராழ்வார் வித்துவக்கோட்டு அம் மான் மீது பாடிய 'தருதுயரம் தடாயேல்' எனத் தொடங்கும் 5ஆம் திருமொழி நாலாயிரத்தில் மிகச் சிறப்பானது எனபது தெளிவு. அழகிய உவமைகளால் பெருமாளுக்கும் தனக்குமுள்ள அன்புறவை நிலை நாட்டுவது படித்து இன்புறத் தக்கதாம். 'அரிசினத்தா லீன்றதா யகற்றிடினும் மற்றவள்தன், அருள நினைந்தே யழும்குழவி யதுவேபோன் றிருந்தேனே' எனத் தாய் சேய் உறவிலும், 'கண்டா ரிகழ்வனவே காதலன்றான் செய்திடினும் கொணடானை யல்லா லறியாக் குலமகள் போல' எனக் கணவன மனைவி உறவிலும், 'தான் நோக்கா தெததுயரம் செய்திடி னும் தார்வேந்தன் கோலநோக்கி வாழும் குடிபோன் றிருந்தேனே' என அரசன் குடிமக்கள உறவிலும், 'எங்கும் போய்க் கரைகாணா தெறிகடல்வாய மீண டேயும் வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன றேனே' எனப் பறவை, கூடு அடைதல் நிலையிலும், வான்முகம் நோக்கும் பயிர் போல் பெருமான முகம் நோக்கும் தன்னிலையை அழகாகப் படம்பிடிததுக் காட்டுவார். தி.வீ.

*திருவிதாங்கூர்:* காண்க: கேரளம், திருவனந்த புரம்.

*திருவிந்தளூர்:* மயிலாடுதுறைப் புகைவணடி நிலையத்திலிருந்து வடகிழக்கே 5 கி.மீ. தொலை வில் உளள திருத்தலம் திருவிநதளூர். திருவழுந்தூர் எனவும வழங்கி வருகின்றனர். காவிரி, கோயிலுக்கு அருகில் பாய்ந்து செலகிறது. இந்து புட்கரணி என் பது திருக்குளப் பெயராகும். இநதளூாப் பெருமான திருநாமம சுகநதவன நாதன. இவர் பரிமளரங்கர், மருவினிய மைநதன எனவும் பரவப பெறுவாா. தாயார் திருநாமம் சந்திரசாப விமோசன வல்லி. சுகந்தாரணய சேத்திரம் எனவும் வழங்கப பெறும் இப்பதி பற்றிய புராண வழககு நினைககததககது. அரக்கர்களால தீமையுற்ற வேதங்கள் பரமனை நோககித் தவமிருநது காவிரியில புனித நீராடிப் பரி மளம் வீசப் பெற்றதால் சுகநதாரணயம் என இத் திருத்தலம் பெயர் பெற்றதென்பர். தாயாருக்குப் பரிமளரங்கநாயகி என்ற திருநாமமும் உணடு. இங குள்ள திருக்குளத்தில் இநது (சநதிரன்) நீராடிச் சாப நீக்கம பெறறதால் திருக்குளம் இந்து புட்கரணி யாயிற்று. ஊர் இந்தளூர் என வழஙகப் பெறறது. தாயாரும் சநதிர சாப விமோசன வலலி என வழங் கப் பெறறார்.

திருக்கோயில் மூன்று திருச்சுற்றுகளுடனும் வான ளாவிய கோபுரம், மணடபஙகளுடனும் திகழகின்றது. சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த பெரிய கோயிலாய இது வேத சக்கர விமானத்தைக் கொணடது. கிழக்கு நோககிய திருமுகத்துடன பரிமளரஙகா வீர சயனமாகப் பளளி கொணடுள்ளாா. தாயார் தனிக கோயிலில் இருநது திருவருள புரிகின்றார். திருமங்கை யாழ்வார் பதினொரு திருப்பாசுரங்களால் இப்பெரு மானைப் பாடிப் பரவித் திருததலத்தை மங்களா சாசனம் செய்துளளார்.

'நும்மைத் தொழுதோம் நுந்தம பணிசெய் திருக்கும் நும்மடியோம்' என இந்தளூர்ப பிரானுக்கு ஆட் செய்யும் அருள பெறற நிலை கண்டு உருகும் திருமங்கையாழ்வார் திருப்பாசுரங்கள் எணணி இன புறத் தக்கன. தி.வீ.

*திருவியலூர்* என்னும் திருவூர் இப்பொழுது திருவிசலூர், திருவிச நலலூர் எனவும் வழங்கப்படு கின்றது. திருவிடைமருதூர்ப் புகைவணடி நிலையத் திலிருந்து வடமேற்கே வேப்பததூா வழியில் ஐநது கிலோமீட்டரில் உளளது. காவிரியின் வடகரை யிலமைந்த பூம்புகார் கல்லணைச் சாலையில் திரு புவனத்துக்கு நேர் வடககே உளளது. கும்பகோணத் திலிருந்தும் மாயூரத்திலிருந்தும் பேருந்து வசதி யுள்ளது.

இது சித்தாந்த சாத்திரம் பதினானகினுள் ஒன்றா கிய 'திருவுந்தியாரை' இயற்றி அருளிய 'திருவியலூர் உய்ய வநத தேவ நாயனாா' அவதரிதத சிறப்புடை யது; தேவாரப் பாடற்றிருத்தலஙகளுள ஒனறாக விளங்குவது; சதாசிவப் பிரமேந்திரரைத தந்த திரு வூர். மேலும் சிரீதர ஐயாவாள எனனும் பெரியாா பசியால் வாடிய அரிசனா ஒருவருக்குச் சிரார்தத தினத்தனறு அனனமளிததது குற்றம்; அதறகுப பரி காரமாகக கங்கையில நீராடி வரவேண்டுமெனறு அஙகுளளோர் கூற, இறையருளால அவரது வீட்டுக கிணற்றிலேயே கஙகைப பிரவாகம வரபபெறறு அது குற்றமனறுஎனறு மெயபபிக்கபபெறற திருவூர். அந தக கிணறு, அவர் வாழ்நத வீடு முதலியவற்றை இப் பொழுதும காணலாம. கார்த்திகை மாதம அமா வாசை நாளனறு இவவிழா சிறநத முறையில கொண டாடப பெறும ஊர்

இஙகுளள யோகானநதேசுரர் திருக்கோவில தேவகோட்டை அ இராம.அ லெ அ , அவர்களாலும், கரு மெ க.தி., அவாகளாலும திருப்பணி செய்யப் பெற்றது இறைவர் திருப்பெயர் யோகானநதேசுரா, விலவாரணியேசுரா. இறைவி திருப்பெயாகள சாநத நாயகி, சௌநதரநாயகி அமபாள் சநநிதிக்கு எதிரேயுளள வெளிததிருச்சுறறுச் சுவரில சூரியனது ஒளி நிழலைக கொணடு மணி அறியும நிழற்கடிகாரம் ஒனறு வரையபபட்டுளளது. இக்கடிகாரம பகலில மிகத் துல்லியமாக மணி காட்டுகிறது

பிரமன் அந்தண குலத்தில் பிறந்து ஏழு தம்பிய ருடன இவவிலிஙகத்தில ஒடுஙகியதால எணமர் சடை கள இலிஙகத்தில உள்ளன என்று சில அடையாளங களைக காட்டுகின்றார்கள. கேரள மனனன கணபதி, ஒழுககம் தவறிய அநதணர் முதலியோர் வழிபட்டுப் பேறு பெற்றார்கள. மற்றும் இயமன முதலியோர்களும் வழிபட்டுளளனர் நநதி தீரதத முதலிய எட்டுத் தீர்த்தங்களின கரைகளில வன்னி, வில்வம் முதலியஎட்டு மரஙகள உள்ளன இஙகு அரசிய லார்படி எடுத்த கலவெட்டுக்கள தொணணூறறு நானகு. சோழமன்னர் பன்னிருவர்,பாணடியர் ஒருவா விசயகிருட்டிணதேவராயர் ஆகியோாதம் வர லாற்றுக் குறிப்புகள் இக்கல்வெட்டுகளால் அறியக கிடககின்றன. பழையாறையில் வாழந்த குநதவை தேவியார் பற்றிய செயதிகளும அறியக் கிடத் தினறன. இக்கோவிலின கருவறையை அமைத்த ஆனந்த சிவன் வடிவமும் இருக்கின்றது. சு.சு.

**திருவிரும் பூளை** என்னும் திருவூர் இப் பொழுது ஆலங்குடி என வழங்கப்படுகிறது. பூளை எனனும் செடிமிகஇருந்த ஊராதலால் திருவிரும் பூளை எனப் பெயர் பெற்றது. நீடாமங்கலம் புகை வணடி நிலையத்தில் இறஙகி வடக்கே 6 கி மீ. பேருந்து வழியாகச் செனறு இத்திருவூரை அடைய லாம. கும்பகோணம் – நீடாமங்கலம செல்லும் பேருநது வழியில் கும்பகோணத்திலிருந்து 15 கி மீ. தொலைவில் உளளது.

தேவாகள பாறகடல கடையுமபோது ஆலகால விடம் தோனறிட, அதுகணடு அவர்கள திருவிரும் பூளையை அடைநது பிரதோட காலத்தில வேணட இறைவன் ஆலநதானுகநது அமுது செய்தான. இக் காரணததால இததிருவூா ஆலங்குடி எனப் பெயா பெறலாயிறறு.

காளமேகப் புலவரும 'ஆலஙகுடியானை ஆலால முணடானை' எனறு தமககே உரிய சிலேடை நயந தோனறப பாடுவாா. இது திருஞான சம்பந்தரும திருநாவுககரசரும போறறிய திருவூராகும்.

திருவிடைமருதூர் தென்முகக் கடவுள ஊராகக் கூறபபடும சிறபபினையுடையது. இவவூரில தெனமுகக் கடவுளின திருவுருவம் மிகச சிறப்பாக அமைநதிருப்பதுடன எழுந்தருளும் திருவடிவம அமைந்திருப்பதும், அப்பெருமான திருத்தேரில் வருவ தும் இவவூருக்கே உரிய தனிச் சிறபபாகும். அம்மை தவம் செயது திருமணக் கோலங் கொணட திருவூர் களுள இவவூரும ஒனறாகப் பேசப்படுகிறது.

இத்திருபபணிக்கு முன் படி எடுககப்பெற்ற இவ் வூர்க் கல்வெட்டுகள் வரலாறறு ஆய்வுக்கு மிகவும பயன்படுவனவாகும் முதற் குலோத்துங்கன வட கலிஙகததில அனந்தபத்மநாபனை வெனற செய்தியும், இரணடாம இராசராசன காலததில நிலத் தீாவை விதிததது, வறட்சிக காலத்தில நிலத்தைப் பாது காக்கத் திட்டம் வகுத்தமை, திருக்குளத்தைச் சுறறி மாடவீதி அமைக்கத் திட்டம் வகுத்தமை பற்றிய செய்திகளும கூறப்பெறுகினறன இறைவர் ஆபதசகா யர். இறைவி ஏலவார் குழலி சு.சு.

**திருவிலம்பையங்கோட்டூர்:** இது தொண்டை நாட்டுத தலங்கள முப்பத்திரண்டுள் பதின மூனறா வதாகும். இததலத்திற்குச் சம்பந்தர் பதிகம் மாத்திரம் முதல திருமுறையில குறிஞ்சிப் பணணிலுள ளது. சென்னையிலிருநது கூவம செனறால (திருவிற் கோலம்) அஙகிருநது 3 கி.மீ. தொலைவில தென் மேற்கேயுள்ளது. நடுவில ஒரு ஏரி இருக்கிறது. மழைக காலததில் அவ்வேரியைச் சுற்றிக் கூடுதலாச 2 கி.மீ செல்ல வேணடியிருக்கும். இறைவன் பெயர் சந்திரசேகரர், அரம்பேசுவர், தெய்வநாயகர். இறைவி பெயர் கோடேந்து முலையம்மை. கனக குசாம்பாள். சுவாமி உயரமான இலிங்கத் திருமேனி,

கோயிலைச் சுற்றிக் குடிமக்கள் பலரில்லை; இருக்கிற சிலரும் கிறித்தவர்களாயுள்ளனர். சைவக் குடும்பங்கள் சில தாம் கோயிலைப் பாதுகாத்து வருகின்றன. பூசகர் அருகிலுள்ள கூவத்திலிருந்து நாள்தோறும் வந்து வழிபாடாற்றிச் செல்கிறார். மிகப் பழைய கோயில். நாட்டுக் கோட்டைச் செட்டியார் ஒருவரால் இப்போது புதுப்பிக்கப் பெற்றுள்ளது. தீர்த்தம் சந்திர தீர்த்தம். அரம்பையர் பூசித்ததால் இதற்கு அரம்பையங்கோட்டூர் என்பது பழையபெயர். பிறகாலத்து இலம்பையங்கோட்டூர் எனமாறியுள்ளது. இக்கோயிலில் 6 கல்வெட்டுகளிருந்தன. மூன்று சோழர் காலத்தவை; ஒன்று பாண்டியன் காலத்தது; இரண்டு வீர கண்ட கோபாலன் காலத்தவை. இவ்வூர் செயங்கொண்ட சோழ மண்டலத்து மணவிற் கோட்டத்துக் கான்றூர் நாட்டுச் சோழ விச்சாதரச் சதுர்வேதி மங்கலம் என்ற கோட்டூர் எனக் குறிப்பிடப் பெறுகிறது. இலம்பையங் கோட்டூருடையார் எனச்சுவாமி குறிப்பிடப் பெறுகிறார். இவ்வூர்ப் பதிகம் மிகச் சிறந்தது. இப்பதிகத்தில் சம்பந்தர் இறைவன் தம்முள்ளிருந்து உணர்த்த அவன் திருவருளால் பாடுகிறேனே யொழியத் தாமாக ஒன்றும் பாடவில்லை என்ற உண்மையைப் புலப்படுத்துகிறார். அதனை ஒவ்வொரு பாடலிலும் காணலாம். சான்றாக 'அண்ணாமலையண்ணல் விளம்புவான் எனதுரை தனதுரையாக... இலம்பையங் கோட்டூரிருக்கையாப் பேணி என் எழில் கொளவதியல்பே' என்று அருளியிருக்கிறார். இது போக்குவரத்து வசதியற்ற நிலையில் உள்ள ஒரு பதி. எனினும் பழம்பெருமை வாய்ந்த திருத்தலம் ஆகும். இரா.ச.

**திருவிளையாடற்புராணம்:** சிவபெருமானது திருவிளையாடல்களைக் கூறுவது திருவிளையாடற்புராணம். தமிழில் நான்கு நூல்கள் சிவபெருமானது திருவிளையாடல்களை நிரல்படத் தருகின்றன. அவை:

1. பெரும்பற்றப் புலியூர் நம்பி எழுதிய திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம்.

2. தொண்டைநாட்டு இலம்பூர் வீமநாதபண்டிதர் எழுதிய கடம்பவன புராணம்.

3. தொண்டைநாட்டு வாயற்பதி அனதாரியப்பன எழுதிய சுந்தர பாண்டியம்.

4. பரஞ்சோதியார் எழுதிய திருவிளையாடற்புராணம்.

மேற்கண்டவற்றுள் முதலாவது கூறப்பட்ட புராணமும், இறுதியாகக் கூறப்பட்ட புராணமுமே குறிப்பிடத்தக்கவை. கல்லாடம், சிலப்பதிகாரம், தேவாரம், திருவாசகம் ஆகியனவும் சில திருவிளையாடல்களைக் குறிப்பிட்டுள்ளன. மிகவும் சிறப்புப் பெற்றுத் திகழ்வது பரஞ்சோதியார் எழுதிய திருவிளையாடற்புராணம். பரஞ்சோதியார் திருவிளையாடற்புராணம், திருவாலவாயுடையார் திருவிளையாற்புராணத்தை விட இருமடங்கு பெரியது. திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணமே பரஞ்சோதியார் திருவிளையாடற்புராணத்தைவிடக் காலத்தால் முந்தியது.

அ. பரஞ்சோதி திருவிளையாடற் புராணம்: சோழநாட்டில் திருமறைக் காட்டில் பிறந்த பரஞ்சோதி எழுதியது பரஞ்சோதி திருவிளையாடற் புராணம். அங்கயற்கண்ணியார் இவரது கனவில் தோன்றி 'இறைவன் திருவிளையாடலை இன்னே பாடுக' என ஆணையிட்டதாகக் கூறுவர். வடமொழி நூலான ஆலாசியமான்மியம் இதனுடைய முதல் நூல் என்பார்கள். சொலநோக்கம், பொருளநோக்கம், சாமுத்திரிகாலட்சணம், அசுவ லட்சணம், இரத்தினப் பரிட்சை, பரதம் முதலியவற்றிற்கு இந்நூல் இலக்கியமாகத் திகழ்கிறது என்று குறிப்பிடுவார்கள். வடமொழி நூல் முதல் நூல் ஆயினும் சொற்சுவை, பொருட்சுவை, அருமை, பெருமை, தொன்மை, மென்மை, நன்மை, வனப்பு ஆகிய தன்மைகள் இதில் அமைந்துள்ளன. இதில் இடம் பெற்றுள்ள 3360 விருத்தப் பாக்களும் இனிமையும் தெளிவும் உடையவை.

மதுரையில் சிவபெருமான் நடத்திய 64 திருவிளையாடல்களை இந்நூல் கூறுகிறது, மதுரைக் காண்டம், கூடற்காண்டம், திருவாலவாய்க் காண்டம் என மூன்று காண்டங்களை உடையது. கடவுள் வாழ்த்து, பாயிரம், அவையடக்கம், நாட்டுப்படலம், நகரப்படலம், கைலாய வருகை, புராண வரலாறு ஆகிய பகுதிகள் முதலில் இடம்பெற்றுள்ளன. தலம், தீர்த்தம், மூர்த்தி ஆகியவற்றின் சிறப்புகளைகூறிப் பின் திருவிளையாடல் அறுபத்து நான்கினையும் தொகுத்துரைத்து அதற்குப் பதிகப்படலம் என்று பெயர் கொடுக்கும் முறை உள்ளது.

இந்திரன் பழி தீர்த்தது முதல் வருணன் விட்ட கடலை வற்றச் செய்தது வரை 18 திருவிளையாடல்கள் மதுரைக் காண்டத்தில் இடம்பெற்றுள்ளன. நான்மாடக் கூடலானது முதல் நாரைக்கு முத்தி கொடுத்தது வரை 30 திருவிளையாடல்கள் கூடற் காண்டத்தில் இடம்பெற்றுள்ளன. திருவாலவாயானது முதல் வன்னியும் கிணறும் இலிங்கமும் அழைத்த படலம் வரை 16 திருவிளையாடல்கள் திருவாலவாய்க் காண்டத்தில் இடம் பெற்றுள்ளன. மதுரை என்று பெயர் பெற்றது முதல் நடந்தவை மதுரைக் காண்டத்தி

லும், நானமாடக் கூடல் எனறு பெயர் பெற்றது முதல் நடநதவை கூடற் காணடத்திலும திருவால வாய்க் காணடத்திலும இடம் பெற்றுளளன.

**ஆ. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்:** இந்நூலும் மதுரையில சிவபிரான நிகழ்ததிய 64 திருவிளையாடல்களைப் பாடுகிறது. பாணடி நாட்டுச் செல்லிநகரைச் சேர்நத பெருமபற்றப் புலியூர் நம்பியால் கி.பி 13-ஆம நூறறாணடில் பாடப் பெறறது. வேம்பத்தூா, நிம்பை, குலசேகர சதுா வேதி மங்கலம் எனறெல்லாம சொல்லப்பட்ட செல்லிநகர் இப்பொழுது பனையூா எனறு சொலலப் படுகிறது குலசேகர பாணடியன் வேணடிக்கொளள அதனபடி பெரும்பற்றப் புலியூர் நமபி இநநூலைப் பாடினார் எனபர் இநநூலை அரஙகேற்றிய பின்னர் பாணடியன் புலியூா நம்பிகருப் பல்லகரு முதலான பரிசுகளையும் விருதுகளையும் வழஙகினான்; செலலி நாட்டை முறறூட்டாகக் கொடுததான் வடமொழி நூலான உத்தரமகாபுராணத்தின் ஒரு பகுதியான 'சார சமுச்சியம்' இநநூலின முதனூல எனபார்கள். ஆயினும், வடமொழி மரபுகளைத தழுவி அமையா மல, தமிழ் மரபுகளைத் தழுவி இது அமைந்துளளது. இந்திரன் பழிதீர்த்த திருவிளையாடல முதல வேதம் உணர்த்திய திருவிளையாடல் வரை 64 திருவிளை யாடல்களா கூறப்பெற்றுளளன. 1753 விருத்தப்பாக் கள் இடமபெற்றுள்ளன. இனிய ஓசையுடன அமைந்த சநதப் பாடல்களும் உணடு. துதிப் பாடல்கள மிகுதி. எதுகை, மோனைகள பாடல்களில சிறப்பாக அமைந துள்ளன. பக்திசசுவை மிகக பாடல்களும் உணடு பாயிரம், கடவுள்வாழ்த்து, அவையடககம், பதிகம், நூல்வரலாறு, திருநகரச் சிறப்பு, நூறபயன எனற பகுதிகளின பின்னர் 64 திருவிளையாடல்களும் கூறப் பெற்றுளளன.பாயிரப் பகுதியில பாணடிய நாட்டுககு வணக்கம பாடப பெற்றுள்ளது. மதுரை, மதுரைத் திருச்சிறறம்பலம, கூடல், ஆலவாய், பெரும்பற்றப் புலியூர் ஆகிய இடங்களுககும வணக்கம கூறப்பெற் றுளளது. நக்கீரா திருமுருகாற்றுப படை பாடியது, மாணிக்கவாசகர் திருக்கோவையார் பாடியது போன்ற குறிபபுகளும் இடம் பெறுகினறன. மயில, கோகிலம், ஓதிமம், பூவை, மான ஆகிய ஐநது வித மாக அம்மையை உருவகிப்பது நயமானது. மதுரை இறைவனைத் 'திருவளர் செந்தமிழச் சொககன' என்று இந்நூல் குறிப்பிடுகிறது. சமபநதரை மறை ஞானசம்பநதர், மறைஞானி, சத்திமான எனறு கூறுகிறது.

பழைய திருவிளையாடல், திருவாலவாயுடை யார் திருவிளையாடல், நம்பி திருவிளையாடல், வேம் பத்தூரார் திருவிளையாடல், மதுரைப்புராணம் என வும் இந்நூல் சொல்லப்படும். பரஞ்சோதி தனது திரு விளையாடலை எழுதும் முன இந்நூலே பெரிதும் பயிலபபட்டது திருப்போரூர்ச் சிதமபரசுவாமிகளா (கி பி. 17-ஆம நூறறாணடு) தமது உரையில் இந்நூற பாடல்களை எடுத்தாளகிறார்.

திருவாலவாயுடையார் திருவிளையாடற்புரா ணமும, பரஞ்சாதியார் திருவிளையாடற புரா ணமும் பல வேறுபாடுகளை உடையவை படல எண ணிககையில இரணடும ஒனறு படுகினறன. ஆனால் நிகழச்சிகளில வேறுபாடு உணடு திருவாலவாயுடை யார் புராணததில் காணடம என்ற அமைப்பும, அறு பத்து நானகு திருவிளையாடலகளுக்கு இறுதியில அருசசனைப் படலமும் இலலை. ஆனால பரஞ்சோதி யாா புராணததில உணடு. பரஞ்சோதி இனன பாண்டியன் காலததில இனன திருவிளையாடல் நடந தது எனறு தெளிவாகப பாணடியர் பரமபரையி னைக கூறுவார். ஆனால பெரும்பறறப் புலியூா நமபி மலயத்துவசன, சுநதரமாறன, உக்கிரன, வடிவலமப நின்றான, வீரமாறன், வரகுணன் முதலான ஒரு சிலரையே குறிபபிடுகிறார். பரஞ்சோதி ஒவவொரு படலத்தின் தொடக்கததிலும் முதல் செய்யுளில முந திய படலத திருவிளையாடலைக் குறிபபிட்டு அடுதது வரும் திருவிளையாடல இது எனறு குறிப்பிட்டுள ளார். ஆனால, பெரும்பற்றப புலியூர் நம்பி இவ்வாறு குறிப்பிடவில்லை. சிவன் பெருமை, சைவத்தின சிறப்பு ஆகியவற்றை இரு புராணங்களும் பாடுகின் றன. அ.பா.

**திருவிற்குடி** எனனும திருவூர் அட்டவீரட்டங களில ஒன்றாக விளங்குகின்றது மயிலாடுதுறை காரைககுடி இருப்புப்பாதையிலுளள 'விறகுடி' புகை வண்டி நிலையததிலிருநது கிழக்கு நோக்கிச் செல்லும பெருவழியில் ஒனறரைக கிலோமீட்டர் சென்று 'கல யாணி இருப்பு' எனற இடத்திலிருந்து ஒனறரைக் கிலோ மீட்டரில இத்திருவூரை அடையலாம். திரு வாரூரிலிருந்தும் பேருந்து வசதிகள உண்டு.

இவவூர் விளப்பாறு பில்லாலி ஆறு என்ற இரண் டாற்றுக்கிடையே மேட்டுப் பகுதியில் விளங்குவதால் 'திட்டை', 'கோத்திடடை' எனவும் பெயர் பெறுவ துடன், சலந்தரன வதையுணடபோது திருமாலி னுடைய வில் விழுநத இடமாதலால், விற்குடி என்ற பெயரும் கூறப்பெறுகின்றது. பளளத்தூர் சொ.மு.அ. குடும்பத்தாரின் சீரிய கருஙகல் திருப்பணி பெற்றது இவ்வூர்த் திருக்கோவில்.

அட்டவீரட்டத் தலங்கள் எட்டனுள் திருவழுவூர், திருக்கடவூர் எனற இரண்டு ஊரில் மட்டுமே கிழக்கு நோக்கிய திருவாயில உண்டு. மற்றைய திருவிற்குடி, திருக்கண்டியூா, திருக்கோவலூர், திருவதிகை, திருப்

பறியலூர், திருக்குறுக்கை ஆகிய திருவூர்களில் திரு வாயில் மேற்கு நோக்கியே அமைந்திருக்கின்றது. வெளித் திருச்சுற்றில் திருமாலுக்காகப் பெருமான் பிருந்தையைத் துளசியாக எழுப்பிய இடமும் திரு மால் வழிபட்ட சிவாலயமும் உள்ளன. இறைவர் திருப்பெயர் வீரட்டானேசுவரர்; இறைவி ஏலவார் குழலி, பரிமளநாயகி. தீர்த்தங்கள் சங்கு சக்கரதீர்த் தங்கள். இங்குச் சலந்தரனைச் சங்கரித்த சங்கார மூர்த்தி இடக் கரங்களில் மானும், அபயமுத்திரையும் வலக்கரங்களில் சக்கரமும் மழுவுமுடையராக விளங்கு கின்றார். இப்பெருமானை வேண்டி நினைந்த பயனை இப்பகுதி மக்கள் அடைகின்றார்கள். சலந்தரன் வர லாறு இத்தல புராணத்திலும் கந்தபுராணம் காஞ்சிப் புராணம் ஆகிய நூல்களிலும் கூறப்பெறுகின்றது. சலந்தரன் பிருந்தை என்பாளை மணந்து தவச்சிறப் பால் தேவர்களைத் துன்புறுத்தினான். இறுதியில் திருக்கயிலாயத்தையே தாக்க வந்தான். இறைவன் மாற்றுருக் கொண்டு எதிரே வந்து காலால் கீறி ஒரு சக்கரத்தை உண்டாக்கிச் சிரசின் மேல் தாங்குவாயா எனக் கேட்க அவ்வாறே சலந்தரன் தூக்க முயலும் போது சக்கரத்தால் பிளவுபட்டான். சக்கரம் இறை வனிடம் மீண்டது.

சு.சு.

**திருவிற்கோலம்** என்னும் திருவூர் இப் பொழுது 'கூவம்' எனச் சொல்லப்பெறுகின்றது. சென்னை அரக்கோணம் இருப்புப்பாதையில் திரு வள்ளூரை அடுத்த கடம்பத்தூர் என்னும் புகை வண்டி நிலையத்தினின்றும் தெற்கே எட்டுக் கிலோ மீட்டர் தொலைவில் இது அமைந்துள்ளது. சென் னைக்கருகிலுள்ள அரக்கோணம் வழியாகப் பேருந் தில் சேரலாம். பத்துச் சேரிகளின் நடுவில் கூவம் உள்ளது. இலம்பையங்கோட்டூர் இதற்கு அண்மை யில் உள்ளது. சிவப்பிரகாச சுவாமிகள் இத்திருவூருக் குத் தலபுராணம் பாடியுள்ளார். திரிபுரம் எரித்த காலத்தில் வில்லை ஏந்திய திருக் கோலத்தோடு வீற்றிருந்தமையால் விற்கோலம் எனப் பெயர்பெற றது. திரிபுரதகனம் செய்த மூர்த்தியைத் தேவர்கள் பூசித்த திருவூர். ஊர்ப் பெயர்-கூவம். கோவில் பெயர் விற்கோலம். இறைவரது திருப்பெயர் திரிபுர சுந்தரேசுரர், திருவிற்கோலநாதர். இறைவி திருப் பெயர்கள் திருவிற்கோல நாயகி, புராந்தகியம்மை, திரிபுராந்த நாயகி என்பனவாம்.

மிகுதியாக மழைபெய்வதாக இருந்தால் இங் குள்ள இறைவன் திருமேனியில் வெண்ணிறம் தோன்றுவதும், அமர் ஏற்படுவதாக இருந்தால் சிவப்பு நிறம் படர்வதும் ஆகிய அற்புதம் பொருந் திய இப்பெருமான் தீண்டாத் திருமேனியாக விளங்கு கின்றார். சுவாமிக்குத் திருக்கோவிலிலிருந்து பறிக் கும் மலரைத் தவிரப்பிறிதொரு மலரைச் சாத்துவ தில்லை என்று கூறப்பெறுகின்றது. இங்குள்ள மக்கள் பெருமானை 'அயயன் நல்லதிசயன்' என்று கூறுகின் றார்கள். 'அயயன் நல்லதிசயன்' என்றே திருஞான சம்பந்தர் பாடி அருளுகின்றார்.

தருமசீலர் என்னும் மறையவர் அடியார்களுக்கு அன்னம் வழங்கி மகிழ்பவர். வறுமை அவரை வாட் டத் தொடங்கியது. தம் குடும்பத்திற்கே உணவில்லா நிலையில் அடியார்கள் வர, மனைவியார் நெல் யாசகம் எடுத்து அதனை உணவு செய்து தர, அடி யாருக்கு அளித்து மீத உணவைத் தாமுண்ணத் தொடங்குகையில் இறைவன் ஓர் அடியாராக வர, அந்த உணவையும் அவருக்கு அளித்துவிட இறைவன் மகிழ்ந்து அவருக்குத் தம் திருக்கோவிலில் செந்நெல் குடம் வைத்து அருள்புரிந்தார். காளி, தாம் நாய கனை எதிர்த்த குற்றம் தீர இங்குத் தவமிருந்தார். இங்குள்ள பிடாரி அம்மை தருக்கமாதா எனப்படும் பெரிய துர்க்கைவடிவம் பெற்றவர். திருக்கோவிலின் முன் 'அச்சிறுகேணி' என்னும் தீர்த்தம் உள்ளது.

சு.சு.

**திருவின்னம்பர்** என்னும் ஊர் இன்னம்பூர் என்று இன்று வழங்கப் பெறுகின்றது; கும்பகோணத் திலிருந்து சுவாமிமலைக்குச் செல்லும் பேருந்து வழி யில் இரண்டு கி.மீ.தூரத்தில் இருக்கின்றது. கும்ப கோணத்திலிருந்து நகரப் பேருந்து வண்டிகள் உள் ளன. அம்பர் என்பது ஊர்ப் பெயர். இதன் அடை மொழி இன் என்பது

இங்குள்ள திருக்கோவிலின் இறைவர் திருப் பெயர் எழுத்தறிநாதேசுவரர்; மிகப் பெரிய திருவுரு வம்; கருப்பக்கிரக வாயிலும் பெரியது, தொழுது தூமலர் தூவித்தொழுது அழுதுகாமுற்று அரற்று கின்றவர்களையும் பொழுது போக்கிப் புறக்கணிக் கின்றவர்களையும் கீழ்க்கணக்கு முறையில் எழுது வாராம் இங்குள்ள பெருமான். மற்றும் திருநாவுக் கரசர் 'என்னிலும் இனியான் ஒருவன் உளன்' என் பர். தான் தோன்றி ஈசர் என்ற திருப்பெயரும் இவ் வூர்ப் பெருமானுக்குண்டு. இங்குக் கொந்தார் குழ லம்மை, நித்திய கல்யாணி அம்மை என இரு அம்மன் சந்நிதிகள் உள்ளன.

அகத்தியருக்கு இறைவன் இலக்கணம் உபதேசித்த தலங்களுள் இதுவும் ஒன்று. இது சிவபெருமான் கணக்கராய்த் தோன்றிக் கணக்கை அரசனிடம் ஒப்புவித்த திருவூர்; ஐராவதம் என்னும் யானை பூசித்த தலம்.

இத் திருக்கோவில் கருப்பக்கிரக விமானம் யானை யின் உருவம்போல செய்யப்பெற்று ஐந்து வரிசை

யான கலசங்களோடு திகழ்கின்றது. பிரகாரச் சுற்றிலுள்ள நடராசர் சிலை வடிவம் காணத்தக்கதாகும். இத்தலத்திற்குத் திருநாவுக்கரசர் பதிகம் நான்கும் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்றும் உள்ளன இங்கு நந்தி சற்றே விலகியுள்ளது. சோழமன்னரில் இராசகேசரி வாமன் நான்காம் ஆண்டிலும், விசயநகர வேந்தர் வீர கம்பண்ண உடையார் காலத்திலும் பொறிக்கப் பெற்ற இரண்டு கல்வெட்டுகள் உள்ளன. இக் கல்வெட்டுகளால் அரிஞ்சிகை விண்ணகரம் என்னும் திருமால் கோவில் இங்கு விளங்குவதையும், தென்னவனவிழுப்பரையன் மனைவி அரிஞ்சிகையால் அன்னமளிகைக்கொடை அளிக்கப்பட்டமையையும், இவவூர் வடகரை இன்னம்பர் நாட்டு இன்னம்பர் எனப்படும் என்பதனையும் அறியலாம். சு.சு.

**திருவீங்கோய்மலை:** காண்க: ஈங்கோய் மலை

**திருவீழிமிழலை:** காவிரிக்குத் தென்கரையிலுள்ள சோழநாட்டுச் சைவத் திருத்தலங்களுள் அறுபத்து ஒன்றாம் தலம் திருவீழிமிழலை கும்பகோணத்திலிருந்து பூந்தோட்டம் செல்லும் பேருந்து வழியில் இத்தலம் உள்ளது ஆடுதுறை,பூந்தோட்டம் ஆகிய புகைவண்டி நிலையங்களிலிருந்தும் செல்லலாம். அரசிலாற்றங்கரையில் இது அமைந்துள்ளது. திருக் கோயிலில் வீழிச்செடிகள் நிறைந்திருப்பதால இவவூர் இப்பெயர் பெற்றது என்ப.

இது மூவர் பாடிய சிறப்பினைப் பெற்ற தலம். திருஞான சம்பந்தர் 15 பதிகங்களும் திருநாவுக்கரசர் 8 பதிகங்களும் சுந்தரர் ஒரு பதிகமும் பாடியுள்ளனர். இறைவன் பெயர் நேத்திரார்ப்பணேசர், வீழியழகீசர்; இறைவி பெயர் சுந்தரகுசாம்பிகை/அழகுமுலை அம்மை. இறைவன் வீற்றிருக்கும் இடத்திற்கு மேலுள்ளது விண்ணிழி விமானம் என்று சொல்லப்படுகிறது. ‘மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே’ என்று வருதல் இதனைக் குறிப்பிடும்.

இறைவன் திருமணக் கோலத்தில் காட்சி தருகின்றார்.அதனால், இறைவனை மாப்பிள்ளைச் சாமி என்று சொல்கின்றனர். இது திருமால் பூசித்த சிறப்புடையது திருமால்தன் கண்ணைப் பறித்து மலராகப் படைத்த குறி இருக்கின்றது. உற்சவமூர்த்தியின் வலப் பாதத்தின் மேலே திருமாலுடைய கண்ணும் கீழே சக்கரமும் காணப்படுகின்றன.

திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் ஒருங்கிருந்த பொழுது,பஞ்சமுண்டாக,இறைவன் இருவருக்கும் படிக்காசு வழங்கிய அருந்தலம். அப் படிக்காசு பெற்று மக்களுடைய துன்பத்தை நீக்கினர் இருவரும். ‘இருந்து நீர் தமிழோடிசைகேட்கும் இச்சையால் காசு நித்தல் நல்கினீர்’ என்று சுந்தரர் பாடுவர். இருவருக்கும் கோயில்கள் உள்ளன. வடக்கு வீதியில் அப்பர் சம்பந்தர் மடங்கள் தனித்தனியே இருக்கின்றன. இக்கோயிலில் பல மன்னர்களுடைய 68 கல்வெட்டுகள் காணப்படுகின்றன. அ.வி

**திருவுசாத்தானம்:** காவிரிக்குத் தென்கரையிலுள்ள சோழநாட்டுச் சிவத்தலங்களுள் நூற்றேழாம் தலம் திருவுசாத்தானம். காரைக்குடி- திருத்துறைப்பூண்டி புகைவண்டிப் பாதையில் முத்துப்பேட்டைப் புகைவண்டி நிலையத்துக்கு வடக்கே 3 கி.மீ. தொலைவில் உள்ளது; திருஞான சம்பந்தர் பாடிய சிறப்பினை உடையது இறைவன் பெயர் மந்திரபுரீசுவரர், இறைவி பெயர் பெரிய நாயகி அம்மை.

தில்லைக்கூத்தனே இவ்வூரினை விரும்பி, எழுந்தருளிய காரணத்தால் கோயிலூர் என்ற வேறு பெயரும் உண்டு இத்தலத்தினை ‘நறைகமழ தில்லையான் உறைவிடம் திருவுசாத்தானமே’ என்று திருஞானசம்பந்தப்பெருமான் குறிப்பிடுவர். இராமன் இலங்கைக்குச் செல்லும் முன்னர் இத்தலத்தில் மந்திர உபதேசம் பெற்றனன் என்பர்.

இராமன், இலக்குவன், சாம்பவான், சுக்கிரீவன், அனுமன் முதலியோர் வழிபட்டுப் பேறுபெற்ற தலம் இது. ‘நீரிடைத்துயின்றவன் தம்பி நீள் சாம்புவான்’ எனத் தொடங்கும் முதலடியால் இது அறியத்தகும். சோழ மன்னர்களின் கல்வெட்டுகள் பல இக்கோயிலில் பொறிக்கப்பட்டுள்ளன. அ.வி.

**திருவுந்தியார்:** மெய்கண்ட சாத்திரம் பதினான்கனுள் முதற்கண் வைத்து எண்ணப்பெறுவது திருவுந்தியார். இது சிவஞான போதத்திற்கு முன் தோன்றியது. இந்நூலாசிரியர் திருவியலூர் உய்யவந்த தேவநாயனார், கி.பி. 12–ஆம் நூற்றாண்டில (கி.பி.1147) வாழ்ந்தவர்.

திருவுந்தியார் ‘உந்தி பறத்தல்’ என்ற மகளிர் விளையாட்டுப் பாடல் வாயிலாகச் சிவாகம ஞான பாதப் பொருளை உபதேச முறையில் சுருங்கச் சொல்லுகிறது. பறவை பறக்கும்போது தன் சிறகுகளை அடித்துக் கொண்டு பறக்கும். அதுபோலச் சிறுமியர், கால்களை ஒன்றாக அசையாது வைத்துக் கொண்டு கைகளை இருபக்கமும் நேராக நீட்டி ஆட்டிக் கொண்டு விளையாடுவர். இங்குப் பறப்பது இல்லை;பாடுவது உண்டு.அதுபோலத் திருவுந்தியாரை மகளிர் பாடி விளையாடுவர். இதனைப் பல்வரிக் கூத்துள் ஒன்றாக அடியார்க்கு நல்லார் குறிப்பர்.

'உந்தீபற' என்ற மகளிர் விளையாட்டை இலக்கிய வடிவில புகுத்தியவர், பெரியாழ்வாரும் மாணிக்கவாசகரும் ஆவர். அவற்றைப் பின்பற்றி உய்ய வந்த தேவ நாயனாா 'திருவுந்தியார்' எனத் தனி நூல் இயற்றினார். இந்நூல் நாற்பத்தைந்து கலித்தாழிசைகளாலானது. முதலிரு அடிகளை ஒருத்தி சொல்ல மூனறாம் அடியை மற்றொருத்தி சொல்லுவதாகத் தாழிசைகள அமைநதிருக்கின்றன. 'என் பெண்ணே' எனற ஆட்சி ஈரிடங்களில் இந்நூலில் காணப்படுகிறது

இந்நூல் தாழிசைகளில் 'உந்தீபற' என்பது மகுடமாகும். இதற்கும் நூல் கூறும் பொருளுக்கும் தொடர்பில்லை. இது பாடல்களில் புறத்துறுப்பாய் நின்று நூற் பெயருக்குக் காரணமாய் விளங்குகிறது.

திருவுந்தியார், உலக மக்களின் பாசததை நீக்க வல்ல சிவபரம்பொருளே ஞானாசிரியனாய் வெளிப்பட்டு மெய்யுணர்வை நல்குவன் எனறு கூறுகிறது. மெய்யுணர்வால் ஆணவம் நீஙகி எழும் பேரனபு ஒன்றாலேயே, சிவமாநதன்மையை முதலவன வழங்கப்பெற்று இன்புறு நிலையையெய்துதல் கூடும். இதுவே திருவுந்தியார் உணர்த்தும் மெய்ப்பொருள்.

திருமந்திரம்போலத் திருவுநதியார் குழூஉக் குறிகளைக் கொணட அரிய தொடர்களால் கருத்துகளை உணர்ததுகிறது. உவமை, உருவக அணிகளும் உணடு. இந்நூலின் வழிநூலே திருக்களிற்றுப்படியார். திருவுந்தியார்க்குப பழைய வுரை ஒனறும், சிற்றம்பலவர் உரையும், இக்காலத்திய உரை நான்கும் உள்ளன. தெ.சொ.

**திருவூரகம்**: திருவூரகம் பெரிய காஞ்சீபுரத்தில் உள்ள திருககோயில இக்கோயிலுககுளளேயே நீரகம், காரகம், கார்வானம் என்னும் மூனறு சிறிய சன்னிதிகளும் உள்ளன. இங்கு ஓங்கி உலகளந்த பெருமானின் நின்ற திருக்கோலத்தைக் கணடு மகிழலாம். பெருமான் திருவிக்கிரமனாய் நினறான். மேற்கு நோக்கிய திருமுகத்துடன ஊரகம் எனனும ஆதிசேடனுக்கு அருள்பாலித்தார் என்பது மரபுவழி நம்பிக்கை. தாயார் திருநாமம் அமுதவல்லி நாச்சியார். சார சீகர விமானம் கொணடது இத்திருக் கோயில் நாகதீர்த்தம் திருக்குளத்தின திருப்பெயர்.

இது திருமழிசையாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசாசனம் செய்த திருக்கோயில் ஆகும்.

திருமழிசையாழ்வார் தம் திருச்சந்தவிருத்தத்தில் 63, 64-ஆம் பாசுரங்களில ஊரகப் பெருமானை உள்ளத்திருத்தி உருகுகின்றார். யோகநீதி நண்ணுகின்ற ஞானிகள சிநதனையில் இருந்து தீவினைகளைத் தீர்க்கினற தேவதேவன, 'குன்றிருந்து மாடநீடு பாடகத்து மூரகத்தும் நின்றிருநது வெஃகணைக் கிடநத தெனன நீர்மையோ?' என்று பெருமானின எளிவந்தமையாகிய சௌலப்பியததைப பரவுவார் மேலும், 'நினற தெநதை ஊரகத்து' எனறும, இருநதது பாடகத்து என்றும, கிடநதது திருவெஃகாவில் எனறும் பாடுகினறார்.

திருமஙகையாழவார் சிறிய திருமடலில் தலைவி நிலையில் பேசுவாராய் 'காரார திருமேனி காணுமள வும் போய்ச் சீரார் திருவேங கடமே திருககோவலூரே மதிட்கச்சி யூரகமே பேரகமே' என ஊரூர் திரிந்து தேடும நிலையில் ஊரகம் பறறிக் குறிப்பார். தி.வீ.

**திருவூறல்**: தக்கோலம் எனப்படும் இது, தொண்டை நாட்டுத் திருததலங்கள் முப்பத்திரணடனுள எட்டாம் தலமாகும். அரககோணம் புகைவணடி நிலையததினின்றும் தெனகிழக்கே 11 கி மீ. தொலைவில் உள்ள தக்கோல நிலையத்தினின்றும கிழக்கே $1\frac{1}{2}$ கி.மீ.தொலைவில் கோயில உளளது. திருநநதிதேவரது வாயினினறும பாதாள கஙகை எப்போதும பொஙகி வழிநதுகொணடே இருப்பதால இதற்குத 'திருவூறல' எனப் பெயர் வநதது. இத்தலத்தின இறைவருடைய திருவடியினினறும் பாதாள கங்கை எப்போதும் பொங்கி வந்துகொணடிருபபதாலும் இப்பெயர் வந்தது என்பர். கிழக்கே உளள மதிலோரத்தில் கங்காதரர் சந்நிதி இருக்கிறது. அதன் மேற்குத் திருச்சுற்றில எழுந்தருளியிருக்கிறார், வாய் வழியாக நீர் சுரக்கும் திருநநதிதேவர். இதுவே இத் தலததின சிறப்பாகும.

இறைவன் பெயர் உமாபதீசுவரா, சலநாதேசுவரர்; இறைவி பெயர் உமையம்மை. தீர்த்தம் பார்வதி தீர்ததம; நந்தி தீரததம் எனவும் வழஙகும். இது கோயிலுககு வடக்கே உளளது. இதற்குக் கிழக்கே 'கல்லாறு', என்றும, 'விருத்தசீர நதி' என்றும், 'குசசுத்தலநதி' எனறும் கூறப்படும் ஆறு ஓடுகினறது. உமாதேவியார், சுர குருவுக்கு இளையவரான சம்வர்த்த முனிவர் ஆகியோர் பூசிததுப் பேறு பெற்ற தலம். ஊர் இக்கோயிலின மேற்கே உள்ளது. 'மாறில் அவுணர் அரணம்' எனத தொடங்கித் திருஞான சம்பந்தமூர்ததி நாயனார் இத்தலததிற்குத் திருக்கடைககாப்பு அருளிச் செய்துளளாா.

சலநந்தீசுவரர் எனக கல்வெட்டில் குறிக்கப்படும் இவ்விறைவர்க்குக் கங்கமன்னன பிரிதிவிபதி என்பான, திரிபுவனச் சக்கரவர்த்தி குலோத்துஙகன் இராசகேசரிவர்மன் காலத்தில் வெள்ளிப்பாத்திரம் கொடுத்த கல்வெட்டும் அருள்மொழி நங்கை எனப்படும்

இவன் துணைவியாரால் கோதானம் செயயப்பட்ட கல்வெட்டும், துர்க்கைக்குப் பார்த்திவேந்திர வர்மன் விளக்குகள் அளித்த கல்வெட்டும், இக்கோயிலுககுத் திரிபுவனச் சக்கரவர்த்தி குலோத்துங்கன் காலத்தில, யாதவ மரபில் வந்த திருக்காளத்திதேவன் நிலம் வழங்கிய கலவெட்டும், நிலம, பொன், பணம் முதலானவைகளை விளககெரிப்பதறகும, பிற செலவுகளுக்குமாகக் கொடுத்த கல்வெட்டுகளும் இங்குக்காணப்படுகினறன. வீ.சொ

*திருவெஃகா*: இது ஒரு வைணவத் திருப்பதி; செங்கறபட்டு மாவட்டத்தில் உள்ளது. காஞ்சிபுரத்தி லிருநது 3கி மீ தொலைவில் அமைநதுளளது. இங்கு எழுந்தருளியிருககும பெருமாள சொன்னவண்ணம செய்த பெருமாள, தாயார் கோமளவல்லி. புட் கரணி என்ற குளம் இஙகுளளது. பெருமாள் பாமபுப் படுக்கையில பளளி கொணடுளளார். ஆழவாாகளால் இததலம் மஙகளாசாசனம் செயயபபடடுளளது. திரு மங்கையாழ்வார் இத்தலத்தையும் பெருமாளையும 'ஊரகததாய் ஒணதுறைநீா வெஃகா உள்ளாய் உளளுவார் உள்ளத்தாய்' எனறு பாடி மகிழந்துள ளார். ஒரு காலத்தில பிரமன் இங்கு ஒரு வேளவி செயதான. வேகவதி எனற ஆறு பெருக்கெடுதது வேள்வியை அழிக்க முறபட்டது. அபபோது பெரு மாள ஆற்றின நடுவே பளளிகொணடு அணையாக நினறார் எனபது புராணச் செய்தி. வேகவதி என்ற தொடரே தமிழில வெஃகா எனறு மருவியது என்பர்
சா.உ.

*திருவெட்டெழுத்து*: பன்னிரு ஆழ்வார் களுள் முதல் ஆழ்வாரான பொய்கையாழ்வார் முதல் திருமழிசையாழ்வார், பெரியாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் போன்ற ஆழவார்கள திருவெட் டெழுத்தின பெருமையினைத் தஙகள பாசுரஙகளில் பாடியுள்ளனர். வைணவ ஆச்சாரியர்களின் ஒளி விளக் கான இராமானுசர் தாம் எழுதிய நித்தியகிரந்தம என்ற நூலில திருவெட்டெழுததை மூல மநதிரம் எனறு குறிப்பிடுகிறார். இராமானுசரின் தலைமை மாணாக்கரான குரேசரின புதலவர் பராசர பட்ட ரால எழுதப்பட்ட நூல 'அட்டசுலோகி' என்பதா கும. திருவெட்டெழுத்தின் தத்துவார்த்தப் பொருளை மரபு வழுவாமல் விளகக எழுந்த முதல் நூல், இதுவேயாகும. பட்டருக்குப் பிறகு வடக்குத் திரு வீதிப் பிள்ளை தாம் எழுதிய 'ஈடு' என்ற திருவாய் மொழியின் முப்பத்து ஆறாயிரப்படி வியாக்கியான நூலில் திருவெட்டெழுததின் பொருளை மணிப்பிர வாளத்தில் பரக்க எழுதியுள்ளார். இவருடைய புதல்வ ரான பிளளை உலோகாச் சாரியார் 'முமுட்சுப்படி' எனற நூலில் வைணவத்தின் மூனறு இரகசியங்களை யும் பற்றி எழுதியுள்ளார் இவருக்குப் பிறகு வட கலையைத் தோற்றுவித்த வேதாந்த தேசிகர் வைணவததின மூனறு இரகசியங்களான திருவெட் டெழுத்து, துவயம், சரமசுலோகம் ஆகியமூன்றையும் விளககி 'இரகசியத்திரயசாரம' என்ற அரிய நூலை எழுதியுள்ளார்.

வைணவ சமபிரதாயத்தில திருவெட்டெழுத் திற்குத் திருமந்திரம எனறு பெயா. மேற்கூறிய மூன்று இரகசியஙகளில திருவெட்டெழுத்துமுதனமை யும் முககியத்துவமும் வாய்ந்தது ஆகும. 'எவவாறு நாராயணனை விட உயர்நத தெய்வம வேறொனறு இல்லையோ அவ்வாறே திருவெட்டெழுத்தை விட உயர்ந்த மந்திரம் வேறொன்றும் இலலை. மநதிரங களிலேயே உயர்ந்தமநதிரம மூல மந்திரமே எனறு நாரதீயம் எனனும நூல கூறகின்றது.

'ஓம் நமோ நாராயணாய' என்பது திருவெட் டெழுத்தாகும். இதில் மூன்று சொறகள உள்ளன. முதற் சொல்லாகிய 'ஓம்' என்ற பிரணவம் நெடுங கணககினபடி ஓர எழுததுத் தான. இது 'அ' 'உ' 'ம' என்ற மூனறு எழுத்துகளின சேர்க்கையாகும். 'அ' எனற உயிரெழுத்து அனைத்து எழுத்துகளுக்கும் ஒலிகளுக்கும் தோற்றுவாய் ஆகும். அனைத்து உயிா களுக்கும பிரபஞ்சததிறகும ஆதிமூலமாக விளங் கும் பரம பொருளை 'அ' என்ற உயிரெழுத்துக குறிககிறது கடவுளின் குறிக்கோளை நிறைவேறறு வதற்காக அவனால இயக்குவிக்கப்படும் உயிர் களை 'உ' எனற உயிரெழுத்துக் குறிக்கிறது. உயிர்கள காரண நிலையிலும் காரிய நிலையிலும் கடவுளைச் சார்நதே உள்ளன. அவற்றால தனித்து இயங்க இயலாது. அவை ஒன்றை ஒன்று சார்நது நிற்கவும் இயலாதவை. கடவுளுக்கும் உயிருககும் இடையேயுள்ள உறவை அதாவது 'சேச–சேசி–சம பநதத்தை' 'ம்' எனற மெயயெழுத்துககாட்டுகின்றது. இநதக் கடவுள்-உயிர்-உறவு வேறு எநத இரு பொருள களுககு இடையேயும் இருக்க முடியாது. எனவே, 'ஓம்' எனற எழுத்து உயிர்களின் சார்வான தனமை யைக் குறிககிறது. இதைத்தான் திருமஙகை யாழ்வார் 'கண்ணபுரம ஒனறு உடையானுக்கு அடியேன ஒருவர்க்கு உரியேனோ?' என்று பெரிய திருமொழியிற் குறிப்பிடுகிறாா.

இரணடாவதாக இருப்பது 'நமோ' என்ற சொல். மூன்றாவதாக இருக்கக் கூடிய நாராயணனை அனுப விக்க வேண்டுமென்றால் உயிர் 'யான' 'எனது' என்ற முனைப்புகளை அழிக்க வேணடும். இதன் முக்கியத் துவத்தைத்தான் 'நமோ' என்ற சொல் காட்டு கிறது. இது 'ந' 'ம': என்ற எழுத்துகளின சேர்கைகை யாகும். 'ம' என்றால் 'ஒன்று அதனைச் சார்ந்தது

என்று பொருள். 'ந' என்றால் 'அவ்வாறில்லை' என்று பொருள். எனவே, 'நமோ' என்ற சொல் உயிர்களின் முனைப்புகளை அகற்றி, அவை தங்களைச் சார்ந்து நிற்க இயலாதவை என்ற 'பரதந்திரியக்' கோட்பாட்டைக் காட்டுகிறது. இறைவனை அடையும் முன் பகையானவற்றை அகற்ற வேண்டும். இறைவனது உண்மைத் தன்மையை அறிவதற்குத் தடையாக உள்ள பகை, உயிர் தனது உண்மைத் தன்மையை அறிவதற்குத் தடையாக உள்ள பகை, உபாயங்களைச் செய்வதற்குத் தடையாக உள்ள பகை, இலக்கினை அடைவதற்குத் தடையாகவுள்ள பகை எனப் பகை பலவகைப்படும். இந்தப் பகைகளை அகற்றி உயிா, என்னுடைய எந்தச் செயல்களும் என்னைச் சார்ந்தவையல்ல, என்னால ஆளவிக்கப் படுவனவும் அல்ல, எல்லாம் பகவானாகிய சேசியைச சாாந்து நிற்பனவாகும் என்ற பக்குவ நிலையைக் காட்டுவது தான் 'நமோ' என்ற சொல்.

மூன்றாவதாக வருவது 'நாராயணாய' என்ற சொல. 'நாராயண' 'ஆய' என்ற சொற்கள் சோநது 'நாராயணாய' என்று வருகிறது. 'நாரா' 'அயனா' என்ற சொற்கள் சேர்ந்து 'நாராயணா' என்று வருகிறது. 'நாரா' என்பது நித்தியமான உணர்வுள்ள அசடப் பொருள்களையும், உணர்வற்ற சடப் பொருளகளையும் குறிக்கின்றது. இவற்றிற்கெல்லாம் உள்ளாற்றலாய் நிற்கும் கடவுளை இது குறிக்கவில்லை 'அயனா' என்றால் உறையுள் என்று பொருள். எனவே, 'நாராயணா' என்றால் சகல உயிர்களுக்கும் உள்ளாற்றலாகவும் உபாயமாகவும் உபேயமாகவும் அனைத்துச் சடப்பொருள்களையும் கொள்ளும் ஆதாரமாகவும் நியந்தராகவும் இருப்பவன் என்பது பொருள். நாராயணா என்ற சொல்லுக்கு அப்பால் எதுவுமில்லை என்ற அளவில் உயர்வற உயர்நலம் உடையவனாய் நல்லது, தீயது, உயர்ந்தது, தாழ்ந்தது போன்ற எதிர் நிலைக் குணங்களுக்கும் கருத்தாவாய் விளங்கும் பரம்பொருளை 'நாராயணா' என்ற சொல் குறிக்கிறது.

'ஆய' என்ற விகுதிச் சொல் திருவெட்டெழுத்தின் இறுதிப் பயனைக் காட்டுகின்றது. இதற்குச் 'சம்பிரதானம்' என்று பெயர். தனக்குக் கருத்தாவாய் விளங்கும் பகவானுக்குத் தொண்டு புரிய வேண்டும். அதாவது பகவத் கைங்கரியத்தில ஈடுபட வேண்டும் என்ற ஆசை உயிர்களுக்கு வேண்டும் என்பதை இது காட்டுகிறது. அவனுக்குச் சொந்தமான ஒன்று அவனுக்கே அளிக்கப்படுகிறது. உடையவனது உடைமையாகிய உயிர் உடையவனிடத்தே சரணமடைந்து பாசநீக்கம் பெற்றுப் பகவத் கைங்கரியத்திற்கு ஆயத்தமான நிலையடைகிறது.

எனவே, திருவெட்டெழுத்திலுள்ள பிரணவம் கடவுளுக்கும் உயிர்களுக்கும் இடையேயுள்ள உறவையும், கடவுள் மற்றும் உயிர்களின தன்மையினையும், இரண்டாம் சொல் உயிர்களின ஆன்மிகப் பயிற்சியின் போது உண்டாகும் தடைகளின் அதாவது பகைகளின தன்மையினையும, அவற்றை நீக்க வேண்டியதன் இன்றியமையாமையினையும்; கடைசிச் சொல இறுதி இலக்கின் தன்மையையும அதனை அடைவதற்கான வழியையும் குறிப்பிடுகின்றன. 'எனக்குத் தனிதது இயங்கும் தகுநிலையில்லை. நான கடவுளைச் சாாநதே யுள்ளேன. உயிர்களுக்கும் சடப்பொருளகளுக்கும கருத்தாவாய் விளஙகும் அவனுக்குப் பகவத் கைஙகரியம செயயும பேற்றை நான் பெற வேணடும்' என பன திருவெட்டெழுத்தின் பொருளகளாம். எல.மு.

**திருவெண்காட்டு நங்கை:** சோழநாட்டுப் பதியாகிய திருச்செங்காட்டங குடியில தோனறிய பரஞ்சோதியாரின் இல்லககிழத்தியாகும பேறு பெற்றவா திருவெணகாட்டு நங்கை. இவர் குறறமற்ற நற்குடியில் பிறந்தவர். அடியார்களுக்குத் திரு அமுது படைத்தபின்னரே உண்ணும்அறததை மேற்கொணட பரஞ்சோதியாரின் தொணடிற்கு இடையூறு வாராத படி நடந்தொழுகிய பெருமைக்குரியவர் திருவெணகாட்டு நங்கை. மனையறத்தின் வேராக விளங்கிய இவரது மணிவயிற்றில் சீராளதேவா எனனும் திருமகனார் உதித்தார். அவரது குழந்தைப் பருவததில் பரஞ்சோதியாரும் திருவெணகாட்டு நங்கையும் அணிமணிகள் பூட்டி அழகு பார்த்து மகிழந்தனர்.

அடியார் வேடஙகொணட சிவபெருமான் பரஞ்சோதியாரின இல்லத்தில் வினவும்காலை சந்தனத தாதியார் அவரை வரவேற்றார். 'பெண்கள் இருக்குமிடம் நாம் தனியே புகோம்' என்ற அடியாரைப பணிநது தம் கணவனாரின நியமங்களைக் கூறி விண்ணப்பம் செய்தவர் திருவெணகாட்டு நஙகையே. அடியார்களைக் காணாது வருந்திவந்த தம் கணவனாரிடம் உலகம் அனபுகூரும் அருளவடிவுடன் வநதவரைப் பற்றிக் கூறியவரும் இந் நங்கையே.

அனபிலுங் கற்பிலும் சிறந்த அம்மையாா பிள்ளைக்கறி பற்றிய தமது கணவனாரின் உரை கேட்டு 'ஒரு குடிக்கு ஒரு மகனாகப் பிறந்த சிறுவனை எங்ஙனம் பெறுவது' எனக கேட்கின்றார். தம் மகனை அங்ஙனம் தரும் எண்ணம் அவரது தாயுளளத்தில் எழவில்லை. 'நீ பெறற மகனையே அழைப்போம்'என்று கணவனார் கூறியபோது அசசொலலை மறுக்காது உடனபட்ட கற்பின் பெருமை வியக்கத் தக்கது.

பள்ளியிலிருந்து வந்த மகனை அம்மையார் குஞ்சி திருத்தி, முகம் துடைத்துத் துகள் நீக்கி மஞ்சனம்

ஆட்டுவிததுக குறைவில்லாக் கோலம் செய்து கொடுததாா. கணவனாரின தொணடிற்கு உடன் பட்டு ஒழுகும் சிறப்பு இதனால் வெளிப்படுகினறது. இருவரும திருமகனை இறைவனுககான உணவாக்கும கால் அம்மையார் உளளம் 'இப புதல்வன் என கணவனாரது அரிய உயிரை எனககு அளித்தான' எனறு கூறியிருப்பது பிள்ளைப்பாசத்தையும் கடந்த பதிபததி நிலையை உணாத்துகிறது.

மேலும் உணவு படைககுமகால் திரு அமுது படைக்கும வகையைக் கூறுமாறு பயிரவரிடம் பணிநது கேடபது அமமையாரின விருநதோம்பும பணபின சிறபபுநிலையை விளக்கும. 'தலையிறைச்சி உணபது வழககம்' என்ற பயிரவர் சொறகேட்டுத திகைதத அமமையாா மனம களிக்கச் சந்தனத தாதியார் அதனையும் அமுதாககிப படைத்தாா.

'உமககு மகன உணடேல் அழையும்' எனற போது சிறுத்தொணடா அஙஙனமே வாயிலில நினறு அழைத்தார் அப்போதும் அமமையாா, 'செயய மணியே! சீராளா! சிவனார் அடியாா யாம் உய்யும வகையால உடனுணண அழைககின்றாா' எனறு ஒல மிட்டார். அடியாா அமுது செய்ய எதனையும துணிநது செய்யும இயலபும், கணவன நெறிப்பட்டு ஒழுகும் கடப்பாடும இவரிடம சிறந்து திகழநதன.

மகனமைப் பாசததை வெனற நிலையில கணவன நெறிபபடடு ஒழுகிச சிவனடியாரை உண பிககும எணணததை முறறுபபெறச் செயத அமமை யாா பலவகையிலும் பாராட்டுககுரியவராக விளங்கு கினறார். ஜி.ஆா.கி.

**திருவெண்காடு**: காவிரியினவடகரையிலுளள சோழநாட்டுச் சிவத்தலஙகளுள பதினொனறாம தலம திருவெணகாடு; சீகாழிககுத் தெனகிழக்கே 11கி.மீ. தொலைவில உளளது. மயிலாடுதுறையி லிருந்து நேரடியாகப் பேருநது வழியே செலலலாம்.

இததலம் மூவர் பாடிய சிறப்பினை உடையது. திருஞான சம்பந்தர் மூனறு பதிகங்களும, திருநாவுக கரசா இரண்டு பதிகங்களும, சுநதரமூர்த்தி சுவாமி கள் ஒரு பதிகமும் பாடியுள்ளனா. இறைவன் பெயா வெணகாட்டுநாதர்/சுவேதாரணியேசுரர், இறைவி பெயர் பிரமவித்தியநாயகி.

கோயில் பெரியது. நடராசா சன்னதி சிதமபரத் திற போலவே அமைநது சிறபபுடையதாக விளங்கு கிறது. உள் திருச்சுற்றில் அகோரமூாத்தி சூலத்துடன தெறகுமுகமாகப் பெரிய வடிவமாக இருக்கின்றது. ஐநது திருச்சுறறுகள உளளன. வெளிச்சுறறில் அககினி



ஆாத்தநாரீசுவரர் செப்புமேனி – திருவெணகாடு

மூலையில அககினி தீாத்தமும், தெற்குத் திருச்சுற்றில சூரிய தீாத்தமும வடககுத் திருசசுறறில சநதிர தீர்த்தமும உளளன. இவற்றை 'வெண்காட்டு முக குளநீர்' என்று ஞானசமபநதா குறிபபிடுவா. இக குளஙகளில் நீராடி வழிபட்டால் பிளளைப் பேற்றை அடைவாாகள் எனபது ஐதிகம். அவர்களைத் தீவி னைகள அடையா எனற கருத்தும நிலவுகினறது சிலப்பதிகாரத்தில குறிககப்படும'சோமகுணடம சூரிய குண்டம்' இவை எனபா இத்தலததில வெளளானை பூசித்துப் பேறு பெறறதை 'வெளளானை வேணடும வரம் கொடுபபர்' எனபா அப்பர் சுவாமிகள. அ.வி

**திருவெண்டுறை** காவிரிக்குத தெனகரையி லுளள சோழநாட்டுச சிவத்தலஙகளுள நூற்றுப்பனனி ரணடாம் தலம திருவெணடுறை,மனனார்குடிபபுகை வணடி நிலையத்துககுக கிழககே 9½கி.மீ. தொலைவில உள்ளது. திருஞானசம்பந்தர் பாடிய சிறபபினை உடையது இத்தலம். இறைவன பெயா வெணடுறை நாதர்; இறைவி பெயர் வேனெடுஙகணணி அமமை பிருஙகி முனிவர் வணடு உருவெடுதது இறைவன இறைவி ஆகியோர் கால்களுககு இடையே துளைததுச் சென்று இறைவனை மாத்திரம் வழிபட்ட பதி இது வென்றும், கருவறையின உளளே வணடின ஒலி இன

றும்.கேட்கினறது என்றும் கூறுவர். சிவபெருமானுக்குரிய நாணமீன திருவாதிரை. முதறபாடல் அதனைக் குறிக்கும் வகையில 'ஆதியன ஆதிரை யன' எனறு தொடங்குகினறது. அ.வி.

**திருவெண்ணி:** காவிரியின தெனகரையிலுளள சிவத்தலங்களுள் நூற்றிரண்டாம் தலம திருவெணணி. தஞ்சாவூா-திருவாரூா இருப்புப் பாதையில கோயில்வெணணி எனனும் புகைவணடி நிலையத்திலிருநது 2½கி.மீ. தொலைவில உள்ளது கோயில்.

திருஞான சம்பந்தா் ஒரு பதிகமும், திருநாவுக்கரசா இரு பதிகங்களும் பாடிய சிறப்பினையுடையது இததலம. இறைவன் பெயர் வெண்ணிக் கருமபர்; இறைவி பெயா அழகியநாயகி. இறைவன திருமேனி கரும்புக் கழிகளை ஒனறு சேர்தது வைத்தாற்போல இருக்கின்றது. 'நேற்றுக் கண்ட இறைவனது திருக்காட்சியை நினைநதிருநத தமக்கு நாவில அமுதூறுகின்றது' எனபா அப்பர்சுவாமிகள். 'வெணணியானையலலது உளகாது என் உள்ளம' என்று கூறுவர் திருஞான சமபநதர். இக்கோயிலில் சோழ மனனர்களின கல்வெட்டுகள பல உள்ளன. கலவெட்டில் இறைவன பெயர் திருவெணணி உடையார் என்று குறிககப் பட்டுளளது. அ.வி.

**திருவெண்ணெய்நல்லூர்:** நடுநாட்டுத திருத்தலங்களுள் பத்தாம் சைவத் திருத்தலம திருவெணணெய் நல்லூர்; திருச்சிராப்பள்ளி-விழுப்புரம் புகைவண்டிப் பாதையில திருவெண்ணெய் நலலூர் நிலையத்திலிருந்து 6½கி.மீ. தொலைவில உள்ளது; பண்ணுருட்டிக்கு மேற்கே 24கி.மீ. தொலைவிலுளளது.

இது சுந்தரர் பாடிய சிறப்பினைப் பெறறது ஒரு பதிகம் பாடியுள்ளார். சுந்தரமூர்த்தி சுவாமிகளின 'பித்தா பிறைசூடி பெருமானே' எனனும் முதல தேவாரப் பதிகம் எழுநதது இததலத்திலாகும். இறைவன் பெயர் தடுத்தாட்கொண்டநாதர், அருட்டுறைநாதர்; இறைவி பெயர் வேற்கணணியம்மை. இத்தலததிலுள்ள கோவிலுக்குத திருவருட்டுறை என்பது பெயர். இறைவன் சுநதரரைத் தடுத்தாட்கொணட ஊர் இது. சுந்தரர் 'வெணணெய நலலூரில் அற்புதப் பழ ஆவணங்காட்டி அடியனாய் என்னை ஆணடு கொண்ட நறபதத்தை' என்று பாடுவர். சைவ சமய சந்தனாச் சாரியராகிய மெய்கணடதேவர் தோனறிய தலமும் இதுவேயாகும்.

இக்கோயிலில் எழுந்தருளியிருககும் இறைவனின் பெயர் திருவருட்டுறை ஆனடார் என்று முதலாம் இராசராசன் கல்வெட்டில் காணப்பெறுகின்றது.



பிட்சாடன மூர்த்தி – திருவெண்ணெய் நல்லூர்

பினனையோர் கல்வெட்டுகளில் ஆட்கொணட தேவர், தடுத்தாட்கொணட தேவர் என்று காணப் படுகினறது மணம் தவிர்ந்த புத்தூர், தடுததாட் கொணடவூர் – என்ற ஊாகள் இரண்டும் அருகில் உள்ளன. அ.வி.

**திருவெண்பாக்கம்:** தொணடைநாட்டுத் திருத்தலங்களுள் பதினேழாம் சைவத் திருததலம் திருவெணபாக்கம்; சென்னைக்கு அருகிலுளள திருவெளளூர்ப்புகைவணடி நிலையததிலிருந்து 11கி.மீ. தொலைவில் உளளது கோயில் இருந்த இடம் பூணடி நீர்த்தேக்கத்தின் ஒரு பகுதியாக உளளது கோயிலை அடியோடு பெயர்த்து வேறு இடத்தில் வைத்துள்ளனர்.

இது சுந்தரர் பாடிய சிறப்பினை உடையது. ஒரு பதிகம பாடியுள்ளார். இறைவன பெயர் ஊன்றீசுரர், வெணபாககநாதர்; இறைவி பெயர் மினனல ஒளியம்மை, கனிவாய்மொழி அம்மை. இவ்வூரிலுளள கோயிலின் பெயர் வெணபாக்கம் என்பதாகும். 'வெணகோயில் இங்கிருநதாயோ என்ன' என்று வருதல் காண்க. திருவொற்றியூரில் சங்கிலியாரை மணப்பதற்காகச் செய்த சபதமொழியைக் கடநததனால சுநதரருக்குக கணபார்வை போயிற்று. திருவொற்றியூரில் கணபார்வை இழநத சுந்தரர் ஊன்றுகோல்

அருளுமாறு வேணடினாா. இறைவன் இததலததில தான் ஊனறுகோல கொடுததருளினார். 'ஊனறுவ தோர் கோல அருளி, உளோம போகீர் என்றானே' என்று சுந்தரர் பாடுவர்.

இஙகுள்ள நந்தியின வலககொம்பு சிறிதளவு ஒடிந்து காணப்படுகினறது. சுநதரமூர்த்தி சுவாமி யின ஊனறுகோல பட்டு, அது ஒடிநதுவிட்டது எனபர். நந்தியின சிலைக்கு அருகில் சுந்தரமூர்ததி நாயனாருடைய சிலையொனறு ஊனறுகோலுடன எழுந்தருளுவிக்கபபட்டுளளது. அ.வி.

**திருவெதிர்கொள்பாடி,** சோழநாட்டில் காவிரியின வடகரையிலுளள சைவத் திருப்பதி. இவ் வூர் திருவேளவிக குடிக்கு வடக்கே $2\frac{1}{2}$ கி.மீ. தொலைவில உளளது.

திருவேளவிகுடியில் திருமணம் செயதுகொணடு மணககோலத்துடன் வநத மனனன மகனைச் சிவ பிரான் மாமனாய் எதிர்கொணடழைத்தமையால் இவவூர் 'எதிர்கொள்பாடி' என்று பெயர் பெற்றது. இபபெயர் சுந்தரா தேவாரத்திலும திருத்தொணடா புராணததிலும் பயிலுகிறது. திருவெதிர்கொள பாடிக்குக கிழக்கே உள்ள திருமணஞ்சேரியைக் கீழைத திருமணஞ்சேரி என்பா. அதனொடு தொடர்புடைய எதிர்கொளபாடியை மேலைத திருமணஞ்சேரி எனபது மரபு. திருவேளவிக்குடியிலுளள கல்வெட்டால, இவ வூர் 'திருவெருதுபாடி' எனறு திரிந்து வழஙகியமை அறியப்பெறும்.

இஙகுளள திருககோயில் சிவபெருமான் ஐராவ தேசுவரா எனறும் வெளளை யானை நாதர் எனறும், அம்மை 'மலாக்குழல மாது' எனறும் பெயர் பெறு வர். இக்கற் கோயிலைக் கட்டியவன் கீரனூர் கிழ வன் அரசுக் குடியான திருநீலகணடன் சேரமான தோழன ஆவன.

இது ஐராவதம் வழிபட்ட தலம். 'எபபொருளும தரும் ஈசா எதிர்கொள்பாடிப் பதி எயதி'த் திருஞான சம்பநதர் பதிகம் பாடினார் என்று சேக்கிழாா குறிப்பர். ஆனால, சம்பந்தர் பாடிய பதிகம் கிடைகக வில்லை. சுநதரர் இத்தலத்திறைவனை இந்தளப பணணில் பாடிய பதிகம், இவவூர்க்கு வரும் வழியில் பாடியது. ஊரிலுளள கோயிலுக்கு வநது இறைவன் முன பாடிய பதிகம் கிடைகக விலலை என்று சி.கே. சுப்பிரமணிய முதலியார் கருதுகிறார். தெ.சொ.

**திருவெம்பாவை:** தனி நூல் போல வழஙகும திருவெம்பாவை, எட்டாந் திருமுறையான திருவாச கத்தின் ஏழாம் பகுதி. திருவெம்பாவைப் பாடல் கள் 'எமபாவாய்' எனறு முடிவதால் இதனைத் திரு வெம்பாவை என்பர். இதனை கி.பி. 8-ஆம் நூற் றாணடின பிற்பகுதியில் வாழ்நத மாணிககவாசகர் திருவண்ணாமலையில் பாடினார். இதில இருபது பாடல்கள் உளளன. இதன் உளளுறைப் பொருள 'சக்தியை வியநதது'.

திருவெமபாவை உலகம நலம் பெற மழை வளம வேணடுவதுடன மகளிர் நலம் பெற நற்கணவனையும் பெறவேணடுகிறது. மார்கழி நீராடலை மேறகொள் ளும் கனனிப் பெணகள பேச்சாகத திருவெமபாவை விளஙகுகிறது. சஙக காலத்திய தைந நீராடலும் அம்பாவாடலுமே பிற்காலத்தில மார்கழி நீராட லாயின. மார்கழி நீராடல், பாவையர் நோனபாயச சமயச் சடஙகாயிறறு. பாணடிய நாட்டுச சஙகப் புலவர்கள 'அம்பாவாடல' எனறு மககள கொண டாடியதை இலககிய வழக்கு ஆககினர். பின அப் பகுதியில் வாழ்நத ஆணடாளும் மாணிக்கவாசகரும அதனைத தம் படைபபுத திறனால பாவை இலக் கியமாகப படைத்தனா. பாணடிய நாடடு மகளிா விளையாட்டும் நோனபும நீராடலும பாவை எனத் தனி இலககிய வகை பிறகக வழி வகுததன.

பாவைப் பாடலகள் நான்கடிககு மேற்பட்டு எட்டடியால இயனற கொசசக ஒரு போகு எனறோ வெணடளையான வநத இயறறரவிணைக் கொச் சகக் கலிபபா எனறோ வழஙகும். இவை 'ஏலோரெம பாவாய்' எனறு முடிகின்றன. ஏலும் ஒரும அசைச் சொற்கள; பாவை எனபதன விளி 'பாவாய்'.

ஐந்து வயது முதல் பனனிரணடு வயது நிறைந்த கன்னிப்பெண்கள அனைவரும் பாவை நோன்பு நோற்றற்குரியவர். திருவெம்பாவையின முறபகுதி யில, கனனிப் பெணகள ஒருவரையொருவர் துயில எழுப்புகின்றனா; சிவனடி மறவாச சீரியோன கணவ னாக வேணடிப பாடுகின்றனா; பின சிவபெருமான் பெருமையைப் பேசி நீராடுகின்றனர், மகளிர் நலல மழை பெய்யவேணடுமெனப் பரவுகின்றனர்; இறை வன் அடியார்கது அருளுந திறம் உரைககினறனா; அண்ணாமலையான அடிக் கமலம் சென்றிறைஞ்சும் பெருமை சொலலிக் கனனியர் நீராடுகினறனர்; சிவ னடியாரே எங்கணவராகுக என்று அவர்கள வேணடி னர். இறுதிப் பாடலில், 'இறைவன் தஙகளைக் காத் தருள்க' என்று கனனியர் போற்றுகினறனர். திரு வெம்பாவை, நோன்பு முறைகளை விவரிக்காது நீராடலையே பாடுகிறது.

பராசக்தி வழிவந்த பல சக்திகள ஒருங்கு கூடித் தம்முள ஒருவரை ஒருவா எழுப்பிக் கொணடு இறை வன் புகழையும் பராசக்தியின் புகழையும் பாடிக் கொணடு பொய்கைக்கு நீராடப் போனதாகத் திரு

வெம்பாவைககு உட்பொருள கூறுவர். ஆனால் 'சக்தியை வியந்தது' எனபதில் ஒருமையே உள்ளது. இஙகு நவசக்தியைக் குறிக்காது, பராசக்தியை வியந்து பாராட்டுதல் என்பதே உட்கருத்து.

ஆணவமலாகிய இருளில் வீழ்ந்து உறங்கும் உயிர் களை அத்துயில் விட்டு எழுப்பிப் பிறவிப் பிணி நீஙக இறைவன் கருணை வெள்ளத்தில் ஆழ்ந்து இன்புற வருக என்பது மற்றோர் உட்பொருள். இது திருப் பெருந்துறைப் புராணம் கூறுவது. சிவஞான போதத் துக்கு ஊற்றுக்கண், திருவெம்பாவை.

இனறு தமிழகக் கோயில்களில பாவைப் பாடல் களை, மார்கழித் திங்கள் முழுமையும் ஓதும் மர புண்டு. இது பிற்காலச் சோழர் காலத்தில் ஏற்பட்ட வழக்கம். அதனால திருவெம்பாவை கீழை நாடுகளுக் கும் பரவ்யது. திருவெம்பாவை, திருப்பாவை இரண டும் தாய்லாந்தில் (சயாம்) மன்னர் முடிசூட்டு விழா விலும் லே.சின.சா என்ற திருவிழாவிலும் தமிழ் மந்திரமாக ஓதப்பெறுகிறது. அதனை 'லோரி பாவாய்' என்பர். திருவெம்பாவை, மார்கழி மாதம மக்களால் பாடப்பெறுகிறது. எனவே, பல பதிப்பு கள் உரையுடன் வெளி வந்துள்ளன. தெ.சொ.

**திருவெருக்கத்தம்புலியூர்,** தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்று. இது நடு நாட்டிலுளள சைவத் திருத்தலம் என்று கொள்ளப்படும்; திருமுதுகுன றத்திற்குத் (விருத்தாசலம்) தெற்கே 10 கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது. இன்று இவ்வூரை இராசேந் திர பட்டணம் என்று வழங்குவர்.

திருக்கோயிலுக்குள் வெள்ளெருக்கஞ்செடி ஒன் றுள்ளது. அதுவே திருத்தலத்துக்குரிய மரம். அதனால இவ்வூர் எருக்கத்தம்புலியூர் என்று பெயர் பெறறது அறுபத்து மூன்று நாயன்மாருள ஒருவரான திருநீல கணட யாழ்ப்பாணர் பிறந்த ஊர் இநத ஊரேயாம்.

எருக்கத்தம்புலியூர்ச் சிவபெருமான் நீலகணடேசு வரர்; இறைவி நீலமலர்க் கண்ணம்மை. இததிருக் கோயிலுக்குத் தீர்த்தம், மணிமுத்தாறு. இது நாக ராசன பூசித்த சிறப்புடையதலமாகும்.

திரு எருக்கத்தம்புலியூர் இறைவனை வழிபட வினைமேவா என்று திருஞான சம்பநதர் ஒரு பதிகம் பாடியுள்ளார். நம்பியாண்டார் நம்பி 'தனை ஒப்ப ரும் எருக்கத்தமபுலியூர்' எனறு இவவூரைச் சிறப்பித துளளார். ந.சொ.

**திருவெவ்வுளுர்:** இது இன்று திருவளளூர் என வழங்குகிறது; செஙகற்பட்டு மாவட்டத்திலுளள ஒரு வட்டம். இவவூரில புகைவண்டி நிலையம உணடு. இது ஒரு வைணவத் தலம். திருமங்கையாழ்வாரும் திருமழிசையாழ்வாரும் இத்தலத்தின் சிறப்புக்களைப் பாடியுள்ளனா. இறைவன பெயர் வீரராகவப் பெரு மாள்; தாயார் பெயர்கனகவல்லி. இங்குளள தீர்த்தத் திற்கு அர்த்த பாபநாசம் எனபது பெயர். இங்குத் திருமால் அரவணையில் கிடநத கோலத்தில் உள ளார். சா.உ.

**திருவெள்ளக்குளம்:** இது ஒரு வைணவத் திருப்பதி; தஞ்சாவூர் மாவட்டத்தில் சீர்காழிக்குத தென்கிழக்கே 6½ கி.மீ. தொலைவில் உளளது இஙகுக் கோயில கொண்டுள்ள இறைவன கண்ணன் எனவும் நாராயணன் எனவும் குறிக்கபபடுகினறார்.பூவார் திரு மகள் என்பது தாயாரின் பெயர். இங்குளள தீர்த்த மும் வெள்ளக்குளம் எனப்படும் திருமங்கையாழ்வாா திருநாங்கூரையும் திருவெளளக் குளததையும இணைத்தே பாடியுள்ளார். 'நல்லார் பலர் வேதியர் மன்னிய நாஙகூர்ச் செல்வா, திரு வெளளக்குளத்து உறைவானே' என வரும பாசுர அடிகள மனங்கொள ளத் தகும். சா.உ.

**திருவெள்ளறை** தமிழ்நாட்டில் திருச்சிமாவட் டம், இலால்குடி வட்டம், கரியமாணிக்கம் பகுதியில உள்ள பாடல்பெற்ற திருத்தலம. திருச்சி-துறையூர் சாலையில் 19 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள இத் தலத்தின்கண வரலாறறுப் புகழ்பெற்ற சுவத்திக வடிவக் கிணறு அமைந்துள்ளது. திருவெள்ளறை வட மொழியில் 'சுவேதகிரி' என்று சொல்லப்படுகிறது.

முத்தரையக குறுநில வேந்தரின் ஆட்சி மையங களுள் ஒன்றாகத திகழ்நத திருவெளளறை பல்லவர், பிற்காலச் சோழர், பிற்காலப் பாணடியர், போசளர் (கி.பி. 12-13ஆம் நூற்றாணடு), விசயநகரத்தார், மதுரை நாயக்கர் முதலானோரின் ஆதிக்கத்திற்கும் உட்பட்டிருநதது என்பதனை இங்குக காணப்படும் அவர்கள கலவெட்டுகளால் அறியலாம. இஙகு ஓலைச் சுவடிகள சிலவும் கிடைத்துளளன.

வைணவ வரலாற்றில திருவெளளறை தனித்த தோர இடத்தைப் பெறறுளளது. நாதமுனிகளின சீடரான உய்யக்கொண்டார் பிறநததும், விசிட்டாத் துவதத்தைத் தோற்றுவித்தவரும, கி.பி.11-ஆம் நூற் றாண்டில் தமிழ்நாட்டில் வைணவ சமயததை நிறு வியவருமான இராமாநுசர் சிலகாலம (2 ஆணடுகள) வாழ்நது சமயப் பணியாற்றியதும் திருவெளள றையிலதான். திருமஙகையாழ்வாா வெள்ளறைப் பெருமானைப பாடி நினற இடமும் இதுவே. ஆழவார் களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட108 திருமால திருப்பதிகளுள் ஒன்றான திருவெளளறை, இராமா

நுசரின் சிரீபாடியததிறகுச் சிறப்பான உரை எழுதிய விட்டுணு சித்தாரியர் பிறபபிடமும் ஆகும. தமிழ கததின் மிகத் தொன்மைவாய்நத கிருட்டிணன உருககுமணிக கோயிலும் இங்குததான் உள்ளது. பெரியாழவாரின் பாடல்பெற்ற சிறப்பும் இத்தலத் திற்கு உணடு,

**கோயில்கள்:** திருவெளளறையில் முத்தரையர் காலத்ததாகக் கருதப்படும குடைவரைக்கோயில் ஒன றும் (திருமால்கோயில), புணடரீகாட்சப் பெருமாள கோயில, செங்கமலவல்லி நாச்சியார்கோயில், முத்த ரையர் கலைப்பாணியில் அமைந்த வடசம்புநாதர் கோயில் ஆகியனவும் கனனிமார்கோயில்,செல்லாண்டி யம்மன் கோயில, அங்காளம்மன் கோயில் முதலான கிராம தெய்வங்களுக்கான கோயில்களும் காணப்படு கின்றன. புணடரீகாட்சர் கோயிலில நாழிகேட்டான் வாசல, ஆரியப்பட்டாள் வாசல், சிங்கர் சந்நிதி, சக்கரத்தாழவார் சந்நிதி, மணவாள முனிகள் சந்நிதி ஆகியனவும் காணப்படுகின்றன.

**மாற்பிடுகுப் பெருங்கிணறு:** ஆலம்பாக்கதது விசயநல்லூழான தமபி கமபன அரையன எனனும முத்தரையன எடுப்பிதத மாறபிடுகுப் பெருங்கிணறு. (சுவசுதிக உருவக குளம்) திருவெளளறைக்குத் தனிப் பெருமையைத் தேடித் தந்துளளது. வியத்தகு அமைப்புக் கொண்ட இக்கிணற்றில் தநதிவர்மனின உருவமும், கம்பன் அரையன் உருவமும (பலரால் கருதப்படும்) வடிக்கப்பட்டுளளன. இககிணறறில் பல்லவர் கல்வெட்டும் உளளது. திருவெள்ளறைச சாக்கைக் கூத்து தமிழகத்தில புகழ்பெற்றுள்ளது. திருவெள்ளறைக்கல், திருவெளளறைககாணம், திரு வெள்ளறைக் கோல் முதலான நிறுத்தல், முகத்தல், நீட்டல் அளவைகள் முன்பு தமிழகததின பல பகுதி களில் வழககில் இருந்தமை திருவெள்ளறையின சிறப்பினை உணாத்தும். திருவெள்ளறையின் மக்கள் தொகை ஏறத்தாழ 3,500 ஆகும். ம.இ.

**திருவெள்ளியங்குடி:** இது தஞசை மாவட்டத் தில் திருவிடைமருதூருக்கு வடக்கே 8கி.மீ. தொலை வில உள்ளது. சோழநாட்டு வைணவத் திருப்பதி களுள் இதுவும் ஒன்றாகும். இஙகுள்ள திருமாலின பெயர் கோலவில்லி இராமன. மரகதவல்லி நாச்சி யார் எனபது தாயாரின் பெயர். பாம்பணையில் கிடந்த திருக்கோலம். இத்தலத்தைத் திருமஙகை யாழ்வார் மஙகளாசாசனம் செய்துள்ளார். ‘சேற்றி டைக் கயல்கள உகள் திகழ் வயல்சூழ் திருவெள்ளி யஙகுடியதுவே’ என்ற பாசுரம் இத்தலத்தின் வளத் தினைப் புகழ்ந்துள்ளது. சா.உ.

**திருவெறும்பியூர்:** இது, காவிரியாற்றின் தென்கரையிலுள்ள சோழநாட்டுச் சைவத் திருத்தலங் களுள் ஒனறு. இவ்வூர்க் கோயிலிலுள்ள கல்வெட்டுகளி லும் கி.பி.7–ஆம நூற்றாணடில் வாழ்நத திருநாவுக் கரசர்பாடிய திருததாண்டகததிலும திருவெறுமபியூர் என்ற ஊர்ப்பெயர் காணப்படுகிறது. இவற்றால இப் பெயரின் பழமை அறியபபெறும். தேவர்கள எறும்பு உருவம் எடுத்து இறைவனை வழிபட்டதனால ஊருக்கு இப்பெயர் வநதது எனபது புராண வரலாறு. ஆனால், இவவூரை இனறு ‘திருவெறுமபூர்’ என்று கூறுகினறனர்.

திருவெறும்பியூரிலுள்ள ‘மணிகூடம’ எனனும குனறின்மேல் சிவனகோயில அமைநதிருக்கிறது. இத் தலத்தில் திருமாலும் பிரமனும் நைமிச முனிவா களும் கரதூடணர்களும் வழிபட்டுப பேறுபெற்றனர்.

திருவெறும்பியூர் மலைமீதுளள சிவபெருமான எறும்பீசர் என்றும், மாணிக்க வணணா என்றும பெயர் பெறுவர். இக்கோயிலிலுளள பிற்காலச சோழர் கல்வெட்டுகள திருவெறுமபியூா ஆழவாா எனறும், திருமலை மேல மகாதேவர் என்றும இறை வனைச் சுட்டுகினறன. இறைவி பெயா நறுஙகுழல நாயகி. மாணிக்கவணணரைத திருநாவுக்கரசர் வழி பட்டு இரணடு பதிகஙகள பாடியுளளார். அவை ஐந் தாம், ஆறாம் திருமுறைகளில் உளளன ஆறாநதிரு முறைத் திருப்பதிகம ‘தெனனெறும்பியூர் மலைமேல் மாணிக்கத்தைச் செழுஞசுடரைச சென்றடையப் பெற்றேன் நானே’ என்ற மதடத்தைப பெறறுளளது. தெ.சொ.

**திருவேகம்பம்:** காஞ்சிபுரம செஙகற்பட்டு மாவட்டத்தின தலைநகராகும். இநநகர் சென்னை மாநகருக்குத் தெனமேற்கில் 80 கி.மீ. தொலைவில் உள்ளது. இங்கு 108 சிவன் கோயிலகளும் 18 வைண வக் கோயில்களும் உள்ளன. சிவன் கோயில்கள அமைந்துள்ள நகர்ப் பகுதி பெரிய காஞ்சிபுரம் அல் லது, சிவகாஞ்சி எனப்படும. வைணவக கோயில்கள உள்ள பகுதி சினன காஞசிபுரம் அலலது அத்திகிரி எனப்படும்.

திருவேகம்பம் என்பது சைவக்கோயிலகளுள் முதன்மையானது இது திருககச்சியேகமபம எனவும் கூறப்பெறும். ஒற்றை மாமரம் எனனும் பொருள் கொணட ‘ஏகாம்பரம்’ என்னும் வடசொல்லின் திரிந்த வடிவமே ‘ஏகம்பம்’ எனபது. இக்கோயிலில சிவன ஒற்றை மாமர நிழலில் இலிஙக வடிவில் எழுந்தருளியுள்ளார். இறைவன ஏகாம்பர நாதர் அலலது ஏகம்பர் எனவும், இறைவி ஏலவார்குழலி

அல்லது காமாட்சி எனவும் வழங்கப்பெறுவர். சைவ ஆகம முறைப்படி சிவனை வழிபட விரும்பிய உமா தேவி காஞ்சிபுரம் வந்து, கம்பையாற்றங்கரையில் மணணால் இலிங்கம் செய்து வழிபட்டாள்; ஆறு பெருக்கெடுத்து வரவே, அஞ்சிய உமாதேவி இலிங் கத்தைத் தழுவிக் கொண்டாள்; இலிங்கம் குழை வுற்றது. அதனால் இறைவனுக்குத் தழுவக் குழைந்த நாதர் என்னும் பெயர் உணடாயிற்று. இறைவனுக்கு நிழல்தரும் மாமரம் ஞானத்தின் அடையாளமாகும். ஞானத்தைப் பெற வழிபாடு செய்த இறைவி, யோக நெறி கூறும் மூலாதாரமாகக் கருதப்பெறுகின்றாள். மூலாதாரம் கணகளுக்கு ஒளி ஊட்டும் ஆற்றலு டைமை பற்றி, அவள காமாட்சி என வழஙகப் பெறுகின்றாள்.

இது வீடுபேறு வழஙகும் ஏழு சைவத் தலங் களுள் ஒனறு; பஞ்ச பூதத் தலங்களுள் நிலத்தின தத்துவம் பொருந்தியது. இக்கோயிலில் கம்பை நதி, சிவகங்கை என்னும் இரு தீர்த்தங்கள் உள்ளன. இங்கு ஏகம்பத்தோடு கச்சி மேற்றளி, கசசி ஓணகாந்தன் தளி, கச்சிநெறிக் காரைக்காடு, கச்சியநேகதஙகா வதம் என்னும் தேவாரப்பாடப்பெற்ற கோயில்களும் கச்சிமயானம் என்னும் வைப்புத் தலக் கோயிலும் உள்ளன. ஏகம்பத்தினுள் கொடிமரத்தினமுன் கச்சி மயானம் உளது. இக்கோயில வெளிமதிலில் புத்தர் வீடுபேறு அடைதல் முதலிய காட்சிகள் சிலைகளாகச் செதுக்கப்பெற்றுள்ளன. அச்சிலைகளின் சில பகுதி களில் மகேந்திரன் காலத்து எழுத்துகளும் வேறுசில பகுதிகளில் விசயநகரச் சின்னங்களான வராகமும் கட்கமும் காணப்படுகின்றன. முன்மண்டபத்தில கரி காலன் சிலை உளது, சுவாமி சன்னிதி கிழக்கிலும் கோபுர வாயில் தெற்கிலும் உள்ளன. கோயிற் சுவர் களில் காகதீய கணபதி, உத்தம சோழன், இராச ராசன், இராசாதிராசன், குலோத்துங்கன, இரண் டாம் இராசராசன் முதலிய மன்னர்கள் காலத்துக் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. அவற்றில் கோயிற் பூசை முறை, திருவிளக்கு, அமுதுபடைத் தல் முதலியவற்றின் விளக்கங்களும அவை நிகழ்த்துவ தற்காக மனனர்கள் வழஙகிய தானங்கள பற்றிய செய்திகளும் உள்ளன.

ஐயடிகள் காடவர்கோன், திருக்குறிப்புத் தொணடர், சாக்கிய நாயனார் போன்றோர் இக் கோயிலை வழிபட்டு நறகதி பெற்றனர். சுந்தரர் இதனை வழிபட்டதால் தம் இடககண பார்வை கிடைக்கப்பெற்றார். திருஞானசமபந்தர், திருநாவுக் கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் இக்கோயில் இறை வனைப் புகழ்ந்து தேவாரம் பாடியுள்ளனர். பட்டி னத்தார் திருவேகம்ப முடையார் திருவந்தாதி பாடி இக்கோயிலைச சிறப்பித்துள்ளார். இரட்டைப் புல வாகள் ஏகாம்பர நாதர் உலா பாடியுள்ளனா. காஞ் சிப் புராணம், கச்சி ஆனந்தருத்திரேசர்பதிகம், திரு வேகம்பர் ஆனந்தக களிப்பு, திருவேகம்பர் அந்தாதி ஆகிய சிவஞான முனிவரின் நூல்களும் காஞ்சிப்புரா ணம், கசசி ஆனந்தருததிரேசர் வண்டுவிடுதூது ஆகிய கச்சியப்ப முனிவரின் நூல்களும் திருவேகம்பததின் பெருமையைப் பாடும் நூல்களாகும். பெ.சு.

**திருவேங்கடநாதர், மாதை:** திருவேஙகட நாதர் சோழ நாட்டில் காவிரி நதிக்கு அருகிலுள்ள மாதை யென்ற மாததூரிலே வாழ்ந்த ஓர் இசுமார்த் தப் பிராமண குடும்பத்தில் பிறநதவர். இவரது தந்தையார் பெயர் பெருமாளையர். பெருமாளையர் பொறை வாய்மை, நல்லறிவு முதலிய சீரிய குணங கள் வாயநதவர். திருவேங்கடநாதரும் தந்தை யாரைப் போல் உயாந்த குணங்களைப் பெற்றிருந தார் எனபதனை இலக்கண விளக்கச் சிறப்புப பாயிரம், மெய்ஞ்ஞான விளக்கப் பாயிரம முதலிய வற்றால் அறிய முடிகிறது.

மாதை எனபது திருவாமாத்தூர் எனவும், சிலர் ஆமாத்தூர் எனவும, மாயூரத்தருகிலுள்ள மாநதை எனவும கூறுவர்.

இவர்தம் கல்வி, கேள்வி முதலிய நற்குணஙகளை அறிந்த நாயக்க மன்னர்கள் இவரைத் தம காரிய கருத்தராக்கி ஒரு மண்டலத்தை ஆட்சிபுரியச் செய்தனர். இது, 'திருவேஙகடநாத மணடலிகன' என்று பணவிடு தூதும், 'திருவேஙகட மாயன்-வளர் செங்கோல் நடத்துந் திருநாட்டில' என்று சாத்தூா நொண்டி நாடகமும் கூறுவதனால் விளஙகும். இவர் திருநெல்வேலி மாவட்டததிலுள்ள கயததாற்றுச் சீமையைப் பரிபாலிதது வநதார். அச்சீமையிலே மந்தித் தோப்பு என்றொரு கிராமமுண்டு. அதனில் சங்கர பாரதித் தமபிரான் என்று ஒரு பெரியார் இருந்தார். அவருடைய மடத்தின செலவுக்காகச சகம் 1466-ல் (கி.பி. 1544)விசுவநாத நாயக்கராட்சி யில் காரிய கருததராயிருநத திருவேங்கட நாயக்கர், விசுவநாத நாயக்கர் ஆணையினபடி சில கிராமங் களை மானியமாக விட்டிருநதார். ஆயினும, இநத மானியக் கிராமத்துக்காக 20 பொன் பொறுப்புக் கட்டும்படி ஏற்பாடிருந்தது. அதனைத் திருவேங்கட நாதர் நீக்கினதாக ஒரு கல்வெட்டுக்காணப்படுகிறது.

பிற்காலத்தில(கி.பி.17. நூற்றாண்டளவில்)வாழ்ந்த வர்களுள் பலர் அரசர்களாயிராவிடினும மாபெருந் தலைவர்களாக இருந்து அரசாட்சியோடு கல்வியிலும் மேம்பாடுடையவராக இருந்திருக்கினறனர். அவா

களுளளே சிறந்தோராகமாதைத்திருவேங்கடநாதரை யும் கூறல் தகும்.

திருவேங்கடநாதர் வைத்தியநாத நாவலரை ஆதரித்ததோடு அவரையே தம மககளுக்குத் தமிழ் கற்பிக்கும்படி செய்திருகக வேணடுமெனபது தெரி கிறது. அவ்வாறு, வைததியநாத தேசிகர் ஆசிரியராக விருந்தமையே இலக்கண விளககம் மூலமும உரையு மாக இயறற இடநதந்ததாகும் எனறு வைத்தியநாத தேசிகா புதல்வர் தம புரவலரைப் பெரிதும போறறு வார்.

இவர் அரசாட்சியிலே தம் காலத்தைக் கழிதது வநதாலும் ஈசனிணையடி மறவா மாணபினராயிருந துள்ளார் இச்செய்தியை மெய்ஞ்ஞான விளக்கச் செய்யுடகள நனகு விளககும இவருக்கு ஞானோ பதேசஞ் செயத குரவர் இராகவானந்தர் எனப்படு வா. மேலும், அவர் முதலில வடமொழியிலேயே இந்நூலைச் செய்துளளாரென்று தமிழ் நூற்பாயிரம கூறும். ஞானசோபனம என்றொரு நூலை இவர் இயற்றினாரெனவும, அதைப் பிறரொருவர் இயற்றி இவா பெயரால் வெளியிட்டிருக்கலாம் எனறும் கூறு கின்றனர். இப்பெரியார் புலவர் பலரை ஆதரித்தார். அந்தகக் கவி வீரராகவ முதலியாரை இவர் ஆத ரித்தார். அவர் இப்புரவலர் மீது கயத்தாற்று அரசா உலா ஒனறு பாடியுளளாா நெல்லையப்பராலயத திற்கு அரஙக கிருட்டிண முத்துவீரப்ப நாயககர் திரு வேங்கட நாதையர் பூதானஞ் செய்ததைச் செப்பே டொனறு குறிக்கிறது எம் சீ.

**திருவேங்கட பாரதி**: தெனகடமடை நகரின ராகிய திருவேங்கட பாரதி அந்தணர் மரபில் தோனறியவர். இவா ஒரு துறவி. இவரைப் பரமா னநத பாரதியென்றும் குறிபபா. இவர் காலம 18 –ஆம் நூற்றாணடின நடுபபகுதியாக இருக்கலாம எனறும்,17–ஆம் நூற்றாணடின் இறுதியெனறும் கூறு கினறனர். இவர் பாரதி தீபம எனற நிகணடு நூலை கட்டளைக கலித்துறையால பாடியுளளார். எம.சீ.

**திருவேங்களநாதர் (தாள்ளபாக) (கி.பி. 1498–1561)**: தமிழக வைணவம் ஆந்திர நாட்டில பரவுதற்குத் துணை நின்றவர்கள் தாள்ளபாக மரபி னர்கள. ஆநதிர நாட்டில் கடப்பை மாவட்டத்தில் உள்ள தாளளபாக என்னும் கிராமத்தில பிறநத அனனமாச்சாரியார் கருநாடக சங்கீதத்தின பிதாம கர் ஆவார். இவர் அகோபிலம் ஆதிவணசடகோப ரின சீடா. புரந்தர தாசரின் சமகாலத்தினர். இவர் ஆயிரக்கணக்கான அகத்துறையிலும் ஆனமீகத துறை யிலும் கீர்த்தனைகள் இயற்றித் திருவேங்கடவனுக்குப் படைத்தார், திருப்பதியிலேயே வாழ்ந்தார் இவர் குமாரரும் மிகப் பெரும கவிஞரே.பெத்த திருமலாச சாரியர் என்னும் இவரும் கீர்தததனைகள, காவியங்கள இயற்றிய தத்துவ ஞானியாவார். திருமலாசசாரி யரின ஐந்து புதலவர்களும கவிஞர்களே. நானகாம புதல்வரே சின்னணணா எனறழைககபபட்ட திருவேங களநாதராவார். இவா கி பி. 1490-இல பிறநதவர். கவிஞர் மரபில உதித்த இவர் பல மொழிகளிலும புலமை பெறறவர்; தமிழிலும பெரும்புலமை எயதி யவா, யோக நெறியின இரகசியங்களை உணர்ந்தவ ராகவும் சிறந்த வைணவப பற்றாளராகவும் திகழந் தார்.

இவர், சதாசிவராயரிடம் 'கொரிசவோலு' என னும கிராமத்தை கி பி. 1546–இல மானியமாகப பெறற மாணபுடையவா. இவரே திருப்பதி வேஙக டேசுவரருக்கு கி.பி. 1546–இல கொணட வீடு பகுதி யில செந்தலூரு, மல்லவரம் எனும் கிராமங்களை அளித்துள்ளார்; இந்த அறக்கொடை மூலம் பல விழாக்கள நடத்த ஏறபாடு செய்திருக்கிறாா நெய யும் குலததொழிலுடைய சாலியாகட்கு உய்யும நெறியுரைககும உத்தம குருவாகத் திகழ்நதிருநதவர் திருவேங்கள நாதர். அககுலத்தினர் ஆணடு தோறும பததாயிரம வராகன பாத காணிக்கை செலுத்தி வந்தனா என ஒரு செபபுப பட்டய வரலாறு கூறுகி றது திருவேங்கள நாதர் (சினனணணா) இயறறிய நூலகள நானகு. அவை 'துவிபத' எனும ஈரடிச செய்யுள யாப்பில ஆசிரியபபா வடிவில அமைந்துள ளன.

'அனனமாச் சாரிய சரிதம' எனனும் நூலில தம பாட்டனார் அன்னமாசசாரியார் வரலாறறைக கூறி யிருக்கிறார். அவ்வரலாறு புனைந்துரைகளின்றி வர லாற்று நோககில் சமகாலத்தவரால் எழுதப்பட்டி ருப்பது தனிச் சிறபபுடையதாகும். அட்டமகிசி கல யாணமு–என்னும் காப்பியத்தில கண்ணபெருமான எட்டு மனைவியரை மணந்த கதைகளைப் பாகவதத தைத் தழுவி அமைத்துள்ளார். உசாபரிணயம்-என னும் காவியத்தில கணணனின் மகன் அனிருத்தன்– உசயினை மணநத கதை கூறப்பட்டுளளது பரம யோகி விலாசமு–எனனும நூல் இவரது சிறந்த படைப்பாகும். இந்நூலில் தமிழக வைணவ ஆழ்வாா கள, ஆசாரியர்களின் வரலாறுகளைக் காப்பிய நடை யில் படைத்தளித்துளளார். தமிழில் மணிப் பிரவாள நடையில அமைந்துள்ள ஆறாயிரப்படி குருபரம்பரா பிரபாவம் என்னும் பின்பழகிய பெருமாள் சீயரின நூலைப் பினபற்றியே இவ்வரலாறுகள அமைந்துள ளன. மேலும், திவவியப பிரபநதப் பாடல்களையும

கறறுப் பலகருததுகள் தெலுங்காககம் செய்திருப்ப தைக் காணலாம். இநநூல் தமிழ், தெலுங்கு உறவு கட்கு ஓர் எடுத்துக்காட்டாகவும் அமைநதுளளது. பனனிரண்டுஆழவார்கள, நாதமுனிகள்,இராமானுசா நஞ்சீயர் முதலிய ஆசாரியர்கள் வரலாறுகளைச்சுவை மிகுந்த அழகிய தெலுங்குச் சொற்களைப் பயன் படுத்தி இனிய காப்பிமாகச் செய்திருக்கிறார். தாள ளபாக மரபினர் இயலதுறைககும் பக்திஇயக்கத்துக்கு மட்டுமேயன்றி இசைத் துறைக்கும்அளப்பரிய சேவை செய்த முன்னோடிகளாவார்கள. திருவேங்கள நாத ரும் இசைப்பாடல்கள் பல புனைநதவராகவே தெரி கிறது. எனினும இவர்தம் இசைப்பாடல்கள இப் போது கிடைக்கவில்லை.

திருவேங்களநாதர் தம் மரபுககேற்ப மிகச்சிறந்த கவிஞராகவும் வைணவ பக்தராகவும் இசை மேதை யாகவும அறிஞராகவும் திகழ்ந்து கி.பி. 1561-இல் காலமானார். மு.க.ஜ

**திருவேட்களம்:** இவ்வூர் தேவாரப் பாடல பெற்ற சோழநாட்டுச் சைவத்திருத்தலங்களுள் ஒன்று. இப்போது இது அண்ணாமலைநகர் என வழங்கப் பெறுகின்றது. தென்னார்க்காடு மாவட்டத்தைச் சார்ந்த இவ்வூர், சிதம்பரம் நகருக்குக் கிழக்கில் 3 கி.மீ. தொலைவில் உள்ளது. கௌரவர்களை வெல லும் பொருட்டுப் பாசுபத அம்பு பெறுதற்காகச் சிவ பிரானை நோக்கித் தவம் இருந்த அருச்சுனனோடு சிவபிரான் வேடன் உருவில தோன்றிப் போரிட்டு, பின் தம்மை வெளிப்படுத்திப் பாசுபதம் அருளிய இதிகாச நிகழ்ச்சியோடு இவ்வூர் தொடர்புபடுததிப் பேசப்படுகின்றது. அருச்சுனனுக்குச் சிவபிரான் பாசு பதம் வழங்கிய நிகழ்ச்சி ஒவ்வோர் ஆண்டும் வைகாசி விசாக நாளனறு திருவிழாவாக இவவூர்க் கோயிலில கொணடாடப்படுகின்றது. இறைவன் பெயர் பாசுப தேசுவரர் ; இறைவி பெயர் நல்லநாயகி. இவ்வூர்க் கோயிலும் நெல்வாயில் (சிவபுரி) கோயிலும் ஒரே அமைப்பும் அளவும் உடையன. திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் இக்கோயில் இறைவனைப் போற் றிப் பாடிய பாடலகள தேவாரத்தில உளளன. இவ் வூரில் புகழ்மிக்க அணணாமலைப் பல்கலைக்கழகம் இயஙகி வருகினறது. பெ.சு.

**திருவேட்டக்குடி.** இது தேவாரப் பாடல் பெற்ற சோழநாட்டுச் சைவத் திருத்தலஙகளுள ஒனறு. இவவூர் காரைககாலுக்கு வடகிழக்கில் 9 கி.மீ. தொலைவில் உளளது. பாசுபத அம்பு பெறும் பொருட்டுத் தவம் இருந்த அருச்சுனனுக்குச் சிவ பிரான் வேடன் உருவில வெளிப்பட்டு அருளிய இட மாகையால், இவ்வூர் 'வேட்டக்குடி' என வழங்கப் பெறுகின்றது. இங்கு எழுந்தருளியிருக்கும் இறைவன பெயர் திருமேனியழகன, இறைவி பெயர் சாந்த நாயகி. திருஞான சம்பந்தா இவ்வூர் இறைவனைப் போற்றிப் பாடிய பாடலகள் தேவாரததில் இடம பெற்றுளளன. பெ.சு.

**திருவேடகம்.** இது தேவாரப் பாடலபெற்ற பாண்டி நாட்டுச் சைவத் தலங்களுள ஒனறு. மதுரை மாநகருக்கு வடமேற்கில உளள சோழவந்தான புகைவண்டி நிலையததிலிருந்து 5 கி மீ. தொலைவில் இவ்வூர் உளளது. சைவ அறிஞர் திருஞான சம்பந தர் சமண சமயத்தவாகளைப் பாணடி நாட்டிலிருந்து விரட்டும் நோக்கில் அவர்களுடன அனல்வாதம், புனல்வாதம் போனற போட்டிகளில ஈடுபட்டாா என இலக்கியங்கள கூறுகின்றன. புனலவாதப் போட்டியினபோது சமணாகள பாடல்கள எழுதி விட்ட ஏடுகள் வைகையில் அடித்துசசெலலப்பட்டன. ஆனால், சம்பந்தர் எழுதிவிட்ட ஏடு வைகையில நீரை எதிர்த்துச் செனறு, ஓரிடத்தில் தங்கிநின்றது. ஏடு தங்கி நின்ற இடமே ஏடகம என வழங்கப்பெறு கின்றது. அவ்விடததில எழுநதருளியுளள இறைவன பெயர் ஏடகநாதேசுவரர்; இறைவி பெயர் ஏலவார் குழலி. கோயிலுக்குப் பின்புறம் வைகை ஆறு உள ளது. சம்பந்தர் புனலவாதத்தினபோது பாடிய 'வன னியும் மத்தமும்' என்னும பதிகம தேவாரததில உள ளது. இவ்வூா இறைவனைத் திருமால், கருடன போன்ற கடவுளர்களும் வழிபட்டு நற்கதி பெற்றுள ளனர். இவவூர்ப் பெருமை கூறும் வகையில இயறறப் பெற்ற தலபுராணம் ஒனறு உள்ளது. திரிபுவனச சக்கரவர்த்தி சுந்தர பாண்டியன், சடாவர்மன,பராக் கிரம பாண்டியன், சடாவாமன் விக்கிரம பாணடியன, சீவல்லபதேவன முதலிய பாணடிய மன்னர் காலக் கல்வெட்டுகளும், கிருட்டிண தேவராயர் என்னும் விசயநகர மனனன காலக் கல்வெட்டுகளும் இவ்வூர்க் கோயிலில் காணப்படுகின்றன. இராம கிருட்டிண தபோவனத்தார் நடத்திவரும் ஆசிரமும், மேனிலைப் பளளியும் விவேகானந்தர் கல்லூரியும் இவ்வூரில் உள ளன. பெ.சு.

**திருவேதி குடி:** சோழநாட்டிலுள்ள தேவாரப் பாடல்பெற்ற சிவத்தலங்களுள இது பதினானகாம் தலமாகும். இது திருவையாற்றிலிருந்து தொடஙகும் ஏழுர் (சப்தத் தலங்)களில் நான்காவது. இது,தஞ்சை யிலிருநது திருவையாறு செல்லும் பெருவழியில் கண்டி யூரினின்றும் கிழக்கில் 2½ கி.மீ. தொலைவிலும், குடமுருட்டியாற்றுக்கும் திருச்சோற்றுத் துறைக்கும் தெற்கிலும உளளது.

இறைவன் பெயர் வேதபுரீசுவரர், (இவர், வாழை மடுவில் தோன்றியதால) வாழைமடுநாதா

இறைவி திருநாமம்: மங்கையர்க்கரசியார். தீர்த்தம்· சுந்தர தீர்த்தம.இத்தலத்திலுள்ள பிளளையாருக்கும் வேதப்பிளளையார் எனற பெயர் வழஙகுகின்றது. பிரமன, வேதம் பூசிதத தலமாதலின 'வேதிகுடி' எனறாயிறறு. மறறும சூரியன், குபேரன, திருமால சைதன்ய மாமுனி முதலானோர் பூசிதத தலம். ஆணடுதோறும் பங்குனித திஙகள 13–ஆம் நாள முதல் 15–ஆம நாள முடிய மூன்று நாட்கள, சூரிய ஒளிககதிர்கள் இவவிறைவன மீது படுவதால இந்நாட் களில் இங்குச் சூரிய பூசை நிகழும இத்தலத்து இறை வனைப் போற்றித் திருஞான சமபநத மூர்த்தி நாய னார் 'நீறுவரி யாடரவொடாமை' என்பது முதலாகத் தொடஙகும் பாடலகளைத் திருவாய மலர்ந்தருளியுள ளாா. இத்தலம் வளம நிறைநதது எனபதனை, 'தாறுவிரி பூகமலி வாழைவிரை நாறவிணை வாளை மடுவில வேறுபிரி யாதுவிளை யாடவள மாருமவயல வேதிகுடியே!' எனற வரிகளால குறிபபிடுகினறார். திருநாவுககரசு நாயனாா, 'கையது காலெரி நாகங கனலவிடு சூலமது' எனத தொடஙகும் தேவாரத தினைப பாடியுளளாா.

**கல்வெட்டுகள்**· கோஇராசகேசரி பனமாதும், கோப்பரகேசரி பன்மாதும ஆகிய காலங்களில் வெட்டப்பட்ட கலவெட்டுகளில நநதாவிளககுககு நிவநதஙகள அளித்த செயதியும், திருபபளளித் தாமம பறிததுத தொடுக்க இருவா, திரு வலகிட்டு மெழுககிடுவார் நால்வர், எக்காளம், ஊதுவார் நாலவர், நநதவனக் குடிகள மூவர், ஆகி யோர் நியமிக்கப்பட்ட செய்தியும காணக கிடைக் கின்றன. மேலும், ஒரு சிதைநத கல்வெட்டில இக கோயிலுக்கு இரணடாயிரத்தைந்நூறு குழி நிலத்தை வழஙகியுள்ளமை, கோராசகேசரி பன்மரின இருபத் தைநதாம் ஆட்சியாண்டினதாகத் தெரிகினறது.

மூனறாம திருமுறையில இடம்பெற்றுள்ள, இத் தலப் பதிகத்தின் ஏழாம் பாடலினை நாள்தோறும 3 முறை 48 நாள்கள் உள்ளனபோடு ஓதி இறைவனை வழிபட்டு வந்தால், திருமணம் ஆகாமல் காலம் கடநது வரும கனனியாக்கும், காளையாக்கும், உறுதி யாகத் திருமணமாகும் எனற நம்பிக்கை இருந்து வரு கினறது. வி.சொ.

**திருவேரகம்**: காண்க: சுவாமிமலை.

**திருவேள்விக்குடி**·இதுதேவாரபபாடல்பெறற தலங்களுள ஒன்று இததலம மாயவரமகும்பகோணம இருப்புப் பாதையின இடையே அமைந்த குற்றாலம் இருப்புப் பதை நிலையத்திலிருந்து வடகிழக்கில இரணடு கல் தொலைவில் அமைநதுள்ளது. இதனைக் காவிரியின வடகரைத தலங்களுள் இருபத்து மூன் றாவதாக எணணிபபோற்றுவர்.

உத்தம சோழனின் தாய் செம்பியன மாதேவி யால இக்கோயில் கட்டப்பட்டது. இறைவன் பெயர் கல்யாண சுந்தரர்; இறைவியின் பெயர் பரிமள சுகந்த நாயகி திருக்கேள்விக்குடி ஆழ்வார், மங்கல நக்கர் சிரீகோயில தேவர், திருவேளவிககுடி உடையார் என்று இறைவனின பெயர்களைக் கல்வெட்டுகள சுட்டுகின்றன. மேலும அவை பெரிய நாச்சியார், நாறுசாந்து இளமுலைநாயகி எனறு இறைவியின் பெயரைச் சுட்டுகின்றன சிவபெருமானின திருககல யாண வேளவிநடைபெற்றதால் இத்தலம திருவேள விக்குடி எனனும் பெயர் பெற்றது எனக கூறப்படு கிறது

திருஞான சம்பநதர் திருவேளவிககுடியைப் பாடும் போது திருத்துருத்தியையும இணைததே பதிகம பாடி யுள்ளாா. காலைப் பொழுதில இறைவன வேளவிக குடியிலும், இரவில் திருததுருத்தியிலும் உளளார் என்னும் மரபு வழிச் செயதியை உணர்ந்த திருஞான சமபந்தர் இரு தலத்தையும் இணைததுப் பாடியது பொருததமானதாகும.

ஓர் அரசகுமாரனுக்கு மணம்புரியும்பொருட்டு உறுதி செயயபபட்ட பெணணின பெறறோர் இறந்து விட, அதனால அரச குமாரனின உறவினாகள அப பெணணைத திருமணம் செயதுகொள்ளச சமமதிக்க விலலை உறுதி செய்யபபட்ட பெணணையே திரு மணம் செயதுகொள்ள விருபபம் கொணட அரச குமாரன் சிவனை எணணித், தவம்புரிநதான. அரச



திருவேள்விக்குடி நந்தி நாகரி கல்வெட்டு
(விசயநகரக்காலம்)

குமாரனின் உள்ளத்தை உணர்ந்த இறைவன் பூத கணத்தை ஏவி அப்பெண்ணைத தூக்கிவரச செய்து, தானே திருமண கேளவி செய்விதது மணம் முடித்து வைத்ததால இத்தலத்திற்கு, திருவேளவிக்குடி எனற பெயர் ஏற்பட்டது என்று இத்தலத்தின் பழமரபு வரலாறு கூறுகிறது.

சோழ அரசன் முதல் பராந்தகன் தொடங்கி 75 கல்வெட்டுகள் இக்கோயில் சுவரில் உள்ளன. இக் கோயில் உத்தமசோழன் காலத்தில் கற்கோயிலாக் கப்பட்டது. இது பலர் எடுத்த ஒரு கோயில். கோயி லின் ஒவ்வொரு உறுப்பும் கால்படை, தாடிப்படை, கற்கள், தளவரிசை, அரிக்கால், துவாரபாலகர் சிலை முதலியன உத்தம சோழன் காலத்தில் கொடையாக அளிக்கப்பட்ட செய்தியைப் பல கல்வெட்டுகள் உரைக்கின்றன. பராந்தகன் மாதேவடிகளான செம்பி யன் மாதேவியார் 142 கழஞ்சு எடையில் வெள்ளிக் கலசம் வழங்க இக்கோயில் திருப்பணி முற்றுப்பெறு கிறது.

கருவறையின் புறச்சுவரில் கி.பி.9-ஆம் நூற்றாண் டைச் சேர்ந்த தட்சிணாமூர்த்தி, இலிங்கோத்பவர், பிரமன் சிலைகளும் அருத்தமண்டபத்தில் அசுத்தியர் நடராசர், கணபதி, துர்க்கை சிலைகளும் உள்ளன இக்கோயில் ஊரின் நடுவே கிழக்குநோக்கிக் கரு வறை, அருத்த மண்டபம், மகா மண்டபம் போன்ற உறுப்புகளுடன் இரண்டு பிரகார மதில்களுடன் விளங்குகின்றது. இரா.குரு.அ.இரா.

**திருவேற்காடு:** தேவாரப்பாடல் பெற்ற தலங்களுள் ஒன்று. இந்தச் சைவத்தலம் சென்னைக்கு மேற்கே பதிமூன்று கல் தொலைவில் அமைந் துள்ள ஆவடி என்னும் ஊரிலிறங்கி, தெற்கே பூவி ருந்த வல்லிக்குப்போகும் வழியில் மூன்றே முக்கால் கல் தூரத்தில் அமைந்துள்ளது. காடுவெட்டியாறு எனறு இப்பொழுது வழங்கப்படும் பழைய பாலாற் றின் கரையில இத்தலம் அமைந்துள்ளது. சென்னை யிலிருந்து பேருந்து வழியாக இந்தத்தலத்திற்குச் செல்லலாம்.

இத்தலத்து இறைவனுக்கு, வேதபுரீசர், வேற காட்டீசர், ஆகிய பெயர்களும், இறைவிக்கு, வேற் கண்ணியம்மை, பாலாம்பிகை ஆகிய பெயர்களும் கூறப்படுகின்றன. காளத்தி இறைவனை வழிபட்டு வந்த திருஞான சம்பந்தர் திருவேற்காட்டு இறை வனைக் கணடு பதிகம் பாடியுள்ளார். சிவபெருமான் தனது திருமண கோலத்தை அகத்தியருக்குக் காட்டி யருளிய தலம் என்று கூறப்படுகிறது. அந்தத் திருக் கோலத்தை இக்கோவிலில் அமைத்துளளனர்.

அறுபத்து மூன்று நாயனமார்களுள ஒருவரான மூர்க்க நாயனார் அவதாரம் செய்த தலம் இது வாகும். இவரது சிலை துவார பாலகருககு வடககுப் பக்கம் அமைநதுள்ளது.

வேத வித்தகரான வேற்காட்டீசருக்கு, பூவும், புகையும் கொண்டு வழிபட்டவருககுத துன்பம் உண்டாகாது என்பது மரபாகக் கூறப்படுகிறது.

திருவேற்காட்டில கோயில் கொணடுளள கரு மாரியம்மன் புகழ்மிக்க ஒரு தெய்வமாகக் கொண டாடப்படுகின்றது. செவவாய், வெள்ளிக்கிழமைகளில சென்னை பதியினின்றும் சிறப்புப் பேருந்துகள இத் தலத்திற்கு விடப்படுகின்றன. அம்மனின சிறப்பால இது ஒரு சுற்றுலாத்தலமாக விளங்குவதை யாவரும அறிவர். இரா.குரு.

**திருவைகாவூர்** எனனும் சிவத்தலம் கும்ப கோணத்திற்கு வடமேற்கில் 9கி.மீ. தொலை வில் அமைந்துள்ள திருப்புறம்பயத்தின மேறகே 5 கி.மீ. தொலைவில் கொள்ளிடத்தின தென கரையில் அமைந்துளளது.

இத்தலத்தின் இறைவன் பெயர் வில்வவனே சுவரர், இறைவியின பெயா வளைக்கை நாயகி யம்மை இறைவிக்குப் பூவை வல்லியம்மை, சர்வசா ரட்சகி என்ற சிறப்புப் பெயர்களும் கூறப்படுகின்றன. வில்வ மரம் இத்தல மரமாகும். இத்தலத் தீர்த்தத் தடாகததிறகு 'எமதீரததம்' என்பது பெயர்.

இங்குள்ள கோவிலில் துவாரபாலகர் சிலைகள இல்லை. எமனை அழிப்பதற்காக நந்தி திரும்பி இருப் பதுபோல் வடிவம அமைக்கப்பட்டுளளது. இக்கோவி லில் அமைந்துளள நநதிச் சிலைகள அனைத்தும திரும்பிய வணணமே காட்சி தருகின்றன. அழகிய கலைநுட்பத்தோடு அமைந்த சிலைகள கண்ணைக் கவரும் வணணம் அமைந்துள்ளன. முருகனுக்குத் தனியாகக் கோயில் அமைந்துள்ளது. இத்தலத்தில மகா சிவராத்திரியின் பொழுது சிறப்புத் திருவிழா நடைபெறும்.

இரவில் புலியால் விரட்டப்பட்ட வேடன ஒருவன இத்தலத்திலிருந்த வில்வ மரத்தின் மீது ஏறி விலவ இலைகளைப் பறித்துப் புலிமீது இட்டு அதனை விரட்ட நினைத்தான். அவ்வாறு வேடன் இரவு முழு வதும் அயராது இட்ட வில்வ இலைகள் அனைத்தும் புலிமீது படாமல், அருகிருந்த சிவலிங்கத்தின்மீது விழுந்துகொண்டிருந்தன. விடியர்காலைப் பொழுதில வில்வத்தால் அர்ச்சனை செய்ததாகக் கொணடு

இறைவன் சிவலிங்கத்திலிருந்து வெளிப்பட்டு வேட னுக்குக் காட்சி நல்கி முத்தியின்பம் அளித்தார் என் பது இத்தலத்தின் புராண வரலாறு. இச்செயலால இத்தலம், 'சிவராத்திரித் தலம்' எனறும் கூறுப்படு கின்றது.

இததலத்தில அமைநதுளள எமதீர்த்ததில நீராடி இறைவனை வழிபட்டால், எமபயம் நீங்கப்பெற்றுச் சிவப்பேறு அடைவர். சமபுவராய மன்னர்களில, 'சகலபுவன சர்க்கரவர்ததி' இராசநாராயண சம்பு வராயரின கலவெட்டு இஙகுளள கோயிற்சுவரில் பொறிக்கப்படடுளளது. இரா.குரு.

**திருவைகுந்த விண்ணகரம்** இது தஞசை மாவட்டத்தில சீகாழிக்குக் கிழககே 8.கி.மீ. தொலைவில் அமைந்துளள ஒரு வைணவத திருத் தலம். வைகுந்தநாதன வைகுந்தவல்லித் தாயா ரொடு இத்திருத்தலததில கோயில கொணடுளளார். இலககுமி புட்கரணி எனபது இங்குளள திருக்குளத தின் பெயர். இதனைத் திருமஙகையாழவாா பாடி யுளளார். 'வலஙகொணடு கயலோடி விளையாடும நாஙகூர் வைகுந்த விணணகரம வணஙகு மட நெஞ்சே' எனற பாசுர அடிகள படித்து மகிழத்தக கவை. சா.உ.

**திருவையாறு**, தமிழ்நாட்டில தஞசாவூருககு வடமேற்கே 11 கி.மீ. தொலைவில அமைநதுளள ஊர். இதன வடபுறம கொளளிடமும தெனபுறம காவிரியும் ஓடுகின்றன நீாவளமும் நிலவளமும் நிறைநத இப்பகுதி வடமொழிப் புராணங்களில் 'பஞ்சநதம எனவும், ஆஙகிலேயரது ஆட்சிக்காலத தில் 'திருவாதி' எனவும் வழங்கபபட்டது. இஙகு ஐந்துஆறுகள் பாய்வதால் இது ஐயாறு (திரு ஐயாறு) எனக்குறிககப்பட்டது. ஐயாறன், ஐயாறபபன என னும் இறைவனது பெயரையே இவவூரும பெற்றது எனக கருதுவோரும் உணடு.

வரலாற்றுச் சிறப்பும இலக்கியச் சிறப்பும் கொண்ட இவ்வூர் ஒரு பேரூராட்சி ஆகும். கோயிலை மையமாகக கொணட இவவூரில நான்கு பெரும் வழிகள் தஞ்சை, கும்பகோணம, கல்லணை, அரிய லூர் ஆகிய ஊர்களுக்குச் செல்கினறன. இவவூரில் பெரிய தினசரி சநதையும், நீதி மன்றஙகளும், மருத் துவ நிலையமும், அரசா கலலூரி எனனும் தமிழக் கலலூரியும், வேத பாடசாலைகளும் ஊரைச் சுற்றி லும் திஙகளூர், திருமழபாடி, திருநெயததானம், திருப்பூந்துருத்தி, திருககண்டியூா முதலான திருத் தலஙகளும் உளளன.

இப் பேரூராட்சியின் பரப்பு 3.30 சதுர கி.மீ. ஆகும். திருவையாறு தியாகராசர் இசைக்குப் புகழ் பெற்றது. தஞ்சை வேந்தன் துளசிஙக மகாராசா வால் ஆதரிக்கப்பெற்ற இவர், இவவூாத் திருமஞ்சன வீதியில வாழ்நதுவந்தாா. பலருக்கு இசை கற்பித்து வந்த இவர் 6.1.1847-இல் சமாதி கொணடார். தியா கையர் உற்சவம் ஐநது நாள இசைக் கச்சேரியுடன மார்கழி மாதத்தில் இஙகு ஒவ்வோராணடும நடை பெறுகிறது.

திருவையாற்றிருள்ள ஐயாறப்பர் கோயில் (பஞ சநதீசுவர சுவாமி கோயில்) முதனமையானது. இக்கோயிலின் வளாகத்தினுள் மூன்று கோயில்கள தனித்தனியாகக கடடப்படடுள்ளன. அவை முறையே ஐயாறப்பர் கோயில, தென கயிலாயம், வட கயிலாயம் ஆகியனவாகும் ஐயாறப்பர் கோயிலி லுளள அமமன, அறம் வளர்தத நாயகி எனப படுகிறாா. இனறு வட கயிலாயம என வழங் கப்பெறும் கோயில முதலாம இராசராசனின் தலை மைத் தேவியான உலோகமாதேவியாரால் கட்டப் பெற்று 'ஒலோகமாதேவீசுரம்' என்று கலவெட்டில குறிக்கபபெற்றுளளது. தென் கயிலாயம், முதலாம் இராசேந்திரசோழனது பட்டததரசியாம் பஞ்சமா தேவியால் எடுக்கபபடடது. இங்கு நுளம்பர் கலைப் பாணியைக் கொணட 46 கறறூணகள உளளன. இம மூனறு கோயிலகளிலும பல கவினமிகு சிற்பஙகளும செப்புத் திருமேனிகளும், நாயககர் கால ஓவியங் களும் உளளன. திருவையாற்றில அட்டமாதர் சிற்பத் தொகுதியும உளளது.



கோபுரத்திலுள்ள கன்னடக் கல்வெட்டு-திருவையாறு (கி.பி. 7-ஆம் நூற்றாண்டுத் தொடக்கம்)

இங்குப பலலவர், பாணடியர், சோழா, விசயநகரத் தாா, தஞசை நாயக்கர், தஞசை மராட்டியர் முத னான அரச மரபினரின காலத்துக கலவெட்டுகள உளளன. பணடு, பெண அதிகாரிகள இருநததனை இவவூர்க கல்வெட்டுகள தெரிவிக்கின்றன.

இவ்வூரில் சததிரஙகள மிகுந்த அளவிலுளளன அவறறுள பல இன்று குடியிருப்புக்கும் வாடகைககும் விடப்பட்டுளளன அவற்றுள வேஙகடமமாள சத் திரம, அமமணிபாய் சத்திரம, வரதபப ஐயா சத் திரம், சீதா சத்திரம், அறுபதது மூவா மடம முதலி யன குறிபபிடத்தக்கவையாகும. திருவையாறறில பழைமைச சிறப்புமிக்க கட்டடஙகள உளளன. அவற றுள் பல தஞசை மராத்தியா காலத்தனவாகும. காவிரி கரையிலுளள கலியாண மகால் சத்திரம அவறறுள மிகபபெரியது இஙகுள்ள காவிரிபபாலம கி.பி. 1846–47–இல தஞசை மராததிய வேநதன சிவாசியால கட்டப்பட்டது ஆறறின் கரையில உளள புறாக கூணடும அதனையொட்டியுளள அரணமனையும். தஞசை மனனர்களுடையன

**விழாக்கள்** இஙகு நடைபெறும திருவிழாககளுள முதனமைமிகதது ஏழூா விழா (சப்த தானம) ஆகும் பஙகுனி மாதத்தில திருமழபாடியில நடை பெறும நநதிதேவர் திருமண விழாவின தொடர்பாக இஙகு ஊர்வலம நடைபெறும். இது சித்திரை மாதப பௌாணமியை அடுதது வருகிற விசாக நட்சததிரத தில சிததிரைத திருவிழாவின 12-ஆம நாள விழா வாகக் கொணடாடப்படுகிறது. திருவையாற்றை அடுததும சூழ்நதுமுளள திருபபழனம, திருசசோறறுத் துறை, திருவேதிககுடி, திருக்கணடியூா, திருப்பூந் துருததி, திருநெய்த்தானம் முதலான ஏழூாகளுககும சாமியும் அம்மனும ஊர்வலம செலவர். சாலையில தொடஙகும் ஊர்வலம், இரவில திருநெய்ததானத்தில காவிரி மணலில முடிவுறும. காவிரி மணலில் (கரை யில்) ஏழூாத் தெயவங்களும் (பலலக்குகள) ஒன்றாக எழுநதருளி பல்லாயிரக்கணக்கான பக்தர்களுக்குக் காட்சி நலகும. சிறப்பான வாண வேடிககைகள நடைபெறும்.

திருஞானசம்பந்தர், சுநதரர், மணிவாசகர், ஐயடிகள, காடவர்கோன், அருணகிரியார், பட்டினத தடிகள ஆகியோர் திருவையாறு பறறிய பதிகஙகள தநதுள்ளனா. திருவையாறறுப் பதிறறுப்பத்து அந தாதி, திருவையாறறுப் புராணம் ஆகியன இத்தலப பெருமையைக் கூறுகின்றன. தியாகராசர் கீர்த்தனை கள திருவையாற்றிற்குப் பெருமை சேர்த்துளளன. இவ்வூரின் மக்கள்தொகை 14,000 (1981). ம.இ.

**திருவொற்றியூர்**: இது தேவாரப் பாடல் பெறற தொணடை நாட்டுத் தலங்களுள ஒன றாகும, இபபோது சென்னையின ஒருபகுதியாக உள ளது. திருககோயில திருவொறறியூர் புகைவணடி நிலை யததிலிருநது கிழக்கே சிறிது தூரத்தில அமைநதுள ளது. கடறகரையில அமைநதுளள தலம இதுவாகும.

ஒறறியூா எனற பெயருக்குப் பலவாறாகக் காரணம கூறபபடுகிறது மாதநதா என்னும அரசன சிவநேசச செலவனாக வாழநது சைவப பணிகள் நிரமபச செயதுவநதான உடல தளாசசியுறற காலததில் இறகக விருமபிச சில தீயோாகளிடம ஆலோசனை கேட்க, அவர்கள 'தாஙகள கோவில களுககு அளிதது வரும கொடைப பெருளகளை நிறுத்தி விடடால தஙகளைத தீவினை சூழும, மர ணம் விரைவில நிகழும்' எனறனா. அரசன அதறகு உடனபட்டு, கணககரை அழைத்துக கோவிலகளுககு வழஙகுவனவறறைக குறைதது எழுதுமாறு கட்டளை யிட்டான எழுதப்பட்ட அக்கட்டளையைப படிககும போது 'ஒறறியூா நீஙகலாக' எனற வரிகள இருககக் கண்டு கணககரை வெகுணடான. கணககா அது தம கையெழுதது இலலை என்பதனை விளகக, அச செயல இறைவனின திருவிளையாடல எனறுணாநது வணஙகினான திருவொறறியூா வநது நீராடி இளமைபெற்றான. அஙகு 'இளமை தநத நாயனாா' என்னும் சிவலிஙகத்தைத தோற்றுவித்தான இச செயதி பிறவாறும குறிககபபட்டுளளது ஓா அரசன தெயவத் தலஙகள உட்பட அனைதது ஊாகளுககும வரி விதித்துச சுறறோலை அனுபபினான அசசுற றோலையில திருமநதிர ஓலை நாயகததிற்கும மன்ன னுககும் தெரியாமல 'இது ஒறறியூர் நீஙகலாக' எனறு வரி பிளநது எழுதபபட்டமை கணடு, அது இறைவன செயலெனறு உணாநதான. அதனால இவ்வூா இறை வற்கு 'எழுததறியும பெருமாள' எனற பெயா உண டாயிறறு. இக குறிபபினை, 'ஏட்டு வரியில ஒறறியூா நீங்கல எனன எழுததறியும் நாடட மலரும் திருநுத லாா' எனச சேக்கிழாரும குறிப்பிட்டுளளாா.

பிரளயம் ஏற்பட்ட காலதது மாலும் அயனும புதிய உலகம படைக்க அனுமதி கோட்டபோது சிவ பெருமான தன சக்தியால் வெப்பம உணடாககி அவ வெபபத்தால் பிரளய நீரை ஒறறி எடுததாா. வெப் பம் ஒன்று கூடிச் சிறு கோள வடிவமானது. அககோள வடிவததிலிருந்து மகிழ மரததோடு சிவலிஙகம தோன்றியது. பிரளய வெள்ளத்தை நெருபபினால ஒறறி எடுதததால இத்தலததிற்கு ஒற்றியூா எனற பெயா நிலைககலாயிறறு எனறு தலபுராணம கூறு கிறது

நின்று ஆடும ஆட்டம் கண்டு மகிழ்நத அகத்தியா, இறைவனின இருநது ஆடும் ஆட்டம காணும வேட்கையைச் சிவனிடம தெரிவிகக, இறைவன, 'பாலாறு பாயும் தொணடை நாட்டில், யாம் சுய மாகத் தோனறிய திருவொற்றியூர் தலம ஒன்று உணடு. அஙகுச் செனறு தவம் இயற்றினால் உன ஆவல் நிறைவுறும' எனறாா. அகததியரும் திருவொற்றியூர் வந்தடைநது நந்தி தீர்த்தம் உணடாக்கி, யோகம் புரிநது தனது வேட்கையை நிறைவுசெய தார். நாள்தோறும சிவபெருமானின நடனம கணட திருமால், அந்நடனக் காட்சி மனத்தில தோன றாது வருநதி நிற்க, 'மாசித் திஙகள ஞாயிறனறு மக நட்சததிரத்தில ஒற்றியூர் வநதால எமது நடனக் காட்சி கிடைககும்' எனற ஒலி கேட்டு மகிழ்நதார். திருமகளோடு ஒற்றியூா அடைநது திருமால தவம புரிந்தார். பிரமனும இத்தலத்தினை வழிபட்டுப் பயனபெற்றுள்ளார். காசி மன்னன இறைவனின நடனம காண ஆவலுடன் ஒறறியூர் வருவதறகு முன திருநடனம் முடிய, மனம் வருநதிய மனனனை அமைதியுரச் செய்து மீணடும அவன அனபு உள்ளத் திறகாக நடனம் ஆடி அருள செய்தாா. திருநடனம் முடிநததும் தானிருக்குமிடத்தில் கஙகையும் இருக்க வேணடும் எனறு வேணட, இறைவனும் அவ்வாறே அருள் செய்தார். இங்குளள தீாததத்திறகுக் 'காசி தீாததம்' என்ற பெயருமுணடு. இவவாறு இத்தலத்தின் பெருமைகள தலபுராணததில கூறப்பட்டுளளன.

இத்தலத்திற்குச் சிவபுரி, பதுமபுரி, அவசபுரி, பிரமபுரி, நிரநதரபுரி, பூலோகச் சிவலோகம் என்ற சிறப்புப் பெயாகளுமுண்டு. இத்தல இறைவன மகாதேவ பட்டாரர், திருவொற்றியூர் மகாதேவர், ஒறறியூா ஆழ்வாா திருஒற்றியூருடைய நாயனார், ஆதிபுரீசுவரர், புற்றிடஙகொண்டாா, காரணிவிடங்கர், எழுத்தறியும் இறைவன, படம்பக்க நாயனார், மாணிககத் தியாகா போனற பல சிறப்புப் பெயர்களால குறிபபிடப் பெறறுளளாா. இத்தல இறைவிக்கு வடிவுடையமமை, திரிபுரசுநதரி ஆகிய பெயாகள உணடு.

இத்தலத்தில் அமைந்த பிளளையார் அனுக்கிரக பிள்ளையார் எனறும், முருகன், குமாரசாமித் தேவர் எனறும், துர்க்கை வட்டபாறை நாச்சியார் எனறும் பெயா பெறுவர். இஙகுப் பைரவருககுத் தனிப் படிமம் உணடு. உயிாப்பலிப் பூசைகள முனபு நடைபெற்றன எனறும், அவை புறச் சமயங்களான பௌதத, சமண மதங்களை எதிர்க்கும பொருட்டு நடத்தப்பெறறன எனறும பினனர் ஆதிசங்கராசாரியாா இத்தலம் வந்து உயிர்ப்பலிப் பூசையை நிறுததி விட்டார் என்றும் கூறப்படுகிறது.

இது எளிதில் முத்தி தரும் தலமாகும், இத்தலத்திற்குச் செல்ல வேணடும் என்று நினைத்தாலே எம பயம் நீஙகும்; இதன எலலையை மிதிக்கக் கருவினைத் துன்பம் நீஙகும, இததலததில் இறநதால பிரமனுக்கும் எட்டாதபதம் கிடைககும், இததலத்தில அன்ன மிட்டால் இநதிரபதம் கிடடும்; இஙகுளள கலலெலலாம் சிவலிஙகம, நீரெல்லாம் கங்கை, உணவெலலாம் அமிர்தம என்றிவவாறு தலபுராணம இததலப் பெருமையினைப் பேசுகிறது

இத்தலத்தில் அமாவாசைதோறும சிறப்பு வழிபாடு நடைபெறும். நநதி, உரோமரிசி, திருமால, பிரமன, வானமீகி, சநதிரன், அகத்தியர், வடலூா இராமலிஙக அடிகளாா, பட்டினத்தடிகள, அருணகிரி, கலிய நாயனாா ஆகியோாகள இததலத்தை வழிபட்டுப் பேறுபெறறுளளனர்.

சம்பநதர் ஒரு பதிகமும, திருநாவுக்கரசர் 'ஐநது பதிகங்களும், சுந்தரா இருபதிகஙகளும் இத்தலம பற்றிப் பாடியுளளனர்.

இத்தலத்தில சுந்தரமூர்த்தி சுவாமிகள தம் மனைவியாகிய சஙகிலி நாச்சியாருக்குச் செய்து கொடுத்த உறுதிமொழியினை மீறியதால கணகளை இழநதார். பின இறைவனை வழிபட்டு அவற்றைப் பெற்றார். அதன் நினைவாக ஆணடுதோறும் மகிழ மரததடியில திருவிழா நடைபெறுகினறது.

இஙகுப் பல மணடபஙகள அமைக்கப்பட்டுளளன. இஙகுளள குலோததுஙகன் மணடபத்தில நாளதோறும் ஐமபது அடியவர்களுககு அனனம் அளிககப் பட்ட செயதியைக் கலவெட்டு உரைககினறது.

பஙகுனி உத்திரவிழாவும, ஆனித் திருவிழாவும், மாசி மக விழாவும் இங்குச சிறப்புற நடைபெற்று வருகின்றன. பங்குனி உத்திரத் திருவிழாவின ஏழாம நாள மகிழ மரததடியில இறைவனை எழுநதருளச செய்து ஆளுடைய நமபியின புராணம படிப்பா.

இரா.குரு.

**திருவோணகாந்தன் தளி:** தொணடை நாட்டுத் தேவாரப் பாடல பெற்ற சிவத் தலங்களுள இது நானகாவதாகும். செஙகற்பட்டு மாவட்டததில் கச்சியேகமபம எனும் காஞ்சிபுரததிற்கு மேற்கிலிருப்பது சருவதீாத்தம. இதன் வடமேற்கே 1 கி மீ தொலைவிலுளளது இத்தளி ஓணன், காநதன எனனும் இரணடு அசுரர்கள் வழிபட்டதால் இப்பெயர் பெறறது. ஓணன வழிபட்ட இறைவன ஓணேச்சுரர் எனறும். காநதன் வழிபட்ட இறைவன காநதேச்சுரர் எனறும திருச்சுறறுக்களோடு இரணடு திருககோயிலில் எழுநதருளியுள்ளாாகள். இறைவி காமாட்சியம்மை,

சலந்தரன வழிபட்டது தெனபால் கோயில் என்றும், வடபால் உள்ளது ஓணன், காந்தன் ஆகிய இருவரும் வழிபட்ட கோயில் என்றும், முறையே, சலந்தரேசுரர் என்றும், ஓணகாந்தேசுரர் என்றும் கூறுவர். இவை யாவும் ஒரே திருச்சுற்று மதிலின் உள்ளடங்கியுள்ளன. தேவர்களும் இத்தலத்தினை வழிபட்டுள்ளனர். தீர்த்தம்: விட்டுணு தீர்த்தம்.

சுந்தரமூர்த்தி நாயனார் இத்தலத்தில் எழுந்தருளி, இறைவனோடு தோழமை பேசி நகையாடி, அடிமைத்திறம் சொல்லி, 'நெய்யும் பாலும் தயிரும் கொண்டு' எனத் தொடங்கும் பதிகம் பாடிப் பொன் பெற்றார். இப்பாடலில், 'உங்களுக்கு ஆட்செய்ய மாட்டோம்', என்றும், 'உம்மை ஒற்றி வைத்து உண்ணலாமோ' என்றும், 'வல்லதெல்லாம் சொல்லி உம்மை வாழ்த்தினாலும் வாய்திறந்து ஒன்று இல்லை என்னீர், உண்டும்என்னீர்,எம்மை ஆள்வான் இருப்பது என்?,என்றும்' 'காமகோட்டம்இருக்க நீர்பிச்சை அடியார்கள் பெறுவது என்னே' என்றும் கடுமையாகப் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது. வீ.சொ.

***திருவோணம்:*** இருபத்தியேழு நட்சத்திரங்களையும் அசுவினி முதலாக எண்ணிவரும்போது திருவோணம் இருபத்திரண்டாவது நட்சத்திரமாக அமையும். இது மகர இராசியில் இடம்பெறும். திருவோணத்தின் அதிபதி சந்திரன். எனவே, திருவோணத்தில் பிறந்தவர்களின் திசை ஆரம்பம் சந்திர திசையில் இருந்து தொடங்கும். ஓணம் என்பதே பெயர்; எனினும் திருமாலின் நட்சத்திரம் என்னும் முறையில் பெருமை பெற்றுத் திருவோணம் ஆயிற்று என்றும் கூறுவர். ஓணப்பண்டிகை மலையாள நாட்டில் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. திருமால் வாமன அவதாரம் எடுத்து மாபலியிடம் மூன்றடி மணகேட்டார். அவன் கொடுக்க முன் வந்தபோது பேருருவம் எடுத்து உலகை அளக்கத் தொடங்கினார். மூன்றாவது அடிக்கு இடமில்லாதபோது மாபலியின தலைமீது திருவடியை வைத்தார் என்று புராணங்கள் குறிப்பிடும். சிலப்பதிகாரமும் மூவடியால் உலகளந்த செய்தியை எடுத்துரைக்கும். அக்கதை நிகழ்ச்சியை நினைவு கூரும் நெறியில் திருவோணம் கொண்டாடப்படுகிறது. பழங்காலத்தில் மதுரையிலும் ஓணத் திருவிழா நடைபெற்றதை மதுரைக்காஞ்சியால அறியலாம். ஞானசம்பந்தர் ஐப்பசி ஓணம் பறறியும் குறிப்பிடுகிறார். 'ஐப்பசி ஓணவிழாவும் அருந்தவர்கள், துய்ப்பனவும்காணாதே போதியோ பூம்பாவாய்' எனறு பாடுவதறியலாம். சிறவோணம், திருவோணம் என்னும் சொற்களைப் பற்றி ஆராய்வோர் பின்வரும் கருத்தைக் கூறுகின்றனர். தனுசு இராசியில் நின்ற வேடன்அம்பு எய்கின்ற நிலையில் காணப்படுகிறான. மகர இராசியில் பறநது கொண்டிருந்த கருடனின் சிறகு, அற்று விழுவதுபோல ஓணம நட்சத்திரம் காணப்படுவதால் அதனைச் சிறவோணம் என்றனர். எனவே, சிராவணம் என்ற பெயரும் வழககில் வந்து விட்டது என்பர். தே.ஆ.

***திருவோத்தூர்:*** தொணடை நாட்டிலுளள, தேவாரப் பாடல் பெற்ற சிவத்தலங்களுள் இது எட்டாவதாகும். திருவத்திபுரம் என்றும், திருவத்தூர் என்றும், அனகாவூர் எனறும் வழங்கப்படும. காஞ்சிபுரம் எனும் கச்சியேகம்பத்தினின்றும் மேற்கில பதினெட்டு கல் தொலைவிலும், அச்சிறு பாக்கம புகைவண்டி நிலையத்தினினறும் வடமேற்கே பதினெட்டுக்கல தொலைவிலும உள்ளது. திருமாகறலினின்றும் தெனமேற்கிலும், சேயாற்றிற்கு வடக்கிலும் இருப்பது இத்தலம்.

சிவபெருமான் தேவர்கட்கும் முனிவாகட்கும் வேதத்தினையும், வேதப் பொருளையும் அருளிச் செய்ததால் இத்தலத்திற்கு இப்பெயர் உணடாயிற்று. ஒத்து (வேதம)+ஊர் ஒத்தூராயிற்று. திரு – அடைமொழி.

இறைவா: வேத நாதேசுவரர், வேதநாதர். இறைவி: இளமுலை நாயகி. தீர்த்தம்: சேயாறு, வேத தீர்த்தம. இவவூர்த் தலபுராணம், கருணாகரக் கவிராயரால் பாடப்பட்டது; அச்சிடப்பட்டுள்ளது. இத்தலத்தில் ஆதிகேசவப் பெருமாள எனும திருமால் சந்நிதியும் இருக்கிறது.

இத்திருக்கோயிலுக்குச் சொந்தமான நிலங்களில் இறைவனுககாகச் சிவனடியார்கள் பனைமரங்களை வைத்து வளர்த்தனர். அவையாவும் காய்க்காத ஆண்பனைகளாயிருந்தமை கண்டு சமணர்கள எள்ளி நகையாடினர். அதுகாலை, திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் அங்குத் தலயாத்திரையாக வந்தார். சிவனடியார்கள், சமணர்கள் குறை கூறுதலைச் சொல்லி முறையிடவே, 'பூத்தேர்ந் தாயன கொணடு நின் பொன்னடி' எனத் தொடங்கி, 'குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்' என்று அருளித் திருக்கடைக்காப்பு அருளினார். அவை பெணபனை யாகித் காய்க்கத் தொடங்கின. பினனர் இப் பனைகள் சிவகதியடைந்தன, தற்போது பனை உண்டாக்கப்பட்டு வழிபாட்டில் உள்ளது.

இத்தலத்தில் இராசாதிராசன், குலோத்துங்கன், இராசேந்திரன், பொத்தப்பிச்சோழன், முதலாம் இராசராசன், மூன்றாம் ராசராசன், விக்கிரம சோழன், சுந்தர பாண்டியன், வீரபாண்டியன், கோப் பெருஞ்சிங்கன், இராட்டிரகூட கனனரதேவன் ஆகி

யோரதுமாக 29 கல்வெட்டுகள் உள்ளன. இவறறுள், கோயில் நித்திய வழிபாட்டிறகும், அர்ச்சகர்கடகும் நலமளித்தமையும், விளககெரிககப்பசுக்கள கொடுத தமையும், அம்பெய்து விளையாடியதில ஒருவன இறந்துபட அக்குற்றத்திறகாகத தணடமாக 16 பசுக்களைக் கோயிலுக்குக் கொடுததமையும், பொன் னணிகலன் அளித்தமையும் பிறவும கூறப்படுகின்றன. மேலும் முன்னொரு காலத்தில இககோயிலினுள ளேயே, சிதம்பரேசுரர் கோயில எனறு ஒரு கோயில இருநததாகவும தெரிகிறது. சைவமும் தமிழும் தழைத்தினிதோங்க இருந்து வாழ்நத பானுகவி இவ வூரவர். கேதாரிநாதமடம ஒனறு இஙகிருநத செயதி யும் கிடைக்கிறது. வீ சொ.

**திருவோமாம்புலியூர்**: தேவாரப பாடல் பெற்ற தலங்களுள ஒனறு. இது காவிரியாற்றின வட கரையில அமைந்துள்ள தேவாரத்தலஙகளுள முப பத்து ஒனறாவதாக எணணப்படும். சிதம்பரத்திறகுத தென் மேற்கில உளள காட்டுமனனார்குடிக்குத் தெற்கே கொள்ளிடததின் வடகரையில் இத்தலம அமைநதுள்ளது. இதறகு அருகில் திருமணணிப்படிக் கரை எனனும் தலம் உளளது.

இத்தல இறைவனின் பெயர் துயர் தீர்த்த நாதர் என்பதாகும்; இறைவியின பெயர் பூஙகொடிநாயகி யாகும். புலிக்கால் முனிவரால (வியாக்கிரபாதர்) பூசிககபபெற்றதாலும, வேளவிச சிறப்புற்றதாலும இததலம் ஓமமாம்புலியூா எனறு வழஙகப்பட்டது. அப்பர் அடிகள இத்தலத்தை ஓமாமபுலியூர் எனறும் சம்பந்தர் ஓமமாமபுலியூா எனறும் தமபதிகஙகளில் குறிபபிட்டுள்ளனா. இத்தலத்திறகுக் கீழபபுறம் அமைந்துள்ள சிறுகோவில வடதளி எனற பெயருடன் விளஙகுகினறது. இதனை அப்பரும் சமபந்தரும் தம பதிகஙகளில சுட்டியுள்ளனர்.

சோழர் காலக் கல்வெட்டு இத்தல இறைவனை வடதளி உடையார் என்றும், பலலவர் காலக் கல் வெட்டு வடதளி உடைய நாயனார் எனறும் குறிப பிட்டுள்ளன.

இரவில் புலியால் விரட்டப்பட்ட வேடன் ஒரு வன் வில்வமரமேறித் தன்னுயிரைக காக்க முயன றான். இரவு முழுதும் புலியின் மீது வில்வ இலை களை எறிந்து புலியினைத் துரத்த முற்பட்டான். வேடன் எறிந்த வில்வ இலைகள புலியினமீது படாது, அருகிருந்த சிவலிஙகத்தின மீதே விழுந்துகொண்டிருந் தன. விடியறகாலைப் பொழுதில சிவலிஙகத்திலிருந்து சிவபெருமான வெளிப்பட்டு, வேடனுக்குக் காட்சி கொடுத்து முத்தியளித்துத் துயரம் தீர்த்ததால, இறைவனுக்குத் துயா தீர்த்த நாதர் என்னும் பெயர் அமைநதது

இத்தலத்துள மூனறாம் குலோததுங்கனது கல் வெட்டு ஒனறும், பல்லவ மனனன, சகலபுவன சககர வர்ததி கோப்பெருஞ்சிங்கதேவரின கல்வெட்டு ஐநதும காணபபடுகின்றன. இரா.கு.

**திரெண்டு ஆறு** இஙகிலாந்து நாட்டின நடுபபகுதியில ஓடும ஆறு இது இநநாட்டினமூனறாம் மிகப்பெரிய ஆறு ஆகும். வடக்கு இசுடாபோர்டுசய ரில (Staffordshire) உளள பிததுலப்பு மூரில (Biddulph Moor) உறபததியாகிறது. அஙகிருநது தென கிழககாகச செனறு, பினபு வடகிழககுத திசையில 274 கி.மீ ஓடி, அம்பர்க (Humber) கழிமுகததில நுழைகிறது. அவ இடம் கடலிலிருநது 64 கி.மீ. தொலைவில உளளது. திரெணடு (Trent) ஆறு10,000 ச.கி.மீ. நிலப்பரப்பிறகு வடிகாலாக அமைந்துள ளது. அநநதியின முறபகுதி போட்டரி (Potteries) ஓரமாகவும், இசுடோன (Stone) வழியாகவும, உரு கிலியை (Rugeley) அடைகிறது.

அலரெவாசு (Alrewas) எனனுமிடததில இரு மருங்கிலும் உளள நிலம சரிவாக இருககிறது. அங்குத் திரெணடு ஆறு அகனறு வெளளச் சமவெளி போல தோற்றம் தந்து, தெறகு தெர்பிசயா (Derbyshire), நாட்டிஙகாமசயர் (Nottinghamshire) வழியாகச செலகிறது. பினபு நாட்டிஙகாம்சயா-இலிஙகனசயர் எல்லையோரமாகவும், அககுஓம(Axholme) தீவின் ஓர மாகவும் செல்கிறது நெவாாககு (Newark) என்னு மிடத்திறகுக் கீழே அவ் ஆற்றின வேகம குறைவாக உளளது.

திரெணடு ஆறறின் தொடக்கப்பகுதி ஒரு சிறிய நீரோடையாகும். பீக மாவட்டத்தில சுர்னெட்டு (Churnet), தோவ (Dove), தொவெணடு (Derwent) முதலிய துணை நதிகள திரெண்டுடன கலககினறன. இநதத் துணை நதிகள நீரோட்டம மிகுநதவை அதனால் மிகுதியாகக் தணணீா திரெண்டு ஆற்றில் வந்து சேருகிறது. வட பகுதியில எர்வாசு (Erewash) என்ற துணை நதி கலக்கிறது. அது தொழில மைய மான நாட்டிங்காம்சயரிலிருந்தும், தொபிசயர் நிலக் கரிச் சுரங்கங்களிலிருந்தும் தணணீரைக் கொண்டுவரு கிறது. தெற்கிலுள்ள துணை நதிகளான பெங்கு (Penk), தேம (Tame), சோர் (Soar) முதலியவை ஓரளவு தணணீரைக் கொணடுவந்து சேர்க்கின்றன.

திரெணடு ஆற்றில் கிராம்வெல் அடைப்பு வரை சுமார் 70 கி.மீ தொலைவிற்கு அலைகள் உளளன,

கிராம்வெல் அடைப்பு நெவார்க்கு என்னுமிடத்தி லிருந்து 5கி.மீ.தொலைவில் உள்ளது. சில நேரங்களில் 1மீ. முதல் 1.2மீ. உயரம் வரை அலைகள் எழுகின் றன. அப்பகுதியில் விசைப்படகுகள் செல்வதற்கான ஏற்பாடுகள் புதிய முறையில் செய்யப்பட்டுள்ளன. இதனால கெயுனசுபரோ, நெவார்க்கு, நாட்டிங்காம் முதலிய இடங்களில் வாணிகம் சிறப்புற்றிருக்கிறது. முன்பு நெவார்க்கிற்கும் நாட்டிங்காமிற்கும் இடை யில போக்குவரத்து மிகவும் கடினமாக இருந்தது. ஆற்றின் குறுககே அணைகளும், தண்ணீரைத் தேக்க வும் வெளியேற்றவுமான கதவுகளும அமைக்கப்பட்ட பிறகு இவ்விரு இடங்களுக்கிடையே ஆற்றில் 1.8மீ. ஆழத்திற்குத் தணணீர் வைத்துககொள்ள முடிநதது. அதனால் நீர்வழிப் போக்குவரத்துச் சிறப்புற்றிருக் கிறது. அல் (Hull) எனற இடத்திலிருந்து ஆற்றின் நீரோட்டத்திற்கு எதிராகப் பெரிய அளவில் எண் ணெய், வாயுப் பொருளகள் (Gasoline) முதலியவை எடுத்துச் செல்லப்படுகின்றன.

திரெண்டு ஆற்றிலிருந்து பிரிந்து செல்லும் சில கால்வாய்கள் போக்குவரத்துக்குப் பயன்படுகின்றன. அவற்றில் ஈடுபட்டுள்ள முக்கிய நிறுவனங்கள் 'தெற்கு யார்க் சயர் படகுப் போக்குவரத்து நிறுவனம்', 'பாசு டைக்கு'(Foss Dyke) முதலியனவாகும். முன்பு புகழ் பெற்றிருந்த 'திரெண்டு-மெர்சி காடிவாயில்' சிறசில இடங்களில் மட்டும் படகுப் போக்குவரத்து இப்போது நடைபெறுகிறது. திரெண்டுக் காலவாயில் பர்ட்டனுக்குக் கீழே மின்சாரம் உற்பத்தி செய்யும் எட்டு நிலையங்கள் உள்ளன. இம்மின் நிலையங் களுக்குத் தேவையான நிலக்கரி அருகிலுள்ள நாட்டிங் காம் நிலக்கரிச் சுரங்கங்களிலிருந்து கிடைக்கிறது. குளிரூட்டுவதற்குத் தேவையான நீர் திரெண்டு ஆற்றிலிருந்து கிடைக்கிறது. அ.சி.

**திரேக்கோ** என்பவர் கி.மு. 7-ஆம் நூற்றாண டில் கிரேக்க நாட்டில் ஏதென்சு நகரரசில் வாழ்ந்த ஒரு சட்டத் தொகுப்பாளர் (Codifier). திரேக்கோ (Draco) குற்றஇயல் சட்டங்களை வரைந்து, அவற் றைத் தொகுத்தார். அவர் வகுத்த குற்ற இயல் சட்டங்களில் மிகச் சிறிய குற்றங்களுக்குக்கூட மரண தணடனை போன்ற மிகக் கடுமையான தண்டனை கள விதிக்கப்பட்டிருந்தன. ஆகையால் திரேக்கோ வின் சட்டங்கள் மிகவும் கடுமையான இயல்புடை யவை என்று தொன்றுதொட்டே வரலாற்றாசிரியர் கள கருதியதோடு, இக்காலத்திலும் குடிகளின் உரிமைகளை ஒடுக்குகின்ற சட்டதிட்டங்களையெல் லாம் 'திரேக்கோவின் சட்டங்கள்' (Draconian Laws) என்றும் குறுப்பிடுவர்.

**சட்டங்களின் இயல்பு**· ஏதென்சில் கி.மு. 683-இல் ஆறு துணை நீதிபதிகள(Arehons)சட்டங்களை எழுதித் தொகுப்பதற்காக அமர்த்தப்பட்டனரென்று அறிஞர் அரிசுட்டாட்டில் கூறுகிறார். பின்னர் கி.மு. 621-இல் சட்டம் வரைபவராகப் பணியாற்ற வந்தவரே திரேக்கோ ஆவர்; ஏதென்சில் குடிகளுக்குத தம் சட் டங்கள யாவை என்று தெரிந்து கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்பட்டபோது, அத்தகைய சட்டங்களை யெல்லாம் ஒன்றாகத் திரட்டித் தொகுத்து வைத் தற்காகத் திரேக்கோ அமாத்தப்பட்டார். இவர் வகுத்த சட்டத் தொகுப்பு தாங்கொணாக் கடுமை யான தணடனை முறைகளை உடையது. எனவே, இவருடைய சட்டங்கள மையினால் எழுதப்படாமல், மனிதக் குருதியினால் எழுதப்பட்டவை என்று வர லாற்றாசிரியர் குறிப்பிடுதல் வழக்கம். சிறிய குற்றங் களுக்கும், பெரிய குறறங்களுக்கும் ஒரே தனமை யான கொலைத் தண்டனைகள் இவருடைய தொகுப் பில் விதிக்கப்பட்டிருநதன.

**சட்டங்கள் நீக்கப்படுதல்**· திரேக்கோவின் சட்டத் தில் விதிக்கப்பட்ட கடுந் தண்டனையின் காரணமாக அவற்றை மாற்றுதல் வேணடுமென்று யாவரும உணர்நதனர். அதனை முதனமைப் பணிகளுள் ஒன்றாக கி.மு. 594-இல நீதிபதியாகத் தேர்ந்தெடுக் கப்பட்ட சொலோன கருதினார். திரேக்கோ வகுத்த சட்டங்களுள, மரண தண்டனைக்குரிய பெரிய குற்றச சட்டங்களைமட்டும் சொலோன் வைத்துக் கொணடு, திரேக்கோ வகுத்த மறறக் குற்றச் சட்டஙகளை யெல்லாம் நீக்கிவிட்டார். (காண்க: சொலோன்) சொலோன் புதிய சட்டங்களை வரைந்து வெளியிட் டார். குற்றங்களுக்காக விதிக்கப்படும் தணடனை குற்றவாளியைப் பழிவாஙகும்படி கடுமையாக இல லாமல், அவர் குற்றமனபபான்மையைத் திருத்துவ தற்காகவே இருததல் வேண்டும் என்ற அறிவியலான இக்காலவிதியை திரேக்கோ கையாளவில்லை, சொலோன இவவிதியைப பினபற்றினார். திரேக்கோ ஏதென்சுக்காக ஓர் அரசியலமைபபுச் சட்டத்தை வரைந்தாரென்ற அரிசுட்டாட்டிலின் கூறறுக்கு சானறு ஏதும் இல்லை என்று வரலாற்றாசிரியர்கள் கூறுகினறனர். பா.சு.

**திரேசு** பால்கன், முந்நீரகத்தில உள்ள ஒரு நிலப்பகுதியாகும். அதன பரப்பளவு பல்வேறு காலங் களில விரிந்தும் சுருஙகியும் இருந்திருக்கிறது. முற் காலக் கிரேக்கர்களுக்குத் திரேசு (Thrace) கிழககுப் பகுதியாக இருந்தது. இது தானயூபு (Danube) ஆற றுக்கும், ஈசியன் கடலுக்கும் (Aegean Sea) இடையி லுள்ளது. சுட்ரைமன் (Strmon) பகுதிக்கு மேறகே

யுள்ள திரேசு நிலப்பரப்பு கி.மு. 480-க்குப் பிறகு மாசிடோனியாவுடன சேர்த்துக்கொள்ளப்பட்டது. எஞ்சியுள்ள பகுதி திரேசு எனக்குறிக்கப்பட்டது.




திரேசு அமைவிடம்

திரேசில் ஏமசு (Haemus), உரோடோப்பு (Rhodope) ஆகிய மலைகள உளளன. இம்மலைகள சந்திக்குமிடத்திற்கு அருகில் ஈப்ரசு (Hebrus) ஆறு உற்பத்தியாகிறது. முனனாளில் திரேசுப்பகுதியில் ஓட்ரிசே (Odrysae), பெசி (Bessi), தென்தெலெடே (Dentheletae), எடோனசு, சாபெய் (Sapaei) போனற பழங்குடியினர் வாழ்ந்தனர்.

திரேசியர்கள இநதோ-ஐரோப்பிய மொழி ஒன்றைப் பேசி வந்தனர். தொடக்கக்காலத்தில் நல்ல பண்பாட்டோடு வாழ்ந்ததோடு அல்லாமல் செய்யுள் இயற்றும் கலையிலும், இசையிலும் தேர்ச்சி பெற்றிருந்தனர். கிரேக்க நாட்டினர் கி.மு. 5-ஆம் நூற்றாண்டில் திரேசியர்களை நாகரிகமற்றவர்களாகக் கருதினர். அவர்கள சண்டையிடும் முறைகள காட்டுவாசிகள் சண்டையிடும் முறைகளைப் போல இருந்தன. அவர்களிடம பச்சை குத்திக்கொள்ளும் வழக்கம் இருந்தது. அரசியலில் ஒற்றுமையாகச் செயற்படவில்லை. கூலிக்கு வேலை செய்யக்கூடியவர்களாக இருந்தனர்.

திரேசின் பெரும்பான்மை மக்கள் பாரசீகத்தின் குடிமக்களாயிருந்தனர். பாரசீக நாட்டின் செர்க்சீசு (Xerxes) மன்னர் கி.மு. 480-இல் கிரேக்க நாட்டின்மீது படையெடுத்தபோது அவருடன திரேசின் பழங்குடியினர் சிலரும் சேர்ந்துகொண்டனா. திரேசியர்கள பலர் பேரரசர் அலெக்சாந்தரின் சிறு படைக்கருவிகள தாங்கிப் போரிடும் பிரிவில் பணியாற்றினர். கால்சு (Gauls) இனத்தவர் கி.மு. 281-க்குப் பிறகுபடையெடுத்துத்திரேசின உட்பகுதியில் செல்வாக்குப் பெற்றிருநதனர். மாசிடோனியாவின் அரசர் ஐந்தாம் பிலிப்பு கி.மு. 200-இல் திரேசின் வடபகுதியிலுளள பழங்குடியினர் சிலரை வென்றார். பின்பு உரோம நாட்டின ஆளுநர்கள் திரெசின பல பழஙகுடியினர்களை வெற்றிகொண்டு அப்பகுதியில் செல்வாக்குப் பெற்றிருந்தனர்.

செபை (Sapaei)நாட்டு அரசர் கோட்டிசு (Cotys), பரந்த திரேசு அரசை நிறுவி உரோமப் பேரரசிற்குக கீழ்ப்படிந்தஅரசராக இருந்தார். அவருடைய மகனுக்குப் பின வநதவர்கள நாட்டைப் பிரித்துத் தங்களுக்குள்ளேயே சணடையிட்டுக கொணடனா. அதனால் உரோமப் பேரரசர் கிளாடியசு கி.பி. 46-இல் அநத அரசைத் தமது பேரரசுடன் இணைத்துக் கொண்டார்.

காத்துகள் (Goths) இனத்தவர்களும், மற்றப் படையெடுப்பாளர்களும கி.பி. 3-ஆம் நூற்றாணடின இடையில் திரேசை அழித்துப் பலரைக் கொனறனர். கூனர்களின்(Huns) அட்டிலா(Attila) கி.பி. 447-இல் தலைவரான திரேசைத் தாக்கினர். சிலாவ் (Slav) இனத்தவர் கி.பி. 6,7-ஆம் நூற்றாணடுகளில் இங்குக் குடியேறினர்.

பலகேரிய நாட்டினர் கி.பி. 7-ஆம நூற்றாண்டிற்குப் பிறகு திரேசினமீது படையெடுததுத் தங்கள் செல்வாக்கை ஏற்படுத்தினர். பிராஙகு (Franks) இனத்தவர் கி.பி. 1204-ஆம் ஆணடில கானசுடாணடிநோபிளைப் பிடித்தவுடன, திரேசின் தென்பகுதி இலத்தின் பேரரசர் பால்டுவினின் மேலாண்மையின கீழ் வந்தது. வடபகுதி பலகேரியாவின் ஒரு பகுதியாக இருந்தது.

துருக்கி கி.பி. 14-ஆம் நூறறாணடில் திரேசைத் தாக்கிக் கைப்பற்றிக்கொண்டது. ஆட்டோமன் பேரரசில் இருந்த கிறித்தவர்களைக் காக்கும் உரிமை கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் உருசியாவிற்குக் கிடைத்தது. அதன விளைவாக உருசியாவிற்கும் துருக்கிக்கும் திரேசில் போர்கள் நடநதன. பின்பு ஏற்பட்ட பால்கன் போர்களின் விளைவாகத் திரேசின் ஒரு பகுதி துருக்கியருக்கும் மற்றொரு பகுதி பலகேரியருககும் கிடைத்தது முதல் உலகப்போரின் முடிவில திரேசின் பெரும்பகுதி கிரீசிற்குக் கிடைத்தது. வரலாற்றில் புகழ்பெற்ற திரேசு பிரிக்கப்பட்டு துருக்கி, கிரீசு, பல்கேரியா ஆகிய மூன்று நாடுகளிடமிருந்தது.

திரேசில் 1960-ஆம் ஆண்டில் துருக்கி நாட்டுப் பகுதியில் 792,00 மக்களும், கிரேக்க நாட்டுப் பகுதியில் 357,000 மக்களும், பல்கேரிய நாட்டுப் பகுதியில் 372,000 மக்களும் இருந்தனர். அ.சி.

*திரைடன், சான்:* சான் திரைடன் (Dryden John) கி.பி. 1631-ஆம் ஆண்டு இங்கிலாந்தில் நார்தாம்டன்சயர் (Northamptonshire) பகுதியில் உள்ள ஆல்ட்விங்கின் (Aldwinkle) என்னுமிடத்தில் பிறந்தார். இவர் தந்தை ஒரு பாதிரியார். இவர் ஒரு கவிஞராகவும், நாடக ஆசிரியராகவும், இலக்கிய வாதியாகவும் திகழ்ந்தார். இவர் கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் வாழ்ந்த கவிஞர்களுள் சிறந்த கவிஞராகத் திகழ்ந்தார். இவருடைய காலத்தைத்திரைடன் காலம் (Dryden Age) என்று கூறுகின்றனர்.



திரைடன், சான்

திரைடன் (Dryden John) தம் தொடக்க நிலைக் கல்வியை வெசுட்டு மினிசுட்டர் (West Minister) பள்ளியில் தொடங்கினார். பின்னர்க் கேம்பிரிட்சு பல்கலைக் கழகத்தில் உள்ள (Cambridge University) திரினிட்டி கல்லூரியில் படித்தார் (Trinity College). கேம்பிரிசு பல்கலைக் கழகத்தில் கி.பி. 1654-ஆம் ஆண்டு இளங்கலை பட்டம் பெற்றார்.

இவர் முதன் முதல் ஏசுடிங்சு பிரபு நினைவாக செய்யுட்களை எழுதினார். ஆலிவர் கிராம்வெல் (Oliver Cromwell) நினைவாக கி.பி. 1649-ஆம் ஆண்டு தம் முதல் காவியத்தை வெளியிட்டார். இக் கவிதை மூலமாகவே திரைடன் வெளி உலகிற்கு அறிமுகமானார். இரண்டாம் சார்லசு மன்னர் அரியணை யேறிய போது கி.பி. 1660-ஆம் ஆண்டு அவரைப் புகழ்ந்து பாடினார். அதன் மூலம் ஆசுத்திரிய இரீடக்சு (Astraea Redux) எனனும் கவிதையை வெளியிட்டார்.

பெர்க்சயர் பிரபுவின் மகளான எலிசபெத் ஓவார்டு என்பவரை (Elizabeth Howard) கி.பி. 1663-இல் மணந்தார்.

திரைடன் கவிதைகளில் குறிப்பிடத்தக்கது 'அனுசு மிராபிலிசு' (Annus Mirabilis) என்பதாகும். இது கி.பி. 1667-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இது இவருடைய நீண்ட கவிதையாகும். இது தச்சு -ஆங்கில வெற்றியைக் குறிப்பிடுகிறது. இப்படைப் பிற்குப் பின்னரே திரைடன் அரசவைக் கவிஞராக நியமிக்கப்பட்டார்.

திரைடன் வெளியிட்ட முதல் நாடகம் 'முரட்டு வீரம்' (The Wild Gallant) என்பது. இந்நாடகம் எதிர்பார்த்த வெற்றியைத் தரவில்லை. இருப்பினும் கி.பி. 1664ஆம் ஆண்டு இநதிய அரசி (The Indian Queen), இந்திய மாமன்னர் (The Indian Emperor) என்னும் நாடகங்களை வெளியிட்டார். இவர்தம் நாடகப் படைப்பில் சிறப்பானது கன்னி அரசி (The Maiden Queen). இந்நாடக வெளியிடு பெரும் செல்வாக்கைப் பெற்றுத்தந்தது. சிறந்த நாடகம் 'அனைத்தும் காதலுக்காக' (All for Love). என்பதாம். இந்நாடகம் சேக்சுபியர் எழுதிய அண்டோனி, கிளியோபத்ராவைப் பின்பற்றி எழுதப்பட்டதாகும். 'கிரெனடா வெற்றி (Conquest of Granada) பிறிதொரு சிறந்த நாடகமாகும்; பக்கிங்காம் பிரபு இவருடைய நாடகங்களைக் கேலி செய்யும் வகையில் கி.பி. 1671-ஆம் ஆண்டு ஒத்திகை (The Rehearsal) என்னும் நாடகத்தை வெளியிட்டார்; தம் பாவங்களை எள்ளி நகையாடும் வகையில் பல எள்ளல் கவிதைகளை வெளியிட்டார்.

சமயக் கொள்கையில் தீவிர ஆர்வமுடையவராக இருந்தார்; எனவேதான் சமயப்பரப்பு உத்தியாக ஒரு கவிதையை வெளியிட்டார்; தொடக்கத்தில் சீர்திருத்தக் கிறித்தவப் பிரிவைச் சார்ந்தவராக இருந்தார்; பின்னர் உரோமன் கத்தோலிக்க மதத்தைத் தழுவியது மட்டுமல்லாமல் அச்சமயத்தை ஆதரித்துக் காவியம் எழுதினார்; உரோமன் கத்தோலிக்க சமயத்தில் கொண்டிருந்த ஆர்வம் காரணமாகச் சீர்திருத்தக் கிறித்தவரான அரசர் வில்லியமும், மேரியும் அரசு கட்டில் ஏறிய போது 'நம்பிக்கை உறுதி மொழி' அளிக்க மறுத்தார். எனவே, அதன் பயனாக அரசவைக் கவிஞர் பதவியை இழக்க நேர்ந்தது.

திரைடன் தம் நாடகங்களுக்கு எழுதிய பெரும்பாலான முன்னுரைகள் இலக்கிய மதிப்புரைகளாக

உள்ளன. இலக்கிய மதிப்புப் பற்றி 'நாடகக் கவிதை பற்றிய கட்டுரை' என்னும் தனி நூல் எழுதியுள்ளார்.

இவர் தம் வாழ்க்கையின் இறுதிக் கட்டத்தில் பல இன்னல்களுக்கு ஆளானார்; வறுமையில் வாடி வதங்கினார், வறுமையின் காரணமாகக் கிரேக்க, இலத்தீன் கவிதைகளை மொழியாக்கம் செய்யும் வேலையை மேற்கொண்டார். அவ்வாறு மொழி பெயர்ப்புச் செய்த நூல்களில் வர்கில் (Virgil), அலெக்சாண்டரின் விருந்து (Alexander's Feast) ஆகியன தலைசிறந்தனவாகக் கருதப்படுகின்றன. இலக்கிய அவைகளையும் நடத்தினார். காங்கிரீவ், (Congreve), அடிசன் (Addison), போப்பு (Pope) போன்ற கவிஞர் பலர் இவரைப் பெரிதும் புகழ்வர். இவர் கி.பி. 1700-ஆம் ஆண்டு காலமானார்.

சு. ஆ.

**திரைப்படக் கலை:** அறிவியலின் வியக்கத்தகு ஆக்கங்களில் ஒன்று திரைப்படக் கலை. மனிதன் தன் அழகியல் உணர்வுக்கு விருந்தாக இதனைக் கண்டு பிடித்தான். இன்று காணும் திரைப்படம் இந்நிலை எய்த அறிவியல் அறிஞர் பலர், அவ்வப்போது பாடுபட்டுச் செழுமையுறச் செய்தனர். திரைப்படம், முதலில் ஒலியின்றி ஊமைப் படமாகத்தான் இருந்தது. பின்னர் ஒலி சேர்க்கப்பட்டுப் பேசும் படமாகியது. பிறகு வண்ணங்கள் சேர்க்கப்பட்டன. அதற்கும் அப்பால் திரைப்படம் அகன்ற திரைக்கு வந்து பேருருக் கொண்டது பலர் அமர்ந்து அரங்கம் ஒன்றில் திரைப்படம் காண்கின்ற நிலையிலிருந்து இல்லங்களுக்குள் குடும்பத்தினர் மட்டுமே கூடிக் கண்டு மகிழ்ந்திட இப்போது, சிறிய பெட்டிக்குள் சிறிய திரையில் இக்கலையை அறிவியல் சாதனையாளர்கள் கொண்டு வந்துள்ளனர்.

இந்திய நாட்டின் திரைப்படக் கலை தொடங்கி 75 ஆண்டுகளாகின்றன.

**ஊமைப்படம்:** 'புகைப்படம்', 'நிழற்படம்' என்றெல்லாம் குறிப்பிடப்படும் நிலையான படத்தைப் பிடித்துக் கொடுக்கும் நிழற்படக்கருவியை (Camera) கி.பி.1822-ஆம் ஆண்டு பிரான்சு நாட்டைச் சேர்ந்த சோசப் நீப்சே என்பார் கண்டுபிடித்தார். இக்கருவி மெய்யான தோற்றத்தைப் படம் பிடித்துக் கொடுக்கிறது.

'ஓவியத்தையோ புகைப்படத்தையோ அசைய வைக்க முடியுமா? இந்தக்கேள்வியோடு அறிவியல் அறிஞர்கள் பலர் ஆராயத் தொடங்கினர். வட்ட வடிவமான தட்டு ஒன்றின் நடுவே துளையிட்டு, துளையை ஓர் ஆணியில் பொருத்தி, தட்டில் ஓர் உருவத்தின் சலன நிலைகளைப் பல சித்திரங்களாக வரைந்து, அந்தத் தட்டைச் சுழலச் செய்து பார்த்தனர். அந்த உருவம், கை, கால்களை அசைத்தது. பின்னர், சித்திரத்துக்குப் பதிலாக, புகைப்படம் பிடித்து வட்டத் தட்டில் ஒட்டி உருட்டினர். அந்தப் புகைப்பட மனிதன் நகர்ந்தான்; நடந்தான்.

'இசைத் தட்டு' எனச் சொல்லப்படும் ஒலிப்பதிவுத் தட்டை, முன்னரே கண்டு பிடித்திருந்த அறிஞர் தாமசு ஆல்வா எடிசன் மேலும் கீழுமாக இரு உருளைகளைப் பொருத்தி, ஆடியில் பதிவுறச் செய்திருந்த புகைப்படங்களைக் கீழிருந்து மேல்நோக்கிச் சுழலச் செய்தார். இன்று மக்களால் காணப்படும் திரைப்படத்தின் அடிப்படை, தாமசு ஆல்வா எடிசனின் அந்தக் கண்டுபிடிப்பேயாகும்; அது, 'கினிட்டோசுகோப்பு (Kinetoscope) எனச் சொல்லப்பட்டது.

எடிசனின் கருவி விற்பனைக்கு வந்த 1894-ஆம் ஆண்டுக்கு முன்பே, ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் எட்வர்ட் முப்ரிசசு (Edward Mupbridge) 'சூப்பராகசோ சுகோப்' என்னும் அதிசயப் பெட்டியை அறிமுகம் செய்திருந்தார்.

ஆடியில் புகைப்படங்களைப் பதிவு செய்வதற்குப் பதிலாக கி.பி. 1870-ஆம் ஆண்டில், அமெரிக்காவில் கியாட்டு என்னும் அறிஞர் நிழற்படச் சுருளில் (Celluloid Film) பதிவுசெய்யும் புதுமையைக் கண்டு பிடித்திருந்தார்.

அதே முறைமையில், சலனப் படங்களை நிழற்படச் சுருளில் பதிவு செய்வதை, இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்த வில்லியம் பிரீசகிரீன் என்பார் கி.பி 1889-ஆம் ஆண்டு கண்டுபிடித்தார். அவரது கண்டுபிடிப்புக்குத் திரைப்படக் கருவி (Cinematograph) எனனும் பெயர் சூட்டப்பட்டது

ஓடும் படங்களை, அதன் அருகேயிருந்த உருப்பெருக்கி ஆடியின் வழியாக ஒவ்வொருவராகத் தான் பார்த்துக் கொண்டிருந்தனர்.

பின்னர் கி.பி.1895-ஆம் ஆண்டில், ஓடும் படத்தின் ஒளி ஓர் திரையின் மீது பாய்ச்சப்பட்டு, ஒரே சமயத்தில் பலர் அமர்ந்து பார்த்திடும் முறையையும் அதற்கான கருவியையும் பிரான்சு நாட்டின் உலூமியர் சகோதரர்கள் (Lumiers) கண்டுபிடித்தனர். அதுதான் இப்போதுள்ள திரைப்படத்தின் வடிவமாகும். இந்த முறை திரைப்படக்கலை (Cinematography) என்று பெயர் பெற்றது. அது வரையில் 15 மீட்டர் உள்ள நிழற்படச்சுருள்தான் தயாரிக்கப்பட்டு வந்

தது பின்னர் ஆயிரம் ஆடி நீளத்தில் நிழற்படச சுருள தயாரிக்கப்படலாயிற்று.

உரையாடலும் பாடலும் இசையும இலலாமல் கதைப் படங்களை தயாரிக்கப்பட்டன. அவை 'ஊமைப் படங்கள்' எனறு குறிப்பிடப்படலாயின.

அனைத்து, அறிவியல் கண்டுபிடிபபுகளுக்கும் ஏற் படுகின்ற பழைமையாளர்களின் எதிர்ப்பும் தொல்லை யும் திரைப்படக் கலைக்கும் விளைந்தன. 'பிலலி சூன்யம் போன்று கொடுமையானது இது' எனறு திரைப்படக் கலையைப் பிற்போக்காளர் வருணித்த னர். திரைப்படத் தயாரிப்பாளர்களும் அதனோடு தொடர்பு உடையவர்களும் கொடுமைப் படுத்தப் பட்டனர்; ஊருக்கு வெளியே துரத்தப்பட்டனர்.

**இந்தியாவில் திரைப்படக் கலையின் தோற்றமும் வளர்ச்சியும்:** இந்தியாவில், திரைப்படக் கலையின் அறிமுகம குறித்து, முனனோடியாகத் திரைப்படத் தயாரிப்பில விளஙகிய சர்தார் சந்துலால் சா பின வருமாறு எழுதியுள்ளார்: 'கி.பி.1896-ஆம் ஆண்டு பிரான்சு நாட்டின் உலூமியர் உடன்பிறப்புகள் முதல் திரைப்படம் காட்டும் கருவியுடன், பமபாய் நகரத்துக்கு வந்து சோந்து, உணவு விடுதியொன்றில், இருநூறு பார்வையாளர்களிடம தலைக்கு இரண்டு உருபா கட்டணத்திற்கு (அந்த நாளில் இது மிக அதிகமான விலை) ஒரு காட்சியை நடத்தினார் கள். வரைபடங்களையும் தொடர்பில்லாப் புகைப் படங்களையும் கொண்டதாக அந்தக் காட்சி இருந் தது. அதன் பின்னர், அதே மாதிரியான ஒரு கருவி யுடன், தன் எச்பிளனேடு மாளிகையில் தனியார் காட்சிகளைச் சாம்செட்சி-என் டாட்டா நடத்தத் தொடஙகினார். தொடர்ந்து பலர் காட்சிகளை அதே போனறு நடத்தலாயினர். தொடர்ச்சியிலலா படங்களில் மக்கள் பொழுது போக்கைக கண்டனர். சர்தார் சந்துலால் சா குறிப்பிட்டுளள அநதக்காட்சி நடைபெறறது கி.பி.1896-ஆம் ஆணடாகும்.

அமெரிக்க நாட்டின் இலாசு ஏஞ்செல்சு(Los Angels) நகரில், உலகின் முதலாம திரையரங்கம் 1902-ஆம் ஆண்டு கட்டப்பட்டது.

பொதுமக்களுக்கான முதலாம் திரைப்படக் காட்சியை மானெக் டி. சேத்னா என்பார்,1904-ஆம் ஆண்டில், பம்பாய் நகரில் காண்பித்தார். அது ஏசு வின்வாழ்க்கை' என்னும் இரு சுருள படம் அப்படம் அங்கே, கையினால் சுழலச் செய்யும் படம காட்டும் கருவியின் மூலம் திரையிடப்பட்டது. இநதிய நாட் டின் முதலாம் திரையரஙகம் 1907-ஆம் ஆணடில, பம்பாய் நகரில் நிறுவப்பட்டது. திரைப்படத் தயா ரிப்பிலும் இந்திய நாட்டினர் ஈடுபடத் தொடங் கினர்.

தாதா சாகேப் பால்கே (Dada Sakeb Phalke) எனபார் இந்தியாவின முதல் முழு நீளக் கதைத் திரைப்படததைத் தயாரித்து 1913-ஆம ஆணடு திரை யிட்டார். அநதப் படத்தின பெயர்-'இராசா அரிச்சந திரா' என்பதாகும.

இந்தப் படத்தின் நீளம 1110 மீ. அளவில் இருந் தது. இதனைத தயாரித்த தாதா சாகேப் பாலகே, 'இது முழுக்க முழுக்க இந்தியர் சாதனை' என்றும், அந்த நாளின தேசபக்த உணர்வினைக் கொணடது' என்றும் குறிப்பிட்டுள்ளார். அவர் இந்தியததிரைப் படத் தொழிலின் தநதை எனறு போற்றபபடுகிறார்.

அவர்தம் நினைவைப் போற்றும் வணணம் மத் திய அரசினர், ஆணடுதோறும் 'தாதா சாகேப் பால்கே விருது' என்ற பெயரில், சிறந்த திரைப்படத் தயாரிப்பாளர் ஒருவருக்குப பரிசளித்து வருகினற னர்.

**பேசும்படம்:** 'ஊமைப் படம்' என்று குறிப்பிடப் பட்ட இயங்கு படக் காலத்தில், பார்வையாளர் களின் செவிச்சுவைக்காகத் திரையின அருகில (அல லது-பின்புறத்தில்) கலைஞர்கள் நின்று கொண்டு பேசுவார்கள்; கதை சொல்லுவார்களா; பாடுவார் களா.

அறிவியலின வியத்தகு சாதனையாக, நிழற் படச்சுருளில் ஒலியைச சேர்க்கும் முறையும் 1927-ஆம் ஆணடு கணடுபிடிககப்பட்டது. அமெரிகக நாட்டின வார்னர் சகோதரர்களே அந்தச் சாதனையாளர் கள்.

அதுவரையில் நடிப்பு, நாட்டியம், ஓவியம் ஆகிய கலைகளை மட்டுமே உளளடக்கியதாக விளஙகி வநத திரைப்படக் கலை, அதன் பினனர் இசைக கலையையும் தனனுள ஐக்கியப் படுத்திக்கொண்டு நுணகலைகள அனைத்தின சஙகமமாகப் பேருருக் கொணடது.

திரைப்படம் பேசும்-பாடும் படமாக மாறியது தொடக்கத்தில் மேற்கு நாடுகளிலிருந்துதான் பேசும் படங்கள இந்தியாவிற்குக கொண்டுவரப்பெறறன.

முதன முதலாக இந்தியாவுக்கு 1929-ஆம் ஆண டில் காதல் கீதம் (Melody of Love)என்னும் ஆஙகில மொழிப் பேசும படம, வந்தது. இந்த படம் இநதி யாவுக்குள் வந்தவுடன், இநநாட்டின் திரைப்படக கலைஞாகளும படைப்பாளிகளும், தாங்கள ஏற கெனவே முப்பதாணடுக் காலமாகப் பகுவப்பட்ட

திரைப்படத்துறையின் 'நூற்றாண்டின் அதிசயததை' நோக்கி ஒருஙகிணைந்து எழுநதனர் எனறு திறனாய வாளர் பி.டி.கார்கா கூறியுளளார்.

அர்தேசிர் இரானி என்பாரின பேரரசு நிழறபடச சுருள் நிறுவனம் (Imperial Film Company) எனற அமைப்புத்தான் 'ஆலம ஆரா' (Alam Ara) எனனுமு திரைப்படத்தை 1931-ஆம் ஆண்டு வெளியிட்டது. இந்தி மொழியில் தயாரிககப்பட்ட இதுவே, இநதி யாவின் முதல் முழுநீளப்பேசும படமாகும்.

**தமிழகத்தில் திரைபடக் கலை.** 'ஏசுவின் வாழ்ககை' எனனும சலனப்படத்தை இந்திய நாட் டுக்குக் கொணடு வந்து ஊா ஊராக முகாமிட்டுத திரையிட்டுக கொணடிருந்த துபானட்டு என்ற பிரஞ சுக்காரா உடலநலக் குறைவினால தாயகம திருமப நேரிட்டது.

அப்போது, அவரது படச்சுருளையும் படங காட்டும் கருவியையும் சாமிக்கணணு வினசெணடு எனனும் தமிழர் ஒருவர் விலை கொடுத்து வாஙகிக கொணடார்; ஊர் ஊராகச சென்று அப்படத்தைத் திரையிட்டார்.

அவர் தம் சொந்த ஊரான கோயமுத்தூர் நகரில், 1914-ஆம் ஆணடில், பல்சுவை கேளிக்கை மனறம் (Variety Hall) எனனும திரையரங்கததைக் கட்டினார்; தெனனகத்தில தோனறிய நிரநதரமான முதல் திரையரங்கம இது தான. இதனைத தொடர்நது, சென்னையிலும் தமிழகததின பிற நகரங்களிலும திரையரஙகுகள பல தோனறின. ஊமைப் படங்களின காலத்திலேயே, தமிழ நாட்டி லும் திரைப்படத் தயாரிப்புப் பணி நிகழ்ந்திருக கிறது. தமிழகத்தின் முதல திரைப்படததைத் தயா ரித்தவர் எனனும் பெருமை ஆர்.நடராச முதலியார் எனபாரையே சாரும். இவர் 1916-ஆம் ஆணடு 'கீசக வதம்' என்கிற பெயரில ஒரு பேசாப் படத்தைத் தயாரித்து வெளியிட்டார்.

செனனையில்,நடராச முதலியாரைத்தொடர்ந்து ஆர் வெஙகையா, அவர் மகன் பிரகாசா, நிலக கிழார் மோதி நாராயணராவ், சிவகஙகை நகரைச் சேர்ந்த ஏ.நாராயணன் ஆகியோா திரைப்படத் தொழிலில் ஈடுபட்டனர்.

இவாகளில், சிவகஙகை ஏ. நாராயணன தமி ழைத் தாய்மொழியாகக் கொணடவர். வஙகியொன் றின கிளையில் பணியாற்றி வநத இவர் 1922-ஆம் ஆண்டு திரைப்படத் தொழிலில் இறஙகினார். முத லில பம்பாய நகரத்துக்குச் சென்று, தஙகியிருந்து, திரைப்படத் தொழிலில பயிற்சி பெற்ற ஏ.நாரா யணன் 1929-ஆம ஆணடு சென்னைக்குத்திரும்பினாா. சொநத முயற்சியில திரைப்படஙகளைத் தயாரிககத தொடங்கினார்.

இநதியாவின முதல பேசும்படமான 'ஆலம ஆரா' 1931-ஆம் ஆணடு சென்னைககு வநது சோநதது. 'ஆலம ஆரா' வை உருவாககிய அர்தே சிரி இரானி எனபார்தான முதல தமிழ்ப் பேசும படத்தையும தயாரிததார்.

'காளிதாசு' எனனும் பெயர் கொண்ட அநதப் படம் சோதனை முறையில படைக்கப்பட்டது. தமிழ, தெலுஙகு இரு மொழிகளைச் சோநத கலைஞாகளும் இப்படததில் நடித்தனா தமிழ்க் கலைஞர்களதமிழில பேசினாாகள்; பாடினாாகள. தெலுங்குக்கலைஞாகள அவர்கள் மொழியில பேசினாாகள; பாடினாாகள.

இநதப் படம 1931-ம ஆணடு திரையிடப பட்டது. தமிழகத்தின பேசும் படஙகள் தொடககத தில பமபாய், புனே, கலகததா போனற வட இந திய நகரஙகளின படப் பிடிப்புக கூடஙகளில தயாரிக கப்பட்டன.

சிவகங்கை ஏ. நாராயணன் 1934-ஆம ஆண்டில் சென்னை நகரில தமிழகததின முதலாம படப்பிடிப் புக் கூடததை நிறுவினாா. 'சவுணட் சிட்டி-சீனிவாச சினிடோன்' எனற பெயரில் அநதக் கூடம் உருவா கியது ஏ நாராயணன தமிழத் திரைபபடத் துறை யின வழி காட்டி என்ற சிறப்பைப் பெற்றார்.

**திரைப்படம் உருவாகும் முறை:** நனகு திட்டமிட்டுத் தயாரிக்கப்படும் திரைப்படததிற்குக் கதை,திரைக்கதை, உரையாடல்கள தயாரிப்பதற்கே மிகுந்த காலம தேவைப்படும். இதனை ஒருவர், அல் லது பலர் கவனிப்பா. முதலில் 'கதை விவாதம்' நடைபெறும். அது முடிநத பின்னா 'திரைக்கதை' எழுதப் பெறும திரைக்கதை எழுதும் போதே காட்சி களுக்கான வரிசைகள் முடிவு செய்யப்பெற்று; 'உரை யாடல்கள' பற்றி முடிவு செய்யப்படும். அநத நிலை யிலேயே எடுக்கப்பட வேணடிய காட்சிகளில் 'தூரக் காட்சி' 'மைய நிலைக் காட்சி' 'அண்மைக் காட்சி' பற்றித் தீர்மானித்துக் குறிப்பெடுத்துக் கொளளப் படும். இவை அனைத்தும 'திரைக் கதை தயாரித் தல்' எனனும் தலைப்பில அடங்கும்.

திரைப்படத் தொழிலில், 'தயாரிப்பாளர்' என னும்சொல முதலீடு செய்தோ, பிறரிடமிருந்து முத லீட்டைப பெறறோ, படத்தை உருவாக்கும் பணி யில ஈடுபடுபவரைக் குறிக்கும.இவர் தம் படததிறகுத் தேவைப்படும் இயக்குநர், கதையாசிரியர், பாடலா

சிரியர், இசையமைப்பாளர், நடிகர்-நடிகையர் போன்றோருடன் ஒப்பந்தம் செய்து கொள்கிறார்.

'தொழில் நுட்பக் கலைஞர்கள்' படப்பிடிப்புக் கூடங்களைச் சேர்ந்தவர்களாகவே இருப்பார்கள். (இப்போது ஒளிப்பதிவாளர் பலர் தனித்தும் இயங்குகிறார்கள்). காட்சியின் தன்மைக்கு ஏற்ப, 'ஓவியர்கள்', 'சிற்பிகள்', 'தச்சுத் தொழிலாளர்கள்' துணையோடு 'கலை இயக்குநர்' அரங்கத்தை நிருமாணிக்கிறார். பாடல்களுக்கு மெட்டமைத்து, 'இசைக்கருவிகளின் கலைஞர்களின்'குழுவுக்குத் தலைமைஏற்றுப் பாடல் பதிவு' செய்தல், படம் தயாரித்து முடிந்து தொகுக்கப்பட்ட பின்னர்ப் பின்னணி இசை' சேர்த்துக் கொடுத்தல் ஆகியவற்றைச் செய்பவர் இசையமைப்பாளர் ஆவார். இந்தப் பணி 'மறு பதிவு செய்தல்' என்று குறிப்பிடப்படுகிறது. நடனங்களை நெறிப்படுத்துபவர் 'நடன இயக்குநர்' என்றும், வீர தீர சாகசக் காட்சிகளில் நடிகர்களைப் பயிற்றுவிப்பவர் 'சண்டைக் காட்சி இயக்குநர்' என்றும் குறிப்பிடப்படுகிறார்கள். நடிப்புக் கலைஞர்களுக்குக் 'கதை மாந்தர்கள்' தன்மைக்கு ஏற்பத் தோற்றத்தை வண்ணங்களால் 'ஒப்பனையாளர்' உருவாக்குகிறார்; உடைகளைத் தயாரித்து 'உடையலங்காரக்கலைஞர் உடுத்திவிடுகிறார். படப்பிடிப்பின் போது, அரங்கத்தில் படத்தைப் பிடிக்கும் ஒளிப்பதிவாளர் கட்டளைகளுக்கு ஏற்ப 'ஒளி உதவியாளர்கள்' பலர் விளக்குகளை இயக்குவிக்கிறார்கள். பாடல்களையும் உரையாடல்களையும் பின்னணி இசையையும் ஒலிப்பதிவாளர் பதிவு செய்கிறார். ஒளிப்பதிவாளரும் ஒலிப்பதிவாளரும் பதிவு செய்து தருகின்ற 'நிழற்பட எதிர் படிவச் சுருளை'ச் செய்முறைச் சாலையில் 'நிழற்பட நேர்படிவமாக மாற்றுகிறார்கள். எடுத்துக் கொடுக்கப்படும் படத்'தில் தேவையையும் நயத்தையும் கருதி வேணடாத பகுதிகளை வெட்டி எடுத்துவிட்டுப் படத்தொகுப்பாளர் இணைத்துக் கொடுப்பார். இநதப் பணிகள் முடிந்தபின், முழுமையான படத்திற்குப்பின்னணி இசை இணைக்கப்படும். மேலே சொல்லப்பட்ட அனைத்துப் பணிகளையும் அறிந்தவராக இருக்கின்ற இயக்குநர், அனைத்துப் பணிகளையும் மேற்பார்வையிட்டு, வழிநடத்தி, படைப்பில் முழுமையாகப் பங்கேற்பார். தயாரான படம், அரசின தணிக்கைக்கு அனுப்பப்படுகிறது. தணிக்கை முடிந்தபின் மாவட்டங்களில் உள்ள வெளியீட்டாளர் தேவைக்கு ஏற்ப, செய்முறைச் சாலையில் படத்திற்குப் பிரதிகள் எடுக்கப்பெறும்.வெளியீட்டாளர்கள் (விநியோகசுத்தர்கள்) படத்தைத்திரை அரங்குகளுக்கு அனுப்புகின்றனர். வெளியீட்டாளர்கள், திரையரங்க உரிமையாளர்கள் ஆகியோரைக் கடந்து தான் படைப்பாளியின் படம் பார்வையாளனுக்கு வந்து சேருகிறது.

**கதைகள்**: புராணங்கள், வழி வழியாகச் சொல்லப்பட்டு வந்த இராசாராணிக் கற்பனைக் கதைகள் போன்றவையே 1947-ம் ஆண்டு வரை தமிழ்த் திரைப் படங்களாக வெளிவநதன அவற்றில் பல, மேடையில், நாடகங்களாக நடிக்கப்பட்டு வந்த கதைகளாகவும் இருந்தன. முதன் முதலாக 1935-ஆம் ஆண்டில் இக்காலக் கற்பனைக் கதைகள் திரைப்படங்களாகத் தயாரிக்கப்பட்டன.

செய்தித்தாள்களில் வெளிவந்த இக்காலக் கற்பனைக் கதைகளைத் திரைக்கு ஏற்றவாறு திருத்தி, திரைப்படங்களாக உருவாக்கும் முயற்சி 1937-ஆம் ஆண்டில் தொடங்கியது. எணணிக்கையில இநத வகையிலான திரைப்படஙகள் குறைந்த அளவிலானவை என்றாலும் தமிழ்த் திரைப்படக் கலையின் வளர்ச்சிப் போக்கில் புதிய நம்பிக்கையைத் தோற்றுவித்தன.

'வளரும் நாடுகளில்-சினிமா' என்ற தலைப்பில், புதுதில்லியில் 9.11.1979-இல் ஏழாம் உலகப் பட விழாவின்போது ஒரு கருத்தரங்கம் நடைபெற்றது. அதில் 'சமூக, பொருளாதாரச் சூழல்' என்னும் பொருளில் என்,வி.கே. மூர்த்தி எனபார் இந்தியத் திரைப்படங்களின் உள்ளடக்கம் குறித்து ஒரு கட்டுரை படித்தார். அதில், 'விடுதலைப் போராட்டக் காலத்தின் திரைப்படப் படைப்பாளிகளிடம் நாட்டுப் பற்றுணர்வின் தாக்கம் ஏற்பட்டிருந்ததால அவர்கள் படைப்புக்களில் அது பிரதிபலித்தது. பொழுது போக்குக்கான ஓர் கருவி எனத் திரைப்படக் கலை கருதப்பட்டிருப்பினும் தொடக்கக்காலப் படங்களில் மக்களின் நாட்டுப் பற்றுணர்வு எதிரொலிக்கவே செய்தது. நாட்டு விடுதலைக்குப் பின்னர், திரைப்படத் துறையில் ஏற்பட்ட மாற்றம் அதிர்ச்சி தரத்தக்கது. இந்திய சினிமாவில் 'பகட்டு' நுழைந்த பின்னர் இந்தத் துறையானது 'கட்டண வசூல் இலாபப் பொருளாதாரத்தையே' அடிப்படையாகக் கொண்டது என்ற அழுத்தம் கொடுக்கபபட்டுவிட்டது' என்று அவர் கூறியுள்ளார்.

இந்தியத் திரைப்படங்களின் உள்ளடக்கம் குறித்த இந்தக்கருத்து தமிழ்ப் படங்களுக்கும் ஏற்புடையதேயாகும்.

அறுபதாம் ஆண்டுகளிலிருந்து, தமிழ்த் திரைப் படத் துறையில் ஒரு புதிய போக்குப் புகுந்தது. தமிழ்நாடு, தமிழர் பண்பாடு சார்ந்த புதிய புதிய கதைகளைத திரைக் கதைகளாக்குவதற்குப் பதில் பிறமொழிகளில் வசூலில் வெற்றிகரமாக ஓடிய படங்களின் கதைகளை விலை கொடுத்து வாங்கி, தமிழ்ப் படங்களாகத் தயாரிக்கத் தொடங்கினார்கள்.

இத்தகைய படங்களின் கதைகளை 'நிலைநாட்டிய கதைகள்' என்று குறிப்பிடுகிறார்கள். பிற மொழித் திரைக்கதை தயாரிப்பை 'மறு தயாரிப்பு' என்று கூறுகிறார்கள். தமிழ்நாட்டில் 1960-ஆம் ஆணடுக்குப் பின்னர்த் தயாரிக்கப்பட்ட தமிழ்ப் படங்களில ஏறத்தாழ 70 விழுக்காடு மறு தயாரிப்புப் படங்களேயாகும்.

**கலைஞர்கள்:** ஊமைப் படக்காலத்தில், நடிப்பதற்குக் கலைஞர்கள் முனைந்து முன் வந்ததில்லை. பேசவும் பாடவும் வாய்ப்பு இல்லாததால் தமிழ்க் கலைஞர்கள திரைப்படத் துறையைப் புறக்கணித்தனர். அத்துடன் மிகவும் சக்தி வாய்ந்த மினவிளக்குகளின் முன்பாக நின்று நடிப்பதால் தங்கள் முக அழகும் உடல்நலமும் பாதிப்புக்குள்ளாகும் என்ற அச்சமும் கலைஞர்களிடம் இருந்தது. பேசாப் படக்காலத்தில், அதில் பேச்சும் பாட்டும் இலலாததால் சண்டையும் நடனமும் பெரிதும் இடம்பெற வேண்டியிருந்தது. இதன் காரணமாக அந்நாளின் திரைப்படங்களில் குத்துச்சண்டை, கத்திச் சண்டை வீரர்களும் நாட்டிய நடிகைகளும் சிறந்த நடிகர்களாக விளங்கினர்.

படம் பேசத் தொடங்கியதும் நிலைமை முற்றாக மாறியது. கதை, உரையாடல், பாடல்கள போன்றவற்றைத் திரைப்படத்துக்கெனத் திட்டமிட்டு எழுதிக் காலத்தை வீணாக்க விரும்பாத தயாரிப்பாளர்கள், மேடைகளில் நடைபெற்றுக் கொண்டிருந்த நாடகங்களையே ஒப்பந்தம் செய்தார்கள். ஒப்பந்தம் செய்யப்பட்ட நாடகத்தில், நடித்துக் கொண்டிருந்த அனைத்து நடிகர்களையும் திரைப்படத்தில் நடிப்பதற்கு அழைத்துச் சென்றார்கள். அந்த நாள்களில், தமிழகத்தில் எண்ணற்ற நாடகக் குழுக்கள் இருந்தன. 'சிறார் நாடகக் குழுக்கள்' 'தொழில் முறை'யாக இயங்கி வந்தன. இந்த நிறுவனங்கள் நடத்தி வந்த நாடகங்களில் பல, தொடக்கக் காலத்தில் திரைப்படங்களாகத் தயாரிக்கப்பட்டதால் அவற்றின் நடிகர்களும் திரைப்படத்துறை நுழைவு பெற்றார்கள்.

தொழில்முறை நாடகக் குழுக்களின் படிப்படியான மறைவுக்குப் பின தமிழகத்தில் 'பயில்முறை' நாடகக்குழுக்கள் தோன்றி, அவை நடத்திய வெற்றிகரமான நாடகங்கள் பல திரைப்பட வடிவம் பெற்றன.

தமிழ்த் திரைப்படத்துறை காலூன்றிக் கொண்டதையும், அது மக்கள் மீது பெற்றுள்ள மாபெரும் செல்வாக்கையும் கண்ட பின்னர் இலக்கியம், பத்திரிகை, அரசியல், அரசுப்பணி போன்ற பல் வேறு துறைகளில் பங்கேற்றிருந்தோர் திரைப்படத் துறைகக வந்தனர்.

'திரைப்படக் கலையின் பல்வேறு பிரிவுகளைப் பயிற்றுவிக்கக், கல்விக் கூடங்கள் ஏற்படுத்த வேண்டும்' என்று தமிழ்நாட்டவர், ஆங்கிலேயர் ஆட்சி செலுத்தியபோதே பல தடவைகள் கோரிக்கைகளை எழுப்பினார்கள்; ஆனால் பயன் விளையவில்லை.

**உருவமும் உள்ளடக்கமும் சிறப்புற அரசு முயற்சிகள்:** திரைப்படம் என்பது தொடர்ந்து வளருகின்ற துறை. இத்துறைகுறித்து உலகப் புகழ் பெற்றிட்ட, இந்தியாவின் திரைப்படப் படைப்பாளியான மிருணாள் சென் கூறுகிறார்: 'புதிய திரைப்படமானது பார்ப்பதற்கு எநத அளவிற்கு முக்கியமான கலையாகிறதோ அதே போலக்கேட்பதற்கும் உரிய கலையாகும் என்ற உண்மை மட்டும் மாறாமல் இருக்கிறது. வளர்ந்து வரும் இத்துறையில் இதன் வளர்சசி அதற்கே உரிய வழிமுறைகளாலும் தொழில் நுட்ப முறைகளாலும் தீர்மானிக்கப்படுகிறது. இதன் வழி முறைகள், தொழில் முறைகள் எல்லாம் அறிவியல், தொழில் நுட்ப வளர்ச்சியையே சார்நதிருப்பதால் நாளுக்கு நாள் தோற்றத்திலும் முறையிலும் மிக்க வேகத்தில் மாறி வருகிறது. இத்துறையினுடைய பல வேறு விதப் போக்குகளால இன்றுவரை பிரமிக்கத் தக்கதொரு சரித்திரத்தைப் படைத்ததோடு மட்டுமல்லாமல், நம்ப முடியாத வேகத்தில் இதன் செயற் பரப்பிற்கான களமும் விரிவடைந்து வருகிறது.

பெரும்பான்மையான திரைப்படங்களின் கதைகளும் கலைஞர்களும் நாடக மேடைகளில இருந்து திரைப்படத் துறைக்கு வந்ததால் நீணட காலம் வரை படங்கள் புகைப்படம் பிடிக்கப்பட்ட நாடகங்களாகவே அமைந்திருந்தன.

திரைப்படம் என்பது 'பார்ப்பதற்குரிய கலை' என்கிற நோக்கில் படங்களின் 'உருவம்' வளராமல் தேங்கியிருந்தது,

நாடு விடுதலை பெற்றபின்னர், திரைப்படக் கலையின் வளர்ச்சிக்கு, அதன் உருவமும் உள்ளடக்கமும் வளர, பல்வேறு முயற்சிகளை மைய அரசு மேற்கொண்டது.

பிறநாடுகளின் திரைப்படக்கலை வளர்ச்சியை இந்தியாவிலுள்ள படைப்பாளிகள் கண்டுணரும் வாய்ப்புக்காக 1952-ஆம் ஆண்டிலிருந்து இநதியாவில் உலகப் படவிழாக்களை மைய அரசு நடத்தத் தொடங்கியது.

திரைப்படக்கலை வளர்ச்சியில் 'உலகப் படவிழா'வுக்கு மிக உயந்த இடமுணடு. கி.பி.1920-ஆம் ஆண்டு

களில் திரைப்பட ஆர்வலர்களால், பிரான்சு நாட்டில 'படவிழா' முதனமுதலாகத் தொடஙகப் பெற்றது. பின்னர்தான் பலவேறு நாடுகளின் அரசுகள் அதிகார பூர்வமாக உலகப் பட விழாககளை நடததத தொடங்கின.

பட விழாவின பயன்குறித்து, இநதியாவின் முதல படவிழாவில் பார்வையாளராக இருந்த மிருணாள சென சொல்லுகிறார்; 'பண்டித நேரு காலத்தில் முதன முதலில, இந்தியாவில் உலகப் பட விழாவை 1952-இல் நடத்தியபோது பல்வேறு திரையரங்குகளில் காட்டபபட்ட உலகின் பலபாகத்துத் திரைப்படங களைத்தேடித்தேடி ஓடிச் சென்று பசியோடு பார்தத இந்திய இளைஞர்களில் நானும் ஒருவன். உலகப் பட விழாக்கள தான் இந்தியத் திரைப படத்திற்கு புதிய பார்வையை, புதிய படைப்புக் கொளகையை, புதிய வெளிச்சத்தை அளித்தன.'

சிறந்த படைப்புகளை ஊக்குவிக்கும தன்மையில், சிறநத படஙகளுக்குப் பரிசளிக்கும் திட்டத்தை 1954-ஆம் ஆணடு மைய அரசு மேற்கொணடது

திரைப்படக்கலையை, அறிவியல் கல்வியாகக் கற்றுத்தர, புனே நகரில் திரைப்படக் கல்லூரியை மைய அரசு நடத்தி வருகின்றது. தமிழநாடு அரசும் அத்தகையதோர் கல்விக் கூடத்தை, சென்னை நகரின் அடையாறு பகுதியில் ஏற்படுத்தியுளளது.

இத்தகைய கல்விக் கூடங்களில திரைக் கலையை ஓர் அறிவியலாகக் கற்றுத் தேறி ஆணடுதோறும் இளைஞர்கள் வெளிவருகிறார்கள்.

இவர்களது வருகையால், தமிழ்ததிரைப்படங் களின் தோற்றத்தில் வியத்தகு வளர்ச்சி ஏற்பட்டுளளது.

தரமான படங்களின் தயாரிப்பை மிகுதிப்படுத்துவதற்காக, மைய அரசு 'தேசிய திரைப்பட நிதி உதவிக் கழகம்' என்னும் அமைப்பை நிறுவியுள்ளது. மாநில அரசும் 1968-ஆம் ஆண்டு முதல் சிறந்த படங்களுககுப் பரிசளிக்கும் திட்டத்தைச் செயல் படுத்தி வருகின்றது.

திரைப்படத் தொழில் வணிக நோக்கில சிறந்தது என்னும் எண்ணத்தில் போட்டி மிகுந்த துறையாக விளங்குகின்றது.

வணிக நோக்கிலான ஒரு திரைப்படத்தைத் தயாரிக்க ஏற்படும் செலவினங்கள் பின்வருமாறு கணக்கிடப்பட்டுள்ளது.

வணிக நோக்கிலான ஒரு படத்தை உருவாக்க, அதன தயாரிப்பாளர், தயாரிப்புச் செவில் 5 விழுக்காட்டை மூலதனமாகப் போடுகிறார்; 55 விழுக்காட்டை வட்டிக்கு கடனாக நிதி உதவியாளர்களிடமிருநது பெறுகிறார்; 40 விழுக்காடு தொகையை வெளியீட்டாளர்களிடமிருநது தயாரிப்பில் உள்ள படத்திற்கு முன் பணமாகப் பெறுகிறார்.

இநதிய நாட்டில் ஆண்டுதோறும ஏறத்தாழ 73 திரைப்படஙகள (1981) நாட்டின பதினான்கு மொழிகளில் தயாரிக்கப்படுகினறன; இத்தொழில ஏறத்தாழ உருபாய் 20 ஆயிரம் கோடி மூலதனமாக இடப்பட்டுள்ளது; இத்தொழில நேரடியாகவும் மறைமுகமாகவும் 20 லட்சம் மக்கள் வேலை வாயப்பைப் பெறுகினறனர்.

இந்திய நாடு முழுதுமுள்ள பதினோராயிரம் நிரந்தரத் திரையரங்குகளில் நாள்தோறும் 75 லட்சம் மக்கள திரைப்படங்களைப் பார்க்கினறனர்.

தமிழ்நாட்டில் 1982 மார்ச்சு மாதத்தில் 972 நிரநதரத் திரை அரஙகுகளும் 800 நிரந்தரமறற திரை அரங்குகளும் இருந்தன.

தமிழில, ஆணடு தோறும் நூறறுக்கும் மேற்பட்ட திரைப்படங்கள் தயாரிக்கப்படுகின்றன. 1984-ஆம ஆண்டில் 102 படங்கள உருவாக்கப்பட்டன.

மிகுந்த வருவாய் தரும் தொழில் என்று கருதும் வணிகச் சிநதையுடைய தயாரிப்பாளர்களின் வருகையால் நாட்டு விடுதலைக்குப் பின வெறும பொழுது போக்குப் படங்களே மிகுதியாகத் தயாரிக்கபபடுகின்றன.

உலக நாடுகளின் படங்களுக்குச் சமமாக உருவத்திலும் உள்ளடக்கத்திலும் சிறந்த படஙகளைத் தயாரிக்கவேண்டும் என்கிற அவா அவ்வப்போது புதிய இளம் சிந்தனையாளர்களுக்குத் தோன்றுவதன காரணமாக அவ்வப்போது, தமிழிலும், தரத்தில் சிறந்த கலைப்படங்கள் தயாரிக்கப்படுகின்றன.

**எழுபத்தைந்தாம் ஆண்டு விழா:** இந்தியத் திரைப் படைத்துறையின் எழுபத்தைந்தாம் ஆண்டு விழாக காலமாக 1988-ஆம் ஆண்டு அமைந்தது.

தொடக்கக் காலங்களில் தாதா சாகேப் பால்கே, 'விலலியம்சன்' என்னும் பெயருடைய படப்பிடிப்புக் கருவியுடனும் சிறிது மூலப்படச்சுருளுடனும், துளையிடுவதற்கான கருவியொன்றுடனும் இங்கிலாந்து நாட்டிலிருந்து திரும்ப வந்து சேர்ந்தார். தனது இராசாஅரிச்சந்திரா' படத்தின் மூலம் இந்தியத் திரைப்படத் தொழிலைத் தொடங்கி வைத்தார்.

தாதா சாகேப் பால்கே, 1917–ஆம் ஆண்டில் 'இநதிய நாட்டு மக்கள் திரையில் இநதிய உருவங் களைப் பார்ககத்தான் செய்வார்கள் என்ற உறுதி யில், நிதி உதவி கிடைக்காத நிலை ஏற்பட்டும் கூட, திரைப்படத் தொழிலைப் பாதுகாக்கும் கடமையில் எனது வாழ்வையே விலையாகக் கொடுக்கத் தீர் மானித்து விட்டேன' என எழுதினார்.

இந்தியா விடுதலை பெற்றது.மூலப் படச்சுருள் முதல், திரைப்படத் தயாரிப்புக்கான கருவிகள் வரை உள நாட்டிலேயே இப்போது உற்பத்தி செய்யப்படு கினறன. திரைப்படக் கலை வளர்ந்தது; மக்களின அன்பிற்கும் போற்றுதலுக்கும் உரிய துறையாக அது பேருருக் கொண்டுள்ளது. அறிவியலின் வளர்ச்சிக்கு ஏற்ப திரையும வளர்ந்தது; 'அகன்ற திரை', 'சினிமாசுகோபு', '70 எம்.எம்.' என்று வளர்ந்தது. கறுப்பு வெள்ளையில் பிறந்த திரைப்படம் இப்போது வண்ணங்களில் ஒளி விடுகின்றது. ஆனால், அதே அறிவியலின வளர்சசியால் திரைப்படத் தொழி லுக்குப் புதிய புதிய சிக்கல்களும் தோனறியுளளன. 'தொலைககாட்சியாலும் வீடியோப் படஙகளாலும் திரைப்படத் தொழில் பெருத்த இழப்புகளுக்குள் ளாகியுள்ளது' எனறு இததுறையில் உளளோர் கூறு கின்றனர்.

'தொலைக்காட்சியின் விளம்பரதாரர் நிகழ்ச்சி களில் பொழுதுபோக்கு நாடகஙகள ஒளிபரப்பப படுவ தாலும் தொலைக்காட்சி நிலையமே வாரததில மூன்றுக்கு மேற்பட்ட திரைப்படங்களை ஒளிபரப்பு வதாலும் திரையரஙகுகளுக்குப் படம் பார்க்க வரு கினற மக்கள் தொகை நாளுக்கு நாள் குறைந்து வருகிறது. பல இலட்சம் ரூபாய்செலவு செய்து தயா ரிக்கப்படும் திரைப்படத்தை வீடியோவில் திருட்டுத் தனமாகப் பதிவு செய்து விற்பனை செய்கிறார்கள. இதனாலும் திரைப்படத்தொழில் பெரும் இழப்புக் குள்ளாகிறது' எனறு திரைப்படத் துறையினர் கூறு கின்றனர். உலக நாடுகள் அனைத்திலும் இந்தப் பிரச்சினை உருவாகியுள்ளது; தீர்வு காண்பதற்கு அரசுகளும் திரைப்படத்துறையும் முயன்று வருகின் றன. அ.நா.

**திரையன்:** கரிகால் சோழனின் மகன். தாய் நாக நாட்டினள். உரிய பருவம் வந்ததும் மகனுக்கு அரசு கொடுப்பேன் என்று கரிகாலன் வாக்களித் திருந்தான். எனவே தன் மகனுக்கு ஆதொண்டை மாலை அணிவித்து கடலில் விட்டனள். கடல் அவ னைக் கரையில் சேர்த்தது. ஆதலால் திரையன் என்ற பெயர் ஏற்பட்டது. கரிகாலன் காஞ்சி மண்டலத்தைத் தன் காதலியின் மகனுக்கு அளித்து ஆதொண்டைச் சக்கரவர்த்தி என்று பெயரிட்டான். அதுமுதல் அவன் ஆண்ட நாடு தொண்டை நாடு என்று வழஙகப்பட் டது. இவன் புழற்கோட்டத்துக் குறும்பர்களை வென்றவன். திருமுலலைவாயில் இவன் சிவனை வழி பட்ட இடம். தொணடை நாட்டை ஆணடவர்கள் சோழரின ஒரு பிரிவினர் என்றே கருதப்பட்டனர். பெரும் பாணாற்றில் 'திரைதரு மரபின் உரவோர் உம்பல்' என்று குறிக்கப்படுகிறது. வெண்பா ஒன்றில 'கான்பயந்த கண்ணிக் கடுமான் திரையனை யான் பயந்தேன் எனனும் செருக்கு' எனறு வருவதால், இளந்திரையன வீரம் செறிந்தவன் எனறு அறி கிறோம். திரையன் பாடிய கவிதைகள் சஙகஇலக் கியத்தில் உணடு. இத்திரையனும் தொணடைமான இளந்திரையனும் ஒருவனா எனபது ஆராயத்தகும். காஞ்சிமா நகரில் செங்கோல செலுத்தி வந்த தொண்டைமான் இளந்திரையனைக் கடியலூர் உருத் திரங்கண்ணனார் பெரும்பாணாற்றுப் படையில் பாராட்டுகிறார். அது திரையனின சிறப்புரைக்கும் குறுங்காவியம். சதகர்ணி மரபில் தோன்றிய காலா என்னும் மன்னன் கதையிலும் நாக கனனிகை யைக் காதலித்த செய்தி வருகிறது. இது ஒருகால் கரிகாலனைக் குறிக்குமோ என்று எணணத் தோனறு கிறது. கரிகாலன் மகன இளந்திரையன; நலலாட்சி புரிந்தவன். தே.ஆ.

**திரையன்சு:** கிரீசில ஆர்கோலிசு(Argolis)என்னு மிடத்தில் உள்ள வரலாறறுக்கு முற்பட்ட கால ஊர். திரையனசு (Tiryns)வில் தொன்மையான கட்டடங் களின எச்சஙகள உளளன. இவை ஓமர் (Homer) காலத்தினைச் சார்ந்தவை. இஙகு அகழாய்வுகள நடத்தப் பட்டதில் இவ்வூர் புதிய கற்காலத்தில இருந்தே மக்களின வசிப்பிடமாக இருநததமை கணடு பிடிக்கப்பட்டது. கிரேக்கர்களுக்கும் முற்பட்ட வேளாண் மக்கள இஙகு மேற்கு அனடோலியாவிலி ருந்து குடியேறி வசித்தனர். செப்புக் காலத்தின் இடைப்பகுதியில் இங்கு வடககிலிருநது மக்கள் குடி யேறி வசித்தனர். இவர்கள் தொனமையான கிரேக்க மொழியைப்பேசினர். பிறபகுதிகளில் வாழ்ந்த மக்க ளிடம் போரிட்டு இறுதியில் இம்மக்கள் திரையன்சில் குடியேறினர். திரையன்சில் கி.மு. 1400–ஆம் ஆண் டைச் சார்ந்த கருங்கல்லால கட்டப்பட்ட அரண் மனைப் பகுதி ஒனறு கண்டுபிடிக்கப்பட்டது.

திரையன்சில் குடியேறிய மக்கள் திரையன்சை மைசீனிய நாகரிகத்தின் ஒரு மையமாக உருவாக்கி னர். மினான் பண்பாட்டுக் கூறுகள் இம்மக்களிடம் பெரிதும் காணப்பட்டன. இந்நகரம் பணடைக் காலத்தில் மைசீனேவிற்கும் நௌபிலியா (Nouplia) விற்கும் இடையில் அமைந்திருந்தது. இந்நகரத்தை



அரண்மனையின் ஒரு பகுதி

ஆர்கோசு (Argos) மக்கள் கி.மு. 468-இல் அழித்தனர். இங்குள்ள உயர்ந்த கோட்டைச் சுவர்ப் பகுதியை சைக்லோப்சு (Cyclopes) என்னும் மக்கள் கட்டினர் எனச் சொல்லப்படுகிறது. சு.இரா.

**திரோபிரியாண்டுத் தீவினர்**: புதிய குடியரசு நாடாக மாறியுள்ள பாப்புவா நியூகினித் தீவுக் கூட்டத்தில் திரோபிரியாண்டுத் தீவுக் கூட்டமும் ஒன்றாகும். இங்கு வாழும் பழங்குடிகள் மிகத் தொன்மையானவர்கள்; வெளி உலகத்தைப் பற்றி அறியாதவர்கள். இவர்களின் எண்ணிக்கை ஏறக்குறைய 20,000 ஆகும்.

திரோபிரியாண்டுத் தீவினரைப் பற்றி முதன்முதலில் கி.பி. 1793-இல் அறிந்துகொள்ள முடிந்தது. தி என்றிகாசுதாக்சு (D' Entrecasteaux) என்னும் பிரஞ்சுப் புத்தாய்வியலார் முதன்முதலில் திரோபிரியாண்டு (Trobriand) என்னும் அலுவலர் குறிப்பிட்ட பெயராலேயே அம் மக்களையும் குறிப்பிட்டார். அதன்பிறகு 90 ஆண்டுகளுக்கு அம் மக்களைப் பற்றி அறிந்துகொள்ள ஆய்வாளர்கள் முயலவில்லை. அவர்களைப் பற்றிப் பெருமளவில் அறிய முற்பட்டது கி.பி. 1894-க்குப் பிறகேயாகும்.



திரோபிரியாண்டு ஆடவன்

திரோபிரியாண்டுத் தீவினரின் கிராமங்கள் ஏறக்குறைய வட்ட வடிவில் இருக்கின்றன. ஒவ்வொரு கிராமத்திலும் 150 முதல் 200 மக்கள் வாழ்கின்றனர். ஒவ்வொரு குடும்பத்தினரும் சிறிய அளவிலான தனி வீடுகளைக் கட்டி வாழ்கின்றனர். முக்கியமான ஒரு சிலரின் வீடுகளுக்கு முன்பு திரோபிரியாண்டுத் தீவினர் விளைவிக்கும் ஒருவகை வள்ளிக்கிழங்கைச்(Yam) சேகரித்து வைக்கும் பாதுகாப்பான வீட்டையும் கட்டிக்கொள்வர். இவ்வகை வீடுகள் அவரவரின் மருமகன்களால் கட்டிக் கொடுக்கப்படுகின்றன. வள்ளிக் கிழங்கு சேகரிக்கும் வீடுகள் ஒருவரின் தகுதியைக் காட்டுவனவாகும்.

இவர்களின் பொருளாதாரம் வள்ளிக்கிழங்கு பயிரிடுவதை அடிப்படையாகக் கொண்டது. இது ஒரு தோட்டப் பயிராகும். ஒவ்வொரு குடும்பத்தவரும் பெரிய அளவிலோ சிறிய அளவிலோ தோட்டங்களை அமைத்து ஆண்டுமுழுதும் வள்ளிக்கிழங்கைப் பயிரிடுகின்றனர். விளைந்த கிழங்கினை நன்கு காயவைத்

துப் பல மாதங்கள் வரை பயன்படுமளவிற்குச் சேமித்து வைக்கின்றனர்.



சேமிப்பு வீடுகள்

வள்ளிக்கிழங்கைத் தவிர இனிப்புவகை வளளிக் கிழஙகு, உருளைக்கிழங்கு, வாழை, தென்னை, மக காச்சோளம் முதலானவற்றைக் குறைந்த அளவில் பயிரிடுகின்றனர். மீனபிடிததல இவர்களது துணைத் தொழில். இவர்கள் மீனை விரும்பி உணபார்கள். சிறப்பு நிகழ்ச்சிகளின்போது பன்றி இறைச்சியை உணபர். வெற்றிலை பாக்கு போட்டுக்கொளவது இவர்களின் விருப்பமான பொழுதுபோக்கு.

திரோபிரியாணடுத் தீவினரின் சமுதாய, பொருளாதார வாழவில பரிமாற்ற முறை மிக்க சிறப்புப் பெற்றது. இதனை அம் மக்கள 'குலா' (Kula) எனக் குறிப்பிடுவர். இம் முறையைக கணடறிந்தவர் ஆங்கிலேய மானிடவியலாரான மாலினோசுக்கி (Malino-wski) என்பவராவார். இவ்வகையான பரிமாற்ற முறை உலகில் வேறு எந்தப் பகுதியிலும் நடைபெற வில்லை என்பது குறிப்பிடத்தககது. திரோபிரியாண்டு தீவுக கூட்டங்களில் வாழும் பழஙகுடியினர் கை வளையங்கள், விலைமதிப்புளள பரிசுப் பொருள் கள, அன்றாட தேவைக்கான பொருள்கள முதலானவற்றைப் பரிமாறிக்கொள்வர். ஒரு தீவில உள்ளவர்கள் சில பொருள்களை வலப்பக்கத் தீவினருக்கும் ஒருசில பொருள்களை இடப்பக்கத் தீவினருக்கும் கொடுப்பா. கொடுத்த பொருளகளுககு ஈடாக அவர்களிடமிருந்து மற்றப் பொருளகளைப் பெற்றுக் கொளவதிலலை. பொருளைப் பெற்றவர் அவருக்கு அடுத்தத் தீவினரிடம் வேறு பொருளகளைக் கொடுப்பர். இவ்வாறு பொருள்கள அனைத்துத் தீவுகளையும் கடந்து இறுதியாக முதலில் பொருள கொடுத்தவருக்கு வநதுசேரும். ஒருவா கொடுத்த பொருளுக்குச் சம மதிப்பான பொருள் கிடைக்கவேணடும் என்று எதிர்பார்ப்பதிலலை. பொருள உடனே கிடைக்கவேணடும் என்றும் எதிர்பார்பபதிலலை. சிலவேளைகளில் பொருள் கொடுத்தவருக்கு மீணடும் பொருள கிடைக்கப் பல மாதங்கள் ஆகும். இதைப் பற்றி விரிவாக அறிய 'தோபு' என்னும் கட்டுரையைக் காண்க.

திரோபிரியாணடுத் தீவினர் தாய்வழிச் சமுதாயத்தினா (Matrilineal Society). சொதது, மரபுரிமை முதலானவை மூதத பெண்வழி வரும். இறநதவர்களின ஆவி ஒவ்வொரு காலவழியைச சேர்நத மூதத பெணகளிடம் மட்டுமே தோன்றும் என்னும் நம்பிக்கை குறிப்பிடத்தக்கதாய் உளளது. மரபுவழிச்

சமய நம்பிக்கைகள் இவர்களிடையே நன்கு வேரூன்றி இருந்தாலும் கிறித்தவ சமய நெறிகள் இவர்களிடையே பரவி வருகின்றன. இன்றும் இவர்கள் சமயச் சடங்குகளின்போது மரபுவழியிலான ஆட்டங்களை ஆடுகின்றனர்.



திரோபிரியாண்டு ஆட்டம்

திரோபிரியாண்டுத் தீவுகளில் 1962-க்குப் பிறகு சுற்றுலா பெருகிவருகின்றது. பழங்குடிகளின் கலைப் பொருள்களுக்குச் சுற்றுலாப் பயணிகளிடையே மிகுந்த வரவேற்புள்ளதால் இவர்களின் பொருளாதாரம் மேம்பட்டு வருகிறது. இன்றைய இளைஞர்களுள் பலர் கல்வி பெற்று வருகின்றனர். சீ.ப.

**திரௌபதி**: பாஞ்சால நாட்டரசன் யாகசேனனின் மகள் பாஞ்சாலியெனவும் குறிக்கப் படுவாள். பஞ்ச கன்னியரில் ஒருத்தி என்று கூறுவர். அகலிகை, திரௌபதி, சீதை, தாரை, மண்டோதரி என்பவர்கள் பஞ்ச கன்னியர்கள் ஆவார்கள். யாகசேனன் வளர்த்த வேள்வித் தீயினில் தோன்றியவள்.

முற்பிறப்பில் நளாயினி என்னும் பெயர் உடையவளாக இருந்து மௌத்கல்ய முனிவரைக் கணவராகப் பெற்றிருந்தாள். அவர் நளாயினியின் கற்புடைமையைச் சோதித்தறிய விருப்பங் கொண்டார். குட்ட வியாதி கொண்டவர் போல் நடந்தும், நளாயினி அவரிடம் வெறுப்புக் காட்டாமல் அவர் உண்ட மிச்சிலை மனமகிழ்ந்து உண்டாள். நளாயினியின் கற்புடைமையைக் கண்ட முனிவர் மனம் மகிழ்ந்து 'உனக்கு வேண்டியது என்ன?' என்று கேட்க, அவள் நின் நீங்காத அன்பே வேண்டுமென்று கேட்டாள்.

நளாயினி இப்பிறப்பு முடிந்து இறந்தாள். பின், இந்திரசேனை என்னும் பெயருடன் மறு பிறப்பை அடைந்து மௌத்கல்ய முனிவரையே சார்ந்தாள். அவர் இலவாழ்வைத் துறந்து தவ வாழ்க்கையை மேற்கொண்டிருந்தார். எனவே, இந்திரசேனையின் கருத்திற்கு இணங்காமல் சிவபெருமானை நோக்கித் தவஞ் செய்யும்படி கூறினார். சிவபெருமான் இவள் முன் தோன்றி அருள் செய்தபோது, 'எனக்குக் கணவனைத் தருவீராக' என்று ஐந்து முறை வேண்டினாள். முற்பிறப்பில் இவள் தன் கணவனின் ஐந்து வடிவங்களோடு இன்பம் நுகர்ந்ததமையைக் கருத்தில் கொண்டு 'அவ்வாறே ஆகுக' என்றார். சிவபெருமானால் பிலத்தில் அடைத்து வைக்கப்பட்டிருந்த இந்திரர்கள் ஐவரையும் பார்த்து 'நீவிர் இந்திரசேனைக்குக் கணவர் ஆகுங்கள்' என்றார். அவ்வாறே அந்த ஐவரும் நிலவுலகத்தில் பாண்டவர்களாகப் பிறந்து திரௌபதியைத் திருமணம் செய்தார்கள். இக்கதை முற்பிறப்புடன் தொடர்புபடுத்திக் கூறப்படுவதாகும்.

யாகசேனன் நடத்திய சுயம்வரத்தில் அர்ச்சுனனால் வெற்றிபெற்றுக் கொண்டுவரப்பட்ட திரௌபதி குந்தியின் கட்டளைப்படி ஐவரையும் மணக்க வேண்டியவளானாள். அப்போது வியாசர் திரௌபதியின் முற்பிறப்பை யாகசேனனிடம் எடுத்துச் சொல்லி இத்திருமணத்தை நடத்துக என்றார். தௌமிய முனிவர் தருமனுக்கு முறைப்படி திருமணச் சடங்குகளை நடத்திப் பின் முறைப்படி மற்றைய நால்வருக்கும் திருமணம் நடந்தது.

பாண்டவர்கள் செய்த இராசசூய வேள்விக்கு வந்திருந்த துரியோதனனை இவள் இகழ்ந்து நகைத்ததற்காக அவன் சினங்கொண்டான். பாண்டவர்களைச் சூதாட்டத்திற்கு அழைத்து அவர்களின் நாடு, நகரங்களை இழக்கச் செய்து அடிமைப் படுத்தினான் துரியோதனன். திரௌபதியைத் தன்தொடையின் மீது அமரச் சொல்லியும் தன்னைக் கணவராக ஏற்றுக்கொள்ளும்படியும் துன்புறுத்தினான்; திரௌபதி மறுத்தாள். துச்சாதனனை ஏவி, அவளது துகிலை உரியச் சொன்னான் துரியோதனன். கிருட்டிணன் அருள்பெற்றுத் துகில் வளரப் பெற்றாள். மறுபடியும் சூதாடி அடிமையிலிருந்து விடுபட்டுச் சபதங்கள் பல செய்து பாண்டவருடன் வனவாசம் சென்றாள்.

வனவாசத்தின் இறுதியாண்டில் மறைந்து வாழ்வதற்காக விராடநாட்டினைப்பாண்டவர்கள் அடைந்தனர். விராடன் மனைவி சுதேட்டிணைக்கு வண்ண மகளாக விரதசாரிணி என்ற பெயரில் திரௌபதி மறைந்து வாழ்ந்தாள். கீசகன் என்பான் இவளை அடைய முற்பட்டபோது வீமன் அவனை வதம் செய்து கொன்றான். பாண்டவர்கள் வெளிப்பட்டுத்

தங்கள் உரிமைகளுக்காகப் பாரதப் போரில் ஈடு பட்டுத் துரியோதனனை அழித்தனர். அவன் அழி விற்குப் பின்னரே தன்னுடைய அவிழ்ந்த கூந்தலைத் திரௌபதி முடிநது கொணடாள.

திரௌபதிக்கும் பாண்டவர்களுக்கும் தோன்றிய குழந்தைகள் உபபாண்டவர்கள் என குறிக்கப்பட் டனர். தருமனுக்குப் பிரதிவிந்தனும், பீமனுக்குச் சுருதசோமனும், அர்ச்சுனனுக்குச் சுருதகீர்த்தியும் நகுலனுக்குச் சதாநீகனும் சகாதேவனுக்கு சுருத சேனனும் பிறந்தனர். பாரதப் போரின் முடிவில் உபபாண்டவர்களைப் பாண்டவர்கள் எனத் தவறு தலாகக் கருதி அசுவத்தமா கொன்றான்.

திரௌபதியைத் திரௌபதியம்மன் என்ற பெய ரில் கருநாடகத்திலும் தமிழ் நாட்டிலும் தெய்வ மாக வணங்கி வருகின்றனர். கும்பகோணத்திலுள்ள திரௌபதியம்பன் கோயிலில் அர்ச்சுனன் சிலையும் அரவான் சிலையும் இருக்கின்றன. சில இடஙகளில் விழாவின போது தீமிதித்தல் முக்கிய நிகழ்ச்சியாக இடம் பெறுகிறது. இரா.பா.

**தில்சிட்டு உடன்படிக்கை;** நெப்போலி யனுக்கும் சில ஐரோப்பிய நாடுகளுக்கும் இடையே கி.பி. 1803–ஆம் ஆண்டு தொடஙகி 1815–ஆம் ஆணடு வரை நடைபெற்ற போரின்போது மேறகொள்ளப் பட்ட பல உடன்படிக்கைகளுள் தில்சிட்டு (Tilsit) உடன்படிக்கை ஒன்றாகும். இது கி.பி. 1807–ஆம் ஆண் டில் நிறைவேற்றப்பட்டது.

ஐரோப்பிய நாடுகளுள் இங்கிலாந்து நாடே தம்மை எதிர்த்த பெரிய எதிரியாக நெப்போலியன கருதினார். ஆகவே அதன் மீது படையெடுக்க ஒரு திட்டம் வகுத்தார். அத்திட்டம் தோல்வி அடையவே இங்கிலாந்துடன் நட்பு கொள்ளச் செய்தால் இங்கி லாந்து தானாக அடிபணிந்து விடும் என்று எண்ணி னார். அதனால் முதலில் ஆசுதிரியாமீது படை நடத் திச் சென்று அதனைத் தன்னுடன் நட்புறவு கொள்ளு மாறுச் செய்தார். இவ்வெற்றி செருமனியைத் திருத்தி அமைக்க வழிகுத்தது. இரைன் கூட்டமைப்பு உருவாக் கப் பெற்றது அதனுடைய தலைமைப் பொறுப்பு நெப் போலியனுக்கு வழங்கப்பட்டது. இவ்வெற்றிகள் இங்கி லாந்தையொடுக்க மற்றொரு திட்டம் உருவாக்கப் படுவதற்குத் துணைநின்றன. ஐரோப்பாவின் பெரும் பகுதி தமது ஆதிக்கத்தின் கீழ் வரவே, ஆங்கில வணிகத்தை ஐரோப்பாவிலிருந்து அகற்றிவிட இயலும் என்றும், அதனால் வணிகத்தையே நம்பி யிருந்த இங்கிலாந்து மக்கள் அல்லல்படுவர் என்றும் இன்னல்களுக்கு எதிர்நிற்க மாட்டாது ஆங்கில மக்கள் தங்களது அரசை நெப்போலியனுடன் சமா தானம் செய்துகொளளும்படி வற்புறுத்துவர் என்றும் அவர் எண்ணினார். அத் திட்டத்துக்குப் பிரசியாவின் ஒத்துழைப்பைப் பெற முற்பட்டார். அம்முயற்சி இறுதியில் இவ்விரு நாடுகளுக்கும் இடையே போர் ஏற்படுவதில் முடிந்தது. போரில் பிரசியா படுதேலவி யடைந்தது ஒரே நாளில் பிரசியப் படையை நெப் போலியன் சீனா (Jena), அவர்சுடாடு (Auerstadt) ஆகிய இடங்களில் தோற்கடித்தார். அதையடுத்து நெப்போலியன் பெர்லின நகரைக் கைப்பற்றினார். இரசியாவுடன் பிரசியா கொண்டிருந்த நட்புறவை விலக்கிக் கொள்ளுமாறு நெப்போலியன கட்டளை யிட்டார். பிரசியா அதற்கிணங்க மறுத்துவிடவே இரசியாவிற்கு எதிராக நெப்போலியன் படைநடத் திச் சென்றார். ஐலொ (Eylau) போரில் கி.பி.1807–இல் நெப்போலியன் வெற்றி பெற்றார். அதையடுதது பிரீடுலாண்டுப் (Friedland) போரிலும் வெற்றி கண டார். இரசிய மன்னர் சமாதானம் நாடினார். இரு பேரரசர்களும் தில்சிட்டு நகருக்கருகே ஓடுகினற மெமெல ஆற்றின் நடுவில் அமைக்கப்பட்ட தெப்பத் தில கூடிச்சமாதான நிபந்தனைகளைப்பற்றிய தொடக்கநிலைப் பேச்சை நடத்தினார்களா. அடுத்த கூட்டங்கள் தில்சிட்டு நகரிலேயே நடத்தப்பட்டன. அக்கூட்டத்திற்குப் பிரசிய மன்னர் மூன்றாம பிர டெரிக்கும் இராணிஉலூவிசும் (Louise) வந்திருந்தனர். எதிர்பார்த்ததற்கு மேலாக இரசியப் பேரரசர் நெப் போலியனுடைய கணடத்திட்டத்திற்கு நிரம்ப ஒத்துழைப்பு நல்கினார். அதற்குச் சில காரணங்கள் உண்டு. சீனப் போருக்குப் பிறகு இரசியப் பேரரசரே நெப்போலியனுடைய தாக்குதலை முழுமையாக ஏற்றுககொளள நேர்ந்தது. அவர் கேட்ட கடன் தொகையை பிரிட்டன மறுத்துவிட்டது. நெப்போலி யனுடைய கவனத்தைத் திசை திருப்பும் வகையில பிரிட்டன் நடவடிக்கைகளை மேற்கொள்ளவில்லை. பேச்சு வார்த்தைகளின்போது பிரசிய மனனரையும் அவர் மனைவியையும் அவமதித்துப் பேசுவதில் நெப்போலியன் மிக்க மகிழச்சி கொண்டார்.

தில்சிட்டு உடனபடிக்கை இரு பிரிவாக அமைந் திருந்தது. அனைவருககும் அறிவிக்கப்பட்ட நிபந்தனை கள், அதற்குமேல் இரகசிய நிபந்தனைகள். பிரசியா வைப் பற்றிய நிபந்தனைகள் இரசியப் பேரரசருடன் ஏற்படுத்தப்பட்ட நட்புறவைத திடமான அடித் தளத்தில அமைக்கும் எண்ணத்துடன் ஏற்படுத்தப்பட் டன எனறு நெப்போலியன் அறிவித்தார். அதாவது இரசியாவின் தலையீடு இல்லையெனில் பிரசியாவின் மீது சுமத்தப்படவிருந்த நிபந்தனைகள் இதைவிட மிகக் கடுமையாக இருந்திருக்கும் என்பதை அவர் உணர்த்தினார். பிரசியா தனது ஆட்சிப்பகுதிகளின

பெரும்பகுதியை இழக்க நேர்ந்தது. பிரசியா விற்குச் சொநதமான மேற்கு மாகாணஙகளில இருந்து பெற்றுக்கொளளப் பட்ட பகுதிகள, ஆனோ வர் (Hanover) தவிரச சில சிறு செருமானிய நாடு கள ஆகியவை ஒனறாக இணைக்கப்பட்டு வெசுடு பாலியா (Westphalia) அரசாக அமைககபபட்டது. அதற்கு நெபபோலியனுடைய சகோதரர் ஆன செரோம் போனபார்டடு (Jerome Bonaparte) அரசராக நியமிககபபட்டாா. இஙகு பிரெஞ்சு மகக ளாட்சி முறையைச சோதனை முறையில் நடை முறைப்படுத்த ஏற்பாடு செய்யப்பட்டது. கிழககு மாகாணங்கள, குறிப்பாக பிரசியப் போலந்துப் பகு தியை ஆசுதிரியாவின கீழிருநத காலிசியா (Galicia) வுடன இணைத்து வாாசா பெருமகோமகனாட்சிப பகுதியாக (Grand Duchy of Warsaw) அமைககப பட்டது. அதனை நெப்போலியனுடைய நணபரான சாகசனி அரசரிடம ஒப்படைததார். போலநதைச சுதநதிர நாடாக மாறறியமைபபதாகத தாம் முன்னர்க கூறிவந்த உறுதிமொழியைக் காககத் தவறி விடடாா. அதுபோனறு பிரசியா நாட்டைக் கூறுபடுததுவதறகு இணஙக மாட்டேன எனறு இராணி லூாவிசுக்கு முனனர் அளித்த வாககுறுதியை இரசியப் பேரரசர் அலெக்சாநதா மறுததுவிடடார். இந்த ஏறபாட்டின் காரணமாகப் பிரசியா தனது ஆட்சிப் பகுதியில ஏறத்தாழ பாதி அளவை இழந்து விட்டது அதனுடைய மக்கள தொகை 10 மிலலி யனில் இருநது ஐந்து மிலலியனகளாகக குறைந்து விட்டது.

இரசியாவிறகு இத்தகைய அவநிலை ஏற்பட விலலை. மாறாக அதனுடைய ஆட்சிப பகுதி விரி வாக்கப்பட்டது. பினலாநதுடன பிரசியப போலநதின ஒரு பகுதி இரசியாவிறகு அளிக்கப்பட்டது. இவற றிறகுப் பதிலாக நடு ஐரோபபாவில் நெப்போலியன் செய்து வைத்த அரசியல ஏற்பாட்டினை இரசியா ஏற்றுக் கொணடது

**இரகசிய நிபந்தனைகள் பின்வருமாறு:** இங்கி லாந்துடன் நெப்போலியன தொடஙகியிருந்த பொருளாதாரப போரில் நெப்போலியனுக்கு இர சியா ஆதரவு அளிக்க வேணடும். அதற்குப் பதிலாக பிரான்சு மேலும் நாடுகளை வெல்லும்போது அவற்றினுக்கு ஈடாக இரசியாவானது சுவீடன மற்றும் துருக்கியில் நிலப்பகுதிகளைப் பெறவேண் டும். ஆயினும் கானசுடான்டிநோபிளை இரசியா கைப்பற்ற பிரானசு ஒருபோதும் சம்மதிக்காது எனபதையும் நெப்போலியன் தெளிவுபடுத்தினார். ஏனெனில் அந்நகரைக் கைப்பற்ற நெப்போலியன் திட்டமிடலானார் உலகத்தைத் தன் கீழ்க் கொண்டு வர வேண்டுமெனில் கானசுடாணடிநோபிள சமாதானததில தாம் கையொப்பமிட வேணடும் எனறு கூறினார். அநநகரைக் கைப்பறறிவிட்டால் அங்கிருந்து ஆசியாவிற்குச் சென்று விட இயலும் என்றும், ஆசியாவிலுளள பிரிடடிசுப பேரரசை வீழ்ததிவிட்டால இஙகிலாந்து ஐரோப்பாவின காலடி யில் வீழ்நதுவிடும என்றும் எணணினார். 35 கி.மீ. அகலமுளள ஆங்கிலக் காலவாயைக கடநது செல் வதை விட, பாரிசியிலிருநது பல ஆயிரம கி.மீ தொலைவிலுள்ள தில்லிக்குச் செல்வது அவருககு எளிதாகப் புலப்பட்டதெனறால அது ஆஙகிலக கடலாதிக்கத்தின பெருமையை உணர்ததுகிறது எனலாம். மேலும இரசியா தனது அரசியல திறததைப் பயன்படுததிப பிரிட்டன் பிரானசுடன சமாதானம செய்துகொளளுமபடி வறபுறுத்த வேணடும் எனறும, அதற்குப் பிரிட்டன இசையவிலலை எனறால் தென மார்ககு, சுவீடன, போாசசுககல் ஆகிய நாடுகளைத தங்களுடைய துறைமுகங்களிலிருந்து ஆஙகில வணிகப பொருட்களை விலக்க வேணடும எனறும், பிரான சுடன சேர்நது பிரிட்டனுடன போரிட வேணடும என்றும அதில கூறபபட்டிருநதது. இவ்விரகசிய நிபந தனைகள எபபடியோ இஙகிலாநதுக்கு எட்டிவிட்டன அச்செய்தியை அறிநது தெனமார்க்கு தனது கபபற படையை இஙகிலாந்திடம ஒப்படைத்து விட வேண டும் எனறு அறிவிக்கப்பட்டது. தெனமார்ககு அதற கிசையாது போகவே அதனமீது தனது கப்பற்படை இராணுவம கொணடு தாக்குதல நடததியது. இவ வுடன்படிககை நெபபோலியனுடைய அதிகாரம உச்ச கட்டததை அடைய உதவியது இந நேரததில அவர் இறந்திருப்பின ஐரோப்பிய இராணுவ வரலாற்றிலே ஏன் உலக வரலாற்றிலேயே அவரது சாதனை இயற்கைக்கு மீறிய சாதனையாக அமைநதுவிட்டிருக் கும.

தி.ஆர்.இரா.

***தில்லானா*:** தில்லானா விறுவிறுப்பானதொரு இசை வடிவம. இதன் விறுவிறுப்பு கருதியே இசை நிகழ்ச்சிகளில் இதனை முடிவில் பாடுவதைக் கலை ஞர்கள் ஒரு மரபாகக் கொணடிருக்கின்றனா. தில் லானா இசை நிகழச்சிகளை விடப் பரத நாட்டிய நிகழ்ச்சிகளிலேயே சிறநத இடத்தைப் பெறுகிறது நாட்டிய நிகழ்சசிகட்கு என்றே இது ஏறபட்டது எனவும கூறலாம்.

இது கி.பி. 18-ஆம நூற்றாணடு வாக்கேயக்காரர் களால உருவாககப்பட்டு வழக்கத்திற்கு வந்திருக் கிறது. இசை நிகழ்ச்சிகளில நீண்ட பலலவி ஆலா பனைக்குப் பிறகு இதனைப் பாடுவது வழக்கம். அதற்கு ஒரு காரணம உண்டு. பொதுவாக ஆலா பனை இசை நுட்பம் தெரிந்தவர்களைத் தவிர மற்ற

வர்கட்குச் சுவைக்காது அப்போது அவையில் ஒரு வகைச் சோர்வு தோன்றும். அந்தச் சோர்வை அகற்ற தில்லானா பாடுவதை ஓர் உத்தியாகக் கலைஞர்கள் கையாளுகினறனர். இசைச் சொற்பொழிவு (கதா காலட்சேபம்) களிலும் இதே காரணத்திற்காக இதனைப் பாகவதர்கள் பயன் படுத்துகின்றனர். இசைச் சொற்பொழிவுகளில் நீணட பூர்வ பீடிகை கட்குப் பின் பாகவதர்கள் தில்லானா பாடுவதன் இரகசியம் இதுவே.

தில்லானாககளில் சொற்கட்டு சிறபபான அம்சமாகும். தில்லானாககளை இசை நிகழ்ச்சிகட்கு உரியன எனவும், நாட்டிய நிகழச்சிகட்கு உரியன எனவும் இரணடாக வகைபபடுத்தலாம. இசை நிகழ்சசிகளுக்கென உருவாக்கப்படும் தில்லானாக்களில இராக பாவத்திறகு முதலிடம தரப்பட்டிருககும். பலலவி சேசயயர் இயற்றிய வசநதாரநகத தில்லானா இதற்கு ஒரு சிறநத எடுததுக்காட்டு எனலாம். நாட்டியத்திறகுரிய தில்லானாககள பொதுவாக மத்தியம காலததில அமைந்திருக்கும. ஆடுபவர் அடவுகளில தம் திறமைகளைப புலப்படுததச் சதிகள உதவியாக இருக்கும் வகையில இத்தகைய தில்லானாக்கள் அமைக்கப்பட்டிருக்கும்.

மகா வைததியநாதையர் எனற தெனனிந்திய இசை மேதை இயறறியதும், கானடா இராகத்தில் சிம்ம நநதன தாளத்தில அமைந்ததும, கவுரி நாயகா எனத் தொடஙகுவதுமாகிய திலலானா புகழ பெற்ற தாகும். சிம்ம நந்தன தாளத்தில் அமைந்த திலலானா இது ஒனறேயாகும. குனறக்குடி கிருட்டிணயயர் இயற்றிய கமபராமாயண திலலானா நுட்பமான தில்லானாவுக்குச் சிறநததோர் எடுத்துக்காட்டாகும்.

இநதுசுத்தானி இசையிலும் திலலானா உணடு. அதற்குத்தரானா எனப் பெயர். சிறிய இசை வடிவஙகட்குத் தில்லானாக்களும், சாவளிகளும சிறந்த எடுததுக்காட்டுகள். இவறறைப் பாடி முடிக்க ஆறு நிமிடங்களுக்குமேல் தேவையில்லை. ஆனால், பரத நாட்டிய நிகழ்ச்சிகளில தில்லானா நீண்ட நேரம நிகழ்த்திக் காட்டபபடும்.

திலலானாக்களை இயற்றியவர்களில் வீரபத்திரய்யா, சுவாதித் திருநாள் மாமனனர், பொனனையா பிள்ளை, பல்லவி சேசய்யர், மைசூர் சதாசிவ ராவு, பட்டணம் சுப்பிரமணிய அய்யா, மைசூா வீணை சேசணணா, இராமநாதபுரம் சீனிவாசய்யங்கார் முதலியோர் குறிப்பிடத் தக்கவர் களாவர். சொ.ச.

**தில்லி** இந்தியாவின் தலைநகரம். யமுனை நதியின் மேற்குப் பகுதியில் உள்ள இந்நகரம் புதுதில்லி, பழைய தில்லி என இரு பிரிவுகளை உடையது. வரலாற்றில் அவ்வப்போது பலமுறை இது தலைநகராக இருந்து வந்துள்ளது. தில்லியும் (Delhi) அதன் சுற்றுப் புறப் பகுதிகளும் (1500 சதுர கிலோ மீட்டர்)இந்திய அரசின் நேரடி நிருவாகத்தில் உள்ளன. நாட்டின் பல பாகங்களோடு இருப்புப்பாதை மூலமும், தேசிய நெடுஞ்சாலை மூலமும், ஆகாயவழி மூலமும் இந்நகரம் இணைக்கப்பட்டுள்ளது.

இதிகாச காலத்தில சிறப்புற்று விளங்கிய இந்திரபிரசுதம் என்ற நகர் தில்லிப் பகுதியில் இருந்தது. கி.மு. முதல் நூற்றாண்டில் 'தில்லு' எனற அரசர் இந்திரபிரசுதத்திற்குத் தென்மேற்கே ஒரு நகரை உருவாககித் தில்லி என்று பெயரிட்டதாகக் கருதப் படுகிறது. இராசபுத்திர அரசர் அனஙகபாலர் தில்லிக்கு அருகில் ஒரு நகரை உருவாக்கினார். பிருதிவிராசர் தில்லி நகரை விரிவுபடுத்தி அழகிய கோயில் களைக் கட்டிக் கோட்டைச் சுவரையும் எழுப்பினார். குத்துபுதீன் ஐபக்கு அரசாண்டபோது அஙகிருந்த 27 இந்துக் கோவில்கள் அழிக்கப்பட்டன. அலாவுதீன் கில்சி, கியாசுதீன் துக்ளக், உமாயூன், சாசகான் போன்ற அரசர்கள் தில்லிக்கருகில் நகர்களை உருவாக்கினர். தைமூர் இந்தியாவின்மீது படையெடுத்து, தில்லியைக் கைப்பற்றி, ஆயிரக்கணக்கான இந்துக் களைக் கொன்றார். பாரசீக அரசர் நாதிர்சா தில்லியைக் கொள்ளையிட்டுப் புகழ்பெற்ற மயிலாசனம், கோகினூர் வைரம் ஆகியவை அடஙகிய பெரும் செல்வத்துடன் இந்நாட்டிலிருந்து சென்றார். ஆப்கானிய அரசர் ஆமது சா அப்தாலி கி.பி. 1757 -ஆம் ஆணடில் தில்லியைக் கொளளையிட்டார். மராத்தியரும் தில்லியைத் தாக்கினர். பின்னர் தில்லியும் அதைச் சூழ்ந்த பகுதிகளும் ஆங்கிலேயர் ஆட்சியின் கீழ் வந்தன.

ஆங்கிலேயரால் நன்கு திட்டமிடப்பட்டுப் புதிதாக உருவாக்கப்பட்ட பகுதி புதுதிலலியாகும். இது 1912-ஆம் ஆண்டில் இநதியாவின் தலைநகராயிற்று. குடியரசுத்தலைவர் மாளிகை, வட்ட வடிவில் அமைந்துள்ள நாடாளுமன்றக் கட்டடம், அரசாங்கத் தலைமைச் செயலகங்கள் முதலியன இங்குதான அமைந்துள்ளன. தில்லி பல்கலைக்கழகம் 1922-ஆம் ஆண்டு தொடங்கப்பெற்றுப் பல கலைகளை கற்பிக்கும் பீடமாக இருந்து வருகிறது.

சுமார் 5 இலட்சம் அகதிகள் 1947-ஆம் ஆண்டில் ஏற்பட்ட நாட்டுப் பிரிவினையால் தில்லிக்கு வர நேர்ந்தது. அவர்கள் மறுவாழ்விற்காகத் தில்லியிலும் அதைச் சுற்றியுளள பகுதிகளிலும் பல குடியிருப்புகள் ஏற்பட்டன. நடுவண் அரசின் அலுவல்கள பெரு

கியதால பல புதிய அலுவலகக் கட்டடங்களும், மாளிகைகளும், வீடுகளும கட்டப்பட்டன. யமுனை ஆற்றின மேற்குக் கரையில தேசததநதை மகாதமா காந்தியடிகளின சமாதி உளளது. இநதிய அரசு அயல நாட்டுத் தூதர்களுக்குரிய அலுவலகங்களையும் மாளிகைகளையும் ஏற்படுததி, அப்பகுதிக்குச சாணக கியபுரி எனப் பெயரிட்டுளளது. இஙகுப் பனனாட்டுக கட்டடக் கலைகளையும காணலாம.

திலலியில் மிக அழகான கட்டடஙகள உளளன· அவற்றுள சாசகானுடைய அரணமனையான செங கோட்டை, உலகப்புகழபெற்ற முததுமசூதி, சும்மா மசூதி முககியமானவையாகும். செஙகோட்டையை எதிர்நோககியுள்ள 'சாநதினிசவுக்கு' எனற வீதி ஒரு காலத்தில் உலகிலேயே செலவமிக்க வீதியாகப் புகழ் பெறறிருநதது. இஙகு கி.பி. 12-ஆம் நூற்றாணடில கட்டப்பட்ட குதுபுமினாா கோபுரமஉலகபபுகழபெற் றது. இதனருகே கி.பி 4-ஆம் நூறறாணடில் வைககப பட்ட இரும்புத்தூண ஒனறும் உள்ளது அததூண இனறும் துருப் பிடிக்காமல் அக்கால இநதியாகளின உலோக வேலைத்திறனுக்கு எடுத்துக்காட்டாக விளஙகுகிறது புதுதிலலியிலகி.பி18ஆம்நூறறாணடில செய்ப்பூர் மன்னர் செயசிசுகினால கட்டபபட்ட சுநதாமநதர் என்ற வானவியல ஆராய்ச்சி மணடபம் உள்ளது.

புதுதில்லி பெரிய தொழிறசாலைப பட்டணமாக வும், வணிக மையமாகவும விளஙகுகிறது. இஙகு கலை நுட்பமும், கை வேலைப்பாடும் கொணட தஙக, வெள்ளி நகைகளும், தந்தப் பொருளகளும, செப்பு, பித்தளைப் பாத்திரங்களும, சரிகை இழைத்த ஆடை அணிகலனகளும் உறபத்தி செயயப்படுகினறன. அ சி.

**தில்லிசுல்தானியம்**· திலலியைத் தலைநக ராகக கொண்டு இந்தியாவை கி.பி. 1206 முதல் 1526 வரை ஆண்டு வந்த சுல்தான்களுடைய ஆட்சி யைத் தில்லி சுல்தானியம் என்று கூறுவா. இச் சுல்தானகள ஐநது அரச குலஙகளாகப் பிரிககப் பட்டுளளனர். இவற்றுள முதலாவது அடிமை அரச குலம். இவர்கள் கி.பி 1290 வரை ஆணடனர். இத னைத் தோறறுவித்தவர் குத்புத்தீன அய்பெக்கு(கி.பி 1206-1210). இவர் முகமது கோரியின அடிமைகளுள ஒருவர். இவரும் இவரைத் தொடர்ந்து ஆட்சி செயத ஒனபது பேரும் அடிமை அரச குலததவர்கள எனறு கூறப்படுகினறனர். குத்புத்தீனும் அககுலத்தைச் சார்ந்த இல்தூத்மிசு, பால்பன ஆகியோர் மட்டுமே அடிமைகளாக ஒரு சமயம் இருந்தனர். அவர்கள சுல் தான்களாகப் பொறுப்பேற்பதறகு முனபே அடிமைத் தனத்திலிருந்து விடுவிக்கபபட்டு விட்டனர். மேலும் இச்சுல்தான்கள உண்மையில மூன்று பிரிவுகளாக இருந்தனர். குதபுததீனுடைய குடும்பம் இவருடைய மகன் எனககருதப்பெறும் ஆராம சாவுடன (கி.பி. 1210-1211) அழிவுறறது. இல்தூதமிசினுடைய குடும்பததினா கி.பி. 1211 முதல 1266 வரை ஆணட னர். அதன பின்னர் அரசு செலுததிய பால்பன், இல்தூதமிசினுடைய அடிமைகளுள ஒருவரேயனறி அவருடைய வழிததோன்றல அலலா. ஆகவே கி பி. 1290 வரை ஆணட சுல்தானகளை அடிமை வமிசத தினர் எனக் கூறுவது பொருந்தாது. அவர்கள யாவரும துருக்கியாகள எனபதால் அவர்களை முந் திய துருககியா எனலாம் இவாகளுள தலை சிறந்த வா இல்தூதமிசு (கி பி. 1211-1236). இநதியாவை மஙகோலியருடைய தாககுதலிலிருநது காபபாறறிய வர். திலலி சுலதானிய அரசியலமைபபிறகு அடிகோலி யவர் இவரேயாவா. இது வரை தில்லியும் லாகூரும் என நாட்டிற்கு இரு தலைநகர்கள இருநது வநதன. இவர் காலம் தொடஙகி திலலி மட்டுமே தலைநகராகச செயறபட்டது. ஆகவே அதை நாடிப் பல அறிஞர்கள வநதனா. அதனவிளைவாக அது ஒரு சிறநத பணபாட்டு மையமாக மாறியது. இரண டாவது பாகதாது எனச சிலா அதைக் குறிபபிட்ட னர். நாட்டிறகு ஓா ஆளுமவருககததை உணடாக்கிய வரும் இவரே. நாறபதினமா (Forty) என இக் குழு பெயர்பெறறது. இதில அடிமைகளே இடம பெற்றிருநதனா. அவரையடுத்து உருகனுததீன பிருசு (கி பி 1236) அரசாணடாா. அவருககுப் பின இரசியா (கி.பி. 1236-1240) பட்டம எயதினாா, இவர் இலதூதமிசின மகளாவார் இவாதம் பெணமையே இவருடைய முககிய எதிரியாகும. மேலும் இவா தமககு ஆதரவு தேடப் பிரபுககளை விடடுவிட்டு மககளை நாடினாா. பிரபுககளின கைப பாவையாக இயஙகாமல தாமே ஆட்சி செலுதத முறபட்டாா. அலலாமலும இவா ஓர் அபிசினிய அடிமையிடம காதல கொணடு வரமபுமீறிய செய்கை யில் வெளிப்படையாக ஈடுபட்டாா. ஆகவே பிரபுககள கலகம் செய்து இவரைக கொன்று விட்டனர். இவரை யடுத்து பராம்சா (கி.பி. 1240-42), அலாவுததீன் மாசூத் சா(கி.பி 1242-46), நாசின உத்தீன மாமூதது (கி.பி 1246-66) ஆகியோா ஆட்சி செலுத்தினார்கள். பால்பன கி பி 1266-இல சுலதானாகப பதவியேற் றார். இவாகி.பி 1286வரைஅரசாண்டாாமஙகோலியப் படையெடுப்பிலிருநது நாட்டைக் காக்கப பல முயறசி கள் இவர் மேறகொணடாா. ஆயினும இராவி ஆற்றுககப்பால அவரால தம் ஆதிககத்தை மீணடும் நிலைநாட்ட இயலவில்லை அரசனுடைய அதிகார வளர்சசிக்கு இடையூறாக இருநத நாறபதினமரை முற்றிலும் ஒழித்தார். பிரபுககளுள் ஒருவராக அர சரைக் கருத இயலாது எனறும அவா கடவுளுடைய நிழலாகக் கருதப்பட வேணடும் எனறும அவர் கூறி

னார். அரசவையில் எவரும் சிரிப்பதற்கு அனுமதிக்கப் படவில்லை. இவருக்குப் பின்னர்க்கைக்குபாத்து(கி.பி. 1286-90) அரசப் பொறுப்பேற்றிருந்தார். கி.பி. 1290-இல் இவர் நோய்வாய்ப்பட்டபோது பிரபுக்கள் கையுமார்சு என்பவரை அரியணையில் அமர்த்தினார்கள். இவரை அகற்றிவிட்டுச் சலாலுத்தின் பிரூசு அரசரானார் (கி.பி. 1290-96). இவரைப் பின் தொடர்ந்து கி.பி.1320 வரைஆட்சிசெலுத்தியவர்களைக்கில்சிக்கள் என்பர்.

கில்சிக்கள் சாதாரண வகுப்பைச் சார்ந்தவர்கள். அரசுரிமை பிரபுக்களுக்கு மட்டுமே உரியது என்ற கோட்பாட்டை முதன் முதலில் இந்தியாவில் தகர்த்தெறிந்த முசுலீம் அரசர்கள் இவர்களேயாவார்கள். பீசுருவினுடைய சகோதரனின் மகனும் மருமகனும் ஆன அலாவுத்தீன் கில்சி அரசுரிமையைக் கைப்பற்று தற்குத் தம்மைவளர்த்து ஆளாக்கிய பீருசைக் கொல்லவும் தயங்கினாரில்லை. இவர் காலத்தில் (கி.பி. 1296-1316) மங்கோலியப் படையெடுப்பு முறியடிக்கப்பட்டது. வட இந்தியாவில் குசராத்து, மேவார் போன்ற நாடுகளை அவர் வென்றார். முதன்முதலில் முசுலீம்கள் இவர்காலத்தில்தான் விந்தியமலையைக் கடந்து தெற்கே படையெடுத்துச் சென்றனர். இவருடைய தளபதியான மாலிக்காபூர் இராமேசுவரம் வரைச் சென்றதாகக் கூறப்படுகிறது. இவராட்சியின்போது விலைக் கட்டுப்பாட்டு முறையை அரசு கொணடு வந்தது. இவருடைய மகனான முபாரக் சா (கி.பி. 1316-20) குசுரூ சாவின் கையில் கொலையுண்டார். குசுரூ சா தில்லியை ஆண்ட முதல் இந்திய முசுலீம் ஆவார். குசுரூ இந்து மதத்தை விட்டு இசுலாமிய மதத்தைத் தழுவிய ஓர் இந்திய முசுலீம் என்பதால் துருக்கிய முசுலீம் பிரபுக்கள் இவரை வெறுத்தனர். அதனால் ஏற்பட்ட கிளர்ச்சியின் பயனாக வேறொரு அரச குலத்தவர் ஆட்சியைக் கைப்பற்றினர். இவர்களைக் துக்ளக்குகள் என்பர். இவர்களும் கில்சிகளைப் போலவே துருக்கிய இனத்தைச் சார்ந்தவர்கள் எனக் கூறப்படுகிறது.

துக்ளக்கின் அரச குலத்தைத் தோற்றுவித்தவர் கியாசுத்தீன் துக்ளக்கு ஆவார் (கி.பி. 1320-1325). முகம்மது பின் துக்ளக்கு கி.பி.1325 முதல் 1351 வரை ஆண்டார். இவரைச் சிலர் பைத்தியக்காரன் என்றும் வேறு சிலர் அறிவாளி என்றும் கூறுகினறனர். இவர் காலத்தில் தலைநகரை மங்கோலியப் படையெடுப்பாளர்கள் எளிதில் நெருங்கா வண்ணம் அமைக்கும் பொருட்டும் பேரரசின் பரப்பெல்லை தெற்கே பரவியதால் தலைநகர் பேரரசின் மையத்தில் அமைந்திருக்க வேண்டியதன் இன்றியமையாமை கருதியும் தில்லியிலிருந்து தலைநகரைத் தேவகிரி(தௌலதாபாத்திற்கு) மாற்றினார். அப்போது தில்லி மக்களிடையே தோன்றிய சலசலப்பின் காரணமாக அலுவலர்களை மட்டும் தேவகிரிக்கு அனுப்பி வைத்தால் போதுமென்றிருந்த சுல்தான் மக்கள் அனைவரையும் அங்குப் போகச் செய்தார். தில்லி பாழாகியது. வழியில் பலர் இறந்தனர். தேவகிரி தலைநகராக இருப்பதறகு தகுதியற்றது என்று உணர்ந்தவுடன் தலைநகரைத் தில்லிக்கு மாற்றிவிட்டார். பொருளாதார நிலையைச் சீர்படுத்த அடையாள நாணயங்களை வெளியிட்டார். மக்கள் அந்நாணயங்களை அச்சிடுவதைத் தடுக்க இவர் முற்படவில்லை. எனவே ஒவ்வோர் இந்து வீடும் நாணயச் சாலையாக மாறியது என்று சிலர் கூறியுள்ளனர். இவ்விரு திட்டங்களும் நல்ல நோக்குடன் கொண்டு வரப்பட்டபோதிலும் முகமதுவின பொறுமையின்மை காரணமாக அவை தோல்வியுற்றன. அவருக்குப்பின் ஆட்சி செலுத்திய பீருசு துக்ளக்கு (கி.பி. 1351-88) வேளாண்மையைப் பெருக்கப் பல கால்வாய்களை வெட்டினார். எழில்மிகு தோட்டங்களை உருவாக்கினார். ஏழை எளியோர்களின் நலன்கருதிக் குறைந்த மதிப்புள்ள நாணயங்களை வெளியிட்டார். ஏழை முசுலீம் பெண்களுக்கு மணம் செய்விக்கப் பல உதவிகளைச் செய்தார். மருத்துவ மனைகள் கட்டினார். ஆயினும் இவர் ஆட்சியில் சில குறைகள் காணப்பட்டன. அடிமைத் தனத்தை இவர் ஆதரித்தார். அடிமைகளுடைய எண்ணிகை பெருகியது. நிருவாகம் கணடிப்புடன் நடத்தப் பெறவில்லை. இலஞ்ச ஊழலை இவரே ஆதரித்தார். அரசாங்கப் பணியில் சமய குருமாாகள செல்வாக்கு மேலிட்டது. துக்ளக்குடைய ஆட்சிக் காலத்தில்தான தைமூர் இந்தியாவின மீது படையெடுத்து வந்து தில்லியைச் சீரழித்தார்.

துக்ளக்குகளுக்குப் பினனர்த் தில்லியிலிருந்து கி.பி. 1414 முதல் 1451 வரை சையத்துகள ஆட்சி செலுத்தி வந்தனர். இவ்வரச குலத்தினர் ஆட்சியைத் தொடங்கியவர் கிசிர்கான். இவவரச குலத்தைச சார்ந்த கடைசி அரசனான ஆலம் சா (கி.பி. 1444-51) பகுலுல் லோடி (Bahlul Lodi) (கி.பி. 1451-56) என்ற ஆப்கானியரிடம் ஆட்சிப் பொறுப்பை விட்டுவிட்டு பதோனுக்குச் செனறுவிட்டார். இவர் அரியணையில் அமர்வதற்குப் பதிலாக தமது ஆப்கானியப் பிரபுக்களோடு தரைவிரிப்பில் அமர்ந்து கொள்வது வழக்கம்.இவருக்குப் பின்னர் பட்டமேறிய சிக்கந்தர் சா (கி.பி. 1489-1517) காலத்தில்தான் ஆக்ரா நகரம் அமைக்கப்பட்டது. இவரே உலோடி அரசர்களுள் சிறந்தவர். இவருக்குப் பின்னர் பதவியேற்ற இப்ராகீம் உலோடி (கி.பி. 1517-26) தமது பிரபுக்களைத் தாழ்வாக நடத்தினார். ஆப்கானியப் பிரபுக்கள் தங்களை அரசருக்குச் சமமானவர்கள்

என்று கருதினார்கள் எனவே இப்ராகிமினுடைய செயலகள அவர்களுக்கு எரிச்சலை ஊட்டின. எனவே அவர்களுள் சிலர் காபூலை ஆண்டு வந்த பாபரின் உதவியை நாடினர். பாபர் அவர்களுடைய வேணடு கோளை ஏற்று இந்தியாவின மீது படையெடுதது வந்து பானிப்பட்டு என்னுமிடத்தில சுலதானைத தோற்கடித்து தில்லி சுல்தானியத்தை அழித்தார்.

சுலதானகளுடைய ஆட்சி சமயச சார்புடைய தாக இருநதது சுலதான் அரசியல் தலைவராக மட்டு மனறிச் சமயத் தலைவராகவும இருநதாா. இசுலாமே நாட்டின அங்கீகாரம பெறற சமயம. நாட்டின வளஙகள அனைததும் இசுலாமின நலனுக்காகப பயனபடுத்தப்பட்டன. இவர்களுடைய ஆட்சி ஓா இராணுவ ஆட்சியாகும். துருககிய பாரசீக அரசியல நிறுவனஙகள இநதியாவில ஏறபடுத்தப் பட்டன. ஆயினும் கிராமஙகளுடைய ஆட்சி இநது அதிகாரிகளிடம் விட்டுவைக்கப்பட்டது ஒவவொரு கிராமத்திலும ஒரு பஞ்சாயதது சபை இயஙகி வந தது.

சுலதானகளுடைய ஆட்சியினபோது சமுதாய மாற்றஙகள ஏற்படடன. முசுலீம சமுதாயம் வேருன றியது. சிறுபானமையினர்களாக இருப்பினும் ஆட்சிப் பொறுப்பு அவாகளிடமேயிருநதது. முசுலீமகள இன அடிப்படையில இரு பிரிவுகளாகப பிரிந்திருந்தனா. அந்நிய முசுலீம்கள் சமயக் கோட்பாட்டின அடிப படையில் சுனனிகள எனறும் சியாககள (Shias) என றும் பிரிநதிருநதனா. இநதுககள கொடுமைக்குள்ளா யினர். கோயில்கள் அழிக்கப்பட்டன. அவாகள மீது செசியா எனப்படும் தலைவரி விதிககபபட்டது. இந துக்கள பல சாதிகளாகப் பிரிநதிருநதனா. பிரா மணர்கள மிக்க செலவாக்குப் பெறறிருந்தனர். சுல தான்கள ஆட்சியில் நாடு செலவச் சிறப்புடன இருந தது, ஆனால் நாட்டின செலவம் உயர்குடியாளரிடம குவிக்கப்பட்டிருநதது. பணக்காரருககும ஏழைககும் இடையே பெரியதோா இடைவெளி ஏறபட்டது.

தில்லி சுலதானகளுடைய ஆட்சிக காலத்தில பக்தி இயககம் தோன்றியது. பகதி இயக்கத்தைத் தொடஙகிய பெரியார்கள இக்காலத்தில் வாழ்ந தனர். இராமானுசர் கி.பி.12-ஆம் நூற்றாணடிலும இராமானநதர் கி பி.14-ஆம்நூற்றாண்டிலும்,வல்லபா சார்யாவும் சைதன்யரும் கி.பி.15-ஆம நூற்றாணடி லும் வாழ்ந்தனா. இராமானநதருடைய சீடருள ஒரு வர் கபீர். சீக்கிய மதத்தைத் தோற்றுவித்த குரு நானக்கும் கி.பி.15-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவ ரேயாவார். பக்திமார்க்கத்தைப் பரப்பிய சமயத் தலைவர்கள் கடவுள் ஒருவரே என்ற கோட்பாட்டை யும் சாதிப் பாகுபாட்டையும் எதிர்த்தனர்.

தில்லி சுல்தானகளுடைய ஆட்சியின்போது இலக் கியம் வளர்ந்தது இந்துத்தானத்தின் கிளி எனக்கரு தப்படும் அமீாகுசுரு இக்காலத்தவரேயாவார்.நானகு இலட்சம் கவிதைகளை இவர் இயறறியதாகக் கூறப் படுகினறது. பலவரலாறறு நூலாசிரியாகள் இக்காலத் தில வாழ்ந்திருநதனர். அவர்களுள் குறிபபிடத் தக்கவர் சியா உத்தீன் பரணி யாவாா. பாரசீக மொழி, வடமொழிகளிலன்றி இநதி மொழியிலும் பல நூல்கள இயறறபபட்டன. செயதேவருடைய கீதகோவிநதம, கல்கணருடைய இராசதரஙகிணி போன்ற நூல்கள இககாலத்தில் இயற்றப்பட்ட னவேயாகும்.

கடடடக் கலையும் இககாலத்தில் வளாசசியுற் றது. அயலநாட்டுப் பாணியும, இநதுப் பாணியும கலநத கட்டடங்கள பல எழுந்தன. இககாலக் கட்ட டஙகளுள குறிப்பிடத்தககவை குதுப்மினார், அலாயி தர்வாசா, துகளகாபாது நகரம ஆகியவையாகும

தி.ஆர்.இரா.

***தில்லித் தமிழ்ச் சங்கம்*** : தமிழகத்திலிருநது வாழ்வு தேடித தில்லிக்கு வந்த தமிழ மககளுக்கு வயிற்றுபபசி தணிந்தபோதிலும், அவாகளது அறிவுப பசி தணியவில்லை. தில்லியில் எநதப்பக்கம திருமபினாலும் இநதி, பஞ்சாபி, உருது போனற மொழிகளே கேட்கக கூடியனவாக இருநதன. செந் தமிழ எனற இனபத்தேன் காதில கேட்காதா எனற ஏக்கமும, சஙகபபுலவர்களும், வளளுவரும், இளங கோவும், பாரதியும் கட்டிககாத்த தமிழ இலககியங் களைச சுவைதது மகிழவேணடும் என்ற ஆாவமும, தமிழ இலக்கியஙகளின சிறப்பை மற்றவாகளுக்கு எடுததுக்கூறவேணடும் எனற வேட்கையும தில்லி வாழ தமிழர்பால் மிககன. வயிற்றுப்பசியைக காட் டிலும் கொடிய பசியாக இவவிலக்கியபபசி ஒவ வொரு தமிழனிடம் எழுநதது. இப்பசிக்கு அருமருந் தாக தில்லியிலிருந்த ஒரு தெனனிந்திய உணவு விடுதி யில 1946-ஆம ஆணடு ‘சஙகம நிறுவிய துங்கர்கள்’ எனச செலலமாக குறிக்கப்படும ஒன்பது உறுப் பினர்களால திலலித் தமிழ்ச் சஙகம் நிறுவப்பட்டது. தலைநகரில் வாழந்த தமிழர்கள் தமிழின் சுவை யைப் பருகி மகிழவதும், தமிழ்மொழியைத தில்லியில் வளர்ப்பதும் தமிழ் இலக்கியத்தை மற்றவர்களுககு எடுத்துககூறுவதும சங்கத்தின் தொடக்ககால நோக் கஙகளாக இருநதன.

**வளர்ச்சி:** இவவாறு சிறிய அறையில் சங்கம் நிறுவப்பட்டாலும், அதன் நோக்கஙகள உயர்ந்தன வாக இருந்தமையால் அதன தேவைகள வளாச்சி அடைந்தன. அந்தத் தேவைகளை நிறைவு செய்

யும் வகையில் சங்கம் நிறுவியவர்களில் ஒருவர் தம் வீட்டின் ஓர் அறையைச் சங்கப் பணிகளுக்காகக் கொடுத்துதவினார். அந்த அறையில் சிறு நூலகம் ஒன்று நிறுவப்பட்டது. தில்லிவாழ் தமிழ் மக்களின் இலக்கியப் பசியை அந்நூலகம் ஓரளவு தணித்ததோடு, தில்லிக்கு வருகை தந்த தமிழர்களையும் சங்கம் கவர்ந்தது. தமிழர்கள் பலரும் சங்கத்தில் ஈடுபாடு கொள்ளவே அதன் சிறிய அறைகள் போதியனவாக அமையவில்லை. ஆகவே புதுதில்லியின் மத்திய பகுதியான 'கனாட்டு பிளேசு' என்னும் இடத்தில் சிறிய கட்டடம் ஒன்று ஒரு உருபாய் வாடகையில் அமர்த்தப்பட்டது. அக்கட்டடத்தில் இருந்த மூன்று அறைகளிலும் சங்க அலுவலகம், நூலகம், சத்திய மூர்த்தி நினைவுப் படிப்பகம் போன்றவை இயங்கி வந்தன.

வசதியான இடம் கிடைத்த நிலையில், தமிழ்ச் சங்கத்தின் பணிகள் பல்துறைகளிலும் விரிவடைந்தன. இலக்கியச் சொற்பொழிவுகள், கவியரங்கங்கள், பட்டி மன்றங்கள், கலந்துரையாடல்கள், வரவேற்பு-வழியனுப்பு விழாக்கள் போன்ற பல்வேறு நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டன. இவை தவிர, தமிழ்ச் சான்றோர்களின் நினைவு விழாக்கள், தமிழ்ப் புத்தாண்டு விழா, பொங்கல் விழா, சுதந்திர தினவிழா, குடியரசு தினவிழா போன்ற விழாக்களும் ஆண்டுதோறும் தமிழ்ச் சங்கத்தால் கொண்டாடப்பட்டன.

மேலும், தமிழ்மொழியின் சிறப்பையும், தமிழ்ச் சமுதாயத்தின் பண்பாட்டையும் தமிழரல்லாத மக்களுக்கு உணர்த்தும் வகையில் தமிழ் வகுப்புகள் இலவசமாக நடத்தப்பட்டன. அவ்வாறே, தமிழ் மக்கள் வடநாட்டு மக்களோடு நெருங்கிப் பழகும் வகையில் தமிழ் மக்களுக்கு இந்திவகுப்புகளும் நடத்தப்பட்டன. மேலும், தமிழ் இலக்கியம், தமிழ்ப் பண்பாடு ஆகியவை குறித்துப் பற்பல நூல்களும் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டன. இவைதவிர, இலக்கியக் கூட்டம் ஒன்றும் வாரந்தோறும் நடத்தப்பட்டு, அதில் ஆராய்ச்சிக் கட்டுரைகள் படிக்கப்பட்டு, தமிழ் மக்களிடையே இலக்கிய உணர்வைத் தமிழ்ச் சங்கம் வளர்த்தும் வந்தது.

**தனிக் கட்டடம்:** பெருகி வந்த சங்கத்தின் இலக்கியப் பணிகளுக்கு, 'கனாட்டு பிளேசில்' இருந்த கட்டடம் நாளடைவில் வசதியற்றதாகிவிட்டது. இந்நிலையில், சங்கக்கட்டட நிதிக்காகப் பலர் கொடுத்த நன்கொடையாலும், தமிழக அரசு கொடுத்த உதவிப் பணத்தாலும், பற்பல கலைநிகழ்ச்சிகள் நடத்தித் திரட்டிய பணத்தாலும், சிண்டிகேட் வங்கியின் கடனுதவியாலும் தில்லி மாநகரத்தின் தென் பகுதியில் உள்ள இராமகிருட்டிணபுரத்தில் புதிய தமிழ்ச் சங்கம் நிறுவப்பட்டது. இப்புதிய சங்கம் அமைந்திருக்கும் சாலைக்கு 'தமிழ்ச் சங்கம் மார்க்' எனவும் பெயரிடப்பட்டது. இப்புதிய கட்டடத்தில் சங்க அலுவலகம், தமிழ்-இந்தி வகுப்புகள், இலக்கியச் சொற்பொழிவுகள், சங்கத்தின் நூலகம், படிப்பகம் போன்றவை இயங்கி வருகின்றன.

**நூலகமும் படிப்பகமும்:** தமிழ்ச் சங்கத்தின் நூலகத்தில் ஏறத்தாழ பத்தாயிரம் தமிழ்-ஆங்கில நூல்கள் உள்ளன. தமிழகத்தில் கிடைத்தற்கரிய சிற்சில தமிழ்நூல்களும் இந்நூலகத்தை அலங்கரிக்கின்றன. இந்நூலகத்தைத் தவிர, தமிழர்கள் அதிகமாக வாழும் கரோல் பாக்கு என்ற பகுதியிலும் ஒரு கிளை நூலகம் இயங்கிவருகிறது. இராமகிருட்டிணபுரத்தில் உள்ள தமிழ்ச் சங்கத்தில் இலவசப் படிப்பகம் ஒன்றும் உள்ளது. அதில் தமிழ், இந்தி, ஆங்கிலம் போன்ற மொழிகளில் வெளிவரும் நாளிதழ்களும், வார மாத இதழ்களும் வாசகர்களுக்கு இலவசமாக வழங்கப்படுகின்றன.

**விழாக்களும் பரிசுகளும்:** தமிழ்ச் சங்கம் கொண்டாடும் விழாக்களில் பாரதிவிழா சிறப்பிடம் பெற்று விளங்குகின்றது. இவ்விழாவையொட்டி நினைவுத் திறனாய்வுப் போட்டி, பேச்சுப்போட்டி, கட்டுரைப் போட்டி, இசைப் போட்டி போன்ற போட்டிகள் நடத்தப்படுகின்றன. இப்போட்டிகளில் பற்பல பள்ளி கல்லூரி மாணவ மாணவியர் கலந்துகொள்கின்றனர். மேலும் தில்லிவாழ் தமிழ் மாணவர்களிடையே தமிழார்வத்தையும், தமிழ்மொழியில் பேச்சாற்றலையும் வளர்க்கும் வகையில் அனைத்துக் கல்லூரிகளுக்கான பேச்சுப் போட்டியினை நடத்துவதற்காகத் திரு வேங்கடவன் கல்லூரிக்குச் சத்தியமூர்த்தி நினைவுச் சுழற்கோப்பையையும், சீமாட்டி சீராம் கல்லூரிக்குத் திருவள்ளுவர் நினைவுச் சுழற்கோப்பையையும் தமிழ்ச் சங்கம் வழங்கியுள்ளது இவைதவிர, அனைத்துத் தமிழ்ப் பள்ளி மாணவர்களிடமும் பேச்சாற்றலை வளர்க்கும் வகையில் 'மகாகவி சுப்பிரமணிய பாரதியார் நினைவுச் சுழற்கோப்பை'க்கான பேச்சுப் போட்டியைத் தமிழ்ச் சங்கம் நடத்தி வருகின்றது. மேலும், ஆண்டுதோறும் பள்ளி இறுதித் தேர்வில் தமிழ்மொழியில் அதிக மதிப்பெண்கள் பெறும் மாணவர்களுக்கு அன்பளிப்பாக நூறு உருபாயும், சான்றிதழும் வழங்கி அவர்களைப் பெருமைப்படுத்துகின்றது.

**நூல் வெளியீடுகள்:** தமிழ்ச் சங்கம் வாய்ப்பும் வசதியும் கிடைக்கும்போது பற்பல நூல்களையும் வெளியிட்டு வருகின்றது. திரு. வ.வே.சு. ஐயா எழுதிய

'கம்பராமாயணம் ஓர் ஆய்வு'(Kambaramayanam-A-Study) 'திருவள்ளுவர் கொள்கை' (Maxims of Thiru valluvar) போன்ற ஆங்கில நூல்களையும், வான்மீகநாதனின். 'கம்பனின சீதை'(Kamban's Sita) 'திருவாசகத்தின் வழி இறைவனை எய்தும வழி' (pathway to God Through Literature Thiruvachakam) போன்ற ஆங்கில நூல்களையும்தில்லித் தமிழச் சங்கம இதுவரையில் வெளியிட்டுள்ளது. இவைதவிர இராசாசி, பாரதி, உ.வே.சா, திரு.வி.க., கவிமணி, பாரதிதாசன், திருவளளுவர், மகாத்மா காநதியடிகள, அறிஞர் அண்ணா போனற பெரியோரகளின பெயரில் ஆணடு மலர்களையும தமிழ்ச்சங்கம் வெளியிட்டுள்ளது.

**கலையரங்கம்:** தில்லித் தமிழ்ச் சங்கததிற்கெனத் தனியான தொரு கட்டடம அமைந்துளளதைப் போல், சங்கம் நடத்தும் கலை நிகழ்சசிகளுக்கும் விழாக்களுக்கும் ஒரு கலையரஙகம் ஏறததாழ எண பது இலட்ச உருபாய் செலவில் கட்டப்பட்டு வருகின் றது. இக்கட்டடப் பணிக்குப் பற்பல அறிஞர்களும் வளளல்களும் தம்மாலியன்ற கொடையினை வழங்கி வருகின்றனர். சு.மா.

*தில்லிப் பல்கலைக் கழகம்,* இந்தியத் தலைநகரில் 1922-ஆம் ஆணடு தோற்றுவிககப்பட்டது நாட்டின உயர் கல்விக்காகவும், பல புதிய துறைகளில் மாணவர்கள் பயிலவும் எணணிக் கல்கததாப் பல்கலைக் கழகக் குழுவின பரிந்துரை அடிப்படையில இப் பலகலைக் கழகம் வடக்கு தில்லியில 448 ஏக்கர் பரப்பில அமைக்கப்பட்டது. இன்று இப் பல் கலைக கழகத்தில் பல புதிய துறைகள் பெருகியுள்ளமையால் தெற்குத திலலியில 1973-இல புதிய வளாகம் ஒன்று ஏறபடுத்தப்பட்டது. இஙகு முதுநிலைக் கல்வி வழங்கப்படுகிறது. அதனோடு தெற்குத் தில்லிப் பகுதியிலுள்ள கல்லூரிகளைக கவனிக்கும் நிருவாகத் துறையும இங்கு உளளது. வடக்கு திலலி வளாகத்தில நிருவாகம, நூலகம், புலஙகள, மாணவர் விடுதி முதலானவை செயறபடுகினறன. இப் பல்கலைக் கழகத்தின் பார்வையாளராகக் குடியரசுத் தலைவர் உளளார்.

தில்லிப் பல்கலைக் கழகத்தின் நோக்கஙகளுள கற்பித்தல், இணைப்புரிமை (Affiliation) தருதல, உறுப்புக் கல்லூரிகளைக் (Constitunt Colleges) கவனித்தல், ஆராய்ச்சி முதலானவை அடஙகும. இப்பல் கலைக் கழகத்தில் இரணடு இணைப்புரிமை பெற்ற கல்லூரிகளும், 38 உறுப்புக் கல்லூரிகளும் உள்ளன. இதன் நேரடி நிருவாகத்தின் கண் இயங்கும் 8 நிறுவனங்களும் உள்ளன. அரசு நிருவகிக்கும் 8 கலவி நிறுவனங்களும் திலலிப் பல்கலைக் கழகத்தில் இடம் பெறறுள்ளன. இங்குப் பல்வேறு புலங்கள் உள்ளன. அவற்றுள் கலை, கலவியியல்,மேலாணமையியல,சமுதாய அறிவியல், சட்டவியல், இசை மற்றும் கவின கலைகள், ஆயுர்வேதம் மற்றும் இசுலாமிய மருத்துவம் (Unani), மருத்துவ அறிவியல், கணிதவியல, அறிவியல், தொழிலநுட்பவியல முதலியவை அடஙகும்.

இப்பல்கலைக் கழகததில் புகுமுகப் படிப்பு இல்லை. பட்டப்படிப்பு முதல ஆராய்சசிப் பட்டஙகள் வரை பயில வாயப்புணடு. இங்கு ஆப்பிரிககவியல் (African Studies), மானிடவியல், அராபிய மொழி, சீன, சப்பானிய மொழிகள், புதிய ஐரோப்பிய மொழிகள (Modern European Languages), இநதிய மொழிகள், புததவியல் (Buddhist Studies), மேலாணமையியல், கல்வியியல, வணிகவியல், பொருளியல,புவியியல, வரலாற்றியல், சட்டவியல், மொழியியல், தத்துவவியல், அரசியல்,சமூகவியல், உளவியல, நூலகவியல முதலான கலைத் துறைகளும் தாவரவியல, வேதியியல், கணிப்பொறி அறிவியல், மணணியல், கணக்கியல், இயறபியலும் வாணியலும், விலங்கியல் முதலான துறைகளும் உள்ளன.

இணைப்புரிமைக் கல்லூரிகளில் இளம்நிலைப் பட்டப்படிப்பு மட்டுமே படிககமுடியும. உறுப்புக் கல லூரிகளிலும் பலகலைக் கழகத் துறைகளிலும் உயா பட்டப் படிப்பு வழங்கப்படுகிறது.

முதுநிலைப் பட்டஙகள், ஆராய்ச்சி முதலானவை அனைத்துத் துறைகளில வழஙகப்பட்டாலும் இங்கு விலஙகியல், தாவரவியல், வேதியியல், பொருளியல, இயற்பியல, சமுதாயவியல ஆகிய துறைகளில் சில உட்பிரிவுகள் உயராய்வு மையங்களாகச் (Centres of Advanced Studies) செயற்படுகினறன. இது தவிர்த்துத் தில்லிப் பலகலைக் கழகததில் வேளாணமைப் பொருளியல ஆய்வு மையம ஒன்று இயங்குகிறது. இம்மையம் 1954-இல் தோற்றுவிக்கப்பட்டு நாட்டின் 10 பல்கலைக் கழகஙகளில் இயங்கும் மையங்களுள் ஒன்றாக விளங்குகிறது. வேளாண் பொருளியல் சார்ந்த பல்வேறு நடைமுறை ஆய்வுகளை இம்மையம் மேற்கொளகிறது.

தில்லிப் பல்கலைக்கழகத்தில அஞ்சல்வழிக் கல்வியும் வழங்கப்படுகிறது. இளங்கலை, முதுகலை முதலான பட்டங்களைச் சில பாடஙகளில மட்டும் பெறமுடியும். தனிப்பட்ட முறையில் பயிலவும் இங்கு அயல்வழி மாணவராகப் (External Candidates) பதிவு செய்துகொள்ளப்படுகிறார்கள. இவ்வகைக் கல்வியில் பி.ஏ.,பி.காம்.,எம்.ஏ.,எம்.காம். முதலான

பட்டங்களைப் பெறலாம். இப் பலகலைக் கழகத்தில் டிசி.எல். (Dc.L), டி.லிட்., டி.எசுசி (D.Sc.) முதலான சிறப்புப் பட்டங்கள் பெற வழியுண்டு.

பட்டயப் படிப்புகள் (Diploma), சான்றிதழ் படிப்புகள் (Certificate Course) முதலான குறுகிய காலக் கல்வி, பெரும் எண்ணிக்கையிலான பாடங்களில் வழங்கப்படுகிறது. குறிப்பாக, இந்திய, ஐரோப்பிய, ஆசிய மொழிகள், சட்டவியல், மருந்தியல், மேலாண்மையியல், மொழிபெயர்ப்பியல் முதலான துறைகளில் இவ்வகைக் கல்வியைப் பெறலாம். தில்லிப் பல்கலைக் கழக நூலகத்தில 9 இலட்சத்திற்கும் மேற்பட்ட நூல்கள உளளன. சற்றேறக்குறைய 3,400 காலமுறை இதழ்கள் பெறப்படுகினறன.

மாணவர்கள் பகுதி நேரத்தில் விளையாட்டு, தேசிய மாணவர் படை முதலான துறைகளில ஈடுபாடு கொள்வதற்குச் சிறந்த வசதிகளை இப் பல்கலைக்கழகம் ஏற்படுத்தியுள்ளது. சீ.ப.

***தில்லை:*** காணக: சிதம்பரம்.

***தில்லை உலா:*** தமிழ்ச் சிற்றிலக்கியவகைகளுள ஒன்று உலா. இத்தில்லை உலா இறைவன் 'மேல் பாடப்பட்டதாகும். தில்லை உலா, 'திலலை வளாகம் வீர கோதண்ட ராமசாமி உலா' என்பதன் சுருக்கமாகும். இவவுலாவைப் பாடியவர் பெரும்புலவர் பினனத்தூர் நாராயணசாமி ஐயர் என்பார். இவவுலா நூல் 1902-இல் வெளிவநததாக இலக்கிய அகராதி வழியே அறிய முடிகின்றது. கோதணடராமர் மேல் பாடப்பட்டதால் 'வைணவ'ச் சார்புடையது என்பது விளங்கும்.

தில்லை வளாகம் 'தென்றிலலை' எனவும் வழங்கும். அதனால், இவ்வுலா 'தெனறில்லை உலா' என்றும் சொல்லப்படும். இவ்வாசிரியரே இயற்றிய மற்றொரு நூல் 'தென்றில்லைக் கலம்பகம்' எனபதாம்.

இறையனார் ஆற்றுப்படை, நீலகணடேச்சரக் கோவை, சிவபுராணம, சிவகீதை முதலிய நூல்களை இயற்றிய இவ்வாசிரியர், இவ்வுலாவும் கலம்பகமும் இயற்றியமையால், சைவ வைணவப் பொதுமை போற்றிய பெருந்தகை எனபது விளங்கும்.

'பழையது விடு தூது', 'செருப்பு விடு தூது' என இவர் இயற்றிய தூது நூல்கள் இவர்தம் புதிய பார்வையை விளக்கும். இவர் எழுதிய நற்றிணை உரை சிறப்பு வாய்ந்தது. சிறந்த உரைவல்லார் இவர் என்பதை நிலைநாட்டுவது. இரா.இ.

***தில்லை நாயக முதலியார்:*** இவர் தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள சிதம்பரத்தில் கி.பி. 1876–ஆம் ஆண்டு பிறந்தவர். சிதம்பரத்தில் 'செந்தமிழ்ச் சங்கம்' நிறுவித் தமிழ்ப் பணிபுரிந்தவரிவர். ஈசானிய மடம் இராமலிங்கத் தம்பிரானிடம் இவர் கல்வி கற்றார். சிதம்பரம் நாவலர் சைவப் பிரகாச வித்தியாசாலையில் ஊதியம் பெறாமல் தமிழாசிரியராகப் பணிபுரிந்து வந்தார். தமிழ்நாடு அரசு ஏற்படுத்திய தமிழ் அகராதித் தொகுப்புக் குழுவில் இவர் மதிப்புறு உறுப்பினராக இருநதுள்ளார். இவர் 'முருகவேள் மும்மணிக் கோவை' எனனும் நூலை எழுதியுள்ளார். சைவசித்தாநதக் கருத்துகள் நிரம்பிய அந்நூல் புகழ்வாய்நதது. இவர் 1917–ஆம் ஆண்டு மறைந்தார். சா.உ.

***தில்லை வாழந்தணர்:*** 'தில்லை' என வழங்கப்படும் சிதம்பரத்தில் வாழ்ந்து நடராசரைப் பூசிதது வரும் அந்தணர்கள் 'தில்லை வாழ் அந்தணர்' என இலக்கியஙகளில் குறிக்கப் பெற்றனர். இவர்கள தொகையடியார் ஆவா.

'தில்லை வாழ் அநதணர்தம அடியார்க்கு மடியேன' எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகளால போற்றப் பட்ட பெருமைக்குரியவர்கள.

தீட்சிதர்கள அந்தண மரபில் வந்தவர்கள. இல்லற மாணபு உடையவர்கள். நான்கு வேதஙகளையும் ஆறு வேதாங்கங்களையும் ஓதியுணர்ந்தவர்கள. ஆகவனீயம், தட்சிணாக்கினி, காருகபத்தியம் என்னும் முத்தீயையும் முறைப்படி வளர்த்து ஓம்புபவாகள. திருநீறும் உருத்திர மணியும் பொலியும் உடலினா; சிவபெருமானுடைய திருவடிகளில இடையறாது பதிந்த பேரனபே தெயவமெனக் கொணடவர்கள.

எந்தத் தீட்சிதரும் திருமணம் செயதுகொணட பின்னரே நடராச மூர்த்தியை அருச்சிக்கும் உரிமையையும் கோயில் நிருவாகப் பொறுப்பின உரிமையையும் பெறுகின்றார். இவவாறு பங்கு பெறும் தீட்சிதர் வயது, கலவி, திறமை, செல்வம் போன்றவற்றால எந்த வேறுபாடும் உடையவராகக் கருதப்பட மாட்டார்.

தீட்சிதர்களின் பொதுக்குழு 'பொது தீட்சிதர்' என வழங்கப்படுகிறது. இச்சபை பேரம்பலத்தில கூடும். இச்சபையினரே தில்லைக கோயிலை வழிவழியாகப் பாதுகாத்துவரும் அறஙகாவலர் ஆவர்.

கோயிலுக்கெனத் தனிப்பட்ட முறையில் ஒரு காணி நிலம் கூட இல்லை. பொது மக்களிடமிருந்து கிடைக்கும் வருவாயைக் கொண்டே கோயில் செலவுகளும் நித்திய நைமித்திக பூசைகளும் நடந்து வருகின்றன.

தில்லைப் பெருங்கோயிலில் பூசை செய்யும உரிமை தீட்சிதர்களுக்கு மட்டுமே உணடு. இக்கோயில இவர்களது சொந்தக் கோயிலென இவாகள வெளியில எங்கும அலுவல்களில அமர்வதிலலை. தில்லை கோயிலின் முனனர் உள்ள கோவிநதராசப் பெருமானுக்கும் கி.பி. 8-ஆம் நூற்றாணடு வரையில இவாகளே பூசை செய்து வந்தனா என்பர்.

வறுமையில வாழநத போதிலும் இவர்கள செம்மையில் தவறுவதிலலை. தமிழ நாட்டுச செல்வர்களும, மனனர்களும் வழங்கிய விலை மதிப்பறற அணிகலனகள் கோயிலில உளளன. இவை அனைததும் 4 நாளகளுக்கு ஒருமுறையும், 20 நாளகளுக்கு ஒரு முறையும, 6 மாதத்திற்கு ஒரு முறையும் எவ்வெவ்வாறு சரிபார்ககப்பட வேணடும் எனற வரையறை வகுககப்பட்டிருக்கின்றது.

இனறுவரை இககணக்குகள் எவவிதக் கையாடலும் இனறிச செம்மையாகவே இருந்து வருகின்றன. சித்தாந்த நூல்கள பலவற்றை இயற்றிய உமாபதி சிவனார் இத்தில்லை வாழநதணர்களுள ஒருவர் என பது குறிபபிடத் தககது. அ ஆ.

### தில்லை விடங்கன் மாரிமுத்தா பிள்ளை:

இவர் கி.பி. 18-ஆம் நூறறாணடைச் சேர்நத தமிழப் புலவர் இவர் தெனனார்க்காடு மாவட்டததில சிதம் பரத்திற்கு அருகேயுளள தில்லை விடஙகன எனனும ஊரில் வாழநதவர். தெயவங்கள் பெருமாள பிளளை இவர் தநதையாராவா. சிதமபரேசர் விறலிவிடு தூது, புலியூர் வெணபா, அமபலப்பளளி, வருணா புரி ஆதிமூலேசர் குறவஞ்சி, ஆதி மூலேசர் நொணடி நாடகம், நடராசர் கீர்த்தனை முதலிய நூலகளின ஆசிரியரிவர். இவருடைய மூத்த மகன பெயா தெயவஙகள பெருமாள பிள்ளை. அவரது மன மயககந தீர்கக இறைவன அருளியவாறு 'புலியூா வெணபா' பாடினார் எனபர். இவாதம் நூல்கள பொருள வளமும சிலேடை நயமும கொணடவை. சா.உ.

### திலகர், பாலகங்காதர(உலோகமானிய)

இந்திய விடுதலைப் போராட்டத்தில கலந்து கொணட மிகச்சிறந்த விடுதலை வீரர்களுள ஒருவர். இவா கி.பி. 1856-ஆம் ஆணடு சூலைத் திஙகள் 23-ஆம் நாள மகாராட்டிரததிலுளள இரத்தினகிரியில் பிறநதார். இவர் வைதிக சிததுபாவன பிராமணக் குடுமபத்தைச் சோந்தவர். இவருடைய முன்னோர்கள கோட்டுகள் (Khots) ஆவார்கள். சிறு நிலககிழார் களைக் கோட்டுகள் என்பர். இவர்தம் முப்பாட்டனார் பெயர் கேசவராவு. குதிரைச் சவாரியில் மிகத் திறமையானவர். இலக்காண்மை மிக்கவர். பீசுவாக்



பாலகங்காதர திலகர்

களின (Pheshwa) கீழ் உயர் பதவி வகித்தவர். இவர் கி.பி. 1818-ஆம் ஆண்டில் நிருவாகம ஆஙகிலேயர் கைககு மாறிய போது தம் பதவியைத் துறந்தார். திலகரின பாட்டனார் பெயர் இராமச்சந்திர பந்து; திறமையானவர்; துறவறம் மேறகொண்டு வாரணாசியில உயிர் நீத்தார். திலகரின தந்தையின் பெயர் கஙகாதர சாசுதிரி (Sastri). இவா ஒரு சிறநத வடமொழிப் புலவர். திலகரின அனனையின பெயர் பாா வதிபாய். கஙகாதர சாசுதிரி இரத்தனகிரியில் ஒரு பள்ளி ஆசிரியராக வாழ்க்கையைத் தொடங்கினார். பூனாவில கி.பி 1886-இல தொடக்கப பளளித் துணை ஆய்வாளருக்கு உதவியாளராகப் பொறுப்பேற்றார். திலகர் கி.பி. 1871-இல் திருமணம் செய்துகொண டார். இவரது மனைவியின பெயர் தாபிபாய (Tapi-bai). திருமணத்திற்குப் பிறகு இவருக்கு . சத்திய பாமா எனபது பெயராயிறறு. இவா இரத்தினகிரி மாவட்டத்திலுள்ள தபோலிக்கு அருகேயுளள இலட்கார் (Ladghar)எனனும கிராமததைச் சார்நத பல்லால் பால் சித்துபாவனக் (Ballal Bal Chitpavan) குடும்பததைச் சேர்ந்தவர்.

திலகா தமது கல்வியைப் பெரும்பாலும் பூனாவிலேயே பெற்றார். படிப்பில் திறமைசாலியாகத் திகழ்நதாா. இவர் கி.பி. 1876-இல இளஙகலைப் பட்டப்படிப்பில் முதல் வகுப்பில் தேறினார். கணிதமும், வடமொழியும் இவருடைய சிறப்புப் பாடங்கள். பின் கி.பி.1879-இல சட்டப்படிப்பில்தேர்ச்சிபெற்றார். குழநதைப் பருவம் முதற்கொண்டே இவர் சுயமரியாதை உணர்ச்சிக்குப் பெயர்பெற்றவர். உண்மை பேசுவதை விரும்பினார். அநியாயத்தைப் பார்த்து வாளாயிருக்கமாட்டார். கல்லூரியில படிக்கும்போது

ஆங்கிலக் கருத்துகளை மிகவும் போற்றினார். அதற்குக் காரணமாக இருந்தவர்கள் இவருடைய ஆங்கிலப் பேராசிரியா வோட்சு வொர்ததும், வரலாறு, பொருளியல ஆசிரியர் சூட்டு (Shoot) எனப வரும ஆவர். எகல (Hegel), கான்ட்டு (Kant), இசுபென்சர் (Spencer), மில் (Mill), பெந்தம் (Bentham), வால்டோ (Voltaire), உரூசோ (Rousseau) ஆகியவர்களுடைய நூலகளைப் படிப்பதில் ஆாவம் காட்டினார். அவாகளுடைய அரசியல் மறறும அகப் பொருள கருத்துகள இவரைக கவர்நதன.

தமது படிபபை முடித்துக்கொண்டபிறகு இவா மிக்க ஊதியம் தருகினற அரசுப்பணியில சேர விருமப விலலை. நாட்டு மககளிடததில் தேசிய உணர்ச்சியைத் தட்டியெழுப்புவதறகுத் தம்மை ஈடுபடுததிக கொணடார். ஆளுவோா, ஆளப்படுவோர் எனற பாகுபாடு மறைந்து நாட்டு மக்களின் நிலை உயர வேண்டுமெனில் இந்நாளைய கல்வியைப் பாமர மக்களுககுக கொணடுசெலல வேணடும் எனறு எணணினார். எனவே அகார்கர் (Agarkar), சிப்ளூனகர் (Chiplunkar), நம்சோசி (Namjoshi) ஆகியோருடன் சேர்ந்து புதிய ஆங்கிலப் பள்ளியைத் தொடங்கினார். பின்னர்த் தககாணக் கல்விக் கழகத்தையும் பெர்கூசன் கல்லூரியையும் கி.பி. 1885-இல் தோற்றுவித்தார். இவருக்கும் மற்ற மூவருக்கும் இடையே கி பி. 1890-இல கருத்து வேறுபாடுகள் தோன்றவே இவர் கழகததிலிருந்து வெளியேறினார். அதன்பிறகு தான் இவருடைய உணமையான பொதுவாழ்வு தொடங்கியது. அதற்குள்ளாககி.பி.1881-ஆம ஆண்டில் தக்காணக் கலவிக் கழகம் தொடங்கிய 'கேசரி', 'மராட்டா' பத்திரிகைகளை இவர் கட்டுக்குள், கொணடுவந்து விட்டிருந்தார். அவற்றின் வாயிலாகத் தமது கவர்ச்சிமிக்க தனி மனிதப் பண்புகளை வெளிப் படுத்தி வந்தார்.

அரசியற் கருத்துகளைப் பொறுத்த அளவில் இவா ஒரு முற்போககுவாதி. தமது எழுத்துகள், சொறபொழிவுகள் வாயிலாக ஆங்கில நிருவாகப் போக்கு, மக்களுடைய இன்னல்கள போக்குவதில் அவர்கள் காட்டிய அக்கறையின்மை, ஆங்கில அதிகாரிகளின் கைகளில் இந்தியர்கள் அடைந்த அவமானம் ஆகியவற்றிற்கு எதிர்ப்புத் தெரிவிக்கும்வகையில் மக்களைத் தட்டியெழுப்பினார். இவர் கி.பி. 1896-இல் பம்பாய் மாநிலத்தில் ஏற்பட்ட பஞ்சம், பிளேக்கு நோய் ஆகியவற்றை ஆங்கில நிருவாகம் தக்க முறையில எதிர்கொளளவில்லை என்பதனால் அதனுடன் இவர் நேரடியாகப் போரிட நேர்ந்தது. மக்களுக்குச் சேர வேண்டியதை மக்கள் உரிமையுடன் வேண்டிப் பெற வேண்டும் என்று கூறி அந்நிய ஆட்சிக்கு எதிராக மக்கள் எதிர்ப்பைத் தூண்டிவிட்டார். பூனாவில கி பி. 1897-இல் இராணடு (Rand) என்பவா கொல்லப்பட்டதறகு இவரே காரணம் எனறு கூறி 18 மாதஙகள இவரைச் சிறையிலடைத்தனா

காஙகிரசுக் கட்சியின் மேலிடத்தில் நீணடகாலமாக இவர் இடம் பெறவில்லை அதறகுக காரணம் இவர் அரசியல கட்சி பற்றிக கொணடிருநத கருதது ஏனைய தலைவாகளுடைய கருததிலிருநது மாறுபட்டு இருந்ததேயாகும். காஙகிரசுக் கடசி எல்லா மக்களும, எலலா வகுபபினாகளும் ஒனறுதிரணடு செயலாறறக கூடிய மையமாக விளங்கவேண்டும எனபது திலகா கருத்து. அரசியல நோககங்களுக்காக வன்முறையில ஈடுபடவும் தயஙகாத மககள இயககம் ஒனறை உருவாக்குவது இவர் நோககமாகும். பணபாடு பறறிய இவருடைய கருததுகளை 1906-ஆம் ஆண்டு காஙகிரசுக கட்சியின கல்கத்தாக் கூட்டத்தில முனவைத்தாா. தேசியக் கலவித் திட்டம், சுதேசி, கூட்டு மறுப்பு. செய்தல் ஆகியவை அவற்றுள அடஙகும. அவை யாவும அப்போது புரட்சிகரமானதாகத் தோனறின. மககளுடைய எதிாகாலம் மக்கள கைகளிலதான் இருககிறது என்றும, மககள சுதநதிரமாக வாழ விருமபினால் அவர்கள சுதந்திரம் அடையமுடியும் எனறும கூறினார். ஆங்கில ஆதிக்கத்தை எதிர்க்கக்கூடிய படைவலிமையை மககள் பெறறிருக்கவில்லை எனினும், அந்நியர்கள் அவாகளை ஆட்சி செய்வதற்கு உதவி செய்யாத வகையில் தஙகளுக்குத் தாமே சில வசதிகளை மறுத்துவிடக்கூடிய அதிகாரம அவர்களிடம இருப்பதைச் சுட்டிக் காட்டினார். அதையே அவர் கூட்டுமறுப்பு (Boycott)என்று கூறினார். வரி வசூலிக்க உதவி செய்யக்கூடாது; ஆஙகிலப் படையில் சேரக கூடாது; வரிகள் செலுத்தக்கூடாது; அமைதியைக காத்தல், நியாயம் வழங்குதல போன்ற நிருவாகப் பணிகளில் ஆங்கிலேயருக்கு உதவக்கூடாது என்று கூறினார். தன்னாட்சியே குறிககோளாக இருத்தல வேண்டும் என்றாா அதனை வேணடுவது பிறப்புரிமை என்று முழஙகினார். வஙகாளப் பிரிவினையினால தோன்றிய புரட்சியாளர்களுடன் இவா தொடர்பு கொண்டார். இந்தியா முழுமையிலும் கலவரம் உணடாக்கும்வகையில் பேசினார், எழுதினார். காஙகிரசார் 1907-இல சூரத்துக் காங்கிரசு மாநாட்டில தீவிரவாதிகள, மிதவாதிகள எனப் பிளவுபட்டனர். திலகர் தீவிரவாதத் தலைவரானார் இவா 1908-இல் ஆஙகில ஆட்சிக்கெதிராக மக்களைத் தூணடினாரெனபதற்காக ஆறு ஆணடுகள நாடு கடத்தப்பட்டு மாண்டலே சிறையிலிடப்பட்டார். இவர் 1914-இல் விடுவிக்கபபட்டார். அன்னிபெசணட்டு அம்மையாருடன் சேர்ந்து தனனாட்சி இயககத்தைத் தொடங்கினார். மீண்டும் 1916-இல் காங்கிரசில்சோந்தார். இவருடைய தன்னாட்சிப் போராட்டத்தின

காரணமாக இந்தியாவிறகுப் பொறுப்பாட்சி வழஙகு வதே தனது நோக்கம் என ஆஙகில அரசு அறிவிகக வேணடியதாயிறறு. அவா 1919-ஆம் ஆணடு இந்திய அர சாங்கச சடடம நிறைவேறறப்பட்டபோது மககளைத் தேர்தலில ஈடுபடுமாறு அழைப்பு விடுததுக் காங்கிரசு மக்கள கட்சியைத தொடஙகினாா. இவர் 1920, ஆகசுட்டு முதல தேதியில இறந்தார்.

திலகர் ஓா உணமையான தேசியவாதி. எலலா சிக்கலகளும சுயராசசியததையே சாாநதிருபப தாக எணணினார். நாட்டுபபறறைவிட வேறு சமயம இருபபதாக இவர் அறியவிலலை என்பது காநதியின கூறறு. பாமர மககளிடம் அரசியல உணாவை எழுப்பி அவர்களை விடுதலைப போராட்டததில ஈடுபடுததிய முதல தலைவர் இவரேயாவாா. அதறகாக சிவாசி செயந்தி (Jayanthi), கணேசபூசை போனற திட்டங களை உருவாககினார். அவா இட்ட அடிததளததின மீதுதான காநதி தமது விடுதலைப் போராட்டததை அமைத்தாா.

சமுதாயச் சீாதிருததங்கள பற்றி இவா பழைய கருததுகளை உடையவராகக கருதப்படுகிறாா. தமது திட்டததில் சமூக சீர்திருத்தஙகளுககு உயரிய இடததை அளிக்கவிலலை 'ஒபபுதல தெரிவிககும் வயது' மசோதாவை (Age of Consent Bill) இவா எதிாததாா. ஒரு கிறிததவப பள்ளியில் தேனீா பருகி யதறகாகக் கழுவாய செய்தாா. அகில உலகத் தாழ்த்தபபட்டவர்கள மாநாட்டில தீணடாமை ஒழிப புப் பறறிப் பேசிய போதிலும தமது சொநத வாழக கையில தீணடாமையைக கையாளுவதிலலை எனற அறிவிபபுப பததிரத்தில கையெழுததிட மறுததாா. பழையவறறின் அடித்தளத்தினமீதுதான தேசிய விருப்புகளை எழுப்பவேணடும எனறாா. ஆகவேதான தமது நணபாகளால் உலோகமானியா எனறு கூறப் பட்ட இவரை இவரது பகைவர்கள சமூகப்பிறபோக காளா என்று குறை கூறினர். இநது சமயததைச சாாநதவரெனறாலும இவா மதச சாாபினமைக கொளகையில நம்பிக்கை வைத்திருநதார் அரசியலுக கும,சமயத்திறகும தொடாபு இருககககூடாதுஎன்பது இவா கருதது இநது, முசுலீம ஒறறுமையிலும இவர் நம்பிககை கொணடிருந்தாா. எலலா வகுப்பினரும ஒனறுசோந்தால்தான் விடுதலை பெறமுடியும எனறு கூறினாா.

இவர் பல நூல்களை ஆக்கியுளளார். மாணடலே சிறையில் இருககும்போது 'கீதா இரகசியம' எனற விளகக நூலை எழுதினாா. வடமொழி, கணக்கியல ஆகியவற்றில் இவருககிருநத பறறின காரணமாக வேதப் பாடஙகளில ஆய்வு செயதாா. இந்து தததுவததைக கறறுணாந்தாா அவா கி பி.1893-இல 'ஓரையன' (Orion) என்ற தலைபபில் நூல வெளியிட்டார். பின 1903-இல 'வேதஙகளின ஆர்டிக் பிறப் பிடம்' (Artic Home in the Vedas) எனற நூலை வெளிட்டாா. தி.அர.இரா.

***திலகவதியார்:*** ஔவையாா எனனும் புலமைச செவவியாரால வளளல அதியமான சிறப்புறறான; சீசிபாய் எனனும் தாயால் மகன சிவாசி பெருமை பெறறான; திலகவதி எனனும் தமக்கையால் திரு நாவுககரசர் எனனும சைவசமயச் சான்றோரை உலகம பெறறது.

திலகவதியார் 4,5,6 தேவாரத திருமுறைகள பாடியருளிய திருநாவுககரசு சுவாமிகளின தமக்கை யார், திருமுனைப்பாடி நாட்டுத திருவாமூரில வாழந்த புகழனார், மாதினியாா எனனும இருவருக கும மகளாய வாயததவா.

தகக பருவம் உறறபோது கலிபபகையாா என் னும வீரரை மணககப பெறறோரால் உறுதிசெயயப் பெறறாா. அந்த வீரா திருமணததை இடையில நிறுத்திவிட்டு மனனனுக்காக வடநாடு நோககிப் போர்க்குப போயினாா. நாள சில ஆயின தநதை புகழனாா இயறகை எய்தினார் கணவனை இழநத மனைவி மாதினியாரும உடன 'உயிாவிட்டனர் தாயையும தநதையும் இழந்து திலகவதியாரும, திருநாவுககரசரும தனிமையராய் ஏஙகலாயினா இதற்கு இடையே போாககுச சென்ற கலிபபகை யார் மனனர்க்காகப் போரிட்டு வடபுலத்தில மாணடுபோயினார். பெற்றோர் செய்த மண உறு தியை மனததில கொணடு கலிபபகையாரையே தம கணவராக வரிததமையால அவர் இறநதமை கேட்டுத திலகவதியாா தானும உயிர்விடத துணிந தார். அப்போது சிறுவனாக ஆதரவினறி இருநத திரு நாவுககரசு அழுது புலமபித தனனைக காத்தருளு மாறு வேணடினான. வேறு யாரும இல்லாமையால தம தமபிககாக உயிாவாழத துணிநதாா. இவவாறு தம்பியினபால இவா வைத்த தயவால உயிா தாஙகி இலலததிலேயே தவ வாழவு வாழநது இறைவன சிவ பெருமானை வழிபட்டுத தம தமபியை வளாதது வரலானாா.

தந்தை, தாய், தன தமக்கைக்குத் தேர்நத தலை வன கலிப்பகை அனைவரும ஒருவர்பின ஒருவராக மாய்ந்தது கணட இளைஞர் திருநாவுககரசு மனம மிகவும் நொநதுபோயிறறு. இநத உலகின் நிலை யாமை அவர் நெஞ்சை மிகவும ஈர்த்தது. இததகு கலஙகிய நிலையில சமண சமயததைச் சார்ந்து' அங்குக் கறபன எலலாம் கறறுத தலைவரானாா.

'தமபியாா உளராக வேணடும்' எனபதறகாக உயிர் தாஙகிய திலகவதியாா தம் குடிக்கும் கொள

கைக்கும் உரிய சைவ சமய நெறியினின்றும் பிறழ்ந்த தம்பியர் நிலைகண்டு ஏங்கினார். திருவதிகைத் திரு வீரட்டானத் திருக்கோயிலை அடைந்து தம் தம்பியை மீட்டுத் தருமாறு சிவபெருமானை வேண்டிய வராகக் கோயிலைத் தூய்மைசெய்து தொழுது வர லாயினார். நாளதோறும் திருவலகிடல், மெழுகல், மலர் கொய்து மாலை தொடுத்தல் முதலிய கோயில் திருப்பணிகள் பல செய்து வரலானார். திலகவதியா ரின திருவுள்ளடக்கிடக்கைக்கு ஏற்ப இறைவன திரு வருளால் திருநாவுக்கரசர் திருவதிகை வீரட்டானம் அடைந்து சிவபெருமான் திருவருளுக்கு உரியவரா னார். தமக்கையாரின இந்த அருட்செயல் திருநாவுக் கரசர் நெஞ்சில் நிலைபெற்றிருந்ததால் பிற்காலத்தில் சிவபெருமான் குறித்துத் தாம் பாடிய தேவாரப் பாடலில் அதனைக் குறித்துள்ளார்.

தம தமக்கையாா திலகவதியார் காட்டிய வழியி லேயே உழவாரத் தொண்டினைத் தலையாய பணி யாகக் கொண்டு தேவாரப் பாடல் பல பாடிப் 'பணி செய்து கிடக்கும்' வழிபாட்டு நெறியை உலகிற்கு உணர்த்தி இறைவன் திருவடிப்பேறு எய்தினார்.

இவ்வாறு பக்தி இயக்கத் தோற்றத்திற்கு முதல் வராகவாய்த்த சைவசமயச் சான்றோருள் ஒருவரும் தேவார மூவருள் மூத்தவராகவும் விளங்கிய திரு நாவுக்கரசரை உருவாக்கி உலகிற்கு அளித்த தவச் செல்வி திலகவதியார் ஆவர். பொன்.சௌ.

**திலீபு சிங்கு**: பஞ்சாபில் சீக்கியப்பேரரசை நிறுவியவரும் பஞ்சாபின சிங்கம் என்ற பெயரால அறியப்பட்ட வருமான மாமனனர் இரஞ்சித் சிங் கின் மக்களுள் ஒருவர் திலீபுசிங்கு(Dilip Singh).இரஞ் சித் சிங்கின் மனைவிகளுள் இளையவரான இராணி சிண்டான் என்றழைக்கப்பட்ட இராணி சிண்டுகௌர் என்பவருக்கு கி.பி.1837-ஆம் ஆண்டு திலீபுசிங்குபிறந் தார்.

மாமன்னர் இரஞ்சித்சிங்குகி.பி.1839-இல் இறந்த பின் அவர் தம் மக்களுள் ஒருவரான கரக்குசிங்குஎன்ப வர் பதவிக்கு வந்தார். இவர் கி.பி.1840-இல் இறந்த பின மற்றொரு மகனான செர்சிங்கு மாமன்னரானார். இவர் கி.பி.1843 ஆம ஆண்டு செப்டம்பர்த் திங்கள 15-ஆம் நாள கொலை செய்யப்பட்ட பின்னர்த் திலீபு சிங்கு மாமன்னரானார்.

திலீபு சிங்கு ஆட்சிக்கு வந்த பொழுது ஏழு வயதுச் சிறுவனாக இருந்ததால் இவரது தாயான இராணி சிணடுகௌர் பகராளுநராக (Regent) நிய மிக்கப்பட்டார். இராணி சூழ்ச்சிமிக்கப் பெண்மணி. மாமன்னரின் சார்பில் எல்லா அதிகாரங்களையும் செலுத்தி வந்தார்.

இந்தியாவில் ஆங்கிலேயரின் மேலாண்மை வலுப் பெற்றது. அவாகள் பஞ்சாபைத தங்கள பேரரசுடன் இணைத்துக் கொள்ள விரும்பினா. மேலும் இராணி சிணடானின நடவடிக்கைகளால் ஆஙகிலேயர் மிக வும் வெறுப்புறறனர்.

ஆங்கிலேயருக்கும் சீக்கியருககுமிடையே இரணடு போர்கள நடந்தன. முதலபோர் கி.பி. 1845-46-இல் நடைபெற்றது இப்போரில சீக்கியர்கள தோற்கடிககப பட்டனர். இப்போரின் இறுதியில திலீபு சிங்கிறகும் ஆங்கியருக்குமிடையே உடன்படிக்கை ஏறபட்டது. அதன்படி மாமன்னர் தாமும தம் வாரிசுகளும சட்லசு ஆறறுக்குத் தெற்கே உளள பகுதிகளின்மேல் உரிமை கொணடாட மாடடோம் என உறுதி அளித்தாா. திலீபு சிஙகு தமமுடைய படைகளின எண்ணிக்கையைக குறைத்துக் கொளளவும ஒபபுக் கொணடார்.

ஆங்கிலேயர் மாமன்னர் திலீபுசிங்கை எவ்வகை யிலேனும் இராணி சிணடாவிடமிருந்து பிரித்துவிட எண்ணினர். தலைமை ஆளுநர் எட்ரிஞசு அச்சிறு வனின நலனுககாகவே தாஙகள அதைச் செய்ய விரும்புவதாகக கூறினார். கி.பி. 1847-ஆம ஆணடு ஆகசுட்டு 17-ஆம் நாள் திலீபு சிஙகிற்கு விலை யுயாந்த பொம்மை ஒன்றைக் கொடுதது குழந் தையைத் தாயிடமிருநது பிரித்துச் சாலி மார் தோட்டத்திற்குக கூட்டிச் சென‌றுவிட்டனர். தன் மகனைத் தன்னிடமிருந்து பிரிததுச் சென‌றது பெருதத அநீதி எனறு அழுது கதறினாா இராணி சிண்டான். இராணி இலாகூரிலிருநது வெளியேற்றப் பட்டு செய்க்குபுரா என்ற கோட்டைககு அழைத்துச் செல்லப்பட்டார். அஙகிருநது தப்பிச் சென‌று அவா நேபாளத்தில் வாழ்ந்தார்.

தாயை விட்டுப் பிரிநத திலீபுசிஙகு அதறகாக வருத்தப்படவிலலை. ஆங்கிலேயர் அவருக்கு நலல கல்வி புகட்டி நல்லமுறையில் வளர்த்தனர்.

பஞ்சாபில் ஒரு பகுதியின் ஆளுநரான முலராசு ஆஙகிலேயருககு எதிராகக் கி பி 1848-இல் கிளர்சசி செய்தார். ஆஙகிலேய அதிகாரிகள பலர் கொலலப பட்டனர். பஞ்சாபின் மக்கள முலராசின் தலைமை யில கிளர்ந்தெழுநதனர். இதனால் ஆஙகிலேயர் இனி மேலும் பஞ்சாபைச் சுதந்திரமாக விடக்கூடாது என்று நினைத்து சீக்கியர் மீது இரணடாம் முறை யாகப் போர் தொடுத்தனா.

இரணடாம் சீக்கியப்போர் கி.பி. 1848-இல நடைபெற்றது. இப்போரில் ஆஙகிலேயர்கள் சீக்கி யர்களை இராம்நகர், சிலலியனவாலா போன்ற இடங களில் தோற்கடிததனர்.பஞ்சாப் மாநிலம் கி.பி. 1849

மார்ச்சுத் திங்கள் 29-ஆம் நாள் ஆங்கிலேயப் பேரரசுடன் இணைக்கப்பட்டது மாமன்னர் திலீபுசிங்கு பதவி நீக்கம் செய்யப்பட்டு, பாததிகர் கோட்டைக்கு அனுப்பப்பட்டார். திலீபுசிங்கிற்கு ஆங்கிலேயர்கள் ஓய்வூதியம் வழங்கினர். அவர் கி.பி. 1851-இல் இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டார்.

இங்கிலாந்தில் வாழ்ந்த திலீபுசிங்கு கிறித்துவ மதத்திற்கு மாறினார். அபிசீனிய மாது ஒருவரை கி.பி. 1846-இல் திருமணம் செய்து கொண்டார். இறுதி வரை இங்கிலாந்திலேயே வாழ்ந்து கி.பி. 1893-ஆம் ஆண்டு அக்டோபர் 22-ஆம் நாள் தம்முடைய 56-ஆம் வயதில் உயிர் நீத்தார். ஆ. செ.

**திவ்விய சூரிகள்**: திவ்விய சூரிகள் என்றால் தெய்வத் தன்மையுள்ள அவதார புருடர்கள் என்பது பொருள். அறியாமையில் மூழ்கிக் கிடந்த உலகினை உய்விப்பான் வேண்டி, நாராயணனுடைய திருவருளால் கி.பி. 3-ஆம் நூற்றாண்டு முதல் 8-ஆம் நூற்றாண்டு வரை தென்னிந்தியாவின் பல பகுதிகளில் பல்வேறு நூற்றாண்டுகளில் தோன்றிச் சமத்துவத்தையும் பக்தி மணத்தையும் பரப்பி, இமயம் முதல் குமரி வரை யாத்திரை செய்து, ஆங்காங்குக் கோயில் கொண்டுள்ள அர்ச்சா மூர்த்திகளை வழிபட்டு, மங்களாசாசனம் செய்து, தங்களது அநுபூதியில் கண்ட பேருண்மைகளைப் பாசுரங்களாக வடித்துத் தந்த பெரியோர்கள் திவ்விய சூரிகள் எனப்படுவர். இவர்கள் சிறந்த அநுபூதிமான்களாகவும், பக்திமான்களாகவும், புலமையாளர்களாகவும் இருந்ததால் தங்கள் அனுபவத்தைத்தெளிவாக வடித்துத் தந்துள்ளனர். தெய்விக உணர்வாகிய பேரானந்தப் பெருவெள்ளத்தில் ஆழ்ந்திருந்ததினால் இவர்களுக்கு ஆழ்வார்கள் என்றும் பெயர். சமணமும் பௌத்தமும் மேலாண்மை பெற்றிருந்த அந்தக் காலத்தில்ஆழ்வார்கள் போதித்த கருத்துகளும், அவர்களுடைய அருளிச் செயல்களும், உருவ வழிபாட்டிற்கு அவர்கள் அளித்த சிறப்பும் மக்களை வைணவ சமயத்தின்பால் ஈர்த்தன. பாமர மக்களும் புரிந்து கொள்ளும் விதத்தில் அவர்கள் உலக வாழக்கையின் நிலையாமையையும், பக்தி மார்க்கத்தின் மேன்மையையும் எளிய தமிழில் எழுதி மக்களை நெறிப்படுத்தினர்.

ஆழ்வார்களின் காலத்திற்குப் பிறகு வாழ்ந்த ஆச்சாரியர்கள் ஆழ்வார்களின் வாழ்க்கை வரலாறுகளைச் செவி வழிச் செய்திகளைக் கொண்டும், அவர்களுக்கு அப்போது கிடைத்த மற்ற சான்றுகளைக் கொண்டும் குரு பரம்பரை நூல்களை எழுதியுள்ளனர். அவற்றில் சில செய்திகள் கற்பனையாக இருந்தாலும், சில உண்மைச் செய்திகளும் கிடைக்கின்றன. ஆழ்வார்களின் பாசுரங்களில் பரந்து கிடைக்கும் அகச் சான்றுகளைக் கொண்டும், மற்ற வரலாற்றுச் சான்றுகளைக் கொண்டும் குருபரம்பரைச் செய்திகளுள் சில உறுதிப்படுத்தப்படுகின்றன. கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் பின்பழகிய பெருமாள் சீயர் எழுதிய ஆறாயிரப் படிகுரு பரம்பரை பிரபாவம், கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் பிள்ளை லோகாச் சாரியர் எழுதிய யதீந்திர பிரவண பிரபாவம், அடுத்த தலைமுறையைச் சார்ந்த வேதாந்த தேசிகர் எழுதிய தேசிக பிரபந்தம், கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் கருடவாகனப் பண்டிதர் எழுதிய திவ்வியசூரி சரிதம், கி.பி 17-ஆம் நூற்றாண்டில் அனந்தாச்சாரியார் எழுதிய பிரபன்னாம்ருதம், பிற்காலத்தில் பிரமமதந்திர சுதந்திர சீயர் எழுதிய மூவாயிரப்படி குருபரம்பரை பிரபாவம் போன்ற நூல்கள் திவ்விய சூரிகளின் வாழ்க்கை வரலாற்றைக் கூற எழுந்தவையாகும். இவர்களுடைய வரிசையை வெவ்வேறு ஆசாரியர்கள் வெவ்வேறு விதமாகக் கூறுகின்றனர். சம்பிரதாயத்தில் திருமங்கையாழ்வாரைக் கடைசி ஆழ்வாராகக் கருத்தில் கொள்ளுகின்றனர். பெரியாழ்வார் பிராமண குலத்திலும், நம்மாழ்வார் வேளாள மரபிலும், குலசேகர ஆழ்வார் சத்திரிய மரபிலும், திருமங்கையாழ்வார் கள்ளர் மரபிலும், திருப்பாணாழ்வார் ஐந்தாம் வருணத்திலும் தோன்றியது இறைவன் முன்பு சாதி வேறுபாடு கிடையாது என்ற உயர்ந்த தத்துவத்தைக் காட்டுகிறது.

மணவாள மாமுனிகள், பிள்ளான் போன்ற ஆசாரியர்கள் ஆழ்வார்களைப் பதின்மர் என்று கூறினாலும், வைணவ சம்பிரதாயத்தில் ஆண்டாளையும், மதுர கவிகளையும் சேர்த்து மொத்த ஆழ்வார்கள் பன்னிருவர் என்று கொள்ளப்படுகிறது. அவர்கள் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், நம்மாழ்வார், மதுரகவிகள், குலசேகர ஆழ்வார், தொண்டரடிப் பொடி ஆழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் முதலியோர் ஆவர். இதில் பதினொருவர் ஆண்கள். ஆண்டாள் மட்டும்பெண். பகவத் கைங்கரியத்திற்கு ஆண், பெண் என்ற பாகுபாடு கிடையாது என்பதை இது காட்டுகிறது. இப் பன்னிரு ஆழ்வார்களும் நாராயணனையே பரமபொருளாக ஏற்றுக் கொண்டவர்கள்.

பன்னிரு ஆழ்வார்களும் இருபத்து நான்கு நூல்களை எழுதியுள்ளனர். ஆழ்வார்களுக்குப் பிறகு தென்னார்க்காடு மாவட்டம் காட்டுமன்னார் கோயிலைச் சேர்ந்த நாதமுனிகள் என்பார் இந்த நூல்களைச் சேர்த்துத் தொகுத்து வெளியிட்டார். இந்தத் தொகுப்புக்கு நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் என்று பெயர். பொய்கை, பூதம், பேய் என்ற முதலாழ்வார்கள் எழுதிய நூல்கள் முறையே முதல் திருவந்தாதி,

இரண்டாம் திருவந்தாதி, மூன்றாம் திருவந்தாதி எனபபடும். திருமழிசையாழ்வார் நான்முகன் திருவந தாதி, திருச் சந்தவிருத்தம் என்ற இரு நூல்களையும், பெரியாழ்வார் திருபபலலாண்டு, பெரியாழ்வார் திரு மொழி எனற இரு நூல்களையும், ஆண்டாள திருப் பாவை, நாச்சியார் திருமொழி என்ற இரு நூல் களையும், தொண்டரடிப் பொடியாழ்வார் திரு மாலை, திருப்பளளியெழுச்சி என்ற இருநூலகளையும், குலசேகரர் பெருமாள் திருமொழியையும், திருபபா ணாழ்வார் அமலனாதி பிரான் என்ற நூலையும், மதுரகவிகள கண்ணி நுண் சிறுத்தாம்பு என்ற நூலை யும் எழுதியுள்ளனர். ஆழ்வார்களிலேயே மிகுதியான பாசுரங்களைப் பாடியவர்கள் நம்மாழ்வாரும், திரு மங்கையாழ்வாரும் ஆவர். நாலாயிரத் திவவியப் பிர பந்தம் முதலாயிரம், திருமொழி ஆயிரம், திருவாய் மொழி ஆயிரம், இயறபா ஆயிரம் என்று நானகு ஆயிரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. திருமொழி ஆயி ரம் முழுவதும் திருமங்கை யாழ்வாராலும், திருவாய் மொழி ஆயிரம் முழுவதும் நம்மாழ்வாராலும்பாடப் பட்டவை. இவையன்றி இயறபா ஆயிரத்தில திரு விருத்தம், திருவாசிரியம், பெரிய திருவநதாதி என்ற நமமாழ்வார் எழுதிய நூல்கள் மூன்றும், திரு வெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திரு மடல் என்ற திருமங்கை யாழ்வார் எழுதியநூலகள் மூன்றும் இடம் பெற்றுள்ளன. பெரிய திருமொழி, திருக்குறுந் தாண்டகம் திருநெடுந்தாணடகம் என்ற மூன்று நூல்களும் சேர்ந்துதிருமொழி ஆயிரம் எனப் படும். இவற்றிற்கு ஆழ்வார்களின் அருளிச் செயலகள என்றும் பெயர்.

வைணவத் திருப்பதிகளிலேயே ஆழ்வார்களால் மங்களாசாசனம் செயயப்பட்ட நூற்றெட்டுத் திருப் பதிகளும் மிகவும் உயர்ந்த நிலையில் வைதது எண ணப்படுகின்றன. பிற்காலத்தில் தோன்றிய இராமா னுசர் போன்ற ஆச்சாரியர்கள் வைணவ சம யத்தை நெறிமுறைப் படுத்துவதற்கு ஆழ்வார்களின் பாசுரக் கருத்துகள பெரிதும் துணை புரிந்தன. புலன் களால் உணர முடியாத பரம் பொருளைத் தேடி அலைய வேண்டாம், அவன் நமக்கு அருள் புரிவ தற்காகத் திருக்கோயிலகளில் விளஙகும் அர்ச்சை (சிலை) களில்வந்து காத்திருக்கிறான். 'ஏரார் முயல விட்டுக்காக்கைப்பின்போவதே!' (சிறிய திருமடல்-16) என்றுதெளிவாக எடுத்துக் கூறி அவர்கள் உருவ வழி பாட்டைச் சிறப்புறச் செய்தனர்.

'அடங்கெழில் சம்பத்து-அடங்கக் கண்டு ஈசன்
அடங்கெழில் அஃதென்று அடங்குக வுளளே'

(திருவாய்மொழி1.2.7) உலக வாழ்க்கை வெறும் மாயை என்பது அவர்தம் கருத்து. தனிநிலையிழந்த இறை உணர்வாளர்களாக இருந்தமையால் ஆழ்வார் கள் இறைவனுடைய பல்வேறு அவதார நிலைகளைத் தங்களது அகக் கண்ணால் கண்டு அநத அறிவு கடந்த மெய்யுணாவைப் பாசுரஙகளாக வடித துத் தந்துளளனர். பரமாதமாவாகிய இறைவன முன அனைத்துஉயிர்களும பெண்களே என்பதை உணாநத ஆழ்வார்கள, அவனை விட்டுப் பிரிநது உலக வாழ வில் உழலும் உயிர்களின் சோகமான நிலையை எணணி, நாயகனைப் பிரிந்து வாடும் நாயகியின நிலையில் நினறு அனுபவித்துப் பாடிய பாசுரங்கள நெஞ்சை நெகிழவிபபனவாகும். எல்.மு.

**திவ்விய தேசங்கள்**: வைணவ சமயத்தில் கோயில் வழிபாடு சிறப்பை அடைந்துள்ளது. பாரதத்தில முககியமாகத் தமிழநாட்டில் கணக் கற்ற கோயிலகள உள்ளன. திருக்கோயில்கள உளள இடங்களைத் திருப்பதிகள எனறு சொலலுவர். நாலாயிரத் திவ்விய பிரபந்தம் என்ற தமிழ் மறை ஆழவார்கள பதினமரால இயற்றப்பட்டது. திருக் கோயிலில எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களை இவர்கள போறறியுளளனர். எல்லா எம்பெரு மான்களையும் எல்லா ஆழ்வார்களும் பாடவிலலை. சில எம்பெருமான்களை ஒன்றுக்கு மேறபட்ட ஆழ் வார்கள பாடியுளளனா. திருவரங்கததெம்பெரு மானை எலலா ஆழ்வார்களும் பாடியுள்ளனர். திருமலையில எழுநதருளியிருக்கும் வேங்கடவனை, ஒன்பது ஆழ்வார்கள் பாடியுளளனர். இவ்விதம் திருமாலிருஞ்சோலை, திருநறையூர், திருவிணண கரம் போன்ற தலஙகள பல ஆழவார்களால போற் றப்பட்டுள்ளன. ஆழ்வாாகளின பாடலைத் திருக்கசசி யில் எழுந்தருளியிருக்கும எம்பெருமான பெறவில்லை எனறு சிலரும், பெற்றுளளார் என்று சிலரும கூறுகின றனர். மன்னார்குடி, காட்டுமனனார்குடி, சிரீமுட்டம், மதுராந்தகம், திருநாராயணபுரம போன்ற தலஙகளில எழுந்தருளியுள்ள எம்பெருமான்களை ஆழவார்கள் பாடவில்லை. ஆயினும் அவறறிறகுக் கூட்டுத் திவவிய தேசம் என்ற பெயர் உணடு. வி வ.

**திவ்வியப் பிரபந்தம்**: உலகில் நிலவும ஒவ் வொரு மொழிக்கும, அதன் இலக்கியத்திற்கும தனிச் சிறப்பு ஒன்றுணடு. தமிழ் இலக்கியததின தனிசசிறபபு அதன்கண அமைநதுள்ள பக்தி இலககியஙகளே என் பர் அறிஞர். சைவசமயம் சார்ந்த பக்திஇலக்கியங்கள் பன்னிரு திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டுள்ளன. மயர்வற மதிநலம் அருளப்பெறற ஆழ்வார்கள பன னிருவரால்இயற்றப்பெற்றபாசுரங்களின தொகுப்பு, 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்' எனப்படும.

ஆழவார்களுள், பொய்கையாழ்வா, பூதத்தாழ் வார், பேயாழ்வார் என்னும் மூவரும் முதலாழ்வாா கள எனச் சிறப்பிக்கப்படுவர். இவர்களால இயற்றப்

பெற்றவை முதலதிருவந்தாதி (100), இரண்டாம் திருவந்தாதி (100), மூன்றாம் திருவந்தாதி (100) என்னும் மூன்று அந்தாதிப் பிரபந்தங்கள் ஆகும். திருமழிசையாழ்வாரால் இயற்றப்பெற்றவை திருச்சந்த விருத்தம் (120), நான்முகன் திருவந்தாதி(96)என்னும் இரண்டு பிரபந்தங்கள். நம்மாழ்வாரால் அருளப் பெற்றவை திருவாய்மொழி (1102), திருவிருத்தம் (100), திருவாசிரியம்(7), பெரியதிருவந்தாதி (87) என்னும் நான்கு பிரபந்தங்கள் மதுரகவியாழ் வாரால் இயற்றப்பட்டது கண்ணிநுண்சிறுத்தாம்பு (11) என்னும் பிரபந்தம். குலசேகராழ்வார் இயற்றியது பெருமாள் திருமொழி (105). திருப்பல்லாண்டு (12), பெரியாழ்வார் திருமொழி (461) என்னும் இரண்டும் பெரியாழ்வாரால் இயற்றப் பெற்றவை. திருப்பாவை (30), நாச்சியார் திருமொழி (143) ஆகிய இரண்டு பிரபந்தங்கள் ஆண்டாளால் பாடப்பெற்றவை தொண்டரடிப் பொடியாழ்வார் பாடியவை திரு மாலை (45), திருப்பள்ளியெழுச்சி (10) என்னும் இரண்டுபிரபந்தங்கள். திருப்பாணாழ்வாரால்அருளிச் செய்யப்பட்டது அமலனாதிப்பிரான்(10) திருமங்கை யாழ்வார் இயற்றியவை பெரிய திருமொழி (1084) திருக்குறுந்தாண்டகம் (20), திருநெடுந்தாண்டகம் (30), திருவெழுகூற்றிருக்கை (1), சிறிய திருமடல் ($77\frac{1}{2}$), பெரிய திருமடல்($48\frac{1}{2}$) ஆகிய ஆறுபிரபந்தங் கள்.

இப்பிரபந்தங்கள், 'தொண்டர்க்கமுதுண்ணச் சொல் மாலைகள்' 'பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவும் ஆயிரம்' எனப்புகழந்துரைக்கப்படும்.வட மொழி வேதங்களில் தோன்றும் ஐயங்களை இவற்றை ஓதித்தெளியலாம் என்பது பேரறிஞர்கள் தம் துணிபு.

பிறருக்குத் தெரியாமல் ஆழ்ந்து மறைந்து கிடக் கும் எல்லாப் பொருளையும் ஆழ்ந்து அறிவதாலும், இறைவனின் மங்கல குணங்களில் ஆழங்காற்படுவதால் இப்பெரியார்கள் ஆழ்வார்கள் எனப்பட்டனர் ஆழ் வார்கள் வாழ்ந்த காலம் கி.பி 3–ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 9–ஆம் நூற்றாண்டு வரை என்பர் வரலாற்றுணர்வோடு இவர்களைக் குறித்து ஆராய்ச்சி புரிந்த அறிஞர்.

சிதம்பரத்திற்கு மேற்கே 22 கி.மீ. தொலைவி லுள்ள வீரநாராயணபுரம் என வழங்கப்படும் காட்டு மன்னார் கோவிலில்தோன்றிய நாதமுனிகள், நம்மாழ் வாரின் புகழ்பரப்புவதையே தம் வாழ்நாளின் குறிக் கோளாகக் கொண்டு வாழ்ந்த மதுரகவியாழ்வாரின் பரம்பரையில் தோன்றிய பராங்குசதாசர் என்னும் பெரியாரின் உதவியால் நாலாயிரத்தையும் பெற்றுத் தொகுத்தளித்தனர் என்பது வரலாறு. முதலாயிரம், பெரியதிருமொழி, திருவாய்மொழி, இயற்பா என நான்கு பெரும்பிரிவுகளாக இவற்றை அமைத்து இயற்பா நீங்கலாக ஏனைய இசைப்பாடல்களுக்கு, இசைவகுத்து அடைவுசெய்தவர் இப்பெரியாரே.

முதலாயிரத்தில் 947 செய்யுட்களும், இரண்டாம் ஆயிரத்தில் 1184 செய்யுட்களும் அடங்கியுள்ளன. திருவாய்மொழியை மூன்றாம் ஆயிரமாகக் கொள்ளும் முறையும் உண்டு. திருவாய்மொழியில் 1102 செய் யுட்கள் உள்ளன இயற்பாவில் அடங்கும் பெரியதிரு மடல், சிறிய திருமடல் ஆகிய இரண்டு பிரபந்தங் களிலும் காணப்படும் கண்ணிகளைக் கணக்கிட்டு இவ் விரு நூல்களுள் 266 செய்யுட்கள் உள்ளனவாகக் கூறும் மரபு உண்டு. இவற்றுடன் இராமானுச நூற்றந்தாதியில் உள்ள 108 செய்யுட்களைக்கூட்டிக் கணக்கிட்டு 4000 பாடல்கள் திவ்வியப் பிரபந்தத்தில் உள்ளனவெனக் கூறுவர் ஒரு சாரார். இராமானுச நூற்றந்தாதியைக் கணக்கில் சேர்க்காமலும், இரு மடல்களையும் இரண்டு செய்யுட்களாகக் கணக் கிட்டும் நாலாயிரத்தைத் தொகுத்துக் காட்டும் வேறு சில மரபுகளும் உண்டு.

முதலாழ்வார்கள் மூவரும் திருக்கோவலூரில் ஓர் இடைகழியில் ஒன்று கூடிய பொழுது 'வையம்தகளியா' என்றும், 'அன்பே தகளியா' என்றும் 'திருக்கண்டேன்' என்றும் தொடங்கி முதல் மூன்று திருவந்தாதிகளை அருளிச் செய்தனர் என்பது ஒரு வரலாறு பாரதநாடு முழுவதும் திரிந்து பல சமயங்களின் உண்மைகளைக் கேட்டறிந்து,இறுதியில் பொய்கையாழ்வாரால் திருத் திப் பணி கொள்ளப்பட்டு வைணவ சமயத்தை மேற் கொண்டவர் திருமழிசை யாழ்வார். இவரது திருச் சந்தவிருத்தம், தமிழின் சந்த நயங்களை வெளியிடும் அரிய பிரபந்தம் ஆகும் நான்முகன் திருவந்தாதி முதற்குறிப்பால் பெயர்பெற்றது ஆழ்வார்கள் பன் னிருவரில் தலைவர் நம்மாழ்வார். இவரை அவய வியாகவும்,மற்றுமுள்ள ஆழ்வார்களைஅவயவமாகவும் கொள்ளுதல் வைணவ சமயமரபாகும். இவர் இளம் பருவத்திலேயே இறைவனால் 'மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர்'. 'தேவு மற்றறியேன்' என்று நம் மாழ்வாரைக் குருவாகவும், தெய்வமாகவும் போற்றி வாழ்ந்தவர் மதுரகவியாழ்வார். மதுரகவியாழ்வார் தம் குருவாகிய நம்மாழ்வாரின் புகழையே பாடிய 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' இறைவன் புகழ்பாடும் பாசுரங்கள் அடங்கிய நாலாயிரப் பிரபந்தத்துள் சேர்க்கப்பட்டுள்ளது

சேரர் குலத்தோன்றலாகிய குலசேகராழ்வார் 'அவன் அடிசூடும் அரசையல்லால் அரசாக எண் ணேன் மற்றரசு தானே' எனவும், 'மெய்யில் வாழ்க் கையை மெய்யெனக் கொள்ளும் இவ்வையம் தன் னொடும் கூடுவதில்லையான்' எனவும் கூறி நெஞ்சு

நெக்குருகிப் பாடிய பாசுரங்களின் தொகுப்பே பெருமாள் திருமொழி. சீவில்லிபுத்தூரில் இறைவனுக்குத் திருநந்தவனம அமைத்துப் பூமாலை தொடுத்துப் பணிபுரிந்து வந்த விட்டுணுசித்தரே, 'சோராத காதற் பெருஞ்சுழிப்பால் தொல்லைமாலையென்னும் பாராத வனைப் பல்லாண்டு என்று காப்பிடும்' பெருஞ்செயலால் பெரியாழ்வார் எனச் சிறப்பிக்கப் படுவர். பெரியாழ்வாரின் திருமகளாய் வளர்ந்து, 'சூடிக் கொடுத்த சுடர்க் கொடியாய்' விளங்கியவர் ஆண்டாள். 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' என்று திருவரங்கப் பெருமானையே மணவாளனாக அடையப் பெருவேட்கை கொண்டவர் இக்கோதை நாச்சியார்.

தொண்டரடிப் பொடியாழ்வார் விப்பிரநாராயணன் எனவும் வழங்கப்படுவார். திருமாலின் நாம சங்கீர்த்தனத்தில் கிட்டும் பேரானந்தம் இந்திரலோக வாழ்க்கையிலும் இல்லை என்னும் கருத்துடையவர் இப்பெரியார். திருப்பாணாழ்வார், இறைவர் திருமுன்னர் யாழிசைத்து, பெருமானை உகப்பித்து வாழ்ந்தவர். 'திருவரங்கப் பெருமா' னின் திருமேனி எழிலில் ஈடுபட்டு,–'என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' எனப் பாடியவர். 'மாறன் பணித்த தமிழ் மறைக்கு மங்கையார்கோன் ஆறங்கம் கூற அவதரித்தார்' என்பது திருமங்கையாழ்வாரைப் பற்றிய புகழ்மாலை. குறுநில மன்னராகத் தோன்றி, இறைவனால் திருமந்திர உபதேசம் பெற்று, அர்ச்சாவதாரங்களில் பெரிதும் ஈடுபாடு கொண்டு, வைணவத் திவ்விய தேசங்களில் பெரும் பாலானவற்றைக் கண்டு மகிழ்ந்து மங்களாசாசனம் செய்தவர் இப்பெரியார்.

ஆழ்வார்கள் சாதிகுல வேற்றுமை பாராது, அன்பு நெறியினை மேற்கொண்டு தமிழகத்தின் வாழ்வில் ஒரு புதிய நெறியை உருவாக்கிய உத்தமர்கள்.

பிள்ளைத்தமிழ், எழுகூற்றிருக்கை, தாலாட்டு, பாதாதி கேசம், மடல், தாண்டகம், தூது, பாவைப் பாட்டு, பல்லாண்டு, குழமணிதூரம், தடம் பொங்கத்தாம் பொங்கோ, உந்தி பறத்தல், கோத்தும்பி, அந்தாதி முதலியபிரபந்த வகைகளைத் தமிழுக்கு அருங்கொடையாக வழங்கியவர்கள் ஆழ்வார்கள்.

பிற்காலப் பிரபந்த இலக்கணப்படி அமைநத பிள்ளைத் தமிழ் நூல்கள் பலவற்றுள்ளும் காணப் படாத பல அரிய செய்திகள் பெரியாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் பாடிய பிள்ளைத்தமிழ்ப் பாசுரங்களில் காணப்படுகின்றன. தளர்நடைப் பருவம், அச்சோப் பருவம், புறம்புல்கல், பூச்சிகாட்டுதல், முலையுண்ணல், காதுகுத்துதல், நீராட்டம், குழல்வாரக் காக்கையை வாவெனல், கோல்கொண்டு வாவெனல், பூச்சூட்டல் முதலியவை பெரியாழ்வார் பாடிய பிள்ளைத்தமிழ்ச் செய்யுள்களில் காணப்படும் சிறப்புச் செய்திகளாகும்.

திருவெழுகூற்றிருக்கை என்னும் அரிய சித்திரகவி வகையைச் சேர்ந்த பிரபந்தம் நக்கீரராலும், சம்பந்தப் பெருமானாலும் பாடப்பட்டுள்ளன. வைணவ மரபில் திருமங்கையாழ்வார், திருக்குடந்தைத் தலத்தைக் குறித்து ஒரு திருவெழுகூற்றிருக்கை இயற்றியுள்ளார்.

சைவத்தில் மாணிக்கவாசகர் திருவெம்பாவை அருளியது போன்று, வைணவ சமய மரபில் ஆண்டாள் திருப்பாவை அருளியுள்ளார். இத்திருப்பாவையை அவர் 'சங்கத் தமிழ் மாலை முப்பது' எனச் சிறப்பித்துக் கூறுவார். 'குழமணிதூரம்' 'தடம் பொங்கத்தாம் பொங்கோ' என்பன இலங்கைப் போரில் தோற்ற அரக்கர் அஞ்சிப் பாடிய பாவனையில் திருமங்கையாழ்வாரால் பாடப்பெற்ற புதுவகைப் பாடல்கள் ஆகும். பெரியாழ்வார் பாதாதி கேசம், திருத்தாலாட்டு ஆகிய பொருள்களின் மேல் பாசுரங்களைப் பாடியுளளார்.

உலகம் முழுவதும் காணப்படும் மெய்யுணர் வாளர்களுள் சிலர் நாயகநாயகி பாவத்தை மேற்கொண்டுள்ளனர். தம் அனுபவங்களைச் சொற்களில வடித்துக் கொடுத்துள்ளனர். எனினும், உள்ளத்தைக் கொளளை கொள்ளும் உருக்கம் மிகுந்த கவிதைகளாக வெளியிட்டவர்களா சிலரே. ஆழவார்கள் இறையன்பில் ஆழங்காற்பட்டவர்களாதலால் நாயக நாயகி பாவத்தைச் செஞ்சொற்கவிகளாக வெளியிடுவதில் தலைசிறந்து விளங்குகினறார்கள்.

பள்ளத்தை நோக்கிப் பாயும் வெள்ளத்தைப் போல் ஆணடாளின அளவற்ற பக்தி, அகப்பொருட் பாடல் மரபில் நாச்சியார் திருமொழியில் வெளியிடப் படுகினறது.

இறைவனைத் தலைவனாகவும், தம்மைத் தலைவியராகவும் பாவித்து ஆழ்வார்கள் நாயக, நாயகி பாவத்தில் பாடிய அகப்பொருட் பாசுரஙகள் தனிச் சிறப்பு வாய்ந்தவை. சங்க காலத்தில், மானுடக் காதலின் வெளியீடாகத் திணைதுறைப் பாகுபாடுகளோடு பாடப்பட்ட செய்திகள ஆழ்வார்களின் காலத்தில் தெய்விகக் காதல பெருக்கெடுக்கும செந்தமிழ்ப் பனுவலகளாக உருமாற்றம் பெற்றன. உலகில வேறெந்த மொழியின இலககியத்திலும் இத்துணை நயத்துடன காணப்பெறாத இவவரிய பாசுரங்களுக்கு 'சுவாபதேசம்' என்னும் முறையில தத்

துவப பொருள விரித்துரைப்பர் வைணவப் பெரியோர். இமமரபின விரிவு 'ஆசாரியஇருதயம்'என்னுமநூலிற் காணப்படும்.

நான்முகன் திருவந்தாதியில் (39)கூடல் இழைதலைக் கூறும் முறையில இந்நெறிக்குத தோறறுவாய் செயகிறார் திருமழிசை யாழவார். பெரியாழவார், குலசேகரர், திருமஙகையாழ்வார், நம்மாழ்வார், ஆணடாள ஆகியோர் அகபபொருண மரபில் சிறப்பான பாசுரங்கள் பாடியுள்ளனர். திருமங்கை யாழ்வார் சஙக காலததில் தனிப் பாடல்களில் இடம பெறும் மடலேறும் செய்தியைப் பெருக்கிச் 'சிறிய திருமடல', 'பெரியதிருமடல்' எனனும் இரு புது வகைப் பிரபந்தங்களை அருளிச் செயதுளளார். சங்க காலததில், ஆணகள் மடலேறுவதாகக கூறுவரேயன்றிப பெண்டிர் மடலேறுவதாகக் கூறுதல் புலனெறி வழக்கில காணப்படவில்லை. ஆனால், திருமங்கை யாழ்வார் நாயகி நிலையில பாடிய இமமடல்களில் தலைவி மடலேறத் துணிந்ததாகக கூறிப் புதுமரபு படைத்துளளார். இவரை, வைணவ உலகில் பரகால நாயகி எனப் போற்றுவர். நம்மாழவாா திருவாய்மொழியிலும், திருவிருத்தததிலும் உளளத்தைக கொளளை கொளளும் அகபபொருட் பாசுரஙகள் பலவறறைப் பாடியுளளார். இவரைப் பராஙகுச நாயகி எனப் போற்றுவர். ஆணடாள, பெணணாகையால, நாயகிபாவம் இவருக்குச் செயற்கையாக வரவழைக்க வேணடாது இயற்கையாகவே அமைந்தது. 'வாரணமாயிரம' எனனும் பததில் மது சூதனனாகிய கணணபிரான தம்மைக் கைததலம் பற்றி மணம் புரிந்த செயதியைக கனவில் கணடதாகப் பாடியுளள பகுதி தமிழ இலக்கிய வரலாற்றில் சிறபபிடம் பெறத்தக்கது.

இராமானுசப் பெருந்தகையைக் குறித்து திருவரங்கத்தமுதனாரால இயறறப்பெறற இராமனுச நூற்றந்தாதி நாலாயிரத்தின இறுதியில் வைக்கப்பட்டுள்ளது தெனனக வைணவத்தைச் சீரபெறச் செய்தவரும், அனைத்துயிர்களும் உய்திபெறவேணடும் எனனும் பெரு நோக்குடன் திருக்கோட்டியூாநம்பியினபால் தாம் அரிதில் முயன்று பெற்ற திருமந்திர மறைபொருளை 'ஆசையுடையோர்க்கெல்லாம்' அருளிய வள்ளலுமாகிய எதிராசர் எனனும் இராமானுசப் பெருந்தகையின் ஏற்றஙகளை இனிதியமபும இவவந்தாதி, இதன சிறப்பும் சீாமையும் நோக்கி நாலாயிரத்தின இறுதியில் சேர்க்கப்பட்டுளளது.

இறைவனைப் பரத்துவம், வியூகம், விபவம், அந்தரியாமித்துவம், அர்ச்சாவதாரம் என்னும் ஐநது நிலைகளில் காண்பது விசிட்டாத்துவைதமாகிய வைணவத் தத்துவம். இவ்வைந்து நிலைகளிலும் அர்சசாவதாரமே ஆழ்வார்களின் உள்ளத்தைக் கவர்நதது. திவவிய தலங்களிலே மககள் எளிதில் கணடு சேவை புரியத் தகக வகையிலே எழுநதருளிக் காட்சி வழங்கும் அர்ச்சாவதாரஙகளில் மிகுந்த ஈடுபாடு கொணடு ஆடிப பாடிக் களித்தும் பணிபுரிநதவர்கள ஆழ்வார்கள். இத்தகைய திருததலஙகளில திருவரஙகம 'கோயில' எனச சிறப்பிததுப் பேசப்படுவது. திருவேஙகடம 'திருமலை' எனப புகழநது பேசபபடும இவறறைப் போனறு, நூற்றெட்டுத திருத்தலஙகள் ஆழவார்களால மஙகளாசாசனம் செய்யப்பட்டன. இமயமலையினகண அமைந்த திருப்பிருதி, வதரியாச்சிரமம் ஆகியவற்றில தொடங்கித தெனகோடியில அமைந்துளள திருவணபரிசாரம், திருவனநதபுரம வரை இத்திவ்வியதலஙகள அமைநதுள்ளன. இவறறுள் வைகுந்தமும திருபபாற்கடலும் அடஙகும்.

ஞானம், பக்தி, கரும மார்க்கஙகளைக் காட்டிலும் இறைவனைச் சரண புகுதலாகிய பிரபத்தி மார்க்கமே மேலானது எனபது விசிட்டாத்துவைதமாகிய வைணவத்தின முடிபு. எனவே, இறைநிலை, உயிாகளின நிலை, உயிாகள தடையாகி நிறபவற்றின இயலபுகள, உயிர்கள இறுதியில் அடையும் பேறு என்பவையே ஆழ்வார்களின் அருளிச செயல்களின வாயிலாகக் கூறப்படுபவை எனலாம்.

வைணவத திருத்தலஙகளில் விழாக் காலஙகளில் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தைச் சாறறு முறையாகப பாடுதல் இன்றும பின்பற்றபபடுகினறது.

நாதமுனிகளின காலத்திலேயே இவை அரையர்களால பாடி அபிநயிக்கப்படும் முறை தோற்றுவிக்கப் பட்டது. இன்றும் திருவரஙகம, சீவில்லிபுத்தூர், ஆழவார் திருநகரி ஆகிய வைணவத் திருத்தலஙகளில அரையாகள் இவ்வாறு திவவியப் பாசுரஙகளைப் பாடி, நடித்து உரைகூறி மக்களை மகிழ்விப்பதோடு நலலறிவும பெறசசெய்து வருகின்றனா. திருக்குறுஙகுடி, திருநரையூர் முதலிய பிற தலஙகளிலும் முன்னர் அரையாகள வாழ்ந்து இத்தொணடு புரிந்து வந்தனர் எனபர் அறிஞா.

நாலாயிரததைக் கோவிலகளிலும், தததம் இல்லங்களிலும் ஓதுவதற்குச் சில முறைகள வகுககப பட்டுள்ளன. அவை பினவருமாறு: கார்ததிகை மாதம் கார்த்திகை நட்சத்திரம் முதல தை மாதம அத்த நட்சத்திரம் வரை எங்கும் திவ்வியப் பிரபநதம் ஓதுதல் இலலை. இதற்கிடையில மார்கழி மாதத்தில் மட்டும் திருப்பள்ளி யெழுச்சியும், திருபபாவையும் பாடப்படுதல் உண்டு. வைகுணட ஏகாதசிக்கு முன பத்து நாளும, பின பத்து நாளும் அத்தியயன விழா

வாகக் கொண்டாடப்படும். கோவிலகளில் மட்டும் முன்பத்து நாள விழாவில் முதலாயிரம், பெரிய திரு மொழி, திருக்குறுந் தாண்டகம், திருநெடுந்தாண்ட கம் ஆகியவற்றை நாள் ஒன்றுக்கு இருநூறு பாசுரங் களாக ஓதுவர். ஏகாதசி தொடங்கிப் பத்து நாட் களுக்குத் திருவாய் மொழி ஆயிரமும் ஓதப்படும். இருபத்தோராம் நாளில இயற்பா முழுவதும் ஓது வர். இவவேறபாடு திருமங்கை மன்னரால் செய்யப் பட்டது எனபது கூறப்படுகின்றது.

திருவாய்மொழிக்கு இராமானுசரின் மாணாக்க ராகிய திருக்குருகைப்பிரான் பிளளான் முதனமுதலில் ஆறாயிரபபடி என்னும் விரிவுரையை இயற்றினார். நஞ்சீயர் ஒன்பதினாயிரப்படியும, பெரிய வாச்சான பிளளை இருபததுநாலாயிரப்படியும், வடக்குத் திரு வீதிப பிள்ளை ஈடுமுபப்த்தாறாயிரப்படி எனனும் விரிவுரையுமா இயற்றினா. இவறறையடுத்து, வாரி கேசரி அழகிய மணவாளசீயர் பன்னீராயிரப்படி என்னும் விரிவுரையைச் செயதனர். இவவாறு திரு வாய் மொழிக்கே ஆறு விரிவுரைகள அமைநதுள்ளன.

பெரியவாச்சான்பிளளை எனனும் பேரருளாளா நாலாயிரம் முழுவதற்கும விரிவுரை செயதுள்ளார். ஆனால, பெரியாழ்வார் திருமொழியின முதல் நானகு பத்திற்கு இவ்விரிவுரை கிடைக்கவில்லை. அந நானகு பத்திறகு மட்டும் மணவாள மாமுனிகள விரிவுரை செய்துள்ளார். மேலும, நஞ்சீயர், அழகிய மணவாளசீயர், அழகிய மணவாளப பெருமாள் நாயனார் என்னும பெரியாாகள திருப்பாவை, அமலனாதிப்பிரான, கணணிநுண்சிறுத்தாமபு ஆகிய வற்றிற்கு விரிவுரை செய்துளளனர். அப்பிள்ளை என்பார் இயற்பாவுக்கு இயறறிய விரிவுரை ஒன்றும உண்டு. மணவாள மாமுனிகளும், பிளளைலோகா சாரிய சீயரும் இராமானுச நூற்றந்தாதிககு விரி வுரை செயதுளளனர். ஜி.ச.

**திவாகரம்**. காணக: சேந்தன் திவாகரம்

**திவுப் பழங்குடி**, நைசீரியாவில வாழும் தொன்மையான பழஙகுடியினர். ஆப்பிரிக்காவின வட மேற்குப் பகுதியிலுள்ள இவர்களைப் புரோபபினியசு (Frobenius) கி.பி.1800-ஆம் ஆணடளவில் கணடறிந் தார். இவர்களைப் பற்றிக் குறிப்பிடுமபோது இவர் கண்ட ஆப்பிரிக்கப் பழஙகுடிகளுள இவர்கள் உழைப் பாளிகள எனவும், மூட நம்பிக்கையற்றவர்கள் என்றும் குறிப்பிடுவார். முதன்முதலில, வெளியார், பழங்குடி களுடன் தொடர்பு கொளவது என்பது நினைத்துப் பார்க்க முடியாதது. ஆனால் இவர்களோ மிகவும் பண்புடன் நடநதுகொணடனர் எனக குறிபபிட்டுள் ளார்.

ஆங்கிலேயர்கள இப்பகுதியில் குடியேற்ற ஆட்சியை ஏற்படுத்தியபோது இம்மக்களுடன பெருத்த மோதல் ஏற்படவிலலை எனலாம். இவர்கள அமைதியானவர்கள் என்பதே அடிப்படையான காரணம். நைசீரிய மக்களிடமிருநதும் வெள்ளையர் களிடமிருந்தும் இவர்கள மிகவும் தனித்து வாழந்து வந்தனர். திவுப் (Tiv) பழஙகுடியினர் ஒரேயொரு மூதாதையரிடமிருந்து தோனறி நூற்றுக்கணக்கான காலவழிக் (Lineage) குழுக்களாகப் பிரிநதுளளனர். இவர்களில் 17முதல 25 தலைமுறைகளுககு முன்னர்த தோனறிய மூதாதையர், அனைவருககும் பொதுவான வர். இருந்தாலும் இந்நூறறுககணககான காலவழிக் குழுவினர் அரசியல், போர் முதலான நடவடிக்கை களில இரு பெருங குழுக்களாகப் பிரிந்து செயற்படு கினறனர்.



திவுப் பழங்குடியினா

திவு மக்களின் பொருளாதாரம் வேளாணமை யைச் சார்நதது. பயிரிடும் முறை இவர்களிடையே சற்றுப் புதுமையாக உளளது. ஒவவொரு கால்வழி யினரும் ஆணவழி மரபில் நிலத்தை அவரவருக்கெனறு உரிமையாக்கிக் கொண்டுள்ளனர். இந் நிலஙகளில பயிா சுழற்சி முறையில் பல்வேறு பயிாகளை விளை விக்கின்றனர். இச சுழற்சி முறை இரணடு அலலது மூன்றாணடுகளைக் கொணடது. முதல ஆணடில் நிலம் உழப்பட்டு ஆஙகாஙகு மண மேடுகளை

அமைத்து அதில் வள்ளிக் கிழங்குகளை நடுகின்றனர். இதில் ஊடு பயிராகக் காய்கறிகளைப் பயிரிடுகின்றனர். இப் பயிரினை விளைவிப்பதில் இவர்களிடையே தொழிற்பகுப்பு ஏற்படுத்தப்பட்டுள்ளது. ஆண்களும் சிறுவர்களும் நிலத்தை உழுதல், மண் மேடுகளை அமைத்தல், வள்ளிக் கிழங்குகளை நடுதல் முதலான வற்றைச் செய்யவேண்டும் பெண்கள் களையெடுத்தல், அறுவடை செய்தல் முதலானவற்றைக் கவனிக்க வேண்டும்.

இரண்டாம் ஆண்டில் நிலத்தைச் சமன்செய்து உழுது தினைவகைகள், சோள வகைகள் முதலான வற்றைப் பயிரிடுகின்றனர். மூன்றாமாண்டு இவர் களின் பணப் பயிர்களுள் ஒன்றான எள் விளைவிக்கப் படுகிறது இதிலிருந்து எண்ணெயையும், கால்நடைத் தீவனமாகப் பயன்படும் புண்ணாக்கையும் பெறுகின் றனர். இம் மூன்றாண்டுச் சுழற்சிக்குப் பின் நிலத்தைத் தரிசாக விட்டு மீண்டும் அதேமுறையில் பயிர்களை விளைவிக்கின்றனர்.

திவுப் பழங்குடிகளின் குடும்பம் கூட்டுக் குடும்ப அமைப்புடையது. மிகவும் நெருக்கமான உறவினர்கள் அனைவரும் ஒரே வேலிக்குள் அமைக்கப்பட்டுள்ள நீண்ட வீட்டிற்குள் வாழ்கின்றனர் குடும்ப அதிகாரம், சொத்துரிமை அனைத்தும் தந்தைவழி வருவதாகும் ஆண்களைக் காட்டிலும் பெண்களே முதலில் திருமணம் செய்துகொள்கின்றனர். 14 அல்லது 15 வயதடையும்போதே பெண்கள் திருமணம் செய்துகொள் கின்றனர். குறிப்பாக 1927 க்கு முன் இவர்களி டையே தமக்கைப் பரிமாற்ற முறை இருந்துவந்தது. ஒரு கால்வழியைச் சேர்ந்தவர்கள் பிற கால்வழியி லிருந்து தமக்கைகளைப் பரிமாறிக்கொள்கின்றனர். இப்போது இம்முறையில் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன.



திவு முதியவர்

இவர்களிடையே உள்ள உறவுமுறை (Kinship) மிகவும் விரிந்ததாகும். ஒருவர் அவருடைய குடிவழிப் பட்டியலைச் சற்றேறக்குறைய 20 தலைமுறையினர் வரை தொடர்புபடுத்திக் கூறுவர். இதனடிப்படையி லேயே இவர்களின் நில உரிமை, குடும்ப அமைப்பு, சமயச் சடங்குகள், அதிகார அமைப்பு அனைத்தும் செயற்படுத்தப்படுகின்றன.

ஒவ்வொரு கால்வழிக்கும் ஒரு தலைவன் உள்ளான் அவர்கள் அனைவருக்கும் பொதுவான ஒரு தலைவரும் நியமிக்கப்படுவார். வயதில் மூத்தவ ராகவும் அனுபவம் மிக்கவராகவும் அனைவராலும் விரும்பப்படுபவராகவும் உள்ள ஒருவர் நியமிக்கப்படு கிறார்.

இவர்கள் முன்னோர் வழிபாட்டையும், ஆவிகள் வழிபாட்டையும் கொண்டுள்ளனர். வாழ்வின் முக்கிய மான சடங்குகளுக்குத் தனித்தனி ஆவிகளை வழிபடு கின்றனர்.

இவர்களிடையே அறிமுகமாகியுள்ள பணப்பயிர் முறை இவர்களிடையே நிலவிய சமூக சமத்துவத்தை யும் (Egalitarianism) வகுப்பற்ற முறையையும் பெரி தும் மாற்றிவிட்டது எனலாம். பணப் பயிரை விளை விப்பதில் செல்வம் மிக்கோர் செல்வமற்றோருக்குக் கடன் கொடுத்து வருவதால் இவர்களிடையே வகுப்பு முறை ஏற்பட்டுள்ளது. இதனடிப்படையில் செல்வத் தகுதியிலும் நில உரிமைத் தகுதியிலும் வேறுபாடுகள் வளர்ந்துவருகின்றன இவ்வகையான வேறுபாடுகள் கடந்தகாலத்தில் இல்லாததால் இன்றைய நிலையை ஓரளவு வெறுக்கின்றனர் நைசீரிய அரசும் இவர்களின் நலனிற்குப் பெருமளவு உதவி வருகிறது சீ.ப.

**திறந்த பள்ளி**: முறையாக அமைக்கப்பட்டு நிறுவகிக்கப்படும் பள்ளிக் கல்வி முறைக்கு இணைந் தும், அதன் குறைபாடுகளை ஈடு செய்யும் வகை யிலும் இன்று திறந்த கல்வி அமைப்பும், இதனைச் செயற்படுத்துவதற்கான திறந்த பள்ளிகளும் ஏற் படுத்தப்பட்டுள்ளன. பள்ளிக் கல்வியைத் தொடரவிய லாத சிறுவர், சிறுமியர்க்கும், பள்ளிப் படிப்பினை

பல்வேறு காரணங்களினால் நடுவில் விட்டு விலகும் குழந்தைகளுக்கும் தங்களது கல்வியை மீண்டும் தொடர வாய்ப்பளிப்பதுடன், முறையான பள்ளிக் கல்வி வாய்ப்பினைப் பெறவியலாத சமுதாயத்தின் இளம் தலைமுறையினர்க்கும் கல்வி கற்க வாய்ப்பினை அளிப்பதாகவும், திறந்த பள்ளிகள் அமைகின்றன. வறுமை போன்ற பொருளாதாரக் காரணங்கள், பள்ளி வசதிகளைப்பெறவியலாத அல்லது பெற்றிராத மலைகள், காடுகள், தொலை தூரங்களிலுள்ள சிற்றூர்கள் போன்றவற்றில் வசிக்கும் குழந்தைகளின் நிலைமையினின்று தோன்றும் காரணங்கள் போன்றன குழந்தைகளிடையே குறிப்பிடத் தக்க விகிதத்தினர், முறைப்படி பள்ளிக் கல்வி பெறுவதற்குத் தடைகளாக உள்ளன. பள்ளிகள் உள்ள இடங்களிலும் குழந்தைகளின் பணியும் உதவியும் அவர்களின் பெற்றோர்களது அன்றாடத் தொழிலுக்குத் தேவையென்பதாலும், முக்கியமாகச் சிறுமியர் இல்லங்களில் தங்கள் தாய்மார்களுக்குத் துணையாகவிருக்கும் கட்டாயம் எழுவதாலும் பல குழந்தைகள் முறைப்படி கல்வி கற்க இயலுவதில்லை. ஓரளவு வயது வந்த இளைஞர்களும் தமது கல்வித் தகுதியை மேலும் உயர்த்திக் கொள்ள ஆர்வமிருப்பினும் மீண்டும் பள்ளிகளிலோ கல்லூரிகளிலோ சேர்ந்து பயில காலமும் நிதி வசதியும் இல்லாமலிருக்கக் கூடும். இத்தகைய பலதிறப்பட்ட கற்போர் குழுக்களைக் கருத்தில் கொண்டு திறந்த பள்ளிகளும் அவற்றுக்கு ஆதாரமான திறந்த கல்வி அமைப்பும் உருவாக்கப் பெற்றுள்ளன.

திறந்த பள்ளிகள் எனப்படுவன பல தமது நோக்கங்களுக்கு ஏற்ற கற்றல் அணுகுமுறைகளைக் கையாளுகின்றன. சேய்மைக் கல்வி முறைகள், பகுதி நேரக் கல்வி, அஞ்சல் வழிக் கல்வி ஆகியன யாவும் திறந்த பள்ளிக் கல்வியில் பயன்படுத்தப்படுகின்றன. சமுதாயத்தில் கல்வி நிலையில் காணப்பெறும் ஏற்றத் தாழ்வுகளை அகற்றி, கல்வி வாய்ப்பினைத் தொடக்கத்தில் இழந்தோருக்கு மற்றொரு மாற்றுக் கல்விப் பாதையினை ஏற்படுத்தித் தருவதாகத் திறந்த கல்வி அமைப்பு விளங்குவதாகும். திறந்த பள்ளிக் கல்வி என்பது மிகப் பரந்த ஒரு சமூகத்தினைக் குறிப்பதாக அமைவதினால் அது பற்றிய திட்டமான விளக்கத்தினை ஒருசில சொற்களால் அளிக்கவியலாது என்று குறிப்பிடும் கல்வி வல்லுநர்களும் உள்ளனர். சமூக மாற்றத்தின் ஒரு கூறாகத் திறந்த பள்ளிக்கல்வி உள்ளது. முறையான பள்ளிக் கல்வி பெற இயலாதோர்க்கும் முழுமை நேரக் கல்வி கற்க இயலாதோர்க்கும் இது கல்வி வாய்ப்பினை உருவாக்கித் தருகிறது. இக் கல்வி அமைப்பில் கற்பித்தல் முறைகளிலும் புதிய உத்திகள் கையாளப்பெற்றுக் கற்பித்தல் மையத்திற்கு மிகத் தொலைவில் வசிப்போர்களுடன் தொடர்பு கொள்ள இன்றைய தொழில் நுட்பச் சாதனங்களின் உதவி பயன்படுத்தப்படுகிறது. மற்றும் கல்வியின் குறிக்கோள்கள், ஆதாரக் கோட்பாடுகள், கல்வி ஏற்பாடு, மதிப்பீட்டு முறைகள் போன்றவற்றிலும் திறந்த பள்ளிக் கல்வியில் ஓரளவு தனித்தன்மை காணப்படுகிறது. கற்போருக்கு இதில் கற்றலில் சுதந்திரம் மிகுதி. மாணாக்கர் இக்கல்வி அமைப்பின் எந்தக் கட்டத்திலும் (சில அடிப்படைத் தகுதிகளுக்குட்பட்டு) எப்போதும் நுழையலாம். ஒவ்வொரு வகுப்பிலும் அடுத்தடுத்து முன்னேற வேண்டிய கட்டாயம் இல்லை. இக்கல்விக்கான பள்ளி அல்லது கல்லூரிகளில் நாடோறும் கட்டாயமாக வருகை தரத் தேவையில்லை. பாடத் திட்டங்களும் சமுதாய வாழ்க்கைத் தேவைகளுடன் பெருமளவு இணைந்திருப்பதுடன், பல்வேறு பாடங்களை மாணாக்கன் தம் நிலைமைக்கேற்ப வரிசைப்படுத்திக் கற்றுத் தேர்ச்சி பெறலாம். இந்திய நாட்டின் ஏழாம் ஐந்தாண்டுத் திட்டத்தில கல்விக்கு உயர் இடம் அளிக்கப்பட்டிருத்தலுடன் அதற்கெனக் கணிசமான நிதியும் ஒதுக்கப்பட்டுள்ளது. புதிய கல்வித் திட்டம் பற்றிய கொள்கை அறிகையில், மரபு வழிப்பட்ட முறையான பள்ளி மற்றும் கல்லூரிக் கல்வி அமைப்புகளுக்கு இணையாகத் திறந்த கல்வி அமைப்புகள் இயங்குவதன் இன்றியமையாமை ஏற்கப்பட்டுள்ளது. இவ்விரண்டு அமைப்புகளுக்குமிடையே ஒரு தொடர்பு இருக்கவேண்டுமென்பதனையும், பள்ளிக் கல்வியைச் சில ஆண்டுகள் பயின்றோர் திறந்த கல்வி வாய்ப்புகள் வழியே தங்களது கல்வியை மேற்கொண்டு தொடருவது போன்றே, திறந்த பள்ளிகளில் கற்றுத் தேறியவர்கள் தேவைப்பட்டால் பின்னர் ஒரு கட்டத்தில் முறைப்படி பள்ளிகள் அல்லது கல்லூரிகளில் சேர்ந்து பயில வாய்ப்புகள் அமைக்கப் பெற வேண்டியதன் அவசியத்தையும் புதிய தேசிய கல்விக்கொள்கை வலியுறுத்துகிறது. இந்தக் கல்வி நெகிழ்ச்சிக்கு (Flexibility) ஏற்ற முறையில் பாடத்திட்டங்களின் கரு அமைய வேண்டும். மற்றும், நாட்டு முன்னேற்றத்திற்கு இன்றியமையாத புதிய தொழிற் கருத்துகள், செயல் முறைகள் ஆகியவற்றை உழவர்கள், தொழிலாளர்கள் ஆகியோரிடம் பரப்பும் சாதனமாகத் திறந்த கல்வி அமைப்புகள் திகழ வேண்டும் என்பதனையும் புதிய கல்விக் கொள்கை சுட்டிக் காட்டியுள்ளது.

திறந்த பள்ளிக் கல்வி, மேலை நாடுகளில் வானொலியின் துணை கொண்டு செயற்பட்ட 'ஆகாயப் பல்கலைக் கழகங்கள்' எனப்பட்ட அமைப்புகளைப் பின்பற்றிப் பிற நாடுகளில் பரவியது. திறந்த பள்ளி, கல்வி கற்போனை மையமாகக் கொண்டது.

செய்மைக் கல்வி, அஞ்சல் வழிக் கல்வி ஆகியன இதன் அடித்தளங்களாகும். கற்றலுக்கான பாடப்பொருள் முழுமைபெற்ற சிறு பகுதிகளாக (Modules) தயாரிக்கப்பட்டு, பலபோது இப்பாடப் பகுதி தானே கற்றலுக்கு உதவும்படி படிப்படியாக நிரலபடுத்தப்படுவதும் (Programming) உண்டு. பாடப் பொருளுடன் கற்றபின் முடித்தனுப்ப வேண்டிய ஒப்படைப்புகள் (Arrangements), விடைத் தாள்கள் (Response sheets) போன்றன இணைக்கப் பெறும். இவற்றை மதிப்பிட்டுக் கற்போனது முன்னேற்றம் பற்றித் திறந்த பள்ளிக் கல்வி மையத்தினர் அறிய முடியும். கற்போர் தாமே தங்களது முன்னேற்றத்தினை உணர உதவும் வினாக்கள் பாட விளக்கத்துடன் ஆங்காங்கே இணைக்கப் பெற்றிருக்கும். அவ்வப் போது, திறந்த பள்ளியில் பயில்வோர் நேர்முகமாக ஆசிரியர்களைச் சந்திக்கும் வாய்ப்பு (Contact programme) ஏற்படுத்தப்பட்டு அதில் மேலும் விளக்கங்கள், செய்முறைப் பரிசோதனைகள் போன்றன இடம் பெறும். வானொலி, தொலைக்காட்சி ஆகியன பயன்படுத்தப்படுதலை இன்று காணமுடிகிறது. திறந்த கல்வி மையங்கள் ஆங்காங்கே நிறுவப்பட்டு அவற்றில் தேவையான நாடாப் பதிவுப் பாடங்கள், திரைப்படங்கள், மேற்கோள் நூல்கள் போன்றன மாணாக்கர் வசதிக்கென இடம் பெற்றிருக்கும். 1979சூலையில் இடைநிலைக்கல்விக்கான மையவாரியம்(CBSC) திறந்த முறைக் கல்வி அமைப்பினைத் தோற்றுவித்தது. தமிழ் நாட்டிலும் மாநில அரசு, மாநிலக் கல்வி ஆராய்ச்சி, மற்றும் பயிற்சி நிறுவனத்தின் (SCERT) துணைக் கொண்டு குறிப்பிட்ட வயதுவந்தோர் பள்ளிகளில் சேராமல் திறந்த கல்வி வசதிகளைப் பயன்படுத்தி, உயர் நிலைப் பள்ளி, அரசுத் தேர்வுகளை எழுத வாய்ப்பளித்துள்ளது. இன்று பல்கலைக் கழகங்களிலும் திறந்த கல்வி வசதிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. பட்டப் படிப்புக்கான நுழைவுத் தேர்வில் அடிப்படைப் பாடங்களில் தேர்ச்சி பெற்றுப் பட்டம் பெறவியலும். இதிலும் ஒரு பட்டப் படிப்புக்குள் அடங்கியுள்ள பாடங்களில் தமக்கு விருப்பமான வரிசையில் ஒவ்வொன்றாகப் படித்துத் தேறி, ஒவ்வொரு பாடத் தேர்ச்சிக்கும் அதற்கான தேர்ச்சி எண்களை (Credits) சேர்த்து, இறுதியில் பட்டம் பெறுதலும் இயலும். முக்கியமாக, இளம் பிராயத்தில் கல்வி வாய்ப்பினை இழந்தோர்க்குத் திறந்த பள்ளிகள், மீண்டும் கல்வி வாய்ப்பினை அளிப்பனவாகவுள்ளன. 'இந்திரா காந்தி தேசிய திறந்த பல்கலைக் கழகம் (1985) இதற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. எஸ்.ச.

***திறமைசார் ஆசிரியர் கல்வி.*** ஆசிரியர் கல்வியானது படிப்படியாக வளர்ந்து தனக்கென ஒரு தனித் தன்மையினையும் வடிவத்தையும் பெற்று வருகிறது. ஆசிரியர் கல்வியின் அண்மைக்கால முன்னேற்றங்களுள் குறிப்பிடத் தக்கதாக 'திறன்சார் ஆசிரியர் கல்வியை' எடுத்துக் காட்டலாம்.

திறமைசார் ஆசிரியர் கல்வி ஒரு சோதனை முயற்சியாக அமெரிக்க ஐக்கிய நாட்டில் 1960க்குப் பின்தோன்றி விரைவிலேயே ஓர் இயக்கமாகப் பெருகி விட்டது. அதற்கு ஆதரவான சூழ்நிலைகள் அப்போது காணப்பட்டன. தொழில் நுட்பத் துறையில் ஏற்பட்ட முன்னேற்றங்களின் பிரதிபலிப்பு கல்வியிலும் காணப்பட்டுக் கல்வியின் வெளியீடுகள், அளவிடற்குரியனவாக இருக்க வேண்டும் என வலியுறுத்தப்பட்டது. ஆசிரியர் தங்கள் பணிகளுக்கு முழு அளவு கணக்குக் கூறும் பொறுப்புடையவர்களாகப்பட வேண்டுமென வரி செலுத்துவோர் சார்பில் கூறப்பட்டது. பொதுவாக ஆசிரியர் பெருக்கமும் தரக் குறைவும் காணப்பட்டன. ஆசிரியர்களை உருவாக்கும் பணியில் ஆசிரியர்களும் கலந்து கொள்ளப்பட வேண்டுமெனவும், ஆசிரியர் தொழிலுக்குத் தேவையான திறன்களை ஆசிரியர்களே பரிசீலித்து வரையறுக்க வேண்டுமெனவும் ஆசிரியர்கள் சார்பில் வேண்டப்பட்டது.

இவ்வியக்கத்தின் வழிகாட்டிகளாக விளங்கியோருள் காரல் மசனார் (Karl Massanari), சுமீடர் (Scumeider), ஈலாம(Elam) போன்றோர் குறிப்பிடத் தக்கவர்களாவர்.

திறமைசார் ஆசிரியர் கல்வியின் சிறப்பியல்புகளாவன: அ) குறிக்கோள்களின் மீது ஊன்றிய பார்வை, ஆ) கற்றலுக்கான பொறுப்பு தனி மாணவருக்களிக்கப்படல், இ) தனியாள் வேறுபாடுமைக்கு மிகுந்த கவனம், ஈ) தனித்தனியாக மதிப்பிடுதலும் விளைவு கூறலும் (Feedback), உ) கோட்பாடுகளும் நடைமுறைகளும் திறம்பட ஒருங்கிணைக்கப்படல், ஊ) கற்போர் எதை அறிந்துள்ளார் என்பது மட்டுமன்றி அவர் உண்மைச் சூழ்நிலைகளில் எவ்வாறு செயலாற்றுகிறார் என்பதை மதிப்பிடல், எ) பயிற்றுநர் என்ற சாதாரண நிலையிலிருந்து அறிவு பெறத் தூண்டுபவர் என்ற மேம்பட்ட நிலைக்கு ஆசிரியர் உயர்த்தப்படல், ஏ) இறுதிநிலைச் சோதனை திட்டவட்டமான குறிக்கோள்களைச் சோதிப்பதாக (Criterion Referenced) அமைதல்.

திறமைசார் ஆசிரியர் கல்வியின் நடைமுறைகளைச் சுமீடர் விளக்கியுள்ளார். இம்முறையில் கல்விக் குறிக்கோள்கள் திட்டவட்டமாக வரையறுக்கப் பெற்ற நடத்தை மாற்றத்தைக்(Behaviour Outcomes) குறிக்கும் சொற்களால் குறிக்கப்படுகின்றன. எதிர்பார்க்கும் திறன்கள் மாணவ ஆசிரியர்களிடம் முன்கூட்டியே வெளிப்படையாகத் தெரிவிக்கப்படுகின்றன.

அவர்களின் உண்மையான சிக்கல்களை உணர்ந்து அவற்றில மாற்றங்கள் செய்து கொள்ள இடமுண்டு. இத்திறனகளைப் பெறுவது மாணவாசிரியர்கள் பொறுப்பாக்கப்படும். பயிற்சித் தேவைகள் இத்திறன் களை முற்றிலுமாகக் கைவரப் பெற உதவும் வகையில் உருவாக்கப்படுகின்றன. ஆசிரியக் கல்வியாளர்கள பயிற்சித் தேவைகளை வடிவமைக்கின்றனர். இம் முறையில் சாதனை மட்டம் நிலையானதாக இருக்கும்; அதை அடைய எடுத்துக் கொள்ளும் கால அளவு நெகிழ்சசியுடையதாக இருக்கும். ஆசிரியர் கலவிக்கான நுழைவுத் தகுதிகளில் சலுகைகள் இருக்கலாம் ஆனால் இறுதிநிலைத் திறன் அளவில் தரக்குறைவு அனுமதிக்கப்பட மாட்டாது.

திறமைசார் ஆசிரியர் கல்வி பயில்வோர் தமது சொந்த வேகத்தில் கற்பதற்கேற்ற கற்றல் பொருள்களைப் பயன்படுத்துகின்றனர். இவை தன்னிறைவுடைய கற்றல குமிழிகளாக (Modules) அமைக்கப் பெற்றுள்ளன. இவர்களின் தன் ஊக்கத்தில் கற்பதற்கு உதவும் வகையில கற்றல மூலக மையங்கள் (Learning Resource Centres) ஏற்படுத்தப்பட்டுளளன. இத் திட்டம் வெற்றி பெற ஆசிரியர்களின ஒததுழைப்பும் கூட்டு முயற்சியும் இன்றியமையாதன.

திறமைசார் ஆசிரியர் கல்வி, சிற்சில மாறுதல்களோடு அமெரிகக ஐக்கிய நாட்டின் பலவேறு பல கலைக் கழகஙகளில் செயறபடுத்தப்பட்டுள்ளது. போர்தாம் (Fordham) பல்கலைக கழகத்தில் இளங் கலை, இளம் அறிவியல் கற்பித்தலில் முது அறிவியல் பட்டம், கலவியில் முது அறிவியல் பட்டம் ஆகியவை திறன சார்ந்தவையாகும். அங்குப் பல்கலைக் கழகத்துடன் பல பொதுப் பள்ளிகளும் ஒத்துழைக்கின்றன. பணியாற்றல்-படித்தல் என்ற அணுகுமுறை பினபற்றப்படுகிறது. கற்பித்தல் தனி மாணவரளவுக்கு இறங்கி வருகிறது. செய்து கறறல் மூலம் ஒவ்வொரு திறனும் கைவர வாய்ப்புளளது. கோட்பாட்டிற்கும செயல் முறைகளுமிடையே உள்ள தொடர்பு வகுப்பறைச் சூழநிலைகளில செயல விளக்கமாகக் கற்பிக்கப் படுகிறது. அறிவுப் பகுதியும, உணர்வுப் பகுதியும ஒரே அளவு கவனததைப் பெறுகினறன. கற்றல் சமூகச் செயலாக மட்டுமினறித தனி ஒருவர் நிகழ்வாகவும கருதப்படுகிறது. ஒவவொரு மாணவ ஆசிரியரும தமது தனித்தனமைகளுக்கேற்பத் தம் கற்றல்பாணி, வேகம் ஆகியவற்றை வகுதுக் கொணடு திறனகள், அறிவு, மனபபானமை ஆகியவறறை வளர்த்துக் கொளள இயலும். கல்வி ஏற்பாட்டில மக்கள, பொருளகள, காலம, இடம், பாடப் பொருளும் கருத்துகளும், கற்பித்தல/கறறல் பாணிகள், ஆசிரியர் தொழிலின தனித்தன்மை, வலலமை, தலைமை போனறவற்றில் ஆசிரியர்களின் பங்கு பணிகள் ஆகிய கூறுகள் இடம் பெற்றுள்ளன. ஆசிரியர்களிடம் எதிர்பார்க்கும் நடத்தைகள் முன் கூட்டியே கவனமாக முடிவு செயயப்பட்டு அவை ஆதாரத் திறன் (Generic Competencies)பட்டியலில் வகைப் படுத்தவும் பெற்றுள்ளன இவை ஆசிரியர் கல்விக்கு மாணாக்கரைத் தேர்ந்தெடுப்பது முதல இறுதி நிலைத் திறன் ஈறாகப் பயன்படுத்தபபடுகின்றன.

இநதியாவில் திறமைசார் ஆசிரியர் கல்வியின் முனனோடியாகப் பல்வேறு பாடஙகளுககான கற்பித்தல் திறன்கள குறித்து ஆராய்ச்சிகள் மேற் கொளளபபட்டுள்ளன. சென்னைப் பல்கலைக் கழகத்தின கல்வித்துறை திறமைசார் கல்வி பறறிய முதல் இந்தியப் பரிசோதனையை 1978-இல மேற் கொணடது.

சா.ந.

**துணை நூல்கள்:**

**Elam, Stanley,** Performance Based Teacher Education: What is the State of the Art? American Association of Colleges for Teacher Education, Washington, 1971.

**Hall and Jones,** Competency Based Education: A Process for the improvement of Education, Prentice Hall Inc., New Jersey, 1976.

**Natarajan, S.,** A Competency Based Programme in Teacher Education Curriculum, Unpublished Ph.D Thesis, University of Madras, 1983.

**Schmeder,** Competency Based Education, The State of the Science American Association of colleges for Teacher Education, Washington, 1973.

***திறன் வேகச் சோதனைகள்:*** பளளிக் கல்வியின் விளைவாக மாணாக்கா எததகைய பயன்களை, எந்த அளவுக்குப் பெறுகினறனா எனபதனைத் தொடர்நது மதிப்பீடு செய்வது ஆசிரியா தம வகுப்பறைச் செயல்களுள் முக்கியமான ஒனறாகும. இவ்வாறு மதிப்பிடுவது, ஒவவொரு மாணாக்கனின கல்வி வளர்ச்சி நிலையினைத தெளிவாக்குவதுடன அவ் வளர்ச்சி எதிாபாாத்த அளவு நிகழ்ந்திராவிடில் அதற்கான காரணஙகளை அறிந்து அவற்றைக் களையத் தகுந்த குறைதீர்க்கும் முனனேறபாடுகள், நடவடிககைகள் ஆகியவறறை ஆசிரியர்கள் மேற் கொள்வதற்கும் உதவுவதாகும். மற்றும் இத்தகைய மதிப்பீடு ஆசிரியர்களின் கற்பித்தல திறனை எதிரொளிக்கும் ஓர் ஆடியாகவும அமைந்து, அத்திறன் வளாச்சிக்கான ஒரு தூண்டுகோலாகவும விளங்கும். கல்வி மதிப்பீடு (Educational Evaluation) எனப்படு

வதில், மாணாக்கர்களின் கல்வி முன்னேற்றத்தில பல் வேறு கூறுகளை ஏற்ற சோதனைகளின துணைக் கொணடு அளவிடுதலுடன் இமமுடிவுகளைக கற்பித தலுக்கான திடடவட்டமான இலக்குகள், மறறும் தனி மாணாக்கனது நுழைவு நடத்தை நிலைமை, கற்றல் திறன் ஆகியவற்றின் அடிப்படையில் உரு வாக்கப்படும் எதிர்பார்ப்புகள ஆகியவறறுடன் ஒப் பிட்டு, மாணாக்கர்களின் கலவி வளாச்சியினை ஆசிரி யர்கள ஆக்கமுறையில் மேலும் ஊக்குவிக்கத் திட்ட மிடுதலும் அடங்குவதாகும். கல்விச் சோதனைகளை உருவாக்கிச் செயறபடுத்துதலில் உளவியற் கருத்து கள் ஆசிரியர்களுக்கு உதவுகினறன. அவை மாணாக்கர் களின் கறறல்திறனுக்கு ஆதாரஙகளான நுண்ணறி வுத் திட்டங்கள (Aptitudes), மனப்பானமைகள, பலவேறு ஆளுமைப் பணபுகள் போனறவற்றைப் பற்றிய திட்டவட்டமான அறிவை ஆசிரியாகளுககு அளித்தலிலும் துணை செய்கின்றன.

இன்று பள்ளிகளில் ஆசிரியர்கள, மாணாக்கர் களின பாடப்பொருளறிவினைச் சோதிகக உதவும தோவுக்கான அளவீட்டு முறைகளுடன இணைந்து பல்வேறு வகைப்பட்ட பிற சோதனைகளையும பயன படுத்துகின்றனர். கலவியின நோக்கஙகள விரிவடைந துள்ளதன் விளைவாகப் பல்வகை ஆற்றல்கள, திறன கள, பணபுகள ஆகியவற்றை ஆசிரியர்கள் சோதித துணர வேண்டிய தேவை எழுநதுளளது. இந நோக் கங்களும் கற்பித்தல இலக்குகளும புளூம போனற கல்வியாளர்கள கருத்துப்படி அறிவுசாாநதவை, மன வெழுச்சிகளையும் உணாச்சிகளையும் சாாநதவை, உள இயக்கஙகளைச் சாாநதவை மற்றும் இவை யாவும இணைநத நிலைமைகளைச சார்நதவை ஆகிய தலைப்புகளில் பாகுபடுத்தப்பட்டுள்ளன. எத் தகைய சோதனையை ஓர் ஆசிரியர் பயன்படுதது கிறாா என்பது மேற்குறிபபிடப்பட்டுளள இலககு களில் எதனை அவர் மதிப்பிட முறபடுகிறார் எனப தனைப் பொறுத்தமையும். கலவிச் சோதனைகள, அவற்றின நோக்கங்கள, அமைப்பு ஆகியவற்றின் அடிப்படையில பல வகைகளாகப் பிரிக்கப்படுகினறன. பள்ளிப் பாடப் பொருளறிவு மட்டுமன்றி, மாணாக் கனது நுண்ணறிவு, நாட்டங்கள், கவர்சசிகள், மனப் பானமைகள், முககிய ஆளுமைப பண்புகள போனற வற்றையும் அளவிட அவற்றுககான தனிப்பட்ட சோதனைகள் உள்ளன. தமககுத் தேவைபபடும சோதனையை ஆசிரியர் தாமே உருவாக்கிக்கொள்ள லாம், அல்லது தரப்படுத்தப்பட்ட (Standardized) சோதனைகளைப பயனபடுத்தி மேலும் நம்பகமான வையும் பரவலாகப் பயனுள்ளவையுமான முடிவு களைப் பெறலாம். சோதனைகள எவறறை மதிப்பிட உதவுகினறன என்பதுடன எவவாறு மதிப்பிட உரு வாக்கப்பட்டன என்பதன் அடிப்படையிலும் அவை பாகுபடுத்தப்படுகின்றன. இவ்வாறு நோக்கும்போது சோதனைகள், தனியாள் சோதனைகளாகவோ தொகுதிசசோதனைகளாகவோ இருக்கக்கூடும. எடுத் துககாட்டாக நுணணறிவுச் சோதனைகள தனியாள சோதனைகளாக அலலது ஒரே சமயத்தில பலரைச் சோதித்து முடிவுகளெடுக்க உதவும் தொகுதிச சோதனைகளாக அமையக்கூடும். இம்மாதிரியே சோதனைகளுள சொற சோதனைகளும் செயற சோதனைகளும உள்ளன. சில சோதனைகள் குறை களை அறிவதற்குதவும் வகையிலும, வேறுசில எதிா காலத்தில குறிபபிட்ட ஒரு துறையில பயிறசியின வழியே எத்தகைய முனனேறறம ஒருவனிடம் எழக் கூடும என்பதனை முனகூட்டியே ஓரளவு குறிப்பிடு வதற்கு உதவும் வகையிலும் உருவாக்கப்பட்டிருககும். இம்மாதிரியே சில, வலுச் சோதனைகளாகவும சில வேகச் சோதனைகளாகவும் இருக்கக்கூடும

சோதிக்கப்படும் திறன பல்வேறு அளவுகளில இருக்கும. சிறு குழந்தைகளை விடக் குமரப் பருவத் தினரின நுண்ணறிவு மிகுதியாக இருததல் எதிா பார்க்கக்கூடியதே. ஒரு குறிப்பிட்டவனை எடுத்துக் கொண்டாலும், அவனது வயது உயர உயர, அவனது நுணணறிவும் குறிப்பிட்ட ஒரு எல்லை வரை, அவ னது வளாச்சித் தனமைக்கேற்ப மிகுந்து செலலும் வலுச் சோதனைகளில், சோதிக்கபபடும் திறன அல லது ஆற்றலின உயர் எலலை மதிப்பிடப்படும வகை யில் உருபபடிகள உருவாககப்பட்டு வரிசைப்படுத்தப பட்டிருக்கும். இவறறின் உருப்படிகள எளியனவாகத் தொடஙகி அடுத்தடுத்து மேலும் கடினமும் சிக்கலும் உடையவையாக அமைக்கப்பட்டிருக்கும். தொடர்ந்து இத்தகைய சோதனை உருப்படிகளுக்கான சரியான விடைகளையளிக்க ஆற்றல அல்லது திறன் மிகுதி யாகத் தேவைப்படும.இசுடானபோர்ட்–பினே நுணண றிவு அளவுகோல போனற ஒரு சோதனையை ஆராயந்தால் இது புலனாகும உயர் வயதுக்கான சோதனை உருப்படிகள் கடினமானவையாக அமைக் கப்பட்டிருக்கும். எநத உயாநிலை வரையிலான உருப் படிகள் வரை ஒருவன் சரியாக விடையளிக்கிறானோ அதன அடிப்படையில் அவனது சோதிக்கப்படும் திறன் எத்துணை வலுவுடன் செயறபடுகிறது என்பது பறறி முடிவு எடுககப்படும். ஆனால், வேகச சோதனை களில சோதிக்கபபடும் திறனை ஒருவன் எவ்வளவு வேகமாகப பயன்படுத்துகிறான் என்பது மதிப்பிடப் படும். குறிப்பிட்ட ஒரு கால அளவுக்குள் ஒரே நிலை யான கடின அமைப்பைக் கொணட எத்தனை உருப் படிகளுக்குச் சரியாக விடையளிக்க முடிகிறது அல்லது ஒரேமாதிரியான செயல்கள் எத்தனை சரியாகச் செயயப்படுகின்றன என்பதனை வேகச் சோதனைகள்

மதிப்பிடுகின்றன. சில தொழில்களில் வெற்றிகாண வேகமாகச் செயற்படுவது தேவைப்படும். இவை போன்ற துறைகளுக்கான நாட்டச் சோதனைகளில் வேகச் சோதனைப் பகுதிகள் இடம்பெறும். எடுத்துக் காட்டுகளாகக் கையியக்க வேகத்தை மதிப்பிட உதவும் பொருள்களைக் கையாளும் வேகம் (Rate of Manipulation) பற்றிய சோதனை, எழுத்தர் தொழில் நாட்டச் சோதனையின் சில பகுதிகள், தட்டெழுத்துத் திறமையினைச் சோதித்தல் ஆகிய பலவற்றில் வேகச் சோதனைப் பகுதிகள் இடம்பெறுகின்றன. வேகம் என்னும்போது துல்லியமும் (Accuracy) அதில் இடம்பெறும். படித்தல் வேகச் சோதனையில் வேகமாக ஆனால் தவறாகப் படித்தல் ஏற்கப்படாது. வலுச் சோதனைக்கும் வேகச் சோதனைக்கும் இடையேயுள்ள முக்கிய வேறுபாடு, பிந்திய வகையில் எல்லாச்சோதனை உருப்படிகளும் செயல்களும் ஒரே அளவு கடின அமைப்பைக் (Level of Difficulty) கொண்டவையாக இருக்கும். இங்கு ஒன்று குறிப்பிடப்பட வேண்டும். திறன்மிக்கோர் பொதுவாக வேகமாகவும் செயற்படுவர். வேகமும் திறனின் ஒரு பண்பாகக்கருதப்படுவதால், நுண்ணறிவுச்சோதனைகள் போன்ற வலுச் சோதனைகளுக்கும் கால அளவு நிருணயிக்கப்படுகிறது. எனவே, ஒரு திறனின் உயர் எல்லை அல்லது அத்திறனின் துணைக்கொண்டு வேகமாகச் செயலாற்றுதல் ஆகிய இரண்டினுள் எது சோதனையின் முக்கிய நோக்கமாக வலியுறுத்தப்படுகிறது என்பதன் அடிப்படையில் அது வலுச் சோதனையா, வேகச் சோதனையா என வகைப்படுத்தலாம். வேகமாகச் செயற்படும் பண்பு சமூகச் சூழ்நிலைச் செல்வாக்கினின்றும் எழுவதாகும். போட்டி மனப்பான்மை குறைந்து காணப்படும் சமுதாய மககள் வேகமாகச் செயற்படுதலில் ஆர்வம் காட்டுவதில்லை எனச் சமூகவியலறிஞர் குறிப்பிடுகின்றனர். அதனால்தான் சில சமுதாய உறுப்பினர்கள், கால எல்லைக்குட்பட்ட நுண்ணறிவுச் சோதனைகளில அவர்களின் ஆற்றலுக்கேற்ற நிலையில் செயற்படுவதில்லை எனக் கூறப்படுகிறது. எஸ்.ச.

**தின்னனூர்**: காண்க: திருநின்றவூர்.

**தினகரவெண்பா**: பிற்காலத்தில், திருக்குறளின் சிறப்பினை உணர்ந்து போற்றும வகையில் சில நீதி இலக்கியங்கள் உருவாயின. அவற்றுள், யாதானும் ஒரு குறளை ஈற்றிரணடு அடிகளாகக் கொணடும், முதலிரு அடிகளில அக்குறட்கருத்தை விளககும் வகையில, வரலாறு, புராணம், இலக்கியம் போன்றவற்றில் இடம்பெற்ற ஒரு கருத்தைப் பொருளாக அமைத்தும் வெணபாவை நிறைவு செயது அவவகையில் நூலினை அமைப்பது ஒரு வகையாகும இவவகை நூல்கள் ஒரு வள்ளலைச் சிறப்பித்தமைதலும் உண்டு. அந்நிலையில், அமையும் நூல, அவவளளல் பெயரால் வழங்கப்படுவதுமுணடு. தினகரன், வீரையன் என்பாரின் புதல்வர்; சைவ சமயத்தவர். தினகர வெண்பா தினகரன் என்னும் வள்ளல் பெயரால் அமைந்ததாகும். தினகரன எனபார், தொணடைநாட்டிலுள்ள கோவூரில், அமைச்சர் நிலையில்வாழந்த செல்வரும் வள்ளலுமாவார். அவர் பெயரால் இந நூல் தினகர வெண்பா எனப்பட்டது. பாடல் தோறும் 'தினகரா' என்று அத்தலைவரை விளித்துக் கூறும் போக்கு அமைநதுள்ளது.

இவ்வகை நூல்கள் திருக்குறளின் ஒவ்வொரு அதிகாரத்திலிருந்தும் ஒரு குறளைத் தேர்ந்து நாலடி வெண்பா அமைத்து உருவாக்கப்படுவது பொதுவான இயல்பாகும். இந்நூல் காப்புச் செய்யுளொடு 137 வெணபாக்களைக் கொணடுளளது. புதல்வர் பெறுதல் (7), புகழ் (24), நட்பு (79)ஆகிய அதிகாரஙகளிலிருந்து இரண்டிரண்டு குறளகள தேர்நது எடுத்துப் பாடப் பட்டுளளன. இந்நூலின் பாடல ஒன்றில (118) இடம் பெற்ற குறிப்பினைக் கொணடு இந்நூலாசிரியர் பெயர் 'நாகரரசன்' என்பதாகும எனறு ஆய்வாளர் கருதுகின்றனர். இநநூல் தோன்றிய காலம் இதில் இடம்பெற்ற குனறை அச்சுதேந்திரன் என்னும் அரசன் பெயர்கொண்டு கி.பி.16-ஆம் நூற்றாண்டின பிற்பகுதி (கி.பி 1575-1600) என்று கூறப்படுகிறது. அ.மா.ப.

**தீ** நாக்கு மேலண்ணத்தை (நுனியை) மெதுவாக அழுத்தி ஒலிக்கும் ஒலியோடு வாயை இளித்துப்பின் எடுத்த நிலையில இவ்வொலி வெளிபபடுகினறது. தகரத்திற்கும் ஈகாரத்திற்கும் கொடுககப்பட்ட குறிபபுகளைப் பார்க்க.

**பொருள்:** நெருப்பு என்ற ஒரு பொருள் இதற்கு உணடு அதையே தொடர்நது அதன் சார்பாக எநதப் பொருளுக்கும் நெருப்பினால ஏறபடும விகாரங் களை ஏற்றிச சொல்லும் சொலலாக இதனைக் கொளளலாம். ஒரு பொருளை எரிப்பது, கருககவைப்பது, சுடுவது, காந்துமபடி செய்வது, தீய்ந்துபோகச் செய்வது, ஒரு மனிதனின் தன்மையை மாற்றிச சீறச் செய்வது ஆகிய பல பொருளையும உணர்த் தும். மேலும் நஞ்சு, நரகம என்ற பொருளும் உணடு. அறியாமையை அழிப்பதால் அறிவு அல்லது ஞானம் என்ற பொருளும் உணடு. நிலநீர் தீவளி விசும்பு எனற ஐநது இயற்கைப் பொருளகளில ஒன்றாகத் தீயை நினைத்தனர்.

**வடிவம்:** தி, தீ இரண்டிற்கும் அதிக வேறறுமை பழைய கலவெட்டுகளில் காணப்படவில்லை. . ... ..

குகைக் கல்வெட்டுகளில கி.மு. 3-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மீனாட்சிபுரம கல்வெட்டுகளில ... .. ...

கி.பி. 2-ஆம் நூற்றாணடில புகளூர்க் கல்வெட்டுக்களிலிருந்து ...

கி.பி. 5-ஆம் நூற்றாணடில் (ஏறத்தாழ) அமமன்கோயில் பட்டிச்சுனைக கல் வெட்டில் . . ... ...

கி.பி. 8-ஆம் நூற்றாண்டில் திருவதிகை இரணடாம் பலலவ பரமேசுவர னின கல்வெட்டில் ... ... . . .

கி.பி. 11–ஆம் நூற்றாணடில் இராசேந்திர சோழனின திருவாலஙகாட்டுச் செப்பேடுகளில் . . . . ... ...

கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் வட்டெழுத்தில் ... .. ..

ஏறத்தாழ கி.பி. 5-ஆம், 6-ஆம் நூற்றாண்டில் இருளப்பட்டிக் கல்வெட்டில் . .

மற்றொரு இருளப்பட்டிக் கல்வெட்டிலும் திருநாதர் குனறுக் கல்வெட்டிலும்

கி.பி. 8-ஆம் நூற்றாணடில பாண்டியன் முதல வரகுண பாணடியனின் வேள்விக்குடிச் செப்பேட்டில ... . .. ...

கி.பி. 9-ஆம் நூறறாண்டில் பராந்தகன் வீரநாராயணனின் செப்பேடுகளில் ...

கி.பி 11-ஆம் நூற்றாண்டில் சோழ பாணடியர் கல்வெட்டில் .

பிறகு வட்டெழுத்து தமிழ்நாட்டை விட்டொழிந்தது. கேரளத்தில அது தொடர்ந்து பிற எழுத்துகளோடு வேறுபாடினறி அமைந்து அங்கும் வழக் கொழிந்தது.

கே.ஜி.கி.

*தீ*[2]: இப் பெயரில் பிரிட்டானியத் தீவுகளில் (British Islands) மூன்று ஆறுகள் உள்ளன. அவற்றுள் ஒன்று இங்கிலாந்து, வேல்சு முதலிய பகுதிகளில் பாய்கிறது. இரண்டாம் ஆறு வடகிழக்கு இசுகாட்லாந்திலும் (Scotland) மூன்றாம் ஆறு தென்மேற்கு இசுகாட்லாந்திலும் பாய்கின்றன.

**இங்கிலாந்திலும் வேல்சிலும்:** தீ என்னும் ஆறு மேற்கு இங்கிலாந்திலும் வடக்கு வேல்சிலும் ஓடுகிறது. இது வேல்சில் (Wales) மெரியோனத்து சயர் (Merioneth shire)என்னுமிடத்தில் உள்ள பாலா ஏரியில் உற்பத்தியாகின்றது. இவ்வாற்றின் வடகரையில் தான் செசுடர் (Chester) நகரம் உள்ளது. அந்நகர் வரையில் இவ்வாறு வடகிழக்காகப் பாய்ந்து,பின்னர் வடமேற்கில்ஓடி, ஐரிசுக் கடலில்(Irish Sea)கலக்கிறது. செசுடர் நகரிலிருந்து இவ்வாறு கடலோடு கலக்குமிடத்திற்கு இடையே 11 கி.மீ. நீளத்திற்கு ஒரு கால்வாய் உள்ளது. இக்கால்வாய் போக்குவரத்திற்குப் பயன்படுகின்றது. இவ்வாற்றின் நீளம் 112 கி.மீ. இது மத்திய இங்கிலாந்துடன் கால்வாய்களால் இணைக்கப்பட்டுள்ளது.

**வடகிழக்கு இசுகாட்லாந்தில்:**வடகிழக்கு இசுகாட்லாந்திலுள்ள 'தீ' ஆறு கிராம்பியன் பகுதியிலுள்ள (Grampian Region) மலைகளில் தோன்றிக் கிழக்கு நோக்கி ஓடி, அபர்தீன் (Aberdeen) என்னுமிடத்தில் வடகடலில் கலக்கின்றது. இங்குத்தான் பால்மொரால் (Balmoral)அரண்மனை உள்ளது. இவ்வாற்றின் நீளம் 140 கி.மீ. இதில் புகழ்பெற்ற சாலமன் மீன்கள் மிகுதியாகக் கிடைக்கின்றன. இதிலுள்ள தீ சைடு (Deeside) என்னும் பள்ளத்தாக்கு காலநடை வளர்ப்பிற்குப் பெயர் பெற்றது.

**தென்மேற்கு இசுகாட்லாந்தில்:** தீ என்னும் பெயரில் தென்மேற்கு இசுகாட்லாந்தில் ஓடும் ஆற்றின் நீளம் 80 கி.மீ. இது மலைப்பாங்கான வடக்கு தம்பிரைசு (Dumfries), கேலோவே பகுதிகள் (Galloway Region) ஆகியவற்றில் உற்பத்தியாகித் தெற்கு நோக்கிப் பாய்ந்து, சால்வே பிருத்தை (Solway Firth) அடைகிறது. இதன கீழ்ப் பகுதியில் 11 கி.மீ. நீளம் போக்குவரத்திற்குப் பயன்படுகிறது.

சி.இரெ.

**தீக் காப்பீட்டு ஒப்பந்தம்:** ஒரு குறிப்பிட்ட சந்தாத் தொகையை ஏற்றுக்கொண்டுதீ விபத்தினால் ஏற்படும் இழப்பைக் காப்பீட்டு நிறுவனம் ஈடுகட்டச் செய்திடும் ஒப்பந்தந்தான் தீக் காப்பீட்டு ஒப்பந்தம் (Contract of Fire Insurance) எனப்படும். இது தீயினால் ஏற்படும் இழப்பு அல்லது சேதத்தைப் பாதுகாத்து இழப்பீடு வழங்குகிறது. இது ஒரு இழப்பீட்டு ஒப்பந்தமாகும். இதற்கு முழு நன்னம்பிக்கை வேண்டும். இது ஓர் ஆணடு ஒப்பந்தமாகும். தீயினால் ஏற்படும் இழப்பைத்தான் இது ஈடுகட்டும். இதன் ஒப்பந்த இதழுக்கு விடுமதிப்பும், செலுத்தப்பட்ட மதிப்பும் எடுத்துக் கொள்ளப்படுவதில்லை. காப்பீடு செய்தவர் சொத்துமீது மிகுந்த அக்கறை அல்லது பற்றுடையவராக இருக்கவேண்டும்.

காப்பீட்டுச் சட்டம் 1938 (The Insurance Act, 1938), பொதுக் காப்பீட்டுத் தொழில் (தேசியமயமாக்கப்படல்) சட்டம், 1972 (The General Insurance Business (Nationalisation) Act, 1972) இந்தியா-இங்கிலாந்து போன்ற நாடுகளின் நீதிமன்றங்கள வழங்கிய தீர்ப்புகள் ஆகியவற்றின் அடிப்படையில் தோன்றியது தீக் காப்பீட்டு ஒப்பந்தம் ஆகும. தீக் காப்பீட்டுத் தொழில் 1979-இல்தேசியமயமாக்கப்பட்டது. தீக் காப்பீடு 1974-ஆம் ஆணடு சனவரி முதல் தேதியிலிருந்து இநதியப் பொதுக காப்பீட்டுக் கழகத்தால் (AICI) நடத்தப்பட்டு வருகிறது.

**தீக் காப்பீடு ஒப்பந்த இதழ் வகைகள்: குறிப்பிட்ட ஒப்பந்த இதழ்:** சொத்தின் மதிப்பிற்குக் குறைவான மதிப்பிற்கு எப்பொழுதும் எடுக்கப்படும் ஒரு குறிப்பிட்ட தொகையுள்ளது இவ்வொப்பந்த இதழ. இக் குறிப்பிட்ட தொகை உண்மையான இழப்பையும் அலலது வேண்டும் பணத்தையும் தீர்மானிக்கப் பயன்படாது ஆனால், இழப்பீட்டில் அதிக அளவு வரையறையை நிருணயிக்க இது பயன்படும். காப்பீடு செய்யப்பட்டுள்ள பொருளின் உணமையான மதிப்பு வேண்டும் பணத்தின் அல்லது இழப்பீட்டின் மதிப்பினைப் பாதிக்காது. குறிபபிட்ட ஒப்பநத இதழில (Specific policy) கணட தொகையளவிற்கு ஏற்படும் இழப்பிற்குக் காப்பீட்டு நிறுவனம பொறுபபாகும். சராசரிக் கணககீட்டிற்கு இவ்வொப்பந்தம் உட்பட்டதன்று.

**மதிப்பிட்ட ஒப்பந்த இதழ்:** காப்பீட்டு ஒப்பந்தம் ஏற்படும்போதே காபபீட்டுக் குழுமத்தின் பொறுப்பு மதிப்பிடப்பட்டு நிலையாக உளளது. இத்தகைய மதிப்பிட்ட ஒப்பந்த இதழில் (Valued policy) காப்பீட்டு நிறுவனம், குறிப்பிடப்பட்ட தொகையை உணமையான இழப்பு எவ்வளவுஇருந்தாலும் அதைப் பொருட்படுத்தாமல் அளிக்கிறது. இங்குத் தீக் காப்பீட்டுஒப்பந்தம் ஓர் ஈட்டுறுதி ஒப்பந்தத்திலிருநது ஒரு நிகழவடைவான ஒப்பந்தமாக மாற்றப்படுகிறது. நடைமுறையில் இத்தகைய ஒப்பந்தங்கள் வெளியிடுவது மிகவும் அரிது.

**சராசரி ஒப்பந்த இதழ்:** இதில் சராசரி சரத்து ஒன்று சேர்க்கப்பட்டுள்ளது. இக்காலத்தில் அளிக்கப்படும் ஒப்பந்த இதழ்கள் பெரும்பாலும் இச் சராசரி சரத்திற்கு உட்பட்டு வழஙகப்படுகின்றன.

ஒருசொத்தின் உணமையான மதிப்பிற்குக் குறை வாகக் காப்பீடு செய்திருந்தால், இழப்பேற்படும் போது மொத்த இழப்பில சொத்தின மதிபபில் காப்பீடு செயயப்பட்ட தொகை முன்னைவிட அதிக மாக இருந்தால் காப்பீட்டு நிறுவனம் ஒரு விகிதா சார இழப்பீட்டை ஏற்கவேணடும.

தீக காபபீட்டு ஒப்பந்தத்தில் உளள சராசரி சரத்து எனபது பொதுவாக எலலா நிறுவனஙகளும் குறைந்த மதிப்புக் காப்பீட்டைத் தவிர்ககும் பொருட்டுத் தங்கள் ஒபபந்தததின் சரத்துகளில் இதைச் சிறப்பான சரததாகச் சேர்க்கினறன இதைச் சராசரி சரத்து (Average Clause) என்பர். சொத்தின உணமையான மதிப்பின விகிதத்திறகு இழபபீடு தரும் காப்பீட்டு நிறுவனத்தின பொறுபபுகளை வரையறுக்கவே இச் சரத்து ஒப்பந்தத்தில சேர்க்கப்பட்டுள்ளது. எவவளவிறகுக் குறைததுக் காப்பீடு செய்யபபட்டுள்ளதோ அவ் வளவிறகுக காப்பீடு பெறுபவர் தாமே காப்பீடு அளிப்பவராக மாறியுளளார். எனவே, மொத்த இழபபிறகுத் தகுந்த விகிதத்தில அவரே பொறுப்பாளியாகிறார்.

**பதிலமர்த்திடும் ஒப்பந்த இதழ:** காபபீட்டு நிறுவனம் பதிலமாததிடும அல்லது பழைய நிலைக்குக் கொணரும ஒப்பநத இதழ்களில (placement or Reinstatement Policy) சேதமடைந்த சொத்தின மதிப்பைத் தருவதோடலலாமல, அதேபோல உள்ளபுதிய சொத்தைப பதிலமர்த்திடும செலவையும தருகிறது. பணம் தாராமல மீணடும் பழையபடி அதே பொருளை வாஙகிக காப்பீடு பெறுபவருககுப் பழைய நிலையில வைததுத தருகிறது.

**பின் தொடர் ஒபபநத இதழ்:** இதை இலாபமிழககும் ஒப்பநத இதழ என்றும் சொல்லலாம. தீ விபதது ஏற்பட்டால் நிறுவனத்தின் சொத்து மட்டும் அழியவில்லை. அதனுடைய வருவாய் அல்லது ஈட்டும் திறனும் அப்பொருள்கள பழைய நிலைக்கு வருமவரை பாதிக்கப்படுகிறது. எனவே, தீ விபத்து நேராவிடில் அது சம்பாதித்திருக்கக்கூடிய இலாபமும் இழகக நேரிடுகிறது மேலும், வாணிகததில் நிலையான கட்டணஙகளை வசூலிகக முடியாததால அந்த இழப்பு இன்னும கூடுகிறது. எனவே, கட்டணஙகள வசூலாகாததால ஏற்படும் இழப்பு, சம்பாதிததிருகக வேணடிய இலாப இழப்பு போன்ற நட்டங்களைச் சரிக்கட்டப் பின தொடா விளைவால் இழப்பு ஒப்பநத இதழ (Consequential Loss Policy) வெளியிடப்படுகிறது.

**சென்ற காலத்தையும் சேர்க்கும் ஒப்பந்த இதழ்:** காப்பீடு பெறுபவர்களுக்குக் காப்பீட்டு நிறுவனம் கடந்த காலத்திற்கும் செல்லக்கூடிய தன்மைவாய்ந்த ஒபபநத இதழ (Retrospective Policy) வெளியிடும்.

**உரிமை மாற்றம்:** ஆஙகிலச் சட்டத்தில காபபீட்டு நிறுவனத்தின ஒப்புதல பெறறு இதை உரிமை மாறறம் செய்யலாம். ஏனெனில, தீ, களவு, விபத்து இவற்றிற்காக ஏற்படும் காப்பீட்டு ஒப்பந்தம், காப்பீடு செய்யபபடும பொருளிலிருந்து முற்றிலும் மாறுபட்ட ஒரு தனிபபட்ட தனமைவாய்நத ஒப்பந்தமாகும். எனவே, காப்பீடு செய்யப்பட்ட சொதது அல்லது பொருளகளின உரிமை மாற்றம் தானாகவே ஒபபநத இதழ உரிமை மாற்றததிற்குள் (Assignment of Fire Insurance Policy) போயவிடாது இநதியாவிலும் இதே முறைதான கையாளப்படுகிறது. ஆனால, உரிமை மாற்றம செய்யும அறிககை ஒனறு காப்பீட்டு நிறுவனத்திற்குத் தரவேணடும. எனவே, நிறுவனத்தின ஒப்புதல் தேவையில்லை. ஆனால, சொததுரிமை மாறறச் சட்டத்தின 135-ஆம் பிரிவின படி காப்பீடு செயதுள்ள சொத்துரிமை மாற்றம செயயாமல் ஒப்பநத இதழ் உரிமை மாறறம் செய்ய முடியாது. எனினும், உரிமை மாறறம பெறுபவர் ஒப்பந்த இதழிலுள்ள எலலாக் குறைபாடுகளுககும உட்பட்டு உரிமை மாறறம செயபவரிடமிருநது பெறுகிறார். மேறகூறிய சட்டத்தின 49-ஆம் பிரிவினபடி இவவாறு உரிமை மாற்றம் பெறுபவர் உரிமை மாற்றம் செய்தவரை இந்த ஒப்பந்தததினகீழ அவா பெற்ற பணததைக கொண்டு பொருளை அல்லது சொததைப் பழைய நிலையில் இருக்கும்படி கேடகும் உரிமையுணடு.

**இழப்பீடு:** தீ விபத்து ஒப்பந்தத்தின்கீழ் இழபபீடு வேணடுவதறகுச் சில கடமைகளைச செய்யவேணடும். அவை: 1) தீ விபத்து ஏறபட்டவுடனே அவா அல்லது அவா சார்பாக ஒருவர் காபபீடு அளிப்பவருக்கு எழுத்து மூலம் அறிககை விடவேணடும், அதற்கெனறு அளவிற்கதிகமான விழிப்பும் கவனமும் தேவையில்லை 2) ஒப்பந்த இதழில் குறிப்பிடப்பட்டுளள காலத்திற்குள் ஒவவொரு பொருளுக்கும் ஏற்பட்ட இழப்பை அல்லது சேதத்தைத தோராயமதிபபுடன எழுதிய பட்டியல ஒன்றைக காப்பீட்டு நிறுவனத்திற்கு அனுப்பவேணடும். 3) காப்பீட்டு நிறுவனம கேட்டால இழப்பீட்டை நிறுவும் சான்று ஒனறையும அனுப்பவேண்டும.

மேற்கூறிய கடமைகளைச் செய்யத் தவறினால் இழப்பீடு தரப்பட மாட்டாது. காப்பீடு பெறுவோர் இழப்பீடு முழுவதையும் இழக்க நேரிடும். மோசடி செய்யும நோக்கத்துடன இழப்பீடு வேணடினால் அவர் ஒப்பந்த இதழால ஏறபடும் எல்லா நனமைகளையும் இழப்பாா. அதுபோலவே அவரோ அவாதம்

முகவரோ வேண்டுமென்றே தவறான நடத்தையுடன் இழப்பீடு வேண்டினால் இழப்பீடு கிடைக்காது.

கே.என்.இரா.

**துணை நூல்கள்:**


Kuchhal M.C., Mercantile Law, vikas Publishing House, Pvt. Ltd., New Delhi, 1981.

Shukla M.C., A Manual of Mercantile Law, S. Chand & Co., Ltd, New Delhi, 1982.


*தீக்காப்பீடு*: தீக்காப்பீட்டு ஒப்பந்தம் என்பது காப்பீட்டு நிறுவனம் பாதுகாப்புப் பெறுபவருக்குத் தீ மூலம் ஏற்படும் இழப்பை ஈடுகட்ட நியாயமான கட்டணத்தை மறுபயனாகப் பெறச் செய்யும் ஓர் ஒப்பந்தம். இவ்வொப்பந்தத்தில் தீ என்பது பெருமள விற்குப் பரவிக் கட்டுக்கடங்காமலிருக்கும் தீயைக் குறிக்கும். காப்பீடு செய்யப்பட்டபொருள் தீப்பற்றி எரிந்து அதனால் ஏற்படும் இழப்பையும் அல்லது ஒரு கட்டடத்தின் ஒரு பகுதியில் அப்பொருள் இருந்து தீயினால் அடைந்த இழப்பையும் தீயினால் ஏற்பட்ட இழப்பு என்று சொல்லலாம். தீயணைப்பு ஏற்பாடு செய்தும் ஏற்படும் இழப்புகளையும் தீயைத் தடுத்து ஏற்படும் இழப்புகளையும் தீக்காப்பீடு ஒப்பந்த இதழ் ஏற்றுக் கொள்ளும். அவ்விழப்புகளுக்கு ஈட்டுத் தொகையும் தரப்படும். நியாயமாக நடக்கக்கூடிய, தீயினால் இயற்கையாக ஏற்படும் இழப்புகள் தீ விபத்தால் ஏற்பட்ட இழப்புகளாக ஏற்றுக்கொள்ளப் படும்.

எடுத்துக்காட்டாக ‘ஏ’ என்பவரின் உந்துவண்டி தீ விபத்துக்கெதிராகக் காப்பீடு செய்யபட்டது. ஆனால் மோதலுக்காகக் காப்பீடு செய்யப்படவில்லை. அவர் காரைச் செலுத்திக் கொண்டிருக்கும்போது மின் இணைப்பில் ஏற்பட்ட குறுக்குப் பாய்ச்சலால் கருவிப் பலகையில்(Dash Board) தீப்பிடிக்கத் தொடங் கியது. அதை அணைத்திட முயலும் போது ‘ஏ’ என்பவர் உந்துவண்டியைக் கட்டுப்படுத்தும் திறனை இழந்ததால் அது மரத்தில் மோதியது. மோதிய பின் தீ பரவி அது முழுவதும் சேதமடைந்து விட்டது. மோதலால் உரூ.8000 இழப்பும் அதன்பின் பற்றிய தீயினால் உரூ.2000 இழப்பும் என மதிப்பிடப்பட்டது. ‘ஏ’க்கு எவ்வளவு இழப்பீடு தரப்படும் என்று வினா எழுந்தது. ‘ஏ’ என்பவர் உரூ.10,000க்கும் இழப்பீடு பெறலாம். தீயினால் ஏற்பட்ட இழப்பு உரூ.2000மும் அதை அணைக்க முயற்சி செய்த போது ஏற்பட்ட இழப்பு உரூ.8000மும் நேர்ந்து, உரூ.10,000 மும் அவர் பெறலாம். கருவிப் பலகையில் ஏற்பட்ட தீயை அணைக்க முயலும் போதுதான் விபத்து ஏற் பட்டது.மோசடி செய்யப்பட்டாலன்றித் தீ விபத்தால் ஏற்படும் இழப்பிற்குத் தீ ஏற்பட்ட காரணம் முக்கிய மில்லை. எனவே, காப்பீட்டு நிறுவனத்திடமிருந்து ‘ஏ’ இரண்டு இழப்புகளுக்கும் ஈட்டுத் தொகை பெற லாம்.

வெறும் சூடானதால் ஏற்படும் இழப்பிற்கு நிறு வனம் பொறுப்பாளியன்று. காப்பீட்டின் கருப் பொருள் அல்லது காப்பீடு செய்யப்பட்ட பொருள் முழுதும் எரிந்து இழப்பு ஏற்பட வேண்டும். எரிதல் இல்லாமல் தீ இருக்க முடியாது. எனவே இத் தகைய இழப்புகளுக்கு நிறுவனம் ஈட்டுத் தொகை தரவேண்டும். தீ பரவின காரணத்தை மட்டும் கேட்டுவிட்டுப் பொறுப்பிலிருந்து விடுவித்துக் கொள்ள முடியாது ஆனால் காப்பீடு பெறுபவர் அல்லது அவரின் வேலையாள்கள் பொறுப்பினறி இருந்து அதனால் இழப்பு ஏற்பட்டாலும், அவரே வேண்டுமென்று தீ வைத்து விட்டு இழப்பீடு வேண்டினாலும் நிறுவனம் தராது. மேலும் காப்பீடு பெறுபவர் வேணடுமென்றே செய்யாமல் நல் லெண்ணத்துடன் இருந்து தீப் பிடித்து இழப்பு ஏற்பட்டால அதற்கு நிறுவனம் பொறுப்பாகும்.

எடுத்துக்காட்டாக ‘எச்’ என்பவர் தன் நகை களுக்குத் தீக்காப்பீடு செய்திருந்தார். அவைகளைக் கரி அடுப்பிலுள்ள கரிக்கடியில மறைத்து வைத்திருந் தார். அதை மறந்து நெருப்பை மூட்டி விட்டார். நகைகள் சேதமடைந்தன, தீவிபத்து ஒப்பந்தத்தின் கீழ் அவர் இழப்பீடு பெற முடியுமா என்பது வினா. நல்லெண்ணத்துடன் நடந்த தீ விபத்தால் ஏற்பட்ட இழப்பாதலால் நிறுவனம் அவருக்கு நட்ட ஈடு தர வேணடும். இஙகு நெருப்பை விருப்பத்துடன் பறற வைத்தாலும் கம்பெனியை ஏமாற்ற வேணடும் என்ற நோக்கமில்லை.

வெளிச்சம், மின்சாரம், வெடிபொருள் என்பவை நெருப்பல்ல என்றாலும், அவைகளால் தீ விபத்து ஏற்பட்டால் அது விபத்தாகக் கருதப்படும் வெடிப் பொருள்கள் பொதுவாக இவ்வகையில் வாராவிட்டா லும் தீயினால் வெடித்து இழப்பேற்பட்டால் இவ் வகையைச் சாரும். ஒளியினால தீ ஏற்பட்டுக் காப்பீடு செய்யப்பட்ட பொருள் இழக்கப்பட்டால்தான் இவ வகையைச் சேரும். மின்சாரம் என்பது தீ அனறு. அதே போல் அதனால் ஏற்படும் சேதம் எரிந்துதான் ஏற்பட வேண்டும் என்ற அவசியமில்லை. தீ இல்லாத வெப்பத்தால் ஏற்பட்ட இழப்பு இக் காப்பீட்டில சேராது. தீ பரவுவதைத் தடுப்பதற்காகப் பிடுஙகி எறியப்பட்ட கூரை வீடுகள் காப்பீடு பொறுப்பிற்குத் தகுதியானவை. காப்பீடு பெறுபவர் அல்லது அவரு டைய வேலையாள் போன்றவரின் புறக்கணிப்பால் ஏற்படும் விபத்து தீ விபத்தின் பாற்பட்டதாகும்.

**தீக்காப்பீட்டிற்கும் ஆயுள் காப்பீட்டிற்கும் உள்ள வேறுபாடுகள்:**1. தீக்காப்பீட்டில் சொததுகளுக்கு ஏற் படும இழப்பு ஈடுகட்டப்படுகிறது. ஆனால, ஆயுள் காப்பீட்டில் மனித ஆயுள பறறிய காப்பீடு திகழ கிறது. 2. தீககாப்பீட்டு ஒப்பநதம் ஓா ஈட்டுறுதி ஒப் பந்தமாகும. ஆனால ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தம் அவ்வாறில்லை அது ஒரு நிகழ்வடைவான ஒப்பந்தம். மேலும், தீக்காபபீட்டில இழப்பு ஏறபடும் காலம முழுதும நிலை இல்லாதது. எபபொழுது நிகழும் என்று சொலலமுடியாது. இழப்பீடு வேண்டுதல் நேர லாம் அல்லது நேராமலிருக்கலாம். ஆயுள் காப்பீட் டில் பணம் வேண்டுதல் அவசியம் நிகழும். பணம் வேண்டுதல் எப்பொழுது நிகழும் எனபதுதான் நிலையிலலா வினாவாகக காணப்படுகிறது. ஒப்பந்தம முதிர்வடைந்த ாலும் ஒபபநதக்காரா் இறந்தாலும், ஒப்பந்தம் முதிர்வடைந்து அவர் உயிருடன் இருந தாலும் இது நிகழும். மேலும் ஆயுள் காப்பீட்டில வேண்டும் பணத்தின் அளவு நிலையானது. ஆனால், தீக்காப்பீட்டில் நேர்ந்த இழப்பிற்கு மட்டும தான் பணம் பெறப்படும். காப்பீடு செய்யப்பட்ட தொகை யை விட இழப்பீடு குறைவாக இருந்தால அத் தொகையைத தானபெற முடியுமேயொழிய ஒப்பந் தத்தின் முழுத் தொகையையும் பெற முடியாது. இழப்பே ஏற்படவில்லை என்றால் ஒன்றும பெற முடியாது 3) தீக்காப்பீடு ஒப்பந்தம் அதிக அளவாக ஓர் ஆணடிற்குத் தான் செயய முடியும. ஆனால், ஆயுள காப்பீடு பல ஆணடுகளுககு எடுக்கலாம். 4) தீக்காப்பீட்டில் ஒப்பந்தம் ஏற்படும் பொழுதும் இழப்பேற்படும் பொழுதும காப்பீடு செய்யப்பட்ட பொருளின் மீது காப்பீடு செய்யத் தக்க நலன இருகக வேண்டும். ஆனால், ஆயுள் காப்பீட்டில் ஒப்பந்தம் ஏற்கும்போது அதாவது ஒப்பநதம முடியும்போது இருந்தால் மட்டும் போதும். 5) தீக்காப்பீட்டில் காப் பீட்டு நிறுவனத்தின் ஒப்புதல் இன்றி உரிமை மாற் றம் செய்ய இயலாது. ஆனால் ஆயுள காபபீட்டில அவ்வாறு செய்யலாம. 6) தீக்காப்பீட்டு ஒப்பந்த இதழுக்கு விடுப்பு மதிப்பு ஒன்றுமில்லை. ஆனால், ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தத்திற்கு அது உணடு. தீக காப்பீட்டில் செலுத்தப்பட்ட ஒப்பந்தத்தொகை போனறவை இல்லை. கே.என்.இரா.

**துணை நூல்கள்:**

**Ahmad,M.M., and Khan,M.A.**, Theory and Practice of Insurance in India, Educational Book House, Aligarh, 1983.

**Murthy,K.S.N.**, Modern Law of Insurance in India, N.M. Tirupathi Pvt., Ltd,, Bombay, 1982.

***தீசிபைனி*** பணடைய ஊர்தார்த்திய(Urtartian) நகரம். ஆாமீனிய சோவியத்துக் குடியரசில எரிவான் (Yerevan) நகருககு அருகில உள்ள காாமீாபுளூா் (Karmirblur) மலைப்பகுதியில் தீசிபைனி (Teishebaini) அமைநதுளளது இந்நகரம் முற்காலத்தில் அரண்களா சூழ்ந்து காணப்பட்டது இஙகுச் சோவி யததுத் தொலலியல அறிஞர்கள அகழாயவுகள மேறகொணடனர். அகழாயவுகள இஙகுள்ள குனறின மீது மேற்கொளளப்பட்டன. அகழாய்வுகளில கோட் டைப் பகுதி ஒனறு வெளிபபட்டது. இதில 150 அறை கள் காணப்படடன.



செம்பால செயயப்பட்ட குதிரை-தீசிபைனி

மரத்தால ஆன இருககைகளும்தீசிபா (Teisheba) எனற கடவுளின சிலையும அகழாய்வில் கணடுபிடிக கப்பட்டன. தீசிபா கடவுளின நினைவாக இநநகரத் திறகுப் பெயர் வைக்கபபட்டது. மேலும பொன், வெள்ளி அணிகலன்களும், செம்பால் ஆன படைக் கருவிகளும், தலைக்கவசங்களும், இடுப்புக் கச்சுகளும இங்குக் கணடுபிடிக்கப்பட்டன. கல்லால் ஆன முத் திரைகளும், மணிவகைகளும், குடையப்பட்ட தந்தப் பொருள்களும் மட்கலன்களும் இங்குக் கணடுபிடிக்கப் பட்ட பிற பொருள்களாகும். இங்கிருந்த கோட்டை கி.மு.600-இல் அழிககப்பட்டிருத்தல் வேணடும் என அறிஞர்கள கருதுகின்றனர். சு இரா.

***தீண்டாமை:*** பறவைகளிடத்திலோ மிருகங களிடத்திலோ சாதி வேறுபாடுகள் இல்லை; தீண் டாமை கிடையாது. அவை தங்களைக் சேர்ந்தவை களை விலக்கி வைப்பதும் இல்லை. ஆனால், ஆறறிவு படைத்த மனிதனோ மேல் சாதி எனகிறான்; கீழ்ச சாதி என்கிறான். ஒருவனைத் தொட்டுப் பழகலாம் எனகிறான; மற்றொருவனைத் தீண்டககூடாது என்

கிறான், தீண்டாமையை வளர்க்கிறான்; வேறுபாடுகளையும் பிளவுகளையும் உருவாக்குகிறான். நாட்டின் ஒற்றுமையையும் வலிவையும் குறைக்கிறான். இத் தீண்டாமைப் பேயினால் விளையும் தீமைகளும் கொடுமைகளும் அளவற்றன. அவற்றை நன்கு அறிந்ததால்தான் தீண்டாமை ஒழியப் பல தலைவர்கள் தொன்றுதொட்டுப் போராடி வருகிறார்கள்.

இந்து சமூகத்தில் சில சாதியினர் மற்றவர்களால் தீண்டத் தகாதவர்களாகவும், நெருங்கத்தகாதவர்களாகவும் கருதப்பட்டும் நடத்தப்பட்டும் வரும் வழக்கம் தீண்டாமை (Untouchability) எனப்படுகிறது. எடுத்துக்காட்டாக, இந்து சமூகப் படிநிலை அமைப்பில் மிகத்தாழ்ந்த நிலையில் வைக்கப்பட்டுள்ள சூத்திரர்கள் (Sudras) தீண்டத்தகாதவர்கள் என்றும், மற்றவர்கள் சாதி இந்துக்கள்(Caste Hindus) என்றும் சொல்லப்படுகின்றனர். தீண்டாமையெனும் இக் கொடிய வழக்கம் எப்பொழுது ஏற்பட்டது, எவ்வாறு நிலைத்தது என்பது அறியப்படவில்லை. இருப்பினும், இந்தியச் சமூக அமைப்பில் சாதிப் பிரிவுகளும், உயர்வு-தாழ்வு என்னும் எண்ணமும் தோன்றிய காலத்தில் தீண்டாமை வழக்கமும் தோன்றியிருக்கலாம் என அறிஞர்கள் கூறுகின்றனர்.

வேத காலத்தில் சாதிப் பிரிவுகள் இல்லை. எந்த வித பொதுத் தடைகளும் இல்லை. ஆரியர்கள் வரும் முன்னர் வட இந்தியாவிலும் தென் இந்தியாவிலும் தீண்டாமை இருந்ததில்லை. ஆரியர்கள் இந்தியாவின் வடக்குப் பகுதியில் குடிபெயர்ந்த பின்னரே அங்கு வருணங்கள் என்றஅமைப்பு முறை உருவாயிற்று. பார்ப்பனர்கள், சத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் என நான்கு வகையான வருணங்கள் தோன்றின. வருண முறை பிறப்பின் அடிப்படையில் தொடர்ந்து வரக்கூடியது என்று இந்து மதம் கூறுகிறது. அதாவது, பார்ப்பனனுக்குப் பிறக்கக்கூடியவன் பார்ப்பனனாகவும், சத்திரியனுக்குப் பிறக்கக்கூடியவன் சத்திரியனாகவும், வைசியனுக்குப் பிறக்கக்கூடியவன் வைசியனாகவும், சூத்திரனுக்குப் பிறக்கக்கூடியவன் சூத்திரனாகவுமே கருதப்பட்டு வந்தனர். மதத்தின் பெயரால், கடவுளின் பெயரால், சாத்திரங்களின் பெயரால் சூத்திரர்கள் தாழ்ந்தவகுப்பினரெனக் கருதி மீள முடியாத ஆழமான அடிமைப் படுகுழிக்குள் தள்ளப்பட்டனர்; தீண்டத்தகாதவர்களாகக் கருதப்பட்டனர். அதற்குச் சூத்திரர்களின் அறியாமையும் அச்சமும் ஒற்றுமையின்மையும் ஒருவகையில் காரணமாக இருந்தபோதிலும் மேல் வருணத்தாரின் தன்னலமும், ஆதிக்க மனோபாவமும் மற்றொரு வகையில் காரணமாக இருந்தன. எனவேதான் தீண்டாமையை ஒழிக்கப் பல சமூக இயக்கங்களும் அரசாங்கங்களும், பல போராட்டங்களையும் திட்டங்களையும் கொண்டு வந்தாலும், இப்பொழுதும் இது ஒரு மிகப்பெரிய சமூகச் சிக்கலாகவே திகழுகிறது.

தீண்டத்தகாதவர்கள் என்னும் வகுப்பினர் ஏதேனும் ஒரு பெயரில் வேத காலத்திற்கு முன்பிருந்தே இருந்து வந்துள்ளனர். இருக்கு வேதத்தில் அடிமைகளைப் பற்றிய குறிப்பு உள்ளது. பிற்காலத்திய இலக்கியத்திலும் அடிமை என்ற சொல்லுக்கு இணையான தாசன (Dasa) என்ற சொல் குறிப்பிடப்பட்டுள்ளது. புருசசுக்தா (Purushasukta) என்ற நூலில் சூத்திரர் என்ற சொல் குறிப்பிடப்பட்டுள்ளது. வேத காலத்தில் சண்டாளர்கள் (Chandalas) என்ற சொல் காணப்படுகிறது இடைக் காலத்தில் அச்சுட்டா (Achhuta) என்றும், ஆங்கிலேயர் ஆட்சியில் புறச் சாதியினர் (Exterior Caste) என்றும் சொல்லப்பட்டுள்ளனர். இந்திய அரசியல் சட்டப்படி இவர்கள் தாழ்த்தப்பட்ட சாதியினர் (Scheduled Castes) எனப்படுகின்றனர்.

**தீண்டாமை வரலாறு:** பஞ்சாபில் குடியேறிய ஆரியர்கள் மேலும் குடி பெயர்ந்தபோது அவர்களுக்குத் தசயூசு (Dasyus) என்னும் பழங்குடிகளுடன் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. ஆரியர்கள் வெளியிலிருந்து குடியேறியவர்களாதலால் அவர்களுடைய பெண்ணினத்தின் எண்ணிக்கை குறைவாக இருந்தது. எனவே சிலர் தசயூசுப் பழங்குடியினரைத் திருமணம் செய்து கொண்டனர். இவ்வாறு பழங்குடிப் பெண்களைத் திருமணம் செய்துகொண்டவர்கள் ஆரியச் சமூகத்திலிருந்து ஒதுக்கப்பட்டனர். மேலும் ஆரியர்கள் அப் பழங்குடிகளின் வீடுகளில் உணவு உண்ணுவதற்கும், தொடர்பு வைத்துக்கொள்ளுவதற்கும் தடை விதிக்கப்பட்டது. அவர்களுடைய மதச் சடங்குகளிலும், முக்கிய நிகழ்ச்சிகளிலும் பங்குகொள்ள அனுமதிப்பதும் இல்லை. இப் பழக்கவழக்கமே பின்னர் ஒரு நிலையான வடிவத்தைப் பெற்றது அவர்களே இப்பொழுது தீண்டத் தகாதவர்களாகக் கருதப்படுகின்றனர் என அறிஞர்கள் கூறுகின்றனர்.

**தீண்டாமை பற்றிய கோட்பாடுகள்.** தீண்டாமை தோன்றியமைக்கான கோட்பாடுகள் பலவற்றை அறிஞர்கள் கூறியுள்ளனர். அவற்றுள் முக்கியமானவை பின்வருவன:

**பரம்பரைக் கோட்பாடு:** மனு (Manu), கீழ்க்குடி மணமே (Pratiloma) தீண்டாமை தோன்றியதற்குக் காரணமாக அமைந்தது என்கிறார். அவ்வாறான திருமணத்தின்மூலம் பிறந்த குழந்தைகள் வருண-சங்கரா (Varna-Sankara) எனச் சொல்லப்படுகின்றனர். அக் குழந்தைகள் தம் பெற்றோரின் ஏதேனும் ஒரு சாதியைச் சாராதவராகிவிடுவதால் இந்துக்

களிடையே ஒதுக்கப்படுகின்றனர். தீண்டத்தகாதவர்கள் எனப்படுவோர் அவ்வாறான திருமணத்தின்மூலம் பிறந்தவர்களே என மனு கூறுகிறார்.

**மனுவின் கோட்பாடு:** மனுவின் சமூகத் தடைகள் பற்றிய கோட்பாட்டை அடியொற்றி அட்டன் (Hutton) என்ற அறிஞர் தீண்டாமையை விளக்குகிறார். இவர் புறச் சாதிகளில் ஒரு பகுதியினர், இன அடிப்படையிலும், ஒரு பகுதியினர் மத அடிப்படையிலும், பிறர் சமூக வழக்கங்களின் அடிப்படையிலும் தோன்றியிருக்கலாம் எனக் கூறுகிறார்.

**இனக் கோட்பாடு.** மசும்தார் (Majumdar), குரே (Ghurye) போன்ற அறிஞர்கள் இன அடிப்படையிலேயே தீண்டாமை தோன்றியதாகக் கூறுகின்றனர். குறிப்பிட்ட சாதியின் தொழில் அல்லது பொருளாதார அடிப்படையே தீண்டாமை தோன்றுவதற்குக் காரணமாக அமைகின்றதெனக் குரே கூறுகிறார். மேலும், ஆரியர்கள் இன அடிப்படையில் இந்தியப் பழங்குடிகளை மிகத் தாழ்வான உயிரினமாகக் கருதினர், சமூகத் தகுநிலையில் தாழ்வான நிலையில் அவர்களை வைத்ததுடன் அனைத்துச் சமூக, சமயச் சடங்குகளில் பங்குகொள்ளவும் அனுமதிக்கவில்லை என இவர் கூறுகிறார்.

தாழ்த்தப்பட்ட சாதியினருக்கு மதச் சடங்கு முறைகளே இல்லை என்றும், அவர்கள் இனம், பண்பாடு ஆகியவற்றின் வேறுபாடுகளின் அடிப்படையிலேயே பார்க்கப்படுகின்றனர் என்றும் மசும்தார் கூறுகிறார். மேலும், அதனால் உயர் சாதியினரிடையே ஓர் அன்னிய உணர்வு ஏற்பட்டுத் தாழ்ந்த சாதியினரைத் தொடுவதுகூடத் தவறு என்ற உணர்வைப் பெறுகின்றனர் எனவும் கூறுகிறார்.

**தொழில் கோட்பாடு:** நெசுபீல்டு (Nesfield) என்ற அறிஞர் தாழ்வான தொழிலைச் செய்வதன் அடிப்படையில் தீண்டாமை உணர்வு ஏற்படுவதாகக் கூறுகிறார். செருப்புத்தைத்தல், சாய்க்கடை அல்லது கழிவறையைச் சுத்தம் செய்தல் போன்ற குறிப்பிட்ட, தூய்மையற்ற அல்லது கைகளையும் துணிகளையும் அழுக்காக்கும் பணிகள் பொதுவாக அனைத்து மக்களாலும் வெறுக்கப்படுவதால், அவை போன்ற தொழிலைச் செய்பவர்கள் தீண்டத்தகாதவர்களாகக் கருதப்படுகின்றனர்

இவ்வாறு தீண்டாமை உருவாகுவதற்குப் பல காரணங்கள் கூறப்படினும் சாதி அமைப்பு முறையே தீண்டாமை எண்ணம் மக்கள் மனத்தில் உருவாகக் அடிப்படைக் காரணமாக அமைந்தது என்பதை அனைத்து அறிஞர்களும் ஒப்புக்கொள்கின்றனர். மேலும் சமயம், இனம் ஆகியவற்றின் அடிப்படையிலேயே இச் சாதி அமைப்பு முறை தோன்றியதாகவும் கூறுகின்றனர்.

**தீண்டாமையின் விளைவுகள்.** அரிசன மக்களிடையே தீண்டாமை நடைமுறைப்படுத்தப்படுவதால் இந்து சமூகம் பெரும் அளவு சீர்கேடுற்றுள்ளது. இது சமூகத்தில் ஒற்றுமையின்மை பெருகக் காரணமாக அமைந்தது சாதி இந்துக்கள் அரிசனங்களைத் தீண்டத்தகாதவர்களென விலக்கி வைப்பதால் அவர்களுள் சிலர் முசுலிம் மதத்திலும், கிறித்தவ மதத்திலும் போய்ச் சேர்ந்து விடுகின்றனர். மேலும் அதனால் அரிசனங்களின் மனத்தில் ஒரு பிரிவுணர்வு தானாக ஏற்பட்டுவிடுகிறது. அவர்கள் இந்து சமூகத்தின் ஒரு பகுதியாகக்கூட மதிக்கப்படாததால் அரசியல், தேசியம் ஆகியவற்றில் ஒற்றுமையின்மை மிகுந்துள்ளது.

இந்தியப் பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான முக்கிய பணிகளில் தீண்டத்தகாதவர்கள் அனுமதிக்கப்படாததால பொருளாதர வளர்ச்சி குன்றியது இந்தியாவின் முழு வளர்ச்சியும் குறைகிற வாய்ப்பு ஏற்பட்டது மேலும், இந்தியா சுதந்திரம் அடைந்த பின்னரும் தீண்டாமையின் அடிப்படையில் ஏற்பட்ட பரம்பரையான வேலைப்பகிர்வு நீக்கப்பட்டு அறிவியல் அடிப்படையிலான வேலைப்பகிர்வு (Division of Labour) ஏற்படுவது கடினமாக உள்ளது

**தீண்டாமை ஒழிப்பு நடவடிக்கைகள்.** காலத்திற்குக் காலம் பழைய வழக்கமான தீண்டாமைக்கு எதிரான கிளர்ச்சியோ எதிர்ப்பு மனப்பான்மையோ மிகுந்து கொண்டேதான் வருகிறது புத்தர், இராமானுசர், கபீர், ஏக்நாதது (Eknath), துக்காராம் (Tukaram) ஆகியோர் முதல் இராசாராம் மோகன் ராய், இரானடே (Ranade), காந்தியடிகள், அம்பேத்கார், பெரியார் போன்றவர்கள் வரை பலர் பல வழிகளில் தீண்டாமையை எதிர்த்துள்ளனர்.

இசுலாமிய மதமும் கிறித்தவ மதமும் தீண்டாமைக்கு எதிரானதாக இருப்பினும் இந்தியாவில் இசுலாமியர் அரசாட்சி நடந்தபோதும், ஆங்கிலேயர் அரசாட்சி நடந்தபோதும் தீண்டாமை ஒழிய எந்த வித நடிவடிக்கைகளும் மேற்கொள்ளப்படவில்லை. ஆனால், ஆங்கிலேயரின் அரசாட்சியின்போது ஏற்பட்ட சமூகப்-பொருளாதார மாற்றங்கள் தீண்டாமை ஒழிப்பு இயக்கங்களை ஊக்குவித்தன.

இங்கிலாந்து அரசின் மதச் சார்பற்ற கொள்கையினால் (Secular Policy) மக்கள் அனைவரும் சாதி, மத வேறுபாடின்றி, உயர்வு-தாழ்வின்றிப் பேருந்துகளிலும், புகை வண்டிகளிலும் பயணம் செய்ய நேரிட்டது. நகரமயமாதல் ஏற்பட்டதால் மக்கள் வேறு

பாடின்றிப் பழகுகிற சூழ்நிலை உருவாகியது. மேலை நாட்டுக் கல்வி அமைப்பு முறை, தீண்டாமை உணர்வினைக் குறைத்தது. மேலும் மேலைநாட்டுப் பண்பாடும் சம உரிமையும் ஏற்படுவதால் தீண்டாமை நீங்க வழி ஏற்பட்டது. தொழில்மயமாதற் காரணத்தால் வேறுபட்ட பல சாதியினர் ஓரிடத்தில் பணியாற்றும் சூழ்நிலை ஏற்பட்டமையால், தீண்டாமை குறைவதற்கான வாய்ப்புகள் மிகுந்தன.

இவைதவிர்த்துச் சுதந்திரத்திற்கு முன்னரும் பின்னரும் தாழ்த்தப்பட்டோர் முன்னேற்றத்திற்காகவும், தீண்டாமையை ஒழிப்பதற்கும் பல சமூகச் சீர்திருத்தவாதிகளும், பல்வேறு சமூக, அரசியல் அமைப்புகளும், அரசும் முயற்சிகள் மேற்கொண்டு வருகின்றன. சுதந்திரத்திற்கு முன்னர்க் காங்கிரசுப் பேரியக்கம் உருவாக்கிய ‘அரிசன சேவா சங்கம்’ அரிசனங்களின் நலனுக்காகப் பல பயன்மிகு திட்டங்களைத் தீட்டிச் செயற்படுத்தியது. மேலும் இராம கிருட்டிணா சேவை நிறுவனம் (Ramakrishna Mission), பிரம்ம சமாசம் (Brahma Samaj), ஆரிய சமாசம் (Arya Samaj) போன்ற சமூக அமைப்புகளும் சமூக, பொருளாதார முன்னேற்றங்கள் ஏற்படப் பணி புரிந்தன.

காந்தியடிகள், பெரியார் போன்ற சமூகச் சீர்திருத்தவாதிகள் ‘மக்கள் என்ற வகையில் எல்லோருடைய அடிப்படை உரிமைகளும் ஒன்றே; அவை பாதுகாக்கப்பட வேண்டியவை’ என்று போராடினர். காந்தியடிகள் தாழ்த்தப்பட்ட சாதியினருக்கு ‘இறைவனின் குழந்தைகள்’ என்ற பொருளில் அரிசனங்கள் (Harijans) என்று பெயர் சூட்டினார். இவர்களின் அடிப்படை உரிமைகளைப் பாதுகாப்பதும் விடுதலைப் போராட்டக் குறிக்கோள்களுள் ஒன்று எனக் கூறினார்.

இந்தியா விடுதலை பெறும் முன்னரே இவர்கள் கோயில்களில் சென்று வழிபட வகைசெய்யும் ‘ஆலயம் நுழைதல்’ என்ற போராட்டத்தைக் கேரளாவிலுள்ள வைக்கத்தில் பெரியார் தலைமையேற்று நடத்தி அதில் வெற்றியும் கண்டார். விடுதலை இந்தியாவில் இவர்களுடைய உரிமைகளைப் பாதுகாத்து, மற்றவர்களுக்கு இணையாகப் போட்டியிடவியலாது என்பதால் சிறப்புச் சலுகைகள் பலவற்றை அரசியலமைப்புச் சட்டத்தில் இடம்பெறச் செய்த பெருமை அம்பேத்காரையே சாரும்.

**அரசு முயற்சிகள்:** நாடு சுதந்திரம் அடைந்தபின்னர் அரிசன சமுதாயத்தின் நிலையில் மிகப்பெரும் மாற்றங்கள் ஏற்பட்டன. சட்டத்தில் இருந்த தடைகள் முதன்மையாக நீக்கப்பட்டன. தீண்டாமை ஒழிப்புச் சட்டங்கள் இயற்றப்பட்டதால் சமூகக் கொடுமைகள் பெரும் அளவில ஒழிக்கப்பட்டன. இப்பொழுது அரிசனங்களும், பிற சாதியினருக்குரிய சமூக, பொருளாதார உரிமைகளைப் பெறுகின்றனர்.

இந்திய அரசியல் சட்டத்தின் 15,16,17,38,46 ஆகிய பிரிவுகளின்படி எந்த மனிதனையும் மதம், சாதி, பிறப்பு ஆகியவற்றின் அடிப்படையில் வேறுபடுத்த இயலாது. பொதுக் கிணறுகள், குளங்கள், கடைகள், கோயில்கள், சாலைகள் ஆகிய பொதுவிடங்களைப் பயன்படுத்துவதற்கு எவருக்கும் தடையில்லை. அரசுப் பணியிடங்களில் ஆட்களைப் பணியமர்த்துவதில் எந்தவித வேறுபாடுகளும் பார்க்கக் கூடாது. மேலும் மாநில அரசும், மத்திய அரசும் இச்சட்டத்தின் அடிப்படையில் தாழ்த்தப்பட்டோரின் சமூக, பொருளாதார நிலைகளை உயர்த்துவதில் மிக்க கவனம் செலுத்தவேண்டும்.

இந்திய அரசியல் சட்டத்தின் 330, 332 ஆகிய பிரிவுகளின்படி சட்டமன்றத்திற்கும், நாடாளுமன்றத்திற்கும் தாழ்த்தப்பட்டோருக்கு அவர்கள் மக்கள் தொகைக்கேற்ப இடங்கள் ஒதுக்க வகை செய்யப்பட்டுள்ளது. இச்சலுகை தொடக்க காலத்தில் 10 ஆண்டுக் காலமே நீடித்தது; பின்னர் அரசியல் சட்டத் திருத்தம் ஒன்றின்படி இது 1990-ஆம் ஆண்டு சனவரி 25-ஆம் நாள்வரை நீடிக்கப்பட்டது. தீண்டாமை ஒழிப்புச் சட்டம் 1955-ஆம் ஆண்டு அரசாங்கத்தால் இயற்றப்பட்டது. அதன்படி தீண்டாமையை நடைமுறைப்படுத்துபவர்கள்மீது சட்டப்படி நடவடிக்கை எடுக்கலாம். அனைத்துச் சமய, சமூக நிகழ்ச்சிகளிலும் எவரும் கலந்துகொள்வதற்கு இச்சட்டம் உரிமை அளிக்கிறது.

இச்சட்டம் பின்னர்ச் சில திருத்தங்களுடன் கடுமையாக்கப்பட்டு 1976 நவம்பர் மாதம் முதல் செயற்பாட்டிற்கு வந்தது இது ‘1955-ஆம் ஆண்டு மக்கள் உரிமைகள் பாதுகாப்புச் சட்டம்’ என்று சொல்லப்பட்டது. அதன்படி தீண்டாமை அகற்றப்பட்டதால் ஏற்பட்ட உரிமைகளை அனுபவிக்க முயலும் ஒருவரைத் தீண்டாமை என்ற காரணத்தால் அவற்றை அனுபவிப்பதிலிருந்து தடுப்பதற்குக் கடுமையான தண்டனை வழங்கப்படும். அடுத்தடுத்துக் குற்றம் புரிவோருக்குக்கூடுதல் தண்டனை வழங்கவும் வழி செய்யப்பட்டுள்ளது.

இந்த மக்கள் உரிமைப் பாதுகாப்புச் சட்டத்தை மாநில அரசுகள் அவ்வப்போது செயற்படுத்தி வருகின்றன. அதற்காக மத்திய அரசு, மாநில அரசிற்கும் மத்திய நிருவாகப் பகுதி அரசுகளுக்கும் நிதியுதவி அளிக்கிறது. மக்கள் உரிமைப் பாதுகாப்புச் சட்ட வழக்குகளில் பாதிக்கப்பட்ட, தாழ்த்தப்பட்ட வகுப்

பினருக்கு இலவசச் சட்ட உதவி கிடைக்க வகை செயயப்பட்டிருக்கிறது மக்கள உரிமைப் பாதுகாப புச் சட்ட விதிகளை மீறித் தாழ்த்தப்படடோரைத் துன்பப்படுத்துவோரைத தணடித்து நடவடிக்கை எடுககச் சிறப்புப் பிரிவு அமைககபபட்டுள்ளது.

தாழ்த்தப்பட்டோரின் சமூக, பொருளாதார நிலை உயருமபோது அஙகுத் தீண்டாமை தானாக மறைநதுவிடும் என்ற நோக்கில் அரசு, தாழ்த்தப் பட்டோருக்குக் கல்வி, வேலைவாய்ப்புகள ஆகியவற றில் முன்னுரிமை அளிககிறது. இததுடன் பணிகளில பதவி உயாவின்போதும் தாழத்தப்பட்டோருககு ஒதுக் கீடுகள் செய்யப்படுகின்றன. மேலும தாழ்ததப்பட் டோரைப் பாதுகாக்கவும, பொருளாதாரத்தில் முன் னேற்றமடையச செய்யவும், அனைவருக்கும் சமமான வாழ்க்கை முறை அமையவும பல திட்டங்களைத தீட்டி அரசு செயறபடுத்தி வருகிறது.

இருப்பினும் இவ்வாறான பல திட்டங்களுடன் அரசு அலுவலகஙகளில் தாழ்த்தப்பட்டோா பணி யமர்த்தப்படுவதால் மட்டுமே தீண்டாமை ஒழியாது. சாதி அமைப்பு முறை அறவே ஒழிக்கப்பட வேணடும். கோயில்களில தாழத்தப்பட்டோா பூசைசெய்பவர் களாகவும், அறஙகாவலாகளாகவும வநதாலதான இநதுககளிடையே தோன்றும் நனமதிப்பால் அவர் களின் சாதி இழிவு நீஙகும். மேலும் இந்து மதம உயர்ந்த மெயப்பொருள் சிந்தனைகளைத் தேககி வைத்திருப்பினும் மக்களை மக்களாக நடத்தாத தனால் சாதிப் பிரிவுகளுக்கு இடமளிக்கிறது எனற கெட்ட பெயரும அகலும். பூ.த.

**துணை நூல்கள்:**

**Ghurye**, G.S., Caste and Class in India, Philosophical Library-New York & Associated Advertisers and Printers, Bombay 1950.

**Panikkar**, K.M., Hindu Society at Cross Roads, Asia Publishing House, Bombay, 1961.

**தீப்சு** பணடைய எகிப்து நகரம். எகிப்து அரசர் களின தலைநகராகவும் விளங்கிவந்தது. நோவி (Nowe) என்றும் வோசு (Wose) என்றும் இந்நகரம் முனபு கூறப்பட்டது. இந்நகரம் நைல் நதிககரையின இருமருங்கிலும் இன்றைய உலூக்சர் நகருக்கருகில 26 பாகை வடககிலும், கெய்ரோவிலிருநது தெற்காக 672 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. தீப்சு (Thebes) நகரம் முற்காலத்தில் 10 ச கி.மீ. சுற் றளவைக் கொண்டு விளங்கியது. நகரின முக்கியப் பகுதி நைல் நதியின் கிழக்குக் கரையில் அமைந்திருந் தது. மேற்குக் கரைப்பகுதி இறந்தவர் நகரம் (The



தீப்சு நகரம

City of the Dead) எனக கூறபபட்டது. இங்கு அரசர் களின் கல்லறைகளும், கோயில்களும, வீராகள், சமயக் குருமாாகள, கலைஞர்கள, தொழிலாளர்கள ஆகி யோரின் வீடுகளும இருந்தமை அகழாய்வுகளில் கணடுபிடிக்கபபட்டுள்ளது.

**வரலாறு:** தீப்சு நகரத்தின் தொனமையான பெயர் வேசு (Wase) அல்லது வோசு (Wose) ஆகும். எகிப்திய 4-ஆம் அரச மரபினர் காலத்தில இநநகரம தோனறியது. இங்குக கணடுபிடிக்கபபட்ட அழிபாடு களில மிகத் தொனமையானது 11-ஆம் அரச மரபின ரின் காலத்தைச் சார்நதது (கி.மு. 2133-கி.மு. 1991). இக்காலததில் எகிப்தின் ஆளுநாகள எகிப்தை ஒருமைப்படுத்தினா. ஒனறுபட்ட எகிப்தின தலைநகர மாகத் தீப்சு விளங்கிவநதது. இது நோவி எனவும் அதுமுதற்கொண்டு கூறப்பட்டது. ஆமோன கடவு ளின நகரமாகவும் இது திகழ்கிறது. தீப்சு எனனும் கிரேக்கச் சொல தா-ஆபி (Ta-Ope) என்னும எகிப் தியப் பெயரையுடைய உலுக்சரின் பெயரிலிருந்து மருவியது ஆகும்.

பன்னிரணடாம மரபினர் காலத்தில(கி.மு. 1991-கி.மு. 1786) அரசர்களின் குடியிருப்புகள இஙகிருந்து அல்-பய்யூம (Al-Fyyum) எனற இடததிற்கு மாற்றப் பட்டது. இருப்பினும் எகிப்திய அரசர்கள தஙகளின குலக் கடவுளான ஆமோன கடவுளைச் சிறப்பிக்கும் வகையில் தீப்சில் ஆமோனுக்குக் கோயிலகள் எழுப்பி னர். அந்நியர்கள இந்நகரைத் திடீரெனறு படை

யெடுத்துத் தாக்கினர். எனினும் தீப்சு அரசர்கள் அவர்களின் படையெடுப்பை கி.மு. 1560-இல் முறியடித்தனர். இக்காலத்திற்குப் பின் தீப்சின் புகழ் பெருகியது. 18-ஆம் மரபு அரசர்கள் இந்நகரைப் புதுப்பித்துப் பல மாளிகைகளை நைல் நதிக்கரையின் இரு மருங்கும் கட்டித் தங்களின் தலைநகரமாக்கிக் கொண்டனர். இந்நகரில் கி.மு.15-ஆம் நூற்றாண்டளவில் அழகான அரண்மனைகளும் அவற்றைச் சுற்றித் தோட்டங்களும் அமைக்கப்பட்டன. பிரபுக்கள் இவ் வூரைச்சுற்றிப் பெரும் நிலப்பரப்புகளில் வசித்து வந்தனர். இந்நகரம் இக்காலத்தில் வணிகர்களால் பெரிதும் சூழப்பட்டிருந்தது. தெருக்களில் வணிகர்களின் கூட்டம் நாள்தோறும் மிகுந்தது. எகிப்திய அரசர்கள் நைல் நதியின் கிழக்குக் கரையில் பல கோயில்களை எழுப்பியதுடன் மேற்குக் கரையில் பிணக் கோயில்களையும்கட்டுவித்தனர். இந்நகரம் மூன்றாம் ஆமென் கோடெப்பு காலத்தில் புகழின் உச்சநிலையை எய்தியது. இவர் படையெடுப்பில் பெற்ற அளவிறந்த செல்வங்களை ஆமென் கோயிலுக்கு அளித்தார். இவர்தம் மகன அக்னதான் காலத்திற்குப் பின் இந்நகரின் புகழ் மங்கியது. மீண்டும் துதங்கமன் (Tutankaman) என்னும் அரசர் காலத்தில் புத்துயிர் பெற்று, முதலாம் செடி (Seti I), இரண்டாம் இராமசெசு ஆகிய மன்னர்களின் பேராதரவினைப் பெற்றுத் திகழ்ந்தது. இங்கிருந்த ஆமென் கோயில்களுக்கு மூன்றாம் இராமசெசு மன்னர் 86,486 அடிமைகளைத் தானமாக அளித்தார். இவருக்குப் பினவந்த அரசர்கள் காலத்தின்போது இந்நகரத்தின் புகழ மங்கத் தொடங்கியது. அதனால பொருள்நிலை நலிவுற்றது. ஒன்பதாம் இராமசெசு காலத்தில் (கி.மு. 1121) இந்நகரில் இருநத கல்லறைகள் பல கொள்ளையடிக்கப்பட்டன. இருப்பினும் அக் கல்லறைச் செல்வங்களைப் பாதுகாக்க அவை இரண்டாம் ஆமென்கோடெப்பின் கல்லறையில் புதைத்து வைக்கப்பட்டன. இங்கு அகழாய்வில் கிடைத்த பொருள்கள் விலை மதிப்பற்றவை.

நூபிய அரசர்கள் காலத்தில் தீப்சு நகரம் தலைநகரமாக மாறியது. ஓமர் தமது நூலில் தீப்சு நகரத்தின செல்வ வளத்தைக் குறிப்பிட்டுள்ளார். தீப்சு நகரம் 100 நுழைவாயில்களைக் கொண்டு விளங்கியது என்றும் குறிப்பிடுகிறார். ஆசுர்பனிபால் என்னும் அசிரிய அரசர் இந்நகரை கி.மு. 661-இல் படையெடுத்துத் தாக்கினார். மீணடும் இந்நகரம் புதுப்பிக்கப்பட்டது. இசுட்ராபோ (Strabo) காலத்தில் தீப்சு ஒரு சிறிய சிற்றூராகக் காட்சியளித்தது. இந்நகரின் பண்டைய சின்னஙகளைக் காணச் சுற்றுலாப் பயணிகள் இவரது காலத்தில் இந்நகருக்கு வந்தனர்.

**தொல்லியல்:** தீப்சு நகரம் பல சிறு ஊர்ப்பகுதிகளை ஒருங்கே கொண்டு விளங்கியது. இப்பகுதியில் பல இடிபாடுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இக் கல்லறைகள் யாவும் மிக உயரமாகப் பெரும்பரப்பளவில் கட்டப்பட்டவை.

இக்கோயில் மிக வனப்புடையது. இதன் அருகில் கூம்புக் கோபுர வடிவில் கோயில் ஒன்று உள்ளது. இதனை கி.மு. 1490-இல் அரசியின் சிற்பி செனின் மூட்டு(Senenmut)என்றகட்டடக்கலைஞர் கட்டினார். இவரே இங்கு வரிசையான பல பெரும் தூண்களை வடிவமைத்தார். இப்பகுதியில் பல தோட்டங்களும், நுழைமாடங்களும்(Gallery)உள்ளன. இதன் கூரையை இரு வரிசையில் அமைந்த தூண்கள் தாங்குகின்றன. இங்குக் கண்டுபிடிக்கப்பட்ட தூண்களிலுள்ள உருவமைப்புகள் மிகவும் வனப்புவாய்ந்தவை. இச் சிற்பஙகள் பண்டைய வாணிகம், கடல் வாணிகம், திருமண விழா ஆகியவற்றைக் குறிப்பிடும் வகையில் செதுக்கப்பட்டுள்ளன.

மூன்றாம் ஆமென்கோடெப்பின் கல்லறைக் கோயில் தீப்சிலுள்ள பிற கோயில்களைவிட மிகப் பெரியதாக விளங்கியது. இக்கோயில் பிற்காலத்தில் வந்த அரசர்களால் கண்டுபிடிக்கப்பட்டது. இப்போது இதன் அடித்தளம் மட்டுமே கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இங்குள்ள கல்லறைச் சிலை 9 .மீ. உயரமுடையது. இதனருகில் மெம்னான் பேருருவச் சிலைகள் இரணடு உள்ளன. இவையிரண்டும் முன்பு கோயிலின் கோபுர நுழைவாயிலின் இரு பக்கஙகளிலும் இருந்தன.

பண்டைய எகிப்திய நகரங்களுள் தீப்சில் கிடைத்த பல சான்றுகளே எகிப்திய நாகரிகத்தைப் பெரிதும் அறியப் பயன்படுகினறன. இங்குக்கண்டுபிடிக்கப்பட்ட கோயில்கள், கல்வெட்டுகள், கல்லறைகள், வரலாற்றுச் சிற்பங்கள் போன்றவை பெரிதும் ஆராய்ச்சிக்கு உகந்தவையாக உள்ளன. அக்காலத்திய மக்களின் சமூக, பொருளாதார வாழ்க்கைத் திறத்தையும் தீப்சு அகழாய்வுகளின் மூலம் அறியமுடிகிறது. தீப்சில் கிடைத்த பல பொருள்கள் பலவேறு அருங்காட்சியகங்களிலும் தனியார் சேகரிப்பிலும் உள்ளன.

சு.இரா.

**தீபகற்பப் போர்:** போர்ச்சுகலையும், இசுபெயினையும் உள்ளடக்கியுள்ள ஐபீரியத் தீபகற்பத்தில் நடைபெற்ற போர் நடவடிக்கைகளைத் தீபகற்பப் போர் என்பர். இப்போரில் பிரஞ்சுப் பேரரசர் நெப்போலியன் ஒரு புறமும் போர்ச்சுகல், இசுபெயின், இங்கிலாந்து நாட்டினர் மற்றொரு புறமும் இருந்து போரிட்டனர். ஐரோப்பாவின் பெரும் பகுதியைத் தமது ஆதிக்கத்தினகீழ் கொண்டுவந்த பிறகும் தமது பெரும் எதிரியான இங்கிலாந்து அடிபணியவில்லை என்பதைக் கண்டு நெப்போலியன்

கண்டத் திட்டத்தைக் கொண்டுவந்தார். அதாவது ஐரோப்பிய நாடுகளுடன் இங்கிலாந்து வாணிகம் செய்வதைத் தடுத்துவிட்டால் வாணிகத்தையே நம்பி வாழும் இங்கிலாநது மககள் மிகுந்த இன்னலுக்கு உட்படுவார்களென்றும், ஆகவே அவர்கள் தங்கள் அரசை நெப்போலியனிடம் சமாதானம் செய்து. கொள்ளும்படி வற்புறுத்துவார்கள் என்றும் நெப் போலியன் கருதினார். ஆனால் கண்டத்திட்டம் எதிர்பார்த்த பலனை அளிக்கவில்லை. அதற்குக் காரணம் ஐரோப்பியக் கடற்கரைப் பகுதிகள் சில நெப்போலியனுடைய கட்டுக்குள் இருக்கவில்லை யாதலின் அவற்றின்வழியே ஆங்கில வாணிகப் பொருள்கள் ஐரோப்பாவிற்குள் நுழைந்தன. ஆங்கில வாணிகம் தொடர்நது நடைபெற்றமையால் கண்டத் திட்டம் தோல்வியுறும் நிலையிலிருந்தது. எனவே, ஐரோப்பியக் கடற்கரை நாடுகள் அனைத்தையும் தம் ஆட்சியின்கீழ்க் கொண்டுவர முற்பட்டார். இவர் கி.பி.1807–இல் போர்ச்சுகலைத் தாக்கினார் இசு பானிய அரசரையும் அவருடைய வாரிசையும் இசு பானிய அரியணையைவிட்டுச் செல்லுமாறு கி.பி.1808 -இல் வற்புறுத்தி அவ்வரியணையைத் தமது சகோதரன் சோசப்புக்கு அளித்தார். போர்ச்சுகல் ஆங்கிலேயர் களின பழைய நட்பு நாடாகும். ஆகவே இங்கிலாந்து தனது படையொன்றை ஆர்தர் வெல்லெசுலியின தலைமையின்கீழ்ப் போர்ச்சுகலுக்கு உதவிசெய்யும் பொருட்டு அனுப்பிவைத்தது. வெல்லெசுலி, பிரஞ்சுப் படையை விமீரோ (Vimiero) என்னுமிடத்தில் தோற் கடித்தார். பிரெஞ்சுப் படையுடன் சின்ட்ரா உடன் படிக்கையைச் (Convention of Cintra) செய்து கொண்டார். பிரெஞ்சுக்காரர்கள் போர்ச்சுகலிலிருந்து வெளியேற ஒப்புக்கொண்டனர். அதுமட்டுமன்றி அவர்களைப் போர்க் கைதிகளாக இங்கிலாந்துக்கு அனுப்புவதை விடுத்து ஆங்கிலக் கப்பல்களில் ஏறிக் கொண்டு பிரான்சுக்குச் செல்ல அனுமதி அளித்தார். இந்நிகழ்ச்சி இங்கிலாந்து மக்களின் எரிச்சலை மூட்டி விட்டது. ஆகவே வெல்லெசுலி திருப்பி அழைத்துக் கொள்ளப்பட்டார்.

இதற்கிடையே இசுபானிய மக்கள் தேசிய உணர்ச்சியால் உந்தப்பட்டு சோசப்புக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தனர். மேலும் 18,000 பிரெஞ்சு வீரர் களைப் பேய்லன் (Baylen) என்னுமிடத்தில்சரணடை யச் செய்தனர். இது மாபெரும் சாதனையாகக் கரு தப்பட்டது. நெப்போலியன் உடனடியாக இசுபெயி னுக்குச் செல்ல முடிவு செய்தார். பெரியதொரு படையைத் திரட்டிக்கொண்டு மாட்ரிடு (Madrid) நோக்கிப் புறப்பட்டார். அங்கிருந்து இலிசுபன் (Lisbon) செல்லத் திட்டமிட்டார். அப்போது போர்ச் சுகலில் ஆங்கிலப் படைக்குத் தலைமை தாங்கி நடத்துவதற்கு அனுப்பப்பட்ட சர் சான் மூர் (Sir John Moore) ஒரு சிறு படையுடன் வடக்கிலிருந்து இசுபெயினுக்குள் நுழைந்து நெப்போலியனுககும் பிரான்சுககும் இடையேயிருந்த போக்குவரததுத் தொடர்பைத் துணடிக்க முற்பட்டார். இவ் வாபத திலிருந்து தம்மை விடுவித்துக்கொளளவேணடி நெப் போலியன் தமது பெரும் படையைச் சர் சான் மூரை நோக்கி நடத்தினார்.இறுதியில் இப்பணியைச்சூல்ட்டு (Soult) எனபவரிடம் ஒப்படைத்தார். மூர் உடனே பினவாங்கினார். வேகமாகப் படையை நடத்திச சென்று கொரன்னாவை(Corunna) அடைந்து பிரெஞ சுக்காரர்கள் பிடியில் சிக்காமல் அங்குத் தயாராக இருந்த கப்பல்களில் தமது படைவீரர்களை ஏற்றிப் பத்திரமாக அனுப்பிவிட்டாா. ஆனால் அங்கு நடந்த போரில் மூர் கொல்லப்பட்டார். பிரிட்டானியப் படை கள் வெளியேறியதும் இசுபானியக் கிளர்ச்சி முடிவ டைந்துவிட்டதாக நெப்போலியன்கருதினார். ஆனால அவர் விரைவில் ஏமாற்றம் அடைந்தார். ஏனெனில கி.பி.1809-ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் வெலலெ சுலி, தீபகற்பத்திற்கு மீண்டும் வந்து போா ஏற்பாடு களைச் செய்தார். அதனுடன் தீபகற்பப் போா தொடங்கியதெனலாம்.

வெல்லெசுலி பல இன்னல்களை எதிர்கொள்ள நேர்ந்தது. அவர்கீழ்ப் பணியாற்றிய தலைவர்கள அனுபவமற்றவர்கள். போர் வீரர்களுக்கு ஆறு மாத கால ஊதியம் நிலுவையில இருந்தது. போதிய கூடாரங்கள இல்லை. போர்ச்சுகீசியர்கள் நமபிக் கைக்குரியவர்களாக இருக்கவில்லை. இசுபானியர்கள கொரில்லாப் போரில் வல்லவர்களாக இருநதபோதி லும் முறையான போர்களுக்கு அவர்கள் தகுதி பெற்றிருக்கவில்லை. மலைப்பாங்கான இடமாக இருந்ததால் போக்குவரத்துக் கடினமாக இருநதது உணவு கொண்டுசெல்வதும், படைகளை ஓரிடத்திலி ருந்து மற்றொரு இடத்திற்கு அழைத்துச் செலவதும் கடினமாக இருந்தன. ஆனால, வெலலெசுலிககுச் சில வசதிகள் இருந்தன. கடலாதிக்கத்தை ஆங்கிலே யர்கள் பெற்றிருந்தமையால் கடல்வழியே போக்கு வரத்து எளிதாக இருந்தது. மேலும் பிரெஞசுக்காரர் கள் தங்களை எதிர்த்து நிற்கும் மக்கள் கூட்டங்கள ஊடே தங்களுடைய தொடர்புகளை வைத்துக் கொள்ளவேண்டிய இக்கட்டான நிலையிலிருந்தனர். அவ்வகையான சிரமம் வெலலெசுலிக்கு இலலை,

வெல்லெசுலி கி.பி. 1809–இல் பிரெஞ்சுககாரர் களைப் போர்ச்சுகலை விட்டு வெளியேற்றினார்; பிறகு இசுபெயினுக்குள் நுழைந்தார். தலவீரா (Talaveera) என்னுமிடத்தில பிரெஞ்சுக்காரர்களைத் தோற் கடித்து மாட்ரிடுக்கு அருகே வந்தார். இசுபானியர் கள் அவருக்குப் போதிய உதவி அளிக்காததாலும் மசீனா (Massena) தலைமையில் பெரியதொரு பிரெஞ்

சுப் படையை இசுபெயினுக்கு நெப்போலியன அனுப்பியதாலும வெல்லெசுலி பினவாங்கினார். பிரெஞ்சுக காரர்கள் அவரைப் போர்ச்சுகலுக்குள துரததிச சென்றார்கள். வெலலெசுலி நேராக இலிசுபனுக்குச் சென்று தாம் ஏறகெனவே அமைநதிருந்த தாரசு வெட்ராசு (Torres Vedras) அரணகளுக்குப் பினனால் பாதுகாப்பாகத் தமது படைகளை நிறுததினார். அவ்வரணகளை அழிககப் பிரெஞ்சுக்காராகளால் இயலவில்லை. அவற்றிற்கருகே இருநத பகுதி முனனரே அழிக்கப்பட்டமையால போதிய உணவு பிரெஞ்சுக் காரர்களுக்குக் கிடைக்கவில்லை. ஐந்து மாத முற்றுகைக்குப் பிறகு மசீரா தம படைகளை இசுபெயினுக்குத் திருப்பி அழைததுக்கொணடு சென்றுவிட்டார். வெல்லெசுலியின் வீரததைப் பாராட்டும்வகையில ஆங்கிலஅரசுஅவருக்குப் பிரபு பட்டத்தை வழங்கியது.

நெப்போலியன் கி பி. 1812-இல் உருசிய மீது படையெடுத்துப் பெரும் தோல்வி கணடார். அவ வாய்ப்பைப் பயனபடுத்திகொண்டு வெல்லெசுலி (வெல்லிங டன் பிரபு) இசுபெயினுக்குள் நுழைநதார். சலமான்கா(Salamanca) போரில் பிரெஞ்சுப் படையைத தோற்கடித்தார். சோசப்பு, மாட்ரிடிலிருநது ஓடினார். பினவாங்கிச் சென்ற பிரெஞ்சுப் படைகளை விட்டோரியா (Vittoria), போரில் தோற்கடித்தார். பிரனீசு (Pyrenees) மலையைக் கடந்து பிரான்சுக்குள் நுழைந்த வெலலெசுலி ஆர்வெசு (Orthez), தூலூசு (Toulouse) ஆகிய இடங்களில் பிரெஞ்சுககாரர்களைத் தோற்கடித்தார். அதற்கிடையில் நெப்போலியன் தமது பதவியைத் துறந்துவிட்டமையால் போர் நிறுத்தப்பட்டது.

தீபகற்பப் போர் மிகவும் முககியமான போரா ஆகும். இப்போரில் நெப்போலியனுக்குப் பேரிழப்பு ஏற்பட்டது. 5,00,000 வீரர்களை நெப்போலியன் இழந்தார். பெருத்த பொருள் இழப்பும் ஏற்பட்டது. ஆங்கிலப் படையின பெருமை உயர்ந்தது. தேசிய உணர்வால் உந்தப்பட்ட மக்களை எவ் வல்லாட்சியாளராலும் வெலலமுடியாது என்பதை இப்போர் திட்டவட்டமாக அறிவித்தது. இசுபானியர் காட்டிய வழியை ஏனைய ஐரோப்பிய மக்களும் கடைப்பிடிக்கலானார்கள். நெப்போலியனுடைய வீழ்ச்சிக்கு இது முக்கிய காரணமாகும். ஆகவேதான் இசுபானியப் புண் (Ulcer) நெப்போலியனை அழித்தது என்று கூறுகின்றனர். தி.அர.இரா.

**தீபாவளி:** தீபாவளி, சைவ, வைணவ வேறுபாடின்றி இந்து மககள் அனைவரும் கொணடாடும் பண்டிகை யாகும். சமணர்கள் இதனைச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். தீபாவளி எனபது தீபங்களின் வரிசை எனப்படும். பணடிகையின் போது தீப வரிசைகளும், மத்தாப்பூ முதலியனவும் இடம் பெறுவதால் இது ஒளித்திருநாள் என்று கூறும் சிறப்புடையது. பொதுவாக இந்து சமயப் பணடிகைகள நிறைமதி நாளை ஒட்டி அமையும்; தீபாவளி அமாவாசை நாளை ஒட்டி அமையும். ஆண்டு தோறும் ஐபபசித திங்கள் சதுர்த்தசி நாளில் இது கொண்டாடப்படும.

இந்து சமயத்தில் நரகாசுரன் கதை இநதப் பணடிகைக்கு அடிப்படையாகக கூறப்படுகிறது. அக கதையினபடி பிராக்சோதிசம் எனனும நகரில வாழ்ந்த நரகாசுரன மக்களுக்கும் சாதுககளுக்கும் பெருந்துயர் கொடுத்து வந்தான. அவர்கள திருமாலிடம் வேணடியதிற கிணங்க அவர் கணணனாக அவதாரம் செய்து அந்த அசுரனை அழித்தார். நரகாசுரனின தாயாகிய பூமிதேவி தன் மகன இறந்ததை எணணாமல அவன் இறைவன் கரத்தால் கொல்லப் பெற்று முத்தி எய்தினான எனபது குறித்து மகிழ்ந்தாள். அன்றியும இறைவனைப் பற்றிய எணணமில்லாதவன் முன இறைவன தோனறியது குறிதது மகிழ்வு கொணடு என பிள்ளை இறநது போன துன்பம் என்னொடு போகட்டும், இவன இறநத நாளை மக்கள எணணெய்த் தேய்த்து நீராடி விருந்துண்டு மகிழ்வாகக கொண்டாடுமாறு அருளசெய்ய வேண்டுமென வேணடிக் கொண்டாள. இறககும தறுவாயில நல்ஞானம் பெற்ற நரகாசுரன் தான் இறந்த நாளில் எண்ணெய்த் தேய்த்து நீராடுவோர் கஙகையில் ஆடிய புணணியமும், திருமகள் அருளும் பெற வேணடும எனறு வேண்டிக்கொணடான. இறைவன் இந்த இருவர் தம் வேணடுகோளையும் நிறைவேற வரமளித்தார்.

தீபாவளி அனறு மக்கள விடியற்காலையில் எழுந்து எணணெய தேய்த்து நீராடி, இறைவன்முன் வழிபாட்டுப் பொருள்களோடு வைத்துப் படைக்கப்பட்ட புத்தாடைகளை அணிநது விருந்துணடு, மகிழ்ச்சியை வெளிப்படுத்த வெடிகளை வெடித்து இனபுறுவர். அன்புடன உறவினர்களுக்குப பலகாரங்களைக் கொடுத்து மகிழ்வர். பணியாட்களுக்கு அவரவர்களின் வசதிககேறப பரிசுப் பொருளும், புத்தாடைகளும் வழங்குவர்.

புது மண மக்களுக்கு முதலில் வரும் தீபாவளி சிறப்பானதொரு விழாவாகும. இதனைத் தலைத தீபாவளி என்று குறிப்பர். புத்தாடைகள் அணிந்தவர்கள் தம் வீட்டில் உள்ள பெரியோர்களை வணஙகிப் பரிசுப் பொருளகளும், வாழ்த்தும் பெறுவர். பரிசுப்பொருள்கள, காசு, பணமாகவே இருக்கும். இதனைத் தீபாவளிக் காசு என்பர். தீப ஒளியால் இருள நீங்குவது போல இறையருளால் துன்பங்கள நீஙகி இன்பம் பெருகும் என்பது பணடிகையின கருத்

தாகும். இறப்புப் போன்ற துககம் நிகழ்ந்த வீட்டினர் ஓராண்டு கழியும் வரை இதுபோனற பண்டிகை களைக் கொண்டாட மாட்டார்கள்.

சமணர்கள் ஒளித்திருநாளாக விளங்கும் இத் தீபாவளித் திருநாளினை, தம் சமய குரவருள இரு பத்து நானகாம தீர்த்தங்கரராக விளங்கிய வாத்த மான மகாவீரர் முத்தி எய்திய நாளாகக் கொண டாடுகினறனா. அவர் பீகார் மாநிலத்திலுளள பாவ புரி எனனுமிடத்தில் முத்தி எய்தினாா எனறு கூறப் படுவதால், தீபாவளித் திருநாளில அங்குச் சென்று வழிபடுவோர் பாவம் நீஙகப் பெறுவர் என்று நமபுகின்றனர். தீபாவளித திருநாளுககு முன்னிரவில் வீடுமுழுதும் பல விளக்குகளை ஏற்றிவைத்து அவை அணையாமல பேணிக காப்பர். விடியறகாலையில நீராடித் தம் கோவிலுககுச் சென்று இருபத்து நானகு தீர்த்தஙகராகளையும் நினைவுகூரும் வகையில் வண்ண மாவினால இருபத்துநானகு விளக்குகள் செய்து தீபமேற்றி வழிபடுவர். அனறு மதிய உணவு மட்டுமே உணடு நோன்பிருப்பா தொடக்ககாலதது இந்நாளில புத்தாடை அணிவது இச்சமயத்தவருக்கு வழக்கமில்லை. நாளடைவில் இநநாளில புததாடை கள அணியத்தொடஙகினா. சமண சமயத்தைச் சார்ந்த மார்வாடி மக்கள தீபாவளி நாளனறு தங கள் வணிக நிறுவனங்களில புதிய கணக்குததொடஙகு வர். அமமரபினை ஒட்டி வேறு சிலரும் புதுககணக்கு தொடங்கும் மரபினைக் கொணடுளளனர்.

குசராத்து மாநிலத்தில் இந்நாளில சாரதா பூசை, குபேர பூசை, இலக்குமி பூசை ஆகியவறறைச் செயவர். நடு இரவில பெண்கள் முறததினால் மூதேவியை விரட்டுவது போனறு முறத்தைத் தட்டு வர். மராட்டிய மாநிலத்தில் இந்நாளை மாபலிச் சக்கரவர்த்தி பட்டம் சூட்டிய நாளாகக் கருதி அவ னது உருவம செய்து வழிபடுவர். இந்நாளை இராமன் இராவணனைக் கொனறு மீண்டு வந்த நாள எனபா. இந்நாளில் வங்காள மககள் காளிபூசை செய்வா. சீக்கியர்களும் இவ்விழாவைக் கொணடாடுவர்.

விடியற்காலையில் வரும் சதுாத்தசியை நரக சதுர்த்தி என்று கூறுவதால், நரகாசுரன கதை கூறப் பட்டது. இந்நாளில் இறந்தவர்கள இறையருளால் பூமி நோககி வருவர் என மககள் நம்புகின்றனர். அவாகளுககாகவே உணவுப் பொருளகள படைக்கப் படுகின்றன. அருணோதய காலத்தில நீராடுவது உட லுக்கு நல்லது என்பதால் விடியறகாலையில நீராடி னர். அகபர் காலத்தில் இநநாளில் அரணமனை அலங கரிககப்பட்டது. சாசகான் மகன தாராசூககோ பெரும் புலவனாவான். அவன் தீபாவளிப் பணடிகை யைக் கொணடாடினான. வஙகாள நவாபு, சிராசு உத்தௌலா இவ்விழாவைக் கொணடாடினாா். வடநாட்டில் நரகாசுரனின் உருவததை எரித்துப் பிறகு கண்ணன் உருவத்தை வழிபடுவர். இந்தியா வெங்கும்பிறகாலததில ஒவவொரு காரணத்திற்காகத தீபாவளி கொணடாடப் படுகிறது. இரா.குரு

**தீமைக் கோட்பாடு**: தீமை உணமையாக இருக்கிறதா? பொயத் தோற்றமா? இறைவனுக்கும் தீமைக்குமுள்ள தொடர்பு யாது? என்பனவற்றை ஆராய்தல் இனறியமையாதது. இராமகிருட்டிணர் பாம்பினிடத்து விடம் உள்ளதைப்போல இறைவனிடம தீமை (Evil) உளளது எனறு கூறுகிறாா. பாம்பினது விடம் மனிதனுககு விடமேயனறி, பாம்பிற்கு விட மாகாது அதுபாம்பினிடததுச் சுரபபதாகும் அந்தச சுரப்பு இல்லாவிட்டால் பாமபு நலமாக இருகக முடி யாது. அந்தவிடம் பாம்பைக் கொலலாது. ஆதலால தீமை மனித நோக்கில் அமைவது மனிதனை ஆன்மிக நெறியில உயர்த்தத் தீமை தேவை என கிறார் இராமகிருட்டிணர்.

இறைவனிடத்துத் தீமை இலலை ஏனெனறால அவன நிறைவுடையவன; எலலையற்றவன; இனப மயமானவன. உணமை அவன வடிவம். மனிதன எலலைக்குட்பட்டு இருப்பதால, நிறைவிலலாதிருப் பதால், தீமையால வாடுகிறான. மனித வாழ்க கையில காணும தீமைகள வறுமை, நோய், மூப்பு, இறப்பு முதலியனவாம். முடிவாக நோககுமிடததுத தீமை என்பதற்கு இருப்பு இல்லை தீமை உளபொரு ளின அமைப்பில் இடம்பெறுவதில்லை. ஆனமாவிற் குளள தடைகள், அறியாமை ஆகியவை நீங்குகினற பொழுது அந்த ஆனமா இன்பம் அடைகிறது ஆன்மா இறைவனோடு சேருகினறபொழுது தீமை விலகு கிறது. ஆதலால் தீமை, தொடககத்திலுமிலலை, முடிவிலும் இலலை. நிறைவிலலாத மனிதர்களிடையே தீமை இருககிறது. மரணததைப் பெரிய தீமை எனறு கருதுகிறார்களமனிதர்கள ஆன்மா ஒருபிறவியினினறு மறுபிறவிககுத் தொடர்நது பயணம செய்கிறது. ஆன் மாவிறகு அழிவு கிடையாது. உடல நலிவுறுகின்ற போது, அவ்வுடலை நீக்கி வேறு உடலை ஆனமா எடுககிறது. மரணம் என்பது தீமையனறு. மரணம நிகழும்போது விடுதலையடைகின்றது ஆனமா எனறு கூறுகினறனா.

மனிதனது பரிணாமத்தில் மரணம் எனபது ஒரு படிநிலையாகும். மனித ஆனமா பல பிறவிகள எடுதது அனபின் பிணைபபை அறிதல வேணடும்.

மனிதனுடைய அறவாழவிற்குத் தீமை தேவை. தீமையை எதிாதது போராடும் பொழுதுதான், நன்மை வலுப்பெறுகிறது என்று கூறுவாரும் உளர்.

வேதாந்தத்தை எடுத்துக் கொண்டால் அங்குத் தீமைக்கு இடமிலலை. 'பரம்பொருள் ஒன்றே உள்ளது. தீமையும் பிறவும் அன்றாட வாழ்வு என்ற நடைமுறை அளவில் உண்மையே. என்றாலும், முடிந்த முடிபான உண்மையைநோக்க, அது உண்மையில்லை' என்று வேதாந்தம் கூறுகின்றது. சுயநலங்களையே மனிதன் அளவுகோலாகக் கொள்கிறான். இந்தச் சுயநலங்கள் மனிதனைச் சிறைப்படுத்துகின்றன. மனிதன் ஆசைகளால் கட்டுறுகின்றான். தாகூர் துறவை மனிதன் ஒரு கலையாகப் பயில வேண்டுமென்கிறார். இந்த உலக வாழ்க்கையையே பேரின்பம் பயப்பதாக ஆக்கிக் கொள்ளவேண்டும் என்று தாகூர் கூறுகிறார். செயலுரிமையோடும் அன்போடும் இல்வாழ்க்கையைச் சிறப்பாகச் செய்ய எளிமையை மேற்கொள்ளவேண்டும். ஆன்மிக வளர்ச்சிக்கு ஓரளவு தீமை தேவை. அது உலகுண்மைகளை நன்கு அறியச் செய்கிறது.

தீமையின் தோற்றம் எளிதில் விளங்காது. சைவ சித்தாந்தம் தீமையை மலம் என்று கூறுகிறது. மலம் என்பதும் தீமையைப் போல் அனாதி என்று கருதப் படுகிறது. அது இறையருளைப் பெறுவதால நீங்குகிறது. இரா.கோ.

**துணை நூல்கள்:**

Heinrich Zimmer, Philosophies of India, Princeton University Press, U.S.A., 1969.

Srinivasachari, P.N, The Philosophy of Visistadvaita, The Theosophical Society, Adyar, Madras. 1970.

**தீயர்:** இவர்கள் கேரளத்தில் பமலாா, கொச்சின், திருவாங்கூர் முதலான பகுதிகளில் பெருமளவு வாழும் ஒரு குடியினர். இவர்கள பலகாலமாகக் கள் இறக்குந தொழிலையும் பனைப் பொருளகள செய்வதையும் முதனமையாகக் கொண்டுளளனர். இத்தொழிலைத் தவிரப் பயிரிடுதல், வேளாண கூலியாகப் பணிபுரிதல் முதலான தொழிலகளையும் செயது வருகினறனர். இவர்கள் தமிழகததிலும் கருநாடகததிலும் குறைநத எணணிககையில் வாழ்கினறனர்.

தீயர் (Tiyar) மககளும் இவர்கள் பகுதிகளில வாழும ஈழவர் (Izhuvan) மக்களும் கிறித்தவ ஆணடுத் தொடக்ககாலத்தில் இலங்கையிலிருநது இந்தியாவிற்குக் குடிபெயர்நதனர் எனறு கருதப்படுகின்றனர். கிறித்தவ ஆணடுத தொடககத்திறகு



தீயர்

முன்னும் அதறகுப பின்னும் இந்தியாவின் தென பகுதிகளிலிருநது இலஙகைத் தீவிற்கு மக்கள் குடி பெயர்நதுள்ளனர். பினனர் அங்கிருநது மீண்டும இந்தியாவின் மேற்குக கடறகரைப் பகுதிகளுக்கு மக்கள் குடியேறினா அவ்வாறு குடியேறியவர்களுள ஒரு குழுவினரே தீயர் மக்கள. தீவுப் பகுதியிலிருந்து வநததால இவர்கள தீவர்கள (Tivars) எனறு வழஙகப் பெறறு நாளடைவில் தீயர்கள எனச் சொலலபபடலா யினா. இம மக்களே இலங்கையிலிருந்து தெனனைப் பயிரைக கொணடு வந்தனர் எனக் கூறுவர்.

தீயா சமூகத்தினர் பல உட்பிரிவினாகளாகப் பிரிநது காணப்படுகினறனா. ஒவ்வொரு உட்பிரிவும் 'இல்லம' எனக கூறப்படுகிறது இதனடிப்படையி லேயே திருமண உறவு அமைகிறது. ஓர் இலலததைச் சேர்ந்த அனைவரும இரத்த உறவு உடையவர்கள எனபதால வேறறு இலலததவருடன மட்டுமே திரு மணம் செயது கொளகினறனர். ஆகவே, ஒவ்வொரு இலலமும புறமணக் குழுவாகச் (Exogamous group) செயற்படுகிறது.

திருமணத்தினபோது கொடுக்கப்படும் அன்பளிப்பு கள இடத்திற்கு இடம மாறுபடுகிறது. வடககு மல பார்ப் பகுதிககும தெற்கு மலபார்ப் பகுதிக்கும இடையே பெரும வேறுபாடுகள உளளன. இவவேறு பாடுகளுக்கு அநதநதப் பகுதிகளில் உளள குடுமபச் சொததுரிமை முறை அடிப்படையாக உளளது ஒரு சில பகுதிகளில் மணபபெண பணம் கொடுக்கும முறை இல்லை பொதுவாக ஒரு மனைவியுடன மட்டுமே வாழ வேணடும என்றிருநதாலுமபல துணை மணமுறை இவர்களிடையே உளளது தீயன மக்களின திருமணச் சடஙகினபோது இநதுக களைப போனறு தாலி கட்டும் சடஙகே இன்றி யமையாதது. பொதுவாக இச்சடங்கு பெண பருவம அடையுமுன நடைபெறுகிறது. குறிபபாகத்தெறகு மல பாாப் பகுதிகளில பெண பருவமடையுமுன திருமணம செய்து கொளவது மரபுவழியில வரும வழக்கததைக கடைப் பிடிப்பதாகக் கருதப்படுகிறது மணவிலககு இவர்களிடம மிக எளிமையானது. இருப்பினும் மண மககளின குறைகளைத் தீர்தது இருவரையும சேர்த்து வைப்பதற்குப் பல முயற்சிகள் எடுதத பினனரே இறு தியாக மணவிலக்கு அனுமதிக்கப்படுகிறது மணமகன வீட்டார் மணவிலக்கை விரும்பினால் மணமகள் கொணடு வநத நகைகளைத் திருப்பித்தர வேண்டும். அதோடு திருமணச செலவினையும திருப்பித்தர வேண்டும். அவ்வாறே மணமகள வீட்டார் மண விலக்கை விரும்பினால் மேற்கூறிய திருமணச் செலவு களை மணமகன் வீட்டாருக்குத் திருப்பித் தர வேண்டும்.

தீயர் மக்களின் பொருளாதாரம் பனைத் தொழிலைமையமாகக் கொண்டுள்ளது. ஆங்கிலேயர் காலத்தில் இவர்கள நாயர்களுக்கும் நம்பூதிரிகளுக் கும் ஓரளவு அடிமைகளாகவே இருந்து வந்தனர். பனை மரங்களிலிருந்து கள் இறககுதல, நாட்டு மதுவகை களைத் தயாரித்தல், அவற்றைவிற்றல்,வெல்லம் தயா ரித்தல் முதலான தொழிலகளைச் செய்து வந்தனா. இனறு இத்தொழிலில சில மாற்றங்களை ஏற்படுத்திக் கொணடுள்ளனர் பனைப் பொருளகளுக்குப் பெயா பெற்றகேரளத்தில இவாகள் பனை நாரை உறபத்தி செயவதில பெரும் பஙகு வகிக்கின்றனா.இனறு பெரும் பகுதியினா வேளாண நிலங்களை உரிமையாக்கிக் கொண்டு பயிர்த் தொழிலை மேற் கொணடுள்ளனா. வேளாண நிலஙகளில நாளகூலிகளாகவும இவாகள வேலை செயகினறனர் பணடைக் காலம் முதலே இவர்கள நாடடு மருந்து கொணடு எலும்பு முறிவு களைச் சரி செயயும மருத்துவத் தொழிலையும், சோதிடம கூறுதலையும், குறி கூறுதலையும், மநதிரச சடஙகுகள நடததுதலையும் துணைத தொழில களாகச் செய்து வருகின்றனர். தெற்கு மலபார்ப் பகுதிகளில குடும்பத்தின சொத்துரிமை மூத்த ஆண வழிச் செலகிறது. வடக்கு மலபாாப பகுதிகளில் 'மரு மககள் தாய' முறை உளளது

தீயர் மக்களின் சமய நமபிக்கை பலதெய்வ வழி பாட்டைச் சார்நதுளளது கோட்டியூர்ப் பெருமாள ஈசுவரன, கொடுஙகாலூர் பகவதி போனற தெய்வங களை முதனமையாக வழிபடுகினறனர் பழநியிலுள்ள முருகன் கோயிலுக்கும் மேறகூறிய இரு கோயிலகளுக் கும் புனிதயாததிரை செயவதன மூலம வாழ்வின பயனை முழுமையாகப் பெறமுடியும் எனறு கருதுகின றனா இததெய்வஙகளைத தவிர ஒவவொரு தனிப் பயனகருதி வெவவேறு கடவுள்களையும வணஙகு கினறனா.

தீயர் மக்கள் இறநதவாகளை எரிக்கினறனர். எரிபபதறகு மாமரததின கட்டைகளைப் பயனபடுதது கினறனர் இறந்த பினபு வெட்டப்படும மரங்களை மட்டுமே எரிபபதற்குப் பயனபடுத்த வேணடும் எனற நம்பிககையைக் கொணடுளளனா. சீ.ப.

**தீர்த்தங்கரர்**: சமண சமயக் கொளகைகளை உலகத்தில பரவச் செய்வதறகாக அவவப்போது தீர்த் தங்கரர்கள எனனும் பெரியார்கள் தோனறுகினறார் கள எனபது சமண சமயக கொள்கை. தீர்த்தங்கரர் என்னும் வடசொலலுக்கு 'பிறவிப் பெருங்கடலில் உழனறு தத்தளிககும ஆனமாக்களைக கரையேற்று பவர்' என்பது பொருள். தீாத்தம் என்பது நீர்நிலை யினையும் கரர் எனபது கரையேற்றுபவரையும் குறிக் கும். 'தீர்த்தம் கரோதி இதி தீர்த்தங்கரகா!' எனறு

சாகடாயன வியாகரணம் கூறுகிறது. தீர்த்தத்தை எவன் செய்தானோ அவன தீர்த்தங்கரன். இங்கு தீர்த்தம் என்பது ஆகமம் என்ற பொருளில் வருகிறது. இதே நூல் மேலும், 'தீர்யதே சம்சார சாகரோ ஏனா தது தீர்த்தம்' என்று கூறுகிறது. 'சம்சார சாகரத்தை நீந்திக் கரைசேர வைப்பது எதுவோ அது தீர்த்தம்' என்பது இதன் பொருள். தீர்யதே என்றால் நீந்துதல்; ஏனா தது என்றால் கரை சேர வைத்தல்.

சமண சமய சாத்திரங்கள், இறந்த காலத்தில் 24 தீர்த்தங்கரர்கள் இருந்தனர் என்றும் நிகழ்காலத்தில் 24 தீர்த்தங்கரர்கள் உள்ளனர் என்றும், எதிர் காலத்தில் 24 தீர்த்தங்கரர்கள் தோன்றுவார்கள் என்றும் கூறுகின்றன.

**இறந்த காலத் தீர்த்தங்கரர்கள்:** 1) நிர்வாண, 2) சாகர, 3) மகா சாது, 4) விமலப்பிரப, 5) சிரீதர, 6) சுதத்த, 7) அமலப்பிரப, 8) உத்தர, 9) அங்கீர, 10) சன்மதி, 11) சிந்து, 12) குசுமாஞ்சலி, 13) சிவகணா,14) உத்சாக, 15) ஞானேசுவர, 16) பரமேசுவர, 17) விமரேசுவர, 18) யசோதர, 19) கிருட்டிண, 20) ஞானமதி, 21) சுத்தமதி, 22) சிரீபத்ர, 23) அதிக்கிராந்த, 24) சாந்தா ..

**நிகழ் காலத் தீர்த்தங்கரர்கள்:** 1)விருடப,2) அசித 3) சம்பவ, 4) அபிநந்தன, 5) சுமதி, 6) பத்மப்பிரப, 7) சுபார்சுவ, 8) சந்திரப்பிரப, 9) புட்பதந்த, 10) சீதள, 11) சிரேயாம்ச, 12) வாசு பூசிய, 13) விமல, 14) அநந்த, 15) தரும, 16) சாந்தி, 17) குந்து, 18) அர, 19) மல்லி, 20) முனிசுவிரத, 21) நமி, 22) நேமி, 23) பார்சுவ, 24) வர்த்தமான மகாவீர.

**எதிர்காலத் தீர்த்தங்கரர்கள்:** 1) மகாபத்ம, 2) சுரதேவ, 3) சுபார்சுவ, 4) சுயம்பிரப, 5) சர்வார்த்ம பூத, 6) தேவபுத்திர, 7) குலபுத்திர, 8) உதங்க, 9) புரோட்டில, 10) செயகீர்த்தி, 11) முனிசுவிரத, 12) அர,13) நிட்பாப, 14) நிட்கசாய, 15) விபுல, 16) நிர்மல,17) சித்திர குப்த, 18) சமாதி குப்த, 19) சுயம்பூ, 20)அனிவிருத்தக, 21) சயகுப்த, 22) விமல, 23) தேவபால, 24) அநந்த வீர்ய.

ஐஞ்சிறு காப்பியங்களுள் ஒன்றான சூளாமணி, பிறவாமைக்கு ஏதுவாகிய துறவறத்தில் தலை நின்ற சிறப்பை எய்தியவரே தீர்த்தங்கரர் ஆவார் என்று கூறுகிறது. தீர்த்தங்கரர்கள் மெய்யுணாவு பெற்றவர்கள். உலகப் பற்றை அறவே நீத்தவர்கள. ஐம்புலன்களை அடககி வென்றவர்கள். ஆன்ம ஆற்றலால் எதையும் ஊடுருவிக காணும் திறன பெறறவாகள. அகிம்சையே உருவானவர்கள. தீர்த்தங்கரராய உயர் நிலையை எய்துவது எளிதனறு. பிறவிதோறும் சேர்ந்து வரும் கர்மங்களை முழுமையாக அகற்றிய வர்களே தீர்த்தங்கரர்கள் ஆக முடியும்.

சமண சமயத்தில் குறிப்பிடப் பெறற தீர்த்தங்கரர்கள் சாதாரண ஆண்டிகள அல்லர். மண்டலத்தை ஆண்ட மன்னர்கள். அவர்களில் பலர் இளவரசுப் பட்டம் பெற்றுப் பின்னர் மனனராக முடிசூட்டப் பெற்றுச் சிறிது காலம் கழித்துத் துறவு நாடி வநத வர்கள். எனவே தான், தீர்த்தங்கரர் சிலைகளில மன்னர்களுக்குரிய சில சிறப்பம்சஙகளைக காணலாம் அவர்களுடைய பீடங்கள் அரியாசனம் போல் அமைக்கப்பெற்றிருப்பதையும் காணலாம்.

சமணர் ஆலயங்களில் உள்ள தீாத்தங்கரர் உருவச் சிலைகளின் மீது மலர்கள அல்லது மாலைகள அணிவிப்பதில்லை. அவாகள் அனைவரும் உலகதததையும், உலக இன்பங்களையும் துறந்த துறவிகள என்பதனால் அவர்களுடைய திருமேனிகளில மலர்களைத் தூவாமல் திருவடிகளில படைககினறனா. பொதுவாகப் பால், தயிா,இளநீர், பழஙகள, சநதனம் ஆகியவற்றால் திருமுழுககு நடை பெறும். இநதப் பணிக்குத் தேன் சேர்க்கப்படுவதில்லை. தேனீக்களைக கொன்று தேன் எடுக்கப் படுவதால் கொலலாமையை வற்புறுத்தும் சமணா தேனை நீக்கி விட்டனர். சு.சு.

***தீர்ப்பாயம்:*** நீதித்துறையலலாத தனி ஒருவரோ ஒரு குழுவோ நீதிமுறையான அல்லது நீதி முறை போனற அலுவல்களை ஆற்றும் அமைபபே தீர்ப்பாயம் (Tribunal) எனப்படும். இது ஒரு குறிப்பிட்ட நோக்கம் குறித்துச் சட்டத்தினால் தோற்றுவிக்கப்படுவதாகும். இது நிலையானதாகவோ அப்போதைக்கேற்பட்டதாகவோ இருக்கும். நீதிபதிகள் அல்லது நீதிபதிகளாக நியமனம் செய்யப்படககூடிய தகுதிகளைப் பெற்றவர்கள் இதன் நடுவர்களாக இருப்பர். சில தீர்ப்பாயங்கள் வழக்குகளை நடத்துகையில் உரிமை வழக்கு நீதிமன்றத்திற்குரிய அனைத்து அதிகாரங்களையும் உரிமையியல் நடைமுறைச் சட்டத் தொகுப்பின்படி (Civil Procedure code) கீழ்க்காணும் பொருள்களைப் பெற்று விளங்கும். 1) எவரையும் தீர்ப்பாயத்தின் முன் தோன்றுமாறு அழைத்தல், அவருடைய வருகையைக் கட்டாயப் படுத்துதல் மற்றும சத்தியப் பிரமாணத்தின் மீது விசாரணை செய்தல. 2) எந்த ஆவணத்தையும் (Document) கணடுபிடித்துத் தாக்கல் செய்ய வேண்டுமென்று கோருதல். 3) சத்தியப் பிரமாணப் பத்திரம் (Affidavit) மீது சானறு பெறுதல் 4) அரசாங்க அலுவலகப பதிவுக் கட்டையோ (Public Record) அதாவது பொது ஆவணத்தையோ, அதன் நகலையோ நீதிமனறததிடமிருந்து வேண்டுகோள் விடுத்துப் பெறுதல மறறும் 5) சான்று கூறுபவரை, அல்லது ஆவணஙகளைப்

பற்றி விசாரிக்க ஆணைககுழு (Commission) அனுப்புதல்.

மேலும், தீரப்பாயங்களின் நடவடிக்கைகள் யாவும், இந்தியத் தணடனைச் சட்டத்தின் பிரிவுகள 193 மற்றும் 22-இன் படியும், அதே சட்டததின பிரிவு 196-இல கண்டுள்ள நோக்கப்படியும் நீதிமுறை நடவடிக்கைகளாகும என்று கூறபபட்டுள்ளது. மேலும குற்ற வழக்கு விசாரணை முறைச சட்டம் பிரிவுகள 480, 482 ஆகியவறறில கணடுள்ள நோககத்தினபடி தீர்பபாயஙகள் உரிமை வழக்கு நீதிமன்றங்களாகக கருதப்படும.

தீர்ப்பாயங்கள, மரபின (Convention) அடிப்படையில்தான நீதிபதிகளின் தலைமையில இயங்கும் பொதுவாக, விசாரணை முறைச் சட்டஙகள் தீரப்பாயங்களுக்குப் பொருநதி வாரா. நீதிமன்றத்தின முன் நடைபெறும் நடவடிக்கைகளுக்குச சிறப்புரிமைகள் (Privileges) ஒவவொரு தீர்ப்பாயத்தையும் தோறறுவித்த சட்டத்தைப பொறுத்தே அமையும். தீரப்பாயததின் நடவடிக்கைகள நீதித தன்மை வாய்நத நடவடிக்கைகளே யனறி, (Quasi-Judicial Proceedings) அவை நீதிமன்ற நடவடிக்கைகள் ஆகா. ஆகவே, முன தீர்ப்புத் தடை, முன தீர்ப்பு முறை ஏறபு (Stare Decisis), முரண தடைக் கோட்பாடு (Doctrine of Estoppel) போன்ற சட்டப் பொதுக் கோட்பாடுகள் தீரப்பாயங்களின தீரப்புகளுக்குப் பொதுவாகப் பொருநதுவதிலலை.

இத்தீர்ப்பாயஙகள யாவும் இந்தியாவின உச்ச நீதிமனறம் மறறும உயர்நீதிமன்றங்களுக்குக் கட்டுப் பட்டவை. இநநீதிமனறங்கள தீர்ப்பாயங்களின தீர்ப்பை நீதிமுறை மறு ஆயவு (Judicial Review) செய்யும் அதிகாரங்கள் பெற்றுள்ளன. எனினுமஇவை சட்டம் பற்றிய சிக்கலை (Question of Law) மட்டுமே மறு ஆய்வு செயயும். செய்திகள் பறறித் தீர்ப்பாயங்களின் தீர்ப்புகளில நீதிமன்றங்கள குறுககிடுவதில்லை.

தீர்ப்பாயங்கள் இந்தியச் சான்றுச் சட்டத்தில குறிக்கப்பட்டுள்ள நடைமுறைகளுக்கு ஏற்பச் செயறபட வேணடுமென்பதில்லை; அவற்றை நிறுவிய சட்டங்களில் குறிக்கப் பட்டிருக்கும் தனிச் சிறப்பு நடைமுறைகளைப் பின் பற்றினால் போதுமானதாகும்.

நிருவாகத்துறை முகவர் நிலைகள் (Administrative Agencies) சில நடைமுறைகளை ஏறறு அவற்றின்படி இயங்கிப் பாதிக்கப்பட்டவர்களின் உரிமைகள பற்றியும், நலன்கள் பற்றியும் தீர்மானிக்கினறன. நிருவாக முறைத தீர்ப்பாயங்கள் அரசுத் துறைகளின் நீதித் தீர்ப்புக் கூறும் பணியினைப் பெரும் அளவில் மேற்கொள்கினறன. சான்றாக வருமானவரி மறு ஆய்வுத் தீர்ப்பாயம் (Income Tax Appellate Tribunal), இரயில்வே விகிதத் தீரப்பாயம் (Railway Rate Tribunal), தொழில் தீரப்பாயங்கள (Industrial Tribunals), விற்பனை வரித் தீரப்பாயஙகள (Sales Tax Tribunals) போனறவை, அவை ஏறபடுத்தப் பட்டதனமைகள குறித்த தகராறுகளை மட்டுமே ஏற்றுக் கொணடு நீதித்தீரபபு வழஙகுகின்றன

நீதிமன்றஙகளின தீரப்பு சட்ட நுணுக்கம் சோந்த (Technical) ஒனறாகத் தானிருக்குமேயின்றி, சமுதாய வளர்ச்சிககேறப வளைநது ஈடு கொடுக்கும் வகையில் அமையாது காலதாமதம் ஏற்பட்டு, வளர்ச்சிப் பணிகள தடை படக் கூடாது எனற நோககத்திறகாகவே அவ்வத் துறை சார்நத வல்லுநர்களைத் தலைவராகக்கொணட தீர்பபாயங்கள சட்டத்தின் மூலம நிறுவப படுகின்றன.

தீர்ப்பாயஙகளின நடைமுறைகளை ஒழுஙகு படுத்த அமெரிககாவில இருப்பது போனறு நிருவாகவியல் நடை முறைச் சட்டமோ (The Administrative Procedure Act) இங்கிலாந்தில்இருப்பதுபோன்று தீர்ப்பாயங்கள மற்றும் விசாரணைகள சட்டமோ (The Tribunals and Inquiries Act) இநதியாவில் இல்லை அலலது பிரான்சு நாட்டுக் கோன்சில் தெட்டா (Conseil d'etat) போன்று தீர்ப்பாயஙகளின நடைமுறையை ஒழுஙகுப்படுத்த ஒரு சீரிய தலைமைத் தீர்ப்பாயும இநதியாவில் இல்லை. இந்தியச சட்ட ஆணையம (Indian Law Commission) கானசில் தெட்டா போனற ஒரு தலைமைத் தீர்ப்பாயம் இங்கு அமைக்கபபடலாமென முதலில் கருதியது. ஆனால், இநதிய உசச நீதிமன்றமும், உயர் நீதிமனறங்களும் அவைகளுடைய அதிகார வரமபிறகு உட்பட்ட இடங்களில் இயஙகும் தீரப்பாயங்களின தீர்ப்புகள மீது நீதிமுறை மறு ஆய்வு செய்யும் அதிகாரததைப் பெற்றுளளதால, கான்சில் தெட்டா போன்று தலைமைத் தீர்ப்பாயம அமைக்கும் எணணம் பின்னர்க் கைவிடப்பட்டது.

ஒவ்வொரு தீர்ப்பாயமும் ஒவ்வொரு நோக்கத்தோடு (Purpose) தோறறுவிக்கப்படுவதால், அது சிறப்பாக இயங்க நோக்கத்திறகேற்பச் சில தனிச் சிறப்பு நடைமுறைகள் தேவைப்படுகின்றன. இந்தச் சிறப்பு நடைமுறைகள் தீர்ப்பாயங்களைத் தோற்றுவித்த சட்டத்திலேயே கொடுககப்படுகினறன. மற்றப் பொது நடை முறைகள் உச்ச நீதிமன்றத் தீர்ப்பு வழிச் சட்டம (Case law) மூலமாகத் தெளிவாக்கப் படுகின்றன. அவை யாவும் ஏறத்தாழ இங்கிலாந்து

நாட்டில் நிலவி வரும் நடைமுறைகளுக்கேற்ப உள்ளன.

**தீர்ப்பாயங்களின் பொதுவான இயல்புகள் கீழ்க் காணுமாறு இருக்கும்** 1). தீர்ப்பாயங்கள் இயற்றப் பட்ட சட்டங்களால் தோற்றுவிக்கப்படுவதால், சட்டத்தின் தோற்றம் கொண்டு விளங்கும். 2). நீதிமன்றத்தின் சில தன்மைகளை மட்டும் கொண்டு விளங்கும். ஆனால் முழுக்க முழுக்க நீதிமன்றமாகாது. 3). நிருவாக முறைத் தீர்ப்பாயங்களிடம் அரசின் நீதி செலுத்தும் அதிகாரங்கள் அளிக்கப்பட்டுள்ளபடியால், அவை நீதித் தீர்ப்புகள் மற்றும் நீதித் தீர்ப்பு போன்ற பணிகளைச் செய்கின்றன. அப்பணிகள் நிருவாகத் துறை அல்லது செயலாட்சிப் பணியிலிருந்து முற்றிலுமாக வேறுபடுவதால், தீர்ப்பாயங்கள் நீதிமுறைப்படி செயற் படக் கடமைப்பட்டுள்ளன. 4) நடைமுறைகளிலும் தீர்ப்பாயங்கள் நீதிமன்றத்தில் செலுத்தும் அதிகாரங்களாகிய சாட்சிகளை வரவழைத்தல், சத்தியப் பிரமாணம் செய்தல், ஆவணங்களை முன்னிலைப்படுத்தச் சொல்லி தரப்பினர்களைக் கட்டாயப்படுத்துதல் போன்ற அதிகாரங்களைச் செயற்படுத்துகின்றன. 5)சான்றுச் சட்டத்தின் விதிகள், நடைமுறைகள் ஆகியவற்றைக் கண்டிப்பாக அப்படியே பின்பற்றவேண்டியதில்லை. 6) பெரும்பாலான தீர்ப்பாயங்களின் தீர்ப்புகள் உண்மையில் நீதித்தன்மை கொண்டனவேயன்றி நிருவாக முறையானவையல்ல. பிரச்சனையில் பொருண்மைகளைக் கண்டறிந்து, நிருவாகக் கொள்கைகளைக் கணக்கில் கொள்ளாமல் சட்டத்தின் பிரிவுகளுக் கேற்பத் தீர்ப்பளிக்கும். இவற்றிற்கு நிலைமைக்கேற்பச் செயற்படும் (Discretion) தன்மை அளிக்கப்பட்டிருந்தாலும், அவை நீதி முறைப்படியாக நடக்கக் கடமைப் பட்டவையாகும். 7) அனைத்துத் தீர்ப்பாயவழக்குகளிலும் அரசே ஒரு தரப்பினராக இருப்பதில்லை. தனிப்பட்ட இரண்டு பேர்களுக்கிடையே எழும் சிக்கல்களையும் இவை தீர்க்கின்றன. எடுத்துக் காட்டாகத் தேர்தல் தீர்ப்பாயம் (Election Tribunal),வாடகைத் தீர்ப்பாயம் (Rent Tribunal), தொழில் தகராறுத் தீர்ப்பாயம் (Industrial Tribunal) போன்றவற்றைக் கூறலாம். மாறாக வருமானவரி மேல்முறையீட்டுத் தீர்ப்பாயம் (Income Tax Appellate Tribunal) அரசுக்கும் வரி செலுத்துவோருக்கு மிடையே எழும் தகராறுகளை மட்டுமே விசாரிக்கும். 8) நிருவாக முறைத் தீர்ப்பாயங்கள் தனித்தே இயங்குவதால், நிருவாகத்தினரின் தலையீடு இல்லாமல் நீதிமுறையாகத் தீர்ப்புகளை வழங்குகின்றன. 9) நிருவாகமுறைத் தீர்ப்பாயங்களின் தீர்ப்புக்கு எதிராக நெறிமுறை உறுத்தும் நீதிப்பேராணை(Writ of certiorari) மற்றும் தடையுறுத்தும் நீதிப் பேராணை(Writ of prohibition) ஆகியவற்றை இடலாம்.

தீர்ப்பாயங்களின் தன்மைகள் குறித்து 1957-இல் பரிந்துரை செய்த பிராங்குழு (Franks committee England) நிருவாக முறைத் தீர்ப்பாயங்கள் கீழக் காணும் 3 குறிக்கோள்களைக் கடைப்பிடித்துத திறம் படச் செயற்படக் கேட்டுக்கொண்டது. அவை 1) வெளிப்படைத் தன்மை (Open-mess) 2) நீதிமுறை நழுவாமை(Fairn-ess) 3). நடுநிலைமை தவறாமை (Impartiality) ஆகியவை. மேற்கூறிய பரிந்துரைகள் இந்தியாவிலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன. சட்ட ஆணையம் தன்னுடைய 14-ஆம் அறிக்கையில் (1958), நிருவாக முறைத் தீர்ப்பாயங்கள் நீதித்தன்மை வாய்ந்த தீர்ப்புகளைத் தருவதால் அவை இயறகை நீதியைப் பின்பற்ற வேண்டுமென்று கூறியுள்ளது. சட்டத்தேவைக்கு உட்பட்டு, அவற்றின் நடைமுறைகளை ஒழுங்கு படுத்திக் கொள்ளத் தீர்ப்பாயங்கள பொதிந்துள்ள அதிகாரங்களைப் (Inherent powers) பெற்றுள்ளன.

**உள்ளுறைவுத் தீர்ப்பாயம்:** (Domestic Tribunal) சட்டம் குறிப்பிடுகின்ற முறைக்கேற்ப நிருவாகத் துறை முகவர் நிலை, தீர்ப்பாயங்களைத் தன னுள்ளே நிறுவி அவற்றின் மூலம் நீதித் தீர்ப்பு வழங்குகிறது. இவ்வாறு நிருவாகத் துறை முகவர் நிலை தன்னுள்ளேயே நிறுவும் தீர்ப்பாயங்கள் உள்ளுறைவுத் தீர்ப்பாயம் எனப்படும். எடுத்துக்காட்டாக, வருமான வரிச் சட்டம் வரி விதிக்கப்பட்டவர்களுக்கு (assessee) ஒவ்வொரு நிலையிலும் முறையிடவும், விசாரணை செய்யப்பெறவும் வாய்ப்பளிக்கின்றது. வருமான வரித்துறை அதிகாரிகள் முதலில வழக்கை விசாரிப்பார்கள். பின்னர், அவசியம் ஏற்படின் நீதித் தன்மை வாய்ந்த தீர்ப்பாய (Quasi-Judicial Tribunal) முன்னிலையில் வழக்குச் செல்லும். இவ்வாறாக, நிருவாகத் துறை முகவர் நிலையின தீர்ப்பினைப் பெறப் படிப்படியான நிலைகள உள ளன.

இவ்வாறே 1961 ஆம் ஆண்டைய வழக்குரைஞர்கள் சட்டம் (The Advocates Act, 1961), 1947-ஆம் ஆண்டைய தொழில் தகராறுகள் சட்டம் (The Industrial Disputes Act, 1947) போன்றவைகளிலும் முறையே வழக்கறிஞர், தொழிலாளி – முதலாளிகளிடையே எழும் சிக்கல்களைக் களைய உள்ளுறைவுத் தீர்ப்பாயங்கள் உண்டாக்கப்பட்டுள்ளன.

சட்டத்தினால் கொடுக்கப்பட்ட அதிகாரத்திற் கேற்ப, உள்ளுறைவுத் தீர்ப்பாயங்களின் அதிகாரங களும் தன்மைகளும் வேறுபடும். சட்டத்தில் உள்ளுறை

வுத் தீர்ப்பாயம் ஏற்படுத்த அதிகாரம்வழங்கவில்லை யானாலும் ஒழுங்குமுறைகள்பற்றி விசாரித்து நிருவாகத்துறைமுகவர் நிலைக்கு அறிவிக்க நிருவாகத் துறை முகவர்நிலை உள்ளுறைவுத் தீர்ப்பாயங்களை ஏற்படுத்தலாம். அவை, இயற்கை நீதி விதிகளைப் பின்பற்றவேண்டும்.

உள்ளுறைவுத் தீர்ப்பாயங்களின் தீர்ப்புகளில் சட்டம் பற்றிய சிக்கல் (Question of law) எழுமானால் தான் நீதிமன்றங்கள் நீதிமுறை மறு ஆய்வு (Judicial Review) செய்யக் குறுக்கிடும். உள்ளுறைவுத் தீர்ப்பாயங்கள் அறுதியிட்டுக் கூறிய செய்திகளைப் பற்றி நீதிமன்றம் எந்தவிதமான சிக்கலையும் எழுப்பாது; குறுக்கிடவும் செய்யாது ஆனால், சான்றுகளின்றிச் செய்திகள் அறுதியிடப் பட்டிருக்குமானால், நீதிமன்றம் குறுக்கிட்டு நீதிமுறை மறு ஆய்வு செய்யும்.

**இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் தீர்ப்பாயம்:** 1976-ஆம் ஆண்டைய 42-ஆம் திருத்தச் சட்டத்தின் மூலமாக 32-ஆம் பாகமாக 323-ஏ, மற்றும் 323-பி ஆகிய இரு பிரிவுகள் சேர்க்கப்பட்டன. பிரிவு 323-ஏ, மத்திய மற்றும் மாநில அரசுப் பணியில் இருப்போரின் பணிச்சேர்ப்பு (Recruitment) மற்றும் பணித்தனமை (Condition of service) ஆகியவை குறித்து எழும் சிக்கல்களைத் தீர்க்க நாடாளுமன்றச் சட்டத்தினால் நிருவாக முறைத் தீர்ப்பாயங்களை நிறுவ வழிவகை செய்கிறது. பிரிவு 323-பி யானது வரித் தொடர்பான புகார்கள், ஏற்றுமதி, இறக்குமதி, தொழிற்சாலை சார்ந்த தகராறுகள், அவற்றின் அலுவலர் பணி குறித்த சிக்கல்கள், இன்றியமையாப் பொருள்கள் வழங்கப்படுவதுகுறித்த முறைகேடுகள், மாநிலச்சட்டசபை, நாடாளுமன்றம் ஆகியவற்றிற்கான தேர்தல் பற்றிய வழக்குகள் ஆகியவற்றைமேற்கொண்டு தீர்ப்பு நல்கிட அதிகார எல்லை பெற்றுள்ளது.

மேற்கண்ட இரு பிரிவுகளினாலும் ஏற்படுத்தப்படும் தீர்ப்பாயங்களின் தீர்ப்பு, அனைத்து நீதிமன்றங்களின் நீதிமுறைமறு ஆய்வு(Judicial Review) செய்யப்படும் அதிகாரத்திற்கு உட்படாது. இத் தீர்ப்பாயங்களின் தீர்ப்பை எதிர்த்து மேல்முறையீடு செய்ய விரும்பின் அரசியலமைப்புச் சட்டப் பிரிவு 136-இன் கீழ் உச்ச நீதிமன்றத்திற்கு மட்டுமே மேல்முறையீடு செய்துகொள்ள முடியும். உச்ச மற்றும் உயர்நீதிமன்றங்களின் நீதிப் பேராணை (Writs)யின் பிரிவுகளான 32 அல்லது 226-க்கு இத் தீர்ப்பாயங்களின் தீர்ப்பு உட்படாது. பிரிவு 323-ஏ மற்றும் 323-பியின் நோக்கங்களாவன, சட்டத்தை நடைமுறைப்படுத்துவதில் நிலவும் தடைகளை அகற்றிச் சமூகப் பொருளாதார முன்னேற்றத்திற்கு வழி வகுப்பதாகும். அரசியல் சட்டத் திருத்தம் குறித்த சுவரன்சிங்கு பணிக்குழு, நீதிமன்ற நடவடிக்கைகளைத் தாமதப் படுத்துவதோடு, தரப்பினர்களுக்குப் பெருஞ் செலவையும் ஏற்படுத்தும் நீதிமன்ற நடவடிக்கைகளைக் களைந்து, விரைவில் நிவாரணம் கிடைத்திட வழி வகை செய்வதே இதன் நோக்கம் என்று தெரிவித்துள்ளது. தீர்ப்பாயங்களின் தீர்ப்புகளை எதிர்த்து உச்ச நீதிமன்றத்திறகு பிரிவு 136-இன் கீழ்மேல்முறையீடு செய்வதற்கான வழிமுறைகளை முன்னரே உச்ச நீதிமன்றம் வரையறை செய்துள்ளது.

***தீர்ப்பின் புறஉரை:*** எந்த ஒரு வழக்கிலும் வழக்கின் முடிவு அந்த வழக்கின் தீர்ப்புரையில Obiter dictum) அடங்கியிருக்கும் இந்தத் தீர்ப்புகள் வழக்கின் தரப்பாருக்கு மட்டும் பொருந்தக் கூடிய முடிவினையோ பொதுவாகக கடைப்பிடிக்க வேண்டிய கொள்கையினையோ தாங்கி நிற்கும்.

ஒரு தீர்ப்புரையை இரு பகுதிகளாகப் பிரிக்கலாம். அவை தீர்ப்பின் அகவுரை, தீர்ப்பின் புறவுரை என்பனவாகும். இதில் தீர்ப்பின் அகவுரை என்பது எந்த ஒரு விதியைப் (rule) பின்பற்றுவதன் வாயிலாகத் தீர்வு எட்டப்பட்டதோ அநத விதியினைக் காட்டுவதாக அமைகிறது. ஏனெனில் அந்தவிதியைத் தவிர வேறு ஏதாவது ஒரு விதியினை நீதிமன்றம் பின்பற்றியிருக்குமேயானால் அந்த வழக்கின் முடிவு வேறுவிதமாக அமைந்திருக்கும். எனவே, ஒரு தீர்ப்பின் அகவுரை என்பது அந்தத் தீர்ப்பின் உயிர்த்துடிப்புப் போன்றதாகும்.

இந்தியாவில் உச்ச நீதிமன்ற மற்றும் உயர் நீதிமன்றத் தீர்ப்புகள் இவவகை நீதிமன்றங்களின் கீழ் அமைந்திருக்கும் அத்தனை நீதிமன்றங்களாலும் பினபற்ற வேண்டிய ஒன்றாக அமைந்திருக்கிறது. ஏனெனில் மேற்கண்ட தீர்ப்புகள் இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தினால் அவ்வாறு அதிகாரம் மிகுந்ததாகக் காட்டப்படுகின்றன. இவ்வாறு பினபற்றத் தகுந்த தீர்ப்புகளில்கூடத்தீர்ப்பின் அகவுரை மட்டுமே பின்பற்றப்பட்டால் போதுமானது. தீர்ப்பின் புறவுரையைப் பின்பற்ற வேண்டிய தேவையில்லை.

தீர்ப்பின் புறவுரையானது, ஒருதீர்ப்பு அமைவதற்கு எந்த விதிகள் உயிர்த்துடிப்பாக விளங்கியனவோ அவை தவிரத் தீர்ப்புரையில் குறிப்பிடப்பட்ட ஏனைய செய்திகளைச் சுட்டி நிற்கிறது. தீர்ப்பின் புறவுரையை நீதிமன்றங்கள் பின்பற்ற வேணடும் என்ற கட்டாயம் இல்லை. இருந்தபோதிலும், இதைப் பயன்படுத்துவதும் பயன்படுத்தாமையும் நீதிபதிகளின் விருப்பத்திற்கு விடப்பட்டிருக்கிறது.

ஒரு வழக்கில் தீர்வுக்கு எடுத்துக் கொள்ளப் பட்ட பொருண்மைகள் பலவாக இருந்தும் அவற்றுள் ஒரே ஒரு பொருண்மையை மட்டும் ஆராய்வதின் மூலம் தீர்வு எட்டப்பட்டிருந்தால் ஏனைய பொருண்மைகளைக் குறித்துத் தீர்ப்புரையில் காட்டப் பட்ட செய்திகள் அனைத்தும் தீர்ப்பின் புறவுரையாக மட்டுமே அமையும்.

தீர்ப்பின் புறஉரையினைச் சுட்டிக்காட்டி வழக் கில் தன் கட்சிக்காரருக்குச் சாதகமான ஒரு போக் கினை உருவாக்க வழக்குரைஞர்கள் முயல்வது உண்டு. சில தீர்ப்பின் புறஉரைகள் பிறகாலத்தில் சில தீர்ப்புகளில் அகவுரையாகவும் மாற வாய்ப் புண்டு. ம.கா.

**தீர்ப்புவழிச் சட்டம்**: தீர்ப்பு வழிச்சட்டம் (Precedent) என்பது சட்ட மூலங்களுள் ஒன்றாக விளங்குகிறது. இந்தியச் சட்ட அமைப்பு ஆங்கிலச் சட்ட அமைப்பினை ஒத்து விளங்குவதால், ஆங்கிலச் சட்டவியலில் கூறப்பட்டுள்ள அனைத்துச் சட்ட மூலங்களும் இந்தியருக்கும் சட்டமூலங்களாகத் திகழ கின்றன.

இங்கிலாந்தில் தொன்றுதொட்டே நீதிபதி களின் தீர்ப்புகள் இயற்றப்பட்ட சட்டங்களுக்கு நிக ரான அதிகாரம் கொண்டதாகக் கருதப்பட்டன. இன்றைய இங்கிலாந்தின் இயற்றப்படாத சட்டம் (Common Law of England) அரச நீதிமன்றங்களில் வீற்றிருந்த நீதிபதிகளின் தீர்ப்பையே கருப்பொரு ளாகக் கொண்டு இலங்குகிறது.

வேறுநாடுகளில் கூட நீதிமன்றங்களின் பழைய தீர்ப்புகள் முன்மாதிரியாகக் காட்டப்பட்டு வழக்காடு கின்ற முறை இருந்து வருகிறது. இருப்பினும் அவை ஆங்கில நீதிமன்றங்களில் ஏற்றுக் கொள்ளப்படுவதைப் போல சிலநாட்டு நீதிமன்றங்களில் மட்டுமே ஏற்றுக் கொள்ளப் படுகின்றன. இவ்வாறு வெவ்வேறு நாடு களில் தீர்ப்புவழிச் சட்டம் வெவ்வேறு அதிகாரங் களைப் பெற்றுத் திகழ்வதால், தீர்ப்புவழிச் சட்டம் என்ற சொல் அது பெற்றிருக்கும் அதிகாரத்தின் அடிப்படையில் இரண்டு பொருளை உணர்த்துவதாக அமைகிறது என்பார் சட்டவியல் வல்லுநர் சால மண்டு.

முதலில், தீர்ப்புவழிச் சட்டம் என்ற சொல் உயர் நீதிமன்றங்களால் தரப்பட்ட பழைய தீர்ப்பு களைக் குறிக்கிறது. எனவே, இத்தீர்ப்புகள் நடை பெற்றுக் கொண்டிருக்கின்ற ஒரு வழக்கின் முடிவைத் தீர்வு செய்வதற்கு உதவுகின்ற மேற்கோளாக நீதி மன்றத்தில் காட்டத் தக்கனவாக அமைகின்றன. சில நாட்டு நீதிமன்றங்களில் இவ்வாறு மேற்கோளாகக் காட்டப்பட்ட வழக்கினைப் பின்பற்றித் தீர்ப்புகள் தருவதும் பின்பற்றாது விடுவதும் அந் நீதிமன்றத்தின் உளத்தேர்வுக்கு விட்டு விடப்பட்டிருக்கின்றன. ஆனால், சில நாட்டுச் சட்ட அமைப்புகளில் நீதிமன் றத்தால் தரப்பட்ட தீர்ப்புவழிச் சட்டமானது சட்ட மூலங்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது.எனவே, உச்ச நீதிமன்றத் தீர்ப்புகளும் உயர்நீதிமன்றத் தீர்ப்பு களும் அவற்றிற்கு கீழ் அமைந்திருக்கும் நீதிமன்றங் களால் சட்டமாகக் கருதப்பட்டு அவற்றின் அடிப் படையில் நீதி வழங்கப்படுகிறது.

ஆங்கில மற்றும் இந்தியச் சட்ட அமைப்புகள் மேற்கூறியவற்றுள் இரண்டாம் வகையைச் சார்ந்து நிற்பதால், இங்கு உச்ச நீதிமன்றத் தீர்ப்புகள் தீர்ப்பு வழிச் சட்டமாகக் கொள்ளப்பட்டு அவ்வடிப்படை யில் நீதி வழங்கப்படுகிறது. இதனால் கீழ் நீதி மன்றங்களில் பணிபுரியும் நீதிபதிகளும், நடுவர்களும் உச்ச நீதிமன்ற மற்றும் உயர் நீதிமன்றத் தீர்ப்புவழிச் சட்டத்திற்குக் கட்டுப்பட்டவர்கள் என்பது நனகு புலனாகும். ம.கா.

**தீர்ப்புவழிப் பிரிந்துறைதல்**: திருமணத் தீர்வழிகள், கலந்துறை உரிமை மீட்டடைவிப்பு (Restitution of Conjugal rights) தீர்ப்பு வழிப் பிரிந் துறைதல் (Judicial separation) இல்லா நிலையாக் கும் ஒரு தீர்ப்பாணை வழியாகத் திருமணத்தைச் செல்லாமலாக்குதல் (Annulment by a decree of nullity) மணமுறிவு (Divorce) எனப் பலவகைகள் உண்டு. திருமணத் தீர்வழியின் (Matrimonial rem edy) தலையாய பணி குற்றமற்ற தரப்பினருக்குப் பாதுகாப்பு அளித்தல் ஆகும் இந்த ஒவ்வொரு தீர் வழியும் ஒவ்வொரு பண்பு கொண்டது. கலந்துறை உரிமை மீட்டடைவிப்பு திருமணத்தைப் பேணுதலை யும் தரப்பினரை ஒருங்கிணைத்தலையும் நோக்க மாகக் கொண்டது. தீர்ப்புவழிப் பிரிவுறைவு தீர்வழி யில் சட்டப்படி, வாழ்க்கைத் துணைவர் (spouses) தனியே வாழ அனுமதிக்கப்படுகின்றனர். அவர்களது உரிமைகளும் கடப்பாடுகளும் நிறுத்தி வைக்கப்படு கின்றன. மணமுறிவில் திருமணம் கலைக்கப்படுகிறது. அவர்களது பிரிவு முழுமையாகவும் இறுதியாகவும் முடிகிறது. மறுமணம் செய்து கொள்ளவும் உரிமை யுண்டு. திருமணத்தின் தரப்பினர் தம் விருப்பப்படி இதில் ஏதாவது ஒரு தீர்வழியைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

திருமணத்தைப் பொறுத்த வரையில் ஒவ்வொரு வரும் தமது இனமுறைச் சட்டத்தினால் (Personal laws) ஆளப்படுவர். இந்துக்கள், 1955-ஆம் ஆண்டு இந்து திருமணச் சட்டத்தினாலும், பார்சிகள்

1936–ஆம் ஆண்டு பார்சிகள் திருமண மற்றும மண முறிவுச சட்டத்தினாலும், முசுலீம்கள் இசுலாமிய சட்டத்தினாலும, கிறித்துவர், 1869–ஆம் ஆண்டு கிறித்துவத் திருமணச் சட்டத்தினாலும் ஆளப்படுவர்.

முதலில தீர்பபுவழிப் பிரிந்துறைதல் பற்றிய 1955-ஆம் ஆண்டு இநது திருமணச் சட்ட வாசகங களைக் கவனித்தால அச்சட்டத்தின 10-ஆம் பிரிவு தீரப்புவழிப் பிரிநதுறைதல தீரவழியைக குறித்த சட்டவிதியினை எடுததுரைப்பது புலனாகும். தீரபபு வழிப்பிரிவுறைவு எனபது திருமணத்தை முறிக்காமல ஒருவனும ஒருத்தியும கணவனும மனைவியும போன்று உடனுறைநது வாழாமல் பிரிந்து வாழ வகை செய்யும்நீதிமனற உத்தரவாகும். இதனபடி திருமணத தரப்பினர் தனியே பிரிநது வாழ உரிமையுணடு இயலபான திருமண வாழ்வையும், மனுதாரர் மற்ற வருடன சோந்து வாழவேண்டும என்ற கடப்பாட் டினையும அது நிறுததி வைககிறது ஆனால திரு மணததை அது கலைப்பதிலலை. அதற்கான தீர்ப பாணைக்குப பிறகும் அது (திருமணம) தொடாந்து செயலிலேயே இருககும. தரபபினரிடையேயான வேற்றுமையைககளையவும், மீணடும அவர்கள ஒன்று சேரவும வாய்பபளிகக இது வகை செயகிறது. இத னிடையில் மறறொரு திருமணததைச செயயத தரப் பினா அனுமதிக்கபபட மாட்டார்கள. இககால கட்டத்தில தரபபினருள ஒருவா பிறாமனை புணர் தல் குற்றததினைப் புரிநதால, அதுவே மறறத தரப் பினர் மணமுறிவு பெற நல்லதொரு காரணமாகும். தீர்ப்புவழிப் பிரிநதுறைதல் தீரப்பாணையினபடி தனித்தனியே பிரிநது வாழும் கணவனும மனைவியும ஒனறு சேர விரும்பினால அதற்குத தடையேதும் இல்லை. 10-ஆம் பிரிவின உட்பிரிவு (2) இனபடி இதற்காகக கொடுககப்படும் மனுவில் கணடுள்ள வாசகங்களின உணமையினை அறிந்து மனநிறைவு கொணட பிறகு நீதிமனறம தனது முநதைய தீர்ப் பாணையை நீக்குதல செயது, இதற்கு வழிவகுக்கும் இதறகுப் பினனர்த திருமணததிற்கான சடங்குகள் ஏதுமின்றி மீண்டும் தஙகளது இயலபான மண வாழ்வினைக் கணவனும் மனைவியும் தொடரலாம். ஆனால் பிரிநதுறைதல் தீரப்பாணை நிறைவேற்றப பட்டு ஓராணடு அல்லது அதறகு மேற்பட்ட காலத திற்கு அவர்களிடையே ஒனறுபடுதலோ மீண்டும் உடனுறைதலோ இலலையெனில் பிரிவு 13 (IA) (i) இனபடி தரப்பினருள் எவரும திருமணக கலைப்பிற் கான (Dissolution of marriage) மனுவினைத தாக்கல் செய்யலாம்.

தீர்ப்புவழிப் பிரிந்துறைதலுக்கான மனுவினைத் திருமணத் தரப்பினருள் எவரேனும் தாககல் செய்ய லாம். இத்தீர்ப்பாணையைப் பெறுவதற்கான கார ணங்கள, திருமண முறிவுக்குள்ளவை போன்றவையே. பிரிவு 13 உட்பிரிவு 2-இனபடி மனைவிககு மேலும் சில காரணங்கள உணடு. திருமணமானது இநது திருமணச் சட்டம இயறறப்படுவதற்கு முனன தாகவோ பினனரோ நடைபெறறதாக இருக்கலாம். மனுதாரர் தமது சொந்தத் தவற்றின மேல ஆதாயம பெற்றதாக இருக்கக்கூடாது.

இநது திருமணச் சட்டத்தின 10-ஆம் பிரிவு, 1976-ஆம் ஆணடில திருத்தபபட்டது. பழைய பிரி வினகீழ்ப் பொறுபபு விட்டேகுதல, கொடுமைப் படுததுதல், ஓராணடுககு மேறபட்ட கொடிய தொழு நோய, மூனறாணடுக காலத்திறகு மேற்பட்ட மேக நோய, இரணடாணடிறகும மேற்படடுத் திடசிததம இல்லாமை, எதிர்மனுதாரா பிறாமனை புணர்தல போனற ஆறு காரணஙகள கூறபபட்டிருநதன. 1976-ஆம ஆணடில திருத்தச் சட்டம் 10ஆம பிரிவின உட் பிரிவு ஒனறினைப பெரும்பாலும் நீககிவிட்டு, பிரிவு 13இல் மணமுறிவுக்குக் கூறப்பட்டுள்ள காரணஙகளை (Grounds) ஏறறுக கொணடுள்ளது எனறே கூற லாம். இததிருததத்திற்குப் பிறகு தீரப்பாணை பெறு வதற்கான காரணங்கள மணமுறிவிறகும தீர்ப்பு வழிப் பிரிந்துறைதலுககும் ஒனறாக இருப்பதால, இவவிரணடு பிரிவுகளுக்கும் உள்ள வேறறுமை ஒன்றேதான. மணமுறிவுககு மனுச் செயவோர் திரு மணததிறகுப் பிறகு ஓராணடுககாலம் காததிருகக வேணடும. ஆனால தீர்பபுவழிப் பிரிநதுறைதலுக கான மனுவை உடனே தாககல் செய்யலாம். திரு மணக் கலைப்பை வேணடாதோா 10ஆம் பிரிவின கீழத தீரபபுவழிப் பிரிந்துறைதலுக்கும திருமணக் கலைப்பை வேணடுவோா 13ஆம் பிரிவினகீழ மண முறிவிற்கும் வழககுத் தொடுக்கலாம.

**தீர்ப்பு வழிப் பிரிந்துறைதலுக்கான காரணங்கள்:** 1) திருமணத்திற்கு அப்பாறபட்ட உடலுறவு (பிறர் மனை புணர்தல்), 2) குறைநதது இரணடாணடிற்கு மேற்பட்ட பொறுப்பு விட்டேகுதல (Desertion), 3) கொடுமைப்படுததல் (Cruelty), 4) மதமாற்றம், 5) திடசித்தம் இல்லாமை, 6) பரவும் தனமை கொணட மேகநோய, 7) கொடிய தீர்க்கமுடியாத தொழுநோய், 8) துறவறம மேறகொளளுதல், 9) குறைந் தது 7 ஆணடுகளாக உயிரோடு இருககிறார் எனறு கேள்விப்படா நிலை. மனைவிக்கு மட்டும் கீழ்க்காணுமகாரணங்களும பொருநதும் 10) கணவன், கறபழிப்புப் போன்ற குற்றங்களுக்குக குற்றம் சாட்டப்படல, 11) இநதுத் திருமணச் சட்டம் செய லுக்கு வருமுன நடைபெற்ற திருமணத்தில், மனு தாக்கல் செய்யபபடும் போது கணவன வேறொரு மனைவியைக் கொணடிருத்தல, 12) இந்து தத்

தெடுப்பு மற்றும் மகவேற்பு சட்டத்தின அல்லது குற்ற விசாரணை நடைமுறைச் சட்டத்தின்கீழ்ப் பெறப்பட்ட வாழ்க்கைப் பொருளுதவிக்கான தீர்ப் பாணை பெற்றுக் குறைந்தது ஓராணடுக்கு மேற பட்டு உடனுறைவு இல்லாமை, 13) குழந்தைத் திரு மணத்தை மறுதளித்தல் என்பன.

கிறித்தவர்களைப் பொறுத்தமட்டில, கி.பி. 1869 ஆம் ஆணடு இந்திய மணமுறிவுச் சட்டததின் 22ஆம் பிரிவுதீர்ப்புவழிப் பிரிந்துறைதலை எடுத்துரைக்கிறது. பிறன்மனை புணர்தல், கொடுமைப்படுத்தல், தகக காரணமின்றி இரண்டாணடு அல்லது அதறகு மேற் பட்டுப் பொறுப்பு விட்டேகுதல் ஆகியவற்றைக் கார ணம் காட்டி, கணவனோ மனைவியோ தீர்பபுவழிப் பிரிந்துரைதலுக்கு மனு தாக்கல் செய்யலாம். இசசட் டம் தீர்ப்பாணையினகீழ்த தனியே பிரிநதுவாழும் மனைவிக்கு ஒரு சிறப்பு உரிமையை அளிக்கிறது. தீரப் பாணைக்குப்பிறகு அவர் பெறும் எந்தச்சொத்தைப் பொறுத்தமட்டிலும் மணமாகா மாதுபோல கருதப்படுவார். அசசொத்தின் மேல கணவனுக்கு எவ்வித உரிமையோ, அதிகாரமோ கிடையாது. மனைவி அதனைத் தனது சொந்தச் சொத்துபோல் பாவிக்கலாம். மேலும், ஒப்பந்தஙகள, உரிமையியல் உரிமைகளுக்கு தனியே உரிமை உணடு. அவர் தனி யாக மற்றவா மீது வழக்கிடவோ, அவர்மீது மற்ற வர் வழக்கிடவோ உரிமையுணடு கணவர் பொறுப் பாகார், தீர்ப்புவழிப் பிரிந்துறைதல தீர்ப்பாணையை இரத்து செய்ய மனைவியோ கணவரோ வழக்கிட லாம்.

மேலும், 1936-ஆம் ஆண்டின் பார்சிகள திரு மணம் மற்றும் மணமுறிவுச் சட்டமும் தீர்ப்புவழிப் பிரிந்துறைதலுக்கு 34ஆம் பிரிவின்கீழ் வகை செய்துள் ளது. மணமுறிவு பெறுவதற்கான காரணங்களுள் ஏதாவது ஒன்றின்பேரில் கணவனோ, மனைவியோ வழககிடலாம். மணமுறிவுக்கான காரணஙகள் இச சட்டத்தின் 32ஆம் பிரிவில கூறப்பட்டுளளன. இது மட்டுமன்றி, கணவனோ மனைவியோ கொடுமைப் படுத்துதல் அல்லது தனிப்பட்ட வன்முறையைக் காரணங்காட்டியும் மனுத்தாக்கல் செய்யலாம்.

பல்வேறு சமயங்களைப்பின்பற்றுவோர் 1954 ஆம் ஆண்டு சிறப்புத் திருமணச் சட்டத்தின் (The Special Marriage Act, 1954)கீழ்த் திருமணம செய்து கொளள லாம். இது மதச் சார்பற்ற திருமணமாகும். இச்சட் டத்தின்கீழ் மணம் புரிந்துகொணடோர் இச்சட்டத் தின் 23ஆம் பிரிவின்கீழ்த் தீர்ப்புவழி பிரிந்துறைதல் தீர்ப்பாணை பெற மனுச் செயயலாம். தீர்ப்புவழிப் பிரிந்துறைதல் குறித்த இச்சட்ட விதிகள ஏறத்தாழ 1955 ஆம் ஆண்டின் இநது திருமணச் சட்டத்தின வாசகங்களைப்போனறன. மணமுறிவுககுக் கிடைக்கக கூடிய காரணஙகள ஏதேனும் ஒன்றின்கீழ்த் தீர்ப்பு வழிப் பிரிந்துறைதலுக்கு மனுச செய்யலாம். மண முறிவுககான காரணஙகள 27ஆம் பிரிவில் கூறப்பட் டுள்ளன. மதமாறறம, மணமுறிவுககுக காரணம் ஆகாது. இந்து திருமணச சட்ட விதிகள இதனைக குறித்தும் அப்படியே பொருந்தும. ஆ.ச.

***தீர்மானம்***: தீரமானம் என்பது ஒரு நிறுமக கூட்டத்தில கலநது கொள்ளும் உறுப்பினர்களின் ஒரு மனதான அல்லது அவர்களில பெரும்பானமையோர் களின் ஒன்றுபட்ட முடிவாகும். கூட்டத்தில் கலந்து கொளவோர் ஒரு குறிப்பிட்ட பொருள பற்றி வெளி யிட அதைப பெருமபாலோர் ஏற்றுக் கொணடால் அது தீர்மானமாக நிறைவேற்றப்படுகிறது நிறுமத தின பல்வகைக் கூட்டஙகளில விவாதிககும் பொருள கள பெரும்பாலோருக்கு ஏற்கும் வகையில் இருந்தால் அமமுடிவுகள தீரமானங்களாக ஏறறுக கொளளப் படும்,நிறைவேறறப்படும். பஙகுதாராகளின பொதுக கூட்டங்களில் நிறைவேறறப்படும் தீர்மானங் களைத் தவிர, ஏனையக் கூட்டஙகளில் நிறைவேற றப்படும் தீர்மானஙகள் பாகுபாடு செய்யப்படுவ திலலை. பங்குதாரர்களின் பொதுக்கூட்டஙகளில நிறைவேற்றப்படும் தீரமானம் (Resolution), சாதாரணத தீரமானம் (Ordinary Resolution) சிறப்புத் தீர்மானம் (Special Resolution), சிறபபு அறிக்கை வேணடும் தீர்மானம் (Resolution Riquiring Special Notice)எனறு மூனறுவகைப்படும. குறிப்பிட்ட பொருளபற்றி எந்த வகையான தீர்மா னங்கள நிறைவேற்றப்பட வேண்டும் எனறு நிறுமக் கட்டமும, அதன் செயலமுறை விதிகளும் கூறுகின றன.

**சாதாரணத் தீர்மானம்:** பொதுவாகச் சாதா ரணப் பொருள்கள பற்றி இத்தீரமானம நிறைவேற றப்படுகிறது. அதாவது தணிக்கை செய்யபபட்ட ஆணடுக் கணக்குகளை ஏற்றல, இயக்குநா அறிக்கை ஏறறல், தணிக்கையாளர் அறிக்கை ஏறறல், ஓயவு பெறும் இயக்குநாகளுக்குப் பதிலாக இயக்குநர்களை அமர்த்தல்,இலாப ஈவு(Dividend)அளிததல, தணிகதை யாளர்களை அமர்த்தல - அவர்களின ஊதியம நிருண யம செய்தல் போன்ற பொருளகளுக்குச சாதாரணத் தர்மானஙகள் தேவை. ஆண்டுப் பொதுக் கூட்டத்தில எடுத்துக் கொள்ளப்படும் ஏனைய பொருள்கள சிறப்புப் பொருள்களாகக் கருதப்படும். சிறப்புப பொதுக கூட்டத்தில் எடுத்துக் கொளளப்படும் பொருள்களும் சிறப்புப் பொருள்களாகும் எனவே சிறப்புப் பொருள்கள் பற்றி நிறைவேற்றப்படும் தீர மானங்கள சாதாரணத் தீர்மானஙகளாகவோ, சிறப

புத் தீர்மானங்களாகவோ இருக்கலாம். இவற்றில் எப்பொருளுக்கு எத்தீர்மானம் நிறைவேற்றப்பட வேண்டும் எனபதை நிறுமச் செயல்முறை விதிகள விளக்குகின்றன. எடுத்துக்காட்டாக நிறுமம அனுமதித்த முதலை மிகைப்படுத்துதல், பங்குகளை வட்டத்தில் அலலது தளளுபடி விலையில் (Discount) வெளியிடல, இலாபத்தை முதலில் சேர்த்தல் (Capitalisation of Profits) மேலூதியப் பங்குகளை வெளியிடல் போன்றவை அனைத்தும் சிறப்புப் பொருள்களே, என்றாலும இவறறைப் பற்றிய தீர்மானங கள் சாதாரணத் தீர்மானங்களாக, இருந்தால போதும் எனறு நிறுமச்சட்டம் கூறுகிறது.

முறையாகக் கட்டப்பட்ட நிறுமப் பொதுக்கூட்டத்தில கலந்து கொணடு வாக்களிக்கும உரிமையுள்ள உறுபபினர்களின சிறு அளவுப் பெருமபானமை ஆதரவோடு நிறைவேற்றப்படும் தீாமானஙகள் சாதாரணத் தீர்மானங்கள எனப்படும். சிறு அளவுப் பெரும்பானமை ஆதரவு என்பது ஒரு தீர்மானத்திறகு ஆதரவாக அளிக்கப்படும் வாக்குகள் அதற்கு எதிராக அளிக்கப்படும் வாக்குகளைக் காட்டிலும் ஒரு வாக்கு மிகுதியாக இருநதாலே போதும். தலைமை தாஙகுபவரின அறுதி வாக்கும் (Casting Vote) இதிலடங்கும். ஆதரவாகவோ, எதிராகவோ வாக்களிக காதவர்கள் கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட மாட்டார்கள். கூட்டத்திற்கு நேரில் வந்தும் வாக்களிக்கலாம் அல்லது பதிலாள (Proxy) மூலமும் வாககளிக்கலாம். வாக்களிப்பு கைதூக்கும் முறையிலோ வாக்குப் பதிவு முறையிலோ நடைபெறலாம். கைதூக்கும முறையில் பதிலாள மூலம் வாககளிக்க முடியாது செயல்முறை விதிகள் அனுமதித்தால் வாக்களிக்கலாம். பஙகு முதலை மாற்றியமைக்கும் சாதாரணத் தீாமானம் தவிர மற்றவறறைப் பதிவாளரிடம்தாககல செய்ய வேண்டிய தேவையில்லை.

**சிறப்புத் தீர்மானம்:** இத்தகைய தீர்மானம் நிறைவேற்ற கீழ்க்காணும் நிபந்தனைகள் தேவைப்படுகினறன. 1) இத் தீர்மானங்கள் கொண்டு வரப்படும் பொதுக்கூட்டம் பற்றிய அறிக்கை 21 நாள்களுக்கு முன்னதாக உறுப்பினர் அனைவருககும் அனுப்பப்பட வேண்டும். 2) அவ்வறிக்கையில் இவை சிறப்புத் தீர்மானங்களாக முன் மொழியப்படவிருககின்றன என்பது தெளிவாகக் கூறப்பட்டிருகக வேண்டும். 3) இத் தீர்மானத்திற்கு ஆதரவாக அளிககப்படும் வாக்குகள் அதற்கெதிராக அளிக்கப்படும் வாககுகளைப் போல் மூன்று மடங்கு இருக்க வேண்டும்.அதாவது நான்கில மூன்று பகுதி வாக்குகள அத்தீர்மானத்திற்கு ஆதரவாக இருக்க வேண்டும்.வாக்களிககாமல்நடுநிலைவகிபபோர்தளைக் கணக்கில் எடுத்துக் கொள்ளக்கூடாது. மற்றபடி சாதாரணத் தீர்மானத்திற்குரிய நிபந்தனைகள இதற்கும் பொருந்தும்.

நிறும அமைப்பு முறையேட்டின் விதிகளை மாற்ற, முதலைக் குறைக்க, செயல்முறை விதிகளைத திருத்த, இயக்குநரின பொறுப்பை வரையறுப் பொறுப்பாக மாற்றச் சிறப்புத் தீர்மானம் தேவை. இவற்றின் ஒவவொரு படியையும் அவை இயற்றப் பட்ட 30 நாள்களுக்குள் நிறுமப் பதிவாளரிடம் சேர்க்கபபட வேணடும்.

**சிறப்பு அறிக்கை வேண்டும் தீர்மானம்** இத் தீர்மானஙகள் சாதாரணத் தீர்மானஙகளாகவோ, சிறப்புத் தீர்மானங்களாகவோ இருககலாம். இத் தகைய தீர்மானத்தை 1956–ஆம் ஆண்டு நிறுமச சட்டம்தான் புகுத்தியுளளது. சில குறிப்பிட்ட பொருள்களைப் பற்றிய தீர்மானங்கள் இவவாறு தான நிறைவேற்றப்பட வேணடும் என அது இயம்புகிறது. இதனை முன் மொழிய விரும்புவோர் இது பற்றிய சிறப்பு அறிக்கையைக் கூட்டம் நடபபதறகு 14 நாள்களுக்கு முன்னதாக நிறுமத்திற்கு அனுப்ப வேண்டும். ஆனால், இவ்வறிககையை நிறுமத்திற்குக் கொடுக்கும் நாளும கூட்டம் நடககவிருக்கும் நாளுமம நீங்கலாக 14 நாள்கள இருக்க வேணடும். நிறுமம் இச்சிறப்பு அறிக்கையைப் பஙகுதாரர் அனைவருக்கும் அனுப்ப வேணடும். அவவாறு அனுப்ப முடியாத நிலையில செயதிததாள விளம்பரம் மூலம் அல்லது செயல்முறை விதிகள கூறிய பிறவழி மூலம் கூட்டம் நடக்கவிருக்கும் 7 நாளகளுக்கு முன்னர் பஙகுதாராகளுக்குத் தெரிவிக்க வேணடும். ஓய்வு பெறும் தணிக்கையாளரை மறுபடியும நியமிக்கக் கூடாது எனக் கூறும் தீாமானம, ஓயவு பெறும் தணிக்கையாளரை அலலது வேறு தணிககையாளரை நியமிகக வேண்டும் எனக் கூறும தீாமானம், பதவிக்காலம் முடியுமுன குறிப்பிட்ட இயககுநரை விலக்க வேண்டும் எனககோரும் தீர்மானம், விலக்கப்படும் இயக்குநருககு மாறாக வேறொருவரை இயககுநராக அமர்தத வேண்டும் எனக்கூறும் தீர்மானம் போன்ற தீர்மானங்களை நிறைவேற்றிட இத்தகைய சிறப்பு அறிக்கை தேவையென நிறுமச் சட்டம் கூறுகிறது. கே.என்.இரா.

**துணைநூல்கள்:**

Ashok, Bagrial K , Company Law, Vikas Publishing House Pvt. Ltd,, New Delhi, 1982.

Kapoor, Mercantile Law, S. Chand & Co., New Delhi, 1985.

**தீர்வகம்:** ஒரு வங்கி தன் வாடிக்கையாளர்களுக்காகப் பிற வங்கிகளின்மீது எழுதப்பட்ட

காசோலைகளுக்குப் பணத்தைப் பெறும்வகையில் கணக்கைத் தீர்த்துக்கொள்ளும் இடம் வங்கிகளின் தீர்வகம் (Banker's Clearing House) எனப்படும் வணிகர்களும மற்றையோரும் தாங்கள் தரவேண டிய பணத்திறகுக் காசோலை எழுதி அதை அஞ்சல மூலம் அனுப்பி வைக்கிறார்கள். அதைப் பெறுபவர் கள் அபபணத்தை வசூலிப்பதற்காக அதை வங்கியில தஙகள கணக்கில் செலுத்துகின்றனர். இவவாறாக ஒவவொரு வஙகியின கிளையும், நாட்டின எலலாப் பாகஙகளிலிருந்தும் மறற வங்கிகளினமேல் எழுதப் பட்ட காசோலைகளைப பெறுகின்றன. அவ்வாறே ஒவவொரு வங்கியின் கிளையும் தங்களின் வாடிககை யாளாகளால எழுதப்பட்டு மற்ற வங்கிகளின் மூலம் வசூலிக்கப்படும் காசோலைகளுக்குப் பணம தர வேணடியிருக்கும. இவவாறே ஒவவொரு நாளும் ஒவ்வொரு வங்கியின கிளையும் ஆயிரக்கணக்கான காசோலைகளுக்குப் பணததைச் செலு; தியும, அவ வாறே தஙகளிடம் வந்துள்ள ஆயிரக்கணக்கான காசோலைகளுக்குப் பணததைப் பெற்று வாடிக்கை யாளா கணக்கில வரவு வைத்தும் தங்கள பொறுப்பை நிறைவேறறுதல வேணடும். இப்பணியை வங்கிகளின தீர்வகம் எளிதாக்குகிறது. தீர்வகங்கள் இல்லை யெனில் வங்கிகளுக்குத் தங்கள் வாடிககையாளர் களால் தரப்படும காசோலைகளை வசூலிபபது எளிய செயலன்று. ஒவவொரு வங்கியும் தனிப்பட்ட காசோலைகளுடன் பணியாளர்களை அனுப்பி அவற் றிற்குரிய மதிப்பைப் பணமாக ஒவ்வொரு வங்கியிட மிருந்தும் பெற்றுவர வேண்டும் அவ்வாறே மற்ற எல்லா வங்கிகளுககும் அவற்றிறகுச் சேரவேண்டிய, வசூலிக்கக்கூடிய காசோலைகளைப பணமாகத் தர வேண்டியிருக்கும். இதனால ஒவவொரு வங்கியும பணததை ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திறகுக் கொணடுசெல்லவேண்டிய அவசியத்திறகும, மிகக் கூடுதலான அளவிறகுப் பணத்தை வைத்திருக்கவேண டிய அவசியத்திறகும் ஆளாகினறன.

ஆனால தீர்வக வசதி இருக்கும் இடத்தில் வங கிககு இத்தகைய தொல்லைகள் குறைகின்றன. தீர்வகம் செயற்படும் முறையை விளக்குவதன்மூலம் இதை நன்கு அறியலாம். இருப்பு வஙகி (Reserve Bank) நாட்டின் மைய வங்கியாக நிறுவப்பட்டபின் அது தீாவகஙகளை மேற்பார்வையிடும் பொறுப்பை ஏறறிருககிறது. தீர்வக வசதியைப் பெறுவதற்கு அதன உறுப்பினர்களான வங்கிகள மைய வஙகி யுடன தாஙகள் வைத்திருக்கும் கணககைப் பயன படுத்திக கொ்ள்ளலாம். மைய வங்கியின கிளைகள இல்லாத இடங்களில் பாரத வஙகி (State Bank of India) தீர்வகத்தின் பணிகளைச் செய்து தருகிறது.

தீர்வகத்தின மூலமாக வங்கிகள் தாஙகள் மொத்தமாகத் தரவேண்டிய தொகையில் தங்களுக்கு வரவேணடியதைக் கழித்துவிட்டு நிகர தொகைக்குத் தாங்கள் வைததிருககும் மைய வங்கியின் கணக்கில் சரிசெய்து கொளகின்றன. இதற்காக ஒரு நகரி லுள்ள எல்லா வங்கிகளும தங்களிடம வசூலிப்பதற்கு வந்து சேர்நதுளள காசோலைகளுடன் தஙகள் பணி யாளர் ஒருவரை ஒரு குறிப்பிட்ட இடததிற்கு குறிப் பிட்ட நேரத்தில் அனுப்பி வைக்கினறன. அவ்வாறு அவர்கள கூடும் இடமதான தீர்வகம் எனப்படும. அது மையவங்கியின் அலுவலகக் கட்டடமாகவோ, மாநில வங்கியின அலுவலகக் கட்டடமாகவோ இருக் கும். அங்கு ஒவவொரு வங்கியும் தாங்கள வசூலிக்க வேணடிய காசோலைகளைச செலுததும், அவவாறே தங்களிடமிருநது மறற வங்கிகள வசூலிககவேணடிய காசோலைகளைப் பெற்றுககொள்ளும். அவற்றில ஏறறுக்கொள்ளத தக்கதாக இலலாத காசோலை களும, பணம் தர மறுக்க வேண்டிய காசோலை களும் உடனே திருப்பித் தரப்பட்டுவிடும். இவ்வாறு தீாவகத்தில் கூடியுள்ள ஒவவொரு வங்கிககும் தாங கள் மொத்தத்தில் தரவேணடிய தொகை, அவவாறே மற்ற வங்கிகளிடமிருந்து மொத்தத்தில்பெறவேணடிய தொகை எவ்வளவு எனபது தெரியும். இவ்விரணடும் ஒன்றுக்கொன்று சரி செய்யப்படும்போது நிகரமாக ஒவ்வொரு வங்கியும்மொத்ததில ஒரு தொகையைத் தரவேணடியோ பெறவேணடியோ வரும். பெறவேணடியிருப்பின அது மைய வங்கியில வைத திருக்கும கணக்கில் அத்தொகை கூட்டப்படும. தர வேண்டியிருப்பின் மைய வங்கியின கணக்கில் அத் தொகை கழிக்கப்படும்.

இம்முறையின மூலமாக வங்கிகள ஒவ்வொரு வங்கிககும சென்று தாங்கள் வசூலிக்கவேணடிய பெரும் தொகையைப் பணமாகப் பெற்றுத் தங்கள் அலுவலகத்திற்குக் கொண்டுவர வேண டிய ஆபத்திற்குரிய பணி தவிர்க்கப்படுகிறது. மேலும வஙகிகள தாஙகள பெற்றுக்கொள்ள வேண்டிய அல்லது தரவேண்டிய தொகையை மைய வங்கி யில் வைத்திருக்கும் கணக்கினமூலம் சரி செய்து கொள்கின்றன. மற்றும் தீர்வகங்கள் இல்லையெனில் ஒவவொரு நாளும் வங்கிகள் தங்களமேல் எழுதப் பட்டு மற்ற வங்கிகளால் வசூலிக்கச் செலுத்தப் படும் காசோலைகளுக்காகப் பெரும் தொகையை வைத்திருக்க வேணடும். ஆனால் தீர்வகங்கள் செயற் படுவதால் அங்கு ஒவ்வொரு வங்கிக்கும் தான பெற வேணடிய தொகையைக் கழித்து நிகரத் தொகைக்குக கணககுகள்சரி செய்யப்படுகினறன.ஒவ்வொரு நாளும ஒரு குறிப்பிட்ட நேரத்தில மட்டும் கூடிக் கணககுகள் சரிசெய்யப்படுவதால் வங்கிகளின பணிபபளுவும் இத னால் குறைகிறது. இவவாறு தீர்வகங்கள வங்கிகளின செயல் முறையின் இனறியமையாத உறுப்புகளாக

அமைந்திருக்கின்றன. வணிக நிறுவனங்கள் பேரள விற்குத் தங்கள் வரவு செலவுகளைக் காசோலைகள் மூலமாக நிகழ்த்திவரும் இக்காலத்தில் தீர்வகங்கள் ஏதேனும் ஒரு நாளுக்குச் செயற்படாத தவறினாலும் கூட வங்கிகளின் இயக்கம் தடைபட்டு வணிக நிறுவனங்கள் பெரும் தொல்லைகளுக்கு உள்ளாக நேரிடும்.

ஆனால், தீர்வகங்கள் இந்தியாவில் பெரிய நகரங்களில் மட்டுமே செயற்படுகின்றன. இப்போது நாட்டின் 500 க்கும் மேற்பட்ட நகரங்களில் தீர்வகங்கள் உள்ளன. கல்கத்தாவில் மட்டும் இரண்டு தீர்வகங்கள் செயற்படுகின்றன. மற்ற நகரங்களில் மைய வங்கி அல்லது மாநில வங்கியின் மேற்பார்வையில் நகரத்திற்கு ஒன்றாகத் தீர்வகங்கள் செயற்படுகின்றன. தீர்வகத்தின் வசதிகளை அதில் உறுப்பினராகும் தகுதியை உடைய பெரிய வங்கிகளே பெறமுடியும். அவை தீர்வக வசதிபெற்ற வங்கிகள் (Clearing Banks) எனக் கூறப்படுகின்றன. சிறிய வங்கிகள் உறுப்பினராக உள்ள வங்கிகள் மூலம் தீர்வகங்கள் அளிக்கும் வசதிகளைப் பெற்றுக் கொள்ளலாம்.

மக்கள் வங்கிகளில் கணக்கு வைத்துக் கொள்ளும் பழக்கம் பெருகி வருகிறது. இதன் மூலம் மிகுந்த அளவில் காசோலைகள் புழக்கத்திற்கு வந்து அவற்றின் மூலம் தீர்வகங்களின் தேவை பெருகியுள்ளது. மேலும் இதுவரை வசதிபெறாத புது நகரங்களிலும் கிராமப்புறங்களிலும் வங்கிகளின் கிளைகள் பெருகிவருகின்றன. எனவே, தீர்வகங்கள் மேலும் பெருக வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. மிகக் கூடுதலாகக் காசோலைகளைக் கையாளவேண்டிய நிலையில் தீர்வகங்கள் திறம்படச் செயற்பட வேண்டும். எனவே, அவை நவீன இயந்திரங்களையும், கணக்கிடும் பொறிகளையும் (Computer) பயன்படுத்தத் தலைப்பட்டுள்ளன. அவற்றின் மூலம் தீர்வகங்களின் பணிகள் செம்மையுற விளங்கும் என எதிர்பார்க்கலாம்.

கோ.கோ.

**துணை நூல்கள்:**

Radhaswamy M., and Vasudevan S.V., A Text Book on Banking, S. Chand & Co., New Delhi, 1984.

Reserve Bank of India Functions and Working, Publication Division, Reserve Bank of India, Bombay, 1984.

Saravanavel P., Banking Theory Law & Practice, Margam publications, Madras, 1987.

**தீல்கார்டு (கி.பி. 1881–1955),** பிரெஞ்சு நாட்டுத் தொல்லுயிரியல் அறிஞர்; மனிதப் படிமலர்ச்சி பற்றிய கோட்பாட்டிற்குப் பல விளக்கங்கள் கண்டவர். இவர் தத்துவவியல் அறிஞருமாவார். தீல்கார்டு (Pierre Teilhard De Chardin), பிரான்சில் சார்சனாட்டு (Sarcenat) என்னுமிடத்தில் கி.பி. 1881-இல் பிறந்தார். வேளாண் குடும்பத்தில் பிறந்த இவர் இளம் வயது முதலே நிலவியலில் (Geology) ஆர்வம் கொண்டிருந்தார். கல்லூரிப் படிப்பிற்குப் பின் கெய்ரோவில் உள்ள சேசுசபைக் கல்லூரியில் (Jesuit College) 24-ஆம் வயதில் பேராசிரியர் பதவி பெற்றார்.



தீல்கார்டு

மனிதப் படிமலர்ச்சி பற்றித் தீல்கார்டின் கருத்துகள் கிறித்தவ சமயக் கோட்பாட்டினையும் அறிவியல் கருத்துகளையும் இணைத்துக் கூறப்பட்டவையாகும். இவர் கருத்துப்படி மனிதன் ஆன்மிக நிலையை அடையும் பொருட்டு மன அளவிலும் சமுதாய அளவிலும் தொடர்ந்து படிமலர்ச்சி அடைந்து வருகிறான். இவர்தம் கருத்துகளுக்கு உரோமன் கத்தோலிக்கப் பிரிவினரிடமிருந்தும், சேசுசபை மரபினைப் (Jesuit Order) பின்பற்றுவோரிடமிருந்தும் எதிர்ப்புகள் வந்தன. இவரது மறைவிற்குப் பின் 1962-இல் திருச்சபையின் உயரிய ஆணைப்படி, இவர் கருத்துகளை ஏற்றுப் பேசி வந்தவர்களுக்கு எச்சரிக்கை விடுக்கப் பட்டது. இருப்பினும் தீல்கார்டின் ஆன்மிக நெறிகளுக்கு மறுப்புத் தெரிவிக்கப்படவில்லை.

தீல்கார்டு முதல் உலகப்போரில் வீரத்துடன் செயற் பட்டதற்காகத் தங்கப் பரிசினைப் பெற்றார். இதற்குப் பின் 1923-இல் பாரிசில் கத்தோலிக்க நிறுவனத்தில் சிலகாலம் கல்வி பயிற்றுவித்தார். அங்குப் பணியாற்றிய போது சீனாவிற்குச் சென்று தொல்லுயிரியல் (Palaeontology) ஆய்வுகளையும் நிலவியல் ஆய்வுகளையும் மேற்கொண்டார். இரண்டாம்

உலகப் போரின் போது சீனாவில் ஆய்வு செய்து வந்ததால் அங்கேயே தங்கிவிட்டார்.

சீனாவில் ஆய்வு செய்த போது இவர் மனிதப் படிமலர்ச்சியை (Evolution) விவரிக்கும் புதை படிவங் களைக் (Fossils) கண்டெடுப்பதில் மிகுந்த ஈடுபாடு கொண்டார். இன்று பீக்கிங் மனிதன் (Peking Man) எனப் படிமலர்ச்சியியலாரால் சிறப்பாகக் கூறப்படும் அக்கால மனிதனின் மண்டையோடு அங்குக் கிடைத் தது அதனையடுத்து ஆசியப் பகுதியின் மண்ணடுக கியல் (Stratigraphy) அமைப்பையும் மனித எலும்புக் கூடுகளையும் இணைத்துத் தொல் மனிதனின் காலத்தை வரையறுத்தார்.இவர் எழுதிய ஆய்வினை இவரது மறைவிற்குப் பினஆங்கிலத்தில் மனிதனின் தன்மை (The Phenomenon of Man, 1959) என்ற நூலாக வெளியிட்டனர். இந்நூலில் மனிதப் படி பலர்ச்சி முடிவுறாதது என்றும் தொடர்ந்து செயற் பட்டிருப்பது என்றும் மதிப்பிடுகிறார்.

தில்கார்டு 1946-இல் பிரான்சிற்குத் திரும்பித் தத்துவவியலில் மிகுந்த ஈடுபாடு கொணடார். பின் னர் வாழ்வின் இறுதியாண்டுகளை அமெரிக்காவில் கழித்தார். அப்போதும் இவர் தென் ஆப்பிரிக்காவில் இரண்டுமுறை தொல்லுயிரியல ஆய்வுகளை மேற் கொள்ளச் சென்றுவந்தார். இவர் நியூயார்க்கில் 1955-ஆம் ஆணடு காலமானார். சி.ப.

**தீலாசு** ஏசியன் கடலிலுள்ள (Aegean Sea) சைக்லேடேசு (Cyclades) தீவுகளின் நடுவே உள் ளது. பழங்கதையின படி பொசெய்டன் (Poseidon) இதனைக் கடலிலிருநது உயர்த்தினார். அப்போலோ வும் (Appollo), ஆர்டிமிசும் (Artemis) பிறப்பதற்காக ஒரு பாதுகாப்பான இடத்தைக் கொடுப்பதற்குச் சீயசு (Zeus) நஙகூரம பாய்ச்சி நிறுத்தியவரை தீலாசு (Delos) மிதந்தது. கிரேக்கர்களுக்குத் தீலாசு ஒரு புனிதத் தீவாகும். அங்கே அவர்கள் பல ஆல யங்களைக் கட்டினார்கள். அப்போலோவுக்குக் கட் டிய ஓர் ஆலயம சிறப்பானதாகும். பாரசீகர் களுக்கு எதிராகக் கி.மு. 476-இலிருந்து 454 வரை தீலியன் சஙகத்தின கருவூலம் இத்தீவில் இருந்தது. பிறகு இக் கருவூலம் ஏதென்சு (Athens)க்கு மாற்றப் பட்டது. மிகக் குறிப்பிடத்தகக பழைய அடிமை அங காடிகளுள ஒனறு தீலாசு ஆகும்.கொரிந்து (Corinth) நகரம் அழிந்த பிறகு இததீவு வாணிக முககியத் துவம் அடைந்தது. மித்ரடேடிக்குப் போர்களால் (Mithridatic Wars) இத்தீவு அழிக்கப்பட்டது. அ கே.

**தீன் இலாகி**: இது அக்பர் தோற்றுவித்த ஒரு சமயம். அக்பருடைய தந்தை ஒரு சன்னியாவார் (Sunni); தாய் சியா (Shia) பிரிவைச்சார்ந்தவர். அக்பர் இளமையிலேயே சமயப் பற்றுள்ளவராக வும் உண்மைப் பொருளைக் கண்டறிய ஆழ்ந்த ஆர்வ முள்ளவராகவும் இருந்தார். இளம்வயதில் சூபி (Sufi) கருத்துகளில் செலுத்திய சிந்தனைகளாலும் நாட்டு மக்களிடையே பரவியிருந்த வேறுபட்ட சம யங்களினாலும் அக்பரின சமயக் கருத்துகளில் படிப் படியாக மாறுதல்கள் தோன்றின.

அக்பர், மெய்யறிவே சமயத்தின் அடிப்படை யாகும் என்றார். குறுகிய மனப்பான்மை கொண்ட சமய வெறியாளர்கள் ஒருவர் மற்றவர்மீது அவதூறு சொல்வதைக் கண்டு வருந்தினாா. இதை ஒழிகக ஆர்வங்கொண்டு தமககுத் தெரிந்த எல்லா மதங களின் சிறந்த கோட்பாடுகளையும் ஒன்றாக இணைத்தார். அக் கூட்டிணைப்பிற்குத 'தீன் இலாகி' (Din Ilahi ) அல்லது 'தெய்வீக ஒரு கடவுட் கோட் பாடு' என்று பெயரிட்டார். இதில் இந்து, சமண, பாரசீகத் தத்துவங்கள் சிறப்பான இடததைப் பெற்றிருந்தன.

தீன் இலாகி என்ற இப்புதிய சமய ஏற்பாட்டில் ஒருவர் உறுப்பினராக விரும்பினால் அபுல் பாசல் என்ற அரசவை அறிஞர் அவரை அறிமுகப்படுத்து வார். பிறகு அம்மனிதர் கையில் தலைப்பாகையுடன் அகபரின் காலில விழுவார். பேரரசர் அவரைப் பிடித்து நிறுத்தித் தலைப்பாகையை அவரது தலை யில் அணிவித்துத் தம்முடைய உருவப்படத்தை அவ ருககு வழங்குவார் 'தீன் இலாகி' என்ற அக்குழு தனிப்பட்ட வணக்கமுறைகளைக் கொணடிருந்தது.

தீன் இலாகி தருமம் செய்தல், உயிாவதை செய் யாதிருத்தல், விதவைத திருமணத்தை ஆதரித்தல், இளமவயது திருமணத்தை விலககல், உடன்கட்டை ஏறுதலைத் தடைசெய்தல், மது அருநதாதிருத்தல் போன்ற உயாநெறிகளை வலியுறுத்தியது. உறுப்பி னர்கள சொத்து, உயிர், பெருமை, சமயம் ஆகிய வற்றையெலலாம் பேரரசருக்குத் தியாகம் செய்ய வேணடும் என்று எதிர்பாாககப்பட்டது. இதில் ஒன் றைத்தியாகம் செய்தவர் ஒரு தரத்தைப பெறறவரா வார். நான்கையும தியாகம் செய்தவர் நான்கு தரத் தையும்பெறறு உயர்ந்திருந்தார்.

'தீன் இலாகி' இந்துக்களுக்கோ முகமதியர் களுக்கோ கவர்ச்சியளிககவில்லை. அக்பர் தீன இலா கியில் சேருவதற்கு ஒருவரையும் கட்டாயப்படுத்த வில்லை. பேரரசின் பிரமுகர்கள் இதில உறுப்பினராக வில்லை. இதில் சேர்ந்துகொணட ஒரே இந்து உறுப் பினர் பீர்பால் ஆவார். சில ஆயிரம் உறுபபினர்களே இதில் சேர்ந்திருந்தனர். இதனால் அக்பரின் இறப் பிற்குப் பிறகு தீன இலாகியும் மடிந்தது. ஆகையால் வரலாற்றறிஞர் இசுமித்து (Smith) 'தீன் இலாகி

அக்பரின் முட்டாள் தனத்திற்கு ஒரு மிகச்சிறந்த நினைவுச்சின்னம்' என்கிறார்.

இந்து மதத்தையும் இசுலாமையும் இணைப்ப தும், பேரரசில் அரசியல் ஒற்றுமையை ஏற்படுத்துவ தும் அக்பரின் உயர்ந்த அரசியல் நோக்கமாகும். மத வெறியர்களாலும், அவரது உயர்ந்த நோக்கத்தைச் சரியாகப் புரிந்துகொண்டு ஒத்துழைப்பு தராத மற்றோர்களாலும் விரைவிலேயே தீன் இலாகியும் மறைந்தது. அ.சி.

**தீன்சின்:** மக்கள் சீனக் குடியரசிலுள்ள மூன்றாவது மிகப்பெரிய நகரம் தீன்சின் (Tientsin). வடசீன சமவெளியின் வடகிழக்கு மூலையிலுள்ள ஒபே (Hopeh) மாநிலத்தில் இது உள்ளது, பீகிங்குக்குத் தென்கிழக்கில் ஏறக்குறைய 97கி.மீ. தூரத்தில் அமைந்துள்ளது; மஞ்சள் கடலிலுள்ள சிகிலி (Chihili) வளைகுடாவிலிருந்து ஏறக்குறைய 56 கி.மீ. தூரத்தில் உள்நாட்டில் அமைந்துள்ளது. தீன்சின் என்பதற்கு வீட்டுலகக் கடவு (Heavenly Ford) என்று பொருள். இது வட சீனாவிலுள்ள சிறந்த துறைமுகம், சீனாவின் இரண்டாம் பெரிய செய்தொழில் மையம்.

**வரலாறு:** இப்போதுள்ள நகரைச் சுற்றியுள்ள சதுப்புநிலத்தில் கி.பி.10-ஆம் நூற்றாண்டு வரை மக்கள் மிகுதியாக வாழ்ந்து வரவில்லை. சுங்குகள் ஆட்சிக்காலத்தில் கை கோ (Hai Ho)நதியின் மேற்குக் கரையில் சியூ சன் கான் கோ (Chiu-San-Han kou) அமைக்கப்பட்டது. பின்னர் இதனுடன் சிகூ (Chi-ku)இணைக்கப்பட்டது. சிகூ ஒரு துறைமுகமாக வளர்ந்தது. யுவான் ஆட்சியின்போது கப்பல் போக்குவரத்தை ஒழுங்குபடுத்த அரசு அலுவலகங்கள் நிறுவப்பட்டன. தற்கால தீன்சின்,மிங்குகள் ஆட்சியின்போது வளர்ச்சியுற்றத் தொடங்கியது. அதற்குக் காரணம் தலைநகரம் நானகிங்கிலிருந்து பீகிங்குக்கு மாற்றப்பட்டதேயாகும். இக்குடியேற்றம் கி.பி.1368-இல் காவல் படை நிறுத்தப்பட்ட நகரமாக மாறியது. அப்போது அதற்குத் தீன்சின் வெய் (Tien- Chin wei) என்ப் பெயர் சூட்டப்பட்டது. வீட்டுலகக் கடவு பாதுகாப்பு என்று அதற்குப் பொருள்.அது முதல் பீகிங்கு செல்லுவதற்கு முதன்மை வாயிலாக மாறியது. சுற்றியிருந்த மாநிலங்களிலிருந்து மக்கள் இந்நகர் நோக்கி வந்தனர். மஞ்சுக்கள் ஆட்சியின்போது வட சீனாவின் தலையாயப் பொருளாதார மையமாக விளங்கியது.

ஐரோப்பியர்களுடைய நடவடிக்கைகளால் 19-ஆம் நூற்றாண்டில் இதனுடைய பொருளாதாரம் பாதிக்கப்பட்டது. அவர்கள் பல வாணிகச் சலுகைகளைக் கட்டாயப்படுத்திப் பெற்றனர். பொருளாதார வீழ்ச்சியின்காரணமாக ஐரோப்பியர்களுக்கு எதிராகக் கிளர்ச்சிகள் தோன்றின. அவற்றை ஐரோப்பியர்கள் எளிதில் அடக்கிவிட்டனர். அதனைத் தொடர்ந்து தீன்சின் தடையின்றி வாணிகம் செய்வதற்குரிய துறைமுகமாயிற்று. மீண்டும் கிளர்ச்சிகள் ஏற்பட்டன. ஐரோப்பிய நாடுகள் நகரைக் கைப்பற்றி நகரின் பழைய மதில்களை அழித்தனர். சீனாவில் குடியரசு அமைக்கப்பட்டபோது, இங்குத் தனிமுறையான நகராட்சி நிறுவப்பட்டது. தேசிய அரசின் நேரடி ஆட்சியின்கீழ் இது நிருவகிக்கப்பட்டு வந்தது. சீனா-சப்பானியப் போரின்போது சப்பான் இதைக் கைப்பற்றியது. கமயூனிசுட்டுப் புரட்சியின்போது இது முதலில் கோமின்டாங்கு ஆட்சியின் கீழ் இருந்தது. கமயூனிசுட்டுகள் 1949-இல் இதனைக் கைப்பற்றினார்.

இக்காலத் தீன்சின் நகரம் யூங்டிங்கு (Yung-ting), தா சிங்கு(Ta-Ch'ing), சு-யா (Tsu-Ya), நான்-யூன் (Nan-Yun), பெய்-யூன் (Pei-Yun) ஆகிய நதிகள் ஒன்றாகக் கூடுமிடத்தில் அமைந்துள்ளது; கடல் மட்டத்திலிருந்து 4½ மீட்டருக்குக் குறைவான உயரத்தில் சமமான வண்டல்மண் பூமியில் அமைந்துள்ளது. நகரின் கிழக்கிலுள்ள தாழ்மட்டத்திலுள்ள சில பகுதிகள் கடல் மட்டத்திருந்து ஏறக்குறைய 2 மீ. உயரத்தில் உள்ளன. கட்டப்பட்ட பகுதியின் 80 விழுக்காடு கடல்மட்டத்திலிருந்து 3½மீ. உயரம் உள்ளது. நகரும் அதன் புறநகர்ப்பகுதியும் 1750 ச.கி.மீ. பரவியுள்ளன. தீன்சின் நகராட்சியின் எல்லை 4,000 ச.கி.மீ. கடற்கரை அருகிலிருந்தாலும் அதனுடைய வெப்பநிலை உள் நாட்டு வெப்ப நிலையைக் கொண்டுள்ளது. நாள்தோறும் மற்றும் பருவகால வெப்பநிலையில் பெருமளவு வேறுபாடு காணப்படுகிறது. குளிர் காலத்தில் குளிரும் கோடையில் வெப்பமும் மிகுதி. கோடையில் மழை பொழியும், குளிர்காலத்தில் வறண்டிருக்கும். ஆண்டில் 80 நாள்கள் பனி உறையும்.

இதன் மக்கள்தொகை 4,300,000 ஆகும். மக்கள் நெருக்கம் ச.கி.மீ.க்கு 15,000 முதல் 75,000 வரை மாறுபடுகிறது. சிறுபான்மை மக்களின் எண்ணிக்கை மொத்தத்தில் 3 விழுக்காடு ஆகும். அவர்களுள் துங்கன்கள் (Tungans), கொரியர்கள், மஞ்சுக்கள் முதன்மையானவர்கள். மக்கள் தொகையில் பாதி பேர் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். 17 விழுக்காடு மக்கள் வாணிகத்திலும், 7 விழுக்காடு மக்கள் கட்டத் தொழிலிலும்,8 விழுக்காடு போக்குவரத்துத் துறையிலும், 7 விழுக்காடு மக்கள் நிருவாகப் பணியிலும், 10 விழுக்காடு மக்கள் கலவித் துறையிலும் ஈடுபட்டுள்ளனர்.

இங்குக் கனரகத் தொழில்கள் நிறுவப்பட்டுள்ளன. வேதியியல் தொழிலும், இரும்பு எஃகுத்

தொழிலும், கப்பற்கட்டும் தொழிலும் நடைபெறு கின்றன. தீனசின கனரக இயநதிர உற்பத்தித் தொழிற்சாலை மிகச் சிறந்த தொழில் நிறுவன மாகும். இதில் 5,000 பேர் பணிபுரிகின்றனர். சிறு தொழிலகளுள் ஆடை தயாரித்தல் குறிப்பிடத்தக்க தாகும்.

பல வங்கிகள இயங்கி வருகின்றன. அவற் றுள சீன மக்களுடைய வங்கி, கூட்டுப் பங்கு தனியார் வங்கி, சீன வேளாண்மை வங்கி குறிப்பிடத் தக்கவையாகும. வாணிகத்தை வாணிகக் கழகங்கள் நடத்திவருகின்றன. அவை தேசிய மற்றும் நகராட்சி அதிகாரிகளுககுப் பொறுப்புள்ளவையாக இருககின றன. சீனாவின அயலநாட்டு வாணிகத்தின் கால் பகுதி இதன் துறைமுகத்தின் வழியாகவே நடைபெறு கிறது.

தீன்சின் தலையாயப் போக்குவரத்து மையமாகும். சிங்கு பூ (Ching Pu) இருப்புப்பாதை இங்கிருநது தெற்குநோக்கி சாங்காய் வரை செலகிறது. சிங் சான் (Ching Chan) இருப்புப்பாதை பீகிஙகிலிருந்து இந்த நகரம் வழியாக முக்டனுக்குச் செலகிறது உள நாட்டு நீர்வழிகள இஙகிருந்து தெற்காகவும்,தென்மேற் காகவுமகிராண்ட்டு காலவாய் வழியாகவும் சூ-யா மற் றும் தாசிங ஆறுகள் வழியாகவும் செல்கின்றன. பெரு வழிகளுள் மிகச் சிறந்த வழி சிங தாங்கு (Ching tang) வழியாகும். இது பீகிங்கிலிருந்து இநநகர் வழி யாக தாங் கூ (Tang Ku) விற்குச் செல்கிறது.

இநநகரை ஆளும் பொறுப்பு தீனசின் நகரப் புரட்சிக் குழுவிடம் உள்ளது. இநநகரம் கடலுக் கருகே இருப்பதாலும் கடல் மட்டத்திற்குச் சிறிதளவு உயரத்தில் இருப்பதாலுமம குடிநீர்ச சிககல் மிகுதியாக உள்ளது. நகருக்கு வேணடிய மினசாரத்தின் பெரும் பகுதி பீகிங்கு போன்ற இடஙகளிலிருநது கொண்டு வரப்படுகிறது.

இங்கு 40க்கும் மேலான மருத்துவமனைகள் உள்ளன. சில மருத்துவமனைகள மேலைநாட்டுப் பாணியில் அமைக்கப்பட்டுள்ளன. குழந்தைகள, தொழிலாளிகள், சிறுபானமையினர் ஆகியோருககுச் சிறப்பான வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

கல்வி நிறுவனங்கள் பல உணடு. ஆறில ஒரு பங்கு மக்கள் இவற்றில் சேர்ந்துள்ளனர் ஏட்டுக கல்வியுடன் தொழில் கல்வியும் அளிக்கப்படுகிறது. தொழிற்சாலைகளில் வேலைசெய்துகொண்டு கல்வி பயில ஏற்பாடு செய்துள்ளனர். மூன்று பொது பல கலைக்கழகங்கள உள்ளன. அவற்றுள தீன்சென பல கலைக்கழகம் ஒன்றாகும். தொழிற்கல்வி நிறுவனம், கலை மற்றும் இசைக்கல்லூரி, மருத்துவப் பள்ளி, ஆசிரியர் பயிற்சிப் பளளி ஆகியவை நிறுவப்பட்டுள ளன. பல நூலகங்கள் உணடு. அவறறுள மிகப பெரி யது நகராட்சி நூலகமாகும். இதில் 8,40,000 புத்தகங் கள உள்ளன.

அருங்காட்சியகங்களும் இங்கு உள்ளன. நுண கலை அருங்காட்சியகத்தில் யுவான், மிங், மஞ்சு ஆகி யோர் ஆட்சிக்காலச் சித்திரங்கள் பாதுகாக்கப்பட் டுளளன.

இந்நகரின் குறிப்பிடத்தக்க செய்தித்தாள் தீன்சிங் சீ பயோ (Tienching Jih-Pao) என்பதாகும். தொலைக் காட்சி நிலையமும் இங்குளளது.

இஙகு 30க்கும் மேறபட்ட பூங்காக்கள அமைககப பட்டுளளன. வெற்றிப் பூஙகா, சிறுவர் பூங்கா, சூ-சாங்கு குங்கு யுவான் (Shu-Shang Kung Yuan) ஆகியவை குறிப்பிடத்தக்கனவாகும. சூ சாங்கு குஙகு யுவான என்பதற்கு நீர மேல் பூஙகா எனறு பொருள்.

தி.அர.இரா.

***தீன்மிதி நாகனார்***: சஙக காலப் புலவர் களுள் ஒருவர். இவர் பெயர் தீமிதி நாகனார், தீன் மிதி நாகனார் எனப் பலவாறாக ஏடுகளில் காணப் படுகினறது. இவர் பாடிய பாடலொனறு குறுந தொகையில் (111) இடம்பெற்றுள்ளது. தோழி கூற றாக அமைந்த அப்பாடல தலைவியை மணந்து கொளளாது கால நீட்டிப்புச் செய்யும தலைவன் சிறைப்புறமாக இருகக அதனை அறியாதாள போலத் தலைவியிடம கூறுவதாக அமைநதுள்ளது. தலைவன் தலைவியை மணம் செய்யாது காலம் நீட்டிக்கிறான். அதனால் தலைவி வருததமடைந்து உடல் மெலிந்து காணப்பட்டாள.அவள் தாய் இவளது உண்மையான நிலையை உணராது வேலனால் ஏற் பட்டது என்று வெறியாட்டெடுக்க முறபட்டாள. நகைப்பிற்கிடமான இச்செய்கையைக் காணும் பொருட்டு தலைவன் வரவேணடும எனறு கூறு வதன் வாயிலாக இத்தகைய இடர்பபாடான நிலையி லுள்ள தலைவியை விரைந்து மணந்துகொள்க எனறு தலைவனுக்குணர்த்தும வகையில் தோழி கூறுவது சிறப்பாக உளளது.

வீ.சே.

**து** நாக்கு மேலணணத்தை (நுனியை) மெதுவாக அழுததி ஒலிக்கும் ஒலியொடு வாயைக் குவித்துப்பின் வெளிவரும் ஒலி து ஆகும. தகர-உகரஙகளின குறிப்புகளைப் பார்க்கவும்.

**பொருள்:** உணவு, அனுபவம், பிரிவு என்கிற பொருள் உண்டு; உண்ணுதல் எனற பொருளிலும் வரும். சொற்களுக்கு விகுதியாகப பயன்படும் இவவெழுத்து வருது என்பதில் போல தனமை ஒருமை முறறு விகுதியாகவும அது வநதது எனப தைப் போல ஒனறன பால் விகுதியாகவும் புதுச் சொலலாககத் துககு உதவும வகையில பகுதிப் பொருள விகுதியாகவும் வரும். எடுததுக்காட்டு- மருந்து.

**வடிவம்:** தமிழ எழுத்தில குகைக் கல்வெட்டு களில கி.பி. 3-ஆம் நூறறாணடு அளவில் . ... .

கி.பி. 3-ஆம் நூறறாணடின இடையில அரசசலூர்க் கல்வெட்டில் .

கி.பி. 6-ஆம் நூற்றாணடில பலலவ மகேந்திரனின வலலம கலவெட்டில .

கி.பி. 8-ஆம் நூறறாணடில் பலலவ நநதிவர்மனின செப்பேட்டில .

கி.பி. 11-ஆம் நூற்றாணடில சோழராசேந்திரனின திருவாலங்காட்டுக கல வெட்டில. . ...

கி.பி. 12-ஆம நூறறாண்டில சோழன குலோத்துங்கனின் திருககழுக்குனறக் கலவெட்டில் .. ...

கி.பி. 16-ஆம் நூற்றாணடில உகரக்குறி பெறும் கோடாகக் கீழே இழுக்கப பட்டது பிறகு வளைத்து எழுதப்பட்டடது. அடுதத நிலையில நேராக இழுக்கப பட்ட கோடு மேல் நோககிச் சென்றது. பிற்காலத்தில் தகரத்தின கீழ்நோககி வருங் கோடு அடியில் சென்று வளைந்து, மீணடும் திருமபி நேர்கோடாகச சென்று, வளைநது மேலநோக்கியது.... ... ..

**வட்டெழுத்தில்** தகரத்தின் உருவத்தில ஏற்பட்ட மாறுதல ஒழிய உகரத்தில் தமிழ எழுத்தில் காட்டப்பட்ட முறைபிலேயே வளர்நதது. கி.பி. 8-ஆம் நூறறாணடி லிருந்து ஏறககுறைய ஒரே முறையில் எழுதப்பட்டு வநதது. கீழ்வளைவைச் சறறு நிறுத்தி நீளமாகவும் அல்லது சற்று வளைத்தே மேல்நோக்கியும எழுதப்பட்டது. .

கே.ஜி.கி.

**துக்காராம்:** இநதியாவில் மகாராட்டிரத்தில் கி.பி. 17-ஆம் நூற்றாணடில் வாழ்நத ஓர் அருட்கவி. பக்தி இயக்கத்தைப் பரப்பிய பெரியார்களுள இவரும் ஒருவர். இவர், பூனாவிற்கு அருகில இந்திராயணி ஆற்றங்கரையில் உள்ள தேகு என்னும் சிறறூரில கி.பி. 1607-இல் பிறந்தார். இவர் தந்தை பெயர் போல்கோபா; தாய்-கனகாயி. இவர்கள் குடுமபம் 'வார்க்கரி' என்னும் மரபைச் சேர்ந்தது. பாணடுரங்கனே இவாகள் குலதெயவம். துக்காராம், தொடக் கத்தில தமது குடும்பத் தொழிலான வாணிகததை நடத்தினார். ஆனால, அவர் மனம் அதில் மிகுந்த நாட்டம் கொளளவிலலை. தமக்குக் கிடைககும் சிறு இலாபத்தையும் அவர் ஏழைகளுக்கு வழஙகி விடுவது வழக்கம். இவர் மணம்புரிந்துகொண்டு வாழ்க்கை நடததியபோதிலும் இல்லற வாழ்க்கையில் இவருககு வெறுப்பு ஏற்பட்டுவிட்டது. சைதன்னிய குருவிடம்

சென்று அறிவுரை பெற்றார். பிறகு பக்திப் பாடல்கள் பல இயற்றலானார். நாலாயிரத்திற்கும் மேற்பட்ட பக்திப் பாடல்கள இவரால் இயற்றப்பெற்றன. சிவாசி மனனன், இவர்தம் மாணாககர்களுள ஒருவன என்றும், இவருடைய பாடல்களைக் கேட்டு இன்புற இவரிடம் அடிக்கடி வருவது வழக்கம் என்றும் சில வரலாற்றறிஞர்கள் கூறுகின்றனர். இவர் மறைந்ததைப் பற்றிப பல கூறறுகள் உள. பக்திப் பரவசத்தில இவர் இந்திராயணி ஆற்றிலகுதித்து இறந்ததாக ஒரு கருத்து நிலவுகிறது. இவர் மறைநத ஆண்டு கி.பி. 1649. மகாராட்டிரத்தில் இவருடைய பாடல்கள் மிகவும் போற்றபபடுகின்றன. தெ.பா.

**துகளறு போதம்:** தமிழ்ச் சமயமாகிய சைவ சமயத்தின் முடிந்த முடிபாகவுளள சைவ சித்தாந்தத்தின முடிந்த முடிபு யாது என்பதனைப் பற்றி மெய்கண்ட சாத்திரங்கள எடுத்தியம்புகின்றன. சித்தாந்தச் சாத்திரங்களின முதனூல்களான இப்பதினான்கு நூலகளின் நடுநாயகமாகத திகழும் சிவஞான போதத்தையாத்த மெய்கண்டாருககுப் பின சாத்திர நூல்கள் விரிவாக வளர்ந்து செழிததுச் சிறப்புற்றன. எனினும், பினவந்த சாததிர நூல்களுள் மிகச சிறப்பாக எணணத் தக்க நூல்கள் சிலவே. அச்சிலவற்றுள் துகளறுபோதம் ஒனறாகும். இதன ஆசிரியர் மெய்கண்டாரின பரம்பரையில ஏறத்தாழ நூறு ஆணடுகளுக்குப் பின் தோன்றிய சீகாழிச் சிற்றம்பலநாடிகள் ஆவர். இவர் காழி பழுதைகட்டி சிற்றம்பலநாடிகள் என்றும் சொலலபபடுவர்.

துகளறுபோதம என்பது துகள அறுவதற்குரிய காரணமாகிய போதம் எனப்பொருளபடும். துகள எனறால் குற்றம். அதாவது உயிர்க்குறறம் எனப்படும ஆணவமலததினை அறுத்து நீககுதறகுரிய நூலாகும் எனபதனால இப்பெயர் இந்நூலுக்கு அமைநதது. தொல்லைமலமாம் ஆணவமலம் அறுதற்கு ஏதுவாகிய சிவஞானத்தை விளைவிககும் நூல என்பதே இதன திரணட கருத்தாகும். இஙகுச சிவஞானததைப் பயப்பிக்கும் நூலுக்கு ஆயினமையின இது காரியவாகு பெயா. துகளறுபோதம அடையடுத்த ஆகுபெயர்; திருவாசகம் என்பதுபோல.

இந்நூலின ஆசிரியரான சீகாழிச சிற்றம்பலநாடிகள், திருக்கயிலாய பரம்பரைத் திருநந்திமரபு மெய்கண்டாரின் சந்தானத்திலே உபதேச பரம்பரையிலே வந்தவராவர். இவர் காழி-கங்கை மெயகணடாருடைய திருவருளுபதேசம் பெற்றவர். இவவாசிரியர் பெருஞானியாய்ப் பல மாணவர்களுக்கு ஆசிரியராய் விளங்கியும், பலநூல்கள செய்தும் சைவத்திற்குத் திருத்தொணடு ஆற்றியவர். சிற்றம்பலநாடிகள கி.பி. 14-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில், அதாவது கி.பி. 1325-1350 ஆண்டுக காலத்தில் தஞ்சை மாவட்டம், சீர்காழியில வாழ்ந்தவர். சிற்றம்பலநாடிகள தம் மாணாக்கா அறுபத்துமூவருக்குச் சாம்பதீட்சை செய்து, அவர்கள் அனைவரையும் மயிலாடுதுறையினையடுத்த சித்தர்காடு எனற இடத்தில் ஒரே காலத்தில் சமாதி கொள்ளச் செய்தவர். இச்செய்தியினை இந்நூலின் சிறப்புப்பாயிரப் பாடலும் உணர்த்தும். சிற்றம்பலநாடிகளின் மாணவர்களுள ஒருவரான தத்துவப்பிரகாசர் இவரைச் சந்தான ஆசாரியரோடு ஒப்பிட்டுக் கருதுவதனாலும் இந்நூலாசிரியரின சிறப்பு விளங்கும்.

துகளறுபோதம் என்னும் இச்சிறிய சித்தாந்தச் சாத்திரத்தினில் காப்புச் செய்யுளுடன் நூறறொன்று திருவெண்பாக்கள உள்ளன. இவையாவும் எளிய நிலையிலே அமைந்து இனிமையாகவும் ஆற்றொழுக்கான நடையினை உடையவனவாகவும் இருக்கின்றன. சிவஞானபோதம் முதலிய சித்தாந்த நூல்களில் தொகுத்துக் கூறியிருக்கின்ற சைவ சிததாநதத்தின் முப்பொருளாம் பாசம், பசு, பதி ஆகியவறறின விளக்கமாகிய-தததுவரூபம், தததுவ தரிசனம், தததுவ சுத்தி, ஆனமரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்பனவற்றை முதன்முதல முப்பது அவதரமாக வகுத்துக் கூறியது இததுகளறுபோதமேயாகும். முப்பதவதரம் எனபது 'சீவனமுததி நிலையிலிருந்த ஆனமா, அந்த நிலையிலிருநத வழுவிய காலத்து, மீணடும அந்நிலைக்குச செல்லத் தலைப்படுஙகால முப்பொருளகளின் உணமை நிலையை உணர்ந்து மேல்நோக்கிச் செல்லும நெறியில் அமைந்த படிகளேயாகும்'.

துகளறுபோதத்தில் முதல 3 பாடல்கள பாயிரப் பாடல்களாகும். அதன் பின் நானகாம் பாடலிலிருநது எழுபத்தெட்டாம் பாடல் வரையுளளவை யாவும் முப்பதவரததினை விளக்கும் பாடலகளேயாகும. முப்பது அவதரம் எவையெனில், பஞ்சப் பூதப் பழிப்பு, பொறியற உணர்தல், அநதக்கரணசுத்தி, கலாதி ஞானநிராகரணம், சுத்ததத்துவ தூடணம், தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுததி, கேவலம, கேவல தரிசனம், கேவலாதீதம். ஆணமரூபம், ஆணம தரிசனம், ஞானதரிசனம், ஞானாதீதம, பரைதரிசனம், பரையோகம, பரைபோகம, பராதீதம், 'சாக்கிராதீதம, சுத்தவததை, சுகசொரூபம். சுகாதீதம, சிவரூபம், பரமானந்த தரிசனம், பரமானநதயோகம், பரமானநதபோகம், ஆணமலாபம், பரமானநத மேலீடு, உலகப்பழிப்பு ஆகியனவாம். இந்த முப்பதவதரங்களின் முறைவைப்பில சிலவேறுபாடுகள்

இருக்கலாம் எனவும் எண்ணப்படுகின்றது. இந்நிலை யில துகளறுபோதத்தில் அவதரஙகள இருபத்தெட்டு தான் எனறும் சொலலப்படுகினறது. மேலும், இம முப்பதவரம் எனகிற நெறியானது சைவாகமங களிலே சொலலப்பட்டவைதான எனவும நூலாசிரியர் சிற்றம்பலநாடிகள கூறுகின்றார். சைவ சித்தாநத உலகிறகு இத்துகளறுபோதம் அளிதத பங்குப் பணி இநநூல் விளககும் முபபதவதரமே என உறுதியுடன கூறலாம்.

இதனையடுத்து, எழுபத்தொனபதாம பாடலி லிருந்து தொனனூறறொன்பதாம பாடல்வரை யுளள பாடலகள யாவும் பஞ்சாககரமந்திரம், குருத் துதி, சீடரலிலககணம் முதலியவைகள் குறிததும யோகம், கிரியை, சரியை எனகிற மாாககஙகளைப் பற்றியும் தெளிவாகவும் விரிவாகவும் எடுததியம்புகின றன. கடைசிப் பாடலில, ஆணவமலததைப் போககி, ஆன்மாவுககுக் குடத்துள விளககுப்போனறு மறைக கப்படடிருநத அறிவுசசுடரினை ஏற்றி, அவ்வறிவை யும அதற்கு அறிவித்துப்பின பசுவறிவையும மாற்றிச சிவபேறு எனனும் பேரினபவெளளத்தினகண திளைப் பித்து நுகர்வித்தலே இநநூலின பயன எனக் குறிப் பிட்டு முடிக்கிறாா.

சிற்றமபல நாடிகளின மாணவா தததுவப்பிர காசா இநநூலின வழியே விரிநதநூலாகத் தததுவப் பிரகாசம் எனற நூலினயும சுருஙகிய அளவிலே துகளறு போதக் கட்டளை எனற சிறு வசன நூலை யும் எழுதி, துகளறுபோ தததின சிறபபுகளை விளக்கி யுளளார். மாபாடிய ஆசிரியரான மாதவச் சிவஞான யோகிகள தம உரையில துகளறுபோதததினை மேற்கோளாகக் கையாணடு இநநூலைப பரமப பிர மாணமாக எடுத்தாணடிருப்பதிலிருநதே துகளறு போதததின பெருமையும், பெருஞ்சிறபபும் தெளி வாக விளங்கும சிவஞானபோதம், சிவஞானசித்தி யார் போன்ற சைவசித்தாந்தச் சாததிரஙகளை எளிதில அறியப் பெரிதும உதவும் சிறிய ஞான நூலே துகளறுபோதம் எனபதில் சிறிதும் ஐயமிலலை.

ஜி.பா.

**துங்கபத்திரை (ஆறு)**: தெனனிநதியாவில ஓடும் கிருட்டிணா ஆற்றின் துணையாறாகிய துஙக பததிரை, துங்க, பத்திரை எனற இரண்டு ஆறுகள ஒன்று சேர்ந்து அமையப் பெற்றது. இநத இரணடு ஆறுகளும் கருநாடக மாவட்டத்தில மேறகு மலைத தொடரில் கங்கைமூலம் என்னுமிடத்தில ஒனறாகத தோனறி, வேறு திசைகளில ஓடி, பினனர் சிமோகா (Shimoga) மாவட்டத்தில கூடலி எனனுமிடத்தில ஒனறு சேர்ந்து துங்கபத்திரை எனப் பெயர் பெறு கிறது. ஏறத்தாழ 640 கி.மீ. நீளமுளள இநத ஆறு கிருட்டிணா ஆற்றுடன இரெயசசூர் அருகில கலபப தறகு முனனதாக, பெல்லாரி (கருநாடகம்) காநூல (ஆந்திரா) மாவட்டஙகள வழியாக ஓடுகிறது. இந்த ஆற்றின வலககரையில வரலாறறுப் புகழ பெறற விசயநகரம தோனறி அரிய சாதனைகளைப் புரிநது, பின மறைந்தது அநத அழிபாடுகள் இனறும காணக் கிடக்கினறன இநத ஆறறில ஆணடு முழுவதும நீா ஓடுவதால அடிக்கடி வெளளப் பெருக்கு ஏறபடுவ துணடு. இநத ஆறறுப பகுதியைக கைபபற்றுவதற காக, இநது அரசாகிய விசயநகரமும், முகமதிய நாடான பாமினியும கி பி 16-ஆம நூற்றாண்டில அடிககடி போரிட்டன.

**திட்டம்**. துஙகபததிரை ஆறறின நீரைததேககி, நீாமின திறன உறபததிககும நீாப்பாசன வசதிப பெருககத்திறகும் 1945-இல் ஒரு திட்டம தொடஙகப பெறறது. இதறகுத துஙகபத்திரைத்திட்டம் (Tungabadra Project) எனபது பெயர். தெனனிந்தியா வின சிறப்புமிக்க நீாபபாசனத திடடஙகளில இதுவும ஒனறு. இபபலநோக்குத திட்டம கறகட்டட அணைக கட்டைக கொணடது. ஆநதிராவில் கிடைககும தாதுப் பொருளகளைத தோணடி எடுப்பதற்கு ஒரு வாயப்பாகவும, கைத்தொழில்கள பல தோனறுவ தற்கு உதவியாகவும், முனனேறறமடையாத பலபகுதி களை வளமடையச செய்யவும இததிட்டம் வகுககப பட்டது. இத்திட்டததிற்குத் தேவைபபடட மதகுக் கதவுகள முதலியன திடடத்தைச சோநத தொழிற சாலையிலேயே தயாரிககபபட்டிருபபது குறிப்பிடத தககதாகும ஆநதிரா, கருநாடகம் ஆகிய இரு மாநிலஙகளின கூடடு முயறசியே இததிட்டம் ஏறத தாழ 345ச. கி மீ நீர் ஏநது நிலபபரபபைக்கொணட துஙகபததிரை அணையின நீளம 2441 மீ உயரம 43 30 மீ. துங்கபத்திரையின் குறுககே மலலாபுரம என்னுமிடத்தில் கட்டபபடடுளள இநத அணையின இருமருஙகிலுமுளள காலவாயகள மூலம 7 இலட்சம ஏக்கர் நிலம பயனபெறுகிறது. பல மினதிறனாகக நிலையஙகளும் இயஙகிவருகின்றன.

தெ.பா.

**துச்சாதனன்**: மகாபாரதக கதையில் பாணட வர்களின எதிர்த தலைவனாக விளஙகும் துரியோ தனனுடைய இளவல் துச்சாதனன எனபபடுவான் இவன் துடிப்பு மிக்கவன. தன தமையனுககு அவன் தீய செயலகளில துணைநினறவன. பாணடவர்களுக கும், கௌரவாகளுககும இடையே நிகழ்நத சூது போரில் பாணடவர்கள தம் நாட்டையும, பொருள களையும் இழந்து இறுதியாகத் தமமையே பணயம் வைததுத தோற்றனர். அநநிலையில துரியோதன னுடைய தாய மாமனாகிய சகுனி அவாகள பணய மாக வைப்பதற்கு வேறொரு பொருளும் இலலாமை

கணடு அவர்களுடைய மனைவியாகிய திரௌபதி யையே வைக்குமாறு கேட்டான். பாணடவர் தலை வராகிய தருமபுததிரர் அதற்கிணங்கித் தம் மனைவி யைப் பணயம வைத்துத் தோற்றார். உடனே சகுனி, துரியன் முதலானோர் மகிழச்சியால ஆரவாரம் செய்து கை கொட்டினா. பிறகு துரியன் திரௌ பதியை அரசவைக்கு அழைத்து வருமாறு துச்சா தனனைப் பணித்தான். அப்பணியைத் தலைமேற் கொணட கொடியவனாகிய துச்சாதனன் மிக்க மகிழ்சசியோடு திரௌபதியிடம் சென்று அவளை உடனே வருமாறு அழைத்தான். அவன் அவளை நோக்கி 'நீ இப்போது எஙகளுக்கு உரியவளாகிவிட் டாய். வெட்கப்படாதே. என் பின்னே வா. நாஙகள உன்னைச சூதில் வெனறு பெற்றுவிட்டோம்' என றான. அதுகேட்ட திரௌபதி நடுநடுங்கி அவனிட மிருந்து தப்ப முயன்று அந்தப்புரத்திறகுள நுழைய லானாள். துச்சாதனனோ அவளைப் பினதொடாநது சென்று அவளது கூந்தலைப் பற்றி அரசவைக்கு இழுத துச் சென்றான. அவளைத் தாசி, ஐவருக்கு வேசி எனறு பலவாறு ஏசினான்.

அரசவைககு இழுத்துவரபபட்ட திரௌபதியை அனைவரது முனனிலையிலும் அவமானப்படுத்த எணணிய துரியனின நண்பன காணன் அவளது துகிலை உரியுமாறு துச்சாதனனுக்குக் கட்டளையிட் டான். அவவாறே அவன் அவளருகில செனறு துகி லைப் பற்றியிழுகக இறைவன் அருளால் அவளது வேணடுதலினபடி அது வளர்ந்துகொணடே வந்தது. துச்சாதனன் தன்னால ஆனமட்டும் முயனறும துகில குறைந்தபாடில்லை. அதனால அவனது உடலும், மனமும் சோர்ந்து அவன மயங்கி விழுநதுவிட்டான. அதுகண்ட வீமன துச்சாதனனை வெகுணடுஅவனைக் கொன்று அவனது குருதியைக் குடிபபதாகச சபதம் செய்தான். திரௌபதியும் அவனது குருதியில தன கூந்தலைத் தோய்த்து முடிப்பதாகச் சூளுரைத்தாள.

சூது போரில நாட்டையும் தம் உரிமையையும் தோற்ற பாணடவர்கள் திரௌபதியுடன 12 ஆணடு வனவாசமும் ஓராணடு அஞ்ஞாத வாசமும் முடிதத பிறகு பாணடவர்களுக்கும துரியோதனாதியருக்கும் நடநத பாரதப் போரில துசசாதனன வீமனை நேருக்குநேராய்ச் சநதித்து அவன்மீது கணைகளை வீசினான. அதுகணட வீமன் அவன்மீது பாய்ந்து அவனைக் கீழே வீழ்த்திக் கைகளையும், கால்களை யும முறித்துக் கீழே வீசினான; பிறகு அவனது குரு தியைக் குடித்து அவன் உடல்மீது ஏறி நின்று வெறிக கூத்தாடினான். திரௌபதியும் அக்குருதியில தன கூந் தலைத் தோய்த்து முடித்துக்கொணடாள. ரா.கி.

**துசியந்தன்** சந்திர வமிசததுப் பேரரசன. மகாபாரதம் ஆதி பருவத்தில் இவன் கதை கூறப் படுகிறது. ஒருகால் இவன் வேட்டையாடும் பொருட் டுக் காட்டிறகுச் சென்றபோது அங்கே கண்ணுவ முனிவரின ஆசிரமத்தில் தனியே இருநத சகுந்தலை எனனும் பேரழகியைக் கணடு அவளைக் காதலித்துக் கந்தருவ மணம் செய்துகொணடான. பின்னர், அவ ளைத் தன்னிடம் அழைத்துககொளவதாக வாக்களித்து விட்டுத் தன நகருககுச் செனறுவிட்டான்.

ஆசிரமத்தில தனியே இருநத சகுநதலை துசியந தனையே எண்ணியபடி சிநதனையில ஆழ்ந்திருந்த போது துருவாச முனிவர் அங்கு வர, அவரை அவள கணடுகொள்ளாமல இருநதாள. அதனால, வெகுணட முனிவா அவளது நெஞ்சில் நிறைந்தவன் அவளை மறநதுவிடுவானாக எனறு சபித்தாா. தன நினைவு வரப்பெறற சகுநதலை துணுககுறறு முனிவரிடம் சாப விடை வேண்ட, துசியநதன தன நினைவாக அவளிடம கொடுததுச்சென்ற ஏதேனும் ஒரு பொருளை அவன் காணும்பொழுது அவள நினைவு அவனுக்கு வருமெனறு அருளினார்.

துசியநதன் தன அரண்மனைக்குச் சென்றதும முனிவர் இட்டசாபத்தினபடி தன அரச காரியங களில் தனனை மறநது சகுநதலையை அறவே கைவிட்டுவிட்டான். அவன் வரவுக்காக ஏஙகிக காத் திருந்த சகுந்தலை ஆராத் துயரத்தில் ஆழ்நதிருந ததைக் கணட , கண்ணுவ முனிவர் அவளைச் சில சீடர்களுடன துசியநதன அரணமனைககு அனுப் பிவைத்தார். துசியந்தன அவளை இன்னாள என இனங கணடுகொளளாமல் கடுஞ்சொறகளைக் கூறி, அவளை ஏற்க மறுததுவிடடான. அதனால மன முடைந்த சகுந்தலை கணணுவ முனிவரது ஆசிரமத் திற்கே திருமபிவநது வாழலானாள. சிறிது காலத் திறகுப் பின்னர்க் காநதருவ மணததால கருவுறறி ருநத அவள பரதன எனனும ஓா ஆணமகவைப பெறறு அவனைப போறறி வளாதது வரலானாள். அமமகன மிக இளவயதிலேயே அறிவும், ஆற்றலும மிககவனாய், அஞ்சாநெஞ்சனாய் விளஙகினான்.

இதறகிடையில் துசியநதன தன நினைவாகச் சகுந்தலையிடம் கொடுத்திருந்த முததிரை பொறித்த மோதிரம் காணாமல போய்விட்டது. அவள நீராடிக கொணடிருநத நீரநிலையில அது நழுவி விழுந்து விட்டதை அறியாமல் அதைபபற்றி மறநத நிலை யில அவள் இருந்தாள. அதனை மீனவர் சிலா கண டெடுதது அரசனிடம் சேர்பபிக்க அரசன் திடீ ரெனறு சகுநதலையின் நினைவு வரபபெற்றான. தான அவளை மணந்தது அவன நினைவுக்கு வந தது; அவளைப் புறக்கணித்த தன செயலுக்கு வருந் தினான. பிறகு ஒருநாள் அவன் காட்டில வேட்டை

யாடச் சென்றபோது பரதன் கொடிய விலங்குகளு டன அஞ்சாமல் விளையாடிக் கொண்டிருந்ததைக் கண்டு அவன் யார் என வினவி அறிநதுகொணடு அவனுடன் சகுந்தலை இருந்த இடத்தையடைநதான. பினனர் மூவரும் மகிழநது வாழ்ந்திருநதனர்

துசியந்தன் மகனாகிய பரதன் பெயரால்தான இந்திய நாடு பாரத நாடு என்று பெயாபெறறது. அப் பரதன சிறநது விளஙகிய பேரரசனாகையால அவன நினைவாக இந்தியநாடு அப்பெயா பெறறது. மகாகவி காளிதாசரால இயற்றபபெற்ற வடமொழி நாடகம 'சாகுந்தலம்' எனபது சகுநதலை-துசியநதன ஆகி யோரைப் பறறியதே ஆகும். ரா.கி.

**துணைவினை:** வினைச் சொறகளை அவற றின பொருணமை, வருகைமுறை ஆகியவற்றின அடிபபடையில் முதன்மை வினைகள (Primar Verbs) எனவும், துணைவினைகள் (Auxiliary Verbs) எனவும இரண்டாகப் பகுககலாம. முதனமை வினைகள் அகராதிப் பொருளைச (Lexical Meaning) சுட்டத துணைவினைகளோ இலககணப்பொருளைச் (Grammatical Meaning) சுட்டும.

துணைவினைகள் பெருமபானமையான மொழி களில் காணப் பெற்றாலும் ஒவ்வொரு மொழிக கேற்ப இவவினைகள சில தனிப்பணபுகளைக் கொண டுளளன. காலபபோக்கில தம அகராதிப்பொருளை இழந்து இலக்கணப்பொருளைச் சுட்டும் வினை வடி வஙகளே தமிழில பெரிதும் துணை வினைகளாகச் செயற்படுகின்றன. தமிழ் மொழியில் துணைவினை எப்பொழுதும் முதனமை வினையின்பின்னிடத்ததாக அமைந்து முதனமை வினைக்கு இலககணப் பொருள் சேர்க்கத் துணைபுரியும்.

'வந்துவிட்டார்' எனபதில் 'வருதல' என்னும அகராதிப் பொருளைச் சுட்டும் 'வநது' என்னும் முதன்மை வினையினைத தொடர்ந்து வரபபெறும 'விடு' என்பது துணைவிணையாகும். ஈண்டு 'விடு' என்னும் வினை வடிவம் 'விடுதல' எனனும் அகராதிப பொருளை இழந்து 'உறுதிப்பாடு' என்னும் வினைமை யாகிய (Aspect) இலக்கணப்பொருளைச் சுட்டு கின்றமையால் இவவடிவம் துணைவினையாகக் கருதப் படுகின்றது.

முதன்மை வினையும் துணைவினையும்இணைநத கூட்டு வினையமைப்பினை அகராதிப் பொருள தரும் இரணடு வடிவங்களாகப் பிரித்தால்கூட்டு வினையமைப்பு உணர்த்தும் பொருளைப் பெற இயலாது. சான்றாகப் 'படித்துப் பார்த்தார்' எனப தனைப் 'படித்து' எனவும் 'பார்த்தார்' எனவும் பகுத்து இவ்விரண்டையும் அகராதிப்பொருள் தரும் வடிவஙகளாகக் கருதினால் 'படித்துப் பார்த்தார்' என்னும் கூட்டு வினையமைப்பு சுட்டும் பொருளைப் பெறமுடிவதில்லை. ஈண்டுப 'பார்' என்னும்வினைவடி வம் 'முயற்சி' என்னும் வினைமையாகிய இலககணப பொருளைச் சுட்டித் துணைவினையாகச் செயற்படு கினறது. இந்நிலையில் முதலவினைககும், துணை வினைக்கும இடையே அகராதிப் பொருள தரும பிற சொற்கள வருதல இல்லை.

துணைவினைகள் பெருமபானமையும் காலம், எதிர்மறை, இடம, எண, பால ஆகியவறறைச் சுட்டும. உருபுகளை (பாடி(ப) பார்-த-ஆ-ர, வர முடி-ஆ-து) ஏறறுவரும. சில வினைசசொற்கள குறிப்பிட்ட சூழ லில முதன்மை வினையாகும(மதுரைககுப் போனார). ஏனைச் சூழலில் துணைவினையாகவும (ஒழிநது போனார்) செயறபடுவதுணடு.

தமிழில் துணைவினைகள முற்று வடிவிலும (வந்து-இருநதார்), செய்து வாய்பாட்டு வினையெசச வடிவிலும் (விழுநது-அடித்து), செயவெனெச்ச வடிவிலும் (கேட்டுப் பார்ததால), பெயரெச்ச வடி விலும (ஓடி-விட்ட), தொழிறபெயர் வடிவிலும (வாழத்-தெரிதல), வினையாலணையும பெயர் வடி விலும் (வேண்டிக்-கொணடது) அமைநதுளளன வேறுபட்ட இலக்கணப் பொருளைச சுட்டுவதன பொருட்டுச சில துணைவினைகள அடுக்கி வருவதும் உண்டு.

தமிழ் இலக்கண நூலகளில் துணைவினைகள பல, மொழியின கண் கையாளபபட்டபோதிலும் துணைவினை என்னும் பாகுபாடு அமையப் பெற விலலை. தமிழில் காணப்பெறும துணைவினைகளை அவை உணர்த்தும் இலக்கணப் பொருளை அடிப்படை யாகக் கொணடு வினைமைத் துணை வினைகள் (Aspectual Auxiliary Verbs) எனவும் வினைப் பொருள துணைவினைகள (Model Auxiliary Verbs) எனவும் வினைச செய்கைத் துணைவினைகள் (Voice Auxiliary Verbs) எனவும் மூன்றாக வகைப் படுத்துதல் இயலும்.

செயல் முழுமை (Perfect), செயல தொடாச்சி (Proressive), முயற்சி (Trial), வழக்கம் (Habitual) போனற வினையின வேறுபட்ட செயலநிலைகளைக் குறிககும் துணைவினைகள வினைமைத துணைவினை கள எனப்படும.

பார்த்துக்-கொணடிருக்கிறார்-செயல்தொடர்ச்சி; செய்து-பார்த்தார்-முயற்சி.

பேசுவோரின் மனநிலையின் அடிப்படையில் வேணடுதல் அனுமதி, எதிர்மறை உணமைநிலை(Fact),

வாய்ப்பு (Probability) போன்ற பல்வேறு வினைப் பொருள்களைச் (Moods) சுட்டும் துணைவினைகள் வினைப்பொருள் துணைவினைகள் எனப்படும்.

வர-வேண்டும்-வேண்டுதல்
கொடுக்க-மாட்டார்-எதிர்மறை
பெய்யக்-கூடும்-வாய்ப்பு

தமிழில் காணப்பெறும் பெரும்பான்மையான வினைப்பொருள் துணைவினைகள் இலக்கண அறிஞர்களால் குறிப்புவினைகளாகக் கருதப்படுகின்றன. வினைப்பொருள் துணைவினைகளாகக் குறிக்கப்பெறுபவை பல, முதன்மை வினைகளாகச் செயல்படும் போதும் (எனக்கு உணவு வேண்டும்) துணைவினைகளாகச் செயல்படும்போதும் (எனக்குப் படிக்க வேண்டும்) அவற்றிடையே பொருண்மை நிலையில் வேறுபாடு இல்லை.

செயப்பாட்டு வினைச் செய்கை (Passive Voice), இயக்குவினைச் செய்கை (Causative Voice), பிரதிபலிப்பு வினைச்செய்கை (Reflexive Voice) போன்ற வினையின் வெவ்வேறு செயல்வகைகளைச் சுட்டும் துணைவினைகள் வினைச்செய்கைத் துணைவினைகள் எனப்படும்.

செய்யப்-பட்டது-செயப்பாட்டு வினைச்செய்கை
பாடச் - செய்தார்- இயக்குவினைச் செய்கை.

ஏ.ஆ.

**துணை நூல்கள்:**

**Agesthialingam**, S. & **Srinivasavarma**, G., (Edrs.) Auxiliaries in Dravidian, Annamalai University, Annamalainagar, 1980.

**Andronov**, N., A Standard Grammar of Modern and Classical Tamil, Madras, 1969.

***துந்திரவெளி***: வடதுருவத்திலிருந்து ஏறத்தாழ 23½ பாகையிலுள்ள சிறு வட்டத்தை அடுத்துள்ள வடஅமெரிக்காவின் வடக்குப் பகுதியும் யூரேசியாவின் வடக்குப் பகுதியும் மரங்களற்ற சமவெளி நிலங்களாகும். இப்பகுதிகள் துந்திர (Tundra) வெளி எனப் பெயர் பெறுகின்றன. ஆர்ட்டிக்கு மாக்கடலின் தீவுகளும் இந்த வெளியில் அடங்கும். காராக் கடலை (Kara Sea) அடுத்துள்ள வடக்கு சைபீரியாவில் துந்திர வெளி மிகப் பரந்து உள்ளது. தெற்கில் காமச்சட்கா முந்நீரகத்தின் வடபுறம் வரை அது பரந்துள்ளது. தெற்கில் இசுகாண்டிநேவியா (Scandinavia), திமான் (Timan), ஊரல் (Ural) மலைப் பகுதிகளிலும் துந்திர வெளி பரவியுள்ளதைக் காணலாம். இங்கு மக்கள் மிகுதியாக வாழ்வதில்லை. நாடோடிக் கூட்டத்தினர் காணப்படுகின்றனர். கலைமான் வளர்த்தல், மீன்பிடித்தல், வேட்டையாடுதல் முதலியன மக்களின் தொழில்களாகும். இப்பகுதிகளில் வடிகால் வசதியில்லாததால் தட்டை நிலம் பெரும்பாலும் சதுப்பு நிலமாகி வருகிறது. வெப்பமான காலங்களில், காளான், பாசி சிலவகைப் பூச்செடிகள் இங்கு முளைக்கின்றன. இங்கு மரங்கள் வளராமைக்குக் காரணம் 1) குளிர் காலத்தில் கடுமையான குளிர் காற்று வீசிக்கொண்டே இருக்கும். 2) பகல் நேரத்திலும், மரங்களுக்குப் போதுமான வெப்பம் இருப்பதில்லை. 3) அடிமண் எப்பொழுதும் உறைந்து கிடக்கும். மிக வெப்பமான சூலை மாதத்திலும், சராசரி வெப்பம் 50 பாகைக்கு மேல் உயர்வதில்லை. பெரும்பாலும் சராசரி வெப்பம் உறைநிலைக்குக் கீழாகவே இருக்கும். குளிர் காலம் மிக நீண்டதாக இருக்கும்; கோடைக்காலம் குறுகியது. தென்கோளத்தில் துந்திர வெளி கிடையாது.

தெ.பா.

***தும்பிசேர் கீரனார்*** சங்கப் புலவருள் ஒருவர். இவர் பெயர்க்குத் தும்பிசோ கீரனார் என்னும் வேறு பாடமும் காணப்படுகிறது. கீரனார் இவரது இயற்பெயர். தும்பியை விளித்துத் தோழியும் தலைவியும் கூறுவதாகக் குறுந்தொகை 392, நற்றிணை 277 ஆகிய இருபாடல்களை இவர் பாடியிருத்தலின் தும்பிசேர் கீரனார் ஆயினார் போலும் என்பர் உ.வே.சா. நற்றிணை உரையாசிரியர் நாராயணசாமி ஐயரும் இக்கருத்தினரே. இவர் பாடியனவாகப் புறநானூற்றில் ஒன்றும் (249), நற்றிணையில் ஒன்றும் (277), குறுந்தொகையில் ஐந்தும் (61, 315, 316, 320, 392) ஆக 7 பாடல்கள் கிடைத்துள்ளன. புறம் 249 பாடியவர் தும்பி சொகினனார் என்னும் வேறு புலவராவர் என்று மர்ரே பதிப்புக் கூறும்.

'தும்பியே, அருஞ்சுரம் பிரிந்த தலைவர்க்கு என் பிரிவை உரைப்பாயாக எனக் கொடுமையுடைய நின்னிடம் கூறியதனால் யான் இறப்பேனாக; அறனிலோய், நின்மெய் கருமையன்றியும் நின் அறிவும் கரிதோ? நீ நீடுவாழ்க' எனத் தும்பியை விளித்துத் தலைவி நெஞ்சழிந்து கூறுவதாக நற்றிணைப் பாடல் (277) உள்ளது. தலைவனுடன் மெய்யுற்று இன்புறாவிடினும் தலைவி அவனிடம் நட்புச் செய்து இன்புறுதலுக்குச் சிறுவர் சிறுதேரை ஊர்ந்து இன்புறாது ஈர்த்து இன்புறுதலையும் (குறுந். 61) தலைவனுள்ள இடத்தையே தலைவியின் தோள் விழைந்து நோக்குதலுக்குக் கதிரவனிருக்குமிடத்தை எதிர்நோக்கும் நெருஞ்சி மலரையும்(குறுந். 315)மலையில் தேனிறால் வரிசையாகத் தொங்குதற்கு அணிவகுத்துச் செல்லும் கேடகங்களையும் (குறுந். 392) உவமை கூறியிருத்தல் சிறப்பாகும். ஓரை மகளிர் அலவனை ஆட்டி அலக்கழித்து விளையாட, அதன் துன்பங் கண்டு கடலலை

அதனை நீருக்குள் அடித்துச சென்று இடர் நீக்கும் நெயதனில இயல்பை உள்ளுறை தோன்ற இப்புலவர் கூறியுள்ளார் (குறுந். 316). நெய்தற் பரதவர் வெண் மணற் பரப்பில் தாம் வலையிற் மீன் உணங்கலையும் கொண்ட இறாவின வாடலையும் இட்டு மணம் வீசச் செய்தலைக குறுந்தொகை 320 கூறும் நனமொழிககு அச்சம் இல்லை எனற அறத்தை (குறுந். 392) இப் புலவர் புலப்படுத்துவர். இரா.சா.

**தும்பி சொகினனார்**: இப்புலவர் புறநா னூறு 249-ஆம் பாடலை மட்டும் பாடியவர் என மர்ரே பதிப்புக் கூறும். உ.வே.சா. இவர் பெயர்க்குத் தும்பிசோ கீரனார் என்று பாட வேறுபாடு இருத் தலைச் சுட்டியுள்ளார். ஒளவை. துரைசாமிப் பிளளை இவர் பெயர்க்குத் தும்பைச் சொகினனார் என்று வேறு பாடம் இருபபக் கணடு தம் பதிப்பில் துமபி சொகினனார் என்பதற்குப் பதிலாகத் துமபைச் சொகினனார் எனறே பதிப்பித்துளளாா. தும்பை என்பது இவரது ஊர் எனவும் சொகினன் என்பது இவரது பெயரெனவுங கொளக; சொகினன - சொகி னம் (நிமித்தம்) கூறுபவன்; சொகினம பிற்காலத்தே சகுனமென மாறியது என அவர் விளக்கந் தந்துள ளார். மேலும் அவர் துமபி சோகீரனார் என வேறு பாடமுண்மையையும் சுட்டியுள்ளார். தும்பி சோகீர னார் எனனும் பெயர் பொருள விளக்கமினமையின் தும்பிசோ கீரனார் என அதனைக் கொள்வதே பொருத்தமெனக் கொணடுள்ளார் நற்றிணை உரை யாசிரியா நாராயணசாமி ஐயர். ஆகவே பலரும கொணட பாடவேறுபாடுகளை நோககின தும்பிசேர் கீரனார், தும்பி சோகீரனார், தும்பி சொகினனார் என்னும் மூவரும் ஒருவரே எனக் கருதலாம் போலும். கதிர்மூக்கு ஆரல என்றும், கணைக்கோட்டு வாளை என்றும், அரிககுரல தடாரியின் யாமை எனறும், பனை நுகும்பனன சினைமுதிர்வரால் எனறும, உறழ வேல அன்ன ஒண்கயல் என்றும மீனவகைகளையும் யாமையையும் தக்க உவமையடைகளோடு கூறியிருத தல் இவரது புலமை நலம் காட்டுவதாகும் (புறம். 249). இப்புறபபாடல் கணவனையிழந்த ஒருத்தியின் கைமமை நோனபினைச சிததிரிககிறது. இரா.சா.

**தும்பி சோகீரனார்**: 'கீரன எனபது இவர் தம் இயறபெயர். சோ – அடைமொழி. இதன் பொருள் விளங்காமையால் இவா பெயரைச் சேர்கீர னார் என்று பதிப்பிக்கலாயிற்று' என்பர் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர். மேலும் அவர், தும்பியை – வணடை – நோககிக் 'கொடியை வாழி துமபி' (நற் றிணை 277) எனவும், 'அம்ம வாழியோ, மணிச் சிறைத் தும்பி' (குறுந்தொகை 392) எனவும் விளித்து அதனைப் பலவாகப் பாராட்டிக் கூறலின இவர் தும்பிசேர் கீரனார் எனப்பட்டார் என விளக்கந்தரு வர். சஙகப் புலவருள தும்பி சோகீரனார் என ஒரு வர் இருந்தார் என மர்ரே பதிப்பும் வையாபுரிப் பிளளைப் பதிப்பும் கொள்ளவிலலை. துமபிசேர் கீர னார் எனனும் பெயரே தும்பி சோகீரனார் எனத் தவறாகக் கருதப்பட்டுவிட்டது. துமபி சொகினனா ரையும (புறம 249 பாடியவர்) தும்பிசேர் கீரனா ராகவே வையாபுரிப் பிள்ளைகருதுவர். இவர் பாடி யனவாக நற்றிணையில் ஒன்றும் (277) குறுந்தொகை யில் ஐந்தும் (61, 315, 316, 320, 392) ஆக 6 பாடல களஉள்ளன. குறுந்தொகை 320-ஆம் பாடலைத் தும்பி மோசிகீரன் பாடியதாக ஆ. சிங்காரவேலு முதலியார் குறித்துளளாா (அபி.சி. பக். 870). நக்கீர னார், மோசிகீரனார், தும்பி மோசிகீரன், இமமென கீரனார், உவர்க்கணணூராப் புல்லங்கீரனார், காசிபன கீரன, மூலங்கீரனார், கழார்க்கீரன, எயிற்றியனார். கிடங்கில் காவிதிக் கீரங் கணணனார், கீரங்கீரனார் இளங்கீரனாா, பொருந்திலிளஙகீரனார், மடல் பாடிய மாதங்கீரனார் முதலிய பெயர்களால கீரன் என்னும் பெயரின செல்வாக்கு அறியலாம். இதனால்தான் கீரனூர், கீரப்பாளையம் முதலிய ஊர்ப்பெயாகள் தமிழகததே வழங்கலாயின. இரா.சா

**துயில்நடை**: சில குழநதைகள், சிறுவர்கள ஆழந்த தூக்கத்தில திடீரெனறு எழுந்து நடப்பதை யும், அதுசமயம் வீட்டின் கதவுகள் திறந்திருந்தால தம் நினைவு இன்றி வெகு தூரம் வீட்டை விட்டுச் செல்வதையும் பலரும் கேளவிப் பட்டிருக்கலாம. இச் செயலே துயில்நடை (Somnambulism) எனப்படும. இது சாதாரணமாக ஆண்களிடையே குறிப்பாகச் சிறுவாகள், விடலைப் பருவத்தினரிடையே மிகுதி யாகக் காணபபடும் ஓர் அறிகுறியாகும. இதறகு அடிப்படைக் காரணமாக மூர்ச்சைநோய் (Hysteria) எனப்படும் மனநோயோ மூளையின் ஒரு பகுதியைப் பாதிக்கும் கைகால் வலிப்புநோயோ (Temporal lobe epilepy) உளச் சிதைவு நோயோ (Schizoperenia) ஒரு காரணமாக அமையலாம். சில சிறுவயது பருவத்தின ருக்குத் தூக்கத்தின ஒரு பகுதியாகத் துயிலநடை தோனறிப் பினனர் மறைவதும் உணடு. துயில் நடை ஏற்படும் போதுகனவுகள இராது. துயிலநடைக்கான உளநோய்க் காரணங்கள்இரா.மேலும், துயில்நடையே சீராக இல்லாமல் தாறுமாறாக அமையும் வாயப்பு உளளது. மனப்பக்குவம் அடையும் வயதில துயில் நடை தானாகவே மறையும். மேற்கூறிய சில உள நோய்களில், துயில்நடை, சாதாரண தூக்கத்தைப் போல அமையாமல், வசிய முறையில் ஈடுபட்ட தூக கத்தை (Hypnotic Sleep) ஒட்டி அமையும். இது போன்று துயில் நடை கொள்வோர் காலையில் விழித் ததும் அந்நிலையை அடியோடு மறந்திருப்பார்கள்.

சில சமயம் தூக்கத்திலேயே சில அதிர்ச்சி தரக்கூடிய சாதாரணமாக ஒருவரது ஆளுமைக்கு ஒவ்வாத செயல்களிலும் ஈடுபடுவது இயல்பே. ஆனால், சில திரைப்படங்களில் காண்பிப்பது போல, இந்நிலையில் கொலை கூடச் செய்யலாம் என்று எண்ணுவது அளவுக்கு மீறிய கற்பனையாகும். துயில்நடை கொண்டுள்ளவரை அத்தருணம் அவர் மூளை உயிரணுக்கள் (Brain Cells) எவ்வாறு வேலை செய்கின்றன என்று பார்க்கும்போது, கண் அசைவுடன் கூடிய தூககத்திற்கு ஒப்பான மாறுதல்களைக் காண நேரிடும். துயில் நடை கொள்வோர் பலரும் மிகவும் பதட்ட நிலைமையிலும், பயங்கர கனவுகளால் பாதிக்கப்பட்டும் இருக்கலாம். அதற்கான சமன்படுத்தும் மருந்துகள் (Anxiolytics), அவர்கள் உள்மனத்தை அரித்துக் கொண்டிருக்கும் விவரங்களை வெளிக்கொணர்ந்து வலிமையூட்டுதல் (Analytical Supportive Psycho Therapy) ஆகியவை மூலமாக இப்பிணியாளர்களுக்கு நன்மை உண்டாக்கலாம். தொடர்ந்து துயில் நடை கொள்வோர் ஒரு மனநல நிபுணரைச் சந்தித்து அவர் சொல வழி நடப்பதால் குணமடையும் வாய்ப்பும் உண்டு. என.மா.

**துர்க்கை பூசை:** துர்க்கை சக்தியின் ஓர் கூறாகக் கொள்ளப்படுகிறது. தமிழ் இலக்கியங்களில், கொற்றவை, காளி என்னும் பெயரால் இத்தெய்வம் குறிக்கப்படுகிறது. சாக்த நெறியில் சக்தி வழிபாடு செல்வாக்குப் பெற்ற நிலையில் துர்க்கை பூசை இந்துக்களின் ஒரு பகுதியினரால் சிறப்பாகப் பின்



துர்க்கை

பற்றப்பட்டு வருகிறது. அதனால், துர்க்கை பூசையும் பல்வேறு வகையாக மேற்கொள்ளப்படுகின்றது. சைவ உணவு வைத்துப் படைத்து வழிபடுவது ஒரு முறையாகும். அசைவ உணவு படைத்து வழிபடுவது மற்றொரு முறையாகும். துர்க்கை அதன் இயல்புகளுக்கேற்பப் பதினாறு வகையாகக் கூறப்படுகிறது.

கல்வியறிவு பழக்க வழக்கங்கள் பண்பாட்டு நிலை முதலியவற்றால் சமுதாயத்தின் மேல்தளத்தில் உள்ளவர்கள் புலால் முதலியவை படைக்காத சைவ பூசையாகவும், அங்ஙனமன்றிச் சமுதாயத்தின் கீழ்த்தளத்தில் வாழ்பவர்கள் மது, மாமிசம் படைத்து வழிபடும் அசைவ முறை பூசையாகவும் மேறகொள்கின்றனர். அட்டமி நாளில் ஒரு வேண்டுகோளை முன்னிட்டுத் தொடங்கிப் பதினாறு வாரம் விரதம் இருந்து இபபூசையை மேற்கொள்வர். துர்க்கை பூசை செய்வோரைத் தீய ஆவிகள் தீண்டாவென்று கூறுகின்றனர். புரட்டாசி மாதத்தில் கொணடாடப் பெறும் நவராத்திரி விழாவின்·முதல் மூன்று நாள்கள துர்க்கை பூசைக்குரிய நாள்களாகும். இந்நாளில் கொண்டாடப் பெறும் பூசை முறை சாத்விகமாக கள், கொலை, புலை தவிர்தத ஒன்றாக நிகழும். அதில் பூவும், பொஙகலும் சிறப்புப் பொருளாக வைக்கப் படும்.

திருக்கோவில்களில் அமைக்கப்பட்டுள்ள துர்க்கை திருமேனிகளுக்கு வெள்ளி, செவ்வாய் ஆகிய கிழமைகளில் எலுமிச்சை மாலையிட்டுக் குஙகுமத்தால அருச்சனை செய்வா. சிலை வடிவாக இருக்கும் துர்க்கா தேவிக்குப் பெரும்பாலும் செந்நிற ஆடையை உடுத்துவது மரபாகும். கன்னிப் பெணகள இராகுகால நேரங்களில் குறிப்பாக, வெளளியன்று காலைப் பொழுதில் துர்க்கை சன்னதியில எலுமிச்சம் பழத் தோலில எண்ணெயிட்டு விளக்கேற்றிப் பூசை செய்வர்.

நகர்ப் புறங்களில் அல்லது காடுகளில் உள்ள துர்க்கை கோவிலில் காணப்படும் பூசை முறைகள் காண்போரை மெய்சிலிர்க்க வைப்பனவாகவும அச்சமுறச் செய்வனவாகவும் அமையும். ஆடு, எருமை, கோழி போன்ற உயிர்கள் பலியிடப்படும். நடுப்பகல் அல்லது நள்ளிரவு நேரத்தில் இப்பூசை செய்வது வழக்கில உண்டு. ஒன்பது கன்னிப்பெண்களைப் பல கையில் அமர வைத்து அவர்களையே துாக்கையாகக் கருதி வழிபடுவதும் உண்டு.

துர்க்கையைத் தீவிரமாக வழிபடுவோர் நீலம் அல்லது செந்நிற ஆடை அணிவர். நாற்பத்தெட்டு நாள்கள் விரதமிருப்பர். ஆடி, தை மாதங்களில் மூன்றாம் வெள்ளி, சித்திரை மாதப் பௌர்ணமி ஆகிய நாள்களில் துர்க்கை பூசை சிறப்பாக நடைபெறும.

துர்க்கையினை நினைந்து இருப்பவர் மருளுற்ற நிலையில் இறைசசிப் பொருளை உண்பர்; வாக்கும் கூறுவர். தொடர்ந்து செய்யும் துர்க்கை பூசையினால அத்தேவியின அருள பெற்றவர்களின வாக்கை, துர்க்கையின வாக்காகவே மககள கருதிப் போறறு வா.

மகிடாசுரனை அழிபபதற்காக விட்ணு முகத்திலிருந்தும், தேவர்களின முகத்திலிருநதும வெளி வநதத் தீப்பிழம்பால் உருவான துாககையை வழிபட்ட பின்பே இராமன இராவணனை அழிக்கச் சென்றான் எனக் கூறுவா. சுவாகளின்மேல் துாக்கை படம் வரைந்து மஞ்சள கிழங்கு,பால் சோறு வைதது வழிபடுவர். துர்ககை பூசைக்குரிய நூறறெட்டு நாமாவளி நூல உளளது. உச்சயினி நகரில உளள துாக்கைக்குக் குறிப்பிடததக்க முறையில பூசை செய்யப் படும். மாவால் துர்க்கை வடிவம் செய்து வழிபாடு முடிந்ததும் ஆற்றில விடும் மரபும் காணபபடுகினறது.

இமவான், மேனை ஆகியோருக்கு மகளாய்ப பிறந்து சிவபெருமானை மணந்த பாாவதி, தன் தாயின வேண்டுகோளுககிணங்கி நிலவுலகு வநது மூன்று நாள தஙகியிருநதாள. அந்த மூனறு நாளும் பார்வதியை வழிபட்டு அருள பெறறனா. சிஙக வாகனம் பெற்ற துாககை வழிபாடு நெடுஙகாலமாக இருந்து வநதுள்ளது. துாக்கையை இளவேனிற காலததில் பூசை செயதால மிக்க பலன் கிட்டும எனபா.

தேவி பாகவதம, மாாக்கணட புராணம், அருணை மானமியம், தேவி மகாத்மியம, இலளிதம் ஆகிய நூல்கள் துாக்கை பூசையைப் பற்றிக் கூறுகின்றன. துர்க்கை பூசை அதனை மேறகொளவோருககுத தீமையை அகற்றி வலிமை தரும் எனபது பொதுவான நம்பிகையாகும். இரா.குரு.

## துர்காபாய் தேசுமுக்கு (1909-1981):

சிறந்த சமூகத் தொணடரும், இந்திய சுதநதிரத்திற்காகப் போரிட்டவரும் கலவித் துறை வல்லுநருமான துர்காபாய் தேசுமுக்கு (Mrs Durgabai Deshmuk) ஆந்திர மாநிலததில் ஒரு பண்பாடுள்ள குடும்பததில் 1909-ஆம் ஆணடு பிறந்தார். அவரது பனிரெணடாம் வயதிலேயே, மகாத்மாகாந்தியின காநதசக்தி அவரை ஈர்த்தது. அவருடைய ஆக்கப்பணி திட்டங்களில் தம்மை ஈடுபடுத்திகொள்ள, துர்காபாய் தமது ப்ள்ளிப் படிப்பை விட்டுவிட்டார்.தமதுபதி மூனறாம் வயதில், இநதி கற்பிக்கவும் நூல்நூற்றல், நெசவு ஆகியனவறறைப் போதிக்கவும், தாமே ஒரு பள்ளியைத் தொடங்கினார். இதுமுதல் அவருடைய தன் உதவித் தொழிற் பணி தொடங்கியது.



துர்காபாய் தேசுமுககு

இவர் 1930-இல நாட்டுச சேவையிலும் பல பொதுப் பணிகளிலும தமமை முழுமையாக ஒபபடைததுக்கொணடாா. உபபுச சததியாககிரகத்திலும், விடுதலைப்போராட்டததிலும பங்கு கொணடாா. இதன் விளைவாக இவருக்குச சிறைவாசம கிடைத்தது. சிறையிலிருந்து 1933-இல் விடுதலை பெற்றவுடன், முறையாகக் கல்வி கறகத் தொடஙகினார். ஆநதிரா பலகலைக் கழகத்தில் முதுகலைப் பட்டம் பெறறார். அத்தேர்வில இவா முதனமை நிலையில் மதிப்பெணகள பெற்றது குறிப்பிடத்தககது. அரசியல பாடப்பகுதியிலும், அரசியல அமைப்பு வரலாற்றுப் பகுதியிலும இவர் அடைநதிருந்த பேரறிவின காரணமாக இவருக்குப் பாராட்டுப் பதககங்கள கிடைததன. செனனை வழககறிஞர் சங்கம் இவரை வழககுரைஞராகப் பணியாற்ற வரவேற்றது.

துர்காபாய் 1946-இல் அரசியல நிருணயசபைககுத் தேர்நதெடுக்கப்பெற்றார். அச்சபையின குழுக்கள பலவற்றில் உறுப்பினராகவும் பணியாற்றினார். இடைக்கால நாடாளுமன்றத்தில் இவர் உறுப்பினராக இருந்து கொணடே உச்சநீதிமனறத்தில வழககுரைஞராகப் பணியாறறினார்.

இநதிய சமூக சேவைக் குழுவிலும திட்டககுழுவிலும் 1952-இல் இவர் நியமனம் பெறற பிறகு, 1953 முதல 1962 வரை மத்திய சமூக நல நிறுவனத்தின் தலைவராகவும் தொணடாற்றினார். இவருடைய தலைமையினகீழ், இந்திய கிராமப்புறஙகளிலும் நகர்பபுறங்களிலும், மக்கள நலத்திட்டஙகள பல செயல்முறைக்கு வநதன. அதுகாறும் தனி மனிதர்களின பொறுப்பின் கீழ் இருநத சமூக நலததிட்டங

கள், விரைவில் நன்கு வரையறுக்கப்பெற்ற அரசுத் திட்டங்களாக உருவெடுக்கத் துர்காபாய் எடுத்துக் கொண்ட முயற்சிகள் போற்றத்தக்கவை. புதிதாக உருவாகிய திட்டங்களில் அரசியல் அதிகாரிகளும், தாமாக இயங்கும் அமைப்புகளும் ஒன்றிணைந்து செயலாற்றலாயின.

இந்தியாவில் பெண்டிர் நிலையையும், அவர்கள் தொடர்பான சிக்கல்களையும் தெளிவாக உணர்ந்த துர்காபாய், விரைவில் அவற்றைத் தீர்க்க வழிவகுத்தார். இவரது கருணை உள்ளம் கண்ணீர் விடுவதுடன் மட்டும் நின்றுவிடாமல் கேடுகளைக் களைவதிலேயே முனைந்து நின்றது. சிக்கல்களுக்கு விடை காணபதில் இவர் காட்டிய தெள்ளறிவும் துணிவும் நம்பிகசை யும் பாராட்டுதலுக்குரியன. எதிலும் இவர் தொலை நோக்குடன் செயற்பட்டார்.

துர்காபாய் ஒரு சிறந்த மேடைப் பேச்சாளா. எங்கு இவர் பேசினாலும் மக்களின் மகிழ்ச்சி ஆர வாரம் இவருக்குக் கிடைக்கத் தவறியதே இல்லை. இவருடைய அரியசெயல்களில் குறிப்பிடத்தக்க ஒனறு, இவர் 1937-இல் சென்னையில் ஆநதிர மகிள சபை நிறுவனங்களை ஏற்படுத்தியதாகும். பிறகு ஐதரா பாத்திலும் இவை நிறுவப்பெற்றன. இச்சபையின் தொடக்கக்காலகுறிக்கோள், வருந்தத்தக்க நிலையில் இருந்த பெண்டிர்களுக்கு உதவி செய்வதாகும். பிறகு சிறிது சிறிதாக இது வளர்ச்சியடைந்து பெணடிரின் நலத்திற்கான அனைத்துச் செயல்களையும் நிறை வேற்ற முற்பட்டது. இந்த நிறுவனம், பல செல்வந் தர்களிடமிருந்தும், அரசிடமிருநதும், உலக நாடுகளி லிருந்தும் நன்கொடைகளை நிரம்பப் பெற்றது. பல நிலங்கள் இந்த நிறுவனத்திற்காகக் கிடைத்தன. நலந்தரும் பல திட்டங்களை ஆநதிர மகிள சபை நிறைவேற்றியது.

துர்காபாயின் அரிய சேவைகளைப் பாராட்டி இவர் கல்வி பயினற ஆந்திரா, வாரணாசி பலகலைக கழகங்கள, சிறப்புப்பட்டங்களை இவருக்கு வழஙகின. நேரு இலக்கியச் சிறப்புப் பரிசும் இவருக்குக் கிடைத தது (Nehru Literacy Award). கணணில்லாதவர் தேசிய சங்கம் 1974-இல் இரசுத்தம் மெர்வாஞ்சி ஆல்பைவாலா நினைவுப் பரிசை (Rustom Merwanji Alpaiwallah Memorial Award) அளித்து மகிழந்தது.

இவருடைய இனிய கணவர் சிநதாமணி தேசு முக்கு (காண்க: தனிக் கட்டுரை). இவவிருவருககும் 1975-இல் இந்திய அரசு பத்மவிபூசன் பட்டத்தை வழங்கி இவர்களைப் பெருமைப்படுத்தியது.

துர்காபாய் தோற்றுவித்தப் பணிகள் யாவும் இவ ருடைய நிறுவனங்கள மூலமாகவும் இவர் தலைமை தாங்கிய பல கிளை நிறுவனங்கள் மூலமாகவும் இன் றும் தொடர்ந்து நடைபெறுகின்றன. இவர் 1981 -இல் காலமானார். தி.சு.

**துர்காபூர்** மேற்கு வங்காள மாநிலத்தில் பருதுவான் (Burdwan) மாவட்டத்தில் உள்ள ஒரு தொழில் நகரம். இதற்கு அருகில் தாமோதர் ஆறு ஓடுகிறது. துாகாபூா (Durgapur) நகரம் சாலைகள மூலமாகவும் இருப்புபபாதைகள் மூலமாகவும் கல் கததா, பருதுவான், அசனால் (Asanol) ஆகிய நகரஙக ளுடன் இணைக்கப்படுகிறது. இந்தியாவின் சிறந்த இரும்பு-எஃகுத் தொழிற்சாலை நகரஙகளில் இதுவும ஒன்று. ஆங்கிலேயரின் உதவியுடன இஙகு 1962-இல ஓர் எஃகுத் தொழிற்சாலை செயலமுறைக்கு வந்தது. இங்கு உறபத்தியாகும சுட்டநிலக்கரி வாயு (Coke - gas) குழாய்கள் மூலம் கல்கத்தாவுக்கு எடுததுச் செல லப்படுகிறது. இரண்டு பெரிய அனல்மின நிலையங் கள் (Thermal Power Stations) இஙகே இயஙகி வரு கின்றன. மேலும, நிலககரிக் கழுவு நீர்மம் (Coal Washery), செங்கல் தொழிற்சாலைகள், உலை அடுப்புகள் செய்யும் தொழிற்சாலைகள், உரத் தொழில நிறுவனங்கள, கண்ணாடிகள செய்யும் நிலை யங்கள் முதலியனவும் துர்காபூரில உளளன தாமோ தர் ஆற்றின் கால்வாய் மூலம நீரப்பாசன வசதிகள் பெருகியுள்ளன. பருதுவான் பலகலைக் கழகத்துடன் இணைக்கபபட்ட ஒரு பெரிய பொறியியல் கலலூரி யும், கல்கத்தா இரவீந்திர பாரதி பலகலைக கழகத் துடன இணைக்கப்பெறற ஓர் இசைக்கல்லூரியும் துர்காபூரில உளளன. மக்களதொகை 1981-இல 306,000. தெ.பா.

**துர்காவதிஇராணி,** மொகலாயப் பேரரச ரான அகபருடைய ஆட்சிக் காலத்தில வாழ்நதவர். இவர் கர்க-கடஙகா (Garha-Katanga) என்ற கோணடுக் களின் நாட்டரசி ஆவார். கர்க நாடு இககால மத்தியப் பிரதேச மாநிலததின் வடக்கு மாவட்டங்களை உள் ளடககியிருந்தது. அது கிழக்கே இரத்தன்பூர் முதல் மேற்கே இரெய்சின (Raisin) வரையிலும், வடக்கே இரேவா (Rewa) முதல் தெற்கே தக்கின் (Dakhin) எலலை வரையிலும் பரவியிருந்தது. மகோபாவைச் (Mahoba) சார்ந்த சந்தேலர் (Chandel) அரச குலத் தைச் சார்நதவர் துாகாவதி. அப்போதைககு 500 ஆணடுகளுககு முனனர் சநதேலர்கள் வலிமை பொருந் திய இந்திய அரசப் பரம்பரைகளுள் ஒருவராக இருநத னர். துர்காவதியின் தநதை பொருளிழந்த நிலைமை யில் இருந்த காரணத்தால் தமது மகளைச் சமுதாயத தில் தம்மைவிடத் தாழநத நிலையில் இருந்தகோணடு அரசருக்கு மணமுடித்துக கொடுத்தார். கோணடு அரசர் பணம் படைத்தவராக இருந்ததால்தான் தம

மகளை அவருக்குத்திருமணம் செயது கொடுத்தார். தம் கணவர்இறந்தபிறகுவயது நிரமபாததம் மகனான வீரநாராயணுககுக் (Bır Narayan) காப்பாளராக இருந்து ஆட்சி செலுததி வநதார். தனது மகன் உற்ற வயதை அடைநதுவிட்டபோதிலும் தொடாநது ஆட்சிப் பொறுப்பைத் தம் கைகளிலேயே வைத்திருந தார். தம்முடைய உயர்ந்த மரபிறகேறப அனைவரும போற்றத்தக்க வகையில் ஆட்சி நடத்தி வந்தார். தொலை நோக்கு உடையவர் எனபதனால பெரிய பெரிய செயல்களை எளிதில செய்து முடிததா மிகக துணிபு உடையவா; ஆறறல் மிககவா. மாளவ அரச ரான பாசு பகதூருடன (Baz Bahadur) போரிட்டு வெற்றி வாகை சூடியவர். போாக்களத்தில அவர் 20,000 குதிரை வீராகளையும 1,000 யானைகளை யும் கொணடு போரிட்டு வந்தாா. குறிபாாத்துச சுடு வதிலும அம்பு எயவதிலும வல்லவர். அவரது வாழநாளில் பெரும்பகுதியை வேட்டையாடுவதில செலவிட்டார். ஒரு புலியை யாரேனும் பார்ததுவிட் டேன் எனறு கூறிவிட்டால அதனைச சுட்டுச் கொல் லும வரைத் தணணீர்கூட அருந்தமாட்டார் எனறு கூறுவா மக்கள அவரிடம பேரனபுடன நடந்து வந்தனர். அயலவருடன போரிட்டு அவாகளை வெனறு தமது கருவூலத்தில நிறையப் பொருள சேர்த்து வைத்திருந்தார்.

உயரிய குணநலனகளைக்கொணட இந்த அரசி யார்மீது அகபர் போர் தொடுத்தாா. அவரது நாட் டைச் சூறையாடுவதும், அவருடன் காரணமினறிப் போரிட்டு அவரது நாட்டை வலுத்காக்குதல் செயவ தும் அக்பருடைய படையெடுப்புககுக் காரணஙகளா கும். அப்படையெடுப்பை எவ்வகையிலும நியாயமான தென்று கூற இயலாது. இப் படையெடுப்பை நடத தும் பொறுப்பு ஆசப்கானுக்கு அளிககப்பட்டது. அவர் அடிக்கடி கர்கா நாட்டிறகுள் தம்முடைய ஆட் களை ஏதேனும் காரணம்கூறி அனுப்பி வைத்தார். அவர்கள் வாயிலாக அந்நாட்டில நிலவிய சூழ்நிலை களையும், அதன தனித்தனமைகளையும,அரசியாரின நிலைமையையும், அவரிடமிருநத செலவத்தையும. பற்றி அறிநதுகொணடார். அவற்றிற்கேற்ற வகையில் பெரும் படையொன்றைத் திரட்டினாா. அரசியாரும் 500 யானைகள், 20,000 குதிரைகள கொணட படை யைத் திரட்டினார். இரு படைகளும வீரத்துடன போரிட்டன. அதுசமயம் குதிரைபபடைக்கு முனனால் நினறு போரிட்டுவந்த அரசியாாமீது அமபு ஒனறு பாய்ந்தது. அதனால அவர் சிறைப்படுவது உறுதி என்று உணர்ந்தபோது தமது யானையை ஓட்டிச சென்றவரிடமிருந்த உடைவாளை உருவித் தமது வயிற்றில் அதைப் பாயச்சி இறந்து விட்டாா. அவரது மறைவினால் ஆசப்கான் வெற்றி உறுதியாயிற்று. அரசியாரின் மகன சௌரகாா (Chauragarh) கோட் டைக்குள புகுந்து கோட்டைககதவை மூடினார். ஆனால அதே நாளில கோட்டை கைப்பறறப்பட் டது. அரசரைக குதிரைக் காலகளால மிதிககச் செய்து கொனறனா. அரசக கருவூலம சூறையாடப் பட்டது. அவா கொணடுசெனற செலவததில பத்தில ஒரு பங்கினைககூடக கணககிட இயலவிலலை எனறு கூறப்படுகிறது தி.அர.இரா.

**துரியோதனன்** மகாபாரதக் கதையின எதிாத தலைவன்; தன பஙகாளிகளாகிய பாணடவா (பாணடுபுத்திரர்) ஐவாமீது தீராப் பகைமையும, பொறாமையும கொணடு அவாகளைப் பலலாறறா னும அழிக்க முறபட்டு இறுதியில் பாணடவருள ஒருவனாகிய வீமனால் கொலலப்பட்டவன. இவனு டன பிறநதவாகள நூறறுவருள இவன மூத்தவன இவர்களின முன்னோருள ஒருவனாகிய குரு எனப வர் வழிததோனறல்களாதலின இவர்கள கௌரவா எனப்பட்டனா. பாணடவாகளுககும, கௌரவர்களுக கும் இடையே நிகழந்த போராட்ட வரலாறறைக கூறுவதே மகாபாரதக கதையாகும். துரியோதனின தந்தை திருதராட்டிரன பிறவிக் குருடன. கதை தொடஙகுமபோது பாணடு (அவன் இளவல) இறநது பட்டதால இவனே அவன சார்பாக நாட்டை ஆணடு வநதான.

பாணடவா பல கலைகளிலும் (குறிப்பாகப் போர்க் கலையில்) சிறநது விளங்கியதால் துரியோ தனன அவர்களமீது பொறாமை கொணடான. பாணடவருள் வீமன மிக்க வலிமையும், ஆறறலும் கொணடு விளங்கினான. அவன துரியோதனனை விளையாட்டாகச் சில சமயங்களில துனபுறுத்துவதும உணடு ஆதலால் துரியன அவனமீது அளவிலாப பகைமை கொணடு அவனைப பலலாறறானும கொலல முறபட்டான. துரியோதனன ஒருகால அரககினால ஒரு மாளிகை செயது அதனுள பாண்ட வர்களையும் அவாகள தாயாராகிய குநதிதேவியை யும் புகவிட்டு வஞ்சனையாக அமமாளிகைககுத் தீ யிட்டு அவாகளை அழிக்க முயன்றான. அவனது சூழ்சசியை முன்னரே அறிந்திருந்த வீமன் எலலாரை யும் அமமாளிகையிலிருந்து தப்புவித்துக காப்பாற்றி னான. வீமனை அவன பலவாறாகக் கொலல முயன றும் முடியாமல போயிறறு. எனினும் வீமனமீது துரி யனுககிருநத பகை மட்டும வளாந்துகொணடேயிருந தது.

பாணடவர்கள பல மனனர்களை வென்று பேர ரசராகத தம்மை அறிவித்துககொண்டு இராசசூயம் என்னும பெருவேள்வியை இயற்றினர். அதனால் துரி

யனுக்குப் பொறாமைத் தீ மேலும் கொழுந்து விட்டெரிந்தது. அவர்களுடைய நாட்டையும், செல்வத்தையும் பறிகக அவன் ஒரு சூழச்சி செய்தான். வஞ்சனையிலும், சூதிலும் மிக்க சகுனி என்னும் தன தாய் மாமனுடைய சூழ்ச்சியால் பாணடவர்களைச் சூது போருக்கு அழைத்து அப்போரில் அவர்கள தம் நாட்டையும், உரிமையையும் இழக்குமாறு செய்தான. அதன விளைவாக அவர்கள் 12 ஆணடு வனவாசமும, பிறகு ஓராணடு உருக்கரந்துறைதலும் (அஞ்ஞாத வாசம்) செய்ய நேர்ந்தது. இக்காலக் கெடு முடிந்ததும் அவர்களுக்குத் தங்கள நாட்டைத் திருப்பித் தருவதாகக கூறிய துரியன் தன் சொற்படி நடக்க மறுத்ததால் இறுதியாக இருதிறத்தாருககும் பெரும் போர் மூணடது. பதினெட்டு நாளகள் நடந்த அப போரின் இறுதியில் வீமன் துரியனைத் தன தணடினால் தொடையின்மீது தாக்கிக் கொனறான. அவர் உடனபிறந்தவர்களும் துணைவரும் அப்போரில் முன்னரே மாண்டனர்.

துரியன் பொறாமைத் தீயினால அழிந்தது உலகிற்கு ஒரு பாடமாகும். பொறாமையை 'அழுக்காறு என்னும் பாவி' என்றே தெய்வப் புலவர் குறிப்பிடுவர். இதற்கு மாறாகப் பாணடவர் தலைவராகிய தருமபுத்திரர் பொறுமைக்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகக் கருதப்படுகிறார். ரா.கி.

**துருக்கி:** மத்தியக் கிழக்கு நாடுகளில் ஒனறு. இதன் ஒரு பகுதி ஐரோப்பாவிலும், மற்றொரு பகுதி ஆசியாவிலும் இருக்கின்றன. ஐரோப்பிய துருக்கியைத் திரக்கியா (Turukiah Trakya) என்பர். ஆசியப் பகுதியைத் துருக்கிய அனடோலு (அனடோலியா) (Turukiah Anadolu, Anatolia) எனபர். இவ்விரு

துருக்கி-அமைவிடம

பகுதிகளும் பாசுபோரசு (Bosporus), மாமரா கடல் (Marmara), தார்டெனல்சு (Dardenelus) நீர்இணைப்பு ஆகியவற்றால் பிரிக்கப்பட்டுள்ளன. இவையன்றி ஈசியக் கடலிலுள்ள இமரோசு (Imroz) மற்றும் போசுகா (Bosca) தீவுகளும் இந்நாட்டில் உளளன. துருக்கி (Turkey) மேலை நாட்டையும், கீழை நாட்டை

துருக்கி – பழைய அரண்மனை

யும் இணைக்கும் பாலம் என்று பொதுவாகக் கூறப் பட்டு வருகிறது.

**எல்லைகள்:** மேற்கே ஈசியக் கடலும், வடக்கே பல்கேரியாவும் கருங்கடலும், கிழக்கே சோவியத் உரு சியாவும் ஈரானும், தெற்கே ஈராக்கும், சிரியாவும், மத்தியத் தரைக்கடலும் எல்லைகளாக அமைந் துள்ளன

**புவியியல் அமைப்பு:** இது பாலகன் முந்நீரகம் தொடங்கி ஈரான் நாடு வரை பரவி இருககும மலைத் தொடர்களின் ஒரு பகுதியாக அமைநதுள ளது. இதன் சராசரி உயரம 1080 மீட்டர். கிழக்கு நோக்கிச் செலலச்செலல இதன் உயரம் 2000 மீட்ட ருககும் மேலே உளளது. இந்நாட்டின மொத்தபபரப் பில் 9 விழுக்காடு மட்டுமே சமவெளி அலலது சரி வான நிலஙகளாக உளளது. தாழ் நிலங்கள கடற் கரை ஓரங்களில் மட்டுமே இருக்கினறன. மைய அன டோலியா பீடபூமியைச் சுற்றியுள்ள 3000 மீட்டருக் கும் மேலாக உள்ள மலைத்தொடர்கள வடககிலும தெறகிலும முனைப்பாக அமைநதுள்ளன. அமமலைத் தொடர்கள் அப்பீடபூமிப் பகுதியைக் குறுகலான கடற்கரைப் பகுதிகளிலிருநது பிரிக்கினறன. இவற றுள வடபகுதியில் உள்ள பாண்டிகுகு(Pontic) மலை கள் கருங்கடலின் தெனகரையின எலலைக கோட்டை (contour) ஒட்டிச் செல்கினறன. தெறகிலுள்ள தாரசு (Taurus) மலைகள பல மலைததொடர்களாகப் பிரிந்துள்ளன. அவை மத்திய தரைக்கடறகரையை ஒட்டியும், சிரியாவின் வட எல்லையை ஒட்டியும், பரந்துளளன. இம்மலைகள சுணணாம்புக் கற்களால ஆனவை. எனவே இங்கு பூமிககடியில் ஓடும் ஓடை கள பலவும், குகைகளும் உளளன. பானடிக்குமலை களின் உயரமான சிகரம் 3937 மீட்டர் உயரமுளள காக்கர் தகி (Kackar Dagı) ஆகும். தாரசு மலை களில உளள உயரமான சிகரங்கள் 3734 மீட்டர் உயரமுள்ள அலா தாகியும் (Ala dagi), 4168 மீட் டர் உயரமுள்ள சிலோதகியும் (Cilo dagi) ஆகும்.

மத்திய அன்டாலியா பாதியளவு வறண்ட பகுதியாகும். அது பல வடிநிலங்கள, ஆழமறற உப்பு ஏரிகள ஆகியவற்றை உட்கொண்டுளளது. அவ வேரிகளில ஒன்று துசு கோலு (Tuz Golu). கிழக்கு அனடோலியாவில உயரமான மலைத்தொடர்கள உண்டு. அவற்றில் புதிதான எரிமலைக் கூம்புகள் உள்ளன. அவற்றுள் ஒன்று அக்ரி தகி (Agri Dagı) என்பதாகும். 5165 மீட்டர் உயரமுள்ள இச்சிகரம் துருக்கியில் உள்ள மிக உயரமான சிகரமாகும். இச் சிகரங்கள் யாவும் எரிமலைக் குழம்புகளால் மூடப் பட்ட உயரமான மேட்டு நிலங்களில் இருந்து உயரக் கிளம்பியுள்ளன. இம்மேட்டு நிலங்களில் பல வடிகால் கள உளளன. அவற்றுள் ஒரு வடிகாலை வான (Van) ஏரி தன்வயப் படுத்திக்கொண்டு உளளது. மேற்கு அன்டாலியா நீண்ட குறுகலான உயரமான் பாறை அருகுகளைக் (ridges) கொணடுள்ளது. இவை பளளமான தலைகளிலிருந்து பிரிக்கப்பட்டுளளன.

வடகிழக்குத் துருக்கியில் மார்மராகக் கடலைச் சுற்றியுளள நில அமைப்புகள் சாதாரணமானவை யாக இருககினறன. திரேசு பெரியதொரு வடிகால் நிலமாகும். அதைச் சுற்றிலும் வடக்கிலும் தெற்கி லும் நடுத்தர உயரமுள்ள மலைகள உளளன. திரேசின் கிழக்கில் பாசுபோரசைச் சுற்றி 91 முதல் 150 மீட்டர் உயரமுள்ள தாழ்வான மேட்டு நிலஙகள உள்ளன. திரேசின் மையப்பகுதி பாதியளவு வறணட நிலமாகும். இசுதான்புல்லுககுச் சுற்றியுள்ள மேட்டுநிலங்கள் ஆற்றுப் பளளத்தாக்குகளால அறுக்கப்பட்டுளளன.

துருக்கியின் ஆறுகள பொதுவாக ஒழுஙகான முறையில பாய்வதிலலை. அவற்றின படுகைகள ஆழ மற்றவை. அவற்றின் ஆழம பருவங்களையொட்டி மாறுபடும் தனமையது. ஆகவே போக்குவரத்துக்குப பயன படுவதிலலை. கோக்சு (Goksu), செயயன (Seyhan), கெய்யன (Ceyhan), ஒரோனடெசு (Orantes) ஆகிய ஆறுகள மத்தியத தரைக்கடலில கலக கினறன. தைக்ரீசு, யூப்ரடீசு நதிகள் இந்நாட்டி லிருநது தோன்றி பாரசீகக் கடலின வாயிலாக இநதியப் பெருங்கடலில கலந்துவிடுகினறன. குருககே (Kurucay), ஆராசு(Aras) போன்ற ஆறுகள காசுபியன கடலில கலககினறன. கிசில் (Kızıl), இர்மக்கு அல்லது ஆலிசு (Irmak or Halys), சகாரியா (Sayarka), யெசில் இர்மக (Yesıl Irmak) ஆகிய ஆறுகள கருங கடலில கலக்கின்றன. மேற்குப் பகுதிகளின மழைநீர் சுசுர்லுககு (Susurluk) ஆற்று வழியாக மார்மராக கட லிலும், கெடிசு அல்லது எாமூசு (Gedız or Herums), பியூக்மெனடர்சு (Buyukmenders) ஆறுகள வழியாக ஈசியன் கடலிலும் கலக்கின்றன. துருககியின ஏழில் ஒரு பகுதியில் நீர் வெளியேயுள்ள நீர்ப்பகுதிகளில கலக்கும் வாய்ப்பு இல்லை.

துருக்கியில் பல ஏரிகள உண்டு. வான் ஏரி 2323 சதுர கிலோமீட்டர் பரப்புளளது. 101 மீட்டர் ஆழ முள்ளது. இது ஓர் உப்புநீர் ஏரி. இது கிழக்கு அன் டாலியாவில் உள்ளது. துசு கோலு 1022 சதுர மீட்டர் பரப்புளளது. இதனுடைய ஆழம் 1 மீட்ட ருக்கும் குறைவாக உள்ளது. இதுவும் ஓர் உப்பு நீர் ஏரி. நல்ல நீர் ஏரிகளும் உணடு. இவற்றுள் பெயசி எர் (Beysehir), எக்ரிடிர் (Egridır), புாதூர் (Burdur) குறிப்பிடத் தக்கனவாகும்.

துருக்கியில் பலதிற மண் வகைகள் உள்ளன. வடக்கு, தெற்கு ஓரஙகளில் சிவப்பு மண் கொண்ட

பகுதியுள்ளது. கிழக்குக கருங்கடல் ஓரத்தில் அமிலம கலந்த சிவப்புமண உள்ளது. மத்திய தரைக்கடற் பகுதியில் வளம குறைநத சிவப்பு மண பூமி உள்ளது. உளநாட்டின பெரும்பகுதி பழுப்புநிறப் புல்வெளித் தரை உடையது. மத்திய அனடோலியாவின மிக வறணட பகுதியில் சாம்பல்நிற மண உள்ளது. உப்பு மண் அப்பகுதியின பெருமபகுதியில காணப்படு கிறது. வறண்ட உட்பகுதியும் ஈரமான ஓரபபகுதி களும கலககுமிடத்தில் பழுப்பு நிற மண உளளது. துருக்கியின ஒரு முக்கியமான சிககல் காட்டு மண அரிப்பு ஆகும். அதற்குக் காரணம் கிரேககர்களும் உரோமானியாகளும் அங்கிருந்த காடுகளை அழிதத தேயாகும.

**வெப்பநிலை:** கோடைக்காலத்தில கருங்கடல் ஓரத்திலுள்ள வடககு மலைச் சரிவுகளில மழை பொழிகிறது. கடறகரைப் பகுதிகளில 65 செ.மீ. மழை பதிவாகிறது. கிழக்குக கருங்கடற் கரைப் பகுதியில 240 செ.மீ. மழை பெய்கிறது மதத்திய அன டோலியாவில 25 செ.மீ. முதல் 35 செ.மீ. வரை மழை பெய்கிறது. மார்மரா, ஈசியப பகுதிகளிலும், தெனகிழககு மற்றும் கிழககு அனடோலியாவிலும் 35 செ.மீ. முதல 60 செ.மீ. வரை மழை பெயகிறது.

தாழவான கடறகரைப் பகுதிகளில மிகுநத அளவு வெப்பம நிலவுகிறது. குளிர்காலத்திலும் மிதவெப்ப நிலை ஏற்படுகிறது. மத்தியதரைக்கடற் பகுதிகளில பனி பெய்வது இலலை எனறு கூறலாம. உளநாட்டுப் பகுதியில் குளிர்காலத்தில உறைநிலைக்குக குறை வாக வெப்பநிலை இருககும். வடகிழககு மேட்டு நிலங்களில கடுமையான குளிர் ஏறபடும்.,20 முதல 40 நாளகள வரை மைய அனடோலியாவில் பனி மூடிக் கிடக்கும. வடகிழககுப் பகுதியில 120 நாளகள பனி உறைநது கிடககும் வெப்பநிலையை ஒட்டித் துருக்கியை நானகு பிரிவுகளாகப் பிரிககலாம். 1) மதத்தியதரைககடல் வெபபநிலை: இது தெறகிலும் மேறகிலும உளள கடறகரைப்பகுதிகளில் நிலவுகிறது. கோடைக்காலம வறணடும் வெப்பமாகவும் இருககும். குளிர்காலத்தில மித வெபபமாகவும் மழையுடன் கூடியதாகவும் இருக்கும். சராசரி வெபபம் 20° செல் சியசு வரை மாறுபடும். 2)கருங்கடற பகுதி: கோடைக காலம் வெப்பமாகவும் குளிர்காலம் வெபபம் குறை வாகவும இருக்கும. இங்குச் சராசரி வெப்ப அளவு14° செல்சியசாகும். வெப்பநிலை 7° செல்சியசு முதல 23° செலசியசு வரை மாறும். ஆணடு முழுவதும இஙகு மழை பெய்யும். 3) உயரமான வடகிழக்கு மேட்டுநிலங்கள: இங்குக் கோடையில் வெப்பமும குளிர்காலத்தில் கடுஙகுளிரும் நிலவும். இங்குச் சரா சரி வெப்பநிலை 4° செல்சியசாகும். இஙகு வெப்ப அளவு -12° செல்சியசு முதல் 18° செல்சியசு வரை மாறும. கோடையில நிறைய மழை பொழியும். 4) பாதியளவு வறணட உளநாட்டுப் பகுதியும், தென கிழக்குப் பகுதியும்: இங்கு மழைக்காலத்தில ஈரமான குளிரும் கோடையில் மிகுந்த வெப்பமும் நிலவும். இஙகுச சராசரி வெபப அளவு 12° செல்சியசு இங்கு வெப்பம 0° செலசியசு முதல் 23° செல்சியசு வரை மாறும்.



புகையிலை உலர வைத்தல

**புவியியல் பற்றிய பிரிவுகள்:** புவியியலை ஒட்டித் துருக்கியைப் பல மணடலஙகளாகப் பிரிககலாம். 1) கிழககே எல்லை தொடங்கி மேறகில் காகாரிய ஆற்றின கீழப் பகுதிவரை கருஙகடல் கரையோரமாக இருக்கும் வடபகுதி இது மலைப் பாஙகானது. எலலாப் பருவங் களிலும இங்கு மழை பெய்கிறது. அடர்த்தியான காடுகள இஙகு உணடு. துருககியின காற் பகுதி காட்டு நிலங்கள் இஙகு இருக்கினறன. கிராம மக்கள இங்கு மிகுதியாக வாழ்கினறனர். வேளாணமை இஙகுளள மககளின் முககிய தொழிலாகும். சோளம் முக்கிய பயிராகும்.அதுவே இங்குளள மக்களின் அடிப்படை உணவாகும். கிழக்குக் கரையோரஙகளில தேயிலை பயிரிடப்படுகிறது. புகையிலை சாம்சன் (Samsun), திரபசான் (Trabezon) ஆகிய இடஙகளில் பயிராகிறது. இங்குச் செம்பும் நிலக்கரியும் கிடைக்கின்றன. திரப சான், சாம்சன,சோங்குல் தக்கு(Zonguldak)ஆகியவை முக்கியநகரஙகளாகவும் துறைமுகங்களாகவும் விளங்கு கின்றன. 2) மார்மரா பகுதி. இது மார்மராக் கடலை யொட்டி உளளது. திரேசும் இதில் அடங்கும். இங்கு



பருத்தி ஆலை-தென்கிழக்கு அங்காரா

நகர வாழ்க்கை பெரும் அளவில் ஏற்பட்டுள்ளது. இசுதான்புல், புர்சா (**Bursa**), இசுமித்து (**Izmit**), அடபசாரி (**Adapazari**), எதிர்னே (**Edirne**) ஆகியவை இங்குள்ள முக்கியமான தொழில், வாணிகம் மற்றும் பண்பாட்டு மையங்களாகும். பொருளாதாரத் துறையில் இதுதான் துருக்கியின் வளர்ச்சிமிக்க பகுதியாகும். இங்குப் புகையிலை, கோதுமை, நெல், ஆலிவு, திராட்சை ஆகியவை பயிரிடப்படுகின்றன. பட்டுப்புழு இங்கு வளர்க்கப்படுகிறது. கரையோரங்களில் மீன் பிடிப்புத் தொழில் நடைபெறுகிறது. 3) ஈசியப் (**Aegean**) பகுதி: தார்டனல்சு நீர் இணைப்புத் தொடங்கி உரோட்சு (**Rhodes**) வரையிலுள்ள கடற்கரைப் பகுதி. பொருளாதாரத் துறையில் மிகவும் முன்னேற்றமடைந்துள்ள பகுதிகளில் இது ஒன்று. மக்கள் நெருக்கம் மிக்குள்ள இடங்களில் இதுவும் ஒன்று. ஏற்றுமதிக்குரிய பணப் பயிர்கள் இங்கு விளைவிக்கப் படுகின்றன. துருக்கியின் புகையிலை உற்பத்தியில் பாதி அளவு இங்குத்தான் உற்பத்தியாகிறது. அதே அளவு அத்திப்பழமும் இங்கு உற்பத்தியாகிறது. நாட்டின் பருத்திஉற்பத்தியில் 30 விழுக்காடு அளவு இங்குப் பயிராகிறது. இசுமிர் (**Izmir**) ஏற்றுமதித் துறைமுகமாகும். மனிசாவும் (**Manisa**), அய்துன்னும் (**Aydun**) முக்கிய நகரங்களாகும். இங்கு வரலாற்றுச் சின்னங்கள் கிடைக்கும் இடங்களும் உண்டு. 4) மத்திய தரைக்கடல் பகுதி: இது உரோட்சு முதல் சிரியா எல்லை வரை பரவியுள்ளது. இதன் பெரும் பகுதியைத் தாரசு மலை தனதாக்கிக் கொண்டுள்ளது. பல கணவாய்கள் இங்கு உண்டு. அவை இப்பகுதியை வடபகுதியுடன் இணைக்கின்றன. பேலன் கணவாய் (**Balen Pass**), குலக் போகாசிக் (**Kulek Bogazi**) கணவாய், செருதாவுல் (**Sertavul**) கணவாய் ஆகியவை முக்கிய மானவையாகும். இது மேலும் பல உட்பிரிவுகளைக் கொண்டுள்ளது. மையத்தில் உள்ள தசேலி (**Taseli**) மேட்டுநிலங்களில் மக்கள் நெருக்கம் குறைவு. மேற்கில் உள்ள ஏரி மாவட்டத்தில், கண்டத்திலுள்ள வெப்பநிலை (**Continental climate**) நிலவுகிறது. இங்குத் தானியம் பயிரிடப்படுகிறது. கரையோரங்களில் மக்கள் நெருக்கம் மிகுதி. இங்குப் பயிர்த் தொழில்மிகுதியாக நடைபெறுகிறது. இங்கு அதானா



பருத்தி உற்பத்தி-துருக்கி


பேரன் சமவெளி-மத்திய அன்டாலியா

(Adana), காசியன்டெப்பு (Gaziantep), இசுகென்டருன் (Iskenderun), அன்டாலியா (Antalya), மெருசின் (Mersin) ஆகிய நகரங்கள் உள்ளன. நாட்டின் பருத்தி உற்பத்தியில் 60 விழுக்காடும், புளிப்பான பழங்கள் உற்பத்தியில் 90 விழுக்காடும் இங்குப் பயிராகின்றன. மேட்டுப் பகுதிகளில் மண் அரிப்புக் காரணமாக வேளாண்மைக்குரிய மா நிலங்கள் இல்லை. இங்கு ஆடு மாடுகள் வளர்க்கப்படுகின்றன.

5) **மத்திய அன்டாலியா:** இதன் நடுப்பகுதிச் சமவெளி நிலமாகும். இங்கு மழை குறைவு. கண்டத்திற்குரிய புல்வெளி வெப்பநிலை இங்கு நிலவுகிறது. இங்குக் கோதுமை பயிரிடப்படுகிறது. நாட்டின் கோதுமை உற்பத்தியில் 40 விழுக்காடு அளவுஇங்குப் பயிராகிறது. ஆடுகள் வளர்க்கப்படுகின்றன. நாட்டின் ஆடு வளர்ப்பில் மூன்றில் ஒரு பங்கு அளவு இங்கு மட்டுமே வளர்க்கப்படுகின்றது. நாட்டின் தலைநகரமான அங்காரா (Ankara) இங்கு அமைந்துள்ளது. இது ஒரு பெரிய தொழில், வாணிக மையமாகத் திகழ்கிறது. சிவாசு (Sivas), எசுகிசெகிர் (Eski-sehir), கோனியா (Konya), காய்சென் (Kaysen) ஆகியன முக்கிய நகரங்கள்.

6) **கிழக்கு அன்டாலியா:** இது உயரமான பகுதியாகும், கரடு முருடானது. ஊசியிலைக் காடுகள் இங்கு மிகுதி. வடகிழக்கில் மலை மேய்ச்சல் நிலமும், தெற்கில் காடுகள் நிறைந்த புல்வெளியும் உள்



அங்காரா நகரம்

ளன. மக்கள் நெருக்கம் மிகக் குறைவு. ஒருசதுரக் கிலோ மீட்டரில் 9 பேர் வாழ்கின்றனர். மண் அரிப்புக் காரணமாகப் பயிர்த்தொழில் செய்வது மிகக் கடினம். கோதுமையும் பார்லியும் விளைகின்றன. வடகிழக்குப் பகுதியில் மாடுகள் வளர்க்கப்படுகின்றன. தெற்கில் ஆடுகளை வளர்க்கிறார்கள். இது தாதுப் பொருள்வளம் நிறைந்த பகுதியாகும். திவிரிகியில் (Divirigi) இரும்பும், எர்கனியில் (Ergani) செம்பும், குலிமனில் (Guleman) குருமமும்(Chromium)

கிடைக்கின்றன. இங்குள்ள முக்கிய நகரங்கள் எர்சுரும் (Erzurum), மலாதியா (Malatya), எலாசிங்கு (Elazing), வான் (van) என்பனவாம்.



அன்டாலியா மலைப்பகுதி

7) **தென்கிழக்கு அன்டாலியா:** தாரசு மலையின் அடிவாரத்தில் வறட்சியான மேட்டுநிலம் உள்ளது. இங்குத்தைக்ரிசு, யூப்ரட்டிசு ஆறுகள் மழை நீரைவெளியேற்றுகின்றன. ஆற்றுப் பள்ளத்தாக்குகளிலும் வடிநிலங்களிலும் உழவுத்தொழில் நடைபெறுகிறது. கோதுமை, நெல், காய்கறிகள், கிராட்சை ஆகியவை பயிராகின்றன. மக்களுள் பெரும்பாலோர் ஏறத்தாழ நாடோடி வாழ்க்கையை மேற்கொண்டுள்ளனர். துருக்கியின் எண்ணெய்க் கிணறுகள் இராமன் (Raman) கருசன் (Garzan), ஆகிய இடங்களில் இருக்கின்றன. இங்குள்ள எண்ணெய், குழாய்வழியாகஇசுகென்டெரூனுக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. இங்குள்ள முக்கிய நகரங்கள் உர்பா (Urfa), தியார் பகிர் (Diyarbakir), காசியன்டெப்பு (Gaziantep) என்பனவாம்.

**பரப்பளவு:** துருக்கியின் மொத்தப் பரப்பளவு 779452 சதுர கி.மீ. (1984) ஆகும். அதில் திரகியாவின் பரப்பளவு 23764 சதுர கி.மீ.; ஆசியத் துருக்கியின் பரப்பளவு 755855 சதுர கி.மீ.

**மக்கள்தொகை:** துருக்கியின் மக்கள்தொகை 1984-ஆம் ஆண்டுக் கணக்குப்படி 48 மிலியன்களாகும். இதில் 60 விழுக்காட்டினர் நாட்டுப்புறப் பகுதிகளில் வாழ்கின்றனர். 35,000 நாட்டுப்புறக் குடியிருப்புகள் உள்ளன. எஞ்சியிருப்பவர்கள் 10,000 பேருக்கு மேலாகஉள்ள நகரங்களில் வாழ்கின்றனர். வடமேற்கு மற்றும் மேற்குப் பகுதிகளிலும் வடமேற்கு மத்திய அன்டாலியாவிலும் இசுக்கென்டூரன் குடாப் பகுதியிலும் மிகுதியான அளவில் மக்கள் நகரங்களில் வாழ்கின்றனர். நகரங்கள் பலவற்றில் 25,000 பேர்களுக்கும் குறைவான மக்களே வாழ்கின்றனர்.



குர்து மொழி பேசுபவர்கள்

1970-ஆம் ஆண்டுக் கணக்கின்படி 20 நகரங்களில் மட்டுமே 100,000 பேர்களுக்கு மேல்வாழ்ந்தனர். நகரங்களுள் பல வாணிக மையங்களாக விளங்குகின்றன. ஏனையவை தொழில் மையங்களாகவும், நிருவாக மையங்களாகவும், அஞ்சல் மையங்களாகவும் உள்ளன. இங்கு இனக்கலப்பு பேரளவு ஏற்பட்டிருப்பதால் ஒருவனைப் பார்த்து இவன் இன்ன இனத்தவன் என்று உறுதியாகக் கூற இயலாது. இங்குள்ள மக்களுள் 90 விழுக்காட்டினர் துருக்கி மொழியைத் தாய்மொழியாகக்கொண்டுள்ளனர். இலத்தீன் எழுத்து முறையைக் கையாளுகின்றனர்; குர்து மொழி பேசுபவர்கள் மொத்த மக்கள் தொகையில் 7 விழுக்காட்டினரும், அரபு மொழி பேசுபவர்கள் 1.2 விழுக்காட்டினரும் கிரேக்கம், அருமீனியம், இத்திசு (Yiddish) ஆகிய மொழிகளைப் பேசுபவர்கள் சிறிதளவினரும் ஆவர். குர்துக்கள் கிழக்கு மற்றும் தென் கிழக்குப் பகுதிகளிலும், அரபு மக்கள் தென்கிழக்கு அன்டாலியாவிலும் மற்றவர்கள் இசுதான் புல்லிலும் வாழ்கின்றனர். மக்கள் நெருக்கம் இங்கு மிகுதியாக இல்லை. சதுர கி.மீ-க்கு 80 பேர் வீதம் உள்ளனர்.



இசுலாமியச்சடங்கு

**சமயம்:** துருக்கியர்களுள் 99 விழுக்காடு மக்கள் இசுலாம் சமயத்தைப் பின்பற்றி வருகின்றனர். அவர்களுள் சுன்னிப் பிரிவினர் பெரும்பாலோர்; உசியா மதத்தைப் பின்பற்றி வருபவர்கள் எண்ணிக்கையில் அவர்களுக்கு அடுத்த நிலையில் உள்ளனர். கிறித்தவர்களின் எண்ணிக்கை குறைவு. அவர்கள் பல பிரிவினர்களாக உள்ளனர். 74,000 பேர் கிரேக்கக் கிறித்துவத்தையும், 70,000பேர் கிரிகோரியக் கிறித்துவத்தையும், 26,000 பேர் உரோமன் கத்தோலிக்கச் சமயத்தையும் கடைப்பிடித்து வருகின்றனர். 18,000 யூதர்களும் இங்கு வாழ்கின்றனர். கிறித்தவர்களும் யூதர்களும் பெரும்பாலும் இசுத்தான்புல்லில் வாழ்கின்றனர். நெசுடோரிய இனத்தவர்கள் 22,000 பேர்கள் வாழ்கின்றனர். இவர்கள்தென்கிழக்கு அன்டாலியாவில் வசிக்கின்றனர். துருக்கியில் சமயச் சார்பற்ற அரசு இயங்கி வருகிறது. சமயத்துக்கும் அரசியலுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை.



துருக்கிப் பெண்கள்

**பொருளாதார நிலை:** வேளாண்மை இங்கு முக்கிய தொழிலாகும். 15 வயதுக்கு மேற்பட்டவர்களுள் 10,482,856 பேர் இதில் ஈடுபட்டுள்ளனர். (1980 கணக்குப்படி) 27,281,000 எக்டேர்கள் பயிரிடப்படுகின்றன. அவற்றுள் 2,892,000 எக்டேர்களில் திராட்சையும், ஆலிவு மரங்களும் பயிர் செய்யப்படுகின்றன. ஏனையவற்றில் பருத்தி, புகையிலை, அத்தி ஆகியவை பயிராகின்றன. 513,516 இழுவை இயந்திரங்கள் (tractors) பயன்படுத்தப்படுகின்றன. 20, 199,000 எக்டேரில் காடுகள் வளர்க்கப்படுகின்றன. 68,000,000 ஆடுகளும், 12 மிலியன் மாடுகளும் 1 மிலியன் கழுதைகளும், 770,000 குதிரைகளும், 8,08,000 எருமைகளும் வளர்க்கப்படுகின்றன. 33 மிலியன் மெட்ரிக் கண்டி(Ton) எடை அளவு உரோமம் உற்பத்தி செய்யப்படுகிறது. 547,000 மெட்ரிக் கண்டி எடையளவு ஆடு, மாட்டுக்கறி பதன் செய்யப்படுகிறது. மீன்பிடித்தல் ஒரு முக்கிய தொழிலாகும். இத்தொழில் துருக்கிக் கடற்கரையில் இருந்து 12 கடல் கல் தொலைவு பரவியுள்ளது. 557,228 மெட்ரிக் கண்டி எடை மீன் பிடிக்கப்படுகிறது. 7263 படகுகள் பயன்படுத்தப்படுகின்றன (1983ஆம் ஆண்டுக் கணக்குப்படி). துருக்கியைத்

தொழில் மயமாக்கும் பணி வேகமாக நடைபெறறு வருகிறது நிலக்கரி, பழுபபு நிலக்கரி, செமபு, இரும்பு, குருமம், சலவைக்கல ஆகியவை இங்குக் கிடைக கினறன. நிலக்கரி உறபததியைத் துருக்கி அரசு நிலக் கரிக கழகம மேறபாாத்து வருகிறது எடடிபேஙகு (Etibank) செப்புச சுரஙகங்களைக கணகாணிதது வருகிறது 30,000 தொழிற கூடஙகள உள்ளன சிமெணடு, காகிதம, இருமபு எஃகுத தொழில் ஆகி யவை சிறந்து விளங்குகினறன. 13,595,000 மெடரிக் கணடி சிமெணடும் 392921 கணடி காகிதமும், 4,203,000 கண்டி இருமபும எஃகும் உறபததியா கினறன. இது நீர்மினசகதி உறபததி செயயும் ஆற றலைப பெறறுள்ளது 24,900 மிலியன மெகாவாடடு அளவு மினசார உறபததி 1981-இல உறபத்தி செய யபபட்டுள்ளது. நாடடிலுள்ள இரணடு எணணெயக் கிணறுகளைத துருக்கியப பெட்ரோலியக குழுமம் நடத்தி வருகிறது. மூனறு எணணெயச சுததிகரிப்புத் தொழிறசாலைகள உள்ளன. இவற்றின மொதத உற் பத்தித் திறன 24 மிலியன கணடிகளாகும. வெளி நாட்டிலிருந்து இஙகு எணணெய இறக்குமதி செய யப்படுகிறது

துருக்கியின் ஏறறுமதி வருவாய் 1960 முதல 1970 வரை 139 விழுககாடு உயாந்துவிட்டது. பருத்தி, புகையிலை, உலர்நத பழம, கொட்டைகள ஆகியவை ஏறறுமதி செய்யபபடுகினறன. முககியமான ஏறறுமதிப பொருளகளுள 40 விழுககாடு அளவும் ஐரோப் பியத் தடையிலா வாணிகச் சங்கம் 18 விழுககாடு அளவையும அமெரிககா, சப்பான, கனடா, யுகோசுலா வியா, எகிப்து ஆகிய நாடுகள எஞசிய பகுதியையும வாஙகுகினறன இறக்குமதிப் பொருள்களின மதிப பும வளாநதுள்ளது. மேறகுச் செருமனி, அமெரிககா, பிரிட்டன், இத்தாலி, பிரான்சு, உருசியா ஆகியவை துருககிக்குப் பொருளகளை அனுபபி வருகினறன.

நாட்டின் பொருளாதார வளஙகளுள பாதிப்பகு தியை அரசு கட்டுபபடுத்தி வருகிறது. மற்றவை தனி யார் வசமுள்ளன. எவ்வெத துறையில மிகுதியான முதலீடு தேவையோ அவற்றிலும், எவவெவறறில் தனியாா முதலீடு செயய அஞ்சுகிறார்களோ அவற றிலும் அரசு முதலீடு செய்து வருகிறது நாட்டுப பொருளாதார வளாச்சியை முனனிட்டு ஐநதாண டுத் திட்டங்கள தீட்டப்பட்டு வருகினறன. அனறி யும ஆணடுதோறும் பொருளாதார வளர்சசிககு வேணடிய திட்டமும நிறைவேற்றப்படுகிறது

**போக்குவரத்தும், செய்தித் தொடர்பும்:** 1970-ஆம ஆணடுக் கணக்குப் படி 9600 கிலோமீட்டர் நீளம் இருபபுப் பாதை அமைககப்பட்டிருநதது. முக்கிய பெருவழிகள அங்காராவிலிருநதும, இசுத்தான்புல விருநதும், அடானாவிலிருநதும, எர்சூருமிலிருந்தும பல இடஙகளுக்குப பிரிநது செல்கினறன. மத்திய அன்டாலிய மேட்டு நிலத்தைச் சுற்றிச் செலலும் இருப்புப் பாதை சுற்றியுள்ள பகுதிகளுக்கு ஆங்காங்கே பிரிநது செல்கிறது அவற்றுள் இரணடு கோஙகுலதககு மற்றும சம்சனுக்கும, மூனறு இசுத்தானபுல, இசுமிா, பணடிர் நா ஆகிய இடங்களுக்கும, மூன்று கிழக்குப பகுதிககும ஒனறு தெறகுநோக்கி ஈராக்கு, சிரியா ஆகிய நாடுகளுககும் செலகின்றன சரக்குகளையும பயணிகளையும ஏற்றிச செல்லக் கபபல்கள உள்ளன அவை பெருமபாலும் எணணெயக் கப்பலகளும், சரக் குக கபபலகளும ஆகும் நாட்டின கப்பல் போக் குவரததின் பாதியளவு இசுத்தானபுல வழியாக நடைபெறுகிறது உளநாட்டு விமானப்போககு வரததுககு முககிய இடமாக விளஙகுவது அஙகாரா வாகும. இசுததானபுல பனனாட்டு விமானப பய ணிகள இறஙகி ஏறும் இடமாகச் செயறபட்டு வருகிறது. நாளிதழகள பல வெளியாகினறன. இசுததான புலலில 24 நாளிதழ்கள வெளியாகின் றன அங்காராவில வானொலி மறறும தொலைக காட்சி நிலையஙகள அமைககபபடடுள்ளன.



துருககி நாட்டில கலவி

**கல்வி.** மககளதொகையில் 10 விழுக்காட்டின ருககே 1924-இல எழுதப்படிககத் தெரியும். 1970க்குள அது 55 விழுககாட்டிறகு உயாத்தப்பட்டது. 7முதல 12 வயது வரையிலானவாகளுக்கு கட்டாயத் தொடக் கக் கல்வி வழஙகப்படுகிறது. ஆயினும், இனனும் பல

உழவர்கள தஙகள பிளளைகளைக கலவிக கூடங்களுக்கு அனுபப விருமபவில்லை 5,000,000 பிளளைகள் தொடககக்கல்வி பெறுகிறார்கள. 1,100,000 பேர் உயர்நிலைப்பள்ளிகளில படிககினறனா. 155,000 பேர் உயர்கல்வி நிறுவனங்களில் படிககின்றனர். பண பாட்டு அமைச்சர் நாட்டின கலை, அறிவியல, வளாச்சியைக் கணகாணிதது வருகினறார்.



அஙகாராவிலுள்ள பலகலைக் கழகம்

**அரசு:** துருக்கி ஒரு குடியரசாகும். பெரிய தேசிய அவை (Grand National Assembly) எனற நிறுவனம் நாட்டின அரசியல அதிகாரததின ஊற்றிடமாகும். அது இரு அவைகளைக் கொணடுள்ளது ஒனறு தேசிய சபை அதில 450 தேர்நதெடுக்கபபட்ட உறுப்பினாகள உளளனர். 21 வயது நிரமபிய அனைவருக்கும வாக்குரிமை வழஙகபபட்டுள்ளது. இசசபை உறுப்பினாகள இரகசிய முறையில தேர்நதெடுககபடுகினறனர். இதில் ஒரு கட்சியைச் சாாந்தவாகளே 1946 வரை இடம் பெறறிருநதனா. 8 கட்சியைச சோந்தவர்கள 1971-இல் இடம் பெற்றிருந்தனா. மற்றது ஆட்சிப்பேரவை (Senate) ஆகும் இதில 165 பேர் இருக்கினறனர். 150 பேர்கள தோநதெடுக்கப்படுகினறனர்; 15 போகள் நியமிக்கப படுகினறனர் குடியரசுத் தலைவர் பெரிய தேசிய அவையால 7 ஆணடுகளுக்குத தேர்நதெடுக்கப படுகிறார். மறுபடியும் அவர் போட்டியிட முடியாது. பிரதம மந்திரியை அவரே நியமிககிறார். அதறகுத தேசிய அவையின் ஒப்புதல் இனறியமையாதது.

நாடு 63 மாநிலஙகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மாநிலம, விளையாத்து(Vilayet) அல்லது இல (Il) என்று சொல்லப்படுகிறது. அதன தலைவர் வாலி (Vali). அவர் நாட்டு அமைசசரின் பரிந்துரையின பேரில் குடியரசுத தலைவரால் நியமிக்கபபடுவார். போர், நீதி வழஙகுதல் நீஙகலாக ஏனைய துறைகள் அனைத்தையும அவரே மாநிலத்தில நடத்தி வருகிறார் அவருக்கு ஆலோசகாகள் உணடு. அவர்கள நிருவாக அவையாகச செயற்படுகிறாாகள. அவ்வவைககு வாலியே தலைவர். மாநிலங்கள மாவட்டஙகளாகப் பிரிககப்பட்டுள்ளன. அவற்றின் நிருவாகம மாநிலததின் நிருவாகத்தைச் சிறிய அளவில ஒத்துளளது. மாவட்டஙகளை வட்டஙகளாகப் பிரித்துளளார்கள. அதில் பல கிராமஙகள சோநதிருநதன. கிராமமே ஆட்சி முறையின மிகச் சிறிய நிருவாக அமைப்பாகும. கிராமத் தலைவரும், மூததோர்அவையும கிராமங்களில செயற்பட்டு வந்தன. ஒவ்வொரு மாநிலத்தின தலைமையிடமும் நகராட்சியாக அமைக்கப்பட்டது 2000 பேர்களுக்கு மேலாக வசிததுவரும் பகுதிகளும் நகராட்சிகளாக அமைக்கப்பட்டன. அதன் தலைவர் மேயர் ஆவார். அவருககு உதவிபுரியத் தேர்ந்தெடுககப்பட்ட அவையொன்றும், அதிகாரிகள குழு ஒனறும இருநதன மாநிலஙகளில நானகு ஆணடுகளுககுத தேர்ந்தெடுககப்பட்ட பேராளா அவைகள அமைககப் பட்டிருக்கினறன.

**சட்டமும் நியாயமும்** நாட்டின சட்டம் மேலை நாட்டுச் சட்டஙகளைத் தழுவியதாக உளளது. சுவிட்சாலாந்து உரிமையியல சட்டமும், இததாலியின தணடனைச் சட்டமும, செருமனியின வாணிகச் சட்டமும கடைப பிடிககபபடடுவருகினறன நாடடின உச்ச நீதி மன்றம, அரசியலமைப்புப் பறறிய நீதி மனறமாகும. அதில 15 நீதிபதிகள உள்ளனா. அடுதததது அரசு ஆய்வுரை மனறம்(Council of State) அது நிருவாகம பற றிய உசச நீதிமனறமாகும். அதில 31 நீதிபதிகள உளளனா. பொதுவான உரிமை வழக்குகளும குற்ற வழககுகளும் நீதி அமைச்சா பொறுபபில விசாரிககப்பெறறு வநதன.

காலாட்படை, கப்பறபடை, விமானப்படை ஆகியவை நாட்டின பாதுகாபபுக கெனறு நிறுவப்பட்டுள்ளன. தேசிய பாதுகாப்பு அமைச்சர் அவற்றைக கவனிதது வருகிறாா. மேலும் பிரதம அமைச்சரின் கீழப்பட்ட. தேசிய பாதுகாபபுப் பற்றிய உயர் அவை (Supreme Council of National Security) போர்க் காலத்தில நாட்டின பாதுகாப்புக்குரிய நடவடிக்கைகளையும் வாயப்பு வளஙகளையும் ஒனறுபடுத்தி இயக்குவதற்காக அமைக்கப்பட்டுளளது.

**வரலாறு:** கி.மு. 1350 – ஆம ஆணடு அளவில இனறைய துருககியின, ஒரு பகுதியில இட்டைடுகள (Hittites) ஆட்சி செலுததி வநதனர். பலதிறப்பட்ட இனத்தவர்கள் அப்பகுதியைக் கைபபற்றினர். அவா

களுள் பெர்சியர்களும ஒருவர். கடற்கரை ஓரங களில கிரேக்காகள குடியேறறம் அமைததனா. கிரேக்காகளுக்கும் பெர்சியர்களுக்கும இடையேபோர் ஏறபட்டது. முடிவில அலெகசாநதர் வெறறி பெற்றுத் தம ஆட்சியின கீழக் கொணடு வநதார். அவர் இறநத பிறகு அவருடைய படைத்தலைவாகளுள ஒருவராகச் செலுயீகசு அப்பகுதிகுத் தலைவரானார் பினனர் அது உரோமின ஆடசிக்குட்பட்டது. உரோமப பேரரசு பிளவுபட்டபோது பைசான்டியததைத தலை நகராகக கொணட கிழக்கு உரோமானியப் பேரரசர் கள் அப்பகுதியை ஆணடு வநதனர் செலசுகருத்துருக கியர்கள் கி.பி. 1059-ஆம ஆணடு முதல் பேரரசின கிழககு எல்லைகளைததாக்கி வநதனா. தலைநகரான கானசுடாண்டிநோபிள (பைசான்டியம)கி.பி.1453-இல் துருககியா வசமாயிற்று துருககியர்கள பால்கன தீப கற்பத்தின பெரும் பகுதியைக் கைபபறறிக் கொணட னர். பாலகன தீபகற்பத்திலுள்ள துருககியக குடி மக்கள் 19-ஆம் நூறறாணடில விடுதலைப போராட டத்தைத் தொடஙகி ஒருவர் பின ஒருவராக விடு தலை பெற்றனா. முதலாம் உலகப் போரினபோது கானசுடாணடிநோபிளைச சுற்றியுள்ள சில ஐரோப பியப் பகுதிகள நீஙகலாக ஏனைய ஐரோபபிய மா நிலங்கள விடுதலை பெறறுவிட்டன இதறகிடை யில துருக்கியர்களிடம் தேசிய உணர்சசி வளரலா யிறறு. இளம துருககியர் சஙகம் (Young Turks) இவ்வியககததை முனனின்று நடததியது. உலகப் போரில துருககி செருமனியுடன சோநது கொணடு போரிட்டது; போரில தோலவியடைநதது. பாரிசு மாநாடு துருக்கி மீது செவரே (Sevres) உடனபடிக கையைச் சுமததியது நாட்டின தேசியததிறகு அது ஊறு விளைவிககும வகையில அமைநததால இளம் துருககியர் அதை ஏறறுக் கொளளவில்லை. அதனால நேச நாடுகளுககு எதிாப்புத் தெரிவிககும் வகையில நிகழச்சிகள நடைபெறறன. அவவெதிாபபுககுக கமால பாட்சா தலைமை தாஙகினார். இறுதியில் அவர் வெற்றிபெற்றார். அவா வேணடியபடிநாட்டின எல்லைகள திருத்தியமைககப்பட்டன. சுலதானிய ஆட்சி1923-இல வீழ்த்தப்பட்டுக் குடியரசு ஏறபடுத்தப் பட்டது. புதிய அரசியலமைப்பு 1981-ஆம் ஆணடில் உருவாககப்பட்டது. தி அர இரா.

**துருக்கி மொழியும் இலக்கியமும்** துவா, நெகய், உகுர், குமென் போன்ற பதினேழுக்கும் மேறபட்ட மொழிகளைத துருக்கிய மொழிகள எனறு குறிப்பிடுவர். இம்மொழிகள கருஙகடல முதல கிழககுச சைபீரியா வரையிலும பேசப்படுகின்றன. இவை அலடய்க்கு மொழி (Altaic language) இனத தைச் சார்ந்தவை. இமமொழிகள் துர்ககோ-தாத்தர் (Turco-Tatar) எனறும் வழஙகப் பெறும. இவற்றை வடகிழக்கு மொழிகள், வடமேற்கு மொழிகள, தென கிழககு மொழிகள, தெனமேறகு மொழிகள என வகைப்படுததுவர். ஆனால் இனறு துருக்கி மொழி எனபது துருககி நாட்டில பேசப்பட்டு வரும் ஒட்ட மன (Ottaman) துருக்கி மொழியை மட்டுமே குறிக் கிறது. துருககியில் வாழும் மூன்று கோடிக்கும மேற் பட்ட மககள இமமொழியைப பேசி வருகினறனர்.

**மொழி வரலாறு.** துருககி மொழியில கிடைககும மிகப பழமையான எழுத்துச சான்றுகள கி.பி. 8-ஆம் நூற்றாணடைச் சாாநத கல்வெட்டுகள மூலம கிடைககினறன. அவை ஒருவகை புதிய வடிவான எழுததுகளால எழுதப் பெறறவை அதன பினனர்த் தோனறிய கலவெட்டுகள் உகுர் எழுததுகளால ஆனவை துருக்கிய மககளில ஒரு பிரிவினா சோகுடி யன (Sogudian) மககளின் மததததைத் தழுவியபோது அவர்கள மணி செயின எழுத்து முறையினைக் கைக கொணடனா. மைய ஆசியாவில வாழநத துருக்கியா கள இசுலாம் மததததைத தழுவிய போது மீண்டும் அவர்களின எழுத்து முறையில் மாற்றம் ஏற்பட்டது. ஒட்டமன் மொழியிலிருநது இன்றைய துருககிமொழி உருவாகிய போது உரோமன எழுததுகள் புகுத்தபபட் டன. இன்று துருககி மொழி இவவெழுத்துகளாலேயே எழுதப்படுகிறது.

இம்மொழி தெளிவான அமைப்புடன் கூடிய ஓர் ஒட்டு மொழியாகும். இம்மொழியில் இலக்கணப் பால பகுபபு இலலை. அரபிகிலிருந்து கடன வாங கிய பெயர்ச்சொற்களில் மட்டும் இப்பகுப்பைக காண முடிகிறது. தமிழில் ‘என்னுடைய தாய’ என்று கூறுவதை இமமொழியில் ‘அனம’ (ana-m) எனற ஒரே சொல்லில் கூற முடியும். தமிழைப் போனறு துருககி மொழியிலும் வினை மாற்றஙகள பல்வேறு பினனொட்டுகளினால் உணாத்தப் படுகின்றன. தமிழைப் போலவே எழுவாய் பயனிலைகளைச் சோப் பதற்குத் தனிச் சொல் தேவையிலலை. இமமொழி யில் மிகுதியாக வினையெச்சஙகளைப் பயனபடுததி மிக நீளமான சொறறொடர்களை அமைப்பது ஒரு சிறப்புப் பணபாகும். சில தொடாகள ஒரு பத்தி யாகவே இருக்கினறன. வினையிலிருநது பெயரும் பெயரிலிருந்து வினையும மிக எளிதாக இம் மொழி யில் உருவாககப்படுகினறன. இமமொழியில இனனு மொரு குறிபபிடத தகக சிறபபு அதிலுள்ள எட்டு உயிரெழுத்துகளும் இசையொற்றுமை கொணடிருத்த லாகும். இம்மொழியினகண அரபு, பாரசீக மொழி களின செலவாக்கைக் காணலாம். பழந்துருக்கி மொழியை அறிய கி.பி. 1073-இல் முகம்மது காசுகரி (Mahamud Kashgari) என்பார் இயறறிய அகராதி பெருந்துணை புரிகிறது.

**இலக்கிய வரலாறு**: துருக்கிய மொழிகளில் முதன் முதலாக இலக்கிய மொழியாக உருவானது உகுர மொழியாகும் மைய ஆசியாவில கி.பி 10,11-ஆம் நூற றாண்டுகளில உகுர் இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டு கரகனித்து இலக்கியம் வளர்ந்தது என்பர். துருக்கிய மொழிகளில கி.பி.15-ஆம் நூற்றாண்டுவரை தோன்றிய இலக்கியங்கள் மொழியமைப்பால ஒன்று டன ஒன்று தொடர்பு கொண்டனவாகக் காணப்பட டன. அதற்குப் பின்னரே ஒட்டமன துருக்கி மொழி தனித்தியங்கத் தொடங்கியது எனலாம்

துருக்கி அரசர்களின வீரச் செயலகளைப் புகழந் துரைக்கும் கி பி. 732-ஆம் ஆண்டைச் சேர்ந்த கல் வெட்டுகளே துருக்கி இலக்கியத்தின் பழமையான இலக்கியமாகப் போற்றப்படுகின்றன. யூசூப் ஆசு ஆசிப்பு (Yusuf Has Hajb) என்பார் கி.பி. 1070-இல் இயற்றிய 'ஆளுநரின அறிவியல்' (The Science of the Governor) என்ற நெடுங்காவியம் சிறப்பு வாய்ந்தது. இக்கால எல்லையில் தோன்றிய 'பகித்தியார் இள வரசர் கதை' 'பத்துத் தலைமையமைச்சர்கள் கதை', 'முகம்மது நபி வீடுபேறு புக்க காதை' என்பன குறிப்பிடத் தக்கன. துருக்கியரின் பழம் பெருமை களைத் 'துருக்கியரின குடிவழி' என்னும் நூல் தொகுத்துரைக்கின்றது.

பாரசீக இலக்கியங்களைப் பின்பற்றி கி.பி. 14-ஆம் நூற்றாண்டுப் புலவர்கள் இலக்கியங்கள் படைத்தனர். செலாலுதின உரூமீ என்பார் பாரசீக மொழியிலேயே 'மெசுணவி' (Mesnevı) என்ற இலக் கியத்தைப் படைத்தார். சுலைமான செலவி என் பார் முகமது நபியைப் போற்றி எழுதிய பக்திப பாடல்கள் இறந்தவர்களின உயிர் அமைதியடையப் பாடப்பெற்று வருகின்றன.

பாத்தி முகமது (Fatın Mehmad) என்பார் கான் சுடான்டிநோபிள நகரத்தை கி.பி. 1453-இல் கைப் பற்றியபின் துருக்கி இலக்கிய வளர்ச்சியில் பாரசீக, அரபு இலக்கியங்களின் செல்வாக்கு மிகுதியாயிற்று. இந்நிலை நானூறு ஆண்டுகள் துருக்கி இலக்கியத் தில் நீடித்திருந்ததாகக் கூறுவர். இந்த நான்கு நூற்றாண்டுகளில் தோன்றிய கவிஞர்களுள் புசூலி (Fuzulı), பாக்கி (Bakı), நெபி (Nefı), நதீம் (Nedım) என்பவர்கள் புகழ்வாய்ந்தவர்கள். 'அழகும் காத லும்' என்ற தலைசிறந்த காவியம் சாயிகாலிபு என்ப வரால் படைக்கப்பெற்றது. 'அழகே காதல; காதலே அழகு' என்ற கோட்பாட்டின் அடிப்படையில் இக் காவியம் அமைந்து சிறக்கிறது.

பிரெஞ்சு இலக்கியச் செல்வாக்கு கி.பி.19-ஆம் நூற் றாண்டின் இடைக்காலத்தில் துருக்கி இலக்கியத்தில் தொடங்கியது. புதிய அரசியல் போக்குகளுக்கு ஏற்ப விடுதலை வேட்கை நிறைந்த இலக்கியங்கள் தோன் றத் தொடங்கின. அந்நூற்றாண்டின தலைசிறந்த கவிஞரான நாமிக்கு கெமால் (Namık Kemal) 'தந்தை நாடு' என்ற எழுச்சி மிகு நாடகம் எழுதி யமைக்காக நாடு கடத்தப்பட்டார். மக்கள் அவ ருடைய பாடல்களைப் பெரிதும் போற்றினர். இக் காலத்தில்தான் நாவல, நாடகம், கட்டுரை முதலிய இலக்கிய வகைகள் துருக்கி இலக்கியத்தில் தோற்றம் பெற்றன. அப்துல் அக்கு அகமது தமது மனைவியின் நினைவாக எழுதிய 'கல்லறை' என னும் காவியம் துருக்கி இலக்கியத்தில் உன்னத இலக் கியமாக இன்று வரை நிலவி வருகிறது. இதே நூற றாண்டில்தான இதழியல வரலாறும துருக்கி இலக் கியத்தில் தொடங்கியது.

துருக்கி இலக்கியம 20-ஆம் நூற்றாண்டில் புதிய வளமும் பொலிவும் பெறத் தொடங்கியது. துருக்கி நாட்டின முதல் குடியரசுத் தலைவா கெமால் ஆட்டட்டர்கு துருக்கியப் புலவர்களின பழைய வரலாற்றை ஆராய்ந்து வெளியிட ஆணை யிட்டார். அதன விளைவாகப் பழைய மொழிகளுக் கும் நாகரிகங்களுக்கும் துருக்கியே மூலம் என்ற கோட்பாடு உருவாயிற்று. இக்காலத் துருக்கி இலக் கியங்கள பெரும்பான்மையும் உருசிய நாட்டைச் சார்ந்தவை. இன்று புதினமே சிறந்த இலக்கிய வகை யாக மக்களால போற்றப்பட்டு வருகின்றது. இக் காலத்தில் தோன்றியுள்ள கவிதைகளும நாடகங் களும் உலகப் புகழ் பெறத் தொடங்கியுள்ளன.

செ.வா.

**துருக்பா பழங்குடி**: இக்குடியினர் பூட்டான மலைப்பகுதிகளில வாழும் ஒரு தொன்மையான பழங் குடியினர். தெற்கே கங்கைச் சமவெளியையும் வடக்கே திபெத்தையும் எல்லைகளாகக் கொண்ட பூட்டான் பகுதி, மலைகளையும் பள்ளத்தாக்கு களையும் கொண்டுள்ளது. இங்கு வாழும் துருக்பா (Drukpa) பழங்குடியினர் பூட்டானின மூன்று இனத் தவர்களுள் ஓரினத்தவராவர்.

துருக்பா பழங்குடியினர்பூட்டானின மையப் பகுதி களில் வாழ்கின்றனர். இவர்கள் மொழியாலும், பண் பாட்டாலும் மற்ற இருகுழுவினரிடமிருந்துவேறுபட் டுள்ளனர். இரண்டாம் இனத்தவர்கள் நேப்பாளப் பகுதியிலிருந்தும், நேப்பாள மொழி பேசும் அசாம் பகுதியிலிருந்தும் அண்மைக்காலத்தில் வந்து குடி யேறியவர்கள். மூன்றாம் இனத்தவர் துருக்பா இனத்தவர்களால் மொன்பா (Monpa) என்று கூறப் படுகின்றனர். இவர்கள் தக்பா (Dakpa) என்றும்

சிலரால் சொல்லப்படுகின்றனர். இவர்கள் வளர்ச்சி பெறாத மக்களாவர். பெரும்பாலும் காட்டுப் பகுதி களில் வாழ்வதால் காட்டெரிப்பு வேளாண்மையைச் (Slash and Burn Cultivation) செய்கின்றனர்.

இம் மூன்று இனத்தவர்களைத் தவிர்த்துக் குறைந்த எண்ணிக்கையில் வாழும் இரு இனத்தவர் களும் உள்ளனர். ஓர் இனத்தவர் 1959-இல் திபெத் திற்கு வந்த அகதிகள். மற்றோர் இனத்தவர் திபெத்து நாட்டிற்கே உரிய எருது வகையினை (Yak) வளர்க்கும் நாடோடிகள். இவர்கள் திபெத்தின் வட கோடியில் வாழ்கின்றனர்.



துருக்பா ஆடவன்

துருக்பாபழங்குடியினர் மங்கோலிய இனத்தவர்கள். குள்ளமாகவும் பருமனாகவும் காணப்படும் இவர்கள் சொறசொறப்பான தலைமயிரையும் செம்பழுப்புக் கலந்த மஞ்சள் நிறத் தோலையும், அகன்று குறுகிய மூக்கையும், மங்கோலியக் கண்ணையும் (Mongoloid Eye)கொண்டுள்ளனர். இவ்வகைக் கண்ணில் இரப்பை அடிமடிப்பு (Epicanthic Fold) இருக்கும். அதாவது மேல் இரப்பை தெளிவாக வெளியே தெரியாமல் உட்புறமாக மடிந்து காணப்படும். ஆண்கள் தோள் பட்டையிலிருந்து முழங்கால் வரை நீண்டுள்ள ஒரே யொரு ஆடையை மட்டும் அணிகின்றனர். பெண் கள் இவ்வகையான ஆடையை அடிக்கால் வரை அணிகின்றனர்.

துருக்பாபழங்குடியினர் சிறு குடிசைகளை மட்டுமே கட்டிக் கொள்கின்றனர். ஒரு குறிப்பிட்ட பகுதியில் குறைந்த எண்ணிக்கையிலான குடிசைகள் மட்டுமே காணப்படுகின்றன. அதற்குக் காரணம் அவரவரின் விளைநிலங்களுக்கு நடுவில் குடிசைகளை அமைத்துக் கொள்வதேயாகும். பெரும்பாலும் ஒரு கால்வழியைச் சேர்ந்த இரத்த உறவினர்கள் மட்டுமே ஒரு குறிப் பிட்ட பகுதியில் வாழ்கின்றனர்.

இவர்கள் விளைவிக்கும் பயிர்களுள் முக்கியமா னது நெற்பயிரேயாகும். இவர்களின் விளைநிலங்கள் பள்ளத்தாக்குகளிலும் மலைச் சரிவுகளிலும் உள்ளமை யால் மிகுதியான மழை சேதத்தை விளைவிக்கிறது. பெரும்பாலும் ஆண்டில் ஒரு முறையே நெற்பயிரைப் பயிரிடுகின்றனர். இவர்கள் பயிரிடும் ஒருவகைச் சிவப்பு நெல் உலகிலேயே ஊட்டச்சத்து மிகுந்த அரிசி வகைகளுள் ஒன்று எனக் கருதப்படுகிறது. இந் நெல்லை உமி நீக்காமலேயே உண்கின்றனர். ஒருசில ஆண்டுகளில் இரண்டாம் முறையும் பயிரிடுவர். அரிசி உணவு அடிப்படையாக இருந்தாலும் காய்கறி களும் பன்றி இறைச்சியும் மிகுதியாக உண்கின்றனர். காடுகளில் கிடைக்கும் பலவகையான கனி வகை களையும், கீரை வகைகளையும் சேகரித்து உண்கின் றனர். கால்நடைகளை மிகுதியாக இவர்கள் வளர்ப் பதில்லை. உணவிற்காகப் பன்றிகளை விரும்பி வளர்க்கின்றனர். இவர்கள் வளர்க்கும் எருதுகளை மிகுதியாகக் கொல்வதில்லை. பன்றி, எருது இறைச்சி



மலைச்சரிவு நிலங்கள்

களை மிகுதியான அளவுபெற்று அதனை உப்பிட்டுப் பதப்படுத்தி ஆண்டுமுழுவதும் பயன்படுத்துகின்றனர்.

கைத்தொழிலில் ஆணகளும் பெணகளும் சிறந்து விளஙகுகின்றனர். பெணகள் உடைகளைக் கையால் நெய்கின்றனர். ஆணகள் வீட்டுப் பொருள்களையும், சடங்கு நிகழ்ச்சிகளில பயனபடுத்தும் அலஙகாரப் பொருள்களையும் செய்கின்றனர். திபெததுப் பகுதியின் பண்பாட்டுத் தாக்கம் இவர்கள் பணபாட்டில் ஓரளவு உள்ளது.

இவர்கள் பொதுவாக ஒருதுணை மணமுறையைக் கொணடுள்ளனர். தகுதியுடையவர்கள் ஒனறுக்கும் மேற்பட்ட மனைவியை மணந்துகொளகினறனா. அரை நூற்றாண்டிற்கு முனனர் துருகபா சமுதாயத்தில் பல உட்பிரிவுகள் இருந்தன. அப் பிரிவுகளுள சணடையில் பிடிபட்ட இந்திய வம்சாவழியினர் தாழ்ந்த நிலையிலிருந்தனர். இப்போது உட்பிரிவுகள் வேற்றுமை பெரிதும் குறைநதுவிட்டது. சமுதாய அமைப்பில் குல அமைபபோ(Clan System), கால்வழி அமைப்போ (Lineage System) இல்லை. இரத்த உறவுடைய நெருஙகிய குடும்பங்களே அனைததுச சமுதாயச் செயல்களிலும் முக்கியமாகக் கருதப்படுகினறன.

ஆண்களின வீர விளையாட்டு, வில விதையா கும் (Archery). விழாக்காலங்களில் பெருமளவில் பநதயப் பணம கட்டி நெடுநேரம் வில் வித்தை நிகழ்ச்சிகள நடைபெறுகின்றன. விழாக் காலஙகளில ஒரு வகை மதுவைத தயாரித்து அனைவரும உணடு மகிழகினறனர். சடஙகு நிகழச்சிகளில் பெண்கள முகமூடியிட்டு ஆடும பறவை நடனம் இவர்களிடம்சிறப்புப் பெற்றது. இநத முகமூடியில மனித மண்டையோடுகளைக கட்டிக்கொணடு ஆடுவதை முன்னோர்களை நினைவு கொளளுதற் பொருட்டு என்று கூறுகினறனர். சீ.ப.


அலங்கரிக்கப்பட்ட முகமூடி

**துருபதன்:** பாஞ்சால தேசத்துப் பிரசிதன குமரன. இவனும் துரோணாசசாரியரும் ஒரு சாலை மாணாக்கராயிருக்கையில் இவன் தனக்கு நாட்டாட்சி வருங்காலபாதி நாடு கொடுப்பதாகக கூறினான. இவன அரசேற்று ஆணடு கொணடிருககையில துரோணர் இவனிடம வறுமையால் ஒரு பசு வேணடி வநத போது, இவன அவரை யறியாதது போலிருந்து அவமதித்தனன. அதனால், துரோணர் கோபித்து 'உனனை என் மாணாக்கனால அவமதிக்கிறேன்' என்று கூறிச் சென்றார். வீடுமரிடம் வநது பாணடு மக்களுக்கு வில் வித்தை கறபித்து அருச்சுனனால் துருபதனைக் கொண்டுவரச் செயது அவமதிததார். அதனால உட்பகை கொணட துருபதன் துரோணரைக கொல்ல ஒரு குமாரனும் தனனை வெனற அருச்சுனனுககு ஒருபெண்ணும் பெறத தவமியற்றி யாகத்தில் திட்டத்துயம்மனையும் திரௌபதியையும பெற்றுப் பகை தீர்நதனன வீடுமரைக கொல்லப் பிறந்த சிகணடியும் இவன மகனே. சுமிததிரன், பிரியதரிசநன், சித்திரகேது, சுகேது, துவசசேநன ஆகியோரும இவனுடைய புதல்வர்களாவர். எம்.சீ.

**துருவங்கள்:** நிலவுலக முனைக கோடிகள அலலது துருவஙகள (Poles) இரணடு. அவை: 1) நிலவுலக வடமுனைக கோடி அலலது வடதுருவம. 2) நிலவுலக தென்முனைக் கோடி அலலது தென் துருவம (North Pole and South Pole) எனபனவாகும.

**வட துருவம்:** கோளம் சுற்றி வருவதாகக் கொள்ளப்படும் கறபனையான நடு ஊடு வரையின வடகோடி(Northern End of the Earth's Axis)வட துருவமாகும். இதன் குறுக்கை அளவு (Latitude)90°; நிரைகோடு (Longitude) 0° (நீளபபாஙகு அல்லது தீர்க்காம்ச ரேகை). இது காந்த விசைத் துருவத்தினின்று (Magnetic Pole) வேறுபடும். நிலவுலக வடமுனைக் கோடியை முதலில (1909-ஆம் ஆணடில) சென்றடைந்தவர் அமெரிக்க ஆய்வுப் பயணி இராபாட்டு இ. பியரி (Robert E. Peary) எனபவராவார்.

**தென் துருவம்:** பூமியின தென்கோடியில இருக்கும் இடத்திற்குத் தென்துருவம் அல்லது தென்முனை

என்பது பெயர். இதைச் சுற்றிப் பனிபடர்ந்த அட்லாணடிக்கு, பசிபிக்கு, இந்தியப் பெருங்கடல் ஆகியவை இருக்கினறன. இது மககளால் நெருஙக முடியாத, வாழ முடியாத, இடமாகும். இது ஆண்டு முழுவதும் பெரிய பனிப் பாறைகளாலும், கட்டிகளாலும மூடப்பட்டிருக்கும். பனிப் பாறைகளின உயரம் 3962.4 மீட்டர் இவ்விடம் கடலமட்டத்திற்கு மேலுளளது. சில பகுதிகளில் இப்பனிப் பாறைகளுக்குக கீழ மலைத்தொடர்கள இருககின்றன. மலைச் சிகரஙகளும் தென்படுகினறன இஙகுளள பனிக்கட்டிகள் கடலிலும் நிலத்திலும் பரவிக் கிடககினறன தென முனையின் மொத்த நிலப்பரப்பில ஒரு விழுககாடு தான் பனியில்லாமல இருக்கிறது அதுவும் மலைச் சிகரமாகவும், மடிப்பு மலையாகவும, உருமாறும் மலைகளாகவும இருக்கிறது.

தென்கோடியில மக்கிய தாவரமும, நிலக்கரியும் இருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டது. அதனால இப்பகுதி எப்பொழுதும் வெதுவெதுபபாக இருக்கும கோடைக்காலத்தின் வெப்பநிலை பனியுறையும் நிலைக்குக் குறைவு. குளிர்காலத்தின் வெப்பநிலையும் 75° F உருகுநிலைக்குக் குறைவு. அதனால் இப்பகுதியில் பனிப்புயல் அடிக்கடி வரும். ஆனால மழை எனபதில்லை. தென் முனையைச் சுறறியுளள கடலில் உவர்ப்புத் தன்மை குறைவு. கடல் அஙகு மிகவும ஆவியாவது இல்லை.

தென்முனையில் இருக்கும் மலைச் சிகரஙகளில் இலைக்கின்கள், பாசி, காளான் போனறவைகள் காணப்படுகின்றன. உயிரினங்கள் இங்கு வாழ்வதில்லை. பூந்தாவரங்களும் புல்லும் இல்லை. சில பகுதிகளில் கடலுக்கு அடியில தாவர உயிரினஙகள இருக்கின்றன. எல்லா உயிரினங்களும் பிளாஙடன் என்ற உணவிலிருந்து உயிர் வாழ்கின்றன. சீல்சு, வால்ரசு என்ற பாலூட்டும் கடல் விலங்குகள்தாம் இங்கு நிறையக் காணப்படுகினறன. பெட்ரல்சு, சேககு இசுகூல் போன்ற பறவைகள வாழ்கினறன. பலவகையான மீன் இனங்களை இங்குக காணலாம். இலைக்கின் என்ற ஒருவிதமான பாசி பானற தாவரத்தைத் தவிர வேறு எந்தவிதமான உயிர்களும் தரையில வாழவில்லை.

தென்முனையை ஆராயக் கேப்டன சேமசு குக்கு என்ற ஆஙகிலேயர் கி.பி. 1772-இல் புறப்பட்டார். இவர் பயணத்தினபோது தரை எதுவும கணடுபிடிக்கப்படவில்லை. பிறகு பல ஆராய்ச்சியாளர்கள இப்பகுதிக்குச் சென்றனர். பிறகு உரோல்டு அமுன்சென (Amundsen Roald) என்னும் நார்வே நாட்டு ஆய்வுப் பயணி கி.பி. 1911-இல் முதனமுதலில தெனமுனையை அடைந்தார். தம் தாய்நாட்டு நார்வேக் கொடியை அங்கு நட்டார். மாவ்சன் எனபவர் 1914-இல இப்பகுதிக்குச சென்றார். இங்கு அறிவியல் ஆராய்ச்சிகள நடத்திப பல புதிய செயதிகளைக் கண்டுபிடித்துக கொடுத்தார். விமானங்கள மூலமாக அமெரிககர்கள தெனமுனையில கி.பி. 1963-இல் இறஙகினர். இநதியாவிலிருநது ஏழாம் முறையாக இப்பகுதிக்கு இப்பொழுது பயணம் செய்துகொணடிருககிறார்கள். தென துருவத்தின் குறுக்கை அளவு 90° (தெற்கு). நிரைகோடு 0°. பொ.க.

**துருவன்:** துருவன உத்தானபாதனுக்குச் சுநீதியிடம் உதித்தவன். இவன் ஒருமுறை மாறறாந் தாயாகிய சுருசியுடன கூடியிருந்த தன் பிதாவையணையத தந்தை இவனைக் கணடு களிககாதிருந்ததையறிநது, சுருசி இவனை நோககி 'நீ என வயிறறில் பிறவாமல் சுநீதியிடம உதித்ததால் உனக்குத் தநதையிடம் இருக்கும் உரிமையிலலை' என்றனள. அதைக்கேட்டு அரசனும் வாளாவிருந்தனன. அதனால துருவன தன தாயை அடைநது நடநதவை கூறி முனிவர்களையடைநது நாரதரால உபதேசம் பெற்றுத் தவமியறறுகையில பேயொனறு பயமுறுத்த அஞசாது பெருந்தவமியற்றித் துருவபதம் எனனும் ஒருபதம் பெற்றனன. இவனது பதம் சப்தரிசி மணடலத்திறகு மேல பதின்மூனறு இலட்சம யோசனை தூரத்திலிருபபது. வடதிசையறியத் துருவ நட்சத்திரமே ஆதாரமாக இருக்கிறது. இவன தவநிலை நீங்கித தாய்தந்தையரைக் கண்டு பல ஆண்டுகள அரசாண்டு உத்தமனைக் கொனற இயக்கருடன் போரிட்டு மனுவாலுபதேசிக்கப் பெற்றான. இவன எட்டு வசுககளுள் ஒருவன, அழிவில்லாதவன். முயறசியினால எதையும் சாதிக்கமுடியும் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது துருவனின் கதை. எம்.சீ.

**துருவாசர்:** துருவாச முனிவரைப் பற்றி இதிகாசங்களிலும் புராணங்களிலும் பலகதைகள கூறப்பட்டுளளன. இவர் அத்திரி முனிவருக்கும அனுசூயைக்கும் பிறந்தவா. சிறநத தவச்சிறப்புடையவர். இவர் எளிதிற் கோபங கொளபவரெனப் பேர் பெற்றவர். சிவபெருமான் திரிபுரமெரித்தபோது அவருடைய சீற்றத்தீ குழந்தையுருக் கொண்டு நிற்க அதனை அனுசூயை வளர்த்தனள். அக்குழந்தையே துருவாசர் எனபர். துவாரகையிலிருந்த கோபாலர்கள இவர் ஆசிரமஞ் சென்று தங்களுள் ஒருவனைக் கர்ப்பிணியாக வேடமிட்டு இவன வயிறறில பிறப்பது ஆணோ பெணணோவெனப் பரிகசிக்க, முனிவர் சினந்து இவன் வயிற்றிலே உங்கள் வமிசத்தை நாசமாக்கும் ஓர் இருப்புலக்கை பிறக்குமெனச் சாபமிட்டார். கைலாயத்தில் சிவபெருமானை வணங்கி, அவர்

அளித்த மலர்மாலையுடன் திரும்பும்போது தேவருல கத்தில இந்திரனைச் சந்தித்தார். இநதிரனுககு அந்த மாலையை அன்பாக அளித்தார். இந்திரன் அதைப் பெற்று அலடசியமாகத் தன ஐராவதத்தின் தலை மீது வைத்து விட்டான். ஐராவதம் அந்த மாலையைத் தன் துதிக்கையாலெடுத்துக் காலிலிட்டு மிதித்து விட்டது. ஆகவே, இந்திரனுக்கும் வெள்ளா ணைக்கும் இவா சாபம் கொடுத்தாா. இவர் கணண னையும உருக்குமணியையும் பலவாறு துனபுறுததிச் சோதனை செய்தும் இவரது மனங கோணாமல நடநது கொணடதனால மகிழ்ந்தார். இவருக்கும் அசமுகிககும் பிறநதவர்களான வாதாபியும் விலவல னும் துருவாசரை நோக்கி அதுவரையில் செய்த தவத்தைக் கேட்க, மறுத்ததுகணடு கொல்ல வந்த போது முனிவர் கோபிதது, 'நீஙகள அகத்தியரால் இறக்க' வெனச் சபித்து மறைந்தார். துரியோதனன ஏவலால் பாணடவரிடததுப் பதினைந்து நாழிகைக்கு மேல் சென்று அன்னம் வேண்டிக் கணணனால பசி நீங்கினார். வபுசு எனனும் காநதருவப் பெண்ணைப் பறவையாகச சபித்தார். குநதிக்கு மந்திரமுபதேசித தார். இராம மூர்த்தி காலமுனியுடன் ஏகாநதத்தில பேசுகையில், துருவாசர் வரக்கணடு, இவர் கோபத திற் கஞசி வாயிலில் இருந்த இலக்குமணர் விட, இவர் செனறு இராமமூர்த்தியைநோக்கி, 'நான் ஆயி ரம் ஆண்டு தவம்புரிந்து மிகப் பசித்தேன் அனனம வேண்டும்'எனக கேட்டு உண்டார். இப்படிப் பல கதை கள இவரைப்பற்றிச் சொலலப்படுகின்றன. எம்.சீ.

**துருமன்**: அமெரிக்க ஐக்கிய நாடுகளின் புகழ் பெற்ற குடியரசுத் தலைவர்களுள் ஆரி துருமனும் (Harry Truman) ஒருவராவார். இவர் கி.பி.1884-இல் மிசௌரி மாநிலத்தில் இலாமார் (Lamar) எனற இடத்திற் பிறந்தார். இவர் தம் முன்னோர்களாம் ஆங்கிலேயர்கள் கி.பி.1666-இல் இங்கிலாந்திலிருந்து அமெரிக்காவில் குடியேறினர். இவர் பள்ளிப் படிப்பை 1901-இல் இண்டிபெண்டனசு (Independence) எனற இடத்திற் முடித்தார். குடுமபச் சூழ்நிலை காரணமாகத் தொடர்ந்து இவரால் கல்லூரியில் படிக்க இயலவிலலை. இவர் கான்சாசு(Kansas) என்ற இடத்தில ஒரு வங்கியில சிறிது காலம் எழுத்தராகப் பணியாற்றினார்; பிறகு வணிகத் துறையில ஈடுபட் டுத் தோல்வியே கண்டார். இவர் முதல் உலகப்போரில் பல வீரச் செயல்கள புரிந்து ஒரு தலைவனுக்குரிய பண்புகளை வெளிப்படுத்தினார். எலிசபெத்து பெசு வாலாசு என்ற பெணணை 1919-இல திரு மணம் செய்துகொணடார்.

**அரசியல் ஈடுபாடு**: மக்களாட்சிக் கட்சியின (Democratic) தலைவரான தாமசு பந்தாகாசுடடு என்ப



துருமன் ஆரி

வரின உதவியால அரசியலில ஈடுபட்டார். நீதிபதிப் பதவி 1922-இல இவருககுக் கிடைத்தது. தலைமை நீதிபதிப் பதவியை 1926-இல பெறறாா. அப பதவி யில 8 ஆணடுகள் நீடித்தாா. இவர்தம நேர்மையும, திறமையான மேற்பாாவையும குடியரசுக் கட்சியின ரது (Republican Party) உதவியைக் கிடைககச் செய்தன. துருமன அமெரிகக ஆளவை மன்றத்திற்கு (Senate)1935-இல தேர்ந்தெடுக்கபபட்டாா. இவர் கடமையுணாசசியும் நட்பு மனப்பானமையும சக ஊழியர்களின பேராதரவைததேடித தந்தன. தேசி யப பாதுகாப்பு விசாரணைக் குழுவிற்குத் துருமன் தலைவராக நியமிககப்பட்டாா. அதனால் பொது மககளிடமும் புகழபெறறாா. அமெரிககக் குடியரசுத் தலைவராக இருநத உரூசுவெலட்டு (1944) இவரை உதவிக் குடியரசுத் தலைவராக நியமித்தார். இவா 82 நாள்களே அப்பதவியில இருந்தாா. தலைவா உரூசு வெட்டு 1945-இல் இறநததும துருமன அமெரிக்கக் குடியரசுத தலைவரானார்.

ஒனறுபட்ட நாட்டவை (United Nations) அமைப்பது தொடர்பாக இவர் சானபிரானசிசுகோச் சாசனம் எழுதுவதற்கான இறுதி ஏறபாடுகளை விரைவாகச் செய்தாா. இரணடாம் உலகபபோரின முடிவில் செருமனி கட்டுப்பாடின்றிக் கீழ்ப்படிவதற் கான உதவிகளையும் மறற நட்பு நாடுகளுக்குச் செய்து கொடுத்தார். போருககுப் பின ஏறபட்ட சிக்கல களை ஆராய 1945-இல் துருமன, இட்சுடாலின் (Stalin), அட்லி ஆகிய மூவரும் போட்சுடாம் (Potsdam) என்னுமிடத்தில் மாநாடு ஒனறில் சநதிததனர் தோற்கடிக்கப்பட்ட செருமனியின நிருவாகத்தைக் கூட்டுக் கட்டுப்பாட்டுக் குழுவிடம் ஒப்படைக்கவும், தோல்விகண்ட பிற நாடுகளோடு சமாதான உடன் பாடுகளைச் செய்துகொளளவும் அவர்கள தீர்மானித் தனர். பசுபிக்குப் பெருங கடலில் சப்பான இரண் டாம் உலகப்போரைத் தொடர்நது நடத்திககொண்

டிருந்ததை முடிவுக்குக் கொண்டுவரச் சப்பானைச் சேர்ந்த உரோசிமா, நாகசாகி என்ற இரு நகரங்களிலும் அணுக்குண்டு வீச 1945 செப்டம்பரில் துருமன் ஆணையிட்டார் போர் முடிவுற்றது. சப்பான்மீது படையெடுத்தால் 5,00,000 அமெரிக்க வீரர்கள் கொல்லப்படுவார்கள் என்று துருமனின் ஆலோசகர்கள் (Advisors) கூறியதால், போரை முடிவுக்குக் கொண்டுவர அணுக்குண்டு வீசக் கட்டளையிட்டது நியாயமானதுதான் எனத் துருமன் கூறியுள்ளார்.

பின்னர் 1948-இல் நடந்த குடியரசுத் தலைவர் தேர்தலில் தம்மை எதிர்த்து நின்ற இ டியூபி (E.Dewey) என்ற குடியரசுக் கட்சியாளரைத் தோற்கடித்துத் துருமன் வெற்றி பெற்றார் உள்நாட்டு நிருவாகத்தில் 24 கூறுகள் கொண்ட தாராளக் கொள்கையை நடைமுறைக்குக் கொண்டுவர முயன்றார். ஆனால் அவற்றுள் ஒன்றே ஒன்றுதான் சட்டமாகியது மிகக் குறைந்த செலவில் பொது மக்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கும் கொள்கை அமெரிக்கக் காங்கிரசால் ஏற்றுக்கொள்ளப்பட்டுச் சட்டமாகியது ஆனால், வெளிநாட்டுக் கொள்கையில் துருமனது ஆற்றல் புகழ்பெற்று விளங்கியது. உலக அமைதிக்கு உருசியா ஒரு முட்டுக்கட்டை எனத் துருமன் கருதினார். உருசியாவின் பொதுவுடைமைக் கொள்கையும், அதன் உலகப் புரட்சிக் கோட்பாடும் அமெரிக்காவின் விரிவடைதல் மற்றும் அதன் முதலாளித்துவக் கொள்கை ஆகியவற்றிற்குப் பெரும் அறைகூவலாக அமைந்திருந்ததைத் துருமன் உணர்ந்தார்.

**துருமன் கோட்பாடு**: துருக்கியும், கிரேக்க நாடும் பொதுவுடைமைக் கொள்கைக்கு இரையாகிவிடும் என்றும், உருசியா தன் செலவாக்கை மத்திய தரைக் கடற் பகுதியில் விரிவடையச் செய்துவிடும் என்றும் துருமன் எண்ணினார். எனவே, அமெரிக்கக் காங்கிரசிறகு விடுத்த உரையில் உள்நாட்டிலிருந்து அல்லது வெளிநாட்டிலிருந்து அச்சுறுத்தப்படும் ஆக்கிரமிப்பிலிருந்து எந்நாட்டின் சுதந்திரத்தையும் காக்க அமெரிக்கா அந்நாட்டிற்கு உதவ வேண்டுமெனத் துருமன் வேண்டுகோள் விடுத்தார். இவ்வறிக்கை துருமன் கோட்பாட்டை வெளிப்படுத்தியது. இதனை ஏற்றுக்கொண்ட அமெரிக்கக் காங்கிரசு துருக்கி மற்றும் கிரேக்க நாடுகளுக்கு இராணுவக் கடற்படைத் தளபதிகளை அனுப்பிப் படைக்கலங்களைப் பெறவும் பிற தேவைகளை நிறைவு செய்யவும் 40 கோடி தாலர்களை (Dollrs) ஒதுக்கியது. அமெரிக்க உதவிபெற்றுக் கிரேக்க நாடும் துருக்கியும் பொதுவுடைமைத் திட்டங்களை முறியடித்தன.

இதனைத் தொடர்ந்து மார்சல் திட்டம் அல்லது ஐரோப்பிய மீட்சித் திட்டம் கொண்டுவரப்பட்டது. புத்தமைப்பிற்கான தேவைகள் குறித்து ஐரோப்பிய நாடுகள் ஓர் உடன்பாட்டிற்கு வந்தால் அமெரிக்கா மார்சல் திட்டத்தின்கீழ் உதவி அளிக்கும் என்று அறிவிக்கப்பட்டது. ஐரோப்பிய நாடுகள் இதனை ஏற்றுக்கொண்டன.

நட்பு நாடுகளின் ஒத்துழைப்போடு 1948-இல் கூட்டுப் பாதுகாப்பு முயற்சியை வளரச்செய்யத் தக்க நடவடிக்கைகளை எடுக்க அமெரிக்கக் காங்கிரசு துருமனுக்கு அதிகாரம் வழங்கியது பொதுவுடைமைக் கொள்கைகளுக்கு எதிரான நாடுகளோடு தலைவர் துருமன் பேச்சுவார்த்தைகளைத் தொடங்கினார். அதன் விளைவாக 1949-இல் வட அட்லாண்டிக்கு உடன் படிக்கையும், 1950-இல் வட அட்லாண்டிக்கு உடன்பாட்டு அமைப்பும் ஏற்பட்டன.

பொதுவுடைமை வட கொரியா, 1950-இல் தென் கொரியாவைத் தாக்கியபோது துருமன், தளபதி மெக் ஆர்தரின்கீழ் ஒரு படையைத் தென் கொரியாவிற்கு உதவ அனுப்பினார். தென் கொரியா மீட்கப்பட்டது. வட கொரியாவையும் தாக்கும்படி மெக் ஆர்தர் உத்தரவிடப்பட்டார். மஞ்சள் ஆறு எல்லைவரை முன்னேறிய மெக் ஆர்தர் சீனப் பொதுவுடைமைப் படைகளை எதிர்க்க வேண்டியதாயிற்று. இந்நிலையில் சீனாவைத் தாக்கவேண்டுமென்று வற்புறுத்திய மெக் ஆர்தரைத் துருமன் பதவியிலிருந்து நீக்கினார். கொரியப்போர் யாருக்கும் வெற்றியின்றி முடிவுக்குக் கொண்டுவரப்பட்டது கொரியப் போரினாலும் சில கூட்டரசு அலுவலர்களின் ஊழல்களாலும் துருமனின் செல்வாக்குக் குறைந்தது

ஐசனோவர் 1953-இல் அமெரிக்கக் குடியரசுத் தலைவரானார். துருமன் இண்டிபெண்டன்சு நகருக்குத் திரும்பினார். இவரது அயல்நாட்டுக் கொள்கை வெற்றிகரமாக இருந்தது குறிப்பிடத்தக்கது. துருமன் 1972-இல் மிசௌரி மாநிலத்தில் கான்சாசு நகரில் காலமானார் இவரது உடல் 'துருமன் நூல் நிலைய' வளாகத்தில் அடக்கம் செய்யப்பட்டது. கி.பி.

**துரைசாமிக் கவிராயர்**: இவர் கி.பி.19-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் தோன்றிய இசைத் தமிழ்ப் புலவர். வள்ளல் பம்மல் விசயரங்க முதலியார் இவரை ஆதரித்துப் போற்றினார். இவர் பழநியாண்டவர் இசைப்பாட்டு, திருப்போரூர் ஆண்டவர் இசைப்பாட்டு, பழநியாண்டவர் வெண்பாவந்தாதி, பழநியாண்டவர் கலித்துறையந்தாதி, பழநியாண்டவர் பதிகம், பழநியாண்டவர் தோத்திரப் பாமாலை, பழநியாண்டவர் மாலை, பழநியாண்டவர் போற்றிக் கலிவிருத்தம், சொர்ணாம்பிகை தோத்திரம் முதலிய நூல்களைஇயற்றியுள்ளார். சென்னையில் சங்கிலி நாச்

சியார் பிறந்த ஞாயிறு என்னும் தலத்தைப்பற்றி இரு பதிகங்கள் பாடியுள்ளார். இவருடைய நூல்களைப் பாராட்டித் திருத்தணிகை விசாகப் பெருமாளையர், காஞ்சிபுரம் வித்துவான சபாபதி முதலியார், அ.வீராசாமிச் செட்டியார் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். 'இன்னம் பராமுகமேனோ' (பியாகடை) 'சாமி ஏழை நானையா' (கனடா) போன்ற இவர்தம் கீர்த்தனங்கள் புகழ பெற்றவை. தாம் பாடிய இசைப்பாடல் அனைத்திலும்தம் பெயரை முத்திரையாகச் சரணத்தில அமைதது்ப் பாடியுள்ளார். சில இசைப்பாக்களை அவற்றின் பல்லவிகளில், இராகத்தின் பெயர் வருமாறு இயற்றியுள்ளார். இசையறிஞர்களுக்கு இவர்தம் இசைப் பாடல்கள் பெருவிருநது அளிப்பன. சா.உ.

**துரைசாமிப் பிள்ளை, சு. ஒளவை (1902-1983):** இவர் தென்னார்க்காடு மாவட்டத்தில ஒளவையார்குப்பம் என்னும் சிற்றூரில் 1902-இல பிறந்தார். இவர் தந்தையார் சுந்தரம்பிள்ளை; தாயார் சந்திரமதி அம்மையார். இவர் கருணீகர் மரபினர். இவர் உடன்பிறநத ஆடவர் மூவர்; பெண பாலார் ஒருவர். இளமையில் பெற்றோரை இழந்த இவர், தம் தமையனார் அரவணைப்பில் வளர்ந்து வந்தார். இவர் திண்டிவனத்தில் தமது பள்ளிக் கல்வியை முடித்தார். இவருக்குத் தமிழ் அறிவுறுத்தியவர் சீர்காழி கோவிந்தசாமி ரெட்டியார் என்ற தமிழாசிரியர்.



துரைசாமிப பிளளை, சு. ஒளவை

இவர், முதன் முதல் உடல்நலத் தூய்மைக் கணகாணிப்பாளர் (Sanitary Inspector) பணியை மேற கொணடார். தமிழ்மொழி ஆர்வத்தால் உந்தப்பட்ட இவர், அரசுப் பணியினின்று விலகித் தமிழ் இலக்கிய -இலக்கணங்களை முறையாகக் கற்கத் தொடங்கினார். நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார், கரந்தைக கவியரசு இரா. வேங்கடாசலம்பிள்ளை ஆகிய பேரறிஞர்களிடம் தொலகாப்பியம் முதலிய இலக்கண நூல்களையும், சங்க இலக்கியஙகளையும் கற்கும சிறப்பினைப் பெற்றார். இளமையிலேயே கூர்த்த மதிநலம் வாய்ந்த இவர், சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழில வித்துவான் பட்டம் பெற்றார்.

தமிழ்பபட்டம் பெற்ற துரைசாமிப்பிள்ளை வட ஆர்க்காடு மாவட்டக் கழக உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணி மேறகொண்டார். இவா உலோகாம்பாள என்னும் அம்மையாரைத் தம் வாழ்க்கைத் துணைவியாக ஏறறார். இவரது தமிழ்ப் பணி தடையின்றி நிறைவெய்த அவ வமமையாரே பெரிதும் காரணமாக இருந்தார்.

இவர் சஙக இலக்கிய-இலககணப் பயிறசி பெறற தோடனறிச் சைவத திருமுறைகளிலும, சித்தாந்த சாத்திரஙகளிலும் உயரிய பயிறசி பெற்றார். 'சித்தாந்தக் கலாநிதி' எனற சிறப்புப பட்டம் இவருக்கு வழங்கப்பட்டது.

இவா இளமைமுதல் எழுத்துப பயிறசியை வளர்த்துவந்தாா படிப்பும எழுத்தும இவருக்கு இரு கண்களா போன்றவை. பிற்காலத்தில் இவர் 'உரை வேந்தர்' என்ற சிறப்புப் பட்டம் பெறுவதற்கு இளமைப் பயிறசியே காரணமாக அமைந்தது. இவா திருப்பதி திருவேஙகடவன கீழத்திசைக கலலூரியிலும், அணணாமலைப் பலகலைக்கழகததிலும் ஆராயச்சிப் பேராசிரியராகப் பல்லாண்டுகளதொணடாறறினார். புதுவன காணபதில பேரார்வமும, வரலாற்றுப் புலமையும் மிககவா. பழஞ சுவடிகளைத் தேடிப் பெறுவதும், பெற்ற சுவடிகளை ஒப்புநோககுவதும் இவரது இயல்பு. புறநானூற்றுக்கு இவா எழுதிய உரை இவரது பரந்த நூற் பயிற்சியையும, வரலாற றறிவையும, நுணமான் நுழைபுலததையும் எடுத்துக காட்டுவதாக அமைந்துளளது. ஐங்குறுநூறு, பதிற்றுப் பத்து, நற்றிணை ஆகிய சஙக நூல்களுககுச் சிறந்த உரை கணடுளளாா பல்வேறு ஆராய்ச்சி நூல்களும் இவர் எழுதியுளளார். மணிமேகலை ஆராயச்சி, சீவக சிநதாமணி ஆராயச்சி, சூளாமணி ஆராய்ச்சி ஆகிய நூல்களையும் இவர் எழுதியுள்ளார். மணிமேகலைக் காப்பியத்தின் பிற்பகுதிககு இவா எழுதிய உரை, இவரது பரநத சமயப்புலமையை எடுத்துககாட்டுகிறது.

இவர்தம் வாழ்க்கையின் பிற்பகுதியில் 1951 முதல் 1968 வரை மதுரைத் தியாகராசர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகவும் தலைவராகவும் விளங்கி

னார். அங்குப் பணியாற்றியபோதுதான இவர் நற்றிணைக்கு உரை எழுதி முடித்தார். ஓய்வு பெற்றபின தள்ளாத வயதிலும் திருவருட்பா முழுமைககும் உரையெழுதி முடித்தார். அவ்வுரை அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் சார்பில இப்போது வெளிவநது கொண்டிருக்கிறது.

இவருக்கு ஆணமககள ஐவர்; பெணமககள நாலவர். தமிழ் உலகத்தில தமக்கெனச சீரிய இடமபெறறு வாழந்த இப்பேராசிரியா 1981-இல மதுரையில காலமானார்.

பா வி.

***துரோசன்***: திராய் நகர மககளைப பொதுவாகத் துரோசன எனறு கூறுவா. திராய் நகரம திரோசா (Troja) என அக்காலத்தில கூறபபட்டதால அஙகு வசிதத மக்களைத துரோசன் எனக கூறினா. துரோசன்கள (Trojans) கடின உழைப்பிற்குப பெயா பெற்றவர்கள. ஆசியா மைனரின வடமேற்குப பகுதியில அமைநதுள்ள திராய் நகரத்தை அகழாய்வுகள் செய்து அதன் பழமையையும அரசியல் வலிமையையும் அறிஞர்கள வெளிப்படுததினா.

வாணிகத் தொடாபு, நில வள ஆற்றல் முதலியவற்றால் மேம்பட்டு விளங்கிய திராய நகரம் பல்வேறு படையெடுபபுகளைச சந்திததது. அவற்றுள ஒனறுதான் துரோசன போா (The Trojan War) இபபோா கி மு. 1194-இல் நடந்ததாக அலெக்சாண்டரினபுவியியல-வரலாற்றியலாராகிய எரடோசுதனசு (Ertosthenes) குறிப்பிடுகிறார். அரசியல், பொருளாதாரக காரணஙகளுககாகவே இபபோா நடைபெறறிருக்க வேண்டும. ஆனால, ஓமா தமது காவியமான இலியடில் பேரழகி எலன (Helen) தான காரணம் எனகிறாா. துரோசனகளின் இளவரசரான பாரிசு (Paris), கிரேகக மனனன மெனலெசின (Menelaus) மனைவி எலனைத் திராய நகருக்குக் கடததிக் கொணடு செல்கினறான். அவளை மீட்கப் பெரும கடற்படையோடு திராய நகரைக கிரேக்கர்கள முறறுகையிடுகின்றனர். பத்தாணடு முற்றுகை பயனறறுப்போகவே தந்திரத்தால திராய நகரினுள நுழைகினறனர். பெரிய மரககுதிரையைச் செய்து அதனுள கிரேககர்களை மறைதது வைத்து அதனைத திராய நகர வாசலில் வைத்துவிட்டுக கிரேக்கர்கள திராய் நகரைவிட்டுச் சினான் (Sinon) என்னுமிடத்திறகுச சென்றுவிடுகினறனர் இமமரக்குதிரை துரோசன் குதிரை எனக் கூறப்படுகிறது இதனை எபியசு (Epeius) எனபவா செய்தார். அதினா (Athena) என்ற பெண் தெய்வத்திற்குக காணிகையாக அது வைக்கப்பட்டதாகக் கிரேககாகள கூறிச் சென்றனர். அக்குதிரையைத துரோசன்கள் நகரினுள கொண்டு சென்று மகிழ்ச்சிக் கூத்தாடிக் களைத்து அயாந்துவிடுகின்றனர். அச்சமயம் மரக்குதிரையினுள மறைந்திருந்தோர் திராய் நகர வாயிலைத் திறந்துவிடக் கிரேக்கப் படையினா துரோசன்களை வீழ்த்தி அழகி எலனை மீட்டுச் செல்கினறனா.

துரோசன்களின் பெயரால் சூரியனைச் சுறறி வரும் இரு குறுங்கோள கூட்டம் (asteroids) துரோசன கோளகள (Trojans planets) எனக்கூறப்படுகிறது. இக குறுஙகோளகள ஏறக்குறைய 40 உள்ளன இவற்றுள முதன்மையானது அககிலீசு. இககோளை மாகசு உலபு (Max Wolf) எனபவா முதனமுதலில 1906-ஆம் ஆணடு கணடுபிடித்தாா. பிற குறுஙகோளகளின பெயர்களில குறிபபிடத்தக்கன சில உள. அவை எகடா, நீசுட்டா (Nestor), அகமெமனான எனபபடும.

எச சா.

**துணை நூல்கள்.**

Couch, Sir A.T.O., The Story of the Iliad, J.M. Dent & Sons Ltd., London, 1951.

Will Durant, The Story of Civilization, Part II., The Life of Greece, Newyork, Simi, and Schuster, 1939.

***துரோணர்***: துரோணா எனபவா குருகுலத்து அரசாகட்குக் குருவானவா. துரோணம் என்பது ஒரு முகத்தலளவையைக குறிககும கருவி. பாரததுவாசா செய்த தவத்தை அழிகக இநதிரன ஏவலால செனற மேனகை அவருககு மோகமுணடாககினாள. அப்பொழுது முனிவர் தமது வீரியத்தை ஒரு துரோணத் திலிட்டாா அதனினறும பிறந்த காரணத்தால துரோணர் என இவர் பெயர் பெற்றாா.

இவர் அசுர குருவாகிய சுககிரனின அமிசமாவார். இவர் தவம முதலிய ஆறறலகளில வசிட்ட முனிவனை ஒபபார். இவா தம தநதை பாரததுவாச முனிவனிடம பதினானகு விததைகளையும கற்றவா. பாா ஏழிற்கும படைபலம படைத்த பரசுராமனிடம் ஏழாணடுகள விலவிததை பயினறவா. தருமன முதலியோர் இளமையிலேயே வலியடைநதது கணடு துரியோதனன் பரசுராமனிடம விலவிததை பயினற கனனனை நட்பாகக கொணடு வலிமை பெறறிருந்தான. வீடுமன, பாணடவரும கௌரவரும் துரோணனிடம விலவித்தை பயில வேணடுமெனறு கருதியதால கிருபாச்சாரியாருககுப் பிறகு விலவித்தை கறபிக்க வேணடி, ஆசானாக நியமிககப் பெற்றவா.

துரோணர் துருபதன என்னும பெயா கொண்ட மனனனிடம் இளமையில் நலல நட்புக் கொணடிருந்தார். இருவரும் அங்கிவேசன என்ற முனிவனிடம் வில் விததை பயின்றதால இருவரும் ஒருவராகி வாழ்ந்து வந்தனர். அந்த நட்பின் பெருக்கால் துருபதன்

துரோணரை நோக்கித் தன தநதை இறந்தால தான பெறும நாட்டு உரிமையில பாதி கொடுதது ஆள வைப்பதாக உறுதி கூறினான

பின துரோணா தவம் செய்யச சென்றார். பல ஆணடுகளுக்குப் பின் துருபதன் தந்தை இறநத பின் அரசனாக வாழ்வதறிந்து தம் மகவிறகுப பால தரும பசு வொனறினைக கேட்டுப் பெறப போநதாா. அப்பொழுது துரோணரை 'நீ யார்' எனறு அறியான போல கேட்டதோடு முனிவாகட்கும் அரசர்கட்கும் மரபுத தொடர் இல்லை எனறு பழமை மறநது பேசியும் புறக்கணித்தான. அபபொழுது துரோணா 'வாய்முறைமை தபபிய உன இராச்சியத்தில பாதி கொளவதோடு உன்னைத் தேரொடு போாககளத்தில கவாவேன' என்று சூளிட்டுப போநதாா. அத்தகைய சூள நிறைவேறுதறகு வாயப்பளிககும எனக் கருதி வீடுமன பாணடவ கௌரவர்ஆகியோாக்குப்படைப பயிறசி அளிப்பதை மனமுவநது ஏறறார். வீடுமனால் தமமில் ஒருவராக வாழுமாறு வேணடிக் குடை முதலிய அரசச் சினனங்கள அளித்துப் போற்றப் பெறறார்.

வில்விதததையைப் பயிற்றுவிக்கும்போது அருச்சுனன் எலலோரினும் மேம்பட்டு விளங்கக கணடு துரோணா அவனிடம பெருவிருபபம வைத்தாா. அவன் மேம்பாட்டினைப் பிறா அறியும வணணம கிணறறில தன மோதிரத்தை இட்டு எடுககச சொனனாா விசயன் தன் விலலாற்றலால எடுத்துத தநதான். ஓர் ஆலின் இலைகள முழுமையும துளைக்குமாறு கட்டளையிடப் பிறர் மலைத்து நிறக, விசயன் தன் விலலாற்றலால் துளைத்துக் காட்ட அவர் பிறர்க்கு அவன ஆற்றலைப் புலப்படுததிக காட்டினார். முதலையினினறும் தம்மை விடுவிதத விசயனுக்கு எல்லா முறையிலும் வலிமையுண்டாகப் பகழியொன்றையும் அளித்தார். விலவித்தை அரங்கேற்ற முடிவில் துரோணர் தம் பகைவன் யாகசேனனை வலியிழக்கச்செய்யும் ஆற்றல்படைத்தவர் பாணடவர்களே எனற துணிவோடு குருதட்சினை தர நின்ற பாணடவர்களிடம் தம் பகைவன் யாகசேனனை வலியொடுக்குதலே தாம் விரும்பும் தட்சிணை எனறு கூறி, அவர்களை அவனிடம் போருக்கனுப்பினார். விசயன யாகசேனனை வலியழித்துத் தேரில பிணைததுக் குருவின் முன் கொணர்ந்து காட்ட, அவர் யாகசேனனைப பார்தது 'நீ அன்று என்னை அறியானைப் போலப் பேசிப் புனசொல் கூறியதை அறியாயோ? அனறு நீ தரமறுத்த அவனியில் பாதியை யாஎ தரக் கொள' என்று கொடுத்துத் தம் வஞ்சினம் முடிததவர்.

மானமிழந்த யாகசேனன் தன்னைச் சிறுமை செய்த துரோணரைக கொல்ல ஒரு மைந்தனையும் தன்னைத் தேரிடைப்பிணிதத வீரனை மணக்க ஒரு மகளையும பெற வேளவி செயது அவர்களைப் பெற்றான. அதனால துரோணர் தம சாவிறகுரியானைத் தாமே உருவாககிக் கொண்டாா.

திடடத்துய்மன துரோணரிடம போந்து தமககு வில் விததை கற்றுத தருமாறு வேணட, அவரும அவனால தனககு இறப்புணடெனறு அறிநதும் விற பயிற்சி உவநதளிததாா.

தருமன சூதாடி நாடிழந்த பின திருதராட்டிரன கருதியவணணம் பாணடவாகள அவர்கள சூதாட்ட நிபந்தனைககியையப் பதினமூனறாணடுகள கழிநத பின போநது, ஒரு ஞானறு நாடடுரிமையைப பெற லாம் எனறும், ஒருஞானறு இராமனே காடுறைந தான எனறும் கூறி, அவ்வாறு செயதலே அவாகட்கு நலலது எனறு கூறியவா.

விராடதேயதது மறைநது வாழ்ந்ததை அறிநத துரியோதனன விராடனின நிரைகவாநததால அது வழிப்பெருகியபோரில பலரோடு கலநதுவிசயனைப் போருககுககழைத்தவர். போரில் விசயனால குருவெனக் கொணடு வணங்கப் பெறறவர் துரோணா. துரியோதனன ஏவல வழி ஒழுகிபபோருககு வநத அர்சசுனனோடு பொருதவர். பொருமபோது அவன் விலலாற்றலைக கணடு தாம ஆசானாகிக் கற்றுக கொடுத்ததைவிடப் பனமடங்கு கலைநயம தோன்றக் கணடு தாமே அவனைக குருவாகத கொணடு வில வித்தை அறிய விரும்பியதோடு புறமுதுகுமிட்டவா.

பன்னிரணடாம நாள் போரில துரியோதனன வேணடுகோளால் தருமனை அகப்படுதத மகர வியூகத்தில சேனை அமைததுத் தருமனோடு பெரும போர் செய்து தருமனால தோ முதலியவறறை இழந்து புறங்கொடுத்தவர். பகதத்தன் இறநதபின னர்க் கனனன, புறங்கொடுத்தவன எனறு இகழ்ந்த போது பாணடவர் தம வீரம பேசி இடிததுரைத்தவா.

பதினமூனறாம் நாள போரில சக்கர வியூகம வகுத்துச சேனையோடு போர்க்களத்து நினறு திட்டத் துய்மனைப் புறக்கொடுக்கச் செயதவா. அபிமன்னுவினால் பலமுறை தோற்கடிககப்பெறறும் மீணடும் போநது அவன தேரொனறைத் துணித்தவர்.

பதினான்காம் நாளபோரில விசயன் மகன அபிமனனுவை இழந்ததால் வஞ்சினம் பூணடு அனைவரையும் ஒழித்து வருஙகால துரியோதனன முறையிட, அவனுக்கு விதிவயங கூறி, அரிய கவசம தநதவா. விசயனுக்கு ஏதம சூழ்நத நிலையில் கண்ணன வலம புரி முழஙகிச்சாத்தகியை அழைத்தபோது அவனைப போர்க்களம புகாவகைத் தனனோடு பொருமாறு அழைத்துத் தடுததவர்

வீமனால துரியோதனன தம்பியர் பலர் மடியக கண்டு வீமனைப் போரில எதிாத்துத தடுத்த போது தேரோடு அவனால தூக்கி எறியப் பெற்று எலும பொடியப் பெறறவா. துரியோதனன ஏவலால படை கொண்டு சென்று விராடனையும் துருபனையும் கொன்றவர். பதினைந்தாம நாட் போரில துருபதன் மைந்தன துரோணரைக கொலல வஞ்சின முரைத்துப் போந்து பொருதபோது, மரீசி, அகததியன் முதலிய முனிவர்கள போந்து மறையோதலும தவமியறறலும உறுதி பயபபன எனறும தேறாது வாளும தேரும் போரும பூணடது கூடாதென்றும, மனஒருமை கொணடு மேலுலகம் புகத்தருவன செய்யவேணடு மென்றும் கூறககேட்டுச சாநத முற்றவர். அசுவத தாமன இறககும் புத்திரசோகத்தாலனறி இறபபுறா அவரைக கொலலக் கணணன தருமன வாயிலாக அசுவத்தாமன இறந்தானெனக கூறக கேட்டுப் படை நடுவ நினறு திட்டததுய்மன் விட்ட அம்பால் உயிர் துறநதவர். வரத்தால மடிந்தவரேயனறிப் பிறர் வீரத்தால மாயந்தவர் அலலர் என வியாசனால புகழப் பெறறவர். கு.தி

**துலாம்:** துலாம, துலை, தராசு என்பன ஒரே பொருள உடைய சொற்கள். கோளகள சூரியனைச சுற்றிவரும் பாதையை மேடம் முதல மீனம ஈறாகப் பன்னிரணடு வீடுகளாகப் பகுத்துளளனர். சிததிரை மாதம சூரியன் சஞ்சாரம செய்வதுபோல தோன றும வீடு மேடம். அபபோது சூரியன் உச்சத்தில் உளளான் எனக் கூறுவா. ஐப்பசி மாதம் சூரியன சஞ்சரிககும் வீடு துலாம் எனறு சொல்லபபடும. அநநேரம சூரியன் நீசம எனபாாகள. வானவெளியில காணப்படும இருபத்தேழு நட்சத்திரக் கூட்டத் தைப் பனனிரண்டு வீடுகளுககும் பகுத்தளிக்குமபோது துலாம் வீட்டிறகும $2\frac{1}{4}$ நட்சத்திரங்கள அமைகின்றன.



துலாம்

அவை அனைத்தும துலாககோல் போன்ற தோற்றம தருவதால துலா வீடு எனறனர். ஒரு நட்சத்திரததை நான்கு காலகளாகப் பிரித்தால் துலா இராசியில் சித்திரையில பினனிரணடு கால்களும சுவாதி முழுமை யும் விசாகத்தின மூனறு காலகளும் அமைந்து கிடக் கும் ஒருவர் மேற்குறித்த நட்சத்திரத்தில பிறந்தால துலா இராசியில பிறந்தவர் எனறு கூறலாம. சூரியன் நிறகும் இராசியில நினறும பிறநத நேரததைக் கணககிட்டுப் பிறநத இலககினத்தை எடுத்துரைபப துணடு. பிறநத இலககினம துலா வீட்டில அமையு மானால் துலா இலக்கினத்தில பிறநதவா எனபார் கள துலா வீட்டிற்கு அதிபதி சுக்கிரன. அவவீட்டில சனி உசசம ஆகும. சூரியன நீசம அடைகிறான. சந்திரனுககுத துலாம பகைவீடு. புதன, செவ்வாய, வியாழன ஆகிய மூவருக்கும துலாம நட்பு வீடு. இவ வாறு சோதிட நூலகள ஒவவொருவீட்டிறகுமஅதிபதி யார்? உச்ச நீசம பெறும கோளகள எவை? பகை நட்பு எனன? முதலியவற்றைக் குறிப்பிடும. துலா இலககினததில பிறநதவர்களுககு வியாழன, செவ வாய், சூரியன் எனபவை பாவிகள சனி, சுக்கிரன புதன மூவரும் நல்லவா. புதனும் சநதிரனும் கூடி யிருப்பின அல்லது ஒருவரையொருவா பாாததிடில, அரச யோகஙகளைக் கொடுபபதுணடு செவவாய் இரணடாம் இடததிறகு உரிமை பெற்று நிற்பதால கொல்லான் எனபது சோதிடக் குறிபபு ஐபபசி மாதத் தைக துலாம மாதம என்றும குறிப்பிடுவர். தே.ஆ.

**துவரை:** காணக: துவாரகை.

**துவைதம்.** காணக: இருமைககொளகை

## துவைது தாவீது ஐசனோவர் (கி.பி.1890 -1969)

அமெரிக்க ஐக்கிய நாட்டின முப்பதது நான காம் குடியரசுத தலைவரான ஐசனோவர் (Dwight David Eisenhower) கி.பி. 1890-ஆம் ஆணடு தெக சாசு மாநிலத்திலுளள தெனிசன எனனும் இடததில பிறநதார். இவருடைய தநதை தாவீது யாக்கோபு ஐசனோவரும(David Jacob)தாய இடா எலிசபெதது ஐசனோவரும் முறையே பேவரியா, சுவிட்சர்லாந்து நாடுகளிலிருந்து குடியேறிய பரம்பரையைச சோந்த வர்கள. இரண்டு குடும்பஙகளும் கி பி. 1750க்கு முனபேவநது குடியேறிவிட்டன. பிறகு அவாகளுடைய குடுமபம் கன்சாசு மாநிலத்திலுளள அபிலீனி எனனு மிடததில் குடியேறியது.ஐசனோவர், எழுவருள மூன றாம் மகனாகப் பிறநதார். அவாகளில ஒருவர் குழந் தைப் பருவத்திலேயே இறந்து விட்டாா. மறறவா களுள் ஆர்தா என்பாா வஙகித் தொழிலராகவும் (Money Lender). எட்கா எனபார் வழக்கறிஞராக வும், இராய் எனபாா மருந்தாளுநராகவும், ஏர்ல்

என்பார் மின்பொறியாளராகவும், மில்டன் என்பார் சான்சு ஆப்கின்சு பல்கலைக் கழகத்தின் தலைவராக வும் இருந்தனர். ஐசனோவர் மில்டனுக்கு ஆலோ சனை வழங்குபவராக இருந்தார்.



ஐசனோவர், துவைது தாவீது

அபிலீனியாவில் குடியேறியபிறகு ஐசனோவர் மதப்பழக்க வழக்கங்களை அறிந்துகொள்ளவும் விவிலிய நூலைப் (Bible) படிப்பதிலும் ஈடுபட்டார். பிற்காலத்தில இவை இவருடைய வாழ்க்கையிலும், பல செயல்களிலும் செல்வாக்குப் பெற்றுவிட்டன. இதைப்பற்றிப் பினனால் 1952-இல் 'கடவுளைப் பற் றிய அச்சம ஏற்படும்பொழுதுதான் அறிவு வளரத் தொடங்குகிறது' என்று கூறுகிறார். அநத அளவிற்கு மதத்தின்மீதும், விவிலிய நூலின் மீதும் நம்பிககை வைத்திருந்தார். இவருடைய குடும்பம ஏழ்மையில இருந்ததால் இவருடைய பெறறோர் இவரிடம் 'வாய்ப்பு எனபது உனனிடம்தான உள்ளது. நீ அதை அடைய முயற்சி செய்யவேணடும்' என்று இவரை ஊக்கப்படுத்தினர். அவருடைய தாய் இவருக்கு நேர்மை என்பது ஆபிரகாம லிங்கன் தனது வாடிக்கை யாளரிடம் மூனறு செண்ட்டுகள் மிகுதியாகப் பெற்றதை மழையிலும் நனைந்து இவரிடம் திருப்பிக் கொடுத்ததைப் போலிருகக வேண்டுமென இவரிடம் அடிக்கடிக் கூறுவாராம். இநநிகழ்ச்சி இவருடைய உள ளத்தில் மிகவும் ஆழமாகப் பதிந்துவிட்டது. இதுவே இவரை நேர்மையின சினனமாக்கியது

ஐசனோவர், எட்டாம் படிவம் வரை இலிஙகன இலக்கணப் பள்ளியிலும, கல்லூரிப்படிப்பை 1909-இல அபிலீனியிலும் முடித்தார். பிறகு 1910-இல் அனன போலீசில் நடந்த கடற்படைத தேர்வும, மேலை மையத்தில் நடந்த இராணுவத் தேர்வும எழுதினார். பிகுற 1911-இல் மேலை மையத்திலுள்ள இராணுவ மையத்தில் சேர்ந்தார். இங்கு இவர் சிறநத கால் பந்தாட்டக்காரராக விளங்கினார். ஆனால் கால் முட்டிகளில் ஏற்பட்ட வலியினால் சால்பந்து ஆடு வதை நிறுத்தினார். பிறகு 1915-இல் இரண்டாம் நிலை இராணுவ அதிகாரியாக உயர்வு பெறறார். இராணுவப் பள்ளியில் படிப்பில் 164 பேரில் 61-ஆம் மாணவராகவும், ஒழுக்கத்தில் 125-ஆம் மாணவராக வும் விளங்கினார்.

**இராணுவப் பணி** தெக்சாசில் உளள சாம் அசு டன கோட்டையில் 19-ஆம் பிரிவில் இரணடாம் நிலை இராணுவ அதிகாரியாகப்பதவியைத் தொடர்ந் தார். இஙகு இருக்கும் பொழுது மம்மீ செனீவா தவுடு என்னுமபெணமணியைக காதலித்து 1916-ஆம் ஆணடு திருமணம செயதுகொணடார். அதே நாளில் ஐச னோவர் முதல்நிலை இராணுவ அதிகாரியாகப் (First Lieutenant) பதவி உயாவு பெற்றாா. இவா களுக்கு இரு ஆண் குழந்தைகள பிறநதன. ஒனறு சிறு வயதிலேயே இறந்துவிட்டது. மறறொரு மகன் தந்தையைப போலவே இராணுவத்தில் பணியாற்றி னார். ஐசனோவா, முதல் உலகப் போரினபோது பெனசிலவேனியாவில உளள கேம்ப்புகோல்டின் பீரஙகிப படைககுத் தலைமையேற்றார். அதனால முதல உலகப்போரில பிரானசுககுச் சென்று இராணுவப் பயிறசியளித்தார் அதைப் பாராட்டி இவருக்குச் சிறப்புப் பரிசு வழஙகபபட்டது.

முதல உலகபபோருககுப்பின ஐசனோவா, நிரந் தரப் படைத்தலைவராக ஒரு பிரிவுக்கு நியமிக்கப் பட்டார். பிறகு 1922-இல பனாமாக் கால்வாய்ப் பகுதியிலுளள இருபதாம இராணுவப் பிரிவிறகுத தலைவராகப் பொறுப்பேறறார்.

பனாமாவிலிருந்து திரும்பியபிறகு அமெரிக் காவிலுள்ள இராணுவப் பளளியில சேர்நது பட் டம் பெறறாா. பினபு போர்நினைவுச் சினனக் குழுவில் (Battle Movement Commission) பணி யாற்றினாா. பின்னர் இருமுறை பிரான்சு நாட் டிறகுச் சென்றுவந்தார். உதவிப் போர்ச் செய லாளராக 1929-ஆம் ஆணடு இவர் பதவியேற்றார். மூனறாண்டுக் காலம் பதவியிலிருந்தபின இராணு வத் தளபதி மெக் ஆர்தருககு உதவியாளராக நிய மிக்கபபட்டார். ஆனால போா முறைகளிலும், வெளிநாட்டு உறவுகளிலும மெக் ஆர்தரின கொளகைகளுககு மாறுபட்டு நினறார்.

மெக ஆர்தருடன 1935-ஆம் ஆணடு பிலிப்பைன சுககு உதவியாளராகச் சென்றாா. அங்கு இராணு வத்தைச சீரபடுத்துவதில், குறிப்பாக விமானப்படை

யில் மிகவும் நாட்டங்கொண்டார். அமெரிக்கா வந்த பிறகு 1940-இல் மூனறாம படைப் பிரிவிறகுத் தள பதியானார். அதனால் உஹரசியானாப் போரில் பங் கேறறுப் பெரும் மதிப்புப பெற்றாா. பிறகு பிரிகேடி யர் பதவி உயர்வு பெற்றார்.

**இரண்டாம் உலகப்போர்:** தளபதி மாாசலின் (Marshall)கவனத்திறகு ஆளாகிய ஐசனோவா,இரண டாம் உலகப்போரினபோது அமெரிககப் படைகளின தளபதியாக அனுப்பப்பட்டார். இரண்டாம உலகப போரில் 1942-ஆம ஆணடு நவமபர் 8-இல் அமெரிக் கப் படைகள பிரானசுப்படைகளுடன் சேர்நது வடக்கு ஆப்பிரிக்கப் பகுதியைத் தாககின. பிறகு ஐசனோவர் கூட்டுப் படைகளுடன 1943 சூலை 16-இல் சிசிலியை யும் 1943 செப்டம்பர் 3-இல இத்தாலியையும் கைப் பற்றினார்.

இவர் தம் போரத்திறமையின் காரணமாக 1943 திசமபர் மாதம் கூட்டுபபடைகளின தளபதி யானார். பிறகு பிரான்சு, இங்கிலாந்து, அமெரிக்கப் படைகளுடன் 1944 சூனில் செயிணட்டுலூ என்னு மிடத்தில செர்மனியை வெற்றி கணடாா. அதே ஆணடில் பாரிசு, செர்மனியிடமிருந்து விடுபட்டது. ஆனால சொமனியின விமானப்போர் மூலமாக 76,890 அமெரிக்க வீரர்கள மாணடனா. இரணடாம் உலகப்போர் 1945-ஆம் ஆணடு மே மாதம் வரை நீண்டு பினனர் முடிவுக்கு வநதது பிறகு செர்மனியை நிருவகிக்கும் குழுவில் இடமபெற்றுப் பணியாற்றி னார்.

**குடியரசுத் தலைவராதல்:** இரணடாம் உலகப் போர் முடிந்து திரும்பிய ஐசனோவருக்கு அமெரிக் காவில்சிறப்பான வரவேற்பு அளிககபபட்டது. பிறகு இவர் அமெரிக்க இராணுவத் தலைவராகப் பொறுப பேற்றார்; மேலும் இரணடாம் உலகப்போரில் ஏற் பட்ட அனுபவங்களை நூலாக எழுதி வெளியிட் டார்.

இவர் கொலம்பியா பல்கலைககழகத்தின் தலைவ ராக 1948-இல் பொறுப்பேற்றார். முதலில குடியரசுத் தலைவர் பதவிக்குப்போட்டியிட இருகட்சிகளிலிருந்தும் வந்த அழைப்புகளை மறுத்தார். பிறகு அதிபர் ஆரி எசு. துருமன் (Truman) இவரை வட அட்லாணடிக்கு நாடுகளின் நிறுவனத்திற்குப் (Nato) படைத்தளபதி யாக நியமித்தார். இவருடைய திறமையின காரண மாக நாட்டோ (Nato) ஒப்பந்தம் சீராகச் செயற பட்டது.

நியூயார்க்குக் குடியரசுக் கட்சியின செயலாளர் தாமசு இ. திவே எனபவரின் வேண்டுகோளுக்கிணங்க ஐசனோவர் அமெரிககக குடியரசுத் தலைவா தேர்த லில் போட்டியிட இசைவு தெரிவித்தார். அதனால் திவேயின குழுவினர் தமது அரசியல் எதிரியான, இராபாட் எ. தாப்ட்டை ஐசனோவர் மூலமாக ஒழித்தனர்.

இராணுவப் பணியிலிருநது ஓய்வு பெற்றபிறகு சிகாகோவில் நடந்த கட்சிக் கூட்டத்தில குடியரசுக் கட்சியின வேட்பாளராகக் குடியரசுத் தலைவர் பத விக்குப போட்டியிட்டாா. இவருடன் இரிச்சாடு நிக சன் துணைக் குடியரசுத தலைவர் பதவிககுப போட்டி யிட்டார் ஐசனோவர், இரணடாம உலகப்போரில சிறநதமுறையில பணியாற்றியமையால அமெரிக்க மக் களிடையே நனகுபுகழபெற்றிருந்தார். அதனால் இவர் குடியரசுத் தலைவராக வெற்றிபெறறு சனநாயகக் கட்சியின இருபதாணடு மேலாணமையை முடிவுக்குக் கொணடுவந்தார். அதுவரை பெற்றிராத அளவுக்கு ஐசனோவரும, நிக்சனும 33,000,000 வாக்குகள பெற்றுத் தோதலில் வெற்றிபெற்றனர். மேலும் காங கிரசில 422 வாக்குகளபெற்றுச் சனநாயகக கட்சியின வேட்பாளர் இசுடீவன்சனைத் தோல்வியுறச செய தார்.

**வெள்ளை மாளிகையில்:** மக்களுககுககொடுத்த வாக்குறுதிகளின்படி ஐசனோவர், கொரிய நாட்டிற் குச் சென்று அஙகுள்ள உணமை நிலைகளை அறிந தார். உருசிய அதிபா இசுட்டாலின மரணம் அடைந்த பிறகு போர்க் கைதிகளை மாற்றும ஒப்பந்தம 1953 -ஆம ஆண்டு ஏற்பட்டது.

ஐசனோவர் உலக அணுசசக்திக குழுவினருடன் அணு ஆயுதம் பரவாமல் தடுக்கவும், அணுச்சக்தியை ஆககப்பணியில பயன்படுத்தவும் 1953-ஆம் ஆணடு திசமபர் மாதம் ஆலோசனை கூறினார். இஙகிலாந்து, பிரான்சு, மறறும உருசியத் தலைவர்களுடன 1955 -இல் செனீவாவில் பேசசுவாாத்தை நடததினார். இந்தப் பேச்சுவாாத்தையில ஆயுதக் குறைப்புக்காக ஓர் ஒப்பந்தம ஏற்பட்டது. ஆனால அமெரிக்காவிற கும் உருசியாவிற்கும் உள்ள பகையுணர்வால் இந்த ஒப்பநதம் பயனற்றுப் போயிறறு.

தென்கிழக்காசியாவில பொதுவுடைமைக் கோட் பாடு பரவாமல் இருக்க இவர் தம்முடைய அயல் நாட்டு அமைச்சர் மூலமாகத் தென்கிழக்காசிய நாடு களின் கூட்டு ஒப்பநதத்தை (Seato) ஏற்படுத்தினார். இந்த ஒப்பந்தம் நாட்டோவின மறுபதிப்பாகும். ஐசனோவர் பொதுவுடைமை நாடுகளை எதிர்த்த தோடு மட்டுமல்லாமல் இலெபனானுக்கு அமெரிக்கப் படைகளையும அனுப்பினார். ஆனால் போா ஏது மின்றி சிக்கல் தீர்ந்தது.

**உள்நாட்டு விவகாரங்கள்:** ஐசனோவர் உளநாட்டுக் கொள்கையில, மககள உரிமைகளில பெருந்தனமையுடனும்,பொருளாதாரக் கொளகையில பழைமைவாதியாகவும காணப்பட்டார். இவா அரசின நிதி நிலை அறிககையில் பற்றாககுறை ஏறபடாமலும் அதேநேரத்தில் வரியைக குறைககவும சில அதிகாரங்களை மாநிலஙகளுககும் கொடுத்தார். புதிய உலக அரசியல, சமூக, பொருளாதார வளர்சசிகளினால இவரது அரசாஙகம் செலவைக் கட்டுபபடுத்த முடியவில்லை. எனவே 1954-இல் புதிய வரிவிதிப்பு முறையைக் கொணடுவந்தார்.

'செனட்டர்' மேக்கர்ததி 1954-இல இவருடைய அயல்நாட்டுக் கொளகைகளை எதிர்த்தா. ஆனால் இவர் தம்முடைய அயலநாட்டுக் கொளகையிலிருந்து சறறும் விலகவிலலை. மேலும சனநாயகக கட்சி, 1954-இல நடந்த காஙகிரசு அவைத தேர்தலில் குறைந்த விகிதத்தில வெற்றிபெற்றதால் அவர்களின் கீழ காங்கிரசு அவை வநதது.

**உடல் நலமும், மறு தேர்தலும்:** கொலமபியா மாநிலத்தில 1955-ஆம ஆணடு தென்வா எனனுமிடத்தில சுற்றுப்பயணம செய்யும போது மாரடைப்பால் மிகவும் வேதனையுறறார். ஆனால அரசாங்க வேலைகளைத் தடைகளின்றிக் கவனித்து வநதார். மேலும் இரண்டாம் முறையாக அமெரிக்கக குடியரசுத் தலைவர் தோதலுககுப் போட்டியிட ஆயததமானார். பிறகு குடலவீககம ஏற்பட்டதால அறுவை சிகிச்சை செய்து கொணடார். பிறகு குடியரசுத தலைவர் தேர்தலில் சனநாயகக்கட்சி வேட்பாளர்கள இசுடீவன்சன் மற்றும் ஈசுடர் ஆகியோரைவிடக காங்கிரசில 457 வாககுகள் பெற்று வெற்றிபெற்றாா. மீண்டும் குடியரசுத் தலைவராக ஐசனோவரும், துணைக் குடியரசுத் தலைவராக நிக்சனும் பதவியேற்றனா. ஆனால் சனநாயகக் கட்சி காஙகிரசில் மிகுந்த இடஙகள் பெற்று பலம் பொருநதியிருநதது.

முதல் முறையில் புகழுடன விளங்கிய ஐசனோவர் இரணடாம் முறை பதவியேற்ற ஓராண்டில புகழ் மங்கப்பெற்றார். அதற்குக் காரணம 1957-58-ஆம் ஆணடுகளின பொருளாதாரக் கொள்கைகளும், இவருடைய உதவியாளர் செர்மன் ஆதம்சு என்பவரின் ஊழலும் ஆகும். அர்கன்சாசு 'மாநிலத்திலுளள இராக்டு என்னுமிடத்தில் 1957-ஆம் ஆண்டு நடந்த இனக் கலவரத்திற்கு ஐக்கியப் படைகளை அனுப்பினார். அதனால் மேலும் புகழ மங்கத் தொடஙகியது. குடியரசுக் கட்சி 1958-ஆம் ஆணடு நடந்த காஙகிரசு சபைத் தேர்தலில் பெரிய தோல்வியைக் கண்டது. பாராளுமன்றத்தில் (செனட்டில) 13 இடஙகளையும், மககளவையில 41 இடங்களையும் அது இழநதது மேலும் 9 மாநிலங்களிலும் ஆளுநர் பதவியை இழந்தது.

ஐககிய அரசாங்கம் 1958-59-ஆம ஆணடுகளில ஏற்பட்ட பொருளாதார நிறைவுகளினால செலவுகளை விடுத்துச் சனநாயகக் கட்சித தலைவர்களின் ஆலோசனையை ஏற்றுக் கொணடது. ஆனால், குடியரசுத தலைவர் ஐசனோவர் தம வழிப்படியே நடநது கொணடாா. சனநாயகக கட்சித் தலைவர்களின ஒறறுமையுடன இவர், அலாசுகாவை 49-ஆம் மாநிலமாகவும் அவாயை 50-ஆம் மாநிலமாகவும் ஐககிய அரசுடன இணைத்தாா. சனநாயகக் கட்சியினருடன ஏறபட்ட கொள்கை வேறுபாட்டினால இவர் நியமித்த வணிக அமைசசா இசுடாரசு எனபவரைக காஙகிரசு புறககணித்தது. இந்நிகழ்சசி இவருககுத தனிப்பட்ட முறையிலும் அரசியலிலும் ஏறபட்ட பேரிடியாகும்.

இவர் 1960-ஆம ஆணடின நிதிநிலை அறிககையில சரிசமமாக இருககவும், மிகுநத பணவீககம ஏறபடாமல இருக்கவும கவனம செலுததினாா. மேலும வளர்சசித் திட்டங்களுககு ஒதுக்கப்பட்ட தொகையைவிட மிகுதியாகச செலவாகாமல் பார்ததுக் கொணடதால நாட்டில் பணவீக்கம் ஏற்படாமல தடுககப்பட்டது.

இரண்டு முறைக்கு மேல் குடியரசுத் தலைவர் பதவிக்குப் போட்டியிடக் கூடாது எனற 22-ஆம் சட்டத்திருத்தததிற்கு முதன முதல் ஆளானவர் ஐசனோவர் ஆவாா. பெர்லினில உருசியர்களுக்கு மேலாண்மை மிகுநததால இரு வலலரசுகளுக்கிடையே கெடுபிடிப் போா (Cold war) மூணடது. வெளியுறவு அமைச்சர் தல்லசு 1959-இல புற்று நோயால் பாதிக்கப்பட்டதால ஐசனோவா, ஆாபர் எனபவரை அப்பதவிக்கு நியமிததார். தலலசு இறநத பிறகு ஐசனோவர் வெளிநாட்டு உறவுகளில் சரியாக ஈடுபடமுடியவிலலை. அது இவருக்குப் பேரிழபபாகும்.

செனீவாவில 1959-ஆம் ஆண்டு மே மாதம இஙகிலாந்து, பிரானசு, உருசியா, அமெரிக்கா ஆகிய நாடுகளின வெளியுறவு மந்திரிகளின் கூட்டம் தொடஙகியது. இதில் பொலின்சிககலுக்குத தீாவுகாணமுயற்சி நடநதது.ஆனால் அமெரிக்காவிற்கும் உருசியாவிற்கும் இடையேயுளள பகையினால் பெர்லினைப் பிளவுபடுத்தும் எணணம்வெளிப்பட்டது.பின்னா 1959-இல சூலையில் நிக்சன் உருசியாவில் பயணம் மேறகொண்டார். அதனால் அமெரிக்க, உருசிய உறவில ஒரு பெரும் மாறுதல்ஏற்பட்டது.

இந்தத் தொடர்புகளினால் சோவியதது நாட்டின அதிபா குருசேவும் அமெரிக்க அதிபா ஐசனோவரும் உறவுமுறைப் பயணமமேறகொளள வேண்டுமெனக் கூறப்பட்டது. அதன்படி சோவியத்துத தலைவர்கள் 1959-செப்டமபரில அமெரிககாவிற்கு வருகைதந்தனர்.

பிறகு ஐசனோவர் ஐரோபபா, ஆசியா ஆகிய கணடஙகளில உள்ள நாடுகளுக்குப பயணஙகள மேற்கொணடார். இலத்தீன அமெரிக்க நாடுகளுககு 1960 பிப்பிரவரி மாதததில சென்றுவநதார். உருசிய அதிபா குருசேவைச் சந்திக்க 1960, மே மாதததில பாரிசுககுச சென்றாா. ஆனால் அமெரிககா தன விமானஙகளை உருசியா மீது செலுததி உளவு பார்தததால உருசிய அதிபா குருசேவு, இவரைப் பாரிசில சநதிகக வரவிலலை.

ஐசனோவரின்பதவிககாலம 1961-ஆம ஆண்டு சனவரி19-ஆம தேதியுடன முடிவடைநதது. பிறகுசனநாயகக் கட்சியின் சார்பில போட்டியிட்டு வெறறி பெறற கென்னடி 1961-ஆம ஆணடு சனவரி 20-ஆம தேதி குடியரசுத தலைவராகப் பதவியேறறாா. கடைசி நாளகளை ஐசனோவா, கெட்டிசுபர்கிலுள்ள தம பணணையில கழிககலானாா. மீணடும மாரடைப்பு ஏற்பட்டதால வாசிஙடனில உளள இரீட் பொது மருத்துவ மனையில 1969-ஆம ஆண்டு தமது எணபதாம வயதில இயறகை எயதினாா. இவர் பெயரில கனசாசு மாநிலததிலுளள அபிலீனியில ஒரு நூலகம் நிறுவப்பட்டது.
சை.வே.சி.

**துவைன், மார்க்கு**: மார்கசு துவைன என்பவா அமெரிக்க நாட்டின சிறந்த நகைச்சுவை எழுத்தாளர் ஆவாா. மாாககு துவைன (Mark Twain) எனபது இவருடைய புனைபெயா. இவருடைய இயறபெயா சாமுவேல லேஙகான கிளமெனசு எனபதாகும். கிளமென்சு கி.பி. 1835-ஆம ஆணடு நவமபாத்திஙகள 30-ஆம் நாள, மிசௌரி நகரில, சான மார்சல, சானேலேம்ப்ட்டன கிளமெனசு ஆகிய இருவருககும் ஆறாம மகனாகப் பிறநதார். கிளமெனசின் நானகாம் வயதில அவர் குடும்பம கானிபெல் எனனும் ஊருககுச் சென்றது அஙகு இவர் தநதையாா வழககுரைஞராகப் பணியாற்றியதோடு சிறு மளிகைக கடையும் வைத்திருநதார். கானிபெலலின இயற்கை அழகில தம் இளமைப் பருவத்தைக் கழித்தாா. இலேஙகான் கிளமெனசு, கானிபெல்லில இருககும் போதே, தமது பதினோராம் வயதில, தந்தையை இழநதாா. பிறகு கிளமெனசு குடுமபத்திறகாக உழைக்க வேண்டிய கட்டாயம ஏற்பட்டது. அதனால வீடுவீடாகச சென்று பொருளகளை ஒப்படைககும் பணிச் சிறுவராகவும மளிகைக் கடையில உதவியாளராகவும கொலலருககு உதவியாளனாகவும் பணியாறறித் தமது பதினமூனறாம் வயதில தொழில கறகும் நோக்கத்தோடு ஓா அச்சகப் பணியில சோநதார். பிறகு இவருடைய அண்ணன தொடஙகிய 'கானிபெல மலா' என்னும் இதழில அச்சுக கோபபவராகப் பணியாற்றினார். 'குள்ளனைப் பயத்துக்குளளாககிய சொகுசுககாரன்' (The Dandy Frightening the Squatter) என்ற இவருடைய முதல நகைச்சுவைக் கதை 'காாபபெட்டு பேகு' (Carpet Bag) எனற இதழில் வெளியானது.


துவைன, மாாககு

பதினெட்டாம வயதில் தம்மை ஒரு பயண விரும்பியாக அறிவித்துக் கொணட கிளமெனசு பல நகரஙகளுககுச் சென்றார். அதனால தாம் பெற்ற அனுபவஙகளைக கடிதஙகள வடிவில பல இதழகளில எழுதினாா. பின வெர்சினா நகரிலிருந்து வெளிவரும் 'டெரிடோரியல் எணடர்பிரைசு' (Teritorial Enterprise) எனனும இதழில் 'சோசு' எனனும் தலைபபில எழுதினாா. பிறகு 'இராணுவ நகரப் படுகொலை' (The Empire City Massacre)என்னும் கதையை நம்பத் தகுநத முறையில எழுதி மக்களைக் கவர்நதார்.

மார்க்கு துவைன் வொசினா நகரில் கி.பி. 1863-ஆம் ஆணடு பிப்பிரவரித் திஙகள மூனறாம நாள முதல புனைபெயரில் எழுதத் தொடஙகினாா. 'சேக்ரமெணடோ யூனியன்'(Sacramento Union)எனனும் இதழின சார்பில், கி.பி 1866-ஆம ஆணடு சானபிரானசிசுகோவிறகும, கொனலுலுவிற்கும் பயணம் செய்தார். அதைத் தொடர்ந்து கலிபோானியாவிலும் நிவேடாவிலும் அளித்த விரிவுரைகள் மக்களைப் பெரிதும் கவர்ந்தன. 'அட்லா கலிபோானியா' (Atla California)

எனனும் இதழின நிருபராக இருநதபோது அவவித ழின் சாரபில ஐரோப்பா, நியூயாாககு ஆகிய இடங களுக்கு இவர் செனறு வந்தார். தம் பயணங்களைப் பறறி நகைசசுவையாகப் பேசுவதிலும எழுதுவதிலும வலலராகத்திகழ்ந்தார்,வெளிநாட்டிலிருநது திருமபிய மார்ககு துவைன' அயலநாட்டில் அபபாவிகள' (The Innocents Abroad) என்ற தம பயண அனு பவத்தை எப்பொழுதும போல கடிதங்களை வாயிலாக எழுதினார். இப்பயணக் கட்டுரைகள மக்களை மிகவும ஈர்த்ததால் அவறறை இதழகள பலமுறை வெளியிட்டன.

மார்க்கு துவைன, கி.பி. 1870-ஆம ஆணடு பிப்பிரவரி மாதம் 2-ஆம் நாள ஒலிவியா லேங்குடன என்னும் மங்கையை மணநதார். மணமுடித்த பின நகைசசுவையாக விரிவுரையாற்றுவதில் இவா ஆர்வம காட்டினார். இவருடைய பேசசைக கேட்க மககள் கூடினர். தொடர்நது விரிவுரையாற்றிய மார்ககு துவைன்கி.பி.1872,73-ஆம ஆணடுகளில் இங்கிலாநதில விரிவுரையாற்றி இங்கிலாநது மககளைக கவாநதாா. இவர் கி பி.1876-ஆம் ஆணடு எழுதிய 'தாம் சாயரின துணிவார்நத செயலகள' (The Adventures of Tom Sawyer) எனற புதினம மிகவும் புகழ பெறறது. பல பதிபபகஙகளும, இதழகளும் இவா கதைகள், கட்டு ரைகள, புதினஙகள, நகைச்சுவைத் துணுககுகள் ஆகிய வறறை வெளியிட்டுப் பயனபெற்றன. இவா கி.பி.1894-ஆம் ஆணடு எழுதிய 'அயல்நாட்டில தாமசாயர்' (Tom Sawyer Abroad) என்ற புதினமும புகழபெற்ற தாகும்.மார்ககு துவைனின படைப்புகளைப் பாராட்டி 1901-ஆம் ஆண்டு ஏல் பலகலைககழகமும் 1902-ஆம் ஆணடு மிசௌரி பல்கலைக் கழகமும் 1907-ஆம் ஆணடு ஆககசுபோர்டு பல்கலைக் கழகமும மதிப் புப் பட்டம் (honorary degree) அளித்தன. மார்ககு துவைன் 1906-ஆம ஆண்டு 'தன் வரலாறு' எழுதத் தொடஙகினார். பல பட்டஙகளும் புகழும் பெற்ற மார்க்கு துவைன் 1910-ஆம் ஆணடு ஏப்பிரல மாதம் 21-ஆம் நாள் சுடார்ம்பீல்டு என்னும் நகரில இறந் தார். பா.அ.

**துளசிதாசர்:** இவர் இந்தி மொழி இலககிய வரலாற்றில சிறப்பிடம்பெற்ற கவிஞர்; இராமபக்தி செழித்த காலத்தில் வாழ்ந்த சிறப்புடையவர். சுவாமி இராமானந்தரின் வழிவந்த இவர் வட இந்தி யாவில் உத்தரப் பிரதேசத்தில் பாநதா மாவட்டத் தைச் சேர்ந்த இராசாப்பூர் என்னும் சிற்றூரில் பிறந் தாா என்பர். இவர் பார்ப்பனக் குலத்தைச் சார்ந்த வர். இவருடைய பெற்றோர் ஆத்மாராம் துபே, கூல்சி எனபோராவர். இவர் மூல நாளில் பிறந்தார் என்பதால இவருடைய பெற்றோர் இவரை இளமை யிலேயே வெறுத்தொதுக்கிக் கைவிட்டனர் எனறு கூறுகினறனா

இளமையை வறுமையில கழித்த துளசிதாசருக குப் பாபா நரகரிதாசு என்பவரின ஆதரவு கிடைத தது. அவரைத் தம் குருவாக ஏறறுக்கொணட துளசி தாசர் அவரிடமே இராம கதையைக் கேட்டறிநதாா. பினனாத தம் குருவுடன காசிநகரம் அடைநது இராமானந்தரின ஆசிரமததில தஙகினார். அஙகு மகாதமா சிரீசேசு சனாதன எனபாரிடம வேதசாத் திரஙகள, புராண இதிகாசங்கள, தததுவஙகள போனறவற்றைப் பதினைநது ஆணடுகள கற்றுத தோநதாா. பினனாப பல இடஙகட்கும பயணம செய்து, கல்வியறிவுடன உலகியல அறிவையும பெற றார்.

துளசிதாசர் இரத்தினாவளி எனனும ஓர் அழகிய பெணணை மணநதார். கல்வியிற் சிறநத இரததினா வளியிடம இவா அளவு கடந்த அன்பு வைத்திருந தாா. ஒருநாள இரத்தினாவளி தன கணவரிடம சொல்லிக கொளளாமல தன பிறந்தகம சென்று விட்டாள. செய்தியறிநத துளசிதாசர் இரவோடு இரவாக யமுனை ஆறறைக் கடநது தம மனை வியைச் செனறடைநதார்.அதனை யறிந்த இரத்தினா வளி தனகணவரைக் கடிநதுகொணடு இம் மனித உடலில் பற்றுதல வைப்பதற்கு மாறாக இறைவன மீது பறறு வைக்குமாறு அறிவுரை கூறினாள. துளசி தாசர் இலவாழவைத் துறந்து துறவு வாழ்வை மேற கொண்டமைக்கு இந்நிகழ்சசி அடிப்படைக காரண மாக அமைந்தது என்பர்.

துளசிதாசர் சிறநத இராமபக்தர். இராமபக்தி யையே பெருமபாலான தம காவியங்களின பெரும் பொருளாகக் கொணடாா. துளசிதாசர் இராமபிரா னையே நசசிப்பாடி வாழ்வில இனபங கண்டாா. இவர் 12 நூல்கள இயறறியுள்ளாா. அவறறுள ஐநது பெரியவை; ஏழு சிறியவை. அவற்றுளளும் இராம சரிதமானசு, வினயபத்திரிகா என்னும் இரு நூல களே துளசிதாசரின் பெரும் புகழுக்குக் காரணங களாக அமைந்தன.

இராமசரிதமானசு 'துளசிதாசா இராமாயணம்' எனப் பெயர் பெறும் பெருநூலாகும். இநநூலுள இராமபிரானின் வரலாறு விரிததுக் கூறப்படுகிறது. கவிஞர் அயோத்தியாவில் தங்கியிருந்தபோது இந நூல் எழுதி முடிக்கப்பட்டது. தோகா, சௌபாயீ, சோரட்டா என்னும் யாப்புகளில் இநநூல எழுதப் பட்டுளளது. இந்தக் காவியம் வடமொழி கலந்த

அவதீ மொழியில அமைநதுள்ளது. இநநூலுள பகதா எனனும் நிலையினும மிகுதியாக உலகுககு அறங கூறும் ஆசானாகக கவிஞரைக காணமுடிகிறது.

வினயபததிரிகா 'முகதக்கு' நடையில அமைநத இலக்கியமாகும். இநநூல ஏறத்தாழ 300 பதஙகளைக கொணடது. பலவேறுபட்ட இராகஙகளில அமைந் துளள அப்பதஙகள அழகும, சொல் நயமும மிககவை. பணணிசைததுப் பாடத தகும இனனிசைப் பாடல களாக இப்பதஙகள அமைந்துள்ளன. இநநூலுள இராமபிரான மீது கவிஞா கொணடுள்ள பகதி வருணனை மிகுதியாக இடம்பெறுகிறது. இநநூல வடமொழி கலநத தூய விரச மொழியில் அமைந துள்ளது

துளசிதாசர் வடமொழி, இநதி, விரச, அவதீ போன்ற மொழிகளில பெரும் புலமை பெறறிருந தாா. அககாலததிய எலலாக கவிதை நடைகளையும விரச, அவதீ ஆகிய இரு மொழிகளிலும கையாணடு தம காவியஙகளைப படைத்தமையே இநதி மொழி இலககிய உலகில இவர் பெருமபுகழ பெறறமைககுக் காரணமாகக் கருதபபடுகிறது. மொழி நடை, அணி நலன், பாததிரப் படைப்புகள போனறன இவா தம படைபபுகளில சிறபபிடம பெறுகின்றன. சாந்தரசத் தையும், சிருஙகாரரசத்தையும இவா இலக்கியங களில மிகுதியாகக காணமுடிகிறது. 'பயன கருதாப் பகதி' எனபது கவிஞரின காவியக கொளகையாத லின அப்பக்திதனை எடுததுரைபபதறகுச் சாநத ரசம இவர்ககுப பெரிதும துணை செய்கிறது. இராமன் காடு செலலுதல, தயரதன மரணம, கோசலை மணடோதரி துனபம் போனறவை குறிதது இராமாயணத்தில பேசுமபோது கருணைரசததைப பயனபடுததுகிறாா இராம-இராவணப போரில வீர ரசததுடனகோபம(ரௌத்திரம), அசசம்(பயானசம), அருவருபபு (பீபதசயம்) போனற இரசஙகளும இடம் பெறுகினறன. இராமசரிதமானசு, கவிதாவளி போனற நூலகளில இடம பெறும் பாலகாணடப் பகுதி வாதசலயரசததுடன காணப்படுகிறது இவ வாறு காவியஇரசககோட்பாடு துளசிதாசரால இவா தம காவியஙகளில முழுமையாகக கையாளபபடு வதைக் காணமுடிகிறது.

துளசிதாசர் வைணவபக்தர். இருப்பினும் பிற சமயக் காழப்பற்றவா. கிருட்டிண பகவான புகழ பாடும இவர்தம் 'கிருட்டிண கீதாவளி' இககொள கைக்குச் சிறநத எடுத்துககாட்டாகும். கவிஞரின இயலபு மறறும விரிநத பார்வை முதலியவறறால இவர் காலத்து நிலவிய சைவ வைணவ கருதது வேறுபாடுகள குறைந்தன. சமய ஒறறுமை ஓஙகி வளாநதது. துறவி நிலையிலும கவிஞா இலலறததின சிறபபையும், இலலறக் கடமைகளையும தம படைப்பு களில ஆஙகாஙகே வலியுறுததிச செலகினறாா. துளசிதாசா நூறு ஆணடுகட்கும் மேல வாழநதவா. இவா காலம கி.பி. 16,17-ஆம நூற்றாணடுகள எனபா.

இரா.செ.

**துளு** காணக: திராவிட மொழிகள.

**துறைக்குறுமாவிற் பாலங்கொற்றனார்** இவா சஙககாலப் புலவருள ஒருவர். இவரைப பறறிய செய்தி யாதொனறும் தெரிய விலலை என முனனைய உரையாசிரியா குறிபபிடுவா. பாலஙகொறறனார் எனனுந தொடரை நோககுழி இவா பாலன எனபாருடைய மகனாகலாம எனக கருத இடமுணடு. இவா பாடியதாக ஒரு பாடலே (நறறிணை. 286)கிடைததுள்ளது அது பாலைததிணை யில பிரிவிடை மெலிநத தலைவியைத தோழி வற் புறுததுவதாக அமைநதுள்ளது அபபாடல வணி கனைக கிளவித் தலைவனாகக கொணடுள்ளதால இபபுலவா வணிக மரபினரோ எனக கருதுவா பி. நாராயணசாமி ஐயா. பாலைவழியிலுள்ள பொலி வறற குனறததைக் குமிழ மலர் வீழநது பரநது அழ குறுத்தும எனபது கொணடு, பொருள காரணமாகப் பிரிந்து சென்ற தலைவர் அரிய அணிகலனகள பல வறறைக கொணாநது நினனை அணிசெய்வர் எனக் குறிபபினால தோழி தலைவிககு உணர்த்துகினறாள. குமிழின ஆயிதழ் அணிககு ஊசல ஒணகுழையை உவமம் செயதுள்ளது ஆசிரியரின நுணணறிவுககு நல்ல சானறாகும. வீட்டு நலம கருதியும் நாட்டு நலம கருதியும தலைவன பொருளவயிற பிரிநதுள் ளான எனபதைப் பாலஙகொறறனாா, 'நட்டோா ஆக்கம் வேணடியும ஒட்டிய நினதோள அணிபெற வரறகும், அனறோ தோழியவர் சென்ற திறமே' எனக கூறிய பகுதி சிறநததாகும்.

இரா.சா.

**துறைமுகச் சீட்டு**: இறககுமதியாளா, கப்பல் சீட்டினைக் காணபிததுக கபபலிலிருந்து சரககுகளைப பெறறுக கொளவது வழககம. இச சரக்குகளை துறைமுகத்திலுள்ள காபபகத்தில இடைக்கால ஏறபாடாக வைக்குமபோது, காப்பகததினரால வழஙகபபடுவது துறைமுகச சீட்டாகும.

துறைமுகச் சீட்டில சரக்குகளின தனமை, அளவு மதிப்பு போனற விவரஙகள குறிப்பிடபபட்டு,காபப கப பொறுபபு அலுவலரின கையொபபம இடப் பட்டிருககும். சரக்குச் சிப்பஙகளின குறியீடுகள, எண போனற விவரஙகளும இச்சீட்டில் இடம பெறும. யாரிடம சரக்குகள ஒப்படைச்கப்பட வேணடும்,

மேலும் எந்நாளிலிருந்து காப்பக வாடகை கணக் கிடப்படும் என்பன போன்ற விவரங்களும் துறை முகச் சீட்டில் குறிப்பிடப்படும்.

இச் சீட்டின் உரிமையாளர் அல்லது அவரால் புறக் குறிப்பிடப்பட்டுத் தரப்பட்டால் அவரது முக வர் சீட்டினை ஒப்படைத்துக் காப்பகத்திலிருந்து சரக்குகளைப் பெற்றுக் கொள்ளலாம். இச் சீட்டு சரக்குரிமைப் பத்திரம் என ஏற்றுக் கொள்ளப்பட் டுள்ளதால், அதன் அடிப்படையில் வங்கியர் கடன் வழங்கலாம்.

துறைமுகச் சீட்டினைப் பிணையாக ஏற்றுக் கடன் வழங்கும் போது வங்கியர் கவனத்தில் கொள்ள வேண்டியவை கீழே தரப்பட்டுள்ளன:

1. துறைமுகக் காப்பகத்தில் உள்ள சரக்குகளை நேரடியாகப் பார்வையிட்டு அதன் எண்ணிக்கையைத் தெரிந்து கொள்ள வேண்டும். கட்டுமானம் செய்யப் பட்ட சரக்குகளாக இருப்பின், சிப்பங்கள் பிரிக் கப்பட்டோ உடைக்கப்பட்டோ உள்ளனவா என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். கட்டுமா னம் செய்யப்பட்ட சரக்குகளாயிருப்பின், சரக்குகள் பற்றிய விவரமறியக் கட்டுமானம் செய்தவர்களின் சான்றிதழ் பெற்றுக் கொள்ள வேண்டும்

2. கடனுக்கு ஆதாரமான காப்பகத்திலுள்ள சரக்குகள் முழுமையாகக் காப்பீடு செய்யப்பட்டுள்ள னவா என்பதை அறிந்து கொள்ள வேண்டியது வங்கி யின் கடமையாகும்.

3. காப்பகத்திலுள்ள சரக்குகள் எத்தகைய வில்லங்கங்களுக்கும் உட்படாதனவாக இருத்தல் வேண் டும். அதாவது கடன் வழங்கிய வங்கியர் தவிர வேறு யாரும் அச்சரக்குகள் மீது உரிமை கொள்ள வாய்ப் பிருக்கக் கூடாது.

4. துறைமுகச் சீட்டை உரிய முறையில் வங்கியர் பெயருக்கு மாற்ற வேண்டும். கடன் வழங்கும் முன், கடன் வழங்கப் போகும் விவரத்தை வங்கி, காப்பக நிருவாகத்திற்கு எழுத்து மூலம் அறிவிப்பது நல்லது. அவ்வாறு செய்வதன் மூலம், காப்பகத்தினர் வங்கியர் அனுமதியின்றி வேறு யாருக்கும் சரக்குகளை விடு விக்க மாட்டார்கள்.

துறைமுகச் சீட்டைப் போன்று, கப்பல் சீட்டு, தொடர்வண்டிச் சீட்டு, சரக்குந்துச் சீட்டு, காப்பகச் சான்றிதழ், சேர்ப்பாணை போன்றனவும் சரக் குரிமைப் பத்திரங்களாகும். இராம.சி.

**துணை நூல்கள்:**

**Kapoor,N.D.,** Elements of Mercantile Law, Sultan Chand and Sons, Delhi, 1985.

**Sinha,J.C., and Mugali, V N.,** A Text Book of Commerce,-R. Chand & Co , Delhi, 1980.

**துறைமுகம்:** நிலப்பரப்பையும், கடலையும் இணைக்கும் பாலமே துறைமுகமாகும். கடற் பரப்பை ஒட்டியுள்ள பல நாடுகளிலிருந்து பயணிகளையும், சரக்குகளையும் சுமந்து வரும் கப்பல்கள் துறை முகத்தை வந்தடையும். அதே போல, பல நாடுகளுக் குக் கடல் வழியாகச் செல்ல விரும்பும் பயணிகளும், சரக்குகளும் துறைமுகத்தை வந்தடைய வேண்டும். எனவே, பயணிகள் தங்குவதற்கும், சரக்குகளைப் பாதுகாக்கவும் தக்க வசதிகளைத் துறைமுகம் கொண்டி ருக்க வேண்டும். மேலும், மோசமான வானிலை காரணமாகக் கப்பலைக் கடலில் செலுத்த இயலா மற் போகலாம். துறைமுகத்தில் சரக்குகளை ஏற்றி இறக்கும் பணி பல நாள்களுக்குத் தொடர்ந்து நடை பெறலாம். இக் காரணங்களால் கப்பலைத் துறை முகத்தில் நங்கூரம் பாய்ச்சி நிறுத்தி வைக்க வேண்டிய அவசியம் ஏற்படலாம். சில சமயங்களில், பல கப்பல் கள் ஒரே துறைமுகத்தில் நிறுத்தி வைக்கப்படுவது முண்டு. இவ்வாறு கப்பல்களை நிறுத்தி வைக்கத் துறைமுக நிருவாகம் தேவையான வசதிகளைச் செய்து தரும். துறைமுகமொன்று செம்மையாகச் செயற்படக் கீழ்க் காணும் வசதிகளைக் கொண் டிருக்க வேண்டும்.

1. துறைமுகங்கள் பயணிப் போக்குவரத்துக்குப் பயன்படுவதோடு, ஏற்றுமதி இறக்குமதி வணிகத்தி லும் முனைந்து செயற்படுகின்றன. துறைமுகத்தைச் சார்ந்துள்ள நிலப்பரப்பு இவ்வகை வணிகத்திற்கு வாய்ப்பளிக்க வேண்டும். அதாவது துறைமுகத்தை அடுத்துள்ள நிலப்பரப்பு வேளாண்மைக் கேற்றவளத் தையும், எண்ணற்ற தொழிற் கூடங்கள் உருவாவதற் கான வாய்ப்பினையும், மிகப்பல மனித வளத்தை யும் கொண்டிருக்க வேண்டும்.

2. துறைமுகங்கள் கடற் பரப்பை ஒட்டியே அமை யும். எனவே, இத்துறைமுகங்களுக்குப் பயணிகளை யும் சரக்குகளையும் ஏற்றிவர அல்லது இத்துறை முகங்களிலிருந்து பயணிகளையும், சரக்குகளையும் பக்கத்திலுள்ள ஊர்களுக்கு ஏற்றிச் செல்ல மற்றப் போக்குவரத்துச் சாதனங்களையே நம்பியிருக்க வேண்டும். கடல வழிப் போக்கு வரத்துச் செம்மை யாகச் செயற்படத் துறைமுகத்தை ஒட்டி நிலவழிப்




துறைமுகம்

போக்குவரத்து, தொடர்வண்டிப் போக்குவரதது, உளநாட்டு நீாவழிப போக்குவரதது முதலியன வளாசசி பெற்றிருக்க வேணடும

3. கப்பலகளை நிறுத்துவதற்கேற்ற வசதிகளைத் துறைமுகம கொணடிருகக வேணடும. கபபலை நிறுத்தத் தகக ஆழத்தினையும், விரிந்த பரப்பினை யும்கொண்ட துறைமுகம்வசதியான துறைமுகமெனக் கருதப்படும். துறைமுகத்தையொட்டி மணல் சேருவ தால் ஆழம் குறைய வாய்ப்புணடு மணல் குவிவதைத தடுககத் துறைமுக நிருவாகம் மணலவாரிக் கப்பல் களைப் பயன்படுத்துவது வழக்கம்.

4 துறைமுகத்தை ஒட்டிய நிலபபரப்பு கடுமை யாக அமையுமேயானால் மணல அரிபபுக்கு வாயப் பிருககாது. மணல அரிப்பைக் கட்டுபபடுததுவதில் துறைமுக நிருவாகம மிக்க கவனம் எடுததுக் கொள ளும்

5. ஏற்றுமதிக்கான சரக்குகளையும இறக்குமதி யாகும் சரக்குகளையும், இடைப்பட்ட காலத்தில் முறையாகப் பாதுகாக்கத் தேவையான வசதிகளைத் துறைமுகம் கொணடிக்க வேண்டும.

6. கப்பலிலிருந்து சரக்குகளைச் சிரமமின்றி விரை வாக ஏற்றியிறக்கத்துறைமுக அமைப்பு, தேவையான சாதனங்களைக் கொண்டிருகக வேணடும்.

7. கப்பல்களை விரைவாகவும் செமமையாகவும் பழுது நீக்கித் தரத்துறைமுகம் தேவையான வசதி களுடன் கூடிய பணிமனையைக் கொணடிருகக வேண்டும்.

8. துறைமுகத்துக்கு வரும் நிலவழிச் சாதனங் களை நிறுத்திச் சரககுகளை ஏறறி இறககத தேவை யான இடவசதி துறைமுகத்தை ஒட்டி அமைய வேணடும

9 பயணிகளுக்கும ஊழியாகளுககும தேவையான வசதிகளையும, பாதுகாபபு வசதிகளையும செய்து தருவதில துறைமுக நிருவாகம முனைப்பாகச செயற பட வேணடும்

துறைமுக நிருவாக முறை நாட்டுக்கு நாடு வேறு படுகின்றது உலகெங்கிலுமுளள துறைமுகங்களின நிரு வாக முறையைப் பினவருமாறு ஐநது வகையாகப பகுக்கலாம்: 1) அரசு ஆளுகை, 2) தனனாட்சி முறை, 3) இருபபுப் பாதை நிருவாகம், 4) உளளாட்சிக கட்டுப்பாடு, 5. தனியாா நிருவாகம

இந்தியத் துறைமுகஙகள அனைத்தும் தனனாட்சி முறையில் செயறபடுகினறன. பம்பாய், கல்கத்தா, செனனை, விசாகப் பட்டினம, கொசசி, கானட்லா, மொாமுகா, புதிய மஙகளூர், ஆலடியா, பாராதீப்பு போன்றவை இநதியாவிலுளள பெரிய துறைமுகங் களாகும. இராம சி.

**துணை நூல்கள்:**

Jain,J K., Transport Economics, Chaitanya Publishing House, Allahabad, 1983.

Srivastava, S.K. Economics of Transport with Special reference to Transport Development in India, S, Chand & Co., Ramnagar, New Delhi, 1981.

***துறையூர் ஓடைகிழார்:*** இவர் பெயரால் துறையூரைச் சோநதவர் என்பதும வேளாண குலத்தி

னர் எனபதும் பெறப்படும. இப்பெயர்க்குத துறையூர் அரிசில கிழாா என்னும பாடவேறுபாடும ஏட்டில் காணபபடுகிறது. இவர் பாடியதாகப் புறநானூற்று 136-ஆம பாடல ஒனறே உள்ளது. கடையெழு வளளல களுள ஒருவனாய ஆய் அணடிரனைப் பறறி இப்புல வா பாடியுளளாா. இப்பாடல் பாடாண திணையில் பரிசில் கடாநிலை எனனும துறையில் அமைந்துள்ளது. 'என வறிய நிலையை யான உரைததேன்; நீ நினககு ஒததனை நாடி எனக்குப் பரிசில நலகுவாயாக' எனப் பாடியுள்ளார். இப்புலவர் துறையூரினராதலின ஆய் அணடிரனைத் 'தண்புனல் வாயில் துறையூா முன்றுறை நுண்பல மணலினும் வாழ்க' என வாழத்தி யுளளாா. தாம் மிகவும் வறியராதலின, தமக்கு ஈதலே சிறந்த ஈகை, பிறர்க்கு ஈவது பயனகருதிச் செய்வதாகும்; ஈகையாகாது எனனும் கருததில் இப் புலவர், 'எமக் கீவோா பிறாக்கீவோா; பிறர்க்கீவோா தமக்கீவா' என்று கூறியிருப்பது நயமாக உள்ளது. பல இழைகள் கொணடு தைக்கப் பெற்ற ஆடையின் புரை களைப் பற்றிக் கிடக்கும ஈரின திரளோடு தஙகிய பேன்பகையை ஒருபகை எனபேனா? உணணாமையின ஊன வாடிக் கணணீர் மலகி வருந்தும சுற்றத்தோடு பசியலைக்கும் பகையை ஒரு பகை எனபேனா? எங கள வறுமை நிலை யறியாது நும கைபபொருளைத் தா எனக்கூறி மரஞ செறிநத மலையில குரஙகு போலப் பறித்துக்கொள்ளும இயல்புடைய ஆறலை கள்வரின அலைக்கும் பகையை ஒரு பகை என பேனா? எனறு முப்பகையை ஆய்வள்ளலிடம் கூறும வாயிலாகத் தம வறுமையைச சித்திரித்துக் காட்டு வது இப்புலவரின புலமைத் திறனைப் புலப்படுத்தும.

இரா.சா.

**துறையூர் சிவப்பிரகாச சாமிகள்:** காணக: சிவப்பிரகாச அடிகள, துறைமஙகலம்.

**துன்பியல் வாதம்:** வாழ்வு, பலருக்கு ஒளி மயமானதாகத் தெரிகிறது; சிலருக்கு எதிலும் தவ றானவை, ஆபத்தானவை, விருமபத்தகாதவை போனறவற்றால வெறுப்பாகத் தெனபடுகிறது இதறகு முதற்காரணம் அவர்கள தம்முள துன பியல்வாதத்தை வளர்த்துக் கொண்டதே ஆகும சிறு வயது முதலே சாதனை புரிநதாலும கணடிப்பை உணர்ந்தே வளர்ந்தவர்களும் எப்பொருளிலும் இருட் டின பாதிப்பையே (Darker Side) கேட்டு, கண்டு வளர்ந்தவர்களும் இவ்வாறு துன்பியல்வாததால தொடர்நது அவதிப்படுவதுண்டு. தன்னம்பிக்கை இழந்து, எதிர்பாராதவகையில் வாழ்வில் வெற்றி களைவிடத் தோல்விகளை மிகுதியாக எதிர்கொண்டு தாழ்வு மனப்பானமை (Inferiority Complex) ஏற் படுவதால் துன்பியலவாதம் வளர வழி உணடாகும். ஒரு வீட்டில் குடும்பத்தலைவனோ தலைவியோ துனபியலவாதத்தால பாதிக்கப்பட்டிருககும்போது அது குடும்பத்து மறற உறுப்பினர்களையும பாதிக் கும. வீடடை விட்டுப் பையன வாகனத்தில் சென றால இபபடிப்பட்ட குடுமபத் தலைவி, பையனுக்கு விபதது ஏறபடும் என்றுதான் மிகுதியாக எணணு வாள். இவ்வாறாகத் துன்பியல்வாதம் எனபது தனது நிம்மதியையும் கெடுதது மறறவரது நிம்மதியையும் கெடுககும். துனபியலவாதத்தை விடுத்து இனபியல வாததனை வளர்த்துக்கொளள வேணடும். அப்போது தான சிக்கலகளும் எளிதாகத தோனறும. அதை எதிர்நோக்கும் பககுவமும வலிமையும ஏற்படும், வாழ்வும் வளமாகத் தோனறும் அதைவிடுத்துத துனபியல்வாதம ஒன்றையே கொணடிருந்தால நாள டைவில் வாழ்வில் வெறுப்புஏற்பட்டு எல்லாமே வெறு மையாகத் தெரியும. சிலர் துன்பியலவாத மிகுதி யால் தறகொலை செய்து கொள்ளவும் துணிவதுணடு வாழ்வைக் கசப்பாக நினைத்து அதை எதிாகொள ளும் திறமையின்றி வாழ்வே ஒரு மாயை என நினைப்பதும் தவறானதாகும். ஏனெனில, மன முதிர்சசியால் ஏறபடும் விவேகம, வேதாந்தம போன்றவை வாழ்வின் தததுவததை உணாநதவ னாக ஒருவனை மற்றவா கண்முன நிறுத்தும் அதை விடுத்து விரக்தியால ஏற்படும் விவேகம விப ரீத விளைவுகளைததான் ஏறபடுத்தும. சில சமயம் துன்பியல்வாதம எனபதே மிகுந்த மனசசோர்வு (Depression) எனற மனநோயின ஒரு அறிகுறியாக இருககலாம. தானாகத் துன்பியல்வாதத்திலிருந்து மீளமுடியாவிட்டால மனநல நிபுணரின அறிவுரைப படி மனத்தை இனபியலவாததனை நோககிச் செலுதத முறபடலாம.

ந.மா.

**துனீசியா,** வடககு ஆப்பிரிககாவில அலசீரி யாவிற்கு வடகிழக்கிலும், இலிபியாவிற்கு வடமேற் கிலும் அமைநதுள்ள குடியாட்சிப பகுதியாகும். வடக் கிலும் கிழககிலும் இந்நாடு மத்திய தரைககடலால சூழப்பட்டுளளது. பிரானசின் கட்டுப்பாட்டிலிருநத துனீசியா (Tunisa) 1956-இல விடுதலை பெற்றது.

இதன் பரப்பு 164,150 சதுர கி மீ. இந்நாட்டின பெரும்பகுதி மலைப்பாஙகானது. தெனபகுதி எவ் விதமான விளைச்சலுமில்லாத பாலைவனப் பாங கானது வடக்கிலுள்ள பளளத்தாக்குப் பகுதிகள விளைநிலங்களைக் கொணடுளளன மெட்சர்டா என்னும் ஆறு நைசீரியாவில் தோனறித் துனீசியா வழியாக ஓடித துனீசு குடாவில் கலக்கின்றது தானி யங்கள், ஆரஞ்சு, அத்தி, திராட்சை, பேரீச்சை, ஆலிவ ஆகியன இங்குப் பெருமளவில பயிராகின்றன. வேளாணமையுடன இப்பகுதி மக்கள கம்பளி, சமுக்காள நெசவு, மீன்பிடித்தல, தோல் பொருளகள செய்தல, பானைகள மற்றும் வெணகலப் பாத்திரங




துனீசியா அமைவிடம்

களை உறபததி செய்தல் ஆகிய தொழிலகளிலும் ஈடுபட்டுள்ளனர். தகரம, ஈயம், இரும்பு, மங்கனீம் ஆகிய உலோகஙகள் இஙகு நிறையககிடைக்கின்றன.

துனீசு அதன் தலைநகரமாகும். சுபாகசு பிசெர்ட்டா, மறறும சுசா முதலியன முககிய துறை முகப் பட்டினஙகளாகும். உள்நாட்டில கைாவான எனனும் முககியபட்டினம முகமதியர்களுக்கோர் புனித தலமாகும்.

துனீசியாவின முககிய மககளினததவர் அராபிய முகமதியராவர். யூதர்கள, இத்தாலியர் மற்றும பிரெஞ்சுக்காரர்கள் குறைந்த அளவில் வாழகினற னர். மலைபபகுதிகளில் வாழும் காபிலெசு இனத்த வாகள அந்நாட்டுப் பழஙகுடியினா. அவாகள வேளாணமையிலும ஆடு மாடு மேயப்பதிலும் ஈடுபட் டுளளனா. பழஙகுடியினருள் பெருமபானமையினா நாடோடி வாழ்க்கையையே மேற்கொணடுளளனர்.

துனீசியா, வரலாறறுப் பின்னணியுடைய ஒரு நாடாகும. தொடக்கக் காலததில எகிப்தின கட்டுப் பாட்டிலிருநத துனீசியா பினபு பொனீசியர் வசமா யிற்று. அவாகள கி மு. 7-ஆம் நூற்றாணடளவில் இனறைய துனீசுககு அருகில் கார்த்தேசு என்ற சிறப்பு மிகக வரலாற்றுப் புகழுடைய நகரினைத் தோற்று வித்தனர். அநநகரம் கி.மு. 146-இல உரோமானிய ரால வீழத்தப்பட்டது. அதனபினனர்த் துனீசியா உரோமானியரின கட்டுக்குள வந்தது. இன்றும உரோமானியச் சின்னஙகள பலவற்றைத் துனீசியாவில்



துனீசு நகரம்

காணலாம். துனீசியா கி.பி. 7-ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் அராபியர் வசமானது. பின் கி.பி. 1575-இல் துருக்கியக் கட்டுப்பாட்டில் வந்தது. தன்னாட்சி உரிமையுடைய பகுதியாக கி.பி. 1705 முதல் விளங்கியபோதிலும் கி.பி. 1881-இல் பிரெஞ்சுக் கட்டுப்பாட்டில் வந்தது. பிரான்சின் காப்புரிமையின் கீழ் 1942 வரை இருந்தது. பின்னர் 1942-இல் செருமனியினால் கைப்பற்றப்பட்டு, 1943-ஆம்ஆண்டு மே மாதம் இது நேச நாடுகளால் மீட்கப்பட்டது. இரண்டாம் உலகப்போருக்குப் பின் 1945 முதல 1956 வரை பிரான்சு நாடு, துனீசியாவின் காப்பரசாகச் செயற்பட்டது. பின்பு இது விடுதலையடைந்து மக்களாட்சி அரசினைப் பெற்றது. இதன் மக்கள் தொகை 6,966,173 (1984 மார்ச்சு) இதில் 3,547,487 பேர்கள் ஆடவர்; 3,419,026 பேர்கள் பெணடிா.

மா.கா.

**தூ** நாக்கு மேலண்ணத்தை (நுனியை) மெதுவாக அழுத்தி ஒலிக்கும் ஒலியோடு வாயைக் குவித்து நீட்டி ஒலிக்கும்போது வெளிப்படும் ஒலியாகும். தகர ஊகாரங்களுக்குரிய குறிப்பைப் பார்க்க.

**பொருள்:** தூய்மை, வெண்மை, வன்மை, பறவைக்கோடு, பகை, தசை, பறவையின் இறகு முதலிய பொருள்களைக் கொடுக்கும்; இகழ்ச்சிக் குறிப்பாகவும் பயன்படும். .. .. ...

**வடிவம்** கல்வெட்டில் இவ்வெழுத்தின் பயன்பாடு மிகக் குறைவு.

குகையெழுத்துக்களில் இதன் வடிவம் பயன்படுத்தப்படவில்லை எனினும், இது போன்ற எழுத்துக்கு 'து' வினுடைய உருவத்தோடு மற்றொரு கோடு இட்டிருப்பார்கள். . ... ...

அதன்பிறகு தகரத்தின் வளர்ச்சியை ஒட்டி ஊ என்ற உயிரை அதனொடு சேர்க்கும் முறையிலும் மாறுதல் காணப்படுகின்றது. . .

செந்தலை முத்தரையரின் கி.பி 9-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டில் காணப்படும் ஓர் உருவம் வேறு எங்கும் காணப்படவில்லை ... .

**வட்டெழுத்தில்** துகாரத்திற்கு உரிய உருவத்தோடு ஒரு கோடு வரையப்பட்டது துகரக் குறிப்பைப் பார்க்க முடிவில் நீட்டப்பட்ட கோடே தூ என்பதன் நெடிய ஊகாரத்தைக் குறிக்கும். . .. ...

கே.ஜி.கி.

**தூங்கலோரியார்:** அகநானூறு 227-இல் நக்கீரனார், 'வருநர் வரையாப் பெருநாளிருக்கைத் தூங்கல் பாடிய ஓங்குபெரு நல்லிசைப், பிடிமிதி வழுதுணைப் பெரும்பெயர்த் தழும்பன, கடிமதில் வரைப்பின் ஊணூர்' என்று பாடிய பகுதி கொண்டு இப்புலவர் தூங்கல் எனச் சுருக்கமாகக் குறிக்கப்பட்டார் என்றும், இவர் தழும்பனைச் சிறப்பித்துப் பாடியுள்ளார் என்றும், அவனது ஊர் ஊணூர் என்றும் உ.வே.சா. முதலியோர் உரைப்பர். ஆனால் அப்பாடல் கிடைத்திலது. இவர் பாடியனவாக நற்றிணையில் ஒன்றும் (60) குறுந்தொகையில் இரண்டும் (151, 295) ஆக மூன்று பாடல்கள் கிடைத்துள்ளன

விடியற்காலையில் வரால்மீன் துண்டத்தோடு அரிசிச் சோற்றை நிறைய உண்டு நாற்று நடும் மகளிரொடு உழவன் வயலுக்குச் செல்வதையும், பெண்டிர் கோரையை வளையமாக அணிதலையும், நெய்தல்நத் தழையை உடையாக அணிவதையும் நற்றிணை (60) சுட்டும். வங்காப் பறவையைப் பிரிந்த பெடை வல்லூறு தாக்கியதால் மாய்ந்த அதனைக் காணாது குழலிசை போன்ற தன் குரலால் பன்முறை அழைத்து வருந்துதற்குரிய குன்றுகெழு சிறுநெறி என்று பாலை வழி சிறப்பிக்கப்பெறுகிறது (குறு.151) தலைவனது பரத்தைமை வாழ்க்கையை 'உடுத்தும் தொடுத்தும் பூண்டும் செரீஇயும், தழையொடு பொலிந்த ஆய

மொடு துவன்றி விழவொடு வருதி' என்னும் அடிக ளால் சிறப்பித்துள்ளார். ஒரு பசுவைக் கொண்டு வாழ்க்கை நடத்துதல வறியதாகும் என்பதை 'ஓரான் வல்சிச் சீரில் வாழ்க்கை' என்று குறிப் பிட்டுத் தலைவனின அத்தகு வறிய வாழக்கை தலைவி வந்ததும் விழாவாயிற்று எனறு பானை பிடித்தவள் பேறு பெற்றவள ஆயினமையைக் காட்டு வர் (குறுந்.295). இரா.சா.

**தூங்கானை மாடம்:** இது ஒருவகைக் கட்டட அமைப்பாகும். தொனறுதொட்டு இநதியா வெங்கும் கட்டப்பட்ட கட்டடங்களின் தரை அமைப்பு பெரும்பாலும் சதுரமாகவோ, நீணட சதுர மாகவோ, வட்ட வடிவமாகவோ உளளது. சில கட்டடங்கள படத்தில் உளளதுபோல ஒரு நீண்ட சதுரததில், ஒரு பககத்தில் ஓா அரைவட்டம் இணைநததாயும் மறுபுறம் நுழைவாயில் கொணட தாயும் அமைக்கப்பட்டன. கி.மு. 200 முதல பாசா (Baja), நாசிககு (Nasik), கார்லே, கனனேரி ஆகிய இடங்களில் மலைகளில் குடையப் பட்டனவும்,ஆந்தி ராவில் பெரும் செஙகற்களால கட்டப்பட்டனவுமான புத்த சைததியஙகள் படத்தில் காட்டப்பட்டுளளது போன்ற தரை அமைப்பைக் கொண்டவை. இவற றின கூரை ஒரு வணடிக்கூடு போல அமைககப்படும். இத்தகைய கட்டுமானக கட்டடஙகளின பின்புறம் நிற்கும ஒரு யானையின் பின்புறத்தைப் போல இருப பதால இவற்றை வடமொழியில் 'அத்தி பிருட்டம் அல்லது 'கயப பிருட்டம்' (யானையின் பினபக்கம்) என்றும், தமிழில 'தூஙகானை மாடம்' என்றும் கூறு வர். இத்தகைய வடிவக கட்டடஙகள கி.மு. 200 முதல் இந்தியாவெங்கும நிலவின எனச் சிறபச் சான் றுகள் மூலம் அறியலாம். இதனை வடநாட்டில் பாரூத்து, சாஞ்சி தூபிகளைச் சுற்றியுள்ள கல் வேலி களில் செதுக்கப்பட்ட புடைப்புச சிற்பங்கள் மூலமாக வும், ஆநதிரத்தில் அமராவதி,நாகார்ச்சுனகொணடா


தூங்கானை மாடம்

தூபிகளின புடைப்புச் சிற்பஙகளின் மூலமாகவும் அறியலாம்.

ஆநதிரத்தில இத்தகைய தூங்கானை மாடங களைப் பௌத்த சமயத்தார் மட்டுமன்றி இந்துக் களும கட்டினர். எடுத்துக்காட்டாக கி.பி. 3–4–ஆம் நூற்றாண்டுகளில் ஆந்திரத்தில் ஆட்சிபுரிந்த இட்சு வாகு மரபினா நாகார்ச்சுனகொண்டாவிலும் அத னைச் சுறறிப் பல இடஙகளிலும் சிவபெருமானுக் கும் திருமாலுககும் கநதப் பெருமானுக்கும் தூங் கானை மாடக் கோயில்களை எழுப்பினர். இவை தவிர ஆநதிரத்திலுளள செசொலா (கிருட்டிணா மாவட்டம்)விலும், கருநாடகத்திலுள்ள தேோ என் னும் ஊரிலும் கி பி. 4-ஆம நூற்றாணடில கட்டப் பட்ட தூஙகானை வடிவப்பௌதத சைத்தியங்கள பிறகாலத்தில் இநது கோயிலகளாக மாற்றப்பட் டன. செசொலா சைத்தியம கபோதேசுவரர் (சிவன) கோயிலாகவும், தேர் சைத்தியம் திரிவிககிரமா (திரு மால்) கோயிலாகவும மாறின.

மேலைச சாளுககியர் கி பி. 5-ஆம நூற்றாணடில அயகொளே எனனுமிடத்தில கட்டிய துர்ககைக் கோயில் தூஙகானை மாட வடிவான கட்டுமானக் கோயில இதன கூரை வணடிக்கூடு போலனறி தட்டையாயுளது.அதனமீது வட இநதியப் பாணி யிலான ஒரு சிகரம் அமைககப்பட்டுளளது. இக் கூரை பிறகாலத்தில் கட்டப்பட்டிருகக வேண்டும். இக் கூரை இதன் உடற்பகுதியின் தனமையோடு ஒத்துவராததால் கணணுககு இனியதாக இல்லை.

பல்லவர்கள கி.பி. 7-ஆம் நூற்றாணடில் மாமல்ல புரத்தில் வெட்டுவிதத ஒற்றைக் கல் கோயிலகளுள 'பாணடவா இரதஙகள' எனப்படும ஐநது கோயில் கள புகழமிக்கன. அவற்றுள நானகு ஒரே வரிசை யிலும், சகாதேவ ரதம் எனப்படும் ஒனறுமட்டும் சற்றுத் தனித்து நிறபதையும் காணலாம.இது தமிழ கத்தில் தூங்கானை மாடத்திறகு ஒரு சிறந்த எடுத் துக்காட்டாகும் அஙகொளே துர்க்கைக் கோயிலைப் போலனறி இதன கூரையும தூங்கானை வடிவிலேயே அமைக்கப்பட்டுளளமையால இது மிக அழகாகவும கண்ணுக்கினிமையாகவும் உளளது. இச் சகாதேவ இரதம் தூஙகானை வடிவாலானது என அறிவுறுத்து வதற்கெனவேதான போலும இதனருகேயுள்ள பாறையில நிற்கும் வடிவில் ஒரு யானை செதுக்கப் பட்டிருக்கிறது.

சோழா காலக் கட்டுமானக் கோயில்களுள் நங்க வரம் (திருச்சி மாவட்டம்) சுந்தரேசுவரர் கோயிலி னுள அமைந்த பிள்ளையார் கோயில் தூங்கானை மாட வடிவமைந்தது. இவவாறே அவர்கள் சோழ



சகாதேவ ரதம்

மங்கலம, மணிமங்கலம் ஆகிய இடங்களிலும் இவவடிவக் கோயிலகளைக கட்டினா.

பாண்டிய நாட்டில் மட்டும இததகைய தூஙகானை மாடஙகள காணபபடவிலலை மதுரை அருகிலுள்ள அழகாகோயில கருவறை முழு வட்ட வடிவில உளளபடியால் இதனைத் தூஙகானை மாடம் எனப தறகில்லை. இரா.வே.

**தூங்கெயிலெறிந்த தொடித்தோட் செம்பியன்:** இம் மனனனைப் பறறிய கற்பனையான தொரு வரலாறறுச் செய்தி காணபபெறுகினறது. முன்னொரு காலததில் ஓா அசுரன்வானததில் இயஙகுதலும் விதலும உடைய மூனறு மதிலகளமைநத அரணைத் தெய்வத்திடம் வரமாகப் பெற்றான. அவன் அவ்வரணகத்தே உறைநது தான நினைத்த இடத்திறகு வான வழிச் சென்று அநதணர், அறவோா முதலிய நனமக்களைப் பெரிதும் துனபுறுததி வநதான. இச்சோழ மன்னன அசுரர்களை எதிர்த்து, வெனறு, அவர்களுடைய எயிலையும அழித்து, மணணுலகிற்கு ஏற்பட்ட துன்பஙகளைக் களைநதான. அதனால், இம்மன்னன் ‘தூங்கெயில் எறிந்த தொடித தோட் செம்பியன’ எனககுறிக்கப் பெற்றான எனப தாக வழஙகப்பெறுகினறது. புறநானூறு 39-ஆம்பாடலில் மாறோககத்து நப்பசலையார் அசுரர்க்குப்பகைவராகிய தேவர்கள் தீணடுதற்கு அஞ்சும், அணுகுதறகு அரிய, மிக்க வலிமையுடைய ஆகாயத்துத் தூங்கெயிலை அழித்த மனனனைக் குறிப்பிடுகின்றார். சிலப்பதிகாரம் வாழ்ததுக காதையில் இம்மனனன சுட்டபபெறுகினறான மணிமேகலையில இநதிர விழாவின வரலாறு கூறப்படுமபோது அகததிய முனிவா பணிபபத் தூஙகெயில எறிநத, வீரவளைகளணிந்த மன்னன ஒருவன விணணவா தலைவனை வணஙகி, அவன் முனனிலையில நின்று, நிலவுலகில அமைநத தன தலைநகரில் தாஙகள அவனுககு மேற்கொணட திருவிழாவில இருபத்தெட்டு நாளகளிலும இனிது வீற்றிருததல வேணடும என வேணடிய தாகக் கூறப்படுகிறது (1·4–8). தொலகாபபியம களவியல் பதினொனறாம சூத்திரத்திற்கு உரையெழுதும நசசினாாககினியா சுட்டும மேறகோள பாடலிலும் இவன சுட்டப்பெறுகிறான கலிஙகததுப பரணியிலும (இராச 17) இமமனனனைப பறறிய குறிப்பு உள்ளது சோழமனனாகளின பரமபரையை விளக்கும இடஙகளில கூடாதாா தூஙகெயில எறிந்த சோழன என விககிரம சோழன் உலாவும (17–18). தூஙகெயில கொணட சுடா வாளோன எனக குலோத்துங்கச சோழன உலாவும (26), வாஙகுந் திருக்கொறற வாளொனறி வாய வாயபபத் தூஙகு புரிசை துணிததகோன் என இராசராச சோழன உலாவும(25-26)இமமனனனைக குறிககினறன. இவன வரலாறறுக் காலததிற்கு முறபட்ட சோழன ஆகலாம தா ஈ.

**தூசிடைடிசு:** இவர் ஒரு கிரேகக வரலாற்று ஆசிரியா (ஏறக்குறைய கி.மு 460–400). கிரேக்க நாட்டிலுள்ள ஏதனசு நகரைச சாாநதவா. இவரது பிறநதநாளைச் சரியாகக கணககிட்டுக கூற இயலாதெனினும கி மு.460-ஆம ஆணடிறகுப பிறகு இவா பிறநதிருகக இயலாது எனறு உறுதியாகக் கூறலாம. இவரது தநதையின பெயர் ஓலோரசு (Olorus). தாய வழியில ஒலோரசு திரேசியராகக (Thrace) கருதபபடுகிறார். மிலடியாடிசு (Milteades) எனற அதீனியருககு இவர் உறவினராவாா. மிலடியாடிச், திரேசிய அரசக் குடுமபததைச் சாாநத பெண் ஒருவரை மணநதிரு; தாா எனபது ஈணடுக் குறிபபிடத்தககது. திரேசில தூசிடைடிசு (Thucydides) வினுடைய தநதை சொததுக்களை வைத்திருந்தாா. தேசாசுத் (Thasos) தீவிற்கு எதிரில அமைநதிருநத தஙகச சுரஙகஙகளில இவருக்கு உரிமைகள இருநதன இவர் நலல செலவாககும் பெறறிருநதாா.

தூசிடைடிசு கி மு.430-29-ஆம ஆணடுகளில ஏதனசில் இருநதார். அதுசமயம கொளளை நோயினால் ஏதனசு பீடிககப்பட்டிருந்தது மக்கள பட்ட இனனல்களை இவா நேரடியாகக் கண்டாா; தாமே அநநோய்க்கு இரையாகி மிகவும் வேதனைப்பட்டாா. இவர் கி.மு. 424-இல இசுட்ராடகாசு (Strategos) பதவியைப் பெற்றார். தேசாசுவைததளமாகக கொணட

திரேசுப் பகுதியின் கப்பற் படைக்குத் தலைவராக நியமிக்கப்பட்டாா. இசுபார்ட்டாவின் (Sparta) படைத்தலைவரான பிராசிடாசு (Brasıdas), ஆம்பி பாலிசுவைக் (Amphıpolıs) கைப்பற்றுவதைத தடுககத் தவறியதால் இவர் திருப்பி அழைத்துக் கொள்ளப் பட்டார்; பினனர் விசாரணைககு உட்படுத்தபபட்டு இருபது ஆணடுகளுககு நாடு கடததப்பட்டார். தமது வரலாறறு நூலுக்குத் தேவையான செய்தி களைத் தடையினறிக கறறுணரவும், பல நாடுகளில் சுற்றுப்பயணம் மேறகொள்ளவும் தமது தொடர்பு களைப் பரவலாக்கவும் அது உதவியது. அப்போது நடைபெற்றுவநத பெலப்பனீசியப் போர் முடியும வரை இவர் நாட்டின வெளியே வாழந்துவநதார். இவரது தணடனைக காலம முடியும்போது ஏதன்சு வீழ்சசியுறறது. கி.மு 404-இல் சமாதானம் கையொபபமாயிற்று. அதைத் தொடர்ந்து ஏதன்சில் குழப்பநிலை உருவாகியது அதுபோது ஏறபட்ட வனமுறையின காரணமாக இவர் இறந்தார். இவரது கலலறையும இவரது நினைவாகத் தோற்றுவிக்கப் பட்ட கட்டடமும் ஏதனசில கி பி.2–ஆம நூற் றாணடில் கணடுபிடிக்கப்பட்டன.

'பெலப்பனீசியப் போரின வரலாறு' என்ற தலைப்பில தூசிடைடீசு வரலாற்று நூல ஒன்றை ஆக்கியுள்ளார். இதை எழுதுவதறகுமுன அரசு அதி காரம் மற்றும் அரசுக் கொளகைகளை உருவாககு வதற்குக் கையாளப்பெறும வழிகள் ஆகியவற்றை மிகப் பெரியஅளவில ஆய்ந்துளளார். ஏதன்சுககும், இசுபார்ட்டாவிறகும இடையே நடைபெற்ற போரைப் பற்றிய இராணுவ, அரசியல் மற்றும் உளப் பாஙகு ஆகியவை பற்றிய விளக்கங்கள இதில இடம் பெற்றுள்ளன. இப் போரினால ஏற்பட்ட ஒழுக்கக் கேடுகள் பற்றியும கூறியுளளார். போர் பறறிய முழு மையான வரலாறறை இநநூல் அளிககவில்லை எனற றிதல வேணடும். இலையுதிர் காலத்தில் கி.மு. 411–ஆம் ஆணடில் நடைபெற்ற போா நிகழசசிகளோடு பாதியிலேயே வரலாறு நிறுத்தப்பட்டுளளது. இவர் எஙகு நிறுத்திவிட்டாரோ அஙகிருந்து போா வர லாற்றைச் செனபன, கிராடிப்பசு (Cratıppus), தியோ பாம்பசு (Theopompus) ஆகிய ஆசிரியாகள் தஙக ளுடைய வரலாற்று நூல்களில் தொடஙகியுளளனா. இந்நூல பல படிநிலைகளில் எழுதப்படடது. முத லில் நிகழ்சசிகள் நடைபெறும்போது அவற்றைக் குறிப்பெடுத்துக கொணடார். பினனர் அவற்றை வரிசைப்படுததித் திருபபி எழுதினார். அதன்பினனர் அவற்றைக்கொணடு விரிவான முறையில் செய்தி களைக கூறினார். இநநூல எட்டுப் பகுதிகளாக வெளியிடபபட்டது.

தூசிடைடிசு அரசியல் காரணங்களுக்கு முதன்மை இடம அளித்துள்ளார். இப்போரை இரண்டு மாறுபட்ட குணங்களுக்கிடையே ஏற்பட்ட போராட்டமாகச் சித்திரித்துள்ளார். புரட்சிகரமான நோக்கும், சுறுசுறுப்பான இயல்பும் கொண்ட அதீனி யர்களுக்கும், மெதுவாகவும் மிக எச்சரிக்கையுடனும நடநதுவந்த இசுபார்ட்டா மக்களுக்கும் இடையே இப்போர் நடைபெற்றது என்பதைக் காட்டியுள்ளார். தனிபபட்டவர்களைப் பற்றி எழுதாமல் போர் நட வடிககைகள், மக்கள் படும் இன்னல்கள், நாடுகளின் பண்பியல்புகள் ஆகியவற்றைப் பற்றிக் கூறியுள்ளார். தனி மனிதர்களுடைய ஆற்றலின சிறப்பை இவர் உணரவில்லை என்பது ஒரு குறை. போர்த் துறைக் குரிய சிறப்புக் கூறுகளில் இவர் மிக்க கவனம் செலுத்தியுளளார்; முற்றுகைப் போர் பற்றிய தொழில நுணுக்கஙகளைக் கூர்நது படித்துள்ளார்; கப்பற்படை வலிமையின தேவையையும் கடல் வாணிகத்தின் வளாசசியையும் வலியுறுத்தியுள்ளார்; சொல்லவநத செய்திகளைச் சுருக்கமாகவும், நேரடி யாகவும் கூறியுளளார். படிப்பதற்காக எழுதப்பட்ட தாக இது உள்ளது; வாயவழியாகச் சொல்வதற் கேறறவாறு இது அமைந்திருக்கவில்லை. செய்தி களை நடுநிலைமையோடு கூறியுளளார். சில இடங் களில இவர் தெளிவுபட நிகழ்சசிகளைக் கூறவில்லை. பேச்சுகள் வாயிலாகச் செய்திகளை விளக்கும முறையை இவர் பயன்படுத்தியுள்ளார். ஆனால் பேச்சுகளில் காணப்பெறும் சொற்கள் இவருடைய தாக உளளன.ஆயினும் இவர் பேசியவர்களுடைய உட் கருத்து மாறாதிருக்கும்படி பார்த்துக்கொண்டார்; அப் பேச்சுகளின் வாயிலாக அக்காலத்தில் வாழ்ந்த பெருந்தலைவர்கள் மற்றும் நாடுகள் ஆகியவற்றின் நோக்கஙகளை, ஆசைகளை விளககினார். கதை கூறுவதை இவர் தவிர்த்தாா. ஆகவேதான் இவரது வரலாறு கவர்ச்சியாக அமையவில்லை. கால வரி சைககுச் சிறப்பான இடமளித்துள்ளார். தமது நூற் பொருள பற்றிய செய்திகள தவிர ஏனையவறறைக் கூற முறபடவில்லை. உணமைக்கு உயர்ந்த இடமளித துள்ளார். தாம் கணடவற்றை அப்படியே கூறியுள் ளாா. பகைவர் என்ற காரணத்தால் அவர்களிடம் வெறுப்புடன் நடக்கவிலலை. விவரங்கள் சரியாகவும ஒழுஙகாகவும் கூறப்பட்டுளளன. தாம் தலைமை தாஙகி நடததியதற்காகப்போர் ஏற்பாட்டின் சிறப்பு களை மிகைப்படுத்திக் கூறவில்லை. தாம் தோற்று விட்டார் என்பதற்காக நொண்டிச் சாக்குகள் கூறித் தம்மைக் காப்பாற்றிக்கொள்ள முனையவில்லை. இவ ரது நூலில் காணப்பெறும் ஒரு பெருங்குறை, சமுதாய வரலாற்றைப் பற்றிய விவரங்கள இன்மையேயாகும். மற்றொரு குறை, வரலாற்றில் புவியியல் பற்றிய கூறுகளின மேன்மையை உணராமையாகும்.

தி.அர.இரா.

**தூசிமா:** சப்பான் கடலையும கிழக்குச் சீனக் கடலையும் இணைக்கின்ற நீரிணைப்பும், சப்பான கொரியா நாடுகளைப் பிரிக்கும இந்நீரிணைப்பில அமைந்துள்ள தீவுக்கூட்டங்களும், 'தூசிமா' (Tsushima) என்ற பெயர் பெற்றுள்ளன. சப்பானிய புராணக் கதைகளின படி இறைவனால முதன்முதலில் படைக்கப்பட்ட சப்பான் தீவுகளுள தூசிமாவும் ஒன்றாகும். சப்பானிய நாட்டு வரலாற்றிலும், கொரியா வரலாற்றிலும் தூசிமா சிறந்த பங்கு வகித்தது. சப்பானிய, கொரிய கடற்கொள்ளையாகள் இதனைப் பலமுறை தாக்கியுள்ளனர். மங்கோலியர்கள கி பி 13-ஆம நூற்றாண்டில் சப்பானைத் தாக்கியபொழுது தூசிமா மக்கள படுகொலை செய்யப்பட்டனா 19-ஆம நூற்றாண்டு வரை 'உலோ' எனப்பட்ட வமிசத்தின கீழ நிலமானியம் செலுத்தும் தகுதி பெற்று விளங்கியது தூசிமா. இதே நூற்றாண்டில் இவ்விடத்தில் சலுகைகள் பல பெறுவதற்கு உருசியா முயன்று தோல்வியடைந்தது.

**புதிய காலத்தில் தூசிமா நீரிணைப்பின் சிறப்பு:** இக்காலச்சப்பானிய வரலாற்றில் தூசிமா நீரிணைப்பு மிகச் சிறப்புப் பெற்ற இடமாகும். உருசிய சப்பானியப்போரில் 1905-இல ஐரோப்பிய வல்லரசான உருசியாவை, சிறிய ஆசிய நாடாகிய சப்பான தூசிமாக் கடற்போரில் பெருந்தோல்வியடையச் செய்தது. இப்போா தொடங்கியதுமே கிழக்குச் சீனக்கடலில் ஆர்தா துறைமுகத்தில அமைக்கப்பட்டிருந்த மிகப் பெரிய உருசிய இராணுவத் தளத்தைப பத்தே மாத முற்றுகையால் பணிய வைத்தாா சப்பானியக் கப்பற்படைத் தளபதி தோகோ (Togo). சிறந்முறற உருசியா 35 போாக் கப்பல்கள் கொண்ட தன் மாபெரும் பால்டிக்குக் கப்பற்படையை அங்கு அனுப்பியது அப்படை ஐரோப்பா, ஆப்பிரிக்கா ஆசியா ஆகிய முப்பெருங் கண்டங்களையும் வலமவர வேண்டியிருந்ததால மிகவும பாழ்பட்ட நிலையில் தூசிமா நீரிணைப்பிற்குள நுழைந்தது அங்குத் தயாராகக் காத்துக் கொண்டிருந்த சப்பானியத் தளபதி தோகோ உருசியக் கப்பற்படையை வெகு எளிதாக அழித்தார். 33 உருசியப் போர்க்கப்பல்கள அழிக்கப்பட்டன. இதுவே உருசிய சப்பானியப் போரை முடிவுக்குக் கொணடு வந்த குறிப்பிடத்தக்க நிகழச்சியாகும.

முதலாம் நெப்போலியனது பிரெஞ்சுக் கப்பற்படையை ஆங்கிலேய தளபதி நெல்சன தோற்கடித்துப் புகழ்பெற்ற திரபால்கர் (Trafalgar) கடற்போருக்குப்பின் இத்தகைய கடற்போர் ஏற்பட்டதில்லை எனக் கூறுகின்றனர். மேலும தளபதி தோகோ கையாண்ட உத்திகளைப் பிற்காலத்தில் ஆங்கிலேய பிரெஞ்சுக் கப்பற்படைத் தளபதிகளும பின்பற்றலாயினா தூசிமாப் போருக்குப்பின ஆசிய நாடாகிய சப்பானை ஐரோப்பிய நாடுகளை ஒத்த நிலையான தகுதிபெற்ற ஒரு நாடாக நோக்கலாயின கி.பி.

**தூண்.** கட்டடங்களின முக்கியமான உறுப்பு தூண தூண்கள கட்டடங்களைத் தாங்கி நிற்கின்றன. பழங்காலம தொட்டு மரங்களால ஆக்கப்பட்ட தூண்கள இன்று வரை பயன்பாட்டிலுள்ளன முதலில மரங்களால தூண்கள செய்யப்பட்டன. பிற காலத்தில இத்தூண்கள கற்களால எடுக்கப்பட்டன

தொல்பழங்காலத்தில வீடுகளைத் தாங்கிநிற்க மரத்தூண்கள பயன்படுத்தப்பட்டன என்பது அகழாய்விலிருந்து கண்டறியப்பட்டுள்ளது பிறகாலத்தில குடைவரைகளிலும் தூண்கள் செதுக்கப்பட்டுள்ளன. இத்தூண்கள் இந்தியாவில பெரும்பாலான பகுதிகளில கிடைக்கின்றன. வடஇந்தியாவில அசோகன காலத்தில எடுக்கப்பட்ட தூண்கள வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தவை குடவரைகளில மட்டுமன்றித்தனியாகவும தூண்கள் எடுக்கப்பட்டுள்ளன. அசோகன காலத்தில எடுக்கப்பட்ட இத்தகைய தூண்களின மேல்பகுதியில புத்தசின்னங்கள இருக்கின்றன. இத்தூண்களில கல்வெட்டுக்களும் வெட்டப்பட்டுள்ளன. தூண கல்வெட்டுகள இன்றும வரலாற்றை அறிய உதவுகின்றன. இத்தூண்களில கிரேக்க நாட்டுத் தூண்களின சாயல்கள காணப்படுகின்றன. இதனுடன பாரசீகா, அசிரியா (Assyria) ஆகிய நாடுகளின் கலை நுணுக்கங்களும சோ்ந்துள்ளன.



தூணில் கசலட்சுமி-பாரூத்து

பாருத்து (Bharut) என்ற இடத்தில் உள்ள தூண்கள சதுரமாகவும், எண்பட்டை வடிவிலும் செதுக்கப்பட்டுள்ளன. இவற்றின இடைப் பகுதியில் பூவேலைப்பாடுகள் காணப்படுகின்றன. கார்லிக்குகைக (Karli) கோயிலில 15தூண்கள் வரிசையாகஅமைக்கப்பட்டுள்ளன. இவை எண்பட்டை வடிவில் செதுக்கப்பட்டுள்ளன. அசந்தாவிலுள்ள தூண்கள் பெரிய அளவின வாகவும் நுணுக்கமான வேலைப்பாடுகளுடனும் காணப்படுகின்றன. மற்றொரு தூணின அடிப்பகுதி சதுரமாகவும் அதற்கு மேல் எண்பட்டையாகவும், அதைத் தொடர்ந்து உருணடையாகவும அமைந்திருக்க, அதில் புல்லாங்குழல் போன்ற அமைப்புடைய வேலைப்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. அதற்கு மேல் பலகை, போதிகை போன்ற அமைப்புகள காணப்படுகின்றன.



கார்லிக்குகை நுழைவாயில்

பல்லவர் காலத்தில் எடுக்கப்பட்ட குகைக் கோயில் தூணகள மிகுந்த வேலைப்பாடுகள்இன்றிக் காணப்படுகின்றன. இவை மண்டபங்களைத் தாங்கி நிறக மட்டும் பயன்படுத்தப்பட்டதுடன் குறைந்த பூவேலைப்பாடுகள் செதுக்கப்பட்டுள்ளன. சோழர் காலத்தில் இத்தூண்களில் பேரளவில் பூவேலைப்பாடுகள் நிரம்பவும் செய்யப்பட்டன. அவற்றில் சிறிய புடைப்புச் சிற்பங்களும் அணிசெய்யும வேலைப்பாடுகளும் நிறைய உள்ளன. விசயநகர நாயக்கர் காலங்களில் இந்தத் தூணகள பெரியனவாக மாற்றப்பட்டடன. இத்தூணகளில் வீரன் சண்டை செய்வது, குதிரையில் செல்வது போனறவைகளும் செதுக்கப்பட்டுள்ளன.

தூணில் கீழ்க்காணும் பகுதிகள உள்ளன போதிகை, பலகை, இதழ், குடம், தாடி, கலசம், பத்மபந்தம், கால் போன்றவை ஒன்றின் கீழ் ஒன்றாக அமைந்துள்ளன. இவை ஒரே கல்லாலும் எடுக்கப்படும். போதிகை எனப்படுகின்ற தூணின தலைப்பாகம் சாதாரண அமைப்புடையது. பலலவர்கள் அமைத்த போதிகை 'சாதா போதிகை' என்று கூறப்படுகின்றது. முற்காலச் சோழர் காலத்தில் போதிகையில் சில மாறுதல்கள் காட்டப்பட்டுள்ளன. இக்காலத்தில் ஒரு பகுதி வெட்டப்பட்டுப்புல்லாஙகுழல் போன்ற அமைப்பில் காட்சியளிக்கினறது. இந்த அமைப்புடைய போதிகை இதற்குப்பின் பின்பற்றப்படவிலலை. மூன்றாம் போதிகை தரங்குபோதிகை எனறு வழங்கப்படுகின்றது. இப்போதிகை பிற்காலச் சோழர்களால் உருவாக்கப்பெற்றது. இவவகைப் போதிகையில் சிறிய தாமரை மொட்டுப் போன்ற அமைப்புச்செதுக்கப்பட்டது. இவ்வமைப்பு போதிகையின் கீழ்ப்பகுதியில் வெட்டப்பட்டது. புல்லாஙகுழல போன்ற அமைப்புடைய போதிகையே வளர்ச்சியடைந்து இத்தகைய பூவேலைப்பாடாகப் பிற்காலச் சோழாகளின் காலத்தில மாறியது. விசயநகர மனனர்களின காலத்தில் இப்போதிகை மேலும் வளாச்சியடைந்தது. வாழை மொட்டு சற்று வளைநத நிலையில இருப்பது போன்று செதுக்கிஅலங்கரிககப்பட்டது இப்போதிகை புட்பபோதிகை என்று குறிக்கப்படுகின்றது. இது வாழை மரப்பூவைத் தாங்கி நிற்கின்ற காரணத்தால இப்பெயர் பெறறது. இதனைத் தொடர்ந்து பிற்காலத்தில பூ முனையாக மாறியது. இதில் மதலை, பூமுனை ஆகிய பகுதிகள உள்ளன. வாழைப்பூ வளைந்துள்ளதால இதற்கு நாணுதல் என்று பெயர் வைக்கப்பட்டிருககின்றது.

இதழ் என்பது பலகையின கீழ உள்ளது. இவ்விதழ் பல்லவா காலத்தில எவ்விதமான அலங்காரமுமின்றி இருந்தது. பிற்காலச சோழர்களின காலத்தில் இதழகள சற்று நீண்டு அவற்றின முனைகளும் நீண்டு வளைந்துள்ளவாறு காட்டப்பட்டுள்ளன. இப்பகுதியே முனை என்று சொலலப்படுகினறது. நாக பந்தம் என்பது பிற்காலச சோழர்களின் காலத்தில உள்ள தூண்களில் காணப்படுவதாகக் கருதப்படுகின்றது. தாபி, கலசம் போன்றவைகள் முதலில் எளிய நிலையிலிருந்து பிற்காலத்தில் பூவேலைப்பாடுகளுடன செதுக்கப்பட்டன.

வேலூர், பேரூர் ஆகிய கோயிலகளில் உள்ள தூணகள இரணடு பகுதிகள் ஒனறாக இணைக்கப்

பட்டுள்ளன. அதாவது பெரிய தூண ஒன்றும் அத னருகிலேயே சிறிய தூண ஒனறும் இணைநது காணப் படுகின்றன. இத்தூணகள மிகுந்த அளவில பூ வேலைப்பாடுகளும், அலங்காரங்களும, புடைப்புச் சிற்பங்களும் கொண்டுாளன. பெரிய சிற்பங்களும் இதில் செதுக்கப்பட்டுளளன. யாளியின மேல் அமர்ந்து வீரன் ஒரு புலியைக் கொல்வது போனறும, மற்றொரு வீரனுடன் சணடை செய்வது போன்றும பலவகையான சிற்பங்கள் செதுக்கப்பட்டுளளன.



திருமலை நாயக்கா மகால தூணகள

நாயககர் காலத்திய தூணகள் அவாகளுடைய அரண்மனைப் பகுதிகளில் காணப்படுகின்றன. இத் தூண்களை மிகுந்த பருமன் உடையனவாகவும் உயர மானவையாகவும் அமைக்கப்பட்டிருககின்றன இவ் வமைப்பிற்குச்சான்றாக மதுரை திருமலை நாயககர் மகாலைக் கூறலாம். தூணகளின உட்பகுதியில் கருங்கல், சுண்ணாம்பு ஆகியவற்றைக் கொண்டு தூண்கள் எழுப்பப்பட்டுளளன. அதன் மேல சுண் ணாம்பு பூசப்பட்டுளளது. அதற்குமேல் தூணகள வழவழப்பாக இருக்கச் சுண்ணாம்பு, முட்டையின வெள்ளைக்கரு ஆகியவற்றைக் கொணட ஒரு பூச்சு பூசப்பட்டுள்ளது. இவ்வாறு செய்யப்பட்டுளள படியால் அழகாகவும் வழவழப்பாகவும் ஆக்கப்பட் டுள்ளன. தி.சு.

**தூண்டல்:** மனிதன் நாளதோறும் செயறபடு வது தூணடலை (Stimulus) முன்னிட்டுத்தான். பொதுவாகப் பசியெடுககுமபோது பரிமாறப் படும் உணவு தூணடலாக அமைந்து உமிழ்நீர், சீரண நீர் சுரந்து சாப்பிடத் தூணடுகிறது. தூணடலை முனனிட்டு ஏற்படும் விளைவே செயல (Response) எனப்படும. பாவலோவு, இசுகின்னர் போனற அறிவியல் அறிஞாகள 'தூணடல-செயல' ஏறபடுவதை வைததே மனிதனின நடத்தையைக் (Behaviour) கணித்திருக்கிறார்கள். தூணடல-செயல் இரண்டையும் சீர்படுததித் தேவையானால் மாறறி யமைத்து ஒருவரது செய்கையை மாற்றமுடியும(Behaviour Modification) எனறும இவர்கள கணடுபிடித துள்ளனர். எடுத்துக்காட்டாகப் பாவலோவு ஒரு நாயைக கூணடில் அடைதது அதனமுன உணவை வைதது அதற்கு உமிழ் நீர், இரப்பை நீர் சுரபப தைக் கணடாா. பின்னர் உணவு வைப்பதறகு முன மணியை அடித்தபோதும் நாய் உமிழ்நீர் சுரநதது. பினபு மணி அடித்த உடனேயே உணவை எதிர் பார்த்து நாய்க்கு உமிழ்நீா சுரநதது. அதாவது உண விறகாகச் சுரக்கும் உமிழநீர், உணவு கொணரப்படும எனபதை அறிவிக்கும் மணியோசைககே சுரநதால உமிழ்நீர் சுரப்பு-மணியோசை தூணடலுககே உண வுத் தூணடலுககு உண்டான விளைவை ஏற படுத்தியது என்பதாகக் கொளளலாம. மனித னின் வாழவில் ஏறபடும் நடவடிக்கைககளைக் கூட இதே முறையில கட்டுப்படுத்தலாம அல்லது மாற்றியமைககலாம் எனற கண்டுபிடிப்புககுச் சான றான இவரது சோதனைகளுக்காகவே இவருககு நோபல் பரிசு கிடைததது. சிலநேரங்களில் இன்னது

நடக்கும் என்பதால் தூண்டலுக்குப் பதிலாக ஒரு விளைவை ஏற்படுத்திச் செயற்படுவர். அதாவது ஒருவர் மற்றவரை அடித்துப் பதிலுக்கு அடி விழுந்தால் அந்த அடியைத் தவிர்க்க முதலில் அடித்தவரும் அமைதியாகப் போக வாய்ப்புண்டு. இதையே எலிகளை வைத்துச் சோதனை செய்து இசுகின்னர் நிறுவினார். உணவு பரிமாறப்படும் என்பதால் கூண்டில் உள்ள கொக்கியை இழுக்க எலிகள்கூடக்கற்றுக்கொள்கின்றன என்பதை அவர் கண்டறிந்தார். இதைவைத்தே தீங்கு, அச்சம் விளைவிக்கும் தூண்டல்களைக் கூட மனம், உடல் தளரும் (Relaxation) விளைவுகள் அளிப்பவையாக மாற்றமுடியும் என்பதையும் உளவியல் வல்லுநர்கள் கண்டறிந்தனர். எடுத்துக்காட்டாக நாயைக் கண்டு அச்சம் என்றால் முதலிலேயே செயல் அளவில் தளர்ச்சியை உண்டுபண்ண வேண்டும். அந்நிலையில் நாயின் படம், பொம்மை, குட்டிநாய், வளர்ந்த கடிக்கும் நாய் என்று படிப்படியாக ஒருவரின் அருகில் கொணர்ந்தால் அவருக்கு நாயின்மீது அச்சம் போக வாய்ப்புண்டு. இவ்வாறு செயலை மாற்றி அமைப்பதன்மூலம் தூண்டல்களின் விளைவை மாற்றியமைக்கும் மருத்துவ முறைக்கு நடத்தை-செயல்வழி மருத்துவ முறை (Behaviour Therapy) என்று பெயர். சிலசமயம் கட்டுப்படுத்தாமல் உள்ளபோது கறுப்பு நாயிடம் ஏற்பட்ட அச்சம் கறுப்பான எல்லாப் பொருள்கள்மீதும் ஏற்பட்டால் அதுவே தூண்டல்-பொதுப்பாதிப்பு(Stimulus-generalization)என்பதாகக் கொள்ளலாம். வாழ்வில் மனிதனுக்கு எப்படியேனும் தூண்டல் இன்றியமையாத் தேவையாகும். சூடாக ஒரு பொருளைத் தொட்டால் சூடு என்ற தூண்டல் நரம்புகளின் வழியே பரவிக் கையை எடுத்துக்கொள்ளத் தூண்டும் செயலில் (Response) முடிகிறது. ஆக மனிதனின் பாதுகாப்புக்கும் தூண்டல் தேவைப்படுகிறது. சிலருக்கு ஒரு பிரிவினரைப் பிடிக்கும்; மற்றவரைப் பிடிக்காது. இதற்கும் மற்றவரிடமிருந்து ஏற்படும் தூண்டலே காரணம். அழகு, அழகில்லாதது; நல்லது, கெட்டது என்று பிரிப்பதும் தூண்டல் மற்றும் அதன் பாதிப்பால் உண்டாகிறது என்றால் மிகையாகாது. தூண்டலே இல்லாமல் ஒளிபுகாத சுவாசிக்க மட்டும் கூடிய ஒரு தனியிடத்தில் ஒருவரைச் சிலநாள் வைத்திருந்தால்கூட அவருக்கு மனநிலை பாதிப்பு ஏற்படும் ஆபத்து உண்டு. ஆகவே 'தூண்டல்-இல்லாமை' (Stimulus deprivation) என்பதும் விரும்பத்தகுந்ததன்று. சுருக்கமாக வாழ்வு முழுதும் 'தூண்டல்-விளைவின்' தொடர்ச்சி என்று கூடக் கூறலாம்.

ந.மா.

**தூத்துக்குடி:** தூத்துக்குடி தமிழகத்திலுள்ள வ.உ. சிதம்பரனார் மாவட்டத்தின் தலைநகராக விளங்குகிறது. வங்காள விரிகுடாவிலுள்ள மன்னார் குடாவில் இது ஒரு துறைமுகப் பட்டினம். இந்தியாவிலுள்ள பத்துப் பெரிய துறைமுகங்களுள் இதுவும் ஒன்றாகும்.

இந்தியாவிற்கு வந்த ஐரோப்பியர்களுள் முதலில் இங்குக்குடியிருப்பு அமைத்தவர்கள் போர்ச்சுகீசியராவார். அவர்களிடமிருந்து இதைத் தச்சுக்காரர்கள் கி.பி.1658-இல் கைப்பற்றினர். ஆங்கிலேயர் தச்சுக்காரர்களிடமிருந்து (The Dutch) கி.பி. 1782- ஆம் ஆண்டில் இதைக் கைப்பற்றிக் கொண்டனர். பிறகு கி.பி. 1785-ஆம் ஆண்டில் ஏற்பட்ட உடன்படிக்கை மூலம் இது தச்சுக்காரர்களுக்குக் கொடுக்கப்பட்டது. ஆனால் கி.பி.1795-இல் மீண்டும் ஆங்கிலேயரால் கைப்பற்றிக் கொள்ளப்பட்டது. தச்சுக்காரர்கள் ஆங்கிலேயரிடமிருந்து கி.பி. 1818-இல் இதைப் பெற்றுக் கொண்டு கி.பி. 1825- இல்ஆங்கிலேயரிடமே மீண்டும் கொடுத்துவிட்டனர்.

இப்பகுதியில் மழை மிகக் குறைவு. இந்நகருக்குக் குடிதண்ணீர் தாமிரபருணி ஆற்றிலிருந்து கிடைக்கிறது. இது கி.பி. 1868 ஆம் ஆண்டு ஒரு நகராட்சியாகியது. மீன்பிடித்தல், முத்துக் குளித்தல் ஆகியன சிறப்புத்தொழில்களாகும். தூத்துக்குடித் துறைமுகத்திலிருந்து பருத்தி, காப்பி, தேயிலை, பருத்தித் துணிகள், மிளகாய், புண்ணாக்கு, தோல் முதலியவை ஏற்றுமதியாகின்றன. பெட்ரோலியப் பொருள்கள், சிமெண்டு, இயந்திரங்கள், பாக்கு, நிலக்கரி முதலியவை இறக்குமதியாகின்றன.

தூத்துக்குடி பெரும்பாலும் புயலால் பாதிக்கப்பட்டதில்லை. அருகில் உள்ள முயல்தீவு தூத்துக்குடிக்கு அரணாக அமைந்துள்ளது. இத்தீவில் ஒரு கலங்கரை விளக்கம் உள்ளது. தூத்துக்குடி துறைமுகம் எல்லாப் பருவ காலங்களுக்கும் ஏற்றது.ஆனால் பெரிய கப்பல்கள் 6 அல்லது 7 கி.மீ. தொலைவிலேயே நங்கூரம் பாய்ச்சப்படுகின்றன. பின்பு அக்கப்பல்களிலிருந்து பொருள்கள் எடுத்து வரப்படுகின்றன.

ஆங்கிலேய அரசு கி.பி. 1868- ஆம் ஆண்டு ஏறக்குறைய உரூ. 1200/- செலவு செய்து முதல் கப்பல் துறையை (Pier) ஏற்படுத்தியது. பிறகு சிறிது சிறிதாக இது வளர்ச்சியுற்றது. இந்திய விடுதலைப் போரில் வ.உ. சிதம்பரனார் ஆங்கிலேயருக்கு எதிராகச் சுதேசிக் கப்பல் நிறுவனம் ஒன்றை நிறுவினார். அந்நிறுவனம் வாங்கிய கப்பல் தூத்துக்குடியிலிருந்து கொழும்புத் துறைமுகத்திற்கு வாணிகத்திற்காகச் சென்று வந்தது. அதைக் கண்ட ஆங்கிலே

யர், சூழ்ச்சி செய்து அக்கப்பல் போக்குவரத்தை நிறுத்தும்படி செய்துவிட்டனா.

தூத்துக்குடியில நூற்பாலைகள இருக்கினறன. மேலும் அனல மின நிலையம், தூத்துககுடி 'ஆலகலி கெமிகலசு அணடு பொடிலைசர்' எனனும் தொழிற் சாலை ஆகியவற்றுக்கான மூலப் பொருள்கள் தூத் துககுடித் துறைமுகத்தில்தான் வந்து இறஙக வேண டும். ஆனால் துறைமுகம் ஆழமில்லாமல இருப்பதால கப்பலின் கொள்ளளவில் ஏறக்குறைய அரை அலலது முக்கால் பகுதி அளவுக்குததான் சரககுகளை ஏற்றிக கொண்டு வரமுடிகிறது. அதனால் காலமும் எரி பொருளும் வீணாகினறன. தூத்துக்குடித துறை முகத்தை ஆழப்படுத்துவதற்குக்கடலுக்குள இருக்கும் பாறைகள இடையூறாக இருக்கினறன. அ.சி.

**தூதங்கமோன்** என்பார் பணடைய எகிப்து நாட்டை ஆணட அரசர்களுள் ஒருவர். இவர் அந் நாட்டை அரசு செய்த அரச மரபுகளுள பதினெட் டாம் வமிசத்தைச் சார்ந்தவர். அவ்வமிசம கி.மு. 1358-ஆம் ஆணடில் பதவி வகிக்கத தொடங்கியது. தூதஙகமோன் (Tutankhamon) கி.மு.1366 முதல 1357 வரை ஆட்சி செய்தார்.

தூதங்கமோன மூன்றாம அமெனோடெப்பு (Amenhotep III) எனபாரின பேரராக இருக்கக்கூடும் எனச் சிலர் கூறுவர். இவர் வரலாற்றுச் சிறப்பு மிக்க வராக எணணப்படுகிறார். இவருடைய மாமனார் அக்நாட்டன் (Ikhnaton) சமய நிநதனையாளர் எனத் தூற்றப்படுகிறார். அரசர்களான பாரோக் களை வழிபடும முறையை இவர் மாறறி அட்டன் (Aton) என்னும் ஒருருவக் கடவுள வழிபாட்டை நிலை நாட்டினாா (Monotheistic Cult). மேலும் அகநாட் டன் தம் தலைநகரைத் தீப்சு (Thebes) என்னும் நக ரத்திலிருநது அக்டாட்டன (Akhetaton) என்னும் நகரத்திறகு மாறறியிருந்தார்.

தூதங்கமோன் பாரோவானவுடன் பழைய சம யத்தைத் திரும்ப நிலைநாட்டியதுடன, மீணடும தீப்சு நகரையே தலைநகராக்கினார். தூதஙகமோன அரசரானபோது அவருக்கு வயது எட்டு அல்லது ஒன்பதாகும். இவர் தொடர்நது ஒன்பதாணடுகள ஆட்சி செய்தபோதிலும், இவருடைய ஆட்சி சிறப் பானதாகக் கருதப்படவில்லை. இவருடைய தலைமை அமைச்சராக (Vizier) ஐ (Eye) எனபார் பணி புரிந தார். ஐ கூட்டுக் காவலராக இவருககு உதவிபுரிந் தார்.

தூதங்கமோனின கலலறையை அடையாளம் காட்டிக் கண்டுபிடித்தவர் ஓவர்டு கார்ட்டர் (Howard Carter)என்பவா. இக்கல்லறை 1922-ஆம் ஆணடில் கணடுபிடிககப்பட்டது. இக்கல்லறை, ஒரு சிறிதும் சிதையாமல் இருந்த எகிப்திய அரசர்களின கல லறைகளுள் ஒனறாகும். இவருடைய கலலறையில் காணபபடும் பல அறைகளில் இவர் பயன்படுத்திய எண்ணற்ற பொருள்கள் குவிககப்பட்டிருந்தன. இப் பொருள்களுக்குள கட்டித் தஙகத்தினால் ஆன சவப் பெட்டியும் அடஙகும். இச்சவப்பெட்டி (Coffin) இப் போது கெய்ரோ அருங்காட்சியகத்தில் (Cairo Museum) காட்சிப் பொருளாக வைக்கப் பட்டுளளது. சவப் பெட்டியில் இருந்த தூதஙகமோனின் உடலும் இவ ருடைய கலலறையில பாதுகாக்கப்படுகிறது. இவர் இறந்தபோது ஐ இவருடைய இறுதிச் சடஙகை நடத்தி இவரை அரசாகள கலலறைகள வெளியில (Valley of the Tombs of the Kings) அடக்கம் செய தார். தூதங்கமோனின் மனைவி இட்டைட்டு அரசர் சுப்பிலலுலியுமா (Shuppiluliuma) எனபவரிடம் தனக்குக் கணவராக இட்டைட்டு அரசரின குமாரர் களுள ஒருவரை அனுப்பினால் அவரைத் திருமணம் செய்து கொணடு அரியணையைப பகிர்ந்து கொளள லாம் என்று தூது அனுப்பினாள. சிறிது காலம தாமதப்படுத்திய பின இட்டைட்டு அரசர் (Hittie இளவரசர் சனனசா(Zannanza) என்பானை அனுபபி வைத்தார். ஆனால் அதனை விரும்பாத எகிபதியர் கள இளவரசனை வழிமறிததுக் கொன்றுவிட்டனா. அதன விளைவாகப் புதிய வமிசம அரசு கட்டில ஏறி யது. இரா.அ.

**தூதர்கள்:** இனறைய உலகில் ஒவவொரு நாடும் தன பிரதிநிதிகளின வாயிலாகத் தனது தொடர்பை மற்றொரு நாட்டுடன நடத்தி வருகி றது இதற்காகச் சிறந்த தகுதி படைத்த தூதர் ஒருவரையும் அவரின்கீழ்ப் பணி செயகினற பணி ஆட்களையும் தான உறவு வைத்திருக்கினற ஒவ வொரு நாட்டிறகும் அனுபபுகிறது.

இது போனற தூதர்களின் உரிமைகள், கடமை கள், தனி உரிமைகள் போன்றவை பெரும்பான்மை யும் சட்ட வழக்காறாக மாறிவிட்டன. இது தவிர 1961-ஆம் ஆணடு வியன்னா இராசதந்திர உறவுக்கான ஏற்பு விதிகள, தூது பறறியும் தூதாணமை பற்றியும் நிலவுகினற பன்னாட்டுச் சட்ட விதிகளைக் கொண்டு விளங்குகின்றன.

ஐரோபபாவிலகி பி.18,19-ஆம்நூற்றாணடுகளில், நிலவிவந்த தூதர்களின உரிமை, கடமை போன்ற வைகளே பிற்காலத்தில பனனாட்டுச் சட்ட விதி களாக உருவெடுத்தன என்றாலும கிழக்குத் தேசங களான இநதியா, சைனா போனற நாடுகளில் தொன்மை வாயந்த தூதாண்மை விதிகள் நிலவி யிருந்தன என்று வரலாற்று ஆசிரியர்கள் விவரிக்கின்ற

னர். திருக்குறளில் உள்ள தூதாண்மை அதிகாரமும் இராமாயணத்தில் வருகின்ற தூது குறித்த செய்திகளும் தூதர்கள் பின்பற்ற வேண்டிய விதிகளையும் அவர்கள் அரசவைகளில் எவ்வாறு நடத்தப்பட்டனர் என்பதையும் காட்டுகின்றன.

வியன்னா ஏற்பு விதிகளின் (1961) படி தூதர்களை மூன்று வகையில் பிரிக்கலாம். அவையாவன: அ) இராச தூதுவர்கள் (Ambassadors) மற்றும் ஒரு நாட்டின். தலைமைத் தூதர்கள் ஆ) தனித் தூதுவர்கள் (Envoys). இ) அயல் உறவுப் பொறுப்பு அதிகாரிகள்.

இதில் (அ) மற்றும் (ஆ) பிரிவில் வருகின்ற தூதர்கள் ஓர் அரசின் தலைவராலும் (இ) பிரிவில் அடங்குகின்ற அதிகாரிகள் வெளி உறவு அமைச்சரிடமும் தங்களது பணிகுறித்த அரசின் ஆவணங்களைச் சேர்ப்பதின் மூலமாகத் தமது பணியில் அமருகிறார்கள். தனித் தூதுவர்கள் என்போர் ஒரு குறித்த பணியை நிறைவேற்ற வேண்டி ஒரு நாட்டினால் மற்ற நாட்டிற்கு அனுப்பப்பட்டவர்களைக் குறிக்கும். இராச தூதர்கள் அல்லது தலைமைத் தூதர் மட்டுமே சிறப்பு மிகுந்த உரிமைகளைப் பெற்று இலங்குகின்றனர்.

**உரிமைகள், விலக்குரிமைகள்**: ஒரு நாட்டின் தூதர்கள் அமர்ந்து பணி செய்கின்ற தூதரகங்கள் எந்நாடு தூதரை அனுப்பியதோ அந்நாட்டின் நிலப் பரப்பாகக் கருதப்படுகிறது. இவ்விதி இப்போது முற்றிலும் ஏற்புடையது அன்று என்றாலும் இந்த விதியினைப் பெரும்பாலும் நாடுகள் மதித்தே நடக்கின்றன.

ஒரு நாட்டின் தூதர்கள் அவர்கள் எந்த நாட்டில் தமது பணியைச் செய்கிறார்களோ அங்குள்ள எந் நீதிமன்றத்தின் ஆள்வரைக்கும் உட்பட்டவர் அல்லர். எனவே ஓர் அயல் நாட்டுத் தூதர் எவர் மேலும் உரிமையியல் வழக்குகளோ அல்லது குற்றவியல் வழக்குகளோ தொடுக்க இயலாது. அவர்கள் பன்னாட்டுச் சட்டத்தின் கீழ்ப் பாதுகாக்கப்பட்ட நபர்கள் ஆகையால் எந்நாட்டில் அவர்கள் பணி செய்கிறார்களோ அந்நாடு அவருக்கு முழுப் பாதுகாப்பையும் அளிக்க வேண்டியது கடமையாகும். அவருக்கு வருகின்ற அஞ்சல்கள் கூடப்பிரிக்கப்படாத நிலையிலேயே அவருக்குத் தரப்படுகின்றன. எங்கு அவர்கள் பணி செய்கின்றார்களோ அந்நாடுகளில் அவர்களுக்கு வரி விலக்கும் தரப்படுகிறது.

அவர்கள் பணிபுரிகின்ற தூதரகமும், அவர்கள் ஆவணங்களை வைத்திருக்கின்ற பகுதியும் எந்நாட்டில் அவர்கள் பணிபுரிகின்றார்களோ அந்நாட்டு அதிகாரிகளினால் சோதனைக்கு உட்படுத்தத் தக்க இடமல்ல. அவர்கள் தாங்கள் பணிபுரிகின்ற நாட்டில் சில அனுமதிக்கப்படாத இடங்கள் தவிர அனைத்து இடங்களையும் சுற்றிப் பார்ப்பதற்கான உரிமை உடையவர்கள். ம.கா.

**தூது**: 'தூது' என்பது ஒருவகைச் சிற்றிலக்கியம்; இருவரிடையே சந்து செய்வித்தல், கூழாங்கல், செய்தி, பகை, தானாதிபதி எனப் பல பொருள் தரும். உண்ணும் தானியங்கள் செரித்தற்காகச் சிறு கற்களை உண்ணும் ஒரு வகைப் புறா 'தூதுணம் புறவு' எனப்பட்டது. 'ஓதல் பகையே தூதிவை பிரிவே' என்னும் தொல்காப்பிய நூற்பாவில் தூது சந்து செய்வித்தலைக் குறித்தது. இதனால் அரசர் முதலானோர்க்குக்கூறப்பட்ட பிரிவுகளில் தூதிற் பிரிதலும் ஒன்று என்பது பெறப்படுகின்றது. 'தூது' என்ற அதிகாரத்தில் திருவள்ளுவர் தூதுவர்க்கான இலக்கணங்களை விரித்துக் கூறியுள்ளார்.

**இருவகைத் தூதுகள்**: ஒருவர் தம்முடைய உள்ளக் கருத்தைத் தமது காதலர், நண்பர், பகைவர் முதலியவர்களில் யாரேனும் ஒருவருக்குத் தக்க ஒருவர் வாயிலாகக் கூறிவிடுப்பது தூது ஆகும். இத்தூது அகத்திணைத் தூது, புறத்திணைத் தூது என இரு வகைப்படும்.

**புறத்தூதுகள்**: பிசிராந்தையார் கோப்பெருஞ் சோழனிடம் அன்னச் சேவலைத் தூதுவிட்டது, அதியமான் ஔவையாரைத் தொண்டைமானிடம் தூது விட்டது, பாண்டவர் துரியோதனனிடம் கண்ணனைத் தூது விட்டது, இராமபிரான் தூதுவனாக அங்கதன் இராவணனிடம் சென்றது போன்ற நிகழ்ச்சிகள் புறத் தூதுகள்.

காதலர்கள் தம் உள்ளக் கிளர்ச்சியைக் கூறி ஒருவர் மற்றவர்க்கு அனுப்பும் தூது அகத்திணைத் தூது எனப்படும். மனநிலையை அறிந்து கூறும் மக்களைத் தூதாக விடுப்பதே யன்றி, அங்ஙனம் கூறும் ஆற்றல் இல்லாத அஃறிணைப் பொருள்களையும் தூது விடுப்பதாகக் கூறுதல் அகத்திணைச் செய்யுள் வழக்கு. இதனைக் 'காமமிக்க கழிபடர் கிளவி' என அக இலக்கண நூல்கள் குறிக்கின்றன. 'சொல்லா மரபின் அவற்றொடு கெழீஇச் செய்யா மரபின் தொழிற்படுத் தடக்கியும்' என்று தொல்காப்பிய நூற்பா வரிகள் இதனை விளக்குகின்றன. 'செய்யா மரபாவன-தூதாச்சேறலும், வருதலும் உளபோலக் கூறும் அவை போல்வன பிறவும்' என இதனை இளம்பூரணார் தெளிவுறுப்பர். இக்காம மிக்க கழிபடர் கிளவியே தூதுப் பொருண்மைக்கு வித்தாக அமைந்துள்ளது.

**தூது செல்லுதற்குரிய பொருள்கள்** தூது விடுதல மிகத தொன்மையான பழககம. தொலகாப்பியா காலத்திலேயே தூதுவிடும் மரபு பரவலாக இருநதது. அதற்கு முன்னரே கி.மு 2 ஆம நூறறாண்டில பாண்டிய மன்னன் ஒருவன அககுடசு எனனும உரோமப பேரரசனுககுத தூதுககுழு வொன்றை அனுப்பினான என ஆராய்சசியாளாகள் கூறுகினறனா. சங்க நூல்களில புறத் தூது பறறிய பாடலகள காணக கிடககினறன.

அரசா, அந்தணர், புலவர் போனறோா புறப் பொருள தூதுக்குரியர். அனனம, மயில, கிளளை, மேகம, பூவை, பாஙகி, குயில், நெஞசம, தெனறல, வணடு முதலியன அகத தூதுககுரியன எனபா. 'இயமபுகினற காலத்து எகினம, மயில, கிளளை' எனவரும இரததினச் சுருகக வெணபாவால இதனை அறியலாம. ஆராயநது நோக்குமபோது தூது விடுத் தறகுரிய பொருளகள முப்பத்தைநது எனபது புலனாகின்றது

**தூது-இலக்கியம்** பிற்காலததில் தோனறிய சிறறிலககிய வகைகளுள் 'தூது' எனபதும ஒன்று. இது பெருமபாலும அகப்பொருளபறறி அமைவது. தலைவன பால் காதல கொணட தலைவி தனது காதல நிலையை அன்னம், மேகம போனற அஃறிணைப் பொருளகளிடம கூறி அவறறைத தலைவனிடம் தூது சென்று மாலை வாஙகி வருமாறு கலி வெணபாவால பாடுவது இததூதிலக்கியத்திற்குரிய இலககணமாகும்.

தமிழில, அழகா கிளளை விடுதூது, தமிழ விடு தூது, தெனறல விடுதூது, கசசி ஆனநதருத்திரேசர் வணடு விடுதூது ஆகியவை புகழ பெறறவை இவற்றுள முதனமுதலில் தோனறியது கொறறவனகுடி உமாபதி சிவாசசாரியாரின நெஞசுவிடு தூது எனபர் அறிஞர். தமிழில இதுகாறும எணபததைநது தூது நூல்கள பெயரளவில கிடைததுளளன அ.ஆ.

**தூபி**. பௌத்தாகளும சமணர்களும தங்கள மதப் பெரியாாகளின ஈமச் சினனங்களைப் புதைதத விடங்களில கடடும் புனித நினைவுச சினனமே தூபி எனப்படும். இது ஒரு வட்டவடிவமான மேடை மீது அமைககப்படும அரை உருணடை வடிவமானது. இததகைய தூபிகள வடநாட்டிலும் பின தென இநதியாவிலும (ஆநதிரா), இலஙகையிலும், சாவா, கம்போடியா, சீனா, சப்பான ஆகிய தூரக் கிழககு நாடுகளிலும கட்டபபடடன. இவறறின அமைப்பு பலவேறு நாடுகளிலும சிற்சில மாறுதலகளுடன காணப்படுகினறன. மேற்கூறிய சமயப பெரியார்களின எலுமபு, சாமபல முதலியன புதைககப்பட்டு அவறறின மீது கட்டபபடும தூபி 'சாரீரகத் தூபி' எனறும், அவாகள பயனபடுத்திய பொருளகளைப் புதைதது அவற்றினமீது எழுபபப்படும தூபி 'பாரிபோகிகத தூபி' எனறும வழஙகபபெற்றன பிற காலத்திலவணககததிறகுரிய பிட்சுககளைப் புதைதத விடஙகளிலும தூபிகள கடடப்பட்டன.

இததூபிகள வரலாறறிறகு முறபட்ட காலததில் இறநதோரைப புதைத்த விடஙகளில எழுபபபடும 'பெருஙகறகள' (Magaliths) எனபபடும ஈமச் சினனங்களின தொடர்ச்சியேயாகும் இத்தகைய பெருஙகற் சினனஙகள தக்காணததிலும், தமிழகததிலும பல இடங்களில அகழநதாயப்பட்டுளளன இவறறின் நடுவே பெரிய பாறையும, அதனைச சுற்றி வட்டவடிவததில பெருஙகறகளும் அடுககப்படும சில இடஙகளில நடுவிலுள்ள பெருமபாறையைச் சுற்றி இரணடு வட்டஙகளாகக் கற்கள அடுக்கப்படுவதுணடு. இவவிரு வடடஙகளுககிடையேயான பகுதி திருசசுற்றாகப் பயனபட்டிருக்கலாம். அதாவது இப 'பெருஙகற்கள' வழிபடபபடடன.

பெருஙகறகளைப போனறே தூபிகளும வழிபடப்பட்டன. கி மு. 487-இல புததர் பாிநிர்வாணம அடைநததும (மரணமுறறதும) அவரது ஈமச் சினனஙகளை எடடு வெவவேறு இடஙகளில புதைத்து அவறறினமீது 'எட்டுப பெருந தூபிகளை' நிறுவியதாகப் பௌதத நூலகள கூறுகினறன. இவை செஙகறகளாலும் மணலாலும கட்டப்பட்டமையால காலபபோக்கில பெரிதும சிதைந்துபோயின. பினபு அசோகன (கி.மு. 273-232) அவறறை விரிவுபடுத்திப் புதுப்பித்தான. இவன தானே இத தூபிகளை நேரில் சென்று வணஙகித தூப வழிபாடடு மரபிறகு ஊககமளித்தான.

ஈனயான மரபில புத்தரை மானுட உருவில வணஙகுவதில்லை. எனவே புத்தரின வாழக்கையைச் சித்திரிககும போது அவரை மட்டும் சில குறியீடுகள மூலம காட்டினர். இவவாறு புததரின வாழ்ககையில் நிகழநத ஐநது சிறந்த நிகழ்சசிகளைப . பினவரும குறியீடுகளால சுட்டினர். அவை: புததரின பிறப்பு -யானைச சின்னம்; அவா இல்லறததைத துறநது கானகம ஏகுதல-அவரது பாதுகைகள அலலது குதிரைச் சினனம; அவர் தவமியற்றி ஞானம பெறறது-போதிமரச் சினனம; தாம பெற்ற ஞானத்தைப் பிறருககுப் போதிததல-தாமசக்கரம், அவரது பரிநிாவாணம்-தூபி. இஙஙனம் தூபி பௌத்தர்களின புனிதச சினனமாகவும் வழிபடு பொருளாகவுமாயிறறு. பிற்காலத்தில் ஒரு பெருந தூபியைச் சுற்றிச் சிறு சிறு தூபிகளைக் கட்டுவது பௌத்தர்களிடையே புண்ணிய கைங்கரியமாகக கருதப்பட்டது. மேலும்

சைத்தியங்கள் என்னும் பௌத்த வழிபாட்டு மன்றங்களில சிறிய தூபி ஒன்று நிறுவப்பட்டது.



தூபி தரை அமைப்ப-நாகர்சுண கொணடா

**தூபிகளின் அமைப்பு:** அண்டம் என்ற திணமையான அரைப் பந்து வடிவமே ஒரு தூபியின் சிறப்பான பகுதி. இது மேதி எனபபடும் வட்ட அல்லது சதுர வடிவ மேடைமீது அமைக்கப்படும். அண்டத்தின மேற்பகுதி தட்டையாகவும், அதில் சதுரமான அருமிகம் எனனும மேடையும் அதன நடுவில சத்திராவளி எனும் குடையும் அமைக்கப்பட்டிருக்கும். மேதியை ஒரு திருச் சுறறாகக கொணடு இதற்கு வேதிகை எனும கைபபிடிச் சுவரும், மேதிக்கு ஏறிச் செலலத் தரையிலிருநது சோபானம் எனனும படிக் கட்டுகளும் அமைக்கபபடும.

மேறகூறிய மொதத அமைப்பையும் சுற்றி மற்றொரு திருச்சுற்றும் அதனையடுத்து மறறொரு வேலி (வேதிகை)யும் அமைப்பர். இப் புறவேலியின் நானகு திசைகளிலும் திசைக்கு ஒன்றாக நான்கு தோரண வாயில்கள உணடு. இவ வேலியும், தோரணஙகளும தொடக்ககாலத்தில மரத்தால அமைகக்பபட்டன. பிறகாலத்தில் அவறறைக் கறகளால் அமைத்தனர்.

தூபியின் அணடத்தைச் செங்கற்களால கட்டி சுணணாம்புச சாந்தினால் பூசி மேற்பரப்பில அழகிய வண்ணச் சித்திரங்களை வரைவர். அணடத்தில் குறிப்பிட்ட உயரத்தின்மேல வரிசையாக முளை அடிப்பது துணடு. இதிலிருந்து விழாக் காலஙகளில் அழகிய மலாசசரங்களையும, கொடிகளையும், தோரணஙகளையும தொஙகவிட்டு அழகுபடுத்துவர்.

இநதியாவில் மத்தியபிரதேசத்திலுளள சாஞ்சி, பார்கூத்து தூபிகளும் ஆந்திரத்து அமராவதி தூபியும் உலகப் புகழ்பெறறவை. அசோகன் புதுப்பித்த தூபிகள காலப்போககில பழுதுபடவே சுங்க மனனர்களின் காலத்தில (கி.மு.-185-கி.பி. 150) இவை விரிவுபடுத்தப்பட்டன. இவர்கள் காலத்தில அணடஙகளுக்கும் கருஙகற பலகைகள வேயப்பட்டன. அசோகன் காலத்து மரவேலியும், தோரணங்களும் கல்வேலிகளாயும், கல தோரணங்களாயும் மாற்றப்பட்டு அவற்றின்மீது மிக அழகிய சிற்பங்கள் செதுககப்பட்டன இச் சிற்பஙகள புத்தரின் வாழக்கையையும் சாதகக் கதைகளையும் சித்திரிககினறன. இச் சிற்பங்களில் காட்டப்பட்ட வீடுகள், மனிதர்களைக் கொணடு அக்கால மக்களின் வாழ்க்கை முறைகளையும், ஆடை ஆபரணங்களைப்பற்றியும் அறியமுடிகிறது. பாரகூத் சிற்பங்கள் தட்டையாகவும் அழகில குறைந்தும் உளளன. இவற்றில் மனித உடல்கள விறைப்பாகவும், குட்டையாகவும் உள்ளன சாஞ்சி சிற்பங்களில் உருவங்கள் உயரமாகவும், வளைவுகளுடன் கூடியவையாகவும உள்ளன. எனவே அழகு மிக்கன.

தென்னாட்டில் ஆநதிரத்தில் கோதாவரி- கிருட்டிணா ஆறுகளுக்கு இடையேயுள்ள எல்லூரு என்னுமிடத்திலிருந்து 120 கி.மீ. ஆரமுளள வட்டததிற்குள ஒனபது இடங்களில் கிட்டத்தட்ட பதினோரு பௌத்தத் தூபிகளின் இடிபாடுகள் காணபபடுகினறன. இவை யாவும் அழகுமிக்கன; ஒரே கலைப் பாணியைச சார்ந்தன. இவற்றை அமராவதிப் பாணி என்பர். இவ் ஒனபது ஊர்களாவன: அமராவதி, கணடசாலா, கரிகபாது (Garikapad), குடிவாடா, சக்கயயபேட்டை, பட்டிப்ரோலு, பெத்தகஞ்சம் (மூன்று தூபிகள), பெத்தமாதூர், நாகாாச்சுன கொண்டா ஆகியவை. இவற்றில பெருமபாலான தூபிகளின் மீது வெணமையான சலவைககற்களைப பரப்பி அதில் பல சிறபஙகள செதுக்கப்பட்டிருந்தன. எனவே இவை வட இந்தியத் தூபிகளைவிட எடுப்பானதோற்றம் மிககவையாகவும், அழகுடையவையாகவும இருநதன. அவ்வாறே இவற்றில் செதுக்கப்பட்ட புடைப்புச் சிறபஙகளில காணும் மாந்தர் வட இந்தியச் சிற்பங்களில் காணும் மாந்தரைவிட உயரமாயும், அழகு மிககவராயும் உள்ளனர். இதனால் 'அமராவதிச் சிற்பம்' இந்தியக் கலை வரலாறறில் தனிச்சிறப்புப் பெறுகிறது.

அசோகர் தனது மகன் மூலம் இலஙகையில் பௌத்த மதத்தைப பரப்பினார். இந் நிகழ்சசியின



சாஞ்சி தூபி

நினைவுச் சின்னமாக 'மிகிந்தலே' எனனும இடத்தில ஒரு தூபி கட்டப்பட்டது இதையடுத்து இலஙகையில பல தூபிகள கட்டப்பட்டன. இலஙகையில் தூபிகளைத் தகபா என்பர். இலஙகையில அனுராத புரத்திலும் அதைச் சுற்றியும நான்கு சிறநத தூபிகள கட்டப்பட்டன. அவை 1) சேதவனாராமா (கி.மு. 320;விட்டம் 325'), 2)அபயகிரிய (கி.மு 300; விட்டம் 327'); 3) தூபாராமா (கி.மு 250, விட்டம் 165'), 4) உருவன்வேலி (கி.மு. 200, விடடம் 254') எனபனவாகும்.

இந்தியத் தூபிகள அளவில சிறியன; மிகப் பெரியது அமராவதித் தூபியே (விட்டம்162') யாகும். இவற்றைக் காணும்போது இலஙகைத் தூபிகள (தகபாக்கள்) பிரம்மாண்டமானவை. இலஙகைக் கலைஞர்கள் பேருருவஙகளே ஆன்மிகச் சினனமாகத் தகுந்தன எனக் கருதினர்போலும். மேலும் இலஙகைத் தூபிகளின அண்டத்திற்கு (இங்கு 'கேபா' என்பா) நான்கு புறமும் வகல்கதா எனப்படும சிறு கோயிலகள் கட்டப்பட்டன. இவை இத் தூபிகளின் அழகை உயர்த்துகின்றன. வகல்கதா இலஙகைத் தூபிகளுக் கேயுரிய தனிச் சிறப்பாகும். இவற்றிலதான் சிறபிகள தங்கள திறமை முழுதையும் காட்டிப் பல சிலைகளைச் செதுக்கியுள்ளனர். குறிப்பாக இவற்றின் அதிட்டானஙகளில வரிசையாகப் பல யானைச் சிலைகள அழகுற அமைக்கப்பட்டுள்ளன.

மத்திய சாவகத்தில போரோபுதூர் எனனுமிடத்திலுள்ள பௌததத் தூபியே (கி.பி.850) உலகப் புகழ்மிககது. சாவக பௌத்தர்கள் தங்கள் கவனம முழுதையும் இநத ஒரு தூபியைக் கட்டவே பயனபடுததினா. இதனை முடிக்க 75 ஆணடுகளாயின. இதில் ஆயிரககணககான கலைஞாகள் ஈடுபடடனா 'போரோபுதூா' என்பதற்குப் 'பல புத்தர்கள' என பது பொருள. இத தூபியைச் சுறறிப புத்தாது எணணறற சிலைகள இருப்பதே இப் பெயாககுக காரணமாகும. இது ஒரு மேடான குன்றினமீது கட்டப்பட்டுளளபடியால் கமபீரமாகக காட்சியளிககிறது. இரா.வே.

**தூம்சுடே புத்தகம்:** இஙகிலாந்தில கி.பி. 11-ஆம் நூறறாணடில் ஆட்சிபுரிநத மனனா முதலாம வில்லியம் தயாரிதத ஒரு சிறநத புளளி விவர நூல. அக்கால இஙகிலாந்து நாட்டைப் பறறிய குறிப்பிடததக்கசெய்திகளை இதில்காணலாம். இதில குறிப்பிடபபட்ட செய்திகள் மறுக்க முடியாத உணமை என்று அக்காலத்தில கருதபபட்டன. நாட்டின நிலைமையை சிறு விவரஙகளஉடபடததூம்சுடே புத்தகம் (Domes-

day Book) விளக்கியுள்ளது. மிகக் குறுகிய காலத்தில் தயாரிக்கப்பட்ட இப்பெரிய நூல், மக்களுக்கு ஒரு வியப்பை அளித்தது. நாட்டின் ஒவ்வொரு துறையின் நிலைமையைப் புள்ளி விவரங்களுடன் சேகரிப்பதற்காக கி.பி. 1086-இல் பல குழுக்கள் நியமிக்கப் பெற்றன. உண்மை விவரங்களைச் சேகரிக்கும் இந்தப் பணிக்கு, மிகுந்த எதிர்ப்பு இருந்தது. எனினும், மன்னன் விடாமுயற்சியுடன் தன் செயலை நிறைவேற்றினான். இங்கிலாந்து நாட்டின் வட்டங்கள் (Counties) பலவற்றிலும் செய்திச் சேகரிப்புக் குழுக்கள் ஓயாது உழைத்தன.

இந்நூல், பொதுவாக, புத்தகம் என்று ஒருமையில் கூறப்பட்ட போதிலும் உண்மையில் இது இரண்டு தொகுதிகளாக உள்ளது. நிலமானிய முறை நிலவிய அக்காலத்தில் அரசன் முதல் அடித்தள மக்கள் வரை சொத்துக்கள் விவரம் வழங்கும் இந்நூல், ஆட்சியாளருக்கும் வரலாற்றறிஞர்களுக்கும் மிக்க பயனுள்ள ஒன்றாகும். பல வட்டங்களைப் பற்றிக் குறிப்பிடும் இந்நூலில் இலண்டன் மாநகரைப் பற்றியும் வின்செஸ்டர் (Winchester) பற்றியும் குறிப்புகள் கிடைத்தில. பல ஆங்கில வட்டங்களின் உண்மை வரலாறு இப்புத்தகக் குறிப்புக்களிலிருந்தே தொடங்குகிறது எனலாம்.

இலண்டன் மாநகரில், பொது ஆவண நிலையத்தில் இப்புத்தகம், மக்கள் பார்வைக்காக இன்றும் வைக்கப் பெற்றுள்ளது. தெ.பா.

***தூரன்***: காண்க பெரியசாமித் தூரன்

***தூவி, சான்*** (கி.பி. 1859-1952), சிறந்த அமெரிக்கக் கல்வியியலாரும் தத்துவவியலாருமாவார்.


தூவி, சான்

இவர் மரபு வழியில் பின்பற்றப்படும் கல்விமுறையில் பெரும் மாறுதல்கள் ஏற்படுத்தப்பட வேண்டும் என வலியுறுத்தியவர்; பயனீட்டு வாத (Pragmatism) இயக்கத்தை வளர்ப்பதில் பங்கு பெற்றவர்.

சான் தூவி (John Dewey) பர்லிங்டனில் (Burlington) கி.பி. 1859-இல் பிறந்தார். பல்கலைக்கழகப் படிப்பிற்குப்பின் இவர் பல பல்கலைக் கழகங்களில் பணியாற்றினார். இவரது தொடக்ககாலச் சிந்தனை டார்வினின் படிமலர்ச்சிக் கொள்கை (Evolutionism), அப்போது புதுத் துறையாகத் திகழ்ந்த உளவியல் துறைக் கொள்கைகள் ஆகியவற்றின் தாக்கம் பெற்றது. மனிதர்களையும் நுண்ணறிவுத் திறனையும் (Intelligence) பற்றி ஆராய்வதில் நீண்டகாலம் செலவிட்டார் தூவி. இவரது கருத்துப்படி ஏதாவது சிக்கல்கள் தோன்றும்போதும், அறைகூவல்கள் ஏற்படும் போதும் மக்கள் நுண்ணறிவினை ஒரு கருவியாகப் பயன்படுத்துகின்றனர். மக்கள் அவரவர் பண்பாட்டு நெறிமுறைகளை ஒட்டி வாழவேண்டியுள்ளதால் நுண்ணறிவுத் திறனானது அந்தந்தப் பண்பாட்டு நெறிமுறைகளோடு ஒன்றிச் செயற்பட வேண்டியுள்ளது. அதனால் மரபுவழியை மீறி ஒரு புதிய முறையில் செயற்படுவதற்கு ஏதோ ஒருவகையான தடையிருப்பதாக மக்கள் உணர்கின்றனர். அதனை மக்கள் கைவிட வேண்டுமென்பார் தூவி. சிக்கல் ஏற்படும் போது அதனை நுண்ணறிவு மூலம் தீர்ப்பதில் மரபுவழியிலான நெறிமுறைகள் தடையாக இருக்குமானால் அவற்றை அகற்றித் தீர்வு காணவேண்டுமென்பார். இவரது இத் தத்துவம் பயன்படுத்தற் கொள்கை (Instrumentalism) எனப் பெருவழக்காகக் கூறப்பட்டது.

மனிதன் சுற்றுச் சூழலைத் தன் வாழ்க்கை நலனிற்கேற்பக் கட்டுப்படுத்த வேண்டும்போது அவனது நுண்ணறிவு ஒரு கருவியாகப் பயன் படுத்தப்படுகிறது எனத் தூவி நம்பினார். இதைப் பற்றியும் கலை, குடியாட்சி, கல்வி, தத்துவம், அறிவியல் முதலானவற்றைப் பற்றியும் இவர் சிந்தித்துப் பல நூல்களை இயற்றினார். இந்த அனைத்து நூல்களிலும் தூவியின் மையக் கருத்து சிந்தனைக்கும் செயலுக்கும் உள்ள இடைவெளியைக் குறைக்கும் முறை பற்றியதாக இருந்தது. இந்த இடைவெளியைக் குறைக்கும் போது மட்டுமே மனிதன் அவனது நுண்ணறிவினை மிகுதியான அளவு பயன்படுத்தமுடியுமெனக் கூறினார். தூவி அறிவியலை ஓர் ஒருங்கிணைந்த துறையெனக் குறிப்பிடுவார். ஏனெனில், அறிவியல் முறை மூலம் மனித நடத்தை முறைகளை நன்கு வெளிப்படுத்திக் காட்டமுடியும் எனக் கருதியதே அதற்குக் காரணம். இவர் காலத்திய உளவியல் துறையாளது

மிகப் புதிய துறையாக ஏற்பட்டு வளர்ச்சியடையத் தொடங்கிய நிலையில் இருந்ததால இவரது கருத்து கள் அறிவியல் முறையைப் பெரிதும் பாராட்டுமள விற்கு இருந்தன.

மனிதச் செயலகளை அறிவதற்கான சோதனை யில் தூவி, செயலகளைத் தனி நிலையிலும் அதன அடிப்படையாக மனிதச் சிந்தனையை மற்றொரு நிலையிலும் வைத்து ஆராய்ந்தார்.

தூவி வாழ்வின் அனைத்து நிலைகளிலும் கல்வி யின் பயனை ஆராய்ந்தார. ஒரு கலவியியலார் என் னும் நிலையில, இவர் மரபு வழியிலான கலவி முறையை எதிர்த்தார. மரபுவழியில மாணவர்கள் தங்கள ஆசிரியர்களிடம் பயினற அனைத்தையும மனததில பதிய வைத்துக கொளளவேணடும் என்னும் நிலை, கலவியையும வாழ்வையும் தனிமைப்படுத்தி விடுகிறது என்றார. கல்வி எனபது மனததோடு மட் டும தொடாபுடையது அன்று; உடலசார்ந்த திற னோடும் தொடர்புடையது. ஆகவே, மாணவர்கள கருவிசாரந்த பயிற்சியிலும், அன்றாடச் சிக்கல்களில ஈடுபாடு கொண்டு அதனைத் தீர்க்கும் முறைகளிலும் ஈடுபட வேண்டுமென்றார். இதனமூலமே மனம் சார்ந்ததும உடலசார்ந்ததும் நுணணறிவு சார்ந ததும் ஆகிய மூன்று நிலைகளில் ஒருங்கிணைந்து அறிவு பெறமுடியும் என இவா உறுதியாக நம்பி னார்.

தூவி கல்விப்பணியில பலகாலம் செலவிட்டவர். இவர் பல பலகலைககழகங்களில் ஆசிரியர் பணியில ஈடுபட்டிருந்தார. இவர் கொலம்பியா பல்கலைக் கழகத்தில 1930–ஆம் ஆணடுவரை மாணவர்களுக்குப பயிற்றுவித்தார்.

தூவியின முதனமையான நூல்களுள் சில. கலை மூலம பட்டறிவு (Art As Experience, 1934), குடி யாட்சியும் கலவியும (Democracy and Education, 1916), பட்டறிவும் இயறகையும (Experience and Nature, 1925). தூவி 1952–இல காலமானார். சீ.ப.

**தெ** நாக்கு மேலண்ணத்தை (நுனியை) ஒட்டியபடி மெதுவாக அழுத்த ஒலிக்கும் ஒலியோடு இளித்துப் பின் சிறிதளவு எடுத்து ஒலித்தால் இந்த எழுத்துக்குரிய ஒலி பிறக்கும். தகர எகரங்களுக்குரிய குறிப்பைப் பார்க்கவும்.

**வடிவம்: தமிழ் எழுத்து:** பழந்தமிழ்க் குகைக் கல்வெட்டுகளில் கி.மு. 3-ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 2-ஆம் நூற்றாணடு வரை. 2-ஆம் நூற்றாண்டில் அரச்ச லூர்க் கல்வெட்டில் அம்மன்கோயில் பட்டடிக்கல்வெட்டில் (5-ஆம் நூற்றாணடு). கையை எடுக்காமல் ஒரே கையாக எழுதப்படுவது. 8-ஆம் நூற்றாண்டில் செந்தலை முத்தரையர் கல்வெட்டில் புள்ளியை ஒரு சிறு அழகுக் கோடாக காட்டப்பட்டது, 11-ஆம் நூற்றாண்டில் சோழ இராசேந்திரனின் திருவாலங்காட்டுச் செப்பேட்டில, 16-ஆம் நூற்றாண்டில் விசய நகரத்து அச்சுததேவராயனின கல்வெட்டில காண லாம். ... ... ... .. ..

**வட்டெழுத்து:** 5-ஆம் நூற்றாண்டில் இருளப்பட்டி முதல கல்வெட்டில், 6-ஆம் நூற்றாண்டில் இருளப்பட்டி இரண்டாம் கல்வெட்டில் 7-ஆம் நூற்றாண்டில பல்லவ மகேந்திரனின் செங்கம் எடத்தனூர்க் கல்வெட்டில் புள்ளி இடப்பட்டது. 9-ஆம் நூற்றாண்டில் பாண்டியன் இரண்டாம் வரகுணன கலவெட்டில், 11-ஆம் நூற்றாண்டில் சோழ பாண்டியரின் பாண்டிநாட்டுக் கல்வெட்டுகளில் காணப்படு கிறது. . ... . ... ..

எகர ஒகரத்தியற்கையுமற்றே என்ற தொல்காப்பியச் சூத்திரத்தின்படி தெ என்பதன் எகரக் குறிலுக்கும் சில கல்வெட்டுகளில் உதாரணமாகக் கூரம் செப் பேட்டுத் தமிழ் கல்வெட்டு, மதுரை சேந்தன் வட்டெழுத்துக் கல்வெட்டு வேள்விக் குடி பாண்டியன் முதல் வரகுணனின் கல்வெட்டு. முதலியவைகளில் எகர உயிர்க்கும் எ உயிர்மெய்க்கும் புள்ளி இடப்பட்டது. கே.ஜி.கி.

*தெக்சாசு:* அமெரிக்க ஐக்கிய நாட்டின் மாநி லங்களுள் ஒன்றாக விளங்கும் தெக்சாசு மாநிலம் 692,379 ச.கி.மீ. பரப்பைக் கொண்டுள்ளது. இங்கு கி.பி.-1528 ஆம் ஆண்டில்தான் முதல்வெள்ளை யர் காலடி எடுத்து வைத்தார். இசுபெயின் நாட்டவர் முப்பது தடவைகள் இப்பகுதிக்கு கி.பி. 1730- ஆம் ஆண்டு வாக்கில் ஆய்வுப் பயணங்களை மேற்கொண்டனர். இலத்தீன் அமெரிக்க நாடுகள கி.பி. 1821-இல் விடுதலை பெற்றபொழுது, சாம்கவுசு டன் என்பவரை அதிபராகவும், இசுடீபன் அசுடின் என்பவரை உள்துறைச் செயலாளராகவும் கொணடு தெக்சாசுக்(Texas) குடியரசு நாடு அமைக்கபபட்டது. இந்நாட்டின தலைநகராக ஊசுடன் (Houston) என்னும் நகா கி.பி. 1839 வரை இருந்து வந்தது. அதன்பின் ஆசுடின் என்னும் நகர், இதன் நிலையான தலைநகராக மாற்றப்பட்டது. தெக்சாசு அரசும், அமெரிக்க ஐக்கிய நாடும் கி.பி. 1845-ஆம் ஆணடு இணைநது மேற்கொண்ட முடிவின் பயனாக, கி.பி. 1845-ஆம் ஆண்டு தெக்சாசு அரசு, அமெரிக்க ஐக்கிய நாட்டோடு ஒரு மாநிலமாக இணைககப்பட்டது.

அமெரிக்க நாட்டில்,அடிமை முறையை வெறுத்த வட மாநிலங்கள், அடிமை முறையை ஆதரிதத தென மாநிலங்கள் ஆகியவற்றிற்கு இடையே கி.பி. 1861-65 ஆண்டுகளுக்கிடையே உள்நாட்டுப் போர் மூணடது. தெக்சாசு தென் மாநிலங்களுள் ஒன்றாக இருநது,



சான் அண்டாய்னியோ நகரம்

இப்போரில் முனைப்புக் காட்டியது. அது சமயம் அமெரிகக ஐக்கிய நாட்டிலிருந்து விலகிய தெகசாசு, உளநாட்டுப் போரில மைய அரசின் படைகள் வெனற பிறகு, மீணடும் ஒரு மாநிலமாகச சோத்துக கொள ளபபட்டது. அதற்கென்று கி.பி 1869-இல ஒரு புதிய சட்ட வரைவும ஏற்படுத்தப்பட்டது.



எண்ணெய் எடுத்தல்-தெக்சாசு

தெக்சாசு மாநிலததில எணணெய் வளம 1901 -ஆம ஆணடு கண்டுபிடிககப்பட்டதிலிருநது, அதன பொருளாதார வளாசசி வாயப்புகள பெருகின அமெரிககாவின எணணெய் வளததை மிகுதியாகப் பெறறுத்தரும் மாநிலமாக 1970-ஆம் ஆணடு வாக் கில் தெகசாசு மாறியது ஊசுட்டன், போாட்டு வொாத்து, தல்லாசு (Dallas) வாகோ, ஆசுட்டின, சான் அணடோனியோ ஆகிய நகரங்களைக கொணட இம மாநிலம, கடல் மட்டததிலிருநது 230 முதல 760 மீட்டாவரை உயரமுளள நிலபபகுதியைக கொண டிருக்கிறது. வேளாணமைப பணணைகளும, கால் நடை வளாபபுகளும இம மாநிலததின அடிப்படைப பொருளாதார நடவடிககைகளாக இருநது வருகின றன.

தெகசாசு மாநிலம, பலவேறு இனததவாகளை யும் பணபாடுகளையும கொணடு விளஙகுகிறது ஐரோப்பியாகள் முதனமுதலில இங்கு வருமபொழுது 20 வகையான பழஙகுடி இனததவாகள மிகுநத அளவில வாழ்நது வந்தாாகள. இப்போதைய மககள தொகைக் கணககெடுப்பினபடி, பழஙகுடி மககளின எணணிக்கை 18,000 ஆகக் குறைநதுள்ளது. ஒரு சிறு தொகைககு ஒரு குடும்பத்திற்கு 4000 ஏக்கா நிலம அளிக்கப்படும் என்ற உறுதிமொழிப்படிகி.பி 1821 முதல் கி பி.1836 வரையுளள கால கட்டத்தில 38,000 அமெ ரிக்காகள இஙகுக குடி பெயர்ந்தாாகள. உளநாட்டுப் போர் தொடஙகுவதற்கு முப்பது ஆணடுகளுககும் முனபாக செருமனி, போலநது, செககோசுலேவியா, சுவீடன, நார்வே, அயாலாநது ஆகிய நாடுகளிலிருநது மககளகூட்டஙகூட்டமாக வநது இஙகுகுடியமர்நதார் கள ஏறத்தாழ 33,000 செருமானியாகள் கி.பி. 1850-ஆம் ஆணடிற்குள் இம்மாநிலத்தில குடியமர்நதாாகள. இநதத தொகை தெகசாசு மாநில மககள தொகை யில் ஐநதில ஒரு பஙகாக அபபோது இருநதது ஐரோபபிய நாடுகளிலநிலவுடைமைபெறுவது மிகவும அரிதாக இருந்த நிலை, இததகு குடியமாவுகளை ஊக்கபபடுததின. கிழககுத் தெகசாசுபபகுதியின வள மான நிலப்பகுதி, பருததி உறபத்திககு மிகவும உகந்ததாக இருநதது. வேளாணமைத் துறையில் இயநதிரஙகளும், புதிய முறைகளும புகுததப்பட்ட பிறகு, மேட்டுப் பகுதிகளைக கொண்ட மேறகுத தெக்சாசுபபகுதியிலும்வேளாணமை மேறகொளளப பட்டு வருகிறது. இம்மாநிலததிலுளள அஙகோரா வகை ஆடுகளிலிருந்து உலகக கமபளி உறபத்தியில 60 விழுககாடும், அமெரிக்காவின் உறபத்தியில் 95 விழுககாடும் கிடைத்து வருகினறன. மாமிச உணவிற் காக மாடுகளையம ஆடுகளையும வளாப்பதில் நாட்டிலேயே இம்மாநிலம் முதலிடம் பெற்றுளளது. அதனுடன் எண்ணெய் வளம், இயற்கை வாயு உற பத்தி, எண்ணெய்சுத்தகரிப்புத் தொழில ஆகியவற்

நிலும் இம்மாநிலம் முதலிடம் வகிக்கிறது. இம் மாநிலத்தில் மூன்றில் இரண்டு பங்கு இடங்களில் எண்ணெய் வளங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. நாட்டின் கந்தக உற்பத்தியில் 60 விழுக்காடு இம்மாநிலத்திலிருந்து கிடைக்கிறது. அமெரிக்க நாட்டின் உலகப் புகழ்பெற்ற தேசிய வான-விண்வெளி ஆய்வு மையம் (TheNational Aeronautics and Space Administration-NASA) இம்மாநிலத்தில் ஊசுடன் நகரில்செயற்பட்டு வருகிறது. சுற்றுலா இம்மாநிலத்தில் ஒரு நல்ல வாணிகமாக விளங்குகிறது. தல்லாசு நகர் உலகப் புகழ்பெற்ற நாகரிக அணிகலன்களின் மையமாக விளங்குகிறது. ஆழ்கடல் ஆய்வு, மருந்தியல், அறுவைச் சிகிச்சை ஆய்வு இவற்றில் தெக்சாசு மாநிலம் சிறந்து விளங்குகிறது.

இம் மாநிலத்தின் புதிய அரசியல் சட்டம் கி.பி. 1876-இல் இயற்றப்பட்டது. இரண்டாண்டிற்கு ஒரு முறை தேர்ந்தெடுக்கப்படும் மாநில ஆளுநர், சட்ட சபையைக் கூட்டும் அதிகாரம்,மசோதா விலக்கு அதிகாரம், ஆணையர்களை நியமிக்கும் அதிகாரம் ஆகியவற்றைக் கொண்டிருக்கிறார். மாநிலச் சட்டசபை, 31 உறுப்பினர்களைக் கொண்டு நான்காண்டுகளுக்குச் செயற்படும் ஆளவைமன்றம் (Senate) என்ற மேல் சபையையும், 150 உறுப்பினர்களைக் கொண்டு இரண்டாண்டுகளுக்குச் செயற்படும் மக்கள் சபையையும் கொண்டிருக்கிறது.



தெக்சாசுப்பல்கலைக்கழகம்

இம் மாநிலத்தில் மூன்று பல்கலைக்கழகங்கள் கல்விப் பணியாற்றுகின்றன. தெக்சாசுப்பல்கலைக்கழகம் தென் மாநிலங்களில் நிறைந்த அளவு பிஎச்.டி ஆய்வுப் படங்களை அளிக்கிறது. நாடு முழுவதும் படைக்கப்பட்ட முதன்மைத் தகுதி வாய்ந்த இருபது பிஎச்.டி ஆய்வுப் பட்டங்களில் பதிமூன்று ஆய்வுகள் தெக்சாசுப்பல்கலைக் கழகத்தைச் சார்ந்தவை. ஊசுட்டன் நகரிலிருக்கும் இரைசுப் பல்கலைக்கழகம் அதன் கல்வித் தரத்திற்குப் பெயர் பெற்றது. வாகோ நகரில் செயற்படும் பேலார்ப் பல்கலைக்கழகம் கி.பி. 1854-ஆம் ஆண்டிலேயே தொடங்கப்பட்ட பெருமையுடையது. இம் மாநிலத்தில் தனியார் அல்லது திருச்சபையால் நிருவகிக்கப்படும் ஐம்பதிற்கும் மேற்பட்ட கல்லூரிகளும் உண்டு. இங்குள்ள மக்கள் வரலாற்றுச் சிந்தனையுடையவர்கள; பாரம்பரியக் கோட்பாடுகளில் நம்பிக்கையுடையவர்கள். கலை, இசை, இலக்கியம் ஆகியவை மக்கள் வாழ்வில் முதன்மை இடத்தைப் பெற்றுள்ளன. ஏராளமான செய்தித்தாள்கள் இம்மாநிலத்தில் வெளியாகின்றன.

**தெகரான்** ஈரான் நாட்டின் தலைநகர். எல்பர்சு மலைத் தொடரின் தென்சரிவில, காசுபியன் கடலிலிருந்து வடக்கே, 100 கி.மீ. தொலைவில் சாசுருட்டு, கரசு என்னும் இரண்டு ஆறுகளுக்கிடையே தெகரான் (Teheram) அமைந்துள்ளது. இப்பெயர் பழைய பாரசீகச் சொல்லிலிருந்து வந்துள்ளது. 'தெ' (teh) என்ற சொல்லிற்கு 'கதகதப்பான' என்ற பொருளும், 'ரான்' (ran) என்ற சொல்லிற்கு 'இடம்' என்ற பொருளும் உண்டு. இந்நகர் 282 ச கி.மீ. பரப்பையும் 3,000,000 மக்கள் தொகையையும் (1970) கொண்டிருக்கிறது.



தெகரான் நகரம்

ஈரான் நாட்டின பழைய தலைநகர் இரே (Rey) என்னும் ஊா கி.பி.1220-இல் மங்கோலியர் படையெடுப்பால் அழிக்கப்பட்டதிலிருந்து, தெகரான தலைநகராக இருந்து வருகிறது.தெகரான் நகரைப் பற்றிமுதன் முதலில் வெளியுலகிற்குஎடுத்துச் சொன்

னவர் தான் ரூய் கோனசேல்சுகிளாவிசோ (Don Ruy Gonzales de Clavijo) என்ற ஐரோப்பியர் ஆவார். அவர் தைமூர் அவைக்களத்தில் காசுட்டைல் (Castile) என்ற நாட்டு மன்னரின் பிரதிநிதியாக இருந்தவர். பாரசீக நாட்டில் சபாவித்து (Safavid dynasty) என்ற அரச வமிசத்து மன்னர் முதலாம் சா தேமாசுப்பு (Shah Tahmasp) என்பவர் கி.பி.1553-54 ஆம் ஆண்டுகளில் இந்நகரில் ஒரு கடை வீதியையும், 144 கோபுரங்களையும், நான்கு வாயில்கள் உள்ள ஒரு சுற்றுச் சுவரையும் கட்டினார். 'பாரசீகப் பயணங்கள்' (Travels of Persia) என்ற நூலின் ஆங்கில நாட்டு எழுத்தாளர் தாமசு எர்பர்ட்டு என்பவர் கி.பி.1628-29 ஆம் ஆண்டுகளில் இந்நகரைச் சுற்றிப் பார்த்து, அங்குள்ள அழகிய பெண்கள், கண்ணைக் கவரும் தோட்டங்கள் ஆகியவற்றைப் பற்றி எழுதியுள்ளார். அதுசமயம் அங்கு 3000 வீடுகள் இருந்ததாகவும் இவர் குறிப்பிட்டுள்ளார். குவாசார அரச வமிசத்தை (Qajar Dynasty)ஏற்படுத்திய அகா மொகமது கான் என்பவர், இந்நகரை கி.பி.1785-இல் கைப்பற்றித் தலைநகராக்கியதிலிருந்து இந்நகர் உலகப்புகழ் பெற்றதாகி விட்டது இந்நகர் 1925 முதல் 1941 வரையுள்ள காலத்தில் இரேசா சா பலலவி (Reza Shah Pahlavi) என்பவரால் பலமடங்கு விரிவாக்கப்பட்டது 1943-இல் 'தெகரான் மாநாடு' இங்குக் கூட்டப்பட்டது. இதில் இரண்டாம் உலகப் பெரும் போரில் கலந்திருந்த அமெரிக்கா, பிரிட்டன், உருசியா ஆகிய நாட்டுத் தலைவர்கள் கூடிப் பேசினார்கள். ஈரான் நாட்டிற்கு விடுதலை நல்க இத்தலைவர்கள் உறுதி கூறியது இம்மாநாட்டின் குறிப்பிடத்தக்க விளைவாகும்.

கடும் வெப்பமும், கடும் குளிரும் கொண்ட கால மாறுபாட்டை இந்நகர் கொண்டிருக்கிறது. ஆண்டிற்குச் சராசரி 20செ.மீ. மழை இங்குப் பெய்கிறது திசம்பர் முதல் பிப்பிரவரி வரை இங்குப் பனி பெய்கிறது இங்குள்ள எண்ணெய் வளமே மக்கள் தொகைப் பெருக்கத்திற்குக் காரணமாக அமைந்துள்ளது. அதனால் தொழில், வாணிகம், வங்கித்தொழில் ஆகியன இங்குப் பெருகியுள்ளன. சாலை வசதிகளோடு, துருக்கி வழியாக ஐரோப்பாவை இணைக்கும் பெரிய புகைவண்டிப் பாதையும் இங்குண்டு. இதனுடன் உலகின் பலநாடுகளை இணைக்கும் விமான வசதிகளும் இந்நகர்க்குண்டு.

இந்நகரில் இசுலாமிய சமயத்தைச் சேர்ந்தவர்களே பெரும்பான்மையாக இருக்கிறார்கள். சிறுபான்மையினராக இருப்பவர்களில் கிறித்துவர்கள், ஆர்மினியன்கள், யூதர்கள், சொராசுத்திரியர்கள் ஆகியோர் அடங்குவர். இங்குப் பாரசீக மொழி பொது மொழியாக இருந்துவருகிறது. இந்நகரில் 40 விழுக்காடு மக்கள் ஓர் அறை கொண்ட வீட்டிலும், 30 விழுக்காட்டினர் இரண்டு அறை வீட்டிலும், எஞ்சிய 30 விழுக்காட்டினர் மூன்று அல்லது நான்கு அறைகள் கொண்ட வீட்டிலும் வாழ்ந்து வருகிறார்கள். 85% மக்களுக்கு மின்சாரமும்,பாதுகாக்கப்பட்ட குடிநீரும் கிடைக்கின்றன 1950-ஆம் ஆண்டிலிருந்து பத்துமுதல் பதினெட்டு அடுக்குகள் கொண்ட வீடுகளும் கட்டப்பட்டு வருகின்றன. இங்குள்ள சிறப்பு வாய்ந்த கட்டடங்களில், சேபா-சாலார் மசூதி,பகாசுதான மாளிகை, கெலெசுத்தான மாளிகை, நியவரன் மாளிகை, மசுசெட்-இ-சா மசூதி, சடாபாத மாளிகை, இரேசா சா அருங்காட்சியகம் ஆகியவைகளும், அனைத்திலும் சிறப்பாக மருமா என்ற பளிங்குக்கல் மாளிகையும் குறிப்பிடத் தகுந்தவை.

இங்குள்ள மக்களின் பொருளாதார நடவடிக்கைகளில் துணி, சிமெண்டு, சருக்கரை, புகையிலை தோல் காலணி, சீனப் பீங்கான்கள், மட்பாண்டங்கள், கண்ணாடிச் சாமான்கள், மின்சாதனங்கள், மருந்துப் பொருள்கள் ஆகியவற்றின் உற்பத்தியும் அடங்கும். ஈரான் நாட்டின் மொத்த உற்பத்திப் பொருள்களில், இந்நகரில் மட்டும் 51 விழுக்காடும் நாட்டின் மொத்த முதலீட்டில் 33 விழுக்காடும், நாட்டின் மொத்த ஊதியம், கூலி பட்டுவாடாவில் 60 விழுக்காடும் உள்ளன

தெகரானின் நகராட்சியை 30 போகளைக் கொண்ட உள்ளாட்சி அமைப்பு நடத்தி வருகிறது இதற்கு நான்காண்டிற்கு ஒரு முறை தேர்தல் நடைபெறுகிறது. இதில் 18 வயது நிரம்பியவர்களுக்கு வாக்குரிமை நல்கப்பட்டுள்ளது. இந்த உள்ளாட்சியின் தலைவர் நகரத்தந்தை (Mayon) என்று குறிக்கப்படுகிறார். ஆசியாவிலேயே உயர்தர நலவாழ்வு வசதி கொண்ட இந்நகரில் 100 மருத்துவமனைகளில் 1700 மருத்துவர்களும், 800 பல் வைத்தியர்களும் பணியாற்றி வருகிறார்கள். கல்விப் பணியில், 185 மழலையர் பள்ளிகளும், 1200 இடைநிலைப் பள்ளிகளும், 500 உயர்நிலைப்பள்ளிகளும், 25,000 மாணவர்களையும், 30 துறைகளையும் கொண்ட மூன்று பல்கலைக்கழகங்களும் இந்நகரில் பணியாற்றி வருகின்றன. 100க்கு மேற்பட்ட திரையரங்குகள், 11 அருங்காட்சியகங்கள், பத்திற்கு மேற்பட்ட நூலகங்கள், 30 விளையாட்டு மையங்கள், மூன்று வானொலி நிலையங்கள், நான்கு வழித் தொலைக்காட்சி அஞ்சல் நிலையங்கள் ஆகியன இந்நகரில் மக்களுக்குப் பயன்பட்டு வருகின்றன. அ.க.

**தெகால்பு**: இது அமெரிக்க நாட்டில் இலினாய் (Illinois) மாநிலத்திலுள்ள ஒரு நகராகும். இந்நகர் சிகாகோ நகரத்திலிருந்து மேற்கே 96கி.மீ

தொலைவில் உள்ளது. திரைச்சீலைக் கம்பிகள், பாதுகாப்பான மின்சாரக் கம்பிகள், இரும்புப் படுக்கைகள், மகளிர் ஆடைகள், பதப்படுத்தப்பட்ட உணவு வகைகள், மோட்டார் வாகன உறுப்புகள், மின்சார உந்து வண்டிகள், குளிர்சாதனப் பெட்டிகள், வீட்டிற்குத் தேவையான இருக்கைப் பொருள்கள் முதலியன தெகால்பு நகரில் உற்பத்தி செய்யப்படுகின்றன. இந்நகர், மேயர் மற்றும் மாநகராட்சி • ஆட்சிக்குழு இவற்றால் திருவாகம் செய்யப்படுகிறது. குடிதண்ணீர் வழங்கு முறை இந்நகராட்சியின் பொறுப்பில் இருந்து வருகிறது. இந்த நகராட்சிக்குச் சொந்தமான நூலகமும், மருத்துவமனையும் செயற்பட்டு வருகின்றன. இலினாய் மாநில ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி இந்நகரில் இயங்கி வருகிறது. இந்நகரில் மக்கள் தொகை 14,000 (1950). அ.க.

*தெசலி:* பண்டைய காலத்திய கிரேக்க நாட்டின் வடகிழக்குப் பகுதி தெசலி (Thessaly) என்று குறிப்பிடப்பட்டது. இதன் வடக்கு எல்லையாகக் 'கம்யூனின்' மலைத் தொடர் இருந்தது. இம்மலைக்கும் அப்பால் மாசிடோனியாப் பகுதி இருந்தது. மேற்குப் பகுதியில் பின்டுசு மலைப்பகுதியும், தெற்குப் பகுதியில் சீதா மலைப்பகுதியும், கிழக்குப்பகுதியில் ஏசியன் கடல் பகுதியும் இருந்தன. மலைப் பகுதிகளால் சூழப்பட்ட வளமான மண்ணைப் பெற்ற இப்பகுதியில், பெனியொசு (Peneios) என்னும் ஆறு மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி ஓடி இப்பகுதியை வளமைப் படுத்துகிறது. சிறந்த குதிரை இனங்களுக்கும், ஆற்றல் மிக்க குதிரையேற்ற வீரர்களுக்கும இப்பகுதி பெயர் பெற்றது. தெசலி என்ற பெயர் 'தெசல்' என்ற ஒரு வகைக்கிரேக்க இனத்தவர் பெயரிலிருந்து வந்ததாகும். இந்தக் கிரேக்க இனத்தவர் ஒருகாலத்தில் மேற்குப் பகுதியிலிருந்து இந்தப் பகுதிக்குக் குடிபெயர்ந்து வந்து, இந்தப் பகுதியை ஆட்சி செய்பவர்களாக மாறியவர்கள். ஒரு சமயத்தில் இந்தத் தெசலிப் பகுதி பலசிறு அரசுகளாகச் சிதறுண்டு, கிரேக்க நாட்டுப் பொதுவாழ்வில் எந்தவித செல்வாக்கும் இல்லாமல் இருந்து வந்தது. ஆனால், கி.மு.375-ஆம் ஆண்டளவில் பெரேவின் சேசன்(Jason of Pherae)என பவர் மக்களால் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பின், தெசலிப் பகுதி முழுவதையும் தம் அதிகாரத்தின் கீழ் கொண்டு வந்து, அதை ஒரு வலிமை மிக்க பகுதியாக மாற்றினார். அதனோடு கிரேக்க நாட்டின் பிறபகுதிகளையும் இவர் அசசுறுத்தத் தொடங்கினார். என்றாலும் கி.மு.370-ஆம் ஆண்டு இவர் கொலை செய்யப்பட்டபிறகு, தெசலிப் பகுதி தனது வலுவை இழக்கலாயிற்று. அதன்பின், இப்பகுதி மாசிடோனியாவைச் சார்ந்து இருக்க வேணடியதாயிற்று. இறுதியில் இப்பகுதி உரோமானியப் பேரரசோடு இணைக்கப்பட்டது. கிழக்கு உரோமானியப் பேரரசு என்னும்பைசாண்டியப் பேரரசு கி.பி.1393இல் வீழ்ந்த பிறகு, ஏனைய உரோமானியப் பேரரசுப் பகுதிகளோடு தெசலிப் பகுதியும் துருக்கியர்களால் கைப்பற்றப்பட்டது. பின்னர்த் தெசலியின் பெரும்பகுதி கி.பி.1881-இல் இக்காலத்திய கிரேக்க நாட்டோடு இணைக்கப்பட்டது. எஞ்சிய பகுதியும் 1919-இல் அந்நாட்டோடு இணைக்கப்பட்டது. அ.க.

*தெட்சல்:* இவர் செருமன் நாட்டைச் சேர்ந்த கத்தோலிக்கக் கிறித்தவ சமயப் பாதிரியார் ஆவார். இவர் கி.பி. 1465-ஆம் ஆண்டு செருமனியிலுள்ள இலெய்ப்சிக்கு (Leipzig) நகரில் பிறந்து, அங்கேயே கி.பி. 1519-ஆம் ஆண்டு சூலை நாலாம் தேதி மரணமடைந்தார். தெட்சல் (Tetzel) கி.பி. 1487-ஆம் ஆண்டு இலெய்ப்சிகு (Leipzig) பல்கலைக் கழகத்தில் பட்டக் கல்வி பெற்று, இரண்டு ஆண்டுகள் கழித்துக் கிறித்துவ மடாலயப் பணியில் சேர்ந்தார். அங்கு இவர் படிப்படியாக முன்னேறி உயர்நிலையைப் பெற்றார். கத்தோலிக்கச் சமயத் தலைவர் போப்புபத்தாம் இலியோ (Leo) என்பவா கி.பி. 1561 இல் இவரைச்சாக்சனிப் பகுதியில் பாவமன்னிபபுக்



தெட்சல

கோட்பாடுகளின் மாண்புகளை மக்களிடையே பரப்பும் பணி புரியப் பணித்தார். அதனோடு, உரோம் நகரில் புதிதாகக கட்டபபடும் புனித பீட்டா தேவாலயத்திற்குத் தேவைப்படும் நிதியைத் திரட்டும் பணியும் இவரிடம் நலகப்பட்டது. அச்சமயம், கிறித்தவ சமயத்திற்குப் பெரும் நெருககடியும், சோதனைகளும் ஏற்பட்ட காலமாகக் கருதப்படுகிறது. கிறித்து சமயத்தின உன்னதக் கோட்பாடாகிய பாவமனனிப்புக் கோட்பாடு, பணம் திரட்டுவதற்காக முறை தவறிப் பயன்படுத்தப்படுகிறது எனறு சமயப் பேராசிரியரான மாாட்டின் லூதர் எனபவர் கடுமையாக எதிர்த்தார். கி.பி. 1517-ஆம ஆணடு, பாவமன்னிப்புச் சீட்டு விற்பனையை எதிர்த்து மார்ட்டின

லூதர் 95 கட்டுரைகளை விட்டன்பெர்கு நகரில வெளியிட்டார். அதனால் அவர் சமயவிலக்குச் செய்யப்பட்டார். அதன் பயனாகக் கிறித்தவசமயம், கத்தோலிக்கச் சமயம எனவும் சீர்திருத்தக் கிறித்தவ சமயம் எனவும் இரண்டாகபபிளவு பட்டது. மார்டினலூதருக்குப் பதிலளிக்கும் வகையில தெட்சல் பாதிரியார், 106 கட்டுரைகளை வெளியிட்டு, திருச்சபையின நடவடிக்கைகளை நியாயப படுத்த முனைந்தார். எனறாலும், தெட்சல பாதிரியாரின் வாதங்களிலுள்ள சில கருததுகளை உரோமன் கத்தோலிக்கத திருசசபையினா ஏற்க மறுதது எதிர்ப்புத் தெரிவித்தனர். அதனால தெட்சல் பாதிரியாரின் ஆர்வம் குனறியது மட்டுமனறி, அவரது உடல் நலமும் பாதிக்கப்பட்டு விரைவில மரண மடைந்தார். அ.க.

**தெந்தேரா,** எகிப்து நாட்டிலுள்ள ஒரு கிராமமாகும். இக் கிராமம் பணடைக் கிரேக்க மொழியில 'தேன்தைரா' எனவும் வழங்கப்பட்டது. இப் பெயரும் பணடை எகிப்திய மொழியின திரிபேயாகும். நைல் நதியின மேற்குக கரையில் கேனாவுக்கு எதிாப் புறத்தில் இது அமைந்துள்ளது இக கிராமம் பழங். காலத்தில ஒரு நகரமாகவும் தலைநகராகவும் விளங கியது.

எகிப்திய கூர்ஙகோபுரக்காலத்திலிருநது, பசுத் தெய்வ வழிபாட்டின மையமாக தெநதேரா (Dendera) விளங்கிவருகிறது. இப் பசுத் தெய்வம அங்கே 'ஆதார்' எனக கூறபபடுகிறது. 'கிறித்துவுககுமுன முதல் இரண்டு நூற்றாணடுகளில் எகிப்தை ஆட்சி செய்த தாலமி மரபு மனனாகள ஆதார் தெய்வத்திற்கு ஒரு கோயிலைக கட்டினாாகள. உரோம நாட்டுப் பேரரசர் அககுடசு சீசர் இக்கோயிலைமுழுமையாகக் கட்டி அழகுபடுத்தினா. ஆனால, வரலாற்றுச் செய்திகளும் அப்பால் செவிவழிச் செயதியாக ஆதார் தெய்வத்திற்கு வேணடிய கோயிலை முதன்முதலாக கி.பி. 4-ஆம நூறறாணடில் வாழ்நத கூபு என்ற மனனன் கட்டினான் எனறும, கி.பி 6-ஆம் நூற்றாணடில் வாழ்நத முதலாம் பெப்பி மனனும், கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த முதலாம் அமெனேமெட்டு அரசனும், கி பி. 18-ஆம நூற்றாணடில் ஆட்சிபுரிந்த மூனறாம் துட்மோசு எனற மன்னனும் இக்கோயிலை மாற்றீடு செய்தனர் என்றும் செயதிகள உள்ளன.

பாதுகாக்கப்பட்டு நல்ல நிலையிலே மிகப் பொலிவுடன அமைநதுள்ள இககோயிலை விஞ்சும் அளவுக்கு வேறு எக்கோயிலும் சிறப்பாக இல்லை. அத்தகைய கலை நுணுக்கத்துடன், திட்டமிடப்பட்டுக் கட்டிய சிறப்பு மாளிகை போன்று இது அமைந்துவிட்டது. இக்கோயிலில நிறைய நிலவறைகளும், நடைவழிகளும, சிறிய அறைகளும் வேறெநதக் கோயிலிலும் காணமுடியாத அளவுக்குப் பெருஞ்சுவர்களில மறைத்துக் கட்டப்பட்டு அழகுபடுத்தப்பட்டுள ளன. சூரியக கடவுளோடு ஒனறுபடும் பொருட்டுத் தனிச சமயச்சடஙகு செயய ஓர் அறையும, பணடை உரோம நாட்டு மககளின மறைவினை முறைகளை வெளிப்படுததும சமயச சடஙகுகளுக் கானஅறைகளும் அமைநதுளளன. இத்தகைய சடஙகுகள் பெரும்பாலும எகிப்திய ஆணடின் நான் காம திங்களில நடைபெறும

இக்கோயிலின கூரையிலுளள வழிபாட்டு அறைகளில மிகவும முதன்மை வாயநதது 'வட்ட வடிவ இராசி' மணடலமாகும. தூண தாஙகிப் பெரும் அறைகளில் செவவக வடிவ இராசி மணடலஙகளும உளளன கூரையில வரையப்பட்டுளள நணடு ஒனறு வணடு போலவும் காட்டப்படடுள்ளது. இப் பெரிய கோயிலுக்கு அடுததாற்போல 'பிறப்பு இலலஙகள, என்ற சிறு கோயிலகளும் அமைந்துளளன. பிறப்பு இலலங்களில ஒனறினை அககுடசு கட்டினாா. பின னர் வேறு சில கோயில்களும் கட்டப்பட்டுப் 'புணணிய பூமி' என வழஙகலாயிறறு. பினனர் அதே இடததில் பண்டையஎகிப்தியத திருச்சபை ஒனறும் கட்டப்பட்டுளளது. இதன மக்கள தொகை 1962-ஆம் ஆணடு குடிமதிப்புக கணககுப்படி 16,320 ஆகும.

பொா.சு

**தெப்ரீசன்** அஙகேரி நாட்டிலுள்ள ஒரு நகரமாகும. இது அஙகேரியின (Hungary) கிழககுப பகுதியில் புடாபெசுட்டு (Budapest) நகருக்குக் கிழக்கே ஏறக்குறைய 2 கி மீ தொலைவில் அமைந்துளளது. இதன அருகில ஓரிட்டோபாசி எனற புலவெளிப பகுதி உளளது. அதனால் அதன் எழில்வணணம மிகுதியாகக காட்சி தருகினறது. இதன பரபபு 446,000 ச.கி.மீ. இந்நகரின மககளதொகை 205,000(1984). இது பல பொருள்களை உறபத்தி செய்யும மையமாக அமைநதுளளது. அப பொருளகள மக்களின வாழ்விறகும் வளத்திறகும் மிகவும பயன்படுகினறன. இங்கு உற்பததியாகும பொருளகளில் மிகக் குறிப்பிடத்தக்கது இயந்திரப் பொருளகள், மருநதுவகைகள், உணவுப் பொருளகள, அழகுமிக்க மர, இரும்புச் சாமான்கள் முதலியனவாகும. இப் பொருளகளை உருவாககுவதில் தெபரீசன முமமுரமாக ஈடுபடடுள்ளது வீட்டுககும், அலுவலகங்களுககும் தேவையான தளவாடச் சாமான்கள நனகு உற்பத்தி செயயப்படுகின்றன.

தெப்ரீசன இடைக்காலத்தில உருவாக்கப்பட்ட நகரமாகும். தானயூபுப் பள்ளத்தாக்கு முதல்

திரான்சில்வேனியா வரையிலான பகுதிகளில் வாழும் கால்நடைகளுககு உகநத இடமாக அமைந்திருந்தது அத்துடன தானியங்களை விற்கும் மையமாகவும இது விளஙகி வந்தது. இந்நகரம் கி பி 16–ஆம் நூற்றாண டில துருக்கியாகளால கைப்பறறப்பட்டது அதன பின் அவர்கள நிலை தளரவே காலவினியக கோட்பாடு காலூனறியது. அம மதம நன்கு வளர்ந்து நாளடைவில அதன போககையே மாற்றிவிட்டது எனலாம. சுருங்கககூறின காலவினிய சமயத்தின மையமாகவே அது காட்சியளித்தது வேளாணமையில அம்மக்கள பெரிதுமஈடுபட்டிருந்தனர். இப்போதும அங்கு வேளாணமையே முக்கிய தொழிலாகும. அதன விளைவாகப் பிற தொழிலகள குறைநது காணப்படுகினறன இருப்பினும கைவினைப பொருளகள் உற பத்தி தஙகுதடையினறி நனகு நடைபெற்றுவருகிறது. இங்குக் காணப்படும பல தொழிற்சாலைகள் கி.பி. 19–ஆம் நூற்றாணடில ஏறபட்டவை. அவை மெலல மெலல வளாநது இரண்டாம் உலகப்போருககுப் பினபு நன்னிலை எயதியுளளன. பல முனனேற்றங் களையும், பல தொழிற்சாலைகளையும் கொண்டிருந் தாலும்கூட இந்நகர மக்கள கிராம மக்களைப் போனறே அன்றும இனறும காணப்படுகிறாாகள. இம் மக்கள கடின உழைப்பாளிகள். இவாகள எப் போதும தஙகள வாழவு வளர, வளமடையப பாடு பட்டு வருகிறாாகள எனபது உணமையேயாகும. இந நகருககு எழில கூட்டுவது பணடைய பாணியில எழுப் பப்பட்ட சீதிருததக்கிறித்தவத் திருச்சபையே என றால அது மிகையாகாது. இஙகு ஒரு பலகலைககழகம உளளது. அது 1912–ஆம் ஆண்டில ஏற்படுத்தப்பட்டது. நா ஜெ.

*தெபோரா* எனபது பழைய ஏற்பாட்டில (Old Testament) காணபபடும் பெயராகும். தெபோரா (Deborah) ஈப்ரு (Hebrew) இனத்தைச சார்ந்த பெண தீரககதரிசி அலலது நீதிபதி ஆவார். அவா பெயா பழைய ஏறபாட்டில பலவிடஙகளில் இசுரேலின தாய என்று குறிப்பிடப்பட்டுளளது. கனானைட்டு அரசன் சாபின என்பவருடன் ஏற்பட்ட போரில் 'இசுரேல் மக்கள்' வெற்றிபெற்றதைக் குறிப்பிடுமபோது அவரால தான்வெறறிஏற்பட்டது என்று கூறப்பட்டுளளது. அம் மக்களின் வெற்றிககு ஆக்கமும், ஊக்கமும் தநதவர் அவ் வம்மையாரே எனலாம அவரது தூணடுதலினாலதான் இசுரேல் மக்கள பெருவெற்றி பெற்றார் கள என்றால் அது மிகையாகாது. அதன விளைவாகவே வடக்கேயிருந்த இனத்தவர்களும், தெற்கே இருந்த இனத்தவர்களும் ஒனறாக இணையமுடிந்தது.

தெபோரா எனற பெயர் புகழ்பெற்று விளங்கக் காரணமாக அமைந்தது அவரைப் பறறிய பாடலே ஆகும். அப்பாடல் ஈபுரு மொழியின புகழ் பெற்ற, ஏற்றம் மிக்க பாடலாகும் அப்பாடல் வெற்றியின் வீரகாவியம் மட்டுமன்று, இசுரேல மக்களின கடவுளே தேவலோகத்திலிருந்து இறங்கிவந்து பகைவாகளுடன் போரிட்டு மககளுக்கு வெற்றிக கனியினைத் தந்தார் எனபதை விளக்கும் வீர ஏடும ஆகும; அதுமட்டுமல லாமல அககால மக்களின சமுதாய, பொருளாதார அரசியல நிலைகளையும் நனகு படம்பிடித்துக் காட்டுகிறது.

இசுரேல படைகளின் தலைமைத தளபதியான பாராககு என்பவரின ஒத்துழைப்புடன தெபோரா எழுதினர் என்பது கருதபபடுகிறது அவா அநத அமமையாரைச் சநதித்து அப்போரில வெற்றி பெறுவதற குரிய வழியினையும அறிவுரைகளையும கேட்டறிந தார். எனவே, தெபோரா எனற அமமையாா இசுரேல் நாட்டு இனத்தவாகளை இணைநது போரில ஈடுபடும்படி கேட்டுக்கொணடாா. கடவுளமீது நமபிக்கை வைத்து எல்லோரும இணைநது செயறபட்டால்வெற்றிபெறுவது உறுதி என்று கூறினார். 'கடவுளிடம் வணஙகி, வேண்டி வெறறியடைய நான பாடுபடுவேன்' என்று கூறினாா அவரது ஆக்கமும ஊககமும போறறுதறகுரியன. எனவே, இசுரேல மக்கள அவரை வாழவைதத தெய்வமாகப் போறறுகினறனா, ஏததுகின்றனர் இசுரேலின் தாய் எனறு பாராட்டுகினறனா. விவிலிய நூல அவரைப் பறறிப பல இடஙகளில பலபடப பாராட்டியுளளது. 'இசுரேல' எனற புண்ணிய பூமி அவரால ஏறககுறைய 40 ஆணடுகள் அமைதியான வாழவில நடைபோட்டது எனறு கூறுகிறார்கள அவரது வாழ்வால் இசுரேல மக்கள் வாழவு வளம பெறறது; அவரது வரவால் இசுரேல் பெருவெற்றி கணடது. அவரது வழிகாட்டுதலினால் அம் மக்கள அமைதி வழி காண நோந்தது எனறால் மிகையாகாது. நா.ஜெ.

*தெமாசுதனீசு* கிரீசு நாட்டிலுளள ஏதென்சு நகரத்தில் கி.மு. 384–ஆம் ஆணடு பிறந்தார். இவா தம் தந்தை போர்த் தளவாடஙகள உறபத்தி செய்யும தொழிலில் ஈடுபட்டிருநத செல்வா. அவர் தெமாசுதனீசு ஏழு வயதுச் சிறுவனாக இருநத பொழுது தம் சொத்துகளையும், தம மகனையும் பாதுகாவலர்கள பொறுப்பில விட்டுவிட்டு உயிர்நீத் தார். சொத்துகளின் பெருமபகுதியைப் பாதுகாவ லர்கள் கைப்பற்றிக் கொண்டனர். தம் சொததுக் களை மீட்கத் தெமாசுதனீசு வழககுத் தொடுத்தார். அதன் விளைவாகச் சட்ட நுணுக்கங்களைக் கற்றறிந் தார்.

தெமாசுதனீசு தெற்றுவாயர். முதலில் பேச் சாளர்களுக்குச் சொறபொழிவுகளைத தயாரித்துக கொடுத்துக் கொணடிருந்தார். பின்னர்த் தாமும்

ஏன் சொறபொழிவாறறக்கூடாது எனற எண்ணம் எழுந்தது. தம் குறையைப் போகக வாயில் கூழாங கற்களைப் போட்டுககொணடு பேசிப் பழகியதாகக கூறப்படுகிறது. தாம் சிறநத பேச்சாளராக வேண டும எனற ஆாவம் அளவுக்கு மீறி இருந்ததால வெளியில் செலவதைத் தவிர்ககத் தலையின ஒரு பகுதியை மழித்துககொணடு நிலவறை ஒனறில இருநது பேசிபபேசிப பயிறசி செயதாா. இவரது விடாமுயற்சியும அளவில்லாத ஆாவமுமே இவரை உலகின் தலைசிறநத பேச்சாளாகளுள முககியமான வராககியது.

தெமாசுதனீசு கி.மு. 355-இல் பொது வாழவில ஈடுபடத் தொடஙகினார். ஏதெனசில பல சீாதிருத தங்கள கொணடு வருவதறகாகப் பாடுபடடார் அணடை நாடான மாசிடோனியாவின அரசாபிலிபபு என்பவர் கி.மு 340-இல் கிரீசைக கைப்பறறும முயற்சியில ஈடுபட்டாா. இதையறிநத தெமாசுதனீசு தம் வாழநாளின இறுதிவரை தமமுடைய பேச சாறறலின மூலம் ஏதெனசு மக்களை மாசிடோனி யாவுக்கு எதிராகக கிளர்ந்தெழச செயவதில ஈடு பட்டாா.

தெமாசுதனீசுககும் மற்றொரு பேசசாளரான அச்சின்சு (Aeschines) எனபவருககுமிடையே கடும் பகை ஏற்பட்டது. அசசமயம தெமாசுதனீசு 'கிரீடத் தின் மீது' (On the Crown) என்ற மிக உயர்நத சொறபொழிவை ஆறறினாா.நாட்டின நலனுககாகத தம வாழநாளை அாபபணித்த தெமாசுதனீசுககு மரண தணடனை வழஙகப்பட்டது. மனமவருந்திய தெமாசுதனீசு தணடனை நிறைவேறறப்படுமமுன கி.மு. 322-இல நஞ்சருநதித் தற்கொலை செயது கொணடாா.

தெமாசுதனீசின சொற்பொழிவுகள என நம்பப் படும் 61 உரைகள கிடைததிருக்கினறன. இவர் மறைநதுவிட்டாலும இவரது சொற்பொழிவுகள அத்தீனிய நாகரிகத்தின பெருமைகளுள ஒனறாக அழியாப் புகழ்பெறறுத திகழ்கினறன. ஆ.செ.

**தெமிசுடாகிளிசு** (கி.மு. 6-கி.மு. 5-ஆம் நூ.): இவர் ஏதென்சு (Athens) நகரததின சிறந்த அரச தநதிரியும, தளபதியுமாவார். கிரேகக நாட்டைப் பாரசீகரிடமிருந்து காதத பெருமை இவரையே சாரும்.

இவர்தம் தநதை, இலிகோமிடே (Lycomidae) என்னும பெருமை பொருந்திய பழைய கிரேக்கக் குடும்பத்தைச் சேர்ந்தவர்; நிறைந்த புகழ் பெறாத வர். தாய ஏதெனசைச் சேர்ந்தவரல்லர். பிரபுக் களின் செலவாக்கை மிகவும நமபியிராமல, மககள ஆதரவையே நமபி வாழ்நத தெமிசுடாகிளிசின (Themistocles) இளமை வாழககையைப் பறறிய செய்திகள மிகுதியாகக கிடைககவிலலை.

பாரசீகர்களின் வலிமையை நனகுணர்ந்திருந்த தெமிசுடாகிளிசு, அவாகளை வெல்லும வாயபபை எதிாநோககியிருநதாா. இலாரியம (Laurium) என னும் சுரஙகத்திலிருநது தோணடி எடுத்த வெளளி யைக் கொணடு ஏதெனசின கடறபடையை நவீனப படுததத தூணடினார். எதீனியாகளின தலைவரான பிறகு, இசுபார்டாவின (Sparta) தலைமையை ஏறகு மாறும, கடல வலிமையை மிகுநத அளவில பெருககு மாறும அவாகளிடம வேணடினார்.

சலாமிசு (Salamis) என்னுமிடததில கிரேககத தளபதிகளை ஆர்வததுடன போரிட ஊககுவிததாா. இவா வடிவமைதத புதிய எதீனியக கபபலகளும, போரில இவா ஆறறிய வீர உரையும சலாமிசு வெற்றிககு வழி வகுததன. இசுபாாடாவிலும இவ ருககு மாபெரும வரவேறபுக் கிடைததது.

அடுத்த இலையுதிர் காலததில இவா எதீனியக கடறபடையை ஏசியன தீவுகளுககு (Aegean Islands) இட்டுச சென்றாா. நிலததிலும நீரிலும முழுவது மாகப் பாரசீகர்களை வென்ற இவா, ஒரு சதியின காரணமாகத தலைமையை இழகக நேரிட்டது. பாரசீகததிறகெதிரான தலைமைப பதவி கி.மு. 478-இல இசுபாாடாவிலிருநது ஏதெனசுககு மாறியது.

அடுதத ஆறு ஆணடுகளுக்கு இவரைப் பற்றிய செய்திகள சரிவரத தெரியவில்லை. ஏதெனசை வலிமை குன்றச்செயத இசுபாாடாவினா (Spartans) மேறகொணட முயறசிகளை இவா தீவிரமாக முறி யடிததாா எனபது மாததிரமே தெரிய வருகிறது.

'பொனீசிய மகளிாகள' (The Phoenician Women) எனற துனபியல நாடகம கி.மு. 479-இல வெளிவரப் பெரிதும பண உதவி செய்தாா. ஆாகசு (Argos) எனனுமிடம சென்று இசுபாாடாவிறகு எதி ரான முயறசிகளை மேறகொண்டார்.

'பசானியசு' (Pausanius) எனனும இசுபாாடா வின ஒற்றரை எதிாத்துத 'துரோகம் புரிநததாகக குற்றம சாட்டப்பட்ட இவா, ஆர்கசை விடடுக் கார்சி ராவிறகு (Corcyra) ஓடி, பிறகு மலாசியர்களின (Molossians) அரசரிடம அடைககலம நாடினாா. பினபு மாசிடோனியாவைக (Macedonia) கடநது ஏசியன் தீவுகளுக்கும, அஙகிருநது தோனியா (Tonia) எனனுமிடத்திற்கும் தபபி ஓடினார்.அஙகுச 'செர்க்சசு (Xerxes) எனனும அரசரின மகன 'ஆர்ட்டா செர்க

சு' (Arta Xerxes), எனபவர் பதவி ஏற்றிருந்தார். அவரிடம் தெமிசுடாகிளிசு சரண புகுந்தார். பிறகு பாரசீகர்களால் சிறப்பிககப்பட்டு, மக்னீசியாவை (Magnesia) ஆள்வதறகும் அனுமதிக்கப்பட்டார். மற்றும் சில நகரஙகளும் இவரது பாதுகாப்புக் காக அளிககப்பட்டன. பிறகு சில நாட்களிலேயே இவர் இயற்கை எயதினார்.

தூசிடைடிசு (Thucydides) என்னும் கிரேகக ஆசிரியர், தெமிசுடாகிளிசின் கூர்ந்த அறிவையும், பின் வருவனவற்றை முன் கூட்டியே அறியும் திறமையையும் பாராட்டுகிறார். அரசியலில் அதிக ஆர்வம் காட்டினார இவர். இசுபார்ட்டாவிற்கு அடஙகியிருக கும் வரை ஏதெனசால் முன்னேற இயலாது எனப தனை இவர் உணர்ந்தார். இவரது கடற்படைக் கொள்கை ஏதென்சின் வெற்றிற்கு வழிகோலியது. ஆனால, தனி வாழ்க்கையில் இவர் நேர்மைக்கு எடுத்துக்காட்டாகார் எனபது தெரிய வருகிறது. ஆசுடியா(Ostia) என்னுமிடத்தில இவரது ஓவியம் ஒன்று கி.பி.1939-இல் கிடைத்திருக்கிறது. சௌ.ல.

**தெமிட்ரியசு, முதலாம்:** மாசிடோனியாவை ஆண்ட செலுகசு அரசர்களின மரபு வழியைச் சேர்ந்த முதலாம் தெமிட்ரியசு (Demetrius I) கி.மு.160-இலிருந்து அரசராக ஆட்சி புரிந்துவந்தார், இவருடைய தநதை நான்காம் செலுகசு என்பவரின் ஆட்சிக்காலத்தில் இவர் உரோமாபுரிககுப் பிணையமாக அனுப்பி வைக்கப்பட்டார். அங்கே இவருக்கும் கிரேக்க அரசியல் மேதையும் வரலாற்றறிஞருமான போலிபியசுக்கும் (Polybius) இடையே மிக நெருங்கிய நட்பு ஏற்பட்டது. இவரின் உறவினரான ஆன்டியோகசு நானகாம எபிபானசு (Antiochus Ephephanus) கி.மு 163-இல் காலமானார். சிரியாவுக்குத் திரும்பி அரியணைக்கு உரிமை பாராட்டுவதற்காக உரோமானிய செனட்டின் அனுமதியைத் தெமிட்ரியசு நாடினார். அனுமதி மறுககப்பட்டதும் போலிபியசின் உதவியைக கொணடு இவர் சிரியாவிற்குத் தப்பிச் சென்றுவிட்டார்.

சிரியாவிற்குத் திரும்பிய தெமிட்ரியசை உணமை அரசராகப் படை வரவேற்றது. ஆனால் பாபிலோனியாவிலும மீடியா (Media) விலும் திமார்கசு (Timarchus) என்ற ஆளுநர் தம்மை அரசராக விளம்பரப படுததிககொணடு உரோமாபுரி ஆட்சிப் பேரவையின அங்கீகாரத்தையும் பெற்றுக கொண்டார். திமார் கசுக்கெதிராக கி.மு 161-160-இல் தெமிட்ரியசு நடத திய படையெடுப்பில் மாபெரும் வெற்றிபெற்று அதற் காக 'இரட்சகர்' (Soter) எனறபட்டப்பெயரையும புனைநதுகொணடார். இந்நிலையில ஆட்சிப பேரவையும இவரை அரசராக ஏற்றது. பினனா கி.மு.160-இல நடைபெற்ற யூதர்களின் கிளர்ச்சியும் ஒடுக்கப்பட்டது. எனினும எஞசியிருந்த மக்காபியர் களின் வசப்பட்டிருந்த எல்லை மாவட்டங்களில் எதிர்ப்பு அவ்வப்பொழுது தலைகாட்டிக் கொணடிருந்தது. பின்னாளில் சுடையாவில் தஙகியிருந்த பிளவுக் கூறுகள் மீண்டும தலைதூக்கின. ஆகவே, செலூசியர்கள் உடன்படிக்கை செயது கொள்ள நேரிட்டது. அதன்படி செலூசியாகள் சுடையாவில் தங்கள் படைகளை நிறுத்தி வைத்துக்கொளளலாம எனறும் அங்கிருக்கும் மக்களுக்கு சமய உரிமை வழங்கப்பட வேண்டும் என்றும் முடிவாகியது.

தெமிட்ரியசின் வெளிநாட்டுக் கொள்கையைப் பொறுத்தவரை பெர்காமம், எகிபது ஆகியவற்றின் பகைமையை இவர் பெற நேரிட்டது அவ் விரு நாடுகளும் உரோமானிய ஆட்சிப பேரவையின இரகசிய ஆதரவுடன அலெகசாண்டர் பலாசு (Alexander Balasu) எனற போலி உரிமையாளருக்கு ஆதரவு காட்டின. அவற்றின உதவியுடன அலெக்சாண்டர் தெமிட்ரியசைப் பதவிநீககம் செய்துவிட்டார். அவ விருவருக்குமிடையே நடைபெற்ற போரில் தெமிட்ரியசு வீர மரணமுற்றார.

**தெமிட்ரியசு இரண்டாம்:** இவா நிகேடார் அலலது மாபெரும வெறறியாளா எனறு அழைக்கபபட்டவர் (கி.மு.161-126). இவர் முற்குறிப்பிட்டவரின மகனாவாா. இவர் கி மு 145-139-இலும் மீணடும கி.மு. 129-இலிருநதும அரசராக விளஙகினாா. சிரியா திருமபிய இவர் (கி மு.147) அலெக்சாணடா பலாசை எதிர்த்தாா. எகிப்தின நான்காம் தாலமியின உதவியுடன் கி.மு.145-இல வெற்றி பெறறு அரசரானாா. அதே ஆணடில் ஒனோபோரசு போரில்(Battle of Onuoporus) பலாசும தாலமியும் கொலலப்பட்டதும இவர் அரசப் பதவியேற்றார். எனினும், இவருடைய நாட்டுப்பகுதிகள முழுவதிலும பற்பல தொல்லைகள் ஏற்பட்டன. இளம் வயதினராக இருந்ததனால இவரால் நிலைமையைச் சமாளிகக இயலவிலலை. சிரியாவில கி.மு 140-இல கடுமையான உளநாட்டுப் போர் ஒனறு நடைபெறறுக கொண்டிருநததையும் இவா பொருட்படுத்தாது பார்ததியப் படையெடுப்பாளர் களின் மீது பாய்நது அவர்களைப பாபிலோனியாவிலிருந்து விரட்டியடிததார். இவரை அவர்கள கி.மு. 139-இல் முறியடிததுச் சிறைபிடித்தனா. இவா கி.மு 129-இல விடுதலைபெறறுச் சிரியா திருமபினார். இவருடைய குறுகிய கால இரணடாம முறையான ஆட்சியினபொழுது இவர் தம் நாட்டின ஒருசில பகுதிகளின மீதுதான ஆதிககம் செலுத்தமுடிநதது. இறுதியில் இவர் கொல்லப்பட்டார்.

**தெமிட்ரியசு மூன்றாம்:** சிறிது காலமே ஆட்சி புரிந்த இவர் (கி.மு.95-88) செலூசியா அரசின் இறு

திககாலச் சிரியாவில நிலவியிருநத குழபபஙகளைச சமாளிகக இயலவிலலை. இறுதியில பார்ததியா களால் சிறை பிடிககப்பட்டு உயிாநீததார். அ. உ.

**தெமியார்,** மலேசியாவில வாழும் முதுகுடி களுள ஓரினததவா. இவாகள மலேசியாவின உட் பகுதிகளில கரடுமுரடான நிலப்பகுதிகளிற பாயும் ஆறறுப பககஙகளில வாழகினறனர். ஏனெனில, மலேசிய மககளின அருகில வாழவதறகு இவர்கள பயபபடுகினறனா. சுமத்திராகளும்(Sumatrans),மலே சிய மக்களும சேர்நது தெமியாாகளை (Temiars) அடிமைகளாகப பிடிததுக கொடுமைபபடுத்தியது முதல இவர்கள மககள எளிதில் அடையமுடியாத இடஙகளுககுச் சென்று வாழ முறபட்டனர். ஆனால் இபபோது சீமாஙகு(Semang)மககளால ஓரளவு இவா கள காபபாறறபபட்டனர். தாழநிலஙகளில வாழநத தெமியாாகளுள சில குழுவினர் மலேசியர்களை மணநதுகொணடு கலப்படைநதுவிட்டனா..

மலேசியாகள தெமியாகளைச் 'சக்காய' என்றே குறிபபிடுவா. மலேசிய மொழியில் இச்சொலலிறகு அடிமை எனபது பொருள. இனறைய தெமியார்களை அவர்கள வாழும இடத்திற்கேற்பச சககாயபுககித்து (Sakait Bukit) எனறும, சக்காய தாரட்டு (Sakai Darat) எனறும் மலேசியர்கள் கூறுகினறனா. இவை முறையே மேட்டுநிலத் தெமியார்கள், தாழநிலத் தெமியார்கள எனப் பொருளபடும.

தெமியாா பழங்குடியினா நீககிரோ இனத்த வருடன கலபபடைநதவாகளாகக காணப்படுகினற னா. குட்டையான உயரம, தடித்த உதடுகள, முக அமைப்பு, தலைமயிரின தோற்றம் அனைத்தும மலேசிய மககளிடமிருந்து பிரித்துக காட்டுவதுடன் நீககிரோ இனத்தவரின் சில பணபுகளையும் காட்டு வதால இவாகளுக்கும் நீககிரோ இனத்தாருக்கும தொடர்பு ஏற்பட்டிருக்கலாம் எனறு எண்ணவேணடி யுளளது.

மிகவும நெருங்கிய உறவுடைய குடும்பததினா ஒனறுசோநது காட்டுப் பகுதிகளில நிலங்களைத தோந்தெடுததுச் சொநதமாக்கிக் கொளகினறனர். இவாகள் காட்டை அழிதது வேளாணமை செயயும முறையைக கொண்டுள்ளனர். குறிப்பிட்ட காலம பயிரிட்டபின அடுத்துளள காட்டை அழித்து அங்குப் பயிரிடுகினறனா. இவாகளிடையே மககள பெருககம மிகுதியாக இலலாததால் நெடுநதொலைவிறகு இடம் விட்டு இடம மாறிப பயிரிடவேணடிய தேவை ஏற படவில்லை இவாகளின் முக்கிய பயிா தினை வகை



தெமியார் பெணகளும் சிறுவர்களும்

களாகும். ஆனால, இனறைய தெமியார் மககள மர வளளிக கிழஙகு, நெல், மககாச்சோளம், பூசணி, வாழை, பிற கிழஙகு வகைகள முதலானவறறைப் பயிரிடுகின்றனா.

உணவுப் பறறாககுறை ஏறபடுமபோதும் மீனபிடிப்புக குறையுமபோதும காட்டு விலஙகுகளை வேட்டையாடி உண்கினறனா. இவாகளுள குழநதைகள,உடல நலமறறோர், தெயவததனமையுற்றவன் (Shaman) முதலானோா இறைச்சியை உணபதில்லை. காட்டுப பொருள்களை மிகுதியாகச் சேகரிககினறனா. மூங கிலகள இவாகளின துணைத தொழிலகளுககு மிகுநத பயனுடையதாய உளளன இவறறைக கொணடு ஊதுகுழல, கைவினைப் பொருளகள, வீட்டுப பொருளகள முதலானவறறைச் செயது சீனாகளிடமும் மலேசியர்களிடமும கொடுதது அவாகளுககு வேணடிய இரும்பு, உடைகள், புகையிலை, உபபு மூதலானவறறைப் பெற்றுக கொளகினறனா. அத்னோடு மூஙகிலைக கொணடே வீடு கட்டுகின றனர்; வில, அம்புகளைச் செயகினறனர்.

மலைப் பகுதிகளில் வாழும தெமியாாகளின வீடுகள 120 அடி நீளமும 60 அடி அகலமும் தரையிலிருநது 20 அடி உயரமும் கொண்டு கட்டபபடுகினற்ன இதில பல குடுமபஙகள் வாழ்கினறன. மூஙகிலால வீடுகளைக் கட்டுகினறனா. வீட்டின் அடித தளமும மூங்கில பட்டைகளே. கூரை, ஒருவகைப பனை ஓலைகளால வேயப்படுகினறது. வீடு கட்டுவ தறகுப் பெரும பொருள செலவு ஆவதால் இடம விட்டு இடம் மாறும வேளாண நிலங்களைப் பெரும் பாலும் வீட்டிற்கு மிகத தொலைவில் அமைததுக் கொளவதிலலை

இவர்களது அரசியல அமைப்பில பெரும் மாறுதலகள ஏறபட்டுளளன. தொடககக காலததில இப் பழங்குடிகளுககும் பிற மலேசிய மககளுககுமிடையே நிகழந்த பலவேறு நடவடிககைகளைக கவனிப்பதறகு மிககாஙசு (Mikongs), பாஙகுசு(Pangkus) என்ற மரபு வழி அமைபபுகள இருநதன. ஆனால, இன்று இவவமைப்புகள நீக்கப்படடுவிடடன. மலேசிய அரசின பழஙகுடிகள நலததுறை இநதப் பொறுப்பைப் பழஙகுடித தலைவனிடமே விட்டுவிடடது.இவர் தலைமையில இயங்கும பழஙகுடி அரசியல் அவை (Tribal Council) அனைத்து நடவடிககைகளையும் கவனிததுககொளகிறது.

மலைப் பகுதிகளில் வாழும தெமியார் பழஙகுடிகள வெளி உலகுடன தொடாபு கொண்டிருக்க வில்லை எனறாலும் மலேசியாவில் அவசர நிலைக் காலம் (Emergency) இருந்தபோது (1948-1960)



தெமியார் வீடு

பொதுவுடைமைக கட்சியைச் சேர்நத கொரில்லாக களிடமிருந்து பாதுகாப்பாக இருககு வெவ்வேறு இடஙகளுக்குக் குடிபெயர்நதனா. இபபோது அரசு இவாகளை வெளியாருடன தொடர்புபடுததி இவர் களின் வாழ்க்கையை உயர்த்தப பல நடவடிககை களை எடுததுள்ளது. தாழநிலத் தெமியார் மககளைப பினபறறி இவாகளும மலேசியப பணபாடடைச் சிறிது சிறிதாக ஏறறுககொணடு வருகினறனர்.

சீ.ப.

**தெமோகிரிடசு** (ஏறத்தாழ கி.மு. 460 முதல் கி.மு. 370 வரை) இவா ஒரு சிறநத கிரேக கத் தததுவ ஞானி அணுக் கொளகையை (Atomism) உலகிறகு உணாததியவாகளுள ஒருவா. வெடடவெளி யில (Void) சுழல்கினற நுணணிய அணுககளால ஆனதே உலகம எனறு உலகைப் பற்றி விளககம தரு கிறாா. தெமோகிரிடசு (Democritus) திரேசு எனனு மிடத்திலுள்ள அபதேராவில கி.மு. 460-இல பிறந தாா. சாகரடீசிககுப் (Socrates) பதது வருடஙகள இளையவரிவர். இருப்பினும சாகரடீசுககு முனகாலத் திய அணடவியல (Cosmology) அறிஞாகளுள இவரே இறுதியானவராகக கருதபபடுகிறாா. இவரால விளக கபபட்ட அணுககொளகை, இவருககு முன்னரே இவர் தம ஆசிரியர் உலூசிபசு (Leucippus) எனபவரால உணரப்பட்டிருக்கிறது இவவிருவருள யாா, எநத அளவுககு அணுக் கொளகையை உலகிறகு உணாததி யுளளாா எனத் தீர்மானிததல் சறறுக கடினம.

இவா ஒரு சிறந்த எழுத்தாளருமாவாா. ஆனால், இவாதம் நூல்களுள் மிகச சிலவே காக்கப்பட்டிருக் கின்றன. அண்டவியல, நீதி, வானவியல, புவியியல, மருததுவம, கணிதம, மொழியியல், இசைக கோட் பாட்டியல மறறும் பல செய்திகளைப் பற்றி அறுப துக்கும் மேலான நூல்களைப் படைததிருககிறாா. இவர்தம நீதி நூலகள இவருடைய அமைதி, ஊககம் போன்ற நலவியலபுகளைப் பறைசாறறுகினறன.

பார்மினிடிசு (Parmenides), சீனோ (Zeno) மற் றும் மெலிசசு (Melissus) போனற அறிஞர்கள் இவ் வுலகின நிலைத்தனமையை மறுக்கினறனர். இவ்வுல கம் மாயை என வலியுறுத்துகினறனர். ஆனால், உலூ சியசு மறறும தெமோகிரிடசு போன்ற அணுவியல வலலுநாகள வெறறிடத்தில சுழலகின்ற எணணிறநத நுணணிய அணுககளைக் கொணடதே இவவுலகம் என்கினறனர். இவவணுக்கள உணர்வுககெட்டா தவை, நிலைத்திருப்பவை, மற்றும் பிரிக்க முடியா தவை; வடிவம், உருவம், இருப்பிடம், அமைவு, வேகம் இவற்றில இவை மாறுபடுகினறன. ஒவ்வொரு பொரு ளும நுண்ணிய அணுக்களின் தொகுதியே என்பது அணுவியல் அறிஞர்களின் கொளகை

அணுக்களின் அசைவில் ஏறபடும விளைவுகளே எணணம், உணாவு முதலியவை. புலனுணாவினால ஏறபடும அறிவானது அவவளவு சிறநத அறிவனறு. அணுககொள்கையைச் (Atomic Theory) சரியானபடி புரிந்துகொளளுதலே உயர்ந்த அறிவாகும.

எபிகுரசு (Epicurus) எனபவரும் இவ்வணுக் கொளகையைப் பின்பற்றியிருககிறார். அவருக்குப் பினவந்த உலூகரிசியசு (Lucretius) எனபவர் தம் பாடலகளிலொன்றில இதைப் பறறி விளக்கியிருக் கிறார். அணுவைப் பறறிய அவரது விளக்கம இன றைய அறிவியல மற்றும் தததுவ முனனேற்றத்தில ஒரு குறிப்பிடததக்க தாககததை ஏறபடுத்தியுள்ளது.

சௌ.ல.

**தெய்லர் ஆல்பிரடு எட்வர்டு** (கி.பி. 1869–1945) ஒரு ஐரோப்பியத தத்துவ ஞானி. இவர் நார்ததாமபடனசயரிலுளள (Northamptonshire) உனடேல் (Oundale) எனனுமிடத்தில பிறந்தார். இவர் ஆசசுபோர்டிலுள்ள புதிய கல்லூரியில (New College) படித்தார் இவர் மானசெசுட்டெரிலுளள ஒயனசு (Ounes) கலலூரியில விரிவுரையாளராக கி.பி. 1891 முதல் 1898 வரை இருந்தார். பிறகு மாண்டிரீலிலுளள மெககில் (McGill) பல்கலைக்கழ கததில பேராசிரியராக 1903 முதல் 1908 வரை இருந தாா. பிறகு அற இயல பேராசிரியராகப் புனித ஆண்ட்ருசு (Andrews) பலகலைக்கழகததில் 1908முதல 1924 வரையும, பேராசிரியராக எடினரோ பலகலைக் கழகத்தில 1924 முதல 1941 வரையும் பணியாற்றி னாா. இவா கிரேக்கத்தத்துவததில வலலுநராகவிளங கியதோடு அற இயலிலும், புலன கடநத மெயப பொருளியலிலும், சமய தததுவத்திலும் கட்டுரை கள எழுதியிருக்கிறார். கிரேக்கத்தத்துவததில பிளேட்டோவைப் பறறி இவா சிறந்த நூல எழுதி யிருக்கிறாா. தெயலரின தத்துவம் ஒழுககததில ஏற பட்ட சிக்கல் (Problem of Conduct) எனற நூலிலும, புலன கடந்த மெய்ப்பொருளின கருப்பொருள் (Elements of Metaphysics) எனற நூலிலும் முதலாவ தாக வெளிப்பட்டது. எப் எச. பிராட்லியின மீது இவர் ஈடுபாடு கொணடார் ஆனமா என்னும் உணாவை முதன்மையாகவும் மையமாகவும்கொணடு ஆனமாவே உணமை எனவும் அதன செயல்களே உணமை எனவும விளக்கும் கொளகையினைக் கருத் துக்கொள்கை (Idealism) என்பா. தெய்லர் கூறும் அறஇயல அனுபவஙகளை ஆராயந்து பார்த்தால, அது சமயத்தில் சென்றடைவது மட்டுமல்லாமல, கடவுள் உண்டு என்ற கோட்பாட்டில் மனிதர்களைக் கொணடு சேர்க்கும் என்று கூறுகிறார். உலக அனுப வத்தில் மதிப்பீடுகளும், உண்மை நிகழ்ச்சிகளும் ஒன்று சேர்நதே காணப்படும்.

ஒழுக்கமான அனுபவத்திலிருந்து, புலன் கடந்த சமயநிலைக்குச் செல்வதில் இரண்டு நிலைகள் அமைந்திருக்கின்றன. ஒன்று ஒழுக்கமான வாழ்க்கையின் குறிக்கோளான நல்லவற்றின் தன்மையில் அடங்கியிருக்கிறது. அதாவது அது இடைக்கால நன்மையா நிலையான நன்மையா என்று அறிவது. இடைக்கால நன்மை மனிதனின் குறிக்கோளை நிறைவுசெய்யாது. மனிதனுடைய விருப்பங்களெல்லாம் சில நேரங்களில் ஏமாற்றத்தை விளைவிக்கும் என்ற கருத்தினைத் தெய்லர் ஒத்துக்கொள்ளவில்லை. இரண்டாம் கருத்தென்னவெனில், அறவாழ்க்கையில் குற்றங்களும் பாவங்களும் நிறைந்து காணப்பட்டு மனிதனை, அவனது குறிக்கோளை அடையமுடியாமல் தடுக்கின்றது என்பதாகும். மேலும் இத்தகைய நிலை நிலையான தன்று. மனிதன் முயற்சியினால் நன்மையை அடையலாம். இறைவன் அருளினால் மனிதன் உயர்நிலை அடைகிறான். மனிதன் இறைவனருளினால் உயர் நிலை அடைவதோடு தெய்விக நிலையையும் அடைகிறான் என்பது தெய்லரின் கருத்தாகும். இரா.கோ.

***தெய்வச் சிலையார்***: தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்கு உரை வரைந்த சான்றோர்களுள் தெய்வச் சிலையார் குறிப்பிடத் தக்கவர். இவர் கி.பி. 12–ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 13–ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்தவராகக் கருதப்படுகிறார். திருமங்கையாழ்வார், திருப்புல்லாணி பற்றிய திருமொழியில், ‘தெய்வச் சிலையார்க்கு என் சிந்தைநோய் செப்புமினே’ என்று மங்களாசாசனம் செய்திருத்தலின் இப்பெயர் திருமாலுக்குரியது என்பது தெளிவு. தெய்வச் சிலையார் பெயரினால் திருமால் சார்பினர் எனினும், தம் உரைப் பகுதியில் சைவ சித்தாந்தத்தில் சுட்டப்பெறும் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள் உண்மையைக் குறித்திருப்பதாலும், திருவைந்தெழுத்தைச் சுட்டுவதாலும் சிவநெறிக்குரியவர் என்று தெளியலாம். இவர் இலக்கியம், இலக்கணம், மெய்ப்பொருளியல், அளவை இயல் ஆகிய பல துறைகளிலும் நிறைந்த புலமை படைத்தவர். வடமொழி இலக்கணத்திலும் இவருக்கு நல்ல பயிற்சி உண்டு. இவர் சொல்லதிகாரத்துக்கு மட்டுமே உரை எழுதியிருப்பினும் எழுத்ததிகாரம், பொருளதிகாரம் ஆகியவற்றையும் நன்றாகப் பயின்றவர் என்பதற்கு அகச்சான்றுகள் கிடைக்கின்றன.

இலக்கண நெறியில் புதுமை காணும் ஆய்வுத் துணிபும், மொழியியல் உணர்வும் இவர் உரைக்குச் சிறப்பியல்புகளாகக் கூறத்தக்கன. திணைவழு, இடவழு, காலவழு முதலியவற்றை வண்ணனை மொழியியல் மரபுப்படி இவர் பட்டியலிட்டுக் கொடுத்திருப்பது பாராட்டத்தக்கது. பல பொருள் குறிக்கும் உருபன்களை இவர் இடையியலில் சுட்டிக் கூறியிருத்தல் காணலாம். சான்றாக, ஆய் என்னும் முன்னிலை வினை விகுதி (தொல். சொல். 217) தெரிநிலை வினையிலும் (உண்டாய்), ஏவல் வினையிலும் (உண்ணாய்), எதிர்மறை வினையிலும் (பாலும் உண்ணாய்) வழங்குதலை எடுத்துக் காட்டியுள்ளார். உண்டு என்ற வினைச்சொல் உண்டது என்னும் பொருளில் வினை முற்றாக வருதலை இவர் சுட்டியுள்ளார். (தொல். சொல். 211). எச்சமே முற்றாக வரும் என்ற மொழியியலார் கருத்திற்கு இவ்வுரைப் பகுதி சான்றாக அமைகிறது. சாரியை பொருள் குறித்து வரும் என்ற விழுமிய கருத்தினை, ‘பொருள் நிலைக்கு உதவுதலாவது அல்வழிப் பொருட்கு இவை, வேற்றுமைப் பொருட்கு உரியன இவை என வருதல்’ என்று எழுதியிருத்தல் (தொல்.சொல்.247) இவர்தம் மொழியியல் உணர்விற்கு மற்றுமொரு சான்றாகும்.

இவர் வடமொழி இலக்கண அறிவு வாய்த்தவரெனினும் தமிழ் மரபினை அறிந்து உரை கூறுவதில் வல்லவர். சான்றாக, ‘ஒன்று, இரண்டு பல’ என வடமொழிப்புலவர் கூறியவாறு போலப் பாகுபடும் வழக்கின்மையின், ஒன்று, பல எனத்தமிழ் நடை இரண்டு பாலாம்’ (தொல்.சொல். 2) என்றும், ‘ஒருமையும் பன்மையும் எனத் தமிழ் நடை இருவகைப் படுதலின்’ (தொல்.சொல்.243) என்றும் எழுதியிருத்தலைச் சுட்டலாம். எவ்வகைத் தொழில் நிகழ்ச்சிக்கும் காரணமாக உள்ளனவற்றை முதல் என்று குறித்தல் தமிழ் மரபு. இதனை வடநூலார் காரகம் என்பர் எனச் சொல்லி, ‘அதாவது தொழிலை உண்டாக்குவது’ என்ற விளக்கமும் வழங்கியுள்ளார். இவ்வுரைப்பகுதி ‘கிரியாம் நிர்வர்த்தயதி காரகம்’ என்ற பதஞ்சலியின் பாடியத்தில் இடம்பெறும் கருத்தினை எதிரொலிக்கக் காணலாம். குறைச்சொற்களாகிய உரிச்சொற்களை வடநூலாசிரியர் கூறும் தாதுக்கள் என்று இவர் கருதினர். தொல்காப்பியர் சுட்டும் இசை, குறிப்பு, பண்பு ஆகிய மூன்றினாலும் உரிச்சொற்கள் பொருளைப் புலப்படுத்தும். இவற்றை வடநூலார் முறையே முக்கியம், இலக்கணம் கௌணம் என்று வழங்குவர் என்று ஒப்பீடு செய்துள்ளார். வேற்றுமை மயங்கியலில் ஒரு வினை ஒடுச்சொல் சிறவாத பொருட்கண் வரும் என்று புதியதொரு உரை செய்து அதற்கு ஆதாரமாக, ‘இப்பொருள் பாணினியாருக்கும் ஒக்கும்’ என்று எடுத்துரைத்தல் எண்ணத்தக்கது. வேற்றுமைத் தொகை முதலியவற்றை ஒரு புடை ஒப்புமைகருதிப் பாணினியார் தற்புருடசமாசம் என்று குறியிட்டார் என்பர். மூன்றாம் வேற்றுமைக் குரிய சொல்லுருபுகளைச் சுட்டும் பகுதியில், ‘புகை ஏதுவாக நெருப்புண்மை அறிக’ என்று எழுதுவதிலிருந்து இவர்தம் தருக்கவியல் அறிவு புலனாகும்.

இவர் உரையில திராவிடம, கருநாடகம், திரி லிங்கம் (ஆந்திரம்) குசராட்டம், மகாராட்டிரம் ஆகிய ஐந்தையும் இணைத்துப் பஞசத்திராவிடம எனக்கூறும் மரபு காணப்படுகிறது (தொல சொல்.366). செப்பும் வினாவும பற்றிய நூற் பாவின உரையில துணிந்து கூறல, கூறிட்டு மொழி தல, வினாவின் விடுத்தல், வாய வாளாமை எனற நால்வகை வினா விடைகளை இவா குறித்திருத்தல ஒரு புதுமையாகும. இககருத்து ஏனைய உரைகளில் காணப்படவிலலை. மணிமேகலையில இவறறைச சாத்தனார் குறித்துள்ளார் (30.235-49).

மேலும், இலக்கணக் குறியீடுகள சிலவற்றிறகும சொறகளுக்கும் இவர் வழஙகியிருக்கிற விளககம் சிந் தனைக்கு விருந்தாக உள்ளது. எடுததுக்காட்டாக வேறறுமை எனபது பொருளகளை வேறுபடுததின மையாற் பெற்ற பெயர் (தொல.சொல.61) எனறும், 'பெயரும் வினையும இடமாக நின்று பொருள உணர்ததுதலின இடைச் சொல்லாயிறறு' என்றும் (நூ.246) இயமபுதல் எணணத்தககது. காலம் எனபது முனனும் பினனும் நடுவுமாகி எனறும உளளதோா பொருள் எனறும்; உலகம என்பது மேலும, கீழும் நடுவுமாகி எலலாவுயிரும தோறறுதறகு இடமாகிய பொருள் என்றும், ஞாயிறு எனபது தீத்திரளாய் உல கினை விளக்குவது எனறும; திஙகள் என்பது நீாத திரளாய உலகிறகு அருள செய்வது எனறும் சொற பொருள் விளககம் தருதல பாராட்டற்பாலது. இவர் உரை எளிமையும், தெளிவும் விளக்கமும் மொழி யியல உணர்வும் வாய்நது பயில்வாாக்கு இனபம பயத்தல காணலாம் சோ.ந.க.

**தெய்வச் செயல்:** மனிதனால் எதிர்ககவோ தடுககவோ இயலாமல, இயறகைச் சகதிகளின் சீறறத் தால விளையும ஊறுகளுககுத் தெய்வச் செயல (Act of God) எனபது பெயர். இது திடீரென ஏற படுவதால, இதுகுறிதது முனகூட்டியே அறிந்து, தகக தற்காப்பு நடவடிககை எடுதது, இதனால ஏறபடும அழிவைத் தடுதது நிறுத்த முடியாத இயல் பைக் கொணடிருககும. இது தீஙகியல சட்டததில சிறந்த எதிர்வாதமாகப் (Defence) பயனபடுகிறது. அளவுக்கு மிஞசிய மழை, சூறாவளிக காற்று, வழக கத்திற்கு மாறான அலை எழுச்சி, நில அதிர்சசி, புயல், மின்னல், இடி விழுதல ஆகியவை தெய்வச் செயலகளாகக கருதப்படுகினறன. ஒரு செயல் தெயவச் செயல் எனறு கருதப்பட வேணடுமானால, அது இயறகையின சீறறத்தால், மனிதனின குறுக்கீடு எதுவுமில்லாமல் நேரடியாக ஏற்பட்டிருகக வேணடும்.

தெய்வச் செயல் எனும் எதிாவாதம் தவிர்க்க முடியாத விபத்து (Inevitable accident) எனற எதிா வாதத்திற்கு ஒப்பானது ஆயினும் இரைலாணடுசு எதிா பிளட்சா (Rylands Vs Fletcher) வழககின தீாப்புப்படி கடும்பொறுப்பு (Strict liability) எனும் விதிககு, தவிர்கக முடியாத விபதது ஓர் எதிாவாதம ஆகாது. ஆனால தெய்வச செயல மேற்படி விதிககு சிறந்த ஓர் எதிா வாதமாகும. மேற்படி வழக்கில, எதிர்வாதி கவனமினறி இருநதிரா விட்டாலும் வாதிககு விளைநத சேதத்திறகுப பொறுப்பாளியா வான எனறு தீாபபளிக்கபபட்டது நீதிபதி பிளாககு பான், கடுமபொறுப்பு எனனும் விதியை இவவழக கில நிறுவினார். 'சட்டம் கூறும உணமையான விதி, ஒருவன் தன சொநதக காரியஙகளுக்காகத் தனனு டைய நிலத்தில வெளியேறிச செனறு இடா விளை விககத் தகக எநதப பொருளையாவது சேகரித்து வைததிருந்தால, அதைத் தனனுடைய பொறுபபி லேயே வைததிருக்க வேணடும, அவவாறு அவன செய்யததவறினால், அப் பொருள மேற்படி நிலததி லிருந்து வெளியேறிச செல்வதால ஏறபடும இயல் பான விளைவுகள அனைததிறகும் பொறுப்பாளியா வான. அவன அஙகு அதைக் கொணடு வந்ததில் கவனமின்றி இருநதிரா விட்டாலும் பொறுபபாளி யாவான்,' எனறு தீாபபளித்தாா. இரைலாணடுசு எதிர் பிளட்சர் வழககில் இவவாறு கொண்டு வந்து வைக்கப்பட்டிருநத பொருள தணணீராகும. ஆயினும், இவ வழககில் சொல்லபபட்ட விதி தீ, வாயு, மினசாரம், வெடி, எணணெய், நச்சுப்புகை, இற்றுப்போன வேலியிலிருநது வரும் துருப்பிடிதத கமபி போன்றவறறிறகும பயன படுததபபட்டுளளது.

எனினும, வெறறிகரமாகத தெயவச்செயல் எனற எதிர்வாதம பயன படுத்தப்பட்ட வழககு நிக்கல்சு எதிா மாாசுலேணடு (Nichols Vs Marsland) ஆகும. இவவழககில எதிாவாதி பல ஆணடுகளுககு முனபே நீரேர்டை யொனறில அணையிட்டுத் தம நிலததில சில செயறகைக் குளஙகளைக கட்டியிருந்தாா. தடுபபுச் சுவாகளையும தகுநத கவனததோடு நலல முறையில கட்டியிருநதாா. ஆயினும் வழக்கத்திற்கு மீறிப் பெய்த பெருமழையின காரணமாகப் பெரு வெளளம புகுநது, தடுபபுசசுவர்களை உடைத்துக் கொணடு கரைபுரணடோடி வெளியேறிச சில பாலங களை அடித்துச் செனறு விடடதாக அவா மீது வழக் கிடப்பட்டது. இவவழககில் சாட்சி சொனனவர்கள, தாஙகள நினைவறிந்த நாள தொட்டு, இவ்வளவு கடுமையான பெருமழையைக் கணடதில்லை எனறு சொனனார்கள. இவ்வழக்கில எதிாவாதி, இரை லாணடுசு எதிர் பிளட்சர் வழக்கில சொல்லப்பட்ட கடும் பொறுப்பு உளளவா என வாதிக்கப்பட்டதை நீதிமனறம் ஏறகாமல, வாதியின் வாதத்தைத் தளளு படி செய்து, இழப்பீடு பெறமுடியாது என்றும கூறி விட்டது.

ஆயினும் இசுகாட்லாந்தில் ஏற்பட்ட கீழ்க்கண்ட வழக்கில், மேற்கூறப்பட்ட கோட்பாடு ஏற்றுக் கொள்ளப்படவில்லை. கிரினாக்கு மாநகராட்சி எதிர் கலிடோனியன் தொடர்வண்டிக் குழுமம் (Greenock Corporation Vs Caledonian Railway Co) என்ற இவ் வழக்கில் மாநகராட்சி ஒரு பூங்கா அமைக்கும் போது, நீரோடையின் படுகையில் குழந்தைகள் படகோட்டி மகிழ நீர்க்குளம் ஒன்றை அமைத்தது. அதன் விளைவாக நீரின் இயல்பான ஓட்டம் தடுக்கப்பட்டது. ஒரு சமயம் பெய்திட்ட பெரு மழையால், வெள்ளம் நீர்க்குளத்தில் நிரம்பி வழிந்து சாலை வழியே ஓடி வாதியின் இருப்புப் பாதை நிறுவனத்திற்குச் சொந்தமான சொத்தில் புகுந்து, அதை வெள்ளக் காடாக்கிப் பெரிய சேதத்தை விளைவித்து விட்டது. எதிர்வாதி அதாவது மாநகராட்சி, நீரோட்டத்தின் இயல்பான திசையை மாற்றியமைக்காமல் இருந்திருந்தால், வெள்ளம் தன இயல்பான வழியிலேயே நீரோடையில் சென்றிருக்கும். சேதம் விளைந்திராது; எனவே, எதிர்வாதிகள் பொறுப்பாளியாவார்கள் என்று பெருமக்கள் மன்றம் (House of Lords) தீர்ப்பு வழங்கியது. வழக்கமாகவே நல்ல மழை பெறும் நிலப்பகுதியில், பெருமழை பெய்ததால் வாதிகளுக்கு இழப்பு ஏற்பட்டது எனும் வாதம் ஏற்கத்தக்கதன்று. மழையே பெய்யாத பகுதியில் வழக்கத்திற்கு மாறாக பிரமிக்கத்தக்க அளவிற்கு மழை பொழிந்து, அதனால் இழப்பு ஏற்படின், மேற்பட்ட செயல் தெய்வச் செயல் என்று கருதப்படும்.

பெருமழையைத் தெய்வச் செயல் என்று கருதிவிட முடியுமா என்பது ஐயத்திற்குரியது. அது, வழக்கில் உள்ள சூழ்நிலைகளைக் கருதிப் பார்த்தே தெய்வச் செயலா, இல்லையா என்று முடிவு செய்ய வேண்டும்.

தெய்வச் செயலும், தவிர்க்க முடியாத விபத்தும் ஒன்றல்ல. இரண்டிற்குமிடையே வேறுபாடுள்ளது. தவிர்க்க முடியாத விபத்து தெய்வச் செயலாக வேண்டுமெனில், அது இயற்கையின் சீற்றத்தால மனிதனின் குறுக்கீடு எதுவுமில்லாமல் நேரடியாக ஏற்பட்டிருக்க வேண்டும். நூசெண்டு, எதிர் சுமித்து (Nugent Vs. Smith) என்ற வழக்கில் நீதிபதி காக்பருன் என்பார் 'தவிர்கக முடியாத விபத்தின் காரணங்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று மனிதனின் குறுக்கீடு ஏதுமின்றி இயற்கையின் மூலதாரமான சக்தியினால் ஏற்படுவது, மற்றொன்று முழுமையோ அல்லது ஒரு பகுதியோ மனிதனின செயலால் ஏற்படுவது என்று கூறியுள்ளார். இவற்றுள் முதல் வகைச் செயல் தெய்வச் செயலின பாற்படும். பின்னது தவிர்க்க முடியாத விபத்தாகும். எடுத்துக் காட்டாக பெரும் புயல் காரணமாகக் கப்பல் அலைக்கழிக்கப்பட்டு தரைகட்டினால் அது தெய்வச் செயலாகும். ஆனால, பனி மூட்டத்தின் காரணமாகத் திசையறிய முடியாமல் கப்பலின் தலைவனின் தவறுதல் காரணமாகக் கப்பல் கரையில் ஒதுக்கப்படுமாயின், அது எவ்வளவு தவிர்க்க முடியாததாயினும் மனிதனின் செயலேயாகும். இதைப் போலவே மின்னல், இடி ஆகியவற்றின் காரணமாக ஒரு வீடு தீப்பற்றி எரிந்தால அது தெய்வச் செயலாகும் ஆனால் வீட்டில் உள்ள ஒரு விளக்கை ஒருவர் உறங்கும் போது தவறுதலாகத் தட்டி விடுவதின் விளைவாகத் தீ விபத்து ஏற்படுமானால் அது மனிதனின செயலேயாகும். மாறாக, அது தெய்வச் செயல ஆகாது.

பொதுவாக இயற்கைச் சக்தியும் மனிதனும சேர்நதே ஒரு விளைவை ஏற்படுத்தினால அது தெய்வச் செயலா? அல்லது மனிதனினசெயலா? எனபதில ஐயப்பாடு எழவாய்ப்புணடு. விபத்து ஏற்பட உடனடியான, நேரடியான காரணம் எனனவென்றுகண்டால் தான்அது எததகையது என்பதைத் தீர்மானிகக முடியும புயலின் காரணமாகத் தரை தட்டிய கப்பல் அதன் சொநதக் கடற் பயணத்திற்குப் பயன்படுத்தியிராவிட்டால, விபத்து ஏற்பட்டிராது எனபது உண்மையாயினும், அதனால் ஏற்படும் இழப்பைத் தெய்வச் செயலாகவே கருதவேண்டும். மனிதனின முன்னறியும் திறமையால் அது நிகழககூடும் எனறு உய்த்துணர முடியாததே தெய்வச செயல்.

**மைசூர் மாநிலம் எதிர் இராமச்சந்திரா** (73 Bom.L.R. 723) எனற வழக்கின விபரமாவது: நியானி கிராமததிற்குக் குடிதணணீர் அளிப்பதற்காக மைசூர் மாநில அரசு ஒரு அணையொன்றைக் கட்டியது. அணையிலிருந்து வழிந்தோடும் தணணீரை முறைப்படுத்த ஒரு கால்வாய் வெட்டப்பட்டது. பாதி நிறைவேற்றப்பட்டும, மீதி நிறைவேற்றப்படாமலும்அக்காலவாய்இருந்தது 4 மணி நேரத்திலபெய்திட்ட 60 மி.மீ பெரு மழையினகாரணமாக வெள்ளம் பெருக்கெடுத்ததோடு, வாதியின நிலத்திற்கும், பயிர்களுக்குச் சேதமும் விளைவித்தது. எனவே, ஏறபட்ட சேதத்திற்கு இழப்பீடு கோரி மாநில அரசின் மீது வாதி வழக்கிட்டார். மைசூர் மாநில அரசோ கீழ்க் காணும் இரண்டு எதிர்வாதஙகளை வைத்தது.
1). பெரு வெள்ளத்தால் ஏற்பட்ட இழப்பு தெய்வச் செயல். 2). அரசியின் இறைமை நிலைச் செயல் (Act -of Stae in its Sovereign capacity)

நீதிமன்றம் மேற்கண்ட இரணடு எதிா வாதஙகளையும் ஏற்கவில்லை. வழககததிற்கு மாறாகப பெரு வெள்ளம் உண்டாகும் நிலையானது தெய்வச்

செயல தான் என்று வாதத்திறகாக ஒத்துக கொண டாலும, அதனால் ஏற்படும் இழப்பானது தெயவச் செயல் என்பதாகக் கூற முடியாது. தெய்வச் செய லால ஏற்படும் பெரு வெள்ளத்தை முறைபபடுத்திக கடத்தும் கால்வாய் முழுமையாகக் கட்டாமல போனது மனித செயல்தான. ஆகவே, தெய்வச செயலால் ஏற்படும மனிதச் செயலுககு இழப்பீடு வழஙகப்பட வேணடும் எனத தீர்ப்பு வழஙகப பட்டது.

ஓர் அரசு தன் குடிமக்கள் மீது செலுத்தும் அதி காரம் இறைமை நிலைச் செயலாகாது. இநதிய அரசாங்க அலுவலர் ஒருவர் சட்டத்திறகு முரணான செயல ஒன்றைச செயது இநதியக குடிமகனுக்குத தீஙகு விளைவித்து, தான் அரசாஙக உத்தரவின பேரில தான் அதைச் செய்ததாகக கூறித்தபப முடியாது. பம்பாய் உயர்நீதிமன்றம் ஒரு வழக்கில் அரசியின் அணைகட்டும செயலானது அரசின் இறைமை நிலைச் செயல் என்ற வாதத்தைப் புறக்கணித்தது. இறைமை நிலைச்செயலின விளைவாக அரசு அணைகட்டும் செயலானது சமூக மேம்பாட்டுச் செயலேயன்றி, அரசு முறைச் செயலாகாது என்று மேலும் கருத்துத தெரிவித்தது. சட்டம்-ஒழுங்கு குறித்த ஓா அரசின் இறைமை நிலைச் செயலானது, சமூக மேம்பாட்டுத திட்டம் குறித்த அரசின இறைமைச் செயலிலிருநது மாறுபட்டதாகும். எவவாறாயினும், அரசின இறைமை நிலைச் செயலானது, தெய்வச் செயலா காது. அ.மா.அ

**தெய்வசிகாமணிக் கவுண்டர், வே.ரா.** இவர் பெரியாா மாவட்டம் ஈரோடு வட்டம் வேலம் பாளையம் எனற சிற்றூரில 1903-இல் இராமசாமிக கவுணடர், அங்கம்மாள ஆகியோருககு மகனாகப் பிறந் தார். வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டிருநத அக் குடும்பம் சைவம், தமிழ் ஆகியவறறில பறறுக் கொண்டிருந்தது.

இளமையில் திணணைப் பள்ளியில் பயின்ற இவர் அவினாசிலிங்க உபாத்தியாயர், ஈரோடு திருமலை சாமிஐயங்கார், சிவபாத இருதயம் பிளளை ஆகி யோரிடமும் முறையாகத் தமிழ நூல்களைக் கற்றாா. தமிழிலும் சைவ சித்தாநதத்திலும், வடமொழியிலும் ஆழ்ந்த புலமை பெற்றார். இவர் மனைவி பெயா இலக்குமி. தமிழாசிரியராக வாழ்க்கையைத் தொடங கிய இவர் மாணவர்கள போற்றும் வகையில் நல லாசிரியராக விளஙகினார்; ஆரவாரம் இல்லாத எளிய வாழ்க்கை வாழ்ந்தாா; தமிழகமெங்கும் சுறறி ஓலைச்சுவடிகள் பல தேடினார்; தேடிய சுவடிகளைப் பாதுகாத்து அவறறைப் பெயர்த்து எழுதிவைத்தார். வாலசுந்தரக் கவிராயாரின் கொஙகுமண்டல சதகம், மேழி விளக்கம், கருணையநதாதி, மலலைககோவை, கபிலமலைக் கோவை, முனிமொழி முப்பது, செனனி மலையாணடவா காதல, தேவி மானமியம், சிவஞான போதத் திருவிருத்தம், திங்களூர் நொணடி, கொன்றை வேநதன வெணபா, தாயுமானவர் மடல போன்றவற்றைப்பதிபபித்தார்.

இவர் கி.பி.17-ஆம நூற்றாணடில அறம வளர்த தான் எனற கொஙகுநாடடு நாட்டியப புலவா தொகுத்த பரத சங்கிரகம் எனனும நூலை 1954-ஆம் ஆணடு அணணாமலைப் பல்கலைக் கழகத் தின வாயிலாக வெளியிட்டாா. அடியார்ககு நலலாரால சிலப்பதிகார உரை எழுத உதவிய நூல என்று பாராட்டப்பெறறதும, சஙக கால இசை நூலு மான அறிவனாா இயறறிய பஞசமரபு என்னும் அரிய நூலின முதல தொகுதியை 1973-ஆம் ஆணடும், இரணடாம் தொகுதியை 1975-ஆம ஆணடும வெளி யிட்டார். மிகச்சிறநத சஙக கால இசை நூலைக் கணடுபிடித்து வெளியிட்ட இப்பணிககாக அரசா அணணாமலைச் செட்டியாா விருது பெறறார்.

தாம் பதிப்பித்த பல நூலகளுக்குக குறிப்புரை யும், விளககவுரையும புலமை தோனற எழுதிய இவா மிகச் சிறந்த கவிஞராகவும் திகழ்நதார். அறச்சலூர், ஈரோடு, செனனிமலை, எழுமாத்தூர் போன்ற தலங கள் பற்றிப் பல சிறறிலககியஙகள இயற்றியுள்ளாா. பல்வேறு இதழ்களில சைவ சிததாநதம, இலககியம, இலக்கணம், பண்டைய உரை, கொஙகு நாட்டு வரலாறு பறறிய பல கட்டுரைகள எழுதியுளளார். தமிழகப் புலவர் குழு உறுப்பினராகவும திகழ்ந தார்.

அண்ணாமலைப் பலகலைக் கழகத்தின கம்பரா மாயண ஆராயசசிப் பதிப்புககு 5 முழுமையான ஏடு கள அளிததாா. திருப்பனந்தாள காசி மடத்தின் திருமுருகாற்றுப்படை உரைக கொத்திற்குககவிப் பெருமாள, பரிதியார் உரை ஏடுகளையும், தருமபுர ஆதீனத்தின திருக்குறள உரைவளதநிறகுக் காலிங் கா, பரிதியார் உரை ஏடுகளையும பெயர்த்து எழுதி அளிததார். வாழ்நாளையே ஏடுகள தேடச் செல விட்ட தெயவசிகாமணிக் கவுணடர் 1976-இல கால மானார். செ.இரா.

**தெய்வ யானை** எனற பெயருடன இரணடு பெணகள புராண இதிகாச இலககியங்களில பேசப்படுகின்றார்கள். இவவிருவரையும் குறிததுக கநதபுராணம், உபதேசகாண்டம், திருப்பரங்குன் றப் புராணம, பிரமனக வர்த்தம், தேவிபாகவதம, பாகவதம், பாரதம் ஆகிய நூலகளில் கூறப பெற்றுள்ளன.

**கந்தபுராணத்தில்:** இந்நூலிற் கூறப்பெறும் தெய்வயானை திருமாலின் திருக்கண்களிலிருந்தோன்றிய அமிர்தவல்லி. இவ்வம்மை சரவணப் பொய்கையில் முருகனை மணக்கத் தவமியற்றினபொழுது முருகன் காட்சி தந்து நீ இந்திரனிடம் மகளாக வளர்க என அருள் செய்தார். அக்கட்டளைப்படி தவத்திலிருந்து நீங்கி இந்திரனுடைய யானையால் குழந்தையாக வளர்க்கப் பெற்றார். இந்திரனின் குழந்தையாகக் கொண்டு தெய்வ யானையால் வளர்க்கப் பெற்றமையால் தெய்வ யானை எனப் பெயர் பெற்றார். சூரபன்மாதியர் போரில் வெற்றி பெறச் செய்த முருகப் பெருமானுக்குத் தன் அன்புக் காணிக்கையாக இந்திரன் திருப்பரங்குன்றத்தில் தெய்வ யானையைத் திருமணம் செய்வித்தான்.

**தேவிபாகவதம், பிரமகைவர்த்தம் ஆகிய நூல்களில்** இவர் பிரமனால் மானதமாகத் தோற்றுவிக்கப்பட்டுக் கந்தமூர்த்திக்குத் தேவியாக ஆக்கப்பட்ட பெருமை உடையவர். தைத்தியர்களால் ஆக்கிரமிக்கப்பட்ட தேவர்களின் பொருட்டுச் சேனை ஆகிய காரணத்தால் தேவசேனை எனப் பெயர்பெற்றார்; சிசுக்களை இரட்சிப்பவர். பிரகிருதியின் ஆறாம் அமிசமாகையால் சஷ்டிதேவி எனப்பெயர்பெற்றார் இவ்வம்மை சிசுக்களின் பொருட்டுப் பிரசவ இடத்தில் ஆறாம் நாளிலும் இருபத்தோராம் நாளிலும் பூசிக்கத்தகுந்தவர்.

**பாரதம், பாகவதம் ஆகிய நூல்களில்** தேவயானை சுக்கிராச்சாரியராகிய அசுர குருவின் மகள். மிருத சஞ்சிவினி மந்திரம் அறிந்துகொள்ளுதற் பொருட்டுத் தன் தந்தையிடம் வந்த தேவகுருவின் மகனான கசனிடம் அன்பு கொண்டவள். கசனை அசுரர் பலவிதத்திலும் கொன்றதைக் கண்டு, தன் தந்தையால் அவன் உயிர் பெறச் செய்தவள். கடைசியில் தன் எண்ணத்தைக் குறிப்பிக்க அவன் உடன்படாததனால் மிருத சஞ்சிவினி மந்திரம் கசனுக்குப் பலியாதிருக்குமாறு சாபமிட்டவள். இவளும் சன்மிட்டையும் நீர் விளையாடச் சென்று, முடிவில் அறியாது இவளது ஆடையைச் சன்மிட்டை அணிந்து கொள்ளக் கோபித்தாள் தேவயானை. அதனைக் கண்டு சன்மிட்டை கிணற்றில் இவளை வீழ்த்திவிட, யயாதி மன்னனால் காக்கப்பெற்றுத் திருமணம் செய்துகொள்ளப் பெற்றாள். சன்மிட்டையை அடிமையாக்கினாள். இவளுடைய குமாரர்கள் எது, துருவசு என்பவர்கள். சு.சு.

**தெய்விக உரிமை** என்பது அரசர்கள் தெய்வத்தாலமர்த்தப்பட்டவர்களென்றும், ஆகையால் அவர்களை எதிர்த்தல் ஒரு தீவினைச் செயலே ஆகுமென்றும் கூறுகிற ஓர் அரசியற் கோட்பாடாகும். தெய்விக உரிமைக் கோட்பாடு (Theory of Divine Right) என்பது, வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் அரசு என்பது தெய்வ ஆணையின் விளைவாகத் தோன்றிற்று என்ற அரசின் தெய்விகத் தோற்றக் கோட்பாட்டிலிருந்து (Theory of Divine Origin) தோன்றியதாகும்.

**தோற்றம்** அரசை இறைவரே தோற்றுவித்து ஆட்சி செய்கிறார். ஆகையால் நாட்டை ஆளும் அரசர் இறைவருடைய முகவர் (Agent) ஆவர். அவருக்குக் கீழ்ப்படிய மறுத்தல் இறைவருக்குக் கீழ்ப்படிய மறுக்கும் தீய செயலே ஆகும். இந்தத் தெய்விகத் தோற்றக் கோட்பாட்டின் கூறுகள் விவிலிய நூலின் பழைய ஏற்பாட்டிலும், கிறித்தவத் திருச்சபையை நிறுவிய பெரியோர்களுடைய விளக்கங்களிலும், புனித பால் உரோமானியர்களுக்கு விடுத்த வேண்டுகோளிலும், கிறித்தவச் சீர்திருத்த இயக்கத்தை நடத்திய மார்ட்டின் லூதர், கால்வின் முதலியோர் வகுத்த எதிர்ப்பின்றிக் கீழ்ப்படிதல் என்ற கோட்பாட்டிலும் காணப்படுகின்றன. இந்தக் கொள்கையிலிருந்து இங்கிலாந்தை ஆண்ட இசுடுவர்ட்டு அரசர் முதலாம் சேம்சும், சர் இராபர்ட்டு பில்மர் (Sir Robert Pilmar) என்ற ஆசிரியரும், பிரான்சில், பொசே (Bousset) என்ற ஆசிரியரும் தெய்விக உரிமைக் கொள்கையை வகுத்தனர்.

**பொருள்:** அரசர் முதலாம் சேம்சு தாம் எழுதிய 'சுதந்திர முடியாட்சிகளைப்பற்றிய சட்டம்' (The Law of Free Monarchies) என்ற நூலில், அரசர் தம் அதிகாரத்தைக் கடவுளிடமிருந்தே பெற்றுள்ளபடியால், அவர் குடிமக்களுக்கும் சட்டத்துக்கும் அப்பாற்பட்டவரென்றும், அவர் கடவுளுக்குத்தான் பொறுப்புடையவரென்றும், மக்களுக்குப் பொறுப்புடையவரல்லர் என்றும் கூறினார். மக்களை நல்லமுறையில் ஆளுதல் வேண்டும் என்ற ஓர் ஒழுக்க இயலான கடமையையே அவர் கடவுளுக்குச் செய்தல் வேண்டும். அரசர்கள்தாம் சட்டங்களைச் செய்கின்றனரே தவிரச் சட்டங்கள் அரசர்களைத் தோற்றுவிக்கவில்லை. ஆகையால், ஒரு சுதந்திர முடியாட்சியில் அரசர் தாம் விரும்பியதைச் செய்தற்குச் சுதந்திரம் இருத்தல் வேண்டும். ஓரரசர் கொடியவராக இருந்தாலும், அவரைக் குடிமக்கள் தங்களுடைய தீவினைகளுக்காகக் கடவுளால் விடுக்கப்பட்ட ஒரு தண்டனையாகக் கருதிக் கீழ்ப்படிதல் வேண்டுமே தவிர அவரை எதிர்த்துக் கலகம் செய்தற்குக் குடிகளுக்கு உரிமை இல்லை. சுருங்கச் சொல்லின், முடியாட்சி இறையருளால் ஏற்படுத்தப்பட்ட ஒன்று என்பதும் அதன் பரம்பரை உரிமையை மறுக்க இயலாது என்பதும் அரசர்கள் கடவுளுக்கு மட்டுமே பொறுப்புடையவர்கள் என்பதும் ஒரு சட்டப்படியான அரசரை எதிர்த்தல் தீய செயலாகும் என்பதும் இக்கொள்கையின் சாரம் ஆகும்.

**செயற்படுதல்**: இடைக்காலத்தில (Middle Ages) (கி.பி. 1000 முதல் கி.பி. 1500 வரை) அரசருக்கும் போப்புக்கும் இடையே எவர் உயர்ந்தவா என்ற கேள்வியினமீது நடநத மோதலில், போப்புக்கும் கிறித்தவத் திருச்சபைக்கும் எதிராக, அரச அதிகாரத்தையும் அரசையும் ஆதரிக்கும் பொருட்டு இக் கொள்கை கையாளப்பட்டது. ஆயினும், இந்தக் கொள்கை அரசரின் கொடிய சருவாதிகார ஆட்சிக்கும் ஆதரவாக அமைந்ததை மக்கள் மெல்ல மெல்லத்தான் உணர்ரலாயினர். மக்களுடைய குடியாட்சிக் கருத்துகளை அழிக்கும் ஒரு கருவியாக இது கி பி 17, 18-ஆம் நூற்றாண்டுகளில் விளங்கியமையால இதற்கு எதிராகக் குடியாட்சிக் கோட்பாடுகள் வளர்ந்தன. பிரான்சுப புரட்சிக்குப் பினனர் முடியாட்சிக் காலம் முடிவுற்றுக் குடியாட்சிக் காலம தொடஙகிற்று. இக்கொள்கை மறைநததற்குக் காரணஙகள், இது ஆதரித்த வலலாட்சி முறையை (Absolute Government)' குடியாட்சி அரசாஙகக் கோட்பாடு வலுவாக மறுத்ததும், உலகியலதிகாரமாகிய அரசியலதிகாரம் ஆனமிக அதிகாரத்தினின்றும் தனியாகப் பிரிந்து தலைமை நிலையை அடைந்ததும், அரசின தோற்றத்தையும் இயலபையும விளககுதற்குச் சமூக ஒப்பநதக் கோட்பாடு கையாளப்பட்டதும ஆகும்.

இப்பொழுது இககொளகையை எந்த அரசியற் சிநதனையாளரும் ஒப்புககொள்ளுவதிலலை. ஆயினும, நாகரிக வளர்ச்சி ஏற்படாத காலத்தில் வாழநத மக்கட் சமூகங்களிலே, ஓா உலகியலதிகாரிக்கோ தாமே வகுத்துக்கொணட சட்டத்துககோ மக்கள கட்டுப் பட்டு, கீழ்ப்படிநது நடக்கும பழககம் ஏற்படாத காலத்தில, இநத இறை உரிமைககோட்பாடு ஒழுஙகை நிலைநிறுத்தி, மககளைக்குழப்பத்தினின்றும் (Anarchy) பாதுகாத்தற்கு ஒரு வலுவான கருவியாகப் பயன பட்டது. பழஙகாலத்தில மனிதனுடைய உயிர், உடைமை, அரசாங்க முறை முதலியவற்றைப பாதுகாத்தறகு இக்கொள்கை உதவி செயதது. மேலும் கட்டுப்பாடு எனபதும், ஒழுஙகு எனபதும் மனிதனிடத்தில் இயல்பாக உள்ள ஓர் உணர்ச்சி எனற உண்மை, அரசியலமைபபு வடிவத்தில் வெளிப்படுவதை இக்கொள்கை எடுத்துக் காட்டுகிறது. வல்லநத ஆட்சி செய்யும் அரசரும் ஒழுக்க இயல்பிலே கடவுளுக்குப் பொறுப்புடையவராவ ரென்று இக் கொளகை கூறுவதன வாயிலாக, இது அரசாஙகம் மக்களுடைய நனமைக்காகவே இருக்கிற தெனற அரசியலமைப்பின் ஒழுக்க இயலான ஆதாரத்தை வலியுறுத்துகிறது. பா.கு.

**துணை நூல்கள்:**


Sidgwick, H., The Development of European Polity, Macmillan, 1920.

Vereker, C., The Development of Political Theory, Hutchinson University Library, 1957.

Willoughby, W.W., The Ethical Basis of Political Authority, Macmillan, 1930.


**தெய்விகவியல்**: மத நம்பிக்கையை அறிவு முறையில் விளகக முறபடும் துறையைத தெய்விகவியல் (Theology) எனலாம. தெய்விகவியலை ஓர் அறிவியல் என்று கூறுவாருமுளர் அறிவியலுககும் தெய்விகவியலுக்கும் வேறுபாடு உளளது. அறிவியல அறிய முறபடும் பொருள்களை ஒருவர் தொட்டு, நுகர்நது, கணடு கேட்டு, அறிநது, கொளளமுடியும. ஆனால், தெயவிகவியலில ஒருவா கடவுளை மேற்கணடவாறு அறிநதுகொளள முடியாது. மக்கள் தமககுள ஏற்படும் இறையுணர்வைக கொணடு ஒரு வகையான இறையறிவைச சித்திரிக்கினறனா. ஆனால், அறிவியலறிவு புலனகளின்மூலம் பெறபபடுகிறது. வில்கெலம தில்தே (Wilhelm Dilthey, கி.பி 1833-1911) எனற செருமானியத் தத்துவஞானி 'மனித அறிவியல' (Human Sciences) என்பதில் வரலாற்றையும சேர்ககிறாா. தெய்விகவியல இயறகை அறிவியலை விட மனித அறிவியலுடன மிகுநத தொடர்புளளதெனினும தெயவிகவியலை மனித அறிவியல் எனபதை விடத் தெய்விக அறிவியல என்பதே சரி. பலதரப்பட்ட அறிவியல்கள இருப்பது போல பலவேறு அறிவியலகளுககும் தகுநதாறபோல வழிமுறைகளும பொருளடககங்களும் உளளன.

தெய்விகவியலுககு மிகவும் ஆதாரமானது நமபிககை (Faith) யாகும. உலகததையும மனித வாழக்கையையும முறறிலும் ஒரு புதிய கணணோட்டததுடன் நோக்கும நிலைக்கு ஒரு மனிதன வரும்போது அவனிடம் தானாகவே நம்பிககை ஏறபடுகிறது. இந்த நிலையை வெளிபபாடு (Revelation) எனறு கூறலாம். இந்நிலையை ஆன்மாபரம்பொருளுடனஇணைய விழையும் முயறசியினால கிடைக்கும அனுபவத்தினமூலமும் அடையலாம. இத்தகைய அனுபவத்தை அருச்சுனன கண்ணனின கீதோபதேசததால அடைநததாகப் பகவத்கீதை கூறுகிறது. இத்தகைய அனுபவத்தை இநதுமதம், புத்தமதம, யூதமதம், இசுலாம், கிறிததவ மதம் ஆகியவை வெவவேறு முறைகளில விளககுகினறன எனினும், எல்லா மதஙகளுக்கும் அடிபபடையானது நம்பிக்கையாகும. பலவேறு மதஙகளும தஙகள மதம் கூறும் விளக்கங்களே ஏற்றுக் கொளளத்தக்கவை எனறு கூற முற்படும்போதுதான விவாதஙகளும் சச்சரவுகளும ஏறபடுகினறன.

**தெய்விகவியலுக்கு ஆதாரங்கள்: 1. பழமையான புனித நூல்கள்**: முன்னோாகளின் இறையுணாவுகள

அவர்கள் விட்டுச் சென்ற புனித நூல்கள் மூலம் அறியப்படுகின்றன. பகவத்கீதை, விவிலிய நூல், குரான், ஆதிகிரந்தம் போன்றவை அத்தகைய நூல் களாகும். இப்புனித நூல்களைத் தவிர மதத் தொடர் பான வாழ்க்கைநெறிகளும் தொன்றுதொட்டுத் தொடர்ச்சியாக முன்னோர்களால் பின்வரும் மக் களுக்கு வழங்கப்பட்டுள்ளன. இவ்வழிமுறைகள் (Tradition) புனித நூல்களுக்கு (Scriptures) முரண் பட்டவையல்ல.

2. **அநுபவம்:** மிகப் பழைமையான நூல்களைத் தவிர அவ்வப்போது தோன்றும் மகான்களின் அனு பவங்களும் தெய்விகவியலுக்கு ஆதாரமாகும். வில்லி யம் சேம்சு (William James) என்பார் தம் 'பல் வகைப்பட்ட சமய அனுபவங்கள்' (The Varieties of Religious Experiences) என்னும் நூலில், எவ்வாறு வெவ்வேறு விதமான மத உணர்வுகள் தெய்விக வியலுக்கு ஆதாரமாகின்றன என்பதனை விளக்கு கிறார். அதனால் பழைய விளக்கங்களும வழிமுறை களும் மாறுதலடையலாம். எனினும், தெய்விகவியல புதிய விளக்கங்களுடன் காலத்திற்கேற்ற வகையிலும புதிய அனுபவங்களின அடிப்படையிலும் உறுதிப் படுத்தப் படுகிறது.

**பண்பாடு:** தெய்விகவியலுக்கு ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் பேசப்படும் மொழி, வரலாறறுப் பின்னணி, நமபிக்கைகள் ஆகியவை ஆதாரமாகின் றன. எனவே, கால வெள்ளத்தில் மொழி, பழகக வழக்கங்கள், நம்பிக்கைகள் போனறவை மாறும் போது தெய்விகவியலின் விளக்கங்களும் மாறுகின் றன. தெய்விகவியல் நமபிக்கையடிப்படையில் செயற் படினும் மனிதனின பகுத்தறிவும மனச்சாட்சியும அதனைப் பெரிதும பாதிக்கின்றன. ஏனெனில், வளர்ந்து வரும் அறிவியல், நம்பிக்கையடிப்படையி லான தெய்விகவியலுக்கு அறைகூவலாக இருப்ப தோடல்லாமல் தெய்விகவியல் விதிக்கும் நெறிமுறை களையும் சாடுகிறது.

**தெய்விகவியலின் வழிகள்:** வெவவேறு விதமான ஆதாரங்கள் (Sources) தெய்விகவியலுக்கு இருப்பது போன்று, பலதரப்பட்ட வழிமுறைகளும் (Methods) தெய்விகவியலுக்கு உணடு. வரலாறறுப் பினனணி யில் தெய்விகவியலை நோக்குவோமாயின் ஓர் உண்மை விளங்கும். அதாவது நம்பிகைக்கும (Faith) பகுத்தறிவுக்கும் (Reason) எப்போதுமே முரண்பாடு இருந்திருக்கிறது.

**பகுத்தறிவு வழி:** இயற்கைத் தெய்விகவியல் (Natural Theology) கடவுள், மனிதனின முடிவு போன்றவற்றைப் பகுத்தறிவால (Reason) அறிய முற்படவேண்டும் என்கிறது. நம்பிக்கையடிப்படை யிலான தெய்விகவியல் (Revealed Theogloy), இயற்கைத் தெய்விகவியலின் அடிப்படையில அமையவேண்டும் என்கிறது. மேலும் கடவுள் இருக்கிறார் என்பதையும மெய்ப்பித்துக் காட்டு கிறது. (Ontological Proofs for the Existence of God). மேற்கண்ட நிருபணங்களை வழங்கியவர் புனித ஆனசெலம (St. Anselm) ஆவர். கடவுள் இருககிறார் எனபதை மனததில் கடவுளைப் பற்றியுளள எணணததின்மூலம் அறியலாம். (From Idea to reality). எனினும, ஆன்செல்ம என்பாரின் வாதங்களைப் பலர் ஒத்துககொள்ளவில்லை. ஒருவர் மனததில் ஒரு எண்ணம் (கடவுளைப பற்றி) இருப்ப தினாலேயே கடவுள இருககவேண்டும் எனபதை ஒத் துககொள்ளமுடியாது எனறு செருமானிய அறிஞர் 'காண்ட்டு' (Kant) என்பாரும கூறினார். புனித தாமசு அக்கினாசு (St. Thomas Aquinas) என்பாரும் ஆனசெலமின் வாதததை ஒத்துக்கொளளவில்லை. அவர் ஐந்து வழிகளின மூலம் கடவுள் இருப்பதை அறி யலாம் எனறார். அவையாவன: 1) மககள் காணும் நகர்ச்சிக்கு (Motion) ஆதாரமாக ஒன்று இருக்க வேண்டும (Prime Moves). 2) காரண காரிய இயக் கங்களுக்கு முதன்மைக காரணம் ஒன்று இருககவேண் டும். 3) அஙகொனறும் இஙகொன்றுமான இயற்கை நிகழ்ச்சிகளின் பின்னணியில ஆதாரமாக ஒன்று இருக்கவேணடும் (From Contingent beings to necessary Being). 4) பல்வேறு தரப்பட்ட முழுமைத் தன்மை பெறாத பொருள்களின பினனணியில் முழு மைத் தன்மை பெற்ற ஒன்று (Perfect Being).இருக்க வேண்டும். 5) நேர்த்தியாகவும இயற்கை விதிகளின் படியும் இயங்கும் பேரண்டத்திற்குப் (Supreme Intelligence) பினனணி ஒன்று இருக்கவேணடும். தாவீது கியூம் (David Hume) என்பார், இயறகைத் தெய்விக வியல் மனித வாழவிறகும் பகுத்தறிவிற்கும் சிறிதும் ஒவ்வாதது என்கிறார்

**நம்பிக்கை வழி:** இயற்கைத் தெய்விக இயல் பகுத்தறிவின் மூலம் கடவுளைப பற்றி விளக்க முற பட்டாலும் அவவிளககங்கள கடவுளைப் பற்றிச் சரி யான விளக்கங்களை எப்போதும் தரவியலா எனற னர் நம்பிக்கை வழியினர். ஏனெனில், மனிதனின் அறிவானது கடவுளைப் பற்றிய எல்லாத் தன்மை களையும் விளககமுடியாது. மனிதன அழியக் கூடிய வன், நிலையற்றவன. எனவே, நம்பிகை வழியில (Revelation)சுய உணர்வுகள் மூலம கடவுளை அறிய முறபடவேணடும். நம்பிக்கை வாதிகள் இயற்கை வாதிகளைச் சாடினாலும் தங்களின் நிலையையும் அவர்களால் காத்துக்கொள்ள இயலவில்லை. ஏனெ னில், மனித வாழ்க்கைக்கு அப்பாறபட்ட இயறகைத் தெய்விகவியலாரின கோட்பாடுகளின் அடிப்படை

யற்ற கொள்கைகள் யாவும் வாழ்க்கைக்குத் தொடர் பற்றவையாகவே இருக்கும். 20-ஆம் நூற்றாண டில் நம்பிக்கை வழித் தெய்விகவியலில் குறிப்பிடத்தக்க வர் காரல் பார்த்து (Karl Barth) ஆவர்.

**மானிட வழி**: இயற்கைத் தெய்விகவியலுக்கும் நம்பிக்கை வழித் தெயவிகவியலுக்கும் இடையே'பால தில்லிச்சு' (Paul Tillich) எனபாரின மானிடவழித் தெய்விக இயல் அமைந்துள்ளது. இவர் கடவுளை மனிதனோடு தொடர்பு படுத்தித் தம் கொள்கை களை விளக்குகிறார். மனிதனற்ற கடவுட் கொளகை யும் கடவுளற்ற மனிதக் கொள்கையும் தேவையற் றன என்கிறார். மனிதனின அன்றாடச் சிக்கல்களா கிய குற்றம், மரணம், அமைதியின்மை ஆகியவை மனிதனை நம்பிக்கை வழித் (Revelation) தெயவிக வியலுககு இட்டுச் செல்கிறது. எனினும, பால் தில் லிச்சு போலன்றிக் காரல் ரேனர் (Karl Rahner) என பார் மனிதனின எதிர்மறை வாழ்ககை நிலைகளோடு (Negative Life Situations) நேரடி நிலைகளையும குறிப்பிட்டுத் தம் கொள்கைகளை விளக்குகிறார. இத்தகைய தெய்விகவியல் கோட்பாடுகள் யாவும இப்போது நிகழவியல் கொள்கைகளில (Phenomenology) முக்கிய அங்கம் வகிக்கின்றன.

மேற்கண்ட மூன்று வகையான தெய்விகவியற் கொள்கைகள ஒவவொன்றும் ஒரு குறிப்பிட்ட வர லாற்றுக் கட்டத்தில் போற்றபபட்டிருக்கின றன. இயற்கைத் தெய்விகவியல் (Natural Theology)கிரேக கர் காலத்திலும், நம்பிக்கை வழித் தெய்விகவியல (Revelational Theology )கிறித்தவ மதம் பரவத் தொடங்கிய இடைக் காலத்திலும், மானிட வழித் தெய்விகவியல் இக்காலத்திலும் போற்றப்படுகின றன.

**தெய்விகவியலும் தத்துவமும்**: கிரேககர் காலத தில் தெய்விக இயலுக்கும் தத்துவத்திறகும் வேறு பாடு இல்லை என்றே கூறலாம். ஆனால் பின்னாத் தெய்விக இயல் என்பது கடவுளைப் பற்றியும கடவுள், உலகம் மற்றும் மனிதனோடு கொண டுள்ள தொடாபு பற்றியும் விளககும் ஓா இய லாகக் கருதப்பட்டது தத்துவம் உணமையை அறிய விழைகிறது உண்மையை அறிய உதவும் வழி களுள கடவுள் நம்பிக்கை வழியும ஒனறாகும். தெய் விக இயலுக்கும் இருத்தற் கொளகை என்னும் கோட் பாட்டுக்கும் (Existentialism) நெருஙகிய தொடாபு இருப்பதைச் சோரன கீர்க்ககார்டு (Soren Kierkegaard) எனனும் அறிஞரின் கொள்கைகளின மூலம அறியலாம். இவரும் சார்த்ரே (Sartre), எய்டெக்கர் (Heidegger) போன்றவர்களும் மனிதன் அடிப்படை யிலும் மத நம்பிக்கையின் அடிப்படையிலுமான பல கொளகைகளை வெளியிட்டுள்ளனர்.

தருக்க நேர்காட்சிக் கொள்கை (Logical Positivism) என்னும் ஒரு கொள்கை, அனுபவத்தின்மூலம் சரிபார்கக முடியாத எநத ஒரு கொள்கையையும தவறானது எனகிறது. அதன்படி தெயவிக இயலில் கூறப்படும் கடவுள் மற்றும கடவுள பற்றிய கருதது கள யாவும் பொருளற்றவையாகினறன. மேலும் இப போது வளர்ந்து வரும் இயற்கை அறிவியல் தெய்விக வியலுககு ஓர் அறை கூவலாகும். ஏனெனில் அறிவியலில கூறபபடும உணமைகளை மெய்ப்பிசக முடிகிறது.தெய விகவியலின் கூறறுகளை மெய்ப்பிக்க முடியவில்லை தெயவிகவியல, மானிட அறிவியலகளான உளவியல (Psychology),சமூகவியல (Sociology) மறறும மானிட வியலுடன (Anthropology)தொடாபுள்ளது. தெயவிக வியலிற கூறபபடும மத சம்பந்தமான மனித அனுப வஙகளை உளவியல் அறிஞர்கள அறிவியல் முறை யில் விளககி முறபட்டுளளனர். உளவியலின பகுத தாய்வு முறையும்(Psycho Analysis) அடிமன ஆய வும் (Depth Psychology)தெயவிக இயலின ஆனமிகச் சார்பான அனுபவத்துடன் (Mystical Experience) ஒப்புநோக்கப்பட்டு ஆராயப்படுகினறன. எனினும், உளவியலாரின விளககங்களைத் தெய்விகவியலார் ஏற்பார்களா எனபது ஐயமே. ஏனெனில், உளவியல, ஆராய்ந்து அறியப்பட்ட உணமைகள் ஒரு குறிப் பிட்ட வரையறைக்குட்பட்டன எனகிறது. தெயவிக இயல் அவவறையரைக்கு அபபாற் செல்லவிழைகிறது. இதுபோனறே சமூகவியல் சமூகததில் நிகழும் நிகழ்ச்சிகளை அறிவியல் முறையில விளக்க முறபடும போது, தெய்விகவியல, சமூக நிகழவுகளையும் கடவு ளோடு தொடர்பு படுததுகிறது அ.அ இரா.

**துணை நூல்கள்:**


Buber, Martin, The Prophetic Faith Magnolia,Mass, 1955.

Niebuhr, Rainhold, The Nature and Destiny of Man, 2 Vols. New York, 1949.

Robinson, John A.T., Exploration into God, Stanford, California, 1967.

Rust, Eric.C., Science and Faith, New York, 1967.


**தெர்பி**: இங்கிலாநது நாட்டில இலண்டன நக ருக்கு 200 கி மீ. தொலைவில் தொவணட்டு (Derwent) ஆறறஙகரையில் தொபி (Derby) நகரம அமைந்துளளது. இது கி.பி. 17-ஆம் நூற்றாண்டின பிற்பகுதியில் தொழில் நகரமாக மாறியது. சான உலாம்பே (John Lombe) எனபவா கி.பி. 1717-இல், இங்கிலாந்தின முதல் பட்டாடைகள் உறபத்தி செய் யும ஆலையைத் (Silk mill) தெர்வண்ட்டு ஆற்றங

கரையில் நிறுவினார். இங்கு கி.பி. 1836-இல் திறக்கப்பட்ட தெர்வண்ட்டுக் கால்வாயும் (Derwent Canal) நாட்டிங்காம் (Nottingham) தெர்பி இருப்புப் பாதையும் தொழில் முன்னேற்றத்திற்குப் பெரிதும் உதவியாக இருந்தன. பர்மிங்காம் (Birmingham) கிளவுசுடர் (Gloucester) தெர்பி ஆகிய மூன்றையும் இணைக்கும் இருப்புப் பாதை நிலையமும் விரைவில் (Junction Railway) திறக்கப்பட்டது. பின்னர் கி.பி. 1841-இல் இலீட்சுடன் (Leeds) இருப்புப்பாதைத் தொடர்பு ஏற்பட்டது. தனித்தனியாக இயங்கி வந்த இவ் விருப்புப்பாதைக் குழுக்கள் ஒன்றாக இணைக்கப்பட்டு மிட்லாந்து இருப்புப்பாதைக் குழுமம்(Midland Railway Company)தெர்பியைத் தலைமை இடமாகக் கொண்டு செயற்படத் தொடங்கியது.

தெர்பியில் சிறப்பு வாய்ந்த கட்டடங்கள் உள்ளன. இங்கிலாந்தின் இரண்டாம் உயரமுள்ள திருச்சபைக் கட்டடம் இங்கு உள்ளது இவை கோதிக்குக் கட்டடக் கலை (Gothic architecture) முறையில் அமைக்கப்பட்டுள்ளன.

இக்காலத்தில் தெர்பி மிகப்பெரிய தொழில் நிறுவனமாக வளர்ச்சி அடைந்துள்ளது. இங்கு உரோலசு-ராய்சு (Rolls-Royce) தொழிற்சாலை 1906-இல் நிறுவப்பட்டது. வானவூர்திக்குத் தேவையான இயந்திரங்களையும் பிற உறுப்புகளையும் தயாரிக்கும் நிறுவனங்கள் (Aero-engines, air-craft Components), இரும்பு வார்ப்புத் தொழில் (Iron Castings), செயற்கைப் பட்டாடைதயாரிப்புத்தொழில் (Artificial Silk),நெகிழித் தொழிற்சாலை (Plastics). சர்க்கரைச் சுத்திகரிப்பு (Sugar refining) ஆலைகள், மின்சார இயந்திரங்கள் (Electric Motors), காப்புறை மின்கம்பிகள் (Cables) சுரங்கத் தொழிலுக்குத் தேவையான துணைக்கருவிகள்(Mining equipment), சரிகை (Hosiery), இரயான் நூலிழை (rayon), பீங்கான் சாமான்கள் (Royal Crown Derby Porcelain), வர்ணப்பூச்சு (Paint) இரசாயனப் பொருள்கள்,(Chemicals) ஆகியவற்றைத் தயாரிக்கும் தொழிற்சாலைகளைக் கொண்ட நகரமாகத் தெர்பி உள்ளது.

இந்நகரத்தின் நிருவாகப் பொறுப்பு 64 உறுப்பினர்கள் கொண்ட நிருவாகக் குழுவின் மேற்பார்வையில் உள்ளது. இதில் 16 உறுப்பினர்கள் நகர மூப்பர் (Aldermen) எனக் கூறப்பட்டனர். தெர்பி பிரபுவினால் கி.பி.1780-இல் மிகச் சிறப்பாகக் கூறப்படும் தெர்பி குதிரைப் பந்தயம் இங்குத்தொடங்கி வைக்கப்பட்டது. எஸ்.அ.

**தெர்மாபிலே** கிரீசு நாட்டின் மத்திய கிழக்குப் பகுதியில் உள்ள ஒரு கணவாய். இது இலாமியாப் (Lamia) பகுதியின் தென்கிழக்கில் உள்ளது. இதன இருமருங்கிலும் ஒயிட்டா (Oeta) மலையின செங்குத்தான பாறைப் பகுதிகளும், மாலிக்கு (Malic) வளைகுடாவும் விளங்குகின்றன. வண்டல்கள சேர்ந்ததன் காரணமாகத் தெர்மாபிலே (Thermopylae) காலப் போக்கில் விரிவுபடுத்தப்பட்டு வந்திருக்கிறது. பணடைக் காலததில இப்பகுதி, கிரீசுக்கு நுழையும் வாயிலாகப் பயனபட்டு வந்தது. ஆதலால்பல போர்கள இஙகே நிகழந்துளளன. பாரசீகத்திற்கும் கிரீசிற்குமிடையே கி.மு.5-ஆம் நூற்றாணடில் நடைபெற்ற பாரசீகப் போர் இஙகேயும் நடந்தது.
தெ.பா.

**தெர்மாபோலிசு** அமெரிககாவில் வியோமிங்கு (Wyoming) மாநிலத்தின் மததிய வடக்குப் பகுதியில உள்ள ஒரு நகரம். இது பிக்ஆரன் (Bighorn) ஆற்றங் கரையில் உள்ளது. தெர்மா போலிசு (Thermo-polis) கி.பி.1897-இல் உருவாயிற்று. வேளாண் பொருளகளுககும், கால்நடைகள் வாணிகததிறகும் இந்த இடம மிகவும புகழ் பெற்றது. மேலும், எணணெய், நிலக்கரி முதலியனவும் மிகுதியாக இஙகுக் கிடைக்கினறன எணணெய்ச் சுத்திகரிபபு ஆலையும இங்குச்செயற்பட்டு வருகிறது இதறகு அணமையில் உள்ள பூஙகாக்களும் ஊறறுகளும மககளை இங்கு வந்து தங்குமாறு தூண்டுகினறன. தெ.பா.

**தெரசா, புனித** (கி.பி.1873-97): புனித பால்(St. Paul) தொடக்க காலத்தில கிறித்தவர்கள் அடஙகிய கூட்டத்தைப்(Christian Congregations)‘புனித’ என்று பொருள்படும் ‘ககாய்’ (hagioi) எனக் கூறினார். இக்காலத்தில் கிறித்துவ மடாலயத் துறவிகள் புனிதர் (Saint) எனறு கூறப்படுகினறனர். இத்



புனித தெரசா

தகைய புனித துறவிகள் இறநதவுடன் அவர்கள அடக்கம் செய்யப்படுகின்ற இடம மிகவும் புனிததகிற குரியதாகக் கருதி மக்கள் அதனை வழிபடுகின்றனர்.

இத்தகையபுனித துறவிகளுள ஒருவராகத் திகழந தவா புனித தெரசா (St Theresa) இவா கி பி.1873 முதல 1897 வரை வாழந்தவர்; உலூயி (Louis), செலி மாாட்டின் (Zelie Martin) எனற தம்பதியருக்கு ஒன பதாம குழநதையாகப் பிறந்தவா. இலிசிக்சு (Lisieux) என்ற ஊரில வசிததபோது 15-ஆம வயதில் மடால யத துறவியாகிச் சகோதரி தெரசா (Sister Theresa) எனறு அழைககபபட்டார்; இறககும் வரை இலிசிகசில வசித்தார். இவருடைய வாழககை வரலாறு கி.பி 1894-இல் வெளியிடபபட்டது இவர் இறநத பிறகும் பல அறபுதஙகளை நிகழ்த்தியுள்ளதாக நம் பப்படுகிறது. புனித தெரசா எனறு அழைக்கப்பட்ட இவர் மககளின் மனத்தில நீஙகா இடம் பெற்ற புனி தராக விளஙகுகினறார். எஸ.அ.

**தெரிநிலை வினை** மரபிலக்கண நூலாா தமிழ்வினைச்சொற்களைத தெரிநிலைவினைஎனவும குறிப்பு வினை எனவும இரணடு வகையாகப் பகுத துளளனா. தொழில நிகழவுப் பொருணமையையும், காலப் பொருணமையையும வெளிப்படையாகச சுட் டும் வினையே தெரிநிலை வினை எனப்படும. 'வந தான'எனனும வினையில 'வருதல்'எனனும் தொழில நிகழவுப் பொருணமையும இறந்தகாலப் பொருண மையும அமையப்பெறறுளளமையால் இதனைத தெரிநிலை வினையாகக கொளளலாம்.

அமைப்பு நிலையில தெரிநிலை வினையின அடி எப்பொழுதும் தொழில நிகழ்வினைசசுட்டும வகை யில வினையடியாக அமையப பெறும. இவவினையடி கள் காலப் பொருணமையினைச சுடடும் குறியீடு களை ஏறகும் தகுதி பெற்றனவாக அமையும. மேலும பெரும் பானமையான தெரிநிலை வினையடிகள ஏவலாகச் (நீ பார்; நீ நட) செயறபடவலலன.

தெரிநிலை வினையடியிலிருந்து முற்றுககளும எசசங்களும் சில பெயாகளும் அமையப்பெறும. தெரி நிலை வினைமுற்றுக்களின அமைப்பு வினையடி+பிற வினைவிகுதி +காலவிகுதி + இடவிகுதி+எண-பால் விகுதி (செய்-வி-(த)-த்-அன-அ-ன) எனற முறையில அமையும். ஈண்டுக் குறியிடப் பெறறுள்ள விகுதிகள அனைத்தும எல்லா வினைமுறறுககளின அமைபபி லும் காணப்பெறுவதில்லை. பெரும்பாலும தெரி நிலை வினைமுற்றுககளின் அமைப்பில் வினையடி, காலவிகுதி, எண-பால், இடவிகுதி அமையபபெறறிருக் கும் தெரிநிலை வினைமுறறு எதிர்மறைப் பொருணமையினைச் சுட்டும் நிலையில காலவிகுதிக் குப் பதிலாக எதிாமறை விகுதியினைப் பெறறு(வார்-ஆ-து) அமையும். தெரிநிலை வினைமுற்றுகள ஐம. பால மூவிடஙளிலுமவரப்பெறும்.

தெரிநிலை வினையடியிலிருந்துபெயரெச்சங்களும வினையெச்சங்களும் அமையும. தெரிநிலைப பெய ரெச்சஙகளினஅமைப்புவினையடி+காலவிகுதி+பெய ரெச்ச விகுதி எனற முறையில (செய்-த்-அ, செய -கினற-அ, செய்-உம) அமையும தெரிநிலை வினை யெச்ச அமைப்பும பெருமபாலும் வினையடி+கால விகுதி+ வினையெச்சவிகுதி எனற முறையில (செய்-த்-உ) அமையப பெறும். தெரிநிலை வினையடி யிலிருநது தொழிற பெயர்களும (வருதல, செயதல) வினையாலணையும் பெயாகளும் (வநதவன், செய பவன்) அமையப பெறுவதுணடு தெரிநிலை வினை கள் வினைச்செயகை (voice), வினைமை (aspect) ஆகியவறறைச் சுட்டும் விகுதிகளைப் பெறறு வருதலும உணடு.

தொடரியல நிலையில் தெரிநிலைவினைகளவினை யெசசம, வினையடை ஆகியவறறால (ஓடி வநதான, நனகு உணடான) தழுவபபெறும. தெரிநிலை வினை முறறாக அமையும் நிலையில பயனிலையாகவும, வினையெசசமாக அமையும நிலையில் பிறிதோா வினையின அணமையுறுப்பாகவும பெயரெசசமாக அமையும் நிலையில ஒரு பெயர்ச்சொல்லின அணமை யுறுப்பாகவும செயறபடும். பொருணமை நிலையில தெரிநிலைவினை தொழிலநிகழவுப் பொருணமையை யும அததொழில நிகழவின காலபபொருண்மையை யும சுட்டும வகையில அமையும. ஏ ஆ

**தெல் அவீவ்** இசுரேல நாட்டில எருசலத்தி லிருநது 77 கி மீ தொலைவில் இநநகரம அமைந்துள ளது. இது 1948-ஆம ஆணடு முதல 1950-ஆம் ஆணடு வரையில் இசுரேல நாடடின தலைநகரமாகவும் இருநதது மக்கள்தொகை அடிபபடையில் இதுவே இசுரேலின மிகப்பெரிய நகரமாகும இரணடாம உலகபபோாக் காலத்தில இசுரேலிய அரசு தெல அவீவின (Tel-Aviv) எலலைகளை 10,000 ஏககா பரப்புளள அளவிறகு விரிவாக்கியது. அதாவது 1930-ஆம் ஆணடில இருநததைவிட 4 மடஙகு விரி வாக்கியது. இதன மககளதொகை 1950-ஆம் ஆண டில 5,00,000மாக இருநதது. இலவச மருததுவ வசதி கள, கலவி வசதிகள, சமூகநலத திட்டஙகள, நக ராட்சி நிருவாகத் திறன ஆகியவை மககளைக் கவாந்ததால 1970-ஆம் ஆணடிற்குள இநநகரம நாட்டின தலையாய பொருளாதார மையமாக மாறியது. இந நகரம சர்ககரைத தொழிற்சாலை களுக்கும, இரசாயனததொழிற்சாலைகளுக்கும் புகழ

பெற்றது. பல வங்கிகளும் இந்நகரில் உள்ளன. வாணிக, பொருளாதாரத் தொடர்பான பத்திரிகைகளின் அலுவலகங்கள் இங்குள்ளன. இது ஒரு பண்பாட்டு மையம். ஈப்ரு மொழிப் பத்திரிகைகள் இங்கிருந்துவெளியிடப்படுகின்றன. இரண்டு திரையரங்குகள்இங்குள்ளன. நகராட்சிக்கட்டடத்திற்குள் ஓர் அருங்காட்சியகமும், கலைக்கூடமும் உள்ளன. சாபாவின் கீழ்த்திசைப் பண்பாட்டிற்கு நேர்மாறான நவீன ஐரோப்பியப் பண்பாட்டின் தோற்றத்துடன் தெல் அவிவ் இருக்கிறது. பாலத்தீனத்தின் 1/3 பங்கு மக்கள் தொகையினர் தெல்அவீவில் வாழ்ந்தனர். சாபாவிலிருந்து இந்நகருக்கு யூதர்கள் இடைவிடாது குடிபுகும் எண்ணிக்கை மிகுந்து கொண்டேயிருக்கிறது. இந்நகரம் தன்னாட்சி அரசு ஒன்றை நிறுவிக்கொள்ள 1921-ஆம் ஆண்டு அனுமதிக்கப்பட்டது. தொடக்கத்தில் 60 வீடுகள் மட்டுமே கொண்ட அமைதியான நகரம் இன்று மிகவும் நடமாட்டமுள்ள அகன்ற சாலைகளைப் பெற்றுள்ளது. இங்கு 1955-இல பர்கன் பல் கலைக்கழகம் நிறுவப்பெற்றது. கே.பா.

***தெல்பி:*** தெல்பி என்பது கிரீசு (Greece) நாட்டில் போசிசப்(Phocis)பகுதியில் இருந்த பண்டையநகரம். கிரேக்கக் கவிஞர் ஓமர் (Homer) அந்நகரத்தைத் தமதுகாவியத்தில் பைத்தோ என்று குறிப்பிடுகின்றார் அந்த நகரத்தின் அருகில் உள்ள மலையில் அப்போலோஎன்னும் கிரேக்கதேவதையின் குறி கூறுமிடம் இருந்தது. அப்போலோவின் மகள் தெல்பியசு என்பதிலிருந்து அவ்விடத்திற்குத் தெல்பி (Delphi) என்ற பெயரிடப்பட்டது. இவ்விடத்தில் அப்போலோ குழந்தையாய் இருந்தபோது ஒரு மலைப் பாம்பைக் கொன்றதால் இவ்விடம் பைத்தோ என்றும் சொல்லப்பட்டது. மேலும் தெல்பி தான் பூமியின் மையம் என்று கிரேக்கர்கள நம்பினர்.



அப்போலோ குறி கூறுமிடம்

ஒரு காலத்தில் ஓர் இடையன் அந்தமலையோரம் ஆடு மேய்த்துக்கொண்டு இருந்தான். அப்போது ஒரு வெடிப்பிலிருந்து மஞ்சள் நிறப் புகை வருவதைக் கண்டான். அப்புகையை அவன் சுவாசித்ததும் குடிவெறியன் போல் ஆனான். அவ்வெறியில் அவன் கூறியவை அப்போலோ கடவுள் அவனுக்குக் கூறியவை என்று மக்கள் நம்பினர். அவ்விடத்தில ஒரு கோயிலைக் கட்டி, ஒரு பெண் புரோகிதரை நியமித்தனர். அவள் இப்புகையைச் சுவாதித்து எதிர் காலத்தில் நிகழப்போவதைக் கூறினாள். அவளைப் பித்தியா என்று கூறினர். அவள் செயயுளாகக் கூறுவதை மற்றப் புரோகிதர்கள் கேட்டு அதன் பொருளை மக்களுக்கு விளக்குவர். கோவிலுக்காக வரும் மக்கள் கோவிலுக்குப் பொன்னும் பொருளும் வழங்கினர்.

பொதுவாக அவள் கூறும் மொழிகள் எளிதில் விளங்குவனவாக இருக்கும்; ஆயினும் சில வேளைகளில் விளங்கா அல்லது பலவகையில் பொருள் கூறக் கூடியனவாக இருக்கும். ஒரு சமயம் கிரீசசு (Croesus) அரசர், சைரசு அரசர் மீது (பாரசீகப் பேரரசர்) போர் தொடுக்கலாமா என்று கேட்டார். போர் தொடுத்தால் ஒரு பெரிய பேரரசு அழியும் என்று விடை வந்தது. அதைக்கேட்டும் கிரீசசு போர் தொடுத்தார். ஆதலின் அவர் பேரரசு அழிந்தது.

உரோமாபுரியிலும். ஆசியாவிலும் இருந்த அரசர்கள் குறி கேட்பதற்குத் தெல்பிக்கு வந்தார்கள். தெல்பி கிரீசு நாட்டில் மிகப்பெரிய சமயமையமாக விளங்கியது. தெல்பிகோயில் உட்புறம் அயோனிய முறையிலும் வெளிப்புறம், தாரிக்கு முறையிலும் அமைந்திருந்தன. நாளடைவில் அங்கிருந்த புரோகிதர்களிடம் சூதும் வாதும் நிரம்பியதால அதன் புகழ் மறைந்தது. உரோமானியஅரசர் நீரோவும், அதன் பின் மகா கான்சுடன்டைனும் (Constantine) அக்கோயிலைக் கொள்ளை அடித்தனர்.

கோயிலுக்குத் தென் மேற்கே அமைந்த திறந்த வெளி நாடக அரங்கு இனறும் சிதைவுறாமல இருக்கிறது. இவ்வரங்கில் பணடைக்காலப் புகழ்பெற்ற பித்தியன் விளையாட்டுகள் நடந்தன. தெல்பி கி.மு. 5-ஆம் மற்றும் 4-ஆம் நூற்றாணடிலே புகழ் வாயநததாக இருந்தது. இப்போது கசுத்திரி என்னும் சிற்றூராக இருந்து வருகிறது. தி.கை.

***தெல்மார்வா முந்நீரகம்:*** தெலமார்வா முந்நீரகம் அமெரிக்க ஐக்கிய நாட்டில் உள்ளது. இது

அட்லாண்டிக்குப் பெருங்கடலின் ஒரு பகுதியாக விளங்குகிறது. தெல்மார்வா முநநீரகம், மேற்கில் சீசுபிக்கு(Chesapake)வளைகுடாவாலும், கிழக்கில் தெலாவர் வளைகுடாவாலும், அட்லாணடிக்கு மாக்கடலாலும் சூழப்பட்டுள்ளது. தெலாவர், மேரிலாநது, வெர்சீனியா ஆகிய மாநிலங்களின முதல எழுத்துக்களைக் கொணடு தெல்மாாவா (Delmarva) முந்நீரகம் பெயர் பெற்றுள்ளது. இம் முந்நீரகததின் நிலப் பரப்பை மேற்குறிப்பிட்ட மூன்று மாநிலங்களும் பிரித்துக் கொள்கினறன. இது ஏறத்தாழ 285கி.மீ. நீளமும் 112 கி.மீ. அகலமும உளளது. இதனுடைய கடற்கரையில் சுற்றுலாப் பயணிகள் தங்கி ஓய்வெடுக்கக்கூடிய தஙகும் விடுதிகள பல உளளன. மேற்கே அமைநதுள்ள சீசாபிக்கு வளைகுடாக் கடற்கரையில எண்ணறற மீன்பிடி துறைமுகங்கள அமைநதுள்ளன. இங்கே செங்குத்தான மலைச் சரிவுகளையும, அழகிய செழிப்பான பள்ளத்தாககுகளையும காணலாம்.

நியூயார்க்கு, பாசுடன் (Boston), பிலடெல்பியா ஆகிய நகரங்கள் இதைச் சுறறியுளள முக்கிய நகரஙகளாகும். இதன் கிழக்கே உளள அட்லாணடிககுச் சமவெளியில் சிறு சிறு தீவுகள உளளன. நீளத்தீவு, மார்தா, வினியார்டு மற்றும் நானடக்கெட்டு ஆகியவை முக்கிய தீவுகளாகும். இந்தத் தீவுகளிலுளள மக்கள் விவசாயப் பொருளகளை மிக அதிக அளவில உற்பத்தி செய்கினறனர்.

கோழி வளாப்பு, ஆடு மாடு மேய்த்தல, காயகறிகள் பயிரிடுதல ஆகியவை முககியமான கிராமப்புறத தொழில்களாகும். ஆபபிளபழம், தக்காளி, பட்டாணி பீன்சு, சிவப்புபபழவகை, உருளைக்கிழங்கு ஆகிய தாவரப் பொருள்களும், இரும்பு, எஃகு, கருங்கல் ஆகிய கனிமப் பொருளகளும இஙகே மிகுதியாகக கிடைக்கின்றன. இம்முநநீரகத்தைச சுற்றியுளள தெலாவர், மேரிலாந்து, வர்சீனியா ஆகிய மாநிலஙகளில் தோல் பொருள்கள், உணவுப பொருளகளைத தகரப்பெட்டிகளில் அடைததல், மீன் உரம் தயாரித்தல் முதலானவை முக்கிய தொழில்களாகும.

இஙகு உறபததியாகும பொருளகள் சீசாபிககு வளைகுடாவிற்குக் கொண்டு வந்து நார்போல்க்குத் துறைமுகத்திறகு ஆம்பட்ன சாலை வழியாக ஏற்றுமதி செய்யப்படுகினறன. ஏற்றுமதிக் கப்பலகள் மேற்கு வெர்சீனியா வழியாகச் செல்லுகின்றன. புகையிலை, பருத்தி மற்றும் மரக்கட்டைகள் இம் முந்நீரகத்திலிருந்து ஏற்றுமதியாகும் பிற பொருள்களாகும். நியூபோர்ட்டு நியூசு எனற துறைமுகம் கப்பற்படைத் தளமாகச் செயற்படுகிறது. நார்போல்க்கு நகரம், உந்து வண்டிகள் உறபத்திக்கும், பட்டாணிப் பருப்பு வணிகத்திற்கும் பெயர் பெற்றது. சாலிசுபரி நகரம் இம்முந்நீரகத்தின் மிக முக்கியமான வாணிக மையமாகும். தெல்மாாவா முந்நீரகத்தின தெற்குப் பகுதியையும், நார்போலககுத் துறைமுக நகரத்தினையும் இணைக்கும் சாலைப் போககுவரத்துப் பாலம் 28 கி.மீ. நீளம் கொணடது. இது 1964-ஆம் ஆண்டு திறந்து வைக்கப்பட்டது

தீ கை.

**துணை நூல்கள்:**

Guide to the U.S.A. Vol. VII., XXI, XXIII., Dell Publishing Company, New York, 1965.

Hudson. F.S., Geography Series- North America London, 1968

*தெல்ரியோ (நகரம்)*· இது தெகசாசு மாநிலததில் தெனமேறகாகப் பாயும மிக நீளமுளள நதியான இரியோ கிரேணடின (Rio-Grande) கரையில அமைந்துளளது. மிகச் சிறந்த வாணிகத் தலமான தெல்ரியோவில (Del-Rio) ஆட்டு உரோமம முககியமான வாணிகபபொருளாகும்.

பிரான்சைச் சார்நத இராபாட்டு கேவிலியா சிவியா திலா சாலி எனபவர் கி.பி. 1685-ஆம ஆணடு அமெரிக்காவிலுள்ள தெகசாசு கடற்கரையில வநதிறஙகினார். இசுபானியர்கள மெகசிகோவுககு வட பகுதிலியிலிருந்து தஙகளுடைய நிலைகளை உறுதிப் படுத்திக கொளள வேண்டிய தேவைக்கு உளளானாாகள்.ஆகையால், கிழக்குத் தெகசாசுப் பகுதிகளில பல மரககோட்டைகளைக கட்டினர் ஆனால, சிறிது காலத்திறகுளளேயே இலாசாலியை அவருடைய சொந்த ஆட்களே கொனறு விட்டதால் இந்த மரக் கோட்டைகள் தேவையில்லாமற போயின· பினனர் உலூசியானாவிலிருந்து பிரெஞ்சு வணிகாகள வாணிகத்திறகாகக கிழககுத் தெக்சாசுப் பகுதியிலும், கிழக்குத் தெகசாசு ஓக்லகாமா பகுதியிலும் தஙகள நிலையஙகளை ஏற்படுத்துவதைக் கண்டு இசுபானியாகள மீணடும் எசசரிக்கையுடன இருந்தனா. இசுபெயின் நாட்டினர் கி.பி. 1727-இல் இககாலத்திய தெகசாசியிலுள்ள தெலரியோவில தங்களுடைய எதிர்பபு நடவடிக்கைகளை முன்மாதிரியாகச செயற்படுத்தத் தொடங்கினர். அவர்கள தங்கள சேன் அண்டோனியோ, நகோகடோசெசு,இலாபாசியா ஆகிய மூனறு இடங்களிலும் தங்கள் பண்பாட்டு மையஙகளை அமைத்தனர்.

இசுபெயின் கி.பி. 1762-ஆம் ஆண்டு வரை உலூசியானாவிலிருந்து பிரெஞ்சுக்காரர்களைக் கவனமாகக் கணகாணித்து வந்தது. இநநாடு, கி.பி. 1762 ஆம் ஆண்டில் பிரான்சு நாட்டோடு செய்துகொணட

ரசம் முதலியவையாகும். ஐக்கிய நாடுகள் 39 விழுக்காடு ஆசுத்திரேலியப் பொருள்களை வாங்கு கின்றன.

**கல்வி:** பதினான்கு வயது வரையில் எவ்விதச் சார்புமின்றிக் கட்டாய இலவசக்கல்வி வழங்கப்படு கிறது. நூற்று ஐம்பது தனியார் பள்ளிகள், ஏழு உயர்நிலைப் பள்ளிகள் (1952-53-ஆம் ஆண்டு புள்ளி விவரப்படி) இருந்தன. அடிலைடு பல்கலைக்கழகம் 1874-ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. இது தனியாரின் நன்கொடையால் நிறுவப்பட்டது. இதற்கு அரசு ஆண்டுதோறும் மானியம் அளிக்கிறது. சுரங்கத் தொழிலுக்கும் பலவேறு ஏனைய தொழில்களுக்கும் சேர்த்து 1889-ஆம் ஆண்டு ஒரு பள்ளி ஆரம்பிக்கப் பட்டது. இங்குப்பள்ளிக் கட்டணம் வசூலிக்கப்படு கிறது. மக்களவையும் இதற்கு ஆகும் செலவை ஓரளவு ஏற்கிறது. இங்கு வேளாண்மைக் கல்லூரியும், தொழில்நுட்பப் பள்ளிகளும் உண்டு.

**போக்குவரத்து:** மாநிலத்திலுள்ள இருப்புப்பாதை கள் அரசுக்குச் சொந்த மானவை இங்கு அகல இருப்புப் பாதையும் குறுகிய இருப்புப்பாதையும் உண்டு. வடக்கிலும், தென்கிழக்கிலும் குறுகிய இருப்புப் பாதைகள் உள்ளன. குறுகிய இருப்புப்பாதை 1707 கி.மீ. க்கும், அகல இருப்புப்பாதை 2368 கி.மீ. க்கும், போடப்பட்டுள்ளன. 83200 கி.மீ.க்குச் சாலை களும் பல்வேறு துறைமுகங்களும் உள்ளன. அடிலைடு, பெர்த்து, மற்றும் ஏனைய மாநிலங்களின் தலை நகர்களை இணைக்கும் வானவழிகள் உண்டு. முர்ரே ஆற்றில் 400 கி.மீ. நீர்வழிப் போக்குவரத்து உண்டு

**அரசு.** தென் ஆசுத்திரேலியாவின் மக்களவை இரு பிரிவுகள் உடையது மேலவை கீழவை என்பன அவை. மேல் அவைக்கு 18 உறுப்பினர் களும், கீழ் அவைக்கு 36 உறுப்பினர்களும் தேர்ந் தெடுக்கப்பட்டனர். மேல் அவைக்கு 1881-ஆம் ஆண்டில் 6 உறுப்பினர்கள் அதிகப்படுத்தப்பட்டனர். மீண்டும் 1901-ஆம் ஆண்டு பழைய எண்ணிக்கைக்குக் குறைக்கப்பட்டனர். இப்பொழுது 3 ஆண்டுகளுக்கு ஒருமுறை ஓய்வுபெறும் உறுப்பினர்கள் எண்ணிக்கை பாதியாக உள்ள 20 பேர் கொண்ட மேலவை உள்ளது. மூன்று ஆண்டுக்கு ஒருமுறை ஆளுநரால் கலைக்கப்பட்டு மீண்டும் தேர்வு செய்யப்படும் 39 உறுப்பினர்கள் கொண்ட கீழ் அவை உள்ளது. இந் நாட்டில் பிறந்த அல்லது இந்நாட்டைத் தாய்நாடாகக் கொண்ட, ஆறு மாதத்திற்குக் குறையாமல் தேர்தல் பட்டியலில் இடம்பெற்ற 21 வயது உடையவர்களே வாக்களிக்கும் உரிமை பெறுவர். மேலவைக்குத் தேர்ந்தெடுக்கச் சொத்துரிமையும் வரையறுக்கப் பட்டுள்ளது. பெண்களுக்கு இங்கு வாக்குரிமை அளிக்கப்பட்டது மேற்கண்ட முறையில் 1856-ஆம் ஆண்டுமுதல் மாநில அரசு இயங்கிவருகிறது. 8 பேர் கொண்ட அமைச்சரவையும் உண்டு.

**வரலாறு** கச்சு மக்கள் கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் தென் ஆசுத்திரேலியாவை அறிந்தனர். தாசுமன் 1649-இல் இப்பகுதியை ஆய்ந்தார். பிலிண்டர்சு 1862 - இல் இப்பகுதியை சாசனப்படுத்தினார். இசுடுவர்ட்டு என்பவர் கி.பி. 1828-ஆம் ஆண்டில் முர்ரே ஆற்றைச் சுற்றி ஆய்ந்தார். கிப்பன் வே கிப்பீல்டு வரையறுத்த முறைப்படிக் குடியேற்றம் அமைந்தது. காங்கரு தீவுகளில் முதன்முதலில் குடி யேற்றம் ஏற்பட்டது. காப்பெள்ண்டாவில் செம்பு கண்டுபிடிக்கப்பட்டது. நாடுமுழுதும் செம்பு கிடைக் கிறது. இந்நாடு 1901-ஆம் ஆண்டு பொதுநல அமைப் பில் (Common wealth) சேர்த்துக் கொள்ளப்பட்டது. 52,2000 மக்கள்தொகை உடைய அடிலைடு இந் நாட்டின் தலைநகரமாக விளங்குகிறது. கே.பா.

***தென் ஆப்பிரிக்கக் குடியரசு:*** ஆப்பிரிக் காக் கண்டத்தின் தென்முனையில் தென் ஆப்பிரிக்கக் குடியரசு (Republic of South Africa) அமைந்துள்ளது. ஆங்கிலேய ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்த குடியேற் றங்களான கேப்புக் குடியேற்றம், நேட்டால் (Natal) திரான்சுவால் (Transval), ஆரஞ்சு சுதந்திர நாடு (Orange Free State or Orange River Colong) ஆகிய நான்கும் 1909-இல் இணைக்கப்பட்டு தென் ஆப்பிரிக்க ஒன்றியம் (Union of South Africa) ஏற் படுத்தப்பட்டது. இது இங்கிலாந்தின் ஆட்சியின்கீழ் பொது நலக்கூட்டமைப்பின் (Commonwealth) ஓர் உறுப்பாக இருந்துவந்தது. இங்கிலாந்தின் ஆதிக்கத் திலிருந்து 1961-இல் விடுபட்டு, பொது நல நாடுகளி லிருந்து விலகித் தென் ஆப்பிரிக்கக் குடியரசு ஏற் படுத்தப்பட்டது. குடியேற்ற நாடுகள் நான்கும் இக் குடியரசின் நான்கு மாநிலங்களாக ஆயின. இதன் நிருவாகத் தலைநகர் பிரிடோரியா (Pretoria); சட்ட மன்றம் கேப்பு நகரில் (Cape Town) உள்ளது; உச்ச நீதிமன்றம் புளோம் பாண்டீன் (Bloemfontein) நகரில் இருக்கின்றது காந்தியடிகள் இந்நாட்டில் வெள்ளை யர் அல்லாதாரின் உரிமைக்காகப் போராடத் தொடங்கியதும் இது உலகின் கவனத்தை ஈர்த்தது. இந்நாட்டில் பின்பற்றப்பட்டு வரும் இன ஒதுக்கல் கொள்கையை அன்றுமுதல் இன்றுவரை உலகநாடுகள் எதிர்த்து வருகின்றன. இந்நாடு இதன் அண்மையி லுள்ள நமிபியா (Namiblia or South West Africa) மீது ஆதிக்கம் செலுத்தி வருவதை ஐக்கிய நாட்ட வையும், உலக நாடுகளும் கண்டித்து வருகின்றன.




தென் ஆப்பிரிக்கா அமைவிடம்

**புவியல் அமைப்பு:தட்ப வெப்பம்:** மூன்று பக்கங்களிலும் கடலால் சூழப்பட்டு மேட்டு நிலப்பகுதியாகத் தென் ஆப்பிரிக்கா உள்ளதால், இந்நாடு முழுவதிலும் தட்ப வெப்ப நிலை ஓரே சீராக அமைந்துள்ளது. வெயில நிறைந்தும், மழை குறைந்துமுள்ள இந்நாடு உடல்நலத்திற்கும், கடும் உழைப்பிற்கும் ஏற்றதாக இருக்கின்றது.குளிர்காலமான சூன், சூலை ஆகசுட்டு மாதங்களில் குளிர் அதிகமாகவும் பகல் நேரத்தில் வெப்பம் அதிகமாகவும் உள்ளது. சில சமயங்களில் இரவில் குளிரானது நீர் உறையும் அளவிற்குச் செல்லும்.கோடைக்காலத்தில் வெப்பம் அதிகமாக இருந்தாலும் இப்பருவத்தில்தான் பெரும்பாலும் மழை பெய்கிறது. முனைப்பகுதியில் (Cape Area) மத்தியதரைக்கடல் தட்பவெப்ப நிலை நிலவுகிறது. கிழக்குக் கடற்கரைப் பகுதி இந்தியப் பெருங்கடல் வட்டாரத்தில் இருப்பதால் வெப்பமண்டலப் பருவ நிலை இங்கு ஏற்பட்டு உள்ளது. கோடைக்காலத்தில் வெப்பம் மிதமாகவும், குளிர் காலத்தில் குளிர் குறைந்தும் இருக்கிறது.

**ஆறுகள்:** தென் ஆப்பிரிக்க மேட்டு நிலப் பகுதியில் பாயும் இரு ஆறுகள் ஆரஞ்சு (Orange), இலிம்போபோ (Limpopo) ஆகியவையாகும். அவற்றுள் பெரியதான ஆரஞ்சு திராகன்சுபர்க்கில்(Drakensbnrg உற்பத்தியாகி வடக்கு நோக்கி 2090 கி.மீ. ஓடி அட்லாண்டிக்கு கடலில் கலக்கிறது. மேற்குத் திரான்சுவாவில் தோன்றும் இலிம்போபோ ஆறு 1600 கி.மீ. நீளமுள்ளது. போட்சுவானா (Botswana) எல்லையில் ஓடும்போது இதற்கு முதலை ஆறு என்ற பெயருண்டு. ஆரஞ்சு ஆற்றின துணை ஆறான வால்(Vaal) 1210 கி.மீ. நீளமுள்ளது; திரான்சுவாலுக்கும் ஆரஞ்சு சுதந்திர நாட்டிற்கும் எல்லையாக ஓடுகிறது. இவ்வாறுகளில் நீர் தொடர்ந்து ஓடாததுடன் சில சமயங்களில் வற்றிவிடும். மேலும் இவை ஆழமின்றியும் உள்ளதால் மின்சாரம் தயாரிக்கவோ போக்குவரத்திற்கோ பயனற்றவை. இருப்பினும் விவசாயத்திற்குப் பயன்படுகின்றன.

**இயற்கையமைப்பு:** இந்நாட்டை இயற்கையமைப்பின் அடிப்படையில் மேட்டுநிலப் பகுதி,மலைப்பகுதி, கடற்கரைப்பகுதி என மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்.

**மேட்டுநிலப் பகுதி:** இந்நாட்டில் பெரும்பகுதி 900 முதல் 1800 மீ. வரை உயரமுள்ள மேட்டுநிலப் பகுதியாகும். பெரும்பாலும் இங்குக்குட்டையான புல் இடம்விட்டு இடம் வளர்ந்துள்ளது. சில இடங்களில் மட்டும் 30 மீ. வரை உயரமுள்ள சிறு குன்றுகள் உள்ளன. இம் மேட்டுநிலமானது வடகிழககு நோக்கி உயர்ந்துகொண்டே செலகின்றது. இப்பகுதியை ஐவெல்டு (High Veld) எனக்கூறுவர். சோகனசுபர்க்கைச் சுற்றியுள்ள இராணடு அல்லது விட்வாட்டர்சுரேணடு (Rand or Witwatersrand) பகுதி தங்க உற்பத்தியில் உலகிலேயே முதல் இடத்தைப் பெற்றுள்ளது. இமமேட்டுநிலப் பகுதி வடக்குத் திரான்சுவாலில இலிம்போபோ ஆற்றுப் பளளத்தாக்கு நோக்கிச் சரிந்துளளது

**மலைப்பகுதி:** இமமேட்டுநிலப் பகுதிக்கும், கடற்கரைப் பகுதிக்கும் இடையே ஒரு தடுப்புச்சுவர்

| நகரம் | சனவரியில் வெப்ப நிலை | சூலையில் வெப்ப நிலை | ஆணடில சராசரி மழை |
|---|---|---|---|
| பிரிட்டே | 21.1°C | 11.1°C | 785மி.மீ. |
| கேப்பு நகரம் | 20.6°C | 12.2°C | 508மி.மீ. |
| தர்பன் | 23.9°C | 16.7°C | 1008மி.மீ. |
| சோகனசுபர்கு | 20°C | 10.6°C | 709மி.மீ. |



சமவெளியும் மலைப்பகுதியும்- தென்ஆப்பிரிக்கா

போனற ஒரு மலைப்பகுதி (Great Escarpment) உள்ளது. திராகனசுபர்க்குக்கு (Drakensburg or Dragons Mountains) கிழககே இம்மலைத் தொடர் மிகவும் உயர்நது காணப்படுகிறது. இங்குளள மலைமுடிகள் 3000மீ. வரை உயரமுள்ளவை. அவறறுள குறிப்பிடத் தக்கதான சயண்டு கேசில (Giant's Castle) 5,960 மீட்டர் உயரம்; மாண்ட்டு ஆக்சு சோர்சசு (Mont-Aux-Sources) 3246 மீட்டர் உயரம்; கத கின பீக் (Cath Kin Peak) 3230 மீட்டர் உடையதாக இருக்கின்றது.

**கடற்கரைப்பகுதி:** தென்மேற்கு ஆப்பிரிககா (நமீபியா) விலுள்ள நபீப்பு பாலைவனம் தென ஆப்பிரிக்காவில் அட்லாண்டிக்குக் கடற்கரை வரை நீணடுளளது. அதற்குத் தெற்கில் நனனம்பிக்கை முனைக்கு அருகில் நீணட, குறுகலான மலைத் தொடர் கடலுக்கும் மலைப்பகுதிக்கும் இடையே அமைந்துளளது. இம்மலைத் தொடர்களுககு இடையிலுள்ள பளளத் தாக்குகளில் வேளாணமை நடைபெறுகிறது. அதறகுக் கிழக்கில் உயர்ந்த மலைகளும், குறுகலான கடற்கரையும் இருக்கின்றது. வடகிழக்குக் கடற்கரைப பகுதியில் மட்டும் அதிகமான தாழ்ந்த சமவெளி உள்ளது.

**பரப்பளவு:** 1983-இல் இதன் பரப்பளவு 1,123,226 சதுர கி.மீ. ஆகும்.

**பரப்பளவு மாநில வாரியாக**

| மாநிலம் | ச.கி.மீ. |
|---|---|
| கேப்பு மாநிலம் | 645,767 |
| நேட்டால் | 86,967 |
| திரான்சுவால் | 262,499 |
| ஆரஞ்சு சுதந்திர மாநிலம் | 127,993 |
| மொத்தப் பரப்பளவு | 1,123,226 |

**எல்லைகள்:** இக் குடியரசின வடக்கில நமீபியா (தெனமேறகு ஆப்பிரிக்கா), போத்துசுவானா (Botswana), சிம்பாப்வே (Zimbabwe) ஆகிய நாடுகளும், வடகிழக்கே மொசாம்பிக்கும் (Mozambique), சுவாசிலாநதும்(Swaziland); கிழக்கே இந்தியப்பெருங் கடலும், தெற்கிலும் மேற்கிலும் தெற்கு அட்லாணடிக்கு பெருங்கடலும் எலலைகளாக அமைந்துள்ளன.

**மக்கள்தொகை:** 1985-இல் இந்நாட்டின் மக்கள தொகை 23,438,590 ஆகும். இதில் வெள்ளையர் 4,576,690; பிறர் 18,861,900. மக்கள தொகையில் ஆபபிரிககர்கள் 15.2 மில்லியன்; கலப்பு இனத்தவர் 2.8 மில்லியன்.

**ஆப்பிரிக்கர்கள்:** ஆப்பிரிக்கர்கள் பண்டு (Bandu) எனப் பெறுவர். ஆப்பிரிக்க மொழியில 'பணடு' என்பதற்கு மக்கள எனபது பொருள்: இவர்கள் சோதோ (Sotho), நுகுனி (Nguni), வெணடா (Venda), சங்கன டோங்கா (Shangan-Tonga) என்ற நான்கு பிரிவுகளாக உளளனர். இக்கூட்டங்கள் ஒவ்வொனறிலும் பல உட்பிரிவுகள் உண்டு.

பண்டு இனத்தவர் மத்திய ஆப்பிரிக்காவிலிருந்து வந்தவர்கள். அப்போது அஙகு வசித்து வந்த புசுமன (Bushmen) காட்டன்டாட்டுகள (Hottentots) ஆகியவர்களை முனைப் பகுதிகளும், கலகாரிப் (Kalahari) பாலைவனத்திற்கும் விரட்டியடித்தனா. ஐரோப்பியர் கேபபுப் பகுதியில் குடியேறத் தொடஙகிய கி.பி. 17-ஆம நூற்றாணடில புசுமன், காட்டனடாட்டுகள் இவ்விரு வலிமைமிக்க பகைவர்களிடையே சிக்கிக்கொணடனர். காட்டன்டாட்டுகள் மற்ற இனத்தவர்களுடன கலப்புத் திருமண உறவுகொணடு இனறு மறைந்துவிட்டனர். புசுமன் இனத்தவர் நமீபியாவிலும், போத்துசுவானாவிலும் வாழ்கின்றனர்.

நுகுனி இனத்தில் சோசா (Xhosa), சூலு (Zulu), சுவாசி (Swazi), போணடோ (Pondo), தெம்பு (Tembu), என்னும் பலவகைக் கூட்டத்தினர் உளளனர். இவர்கள கி.பி. 1500-இலிருந்து தென் ஆப்பிரிக்காவில் குடியேறி வாழத் தொடங்கினர். இனறு இவர்கள கிழக்குக் கடற்கரையில் திராகனசுபர்க்கிலிருந்து இந்தியப் பெருங்கடல் வரையிலுள்ள பகுதியில் இவர்களுக்காகத தென் ஆப்பிரிக்க அரசால ஒதுககப்பட்டுள்ள இடங்களில் வாழ்ந்து வருகின்றனர். வேளாண்மையும், காலநடை வளர்ப்பும இவர்களுடைய முக்கியதொழில். வேளாண்மை பெணகளாலேயே செய்யப்படுகிறது. ஆணகள் காடுகளைக் களைந்து பெரும் பண்ணைகளை அமைத்துளளனர். கால்நடை வைத்திருப்பது அவர்களுடைய தகுதியின சினனமாகக் கருதப்படுவதால் அவற்றை அவர்கள விற்பதோ கொல்வதோ கிடையாது. கால்நடைகள மணமகளுக்குப் பரிசாக (Lobolo) அளிக்கப்படுகின்றன. இவர்களுள் 48 விழுக்காட்டினர் தஙகளுடைய முனனோரின் இடஙகளில வாழ்ந்தாலும் மற்றவர் நகரங்களுக்குச் சென்று வெளளையரின பணணைகளிலும் சுரங்கஙகளிலும் வேலை செய்கின்றனர். இவர்கள கூரை வேயப்பட்ட, வட்டமான வீடுகளில் வசிககினறனர். பல வண்ண ஆடைகளை அணிகின்றனர். மிக அழகாகப் பலவகை முடி ஒப்பனை செய்து கொள்கினறனர். ஐரோப்பியருடன் கொணடுள்ள தொடாபால் அவர்களுடைய பழக்க, வழககஙகளையே பினபறறுகின்றனா.

**ஐரோப்பியர்:** இந்நாட்டிலுள்ள ஐரோப்பியர் அல்லது வெளளையரை ஆப்பிரிகானர்கள (Afrikaners), ஆங்கிலேயர் எனஇரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஆப்பிரிகானர்கள் என்பவர் 1652-இல் தச்சுக்கிழக்கிந்தியக் குழு (Dutch East India Company)மூலமாக இந்நாட்டில குடியேறிய தச்சுக்காரர்களின் வழித் தோனறல்கள். இவர்கள முதலில போயர்கள் (Boers) என்றுகூறப்பட்டனர். பினனர் இவாகளுடனஐரோப்பாவிலிருந்து சமய ஒறுப்பின் காரணமாக வெளியேறி வந்து இஙகுக் குடியேறிய புராட்டசுடணடுகளும், பிரெஞ்சு கியூகோனோக்களும் (Huouenats) சேர்ந்துகொணடனர். இவர்களுள பெரும்பான்மையினர் தச்சு சீர்திருதகத் திருச்சபையைச் (The Dutch Reformed Church) சேர்நதவர்கள. இவர்களபேசும் ஆப்பிரிகானசு (Afrikaans) மொழி கி.பி. 17-ஆம்நூற்றாணடில் இஙகுக குடியேறிய தச்சுக்காரர்கள் பேசிய மொழியிலிருந்து தோனறியது. இப்பொழுது இம்மொழியில் செருமானிய, பிரெஞ்சு, ஆஙகில, ஆப்பிரிக்க மொழிச் சொற்கள கலநது இது ஒரு புதிய மொழியாக உருவாகியுளளது. தங்களுடைய இனம்தான் உயர்நதது எனக் கருதும் இவர்கள ஆப்பிரிககர்களை மிகத் தாழ்நத இனமாகக் கருதுகினறனர். இவர்களுடைய முக்கிய தொழில வேளாண்மை அரசுப் பணிகளிலும் இவர்கள் மிகுதியாக ஈடுபட்டு உள்ளனர்.

இங்கிலாந்து கி.பி. 1814-இல தென் ஆப்பிரிக்காவைக் கைபபற்றியதால இநநாட்டில் ஆங்கிலேயர் குடியேறத் தொடங்கினாலும் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் பொன்னும், வைரமும் கணடுபிடிக்கப்பட்ட பினனரே அவாகள பெருமளவில குடியேறலாயினா. இவாகளுள 85 விழுக்காட்டினர் நகரங்களில், குறிப்பாக கேப்பு நகரம, தர்பன, பிரிடோரியா, சொகானசுபர்கு ஆகிய நகரங்களில வாழந்து வருகின்றனா. பெரும்பாலும இவாகள் சுரஙகத் தொழிலிலும், தொழிற்சாலை வேலையிலும, வாணிபத்திலும் ஈடுபட்டுளளனர். இவர்களுள் பெரும்பாலோர் ஆங்கிலிகன் திருச்சபையைச் (Anglican Church) சேர்நதவாகள. மறறவர்கள பிற புராட்டசுடாணடு பிரிவுகளையும், உரோமன கத்தோலிக்கத் திருச்சபையையும் சேர்ந்தவர்கள.

ஆப்பிரிக்கானர்களும, ஆஙகிலேயரும வெளளையர்களாக இருப்பினும தனித்தனியே வாழ்ந்து வருகின்றனா. இவர்களுககுத தனித்தனிப் பளளிகளும், செய்தித்தாள்களும் உள்ளன. பணபாட்டில் வேறுபட்டுளளனர். இவர்கள வெளளையர் ஆதிக்கத்தை நிலைநாட்ட இன ஒதுக்கல் கொளகையைக் கடுமையாக ஆதரித்தாலும் பரந்த உளளம்கொண்ட ஆஙகி

லேயர் பலா இனவெறிக கொளகையை எதிர்த்து வருகினறனர்.

**கலப்பு இனத்தவர்:** கலபபு இன மககள(Coloured People) எனபோர் ஆபபிரிககா, மலாய (Malay) அடிமைகள, புசுமன்கள, கோட்டனடணடுகள, ஐரோபபியர், ஆசியா ஆகியோரின கலப்பால் தோனறியவாகள, தச்சுககாரா, மலேசியாவிலிருநது அடிமைகளாகக கொணடுவநதவாகளின வழிவநத வாகள ஆகியோராவா. பெரும சமுதாயமாக உளள இவாகளுள பெருமபாலோர் முகமதியர் ஆவர். இவர் கள ஆபபிரிகானசு (Afrikaans) மொழியைப பேசிக கொணடு தசசு சீர்திருத்த திருச்சபையைப (Dutch Reformed Church) பினபறறுகினறனர். இவாகளுள 75 விழுக்காட்டினா நகரஙகளிலும, பெருமபாலோா கேபபு நகர் தொழிறசாலைகளில தொழிலாளர் களாகவும, வெளளையரின வீடுகளில பணியாளா களாகவும, கிராமஙகளில உளளவர்கள திராட்சைத் தோட்டஙகளிலும், பழத தோட்டஙகளிலும பணி புரிந்தும் வருகினறனர். நீண்டகாலமாக இவாகள ஆங்கிலேயரின வீடுகளில பணிபுரிந்து வருவதால் அவர்களது நாகரிகததைையே பினபறறி வருகினறனா.

**ஆசியர்:** இந்நாட்டிலுளள 793,978 ஆசிரியாகளுள 85 விழுககாட்டினர் நகரங்களில் உள்ளனர். அவர் களுள பெரும்பாலோர் நேட்டாலில வாழ்கினறனர். ஆசியர்களுள பெருமபானமையினர் இந்தியர் எனி னும, சில சீனாகளும் உளளனா. இநதியருள பெரும பாலோா இநதுககள, பிறர் முகமதியா. இந்துககள தங்களுடைய சமயப் பழகக வழககங்களை அப படியே பினபற்றி வருகினறனர். இந்தியாகள கி பி. 1800-இல் நேட்டாலில உள்ள கரும்புத தோட்டங களில் வேலை செய்வதறகாகக் கொணடு செலலப் பட்ட ஒப்பநதக கூலிகள். இப்பொழுது இவாகள நகரங்களில் வாணிபம் செய்துவருவதுடன மருத்து வாகளாகவும, தொழிலதிபர்களாகவும், வழககுரை ஞர்களாகவும் உளளனர். இநநாட்டிறகு கி.பி. 1893 -இல் வழககுரைஞராகச் சென்ற காநதியடிகள இன வேறறுமையின காரணமாக இந்தியர் கீழததரமாக நடத்தப்படுவதைக் கண்டு கொதித்தெழுநது மககள அனைவரையும் ஒன்றுதிரட்டி அமைதிப் போராட்டத் தைத் தொடஙகினாா. அதிலிருநது அப் போராட் டம் தொடாநது நடந்துகொணடே இருககிறது. பெருமபாலான இந்தியர் தொழிற்சாலைகளில கூலி களாக வேலை செய்து வறுமையில் வாடுகினறனர்.

**சமயம்:** இஙகுள்ள மக்களுள ஐந்தில் நானகு பஙகினா கிறித்தவர்கள; அவர்களுள பெருமபாலோர் புராட்டசுடணடுகள. ஆஙகிலேயரும், கருப்பர்களும் உரோமன கததோலிககத் திருச்சபையைப் பினபறறு கினறனா. புராட்டசுடணடு சமய உட்பிரிவுகளான ஆஙகிலிகன திருசசபை, மெதாடிசு திருச்சபை, பிரசுபிட்டிரியன (Presbyterian) பிரிவு, அப்போசுதலர் கள திருசசபை (Apostolic Church), உலூதரன திருச சபை ஆகியவற்றில பலர் சோநதுள்ளனர். மேலும் இநநாட்டில 512,360 இந்துககளும், 318,000 இசு லாமியரும், 119,220 யூதாகளும் உளளனர்.

**மொழி** இந்நாட்டின் ஆட்சி மொழிகளாக ஆங் கிலமும, ஆப்பிரிகானசும உள்ளன. இவ்விரு மொழி களும் நாட்டின நிருவாகத்தில் பயனபடுததப்படுகின் றன. வெள்ளையா பள்ளிகளில இவையிரணடும கற் பிககப்படுகினறன. தென ஆப்பிரிக்க ஆஙகிலமானது பல ஆப்பிரிகானசு சொற்கள் கலந்து தரமான ஆங கிலமாக உளளது தசசு மொழியிலிருந்து பிறநத ஆப்பிரிகானசு மொழியில் ஐரோப்பிய, ஆசிய, ஆப் பிரிக்க மொழிச சொற்கள கலநதுள்ளன. ஆசியருக குப் பெரும்பாலும் ஆங்கிலம் தெரிந்திருந்தாலும் பல் வேறு இநதிய மொழிகளைப பேசுகினறனர். ஆப் பிரிககர்கள பலவகைப் பணடு மொழிகளைப பேசி னாலும் சிலர் ஆப்பிரிகானசு அல்லது ஆங்கில மொழியையும அறிநதுள்ளனர்.

**பொருளாதாரம்:** இது ஆப்பிரிக்க நாடுகளிடையே தொழிற்றுறையில் வளாசசியடைநது செலவமிகக நாடாகத் திகழகினறது. அதற்குக காரணம் இந நாடு பலவகைக கனிமஙகளையும பெற்றுள்ளமையே யாகும். ஆப்பிரிககா கணடத்தில் உற்பத்தியாகும பொருளகளில ஐநதில இரணடு பஙகை இது உற்பததி செய்கிறது.

**வேளாண்மை:** வைரமும, பொனனும் கணடு பிடிக்கப்படுவதறகு முன்னா இஙகு வேளாணமை முககிய தொழிலாக இருந்தது. மழை மிகக குறை வாகவும், மணவளமறறும் இருப்பதால வேளாணமை சிறப்பாக அமையவில்லை. இஙகு மககாசசோளம், பார்லி, கோதுமை, நிலக்கடலை, சூரியகாநதி விதை, கருமபு, எலுமிச்சை, உருளைக்கிழஙகு, புகையிலை, பருத்தி, காய்கறிகள, திராட்சை ஆகியவை விளை விக்கப்படுகினறன. வறணட பகுதிகளில் பருத்தி விளைகிறது. நேட்டாலில கரும்புத தோட்டஙகள மிக்குளளன. தெனமேறகுக கடறகரைப் பகுதியில (Hex River Valley near Cape Town) திராட்சைத் தோட்டஙகள நிறைய இருபபதால மது (ஒயின்)த் தொழிறசாலைகள உளளன. இஙகிருந்து திராட்சைப் பழம் கடல வழியாகவும், விமானம மூலமாகவும் ஐரோபபிய நாடுகளுக்கு அனுப்பப்படுகிறது.

மழை குறைந்துளள மேட்டுநிலப் பகுதிகளில் காலநடைகள வளர்க்கப்படுகினறன. உரோமம் அதிக மாக உறபத்தி செய்யப்பட்டு ஏறறுமதி செய்யப்படு கிறது. இநநாட்டிலிருந்த காலநடைகள 1984-ஆம்

ஆண்டுக கணக்கினபடி மாடுகள 12,895,000, ஆடுகள 31,265,000,வெள்ளாடுகள்575000,பன்றிகள 1,472,000. இவற்றின் மூலம பெறப்பட்ட இறைச்சி 9,570,000 கணடிகள்; கோழிக்கறி 457,00 கண்டிகள்; உரோமம் 119,000 கணடிகள; முட்டைகள 272 மிலலியன கணடிகள; பால் 2,065 மில்லியன லிட்டர்கள.

**காடுகள்:** இஙகு 1 62 மில்லியன் எக்டேர் நிலத்தில காடுகள உளளன. இவறறிலிருநது பலவகைப் பொருளகள உறபத்தி செய்யப்பெற்று அவற்றில 90 விழுக்காடு உளநாட்டிலேயே செலவிடப்படுகிறது. இத்தொழிலில 100,000 பேர் ஈடுபட்டுள்ளனர்.

**கனிமங்கள்:** இந்நாட்டில், பொன, வெளளி, வைரம், நிலக்கரி, இருமபுத்தாது, செம்பு, மாஙகனீசு நிக்கல், தகரம், சுணணாமபு, சுணணாம்புககல், யுரேனியம் முதலியன வெட்டியெடுக்கபபடுகினறன.

**தொழிற் சாலைகள்** இநநாட்டில பலவிதக் கனிமஙகளும கிடைப்பதால 19-ஆம நூறறாண்டிலிருந்து தொழிற்சாலைகள பெருகின. தர்பன, கேப்பு நகரம, சோகனசுபாககு ஆகிய நகரஙகளைச் சுற்றித்தொழிற சாலைகள் தோனறியுளளன. இரும்பு, எஃகு, இயநதிரஙகள், துணி நெயதல, வேதியல பொருளகள, உணவைப் பதப்படுததுதல ஆகியவற்றிறகுரிய தொழிற்சாலைகள உளளன.



மின் அணுத் தொழிற்சாலை

**வைரச் சுரங்கங்கள்:** தென ஆப்பிரிக்காவில கிம்பர்லி (Kimberly), பெரியபள்ளம (Great Hole)ஆகிய இடங்களில் வைரம் அதிகமாகக் கிடைக்கிறது. உரோடசு (Cecil John Rhodes) எனபவர் இஙகிலாந்திலிருந்து நேட்டாலுக்குப் பருத்தி விளைப்பதறகுச சென்றவர் இங்குள்ள சுரஙகங்களின் நிருவாகத்தை உலகிலேயே மிகச் சிறந்தமுறையில் மாற்றியமைத்தார். பினனர் இவர் கேப்புக் குடியேற்றததின தலைமை அமைச்சராகவும் ஆனார். இவருடைய நிறுவனம இனறும் தென ஆப்பிரிககாவின பெரும்பாலான வைர. உறபத்தியைக கட்டுப்படுத்தி வருகிறது.

**தங்கச் சுரங்கங்கள்:** இன்று உலகில் கிடைக்கும தஙகத்தில ஐந்தில மூனறு பங்கு ஆப்பிரிககாவில கிடைக்கிறது இங்குளள 55 சுரஙகஙகளிலிருநது ஆணடுதோறும் 1 மிலலியன தாலர் மதிப்புளள தஙகம வெட்டியெடுக்கப்படுகிறது. அதில 80 விழுககாடு தென ஆப்பிரிக்காவில் உறபத்தியாகிறது என பது குறிப்பிடத்தக்கது. முதலில் இநநாட்டில தஙகம நிறைநத பாறைகள சொகானசுபாககின கிழககே 40கி.மீ. தொலைவிலிருநது இசுபிரிஙகுநகா (Springs Town) வரையிலும, மேற்கில 40கி மீ. தொலைவிலிருநது குருகர்சுடிராப்பு (Krugersdrop) வரையிலும் உளளன. விட்வாட்டர்சுராணடு அலலது இராணடு (Witwatersrand or Rand) எனப்படும இப்பகுதி உலகிலேயே அதிகமாகத தஙகத்தை உற்பத்தி செயயும் பகுதியாகும. இரண்டாம உலகபபோருக்குப் பினனர் ஆரஞ்சு மாநிலததிலுளள வால ஆறறின (Vaal



தங்கச் சுரங்கத் தொழிலாளர்கள்

River) பகுதியில தஙகம் இருப்பது கணடுபிடிககப் பட்டது,இஙகுளளசுரஙகஙகள சொகானசுபபாககைச் சுற்றியுளள சுரஙகங்களைவிட நிரம்பத் தஙகத்தை உற்பத்தி செய்கின்றன. இச்சுரஙகஙகளில் பல வேறு வேலைகளையும் செய்ய ஆப்பிரிக்கர்கள் பயிற்றுவிக்கப்பட்டு 430,000 போ வேலை செய்கினறனர். பொறுப்புளள உயர் பதவிகளில் 50,000 ஆப்பிரிககா அலலாதவர் (பெரும்பாலும ஆஙகிலேயரும, ஆப்பிரிகானர்களும்) இருக்கின்றனா.

**பிறதொழில்கள்:** இராணடிறகுக (Rand) கிழக்கிலுள்ள விட்பாங்கு (Witbank) எனனுமிடம் ஆப்பிரிக்காக கணடத்திலேயே நிறைய நிலககரி உளள இடமாகும். இங்கு 1930-இலிருநது நிலககரி வெட்டி

யெடுக்கப்பட்டு, பிரிடோரியா கொண்டுசெல்லப்பட்டு, அங்குள்ள ஊது உலைகளில் எரிபொருளாகப் பயன படுத்தப்பட்டு, ஆண்டுதோறும் பலலாயிரக்கணக்கான கண்டி எஃகு உறபத்தி செய்யப்படுகிறது கேப்பிலும், திரானசுவாலிலும் இருமபுத்தாது வெட்டி யெடுக்கப் படுகிறது. அது பிரிடோரியாவிலுள்ள இருமபு ஆலை களுக்கு அனுப்பப்படுகிறது. நிலக்கரியானது இங் குள்ள தொழிறசாலைகளிலும், சுரங்கங்களிலும மின சாரம் உற்பத்தி செய்யப் பயனபடுகிறது.

**அயல்நாட்டு வாணிபம்:** இங்கிலாந்து, அமெ ரிக்கா, மேறகு செருமனி, சப்பான, சுவிட்சர்லாந்து ஆகிய நாடுகளுடன தென ஆப்பிரிக்கா வாணிபத்தில ஈடுபட்டுள்ளது இந்நாடு தங்கத்தை அதிகமாக ஏற்று மதி செய்கிறது. 1980-இலிருந்து இறக்குமதியைவிட ஏற்றுமதி மிகுதியாக உள்ளது.

**இறக்குமதி.** கோதுமை, உலோகங்கள, வேதியல பொருள்கள, இயந்திரங்கள், அவற்றிற்கான உறுப்பு கள, துணி வகைகள, ஊர்திகள், விமானங்கள, போக்குவரத்துச் சாதனங்கள ஆகியவற்றை இந்நாடு இறக்குமதி செய்கிறது.

**ஏற்றுமதி:** இங்கிருந்து தங்கம, விலையுயர்ந்த வைரக் கற்கள, உலோகங்கள, இருமபு, எஃகு, முத்து, உணவு வகைகள, புகையிலை, மது ஆகியவை ஏற்று மதி செய்யப்படுகின்றன. அவவாறு ஏற்றுமதி செய யப்படும் பொருள்களின் மதிப்பில பாதிக்குமேல தங்கமாகும்.

**விமானப் போக்குவரத்து** தென ஆப்பிரிக்க விமானப் போக்குவரத்து (South African Airways) உளநாட்டிலும், ஐரோப்பா, தென அமெரிக்கா, அமெரிக்க ஐக்கிய நாடுகள, தூரக் கிழக்கு நாடுகள, ஆசுத்திரேலியா ஆகிய நாடுகளுடனும் விமானப போக்குவரத்தை நடத்திவருகிறது மேலும் இருபத்து மூன்றுநாடுகளின பன்னாட்டுவிமானப்போக்குவரத்து களும் இயங்கிவருகின்றன இவற்றினமூலம 1982-இல 3,937,217 பயணிகளும்,77,548 கண்டி பொருள்களும், 46,871 கடிதங்களும் கொண்டு செலலப்பட்டன.

**கப்பல் போக்குவரத்து** இந்நாட்டிலுள்ள முக்கிய துறைமுகங்கள தர்பன, தேபிள் வளைகுடா (Table Bay), சல்தங்கா (Saldanha), இரிச்சாடு வளைகுடா (Richards Bay), எலிசபெத்துத் துறை முகம (Port Elizabeth), கிழக்கு இலண்டன (East London) ஆகியவைகளாகும. இவை 1982-83-ஆம் ஆண்டுகளில் 73 .7 மிலலியன கண்டி பொருள்களைக் (பெட்ரோலியப் பொருள்கள் நீங்கலாக) கையாண டன. அதில இரிச்சர்டு வளைகுடா 31 0 மிலலியன கண்டி, தாபன 18 2 மில்லியன கண்டி பொருள களைக் கையாணடன. மோசல வளைகுடா (Mossel Bay), நலலாத்துத துறைமுகம (Port Nolloth), வல் விசு வளைகுடா (Walvis Bay) முதலியன இங்குள்ள சிறிய துறைமுகங்கள் ஆகும

**கல்வி** இந்நாட்டில இன ஒதுக்கல் கொளகையின விளைவாகக் கலவியானது எலலா வகையிலும் இனத் திறகேறபப் பெரிதும மாறுபட்டுள்ளது. இங்கு 1967-



கேப்புநகரப பலகலைக்கழகம

இல பிறப்பிக்கப்பட்ட தேசியக் கல்விக் கொளகைச் சட்டத்தினபடி தொடககப்பள்ளிகளும், உயர்நிலைப் பளளிகளும கல்வி, கலைகள்' அறிவியல் அமைச்சகத் தின கட்டுப்பாட்டிலுள்ளன கறுப்பர்களுக்கான கல வியை அதறகான துறையும் (Department of Black Education Training) கலப்பு இனத்தவர், இந்தியர் ஆகியோருககான கலவியை உளநாட்டு விவகாரத் துறையும (Department of Internal Affairs) கவனித் துக்கொளகினறன. அரசுப்பள்ளிகளே அன்றித் தனி யாா பள்ளிகளும் உளளன. வெள்ளையருககு 7 வயது முதல 16 வயதுவரை இலவசக கட்டாயக் கல்வி வழஙகப்படுகிறது. கறுப்பர்களுககுக் குடியரசோ மாநில அரசுகளோ கட்டாயக் கலவி கொணடு வரவில்லை கலப்பு இனததவருககு நேட்டால தவி ரப் பிற மாநிலஙகளில கட்டாயமில்லை; ஆனால கட்டணம் கிடையாது. நேடடாலில் அவர்களுக்கு 15 வயதுவரை அலலது எட்டாம வகுபபுவரை இலவசக கலவி அளிக்கப்படுகிறது இந்தியருககுத தொடகக, உயர்நிலைப பள்ளிகளில கல்விக்குக் கட்டணமில்லை· ஆயினும் கட்டாயமுமிலலை.

குழந்தைகள பளளி (Kindergarten), தொடககப் பளளி, ஆயததபபள்ளி (Preparatory), உயர்நிலைப் பளளி, வணிகக் கல்வி நிலையஙகள ஆகியவற்றைத தனியாரும் நடததி வருகினறனர். இவறறின் நட வடிக்கைகள அரசாஙகததால கடடுபபடுத்தப்பட்டு மாணவர்களுக்கான அரசாஙகத தோவை அரசாங கமே நடததுகின்றது.

இஙகுளள 17 பலகலைக கழகங்களுள ஒனறைத் தவிர மறறவை மாணவர்கள தஙகிப் படிப்பதற்கு ஏற்படுததப்பட்டவை அவை வெளளையருக்கு 11, கறுப்பாகளுககு 3, கலப்பு இனத்தவருககு 1, இந்தி யருக்கு 1 என இருக்கினறன.

**முக்கிய நகரங்கள:** இந்நாட்டில் ஓா இலட்சத்திற் கும் மேற்படட மக்களைக் கொணட 11 நகரஙகள உள்ளன. அவறறுள கீழ்ககண்டவை சிறப்பு வாய்ந் தவை.

**சொகானசுபர்கு.** இக குடியரசிலேயே மிகப் பெரிய நகரமான இது 1,150,000 மககளைக் கொண டது. தென் ஆப்பிரிக்காவின வாணிப, சுரங்கத தொழில், மையமாக சொகானசுபர்கு (Johannes-barg) விளங்குகிறது. இநநகரில் தென ஆப்பிரிக்கப் பஙகு அஙகாடி, வானொலி நிலையம், பலகலைக கழகம் (The University of witwatersrand) ஆகியவை உள்ளன.

**கேப்பு நகரம்:** இது தென் ஆப்பிரிககாவிலேயே மிகப்பழைய நகரமாகும். கேப்பு நகரம் (Cape



சொகானசுபர்கு

Town) அட்லாணடிக்குக் கடறகரையிலுள்ள தேபில வளைகுடாவிற்கும் (Table Bay), தேபில் மலைக்கும இடையே அமைந்துள்ளது. இம் மலைச்சரிவுகளில் உள்ள சிறநத கட்டடஙகள் (Groote Sehur Estate) இநநாட்டின பிரதமராகவிருந்த செசில் ரோடசும் ஆஙகிலேயக்குடியேறறக்காராகளும அளித்த நன் கொடையாகும். இஙகுத்தலைமை அமைச்சரின இல லம் (பாராளுமனறம கூடுமபொழுது), பல்கலைக கழகம் (The University of Cape Town), மருத் துவமனை ஆகியவை உளளன. இம்மருத்துவமனையில் தான் உலகில முதலாவது மனித இதய மாறறு அறுவை மருத்துவம நடைபெறறது. இநநகரின் மையத்தில தாவரவியல் பூஙகாவை நோககி இந் நாட்டின் பாராளுமனறம் அமைநதுளளது இத் துறைமுகததைக காபபதறகாக கி.பி.17-ஆம் நூற றாணடில கட்டப்பட்ட கோட்டை ஒன்று உளளது. ஐநது முனைகளைக் கொணட ஒரு விணமீன உரு வில அமைக்கப்பட்டுளள இக் கோட்டையில் இப் பொழுது இநநாட்டுப் பாதுகாப்பு அமைச்சகம் உளளது.

**பிரிடோரியா:** இநநகரம் சோகானசுபர்க்கிலிருந்து 58கி.மீ. தொலைவில உள்ளது. இது திரானசுவால மாநிலத்தின் தலைநகரும, தென ஆப்பிரிககக்குடியர சின நிருவாக மையமும ஆகும். இஙகுளள சகராநதா (Sacaranda) என்ற ஒருவகை மரத்தில் அக்டோபர், நவம்பர் மாதஙகளில மலர்கள பூத்துக் குலுங்குவது கணகொள்ளாக காட்சியாகும். இநநகரில மலைமீது அமைந்துளள ஒன்றியக் கட்டடத்தில (Union Buil-



கேப்பு நகரம்



பிரிடோரியா நகரம்

ding) அரசு அலுவலகஙகள உளளன. இக் கட்டடம 1910-ஆம் ஆண்டு நானகு மாநிலஙகளும் இணைக கப்பட்டு தென ஆப்பிரிகக ஒன்றியம ஏறபடுததப் பட்டபொழுது கட்டப்பட்டதாகும்.

**தர்பன்:** மிகப்பெரிய நகரமான தர்பன (Durban) தொழிறசாலைகளின, பொருள உற்பத்தியின முக் கிய மையமாக விளஙகுகிறது. இஙகுள்ள இத்தியப் பெருங்கடல் கடற்கரை விடுமுறை காலப்பொழுது போக்கிற்குச் சிறந்த இடமாக விளங்குகிறது. இந நகரின் மேற்கிலுள்ள பள்ளத்தாக்கு (Valley of the Thousand Hills) தென் ஆப்பிரிககாவிலேயே மிக அழகிய இடங்களில ஒனறாகக் கருதப்படுகிறது.

**புளோம்பாண்டீன்:** தென ஆபபிரிகாவின் நடுப் பகுதியில அமைந்துளள புளோமபாணடீன (Blo-emfontein) ஆரஞ்சு சுதநதிர மாநிலத்தின் தலைநகராகும. இஙகுத்தான்தென ஆப்பிரிக்கக குடி யரசின உச்ச நீதிமனறம் உளளது. இநநகர் ஒரு சிறந்த தொழில, வாணிக மையமாகத திகழகிறது.

**அரசு. மைய அரசு:** ஒன்றுபட்ட தென ஆப் பிரிக்கா ஏறபடும்வரை (1910) கேபபுக் குடியேற

றம், நேட்டால, திரான்சுவால், ஆரஞ்சு சுதந்திர நாடு ஆகிய நானகும் தனித்தனிக் குடியேற்ற நாடுகளாக இருந்துவநதன. ஐக்கியம் ஏற்பட்டதும் அவை நான்கும் அநநாட்டின் நானகு மாநிலங்களாக ஆக்கபபட்டு இங்கிலாந்துஅரசியலமைப்பைப்பின்பறறி அரசியல் அமைப்பு இஙகு ஏறபடுத்தப்பட்டது இங்கிலாந்து அரசி நாட்டின் தலைவராகவும, அவரால் நியமிக்கப்பட்ட அரசப் பிரதிநிதி (Viceroy) அரசின் தலைவராகவும் இருந்தனர். இநநாடு 1961 - இல இங்கிலாந்திடமிருநது விடுதலை பெற்று ஒரு குடியரசாக மாறியதும் பொதுநல நாடுகள் அமைப்பிலிருநது விலகிக் கொண்டது புதிய அரசியல் அமைப்பு 1984 செப்டம்பா 4-இல் கொண்டுவரப்பட்டது. அதன்விளைவாக நாட்டின் தலைவர் 'குடியரசுத் தலைவர்' எனப்பட்டார். இந்நாட்டில மூனறு அவைகளைக் கொண்ட பாராளுமன்றம் ஏற்பட்டது.

**குடியரசுத் தலைவர்:** மூன்று அவைகளிலும் உள்ள பெரும்பானமைக் கட்சியினரால்தோ நதெடுக்கப்பட்ட 50 வெளளையர், 25 கலப்பு இனத்தவர், 13 இநதியர், கொண்ட ஒரு குழு (Electoral College) குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுக்க வேணடும். அவருடைய பதவிக்காலம் 7 ஆண்டுகள. சட்டஙகளை இயறறுதல, மூன்று அவைகளுக்கும் இடையிலான சிக்கலகளைத தீர்த்தல் அவருடைய பணிகளாகும.

**சட்டமன்றம்:** 178 உறுப்பினாகளைக கொண்ட சட்டமன்றத்தில் (The House of Assembly) 166 போ நேரடியாகத் தேர்நதெடுககப்படுகினறனர். 8 போ வெள்ளை வாக்காளாகளால் மறைமுகமாகத தேர்ந்தெடுக்கப்படுகினறனர். இதன உறுப்பினர்கள காலம 5 ஆண்டுகள். அவர்கள் ஐரோப்பியரின் வழிவந்தவராக மட்டும் இருக்கவேண்டும். பதினெட்டு வயதிறகு மேற்பட்ட வெளளையருக்கு மட்டுமே வாககுரிமை உணடு.

**பிரதிநிதிகள் அவை:** பிரதிநிதிகள அவையின (The House of Representatives) உறுப்பினர் எணணிக்கை 85 ஆகும். இதில் 80 பேர் நேரடியாகக் கலப்பு இனத்தவரால தேர்ந்தெடுக்கப்படுகினறனர். இதன் காலம் 5 ஆண்டுகள.

**சார்பாளர் அவை:** இதில் உள்ள 45 உறுப்பினர்களுள் 40 பேர் இநதிய வாககாளர்களால நேரடியாக 5 ஆண்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்படுகினறனர்.

**குடியரசுத்தலைவர் அவை:** குடியரசுத தலைவருக்கு ஆட்சியில ஆலோசனை கூற 50 உறுப்பினர்களைக் கொணட ஒரு பேராளர் அவை (House of Delegates) உள்ளது. அவர்களுள் 20 பேர் சட்டமனறத்திலிருந்தும், 10 பேர் பிரதிநிதிகள் அவையிலிருந்தும், 5 பேர் சார்பாளர் அவையிலிருந்தும் அனுப்பப்படுகின்றனர். பாராளுமன்ற உறுபபினர்களுள 15 பேர் குடியரசுத் தலைவராலும், 10 பேர் எதிர்க்கட்சிகளாலும நியமிககப்படுகினறனர்.

**அமைச்சர்கள் அவை:** குடியரசுத் தலைவர் ஒவ்வோர் அவைககும் 5 உறுப்பினர்கள கொணட ஓர் அமைசசர் அவையை (President's Council) ஏற்படுத்துவார். அவர்கள் பெருமபானமைக கட்சியிலிருந்து குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படுவர். அவ்வாறு நியமிக்கப்படும் உறுப்பினர் அந்த அவையின அங்கத்தினராக இல்லாவிட்டால் அவவாறு நியமிக்கபபட்ட ஒரு ஆண்டிற்குள் அதன உறுப்பினராகிப் பெரும்பானமைக் கட்சியின ஆதரவைப் பெறவேணடும். ஒவவோர் அவையும் தத்தம் இனத்திற்கான விவகாரஙகளையும், அதற்கான துறைகளின நிருவாகத்தையும் கவனிக்க வேணடும்.

**மாநில அரசு:** ஒவ்வொரு மாநிலத்திறகும் குடியரசுத் தலைவரும், அவரது அவையும் நிருவாகி (Administrator) ஒருவரை 5 ஆண்டுகளுக்கு நியமிக்க வேணடும். மாநில அவைகளுக்கான உறுப்பினர்கள் பாராளுமன்ற உறுப்பினர்களுககுள்ள முறைப்படி தேர்ந்தெடுககப்பட வேண்டும. அதன் ஆயுட்காலம் 5 ஆணடுகள. ஒவவொரு மாநிலத்திற்கும் 4 உறுப்பினாகளைக கொண்ட நிருவாகக் குழு (Executive Committee) ஒன்றிருக்கும். மாநில நிருவாகி அதன் தலைவராக (Chairman) இருப்பார். மாநில அவையும, நிருவாகக் குழுவும் அவ்வம் மாநிலப் பொருளாதார நிலைக்கேற்பக் கல்வி(தொடக்க, உயர்நிலை, மேல்நிலை, தொழில் நுணுக்கக்கல்வி), மருத்துவ மனைகள, சாலைகள், பாலங்கள, நகரியஙகள், குதிரை மற்றும் பிற பந்தயங்கள், விளையாட்டுகள் ஆகிய துறைகளை நிருவாகம செய்யவேணடும். மாநில அவைகளால் பிறப்பிககப்படும் சட்டங்கள் குடியரசுத தலைவர், அவரது அவையின தடுப்பு ஆணைக்கு (Veto) உட்பட்டவை.

**கறுப்பர்களுக்கான நிருவாகம்:** கறுப்பர்களுக்காக 1951-இல் பிறப்பிக்கப்பட்ட சட்டபபடி (The Bantu Authorities Act) அவர்களுக்குக் குடும்பம் வட்டம், நிலப்பகுதி அளவில வரையறுக்கபபட்ட அளவு ஆட்சி செய்ய, சட்டமியற்ற, நீதிவழஙக அதிகாரம் வழங்கப்பட்டுளளது. அவாகளுக்கான 10 வாழ்விடங்களில 1986-இல 4 சுதந்திரமானவைகளாகவும், 6 ஓரளவு தல சுயாட்சி பெறற, ஆனால குடியரசுககு உட்பட்டவைகளாகவும் உள்ளன. அவர்களுக்கென ஒவ்வொரு பகுதிககும் ஒரு சட்டமன்றமும், 6 உறுப்பினர்களைக் கொண்ட நிருவாகக் குழுவும் உளளன.

இங்கிலாந்து கி.பி. 1815-இல ஆலந்திடமிருந்து (Holland) கேப்புக் குடியேற்றத்தை 69 இலட்சம்

பவுனகளுக்கு விலைக்கு வாஙகியது. ஆங்கிலேய மேலாணமையை விரும்பாத 10,000 போயர்கள் வடக்கு நோக்கிப் பயணம் (The Great Trek) செய்து நேட்டால் (Natal), ஆரஞ்சு சுதந்திரக் குடியேற்றம் (Orange Free Colony), திரானசுவால் (Transval) என்னும் மூன்று புதிய குடியேறறங்களை ஏற்படுத்திக் கொணடனர். அப்பொழுது திரான்சுவாலில வாழ்ந்து வந்த ஆப்பிரிக்கர்களான சூலூக்கள் (Zulus) அப் பகுதியில குடியேறிய போயர்களை எதிக்கலாயினர். எனவே போயர்கள் ஆங்கிலேயரின் உதவிபெற்று கி.பி. 1879-இல் சூலூக்களைத் தோற்கடித்து விரட்டி னர்.ஆனால் ஆங்கிலேயர் திரான்சுவால் மீது உரிமை கொண்டாடினர். அதன்விளைவாக முதலாவது போயர் போர் ஏற்பட்டு அதில் ஆங்கிலேயர் தோற் கடிக்கப்பட்டு கி.பி. 1881-இல ஏற்பட்ட பிரிடோரியா உடன்படிககையினபடி திரான்சுவாலின் சுதந்திரத்தை இங்கிலாந்து ஏற்றுக்கொணடது.

ஆரஞ்சு, வால் ஆறுகளின் பகுதிகளில கி.பி.1869 -இலும், கிம்பர்லியில் கி.பி. 1870-இலும் வைரம கணடுபிடிக்கப்பட்டது. விட்சுவாட்டர்சுராலநதில் தங்கம் கண்டுபிடிக்கப்பட்டது. எனவே திரானசு வாலில் பல்லாயிரக்கணக்கான ஆங்கிலேயர் குடியேற லாயினர். அவாகளின் எணணிக்கை போயர்களின எண்ணிக்கையைவிடக் கூடிவிடுமென அச்சம்கொணட திரானசுவால் அரசு அவர்களுக்குக குடியுரிமை வழங்க மறுத்துவிட்டது. அப்பொழுது கேப்புக் குடி யேற்றத்தின் முதலமைச்சராகவிருநத செசில் உரோ டசு (Cecil Rhodes) திரான்சுவாலைக கைப்பற்ற ஒரு திட்டம் தீட்டினார். அதனையறிநத திரானசு வாலின தலைவரான பால் குருகர் (Paul Kruger) அதனை முறியடித்து யேம்சன் (Jamson) என்பவரின தலைமையிலான ஆங்கிலேயப் படையைக் கைப்பற்றி னார். அதன் விளைவாக கி.பி. 1898-இல் இரணடா வது போயர் போர் தொடங்கியது. திரானசுவால், ஆரஞ்சுச் சுதந்திரக் குடியேறறம் ஆகியவற்றிலிருநத போயர்கள கேப்புக் குடியேற்றத்தைத் தாக்கினர். ஆங்கிலேயர் நேட்டாலைக் கைப்பற்றிக் கொணட னர். இப்போரின் முடிவில் ஏறபட்ட வெரினீகிங்கு உடன்படிக்கையினபடி (The Treaty of Vereeniging) ஆரஞ்சு சுதந்திர நாட்டையும், திரான்சுவாலையும் ஆங்கிலேயர் பெற்றனர்.

கேப்பு, நேட்டால், திரான்சுவால், ஆரஞ்சு சுதந் திர நாடு ஆகிய நானகும் 1909-இல் இணைக்கபபட்டு தென் ஆப்பிரிக்க ஒனறியம் (Union of South Africa) ஏற்படுத்தப்பட்டது. அந் நான்கு குடியேற்றங்களும் இவ் ஒன்றியத்தின் நான்கு மாநிலங்களாயின. ஒனறு பட்ட தென் ஆப்பிரிக்கா ஏற்படுவதற்கு முன்னரே காந்தியடிகள் திரான்சுவாலில் இனவெறிக் கொள கையை எதிர்த்து அறவழியில் போராடலானார் தென் ஆப்பிரிக்காவின் இன வெறியை எதிர்த்துப் போராட 1912-இல் ஆப்பிரிக்கத் தேசிய காங்கிரசு (African National Congress) ஏற்படுத்தப்பட்டது. போயர்களின் தலைவரான கெர்ட்சாக் (J.B.M. Hertzog) தென் ஆப்பிரிக்காவிற்கு இங்கிலாந்தின் ஆட்சியிலிருந்தும், வெள்ளையருக்கு ஆப்பிரிககர் களிடமிருந்தும் விடுதலை வேணடுமெனக் கூறினார். இவரோடு இன ஒதுக்கல் கொளகையினரான சுமட்சும் 1933-இல் இணைந்து நினறார். அதன் விளைவாக 1961-ஆம் ஆணடு தென்னாப்பிரிககா ஒரு குடியரசாக ஆனது. அதையடுத்து அது பொதுநல நாடுகள அமைப்பில் இருந்து விலகிக கொணடது. வெர்வோர்டு 1966-இல் கொலை செய யப்பட்டதும் வொர்சுடர் தலைமை அமைச்சரா னார். இன ஒதுக்கல கொளகை 1973-74-இல சிறிது தளாத்தப்பட்டது. தலைமை அமைசசருக்கும் உள நாட்டுத் தலைவர்களுக்கும் இடையே நல்லுறவு ஏற பட்டது. சொகானசு பர்க்குக்கு அருகிலுளள சொவெடோ (Soweto) பள்ளியில 1976-இல் குழந தைகள ஆங்கில மொழியுடன் ஆப்பிரிகானசு மொழி யும் கற்க வேணடுமென வலியுறுத்தப்பட்ட பொழுது பெரும் கிளர்ச்சி தோனறியதால் அது கைவிடப்பட் டது. எனினும் கறுப்பாகள் கலகங்களிலும அரசுக்கு எதிரான செயலகளிலும், கொலைகளிலும் ஈடுபட்ட னர். எனவே 1976-77-இல சில சலுகைகள் வழங்கப் பட்டன. 1978-இல வொர்சுடர் பதவி விலகியதும் பீடர் வில்லியம் போதா (Peter William Botha) தலைமை அமைச்சரானார். தொடக்கத்தில் அவர் சில சீர்திருத்தஙகளைச் செய்தாலும் அன்றிலிருந்து இனறுவரை உலக நாடுகளின் எதிாப்பிற்கிடையே இன ஒதுக்கல் கொள்கையானது இநநாட்டில் கடுமை யாகப் பின்பற்றப்பட்டு வருகிறது.

**தென் ஆப்பிரிக்காவும், நமீபியாவும்:** இன்று நமீ பியா (Namibia) என்று குறிக்கப்படும தென மேற்கு ஆப்பிரிக்கா கி பி. 1884-இல் செருமனியின் பாதுகாப்பு நாடென அறிவிக்கப்பட்டது. முதல் உல கப் போரின் போது நட்பு நாடுகளின வேணடு கோளுக்கிணங்க 1915-இல் தென ஆப்பிரிக்கா இந் நாட்டைக் கைப்பற்றிக் கொணடது. பனனாட்டுக் கழ கம் 1920-இல் அதன் நிருவாகத்தைத் தென் ஆப் பிரிக்காவிடம் ஒப்படைத்தது. அது தென் ஆப்பிரிக் காவின் ஆட்சியின் கீழ் இருந்துவந்தது. இரணடாம உலகப்போருக்குப் பின் ஐக்கியு நாடுகள அந்நாட் டைத் தன்னுடைய நிருவாகத்தின் கீழ (U.N.Trusteeship Council) கொண்டுவர விரும்பியதைத் தென் ஆப்பிரிக்க அரசு ஏற்றுக் கொள்ளவில்லை. ஐக்கிய நாட்டவை தென்மேற்கு ஆப்பிரிக்காவை நிரு வாகம் செய்ய ஓர் அவையை (U.N. Council for

South West Africa) ஏற்படுத்தியது. ஐ.நா. 1968 சூன் திங்களில் இந்நாட்டின் பெயரை நமீபியா என மாற்றியது. நமீபியா 1978-இல் தனி நாடாக ஆக வேண்டுமென்றும், அதற்கு ஐ.நா. மேற்பார்வையில் தேர்தல் நடத்தவேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. ஆனால் தென் ஆப்பிரிக்க அரசு தானாகவே 1978 திசம்பர் 4 முதல 8 வரை ஒரு தேர்தலை நடத்தியது. அதில் தென்மேற்கு ஆப்பிரிக்க மக்கள இயக்கம் (South West Africa Peoples Organisation-SWAPO) பங்கு கொளள மறுத்து விட்டது. பின்னர் 1983-இல் பல கட்சிகளின இயக்கம (Multi-Party Conference- M.P.C.) உருவானது. இவவிரு இயக்கங்களுக்கும் இடையே 1984-இல் பேசசு வார்த்தை நடைபெற்றது. அதனால் எவ்விதப்பயனும ஏற்படவில்லை. இந்நாட்டு மக்கள் எவ்வளவோ போராடியும் இந்திய அரசும், பிற நாடுகளும், ஐ.நா.வும் வலியுறுத்தியும் தென் ஆப்பிரிக்க அரசு நமீபியாவிற்கு விடுதலை அளிகக மறுத்து வருகினறது. சி.இரெ.

துணை நூல்கள்:

Bissell, R.E and Grocker, C.A., South Africa in the 1980's Boulder, 1979.

De Vilbers,L., South Africa: A Shunk Among Nations, London, 1975.

Lacour-Gayet,R , A History of South Africa, London, 1977.

Lands and Peoples, Vol.I. Grolker Inc., New York, 1976.

**தென் ஆல்ப்சு மலை** நியூசிலாந்தின் தென் தீவில் உள்ளது. இமமலை ஆதாசு என்ற கணவாயின தெற்கில 320 கி.மீ. நீளமுடையது. 16 மலைகளைக் கொண்ட ஆல்ப்சு மலையின் உயரம் 3048 மீட்டருக்கும் மேலாகும். இதிலுளள மலைகள மால்டிபுரூன், இலிடி பியூ, பிளாரெட்டு, தௌகிளாசு, ஐடிஙகா, இலென்டென்பெல்டு, ஆசுட்டு, தோரிசு, தாசுமேன், கில்பர்கார்ன், கூல், தேமபியா, தேவிட்டும், சொப்டன் முதலியனவாகும். இஙகு ஐரோபபிய ஆல்ப்சு மலைத்தொடர்களைவிட மிகுதியாகப் பனி உறைநதுள்ளது. தாசுமேன என்ற 29 கி மீ. நீளமுளள பனியுறைந்தமலை குக் மலையின் கிழக்கிலும், பிரானசு சோசப்பு மலைத்தொடரின மேற்குப் பக்கத்திலும் உள்ளது.

தெற்குஆல்ப்சு (Southern Alps) மலைகளிலிருந்து கடல் 189 மீ. தூரததிலுள்ளது. மலையிலுளள பனிக் கட்டிகள் உருகிக் கடலில் கலக்கின்றன. கோப்லாணடு கணவாய், கிரகாம் சேடில் கணவாய், பயணியர் கணவாய் ஆகியன இங்குள்ளன. இவை போக்குவரத்துக்கு எளிதானவை அல்ல.

தெற்கு ஆல்ப்சு மலையின் காலநிலை நிரந்தரமற்றது. இங்கு வடமேற்குப் பருவக்காற்றால் காலநிலை பாதிக்கப்படுகிறது. தென் பகுதியிலிருந்து குளிர்ந்த காற்று வீசுவதால் பனிக்கட்டிகள் இம் மலையில உறைகின்றன. இப்பகுதியில் நவம்பர் மாதத்திலிருந்து ஏப்பிரல் வரை கோடைக்காலம். கோடைக்காலத்தைவிடக் குளிர் காலம் மக்களுக்கு ஏற்றவாறு உளளது. பனிச்சறுக்கு விளையாட்டு இஙகுளள மக்களின பொழுது போக்காகும்.

தெற்கு ஆல்ப்சு மலைதொடரிலுள்ள குக் என்ற பனிபடர்நத மலையில் கி.பி 1882-ஆம் ஆண்டு கிரினும், இரணடு சுவிட்சர்லாந்து வழிகாட்டிகளும் ஏறினார்கள். பெட் செராலடு எனபவா 1895-இல தாசுமேன், கிலபர்கார்ன, செப்டன், ஐடினசர் மலைச்சிகரங்களின மீது ஏறி வெற்றிகணடார். ஆலபசு மலைகளைப் பற்றி கி.பி. 19-ஆம நூற்றாணடில பல ஆயவுகள் நடத்தப்பட்டன. ஒட்டாகோ, அசுபைரிங், துகோடோ, இசுடாராகாகியர், இரெட்டீர் போனற மலைகளில் ஆராய்ச்சியாளர்கள ஏறி ஆய்வுகள நடத்தியுள்ளனர். இப்பொழுது நியூசிலாந்திலுள்ள மலையேறுபவர்கள இம்மலைகளிலஏறுவதில் ஆர்வம் காட்டி வருகினறனர். அல்பைன் எனற மலையேறும் சங்கம கி.பி. 1891-ஆம் ஆணடு தொடங்கப்பட்டது. இசசஙகத்தின்மூலம் மலையேறும் மக்களுககு வேண்டிய பயிறசியும், வசதியும் கொடுககப்பட்டன. மலைவளஙகள, பாறைகளின் வகைகள போன்ற அனைத்து விவரங்களையும் இச்சஙகம், சேகரித்து நாட்டுக்கு நல்கியது. பொ.க.

**தென்கடல்:** உலகிலேயே மிகப் பெரியதும், ஆழமானதுமான பசுபிக்குப்பெருஙகடலுக்குத் தென் கடல் (South Sea) எனனும் பெயரும் உணடு. இது வடக்கு, தெறகு அமெரிககக் கணடங்களுக்கு மேற்கிலும, ஆசியா, ஆசுதிரேலியா கணடஙகளுக்கு கிழக்கிலும அமைநதுளளது முதன முதலில் இககடலைக் கணட ஐரோப்பியரான இசுபெயின் (Spani) நாட்டு மாலுமி வாசுகோ நூனெசு தெ பால்போவா (Vasco Vunez de Balboa ,கி.பி. 1475-1519), இதறகுத் தென்கடல் எனப் பெயரிட்டார். தேரியன (Darien) நாட்டின ஆளுநராகவிருநதஇவர் கி.பி.1513 செப்டெமபர்-இல் மததிய அமெரிக்காவிலுளளபனாமாவில் ஒரு குனறின் மீது ஏறிததெற்கே பாாத்தபொழுது இப் பரந்த கடலைக்கண்டதால் இதனை 'தென்கடல்' என வழங்கினார். அவர் நான்கு நாளகள் அககடலில் பயணம் செய்து 29-ஆம் நாள் அப்பகுதி முழுவதும் இசுபெயின நாட்டிற்கு உரிமையானதென அறிவித்தார்.

பின்னர் உலகைச் சுறறிவந்த பொடினான்டு மெகல்லன் (Ferdnand Magellan) கி பி 1480-1521) இசுபெயின நாட்டிலிருந்து புறபபட்டு, மேற்கு நோக்கிப் பயணம் செய்து, உலகச் சுற்றிக் கொணடு தன னாட்டை அடைந்து, உலகம் உருண்டையானது என் பதை எடுத்துக் காட்டினார். அப்பயணததின பொழுது கி.பி 1520-இல தென் அமெரிக்காவைச சுற்றிக கொணடு இப்பெருங்கடலை, அடைநதபொழுது இது மிகவும் அமைதியாக இருந்ததால் 'அமைதிப் பெருங கடல' என்னும் பொருளில் இதற்குப் பசிபிககுப் பெருஙகடல் (Pacifico Ocean) எனப் பெயர் சூட்டினார்.

கிழக்கில் வடக்கு, தெற்கு அமெரிககக் கண்டங் களும், மேறகில் ஆசியா, ஆசுதிரேலியா கணடங் களும், மலேயாத தீவுக் கூட்டஙகளும, வடக்கில் பெர்ரிஙகு நீர் சந்தியும் (Bering Strait), தெற்கில் அணடாாடிகாவும இதன் எல்லைகளாம். இதைசசுறறியுளள நிலப்பகுதி உலகிலுள்ள நீர்ப்பகுதியைவிடவும், நிலப்பகுதியை விடவும்அதிகம் இதன அகலமகிழககே பனாமாவிலிருந்து மேற்கே மலேயா வரையில 17,700 கி.மீ. நீளம் வடக்கில பெர்ரிங்கு நீர்சந்திபபிலிருந்தும் தெறகே அண்டார்டிக்கா வரையில் 15,500 கி.மீ; பரப்பளவுமில்லியன சதுர கி.மீ; சராசரி ஆழம் 4282 மீட்டர்; உயாந்த அளவு ஆழம் 11 033 மீட்டர் இக் கடலில் 30,000 தீவுகள் உள்ளன நிலநடுககோட்டிற்கு வடக்கில் உள்ளது வடக்கு பசிபிககு என்றும், தெற்கில உள்ளது தெற்கு பசிபிக்கு எனறும் குறிப்பிடப்படுகிறது சி,இரெ.

**தென் கடல் குமிழி:** நிரம்ப இலாபம கிடைக்குமென்று எதிாபார்த்து மிகுதியான அளவு முதலீடு செய்து ஆனால் பெரும் நட்டமே கணட ஆஙகிலேயரது துணிகர வணிக நோககத்திற்கு தென கடல் குமிழி (South Sea Bubble) என்ற பெயர் கொடுக்கப்பட்டிருககிறது. இந்நிகழசசி கி பி.18-ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டில நடந்தது.

இசுபானிய அமெரிக்காவில (Spanish America) அடிமைகளை வணிகம செய்யத் தென் கடல் குழுமம் இஙகிலாந்தில் கி.பி. 1711 இல நிறுவப்பட்டது. அப்பொழுது நடந்து கொணடிருநத இசுபெயின நாட்டு வாரிசுரிமைப் போரை முடிவுக்குக் கொணடு வர விருநத உடன்படிக்கை அடிமை வியாபாரத்திறகுப் பெரும் சாதகமாக இருக்குமென வணிகர்கள எதிர் பார்த்திருந்தனர். ஆனால் கி.பி. 1713 இல ஏற்பட்ட உட்ரெக்ட்டு (Utrecht) உடன்படிக்கை தென கடல் குழுமத்திற்குச் சாதகமாக இருக்கவில்லை. மாறாக இக்குழுமம் ஒவ்வொரு ஆணடும் ஒரே ஒரு கப்பல் அடிமைகளைத்தான் இசுபானிய அமெரிக்காவிற்கு அனுபபலாமென்றும, இறககுமதி செய்யும் அடிமைகள மீது ஆணடு வரிவிதிககப்பட வேணடுமெனறும் இவ்வுடன்படிக்கையினபடி தீர்மானிக்கப்பட்டது முதல அடிமை வணிகக கப்பல் பயணம் ஓரளவு வெறறி கரமாகவிருந்தது. ஆனால கி பி. 1718-இல் முதலாம சார்சு மனனர் குழுமத்தின் ஆளுநரானவுடன துணிச்சல்மிகக வாணிக முயறசிககாரர்களுககு நம பிக்கை ஏறபடவே, குழுமம் 100 விழுக்காடு வட்டி கொடுக்கலாயிறறு நமபமுடியாத அளவு திடீர் விலை ஏற்றததால கி.பி 1720 இல குழுமத்தின வாணிப முதலீடு பெருகித் தேசியக் கடனைக்கூட அது ஏற்கத் தயாராயிறறு.

குழுமபபஙகின விலை ஏறும என்று எதிர்பார்ககப பட்டது. அதனபடியே கி.பி. 1720 சனவரியில $128\frac{1}{2}$ ஆக இருந்த பஙகின விலை ஆககூட்டு மாதம் 1000 ஆக ஏறியது. தெனகடல குழுமததின பங்குகள் கிடைக்கப பெறாத பல ஆயிரம மககளிடம குழும இயகுக்நர் சிலரும், இதர மோசடிகாரர்களும ஏமாறறுவேலை செயயத தொடஙகினா. செப்டமபா மாதத்திறகுள் பங்குச்சந்தை சரிநதுவிட்டது

தென்கடல குழுமப் பங்கின மதிப்பு திசம்பர் மாதத்திறகுள 124 ஆகக குறைநதுவிட்டது. முதலீடு செயத பலர் பெரும் இழப்புகுளளாயினர். இஙகிலாந்து நாட்டு மககளஅவை விசாரணைக்கு ஏற்பாடுகள் செய்தது. இதன விளைவாக மூனறு அமைசசாகள கையூட்டு வாஙகியது புலனாயிறறு. குழும இயக்குநர் சிலர் இழிவு செய்யப்பட்டனா. ஆனால் தென்கடல் குழுமம கி.பி. 1853 வரைச செயறபட்டு வநதது. கி.பி.

**தென்கிழக்கு ஆசியா:** ஆசியாக் கணடத்தில் இநதியாவிற்குக் கிழககே, சீனாவிறகு தெற்கே அமைந்துளள முந்நீரகததின ஒரு பகுதியும், சில தீவுக் கூட்டங்களும் சேர்ந்த பகுதி தெனகிழககு ஆசியா என உரைக்கப் படுகினறது. இப்பகுதியில பர்மா, முன்னர் சயாம் எனப் பெயாபெற்ற தாய்லாந்து, வியட்நாம், இலாவோசு (Laos), கம்பூசியா (Kampuchea) கம்போடியா (Combodia), மலேசியா இநதோனேசியா, பிலிப்பைனசு, சிஙகப்பூர், புருனி ஆகிய நாடுகள் அடஙகியுளளன. போர்னியோவின ஒரு பகுதியான புருனி இஙகிலாநதின காப்பில் உளள நாடு. மத்தியக் கிழக்கிறகும் தூரக் கிழக்கிறகும் இடையே இப்பகுதி அமைந்துள்ளதால் சிறப்பான தாக விளஙகுகினறது இரணடாம் உலகப் போரில் இப்பகுதி முக்கியமானதோர் இடத்தைப் பெற்றிருந் தது.

**புவியியல் அமைப்பு: தட்பவெப்பம்** இப்பகுதியின் தெற்கில் நிலநடுககோடு செலவதால் இங்குள்ள தாழ்




தென்கிழக்கு ஆசியா அமைவிடம்

நிலங்களில் ஆண்டு முழுவதும் வெப்பம் மிகுதியாக உள்ளது. ஆண்டின் சராசரி வெப்பநிலை 80° செல்சியசு. மேட்டுநிலப்பகுதிகள், மலைப்பகுதிகள் ஆகியவற்றில் இரவு வெப்பம் குறைவு.

**மழை:** இப்பகுதியில் ஆண்டில் சராசரி 100 செ.மீ. மழை பெய்கிறது. சில சமயங்களில் பருவ மழை மிகுதல் உணடு. புயல் காற்றாலும் மழையின் அளவு கூடுதலாக இருக்கும். ஆண்டிற்கு 500 செ.மீ. வரை மழை சில ஆண்டுகளில் பொழியும். அப்பொழுது வெள்ளம் ஏற்படும்.

**இயற்கை அமைப்பு:** இதன் பெரும்பகுதிகளில் மலைகளும் அடர்ந்த காடுகளும் இருக்கின்றன. மலைகள், மேட்டுநிலப்பகுதிகள, சமவெளிகள ஆகியவற்றில் புல்வெளிகள உள்ளன. இந்தோனேசியாவில் எரிமலைகள அடிக்கடி வெடித்து நெருப்பைக் கக்கும். அவற்றுள் ஒன்றான கிரகடன (Krakatan) கி.பி.1883 -இல் மிக வேகமாக வெடித்த பொழுது சுற்றியிருந்த பல சிறு தீவுகள் வெடித்துச் சிதறிவிட்டன. இங்குளள கடற்கரைப் பகுதிகளில் உள்ளே செல்ல முடியாத அளவிற்குச் சதுப்புநிலங்கள் உள்ளன. மலைப்பகுதிகளில் மக்கள் பெரிதும் குடியிருப்பதில்லை. உள்நாட்டுப் பகுதியிலும், கடற்கரைச் சமவெளிகளிலும் பல நூற்றாண்டுகளாக மக்கள வாழ்ந்து வருகின்றனர். ஆறுகளில் கழிமுகப் பகுதிகளிலும், பள்ளத்தாக்குகளிலும் மக்கள நெருக்கம் குறைவு. பெரும் நகரங்களான கனாய், சைகோன், மணிலா, பாங்காக்குஇரங்கூன் முதலியன பெரிய ஆறுகள கடலுடன் கலக்குமிடத்தில் அமைநதுள்ளன. பர்மாவிலுள்ள ஐராவதி, சல்வீன், சிட்டாங்கு, தாய்லாந்திலுள்ள மீனம், மீகாங்கு வடக்கு வியட்நாமிலுள்ள சிகப்பு ஆறு ஆகியவை அப்பகுதியிலுள்ள குறிப்பிடத்தக்க ஆறுகளாகும். இவவாறுகள் போக்குவரத்திற்குப் பயன்படுகின்றன.

**பரப்பளவும் மக்கள் தொகையும்:** இதன் பரப்பளவு அமெரிக்க ஐக்கிய நாடுகளின் பரப்பளவில பாதியாகும். வடக்கு, தெற்காக 3,200 கி.மீ. நீளமும், கிழக்கு மேறகாக 5600 கி.மீ. அகலமுமுளள இப்பகுதியின பரப்பளவு 4,600,00 ச.கி.மீ. இப்பகுதியின் மக்கள் தொகை 300,000,000. (1971-ஆம் ஆண்டுக் கணக்குப்படி)

**எல்லைகள்:** வடக்கில் சீனாவும், வடமேற்கில் பங்களாதேசமும், மேற்கில் வஙகாளக்குடாக்கடலும், இந்தியப் பெருங்கடலும், தெற்கில ஆசுதிரேலியாவும், இந்தியப் பெருங்கடலும், கிழக்கில் பசிபிக் பெருங்கடலும் இதன் எல்லைகளாகும்.

**இப்பகுதியிலுள்ள ஒவ்வொரு நாட்டின் மக்கள்தொகை-பரப்பளவு**

| | நாடு | ச கி.மீ. | மக்கள தொகை | தலைநகர் |
|---|---|---|---|---|
| 1) | புருணை | 5,765 | 221,000(85) | பர்தர்சேரி |
| 2) | பர்மா | 678,033 | 35,310,000(83) | இரஙகூன |
| 3) | கம்பூசியா | 181,035 | 6,230,000(85) | நாமபென் |
| 4) | இந்தோனேசியா | 1,919,445 | 173,000,000(85) | சகர்த்தா |
| 5) | இலாவோசு | 236,800 | 3,520,000(79) | வியனடீன |
| 6) | மலேசியா | 332,633 | 15,270,000(84) | கோலாலம்பூர் |

**பரப்பளவு, தலைநகர் ஆகியன.**

| | நாடு | ச.கி.மீ. | மக்கள் தொகை | தலைநகா |
|---|---|---|---|---|
| 7) | பிலிப்பைன்சு | 299,407 | 54,450,000(85) | மணிலா |
| 8) | சிங்கப்பூர் | 581 | 2,560,000(85) | சிஙகபபூர் |
| 9) | தாய்லாந்து | 514,000 | 50,600,000 | பாங்காக்கு |
| 10) | வியட்நாம் | 329,656 | 58,300,000(86) | அனோய் |

**மக்கள்:** இஙகுள்ள மக்கள பல்வேறு இனத்தைச் சேர்ந்தவர்கள. இஙகுள்ள பெரும்பாலான மக்கள் பல நூற்றாண்டுகளாக இப்பகுதியில் வாழ்ந்தவா களின் வழித் தோன்றல்களாக இருக்கின்றனர். உள நாட்டுப் பகுதியில வாழ்பவர் மஙகோலியரின் வழித் தோன்றல்களாகவும், தீவுகளில் வாழ்பவா மலாய இனத்தின் வழிவந்தோராகவும் உள்ளனர். பல இனத் தைச் சேர்ந்தவர்களாய இவர்கள உளளனராகை யால் குறிப்பிட்ட ஓர் உடல் அமைப்பைக கூற இயலவில்லை. இவர்கள் பொதுவாகக் குட்டையாக வும், ஒல்லியாகவும் பல நிறத்தினவராயும் உளள னர். முடி நீளமாகவும கருப்பாகவும் இருக்கினறது. கண்களின் நிறம் கருப்பு அல்லது பழுப்பு. பொது வாகக் கூறுமிடத்து இப்பகுதியின ஆணகளும பெண் களும் அநநியரை ஈர்க்ககககூடிய உருவ அமைபபுக் கொண்டவர்கள். இங்குளள மக்கள் தொகையில் பெரும்பான்மையினர் சீனர்கள. இவர்கள கடந்த 500 ஆண்டுகளாக இப்பகுதியில குடியேறி, இநநாடு களைத தங்கள் சொநத நாடாகக் கொண்டு வாழ கின்றனர். சிங்கப்பூரின் மககள் தொகையில் 75 விழுக காட்டினர் சீனர்கள். இநதியாவிலிருந்தும்,ஐரோப்பிய நாடுகளிலிருந்தும் குடியேறியவர்களும் இங்கு வாழ் கினறனர்.

**மொழிகள்:** இஙகு நூற்றுககணக்கான மொழிகள் பேசபபடுகினறன. பர்மாவில் மட்டும 125-இலிருந்து 140 வரையிலான மொழிகள் உள்ளன. இந்தோ னேசியத் தீவுக் கூட்டங்களில 200 மொழிகள் வரை இருககினறன. உளநாட்டின வடபகுதியில் உளள மக்கள பேசும் மொழிகள சீன மொழியுடன் தொடர் புடையவை. இனிமையான தாய் (சியாமீசு), பர்மிய, இலாவோசிய மொழிகள இவவினததைச் சேர்ந தவை. வியட்நாம் மக்கள பேசும் மொழி மறறொரு மொழித் தொகுதியைச் சார்ந்தது உள்நாட்டின் தென்பகுதியிலும தீவுக்கூட்டங்களிலும வாழும் மக் கள் மலாய்க் குடும்பத்தைச சோநத மொழிகளைப் பேசுகினறனர். மலாய, இநதோனேசிய தகலோக்கு (Tagalog) பிலிப்பைனசில பேசபபடும மொழி மொழிகள இவ்வினததைச் சேர்நதவை. தெனகிழககு ஆசியாவின் பல பகுதிகளிலும் பரவலாக மலாய் மொழி பயன்படுததப்படுகினறது.

ஐரோப்பிய நாடுகளின் குடியேற்ற நாடுகளாக இவை இருந்தனவாதலால் ஐரோப்பிய மொழிகள பலவும் வழககில உள்ளன. பிலிப்பைன்சு, பர்மா, மலேசியா ஆகியவற்றில் ஆஙகிலம பேசப்படுகிறது வியட்நாம், கமபூசியா, இலாவோசு முதலிய நாடு களில் பிரெஞ்சு மொழி பேசப்படுகிறது. ஒரு காலத

தில் இந்தோனேசியாவில் உயர்குடி மக்கள் தச்சு மொழி (Dutch) பேசி வந்தனர். இரண்டாம் உலகப் போருக்குப் பின் அம்மொழியைப் பேசுபவர் எண்ணிக்கை குறைந்துவிட்டது. பிலிப்பைன்சு மக்கள் இசுபானிசு மொழியை அறிந்துள்ளனர். மலேசியா, சிங்கப்பூர் ஆகியவற்றில் தமிழ் முக்கிய மொழியாகும்.

இப்பகுதி மொழிகளுக்கு எழுத்து அவ்வளவாக வளரவில்லை. கடந்த 1000 ஆண்டுகளாக இம்மக்கள் பயன்படுத்தும் எழுத்துகள் பிற நாகரிகங்களிலிருந்து கடன் வாங்கப்பட்டவையே. அராபியுடன தென்னிந்திய மொழிகளின் எழுத்துகள் இங்குள்ள எல்லா மொழிகளாலும் ஏற்றுக்கொளளப்பட்டுள்ளன. இந்தோசீனா தீவக்குறைவத்தில் உள்ள பல நாடுகள் சீன எழுத்துகளைப் பயன்படுத்துகின்றன. ஐரோப்பியர் கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் இப்பகுதியில் குடியேறிய பின்னர் இலத்தீன் எழுத்துகளும் சில வேளை பயன்படுத்தப்பட்டன.

**சமயம்:** உலகப் பெரும் சமயங்கள் அனைத்தும் இங்குள்ள மக்களால் பின்பற்றப்படுகின்றன. 2000 ஆண்டுகளுக்கு முன்னர்ச் சீனாவிலிருந்து கன்பூசிய சமயம் வியட்நாமில் பரவியது. இப்பொழுது அதன் செல்வாக்கு குறைந்துவிட்டது. இந்து சமயமும் புத்த சமயமும் இங்குப் பரவின. இந்து சமயமானது இந்தோனேசியாவிலுள்ள பாலித்தீவு நீங்கலாகப் பிற இடங்களில் மறைந்துவிட்டது. புத்தசமயம் நன்கு வேரூன்றி இன்று பர்மா, தாய்லாந்து, இலாவோசு, கம்பூசியா, வியட்நாம் முதலிய நாடுகளின் முதன்மைச்சமயமாக உள்ளது. இங்குள்ள மக்களின் கலைகள, இலக்கியம் ஆகியவற்றில் இச்சமயங்களின் தாக்கத்தை நாம் காணலாம்.



வியட்நாமிலுள்ள விளைச்சல் நிலம்

பின்னர் இசுலாமிய, கிறித்தவ சமயங்கள் இப்பகுதியில பரவின. இந்தியாவிலிருந்தும், மத்திய கிழக்கிலிருந்தும் வநத வணிகர்களும் சமயவாதிகளும் கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் இசுலாமிய சமயத்தைப் பரப்பினர். இது இநதோனேசியா, மலேயா,தெற்குப் பிலிப்பைன்சு ஆகியவற்றின் முக்கிய சமயமாக ஆனது. பிலிப்பைன்சில கிறித்தவ சமயம் பரவியது, அங்குள்ள மக்களுள 80விழுக்காட்டினர் இச்சமயத்தைப் பின்பற்றுகினறனர். இந்தோசீனாவில் பிரெஞ்சு மேலாண்மை ஏற்பட்ட பின்னர் அஙகுப் பலர் கிறித்தவர்களாக மாறினர். தெற்கு வியட்நாமிலும் இச்சமயத்தவர் உள்ளனர்.

**பொருளாதாரம். வேளாண்மை:** இப்பகுதி மக்களின் முக்கிய தொழில் வேளாண்மை யாகையால் இவர்களுடைய வாழக்கைத்தரம் மிகவும் தாழ்ந்துள்ளது. இவர்கள் சிறுசிறு துண்டு நிலங்களில், பழைய கருவிகளைக்கொணடு,பழைய முறைகளைப் பினபற்றி உழவு செய்வதால் விளைச்சல் மிகக்குறைவு. இப்பகுதியின் குறிப்பிடத்தக்க விளைபொருள்கள் நெல்,தேயிலை, கொப்பரை, நறுமணப் பொருள்கள்(Spices)முதலியன வாகும். இம்மக்களின் முதனமை உணவு அரிசியாகையால் எல்லாவிடங்களிலும், சிறப்பாக, பர்மா, தாயலாந்து, வியட்நாம், கம்பூசியா ஆகிய நாடுகளில் நெல் பயிரிடப்படுகிறது. இநதோனேசியா உலகில் நிறையத தேயிலை உறபத்தி செய்யும் நாடுகளில் ஒனறாக உளளது மலேசியாவிலும் இநதோனேசியாவின் சில பகுதிகளிலும் நறுமணப் பொருளகளின் (Spices) உற்பத்தி மிகுதி. இப்பகுதியில் விளையும் பிற பொருள்கள் கொப்பரை, கரும்பு, காபி, மக்காச்சோளம், புகையிலை, எண்ணெய்வித்துக்கள முதலியன. இப்பொழுது இப்பகுதியில் பனை எண்ணெய் (பாமாயில)மிகுநத அளவு உற்பத்தி செய்யப்படுகிறது.

மிகப பரநத கடலபகுதியில், இடம்விட்டு இடம் பலதீவுக் கூட்டஙகளாக இநநாடுகள் அமைநதுள்ளதால இங்கு பல வகை மீனகள கிடைககின்றன. எனவே மீனும, பிற கடல உணவுப் பொருளகளும் மக்களின் முக்கிய உணவாகும்.

இவ்வட்டாரத்தில் காடுகள் நிறைந்து, மரங்கள் அடாந்து உளளமையால் இம்மக்களின பொருள்

வளததில் காடுகள் குறிபிடத்தக்க பங்குபெற்றுள்ளன உலகிலேயே மிகுதியான இயறகை இரப்பர் இப்பகுதியிலதான் உறபத்தி செய்யப்படுகிறது. மலேசியா, இந்தோனேசியா, பிலிப்பைனசு, தாய்லந்து முதலிய நாடுகள் இரப்பர் உற்பத்திக்குப் பெயா பெற்றவை. குனைன உற்பத்தியிலும் இப்பகுதி சிறந்து விளஙகுகின்றது. உலகில் கிடைக்கும தேக்கு மரத்தில பெரும் பகுதி இங்கு விளைகின்றது. மேலும் இக்காடுகளில சந்தன மரம், மூஙகில், இனனும் பல வகை மரஙகள (Cedor, elony, mahogany முதலியன) உள்ளன. இஙகுளள காடுகளிலும, மலைகளிலும் புல்வெளிகள் நிறைய இருப்பதால கால்நடை வளாப்பதும இமமக்களின முதனமைத்தொழில்.

**கனிமங்கள்:** இஙகுப் பெட்ரோலியம், தகரம், விலையுயர்ந்த கறகள், செம்பு, இருமபு, ஈயம, மஙகனீசு, வெளளி, துததநாகம, குரோமைட்டு, தஙகம சிறிதளவு நிலக்கரி ஆகியவை கிடைக்கினறன. மலேசியா, இநதோனேசியா, தாய்லாநது ஆகிய நாடுகள் உலகிலேயே மிகுந்த தகரததை உறபத்திசெய்கினறன. பர்மா, வடக்கு போர்னியோ, சுமததிரா ஆகியவிடங்களில் பெட்ரோலியம் கிடைக்கிறது உலகில் கிடைக்கும நீலககறகளில் (Sapphire) பாதி தாய்லாந்திலிருந்து வருகிறது. மலேசியா வைரக்கறகளுக்குப் பெயர் பெற்றது. பாமாவில பலவித விலை உயர்ந்த கற்கள கிடைக்கினறன. பிலிப்பைன்சில இருமபு, குரோமைட்டு, மாஙகனீசு, தங்கம, செம்பு ஆகியவை வெட்டியெடுக்கப்படுகினறன. வியட்நாமின வடபகுதியில் சிறிதளவு நிலக்கரி கிடைத்தாலும், இப்பகுதியில் நல்ல நிலக்கரி இலலாதது ஒரு பெரிய குறையாகும்.

**தொழிற்சாலைகள்:** பலவித கனிமங்கள இபபகுதியில கிடைத்தாலும தொழிறசாலைகள நனகு வளாசசியடையவிலலை. அணமைக்காலம் வரை குடியேறறங்களாக இருந்துவந்ததாலும, இயநதிரஙகளை இயககத் தேவையான நல்ல நிலககரி கிடைககாததாலும் இப்பகுதியில தொழிறசாலைகள பெருகவில்லை. மேலும் முனனேறிய நாடுகள தஙகளுடைய உற்பத்திப் பொருட்களை மிகக குறைநதவிலையில இநநாடுகளில விறபனை செய்துவருகினறன. எனவே இரும்பு எஃகு, வேதியியல் பொருட்கள, குனைன், மின்சாதனங்கள், துணிகள் போன்ற நுகாவோா பொருட்கள் ஆகியவறறை உறபத்திசெயயும தொழிறசாலைகள் ஒருசிலவே உளளன. பெருநதொழிற்சாலைகளைத் தொடங்க நிறைய முதலீடு, நல்ல சாலைகள், பொறியியல், தொழில நுணுகக வலலுநர்களைப் பயிறறுவித்தல் ஆகியவை தேவைப்படுகினறன.

**போக்குவரத்தும் செய்தித் தொடர்பும்: போக்குவரத்து:** இங்குள்ள நாடுகளிடையே போக்குவரத்து கடல்வழியாகவும், ஆகாயவிமானம் மூலமும் நடைபெறுகினறது. மலைகளும், காடுகளும மிகுதியாக உளளமையால் உளநாட்டில் சாலைப போக்குவரத்து எளிதாக இலலை, ஆறுகள உள்நாட்டுப போககுவரத்திற்குப் பெரிதும பயன்படுகினறன துறைமுகஙகள நிறைநதிருபபதால இந்நாடுகளுக்கிடையே கடலோரக் கபபல போக்குவரததது முனனேறறம அடைநதுளளது. தாயலநதிலும, பிலிப்பைனசிலும் நெடுஞ்சாலைகளும, புகைவணடிகளும் போக்குவரததிறகுப் பெரிதும் பயன்படுகினறன.

**சாலைகள.** உள்நாட்டுப் போக்குவரத்திறகுச் சாலைகள பயன்படுகின்றன. பர்மாவில 14,279கி.மீ. நீளததிற்குச் சாலைகள் உளளன. இநதோனேசியாவில் சாவா, சுமததிரா, சுலவெசி (Sulawes) பாலி (Bali) ஆகியவற்றை நெடுஞசாலைகள இணைக்கினறன. மலேசியாவில 1982-இல 29,934 கி.மீ. நீளச் சாலைகளை அநநாட்டு பொதுப்பணித்துறை நிருவாகம் செய்துவந்தது பிலிப்பைனசில 155,467கி மீ, சிஙகபபூரில 2597 கி.மீ. 'தாய்லநதில 44,200கி மீ. (1982) வடககு வியடநாமில 95)0 கி மீ.(1973)தெறகு வியட்நாமில 20,905 கி.மீ. நீளசசாலைகள இருந்தன.

**இருப்புப்பாதைகள்:** பர்மாவில இரயில்வே தேசியமயமாககபபட்டுளளது. கம்போடியாவிலுளள காமரூன் இரயில்வேயின நீளம் 1168 கி மீ. இந்தோனேசியாவில 1985-இல 6877 கி.மீ.நீள இருப்புப் பாதை போடப்பட்டிருந்தது, இலாவோசில அந்நாட்டு இருபபுபபதை இலலை எனினும, தாய்லந்து இரயில்கள நான்கை (Nongkhai) வரைச் செல்லுகினறன மலேசியாவிலுளள மலேயன் இருபபுப்பாதை (The Malayan Railway)யின நீளம் 1639 கி மீ. (1982) தேசியமாக்கப்பட்ட பிலிப்பைன்சின இருபபுபபாதை 1027 கி மீ நீளமுள்ளது. சிஙகப்பூரில இருபபுபபாதை சிஙகப்பூர் நகா வழியே செனறு மலேசிய நாடுகளை இணைககிறது. இங்கு 1986-இல தொடஙகப்பெறற புதிய இருப்புபபாதை (The mass Rapid Transit system) 1992-இல் முடிவடைய வேணடும். தாயலந்தில் 1982-இல 3735 கி.மீ. நீள இருப்புப்பாதை அமைக்கப்பட்டு இருநதது.

**விமானம்:** பாமா தனி விமானப் போககுவரத்தை (Burma Airways Corporation) வைத்துள்ளது. கம்போடியாவில தலவா (Dowla) முக்கியமான பன்னாட்டு விமான நிலையமாகும். இந்தோனேசியாவில பெரிய விமான நிலையங்கள் 14 உள்ளன. இந்நாட்டு அரசும், தனியார் நிறுவனமும் (K L.M.) 1949-இல 'கருடா இந்தோனேசியனவிமானப்போக்கு

வரத்தைத்' (Garuda Indonesian Airways) தொடங்கின. அது 1954-இல் தேசியமாக்கப்பட்டது. இலாவோசில் உள்நாட்டு, பன்னாட்டு விமானப் போக்குவரத்தை ஒரு விமானப்போக்குவரத்து (Laonviation) நடத்துகின்றது. மலேசியாவில் 1972-இல் ஏற்படுத்தப்பட்ட மலேசிய விமானப் போக்குவரத்து (MAS – Malaysian Airlines System) உள்நாட்டு, வெளிநாட்டு விமானப் போக்குவரத்தை நடத்துகின்றது. பிலிப்பைன்சில் ஒரு நிறுவனம் (The Philippine Airlines Inc.) விமானப் போக்குவரத்தைப் பார்த்துக் கொள்கின்றது. தாய்லந்தில் 1947-இல் ஒரு விமானப் போக்குவரத்து (TAC-Thai irways Co. Ltd.,) ஏற்படுத்தப்பட்டது. அது 11 உள்நாட்டுத் தடங்களிலும், 3 பன்னாட்டுத் தடங்களிலும் செயல்படுகின்றது.

**கப்பல்:** நீண்ட கடற்கரையும், நிறையத் தீவுகளும், மிகுதியான துறைமுகங்களும், ஆறுகளும், கால்வாய்களும் இருப்பதால் உள்நாட்டு, அயல் நாட்டு, கடலோர வாணிகத்திற்கும், மக்கள் போக்குவரத்திற்கும் கப்பல்கள் மிகவும் பயன்படுகின்றன.

**கல்வி:** இப்பகுதியிலுள்ள நாடுகள் குடியேற்றங்களாக இருந்து வந்ததால் ஐரோப்பியர் இம்மக்களுக்குப் போதிய கல்வி வசதிகளை அளிக்கவில்லை. நாட்டின் நிருவாகத்திற்காக ஒரு சிலருக்கு மட்டுமே கல்வி வழங்கப்பட்டது. முதலில் மதகுருமார்களைத் தயாரிப்பதற்காக பிலிப்பைன்சில் உரோமன் கத்தோலிக்கக் கல்வி நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டன. குறிப்பிட்ட ஒரு சில செல்வருக்கே பொறியியல், சட்டம், மருத்துவம் ஆகியவற்றில் பயிற்சி அளிக்கப்பட்டது. பல கட்டுப்பாடுகள் காரணமாக மாணவர் எண்ணிக்கையும் குறைவாகவே இருந்தது. இருப்பினும் இக்கல்வி நிலையங்கள் புரட்சியின் மையங்களாக மாறின. இவற்றிலிருந்து நாட்டின் தலைவர்கள் பலர் தோன்றி, ஐக்கியத்திற்கும், விடுதலைக்கும் வித்திட்டனர். அந்நியரிடமிருந்து விடுதலை பெற்ற பின்னர் கல்வியின நோக்கம் மாறியது. அனைவருக்கும் கல்வி அளிக்க வேண்டியது அரசாங்கத்தின் கடமையாக ஆனது. பல்கலைக் கழகங்களின் அளவு, நோக்கம், நிருவாகம், மாணவர்களின் எணணிக்கை ஆகியவற்றில் பெரும் மாறுதல்கள் ஏற்பட்டன. ஒவவொரு நாட்டிலும், பிற நாடுகளின் உதவியுடன் பல புதிய துறைகள் தொடங்கப்பெற்று, பல பேராசிரியர்கள் பயிற்றுவிக்கப்பட்டனர். பழைய பல்கலைக் கழகங்கள் தேசியக் கல்வி மையங்களாக மாறி, மாணவர் எண்ணிக்கைப் பெருகி, புதிய கற்பிக்கும் முறைகள் பின்பற்றப்பட்டு கல்வியில் முன்னேற்றம் ஏற்பட்டது.

இந்தோனேசியாவில் 41 அரசு பல்கலைக் கழகங்களும், 200 தனியார் பல்கலைக் கழகங்களும், ஆசிரியப் பயிற்சி நிலையங்களும் உள்ளன. கல்வியின் தரத்தை உயர்த்தப் புதிய பல்கலைக் கழகங்கள் இந்நாட்டில் திறக்கப்படவில்லை. பிலிப்பைன்சில் அமெரிக்காவினால் நல்ல கல்வி நிலையங்கள் ஏற்படுத்தப் பட்டிருந்தன. இப்பொழுது எல்லோருக்கும் கல்வி வழங்கப்படுவதால் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகியுள்ளது. மலேசியாவில் 5 அரசு பல்கலைக் கழகங்கள் உள்ளன. சிங்கப்பூரில் சீனம், தமிழ், மலாய், ஆங்கிலம் இவை நான்கும் அரசு மொழிகளாகும். தாய்லாந்தில் 'தாய்' தேசிய மொழி ஆங்கிலம் இரண்டாவது மொழி. இந்நாட்டில் 7 வயது முதல் 15 வயது வரை அனைவருக்கும் கட்டாயக் கல்வி அளிக்கப்படுகிறது. பின்னர் அவர்கள் இந்நாட்டிலுள்ள 23 பல்கலைக் கழகங்களில் ஏதேனும் ஒன்றில் சேர்ந்து படிக்கலாம் எனவே வயதுவந்தோரில் 82 விழுக்காட்டினர் கல்வி கற்றவராய், உள்ளனர். மலேசியாவில் 9 ஆணடுகளுக்குக் கட்டாயக் கல்வி கட்டணமின்றி வழங்கப்படுகிறது. கோலாலம்பூரிலுள்ள மலேசியா பல்கலைக் கழகம் மிகப்பெரிய பல்கலைக்கழகமாகும்.

**முக்கிய நகரங்கள்: சிங்கப்பூர்:** சிங்கப்பூர் நகரம் சிங்கப்பூர் தீவின் தென் கோடியில் உளளது. இதன பரப்பளவு 581 சதுர கி.மீ. மக்கள் தொகை 2.5. மிலியன் (1984 கணக்குப்படி). ஒரு சிறந்த துறைமுகப் பட்டணமான இது இராபில்சு (Sir Thomas Stamford Raffles) என்பவரால் திட்டமிட்டுக் கட்டப்பட்டது. பழைய நகரைச் சுற்றி அரசு கட்டடங்களும், முககிய அலுவலகங்களும் உள்ளன. விக்டோரியா அரங்கம், உச்ச நீதிமன்றம், நகர அரங்கம் குறிப்பிடத்தக்கவை. சிறிது தூரத்தில் தேசிய அரும்பொருட்காட்சி அகமும, தேசிய நூலகமும் உள்ளன. நகரத்திற்கு வெளியே வடமேற்குத் திசையில் தாவரவியல பூஙகாவும், சிங்கப்பூர் பல்கலைக் கழகமும் இருககின்றன

**பாங்காக்கு:** பாங்காக்கு (Bangkok), சாவோ பிரையா (Chao Phraya) ஆற்றஙகரையில் அமைந்துள்ளது. இங்கு 1,299,528 (1960) பேர் வாழ்கினறனர். 'கீழ்த்திசையின் வெனீசு' என குறிக்கப்படும் பாங்காககு மிக அழகிய நகரம். நூற்றுக்கணக்கான புத்த கோயில்களைக கொணட இது உல்லாசப் பயணிகளால் மிகவும் விரும்பப்படுகிறது. பலதிரையரங்குகள், உணவு விடுதிகள, இரவு விடுதிகள் இருக்கினறன. இங்குளள மூனறு பெரிய பூங்காக்களில தேசியக் கண்காட்சிகளும், விழாக்களும் நடத்தப்படுகின்றன.

**சாபர்தா:** சாகர்த்தா (Jakarta) வடமேற்கு சாவாவில் உள்ளது. இதன் மக்கள்தொகை 3,000,000. இநநாட்டின் பெரிய நகரமும், முக்கிய துறைமுகமு

மான இது சிறந்த வாணிக, போக்குவரத்து மைய மாகவும் விளங்குகின்றது. தச்சுக்காரர்களின ஆட்சி யின் பொழுது இது 'பட்டேவியா' (Batavia) என குறிக்கப்பட்டது. இந்நகரின் பல பகுதிகளிலும் கால்வாய்கள் ஊடுருவிச் செல்கின்றன. அகன்ற தெருக்களையும், பல புதிய அமைப்புள்ள கட்டடங் களையும் கொண்ட இந்நகரில் மக்கள் நெருக்கம் மிகுதி.

**சூரபயா:** சாகர்த்தாவிற்கு அடுத்த பெரிய நகர மான சூரபயா (Surabaya)வடகிழக்கு சாவாவிலுள்ள ஒரு துறைமுகப் பட்டினமும், கடற்படைத்தளமு மாகும். தச்சுக்காரர்கள் சூரபசா (Surabaja) என இதனைக் கூறினர். சிறு தொழில்களின் மைய மாக விளஙகும், இதன மக்கள்தொகை 989,734 (1961 மதிப்பீடு).

**பாண்டுங்கு:** இநதோனேசியாவின் மூன்றாம பெரிய நகரமான பாண்டுஙகு (Bandung) சாவா தீவில் 738 மீட்டர் உயரத்தில் உளள ஒரு நவீன நகரம். இந்நகரில் 1955-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஆசியா-ஆப்பிரிக்க நாடுகளின் மாநாடு நடைபெற்ற தால் இது புகழ்பெற்றது. இங்கு கி.பி. 1810-இல் தலைமை ஆளுநராகவிருந்த தேனடெல்சு (Marshal H.W. Daendels) என்பவரால் ஏற்படுத்தப்பட்ட இது இன்றுஅழகிய மலைகளால் சூழப்பட்ட ஒரு நவீன நகரமாகத் திகழ்கின்றது பல அருவிகள் நிறைந்துள் ளன.அகனற, தெருக்களைக்கொணடுள்ளது.கடைகள், வங்கிகள், வீடுகள் ஆகியவை ஐரோப்பிய முறையில் கட்டப்பட்டுளளன. இங்குப் பல திரைப்பட அரஙகு களும், ஒரு நாடக அரங்கும், ஒரு குதிரைப் பந்தயத் திடலும், மூன்று அழகிய பூங்காக்களும் இருக்கின்றன. இரணடாம் உலகப் போருக்கு முன் இங்குள்ள குனைன் தொழிற்சாலை உலக உற்பததியில் 80 விழுக் காட்டைத் தயாரித்தது. இதன் மக்களை தொகை 797,566 (1961 கணக்குப்படி).

**இரங்கூன்:** பர்மாவின் தலைநகரான இரங்கூன் இந்நாட்டின் சிறநத துறைமுகமாகும். இரங்கூன் ஆற்றங்கரையில் இந்நகரம் அமைந்துள்ளது. இந்நாட் டின் தொழில், வாணிகம், போக்குவரத்து, செய்தித் தொடர்பு ஆகியவற்றின மையமாக இது விளங்குகின் றது. இங்கு மிகப் பெரிய அழகியகட்டடங்களும், வர லாற்று நினைவுச் சின்னங்களும் இருக்கின்றன. இங் குள்ள மிகப்பெரிய பொன்வேயப்பட்ட புத்தகோயில் (Shwe Dagon Pagodo) 112 மீ. உயரம் உள்ளது. இங் குளள பல கல்வி நிலையங்களுள இரங்கூன் பல்கலைக் கழகம் குறிப்பிடத்தக்கது.

**மணிலா:** இது ஆசியாவிலேயே மிகப்பெரிய நக ரங்களுள் ஒன்று. பிலிப்பைன் நாட்டின் சிறந்த துறை முகம் ஆகவும், சிறந்த வாணிக மையமாகவும இது விளங்குகின்றது.பிலிப்பைன்சின் சிறந்தவீரராகவிருந்த இராசா சுலைமானால் இது நிறுவப்பட்டது. இதனை கி.பி. 1571-இல் இசுபானியர் கைப்பற்றி, புதுப்பித்து, கிறித்தவ நகரமாக மாற்றினர். இங்குள்ள பல பல் கலைக் கழகங்களுள கி.பி. 1611-இல் இசுபானியரால் ஏற்படுத்தப்பட்ட தாமசு பல்கலைக் கழகம் (University of Santo Thomas) மிகப் பழமையானது. இரண டாம் உலகப் போரில் இநநகரம் அழிக்கப்பட்டு, புதுப் பிக்கப்பட்டது. இதன் மக்கள் தொகை 1,500,000.

**கூசன் நகரம்:** பிலிப்பைனசின மற்றொரு தலை நகரமாக விளங்கியது கூசன் நகரமாகும் (Quezon City). இது மணிலாவிற்கு வட கிழக்கில் 16 கி.மீ. தொலைவில் உளளது. பின் 1948-லிருந்து தான் மணிலா தலைநகரமாக ஆயிற்று இநநாட்டின் நிரு வாகம் மணிலாவிலிருந்து நடத்தப்பட்டாலும், அரசு அலுவலங்கள் கூசன் நகரிலேயே உளளன.இதன் பரப் பளவு 72 ச கி.மீ. மக்களதொகை 397,990(1960 கணக்குப்படி).

**கோ சி மின் நகரம்:** தெற்கு வியட்நாமின் தலை நகரம் சைகோனின் புதிய பெயர் கோசி மின் நகரம் (Ho Chi Min City) ஆகும். இப்பெயர் மாற்றம் 1975-இல் வடக்கு வியட்நாம் தெற்கு வியட்நாமைக் கைப்பற்றியதும் ஏற்பட்டது. 19-ஆம் நூற்றாண்டில பிரெஞ்சு மேலாணமையின் கீழ் வந்தபொழுது இந் நகரம்வளரத் தொடங்கியது. போரின் காரணமாகக் கிராமத்திலிருந்து மக்கள் இந்நகரில் குடியேறியதும் மக்கள்தொகை 1,500,000 லிருந்து 2,500,000 ஆகப் பெருகியது. அகன்ற, இருமருங்கும மரங்கள் உள்ள தெருக்களைக் கொண்ட இந்நகர் மிகவும் அழகியது ஐரோப்பிய நாகரிகத்தைப் பின்பற்றிக் கட்டடங்கள பல கட்டப்பட்டுள்ளன. இந்நகரில் நகரமன்றம், கலைக் கண்காட்சி, தாவரவியல் பூங்கா, விலங்குகள் காட்சிசாலை ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

**வரலாறு: பண்டைக்காலம்:** இப்பகுதியில் வரலாற் றுக்கு முந்திய காலத்திலிருந்தே மக்கள வாழ்ந்து வந் தனர். இந்தோனேசியாவில் 40,000 ஆண்டுகளுக்கு முன்னர் சாவா மனிதன் (Java man) வாழ்ந்ததற கான சான்றுகள் கி.பி. 1891 இல் கண்டுபிடிக்கப்பட் டன. இப்பகுதியில் வரலாற்றுக் காலம் தொடங்கு வதற்கு முன்னரே இந்தியா, சீனா, மத்திய கிழக்குப் பகுதிகளில் நாகரிகம் மிகவும் உயர்நிலையை அடைந் திருந்தது. இந்தியாவிலிருந்து கி.பி. 6,7-ஆம் நூற் றாண்டுகளில் இந்து, புத்த சமயத்தவர் குடியேறிய பின்னர்த் தென்கிழக்கு ஆசிய நாடுகளில் கலைகளும், பண்பாடும் வளரத் தொடங்கின. இவர்களுடைய அறிவு, திறமை ஆகியவற்றைப் பயன்படுத்தி இங்கி

ருந்த சிற்றரசர்கள் பேரரசுகளை ஏற்படுத்த முயன்றனர். இன்றைய வியட்நாம் பகுதியில் 1300 ஆண்டுகள் (கி.பி. 150–1471) இந்து அரசர்கள் சம்பா (Champa) பேரரசை ஆண்டுவந்தனர். கம்போச (Kambuja) நாடும் 900 ஆண்டுகள் இந்து அரசர்களின் ஆட்சியில் இருந்தது. இது வலிமைமிக்க பேரரசாகத் திகழ்ந்த பொழுது இதில் கம்பூசியா, இந்தோ-சீனா, இலோ வோசு, சயாம், பர்மாவின் ஒரு பகுதி, மலாய் தீவக் குறைவம் ஆகியவை அடங்கியிருந்தன. இங்குள்ள அங்கர் வாட்டு (Angkor Vat), அங்கர் தாம் (Angkor Thom) முதலிய பல கோயில்கள் அக்காலக் கலையின் சிறப்பினை எடுத்துக்காட்டுகின்றன. மலாய்த் தீவக் குறைவத்திலும் இரு இந்துப் பேரரசுகள் தோன்றி, வளர்ந்து, மறைந்தன. இப்பகுதியில் சற்றேறக்குறைய 1500 ஆண்டுகளுக்கு இந்தியரின் ஆட்சியும்,அவர்களின் சமயம், இலக்கியம்,கலைகள் ஆகியவற்றின் மேலாண்மையும் இருந்து வந்தது. இவற்றின் தாக்கத்தை இன்றும் பல இடங்களில் காணலாம்.

**ஐரோப்பியரின் மேலாண்மை:** ஐரோப்பியர் கி.பி.1500-இல் தென்கிழக்கு ஆசியாவிற்குள் நுழைந்ததிலிருந்து அவர்களுடைய மேலாண்மை தோன்றலாயிற்று போர்த்துக்கீசியர் கி.பி.1511-இல் மலேசியாவிடமிருந்து மலாக்காவைக் (Malacca)கைப்பற்றினர். மெக்சிகோவிலிருந்த இசுபானியர் பிலிப்பைன்சின் மீது மேலாண்மை செலுத்தத் தொடங்கி கிறித்தவ சமயத்தைப் பரப்பினர். அமெரிக்க ஐக்கிய நாடுகள் கி.பி. 1898-இல் இசுபெயினிடமிருந்த பிலிப்பைன்சைப் பெற்றது. இங்கிலாந்து அரசு பர்மா,சிங்கப்பூர், மலேசியா,வடக்குபோர்னியோ ஆகியவற்றைத் தன்னுடைய மேலாண்மையின் கீழ்க் கொண்டு வந்தது. பிரெஞ்சு இந்தோசீனா எனப்படும் கம்பூசியா, இலாசோபு, வியட்நாம் ஆகியவற்றைப் பிரான்சு கைப்பற்றிக் கொண்டது. தச்சுக்காரர்கள் இந்தோனேசியா மீதும், போர்த்துக்கீசியர் இந்தோனேசியத் தீவான திமர் (Timor) மீதும் மேலாண்மை செலுத்தினர்.

**விடுதலை:** இக்குடியேற்றங்களில் ஐரோப்பிய நாடுகளுக்கு எதிராகத் தேசிய எழுச்சி தோன்றியது. தாய்நாட்டின் மேலாண்மையை எதிர்த்து ஏற்பட்ட முதலாவது புரட்சி கி.பி. 1896–97-இல் பிலிப்பைன்சு மக்கள் இசுபெயினை எதிர்த்துச் செய்த கிளர்ச்சியாகும். அது தோல்வியில் முடிந்தது. இசுபெயினுக்கும், அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு மிடையே கி.பி. 1898–இல் போர் மூண்ட பொழுது பிலிப்பைன்சு மக்கள் கிளர்ச்சி செய்து அதை ஒரு குடியரசு நாடாக அறிவித்தனர். ஆனால் அது 1902 இல் அமெரிக்க ஐக்கிய நாடுகளால் அடக்கப்பட்டது. 20-ஆம் நூற்றாண்டின் முதல் பாதியில் இந்நாடுகளில் மீண்டும் தேசிய உணர்ச்சியும், குடியேற்ற எதிர்ப்பு உணர்ச்சியும் தலை தூக்கின. அதற்குக் காரணங்கள் பல ஒன்று சப்பான் ஒரு வலிமைமிக்க சக்தியாகத் தோன்றியதாகும். இரண்டாவது, சீனாவில் 1911-இல் புரட்சிக் கருத்துகள் மேலோங்கின. இந்தியாவில் தேசியம் வளர்ந்தது. இந்நாட்டு இளைஞர்களிடையே மேலைநாட்டுச் சிந்தனைகளும், இலெனினுடைய புரட்சிக் கருத்துக்களும் பரவின. இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் குடியேற்றக் கருத்துக்கு எதிராக உலகக் கருத்தானது இயங்கலாயிற்று.

பிலிப்பைன்சு 1946-லும், பர்மா 1948-லும், இந்தோனேசியா 1949–லும் மலேயா 1957-லும் விடுதலை பெற்றன. வடக்கு வியட்நாமில் 1946–இல் பொதுவுடைமையாளர்களுக்கும், பிரெஞ்சுக் குடியேற்றப் படைக்கும் இடையே போர்மூண்டது. அதன் முடிவில் 1954–இல் கம்போடியா, இலாவோசு இரண்டும் விடுதலை பெற்றன. வியட்நாம் வடக்கு வியட்நாம், தெற்கு வியட்நாம் என இரண்டாகப் பிரிக்கப்பட்டது. இங்கிலாந்து சராவக்கு (Sarawak), சாபா (Sabah–North Borneo), சிங்கப்பூர் ஆகியவற்றிற்கு 1963–இல விடுதலை அளித்தது. இவை மூன்றும் மலேயாவுடன் சேர்ந்து மலேசியாவாயின. ஆனால் 1965-இல் சிங்கப்பூர் தனி நாடாக ஆனது.

**இன்றைய நிலை:** விடுதலைக்குப் பின்னர் இந்நாடுகளில் பல சிக்கல்கள் தோன்றின. பொருளாதார வளர்ச்சி, கல்வி, நிர்வாகத் திறமை ஆகியவை இல்லாததன் விளைவாகப் பூசலகள் தோன்றின. மக்களுடைய வறுமையின் காரணமாகப் பொதுவுடைமைக் கொள்கை பரவி புரட்சிகள் ஏற்பட்டன. இன வேறுபாடுகள், சமூகப் பிளவுகள், நிருவாகத் திறமையின்மை ஆகியவற்றின காரணமாக இந்நாடுகளில் நிலையான ஆட்சி ஏற்படவில்லை. வியட்நாம் போர், கம்பூசியப் போர் ஆகியவை தோன்றின. பொதுவுடைமையாளர்களின் போராட்டங்கள் வியட்நாமில் மட்டு மன்றி பர்மா, மலேசியா, பிலிப்பைன்சு, தாய்லாந்து ஆகிய நாடுகளிலும் ஏற்பட்டன.இந்நாடுகளில் தொழில் வளர்ச்சியின்றி, ஏழ்மை நிலை நிலவிவருவதால் பொதுவுடமைக் கொள்கை பரவி, பல போராட்டங்கள் தோனறி, நிலையான அமைதியான அரசு நீடித்திருக்க முடியவில்லை. சி.இரெ.

**துணைநூல்கள்:**

Hall. D.G.E., A history of South-East Isia, Macmillan, New York, 1968.

Majumdar R.C. & others, An advanced History of India, Macmillan, London, 1970.

***தென் குசராத்துப் பல்கலைக் கழகம்,*** சூரத்து நகரில் 1967–ஆம் ஆணடு தொடங்கப்பட்டது.

தென குசராத்துப் பகுதியின உயர் கல்வியின் தேவையை நிறைவு செய்யும் முறையில இப் பல கலைக் கழகம் அமைக்கப்பட்டது. இலால்பாய் ஆர்.தேசாய் (Lalbhai R. Desai) எனபவரின தலைமை யிலான குழு இப் பல்கலைக் கழகக் குறிக்கோள், நெறிமுறைகள் முதலானவற்றை உருவாககிக் கொடுத்தது.

தென் குசராத்துப் பல்கலைக் கழகம் (South Gurjarath University) கற்பித்தல, இணைப்புரிமை வழங்குதல் முதலான பணிகளை முதன்மையாகக் கொணடுள்ளது. இப்பல்கலைக் கழகம் சுறறேறக் குறைய 40 கல்லூரிகளை இணைப்புரிமைக் (Affilia-tion) கல்லூரிகளாகக் கொணடுள்ளது. அனைத்துக் கலலூரியிலும் புகுமுகப் படிப்பு இலலை. பெரும் பாலான கல்லூரிகளஇளநிலைப்பட்டப்படிப்பு வழங்கு பவையாகச் செயறபடுகின்றன. சில கலலூரிகளில் மட்டும் முதுநிலைப் பட்டப்படிப்பு வழஙகப்படுகிறது.

இப் பல்கலைக் கழகத்தில் கலை, வணிகவியல், கல்வியியல், பொறியியல், சட்டவியல், மருத்துவ வியல், ஊரக ஆய்வுகள் முதலான புலஙகள் உளளன. இதன்கண் பல துறைகள செயறபடுகின்றன. அவை ஆங்கிலம், மொழியியல், கல்வியியல், வணிகவியலும் தொழில் மேலாணமையியலும், பொதுத துறை மேலாண்மையியல் (Pulbic Administration), ஊரக வியல் (Rural Studies), சமூகவியல், சட்டவியல், பொருளியல், உயிா அறிவியலகள் (Bio-Sciences), வேதியியல், கணிதவியல, பொறியியல், இயற்பியல், புளளியியல், மருத்துவம் முதலானவை. இநத அனைத் துத துறைகளிலும முதுகலைப் படிப்பிற்குப் பின் எம் பில் (M Phil), பிஎச்.டி. முதலான ஆராய்ச்சிப் பட் டங்களைப் பெற வசதியுண்டு.

தென குசராததுப் பலகலைக் கழகம் தனிபபட்ட முறையில மாணவர்கள பயிலவும் வழி செய்துளளது. இவ்வாறான மாணவர்கள் தனிப்பட்ட முறையில் பயின்று தேர்வுகள் எழுதிப் பட்டங்கள பெறலாம். எம்.ஏ , எம்.காம். முதலான பாடங்களில் இவ்வகை வசதியுண்டு. மேலாண்மையியலின் பிரிவுகள, மருத் துவப் பிரிவுகள முதலானவற்றில் பட்டயத் தகுதி (Diploma) பெறும் வசதியையும இப்பல்கலைக் கழ கம் வழங்குகிறது. அவவாறே உருசிய மொழியில ஓராணடு படித்துச் சான்றிதழ்த் (Certificate) தகுதி யையும் பெறலாம். இப்பல்கலைக் கழகம் மதிப்புறு பட்டமாக டி.லிட். (D.Litt.) பட்டத்தை வழங்கு கிறது. மருத்துவவியல், பொறியியல் முதலிய துறை களுக்கான ஆய்வுக்கூடங்கள் இங்குச் சிறப்பாக அமைக்கப்பட்டுள்ளன. சிறந்த நூலகம் இப் பல் கலைக் கழகத்தில செயற்படுகிறது. மாணவர்கள் விளையாட்டுத் துறை, நாட்டு நலப் பணித் திட்டம் முதலானவற்றில் ஈடுபடவும் ஊக்குவிக்கப்படுகிறார் கள். சீ.ப.

**தென்சிங்கு நார்கே:** இவர் மலையேறுங் கலையில் வல்லுநர்; உலக மலைச் சிகரங்களில் எல லாம் மிக உயரமான எவரெசுட்டில் (Everest) முதன் முதலாக ஏறிப் புகழ்பெற்றவர்.



தென்சிங்கு நார்கே

தென்சிங்கு நார்கே (Tenzing Norkay) நேபா ளத்தில் 1914-ஆம் ஆணடில பிறந்தார். தமது18-ஆம் வயதில் இந்தியாவில உள்ள தார்சிலிஙகு(Darjeeling) பகுதிக்குக் குடிபெயாந்தார். எவரசுட்டு மலையின்மீது 1935-இல் இவர் முதனமுதலாக ஒரு சுமைகாரராக (Porter) ஏறினார்; உச்சிக்குப் போகவிலலை. பிறகு ஒவ்வோர் ஆண்டும இமயமலை மீது ஏறுபவர்களு டன் சென்று வந்தார் இவருக்கு 1947-இல் சிர்தாா (Sirdor) அல்லது தலைமைச் சுமைகாரர் எனற நிலை கிடைத்தது. மலையேறும் ஒரு பிரெஞ்சுக குழு வுடன் 1951-இல் தென்சிஙகு, நந்ததேவிக்குன்றின கிழக்குப் பக்கத்தில்ஏறிச் சாதனை புரிந்தார். அடுத்த ஆணடில் சுவிட்சர்லாந்து நாட்டிலிருநது வந்த இரண்டு மலையேறுங் குழுக்களுடன் இவரும் இணைநது கொண்டார். பிறகு நியூசிலாநதுநாட்டி லிருந்து போந்த சர் எட்மண்டு இலாரி (Sir Edmund Hillary) என்பவருடன் சேர்நது 1953-இல் எவரசுட் டின் உச்சிக்குச் செனறு தமது புகழை நிலைநிறுத் தினார். தார்சிலிங்கில் உளள இமாலய மலையேறும், பயிறசி நிறுவனததின இயக்குநராக இவர் 1964-இல் அமர்த்தப்பட்டார்.

இவர் தமது சுயசரிதையைப் பனிகளின் புலி (Tiger of the Snows) என்ற தலைப்பில் ஒரு நூலாக ஆக்கினார். சேம்சு உல்மன் (James Ullman) எனபவ ருடன் இணைந்து எழுதப்பட்ட இந்நூல் 1955-இல் வெளியாயிற்று. தெ பா.

**தென் தகோடா** அமெரிக்க ஐக்கிய நாட்டின் வடக்கு மத்திய பகுதியில் உள்ள ஒரு மாநிலம். இது கி.பி.1889-ஆம் ஆண்டில் ஒரு மாநிலமாயிற்று. இதன் தலைநகர் பியரி (Pierre). தென் தகோடாவுக்கு (South Dakota) வடக்கில் வடக்குத் தகோடாவும் கிழக்கில் மின்னசோட்டா, அயோவா மாநிலங்களும், தெற்கில் நெப்ராசுகாவும், மேற்கில் வயோமிங்கு, மொண்டானா மாநிலங்களும் எல்லைகளாக



இராண்டால் அணை

உள்ளன. இம்மாநிலம் 67 வட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மாநிலத்தின் மொத்தப் பரப்பு 199,552 சதுர கி.மீ. மக்கள்தொகை 690.178 (1980).

மாநில அரசியலமைப்பு,ஒரு ஆளவை மன்றத்தையும் (Senate) ஒரு பேராளர் மன்றத்தையும் (House of Represeutations) ஒரு ஆளுநரையும் (Governor) கொண்டுள்ளது. ஆளவை மன்றத்தில் 35 உறுப்பினர்களும் பேராளர் மன்றத்தில் 70 உறுப்பினர்களும் இரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். ஆளுநர் நான்கு ஆண்டுகட்கு ஒரு முறை மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறார். நடுவண் அரசு சட்டசபைக்கு (Congress) இம்மாநிலம் இரண்டு ஆளவை உறுப்பினர்களையும் ஒரு பேராளரையும் தேர்ந்தெடுத்து அனுப்புகிறது.

கம்பு உற்பத்தியில் இம்மாநிலம் அமெரிக்காவிலேயே முதலிடம் பெற்றுள்ளது. சணல் உற்பத்தியிலும் பயறு வகைகள் உற்பத்தியிலும் இரண்டாம் இடத்தைப் பெற்றுள்ளது. மரச்சாமான்கள் தயாரித்தல், அச்சு இயந்திரம் தயாரித்தல், மின்சார இயந்திர உற்பத்தி முதலிய தொழில்களும் சிறப்பாக நடைபெறுகின்றன.

**வரலாறு:** வெள்ளையர்கள் முதன் முதல் கி.பி.18-ஆம் நூற்றாண்டில் தெற்குத் தகோடாப் பகுதிக்கு வந்தபொழுது, இங்கு நாடோடிகளான சியோ (Sioux) இந்தியர்களும், வேளாண் மக்களான அரிகரா (Arikara) மக்களும் காணப்பெற்றனர். அமெரிக்க அரசு, உலூசியானாப் பகுதியைப் (Louisiana) பிரான்சிடமிருந்து விலைக்கு வாங்கியபொழுது, தென் தகோடா நிலப்பகுதியும் அதற்கு உட்பட்டிருந்தது. மிகக் குறுகிய காலத்தில் அமெரிக்க மக்கள் தம் உழைப்பினால் இப்பகுதியைச் செழிப்புறச் செய்தனர். இங்குள்ள கருங்குன்றுகள் (Black Hills)பகுதியில் கி.பி. 18-ஆம் நூற்றாண்டுப் பிற்பகுதியில் தங்கச் சுரங்கம் கண்டுபிடிக்கப்பட்டதால், மக்கள் கூட்டங் கூட்டமாக இங்கு வரலாயினர். மாநில உயர்வுக்குத் தேவையான மக்கள்தொகையைத் தென் தகோடா பெற்றிருந்ததால் கி.பி.1889-இல் நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தின்படி, புதிய அரசியல் அமைப்பு உருவாகியது. தெ.பா.

**தென் தீவு**, நியூசிலாந்திலுள்ளது. இதன் பரப்பளவு 153,318 சதுர கி.மீ. ஆகும். இதன் மக்கள் தொகை 1956-ஆம் ஆண்டில் 6,77,098 ஆகும். இத்தொகை1961-இல் 7,30,199 ஆக உயர்ந்தது. இப்பொழுது 10இலட்சம் மக்களுக்கும் மேலாக இத்தீவில் வாழ்கின்றனர்.

தென் தீவின் (South Island) மூன்றில் ஒரு பகுதி மலைத்தொடர்களால் ஆனது. தெற்குஆல்ப்சு மலைத்தொடர் இத்தீவின் மத்தியில் அமைந்துள்ளது. இம்மலை எப்பொழுதும் பனியால் மூடப்பட்டிருக்கும். கூல் என்ற மலைச்சிகரம் சிறப்பு வாய்ந்தது. இத்தீவின் வடக்குப் பகுதி முழுவதும் மலைத்தொடர்களால் ஆனது. கைகௌரா என்ற மலைத்தொடரும், இசபென்சன் மலைத்தொடரும் இப்பகுதியில் இணையாக அமைந்துள்ளன. இங்குள்ள அர்னாடு மலையில் பள்ளத்தாக்குகளும், பெரிய அருவிகளும் உள்ளன. எல்லா மலைகளும் கல் மண்ணால் ஆன களிமமாகும். ஒருசில இடங்களில் காலத்தால் முந்தைய பாறைகள் தென்படுகின்றன. இப்பகுதிகள் பீடபூமியாகும். கடல் மட்டத்திற்கு மேல் 1500முதல் 2100மீட்டர்வரை உயரமுள்ளவையாக இப்பீடபூமிகள் இருக்கின்றன. பொதுவாகப் பனிபடர்ந்த இடங்கள், ஆழமான பள்ளத்தாக்குகள், உயரமான பாறைகள் ஆகியவை இத்தீவின் வட பகுதியில் உள்ளன.

தென் தீவின் தென்பகுதி நிலம் சரிவாகவும், பழமையான பாறைகளால் அமைந்தும் உள்ளது. திரைசிக்கு, சுராசிங்கு பாறைகள் இப்பகுதிகளில்நிரம்பிக் காணப்படுகின்றன. மேலும் ஓகோனைய மலையில் 914.4மீ. உயரத்திற்குப் பல படுக்கைகளாக இப்பாறைகள் இருக்கின்றன. இத்தீவின் மேற்குப் பகுதி கடலால் அரிக்கப்பட்டுள்ளது. இங்குள்ள அல்பன்

மலை முக்கிய மலையாகும். இம்மலை பழமையான பாறைகளால் ஆனது, வடக்கு நோக்கி 144கி.மீ. நீள முள்ளது. இம்மலையை அடுதது வண்டல மணணால் ஆன சமவெளி ஒனறுளளது இதையடுத்துப்பனி படர்நத குறுகிய கடற்கரை இருககிறது.

கிழக்கிலுளள மலைகள மால்பரோ கடற கரையை நோக்கிச சரிவாக இருக்கினறன. சில இடங் களில் சமவெளியும, சிறிய குன்றுகளும,பளளததாககு களும இருக்கின்றன.கேனடர்பரி எனற பகுதி சரிவான பளளத்தாக்குப் பகுதியாகும். இபபகுதியில் மலை களுக்கு இடையிலும, கடறகரை ஓரததிலும வணடல் மண மிகுதியாகக காணப்படுகிறது மெரைன, டீ அனா, மனபௌரி, மோனோவா, ஓரோகா போன்ற ஏரி கள இஙகுளளன.

வைரா எனற ஆறு 160 கி.மீ நீளமுள்ள முக்கிய ஆறாகும். குளுதா ஆறு 336 கி மீ. நீளமும், வைதகி ஆறு 216 கி.மீ. நீளமும் உடையவை. இன்னும் பல ஆறுகளும் ஓடுகின்றன. மலைத்தொடர்களிலிருந்து பனியுருகி ஆணடு முழுவதும் ஆறறில் நீர் வருகின றது. வைகாடே என்ற ஆறறில பெனமோர் என்ற நீர் மின்நிலையம் கட்டப்பட்டுள்ளது இதில 5,40,000 கிலோவாட்டு மின்சாரம் தயாரிககப்படுகிறது. நாட்டின் தொழில, வேளாண்மை முன்னேறறத்திற்கு இச்சக்தி பயனபடுத்தப்படுகிறது. தங்கம், நிலக்கரி போன்ற கனிவளங்களும், பல தாதுப் பொருள்களும் இத்தீவில் எடுக்கப்படுகின்றன. இயறகை வளத்தை யும், நீர் மின்சக்தியையும் பயனபடுத்திப் பல தொழிற்கூடங்கள தொடங்கப்பட்டுள்ளன. தொழில் முன்னேற்றம் அடைந்துளளது. தானியஙகள, பழங கள், மரவகைகள், ஆடுகள் கம்பளி ஆடைகள் ஆகி யவை ஏற்றுமதி செய்யப்படுகின்றன. தங்கம், நிலக் கரி, எணணெய் ஆகியவை இங்குக் கிடைக்கின்றன. இத்தீவைச் சுறறியுளள கடலில் 310 வகையான மீன் கள் கிடைக்கின்றன. பெர்ன் எனற 120 வகையான பூக்காத, நிழலில வாழும் தாவரங்கள உளளன.

இங்குள்ள மக்களுள பெரும்பாலோா சீர்திருத்தக் கிறித்தவ வகுப்பினர். இவர்களைத்தவிர ஆங்கிலேய தேவாலயத்தைச் சேர்ந்தவர்களும் இங்கு வாழ்கின்ற னர். பொ.க.

**தென்மார்க்கு: அமைவிடம்:** ஐரோப்பாக் கண்டத்தில், கி.பி. 9-ஆம் நூற்றாண்டிலிருநது தொடர்நது வெறறியுடன் செயறபட்டு வருகிற முடி யாட்சிகளுள் தென்மார்க்கும் ஒனறாகும. வடககு மத்திய ஐரோப்பாவில் அமைந்துளள அரசியலமைப் பினைக் கொணட இமமுடியாட்சியில் சட்லாந்தின (Jutland) வடக்குத் தீபகறபப் பகுதியும், நூற்றுக்கும் மேற்பட்ட தீவுகளும் அடஙகியுள்ளன. அத்தீவுகளுள்



கோபன்கேகன் துறைமுகச்சிலை

சீலாந்து (Sjaelland), பின (Fyn), கிரீன்லாந்து, இலா லாந்து, பால்சுடர், ஆல்சென், பார்ன்ஆம், பிரிசான் ஆகியவை மிக முக்கியமானவை. அத்தீவுகளுள் பரப் பளவில் முதன்மையான இடத்தைப் பெறுவது சீலாந்து; இரண்டாம் இடத்தைப் பெறுவது பின. தெனமார்க்கு (Denmark) செருமெனிககு வடக்கே யுள்ள வடகடல், பால்டிக்குக்கடல் ஆகியவைகளி னுள்ளே நீணடு நிற்கும் நிலப்பகுதியாகும். இது சட் லாந்து, செருமனி,சுவீடன ஆகிய நாடுகளுக்கிடையே அமையப் பெற்றுள்ளது.

**நிலவியல் அமைப்பும் தட்பவெப்பமும்:** இசுகாந்தி னேவிய (Scandınavia) இராச்சியங்களுள மூன்றினைக் கொணட. தென்மார்க்கின் பரப்பளவு ஏறககுறைய 43,069 ச.கி.மீ. மூன்று பக்கங்களிலும் நீராலும், ஒரு பக்கத்தில் மட்டும் நிலத்தாலும் (செருமனி) சூழப் பட்டது. கடலிலிருந்து இந்த நாட்டின் எந்தப் பகுதி யும் 80 கி.மீ. தூரத்திற்கு மேலில்லை. இந்நாட்டின் கடற்கரையின மொத்த நீளம் 7,438 கி.மீ. கரடுமுர டான குன்றுகள ஆஙகாஙகே நிறைந்துள்ளன. நாடு முழுவதும் தாழ்வான நிலவெளியாகவே இந்நாடுள் ளது. கடல் மட்டத்திலிருந்து மிகுந்த உயரம் 173 மீ. மிகத் தாழ்வான பகுதி 2 மீ. ஆழமான உட்குடாக் கள் பல தீபகற்பத்தைத் துளைதது உள்ளே சென் றுள்ளன. அவைகளில் இலீம் உட்குடா மிகப் பெரிய தாகும். இது சட்லாந்துத் தீபகற்பத்தின் வடக்கு முனையை இரண்டாகத் துண்டித்துச் செல்லுகிறது. இது கால்வாய் ஒன்றினால் வடகடலுடன் இணைக் கப்பட்டுள்ளது. இந்நாடு சிறிய ஏரிகளையும் ஆறு

களையும் உடையது. ஆறுகளுள ஏறக் குறைய 160 கி.மீ. நீளத்தில ஓடுகிற -கூடன் எனபதே மிக முக்கிய மானதாகும்.



கிழக்கு-மத்திய குன்றுகள், தெனமார்க்கு

இந்நாட்டின் தட்பவெப்பம் மிதமானது; ஈரமானது; கடலோரத்துக்குரியது; அடிக்கடி மழையும பனியும் பெய்யும் நிலையில உளளது. ஆனால் ஆண டுச் சராசரி மழை 45 செ.மீ. முதல் 60 செ.மீ. வரை அளவே ஆகும். பொதுவாகத தெனமேறகு, மற்றும் மேற்குக் காற்றுகள், சனவரி திஙகளிலும் கிழககுக் காற்றுகள ஏப்பிரல திஙகளிலும், மேற்கு மறறும வட மேறகுக் காற்றுகள சூலைத் திங்களிலும் வீசுவதுணடு.

**முக்கிய நகரங்கள்:** தெனமாாக்கின் தலைநகரம் கோபனேகன எனபதாகும. இது மிகப் பழமை வாயநத ஒரு நகரமாகவும, புதிய கட்டடங்கள,கடைகள, பெருமைமிகு திவோலித் தோட்டங்கள் ஆகியவைகளைக் கொணட ஒரு புதுமை நகரமாகவும் விளங்குகிறது. இது பனனாட்டுப் பயணிகளைக்கவரக கூடிய தனிச் சிறப்பைப் பெறறுளளது. இந்நகருக்கு அடுததாற்போல ஒதெனசே, ஆரசு, ஆர்செனசு, வெசுலி, வைபோாககு முதலிய நகரங்கள மிக முககியத்துவம பெறறவைகளாகும். இநநகரஙகள் அனைத்தும கல்வி நிலையஙகள, பலவேறு தொழிற கூடஙகள, வணிக நிலையஙகள ஆகியவறறின் மையங்களாகும்.

**மக்கள தொகை:** இந்நாட்டின் மக்கள் நெருக்கம் ஒரு ச.கி.மீ. கசு 118 ஆகும் (1980). மொத்த மககள தொகையில நகர்ப புறஙகளில் 8) விழுக்காடு எனவும், கிராமப் புறஙகளில் 20 விழுக்காடு எனவும் கணக்கிடப்படுகிறது. மக்கள தொகை 5,101,000 (1980).



கிறிசுடியன் போர்கு அரண்மனை, கோபனேகன்



கோபனேகன் நகரம்

**நிலவளம்:** பனிப்பாளம பரவிய களிமண்ணும் மணற் பகுதிகளும இநநாட்டில மிகுதியாகக் காணப் படுகினறன.எனவே பயிரிடக்கூடிய வளத்தை இநநாடு பெற்றிருக்கவிலலை. எனினும், மத்திய சட்லாநதின கிழக்குப் பகுதியில களிச் சேற்று வணடல் நிலஙகள இநநாட்டின வளத்தை மேமபடுத்துகினறன. மேற்குக் கடறகரையோரமாக அமைந்துளள இயறகை நீர்க் கால்வாயின இரு புறங்களும பயிரிடக்கூடிய நிலங களாக மாறறி அமைககபபட்டுளளன.

இந்நாட்டின பததில் ஒரு பங்கு நிலப்பகுதி காடு களைக் கொணடது. காடுகள அனைத்தும் சிறி யவை. காடுகளில புனக மரம் (Peach), தேவ தாருமரம (Pine), சிநதூர மரம (Oak), அசோக மரம், செநநிற உயாவெடடு மரம, பூவரசுமரம இரட்டை அரமபப்பல விளிம்புடைய இலைகளும, சிறுமலர்க் கொததுகளும உளள மரம், நெட்டிலிஙக மரம், சர்ககரை தரும், அழகுடைய நிழல் தரும் மரம் ஆகியவை நிறைநதுளளன. இநநாட்டில் நான கில் மூனறு பகுதிகள பயிரிடககூடிய நிலங்களாகப் பணபடுததப்பட்டுப் பயிரிடப்பட்டு வருகினறன. விளைநிலங்களில பாாலி, புலலரிசி, கோதுமை, கம்பு, தர்னிப்பு என்கிற கிழஙகு வகை, சர்ககரைவளளிக் கிழஙகு, உருளைக்கிழங்கு, காரட்டு, வெஙகாயம், பூண்டு, ஆப்பிள ஆகியவை பயிரிடப்படுகின்றன. இந்நாடடில விலங்கினஙகள ஏனைய நாடுகளைப் போனறு மிகுதியாக இல்லை ஆனால ஆங்காஙகே மான், முயல், நரி, அணில், ஆடு, பனறி, காட்டுக்



தெனமாாக்கிலுள்ள பணணைகள்

குளள வாத்து, நெடுவால் பகட்டு, வணணக்கோழி, கௌதாரி, சாதாரண கோழி ஆகியவை வாழ்கின றன.

**தொழிலும் பொருளாதாரமும்:** இந்நாட்டின் நிலப் பரப்பில் 80 விழுக்காட்டுப் பகுதியில் இன்று வேளாணமை நடைபெறுகிறது. தானிய விளைச் சலே கி.பி.1880-ஆம் ஆண்டு வரை முக்கியமாக இருந்து வந்தது. தானிய விலை சரிநததும், இந் நாட்டு மக்கள் பால் பண்ணைத் தொழிலை மேற் கொணடனர். இன்று தென்மார்க்கு 'ஐரோப்பாவின் பால்பண்ணை' என்று போற்றப்படும் அளவுக்கு அத் தொழிலில் வளர்ச்சி அடைந்துள்ளது. இத்தொழிலின் மூலம், பால், வெண்ணெய், பாலாடைக் கட்டி, இறைச்சி, முட்டை, பன்றியிறைச்சி முதலியன மிகுதி யாகவே கிடைக்கின்றன. பால்பணணைத் தொழில் பெருமபாலும் கூட்டுறவு முறையில் நடைபெற்று வரு கிறது. அடுத்த மிக முக்கியமான தொழில் மீன் பிடித் தலாகும். இந்நாட்டு மக்கள் கடல், ஏரி, குளம் ஆகிய நீர்நிலைகளில் மீன் பிடிப்பது வழக்கம்.



மாட்டுப் பணணை, தெனமார்க்கு

வேளாண்மையிலும் கால்நடைப் பராமரிப்பிலும் கி.பி.19-ஆம் நூற்றாணடின இறுதிப் பகுதியில் அறி வியல் புகுததப்பட்டதால் மிகுதியான பயனை மக கள் பெற ஏதுவாயிற்று. அறுவடையில் நிறைவு பெற்றதோடு, காலநடைகளுக்குத தேவையான தீவனத்தையும மக்கள் பெறறனர்.

கால்நடைத் தீவனத்தின் அளவு ஆணடுதோறும் குன்றியது. கால்நடைப் பராமரிப்பும் அதனால் குனறியது. அதுபோலவே வேளாண்மையும் குனறத தொடங்கியது. எனவே வேளாண்மை செய்வோருககு ஆக்கமும் ஊக்கமும் அளிக்க வேண்டித 'தென்மார்க்கு வேளாண்மைச் கூட்டுறவுச் சங்கம்', 'தெனமார்க்குக் குடியானவர் சங்கங்களின கூட்டமைப்பு', 'தென்மார்க் குக் கூட்டுறவுச் சஙகங்களின் கூட்டமைப்பு' ஆகியவை தொடஙகப்பட்டன. இருப்பினும் உலகப்போர்களின் விளைவாகப் பொருளகள் விலை ஏற்றம் கண்டதால் மக்களுககு வேளாண்மையில நாட்டம் இல்லாமற போயிற்று. அதன விளைவாக வேளாணமையில் 1953-இல் 20 விழுக்காடும், 1978-இல் 7 விழுக் காடும்தான வருவாய கிடைத்தது. எனவே, நாட் டைத் தொழில் மயமாக்க வேணடிய நிலையும் அங்கே உணடாயிற்று.



வேளாண்மைச் சமவெளி

இன்று உலகிலேயே தொழில் வளத்தில உன்னத மான இடத்தைத் தென்மார்க்கு பெற்றுள்ளது. உல கத்திலேயே தனி மனிதனின் ஆணடுச் சராசரி வரு வாயும் தென்மார்க்கில் தான் மிகுதி. ஆனால தனி யார் நிறுவனங்களிலே நாட்டின் வருவாய முழுவதும முடஙகிக் கிடக்கினறது.

பார்ன்ஆமில நிலக்கரிச் சுரஙகங்களும், கருங்கற் சுரஙகங்களும, சட்லாந்தில் பழுப்பு நிலககரிச சுரங கஙகளும், மேறகுச் சட்லாந்தில் உப்பளங்களும் உள் ளன. மீனபிடிபபுத் தொழிலுக்கு வேண்டிய இயநதிர இயககி செயதல்,எணணெய எடுத்தல, வலை பின்னு தல், படகு கட்டுதல், இயந்திரங்கள் செயதல் ஆகி யவை தென்மார்க்கிலேயே நடைபெறுகினறன. அங் குளள இயந்திரத் தொழிற்சாலைகளைக் கூட்டுறவுச் சஙகங்களும, நகராட்சிக் கழகங்களும் நடத்துகின் றன. மிகப் பெரிய நீராமின் இயந்திரத் தொழிற் சாலை சட்லாந்தில்செயற்படுகிறது. பற்றாக் குறைக் குச் சுவீடன் நாட்டிலிருந்து இந்நாடு நீர்மின ஆற்ற



மீனபிடித்தல, தெனமார்க்கு

லைப் பெறுகிறது. இரணடு உலகப் பெரும் போா களுக்கிடையே மிக வேகமாகத தொழில் துறையில வளர்சசி பெற்ற இநநாடு 1960-ஆம் ஆணடளவில வேளாணமையை விடத் தொழில துறையிலேதான் மிக்க வருமானத்தைப் பெற்றது மினசாரக கருவிகள செய்தல, உணவுப் பதனஞ் செய்தல, கபபல கடடுதல கட்டடம்கட்டுதல்,மரச்சாமானகள செய்தல,சிமிணடு உற்பத்திசெய்தல்,செஙகல உற்பத்திசெய்தல ஆகியன இநநாட்டின தொழிலகளாகும். பீர், காகிதம், சைக் கிள், மோட்டார், துணி, மட்பாணடம், வெள்ளி ஆகியவை சம்பந்தப்பட்ட வேலைகளும் இந்நாட்டில் நடைபெறுகின்றன.

இநநாடு இனறு வாணிகத்தை நம்பியே உள் ளது. கடல் போக்குவரத்து வசதி மிகுதியாக இருப் பதால் ஆக்கப் பொருளகளுக்குத் தேவையான மூலப் பொருள்களான பஞ்சு, தானியவகைகள, இரும்புச் சாமான்கள், நிலக்கரி, பெட்ரோலியம், எஃகு முதலி யன இறக்குமதியாகின்றன. தனனிடம் மிஞ்சியுள்ள வெணணெய், முட்டை, பன்றி இறைசசி, இயந்திர சாமான்கள் முதலியன ஏற்றுமதிசெய்யப்படுகின்றன.

அயல்நாட்டுச் செலாவணியில் முதலில இலாபம் மிகுந்த அளவில இல்லையெனறாலும், நாள டைவில தென்மார்க்கின வெணணெய், முட்டை, பதனப்படுத்தப்பட்ட பனறி இறைச்சி ஆகியவை நெதர்லாந்து, பிரிட்டன, மேற்குச செருமனி, சுவீடன அமெரிககா, நார்வே போன்ற நாடுகளில மிகுந்த விலைக்கு எடுத்துககொளளபபட்டதால், எதிபாராக் கபபட்ட வருவாய் கிடைததது. தெனமார்க்கின தொழிலகளுக்கும் வாணிகத்திறகும் மையஙகளாகக கோப்பனேகன, ஆல்பார்க்கு, ஆரசு, எசுப்செர்ககு, ஓதெனசே, இராணடாசு ஆகிய நகரஙகளைக குறிப் பிடலாம்.

தெனமாாக்கு 1960 முதல் 1972 முடிய 'ஐரோப் பியத் தடையிலலா வாணிகச் சஙகததில' உறுப்பு நாடாகவும், 1973–ஆம ஆணடில 'ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயத்தில' உறுப்பு நாடாகவும விளஙகியது.

தெனமார்க்கு நாட்டில 'குரோன' எனப்படும வெளளி நாணயம 100 கலபபு உலோக நாணயங களுக்குச் சமமானது இநத நாணயஙகளைத தென மாாக்குத தேசிய வஙகியே வெளியிடும். நாணயங களைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தையும இந்த வங கியே பெற்றுளளது. இநத வஙகிககுத துணையாகக கோபனேகன தனியாா வங்கி, கோபனேகன வாணிக வஙகி, உழவர்களின கடன் மறறும வாணிக வஙகி ஆகிய மூனறு வஙகிகளும செயற்படு கினறன.

இநநாட்டின் வருவாய, சொத்து, வருமானம் ஆகியவைகளிலிருநது 40 விழுக்காடும, விற்பனைவரி, உளநாட்டுப் பொருள் வரி ஆகியவைகளிலிருந்து 47 விழுககாடும, பிற சிலலறைத் துறைகளிலிருநது எஞசிய 13 விழுக்காடும கிடைக்கினறன மொத்த வருவாயில பொதுநலத் தொணடுக்கு 37 விழுக்காடும, கல்வித் துறைக்கு 9 விழுக்காடும, பாதுகாப்புககாக 6 விழுக்காடும செலவிடப்படுகின்றன.

**போக்குவரத்து, செய்தித் தொடர்பு வசதிகள்:** உந்து வணடி (Motor cars) வசதிகள இஙகு மிகுதி. இந நாட்டின முதன்மைச் சாலையின மொத்த நீளம 8552 கி.மீ. அதில முக்கிய பெருஞ்சாலைகளின நீளம் 2328 கி மீ. குறுக்குச் சாலைகளின நீளம 47,379 கி.மீ. ஆகியவையும அடஙகும. தெனமார்ககு நாட்டி லுளள இருப்புப்பாதைகளின மொத்த நீளம 3900 கி.மீ. இதில 2449 கி.மீ. நீளமுள்ள இருப்புப் பாதை தேசிய அரசின வசமுளளது; 1451 கி.மீ நீளமுளள இருப்புப் பாதை நிறுவனஙகளிலஅரசும்பஙகுகொணடு செயற்படுகிறது. இருப்புப் பாதைகளுககிடையே அமைககப்பட்டுள்ள பாலஙகளுள் ஒனறு பினனுக்கும் சட்லாந்துக்கும இடையே 800 மீ. நீளமுளளது; மற் றொனறு சுசேலாந்துக்கும் பால்சுடருக்கும் இடையே கட்டப்பட்டுளள 3200 மீ. நீளமுள்ள பாலமாகும். முதன்மையான இருப்புப் பாதையும், பெருஞசாலை யும் கோபனேகனுககும எசுப்சொக்குககும் இடையே

உள்ளன. அப்பகுதியிலிருந்து பல்வேறு பகுதிகளுக்கும் குறிப்பாக இங்கிலாந்துக்கும் செல்லும் பிரிடெரிசியா அனைத்துப் பாதைகளுக்கும் ஒரு பெரிய சந்திப்பாக விளங்குகிறது. அங்கிருந்து ஆம்பர்க்கு, மேற்குச் செருமனி, நார்வே, சுவீடன் ஆகிய நாடுகளுக்கும் செல்லலாம்.

தென்மார்க்கு நாட்டில் நிறைய துறைமுகப் பட்டினங்களும், துறைமுகங்களும், ஓடத்துறைகளும் உண்டு. வாணிகத்தை விரைவுபடுத்தும் வகைகளில் இயந்திரப் படகுகளும் உள்ளன. தென்மார்க்குக் கப்பல்கள் ஐந்தில் ஒரு பங்கு வாணிகத்தைச் செயற் படுத்துகின்றன.

கோபனேகன், உள்நாட்டு, அயல்நாட்டு விமான தளமாகப் பயன்படுகிறது. சட்லாந்து, பார்ன்ஆம் ஆகிய பகுதிகள் உள்நாட்டு விமானத் தொடர்பைப பெற்றுள்ளன.

தென்மார்க்கு நாடு அஞ்சல், தநதி, கடலடித் தந்தி, வானொலி, தொலைக்காட்சி முதலிய துறை களையும் நடத்துகிறது. தொலைப்பேசித் துறையை மட்டும் தென்மார்க்கு அரசும், நகராட்சிகளும் இணைந்தே நடத்துகின்றன.

**கல்வியும் கலைகளும்:** இந்நாட்டில் எலலோரும் கல்வியறிவு பெற்றவர்களே. இங்கே குழநதைகள அனைவரும் 7 வயது முதல் 14 வயது வரை தொடக் கப்பள்ளிகளில் கட்டாயக் கல்வியைப் பெறவேணடும். குழந்தைகள் 14 வயது முதல் 19 வயது வரையுள்ள வர்கள் மேனிலைக் கல்வியைத் தொடரலாம். தொடக்கக் கல்வியும் மேனிலைக் கல்வியும அரசி னால் இலவசமாக அளிக்கப்படுகின்றன. இந்நாட்டில் 1960-ஆம் ஆணடின் இடைப்பகுதியில் 2800 உளளாட்சிப் பள்ளிகளும், 350 தனியார் பள்ளிகளும், 40 அரசு நிறுவனங்களும், 30 ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகளும் இருந்தன. அரசு உதவியுடன 60 பெரியவர்களுக்கான பள்ளிகளும் 200 வணிகப பாடப் பளளிகளும் 150 தொழில் நுணுக்கப் பளளிகளும் இருந்தன. தனிப் பயிறசியை அளிககவல்ல வேளாணமைக் கல்லூரி களும் அறிவியற் கல்லூரிகளும் செயற்படுகின்றன. கோபனேகன் பல்கலைக் கழகம கி.பி. 1479-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டு இன்றைக்குச் சுமார் 15,000 மாணவர்களைப் பெற்றுள்ளது. கோபனேக னில் உள்ள அரசுப் பல்கலைக கழகம் 1923-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டு 5000 மாணவர்களையும், தொழில்நுட்பப் பல்கலைக் கழகம் 3000 மாணவர் களையும், கால்நடைப் பல்கலைககழகம், 1000 மாண வர்களையும் கொண்டுள்ளன ஒதென்சே பலகலைக் கழகமும் செயற்படுகிறது. பொது நூலகங்கள 1400 உளளன.


முதியோர் பள்ளி தென்மார்க்கு

தென்மார்க்கு இலக்கியத் துறையில பேராசிரியர் ஆணடர்கன நெக்கோ, எனரிக் பான்டோபிடன் ஆகி யோர் 1917-ஆம் ஆணடிலும், ஆன்சு கிறித்திலன் ஆண்டாகன், செ.வி. செனசென் போன்றவர்கள 1944-ஆம் ஆணடிலும், நோபல பரிசு பெற்றார்கள. காசு முன்கு, செல்டு ஆபேல், காரல் சோயா போன் றோர் சிறந்த இலக்கிய வலலுநர்களாகத் திகழ்ந் தார்கள. புதிய கட்டிடக் கலைகளுக்குச் சிறந்த எடுத்துககாட்டாக விளங்கும் கே பிசுகர் வேலைப் பாடுகளும், ஆக் காம்ப்பானன, ஆகே இராபின, ஆர்னி சாககோப்சன் போனறவாகளின கலை நுணுக் கங்களும் சிறப்புப் பெற்றவை. மிகச் சிறந்த இசை வாணாகளாகக் காரல் நெலசன், எப்பே, ஆமரிக்கு, நீலசு விக்கோ பென்ட்சன் முதலியோர் திகழநதனர். அறிவியல் ஆய்வுகளுக்கெனத் தேசிய கலை இலக்கியக் கழகமும் ஆவணக் காப்பகமும் தேசிய அருங்காட்சி யகமும் நிறுவப்பட்டுள்ளன.

**சமுதாயமும் சமயமும்:** தென்மார்க்கின் மக்கள அனைவரும் ஓரினத் தன்மையைப் பெறறவர்கள், தானிசு என வழங்கும் மொழியைப் பேசுபவர்கள; பொதுவான மரபுரிமையை உடையவர்கள; காலத் திற்கேற்றவாறு இயங்குபவர்கள; தங்களுக்கிடையே உள்ள சிக்கல்களை மிகச் சுலபமாகத் தீர்க்கும் குண வியல்பு பெறறவர்கள்; எப்பொழுதும் மகிழ்ச்சியாக வும் கலகலப்பாகவும் உளளவர்கள; நகைததிறத்திற் குப் பெயர் பெற்றவர்கள; தேசிய உடை களை விரும்பி அணிபவர்கள; தேசிய கொடி யையும், நாட்டு மொழியையும் தெய்வமெனக் கருதுபவாகள்; பெரிய வெள்ளிக கிழமையில கொடி களை அரைக்கம்பத்தில கட்டித் துககத்தைக் கடைப் பிடிப்பவர்கள்; இராணியார் பிறந்த ஏப்பிரல 16ஐத்

தேசிய விடுமுறை நாளாகக் கொண்டாடுபவர்கள், 'இதுவே இனிய பூமி' எனத் தொடங்கும் நாட்டுப் பண்ணைப் பாடுபவர்கள். இவர்கள் செருமனிப் பிடியிலிருந்து விடுதலை பெற்ற மே 5-ஆம் நாளையும், புதிய ஆண்டின் முதல் நாளையும் விடுமுறை நாளாக ளாகப் பெற்றவர்கள்.

தென்மார்க்கு அரசியலமைப்பு மக்களுக்கு வழிபாட்டு உரிமையை அளித்துள்ளது இருப்பினும் பெருவாரியான மக்கள் சீர்திருத்தக் கிறித்தவ சமயம் (Protestant) அல்லது உலூத்தரன் பிரிவையே ஏற்றுக் கொண்டதால், அச்சமயமே நாட்டுச் சமயமாக விளங்குகிறது உரோமன் கத்தோலிக்கத் திருச்சபைகளும் முழுச் சுதந்திரமாக விளங்குகின்றன பழைய மூடப்பழக்க வழக்கங்களை ஒழிக்கவேண்டும் என்ற எண்ணம் இருந்தபோதிலும், இயேசு பிறந்த நாள், இயேசு உயிர்த்தெழுந்த நாள், இயேசு மீட்டுயிர்ப்பு வாரங்கடந்த நாள் ஆகிய திருவிழாக்கள் பழைய முறையிலேயே கொண்டாடப்படுகின்றன. திருச்சபைகளுக்குச் செலுத்தவேண்டிய வரி மிகுதியாக உள்ளதால், மக்கள், அரசு சமயத்தை விட்டு எதிர்ச்சமயத்திலே சேருகிறார்கள். எதிர்ச் சமயத்திலே கத்தோலிக்காகளும், யூதர்களும், திருமறைப் பரப்பு ஊழியப் பிரிவினரும், கிறித்தவச் சமய கிளைக்குழுவினருமாக ஏறக்குறைய 8000 பேர் உள்ளனர்.

**ஆட்சிமுறையும் அரசியலும்**: தென்மார்க்கு அரசு அரசியற் சட்டத்திற்குட்பட்ட மரபுரிமை பெற்ற ஒரு முடியாட்சி ஆகும் அரசர் கி.பி. 1848-ஆம் ஆண்டு வரை முழு அதிகாரம் உடையவராக இருந்தார். அவர் கி பி. 1849-ஆம் ஆண்டிலிருந்து அரசியலமைப்பின் வரம்புக்கு உட்பட்டவரானார் அரசருக்கு உதவியாக ஆட்சிமன்றம், அமைச்சரவை, இரிக்சுடாக்கு என்ற நாடாளுமன்றம் ஆகியவை செயற்படுகின்றன. நாடாளுமன்றத்தில் போல்கேடிங்கு என்ற கீழ்ச்சபையும், இலான்சுடிங்கு என்ற மேல் சபையும் இருந்தன மேல்சபை 1953-ஆம் ஆண்டிலிருந்து நீக்கப்பட்டது. நடைமுறையிலுள்ள கீழ்ச் சபையில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட 179 உறுப்பினர்கள் உள்ளனர். பதவிக் காலம் 4 ஆண்டுகளாகும். தேர்தலில் போட்டியிடத் தென்மார்க்கின் நிலையான குடியாகவும், 23 வயது நிரம்பப் பெற்றவராகவும் இருக்க வேண்டும். நாடாளுமன்றம் சாதாரணமாக அக்டோபர் திங்கள் முதல் செவ்வாயிலிருந்து கூடும். வாக்களிக்க 21 வயது முடிந்திருக்க வேண்டும். நாடாளுமன்றத்தின் இசைவின்றி அரசரால் போர் தொடுக்கவோ சமாதானம் செய்துகொள்ளவோ இயலாது. ஆனால், நாடாளுமன்றத்தைக் கூட்டவும் கலைக்கவும் அரசருக்கு அதிகாரம் உண்டு. தென்மார்க்கு அமைச்சரவையில் 18 பேர் உள்ளனர். அவர்களின் தலைவர் 'முதலமைச்சர்' ஆவார். அமைச்சர்கள் தம் செயல் முறைகளுக்குத் தனித்தனியாகவும், கூட்டாகவும் பொறுப்புடையவர் ஆவார்கள். தனிக்கட்சி ஆட்சி இங்கே இல்லை; கூட்டாட்சியே நடைபெறுகிறது

தென்மார்க்கில் 90 கீழ் நீதிமன்றங்களும், 2 உயர் நீதி மன்றங்களும், ஒரு உச்ச நீதி மன்றமும் உண்டு. தவறு செய்கிற நாடாளுமன்ற உறுப்பினர்களை விசாரணை செய்து தீர்ப்பளிக்கத் 'தீர்ப்புரிமைப் பீடமும் செயற்படுகிறது தண்டனைக்குரிய வழக்குகளை விசாரிக்க 'முறைகாணஆயம்' ஒன்றும் உண்டு.

தென்மார்க்கின் ஆட்சிமுறை 1970-ஆம் ஆண்டில் சீரமைக்கப்பட்டதால், 25-இலிருந்து 14 மாவட்டப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது. ஒவ்வொன்றுக்கும் ஒரு மாவட்டச் சபையும், மாவட்டப் பெருந்தலைவர் அல்லது மாவட்டத் தந்தை என்ற பதவியும் அளிக்கப்பட்டுள்ளன.

'சமுதாய மக்களாட்சிக் கட்சியே' தென்மார்க்கில் பெரும்பான்மை பெற்றுள்ளது. இது உழைப்பாளர்களின் நலனுக்காகப் பாடுபடுகிறது அடுத்து நிற்பது 'மிதவாத வேளாண்மைக் கட்சி'; இது குடியானவர் நலனிலே நாட்டம் உடையது. எஞ்சியவை 'சமுதாய முற்போக்குக் கட்சியும் பொதுநல மக்கள் கட்சியும்', 'சுலெசுவிக் கட்சியும்', 'முன்னேற்றக் கட்சியும்' ஆகும்.

**பாதுகாப்புத் துறை**: வட அட்லாண்டிக்கு உடன்படிக்கை அமைப்பில் அங்கம் பெற்ற தற்பாதுகாப்பைத் தென்மார்க்கு தேடிக் கொண்டது இராணுவத்திலே 9 மாதங்கள் வரை பயிற்சி பெறுகிற எவரும் குறைந்தது 14 மாதங்கள் பணியாற்ற வேண்டும் என்ற கட்டாயம் இங்கே உள்ளது 1979-ஆம் ஆண்டு புள்ளிவிவரப்படி, விமானப் படையில் 7100 பேரும், கப்பற்படையில் 6100 பேரும், தரைப்படையில் 21400 பேரும் இருந்தனர். விமானப் படையில் 120 வான கலங்களும், 18 இயந்திரக் கருவிக்கலங்களும், கடற்படைப் பிரிவில் 7 பீரங்கி நோதளப் போர்க் கப்பல்களும், 7 கடற்கண்ணிக் கப்பல்களும், 2 வழித்துணைக் கப்பல்களும் 6 நீர்மூழ்கிக் கப்பல்களும், 8 கடற்கண்ணி வாரிக்கப்பல்களும், 16 மின்திற வெடிக்கண்ணிப் படகுகளும் உள்ளன. இவையன்றித் தென்மார்க்கில் ஆடவரும் பெண்டிரும் ஏறக்குறைய 56000 பேர்களைக் கொண்ட 'எச்சரிக்கை நிலைப்படை' ஒன்றும் செயற்படுகிறது.

**பிற சிறப்புகள்**: தென்மார்க்கு மக்கள் தம் திறமைகளை அச்சிட்டு வெளியிடுவதில் விருப்பம் உடையவர்கள். தொலைக்காட்சி, நாடக அரங்குகள் ஆகியவைகளில் இன்பம் காணுபவர்கள், கால்பந்து, நீச்சல்

வரிப்பந்து (Tennis), சைக்கிள் ஓட்டுதல், இனப உலா, இரக்பி கால்பந்தாட்டம் ஆகியவைகளில் மிகுந்த விருப்பம் கொண்டவர்கள்.

**நாட்டின் வரலாறு**: கி.மு. 1000-ஆம் ஆண்டிலேயே தேனியர்கள் (Danes) தம் தொன்மையான இசு காண்டிநேவியாவிலிருந்து சட்லாந்திலும் அதனை யடுத்த தீவுகளிலும் குடியேறினார்கள். கி மு.1500-400-ஆம் ஆண்டுக் காலத்தில் திகழ்ந்த 'வெணகலக் காலத்'தைக் காட்டிலும் இவர்களின நாகரிகமும் பணபாடும் மிக உன்னதமாக விளங்கின.

இவர்கள் கி.பி: 8-ஆம் நூற்றாண்டில் முடியாட்சி முறையைப் பெற்று, இங்கிலாந்து, பிரான்சு, இசு பெயின் ஆகிய நாடுகளின்மீது படை வலிமையைக் காட்டினர். இநதப் படையெடுப்புகளைப் பயன் படுத்தித் தென்மார்க்கு,இசுகாணடிநேவியா போனற இடங்களிலிருந்து பல சுயநல வீரர்கள் பிற நாடுகளுக் குச் சென்று கொள்ளையடித்து வந்தனர் இவர்களுக்கு 'வைக்கிங்குகள்' என்று பெயர். புதிய கார்ம் என்ப வர் கி.பி. 10-ஆம் நூறறாணடில் நிறுவிய நிலையான அரசு ஒரு நூற்றாணடுகூட நிலைக்கவில்லை. முதலாம் வால்டமார் (Weldemar, கி.பி. 1157-82) காலத்தில தென்மார்க்கு மீண்டும் ஒரு வல்லரசாயிறறு. இவரு டைய காலத்தில் எல்லா நலனும் வளமும் பெற்று இந்நாடு விளங்கியதெனறாலும்.உள்நாட்டுப் போரும, போப்பாண்டவருடன் சச்சரவுகளும் பிரபுககளுடன ஆதிக்கப்போரும் மூண்டன.ஆனால் நான்காம் வாலட மார்(கி.பி.1340-1375) காலத்தில் மீண்டும் நாடு வல் லரசாகியது.

இவருடைய மகள் மார்கரெட்டின் ஆட்சியில் தென்மார்க்கு. நார்வே, சுவீடன் ஆகிய மூன்றும் ஒன்று சேர்ந்து ஒரே ஆட்சியின்கீழ் வநதன. இந்த ஐக்கிய மும் பிறகு சீர்குலைந்தது. இரணடாம கிளித்தியன காலத்தில் மீண்டும் தேசிய இயக்கம் வலுத்தது. இவரைப் பிரபுக்கள் கி.பி.1523-இல் நாட்டைவிட்டுத் துரத்தி, சிலெசுவிக்கு ஒல்சுடீசின பிரபுவான பிர டெரிக்கை (கி.பி.1523-33) அரசனாக்கினர். இவர் மகன் மூன்றாம் கிளித்தியன் (கி.பி.1535-59) உலுத் தரன் சபையைத் தென்மார்க்கு நாட்டுத் திருச்சபை யாக உயர்ததினார். நான்காம் கிளித்தியன (கி.பி. 1559-1648) சுவீடனுடனும் செருமெனியுடனும் போர் செய்து நாட்டை வலுவிழக்கச் செய்தார்.

இந்நாட்டிலும் கி.பி.18-ஆம் நூற்றாண்டில் நில மானிய முறை ஒழிக்கப்பட்டதால சொநத நிலம பெற்றுக் குடியானவர் செம்மை அடைந்தனர். இந நாடு கி.பி.19-ஆம் நூற்றாண்டில் நெப்போலியப் போர்களில் இங்கிலாந்துக்குஆதரவாக இலலாததால் பேரிழப்பு உண்டாயிற்று. மக்கள் முடியாட்சியை வெறுத்தனர்; மக்களாட்சியை விரும்பினர். ஏழாம் பிரெடரிக்கு (கி.பி. 1848-63) தம் வரம்பிலா முடியாட் சியை விட்டுக்கொடுத்து, வரம்புக்குட்பட்ட பொறுப் பாட்சியைத் தந்தார்.

முதலாம் உலகப் பெருமபோரின்போது இந்நாடு நடுநிலைக் கொள்கையைப் பினபற்றியதால் பல துன் பங்களுக்குள்ளாயிற்று. இந்நாடு 1920-இல சர்வதேச சங்கத்தில் உறுப்பு நாடாகியது. இரணடாம உலகப் பெரும்போரின்போது நடுநிலையை வகித்த போதி லும், 1940-ஏப்பிரல் 9-ஆம் நாளனறு செருமனி இந் நாட்டைக் கைப்பற்றியது. போரின் முடிவில் (1945) செருமனி தோல்விகணட பின்னரே தெனமார்க்கு விடுதலை பெற்றது. இந்நாடு 1945-ஆம ஆண்டி லிருந்து ஐககிய நாடுகள சபையில உறுப்பு வகிக் கின்றது. அரசியலமைப்பினை ஏற்றுக்கொணட வரம் புக்குட்பட்ட முடியாட்சியை உடைய இந்நாட்டில 1979-ஆம் ஆணடில 'சமுதாய மக்களாட்சிக் கட்சியே' பெருமபானமை பெற்று நாடாளுமன்றத்தைக் கைப் பற்றியது.

பொன்.சு.

***தென்மேற்கு ஆப்பிரிக்கா*** தெற்கு ஆப்பிரிக் காவின் ஒரு பகுதியான இது வொசே உடனபடிக் கையின்படி ஐககிய ஆப்பிரிக்காவின கட்டுபபாட்டுக் குள கொணடுவரப்பட்டது. இன்றும் இப்பகுதி தென் ஆப்பிரிக்கக் குடியரசின்கீழ இருந்துவருகிறது. இப் பகுதி தெறகில் ஆரஞ்சு ஆற்றிலிருந்து வடக்கில்



தென்மேறகு ஆப்பிரிககா அமைவிடம

குனேனே, ஒகேவாங்கோ ஆறுகள வரையிலும் வடக்கில பாத்சுவானாப் பகுதியிலிருந்து தெனகிழக்கு அஙகோலா வரையிலும் பரவியுளளது.

தெனமேறகு ஆப்பிரிக்காவின் பரப்பளவு 824,269 ச. கி மீ. இப்பகுதியில நான்கு பெரும்பகுதிகள அடஙகியுள்ளன. அவை யாவன பீடபூமிப் பகுதிகள, மலைகள, பள்ளத்தாக்குகள, கனிவளஙகள நிறைநத பகுதிகள இஙகுக் கலகாரிப்பாலைவனம் உளளது. இப் பகுதி முழுவதும் மணலும் சிறுசிறு கற்களும் நிறைந்துள்ளன பீடபூமிப பகுதியில் மிக உயர்நத இடம கோமாசு மேலநிலமாகும. அது விநதூக்கு நகரம் வரையில பரவியுளளது அதுமட்டுமலலாமல கிளீன, காராசு போனற மலைகளும், புரூககாரோசு மலைப் பகுதியும் இஙகுளளன.

புவியியல அடிப்படையில இதனை 5 பகுதிகளாகப் பிரிக்கலாம். அவை ஓவம்போலாநதிலுள்ள எடோசாச சமவெளி, விந்தூககு பகுதிக்குத் தெற்கிலுள்ள தாமராலாநது, அவாய் மலைகளுக்கும் ஆரஞ்சு ஆற்றுககும் இடையிலுள்ள நாமாலாந்து, கலகாரிப் பாலைவனம, நமீ பகுதி ஆகியவைகளாகும். ஆரஞசு ஆறு வனப்பு மிக்க ஆறாகும். குறிப்பாகவும சிறப்பாகவும விளஙகும் அஙகுளள மீன ஆறு கண்கொள்ளாக் காட்சியினைக கொண்டது. நமீபுப் பகுதி மிதமான தட்பவெப்ப நிலையைக கொணடுளளது. அதற்குக் காரணம் தென அட்லாணடிக்கிலிருநது வீசும காற்றேயாம. வாலவிசு குடா ஆககூட்டு மாதத்தில குறைந்த வெப்பநிலையினைப பெற்றுள்ளது. விநதூக்கு நகரம் கோடை, குளிர் காலங்களில நல்ல தட்பவெப்ப நிலையினைப் பெற்றுளளது. பீடபூமிப பகுதியிலும் நல்ல மழை பெய்வதுண்டு. புலவெளிகள, பிற பயிரினங்கள முக்கியமாக அகேசியா போனறவை அங்கு நிறையக் காணப்படுகினறன. குரஙகுகள், சிறுத்தை, புலி ஆகிய விலங்குகள அப்பகுதியில வாழந்து வருகினறன. கடலோரப் பகுதிகளில பல வேறு மீனவகைகளும், நத்தைகளும் காணப்படுகினறன. கௌகேரிவெல்ட்டு, கப்ரிவி, ஒகேபாஙகோ பகுதிகளில் யானைகள, ஒட்டைச்சிவிஙகிகள, நீர் யானைகள் போன்ற விலங்குகளும காணப்படுகினறன. வால் விசுக் குடா, கிராங்கு முனை, கடல் முனை ஆகிய பகுதிகளில் உரோமமுள்ள சில விலஙகுகள வாழகினறன.

தெனமேறகு ஆப்பிரிக்காவிலுள்ள வெள்ளையர் அலலாதோர் இரு வகையினராவர். அவர்கள முறையே தெனமேற்கு பாணட்டு, கொய்சான பிரிவினர்கள், வெள்ளையர்கள் உட்பட இதன மக்கள் தொகை கி.பி. 1960-ஆம் ஆணடு மக்களதொகைக் கணக்கெடுப்பின்படி 526,004 ஆகும். இதில வெள்ளை



விணட்காக்கிலுள்ள அரசுககட்டடம்

யர் 73,464 பேர், பிறா 452,540 பேர். விநதூககு நகர மக்களதொகை 36,051 ஆகும். இதில் வெள்ளையா 19,000 பேர் உளளனர்



கறுப்பர் இனத்தவர், தென்மேற்கு ஆப்பிரிக்கா

தென்மேற்கு ஆப்பிரிக்கப் பகுதியில் முதலில் காலடி எடுத்து வைத்த ஐரோப்பியர் போர்ச்சுகீசியர் ஆவர். தயகோ காம் என்பவர் கி.பி. 1485–86-ஆம் ஆண்டில் இங்கு வந்து கிராங்கு முனையில் தூண் ஒன்றை நாட்டினார். அதன்பின் தச்சுக்காரர், ஆங்கிலேயர் போன்றோர் அலைஅலையாக இங்கு வரத் தொடங்கினர். தாமசு அலெக்சாண்டர் கி.பி. 1795-ஆம் ஆண்டு இங்கு வந்து பிரித்தானியக் கொடியினை ஏற்றினார். பின்னர்க் கிறித்தவ சங்கங்கள இங்கு வரத் தொடங்கின. என்ரிச்சு போசல்சங்கு எனபவர் கி.பி. 1883-இல் இதைச்செருமன பகுதியாக மாற்றினார். பிசுமார்க்கு தம் செல்வாக்கை நிலை நாட்டி கி.பி. 1885-இல் எச்.இ. கோரிங்கு என்ற பிரதிநிதியினை அனுப்பி வைத்தார். முதல் உலகப்போரின போது இப்பகுதி பிரித்தானியரின் உதவியினை நாடியது. வெர்சே உடன்படிக்கையினபடி செர்மனி இப்பகுதியினை நேசநாடுகளிடம் ஒப்படைத்தது. பிரிட்டனின் ஆதிக்கத்தின்கீழ் இது கொணடுவரப்பட்டது. பிறகு இரண்டாம் உலகப்போரின்போது இது பாதிக்கப்பட்டு விடுவிக்கபபட்டது. ஐக்கிய நாட்டு அவையில் இதைப் பிரிக்கவேண்டும் எனற வேணடுகோளும் எழுந்தது. ஓடனடால் குழு அறிக்கையின்படி இதன் இனக்கொளகை, பிற கொள்கைகளுக்கு வழி கண்டது. இப்பகுதி பொருளாதார வளத்திலும, பிற துறைகளிலும் சீரிய முறையில் வளர்ந்துகொணடிருககிறது.

தென்மேற்கு ஆப்பிரிக்காவின் நிருவாகப் பொறுப்பு கி.பி. 1961-ஆம் ஆண்டு தெனனாப்பிரிக்கக குடியரசின்கீழ்க் கொணடுவரப்பட்டது. நால்வர் கொண்ட செயற்குழு இதன் நிருவாகப் பொறுப்பினை ஏற்று நல்லமுறையில் செய்துவநதது. அங்கு 18 பேர் அடங்கிய ஒரு சட்டமன்றமும் நடைபெற்று வந்தது. மேலும அங்கு ஆறு தேர்வாளர் தொகுதிகள அமைக்கப்பட்டன. ஒவவொரு தொகுதியிலிருந்தும் ஒரு பிரதிநிதி தென்னாப்பிரிக்கச் சட்டமன்றத்துக்குத் தேர்ந்தெடுத்து அனுப்பபபட்டார். ஆட்சிப்பேரவைக்கு நாலவர் அனுப்பப்பட்டனர். அவருள் இருவர் நியமன உறுப்பினர்களாவர். இருவரில் ஒருவர் வெள்ளையர் சார்பாக அனுப்பப்பட்டார்.

தல நிருவாகம் தேர்நதெடுக்கப்பட்ட நகரசபை உறுப்பினர்களால் நிருவகிக்கபபட்டு வருகினறது. கிராம நிருவாகம் கிராமப்புற வாரியங்களால் நிருவாகம் செய்யப்பட்டு வருகின்றது. நிருவாகத்தின அடித்தளமாக விளங்குவது விந்தூக்காகும். அப்பகுதிகளில் வரிவிதிப்பில் முக்கிய கூறான வருமான வரி 1942-ஆம் ஆண்டில்தான் விதிக்கப்பட்டது. தென்மேற்கு ஆப்பிரிக்கப்பகுதியின் முக்கிய வருவாய் வருமான வரி, சுங்க வரி, சுரங்க வரி, கலால் வரி ஆகியவற்றின் மூலம் கிடைக்கிறது இப்பகுதிவாழ் தொழிலாளர்கள் வாழவு வளமடையப் பலதிட்டங்கள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. ஆப்பிரிக்காவின் தொழிலாளர்களைப் பிறகுடியேற்ற நாட்டினர் சுரணடுவதாக ஐக்கிய நாட்டவையில் முறையிடப்பட்டு, நடவடிக்கையும எடுக்கப்பட்டது. தென்னாப்பிரிக்காவில் சுகாதாரம், மருத்துவ வசதிகள எவவாறுள்ளனவோ அவ்வாறே தென்மேற்கு ஆப்பிரிக்காவிலும் உள்ளன. வெள்ளையர்களுக்கான மருத்துவமனைகள அரசு உதவியுடன் இயஙகிவருகின்றன. அவறறை வாரியங்கள் கவனித்து வருகின்றன மருத்துவத் துறையின இயக்குநருக்கு அவை பொறுப்புள்ளனவாக நடந்துவருகினறன. ஆப்பிரிக்கர்களுக்கான மருத்துவ மனைகள நேரடி நிருவாகத்தினகீழ் இயங்கிவருகின்றன. தெனமேற்கு ஆப்பிரிககாவில நீதி நிருவாகம் செவவனே நடைபெற்று வருகிறது. உயர்நீதிமனறம் ஒன்றும், சுறறு நீதிமனறஙகள பலவும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. காவல்துறையும் பாதுகாப்புத் துறையும் தென்னாபபிரிக்காவுடன இணைந்து செயற்பட்டு வருகினறன. மேலும் அவை பாதுகாப்பு நடவடிக்கைகளை நன்கு கவனித்து வருகினறன.



நமிபுப் பாலைவனம்

தெனமேற்கு ஆப்பிரிக்காவிலுள்ள வெளளைக்காரச் சிறுவாகள, சிறுமிகள (ஏழு முதல பதினாறு வயது வரையில் உளளவர்) எல்லோருமு கட்டாயமாகத் தொடக்கக்கல்வி, இடைநிலைக் கல்வி ஆகியவறறைப் பெறுதல் வேண்டும். சில பளளிகளில செருமன பாடமொழியாக உளளது.

மழை பெறும் பகுதியில மட்டும் வேளாண்மை சிறிதளவு நடை பெறுகின்றது. மக்காசசோளம் அங்கு விளையும் முக்கிய பயிராகும. ஆற்றுப பகுதியில் கோதுமையும பயிராகிறது இப்பகுதி பெருமபாலும மேய்சசல நிலங்களைக் கொணடது. இஙகுளள கால நடைகளின் எண்ணிக்கை 2,400,000 ஆகும. இவறறுள வெள்ளாடுகள், செமமறி ஆடுகளதான மிகுதி வெளிநாடுகளுக்கு ஆடுகள ஏற்றுமதி செய்யப்படு கின்றன. மீன் பிடிக்கும தொழிலும் மற்றொரு முக் கிய தொழிலாகும. ஆணடுக்கு 600,000 முதல 700,000 கணடி வரையிலான மீனகள பிடிக்கப்பட்டு ஏறறுமதி செய்யப்படுகின்றன. வைரச் சுரஙகஙகள இப்பகுதியில் உள்ளன. இஙகிருந்து வைரங்கள, கனிப் பொருள்கள மிகுதியாக ஏறறுமதி செய்யப்பட்டு வருகினறன அமெரிக்கா, ஐரோபபிய நாடுகளுக்கு மட்டும் ஆணடுதோறும் 200,000 கணடி முதல் 300,000 கணடி வரையிலான தாதுப் பொருளகள ஏற்றுமதி செயயபபடுகினறன. அவற்றுடன தகரக் குவளைகளில அடைககப்பட்ட மீன்களும் ஏற்றுமதி செய்யப்படுகினறன.

தென்மேற்கு ஆப்பிரிக்காவிலிருந்து தென ஆப் பிரிக்கக் குடியரசுககு வெணணெய், பாலடைக்கட்டி முதலிய பால் பொருளகள் பெரும அளவில் அனுப்பப் படுகின்றன. கட்டுமானப் பொருளகள, இயந்திரப் பொருள்கள், எண்ணெய் வகைகள், உறபத்திபபொருள கள் ஆகியவை பல நாடுகளிலிருந்து இறக்குமதி செய யப்படுகின்றன. அவற்றுள் மூஙகில, சிமெணடு, நிலக கரி முதலியவை முககியமானவை. நா.ஜெ.

**தென்னசி.** ஐககிய அமெரிக்காவின மையத் தெற்குப் பகுதியில உளள ஒரு மாநிலம். இதன தலைநகா நாசுவில (Nashville); பரப்பளவு 109,412 ச.கி.மீ. இமமாநிலத்தின மிகப்பெரிய நகரம் மெம்பிசு (Memphis). தென்னசியின வடக்கில் கெணடகி, வர் சீனியா மாநிலங்களும், கிழக்கில வடகரோலினாவும், தெற்கில சார்சியா (Georgia), அலபாமா, மிசிசிப்பி மாநிலங்களும், மேறகில் மிசிசிப்பி ஆறும எல்லை களாக உளளன. இந்த ஆறு இமமாநிலத்தை மிசா வுரியினின்றும, ஆகண்சாசு மாநிலத்தினின்றும் பிரிக் கின்றது.




தென்னசி அமைவிடம்



இசுமோகி மலைகள்

இம்மாநிலம் இப்பொழுது ஒரு தொழில் வளம் மிக்க பகுதியாக விளங்குகிறது. 54 விழுக்காட்டினர் நகரங்களில் வாழ்கின்றனர். எனினும், இதன வேளாண்மைச் சிறப்பு குறிப்பிடத்தக்கது. கிழக்குத் தென்னசியில் பெரும் இசுமோகி (Smoky) மலைகளும் கம்பர்லாந்து பீடபூமியும் உள்ளன. குறுகிய பல ஆற்றுப் பள்ளத்தாக்குகளும் காடுகளும் இங்கு உண்டு. சட்டநூகா (Chattanooga), நாக்சுவில் (Knoxville) என்ற இரு பெரும் தொழில் நகரங்கள் இங்கு உள்ளன. மையத் தென்னசியைத் தென்னசி ஆறு வளப்படுத்துகிறது. கால்நடை வளர்ப்பும், பால்பண்ணைத் தொழிலும் இப்பகுதியில் மிகுதியாக நடைபெறுகின்றன. மேற்குத் தெனனசியில் பருத்தி விளைச்சல் மிகுதி. பொதுவாகத் தென்னசி மாநிலத்தில் தட்பவெப்ப நிலை மிதமாக உள்ளது. இங்குப் பெய்யும் மழையின் சராசரி அளவு 101.6 முதல் 127 செ.மீ. வரையாகும். தென்னசிப் பள்ளத்தாக்குத் திட்டத்தின் கீழ்(காண்க: தென்னசிப் பள்ளத்தாக்குத் திட்டம்)பல ஏரிகள் இங்கு வெட்டப்பட்டுள்ளன. பொதுமக்களுக்குச் சொந்தமான பெரிய ஏரிகள் 26 இங்கு உள்ளன. ஏரிகளுக்கு இடைப்பட்ட நிலப்பகுதி, மேற்கூறிய திட்டத்தால் பெரிதும் வளர்ச்சியடைந்துள்ளது. இம் மாநிலத்தில் 23 அரசுப் பூங்காக்கள் 53,420 எக்டேர் (hectares) நிலத்தில் பரவியுள்ளன. வரலாற்றுப் புகழ் பெற்ற இடங்கள் பல இங்குண்டு.



சில்லோ தேசிய பூங்கா

தென்னசி 95 வட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மாநில உற்பத்தியில் தலையாய இடத்தைப் புகையிலை, சோயாஅவரை, வைக்கோல், பருத்தி ஆகியன பெறுகின்றன. இங்குக் கிடைக்கும் தாதுப் பொருளகளில், விலையுயர்ந்த கற்கள்,நிலக்கரி, துத்தநாகம் முதலியன குறிப்பிடத்தக்கவை. நிமிளை அல்லது கநதகக் கல்லும் (Pyrites), எரியகிப் பாறையும் (Phosphaterock), இங்கு உள்ளன. இமமாநிலத்தில் வேதிமப் பொருளகள், துணி வகைகள், உணவு வகைகள், மின்சார இயந்திரங்கள, கணணாடிக் களிமண், கல், உலோகப் பொருளகள, அலுமினியப் பொருள்கள ஆகியவை உற்பத்தி செய்யப்படுகின்றன. பிரிசுடல் (Bristol)நகரில் ஏவுகணைத் தொழிற்சாலை உள்ளது.



சுற்றுலா இடம்

**வரலாறு** ஐரோப்பியர், தென்னசிப் பகுதிக்கு கி.பி. 1540-இல் முதன்முதலாக வந்தபொழுது இங்கு செவ்விநதியர்கள பலர் வாழ்ந்து வநதனர். அவர்கள் செரோககு (Cherokee), சிக்கசா (Chickasaw), சானீ (Shawnee), கிரீக்கு Creek) என்னும் பிரிவினராவா. முதலில் பிரெஞ்சுக்காரரும், பிறகு ஆங்கிலேயருமு இங்கு வந்து வாணிகத்தலஙகளை அமைத்தனர். அமெரிக்கச் சுதநதிரப் போருக்குப் பிறகு கி.பி. 1790 –இல் அமெரிக்க நடுவண அரசு, தெனனசி நிலப்பகுதியை (Territory) அமைத்தது. இது 1796-இல் ஒரு மாநிலமாக வளர்சசியுற்றது. பிறகு அமெரிக்க மாநிலஙகளில் ஒன்றாக அனுமதிக்கப்பட்டது. மேற்குத் தென்னசியில் நீக்கிரோககள மிகுதியாக இருநதபோதிலும், இந்த மாநிலம் தொடககததில, இலிஙகனின மைய அரசை ஆதரிததது. ஆனால சில மாதஙகளில மக்கள மனம்மாறி, மாநிலம் பிரிந்து செல்லவேணடு மென்ற கொள்கையை வற்புறுத்தத் தொடங்கினர். அதனால் இங்குக் கடுமையான போர் நிகழந்தது. உள்நாட்டுப் போருக்குப் பிறகு கி.பி. 1866–இல் மீண்டும் இம மாநிலம் அமெரிக்க ஒனறியத்திற்குள் அனுமதிக்கப் பெற்றது. வெளளையரின் ஆதிக்கத்தை நிலைநிறுத்தத் தென்னசியில் தீவிரமான முயறசிகள நடந்தன. காலப் போக்கில் அவை கைவிடப்பட்டன.

**அரசாங்கம்**: தென்னசியில் கி.பி. 1870–இல் ஏற்பட்ட மாநில அரசு முறை தொடர்ந்து வருகிறது. நிருவாக அதிகாரியான ஆளுநர், நான்கு ஆண்டுகட்கு ஒருமுறை மககளால் தேர்ந்தெடுக்கப்படுகிறார். ஒருவர் மறுமுறையும் தேர்தலுக்கு நிற்க இயலாது.

33 உறுப்பினர் அடங்கிய ஓர் ஆளவை மனறமும் (Senate) 99 உறுப்பினர்களைக் கொணட பேராளா அவையும் சட்டமியறறி வருகின்றன. இச்சட்டசபை 2 ஆண்டுக்கு ஒரு முறை தேர்ந்தெடுக்கப்படுகிறது.



தென்னசிப் பல்கலைக் கழகம்

இம்மாநிலத்தின் கல்வி நிலையங்களில நாக்சுவில நகரில உள்ள தென்னசிப்பலகலைக்கழகமும், சானசன (Johnson) நகரில உளள கிழக்குத் தெனனசி மாநிலப் பல்கலைக் கழகமும, நாசுவிலில(Nashville) உள்ளஇரு பல்கலைக் கழகஙகளும, மெம்பிசு நகரில உளள மாநிலப் பல்கலைக் கழகமும சிறபபானவை. மாநிலத்தின் மக்களதொகை 4,591,120 (1980). தெ.பா.

**தென்னசிப் பள்ளத்தாக்கு அதிகாரக் குழு**: அமெரிக்காவில் ஆற்று வளம் மிகுநத தெனனசிப பளளத்தாக்கு வேளாணமையில மிகவும் பினதஙகிய பகுதியாய் இருநதது. அஙகு அணைகளையும, மின உறபத்தி நிலையங்களையும அரசு கட்டவேணடும் என்ற திட்டம் முதல் உலகப்போர் நடைபெறுவதற்கு முன்னரே விவாதிககப்பட்டது. ஆனால் மின உற்பத்தி நிலையஙகளை ஏற்கெனவே அபபகுதியில நிறுவியிருநத தனியார் குழுமங்கள இத் திட்டததை எதிர்த்தன. மேலும் தனியார் குழுமஙகள் பொது மக்களிடம் மின்சாரததிற்குக கூடுதற் கட்டணம் பெறறன.காலப்போக்கில் தனியார் குழுமங்கள் நிருவாகச் சீர்குலைவு காரணமாகத் தொடாந்து செயற்பட முடியாத நிலையிலிருநதன. அமெரிக்கச சட்டசபை தென்னசிப் பகுதி முன்னேறறத்திற்காக இரணடு முறை சட்டமுன் வரைவுகளை நிறைவேறறியபோதிலும் குடியரசுத் தலைவர்களான காலவின கூலிட்சும் (Calvin Collidge, 1925-28), ஊவரும் (Hoover 1929 -33) இச் சட்டமுன வரைவுகளை மறுததனர்.

தெனனசி ஆற்றுநீர் பயன்படாமல் வீணாக ஒடுவதைக் கட்டுப்படுததி, மணவளப் பாதுகாப்புப் பணியினை மேற்கொணடு, குறைந்த செலவில் மககளுக்கு மினசாரம் வழஙக அரசு திட்டமிடவேண்டும என்ற வேணடுகோள வலிமையாக எழுநதது. தேர்தல் வெறறிக்குப் பின்னர் 1933-இல் பதவியேறற குடியாடசித் தலைவர் பிராங்க்ளின உருசுவெல்ட்டு (Franklin D. Roosevelt, 1933-45) தெனனசிப பளளத்தாக்கை வலலுநர்களுடன செனறு பார்வையிட்டாா. அதன விளைவாக அமெரிக்கப் பாராளுமனறம் 1933-ஆம் ஆணடு மே திஙகள தெனனசிப் பள்ளத்தாககு அதிகாரக குழு (Tennessee Valley Authority) ஒனறினை நியமித்தது அமெரிக்க வரலாற்றில ஏறபட்ட முதலாம் வட்டாரத திட்டம் இதுவேயாகும. இக் குழுவில் மூனறு இயககுநர்கள,அமெரிகக மேல்சபையான ஆளவைமன்ற இசைவுடன அமெரிக்கக் குடியரசுத தலைவரால் நியமிக்கப்பட்டனா. அதன தலைமையிடம் தென்னசியிலுளள நாக்சுவில் (Knoxecille) ஆகும.

தெனனசி ஆற்றின் குறுககே அணைகள கட்டவும், மினசாரம் உற்பத்தி செய்யவும, விற்கவும் இககுழுவுக்கு உரிமை தரபபட்டது. நில அரிப்பைத் தடுத்து, மணவளப் பாதுகாபபு நடவடிககைகளை மேறகொள்ளவும், வேளாணமைககு வேணடிய செயறகை உரஙகளைத் தயாரிக்கவும், வெள்ளக கட்டுபபாட்டுத் திட்டஙகளை மேறகொளளவும, புதிய வேளாணமை முறைகளைப் புகுத்தவும், மலேரியா நோய ஒழிபபுத் திட்டத்தை நிறைவேறறவும, தென்னசிப் பள்ளததாககில வாழும மககளின பொருளாதார, சமூகநலனைப் பாதுகாக்கவும் தென்னசிப பள்ளத்தாக்கு அதிகாரக் குழுவுககு எல்லாவகையான அதிகாரஙகளும் அளிக்கப்பட்டன. அமெரிகக ஐக்கிய நாட்டில் வறுமையின பிடியில சிககித் துயருற்ற அப் பகுதியைச சார்நத ஏழு மாநிலங்களான தெனனசி, கெண்டகி (Kentucky), மிசிசிப்பி (Mississippi), அலபாமா (Alabama), வடகரோலினா (North Carolina) சார்சியா (Georgia), வாசீனியா (Virginia) ஆகிய வறறைச் சார்ந்த இரணடு மிலியன மககள் இத் திட்டததால் பயனடைநதனர்.

தென்னசிப் பள்ளத்தாக்குச் சீரமைப்புத் திட்டத்தினால் புதிதாக இருபது அணைகள 1953க்குள் கட்டப்பட்டு, வெள்ளப் பெருக்குத் தடுதது நிறுத்தப்பட்டது. போக்குவரத்திற்கு ஏற்ற 650 மைல நீளக் காலவாய்கள் வெட்டபபட்டன. குறைநத விலையில் மக்களுக்கு உரஙகள் அளிக்கபபட்டன. பரந்த நிலப்பகுதியில் காடுகள் அமைக்கப்பட்டு மண அரிப்புத தடுககப்பட்டது. மிகப்பெரும் அளவில் மின உற்பத்தி செய்யும் நிலையஙகள் தோனறின.அலுமினியம, புளுட்டோனியம், வெடிமருந்துகள், குண்டுகள ஆகியன தயாரிப்ப

தற்கு வேண்டிய தொழிற்சாலைகள் பிற பகுதிகளில் தோன்றுவதற்கு மின் உற்பத்தி உதவியது; இப்பகுதிக் குடியானவர்கள் வாழ்க்கைத்தரம் உயரக் காரணமாக இருந்தது.

அண்மைக்காலத்தில் தென்னசிப் பள்ளத்தாக்குக் குழு,மின் உற்பத்தியில் நிரம்பக் கருத்தைச் செலுத்தி வருகிறது. ஏறக்குறைய 2.9 கோடி மக்களுக்குப் பயன் படக்கூடிய மின்சாரத்தை 160 உள்துறை விநியோக நிலையங்கள் (Local Distribution System) மூலம் அளிக்கிறது தென்னசிப் பள்ளத்தாக்குக் குழு 1983 -ஆம் ஆண்டு அறிக்கையின்படி 114,331 கிலோவாட்டு மின்சாரத்தை உற்பத்தி செய்துள்ளது.

இன்றைய உலகில் ஆற்றல் (Energy) பெருமளவில் தேவைப்படுவதால்ஆற்றல்முறைக்கு மாற்றாகப் புதிய முறைகள் கண்டுபிடிக்க ஆராய்ச்சிகளைத் தொடர்ந்து செய்துவருகிறது. உயர் கந்தகம், கரி இவற்றை எரித்து அதிலிருந்து கிடைக்கும் ஆற்றலைப்பற்றி ஆராயும் புதிய வளிமண்டலப் பாய்பொருள் எரி பொருள் அடுக்கு (Atmospheric Fluidized bed Combus tion A & BC) என்ற முறையில் ஆராய்ச்சிகளைச் செய்து வருகிறது. சூரிய சக்தியை வணிக முறையி லும், வீடுகளுக்கு நலம்பயக்கும் முறையிலும், பயன் படுத்த ஆராய்ச்சிகளை மேற்கொண்டுள்ளது. சுற்றுப் புறச் சூழல் மாசுபடாதவாறு பாதுகாக்கும் முயற்சி களிலும் ஈடுபட்டுள்ளது. எஸ்.அ.

**தென்னார்க்காடு மாவட்டம்**: காண்க: தமிழ்நாட்டு ஆட்சிப்பிரிவுகள்.

**தெனாலிராமன்** தமிழ்நாட்டில் தெனாலி என்னும் ஊரில் பிறந்தவன்; இயற்பெயர் இராமன் அல்லது இராமகிருட்டிணன் அல்லது இராமலிங்கம் என்பது.இவன்ஊர்பெயருடன்இயற்பெயரும் சேர்ந்து சுருக்கமாகத் தெனாலிராமன் எனப்பட்டான். இவன் தந்தைபெயர் இராமையா. இவனுடைய காலம் கி.பி. 15-ஆம் நூற்றாண்டு.விசயநகரப் பேரரசரா கிய கிருட்டிணதேவராயர் அரண்மனையில் இருந்த 'அட்ட திக்கசங்கள்' (எண்டிசையானைகள்)எனப் பட்ட அவையோருள் ஒருவனாக இவன் திகழ்ந்தவன். இவன் மிகப்பெரும் கவிஞனாகவும், சொல் திறமை மிக்கவனாகவும், அந்தந்த நேரத்திற்குகந்த கூர்த்த அறிவுடையவனாகவும் நகைச்சுவைப்படப் பேசுபவ னாகவும் விளங்கினான்; 'விகடகவி' என யாவராலும் போற்றப்பட்டான். இவன் இயற்றிய நூல்கள் கடி காசல மான்மியம், இலிங்கபுராணம், பாண்டுரங்க மகாத்மியம் அல்லது பாண்டுரங்க விசயம் ஆகியவை யாம்.பாண்டுரங்கவிசயம் என்பது பாரத,இராமாயண இதிகாசங்களை இணைத்துப் பாடப்பட்ட சிலேடை நூலாகும். பாண்டு என்பது பாண்டவரையும்,இரங்க என்பது இராமரையும் குறிக்கும். இவ்விருவருக்கும் பொருந்துமாறு சிலேடையாக (இருபொருள் படு மாறு) இந்நூல் எழுதப்பட்டது. இவை யாவும் தம் தாய் மொழியாகிய தெலுங்கில் இவனால் இயற்றப் பட்டன.

இவனைப் பற்றிப் பல நகைச்சுவைமிக்க கதைகள் வழங்கிவருகின்றன. அவை தெனாலிராமன் கதைகள் என்ற பெயரால் பல மொழிகளிலும் தொகுக்கப்பட் டுள்ளன. இவன் காளியை வழிபடுபவன்.ஒருகால் இவ னது பக்திக்கு இரங்கிக் காளி தேவி ஆயிரம் தலை களுடன் இவன்முன் தோன்றினாள். அதைக்கண்டு இவன் சிறிதும் அஞ்சாமல் காளிதேவியை நோக்கி 'அம்மா!ஆயிரம் தலைகளுள்ள நீ உனக்கு சலதோசம் வரும்போது என்ன பாடுபடுவாயோ? எனக்கு ஒரே ஒரு தலை இருந்தும் அப்போது என்னால் அதனைப் பொறுக்க முடியாமல் படும் அவத்தை சிறிதன்று' என்று நகைச்சுவை தோன்றக் கூறினானாம்.அதனைக் கேட்ட காளிதேவி இவனுடைய நகைச்சுவையைக் கண்டு மகிழ்ந்து இனி இவன் நகைச்சுவை மன்னனாக விளங்குக என்று அருளினாள் என்பர்.

ஒருமுறை கிருட்டிணதேவராயர் இவனைக் கடிந்து கொண்டு 'இனிமேல் நீ என்முன் தலைகாட்டாதே, போ' என்று கூற இவன் மறுநாள் தன் தலையில் ஒரு பானையைக் கவிழ்த்துக்கொண்டு அரசவைக்கு வந் தான்.அதுகண்ட மன்னர் 'இவன் யார்? என்ன இது? என வியப்புடன் கேட்க இவன் நீர்தான் என்னைக் கடிந்துகொண்டு இனி என்முன் தலைகாட்டாதே என்று கூறினீர்;அதனால்நான் தலையைமறைத்துக் கொண்டுவந்தேன்' என்றானாம். அதுகேட்டு யாவரும் சிரித்தனர் என்பர்.

தமிழ்நாட்டில் இவனைத் 'திருவாழித்தான்' அல் லது 'திருவாழத்தான்' என்று வழங்குவர். ஏறுக்கு மாறாகப் பேசுபவரையும், நடப்பவரையும் இவ்வாறு குறிப்பிடுவது வழக்கம். ரா.கி.

**தெனிசன் கோமகன் ஆல்பிரடு**: (கி.பி. 1809-1892): விக்டோரியாப் பேரரசியாரின் காலத்தில், அக்காலத்தில் மேலோங்கி நின்ற மனப்பான்மை களைப் பிரதிபலிக்கும் கவிஞன், மிகுந்த செல்வாக்குப் பெற்றுத் தன்னிகரற்று விளங்கிய தெனிசன் கோமகன், ஆல்பிரடு (Tennyson, Alfred Lord) ஆவான். வேர்டுசுவொர்த்து, பைரன், கீட்சு போன்ற தனக்கு முற்பட்ட புனைவியற்பாங்குக் (Romantic) கவிஞர்களால் உருவாக்கப்பட்ட மரபுகளைச் சீர் செய்து கட்டுறுதியாக்கிமெருகேற்றிய முழு முதிர்ச்சி பெற்ற கவிதைக் கலைஞன் எனத் தன் காலத்தோரால்



தெனிசன கோமகன ஆலபிரடு

மதிக்கப்பெறறவன் தெனிசன. கலவி கறற, அந் நாளைய நடுததர வகுப்பு ஆங்கிலேயனின உறுதி வாய்நத ஒழுக்க, சமய நோககுகள், அரசியல் சமுதாய உணர்வுகள, சுவைகள,உணாசசிக் கொப்பளிப்புகள ஆகியவற்றை ஒரு சோகமனப்பான்மை இழையோடப பாடியவன. தன வாழ்க்கையின முற்கூற்றில் உலகியலிலிருநது விலகி, ஒரு தனி மனிதனின தனிப்பட்ட நெருக்கமான சிககலை அவன பாடுகிறான. பின்னாளில சமய ஒப்புதல் பெற்ற பழைய நடைமுறைகள, மனித இயற்கை, விதி பற்றிய வழிவழி மரபுக் கோட்பாடுகள ஆகியவற்றின மீது ஐயம், விக்டோரியா காலத்து மாறறமற்ற தேககநிலை, அளவிறநத தூய்மைப்பாடு ஆகியவறறை எதிாத்துப் புரட்சி செய்யும் மனப்பானமை, அனறைய அறிவியலால,வெளிப்படுததப்பெறற மெயம்மைகளின வழியே அகிலததில மனிதனின இடம் பறறிய புததோவியம் எனபன போனறவை இவன பாடல்களில காணப்படுகின்றன இவனுடையசிறநதபடைபபுகளில விரிவுடைமையுமவிழுப்பமும் கொண்ட கவிதையாணமையினைக் காணலாம. பரிவு கொணட தன வாசகர்கரு உள்ளமைநத நமபிககையூட்டுதல, வீறாாநத அமைதி அளித்தல் ஆகியவை இவன கவிதைகளில் உணடு. இவனது எல்லையற்ற கற்பனை விரிவு கவிதைக் கலைக்கு ஓர் ஆழமும் ஒத்திசையும உணடாக்கியது. இவன கலைககுத் தநத அருட்கொடை அது.

**வாழ்க்கை.** இஙகிலாந்தின இலஙகாசயரில் உளள சாமர்சுபி (Somersby) எனற சிற்றூரில், அவ்வட்டகைககு மத குருவாய் இருந்த சியார்சு கிளேட்டன் தெனிசன் (George Clayton Tennyson) எனபாரின பன்னிரு பிள்ளைகளுள நாலாமவன் ஆல்பிரடு தெனிசன். இவன கி.பி.1809-ஆம் ஆணடு பிறந்தான. உலவுதது இலக்கணப் பளளியில (The Grammar School of Louth) பயினறதை விடத தநதையின் துணையோடு வீட்டில நூலகத்திலிருநது இவன படித்தததே மிகுதி.

கேம்பிரிட்சிலுளள திரினிட்டிக் கல்லூரியில் சேர்நதான. (Trinity College, Cambridge) அங்கு ஆர்தர் என்றி ஆலம (Arthur Henry Hallam) எனபவரின் இனிய நட்புக் கிடைததது கலலூரியிலுளள 'திருத்தூதா' (Apostles)எனனும இலககியக் கழகத்தில் பிற உறுபபினாகள மதிததுப போற்ற உறுப்பினனாக இருந்ததுடன் 'திமபகதூ' (Timbuctoo) எனற கவிதைக்கு 1829-இல பல்கலைக கழக வேநதரின் விருதும் பெறறான. ஆனால், இரு சகோதரர்களின் கவிதை (1827), பெரிதும தனனுணர்ச்சிப் பாடலகள் (1830) (Poems, chiefly lyrical) ஆகிய நூலகள நல்ல வரவேற்புப் பெறவில்லை.

இவன் தன தந்தை நோயவாய்ப்பட்டு 1831-இல் இறந்தார். அடுத்து இவன வெளியிடட கவிதைத் தொகுதியும் கடும் திறனாய்வின தாக்குதலுக்குளளாகியது. மேலும தன கூடப் பிறநதவளைக் காதலித்த உயிர் நணபன் ஆர்தர் ஆலமும 1833-இல் எதிர்பாராமல் இறநதுவிட்டான. துனபத்தால் துவணட தெனிசன எழுதிகொணடிருந்தான; வாழ்ககையைப பறறி நன்கு சிநதிககவும் செயதான்.

பழைய கவிதைகளைத் திருததிப் புதியன புனைந்து இவனதன கவிதையின் நாலாம தொகுதியை 1842-இல வெளியிட்டான். மக்களும் திறனாய்வாளரும ஒருமிததுப புகழ்நதனா. இவன திடீரெனறு உயிர்வாழும கவிஞர்களுள மிக உயர்நதவனென மதிககப் பெறறான.

இவனுடைய வாழ்வின திருபபுமுனை கி.பி 1850-ஆம் ஆணடு எனலாம. நணபனைப் பிரிநத துயரத்தால் இவன் இரஙகிப் பாடிய'நினைவினிலே'(In Memorium) இவனுககு ஈடிலலாப் புகழை ஈட்டித் தநதது. அரசியார் இவனை அரசவைக கவிஞராக்கினார். இவன கி.பி. 1836 முதல் காதலித்த எமிலி செலவுடு (Emily Selwood) இவனுக்கு மனைவியானாள. புது மணமககள வைட்டுத் தீவில (Isle of Wight) குடியேறினா. தெனிசன் வாழககையிலேயே இஙகு வாழந்த மூனறாணடுக் காலம் இனபம நிறைந்த காலம். இததீவில் கி பி. 1870 வரை வாழ்நத இவன சர்ரேயிலுள்ள ஆல்டுசுவொர்த்தில் (Aldsworth in Surrey) வீடொனறு கட்டிக குடியேறினான். வாழ்நாள முழுதும அஙகேயே வாழந்தான. புகழ்பெற்ற விருந்தினர்களை அங்கு வரவேற்றுக் கோடை மாதஙகளில் பயணம் மேற்கொணடான தெனிசன.

எழுதுவதில் ஓயாத கவிஞன் கி.பி.1859-இல் ஆர்தர் மன்னனைப் பற்றிய முல்லைப் பாடல்கள் எழுதினான் (Idylls of the King). அதன் மூலம் நாடு முழுவதும் இவன் பெயர் பரவியது. நாடகத் தனிமொழிகள் (1875-84) பலவற்றை இவன் எழுதினான். பொது வாழ்வில் ஈடுபாடு கொண்டு வாழ்த்துப்பாவும், வரவேறபு மடல்களும் வரைந்தான். விக்டோரியாப் பேரரசி இவனை 1884-இல் பாரிங்போர்டு ஆல்டுசுவொர்த்துக் கோமகன் என்ற பட்டம் அளித்துப் பாராட்டினார். இலக்கிய ஆசிரியன் என்ற முறையில் இவ்வளவு உயர்ந்த நிலையைப் பெற்றவர் பிறர் எவரும் இல்லை.. பின்னாளில் இவன் வாழ்க்கை, நிகழ்ச்சிகள் நிரம்பி இருக்கவில்லையென்றாலும் எழுதிக் குவிக்கும் எழுத்தாற்றல் இவனை விட்டு நீங்கவில்லை. இங்கிலாந்து முழுதும் மதித்துப் போற்றிய இக்கவிஞன கி.பி.1892-இல் காலமானான். வெசுடுமினிசுட்டர் மடத்தில் (West Minster Abbey) கவிஞர்கள் மூலைப் பகுதியில் இவன் அடக்கம் செய்யப்பெற்றான்.

**இலக்கியப் படைப்புகள்:** தெனிசனின் தொடக்க காலக் கவிதைத் தொகுதிகள் திறனாய்வாளரின் கடுந் தாக்குதலுக்கு ஆளாயின. அவற்றுள் உள்ள மரியானா (Mariana) போனற கவிதைகளும் பின்னைய தொகுதியிலுள்ள சேலாட்டு சீமாட்டி(Lady of Shallot), ஓய்னோன் (Oenone), தாமரை புசிப்போர் (Lotus eaters), கலை மாளிகை(The Palace of Arts) யூலிசசு (Ulysses), இலாக்குசுலிக் கூடம் (Locksley Hall) முதலிய கவிதைகள் கீட்சைத் தவிரப் பிறர் எட்ட முடியாத அளவு மேம்பட்ட புலனுணர்வு சார்ந்த, ஒலிநயம் மிக்கதன்னுணர்ச்சிப் பாடல்கள். இவனுக்குப் புகழ் ஈட்டித் தந்த 'நினைவினிலே' (In Memorium), ஆர்தர் மன்னனின் வீரச் செயல்கள் கூறும் முல்லைப் பாடல்கள் (Idylls of King) என்னும் இரண்டும் சிறப்புடையவை. முன்னது தனிப்பட்ட இழப்புத் துயரத்தை உலகப் பொதுவான துயர அனுபவமாகப் பாடுகிறது. எதிர்காலத்தில் நம்பிக்கையையும் வெளிப்படுத்துகிறது. பின்னது, உண்மை, ஒழுங்கு, உயர்குறிக்கோள் ஆகியவற்றுடன் இசைந்து வாழாத உலகம் பற்றிப் பேசுவது. நிகழகால உலகை எதிர் கொள்ளாமல் தப்பித்துக் கொள்ளும் தெனிசனின் மனப்பான்மையைக் காட்டுவது எனச் சிலர் கூறுவர். இவனுடைய தனி இலக்கிய வகையான மேரி அரசி (Queen Mary) பெக்கட்டு (Becket) முதலான நாடகத் தனிமொழிகள் வெற்றி பெறவில்லை. இவன் தன் பிற்காலப் படைப்புகள தெய்வ நம்பிக்கை, இறப்பிற்குப் பின் உள்ள வாழ்க்கை, மீட்பு ஆகியவற்றைப் பற்றிய இவன்தன் சிந்தனைகளை வெளியிடும்.

**மதிப்பீடு:** விக்டோரியா காலத்தின பிரதிநிதியாக விளங்கிய கவிஞன் தெனிசனாவான். இவனது ஒலிநயம் மிகக சிறிய தன்னுணர்சசிப் பாடல்கள் இணையறறவை; வழுவறற யாப்பமைதி உடையவை. இவன் காலததவர் இவனுடைய சிநதனைகளைப் பெரிதாக நினைககவிலலை. இந்நாளில் இவனது இயறகையாகப் பாடும திறம், நகைசசுவை முதலியனவும சுவைக்கத் தக்கவை எனக் கருதுகின்றனர். நாடடுப்புற இயற்கை எழிலை ஒலி வணணமும் எழில் வணணமும மிளிரும்படி பாடும் அழகு இவன் பாடல்களின் தனிச் சிறப்பு. ம சி.இரா.

தே நாக்கு மேலண்ணத்தை (நுனியை) ஒட்டியபடி மெதுவாக அழுத்தி ஒலிக்கும் ஒலியோடு இளித்துப்பின பெருமளவு எடுத்து ஒலிததால் இநத எழுததுக்குரிய ஒலி பிறகும். தகர ஏகாரங்களுக்குரிய குறிப்புக்களைப் பார்க்க.

**பொருள்:** தெய்வம், தலைவன் என்ற இரு பொருள்களைக் கொடுககும் ஓரெழுததொரு மொழி ஆகும. கொளளுதல என்ற பொருளில தெவவு எனற சொல் தே எனறு நீணடது. தொணடை மணடலத்தின் வடபகுதியில பழைய மரபில கணவ்ன் மனைவியா ஒருவரை ஒருவர் தே எனறு அழைப்பதாகக கூறப்படுகிறது.

தே என்பதன அடியாகப் பல்வேறு பொருளைக கொடுக்கும் சொற்கள் இருக்கினறன.

**வடிவம்:** மேல் தெ எனற எழுத்தின் உருவமே இதறகும். ஆனால் புளளி குத்துதல் இதற்கு இல்லை. ... ...

கே.ஜி.கி

### தேசிக விநாயகம் பிள்ளை, கவிமணி:

கவிமணி தேசிக விநாயகம்பிளளை கி.பி 1876-ஆம் ஆணடில் தேரூரிலுள்ள சிவதாணுப்பிளளை, ஆதி லெட்சுமி அமமையார் ஆகியோருக்கு மகனாகப் பிறநதார். தொடக்கக்கல்வி மலையாள மொழியைப் பயிறறு மொழியாகக் கொணட பளளியில தொடர்ந் தது. இவா வாணன்திட்டு என்ற ஊரில் அமைந்த திரு வாவடுதுறை ஆதீன மடத்தின் தலைவராகிய சாநத லிஙகத் தமபிரானிடம் தமிழ் இலக்கிய இலக்கணங களைக் கற்றுத் தமிழில் நலல புலமை பெற்றாா. கோட்டாறு ஆஙகிலப் பளளியிலும் பினனாக் கல லூரியிலும் படித்தார். குடும்பச் சூழ்நிலையினால கல்வியைத் தொடர இயலவில்லை. கோட்டாறறிற்கு வருகை தந்த திருநெல்வேலி மடத்தைச் சார்நத உமையொருபாகக் குருக்களிடம் சிவதீட்சை பெற் றார். இவர் தம் 25-ஆம் வயதில புத்தேரியிலுள்ள உமையமமையாரைத் திருமணம் செய்துகொண்டார். கவிமணி பழம்பெருந்தமிழ் நூலகளோடு ஆங்கில நூல களையும் கற்றுத் தமது ஆங்கில மொழிப் புலமை யைப் பெருக்கிக் கொணடதனால பல ஆஙகில ஆராய்ச்சிக் கட்டுரைகளைப் படைக்க வாய்ப்பு ஏற் பட்டது.

இவர் 25-ஆம் வயதில் கோட்டாற்றுத் தொடக் கப் பளளியில் ஆசிரியராகப் பணியேற்றார். அடுத்து



தேசிக விநாயகம் பிளளை, கவிமணி

ஆசிரியர் பயிற்சிப் பளளியில ஆசிரியராகவும், அதன்பின திருவனந்தபுரத்தில் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் ஆசிரியராகவும் பணியாற்றினார். பின் னர்த் திருவனநதபுரம் மகாராசா பெணகள் உயர்நிலைப் பள்ளியில் முதலில் அறிவியல் ஆசிரிய ராகவும், அடுத்துத் தமிழாசிரியராகவும் பணியாற்றி, அங்கேயே பெணகள் கலலூரியில் தமிழ் விரிவுரை

யாளராகவும் இருந்து 1931-ஆம் ஆண்டு தம் 53-ஆம வயதில் தாமாகவே ஓய்வை வேண்டிப்பெற றார்.

தம் இளம் வயதிலேயே கவிமணி கவிபாடும் ஆற்றல் பெற்றவா. புனைபெயர் கொண்டு கவிபாடு வார் இவர் படைத்த படைப்புகள் மலரும் மாலை யும், ஆசியசோதி,உமார்கய்யாம் பாடல்கள். நாஞ்சில நாட்டு மருமக்கள வழி மான்மியம், கவிமணியின கீரத்தனைகள, கவிமணியின உரைமணிகள், காந்த ளூரச்சாலை (ஆங்கிலம்), சில ஆஙகிலக் கட்டுரைகள முதவியனவாகும். ஆசியசோதியும் உமர்காயயாம் பாடல்களும முதற்கண மலரும் மாலையும் என்ற தொகுப்போடு இணைக்கபபட்டு வெளியிடப்பட்டன. பிறகாலப் பதிப்பில் அவை தனித்தனி நூல்களாக வந்தன. இவை தவிர அழகமமை விருத்தம் எனற நூலும் உண்டு தமிழ இதழ்களில புனைபெயரால் வெளிவநதவற்றின தொகுப்பே மலரும் மாலையும எனற நூல் ஆகும. ஆசியசோதி, உமாரகய்யாம் பாடலகள் ஆகிய இரண்டு நூலகளும் மொழிபெயாப் பின வழியே அமைநதனவாகும். அவை முதல நூலின கருத்துகளை அடிப்படையாகக கொண்டு தமிழிலே எழுதப்பட்டவை.

நாஞ்சில் நாட்டு மருமக்கள தாய வேளாளருள முற்போககுச் சிநதனையாளர் அவகாசக் கிரமம் பறறிய சட்டத்தை மாற்றியமைக்க வேணடுமெனறு கருதினா. முற்போககில் ஈடுபடாத ஒருசிலர் அதனை மறைமுகமாக எதிர்க்கத் தலைப்பட்டனர். நாஞ்சில் நாடு இருபிளவு பட்டது. ஆனால, முற்போக்காளரே முடிவில வெனறனா. கவிமணி முற்போக்காளருள முதன்மை பெறறவர். மருமககள் வழித் தாயத்தின் தீங்குகள் பற்றிய தம் கருத்துகளைக் கவிமணி, திரு வனந்தபுரத்திலிருநது வெளிவநத 'தமிழன' எனற இதழில் 1917-ஆம் ஆணடு மாரச்சுத திஙகள் தொடங்கி 1918-ஆம் ஆண்டு பிப்பிரவரித் திஙகள வரை 'மருமக்கள் வழி மான்மியம்' எனற பெயரில தொடர் கவிதையாக வெயிட்டார். அநதத் தொடா கவிதை பழைய ஏட்டுச் சுவடியில இருநத நூலை அசசிற பதிப்பிககிற பாவனையில வெளிவந்தது. தமிழ் மக்களோடு வேளாள இளைஞர்களும் அதனைப் படித்து உளளங கொதித்தார்கள. முதியோர்கள அதனைப் படித்து அதில பொதிநது கிடைக்கும உணமையையும சீரதிருத்தத்தின தேவையினையும உணர்நதனர். இவரது மருமக்கள வழி மானமியம் என்னும் கவிதை நூல் ஒரு சமுதாயச் சீரதிருத் தத்தை விளைவித்தது. அதன பயனாக வேளாளர் குடும்பம் அடைவதற்குரிய சீரதிருத்த மசோதா 1926 -ஆம் ஆணடு சட்டமன்றத்தில நிறைவேறி அடுத்த ஆண்டே நடைமுறைககு வந்தது. 'மருமக்கள வழி மான்மியம்' எனனும் தொடர்கவிதை அச்சட்டம் நிறைவேறக் காரணமாயிருந்தது.

தமிழகத்தில் 1943-ஆம் ஆண்டு முதல் பொஙகி யெழுந்த தமிழிசை இயக்கத்தின் அலைகள கவிமணி யின் உளளத்திலும் மோதின. கவிமணியின ஆன்மா இகவாழ்வு பற்றிய தளைகளையெல்லாம முறறத் தகாததெறிநத நிலையில தெயவத் தொடர்பான கீர்த்தனைகளைப் பாட முறபட்டது. பக்திச சுவை மிக்க தெயவத தமிழ்க் கீர்த்தனைகள் பலவற்றை கவிமணி இயற்றியுளளாா.

கவிதை நடையில ஒரு செம்மைநெறியைக கையாணட கவிமணி உரைநடை எழுதுவதிலும் சிறநது விளங்கினார். இவரது உரைநடைப் படைபபில அமைந்த கட்டுரைகள் யாவும் வரலாறு, சாசன ஆராய்ச்சி போனற தலைப்பில் அடங்கின.'காந்தளூர்ச் சாலை' என்னும் நூல் ஆஙகிலததில் எழுதப்பட்டது.

சென்னை மாகாணத் தமிழ்ச சஙகச சார்பில் 1940-ஆம் ஆணடில் செனனைப் பசசையப்பன கல் லூரியில் நடநத பாராட்டுவிழாவில தலைவா உமா மகேசுவரனார் 'கவிமணி' எனற சிறப்புப் பட்டத்தை இவருக்கு வழஙகினார். கவிமணி அவாகளுக்கு இராசா சர். அணணாமலைச் செட்டியாா பெரிய விருந்து நடத்திப் பொனனாடையும போாத்தி, 1000 வெணபொறகாசுகளைப பரிசாக வழஙகினார். இவர் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப பேரகராதி அமைப்பின சிறப்பு ஆலோசகராக நியமிககப்பட்டாா. பல துறைகளிலும் சிறந்து விளஙகிய தமிழச் சான றோர், இவருக்குப் பல்வேறு பதவிகளும பட்டங களும் வழஙகிச சிறப்பித்தனர். அவவாறே நிறுவனங கள பலவும் சிறப்பிததன.

ஓய்வுபெற்ற பின் கவிமணி புத்தேரி எனற ஊரில் தஙகினாா. கவிமணி 1952-ஆம் ஆணடு முதல எழுந்து நடமாட முடியாத நிலையினை அடைநதார். நோய கள பல அவரைத் துன்புறுத்தின. அந்நிலையி லும தமமைக் காணவரும் நணபர்களை வரவேறறு உபசரிதது வேணடியவற்றைச் செயது அனுபபினாா. இவர் 1954-ஆம் ஆணடு தம 78-ஆம் வயதில் திரு வாசகம கேட்ட நிலையிலேயே உயிர்துறநதாா.

அ.அ.

**தேசிங்குராசன் கதை:** இது நாட்டுப்பாடல இலக்கிய வகையைச் சேர்ந்த ஒரு நூல. இது செஞ்சியை ஆண்ட மன்னனான தேசிஙகுராசனைத் தலைவனாகக கொணடு பாடப்பட்டது அம்மனன் வரலாறு வீரமிக்க ஒனறாதலின அதனைப்போற்றிப் பயனகொளளும் வகையில் தேசிங்குராசன கதை, விலலுப்பாட்டாக நடததப் பெறும. இநத நாட்டுப

பாடல் இலக்கியத்தை இயற்றியவா பெயர் தெரிய வில்லை எனினும் அலலி அரசாணி மாலை, சிததிர புத்திரன் கதை போனற இத்தகைய நூலகளின ஆசிரியர் எனக் கூறப்படும் புகழேந்திப் புலவரே, இந் நூலினை இயற்றியவராகக் கூறப் பெற்றுள ளார். வீரச் சுவை மிக்க இக்கதைபொதி பாடல் விழாக்காலஙகளில் பாடிக் காட்டபபெறும. தேசிங்கு ராசனின பெயர் தேசு சிஙகு எனபதாகும. இவன தேரணி இராமபாயி ஆகிய பெற்றோருக்கு மகனாகப் பிறந்தான. மேரு மலையில் கொஙகுப்பக்கிரிஎனனும யோகி தவம செய்கையில வானுலகததிலிருந்து வநத குதிரை கனைத்து ஒலி எழுப்ப, அதனைத்தம் மந்திர ஆறறலால் அடககி, திலலி மன்னனுக்குப பரிசாகக கொடுததார் அம்முனிவர். தில்லி மனனன இக் குதிரையை அடககும், போட்டி வைதது அதில தோற்றவரைச் சிறையிலடைத்தான. தேசிஙகு இராசன தாய்வயிற்றில இருந்தபோது குதிரையை அடககச் சென்ற தேரணிராசன், தோற்றதும் சிறை யிலடைக்கப் பட்டான. அம்மனனன் சிறைப்பட்ட ஏழாம் நாள தேசிஙகு பிறந்தான். இளமையில் யாவரும் வியக்கும்வண்ணம வீரமுடன விளங்கினான். மாவுததுககாரன எனனும இசுலாமியன தேசிஙகின உயிர் நணபனானான். தாயின் துயரத்திறகுக் காரணம் கேட்டறிநது தான் ஐந்தாம் வயதிலேயே தன் நணபனுடன திலலி சென்று குதிரையோடு ஐந்து நாள்கள போராடி அடக்கினான. பொதுவாக விட்டுணு பகதனான தேசிங்கு குதிரையின வலிமை யைக் குறைக்க, திருமாலிடம் வேண்டினான. திருமால் குதிரையில் வநது அதன முகத்தில் அறைந்து நிறுத்தினாா. 'மேலும சில நாள்கள் நடைபெற இருக்கும் சணடையில் அவன இறந்து மேலுலகம அடைவான என்றும, அப்பொழுது அம் மனனனுக்கு அடங்கிப் போகவேணடும்' என்றும் கூறி அருளினார். பாராசாரி என்ற வானுலகக் குதிரையை அடக்கிய தேசிங்குராசனைப் பாராட்டிய தில்லி மனனன் தன மகள இராணி அமமாளைக் கொடுக்க இசைந்தான. தந்தையைச் சிறைமீட்டுச் செஞ்சி வந்து தாயை மகிழ்வித்தான். திலலி மனனன கொடுத்த வாககுறுதி யின்படி அவனதன் மகளைக் கொடுககத தேசிஙகு ராசன அவளை மணந்து கொண்டான்.

பத்து மாத காலமே ஆட்சி செய்த தேசிஙகு ராசன் அனைவராலும் வீரன என்று புகழப் பெற்றான. கபபம் கட்ட வேணடும் எனறு கூறிய நவாபை எதிர்த்துப் போரிட்டான். முந்நூறு குதிரை வீரர்களை மட்டும் வைத்துக்கொணடு ஒரு இலட்சம வீரர்களைக் கொணட நவாபை எதிர்த்தான். தன் நன்பனுக்கு ஆபத்து என்பதை உணர்ந்த மாவுத்துக் காரன், திருமணக்கங்கணம் கட்டிய கோலததோடு போர்க்களம் சென்று சண்டையிட்டு மாணடான். நவாபைஎதிர்த்த தேசிங்குராசனின் குதிரை நவாபால் வெட்டப்பட்டது. போரில் தன்னைத் தவிர மற்ற அனைவரும் இறக்கக் கணட தேசிஙகுராசன், தனது வீர வாளை உயரேவீசி தரையில மல்லாந்து படுத்துத் தன மார்பில் பாய்நத அந்த வாளால் தன்னுயிரை மாய்த்துக் கொணடான். தேசிஙகு மறைந்ததும் அவன் மனைவி இராணியம்மாள உடன கட்டை ஏறினாள. தேசிஙகு மனனனின பகைவனான நவாபு தேசிங்கின் வீரவுணாவைப் பாராட்டினான். கிராமப்புறஙகளில இரவு முழுவதும் தேசிங்கு மனனனின் வரலாறு நாட்டுப்புறப் பாடலாகப் பாடப்படும். தேசிஙகுராசன கி.பி. 18-ஆம் நூற்றாணடின் முறபகுதியில் செஞ்சியை ஆட்சி செய்த குறுநில மனனன். இரா.குரு.

**தேசிய அருங்காட்சியகம்** இநதியாவின் மிகச் சிறநத அருஙகாட்சியகஙகளுள ஒன்று. இது புதுதிலலியில் 'இராச பாத்து'(Raj path),'சன பாதது' (Jan path) ஆகிய இடஙகள சேருமிடத்திலுள்ள கவர்சசிமிகு சிவப்புக் கட்டடததில் அமைந்துளளது. இலணடனில் 1947-48-ஆம் ஆணடுகளில் நடநத இந் தியக் கலைவிழாவில் இடம்பெறற பெரும எண ணிக்கையிலான பொருளகளைக் கொண்டு இவ்வருங காட்சியகம் தொடங்கப்பட்டது. முதன் முதலில் 1949-ஆம் ஆணடு குடியரசுத் தலைவர் மாளிகையில் தொடஙகப்பட்ட இவ்வருங்காட்சியகம் பினனர் 18 12.1960-இல இப்போதுளள கட்டடத்திறகு மாற் றப்பட்டது.

தேசிய அருங்காட்சியகத்திலுள்ள பொருள்கள் அனைத்தும் இந்தியப் பணபாட்டின மரபினைச சிறப் பிப்பனவாக உளளன. அதோடு மத்திய ஆசியப் பகுதி யைச சேர்நத கலைப் பொருளகளும், கொலம்பசுக்கு முந்தைய கால அமெரிககக் கலைப் பொருளகளும் மேற்கத்தியக் கலைப் பொருள்களும் இங்குச் சேகரிக் கப்பட்டுக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. இஙகுள்ள பொருளகள் பலவேறு துறைகளைச சேர்ந்தவையாக உளளன. அவற்றுள முதன்மையானவை முன வரலாற் றுக்காலத் தொலலியல், சிற்பங்கள், இசைக் கருவிகள், ஓவியங்கள், கையெழுத்துப் படிகள் (Manuscripts), வணணக் கலைகள் (Decorative Arts),நெசவுத் துணி வகைகள், கலவெட்டியல், நாணயங்கள், மானிட வியல, போர்க் கருவிகள முதலானவையாகும். இத் துறைகளைச் சேர்நத பொருள்கள் அனைத்தும் நவீன முறையில் ஒளி வசதிகளுடன காட்சிப்படுத்தப்பட்டுள் ளன.

தேசிய அருங்காட்சியகத்தின் கட்டடம் மிகச் சிறந்த முறையில் திட்டமிடப்பட்டுக் கட்டப்பட்டுள ளது.கட்டடத்தின் நடுவில் வட்ட வடிவிலான திறந்த

வெளியகம் ஒன்று உள்ளது. இதைச் சுற்றி எண் கோண வடிவில் காட்சிக் கூடங்கள் அமைக்கப்பட்டுள் ளன. அனைவரையும் வரவேற்கும் முகப்புக் கூடத் தில் பல்வேறு வகையிலான கற்சிற்பங்கள் காட்சிப் படுத்தப்பட்டுள்ளன. இதற்கெதிரே எழில்மிகு பல்ல வர் காலச் சிற்பமொன்று வைக்கப்பட்டுள்ளது. இது கி.பி. 6 அல்லது 7-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது எனக் கருதப்படுகிறது. தரைப்பகுதியில் உள்ள சிற்பக் கூடத்திற்கு நுழையும் அனைவரையும் இச்சிற்பம் வர வேற்கிறது.

இங்குள்ள காட்சிக் கூடங்கள், மிகச் சிறந்து விளங்கிய கலை வகைகளான மயூர்யா, சுங்கா (Sunga), காந்தாரம், இக்சுவாகு (Ikshcyaku)முதலான வற்றை விளக்குகின்றன. இவை தவிர இடைக் காலத் திற்கு முந்திய (Premedieval) கலைப்பாணியை விளக் கும் காட்சிக்கூடமும், இடைக்கால (medieval) கலைப் பாணியை விளக்கும் காட்சிக் கூடமும், இடைக்காலத் திற்குப் பிந்திய (Post Medieval) கலைப்பாணியை விளக்கும் காட்சிக்கூடமும் உள்ளன.

தேசிய அருங்காட்சியகத்தின் சிறந்த காட்சிக் கூடங்களுள் தொல் வரலாற்றுக் கூடம், சிந்து சம வெளிக் கூடம், வெண்கலப் பொருளகள் கூடம போன்றவை குறிப்பிடத்தக்கவை. இவை அனைவரின் கவனத்தையும் ஈர்க்கக்கூடியவை. சிந்து சமவெளி நாகரிகத்தைச் சேர்ந்த வெணகலத்தாலான பெரும் பெண் உருவமொன்று இவ்வருங்காட்சியகத்தில் காட் சிக்கு வைக்கப்பட்டுள்ளது.

சிந்து சமவெளி நாகரிகத்தைச் சேர்நத ஏராள மான பொருள்கள் இங்குளளன. கறசிற்பஙகள, சுடு மண் பொம்மைகள், உருவம் பொறிக்கப்பட்ட முத் திரைகள, விளையாட்டுப் பொருள்கள், போர்க கருவி கள் முதலானவை இவற்றுள் குறிப்பிடத் தக்கவை. நடனமாடும் நிலையிலுளள மிகப்பெரும் பெண் உரு வம் இங்கு உள்ளது. இது சிந்து சமவெளி நாகரிகத் தைச சேர்ந்தது. இதைத் தவிர இந்நாகரிகத்தைச் சேர்ந்த கறசிற்பங்கள் இங்கு ஏராளமாக உளளன. இவற்றுள் கி.பி. முதல் நூறறாண்டு முதல 3-ஆம் நூற்றாணடு வரையிலான காலத்தைச் சோந்த இயட் சன (Yaksha), இயட்சி (Yakshi) சிற்பஙகள சிறபபா னவை. இவை மத்துராவிலிருந்து (Mathura) பெறப் பட்டவை. இவை தவிர நாகார்ச்சுன கொணடா விலிருந்து பெறபபட்ட சிற்பமும் (கி.பி. 2-3-ஆம் நூறறாண்டைச் சேர்ந்தது), குப்தர் கால விட்ணுவும் (கி.பி. 5-ஆம் நூற்றாண்டு), அகிச்சத்ராவிலிருந்து (Ahichhatra) பெறப்பட்ட கங்கா, இயமுனா ஆகி யோரின முழுநீள சுடுமண பொம்மைகளும் (கி.பி. 5-ஆம் நூற்றாண்டு), கிரேக்கக் கலைப்பாணியைச் சேர்ந்த போதி சத்துவர் (Bodhi sattuva) உருவமும் (கி.பி. 2-ஆம் நூற்றாண்டு) இக்கூடத்தில் காட்சிப் படுத்தப்பட்டுள்ளன. இவை போன்ற சிறப்புமிக்க எண்ணறற கறசிற்பஙகள இங்கு உளளன.

இந்திய ஓவியஙகள, கையெழுத்துப் படிகள் (Manuscripts), மத்திய ஆசிய தொலபொருள்கள் போன்றவை முதல தளததில் காட்சிக்கு வைக்கப் பட்டுளளன. இநதிய ஓவியங்களுள் முகலாய ஓவியங கள், இராசசுததானி, தக்காண ஓவியஙகள், மாலவா, பகாரி ஓவியஙகள் முதலானவை காலவரிசைப்படி காட்சிப்படுத்தப்பட்டுளளன. கையெழுத்துபபடி களுள் புத்த, சைன, சமயத்தைச் சேர்ந்த பழங காலக் கையெழுத்துப் படிகளும் முகலாயர்களின் கையெழுத்துப் படியும் இங்குப் பாதுகாக்கப்பட்டுக் காட்சிப்படுத்தப்படடுளளன. அக்பர் எழுதிய பாபர் நாமா நூலின் ஒரு படியும் இங்குள்ளது. மத்திய ஆசிய தொல்பொருள் கூடத்தில் சர் ஆவ்ரல் இசுடீன (Sir Aurel Stein) மேறகொணட புத்தாய்வில கிடைத்த பொருளகள் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. இப்பொருள்கள் கி.பி.1900 முதல 1916 வரை காலத் தில் சேகரிக்கப்பட்டவையாகும்.

தேசிய அருங்காட்சியகத்திலுள்ள மற்றுமொரு முதன்மையான கூடம் மானிடவியல் கூடமாகும். இஙகு இந்தியமனித இனத்தின் படிமலர்ச்சியை (Evolution) விளக்கும் காட்சிப் பெட்டகங்களும் இந்திய நிலப் பகுதியில வாழும பல்வேறு இனத்த வர்களை விளக்கும் காட்சிப் பெட்டகங்களும் உள ளன. அதோடு இம்மக்கள பயன்படுத்தும பொருள்கள், ஆடை அணிகலனகள் முதலானவையும காட்சிப் படுத்தப்பட்டுள்ளன.

இந்திய அழகுப் பொருள்கள் காட்சிக்கூடம் மிகப் பெரும் வகையிலான பொருள்களைக் கொணடுள்ளது. இவற்றுள் நெசவு வகை கள, இரும்புப் பொருள்கள, சாடிகள, தந்தப் பொருள்கள், கிளிஞ்சலால செய்யப்பட்ட பொருள கள, அணிகலன்கள,மரவேலைப்பாடுகளமுதலானவை ஒருசில குறிப்பாக நெசவுத தொழில கூடத்தைச் சுறறிப் பார்க்கும் ஒருவர் இநதிய நெசவாளாகள எவவாறு நெசவு நுணுக்கங்களையும், கைப்பின்னல நிறையையும, சாயம் போடுவதையும் வளர்த்துக் கொண்டுள்ளனர் எனபதை உணர முடியும். இவ வாறே மரவேலைபபாடுகள கூடத்தைச சுற்றிவரும் ஒருவா இந்தியக் கைவினைஞர்களின் திறமையைக் காணமுடியும்.

இவ்வருங்காட்சியகததின பலவேறு இந்திய மொழிகளின நெடுங்கணக்கு வளாச்சி பெற்ற முறை அழகிய முறையில் காட்சிப்படுத்தப்பட்டுளளது. நாணயவியல் பற்றிய கூடமொன்றும் இங்குளளது.

இக்கூடத்தில், குப்தர் காலம் முதல் பல்வேறுகாலத தில் தோனறிய எணணறற நாணயங்கள உள்ளன. குறிப்பாக கி.மு 5- ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 18-ஆம் நூற்றாண்டு வரையிலான நாணயங்கள் சேகரிக்கப்பட்டுக் காட்சிப்படுத்தப்பட்டுளளன.

போர்க்கருவிகள கூடத்தில் இராசபுத்திரர்கள முகலாயர்கள ஆகியோரின் போர்க் கருவிகள பெரும ளவில் உள்ளன. இவற்றில் விலைமதிக்க முடியாத கருவிகள பல உளளன. சகாங்கீர், அவுரங்கசீபு, திப்பு சுல்தான் ஆகியோரின் போர்க்கருவிகளில் எழுத்துகள் பொறிக்கப்பட்ட நிலையில் பல ஆயுதங கள் உள்ளன.

தேசிய அருஙகாட்சியகம் இந்தியப பணபாட்டின் மரபினைக் காப்பதில் பல பணிகளை மேற்கொண டுளளது. பளளிகளுக்கும் கிராமங்களுக்கும் செனறு அருங்காட்சியகததின் ஒரு சில கூடங்களை விளக்கும் வகையில் அருங்காட்சியகப் பேருந்து ஒன்றை இவ வருஙகாட்சியகம் நடத்தி வருகிறது, இநதியக் கலை பறறிப் பல நூல்களை வெளியிட்டுளளது. ஒளிப் படஙகளை இலாப நோக்கமின்றி விற்கினறனர். காட்சிப் பொருள்களைப் பாதுகாக்கும் பாதுகாப்புக் கூடமொன்று (Conservation Laboratory) இங்குள ளது. இவ்வருங் காட்சியகம் திஙகள் தவிர ஏனைய நாள்களில் 10 மணி முதல 5 மணி வரை திறந்திருக்கும். பார்வையாளர்களிடம் குறைநத கட்டணமே வசூலிக்கப்படுகிறது. என் அ.

**தேசிய ஆசிரியர் கல்விக்கழகம்**: ஆசிரியக் கல்வியாளாகளின இநதியச் சங்கம் 1905-ஆம் ஆண்டிலேயே தோற்றம் பெற்றது. இது இந்நாட்டின் பல்வகை ஆசிரியக் கல்வியாளர்களின ஒரே அமைப் பாகும். இவ்வமைப்பின் கோரிககையை ஏற்று 1966 -இல் கலவிக்குழு மாநில ஆசிரியக்கலவி வாரியங களை அமைத்து, ஆசிரியக் கலவியின் மேம்பாட்டிற் காக மாநிலங்கள பாடுபட வேண்டுமென வற்புறுத் தியது. அதன்படி 1967-இல் மத்திய பிரதேசத்திலும் பின்னர் 1973 வரை குசராத்து, மராட்டியம், மைசூர், இராசசுத்தான, தமிழ்நாடு, சம்மு-காசுமீர், மணிப் பூர் ஆகிய மாநிலங்களிலும ஆசிரியக் கல்வி வாரி யங்கள் வெவவேறு ஆணடுகளில் அமைக்கப்பட்டன. பல்கலைக் கழக நல்கைக் குழு, தேசிய கலவி ஆராய்சசி பயிற்சிக் குழு, கல்வி அமைசசகம் ஆகிய வற்றின் கலவியாளர்கள், அலுவலர்கள் ஆகியோரி டையே நிகழ்நத நீண்ட விவாதங்களுக்குப் பின்னர், 1973-இல் இந்திய அரசு தேசிய ஆசிரியர் கல்விக் குழுவை அமைத்து, இந்நாட்டு ஆசிரியக் கலவிககுப் புத்துணர்ச்சியையும் விரைந்த வளர்ச்சியையும் அளிக்க முன்வந்தது.

**அமைப்புக் குறிக்கோள்கள்**: அ) ஆசிரியர் கல்விப் பாடத்திட்ட மதிப்பீடு, பாடத்திட்டத் திருத்தக் கணிப்பு, பணி முன், பணியிடைப் பயிற்சிகள் உட் பட்ட ஆசிரியர் கல்வி ஆகியவை பற்றிய எல்லாக் கருத்துகளிலும் இநதிய அரசுக்கு அறிவுரைத்தல், ஆ) மாநில அரசுகளால இக்குழுவுக்கு அனுப்பப்பட்ட பொருளகள் பறறி அவ்வவ வரசுகளுக்கு அறிவுரைத் தல் இ) ஆசிரியர் கலவி பற்றிய மாநில, மையத் திட்டச் செயல்களை மதிப்பிடுதல, ஈ) ஆசிரியர் கலவி யின தரததினை உறுதிப்படுத்துவது பறறி அரசுக்கு அறிவுரைத்தல். உ) இநதிய அரசினால் இக்குழுவுக்கு அனுப்பப்படும் எலலாப் பொருளகளையும் பற்றிக் கருத்துரைத்தல்.

**உறுப்பினர்கள்; உட்குழுக்கள்; செயலகம்**: 42 உறுப்பினர்களைக் கொணட தேசிய ஆசிரியர் கல் விககுழு மாநிலப் பிரதிநிதிகள், பல்கலைக்கழக நல்கைக குழு, தொழில் நுட்பக கல்வி பற்றிய அனைத்திந்தியக் குழு, கல்வி பற்றிய மையப பரிந துரை வாரியம், திட்டக் குழு, தேசிய கலவி ஆராய்ச்சி பயிற்சிக் குழு, இவற்றின பிரதிநிதிகள், குடியரசுத் தலைவரால் நியமிக்கப்பட்ட 12 வல்லுநாகள் ஆகி யோர்களைக் கொணடதாகும். மனித ஆற்றல் வளாசசி அமைச்சரைத தலைவராகவும் கல்விக்கான இணை அமைச்சரைத் துணைத் தலைவராகவும், தேசிய கல்வி ஆராயச்சி-பயிற்சிக் குழு இயக்குநரை உறுப்பினர்-செயலாளராகவும் அலுவல் முறையில் கொணட இக்குழு நானகு உட்குழுக்கள் வழிச் செயறபடுகின்றது. அவையாவன: அ) இயககக்குழு ஆ) தொடக்க, முனதொடக்க ஆசிரியர் கல்விக குழு இ) உயர் நிலை, கல்லூரி ஆசிரியர் கலவிக்குழு, ஈ). சிறப்புப் பளளி ஆசிரியர் கலவிக்குழு இந்த நானகு உட்குழுக்களும ஆணடிறகொரு முறையாவது கூடி ஆசிரியர் கல்வியின நிலைபற்றிக் கருததுரையாடி, ஆணடிறகொரு முறை மட்டுமே கூடும தேசிய குழு விற்குத தங்கள் பரிநதுரைகளை அனுப்பி வைக்கின் றன. தேசிய குழு, கொளகையடிப்படையிலான வழி முறைகளை வகுக்கும். உட்குழுக்களின பரிந்துரை களுக்கு வடிவமைததுச் செயற்படுத்தும பொருட்டுப் பலவேறு குழுக்களை அமைககவோ, மாநாடுகள, கருத்தரஙகுகள், பணிமனைகள் ஆகியவற்றை அமைக்கவோ தேசிய குழு ஏற்பாடுகளைச் செய்யும். அதிகார வரம்பிறகுட்படுத்தப் படாத இக்குழு வினால் தன் பரிந்துரைகளைச் செயற்படுத்த, வேணடுகோளாகவே விடுக்க முடியும்.

இக்குழுவின நிருவாக, அறிவு நிலைச் செயலகமாகத் தேசிய கல்வி ஆராய்ச்சி-பயிற்சிக் குழுவின ஆசிரியர் கல்வித் துறை பணியாற்றுகிறது. இத்துறையின் மூன்று ஆசிரியர்கள் தங்கள துறைப் பணிகளுடன்

தேசிய ஆசிரியர் கல்விக் குழுவின் பணிகளையும் ஆற்றி வருகின்றனர். இத்துறைத் தலைவரின் கருத்துரைப்படி ஒரு பேராசிரியர் இப்பொறுப்பில் இருக்கிறார். மற்றுமுள்ள ஆசிரியர்கள் உட்குழுக்களின் கூட்டங்களுக்கான நிகழ்ச்சி நிரல்களையும் கூட்ட நடவடிக்கைகளையும் தயாரிக்கின்றனர். இத்துடன் அவற்றைச் செயற்படுத்தி அது பற்றிய விவரங்களை மீண்டும் குழுக்களுக்கு அளிக்கின்றனர்.

தேசிய ஆசிரியர் கல்விக்குழு இந்நாட்டிலுள்ள கீழ்க்காணும் கல்வித் துணையமைப்புகளுடன் இணைந்து பணியாற்றுகிறது. அவ்வமைப்புகள்: 1) இந்திய அரசின் கல்வி அமைச்சகம், 2) மாநில அரசுகள், 3) இந்தியத் திட்டக் குழு, 4) பல்கலைக் கழக நல்கைக் குழு, 5) தேசிய கல்வி ஆராய்ச்சி-பயிற்சிக் குழு, 6) இந்தியப் பல்கலைக்கழகங்கள், 7) மாநிலக் கல்வித் துறைகள், 8) மாநிலக் கல்வி நிறுவனங்கள்/ மாநிலக் கல்வி ஆராய்ச்சி-பயிற்சிக் குழுக்கள், 9) மாநில ஆசிரியர் கல்வி வாரியங்கள், 10) மண்டலக் கல்வியியல் கல்லூரிகள், 11) மாநிலத் தலைநகர்களிலுள்ள தேசிய கல்வி ஆராய்ச்சி-பயிற்சிக் குழுவின் கள அறிவுரையாளர்கள், 12) பல்கலைக்கழகக் கல்வித் துறைகளும் மாநிலத்திலுள்ள கல்வியியல் கல்லூரிகளும், 13) ஆசிரியர் பயிற்சி நிறுவனங்கள் ஆகியனவாம்.

**குறிப்பிடத்தக்க பணிகள்:** சென்ற 14 ஆணடுகளில் இக்குழு பலவேறு பணிகள் ஆறறியுள்ளது. தேசிய ஆசிரியர் கல்விக்குழுவின் முதற் கூட்டத்தில 20 மாநிலச் செயற் சிறுகுழுக்கள் அமைக்கப்பட்டு ஆசிரியர் கல்வி பற்றியபினவரும் சிக்கல்களைக் கண்டறிந்தது.

க) மனித ஆற்றல் திட்டமின்மை.

ங) நுழைவுச் செயல்முறை வரையறுக்கப்படாமை.

ச) அணமைக்கால ஆய்வு முடிவுகளுககொபப ஆசிரியர் கல்விப் பாடத் திட்டங்களைப் புதுமைப படுத்தாமை.

ஞ) மாணவ ஆசிரியர்களுக்கு நல்ல பாடப் புத்தகங்களும், ஆசிரியக்கலவியாளர்களுக்கு வழிகாட்டு நூல்களும் இல்லாமல் அயலநாட்டு ஆசிரியர்களின் நூல்களையே சார்ந்திருத்தல.

ட) மாணவர் எண்ணிக்கை, ஆசிரியர் நியமனம் பற்றிய வரையறையின்மை.

ண) இடவசதி, நூல்நிலையம், ஆய்வுக்கூடம், பணிமனை, மாணவர் விடுதி, விளையாட்டு நிலம் ஆகியவை ஆசிரியர் பயிற்சி நிறுவனங்களில் போதுமான அளவு இல்லாமை.

த) பாடத்திட்டம், பயிற்றல் முறைகள், மதிப்பிடுதல் ஆகியவற்றில் போதிய ஆராய்ச்சி இல்லாமை.

ந) பல்வேறு ஆசிரியர்கள், ஆசிரியக்கல்வியாளர் ஆகியோர்க்கான தொழிற்கல்வி தொடங்கவும் பல்வேறு பாடங்களுக்கிடையேயுள்ள உறவு வலுவடையவும் பல்கலைக்கழகங்களில் கல்வியியல் கல்லூரிகள் தொடங்கும் முயற்சியின்மை.

ப) தொடக்க, உயர்நிலை ஆசிரியர் கல்விகளுக்கான ஒருங்கிணைந்த கல்வியியல் கல்லூரிகளின்மை.

ம) தொடக்க ஆசிரியர் கல்விக்கும்கூட அஞ்சல் வழிப் பயிற்சிகள் தோன்றாமை.

ய) தொடக்க ஆசிரியர் கல்விக்கான கல்வியாளர்களுக்கெனத் தனிப் பயிற்சிகளின்மை.

ர) ஆசிரியர் கல்வியில் தர வேறுபாடு உள்ளமை.

ல) ஆசிரியக் கல்வியாளர்களுக்கான பணியிடைப் பயிற்சிக்குப் போதிய வசதிகளின்மை.

வ) கல்லூரி ஆசிரியர்களுக்கான பயிற்றுநிலை வழிநடத்தலுக்கான தேவை.

மேற்கூறியவற்றில் க,ங,ண,ப,ம எனக் குறிப்பிடப்பட்டவை 14 ஆண்டுகளுககுப் பின்னும் தீராத சிக்கல்களாகும். நான்கு மண்டலக் கருத்தாய்வு அணிகள் 1978-இல் அமைக்கப்பட்டு, அவை 1979-இல் உயர்நிலை ஆசிரியர் கல்வி நிறுவனங்களுக்கான வரன்முறைகளைப் பரிந்துரைத்தன.

**பிற பணிகள்: தேசிய கருத்தரங்கு:**'ஆசிரியர் கல்விப் பாடத்திட்டம்-ஓர் உருவமைப்பு'என்ற கொள்கையளவிலான பாடத் திட்டத்தைச் செயறபடுத்த இயலாமை பற்றி 1984 நவம்பர்த் திங்களிறுதியில் நடைபெற்ற தேசிய கருத்தரங்கில் ஆராயப்பட்டது. மேலும் பல்வேறு நிலையிலுள்ள ஆசிரியர் கல்வியை முனனேற்றுவது பறறிய வழிகளும் வகுக்கப்பட்டன.

**ஒலி, ஒளி வடிவங்கள்:** ஆசிரியர் கல்வி பற்றிய வானொலிப் பாடஙகளும் ஒளிப் படஙகளும் அமைக்கப்பட்டன.

**வருங்காலத்தை நோக்கி ஆசிரியர் கல்வி.** கல்வியில் முதுநிலைப் பட்டப் படிப்பில் ஒரு விருப்பப்பாடமாகக கல்வித் திட்டமிடல எனபதையும் அதில் வருங்காலக் கணிப்பு என்ற பகுதியையும் சேர்க்க முடிவு செய்யப்பட்டது.

**கல்லூரி ஆசிரியர் கல்வித்திட்டம்:** பல்கலைக் கழக நல்கைக் குழுத் தலைவர் தலைமையில் 1978-இல் அமைக்கப்பட்ட குழுவினால் கல்லூரி ஆசிரியர்களுக்குப் பயிற்சியளிக்கும் திட்டம் வடிவமைககப்பட்

டது. இபபொழுது நாடு முழுவதிலும 40 பலகலைக் கழகஙகளில கலலூரி ஆசிரியர்களுககுத் தகக பயிறசி நிலையஙகள அமைககபபட்டு வருகினறன.

**பணியிடைப் பயிற்சி:** பலவேறு முறையில் ஆசிரியர்கள தஙகள் நிலைகளை உயர்த்திககொளளத தகக பணியிடைப் பயிறசி அளிக்கபபட்டு வருகிறது.

**ஒழுக்கவழி ஆசிரியர் கல்வி.** ஆசிரியர் கலவியில ஒழுக்கநிலையை உட்படுததுவது பறறி 1977 முதல் மேறகண்ட முயற்சிகளின பலனாக ஆசிரியர்களுக கான ஒழுக்கநெறிக் கோட்பாடு உருவாக்கப்பட்டு வருகிறது.

**முன்தொடக்க, தொடக்கநிலை ஆசிரியா கல்வி நிலைகளை இணைத்தல்.** தொடக்க ஆசிரியா கலவியில் முனதொடகக ஆசிரியா கல்வியை இணைத்து இரு நிலைகளுககுமுாள இயறகையான தொடாபை வலுப்படுதத முயறசி மேற்கொள்ளப்படடுளளது.

**தொடக்கநிலை ஆசிரியர் கல்வி:** தொடககப் பள்ளி ஆசிரியாகள 12-ஆம வகுப்புத தேறியவாகளாக இருக்கவேணடுமென்றும் ஆசிரியர் கலவி இரு ஆணடுகளாயிருக்க வேணடுமெனறும முடிவுரைககபபட்டுளளது.

**கல்வி இளநிலைப் பயிற்சி அஞ்சல்வழிப்பாடங்கள்:** பயிற்சி பெறாத ஆசிரியர்களைப் பகுதிநோ அலலது மாலை/காலை வகுப்புகள அலலது விடுமுறைக கால வகுப்புகளின மூலம பயிற்சி பெற்றவர்களாகக வேண்டும. ஏற்கெனவே பயிற்சிபெற்றுப பணியில் அமர்த தப்பாத ஆசிரியர்களுக்குப் பணி கிடைக்கும்வகையில அஞசலவழிப பாடஙகள நிறுததப்படவுள்ளன.

**ஆசிரியர் கல்வித் தகுதிகள, பணியளவு:** உயர்நிலை, கல்லூரி ஆசிரியர் கல்விக குழுவின பரிநதுரைகளைப் பலகலைக்கழகஙகள, மாநில அரசுகள, பலகலைக்கழக நல்கைக் குழு ஆகியவற்றிற்கு அனுப்பி, மேற்கணட ஆசிரியர்களின் கலவித் தகுதிகள், பணியளவு ஆகியவை பற்றி உரியமுறையில் ஆணையிட வேணடிக் கொள்ளப்பட்டுள்ளது.

**சிறப்புக் கல்வி.** ஊனமுற்றோர் கலவிககான ஆசிரியர் பயிறசிககு வேணடிய நூல்களையும் பிற ஏடுகளையும பல்வேறு மொழிகளில் மொழிபெயர்த்து வழஙக ஏறபாடு செய்யப்படுகிறது.

இவவாறாகப் பல்வேறு நிலைகளிலுள்ள ஆசிரியர் கல்வி, தேசிய அளவில் வடிவுதரப் பெறறுச் சீராக்கப்படவேணடும ஆசிரியர் பாடத் திட்டஙகள நாட்டு வளர்ச்சிக்கு ஏறறவாறு அமையவேண்டும். தேசிய ஆசிரியா கல்விக் குழுவின் புதிதாக வழஙகப்படவுளள சானறுநிலை, ஆசிரியாகளுக்குச சமூகததில தககநிலையை வழஙகுமெனவும், நாடு முழுவதிலும் ஆசிரியர் பணியை ஒப்புதல பெறற பொறியியல, மருததுவம், வழக்குரைத்தல், கணககாளர்கள் ஆகிய பணிகளுக்கொப்ப உயர்நிலைப பணியாக மாறறும் பெருமுயறசியில வெறறிபெறும் எனவும நமபுவதற்கிடமுணடு எஸ சு.

**தேசிய ஆவணக்காப்பகம்.** இககால இந்திய வரலாறறுககு உதவும் ஆவணஙகளைப் பாதுகாததது வரும் பணியினைத தேசிய ஆவணக் காபபகம (National Archives) மேற்கொணடுளளது. இநதியாவிலுளள மாநிலஙகள பலவும் ஆவணக காபபகஙகளைக கொணடிருநதாலும், தேசிய நிறுவனம் முதனமையான ஒனறாக விளஙகுகிறது

ஆவணக காப்பகம எனனும பொருளைத் தரும ஆாககிவச (Archives) எனனும் ஆஙகிலச் சொல ஆர்ககே, ஆர்ககியான (Arche, Archeon) எனனும கிரேககச் சொல்லிலிருந்து தோனறியதாகும. நனகு அமைககப் பெறற பதிவுகளின தொகுப்பு அரசின முகவர், நிறுவனம அலலது அமைப்பினால உருவாக்கப பெற்றமையை இசசொல குறிக்கிறது.

இந்திய அரசினால கி.பி. 1891-ஆம் ஆணடு பேரரசுப் பதிவுகள அலுவலகம (Imperial Record Office) தொடஙகபபட்டது. இதன முதல தலைவராகப பாரசுடர் எனபவா நியமிக்கப பெறறாா. பேரரசுப பதிவுகள் அலுவலகம கலகததாவில இநதிய அரசின தலைமைச செயல மாளிகையின மேறகுப் பகுதியில அமைக்கப்பெறறு இநதிய அரசின பதிவுகள பாதுகாக்கபபடும் பணி தொடஙகியது இநதியாவிலிருநத ஆஙகிலேயே அரசின் தலைநகர் 1911-ஆம ஆணடில கலகததாவிலிருநது தில்லிக்கு மாறியது எனவே இநதப பதிவுகளையும தில்லிககு எடுத்துச செல்ல வேணடிய சூழ்நிலை உருவாயிறறு. தலைமை ஆளுநா ஆர்டிஞ்சு பிரபு 1912 இல ஆவணக காப்பகததிறகெனத் தனிக கட்டடம கட்ட வேணடி அதனைத் தொடஙகிட ஆணை பிறப்பிததாா.

ஆவணக் காப்பகக் கட்டடம 1926-இல் தில்லியில இராசுபாததும, சனபத்தும கூடும் சாலையில் உருவாயிற்று. ஆசியாவிலேயே பெரிய ஆவணக் காப்பகஙகளுள ஒனறாக இது விளஙகுகிறது. கல்கத்தாவிலிருநது 1926-இலும், 1937-இலும் பதிவுகள இரணடு தவணைகளில தில்லிககு மாற்றப்பட்டன. இநதிய ஆவணக காபபகத் தலைவராகத் தில்லியிலும பாரசுட்டு நீடித்தாா.

இஙகு கி.பி 1858-வரையிலான இஙகிலாநது வணிகக் குழுமப பதிவுகளும (English Company's

Records), கி.பி. 1858-க்குப் பிறபட்ட பேரரசுப் பதிவுகளும (Crown Records) தனிததனியே பிரித்து வைததுப் பாதுகாககப் பெறறன. வணிகக் குழுமப் பதிவுகள, பேரரசுப் பதிவுகள எனக குறிக்கப் பெற றவை பினனாச'சிப்பாய்க கலகததிறகு முநதிய பதிவுகள' (Pre-Mutiny Records) எனவும், 'சிப்பாயக கல கத்திறகுப் பிறபட்ட பதிவுகள' (Post-Mutiny Records) எனவும பெயா மாறறம பெறறன தேசிய ஆவணக காப்பகததில சிபபாயக கலகததிறகு முநதிய பதிவுகள உணவுத துறை, உளதுறை, சட்டத் துறை, அயல உறவுத துறை, பொதுப பணிததுறை முதலான தலைபபுகளிலும, சிபபாயக கலகததிறகுப பிநதிய பதிவுகள வேளாணமை, வணிகம, தகவல தொடர்பு, பாதுகாப்பு, கலவி முதலான தலைபபுகளிலும பகுககப பெற்றுளளன. ஆஙகிலேய வணிகக் குழுமப பதிவுகள, ஆஙகிலேய இநதிய அரசின பதிவுகள மட்டுமலலாது, 1947-இல ஆஙகிலேயரின நிலையஙகள (Residents), முகவாகள (Agencies) ஆட்சியும முடிவிறகு வநததால் அவாகளின 'பதிவுகளும இஙகே பாதுகாககப பெற்றன. விடுதலைக்குப பின இந்திய அரசின துறைகளின கடிதஙகள, பதிவுகள ஆகியன இஙகே பாதுகாககப பெறறு வருகினறன. இநதிய விடுதலை இயககத தலைவாகள, சமூகச சீர திருததவாதிகள முதலானோரின் தனிபபட்ட கடிதஙகள, ஆவணஙகளும இஙகே பாதுகாககப் பெறறுள ளன. இவறறைத தனியாா ஆவணஙகள (Private Papers or Records) எனறு கூறுகினறனா.

பதிவுகள அறிவியல முறையில பாதுகாககப்படு கினறன. இஙகுக கைக கொளளப பெறும முறைகள இநதியாவிலேயே சிறநதவை எனறு கூறபபெறுகிறது. பறவைகள, பூசசிகள உட்புகுநது ஆவணஙகளுககுச் சேதம விளைததிடா வகையில் சன்னலகள வலையினால் மூடப பெறறுச சூரிய வெளிசசம பதிவுகளின மேல பட்டுக கேடு விளைநது விடாமல அவறறின மேல திரைகளும போடப பெறறுளளன.

தொடககக காலஙகளில சிபான துணி கொணடு, சபபானியத தாள கொணடு கையால பதிவுகளைச செபபனிடுப பழுது பாாததனர். அறிவியல வளாச்சியினால உருவாகியுளள பாதுகாபபு முறைகள் அனைததும இஙகுப் பினபறறப் பெறுகினறன.

காறறுத் துடைபபான கொணடுப் பதிவுகளின மீது படிநதுளள தூசு துடைக்கபபடுகின்றது. மின கருவி வாயிலாக மடிப்புகள நேராக்கப்படுகினறன. காற்று நீக்கப் பெற்ற அறையுள் பதிவுகளை வைதது, வேதியியல பொருளகளைக கொணடு பதிவுகளுககுச் சேதம விளைததிடாது பூச்சிகள முதலான தாளகளைச சேதபபடுத்தும உயிரினங்கள அழிககப் பெறுகின்றன கணணாடி இழை போன்ற செல்லூலசுத் தாள ஒட்டும் இலாமினேசன முறையும் இப் பாதுகாபபு முறையில அடஙகும.

ஆவணக் காபபுப பயிறசியும் இஙகே அளிக்கப படுகிறது ஆவணஙகளைப் பாதுகாப்பது பற்றிய பயிறசி அளித்துச சானறிதழ்கள வழங்கலும நடைபெறுகினறது. இதன வாயிலாகப பயிற்சி பெற்றவாகள் இநதிய மாநிலஙகளில உளள ஆவணக காப்பகஙகளில, தனியார் ஆவணக் காபபகஙகளில ஆவணஙகளைத் தகக முறையில பாதுகாககும பணியினை மேறகொளளலாம.

இநதிய விடுதலைக்குப பின் 1947-இல 'இநதியப பதிவுகள அலுவலகம' எனற பெயா மாறறபபட்டு, தேசிய ஆவணக காபபகம (National Archives) எனக கூறப்படுகிறது. ந.க.ம.

**தேசியக் கொடிகள்:** கொடி அது துணியாயினும பொதுவாக பயன்பாட்டில உளள துணியை விட மிகுந்த மதிபபையும் மரியாதையையும பெறுகிறது. எநதக் கொடியாக இருநதாலும் அது ஓா அடையாளச சினனமாகவும, ஓர் எணணததை எதிரொலிப்பதாகவும, குறிபபிட்ட நோக்கததிற்காக உணடாககப்பட்டதாகவும, உறுப்பினர்களின ஒற்றுமையை நிலை நாட்டுவதாகவும், இருககும

இத்தகைய கொடிகள இனறு ஒவ்வொரு நாடுகளுக்கும் உணடு. அத்தகைய கொடிகள அநதந்த நாட்டின 'தேசியக கொடிகள' எனறு கூறபபடும. தேசியக் கொடி அந்நாட்டின் பணபுகளையும், கொளகைகளையும், கோட்பாடுகளையும், நிலவளஙகளையும, மணவளஙகளையும், அரசியல நோக்கஙகளையும தெரிவிக்கும் வண்ணம அமைக்கப்படும் தேசியக கொடி ஒரு நாட்டு மக்களின ஒற்றுமையைக் காட்டும்; நாட்டின விடுதலைக்காகப் பாடுபட்ட தலைவர்களின வரலாறறை நினைவுப்படுத்தும்; நாடு உயர்ந்தாலும் அல்லது தாழநதாலும், துன்பத்திலும் அல்லது இனபததிலும பஙகு கொள்ளும். எனவே தான மக்களிடையே எப்பொழுதும தேசிய எணணததை நினைவுபபடுத்த வேணடி,அரசுக் கோட்டையிலும, அரசு அலுவலகங்களிலும, கலவிக்கூடஙகளிலும, அரசு ஊர்திகளிலும, அரசு சாாபுள்ள மாநாடு போனற கூட்டஙகளிலும தேசியக் கொடியினைப் பயன்படுததி வருகினறனர்.

கொடிகளைச் சமுதாய வாழ்வின் சிறப்புச் சின்னமாகக் கருதினா எனச் சானறுகள் கூறுகினறன. விவிலிய நூலின பழைய ஏறபாட்டிலும் கொடிகள பயன்படுத்தப்பட்டதைக் குறிப்பிட்டுளளனா.

ஒருசில நாடுகள வலிமையையும், அஞ்சாமை யையும காட்டுவதறகாகச சிஙகததையும், சக்தியை யும, வேகத்தையும வெளிப்படுத்துவதறகாகககழுகை யையும், உணமையையும் தூயமையையும காட்டுவ தறகாக அன்னததையும, அழகையும வளத்தையும காட்டுவதற்காக மயிலையும தஙகள சினனஙகளா கப பயனபடுத்தின. உரோம நாடு, குதிரை வரையப பட்ட சதுரக கொடியையும, இங்கிலாந்து, மூனறு தஙகச சிங்கங்கள அடஙகிய கொடியையும் உபயோ கிததன. இநத மூனறு சிஙகஙகளும முறையே இஙகி லாநது, இசுகாட்லாநது, அயாலாநது ஆகிய நாடு களின் கூட்டமைபபான ஆஙகிலத் தீவுகளைக குறிக் கும பினனர், அவை 'ஐக்கியப பேரரசாக' மாறுதல அடைநத போது, அமமூனறு நாடுகளில கூடடமைபபு மூனறு சிலுவைகளைச சின்னமாகப பெற்றது. இசு லாம் சமயததினா பிறைச சந்திரனைச் சினனமாக ஏற்றுக்கொணடனா.

**தேசியக்கொடி வகைகள்:** கொடிகள பொதுவாக அரசர் கொடி, இராணுவக் கொடி, தேசியக்கொடி என மூனறாகப் பிரிககபபட்டன. அரசன அல்லது அரசனின் மேலாளர் ஒருவன வீறறிருக்கும்போது பறக்கவிடுவது அரசா கொடியாகவும, படைவீரர் களால் உயர்த்தப்படுவது இராணுவக் கொடியாக வும், அரசனின் ஆணைச செல்லத்தக்க வகையில வேணடும் இடஙகளில ஏற்றப்படுவது தேசியக் கொடி யாகவும அமைநதன. இம்முறையை இன்றும சில நாடுகள பினபறறுகினறன. மற்றும் சில நாடுகள தேசியககொடி, கப்பல படைககொடி, வாணிகக கப் பல கொடி, இராணுவப போாக் கொடி ஆகிய நான கையும தேசியக கொடி வரிசையிலேயே பெறறுள ளன.

இடைக் காலத்தில முடியாட்சியும, சமயாட்சியும் உசச நிலையில் இருந்தபோது, அவை தேசியககொடி களைத் தனித் தனியாகவே பெறறிருநதன. இடைக் காலத்துப போாவீராகள தேசியக கொடிச சினனங களை அணிந்துதான போாக்களம புகுவார்கள். படடி மனறம, வழக்காடு மனறம், விளையாட்டு அரஙகம ஆகிய இடஙகளில் கூட கொடிகளைப் பறககவிடு வாாகள. நிலவியல் பகுதிகளை ஆராயச சென்ற பனனாட்டு மாலுமிகளும தததம கப்பலகளில அவா தம் நாட்டின தேசியக கொடியைப் பறககவிட்டே சென்றாாகள. வேறுசில நாடுகளில் தேசியக கொடி கள் அரசர்களுக்கும், அரசியர்களுககும, அலுவலக அதிகாரிகளுககும, நாட்டின பெருந்தலைவாகளுக கும், ஐககிய அமைப்புகளுக்கும் திருச்சபைகளுக்கும் தனிததனியாக அமைந்துள்ளன. கப்பலகளில் பொது வாக அனைத்து நாடுகளும் மஞசளகொடி, சிவப்புக கொடி, வெள்ளைக்கொடி ஆகியவற்றை நேரததிறகு ஏற்றவாறு பயனபடுத்துகின்றன. பயனபடுத்தும் இடததிறகும, பயன்படுத்துவோரின தகுதிககும ஏறற வாறு தேசியக் கொடிகளின அளவுகளும மாறுபடுகின றன. எடுத்துக்காட்டாக ஓர் எளிய சிபபாய முதற கொணடு, படைத்தளபதி வரை காலநடையாக எடுததுச் செலல வேணடுமானால அககொடி 4'4"×5'6"அளவில இருக்கவேணடும், இயநதிர வாக னஙகளில பொறுததிச் செலல அககொடி அளவில இருக்கலாம. அனைதது நாடுகளுககும வெளளைக் கொடி எனபது சமாதானத்தைக குறிக்கும

**தேசியக்கொடியின பயன்கள்.** தேசியக கொடியே நாட்டின சினனமாகும. நாட்டின குடிமககளும் அணடை நாட்டு மககளும அககொடிககு வேணடிய மரியாதையை இயலபாகவே அளிபபார்கள ஒரு தேசியக கொடியை அவமதிததால் அநநாடடையே அவமதிததது போலாகும. தேசியக கொடி மகக ளிடையே ஒறறுமையையும, பறறையும வளாக கும் போாக்களததில பயனபடுததபபடும தேசியக கொடி இராணுவ வீராகளுககும் வேணடிய மன வலி மையையும், பாதுகாப்பையும தரும அககொடிகளில தீடடியிருககும வணணஙகளும, எணணஙகளும வீரர் களின உடல வலிமையையும மன வலிமையையும ஒரு முனைபபடுததும. அாசு அலுவலகஙகளிலும், கலலூாி களிலும், பலகலைக கழகக் கட்டடம், மருத்துவ மனைகள ஆகியவற்றிலும், தேசியக கொடியைப பறக்கவிட்டால் மககளிடையே நாட்டின மீது அன பும மரியாதையும தாமாகவே எழும். அதை விடுதது வியாபார விளமபரஙகளில் எககாரணம கொணடும தேசியக் கொடியைப பயனபடுததக கூடாது போரின போது எநத நாட்டின கொடி நாடடபபடுகிறதோ அநத நாடு அநதப்பகுதியைக் கைப்பறறிவிடடதாகப பொருளபடும. போர்புரிநது கொணடிருக்கிற ஏனைய வீரர்களுககு இது சரியான அடையாளமாகப பயன படுகிறது ஒரு கபபலில பறக்கினற கொடியைத தொலைவிலிருநதே பாாதது, அது இனன நாட்டைச் சேர்ந்தது எனசசொல்லிவிட முடியும. வாணிகக் கப பலகள இரணடு நடுக்கடலிலே சநதிகக நேர்நதால், உடனே அககப்பலகள தததம் நாட்டுத தேசியக கொடியை மேலே உயாததி மரியாதையைச் செலுதத தும. ஒரு கப்பலின கமபததில எநத நிலையில ஒரு தேசியக் கொடியைப்பறககவிட்டாலும், அணடைக் கபபல் மாலுமிகளோ அலலது அருகில உளள துறை முக அதிகாரிகளோ உடனே அககபபலின நிலைமை யைப புரிநது கொணடு, அருகிற சென்று காப்பாறற முறபடுவர்.

**தேசியக்கொடியைப் பயன்படுத்தும் முறை** தேசியக் கொடியை மழை பெய்யுமபோதோ பனி பெயயும போதோ பலதத்காற்று வீசும்போதோ பறக்கவிடக் கூடாது. பொதுவாக இரவு நேரஙகளிலும் பறக்க

விடக்கூடாது. மாறாகப் பொதுக் கூட்டங்கள, விளை யாட்டு நிகழ்ச்சிகள, சிறப்பு மரியாதைக்குரியவர்கள் கலந்து கொள்ளுகிற அவைகள் ஆகியன பாதுகாப் பான கட்டடங்களுக்குள் மின் விளக்குகளுடன் ஏற் பாடு செய்யப்பட்டிருக்குமேயானால் தேசியக் கொடி களை எல்லா தட்பவெப்ப நிலையிலும் பறக்கவிட லாம். போர்க் காலங்களில் கோட்டைகளிலும், போர்க் கப்பல்களிலும், போர்ப்பாசறைகளிலும் இரவில் கூட பறகக விடலாம்.

கொடியைப் பறக்கவிடும்போது அந்நிகழ்ச்சியில கலந்து கொள்ளுகிற அனைவரும எழுநது கால் சேர நினறு தேசியக் கொடியின பக்கமாக முகங்காட்டி, வணக்கத்தைத் தெரிவிக்க வேண்டும். சீருடையில உள்ளவாகள் இராணுவ முறையில் வணஙக வேண் டும்; மற்றவர்கள் தலையில் குல்லாய் போனறவற்றை அணிந்திருந்தால் அதைத் தம் வலது கையால் எடுத்து, இடதுகையில் பிடித்துக்கொணடு, வலக் கையை இதயத்திறகு மேலே கொணடுவந்து வணங்க வேண்டும்; தேசியக் கொடி அரைக் கமபததில பறந்தால் அது நாட்டு மக்களுககு ஏறபட்டுவிட்ட ஓர் இழப்பை அறிவிக்கும். கொடியைக் கீழே தொஙக விட்டால் தம்மை எதிர்ததவரிடம் சரண அடைந்து விட்டதாகப் பொருள்.

வாணிக விளம்பரஙகளுக்காகத் தேசியக கொடி யைத் தயாரிக்கக்கூடாது; கைத்துணடு, பனியன், பெட்டி போன்ற பயன்படு பொருளகளில் கொடியை வரையககூடாது; ஒரு தேசியக் கொடி பயன்படாத வகையில் பழுதடைந்திருந்தால அதைத் தனிபட்ட முறையில் கொளுத்திவிட வேண்டும். அமங்கல நிகழ்ச்சிகளின் அடையாளமாகக் கொடிகளைப் பறக்க விடும் போது, முதலில கொடிக் கம்பத்தின் உச்சி வரைக் கொடியை ஏற்றிப் பினனர் அரைக்கம்பத்தில் இறக்கிக் கட்டிப் பறக்கவிட வேண்டும். மீணடும் மாலையில கொடியை இறக்கும்போது கூட அதை உச்சியில் ஏற்றிப் பினனரே இறக்க வேணடும்.

கம்பளி, பட்டு போன்ற பொருள்களே தேசிய கொடிகளை அமைக்கப் பயனபடுகினறன. மலிவாகக் கிடைப்பதால் பருத்தியும பல நாடுகளில் பயன படுகிறது. உறுதியாகவும், நேர்த்திமிகு வண்ணத்தைக் கொடுப்பதற்காகவும் நைலான நூலையும் பயன் படுத்துகின்றனர். தேசியக் கொடிகள பெரும் பாலும் செவவக வடிவத்தில் பளபளப்பான வணணங களில், சின்னங்களும் பொறிக்கபபட்டிருப்பதோடு, அவ்வண்ணங்களுககும் சின்னங்களுக்கும் பொருள் விளக்கங்களும் தரப்பட்டிருக்கும். தேசியக கொடி களைத் தயாரிக்கும முறை அவற்றை வணங்கும் முறை முதலியவற்றைப் பற்றி ஒவ்வோர் அரசும விரி வான விதிகளை வகுத்துள்ளன.

**கொடிக்கான விதிமுறைகள்:** ஒவ்வொரு நாடும் தனித்தனியாகத் தேசியக் கொடிககான விதிகளை வகுத்துள்ளன. எனினும் பொதுவான விதிகளைக் கீழே காணலாம்.

1. ஒரு குறிப்பிட்ட நாட்டில அந்நாட்டின் தேசி யக் கொடியுடன் பிற நாட்டுக் கொடிகளையும் பறக்க விட்டால், அக்கொடிகளை அந்நாட்டுக் கொடியின் இடப்புறத்திலேயே பறககவிட வேணடும்.

2. ஒரு குறிப்பிட்ட நாட்டில அந்நாட்டின் தேசி யக் கொடியைப் பிற நாட்டுக் கொடிகளுடன ஏற்றி னால் முதலில் அந்த நாட்டின தேசியக் கொடியை உயர்த்திக் கடைசியில் இறக்கவேணடும். பிற நாட்டுக் கொடிகள் பறக்கும்போது அநத நாட்டுக் கொடியை எக்காரணத்தைக் கொணடும் இறக்கக் கூடாது.

3. ஊர்வலத்தினபோது ஊர்வலத்தின் முனனால் தேசியக் கொடியை வலத் தோளில் உயர்த்திப் பிடித் துச செல்ல வேணடும்.

4. பொதுக்கூட்டம், கருத்தரங்கு, விழாக் காலம் போனறவறறில தலைவர் அல்லது பேச்சாளருக்குப் பினனால் அவருடைய தலைககு மேல் மற்ற அலங காரங்களுக்கும் மேலாக தேசியக் கொடியைத் தொங்கவிட வேணடும்.

5. தேசியக் கொடியில் எதையும் எழுதக் கூடாது.

6. கிழிந்துபோன தேசியக் கொடியைக் குபபைத் தொட்டியில போடவோ, அழுக்குத் துடைக்கும் கந்தையாகப் பயனபடுத்தவோ கூடாது.

7. புடவையின் கரை, மேசை விரிப்பு, சாளரத்திரை, வாணிகப் பொருட்களின் விளமபரக் குறி போன்ற வகைகளில் தேசியக் கொடியைப் பயன்படுத்தக் கூடாது.

8. தலைமைச் செயலகம், உயாநீதி மன்றம், மாவட்ட ஆட்சியா அலுவலகம், காவல் துறை அலு வலகம், மாநாகராட்சி மற்றும் நகராட்சி அலுவல கங்கள், ஊராட்சி ஒற்றிய மற்றும வட்டாட்சியர் அலுவலகஙகள, சிறைச் சாலைகள், மத்திய மாநில அரசுக் கட்டடஙகள ஆகியவற்றில் தேசியக் கொடி யைப் பறக்கவிட வேணடும்.

9. எல்லைப் புறங்களில குறிப்பிட்ட இடங்களில் தேசியக கொடியைப் பறக்கவிட வேணடும.

10. மத்திய மாநில அமைச்சர்கள, துணை அமைச்சர்கள, நாடாளுமனறம், சட்ட மன்றம் ஆகிய அவைகளின் தலைவர்கள் குடியரசுத் தலைவர், முத லமைச்சர், அல்லது முடியாட்சியாக இருக்குமே யானால் அரசர் ஆகியோருடைய வீடுகளிலும் அவர் கள் பயனபடுத்தும் வாகனங்களிலும் தேசியக் கொடி யைப் பறக்கவிட வேணடும்.

11. அயல் நாடுகளிலுள்ள தூதுவர்களின் அலுவலகங்களிலும் அவர்களுடைய வீடுகளிலும் அவர்கள் செல்லும் வாகனங்களிலும் கொடியைப் பறக்க விட வேண்டும்.

12. மக்களாட்சியைப் பின்பற்றுகிற நாடாக இருக்குமேயானால் அந்நாட்டின் விடுதலை நாள், குடியரசு நாள், தேசிய வாரம், நாட்டின் தந்தை பிறந்த நாள் போன்ற தேசியத் திருவிழா நாள்களிலும் எல லோரும் அவரவர்களுடைய இல்லங்களிலும், அரசு பொது நிறுவனங்களிலும் தேசியக்கொடியைப் பறக்க விடலாம்.

13. சூரிய உதய முதல் அது மறையும் வரையில் தான் தேசியக் கொடியைப் பறக்க விட வேண்டும்.

14. தேசியக் கொடியைப் பறக்க விடும்போது, அக்கொடியின் அமர்வு நிலைப்படியே பறக்க விட வேண்டும். அமர்வு நிலையை மாற்றிப் பறக்க விட்டால் நாட்டை இழிவுப் படுத்துவதாகும்.

15. நாட்டுப் பெருந்தலைவரின் மறைவு போன்ற தேசிய துக்க நாள்களில் அந்நாட்டு மக்களின் கவனத்தில் அவரின் சேவைகளையும் தியாகத்தையும் நினைவுப் படுத்தவும், துக்கத்தை அறிவிக்கவும் கொடிமரத்தின் பாதியில் தேசியக் கொடியைப் பறக்க விடுதல் வேண்டும். பொன்.சு.

**தேசிய கல்வி ஆராய்ச்சி பயிற்சி நிறுவனம்**, 1961-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல் தேதி மத்திய அரசினால் நிறுவப்பட்டது. இது மத்திய அரசின் நிதிகொண்டு தன்னுரிமை பெற்றுச் செயற்படுகிறது. மனித வள மேம்பாட்டுத் துறை (Ministry of Human Resource Development), பள்ளிக் கல்வி மேலும் தொடக்க நிலையிலுள்ள ஆசிரியர் கல்வி ஆகிய துறைகளுக்குத் தேவைப்படும் ஆலோசனையை இந்நிறுவனம் வழங்கிவருகிறது. மனித வள மேம்பாட்டுத் துறை அமைச்சர் இதன் தலைவராவார்.

**முதன்மைப் பணிகள்**: தேசிய கல்வி ஆராய்ச்சி, பயிற்சி நிறுவத்தின் முதன்மைப் பணிகளுள் சில பின்வருவன: 1) கலைத்திட்டம், கற்பித்தலுக்கான துணைக் கருவிகள், கற்றல் கருவிகள, கற்றல் பொருளகள் ஆகியன வற்றைப் படைத்தலும் நெறிப்படுத்துதலும், 2) ஆசிரியர்களுக்கும் ஆசிரிய-பயிற்சியாளர்களுக்கும் மேலும் பிற பணியாளர்களுக்கும் தேவைப்படும் பணி முன பயிற்சியையும் பணியிடைப் பயிற்சியையும் வழங்குதல், 3) கல்வி ஆராய்ச்சியை நடத்துவதும் ஊக்குவித்தலும், 4) செம்மைப்படுத்தப்பட்ட கல்வி நடைமுறைகளையும் யுக்திகளையும் கல்வி ஆராய்ச்சி முடிவுகளையும் பரப்புதல், 5) பள்ளிக் கல்வி சார்ந்த அனைத்துக் கருத்துகளுக்கும் செய்திகளுக்கும் ஒருமைய இல்லமாகச் செயற்படுதல்.

**வடிவமைப்பு: கிளை அமைப்புகள்**: இதில் ஆறு கிளை அமைப்புகள் உள்ளன. அவையாவன: 1) தேசிய கல்வி நிலையம் (National Institute of Education), 2) மத்திய கல்வி தொழில்நுட்ப நிறுவனம் (Central Institute of Educational Technology), 3) ஆசுமீர் போபால், புவனேசுவரர், மைசூர் ஆகிய இடங்களில் அமைந்துளள நான்கு வட்டாரக் கல்வியியல் கல்லூரிகள்.

**தேசிய கல்வி நிலையம்**: இதன் குறிப்பிடத்தக்க துறைகள்: 1) அறிவியல் மற்றும் கணிதக் கல்வித்துறை (Department of Science and Mathematics Education), 2) கல்வியைத் தொழில் மையமாக்கும் துறை (Vocationalisation of Education Unit), 3) கலவி உள வியல், வழிகாட்டுதல் மற்றும் அறிவுரை வழங்கும் துறை (Educational Psychology, Guidance and Counselling), 4) சமூகவியல் கலவி மற்றும் உயர் மனிதப் பணபுப் பயிற்சித் துறைகள் (Department of Social Science and Humanities), 5) அளவீடு, மதிப்பீடு மற்றும் புள்ளிவிவர ஆய்வுத்துறை (Department of Measurement, Evaluation and Data Processing), 6) ஆசிரியர் கல்வி, சமூகக கலவி மற்றும் விரிவுப் பணித்துறை (Department of Teacher Education, Social Education and Extension Services), 7) முன் தொடக்கக் கல்வி மற்றும் தொடக்கக் கல்விததுறை (Department of Pre-school and Elementary Education), 8) நூலகம், ஆயக்கட்டு மற்றும் செய்தித் துறை (Library and Department of Documentation and Information), 9) களப்பணிகள் மற்றும் இணைப்புத்துறை (Department of Field Services and Coordination), 10) கருத்துப்பட்டறைப் பிரிவு (Workshop Section), 11) பத்திரிகைத்துறை (Journal Cell).

**வட்டாரக் கல்லூரிகள்**: மேற்கூறப்பட்ட நானகு வட்டாரக் கல்வியியல் கல்லூரிகள் நானகு ஆண்டு ஆசிரியர் பயிற்சியை வழங்குவதோடு ஓராணடு இள நிலை மற்றும் முதுநிலை கலவியியல் பட்டஙகளுக்கான கல்வியையும வழங்குகின்றன. புவனேசுவரிலும் மைசூரிலுமுளள கல்லூரிகள் இரண்டும் எம்.எசுசி.எட். (M.Sc.Ed.) பட்டக் கல்வியையும் வழங்கி வருகின்றன. மேலும் டாக்டர் பட்டத்திறகான ஆராய்ச்சிவழி அமைந்த பயிறசிக்கும் வாயப்புகள உள்ளன. பல்லாண்டுகளாகப் பயிற்சி பெறாத ஆசிரியர்களின் பெருந்தேக்கத்தைப் போக்குவதற்காகக் கோடைப்பளளியும் அஞ்சல்வழிப் பயிற்சியும் (Summer cum Correspondence Course) நடத்தப்படுகிறது. இக் கல்லூரிகள, தாம் அமைந்துள்ள வட்டாரஙகளிலுளள மாநில அரசுகளோடு இணைந்து மேம்பாட்டிற்கான முயற்சிகளை மேறகொள்ளுகினறன.

**கல்வித் தொழில் நுட்பவியல்:** தேசிய கல்வி ஆராய்ச்சி-பயிற்சி நிறுவனத்தின் கல்வி தொழில்நுட்ப மையமானது (Centre for Educational Technology) 1973-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. இரண்டு ஆண்டுகளுக்கு முன் இம் மையமானது கற்பித்தலுக்கான துணைக் கருவிகளின் துறையோடு இணைந்து, கல்வித் தொழில் நுட்பத்திற்கான மைய நிறுவனம் (Central Institute of Educational Technology) என்ற அமைப்பாக உருவாக்கப்பட்டுள்ளது. இந் நிறுவனம் விரைவாக வளர்ந்து வருகிறது இது சுவையாகக் கற்பதற்குத் தேவையான ஒளிப்பதிவு செய்யப்பட்ட நாடாக்கள், ஒளியும் ஒலியும் பதிவு செய்யப்பட்ட நாடாக்கள்,பலகேள்விகாட்சிப்பொருள்கள் ஆகியவற்றைத் தயாரித்து வருகிறது. மத்திய திரைப்பட நூலகத்தில் மட்டும் 8,000, 16 எம் எம். திரைப்படங்கள் பள்ளிகளுக்குக் கடனாக வழங்குவதற்காக இருக்கின்றன. உள்வரை அமைப்பைப் (Insat) பயன்படுத்திப் பள்ளிகளுக்கான தொலைக்காட்சிக் கல்வி ஏற்பாடு செய்த பாங்கிலிருந்து இதனுடைய சாதனைத்திறன் தெரிகிறது.

**மாநிலங்களோடு பிணைகள்.** தேசிய கல்வி ஆராய்ச்சி-பயிற்சி நிறுவனம் மாநிலக் கல்வித் துறைகளோடும் பல்கலைக் கழகங்களோடும் பள்ளிக் கல்வி மேம்பாட்டிற்காக இணைந்து செயற்படுகிறது. இந்நிறுவனத்தின் கள ஆலோசகர்கள்(Field Advisers) 18 மாநிலங்களில் பணிபுரிந்துவருகிறார்கள். மாநிலப் பேராளர்கள் இந்நிறுவனத்தின் பல குழுக்களிலும் கள ஆலோசகர்களின் அலுவலகங்களைச் சார்ந்த பல வேறு ஆலோசனைக் குழுக்களிலும் பங்கேற்று இணைந்து பணிபுரிகிறார்கள். பள்ளி ஆசிரியர்கள் தொடக்கப்பள்ளி ஆசிரிய-பயிற்சியாளர்கள் ஆகியோரின் பணியிடைப்பயிற்சிக்காகத் தொடர்கல்வி மையங்களை (Centres for Continuing Education)நாடு முழுவதும் இந் நிறுவனம் மாநிலக் கல்வித்துறைகளின் துணைகொண்டு நடத்திவருகிறது. இந்நிறுவனம் மாநிலங்களிலுள்ள கல்வி ஆராய்ச்சி-பயிற்சி நிறுவனங்களுடன் நெருக்கமான உறவுகொண்டு தன் பணியைச் செய்து முடிக்கிறது.

**கல்வியியல் ஆராய்ச்சி:** தேசிய அளவில் இது மிகப் பெரிய கல்வி ஆராய்ச்சி நிறுவனமாகும். இதனுடைய கிளை நிறுவனங்களும் இதனுடைய எல்லாத் துறைகளும் ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளன. நாட்டினுடைய இரண்டாம், மூன்றாம், நான்காம் தேசிய கல்வி அளவாய்வுகளை(National Educational Surveys) நடத்தி அவற்றிற்குரிய அறிக்கைகளை வெளியிட்டுள்ளது.இந்நிறுவனம் கல்வி உளவியல் அளவீடுகள் துறையில் சில பல ஆராய்ச்சிக் கருவிகளையும் உளவியல் சோதனைகளையும் தயாரித்துள்ளது. மேலும் கல்வி ஆராய்ச்சி மற்றும் புதிய பரிசோதனைகள் குழு(Educational Research and Innovations Committee) ஒன்றினைக் கொண்டு ஆராய்ச்சியாளர்களின் புதிய திட்டங்களுக்கும் பரிசோதனை முயற்சிகளுக்கும் நிதி வழங்கி வருவதோடு கல்வி ஆராய்ச்சிகளுக்காகப் பருவ மாநாடுகளையும் கூட்டுகிறது. கல்விக் கழகங்களும் தொழிற் கழகங்களும் தமமுடைய ஆண்டு மாநாடுகளையும் இதழ்களையும் நடத்தப் பொருளுதவி அளித்து இந்நிறுவனம் ஆதரிக்கிறது. கடந்த காலங்களில் நாட்டினுடைய கல்விக் கொள்கை உருவாக்குவதற்குத் தேவையான ஆராய்ச்சிகளைச் செய்யும் பொறுப்பினை இந்நிறுவனம் ஏற்றுள்ளது குறிப்பிடத்தக்கது இந்தியக் கல்விக் குழுவின் (Indian Education Commission) 1964-66 அறிக்கைக்குத் தேவையான ஆராய்ச்சிகளை இந்நிறுவனமே செய்து முடித்தது இந்நிறுவனம் 1975-ஆம் ஆண்டிலிருந்து தொடங்கி நாடு முழுவதும் 10+2+3 என்ற ஒரே அமைப்பு வருவதற்கு வேண்டிய ஆராய்ச்சி முயற்சிகளில் ஈடுபட்டுப் பல நல்ல அறிக்கைகளைத் தந்துள்ளது அதுபோலவே 1986-ஆம் ஆண்டின் புதிய தேசிய கல்விக் கொள்கையை உருவாக்குவதற்குத் தேவையான சிறந்த ஆராய்ச்சிகளை முடித்து நாட்டின் கல்வியாளர்களையும் ஆயத்தப்படுத்தியுள்ளது.

**வளர்ச்சிக்கான கல்வி:** பாங்காக்கிலுள்ள ஐக்கிய நாட்டுக்கல்வி சமூகப் பண்பாட்டு (UNESCO) நிறுவனத்தின் வளர்ச்சிக்கான புதிய கல்விப் பரிசோதக ஆசிய திட்டத்தில் (Asian Programme of Educational Innovations and Development) இந்நிறுவனமானது ஒரு துணை மையமாக (Associate Centre) ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. இந்நாட்டில் கல்விப் பரிசோதனைகளுக்கான தேசிய வளர்ச்சிக் குழுவாக (National Development Group for Educational Innovations) இந்நிறுவனம் இயங்கி வருகிறது பிறநாட்டின் கல்வியாளர்கள் பயிற்சிக்காகவும், சில சிறப்பு அனுபவங்கள் பெறுவதற்காகவும் இதனுடன் தொடர்பு கொள்கிறார்கள்.

**பரிசோதகத் திட்டங்கள்:** யூனிசெப்பு (UNICEF) நிறுவனத்தின் ஆதரவு பெற்றுக் கீழ்க்காணும் பல வேறு பரிசோதகத் திட்டங்களை நடைமுறைப்படுத்தி வருகிறது. அத்திட்டங்களாவன: 1) முன் குழந்தைப் பருவக்கல்வி(Early Childhood Education), 2) தொடக்கக் கல்விக் கலைத்திட்டத்தைப் புதுப்பித்தல் (Primary Education Curriculum Renewal), 3) சத்துணவும் உடல்நலக் கல்வியும் சுற்றுப்புறத் துப்புரவும் (Nutrition, Health Education and Environmental Sanitation), 4) சமூகக் கல்வியும் பங்கேற்பிற்குமான வளர்ச்சி நடவடிக்கை (Developmental Action For Community Education and Participation),5)தொடக்

கக் கல்விக்கான பரவலான நுழைவுரிமை (Comprehensive Access for Primary Education).

**மக்கள் தொகைக் கல்வி:** ஐக்கிய நாடுகளின் குடும்ப நல நிறுவனத்தின் (UNIFPA) ஆதரவுடன் செயற்படும் மக்கள்தொகைக் கல்வித் திட்டத்தை (Population Education Programme) இந்தியா முழுவதும் நடைமுறைப்படுத்த வழிகாட்டுவதோடு மேலாண்மையும் செய்து வருகிறது.

**வெளியீடுகள்:** இந் நிறுவனமானது ஆண்டிற்கு ஏறக்குறைய 250 வெளியீடுகளை வெளியிடுகிறது. இவற்றுள் சிறப்பாகக் குறிப்பிட வேண்டியவை மாணாக்கர்களுக்காகத் தயாரிக்கப்படும் பாடப் புத்தகங்கள், துணைப் புத்தகங்கள், பயிற்சி ஏடுகள் ஆகியவையாகும். ஆசிரியர்களுக்காகவும் ஆராய்ச்சியாளர்களுக்காகவும் வழிகாட்டிப் புத்தகங்களையும், மூலப் புத்தகங்களையும் ஒரு பொருள் பற்றிய தனிக் கட்டுரை நூல்களையும் பத்திரிகைகளையும் வெளியிடுகிறது. இந்தியக் கல்விமீள் பார்வை (Indian Educational Review) (காலாண்டு), இந்தியக் கல்விப் பத்திரிகை (இரு மாதத்திற்கு ஒருமுறை), பள்ளி அறிவியல் (காலாண்டு), தொடக்கப்பள்ளி ஆசிரியர்(காலாண்டு) ஆகியவை இவற்றின் ஒழுங்கான பருவ வெளியீடுகளாகும். மாதந்தோறும் செய்திமலர் ஒன்றினையும் இந் நிறுவனம் இல்லப் பத்திரிகையாக வெளியிடுகிறது. வட்டாரக் கல்வியியல் கல்லூரிகளும் தம்முடைய இதழ்களை வெளியிடுகின்றன.

**உதவிச் சம்பளம்:** ஆண்டிற்கு ஏறக்குறைய 750 மாணவர் படிப்பிற்கான உதவிச் சம்பளத்தை வழங்கத் தேசிய அளவில் திறமையைச் சோதித்துப் பார்க்கும் போட்டித் தேர்வுகள் (National Talent Test) இடைநிலை மாணவர்களுக்காக நடத்தப்படுகின்றன. இவ்வுதவிச்சம்பளம் பெறும் மாணவர்கள் அறிவியல், சமூக அறிவியல் அல்லது தொழிற்கல்வித் துறைகளில் டாக்டர் பட்டம் பெறுமளவிற்கு இவ்வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

**அறிவியல் மனப்பாங்கு:** அறிவியல் மனப்பாங்கை வளர்க்கும் முகத்தான் மாவட்ட, மாநில, தேசிய அளவில் அறிவியல் கண்காட்சிகளை ஏற்பாடு செய்கிறது. அறிவியல் பாடத்தைச் சுவைபட அமையத் தயாரித்துள்ளது. தொடக்க நிலைக்காகத் தயாரித்த பெட்டியில் 79 உருப்படிகள் உள்ளன. இவற்றைக் கொண்டு 180 நடவடிக்கைகளை நடத்தலாம். இடைநிலைக்கான பெட்டியிலுள்ள 132 உருப்படிகள் கொண்டு 150 செயல்முறைகளை முடிக்கலாம். நாட்டில் அறிவியல் வளர பத்தாண்டுப் பள்ளிப் பாடத்திட்டத்தில் அறிவியல் எல்லோருக்கும் கட்டாயப் பாடமாக்கப்பட்டுள்ளது.

**தேசிய ஒருமைப்பாடு:** தேசிய ஒருமைப்பாட்டுணர்வை வளர்க்கவேண்டி ஆண்டுதோறும் 12 மாணவ ஆசிரிய முகாம்களை ஏற்பாடு செய்கிறது. பல மொழி பேசும் பல மாநில உறுப்பினர்களிடையே பட்டி வாழ்க்கையின் விளைவாகத் தேசிய ஒருமைப்பாடு கூடுகிறது. கூடிப் பாடும் நிகழ்ச்சிகளை (Community Singing) ஆதரித்து, 15 இந்திய மொழிகளில் பாடல்கள் பதிவு செய்யப்பட்ட நாடாக்களைப் பள்ளிகளுக்கு வழங்கித் தேசிய உணர்வை வளர்த்து வருகிறது. இந்தியச் சுதந்திரப்போராட்டம் பள்ளிகளில் ஒழுங்காகக் கற்பிப்பதற்குப் பயன்படும்வகையில் சிறந்த நிகழ்ச்சிகளைச் சித்திரிக்கும் 89 படங்கள் கொண்ட பெரிய புத்தகம் ஒன்றினை (India's Struggle for Independence-Visuals and Documents) ஐந்தாண்டு ஆராய்ச்சியின் முடிவாக வெளியிட்டிருக்கிறது. தேசிய ஒருமைப்பாட்டுக் கண்ணோட்டத்தில் வரலாறு மற்றும் மொழிப் பாடப் புத்தகங்கள் மதிப்பீட்டாய்வு செய்யப்பட்டு ஒவ்வாத பகுதிகளும் புத்தகங்களும் திருத்தி எழுதப்பட்டுள்ளன.

**பள்ளிகளில் கணிப்பொறி:** இந்நிறுவனம் மத்திய அரசின் மின் அணுவியல் துறை (Dept. of Electronics), புதுதில்லியிலுள்ள இந்தியத் தொழில் நுட்ப நிறுவனம் ஆகியவற்றின் நெருக்கமான கூட்டுறவுடன் 'பள்ளிகளில் கணிப்பொறி' பற்றிய எழுத்தறிவு மற்றும் பிற பயிற்சி (Computer Literacy And Studies in School) என்ற முன்னோடித் திட்டத்தை 1984-85-இல் தொடங்கியது. இப்போது 750 மேல் நிலைப் பள்ளிகளில் இது நடைமுறையில் உள்ளது.

**புதிய மதிப்பீட்டு முறைகள்:** கல்வி மதிப்பீட்டுத் துறையில் முற்போக்கான சில திருத்தங்கள் வலியுறுத்தப்பட்டு வருகின்றன.அவற்றுள் புறவய மதிப்பீட்டுப் போக்குகள், அக மதிப்பீட்டு முறைகள், வினா வங்கிகள், பொதுத்தேர்வுகளில் சில மாற்றங்கள், தேர்வு மையத்திலேயே மத்திய மதிப்பீடு, கணிப்பொறி கொண்டு தேர்வு முடிவுகளை விரைவுபடுத்தி வெளியிடுதல், திறந்த புத்தகத் தேர்வு முறைகள் (Open-book Examinations), வாய்மொழித் தேர்வு முறைகள், செயல் முறைத்தேர்வுகள் ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

**ஆசிரியர்களுக்கான போட்டிகள்:** ஆண்டுதோறும் ஆசிரியர்களின் பரிசோதக ஆற்றல், படைப்பு ஆற்றல் ஆகியவைகளைத் தூண்டும் நோக்கோடு கட்டுரைப் போட்டிகளைத் தொடக்கப்பள்ளி, இடைநிலைப்பள்ளி ஆசிரியர்களுக்கும் தொடக்கநிலை, இடைநிலை ஆசிரியப் பயிற்சியாளர்களுக்கும் போட்டிகளை நடத்தி வருகிறது. சிறந்த கட்டுரைகள் தேர்ந்தெடுக்கப்பட்டு, அவ்வாசிரியர்களுக்குத் தலைக்கு உரூ. 1000 பரிசும் சான்றிதழும் வழங்குவ

தோடு அவர்கள அனைவரையும் இநநிறுவனத்திற்கு அழைத்து நலல கருத்தரஙகினை ஏற்பாடு செயவ தால, முற்போக்கான ஆசிரியாகள கூடுவதோடு அவர்தம் கட்டுரைகளையும இந்நிறுவன வுலலுநர் களோடு கலந்து பேசி ஆராய்கிறாாகள. இககட்டுரை களைததொகுபபாகப்புததகவடிவிலும்வெளியிடுகிறது.

ஆண்டுதோறும் முனதொடக்க, பாலவாடி, தொடக்கப்பளளி ஆசிரியர்களுககான தேசிய, மாநில அளவிலான விளையாட்டுப் பொமமைகள படைக்கும் போட்டியை 1979-80 முதல் நடத்தி வருகிறது. பொமமைகள் கற்பனையையும பண்பாட்டையும படைப்பாற்றலையும் வளமிக்க கருத்துகளையும வெளிப்படுத்துகின்றன. இததகைய சிறப்புமிகக பொம்மைகள் படைககும் ஆற்றலை ஆசிரியர்களிடம் வளர்த்துக் கற்றலுக்கும கறபித்தலுககும துணை செயயும வகையில இந்தச் சிறப்புப் போட்டியை இந் நிறுவனம நடத்திவருகிறது. கறறல ஆாவத்தைத தூணடி, கற்றல அனுபவத்தைப் பெருக்கும் இப் படைப்புகள காலந்தோறும நினறு நிலவும் இவற்றின கணகாட்சியையும் ஏற்பாடு செய்து, ஆசிரியப் பெரு மககளையும குழநதைச் செலவஙகளையும உறசாகப படுத்தி வருகிறது

**அனைவருக்கும் தொடக்கக் கல்வி:** பதினானகு வயதிறகுட்பட்ட அனைததுக் குழநதைகளுககும கட்டாய இலவசக் கலவி எனற கொளகையைச் செயற் படுத்துவதில் மத்திய அரசிற்கு உறுதுணையாகப பல திட்டஙகளைத் தீட்டித தநதுளளது எலலாக் குழந தைகளும் பளளியில் சேரவேணடும். சோநதவர் அனைவரும் தொடர்நது பயிலவேண்டும. பயினறவா அனைவரும நலல தோசசி பெறவேணடும எனற குறிக்கோளோடு செயறபட்டு வருகிறது தொடக்கக் கல்வியில் தேக்கம் வேணடாம் எனக் கருதி ஆணடு தோறும் அனைத்துக் குழநதைகளும உயாவகுபபிறகு அனுப்பப்பட வேணடுமெனற திட்டததை உருவாக் கியது. தொடக்கப்பளளிக் குழநதைகள குறைந்த அளவு கற்றல இலககுகளை நிறைவேற்ற வேணடும எனற (Minimum Learning Continuum) பொதுமைக் கருத்தைக் கொண்டுவந்தது. வகுப்புவாரியாகப் பாட முறையாக எட்டவேணடிய கற்றல் நிலைகளும் திற மைகளும் வரையறை செயயபபட்டன.

**பள்ளிக் கல்வியில்பணிஅனுபவம்:** பொதுககலவியில பணி அனுபவம்(Work Experience) எததுணை சிறநத இடத்தைப் பெற வேண்டும எனபதனை இநநிறு வனநதான் தெளிவுபடுத்தியது. இதனையொட்டி ஏட்டுக்கல்வி மட்டும் வழஙகப்பட்ட பள்ளிச் சூழ நிலையில பணி அனுபவம அறிமுகம் செய்யப்பட்டது. இநநிறுவனமானது 1986-ஆம் ஆணடின தேசியக கல்விக் கொள்கையையொட்டித் தீட்டிய கலைத திட்டக கட்டமைப்பில் பணி அனுபவக் கல்விக்குச் சிறபபான இடத்தை அளிததுளளது. அதனால குழந்தைகள் பணி செயயும் பாஙகினையும பணியின பெருமையையும் தெரிந்துகொள்ளக்கூடும்.

**மேல்நிலையில் தொழில்சார் கல்வி** மேலநிலைப் பளளிகளில தொழில்சார் கலவி (Vocationalized Education) பரவலாக ஏட்டுக் கலவிக்கு இணையாக வழங்கப்படவேணடும் என வற்புறுத்தி வருகிறது. கொளகையளவில் மாநிலஙகள் இக்கருததை ஏற்றுக் கொணடாலும் நடைமுறையில் எதிர்பார்தத அளவு முன்னேற்விலலை. ஏழாம ஐநதாணடுத திட்ட முடி வில மேலநிலையிலுளள மாணவர்களில நானகில ஒரு பஙகாவது தொழில்சார் கலவியைப் பெறவேண்டும எனபதுதான் நாட்டினுடைய இத்துறைக்கான இலக் காக உளளது. இனறைய நிலை என்னவெனறால் மேல்நிலைப பளளிகளில மொத்ததில 72,000 மாணாக்காகள தொழிற்கலவிப பிரிவில பயிறசி பெறுகினறனர். இது மேல்நிலையிலுளள மொதத மாணாக்கர் தொகையோடு ஒப்பிடுமபோது 2 5 விழுக்காடாகும்

**மாபெரும் பணியிடை ஆசிரியர் பயிற்சி.** புதிய தேசிய கலவிககொளகையைப் பளளிகளில சரிவர நடைமுறைப்படுததுவதறகுத தேவையான பணியிடை ஆசிரியர் பயிற்சித் திட்டததைப் பெருமளவில் தீட்டி 1985-86 கலவியாணடில ஐநது இலட்சம் பளளி ஆசிரி யர்களுககு 10 நாளகள பயிறசியளிகக மாபெரும் ஏறபாட்டினைச செயதது மீணடும் 1986-87 கலவி யாணடில இச்சாதனையை நிகழத்தியுள்ளது. இதனு டைய சிறப்புக் காரணி எனனவென்றால இப்பயிறசிக் காலத்தில, ஆசிரியர்களுக்காகத் தொலைககாட்சி நிறுவனத்தின் துணைககொணடு நாடோறும கல்வி நிகழச்சிகளைத் தொலைக்காட்சி மூலம் ஆஙகிலததி லும் 13 இந்திய மொழிகளிலும் வழஙகியதாகும், ஆசிய நாடுகளின் கலவி வரலாற்றில் இது ஒரு சிறப்பு நிகழ்ச்சியாகும்.

**புதிய தேசிய பாடத்திட்டம். பாடத்திட்டத்தின் கட்டமைப்பு:** தேசியக கல்விக் கொளகையின அடிப் படை கொணடு ஒரு தேசியபாடத் திட்டததின கட்ட மைப்பைத் (National Curricular Framework) தீட்டித் தந்துளளது இந்நிறுவனம் காசுமீரிலிருநது கனனியா குமரி வரையில இனி ஒரே தேசிய கலைத்திட்டம் பளளிகளில் நடைமுறையில் இருககும். இதனுடைய சிறப்புககூறுகள் பின வருவன: 1) அனைத்துக் குழந்தைகளும் கணிதம், அறிவியல், பணி அனுபவம, நனனெறிக்கலவி (Value Education), உடறகலவி ஆகியவற்றைப் பெறவேணடும எனபதாகும். 2) மாணாககர் அனைவருக்கும ஆண, பெண எனறு பால அடிப்படையில வேறுபாட்டு உணர்வுகள

இன்றிச் சமமான கல்வி வாய்ப்புகள் வழங்கவேண்டும். 3) புதிய மதிப்பீடு முறைகளைக் கையாண்டு, குழந்தைகளின் முழுமையான வளர்ச்சியைப் பலதுறைகளிலும் தூண்டும் வகையில் பள்ளிக் கல்வியிலுள்ள கற்பித்தல்-கற்றல் சூழ்நிலைகளை மாற்றியமைக்க வேண்டும். 4) பாடத்திட்டத்தில் மையக்கலைத் திட்டம் (Core Curriculum) ஒன்றினை அறிமுகப் படுத்தியுள்ளது குறிப்பிடத்தக்கது.

**மையக் கலைத்திட்டம்.** தேசியக் கலைத்திட்டத்தில் கீழ்க்காணும் முக்கிய மையக்கூறுகள் (Core Elements) இடம்பெறுகின்றன. 1) இந்தியாவின் விடுதலை இயக்க வரலாறு, 2) அரசியல் சாசனத்தின் அடிப்படையில் குடிமகன் ஆற்றவேண்டிய கடமைகள், 3) தேசிய உணர்வை வளர்ப்பதற்கான மிகத் தேவையான பாடப்பகுதிகள், 4) இந்தியப் பண்பாட்டின் பொதுவான மரபு, 5) சமத்துவம், குடியரசு, சமயச்சார்பின்மை, 6) ஆண், பெண் சமத்துவம்,7) சுற்றுப்புறச் சூழல் பாதுகாப்பு, 8) சமூகத் தடைகளை அகற்றுதல்,9) சிறு குடும்பக் குறியீட்டை மேற்கொள்ளல், 10)அறிவியல் நோக்கு ஊட்டுதல். நல்ல நாட்டுப்பற்று வளர்வதற்கு மேற்கூறியவை தேவையாகக் கருதப்படுகின்றன. இவற்றைப் பள்ளிச் சூழ்நிலையில் எவ்வாறு கற்பிப்பது என்ற சிக்கலை அணுகிக் கற்றல் எடுத்துக்காட்டுப் பொருள்களை (Examplar Materials) இந்நிறுவனம் தயாரித்துள்ளது. இதனைப் பின்பற்றி மாநிலங்கள் தம்முடைய சிறப்புத் தேவைகளுக்கு ஏற்ப இவற்றை மாதிரிப் பொருள்களாக எடுத்துக் கொள்வதோடு போதிய அளவு மாற்றியும் அமைத்துக்கொள்ளலாம்.

**நவோதயா வித்யாலயா:** புதிய கல்விக்கொள்கையையொட்டிக் கிராமப் பகுதியிலிருந்து வரும் சிறப்புத் திறனமிக்க குழந்தைகளுக்காக ஒவ்வொரு மாவட்டத்திலும் சராசரி ஒரு நவோதயா வித்யாலயா நிறுவப்பட்டிருக்கிறது. 1988-இல் 59 பள்ளிகளில் சேர்வதற்காக சுமார் ஐந்து இலட்சம் குழந்தைகள் 19 மையங்களில் இதற்கான நுழைவுச் சோதனைகளை எழுதியுள்ளனர். இச்சோதனையானது மொழி மற்றும் பண்பாடு சார்பற்றது (Non Verbal and Culture Free Test) மேலும் இது போட்டித் தேர்வாகும். இதற்கான எல்லாப் பொறுப்புகளையும் இந்நிறுவனமே ஏற்றுள்ளது. இப்பள்ளிகளுக்கான ஆசிரியர்களையும் கவனத்தோடு தேர்ந்தெடுத்து அவர்களுக்குப் புத்துணர்ச்சிப் பயிற்சியையும் வழங்குகிறது.

**கல்வியில் திருப்பமும் நாட்டின் வளர்ச்சிப் பணியும்:** நாட்டின் பள்ளிக் கல்வியில் 1986-ஆம் ஆண்டின் தேசிய கல்விக் கொள்கையையொட்டி ஒரு திருப்பம் ஏற்பட்டது எனலாம். இத்துறையில் மத்திய அரசும் மாநில அரசுகளும் இணைந்து இயங்கத் தொடங்கியுள்ளன. பள்ளிக்கல்வியைத் தேசிய அளவில் இணைப்பதற்காக இந்நிறுவனம் அண்மைக்காலத்தில் பெரு முயற்சி செய்து வருகிறது. கல்விப் பணியானது நாட்டின் வளர்ச்சிப்பணி என்ற கொள்கை நிலை நாடு முழுவதும் தெளிவாகி வந்துகொண்டிருக்கிறது தேசிய கல்விக் கொள்கையைக் ‘கேந்திர வித்யாலயா’ பள்ளிகளிலும், ‘நவோதயா வித்யாலயா’ பள்ளிகளிலும், மேலும் மைய உயர்நிலைக் கல்வி நிறுவனத்துடன் (Central Board of Secondary Education) இணைக்கப்பட்ட பள்ளிகளிலும் 1988-ஆம் ஆண்டு நடைமுறைப்படுத்துவதற்கு ஆவன அனைத்தையும் இந்நிறுவனம் செய்துவருகிறது; மாநிலங்களில் இக்கொள்கை அடுத்த கல்வியாண்டில் பள்ளிகளில் நடைமுறைப்படுத்தப்படுவதற்கு வேண்டிய ஆலோசனைகளையும் வழங்கி வருகிறது. இந்நிறுவனமானது 1986, செப்டம்பர் மாதம் தனது வெள்ளிவிழாவை நாடு முழுவதும் கொண்டாடி இப்போது நாட்டின் கல்விப்பணியில் வீரநடை போடுகிறது

ம.இரகு.

**தேசியகல்வித் திட்டமிடல், நிருவாக நிறுவனம்** 1962-ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்டது. இந்திய அரசு, ஐக்கிய நாட்டுக் கல்வி, அறிவியல், பண்பாடு ஆகிய துறைகளுடன் இணைந்து ‘பத்தாண்டு ஒப்பந்தம்’ ஒன்றை மேற்கொண்டது. அதன்படி ஆசிய நாட்டுப் பகுதியில் கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாகம் ஆகியவற்றில் முதிர்ந்த அனுபவமுள்ளவர்களைப் பயிற்றுவிப்பதற்கென‘ஆசிய நாட்டுக் கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாக நிறுவனம்’ ஒன்று அமைக்கப்பட்டது. அச்சமயம் உருவானதே ‘தேசிய கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாக நிறுவனம்’ ஆகும். ஐக்கிய நாட்டுடன் செய்து கொண்ட பத்தாண்டு ஒப்பந்தக் கால எல்லை முடிந்தவுடன் மேற்குறிப்பிடப்பட்ட நிறுவனம், கல்வித் திட்டம் மற்றும் நிருவாகப் பொறுப்பு வகிப்பவர்களை உருவாக்கும் தேசிய பயிற்சிக் கல்லூரியாக மாற்றியமைக்கப்பட்டது. இந்நிறுவனம் 1979-ஆம் ஆண்டு மே மாதம் முதல் இப்போதுள்ள ‘தேசிய கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாக நிறுவனம்’ என்னும் பெயரைப் பெற்றது. இது சுய ஆட்சி உரிமை பெற்றதாய் இருப்பதுடன் கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாகத்துறையில் இந்திய அரசு உருவாக்கியுள்ள நிறுவனங்களுள் தலைசிறந்ததாகவும் விளங்குகிறது.

**சிறந்த, பொறுப்பான பணிகள்:**1) கல்வித் தொடர்பாகச் செயலாற்றும் பல்வேறு தொகுதியினருக்கும், பலதரப்பட்ட கல்வி நிலையிலுள்ளவர்களுக்கும் தேவையான பயிற்சித் திட்டங்கள் அமைப்பது; அவற்றின் வாயிலாகக் கல்வி அமைப்பு முறைகளும்

நிருவாகமும் சிறந்திருக்கும் பகுதிகளில் உள்ளோரின் திறமைகளைச் செம்மையாக்குவது. 2) தேசிய ஆதரவு அல்லது முக்கியத்துவம் குறைந்திருக்கும் இடங்களிலுள்ளவர்களது திறமைகளை ஊக்குவித்து அவர்களுக்கும் கல்வியமைப்பு மற்றும் நிருவாகத் துறைப் பயிற்சி அளித்து அத்துறையில் ஆராய்ச்சி செய்யுமளவு பக்குவப்படுத்துவது 3) அறிவைப் புகட்டுவதற்கும் அறிவை விரிவடையச் செய்வதற்குமிடையே நெருங்கிய தொடர்பை உருவாக்குவது. இத்தகைய நோக்குடன் செயற்படுத்தப்படும் அடிப்படை ஆய்வினைக் கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாக வட்டாரங்களில் சீர்படுத்துவது. 4) மாநில, மத்திய அரசு நிறுவனங்கள், பல்கலைக் கழகங்கள், பலவேறு சங்கங்கள் அல்லது இவற்றையொத்த பலவேறு கழகங்கள், பலவேறு வகைப்பட்ட அரசு நிறுவனங்கள், அயல் நாடுகளில் அமைக்கப்பட்டிருக்கும் அகில உலக நிறுவனங்கள் ஆகியவைகளுக்குக் கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாகத்துறைத் தொடர்பான அறிவுரை வழங்குதலான பணிகளைச் செய்தல். 5) கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாகத்துறையில் புதிய முன்னேற்றங்கள், புதிய அனுபவங்கள் ஆகியவை பற்றிய புதுமைக் கருத்துகளைப் பரவச் செய்தல், 6) தேசிய முக்கியத்துவம் நிறைந்த கல்வியமைப்பின் விளைவுகள் பற்றி எழும் கலந்துரையாடல்களைத் தொடங்கி ஊக்குவித்தலாகிய பணியினைச் செய்தல். 7) இந்திய நாட்டில் உடன் பணிபுரியும் நிறுவனங்கள், அயல் நாட்டுக் கல்விச் சாலைகள் ஆகியவைகளுடன் குறிப்பாக முன்னேற்றமடையாத நாடுகளிலுள்ள நிறுவனங்களுடன் கல்வித்தொடர்பான முன்னேற்றத்திற்கு ஏதுவான ஒத்துழைப்பையும் தொடர்பையும் நிலை நிறுத்துதல்.

நிருவாகம் செம்மையாக அமையவேண்டுமென்று கருதிக் கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாக நிறுவனம், தான் செயலாற்றும் முறைகளையும் பணிகளையும் நான்கு பெரும் பிரிவுகளாக வகைப்படுத்தியுள்ளது அவை பின்வருவன: 1) கல்வித் திட்டமிடல் குறித்துச் செயற்படும் அமைப்பாளர்களையும், நிருவாகிகளையும் பயிற்றுவிப்பது. 2) ஆய்வுசெய்தல் (ஆராய்ச்சி மேற்கொள்ளுதல்). 3) புதுமையான செயல்முறைகளைப் பரவச்செய்தல். 4) கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாகத் தொடர்பாக அறிவுரை வழங்கும் பணிகளைச் செய்தல்.

கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாக நிறுவனம் பெருமளவில் ஒவ்வொருபயிற்சித் திட்டத்தையுமகுறிப்பிடப்பட்ட தொகுதியினருக்குப் பயனளிக்கும் வகையில் திட்டமிட்டுச் செயற்படுத்துகிறது. 1983-88-ஆம் ஆண்டுகளில் பலவேறு நாடுகளிலும், இந்திய அரசாங்கத்துடன் இணைந்துள்ள நாடுகளிலும் கல்வித் துறையில் பணிபுரியும் 4,000 க்கும் மேற்பட்ட உயர் அலுவலர்களுக்குப் பயிற்சியளித்துள்ளது உயர் கல்வி நிருவாகிகளுக்கும் மாவட்டக் கல்வி அதிகாரிகளுக்கும், புள்ளித் தொகுப்பியல் துறை அதிகாரிகளுக்கும், ஊனமுற்றோர், ஆதரவற்றோர் ஆகியோரைக் கண்காணிக்கும் அதிகாரிகளுக்கும் இத்தகைய பயிற்சி அளிக்கப்பட்டது. அயல்நாட்டிலிருந்து வந்து கலந்து கொள்பவர்களுக்கும் பலவேறு பொருத்தமான நிகழ்ச்சிகளை அமைத்துக் கொடுத்துச் செயற்பட்டுள்ளது.

இந் நிறுவனம் ஆண்டுதோறும் கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாகப் படிப்பில் நற்சான்றிதழ் பெறும் பட்டப்படிப்புக்கென மூன்று வேறுபட்ட நீடித்த பயிற்சியளிக்கிறது. அயல்நாட்டு உயர் அதிகாரிகளுக்கென ஒரு நீடித்த பயிற்சியும், புதிதாகச் சேர்க்கப்பட்ட உயர் பொறுப்பு வகிக்கும் அல்லது உயர் பொறுப்பு ஏற்கவிருக்கும் இந்திய நாட்டு மாவட்டக் கல்வி அதிகாரிகளுக்கென இரு வேறுபட்ட நீடித்த பயிற்சியும் அளிக்கிறது. ஆறு மாத காலம் நடத்தப்படும் நீடித்த நற்சான்றிதழ்ப் பயிற்சியின் போது பயிற்சி பெறுவோர் மூன்று மாத காலத்தைக் கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாகம் பற்றிய அடிப்படைப் பாடத் திட்டங்களை நுணுக்கமாக ஆராய்வதில் செலவிடுகின்றனர். எஞ்சிய மூன்று மாத காலம், மேற்கொண்ட திட்டம் செயற்படும் வகை செய்வதிலும், அதனை மேற்பார்வையிடுவதிலும் செலவிடப்படுகிறது. கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாகம் பற்றிய பட்டப் படிப்பு, தொலைவிலுள்ளவர்களும் கற்றுக்கொள்வதற்கு வசதியாக இருக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் அஞ்சல் வழிக் கல்வி முறையிலும் பயிற்றுவிக்கப் படுதல் வேண்டும் என்கிற திட்டம் ஒன்றும் உருவாகி வருகிறது.

ஆய்வு அல்லது திறனாய்வு நிகழ்ச்சிகள், கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாகத்துறையில் புதிதாகப் புகுத்தப்பட்டிருப்பனவற்றுள் சிறப்பானவையாகும். இத் திறனாய்வின்நோக்கம், பயிற்சியையும் ஆராய்ச்சியையும் இணைப்பதாகும். இதனால் ஆராய்ச்சியின் விளைவு, பலவேறுபட்ட பயிற்சித் திட்டங்களைமேம்படுத்தக் கூடுமென்று கருதப்படுகிறது. மேலும் இது தீர்மானங்களை உருவாக்கும் செயலில் செயல்திட்டங்கள் உருவாக்கும் அதிகாரிகள், திட்டங்களுக்கு முன்னேற்பாடு செய்கிறவர்கள், கல்வி நிருவாகிகள் ஆகியோருக்குத் துணைபுரியும் என்று கருதப்படுகிறது இவ்வாறு நிகழ்த்தப்படும் ஆய்வுகள் பலதரப்பட்டவையாகும். அவை சுருசுருப்பான ஆராய்ச்சி நெறிமுறைகள், மேற்போக்கான விவரங்களைப் பார்வையிடல், பகுத்து ஆய்வுசெய்து பயன் கண்டுகொள்ளல், கல்வித்துறையின் பல பகுதிகளுக்கான செயல் திட்டங்களுடன் தொடர்பு கொண்டு ஆராய்ச்சித் திட்டங்கள் வகுத்தல் எனப் பலவாறு செயற்படுகின்

றன. கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாகத் துறையில் இவ்வாறு செயலாற்றப்பட்டு வரும் ஆய்வுகளில் சில சிறப்புடையனவாகவும் இன்றியமையாதனவாகவும் விளங்குகின்றன. மற்றும் சில மேலும் வளர்ச்சி பெற வேண்டியனவாகவோ சுருக்கமான கண்டுபிடிப்புகளாகவோ அமைந்துள்ளன.

இந்தியாவிலிருந்தும் அயல் நாடுகளிலிருந்தும் புலமைபெற்ற அறிஞர்கள் புலமைத் தேர்வுக்குப் பின்னும் (டாக்டர் பட்டம் பெற்ற பின்னும்) மேற்கொண்டு கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாகத் துறையில் 'கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாக நிறுவனத்தில்' தங்கள் ஆய்வினைத் தொடர்ந்து ஓராண்டு காலம் படிப்பதற்கென இந்நிறுவனம் ஓர் இணைப்பு அமைப்பினை உருவாக்கியுள்ளது.

கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாகத் துறையில் பல்வேறு நாடுகளும் புதுமையைப் புகுத்தவும், பரவச் செய்யவும் முயற்சி செய்கையில், தான் எவ்வித மாற்றங்களுக்கும் உட்படாமல், ஆனால்பிற நாடுகளின் வேறுபட்ட போக்குகளுக்குத் துணைபுரியும் வகையில், கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாக நிறுவனம் சில பகுதிகளைத் தேர்ந்தெடுத்து, அங்குப் புதுமையான நிகழ்ச்சிகளை நடத்துவதற்குச் சிறந்த பயிற்சியளிக்கிறது. சான்றாக, மகாராட்டிர மாநிலப் பள்ளி வளாகங்களில் நடத்தும் நிகழ்ச்சிகளும், தமிழ் நாட்டுப் பகுதிகளில் நடத்தப்படும் தொழிற்பயிற்சி நிகழ்ச்சிகளும் குறிப்பிடத்தக்கனவாகும்.

தமிழ்நாட்டிலும் தமிழ்நாட்டுடன் இணைந்த பகுதிகளிலும் அமைந்துள்ள கல்வித் துறையினைப் புதுமையாக மாற்றியமைத்துக் கொள்வதற்கு வேண்டிய வழி வகைகளையும், அறிவுரைகளையும் வழங்கும் பணியினையும் இந்நிறுவனம் செய்துவருகின்றது. கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாகம் பற்றிய எண்ணற்ற நூல்களையும் இதழ்களையும் செய்தித் தாள்களையும், வார, மாத இதழ்களையும், அவ்வப்போது வெளிவரும் திறனாய்வுக் கட்டுரைகளையும் ஆய்வுக் கட்டுரைகளையும் இந்நிறுவனம் வெளியிடுகிறது.

செயற்பட முற்படும் முயற்சிகளையும் திட்டங்களையும் சிறப்பாகச் செய்தல் வேண்டும் என்பதற்காகக் கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாக நிறுவனம் பல பிரிவுகளாகப் பிரிந்து பணியாற்றுகின்றது. அவையாவன: கல்வி நிருவாகத் துறை, கல்வித்திட்டமிடல் துறை, கல்வி நிதிப்பிரிவு, பள்ளிகள் மற்றும் மாறுபட்ட கல்விமுறைகளைப் பார்வையிடும் துறை, உயர் கல்வித் துறை, உள்நாட்டுக் கல்வித் திட்டத் துறை, அயல்நாட்டு நிகழ்ச்சிகளை அமைக்கும துறை முதலியன.

கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாக அமைப்பு, தேசிய கல்வி ஆராய்ச்சி-பயிற்சி நிறுவனம் (NCERT) அருகே அமைந்த கியூதாப்பு விடுதியினருகே அமைந்துள்ளது. இந் நிறுவனத்திற்கெனவே சிறப்பான வகையில் அமைக்கப்பட்டுள்ளதும், தேவையான நூல்கள் நிறைந்ததுமான ஒரு நூலகமும் ஆங்கு உள்ளது. அதில் கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாகம் மற்றும் இதன் தொடர்பான செய்திகளைத் தரும் நூல்கள் ஏறத்தாழ 3,900 இருக்கின்றன. 250 இந்திய மாத இதழ்களும், அயல்நாட்டு இதழ்களும் இங்கு வரவழைக்கப்படுகின்றன. மாவட்ட, மாநில, கல்வித் திட்டமிடல் மற்றும் நிருவாகம் பற்றிய ஆவணங்களும், பத்திரங்களும், ஆய்வுரைகளும் மற்றும் கட்டுரைகளும் நிறைந்த ஆவணக்களரி ஒன்றும் ஈண்டு அமைந்துள்ளது. கணிப்பொறியின் துணையுடன் கொடுக்கப்பட்டுள்ள அமிசங்களை அல்லது செயல் முறைகளை ஒழுங்குபடுத்தும் துறையும் இங்குள்ளது. தேசிய செய்தித் துறையுடன் இணைந்து பணியாற்றும் செயல் முறைகளைச் சேகரித்து வைத்திருக்கும் சேமிப்புக் கூடம் ஒன்றும் இங்கு அமைக்கப்பட்டுள்ளது.

ஈ.ஞா.வே.

**தேசிய சிறு தொழில் கழகம்**: தொழில்களைக் குடிசைத் தொழில், சிறுதொழில், நடுத்தரத் தொழில, கனரகத் தொழில் எனப் பல வகைப்படுத்துவர். பெரியதாக இருந்தாலும் சிறியதாக இருந்தாலும் தேவையான அளவுக்கு நிதி மூல வளங்கள் இருந்தால்தான அத்தொழில் வளர்ச்சியடைய வாய்ப்புண்டு. மூலதனப் பற்றாக் குறை மிகுதியாக இருந்தால் இந்திய நாட்டில்விரைவான தொழில வளர்ச்சியைக் காண இயலாத சூழ்நிலைகள் இருந்தன. இச்சூழ்நிலையை மாற்றித்தொழில் வளர்ச்சிக்கான பல வகையான நிதிக் கழகங்களை இந்தியப் பேரரசும் மாநில அரசுகளும் தோற்றுவித்திருக்கின்றன. அவற்றுள் ஒன்றே தேசிய சிறு தொழில் கழகம் (National Small Industries Corporation)

சிறுதொழில்களுக்கு வாணிக வங்கிகள் கடன் உதவிகளை அளிக்காமல் இருந்த நிலை மாறி குறிப்பிடத் தக்க அளவில் நிதி உதவியை இக்காலததில் அளித்துக் கொண்டிருக்கின்றன. சிறு தொழில்களின் வளர்ச்சிக்கென நிதி உதவி தரும் வங்கிகளுக்கு இவ் உதவியினால் நிதி நெருக்கடியை எதிர் நோக்கும் நிலை வந்தால், வங்கிகளுக்குத் தேவையான நிதிப் பாதுகாப்பு அளிப்பதற்காக 1960-ஆம் ஆண்டு சூலைத் திங்களில் சிறு தொழில்களுக்கான கடன் உத்திர வாதத் திட்டம் (Credit Guarantee Scheme for Small Industries) புகுத்தப்பட்டது. ஆனால், 1982-ஆம் ஆணடு சூன் திங்களில் இவ்வமைப்பு நீக்கப் பட்டு, வைப்புக் காப்பீடு, கடன் உத்திரவாதக் கழகம் (Deposit in Insurance and Credit Guarantee

Corporation -DICGC)என்ற அமைப்பிடம் இப் பணி கொடுக்கப்பட்டிருக்கிறது.

இந்தியாவில் உள்ள சிறுதொழில்களுக்கு உதவி செய்தல், நிதி அளித்தல், பாதுகாப்பு அளித்தல் போன்ற பணிகளை ஆற்றி இத்தொழில்களை வளர்ச்சி யுறச் செய்யும் நோக்கத்துடன் 1955-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களில் தேசிய சிறுதொழில் கழகம் தோற்றுவிக்கப்பட்டது.

(1) சிறு தொழில் தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் பண்டங்களை அரசாங்கம் வாங்கிக் கொள்ளும் வகையில் இப்பண்டங்களுக்கு அரசாங்கத்திடமிருந்து ஆணைகளைப் (Orders) பெறுதல், (2) அத்தகைய அரசு ஆணைகளை நிறைவேற்றுமள விற்குத் தேவையான நிதி உதவி, பொறி நுட்ப உதவிமற்றும் பலவகையான உதவிகளைச் சிறு தொழில்களுக்குத் தருதல், (3)சிறு தொழில்களையும் பெருந்தொழில்களையும் இணைக்கும் பாலம் போலச் செயற்பட்டுப் பெருந்தொழில்களுக்குத் தேவைப்படும் துணைப் பொருள்களைச் சிறு தொழில்கள் செய்யத் துணை நிற்றல், (4) சிறு தொழில்களுக்கு வங்கிகளும் பிற நிதி நிறுவனங்களும் கொடுக்கும் கடன்களுக்கு உத்திரவாதமளித்தல் ஆகிய உயர் நோக்கங்களைத் கொண்டதாகததேசிய சிறுதொழில் வளர்ச்சிக் கழகம் அமைக்கப்பட்டது

சிறு தொழில்களின் வளர்ச்சிக்குத் தேவையான இயந்திரங்களையும், பல்வேறு கருவிகளையும் எளிய முறையில் அமைந்த இலகுவான தவணை முறைக் கடன்கள் மூலம் பெறுவதற்கான நிலைகளைஇச் சிறு தொழில் வளர்ச்சிக் கழகம் அமைத்துத் தந்தது. இக் கழகம் தோற்றுவிக்கப்பட்ட 1955-ஆம் ஆண்டு முதல் 1982 ஜுன் திங்கள் முடிய சிறு தொழில்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்த ரூ 3003 கோடி மதிப்புள்ள கடன்களுக்கு உத்திரவாதத்தை இக் கழகம் அளித்திருக்கிறது. பிளாசுடிக்கு (Plastic), தோல், அச்சிடுதல், ஆயத்த ஆடைகள் (Readymade garments), பேருந்து, மகிழுந்து மற்றும் பலவகையான உந்து வாகனங்களுக்கான உதிரிப்பாகங்கள் (Spares), மின் பொறி சாதனங்கள் (Electronicequipments) போன்ற பல வகையான பொருள்களை உற்பத்தி செய்த பல தொழிற் சாலைகளுக்கு 1983-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் முடிய ஏறத்தாழ ரூ.146 கோடிக்கு இயந்திரங்களையும், இயந்திர சாதனங்களையும் தவணைக் கடன் முறை மூலம் இக் கழகம் அளித்திருக்கிறது.

இக்கழகம் நாட்டின் குறைவளர்ச்சிப் பகுதிகளிலும், மிகவும் பின் தங்கிய பகுதிகளிலும் தொடர்புடையது. பல அரசுத்துறைகளோடும், தனியார், துறைகளோடும் நிலையங்களோடும் தொடர்பு கொண்டு தீவிரமான தொழில் ஆய்வுகளை (Industrial Suveys) இக்கழகம் நடத்திஅந்த ஆய்வுகளின் முடிவுகளின் அடிப்படையில் அந்தப்பகுதிகளில் எந்தெந்தச் சிறு தொழில்களைத் தொடங்க வாய்ப்புகளும் வசதிகளும் இருக்கின்றன என்பனவற்றைத் தொழில் முயல்வோருக்குக் கூறி வருவதன் மூலம் நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு மிகவும் இன்றியமையாத பங்கை இக்கழகம் ஆற்றி வருகிறது. மைய அரசுக்குத் தேவையான பண்டங்களைப் பெற்றுத் தரும் பதிலாண்மைகளுடன் (Agencies) இக்கழகம் பல ஒப்பந்தங்களையும் மேற்கொண்டு சிறுதொழில்களில் உற்பத்தியாகும் பண்டங்களுக்கு நல்ல அங்காடியையும் அமைத்துத் தருகிறது. இத்தகைய, ஆணைகளின் அளவு 1960-61இல் ரூ 107 கோடியாக இருந்தது. 1982 மார்ச்சுத் திங்களில் ரூ 931 கோடியாக உயர்ந்தது. என எஸ் பா.

**துணை நூல்கள்:**

Dhingara,I C., The Indian Economy: Resources, Planning Development and Problems, Sultan Chand and Sons, New Delhi, 1986.

Misra,S.K. and Puri, V.K., Indian Economy: Its Development Experience, Himalaya Publishing House, Bombay, 1983.

## தேசிய திட்டமிடுதல்:

திட்டமிடும் நிலப் பரப்பின் அடிப்படையில் வட்டாரத் திட்டமிடுதல் (Regional Planning), தேசிய திட்டமிடுதல், பன்னாட்டுத் திட்டமிடுதல் (International Planning) என்று திட்டமிடுதலை வகைப்படுத்தலாம்

**தேசிய திட்டமிடுதல்,** பொருளாதார வளர்ச்சிக்கான திட்டமிடுதல் என்று குறிப்பிடும் போது தேசிய அளவில் திட்டமிடுவதைத் தான் பொதுவாகக் குறிப்பிடுவர். நாட்டில் கிடைக்கும் மூலவளங்களையெல்லாம் ஒன்றுதிரட்டிச் சீரிய முறையில் பகிர்ந்தளித்துப் பலசெயல்களை நிறைவேற்றி விரைவான பொருளாதார வளர்ச்சியைப் பெறுவதே தேசிய திட்டமிடுதலின் அடிப்படை நோக்கமாகும். திட்டத்தை வரைதல், ஏற்றுக் கொள்ளுதல், நிறைவேற்றுதல், மேற்பார்வையிடுதல், மதிப்பிடுதல் ஆகிய எல்லாம் தேசிய அளவில் மேற்கொள்ளப்படுகின்றன

இத்தகைய திட்டமிடுதலில் இரு கருத்துகள் உள்ளார்ந்திருக்கின்றன. முதலாவதாக, திட்டத்தின் அளவு நாட்டின் நிலப் பரப்பைப் பொறுத்து அமைகிறது. நாட்டின் அளவு சிறியதாக இருப்பின் பேரளவுத் தொழில்களைத் தொடங்கி வளர்ச்சி பெறச் செய்வதற்கும், வேலைப் பகுப்பு, சிறப்புத் தேர்ச்சி போன்றவற்றைப் புகுத்துவதற்கும் மற்றும் இவைபோன்ற பிறவற்றிற்குமான வாய்ப்புகள்குறை

வாக இருப்பது இயல்பு. இரண்டாவதாக, ஒரு நாட்டின் பொருளாதார இயக்கத்தில் அயல் வாணிகத்தின் அளவு பேரளவில் பன்னாட்டு அளவில் தோன்றும் எதிர்பாராத மாற்றங்களால் உள்நாட்டுப் பொருளாதாரமும் கேடுறலாம். எனவே, அயல் வாணிகத்தைப் பேரளவில் நம்பியிருக்கும் நாடுகளில் தேசிய திட்டமிடுதல வரையறைக்குட்பட்டதாகவே இருக்கிறது. என.எஸ் பா.

**தேசிய நூலகம்:** இநதியாவின் தேசிய நூலகம் மேற்கு வங்கத் தலைநகராகிய கல்கததாப் பெருநகரில் உள்ளது. இது இந்தியாவிலுளள நூலகங்கள் எல்லாவற்றிலும் மிகப் பெரியது. இந்நூலகம் சுதந்திரம் பெற்ற அடுத்த ஆண்டிலேயே (1948) தொடஙகப்பெற்றது. நாட்டின் பல மொழிகளில் வெளிவரும் நூல்களும் ஆங்கிலம், பிரெஞ்சு, செர்மன, போன்ற உலகளாவிய மொழிகளில் உள்ள நூல்களும் தமிழ் தெலுங்கு போன்ற தேசிய மொழி நூல்களும இங்கு இடம்பெற்றுள்ளன. பொது நூலகச சட்டம் 1954-இன்படி இந்தியாவில் அசசிடப்பெறும் எந்த நூலுக்கும் உரிய ஒரு படி (copy) இந்த நூலகத திற்கு அனுப்பிவைககப்பட வேண்டும். ஆதலால நாட்டிலுளள எலலாமொழி நூல்களும் நாள் தோறும் இங்குவந்து குவிந்தவணணமாயுள்ளன. இவறறை எல்லாம் முறைப்படுத்தித் தொகுத்து இந்திய தேசிய நூற்றொகையினை (National Bibliography) உரோமன் எழுத்தில பருவமதோறும், ஆணடு தோறும் வெளியிட்டு வருகிறார்கள.

இந்த நூலகம் தொடங்கிய காலத்தில தமிழ் நூலகள் மிகவும் குறைவாகவே இருநதன. அப்போது தமிழ்ப் பகுதியின பொறுப்பாளராய் இருந்த பி.நா. வேஙகடாசசாரியார் தமிழப் பகுதியை விரிவாக்குவதறகு அயராது பாடுபட்டுத் தமிழகத்தில் நூல்களைச சேர்த்து வைததிருநத அனபர்கள் பலரிடம் கேட்டுப் பழம் பதிபபுகளை விலை கொடுத்துப் பெற்றுத தேசிய நூலகத தில் வைத்தார். தேசிய நூலகத்தில நிகணடுகள, அகராதிகள, இலக்கணம், சஙக நூல்கள், திருக்குறள்,தேவாரம், திவ்விய பிரபநதம், திருவாசகம், திருவிசைப்பா, பெரியபுராணம், மிகவும் பழமையான ஓலைச்சுவடிகள ஆகியவைகள் தமிழ்ப்பகுதியை அழகு செய்கின்றன. கல்கத்தா தேசிய நூலகத்தை அடிப்படையாகக் கொணடு பமபாய், செனனை, தில்லி ஆகிய நகரங்களில தேசிய நூலகம் இன்று செயற்படுகிறது. அரசு அனுமதி பெற்ற தேசிய நூலகமாகப் இநதிய நாட்டில் மொத்தம் நானகு நூலங்கள் இயங்குகினறன. நாட்டில வெளியாகும் அனைத்து மொழி நூல்களையும் இந்த நான்கு நூலகஙகளுக்கும ஒரு படி வீதம் அனுப்பிவைத்தே ஆகவேண்டும.

இந்திய தேசிய நூலகத்திற்கு வருகின்ற நூல்களை அனைத்தையும ஒழுங்குபடுத்தி, வரிசைப்படுத்தி நூற்றொகையாகப் பருவம்தோறும், ஆண்டுதோறும் வெளியிட்டு வருகினறனர். இநநூலைக் கொண்டு இநதியாவில் எவவளவு நூல்கள், எந்தெந்த மொழியில வெளியாகியிருக்கின்றன என்று எளிதில் தெரிந்து கொளள இயலும். இந்நூலகத்தில் வாசகருக்குச் சிறப்பு வகுப்புகள நடத்தப்பட்டு வருகின்றன. தேசிய நூலகத்திலிருந்து நாட்டின எந்தப் பகுதியிலிருந்தும் வெளியாகும் நூல்களை நூலக வங்கியின் (Inter Library Loan) மூலமாகக் கடனாகப் பெற்று படிப்பதற்கான வசதிகள் செய்யப்பட்டுளளன. வாசகர் எளிதில் படிபபதற்கும் புரிந்துகொளவதறகும் ஏதுவாக இது அமைநதுள்ளது. மு.இரா.

**துணை நூல்கள்**

Sharma, C.D., Use of Libraries, Metropolitan Book Co, New Delhi, 1978.

Mukherjee, A.K., The Indian National Bibliography, Annual Volume 1974-Central Reference Library, Calcutta, 1978.

**தேசியம்:** தேசியம அல்லது தேசிய உணர்வு என பது, ஒவ்வொரு மனித சமுதாயமும் தனது நாகரிகத்தினசிறப்பியல்புகளை வெளிப்படுத்துதற்கு ஏறறவகையில் தனக்கென்றே தனியான சட்டமுறைகளையும், அரசாங்க நிறுவனஙகளையும் அமைத்துக்கொளளுதல் வேணடுமென்ற கொளகையை அல்லது உரிமையை எடுத்துக்காட்டும உணர்வே ஆகும். உலகில் எல்லா இனமககளும ஒரே வகையான எண்ணஙகளையோ நாகரிகங்களையோ பெற்றிருக்கவில்லை. ஒவ்வோர் இன மக்கட் சமுதாயத்திறகும சில தனிப்பட்ட, சிறப்பான பணபுகள இருக்கினறன. இப்பணபுகள பாதுகாககப்படுதலும வளர்த்தலும யாவருக்கும் பயன்படுதலும வேண்டுமாயின, அபபண்புகளையுடைய இனம் ஒவ்வொன்றும தனககுத தனியாக, வேறு இனத்தைச் சாராமல், சுதநதிரமாகச் சட்டஙகளையும், அரசாங்க நிறுவனஙகளையும அமைததுக் கொள்ளுதல்வேண்டும். எல்லா இனமக்களும் ஒரேவகையான நாகரிகக் கூறுகளை ஏறறிருக்குமாறு அவாகள் யாவரையும், ஒரே பெரிய அளவிலான அரசில அமைத்து, ஒரே அரசாஙகததினகீழும், ஒரே வகையான சட்டஙகளினகீழும் வாழுமாறு செயதால, பலவேறுபட்ட சுவையான வளர்சசிக்கு இடமிலலாமல், ஒரே அமைப்பில சலிப்பும், மககளுக்கு ஈடுபாடில்லாத போககும் தோனறும். தேசிய உணர்வை வளர்க்கும காரணிகள: ஒரு குறிப்பிட்ட மககட் சமுதாயததார் ஒரு பொதுவான நில அமைப்பில் வாழும முறையை ஏறறுக்கொளளும் போது, தாம யாவரும அதில வாழதல வேணடு

மெனற விருப்பத்தினால அவாகள் ஒற்றுமை உணாவை வளர்பபாாகள. இநத ஒற்றுமை உணர்வை வளர்க்கும வேறு பல காரணிகள, அவாகள ஒரே மொழியைப பேசுதல், ஒரே சமய நெறியைப் பின பறறுதல், ஒரே பணபாட்டினைப் போற்றுதல, ஒரே பண்டைய வரலாற்றைப் பெறறிருத்தல, பொதுவான போர் நடவடிக்கைகளில ஈடுபட்டிருததல், பொது வான பொருளாதார நோககங்களைக் கொணடிருத தல முதலியவறறாலும ஏற்படுதல கூடும. தமக் கெனத் தனியாக அரசையும், சட்டஙகளையும பெறு தல் வேணடும் எனற அரசியல உணாவை (Political Consciousness) அவாகள் கொண்டிருநதால அதுவே அவர்களை ஒரு தேசியமாக இணைக்கும் வலுவான காரணி ஆகும. சிநதனையாளா அரிசுட்டாட்டில கூறுவதுபோல அரசியல உணாவுதான் மககட் சமு தாயத்தை வலுவாக ஓர் அரசாக இணைத்து, அரசு தோனறுதற்கு வழி செய்கிறது.

**தேசிய நாடுகள் தோன்றுதல்:** வரலாறறிலே இடைக்காலத்தில (கி.பி 1000 முதல கி.பி.1500 வரை) ஒரே பேரரசு முறையில (Universal Empire) பலவேறு பழக்க வழககஙகளையுடைய ஐரோபபிய நாடுகள் சேர்நதிருநதன. கி.பி.14,15-ஆம நூறறாணடுகளி லேற்பட்ட மறுமலாச்சி இயககததின விளைவாகப பொதுவாக மககளிடையே ஆயவு மனப்பானமையும, தனியார் சுதநதிர உணர்வும, உலகியல வாழவில ஈடுபாடும் பெருகின. அமெரிக்கா போனறபுதிய நாடு களும், இநதியாவுககு நேர்கடல்வழியும கணடுபிடிக கப்பட்டன. பணடைய நிலமானிய முறையை ஒட்டிய சமுதாய அமைப்பும், அரசியலமைப்பும் மறைந்து, ஒவவொரு நாடும் அதனதன் அரசருடைய ஆட்சியில இணைந்து அவருடைய ஒரே அரசாஙக முறையையும், சட்டங்களையும் ஏறறு வாழும் நிலையில் வநதது. இஙகிலாந்து கி.பி 14-ஆம நூறறாணடிலும, பிரான்சு, இசுபெயின், போாச்சுகல் அதற்கடுத்த நூறறாணடி லும், தேனிய, சுவீடிய மக்கட் சமுதாயஙகள கி.பி. 16-ஆம் நூற்றாணடிலும தேசிய உணர்வின அடிப் படையில தனித்தனியான சுதநதிர நாடுகளாயின. தேசிய உணர்வு மிக விரைவாக வளாந்ததன விளை வாக கி.பி 18, 19, 20-ஆம் நூற்றாணடுகளில பல தேசிய சுதந்திர அரசுகள் தோனறின. போலநது நாட்டை கி பி.18-ஆம் நூற்றாணடில பிரசியா, உரு சியா, ஆசுத்திரியா முதலிய வல்லரசுகள தம்முள பஙகுபோட்டு எடுத்துக்கொணடதனால போலநது மக்கள தேசிய சுதநதிர உணர்வினால் ஒற்றுமைப் படுத்தப்பட்டு மீணடும தஙகளுடைய சுதந்திர நாட்டை நிறுவ முயனறனர். உருசியா, செருமனி, இத்தாலி, இசுபெயின முதலிய நாடுகளிலுள்ள ஐரோப்பியரிடையே தேசிய உணர்வைத் தூண்டி விட்ட நிகழச்சி கி.பி.1789 முதல் கி.பி.1815 வரை நடைபெற்ற பிரஞ்சுப் புரட்சியும், நெப்போலியப் போர்களும ஆகும. இதனால கி.பி.1820 க்கும கி பி. 1878 ககும இடையே இததாலி, செருமனி எனற இரு பெரிய சுதந்திர தேசிய அரசுகள நடு ஐரோப்பா விலும், கிழககு ஐரோப்பாவில கிரீசு, சொபியா, உருமேனியா, மாணடிநீக்கிரோ எனனும் 4 சிறிய சுதநதிர தேசிய அரசுகளும மேற்கு ஐரோப்பாவில் பெலசியம், ஆலநது எனனும் இரு சுதநதிர நாடு களும தோன்றின. கவூர், கரிபாலடி, மாசினி முதலி யோரின முயறசிகளால தனிததனியாக நடு ஐரோப் பாவில சிதறிக் கிடநத இத்தாலிய அரசுகள் ஒனறாக இணைக்கப்பட்டு இததாலி நாடு உருவாயிற்று. அது போலவே தனியாக இயஙகிய பல சிறிய செருமனிய அரசுகள, பிசுமார்க்கு (Bismark) எனனும செரு மானிய அரசியல சூழவலியாளருடைய வெறறியான போர்ச் செயலகளால, பிரசியாவின் தலைமையில ஒரே செருமானிய தேசிய அரசாக இணைககப்பட டன. கிழக்கு ஐரோபபாவில பலவேறு தேசிய இன மக்கட் சமுதாயஙகளைஒரே பேரரசில அடக்கியிருநத மூனறு பேரரசுகள் பல சிறிய தேசிய அரசுகளாக உடைக்கப்பட்டதன வாயிலாகத தேசிய உணாவு செயறபட்டது. உருசியா, ஆசுததிரியா, துருககி முத லிய பேரரசுகள ஒவவொனறிலும் பலவேறு தேசிய இனஙகளைச சோநத மக்கட் சமுதாயஙகள தத்தம விருப்பத்துக்கு மாறாகப் பிணைத்து வைககபபட்டி ருநதனர். முதலில் கிரீசும் பினனா உருமேனியா, சொபியா, மானடி நீக்கிரோ முதலியனவும சுதநதிர நோக்கத்தால தங்களைச் சுதந்திர நாடுகளாக ஆக்கிக்கொளளும பொருட்டுத் தஙகளை ஆணட துருககிய சுலததானுககெதிராகக் கலகஙகள செயது சுதநதிரம் பெற்றன. பலகேரியா 1908-இல துருககி யிடமிருந்து சுதநதிரம் பெறறது நாாவேயும, சுவீட னும 1905-இல் இரு தேசிய அரசுகளாகப் பிரிநதன. முதலாம உலகப்போருக்குப் பினனா (1914-1918) செருமெனி, உருசியா, ஆசுததிரியா-அங்கேரி முதலிய 3 பேரரசுகளும் உடைபட்டதன விளைவாகப் போலந்து,இலிதுவேனியாமுதலிய புதிய தேசிய அரசு கள் தோன்றின. இவவாறு 1920-இல ஐரோப்பாவி லிருந்த எல்லா 27 நாடுகளும் தேசிய அரசுகளே ஆகும். இரணடாம் உலகப் போரின் விளைவாக (1939-1945) ஆசியா, ஆப்பிரிககாக் கணடஙகளில ஐரோப்பிய நாடுகளுககு இருநத குடியேற்ற நாடு களின் மக்களிடையே, போருககு முன்பே தோன்றிய தேசியஉணர்வு வலுவாகவும விரைவாகவும வளரவே, அவையெல்லாம் சுதநதிர அரசுகளாயின. இநதியா, இலஙகை, பர்மா, மலாயா, பாகிசுத்தான, இநதோ னேசியா முதலிய ஆசியநாடுகளும், சூடான, சோமாலி லாந்து, அல்சீரியா, கானா, நைசீரியா, கென்யா, சிம்பாப்வே, தான்சானியா, உரொடீசியா முதலிய ஆப்பிரிக்க நாடுகளும புதிதாகத தோன்றிய தேசிய சுதந்திரநாடுகளாகும.

**தேசிய உணர்வின் நிறைகுறைகள்:** மனிதர் ஒவ்வொருவருக்கும் இயற்கையாக இருக்கும் சுதந்திர விருப்பத்தை வெளிப்படுத்தும் தேசிய உணர்வையே ஆதாரமாகக் கொண்டு அரசுகளும், அரசாங்கங்களும் அமைதல் வேண்டுமென்ற அளவில் பார்க்கும்போது தேசிய உணர்வு என்பது நல்லதொரு கருத்தே ஆகும். ஆசிரியர் திலைல் பர்ன்சு (Burns) கூறுவதுபோல் தேசிய உணர்வும் சுதந்திர அரசியலமைப்பும், ஒவ்வொரு மக்கட் சமூகத்தின் சிறப்பான நாகரிகக் கூறுகள் பாதுகாக்கப்படவும் வளரவும் உலகத்தாருக்குப் பயன்படவும் உதவி செய்கின்றன. மேலும், ஓரின மக்கட் சமுதாயத்தையுடைய அரசுதான பல தேசிய இனங்களைத் தன்னுள் அடங்கிய பேரரசைவிட மிகவும் நிலையானதாக (Stability) இருக்கும் என்பதும் ஓரளவு உண்மையே. ஓரின அரசில் உள்ள மக்கள் அவ்வின அரசாங்கத்தின் சட்டங்களுக்கு மிகவும் ஆர்வத்தோடு மதிப்புக் கொடுத்துக் கீழ்ப்படியும் நிலையில் இருப்பார்கள். 'அரசின் இறைமை அதிகாரத்துக்கும், தனியாளின் சுதந்திர விருப்பத்துக்குமிடையே யுள்ள வேறுபாட்டைத் தேசிய அரசு (Nation State) என்னும் அமைப்பு பெருமளவில் நீக்குகிறது' என்று ஆசிரியர் பர்கசு (Burgess) கூறுகிறார்.

ஆனால் ஒற்றுமை உணர்வினால் தோன்றிய தேசிய உணர்வு அளவுக்கு மீறி மிகைப்படுத்தப்பட்டு, ஆணவமாக மாறியதன் விளைவாகத் தேசிய அரசுகள் ஒன்றையொன்று வீழ்த்த முயன்று அழிவுப் பாதையில் இறங்கின என்பது மறுக்க முடியாத உண்மையே. காலப்போக்கில் தேசிய உணர்வை அழித்தற்கு அதனுள்ளேயே அடங்கியுள்ள காரணிகள் வெளிப்பட்டதைக் கடந்த கால வரலாறு காட்டுகிறது. ஆக்ட்டன் பிரபு (Lord Acton) தேசிய உணர்வு ஒரு குற்றவியல் மனப்பான்மையை உண்டாக்கும் எனவும், ஆசிரியர் சிம்மர்ன் என்பவர் (Zimmern) தேசிய உணர்வு என்பது, நாளடைவில் அரசர் எட்டாம் என்றியும், மார்ட்டின் லூதரும் வகுத்த தேசிய திருச்சபை என்ற திட்டம் வலுவற்றுப் போனதைப் போல வலுவிழந்து விடுமெனவும் கூறுகின்றார். ஒவ்வொரு தேசிய அரசும் தனது சிறப்பான நாகரிகப் பண்புகளை வெளிப்படுத்தியதோடுகூட, தனது நாட்டெல்லைக்கு அப்பாலுள்ள தேசிய இனங்களின் நாகரிகக் கூறுகளைத் தாழ்ந்தவை எனக் கருதி வெறுக்கவும், தன்னைத் தனியாகவும், மற்றவனின்றும் உயர்வாகக் கருதவும் தொடங்கிற்று. இது பொருளாதாரத் துறையில் விரும்பத்தகாத விளைவுகளை உண்டாக்கிற்று. தொழிற் புரட்சிக்குப் பிற்பட்ட காலத்திலே, பொருளாதாரத் துறையில், மூலதனம், கச்சாப் பொருள்கள், தொழில் திறன், சந்தைகள் முதலியவற்றைப் பொறுத்த வரையில் உலக நாடுகளெல்லாம் ஒன்றையொன்று சார்ந்தே இருக்க வேண்டிய கட்டாயமான நிலை தோன்றியுள்ளது; எந்த ஒரு நாடும் பொருளாதாரத் துறையில் முழுவதும் தனித்து இருத்தல் இயலாது. ஆனால் குறுகிய தேசிய உணர்வின் காரணமாக அரசுகள் வாணிகத் தடைகளையும் (Economic sanction) சுங்கவரிகளையும், வரையறுக்கப்பட்ட இறக்குமதி அளவுகளையும் நடைமுறையில் செயற்படுத்துவதால், உலகப் பொருளாதார மூலவளங்களை முழுமையும் பயன்படுத்த இயலாமற் போகிறது. அரசியல் துறையிலே மட்டுக்குமிஞ்சிய தேசிய உணர்வின் காரணமாகப் பல அழிவைத் தரும் போர்கள் நடந்துள்ளன. அளவிற் பெரிய தேசிய இனம் தனது ஒற்றுமையைப் பயன்படுத்தித் தன் படைவலிமையைப் பெருக்கி, வலுவற்ற அண்டை தேசிய அரசுகளைத் தன் கட்டுப்பாட்டில் கொண்டுவந்து, தனது மொழி, பழக்க, வழக்கங்கள் ஆகியவற்றை அவற்றின்மீது வலுக்கட்டாயமாகத் திணித்ததும் உண்டு. ஆகையால் ஆசிரியர் இலாசுகி (Laski) கூறுவதுபோல, தேசியம் என்பது அச்சமில்லாத உரிமையின் அடிப்படையில் அமைந்திருந்தால் தான், தேசிய உணர்வின் விரும்பத்தகாத விளைவுகள் தோன்றாதவாறு தடுத்தல் இயலும். பா.கு.

**துணை நூல்கள்:**

Burns, C.D., Political Ideals, Oxford, 1929.

Zimmern, A., Modern Political Doctrines, Oxford, 1939.

**தேசிய மாணவர் படை:** மனத் துணிவும், ஒழுக்கமும் உடையவர்களாக இளைஞர்களை உருவாக்க இந்தியாவில் அமைக்கப்பட்ட ஓர் அமைப்பு தேசிய மாணவர் படை (National Cadet Corps) ஆகும். இது இந்தியாவில் முதன்மையாகத் தோன்றிய மிகப்பெரிய இளைஞர் அமைப்பாகும். இது தேசிய இராணுவப் பயிற்சிப் படை என்றும் சொல்லப்படுவதுண்டு. இந்த அமைப்பு, பல்கலைக்கழகங்கள், கல்லூரிகள், பள்ளிகள் ஆகியவற்றில் பயிலும் மாணவர்களுக்குப் படைப்பயிற்சி அளித்து வருகிறது

மாணவர்களுக்கு ஒழுக்கத்திலும் தலைமை ஏற்பதிலும் தக்க பயிற்சி அளிப்பதற்காக 1925-இல் பல்கலைக்கழகப் பயிற்சிப் படை (University Training Corps) என்ற ஓர் அமைப்பு நிறுவப்பட்டது. இது பின்னர்ப் பல்கலைக்கழக அதிகாரிகள் பயிற்சிப் படை என மாற்றப்பட்டது. ஆனால் இப் படையில் பயிற்சி பெற மாணவர்களுக்குப் போதிய வாய்ப்பு கிடைக்கவில்லை. எனவே, மாணவர்களுக்குப் படைப்பயிற்சி அளிப்பதற்கு ஒரு தனிஅமைப்புத் தேவை என 1946-இல் இந்திய அரசு நியமித்த குழு ஒன்று கருத்துத் தெரிவித்தது. அதற்கிணங்க 1948-இல் சட்டம்





தேசிய மாணவர்படை (பெண்கள்)

பாட்டு முறைகளும் அடங்கிய பெருங்களஞ்சியம். கிறித்தவ சமயத்தின் அடிப்படைத் தத்துவங்கள், விவிலியத்தின் விளக்கம், கிறித்தவ வாழ்வு நெறி, படைப்புக் கோட்பாடு, இறைமையின் இலக்கணமும் விளக்கமும், இறைவன் ஈந்த பத்துக் கட்டளைகள், மரியாளின் மாண்பு ஆகியவற்றைத் தேம்பாவணி விளக்கமாகக் கூறுகிறது.

இயேசு, மரியாளின் மகனாகப் பிறந்தார். இயேசுவை மரியாள் கன்னிமையழியாது பெற்றாள். நாயகன் இன்றி ஒரு மகனைப் பெற்றெடுத்த பெண் என்று உலகம் தூற்றாதிருக்கும்படி காப்பியத்தைப் படைத்திருக்கிறார். ஆசிரியர் தூயவர்க்கு வணக்கமும், வளனுக்குச் சிறந்த வணக்கமும், மரியாளுக்கு மேலான வணக்கமும் இறைவனுக்கு வழிபாடும் செய்ய வேண்டும் என்பதை ஆசிரியர் நன்கு விளக்குகின்றார்.

சூசை வரலாறும், அன்னை இறைமகன் பங்கும், பழைய புதிய ஏற்பாட்டு வரலாற்று நிகழ்ச்சிகள் ஆகிய மூன்றுமே தேம்பாவணியின் அடிப்படைப் பொருள்களாகின்றன.

காப்பிய இலக்கணத்தைக் கூறும் தண்டியலங்காரம் கிளைக் கதைகளைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. ஆயினும் காப்பியங்களில் கிளைக்கதைகள் ஒரு மரபாகப் பின்பற்றப் பட்டு வந்திருக்கின்றன. தேம்பாவணியும் இதற்கு விதிவிலக்கில்லை. ஏறத்தாழ நாற்பது கிளைக்கதைகள் தேம்பாவணியில் அமைந்துள்ளன. விவிலிய வரலாற்றுச் சுருக்கமாகக் காப்பியம் அமைய வேண்டும் என்னும் நோக்கத்தால் கிளைக் கதைகளை நிரப்பியிருக்கலாம் என்பது அறிஞர் கால்டுவெலின் கருத்து.

தேம்பாவணி அறிவுறுத்தும் அறநெறிகள் பல. 'அறமுதல் விளங்கச் சொல்வாம்' எனப் பாயிரத்தில் கூறிக் காப்பியத்தைத் தொடங்கும் ஆசிரியர் அறன் வலியுறுத்தலையும் தம் படைப்பின் நோக்கமாகக் கொண்டுள்ளார். அந்த அறன் நிலைபெறுதற்குரிய களன்களாக இல்லறம் துறவறத்தைக் காட்டித் துறவறமே சிறந்தது என்னும் கருத்தைக் கோடிட்டுக் காட்டுகின்றார். துறவுக்கு அடிப்படை ஐம்புலப்பகை என்னும் கருத்தை ஆசிரியர் அழுத்தமாகக் கூறுகின்றார். ஐம்புலன் ஒருவனைக் கெடுத்து அழிக்கும் ஆற்றலைச் சொல்லும் பொழுது அது, பாம்பின் நஞ்சை விடக்கொடியது என்கிறார். துறவேற்பது இரு பாலருக்கும் உரியது எனினும் ஆடவர் துறவே மிகுதியாம். ஆயின் சிறப்புமிக்கது பெண்துறவே என்பது ஆசிரியரின் கருத்து.

சில சொற்றொடர்களும் பொருட்போக்கும் பல்கிப் பயிலாதனவாக ஆங்காங்கே காணப்பட்டுக் கற்போரைத் திகைக்க வைக்கும் தன்மையில் அமைந்துள்ளன. உயர்வு நவிற்சியணியை ஆங்காங்கே கையாண்டுள்ளார். காதற் சுவையை விலக்கித் தன்மையணியில் காப்பியம் இயற்றியிருப்பது குறிப்பிடத்தக்கது.

இதனுடைய முதற்பதிப்பு தூபே அடிகளால் கி.பி. 1851-ஆம் ஆண்டு பாண்டிச்சேரியிலிருந்து வெளியிடப் பட்டுள்ளது இதுகாறும் ஏழு பதிப்புகள் வந்துள்ளன. தூபே அடிகளார் ஒவ்வொரு காண்டத்தின் சுருக்கத்தையும் பிரெஞ்சு மொழியில் எழுதி வெளியிட்டுள்ளார். எலலீசு என்பாரும், பாபிங்டன் என்பாரும் சில பாடல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளனர் இந்நூல் சந்த வேறுபாடுகளின் எண்ணிக்கை மிகுதியாக அமையுமாறு அமைக்கப் பட்டிருக்கும் சிறப்பிற்குரியது.

'காப்பியக் கூறுகளுள் தூதும் ஒன்றாயினும் அத்தூது செல்பவராகக் காப்பியத் தலைவரையே காட்டியிருப்பது பிற காப்பியங்களில் காணப்படா ஒன்றாகும்'. 'காப்பியத் தலைவர்க்கு மண்ணுலகில் முடிசூட்டு நிகழ்வது இயல்பு. தேம்பாவணித் தலைவனுக்கு விண்ணுலகில் முடிசூட்டிய பின்னர், மண்ணுலகிலும் மன்னனொருவன் முடிசூட்டி விழா வெடுக்குமாறு படைத்திருப்பது தனிச் சிறப்பாகும்'. மேனாட்டாராக இருந்தும் தமிழ்க் காப்பியம் எழுதுங்கால் தமிழ் மரபையே பின்பற்றி எழுதியிருக்கிறார். கிறித்தவர்கள் இறைவனின் முழு உருவத்தையும் கண்டு வணங்குவர் இவர் 'வேரிய கமலபாதம் வினையறப் பணிந்து போற்றி' என வாழ்த்துகிறார். இறைவனுக்குச் செலுத்தும் வணக்க முறையிலும் 'கைகூப்பிக் கூறலுற்றாள்' எனத் தமிழ் மரபே கூறப் படுகிறது. முழந்தாளிட்டு வணங்குதல் கிறித்தவர்களின் மரபு. மேலும் ஆலகால நஞ்சை அமுதாக மாற்றிய சிவபெருமான் பற்றிய புராணக் குறிப்பும் (குழவிகள் வதைப் படலம்) காணப்படுகிறது. இவை தமிழ் மரபையொட்டிக் காப்பியம் எழுத முயன்றதன் பயனே எனலாம். சு.சு.தே.

**தேமர்லாந்து**: இப்பகுதி, நமீபியா (Namibia) என்று இப்பொழுது கூறப்படுகின்ற தென்மேற்கு ஆப்பிரிக்காவில் உள்ளது. தேமாலாந்தில் (Damer-land) முன்னாளில் கோமாச்சா (கால்நடை வளர்ப்போர்) தேமா என்று, நேமா (Nama-அதாவது ஆட்டென்டாட்டுகள் - Hottentots) எனபவர்களால் அழைக்கப்பட்ட எரேரோ (Herero) மக்கள் வசித்து வந்தனர். 'தேமர் ரா' என்ற சொல் அம்மக்கள் அனைவரையும் குறிக்கும். பெண்பால் பன்மை வடிவமாகும். நேமா மொழியில் தேமா என்பதற்குக் 'கருத்த மக்கள்' என்பது பொருளாகும். ஆகவே அது ஓர் இகழ்ச்சிக்குரிய பெயராகும். இப்பகுதியை எரேரோ

லாந்து என்று வழங்க வேண்டும்; தேமர்லாந்து என்று அழைக்கலாகாது என்று பலர் வற்புறுத்துவர்.

தேமர்லாந்து என்ற பகுதி இப்போதைய நிருவாகப் பகுதி எதையும் ஒத்திராது. இது செர்மானியர் வந்து வசிப்பதற்கு முன்பு எரேரோ மக்கள் அலைந்து திரிந்து கொண்டிருந்த பகுதியையே குறிப்பிடுகின்றது. ஏறக் குறைய இது வடக்கில் எதோசாபனிலிருந்து (Etoshapan) தெற்கில் கோமா (Khoma) மேட்டு நிலங்கள் வரையிலும், கிழக்கில் கலகாரி மணற்பகுதியிலிருந்து மேற்கில் நமீபுப் பாலைவனம் வரையிலும் பரவியுள்ளது. தேமர்லாந்து அடர்த்தியான புல புதர்கள் மிக்க ஒரு நிலமாகும். இங்கே 40 செ.மீ யிலிருந்து 60 செ.மீ வரை ஆண்டுதோறும் மழை பொழிகின்றது. அப்பகுதியில் இது மிகப் பெரிய மேய்ச்சல் நிலமாகும். இங்கு வெள்ளையர்கள் ஏராளமானவர் வசிக்கின்றனர். எரேரோ மக்களுக்கு எனத் தனிப்பகுதிகள் ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளன. அ.உ.

**தேய்புரிப் பழங்கயிற்றினார்**: இயற்பெயர் அறியப்பெறாமல் தாம் கையாண்ட உவமைச் சிறப்பால் சங்கப்புலவர் சிலர் பெயர் பெற்றுள்ளனர். அணிலாடு முன்றிலார், ஒரேருழவர், கல்பொரு சிறுநுரையார், குப்பைக் கோழியார், செம்புலப் பெயனீரார், மீனெறி தூண்டிலார், விட்ட குதிரையார் எனனும் புலவர்கள் போலத் தேய்புரிப் பழங்கயிற்றினாரும் உவமையாற் பெயர் பெற்றவராவர். இவர் பாடிய ஒரே பாடல் நற்றிணையில் 284-ஆம் பாடலாக அமைந்துள்ளது. அது பாலைத் திணையில் பொருள் வயிற்பிரிந்த தலைவன் ஆற்றானாய் நெஞ்சிற்குச் சொல்லியது என்னும் துறையில் பாடப்பெற்றது. தலைவன் பொருளீட்டச் சென்றபோது, அவனைக் கவர்ந்த காரிகைபாற் சென்று கவலை நீங்கலாம்; செல்க என அவனிடம் நெஞ்சம் கூறியது. ஆனால், அவன் அறிவோ செய்வினையை முடிக்காமல் இடையில் மடங்குதல் அறியாமையுடன் இகழ்ச்சியைத் தரும் என்று கூறியது. நெஞ்சமும் அறிவும் கூறிய எண்ணப் போராட்டத்துக்கிடையே சிக்குண்டு இரு யானைகள் பற்றி ஈர்க்கும் தேய்புரிப் பழங்கயிறு போலத் தலைவனின் வருந்திய உடம்பு இற்றொழிய வேண்டுவதுதானோ எனத் தலைவன் கூறற்றிலவைத்து அவன் இரங்கிக் கூறுவதாக இப்புலவர் பாடியுள்ளார். 'ஒளி றேந்து மருப்பிற் களிறுமாறு பற்றிய தேய்புரிப் பழங்கயிறு போல வீவது கொல்என் வருந்திய உடம்பே' எனப் பாடிய சிறப்பால் இப்புலவர் தேய்புரிப் பழங்கயிற்றினார் ஆயினார். இரா.சா.

**தேய்மானம்** என்பது அளவில், தன்மையில், நிலையாகத் தொடர்ச்சியாக ஒரு குறிப்பிட்ட சொத்தில் ஏற்படுகின்ற மதிப்புக் குறைவாகும். இயந்திரம், கட்டடம் போன்ற நிலையான சொத்துகள், குறைவான ஆயுளுடைய மதிப்புரிமை, குத்தகை நாணயங்கள் போன்றவை தேய்மானம் (Depreciation) பெறுவதற்குரியவையாகும். பொருளாதார அமைப்பில் மாற்றம் ஏற்படும்பொழுது அதற்கு வரிச் சலுகைகள் அளிக்கப்படுகின்றன. அதாவது, ஒரு சொத்திற்கான விலையைக் கொடுக்கும்பொழுது பின்னர் ஏற்படுகின்ற செலவினை முன்னரே கொடுத்துத் தீர்ப்பது. எடுத்துக்காட்டாகக் கட்டடங்கள் வாங்கும்போது பணத்தை முன்பணமாக அதன் விலைக்கு ஈடாகக் கொடுத்து அதன்மூலம் பிற்காலத்தில் கொடுக்கவேண்டிய வாடகையை வாங்குவோர் தவிர்க்கின்றனர். ஆனால், நாளடைவில் அந்தக் கட்டடம் மதிப்பிழந்துபோகிறது அதனை வாங்குவதற்குச் செலவிடும்மதிப்பு முன்கூட்டியே பல வருடங்களுக்குச் செலுத்தும் வாடகைப்பணம் ஆகும்.

சொத்துகள் நாளடைவில் தேய்மானம் அடைவதற்கு இயற்கை ஏற்படுத்தும் மாற்றங்கள் காரணமாகக் கூறப்படுகின்றன. நாட்பட்ட அல்லது தேய்வடைந்த காரணத்தை அடிப்படையாகக் கொண்டு கணிக்கப்பட்ட பிற எண்ணிறந்த காரணிகள் சீரற்ற தேய்மான பளுவின் நிலைப்பாட்டை (Incidence) மாற்றியமைக்கின்றன. தேய்மானப் பண அளவு அவ்வப்பொழுது மாறும் தன்மையுள்ளது

தேய்மானம் ஏற்படுவதற்கு அநேக காரணங்கள் உள்ளன. அவற்றுள் சொத்தில் தேய்வு, நீர்ப்பொருள்கள் (Liquid) ஆவியாக மாறுதல், நீர்ப்பொருள்களின் வீரியம் குறைதல், அரிப்பு, ஈரத் தன்மையில் மாற்றம், நாகரிகம், புதிய கண்டுபிடிப்புகள் போன்றவை ஏற்படுத்தும் பழமை, அங்காடியில் விலைச் சரிவு, காலப்போக்கில் ஏற்படும் மாறுதல் ஆகியவை அடங்கும்.

உண்மை இலாபத்தைக் கழிப்பதற்கு முன்னால் சோகக்கப்படக்கூடிய முதன்மை வருவாய், செலவினங்கள் போன்றவை கணக்கிடப்பட்டு, ஒரு குறிப்பிட்ட செலவினம், கூலி, பழுதுபார்த்தல் அல்லது தேய்மானம் போன்றவற்றில், சொத்தின் சரியான அல்லது ஏறக்குறைய சொத்தின் ஒரு பகுதி பயன் அல்லது நுகர்வு ஆகியவற்றிற்கு ஒதுக்கும் பகுதியும் தொழிலை ஏற்று நடத்தும் செலவினங்களோடு சேர்க்கப்படவேண்டும் இவ்வாறு கணக்கிடுவது தேய்மானங்கள் கணக்கிடுவதற்குப் பயனாக இருக்குமென்று கருதப்படுகிறது.

தேய்மானத்திற்காக ஒதுக்கப்படுகின்ற பணம் அந்நிறுவனம் ஏற்றுக்கொள்ளக்கூடிய தேவையான கடன் தொகை என்றோ குறிக்கப்பட்ட ஒரு பங்கு எனக் கருதாமல் கணக்கில் எடுத்துள்ள காலத்திற்கு இலாபத்திலிருந்து சுமத்த வேண்டிய பகுதி என்றோ குறிப்பிடப்படுகிறது. இயந்திரத்தைப் பாது

காப்பதற்கும், தேய்மானத்திற்கும் இடையேயுள்ள வேறுபாட்டைத் தெரிந்துகொள்வது இன்றியமையாதது. இயந்திரத்தின் தேய்ந்துபோன பாகங்களை அவ்வப்பொழுது மாற்றிச் சோதனை செய்து அதை ஓர் உயர்ந்த நிலையில் வைக்கமுடியும் என்று கூறப்படுகிறது. பொதுவாக ஓர் ஆண்டு காலத்தில் அந்த நிறுவனத்தின் பொறியியல் வல்லுநர்கள் எவ்வளவு தான் கவனத்தோடு இயந்திரத்தின் திறனைப் பாதுகாத்து வந்தாலும், அதைக் கணக்கிடுவது அரிதாக இருந்தாலும் அதற்கான செலவை (குறிப்பிட்ட காலத்தில்) அந்த நிறுவனத்தின் இலாபத்தில் குறிப்பிட வேண்டும். இதன்படி நாளடைவில் இயந்திரங்களுக்கான தேய்மானம் இயந்திரம் ஒன்றுக்கும் உதவாத நிலையில் அதனை முதலில் வாங்குவதற்கு ஏற்பட்ட செலவுக்கு ஒத்ததாகும். தேய்மானக் கணக்கு, பொதுவாக ஒரே தன்மை செய்றபடுங்காலம் போன்றவற்றைக் கணக்கிட்டு அதில் சராசரி தேய்மானம் எடுத்துக் கொள்ளப்படுகிறது.

தேய்மானச் செலவைக் கணக்கிடும் பொழுது பின்வரும் அடிப்படை விதிமுறைகளைப் பின்பற்ற வேண்டும். அவை: 1) சிலவகைச் சொத்துகளில் எடுத்துக்காட்டாக நிலம், தொல் பொருள்கள் போன்றவற்றில் தேய்மானம் காணப்பட்டாலும், அது கண்ணுக்குப் புலப்படாத அளவில் காணப்பட்டாலும், அதனைத் தவிர்க்க இயலாது, 2) இலாபத்திலிருந்து தேய்மானம் கணக்கிடப்படுகிறது, 3) சொத்துகளின் தன்மைக்கேற்பப் பாதுகாப்புச் செலவும் இலாபத்தில் குறைக்கப்படும் தேய்மானமும் ஒன்றல்ல, ஈடல்ல; 4) சிறப்பு வைப்பு நிதி ஒன்றை ஏற்படுத்தி அதனைச் சிறப்பு வங்கி வைப்புக் கணக்கில் ஆயுள் காப்பீட்டு முறை அல்லது வேறெந்த மூலதனத்திலோ வைப்பதன்மூலம் தேய்மானத்திற்கான செலவை மேற்கொள்ள இயலாது. அதற்கு மாறாக அதனைப் பதிலீடு செய்யும் பணி முறையாக அது அமைகிறது 5) சொத்தைப் பதிலீடு செய்வது முதன்மையானது ஆனால், அது தேய்மானத்திற்கேற்ற அடிப்படைக் கொள்கையாகாது.

தேய்மானம் பல முறைகளில் கணக்கிடப்படுகிறது. அவை: நேர் கோடு முறை (Straight Line Method), குறைவுச் சரியீட்டு முறை (Diminishing Balance Method) வருடாந்திர வரி முறை (Annuity Method), கடன்கழிவு நிதி முறை (Sinking Fund Method), மறுபதிப்பு முறை (Revaluation Method), பழுதுபார்த்தல், பராமரித்தல், தேய்மான வைப்பு நிதி (Depreciation Method), புதுப்பித்தல்(Renewals) போன்றவையாகும்.

இயந்திரங்கள், சொத்துகள் தேய்மானம் அடைவது அன்றி நாட்டு நாணயம் தேய்வடைவதற்கும் வாய்ப்புள்ளது. இதனை நாணயத் தேய்மானம் என்று கூறுவர், ஒரு நாணயத்தின் மாற்றுவீதம் (Rate of exchange)அயல்நாட்டு மாற்றுச் சந்தையில் எவ்வாறு விரும்பப்படுகிறது என்பதனைப் பொறுத்து அந்நாணயத் தேய்மானம் அமைகிறது. இவ்வகையான செயல் ஏற்றத்தாழ்வுகளுக்குட்படுகின்றது. ஒரு குறிப்பிட்ட நாணயத்திற்கானதேவை அந்த நாட்டின் ஏற்றுமதித் தேவையைப் பொறுத்து அமைகிறது. அந்நாணயத்தின் அளிப்பு, கண்ணுக்குப் புலனாகும் (Visible), புலனாகாத (Invisible) இறக்குமதிப் பண்டங்களின் தேவையைப் பற்றியதாகும். அந்நிய மாற்றுவீதச் சந்தையில் ஒரு நாட்டின் நாணயத்திற்கான தேவை அதன் அளிப்பைவிட அதிகமாக இருக்குமானால் பிற நாணயங்களோடு ஒப்பிடும்போது அதன் மதிப்பு உயர்வாகவும், இதற்குமாறாக நாணயத்தின் அளிப்பு தேவையைவிட அதிகமாக இருந்தால் அந்நாணயத்தின் மதிப்பு தேய்வடைந்தும் காணப்படுகின்றது. இங்கிலாந்து நாட்டு பவுண்டின் மாற்றுவீதம் 1972-ஆண்டில் இவ்வாறு அமைந்தபொழுது அதன் மதிப்பு மாற்றுவீத அங்காடியில் (Exchange Market) உடனடியாகத் தேய்வடைந்தது.

நாளடைவில் நாணயமும் இயந்திரம், பதிப்புரிமை போலவே தேய்வடைந்து அவற்றிற்கு மாறாக ஈடு செய்யப்பட வேண்டும் என்ற நிலை ஏற்படுகின்றது. ஒருசில மூலதனம் குறிப்பிடத்தக்க அளவில் நீடித்திருந்தாலும் அவ்வகை மூலதனமும் நவீன அளவில் புதுப்பிக்கப்பட வேண்டும். இவ்வாறு செய்வதற்கு ஆண்டு உற்பத்தியின் ஒரு பகுதி பழமையான, தேய்வடைந்த மூலதனப் பதிலீடு செய்யப்பட வேண்டியுள்ளது. இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர் ஏற்பட்ட பொருளாதாரச் சரிவில் பணவீக்கத்தின் தலையீட்டினால் விலைகள் விடம்போல அதிகரித்துப் பலவாறான விபரீத விளைவுகளை ஏற்படுத்தின. தேய்மானம் வரிப்பளுவை ஏற்பதற்கும், பெறுவதற்கும், கணக்குப் பரிசோதனை செய்வதற்கும் பயன்படுகிறது. க.சொ.

**துணை நூல்கள்:**

**Hanson**, A Dictionary of Economics and Commerce, The English Language Book Society and Macdonald and Evans Ltd., London, 1975.

**Pickles, William Laffert yand James L.**, Accountancy Pitman Book Ltd., London, 1982.

***தேய்வு வீத வரி முறை***. பொது அமைப்புகளின் (அரசுகளின்) செலவுகளை ஈடுசெய்வதற்காக இப்பொழுது எவ்விதமான நேரிடைப் பலனையும் எதிர்பாராமல் மக்களால் செலுத்தப்படுவது வரி. இவ்வரி

முறைகள் பல வகைப்படும். அவற்றுள் ஒன்று தேய்வு வீத வரி முறை (Regressive taxation).

இறுதிநிலை வரி அடிப்படை (Tax base) அதிகரிக்க அதிகரிக்க இறுதி நிலை வரி விகிதம் குறைந்து செல்லத் தக்க வகையிலான வரி முறையைத் தேய்வு வீத வரி முறை என்பர். கீழ்வரும் அட்டவணையும் வரைபடமும் இதனை எளிதில் விளக்கும்.

| வரி அடிப்படை | வரி விகிதம் | வரித் தொகை |
|---|---|---|
| உரு. 1,000/- | 10 விழுக்காடு | உரு.100/- |
| உரு. 5,000/- | 9.5 விழுக்காடு | உரு.475/- |
| உரு.10,'00/- | 8.0 விழுக்காடு | உரு.800/- |
| உரு.50,000/- | 6.0 விழுக்காடு | உரு.3,000/- |
| உரு.1,00,003/- | 4.0 விழுக்காடு | உரு.4,000/- |




வரி அடிப்படை
tt–குறைநது செலலும் வரி விகிதக் கோடு

வளர் விகித வரிமுறை (Progressive taxation) விகித வரி முறை (Proportional taxation) போன்று பெரு வழக்கில் இம்முறை இலலை. மித வளா விகித வரி முறை (Degressive Taxation)போனறு ஓரளவுக்கு இம்முறை வழக்கில் இருக்கிறது.

மொத்த வரிப் பொறுப்பை (Total Tax liability) மொத்த வரி அடிப்படையால் (Total tax base) வகுத்துப் பெறுவது சராசரி வரி விகிதம். இதற்கு மாறாக, மொத்த வரிப் பொறுப்பில் தோனறும் அதிகரிப்பை, மொத்த வரி அடிப்படையில தோனறும் அதிகரிப்பால் வகுத்துப் பெறுவது இறுதிநிலை வரி விகிதம் (Marginal rate of taxation). எடுத்துக் காட்டாக,வருமானம்உரு 10,000/-என்றும்அதற்குரிய வரிப் பொறுப்பு உரு.1000/-எனறும்இருக்குமானால் சராசரி வரி விகிதம் $\frac{1000}{10,000}\times 100 = 10\%$,இவ்வரிஅடிப்படை உரு.12,000/-ஆகவும் வரிப் பொறுப்புஉரு.1560-/ ஆகவும் மாறினால் சராசரி வரி விகிதம் $\frac{1560}{12,000}\times 100 = 13\%$, இறுதிநிலை வரி விகிதம் $\frac{560}{2000}\times 100 = 28\%$,

விகித அடிப்படை வரி முறையில சராசரி, இறுதி நிலை வரி விகிதங்கள் ஒனறுக்கொனறு சமமானவையாக இருக்கும். வளர்விகித வரி முறையில் வரி அடிப்படை அதிகரிக்கும் போது, சராசரி வரி விகிதத்தை விட இறுதிநிலை வரி விகிதம் அதிகரிததுச் செலலும். இதற்கு மாறாக, தேய்வு வீத வரி முறையில வரி அடிப்படை அதிகரிக்கும் போது, சராசரி வரி விகிதத்தை விட இறுதிநிலை வரி விகிதம் குறைந்து செல்லும்.

மறைமுக வரிகளில் (Indirect taxes) பல இவ்வகையைச சார்ந்தனவே எனறும் ஒரு சிலா குறிப்பிடுகின்றனா, எடுத்துககாட்டாக, விறபனை வரி ஒரு மறைமுக வரி. ஒருவர் எந்த அளவுக்குப் பண்டஙகளை வாஙகினாலும், அவா செலுத்தும வரி விகிதம் மாறாதிருக்கும். அதிக வருமானமுடைய ஒருவர் தம் வருமானததில் செலுத்தும் விறபனை வரிப் பளுவோடு ஒப்பிடுகையில குறைநத வருமானமுடைய ஒருவர் தம் வருமானததில செலுத்தும் விற்பனை வரிப்பளு மிகுதியாக இருக்கும் எனபதைச் சுட்டிக்

காட்டி இவ்வறிஞர்கள் தம் கருத்தை வலியுறுத்து கின்றனர்.
என். எஸ்.பா.

**துணை நூல்கள்:**

**பாலசுப்பிரமணியன், என்.எஸ்.** பொது நிதி, உமா பப்ளிகேஷன்ஸ், மதுரை, 1985.

**Bhatia, H.L.,** Public Finance, Vikas Publishing House, New Delhi, 1976.

**Tyagi, P.T.,** Public Finance, Jai Prakash Nath Publications, Meerut, 1985.

**தேர்:** 'தேர்' என்ற சொல் தேர்ந்தெடுத்த என்றும், 'இரதம்' என்ற சொல் உயர்ந்த அமைப் புடையது என்றும் பொருள்படும். தொடக்கக் காலத் தில் போர்களுக்கும், மன்னர்கள், மக்களின் போக்கு வரத்திற்கும் பயன்படத் தொடங்கிய தேர், பின்னர்க் கடவுளின் ஊர்தியாக உருவெடுத்து'நகரும் கோயில்' என்ற சிறப்புப்பெயருடன், தேர் என்றாலே கோயில் தேரை மட்டும் குறிக்கும் அளவில் மாறி உள்ளது.



தேர்

வேத காலத்தில் தேர்கள் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட சக்கரங்களையுடைய போர்க் கருவியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இருக்கு வேதத்தில் கயிறு களால் இழுக்கப்படும் தேர்கள் பற்றியும், இந்திரன், வருணன், அக்கினி, சூரியன் போன்ற கடவுளர்களுக்கு ஊர்தியாகத் தேர்கள் பயன்படுத்தப்பட்டமை பற்றியும் குறிப்புகள் காணக் கிடக்கின்றன.

அருத்தசாத்திரத்தில் (கி.மு. 4-ஆம் நூற்றாண்டு) தேர்கள் நாள்தோறும் போக்குவரத்துக்குப் பயன் படும் தேர்கள், போருக்குப் பயன்படும் தேர்கள், கடவுளரின் தேர்கள் (கடவுளர்களின் வாகனங்கள்) என்று மூன்றாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. மேலும், கிருனார் கல்வெட்டுகளிலும் தேர்கள் பற்றிய குறிப்பு கள் கிடைக்கின்றன. காரவேலன் காலத்திய தேர்த் திருவிழாப் பற்றிய குறிப்புகளில் சமண சமயக் கடவுள் க்ளுக்குத் தேர்த்திருவிழா நடத்தப் பெற்ற செய்தி கள் கிடைக்கின்றன.



தேர்

தமிழகத்தில் சிலப்பதிகாரத்திலும், மணிமேகலை யிலும் தேர் பற்றிய செய்திகள் நிரம்ப உள்ளன. அதுபோன்றே சங்க இலக்கியங்களிலும் தேர்கள் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. மேலும் பன் னிரு திருமுறைகள், புராணங்கள் போன்றவற்றில் தேர்கள் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

தமிழக வரலாற்றில் பல்லவர் காலத்திற்கு முன்பே (கி.பி. 4-5-ஆம் நூற்றாண்டுகள்) தேர்த் திரு விழா தொடங்கலாயிற்று. தேர்கள் பற்றிய கல் வெட்டுக் குறிப்புகள் திருவில்லிபுத்தூர், திருவரங்கம், நல்லூர், மதுரை மற்றும் பல இடங்களில் உள்ள கோயில் கல்வெட்டுகளில் உள்ளன. அச்செய்திகள் தேர் பற்றிய கூற்றினை உறுதி செய்கின்றன (**South Indian Inscriptions III, IV, V, VII, XII, XXIV**). சோழ

பாண்டிய மன்னர்களின் கோயில் கட்டும் பணியின் ஓர் உறுப்பாகத் தேரின் வளர்ச்சி தொடங்கியது. அவ்வளர்ச்சிக் கட்டத்தில் விசய நகரப் பேரரசின் காலம் தேர்களின் பொற்காலம் என்றே கூறலாம். தேர்கள் வடிவமைப்பும், படிமங்களும் அழகுற அமைக்கப்பட்டதோடு மரச் சிற்பங்களின் வளர்ச்சி ஓர் முழுமை அடைந்த காலமாகவும் அது அமைந்தது.

தேர்கள் அமைப்பதைக் கலைஞனின் கருத்தில் தோன்றியவாறு அமைக்காமல் இருக்கச் சிற்ப நூல் விதிமுறையில் கைவண்ணத்துக்கு வளமூட்டி, கருத்துக்கு வரையறை வகுத்துள்ளது. விட்டுணு தத்துவ சமகிதை எனும் ஆகமத்தில் 'இரத நிர்மாணப் படலம்' என்ற படலம் முழுமையும் தேர் அமைப்பு விதிமுறைகளைக் கூறுகின்றது. அப்படலமே 'தேர்-இந்து தெய்வங்களின் உறைவிடம்' என்ற வரியுடனே தொடங்குகிறது. அதுபோன்றே 'மானசாரம்' என்ற சிற்பசாத்திரம் தேரின் அமைப்பு முறையையும், அதில் படிமங்கள் அமைய வேண்டிய இடங்களையும் தெளிவுபடுத்துகிறது

கோயில்களில் நாகரம், திராவிடம், வேசிரம் என்ற கோட்பாட்டில (அதாவது சதுரம் அல்லது அறுகோணம் மற்றும் எண்கோணம், வட்டம் போன்ற அமைப்பில்)கருவறை அமைக்கப்படும்.அதுபோல தேர்களின் அமைப்பும் நாகர, வேசிர, திராவிட போன்ற வகையில் அமைய வேண்டும் என்று மானசாரம் கூறுவதன்மூலம் தேரும், கோயிலும் அமைப்பில் ஒரு தன்மையின என்பதை உணர்த்துகிறது.

சங்ககாலத் தேர்கள் பொற்றேர், கொடிததேர், நெடுந்தேர், இயல்தேர் எனப் பல்வகையில் இருந்ததுபோல் இன்றையத் தேர்களும் 1) சகடை (மாடுகளால் இழுக்கப்படுவது-மிகச் சிறிய அடிப்பாகம் கொண்டு விமானம் எனும் அமைப்பு இல்லாத ஒன்று), 2) சட்டத்தேர் (உறுதியான நான்கு சக்கரங்களுடன் கூடிய அடிப்பாகம், மேல்பகுதி முழுவதும் சட்டங்கள் கட்டப்பட்டு விழா நிறைவு பெற்றபின் பிரிக்கப்படுவது ) 3) வைரத்தேர் (உறுதியான சக்கரங்களும்,உறுதியான பெரிய அடிப்பாகமும் அதன் மேல சிற்பங்களும் விமானத்துடன் கூடிய மேல பகுதியும் உள்ள இக்காலத்தேர்) என்று மூன்று வகையாகப் பிரிக்கப்படுகின்றன.

தேர், கோயிலின் கருவறை அமைப்புப்போன்று, உபபீடம், அதிட்டானம், பாதம், விமானம் போன்ற உறுப்புகளால் அமைக்கப்பட்டிருப்பதால் இது கோயிலின் மறு உரு என்று சொல்லப்படுகிறது. கோயில திருவிழா நிறைவின்போது இழுக்கப்படும் தேர்கள் ஒவ்வொரு கோயிலிலும் ஐந்து வகை(சுவாமி,அம்மன், முருகன், கணபதி, சண்டிகேசுவரர் ஆகியோர் தேர்கள்) உள்ளன.

ஒவ்வொரு தேரிலும் ஏறக்குறைய 250 முதல் 300 வரை சிற்பங்கள் இருக்கும். இதில இந்துக் கடவுளர்கள் சிற்பங்களும், புராண, தல புராண சிற்பங்களுடன் இராமாயண, மகாபாரத சிற்பங்களின் தொடர்கள் அணிசெய்யும். யானை, யானைவீரர்கள், குதிரை வீரர்கள், சங்கநிதி, பதும நிதி போன்ற சிற்பங்களும் உண்டு. பெரும்பாலான தேர்கள் உறுதியுடைய இலுப்பை மரத்தினால் செய்யப்படுகின்றன. சக்கரம் வாகை மரத்தினால் அல்லது வேங்கை மரத்தினால் செய்யப்படுகிறது. தேர்கள் ஒரு கலைப் பெட்டகமாக இருப்பதோடு மட்டுமன்றி ஒரு சமுதாய ஒருமைப்பாட்டுச் சாதனமாகவும் அமைகின்றன. கி.க.

**தேர்ச்சி நிலை:** ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கும் சமுதாயத்தின் மேம்பாட்டிற்கும் ஈடிணையற்ற கருவியாகக் கல்வி விளங்குகிறது. இத்தகைய கல்விக்கெனத் திட்டமிடும்போது வரையறுக்கப்பட்ட இலக்குகள் எந்த அளவுக்கு அடையப்பட்டன என்பதை மதிப்பிட்டால்தான் கல்வியில் தேவையான மாறுதல்களைச் செய்யமுடியும் மதிப்பீட்டின் மூலமே பொதுவான அடைவுகளையும் (Achievements), கற்போரின் தேர்ச்சி நிலையையும் (Attainment Level) அறிய இயலும். இக்கட்டுரை தேர்ச்சிநிலை என்றால் என்ன, தேர்ச்சிநிலையைக் கண்டறிதலின் பயன்கள், தேர்ச்சிநிலையை மதிப்பிடுதல், தேர்ச்சிநிலையைப் பாதிக்கும் காரணிகள், மேம்படுத்த வழிமுறைகள் ஆகியவை பற்றி விளக்குகிறது.

ஒரு பாடத்திட்டம் அல்லது பயிற்சியில் கற்பவர் எந்த அளவுக்கு அறிவாற்றல், கருத்துகள், தேவையான மனப்பான்மைகள், ஆர்வம், திறன்கள் ஆகியவற்றை வளர்த்துக்கொண்டுள்ளனரோ அதுவே அவரது தேர்ச்சிநிலை எனப்படுகிறது. தேர்ச்சிநிலை தேர்வுகளின்மூலம் அறியப்படுகிறது. வகுப்பறைகளில் மட்டுமல்லாமல் பலவேறு தொழில்கள், அரசாங்கப் பணிகள், பாதுகாப்புப் படைகள் ஆகியவற்றிலும் குறிப்பிட்ட பயிற்சிக்கும் அனுபவத்திற்கும் பிறகு பயிற்சியாளரின் தேர்ச்சிநிலையைக் கண்டறியத் தேர்வுகள் பயன்படுத்தப்படுகின்றன.

**தேர்ச்சிநிலையைக் கண்டறிதலின் பயன்கள்.** தேர்ச்சி நிலையைக் கண்டறிவதன் மூலம் கற்றல்-கற்பித்தல் முறைகளை மேலும் செம்மையாக்க முடிகிறது. கற்றல் அனுபவங்கள், பாடங்கள், பயிற்சிகள் ஆகியவை சரியான அணுகுமுறைப்படி தரப்பட்டனவா என்பதை அறிந்து குறைகள் இருப்பின் சரிசெய்துகொள்ள முடிகிறது. ஒரு பள்ளியில் ஒரு வகுப

பில் ஒரே பாடத்தைப் பல பிரிவுகளில் (Sections)பல ஆசிரியர்கள நடத்துமபோது அவர்களுடைய மாண வர்களின் தேர்ச்சி நிலையோடு ஓர் ஆசிரியர் தன னுடைய மாணவர்களின் தேர்சசி நிலையை ஒப்பிட் டுப் பார்த்து, அதறகேற்றபடி தன பயிற்று முறை களை மாற்றி அமைததுக்கொளள முடியும்.

தேர்ச்சி நிலையைக் கணடறிவதால் கறபவா ஒருவருக்கு எந்தெந்தப் பாடஙகளில் எதிர் பார்த்துளள திறமை ஏறபட்டுளளது என்பதும, இனனும் எநதெந்தப் பாடஙகளில் தனிக் கவனம செலுத்தப்பட வேணடும் எனபதும தெரியவரும். ஒவவொரு பாடததிலும மாணவரின தேர்சசி நிலையை அறிநது அவருககுச் சரியான கறறல் முறை களைப் பறறியும், வருஙகாலத்தில புதிய பாடங களைத தேர்நதெடுத்தல பறறியும் வழிகாட்ட முடி கிறது. பாடஙகளைக் கறபதில தம் நிலை என்ன எனபது தெரிநதாலதான கற்பவருககு மேலும படிப் பதில தொடர்ந்து ஆாவம் இருககும.

பலதரப்பட்ட பணிகள, மேறபடிபபு, தொழிற் கல்வி ஆகியவறறுக்குத தேர்ச்சி நிலையின அடிப் படையிலேயே அவறறில் ஈடுபடுபவர்கள தேர்வு செய்யப்படுகினறனர்.

சமூகக காரணங்களுக்காகவும் தேர்ச்சி நிலையை அறிவது தேவையாகிறது.கலவிக்காகவும,பல பயிறசி களுக்காகவும அரசாங்கம கோடிககணக்கில பணம் செலவு செய்வதால இநதத் தொகை சரிவரபபயன் படுத்தப்படுகிறதா எனபதை அறிய வேண்டியுள ளது. ஒரு பள்ளியில் மாணவரின தோசசி நிலை, அந்தந்த மாவட்டம், மாநிலம் ஆகியவற்றிலுளள மாணவர்களின பொதுவான தோசசி நிலை ஆகிய வறறைச் சமுதாயத்திறகு அறிவிக்கவேணடிய கடமை கலவி நிறுவனஙகளுக்கும் பிற பயிறசி நிலையங களுக்கும உள்ளது.

**தேர்ச்சி நிலையை மதிப்பிடுதல்:** பொதுவாகத் தேர்சசி நிலையானது நூற்றுககு இத்தனை என்று மதிப்பெணகள் (Marks) மூலம் அறிவிககபபடுவது வழககமென்றாலும், துல்லியத் தன்மைக் (Accuracy) குறைவினாலும், பாடததுககுப் பாடம உயர்ந்தஅளவு குறைந்த அளவு மதிபபெணகள் வழஙகப்படுவது வேறுபடுவதாலும் தேர்சசி நிலையைத் தரத்தின (Grade) மூலம் குறிப்பிடுவது சிறநததாகும். இதனை O,A,B,C,D,E,F, எனற ஆங்கில எழுத்துகளின்மூலம குறிப்பிடலாம். ஒருவரது தேர்ச்சி நிலையைத்தரத தின் வாயிலாகக் குறிப்பிடும்போது பலவிதஙகளில் ஒப்பிட்டுப் பார்க்க முடிகிறது. தணடேகர் எனபவர் மதிப்பெணகளைத் தரமாக மாற்றுவதற்குப் பின் வரும் எளிய முறையைத் தந்துள்ளார்.

| வரிசை எண | மதிப்பெண்களின வரிசை | தரம் | விவரம் |
|---|---|---|---|
| 1. | 79-உம் அதறகு மேலும் | O | மிகச் சிறநதது |
| 2 | 73-78 | A | மிக நனறு |
| 3. | 65-72 | B | நன்று |
| 4. | 53-64 | C | சராசரி |
| 5. | 40-52 | D | சராசரிககுக் கீழ் |
| 6. | 32-39 | E | மோசம் |
| 7. | 30-ம் அதற்குக் கீழும் | F | மிக மோசம |

**தேர்ச்சி நிலையைப் பாதிக்கும் காரணிகள்:** இவற் றுள் பல காரணிகள அடங்கும். அவை, சமூகக் காரணிகள், திறமை, ஆளுமை, ஊக்கம், தறகருத்து (Self-Concept) முதலியன.

கற்போரின் தேர்ச்சி நிலைக்கும சில சமூகக் காரணிகளுக்கும் இடையே தொடாபு இருப்பதாகப் பல ஆராய்சசிகள உறுதிப்படுத்தியுள்ளன. தக்லசு எனனும் உளவியல அறிஞரும் அவருடன் பணியாறறி யவர்களும இஙகிலாநதில் நடத்திய 'ஆரோக்கியமும வளாச்சியும்' எனனும் நாடு தழுவிய மதிப்பீட்டில் குழந்தைப பருவத்திலிருந்தே ஒரு மாணவனது தோச் சிககும், குடும்ப அளவு, தநதையின தொழில் ஆகிய வறறுககும தொடர்பு இருபபதாகக் கணடறிந்தனர்.

நுணணறிவிற்கும் (Intelligence) தேர்சசிநிலைக் கும நேரடித் தொடாபு இருப்பது மறுக்கமுடியாத உணமையாகும நுணணறிவுச சோதனைகளில் ஒரு வர் பெறும மதிபபெணகளை வைதது அவரது வருங காலத் தேர்சசிநிலையினை ஓரளவு கணிததுககூற இயலும.

ஆளுமைக் குணநலனகளுககும தோசசி நிலைக்கு மிடையே உளள தொடர்பு அவவளவு தெளிவான தாக இலலை. பொதுவாகக் கலகலபபாகப் பழகும இயலபிறகும தோசசி நிலைக்கும் தொடர்பு இருப பதை ஆராய்ச்சிகள தெரியப்படுத்துகினறன. 14வய தில கலகலபபாகப் பழகும தனமையுடையவாகள நல்ல தோச்சி பெறுகின்றாரெனவும் அதற்குப்பிறகு ஒதுங்கிப்போகும இயலபுள்ளவர்கள் நனகு தேர்சசி பெறுகினறாரெனவும் ஆராய்ச்சிகள் கூறுகின்றன.

எதையும சாதிக்கவேண்டும் எனற ஊக்கம் மக்க ளிடையே மாறுபட்ட அளவில உளளது. சாதனை உணர்வு மிகுதியாக உள்ளவர்களுக்குத் தோல்வியைத் தவிர்க்கவேணடும் என்ற எண்ணத்தைவிட வெற்றியை

அடைய வேண்டுமென்ற எண்ணமே மேலோங்கி இருப்பதாக ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள்.

ஒருவர் தம் வாழ்க்கையில் முக்கியமாகக் கருதுபவர்கள் பலரிடம் பழகி அப்பழக்கத்தின் விளைவாகத் தம்மைப்பற்றிக் கொண்டுள்ள ஓர் எண்ணத்தையே தற் கருத்து எனலாம். ஒருவருடைய மனப்பான்மைகள், திறமைகள், அனுமானங்கள், தம்மைப் பற்றிய எண்ணங்கள் ஆகிய யாவும் இந்தத் தற்கருத்தில் அடங்கும். இவற்றில் ஒருவருடைய திறமையைப் பற்றி அவர் கொண்டுள்ள கருத்து நேரடியாக அவரது தேர்ச்சியினைப் பாதிக்கிறது.

**வகுப்பறைக் காரணிகள்:** வகுப்பறைகள் கற்போரின் படைப்பாற்றல் திறனையும்,சுயமாகச் சிந்திக்கும் திறனையும் வளர்க்காமல் ஏதோ 'அறிவுக் கடைகள்' போல் அமைந்துள்ளன. இருக்கை வசதி, கரும்பலகை வசதி, காற்றோட்டமான அறைகள், நல்ல வெளிச்சம்,சுகாதாரச் சூழ்நிலை ஆகியவை பல வகுப்புகளில் இருப்பதில்லை. இந்நிலைமை மாணவர் தேர்ச்சியினைப் பெரிதும் பாதிக்கிறது.

மாணவரின் தேர்ச்சி நிலை பெரும்பாலும் ஆசிரியரின் பயிற்று முறைகளைப் பொறுத்தே அமைகிறது.

**பள்ளிக் காரணிகள்:** ஒரு நல்ல பள்ளியில் படிக்கும் மந்த புத்தியுடைய மாணவர்களின் சராசரி மதிப்பெண்களும், ஒரு மட்டமான பள்ளியில் படிக்கின்ற திறமைவாய்ந்த மாணவர்களின் மதிப்பெண்களும் ஒன்றாக உள்ளனவென ஆராய்ச்சிகள் தெளிவாக்கியுள்ளன. பள்ளிக் கட்டடம், நூலகம், ஆய்வக வசதிகள், பயிற்று முறைகள், ஆசிரியர்-மாணவர் தொடர்பு, தலைமையாசிரியர்-பிற ஆசிரியர் தொடர்பு போன்ற பள்ளிச் சூழ்நிலைகள் தேர்ச்சியினைப் பாதிக்கின்றன.

**தேர்ச்சிநிலையை மேம்படுத்துவதற்கான வழிகள்:** ஆசிரியரைப் பொறுத்தவரை தெளிவாகக் கற்பித்தல், மாணவரைப் பாராட்டி முன்னேற்றம் பற்றி அறிவித்து ஊக்குவித்தல், தாமே சிந்திக்கும் திறனை வளர்த்தல், கற்பிக்கும் பாடங்கள் பிற பாடங்களுடனும் வாழ்க்கையுடனும் எவ்வாறு தொடர்புடையன என்பதைப் புரியவைத்தல், காட்சி கேள்விக் கருவிகளைப் பயன்படுத்திப் பயிற்றுவித்தல், ஆரோக்கியமான போட்டி, வெற்றி தரும் அனுபவங்கள் ஆகியவற்றிற்கு வழிவகுத்தல்போன்றுவற்றின்மூலம் தேர்ச்சி நிலையை மேம்படுத்த இயலும். மாணவர்கள் பாடங்களை ஒட்டுமொத்தமாகப் படிக்காமல் இடைவெளி விட்டுக் கற்றல், திரும்பத்திரும்பக்' கற்றல், பொருளுணர்ந்து படித்தல், செய்துபார்த்துக் கற்றல், சிறந்த படிப்புப் பழக்கங்கள் ஆகியவற்றைக் கடைப்பிடித்தால் தம்முடைய தேர்ச்சி நிலையினை மேம்படுத்த இயலும். பி.பி.

துணை நூல்கள்:

**Cohen, Louis and Manion, Lawrence,** Perspective on Classrooms and Schools, Holt, Rineharts and Winstion, London, 1981.

**Nunnally. Jumc.,** Educational Measurement and Evaluation, McGraw-Hill Book Company, Newyork, 1972.

**தேர்தல்கள்:** பொதுப்பணி செய்தற்குரிய ஏதேனுமொரு பதவிக்கு அல்லது நிறுவனத்துக்கு வேட்பாளராக நிற்பவர் பலருள் ஒருவரை அப்பதவிக்கு அல்லது நிறுவன உறுப்பினா பதவிக்குத் தகுதி உடையவரெனறு வாக்காளர்கள் இரகசியமுறையில் தெரிவு செய்தலே தேர்தல் (Election) எனப்படும். எனவே, இது குடிமக்களுடைய சுதநதிரமான விருப்பத்தை வெளிப்படுத்தும் ஒரு செயல ஆகும்

**வரலாறு:** கடநத இரு நூறாணடுகளாக ஒவ்வொரு நாட்டிலும் குடிமககளே தலைமையான அதிகாரமுடையவர்களென்ற கொள்கை உலக நாடுகளில் பின்பற்றப்படுகிறது. மக்களாட்சிக் கொள்கையாகிய இக்கொள்கை,குடிமககளுக்கு அரசியலில பஙகு அளிப்பதற்கான வாய்ப்புகளை நல்கும். (1) குறிப்பிட்ட வயது வந்த குடிமக்கள் யாவருக்கும் தேர்தலகளில தமக்கு விருப்பமான வேட்பாளரை வாக்கெடுப்பின வாயிலாகத் தெரிவு செய்தற்கும், தாஙகளே வேட்பாளர்களாகத் தேர்தலுக்கு நிறபதற்கும் உரிமை இருத்தல்(2) அவ்வப்போது தேர்தலகளை நடத்துதல் (3) நிருவாக, நீதித் துறைப பதவிகளின் பணிகளைச் செய்தற்குரிய படிப்புத் தகுதிகளை உடையோருக் கெல்லாம் அவ்வலுவல்களைப் பெறுதற்குச் சம உரிமை இருத்தல் (4) கருத்துகளை எடுத்துப் பேசுதற்கும், வெளியிடுதற்கும, அதற்காகக கழகங்களை அமைத்தற்கும் உரிமை இருத்தல முதலியவை ஆகும். இத்தகைய அடிப்படையான அரசியலுரிமைகளின இன்றியமையாமையைப் பணடைய கிரேக்க நாட்டில் அரிசுட்டாட்டில வலியுறுததினார். பணடைய கிரேக்க நாட்டில இசுபாாட்டா நகரரசில் இருநத முதியோர் மன்றத்தின (Council of Elders) 28 உறுப்பினர்கள்,பிரபுக்கள வகுப்பில 60 வயதுக்கு மேற்பட்டவரிடையேயிருநது வாழ்நாள முழுமைககும் மக்கள் மன்றததால் தேர்நதெடுக்கப்பட்டனர் மககள் மன்றமே (Apella) முக்கிய அதிகாரிகளைத் தோந்தெடுத்தது. நேர்முக மக்களாட்சி நடைபெற்ற ஆதெனசு நகரரசில பெரும்பாலான பதவிகளுக்கும, நிறுவனஙகளுககும் திருவுளசீட்டு முறையில் (System of choice by lot) பணியாளர்கள தெரிவு செய்யப்பட்டபோதிலும், தொழிலநுட்பததிறன் தேவைப்படும் போர்த் தளபதி வேலை, நீரூற்றுக கணகாணிப்பாளர் வேலை முதலியவறறுககு, அததொழில்களுககுரிய

தகுதியுடையோரிடமிருநதே பணியாட்கள் தோந்து எடுக்கப்பட்டனர். உரோமானியக் குடியரசில நூற்றுவர் மன்றம் (Comitia Centuriata) உயர்தர நிருவாக, நீதி அதிகாரிகளையும், திறைசெலுத்துவோர் மன்றம் (Comitia Tributa) சில அதிகாரிகளையும, மக்கள் மனறம் (Concilium Pebis) சில உயர்தர அதிகாரிகளையும் தேர்ந்தெடுத்தன. பணடைய இநதிய அரசுகளில் செயறபட்ட சில மனறங்களுக்கு உறுப்பினர்கள் மக்களால் தேர்நதெடுககப்பட்டனர். இடைக்காலத்தில் கிறித்தவத திருசசபைகளில ஆயர்கள, (Bishops), பேராயர்கள் (Arch Bishops), போப்பு (Pope) முதலிய உயர்தர அதிகாரிகளைத் தகுதியுளள வாககாளர்கள் தேர்ந்தெடுத்துப் பதவியிலமர்த்தும முறை கொணடு வரப்பட்டது. இடைக்கால இஙகிலாந்தில வாணிகமும் தொழிலும் நகரஙகளில் வளரவே, ஒவவொரு நகரமும் அரசருக்குச் செலுத்த வேணடிய வரியைத் தீர்மானித்தற்கும், வரியைப் பிரித்துக் கொடுப்பதறகும் ஒரு நகரத் தலைவரையும் (Mayor) ஒரு நகரமனறத்தையும் (Council) நகரமக்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளும உரிமைகளைப் பட்டயங்களின் வாயிலாக அரசரிடமிருந்து பெற்றிருநதது. இங்கிலாந்தில கி.பி. 1265-இல முதன முதலாக சைமன் டி மான்ட்பர்ட்டு என்பவரால் கூட்டப்பட்ட பாராளுமனறத்தில் ஒவ்வொரு மாவட்ட நீதி மனறத்திலிருந்தும் இரண்டு நிலமானிய வீரர்களும (Knights), ஒவ்வொரு பட்டணததிலிருந்தும் இரணடு நகர மக்களும் (Burgesses) தேர்நதெடுத்து அனுபபபடுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. இப்பாராளுமனறத்தில நாடு முழுவதற்கும பிரதிநிதித்துவம் அளிக்கப்படவிலலையாயினும், சைமனுக்கு ஆதரவளித்த மாவட்டங்களிலிருந்தும் (Shires), பட்டணங்களிலிருநதும் (Towns) தேர்ந்தெடுக்கப்பட்ட நிலமானிய வீரர்களும், பட்டணப் பிரதிநிதிகளும் கலநது கொண்டார்களாகையால,இவவிருவகைப்பட்ட பிரதிநிதிகளால நாளாவட்டத்தில் இங்கிலாந்தின பொது மக்கள மன்றம (House of Commons) அமைவதற்கு வழி உணடாயிறறு. 'பொது மக்கள யாவருக்கும தொடர்புள்ள செயல்களெலலாம் பொது மககளுடைய ஒப்புதலைப் பெறுதல் வேணடும்' என்ற மக்களாட்சிக் கொளகையினடிப்படையில் ஆஙகில அரசர்கள, குடிகளிடமிருந்து வரி வாங்கும் பொருட்டுக் குடிகளின் இததகைய பிரதிநிதிகளை அவ்வப்போது பாராளுமன்றமாகக கூட்டும் ஒரு நல்ல பழக்கத்தை வளாத்தனா. இங்கிலாந்தில் இவவாறு குடிகளுக்கு ஆட்சியில் பஙகு அளிக்கவலல முறையாகத தேர்தல் முறையும், பாராளுமன்றமும தோன்றின. அநத முறையை முன் மாதிரியாக வைத்து மற்ற ஐரோப்பிய நாடுகளிலும், அமெரிக்காவிலும், இநதியாவில ஆங்கில ஆட்சிக காலத்திலும தோதல முறைதள கையாளப்பட்டு வநதன.

**தேர்தல் பற்றிய செயல்கள:** தேர்தலில் போட்டியிடும வேட்பாளர்களுடைய தகுதிகள, வாககாளர்களுடைய தகுதிகள, வேட்பாளர்கள் வைப்பு அலலது காப்புத தொகை (Deposit) கட்டுதல், வேட்பு மனுக்களைத் தாக்கல் செயதல், அவற்றைத் தேர்தல அதிகாரிகள பரிசீலனை செயதல, வேட்பாளர் சார்பாக அவாகளுடைய ஆதரவாளர்கள் பிரச்சாரம் செய்தல், தோலில போட்டியிடுவோர் தேர்தல செலவு பற்றிய கணககுக் கொடுத்தல, தேர்தலில வாக்கு அளிக்கும் முறை. தேர்தல் பற்றிய வழககுகளைத தீர்த்தல் முதலியவையெல்லாம் ஒவ்வொரு நாட்டின சட்டத்திலும் வரையறை செயயப்பட்டிருக்கினறன. இநதிய நாட்டில் அரசியலமைபபுச சட்டமும, மக்கள பிரதிநிதித்துவச சட்டமும இவறறை வரையறை செய்துளளன.

**தேர்தல் முறைகள்:** தேர்தலகள் நேர்முகத தோதல எனவும், மறைமுகத் தோதல எனவும், வெளிப்படையான வாககுப்பதிவு எனவும், இரகசிய வாக்கெடுபபு எனவும் பலவகைப்படும. பிரஞ்சுக் குடியரசின மேலவை உறுபபினர்களும் (Council), ஐக்கிய அமெரிகக நாட்டின் குடியரசுத தலைவரும் (President), இந்தியக் குடியரசுத் தலைவரும மறைமுகத தேர்வின் வாயிலாகத் (Indirect Election) தேர்நதெடுக்கப்படுகினறனர். மறைமுகத தோவில தேர்நதெடுக்கப்படும் பிரிதிநிதிக்கும (அலலது தலைவருககும) தொடக்க வாக்காளருக்கும (Primary voter), நடுவே இடைத் தோவாளர் (Intermediate Elector) இருக்கிறார். இதில் உறுப்பினாகளை அல்லது குடியரசுத் தலைவரைத தோநதெடுக்கும் இடைத் தேர்வாளர்களின எண்ணிக்கை சிறிதாக இருபபதால், இவர்கள குறிப்பிட்ட வயதுவந்த எல்லாச சாதாரண வாக்காளாகளையும விட வெறும் உணர்ச்சி வயபபடாமல, பொறுப்புத் தகுதிகளைக் கவனமாக ஆயந்து தக்கவாகளைத் தோவு செயதல இயலும. இதுவே மறைமுகத தோதலிலுளள ஒரு நிறைஆகும். ஆனால் நடைமுறையிலேயே இடைத் தோவாளர்கள பொறுப்புத் தகுதியை ஆய்தறகுரிய சுதநதிரத்தோடு இல்லாமல, இனன வேட்பாளரையே அவர்கள இறுதியில தேர்ந்தெடுத்தல வேணடும என்ற வாக்குறுதியின் பேரிலதான (Pledge) நடைமுறையில தொடக்க வாக்காளர்களால தேர்நதெடுக்கபபடுகினறனர். ஆகையால, ஐககிய அமெரிகக நாட்டுக் குடியரசுத் தலைவருடைய மறைமுகத் தோதலில நடபபது போல, மறைமுகத் தேர்தலானது நடைமுறையிலேயே நேர்முகத தேர்தலாகவே ஆகிவிட வழி ஏற்படுகிறது மேலும், மறைமுகத் தேர்தலில இடைத் தோவாளர்கள எணணிககையில குறைவாக இருப்பதால், அவர்களை வேட்பாளர் சாாபாகக் கையூட்டு முதலிய ஊழல முறைகளுக்கு உட்படுத்து

தற்த வாயப்புகள பெருமளவு தோனறுகின்றன. எனவே மறைமுகத தேர்தல் முறையில் பொதுநல உணாவு புறக்கணிக்கபபட வழி உணடு. நேர்முகத் தேர்தலில் எண்ணிக்கையில் பெருமளவு வாக்காளா கள் பஙகெடுததுக் கொணடாலும, அவர்களுக்கு அரசியலில் ஈடுபாடும், பொதுநல உணாவிலீடுபாடும் தோனற வாய்ப்பு இருக்கிறது.

இரகசிய வாக்குப்பதிவு முறையே (Vote by Secret ballot) இப்பொழுது எலலா நாடுகளிலும கையாளப்படுகிறது. முன்பு வெளிப்படையான வாக்குப் பதிவு (Public voting) கையாளப்பட்டது. இது தென்மார்க்கு நாட்டில் 1901 வரையிலும், பிரசியா வில் 1920 வரையிலும், உருசியா நாட்டில 1936 வரையிலும் பின்பற்றப்பட்டது· வாக்குப்பதிவு செய தல் என்பது பொதுமக்கள் சார்பான ஓர் அரசியற பணி ஆகையால் அது வெளிப்படையாகவே இருத்தல வேணடுமென்று மில் என்பவா கருதினார். மேலும் இரகசிய வாக்குப் பதிவில் வாககாளர் தம் பொறுப் புணர்வுக்கு மாறாக, தமது அலலது ஒரு வகுப்பாரின் நலனுக்காகத தம வாக்கைப் பதிவு செய்தறகு வாய்ப்பு இருக்கிறது எனினும் வெளிபபடை வாககுப் பதிவிலுள்ள ஒரு பெருநதீஙகே அது மறைதற்குக் காரணமாக இருந்தது, இநத முறையில் வேட்பாள ரின சார்பாக வாக்காளர் வலிய கட்டாயத்துக்கு உட்படுத்தப்படலாம். பிரசியாவில 1920-ஆம ஆணடு வரை இந்த முறையின் விளைவாக அரசாங கம் தனது வேட்பாளாகளுக்கு வாக்கு அளிக்குமாறு வாக்காளர்களை வனசெயலின் வாயிலாக அச்சுறுத திற்று; அதனால பல வேட்பாளர்கள் வாககுபபதிவு செய்தலினின்றும் ஒதுங்கி விட்டனா.

**பொதுவுடைமை நாட்டில் தேர்தல் முறைகள.** பொதுவுடைமைநாடாகிய உருசியாவில அநநாட்டின சமநிலைக் கோட்பாட்டினபடியே அதன் சமூகப் பொருளாதார, அரசியலமைப்பும உருவாக்கப்பட் டுள்ளன (காணக: சமநிலைக கோடபாடு). அந நாட்டின இரு உயாதரச சட்டமனறஙகளுககும நடை பெறும தேர்தல்களின அரசியலமைபபுச சட்டத்தில ஒப்புக கொளளப்பட்ட பொதுவுடைமைக கட்சி ஒனறு தான (Communist Party) பஙகு கொளள உரிமை பெற்றுளளது. வேறு அரசியறகட்சிகள அஙகு அமைக்கபபட இயலாது. வாக்குரிமை பெற்ற இரு பதது மூனறு வயது நிரமபிய இருபாலார் எவரும, உழைப்பாளர் கழகங்களாலோ, பொதுவுடைமைக கட்சி அமைப்புகளாலோ, தொழிற்சஙகஙகளாலோ, கூட்டுறவுக் கழகங்களாலோ, பொதுவுடைமை இளைஞர் பணபாட்டு-நிறுவனங்களாலோ தேர்த லுக்கு வேட்பாளராக நிறுத்தப்படுதறகுத தகுதி உடையவர் ஆவர். உருசிய தேசிய இனத்தைச் சோாநத 18 வயததைடநத ஆண, பெண் அனைத்துக குடிமக்களுக்கும வாக்குரிமை இருககிறது. இனம், சமயம், கல்வி, ஊர், சொத்து, சமூகநிலை முதலிய வற்றினபடிபபடையில மககளுக்கிடையே எந்த வேறு பாடுமின்றி இவவுரிமை வழஙகப்பட்டுளளது. ஒவ வொரு குடிமகனுக்கும ஒரு வாககு உணடு; தோதல் களில இரகசிய வாககெடுப்பு முறையே கொணடு வரபபட்டுளளது உருசியாவில பல்வேறு நிலைகளி லுள்ள பொதுவுடைமைக் கட்சி அமைப்புகளுக்கும் குடி யாட்சி இயல்பான அதிகாரக குவிப்பு (Democratic Centralism) எனற கொளகையின்படி உறுப்பினர்கள தேர்நதெடுககப்படுகினறனர்.

**மக்கள் ஆட்சியில் தேர்தல் முறை:** இநதியா தாராள, இயல்பான மக்களாட்சி நாடு ஆகும். மக்க ளாட்சியில குடிமக்களே இறைமை அல்லது தலைமை யான அதிகாரம் உடையவர்கள் எனற கொள்கையை (Principle of Popular Sovereignty) அதன அரசிய லமைப்புச் சடடததின பிரிவு 326 எடுத்துக் காட்டு கிறது; இநதியமக்கள் சபைக்கும் (House of the People) ஒவவொரு மாநிலத்தின் சட்ட மனறத்துக்கும் தேர்தலகள 21 வயதுடையோர்க்கு வாக்குரிமை (Adult Suffrage) என்ற அடிப்படையில நடைபெறுதல வேணடும; அவா இநதிய நாட்டில் வாழ்பவராகவும், சிததசுவாதீனமிழந்து விடாமலும், பெருஙகுறறமோ ஊழலோ சட்டத்துககு மாறான செயலோ செயயாதவராகவும் இருததல் வேணடும். இரகசியவாக்குப் பதிவு முறையே கையாளப்படுகிறது. பாராளுமனறத்துககும, மாநிலச சடடமன்றத்துககும் குடியரசுத் தலைவர், துணைக் குடியரசுத் தலைவா பதவிகளுக்கும் நடைபெறும் தேர்தலுகளுககான வாக காளாபபடடியலகள வரைதலைமேறபாாவை செயது இயககிக் கட்டுப்படுத்தலை ஒரு தோதல ஆணையம (Election Commission) செய்யும (பிரிவு 324). இதில ஒரு தலைமைத் தேர்தல் ஆணையாளரும, மாநிலத் தேர்தல்ஆணையாளர்களும இருக்கின்றனா. இவ்வலு வலர்களின பணிககட்டுப்பாடுகள தலைமைநீதிமனற நீதிபதிகளின் பதவியைப போனறு அமைக்கப்பட டுள்ளன.

**சமுதாயத்தில் தேர்தல்பெறும் இடம்** மக்களாட்சியில சுதந்திரமான தேர்தல்முறையும், உரிமைகளும, குறிப் பிட்ட காலங்களில தோதல்கள நடத்தப்படுதலும மிக முககியமானவையாகும். பல அரசியற் கடசி களும பஙகு பெறுதறகு அரசியலமைபபில இடம் இருத்தல் வேணடும, குடியாடசி அமைபபுகளை வைததுக் கொணடு ஒரே அரசியற் கட்சியே ஆளுதல உண்மையான மக்களாட்சி ஆகாது. அரசியலில் சுதந்திரமாகப பஙகு கொளளுதற்கு இருககும ஒரே

உரிமை, தேர்தலில வாக்கு அளிப்பதறகு இருக்கும் உரிமையேயாகும். பா சூ.

**துணைநூல்கள்:**


Mill, J S., Representative government, Worlds Classics. No.170, Oxford. 1940.

The Constitution of India, 1950.


*தேர்தல் பொறுப்பதிகாரி:* மக்கள பிரதிநிதித்துவச் சட்டம் 21- ஆம பிரிவினபடி மாநிலச் சட்டமன்ற மேலவையில் (Counil of States) ஓர் இடத்தையோ, மேற்பட்ட இடங்களையோ நிரப்புவதற்காக ஒவவொரு தொகுதியிலும நடத்தப்படும் தேர்தலுக்காவும், மாநிலச சட்டமனற மககளவையின (Legislative Assembly) உறுப்பினர்களால் மாநிலச் சட்டமன்ற மேலவையின் (Legislative Coun-cil) ஓர் இடததையோ மேறபட்ட இடஙகளையோ நிரப்புவதற்காக நடத்தப்படும் தேர்தலுககாகவும் தேர்தல் குழு, அரசுடன ஆலோசிதது, ஓர் அரசு அதிகாரியையோ உளளாட்சித துறை (Locaatuho-rity) அதிகாரியையோ, தேர்தல் பொறுப்பதிகாரியாக நியமிக்கிறது. தேர்தலுககான அனைத்துக் காரியஙகளையுமம இவா கவனிததுக் கொள்வாா.

தேர்தல குழு, மாநில அரசுடன கலநது ஆலோசித்து, ஓா அரசு அதிகாரியையோ உளளாட்சி அதிகாரியையோ தோதல பொறுப்பதிகாரியாக நியமிககிறது. மாநிலச் சட்டமனற இடஙகளை நிரப்புவதற்காக நடத்தப்படும தோதலுககாகவும், மாநிலச் சட்டமன்ற மககளவையின் உறுபபினாகளால், மாநிலச் சட்டமன்ற மேலவையின இடங்களை நிரபவதறகாக நடத்தபபடும தோதலுககாகவும் தோதல பொறுப்பதிகாரி நியமிககப்படுகிறார். ஒவவொரு தொகுதிக் தும், அத்தகைய ஒவ்வொரு தேர்தலுக்கும அவர் நியமிககப்படுகிறார். தேர்தல் குழு, ஓர் அதிகாரியை, ஒனறிற்கும் மேற்பட்ட தொகுதிகளுக்குத் தேர்தலபொறுப்பதிகாரியாக நியமிக்கலாம். இததோதல அதிகாரி, சட்டம் கூறியபடி, தேர்தலைத் தகுநத முறையில நடத்துவதறகான எல்லாச செயல்களையும செய்கிறாா.

தேர்தல குழு, அரசு அதிகாரி அல்லது உள்ளாட்சி அதிகாரி ஒருவரை உதவித்தோதல் பொறுப்பதிகாரியாக நியமிக்கலாம். அவர் தோதலபொறுப்பதிகாரியின கட்டுப்பாட்டிறகுள இருப்பார். தேர்தல பெறுப்பதிகாரி செயயும் செயல்களைச் செய்யத் தகுதியுடையவராகஅவா இருக்கவேண்டும். ஆனால, அவா வேட்பு மனுக்களை ஆராயும் செயலோடு தொடாபுடைய, தேர்தல் பொறுப்பதிகாரியின செயலகளைச் செய்யககூடாது.

விழிப்புணர்வு கொணட, அனுபவமிக்க, நனனடத்தை கொணட, நாணயமிக்க தம கடமைகளுக்கான சட்டததைப் பற்றி நன்கு அறிந்த அதிகாரிகள தோதல் பொறுப்பதிகாரிகளாக நியமிக்கப்படுகிறார்கள. சட்டத்தினபடி தோதலை நோமையாகவும், கணடிபபான முறையிலும் நடத்த வேணடியது மிக முக்கியமானது எனபதைத தேர்தல் பொறுப்பதிகாரி நனகு உணர வேணடும்.

தோதல் பொறுப்பதிகாரியின செயல்களா பாதியளவு நீதித் தனமை (Quasi-judicial) வாயநதது. தஙகளது கடமைகளுக்கான சட்டத் தலைமையினை (Legal position) அவர்களா அறிநதிருகக வேணடும.

வாக்கு அட்டையைத் தேர்தல் பொறுப்பதிகாரி ஒப்புக் கொள்ள மறுத்துப் பினபு திருமபப பார்க்கும் போது, தாம ஒப்புக கொள்ள மறுததது தவறு எனறு கணடால, தாம மறுதத அவ வாககட்டையை ஏறறுக் கொள்வதறகுத் தேர்தல் பொறுப்பதிகாரிககு அதிகாரம உளளது.

தேர்தல பொறுப்பதிகாரி, ஒவவொரு ஓட்டுச சாவடிககும தலைமை அதிகாரிகளையும் (Presiding Officers) ஓட்டு அதிகாரிகளையும் (Polling Officers) நியமிக்கிறார். வேட்பாளரைச் சார்நதோரைத தலைமை அதிகாரியாகவோ ஓட்டு அதிகாரியாகவோ நியமிககக் கூடாது

தேர்தல் குழு, தேர்தலைப் பற்றிய அறிககையை வெளியிட்டவுடன, தேர்தல பொறுப்பதிகாரி (பிரிவு 31) வேட்பாளர்கள் வேட்பு மனுககளை, குறிப்பிட்ட இடததிற்கு அனுபபுமபடி குறிப்பிட்ட முறையிலும் குறிபபிட்ட படிவத்திலும ஒரு பொது அறிக்கை (Public Notice) கொடுப்பார். அநத அறிககையில வேட்பு மனு தாக்கல செயயபபடும் இடம குறிப்பிடப்பட்டிருக்க வேணடும்

36-ஆம பிரிவினபடி, வேட்பு மனு தாக்கல செய்யப்பட வேணடிய நாளில தோதல் பொறுப்பதிகாரி வேட்பாளர்களையும், அவரால ஏற்றுக் கொளளப்பட்டவாகளையும் உள்ளழைதது, அனைத்து வேட்பாளாகளின் மனுககளையும ஆராய வாய்பபுகளை அளிப்பாா. அதனபினபு தோதல பொறுப்பதிகாரியே, வேட்பு மனுக்களை ஆய்வு செய்வார். தேர்தல அதிகாரிக்குத் தகுந்த, குறிபபிட்ட காரணஙகளால, வேட்பு மனுக்களை ஏற்றுக் கொளளாமல தளளிவிட அதிகாரம் உளளது. வேட்பு மனு ஏற்றுக் கொளளபபட்டதா, தளளபபட்டு விட்டதா எனபதனை மனுவிலேயே தேர்தல பொறுப்பதிகாரி குறிப்பிடுவார். வேட்பு மனு தளளபபட்டு விட்டால அதற்கான காரணஙகளைச சுருக்கமாக அவா கூற

வேண்டும். அதற்குப் பின்பு, ஏற்றுக் கொள்ளப் பட்ட வேட்பாளரின் பட்டியல் ஒன்றை அவர் தயாரித்துத் தம் அறிக்கைப் பலகையில் ஒட்டிவிடு வார். அதன் பின்பு தேர்தல் பொறுப்பதிகாரியால் குறிப்பிட்ட நாளன்று பிற்பகல் மூன்று மணிக்கு முன்பு, வேட்பாளர்கள் வேண்டுமானால் தங்களது மனுக்களைத் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம் (Withdrawal). வேட்பு மனுக்கள் திரும்பப் பெற்றுக் கொள்ளப்பட்டபின், போட்டியிடும் வேட்பாளர் பட்டியலைத் தயாரித்து வெளியிடுவார்.

பின்பு தேர்தல் குழுவால் குறிப்பிடப்பட்ட நாளன்று வாக்குப் பதிவு செய்தல் நிகழ்ந்த பின்பு, தேர்தல் பொறுப்பதிகாரியின் கண்காணிப்பின்கீழும் ஆணையின் பேரிலும் வாக்குச் சீட்டுகள் எண்ணப் படும். எண்ணப்பட்ட பின்பு, தேர்தல் பொறுப்பதி காரி தகுந்த அதிகாரியிடமும் தேர்தல் குழுவிடமும் தேர்தல் முடிவை அறிவிப்பார். அம்முடிவு அரசிதழில் வெளியிடப்படும்.

இவ்வாறு தேர்தல் அதிகாரி தேர்தல் நடத்தி முடியும் வரையிலுமான அனைத்துப் பொறுப்புகளை யும் ஏற்றுத் தம் கடமைகளைச் செம்மையுறச் செவ் வனே நடத்தி முடிக்கிறார். தேர்தல் குழுவால் நிய மிக்கப்பட்ட தேர்தல் பொறுப்பதிகாரி, தேர்தலை நடத்தி முடித்த பின்பு, முடிவைத் தேர்தல் குழு விடம் கூறிவிட்டுக் கடமையை முடிக்கிறார்.

அ.பி.பொ.

**தேர்ந்துகொளல் கோட்பாடு:** தேர்ந்து கொளல் கோட்பாடு (Doctrine of Election) சொத் துரிமை மாற்றுச் சட்டத்தின் 35-ஆம் பிரிவின் கீழ் விளக்கப்பட்டுள்ளது. இக்கோட்பாடானது, எவரும் தாம் பெற்றிருக்கும் உரிமை அல்லது நலன்களைவிட மேலானவற்றை மற்றவருக்கு மாற்ற முடியாது (Nemo Dat Quid non habet-no man Can give that which he has not) என்ற முதுமொழிக்கு ஒரு விதி விலக்காகும்.

ஓர் ஆவணத்தின் மூலமோ உயிலின் மூலமோ ஒருவருக்கு ஒரு நலனை அளித்து அவருக்குள்ள மற் றோர் உரிமையை விட்டுவிட வேண்டுமென்று கூறப் பட்டிருக்கும்போது, அவ்விரண்டு உரிமைகளையும் அனுபவிக்கக்கூடாது. அவ்விரண்டில் ஒன்றையே தேர்ந்து கொள்ளல் வேண்டும். அவ்வாறு தேர்ந்து கொள்ளுதல் 'தேர்ந்து கொளல்' என்னும் கோட் பாடாகும்.

மூன்று கொள்கைகளின் அடிப்படையில் இக் கோட்பாடு அமைந்துள்ளது. முதலாவதாக, முறையா வணம் ஒன்றினை இயற்றியவர், அதில் கண்டிருக் கும் எல்லாவற்றையும் நிறைவேற்றக் கருதினார் என்று கருதி எல்லா வாசகங்களையும் செயற்படுத்த வேண்டும். இரண்டாவதாக ஓர் உரிமை மாற்றத் தின் நலன்களைப் பெறுபவர் அதன் சுமைகளையும் ஏற்க வேண்டும். மூன்றாவதாக ஒரே ஆவணத்தின் கீழாகவும் அதற்கு எதிராகவும் ஒருவர் உரிமை யொன்றினைப் பெறக்கூடாது. தேர்ந்துகொளல் வரைவுக் கோட்பாட்டினைப் பின்வருமாறு உரைக்க லாம்: 'ஓர் ஆவணம், அல்லது உயில் அல்லது மற்ற ஆவணத்தின் கீழ் ஒரு நலனை ஒப்புக் கொள்பவர் ஆவணத்தில் கண்டுள்ள எல்லாவற்றையும் ஏற்க வேண்டும். அதன் எல்லா வாசகங்களுக்கும் ஏற்ப அது இருக்க வேண்டும் (மெயிடுலாண்டு). தேர்ந்து கொளல் வரைவுக் கோட்பாடு, தகைமை நெறியில் ஒரு நடைமுறை விதியாகும். இது இந்துக்களுக்கும் மற்றும் இனமுறைச் சட்டத்தினால் ஆளப்படுபவருக் கும் பொருந்தும். இது ஆங்கிலச் சட்டத்திற்கு மட் டும் உரியதன்று. எல்லாச் சட்டங்களுக்கும் பொது வானது. இது அசைவியல் மற்றும் அசையாச் சொத்துகளுக்கு ஒருங்கே பொருந்தக்கூடியது (கூப்பர், எதிர் கூப்பர், 1874, 7 H.L. 53, 71).

இந்தியச் சட்டத்தினில் தேர்ந்துகொளல் வரை வுக்கோட்பாடு, சொத்துரிமைச் சட்டத்தின் 35-ஆம் பிரிவில் கூறப்பட்டுள்ளது. இதன்படி ஒருவர், தமக் குரிமையில்லாச் சொத்தொன்றினை உரிமை மாற்றம் செய்கிறார். அதே சமயத்தில் அந்தச் சொத்துக் குரியவருக்குத் தமக்குரிமையுள்ள வேறு நலன்களை அளிக்கிறார். அச்சொத்துக்குரியவர் அத்தகைய உரிமை மாற்றத்தினை ஏற்கவோ, அதனைத் துறக் கவோ தெரிந்து கொள்ள விடப்படுகிறார். அதனைத் துறப்பதாயின், அவருக்கு அளிக்கப்பட்ட நலன்களை அவர் விட்டுவிட வேண்டும். இதைப் போன்ற விதி, இந்திய இறங்குரிமைச் சட்டத்தின் 180 முதல் 190 ஆவது வரையிலான பிரிவுகளில் கூறப்பட்டுள்ளது. கீழ்க்காணும் எடுத்துக்காட்டு இக்கோட்பாட்டினை நன்கு விளக்கும்.

சுல்தான்பூர் பண்ணை, C க்குஉரிய சொத்து; உரூ. 800 மதிப்புக் கொண்டது. A, ஒரு கொடையா வணம் மூலம் அதனை B க்கு உரிமை மாற்றம் செய் கிறார். அதே ஆவணத்தின் கீழ் உரூ. 1000 ஐ C க்கு அளிக்கிறார். C, பண்ணையையே தேர்ந்தெடுத்துக் கொள்கிறார். அவர் உரூ. 1000-க்கான கொடையை இழப்பார்.

**தேர்ந்து கொளல் வரைவுக் கோட்பாட்டினைச் செயற்படுத்துவதற்கு வேண்டிய நிபந்தனைகள்:** 1) உரிமை மாற்றம் செய்பவர், தமக்கு உரிமையில் லாத சொத்தினை மாற்ற வேண்டும், 2) உரிமை

மாற்றம் செய்பவர், சொத்துக்குரியவருக்கு ஒரு நலனை அளிக்க வேண்டும். சொத்துக்குரியவருக்கு அளிக்கப்படும நலனானது, நேரடியாக அளிக்கப்படுவ தாக இருக்க வேண்டும். ஒரு நலனை நேரடியாக அவவாவணத்தின கீழன்றி, மறைமுகமாகப் பெறுப வர் தேர்ந்தெடுக்க வேண்டியதில்லை. 3) சொத்தின மாற்றமும், அச்சொத்திற்குரியவருககு அளிககபபடும் நலனும ஒரே (உரிமை) மாற்றததின பாகஙகளாக இருக்க வேணடும. பெறுகின்ற நலனும சுமத்தபபடு கினற பொறுப்பும் நேரடியாக ஒரே உரிமைமாறறத் தின வழியாக வநதாலன்றி, 35-ஆம பிரிவினைப பயன்படுத்த முடியாது. 4) நலன ஒன்றினைத் தேர்ந் தெடுத்துக் கொளளும் சொத்துககுரியவருககு, மாற் றபபட்ட சொத்தில தனிப்பட்ட முறையில உரிமை இருக்க வேணடும். மேற்கூறிய நிபந்தனைகள நிறை வேற்றப்பட்டாலொழிய தேர்நதுகொளல் வரைவுக் கோட்பாட்டினைச் செயறபடுத்த முடியாது. அவர் நலனைத் தேர்நதெடுப்பின், ஆவணததின மற்ற வாசகங்களையும நிறைவேறற வேணடும. அதாவது, வேறு ஒருவருக்கு ஆதரவாக உரிமை மாறறம செய் பவர், தம சொததினைப் பொறுததுக கொடுக்கப் பட்ட எலலா உரிமைகளையும துறக்க வேணடும்.

உரிமை மாறறம செய்பவா, ஒரே ஆவணத்தின் கீழ், சொததுக்குரியவருக்கு இரண்டுவகை நலன்களை அளிககும்போது, அதாவது வேறொருவருக்கு மாற றபபடும சொததிற்குப பதிலாக ஒனறும், பரிசாக மறுபயன ஏதுமினறி வேறொனறும அளிக்கும்போது சொத்துக்குரியவா, தமது சொத்தினை வைத்துக் கொளளத் (அதாவது ஆவணத்திறகு எதிராக)தோவு செய்தாலும், ஆவணம் செயறபடுத்தபபட வேணடு மென்று உரிமை மாறறம செயதவர் கருதினாா என்று கொளளபபடும். சொத்துககுரியவர் தம சொத் தினை வைத்துக்கொண்டு, மறறொரு நலனையும பெற்றுக் கொளளலாம் ஏனெனில், இரு நலன்களும தனித்தனியானவை. இதுபோனற விதிவிலககு இந் திய இறங்குரிமைச் சட்டததின் 186-ஆம பிரிவிலும் கூறப்பட்டுளளது.

அடுத்து, எப்போது ஒருவர் தேர்நதெடுக்க வேண்டும் எனகிற வினா எழுகிறது. இதுபற்றி 35-ஆம பிரிவின 5 முதல 9 வரையிலான வாசகஙகள குறிப்பிடுகினறன. தோநதெடுபபது என்பது, நலனைப் பெறும் ஒருவரின எணணத்தைப பொறுத்தது. அதனை வெளிப்படையாக உணர்த்தலாம்; அலலது செயலகள, நடததைகள மூலம் வெளிப்படுத்தலாம். தேர்ந்தெடுப்பதை வெளிபபடையாக வார்ததைகள மூலம் வெளிப்படுத்தும் போது, அவை முடிவானவை யாகும். மறறவற்றை அனுமானிக்க வேணடியது இல்லை.

இரணடாணடு நுகர்வும் மீணடும் பழைய நிலைக்கே கொணடு வரமுடியா நிலையும: 1) தோந தெடுப்பவர் இரண்டாண்டுக காலங்களுக்கு வெளிப் படையாக மாறுதலளிககாமல் நலனை அனுபவிதது வநதாலும், 2) மீணடும் பழைய நிலைககுக் கொணடு வர முடியாமல சொத்தில ஏதாவது ஒரு செயலைத தேர்நதெடுபபவருக்குத்தோவு பறறிய தகவல் இருநத தாக யூகிககப்படும்.

தேர்நதெடுப்பதற்கான காலம் குறிப்பிடப் பட்டிருக்கும்போது தம விருபபுரிமையைத் தெரி விககாமலிருப்பது ஆஙகிலச் சட்டததில் ஆவணத்திறகு எதிரான தேர்வாகவும், இந்தியச் சட்டத்தில ஆவ ணத்தில் கணடுளளவற்றை ஒப்பும் தோவாகவும கருதபபடுகினறன.

**தோவினைத் தள்ளிப்போடுதல்** கொடையைப பெறுபவர், ஏதாவது ஓர் இயலாமையால், அல்லது தகுதிக் குறைவால அதாவது, உரிமை வயது அடை யாத நிலைமை (மைனாரிடி) போனறவற்றால பாதிக்கப்படும்போது, அத்தகைய இயலாமை அல லது தகுதியின்மை நீங்கும்வரை அலலது தககோரால தேர்ந்தெடுக்கப்படும்வரை தோநதெடுப்பது தளளி வைக்கப்படும் எனறு 35 ஆவது பிரிவின இறுதிப் பகுதி கூறுகிறது. ஆ. ச.

**தேர்வண்-மலையன்**: கடையெழு வள்ளல் களுள் ஒருவனான மலையமான திருமுடிககாரிககுத தோவன் மலையன எனற பெயரும உண்டு இரவலா களுக்கு மிகுதியாகத் தேர்களை வழஙகியமையின 'தேர்வண மலையன' எனச் சிறப்பிக்கப் பெறறான். 'மலையன மகிழாது ஈத்த இழையணி நெடுந்தேர். பயன்கெழு முளளூர் மீமிசைப், பட்டமாரி உழையி னும பலவே' (புறம்.123) எனபது அவனது தேர்க கொடைக்குச் சானறாகும். இவன வேநதருக்குத் துணையாகப் பொருது வெறறி தேடித் தருவான. சேரமான மாந்தரஞ் சேரலிரும் பொறையுமசோழன இராச சூயம் வேட்ட பெருநறகிளளியும பொருத வழிச் சோழறகுத் துப்பாகித் தேர்வண மலையன பொருது வாகை சூடினான. இதனை வடம வணணக கண பெருஞ்சாத்தனார் புறம் 125-இல சிறப்பிதுப் பாடியுள்ளாா. போரில வெற்றி பெறறவரும நம்மை வெலவிததோன இவனென மலையனைப பாராட்டு வர்; மலையன பொர வரவில்லை எனின் போரில வெல்லுதல் நமக்கு எளிது எனத தோறறவரும தொலைவிததோன் இவனெனப் பாராட்டுவர். ஆத லால, மலையனைப் பகையாகவும நட்பாகவும பெற றார்க்கு அவன் முருகனைப் போல்வான் என்று அப் பாடலகுறிபபிடுகிறது. 'வல்வேல மலையன' எனறு

பெருஞ்சத்தானார் அடை கொடுத்து இவன் மறச சிறப்பை உணர்த்துவர். பெருஞ்சித்திரனார் இவனது கொடையையும வீரத்தையும் 'காரியூர்நது பேரமர்க் கடநத, மாரியீகை மறப்போர் மலையன்' (புறம்.158) எனனும அடிகளால புலப்படுத்துவர். கபிலர் இவனது கொடைச் சிறப்பைப் பாராட்டி 'வரிசையறிநது நல குக' என அறிவுரை கூறியுள்ளார் (புறம் 121, 122). இவனைப் பாடிய வேறுபுலவர்கள் பரணர், மாறோக கத்து நப்பசலையார் ஆவர்.

இவன் மலையமானாட்டிற்குரியவன. கோவலூர் அதன தலைநகர். முளளூர் மலை இவனுக்குரியது. இவன் ஓரியைக் கொனறு கொல்லி மலையைச் சேர னுக்கு ஈந்தான. இறுதியில் அதியமான கோவலூரை அழித்து மலையனைத தோல்வியுறச செய்தான.
இரா.சா.

**தேரதரனார்** சஙக காலப் புலவர்களுள ஒரு வர். இவா பெயர் தேரதரன, தாமோதரன எனப் பலவாறாக ஏடுகளில காணப்படுகினறது. இப்பெயா களில எது உணமையான பெயர் என்பது அறிய இயல வில்லை. இவர் பாடிய ஒரே பாடல குறுந்தொகை யில 195-ஆம பாடலாக இடமபெறறுளளது. தலைவி கூற்றாக அமைந்த அப்பாடல் தலைவன வினைமுடிதது வருவதாகக் கூறிய பருவம் வநதும் அவன் வாராமையால தலைவி வருநதிக கூறுவதாக அமைந்துளளது. அப்பாடலில திருமபி வருவதாகக குறிதத பருவததில தலைவனைக் காணாமையால, அரககினால் செயத பாவை வெப்பத்தால உருகுமாறு போலப் பிரிவுத் தீயால் தாம் உருகுவதனையும், மாலைப்பொழுது வந்து மிகுந்த துனபத்தைத் தரு தலினால் தாம மிகவும் துனபப்படுவதையும உண ராத தலைவர் எஙகுள்ளாரோ எனத் தல்லவி ஏக கததுடன் கூறியுள்ளது நயமிககதாகும. வீ.சே.

**தேராடூன்**: இந்நகரம இநதியாவில உத்திர பிரதேச மாநிலததில் உளளது இமய மலைத்தொட ரின அடிவாரத்தில் ஒரு பளளத்தாக்கில தேராடூன் (Deharadun) அமைந்துள்ளது. இந நகரத்தில உளள வன ஆயவகமும, தேசியப் பாதுகாப்புக் கலவி நிலையமும இந்நகரத்திறகுப புகழ் சோக்கின்றன. இஙகு மித வெப்பநிலை நிலவுகின்றது. இது ஓர் இயற்கை எழிலுடைய நகரமாக அமைந்துளளது. இங் குளள இந்தியப் படைக கலலூரி 1949-ஆம் ஆணடில திருத்தியமைக்கப்பட்டது மேலும், மூனறு படை அலு வலர்களுக்கும் கூட்டு ஆதாரப பயிற்சி கொடுககக கூட்டுப் படைக்கிளை ஒன்றும் நிறுவபபட்டுளளது. இக் கிளையில் இரண்டு ஆணடுகள் பயினற கடற் படைப் பயிறசி மாணவாகள் மீணடும் 4 முதல 6 ஆணடுகள் பயிறசி பெறுவதறகாக இஙகிலாநதுக்கு அனுப்பப்பட்டு வந்தனர். இதன் மக்களதொகை 294000 (1981). கே பா.

**தேரியசு**: பணடைய பாரசீக மனனர்களுள தேரியசு (Darius) என்ற பெயர்பெற்ற மூவர் குறிப் பிடத்தக்கவர்களை. இவர்கள அகிமீனிய குலத்தைச சோநதவர்களை. இவர்களில் முதலாம் தேரியசு கீழை மன்னர்களிலேயே தலைசிறந்தவர். இவா கி மு. 558-இல பிறநதார். இவர் சாதனைகளைப் பறறி குயுனிபாரம் (Cuneiform) அல்லது ஆப்பெழுத்தில் மேலைப் பாரசீகத்திலுளள பாறையின உச்சியில எழு தப்பட்டுள்ளது. இவர் கி மு.521-இல பாரசீக மனன ரானாா; பல கிளர்ச்சிகளை ஒடுககினார். பிறகு வட மேற்கு இநதியாவையும, மத்திய ஆசியாவின சில பகுதிகளையும தெனகிழக்கு ஐரோபபாவையும தமது பேரரசுடன இணைததுக கொணடாா. இவா தமது பேரரசைச சாத்ரபிகள (Satrapes) எனறுரைககபபடு கின்ற மாநிலஙகளாகப பிரிததாா. வடமேற்கு இந தியா இவரது 20-ஆம் மாநிலமாக இருந்தது இவர் வரி வசூலிப்பதை முறைப்படுததினார். அணடை நாடுகளுடனவாணிகத தொடர்பை ஏற்படுத்தினார். ஆசியாமைனரிலிருநத கிரேககாகளுடன் போரிட்ட பிறகு தமது படையைக் கிரேகக நாட்டிற்குளளும அனுப்பினாா. பிறகு ஐரோப்பாவிலிருநத சித்தியா களையும் வெலலத் திட்டமிட்டிருநதாா. ஆனால் கி.மு. 490-இல மாராதான என்ற இடத்தில கிரேக காகள இவரை முறியடித்தனா. மீணடும் கிரேகக நாட்டினமீது படையெடுககத திட்டமிட்டிருந்தார். ஆனால் கி மு.486-இல் இறந்தார். இவருககுப் பிறகு இவாமகன செர்சசு(Xerxes)பாரசீக மனனரானாா.

**இரண்டாம் தேரியசு**: இவா பாரசீகப் பேரரசை கி.மு 424 முதல 404 வரை ஆட்சிசெயதாா. இவரது ஆட்சியினபோது அவைககள சதிகள பல ஏறபட்டுப் பேரரசின் வலிமை மிகுதியாகக குறைநதது.

**மூன்றாம் தேரியசு**: இவர் பாரசீக மன்னர்களில இறுதியானவா. இவர் கி.மு. 336 முதல 330 வரை ஆட்சிபீடத்தில இருநதாா. இவரது ஆட்சியின போது நாட்டில ஊழல் பெருகியது. பேரரசு தன் வீழ்ச்சியை நோககிச் சென்றது. கிரீசில கி.மு. 336-இல மாசி யோடனியாவின மன்னராக முடிசூட்டிககொணட அலெசசாநதர் மேலை ஆசியா முழுவதையும தமது பேரரசுககுள அடககினார். ஆபேளா போரில் கி மு. 331-இல் அலெக்சாந்தர் மூன்றாம தேரியசை வென்றதன் காரணமாகப் பாரசீகப பேரரசர் கீழை மாநிலஙகளுக்கு ஓடினார். பிறகு தம் மக்களாலேயே கொலலபபட்டாா. கே.சே.

**தேரியன்** தென் அமெரிககாவில் கொலம்பியா வுக்கு அருகில் அமைந்துள்ள பனாமா குடியாட்சிப்

பகுதியில் உள்ள ஒரு மாநிலம். உராபா வளைகுடாப் பகுதியிலுள்ள நிலங்களையும் இது தன்னகத்தே கொண்டுள்ளது. பனாமா பூசநதியின் கிழக்குப் பகுதியில் இந்நிலப்பரப்பு அமைந்துள்ளது. மிகக் கடுமையான வெப்ப இலைக்காடுகள் இங்கு மிகுதி. தேரியன் (Darien) மாநிலத்தின் மக்கள் தொகை 26,497 (1980). கொலம்பியாவினை ஒட்டி அமைந்துள்ள தர்கோபா என்ற துறைமுகப் பகுதியை உள்ளிட்ட நிலப்பரப்பே இங்குள்ள மிகப் பெரிய குடியேற்றப் பகுதியாகும். இதன் தலைநகர் இலாபால்மா (Lapalma).

இப்பகுதியை கி.பி. 1501-இல் முதலில் கண்டுபிடித்தவர் உரோட்ரிகோ டி-பாசுடிடாசு என்பவராவார். கொலம்பசு 1503-இல் தம்முடைய இறுதியான கண்டுபிடிப்புப் பயணத்தின்போது இங்குச் சென்றார். இங்குத்தான் தென்அமெரிக்காவின் முதற்குடியேற்றப் பகுதி தோற்றுவிக்கப்பட்டது. உராபா வளைகுடாவின் வடக்கில் ஏற்பட்ட இக்குடியேற்றமானது கி.பி. 1510-இல் மேலும் விரிவடைந்தது. இங்கிருந்துதான் நூனசு-டி-பால்போவா (Nunez-de-Balboa) என்னும் பயணி தமது ஆய்வுப் பயணத்தைத் தொடங்கி, பசுபிக்குப் பெருங்கடல் பகுதியில் உள்ள சான் மிகுயெல் (San Miguel) குடாவைச் சென்றடைந்தார் அங்கிருந்து தொடர்ந்து பயணம் செய்த ஒரு சாரார் கி.பி. 1519-இல் பனாமா என்ற நகரை உருவாக்கினர். அதன்பின்னர் அதீதவெப்ப நிலை காரணமாகத் தேரியன் குடியேற்றம் படிப்படியாகச் செல்வாக்கிழந்தது. இறுதியில் மக்களற்ற பகுதியாகவும் மாறியது பின்பு கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் இசுகாட்லாந்தைச் சேர்ந்தவர்கள், குறிப்பாக வில்லியம் பேட்டர்சன் என்பவர், தமது வாத்தக நிறுவனத்திற்கென அங்கு ஒரு குடியமைப்பினை நிறுவினார். ஆனால், அது விரைவில் அழிந்துவிட்டது.

**தேரியன் வளைகுடா:** கரீபியன் கடலுக்குத் தெற்கில் பனாமாவிற்கும் கொலம்பியாவுக்குமிடைப்பட்ட பகுதியில் உள்ள நீர்ப்பகுதிக்குத்தேரியன் வளைகுடா என்பது பெயர் இதன் உட்பகுதி உராபாகுடா என்று குறிக்கப்படுகிறது. இதற்கு மேற்கில் தேரியன் மாநிலம் இருக்கிறது. நூனசு-டி-பால்போவா என்ற போர்த்துகீசிய ஆய்வுப் பயணி கி.பி. 1513-இல் இவ்வளைகுடாவைக் கடந்து சென்றான்.

**தேரியன் நகரங்கள்:** அமெரிக்காவில் தேரியன் என்ற பெயரையுடைய நகரங்கள் இரண்டு உள்ளன. முதலாவது, கனெக்டிகட்டு மாநிலத்தின் தென்மேற்கில் உள்ளது. ஏறத்தாழ கி.பி. 1641-இல் இங்கு ஐரோப்பியக் குடியேற்றம் ஏற்பட்டது. இதன் மக்கள் தொகை 1975-இல் 20,229. இரண்டாவது, சார்சியா (Georgia) மாநிலத்தின் தென்கிழக்கில் உள்ளது. இது கி.பி. 1736-இல் இசுகாட்லாந்து (Scotland) மக்களால் குடியேற்றமாக அமைக்கப்பட்டது. மீன்பிடித்தல் தொழில் இங்கு முக்கியமாக நடைபெற்றது இதன் மக்கள்தொகை 1970இல்-1826. இப்பொழுது இது மிகவும் வளர்ச்சியடைந்துள்ளது. தெ.பா.

**தேரையர்:** தமிழகத்தில் நீண்ட நெடுங்காலமாகத் தோன்றி வளர்ந்து வரும் சித்த மருத்துவத் துறைக்கு ஆக்கம் சேர்த்தவர்கள் பலர். அவர்களுள் தேரையர் என்பவர் சிறப்புமிக்கவர். இவர் எழுதிய மருத்துவ நூல்கள் இருபத்தொன்று என்பர். அவற்றுள் குறிப்பிடத்தக்கவை சிகாமணி வெண்பா, நிகண்டு, சேகரப்பா, வண்ணம், யமக வெண்பா, கரிசல், நீர்நிறக்குறி, நீர்நெய்க்குறி, தயில வருக்க சுருக்கம், சிகிச்சைக்கிரமம், நோய்மருந்தளவை, வாகடம், வைத்தியப் பள்ளு நடனம் என்பனவாகும். இவர் இலக்கியம், இலக்கணம், மருத்துவம் சோதிடம் முதலிய பல துறைகளிலும் வல்லவர் என்பது இந்நூல்களினால் அறியப்படுகிறது மேலும், வடமொழியிலும், தெலுங்கு, கன்னடம் ஆகிய திராவிட மொழிகளிலும் புலமை படைத்தவர் என்பது இவர் நூல்களில் இடம்பெறும் பாடல்களினால் உறுதிப்படுகிறது இவருடைய பிறப்பிடம், பெற்றோர் பற்றிய வரலாறு அறியப்படவில்லை. இவர் கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தெலுங்குக் கவிஞர் வேமனரைப் பற்றி 'உத்தம மஞ்சி வாரு சுவாமி நீ வென வேமனா வடுகில உரைத்தல் போல' என்று இசைத்திருப்பதால், அவர்க்குப் பின்னர் வாழ்ந்தவராதல் வேண்டும். மேலும், தேரையர் யமக வெண்பா என்ற தம் நூலில் உருளைக்கிழங்கு கற்பம் என்னும் மருந்துவகையினைக் குறித்துள்ளார். ஐரோப்பியர் தென்னிந்தியாவிற்கு வந்த பிறகுதான் உருளைக்கிழங்கு அறிமுகமாயிற்று. ஆதலின், இவர் கி.பி. 16 அல்லது 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராதல் கூடும் இவரைப் பற்றி ஒரு வரலாறு செவிவழியாக வழங்கி வருகிறது. அரசன் ஒருவனுக்கு ஏற்பட்ட மண்டையிடி என்னும் கொடிய தலைவலியைத் தோசசி பெற்ற மருத்துவர் ஒருவராலும் போக்க முடியவில்லை. அப்பொழுது மயக்க மருந்து கொடுத்து அவன் கபாலத்தைத் திறந்து அதிலிருந்து ஒரு தேரையை நீர்க் கிண்ணத்தில் பாயவைத்துப் பின்பு அதனை முன்புபோல பொருத்தி அவ்வலியினை அகற்றிய காரணத்தினால் இவருக்குத் தேரையர் என்ற பெயர் ஏற்பட்டது என்பர். வடமொழியில் 'போசப் பிரபந்தம்' என்ற நூலிலும் இப்படி ஒரு கதை வழங்குகின்றது. தேரை என்பதை வடமொழி வாணர் மண்டூகம் என வழங்குவர். மண்டூக மகரிசி என்ற வடமொழி வாணரின் பெயரிலிருந்து தமிழில் தேரையர் என்ற பெயர் வந்திருக்கலாம் என்பர் சிலர். ஆயினும், தம் நூலில் தேரன் என்ற

பெயராலேயே தமமைக் குறித்துள்ளார். இவர் பாடிய மருந்து பாரதம என்னும நூலின சிறபபுப் பாயிரத்தில், 'கருத்துககேறறிடச்செய்தனன தேரன', 'செந்தமிழ்த துறைத் தேரச சிகாமணி', 'மொழிநத தேரப் பெருமானும்', என்று குறிக்கப் பெறுதலின, இவரது இயற்பெயர் தேரன் என்றிருநத பினனர்த் தேரையா என்று வழஙகப பெற்றிருத்தல வேண்டும என்பது புலனாகும. பௌத்தராகிய மகா தேராகள மருததுவத் துறையில வலலவராக விளங்கியுள ளனர் என்பதும் இங்கு எண்ணத்தக்கது. இவர் எழுதியுள்ள தேரையா மகாகரிசல், தேரையா வெண்பா, தேரையர் யமக வெணபா, தேரையர் வாகடம் என்ற நூலகள இப்பொழுது உரையுடன கிடைக்கின்றன. இநநூலகளில் வாத, பித்த, கபததி னுடைய தொழில, நோயகளின் குறிககுணஙகள, தீர்க்கும் முறைகள், சூரணம, குழமபு இலேகியம, மாததிரை, பற்பம், செந்தூரம் முதலியவறறைப் பற் றிய செய்திகளும நோய் வராமல் தற்காத்தற்குரிய வழிமுறைகளும் நீணடகாலம் வாழ்வதற்குரிய நெறி முறைகளும் விரிவாக விளக்கப் பெற்றுள்ளன. மருத்து வக கருத்துகளையும் இலக்கணம் பிழையாது பலவகை யாப்புகளில் சுவையுடன பாடியிருககும் தேரையரின கவித்திறன் பாராட்டற்பாலது. சோ.ந.க.

**தேல்,சர், தாமசு,** கி.பி.17-ஆம நூற்றாண டில் வாழ்ந்த ஆஙகில அரசியல்வாதி. இஙகிலாந்தில் கி.பி.1603 முதல 1625 வரை அரசோச்சிய முதலாம் சேம்சு மன்னரின் சமகாலத்தவர். நெதர்லாநதில் ஆங்கிலப்பணியாளராகச் செயற்பட்ட சா தாமசு தேலின் (Sir Thomas Dale) திறமை காரணமாக அவருக்கு 'வீரத்திருத்தகை' (Knight) பட்டம வழங கப்பட்டது. அமெரிக்காவிலுள்ள வொசீனியாவுககு கி பி.1611-இல அனுப்பப்பட்டு அதன் பாதுகாபபிற கான வழிகளை மேறகொள்ளப் பணிக்கபபட்டார். பிறகு கி.பி 1614-இல அதன் பொறுப்பு ஆளுநராக நியமிக்கப்பட்டார. அவ்வமயம வெர்சீனியக் குடி யேற்றத்தின வளர்ச்சிக்கெனத் 'தேலின சட்டஙகள' என்ற தனிப்பட்ட சட்டத்தொகுப்புகளை உருவாக கினார். அவை அககுடியேற்றத்திறகென உருவாககப் பட்ட முதற சட்டஙகளாகும. அச்சட்டஙகள மிகக் கடுமையானவையாயிருந்தமையால் அவற்றை 'ஐந தாண்டு அடிமை வாழவு' என அப்பகுதியினர் குறிப் பிட்டனர். தொடர்ந்து ஆங்கிலேயக் குடியேற்றங்கள விரிவாக்கம் செய்யப்பட்டன. செவ்விந்தியர் பலர் கட்டுப்படுத்தப்பட்டார்கள. இவர், கி.பி.1616-இல் இங்கிலாந்திற்குத் திரும்ப அழைத்துக்கொள்ளப்பட் டார். தச்சுக்காரர்களுக்கு எதிராக ஆங்கிலேயக் கிழக்கிந்திய நிறுவனத்தின சார்பில ஆங்கிலத் தூதுக் குழு உறுபபினருள் ஒருவராக இவர் 1618-இல கிழக் கிநதியத்தீவுகளுக்கு அனுப்பப்பட்டாா. கிழககிந்தியத் தீவுப்பகுதியில கி பி 1618 திசம்பரில் தச்சுக்காரர் களைத் தோற்கடித்தார். பின்னர் அங்கிருநது இநதி யாவுக்கு வநது கி பி.1619-ஆம் ஆணடு ஆகசுட்டு ஒன்பதாம் நாள் பண்டார் என்னுமிடத்தில கால மானார். மா.கா.

**தேவகுலத்தார்:** இவர் சஙகபபுலவருள் ஒருவர் 'ஊரானோர் தேவகுலம' என்றவிடத்துப் போல இஙகுத் தேவகுலம் என்பது கோயிலைக் குறிககும். ஆகவே தேவகுலத்தார் என்பதற்குத் தேவாலயத் தினர் என்ப பொருள கூறுவர் உ.வே.சா. (குறு.பாடி னோர் வரலாறு). தேவ குலத்தா என்னும் பெயர் கொணடு இவரை அந்தணராகலாம் என்பர் ஆ சிங்காரவேலு முதலியார் (அபிதான சிநதாமணி, பக்.892). இவா பாடியதாகக் குறுநதொகை 3-ஆம் பாடல் ஒன்றே காணப்படுகிறது தலைவனசிறைபபுற மாகத் தோழி இயற் பழித்த வழித் தலைவி இயற் பட மொழிந்தது என்னும் துறையில இப்பாடல அமைநதுள்ளது. இதனகண தலைவனது நட்பின் சிறபபை நிலததினும் பெரிது; வானினும் உயர்ந்தது; கடலினும் ஆழமுடையது என்று வியந்து தலைவி பாராட்டுகிறாள. 'கருஙகோற் குறிஞ்சிப் பூக கொண்டு பெருநதேன இழைக்கும நாடன' எனத் தலைவனைக் கூறும குறிப்பினால அவன நட்புத் தேன போன்று இனியது என்பதும் பெறப்படும. ஆகவே உயர்ந்த நட்பின் இலக்கணததை இப்பாடல சுட்டுவதறியலாம். இபபாடற் சிறப்பினால இதனை இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பேராசிரியா முத லியோர் தம் தொல்காப்பிய உரைக்கு மேறகோள காட்டியுள்ளனர். இரா.சா.

**தேவதைகள்:** பழைய காலத்தில் மககள் இயற் கைச் சக்திகளை வணங்கியதற்குக் காரணம், அவற் றால் நன்மையடைந்தமையேயாகும. சூரியன மரஞ் செடிகளுக்குத் துணை புரிநதான். சந்திரன இருளில ஒளி கொடுததான. மழை தண்ணீர் கொடுததது. தென்றல இன்பத்தை அளித்தது. தேவதைகளை எட்டுவகையாகப் பிரித்தார்கள். 1.சூரியன, சந்திரன, இந்திரன, வருணன முதலானோர் இயற்கைத் தேவ தைகள் 2. குத்துவிளககு, வாயிற்படி முதலியவைகள குடும்பத் தேவதைகள 3. கலவி, செலவம, காதல முதலியவைகள பணபுத தேவதைகள, 4. மூதாதையர், வீரர்கள் முதலானோர் மனிதத தேவதைகள, 5.நில மகள வளநதரும் தேவதை. 6) பிரமன படைப்புத் தேவதை. 7) சிவன, விடடுணு ஆகியோர் உருவ முடைய இறைமைத் தேவதைகள. 8) பரப்பிரமமும் உலோகாசும் (Logos) உருவமிலலாத இறைமைத தேவதைகள.

கிராமதேவதைகளும இவவகையைச் சோந்தவை எ-டு. ஐயனாா, கேரள நாட்டில விடடுணு, சிவன்,

தேவி கோயில்களில், தெனமேறகு மூலையில ஐய னாருக்குச் சநநிதி உணடு. ஐயனார் சாத்தா எனவும சொல்லப்படுவர்.

மேற்குத் தொடர்ச்சி மலையில சாத்தாவிறகு எட்டுக கோயிலகள உள்ளன. இவைகளுள் மிகசசிறப்பு வாயநதது சபரிமலை. விட்டுணு மோகினியாகிச் சிவனைக் கூடியபோது சாத்தா தோன்றினார். இவரை அரிகரபுத்திரன எனக் கூறுவா. இவருக்குப் பூரணை, புட்கலை எனற இரணடு தேவிகள உள்ள னா. இவருககு வாகனம் யானை; கொடி சேவல. இவரை மக்கள தருமசாததா என்று கூறுவா. ஏனெனறால இவர் தருமததைக் காபபவர். யானை மேல் அமர்நதிருக்கும கோலததிலும், யோகாசனத் தில அமாநதிருக்கும கோலத்திலும இவரைக காண லாம். அபயமுததிரையுடன், கத்தி, கேடயம், தடி ஆகியவைகளை இவா வைத்திருபபார். கோயிலின முன் செஙகல, மண முதலியவறறால் செய்யபபட்ட யானை, குதிரை உருவஙகள வரிசையாக வைக்கப பட்டிருக்கும்.

சேத்திரபாலர்: இவர் கிராமஙகளுககு வடகிழக கில் நிறுவப்படுவர். இவர் ஆடையிலலாமலும் முக கஙகளுடனும விரிநத சடாமகுடத்துடனும் இரணடு, நானகு, ஆறு அலலது எட்டுக் கைகளுடனும் காட்சி யளிப்பார். இவருடைய படைக் கலஙகள சூலம், கபாலம, மணி, பாசம முதலியவை. இவர் பைரவரின் அமிசம் எனறு கருதப்படுவர்.

**நாகதேவதைகள்.** இவர்கள் கத்துருவுக்கும் காசி பருக்கும் பிறந்தவர்கள். இவர்கள. வாசுகி, தக்கன, கார்க்கோடகன, பத்மன, மகாபதமன, சஙகபாலன, குலிகன என்னும் எழுவராவர். இவர்களின சந்ததிகளே பாமபுகள. தமிழ் நாட்டில் மகபபேறு விருமபுவோா ஆறு, குளஙகளுக்கு அருகில அரச மரத்தடியில நாக உருவம பதித்த கற்களை நட்டு வழிபடுவது வழக்கம். நாகர் கோயில என்னும ஊரில் நாகமூர்ததம் உளள பெரிய கோவில் உளளது. சிரவண மாதம பஞசமி யனறு ஆநதிரா, கனனடியர் முதலியோர் நாக பஞ்சமி விரதம் இருப்பார்கள. நாகம திருமாலுக்குப் படுக்கையும் ஆசனமும் குடையும் ஆகும், சிவன, விநாயகர், காளி முதலியோருக்கு அணிகலன ஆகும.

வேறு தேவதைகளும் உளர். தோட்டஙகளையும் துரவுகளையும் காப்பவர் காததவராயா. இவரைப் பற்றிய கதைகளை நாட்டுப் பாடலில் கேட்கலாம மன்னார்குடியிலுளள திருமாலுடன் தொடர்பு கொணடவா மனனார்சாமி. இவர் திருமால அமிச முள்ளவர், கறுப்பர். அழகர் கோயிலிலுளள கறுப்பர் பதினெட்டாம்படிக் கறுப்பர் எனறு கூறுப்படுவர். கறுப்பர் உள்ள கோயில்களில் இருமபுச் சங்கிலிகள தொங்குவதுணடு. ஆதலால இவரைச் சஙகிலிக கறுபபர் என்றும் கூறுவா.

பொமம நாயககருக்குக் காவலாளியாக இருநத வீரன் எனபவன் மதுரைநாயக்க வமிசத்திலுளள அரச குமாரியைக காதலிததுப் பல துனபஙகள அடைந தான. அவனுடைய ஆவியே மதுரை வீரன. மாடு களைத திருடப் போகுமுன பணடைய களள வீரர் கள் வீரனை வழிபடுவது வழககம. துாமரணம அடைநத பணடைய வீராகளின ஆவிகளே, மாடன், சாமபன, சினனன, மழிக்கன் முதலியோராக உளளன. சுடுகாட்டில வசிக்கும மாடன சுடலை மாடன.

**பெண் தேவதைகள** பணடைய தமிழமககள பராசகதிக்குக கொற்றவை எனறு பெயரிட்டு வணங கினர். எயினர் முதலியோரும கொற்றவையை வணங கினர். அம்மனின பூசை செயபவர் வேட்டுவ வரி என்ற கூத்தை ஆடி, நாட்டுக்கு நேரும் தீஙகு களைப் பற்றிக் குறி சொல்வர் கொறறவையின அமிசமாகிய சில தெய்வஙகள இபபோது பததிர காளி, செலலியமமன, ஏகாததாள், பொனனி யம்மன, காளியமமன், பிடாரியமமன எனற பெயா களால் கிராம தேவதைகளாகக் கொண்டாடபபடு கினறனர். மாரியமமன வேப்பமரத்தடியில் வசிப்ப வள. அவள் கையில கபாலம, சூலம, கத்தி, அரவம், தீச்சுடர் முதலியவை காணபபடும். கோபம வநதால இவள பல நோய்களைக் கொண்டு வருவாள என றும், இவளைத துதித்தால் வைசூரி முதலிய கொடிய நோயகளைத தடுத்து, வருந்தும் மக்களுக்குக குணம அளிப்பாள எனறும மக்கள கருதுகினறனா. இவள வேலையாள் பேசசியும், பாவாடைராயனும ஆவா. இவளுக்குப் பெரியமமா, மாரிமுதது, மகமாயி, நல்ல முதது, முத்தியாளமமன் முதலிய பல பெயாகள் உணடு. வடநாட்டில் இவளைச் சீதளா என்பர். பாணடவாகளின மனைவியான திரௌபதி சிறப் பான தெய்வம். எல்லமமன மிகுநத பலமுடன எலலை களைக் காப்பவள. இவளை இரேணுகாதேவி எனறு பலர் சொல்லுவா. இவளுடன அமாநதிருக்கினற தெயவஙகள இவள கணவர் சம தககினியும்; மகன பரசுராமன. தக்கனுடைய யாகத்தை அழிகக வீர பத்திரனுககு உதவி செய்யச் சிவபெருமானால தோற்றுவிககபபட்டவள அங்காளம்மன என்று கூறு வர். இவள எரியும் நெருப்புப் போனறவள். காட் டேரி, ஒரு கிராமதேவதை. இவள கணவன் இரு ளன். தீராப் பசியையுடைய எசசிபபேய, தீயைப்பாது காக்கும் கொளளிவாய்ப் பேய், மோகினிப பேய முத லானவைகளும் சிறு தெயவஙகளே. மாரியம்மன், திரௌபதி, அங்காளம்மன் முதலியோர்களின கோவில் களுககு வணக்கம் செலுததுபவர் பலவித விரதஙகளைக் கடைப்பிடிப்பர். உயரமான கம்பத்திலிருந்து தொங்கும்

வளையத்தில் தொங்குவது, கூர்மையான ஆணிகளை யுடைய கால் கட்டைகளில் நடப்பது, அங்கப்பிரதட் சிணம், அடிப்பிரதட்சிணம், வாய்ப்பூட்டு அணிநது கொள்வது முதலிய கடுமையான செயல்களை மேற் கொள்வர். பால், சர்க்கரை முதலியவைகளைக் கொண்டகாவடி எடுத்துச் செல்வதுசிறப்பான பிரார்த் தனை. வெள்ளியால செய்த கால், கை, கண போன்ற தகடுகள் ஆகியவற்றைக் காணிக்கையாகச் செலுத்து வர். விரதம் இருந்து நீராடி, மஞ்சள ஆடையும், மாலையும் அணிந்து,பல அடி நீளமுள்ள கொதிக்கினற தணல்மீது நடந்து செல்வர். இது தீமிதி எனப்படும். கிராமத்தில் வறுமை, தொற்று நோய் முதலியவை ஏற்படுமாயின் கரகம் எடுப்பர். தணணீர் நிறைநத குடத்துக்கு வேப்பிலைகளையும், பல மலர்களையும் சூட்டி, அதில் தேவதையை வந்திருக்கும்படி வேண்டிப் பூசை செய்து, பிறகு குடத்தைத தலையில் சுமந்து கொண்டு வாத்தியங்கள் முழங்க ஆடிக்கொண்டு செல்வர். கிராமக் கோயிலகளில கூத்துகளும, மஞசு விரட்டு, ஆட்டுச்சண்டை, சேவற்சண்டை முதலிய வைகளும் நடைபெறும்.

கிராம தேவதைகட்கு ஆடு, எருமை, கோழி முதலியவற்றைப் பலி கொடுப்பார்களா. கள், சாராயம, புகையிலை முதலிய பொருள்களையும் வைத்துப் படைப்பார்கள். இப்பழக்கம் இப்பொழுது மாறித் தேங்காய், பழம், பொங்கல் முதலியவை வைத்துப் படைக்கின்றனர். தன்னால் அறியமுடியாத சகதியைக் கொண்ட தெய்வங்களைப் பலி முதலிய சடஙகு களால் வணங்காவிட்டால், அவைகளால் தீமை ஏற் படும் என்று நம்புகினறனர். எல்லாவித சக்தியையு முடைய கடவுள் அருள் வடிவானவா எனற உறுதி தோன்றினால் அதற்கேற்ப வழிபாட்டு முறைகளும மாறுதலடையும். இரா.கோ.

**தேவநேயப் பாவாணர்:** சொற்பிறப்பியல என்னும்வேர்சசொல் ஆராயசசிஇயலில்தோராயமாக அரை நூற்றாண்டுககால அளவுக்கு முழுக்க முற்றத் தம்மை ஈடுபடுத்தித்தோய்த்துக்கொணடு,பனனூறறுக கணக்கான புதிய மொழியியல அடிப்படைகளைத் தமிழிலும் ஆங்கிலத்திலுமாக வெளிபபடுததித் தூய தமிழ் இயக்க வளாச்சி-நிலைப்பு ஆகியனவற்றுக்கு வழியும் வகையும் கணடு-அதறகுரிய வினைப்பாடு களே தம் வாழ்க்கை நெறியாகவுங் கொணடு வாழ்ந்து யிர்த்து வாகை சூடிய பெருமகனாரே, 'தேவநேயன என்னும் இப் பாவாணர் ஆவார்.

திருநெல்வேலி மாவட்டத்திலுளள சஙகரன கோவில் என்னும ஊருக்கு அருகிலுள்ள பெரும்புத் தூரில் ஆசிரியர்-ஞானமுத்து-பரிபூரணம் அம்மை யார் ஆகியோருக்கு 7.2.1902-இல இவர் மகனாகப



தேவநேயப் பாவாணா

பிறந்தாா, இவருடன் பிறநதோா ஐவர். மூவா தமையன்மார். இருவா தமக்கையர்.

தம் 22-ஆம் அகவையில மதுரைத் தமிழ்ச சங்கப் பணடிதர் தேர்வில தனியொருவராக இவா மட்டுமே (1924-ஆம ஆண்டில) தோவுறறார் பினனா, 'வித்து வான்' படடமும், அதனையடுத்து நெல்லைத்தமிழச் சங்கப் புலவர் பட்டமும இவர் பெறறார், 1942-இல கீ.மொ இ (பி.ஓ எல.)பட்டமும், பினனர்ச் சென்னைப் பலகலைக் கழகக் கலைமுதுவர் (எம்.ஏ.) பட்டமும பெற்றார்.

தமிழ மொழியானது,'உலக முதன மொழி' என் பதும, 'திரவிட மொழிகளின் தாய்' என்பதும, சமசுகிருததற்குமூலமொழி என்பதும இவரின்மூலக கொளகைகளாக விளங்கின. இக கொள்கைகளை மெய்ப்பிப்பதற்கு வாழ்நாள் முழுமையும முயன றார். இம மூலக கொளகைகளைத் தாங்கியவாறு- 'உலக முதல் இலககிய உயர்தனிச் செமமொழி'- என்னும் பொருள தலைப்புடைய ('The Primary Classical language of the world') ஆங்கில நூல் (1966), திரவிடததாய (1944), முதல் தாய மொழி (1953), தமிழ் வரலாறு (1967), வடமொழி வரலாறு (1967), தமிழர் வரலாறு (1967)-ஆகியவை வெளிவந்தன.

இயற்றமிழ் இலக்கணம் (1934), கட்டுரை வரை வியல என்னும உரைநடை இலக்கணம (1936), ஒப

பியன் மொழிநூல் (1940), சொலலாராயச்சிக் கட்டுரைகள (1949), உயர்தரக கட்டுரை இலக்கணம (முதறபாகம்) (1950), உயர்தரக கட்டுரை இலக்கணம (இரணடாம பாகம்) (1951), பழந்தமிழாட்சி (1952), தமிழ்நாட்டு விளையாட்டுகள் (1954), தமிழா திருமணம (1956), இசைததமிழ்க் கலமபகம (முதற பாகம) (1966), பண்டைததமிழ நாகரிகமும பணபாடும் (1966), வணணனை மொழி நூலின வழுவியல் (1968), தமிழ் கடன்கொணடு தழைககுமா? (1969), இசையரஙகு: இன்னிசைககோவை (1969), திருக்குறள தமிழ மரபுரை (1969), வேர்சசொற் கட்டுரைகள் (1973), தமிழர் மதம (1972), மணணில் விண் அல்லது வளளுவர் கட்டுடைமை (1978), தமிழ இலக்கிய வரலாறு (1979),- என்னும் தலைபபுப்பெயர்களில் வெளிவநதுள்ள மேறகணட பததொன பது செந்தமிழ நூலகளினுள்ளும் தமிழ்மொழி-இன-நாட்டு மேமபாட்டுக கூறுகளைத் தெளிவுறுததும் இவாதம் ஆராய்சசித் திறத் தெறிப்புகளை ஆஙகாஙகுமபரவலாகக காணலாம.

1937-இல் தமிழநாட்டில் இந்தியெதிாப்புத் தலைப் பட்டபோது-எதிாப்புப போராட்ட மறவாகள பாடிப் பயனபடுததுவதறகெனறு கட்டாய இநதிக கலவிககணடனம எனனும் பெயரில 'செந்தமிழக் காஞசி' என்னும் பாடல தொகுப்பொன்றை வெளியிட்டுத் தமமையும எதிர்பபாளரின முனவரிசையில நிறுத்திக் கொணடாா.

1965-சனவரி 25-இல தொடங்கிய இந்தியெதிாப பின் விளைவழுததங்களை ஆராய்ந்து தம கருததுகளைத தீர்வுற வெளிப்படுத்த வேணடும் எனற உந துணர்வால்,-'தமிழ்நாட்டின மொழிச்சிக்கலும் அதனின ஏரணத தீாவும' என்னுமபொருள ,தலைப்பிலமைந்த (The language problem of Tamilnad and its logial solution) ஆஙகில நூலையும, (1967) இந்தியால் தமிழ எல்வாறு கெடும்? (1968) என்னும் தமிழ நூலையும வெளியிட்டார்.

27 ஆண்டுகள (1913 முதல் 1939-வரை) செலவழித்து உருவாக்கப்பெற்ற சென்னைப் பலகலைக் கழகத தமிழகராதியில் நாறபததொனறு எனனும எணணிக்கையளவுக்குக குற்றங்குறை வகைகள உள்ளன எனறு எடுத்துக்காட்டி அவற்றைத் திருத்த வேணடிய தேவைகளையுஞ சுட்டிச் 'செனனைப பலகலைக் கழகத் தமிழகராதியின சீர்கேடு (The manifold defects of the Madras University Tamil Lexicon) (1961) என்னும தலைப்பில் நூலாக வெளியிட்டார்.

தேவநேயப் பாவாணர் ஓராணடு நடுநிலைப் பள்ளி யொனறிலும, 22 ஆணடுகள உயா நிலைப பள்ளிகளிலும், 12 ஆணடுகள் கலலூரியிலும் (சேலம் நகராட்சிக கலலூரி), 5 ஆணடுகள பலகலைக கழகத திலும (அணணாமலைப் பல்கலைக் கழகம) 7 ஆணடுகள செநதமிழ்ச சொறபிறப்பியல் அகரமுதலித திட்ட இயக்ககத்திலும் பணியாற்றினாா.

உலகத் தமிழ்க கழகம் என்னும் பெயரில தனித் தமிழியககம ஒன்றை 1968-இல உருவாககினாா. இதற்கு இவர் காலததில 140 கிளைகள பெருகி நின றமையின, இவருககுத் தமிழ நாட்டிலிருநத மதிப்பை உணரலாம. செநதமிழ்ச் செலவர் (தமிழக அரசு-(1980), செநதமிழ ஞாயிறு (பறம்புமலை-பாரிவிழா-(1977), மொழிஞாயிறு (தெனமொழி-1970) எனப் பல்வேறு சிறப்படைகள் இவர் பெயருக்கு முனனா தககாரால அணிவிககப் பெறறன.

'மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின செநதமிழ்ச் சொற்பிறப்பியல பேரகரமுதலி உருவாகக வெளியீட்டுத் திட்டம' எனனும் பெயரில அருமையான திட்டமொனறு 'தெனமொழி' ஆசிரியர் பாவலரேறு-பெருஞசித்திரனாரால 1970-திசம்பா மாததநில தொடங்கப பெறறு-அதில் இருநூற்றுவா உறுப்பினர்களாகச சோககப் பெறறனர். இவரின அகரமுதலிப பணி அக்காலந் தொடங்கியது.

தமிழக அரசு 1974-இல் செ.சொ.பி. அகரமுதலி இயக்ககம் ஒன்றைத தொடங்கி இவரை இயக்குநராக்கியது அகரமுதலியைப் பதினமூன்று மடலங களில் முடிக்கத் திட்டமிட்டிருந்தார். பாவாணர், 'அகரம' தொடஙகி 'ஆசைமொழி' எனனும சொலவரைதான் முடித்தார். இடையில 1981-இல் திடீரெனக் காலமானார். ப.அ.

**தேவபூதி** எனபவன் வடஇந்தியாவில் மோரியப பேரரசின சிதைவுககுப்பின தோனறிய சுஙக (Sungas) குல ஆட்சியின் இறுதி மனனன் சுஙக வமிசம் மகத நாட்டில் சுமார் கி.மு.185 முதல் கி.மு.73வரை ஆட்சி புரிந்தது. அதன் கடைசி அரசனான தேவபூதி (Devabhuti) சுமார் கி.மு 82-இல பட்டமேற்றான. இவன் ஒரு சிறறின்பப் பிரியன. இவன மனைவி போல வேடந்தரித்து வந்த அடிமைப் பெண ஒருததியால் கொல்லப்பட்டான எனறு அர்சப் (Harsha) பேரரசனின் அவைககளப் புலவா பாணா எனபவர் தமது நூலில குறிப்பிட்டுள்ளாா. இககொலைககு முக்கிய காரணமாக இருந்தவர் தேவபூதியின் அமைசசராக இருநத வாசுதேவர். இககொலைககுப்பின வாசுதேவா நிறுவிய கணணுவ குலம் ஆட்சி பீடததில் அமாந்தது. தெ.பா.

**தேவர்கள்**: 'தே' எனற சொல தெய்வத் தன்மை; தெய்வம் எனப் பொருளபடும. 'ஈனமில்

அணங்கு புத்தேள் ஏற்ற சூர் கடவுள் தேவே' என்பர் மண்டல புருடர். மனிதரின் மிக்குயர்ந்த புண்ணியப் பேறு பெற்றவர் தேவர்கள் ஆவர். இவர்கள் நிட்டோமம் முதலிய யாகங்களைச் செய்தவராவர். மகாவிரதம் புரிந்தோர் தேவராகச் சென்று போகம் நுகர்வர்.

தேவருலகின கண் உள்ள தேவர்கள் முப்பத்து மூன்று கோடி பேர் எனப் புராணங்கள் கூறும். ஆதித்தர் பன்னிருவர், ஏகாதச உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர்,அச்சுவினி தேவர் எனப்படும் தேவ மருத்துவர் இருவர் ஆக முப்பத்துமூவர்க்கும் வகைக்கு ஒரு கோடியாகக் கணக்கிட்டுக் கொள்ள வேண்டும். 'மருத்துவர் வசுக்கதிர் உருத்திரர் எனப் பொலியும் முப்பத்து முக்கோடி தேவர்கள்' எனக் குறிப்பர் குமர குருபரர்.

**ஆதித்தர் பன்னிருவராவார்:** அவர்கள் வைகத்தன்,விவச்சுதன், வாசன் மார்த்தாண்டன்,பாறகரன், இரவி,உலோகப்பிரகாசன்,உலோக சாட்சி,திரிவிக்கிரமன், ஆதித்தன், திவாகரன்,அங்கிசமாலி எனப்படுவர். அவர்கள் மாதம் ஒருவராக இருளைப் போக்குவா.

**உருத்திரர் பதினொருவர் ஆவார்.** அவர்கள மாதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன, காபாலி, செமியன எனப்படுவர். அவர்கள பிரமன் நெற்றியில் தோன்றிப் படைப்புத் தொழிலைச் செய்பவராவர். அவ்வுருத்திரர் ஒவ்வொருவரும், கோடி உருத்திரரைப் படைத்தனர். அவர்களைப் பிரமன் கணடு, 'வினைக் கீடாகப் படைக்காமல முடியாச் சிருட்டி செய்தல் கூடாது' என வேண்டி நிற்கச் சிவ சாரூபந் தாங்கித் தேவர் கூட்டமானவர்கள்.

**வசுக்கள் எண்மராவார்.** அவர்கள் அனலன், அனிலன், ஆபத்னசவன், சோமன, தரன, துருவன, பிரத்தியூசன், பிரபாசன எனப்படுபவர்.அச்சுவினி தேவர்இருவர். நாசத்யன், தசரன் எனப்படும அவர்கள தேவ மருத்துவராவார்.

**தேவருலகு:** தேவர்கள் சுவர்க்கபூமி எனப்படும் தேவருலகில் வசிப்பவர்கள் என்பது தொன்மம கூறும செய்தி. தேவருலகு பூலோகத்திற்கு மேல் அமைந்துள்ளது; எணபத்தைந்து நூறாயிரம் யோசனைப் பரப்புளளது; தலைநகர் அமராவதி தேவாகள இன்பமே நுகர்வர். துனபம்எனபது தேவருலகில் சிறிதளவும் இல்லை; இரவு பகல் என்ற வேறுபாம்டு இலல்லை; எப்போதும் ஒளி நிறைந்திருக்கும்.

தேவர்களுக்கு 365-நாள் கொண்ட மக்கள் யாண்டு ஒரு நாள் ஆகும். இவர்கள் உண்ணும் உணவு அமுதம் என்பர். தேவர்களின தலைவன இந்திரன. இவன் முப்பத்து முக்கோடி தேவரும் முனிவரும் வணங்கத் தேவருலகை ஆளுபவன. இவன் மனைவி புலோமசை எனப்படும் இந்திராணி. நவநிதியம் சிநதாமணி, சூளாமணி என்பனவும் தேவருலகச் செல்வங்கள். கற்பகம், சந்தானம், அரிசந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பன வாடாத மலர் தரும் தெய்வதருக்கள். இந்திரன மகன் சயந்தன். பட்டத்து வெள்ளை யானை அயிராவதம். தெய்வப்பசு காமதேனு. தெய்வ குரு வியாழன். குதிரை உச்சைச்சிரவம். இந்திரன் ஆட்சி செய்யும் தெய்வ சபை சுதன்மா. ஆயுதம் வச்சிராயுதம், கொடி இடி. நடன மாதர் அரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமை என்னும் நாலவர்.

மக்களில் நூறு அசுவமேத வேள்வி செய்தவரே இந்திரப் பதவியை அடைய முடியும். தேவர்கள் எத்துணைச் சிறப்புடையவராயினும் நேராகத் தவஞ் செய்து முத்தி பெற இயலாது. மண்ணுலகில் பிறந்தே அதனை அடைய முடியும். இதனை, 'வானிடத் தவரும் மண்மேல் வந்தரன் தனை அர்ச்சிப்பர், ஊனெடுத் துழலும ஊமர் ஒன்றையும் உணரா ரந்தோ' எனனும் பாடற் பகுதியால் அறியலாம்.

அ.ஆ.

**தேவராச பிள்ளை:** இவர் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழப் புலவர்களுள ஒருவர். இவர் கி.பி. 1837-ஆம் ஆண்டு செங்கறபட்டு மாவட்டத்தில் உளள வல்லூர் எனனும் சிற்றூரில், கருணீகர் குலத்தில் வீராச்சாமி பிளளை என்பவருககு மகனாகப் பிறந்தார். வல்லூரில் பிறந்த காரணமாக வல்லூர்த் தேவராச பிளளை என்று சொல்லப்பட்டார்.

இவா வேலை நிமித்தமாகப் பெஙகளூர் சென்று வாழ்நதாா. திரிசிரபுரம் மகாவித்துவான மீனாட்சி சுநதரம் பிளளையிடம் ஈடுபாடு கொணடவராய, அவரைத் தம் இருப்பிடததிற்கு அழைத்துப் பொனனும் பொருளும கொடுத்துத் தமிழ் கற்றார். மகாவித்துவானிடம் தமிழ கறறுத் தனியே நூல் எழுதும் ஆற்றல் பெற்றாா.

இவா 'சூத சங்கிதை' எனனும் வடமொழி நூலைத் தமிழில் மொழி பெயர்த்துத் தந்தாா. இந் நூல மூவாயிரம பாடல்களைக் கொணடதாகும். தணிகாசல மாலை, சேடமலைமாலை, பஞசாக்கர தேசிகர் பதிகம, பஞச ரததினம் ஆகிய நூல்களையும இவர் இயறறியுள்ளாா.

பாகவதத்தில் இடம்பெறும் குசேலா வரலாறறினைக 'குசேலோ பாக்கியானம்' எனற பெயரில் 726 பாடல்களால் இவர் இயற்றியுள்ளாா.

இந்நூல மகாவிததுவான மீனாட்சி சுந்தரம பிளளையால் இயற்றபபெறறு இவர் பெயரால வெளியிடப்பட்டது என்று கூறுவர். தேவராச பிள்ளை எழுதியதைமகாவிததுவான பிளளையவாகள செபபஞ செய்து கொடுததார் என்பதே பொருத்தமானதாகும.

இவா தம் ஆசிரியரான மகாவிததுவான மீனாடசி சுநதரம்பிளளை மீது அளவிலாப் பறறுடையவராக விளங்கினாா. தம ஆசிரியரை முருகனுக்கு ஒபபாகச சித்திர சததிரப் புகழ்சசி மாலையில அமைத்திருப பது குறிபபிடத் தககதாகும இரா.குரு.,

**தேவன் திருவரன் குளமுடையான்** இவா கி.பி. 13-ஆம நூறறாண்டின் முற்பகுதியில வாழ்நத புலவாகளுள ஒருவா. இவரது ஊா திருவரனகுளம என்பதாகும். அவவூா, புதுககோட்டை மாவட்டததிலுளளது. இப்புலவர் பற்றிய செய்தி, அவவூரிலுளள திருமால் கோயிலின சுவர் ஒன்றில் பொறிக்கப்பட்டுளள கல்வெட்டினால் அறியப்படுகிறது. இபபுலவா பொனனமராவதிப் பகுதியில வாழநது மறமாணிககர் என வழஙகப் பெற்ற வீரர்கள மீது பெரிய வஞ்சி எனப் பொருளபடும 'போ வஞ்சி' எனனும சிற்றிலககியததைப் பாடியுள்ளார் பெருவஞ்சி எனனும புறத துறை, தமமை வந்தடையாத பகை மனனா நாட்டை வெனறவேந்தன் தீயிட்டழிககும் செய்திபறறிக் கூறுவதாகும. மறமாணிககாகள மீது இபபிரபநதம் பாடப பட்டிருப்பதால் அவர்கள, தம் மனனா பொருட்டு நாட்டை எரித்தழிககும செயலில ஈடுபட்டிருத்தல் கூடும். பொனனமராவதி அககாலததே, ஆட்சிபுரிநத சுநதர பாணடியனின் தலைநகரஙகளுள ஒன்றாக விளஙகியது. அதனால பணியாத சோழமனனை நாட்டை எரியூட்டியழிதத மறமாணிககர்கள சுநதர பாணடிய மன்னனின வீராகளாகக கருதப்படுவது கொணடு, அவாகளைப் பாடிய தேவன திருவரன குளமுடையானும அவா காலததவராவா எனபது புலனாகிறது. இப்புலவா பாடிய 'போவஞ்சி' எனனும் சிறறிலக்கியம இனறு கிடைக்கவிலலை. திருவரனகுளக்கோயிறகல்வெட்டு, 'பாணடி மணடலத துபபொன்னமராவதிமுதலிய நாடுகளிலவாழும் பெரு வீரர்களான மறமாணிக்கர்கள மேல தேவன திரு வரன குளமுடையான எனற புலவா பாடிய போ வஞ்சி எனற பிரபந்தத்தை அவ்வீராகள கேட்டு மகிழ்ந்து அப்புலவர்க்கு மறசசக்கரவாததிப பிளளை எனற பட்டப் பெயர் தந்தும, தூத்திககுடி எனற கிராமத்திற பாதி இறையிலியாகக் கொடுததும பெருஞ சிறப்புச் செய்தனா' என்று இப்புலவர் பறறிய செய்தியைக் கூறுவதாக மு.இராகவையஙகார் எடுதது்க் காட்டியுளளார் அ.மா ப

**தேவனார்** சங்க காலப் புலவர்களுள ஒருவர். இவா பெயா பூதன தேவனார் எனறும ஏடுகளில காணபபடுகின்றது இவா பாடிய பாடல ஒனறு நறறிணையில் 227-ஆம் பாடலாக இடமபெறறுளளது நெயதல திணையிலமைநத அபபாடல விரைவில மணநதுகொளளாது காலநீட்டிபபுச் செயயும தலைவனைத தோழி தலைவியின நிலையை எடுததுக கூறி விரைவில மணநதுகொளக எனறு கூறுவதாக உளளது அபபாடலில தலைவன மணநதுகொளளா மல செலவதால் வீதியினகண இடையறாது செலலுமதேரின ஓசையைப போலத தலைவியைப பறறி ஊரில பேசும அலா மிகுதியாக உளளது. எனவே, அவள இறநதபினனும அககுடிககு உணடாகும இழுககினை எணணி விரைவாக வநது மணநதுகொளவாயாக எனத தோழி தலைவனிடம கூறுவது நயமிககதாகும வீ.சே.

**தேவாரம்** சைவத திருமுறைகள பனனிரண டென வகுககபபெறறன அவறறுள முதல ஏழு திருமுறைகளும தேவாரம எனறு வழஙகபபெறுகினறன. திருஞானசமபநதா பாடலகள முதல மூனறு திருமுறைகளாகவும, திருநாவுககரசர் பாடலகள நாலாம, ஐந்தாம, ஆறாம் திருமுறைகளாகவும, சுநதரமூர்த்தி நாயனாா பாடலகள ஏழாம திருமுறையாகவும் பகுக்கபபெறறுளளன இபபாடலகள சிவபெருமானைப போறறிப பாடியவை ஆகும.

மூவா திருப்பதிகஙகளைத் தேவாரம என வழஙகும வழககம இரட்டைப புலவர்கள பாடிய ஏகாமபர நாதருலாவிற்றான் முதன முதற காணபபடுகினறது 'மூவாத பேரனபின மூவர் முதலிகளும தேவாரஞ செயத திருபபாட்டும்'-எனபது அவவுலாத தொடா மூவர் திருப்பதிகஙகளையும தேவாரம எனற பெயரால முதன முதல தெளிவாகக குறிபபிட்டு வழஙகியவர் சைவ எல்லபப நாவலராவா

தேவபாணியெனறாறபோலத் தெய்வததைப் பரவும இசைப் பாடல எனற பொருளில் வழஙகியதே தேவாரமெனனும பெயரெனபதும, இறைவனைப பணணார்நத இசையாற் பாடிப போற்றுதறகேறப அமைநதவை மூவா திருபபதிகஙகளாதலின இவை தேவாரம என வழங்கப்பெறறனவெனபதும், தெயவ இசைப்பாடல்களாகிய இவை இறைவழிபாட்டிறகு இனறியமையாச் சாதனமாக அமைநதமை கருதி இவறறுக்கு வழஙகிய தேவாரமென்ற சொல வழிபாடு எனனும பொருளிலும வழஙகபபடுவதாயிற்று எனபதும நனகு புலனாகும.

முதல ஏழு திருமுறைகளும அடஙகன முறை எனப்படும. தேவாரம் என வழஙகப்படுவனவும அவையே எனினும திருஞான சமபநதர் பாடல்களைத திருககடைககாபபு எனவும, சுநதரமூர்த்தி

களின பாடல்களைத் திருப்பாட்டு எனவும், திருநாவுக்கரசர் பாடல்களையே தேவாரம் எனவும் வழங்குதல் பண்டை மரபாம்.

தேவாரம் என்ற சொற்குப்பலவகையான பொருள் விளக்கங்கள் தரப்படுகின்றன. யாழ்ப்பாணத்து வண்ணைநகர் சுவாமிநாதபண்டிதர் தரும் விளக்கங்கள் வருமாறு:

1. தே வாரம் ; தேவனிடத்து வாரத்தை விளைவிப்பது. அதாவது சிவபிரானிடத்து அன்பை உண்டு பணணுவது. 2. தேவாரம்: சிவபிரானுக்கு இன்பை விளைவிப்பது. 3. தே ஆரம் : சிவபிரானை ஆரம் போல அலங்கரிப்பது. 4. தே ஆரம் : தெய்வத் தன்மை பொருந்திய மாலை. 5. தே வாரம்: சிவ பெருமானுக்கே உரிமையுடையது. 6. தே வாரம் : தெய்வத்தன்மை பொருந்திய வாரமாயுள்ளது.

**மூவர் தேவாரப் பாடல்களின் எண்ணிக்கை**: திருஞானசம்பந்தர்பாடியதிருப்பதிகங்கள் பதினாறாயிரம் எனவும், திருநாவுக்கரசர் பாடியவை நாற்பத்தொன் பதினாயிரமெனவும், சுநதரர் பாடியவை முப்பத் தெண்ணாயிரமெனவும் திருமுறை கணட புராணம் கூறுவதாகக் கருதுவர் சிலர்.

திருநாவுக்கரசர் 'கூற்றாயின' எனற பாடல் முதல் 'ஒருவரையுமல்லாது' என்ற பாடல ஈறாக நாற்பததொன்பதினாயிரம பாடலாகப (நாலாயிரத துத் தொளாயிரம பதிகம) பாடினார் எனத திருமுறை கண்ட புராணத் தொடர்க்குப் பொருள கொளளுதலே சுநதரமூர்ததி சுவாமிகள, நம்பியாண டாா நம்பியென்னும இவ்விரு பெருமககள கருததுக் கும ஏற்புடையதாகும.

திருஞான சம்பந்தர் 1600 பதிகஙகளும, திருநாவுக கரசர் 4900 பதிகஙகளும், சுந்தரர் 3800 பதிகங்களும் பாடியருளினார்கள் எனவும, அமமூவரும் அருளிச செய்த திருப்பதிகஙகளின தொகை 10300 எனவும், பாடற்றொகை 1,03,000 எனவும கூறுதல் ஏறபுடைய தாகும். எல்லாத திருப்பதிகஙகளும் கிடைககவிலலை. திருஞானசமபநதர் தேவாரப் பதிகஙகள 384உம், திருநாவுககரசா பதிகஙகள 310உம, சுநதரர் பதிகங கள 100உம், நம்பியாணடாா நமபிகளால் தொகுககப பட்டனவெனபது தெரியவருகினறது. இபபொழுது வழங்கிவரும மூவர் தேவாரப் பதிபபுககளில 796 திருப்பதிகஙகள அடங்கியுளளன. ஏழு திருமுறை களாக விளங்கும இததிருப்பதிகஙகளிலுளள திருப பாடலகளின் தொகை 8250 ஆகும்.

மூவர் தேவாரப் பதிகஙகளை நமபியாணடாா நம்பி தேடிக கொணாநது திருமுறைகளாகத தொகுத்த பினனா அப்பதிகஙகள அழிநதுபோகாத வாறு தில்லைப் பெருங்கோயிலில் முதற் குலோத்துங்கன் காலத்தில் அவனுடைய படைத்தலைவன் காளிங்கராயனது நன்முயற்சியால் செப்பேடுகளில் எழுதிவைக்கப்பட்டன என்றறியப்படுகிறது. தருமபுர மகாசந்நிதானம் அவர்களின திருவருளாணையின வண்ணம் ஏழு திருமுறைகட்கும் தனித்தனியாகச் சிறந்ததொரு பதிப்பு உரையுடன் வந்து விளங்குகிறது.

**தேவாரத்தின் பெருமை**: தேவாரம் தமிழ் வேதமெனப் போற்றப்படும். அதனாலேயே விழாக்காலஙகளில் வேதத்துடன் தேவாரம் ஓதுவதும் வழக்கமாய் இருந்துவருகிறது. சைவசித்தாநதம ஓதும் பதிபசுபாச இலக்கணத்திற்குத் தேவாரம் இலககியமாகும் தேவாரப் பதிகஙகள இசைத் தமிழாயும், அவவிசைகள் தமிழுக்குரிய பணகளாயும் அமைந்திருத்தல அவற்றிற்குரிய தனிசசிறப்பு. சம்பந்தர், அப்பர் திருப் பதிகங்கள் பெரும்பாலும ஒரு காலத்தில தோனறி யன. சுந்தரர் திருப்பதிகங்கள் ஏறக்குறைய ஒரு நூற்றாணடு பின்னர்த் தோனறியவை.

இறைவன் திருநாவுக்கரசரை அடியாராகவும, திருஞான சம்பந்தரை மகனாராகவும், சுந்தரரைத் தோழராகவும் கொண்டு திருவருள புரிநதான. இநத மூவகை உறவுமுறைத் திறபபாடுகள அவாகள் திருப் பதிகஙகளில் வெளிப்படக் கிடக்கின்றன. இறைவனை அகத்திலும் புறத்திலும் வழிபடும் வழிபாட்டு முறையைத் தேவாரப் பாடல்கள வலியுறுத்தும். இறைவனது திருவருளில் நம்பிககையும உறுதிப்பாடும வைத்து விட்டால், 'அஞ்சுவது யாதொனறும் இல்லை: அஞ்சவருவதுமிலலை' எனவும், 'நாமார்க் குமகுடியல்லோம்: நமனை அஞ்சோம' எனவும், அறைகூவும் துணிவும் ஆறறலும தோனறும் எனத் தேவாரப் பாடல்கள காட்டுகினறன. ச.ச.

**தேவிசு செபர்சன்**, (கி.பி. 1808-1889) அமெரிகக ஐககிய நாட்டு அரசியல தலைவர். இவா தெனமாநிலஙகளை ஆதரித்து, அடிமை முறை ஒழிக கப்படுவதை எதிாததவர் உள்நாடடுப் போரின பொழுது (கி.பி 1861-1865) கூட்டரசு நாடுகளின (Confederate States) குடியரசுத தலைவராக இருநது அப்போரைத் திறமையாக நடத்தினார் சிறநத வீரமும், நலல நிருவாகத திறமையும கொணட செபாசன தேவிசு (Jetteron Davis) தென மாநிலங்களுக காக ஓயாது போராடினார்.

**இளமை** இப்பொழுது தாது (Todd) எனறுசொல லபபடும் கிறிசுதியன (Christıan) மாவட்டததில கி.பி. 1808 சூன் 3-இல சாமுவல் எமரி தேவிசு (Samuel Emory Davis), சேன குக்கு தேவிசு(Iane Cook Davıs) ஆகியோரின மகனாய்ப் பிறந்தாா கெணடகியி


தேவிசு செபாசன

லிருநத தாமினிகன் பளளியில இவர் சில காலம் கலவி பயின்றாா; பினனர்த் தம் ஊருக்கு அருகில இருந்த கல்வி நிலையஙகளில் கறறார், தமது 13-ஆம் வய தில கெண்டகிபிலிருநத திரான்சில்வேனியா கலலூரி யில சேர்நதாா; அமெரிக்கப் போர்ப் பயிற்சிப் பளளி யில (U S. Military Academy) பயிற்சி பெற்ற பின னா கி பி. 1828-இல் பட்டம பெறறு வடமேறகு எல்லையில ஓா அதிகாரியாக இருந்தார். அப்பொழுது இவாதம மேலதிகாரியின மகள் சாரா நாக்சு (Sarah Knox) என்பவரைக் காதலித்து, அதறகாகப் பதவியைத் துறந்து, திருமணம் செய்து கொணடார். ஆனால் மூனறே மாதஙகளில் இவருடைய மனைவி, மலேரியாக் காயசசலுககுப் பலியானாா. எனவே, இவா மிசிசிப்பி சென்று, தம்முடைய தமையன கொடுத்த 400 எக்டேர் (hectare) பணணையில் பருத்தி வேளாண்மையில் ஈடுபட்டார். அப்பொழுது இவர் நீக்கிரோககளை நல்ல முறையில் நடத்தினா லும, வெளளையாகளைவிட அவர்கள தாழ்நதவா களே எனவும், அவர்களுக்கு நல்ல வாழ்ககையை அளிக்க முடியாதெனவும கருதினார்.

**அரசியலில் ஈடுபாடு.** மிசிசிப்பி மாநில அவைககு கி.பி. 1843-இல் நடந்த தேர்தலில குடியரசுக் கட்சி யின (Democratic Party) சார்பாக இவர் போட்டியிட் டுத் தோற்றார். குடியரசுத் தலைவராகப் போட்டி யிட்ட சேமசு போக்கை (James Polk) இவா கி.பி. 1844-இல் ஆதரிததுச் சொறபொழிவுகள நிகழ்ததித தம்முடைய திறமையைக காட்டினார்; வெரினா கோ வெல (Varina Howell)எனனும் 19 வயது மஙகையை கி பி.1845-இல திருமணம செய்துகொணடாா. பேரா ளர் அவைக்கு இவர் (House of Representative) குடியரசுக கட்சியின் சாாபில போட்டியிட்டு வெறறி பெறறார். எனினும கி பி. 1846-இலபதவியைத துறந்து மெக்சிகோ போரில மிசிசிப்பித துப்பாககிப படைத்தள பதியாக (Command of the Mississippi Rifles)இருந்து பெயரும் புகழும பெற்றார். மிசிசிப்பி ஆளுநர் கி.பி. 1847-இல் இவரை அமெரிக்க ஆளவை மனறத்திறகு (Senate) நியமனம் செய்தார் பிராங்கிலின் பியர்சு (Franklin Pierce) குடியரசுத் தலைவராக இருந்த பொழுது இவர் போா அமைச்சராக (Secretary of War, கி பி. 1853-57) நியமிக்கபபெற்றுப படையை விரிவுபடுத்திப் பல சீர்திருத்தங்களைச் செய்தார் பின் னர் கி.பி. 1857-இல ஆளவை மன்றத்திற்கு இவர் தோநதெடுக்கப்பட்டு கி.பி. 1861 வரையில் பணிபுரிந தார் அப்பொழுது தென் மாநிலங்களுக்கு ஆதரவாக இவா குரல எழுபபி வந்தார். ஆப்ரகாம இலிஙகன குடியரசுத் தலைவராகத் தேர்நதெடுக்கப்பட்டதும் தென மாநிலஙகள பிரிய வேண்டியதன் தேவையை வலியுறுத்தலானாா.

**உள்நாட்டுப போரில்:** அமெரிக்க உளநாட்டுப போர் தொடஙகியதும் கி.பி. 1861 பிபபிரவரியில் கூட்டரசின (Confederacy) தலைவராக இவா தேர்ந தெடுக்கப்பட்டார், மிகவிரைவிலேயே 900,000 போ கொணட ஒரு படையையும், போருக்குத் தேவை யான அனைத்துப் பொருளகளையும திரட்டினார். இறுதியில இபபோரில இவா தோல்வியடைந்தாா. இர்வின விலலி (Irwinville) எனனுமிடத்தில கி.பி. 1865மே 10-இல் இவர் கைது செய்யப்பட்டார். தேசத துரோகக் குற்றமும, குடியரசுத தலைவா இலிஙக னைக் கொலை செய்ய முயன்றதாகக் குறறமும் சாட்டப்பட்டாா. இவர் மனறோ கோட்டையில கி பி. 1865-67-இல் சிறை வைக்கப்பட்டிருந்தாா; விசாரணை எதுவும் செய்யப்படாமலேயே இவர் கி.பி. 1863 மே 13-இல விடுதலை செய்யப்பட்டார். பினனா கி.பி. 1868 திசம்பர் 25-இல் இவர் மீதான வழககு கைவிடபபட்டது

**இறுதிக்காலம்:** 'கூட்டரசின எழுச்சியும் வீழ்ச்சி யும்'(The Rise and Fall of the Confederate Govern -ment) எனனும் நூலை கி.பி. 1881-இல் இவர் எழு தினார்; பல இடங்களுக்கும் சுற்றுப் பயணஙகளை மேறகொண்டு சொற்பொழிவு நிகழ்ததினார். இவா கி.பி 1889 நவம்பரில் உடல் நலம் கெட்டுத் திசமபா 6-இல் தமமுடைய 81-ஆம் வயதில காலமானார். மிசிசிப்பியில இவருக்குச் சிலை வைக்கப்பட்டது. இவருடைய பிறநதநாள கெணடகியிலும், உலூசி யானாவிலும் கூட்டரசின நினைவு நாளாகக (Confederate Memorial Day) கொணடாடப்படுகிறது.

சி.இரெ.

**துணை நூல்கள்:**

Allan Nevins and Henry Steele Commanger, A Short History of the United States, Scientific Book Agency, Calcutta, 1966.

Heenry Bamford Barkes, The United States of America-A History, Scientific Book Agency, Calcutta, 1976.

Randall, J.G. and Donald David, The Civil War and Reconstruction, D C. Heath and Company, Boston, 1966.

**தேவிசு செபர்சன் கொலம்பசு** (கி.பி.1828 -1879): அமெரிக்க உள்நாட்டுப் போரில் ஐக்கியப் படையின் (Union army) தளபதியாக இருந்தவர் தேவிசு செபர்சன்.

கொலம்பசு (Davis Jefferson Columbus) இந்தியானா மாநிலத்தில் கிளார்க்கு வட்டத்தில் (Clark-county) கி.பி.1828-ஆம் ஆண்டு பிறந்தார். இவர் உள்நாட்டுப் போர் தொடங்கியபொழுது திரட்டப்பட்ட படையில் சேர்ந்து, கி.பி 1862-இல் கெண்டகியிலுள்ள உலூயிவில்லியில் (Loui ville) இராணுவ அதிகாரியாகப் பணிபுரிந்தார். அப்பொழுது இவர் பணியில் கடமை தவறியதற்காக இவருடைய உயர் அதிகாரியான வில்லியம் நெல்சன் (Maj. Gen. Willi-am Nelson) இவரைக் கடிந்து கொண்டார். எனவே இவர் தம்முடைய நண்பன் மார்ட்டனுடன்(Mortion) செம்டம்பர் 29 ஆம் நாள் உலுயிவில்லியில் வில்லியம்நெல்சன் தங்கியிருந்த உணவு விடுதிக்குச் சென்று, நெல்சனைத் தாக்கித் துப்பாக்கியால் சுட்டார். அதனவிளைவாகப் படுகாயமடைந்த நெல்சன மரணமடைந்தார். அதற்காகத் தேவிசு சிறை செய்யப்பட்டார். என்றாலும் இவருடைய திறமையின காரணமாகவும், மார்ட்டனின செல்வாக்கின் விளைவாகவும் இவர் விசாரணை செய்யப்படவில்லை. உளநாட்டுப போரில் சிறப்பாகப் பணியாற்றிய இவர், 'கலிபோர்னியாவிலும், அலாசுகாவிலும் (Alaska) நடந்தபோர்களில சேவை செய்தார். இவர் கி.பி 1879ஆம் ஆண்டில் சிகாகோ நகரில மரணமடைந்தார். சி இரெ.

**தேவிசு பெஞ்சமின் ஆலிவர்** (கி பி. 1877 -1970) அமெரிக்க ஐக்கிய நாடுகளின் படையில் பல்வேறு பதவிகளை வகித்த முதல் நீக்கிரோ தளபதி ஆவார். தேவிசு பெஞ்சமின் ஆலிவர (Davis-Ben-gamin Oliver), கி.பி 1877-ஆம் ஆணடில் வாசிங்டனில பிறந்தார். இசுபானிய-அமெரிக்கப் போரில (Spanish-Ameriban War)சிறப்பாகப் பணிபுரிந்து1901-இல காலாட்படையில் இரண்டாம் அணுக்க முதன்மையராகப் (Second lieutenat) பதவி உயர்வு பெற்றார். பினனர், 1940-இலஇவர் படைப்பகுதித்தளபதிப் (Brigadier general) பதவியை அடைந்தார். இவர் 1911-12-இல இலைபீரியாவிலுள்ள (Liberia) மொன ரோவியாவில் (Monrovia) படைத் தூதுவராகப் (Military attache) பணிபுரிந்தார். முதல் உலகப் போரின்பொழுது மெக்சிகோவின எல்லையிலும், பிலிப்பைன்சுத் தீவுகளிலும் காவல புரிநத நீக்கிரோ குதிரைப்படையின் அதிகாரியாக இருநதார். பினனர் 1905-38 ஆண்டுகளில் இவர் நானகு முறை விலலியம வில்பர் போாசு பல்கலைக கழகத்திறகும், தசுகிகீப பயிற்சி நிலையத்திற்கும (Tuskegee Institute)போர்க் கலை பறறிய (Military Science and Tactics) பேராசிரியராகச் சென்று உரை நிகழத்தினார். இரண்டாம் உலகப்பேரின் போது இவர் நீக்கிரோ சிக்கல் பற்றிச் சிறப்பு ஆலோசகராகப் பணிபுரிந்தார; அதுவரை அமெரிக்க ஐக்கிய நாடுகளின படையில நீக்கிரோ வீரர்கள் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த முறையில பெரும் மாற்றத்தை உணடாககினார. அநநாட்டிற்கு 1944-45-இல காலாட்படையினர் தேவைப் பட்ட பொழுது 5000நீககிரோக்கள் முன்வநது சேர்ந்தனர். அவர்கள அதற்கு முனனர வெள்ளையர் மட்டுமே பணிபுரிநதுவந்த படைப்பிரிவில் சிறப்பாகப பணியாற்றினர். போர் முடிநததும் இவர் வாசிங்டன சென்று படைத்தலைமை ஆய்வாளராகப் (Inspec-tor general of the army) பதவியேற்றார். இவர் 1948-இல பதவியிலிருந்து ஒய்வு பெற்று, வட சிகாகோவில் 1970-இல் காலமானார்.

இவருடைய ஒரே மகனான தேவிசு பெஞசமின ஆலிவர் (இளையவர்) (Davis Benjamin (Junior) அமெரிக்க ஐககிய நாடுகளின் விமானப் படையில முதலாம நீக்கிரோ தளபதியாகப் (General) பணி புரிநதார என்பது குறிப்பிடததககது. சி இரெ.

**தேவிப்பட்டினம்** தென்னிந்தியத் திருததலங்களுள் ஒன்று. இது தமிழ் நாட்டில் இராமநாதபுரம மாவட்டததில் உளள ஒரு கடற்கரைப் பட்டினம். திலகேசுவரர் என்ற பெயரை உடைய சிவபெருமானின கோயில ஒனறு இங்கு உணடு. இஙகுப் பாண்டியர் காலக் கலவெட்டுகள காணப்படுகின்றன சடையவர்ம பாணடியன,மாறவாம பாண்டியன, குலசேகர தேவ பாணடியன் முதலியோரின கல்வெட்டுகள் குறிப்பிடத் தக்கவை. கலவெட்டுகளில் திலகேசுவரரின் பெயர் போகீசுவரமுடைய நாயனார் எனறு குறிப்பிடப்பட்டுள்ளது விட்டுணுவுககுரிய கோயில ஒனறும் இங்கு உள்ளது. அககோயிலில எழுநதருளியுள்ள இறைவனின பெயர் கடலடைத்த பெருமான. கடறகரை நீரில பிரதிட்டை செய்யப்பெற்ற நவக்கிரகங்கள இவ்வூரில் உளளதால இதற்குத தலச் சிறப்பு மிகுதி. பல பயணிகள இஙகு வந்து வழிபாடு செய்வது வழக்கம. தெ.பா.

**தேவேந்திரநாத தாகூர், மகரிசி**: இவர் புகழ்பெற்ற வங்கக் கவி; இரவீந்திர நாத தாகூரின்

தந்தை ஆவார் நன்கு கற்றுணர்ந்தவரும், ஆழ்ந்த சமய நம்பிக்கை உடையவருமான தேவேந்திர நாதது, வங்காளத்தில் புதிய சமய நெறியைத் தோற்றுவித்த இராசா ராம மோகன ராயின் நெருங்கிய நண்பரான துவாரகா நாத தாகூரின் மூத்த மகன் ஆவார். பிரமம சமாசம் (Brahamma Samaj) என்ற சமயச் சீர்திருத்த இயக்கத்தை உருவாக்கியவர்களுள் தேவேந்திரநாதர் ஒருவராவார். இவர் கி.பி.1817-இல் பிறந்து 1905-இல் கலகத்தாவில் உள்ள தமது இல்லத்தில் இயற்கை எய்தினார்.

தேவேந்திர நாதர் மிகச் செல்வ வளமுள்ள குடும்பத்தில் பிறந்தார். இவர் தந்தை துவாரகா நாதர் பண முதலீட்டாளர் (Financier). இன்று தனி நாடாக விளங்கும் வங்காள தேசத்தில் அவருக்குச் சொந்தமாக அளவற்ற நிலம் இருந்தது. பிராமண வகுப்பைச் சேர்ந்தவர் என்றாலும் இவருடைய குடும்பம் சமய ஆசாரத் 'தூய்மை' (Pure) உடையதாகக் கருதப்படவில்லை. இவருடைய தந்தை அளவற்ற செல்வத்தின் காரணமாகப் போக வாழ்க்கையில் ஈடுபட்டார். அதனால் தேவேந்திர நாதர் இளம் வயதிலிருந்தே உலலாச வாழ்க்கையை வெறுத்தார்; ஆன்மிக வழியில் நாட்டங் கொண்டு 'மெய்ப்பொருளைக்' காணப்பல சமயங்களைப் பற்றியும் நன்கு கற்று ஆய்வு செய்தார்; அதற்காகத் 'தத்துவ போதினி' (Tattuva Bodhini) என்ற சபையை நிறுவினார்; அதன்மூலம் வேதங்களிலும் உபநிடதங்களிலும் (Upanishads) சொல்லப்பட்டிருக்கும் கருத்துக்களை மக்கள் மத்தியில் பரப்பினார். இராசா ராம மோகன் ராய் 1828-இல் தொடங்கிய பிரம்ம சமாசம் (Brahamma Samaj) அவர் 1833-இல் இங்கிலாந்திலேயே இறந்துவிட்டதால் வழி நடத்துவோரின்றித் தடைபட்டது. தேவேந்திரநாதர் கி.பி.1842-ஆம் ஆண்டு அதனை வழிநடத்த முன்வந்தார். பழைய வைதிகக் கொள்கைகளிலிருந்து முற்றிலும் வேறுபட்ட கருத்துக்களை இவ்வமைப்புக் கொண்டிருந்தது 'பிரமம தருமம்' என்ற நூலை இவர் 1850-இல் தொகுத்து வெளியிட்டார். உருவ வழிபாடு இன்றி இறைவனை நிர்குணமாகக் (Nirguna) கண்டு வழிபடுதல் பற்றியும் 'மெய்ஞ்ஞானம்' பற்றியும் இவர் அதில் விளக்கியுள்ளார்.

அவ்வியக்கத்தை இவர் 1854-இலிருந்து முறையாக வழி நடத்தலானார், பிணைப்பு இல்லாதிருந்த இவ்வியக்க உறுப்பினர்களிடையே பிணைப்பினை ஏற்படுத்தி, ஒரு சமயக் கூட்டமாக மாற்றினார்; தமது கொள்கைகளையும், புதிய தத்துவத்தையும் 'தத்துவ போதினி பத்திரிகா, (Tattva Bodhini Patrika) என்னும் செய்தித்தாள் மூலம் பரப்பினார்; அதைத்தவிரச் சமயப் பரப்புநர் பலரை நியமித்து நாடு முழுவதும் பரப்பினார். புதிய சமயத்தில் சேருவோர் செய்கிற முதற் சடங்கு, 'மகா நிர்வாண தந்திரம்' (Mahanirvana Tantra) என்னும் தந்திர நூலை அடிப்படையாகக் கொண்டது. வேதங்கள் என்பவை தெய்வத்தன்மையுள்ள 'இறைவழி வெளிப்பாடு' (Divine Revelation) எனவும் 'புதிய சமயத்தின் நம்பிக்கைகளுக்கு ஒரே அடிப்படை வேதங்களே எனவும் இவ்வியக்கத்தின் உறுப்பான 'தத்துவ் போதினி பத்திரிகா' அறிவித்தது.

தேவேந்திரநாதர் தலைமையில் இருந்த இப்புதிய சமயத்தில் இளைஞர்களின் தலைவராக மாறிய கேசவ சந்திர சென் என்பவர் இம்மதத்தின் 'அறிவு முதற் கொள்கைகளை (Rationalistic Principles) தீவிரப்படுத்திப் 'புதிய பிரம்ம இயக்கம்' (New Brahmanism) என்பதை உண்டாக்கினார். முதலில் கேசவ சந்திர சென்னின் தொண்டைப் புகழ்ந்து அவரைச் சமய குருவாகவும், சமாசத்தின் செயலராகவும் தேவேந்திரநாதர் நியமித்தார். ஆனால் கி.பி.1865-இல் அவருடைய முன்னேற்றக் கருத்துக்களை வெறுத்து அவரை இயக்கத்திலிருந்து தேவேந்திரநாதர் விலக்கினார் இந்நிலையில் பிரமம சமாசம் பழமை விரும்பிகள், முற்போக்காளர்கள் என்று இரு பிரிவுகளாகப் பிரிந்தது. 'இந்தியாவின் பிரம்ம சமாசம்' எனவும் தேவேந்திர நாத தாகூரின் நிறுவனம் 'ஆதி பிரமம சமாசம்' எனவும் பெயர் பெற்றன. உருவ வழிபாடு, சாதிப் பிரிவினை ஆகிய இந்துசமயக் கொள்கைகள் சிலவற்றை மறுத்தமையும், கேசவ சந்திர சென் இயக்கத்தில் இருக்கும்போது கிறித்தவ சமயக்கூறுகளை எடுத்துக்கொண்டமையும் தேவேந்திர நாதரின் இயக்கத்தை இந்து சமுதாயத்திலிருந்து விலகி நிற்கு மாறு செய்தன. ஆனால் உபநிடதங்களை அடிப்படையாக ஒப்புக்கொள்ளுதல், மதச் சகிப்பு, கடவுள் சிந்தனை ஆகியவை இந்து சமுதாயத்துடன் இணைத்து வைத்தன. இராசாராம மோகனராயின் 'பகுத்தறிவுடன் கூடிய கடவுள் நம்பிக்கை' என்ற கொள்கையுடன் தேவேந்திரநாதர் 'உணர்ச்சிப் பெருக்கை'யும் ஒருங்கிணைத்தார். தேவேந்திரநாதர் இயக்கம் சமுதாயச் சீர்திருத்தங்களையும், எல்லாவித மான சமயப்பரப்புதல்களையும் எதிர்த்ததால் விரைவில் மறைந்து விட்டது.

தேவேந்திரநாதர் தம் தந்தையாரின் இறப்பிற்குப் பிறகு பெரிதும் துன்பமுற்றார் அவர் நிறுவித்த 'யூனியன் வங்கி'யும், பிற வணிக நிலைகளும் சீர்குலைந்தன. கோடிக்கணக்கில் கடன் சுமை தேவேந்திரநாதர் மீது விழவே, தம் சொத்துக்களை விற்றுக் கடனை அடைத்தார். இவர் பிரித்தானிய இந்தியக் கழகத்தின் கௌரவச் செயலராகவும் இருந்தார். அச்சமயம் கி.பி.1851-இல் சென்னையிலுள்ள முக்கிய பெரியோர்களுக்குக் கடிதம் எழுதி இந்தியர்கள்

அனைவரையும் ஒருங்குதிரட்ட ஒரு பொது அமைப்புத் தேவை என வலியுறுத்தினார்.

தேவேந்திரநாதர் ஆன்மிக வாழ்க்கையில் மிக்க ஈடுபாடு காட்டியமையாலும், தூய்மையான வாழ்க்கை முறைகளைப் பின்பற்றியமையாலும், முனிவர்களைப் போலவே தனிமையை நாடி அடிக்கடி இமயமலைச் சாரலுக்குச் சென்றமையாலும், வங்க மக்களால் 'மகரிசி' என்று கூறப்பட்டார். இவர் தமது சுயசரிதையை 'ஆத்ம சீவனி' என்ற பெயருடன் நூலாக எழுதியுள்ளார். பிரம்ம தருமம் பற்றிய இவரது சொற்பொழிவுகள் தொகுக்கப் பட்டுள்ளன.

தேவேந்திரநாத தாகூரின் மனைவியார் சாரதா தேவியார். தேவேந்திரநாத தாகூருக்குப் பதினான்கு குழந்தைகள் பிறந்தனர். இவருடைய ஒன்பதாம் குழந்தையாகிய இரவீந்திரநாத தாகூர் 1861-இல் பிறந்தார். தேவேந்திரநாத தாகூரின் குழந்தைகளுள் எழுத்தாளர்-தத்துவ மேதை எனப் புகழப்படும் திவிசேந்திர நாதர் (Dvijendra Nath), இசை வல்லுநரான சுயோதிரிந்தர நாதர் (Jyotirindra Nath), வங்காளத்தின் முதல் பெண் புதின எழுத்தாளர் (Novelist) எனப் புகழப்படும் சுவர்ணகுமாரி தேவி (Suvarna Kumari Devi) ஆகியோர் குறிப்பிடத் தக்கவர். தி.செ.

*தேவை*: நடைமுறையில் ஆசை, விருப்பம் வேட்கை, தேவை, ஆவல் போன்ற சொற்கள் ஏறத்தாழ ஒரே பொருளில் பயன்படுத்தப்படுகின்றன ஆனால், பொருளாதார இயலில் வாங்குந் திறனோடு கூடிய ஆவலைத் தேவை (Demand) என்ற சொல் குறிப்பிடுகிறது. பண்டம் அல்லது பணியைப் பெறுவதற்கான ஆவல், அதைப் பெறுவதற்குரிய வாங்கும் திறன், தன்னிடம் உள்ளதைக் கொடுத்துவிட்டுப் பண்டம் அல்லது பணியைப் பெறச் சம்மதம் ஆகிய மூன்று இயல்புகளை உறுதித் தேவை (Effective Demand) அல்லது தேவை (Demand) கொண்டிருக்கிறது. தேவைச் சார்பு, தேவையின் வகைகள், தேவை விதி, அசாதாரணத் தேவை, தேவைக் கோட்பாடு என்ற பகுதிகளைத் தேவை விளக்கும்.

**தேவைச் சார்பு**: விலைகள், நுகர்வோரின் வருமானம், பதிலிப் பண்டங்கள், பணிகள் விலைகள், வாங்குபவரின் விருப்பு வெறுப்புகள் மற்றும் இவைபோன்ற பல காரணிகள் தேவையின் அளவை நிருணயிக்கின்றன. தேவைக்கும் இக்காரணிகளுக்குமுள்ள தொடர்பைத் தேவைச்சார்பு (Demand Function). என்பர்

தேவையை ஒரு குறிப்பிட்ட விலையின் அடிப்படையில்தான் குறிப்பிடுவர். குறிப்பிட்ட கால அளவில் குறிப்பிட்ட பல விலைகளில் நுகர்வோர் எவ்வளவு பண்டங்களை நுகர விரும்புகிறாரென்றுதான் குறிப்பிடுவது இயல்பு

விற்பனையாளரைப் பொறுத்தமட்டிலும் தேவை விலை என்பது பண்டத்தின் சராசரி வருவாயாகும் (Average Revenue).

**தேவையின் வகைகள்**: தேவையை விலைத் தேவை (Price Demand), வருமானத் தேவை (Income Demand), குறுக்குத் தேவை (Cross Demand) என மூவகைப்படுத்தி விளக்குவது மரபு. விலை மாற்றத்தின் விளைவாகத் தேவை மாறுவதை விலைத் தேவை என்றும், வருமான மாற்றம் காரணமாகத் தேவை மாறுவதை வருமானத்தேவை என்றும், ஒரு பண்டத்தின் விலை மாறுவதால் அப் பண்டத்தின் பதிலிப் பண்டத்தின் தேவையில் மாற்றம் ஏற்படுமானால் அதைக் குறுக்குத் தேவை என்றும் குறிப்பிடலாம். இவற்றை முறையே படம் 1,2,3 விளக்குகின்றன.

படம் 1-இல் விலை OP யிலிருந்து $OP_1$ ஆக அதிகரிக்கும்போது தேவையின் அளவு OQ இலிருந்து $OQ_1$ ஆகச் சுருங்குகிறது. விலை $OP_2$ ஆகக் குறையும் போது தேவையின் அளவு $OQ_2$ ஆக விரிவடைகிறது விலை மாற்றமும் வருமான மாற்றமும் தலைகீழ்த் தொடர்பு உடையவை.

படம் 2-இல் வருமானம் OY இலிருந்து $OY_1$ஆக அதிகரிக்கும்போது தேவையின் அளவு OQ இலிருந்து $OQ_2$ஆக அதிகரிக்கிறது வருமானம் $OY_2$ ஆகக் குறையும்போது தேவையின் அளவு $OQ_1$ ஆகக் குறைகிறது. வருமான மாற்றமும் தேவை மாற்றமும் நேர் உடன் தொடர்பு உடையவை.

படம் 3-இல் Y பண்டத்தின் விலை OPஇலிருந்து $OP_1$ ஆக அதிகரிக்கும்போது X பண்டத்தின் தேவை $OQ_1$ இலிருந்து $OQ_2$ ஆக அதிகரிக்கிறது; OP2 ஆகக் குறையும்போது X பண்டத்தின் தேவை $OQ_1$ ஆகக் குறைகிறது. பதிலிப் பண்டங்களின் விலைமாற்றமும் தேவைமாற்றமும் நேர்உடன் தொடர்பு உடையவை.

**விலைத் தேவை**: பொதுவாகத் தேவை என்னும் சொல் விலையோடு தொடர்புபடுத்தத்தக்கது. குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட விலையில் எந்த அளவுப் பண்டங்கள் வாங்கப்படுகின்றனவோ அந்த அளவே தேவை என்பது பேராசிரியர் பென்கமின் (Prof:Benham) கருத்து.

**தேவை விதி** (Law of Demand). மற்றவை மாறாதிருக்கும்போது விலை குறைந்தால் தேவை விரிவடை


Y
D
B
P1
A
P
விலை
C
P2
D
O
Q1
Q
Q2
X
தேவை அளவு


Y
B
D
Y1
A
Y
வருமானம
C
Y2
D
O
Q1
Q
Q2
X
தேவை அளவு


Y
B
D
P1
A
P
Y பண்டத்தின விலை
C
P2
D
O
Q1
Q
Q2
X
தேவை அளவு

யும்; விலை அதிகரித்தால தேவை சுருஙகும். நுகர் வோரின வருமானம், விருப்பு, வெறுப்பு, பதிலிப் பண டஙகளின் விலைகள் போனற பிற காரணிகளில் மாற்றம் இருக்கக்கூடாது எனபது கருத்து.

**தேவைப்பட்டியல்:** குறிப்பிட்டதொரு நேரத்தில் பல விலைகளில நுகரப்படும் அளவுகளைக் காட்டும் பட்டியல் தேவைப்பட்டியல. இது தனி ஒருவர் தேவைப் பட்டியல் (Individual Demand Schedule), அங்காடித் தேவைபபட்டியல் (Market Demand Schedule) என இருவகைப்படுகிறது. கீழவரும் பட்டியல்களைக் காண்க.

**தனிப்பட்டோர் தேவைப்பட்டியல்**

| விலை (உரு.) | 'அ'வின தேவை அளவு | 'ஆ'வின் தேவை அளவு | 'இ'யின் தேவை அளவு |
|---|---|---|---|
| 10 | 2 | – | - |
| 8 | 3 | 1 | 1 |
| 5 | 4 | 2 | 2 |
| 3 | 5 | 5 | 6 |

**அங்காடித் தேவைப்பட்டியல்**

| விலை (உருபாயில) | அஙகாடித்தேவை |
|---|---|
| 10 | 2 |
| 8 | 5 |
| 5 | 8 |
| 3 | 16 |

**தேவைக்கோடு:** படம் 1-இல் விலை அதிகரிககும போது தேவை விரிவடைவதையும் விலை குறையும போது தேவைசுருங்குவதையும காணலாம். சமநிலை களானA,B,Cபுள்ளிகளை இணைக்கும் கோடு தேவைக் கோடு எனப்படும். அஙகாடித் தேவைக கோட்டை அமைக்கும்போது (அ) விலைமாற்றமும் தேவைமாற்ற மும் தொடாசசியாக நடைபெறுகினறன;(ஆ) தேவை அளவு மிகச்சிறிய அளவிலும் அளவிடத்தக்கது; (இ) தனி நுகர்வோர் யாரும் தம தனிச் செலவாககினால சிறிதளவுகூட விலையை மாற்ற முடியாது என்ற பல எடுகோள்கள் அமைத்துக் கொளளப்படும்.

குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டு விதி (Law of Diminishing Utility) செயற்படுவதாலும், பதிலீட்டு விளைவு (Substitution Effect), வருமான விளைவு(Income Effect),புதிய நுகர்வோர்களின் எண் ணிக்கைப் பெருக்கம் போன்ற பல காரணங்களால் விலை குறையுமபோதும் தேவை விரிவடைகிறது. எனவே, தேவைககோடு இடமிருந்து வலமாக, மேலி ருந்து கீழ்நோக்கிச் சரிநதுசெல்லும கோடாக இருக் கும். தேவைக்கோட்டின் சரிவின் தன்மை X,Y அச்சு களில எடுத்துக்கொளளப்படும் அளவுகளைப்பொறுத் தும் அமையும்.

**அசாதாரணத் தேவை**· பொதுவாகத் தேவை விதி செயற்படும் ஒருசில நேரங்களில் தேவைவிதி செயற் படாமல் விலை அதிகரிக்குமபோது தேவை விரிவடை யும்; விலை குறையும்போது தேவை சுருங்கும. பொதுவாக, ஆடமபர நுகாவுப் பணடஙகள், கிப்பன பண்டஙகள (Giffen Goods) ஆகியவைகள தேவை விதிககு விலக்கானவை. பற்றாக்குறை பற்றிய நுகா வோரின அச்சத்தாலும,எதிாகாலததில விலைகுறைய லாம் எனற நுகர்வோரின் நமபிக்கை, நுகாவோர் அறியாமை போனற பல காரணஙகளாலும் தேவை விதிககுப புறமபான விளைவுகள தோனறலாம். கீழே உளள படம் அசாதாரணத தேவைககோட்டைக் காட்டுகிறது.




விலை OPயிலிருநது $OP_1$ ஆக அதிகரிக்கும்போது தேவையின அளவும் OQ இலிருந்து $OQ_1$ ஆக அதி கரிககிறது;விலை $OP_2$ ஆகக் குறையும்போது தேவை $OQ_2$ ஆகக் குறைகிறது.

**தேவை விரிவடைதலும் சுருங்குதலும், தேவை அதிகரிப்பதும் குறைவதும்:** தேவையின் அளவு பல காரணங்களால மாற்றமடையலாம். விலை தவிரப பிற காரணங்களால் தேவை மாறும். மாறும்போது அதனைத் தேவை அதிகரிக்கிறது (increases), குறை கிறது (decreases) என்று குறிப்பிடுவது இயலபு. அதற்கு மாறாகப பிற காரணிகளில் மாற்றமில்லா திருக்கும்போது, விலை மாற்றத்தின் காரணமாகத் தேவையில மாற்றம் நிகழும்போது,அதனைத் தேவை




விரிவடைகிறது (expands) என்றும், தேவை சுருங்குகிறது (contracts) என்றும் குறிப்பிடுவது மரபு. கீழ் வரும் வரைபடம் மூலம் இதனை எளிதில் அறியலாம்.

விலை OP ஆக இருக்கும்போது DD தேவைக் கோட்டில் தேவையின் அளவு OQ. விலை மாறாமல் OP ஆக இருக்கும்போது, $D_1D_1$ கோட்டில் தேவை அளவு OS அளவாக மாறுவதைத் தேவை அதிகரிப்பு என்றும், $D_2D_2$ தேவைக்கோட்டில் OR ஆக மாறுவதைத் தேவைக் குறைப்பு என்றும் குறிப்பிடலாம். விலை $OP_1$ ஆக அதிகரிப்பதால் DD கோட்டில் தேவையின் அளவு $OQ_1$ ஆக மாறுவதைத் தேவைச் சுருக்கம் என்றும், விலை $OP_2$ ஆகக் குறைவதால் DD கோட்டில் தேவையின் அளவு $OQ_2$ ஆக மாறுவதைத் தேவை விரிவடைதல் என்றும் குறிப்பிடலாம்.

விலை தவிரப் பல்வேறு காரணங்களால் தேவையின் அளவு மாற்றமடையலாம். தட்பவெப்ப நிலைகளில் மாற்றங்கள், மக்களின் மனநிலை, சமுதாயப் பழக்கவழக்கங்கள், பண்பாட்டு நிலை ஆகியவற்றில் மாற்றங்கள், வருமானப் பங்கீட்டில் மாற்றங்கள், உற்பத்தி முறைகளில் தோன்றும் மாற்றங்கள், மக்கள் தொகை அளவில் ஏற்படும் மாற்றங்கள், மக்களின் வருமான நிலைகளில் மாற்றங்கள், பதிலிப் பண்டங்களின் இருப்பிலும் விலைகளிலும் மாற்றங்கள், நுகர்வோரின் எதிர்கால நோக்கில் மாற்றங்கள், நாட்டின் வாணிக நிலையில் மாற்றங்கள், நாட்டின் மொத்தப் பண அளிப்பில் மாற்றங்கள், வரிவிதிப்பில் மாற்றங்கள் போன்றவை இவற்றில் குறிப்பிடத்தக்கவை.

காண்க: தேவைக்கோட்பாடு. என்.எஸ் பா.

**தேவைக் கோட்பாடு:** பண்டத்தின் அல்லது பணியின் விலைக்கும் அதன் தேவைக்குமுள்ள தொடர்புகளையும், தேவை மாற்றங்களுக்கான காரணங்களையும் விளக்குவது தேவைக் கோட்பாடு (Theory of Demand) இக்கோட்பாட்டை 1) அளவிடத்தக்க பயன்பாடு (Cardinal Utility), 2) மதிப்பிடத்தக்க பயன்பாடு (Ordinal Utility), 3) நடத்தியியல் மதிப்பிடத்தக்க பயன்பாடு (behaviourist Ordinal Utility) என்ற மூன்று அடிப்படைகளில் அறிஞர்கள் விளக்கியுள்ளனர். தொன்மை அறிஞர்களில் பலரும், பேராசிரியர் ஆல்பிரடு மார்சல் (Prof. Alfred Marshall) அவர்தம் மாணவர்கள் போன்றோரும் அளவிடத்தக்க பயன்பாட்டுப் பகுத்தாய்வைப் பயன்படுத்தினர். எப்.ஒய். எட்சுவொர்த்து (F Y. Edgeworth), சி பி. அண்டோனெலி (G B. Antoneli), இர்விங் பிசர் (Irving Fisher), வில்பிரடோ பாரிட்டோ (Vilfredo Pareto) போன்றோரும், சே ஆர். இக்சு (J.R. Hicks), ஆலன் (Allen) ஆகியோரும் மதிப்பிடத்தக்க, பயன்பாட்டுப் பகுத்தாய்வைப் பயன்படுத்தினர். பேராசிரியர் சாமுவேல்சன் (Prof. Samuelson) நடத்தியல் மதிப்பிடத்தக்க பயன்பாட்டுப் பகுத்தாய்வைப் பயன்படுத்தினார்.

**அளவிடத்தக்க பயன்பாட்டுப் பகுத்தாய்வு**: பண்டம் அல்லது பணியை நுகரும்போது மனிதன் மனநிறைவு பெறுகிறான். மனநிறைவைத் தரும் பண்டத்தின் அல்லது பணியின் ஆற்றலைப் பயன்பாடு (Utility) என்பர். இப் பயன்பாடு மனிதனின் மனநிலையே. எனவே, இதனைத் துல்லியமாக அளவிட முடியாது. ஆனால், பயன்பாட்டைப் பணத்தின் அடிப்படையில் அளவிடமுடியும் என்பது பொருளியல் அறிஞர்கள் பலர்தம் கருத்து எடுத்துக்காட்டாக உரூ. 300/-, ஒரு வானொலிப் பெட்டி, ஒரு மின் விசிறி ஆகிய இரண்டில் எதை வைத்திருந்தாலும் ஒருவர் ஒரே மாதிரியான மனநிலை உடையவராக இருந்தால் வானொலிப் பெட்டியின் பயன்பாடு உரூ.300/-க்குச் சமம், மின் விசிறியின் பயன்பாடும் உரூ 300/-க்குச் சமம் என்று கணக்கிடலாம். அளவிடத்தக்க பயன்பாட்டு அடிப்படையில் இன்னும் பல எடுகோள்களையும் சேர்த்துத் தேவைக்கும் விலைக்கும் உள்ள தொடர்பு விளக்கப்படுகிறது.

இக்கோட்பாட்டில் விலைமாற்றமும் தேவை மாற்றமும் தலைகீழத் தொடர்புடையன என்பது விளக்கப்படுகிறது.

$AA_1$ விலையில் தேவையின் அளவு$O\ A_1$ விலை $BB_1$ ஆகக் குறையும்போது தேவையின் அளவு $OB_1$ ஆக விரிவடைகிறது. விலை $CC_1$ ஆகக் குறையும்போது தேவை $OC_1$ ஆக இன்னும் விரிவடைகிறது. A,B,C




புள்ளிகளை இணைத்துப் பெறுவது தேவைககோடு (DD).

இக்கோட்பாடு பல குறைகளை உடையதென்றும், பயன்பாடு அளவிடத்தக்கது என்பதை ஏற்றுக கொளள இயலாதென்றும், பணத்தின் பயன்பாடு மாறாதிருக்கிறது என்ற எடுகோள் உணமைக்குப் புறம்பானதென்றும் பல அறிஞர்கள சுட்டிக்காட்டுகின்றனர்.

**மதிப்பிடத்தக்க பயன்பாட்டுப் பகுத்தாய்வு:** இதனைச் சமநோக்கு வளை கோட்டுப் பகுத்தாயவு என்று குறிப்பிடலாம். நுகர்வோராகிய பகுத்தறிநது செயற்படுபவர், ஒன்றுக்கு அதிகமான பண்டங்களை நுகருகிறார்; பண்டங்களின் பல கலவைகளையும் (Combinations) சம நோக்குடன் கருதுகிறார்; வருமானம் முழுவதையும் செலவிட்டுவிட விரும்புகிறார் என்ற பல எடுகோள்களின் அடிப்படையில் நுகர்வோர் சமன்பாட்டை விளக்கி அச்சமன்பாடுகளின் மூலம் தேவைக்கோட்பாட்டை விளக்குகின்றனர்.




X,Y என்ற இரு பணடங்களை நுகரும்போது A என்ற புள்ளியில் $AA_1$ அளவு Yஐயும், $OA_1$ அளவு X-ஐயும் நுகருகிறாா. அதுபோல B என்ற புள்ளியில $BB_1$ அளவு Yஐயும் $OB_1$ அளவு X-ஐயும் நுகருகிறாா. இவவாறு அவர் நுகரும பல கலவைகளிலும் சம அளவு மனநிறைவைப் பெறுவாரானால் அத்தகைய புள்ளிகளை (படத்தில A,B,C புள்ளிகளை) இணைத்துப் பெறும கோட்டிற்குச் சமநோக்கு வளை கோடு (Indifference Curve) எனபது பெயராகும்.

நுகர்வோரின் மனநிலைகளைக் காட்டும் சமநோக்கு வளைகோடுகள கொணட படததைச் சமநோக்கு வளைகோட்டுப் படம் (Indifference Map) என்பர்.




தொடககநிலைச் சமநோக்கு வளைகோட்டுக்கு வலப்புறமாக உள்ள சமநோக்கு வளைகோடு உயர்ந்த நுகர்வுநிலையைக் காட்டுகிறது. $IC_1$ A எனற புள்ளியில் $AA_1$ அளவு Y பணடத்தையும் $OA_1$ அளவு X பண்டத்தையும் நுகருவா. B எனற புள்ளியில $BB_1$ அளவு Y பணடத்தையும் $OB_1$ அளவு X பண்டத்தையும் நுகருவர். எப்போதும் நுகாவோர் மிகுநத பயன்பாட்டைத் தரத்தக்க சமநோக்கு வளைகோட்டையே (படத்தில் $IC_3$ ஐ) விரும்புவர்.

குறிப்பிட்ட வருமானமுடைய நுகாவோா தம் வருமானம் முழுவதையும Y பண்டததை மட்டும் நுகருவதற்காகப் பயன்படுத்தினால OA அளவு Yபண்டத்தையும், X பணட்த்தை மட்டும நுகருவதற்காகப் பயன்படுத்தினால் $OA_1$ அளவு X பணட்த தையும் நுகரலாம். ஆனால் X,Y என்ற இரு பணடங்களையும் நுகர விரும்புவதால $AA_1$ கோட்டில ஏதாவது ஒரு புள்ளியில் இருப்பார். நுகர்வோரின் வாங்குந திறனைக் குறிக்கும் புள்ளிகளின் இணைப்பை $AA_1$ கோடு காட்டுவதால், இதனை வரவு செலவுக




கோடு (Budget Line) எனறும், விலைக்கோடு (Price Line) என்றும் குறிப்பிடுவா. $BB_1$ குறைந்த அளவு வருமான நிலையையும, $CC_1$ அதிகமான அளவு வருமான நிலையையும் குறிக்கின்றன.

குறிப்பிட்ட வருமானம் இருககும்போது X பணடத்தின் விலை குறைநதால் Yஐ அதிகமாக நுகரலாம்; Y பணடததின விலை குறைநதால Xஐ அதிகமாக நுகரலாம்; X,Y ஆகிய இரணடு பணடங களின விலைகளும் குறைநதால் X ஐயும், Y ஐயும மிகுதியாக நுகரலாம். விலை அதிகரிததால நுகாவின அளவு குறையும். இக்கருத்தைக கீழவரும படங கள காட்டுகின்றன.

**நுகர்வோர் சமன்பாடு:** உச்ச அளவு மொத்தப் பயனபாட்டைப் பெறுவதையே நோககமாகக கொணடு நுகாவோர் செயற்படுகின்ற காரணத்தால படத்தில எடுத்துக்காட்டாகக் காட்டியுளளபடி, C




எனற புளளியில சமநிலையில இருபபாா. இததகைய சமனபாடுகளின அடிப்படையில தேவைககோட்டைக கீழவருமாறு வரையலாம. வரைபடத்தில X பணடத்தின விலை மட்டும் குறைந்து செலகிறது. விலை அதிகமாக இருந்தபோது E எனற புளளியில சமநிலையில இருந்த நுகாவோர், விலை குறைந்து






செல்லும்போது $E_1$, $E_2$ என்ற சம நிலைகளை அடைகிறார். கீழ்வரும் அட்டவணையில் விலைகளும் தேவை அளவுகளும் உள்ளன.

| விலைகள் | பண்டத்தின நுகர்வின் அளவு |
|---|---|
| $(P_3 = \frac{OA}{OB}$ | $OX_1$ |
| $(P_2 = \frac{OA}{OC}$ | $OX_2$ |
| $(p_1 = \frac{OA}{OD}$ | $OX_3$ |

அதிகமான விலையில் ($P_3$இல்) நுகர்வின் அளவு குறைவாக ($OX_1$) இருப்பதையும் விலை குறையும்போது தேவையின் அளவு விரிவடைவதையும் வரைபடத்தின் கீழ்ப்பகுதி காட்டுகிறது.

தேவைக்கோட்பாட்டைப் பற்றி விரிவான விளக்கத்தைச் சமநோக்குப் பயன்பாட்டுப் பகுத்தாய்வு தருகிறது. இதில் இயல்பான பண்டங்கள் (Normal Goods), தாழ்வான பண்டங்கள் (Inferior Goods), கிப்பன் பண்டங்கள்(Giffen Goods)ஆகியவற்றிற்கான தேவைக்கோடுகளை வரையமுடிகிறது.

இயல்பான பண்டங்களின் வருமான விளைவும் (Income Effect), பதிலீட்டு விளைவும் (Substitution Effect) ஒரே நோக்கில் செல்வதால், விலை குறையும்போது தேவை விரிவடைகிறது. விலை அதிகமாகும்போது தேவை சுருங்குகிறது. கிப்பன பண்டங்களின் வருமான விளைவு எதிர்மறையில் செல்வதோடு பதிலீட்டு விளைவைக் காட்டிலும் மிகவும் வலுவானதாகவும் இருப்பதால், விலை குறையுமபோது தேவையும் குறைகிறது. இவ்விளக்கம் மார்சலின (Marshall) பயன்பாட்டுப் பகுத்தாய்வில் இல்லை.

இக்கோட்பாட்டிலுள்ள குறைகளையும் பலர் சுட்டிக்காட்டியுள்ளனர். கற்பனை மிகுதி, உணமைக்குப் புறம்பான அடிப்படைகள, மிகுதியான அளவிலான தற்சோதனை (Introspection), புதிய வடிவில் பழைய கருத்து, ஒரு பண்ட நுகர்வுக்குப் பொருநதாமை, எளிமையறற விளக்கங்கள் என்பன போனற பல குறைகள் கூறப்படுகின்றன.

**வெளிப்படுத்தும் விருப்ப அணுகுமுறை (Revealed Preference Approach):** பேராசிரியர் சாமுவேலசன் (Prof. Samuelson) இவவணுகுமுறையை விளக்கிப் புகழடையச் செய்திருக்கிறார். இக்கோட்பாட்டை நடத்தியல் மதிப்பிடததக்க பயன்பாட்டுப் பகுத்தாய்வு (Behaviourist Ordinal Utility Analysis) எனறு குறிப்பிடுவர். பயன்பாடு அளவிடத்தக்கது என்ற மார்சலின் கருத்தும, மதிபபிடத்தக்கதுஎன்ற ஆலன, இக்சு (Allen, Hicks) ஆகியோர் கருத்தும் தற்சோதனையின் பாறபட்டது. ஆனால், சாமுவேல்சன் இவற்றினின்றும் வேறுபட்டுப் பரிசோதனைக்கு உட்படுத்திப் பார்க்கத்தக்க வகையிலான கருத்துகளைப் (Testable Hypotheses) பயன்படுத்துகிறார்.

பகுத்தறிந்து செயறபடுபவராக நுகர்வோர் இருக்கிறாரென்றும், நேர் கணிய வருமானத் தேவை நெகிழ்ச்சி (Positive Income Elasticity) இருப்பதாகவும், நுகர்வோரின் தேர்வுகள (Choices) உறுதியானவைகளாக (Consistent) இருப்பதாகவும் பல எடுகோளகளை அமைத்துக்கொணடு தேவைக்கோட்பாட்டைச் சாமுவேல்சன விளக்குகிறார்.

சாமுவேலசன் கூறறுப்படி வருமானம் மட்டும் அதிகரிக்கும்போது தேவையும அதிகரிககததக்க வகை யிலான எப பணடமும, அதன் விலை மட்டும குறை யுமபோது அதன தேவையும சுருஙகும் தனமையைப் பெறறிருக்கும். அதாவது, வருமானம் மட்டும அதி கரிககும்போது ஒரு பணடததின் தேவை மட்டும அதிகரிக்குமானால, அததகைய பணடததின விலை மட்டும அதிமாகுமபோது அதன தேவை சுருஙகும. இதனைக் கீழவரும வரைபடஙகள் மூலம எளிமை யாக அறியலாம




நுகர்வோரின வருமானததை Y பணடத்தின அடிபபடையில குறிபபிட்டால் OA ஆகவும,X பண டத்தின அடிப்படையில் குறிபபிடடால OB ஆகவும கருதிக்கொளளலாம. மேலும, நுகாவோா தம வரு மானம் முழுவதையும் X, Y பணடஙகளின் நுகாவுக காகப பயனபடுததி, உசசநிலை மொததப பயனபாட் டைப் பெற விருமபுகிறாா இநநிலையில AB விலைக கோட்டில Qஇல் சமநிலையில இருககிறாா எனறும கருதிககொளளலாம.

Xஇன விலை கூடினால AB விலைககோடு AC விலைககோடாக மாறும வருமானம எலலைககுட் பட்டிருபபதால் நுகாவோா இபபோது Qஇல் இருகக இயலாது; Qஇல இருககச்செயய அவருககு விலை உயாவின இழப்பு ஈடுசெய்ய ஓரளவு அதிகப்படியாகப பணம கொடுககபபடுகிறது எனற எடுகோளை அமைததுக்கொணடால, Qஇன வழியாக AC கோட டிறகு இணையாக DE எனற புதிய விலைக்கோடு அமைகிறது. இப்போது நுகாவோா Qஇல அலலது DE கோட்டில DQ பகுதியில, ஏதாவதொரு புள்ளியில இருபபார் அதிகபபடியாகக் கொடுக்கப்படும் இப பணத்தை அமித இழப்பீட்டு விளைவு (Over Compensation Effect) எனறு சாமுவேலசனும, செலவு வேறு பாடு (Cost Difference) எனறு இக்சும(Hicks) குறிப பிடுகிறார்கள. அதாவது விலை அதிகமாகுமபோது, Dஇன நுகாவின் அளவு பழைய அளவிலேயோ அதற் குக குறைவாகவோ இருககும். இழப்பு ஈட்டு நிதி கொடுககப்படாவிட்டால, Xஇன நுகாவு உறுதியாக முனபிருநததைக காட்டிலும குறைவாக இருககும




Xஇன விலை குறைந்தால, AB விலைக்கோடு AC விலைககோடாக மாறும. உணமை வருமானம அதிகரிபபதால Q என்ற பழைய நிலையே நுகாவின அளவு இருககவேணடுமானால, அவ ரிடம உளள அதிகமான வாஙகும திறன அகற்றப பட வேணடும் அவவாறு அகறறபபடடால DE எனற புதியவிலைககோட்டில,Qஇல் அலலது QE பகுதி யில ஏதாவதொரு புளளியில இருப்பாா. அதாவது, விலை குறைநதால பழைய நுகாவு நிலையில அல லது அதிகமான நுகாவு நிலையை நுகாவோர் அடை வார். அவரிடம உளள அதிகபபடியான வாஙகும திறன குறைககபபடாவிடடால அவர் Xஐ அதிக மான அளவில நுகாவாா் அதாவது, விலை குறைந் தால தேவை விரிவடையும.

இககோட்பாட்டிலும பல குறைகள காணப்படு கின்றன — என.எஸ.பா

**துணை நூல்கள.**

Balasubramanian, N S , Micro Economics (Tamil) Uma Publications, Madurai, 1987.

Koutsoyiannis,A , Modern Micro Sconomics, Macmillan Press Ltd., London, 1979.

*தேவைகள் மதிப்பீடு:* தேவை என்பது ஓர் இலக்கை நோக்கமாகக் கொண்டு செலுத்தும் எந்த ஒரு பயனுள்ள செயலையும் குறிக்கும். மனித வளர்ச்சியில் தேவைகளின் பங்கு மகத்தானது. தேவைகள் கோட்பாடு சமூகத் தன்மையுடையது. எச்.ஏ.முர்ரே என்பார் மூவகைத் தேவைகளைக் காட்டுகிறார். அவை 1)உடைமைகளையும் செல்வத்தையும் பெறுதல், 2)பாதுகாப்பு மற்றும் ஆபத்திலிருந்து காத்துக் கொள்ளல், 3)உடைமைப் பொருள்களைத் தங்க வைத்துக் கொள்ளல் முதலியனவாகும்.

மனிதன் மகிழ்வுடன் வாழவும் பயனுறச் செயலாற்றவும் வேண்டித் தமது தேவைகளை நிறைவாக்க முயலுகிறான். ஆனால், இத்தேவைகள் முற்றிலுமாக நிறைவுபெறுதல் என்பது இயலாததாகும். ஏனெனில் பலவேறு தடைகளும் இடையூறுகளும் ஏற்படுகின்றன. இத்தடைகள் வாழ்வில் ஏமாற்றத்தைத் தோற்றுவித்து மனத்தாங்கலையும் உண்டாக்கிவிடுகின்றன. ஒருவருடைய அடிப்படைத் தேவைகள் பற்றிய தொடர்ந்த ஏமாற்றங்கள் மனநலக் குறைவுகளும் இட்டுச் செல்கின்றன.

மிக வெளிப்படையான மனிதத் தேவைகள் உடலியல், வாழ்வு, சுகநலப் பாதுகாப்பு ஆகியவற்றில் அடங்குகின்றன. மனிதன உயிர் வாழ்வதற்கு மட்டுமன்றித் தனது ஆற்றல்களைப் பயன்படுத்திக்கொள்ளவும் தேவைகள் அமைகின்றன. ஒருவர்தம் உணர்வுகள் அவர்தம் தேவைகளாலும் செயல் தகவுகளாலும் ஓரளவுக்குத் தீர்மானிக்கப்படுகின்றன.

**மனிதனின் அடிப்படை உடலியல், உளவியல் தேவைகள்**




ஆபிரகாம் மாசுலோ என்பார் மனிதத் தேவைகளைப் பின்வருமாறு வகைப்படுத்தியுள்ளார்.



1. **உடலியல் தேவைகள்** உணவு, நீர், காற்று, ஓய்வு, உறக்கம், புலனுணர்ச்சி, இனப்பெருக்கம் முதலியன.

2. **பாதுகாப்புத் தேவைகள்:** நேரப்படி செயலாற்றல், பாதுகாப்பு, முறைமை போன்றன. நெறிப்படி இயங்கும் உலகில் ஒவ்வொருவரும் தத்தம் அளவில் நெறிப்பட்ட ஒழுங்கை விரும்புகின்றனர்.

3. **அன்பு மற்றும் சார்புத்தேவைகள்:** அன்புடையார் எல்லாம் உடையார். அன்பு பெறாத குழந்தை குறைந்த சாதனையைப் பெறுகிறது. குழுவைச் சார்தலும், அதனால் விரும்பப்படுதலும் உடையவனாக இருக்கவே மனிதன் விழைகிறான்.

4. **மதிப்புத் தேவைகள்:** தன்னம்பிக்கை, சுதந்திர உணர்வு, பிறரால் ஏற்கப்படுதல், மதிக்கப்படுதல், பாராட்டப்பெறுதல், கவனிக்கப்படுதல் முதலியன.

5. **அறிதல் புரிதல் தேவைகள்:** உயர் கருத்துகளையும் சிக்கலான உண்மைகளையும் அறிந்து கொள்ளும் நாட்டமும், தத்துவ சிந்தனையும் இவற்றிலடங்கும்.

6. **அழகுணர் தேவைகள்:** இயற்கையுலகின் அழகு, நுண்கலைகள், இலக்கியச் சுவை உணர்தல்.

7. **முழுமை பெற உதவும் தேவைகள்.** உண்மை உலகோடு ஒட்டி ஒழுகுதல், தனது முழுத் திறனும் வளர்ச்சியடைய வாய்ப்புகளைப் பெறுதல்.

வாழ்வின் ஊக்கிகளை 1) உடலியல் தேவைகளை ஒட்டியவை, 2) உளவியல் தேவைகளை ஒட்டியவை, 3) பிறரோடு பழகுதல் தொடர்பானவை, 4) உயர்திறம் மற்றும் தன்னைப் பற்றிய தேவைகள் எனப் பிரிக்கலாம்.

பசி, தூக்கம், ஓய்வு, கழிவுகளை அகற்றுதல், துன்பநீக்கம், பாலபற்றிய தேவைகள் ஆகியவற்றை முதனிலை ஊக்கிகளாகக் கூறுவர். உளவியல், சமூகத் தேவை ஆகியவற்றை இடைநிலை ஊக்கிகள் என்பர். பாதுகாப்புத் தேவை, சமூகப் பாராட்டினைப் பெற முயலுதல், அதிகார வேட்கை, அடைவு ஊக்கம் போன்றவை கடைநிலை ஊக்கிகளாகும். சே.தா.

**துணை நூல்கள்:**

**Hilgard E R. and Atkinson R.C.**, Introduction to Psychology, Harcourt Brace & World Introduction, NewYork, 1967.

**Maslow A.H.**, Toward a Psychology of Being, Princeton, 1962.

**Murray H.A.**, Explorations in Personality, U.U P. NewYork, 1938.

**தேவை நெகிழ்ச்சி.** விலை மாற்றத்திற்கும் தேவை மாற்றத்திற்கும் தலைகீழ் தொடர்புண்டு என்பதைத் தேவை விதி விளக்குகிறது. ஆனால், விலையில் ஏற்படும் மாற்றத்தினால் தேவையில் எந்த அளவுக்கு மாற்றம் ஏற்படும் என்பதைத் தேவை விதி விளக்கவில்லை. விலைமாற்ற விழுக்காட்டிற்கும் தேவை மாற்ற விழுக்காட்டிற்கும்

**தேவை நெகிழ்ச்சி அளவைகள் அட்டவணை**

| வ. எண் | தேவை மாற்ற விழுக்காட்டு அளவு | விலை மாற்ற விழுக்காட்டு அளவு | தேவை நெகிழ்ச்சியின் அளவை |
|---|---|---|---|
| 1. | 10 | 0 | $\frac{10}{0} = \infty$ எல்லையற்ற தேவை நெகிழ்ச்சி ($\infty$) |
| 2. | 10 | 5 | $\frac{10}{5} = 2$ ஒன்றுக்கு அதிகமான தேவை நெகிழ்ச்சி (>1) |
| 3. | 10 | 10 | $\frac{10}{10} = 1$ ஒருமைத் தேவை நெகிழ்ச்சி (=1) |
| 4. | 10 | 20 | $\frac{10}{20} = .5$ ஒன்றுக்குக் குறைவான தேவை நெகிழ்ச்சி (<1) |
| 5. | 0 | 10 | $\frac{0}{10} = 0$ முற்றிலும் நெகிழ்வற்றது (0) |




படம் 1




படம் 2




படம் 3




படம் 4




படம் 5

உள்ள தொடர்பை விளககுவதைத்தேவை நெகிழ்ச்சி (Elasticity of demand) எனறு கூறுகினறனா. தேவை நெகிழசசியின் அளவைகள, வகைகள, பயனகள, தேவை நெகிழச்சியை அளவிடும் முறைகள போனறவை தேவை நெகிழசசியில் அடஙகும.

குறிப்பிட்டதொரு தேவைககோட்டில் குறிப்பிட்டதொரு மாறறததின காரணமாகத தேவையின அளவில தோன்றும் குறிப்பிட்டதொரு விழுக காட்டு அளவே தேவைநெகிழசசி எனனும் பொருள பட மேயர்சு (Meyers) குறிப்பிடுகிறாா. தேவையில ஏறபடும் விகித மாறறததை விலையில ஏறபடும விகித மாறறததால் வகுததுப் பெறுவது தேவை நெகிழச்சி எனனும பொருளபடத திருமதி. சோன ராபினசன அமமையாா (Mrs. Joan Robinson) குறிப்பிடுகிறாா.

**தேவைநெகிழச்சியின் அளவைகள்.** தேவை நெகிழசசியின அளவைகளைப் பொதுவாக 1) முறறிலும நெகிழ்வுளள தேவை (Perfectly elastic demand), 2) மிகுநத நெகிழவுளள தேவை (Highly elastic demand), 3) ஒருமை நெகிழ்சசித தேவை (Unitary elasticity of demand), 4) குறைநத நெகிழச்சியுளள தேவை (Less elastic demand), 5) முறறிலும நெகிழவறற தேவை (Perfectly inelastic demand) எனற ஐந்து அளவைகளில குறிப்பிடுவது வழககம அவற றைக் கீழவரும அட்டவணையும வரைபடஙகளும் காட்டுகினறன.

படம் 1- விலைமாறறம எதுவுமிலலை எனறு சொலலத்தக்க அளவில மிகமிகச் சிறிய மாற்றததைக காட்டுகிறது தேவை OQ-இலிருந்து $OQ_1$ ஆக மாறுகிறது. எனவே, இதனை முறறிலும நெகிழவுளள தேவை நெகிழச்சி ($ep \propto$) எனலாம படம் 2-இல தேவை மாறற விழுககாடு மிகுதியாமாகவும விலைமாற்ற விழுககாடு குறைவாகவும இருப்பதால ஒனறுககு அதிகமான தேவைநெகிழ்ச்சி($ep > 1$)அல்லது தராதரமாக அதிகமான தேவை நெகிழ்ச்சி (Relatively highly elastic demand) படம 3-இல் தேவை மாறற விழுககாடும விலைமாறற விழுககாடும சம மான அளவுகளில இருபபதால் ஒருமைத் தேவை நெகிழ்சசி ($ep = 1$) அலலது ஒனறுக்குச் சமமான தேவை நெகிழச்சி. படம 4-இல தேவைமாறற விழுக் காடு குறைவு, விலை மாறற விழுக்காடு மிகுதி எனப தால் தேவைநெகிழ்ச்சி ஒனறுக்குக குறைவு ($ep < 1$) அலலது தராதரமாகக குறைவான தேவைநெகிழச்சி. படம 5-இல் விலையில எவவளவு மாறறம் ஏறபட் டாலும தேவையின அளவில் மாறறம் எதுவுமிலலை எனபதால் முறறிலும நெகிழ்வறற தேவை அல்லது பூசசியத் தேவை நெகிழசசி ($ep = 0$).

**தேவை நெகிழ்ச்சியின் வகைகள.** தேவை நெகிழசசியை விலைத் தேவை நெகிழசசி (Price Elasticity of demand), வருமானத தேவைநெகிழ்ச்சி (Income elasticity of demand), குறுககுத தேவை நெகிழசசி (Cross elasticity of demand), என மூவ கைபபடுததலாம்.

விலை மாறற விகிதம, தேவை மாற்ற விகிதம ஆகியவறறின தொடாபு பறறிக குறிப்பிடுவது விலைத் தேவை நெகிழசசி.வருமான மாறற விகிதம, தேவை மாறற விகிதம் ஆகியவறறின தொடாபு பற்றிக குறிப்பிடுவது வருமானத தேவை நெகிழ்சசி. ஒரு பணடததின விலை மாறற விகிதம். அபபணடத தின பதிலிப் பணடததின தேவைமாறற விகிதம ஆகியவறறின தொடாபு பறறிக குறிபபிடுவது குறுக குததேவை நெகிழச்சி அலலது பினனிய தேவை நெகிழசசி

| | | |
|---|---|---|
| வருமானத தேவைநெகிழச்சி = | $\dfrac{\dfrac{\text{தேவை மாற்றத்தின அளவு}}{\text{தொடககநிலைத தேவையின அளவு}}}{\dfrac{\text{விலை மாறறத்தின அளவு}}{\text{தொடககநிலை விலை அளவு}}}$ | $= \dfrac{\dfrac{\Delta Q}{Q}}{\dfrac{\Delta P}{P}}$ |
| = | $\dfrac{\text{தேவை மாற்ற விகித அளவு}}{\text{விலைமாறற விகித அளவு}}$ | $= \dfrac{\%\Delta Q}{\%\Delta P}$ |
| வருமானத் தேவை நெகிழ்ச்சி = | $\dfrac{\text{தேவைமாற்ற விகித அளவு}}{\text{வருமான மாற்ற விகித அளவு}}$ | $= \dfrac{\%\Delta Q}{\%\Delta Y}$ |
| குறுககுத் தேவை நெகிழசசி = | $\dfrac{\text{Yபணடததின தேவைமாற்ற விகித அளவு}}{\text{Xபணடததின விலைமாறற விகித அளவு}}$ | $= \dfrac{\%Qy}{\%Px}$ |

**விலைத் தேவை நெகிழ்ச்சியை அளவிடுதல்:** விலைத் தேவை நெகிழ்ச்சியை 1) விகிதமுறை அல்லது விழுக்காட்டு முறை (Percentage Method), 2) மொத்தச்செலவு முறை (Total Outlay Method), 3) புள்ளி முறை (Point Method), 4) வில் முறை (Arc Method) ஆகிய பல முறைகளைப் பயன்படுத்தி அளவிடலாம்.

**விகித முறை.** பணடத்தின் தேவைமாற்ற விகிதத்தை விலைமாற்ற விகிதத்தால வகுத்துப் பெறும் ஈவு எல்லையற்றதாக (∝) இருந்தால் முற்றிலும் நெகிழ்வுள்ள தேவை நெகிழ்ச்சி என்றும், ஒன்றுக்கு மிகுதியாக இருந்தால் ஒன்றுக்கு மிகுதியான தேவை நெகிழ்ச்சி என்றும், ஒன்றுக்குச் சமமாக இருந்தால் ஒருமைத் தேவை நெகிழ்ச்சி என்றும், ஒன்றுக்குக் குறைவாக இருந்தால் ஒன்றுக்குக் குறைவான தேவை நெகிழ்ச்சி என்றும், பூச்சியமாக இருந்தால் முற்றிலும் நெகிழ்வற்ற தேவை என்றும் அளவிடலாம்.

**மொத்தச் செலவுமுறை:** ஒரு பொருளின் விலை உரு. 5/- என்றும் தேவையின் அளவு 10 என்றும் கருதிக்கொண்டால், மொத்தச்செலவு உரு. 50/- ஆகிறது. விலை மாறும்போது தேவை மாறி மொத்தச் செலவும் மாறும். குறிப்பிட்டதொரு அளவு விலை மாற்றத்தினால் மொத்தச் செலவில் ஏற்படும் மாற்றத்தைக் கொண்டு தேவை நெகிழ்ச்சியை அட்டவணையில் குறிப்பிட்டுள்ள வண்ணம் அளவிடலாம்.




ளது. DC பகுதியில் விலைககுறைவினால மொத்தச செலவு மிகுதியாவதால் தேவை நெகிழ்ச்சி>1, CB பகுதியில் விலைக் குறைவினால மொததச்செலவு மாறாதிருப்பதால் தேவை நெகிழச்சி = 1; BA பகுதியில் விலைக்குறைவினால் மொத்தச்செலவும் குறைவதால் தேவை நெகிழ்ச்சி<1.

| மாதிரி | விலை | தேவையின் அளவு | மொத்தச்செலவு (மொத்தவருமானம) | தேவை நெகிழசசி |
|---|---|---|---|---|
| 1. | உரு 10/- | 150 | உரு.1500/- | ஒனறுககு அதிகமானது (>1) |
| | உரு. 5/- | 500 | ,, 2500/- | |
| 2. | உரு.10/- | 150 | உரு.1500/- | ஒனறுக்குச் சமமானது (=1) |
| | உரு. 5/- | 300 | ,, 1500/- | |
| 3. | உரு.10/- | 150 | உரு.1500/- | ஒன்றுககுக் குறைவானது (<1) |
| | உரு. 5/- | 200 | ,, 1000/- | |

மூன்று மாதிரிகளிலும விலை குறைநது தேவை விரிவடைந்திருககிறது. ஆனால், முதல மாதிரியில மொத்தச்செலவு அதிகரித்திருக்கிறது, இரண்டாம மாதிரியில் மாறாதிருக்கிறது; மூனறாம மாதிரியில குறைந்திருக்கிறது. இதனை வரைபடம மூலமும விளக்கலாம.

விலை குறைந்து மொத்தச செலவு மாறுவது, மூன்று மாதிரிகளாகப் படத்தில் காட்டபபட்டுள

**புள்ளிமுறை:** தேவைககோட்டின ஏதாவது ஒரு புளளியில தேவை நெகிழ்ச்சியை அளவிடும முறையைக் கீழவரும் படஙகள மூலம் எளிதாக அறியலாம. முதல் படத்தில் BA எனற நேர்கோடாகத தேவைககோடு அமைந்துள்ளது தேவை நெகிழச்சியை எநதப புளளியில் அளவிட வேணடுமோ அப் பகுதியிலிருந்து பெறப்படும கீழபபகுதியை மேல்பகுதியால் வகுக்கவேண்டும.




$C$ யில $e_p = \frac{CA}{CB}$

$D$ யில $e_p = \frac{DB}{DA}$

$E$ யில $e_p = \frac{EA}{EB}$

இரணடாம படத்தில (வரைபடம8) தேவைககோடு வளைகோடாக (DD) அமைநதுளளது. எப்புளளியில தேவை நெகிழச்சியை அளவிட வேணடுமோ அப புளளியின வழியாகத தேவை வளைகோட்டுககு ஒரு தொடுகோடு வரைநது தேவை நெகிழச்சியை அளவிடவேணடும. DD தேவைக் கோட்டில Rபுள ளிக்கு BA கோடு தொடுகோ்டு.

$$e_p = \frac{RA}{RB}$$

**வில்முறை** புள்ளி முறையைப் பயன்படுத்தினால் ஒருசில முரணபாடுடைய முடிவுகள தோனற வாயப் புண்டு. இம் முரண்பாடுகளைக் களைய வில முறை யைப் பயனபடுத்துவா. வில் முறையில

தேவை நெகழ்ச்சி

$$= \frac{\Delta Q}{Q_1 + Q_2} \div \frac{\Delta P}{P_1 + P_2}$$

| | |
|---|---|
| $Q_1$ தொடககநிலைத் தேவை | $P_1$ தொடககநிலை விலை |
| $Q_2$ புதிய தேவை | $P_2$ புதிய விலை |
| $\Delta Q$தேவை மாற்ற அளவு | $\Delta P$ விலை மாறற அளவு |




**விலைத்தேவை நெகிழச்சியைநிருணயிக்குமகாரணி கள்:** பணடத்தின தனமை (ஆடமபரப் பணடங களா மிகுதியான தேவை நெகிழசசியையும், இனறிய மையாத பணடஙகள குறைவான தேவை நெகிழச் சியையும பெறறிருககும), பதிலீட்டுப் பணடஙகளின இருபபு (இருப்பு அதிகமானால அதிகமான தேவை நெகிழச்சி இருககும), பணடஙகளின பயனகளின தனமை (பல வழிகளில பயன்படத்தக்கவை மிகுதி யான தேவைநெகிழ்சசியுடையவனாக இருக்கும்), கூட்டுத தேவைப் பணடஙகள (குறைவான தேவை நெகிழசசி) பயனபடுவதைத் தளளிப் போடததகக தனமை (மிகுதியான தேவை நெகிழ்சசி), விலைநிலை (மிகமிகக் குறைந்த, மிகமிக அதிகமான விலைகளில குறைவான தேவைநெகிழ்ச்சி), செலவிடப்படும தொகையின அளவு (வருமானததில் மிகச் சிறிய தொரு பகுதி செலவிடப்படுமபோது குறைவான தேவை நெகிழ்ச்சி), பண்டஙகள பயனபடுத்தப்படும நோககம் (மிகவும அவசியமானால குறைந்த தேவை நெகிழ்சசி), நுகாவோா உபரியின (Consumer's Surplus) அளவு (மிகுதியான அளவில குறைந்த தேவை நெகிழசசி) ஆகிய பல காரணிகள தேவை நெகிழ்சசியை நிருணயிக்கினறன.

**தேவை நெகிழ்ச்சி எனற கருத்தின் பயனகள:** தேவை நெகிழ்சசி குறைவாக இருநதால் சருவாதீன அஙகாடியில் உறபததியாளா விலை அதிகரிபபதால் உசச அளவு இலாபததைப பெற முயலவார்; அதிக மாக இருந்தால விலையைக்குறைத்து விறபனையைப் பெருககி அதிக அளவு இலாபததைப் பெற முயல வார். இவவாறு சருவாதீன அஙகாடியில் விலை நிரு ணயததில இக்கருத்துப பயனபடுகிறது.

எபபணடஙகளின் தேவை நெகிழச்சி குறைவாக உள்ளதோ அவற்றின் மீது வரிவிதிததால் அரசுககு

வருமானம் மிகுதியாக இருக்குமென்று சுட்டிக்காட்டுவதன் மூலம் வரிக்கொள்கையில் பயன்படுகிறது. உலகச் சந்தையில் தேவைநெகிழ்ச்சி குறைவாக உள்ள பண்டங்களை ஏற்றுமதி செய்தால் ஏற்றுமதி பெருகுமென்பதால் பன்னாட்டு வாணிகத்தில் பயன்படுகிறது. கூட்டுப் பண்டங்களின் விலைகள் அவற்றின் தேவை நெகிழ்ச்சிக்கேற்ப நிருணயிக்கப்படுகின்றன. துணை அங்காடிகளில் வேறுபட்ட தேவை நெகிழ்ச்சிகள் இருந்தால்தான் சருவாதீன விலைபேதம் காட்டுதல் (Price Discrimination) இயலும்.

மிகவும் இன்றியமையாத பொருள்களாகவும், தேவை நெகிழ்ச்சி குறைவானதாகவும் உள்ள ஒரு சில பண்டங்களின் பகிர்வை அரசே ஏற்று நடத்தினால் தான் பொதுமக்களுக்குக் கிடைக்கும் நன்மைகள் உச்சஅளவில் இருக்கும் என்பதை உணர வைப்பதன் மூலம் பொதுக் கொள்கைகளை வகுப்பதில் இக்கருத்துப் பயன்படுகிறது. தேவைநெகிழ்ச்சி மிகவும் குறைவாக உள்ள பண்டங்களின் மீது விலைக் கட்டுப்பாடு கொணடுவருவது பொதுமக்களுக்குப் பயன்தரு மென்றும் இதன்மூலம் அறிய வாய்ப்புகள் தோன்றுகின்றன. என்.எஸ்.பா.

**துணை நூல்கள்:**


Balasubramanian,N.S., Micro Economics (Tamil), Uma Publications, Madurai, 1987.

Koutsoyiannis,A., Modern Micro Economics, Macmillan, London, 1979.


*தேன் லா:* இங்கிலாந்தின் வட கிழக்குப் பகுதியில் தேனியர்கள் (Danes) கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் குடியேற்றங்களை அமைத்தனர். அப்பகுதியில் நடைமுறைப்படுத்தப்பட்ட சட்டங்களை ஒட்டுமொத்தமாக தேன் லா (Danelaw) எனறு கூறினர். தேனலா நடைமுறையில் இருந்த நிலப்பகுதியும் தேனலா எனச் சொல்லப்பட்டது. தேனியர் என்று இங்குக் குறிப்பிடும்போது தென்மார்க்கிலிருந்து (Denmark) வந்தவர்களை மட்டுமே குறிப்பதாக எடுத்துக்கொள்ளக் கூடாது, வடக்குச்செருமனி, இசுகானடிநேவியா, மற்றும் வடகடலின் கரையோரப் பகுதிகளில் இருந்து வந்தவர்களையும் குறிக்க இச்சொல் பயன்படுத்தப் பட்டது. இவர்களை வடவர் (Northmen) எனறு கூறுவது பொருத்தமாகும். இவர்களுக்கு முன்னர் இஙகிலாந்தில் குடியேறி அரசுகளை நிறுவிய ஆங்கிலோ-சாக்சனியர்களும் (Anglo Saxon) இவர்களும் ஒரே இனத்தைச் சார்ந்தவர்ளாவா. இவர்களுடையமொழியும் ஆங்கிலோ-சாக்சானியர் பேசிவந்த மொழியும் ஒரே வகையைச் சார்ந்தன வாகும். இவாகளுடைய அரசியல நிறுவனங்களும் சமூக நிறுவனங்களும் ஆங்கிலோ சாக்சானிய நிறுவனங்களை ஒத்திருந்தன.

எக் காரணத்தால் ஆங்கிலோ சாக்சானியர் தங்கள் இல்லத்தைவிட்டு இங்கிலாந்துக்கு வந்து குடியேறினார்களோ அதே காரணத்தினாலதான் இவர்களும் இங்கிலாந்துக்கு வந்தனர். மேற்குநோக்கிக் குடி பெயர்ந்து வந்தமுரட்டு இனத்தவர்களின் தாக்குதல்களை எதிர்கொள்ள இயலாது இவாகள் புதிய இடங்களைத்தேடி இங்கிலாந்துககு வநதனர். கி.பி.793 -இல் முதன்முதலில் தேனியக் கடறகொள்ளைக்கரர்கள் தார்செட்டு (Dorset) கடறகரைக்கருகே தோன்றினர். பிறகு இவாகள் வெசக்சு (Wessex) மீது தாக்குதல் நடத்தினர். நாள்கள் ஆகஆக இவர்கள மிகுந்த மனவுறுதி பெறாலயினர். உளநாட்டில புகுந்து கொள்ளையிட்டனர். பின்னர் நிலமுனைகளில் அரணகள் அமைததுக குளிர்காலத்தைக் கழித்தனர். இறுதியில கி.பி.9-ஆம் நூற்றாணடின் இடைப் பகுதியில் கூட்டம்கூட்டமாகவநதுநாடுகளை வென்று இங்கிலாநதின் வடகிழககுப் பகுதியில குடியேறினார்கள். பின்னர் நார்ததம்பிரியா, மெர்சியா, மறறும் வெசக்சு அரசுகளைத் தாக்கினார்கள. தெற்கு இங்கிலாந்திலுள்ள தானெட்டில் (Thanet) முதனமுறையாக கி.பி 854-இல குளிர்காலத்தைக கழித்தனா. அச்சமயத்தில்தான் இவர்கள இங்கிலாந்தை வெனறு இஙகிலாந்திலேயே குடியேற முடிவு செய்திருக்க வேண்டும்

யார்க்சயரை கி பி. 867-இல வெனறு அஙகுத் தேனிய அரசை அமைத்தனர். பின கி.பி.870-இல கிழக்கு ஆங்கிலியாவை வென்றனா. மீணடும இவாகள் வெசககை தாக்கினார்கள. அபபோது ஒனபது சணடைகள் நடந்தன. பெரும்பாலும் வெசககப படைகள் தோற்றுப் போயின. எனினும் தேனியப படையெடுப்பை வெசக்சு முறியடித்துவிட்டது. தேனியர்கள கி.பி. 872-இல் பினவாஙகினர். 877-இல் தேனியர்கள் மீணடும் படையெடுதது வநதனர். அப்போது ஆல்பிரடு வெசகசின் அரசராக இருந்தார். தேனியர்கள் படைககுக் கூத்ரம் (Guthrum) தலைமை தாங்கினார். எதிர் பாராத தாக்குதலைச் சமாளிக்க இயலாமல் ஆல்பிரடு, அதெல்னி (Athelney) தீவில் புகலிடம் தேடினார். சிறிது காலத்திற்குள அவர் தமது படையைத் திரட்டிக் கொணடு தேனியர்களை ஈதணடன (Ethandun) என்னுமிடத்தில தோறகடித்தார். ஆல்பிரடு அரசியல நிபுணர் தேனியர்களை முழுமையாகத் தோறகடித்து இஙகிலாந்தை விட்டு வெளியேற்ற இயலாது என உணர்நதாா. வடக்கு மறறும் கிழக்கு இங்கிலாந்தில மட்டும் தஙகளுடைய ஆட்சியை அமைத்துக்கொண்டு வெசக்சு நாட்டின் அமைதியான அக்கமபக்கததாாகளாகத் தேனியர்கள வாழ இசைநதால் அவர்களுடன் சமாதானம் செய்து கொளவது உசிதமானது எனறு அவர் எண்ணினார். மேலும் தேனியர்கள கொளளை

யிலும அழிபபதிலும் ஈடுபட்டமையால அவர்களை ஆல்பிரடு வெறுத்தாரேயன்றி அவாகள தேனியர்கள் எனபதால் வெறுக்கவிலலை. அதன விளைவாக கி பி. 879-இல் கூதரமுடன்வெட்மோர்(Wedmore)உடன்படிக் கையைச் செய்து கொணடார் தேனியர்கள கிறித்தவ சமயத்தை ஏறறனர், எககாலததிலும வெசக்சுடன போர் புரிவதிலலை எனறு உறுதி கூறினா.

இங்கிலாநது நாட்டைத தேனியர்கள வெசக்சு அரசுடன் பங்கு போடடுக கொண்டனர். தேம்சு நதிக குத் தெற்கேயுளள பகுதி அனைததையும வாட்லிங்கு சாலைககு மேறகேயுள்ள மொசியாவின ஒரு பகுதி யையும் ஆல்பிரடு பெற்றாா. எட்டு ஆணடுகளுக் குப் பிறகு இவவெலலை ஆலபிரடுககுச சாதகமாக மாற்றியமைககப்பட்டது. அதன் விளைவாக மிடில செசக்சும, லீ (Lea) ஆறறுககு மேறகேயுளள நிலங களும் ஆலபிரடுககு வழஙகப்பட்டது வெசக்சுககும் ஆஙகிலமெர்சியாவிறகும வெளியே வடககு நாாததம் பியா மட்டுமே ஆஙகிலேயரிடம இருநதது. ஏனைய பகுதிகள் தேனியா ஆட்சிக்கு உட்படடு இஙகிலாந தின பாதிப பகுதிக்குமேல தேனியா வசமாயிறறு. இப்பகுதி தேனலா எனப்பட்டது. தேனியாகள தமது புதிய இலலஙகளில விரைவில அமாநது கொணடனா. அஙகுத் தமது தேனியச் சட்டஙகளை நடைமுறைப்படுததினர். இங்கிலாந்தில மூன்றுவிதச் சட்டமுறைகள கி பி 11-ஆம் நூறறாணடில் இருநது வந்தன. அவை 1) வெசககசுச் சட்டம 2)ஆங்கில மொ சியாச் சட்டம் 3) தேன்லா எனபனவாம நூறு ஆண்டுகளுக்கு மேலாகத் தேன்லா பகுதிககும, ஏனைய இங்கிலாந்து நாட்டிற்கும பெருதத வேறு பாடுகள நிலைததிருந்தன.

ஆலபிரடின மறைவிறகுப் பிறகு ஆஙகில அரசா கள தேன்லாவைச் சிறிது சிறிதாக வெலலத் தொடங் கினா. மூத்த எட்வர்டு (கி.பி 900-924)தேனிய மொசி யாவையும் கிழக்கு ஆஙகிலியாவையும் வெனறார். நார்த்தமபிரியாவிலிருநத தேனியாகள அவருககுக் கீழ்ப்படிந்தனா. அதெலசுடன (கி.பி. 924-939) யாாக சயரையும, இலஙகாசயரையும தம் நேரடி ஆட் சிக்கு உட்படுத்தினாா. அவருக்கு எதிராகக கிளாச்சி செய்த தேனியர்களைப புருனானபர்கு (Brunanburh) என்ற இடத்தில தோற்கடித்தாா.

புதியதொரு தேனியப் படையெடுப்பு கி.பி 980 -இல நிகழநதது அச்சமயததில தேனலாவில் குடியேறியிருந்த தேனியர்கள ஆங்கிலேயருடன சேர்ந்து புதிய தேனியர் படையெடுப்பாளர்களை எதிர்த்தனா. இறுதியில இங்கிலாந்து தேனியராட் சிக்கு உட்படுததபபட்டது. கான்யூட்டு எனற தேனியர் இங்கிலாந்தின் அரசரானாா. அவருடைய மறைவிற் குப் பிறகு ஆல்பிரடின் வழிவநதவர்கள மீண்டும் இஙகி இலாநதின ஆட்சிப் பொறுப்பை ஏறறனர். இதற கிடையில ஆஙகிலேயர்களும இஙகிலாநதில குடி யேறிய தேனியர்களும ஒன்றாகக கலநதுவிட்டனர்.

தி.ஆா இரா.

**தேனிகெல்டு**: இது இங்கிலாநதில கி.பி. 10-ஆம நூறறாணடில விதிக்கப்பட்ட ஒரு வரி. அரசு முறையான முதல வரி இது எனலாம. இஙகிலாநதை கி பி. 8-ஆம் நூற்றாணடில் தேனிய கடற்கொள ளைககாராகள தாககத் தொடஙகினா. நாளடை வில் இஙகிலாநதின உட்பகுதியைத் தாககிக் கொளளையிட்டனர். பினனா நிலமுனைகளில் அரண் கள அமைததுக்கொணடு குளிர்காலத்தைக கழிகக லாயினர் அதைததொடாநது இங்கிலாந்தை முழு மையாக வெனறு அங்கு நிலையாகக் குடியேற முற பட்டனா. அதனால் அவாகளுக்கும் இஙகிலாந்தில் ஏறகெனவே ஆட்சியை அமைததிருநத ஆஙகிலேயர் களுககும இடையே போர் நடைபெற்றது. இறுதி யில இஙகிலாந்தில ஒரு பகுதியில தேனியர்கள நிலை யாகக குடியேறி ஆட்சியை அமைத்துத் தங்களு டைய சட்டஙகளை நடைமுறைபபடுததிக்கொளள ஆஙகிலேயர்கள இசைநதனா. அபபகுதி ‘தேனலா’ எனறுசொலலப்பட்டது நாளடைவில ஆஙகில மனனா கள தேனலாவைத தஙகளுடைய நேரடி ஆட்சிககு உட்படுத்தினர். புதியதொரு தேனியப் படையெடுப்பு கி.பி 10-ஆம நூறறாணடில ஏறபட்டது. அப்போதைய ஆங்கில அரசர் எதெல்ரெடு போருககு ஆயத்தமாக இலலை. அஙகுமிஙகுமாக உளளூாப் படைகள சேகரிக் கபபட்டன அவற்றைப பிரபுக்கள் நடததிவநதனர். ஆயினும தேனியாகளை எதிர்த்துப போராடுவதற்கு வேணடிய பெரும்படையைத் திரட்ட இயலவில்லை. அப்போது அரசருககு ஒரே வழிதான தோனறியது. அதாவது தேனியப் படையெடுபபாளாகளுக்குப் பொருள் கொடுத்து நாட்டைவிட்டுப் போகச் சொல வதாகும். அதறகுப் பெரிய தொகை தேவைப்பட்டது. அததொகையைத் திரட்டத் தலைமைக்குரு சிகெரிககு (Sigeric) எனபாருடைய அறிவுரையினபேரில் நிலத் தின்மீது விடான எனற மூததோர் சபையின ஒப்பு தலுடன நோமுக வரியை விதிததாா. அதுவே தேனி கெலடு (Danegeld) ஆகும். ஒவவொரு ‘ஐடு’ (Hide) நிலத்தினமீது இரணடு சிலலிஙகு வீதம் வரி விதிக கப்பட்டது. ஒரு ஐடு எனபது 60 முதல 120 ஏக்கர் பரப்புளள நிலததைக் குறித்தது.

பக்தசீலா எட்வர்டின் (Edward the Confessor) ஆட்சிககாலததிறகு முன்புவரை அவவப்போது இவ்வரி வசூலிககப்பட்டு வநதது பக்தசீல எட்வர்டு பட்டமெய் தியவுடன அவா இவவரியை ஒழித்தார். முதலாம் விலலியம கி பி. 1084-இல் இவவரியைப் புதுப்பித் தார். அதுமுதல ஏறததாழ 80 ஆணடுகள வரை இவவரி அடிககடி விதிக்கப்பட்டு வந்தது. வில்லியம் இவவரியை எலலாக் காலத்திலும விதிக்கப்படும்

வரியாக மாற்றி இதனுடைய பொருளை அழித்து விட்டார். அதுமட்டுமன்றி இவ்வரியை இரண்டு சில்லிங்கிலிருந்து ஆறு சில்லிங்காக உயர்த்தினார். சுதந்திரமாகச் செயற்பட்டு வந்த சிறு உழவர்களுக்கு இது மிக்க இன்னலை விளைவித்தது. வில்லியத்தின் ஆட்சிக்கு முன்னர் சுதந்திரமாக இருந்த உழவர்கள் அவர்காலத்தில் பண்ணை வேலையாட்கள் (Villains) நிலைக்குத் தாழ்த்தப்பட்டனர். இவ்வரியைச் செலுத்த வேண்டும் என்று நகர மக்களுக்கும் அரசு ஆணையிட்டது. தி.'அர.இரா.

**தை** தகர ஐகாரக் குறிப்புகளைப் பார்க்க. நாக்கு மேலண்ணத்தின் நுனியை ஒட்டியபடி மெதுவாக அழுத்தி ஒலிக்கும் ஒலியோடு மேலண்ணத்தைக் கீழ்நோக்கி இளித்தபடியே ஒலித்தால் இவ்வொலி தோன்றும்.

**பொருள்:** தை என்று தொடங்கும் சொற்கள் 99 இருப்பதாக அறியக் கிடக்கின்றது. ஓரெழுத்து ஒரு மொழியாக இது ஒப்பனை, தையல், நாட்டியத்தில அடைவு, ஒரு மாதத்தின் பெயர் (10-ஆம் மாதம்), வானத்தில மகரம் என்ற பிரிவு, மரக்கன்று ஆகிய பொருள்களைத் தருகிறது. வினைப்பெயராக ஒரு பொருளோடு வேறு ஒரு பொருளைப் பொருத்துதல, ஒப்பனை செய்தல், மனத்தில் உறைத்தல முதலிய பொருள்களையும் கொடுக்கும்.

**வடிவம்:** பழந்தமிழ் எழுத்தாக கி.மு. 3-ஆம் நூற்றாண்டில குகைக்கல வெட்டுகளில தலைக கட்டிலிருந்து இடப்புறம் ஒரு கோடாகக காட்டப் படுகின்றது .. .. ... ... ...

இந்த இரண்டு கோடுகளும வளைந்து ஒன்றன்மேல ஒன்றாக வாராமல் அடுத தடுதது எழுதப்பெறும. இது கி.பி. 7-ஆம நூற்றாண்டில தோன்றி இருக்ககூடும. இரண்டு கொம்புகளும் இணைந்தால வரும இன்றைய உருவம் கி.பி.16-ஆம நூற றாண்டில் கிடைக்கிறது. . .. .. ...

**வட்டெழுத்து** பழந்தமிழ்க் குகைக கலவெட்டுகளில் (கி.மு. 3-ஆம் நூற் றாண்டு) .. ... .. .

கி.பி. 5 முதல் 8-ஆம நூற்றாண்டுவரை செங்கம் நடுகற்களில கீழ் நோக்கிய வளைவாக அதுவே கி.பி. 11-ஆம் நூற்றாண்டு வரை வழங்கிறறு. ... ...

கே ஜி.கி.

ொ
தை
ொ
ெ
ெ

**தைகோ:** (கி.பி. 1288-1339) 'கோதைக்கோ' என்று சொல்லப்படுகிற இவர் சப்பான நாட்டின் 96-ஆம் அரசராவார். ஒருசிலர் இவரைச் சப்பான நாட்டின் மிகப்பெரிய மன்னர் எனவும, மற்றும சிலர் இவரை வரம்புகடப்பட்ட திறமைகளைக கொண்ட மன்னர் எனவும் மதிப்பிடுகின்றனர். சுமார் ஒன்றரை நூற்றாண்டுக காலமாக இராணுவ அரசின் நிழலாக உழன்ற முடியாட்சிக்குத் தம் தைரியத்தாலும், ஐக கியப் போக்காலும மீண்டும புத்துயிர் அளித்து அதி காரத்தைத் திரட்டித் தந்தார். ஆனால், சப்பான நாட்டில உள்நாட்டுப் போர் ஏற்பட்டு அரசவர்க் கமே இரண்டு பகைமை முகாமகளாகப் பிளவுண் டது.

தைகோ (Daigo) கி.பி 1288-ஆம ஆண்டில பிறந்தார். இவர் கி பி. 1318-ஆம் ஆண்டில் ஆட்சி முறை தெளிவில்லாமல் கட்டுக்கடங்காத நிலையி லிருந்தபோது அரியணை ஏறினார். கியோட்டோவை மையமாகக் கொண்டு சட்டபூர்வமான ஒரு முடி யாட்சியும், கிழக்குச் சப்பானில காமகுராவைத் தலை மைப் பீடமாகக் கொண்டு படைத்தலைவரின் உண மையான ஓர் இராணுவ ஆட்சியும ஒரேகாலத்தில்



தைகோ

நடைபெற்று வந்தன. இவ்விரண்டு ஆட்சிகளும நிலைப்பாடின்றி அதிகாரமிகு ஓசோ, பூசிவாரா, நாகசாகி மற்றும் அரச குடும்பங்களின் கைப்பாவை களாகச் செயற்பட்டன.

தைகோ அரியணையில் அமருவதற்கு முன்னரே இராணுவ ஆட்சியை அடியோடு ஒழித்து முடியாட் சியை வலுப்படுத்த எண்ணினார். ஆட்சிப் பொறுப் பேற்றதும் அதற்கான முயற்சிகளை இரகசியமாக மேற்கொண்டார். ஆனால் கி.பி. 1331-ஆம் ஆண்டில் அவருடைய எண்ணம் வெளிப்படையாகத் தெரிநத தால் இராணுவப் படையினர் அவரைச் சிறைப் படுத்திச் சப்பானின் கடலிலுள்ள ஓகித் தீவுகளுககு நாடு கடத்தினர். இருப்பினும், தைகோவின் ஆதர வாளர்களுக்கும், இராணுவப்படைகளுக்கும் இடையே கி.பி. 1333-ஆம் ஆணடில் நடைபெற்ற இறுதிச் சண்டையில் இராணுவப் படையினர் திடீரெனத் தம் படைகளையே அழித்து முடியாட்சிக்குச் சாதகமாகப் போரிட்டதின் விளைவாகச் சப்பானின முதல இரா ணுவ ஆட்சி முடிவுற்றது. தைகோவும் ஓகித் தீவு களிலிருந்து தப்பி வந்துவிட்டார். போரின்போது முடி யாட்சிக்கு வித்திட்ட ஓசோ வமிசத்தாருக்கு நன்றி யுள்ளவராக இவர் இருக்கவில்லை; அனபளிப்பேதும அளிக்கவில்லை; உயர் பதவிகளேதும் தரவிலலை. மாறாகத் தாகௌசி என்பவருக்கு மட்டும் சிறு நிலப் பகுதிகளையும், மிகக் கீழான வரிசையில ஆலோச கர் பதவியையும் தநதார்.

தாகௌசி கி.பி. 1335-இல் தமமை ஓர் இராணு வத் தலைவர் என அறிவித்ததையொட்டி தைகோ அவரை ஒரு பகைவர் என அறிக்கை விட்டார். எனவே, போர் இருவருக்குமிடையே தவிர்க்க முடி யாததாயிறறு. தாகௌசியின படைகள வென்றன. தைகோ கி.பி. 1336-இல் தலைநகரைவிட்டு ஓடிவிட் டார். தாகௌசி நாட்டின் மனனராக முடிசூட்டிக் கொண்டார். கியோடோவின் தெற்கிலுள்ள ஓசினோ மலைச்சரிவில் தம் அரசவையை அமைத்துககொணடு மூன்றாணடுக்காலமவரை வாழ்ந்த தைகோ கி பி. 1339-இல காலமானாா. அவர் அமைதத தெறகு அரசவை கி.பி. 1392-ஆம ஆண்டுவரை நீடித்துப் பின அழிந்துவிட்டது இவருககுமுன் தைகோ எனற பெய ரைக் கொணட ஒரு மன்னன் இருந்தபடியால் இவரை இரண்டாம் தைகோ எனக் கூறுவர். பொன்.சு.

**தைப்பிங்குக் கிளர்ச்சி:** கடநத நூறறாணடி லிருநது இன்றைய சீனா பொதுவுடைமை அரசாக மாறிய வரையில நிகழ்ந்த புரட்சிகளுககும, மக்கள கிளர்ச்சிகளுககும் முன்னோடியாகத திகழ்ந்தது கி பி 1850-ஆம் ஆண்டில சீனாவில நிகழநத தைப பிங்கு (Taiping)எனனும் கிளர்ச்சியாகும.

சீனாவில் மஞ்சு வமிச ஆட்சியைச சீனாகள அய லாராடசி எனக் கருதினார்கள. பேரரசா தாவகுஙகு (Tao-Kung) அவர்தம வாரிசான சியேனபேங்கு(Hsien -Feng-1850-61)ஆகியோர் ஆட்சியில் நிருவாக ஒழுங கீனங்களும், எதேச்சாதிகாரமும தலைவிரித்தாடின, சீனர்கள் வறுமையில வாடினர். பஞசம், பட்டினி, வெளளம, கொளளைக்காராகளினால ஆபத்து ஆகியவறறைச சீனர்கள எனறும எதிர்கொணட னர். ஆளுநாகளும் அமைசசர்களும அதிகாரி களும் மாறி மாறி மககளிடமிருநது வரிகள, சுங்கஙகள, தணடஙகள் ஆகியவறறைக் கட்டுப் பாடின்றி வசூலிதது வநதனா. அபினிப போர் களின விளைவாகத் தககாகளும் கொளளையர்களும சீனாவில் ஊவாங்கு, ஊபே மாகாணங்களில மகக ளைத் துனபுறுத்தலாயினர். இம்மாதிரிச் சூழநிலை யில 'சிறு அமைதிக் குழு (Small Pax Chu) 'முப்பிரி வினர்கள்' (Triads) 'வெணதாமரைச சஙகம்' (White Lotus Society) போன்ற பலவேறு குழுககள் தோனற லாயின. மேற்கூறிய காரணங்கள் மட்டுமன்றிக் கூலி யாட்படைகளைக் கொண்ட இராணுவம், அபினிப் போர்களின இழப்புகள், பொருளாதாரச் சீர்கேடுகள, வாணிகததில அயல நாடுகளின் மேலாணமை ஆகியவைகளும் தைப்பிங்குக் கிளாச்சி கிளர்ந்தெழ மேலும் ஊககுவித்தன.

'ஊஙகு சூ சுவான்' (Hung Hsiu Chuan)என்பவா தைப்பிஙகுப் புரட்சியின் மூல காரணர் எனறு கூற லாம. இவர் அக்கா (Hakka) எனனும இனத்தைச் சாாந்தவா. இவ வினத்தவர்கள் வட சீனாவிலிருநது தென சீனாவிற்குக் குடியேறி வாழ்ந்தவர்கள. ஊஙகு, கி பி. 1814-இல் பிறந்தார். இவாபளளித் தோவுகளில தோல்வி கணடார்; பின்னாக் கிறிததவ மதக் கருத்து களால் ஈாக்கப்பட்டார். சீனாவில பினபற்றபபட்ட

உருவ வழிபாடு, கனபூசியசு மதச் சடங்குகள் ஆகிய வற்றை வெறுத்தார். ஐசாச்சர் ராபர்ட்சு (Rev. Isachar Roberts) என்னும அமெரிக்கக் கிறிததவ மத போதகரின தததுவக் கோட்பாடுகள் ஊங்கு சூ சுவா னைப பெரிதும் கவாநதன. அதன விளைவாக கி பி. 1844-ஆம ஆணடில குவாஙதுஙகுகுவாஙட்சீ (Kwangtung and Kwangtse) மாநிலஙகளில் 'இறை வணககத் தாாகளின சஙகம்' (Society of God Worshippers) எனற ஓர் அமைப்பினை நிறுவினாா.ஊஙகு சூ சுவான தம்மைத் 'தெய்விக அரசர்' எனறு அறிவித்துக் கொணடார். சங்க வணக்க முறைகளுககாகவும் மற்றும் நாட்டின சீாதிருததஙகளுக்காகவும் மற் றோர் அமைப்பையும் நிறுவினாா அவ்வமைப்பின பெயர்தான் தைப்பிஙகு' எனபதாகும்.தைபபிஙகு என் றால 'சமபூர்ண சமாதானம' (Ta'-Ping = Perfect Peace) எனபது பொருள்.

தைப்பிஙகு அமைப்பிறகு ஏழு குறிககோள்கள இருநதன. அவை· 1) எலலா மககளிடையே சமத் துவம-இனததவர்கள, மொழியினா, இரு பாலினா, எல்லோரிடமும் முழு சமத்துவம, 2) சொததுகளில பொதுவுடைமையும கூடடுறவும(Common Ownership and Community Owning),3)நிலவேளாணமை உரிமை களில கூட்டுத தனமையும பொதுவுடைமையும, 4) செலவம்-அனைவருககும சம பஙகீடு, 5) பொருளா தாரத தன்னிறைவும் ஆதிகக வருக்கததாரின தலை யீடடைக களைதலும, 6) ஆண், பெண சமத்துவம; கல்வி வேலைவாயபபுகள அனைத்திலும் சமததுவம; பெணணடிமை ஒழிக்கபபடுதல், 7) இறையருளும தேசியமும் வலியுறுத்தல; உணவு, உடை, உறையுள, வாழவு அனைத்துக்கும் இறையருளே காரணம; மஞசுப் பேரரசர்கள காரணமலலர்; தேசிய உணர்வு வேண்டும், அயல் மஞசுப் பேரரசு அகற்றப்பட வேணடும எனபன.

ஊங்கு சூ சுவானின கருத்துகள பரவத தொடங கின; அவரின சீடர்களும குவாஙதுஙகு, குவாஙட்சீ, ஊனான, ஊபே (Hunan and Hupeh) மாநிலஙகளில பெருகினாாகள. தைப்பிஙகுப் புரட்சியாளாகள மிக விரைவிலேயே பலவேறு இடஙகளிலிருந்து சீன அரசை எதிர்தது ஆயுதங்களைத திரட்டினாாகள். நான்கிஙகு (Nanking)நகரம் கி.பி.1853-ஆம் ஆணடில் தைப்பிங்கினர் வசமாயிற்று சீன அரசாங்கம் சேங் குவாபேன (Tseng-Kua-Fan), இலீ ஊங சாஙகு (Li Hung Chang) ஆகிய இரு தளகர்ததர்களை அனுப்பிப் புரட்சியாளர்களை ஒடுக்க முயனறது. தைப்பிஙகுப புரட்சியாளாகளின ஆதிககம நானகிஙகு நகரிலும சீனாவின் தென்பகுதியிலும் 11 ஆணடு களுககு நீடிததது.

தொடக்க காலத்தில அயல் சக்திகளான இஙகி லாந்து, அமெரிக்கா, பிரான்சு, செர்மனி ஆகியவை மஞ்சு அரசை ஆதரிக்காமல புரட்சிக கருததுகளை வரவேற்றன. ஆனால, அவவரசுகளின வாணிக நலன கள் பாதிக்கப்படவும ஆதிக்கத்தின் பிடி நழுவவும் அந் நியர்களைத் தைப்பிங்கினர்கள தாக்கின அளவில் அவை தைப்பிஙகினர்களுக்குக் கொடுத்த ஆதரவைக் கைவிட்டுவிட்டுச் சீன அரசுக்கு உதவத் தொடஙகின. அமெரிககத தளகர்த்தர் பிரடரிககு தவுன் செணட வார்டு(Frederick Tounshendward)சீனப்படைகளுக்குப் பயிற்சியளிததுச் சீரமைததுக கொடுததார். இவர் அடிச்சுவட்டையொட்டி 'மேசர் சார்லசு கார்டன' (Major Charles Gordon) எனபாரும் தைப்பிஙகுப் புரட்சியாளர்களை ஒடுககினாா. நூற்றுககணக்கா னோர் மாணடனா. சீன உதவியுடன கி.பி 1863-ஆம ஆணடில் வெளிநாடடுப் படைகளுககுச் சூகோவ (Soochow) நகரம சரண அடைந்தது. தைபபிஙகினர் பலர் கொல்லபபட்டனர்; ஊஙகு சூசுவான (தைப் பிங்குத தலைவா) தற்கொலை செயதுகொணடார், தைப்பிஙகுப் புரட்சியும் ஓய்நதது.இது பெர்லின நகர மும்,செருமனியும் இரணடாம் உலகபபோரில எதிரிப படைகளுககுச் சரண அடைவதை அறிந்த இட்லர் இறுதியில தற்கொலை செயதுகொணட நிகழ்சசிககு ஒபபானதாகும்.

தைப்பிஙகுத்தோல்விககுப் பல காரணங்கள இருந தன அவை: 1) மஞசு அரசைக குறைகூறிய இவா களே அததவறுகளைச் செய்யத துணிநதனா. 2) இவர்களே நிலததிலும மறறுமஅனைததிலும் பொது வுடைமையை மறுததனா. 3) ஆயுதப போராட் டத்தில ஈடுபட்டனா. 4) வெளிநாடடவர்களின,உள நாட்டினர்களின வணிகத்தைக கெடுததனர். 5) சீனர் கள மரபுமதமான கனபூசியசு மதத்தைக் கைவிட விருமபவில்லை, கிறித்தவ மதக் கோட்பாடுகள மீது சீனர்களுககு வெறுபபு ஏற்பட்டது. 6) அயல அரசு களின் படைவலிமையும், மஞசு அரசுககு அவை நலகிய ஆதரவும் மிக முக்கியமான காரணமாகும.

எவ்வாறாயினும பழமபெரும சீனநாட்டை ஆழநத தூக்கததிலிருநது சீாதிருததப் பாதையில் தட்டியெழுப்பிய பெருமை தைப்பிஙகுப் புரட்சியின ரைச் சாரும். தைப்பிஙகினர் 20 மிலியன மககள கொல்லப்பட்டாலும் இபபுரட்சியால மஞசு அரசு ஆட்டமகாணலாயிற்று. ஐரோப்பியர்களின சீர்திருத தஙகளால் முறையினறிச் சீனாவை முனனேறறமுடி யாது என்பது உறுதியாயிற்று.அதனால சீனாவில'100 நாளகள சீாதிருத்தங்கள' எனனும் சகாப்தம தொடங்கியது. எலலாவறறிற்கும் மேலாக 1911-ஆம் ஆணடில் ஏற்படுத்தபபட்ட 'குடியரசுக்கும்' டாக்டா சனயாட்செனின் 1) மக்களாட்சி, 2) தேசியம், 3) சமத் துவ'வாழவு ஆகிய அரசியல் கோட்பாடுகளுக்கும் ஊங சூ சுவானும், அவா கோட்பாடுகளும், தைப்பிஙகுப்

புரட்சியும் முன்னோடியாக அமைந்தன என்று உறுதியாகக் கூறலாம். எச்.அ.

**'தைப்பூசம்** காணாது போதியோ பூம்பாவாய்' எனத் திருஞானசம்பந்தர் என்பைப் பெண்ணாக்கிய 'பூம்பாவைப் பதிகத்தில் மயிலாப்பூரில் அருளிச் செய்வார். இவ்வாறு திருமுறைகளிலும் திருவிடைமருதூர்ப் புராணம், பழனித்தலபுராணம் முதலியவற்றிலும் தைப்பூச விழா சிறப்பித்துக் கூறப் பெறுகின்றது. இருபத்தேழு நாண்மீன்களுள் எட்டாவதாகக் கூறப் பெறுவது பூச நாண்மீனாகும். இப்பூசம் முழு நிலவு நாளில் கூடிவரும் திங்கள் தை ஆகும். தேவர்களின் குருவாகிய வியாழன் பூசநாண்மீனின் அதிதேவதை. வியாழன் அறிவினை உண்டாக்கும் வல்லபம் உடையவன் எனச் சோதிட நூலார் கூறுவதால் பூச நாண்மீனில் வழிபட்டால் வியாழனின் அருள் கிடைக்கும். கல்வியில் வல்லமை பெற ஏதுவாக இருக்கும் எனக் கருதி வழிபடுகின்றார்கள்.

இப்பூச விழாவைச் சிவன் கோவில்களிலும் முருகன் கோவில்களிலும் பத்து நாட்கள் சிறப்பாகக் கொண்டாடிப் பூச நன்னாளில் புண்ணிய ஆறுகளில் நீராடல் விழாச் செய்து நிறைவு செய்வார்கள். இத்தகைய பூச நீராட்டுத் தலங்களில் தஞ்சை மாவட்டத்திலுள்ள திருவிடைமருதூர் குறிப்பிடத்தக்க தலமாகும். திருஞானசம்பந்தர் இங்குப் பூச நீராடலைச் சிறப்பித்துக் கூறுகின்றார். திருநெல்வேலியில் தாமிரபருணியில் தைப்பூசத்தன்று நீராடி மகிழ்கின்றார்கள். அம்பாசமுத்திரத்திற்கருகிலுள்ள திருப்புடைமருதூரிலும் இவ்விழா சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றது. தைப்பூச விழா பழனியில் சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றது. சேலம், இடப்பாடி, கும்பகோணம், தேவகோட்டை முதலிய இடங்களிலிருந்து ஆயிரக் கணக்கான அடியார்கள் பாதயாத்திரையாகப் பழனிக்குச் சென்று இறைவனை வழிபட்டு உய்தி அடைகின்றார்கள். மதுரையில் தைப்பூச விழாச் சிறப்புடன் கொண்டாடப் பெற்று வண்டியூர் மாரியம்மன் தெப்பக் குளத்தில் தெப்ப விழா திருமலை நாயக்கர் கால முதல் சிறப்புடன் நடைபெறுகின்றது.

வடலூர் வள்ளலாரது சத்தியமெய்ஞ்ஞான சபையில் தைப்பூசத்தன்று ஏழுதிரைகள் நீக்கப் பெற்றுச் சோதி தரிசனம் காட்டும் விழா தைப்பூசத்தில் சிறப்புடன் நடைபெறுகிறது. சன்மார்க்கப் பேரன்பர்கள் அனைவரும் அங்குக் கூடிச் சோதி தரிசனம் கண்டு அன்னதானம் செய்து மறுநாள் மேட்டுக்குப்பத்தில் வழிபட்டு மகிழ்வார்கள். சு.சு.

**தைபர் ஆறு:** தைபர் ஆறு (Tiber River) இத்தாலி நாட்டின் மிகச்சிறந்த ஆறாகும். இத்தாலியில் 'போ'(Po) என்னும் ஆற்றுக்கு அடுத்து மக்களின் தேவைகளுக்கு நிரம்பப்பயன்படும் ஆறாக இது கருதப்படுகிறது. இந்த ஆறு ஐரோப்பாவின் ஆறுகளுள்ளும் மிகச் சிறந்த ஒன்றாகும். இது உரோமானியப் பேரரசின் நாகரிகக் காலம் முதற்கொண்டு வரலாற்றுத் தொடர்புடைய முக்கிய ஆறாகும். இவ்வாற்றுக் கரையின் மீதுதான் உரோம் நகரமே அமைந்துள்ளது.

இவ்வாற்றின் மொத்த நீளம் 405 கி.மீ. புணையாலோ (Funaiolo) என்னும் 1400 மீ. உயரத்திலிருக்கும் மலையடிவாரத்திலிருந்து இவ்வாற்றுக்கு நீர் வருகிறது. இம்மலைக்கு 'அசுசெனினோ எனிலியானோ' (Assenino Eniliano) என்பது பெயர். எனிலியானோ மலையில் தோன்றும் தைபர் ஆறு இத்தாலியின் கிழக்கே திர்ரேனியன் (Tyrrheian) கடலில் கலக்கிறது. தைபீரியசு எனச் சொல்லப்படும் இந்த ஆறு தெற்கு, கிழக்கு நோக்கிப் பாயும்பொழுது நிறைந்த வண்டல் மண்ணை அடித்துக்கொண்டு வருகிறது. இந்த ஆறு இலால்டைரினோ எனும் அகன்றவெளியை அடைகிறது. இடப்புறத்திலிருந்து சியாசியோ (Chiacio), தொபினோ (Topino) ஆறுகளும் வலப்புறத்திலிருந்து நெசுடோர்(Nestor) ஆறும் தைபர் ஆற்றுடன் கலக்கின்றன. மீண்டும் தோடி என்னும் இடத்திற்கருகில் மேற்கு நோக்கிச் சென்று பின்னர்த் தென கிழக்குத் திசையில் செல்லும்போது இதன் துணையாறான நீரா (Nera) என்னும் ஆறு இவவாற்றுடன் கலக்கின்றது.அகன்ற உரோம் நகருக்கு நெருக்கமாகப் பாய்ந்து வரும்போது 'அனியன' (Anion) என்னும் மற்றோர் ஆறும் தைபருடன இணைகிறது.

தைபர் ஆற்றின வடபுற ஓட்டத்தில் மத்திய தரைககடல் காலநிலை காரணமாக இவ்வாற்றில மிகுந்த நீர் வருவதில்லை, ஆனால தென்புறத்தில் துணைநதிகள காரணமாக நீர்ப்பெருக்கம் மிகுதியாக உளளது. மழைக் காலஙகளிலும மிகக் கூடுதலான நீர்ப்பெருக்கம் இல்லாததால் இத் தைபர் ஆறு மலைகளையும் குன்றுகளையும் சுற்றிச் சுற்றி வட்டமிட்டபடியே ஓடிக் கடலில் கலப்பதால் இநத ஆற்றுக்கரையின்மீது துறைமுகங்களே கி.பி. 1692 1703, 1844 ஆகிய ஆண்டுகளில்தான் கட்டப்பட்டன. இவ்வாற்றின் மூலம் தேவையான வாணிகப் பெருக கம் காரணமாகத் தைபர் ஆற்றிலிருந்து மணணெடுதுத் தூர்வாரி ஆழப்படுத்தினார்களா. மண் சேற்றுப் படிவு என்பது இவ்வாற்றின தீராத தலைவலி கொடுக்கும் மிக முக்கிய சிக்கலாகும். ஏனெனில், இவ்வாற்றினால் உரோம் நகரில மட்டும் வாணிகப் போககுவரத்துக்குப் பயன்படும் அளவிற்கு நீர் உள்ளது. பிற இடங்களில் சேற்றுப் படிவு மிகுதி; பிற இடங்களில் ஏறத்தாழ $2\frac{1}{2}$ மீ. முதல் 7 மீ. வரைதான் ஆழம உள்ளது. இவவாறு கடலில் கலக்கும் இடத்திற்கு

அருகிலேயே இரண்டு கல் தொலைவு வண்டல்மண் சேறறுப்படிவு காரணமாகக் கடல உள்ளே பினவாங்கி யுளளது.

எவ்வாறாயினும் தைபர் ஆற்றின ஓட்டம மலையைச் சுறறி உரோம் நகரை அடைந்து இறுதியாகத திர்ரெனியன கடலில கலக்கும்போதும் அழகுககு அழகூட்டுவதாகவே உளளது. இநத ஆறு அதன் துணையாற்றுடன மிகுதியான அளவிற்கு மின்சார உறபத்தி செய்கினறது. ஹ.அ.

**தைபுட்சு.** சபபானிய மொழியில் தைபுட்சு (Daibutsu) எனபது மகா புத்தர் அல்லது புனித புத்தர் எனப் பொருளபடும். சீனாவிலுளள மிகப்பெரிய புத்தர் சிலைகளைப போனறு சப்பானில செயயப்பட்ட சிலைகளுககு இப்பெயர் வழங்கலாயிற்று இச்சிலைகள அனைத்தும ஆப்கானிசுத்தான் நாட்டிலுளள பனியன எனனுமிடததிலுள்ள இராட்சத சிலையிலிருந்து அமைக்கபபட்டவை.

சப்பான நாட்டில கற்சிலை செய்வதற்கு வேணடிய பாறைத் திணபகுதி கிடைக்காததால மரத்தாலும், வெணகலத்தாலும் சிலைகள செயயப்பட்டுப புத்த சமயக கோயிலகளில வைக்கப்பட்டன. முதன முதலில் சபபான நாட்டில கி பி 6-ஆம் நூறறாணடில தோடைசி எனற இடத்தில வெணகலத்தினால் செய்யப்பட்ட தைபுட்சு எனற சிலை, கியோடோ எனற மாநிலததில நாரா என வழஙகும நகரிலுளள அருஙகாட்சியகததில இடம பெறறுளளது இசசிலையின உயரம் 16 மீ.; எடை 452 கண்டிகள. இசசிலை சோனு என்ற பேரரசின் கட்டளைககிணஙக கி பி. 745-ஆம் ஆண்டில தொடஙகப்பட்டு கி.பி. 749-ஆம் ஆண்டில் முடிககப்பட்டது. இது கி.பி. 752-ஆம் ஆணடில் பேரரசா, பேரரசியாா, அரசவை உயா பதவியாளர்கள, உலகின பலவேறு நாடுகளிலிருந்து அழைக்கபபட்ட 10,000 புத்த சமயத் துறவிகள ஆகியோர் முனனிலையில ஒபபடைப்புச் செயயபபட்டது. இசசிலையின் தலையும் வலககையும கி.பி. 1880-ஆம ஆண்டில் பழுதடைந்து மீணடும் புதுப்பிககப்பட்டது.

தைபுட்சு எனற சிலைகளுள காமகுராவிலுளள கோடேகாயின் கோயிலிலுள்ள சிலை சிறபபுப் பெற்றதாகும். இசசிலை நாராவிலுள்ள சிலையின அமைப்பினை உடையதாகும். இது உருவத்தில் சிறியது. இதன் உயரம் 13 மீ.; முகததின் நீளம் 2.5 மீ.; கணகள 3.25 மீ; எடை 103 கணடிகள; உளளீடற்றது; சிலையின மேல்மட்டத்திற்குச் செல்லச் சுழறபடிக் கட்டுகளைக் கொணடது. இது கி பி 1252-ஆம ஆணடில் செய்யப்பட்டது இச்சிலை கொரோமான் எனற கீர்த்திமிகு சிற்பியால சபபானிய அரசின உதவிகொணடு செய்யப்பட்டதாகும. கோயிலின் உட்புறத்தில் வைக்கப்பட்டிருநத இசசிலை புயலால அழிககப்பட்டு, மீணடும கி பி. 1495-ஆம் ஆணடில் கடலலையால் உடைககப்பட்டுப் பின் மீணடும புதுபபிக்கபபட்டு, இனறு கோயிலின் வெளிப்புறத்திலே நிறுவப்பட்டுளளது இது சபபானிய நாட்டின பணபாட்டுக்கு உரிய ஒரு சொத்தாக மதிபபிடப்படுகிறது

டண்டைககாலத்தில் உலோகததால் செயயபபட்ட இச் சிலைகள் கோயிலகளை மேனமைப்படுதது வதற்காகவே அமைந்தன. ஆனால், பிற்காலத்தில வாணிகப் பொருள்களாகவே அவை ஆககபபட்டன. எனவேதான் கி பி 16-ஆம நூற்றாணடிலிருந்து, புத்த சமய வணணத்தை உளளபடியே படைககவேணடித் தஙகததாலும, இரச கந்தகத்தாலும் இச்சிலைகள செய்யப்படுகினறன.

இச் சிலைகள் அனைத்தும திறநத தாமரைப பூவைப போனற பீடததில புத்தா அமர்நது தியானததில உளள நிலையிலேயே உளளன. இந்நிலை புததர் ஒரு முடிவிலலாத ஒளிவிளககு எனபதைச் சுட்டிககாட்டுகிறது. புத்தர் உருவததை மரக்கட்டையில மிக நுணுக்கமாகத தைபுட்சு பாணியிலேயே செதுககுவதில சபபான் நாட்டுத் தச்சாகள மிகவும் புகழபெறறவர்கள. அந்நாட்டுப் பெண்கள அணியும மெருகிடபபட்ட குமிழ்மாட்டி அணிகள, ஆடவாகளின மணிககயிறு, புகையிலைப் பை ஆகியவறறில பொருநதும் அளவிறகு மிகச்சிறிய வேலைப்பாடு மிகுநத தைபுட்சு மாதிரிகளைச செயகிறார்கள. பொன.சு.

**தைமிர் முந்நீரகம்**· இது சோவியத்து நாட்டைச சேர்நத சைபீரியாவின வடக்கில உளள ஒரு முநநீரகம தைமிர் (Taimyr) பகுதி ஏனிசெய் (Yenisei), கடஙகா (Khatanga) எனனும் இரு ஆற்றுக் கழிமுகஙகளுககிடையே ஆர்ட்டிககு மாக்கடல வரை ஊடுருவிச செலகிறது. ஆசியாக கணடததின வடககு மூலையில உளள செல்யூசுகின முனை (Cape Cheylyuskin) தைமிர் முநநீரகத்தின ஓரததில உள்ளது இம் முந்நீரகம பெரும்பாலும் துந்திரப் பகுதியாக (Tundra) இருககிறது. தெ பா.

**தைமூர்:** பார்லாசு துருககியர் (Barlas Turks) இனத்தின தலைவராக விளஙகிய அமிர் துருக்காயின் (Amir Turghay) மகனாக கி பி.1336-ஆம ஆணடில் 'திரான்சாககியானா' (Transociana) மாநிலத்தில் உளள கேசு (Kesh) என்னும் ஊரில் 'அமிர் தைமூா' (Amir Timur) பிறநதார். இவர் கி.பி 1369-இல் சாமர்கண்டைக் (Samargand) கைப்பற்றி அந நாட்டின் அரசராக முடிசூட்டிக் கொணடார். பின்னர் பாரசீகம், மெசபடோமியா, ஆப்கானிததானம ஆகிய நாடுகளின மீது கொள்ளையடிக்கும நோக்கத்துடன படையெடுததார். இப்போரினபோது இநதிய நாட்டின செல்வச் செழிப்பையும வளத்தையும கேட்

டறிந்தார். இந்தியாவின்மீது படையெடுப்பதன்மூலம் பெருஞ் செல்வத்தினைத் திரட்டலாமென எண்ணங் கொண்டு அதற்கான முயற்சிகளில் இறங்கினார். இவரது முயற்சிக்கு ஆதரவாக இந்தியாவில்முகலாயப் பேரரசு வலிவற்று, நலிந்த நிலையில் இருந்தது. இசுலாமிய மதத்தின் காவலராகமுகலாய பிரபுக்களிடம் தம்மைக்கூறிக்கொண்டு அவரகளின், நன்மதிப்பைப் பெறும் நோக்கத்தைக் காரணம் காட்டி இந்தியாவின் மீது படையெடுத்தார்.



தைமூர்

தைமூரின் பேரனான பீர்முகமது (Pir Mubammad) கி.பி.1398-இல் முல்டான் மாநிலத்தின்மீது படையெடுத்து ஆறு மாதம் போரிட்டு அதைக் கைப்பற்றினார். தைமூர் கி.பி.1398-ஆம் ஆண்டு பெரும் படையொன்றைத் திரட்டிச்சாமர்கண்டை விட்டுப் புறப்பட்டார். அவர் சிந்து நதியையும் அதன் கிளை நதிகளான 'சீலம்' (Jhelum), இராவி (Ravi) நதிகளையும் கடந்து முல்டானுக்கு 112கி.மீ. தொலைவில உளள 'தாலம்பா' (Talamba) என்னுமிடத்தை வந்தடைந்தார். தாலம்பா நகரை அழித்து அங்கிருந்த மக்களைக் கொன்று குவித்தார்; பெரும்பாலோர் கைது செய்யப்பட்டனர். பல நகரங்களைக் கைப்பற்றி, பலரைக் கொன்று குவித்தபினனர் தில்லி மாநகர் வந்தடைந்தார். இப்படையெடுப்பின போது ஒரு இலட்சம் ஆண் கைதிகளைக் கொனறு குவித்தார் என வரலாற்றுச் சானறுகள் கூறுகின்றன.

தில்லியை ஆண்டுவந்த சுல்தான மகமது (Sultan Mahmud) மிகப்பெரிய படை ஒன்றைத் திரட்டித் தைமூரை எதிர்த்து நினறார். அவரது சேனையில் 10,000 குதிரைப்படை வீரர்களும், 40,000 காலாட் படைகளும், 120 போர் யானைகளும் போர்க்கவசங்கள் பூட்டி வலிமைபெற்றதாக இருந்தன. ஆயினும் தைமூரின படையோ இதைவிட வலிமை வாய்ந்ததாக இருந்ததால் இப்பெரிய சேனை தைமூரின் படை வலிமைக்கு முன் வலிவற்றதாக விளங்கியது. சுல்தான தோற்கடிக்கப்பட்டு அவரும் அவரது படை வீரா களும் போர்க் களத்திலிருந்து ஓட்டம் பிடித்தனர். சுல்தான குசராத்துக்கு ஓடினார். அடுத்த நாள தைமூர் தில்லி மாநகருக்குள நுழைந்து நகரைச் சூறையாடினார். நகரமக்கள பெரும் எண்ணிக்கையில கொலை செய்யப்பட்டனா. வீடுகள் கொள்ளையடிக்கப்பட்டன. நகரில் கைது செய்யப்பட்ட கட்டடக் கலைஞாகளையும் தொழில் விற்பன்னர்களையும் தமது தலைநகரான சாமர்கணடில் புகழ்பெறற 'வெளளிக்கிழமை மசூதி' கட்டுவதற்காக அனுப்பி வைத்தார்.

துக்ளக்கு மரபுத்திலலிச்சுல்தானகளின் ஆட்சிககுத் தைமூரின் படையெடுப்பு ஒரு பேரிடியாக விளங்கியது. தில்லியில் தங்கி 15 நாளகள் கொளளையடித்த பொருள்களைத் திரட்டியபின் தைமூர் கி பி.1399-ஆம் ஆண்டு தாய்நாடுதிரும்பினார். மேலும் வடக்குநோக்கி செல்லும்வழியில் அரித்துவார் (Hardwar) அருகே இரண்டுபேரரசுகளைத்தோற்கடித்தார் எனக்கூறப்படுகிறது. இவர் சிவாலிக்கு மலைகளைத் தாண்டும்போது காங்கராவைக் கைப்பறறிச் சம்மு நகரில் கொளளையடித்தார். அங்குப் பெரும் எணணிககையில மக்கள் கொல்லப்பட்டனர். தம தளபதிகளில ஒருவரான காசிர் கான் சையது (Khazir Khan Sayyid) எனபவரை முலடான், இலாகூர், திபாலபூர் அரசுகளை நிருவகிக்கும் பொறுப்பில் அமர்த்தியபின, சிந்து நதியைக் கடந்து தலைநகர் போய்ச் சேர்ந்தார். 'இவருக்கு முன்னால் எவரும் இத்துணை இன்னலகளை இந்திய நாட்டுக்கு இழைத்ததில்லை' என வரலாறறுப் பேரறிஞர்கள கூறுகின்றனர். ஒரே படையெடுப்பில இவ்வளவு வெற்றிகளை எவரும் கணடிலர் எனபதும உண்மை. இவரது வெற்றிக்குப் பல காரணங்கள் கூறப்படுகின்றன. பஞ்சம், பட்டினியில் மக்கள் அவதியுற்ற நிலை, இந்திய அரசுகளின வலிவற்றநிலை, தைமூரின சிறந்த பயிற்சி பெற்ற சேனை ஆகியவை தைமூருககு நல்ல வாய்ப்பாக இருநதன என வரலாற்று வலலுநர்கள் கூறுகினறனா. பி.சி.

**தையசு, பார்த்தலோமு (1405-1500):** போர்ச்சுகீசிய நாட்டைச் சேர்ந்த இவர்கி பி.15-ஆம் நூற்றாண்டில் பல புத்தாய்வுகளை (Exploration) மேற்கொணடவர். இதன் மூலம் பல புதிய நிலப பரப்புகளையும் மக்களினத்தவர்களையும் வெளி

உலகம் அறியுமாறு செய்தவர். ஆப்பிரிக்காவைச சுற்றிச் செல்லும் கடல்வழியை இவர் கணடறிந்த தன மூலம் ஐரோப்பாவிற்கும் ஆசியாவிறகும கடல் வழித் தொடர்பு ஏறபட்டது.

தையசுவின (Bartolomeu Dias) தொடகக கால வாழ்ககையைப பறறிச் செயதிகள கிடைக்க வில்லை. இவர் கி.பி 1481-82இல்ஆப்பிரிக்காவிலுளள தங்கக் கடறகரையைக் கணடுபிடிககும் பொருட்டு மேறகொளளப்பட்ட புத்தாய்வுப் பயணததில ஒரு கபபலுக்குத தலைமை தாஙகிச் சென்றாா. இவாகள செல்ல விரும்பிய அபபகுதி இப்போதைய கானா நாட்டுப் பகுதியாகும்.

போர்சசுகலின பேரரசா இரணடாம் சான (John II) கி.பி.1487-இல் ஆப்பிரிக்காவின தென முனையைக் கணடறிநது வருமாறு தையசுவிறகுக கட்டளையிட்டாா. அதோடு பேரரசர் சான ஆசியப பகுதியினைத தரைவழி மூலமும கடல்வழி மூலமும கணடறிய வேணடுமென விரும்பிப் புததாய்வுகளை மேற்கொள்ள உதவிகள் செய்தார். ஆனால அபபய ணங்கள் தோலவியடைநதன

தையசு கி.பி 1487-இல மேற்கொணட புததாய வுப் பயணம் வரலாற்றில் முககிய இடம பெறறு விட்டது. இநத ஆண்டில் இவரும் இவர்தம் குழுவின ரும 3 கப்பலகளில ஆப்பிரிககாவின தெறகு முனை நோககிப் பயணம செயதனர். ஆப்பிரிககாவின தெற்குப் பகுதியில கடலில் கலக்கும் ஆரஞ்சு ஆற் றின (Orange River) முகத்துவாரத்திறகு அருகில பெரும புயல அடித்ததால 13 நாளகள கடறகரை யைப் பாாககாமலேயே கடலில தவித்தனா. கப்பல் தெறகு முனைககு அடித்துச் செல்லப்பட்டிருககும் என நம்பினா தொடர்ந்து தெற்குக கரையோர மாகவே சென்று கொணடிருந்ததால இநதியாவைக கணடுவிட முடியும என நம்பினா. அபபோது அவா களிடமிருநத உணவு தீரும் நிலையிலிருந்தது. அனை வரும் நெடும் பயணத்தால சலிப்படைநதுவிட்டனா. போர்ச்சுகலுககு மீணடும் திரும்பிவிடுவது என முடிவு செய்யும போது ஒரு நிலப்பகுதியைக கணடனர். அதுவே இப்போது நனனமபிக்கை முனை (Cape of Good Hope) எனக கூறப்படும் பகுதியாகும. தையசு அப்பகுதியைப் புயலகளின முனை (Cape of Storms) எனப் பெயரிட்டுத் திரும்பினாா. இருப்பினும இநதி யாவை அடைவதற்கு ஒரு வழி புலப்பட்டது எனற நம்பிககையில் பேரரசா இரணடாம் சான அதனை 'நன்னமபிக்கை முனை' என மறுபெயரிட்டாா. கி.பி.1487-இல தொடஙகிய பயணம் கி.பி 1488-இல முடிவுற்றது.

இதற்குப் பின்னர்த் தையசு கி.பி 1494-இல ஆய்வுப் பணத்திறகு ஏற்ற இரணடு கப்பல்கள் கட்டு வதற்கு ஆலோசனை கூறினார். அதன் மூலமே வாசு கோடகாமா (Vasco da Gama) எனற மற்றுமொரு போாச்சுகீசியா கி பி 1497-இல ஆப்பிரிககாவைச் சுறறி இநதியாவைக கணடறிநதார். மீணடும் கி.பி. 1500-இல தையசு, கேப்ரல (Pedro Al Vares Cabrel) தலைமையில் வாசுகோடகாமா சென்ற பாதை யிலேயே இநதியாவைச் சென்றடைய வேணடுமெனக் கிளமபினார். இபபயணத்தில் 13 கப்பலகள இடம பெற்றன. பயண வழி திசை தெரியாமல் மாறிய தால் இப்போதைய பிரேசில உளள பகுதிக்குச் சென்றுவிட்டனா. பிரேசிலிலிருநது திருமபி வரும் போது புயலின கொடுமையினால் தையசுவின கப்பல் மூழ்கியதால அவரும இறந்து விட்டார் சீ.ப.

**தையர் ஆடால்பு:** உலூயி ஆடாலபு தையர் என முழுபபெயரைக கொண்ட இவா பிரான்சு நாட்டின மூனறாம் குடியரசின் முதல் தலைவராா வார். இவா ஒரு சிறந்த வரலாறறாசிரியராகவும், எழுததாளராகவும, அரசியல வலலுநராகவும், மக்க ளின உணமையான பிரதிநிதியாகவும, புரட்சிததலை வராகவும் விளங்கினார்.



தையா ஆடால்பு

உலூயி ஆடாலபு தையர் (Louis Adolphe Thiers) மார்சேல் நகரில் கி.பி.1797-ஆம் ஆண்டு ஒரு கடற படைத தளபதியின மகனாகப் பிறநதார். மார்சேல் நகரில் கலவியைத தொடங்கி ஐயனபுரோவெசிப்பு பல்கலைக்கழகததில கி பி.1822-ஆம ஆணடில் சட்டக் கல்விப்பட்டம பெற்றார். இருப்பினும் சட்டத்துறை யில் பணியாற்ற விரும்பாமல் எழுத்தாளராக விளஙக எணணி 'அரசியலமைபபு' எனற இதழின் அலுவலகத் தில் பணிபுரிநதார். பீலிக்சு போடின என்பவருடன் சோநது 'பிரானசுப் புரட்சி'யின் வரலாற்றை கி.பி. 1827-ஆம் ஆணடில எழுதிமுடித்து பத்துத் தொகுதி

களாக வெளியிட்டார். இவர் கி.பி.1830-ஆம் ஆண டில 'தேசியம்' எனற நாளிதழைப் பத்தாம சார் லசுக்கு எதிராகத் தொடங்கினார். இவருடைய எழுத்துகள் பிரானசு நாட்டு மக்களின அவவாண்டுப புரட்சிக்கு வித்துக்களாகஅமைந்து விட்டன. புரட்சி யின் முடிவில் ஆர்லியன்சு நாட்டுப் பெருமகனார் புதிய மன்னராகப பதவியேற்றவுடன இவா பல உயர்ந்த பதவிகளைப பெற்றார். இவர் கி.பி. 1830-இல் மனனரின நேருதவிச் செயலராகவும் கி.பி 1832-இல் உள்நாட்டு அமைசசராகவும், கி.பி.1833-இல் பொதுப்பணித்துறை அமைச்சராகவும், கி.பி. 1836-இல வெளியுறவு அமைச்சராகவும், கி.பி.1840-இல் முதலமைச்சராகவும், கி.பி 1848-இலிருநது நாடாளுமன்ற உறுப்பினராகவும் பணியாற்றினாா. குடியரசுக் கொள்கைகளை மககளிடையே பரப்பிய காரணத்தால் கி.பி.1851-இல் லூயி நெப்போலியன காலத்தில் நாடு கடத்தப்பட்டார். பின் கி.பி.1853-இல் தணடனை நீக்கபபட்டுத் தாயநாடு திரும்பி சில ஆணடுகள்வரை அரசியலில ஈடுபடாமல் ஒதுங கியே இருந்தார். இவருடைய அறிவையும், பட்டறி வையும பயன்படுத்தும்பொருட்டு கி.பி.1863-இல நாடாளுமன்ற உறுப்பினராகத் தேர்நதெடுக்கப் பட்டார். அச்சமயத்தில் இவர் அகப்படுத்தல் கொள கைகளை அடியோடு வெறுத்தார்

இவர் கி.பி.1870-ஆம் ஆண்டில் நடைபெற்ற பிரெஞ்சு-பிரசியப் போரினபோது ஐரோப்பிய நாடு களுக்கிடையே தம் அரசியல் தந்திரத்தால பிரசிய ஆட்டோவான் பிசுமாககுடன அமைதி உடனபடிக் கையில வெற்றி கணடார். போரின்போது ஏற்பட்ட நட்ட ஈட்டையும் கொடுக்க ஏற்பாடு செய்து நாட் டின் நிலையை உயர்த்தினாா. இவர் கி.பி.1871-ஆம ஆணடு பிப்பிரவரிததிஙகளில நிறுவப்பட்ட'மூனறாம் பிரெஞ்சுக் குடியரசில' தேசிய சடடப்பேரவையில ஆட்சிககுழுவின் தலைவரானார்; ஆககட்டுத் திஙக ளில குடியரசின தலைவராகத் தோநதெடுக்கபபட் டாா; பிரான்சின சீர்கெட்டுவிட்ட அரசியல நிலை களைச் சரிப்படுதத எணணங்கொண்டாா. இவர் கி.பி.1872-இல தனி இராணுவசசட்டத்தையும வெளி யிட்டார். இவரின முயற்சிகள் தோல்வியடைநதன. இவர் பிரான்சு நாட்டின் விடுதலை வீரராவார்; விவசாயிகளின் நல்லெணணத்தைப் பெறறவர்; உழைப்பாளர்களின நலனிலே அககறைகொணடவா; நாட்டில வருமான வரியை எதிாத்தவா; தேசிய இராணுவப் பராமரிப்பை விருமபாதவர்; மக்களாட் சியில் தளராத நம்பிக்கை உடையவா, அனைத்து நாடுகளுக்கிடையே பிரானசின தரததையும செல் வாககையும் உயர்த்தி அநநாடும் ஒரு வலலரசே என நிறுவத் தம் எழுத்துகளையும அரசியலதநதிரத்தை யும பயன்படுததியவர்; நாட்டிறகு ஆறறிய தொணடு களை விளமபரம் செய்ய விரும்பாதவர்; பிரானசு நாட்டின்மீது பகதியையும் பற்றையும் மக்களிடையே பரப்பியவர் இவர் கி.பி.1877-ஆம ஆண்டு பாரிசில காலமானாா. பொன்.சு.

**தைர்-அல்-மதீனா** நைல நதிக்கரையில மேலை எகிபதில் தீப்சில அமைந்துளள தொன்மை யான பகுதி. இப்பகுதியில் பணடைக் காலத்தில கைவினைஞர்கள குடியிருந்தனா. இவர்கள் எகிப்திய அரசக கலலறைகளை அழகு செய்வதில வல்லவாக ளாக விளஙகினர். அக்காலத்தில வாழ்நத கைவினை ஞர்களைப பறறி அறிஞர்கள அறிநதுகொளள இப்பகுதி ஆயவு செய்யபபட்டது. இஙகுப் பெருமள வில எழுததுப் பொறிபபுகள கொணட சான்றுகள கிடைததுளளன. இவை கைவினைஞாகளின வாழக கைத திறததைக் கூறும எழுததுச சான்றுகளாக விளங்குகினறன. இவை கி.மு. 1200-க்கும கி.மு. 1085-ககும் இடைப்பட்ட காலததவை. இஙகுப பல கலலறைகளும காணப்படுகினறன. இக்கல்லறைகள கலைஞர்களுககுரியவை. இஙகுப்பணியாளர்களின வழிபாட்டிற்காக மூன்று கோயிலகள கட்டப் பட்டன. சு.இரா.

**தைர அல்-பாகிரி** எகிப்தில உளள தொல்லி யல் சிறப்புப்பெற்ற ஊா. தீப்சுப்பகுதியில உளள நெக்ரோபோலிசு (Necropolis) பகுதியில் தைர அல-பாகரி (Dayral-Bahri) அமைந்துளளது கிஙசு பளளத்தாககிற்குத்தெற்கிலும் நைல் நதியின மேறகுக் கரையிலும் அமைநதுளள செஙகுத்து மலைச சரிவுப் பகுதியில் அமைநதுளள தைரஅல பாக்ரி, வடககு



தைர அல் பாகிரி கோயிலகள

மடாலயம என்னும பொருளால் பெயா பெறறுத் திகழகிறது. இங்குளள மடாலயம் கி.பி.7-ஆம் நூற றாண்டில கட்டபபட்டது இஙகுள்ள 3 பழமைச சினனங்கள் எகிப்தியக கட்டடக கலைககுச் சான்று பகர்வன. இவறறுள கி.மு 2050-இல கட்டபபட்ட அரசா இரணடாம மெணடுகோடெபபின சடஙகுக கோயில ஒனறாகும். இது இப்பொழுது பெருமளவில் அழிநதுளளது. இரணடாவதாக விளஙகுவது அரசி ஆடசீப்சுட்டு (Hatshepsut) கி மு. 1500 இல கட்டிய மேடை போனறு அமைப்புடைய கோயிலாகும். இக் கோயில அகழாயவு செய்து வெளிக் கொணரப பட்டது. இதனமேல பிற்காலததில மடாலயம் கட்டபபட்டது. மூனறாவது பழமை ஆலயததை 1968-ஆம ஆணடு போலநது தொல்லியல அறிஞர் களின் குழு ஒனறு கணடுபிடிததது. மிகுநத அழி பாட்டுக்குள்ளான இககட்டடம கி.மு.1460-ஆம் ஆணடு மூனறாம் துட்மோசு (Thutmose III) என னும அரசால இரணடு பழைமையான கோயில களுககு இடையில கட்டப்பட்டது. இககோயில கி மு.1160-ஆம் ஆணடு மலையிலிருநது உருணட பாறையால அழிநதுபட்டது. இமமூனறு கோயில களையும் ஒருசிறிய வழிஒனறுடன் ஒனறு இணைத்து பளளத்தாக்குப் பகுதியில உள்ள கோயிலகளுக்கும் இணைத்துளளது பளளததாக்குப பகுதியில படகுத துறை ஒனறு உளளது. இதன எதிரில செஙகுத்து மலை உளளது. சு.இரா.

***தைலப்பா***: தெனனிந்தியாவின மேறகு பகுதி யில் புதிய சாளுக்கிய அரசை நிறுவியவர் இரணடாம் தைலப்பா ஆவார். இவர் நிறுவிய அரசு இராட்டிர கூடாகளின வீழ்ச்சிககுப்பின தோன்றியது. இவா கல யாணியைத் தலைநகராகக் கொணடு ஆடசி செய் தாா. இவா ஆட்சிக் காலத்திலிருநது மேலை சாளுக் கியரின் ஆட்சி தொடஙகியது. இவவரசு கி பி.11, 12-ஆம நூறறாணடில் சோழ அரசை எதிாததும், வேங்கி (அ) கீழை சாளுக்கியரை எதிாததும விளங கியது. மேலை சாளுககிய அரசர்களில மூவருக்கு தைலப்பா என்ற பெயர் உளளது இதில முதலாம் தைலப்பா சாளுக்கிய அரசா இரணடாம் கீர்த்திவர் மனின, மாமனான பீமா எனபவரின் வழியில் தோன றியவர் எனக் கருதப்படுகிறது. இவர் வமிச வழியில வநத நானகாம விக்கிரமத்தியா காலசூரி இலட்சு மணனின மகளான போநதா தேவியை மணநதாா. இவர்களுக்குப் பிறநதவா தான் இரணடாம் தைலப்பா ஆவார்.

**இரண்டாம் தைலப்பா** (கி பி.973-997): இவரை தைலப்பா (Tailapa), தைல அப்பா (Tailappa), தைலப்பய்யா (Tailappaya) எனறும் குறிப்பிடுவர். இரண்டாம் தைலபபாவைப் பற்றி அறிய கி.பி. 957,965-இல் எழுதப்பட்ட இரண்டு கல்வெட்டுகள் உதவியாக உளளன. இதன மூலம் அவரது இளமை காலத்தில்இராட்டிரகூட அரசர்இரணடாம்கிருட்டிண னின சிற்றரசர் ஆக தாரவாடியை ஆணடதாக தெரிகிறது. தற்பொழுது தாரவாடி, பீசப்பூா மாவட் டததில சிறறூராக உளளது. இக்கல்வெட்டு மூலம இரணடாம தைலப்பாவின முனனோர்களும் இராட் டிர கூடர்களின சிற்றரசர்களாக இருநதிருக்க வேண டும என்று தெரிகிறது. ஆனால் இவர்களுக்கும் வாதாபி சாளுக்கியாகளுககுமிடையே இருந்த உறவு -தொடாபு பறறி தெரியவில்லை. கோதாவரி மாவட் டததில் உளள பிமாவரததில் உளள முறறுப பெறாத கோயில கலவெட்டு மூலம் தைலபபா முதல திரிபு வண மலலா வரை உளள வமசவழிப் பறறி அறிய முடிகிறது. கல்வெட்டுகள மூலம் இரண்டாம தைலப பாவைப் பறறி கி பி.996 வரை அறிய முடிகிறது. இவர் இருபததிநானகு ஆணடுகள ஆடசி புரிநதாா. அவரை அடுதது அவா மகன சததியசரயா முடி சூட்டிககொணடார்.

இரணடாம்தைலபபா ஆகவமலலா (Ahavamalla) பூவனமலலா (Chavana Malla) எனற படடப பெயர்கள சூடடிக கொணடாா. இரணடாம் தைலப பாவைப் பறறி அவருக்குப் பினனா எழுதப்பட்ட வழிமுறைச் செயதிகள அவரை இறைவன கிருட்டிண னின அவதாரம எனறும், 108 போர்களை, அரசகர் களை எதிாதது வெனறாா. எனறும், 88 அரண களைக கைப்பறறினாா எனவும் கூறுகிறது. ஏறத் தாழ கி.பி 965-இல இராட்டிரகூட அரசர் மூனறாம் கிருட்டிணர் தமது இராணுவத் தளபதிகளுக்கு பல நிலஙகளை வழஙகினர். அதில தாரவாடி (Taradavadi) எனற முக்கிய பகுதியை ஆகவமலலா தயிலப் பராசா எனற சதயசாயா குடும்பததைச சோந்தவா களுககு வழஙகினர் அன்றிலிருநது தயிலபரசரா இராடடிர கூட.ர்களைவீழதத காததிருநத மூனறாம் கிருட்டிணனுக்குப் பின அரியணை ஏறிய இரண டாம கர்காவை கி பி 973-இல சில இராட்டிரகூட சிற்றரசாகளின துணைக் கொணடும, தமது தாய் வழியான காலசூரிகளின உதவியுடனும வீழ்ததிச் சாளுககியர்களின ஆட்சியை மீணடும் தக்காணத்தில நிறுவினர். அவர் மணியகட்டகோ(Maniyakatto)என் னும நகரை தமது ஆட்சிப் பீடமாக வைத்துக கொணடார். இந்நகர் கி பி 993 வரை தலைநகராக விளங்கியது. பின்னர்க் கலயாணி தலைநகராக மாறி யது. இரணடாம் காககாவை வீழத்தி அரியணை ஏறிய தைலபபா தமது ஆட்சியை நிலைநிறுத்த முயனறார். முதலில் அவர் மாராசிமமாவை எதிர்த் தாா. ஏனெனில, மாராசிமமா,இராடடிரகூட அரசர் மூனறாம் கிருட்டிணனின் சகோதரியரின் மகனான நான்காம இநதிராவை அரியணை ஏற்ற முயறசிசெய் தார். அம்முயறசியில் தோலவியுறறு உண்ணா

நோன்பு பூண்டு உயிர் நீத்தார். பின்னர் நான்காம் இந்திராவும் அவ்வாறே உயிர் நீத்தார்.

கங்காபஞ்சலதேவா தமது எதிரியாக விளங்குவதை கண்ட தைலப்பா கங்க பூதங்கதேவா (Ganga Bohdhangadeva) மற்றும் சில சிற்றரசர்கள் துணைக் கொண்டு பஞ்சலதேவாவைத் தாக்கினார். பின்னர்ப் பூதங்கதேவா பஞ்சல தேவாவைப் போரில் வென்றார். இவ்வெற்றிக்குத் தைலப்பா, ஆகவமல்லா என்ற பட்டத்தைப் பூதாங்கதேவருக்குச் சூட்டினார். மேலும் இவ்வெற்றி தைலப்பாவின் ஆட்சியை நிலை நாட்ட உதவியது. இவர் கி.பி.980க்கு முன்னர் சோழ அரசர் உத்தம சோழரையும் வெற்றியடைந்திருக்க வேண்டும். இவ்வாறு தமது ஆட்சியை நிலைநாட்டிய பின், தெற்கு பகுதியில் வெற்றியடைந்தபின், தமது கவனத்தை மேற்குப் பகுதியில் செலுத்தினர். அங்கும் தமது மேலாண்மையை நிலை நிறுத்தியபின் வடக்கே மல்வா நாட்டை ஆண்ட பர்முரா மூலா ராசாவை வெல்ல ஆறு முறை படையெடுத்தார். ஆறு முறைகளும் தோல்வியடைந்தார். இப்படையெடுப்பிற்கு முதன்மைக் காரணம் மால்வாநாடு, முன்னர் இராட்டிரகூடர்களின் ஆட்சியின்கீழ் இருந்ததே ஆகும். இவ்வெற்றிகள் அடைந்த மால்வா நாட்டு அரசர் மூலாராசவைக் காத்துக் கொள்ளும் முயற்சியாக தைலப்பாவை எதிர்த்து சாளுக்கியர்களை அடக்க கோதாவரி வரை படையெடுத்தார். அப்போது மூலாராசாவைத் தைலப்பா சிறைசெய்தார். சிறையில் தைலப்பாவின் சகோதரி மிருலைவதிக்கும் மூலா ராசாவுக்கும் தொடர்பு ஏற்பட்டது. இதற்கிடையே மூலாராசாவின் அமைச்சரின் முயற்சி மூலம், மூலாராசா தப்பும் எண்ணம் கொண்டுள்ளதை மிருணலவதி தைலப்பாவிற்குத் தெரிவித்தால, தைலப்பா மூலாராசாவைத் துன்புறுத்திக் கொன்றார். இப்போர்களில் தைலப்பாவின் தளகாத்தர் நாகதேவ உதவியாகவிளங்கினார். தைலப்பா செய்த எல்லா போர்களிலும் அவரது மகன சதயசாரயா உதவினார். தைலப்பாவின் ஆட்சி சிமோகா, சிததலதுர்க், பெல்லாரி முதலிய பகுதிகளையும் தெறகு கொங்கன் பகுதியையும், கோதாவரி அல்லது நர்மதா வரை பரவியிருந்தது. தைலப்பாவின் வாரிசுகள தங்களைக் கன்னட அரசர்கள எனக் கூறிக்கொணடனர். தைலப்பா, இரத்னாபம்மகா (Ratta Bhammata) என்பவரின் மகளான சக்கமமாவை (Jakabba) மணந்தார். அவளுக்கு இரண்டு புதல்வாகள் சத்திய சாராயா, தசாவர்மன் எனபவாகள. தசாவாமன் தைலப்பாவின் காலத்தே ஆளுநராக விளஙகினார். தைலப்பாவும் அவரது குமாரர்களும் கன்னட கவி இரன்னாவை ஆதரித்தனர். இரன்னா தைலப்பாவின அரசவை கவியாகவும் விளங்கினார். கவிஞருக்குப் பல சிறப்புகள் செய்யப்பட்டன. அவர் எழுதிய அசித்த புராணம் (Ajrta Purna) சமணத் தீர்த்தங்களை பற்றி கூறுகிறது.

**மூன்றாம் தைலப்பா** 1149/50-63: கல்யாணி சாளுக்கியர் வமிச அரசர்களில் மூன்றாம் சோமசுவராவின் புதல்வர் மூன்றாம் தைலப்பா ஆவார். இவர் ஒய்சாளர் அரசர் விசுணுவர்த்தனுவின் சமகாலத்தவர். இவர் ஆட்சிக் காலத்தே சாளுக்கியர்களின் வீழ்ச்சி தொடங்கியது எனலாம். விசுணுவர்த்தனு பன்பாபுரா என்னுமிடத்தில் தங்கியிருந்ததால் அவர் செல்வாக்கு வளரத் தொடங்கியது. மேலும் தாரவாடி காலசூரிகளிடம் இருந்தது. காகத்தியா அரசர் இரண்டாம் புரலா மூன்றாம் தைலப்பாவுடன போர் செய்து அவரைச் சிறை செய்தார். பின்னர் ஓர் அனுமானம் கொண்டு மூனறாம் தைலப்பாவை விடுதலை செய்தார். பூரலாவின் குமரார் உருத்ரன பற்றிஅஞ்சி தைலப்பா வயிற்றுப்போக்கு நோய்க்கு ஆட்பட்டு உயிர்நீத்தார். பு.எ.மோ.

**துணை நூல்:**


Nilakanta Sastri, K.N. A History of South India, Oxford University, Second Edition, Madras, 1958.


**தைலர், சர் எட்வர்டு பர்னட்டு** (கி.பி. 1832-1917): இவர் தலைசிறந்த ஆங்கிலேய மானிடவியலறிஞர்; சமுதாய மானிடவியலைத் தோற்றுவித்தவர் எனக் கருதப்படுபவர்; புகழ்மிக்க நூலான 'தொன்மைபண்பாடு' (Primitive Culture) என்னும் நூலை எழுதியவா. தைலர் (Sir Edward Burnett Tylor) இஙகிலாநதில் சொமர்செட் மாகாணததில் வெலிங்டனில் கி.பி. 1832-இல பிறந்தார். பதினாறு வயது வரை கலவி பயின்ற பின்னர்க் குடும்பத்தாருடன சேர்ந்து சிறிதுகாலம் வாணிகம் செய்யத் தொடங்கினார்.



தைலர்

தைலரின் தொடக்ககாலம் சுற்றுப்பயணங்களில் கழிந்தது. இளம் வயதிலேயே காசநோயால் பாதிக்கப்பட்டதால் இவரது செல்வக் குடும்பம் இவரை அமெரிக்காவிற்கு அனுப்பி மருத்துவம் பெறச்செய்தது. அக்காலத்தில் இவர் தொல்லியலாரும் இனக்குழு ஒப்பாய்வியலாருமான (Ethnologist) கிரிசுடி (Christy) என்பாருடன் தொடர்புகொண்டு இத்துறையில் ஆர்வங்கொண்டார். கிரிசுடியின் துணையுடன் தைலர் தொல்லியல், மானிடவியல் முதலான துறைகளில் களப்பணி அனுபவங்களைக் கற்றுத் தேர்ந்தார். இவருடன் இணைந்து மேற்கொண்ட மெக்சிகோ புதாய்வுப் பயணத்தின் இறுதியில் தைலர் இத்துறையில் நன்கு காலூன்றிவிட்டார்.

தைலர் கி.பி. 1861-இல் மெக்சிகோ பயண அனுபவங்களைத் 'தொன்மை மற்றும் இக்கால மெக்சிகோவும் மெக்சிக்கர்களும்'(Mexico and the Mexicans: Ancient and Modern) என்னும் நூலாக வெளியிட்டார். இந்நூலின் மூலம் பண்பாட்டுக் கூறுகளைத் திறம்படக் கவனித்து அவற்றை முறைப்படுத்தி எழுதும் தைலரின் திறமையைக் காண முடிந்தது. இதனையடுத்து இவர் எழுதிய மனித குலத்தின் தொடக்கக் கால வரலாறும் நாகரிகத்தின் வளர்ச்சியும் பற்றிய ஆய்வுகள் (Researches into the Early History of Mankind and the Development of Civilization, 1865) என்னும் நூல் இவருக்கு மானிடவியலில் சிறப்பிடத்தைத் தேடித் தந்தது. இந்நூலில் மனிதப் பண்பாட்டின் வளர்ச்சி பற்றி விவரித்துள்ளார். இந்நூலின் மையக் கருத்தாக அமைவது, கடந்தகாலப் பண்பாடுகளும் இக்காலப்பண்பாடுகளும், நாகரிகமுற்றவர்களும் ஆதிகுடிகளும் மனிதச் சிந்தனையின் வரலாற்றில் ஒரு பகுதியாகக் கொண்டு ஆராயப்படவேண்டுமென்பதே.

தைலருக்குப் பெரும் புகழைத் தேடித் தந்தது அவரது தொன்மைப் பண்பாடு (Primitive Culture) என்னும் நூலாகும். அந்நூல் கி.பி. 1875-இல் இரண்டு தொகுதிகளாக வெளியிடப்பட்டது. அந்நூலில் இவர் தொன்மைச் சமயத்தின் தோற்றம் பற்றிய ஆவியுலகக் கோட்பாட்டைப் (Animism) பற்றிக் குறிப்பிடுகிறார். ஆவிகளின்பால் நம்பிக்கை கொண்ட நிலையே சமயம் தோன்றியதற்குக் காரணமாக அமைந்தது எனக் குறிப்பிடுகிறார். காண்க ஆவியுலகக் கோட்பாடு.

இன்று வழக்கில் உள்ள 'பண்பாடு' என்னும் சொல்லோடு மிகவும் தொடர்புடையவர் தைலர். பண்பாடு பற்றிய இவரது வரையறையே இன்று சமுதாய அறிவியல்களில் பெருவழக்காகக் கையாளப்படுகிறது இவர் பண்பாட்டை 'அறிவு, நம்பிக்கை, கலை, ஒழுக்க நெறிகள் (Morals), சட்டம், வழக்கம் முதலானவையும் மனிதன் சமுதாயத்தில் ஓர் உறுப்பினராக இருந்து கற்கும் பிற திறமைகளும் பழக்கங்களுமாகும்' என வரையறை செய்வார்.

தொன்மைப் பண்பாடு என்னும் நூலில் தைலர் பண்பாட்டின் படிமலர்ச்சியைப் பற்றி விளக்குகிறார். தைலரின் படிமலர்ச்சித் திட்டத்தில் பண்பாடு பல நிலைகளில் வளர்ச்சியடைந்துள்ளது என்றும் அதனை விலங்குத் தன்மை (Barbraism), காட்டுமிராண்டித் தன்மை (Savagery), நாகரிகம் ஆகிய மூன்று நிலைகளாகப் பாகுபடுத்தலாம் என்பார். அனைத்துப் பண்பாடுகளும் இம்மூன்று நிலைகளைக் கடந்தே சென்றுள்ளன என்பார் தைலர்.

பண்பாட்டைப் பற்றித் தைலர் ஆய்வு செய்ததைக் காட்டிலும் வேறு எவரும் விரிவாக ஆய்வு செய்யவில்லை எனலாம். தைலரின் கருத்துப்படி, பண்பாடு என்பதை அதன் ஒழுக்க நெறிகளோடும் கலை வளர்ச்சியோடும் மட்டும் ஒப்பிட்டு அறியக் கூடாது, அதன் தொழில்நுட்ப வளர்ச்சியோடும் பண்பாட்டின் பிற நிறுவனங்களின் வளர்ச்சியோடும் தொடர்புபடுத்தி அறிய வேண்டும். பண்பாடு காலப் போக்கில் வளரும்போது அதன் பழைய பண்புகள் சில செயலிழந்து எஞ்சிநிலைத்தவையாக (Survivals) அப் பண்பாட்டில் தொடர்ந்து காணப்படும் என்பார். இவரது 'எஞ்சி நிலைத்தவை, கோட்பாட்டைச் சார்லசு தார்வின் (Charles Darwin) பாராட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது.

தைலர் இறுதியாக எழுதிய நூல் மானிடவியல்; மனிதனையும் நாகரிகத்தையும் பற்றிய ஓர் அறிமுகம் (Anthropology: An Introduction to the Study of Man and Civilization 1881) இது இவர் காலத்திய அனைத்து மானிடவியல் அறிவையும் தொகுத்துக் கூறப்பட்டதாகும்.

தைலர், பேரரசுச் சங்கத்தில் (Royal Society) கி.பி. 1871-இல் தகைமை உறுப்பினராக்கப்பட்டார்; ஆக்சுபோர்டு பல்கலைக் கழகம் கி.பி. 1875-இல் குடிமைச் சட்டத்தில் (Civil Law) டாக்டர் பட்டம் கொடுத்துச் சிறப்பித்தது இதன்பின்னர் 8 ஆண்டுகள் கழித்து அப் பல்கலைக் கழகத்தின் அருங்காட்சியகத்தின் பொறுப்பையும் அங்கு விரிவுரையாற்றும் பொறுப்பையும் பெற்றார். பின்னர் கி.பி. 1884-இல் இணைப்பேராசிரியராகவும், 1896-இல் முதல் மானிடவியல் பேராசிரியராகவும் பொறுப்பேற்றார். நீண்டகாலமாக மானிடவியல் துறையின் வளர்ச்சியில் ஈடுபட்டிருந்த இவர் 1909-இல் பணி ஓய்வு பெற்றார். மானிடவியல் இவரது பணியைப் பாராட்டி இங்கிலாந்து அரசு ஆண்தகை (Knight) என்னும் விருதினை 1912-இல் வழங்கியது. இவர் 1917-இல் காலமானார்.

சீ.ப.

**தைலர் மதிப்பீடு மாதிரி**: மதிப்பீடு, வளர்ச்சிககு இன்றியமையாதது. வளர்ச்சியை ஊக்குவிககும மிகச்சிறந்த கருவியான கல்வி, நோக்கங்களைக கருத்திற் கொண்டு, திறம்பட அதன நோக்கங்களை அடையும வகையில் பயனபடுத்தப்பட்டாலன்றி வளர்சசி ஏறபடாது. இதை உணர்ந்த தைலர் கலவித்திட்டங்களின் மதிப்பீடு எனற கருத்தை 1930-ஆம் ஆண்டில தொடஙகி 1950-ஆம ஆணடிலே இமமதிப்பீடு குறித்து விரிவாக எடுததுரைததுளளாா.

தைலா மதிபபீடு மாதிரி, கலவிததிட்டத்தை உருவாக்குவதிலும கறபிககும் முறைகளைத் தீர்மானிதது மதிப்பிடுவதிலும், பயனபடக்கூடிய ஒரு முறை. இமமுறை நானகு வினாககளுக்கு விடை கணடுபிடிககும வகையிலே அமைந்துள்ளது.

1 பளளி எந்தக கலவிக் குறிக்கோளகளை அடைய விரும்புகிறது?

2. இந்தக் குறிககோளகளை அடைய எநதக் கலவி அனுபவஙகளை வழஙகுதல வேணடும?

3. இந்தக் கலவி அனுபவஙகளை எவவாறு திறமபட அமைக்கலாம?

4 குறிக்கோள்கள நிறைவேறுதலை எவவாறு கணிப்பது?

தைலா மேறகொண்டு இவவினாககளை ஆராயும் முறைகளை விளக்குகிறாா. மேலே குறிபபிட்டுளள வினாக்களுககு விடை கூறுவது முடியா விட்டாலும (ஏனெனில, நிறுவனஙகளைப் பொறுததும் கலவிநிலை பொறுத்தும் அவை மாறக கூடியன) தைலா அக கேள்விகளுக்கு விடைகாண ஓா அமைபபை ஏற்படுததிக கொடுத்துளளாா். அந்த அமைப்பிலுளள மூனறு முக்கிய கூறுகள் பின்வருவன; அ. குறிக்கோளகள, ஆ கற்றல் அனுபவங்கள, இ மதிப்பீடு.

ஒவ்வொரு கூறும் பிற கூறுகளுடன் எவவாறு தொடர்பு கொணடுளளது எனபதன் அடிப்படையிலே தான விளககம் பெறுகிறது. பினவரும படம் இந்த மூனறு கூறுகளின நிலையை விளககுவதாக அமைகிறது.




குறிக்கோளகள், கற்றல் முயறசிகளில ஒருவரது கருததுகளைக் குறிககினறன. அவை ஒரு கல்விததிட்டம், நடைமுறையில மாணவரிடம் இயஙகக்கூடிய நடத்தை முறைகள், மற்ற அடைவுகள் ஆகியவற்றைப்பற்றிய எதிாபாாப்புகளை உணாததுகினறன. குறிககோளகள குறிபபிட்ட செயல் திறனைப் பெறுவதிலிருநது, புதுவகையான உணாவுகள, எணணஙகள வரையில பரவலாக அமைய முடியும். கற்றல் அனுபவம் எனபது, விருமபும நடததைகளையும அடைவுகளையும் எய்தக கறபவர் பெறும் அனுபவஙகள எனக கொளளலாம. கற்றல அனுபவஙகள், தனிபபட்ட அல்லது குழுவின, வகுபபறையிலும் வெளியிடஙகளிலும குறிககோளகளை அடைவதற்கான முயறசிகள அனைத்தையும் தம் மகததே கொணடவை. மதிப்பீடு என்பது எநத அளவிறகுக குறிககோளகள அடையப் பெற்றன எனபதைக் கணிப்பதாகும.

படததில் அம்புகள இருமுனைகளையுடையனவாகவுளளன. அதன விளககம எடுத்துக்காட்டாகக் குறிக்கோளகளை எடுத்துகொணடால், கற்றல் அனுபவஙகளை உருவாக்குவதிலும்தோ்தலிலும குறிககோளகள் வழிகாட்டுகினறன எனபதைக் குறிக்கிறது மேறகொணடு கூறபபோனால், கற்றல் அனுபவங்களைச் செயல முறைபபடுத்தும் முயற்சிகளை நிருணயிப்பன குறிககோளகள எனக கொளளலாம. அவவாறே மதிப்பீட்டை நோககியுளள அம்புகுறி மதிபபீட்டு முறைகளின சிறப்புக் கூறுகளை உருவாக்குவதாக அமைகிறது மதிப்பீட்டுப்பலன்களின் தரத்தைக கொணடு குறிக்கோளகள சில சமயம மாற்றப்படலாம் அல்லது நீக்கப்படலாம்.

மதிபபீட்டிலிருநது கற்றல அனுபவங்களை நோக்கியுளள அம்புக்குறி இரணடு முதனமைக் காரியஙகளைக குறிபபதாக அமைநதுளளது முதலாவதாக மதிப்பீட்டுச செயல்கள, எநத அளவிறகுக் குறிககோள்கள் அடையப்படுகினறன என்பதையும மேலும கறறல் அனுபவங்களில் எவை திறமபட நடைபெறுகினறன, எவை பயனற்றவை எனபனவற்றையும் அறிவதறகு ஏதுவாக உளளன. உருவாக்க மதிப்பீடு (Formative Evaluation) எனற கருததை இவவகையில தைலர் புகுத்தியுளளாா. இரணடாவதாக நலல வகையான மதிபபீட்டுச செயல்களும முறைகளும நலல கறறல் அனுபவஙகளுக்கு வகை செய்கின்றன எனற கருத்தையும உட்கொணடிருக்கிறது. இதன மூலம் கற்றல் சிறநத முறையில நிகழ ஏதுவாகிறது.

கறறல அனுபவஙகளிலிருநது குறிககோள்களை நோக்கியுள்ள அமபுககுறி, ஆசிரியா மாணவர் கற்றலுக்குப் பயன்படும ஏதுக்களும, இவற்றினிடையே ஏறபடும் அனுபவஙகளும புதுக குறிக்கோளகளை அமைத்துக் கொடுக்க வல்லன என்பதைக் குறிப்பதாகவுளளது. இவவாறு வாய்ப்பு அனுபவஙகளை வலுவுளள கறறல அனுபவஙகளாக நல் ஆசிரியர்களால பயனபடுத்திக கொளள முடியும்.

இவவாறாகத் தைலர் மதிப்பீடு மாதிரி, வாத முறையிலும் ஆராய்ச்சி முறையிலும் நல்லதொரு நிகழ்ச்சி அமைப்பிற்கு வழிகோலியுள்ளது சிறந்த பாடத்திட்ட அமைப்பிற்கு இவரது மாதிரி ஏற்றுக் கொள்ளப்பட்ட போதிலும், அதில குறைகள் உள் ளன. கிரிபார்ட்டு (1970) பின்வரும குறைகளைச சுட்டிக் காட்டியுள்ளார்.

1. குறிககோள்கள் அமைக்கப்படும் முறைகள் மிகக்குறுகிய கணணோட்டத்தில உருவா கின்றன.
2. இதனால் மதிப்பீட்டு முறைகளும குறுகி மிகுதியான பயனகளைத தடைசெய்வன வாக அமைகினறன. குறிக்கோளகளில் வலு வற்றன முதன்மை பெறக்கூடிய வாயப பையும் இம்மாதிரி ஏற்படுத்திக் கொடுபப தாகவுள்ளது.

இருப்பினும் மதிப்பீட்டு முறையைக கலவித்திட்ட வளாச்சியிலே ஒரு முக்கிய உறுபபாக அமைத்துக் கொடுத்த பெருமை தைலரைச சார்ந்தது எனபது ஒரு மறுக்க முடியாத உணமை. இவரது கருத்தின் அடிபபடையிலே அணமையில மதிப்பீட்டுமுறைகள மிகுதியாக வளர்ந்துள்ளன. இசுகிரிவன (1967), போப்பம் (1975), குக் காம்பபெல் (1979), உல்பு (1979) கால்வினும், கீரினும் (1980) முதலிய பல கலவி யாளர்கள கல்வியின் வளர்ச்சியிலே மதிப்பீட்டின சிறப்பினை உணாநது அதனுடைய வடிவமைபபை மேலும் மேலும் முன்னேற்றியிருககிறாாகள். ஒரு நல லாசிரியர் தொடர்ந்து கற்றுக் கொணடிருநதா லொழிய நல்ல கலவி முறைகளைப் பின்பற்றிக் கல்வி யின் மூலம் திறமையான மனித வளத்தை அமைத்துக் கொடுக்கும் பொறுப்பை நிறைவேற்ற இயலாது. மனித வளமேம்பாட்டில் கல்வி ஒரு சக்திவாய்நத கருவி என்பதையும், அககருவியை நலல முறையில பயன்படுத்திப் பயனைப் பெறுவதற்காக வழிவகை களை அமைக்கும் பொறுப்பு நிருவாகிகளையேயனறி ஆசிரியர்களையும் சாாந்தது என்பதையும் உணர்ந்து செயற்படப்பொறுப்புடைய அனைவரும கேட்டுக கொள்ளப்படுகிறார்கள.

இவ்வாறு மதிப்பிடுதல், கற்பிபபவர்கள குறிக் கோளகளைச்சிந்திக்கவும முன்னேறறவும உதவுகிறது. இம்மதிபபிடுதல மாணவர் குழுககளிடம், குறிக் கோள்களை அடைவதற்கான வழியை வகுககிறது. இம்மதிப்பிடுதல், குறிக்கோள்களை அடைவதற்கான சாதனங்களை வரையறுக்கிறது.

மதிப்பிடுதல் கறபவருக்கும் கற்பிப்பவர்க்கும், கற்க வேணடியவற்றிற்கும் தொடர்பு ஏற்படுத்திக் குறிக்கோள்களை அடைய உதவும், அது கற்பனை மிகுந்த ஆர்வமிக்க ஆசிரியர்களை மாறுபட்ட புதுமை யான குறிககோள்களை அமைப்பதற்கும் அவற்றை அடைவதற்குக் கையாளக்கூடிய புதியவழி முறை களை உருவாக்குதற்கும் உரிய சிறபியாக மாற்று கிறது.

மே ஜோ.ஞா.

**தைவான்:** தைவான தீவு தென் சீனக் கடலில உளளது. இத்தீவு சுமார் 36,000 ச.கி.மீ. பரப் பளவைக் கொணடது. இதன் கிழக்குப் பகுதி மலைப் பாங்கானது இத்தீவின் கிழககுப் பகுதியில வடக்கு தெற்காக உயரமான மலைகள நீணடு காணப்படு கினறன. இம்மலைகளுக்கு மேறகில் அமைந்துளள சமவெளிகள வண்டல மண படிநது செழிப்பாக உள் ளன. இத்தீவின மக்கள தொகையில் பெரும் பகுதி இங்குத்தான உளளது இத்தீவின் முக்கிய விளை பொருளகள் நெல, கருமபு, வளளிககிழங்கு, தேயிலை, பழஙகள முதலியன. நெல சாகுபடி இங்கு மிகுதி. அதனால் இஙகிருந்து அரிசி மிகுதியாக ஏற்றுமதி செயயப்படுகிறது.



தரோக்கோ மலை

இததீவின் தலைநகரம் தைப்பே (Taipeh) ஆகும். இந்நகரம் வடகோடியில் கடற்கரையில அமைந்துள ளது. இது மிகுதியான மக்களதொகை கொணட நகரமாக விளங்குகிறது. இநநகருக்கு மேற்கே 24கி.மீ. தொலைவில் உள்ள கீலங்கு (Keelung) சிறநத துறை முகம். இத்தீவின இரண்டாம் பெரிய நகரமாக விளங்குவது கவோசியுங்கு (Kaohsiung). இந் நகரம் தெற்குச் சமவெளியின் கோடியில் அமைந துள்ளது. இது இத்தீவின் மிகப் பெரிய துறைமுக மாகவும் சிறப்புப் பெற்ற தொழில் நகரமாகவும விளங்குகிறது. இத்தீவின் கடறகரையில் வாழும் மக் களின் முதன்மைத் தொழில் மீன் பிடித்தலாகும்.

இத்தீவில் வாழும் மககளுள பெருமபாலோா சீனர்கள். இது சீனாவின் மாநிலமாக விளஙகியது. இத்தீவு கி.பி. 1683–ஆம் ஆணடு முதல் புகியமாநிலத தின பகுதியாக விளஙகியது. மேலை நாட்டுமககளும சப்பானியரும் 19–ஆம நூற்றாண்டில் இத்தீவில மேலாண்மை செலுத்த முயனறனர். அதனால் கி.பி. 1887-இல் இலியூ-மிங்சுவான (Liu Ming Chuan) என்ப வரை இத்தீவின் ஆளுநராகச் சீனப் பேரரசர் நியமித் தார். அவர் இங்கு ஒழுங்கை நிலைநாட்டப் பொருளா தார வளர்ச்சிக்கு வழியமைத்தார். கீலங்கு–கிஞசு இருப்புப்பாதை அமைப்பை ஏற்படுத்திப் போக்கு வரத்தை விரிவாக்கினார். சீன–சப்பானியப் போரின விளைவாக இத்தீவினைச்‘சமோனோசெகி’ உடன படிக்கையின்படி (கி.பி. 1895) சப்பான் கவர்ந்து கொண்டது. அன்று முதல் இத்தீவு சப்பானியர் குடி யேற்றமாகவும், சப்பானியப் பொருள்கள விற்பனைச் சந்தையாகவும் விளங்குகிறது. சப்பானின் தொழில வளர்ச்சிக்கு இத்தீவிலிருந்து கச்சாப் பொருளகள பெறப்பட்டன.

இத்தீவில் சீனர்கள மிகுந்த எண்ணிக்கையில் இருந்ததால் அவர்கள் சப்பானியர் மேலாண்மையை எதிர்த்துப் போராடினர். கி.பி 1898–ஆம் ஆணடு வரை இத்தீவில் சப்பானியரின இராணுவ ஆட்சியே நடந்தது. அவவாணடில் முதலாவது சப்பானிய ஆளுநராக சிம்பீ கோட்டி(Shimpei Gote) நியமிககப பட்டார். அவர் கி.பி. 1906-ஆம ஆணடு வரை எட்டு ஆணடுகள் இத்தீவில் சப்பானியரின் ஆட்சி முறை களை நிறுவினார். தைவான் வங்கி (Bank of Taiwan) ஒன்று நிறுவப்பட்டு சப்பானிய முதலாளிகளின சுரணடல் இததீவில மும்முரமாககப்பட்டது. சப பானியர் வணிக வளர்ச்சிக்காக இத்தீவில மேறகுச சமவெளிகளில சாலைகள, புகைவண்டிப பாதைகள மற்றும் தந்தி இணைப்புகள அமைத்தனா. பாசனத் திட்டஙகள விரிவாக்கப்பட்டு நெல், கருமபு சாகுபடி கள் பெருககப்பட்டன. இததீவின் தலைநகராகிய தைப்பேயில் விவசாய ஆராய்ச்சி நிலையம் ஒன்று நிறுவப்பட்டது. சப்பானியா ஆடசியின் போது தைவானின் மக்கட்தொகை பெருகியது. இததீவில கி.பி. 1905-ஆம ஆண்டின மககள் தொகை 30 இலட் சமாக இருந்தது 1945–இல 65 இலட்சமாக உயர்ந தது. பின 1949–இல் சியாஙசின் படைகளும சீன அகதிகளும் இத்தீவில குடியேறினர்

இத்தீவில் வணிகம் வளாசசிபெறச் சப்பானியர் சருக்கரை ஆலைகள, பழங்களைப் பக்குவப்படுத்தும



நெல் காயவைத்தல, தைவானியர்

ஆலைகள செங்கற் சூளைகள், நெல அரைக்கும் ஆலைகள போனறவறறை நிறுவினர். மையத் தைவானில 1930-ஆம ஆணடில புதிய நீரமின நிலையம நிறுவப்பட்டது கவேசியுஙகு நகரைச சுறறிப பல முக்கிய தொழிலகள நிறுவப்பட்டன. இநநகரம சபபானியர் கடற்படையின முககிய தென தளமாக விளஙகியது. இந்நகரில கப்பலகட்டும தொழிற் சாலை, எணணெயசுத்திகரிபபு நிலையங்கள், இரசாயனத் தொழிலகள, சிமெணடுத் தொழிற்சாலைகள ஆகியவை நிறுவபபட்டன. சப்பானியா் இத்தீவின் பணபாட்டையும் மாற்றியமைத்தனா். சபபானிய மொழி ஆட்சி மொழியாகவும், கலவி மொழியாகவும ஆக்கப்பட்டது தைவான மககள் சபபானிய நாட்டின் இரண்டாந்தரக் குடிமககளாக நடத்தப்பட்டனர். அரசாங்கத்தின உயர் பதவிகள சபபானியருககு அளிககபபட்டுத் தைவான மக்களுக்குக் கீழான தொழில்களும் குறைநத சம்பளமுளள அரசுப் பணிகளும அளிக்கப்பட்டன.

இரணடாம் உலகப போருககுப்பின இததீவு சப்பானியரிடமிருநது பிரிக்கப்பட்டுச் சீனாவுககுக் கொடுக்கப்பட்டது. இத்தீவு 1945-இல் சீனாவின 35-ஆம் மாநிலமாக விளஙகியது. 3 இலட்சததுக்கும் மேலான சப்பானியப் படைவீராகள், அதிகாரிகள் சப்பானுக்குத் திருப்பி அனுப்பபபட்டனர். இத தீவில் 1947-ககுப் பின குடியாட்சியமைபபு ஏற்படுத்தப்பட்டு அமெரிகக நாட்டின் உதவியினால இஙகுப் பொது உடைமை ஆட்சி ஏறபடாமல் தடுக்கப்பட்டது 1952-முதல் நான்காணடுப் பொருளாதார மேம்பாட்டுத் திட்டஙகள் சில இஙகு நிறைவேறறப்பட்டன. அமெரிக்க மூலதனம் பெருமளவில வநதது.

அமெரிக்கா 1979-இல பீக்கிங்கு அரசுடன் அரசியல் உறவு ஏற்படுத்திக்கொணடு, தைவானுடன் இருந்த உறவைத் துணடித்துககொணடது. எனினும் இருநாடுகளுக்கிடையே நல்லுறவு தொடர்ந்து வருகிறது. தைவான் ஒருதனி அரசியலமைப்பைப்பெறறு விளஙகுகிறது. ஒரு தேசிய பேரவை 1947 முதல் செயற்பட்டு வருகிறது. அதில 1984-ஆம் ஆணடுத் தேர்தலபடி 1080 பேராளர்கள தோநதெடுககப்பட்டிருந்தனா. இசசபை ஐநது ஆலோசனை சபைகள மூலம் செயறபடுகிறது. இந்நாட்டில மூனறு அரசியல் கட்சிகள உளளன அவையாவன: 1)ஆட்சிபுரியும்கோமின்டாங்கு (Kuomintang) - 1982 கணககுப்படி 2 மில்லியன் உறுபபினர்கள. 2)இளஞ்சீனக்கட்சி, 3) சீனமக்களாட்சிச் சமஉடைமைக் கட்சி. இநநாட்டில எதிாக்கட்சியினர் தேர்தலுககுத் தகுதியுடையவர்கள அல்லா; மாநிலப் பேரவை ஒனறு 77 உறுப்பினர்களுடன் செயற்பட்டு வருகிறது. தலைமை அமைச்சர் ஒருவரும உதவித்தலைவா ஒருவரும பணிபுரிகின்றனர்.

தைவான இப்பொழுது சீனக் குடியரசின ஒரு பகுதி அனறு; அமெரிக்காவை நம்பித் தனி அரசுடையதாக விளஙகுகிறது. சீனா, தைவான தனது அரசுககு உட்பட வேணடுமெனறு விரும்பி, அத்தகைய உரிமையைக் கைவிட்டு விடாமல காத்து வருகிறது.

பி.சி.

**தொ** நாக்கு மேலண்ணத்தின் நுனியை ஒட்டியபடி வரும் ஒலியோடு வாயைக் குவித்து வரும் ஒலியும் கலந்துவந்தால் தொ என்ற ஒலி பிறக்கும். தகர ஒகரங்களின் குறிப்பைப் பார்க்க.

**பொருள்:** தனி ஒரு மொழியாக இதற்கு ஒரு பொருளும் இல்லை. ஆனால் இவ்வோர் எழுத்தைத் தொடக்க எழுத்தாகக் கொண்டுவரும் சொற்கள் 600க்கும் மேற்பட்டன என்று சொல்லப்படுகிறது.

**வடிவம்:** பழந்தமிழ்க் குகைக் கல்வெட்டுகளில் (கி.பி. 3-ஆம் நூற்றாண்டு) இதன் உருவம் முறையாகவே தோன்றுகிறது. இருபுறமும் கோடுகள் இழுக்கப் பட்டன. ... ... ...

இக்கோடுகள் இடப்புறம் கொம்பாகவும் வலப்புறம் காலாகவும் மாறி வந்தன. கி.பி.7-ஆம் நூற்றாண்டில் பல்லவ பரமேச்சுரவர்மனின் கூரம் செப்பேட்டில் இது காணப்படுகின்றது. குறிலாக வரும்பொழுது சில கல்வெட்டுகளில் புள்ளி குத்தப் பெற்றது. இதுவே இன்றளவும் நிலை பெற்றது. ... ... ...

கே.ஜி.கி.

*தொகுகாவாச் சோகன்கள்:* சப்பானில் சோகன்கள் (Shogunate) ஆட்சி கி.பி.1192-ஆம் ஆண்டில் தொடங்கியது. இவ்வாட்சியைப் படையாட்சி அல்லது இராணுவ ஆட்சி என்று குறித்தனர். இவ்வாட்சி தோன்றியபிறகு தொகுகாவாச் சோகன்கள் (Togugava-Shogonate) கி.பி 1603 முதல் 1867 வரை அரசாட்சி செய்தனர். தொகுகாவா இயேயாசு உள்நாட்டுப் போரில் வெற்றிபெற்று கி.பி.1603-ஆம் ஆண்டில் சோகனானார். இவர் தம் குடும்பத்தினரே 'தொகுகாவாச்சோகன்கள்' என்ற பெயரில் சப்பானை கி.பி.1867-ஆம் ஆண்டு வரை அரசாட்சி செய்தனர். இவர்கள் எதோ (Yedo) என்ற நகரைத் தலைநகராகக் கொண்டனர். பழைய எதோ நகரமே இன்றைய 'தோக்கியோ' நகரமாகும். இவர்கள் ஏறத்தாழ 265 ஆண்டுகள் ஆண்டனர். இவர்கள் சப்பானிய வரலாற்றையே மாற்றியமைத்துச் சமூக, பொருளாதார அரசியல் அமைப்புகளில் சீரமைப்புச்செய்து, புதிய வலுவான ஆட்சியை ஏற்படுத்தினர்.

தொகுகாவா சோகன் குடும்பத்தை ஏற்படுத்தியவர் இயேயாசு என்பவராவார். இவர் கி.பி.1542-இல் மிகாவா என்னும் மாநிலத்துச் சிற்றூரில் பிறந்தார். இவர்தம் முன்னோர்கள் மினாகமாத்தோக்களின் மரபு வழியில் வந்தவர்கள். அவர்கள் தொகுகாவா என்னும் ஊரில் வாழ்ந்தவர்கள் ஆதலின் தங்கள் பெயர்களுக்குமுன் 'தொகுகாவா' என்னும் அடைமொழியைச் சேர்த்துக் கொண்டனர். அதனால், இயேயாசும் தம்மைத் 'தொகுகாவா இயேயாசு'எனக் குறிப்பிட்டுக் கொண்டார். இவரைத் தொடர்ந்து 'சோகன்களாக' விளங்கிய இவர் குடும்பத்தினர் தங்களைத் 'தொகுகாவாச்சோகன்கள்' என்று கூறிக் கொண்டனர். இவர்கள் படைவீரக் குடும்பங்களைச் சேர்ந்தவர்கள்.

இவர்கள் மாமன்னர் வசித்த கோநகருக்கப்பாலிருந்த படை வீட்டுத் தலைமையலுவலகமாகிய 'எதோ' நகரிலிருந்து ஆண்டனர். மாமன்னர்கள் தங்களுக்கென ஓர் அவையை நிலையாக வைத்துக் கொண்டு அதிலிருந்து தங்கள் உத்தரவுகளைப் பிறப்பித்தனர். ஆனால், படைவீரர் குடும்பங்கள் 'சோகன்' பதவியைப் பரம்பரையாகப் பெற்று ஆண்டன. அவர்கள் தங்கள் தலைநகரிலிருந்து

உத்தரவுகளைப் பிறப்பித்துச் சப்பானை ஆணடனர். இவவாறு 'மீகாடோ' எனக் குறிக்கப்பட்ட மாமன னர் ஒருபுறமும்,சோகன்களஒருபுறமும் 676 ஆணடுகள் சப்பானை ஆண்டனர். இவவித ஆட்சி சப்பானிய இரட்டையாட்சிமுறை' என்று கூறபபடுகிறது. தெய் விகப் பேரரசர்கள் கியோத்தோவில் வாழ்ந்தும், அவர் கள ஆட்சி அதிகாரங்களைச் சோகன்கள கைப்பற்றி ஆணடதால் மாமன்னர்கள இருந்தும் இல்லாதவா களாகவே காணப்பட்டனர். தொகுகாவாச் சோகன் கள் குடும்பமே கடைசிச் சோகன் குடும்பம். கெய்கி (Keiki) என்று கூறப்பட்ட யோசிநோபு(Yoseinobu) என்பவர் கி.பி. 1865-இல் தொகுகாவாக்குலத்தின் கடைசிச் சோகனாக விளங்கினார். சோகனகளுக்கு எதிரான புரட்சியின் விளைவாக மாமனனர், தொகு காவா யோசிநோபுவை கி.பி. 1867-ஆம் ஆணடு பதவி விலகும்படி ஆணையிட்டார். மககளின் கிளர்ச் சிக்கு மதிப்பளித்து கி.பி. 1867-ஆம் ஆணடு யோசிநோபு தமது பதவியைத் துறநதார். அஙகு 676 ஆணடுகள இருந்துவநத இரட்டை ஆட்சி ஒழிநது, அதிகாரங்கள் அனைத்தும் பேரரசா கையில வந்தன.

தொகுகாவாக்களின் காலத்தில் நிலககிழமை உச்சநிலை யடைந்தது. இயேயாசு சிறந்த கட்டடங் களைக் கட்டினார். எதோ நகருக்குப் பல அறிஞா களை வரவழைததுப் பல பளளிகளை அமைத்துச்சீன இலக்கியங்களையும் மற்றும் பல கலைகளையும் பயிறறு விக்கச் செய்தார். அச்சுப்பொறி அமைத்துப் பல நூலகளை அசசிட்டு வெளியிட்டார். நிலக்கிழார்களை ஊககப்படுத்தி அவாகள் நன்மதிப்பைப் பெறறாா. இவர்கள் காலததில் சபபானிய நாட்டில் பல மாற்றங களை நிகழ்ந்தன. ஐரோப்பியர் சப்பானில நுழைநதனர். தச்சுக்காராகள கி.பி 611-இல் அங்கு வணிகம செய யும உரிமைபெற்றனர்.

இவர்கள காலத்தின் சிறப்பான கூறுபாடுகள நகரஙகளின் தோற்றமும், நகர வாழ்ககை முறையின் வளர்ச்சியுமாகும். எதோ என்ற அவாகளது தலை நகரம் புகழபெற்று விளங்கி இன்று முதனமை நகர மாகிய தோககியோவாகத் திகழ்கிறது. அரசவைக கிழார்களும், அரசுப் பெரும் பணியாளர்களும் நாட்டுப் பணிகளில் ஈடுபட்டுப் பல பகுதிகளில செயலாறறி னாலும் அவர்கள் குடும்பங்கள எதோவிலேயே தஙகி யிருநததால் அந்நகர மக்கள தொகையும், நாகரிக மும் உலகப் பெரு நகரங்களில ஒன்றாக மதிக்கத தக்கவாறு வளர்ந்தன.இவர்கள் காலததில புத்தமதம் சீருடன் வளர்ந்தது. பல விலையுயர்ந்த சிலைகளும், கோயில்களும் அமைக்கப்பட்டன. கன்பூசிய மதம் தொகுகாவாக்குலத்தவரால் பின்பற்றப்பட்டதால் அம்மதமும் சிறப்புடன வளர்ந்தது. இவர்கள கலை யழகு மிளுரும் கவின்மிகு அரணமனைகளைக் கட்டி னர். நுண்கலைகளும்,வீரப்பண்பும்வளர்ச்சிபெற்றன.

சென புத்த சமயப் பிரிவினர் கலை நுணுக்க முள்ளஅணியழகு கொணட பல்கலைகளையும் தங்கள் கோயில்களில் வளர்த்தனர். வண்ணக் குழம்புகளைக் கொண்டு ஓவியங்கள் தீட்டுதல், அச்சடித்தல் ஆகியவை இக்காலத்தில் புதியமெருகுடன்வளர்ந்தன. பலர் கூடிப் பல்வகை இனனிசைகளுடன் நடத்தும நோ (NO) எனப்படும் நாடகக் கலை இக்காலத்தில தான் வளர்நதது.

போர்ச்சுகீசியர் கி.பி. 1642-இல் சப்பானில் இறங்கியபின் கிறித்தவ மதம் இஙகுப் பரவியது. இங்கு கி பி. 1603-ஆம் ஆண்டிலிருந்து கி.பி.1868-ஆம் ஆண்டு வரை 15 தொகுகாவாக்கள் ஆண்டனர்.அவர் கள் காலத்தில் கடலவழிப் போக்குவரத்து மிகவும் சிறப்புற்று விளஙகியது. உறகா, நாகசாகி ஆகிய துறை முகங்களில மேலநாடடு முறையில் கப்பல் தளங் கள் அமைக்கப்பட்டன. முதனமுதலில் கி.பி. 1852 -ஆம் ஆணடு அமெரிக்கத தளபதி மேத்தியூ-சி-பெரி (Commodore Matheoo-C-Perry) சப்பானில இறங்கி கி.பி. 1854-ஆம் ஆண்டில அங்கு வணிகம் செய் யும் உரிமையைப் பெற்றார். தொகுகாவாககளின ஆட்சி சப்பானிய வரலாற்றில் முககிய இடம் பெறற ஒன்றாகும. பெ.சி.

**தொகுதிக் கொடைகள்:** சொததுரிமை மாற்றுச் சட்டத்தின 15-ஆம் பிரிவு தொகுதிக் கொடையை (Class Gift) விளககிக் கூறுகிறது. இப் பிரிவினபடி, சொத்துரிமை மாற்றம நிகழுங் காலத் தில் ஒரு தொகுதியினா நன்மைக்காக நலன் ஒன்று ஏற்படுததப்பட்டு அவர்களில சிலரின் நலன கள் சொத்துரிமை மாற்றுச் சட்டத்தின 13-ஆம், 14-ஆம பிரிவுகளில் கூறப்பட்டவிதிகளினால் பாதிக கப்படுமானால், அவர்களின் நலனகள மட்டுமே பாதிக்கப்படும். மற்றவர்களின் நலன்கள் பாதிக்கப் பட மாட்டா. 13-ஆம பிரிவு பிறக்கவிருக்கும் மக களின பேரில் ஏறபடுத்தப்படும சொத்துரிமை மாற் றததைப் பறறியும், 14-ஆம் பிரிவு வரையிலா நிலைக்கு எதிரான விதியைப் (Rule against perpetuity) பறறியும் கூறுகின்றன.

இவ்வமயத்தில் தொகுதிக கொடை எனனும சொறறொடரின முழுப பொருளை அறிவது பய னுடையது. ஒரு தொகுதியினா எனபவாகள ஒரு குறிப்பிட்ட இனத்திறகுள அல்லது பொதுவான விளககத்தின் கீழ் வருபவாகள் ஆவர். அவர்களுககுக கொடுக்கப்படும் கொடை, தொகுதிக் கொடை எனப் படும். கொடையளிககப்படும் காலத்தில அவர்களின் எண்ணிக்கை உறுதி செயயப்படாமல், பின்னர் எதிர் காலத்தில் உறுதி செய்யப்படக் கூடியவருக்கு ஒட்டு மொத்தமாகக் கொடையொன்று அவர்களுக்கு அளிக்கப்படுகிறது. அவர்கள் எல்லாரும் சமமாக

அல்லது திட்டவட்டமான வீதப்படி பங்கினைப் பெறுவர். அவர்களின் ஒவ்வொரு பங்கும் இறுதியாகவுள்ள மக்களைப் பொறுத்து அமைந்திருக்கும். இவ்வாறாக ஓர் உரிமை மாற்றத்தில் கொடையொன்று மாற்றம் செய்பவருடைய 'மகனுடைய மகன்களுக்கு' அல்லது 'மகன்களின் மகள்களுக்கு' என்று கூறப்பட்டிருந்தால் அது தொகுதிக் கொடையாகும்.

இதைப் போன்ற சட்டவிதி 1925-ஆம் ஆண்டு இந்திய இறங்குரிமைச் சட்டத்தின் 115-ஆம் பிரிவின் கீழ்க் கூறப்பட்டுள்ளது. இந்த இரு பிரிவுகளும் 1929-ஆம் ஆண்டில் திருத்தப்பட்டன. அச் சட்டத் திருத்தத்திற்கு முன்பிருந்த சட்டவிதி இப்போதுள்ள சட்டவிதிக்கு நேர்மாறானது.இலீக்குஎதிர் இராபின்சன் என்ற ஆங்கில வழக்கின் தீர்ப்புரையை அடிப்படையாகக் கொண்டது. இந்தப் பழைய விதியின் படி ஒரு தொகுதி மக்கள் மீது நலன் ஒன்று கொடுக்கப்பட்டு அதில் சிலரின் நலன்களாவது 13, 14-ஆம் பிரிவுகளில் கூறப்பட்ட விதிகளினால் பாதிக்கப்பட்டால், முழுத்தொகுதி மக்களின் நலன்களும் பாதிக்கப்படும்.

இப் பிரிவின் செயல் தன்மை குறித்து நீதிபதி முகர்சி அவர்கள் இராசு பாசரசு பகதார்சிங்கு எதிர் தாகுராயன் பத்த இராசு குயூர் (AIR 1953 SC 7) என்ற வழக்கில் தீர்ப்புரை வழங்கும்போது பின்வருமாறு கூறியுள்ளார்: பிறக்கவிருக்கும் குழந்தைமீது எந்த உரிமையையும் ஏற்படுத்த முடியாது என்பது உண்மை. ஆனால் ஒரு தொகுதி அல்லது குழுவினர்களுக்குக் கொடை ஏற்படுத்தும்போது சிலர் உயிரோடு இருக்கலாம். சிலர் அவ்வாறு இல்லாமலுமிருக்கலாம். இது முழுவதுமாக அழிவுறுவதில்லை. உயில் இயற்றுபவர் இறக்கும்போது உயிரோடு இருந்தவர்களைப் பொறுத்து அது செல்லும், மீதியுள்ளவர்களைப் பொறுத்துச் செல்லாது. ஆ.ச.

**தொகுதி மாற்றி அமைத்தல்**: வாக்காளர் தொகுதிகளிலே, ஒரு குறிப்பிட்ட அரசியற் கட்சிக்கு அடுத்து நடைபெற இருக்கும் தேர்தலிலே சில நற்பயன்கள் கிடைக்கும் பொருட்டு, அத்தொகுதிகளின் எல்லைகளைச் சிறிது மாற்றி அமைக்கும் செயலுக்குத் தொகுதி மாற்றி அமைத்தல் (Gerrymandering) என்பது பெயர்.

ஐக்கிய அமெரிக்க நாட்டில் மசாசுசெட்சு மாநிலத்தின் ஆளுநராக எல்பிரிட்சு செரி (Elbridge Gerry) என்பவர் கி.பி. 1812-இல் இருந்தபோது, அந்த மாநிலச் சட்டமன்றம், எசக்சு வட்டத்தை (Essex County) இரு மாவட்டங்களாகப் பிரித்து அம்மாவட்டங்களின் எல்லைகளை மாற்றி வரைந்தது. அப்போதிருந்த குடியரசுக் கட்சிக்கு மிகுதியான வாக்குகள் கிடைத்தற்காக இவ்வாறு செய்யப்பட்டது. இவ்விரு மாவட்டங்களைக் காட்டும் வரைபடத்தில் ஒரு மாவட்டத்தோடு சேர்க்கப்பட்ட பகுதிகள் எழுதுகோலினால் (Pencil) காட்டப்பட்டிருந்தன. அவ்வாறு காட்டப்பட்ட நிலப்பகுதிகள் ஓர் உடும்புபோல் காணப்பட்டன. உடும்பு என்பதைக் குறிப்பிடும் ஆங்கிலச் சொல்லாகிய 'சலமாண்டர்' (Salamander) என்பதிலிருந்து, இவ்வாறு தொகுதி மாற்றி அமைக்கும் செயலைக் குறிப்பிடுதற்குச் 'செரிமாண்டரிங்' (Gerrymandering) என்ற புதிய சொல் புனையப்பட்டது.

தொகுதிமாற்றி அமைத்தல் என்பது ஒரு குறிப்பிட்ட அரசியற் கட்சிக்கு வாக்குகள் கூடுதலாகக் கிடைத்தல் வேண்டுமென்பதற்காகத் தொகுதிகளின் எல்லைகளைச் சிறிது மாற்றி அமைத்தலைக் குறிப்பிடுகிறது. இது சம இடப் பங்கீட்டு முறையினின்றும் (Redistribution system) வேறுபட்டதாகும். ஒவ்வொரு பாராளுமன்ற உறுப்பினரும்ஏறக்குறையச்சம எண்ணிக்கையுள்ள வாக்காளர்களின் பேராளராக இருத்தல் வேண்டுமென்ற நோக்கத்தோடு தொகுதிகளின் எல்லைகளை மாற்றி அமைத்தலே சம இடப் பங்கீட்டு முறை ஆகும்.

ஆளும்கட்சி தன் நிலையை அடுத்துவரும் தேர்தலில் வலுப்படுத்திக் கொள்ளும் பொருட்டுக் கையாளும் பல வழிகளுள் தொகுதிமாற்றி அமைத்தலும் ஒன்றாகும். பா.சு.

**தொகுதி வரையறை செய்தல்**: ஒரு சட்டமன்றப் பேரவையின் பிரதிநிதித்துவம் (Representation), பல தேர்தல் தொகுதிகளாகப் பிரிக்கப்படும் செய்முறையே 'தொகுதி வரையறை செய்தல்' (Delimitation of Constituency) எனப்படும்.

தொகுதி வரையறை செய்தல் என்பது மிகத் தொன்மையானது. பண்டைய பேரவைகளிலும், ஏதென்சு நகரப் பேரவையிலும் மரபுக் குழுக்களின் (Tribal) தலைவர்கள், போர்வீரர்கள், அடிமையல்லாத குடிமக்கள் முதலியவர்கள் நேரடியாகப் பிரதிநிதித்துவம் பெற்றனர். அதன்பிறகு ஆண்ட அரசர்களின் அரசவைகளில், சமுதாயத்தின் சிலவகுப்புகள், அரசியலில் உரிமையுள்ள வகுப்பினர் (Estates), பெருமக்கள் குடி (Nobility), சமயக் குருமார்கள் (Clergy), வாணிகக் குழு (Guild), கல்வியாளர்கள் ஆகியோர்களுக்குப் பிரதிநிதித்துவம் பகிர்ந்தளிக்கப்பட்டது.

குடியாட்சி (Democracy) வழக்கத்திற்கு வந்த பிறகு, பல அரசியல் கட்சிகள் தோன்றின. வாக்குரிமையும் (Suffrage) விரிவுபடுத்தப்பட்டது. அதனால், இக்காலத்தில் தொகுதி வரையறை செய்தல் ஒரு

சிக்கலான செயலாகும் எனவே, சட்டமன்ற இடங் களை வாக்காளர்களின் விருப்பத்தை மிகச் சரியாக வெளிப்படுத்த அவற்றைப் பகிர்வு செய்யும் முறை, முன்பைவிட இக்காலத்தில் மிகுந்த கவனத்தோடும் முறையோடும் கணிதவியல் துணை கொண்டும் செய யப்படுகிறது.

இவ்வாறு தொகுதி வரையறை செய்யும் முறை யில் ஐந்து வகைகள் இருக்கின்றன. ஒவ்வொரு வகை யும் ஒரு குறிப்பிட்ட தேர்தல் தொகுதிக்கு ஏற்புடைய யதாகும். அவை பின்வருவன: 1) மக்கள் தொகையை (Population) ஆதாரமாகக் கொண்டு தொகுதி வரையறை செய்தல். ஒவ்வொரு தொகுதியும் குறிப் பிட்ட நில எல்லைகளைக் கொண்டதாகவும், குறிப் பிட்ட வாக்காளர் எண்ணிக்கையைக் கொண்டதாக வும் இருக்கும். இதுவே பெரும்பாலான நாடுகளில் கடைப்பிடிக்கப்படும் முறையாகும். எடுத்துக்காட் டாக, இந்திய நாடாளு மன்றத்தின் மக்களவை, மாநிலங்களின் சட்டமன்றம், இவைகளின் பிரதி நிதித்துவம் ஆகியவை இம்முறையில் வரையறை செய்யப்படுகின்றன. 2) அரசாங்கம் அல்லது நிலப் பகுதியை (Governmental or geographical units) ஆதாரமாகக் கொண்டு வரையறை செய்தல். எடுத் துக்காட்டாக, அமெரிக்க ஐக்கிய நாடுகளின் ஆட்சிப் பேரவை (Senate), ஒவ்வொரு மாநிலத்திலிருந்தும், தேர்ந்தெடுத்த இரண்டு உறுப்பினர்களைக் கொண் டது. 3) இனம், தொழில், பல்வேறு சமூகக் குழுக்கள் (Social groups), நாட்டினம் (Nationality) சார்ந்த குழுக்கள் ஆகியவற்றிற்குப் பிரதிநிதித்துவம் வழங் கித் தொகுதி வரையறை செய்தல். 4) செல்வத்தின் (Wealth) அடிப்படையில் வரையறை செய்தல். தொடக்க காலத்தில், ஐக்கிய அமெரிக்க நாடுகளின் மாநிலங்களில் சொத்துடையவர்களே (Property) வாக்குரிமை பெற்றிருந்தார்கள். 5) அரசியல் கட்சி களை ஆதாரமாகக் கொண்டு தொகுதி வரையறை செய்யலாம். இம்முறை விகிதாசாரப் பிரதிநிதித்துவ (Proportional Representation) முறைத் தேர்தலில் பின்பற்றப்படுகின்றது.

தொகுதிகளுக்கிடையே அளவுகள் வேறுபடுவது என்பது ஒரு முக்கிய சிக்கலாக இருப்பதால், அவ்வப் போது தொகுதிகளின் நில எல்லைப் பகுதிகளை (Territorial boundaries) அந்தந்தத் தொகுதி மக்கள் தொகைக்கேற்ப மாற்றியமைத்தல் இன்றியமையாத தாகும். கி.வி.

**தொகுப்புச் சமநிலை:** நிலம், உழைப்பு, மூலதனம், அமைப்பு ஆகிய காரணிகளைப் பயன் படுத்திப் பயன்பாட்டைப் படைக்கும் (ஏதேனும் ஒரு பண்டத்தை அல்லது பணியை உற்பத்தி செய்யும்) அமைப்பை நிறுவனம் (Firm) என்பர். நிறைவுப் போட்டி நிலவும் அங்காடியில் நிறுவனங்களின் பொதுப் பெயர் தொழில் (Industry). நிறைகுறைப் போட்டி நிலவும் அங்காடியில் விற்பனையாளர்கள் அல்லது உற்பத்தியாளர்களின் எண்ணிக்கை அடிப் படையில் முற்றுரிமை (Monopoly), இருவர் முற்று ரிமை (Duopoly), ஒருசிலர் முற்றுரிமை அல்லது சில்லோர் முற்றுரிமை (Oligopoly), முற்றுரிமைப் போட்டி (Monopolistic Competition) போன்ற பல அங்காடிகளாக வகைப்படுத்துவது இயல்பு. முற்று ரிமைப் போட்டி அங்காடியில் நிறுவனங்களின் பொதுப் பெயர் தொகுப்பு (Group).

(அ) மற்றவர்களைச் சார்ந்திராமல் தனித்தியங் கும் பல விற்பனையாளர்கள் அல்லது உற்பத்தி யாளர்கள் செயற்படுதல், (ஆ) மற்ற நிறுவனங் களின் பண்டங்களை ஒத்த பண்டங்களை உற்பத்தி செய்தல், (இ) முற்றிலும் நெகிழ்வுத் தன்மையுடைய உற்பத்திப் பணிகள் இருத்தல், (ஈ) ஏராளமான நுகர்வோர் இருத்தல், (உ) நிறுவனங் களிடையே முற்றிலும் நிறைவான போட்டி இருத்தல் போன்ற பல இயல்புகளை முற்றுரிமைப் போட்டி அங்காடி பெற்றிருக்கும்.

தொகுப்பில் உள்ள நிறுவனங்களுள் ஒவ்வொன்றும் பிற நிறுவனத்தின் அல்லது நிறுவனங்களின் பண்டங் களுக்கு அல்லது பணிகளுக்கு நிறைவான பதிலிகளாக இல்லாமலும் (noperfect substitute) அதே நேரத்தில் ஒத்ததாகவும் (Similar) உள்ள பண்டத்தை அல்லது பணியை உற்பத்தி செய்கின்றன. எனவே, ஒவ்வொரு நிறுவனமும் அதனதன் விலைக் கொள்கைகளின்படி செயற்பட வாய்ப்பு உண்டு. அதாவது விலையைக் குறைத்து உற்பத்தி அல்லது விற்பனை அளவைப் பெருக்கவும், அல்லது விலையை அதிகரித்து குறை வான விற்பனை அல்லது உற்பத்தி அளவை ஏற்றுக் கொள்ளவும் நிறுவனங்கள் இருக்கின்றன. அதன் விளைவாக, ஒவ்வொரு நிறுவனத்தின் இறுதிநிலை, சராசரி வருவாய்க் கோடுகள் படம் 1இல் காட்டப் பட்டுள்ள வண்ணம் மேலிருந்து கீழ் நோக்கிச் சரிந்து செல்லத் தக்கவையாக அமையும்.

எல்லா நிறுவனங்களும் அதனதன் உற்பத்திச் சிக்கனங்கள் (Economies of Production), உற்பத்தி எதிர்ச் சிக்கனங்கள் (Diseconomies of Production) அடிப்படையில் நிறுவனங்களின் சராசரி, இறுதி நிலைச் செலவுக் கோடுகள் படம் 2 இல் காட்டப் பட்டுள்ளமைபோல அமையும்.

**சமநிலை** நிறுவனம், உச்ச அளவு மொத்த இலாபத்தைப் பெறத் தக்க உற்பத்தி அளவை உற்பத்தி செய்து கொண்டிருக்கும்போது சமநிலை யில் (equilibrium) இருக்கிறது என்பர். அதாவது, அந்த




படம் 1

உற்பத்தி அளவிற்கு அதிகமாகவோ குறைவாகவோ உற்பத்தி அளவை மாற்றியமைக்கும்போது மொத்த இலாபம் உச்ச அளவைக் காட்டிலும் குறைந்து விடுகிறது. எந்த உற்பத்தி அளவில் நிறுவனத்தின் இறுதி




படம் 2

நிலை வருவாயும், இறுதி நிலைச் செலவும் சமமாக அமைகிறதோ அந்த உற்பத்தி அளவே சமநிலை உற்பத்தி அளவு. இதைப் படம் 3 காட்டுகிறது. படம் 3 இல் E என்ற புள்ளி சமநிலைப் புள்ளி; OQ சமநிலை உற்பத்தி அளவு. E என்ற புள்ளியில் MRக்குச் சமமாக இருக்கிறது என்பதோடு, MC கோடு MR கோட்டைக் கீழிருந்து மேல் நோக்கி வெட்டிக் கொண்டு செல்கிறது.

தொகுப்பில் உள்ள எல்லா நிறுவனங்களும் சமநிலையில் இருக்கும் நிலையைத் தொகுப்புச் சமநிலை (group equilibrium)என்பர்.

தொகுப்பில் உள்ள ஒவ்வொரு நிறுவனத்தின் சராசரி, இறுதிநிலை வருவாய்க் கோடுகளும் மாறுபட்டிருப்பதால் எல்லா நிறுவனங்களும் ஒரே நேரத்




படம் 3

தில் சமநிலையில் இருக்கத் தக்கதொரு நிலையைக் காண்பது அரிது. எனவே, கோட்பாட்டளவில் தொகுப்பின் சமநிலையை விளக்குவதற்காகப் பேரா




படம் 4 குறுங்காலச் சமநிலை




படம் 5 நீண்டகாலச் சமநிலை

சிரியர் சேமபர்லின (Prof. Chamberlin) விலை, உற்பததி அளவுகளில் உளள பலதரபபட்ட நிலைகளைத் (Hetrogeneous condition) தவிர்ப்பதற்காக இரு பெரும் எடுகோளகளை அமைத்துத் தொகுப்புச் சம நிலையை விளக்குகிறார்.

பணட வேறுபாடு இருநதாலும் தொகுப்பில உளள எலலா நிறுவனங்களின சராசரி, இறுதிநிலை வருவாயக் கோடுகளும், சராசரி, இறுதி நிலைச செலவுக் கோடுகளும ஒரேமாதிரியாக இருக்கினறன எனற 'ஒரு மாதிரி எடுகோளையும' (Uniformity assumption), விலையைப பறறியும உற்பத்தி அளவைப் பறறியும தனியொரு நிறுவனம மேற கொளளும் முடிவுகள மொதத நிலையை மாறறியமைக்கும் அளவிற்கு வலுவற்று மிக மிகச் சிறியவைகளாக இருக்கின்றன எனற 'இருபுற ஒரே மாதிரி எடுகோளையும்' (Simmetry assumption) பேரா சிரியர் சேமபர்லின் அமைத்துககொண்டு, குறுஙகால, நீணடகாலத் தொகுபபுச் சமநிலையைவிளககுகிறார.

தொகுப்பில உளள எலலா நிறுவனஙகளும் குறுங்காலததில் E என்ற சமநிலையில இருப்பதால் எல்லா நிறுவனஙகளும் இயலபுககுமேல அதிக இலாபததைப் (abnormal profit) பெறும் நிலையைப் படம 4-உம், தொகுப்பில உள்ள எலலா நிறுவனஙகளும நீணட காலத்தில E என்ற சமநிலையில் இருந்து இயல்பு இலாபத்தை மட்டுமே பெறும் நிலையைப் படம் 5-உம் விளக்குகின்றன. தொகுப்பில் உளள நிறுவனஙகளுக்கிடையே உளள போட்டியின விளைவாக நீணட காலததில எலலா நிறுவனங்களும இயல்பு இலாபததை மட்டுமே பெறுகின்றன.

என் எஸ்.பா.

**துணை நூல்கள்:**


Chamberlin, E.H., Theory of Monopolistic Competition (5th ed), Harvard University Press, 1947.

Dervett, K.K., Modern Economic Theory, S. Chand & Co., New Delhi, 1983.

Ryan, W.J.L., Price Theory, Macmillan & Co, London, 1964.


**தொகுப்புத் தேவை:** பணட அங்காடியை நிறைவுப் போட்டி நிலவும் அஙகாடி, நிறைகுறைப் போட்டி நிலவும் அங்காடி என இருவகையாகப் பொருளியலில பிரிததுக் குறிப்பிடுவர். நிறைகுறைப் போட்டி அங்காடியை முற்றுரிமை அஙகாடி, இருவர் முற்றுரிமை அஙகாடி (Duopoly), ஒருசிலா முற்றுரிமை அஙகாடி, சில்லோர் முற்றுரிமை (Oligopoly), முற்றுரிமைப் போட்டி அஙகாடி (Monopolistic Competition) எனப் பலவகைபபடுத்துவர். முற்றுரிமைப் போட்டி அஙகாடியில நிறுவனஙகளின் பொதுப் பெயா தொகுப்பு (Group) எனப்படுகிறது.

1) நிறைவுப போட்டியில இருப்பதைப் போனறு ஏராளமான நிறுவனஙகள இலலாவிட்டாலும், ஒன றோடொனறு போட்டியிடும முறறுரிமைத தனமையுடைய அதிகமான நிறுவனங்கள இருததல, 2) வேறுபடுத்தப்பட்ட (Differentiated) பணடஙகள ஒன்றுக்கொனறு நெருக்கமான பதிலிகளாகப் பயனபடுதல 3) விலையின மீது நிறுவனஙகளுக்குக கட்டுபபாடு இருததல, 4) முறறுரிமை தோன்றி விடுமோ என்ற அச்சத்தில நிறுவனஙகளுககிடையே கடுமையான போட்டி இருத்தல, 5) புதிய நிறுவனஙகள தொகுப்பில சேருவதறகும் ஏறகெனவே இருககும நிறுவனஙகள தொகுபபை விட்டு வெளியேறுவதறகும வாயப்புகள இருத்தல், 6) விளமபரம், பண்ட வேறுபாடு ஆகிய அடிப்படைகளில விலை தவிர உளள பிற வடிவஙகளில (Non-price forms) நிறுவனஙகளிடையே போட்டி நிகழதல, 7) உறபததிச செலவும் விறபனைச் செலவும் சேர்நதனவாக உறபததிச செலவு இருத்தல, 8) நிறுவனம அதன முழுத திறனையும் பயனபடுத்தாமல எசசத் திறனைப் பெறறிருத்தல ஆகிய பல இயலபுகளை முறறுரிமைப போட்டி அங்காடி பெறறிருக்கும. இவ்வியலபுடைய முறறுரிமைப போட்டி அஙகாடியில நிறுவனத்தின தேவைக் கோடு மேலிருந்துகீழ் நோககிச் செல்லத தகககதாகப் படததில காட்டியுளளபடி அமையும். அதாவது விலையை அதிகரிததால தேவையின அளவை அஙகாடிநிருணயிக்கும். குறிப்பிட்ட அளவுக்குப பணடங்களை விறக வேணடுமென்று விருமபினால விலையின் அளவை அஙகாடி நிருணயிககும.




படம் 1 DD- நிறுவனத்தின தேவைக்கோடு

தொகுப்பில் பல நிறுவனங்கள் இருக்கின்றன. அவற்றிடையே கடுமையான போட்டி நிலவுகிறது. தொகுப்பில் உள்ள நிறுவனம் ஒவ்வொன்றும் அது உற்பத்தி செய்யும் பண்டத்தில் முற்றுரிமைத் தன்மையைப் பெற்றிருக்கும். அதே நேரத்தில் இந் நிறுவனங்கள் உற்பத்தி செய்யும் பண்டங்கள் ஒன்றுக்கொன்று நெருங்கிய பதிலிகளாக இருப்பதால் அவற்றிடையே போட்டியும் நிலவுகிறது. நிறுவனம் ஒவ்வொன்றும் உற்பத்தி செய்யும் பண்டத்தில் முற்றுரிமைத் தன்மை பெற்றிருப்பதால் ஒவ்வொரு நிறுவனத்தின் சராசரி, இறுதிநிலை வருவாய்க் கோடுகள் பலவிதமான நிலைகளில் இருக்கும். எனவே, தொகுப்பிற்கெனத் தனித் தேவைக் கோட்டை அமைத்தல் எளிதன்று. தொகுப்பின் தேவைக் கோட்டை அதன் வழியாகத் தொகுப்புச் சமநிலையையும் (காண்க: தொகுப்புச் சமநிலை) விளக்குவதற்காகப் பேராசிரியர் சேம்பர்லின் (Prof. Clamberlin) கீழே குறிப்பிடப்பட்டுள்ள இன்றியமையாத சில எடுகோள்களை (Assumptions) அமைத்துக் கொள்கிறார். 1) நீண்ட காலம், 2) பண்டத்தின் தரம் நிலையானதாக இருக்கிறது, 3) விற்பனை முயற்சி எதுவும் இல்லை, 4) நிறுவனங்களின் தேவைக் கோடுகள் எல்லாம் ஒரே மாதிரியாக உள்ளன (Symmetry assumption), 5) போட்டியிடும் நிறுவனங்களுக்கிடையே போட்டி மனப்பான்மையுடன் ஆன எதிர் நடவடிக்கைகள் இல்லை (Uniformity assumption). இவ்வெடு கோள்களின் அடிப்படையில்




படம் 2 தொகுப்பின் தேவைக்கோடு

தொகுப்பின் தேவைக்கோடு மேலிருந்து கீழ் நோக்கிச் செல்லத் தக்கதாகவும், விலைக்கும் உற்பத்தி அளவுக்கும் தலைகீழ்த் தொடர்பு உடையதை விளக்குவதாகவும் அமைகிறது (படம் 2 இல் காண்க).

என்.எஸ்.பா.

**துணை நூல்கள்:**

**பாலசுப்பிரமணியன், என்.எஸ்.** நுண்ணியல் பொருளாதாரம். உமா பப்ளிகேஷன்ஸ், மதுரை, 1986.

Richard G. Lipsey, An Introduction to Positive Economics, ELPS, London, 1975.

Ryan, W.J.L. Price Theory, Macmillan & Co., London, 1964.

*தொகுப்பு வங்கி முறை*: பலவிதமான வைப்புகளின் வடிவங்களின் குறைந்த வட்டி விகிதத்தில் பணத்தைப் பெற்று, அதிகமான வட்டி விகிதங்களில் கடன்களை அளித்தும், உண்டியல்களைக் கழிவு செய்தும், பிற வங்கிப் பணிகளையும் ஆற்றிச் செயற்படும் நிதி அமைப்பை வங்கி (Bank) என்பர். வங்கிகளில் மைய வங்கி (Central Bank), வணிக வங்கி (Commercial Bank), பரிமாற்ற வங்கி (ExchangeBank) தொழில் வங்கி (Industrial Bank), கூட்டுறவு வங்கி (Cooperative Bank), சேமிப்பு வங்கி (Savings Bank) எனப் பலவகை உண்டு. அமைப்பின் அடிப்படையில் வங்கிகளைத் தனி வங்கி முறை (Unit Banking), கிளை வங்கி முறை (Branch Banking) தொகுப்பு வங்கி முறை (Group Banking) தொடர் வங்கி முறை (Chain Banking) என வகைப்படுத்துவர்.

தனிப்பட்ட ஒரு சில வங்கிகள் தன்னிச்சையாக ஒரு பிடிப்புக் கம்பெனியின் (Holding Company) கட்டுப்பாட்டுக்குள் அடங்கி, அவைதம்முள் ஒருசில விதிமுறைகளைக் கடைப்பிடித்துக்கொண்டு செயற்படும் வங்கி அமைப்பைத் தொகுப்பு வங்கி முறை (group Banking -System) என்பர். இம்முறையில் உள்ள வங்கிகள் ஒவ்வொன்றும் மற்ற வங்கிகளின் கிளைகள் போலச் செயற்படுகின்றன.

பொதுவாக, ஒரு பிடிப்புக் கம்பெனியினால் கட்டுப்படுத்தப்படும் ஒரு இன்றியமையாத வங்கியைச் ('Key' Bank) சார்ந்திருக்கும் பல வங்கிகள் இம்முறையில் தொகுப்பெனப்படுகின்றன. ஐக்கிய அமெரிக்க நாட்டில் இம் முறை 1926 ஐச் சேர்ந்த ஆண்டுகளில் மிக விரைவாக மக்களால் ஏற்கப்பட்டுச் சொல்வாக்கு மிக்கதாகச் செயற்பட்டது. ஏறத்தாழ 2000 தனி வங்கிகளைக் கொண்ட 300 தொகுப்புக்கள் 1929-ஆம் ஆண்டளவில் திகழ்ந்தன. பொதுவாக ஒரு தொகுப்பில் ஏறத்தாழ 10 வங்கிகள் இருக்கும் என்றநிலை இருந்தாலும் 3 முதல் 108 உறுப்பினர் வங்கிகளைக் கொண்டுள்ளவையாகப் பல தொகுப்புகள் அமெரிக்காவில் காணப்பட்டன. ஆனால், 1929-ஆம் ஆண்டிற்குப் பிறகு இம் முறையின் புகழ் மங்கத் தொடங்கி, தொகுப்புகளின் எண்ணிக்கை படிப்படியாகக் குறைந்து 1945-ஆம் ஆண்டின் இறுதியில் அமெரிக்காவில் 33 மாநிலங்களி

லும சேர்தது மொததம 387உறுபபினா வங்கிகளைக் கொணட 33 தொகுபபுகளே காணப்பட்டன.

தொகுப்பு வங்கி அமைபபில் தனி வங்கி முறை, கிளை வங்கி முறை ஆகிய இரு வங்கி முறைகளின நனமைகளையும பெறும வாயபபுகள உளளன. ஒவ வோா உறுபபினர் வங்கியும தனிததனி அமைப்பா கச் செயறபடும அதே நேரததில, மைய அமைபபிற குக் கட்டுப்பட்டுச் செயற்படுவதனால அந நனமை யைப பெறுகின்றது.விளமபரம, வாணிகப பெருககம், சீரான கணககு முறை,வங்கி ஆலோசனைகள போன் றவை எல்லாம மைய அமைப்பின மூலம உறுபபினா வங்கிகள ஏறறுக கொளவதால பலபபல நனமைகள கிடைககினறன.

மைய அமைப்பின கட்டுபபாடுகள யாவும் பெயரளவுககுததான இருக்குமே யொழியத் தர மானவையாகவும் வலுவானவையாகவும இருககும வாயப்புகள இவ வங்கி முறையில் இலலை. உறுப பினா வங்கிகளை, ஊரக வாணிகததிறகும் மறறும பல விதமான துணையான நிலைகளுககுமான சாதனஙகள போலவே மைய அமைபபினைப பயன படுததிககொளளும் வாய்பபுகள இம முறையில மிகுதி யாக உணடு. உறுபபினா வங்கிகளில ஏதாவதொனறு தோலவியடையநேரிட்டால அததோலவி மறற வங்கி களையும் கேடுறச செய்யும. எலலா உறுபபினர் வங்கி களையும் ஒரே நேரத்தில ஆய்வு செயவது இயலாது எனபன போனற கருததுகளைத் தொகுப்பு வங்கி முறையின குறைகளைச சுட்டிக காட்டுபவர்கள குறிப் பிட்டு விளககுகிறாாகள. என எஸ்.பா.

**துணை நூல்கள்:**

**பாலசுப்பிரமணியன், என். எஸ்.,** பணம, பாஙகு, பன னாட்டு வாணிகம், உமா பபளிகேஷன்ஸ, மதுரை, 1987.

**Vaisn, M.C., Monetay Th:ory, Ratan Prakash Mandi, Agra, 1975.**

***தொகை நூல்கள்:*** தொகுக்கப்பட்ட பாடல களையுடைய நூல்கள தொகை நூலகள எனப படும. அவவகையில பழமையானவை எட்டுத் தொகை நூலகள எனபன.

நறறிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, பதிற றுபபத்து, பரிபாடல, கலிததொகை, அகநானூறு, புறநானூறு என்பவை எட்டுததொகை நூலகள. பதிற்றுபபத்தும புறநானூறும புறபபொருள் நூல் கள. பரிபாடல், பரிபாடல் என்னும் யாப்பு வகை யால அமைந்தது. கலிப்பாவால் அமைந்தது கலித் தொகை.இவையெலலாம் அகப்பொருள பறறியவை. பரிபாடலில மட்டும கடவுள வாழததுப் பொருள மைநத பாடலகளும உணடு நானகு முதல எட்டடி களையுடைய பாடலகளால ஆயது குறுநதொகை ஒன்பது முதல பனனிரணடடிகளையுடைய பாடல களால் ஆயது நறறிணை பதினமூனறடி முதல முபபததோரடிகளால ஆயது நெடுநதொகை எனப படும் அகநானூறு இவவாறு அடியளவால் பாடல களைப் பிரித்து அகபபொருள பறறிய ஆயிரதது இருநூறு பாடலகளை மூனறு நூல்களாககிக கொண டனர்

நூலவகையுள ஒனறு 'தொகை' எனபதைத் தொலகாபபியம கூறுகினறது. அநநூலே, பரநது பட்ட தமிழ இலககணஙகளையெலலாம தொகுதது ஆராயநது செயயப்பட்ட நூலேயாகும அவவாறே வாழவியல கூறுகளையும, அறநெறிக கூறுகளையும ஆய்நது தொகுககபபட்ட நூலே திருககுறளாகும் பினனாளில தோனறிய பெரியபுராணம, திருவிளை யாடற் புராணம எனபனவும் ஒருவகையால தொகைநூலகள எனலாம் ஆஙகாஙகுக் கிடைதத வரலாறறுக குறிப்புகளையும, பேசப்பட்ட செயதி களையும கொணடு அமைககபபட்ட நூலகளே அவை எனபதால இககருதது விளஙகும்

மும்மூனறு செயதிகளால அமைநத பாடலகளை யுடையநூல திரிகடுகம் நனனானகு செயதிகளால அமைநத பாடலகளையுடைய நூல, நானமணிக கடிகை ஐநதைநது செயதிகளால அமைநத பாடல களையுடைய நூல சிறுபஞசமூலம பெரும்பாலும ஆறாறு செயதிகளால அமைநத பாடல்களையுடைய நூல ஏலாதி. இவை ஒவவொருவரால செய்யப் பட்ட தொகைநூலகள. இனி ஒவவொருவரால செயயபபட்ட பல நூலகளைத தொகையாககுதலும தொகை நூலே, குமரகுருபரா பிரபநதத திரட்டு, சிவஞான முனிவர் பிரபநதத் திரட்டு எனபன போனறவை இவவகை சாாநதவை.

நாலடியார் பல புலவாகளபாடிய பாடல்களைத் திரட்டியது எனபர் அவவாறே மிகப்பலா பலப்பல காலத்துப் பாடிய பாடலகளைத திரட்டிய தனிப் பாடல திரட்டு, தனிச் செயயுட் சிநதாமணி என பனவும் தொகை நூலகளே பொருள் வகையால தொகுககப்பட்ட தொகைநூல்களில தனிச் சிறப் புடையது புறத்திரட்டு, பனனூறறிரட்டு, **சைவ** மஞ்சரி எனபன. இவவகையில பின் வந்த நூல்கள பனனூல பாடற்றிரட்டு, சிவநெறிச் செயயுள் திரட்டு என்பன. பரந்து கிடககும பாடல்களுள் சுவையான வற்றையும் பொருட் சிறப்புடையனவற்றையும் தொகுத்தாக்கிய தொகை நூலகளும் பல. **அவை** தேவாரத திரட்டு, திருவருட்பாததிரட்டு, **கம்ப** ராமாயண இனகவித் திரட்டு முதலியன. இசை

வகையாலும் பாவகையாலும் திரட்டப்பட்ட தொகை நூலகளும் உளளன. வண்ணததிரட்டு, சித்திர கவிததிரட்டு எனபவை அதற்குச் சானறாவன.

காாகாலம பறறிய செய்திகளைக் கூறும காா நாற்பது, போர்க்கள நிகழசசி பற்றிய செய்திகளைக் கூறும களவழி நாற்பது, இனியவை இன்னாதவை பற்றிய செய்திகளைக் கூறும இனியவை நாறபது இனனா நாறபது ஆகியவையும் தொகை நூல்கள வகையைச சாரும். ஐநதிணை ஒழுககஙகளைப பற றிக் கூறும ஐநதிணை ஐமபது, ஐநதிணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூறறைம்பது எனபனவும, ஆசார (ஒழுக்க) வகை இவையெனத் தொகுததுரைக்கபபட்ட ஆசாரக் கோவை எனபதும தொகை நூலகளுள அடஙகும.

ஒரு திருக்கோயில பற்றிய நூல்கள, பாடலகள் ஆகிய எலலாவற்றையும், ஒரு வளளல் பற்றிய நூல்கள, பாடல்கள ஆகிய எல்லாவற்றையும தொகுதது வைககபபட்ட தொகை நூலகளும் பலவுள. தொகை நூலகளின வரலாறு மிக நீணடது; விரிந்தது, தனி நூலாகும அளவு பெரியது. இரா இ.

**தொகைப் பெயர் விளக்கம்**: தொகைப் பெயர் விளக்கம் எனபது ஒரு நிகணடு நூல. இது வேதகிரி முதலியார் எனபவரால கி.பி.1849-இல இயற்றப்பட்டது அவர் தொணடை நாடடுக களத்தூர் எனனும் ஊரினர். அவர் காலம கி பி 1795-1852 ஆகும்.

நிகணடு நூலகள் தெய்வப் பெயாத் தொகுதி, மக்கட்பெயாத் தொகுதி, விலஙகினபெயாத தொகுதி முதலிய தலைப்புகளில செய்திகளைக் கூறும். பினனர், அத் தொகுதிகளுள் வநத ஒரு சொல பல்பொருட் பெயர்களைத் தனியே தொகுத்து நூலிறுதிக்கண் கூறும. அத்தொகுதிக்குப் பெயர் 'பலபொருட் கூட்டதது ஒரு பெயாத் தொகுதி' என்பது (திவாகரம்). இதனைப' 'பல்பெயர்க் கூட்டதது ஒரு பெயர்த் தொகுதி' எனபதும் உணடு (சூடாமணி).

'முனனே கூறப்பட்டவற்றுள் சிலவறறை மீணடும் தொகுத்துக் கூறுதல 'கூறியது கூறல' எனனும் குறறம ஆகுமோ?' எனின், முன்னர்ப பொது வகையால கூறபபட்டவற்றுள் சிலவற்றைச் சிறபபு வகையால் தொகுத்துக கூறுவதால் 'கூறியது கூறல'ஆகாது. ஆனால, வேதகிரியார் செயத 'தொகைப்பெயர் விளக்கம்' பலபொருட் கூட்டத்து ஒருபெயாத தொகுதியை மட்டுமே சொல்வது. இரா.இ.

**தொஙகர்** தென் பசிபிக்குப் பெருஙகடலில் தொங்காத்தீவுகளில் வாழும் தொனமைச்குடியினர். **தொங்காத்(Tonga)** தீவுக கூட்டஙகள் ஆசுத்திரேலியாவிறகுக் கிழக்கிலும நியூசிலாந்திற்கு வடக்கிலும் பிசித் (Fiji) தீவுகளுக்கு அணமையிலும உளளன. இத்தீவுகளின எணணிககை சறறேறககுறைய 150 ஆகும் இதன பரபபளவு 69. ச.கி.மீ. ஆக இருநதாலும 150 தீவுக கூட்டஙகளாக இருபபதால பசிபிககுக் கடலில 52.000 ச.கி மீ. பரப்பில பரவியுளளன

தொஙகாததீவுகள 1970-ஆம் ஆண்டுவரை ஆஙகில அரசின பாதுகாபபில் தனி நாடாகச செயறபட்டு வந்தன. இத்தீவுகளின அயலுறவுக் கொளகைகள அனைத்தும் ஆஙகிலேய அரசால் கவனிக்கபபட்டு வந்தன. உளநாட்டு நிருவாகம, பிற அரசியல் அலுவல்கள் அனைததையும் தொங்காததீவு மக்களே கவனித்துக் கொளளும் முழுப்பொறுப்பினையும, அதிகாரத்தையும் பெறறிருந்தனர். தனி நாடாக 1970 -இல் மாறிப் பொதுநல அமைப்பிலும உறுப்பு நாடாகியது.

தொஙகர்கள பாலினீசியர்களாவா கி மு 12 -ஆம நூற்றாணடில கிழககு மெலனீசியாவிலிருநது (Melanesia) பாலினீசியாகள இததீவுகளுக்குக் குடியேறினர். அப்போது அவாகள கொணடுவந்த சில மட்பாண்ட வகைகள அவாகளின குடியேறறத்தைக் கணடுபிடிக்கத் துணை செய்கின்றன. இவாகளுள ஒரு பகுதியினர் பிசித தீவு மககளுடன் கலப்புறறு வாழ்நது வந்துளளனா. பொதுவாக இவர்கள நடுத்தர உயரததையும எடுப்பான நெற்றியையும் அலை அலையான தலைமயிரையும் நீணட முகத்தையும் கரும்பழுப்பு நிறத்தையும் உடையவாகளாக உள்ளனா.



தொங்கர்

தொங்கர்கள எளிமையான குடிசைகளில வாழந்து வந்தனர். தென்னங்கீற்றுகளையும், கருப்பஞ் சோலைகளையும் பரப்பிக கூரை அமைப்பதே இவா களின் பண்டைய முறை. இன்று இவாகள இருமபு, மரஙகள முதலானவற்றைக் கொண்டு வலிமையான வீடுகளைக் கட்ட முறபட்டுள்ளனர்.

இவாகளின சமூக அமைப்பில் ஒருவருடன் ஒரு வா பழகுவதில அடுக்கமைப்புகள (Stratification) உள்ளன இவை பெருமபாலும் வயதையும பாலை யும (Sex) அடிப்படையாகக கொண்டவை. ஒரு பெண், தன உடனபிறநதவனைக் காட்டிலும மிகுந்த தகுதியைப் பெற்றுள்ளாள. ஆனால், குடும பத்தலைமை தநதைவழி (Patriliny) வருவதாகும. மரபுரிமையும (Inheritance) ஆணவழியே அமைந துள்ளது நெருக்கமான உறவினர்கள அடுததடுததுச சேர்ந்து வாழ்கின்றனர். பொருளாதாரச செயறபாடு களிலும் உறவுக் குழுவினரே நெருககமாக ஒருவருட னொருவர் இணைநது செயற்படுகின்றனா.

தொஙகர்கள வாழும் பகுதி பவழத தீவுகளாக வும், எரிமலை வெடித்த மண்ணைக் கொண்டதாக வும் உள்ளது. ஆனால, பெருமபகுதி வேளாணமை செயவதற்கு ஏறறதாக மாறிவிட்டது. இவர்களின முக்கிய தொழில வேளாணமை. ஆணகளே வேளாண மையில முழுமூச்சாக ஈடுபடுகினறனர். ஆணகளுள பெருமபாலானோா பணப்பயிர்களைக் கவனிப்பதி லேயே ஆணடில் பெரும்பகுதியைச செலவிடுகின் றனா. தென்னை, வாழை ஆகிய இரணடும இவர் களின முககிய பணபபயிர்கள. தென்னையிலிருந்து கொப்பரைத் தேஙகாயை மிகுதியாகப பெற்றுச் சந தைகளில விறகினறனா. வாழையையும விற்றுப பொருள ஈட்டுகினறனா.

இவாகளின முதனமையான உணவுபபயிாகள் வளளிக்கிழஙகு, மரவளளி, மேறகிநதியத தீவுகளி லுளள ஒருவகைக் கிழஙகுச செடி (Manioc) முதலா னவை. இவர்கள பெருமளவு பழவகைகளையும பயிரிடுகினறனர் மா, அன்னாசிப்பழம், ஆரஞ்சு முத லானவை உணவாகவும பணடமாறறல பொருள களாகவும் பயனபடுகினறன.

தொஙகர்கள பலவகையான கைத்தொழிலகளில ஈடுபடுகின்றனா. தென்னையிலிருந்து கிடைககும் பல் வேறு பொருளகளையும வீணாககாமல அவற்றைக் கொணடு அனறாடப பயனபாட்டிற்குத தேவையான பல பொருளகளைச செய்கினறனர். இபபகுதிகளில கிடைககும ஒருவகைக் கோரைப் புற்களைக் கொணடு கூடைகள, பாய்கள், இருககைகள முத லானவற்றைச செய்கினறனர். இஙகுக கிடைககும் ஒரு



தொங்கர் குடும்பம்

வகைக் கிளிஞ்சல்களைக் கொண்டு அழகான மாலைகளைச் செய்கின்றனர். தொங்கர் தீவுகளுக்குச் சுற்றுலாப் பயணிகள பெருகிவருவதால் இவர்களின் கைவினைப் பொருளகளுக்கு நல்ல வருவாய கிடைக கிறது.

இவர்களின திருமண முறை பல மனைவி மண முறையைச் சோநதது. வயதுவநத ஆணகள விரும்பிய பெண்களைத் தேர்நதெடுதது உறவினர்கள முன்னிலையில் மணந்துகொளகினறனர். ஒரு மனைவி உயிருடன் உளளபோதே வேறொரு பெணணையும் மணக்கும் முறை இவாகளுக்குப் புதியதனறு. அனைத்து மனைவிகளுககும் மககளுககும் உரிய பொருளை ஈடடித் தரவேணடும் என்ற முறையை மீறுபவர்கள தணடிககபபட்டுத் தணடம கட்டவேணடும். மணவிலக்கும் இவாகளிடம் எளிமையானது.

தொங்கர்கள சமூகச சிககல்களைக குடித்தலைவன மூலம தீர்ததுககொள்கினறனா. இவருக்கு உதவியாக ஒவவொரு காலவழியிலும் ஓர் உறுப்பினா தேர்நதெடுக்கப்படுகிறாா. இவர்கள அனைவருமே அறிவிலும சிறநது தனனலப போககு அற்றவர்களாகவும மூத்தவர்களாகவும் இருததலவேணடும.

இனறு இவர்களுள் பெரும்பாலோர் கிறிததவ சமயத்தைச் சேர்ந்தவர்கள்; ஆனால, பல பிரிவுகளைச் சேர்நதவர்களாகக காணபபடுகினறனர். பிறப்பு, இறப்பு முதலான பலவேறு சடஙகுகளில பாலினீசியப பணபாட்டின தாக்கம் இவாகளிடமிருந்து அழியவில்லை எனலாம. கிறிததவ நெறிகளை ஏற்றுளள அதேவேளையில பழைய வழக்கஙகளை விடுவித்துக கொளவதில் தயக்கம் காட்டுகினறனர். சீ ப.

***தொட்டபெட்டாச்சிகரம்***: தெனனிநதியாவில குறிப்பாகத் தமிழகததின மேற்றிசையில நீலகிரி மாவட்டத்தில் காணப்படும் மலைகள் நீலகிரி மலைகளாகும. இம்மலைகள சமவெளிகளிலிருநது மேலெழுந்தவைகளாகும. இம்மலைகள்கிழக்குத்தொடர்சசி மலையையும் மேற்குத் தொடர்ச்சி மலையையும் இணைக்கினறன. நீலகிரிமலைகளில காணப்படும் மிக உயரமான சிகரம தொட்டபெட்டா (Dodda-betta) சிகரம். இது 2677மீ. உயரமுளளது. தெனனிந்தியாவின முக்கிய கோடைவாழ் தலமாகவும் இது விளஙகுகினறது. மலைவாழ இடஙகளின அரசி எனச் சொல்லப்படும் உதகமணடலம் இமமலை வெளியிலதான இருக்கின்றது.

தெனனிந்தியாவின மிக உயர்ந்த சிகரமாகக் கருதப்படும் தொட்டபெட்டாவின உசசியில அழகிய பயணிகள தஙகுமிடம் ஒனறு அமைக்கப்படடுளளது. இதன உச்சிககுச் செலல உதகமணடலததிலிருநது நெடுஞசாலை அமைக்கப்பட்டுள்ளது. வெளிநாடுகளிலிருநது உதகமண்டலத்தைப் பார்கக வருபவர்களும் உளநாட்டுப் பயணிகளும் இதற்கருகிலுள்ள தொட்டபெட்டாவைக் கணடுகளிக்கத் தவறமாட்டார்கள. உந்து வண்டியின மூலமும குதிரையின் மூலமும் தொட்டபெட்டாவின உச்சியினை அடையலாம்.

இயற்கையின எழிலைக் கணடுகளிக்கவும, மலைகள, குன்றுகள், ஆறுகள் போன்றவற்றைக் கணடு மகிழவும ஏறறதோர் எழில் மிகக சிகரமாக விளஙகுவது தொட்டபெட்டாச்சிகரமேயாகும். க பூ சி.

***தொடக்கநிலைச் சான்றிதழ்***: பொது நிறுமஙகளை உருவாககுவதிலுளள நானகாம கட்டமும் இறுதிக் கட்டமும் தொழில தொடக்கச் சானறிதழைப் பெறுவதேயாகும. தனி நிறுமஙகள கூட்டுருவாக்கச் சான்றிதழைப் பெறறவுடன தொழிலைத் தொடஙகலாம. ஆனால, பொது நிறுமஙகள தொழில தொடக்க நிலைச் சான்றிதழையும் பெறறிருக்க வேணடும

தகவலறிக்கையைப் பார்த்த மககள நிறுமஙகளில் பஙகுகளைப் பெற விருமபி நிறுமங்களுககு விணணப்பம் செய்வார்கள. அவ்விணணபபத்தில அவர்கள வாங்க விரும்பும்எணணிககையைக்குறித்து விணணப்பத்தோடு செலுத்த வேணடிய தொகையையும் சோதது அனுப்புவார்கள மொததம எடுததுக் கொளளபபட்ட பஙகுகளின அளவு, குறைந்த அளவு பஙகெடுப்பிற்குள இருந்தால, பதிவாளா தொழில தொடக்கச சான்றிதழ வழஙகுவாா. தகவலறிக்கை, நிறுமத்தின பதிவு அலுவலகம் இருக்குமிடம் பறறிய அறிக்கை, பஙகு ஒதுக்கீடு செய்யப்பட்ட தொகை முதலிய எலலாச் சடங்குகளும் நிறைவேற்றப்பட்டன எனற மறறொரு சானறைப் பதிவாளரிடம தாக்கல செய்ய வேணடும் அவர் குறைநத அளவு பஙகெடுப்பு எடுக்கப்பட்டுள்ளதா, இயககுநாகள் தத்தம தகுதிப பஙகுகளின் மீது பணம செலுதகி விட்டனரா என்று சரிபாாத்து நிறைவு அடைந்த உடனே தொழில தொடக்கச் சான்றிதழை (Certificate of Commencement) வழஙகுகிறார். சுருங்கச் சொனனால இச சானறிதழைப் பெற நிறுமஙகள் பினவரும் சில நிபந்தனைகளை நிறைவேற்ற வேண்டும்.

1. குறுமப் பஙகு-எடுப்பு எனற திட்ட அறிவிப்பு நிருணயித்திருக்கிற அளவுக்குப் பங்குகள் ஒதுக்கீடு செயயப்பட்டிருக்க வேணடும்.

2. ஏறபிசைவு பஙகு மாறறு நிலையத்தில் தன் பங்குகள், கடனீட்டுப் பததிரங்களை வாங்கவும விறகவுமான வசதி வேணடி அநநிறுமம மனுச் செய

யவோ மனுச் செய்தும் அந்நிலையத்தின அனுமதி பெறவோ தவறிய நிலையில், பஙகுகள அலலது கட னீட்டுப் பத்திரங்களுககு விணணப்பித்தவர்களுக்குப் பணம் திருப்பிச் செலுத்தும பொறுப்பு ஏதும் இல்லாது இருக்க வேணடும.

3. பொது மக்கள் தாஙகள எடுக்கும் பஙகு ஒவ்வொன்றின் மீதும் மனுததொகை, ஒதுக்கீட்டுத தொகை எனற வகையில் அதன் முகமதிபபில் எனன விகிதம் செலுத்த வேணடுமோ, அதே விகிததில இயக்குநாகள தாம் எடுக்க எணணிய பஙகுகள மீது பணம் செலுதகியிருக்க வேண்டும.

4. 'பிற நோக்கஙகள' என நிறுமஙகள் தம் அமைப்பு முறை ஏட்டில் சொலலியிருக்கிற தொழில்கள் எதையாவது ஒனறைத தொடஙக எணணினால் அது குறித்துச் சிறபபுத தீாமானம இயற்றிப் பஙகாளர்களின் ஏற்பிசைவைப் பெற்றிருக்க வேணடும.

5. இயக்குநரோ செயலாளரோ மேற்கூறிய நிபநதனைகளைச சரிபார்த்துத் தரும அறிவிப்புத் தாளைப பதிவாளரிடம் தாககல் செய்ய வேணடும.

தகவலறிககையை வெளியிடாத நிறுமஙகள் மேற்கூறிய முதலிரணடு நிபந்தனைகளை நிறைவேற்றத் தேவையில்லை. ஆனால், அவை பதிவாளரிடம தகவலறிக்கைக்குப் பதிலான அறிக்கையைத தாக்கல செய்ய வேண்டும்.

கே என்.இரா •

**துணைநூல்:**

Ashok K. Bagrial, Company Law, Vikas Publishing House Pvt., Ltd., Madras, 1982.

***தொடர்கல்வி***: இனறைய சிக்கலானஅறிவியல்-தொழில நுட்பச் சமுதாயத்தில் புதிய புதிய சிக்கல்கள் எழுந்த வணணம் உளளன. அவற்றுக்கு விடை காணபது வாழககையின் பொருததப்பாட்டினைப் பெற அடிப்படையாகும். பள்ளிக் கல்வியின் முக்கிய நோக்கமசூழ்நிலையுடன உயர் நிலைப்பட்ட பொருத்தப்பாட்டினைப் பெறுதலில மாணாக்கர்களுக்குத் தேவைப்படும் அறிவு, செயல்திறன்கள, மனப்பான்மைகள் ஆகியவறறை அவர்கள் பெற உதவுதலாகும். ஆனால இன்றைய நிலைமைகளில் பள்ளிகளில் பெறப்படும் இளம் பருவக் கற்றல் அனுபவஙகள் மட்டும பிற்கால வாழ்க்கைத் தேவைகளை நிறைவு செய்வதற்குப் போதுமானவையாக இருப்பதில்லை. கல்வி எனப்படும் செயல்முறை, வாழ்க்கை முழுமையும தொடர்ந்து நீடிக்கும் ஒனறாக இனறு கருதப்படுகிறது. பிற்கால வாழ்க்கைக்குத் தேவைப்படும் எல்லா அடிப்படைத் திறன்களையும அறிவினையும்ஒருவனுக்குப் பள்ளிகளால் அளித்து விடமுடியாது எனபது இன்று உணரப்பட்டுள்ளது சமுதாயத்தில் எழும் துரித மாற்றம் 'வாழ்ககைக் கற்றல' என்னும் கோட்பாட்டின இன்றியமையாமையை அடிககோடிட்டுக் காட்டுகிறது. எனவே தொடர் கல்வியின் முக்கியத்துவத்தைக் கலவி யாளர்கள யாவரும்வலியுறுத்துகின்றனர். இத்தொடர் கல்வி வாய்ப்பு பளளி அல்லது கல்லூரிக கல்வியினை முடித்துத் தேர்சசி பெற்றோர்க்கு எவ்வளவு இனறியமையாததோ அதைவிடப் பளளிக் கலவி பெற வாய்ப்பறறோர் அலலது அக்கல்வியில் முழுமை பெறாதோா போனறோர்க்கு முககியமானதாகிறது. ஓா அறிவுத துறையில் தேர்ச்சி பெறறோர் அத்துறையில எழும' புதுக் கருத்துகளை அறிவதறகும, இணைந்த துறைகளின் பயனுள்ள புதுக் கருததுகளைப் பெறுவதற்கும் தொடர் கல்வி உதவுகிறது. ஏட்டுக் கல்வி பெற்றோர் தொழில் திறன் பயிற்சி பெறுவதறகும தொடர் கல்வி துணை செயகிறது. மருத்துவம, பொறியியல, வேளாண்மை போன்றவற்றிலும், தொழில் துறையின பல்வேறு பிரிவுகளிலும் புதிய உத்திகளை அறிநதிராதோர் தேககநிலையில தஙகிப பின்னைடவா; அநநிலையை அகற்றுதலிலும் தொடாகலவி தேவைப்படுவதாகும்.

ஆசிரியர் பயிற்சியில பணியிடைப் பயிற்சியில் (Inservice Training) ஒரு முக்கிய சாதனமாகவும தொடர்கல்வி விளங்குகிறது. தொடர் கலவியில் பளளிப் பாடங்களின புதிய கருத்துகள மட்டுமே கற்பிக்க வேண்டுமெனபதில்லை. பல தொழில்சார் பயிற்சியளிததுத் தோசசிச் சானறிதழ வழஙகும் அமைபபாகவும தொடர்கலவி உள்ளது. தொடர் கல்விக்கான வசதிகளைப் பள்ளிகள, கலலூரிகள், பலகலைக்கழகஙகள போனறன உருவாககி உதவலாம. 'பகுதிநேர வகுப்புகள', 'மாலை நேர வகுப்புகள', கோடை வகுப்புகள்' போன்றன கல்வி நிலையஙகளின கற்பிநதல அடித்தளஙகளைத் தொடர் கல்விககுப் பயன படுத்துகினறன. திறந்த பளளிக கலவி அமைப்பும், இதனுடன ஓரளவு இணைந்த சேய்மைக கல்விச் சாதனங்களும் தொடர் கலவிக்கு வாயபபுகளை ஏற்படுத்தித தருகினறன. அச்சுக் கலை, வானொலி, தொலைக் காட்சி நிகழச்சிகள ஆகியவை தொடர் கல்வியினைப பரவலாககுவதில மையக கருவிகளாகச செயற்படுத்தபபடுகினறன. தொடர் கலவிக்காக அரசு, மற்றும தனிப்பட்டோர் அமைபபுகள பல உளளன. மைய, மாநில அரசுகளின தொழிலாளர் நலப் பிரிவு, சமூக நலப் பிரிவு போன்றவையும் தமது பொறுப்புகளின் ஒரு கூறாக அவவப்போது குறிப்பிட்ட பகுதியினருக்குத தொடர்கலவி வாய்ப்புகளை ஏறபடுத்தித் தருகினறன.

தொடர் கல்வியின முககிய நோக்கம, புதிய கருத்துகளையும் செயல் முறைகளையும் சமுதாய உறுப்பினர்களுக்குக் கற்பித்து அவர்களின்

தொழில் திறனையும் சமூக உணர்வினையும் மேலும் வளர்த்து நாட்டின் வளர்ச்சிக்கு உதவு தலாகும். அஞ்சல் வழிக் கல்வியின் துணைக்கொண்டு இன்று பலர் விட்ட கல்வியைத் தொடர்கின்றனர். பலர் புதிய பாடங்களைப் பயில முற்படுகின்றனர். தொழில் துறையில் புதிய உத்திகள் புகுத்தப்படும் போது, பணியிடைப் பயிற்சி வழியே தொடர் கல்வி அளித்தல் தேவைப்படுகிறது. பாடத் திட்டத்தில மாற்றங்கள், கற்பித்தல் முறைகளில் புதுமைகள் என ஏற்படும் போதும் இவை பற்றிய புதுப் பயிற்சி வகுப்புகள், கருத்தரங்குகள், செயலரங்குகள் போன் றன ஏற்பாடுசெய்தல் தொடர் கல்விககான வழி யாக அமைகின்றது. நிருவாகத் துறையில் எழுந்துள்ள புதிய கருத்துகள், நிருவாகத்தினர் – தொழிலாளர் தொடர்பினைச் சீர்படுத்தி, உற்பத்தியினைப் பெருக்க உதவுவதால், தொடர் கல்வி வழியே நிருவாகத்தின ருக்குப் புதுப் பயிற்சி அளிக்கப்படுவது இன்று நாட் டில் பரவலாக நடைபெறுகிறது. தொடர் கல்வி திறந்த பள்ளிகள், சேய்மைக் கல்வி ஆகிய கோட்பாடு களிடையே அடிப்படையில் தொடர்பு உண்டு. இவை யாவும் கல்வி வாய்ப்புகளில் ஏற்படக்கூடிய ஏற்றத் தாழ்வுகளை அகற்றுவதிலும், கல்வியினை நடை முறைப் பயனுள்ளதாக ஆக்குவதிலும் இணைநது தேவைப்படுவனவாம். இவற்றின் வளர்ச்சிக்கு மின்ன ணுத் தொழில் நுட்பம் பெருமளவு உதவியுளளது.

எம்.ச.

**தொடர்தகு பாத்தியங்கள்:** தொடர்தகு பாத்தியத்தைப் பற்றிச் சொத்துரிமை மாற்றுச சட்டத்தின் 3-ஆம் பிரிவு வரையறுத்துக் கூறுகிறது. இதன்படி தொடர்தகு பாத்தியம் எனபது, உரிமை யியல் நீதிமன்றங்கள் ஏற்கும் வகையில் நடவடிக்கை எடுத்து நிலை நாட்டத் தக்கவையான அடகு, அடை மானம், இவையலலாத கடன், நேரடியான அல்லது கொள்நிலை உரிமையற்ற அசை பொருள் பறறிய நலன் ஆகியன குறித்த பாததியதை ஆகும். இவ வகையான பாத்தியதை நடப்பில் உளளதாகவோ, இனிச் சேர விருப்பதாகவோ, நிபந்தனையுடையதா கவோ, வருநிகழ்வு சார்நததாவோ இருக்கலாம.

ஆங்கிலச் சட்டத்தில், அசைவியல பொருள் ஒன்று, ஒருவரின் உடைமையுரிமையில மட்டுமனறிச் சுவாதீனத்திலும் இருக்கும்போது, அப்பொருள 'கையுரிமைப் பொருள' (Chose-in-Possession) ஆகும். ஆனால், அப்பொருள அவரது சுவாதீனத்தில இனறி வழக்கிட்டுப் பெறுவதாக இருப்பின், வழக்குரிமைப் பொருள்' (Chose-in-action) ஆகும். இரணடாவதைப பொறுத்தமட்டில் வழக்கிட்டுத்தான பெற முடியும். நேரடியாகச் சென்று சுவாதீனத்தைப் பெற முடி யாது. இவ்வார்த்தையானது, சுவாதீனத்தில் அல்லது அனுபோகத்தில் இல்லாதவற்றைப் பெறுவதற்கான உரிமையை மட்டுமன்றி, சிலவகைத் தனிப்பட்ட பருப்பொருள சொத்துகளையும் உள்ளடக்குமாறு பல வகைகளில் பயன்படுத்தப்படுகிறது.

எனவே, ஆங்கிலச் சட்டத்தில் 'வழக்குரிமைப் பொருள்' என்பது, பின்காணுபவற்றையெல்லாம் உள்ளடக்குகிறது: 1. கடன்கள்; 2. ஒப்பந்தத்தின் நலன்கள்; 3. ஒப்பந்த முடிவிற்கான அல்லது தீங்கிற் கான இழப்பீடுகள. மற்றும், 4. இருப்புச் சரக்குப் (Stock) பங்குகள், கடனீட்டுப் பத்திரங்கள், (debent -ures), ஆக்குப்பொருள் உரிமைகள் (Patent rights) பதிப்புரிமைகள் (Copy rights), வாணிகக் குறிகள (trade marks).

சொத்துரிமை மாற்றுச்சட்டத்தின 3-ஆம் பிரி வினபடி, தொடர்தகு பாத்தியம் என்பது பினகண்ட வற்றையெல்லாம் உள்ளடக்குகிறது. 1. கடன்கள், (i) ஆனால், அசையாப் பொருள அடைமானம் வைக்கப்படுவதன் மூலம் பெறப்படும் கடன்கள, (ii) அசைவியல் பொருள் அடகு அல்லது அடை மானம் வைக்கப்படுவதன மூலம் பெறப்படும் கடன கள ஆகியவற்றை இவை உளளடக்கா. 2. உரிமை யியல் நீதிமன்றங்கள ஏற்கும் வகையில் நடவடிக்கை எடுத்து நிலைநாட்டத் தக்கவான நேரடியான அல்லது கொள்நிலை உடைமையற்ற (சுவாதீன மற்ற) அசையும் பொருள் பற்றிய நலனகள்.

இத்தகைய கடன் அலலது பயன்பெறும் பாத்தி யதை (Beneficial Interest) நடப்பில் உளளதாகவோ, இனிச்சேர விருப்பதாவோ, நிபந்தனையுடையதா கவோ, வருநிகழ்வு சார்நததாகவோ இருக்கலாம். ஆனால், வழக்கிடுவதற்கு மட்டுமான உரிமை (mere right to Sue) 6ஆம் பிரிவின உட்பிரிவு (e) ஆல் மாற்றப்பட முடியாது என்று கூறப்பட்டிருப்பதால் தொடர்தகு பாத்தியம் ஆவதிலலை.

ஆஙகிலச சட்டத்தில் கூறப்படும் 'வழககுரிமைப் பொருளைக் காட்டிலும், இநதியச் சட்டத்தில் கூறப் படும் 'தொடர்தகு பாத்தியம்' குறுகியது. கடனீட் டுப் பததிரஙகள அடைமானக் கடன்கள் ஆகியன ஆஙகிலச் சட்டத்தினபடி வழக்குரிமைப் பொருள் களாகும். இந்தியச் சட்டத்தில ஈட்டுறுதியின மேல் பெறப்படும கடன்கள தொடாதகு பாத்தியங்களின் இனஙகளிலிருநது விலக்கப்பட்டுளளமையால், 3ஆம பிரிவினபடி இவை தொடாதகு பாத்தியங்கள ஆவ தில்லை. மேலும் தொடர்தகு பாத்தியம் பற்றிய விளக்கம், 'கையுரிமைப் பொருளை' யும விளக்கு கிறது. எனவே, அசையாப் பொருள்களின் அடை மானம், அசைவியல் பொருளகளின் அடகு, மற்றும் ஒப்பந்த முறிவு அல்லது தீங்கிற்கான இழப்பீடு, மற்றும வெறும் வழக்கிடுவதறகுமட்டுமான எளிமை

ஆகியன இவற்றின் உரிமையின் கீழ் வருவதில்லை மேலும், 137 ஆம பிரிவின்படி, மாற்றும் முறை ஆவ ணங்கள (Negotiable instrument) வாணிக ஆவணங களா (Mercantile document) இருப்புச் சரககுகள், கடனீட்டுப் பத்திரஙகள போனறவை தொடாதகு பாத்தியம் ஆவதில்லை. தொடர்தகு பாத்தியமாக ஒன்று இருக்க வேணடுமெனில, அது பின காணுமாறு இருகக வேணடும்.

1) கடன் ஒனறினைக குறிந்த பாத்தியதையாக அது இருகக வேணடும; அசையாப் பொருளினமீது பெறப்படும அடைமானக் கடனாகவோ, அசைவியல பொருளினமீது பெறபபடும அடகாகவோ (Pledge of movable Property)அககடன இருககககூடாது அலலது 2)அசைவியல் பொருள பறறிய நலனைப் பெறும் பாத தியதையாக அது இருகக வேணடும, ஆனால, அநத அசைவியல் பொருளை வேணடுபவரின நேரடி அலலது கொளநிலை உடைமையில (சுவாதீனததில) இலலாமல் இருகக வேணடும். 3 உரிமையியல நீதிமனறங கள (Civil Courts) ஏறகும் வகையில நடவடிககை எடுத்து நிலை நாட்டததகக பாததியதையாக அது இருகக வேணடும.

**தொடர்தகு பாத்தியத்தை எவவாறு ஏற்படுத்துவது?** 130-ஆம பிரிவு, மாற்றளிககும முறையைப (mode of assignment) பற்றிக கூறுகிறது. இபபிரிவின படி, மறுபயனுடன கூடிய அலலது மறுபயன இலலாத தொடர்தகு பாத்தியத்தை முறையாவணம வாயிலாகவே மாறற வேணடும. இது எழுதப்பட்டிருக்க வேணடும். உரிமை மாற்றம செய்தவரால, அலலது அவரது அதிகாரம் பெற்ற முகவரால் அது கையெழுத்து இடப்பட்டிருகக வேணடும் இவவாறு நிறைவேற்றபபடுவதன மூலமே அது முழுமை பெறறுச செயலுககு வரும் இவவாறு 130-ஆம பிரிவில எடுத்துரைக்கப்பட்டிருககும முறையானது, ஆஙகிலச் சட்டத்தின் கீழ் உள்ள தகைமை நெறி மாறறளிபபு முறையின சிறப்பியல்புகளையும செய் சட்டததின மாற்றளிப்பு முறையின சிறப்பியலபுகளையும ஒருஙகே கொணடிருக்கிறது. செய் சட்டத்தின மாறறளிப்பு முறையினபடி, இது எழுத்து மூலமாகவே மாறறப படக் கூடியது. மாறறளிபபுப் பெறுபவா, தமது பெயரிலேயே வழக்குத தொடரலாம. மாறறபபடுவதறகு மறுபயன வேணடியதில்லை. தகைமை நெறி மாற்றளிப்பு முறையினபடி, பொருட்பிணைப் பொறுபபுப் போலவோ, முழுமையான மாறறளிபபுப போலவோ மாறறளிககலாம் மாறறபபட்ட தேதியிலிருந்தே இது செயலுககு வரக்கூடியது.

**மாற்றளிப்பின் விளைவுகள.** 130ஆம் பிரிவின் முதலாம் பத்தியின இரணடாம பாகமும, 132 ஆம் பிரிவும் மாற்றளிப்பின விளைவுகளை எடுததுரைககினறன. மாற்றளிப்பானது, எழுதப்பட்டு நிறைவேறறபபட்ட தேதியிலிருநதே செயலுக்கு வரும இதன மூலம் உரிமை மாற்றம செய்தவருக்கு இருந்த எலலா உரிமைகளும் பரிகாரஙகளும் உரிமை மாறறம் பெறறவருககுச் சேர்நதமையும், தொடர்தகு பாத்தியத்தைப பெறற உரிமை மாறறம பெற்றவர் அதனைக் குறித்துத தமது பெயரிலேயே வழககுத் தொடுக்கவோ நடவடிக்கை எடுககவோ செயயலாம அதறகாக உரிமை மாற்றம செயதவரின் இசைவைப பெற வேண்டியதிலலை. வழக்கில அவரைத தரபபினராகச் சேரகக வேணடியதிலலை. மாறறளிபபிறகுப பினனர், உரிமை மாறறம பெற்றவர் மட்டுமதான் பாததியததைப பெற உரிமையுளளவர் (முத்துககிருஷ்ணய்யா எதிர வீரராகவன 38, சென்னை, 296 F B) இவை, இப்பிரிவில 132ஆம் பிரிவின படி, உரிமை மாறறம செயதவா கொணடிருநத பொறுப்புகளுக்கும கடபபாடுகளுக்கும உட்படடே உரிமை மாறறம் பெறறவா மாற்றளிப்பினைப பெற முடியும் அவரைவிட உயர்நத உரிமை மூலத்தை உரிமை மாறறம பெற்றவா பெற முடியாது. எடுத்துக்காட்டாக, எதிரிடைக் கோரிககை அதாவது எதிரீடு ஒனறுககு உடபட்டுக் கடன ஒனறு மாறறப்படுமானால, இநத பொறுபபிறகு உட்பட்டே கடனை உரிமை மாறறம பெற்றவா பெறுவார்

**மாற்றளிப்புப் பற்றிய அறிவிக்கை,** அறிவிககை ஒனறு தரபபடாமலேயே முறையாவணம நிறைவேறறபபடுவதன மூலம் தொடாதகு பாததியதையின் உரிமை மாறறம் முழுமை பெறும. இருப்பினும், உரிமை மாறறம பெறறவரின உரிமைகள பாதிக்கப படாமல இருக்க அறிவிககை தருவது இனறியமையாததாக இருக்கிறது. தேவையான அறிவிக்கை கொடுககபபடாதவரை, உரிமை மாறறம் பெறறவரின நிலை பாதுகாபபறறு இருககிறது கடன பெற்றவா அறிவிக்கையைப் பெறாமலோ உரிமை மாறறததில தரப்பினராகச சோக்கபபடாமலோஇருககும் போது, கடனை உரிமை மாற்றம் செயதவரிடம் செலுததியிருந்தால, உரிமை மாறறம பெற்றவரின நடவடிககையை நனகு தடுத்து நிறுத்த முடியும் (இராமசாமி எதிர் சினனான, 24 சென்னை, 449). அறிககை இல்லாமை அவருக்குப் பாதுகாப்பை அளிககும.

முறையான அறிவிக்கையைக் கடன பெறறவர் பெறாதவரை, அவர் உரிமை மாற்றம் பெறறவருககு நேரடியாகக் கடமைப் பட்டவரலலர். ஆனால, உரிமை மாறறத்தின் அதாவது, மாற்றளிப்பின தரப்பினராக இருக்குமபோது நேரடியான அறிவிக்கை இல்லையெனினும கடன பெறறவர் உரிமைமாற்றம பெறறவருக்குக கடனைச் செலுத்தக் கடமைபபட்டவராவார்.

ஆ ச.

***தொடர் திட்டம்***: திட்டமிடுவதில் உள்ள பல வகைகளில் தொடர்திட்டமும் ஒன்று. பின் தங்கிய நாடுகளின் பொருளாதார வளர்ச்சிக்கான நல்ல தொரு முறையாகத் தொடர் திட்டம் (Rolling Plan) அமையும் என்று பேராசிரியர் குன்னார் மிர்தல் (Prof. Gunnar Myrdal) குறிப்பிட்டார். இம் முறையில் ஒவ்வோர் ஆண்டிற்கும் மூன்று திட்டங்கள் அமைக்கப்பெறும். முதலாவதாக, நிகழும் ஆண்டிற்கு அடுத்த ஆண்டின் பொருளாதார வளர்ச்சிக்கான இலக்குகள், நிதித்தோற்றுவாய்கள், செயல்கள் பற்றிய ஓராண்டுத்திட்டம். இரண்டாவதாக, அடுத்த ஒருசில ஆண்டுகளில் எதிர்பார்க்கப்படும் பொருளாதார வளர்ச்சிக்கான திட்டம். ஒருசில ஆண்டுகள் என்பது 3அல்லது 4 அல்லது 5 அல்லது அதற்கும் மேற்பட்ட ஆண்டுகளாகக் கூட இருக்கலாம். இத்திட்டத்தில் நிகழும் ஆண்டிற்கு முந்திய ஆண்டுத் திட்டங்களைத் தவிர்த்துப் புதியதொரு எதிர்கால ஆண்டிற்கான திட்டங்களைச் சேர்த்துக் கொள்வர். எடுத்துக்காட்டாக, 1986, 1987, 1988-ஆம் ஆண்டுகளுக்கான குறுகிய காலத் திட்டம் 1986-இல் பயன்பட்டிருக்குமானால், 1987-இல் 1987, 1988, 1989 ஆகிய ஆண்டுகளுக்கான குறுகியகாலத் திட்டமாக அது மாற்றியமைக்கப்படும். மூன்றாவதாக 15 முதல் 20 ஆண்டுகள் கால அளவிற்கான தொலை நோக்குத் திட்டம்.

முந்திய ஆண்டின் அனுபவங்களையும் சாதனைகளையும் அடிப்படையாகக் கொண்டு, அடுத்தடுத்த ஆண்டுகளுக்கான இலக்குகளையும் நிதி நிலைகளையும் மாற்றியமைத்துக் கொண்டு, எவ்வித இடைவெளியுமின்றித் தொடர்ந்து திட்டமிட்ட வளர்ச்சிப் பாதையை நாடு அடைந்து பயன் பெற வேண்டும் என்பதே இத் தொடர் திட்டத்தின் அடிப்படை நோக்கம். தீவிரமான சிந்தனையாளர்களுள் ஒருசிலர் ஆறுமாதங்களுக்கு ஒருமுறைகூடத் திட்டங்களை மாற்றியமைத்துப் பயன்பெறலாம் என்றும் குறிப்பிடுவர். கால அளவு எவ்வாறு இருந்தாலும் அடிப்படை நோக்கம் ஒன்றே.

திட்டம் என்பது தொடர்ந்து நிகழும் போக்குடையது. அதனை நிறைவேற்றும்போது பல இடர்களும், எதிர்பாராத நிலைகளும், நன்மைகளும் தோன்றலாம். எனவே, தொடர் திட்ட முறையில், தவறுகளையும் குறைகளையும் பலன்களையும் ஆண்டுதோறும் ஆராய்ந்து குறைகளைக் களைந்து, நன்மைகளைப் பெருக்கப் புதிய முயற்சிகளை மேற்கொள்ள முடிகிறது. மேலும் திட்டத்தை நிறைவேற்றி வரும்போது பல புதிய தகவல்கள், புதிய உற்பத்தி முறைகள், புதிய அணுகுமுறைகள், புதிய அறிவியல், தொழில் நுட்ப மாற்றங்கள் போன்றவை தோன்றலாம். இவைகளுக்கெல்லாம் ஏற்பத் திட்ட இலக்குகளையும் முயற்சிகளையும் தொடர்திட்டத்தில் மாற்றியமைத்துப் பயன் பெறலாம்.

வணிக நிறுவனங்கள், உள்ளூர் அரசுகளான (Local Governments) மாநகராட்சிகள் போன்றவை அவைதம் வரவு செலவுத் திட்டங்களை அவ்வப்போது மாற்றி அமைத்துச் செயற்படுவதிலிருந்து தொடர் திட்டம் என்ற கருத்துத் தோன்றியது என்பர். ஆறாண்டு நிதித் திட்டங்களில் (Six year Financial Programmes) இத் தொடர் திட்டத்தைப் பயன்படுத்தி மற்றவர்களுக்குப் பியூர்ட்டோ ரிக்கோ(Pureto Rico) நாடு வழிகாட்டியாக விளங்கியது. பிலிப்பைன்சு (Phillipines) சோவியத்து உருசியா (Soviet Russia) இந்தியா போன்ற நாடுகளும் இத் தொடர் திட்டத்தை ஓரளவுக்குப் பயன்படுத்தின.

தொடர் திட்டத்தில் நெகிழ்ச்சித் தன்மை இருப்பதனாலும், வளர்ச்சியைப் பற்றிய சரியான நோக்கு இருப்பதனாலும் வளரும் நாடுகள் இத்திட்ட முறையை விரும்பி வரவேற்று ஏற்றுக் கொண்டாலும் நடைமுறையில் திட்ட முறையைக் கையாளுவது மிகவும் இடர் மிக்கதாகக் கருதப்படுகிறது.

பர்மா (Burma), மெக்சிகோ (Mexico) போன்ற நாடுகள் இம் முறையைக் கையாளும் முயற்சியில் தோல்வியடைந்துவிட்டன. இத் தொடர் திட்டத்தின் இயல்புகளை எளிதில் புரிந்து கொள்ள முடியாமை, புரிந்து கொண்டாலும் திறம்படச் செயலாற்றும் அளவுக்குத் திட்ட அமைப்புகளில் திறமையின்மை, அடிக்கடி மேற்கொள்ளப்படும் மாற்றங்களால் தோன்றத் தக்க உறுதி யின்மை என்ற நிலைமை, அரசியல்வாதிகள் அவர்தம் புதுமைக் கருத்துகளையும் திட்டங்களையும் புகுத்திப் புகழ் பெறுவதற்கான வாய்ப்புகள் இன்மை போன்றவை இத்திட்ட முறையின் தோல்விக்கான காரணங்களாகக் குறிப்பிடப்படுகின்றன.

இந்திய நாட்டிலும் தொடர்திட்டம் நிறைவேற்றப்பட வேண்டும் என்று 1977-இல் திட்டக்குழு உறுப்பினராகயிருந்த பேராசிரியர் இரா.சீ. கிருட்டிணா வலியுறுத்தினார். ஆனால் நடைமுறைப் படுத்தபடவில்லை. என்.எஸ்.பா.

**துணை நூல்கள்:**

Misro S.K. and Puri, V.K., Development and Planning, Theory and Practice, Himalaya Publishing House, Bombay, 1986.

Seth, M.L., Theory and Practice of Planning, S. Chand & Co., Ltd., New Delhi, 1977.

*தொடர் பதிவேடுகள்*: மாணவனின் தரம், ஆர்வ நிலை, தேர்ச்சி போன்றவற்றை அறிந்து கொள்ளப் பொதுத் தேர்வுகளின் வாயிலாகப் பெறப் பட்ட மதிப்பெண்களே மிகுதியாகப் பயன்படுத்தப் படுகின்றன. வகுப்பறைச் சோதனைகள் அவ்வள வாகப் பயன்படா. பெற்றோர்களின் தவறான நம் பிக்கைகளைத் தெளிவுபடுத்தத் தரப்படுத்தப்பட்ட தேர்வுத்தாள்களிலிருந்து பெறப்பட்ட மதிப்பெண் களைச் சீராகப் பதிவு செய்திருந்தால்தான் அவை பயன்படும்.

ஒரே ஒரு சோதனையினால் அல்லது தேர்வி னால் பெற்ற மதிப்பெண்கள் எதையும் தெளிவுற விளக்குவதில்லை. பல தேர்வுகளிலிருந்தும் பல்வேறு வகையான சோதனைகளிலிருந்தும் மதிப்பெண்கள் கிடைக்கப் பெற்றிருந்தால்தான் மாணவனின் தரத்தை ஒப்பிடுதல் என்பது முடியும். அதோடு மதிப்பெண்களைத் தவிர வேறு வழியாகக் கிடைத்த ஆதாரங்களும் தேவை. இத்தகைய தகவல்கள் சேக ரிக்கப்படுவதோடு சீராக அமைக்கப்படுவதுதான் மிக மிக முக்கியமானது. இவ்வாறு செயற்படுவதற்குப் பயன்படுவனவே தொடர் பதிவேடுகள் எனப்படும். ஒவ்வொரு மாணவனுக்கும் ஒரு தனி தொடர் பதி வேடு இருக்கவேண்டும். சாதாரணக் குறிப்புகளைக் கொண்ட நீண்ட பதிவேட்டைவிட மிகமிகத் தேவை யான செய்திகளை அண்மைக்காலம் வரை பதிவாக் கப்பட்ட பதிவேடுகளே பெரும் பயனைத் தருபவை யாகும்.

இந்திய நாட்டில் பல பள்ளிகளில் ஏதாவதொரு முறையில் மாணவனைப்பற்றிய செய்திகளைப் பதியச் செய்கின்றனர் அண்மைக்காலத்திலிருந்து தொடர் பதிவேடுகளை வைக்கத்தொடங்கியுள்ளனர். சிலர் இதனைத் தகைமைத் தொகுப்பேடு என்ற பெயரால் குறிப்பிடுகின்றனர். சில பள்ளிகளில் அட்டைகளில் விவ ரங்களைப் பதிக்கின்றனர். சில பள்ளிகளில் மடிப்பு அட்டைகளையும் காணலாம். ஏடுகளாக இருந்து நிறைய வெவ்வேறு தலைப்புகளில் தனி இடம்விட்டு இருக்கும் தொடர்பதிவேடுகளே சிறந்தவை. தொடர் பதிவேடுகள் எந்த உருவில் இருந்தாலும் வெவ்வேறு துறைகளில் மாணவனின் வளர்ச்சியைச் சீராகக் காட்டுவனவாக இருத்தல் வேண்டும். அவ்வப்போது இந்த வளர்ச்சியையோ வளர்ச்சியின்மையையோ ஆதார அடிப்படையில் கவனித்துச் சுருக்கமான தெளிவான தொகுப்பறிக்கையை எழுதுவதற்கும் இடம் விடப்பட்டிருக்க வேண்டும்.

தொடர் பதிவேடுகளில் எல்லாவித செய்திகளும் தொகுக்கப்படுகின்றன. பெற்றோர்களின் சம்பளம், பிற வருமானம், தொழில், குலம், குடும்பத்தின் அளவு, இதற்குமுன்னர் படித்த பள்ளியை விட்டதன் காரணம், உடல்நிலைக் குறிப்புகள், கையெழுத்தின் தரம், ஆற்றல்களும் ஆர்வங்களும், ஆளுமைப் பண்பு, சமூ கப் பொருளாதார நிலையும் பண்பாடும், பின்பற்றும் சமயம், உடல்நலம், மன வளம் போன்றவை குறிப் பிடப்படும். தீய பழக்கங்களை நீக்கத் தந்த பரிந் துரைகளும் அவற்றால் ஏற்பட்ட பண்புமாறுதல்களும் குறிக்கப்படுவதும் உண்டு. சுருங்கச்சொன்னால் ஒரு மாணாக்கனின் கல்வி, தொழில் பற்றிய சரியான உணர்வுகளையும், வளர்ச்சியையும் சுட்டிக்காட்டப் பயன்படும் அனைத்து விவரங்களையும் தொடர்ந்து பதிவாக்கிவரும் ஏடுதான் தொடர் பதிவேடு எனப்படு வது. ஓரிரண்டு தேர்வுகள் வெளிப்படுத்துவதைவிடச் சரியான, முழுமையான தகைமையை வெளிப்படுத்து வன தொடர் பதிவேடுகளே. இவ் வேடுகள் எந்த அமைப்பில் இருந்தாலும் சில ஆண்டுகளுக்கு ஒருமுறை யாவது திருத்தியமைக்கப்பட வேண்டும்.

ஏறக்குறைய ஒரு மாணவனைப் பற்றி எல்லா விவரங்களும் முழுமையாகப் பதிவாக்கப்பட வேண் டும். சோதனைகளின் வாயிலாகப் பெற்றதைத் தவிர வேறுவகையில் சேகரிக்கப்பட்ட விவரங்களும் இடம் பெறுதல் வேண்டும். இவை பள்ளிக்கு மாணவனின் வருகை, அவனைப் பற்றிய தேர்ச்சி, நுண்ணறிவு ஈவு, வளர்ச்சி, நடத்தை, தனித் தேவைகள், நடத் தைக் குறைகள், சிக்கல்கள், உடல்நலம், வீட்டு நிலை, கற்கும் ஆற்றல் ஆகியவற்றைத் தருவனவாக இருக்க லாம்.

கல்வி தொடங்கப்படும்போதே தொடர் பதிவேடு களும் தொடங்கப்பட வேண்டும். மேல் வகுப்பு களுக்குச் செல்லும்போது முந்தைய ஆண்டின் தொகுப் பாவது புதிய ஏட்டில் இடம்பெற வேண்டும். மாண வர்களின் வளர்ச்சியும் (Growth), முன்னேற்றமும் (Development) தெரியவேண்டும். மதிப்பெண்கள் மட்டுமல்லாது மற்ற விவரங்களும் பதிவாக வேண் டும். பதிவு செய்வது சிரமமாக இருந்துவிடக் கூடாது. பதிவேட்டை உருவாக்கும்போது அதைப்பற்றி மிக்க கவனம் செலுத்த வேண்டும். பெற்றோர்களுடன் மாணவனைப் பற்றிப் பேசப்பட்டதன் சுருக்கமும் இடம்பெறுவது நன்மை பயக்கும். சில குறிப்புகள் குறி யீடுகளினாலும் விளக்கப்படலாம். மாணவனைப் பற் றிய எல்லாச் செய்திகளும் காக்கப்பட வேண்டும். எவருக்கும் தெரிந்துவிடுவதுபோலவும் இருக்கக் கூடாது ஆதாரமற்ற யூகங்களும் பதிவாகக் கூடாது. பழைய தொடர் பதிவேட்டிலிருந்து புதிய ஏட்டிற்குச் செய்திகளை மாற்றும்போது பொருந்தாதனவற்றை அவ்வப்போது நீக்கிவிடுதல் அந்தத் தொடர் பதிவேட் டின் பயனைப் பெருக்கும் (ஆதம்சு-1966).

ஆளுமையைப் பற்றியும், நடத்தையைப் பற்றி யும், சண்டை சச்சரவு, பிறர்க்குதவுதல், விருப்பு

வெறுப்புகள் ஆகியவற்றுடன் குடும்பத் தொடர்பான நிகழ்வுகளைப் பற்றியும் பதிவுகள் இருக்கவேண்டும், இத்தகைய விவரங்கள் தொகுப்பேட்டின் அளவைப் பெரிதாகும்படி அமைந்துவிடக் கூடாது. ஆகவே முதலில் தனித்தாளில் எழுதியபிறகு அதன் சுருக்கத்தைப் பொருள் சிதறாதவாறு தொகுக்கவேண்டும். செய்திகளைப் பதிவு செய்தவர் ஒருவராக இருந்தாலும வேறு ஆசிரியர் அதைப் படிக்கும்போது முழு நிகழச்சியையும் சரியாகப் புரிநதுகொளள முடியவேண்டும். தொடர் பதிவேடுகள் சில ஆண்டுகளுக்காகப் பயன படுத்தப்படுவதனால் உறுதியான அட்டைகளுடன் தைக்கப்பட வேண்டும். தொகுத்து எழுதுவதறகு எளிமையான பதிவுமுறைகள் கையாளப்பட்டால பின்னர் மாணவர்களை நெறிப்படுத்துவதற்குச் சரியான முறையில் பயன்படும்.

**பயன்கள்:** தொடர் பதிவேடுகள், மாணவர்களுக்கு மட்டும் உதவுவதோடல்லாமல் ஒரு வகுப்பின் பொதுவான தேவையை அறிவதற்கும் வகுப்பின் ஏற்றத்தாழ்வுகள், தனிக்கவனம் செலுத்த வேண்டிய துறைகள், குழு என்ற முறையில் வளர்ச்சி, மீக்கற்றலுக்குத் தேவைப்படும் பாடங்கள் ஆகியவற்றை அறிவதற்கும், பொருத்தமான குழுக்களை அமைப்பதற்கும், பொதுமக்கள் தொடர்பை அளிக்க ஏறபாடுகளைச் செய்வதற்கும் ஆசிரியர்களுக்குப் பயன்படுகின்றன.

தொடர் பதிவேட்டை ஆதாரமாகக் கொண்டு மாணவர்களை நெறிப்படுத்த முயலும்போது மாணவர்கள் தத்தம் ஆற்றல்களைத் தாமாகவே சீர்தூக்கிப் பார்த்துக்கொள்ள முடியவேண்டும். ஆசிரியரின் பங்கு, ஒரு பொருளை மாணவன் புரிந்து கொள்ளுவதற்குத் துணைநிற்பதோடு நின்றுவிட வேண்டும். நல்லதோர் தொடர் பதிவேடு இத்தனமையைப் பெற்றிருக்கும். அதோடு பெற்றோர்களுக்கு அழுத்தந்திருத்தமான, தெளிவான விளக்கங்களைத் தரவும் முடியும். இவ்வாறு பெற்றோர்களுக்கு அவர்கள் மக்களின் வளர்ச்சியையும் தளர்ச்சியையும் சரியான ஆதாரங்களுடன் விளக்கியபோதெல்லாம் பெரும்பாலும் நன்மைதான் ஏற்பட்டுள்ளது. பதிவேடுகள் எவ்வாறிருப்பினும் ஆசிரியர்கள் தரும் பொதுக் குறிப்புரையானது குறிப்பிட்ட மாணவனைப் படம்பிடித்துக் காட்டுவது போல் அமைதல் வேணடும். ம.பெ.

**துணை நூல்கள்:**

**Adams, G.S.,** Measurement and Evaluation in Education, Psychology and Guidance, Holt, Rinchart & Winston, New York, 1966.

**Frieson, C.D.,** Results of Homework Versas No-Homework Research Studies, University of Gowa, Gowa City, 1979.

**தொடர்பறுநிலை:** ஒருவர் தம்மிடமிருந்தும் சமுதாயத்திடமிருந்தும் விடுபட்டுத் தனித்து நிற்பது போல் உணருகின்ற நிலை தொடர்பறு நிலை (Alienation) எனப்படும். இந்நிலையில் உளளவர்கள, உணர்வு பூர்வமான அனுபவங்களிலிருந்தும் (Emotional Experiences), சில சமயம் தம்முடைய சுய மான உணர்சசிகளிலிருந்தும் (Feeling) கூட விடுபட்டு நிற்பதும் உண்டு. மனத்தில் ஏற்படும் கருத்து அல்லது நினைவுகளுடன சாதாரணமாக மனிதன் சில உணர்வுகளால் உந்தப்படுவதுணடு. ஆனால், தொடர் பறுநிலையில் உள்ளவர்கள் கருத்து வேறு, உணர்வு வேறு, நினைவு வேறு, உணர்ச்சி வேறு என்று பிரிந்து நிற்பதிலேயே மனத்தைச் செலுத்துவர். தம்மைப் புற்றியோ மற்றவாகளைப் பற்றியோ கவலைப்படுதல், மற்றவர்களின் நிலை உணருதல் ஆகியவையும் இவர்களுக்குக் கடினமாகவே தோன்றும். தம்மைச்சுற்றி இன்பமான அல்லது துன்பமான நிகழ்வுகள் எவை நடந்தாலும் அதில் தமக்கு ஈடுபாடு இல்லை எனக்காட்டிக்கொளவதும் இவர்களது மனம் எந்த வகையில் செயற்படுகிறது என்பதைத் தெளிவாகக் காட்டும். காரன்ஆர்னி (Karen Horney) என்ற மனநலவலலுநர் இதைப்பற்றி நிறையக் கருத்துகளைக் கூறியுள்ளார். மனத்தில் ஏற்படும் கொநதளிப்பை அடக்கும் பல முறைகளில் தொடர்பறு நிலைக்குச செல்வதும் ஒன்று என அவர் கூறியிருக்கிறார். அப்போதைக்கு ஒருவரது அச்சத்தையும் வருத்தத்தையும் இது குறைக்குமென்றாலும், இந்த மனோபாவத்தின் காரணமாகக்கடைசியில் நிம்மதி இழக்கும் நிலைக்கும் ஒருவர் செல்வதுண்டு. தான் என்ற தன்னம்பிக்கையுடன் நடமாடும் ஒருவர் சிககல்களை நேர்கொண்டு தீர்க்காமல், இவ்வழியைக் கையாளுவதன் மூலம் தம் மனவலிமையை நாளடைவில் இழப்பார். ஆகவே, இதுபோன்று எண்ணுவது சரியாக ஆகாது. ஒவ்வொரு மனிதனின மனத்திலும் ஆசாபாச, ஆவேச உணர்ச்சிகள் நிறைய இருக்கும். அவற்றை உணர்ந்து அவைகளைச் சமய சந்தர்ப்பம் பார்த்து வெளிக்காட்டித் தம் மனநிறைவை அடைவதுதான் அறிவுடைமையாகும். ஆனால் தொடர்பறு நிலைக்குத் தம்மைத் தளளிக் கொள்ளுபவர்கள, தம் உண்மையான உணர்வுகளை அளவுக்கு மீறித் தம்மை அறியாமலேயே அடககி அமைதியை நாட் செல்லச் செல்ல இழப்பது திண்ணம். இது தொடர்ந் தால், ஒருவர் தம் தேவை என்ன, தாம் யார்? தம் தகுதி, கடமை என்ன என்பதைக் கூட மறகக நேரிடலாம். ஏதோ ஒரு குறிக்கோள் அற்றுத் தனியாக ஒரு பாதையில் செல்வது போலவும்

வாழ்க்கையை ஒருபிடிப்பில்லாமல் நடத்துவது போல வும் இவர்கள நாளடைவில் உணர்வது நிச்சயம். அதையும் மீறித தொடர்பறு நிலை உணர்வு ஒரு வரைப் பாதித்தால் அவர் வாழவில் தம் அன்றாட நடவடிக்கைகளில் ஒரு பெருமையையே உணர்வார் என்பதும் உண்மை ஏனெனில் ஒரு மனிதனுக்கு ஒத்து வரவில்லை, பிடிக்கவில்லை என்பதறகாக அவன் அவனையே மறுத்தால் எனன ஆகும்? மனககுழப்ப மும் அமைதியினமையுமே கிட்டும, அவன அவனாக இருந்தால்தான அதில் ஓர் உணமை புலப்படும். அதை விடுத்து ஒருவன தன்னைத்தானே வெறுக்க வேணடிவந்தால் நடைமுறைக்கு ஒவ்வாதவன என்றே பெயரெடுக்க நேரிடும.

தொடாபறு நிலை என்பது மயக்கத்திறகுட் பட்ட மனததிறகுச (Psychological Anaesthesia) சம மாகும். இந்நிலையில ஒரு மனிதனுடைய உணர்வு கள், குழபபங்கள ஆகியவை மனததளவில செய லறறு மறைந்து போக வாய்ப்பு உணடு. வாழ்வில வளம்பெற இம்மனப் போக்கை மாற்றி உண்மை யான குறைகளுள்ள வாழ்ககையை வாழ எதிர் நோக்க மனிதன் அவனைத் தயார் செய்து கொளள வேணடும.

பலகாலம் நோய்வாய்ப் பட்டிருக்கும்போதும், சாவை எதிர்நோககி இருக்கும்போதும் சிலர் இந் நிலைக்குத தள்ளப்படுவதுணடு. மனத்தில வேதனை மிகுநது அதற்கு வடிகால் கிடைககாததால தன னையே நொந்து கொளளும் நிலைக்குச சிலசமயம மனிதன் தள்ளப்படுகிறான. அப்போது அவன மற்ற வர்களிடமிருந்து தனிதது நிற்பதாக உணாகிறான்; எல்லோராலும கைவிடபபட்டவனாக நினைக்கிறான, அனைவரிடமிருநதும தொடாபு துணடிககப்பட்டது என்றும் அவன் எணணுகிறான். வெளி உலகம அவ னுக்கு உண்மையற்றதாகத தோனறுகிறது. மறற மனிதர்கள உலவும் இயந்திரஙகளாக மட்டும் தெரி கின்றனா. தன குறையைச் சொல்வதறகு யாரும் தெரிவதில்லை. குறை சொலவதற்கு ஒன்று இருபப தாகவும் தெரிவதிலலை. மற்றவர்கள ஊககுவித் தாலும் இவனால உறவை வளர்க்க முடிவதில்லை இவவுலகிற்கும் தனக்கும தொடர்பில்லை எனறும தனக்கும் தன் உடலுக்கும தொடர்பிலலை எனறும எணணததொடஙகுகிறான். இவவுலகைவிட்டுப்பிரிய மனமில்லாமல், தான எப்போதுமே இவவுலகைச் சார்ந்தவன அல்லன எனற ஒரு தவறான எணணமும் கொளகிறான். தனனையே நொந்து கொள்ளும் மன நிலையும் அப்போது மிகுதியாகும். மற்றவர்கள் சொலவது ஒரு பொருட்டாகவும் தெரியாது. இவர் கள் சிகிச்சைக்கும ஒத்துழைக்க மாட்டார்கள. ஏனென்றால் எலலாமே வீண் பொருளற்றது எனத் தோன்றும்.

சில ஞானிகள், மனமுதிர்ச்சி பெற்ற ஆன்றோர் கள, பெரியோர்கள ஆகியோர் மனப்பக்குவம் மேலிட்டு இந்நிலையை அடைவதுணடு. சாக்ரட்டீசு சொன்னது போல 'உனனையே நீ அறிவாய்' என்ப தற்கேற்பத தனனை நன்றாக உணர்நதவர்கள இவர் கள். ஆபிரகாம் மாசுலோ (Abraharm Maslow) என்ற உளநல வலலுநரும் இவர்களைத் தன்னிலை உணர்ந்த வர்கள் எனக் குறிபபிடுகிறார்.

சாதாரணமாக இருந்த ஒருவர் இந்நிலைக்குத் தள்ளப்பட்டால் நலலநிலையிலிருப்பவர்கள அவரை உற்சாகப்படுத்தி, அவர்தம் பெருமைகளைச் சொல்லி, அவருக்கு முககியத்துவம் கொடுத்து, இந்நிலையி லிருநது அவரை விடுவிக்க முயற்சி செயய வேணடும். அவ்வாறு செய்யாவிட்டால இந்நிலையையும தாண்டி மேலும்சமூகததை விட்டு இவர்கள் ஒதுங்கிச் செயற்பட அல்லது பிரிய நேரிடும். என் மா.

**தொடர் வங்கி முறை:** பணத்தைக் கடன கொடுக்க அல்லது முதலீடு செய்ய மக்களிடமிருந்து வைப்புகளாகப் பெறறுககொணடும் அதேநேரத்தில வைப்பாளர்கள விடுக்கும் காசோலைகள, உறுதிக் காசோலைகள் (Drafts), ஆணைகள் மற்றும் பிற வகைகளின்மூலம் திருப்பிச் செலுத்திக்கொணடும் செயறபடும் நிறுவனம வங்கி (Bank) எனப்படுகிறது. வஙகிகளை அவற்றின் செயற்பாட்டின் அடிப்படை யிலும் அமைப்பின் அடிப்படையிலும் வகைப்படுத்த லாம். செயற்பாடு எனற நிலையில் ஆதாயம, உறுப் பினர்களுககு உசச நனமை பெற்றுத் தருவது, பொரு ளாதார மேம்பாடு போனறவற்றைக் கருத்திற கொணடு செயற்படும் வங்கிகளாக வணிக வங்கிகள, கூட்டுறவு வங்கிகள, மைய வங்கி ஆகியவை விளஙகு கினறன. வங்கிகள் அமைப்பின் அடிப்படையிலும் பல வகைபபடும். அவ்வகையில் தொடர் வங்கிமுறையும் (Chain Banking) ஒனறாகும்.

தொடர் வங்கி முறையைச சஙகிலி வஙகி முறை எனறும் குறிப்பிடுவர். பிடிப்புக் குழுமங்களை (Holding Companies) தவிர்த்து ஒருவர் அல்லது ஒருசிலர் கூட்டாகச் சேர்ந்து பல வங்கிகளை நிறுவிச் செயற்படும் முறை தொடர் வஙகி முறையாகும். இதில ஒவவொரு வஙகியும் தனித்தனி வஙகியாகச் செயற்படும திறன இருப்பினும் ஒரே நிருவாகத்தின கீழ இயங்குவதால ஒரு வங்கிக்கு மற்றொரு வங்கி கிளை போலச் செயற்படும. இம்முறை ஐக்கிய அமெ ரிகக நாட்டில் புகழ் பெற்று விளங்கியது. ஐக்கிய அமெரிக்க நாட்டில கி.பி. 19-ஆம் நூறறாண்டின் மையப பகுதியில இம்முறை தோனறி வலுப்பெற்று 1920-ஆம் ஆண்டை ஒட்டிய ஆணடுகளில புகழேணி யின உச்சியில் இருந்து மக்களால் பெரிதும் போற்றப் பட்டது. ஆனால், 1920-ஆம் ஆண்டிறகுப் பிறகு பல

தொடர்கள் (Chains)தோல்வியுற்றதைத்தொடர்ந்து இவ்வங்கி முறையின் பயன் குறையத் தலைப்பட்டது. அமெரிக்க நாட்டில் 1925-ஆம் ஆண்டில் 933 வங்கி களைக் கொண்ட 133 தொடர்கள் இருந்தன. கலி போர்னியா (California) வாசிங்டன் (Washington) இடாகோ (Idaho), உட்டா (Utah), நியூயார்க்கு (New York), சார்சியா (Georgia), மினெசோட்டா (Minesota) ஆகிய பகுதிகளில் இவ்வங்கி முறை செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்தது. ஏறத்தாழ 175 வங்கிகளைக் கொண்டிருந்த சார்சியா மற்றும் பிளா ரிடாவின் வித்தாம் முறை (Witham System of Georgia and Florida) நாட்டிலேயே மிகப் பெரிய தொடராகத் திகழ்ந்தது. இந்தத் தொடரும், அர்க் கான்சாசில் இருந்த ஏ.பி. வங்கித் தொடரும் (A.B. Banks Chain in Arkansas) மற்றும் பல தொடர் களும் தோல்வியடைந்ததைத் தொடர்ந்து இம் முறையில் செல்வாக்கு மங்கியது. ஏறத்தாழ 522 வங்கிகளைக் கொண்ட 115 தொடர்களே 1945-ஆம் ஆண்டில் செயற்பட்டுக் கொண்டிருந்தன. இல்லி னாய் (Illinois), கான்சாசு (Kansas), இலோவா (Lowa),மினெசோட்டா (Minesota), மிசூரி (Missouri) நெப்ராசுகா (Nebraska), தெக்சாசு (Texas) போன்ற மாநிலங்களில், நாட்டில் இருந்த தொடர் வங்கிகளில் 50 விழுக்காடு அளவுத்தொடர் வங்கிகள் செயற் பட்டுக் கொண்டிருந்தன. என்.எஸ்.பா.

**துணை நூல்கள்:**

**பாலசுப்பிரமணியன், என்.எஸ்.** பணம், பாங்கு, பன் னாட்டு வாணிகம், உமா பப்ளிகேஷன்ஸ், மதுரை, 1987.

**Vaish, M.C.** Monetary Theory, Ratan Prakash Man dir, Agra, 1975.

***தொடர் வெளியீடுகள்***: இது ஒரு குறிப் பிட்ட காலவரையறையின்றித் தொடர்ந்து வரும் வெளியீடு (Serial) ஆகும். பல்வேறு நிறுவனங் களில் இருந்து அந் நிறுவனங்களைப் பற்றிய செய்திகளைத் தாங்கி வெளிவரும் செய்தித் தாள்களும் தொடர் வெளியீடுகளைச்சாரும். மற் றும் ஒரு நீண்ட கதை பல பகுதிகளாக ஒரு குறிப்பிட்ட பெயருள்ள வெளியீட்டில் வருமாயி னும், அல்லது ஒரே நூலில் உள்ள பகுதிகள் மற்றும் பல தொகுதிகள் அவ்வப்போது தனியாக வெளி வரு மாயினும் அதுவும் தொடர் வெளியீட்டைச் சாரும். மற்றும் ஒரு குறிப்பிட்ட நிறுவனத்தினுடைய ஆண் டறிக்கை, ஆண்டுநூல், கருத்தரங்குகள் பற்றிய கட்டு ரைகள், மாநாட்டுச் சொற்பொழிவுகள், ஆண்டு மலர், ஒருவரது சுருக்கமான வாழ்க்கைச் சரித்திரம், ஆராய்ச்சி உரைகள், நாணய மாற்றுச் சான்று வெளியீடு, நூல்விவரத் தொகுப்பு (Bibliography), செய்தி நாளேடு (News Bulletin) போன்ற அனைத்து வெளியீடுகளும் தொடர் வெளியீடுகளைச் சாரும். இந்த வெளியீடுகள் எந்தெந்தக் காலத்தில் வெளி வரும் என்று குறிப்பிட முடியாது. மு.இரா.

**துணை நூல்கள்:**

**Leonark Montague Harrod,** The Librarians Glossory, Clarion Books Indian Book Co., Andre Deutsch, 1977.

**Thomas (Diana M) and Others,** The Effective Reference Librarian, Academic Press, New York, 1981.

***தொடரியல்***: ஒரு மொழிக்கு எழுதப்படுகின்ற இலக்கணத்தின் உட்பிரிவுகளுள் தொடரியலும் (Syntax) ஒன்று. இது ஒரு மொழியிலுள்ள பொருள் பொதிந்த வாக்கிய அமைப்புகள் அனைத்திலுமுள்ள சொற்கள், எச்சத்தொடர், முற்றுத்தொடர் போன்ற வற்றின் நிலை,ஒழுங்கு முறை, பயனாக்கம்(Function) ஆகியவற்றை எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் எனும் அமைப்பு அடிப்படையில் விளக்கு கிறது. இத்தகைய விரிவான தொடரியல் விளக்கம் முழுமையும் எம்மொழிக்கும் இன்றுவரை எழுதப்பட வில்லை. தமிழுக்கு முழுமுதல் இலக்கணம் வகுத்த தொல்காப்பியர் கூடத் தமிழ்மொழியின் தொடரியல் கொள்கைகளைக் கிளவியாக்கம், வேற்றுமையியல் போன்ற அதிகாரங்களுள் ஆங்காங்கே விளக்கிச் செல்கின்றாரேயொழியத் தொடரியலுக்கெனத் தனி யொரு இயல் அமைத்தாரில்லை.

சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்புவரை தோன்றிய இலக்கணங்கள் ஒருமொழியின் எழுத்ததி காரம் (Phonology), சொல்லதிகாரம் (Morphology), அண்மை உறுப்பு (Immediate constituent), தொடர மைப்பு (Phrase structure) போன்றனவற்றை மட் டுமே விரிவாக விளக்கின. இதனை அமைப்பு மொழி யியலாளர்கள் (Structural Linguists) செய்து வந்த னர். ஆனால், ஒருவாக்கியத்தில் அமைந்துள்ள சொற் களின் தன்மைகளையும் அவற்றிற்கிடையேயுள்ள உற வினையும் கூறித் தொடரியல் விளக்கம் கொடுக்க இயலவில்லை. அதனால் சுமார் 35 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே பல்வேறு அணுகுமுறைகள் வெவ்வேறு அறிஞர்களால் கையாளப்பட்டன. ஆரிசு (Harris, 1958) இடமாற்று முறை (Transformational method) என்ற கொள்கையின் மூலம் தொடரியலை ஆராய்ந் தார். அதே முறையைச் சோம்சுக்கி (Chomsky, 1957) என்ற அறிஞரும் கையாண்டார். ஆனால் இரண்டிற் கும் மிகுந்த வேறுபாடுகள் காணப்பட்டன. தொடரி யல் ஆய்வில் அண்மை உறுப்பாய்வு (Immediate

constituent analysis), பதிலீடு முறை (Substitution method), உறுப்பமைப்புக் கொள்கை (Tagmemic theory) போன்ற பல்வேறு முறைகளை அமைப்பு மொழியியலாளர்கள் மேற்கொண்டார்களேயானா லும், சோம்சுக்கியின் மாற்றிலக்கண முறையே சிறப் பானதாகக் கருதப்பட்டது. தொடரியல் அமைப்புகள் (Syntactic Structures) என்ற நூலை 1957-ஆம் ஆண்டு வெளியிட்ட சோமசுக்கி அமைப்பு மொழியிய லின் மூலம் தொடரியலை விளக்கும்போது ஏற்படும் இயலாமையையும் இடர்ப்பாடுகளையும் சுட்டிக் காட்டி, மாற்றிலக்கண முறை தொடரியலை விளக்க எத்துணை இன்றியமையாததாக உள்ளது என்பதை யும் நிலைநாட்டினார். இவரது கொள்கைகள் தொடரியல் ஆய்வில் ஒரு திருப்புமையமாக அமைந் தன. மாற்றிலக்கண முறையால், ஒருமொழியில் உள்ள எண்ணற்ற வாக்கியங்களை விளக்கலாம் என்று நம்பப்பட்டது.

சோம்சுக்கி ஒரு குறிப்பிட்ட மொழியிலுள்ள பொருளுடை வாக்கியங்களனைத்தும் எவ்வெவ்வாறு? எப்படியெப்படி? எவ்வெம் முறைகளில் தோன்றுகின் றன, தோற்றுவிக்கப்படுகின்றன என்பதை உய்த்து ணர்ந்து புதியதொரு கொள்கையினை வகுத்தார். அதன்படி தொடரியல் முறையே,

1. தொடரமைப்பு விதிகள் (Phrase structure rules)
2. மாற்று விதிகள் (Transformational rules)
3. உருபொலியனியல் விதிகள் (Morphophonemic rules)

என்ற விதிகளால் விளக்கப்படும் என்றார். வாக்கியங் களின் புற அமைப்பை விளக்கிக் காட்டுவது தொடர மைப்பு விதிகள். அதாவது, ஒரு வாக்கியம் தொடர் களின் கூட்டமைப்பால் ஆனது என்றும், தொடர்கள் பெயர்த்தொடர், வினைத்தொடர் எனப்படுமென்றும், பெயர்த்தொடர், பெயரடை-பெயர் எனும் அண்மை உறுப்புகளால் ஆனது என்றும், வினைத்தொடர், செயப்படுபொருள் பயனிலை எனும் அண்மை உறுப்பு களால் ஆனது என்றும் படிப்படியாக விளக்குவது தொடரமைப்பு விதிகளின் வேலை. இவ்வாறு தொடரமைப்பால் தோற்றுவிக்கப்பட்ட வாக்கியங் கள் நிலைபேறுடையனவாக இல்லாமல் மாறியமை யும் பாங்கினவாகையால், மாறும் பாங்கினை விளக்கு வன மாற்று விதிகள் என்று சொல்லப்பட்டன.

எ-டு. 'நான் பாடம் படித்தேன்' என்ற நேர் வாக் கியம், 'நானா பாடம் படித்தேன்?' 'நான் பாடமா படித்தேன்?' 'நான் பாடம் படித்தேனா?' என்றவினா வாக்கியங்களாகவும், 'நான் பாடம் படிக்கவில்லை' என்ற எதிர்மறை வாக்கியமாகவும் மாற்றம் பெறு கிறது. இம்மாற்றங்களை முறையே வினாவாக்கிய மாற்றம், எதிர்மறை வாக்கிய மாற்றம் எனும் விதிகளைப் பயன்படுத்தி விளக்கலாம். இவ்வாறு ஓர் எல்லைக்குள் நின்று கொண்டே வெவ் வேறு விதிகளைப் பயன்படுத்திப் பலவேறு வாக்கி யவகைகள் அனைத்தையும் விளக்கிவிடலாம். இத் தகைய வாக்கியங்கள் அடிப்படைச் சொற்களா லானவை, சொற்கள் உருபன்களாலானவை. உருபன் களும் சொற்களும் ஒன்றோடொன்று இணையும் போது புணர்ச்சி ஏற்படும். அதனால் சந்தி மாற்றங் கள் தோன்றும், அவை உருபொலியன் விதிகள் மூலம் விளக்கப்படும்.

இவ்வாறு காட்டப்பட்ட தொடரியல் கோட்பாடு வாக்கியங்களின் புற அமைப்பை (Surface structure) மட்டுமே காட்டவல்லது என்ற உண்மையினைப் படிப் படியாக உணர்ந்த அறிஞர்கள் (Katz, 1964, Fodor, 1964) புற அமைப்புக்கும் மேலாகப்பிறிதொரு அமைப் பும் உள்ளது என்ற கருத்தினை வலுவுறச் செய்த னர். அது தொடரியல் கோட்பாட்டின் பிறிதொரு எல்லைக்கல்லாக அமைந்தது. அதனால், 'தொடரி யல் கொள்கைகளின் கூறுகள்' (Aspects of the theory of Syntax) என்ற நூலை 1965-ஆம் ஆண்டு வெளி யிட்டுத் தொடரியல் கோட்பாட்டினை விளக்க நிலைக் கொள்கை (Standard Theory) என்ற ஒன்றைச் சோம்சுக்கி உருவாக்கினார். அதன்படி புற அமைப்பு வாக்கியங்கள் அனைத்தும் குறிப்பிட்ட சில அக அமைப்பு (Deep structure) வாக்கியங்களிலிருந்து உரு வாகும் என்ற கோட்பாடு நிலை பெறுவதாயிற்று. எனவே, பழைய கோட்பாட்டினை மாற்றி-அதாவது, தொடரியல் விதியையும் மாற்று விதியையும் தொட ரியல் பகுதி (Syntactic component) எனவும், உரு பொலியன் விதியை ஒலியனியற் பகுதி (Phonological component) எனவும் இருபகுதிகளாக்கிப் புதியதொரு பகுதியாகிய பொருளியல் பகுதி (semantic component) மூன்றாவதாக இணைக்கப்பட்டது. பொருள் அடிப்படையே (semantic basis) ஒரு வாக்கியத்தின் அக அமைப்பைக் காட்டவல்லது எனக் கொண்ட தால் தொடரியல் மாற்றிலக்கணக் கோட்பாடு மிகப்பெரியதொரு நிலையைப் பெறுவதாயிற்று.

இந்நிலையில், பொருண்மையியலை (samantics), ஆழமாக ஆராய்ந்துகொண்டிருந்த அறிஞர்கள் (McCawley, 1968, Lakoff, 1971) அக அமைப்பு வாக்கியங்களுக்கும் ஆழமாக ஓர் அமைப்பு இருத்தல் வேண்டுமென்ற கொள்கையின் அடிப்படையில், தொடரியல் விளக்கத்திற்கு உருவாக்கப்பொருண்மை யியல் (generative semantics) என்ற ஒரு கொள்கை யினைத் தோற்றுவித்தனர். இதனடிப்படையில் எடுத் துரை பொருண்மை இயல் (Interpretive semantics)

என்ற முறையும வலுப்பெறுவதாயிற்று. ஆனால், இக் கருத்துகளும் கடுமையாகத் திறனாய்வு செய்யப் பட்டு1975-ஆம் ஆணடுககுபபின வலுவிழந்துபோயின.

இவவாறு தொடரியல் கொள்கை நிலைபேறு அடையாமல் தொடாந்து கொணடேயிருக்கும் போககினை உணர்ந்த சோம்சுககி மொழியை,மொழி யின் இலக்கணததை, தொடரியலை ஒரு புதுக் கோணத்தில ஆராய முற்பட்டார். இப்பொழுது வழக்கிலுள்ள மொழிகள வழக்கில இருகக வேணடிய பலலாயிரக கணக்கான மொழிகளின ஒரு கூறுதான் என்றும், அதனால், அவற்றின் உளளீட்டு இலக்கணம் (Core grammar)கண்டு, பொது இலககணம் (Universal grammar) ஒனறை நிலைநாட்ட வேணடும என்றும் கூறலானார். அதற்காக வளம்பெற்ற சிறப்பு வாய்ந்த மொழிகளை வெவவேறு கோணத்தில ஆராய்ந்து, புதுக் கோட்பாடுகளை நிலைநாட்ட வெவ்வேறு சோதனைகளைச செய்து, கட்டுக்கோப் பான வழிகாட்டிக் கொள்கைகளை உருவாககித தனி யொரு மொழியின் இலக்கணம் பொது இலககணத துடன ஒப்பிடப்படும் பொழுது. நிலையறறதாகிவிடு தலை உணரவேண்டும் என்றார். அதனடிப்படையில 1980 முதல் மேற்கொணட முயற்சியின பலனாகக கட் டுறுப்புக் கொள்கை (On binding theory) என்ற ஒரு கருத்தை முன் மொழிந்து முழுமுதற் கொளகை (Government Binding theory) எனற கோட்பாட டினை நிலைபெறச் செய்தார். அதனால முன்பிருந்த தொடரியல் கோட்பாடுகளிலெல்லாம் பெரும் மாற்ற மும வீழ்சசியும் ஏற்பட்டன.

இக்கோட்பாட்டின்படி ஒரு மொழியிலுளள அடிப்படை வாக்கியங்களெல்லாம் ஒலியியல் உருவம் (Phonetic form), தருக்க உருவம் (logical form) என்ற இரணடை மட்டுமே பெறறிருக்கும். எனவே, ஒரே விதியின மூலம் அனைத்துவகை வாககியஙகளை யும் உருவாக்கலாம் எனற கருததினை முனமொழிந தாா. பொதுவாக ஒரு வாக்கியத்தின் புற அமைப்பி லுள்ள அருவக்கூறு(Empty category)அடிச்சுவடுகள் (Trace)எனறும், அவை பெயாத்தொடர் மாற்று(Move-NP),வினா மாற்று (Move-Wh) எனும் விதிகளால் பெறப்படும் என்றும அறுதியிட்டு இறுதியில இயக்குவிதி (Move-rule) எனனும் ஒரே விதியின் கீழ அடக்கலாம் எனறு பரிந்துரைத்தார். சோம்சுக்கியின் இக்கோட்பாடு பலரால் விவாதிக்கப்பட்டாலும் முழுமையாக இனனும் பயனாக்கம பெறவில்லை. ஒரு மொழியில் வரையறுக்கப்பட்ட வாக்கிய அமைப்புகளினின்று எலலா வாக்கியங்களையும் இவ் இயக்குவிதியால உருவாக்கி, இலக்கணவாக்கியங் களை ஏறகவும் அலலாதவறறைத தளளவும் வேண் டும் என்பது சோம்சுக்கியின் இன்றைய வாதம். இஙகு மாறறிலக்கணக் கோட்பாட்டிற்கோ பொருளியல கோட்பாட்டிறகோ இடமில்லை.

இவவாறு, தொடரியல் ஆய்வாளர்களின் அணுகு முறை நிலையானதொனறாக இல்லாமல, ஆங்கிலத் தில் கிடைக்கின்ற இலக்கண வாக்கியஙகளின அடிப் படையில், தொடரியலின தொடராய்வு முடிவுறா மல் இன்று நிற்கிறது.

ஆங்கில மொழியினை மையமாக வைத்து எழுநதுள்ள தொடரியல கோட்பாடுகள் அனைத் துலக மொழிகளுககெலலாம் பொதுவானதாக அமை யுமா என்பது நீண்டதொரு ஆய்வுககுரியது. அத னாலதான பொது இலக்கணம் என்ற கொளகை யினைச சோமசுககி வலியுறுத்துகிறார் எனலாம். அதனால, 'ஒரு மொழியை எப்படியும் பேசலாம்-பொருள விளங்கினால் போதும்; எப்படியும் எழுத லாம் – மாற்றியமைக்கலாம் – பொருள புரிந்தால போதும்' என்ற கொள்கையின் அடிப்படையில் தொடரியலின கொளகை விளக்கம செலலுகிறதோ என்ற ஐயம் எழுகிறது. இரா.பா.

**துணை நூல்கள்:**

Chomsky, Noam, Syntactic Structures, Mouton and Company, The Hague, 1957.

Katz, Jerrald J; The Philosophy of Language. Harper and Row, New York, 1966.

Lakaff, George, The nature of Syntactic Irregularity. Cambridge, 1965

**தொடித்தலை விழுத்தண்டினார்**: சங்க காலப் புலவருள ஒருவராய இவா தம் இயறபெயர் தெரிநதிலது. முதுமைக் காலத்தில ஊனறு கோலா கப பறறி நடந்த பூணகட்டிய கமபினைத் 'தொடித் தலை விழுத்தணடு' என்று கூறிய சொலலாட்சிச் சிறப்பான இப்புலவர் தொடித்தலை விழுத்தணடி னாா எனப்பெயர் பெற்றார். இவர் பாடிய ஒரே பாடல புறநானூற்றில் 243ஆம் பாடல் ஆக இடம பெற்றுள்ளது. இவர் ஒல்லையூர்கிழான் மகன பெருஞ் சாததனைப் பாடியுளளார். தொடித்தலை விழுத தணடூன்றி, நடுக்குற்று, இருமலிடையே சில சொற் கூறும் முதிய நிலையில் இபபுலவர் வண்டற் பாவைக் குப் பூவைச் சூடிப் பொய்கையில விளையாடும மகளி ரொடு கைகோத்து விளையாடி, இளைஞருடன் மருத மரத்திலேறிக் கரையிடத்தில் உள்ளோா திகைக்க நெடுநீர்க் குட்டததுத துடுமெனப் பாய்ந்து குளித்து மணற் கொண்ட இளமை சென்று மாய்நததே என இப்பாடலில் முதுமை நினைந்து இரஙகிப் பாடியுள ளார். இப்பாடலைப் பேராசிரியா மூப்புப் பொருளாக

இளிவரல் பிறந்ததறகும் நச்சினார்க்கினியா 'கழிந் தோர் ஒழிநதோர்க்குக் காட்டிய முதுமை'க்கும் மேற் கோளாகக் காட்டியுள்ளனர். இரா.சா.

***தொண்டரடிப் பொடி ஆழ்வார்***: ஆழ் வார்கள பனனிருவருள ஒருவர் இவர். ஆழவார் களின காலவரிசையில், இவர் பத்தாம இடததைப் பெறுகிறார். சோழ நாட்டில் உள்ள திருமணடஙகுடி என்னும் ஊரில, முன்குடுமிச் சோழியர் குலத்தில, கி.பி.8-ஆம நூற்றாணடில் இநத ஆழவார் பிறந் தார்; 'விப்ர நாராயணன்' எனறு பெறறோர்களால பெயரிடப்பட்டார.

இவர் பிரமசரிய நிலையில் இருநதுகொணடு, திருவரங்கத்தில் நநதவனம் அமைதது, மலா பறிததுத் திருமாலை கட்டி, அரங்கநாதனுக்கு அணி வித்து மகிழும் தொண்டு வாழக்கையில் நிலை பெற் றிருந்தார். சூழநிலையின் காரணமாக, மன உறுதி தளர்நது, 'தேவதேவி' என்னும அழகு மங்கையின ஆசைவலைக் குட்பட்டு. 'ஆவி திகைக்க ஐவர் குமைக்கும் சிற்றின்பப் பாவி' யாகி விட்டார். ஆனாலும், அரஙகநாதனால், உரிய காலத்தில சூழ் நிலையை மாற்றுவித்து, ஆட்கொளளபபட்டார். அதற்குப் பிறகு, 'அரங்கவோ! என்று அழைக்கும் தொண்டா அடிப் பொடி ஆகும்' வேட்கையராய, திரு அரங்க நாதனை விட்டுப் பிரியாதவரானார். அரங்கநாதனை அன்றி வேறு எநதத் திருத்தலத்து எம்பெருமானையும இவர் பாடாதவரானார்.

இவர் 'திருப்பளளி எழுச்சி' என்ற பிரபந்தம பாடியுள்ளார். இது 10 பாசுரங்களைக் கொணடது மற்றொன்று 'திருமாலை' என்றபிரபந்தம். இது 45 பாசுரங்களைக் கொணடது.

திருப்பள்ளி எழுச்சி, அரங்கநாதனைத துயில் எழுப்புவதாக அமைந்த சிறு பிரபந்தம். சங்க காலத்தில், அரசனைத் துயில் எழுப்புவதாக அமைந்த 'துயில் எடை நிலை' எனற அமைப்பை ஒத்தது இது. இபபிரபந்தம் காலை நேரத்திற்குரிய இயற்கைச் சூழலை நனகு வருணிக்கிறது.

'திருமாலை அறியாதார் திருமாலை அறியா தாரே' என்ற வைணவச் சான்றோர்களது கூறறே திருமாலை என்னும் இவரது பிரபநதத்தின பெருமை யைத் தெரிவிக்கும். 45 பாசுரங்களும், பக்தர்களைப் பகவானோடு இணைத்து வைக்கும் அன்பு தவழும் அறுபுதச் சஙகிலி என்னலாம. இதற்குப் பெரியவாச் சான் பிள்ளை அவர்கள் கொடுத்துள்ள விரிவுரை மேலும் இப்பிரபந்தத்துள் பக்தர்களை ஈடுபடச் செய்யும். 'குடதிசை முடியை வைததுக் குணதிசை பாதம் நீட்டி, வடதிசைப் பின்புகாட்டித் தென்திசை இலங்கை நோக்கி, கடல் நிறக் கடவுள் எநதை அரவணைத துயிலும் ஆ கண்டு உடல எனக்கு உருகு மாலோ என்செயவேன உலகத்தீரே' எனனும் 17ஆம பாசுரம் ஆழ்வாரது பக்திஉணர்வை வெளிப்படுதது கிறது. அரஙகனின் பக்தாகள, சாதி வேறுபாடு கரு தாது ஒனறி வாழ வேணடும, என்ற உயர்நத சாதி ஒழிப்புக கருததை, 'பழுதிலா ஒழுகலாறறுப் பல சதுப்பேதிமார்கள். இழிகுலத்தவர்களேனும் எம் அடி யார்கள ஆகில் தொழுமின்! நீர் கொடுமின! கொண மின்! என்ற பாசுரத்தில் தெளிவு படுத்துகிறார் ஆழவார். மு.இரா.

***தொண்டி***, இராமநாதபுரம் மாவட்டம், திரு வாடானை வட்டததில் திருவாடானைககுக் கிழககே 13 கி.மீ. தொலைவில கிழக்குக் கடறகரையில அமைநதுள்ள ஊா. தமிழநாட்டில பாணடிய நாட் டின் புகழபெற்ற துறைமுகஙகளுள ஒன்றாக இது விளஙகியது சஙக காலத்தில் இங்கு வாணிகம் சிறப் பாக நடைபெறறது தமிழகத்திறகுத் தேவையான சில பொருள்கள இத்துறைமுக மூலமாகப் பிற நாடுகளிலிருநது இறககுமதி செயயப்பட்டன.

பனனெடுங்காலமாகப புகழபெற்றிருநத இத் துறைமுகப் படடினம அயல்நாட்டு வணிகர்களுக்கு நனகு அறிமுகமாகி இருநதது. தாலமி, அபுலபிடா, இபின் பதூதா, மார்க்கோபோலோ முதலான அயல் நாட்டுப் பயணியர் தொணடியைக குறிப்பிடுகினற னா. தாலமி 'தியாதிசு' (Tyadis) எனவும், அபுலபிடா 'தணடியூர்' (Thandiyur) எனவும், 'திமிசுகி' (Dimi-shqi) 'தணடா' (Thanda) எனவும், பெரிபுளூசின எரித திரியக்கடல் என்னும் நூலின ஆசிரியர் 'தொணடி' எனவும் இதனைக் குறிப்பிட்டுளளனர். மேலைக கடறகரையிலுளள சேரரது தொணடியினின்றும் இதனை வேறுபடுத்திக்காட்ட இதனைச 'சோழன-தொணடி' எனவும சுட்டினர். இஙகிருந்து மலாயா, சீனா, இலங்கை முதலான நாடுகளுககுப் பணடஙகள ஏற்றுமதி செய்யப்பட்டன. மததியகிழக்கு நாடு களைச் சோநத (Middle Eastern Countries) வணிகா கள தொணடித துறைமுகப் பகுதிகளில் முததுக்குளித் தல், சங்கறுத்தல், மீனபிடித்தல முதலான தொழில் களில் ஈடுபட்டனர். தொணடிக்கு கி.பி. 13-ஆம் நூற்றாணடின இறுதிபபகுதியில் வருகைபுரிந்த வெளி நாட்டுப் பயணியான மார்ககோபோலோ இஙகு முத்துக்குளிக்கும் தொழில் மிகச் சிறப்புடன் நடை பெற்றதாகக் குறிபபிட்டுள்ளார். இநதியாவின பருத்தி (Raw Cotton) மிகுநத அளவில் தொண்டி, தேவிப் பட்டினம ஆகிய துறைமுகஙகளின் மூலம இலஙகாசயர் தொழிற்சாலைகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு இத் துறைமுகஙகளின் மூலம் துணியாக இறக்குமதி செய் யப்பட்டது. கிழக்கிநதியக குழுமம் இராமநாதபுரத்

தில் ஆதிக்கம்பெற்ற பின்பு இத்துறைமுகத்தின்மூலம் தானியங்கள், பருப்பு, அரிசி, தவிடு ஆகியன ஏற்றுமதி செய்யப்பட்டன. பர்மாவிலிருந்து விசைப்படகுகள் (Steamers and Sailing Craft) கி.பி. 1940 வரை இத்துறைமுகத்திற்கு பெரும் அளவில வந்துகொண்டிருந்தன. தொடக்க காலத்திலிருந்து இங்கிருந்து இலங்கைக்குக் கப்பல்கள் சென்றுகொண்டிருந்தன. இராமநாதபுரத்தின்மீது கி.பி 1170-இல் படையெடுத்து வந்த இலங்கைப் படைத்தலைவனான இலங்காபுர தண்டநாயகன் என்பான தொண்டியைக் கைப்பற்றி, அதனைச் சிலகாலம் தனது ஆதிக்கத்திற்கு உட்படுத்தினான்.

அக்காலத்தில தொண்டித் துறைமுகத்தின் முக்கியத்துவம் குறைந்து சிறுமையுற்றுள்ளது. அப்போது தனுஷ்கோடியும் பாம்பனும் முக்கியத்துவம் பெற்று விட்டன. ஒருகாலத்தில் சிறந்த கப்பல கட்டும் துறைமுகமாகத் திகழ்ந்த தொண்டி இன்று பெருமை குன்றி நிற்கின்றது இங்குள்ள விரிகுடா (Bay) குறுகிவிட்டதால் கப்பல்கள் கடற்கரையிலிருந்து $4\frac{1}{2}$ கி.மீ. முதல 7 கி.மீ தொலைவில நங்கூரம் பாய்ச்ச வேண்டியுள்ளன. இப்போது இங்குப்பயணிகள போக்குவரத்து இல்லை; பண்டக கப்பல்கள் மட்டும் செல்கின்றன. உலகப்போருக்கு முன்பு பர்மாவிலிருந்து மரங்கள் இத்துறைமுகத்தின்மூலம் இறக்குமதி செய்யப்பட்டன. மதுரை-தனுஷ்கோடி இரயில போக்குவரத்து கி.பி. 1914-இல் தொடங்கியதால இதன் பயன்பாடு குறைந்துவிட்டது. இப்போது இங்கு மீன் பிடித்தலே முக்கிய தொழில். இதன் கரையில 16 கி.மீ. தொலைவு மட்டுமே வெளிச்சம் தெரியும மண்ணெண்ணெயில் எரியும் கலங்கரை விளக்கம் ஒன்றும், இரண்டாம் பிரிவு வான ஆராய்ச்சி நிலையம் ஒன்றும் செயற்படுகின்றன. இதன் மக்களதொகை 16,164 (1981). ம.இ.

***தொண்டி ஆமூர்ச் சாத்தனார்*** சங்க காலப் புலவர்களுள் ஒருவர். இவரது இயற்பெயர் சாத்தன் என்பதாகும். இவர் தொண்டி ஆமூரைச் சேர்ந்தவராதலின் இவ்வாறு பெயர்பெற்றார். தொண்டியைச் சேர்ந்த ஆமூராகையால் தொண்டியாமூர் என வழங்கப்பெற்றது. இந்த ஆமூர் சேர நாட்டில் குறும்பறை மலைக்குக் கீழ்ப்பால் அமைந்துள்ள ஊராகும். இவர் பாடியதாக அகநானூற்றில (169) ஒரு பாடலே இடம் பெற்றுள்ளது. பாலைத் திணையிலமைந்த அப்பாடல தலைவியைப் பிரிந்து செல்லும தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவதாக உள்ளது. அப்பாடலில தனிமைத் துன்பத்தை மிகுவிக்கும் மாலைப்பொழுதில் கண்களில நீர் மல்கத் தோள்கள் மெலிந்து வருத்தமுடையவளாகத் தலைவி இருப்பாள்; அவள மிகவும் இரங்கத்தவள என்று தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவது சிறப்பாக உள்ளது. வீ.சே.

***தொண்டு நிறுவனங்கள்:*** மனித வாழ்வின் தரத்தையும், மக்களின் உற்பத்தித் திறனையும் அதிகரிக்க வேண்டுமென்றால் நலிவுற்றோர்க்கான சேவைத் திட்டங்கள் செயற்படுத்தப்பட வேண்டும என்பதைச் சமூகவியல அறிஞர்கள் பலரும் ஒருமனமாக ஒப்புக்கொண்டுள்ளனர். இந்தியாவில ஏறக்குறைய 20 முதல் 25 விழுக்காடு வரையிலான நகர மக்கள் சேரிப் பகுதிகளில் வாழ்ந்து வருகின்றனர். மொத்த மக்கள்தொகையில ஏறக்குறைய 40 விழுக்காட்டினர் வறுமைக்கோட்டின்கீழ வாழ்ந்து வருகின்றனர். உண்ண உணவு, நல்ல குடிநீர், உடுக்க உடை, இருக்க இடம, உடல்நலம் முதலியன கூட இம்மக்களுக்குக் கனவாகவே இருந்துவருகின்றன. குறிப்பாக, குழந்தைகள், பெண்கள், உடல் ஊனமுற்றோர், மன நோயாளிகள முதியோர் முதலானோருக்குத் தனிப்பட்ட கவனம் தேவைப்படுகிறது. இவ்வாறு உதவி தேவைப்படும நிலையில் இருப்பவர்களுக்கு உதவ வேண்டும் என்ற மனப்பாங்கு எல்லாக் காலகட்டத்திலும் இருந்து வந்திருப்பதை வரலாறு உணர்த்துகிறது.

உடல் ஊனமுற்றோர், மனநலம் குன்றியோர், அனாதைகள், விதவைகள், சமுதாயத்தில் பின்தங்கிய நிலையிலுள்ளோர், பிச்சை யேற்றுண்பவர், முதியோர் ஆகியோர் அடங்கியசமூகத்திற்கான நலப் பணிகளை மேற்கொள்ளும் நிறுவனங்கள் தொண்டு நிறுவனங்கள் (Service Organisations) என்று சொல்லப்படுகின்றன.

**தொண்டு நிறுவனங்களின் வரலாறு:** குறிப்பாக இந்தியாவில சமயம், சமூகம ஆகியவற்றின் அடிப்படையில இப்பணிகள நிறைவேற்றப்பட்டு வந்திருக்கின்றன ஒரு குறிப்பிட்ட சமூகத்தினைச் சேர்ந்தவர்கள அச் ‘சமூக நிதி’க்குப பணமாகவோ பொருளாகவோ உடல உழைப்பாகவோ உதவுவதால, அதன் மூலம் அச சமூகத்தில் பாதிக்கப்பட்டோரும, நலிந்த பிரிவினரும் பயன பெறுகின்ற நிலை இருந்து வந்திருக்கிறது. உடல ஊனமுற்றோரின் பராமரிப்பும அச சமூகத்தினைச சார்ந்ததாகவே இருந்துவந்திருக்கிறது. பல சமூகங்கள தங்களுக்கெனக் கல்வி நிலையங்களையும், அறக்கட்டளைகளையும் (Trusts) ஏற்படுத்தியுள்ளன. எதிர்பாராத இயற்கைப் பாதிப்புகள் ஏற்படுகின்ற நேரத்தில இச் சமூகம், சமயம் ஆகியவற்றின் தடைகளையும் மீறிக் கிராம மக்கள அனைவரும் ஒன்றுசேர்ந்து பாதிக்கப்பட்டோருக்கு உதவி வந்திருக்கின்றனர். இதைத்தவிர தனிப்பட்டவர்களின ஈகைக் குணங்களும் சமய அடிப்படையில் வளர்க்கப்பட்டிருக்கின்றன.

அசோகர் போன்ற அரசர்கள் காலத்தில் தரும சாலைகளும் அதற்கும் பிறகாலத்தில் சமய ஆதீனங்

களும் இன்றைய சமூக சேவை நிறுவனங்களுக்கு அடிப்படை முன்னோடிகளாகத் திகழ்ந்திருக்கின்றன. இவைகள் தொண்டு செய்யும நல்ல அமைப்புகளாக அமையவிலலை. அதாவது, இவை பாதிக்கப்பட்டோருக்கு உதவவுமில்லை; அவர்கள் மறுவாழ்வு பெறுவதற்கான உதவிகளைச் செய்யும் அமைபபுகளாக இயஙகவுமில்லை.

கி.பி. 16,17,18, ஆகிய மூனறு நூறறாணடுகளில சமூகச் சிக்கல்களைத தீர்பபதற்குத் தனிப்பட்டோர் உதவியும் மத அடிப்படையிலான உதவியும் மட்டுமே பயனபடுத்தப்பட்டு வந்திருககினறன. சிககலகளைத தவிர்ப்பதறகோ அவறறைக் குறைப்பதற்கோ அரசு குறிப்பிடத்தக்க முயற்சிகள எவையும் எடுககவில்லை. அனாதைகள, விதவைகள, வயது வநதோர் ஆகியோருக்கான தஙகுமிட வசதியுடனகூடிய நிறுவனஙகள எவையும் அமைககப்படவிலலை. நிவாரணப பணிகளுககென்ற தனிப்பட்ட நிறுவனஙகள் எவையும் இலலை.

இவவிதமாக முறையான தொணடு நிறுவனஙகள் பழஙகால இநதியாவில் இல்லாமைககுக குறிப்பாக இரண்டு காரணங்கள் உணடு. முதற்காரணம், தொண்டு நிறுவனங்களின இன்றியமையாத் தனமை அப்போது உணரபபடாமையேயாகும். இரணடாம காரணம், இப்பணிகளைச் சமய அடிப்படையிலான நிறுவனங்களே நிறைவேற்றி வநததால் தனியான தொணடு நிறுவனங்கள அப்போது ஏற்படுத்தபபடவில்லை. அதோடு மட்டுமலலாமல சாதி அமைபபும், கூட்டுக் குடும்ப முறையும் சமூகத்தில நலிவுற்ற பிரிவினரின் தேவைகளை நனமுறையில் நிறைவேற்றி வந்தன. 'இநதியச் சமுதாயத்தில்' நன்முறையில கட்டமைக்கப்பட்ட சமுதாய அமைப்புகளான கூட்டுக குடும்பம, சாதி, சமூகம் முதலியன சமூகநலப் பணிகளைக கவனித்துவந்தன.

கி.பி. 19-ஆம் நூற்றாணடின் தொடக்கத்தில் சமூகம், சமயம் ஆகியவற்றில் சீர்திருத்தஙகள பல ஏற்பட்டன. இராசாராம் மோகன்ராய் போனறவர்கள சமூகச் சீர்திருத்தவாதிகளாக மட்டுமலலாமல தாமாக முன்வநது சேவை செயயும் இயல்பை மக்களிடம் தூணடுபவர்களாகவும் திகழ்ந்தனர். இராசாராம் மோகன்ராயின் ஆத்மிக சபை, பிரம்ம சமாசம ஆகியவை தன் விருப்பத் தொண்டினை (Voluntary Service) அடிப்படையாகக் கொணடு திகழ்ந்தன. அந்தக் காலகட்டத்திலேயே இலவசக் கல்விச்சாலைகள் பல தொடங்கப்பட்டன. அவற்றின் ஆசிரியர்கள ஊதியம் பெறாமலேயே பணிபுரிந்து வந்தனர்.

பல்வேறு சமூக நலப் பணிகளைப் புரிதலோடு தங்குமிட வசதியுடனும் கூடிய தொணடு நிறுவனங்கள் (Institutionalised Services) ஆஙகிலேயர் ஆட்சிக்கு முற்பட்ட காலத்தில இந்தியாவில் இல்லை. இவ்வகையான சமூகநலப் பணிகள குறிப்பாக கடந்த நூற்றாண்டுக் காலத்தில்தான வளர்சசியுற்றன.

சில நலல திருப்பஙகள் கி பி. 19-ஆம் நூறறாணடின பிற்பகுதியில மேலை நாடுகளின பணபாட்டுத் தாக்கத்தின விளைவாக நிகழ்ந்தன. அககால கட்டத்தில் அமைககபபட்ட ஆரிய சமாசம், இராமகிருட்டிண மடம, பிரம்மஞான இயக்கம் ஆகிய மூனறும சமூகச் சேவையை அடிப்படையாகக கொணடு அமைக்கப்பட்டன

பினனாக கிறித்துவ சபைகளினால நிறுவபபட்ட அனாதை இல்லஙகளும், கலவி நிறுவனஙகளும, மருத்துவ மனைகளும பிறகாலத்திய சமூக சேவைப் பணிகளின் வழிகாட்டிகள எனக குறிபபிடத்தகக அளவில மிகச சிறபபாகப பணிபுரிநதன. கிறித்துவ சபைகள மட்டுமே கி பி. 1895 வரை அனாதை இலலங்களை ஏறபடுத்தியிருநதன காநதியடிகள போனற தலைவர்களின பணிகளால 20-ஆம் நூற்றாணடின தொடககத்தில தன விருப்பச் சேவையின முககியதது வம் மிகுநதது.

இனறைய சமூக அமைப்பில, இத்தகைய சமூக அமைபபுகளின பணிகளில் பல மாறறங்கள ஏறபட்டிருககினறன. அதன காரணமாகத் தொணடு நிறுவனங்களின தேவை உணரப்பட்டது. தொடக்கத்தில் தனிப்பட்ட நன்கொடையாளர்கள சில தொணடு நிறுவனஙகளை ஏறறு நடததினாாகள். பினனாச சில தனிபபட்டோர் ஒருஙகிணைந்து சில தொணடு நிறுவனஙகளைத் தொடஙகினார்கள். இநதியா சுதநதிரமடைநததறகுப பின்னர் இப்பணிகள் விரைவுபடுத்தப்பட்டன இநதியச சமூகததில் சுதந்திரத்திற்குப் பினனாப் புரட்சியமைந்த மாறுதலகள ஏற்பட்டன. விரைவான மாறுதலகளுக்கான இந்தக்காலத்தில் சமூகச சீர்திருத்தம, சமூகப் பணி ஆகியன புதுப பொலிவுடன நாளுககு நாள விரிவடைந்து வருகினறன.

இநதியா போன்று வளர்ந்துவரும் நாடுகளால் சமூக நலப பணிகளுக்குப் பெரும அளவு நிதி ஒதுககீடு செய்ய இயலாது. அதன் காரணமாகச சேவைப் பணிகளில் மக்கள் ஈடுபாடு மிதுதியாதல் வேணடுமென்ற கருத்துத் தோனறலாயிற்று.

**சுதந்திரத்திற்குப் பின்:** இநதியா சுதந்திரம் அடைந்ததறகுப் பின் 1957-ஆம் ஆணடைய பல்வந்திரி மேததா குழு, 'இன்றய சமூக வளர்ச்சித் திட்டஙகளை நடைமுறைப்படுத்துவதில், அரசு அல்லாத நிறுவனங்களின பணியில் தனிக்கவனம் செலுத்தப்படுதல வேண்டும; எல்லாப் பணிகளையும் மக்களின் நிறுவ

வனங்களே ஏற்று நடத்தவேண்டும்' என்று கூறியது. பின்னர் 1966-ஆம் ஆண்டுக் குழுவும், பஞ்சாயத்து அரசு பற்றிய அசோகமேத்தா குழுவும் இக் கருத்தையே வலியுறுத்தின.

ஒருங்கிணைந்த சமூகப் பாதுகாப்புக் கருதி 1964-ஆம் ஆண்டு சூன் மாதம் 14-ஆம் நாள் சமூகப் பாதுகாப்புத் துறை (Dept. of Social Security) ஏற்படுத்தப்பட்டது. பின்னர் 1966, சனவரி 24-ஆம் நாள் இத்துறை சமூகநலத் துறை (Dept. of Social Welfare) எனப் பெயர்மாற்றம் செய்யப்பட்டது. இத்துறை 1979-ஆம் ஆண்டில் தனி அமைச்சக(Ministry) நிலைக்கு உயர்த்தப்பட்டது. இந்த அமைச்சகம் இந்தியாவில் சமூகநலப் பணிகளை ஒருங்கிணைக்கிறது. அதோடல்லாமல் தன் விருப்பப் பணிகளுக்குப் பண உதவியும் செய்கிறது. இப்பணியில் மக்களின் ஈடுபாட்டினை மிகச் செய்வது போன்ற பணிகளிலும் இந்த அமைச்சகம் கவனம் செலுத்துகிறது. இந்த அமைச்சகத்தின்கீழ் மத்திய சமூகநலத் துறை (Central Social Welfare Board), சமூகப் பாதுகாப்பிற்கான தேசிய நிலையம் (National Institute of Social Defence), மக்கள் ஒத்துழைப்பு மற்றும் குழந்தைகள் நலத்திற்கான தேசிய நிலையம (National Institute of Public Co-operation & Child Development) ஆகிய துறைகள் இயங்குகின்றன. இத்துறைகள் நாடு முழுவதும் உள்ள தொண்டு நிறுவனங்களுக்குப் பண உதவி செய்து வருகின்றன. பலர் இணைந்து ஒரு தொண்டு நிறுவனத்தை ஏற்படுத்தலாம். இந்நிறுவனங்களின் நிருவாகம் முறையான அமைப்பின் கீழ் இயங்க வேண்டும். இந்நிறுவனங்களில் சமூகத் தகுதி பெற்ற உறுப்பினர்கள் பலர் நிருவாகக் குழு உறுப்பினர்களாயிருக்கின்றனர். இந்தக் குழுவின் கீழ் அத்தொண்டு நிறுவனத்தின் பணிகளுக்கேற்றவாறு ஊழியர்கள் நியமிக்கப்படுகின்றனர். சில நிறுவனங்களில் பலர் பகுதிநேர இலவசப் பணியாளர்களாகத் தாமாகவே முன்வந்து பணியாற்றுகின்றனர். செல்வர்களும், சமூகத்தில் முக்கிய பொறுப்பில் உள்ளவர்களும், குடும்பப் பெண்களும் இப்போது தொண்டு நிறுவனங்களில் மிகுந்த ஈடுபாடு காட்டி வருகின்றனர்.

இப்போது இந்திய நாட்டில் 10,000 க்கும் மிகுதியான தொண்டு நிறுவனங்கள் இயங்கி வருகின்றன. இவற்றில் நூற்றுக்கும் மேற்பட்ட நிறுவனங்கள் கண் பார்வையற்றோருக்கு உதவும் நிறுவனங்கள் ஆகும். காது கேளாதோருக்காக 68 தொண்டு நிறுவனங்கள் இயங்கி வருகின்றன. அவற்றோடு சுழற்கழகம் (Rotary Club), அரிமா சங்கம் (Lions Club போன்ற நிறுவனங்களும் தொண்டு நிறுவனங்களாக இயங்கி வருகின்றன.

'அரசாங்கம் தன்னால் இயன்ற அளவுக்கு வேலைக்கான உரிமையையும் கல்விக்கான உரிமையையும் அளிப்பதோடு வேலையின்மை, உடல் நலமின்மை, முதுமை, உடல் ஊனம் மற்றும் இது போன்ற குறைபாடுற்றோருக்கு உதவியும் அளிக்க வேண்டும்' என்று இந்திய அரசியல் சட்டம் 41-ஆம் பிரிவு கூறுகிறது. பொதுவாகத் தொண்டு நிறுவனங்களைக் கீழ்க் காணுமாறு வகைப்படுத்தலாம்.

**அ) குழந்தைகளுக்கான நிறுவனங்கள்:** 16 வயது வரையுள்ளவர்கள் குழந்தைகள் என வரையறுக்கப்படுகிறார்கள். இந்திய மக்கள் தொகையில் 42 விழுக்காட்டினர் குழந்தைகளே. நாளைய சமுதாய அமைப்பின் பலம் இன்றைய குழந்தைகளின் நலனைப் பொறுத்தே அமையும். எனவே, குழந்தைகள் நலப் பணிகள் முன்னுரிமை பெறுகின்றன. குழந்தைகளுக்கான தொண்டு நிறுவனங்களை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். அவை 1) தங்குமிட வசதியுடன் கூடிய நிறுவனங்கள் (Institutionalized Services), 2) தங்குமிட வசதியில்லாத நிறுவனங்கள் (Non-Institutionalized Services) என்பனவாகும்.

முதற் பிரிவில் அனாதை மற்றும் கைவிடப்பட்ட குழந்தைகளுக்கான இல்லங்கள், திருமணமாகாத தாய்மார்களின் குழந்தைகள் பராமரிப்பு நிறுவனங்கள், இளங் குற்றவாளிகளுக்கான நிறுவனங்கள், உடல் மற்றும் மன ஊனமுற்ற குழந்தைகளின் காப்பு இல்லங்கள் ஆகியவை அடங்கும்.

இரண்டாம் பிரிவில் பாலவாடிகள், அங்கன்வாடிகள், விடுமுறை இல்லங்கள், குழந்தைகள் வழிகாட்டு நிலையங்கள் (Child Guidance Centres), தத்து எடுக்கும் நிறுவனங்கள் (Adoption Centres) ஆகியவை அடங்கும்.

**ஆ) உடல் ஊனமுற்றோருக்கான நிறுவனங்கள்:** கண் பார்வையற்றோர், காது கேளாதோர், பேசும் சக்தி இழந்தோர், கை கால்களை இழந்தோர், மன நோயாளிகள் போன்றோர் இப்பிரிவில் அடங்குவர். அவர்களது குறைபாடுகளைக் கருத்திற் கொண்டு அதற்கேற்றவாறு தொழிற் பயிற்சி அளிக்கும் வகையில் தொண்டு நிறுவனங்கள் ஈடுபட்டு வருகின்றன. ஊனமுற்ற குழந்தைகள் கல்வி கற்கச் சிறப்புப் பள்ளிகளையும் இவை ஏற்படுத்தியுள்ளன. ஊனமுற்றோருக்கான வேலைவாய்ப்பு வசதிகள் சமுதாயத்தில் மிகுதியும் இல்லாத காரணத்தினால் இவர்களுக்கு வேலைவாய்ப்பு வசதிகளையும் இந்நிறுவனங்களே வழங்கிவருகின்றன. எனினும், இப்பணிகளுக்குச் சமுதாய ஆதரவு (Community support) பெருமளவில் தேவைப்படுகிறது. உடல் ஊனமுற்றோர் சிறப்பாகச் செய்யக் கூடிய பணிகளை எடுத்துக்கூறி அவர்களுக்கு

வேலை பெற்றுத் தருவதற்கான வேலைவாய்ப்பு அலுவலர்களை (Placement Officers) பல நிறுவனங்கள் நியமித்துள்ளன.

**இ) பெண்களுக்கான நிறுவனங்கள்:** நாட்டின் மக்கள் தொகையில் 30 விழுக்காட்டிற்கும் மிகுதியானவர்கள் பெண்கள். நாட்டில் பெண்களின் பெரும்பாலான சிக்கல்கள் சில குறிப்பிடத்தக்க காரணங்களினால் ஏற்படுகின்றன. கல்வி அறிவின்மை, பொருளாதார உரிமையின்மை, சம உரிமை இல்லாத சமூக நிலை ஆகியவை அவற்றில் முக்கியமானவை. பெண்களுக்கான தொண்டு நிறுவனங்களின் முதற் பணி பெண்களுக்குப் பொருளாதாரத் தற்சார்பு ஏற்படுத்தித் தருவதேயாகும். அதற்காகப் பல நிறுவனங்கள் பெண்களுக்குத் தொழிற்பயிற்சி அளித்து வருகின்றன. தொழிற் பயிற்சி பெற்ற பெண்களின் வேலைவாய்ப்புக்கான ஏற்பாடுகளையும் இந்நிறுவனங்களே கவனிக்கின்றன. அதோடு பெண்களிடையே சமூக விழிப்புணர்வைத் தோற்றுவிக்கும் வகையில் சமுதாயத்தில் பெண்கள் நிலை, சமுதாயத்தில் பெண்களின் பங்கு, பெண்கள் உரிமைகளைப் பற்றிய அறிவு ஆகியவை அவர்களுக்குப் போதிக்கப்படுகின்றன.

வேலை பார்க்கும் பெண்களுக்கான விடுதிகளும் (Working Women's Hostel) பெண்கள் நலப் பணிகளின் ஒரு முக்கிய பிரிவாகும். இளைஞர் கிறித்தவ சங்கம் (Y.M.C.A.) நாடெங்கிலும் பல, வேலை பார்க்கும் பெண்களுக்கான விடுதிகளை ஏற்படுத்தி அப்பணியில் குறிப்பிடத்தக்க அளவில் ஈடுபட்டு வருகிறது. திருமணமாகாத தாய்மார்கள், விபசாரத்திலிருந்து மீட்கப்பட்ட பெண்கள் ஆகியோர்க்கான மறுவாழ்வு நிலையங்கள் பெண்கள் தொண்டு நிறுவனங்களின்கீழ் அடங்கும். கருவுற்ற மகளிர் நல நிறுவனங்களும் மருத்துவ வசதியுடன் தொண்டு புரிந்து வருகின்றன. அதோடு கிராமப்புறப் பெண்களின் நிலை முன்னேறுவதற்காகப் பணிபுரியும் நிறுவனங்களும் நாடெங்கிலும் இயங்கி வருகின்றன.

**ஈ) முதியோருக்கான நிறுவனங்கள்:** 65 வயதிற்கும் மேற்பட்டவர்கள் முதியோர் எனப்படுவர். இந்தியாவின் மக்கள் தொகையில் 6.1 விழுக்காட்டினர் முதியோர்களே. மருத்துவத் துறையில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களினால் மக்களின் வாழ்நாள் நீண்டிருப்பதால் முதியோர்களின் எண்ணிக்கையும் மிகுந்துள்ளது. அதேநேரத்தில் முதியோர்களுக்குச் சமூகப் பாதுகாப்பு அளித்துவந்த கூட்டுக் குடும்ப முறை மெல்ல மெல்ல மாறி வருவதால் அவர்களின் பராமரிப்புச் சிக்கலுக்குரிய ஒன்றாக மாறிவிட்டது. பொதுவாக முதியோர்கள், பொருளாதாரச்சிக்கல், உடலியல் சிக்கல் ஆகியவற்றால் பெரிதும் இன்னலுறுகின்றனர். முதியோர் நலத் தொண்டு நிறுவனங்களின் முக்கிய பணி, முதியோர் இல்லங்களை ஏற்படுத்துவதே. இங்கு முதியோருக்கான பொழுதுபோக்கு வசதிகள் இருப்பதோடு அவர்கள் செய்ய இயன்ற வேலைகளைச் செய்யவும் வாய்ப்பு அளிக்கப்படுகிறது. இதுதவிர வேலை செய்ய இயலாதோர் (Infirm), உடல் நலக் குறைவால் பாதிக்கப்பட்டோர் ஆகியோருக்கான மருத்துவ வசதிகளையும் இந்நிறுவனங்கள் ஏற்படுத்தித் தருகின்றன.

**உ) கிராம, நகரத் தொண்டு நிறுவனங்கள்:** இந்தியாவின் மக்கள்தொகையில் பெரும்பான்மை இடம் வகிக்கும் கிராம சமுதாயத்தின் (Rural Community) முன்னேற்றப் பணிகள் முழுவதையும் அரசே ஏற்று நடத்த இயலாது. எனவே, இப்பணியில் தொண்டு நிறுவனங்கள் அரசுக்கு முழு ஒத்துழைப்பையும் அளித்து வருகின்றன. கிராம சமுதாயத்தின் தேவைகளைக் கண்டறிந்து அவற்றை அரசுக்குத் தெரியப்படுத்தும் பணியினைப் பெரும்பாலான சமுதாயத் தொண்டு நிறுவனங்கள் செய்து வருகின்றன. இது தவிரச் சமூக விழிப்புணர்வினை (Social Awakening) ஏற்படுத்தும் நிறுவனங்களும் சமுதாயத் தொண்டு நிறுவனங்களின்கீழ் அடங்கும்.

**தொண்டு நிறுவனங்களும் நிருவாகச் சிக்கல்களும்:** தொண்டு நிறுவனங்கள் பல சிக்கல்களை எதிர்கொள்ள வேண்டியிருக்கின்றன. அவை 1) சமுதாயத்தின் பின் தங்கிய நிலை, 2) பொதுச் சேவைகளில் மக்களின் ஈடுபாடின்மை, 3) சேவைக்கென்றே தம்மை உரிமைப்படுத்திக் கொண்ட தொண்டர்களின் குறைவான எண்ணிக்கை, 4) அரசியல் தலையீடு, 5) தொண்டு நிறுவனங்களின் குறையான, திட்டமில்லாத செயற்பாடுகள், 6) சில தொண்டு நிறுவனங்கள் மீதான மக்களின் நம்பிக்கையின்மை என்பனவாகும்.

இவைதவிர வேறுசில குறிப்பிடத்தக்க குறைபாடுகளும் தொண்டு நிறுவனங்களின் பணிகளில் உள்ளன.

பல நிருவாகிகள் பெயரளவில்தான் உறுப்பினராயிருக்கின்றனர். அவர்கள் தங்கள் சொந்த அலுவல்களையே கவனிக்க நேரமில்லாத அளவு பணிகளைக் கொண்டிருப்பதனால் தொண்டு நிறுவனத்தின் பணிகளில் அவர்களால் ஈடுபட இயலுவதில்லை.

ஒரே ஆள் பல தொண்டு நிறுவனங்களில், பல வேறுபட்ட பொறுப்பான பணியிலிருப்பதும் ஒரு குறையாகும். இது பணிக்காக அன்றிப் புகழ் கருதிச் செய்யும் செயலாகவும், முக்கிய பதவிகளில் இருப்பவர்களின் அன்றாடப் பணிகளில் ஒன்றாகவும் மாறி விடுகிறது. மாநிலங்களில் மக்கள்தொகைக்குப்

பொருந்தாத விகிதங்களில் தொண்டு நிறுவனங்களின் எண்ணிக்கை அமைந்துள்ளது. எடுத்துக்காட்டாக மக்கள்தொகை மிகுந்த உத்தரப்பிரதேசம், மத்தியபிரதேசம் ஆகிய மாநிலங்களில் மிகக் குறைவான தொண்டு நிறுவனங்களே அமைந்துள்ளன.

தொணடு நிறுவனஙகள் அரசு நிதியினை மிக்க அளவில் சார்ந்திருக்கத்தொடங்கிவிட்டன. இந்நிலை வரவேற்கக் கூடியதன்று. மக்களிடமிருந்து நன் கொடை சேகரிக்கும் திட்டங்களைத் தொண்டு நிறுவனங்கள் முறையாகச் செயற்படுத்தவில்லை. இவை பெரும்பாலும் அரசு நிதி நிறுவனங்களையும் வெளி நாட்டு நிதி நிறுவனங்களையுமே பெரும் அளவில் சார்ந்திருக்கின்றன. பல்வேறு திட்டப் பணிகளை நிறைவேற்றப் போதுமான நிதி வசதி பல நிறுவனங்களிடம் இல்லை. தொண்டு புரிய விருப்பமுள்ளவர்களின் எணணிக்கையும் தேவைக்குக் குறைவாகவே உள்ளது.

தொணடு நிறுவனங்களுககிடையேயும் பல சிக்கல்கள் ஏற்படுகினறன. பல நிறுவனங்களில் தொண்டுப் பணிகளில் ஒருங்கிணைந்த அணுகுமுறை இல்லாததால் ஒரே பணியைப் பல நிறுவனங்கள் செய்யும் நிலை உள்ளது. அதனால் பொருள் இழப்பு ஏற்படுவதோடு தேவையான பணிகள் பல நிறைவேற்றப் படாமலுமபோகின்றன. சாதி, சமயம் போனற காரணங்களினாலும் பல நிறுவனங்களுக்கிடையே மோதல்கள ஏற்படுகின்றன. ஒரே நிறுவனத்திலும கூட அதன் ஊழியர்கள், நிருவாகிகள் ஆகியோருக்கிடையில் பல கருத்து வேறுபாடுகள் தோனறுகின்றன.

தொண்டு நிறுவனங்களின் நிருவாக அமைப்பிலும் பல சிக்கல்கள இருக்கின்றன. எடுத்துக்காட்டாகப் பல நிறுவனங்களின் தலைமை நிறுவனங்கள தொலைதூரத்தில் அமைந்துள்ளன. கிளை நிறுவனங்கள் தங்கள்அன்றாடப்பணிகளுக்கான ஒப்புதல்களைத் தலைமை நிறுவனத்திடமிருந்தே பெறவேண்டியுளளது. இதில் கால தாமதம் ஏற்படுகிறது. பல நேரங்களில் அரசியல் தலையீடும் உள்ளது. தொணடு நிறுவனங்களின் நிருவாகக குழுவில் இடம பெற்றிருப்பது தங்களசமுதாய நிலை உயர ஒரு வழி எனப் பலர் நினைக்கினறனர். எனவே, பதவி ஆசை பிடித்தவர்களின் கையில் தொண்டு நிறுவனங்கள் சிக்கிவிடுகினறன.

தொண்டு நிறுவனஙகளின் தலைமைப் பொறுப்புகளில் ஒருவரே பல ஆண்டுகள தொடர்ந்து நீடிககும் நிலையும் நிலவி வருகிறது. தொணடு நிறுவனங்களின் நிருவாகிகள் தகுதி அடிப்படையில அல்லாமல அவர்களது சமூக நிலை அடிப்படையிலேயே நியமிக்கப்படுகினறனர். அதன் காரணமாக அத்துறையில் நன்கு பயிற்சிபெற்ற பலரின் பணியினைத் தொண்டு நிறுவனங்கள் இழக்கவேண்டி வருகின்றன. பல நிறுவனங்களில பயிற்சிபெற்ற சமூகப் பணியாளர்களுக்கும், பயிற்சி பெறாத தன் விருப்பப் பணியாளர்களுக்கும் இடையில் நல்ல உறவு நிலவுவதில்லை. தொண்டு நிறுவனங்கள் இன்னும் சிறப்பாகப் பணிபுரியச் சில மாறுதல்கள் தேவைப்படுகின்றன. தொணடு நிறுவனங்களின் சேவை பற்றி மக்களுக்குச் சரியான முறையில் அறிவுறுத்த வேண்டும். அதற்குத் தொண்டு நிறுவனங்கள், தங்கள் மக்கள் தொடர்பு பணிகளை மிகுத்தல் வேண்டும். அதன் வாயிலாக இந்நிறுவனஙகளுக்கு மக்கள் ஒததுழைப்பு மிகுதியும் கிடைக்கும்.

சொந்த நலன் கருதாதவர்கள இந் நிறுவனஙகளில் தலைமைப் பொறுப்பேற்க விழைய வேண்டும். ஒருவரே பல நிறுவனங்களின் தலைமைப் பதவிகளில் இருப்பது குறித்து மறு பரிசீலனை செய்ய வேணடும். தொணடு நிறுவனஙகளின பணி தேர்நதெடுககும் முறையில் இனனும் மிகுந்த கவனம் தேவை. மக்களின் சிக்கல்களைச் சரியாகப் புரிந்துகொணடு 'அதன அடிப்படையில் பணிகள் நிறைவேற்றப்படவேணடும்.

தொண்டு நிறுவனங்களின் நிருவாக அமைப்பில மாறுதல் தேவை. அதிகாரம் ஒரே மையத்தில் இருக்கும நிலை மாறி அதிகாரப் பரவல் ஏற்படுதல் வேணடும். அப்போதுதான் தொணடு நிறுவனங்கள் சிறப்பாகப் பணிபுரிய இயலும். இறுதியாகத் தொணடு நிறுவனங்களின் மீதான அரசியல் தலையீடு குறைதல வேணடும் பட்டறிவு, திறமை ஆகியவற்றின அடிப்படையில் நிருவாகிகள தேர்ந்தெடுக்கப்பட வேணடும். பொ.இரா.

**துணை நூல்கள்:**

Paul Chowdry D., A Hand Book of Social Welfare, Atma Ram and Sons, New Delhi, 1981.

Waltair A. Friedlander & Robert Z. Apte., Introduction to Social Welfare, Prentice Hall of India Pvt. Ltd. New Delhi, 1982.

**தொண்டை மண்டல சதகம்:** இது, படிக்காசுப் புலவரால் இயறறப்பட்ட நூல். தொணணூற்றாறு வகைச் சிற்றிலக்கியங்களுள ஒன்று சதகம இது நூறு பாடல்கள அமையப் பாடப்படுவது. சோழ மணடலசதகம், பாணடி மண்டல சதகம், கொங்கு மண்டல சதகம் என்பன போல, இத்தொணடை மணடல சதகத்துள கடவுள் வணக்கம ஒன்றும், நூல் நூறும், வாழ்த்து ஒனறும் ஆக நூற்றிரண்டு கட்டளைக் கலித்துறைப் பாடல்கள உள்ளன.

இது தொண்டை மண்டலத்திலுள்ள அடியார்கள், வேளாளர்கள், வணிகர்கள், அரசர்கள, அந்தணர்கள், புலவர்கள், வள்ளல்கள, பெருஞ்செல்வர் முதலா னோர் புகழினைக் கூறுவது.

இற்றைக்குச் சற்றேறக்குறைய முந்நூற்று நாற் பது ஆணடுகட்கு முனனர், அதாவது கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் இடைப்பட்ட காலத்தில, களத்தூா, பொற்களந்தை, தெனகளததூர் எனறு பேசப்படும் பொன்விளைந்த களத்தூரில், சைவ சமயததில் தோன்றியவர் படிக்காசுப்புலவர். இவா, தவத்திரு சுப்பிரமணியரின் வழித்தோன்றல். ஆயினும் இவ ரது பிள்ளைத் திருநாமம் அறியக கூடவிலலை. தமது வறுமை காரணமாகத தில்லைக்குச் செனறு, பொன்னம்பலக் கூத்தனாகிய ஆடல்வல்லானையும, சிவகாமசுந்தரியையும் வணங்கி, பஞ்சாக்கரப்படியில ஐந்து பொற்காசுகள், அன்றாடச் செலவுக்கு நாடோ றும் பெற்று வநததமையால், இவருககுப் படிககாசுத் தம்பிரான், படிக்காசுப் புலவர் என்றெல்லாம் (காரணப்) பெயருண்டாயிறறு.

இவர் காலத்துச் சீரும் சிறப்பும் பெறறுப் பெருஞ் செல்வராக விளஙகிய கத்தூரிரஙக முதலியாரின தவப்புதல்வர் கருப்ப முதலியாா, மாவணடூரில வாழ் ந தார். அவரது வேணடுகோளுககிணங்கப் படிக்காசர் இதனைப் பாடினார். அதற்காகக் கருப்ப முதலியார் இவருக்குப் பல பரிசுகளையும் விருதுகளையும் அளித்த தோடன்றி, ஒரு பலலக்கும தந்து, அதில புலவரை எழுந்தருளச் செய்து, அதனைத் தம் தம்பியர்களுடன் தாமும் சுமந்து சென்று போற்றினாா.

தமிழ்நாட்டை கி.பி. 2-ஆம் நூற்றாணடில், ஆணடுவநத கரிகால் பெருவளததான, கலவி, ஒழுக் கம, அன்புளளம, இரக்கம, இறைப்பறறு முதலான வற்றால் மேம்பட்டு விளங்கிய வேளாளர் பெருமக் களைத் தொண்டை நாட்டில் குடியேற்றினான் இவ் வேளாண் பெருமக்களையே, முதலியாரெனவும், வைசியரெனவும் (செட்டியாா), கஙகா குலத்தோர் எனவும் இச்சதகத்துள கூறியுள்ளார் ஆசிரியர்.

இவ்வாசிரியர், தம் ஆசிரியரையும் அவர் தம் முன்னோாகளையும் பலபடியாகப் புகழ்ந்து கூறியுள்ள தால் இவர் தம் குருபகதி நன்கு விளங்கும். வேளாண மக்கள மகட்கொடைக் குரியார் என்பது 92-98 வரை உள்ள செய்யுள்களால் விளங்குகினறது. வேளாளர் எழுபதின்மர் பழையனூரில் வாழ்ந்தவர்கள்; ஒரு வணிகனுடைய உயிரைக் காத்தறபொருட்டு, நெருப் பில் வீழ்ந்து, உயிர் நீத்துத் தஙகள் பழிதுடைத்துக் கொணடது 8-ஆம் பாடலில் கூறப்படுகிறது.

திருவாலங்காட்டில் அருளிய திருஞான சம்பநத ரின் திருக்கடைக் காப்புச் செய்யுளும் இதற்கு மேற் கோள. மேலும், கரிகாற்சோழனுடைய புகழ் இவரது புகழாக இதில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது 'சோழவளநாடு சோறுடைத்து' என்பதனைத் தொணடை நாட்டுககும் ஏற்றிக் கூறப்பட்டுள்ளது. வேளாளர்கள் சாதிபேதமற்றவர்கள எனறு கூறி யிருப்பதும் சிறப்பு.

இதன்கண, திருவாரூர்ச சிறப்பும், சுந்தரர் வரலாறும், இறைவன சுநதரருக்காகப் பரவை நாச்சி யாரிடம் தூதுபோனது முதலான சைவ சமயச் செய்தி களும கூறபபட்டிருப்பினும, வைணவம் முதலான பிற மத நிந்தனையிலலாச சைவச் செநநெறி நூலாகுமிது. இது தொணடை நாட்டுக குன்றததூர்ச சேக்கிழார் வரலாறு, கணிகணணன வரலாறு முதலான வரலாற் றுக் கருவூலமாகும. இந்நூல, மூலம் மட்டும் கி.பி. 1880 -இல அச்சேறியது. பினனா, கி பி.1887-இல் மேலும, உரைபபதிப்பு வெளிவநதது பினனர், மூலமும் ஈரோடு உலக இரகசியம பததிராதிபர், கோயமுத் தூர் சி கு நாராயணசாமி முதலியார் எழுதிய பொழிப்புரையும், மேற்கோள செய்யுள்களும், அதற் கான விளககஙகளும், சரிதவிளக்கஙகளும் கொணட விரிவான பதிப்பு 1924-இல காளத்தி முதலியாரால வெளிவந்தது .

**இந்நூலாசிரியர் இயற்றிய வேறுநூல்கள:** சிவந் தெழுந்த பல்லவனுலா, சிவந்தெழுந்த பல்லவன் பிளளைத்தமிழ, உமைபாகர் பதிகம், பாம்பலங்காரர் வருக்ககோவை, புளளிருக்கு வேளூர்க் கலம்பகம, பல தனிப்பாடல்கள் ஆகியவையாகும். வீ.சொ.

**தொண்டை மண்டலம்:** 'தொண்டை நன் னாடு சானறோருடைதது' என்ற பெரும்புகழ் படைத்த இது, இபபோதைய சித்தூர், செங்கற் பட்டு, வடார்க்காடு, தெனனார்க்காடு உளளிட்ட, வட்டமான நிலப்பரப்பினை உடையது. இம்மணட லம் ஒரு காலததில் தமிழகததின வடபகுதியாக இருந் தது இது, அபபோது கிழக்கே கடலையும், தெறகே தென்பெண்ணையாற்றையும், மேறகே பவளமலை யையும், வடக்கே திருவேஙகட மலையையும் எலலை யாகக கொணடிருந்தது. அதுகாலைத தமிழகம், தொணடைமணடலம், சோழமணடலம், பாணடி மண்டலம், மலை மணடலம, கொஙகு மணடலம் என்றெல்லாம பேசப்பட்டது.

அவற்றுள, தொணடை மணடலமென்பது, இரு பதின காதவட்ட எல்லையினையுடையது; 24 கோட் டங்களையும், 79 உட் கோட்டங்களையும், 1900 நத்தஙகளையும், 64 அக்கிரகாரம் எனப்படும் அநத ணர்வாழ் பகுதிகளையும், 3600 குடிகளையும், மகரிசி

களால் பிரிக்கப்பட்ட 12000 கோத்திரங்களையும் கொணடது.

சோழ மன்னர்களுள் குறிப்பிடத்தக்கவனான கரிகாற் பெருவளத்தானின் வழியினனான தொண டைமானிளந்திரையன், இந்நாட்டைக் காஞ்சிபுரத் தைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி செயதான் இவன பெயரிலுளள தொணடை எனனும சொற் கொணடு தொண்டைமணடலம் ஆயிற்று எனபர்.

'கச்சிப்பேடு' எனறிருந்த காஞ்சிபுரம், திருஞானசம பநதரின் திருக்கடைக்காப்பிலும், திருநாவுக்கரசரின் தேவாரத்திலும், 'கசசி' என்றும, 'காஞசி' எனறும் பாடப்பட்டுளளது. இது கி.பி 7-ஆம நூற்றாண்டுத் தமிழ் நூலகளிலும் காணக் கிடைக்கிறது.

இது, பல நூறறாணடுகளாகச் 'செயங்கொண்ட சோழமணடலம்' எனறு வழஙகப்பட்டது. இமமண டலத்தில இருந்த 24 கோட்டஙகளுள ஒன்று 'எயிற் கோட்டம்'. அதில இருந்தது எயிலநாடு. இது செயங கொண்ட சோழமணடலத்து, எயிற் கோட்டத்து, எயில்நாட்டுத் திருவத்தியூா எனறு S.I.I 1-187-இல குறிக்கப்பட்டுள்ளதால் விளங்கும். முதலாம் இராசரா சனது புகழ்ப் பெயரால் 'செயஙகொண்ட 'சோழ மணடலம்' எனமுன்பு வழங்கிவநதது. 'காஞ்சிபுரம்' எயிற்கோட்டத்து முககிய தலைநகரம். இது சைவர் கட்கும வைணவாகட்கும் சமணர்கட்கும, பௌத தர்கட்கும் அவ்வப்போது கோட்டைபோல் விளங கியது.

பின்னர் விசயநகர மன்னர்கள காஞ்சிபுரத்தைக கைப்பற்றி ஆண்டுவந்தனர். இதில 283ககும மேலான கல்வெட்டுகள உள்ளன. 'வையம் பெறினும பொய்சொலல மாட்டார். தொணடை நாட்டாரே! என்ற புகழ் படைத்தவாகள் தொணடை நாட்டு மக்கள். ஒருகாலத்தில் ஒரு வணிகனுடைய உயிரைக் காப்பதற்காக, இமமண்டலத்திலுள்ள பழையனூர் வாழ் வேளாண் குடிமக்கள் எழுபதின்மர், தம் உயிரைக் கொடுத்தனா என்றொரு பழைய வரலாறு கூறுகினறது. பலவேறுபட்ட குடிமக்கள சிறபபோடு பெருகிவந்திருந்த போதிலும், மேற்கூறியபடி உயிரை யும் தரவல்ல வேளாளர்கள், அககாலததில, அன்பு, அடக்கம், பணபு, ஒழுக்கம், இரக்கம், வாய்மை, தூய்மை, கொடை, பொறை முதலான எல்லாக குணநலன்களும் பெற்றிருந்த காரணததாலதான் கரி காற் பெருவளத்தான், இவர்களைத் தொண்டை மண்டலத்தில் குடியேறச் செய்து சிறப்புச் செய தான்.

தேவாரப் பாடல் பெறற சிவத்தலஙகள 32-ம் இன்றும் தொண்டைநாட்டுத் திருத்தலஙகள எனற பெயராலேயே வழங்குகின்றன. மலைகள: திருவேங கடம், திருத்தணி, காளத்தி, கழுக்குன்றம் முதலியன சிறநதவை. ஆறுகள்: பாலாறு, செய்யாறு, பெண்ணை யாறு, ஆரணியாறு, நிவா, கூவம், அடையாறு முதலியன. நீாத்தேக்கஙகள்: பூண்டி நீர்த்தேக்கம். புழலேரி, பழவேற்காட்டு ஏரி, செம்பரப் பாக்கம் ஏரி முதலியன.

இததொணடை மணடலத்தில் பல புகழ்பெறற நூலாசிரியாகள வாழ்ந்தனர்.

திணணன் எனனும் கணணப்பர் பிறந்த பொத தப்பி நாடு, நேமிநாதம இயற்றிய குணவீர பண்டித ரும் நளவெணபா இயறறிய புகழேநதிப புலவரும் பிறந்த பொன் விளைநத களத்தூர், நன்னூலியற்றிய பவணந்தி முனிவரின் சனகாபுரம், சஙகிலி நாச்சி யாரைச சுநதரர் மணந்ததும பட்டினததார் சமாதி யுறறதுமான திருவொற்றியூர், பெரியபுராணம் இயற றிய சேககிழார் பிறநத குனறத்தூர், திருககுறளுக்கு உரை எழுதிய பரிமேலழகா பிறநத காஞ்சிபுரம், ஞானசமபநதரால என்பு பூம் பாவையானதும வளளு வர் வாழ்ந்ததுமான மயிலாபபூர், இனறைய தலை நகரான செனனை, நின்றியூர், நெற்குன்றவாணரது வேலூா, கோட்டையாற் சிறபபுறற செஞ்சி, மிகப் பெரிய மாடமாளிகையும கூடகோபுரமும் கொணட மலைபபகுதிகள, கல் தேர்களும் கடற்கரைக கோயிலகளுங கொண்ட மாமல்லபுரம் முதலியவற்றா லும் மற்றும கசசியப்ப சிவாச்சாரியர், இராமா னுசா, குகனேரியப்பன, காளியப்பன், கறுபபன், மணிகணடாா முதலானோர் வாழநதமையாலும் சிறப்புப் பெறற நாடு தொண்டை நாடு. காஞசி ஏகாம்பரநாதர், காமாட்சி, வரதராசப் பெருமாள், உலகளந்த பெருமாள ஆகியோர்ககமைந்த கோயில் களாலும, பிறவறறாலும சிறப்புப் பெற்றது தொண்டை மணடலம். வீ.சொ.

**தொண்டைமான்கள்**: தொணடைமானகள மிகமிகத் தொன்மைமிக்க குடியினராவர். தொணடை மான கோட்டைப்பகுதி, கி பி. 2, 3-ஆம் நூறறாணடு களில தமிழநாட்டின வடக்கு எல்லையாகவும காடுகள அடர்நத பகுதியாகவும் தொண்டை. மணடலத்தின ஒரு நாடாகவும் பிரிந்திருந்தது. இது பெருமபாலும கள்ளர் மரபினா வாழ்ந்த பகுதியாகவே விளஙகி வநதது தொண்டைமான கோட்டை எனற பகுதியில் வாழந்த களளர் மரபினரே தொணடைமானகள் ஆவர்.

தொண்டைமான கோட்டைப் பகுதியில வாழ்ந்து வநத களளா மரபினர் உழவுத் தொழி லோடு யானைகளைப பிடிப்பதிலும், அவற்றைப் பழக்குவதிலும் சிறந்து விளஙகினர். இவர்களது

திறமையைப் பல்லவ மன்னர்களும் மற்றத் தமிழக மன்னர்களும் நன்கு பயன்படுத்திக் கொண்டனர். இவர்களுள் சிறந்தவர்களைத் தங்களது யானைப் படைக்குத் தலைவர்களாகவும் அமர்த்திக் கொண்டனர். இவர்களுள் சிலர், பிற்காலத்தில் அதாவது சோழர்கள் தலையெடுத்த கி.பி. 10, 11-ஆம் நூற்றாண்டுகளில், தெற்கு நோக்கிச் சென்று தமிழகத்தின் பல பகுதிகளில் குடியேறினர்.

காஞ்சியிலிருந்து அன்பிலுக்கு வந்து இம்மரபினர் அங்குச்சில காலம் இருந்து பிறகு புதுக்கோட்டையில் இப்பொழுது ஆலங்குடி வட்டப்பிரிவாக விளங்குகின்ற பல பகுதிகளில் குடியேறினர். முன்பு அன்பில் என்ற இடத்தில் தங்கியிருந்தனர் என்றும். தஞ்சைக்குத் தெற்கில் உள்ள அம்புகோவில் நாடானது பன்னிரண்டு தன்னரசு நாடாக ஏற்பட்டதென்றும் தெரிகிறது. தொண்டைமான்களோடு ஒன்பது குடிகள் அம்பு நாட்டில் குடியேறினரென்று ஆய்வுகள் கூறுகின்றன.

அவர்கள்: 1) மாணிக்காரன், 2) பன்றிகொன்றான், 3) பிற்பன்றிகொன்றான், 4) காடுவெட்டி, 5) மேனத்தரையன், 6) பல்லவராயன், 7) தொண்டைமான், 8) இராங்கியன், 9) போர்ப்பன்றிகொண்டான், 10) கலியிரான்.

அவர்கள் பத்து வீட்டினரும் அரசு என்றும் சொல்லப்படுகின்றனர். அவர்கள் எல்லோரும் சேர்ந்து நாலா பக்கங்களிலும் சென்று பிலாவிடுதி, கரம்பக்குடி, வடக்கலூர், நெய்வேலி, கல்லாக்கோட்டை, நரங்கியன்பட்டி, அம்மணிப்பட்டி, பந்துவாக்கோட்டை, மங்கல வெள்ளாளவிடுதி என்னும் ஒன்பது இடங்களில் குடியேறினர்.

தொண்டைமானால் குறிக்கப்பட்டுள்ள பல தாமிர, சிலாசாசனங்களில், அவர்கள் தறகாலூரில் (அம்பு நாட்டில்) நிலங்களையுடைய இந்திரகுல அரையர் என்று குறிப்பிடப்பட்டுள்ளனர். அவர்கள் சிவன், பிள்ளையார், மாரியம்மன், வீரமாகாளி என்ற தெய்வங்களை வழிபட்டனர்.

புதுக்கோட்டை அரசில் கி.பி. 1750-ஆம் ஆண்டு அளவில் அரசவைக் கவிஞராயிருந்த வைங்கண்ணா என்பவர் தொண்டைமான் வம்சாவளி என்கின்ற ஒரு தெலுங்குக் காவியத்தை இயற்றியிருக்கிறார். அதில் கீழ்க்காணுமாறு ஒரு கதையைக் கூறுகின்றார். சிரீரங்கராயர் என்ற விசயநகர அரசன் கரம்பக்குடி வழியாக இராமேசுவரத்திற்குப் பயணம் சென்றபோது அவ்வரசனுடைய யானை மதங்கொண்டு பல சேதங்களை உண்டுபண்ண, அதனையறிந்த ஆவுடை ரகுநாத தொண்டைமான் அந்த யானையைப் பிடித்து அடக்கி இராயரிடம் கொண்டு வந்தான் என்றும் அப்பொழுது தொண்டைமானுக்கு 'ராய ராகுத்த ராயவசுரீடு ராயமன்னீடுராய' என்னும் பட்டமும், பல நிலங்களும், யானையும், சிங்கமுகப் பல்லக்கும், பிறவும் வரிசையாக அளிக்கப்பட்டன என்றும், அதிலிருந்து 'தொண்டைராய தொண்டைமான்' என அவன் வழங்கப்பட்டான் என்றும் தெரிகிறது அக்காலத்திருந்தே (கி.பி. 1639) புதுக்கோட்டை தொண்டைமானால் ஆளப்பட்டு வந்தது.

'தோட்டி முதல் தொண்டைமான் வரையில்' என்று வழங்குகிற பழமொழி மூவேந்தருக்குப் பின் தொண்டைமானே தமிழ்நாட்டு மக்களின் தலைவர் என்பதனைப் புலப்படுத்துவதாகும். தொண்டைமண்டலமாகிய பல்லவ நாட்டினின்றும் குடியேறிய பல்லவராயர் அல்லது தொண்டைமான் என்னும் பட்டமுடைய அரசர் பலர் குளத்தூர், அறந்தாங்கி முதலிய இடங்களில் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே ஆட்சி புரிந்துள்ளார்கள். அம்புகோவிலில் தங்கி ஆண்டு கொண்டிருந்த தொண்டைமான் வழியினர் கி.பி. 17-ஆம் நூற்றாண்டிலிருந்து புதுக்கோட்டை அரசராயினர்.

**இரகுநாதராய தொண்டைமான் (கி.பி.1686-1730)**: புதுக்கோட்டை மன்னர்களுள் முதலவர் இவரே; குழப்பமும் கலவரமும் மிகுந்த இந்தக் காலப் பகுதியில்தான் புதுக்கோட்டைத் தொண்டைமான்களின் அரசு தோன்றியது எனலாம். இரகுநாதத் தொண்டைமான் சிங்கமங்கலம், கலசமங்கலம் என்னும் நகரங்கள் அழிந்த பின்னர் அவை இருந்தவிடத்தில் ஒரு புதிய நகரையுண்டாக்கி, அதற்குப் புதுக்கோட்டை என்று பெயர் கொடுத்தார். ஒரு பெரிய கோட்டையும் கட்டினார். மதுரையை ஆண்ட நாயக்கருக்காகத் திருவாங்கூர், மைசூர், தஞ்சாவூர் ஆகிய இடங்களை ஆண்ட அரசர்கள் மேல் படையெடுத்துச் சென்று அவர்களை வென்றார். தொண்டைமானின் வலிமை அதிகமானது கண்டு சொக்கநாதநாயக்கரின் மந்திரியாய் இருந்த கோவிந்தப்ப ஐயர் சூழ்ச்சியால் இவரது வலிமையைக் குறைத்தார். பின்பு, இவர் இராமநாதபுரம், தஞ்சை முதலிய அரசர்களிடமிருந்து திருமயம், பட்டுக்கோட்டை முதலிய நகரங்களைக் கைப்பற்றினார். நாயக்கராலும், அவர்தம் முதல் அமைச்சர் நாரணப்ப ஐயராலும் கி.பி. 1717-1727 ஆகிய ஆண்டுகளில் மிகுந்த தொல்லைகளுக்குள்ளான கிறித்தவர்களும், கிறித்தவப் பாதிரிமார்களும் புதுக்கோட்டையில் அடைக்கலம் புகுந்து அன்புடன் ஆதரிக்கப்பட்டு நலமுற வாழ்ந்து வந்தனர். இந்த மன்னரது நடுநிலைமை கிறித்தவர்களை நடத்தின முறையிலிருந்து தெரிகிறது. இவர் வீரத்திலும், உடல் வலுவிலும், மனவுறுதியிலும், நடுநிலைமையிலும் மிகவும் புகழ்வாய்ந்தவராக இருந்தார். இவர்காலத்திலேயே இவருடைய மக்கள்

இறந்து விட்டதால் இவர் தம் பேராகளுள் மூத்தவ ராகிய விசயரகுநாதராய தொணடைமானுக்கு முடி சூட்டிவிட்டு கி.பி. 1730-இல் இறந்தார்.

**விசயரகுநாதராய தொண்டைமான் (கி பி. 1730–1769):** தொண்டைமான் அரச பரமபரையில இரண டாம் மன்னராக விசயரகுநாதராய தொணடை மானின ஆட்சி அமைந்தது. இவருககுச் சிவஞானபுரத் துரை தொண்டைமான் என்றும் பெயருணடு இவர் பட்டத்துக்கு வந்தவுடன் தம் சகோதரர்களாகிய இராசகோபால தொண்டைமான், திருமலைத் தொண்டைமான் எனனும் இருவருக்கும் இரண்டு பாளையப்பட்டுகளை அளித்துத் தமக்கு உதவியாக வைத்துக்கொண்டார். அப்போது தென்னிந்தியாவில் நடந்த கருநாடகப் போரின்போது சந்தாசாகிபு படையெடுப்பினால் நாயக்கர் அரசாட்சி ஒழிந்தது. புதுக்கோட்டையிலுள்ள அரணமனையும பகைவ ருடைய பீரங்கிக் குணடுகளால் அழிந்துவிட்டது ஆதலின் இவர் புதுக்கோட்டைக்குத் தெனகிழககே சிவஞானபுரம் எனனும் ஒரு புதிய அரணமனையைக் கட்டிக் கொணடு அங்கிருநது சமயப்பணியிலும் ஈடு பட்டார். சதாசிவப்பிரமம் எனறு கூறப்படும் பெரி யார் ஆசிரியராக வந்து அருள் புரியும பேற்றினை யும் இவர் பெற்றார்.

தஞ்சை அரசரின் படைத்தலைவனாகிய ஆனநத ராவ் கி.பி. 1733-இல் ஒரு பெரியசேனையுடன வந்து போர் புரியாமலேசூழ்ச்சியால் பெரும்பகுதியை பற்றிக் கொண்டான. நெடுநாள் வரை திருமயம் கோட்டையைப் பிடிக்க முடியாமையால் முடிவில் புதுக்கோட்டையைக் கைவிட்டு ஓடிவிட்டான்.

ஐதராபாது நிசாம் திருச்சிராபபளளியை முற்றுகையிட்ட போது புதுகோட்டை மீதும் படை யெடுக்க முயன்றார். அதனையறிநத கூனம் பட்டித் தலைவர்கள் நிசாமின படையைத் தடுத்து நிறுத்தி, ஒன்றும் செய்ய முடியாமற் றடுத்துத் திருப்பியனுப்பினார்கள்.

முகமதலிக்கும் சந்தாசாகிபுக்கும் நடநத கரு நாடகப் போரில் புதுக்கோட்டை மன்னா ஆங்கிலேய ருடன் முகமதலிககுத் துணையாய் நின்று சந்தா சாகிபையும் பிரெஞ்சுக்காரரையும் எதிர்த்தார். பிரெஞ்சுக் காரருக்கும் ஆங்கிலேயருக்கும் தென னாட்டில் இடைவிடாது நடந்த போராட்டங்களி லெல்லாம் இத்தொண்டைமான ஆங்கிலேயரைப் பிரியாமல் அவர்கட்கே உதவி செய்து வந்தார். இவர் தமது நுணணிய அறிவினாலே ஆங்கிலேயரே வெற்றி பெறுவர் என்பதனைத் தெளிவாக உணர்ந்த தால்தான் புதுக்கோட்டை அரசு மேன்மையடைந் தது. ஆங்கிலப் படைத்தலைவராகப் பணிபுரிந்த இலாரன்சு ஆஙகில நாட்டுக்குப் புறப்பட்டுச் செல்லு முன தொணடை மானுக்கு ஓர் கடிதம் எழுதிச சென்றார். அந்தக்கடிதம்,

'எஙகள வெற்றிக்குக காரணமான தஙகள உதவியை நான் ஆஙகில அரசா திருமுனபு தெரிவிப பேன. என்னிடம தாஙகள காட்டிய உணமையான நட்புக்குணத்தை நான எனறும் மறவேன. நான தூர தேசத்திற்குச சென்றுவிட்டாலும் எனக்குத் தாஙகள புரிநத நன்மைகளும் உதவிகளும் என் மனத்தில் நினறு கொணடேயிருககும்' என்பதாகும.

இவா சமயததிலும வழிபாட்டிலும ஈடுபட்டிருந தாலும அரசின் எல்லாச செய்திகளையும் இடை விடாது கவனிதது வநதிருக்கிறாா. புதுககோட்டை அரசை நிறுவினவர் இராயரகுநாத தொணடைமான எனின், அதை வலிமையுறச செய்தவர் இம்மனனரே யாவர். ஏறக்குறைய 40 ஆண்டுகள் வரையில இடை விடாது போரில் காலங்கழிதது வநத இவவரசர் கி பி. 1769-இல் இவ்வுலக வாழவை நீத்தார். இவ ருக்குப பினபு இவருடைய மகன இராயரகுநாத தொண்டைமான ஆட்சிககு வந்தார்.

**இராயரகுநாத தொண்டைமான் (கி பி. 1769-1789):** இவர், கி பி.1738-இல பிறநதார்; தம் 31-ஆம் ஆண்டில பட்டத்திற்கு வநதார். தம் முனனோரைப் போன்றே ஆஙகிலேயரிடததில நட்புப் பூண்டிருந்தார். ஐதரலி கி.பி. 1780-இல் கருநாடகததினமீது பெருமபடை யுடன வந்து தாக்கியபோது ஆஙகிலேயர் இந்தத் தாக்குதலைச் சநதிக்க முடியாமல் தடுமாறினர். தெனனாட்டு அரசர்கள அனைவரும ஐதரலியுடன் சோநது கொணடனர். இராயரகுநாத தொண்டை மான் மட்டிலுமே ஆஙகிலேயருககும் நவாபிற்கும் உதவியாய் நினறார். ஐதரின படை ஆதனக் கோட் டைக்கு அருகில் புதுககோட்டையைத் தாக்கிய பொழுது தொணடைமானின படைகள சோத்துப் பாளை எனறவிடத்தில் அதனை சந்தித்து முறியடித் தன இவ்வெறறியைக கேள்வியுறற ஆஙகிலப்படைத் தலைவர் சர் அயர்கூட்டு தொணடைமானுக்குக கீழ்க காணும் கடிதம் எழுதினாா. 'நாடு முழுவதும் போர் புரிந்து வந்த என கட்சியார் எல்லாரிடமும இருந்து கிடைத்த செய்திகளுள் ஒனறுதான் எனக்கு வெறறி யைத் தெரிவித்தது.அதாவது,தாஙகள் மிக்க ஆணமை யுடன உங்கள் நாட்டை அழித்து வந்த பகைவரைத் தணடித்து நூற்றுக் கணக்கான குதிரைப் படை வீர ரைச சிறை கொணட செய்தியாகும். தாங்கள் இன னும் சிறந்த வீரச் செயல்களைச் செயவீர்கள என்று எனக்கு மிகுந்த உறுதியுண்டு.'

இந்த மாபெரும் வெற்றியினால் புதுக்கோட்டை மனனரின பெயா தெனனிந்திய வரலாறறில் புகழி

டத்தைப் பெற்றது. ஐதர் தான படையெடுத்துச் சென்ற இடங்களில் ஊர்களைத் தீயிட்டும், மரங்களை வெட்டியும்,பயிர்களையழித்தும்,பல கொடுமைகள் செய்து வந்தான. மேலும் பெண்களும் குழந்தைகளும் பலவகையான துனபததிறகு உளளானார்கள். இக்கொடியவனை முற்றிலும முறியடிப்பதற்குத் தொண்டைமானே காரணமாய இருநதார். ஐதரலியின் மகனாகிய திப்புவுககு எதிராகவும இவர் ஆங்கிலேயருக்கு உதவி செய்தார்.ஆர்ககாட்டு நவாப்பிறகு இவர் செய்த உதவியின பயனாகப் பட்டுக்கோட்டைத் தாலுக்காவின ஒரு பகுதி இவருடைய ஆட்சியின் கீழ வந்தது. இவருக்கு ஆண பிளளை இலலை. இவர் கி.பி. 1789-இல் இறநதாா.

**விசயரகுநாத தொண்டைமான் (கி பி. 1789-1807):** இவர், இராயரகுநாத தொணடைமானின சிறிய தந்தையாகிய திருமலைத் தொண்டைமானின மூத்த புதல்வராவார் இவா தம் 30-ஆம வயதில் பட்டத்திற்கு வநதார். இவர் கி.பி. 1790-இல திப்புசுலதான் திருச்சிராபபள்ளி மேல் படையெடுத்து வநத போது ஆங்கிலேயருககுத் துணையாக நினறு திபபுசுலதானைப் பல இடஙகளில தோற்கடித்தார்

ஆர்க்காட்டு நவாபாகிய முகமதலி கி.பி. 1795-இல இராசா பகதூர் என்னும் பட்டததை அளித்தார். அதனால். 1500 குதிரைகள கொண்ட படையும் கொடியும் முரசும முடியும பட்டத்து யானையும் வைத்துககொள்ள உரிமை பெற்றாா. இவரது பிள்ளைகளான விசயரகுநாதராய தொணடைமானும, இரகுநாத தொண்டைமானும் முறையே கி.பி.1807-இலும கி.பி. 1825-இலும் மன்னராயினர். விசயரகுநாத தொண்டைமான 1807-இல காலமானார்: இவா மனைவி ஆயிஅம்மாள உடன் கட்டை ஏறினாா

**விசயரகுநாதராய தொண்டைமான் (கி பி. 1807-1825):** இவர் புதுககோட்டை அரசின ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொணடபொழுது பத்து வயதுள்ள சிறுவராய் இருந்தார். ஆதலால, இவருடைய கிளையைச் சேர்ந்த விசயரகுநாத தொணடைமான அரசின் நிருவாகத்தைக் கவனித்து வந்தார். அப்பொழுது புதுக்கோட்டையில் நவாபுக்குளள உரிமை மாறி ஆங்கிலேயரைச் சார்ந்தது. ஆங்கில அரசாஙக ஆட்சியினபோது விசயரகுநாத தொணடைமானின் முடிசூட்டுவிழா புதுக்கோட்டை நகரில் மிக்க சிறப்புடன் நடைபெற்றது. இவர் காலத்தில் புகழ் பெற்ற நிருவாகியும், ஆங்கில அரசின் பிரதிநிதியுமான படைத்தலைவர் (Major) பிளாகபர்ன புதுகோட்டை அரசின நிருவாகத்தைச் சீர்திருத்தி மிகவும் உயர்ந்த நிலைக்குக் கொண்டு வநதார்.குழந்தைகளாக இருந்த விசயரகுநாதராய தொணடைமான், இரகுநாத தொண்டைமான் இருவருக்கும் பிளாக்பர்ன் தந்தையைப் போன்று எல்லாவற்றையும் கவனித்து வநதார் இருவரும் வடமொழி, மராத்தி, ஆங்கிலம, முதலான மொழிகளும், குதிரையேற்றம, நிருவாகம, போர்ப்பயிற்சி ஆகியவற்றிலும் பயிற்றுவிககபபெற்றனர்.

இநத அரசரின காலத்திலதான புதுககோட்டை 5 வட்டங்களாகப் பிரிக்கபபட்டது. நீதிமன்றங்கள் நிறுவப்பட்டன. வரிவாங்கும் துறை சீர்திருத்தம் செயயபபட்டது அரசாஙகத்திற்கு வேணடிய எல்லாக் காரியங்களும செய்யபபெற்றன.

புதுக்கோட்டை நகர் கி பி 1812-இல் தீக்கிரையாயிறறு. படைத்தலைவர் பிளாகபர்னின திட்டப்படி இப்பொழுதுளள அழகிய புதுநகரம் உருவாக்கப் பட்டது. அதறகு மததியில் ஒரு புதிய கோட்டை கட்டும பணியும் தொடஙகப்பட்டது. இக்கோட்டை கி.பி. 1818-இல கட்டி முடிககப்பட்டது. இம்மன்னருககும் இவர் தமபிக்கும் கி பி. 1812-இல திருமணம் நடை பெற்றது. இவருடைய காலத்தில் புதுக் கோட்டை அரசு சிறப்புற விளங்கியது. புதுக கோட்டை மனனரான விசயரகுநாதராய தொணடைமான் கி பி 1825-இல இயற்கை எய்தியதால, அவருககுப்பின் அவர் தமபியான இரகுநாத தொணடைமான் அரசரானாா.

**இரகுநாத தொண்டைமான் (கி பி. 1825-1839):** இவர் கி.பி. 1825-இல் மனனரானார். இவர் மிகச் சிறநத நீதிமனனர். ஆஙகில அரசாஙகத்திடம் மிக மிக இணக்கமாகவே. நடந்து கொணடார். இரகுநாத தொண்டைமானுக்கு கி பி. 1830-இல் 'மேன்மைபொருந்திய' (His Excellency)எனற விருது ஆங்கில வணிகக குழுவினரால அளிக்கப்பட்டது. இவருடைய காலததில சாயத் தொழிற்சாலைகள கரம்பககுடியிலும் காரைத்தோபபிலும் இலாபகரமாக இயஙகி வநதன. சுஙகச்சாவடி வரியும் மாற்றி அமைக்கப்பட்டது.

இவரது காலம் போர் எதுவுமிலலாமல் அமைதி மிகுந்த காலம். இவாகாலததில புதுக்கோட்டையில் இசை வளர்ச்சி பெரிதும் செழிததது. பல அரசவை இசைக்கலைஞர்கள் இருநதனர்.

புதுககோட்டையில கி.பி. 1838-ஆம் ஆண்டு முதல அஞ்சல நிலையம் தொடஙகப்பட்டது. இது அஞ்சல் போக்குவரத்தை நன்கு செயற்படுத்தியது. இம்மன்னர் கி.பி. 1839-இல் காலமானார். இரணடு பிளளைகளுள் மூத்தவரான இராமசநதிர தொண்டைமான் அரசரானார்.

**இராமச்சந்திர தொண்டைமான்** (கி.பி. 1839-1886): இராமச்சந்திர தொண்டைமான் பட்டத்திற்கு வந்த போது ஒனபது வயதுள்ள சிறுவராயிருந்தார். அரசு நிருவாகம் கி.பி. 1844 வரை ஒருகுழுவால் நிருவகிக்கப்பட்டது. அதன்பின் தாமே அரசாட்சிப் பொறுப்பை ஏற்று நடத்தி வந்தார். இவருடைய திருமணத்தின்போது ஆங்கிலக் குழுவினர் வெண்சாமரங்கள் பரிசாக அளித்துக் கௌரவித்தனர். இராசா இராமச்சந்திர தொண்டைமான் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொணட சில ஆண்டுகளுக்குப் பிறகு கி.பி. 1854-இல அரசுக்கு எதிராகக் கிளர்ச்சி தோன்றியது. ஆங்கிலேயர் படையொன்று புதுக்கோட்டைக்கு வந்து அமைதியை ஏற்படுத்தியது. ஆங்கில அரசு அரசியல் முகவர் ஒருவரை நியமித்துத் தொடர்ந்து உள்நிருவாகத்தைத் தன் நேரடிப்பார்வையில் வைத்துக் கொண்டது. மராத்தி கணக்கு முறைகளை கி.பி. 1858-இல் ஒழித்து ஆங்கிலக் கணக்குமுறை நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டது. மன்னரின் அதிகாரம் பெருமளவிற்குக் குறைக்கப்பட்டது. ஆனால், இராமச்சந்திர தொண்டைமான தம் வாழ்நாள் இறுதிவரை, தம் அதிகாரம், சலுகைகள், கண்ணியம் ஆகியவற்றை நிலைநாட்டிக்கொள்வதில் மிகுந்த கவனம் கொண்டிருந்தார். சென்னை அரசு–ஆங்கில அரசு-புதுக்கோட்டை அரசின் நிர்வாக இயந்திர அமைப்பை கி.பி. 1867-இல் மாற்றி அமைத்தது. ஐந்து வட்டங்கள் மூன்று வட்டஙகளாகக் குறைக்கப்பட்டன. இம்மன்னர் பெரிய செலவாளி; அதனால் கடனாளியாகிவிட்டார். இதைக் காரணமாகக் காட்டித் தொண்டைமான் மனனர்கள் அனுபவித்துவந்த 'மேன்மைபொருந்திய' என்ற விருதைச் சென்னை அரசு கி.பி. 1859-இல் பறித்துக் கொண்டது. இவ்விருது கி.பி. 1870-இல் எடின்பரோ கோமகனின் இந்தியச் சுற்றுப் பயணத்தினபோது திரும்ப அளிக்கப்பட்டது. இராசா இராமச்சந்திர தொண்டைமானுக்கு இருந்த ஒரே வாரிசும் இறந்துவிடவே வாரிசுக்கு ஒரு பிள்ளையை தத்துஎடுத்துக்கொள்ள வேணடிய இன்றியமையாமை தொண்டைமானுக்கு ஏற்பட்டது. மூத்தமகள பிரகதாம்பாள அம்மணியின் மூன்றாம் பிள்ளை மார்த்தாண்ட பைரவ தொண்டைமானைத் தமக்கு வாரிசாகத் தத்து எடுத்துக் கொணடார். இராமச்சந்திர தொண்டைமான, தமக்குப் பிறகு வாரிசு உரிமை சச்சரவுகள் ஏற்படுவதைத் தவிர்த்திடும் வகையில் மார்த்தாண்ட பைரவ தொணடைமானைத தத்து எடுத்துக்கொண்டிருப்பதாகவும் அதை அங்கீகரிக்குமாறும் ஆங்கில அரசைக் கேட்டுக்கொணடார். அவ் விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்பட்டு, கி.பி. 1878 சனவரி 23-ஆம் தேதி அங்கீகாரம் அளிக்கப்பெற்றது.

தொண்டைமான் அரச பரம்பரையின் உயர்வுக்கும் புதுக்கோட்டையின் நலனகளுக்கும் வில்லியம பிளாக்பர்ன் எவ்வாறு அக்கறை காட்டினாரோ, அதற்கு ஈடாகச் செயலாற்றிய திவான் சேசய்யா சாத்திரிகளைப் பற்றி இங்கே குறிப்பிடுவது தகும். இவர் திருவாஙகூரின் திவானாக இருந்து ஓய்வு பெற்றவர். இந்தச் சமயத்தில்தான் சேசய்ய சாத்திரி கி.பி. 1878 ஆகசுட்டில் புதுக்கோட்டையில் வட்டக் காவல் தலைவர் (circle)ஆகப் பதவி ஏற்றார். இவர் 16 ஆண்டுகள் இந்தப் பதவியை வகித்துப் புதுக்கோட்டையை பல வகைகளிலும் நல்ல முன்னேற்றம் காண வைத்தார். புதுககோட்டை நகரின புது அமைப்பிற்கும், நேர்த்தியான கட்டடங்களுககும், நலமிக்க நகர் அமைபபிற்கும இவரே காரணமாவார். இவரைப் புதியபுதுக்கோட்டையின் சிற்பி எனலாம்.

**மார்த்தாண்ட பைரவ தொண்டைமான்:** மார்த்தாண்ட பைரவத் தொண்டைமானுக்கு முடிசூட்டப்பட்டபோது அவருக்கு வயது 11. அரசு நிருவாகத்தைசேசய்யசாத்திரி அப்போது திவானாக இருந்து நடத்தினார். இம்மன்னா திறமை மிக்கவராக விளங்கத் தகுந்த முறையில் கல்வி போதிக்கப்பட்டது. மனனர் மார்ததாணட பைரவ தொண்டைமானுககு கி.பி 1894-இல் 19 வயது நிறைவு பெறவே அரசின் நிருவாகப் பொறுப்பை இவரிடம் ஆஙகில அரசு ஒப்படைத்தது. இவரது காலத்தில் கமபீரமான கட்டடங்கள் கட்டி முடிக்கப்பட்டன. திருச்சி, தஞசை, மதுரை ஆகிய பெருநகர்களுக்குச் செல்லும் பாதைகளும் சீராக அமைக்கப்பட்டன. நிலத்தீர்வையில பல மாறறங்கள் செய்யப்பட்டன. ஆஙகில அரசு புதுககோட்டையில் மண்ணுப்பு காய்ச்சும் முறையைத் தடைசெய்தது. ஆணடு ஒன்றிற்கு உரு 38,000 நட்ட ஈடு தருவதென்று ஒப்பந்தமாயிற்று.

மன்னா ஐரோப்பிய நாடுகளுக்கு அடிக்கடி பயணம் செய்தார். மன்னர் வெளிநாட்டில் இருக்கும் போது நிருவாகத்தைக் கவனித்துக்கொளள ஒரு ஆட்சிக்குழு ஏற்படுத்தப்பட்டது. இவர் இங்கிலாந்துக்குச் சென்றபோது வேல்சு இளவரசரான ஏழாம் எட்வாடு, விக்டோரியா மகாராணி ஆகியோரைச் சந்தித்தார்.

புதுக்கோட்டை மக்களை மககளாட்சிககுத் தகுதியானவர்களாக ஆக்கப்பேராளர் சபை ஒன்று 1902-ஆம ஆணடு நியமிக்கப்பட்டது. முன்னரே இந்தியதேசிய இயக்கத்தில பங்கு கொணடிருந்த காஙகிரசுக் கட்சியினர் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு பேராளர் சபைக் கூட்டங்களில் தேசிய விடுதலை உணர்ச்சிகளை எதிரொலிக்கும கருத்துகளை வெளிப்படுத்தினர். தேசிய உணர்ச்சி மிகக பேராளர் சபை உறுப்பினர் பலர் ஒனறு கூடி ஆலங்குடி தாலுகா பூவரசங்குடியில் 27.4.1920-இல் புதுக்கோட்டை மக்கள மாநாடுஒனறினைக்கூட்டினர்.

மார்த்தாண்ட தொண்டைமானுக்கு 1913-ஆம் ஆண்டு சனவரி முதல் தேதி இங்கிலாந்து மன்னரால் ஒரு விருது (G.C.I.E. Grand Commander of the order of the Indian Empire) அளிக்கப்பட்டது. இம் மன்னரின் 25-ஆம்ஆட்சி ஆண்டுவிழா 1913-ஆம் ஆண்டில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அதனை ஒட்டிப் பல சலுகைகள் மக்களுக்கு வழங்கப்பட்டன.

மார்த்தாண்ட தொண்டைமான் ஆசுத்திரேலிய வழக்குரைஞரின் மகளான மோலி பிங்கு(Miss Molly Fink) என்பவரை 1915-ஆம் ஆண்டு ஆசுத்திரேலியாவின் தலைநகராகிய சிட்னியில் மணந்து கொண்டார். மார்த்தாண்ட தொண்டைமான் 1922-ஆம் ஆண்டளவில் ஐரோப்பாவிலேயே தம் குடும்பத்தோடு நிலையாகத் தங்கிவிட முடிவுசெய்தார். எனவே நாட்டின் ஆட்சிப்பொறுப்பையும் அரசரின் எல்லா அதிகாரங்களையும் நிருவகிக்கும் பொறுப்பைப் பகர ஆளுநருக்கு (Regent)அளித்தார். பகர ஆளுநர்களாக மன்னரின் மூத்த தமையனாரும்,ஏற்கெனவே அரசின் திவான் பதவியை வகித்தவருமான இராசகுமார் விசயரகுநாததொண்டைமானும் நியமிக்கப்பட்டனர். ஆங்கிலப் பேரரசின் ஒப்புதலோடும் ஆணையோடும் புதுக்கோட்டை அரசின் வைப்பு நிதியில் இருந்து ரூபாய் 20 இலட்சமும் அரசர் திருமண நிதியில் இருந்து உரூ,1,60,000-மும் ஆக 21 லட்சத்து 60ஆயிரம் உருபாய் தொண்டைமானுக்குத் தரப்பட்டது.இதற்கு மாறாக மாதந்தோறும் மன்னருக்குத் தரும் படித்தொகை உரூ. 2500 நிறுத்தப்பட்டது. இவ்வேற்பாட்டுடன் மன்னர் புதுக்கோட்டையைவிட்டு வெளியேறினார்.

புதுக்கோட்டை அரசு 1923-ஆம் ஆண்டு ஆங்கில அரசின் நேரடிப் பார்வைக்கு வந்தது. திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவர் முகவராக நியமிக்கப்பட்டார். சட்டசபை ஒன்று (Legislative Council) -1924) பகரஆளுநர் (Regent) ஆட்சியில் தொடங்கப்பட்டது. இதில் 35 பேர் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள், மீதி 15பேர் நியமன உறுப்பினர்கள் ஆவர். இதில் அரிசன வகுப்பைச் சேர்ந்த ஒருவரையும். பெண் உறுப்பினர் ஒருவரையும் உறுப்பினர்களாக நியமிக்கும் முறை மேற்கொள்ளப்பட்டது. மன்னர் மார்த்தாண்ட பைரவ தொண்டைமான் 1928-ஆம் ஆண்டு மே மாதம் 28-ஆம் தேதி பாரிசு நகரில் காலமானார்.

மார்த்தாண்ட தொண்டைமானுக்குப் பிறகு அவர் மகன் சிட்னி மார்த்தாண்டன் மன்னராவதற்குச் சமசுத்தானத்தில் பெரும் எதிர்ப்பு உருவாக்கப்பட்டது. இந்திய அரசு 1928 நவம்பரில் வெளியிட்ட செய்தி இந்த வாரிசுரிமைச் சிக்கலுக்கு முடிவு கட்டியது. புதுக்கோட்டை மன்னர் பட்டத்திற்கு இராசா இராசகோபாலத் தொண்டைமானைத் தேர்ந்தெடுத்து இந்திய அரசு அறிவித்தது. இவர் மன்னர் மார்த்தாண்ட பைரவ தொண்டைமானின் இளைய சகோதரி மீனாம்பாளின் பேரர் ஆவார்.

**இராசகோபால தொண்டைமான்:** இராசகோபால தொண்டைமான் பட்டத்திற்கு வந்தபோது அவருக்கு எட்டு வயதுதான். இவர் புதுக்கோட்டை தொண்டைமான் பரம்பரையில் ஒன்பதாம் மன்னராகவும் கடைசி மன்னராகவும் திகழ்ந்தார்.

மன்னர் இராசகோபால தொண்டைமான் சிறுவயதினராய் இருந்ததால், ஆட்சிக்குழு ஒன்று ஏற்படுத்தப்பட்டது. இத்தொண்டைமானின் ஆட்சிக் காலத்தில் பல சீர்திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன. புதிய அரண்மனையும் கட்டி முடிக்கப்பட்டது. புதுக்கோட்டை வழியாக மானாமதுரை வரை தொடர் வண்டிப் போக்குவரத்து 1929-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. இந்திய வைசிராய் மார்க்கியூசு வெல்லிங்டனும் அவர் துணைவியாரும் 1933-ஆம் ஆண்டு புதுக்கோட்டைக்குச் சுற்றுப்பயணம் செய்தது புதுக்கோட்டை வரலாற்றில் குறிப்பிடத்தக்கதாகும். அலெக்சாண்டர் தாட்டன்காம் 1934 முதல் புதுக்கோட்டை சமசுதான ஆட்சியாளராகப் பதவி ஏற்றார். வில்லியம் பிளாக்பர்ன், சேசய்யா சாத்திரி ஆகியோருக்குப் பிறகு புதுக்கோட்டைக்குக் கிடைத்த ஒப்பற்ற சிறந்த நிருவாகியிவராவார். தாட்டன்காமின் நிருவாகச் சீர்திருத்தங்கள் பெரும்புகழ் பெற்றவை.இவர் பல துறைகளில் சீர்திருத்தங்களைச் செய்தார்; புதுக்கோட்டை ஒரு புதிய அரசாவதற்கு வேண்டிய அடிப்படைச் செயல்களைச் செய்தார்.

மன்னர் இராசகோபால தொண்டைமான் தம் 22-ஆம் வயதில் ஆட்சி உரிமை பெற்றார். 1944 -ஆம் ஆண்டு சனவரி மாதம் 17-ஆம் தேதி புதுக்கோட்டை மக்களுக்கு அது ஒரு திருவிழாவாக அமைந்தது.

அப்பொழுதுதான் இந்தியத் தேசிய காங்கிரசுக்கட்சியின் செல்வாக்கு, தமிழ்நாட்டில் உயர் நிலை அடைந்ததை ஒட்டிப் புதுக்கோட்டைத் தனியரசு இந்திய ஒன்றியத்துடன்சேர்க்கப்படவேண்டுமென்கிறவேண்டுகோளும் வலுப்படத் தொடங்கியது. இந்தியா 1947-இல் விடுதலைஅடைந்ததைத் தொடர்ந்து புதுக்கோட்டை சமசுதானம் சென்னை மாகாணத்துடன் இணைக்கப்படவேண்டுமென்றவேண்டுகோள் மிகவும் தீவிரமடைந்தது. இந்தியாவின் உள்துறை மந்திரியாக, 1948-ஆம் ஆண்டில் விளங்கிய சர்தார் வல்லபாய் பட்டேலின் அழைப்பின் பேரில் மன்னர் இராசகோபாலத்

தொணடைமான் புதுதில்லி சென்றார். புதுக் கோட்டைச் சமசுதானத்தை இந்திய ஒன்றியததுடன் இணைத்துக்கொள்ள மனநிறைவோடு இசைவு தெரி வித்து அதற்கான ஆவணங்களில் கையெழுத்திட்டுத் திரும்பினார். முடிதுறந்த மனனரரான இராசா இராச கோபால தொணடைமான் திருமணம் கூடச் செய்து கொள்ளாமல் தனனந்தனியாக போற்றத்தக்க ஒரு அரச துறவியாக இப்போது திருச்சியில் உள்ள தம் அரணமனையில் ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கையை மேற்கொண்டிருக்கிறார். அ சு.

**துணை நூல்கள்:**


**Aiyan, Kameswara B.V. Sir A Seshiah Sastri,** Indian Statesman, Madras, Srinivasa Varadachari & Co., 1902.

**Aiyar, Radhakrishna, S.,** A General History of the Pudukkottai State, Pudukkottai, Darbar, 1916.

**Ayyar, Venkatarama K.R.,** (Ed) A manual of the Pudukkottai State, Vol.I & II, Pudukkottai, Pudukkottai Darbar, 1940.


***தொண்டைமானிளந்திரையன்:*** இவன், பெரும்பாணாற்றுப் படையின் பாட்டுடைத் தலைவன. காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு தொண்டை நாட்டைச் சங்ககாலத்தில் ஆண்டுவந்தவன். இவனைத் தொண்டைமான், இளந்திரையன, திரையன் எனறெல்லாம கூறுவர். 24 கோட்டங்களையும், 79 உட்கோட்டங்களையும் கொணட தமிழகத்தின் வடபகுதி, இவனது பெயராலேயே, 'தொண்டை மணடலம்' என வழங்குவதாயிற்று.

நாகப்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு சோழமண்டலத்தை ஆண்ட 'வெண்வேற்கிள்ளி' என்னும் சோழமன்னன, ஒருநாள் தன் நந்தவனத்தில் உலாவருங்கால்,பேரழகியாகிய பீலிவளை என்பாளை அப்பொழிலிடைக்கண்டு காமுற்றுக் கலந்திருந்தான். கலவி மயக்கந் தீர்ந்து எழுந்தபோது அவள காணப் படாமையால் வருந்தியிருந்தான். சிலநாளகள, சென்றதும், ஒரு முனிவர் இவனது நகரத்திற்கு வரவே, அவரிடம், தனது துயரத்தைக் கூறினான். அம்முனிவர், 'அவள் பெயர் பீலிவளை. இனி அவள் வரமாட்டாள். அவளோடு கூடியதால் உண்டான உனது மகன் மட்டும் உன்னை வந்தடைவான்' எனறு கூறிச் சென்றார். சிலநாட்கள் கடந்ததும், கடல் வாணிகம் செய்யும் செட்டியார்கள் மரக்கலம் கொண்டு சென்று மீண்டு வருங்கால், கம்பளச் செட்டியாரிடம், பீலிவளை தோன்றித் தன்மகனை ஆதொண்டை கொடியைச் சுற்றித்தந்து, அவனை, வெண்வேற் கிள்ளிச் சோழனிடம ஒப்படைக்குமாறு கூறவே, அச் செட்டியார், அவனைச் சோழனிடம் சேர்க்கக் கொண்டுவரும்போது மரககலம் கவிழ்ந்து போகவே, குழந்தை, கடலலை (திரை) யாலொதுக்கப்பட்டு நாகைக் கடறகரையை யடைந்தது. அதனைச் சோழ னெடுத்து, தொண்டைக் கொடியால் சுற்றப்பட்டமையால் 'தொணடைமான' என்றும், திரையால் ஒதுக்கப் பட்டுக் கிடைத்தமையால், 'இளந்திரையன' என்றும் பெயரிட்டான.

இதனை, வேறுவிதமாகவும கூறுவர். வெண்வேற கிளளி, தன வலிமையால பிலத்துவாரத்தின் வழியே நாகருலகு செனறான. அங்கு நாக கனனியாகிய பீலிவளை என்பாளை விரும்பினான. அவள், 'உன்னைக் கலநது மகப்பெற்றால், மகனை என செய் வேன்' என்றாள. அதற்குச் சோழன், 'நீ பெற்ற மகனைத் தொணடைக் கொடியைச் சுற்றிக் கடலில விட்டுவிடு. அவன வந்து என்னிடம் சேர்ந்தால, அவனுக்கு யான இளவரசுப் பட்டம்கட்டி, அரசுரிமை நல்குவேன்' எனக கூறிக கூடினான். அவ்வாறே, தொண்டைக் கொடியால் சுற்றப்பட்டு, திரையால் உநதப்பட்டுக் கரை சேர்ந்து, அரசனை அடைந்ததால், அவனுக்குத தொணடைமானிளந்திரையன எனறு பெயர் சூட்டினான். இவனது வரலாற்றினை மணிமேகலையானும் அறியலாம்.

ஆதொணடைச் சக்கரவர்த்தி என்று வடதிரு முல்லைவாயிற் புராணம் இவனைக் கூறுகின்றது. வடதிருமுல்லை வாயிலிறைவனை வழிபட்டுப் பேறு பெற்றவன் இம்மன்னன். ஒருகால், இவன், போரிட நேர்ந்தபோது இவ்விறைவன இவனுக்குத் துணையாகத தன் நந்தியம்பெருமானை அனுபபியதாகச் சொலலப்படுகிறது.

இவனது சிறப்புகள், அகநானூற்றிலும், யாப்பருங் கல விருத்தி மேற்கோளிலும் பிறவற்றிலும் கூறப்படுகின்றன. இவன, புறநானூற்றில் 185-ஆம் பாடலையும், நற்றிணையில் 94, 99, 106-ஆம் பாடல்களையும் பாடியுள்ளான். நனனூல் மயிலைநாதருரையாலும, இறையனார் அகப்பொருள உரையாலும், இவன 'இளந்திரையம்' என்ற ஒரு நூல் இயற்றியுள்ளான எனத் தெரிகின்றது. இவனது வீரமரபு அகநானூற்றில் அழகாக வருணிக்கப்படுகின்றது.

இவ்வளவு சீரும சிறப்பும் வாய்ந்த இவனது பெயராலேயே திரையனூர் என்றொரு ஊர் இருந்ததாகத் தெரிகின்றது. வீ.சொ.

***தொபாகோ:*** கரீபியன் கடலுக்குத் தெற்கே கிறித்தபர் கொலம்பசு எனபவரால் கண்டு பிடிக்கப்

இலயார்டு (Austen Layard) என்பவர் நிமுரதது என்னும் இடத்தில் அகழாய்வுகளை மேற்கொண்டார். சுமேரிய நாகரிகத்தைப் பற்றிப் பிரானசுத் தொல வியல் அறிஞர்கள் அறிந்திருந்தனர்.

தொலலியலின வளாச்சி கி.பி. 19-ஆம நூற்றாணடில விரிவடைந்தது. உலகின் பலவேறு பகுதிகளிலும் தொல்லியல் ஆய்வுகள நடததப்பட்டன. தொல்லியல அறிஞர்கள், இநதியா, ஐரோப்பா, உருசியா, தென் அமெரிககா, சீனா, சப்பான, தென கிழககு ஆசிய நாடுகள் முதலிய பகுதிகளில் கள அகழாய்வுகளும் அகழாய்வுகளும மேறகொணடனா. இனறு உலகெங்கினும் வாழும் பழஙகுடி மக்களின் பழக்க வழககஙகளைப் பணடைய வரலாறறுடன் ஒப்பு நோக்கும பணியில் அவாகள் ஈடுபட்டு, வரலாற்றுககு முற்பட்ட காலத்தை ஆய்ந்து வருகின்றனர். இப்பொழுது தொலலியலின் ஒரு பிரிவான கடலகழாய்வும வளர்சசி பெறறு வருகினறது. இதனால கடலுக்கடியில் மறைந்துபோன நகரஙகள வெளிப்படுத்தப்படுகினறன ஐரோபபாவில் தொழிற்சாலைத தொலலியல (Industrial Archaeology) என்னும புதிய ஆயவும் வளர்சசியடைநது வருகினறது. இது கி.பி. 17, 18-ஆம நூற்றாண்டுகளில இருநத ஐரோபபியத் தொழிறசாலைகளைப் பறறியும், காலவாய்கள, ஆலைகள, கட்டடஙகள் பறறியும் ஆயவு செயவதுடன, தொழிற்புரட்சியின் பொழுது தொழிலாளர்கள எவவாறு வாழந்தனர்? எஙஙனம் தொழிற சாலைகள் வளர்ச்சியடைநதன? எனபனவறறையும ஆய்வு செய்கினறது.

இந்தியாவில ஐரோப்பியர்களின வருகையால் தொலலியல வளர்ச்சியடைநதது. அவர்கள இநதியத் தொல்லியலுக்கு ஊக்கம அளித்ததுடன், பலவேறு நகரங்களை அகழாயவுகள், கள ஆய்வுகள செய்தனர். வரலாற்றுக்கு முறபட்ட காலப் பகுதிகளையும் கலவெட்டுகளையும் தொனமைச் சினனங்களையும் அவர்கள கண்டுபிடித்தனர். இநதியத தொலலியலின தந்தை என மார்டிமர் வீலா (Mordimer Wheeler) கருதப்படுகிறார் இவருக்கு முன வில்லியம் சோனசு, கூலபுருக்கு, எாசுகின (Erskine), மெக்கன்சி, அலெக சாந்தர் கனனிங்காம், கோல் (Cole), சா சான மார்சல் (Sir John Marshall) போனற ஐரோப்பியர்கள இநதியாவின் தொனமை வரலாற்றை ஆய்வு செயவதில பெரிதும் ஈடுபட்டு வெறறி கணடனா. இநதியாவில் இநதியத தொல்லியல பரப்பாயவுத துறையும், மாநிலஙகளின தொலலியல துறைகளும், பல்கலைககழகஙகளும் இந்தியத தொல்லியலில பெரிதும ஈடுபட்டு வருகின்றன. அறிவியல சார்ந்த தொலலியலை மாாடிமா வீலர் இநதியாவில் புகுத்தினார். பெட்டர்சன் (Patterson) போன்றோர் கறகாலத்தில் ஆர்வம் கொணடு விளஙகினா.

இந்தியாவில சிந்துவெளி நாகரிக நகரங்களும் கல்-செப்புக்கால கங்கைப் பகுதி நகரங்களும், சங்க கால நகரஙகளும், பழங்கறகாலப் பகுதிகளும், பெருஙகற்காலப் பகுதிகளும் பெருவாரியாக இந்நூற்றாணடில கண்டுபிடிக்கப்பட்டுளளன. கடலகழாய்வுகளிலும் இந்தியா முன்னேறறம் கண்டுள்ளது. அரபபா, மொகஞசதாரோ (பாகிசுத்தான்), பாடலிபுத்திரம, சாலிகுண்டம், தட்சசிலம், நாகர்ச்சுன கொண்டா, குன்னத்தூர், காவிரிப்பூம்பட்டினம், காஞ்சிபுரம, அரிககமேடு, உறையூர், ஆதிச்சநல்லூர், கொறகை, கொடுமணல போனற ஊர்கள் இந்தியாவில் அகழாய்வு செய்யபபட்ட குறிப்பிடத்தகக ஊாகளாகும.

இனறு பலகலைக கழகஙகளில தொல்லியல் ஒரு பாடப பிரிவாகப் பயிற்றுவிக்கப்படுகிறது. வரலாறறை இளங்கலையில் பயினற மாணவர்களும், பிற இயலகளைப் படிததவாகளும் இத்துறையில சேர்க்கபபடுகினறனர். இவர்களுககு பலவேறு பயிறசிகளும் அளிககப்படுகின்றன. சு.இரா.

**தொல்லெழுத்தியல்:** 'எழு' எனற அடியினின்றும் தோனறிய எழுதது எனற சொல் வெளியில் கிளமபுவது என்ற பொருளைத்தான குறித்திருக்க வேண்டும். அதாவது, எழுப்பப்படுகினற ஒலியே ஆகும். எழுதப்படுவதால எழுத்து என்ற கருத்து பிற்பட்ட ஒனறாகும் எழுத்தின் ஒலிவடிவம் முதலில் தோனறிற்று; வரிவடிவம் பினனாத் தோன்றிறறு.

ஆதிமனிதன முதலில் பேசககற்றுக் கொணடிருகக வேணடும். அப்படி அவன பேசி, எழுப்பிய ஒலிகளைச் சொறகளாகக் கொணடு தன கருததுகளைப் பிறருக்குத தெரிவித்திருக்கிறான். அவற்றை எப்படி எழுதித் தெரிவிததான எனபதை ஆராயவதே தொல்லெழுததியலின நோக்கம. முதன முதல் அவன அதைப்படம வரைந்தே தெரிவித்திருகக வேணடும். மானின படத்தை எழுதி, அம்பு குததுவதைப போல் காட்டினால, வேட்டை ஆடியதைக் குறிப்பிட்டிருக்கலாம. மான அருகில சில புளளிகளை இட்டால், அத்தனை மானகளவேட்டையாடியதாகக்கொள்ளலாம.சூரியன படததைப போட்டால் சூரியனைக குறிப்பிடலாம். இவவாறாகப் படம் வரைந்து தெரிவித்தல் அதனைச் சித்திர எழுத்து (Pictograph) என்று தொல்லியல் வல்லுநர் குறிப்பிடுகின்றனர். இதற்கடுத்த நிலையில அச்சித்திரங்களை அவை குறிககும பொருள்களோடு தொடாந்து வேறு கருத்துகளையும் குறிப்பிடக் குறியீடாகக் கொணடார்கள. (எ.கா) சூரியன படத்தை எழுதினால சூரியனை மட்டுமல்லாமல பகல், வெப்பம முதலிய கருததுகளையும் அது உணர்த்தலாம். அதைக் கருத்தெழுத்து (ideogram) எனபர். அதற்கு அடுத்ததாக அப்படஙகளின பெயர்களில் முதலெழுத்தை மட்டும் குறிகக அப்படஙகளையே பயன்படுததலாம்.

சூரியன் படத்தை எழுதி சூ என்ற முதலெழுத்தைக் குறிக்கச் செய்யலாம். இந்நிலையில் அப்படத்திற்கும் அவ்வொலிக்கும் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டார்கள். இது கருத்துக்கு மட்டும் அல்லாமல் ஒலிக்கும் பயன்பட்டது. இப்படியே அவரவர் பேசும் மொழிக்கேற்ப ஒலி எழுத்துகள தோனறலாயின. அந்த நிலையில் சித்திர வடிவின் கருத்துக்கும் ஒலிக்கும் யாதொரு தொடர்பும் இல்லாமல் போயிற்று. ஆயினும், எல்லா எழுத்துகளும் சித்திரக் குறிகளிலிருந்துதான் தோன்றின என்று சொல்ல இயலாது.

மேலே குறிப்பிட்டபடி சில எழுத்து முறைகளில் அகர முறையும், மற்றும் சிலவற்றில் உயிர்மெய்வகை முறையும் தோன்றின. மெய் வேறாகவும் உயிர் வேறாகவும் எழுதப்படுவதும், இரண்டும் ஒரே உருவத்தில் தோன்ற எழுதப்படுவதும் இவ்விருமுறைகளைப் பின்பற்றுவன. இரண்டாம் முறைப்படி உயிர்மெய் எழுத்துகளே முதலில் தோனறியவை என்று அறிஞர்கள் கருதுகின்றனர். அசீரியா, சீனம், சப்பான ஆகிய நாடுகளில் தொல்லெழுத்துகள் இந்த முறையில்தான் தோன்றின. எழுத்துகளின் உருவத்தில வேறுபாடு தோன்றாமல் ஓர் ஒலிக்கு ஓர் எழுத்து முறையில் தோன்றியது அகர முறை எழுத்து. ஈபுரு, கிரேக்க, உரோமானிய, அராபிய எழுத்துகள் இந்த வகைப்பட்டன. முதலில் எதை எவர் உருவாக்கினர் என்பதில் கருத்து வேற்றுமை இருக்கிறது. வடசெமித்திக்கு மக்கள் 'உ' குறியீடுகளைக் கொண்டு மெயகளாகவே எழுதி வந்தவர். சில நேரங்களில் அவற்றில் சிலவற்றை உயிராகவே எழுதிவந்தார்கள். சிரியா, பாலசுதீனத்தில் வாழ்ந்தவர் அகர எழுத்துகளை (alphabet) தோற்றுவித்தனர் என்று கருத இடமுண்டு. இவை எல்லாமே ஒன்றற்கு ஒன்று தொடர்புடையன என்று அறிய முடியாவிட்டாலும, அதனை மறுக்க இயலவில்லை. வடசெமித்திக்கு மொழியினர் ஏறக்குறைய கி.மு.1500-இல மெய்யெழுத்துகளைத் தோற்றுவித்த பின், மற்ற மொழியினர் தங்கள எழுத்துகளை உருவாக்கிக் கொணடதாகக் கருதப்படுகின்றது.

கி மு.3000-க்கு முன் இந்தியாவில் (இன்று பாகிசுத்தான்) மொகஞ்சதாரோ, அரப்பா, பகுதிகளில் எழுத்துகள் வழங்கி வந்தன. அரப்பாவில் சித்திரங்களாகவும் இரண்டு இடங்களிலும் சித்திர எழுத்து, ஒலி எழுத்து எனற இருவகைகளும் காணப்படுகின்றன. இன்னும் உறுதியாகவும், அறுதியாகவும் அறியப்பட முடியாத இவ்வெழுத்துகள் பல உலக அறிஞர்களின ஆராய்ச்சிக்கு உட்பட்டிருக்கின்றன. முழுமையாக ஒப்புக்கொள்ளக் கூடிய நிலையில் முடிவு வெளிப்படவில்லை. மேலும் அரப்பா எழுத்துகளின் எழுத்துமுறைக்கும் கி.மு. 3-ஆம் நூற்றாண்டில் வழங்கிய திருந்திய எழுத்துகளின் எழுத்து முறைக்கும் இடையில் என்ன நிலை இருந்தது? எப்படி வளர்ந்து வந்தது? எனபதை அறிய இயலவில்லை. இந்தியாவின் வட பகுதியில் வழங்கி வநத கரோசுட்டி, பிராம்மி என்ற இருவகை எழுத்துகளும் வடசெமிட்டிக் எழுத்து முறையோடு தொடர்புடையன என்று கருத இடமிருக்கிறது.

வடமேற்குப் பகுதியில் கி.மு. 4-ஆம் நூற்றாணடுக்கு முன்றிய அரசு அலுவலுககு என்று தோன்றிய கரோசுட்டி எழுத்து கி பி. 4-ஆம் நூற்றாண்டில் வழக்கொழிந்தது. கி மு 3-ஆம் நூற்றாண்டில் அசோகனின் கலவெட்டுகள இநதியாவில் பிராம்மி எழுத்திலும வடமேறகுப் பகுதிகளில் கரோசுட்டியிலும் எழுதப்பட்டன. இநதப பிராம்மி எழுத்து தமிழ்நாடு தவிர மற்ற இடங்களில் வழஙகி வந்தது. அதே எழுத்து தமிழ்நாட்டில குறிப்பாக பாண்டிய நாட்டுக் குகைகளில் சமணர்ககாகத் தயாரிக்கப்பட்ட படுக்கைகளின் அருகிலும் குகைகளின் கூரை விளிம்புகளிலும் தமிழி (அதாவது) தமிழ் என்ற பெயரால எழுதப்பட்டது. கி.மு. முதல் நூற்றாணடிற்கு முன் தோனறிய சமபாயாஙகன சுத்த ' எனற சமண நூலில் இந்தியாவில் வழங்கிய எழுததுகளில பிராம்மி, தாமிழி ஆகிய இரணடின பெயாகளும காணப்படுகின்றன. எனவே இநதியா முழுவதும் பொதுவான சில எழுத்துகள் வழங்கி வந்தன என்பதும அவ்வப் பகுதிக்கு ஏற்ப உருமாற்றிக் கொளளப்பட்ட எழுத்துகள வளர்ச்சி அடைந்து வடக்கே நாகரியும், தெற்கே கன்னடம, தெலுஙகு, தமிழ எனவும் தனித்து வழஙகின என்பதும் அறியக் கிடக்கிறது. வடமொழியை எழுதப் பயனபட்ட கிரந்த எழுத்தினினறும மலையாள எழுத்து கி.பி. 13,14-ஆம் நூற்றாணடில தோனறத் தொடங்கிற்று ஏறத்தாழ கி.பி. 250-லிருந்து பாண்டி நாட்டில் வழங்கிய எழுத்துகளிலிருநது தோனறிய வட்டெழுத்து எனற எழுத்தும தமிழ் மொழிக் கல்வெட்டுகளை எழுதப் பயன்பட்டது. தமிழ்நாட்டின கிழக்குப் பகுதியில வழங்கிய தமிழ் எழுத்து தழைததோங்கி வளரவே, வட்டெழுத்து வடாாக்காடு, கொங்கு நாடுகளில் கி பி 8-ஆம் நூற்றாண்டிலிருந்து மறையலாயிற்று. பிறகு பாண்டி நாட்டில் கி.பி. 11-ஆம் நூற்றாண்டு வரை வழஙகி வந்த வட்டெழுத்து சோழர் மேலாணமையால்வந்ததமிழின தாக்கத்தால மறைந்தது. இதற்குப் பின கி.பி. 16-ஆம் நூற்றாண்டு வரை கேரளத்தில் வட்டெழுத்து வழக்கிலிருந்தது. கடைசியாக எழுத்துகளில் வேறுபாடு காட்டாமல ஒரே மாதிரி எழுதிக் குழப்பமடைந்த காரணத்தால கோலெழுத்து என்று சொல்லப்பட்டு அதுவும் வழக்கொழிநதது.

கே.ஜி கி.

**தொல்லை தரும் குழந்தை:** இயல்பிலிருநது மிகுதியும் விலகிய குழந்தைகள பலராலும் பலவகை

யில விளக்கப்படுகின்றனா. பிறவியிலிருந்து அக் குழந்தைகளைக் காணும வாயப்புபெற்ற பலரும், எடுத்துக்காட்டாகக் குடுமப மருததுவர், குழந்தை சூழநிலைகருத் தன்னை ஈடுகொடுத்துச சரிப்படுததிக் கொள்ள முடியாததுடன எளிதில் ஆபத்துக்காளாகும நிலையில் உள்ளது' என்று கூறலாம். 'தாயார் குழநதையைக் கவனித்துக்கொளள முடியாத நிலை' என்று மகப்பேறு உதவியாளர் கூறலாம். 'மறறவா களைவிட மிகவும் தொலலைதரும் குழந்தை' எனறு பெற்றோர் கூறலாம. 'பளளியில் மற்றக்குழநதை களைப் போல அறிவுககூர்மையுடன இக்குழந்தை இலலை' என்று ஆசிரியாகள கருதலாம். நீதிமன்றம் இளங்குற்றவாளியாகக்கருதி.கவனிப்பும் கட்டுப்பாடும தேவை எனறு முடிவு செய்யலாம். உளநோய் மருதது வர்கள் அககுழநதையைச் சிக்கலான குணநலனுளள தெனறும், இணக்கமானதலல எனறும் கருதுவா. சமூகப் பணியாளாகள தொலலை தருவதாக அக குழநதையைப் பற்றிக் கூறலாம். மருத்துவ நிலையம. தொலலைதரும குழந்தையாகவும்,மருத்துவத்துக்குப் பயன் தெரியவிலலை என்றும் கருதலாம். இந்த எல்லா முடிவுகளும தொல்லைதரும் குழந்தையைப் பிறரிடமிருநது தனிமைப்படுத்துவனவாகவே அமை கினறன.

தொலலைதரும குழந்தையைப் பொறுத்தமட் டில தொலலைதரும் குணநலம என்பது 'ஏறறுக கொள்ளததகா நிலை' எனறு கூறலாம். அதாவது 'ஏறறுக்கொளளத்தகாதது' சில சூழநிலைகளில, அதாவது சில நேரஙகளில, அலலது சில இடங களில 'விருமபததகாதது' எனறபொருள் தரு கிறது. எனவே, ஒரு நேரத்தில ஏறறுக கொளளத தகாததாக மறறும் 'விருமபத் தகாததாக உளளது மறறொரு நேரததில் அப்பபடியே இருககும எனறும் எதிாபார்க்க முடியாது.

தொல்லைதரும் குழநதைகளின கோளாறுகள பொதுவாகக் கீழ்க்காணுமாறு பகுததுணரப்படும

**உடற்கூறு:** இதில் குழந்தையின உடலமைபபில உள்ள கோளாறுகள், செயலற்ற தன்மைக் குறை பாடுகள முதலியன அடஙகும். இது பரம்பரை யாகவோ பினனா வந்ததாகவோ இருக்கலாம். எடுத்துககாட்டாக வலிப்பு நோய், இறங்காத விதை கள, மனக் கோளாறுகள் முதலியவறறைக் குறிப்பிட லாம்.

**உணர்வுக் கூறு:** இது குழநதையின் அனறாட வாழ்வின் அறிவுக்கூர்மை அலலது அறிவாற்றல தேவைகளை ஈடு செய்வதறகான திறமைதொடா புள்ளது.

**குடும்பக் கூறு:** பெறறோரின பினனணித்தொடர் புடைய சிக்கலகள (எடுத்துக்காட்டாக, குற்றவாளி களான பெறறோர்),சமூகப பொருளாதார நிலை (எடுததுக்காட்டாக, வேலையறற தொழிலாளா), சுற்றுபபுறம (எடுத்துக்காட்டாக, குடிசைப்பகுதி),வீடு (எடுத்துக்காட்டாக, நெருக்கடி மிககது),குழந்தையின தனிககுணநலன (எடுத்துக்காட்டாக, பிடிவாதம, அதி காரத்துககுப் பணியாமை), பெறறோா ஒருவருட னொருவர் முரணபடுதல் (எடுததுககாட்டாக, பணி வின்மை) பெறறோருக்கு, குழநதைகளுககு முரணபாடு (எடுததுககாட்டாக, அனபின்மை), குழநதை வளாப்பு மறறும கணகாணிப்பு (எடுததுக்காட்டாக, அடிததல, மாறுபடுதல) முதலியன.

**சமூக உறவு:** சமூக உணாவு ஏறபடுததும் புலனு ணர்வு, தொடாபுளள மாறுபடும் திறன, கூட்டுறவு நடவடிக்கையில ஈடுபாடு முதலியன தொடாபுளளது.

**சமூக நடத்தை:** இதில சட்டமீறல்கள அனைததும அடங்கும. முககியமாக மனிதா, சொத்து, போதை மருநது உட்கொளளுதல, விபசாரம் தொடர்பான எல்லாக குறறஙகளும், சட்ட மீறல்களும் இதி லடஙகும் மேலும குறறம்சாரா, தன்னை அழித்துக் கொளளும செயலகளும் (தற்கொலை முதலியன) இதிலடஙகும.

**தனிக்குணம்** குணநலனில மாறுபாடு (எடுததுக் காட்டாக, கடுமையான தன்ஆயவு), உணர்வு மாறு பாடு (எடுத்துக்காட்டாக, உணர்வு முதிரா நிலை) முதலியன.

மேலே குறிப்பிட்ட ஒவவொரு தனமையும் மிக வும் பொதுவான நிலையிலிருந்து மிகவும சிறப்பான நிலைவரை பல்வேறு நிலைகளிலும் விரிவாகப் பகுப பாய்வு செய்யப்படுகிறது.

இநத அடிபபடையில உருவாககப்பட்ட புதிய மருத்துவ முறையில் சிக்கல்கள மூனறு நிலைகளில விரிவாக ஆராயப்படுகின்றன. அவை.1)தனமை (எடுத்துக்காட்டாக,உடற்கூறு),2)நோய (எடுத்துக காட்டாக, சிறுநீர் கட்டுபபடுத்தமுடியாமை),3) நடத்தை (எடுததுக்காட்டாக, தவறுகளை மறைததல. அலலது 1) தன்மை (எடுத்துக்காட்டாக, சமூக நடத்தை), 2)நோய் அல்லது சிக்கல (எடுததுககாட் டாக, தற்கொலை எண்ணஙகள்), 3) நடததை (எடுத்துக்காட்டாக தனக்குத்தானே காயபபடுததிக் கொள்ளுதல்) முதலியன.

ஒவ்வொரு நடத்தைக்கும் ஒரு மருத்துவத் தொடர் அமைந்துள்ளது. வே ந

**தொலைக்காட்சிவழிக் கல்வி:** இன்றைய கலவி அமைப்பில் ஆசிரியரின பஙகு கல்வி கற்பித்தல

என்பதில் இருந்து கல்வி கற்றிடப் பேணல் என்னும் அமைப்பை நோக்கிச் செல்வதாக உள்ளது. கல்வித் தொழில் நுட்பம், இம்முறையை எளிதாக்கும்வகையில் பலவித கருவிகளைக் (MultiMedia) கொண்டு பயனளிக்கின்றது. இப் பல்வேறு கருவிகளைக் கையாள்வதன்மூலம் கற்றல் அணுகுமுறைகளை எளிதாக்கவும், பயனுடையதாக்கவும் இயலும். இம்முறைகளின் மூலம் செய்தித் தொடர்புத் திறனை வளர்க்கவும், கற்றலை மனத்தில் இருததிக்கொள்ளவும் இயலும்.



தொலைக்காட்சி

இரண்டாம் தொழிற்புரட்சியான செய்திப் பரிமாற்றம், தொடர்புகள் மூலம் கற்றல் வழிகளான அணுகுமுறைகள், பின்தொடர்பு, செவி மற்றும் கட்புலக் கருவிகள் (Audio Visual) ஆகியவை பெரு மாறுதல் பெற்றுள்ளன. இத்தகு செவி கட்புலக் கருவிகள் கற்றலை உறுதிப்படுத்த வல்லனவாக உள்ளன.

இத்தகு கருவிகள . மாணாக்கர்கள் கற்றல அனுபவங்கள் பெறப் பல்புலன அணுகுமுறைகளை (Multi Sensory Approach) மேம்படுத்துகின்றன. மேலும், கற்றபின் மொத்த அனுபவங்களை ஒட்டு மொத்தமாகப் பெறத் துணை செய்கின்றன.

கட் செவிப்புலக் கருவிகளில் எல்லாம் தலையாயதாகக் கருதப்படுவது தொலைக்காட்சி(Television) யாகும். ஒளியையும் ஒலியையும் ஒருசேரத் தரும் கருவி தொலைக்காட்சிப் பெட்டியாகும். பொதுச் செய்திவழித் தொடர்பில் இது மிக உயர்ந்த இடத்தைப் பெறுகிறது. தேசிய அளவில் கல்வி அறிவியல் நுட்பத் திறனுடன கிராமப் புறஙகள எலலாம கல்வி மேம்பாடு அடையச்செய்வது தேசிய வளர்சசிப் பணியின் இன்றியமையாத அங்கமாகும்.

கல்வி அரங்கில் ஓர் ஆசிரியருக்குக் கட்செவிப் புலன்கள் வழிக் கற்றல் அனுபவங்களைத் தரத் திட்டமிடுதற்குத் தொலைக்காட்சி வழி மிகவும் இன்றியமையாததாகும். சலனப் படங்கள் (Motion Pictures) வழிக் கற்பித்தல்அனுபவங்கள் பெற விழையும் முயற்சிகள் இவண் தேவையில்லை. எடுத்துக் காட்டாக எவ்வகையான படச்சுருள்கள் உள்ளன, எவை சிறந்தவை, எவற்றை வரிசைப்படி அமைக்க வேணடும், எவ்வெவற்றிற்கு எங்கெஙகு எழுத வேணடும், முன் ஆயத்தங்கள, படச்சுருளைப் பயனபடுத்த வேண்டிய கருவிகளை இயக்கும் முயற்சி, திட்டமிடல் போன்றவற்றில் எலலாம ஈடுபட வேண்டிய திலலை. இம் முயற்சிகளுக்கெலலாம் இடமினறி நிறைநத அனுபவங்களை எளிய அணுகுமுறையில் நிறைவாகத் தருவது தொலைக்காட்சி வழிக்கல்வியாகும்.

இததகு தொலைக்காட்சிவழியே தேவையான விளக்கஙகளைச் சேகரிததுத் தொகுத்துத் தேவைப் பட்டபோது அளிக்கவும், தொலைவுகளைக் கடந்து கிராமப்புற மாணாக்கர்களும் அறியுமவணணம் வெளியிடவும், மாணாக்கர்கள் விரும்பும்வண்ணம பலவித அணுகுமுறைகளில் அளிக்கவும்இயலும். எனவே சிறநத, தோந்த முறையில திறன்களை வளர்க்கும் வகையில் திறன்மிகு கற்றல், தொலைக்காட்சி வழி மூலம நிகழ ஏதுவாகினறது எனவே, தொலை தூரஙகளில் உளள கிராமப்புறங்களில் உளள மாணாக்கர்களும் கற்கும் வணணம் (SITE) கோள வழித் தொலைக்காட்சி கற்றல் சோதனை (Satellite Instructional Television Experiment) 1976-ஆம ஆண்டு மேற்கொள்ளப்பட்டது. ஆறுமாநிலங்களில மட்டும ஆநதிரா, பஞ்சாபு, பீகார், காசுமீர், மத்தியபிரதேசம், ஒரிசா, இராசசுத்தான் மாநிலப் பளளிகளில, பளளிக்கூட நேரங்களில், காலையும் மாலையும கலவி நிகழ்ச்சிகள தொடக்கப் பளளி மாணாக்கர்களுக்கெனத் தொலைக்காட்சி வழி நடத்தப்பட்டன. இத்தகு நிகழ்ச்சிகள், நிறைந்தபயனைத் தந்தமையால் உளவரை (Insat IB) மூலம் உயர்கலவிககென நிகழ்ச்சிகள் இப்பொழுது நடத்தப்பட்டு வருகின்றன.

இத்தகு நிகழ்சசிகளுககென வழிமையமாகிய (Media Centre) சாமியா மிலியா பல்கலைக்கழகத்திலும் தேசிய கலவி ஆராய்ச்சி மற்றும் பயிற்சிக் (N.C.E.R.T.)குழுவிலும்(Software)நிகழ்ச்சிகள் தயாரிக்கப்பட்டு வருகின்றன. இவை எநத அளவிற்கு மாணாககர்கள மனத்தில் தாக்கம் விளைவிக்கின்றன எனபது பற்றியும் ஆய்வுகள் நடத்தப்பட்டு, அவற்றின் பின்னணியாக நிகழ்ச்சிகளுககுப் புது வடிவமும் கொடுககப்படுகின்றன.

எந்த ஒரு தொலைக்காட்சி நிகழச்சியின வெற்றியும் எவ்வாறு அதற்கு வடிவம் கொடுக்கப்படுகிறது எனபதைப் பொறுத்ததாகும் ஏனெனில் ஒரு கருவின் பின்னணியில் நிகழ்ச்சியாக்கப்பட்டு, ஒலியும் ஒளியும் ஏற்றப்பெற்று, உயிா கொடுக்கப்பட்டு, நிகழசசிகளைக் காணபோாின மனநிலைக்கு ஏற்றவாறு வடிவம் கொடுக்கப்படுகிறது

ஒவவொரு நிகழச்சியும் ஒரு கலவிக குறிககோளின பினனணியில எழுபபப்பட்டதாகும் எநத ஒரு பொழுதுபோககு நிகழ்ச்சியும ஒரு குறிக்கோளின அடிபபடையிலேயே அமைக்கபபட்டதாகும். ஏனெனில, ஒவவொரு நிகழச்சியும் அறிவின்பாறபட்டதாகவோ உணர்வினபாற் பட்டதாகவோ செயலினபாற்பட்டதாகவோ அமையும்.

பொதுவாகக் கற்றல் எனபது மூனறு களஙகளில அமையும என்னும புளூம் (Bloom), அறிவுசார் நிலைக்களம் (Cognitive Domain), உணர்வுசார் நிலைககளம (Affective Domain). செயலசாா நிலைக்களம (Psycho Motor Domain), எனக் கற்றல நிகழும நிலைகளைக் குறிப்பிடுவர். ஒன்றன்பால் பெற்ற அறிவின்மூலம் அறிதல், தெளிதல, பகுததல், தொகுததல பயன்படுத்தல், மதிப்பிடுதல போன்ற பணபுகள அறிவுசார் நிலைககளத்திலும, ஒனறன்பாற பெற்ற உணர்வுகளின் கொள்கலனாக விளஙகுவது உணாவு சாா நிலைக்களத்திலும், ஒரு செயலைக் கணணுறறு அவவாறே அச்செயலைச் செய்யப்பயிறசிபெற்றதிறன கள் செயல்சார் நிலைக்களததிலும் வெளிபபடுகினறன எனபார் கல்வியியலார். இவ்வாறே இம்மூனறு நிலைகளிலும தொலைககாட்சி வழிக கலவி, நிறைநத கற்றல அனுபவஙகளைத் தரவல்லதாக அமைநதுள ளது. மேலும் நிறைந்த கருத்துகள மூலம் அறிவைப் பரப்பவலலதாகவும் அமைகினறது கற்ற செயதிகளை நினைவில் இருத்தி வைத்துக்கொளவதறகு ஏதுவாக ஆாவம் ஊட்டவல்லதாகவும் அமைகிறது. உலக நிகழச்சிகளையும் நாட்டுநிகழ்சசிகளையும் பன்னாட்டு நிகழசசிகளையும் கலவித் தொடாபான அனைததுச் செய்திகளையும் உடனுககுடன் தரும வழிகளைப் பெறறுளளது. உலகைச சுற்றி அனுபவங்கள பெறு தலைவிட, இருந்த இடத்திலேயே உலகைச சுறறி வரும் அனுபவம பெறும் அளவிறகு, உடனுககுடன நிகழ்ச்சிகளைத தருகினறது, ஏறக்குறைய ஒரே நேரத்தில காசுமீரததில் இருந்து கனனியாகுமரி வரையிலும், பம்பாயில் இருந்து திசுபூர் வரையிலும் மாணாக்கர்கள கல்வி நிகழச்சிகளைக் காணமுடிகினறது. கணணுக்குப் புலப்படாத மிகச்சிறிய பொருளகளைப்பெரிதாக்கிக் காணவும், அரிய பொருளகளைக் காணவும் இயலுகினறது. இத்துணைச் சிறப்புப் பெறறிருந்தாலும் சிற்சில குறைபாடுகளும் உள்ளன என்பார் திறனாய்வாளர். ஒரேவழிப்போக்கு (One Way Medium) கொணடது எனறும, பெருஞ் செலவினம கொணடது எனறும், பார்வையாளா செயலின்றி இருக்கினறனர் என்றும, தனியாள வேறுபாடுகளைக் கருத்திற் கொணடு அமைககபபடுவதிலலை எனறும சுட்டுவர். குறைகள ஒருசில இருப்பினும அவற்றை ஓரளவு சரியான திட்டமிடல மூலம போகக இயலுமென்றும கூறுவர்

தொலைககாட்சி வழி மூலம எவவகையான கறறல அனுபவஙகளைப பெறமுடியும்? அனைத்து வகைக் கறறல முறைகளுககும தொலைக்காட்சியைப பயனபடுத்த வேணடுமா?, தனியாள முனனேறறத திறகு அடிகோலுமா?, எளிதாக வகுபபறை கொடுகக இயலும அனுபவஙகளைத தொலைககாட்சி வழி மூலம தருதல் தேவையா?, ஆசிரியா இடத்தைத் தொலைககாடசி நிரபப இயலுமா?, எந்த அளவிற குச் சிறநத நிறைநத அனுபவஙகளைத தர இயலும்? எனபனவறறையெலலாம திட்டமிட்டுத தொலைககாட்சி வழி தருதல கலவியின பயன்களை நிறைவேற்ற வலலதாககும.

எஸ.மோ.

**தொலை நோக்குத் திட்டமிடுதல்:** உள நாட்டில் கிடைக்கததக்க மூலவளஙகளையும வெளிநாடுகளிலிருநது பெறத தக்க மூலவளஙகளையும் தகுதியானதொரு மைய அமைப்பின மூலம ஒனறு திரட்டி, நாட்டின தேவைகளுககேறப முனனுரிமைகளையும இலககுகளையும அமைததுக் கொணடு, மூலவளஙகளைப் பகிாநதளித்துத் திட்டமிட்டுப பொருளாதார முனனேற்ற முயறசிகளைப் பல நாடுகளும மேறகொள்கின்றன. திட்டமிடுவதில உளள பல வகைகளில கால அளவின அடிப்படையில குறுகிய காலத் திட்டமிடுதல (Short term Planning), நீணட காலத் திடடமிடுதல(Long term Planning) எனறு வகைபபடுததுவது இயலபு

குறுகிய கால அளவு ஓராண்டாகவோ, அதறகு மிகுதியாகவோ, குறைவாகவோ இருககலாம. குறுகிய காலத் திட்டம எனபது நீணட காலத் திட்டத்தின் ஓர் அஙகமாகவோ, தனித திட்டமாகவோ இருககலாம்.

பொதுவாக 15முதல 20 அலலது 25 ஆணடுகளுக்கென அமைக்கப்படும் திடடத்தை நீணட காலத திட்டம் அலலது தொலை நோககுத் திட்டம் என்பர். இந்த நீணட கால அளவில் நிறைவேற்றப் பட வேணடிய பல நோககஙகளையும் திட்ட இலக்குகளையும் பொதுவாகக் குறிப்பிட்டு, மேலெழுந்த வாரியாக அமைக்கப்படுவது இததகைய தொலை நோக்குத் திட்டம் (Perspective Planning)

சோவியத்து உருசியாவை (Soviet Russia) மினமயமாககுவதறகு அமைககப் பெறற புகழ் மிகக

'கோயல்ரோ' (Goelro) எனப்படும் திட்டத்தை அமைத்தபின் இம்முறைமிகவும்புகழுடையத் தொடங்கியது. ஐந்தாண்டுத் திட்டங்களை 1958-ஆம் ஆண்டு வரை வரைந்து நிறைவேற்றிய உருசியா 1959 முதல் 1979 வரையிலான 20 ஆண்டுகளுக்கான திட்டத்தை விரைந்து செயற்படுத்தத் தொடங்கியது. தொலை நோக்குத் திட்டத்தின் அடிப்படையில் குறுங்காலத் திட்டங்களும் ஓராண்டுத் திட்டங்களும் அமைக்கப் பெற்றுச் செயற்படுத்தப்பட்டன.

**இயல்புகள்:** விரிவானதாகவும் எல்லாவற்றையும் உள்ளடக்கியதாகவும் இத்திட்டம் இருக்கும். நீண்ட கால அளவில் நிறைவேற்றப்பட வேண்டிய பல செயல்களையெல்லாம் பகுதிபகுதியாகக் குறுகிய காலத் திட்டத்தில் மேற்கொள்ளத் தக்க வண்ணம் அமையப் பெறுவதால், குறுங் காலததிட்டங்களுக் கானதொரு அடிப்படையாகத் தொலை நோக்குத திட்டம் அமையும்.

**இன்றியமையாமை:** நீண்ட கால அளவிலான பல தொழில் திட்டங்களை விரைவாக நிறைவேற்றவும், பல துறைகளுக்கிடையேயும் பல வட்டாரங்களுக கிடையேயும் சமச் சீரான வளர்ச்சியைப் (Balanced growth) பெறவும், அறிவியல் முறைகளையும் திறன மிகுந்த தொழில் நுட்பங்களையும் புதுப்புது உற்பத்தி முறைகளையும் பயன்படுத்தவும், எதிர் காலத தில் மக்கள் பெருக்கத்தையும், அதன தொடர்பான முதலீட்டு, நுகர்வுத் தேவைகளை மதிப்பிட்டு பேரளவில் உற்பத்தியைப் பெருக்கவும், பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான சமுதாயப் பொருளாதாரக் கட்டமைப்புகளின் (Social and economic infrastructure) பெருக்கத்திற்கு , மக்கட் பெருக்கக் கட்டுப்பாட்டு முறைகளைத் தகுந்த முறையிலபயன் படுத்தவும், குறுங்காலத் திட்டஙகளுக்கான நலல தொரு அடிப்படையாக விளங்கவும தொலைநோக்குத் திட்டமிடுதல் மிகவும் இன்றியமையாதது

**இடர்கள:** சரியான தொலை நோக்குத் திட்டத்தை அமைப்பது எளிதன்று. நெகிழ்ச்சித் தன்மையின்மை, எதிர்பாராமல் தோனறத் தகக மாறறங்களை மதிப்பிட இயலாமை, எதிர்பாராமல் தோன்றும மாற்றங்களுக்கேறபத் திட்டஙகளை மாறறியமைக்கும்போது மக்களிடையே மதிப்பை இழநது விடத் தக்க வாய்ப்புகள போனற பல இனறியமையாத இடர்கள் தொலை நோக்குத திட்டத்தில் உளளன. என.எஸ பா.

**துணை நூல்கள:**

**பாலசுப்பிரமணியன், என்.எஸ்.** திட்டமும் வளர்ச்சியும், உமா பப்ளிகேஷன்ஸ், மதுரை, 1987.

**Thingan, M.L.** The Economics of Develement and Planning, Vikas Publishing House, New Delhi, 1973.

**Seth, M.L.** Theory and Practice of Planning, S. Chand and Co., New Delhi, 1977.

***தொலை வில்லிமங்கலம்:*** தென்பாண்டி நாட்டில அமைந்த வைணவத் தலங்களுள ஒனறு. திருநெல்வேலியில் இருந்து வடககே இருபத்தைந்து கல் தொலைவில் உள்ளது வைகுணட ஏகாதசியன்று நவத்திருபபதிக்கும் மக்கள் சென்று இறைவனை வழிபடுவதுணடு. நவத்திருப்பதியில தொலைவில்லிமங கலம எனற இரட்டைத் திருப்பதி, தாமிரவருணி ஆறறின் வடகரையில உளளது. ஆழ்வார திருநகரியின எதிர்பபுறம் அமைநதுள்ளது எனறுமகுறிபபிடலாம். இங்கே திருமால் நினற திருக்கோலத்திலும, வீற்றிருக்கும திருககோலததிலும் காணப்படுகிறார. இங்கே இரணடு சந்நிதிகள இருபபதால் இரட்டைத் திருப்பதி என்று வழஙகினர். இது நம்மாழவாரின் பாடல பெறற தலம. திருவாயமொழி ஆறாம பத தில் இவவூரின வளம பேசப்படுகிறது. நோக்கும் பக்கம எலலாம் கரும்பொடு செநநெல், ஒஙகு செந் தாமரை வாயககும். தணபொருநல வடகரை வண தொலைவில்லி மஙகலம் நோககினால, அத்திசை யனறி மறு நோககிலலை. நாடொறும மணிவணணன் நாமமே வாய்ககுள முனகியவாறு காணப்படுகிறாள எனற கருத்தைப் பாட்டில பார்ககமுடியும். திருநது வேதமும் வேள்வியும் திருமாமகளிரும தாம மலிந்து இருநதுவாழ்பொருநல் வடகரை வண தொலைவிலவி மஙகலம் எனறு பாராட்டப் பெற்ற இவவூர வெறும கோயில மாத்திரம் உடைய இடமாக விளஙகுகிறது. ஊர எனற அமைபபே இலலை. வைகுணட ஏகாத சிக்கு மக்கள கூட்டம கூடடமாகச் செல்வதால், புகழ குனறாமல இருககிறது. சடகோபன முநதை ஆயிரததுள இவை தொலைவில்லி மஙகலததைச சொனன செநதமிழ பத்தும நமக்கு அவ்வூரை நினைவு படுததும வேத ஒலியும் விழா ஒலியும மிகுந் திருநதன. மா.வ

***தொழில் அமைப்பும் அமைதியின்மையும்:*** வேளாணமைத துறை, காடுகள், சுரஙகம், மீன் வளம் போன்றவை உளளிட்ட முதன்மைத துறை (Primary Sector), பெருந் தொழிலகள, சிறு தொழில்கள, குடிசைத தொழிலகள, நடுத்தரத தொழிலகள, பாதுகாபபிறகு மிகவும் இன்றியமை யாத தொழில்கள (Strategic Industries) எனற பல வகைத தொழிலகளைக கொணட இரணடாம துறை (Secondary Sector), இவ்விரணடிலுமவாராத செய்தித் தொடாபு, போககுவரதது, வணிகம, வஙகி

போனற மறறெலலாம் அடங்கிய மூனறாம துறை (Tertiary Sector) என்ற மூனறு துறைகள செயற படுவது இயல்பு இம்மூன்று துறைகளிலும ஒரே நேரததில தொடாசசியாகத தோன்றும வளாசசியே பொருளாதார வளாசசி எனப்படும. ஒரு நாடு பொருளாதார வளர்ச்சியைப் பெறுவதறகு முன னால உளள நிலையிலும, வளாச்சிக காலததிலும வளாந்த நிலையிலும் இததுறைகளின் அமைப்புகளில் (Structure) பேரளவு மாறறஙகள நிகழகின்றன. இவண இரண்டாம துறையான தொழில அமை பில தோனறும மாற்றஙகளைக் காணலாம.

பலவகைத் தொழிலகளுள ஒருசிலவகைத் தொழிலகள சிறப்புப் பெறறும, சிலவகைத தொழில கள சிறபபுப் பெறாமலும், ஒருசிலவகைத் தொழில கள இலலாமல இருபபதும ஒருவகைத தொழில அமைப்பு பொருளாதார வளாசசி நிலைகளில இவ வமைப்பில் பலவித மாறறஙகள நிகழுவது இயலபு

நாடடின் நிலபபரபபில ஒருசில நிலபபகுதிகளில தொழிலகள் செறிந்தும், பிற பகுதிகளில சிறிதளவாக வும, சில பகுதிகளில தொழிலகளே இலலாமலும இருபபது ஒருவகைத் தொழில் அமைபபு பொருளா தார வளாசசி நிலைகளில இவவமைப்பிலும மாற றஙகள நிகழவது இயல்பு.

தொழிலைத தொடங்குதல், நிருவகித்தல ஆகியவற்றில நாட்டில் நிலவும பொருளாதார அமைபபிறகு (Economic System) ஏறபத தனியார் துறையோ, பொதுத் துறையோ, தனியார் துறை யும பொதுத்துறையும சேர்நத கூடடுத் துறையோ மிகுதியான பங்கேறகலாம இந நிலையையும தொழில அமைபபு(Industrial Structure) எனக குறிப பிடலாம் எனபா சிலர். நாட்டின் பொருளாதார வளர்ச்சி நிலைகளில இவவமைபபிலும் பல மாறறங கள நிகழ வாயப்புகள உணடு

தொழிலில் பயன்படுததபபடும நிலம, உழைப்பு மூலதனம், அமைபபு என்ற நான்கு வகை உற்பததிக காரணிகளின் அளவின அடிப்படையில தொழில களை மூலதனசசெறிவுள்ள, தொழிலாளர் செறி வுளள, நிலப்பரபபுச் செறிவுளள, நிருவாகத திறன் செறிவுள்ள தொழில அமைபபுகள் என வகைபபடுத் தலாம எனபா சிலா. ஒரு நாட்டின் வளாச்சி நிலை களில் இவ்வமைபபிலும பலவகை மாறுதலகள தோனற வாயப்புகள உணடு

தொழிலகள் உறபத்தி செய்யும பணடஙகள பெரும்பாலும் நுகாவோர் பண்டஙகளாகவோ, மூல தனப் பண்டங்களாகவோ இருககலாம். இந்த அடிபபடையிலும் தொழில் அமைபபு, பொருளா தார நிலைகளால் மாற்றம் அடையலாம்.

**இந்தியத் தொழில் அமைபபு**· இநதியா 1947-ஆம் ஆணடில அரசியலில தனனாட்சி பெறற காலததில தொழில் வளர்சசியில மிகவும பினதஙகிய நிலையி லிருந்தது இநதியத தொழில அமைபபில 1951-ஆம் ஆணடில தொடஙகப பெற்ற திடடமிடட பொருளா தார வளாசசிககான முயறசிகளின விளைவினால பறபல மாறறஙகள் நிகழந்துளளன.

நுகாவுப் பொருளகளை ஓரளவுக்கு மட்டுமே உறபத்தி செய்து வநத இநதியத தொழில, இனறு நுகாவுப பணடஙகளையும், மூலதனப் பணடஙகளை யும பெருமளவில உற்பததி செயயும ஆறறலைப் பெற்றிருக்கிறது ஒருசில வகைக கசசாப பொருள களைத தவிர ஏறததாழ எலலாவிதமான கசசாப பொருளகளும் இநதியாவிலேயே கிடைககினறன. ஒருசில வகைப பணடஙகளைத தவிர ஏறததாழ எலலாவகைப் பணடஙகளையும இநதியத தொழில களே உறபத்தி செய்கினறன குறிபபாகச் சிறிய வகைப பொறியியல பொருளகள (Engineering goods) இநதியத் தொழில ஏறறுமதியில மிகவும உயர்நிலையை அடைநதிருககினறன சுருஙகககூறின பேரளவில தொழில பணடஙகளை உறபத்தி செய யும பதது நாடுகளில இந்தியாவும் ஒனறு எனற நிலைககு இநதியா உயாநதிருககிறது.

**பொதுத்துறையின் பங்கு**· இநதியத தொழில் அமைபபில பொதுததுறையின (Public Sector) பஙகு பனமடஙகு பெருகியிருககிறது பொதுத துறை நிறு வனஙகளின முதலீட்டு அளவு கடநத 40 ஆணடு களில உரூ 25,000 கோடிக்கும மிகுதியாகிவிட்ட தாகக குறிப்பிடபபடுகிறது அதாவது இநதியத தொழில அமைபபில தனியார் துறைககுச் சமமாக அலலது தனியார் துறையையும் மிஞசிச் செலலும் வகையில பொதுத்துறையின பஙகு பெருகியிருககிறது.

**சிறுதொழில் துறையின் பங்கு**: சிறு தொழிலகள, நடுத்தரத் தொழிலகள், பெருநதொழிலகள, பாது காப்புக்கு இனறியமையாத தொழில்கள எனறு தொழில அமைபபை வகைப்படுததி மொதத உற பத்தியில அவறறின பஙகைக கணிததுப பாாக்கும் போது சிறு தொழிற்றுறையின பங்கு சிறிது சிறி தாகக் குறைந்துகொணடே செலகிறது அதாவது, இநதியத் தொழில அமைப்பில சிறு தொழிலின் பஙகு மையப் புளளியியல கழகததின (Central Statistical Organization) கணிப்பின்படி 1960-61-இல இது 42 விழுககாடாக இருந்தது. ஆனால 1976-77 -இல் 36 விழுககாடாகக் குறைந்துவிட்டது.

**பெரும் தொழில் குடும்பங்கள்:** தொழிலகள பரவலாகவும், செறிநதும் வளர்சசியடைவது இயலபு. இந்தியத் தொழில் அமைப்பில் தொழிலசெறிவு

(Industrial Concentration) மிகுந்து வருகிறது (காண்க: தொழில் செறிவு). முற்றுரிமை, கட்டுப் படுத்தப்படத்தக்க வாணிக நடவடிக்கைகள் (Monopolies and Restrictive Trade Practices) சட்டத்தின் அடிப்படையில் பல முயற்சிகளையும், உரிமம் வழங்குதலில் பல கொள்கைகளையும், கோட்பாடுகளையும் இந்தியப் பேரரசு கடைப்பிடித்தாலும்கூட நாட்டில் பொதுவாக நிலவும் மூலதனப் பற்றாக்குறையாலும், பொதுவாக மக்களால் விரும்பி ஏற்றுக்கொள்ளப்படும் மூலதனச்செறிவுள்ள தொழில்களின் வளர்ச்சியாலும் இந்தியத் தொழில் அமைப்பில் தொழில் செறிவு மிகுதியாகக் காணப்படுகிறது.

**தொழில் வளர்ச்சியில் நிலப்பரப்பின் அடிப்படையில் வேறுபாடுகள்:** ஒரு நாட்டிலுள்ள எல்லா மாநிலப் பகுதிகளிலும் தொழில்கள் தொடங்கப் பெற்று வளர்ச்சியடைந்து வருவது ஒருவகைத் தொழில் அமைப்பு. இவ்வமைப்பு மிகவும் விரும்பத் தக்கது என்பதைப் பலரும் வலியுறுத்தியுள்ளனர். ஆனால், பல காரணங்களால இவ்வமைப்பைப் பெற முடியாமலும் போகலாம். இந்தியாவின் தொழில கொள்கை இவ்வமைப்புக்கு ஆதரவாக இருககின்றது ஆனால், எவ்வளவுதான் முயறசிகள் மேற்கொள்ளப பட்டாலும் பல காரணங்களால் பீகார், மத்திய பிரதேசம், ஒரிசா போன்ற பல மாநிலப் பகுதிகளில தொழில்கள் மிகுதியான அளவில் தோறறுவிககப்பட வில்லை. எனவே, இந்தியாவில் தொழில் வளர்சசி யில் மாநிலப் பரப்பின அடிப்படையில பல வேறு பாடுகளைக காணமுடிகிறது.

**மிகுந்த செலவு அமைப்பு:** தொழில்களைத் தொடங்கவும, தொழில பண்டஙகளை உறபததி செய்யவும் ஆகும் செலவின் அடிப்படையிலும் தொழில் அமைப்பை வேறுபடுத்த இயலும. பல பன் னாட்டுத் தொழில் அமைப்புகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது இந்தியத் தொழில்களில் பல மிகுந்த செலவு அமைப்பைப் (High Cost Structure) பெற் றிருக்கின்றன. நாட்டில் நிலவும் உரிமம் வழங்கும் கொள்கையும் (Licencing Policy) இதற்கான காரணங்களுள் ஒன்றாகக் குறிபபிடப்படுகிறது.

**குடிசைத் தொழில்களின் நசிவு:** இநதியாவின் தொடக்கக் கால வளர்சசி நிலையில் குடிசைத் தொழில்கள் மிகவும் புகழ்பெற்று விளஙகின. ஆனால், ஆலைத் தொழில்களின் பெருக்கத்தாலும், பல்வேறு புதியன புகுத்தும் முறைகளாலும் பெரும்பானமை யான மக்களுக்குத் துணை ஊதியத்தை (Supplementary Income) நல்கிவந்த குடிசைத் தொழிலகள நசிந்து விட்டன. குறிப்பாகத் துணித் தொழில்கள, எண ணெய் எடுத்தல், சோப்பு உற்பத்தி, தீப்பெட்டிகள் உற்பத்தி, தோல் பொருள்கள் உற்பத்தி போன்ற பல துறைகளில் மிகவும் புகழ்பெற்றிருந்த குடிசைத் தொழில்கள் நசிந்துவிட்டன.

இந்தியத் தொழில் வளர்ச்சியைப் பெருக்க 1983 –ஆம் ஆண்டு இந்தியப் பேரரசின் தொழில் மந்திரி யால் அறிவிக்கப்பட்ட 10 அம்சத் திட்டத்தில் (10 Point Programme) இந்தியத் தொழில் அமைப்பில் ஒருங்கிணைப்பு வலியுறுத்தப்பட்டது. அதாவது இந்தியா முழுவதிலும் பரவலாகப் பல்கிப் பெருகியுள்ள சிறுதொழில்கள், கிராமத் தொழில்கள துறையும், பேரளவில் காணப்படும் சிறுதொழில்கள் துறையும் நன்கு அமைக்கப்பட்டு, விரைவான வளர்ச்சியைப் பெற்றுவரும் நன்கமைக்கப்பட்ட (Well Organised) பெருந் தொழில் துறையும் ஒருங்கிணைந்து செயற் படுவதனமூலம், தொழில் உற்பத்தியின் மொத்த அளவு மிகுதியாக்கப்பட வேண்டும் என்றும், வேலை வாய்ப்புகள பெருக்கப்பட வேண்டும் என்றும் வலி யுறுத்தப்பட்டது. நடப்புத் திட்டமான ஏழாம் ஐந தாண்டுத் திட்டததில் (1985-90) கட்டமைப்பு வசதி களில (Infrastructure Facilities) குறிப்பாக, ஆற்றல் (Power) வசதிகளில் முனைப்பான முன்னேற்றத்தைச் சாதித்தல, புதிய உற்பததி உத்திகளைக் கையாளு தல, பொறி நுட்பத் திறத்தை மேம்படுத்துதல், மூலதனத்தையும் பிற உறபத்திக காரணிகளையும் திறம்படப பயனபடுத்தி உறபததியைப் பெருக்குதல, உறபத்திச் செலவைக் குறைத்துப் பனனாட்டுத் தொழில் பணடஙகளோடு பன்னாட்டுச் சந்தையில் போட்டியிடத்தக்க துணையான நிலைகளைப் பெறு தல, புதிய புதிய பணடங்களைப் புகுத்துதல், ஏற்று மதித துறையில் தொழில வளர்ச்சியை மிகுதியாக்கு தல போன்ற பல உத்திகள கையாளப்படுகின்றன.

**மூலதனச் செறிவு, தொழிலாளர் செறிவு அமைப்புகள:** தொழில அமைப்பில மூலதனச் செறிவு அமைப் புக்கும் தொழிலாளர் செறிவு அமைபபுக்கும சிறபபுக் கொடுப்பதில பல கருத்து வேறுபாடுகள் உண்டு. தொழில் அமைப்பில் மூலதனச் செறிவுள்ள தொழில களின பங்கை மிகுதியாக்கினால் தொடக்க நிலையில வேலையில்லாத திண்டாட்டம் போன்ற நிலைகள தோன்றினாலும் பொருள் உற்பததி மிகுதியாக இருப்பதன் விளைவாக நீண்ட காலத்தில எல்லாத் தொழிலாளர்களுக்கும் வேலைவாய்ப்புகள் கிடைத்து விடும் என்று விவாதிதது, அதனடிப்படையில் தொழில் அமைப்பில மூலதனச் செறிவுள்ள தொழில் களின் பஙகை மிகுதியாகக வேண்டும் என்று ஒரு சிலர் குறிப்பிடுகின்றனர். இவர்கள் கருத்தினபடி விரைவான பொருளாதார வளர்ச்சிபெற, இத்தகைய தொழில அமைப்பே சிறந்ததாக இருக்கும். ஆனால், இதற்கு மாறான கருத்துகளை வலியுறுத்துவோரும்

உண்டு. ஒரு நாட்டில் உழைப்பாளர் எண்ணிக்கை மிகுதியாக இருந்தால் தொழிலாளர் செறிவுள்ள தொழில்களையே தோற்றுவிக்கவேண்டும் என்றும், தொழில் அமைப்பில் தொழிலாளர் செறிவுள்ள தொழில்களுக்கே சிறப்புத் தரவேண்டும் என்றும் இவர்கள் தம் கருத்தைக் குறிப்பிடுகின்றனர். வேலையின்மை நிலை இடைக்கால அளவில் தோன்றினாலும், நிலையாக இருந்தாலும், பகுதியளவில் இருந்தாலும் விரும்பத் தக்கதன்று என்பதை இவர்கள் வலியுறுத்துகிறார்கள். பொருள்களின் உற்பத்தி பெருகினாலும் வேலையின்மை நிலையால் வாங்கும் திறன் குறைந்து பொருளாதாரப் பின்னிறக்கம் தோன்றிவிடும். நாட்டில் காணப்படும் பொருளாதார இரட்டை நிலை (Dualism) இன்னும் முனைப்பாகிவிடும் என்பதோடு செல்வ வருமானப் பங்கீட்டில் உள்ள இடைவெளியும் மிகவும் அதிகமாகிவிடும் என்றும் இவர்கள் குறிப்பிடுகின்றனர்.

கிராமப் பகுதிகள், நகரப் பகுதிகள் ஆகிய இரு பகுதிகளுக்கும் ஏற்றாற் போன்ற தொழில்கள் அவ்வப் பகுதிகளில் செறிந்து மேம்பாடு அடைதல், சிறு தொழில்கள், நடுத்தரத் தொழில்கள், கனரகத் தொழில்கள் ஆகிய மூவகைத் தொழில்களிலும் சீரான வளர்ச்சியைப் பெறுதல், மூலதனச் செறிவுள்ள தொழில்கள், தொழிலாளர் செறிவுள்ள தொழில்கள் ஆகிய இருவகைத் தொழில்களுக்கும் சிறப்பான பங்கைத் தருவதன் மூலம் வேலையின்மை நிலையைத் தவிர்த்தும், கிடைத்தற்கரிய மூலதனத்தைச் சிறப்பாகப் பயன்படுத்தியும் தொழில் வளர்ச்சியைப் பெறுதல், கூட்டரசு அமைப்பிற் செயற்படும் இந்தியா போன்ற நாடுகளில் எல்லா மாநிலப் பகுதிகளிலும் ஏற்றத்தாழ்வற்ற ஒரே சீரான தொழில் வளர்ச்சி நிலையைப் பெறுதல் போன்றவை நல்ல தொழில் அமைப்பின் இயல்புகள் என்பது வலியுறுத்தப்படுகின்றது.

என்.எஸ் பா.

**துணை நூல்கள்:**

**Kuchhal**, S C., The Industrial Economy of India, Chaitanya Publishing House, Allahabad, 1987.

**Sivayya, K.V. & Das, V.B.M.**, Indian Industrial Economy, S.Chand & Co., New Delhi, 1987.

**தொழில் அமைதியின்மை:** தொழிலதிபர்கள் ஆதாயம் பெறுவதைத் தலையாய நோக்கமாகக் கொண்டு தனியார் துறைப் பொருளாதாரத்தில் தொழில்களைத் தோற்றுவித்து நிருவகிக்கிறார்கள். பெரும்பாலான தொழில் முனைவோர்கள் ஆதாயம் பெறுதல் என்ற எண்ணம் முனைப்படைந்து உச்ச அளவு ஆதாயத்தைப் பெறுதல் என்பதைக் குறிக்கோளாகக் கொண்டு செயற்படுவர். இம் முயற்சியில் வெற்றிபெற அவர்கள் பல வழிமுறைகளைக் கையாளுவர். குறிப்பாகச் செலவு மிக்க உற்பத்திக் காரணிகளுக்கு மாறாகச் செலவு குறைந்த உற்பத்திக் காரணிகளைப் பயன்படுத்துதல், நுகர்வோரைக் கவர்ந்திழுக்கும் விளம்பர உத்திகளைப் பயன்படுத்துதல் போன்ற பல வழிகளைக் கையாண்டு, தாம் பெறும் ஆதாயத்தின் அளவை மிகுதியாக்கிக் கொண்டே செல்வர்.

உற்பத்தியில் பயன்படும் பிற மூன்று உற்பத்திக் காரணிகளாகிய நிலம், உழைப்பு, மூலதனம் ஆகியவற்றில் சிறப்பான உற்பத்திக் காரணி உழைப்பு. இவ்வுழைப்பை நல்கும் உழைப்பாளர்களின் எண்ணிக்கை பெருமளவில் இருக்கின்ற காரணத்தால் உழைப்புக்கேற்ற ஊதியத்தைப் பெறும் வாய்ப்புகளை உழைப்பாளர்கள் பெரும்பாலும் பெற்றிருப்பதில்லை. அவர்களின் குறைவான பேர ஆற்றலைப் (Bargaining Power) பயன்படுத்தி அவர்களுக்கேற்ற கூலியைத் தொழில் முனைவோர் பெரும்பாலும் அளிப்பதில்லை. கார்ல் மார்க்சு (Karl Marx) குறிப்பிட்டதைப் போன்று உழைப்பின் ஒரு பகுதியைத் தொழில் முனைவோர் தம் ஆதாயமாகப் பெற்றுக்கொள்கின்றனர்.

ஆதாயம் பெறுவதையும், உழைப்பாளர்களின் எண்ணிக்கையைக் குறைவான அள[illegible]ல் வைத்திருப்பதையும் விரும்பி முனைப்பாகச் செயற்படுத்தும் தொழில் முனைவோர் ஒருபுறமும், உழைப்புக்கேற்ற ஊதியத்தைப் பெற முடியவில்லையே என்ற ஏக்கத்துடனும் பெருகிவரும் விலை உயர்வினால் உண்மை வருமானம் தொடர்ந்து குறைந்துசெல்லத்தக்க நிலையில் இருக்கும் துன்பத்துடனும் வாழும் உழைப்பாளர்கள் ஒருபுறமும் இருக்கும் நிலையில், தொழில் நல்லுறவுகள் நலிவுற்றுத் தொழில் அமைதியின்மை (Industrial Unrest) தோன்றுகிறது. தத்தம் நோக்கங்களை நிறைவேற்றவும் எதிர்த்தரப்பினரை அடக்கவும் இருசாராரும் பல வழிகளை மேற்கொள்கின்றனர். கதவடைப்பு, ஆட்குறைப்புப் போன்ற வழிகளைத் தொழில் முனைவோரும், ஆர்ப்பாட்டங்கள் வேலைநிறுத்தம், உள்ளிருப்புப் போராட்டம் போன்ற பல முறைகளைத் தொழிலாளர்களும் மேற்கொள்கின்றனர். இம்முறைகள் யாவும் தொழில் அமைதியின்மையை மேன்மேலும் முனைப்பாக்கத்தக்கவை.

தொழிலதிபர்கள் தங்களுக்குள் கட்டுப்பாடான அமைப்புகளை அமைத்துக்கொண்டு அரசின் ஆதரவுடன் தொழிற் சங்கங்களை அடக்க முற்படுவதும், தொழிலாளர்கள் தொழிற்சங்கங்கள் மூலமாகப் பல விரும்பத்தகாத நிலைகளை மேற்கொள்ளுவதும் தொழில் அமைதியின்மையை மேன்மேலும் வளர்த்துக் கொண்டு செல்கின்றன.

ஒருசில தொழில்கள ஏதாவதொரு காரணத்தால் நலிவடையும்போதும், தொழில முனைவோாகள் அத்தொழிறசாலையை மூடிவிட முயலும் போதும், வேலையினமை நிலைக்குத் தொழிலாளர்கள் தள்ளப்படும்போதும் தொழில அமைதியின்மை தோனறுகிறது. வாணிகச் சுழலின் (Trade Cycle) போது தொழில மந்த நிலையை அடைந்து வேலையின்மை தோனறத் தொடங்கும்போதும தொழில அமைதியின்மை தோன்றுகிறது.

இவ்வமைதியினமை நீங்கவேண்டியது மிகவும் அவசியம. இதற்குத் தொழிலதிபர்கள, தொழிலாளர்கள், அரசு ஆகிய மூவகையினரும் முயன்று பாடுபடவேண்டும். இம்முயற்சியில் தொழில நல்லுறவை ஏற்படுத்தப் பல வழிமுறைகள் மேற்கொளளப்பட்டு வருகின்றன.

வளரும் நாடுகளில் விரைவான பொருளாதார முன்னேற்றம் பெறத் தொழில அமைதி மிகவும் இனறியமையாத காரணிகளில் ஒன்றாகும்.

என எஸ்.பா.

**தொழில் இடஅமைப்பு:** நதிக் கரையோரஙகளிலும், கடும் குளிரோ கடுமையான வெப்பமோ இல்லாத நிலப்பகுதிகளிலும், உடலையும் உள்ளத்தையும பேணிப் பாதுகாத்துக் கொளளும் சூழநிலைகள அமைநதிருக்கும் நிலப்பகுதிகளிலும், வாழ்க்கை வசதிகளை எளிதாகப் பெறத் தக்க இடங்களிலும், மக்கள செறிந்து வாழ்வதைப் போன்று தொடககாலத்திலிருந்தே துணையான சூழ்நிலைகளைக் கொணட இடஙகளிலும் தொழில்கள் பல தொடங்கப பெற்றுச் செயறபட்டு வருவதைக காணலாம். இச சூழ்நிலைகளே இட அமைப்பு (Location) எனப்படுகினறன. இவவாறு தகுதி வாய்நத இடங்களில் தொடஙகப் பெறும் தொழில்களே சீராகச் செயறபடும்.

தொழில் இடஅமைபபை விளக்க எளிய பல கோட்பாடுகள உள. அவற்றில ஆல்பிரடு வெபர் (Alfred Weber) என்பாரின பகுத்தறி முறைக் கோட்பாடும், பிளாரென்சு (Florencc) எனபாரின் தொகுத்தறி முறைப் பகுததாய்வும் குறிப்பிடத்தககவை.

**ஆல்பிரடு வெபரின் தொழில் இடஅமைப்புக் கோட்பாடு** (Weber's Theory of Industrial location): வெபரின் கோட்பாடு கீழ்வரும் நான்கு அடிப்படை எடுகோளகளின் அடிப்படையில அமைந்திருக்கிறது.1. இரும்புத் தாதுக்கள் போனற பண்டஙகள் குறிப்பிட்ட இடங்களில மட்டுமே கிடைக்கினறன.

2. எல்லா இடஙகளிலும் உள்ள இத்தகைய பணடஙகளின இருப்புச் (deposits) சீராக இல்லை; ஆனால, இவறறைப் பெறுவதற்காக ஆகும் செலவு சமமாக இருக்கிறது.

3 ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு எடுத்துச் செல்லுவதற்கான போக்குவரத்துச் செலவு ஒரே மாதிரியாக இருக்கிறது.

4. நுகர்வு நிகழும் இடஙகளும, இபபணடஙகளைப் பயனபடுத்தும் தொழிலாளர்களின எண்ணிககையும் அளவறறதாக இருக்கின்றன எனபதோடு மாறாமலும் இருக்கின்றன.

பல தொழில்களின செலவுகளைப பகுத்தாராயந்த ஆல்பிரடு வெபா பொறி செய் தொழிற சாலைகள (Manufacturing factories) குறிப்பிட்ட தொரு இடததில் நிறுவபபடுவதற்குப் பொதுவான காரணிகளாகப் (1) போக்குவரத்துச் செலவுகளையும (2) தொழிலாளாகளுககான செலவுகளையும குறிபபிடுகிறார். குறிபபிட்டதொரு நிலபபரப்பில் தொழிலகள அமைவதறகான இன்றியமையாத காரணிகளாக இருப்பதால் போக்குவரத்துச் செலவு, தொழிலாளர்களுககான செலவு ஆகிய இரு காரணிகளையும வட்டாரக் காரணிகள (Regional factors) எனறு குறிபபிட்டு, இவவிரு காரணிகளில போக்குவரத்துச் செலவே மிகவும இனறியமையாத ஒன்று எனறு கூறியுளளார்.

**போக்குவரத்துச் செலவுகள்:** (Transportation Costs) கச்சாப் பொருள்களை அவை கிடைககுமிடஙகளிலிருநது உற்பத்தி நிகழும் இடங்களுக்குக் கொணடு செல்வதற்கும, உற்பத்தியான பணடங்களை நுகாவு நடக்கும் இடததிற்கு எடுததுச் செல்வதற்கும் ஆகும் செலவுகள போக்குவரத்துச் செலவுகள எனபபடும. பணடஙகளின் எடை, பண்டஙகள இடம் மாறறபபடும் இடஙகளுக்கு இடையே உள்ள தூரம் ஆகிய இரணடு காரணிகளைப் பொறுததுப் போக்குவரத்துச் செலவின் அளவு அமைகிறது.

போககுவரத்துச் செலவில் பணடஙகளின எடை சிறபபான இடத்தை வகிக்கிறது. இடங்களுககிடையே உளள தூரம் அதிகமான சிறப்பிடத்தை வகிக்கிறதா எனபதை (1) கசசாப் பொருள்களின தன்மையும், (2) கச்சாப் பொருளகளை முழுமையான பண்டங்களாக மாறறும் முறையும் நிருணயிககின்றன.

கச்சாப் பொருள்களின் தன்மையைக் கருதும் போது அவறறையும் இரு வகைகளாகப் பிரிததுக்காண இயலும். முதலாவது இடசசெறிவுளள பணடங்கள. இவை பெரும்பாலும் குறிபபிட்ட இடஙகளில் செறிந்து காணப்படும். எடுத்துக்காட்டாக மரஙகள காடுகளில செறிநது வளாகினறன. தாதுப் பொருள

கள குறிப்பிட்ட இடங்களில் செறிந்து காணபபடு கின்றன. இரண்டாவது பல இடங்களிலும் கிடைக் கும பணடங்கள எடுத்துக்காட்டாகத் தணணீரைக் குறிப்பிடலாம.

இடச் செறிவுள்ள பணடஙகளையும் (Localised Materials) (1) பேரளவில எடை குறையத் தக்க பணடங்கள (Heavy Weight-losing materials), (2)சிறிதளவே எடை குறையத் தக்க தூயபணடஙகள் (Pure goods) என இருவகைபபடுத்தலாம. நிலக்கரி, உறபத்திப பணியில பயன்படுத்தப்படுமபோது ஏறத தாழ முழுவதுமாக அழிந்து விடுகிறது. இதனைப் பேரளவில எடை குறையத தகக பண்டததிறகு எடுத்துககாட்டாகக் குறிபபிடலாம பஞசை நூலாக மாற்றும் போது பஞசின் பெருமபகுதி பயன்பட்டு மிகச் சிறிதளவே பயனபடாதொழிகிறது. இதனைத் தூய பணடத்திறகு எடுததுககாட்டாகக குறிப்பிட லாம்

இவ்வாறு ஆலபிரடு வெபா தமது பகுததறி முறைப பகுத்தாயவில (Deductive analysis)பணடக் குறியீட்டு எண் (Material index) எனறதொரு குறி யீட்டெண்ணைப் பயன்படுததித தொழிலின இட அமைபபை விளகக முற்படுகிறாா. அதாவது, ஒரு தொழிலானது பணடஙகள கிடைககுமிடத்திறகு அரு கில அமையுமா, நுகர்வோாகள் வாழுமிடத திற்கு (அஙகாடிக்கு) அருகில் அமையுமா என பதை விளக்கத் தமது பணடக் குறியீட்டெண ணைப் பயனபடுத்துகிறார். முழுமை பெறற பணடத் தின நிறைக்குச் செறிவுளள பணடததின விகிதமே பணடக குறியீட்டெண எனப்படும. இக குறியீட் டெணணின அளவு மிகுதியாக இருநதால் பண்டங் களின இருப்பிடஙகளுக்கு அருகில தொழிலகள் அமையும்; மாறாக இக் குறியீட்டெணணின அளவு குறைவாக இருநதால அங்காடிக்கு அருகில தொழில கள அமையும் எனறு ஆல்பிரடு வெபா குறிபபிடு கிறார்.

**உழைப்புச் செலவு** தொழிலாளர்களின இயற்கை யான திறன, தொழிலாளாகளின் திறனகளை வெளிக் கொணாவதற்கு மேறகொளளபபடும் முறை ஆகியவற்றைப்பொறுத்துத் தொழிலாளர்களுக்காகும செலவின் (Labour Costs) அளவு அமையும். தொழி லாளர்களுக்கான செலவுகள குறைவாக இருக்கு மிடஙகளில தொழில்கள அமைவது இயலபே. போககுவரத்துச் செலவோடு ஒப்பிடும்போது தரா தரமான தொழிலாளர்களுக்கான செலவுகள் மிகவும் குறைவாக இருப்பின், தொழிலாளாகள செறிவாக உளள இடங்களில தொழிறசாலைகள அமையும் வாய்ப்புகள் மிகுதியாக உணடு.

தொழிலின இடஅமைப்பில் இவ்விரு காரணிகள் நீஙகளாக, பேரளவுச் சிக்கனங்கள் (Economies of scale) எனப்படும தொழிலின் இடச் செறி வுக்குரிய (Localisation of industries) நன்மைகளான குவியல் காரணிகளும (Agglomerating Factors), பேரளவுச் சிக்கன மின்மைகளால் (diseconomies of -scale) தோனறும் தொழில பரவல் காரணிகளும் (deglomerating factors) தொழிலின் இட அமைப்பை நிருணயிக்கும இனறியமையாத காரணிகளாகும்.

ஆலபிரடு வெபரின் கோட்பாடு உணமை நிலைககுப் புறமபான பல எடுகோளகளில அமையப் பெறறிருக்கிறது எனறு அககோட்பாட்டிலகீழகாணும் குறைகளைப் பலர் சுட்டிக் காட்டியுளளனர். இக் கோட்பாடு மூலதனத்தின் சிறபபையும், தொழில் முனைவின (Enterprise) இனறியமையாத தனமையை யும் குறிபபிடத் தவறிவிட்டது; அளவுக்கதிகமாக குறியீட்டெணகளையும் (indices), கெழுக்களையும் (Co-efficients) பயனபடுத்தியுளளது.

ஆல்பிரடு வெபரின பகுத்தறிமுறைப் பகுத் தாயவுக்குப பதிலாகச் சார்செண்டு பிளாரென்சு (Sargant Florence) என்பாா தொகுத்தறி முறைப் பகுத்தாய்வைப் (Inductive analysis) பயனபடுத்தித் தமது கருத்தை விளககியுளளார். தமது பகுததாய் வில இட அமைப்பு ஈவு (LocationCo-efficient), இடச் செறிவுககெழு (Co-efficient of localisation) இணைப்புக கெழு (Co-efficient of linkage) எனற மூன்று அளவைகளைப் (Measures) பயன்படுத்தித் தொழிலின இடஅமைப்பை விளககுகிறார்.

இடஅமைப்பு ஈவு ஒனறுக்குச் சமமாக இருப்பின குறிபபிட்ட தொழில ஏறத்தாழ எல்லா இடஙகளி லும சமமாகப் பகிாநதளிக்கப்பட்டிருக்கும்; ஈவு ஒனறுக்கு அதிகமாக இருபபின் குறிப்பிட்ட நிலப் பரப்பில குறிப்பிட்டதொரு தொழில் செறிவாக இருக்கும, ஈவு ஒன்றுககுக் குறைவாக இருப்பின குறிப்பிட்ட நிலப்பரப்பிலகுறிப்பிட்டதொரு தொழில் செறிந்திருககவில்லை என்று அறியலாம என்பது சார்செணடு பிளாரெனசு கருத்து. மேலும், அவர் இடச் செறிவுக் கெழு மிகுதியாக இருப்பின தொழிற் செறிவும், குறைவாக இருப்பினதொழில பரவலும் இருக்கும் எனறும் குறிப்பிட்டார்.

இணைப்பு விளைவுக் கெழு மிகுதியானதாக இருப்பின இருதொழிலகள் அல்லது பல தொழிலகள் ஒனறை யொன்று சார்நதிருப்பவையாக அமைந்திருக் கும,குறைவாக இருப்பின சார்ந்திரா தவையாக இருக் கும். இக்கோட்பாட்டிலும் பல குறைகள் இருப்பதை அறிஞர்கள பலர் சுட்டிக் காட்டியுள்ளனர்.

பொதுவாக (1) கச்சாப் பொருள்கள் கிடைத்தல், (2) உழைப்பாளர்கள் மிகுதியாகவும் மலிவாகவும் கிடைத்தல், (3) அங்காடிகளுக்கு அருகில் இருத்தல், (4) போக்குவரத்து வசதிகள் கிடைத்தல், (5) ஆற்றல் (Power) வசதிகள் கிடைத்தல், (6) இடங்களும் பணிகளும் கிடைத்தல், (7) நிதி வசதிகள் கிடைத்தல், (8) இயற்கைச் சூழ்நிலைகளும், தட்பவெப்ப நிலைகளும் துணையானவைகளாக இருத்தல், (9) தனிமனிதரின் விருப்பு வெறுப்புகள், (10) போர் நிலைகள் தோன்றின் பாதுகாப்புடன் இருக்கத்தக்க சூழ்நிலைகள் அமைந்திருத்தல், (11) பேரளவுச் சிக்கனங்கள் கிடைத்தல், (12) பிற பல காரணிகள் வசதியாக அமைதல் போன்ற பல காரணிகள் தொழிலின் இட அமைப்பை நிருணயிக்கின்றன. இக்காரணிகளோடு இக்காலத்தில் 'அரசின் கொள்கை' தொழிலின் இட அமைப்பை நிருணயிக்கும் இன்றியமையாத காரணியாக விளங்குகிறது.

என.எஸ் பா.

**துணை நூல்கள்:**

**Donald, A. Hay and Derek, J. Morris, Industrial Economics: Theory and Practice, Oxford University Press, London, 1979.**

**Sivayya, K.V. and Das, V.B.M., Indian Industrial Economy, S. Chand & Co., New Delhi, 1987.**

**Tulsi Ram Sharma and Singh Chauhan, S.D., Industrial Economics, Shiva Hal Agarwala Company, Agra, 1977.**

***தொழில் இடையூறுகள்:*** தொழிற்கூடங்களினால் முன்பைவிட இன்று சுற்றுச்சூழல் மிகுதியாகக் கெட்டதோடு தொழிற் சூழ்நிலையிலேயே நிறைய முறைகேடுகள் புகுந்து, அங்குப்பணியாற்றுவோர் சிறப்பாகவும் உடல்நலமாகவும் இயங்கவிடாமல் நிறைய இடையூறுகளும் மலிந்துவிட்டன. இவை தொழில் இடையூறுகள் (Occupational Hazards) எனப்படுகின்றன.

ஒரு தொழிலாளி சிறந்து பணியாற்றும் காலம் நடுத்தர வயது தான். நாற்பது வயதுக்கு முன்னரோ அறுபது வயதிற்குப் பின்னரோ தத்தம் தொழிலில் சிறந்து விளங்குவோர் மிகச்சிலரே. ஏறக்குறைய பதவி உயர்வின் உச்சக்கட்டமும் இந்தச் சமயத்தில் தான் நிகழ்கிறது. பலர் தமது தொழிலில் ஆர்வம் காட்டாமைக்குக் காரணம் தொழிலில் சில தொல்லைகளை உணர்வதாகும். பெண் தொழிலாளிகளுக்குப் பதவி உயர்வு கிடைக்காதுபோவது அவர்களை மிகவும் பாதிக்கிறது. குறைந்த சம்பளம் பெண் தொழிலாளிகளின் இரண்டாம் முக்கிய சிக்கலாகும். ஆண்களுக்குரிய சிக்கற பட்டியலில் இது எட்டாம் அல்லது ஒன்பதாம் சிக்கலாகும். ஒரேவகையான சலிப்பூட்டும் வேலை, வேலைப்பளு, மேற்பார்வையிடல், ஒத்துழைப்புத் தாராத மேலதிகாரி, குறைந்த ஊதியம், பணிப்படிகள் தெளிவாக்கப் படாமை போன்றவை பிற சிக்கல்களாகும்.

தொழிலில் மிக்க அளவில இடையூகள் இருப்பதாக உணர்பவர்களபெரும்பாலும் கீழ்நிலை ஊழியர்களே, மருத்துவத் தொழிலில் மருத்துவருக்கு உதவியாக இருப்போர், தொலைபேசியைக் கவனிப்பவர், வரவேற்பாளர் போன்றோர் தாம் இவ்வாறிருக்கின்றனர். இவ்வுணர்விற்குக் குறைந்த சமபளமும், பதவி உயர்வின்மையும் காரணமாக இருக்கலாம். வேலையின்மை, வேலை கிடைத்தாலும் நிலைத்திருக்க முடியாமை போன்றவை பெரும் இடையூறுகளே. எடுத்த எடுப்பிலேயே வருவாய் இல்லாத நிலை ஒருவனைப் பொருளாதாரச் சிக்கலில் சிக்க வைப்பதோடு அவனுக்குத் தன்னைப் பற்றிய கருத்தும் தாழ்ந்து விடுகிறது. இவ்வாறு தன மதிப்புத் தாழ்ந்துவிடுவது ஆளுமையைச் சீர்குலையச் செய்துவிடும்.

**புதுச் சிக்கல்கள்.** புதிதாகப் புகுத்தப்படும தொழில்நுட்பங்களை வேலை செய்துகொண்டே கற்கமுடியாத நிலை பல தொழிலாளிகளுக்கு ஏற்படுகிறது தனியாகச் சிறப்புப் பயிற்சி பெறவேண்டியுள்ளது. இதற்குத் தனி அடிப்படைக்கல்வியும் தேவைப்படுவதனால பட்டறிவு பெற்ற தொழிலாளிகளுக்குக்கூட இத்தகைய சூழ்நிலையானது தவிர்க்க முடியாத இடையூறாகவே அமைந்துவிடுகிறது.

தொழில் நிறைவும தொழில் செயலும் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளவை. உடன் பணியாற்றும தொழிலாளர்களின் ஏற்புத்தன்மை இருப்பின் தொழிலின படைப்புச் சிறந்து விளங்கும். ஒரேவகையான சலிப்பூட்டும் செயல்களகூட நட்பு நிறைந்த தொழிலாளர்களுடன் இயங்கும்போது மகிழ்ச்சி தருவதாக இருக்கும். நட்புடைய தொழிலாளர்களின ஊக்கமானது தொழிலில ஊக்கத்தை ஏற்படுத்தி விடும். மனநிறைவுடன் செயற்படும் தொழிலாளர்கள வேலைக்கு வாராமலிருக்கும் நாள்கள குறைந்து விடும.

பூச்சிக்கொல்லிகள், மருந்துகள், சிமெண்டு தயாரித்தல் போன்ற வேதியல் அடிப்படைத் தொழில்களில இருக்கும் இடையூறுகள உயிருக்கே ஆபத்தானவை. தொழிலாளியின வாழ்நாள் குறைந்துவிடும் வாய்ப்பும் இத்தகைய பணிகளில் ஈடுபடும்போது ஏற்படுகிறது.

**நிருவாகத் தொல்லைகள்:** தொழிலின குறிக்கோளகளும், என்னென்ன செய்யலாம், என்னென்ன செய்யக்கூடாது, பொறுப்புகள இன்னின்னவைதாம் என்பனவும்தெளிவில்லாதபோது தொழிலின் இயக்கத்தில் இடையூறு ஏற்படும். ஒரே வேலைக்கு இரு மேற்பார்வையாளர்கள இருந்தால் ஒருவர் விதிகளைப் பினபற்றச் சொல்லியும் மற்றவர் தனியாக விதிகளைத் தளர்த்தச் சொல்லியும் அறிவுரை தரும்போது இடையூறாகத் தானிருக்கும். வரிவசூலிக்கும் அலுவலகத்தில் ஆற்றலுக்கு மீறியும் குறைநதகால அளவிலும் வேலை செய்யும்படி பணிக்கப்பட்டபோது, கால வரையறை நெருஙக நெருஙக அவரவர்களுக்கிருந்த சிறு நோய்களும் பெரியனவாகிப் பெருந் தொலலைகளைத் தந்தன.

பெண தொழிலாளர்களின எணணிகைை பெருகி வருவது (25 விழுக்காடு) ஏறகெனவே பணிபுரியும் ஆண தொழிலாளர்களால் இடையூறாக உணரப்படுகிறது. முன்பு பள்ளிப் படிப்பிற்குப் பினனாத் திருமணமாகுமவரை பெணகள் வேலைககுச் செனறனர். இபபொழுது திருமணத்திற்குப பினனரும பெணகள தொடர்ந்து வேலையிலிருப்பது ஆணகளின் இடையூறு மிகுதியாவதற்கான காரணமாக உள்ளது

இஙகிலாநதில 1970-ஆம் ஆண்டு முதற்கொணடே தொழில் இடையூறுகளைத் தவிாக்கப பெரும் முயற்சிகள நடந்துவருகினறன. தொழிலாளிகளுககும சம உரிமை, கடமை, கட்டுப்பாடு ஆகியன வரையறை செய்யப்பட்டுள்ளன. ‘தமமிடம் பணி செய்யும் எலலாத் தொழிலாளிகளின உடல்நலனும பாதுகாப்பும் பேணுவது தொழிலதிபர்களின் கடமையாகும்’ எனபது சட்டமாக்கப்படடது. தொழிறசஙகங்களின பேராளர்களுக்கு விபத்து நடந்த பகுதிகளைப் பார்வையிடவும, வேறு தொழிலாளர்களின் கருததுகளின அடிபபடையில் பரிநதுரைகளை அளிக்கவும அதிகாரம் தரபபட்டுளளது. மா.பெ.

**துணை நூல்கள்:**


**Frutech, M.A**, Issues in Occupation and Training, Orient Longman's Ltd., New Delhi, 1970.

**Rothlisberger, F.J and Dickson, W.J.**, Management and the Worker. Harvard University Press, Cambridge, 1939.


*தொழில் இணைப்புகள்*: ஒரேவிதமான பண்டஙகளை உற்பத்தி செய்யும் நிறுவனஙகள அலலது ஒன்றுக்கொன்று பயன்படத்தக்க பணடங்களை உற்பத்தி செய்யும் நிறுவனங்கள் ஏதாவது ஒனறு அல்லது பல நோக்கஙகளுடன ஒரே நிறுவனமாக இணைவதே தொழில் இணைப்பு (Industrial Combination) எனப்படும். தொழில இணைப்பு எனறால் எனன என்பதற்கான துல்லியமான இலக்கண வரையறை எதுவும் காணப்படவில்லை. எனவே, தனித்தனியாகத் தனி நிருவாகங்களிற் செயற்பட்டுவரும் நிறுவனங்கள் சிலபல நோக்கங்களுடன் இடைக்காலமாக அல்லது நிலையாக ஒரே நிறுவனமாக இணைந்துவிடுவதைத் தொழில் இணைபபு எனபதறகான விளக்கமாகக் கொளளலாம். இத்தகைய தொழில் இணைப்புகள் நாளதோறும் பெருகி வருகின்றன. தொழில் இணைப்புகளின பெருக்கததிற்கான காரணங்களையும், தொழில இணைபபின பல வகைகளையும் வடிவங்களையும் இந்தியாவில தொழில் இணைப்புகளின் நிலைகளையும காண்பது அவசியமாகும். தொழில் இணைப்பிறகான காரணஙகள் பல. அவை:

**1) போட்டியிலிருந்து விடுபடுதல்:** அஙகாடியில் பல காரணஙகளால் கடுமையான போட்டி நிலவலாம். விறபவர்களிடையே உளள போட்டியின் விளைவாக விலைகள குறைந்து இலாபம் குறையலாம்; விலைகள குறையாதிருநதாலும் விற்பனை அளவு குறைந்து இலாபம் குறையலாம். ஒவவொரு நிறுவனமும் போட்டியின கடுமையான விளைவுகளிலிருந்து விடுபட்டு மிகுதியான இலாபத்தைப் பெற முயல்வது இயல்பு. ஐரோப்பாவிலும, ஐக்கிய அமெரிக்காவிலும் போட்டியின் விளைவாகத் தொழில இணைப்புகள பெருகுகினறன. இந்தியாவில் சிமெண்டுக் கூட்டுக்குழுமம் (Associated Cement Company), இந்தியச் சருக்கரைக கூட்டு நிறுவனம் (Sugar Syndicate of India) ஆகியவை தொழில் இணைப்புக்கான சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

**பெரிய தொழில்களின் நன்மைகள்:** பெரிய இயநதிரங்களைப் பயனபடுத்துவதால பெறத்தகக தொழிலநுட்பச சிககனஙகள (Technical economies), நிருவாகத்தில் புகுத்தபபடும் வேலைப்பகுப்பு (division of labour), சிறப்புத தோச்சி (Specialisation) ஆகியவற்றால பெறத்தக்க நிருவாகச் சிக்கனங்கள (Managerial Economies). மொததமாகக் கொள்முதல செய்தல், விற்றல் ஆகியவைகளிலும் போக்குவரத்துச் செலவிலும பெறத்தக்க வாணிகச் சிக்கனங்கள (Commercial Economies), பெரும் தொகைகளை நீணடகால அளவிற்கும், குறைந்த வட்டி விகிதத்திலும் பெறுவதற்கேறற துணையான நிலைகளைத் தரும நிதிச் சிக்கனஙகள (Financial Economies), இடர்களைப் பரவலாக்கிக் கொள்வதால் ஏற்படும் நனமைகள் போன்ற அகச் சிக்கனஙகள் (Internal Economies), துணையான சூழநிலைகள், ஆய்வுக்கான நல்வாய்ப்புகள், திறமைப் பெருக்கம் போனற பல புறச் சிக்கனஙகள் (External Economies) ஆகியவற்றைப் பெறுவதற்காகத் தொழில்கள இணையும் போக்குப் பெருகிவருகிறது. வங்காளத்தின் எஃகு நிறுமம் (Steel Corporation of Bengal) இந்திய இரும்புக்

குழுமத்தோடு (Iron & Steel Company of India) இணைந்தது இதற்கொரு எடுத்துக்காட்டாகும்.

3. **சுங்கவரிகள்:** உள்நாட்டுத் தொழில்களின் வளர்ச்சியைக் கருதி அந்நியப் போட்டியிலிருந்து அவற்றைப் பாதுகாக்க விதிக்கப்பெறும் சுங்கவரி விதிப்பைத் தொழில் இணைப்பின் தாய் (Protective Tariff is the Mother of Combination) என்று குறிப்பிடுவர். இந்தியாவில் 1937-இல் இந்தியச் சருக்கரைக் கூட்டு நிறுவனம் (Sugar Syndicate of India) தோன்றியதற்குப் பாதுகாப்புக் கருதிய சுங்க வரி விதிப்பே மூல காரணமாக இருந்தது உள்நாட்டுத் தொழில்களைப் பாதுகாப்பதற்காக மேற்கொள்ளும் முயற்சியில் உள்நாட்டுப் போட்டி கடுமையாகி அப்போட்டியின் விளைவுகளைத் தவிர்க்கத் தொழில் இணைப்புகள் தோன்றலாம்.

4) **தொழில் அமைப்பில் தோன்றியுள்ள மாறுதல்கள்:** இக்காலத் தொழில்களில் பெரும்பாலானவை கூட்டுப் பங்குக் குழுமத்தின் அமைப்பில் தோன்றத் தக்கவையாகவும், பேரளவில் மூலதனம் தேவைப்படத்தக்கவையாகவும் இருக்கின்றன. எனவே, சிறிய அளவிலான தொழில்கள் இணைந்துவிட வாய்ப்புகள் உண்டு.

5) **பெரிய நிறுவனங்களாகும் இயல்பும் விருப்பமும்:** ஒருசில நிறுவனங்கள் எப்பாடுபட்டாவது பெரிய நிறுவனங்களாக மாறிவிடவேண்டும் என்ற தணியாத விருப்பம் உடையனவாக இருக்கும். எனவே, வாய்ப்புகள் கிடைக்கும் போதெல்லாம் பிற நிறுவனங்களைத் தம்முடன் இணைத்துக்கொள்ளும் இயல்புடையவைகளாக இருக்கும். இவ்வியல்பும் விருப்பமும் தொழில் இணைப்புக்கு இன்றியமையாததொரு காரணமாகும்.

6) **தனி மனிதர்களின் தொழில்முயற்சி:** ஒருசிலரிடம் தொழில்முயற்சி (Enterprise) குறைந்தும் மற்றச் சிலரிடம் தொழில்முயற்சி மிகுந்தும் இருப்பது இயற்கை. தீவிரமான தொழில் முயற்சி உடையவர்கள் கிடைக்கும் எல்லா வாய்ப்புகளையும் பயன்படுத்தித் தொழில் இணைப்புகளுக்கு வழிவகுப்பர்.

7) **வாணிகச் சூழல்கள்:** பொருளாதார நிலைகளில் மலர்ச்சியும் மந்தமும் வீழ்ச்சியும் மறுமலர்ச்சியும் மாறிமாறித் தோன்றத்தக்கவை. இம்மாற்றக் காலங்களில் தொழில் நிறுவனங்கள் அவற்றிற்கேற்படும் இடர்களைத் தவிர்ப்பதற்காகத் தங்களுக்குள் இணைந்துகொள்வதுண்டு.

8) **அரசின் கொள்கைகள்:** ஒருசில நிறுவனங்கள் தனித்தனியாகச் செயற்படுவதைக் காட்டிலும் ஒன்றுபட்டுச் செயற்படுவது நல்லது என்றும், நிறுவனங்கள் நலிவடைவதைத் தவிர்ப்பதற்காகப் பல வீனமான நிறுவனங்கள் வலிமையான நிறுவனங்களுடன் இணைந்துவிடவேண்டும் என்றும் அரசுக் கொள்கை இருக்கும்போது தொழில் இணைப்புகள் எளிதாகத் தோன்றுகின்றன. நிறுவனங்களைப் புதிதுபடுத்தவேண்டும் என்ற கொள்கையை அரசு கொண்டிருந்தாலும் தொழில் இணைப்புகள் தோன்றலாம்.

**தொழில் இணைப்புகளின் வகைகள்:** தொழில் இணைப்புகளை 1) படுகிடையான இணைப்புகள் (Horizontal Combination), 2) செங்குத்தான இணைப்புகள் (Vertical Combinations), 3) சுழலான இணைப்புகள் (Circular Combinations), 4) மூலை விட்ட இணைப்புகள் (Diagonal Combinations) என நான்கு வகைப்படுத்துவர்.

1) **படுகிடையான இணைப்புகள்:** ஒரே தன்மையான பண்டங்களை உற்பத்தி செய்யும் நிறுவனங்கள் தங்களுக்குள் இணைந்து செயற்படும் நிலையில் கிடைக்கத்தக்க நன்மைகளைக் கருதி ஒருங்கிணையும்போது அவ்விணைப்பைப் படுகிடையான இணைப்பு என்பர். சருக்கரை உற்பத்தி செய்யும் நிறுவனங்கள் ஒன்றாக இணைந்து 'இந்தியச் சருக்கரைக் கூட்டு நிறுவனம் என்ற அமைப்பைத் தோற்றுவித்ததும், சிமெண்டு உற்பத்தி செய்யும் நிறுவனங்கள் ஒன்றுசேர்ந்து சிமெண்டுக் கூட்டுக் குழுமம் என மாறியதும் படுகிடையான இணைப்புகளுக்குரிய எடுத்துக்காட்டுகளாகும்.

2) **செங்குத்தான இணைப்புகள்:** பண்டங்களை உற்பத்தி செய்வதில் பல நிலைகள் உள்ளன. கச்சாப் பொருள்களைப் பெறுவதிலிருந்து முழுமைபெற்ற பண்டங்களை உற்பத்தி செய்வதுவரை உள்ள பல நிலைகளில் பண்டங்களை உற்பத்திசெய்யும் நிறுவனங்கள் பல ஒருங்கிணைந்து ஒன்றின் உற்பத்திப் பொருள் மற்றதன் கச்சாப் பொருள் போன்று பயன்படும் நிலையிலுள்ள இணைப்பைச் செங்குத்தான இணைப்பு என்பர். இதனால் நிறுவனங்களுக்கு அவற்றின் உற்பத்திக்குப் பண்டங்கள் கிடைப்பதும், உற்பத்தியான பண்டங்களை விற்பதும், உற்பத்திச் செலவைக் குறைப்பதும் எளிதாகின்றன. செங்குத்தான இணைப்பை முன்னோக்கிய செங்குத்தான இணைப்பு (Forward Vertical Combination)என்றும், பின்னோக்கிய செங்குத்தான இணைப்பு (Backward Vertical Combination) என்றும் இருவகைப்படுத்துவர். ஒரு நிறுவனம், அது உற்பத்தி செய்த பண்டங்களைப் பயன்படுத்தும் நிறுவனங்களோடு இணைவதை முன்னோக்கிய செங்குத்தான இணைப்பு என்றும், ஒரு நிறுவனம் அது உற்பத்தி செய்யும் பண்டத்திற்குத் தேவைப்படும் பண்டங்களைப்பெறும்முந்திய நிலைகளில் உள்ள நிறுவனங்களோடு இணைவதைப் பின்

னோக்கிய செஙகுத்தான இணைப்பு எனறும் விளக குவர்.

3) **சுழல் இணைப்புகள:** நிறுவனஙகள அவை உற்பத்தி செய்யும பண்டஙகளோடு மிகவும் தொடர் புடையனவாகவும் அதேநேரத்தில வேறுபடுத்தப் பட்ட பண்டஙகளாகவும உள்ளவற்றை உற்பத்தி செய்யும நிறுவனஙகளோடு இணைவதைச சுழல் இணைப்பு என்பர். எடுத்துக்காட்டாக மின்விசிறிகள மின் வெப்பம தரும் கருவிகள, மின் அடுப்புககள் வானொலிப் பெட்டிகள், மினசாரச் சலவை இயநதி ரங்கள், இவை போனற பிற மினசாரப் பொருள்கள் ஆகியவற்றை உற்பத்தி செயயும் நிறுவனஙகள தனித் தனிப் பணடஙகளை உறபத்தி செய்தாலும் அவை யாவும் மினசாரத்தைப் பயன்படுத்தும கருவிகளைப படைப்பதால அத்தகைய நிறுவனஙகளின இணைப் பைச் சுழல் இணைபபு எனலாம்.

4) **மூலைவிட்ட இணைப்புகள:** பணடஙகளின் உறபத்தி, பகிர்வு ஆகியவற்றில் பயனபடும பழுது பார்ததல, பகிாதல், கட்டுமானப் பணிகள (Packaging Services), விளம்பரப்படுததுதல, உதிரிப பணடஙகளை உற்பத்தி செயதல போன்ற பலவறறைசசெய் யும் நிறுவனஙகளின இணைபபை மூலைவிட்ட இணைப்பு எனபர்.

**தொழில் இணைப்புகளின் வடிவங்கள்:** தொழில் இணைப்பின் வடிவஙகள பறறிப் பலரும தத்தம கருத்துகளைத தெரிவித்துள்ளனர். இணைபபு நேரும் காலத்தில எவ்வளவு காலததிறகு இவ விணைப்பு இருத்தல வேணடும் என்று விருமபபபடும் கால அளவு, இணைநதபின இருக்கததகக நிரு வாக அமைப்பு; குறிப்பிட்ட தொழிலின் உறபத்தியிலும, பகிாவிலும் இவவிணைபபு ஆறறும் பஙகு ஆகிய அடிப்படைகளில இணைப்பின வடிவஙகள அமையலாம் எனபது காாட்டர் (Carter) எனபவரின் கருத்து குறுகிய கால வடிவஙகள (Short Term Forms), இடைககாலமான மாறறுக் கால வடி வஙகள் (Transitional Forms), நெடுஙகால வடிவங கள (Long Term Forms) என்று இணைப்புகளை வகைப்படுத்தலாம் எனபது பேராசிரியர் ஈ.ஏ.ஜி. இராபினசன (Prof. E A.G. Robinson) எனபவரின கருத்து. பெரிய இணைபபுகள் (Simple Combinations), கூட்டு இணைபபுகள (Compound Combinations), ஒன்றிணைப்புகள (Consolidations) என்று தொழில இணைப்புகளை வகைப்படுத்தலாம என் பது உலூயிசு எச. கேனே (Lewis H. Haney) எனபவ ரின கருததது.

**இந்தியாவில் தொழில இணைப்புகள்:** ஐக்கிய அமெரிககா, இஙகிலாநது, செருமனி, சப்பான போன்ற நாடுகளோடு ஒப்பிடுகையில இந்தியாவில் தொழில் இணைப்புகள மிகக குறைவான வேகத்தில் மிகச் சிறிய அளவிலேயே நிகழ்நது வருகின்றன. தொழில் இணைப்புகளால பெருந் தொழிலகள ஏற பட்டு அதன மூலமாகப் பொருளாதார ஆறறல ஓரி டத்தில செறிந்துவிடுவதைத தவிாக்கும்கொள்கை களை அரசு கொணடிருபபது தொழில இணைப்புகள மெதுவாக நிகழவதறகானதொரு காரணமாகும். இநதியாவில தனியாா துறையைவிடப் பொதுத துறைககுச் சிறப்பிடந் தருதல, இநதியாவிலுள்ள தொழில நிறுவனஙகளிடையே பேரளவில கூட்டுறவு மனபபானமை இலலாதிருத்தல், பேரளவில் காணப் படும நிருவாகப்பதிலாணமை முறை (Managing Agency System) போனறனவும் இந்தியாவில் பேரளவில் தொழில இணைப்புகள பெருகாமல இருபபதற்கான காரணஙகளாகும. தொழில்இணைபபுகளுள கலததல (Amalgamation), ஒன்றுசேர்தல (merger) போனற ஒருசில வகைகள மட்டுமே ஓரளவுக்கு இந்தியாவில் காணப்படுகினறன. பெருநதனமையாளா ஒபபநதங கள (Gentlemen Agreements), எழுதது மூலமான ஒப் பந்தஙகளின் அடிபபடையில் அமையும் தொழில இணைப்புகள (Pools), இணையும நிறுவனஙகள அவை தம் உறபததியளவைக் கட்டுபபடுத்தி மொதத உற் பததியைக் குறைதது விலைச சரிவைத் தவிர்தது இலாபத்தை மிகுதியான அளவில பெறும் நோககத் தோடு செருமனியில தோற்றுவிக்கப்பட்ட வணிகக் கூட்டணி (Cartels), அறககட்டளைகள (Trusts) போனற பலவகைத் தொழில இணைப்புகள இந்தி யாவில பரவவில்லை.

தொழில் அதிபர்களும, வாணிகர்களும் இணைந்து அமைககும வாணிகக் கழகமாக இந்தியாவில முதன முதலாக கி.பி 1834-இல கல்கததாவில் வங்க வாணி கக கழகம் (Chamber of Commerce of Bengal) தோன்றியது. அதைத்தொடர்நது கி.பி. 1836-இல் பமபாயிலும் சென்னையிலும வாணிகக் கழகங்கள் தோற்றுவிக்கப்பட்டன. கொச்சியிலும் (கி.பி. 1857), காக்கிநாடாவிலும் (கி.பி. 1868) இதததகைய கழகங் கள் தோறறுவிக்கப்பட்டன. இந்திய மேல வாணிகக கழகம் 1988 (The Upper Indian Chamber of Commerce), பஞ்சாபு வாணிகக் கழகம் 1905 (The Punjab Chamber of Commerce), கோயம்புத்தூர் வாணிகக் கழகம், 1922 (Coimbatore Chamber of Commerce) போனறவையும் தோற்றுவிக்கப்பட்டன. இந்தியாவின் வாணிக, தொழில் கழகங்களின் சங்கம் (The Federation of Indian Chamber of Commerce) 1926-இல் திலலியைத் தலைமையிடமாகக கொணடு தொடங் கப்பட்டது பினனாப் பல வாணிகக கழகங்கள் நாடு முழுவதிலும தோனறின.

பலவீனமான தொழில் நிறுவனங்கள் வலிமை யான தொழில் நிறுவனங்களுடன் இணைவதிலுள்ள சிக்கல்களை ஆராய்வதற்காக 1976-ஆம் ஆண்டின் தொடக்ககாலத்தில் மைய அரசின் நிதி அமைச்சகச் செயலாளராக இருந்த கெச்.என்.ரே.(H.N. Ray) என்பவரின் தலைமையில் நால்வர் குழு ஒன்று அமைக்கப்பட்டு அதன் பரிந்துரைகள் செயற்படுத்தப்பட்டன.

என்.எஸ்.பா.

**துணை நூல்கள்:**


**Kuchhal,S.C.**, The Industrial Economy of India, Chaitanya Publishing House, Allahabad,1987.

**Mehta,M.M.**, Combination Movement in Indian Industry, Friend Book Depot, Allahabad, 1952.

**Shields,B.E.**, The Evolution of Industrial Organisation, Sir Issac Pitman & Sons Ltd., London, 1930.

**Sivayya, K.V. & Das, V.B.M.**, Indian Industrial Econmy, S. Chand & Co., New Delhi, 1987.


***தொழில் உற்பத்தித் திறன்:*** பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் தொடர்ச்சியான உற்பத்திப் பெருக்கம் பொருளாதார வளர்ச்சியின் இயல்புகளில் ஒன்று. உற்பத்திப் பெருக்கத்திற்கு உறுதுணையாக இருப்பது உற்பத்திக் காரணிகளின் அளவும் திறனும் ஆகும். அளவு குறைவாக இருந்தாலும் திறன் மிகுதியாக இருந்தால் விளைவு மிகுதியாக இருக்கும் என்பதால் எல்லா நாடுகளிலும் உற்பத்தித் திறனைப் பெருக்க எல்லாவிதமான முயற்சிகளும் மேற்கொள்ளப்படுகின்றன.

பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் உற்பத்தியில் பயன்படும் இடுமான அலகின் உற்பத்தி ஆற்றலையே உற்பத்தித் திறன்(Productivity) என்பர்.எடுத்துக் காட்டாக உரு. 100/-ஐப் பயன்படுத்தி முதல் நிலையில் 10 பண்டங்கள் உற்பத்தி செய்யப்படுவதாகவும்,பிறகு இரண்டாம் நிலையில் 12 பண்டங்கள் உற்பத்தி செய்யப்படுவதாகவும் குறிப்பிட்டால் உரு. 100/-இன் உற்பத்தித் திறன் முதல்நிலையில் இருந்ததைக் காட்டிலும் இரண்டாம் நிலையில் மிகுதியாக இருக்கிறது என்பது பொருள். ஒரே அளவு உற்பத்திக் காரணிகளைப் பயன்படுத்தி ஒருநிலையில் 10 தொழிலாளர்கள் 100 பண்டங்களையும், இரண்டாம் நிலையில் 150 பண்டங்களையும் உண்டாக்குகிறார்கள் என்றால் தொழிலாளர்களின் உற்பத்தித் திறன் இரண்டாம் நிலையில் மிகுதியாக இருக்கிறது என்பது பொருள். இன்றைய வளரும் நாடுகளில் உற்பத்திக் காரணிகளின் பற்றாக்குறை மிகுதியாக இருக்கிறது. ஒருசில வளரும் நாடுகளில் மக்களின் எண்ணிக்கை மிகுதியாக இருக்கிறது என்றாலும் பயிற்சியும் திறமையும் பெற்ற உழைப்பாளர் எண்ணிக்கை குறைவாகவே இருக்கிறது. இத்தகைய நிலையிலுள்ள வளரும் நாடுகள் தங்களின் தணியாத ஆசையாகிய விரைவான பொருளாதார வளர்ச்சியைப் பெற எல்லாவிதமான உற்பத்திக் காரணிகளின் உற்பத்தித் திறனையும் மிகுதிப்படுத்த வேண்டியது மிகவும் இன்றியமையாதது என்பது வலியுறுத்தப்படுகிறது.

தொழில் துறையிலுள்ள உற்பத்தித் திறனைத் தொழில் உற்பத்தித் திறன் (Industrial Productivity) என்பர். பொதுவாக மொத்தமாகத் தொழிற்றுறையில் தோன்றும் திறன் அதிகரிப்பைத் தொழில் உற்பத்தித் திறன் என்று இவான் கிளேக்கு(Evan Claugue) குறிப்பிடுகிறார். எண்ணிக்கையின் அடிப்படையிலான (Quantitative) அளவீடு எதையும் இவ்விளக்கம் உள்ளடக்கியிருக்கவில்லை என்று இவ்விளக்கத்தைப் பலர் குறை கூறுவர்.

1) உற்பத்தித் திறன் என்பது திறன் வடிவத்தில் அமைந்துள்ளது. 2) உற்பத்தித் திறன் மூல வளங்களைச் சிறப்பாகப் பயன்படுத்துவதைக் குறிப்பிடுவது. 3) உற்பத்தித் திறன் என்பது ஒரு விகிதம் (A ratio). 4) உற்பத்தித் திறன் என்பது ஒருவித அளவை (A measure of some kind), 5) உற்பத்தித் திறன் என்பது பணத்தின் அடிப்படையில் விளைவைக் குறிப்பிடுவது. என்ற ஐந்துவிதமாக இரசல் டபிள்யூ. பென்சுகி (Russel W. Fenske) குறிப்பிடுகிறார்.

சே.எம்.எசு. இரிசுக்கு (J.M.S. Risk) என்பாரும் தொழில் உற்பத்தித் திறனை ஒரு விகிதம் என்றே குறிப்பிடுகிறார். பலர் பலவிதமாகக் குறிப்பிட்டாலும் ‘ஒரு குறிப்பிட்ட உற்பத்திக் காரணி இடுமான அலகிற்கு அதன் உற்பத்தியின் விகிதம்’ என்ற பன்னாட்டுத் தொழிலாளர் அலுவலகத்தின் (International Labour Office)விளக்கத்தைப் பெரும்பான்மையோர் ஏற்றுக்கொள்கின்றனர். ஐ.எல்.ஓ. வின் (I.L.O.) விளக்கத்தின்படி உற்பத்தித் திறன் என்பது பெரும்பாலும் உழைப்பின் உற்பத்தித் திறனையே குறிக்கும். இவ்விளக்கத்தை ஏறத்தாழ எல்லோரும் ஏற்றுக் கொள்கின்றனர். இருப்பினும் உழைப்பு என்ற உற்பத்திக் காரணியை மட்டுமல்லாமல பிற உற்பத்திக் காரணிகளையும் கருத்திற் கொண்டு அக் காரணிகளின் உற்பத்தித் திறனையும் பெருக்க முயலுவது அவசியம் என்பதையும் பலர் வலியுறுத்தியுள்ளனர்.

**உற்பத்தித் திறனை அளவிடுதல்:** உற்பத்தித் திறனைக் கீழ்வரும் சமன்பாடுகள் மூலம் எளிதில் அளவிட முயலலாம்.

உற்பத்தித் திறன = நிகர உறபததி / இடுமான அளவு

இநத அடிப்படையில்,

உழைப்பின் உற்பத்தித்திறன் = நிகர விளைவு / உழைப்பாளாகளின அளவு (அலலது) உழைப்பாளரின் மணிகள அளவு (Man-Hours)

இதைபபோல,

மூலதனத்தின் உற்பத்திததிறன் = நிகர விளைவு / நிகர மூலதன இடுமான அளவு

பெருமபாலும் தொழில உறபத்தித திறன எனற அடிப்படையில் தொழிலாளர்களின் எணணிக்கைக் கும, விளைவின அளவுககும உள்ள விகிதமே பயன படுத்தபபடுகிறது.

தொழில் உற்பத்தித் திறனை அளவிடுவதில் சில இடர்களும உணடு என்பதைப் பலா சுட்டிக்காட்டி யுளளனா. முதலாவதாக, பணிகளின் அளவை எண ணிக்கையின் அடிப்படையில அளவிடமுடியாது எனப தால பணிகளை ஆற்றும் தொழிலாளர்களின் உற பததித்திறனை அளவிடுதல எளிதனறு. இரணடாவ தாக, முழுமைபெறும் உறபததிப் பணட அலகுகள ஒரியல்பானவையாக இருப்பின உறபத்தித திறனை அளவிடுதல் எளிது. ஆனால், நடைமுறை வழக்கில உற்பத்திப் பணட அலகுகள பல அடிப்படைகளில் வேறுபட்டனவாக இருப்பதால் உறபததித் திறனை அளவிடுதல் எளிதனறு. மூனறாவதாக, உற்பத்தி முழுமை பெற்ற பணடஙகளை எணணிக்கை அடிப படையில கணக்கிடுமபோது உற்பததித் திறனை எளி தாக அளவிடலாம். ஆனால, பண்டங்கள முற்றுப் பெறாமல பல நிலைகளில் உற்பததி செய்யபபடும போது தொழிலாளர்களின் உற்பததித் திறனைக கணக்கிடுதல எளிதன்று. நானகாவதாக, உறபததி முற்றுபபெறும் பணடஙகளை மட்டுமே கணக கிட முடியும்; உற்பத்தியோடு இணைந்த பல முற்றுப்பெறாத் துணைப பணடஙகள, பணிகள போனறவற்றைக் கணக்கிடுதல் எளிதன்று. இதைப் போனறு தொழிலாளர் இடுமானத்தை எணணிக்கை யின் அடிப்படையில் கணககிடுவதா, பணியாற்றிய பணிகளின் அடிப்படையில கணக்கிடுவதா என்பது போனற பல சிக்கல்களும், பனனாட்டு அளவுகளில் ஒப்பிட்டுப் பார்பபதறகான சீரான அளவைகள இல்லாமலிருப்பது போனற பல சிக்கல்களும் தோனற லாம். எவ்வளவு குறைகளும, இடர்ப்பாடுகளும் இருந் தாலும் உற்பத்தித் திறனைக கணக்கிடுவதிலும், உற பத்தித் திறனை மிகுதிப படுத்துவதிலும ஏறத்தாழ எல்லாத் தொழிலாளர்களும், தொழிற் சஙகங்களும் நாடுகளும முனைப்பான முயறசிகளை மேற்கொணடு வருகின்றன.

இன்றைய உலகம் அறிவியல உலகம். அறிவியல் அடிப்படையில எதிர்கால மக்கள்தொகை எவவள வாக இருக்கும் எனபதையும், எதிர்காலத்தில் ஒவ வொரு துறையிலும் தேவைகள எவவாறெல்லாம் இருககும எனபதையும், இத் தேவைகளை நிறை வேறற உறபத்திக் காரணிகளின அளவுகளையும், உற் பத்தித திறனையும் எவ்வாறெலலாம் மிகுதியாக்க முடியும என்பதையும கணடறிய ஏறத்தாழ எலலா நாடுகளும் மிகவும் முனைப்பாக முயலுகின்றன. அவை ஒவ்வொரு நாட்டின தொழில உற்பத்தித் திறனையும் பிற நாட்டின அலலது நாடுகளின் தொழில் உறபத் தித் திறனோடு ஒப்பிட்டுத் தம் தம் முயற்சிகளை இனனும் முனைபபாக்க முயலுகினறன.

தொழில உறபத்தித திறனை மிகுதிப்படுத்தும் சாதனங்களாகக் கீழே குறிப்பிடப்பட்டிருப்பவை பயனபடுகினறன. அவை, 1) அறிவியல் அடிப்படை யிலான நிருவாக முறையையும், பயிற்சியையும் பயன படுத்துதல், 2) ஒரு பணியை விரைவாகவும், மிகநல்ல முறையிலும செயவதை நிருணயிக்கத்தக்க கால ஆய்வுகள் (Time Studies), பணி ஆய்வுகள (Work Studies), இயகக ஆய்வுகள் (Motion Studies) ஆகிய வறறைப பயனபடுததுதல், 3) தொழில முனைவோர், தொழிலாளர் ஆகியோரிடையே மிகவும் இணக்கமான தொழில உறவுகளை ஏறபடுததுதல, 4) கூலி, ஊக் கத்தொகை (Bonus) போன்றவற்றைத் தொழிலா ளர்களுக்குத் தருதல், தொழிலாளர்களின் கூட் டுப் பேரததை (Collective Bargaining) ஆத ரிததல, நிருவாகிகளும தொழிலாளர்களும் அவ் வப்போது தொழில் சிககலகளைப் பற்றிக் கலந்துரை யாடிவேறுபாடுகளைக களைநதுகொள்ளுதல், நிருவா கத்தில் தொழிலாளர்கள பஙகேறறல், தொழிலாளர் களுக்குப் பலவிதமான பயிறசிகளை அளித்தல், தொழிலாளர் நலத்திட்டஙகளை நடைமுறைப்படுத்து தல் போனறவறறைப் பயனபடுத்துதல், 5) உறபத்தி முறையில ஒருநிலைப்படுத்தும் போக்கைத் தோற்று விததல (Adoption of standardisation), சிறப்புத் தேர்ச்சிககான வாய்ப்புகளைத் தோற்றுவிததல, ஒவவொரு நிலையிலும் உறபத்தித் தரக் கட்டுப்பாட் டுச சோதனைகளை மேறகொள்ளுதல் போனறவற றைப் பயனபடுத்துதல, 6) செலவுக் கட்டுப்பாடு, தரக் கட்டுபபாடு (QualityControl)எனபவற்றை ஒவவொரு நிலையிலும் கவனமாகப பயனபடுத்துதல, 7) பணி நிலைகளை மேம்பாடு அடையச்செய்தல, 8) தொழி லாளாகளுககுப் பயிற்சி அளித்தல எனபனவாகும்.

உறபத்தித் திறனை மிகுதிப்படுத்துதல் என்றால் தொழிலாளர்கள நீணட நேரம உழைக்க வேணடும்

அல்லது முன்பைக்காட்டிலும் கடுமையாக உழைக்க வேண்டும் என்றதொரு கருத்தும் நிலவுகிறது. இக் கருத்து தவறானது என்பதைப் பலரும் சுட்டிக்காட்டி யுள்ளனர். தொடக்கநிலையில் புதிய முறைகளைக் கையாளும்போது பல இடர்கள் ஏற்படுவது இயல்பே. ஆனால், உழைப்பாளர்களை நீண்ட நேரம் உழைக்கச் செய்வதோ, கடுமையான உழைப்பை மேற்கொள்ளச் செய்வதோ தொழில் உற்பத்தித் திறன் அதிகரித்தல் என்பதின் உள் ளார்ந்த கருத்து அன்று. புதிய முறைகளையும், புதிய சாதனங்களையும், புதிய முயற்சியோடு திறம்படப் பயன்படுத்தி உற்பத்தியின் அளவை மிகுதிப்படுத்து வதையே உற்பத்தித் திறன் பெருக்கம் என்ற கருத்து குறிப்பிடுகிறது. உற்பத்தித் திறன் பெருக்கத்தின் அடிப்படை நோக்கம் உற்பத்தியின் அளவை அதி கரிப்பது மட்டுமல்லாமல், தொழிலாளர்களின் பணிக் காலத்தைக்குறைத்து, ஓய்வு நலத்தை மிகுதிப்படுத்து வதும் ஆகும்.

தொழில் உற்பத்தித் திறனைப் பல காரணிகள் நிருணயிக்கின்றன.

**1)தொழில்நுட்பம்:** தொழில் உற்பத்தி முறை களிலும், தொழில் நுட்பத்திலும் பல மாறுதல்கள் விரைந்து தோன்றுகின்றன. மனித ஆற்றலைப் பயன் படுத்திய இடத்தில் இயந்திர ஆற்றலைப் பயன்படுத்து வதை எடுத்துக்காட்டாகக் குறிப்பிடலாம். மிக மிக வேகமாக முன்னேறிவரும் அறிவியல் கண்டுபிடிப்பு களினால் தொழில் நுட்ப மாற்றங்கள் காற்றிலும் கடிய வேகத்தில் தோன்றுகின்றன. மின் ஆற்றல், அணு ஆற்றல், தானியங்கி இயந்திரங்கள் என்று புதுப்புது நுட்பங்கள் தோன்றுவதால் தொழிலாளர் கள் அவற்றைப் பயன்படுத்தித் தொழில் உற்பத்தித் திறனை எளிதில் மிகுதிப்படுத்தலாம்.

**2)தொழிலாளரின் திறன்:** மாறிவரும் நிலைகளுக் கேற்பத் தொழிலாளர்கள் தத்தம் திறமை, பயிற்சி, தகுதி, கடுமையாக உழைக்கும் இயல்பு போன்ற வற்றைப் பெருக்கிக்கொண்டு வருகின்றனர். வளர்ந்த நாடுகளிலுள்ள இத்தகைய தொழிலாளர்களைப் போலவே வளரும் நாடுகளில் உள்ள தொழிலாளர் களும் தங்களிடம் உள்ள வசதி வாய்ப்புகளைப் பயன் படுத்திக்கொண்டு திறனை மிகுதிப்படுத்துகின்றனர். இந்நிலையும் தொழில் உற்பத்தித் திறனைப் பெருக் கத்தக்கதே.

**3) நிதி வசதிகள்:** தொழில் நுட்பத்தில் புதியன கண்டுபிடித்தல், புதியன புகுத்துதல், பல்வேறு வித மான ஆய்வுகளை மேற்கொள்ளுதல் போன்றவற் றிற்கு நிதி வசதிகள் மிகவும் அடிப்படையானவை. அதாவது, நிதி வசதிகள் பெருகியிருப்பதும் தொழில் உற்பத்தித் திறனுக்கு உதவும் துணையானதொரு நிலையாகும்.

**4) உற்பத்தி அமைப்பின் அளவு:** உற்பத்தி அமைப்பின் அளவு சிறியதாக இருந்தால் அகச் சிக்க னங்கள், புறச் சிக்கனங்கள் போன்ற பல நன்மை களைப் பெறுவதும் அதன்மூலம் உற்பத்தித் திறனை மிகுதிப்படுத்துவதும் இயலாமற் போகலாம். எனவே, தொழில்கள் பேரளவுத் தொழிலகளாகவும், உற்பத்தி யின் அளவுகள பேரளவிலும் இருப்பின் தொழில் உற்பத்தித் திறன் மிகுதியாக இருக்கும் வாய்ப்புகள உண்டு.

**5) இயற்கை நிலைகள்:** தொழில் உற்பத்தித் திறனை நிலவியல அமைப்பு, தட்ப வெப்ப நிலைகள போன்ற இயற்கைக் காரணிகளும் ஓரளவுககு நிருண யிக்கின்றன. நிலமும், இயற்கைச் சூழ்நிலைகளும், தட்பவெப்ப நிலைகளும் துணையானவையாக இருப் பின் தொழில் உற்பத்தித் திறனும் மிகுதியாக இருக் கும் வாய்ப்புகள் உணடு. ஆனால், அறிவியல் முன் னேற்றத்தின் விளைவாக இயற்கை இன்னல்களை யும் துணையான நிலைகளாக்கும் முயற்சிகளும் ஓரளவுக்கு வெற்றியடைந்து தொழில் உற்பத்தித் திறன் பெருக உதவியுள்ளது.

**6) நிருவாகம்:** தொழில் உறபத்தித் திறனை நிருணயிக்கும் மிகச் சிறப்பான காரணி நிருவாகம். சிக்கனமாகவும், பயனுள்ளனவாகவும், விரைவானவை யாகவும் உள்ள பல முடிவுகளை நிருவாகம் செய்வனே செய்தால் தொழில் மேம்பாடு அடைந்து தொழில் உற்பத்தித் திறன பெருகும்.

**7) சமுதாய, பொருளாதாரக் காரணிகள்:** நாட்டில் நிலவும் சமுதாயப் பண்பாட்டு நிலைகளும், நிலையக் காரணிகளும் (Institutional Factors), பருப்பொருள் சார்ந்த வாழ்க்கை பற்றிய கருத்துகளும், உற்பத்திக் காரணிகள் கிடைத்தல், சொத்துரிமை, வாரிசு உரிமை, வாழ்க்கைத்தரம், வருமானம், சேமிப்பு, நுகர்வு, நாட்டம் போனற பல்வேறு சமுதாய பொருளாதாரக் காரணிகளும் தொழில் உறபத்தித் திறனை நிருணயிககின்றன.

**8) அரசின் கொள்கைகள்:** காவல அரசுகளாக இருந்த அரசுகள் இன்று மக்கள் நலம் நாடும் பொது நல அரசுகளாகவும், விரைவான பொருளாதார வளர்ச்சியைப் பெறும் ஆர்வம் உடையவைகளாகவும் இருக்கின்றன. எனவே, துணையான பல கொள்கை களையும், கோட்பாடுகளையும் கடைப்பிடிப்பதன மூலம் தொழில் உற்பத்தித் திறனைப் பெருக்கும் முயறசிகளில் ஈடுபடலாம்.

**இந்தியாவில் தொழில் உற்பத்தித் திறன் இயக்கம்:** வளரும் நாடுகளில் ஒனறான இந்தியப் பெருநாடு

அதன தொழில உற்பத்தித் திறனைப் பெருக்குவதில தொடக்கநிலை தொட்டு மிகுந்த ஆர்வம் காட்டி வருகிறது, பல சாதனைகளையும் சாதித்து வருகிறது. இந்தியா ஒரு வேளாணமை நாடு. அது அரசியலில தன்னாட்சி பெற்றபோது தொழிலதுறையில் வளாச்சியடையா நிலையில இருந்தது. ஆனால, தொழில உறபததிப பெருக்க இயக்கத்தின் விளைவாக இப்பொழுது உயர்நத நிலையை நோககி விரைநது சென்று கொணடிருககிறது.

முதனமுதலாக 1952-ஆம ஆண்டில உறபத்தித திறன பெருக்க இயககம் தோற்றுவிக்கபபட்டு வலுவடையத் தலைபபட்டது துணித் தொழிலிலும், பொறியியல தொழிலிலும் இவவியக்கம விரைநது பயன்படுத்தப்பட்டுப் பலன் கிடைததது. இவவியக்கததின் சாாபாளர்கள சப்பான் நாட்டுக்குச சென்று வநதபின் அதன் அறிக்கையை 1957-ஆம் ஆணடு மார்ச்சுத் திங்களில் அரசுக்கு அளித்தனர். அதன்பின உற்பத்தித் திறனைப் பெருக்கும் முயறசி மேன மேலும் விரிவுபடுததப்பட்டது. டாகடா விகரம சாராபாய் (Dr. Vikram Sarabai)தொழில் உறபத்தித் திறன் பெருக்க வழிமுறைகளைப் பரிநதுரைக்கும் படி கேட்டுக்கொளளப்பட்டார். சப்பான உறபததித திறன மையம (Japan Productivity Centre), ஐரோப்பிய உற்பத்தித் திறன குழு (European Productvity Council) போனறவறறைப போனறு இந்தியாவிலும் ஓர் அமைபபை உருவாகக நடவடிககைகள மேற்கொளளப்பட்டன. உற்பததித் திறனைப் பெருககுதல, உள்நாட்டு, பனனாட்டு நிதித தோற்றுவாயகளை உறபத்தித திறனைப் பெருககப் பயனபடுத்தத் தக்க உததிகளின்மூலம் தோற்றுவித்தல, திறமபட்ட தொழில்நுட்ப உதவிகளைத தருதல் போனற பல செயல் நோக்கங்களுடன தேசிய உறபததித திறன குழு (National Productivity Council) ஒன்றை நிறுவவேணடுமென டாக்டர் விகரம் சாராபாய் குழு பரிநதுரைத்தது அக்குழுவில நிருவாகிகள, தொழிலாளர்கள், வலலுநாகள, ஆயவாளாகள, அரசுச் சாாபாளர்கள் ஆகியோரும் மறறும பலரும் இடம பெறறிருக்கவேணடும் எனறும பரிந்துரைக்கபபட்டது. அதன அடிபபடையில தேசிய உற்பததித் திறன் குழு 1958-ஆம் ஆணடில் நிறுவப்பட்டது அதைத்தொடநது. உளளூர் உற்பததித திறன் குழுக்களும்(Local Productivity Councils) நிறுவபபட்டன. மேலும், 1958-ஆம ஆணடு மார்சசு திங்களில் நாட்டில தொழில் உற்பததித் திறனைப் பெருகக ஓர் எட்டு அம்சத் திட்டம் வகுக்கப்பட்டுச் செயறபடத் தொடங்கியது. மேலும், 49 உளளூர் உற்பத்தித் திறன் குழுககளும் ஏறபடுததபபட்டுச செயற்படத் தொடஙகின.

இநதிய உற்பத்தித் திறன ஆணடாக (India productivity Year) 1966-ஆம ஆணடை அறிவிததுத தொழில உறபததித திறனைப் பெருகக எல்லா முயறசிகளையும அரசு மேற்கொணடது. கல்கத்தாவில உள்ள இந்தியப் புளளியியல கழகம் (Indian Statistical Institute, Calcutta), அகமதாபாதில உள்ள துணித தொழில ஆராய்ச்சிக கழகம் (Textile Research Association, Ahmedabad), கோயமபுததூரிலுளள தென் இநதியத் துணிததொழில் ஆராயசசிக கழகம (South Indian Textile Research Association, Coimbatore), ஐதராபாதில் உளள நிருவாகப் பயிறசிக கலலூரி (Administrative Staff College, Hyderabad), கரக்பூரியில உளள இநதியத தொழில நுட்பக கழகம (Indian Institute of Tecnology, Kharagpur), தில்லியில உளள இநதியத் தர நிறுவனம (Indian Standards Instition, Delhi), பம்பாயில உளள தாட்டா சமூக இயலகள கழகம் (Tata Institute of Social Sciences, Bombay) போனற பல நிறுவனஙகள தொழில உறபததித திறனைப பெருகக முயனறு வருகினறன.

இந்தியா 13 உறுபபினர்களைக் கொணட ஆசிய உறபத்தித் திறன அமைபபின் (Asian Productivity Organisation) உறுபபினா எனற முறையில 1970-ஆம் ஆணடை 'ஆசிய உறபத்தித திறன' ஆணடாகக (Asian Productivity Year) கொணடாடியது. 6,7-ஆம் திட்டக காலஙகளில இந்தியாவின தொழில உற்பததித திறனை மிகுதிபபடுத்தப்பல முயற்சிகளை இநதிய நாடு மிகவும் முனைப்புடன மேறகொணடிருககிறது.

என.எஸ.பா.

**துணை நூல்கள :**

Kuchhal S C., The Industrial Economy of India, Chaitanya Publishing House, Allahabad, 1987.

Sivayya, K V. & Das, V B.M , Indian Industrial Economy, S. Chand & Co., New Delhi, 1987.

***தொழில் உறவுகள்.*** தொழிலகளில நிருவாகததினர், தொழிலாளர்கள எனற இரு பிரிவினர் செயறபடுவா. இவவிரு பிரிவினரிடையே நிலவும் உறவுகளைத் தொழில உறவுகள (Industrial Relations) எனலாம். இவ்வுறவுகள் நல்லுறவாக அமையப் பெறின தொழில வளம பெருகும்; அமையப் பெறாவிடின் தொழில நலிவுறும

நிருவாகததில பஙகுபெற முடியாத நிலையில தொழிலாளர்கள இருககினறபோது இவவிரு பிரிவினரின எணணஙகளும, செயல்களும வெவவேறு விதமாக அமைநதுவிடலாம். தொழிலாளர் ஒனறு திரண்டு தஙகள உரிமைகளுக்காகப் போராடுவதையும, ஆதாயம பெறுதல் என்பதையே முதன்மையான குறிக்கோளாகக கொணடு தொழிலாளர்களுககுரியதைக் கொடுககாமல ஏமாறறிச செல்வம்

சேகரித்துககொணடு நிருவாகிகள செயறபடுவதையும் பெருந்தொழில்களில் இயலபாகக் காணமுடிகிறது. இந்நிலையில நிருவாகிகளுக்கும் தொழிலாளாகளுக்கு மிடையே நலலுறவுகள இருப்பதிலலை. தொழில உறவுகள சீராக இருந்தால வேலைநிறுத்தம, கத வடைப்புப் போனற விருமபத்தகாத நிலைகளைத தவிாத்துவிடலாம். கதவடைப்பு, வேலைநிறுததம போனற நிகழசசிகளினால தொழிலாளர் குடுமபங களில் உறவுச் சிதைவுகளும் குழப்பஙகளும் இழபபுக களும் ஒருபுறம தோனற, உற்பத்திக் குறைவு, பொரு ளாதாரச் சிக்கலகள் போன்றவை மறுபுறம் தோனற மொததத்தில யாவரும் விரும்பாத சூழ்நிலைகள உருவாகினறன.

பெருமபாலான நாடுகள இக்காலத்தில திட்ட மிடட வகையில் விரைவான பொருளாதார முன னேறறம, சீரான செல்வ வருமானப் பங்கீடு, சமுதாய நீதியுடன கூடிய பொதுநலம போனற பலவற்றையும் பெறப் பாடுபட்டு வருகினறன இவறறைப் பெறத தொழில் உறவுகள செம்மையாக இருக்கவேணடியது மிகவும் அவசியம என்பது அறிஞர்தம கருத்து. இரு சாராரும் ஒருவரின சிககலகளை மற்றவாகள் புரிநது கொணடு மனம திறநது பேசி, மனிதாபிமானத தனமையுடன நடந்துகொண்டால இவவினிய உறவு களை எளிதில் பெறலாம்.

தொழில உறவுகள செமமையாக இருநதால தொழிலதுறை மட்டுமலலாமல நாடு முழுவதும நலல வளாசசியைப் பெற வாய்பபுகள தோனறும சமுதா யத்தின ஒவவொரு பிரிவினரும தததம நலனகளை மட்டுமலலாமல எல்லாப் பிரிவு மககளின நலனகளை யும மனத்திற கொணடு செயற்படும்போது தொழில நலலுறவு சமுதாயததின நல்லுறவுக்கு வழிவகுககும் எனபதைப் பலரும் வலியுறுத்துகினறனர். எனவே, தொழில நலலுறவுகளை ஏறபடுததவும், நிலை பேறு கொளளச்செய்யவும அரசுகளும், தொழிலாளா அமைப்புகளும் பலப்பல முயற்சிகளை மேறகொணடு வருகினறன. அணமையில் ஒருசில ஆணடுகளில் இம முயறசிகளின பலனாக இழப்புகள குறைநதிருப்பதை அட்டவணை எண 1. காட்டுகிறது.

**அட்டவணை எண. 1**

**கதவடைப்பு, வேலை நிறுத்தம் ஆகியவற்றால் ஏற்பட்ட மனிதநாளகள் இழபபுகள் (Mandays Lost): (எண்களா: மிலியன் கணக்கில்)**

| ஆணடுகள | இழப்புகளின எணணிககை |
|---|---|
| 1980 | 21.9 |
| 1981 | 36.6 |
| 1982 | 74.6 |
| 1983 | 46 9 |
| 1984 | 30 8 |

இருப்பினும் 1975-84-ஆம் ஆண்டுகளுககான கணக்கைப பாாககும்போது, கதவடைப்புகளாலும் வேலை நிறுததஙகளாலும் ஏறபட்ட மனிதநாட்கள இழப்புகளின போக்கு (Trend in Mandays Lost) 1975, 1976, 1980, 1984 ஆகிய ஆணடுகள் தவிரப பிற ஆணடுகளில் அதிகரித்துக்கொணடே செனறிருப பது புலனாகிறது

**தொழில் உறவுகளைச் செம்மைப்படுத்துதல.** தொழில் உறவுகள சீாகெடுமபோது அவற்றைச் சீராககப் பல வழிகள கையாளப்படுகினறன. இரண டாம் உலகப பெரும போருக்கு முனபு இந்தியாவில இநதியப பாதுகாப்புச சட்டத்தின (Defence of India Rules) அடிபபடையில் கட்டாயமான தீர்பபுகளை வழஙகுவதனமூலம தொழில் தகராறுகள தீாககப்படுவதுமிகவும இயலபான முறையாக இருநது வந்தது. இந்தியாவில 1947-ஆம ஆணடில் 'தொழில தகராறுகள சட்டம' இயற்றபபடடது அதனடிப படையில நூறறுககும மிகுதியான தொழிலாளர்கள உளள தொழிறசாலைகளில் தொழிலாளாகளின சாாபாளாகளையும், நிருவாகததின சார்பாளா களையும் கொணட பணிக் குழுக்கள (Works Committees) அமைககப்படவேணடிய நிலை தோற்று விக்கப்படடது. இததகைய பணிக்குழுககள மேற கொள்ளத்தகக, தலையிடத தேவையறற பணிகள 1960-ஆம ஆணடில வரையறை செயயப்பட்டன. ஆனால, இக் குழுககளின பரிநதுரைகளை நிருவாகம கட்டாயம ஏற்றுக்கொளளததான வேணடுமெனற நியதி இலலா திருந்ததால தொழில உறவுகள சீா கேட்டைத தவிர்க்க முடியவிலலை எனவே, உறவு களைச் சீராககப பல முயற்சிகள மேற்கொளளப் பட்டன அவறறுள சில பினவருவன

**அமைதிப்படுத்துதல்.** சமாதானப்படுத்துதல அல லது அமைதிபபடுத்துதல (Conciliation) என்ற அடிப் படையில தொழில தகராறுகளைத தீர்க்கப் பல முயறசிகள மேறகொள்ளப்பட்டன இருசாராரின் கருததுகளையும பொறுமையுடன முழுமையாகக் கேட்டறிந்து, கருத்து வேறுபாடுகளைச சிறிது சிறி தாகக் குறைததுக்கொணடே வநது, இறுதியில இரு சாராரும ஏறறுக்கொளளத் தககதொரு தீர்ப்பை நடு நிலைமையிலுளள ஒருவர் அலலது ஓர் அமைப்பு தரு வதையே அமைதிபபடுததுதல் என்பர்.

**நடுவர் தீர்ப்புக்கு விடுதல்:** இருசாராரும் தஙகள் தஙகள் சார்பிலான விவாதங்களைத் தெரிவித்து விட்டு நடுவா ஒருவரின தீர்பபுக்குக கட்டுபபடுதல

தொழில் உறவுகளைச் சீராக்கும் மற்றொரு முயற்சி யாகும். நடுவர் தீர்ப்பை ஏற்றுக்கொள்வதில் தன்னிச்சையாக ஏற்றுக்கொளவது, கட்டாயமாக ஏற்றுக கொள்வது என்ற இரு முறைகள உள்ளன.

**தீர்ப்பு வழங்கும் குழு:** தேசிய அளவிலான நடுவர் தீர்ப்பு வழங்கும் குழுவை (National Arbitration Board) அமைப்பதுபற்றிய விவாதம் 1965-ஆம் ஆண்டில முனைப்பாக இருந்தது அதனடிப்படையில 1966-ஆம் ஆண்டு பிப்பிரவரித திங்களில் தேசிய அளவில நடுவர் தீர்ப்பு முன்னேற்றக் குழுவை (Arbitration Promotion Board) அமைப்பதற்கான சூழநிலை உருவாகியது. பிறகு அரசினால நியமிக்கப்படும் உறுப்பினர்கள், தொழிலாளர்களின் சார்பாளர்கள, நிருவாகிகளின் சார்பாளர்கள ஆகியோரைக் கொண்ட ஒரு குழு அமைக்கப்பட்டது.

**முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள.** தொழில் உறவுகள் சீர்கெட்டபிறகு சீரமைப்பதைவிட முன்னெச்சரிக்கையாக உறவுகளை நன்கு பேணிக் காப்பது நன்று எனபதால் இவ்வழியிலும் பல முயற்சிகள மேற்கொள்ளபபடுவதுண்டு.

**ஒழுங்குமுறை விதிகள்:** கதவடைப்போ வேலை நிறுத்தமோ நிகழக்கூடாது, தொழில் உறவுகளைப பொறுத்தமட்டிலும் தொழிலாளர்களோ நிருவாகமோ எந்தவிதமான முடிவுகளையும தன்னிச்சையாக மேற்கொள்ளக்கூடாது. மெதுவாகப் பணியாற்றுதல (Go-slow Tactics) என்ற முறையைத் தொழிலாளர்கள மேற்கொள்ளக்கூடாது. வேண்டுமென்றே தொழிற்சாலைச் சொத்துகளுக்குச் சேதம் விளைவிக்கக்கூடாது. பயமுறுத்துதல், கட்டாயப் படுததுதல், துன்புறுத்துதல், தூண்டிவிடுதல போன்ற விரும்பததகாத முறைகளை இருசாராருமே கையாளக்கூடாது. சிககல்களைத தீரததுக்கொள்வதில் நடைமுறையில உள்ள அமைப்புகளையும, முறைகளையும் நனகு பயனபடுத்திக் கொள்ள வேண்டும். ஒப்பநதங்களும தீரமானஙகளும் மிக விரைவில் முடிக்கப பெற்று நிறைவேற்றப்பட வேண்டும். நல்லுறவுகளைக் கெடுக்கும் எத்தகைய நடவடிக்கைகளையும் தவிர்க்கவேண்டும என்ற பல அடிப்படைக் கோட்பாடுகளைக் கருத்திற்கொண்டு தொழிலாளர்களும் நிருவாகிகளும் தஙகளைத் தாஙகளே பல ஒழுங்கு நடவடிக்கைகளுக்குள கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டும் என்பது 1957-இல் கூடிய இந்தியத் தொழிலாளர் மாநாட்டில் வலியுறுத்தப் பட்டது. இவ்வொழுங்கு நடவடிக்கைகளை நிறைவேற்றும் வகையில் பல நிலைகளில் தீர்மானங்கள நிறைவேற்றப்பட்டு நடைமுறைப்படுததப்பட்டன.

**கூட்டுப் பேரம்:** வெப்சு (Webbs) என்பவர் 20-ஆம நூற்றாண்டுத் தொடக்கத்தில், தொழிலாளர்கள ஒன்றாக இணைந்து கூட்டாக நிருவாகத்தினருடன் பேச்சுவார்த்தை நடத்தி ஒருவரையொருவர் புரிந்து கொணடு செயற்படின தொழில் உறவுகள் சீராக அமையும் என்ற கருததை வெளியிட்டிருககிறார். தொழிலாளர்கள ஒனறுபட்டுத் தொழிறசாலைகளை அமைதது,அவறறினமூலம் உறபத்தித் திறனையும் ஊதியத்தையும் உயர்ததிக்கொளவதை நிருவாகிகளும தொழிலாளர்களும ஏறறுக்கொள்வது சிறப்பானது எனற கருத்து வலியுறுத்தபபடுகிறது.

**கூலி நிருணயக் குழுக்கள:** தொழில் உறவுகள சீர்கெடுவதற்கான காரணங்களில கூலியின அளவுகளும, கூலியை நிருணயிக்கும் முறைகளும, அவற்றோடு தொடர்புடைய சிககலகளும சிறப்பிடததைப பெறுகினறன. எனவே, தொழிலாளர்கள், நிருவாகிகள, அரசு ஆகிய மூன்று அமைப்புகளின சார்பாளர்களும ஒரு குழுவாகத் தஙகளை அமைத்துக்கொணடு சிககல்களுககான தீர்வுகளைக் காண முயலுவது நலல பலனைத தரத்தககதாகும். குறிப்பாக வளர்ந்துவரும இந்தியா போன்ற பொருளாதாரஙகளில விலைகள முனைப்பாக அதிகரிததுக் கொணடு செல்லும்போது பணத்தின வாஙகுந் திறன குறைந்து உணமைககூலி நிலை சரிந்து செல்லும்போது தொழிலாளர்களின் நலவாழ்வைக் கருதி ஊதியஙகளை அவ்வப்போது உயர்த்தவேண்டிய நிலைகள தோன்றுகினறன. இததகைய பணிகளை இந்தியாவில் நிறுவபபெறறுள்ள கூலி நிருணயக் குழுக்கள (Wage Boards) பல நிறைவேற்றி வருகினறன.

**தீர்மானங்களையும் ஒப்பந்தங்களையும் முறையாகச் செயற்படுத்துதல்:** ஒப்பந்தங்கள் மேற்கொளளப்பட்ட பிறகு, அவற்றை நிருவாகமோ தொழிலாளர்களோ முறையாகச் செயற்படுததத் தவறினால சிக்கல்கள் தோன்றி நல்லுறவுகள் முறியும். இந்நிலையைத் தவிர்க்க ஒப்பந்தஙகள விரைந்தும், முழுமையாகவும நிறைவேற்றபபடல் வேணடுமெனறு பலா வலியுறுத்துகினறனா.

**தொழிலாளர்களுக்கான தேசிய குழு:** இது 1969-ஆம் ஆணடில் அமைககப்பட்டது. தொழில் உறவுகளை மேம்படுத்தப் பல பரிநதுரைகளைத் தொழிலாளர்களுக்கான தேசிய குழு(The National Commission for Labour) தநதிருககிறது.

இநதியப் பாராளுமன்றத்தில 1926-ஆம் ஆணடில் தொழிற சஙகச் சட்டம்(The Trade Union Act, 1926), 1946-ஆம் ஆணடின தொழில் வேலை (நிலையான ஆணைகள்) சட்டம் (The Industrial Employment (Standing Orders) Act, 1946), 1947-ஆம் ஆண

டின தொழில தகராறுகள சட்டம் (The Indian Dispute Act, 1947) ஆகிய மூனறையும் ஒருங கிணைத்து 1978-ஆம் ஆணடின தொழில உறவுச் சட டம் (The Industrial Relations Bill, 1978) கொணடு வரப்பட்டது அதனடிப்படையில பலவேறு கருத் தரங்குகள, கலநதுரையாடலகள போனறவை நிகழ்ந்தன. சமுதாயத்தின பல பிரிவினரும இச் சட் டததின நிறை குறைகளைச சுட்டிககாட்டினா.

என எஸ்.பா.

**துணை நூல்**

Kuchhal S C., The Industrial Economy of India, Chaitanya Publishing House, Allahabad, India, 1987

*தொழில் செறிவு*: இககாலத தொழிலகளைத் தொடஙகி நடததுவதறகுப் பேரளவில மூலதனம தேவைப்படுவதால தொழில வளர்சசிக்குப் பொருளா தார ஆறறல் சிறப்பான இனறியமையாத ஒரு தகுதி யாக இருககிறது அதாவது, பொருளாதாரத் திறன் மிகுந்தோரே அலலது பொருளாதாரத் திறன மிகுநத அமைப்பே இககாலத தொழிலகளைத் தோறறுவிதது வளர்ச்சியடையச் செயய இயலும நிலை உளளது எனவே, தொழிலகளைத தொடஙகுதல, திறமபட நிருவகித்தல, இடர்களைத தாஙகுதல, மேன்மேலு மான வளர்சசிககுத துணையாக இருத்தல் போனற பலவறறிற்கும் துணையாக இருக்கும் செலவ வரு மான ஆற்றலையே தொழிறசெறிவு (Industrial Concentration) எனபர் அதன காரணமாகச செலவ மும வருமானமும் ஓரிடத்தில குவிவது ஓரளவுககு நனமைதரத தககதே ஆனால், இது அளவுககு மீறிச செல்லுமபோது இச செலவ வருமானக் குவிபபின் தீய விளைவுகளால சமுதாயம் கேடுறும ஆதலால, முற்றுரிமைப் பெருக்கம், தொழில செறிவு ஆகியவற றைக் கட்டுப்படுத்திச் சமுதாய நலனகளைக காபபது மிகவும இனறியமையாததொனறாகிறது.

தொழிலுககுத தேவையான மூலதனததைப் பல பஙகுகளாகப் பிரிததுப பலரிடமும பிரிததுக கொடுத தல், புதிய புதிய நிறுவனஙகள பலவிதமான தொழில களில ஈடுபடுவதை ஆதரித்தல, நிறுவனஙகள இணைநது பெரும் நிறுவனங்களாக மாறி முறறு ரிமை அமைப்புகளாக உருமாறுவதைத் தவிர்ததல், ஒவவொரு நிறுவனமும ஆதாயம் பெறுவதை மட டும் குறிக்கோளாகக் கொளளாமல அதனதன் சமு தாயப்பொறுப்புகளையும(social responsibilities)உண ரும்படி செயதல் போனற முயற்சிகள தொழிலசெறி வின் விருமபத்தகாத விளைவுகளைக குறைக்கத்தக கவை.

அணமைக்காலத்தில் இநதியாவில் தனிபபட்ட மனிதாகளிடமும, தனியார் துறை நிறுவனங்களிட மும் பொருளாதார ஆற்றல குவிநதுவிடும் நிலை யைத் தவிர்க்கும் நோக்கத்தோடும், பொருளாதார ஆற்றலைப் பரவலாக்கும நோக்கோடும் அரசுத்துறை யான பொதுததுறை, பலவிதமான நடவடிக்கைகளை மேறகொணடு வருகிறது ஆனால, தனியார் துறையி லும், தனியாா துறைச செறிவுகள குறைக்கப்படும நோககததோடு செயறபட்டு வரும் பொதுத் துறையி லுமதொழில செறிவு பெருமளவுககுப பெருகிவிட்டது. அதன் விளைவாக அரசின அமைசசர்களிடமும், அதி காரிகளிடமும் பொருளாதார ஆறறல் செறிந்து காணபபடுகிறது. இநநிலையும் விரும்பத்தககதனறு. தனியாா துறையாக இருநதாலும, பொதுத துறை யாக இருநதாலும் பொதுமக்களின நலனகளுக்குக் கேடு விளைவிக்கும வண்ணம தொழில் செறிவைக் கொணடிருப்பது நலலதனறு எனபதையும், இந நிலையை எப்படியாவது மாறறியே தீரவேணடும் எனபதையும் பலரும வலியுறுத்துகினறனர்.

இநதியாவிலுளள உறபததி மூல வளஙகளின உரிமையும கட்டுபபாடும தனிபபட்டவாகளிடம் செறிநதுவிடக்கூடாது எனபதையும், அவை மிகவும பரவலாக எல்லா மக்களிடையேயும சமமாகப் பிரிநது அமைந்திருக்க வேணடும எனபதையும் இநதி யாவின அரசியல அமைப்புச சட்டம் தெளிவாகக குறிப்பிட்டுளளது. மேலும், இந்தியாவில நிறுவப் பெறும பொருளாதார முறையினாலும (Economic System), உற்பத்திச் சாதனஙகளைப் பயனபடுத்தும் முறையினாலும பெரும்பானமையான மககளின் நலனகளுககு எந்தவிதமான ஊறும விளையாதவண ணம் பொருளாதார நடவடிக்கைகளை முறைப படுத்த வேணடும எனற கருததும், சமதரும அனமப் பிலான சமுதாயததின (Socialistic Pattern of Society) எந்த நடவடிக்கையும தனியார் நலன்களை யும ஆதாயததையுமவிடப் பொது நலனகளையும், ஆதாயததையும் மிகுதிபபடுத்துவதாகவே அமைதல வேணடும எனற கருத்தும, பொருளாதார முனனேற றத்திறகான முயறசிகளினால தேசிய வருமானமும், வேலைவாய்ப்பும் அதிகரிபபதோடு செலவமும் வரு மானமும பொருளாதார ஆறறலும மக்களிடையே சமமாகப பகிர்நதளிக்கப்படும நிலையையும் தோறறு விககவேணடும எனற கருத்தும், பொருளாதார முன னேறறததின பெருமபகுதிப் பலன்கள சமுதாயததின அடிமட்டத்திலுளள மக்களுககுக கிடைக்குமபடி செயவதன மூலம் செலவ வருமான ஆறறல மேன மேலும பரவலாக்கப்படவேணடும் எனற கருத்தும் அரசியல சட்டததில் வலியுறுத்தப்பட்டுளளன. இக் கருத்துகளையே இந்தியாவின 1956-ஆம் ஆணடுத் தொழிலகொளகைத் தீர்மானமும் (Industrial Policy Resolution, 1956) உறுதி செய்திருககிறது.

சுதந்திர இநதியாவில் தொழில செறிவு ஆதரிககப பட்டு வந்துள்ளது. அதாவது திறமையும உறபத்தி ஆறறலும் மிகுதியாகும் எனறு எதிாபாாககப்பட்ட போதும, அநநிய உற்பத்தி அமைபபுகளோடும வாணிகக கழகஙகளோடும் இணைநது செயற்படும் போது உள்நாட்டுத் திறன பெருக வாய்பபுகள ஏற படுமெனறு எதிர்பார்ககப்பட்டபோதும் தொழில களின பலவிதமான இணைப்புகளை அரசு ஆதரிதது வநதிருககிறது. ஆனால், அததகைய ஆதரவினால தோன்றும தொழில இணைப்புகள சமுதாயததின பொது நலனுக்குத் தீஙகு விளைவிப்பதாகத் தோன றும போது அதாவது சமுதாயத்தின ஒட்டுமொதத நனமைக்குக கேடு விளைவிககுமபோது தொழில இணைப்புகளை அரசு ஆதரிககாமலும் தடைசெய தும் கட்டுபபடுத்தியும வநதிருக்கிறது.

இந்தியாவின முதல இரணடு ஐநதாணடுத திட் டஙகளினால (1951 முதல 1961 முடிய) தோனறிய தொழில செறிவு எநத அளவுக்குப பொது நனமை களைப பெருககியிருக்கிறது எனபதை ஆயநதறிய 'வருமானப் பகிாவு, வாழ்ககை நிலைக குழு' (Distribution of Income and Level of Living Committee) ஒன்றை 1960-ஆம் ஆணடு அகடோபர் திங்களில டாக்டா பி.சி மகலனோபிசு (Dr.P C. Mahalanobis) தலைமையில் இந்தியப் பேரரசு நியமித்தது. நிலைமை களை நுணுகி ஆராய்ந்த இக்குழு முதல் இரணடு ஐநதாணடுத் திட்டக்காலங்களில தனியாா துறை யில் செல்வ வருமானச செறிவு மிகுதியாக இருநத தாகக் குறிப்பிட்டது. பிற நாடுகளில் நிலவிய அள வுககு இல்லாவிட்டாலும இந்தியாவில 1951-58-ஆம் ஆண்டுகளில் தனியார் துறையில் இத்தகைய செறிவு மிகுதியான அளவில் பெருகியிருநததைககுழு சுட் டிக்காட்டியது.

இநதியாவின் தலைமை நீதிமன்றத்தின (Supreme Court of India) நீதிபதிகளில் ஒருவரான கே சி. 'தாசு குப்தா (K.C. Das Gupta) தலைமையில முற்றுரிமை விசாரணைக் குழு (Monopolies Enquiry Commission) ஒன்று 1964-ஆம் ஆணடு ஏபபிரல் திஙகளில் அமைக் கப்பட்டது. வேளாணமை தவிரப் பிற துறைகளிலான செறிவிற்கான காரணிகளையும், அவறறின சமுதாய, பொருளாதார விளைவுகளையும் கணடறிதல. பொது மக்களுககு நனமையளிக்கும் வகையில் எந்தெநத வித மான சட்ட நடவடிக்கைகள மேற்கொளளபபடலாம என்பதைப் பரிந்துரைத்தல ஆகிய குறிககோள்களு டன் இக்குழு அமைககப்பட்டது. குழு அதன அறிக் கையை 1965-ஆம் ஆணடு அகடோபர் திங்களில் இநதியப் பேரரசுககு அளித்தது

குழு அதன் அறிக்கையில் தொழில செறிவிற்கான கீழ்வரும் பல காரணஙகளைக் குறிப்பிட்டுள்ளது அவை. 1) கூட்டுப் பஙகு நிறுமம (Joint Stock Company) அமைபபில தொழில நிறுவனஙகள் பேரளவில தோனறி வளாசசியடைநததும, பேரள வில உற்பததி நிகழும்போது தோனறும் அகசசிக் கனஙகள் (Internal Economies), புறச சிககனஙகள (External Economies) எனனும் நனமைகளும் தொழில செறிவிறகான அடிபபடைக் காரணஙகளில ஒன்று 2) நிருவாக மேலாணமைப் பதிலாண்மை முறையின (Managing Agency System) பெருக்கம், 3) பல வகைத் தொழில இணைபபுகளின (Industrial Combinations) பெருககம, 4) ஒரேமாதிரியான பணடங கள், பணிகள ஆகியவறறின உறபததி அமைபபுகளின நிருவாகஇயககுநாகள ஒருவரோடு ஒருவரை இணைத் துக கொளளும முறை, 5) திட்டமிட்ட வளாச்சியின விளைவாகத தோனறிய துணையான நிலைகள.

**தொழில் செறிவின அளவு** விசாரணைக் குழு அதன ஆயவுக்காக 100 விதமான பணடஙகளின உற பததி அமைபபுகளைத தோநதெடுததுப் பயனபடுத தியது அவறறில ஏறததாழ 65-இல தொழில செறிவு ஏறததாழ 75 விழுக்காடு வரையில இருபபதைக் குழு சுட்டிககாட்டியது.

**விளைவு** தொழில செறிவினால அரசியலில் ஊழலும, மககளிடையே மன நிறைவினமையும பெருகியிருநதாலும பொருளாதார விளைவுகள பொதுவாக மனநிறைவு அளிககததக்க வகையிலேயே இருந்தனவாகக குழு சுட்டிக்காட்டியது. இருப்பி னும் குறைகள களையபபடவேணடும் எனபதையும குழு வலியுறுத்தியது.

**குறைகளைக் களைதல்** தொழில் செறிவின குறைகளைக களைய நிலையான தொரு சட்டப் படியான அமைபபை (Permanent Legal Body) ஏற் படுத்த வேணடும எனறு குழு பரிந்துரைததது. அதோடு கீழக்காணும் கருத்துகளையும், குழு பரிந துரைததது அவை 1) தேர்தல செலவுகளுககாகத் தொழில அமைபபுகளை அரசியல கட்சிகள நாடு வதில் ஒழுகக நெறிமுறைகள கடைப்பிடிககப்பட வேணடும் 2) இறககுமதி, ஏறறுமதி உரிமஙகள் வழங குவதில நுகாவோர் நிலைகள கேடுறாமல கவனிததுக கொள்ள வேணடும். 3) சிறு தொழிலதிபர்களும் பல உரிமங்களைப பெறுமவகையில உரிமங்கள வழஙகல் எளிமையாககப்பட வேணடும். 4) சிறு தொழில்களுக்கும், கூட்டுறவுத் துறையில் அமைக்கப் படும் தொழிலகளுக்கும் ஆதரவு அளிக்கவேணடும்.

குழுவின் பரிநதுரைகளின அடிப்படையில் 1969-ஆம் ஆணடு திசம்பர் திங்களில் முற்றுரிமை மற்றும் தடைசெய்யத்தக்க வாணிக நடவடிக்கைகள சட்டம் (Monopolies and Restrictive Trade Practices Act,

1969) இந்தியப் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப் பட்டது. இப்போது முழுமையானதொரு முற்றுரிமைக் குழு (Monopolies Commission) ஏற்படுத்தப்பட்டுள்ளது. முற்றுரிமை வளர்ச்சி, தொழில் செறிவு பற்றிய எல்லா இயல்புகளையும் இக்குழு ஆராய்ந்து அரசுக்குப் பல பரிந்துரைகளைத் தருகிறது. அரசு அவ்வப்போது பல குழுக்களை நியமித்து அவற்றின் பரிந்துரைகளின் அடிப்படையில் நடவடிக்கைகளை மேற்கொண்டும், சட்டங்கள் பல இயற்றியும் தொழில் செறிவின் குறைகளைக் களைய முயன்று வருகிறது.

என.எஸ்.பா.

**துணை நூல்கள்:**

Kuchhal S.C., The Industrial Economy of India, Chaitanya publishing House, Allahabad, 1989.

Sivayya K.V., Das, V.B.M., Indian Industrial Ecnoomy. S. Chand and Co., New Delhi, 1987.

*தொழில் தகராறு*: தொழில தகராறு தொழிற்சாலைகள் தோன்றியவுடன் கூடவே பிறநத தாகும். தொழில் தகராறு (Industrial dispute) முதலாளித்துவ உற்பத்தி முறை வளர்ந்த சாலத்திலிருந்து நிருவாகத்தினருக்கும் தொழிலாளர்களுக்கும உலகம் முழுமையும் தோனறிய வேறுபாடாகும் என பது பொருளியல் அறிஞர் இராதகமசு முகர்சியின் கருத்தாகும். மூலதனத்திறகும் உழைப்பிற்கும் தோன்றிய இநத முரண்பாடு பெரிய தொழிற்கூடங்களில் உலகம் முழுமையும் ஏற்பட்டதாகும். பேராசிரியர் ஏ.சி.பிகு (A.C.Pigou) என்பர் தொழில் தகராறுகள் ஏற்படும் பல காரணஙகளுள் கூலி வேறுபாட்டால் ஏற்படுவது முதன்மையாகும் என்றார். தொழிலாளர்களின் உழைப்பிற்குத் தகுந்த கூலி கிடைக்கவில்லையென்றால் தொழில தகராறு ஏற்படுகிறது. இது கூலியை ஒட்டிய வேறுபாடாகும். பல வகுப்பினராகக் கூலியைப் பிரிக்கும் பொழுது அங்குக் காட்டப்படும் சலுகைகளால தகராறுகள் ஏற்படுகின்றன. வேலை விதிகளாலும் தொழில் தகராறு ஏற்படுகிறது. இவை தொழிற் பிரிவால் ஏற்படும் தகராறுகள் ஆகும். பொதுவாகப் பொருளாதாரக் காரணங்களுக்காகத்தான் தொழில் தகராறு ஏற்படுகிறது எனலாம்.

அரசியற் கொள்கை அடிப்படை, மனநிலை அடிப்படை ஆகியவற்றால் ஏற்படும் தகராறுகளைப் பொருளாதாரம் அல்லாத காரணங்களால் ஏற்படும் தகராறு எனலாம். பொருளியல் மேலத காரல் மார்க்சு,'முதலாளித்துவத தொழில்முறையில் உழைப்புச்சுரண்டப்பட உழைப்பின் மிகை மதிப்பை முதலாளி எடுத்துக் கொள்கிறான்; எனவே சுரண்டலுக்குப்பின் கிடைக்கும் கூலியைத் தான் தொழிலாளி பெறுகிறான் என்கிறார். காரல் மார்க்சின் மூலதனமும் பொதுவுடைமை அறிக்கையும் வெளிவந்த பின்னர் உலகத் தொழிலாளர்களிடத்தில் விழிப்புணர்ச்சி ஏற்பட்டது. தொழிலாளர்களின உரிமைப் போரட்டத்தின் வெளிப்பாடுகளில் தொழில் தகராறு ஏற்படுகிறது.

தொழில் தகராறு பல்வேறு கால கட்டங்களில பல நிலைகளில ஏற்பட்டுள்ளது. தொழிலாளர்கள் பெரும்பாலும் அதிக கூலி உயர்விலும், நல்ல நிலையில பணி அமைய வேணடுமென்பதிலும், பணிகள் உயர்வதிலும், பணியில் அமைதி ஏற்படுவதிலும, தொழிற்கூடத்தில் தொழிலாளர்களுடைய கருத்துகளும சிக்கல்களும் எதிரொலிக்க வேண்டும் எனபதிலும், கூலி நட்டம் ஏற்படாமல் பாதுகாக்கப் படுவதிலும், அதிக வேலை வாங்குவதைத் தடுப்பதிலும ஆர்வம் காட்டுகினறனர். நிருவாகத்தினர் இலாபத்தைப் பெருக்குவதிலும், அதன் காரணமாகத் தொழிலாளர்களுக்கு ஆகும் செலவினங்களைக் குறைப்பதிலும் ஆர்வம் காட்டுகின்றனர். இந்நிலையில, தொழிலாளர்கள தங்களின உரிமைகளை நிலை நாட்டவும், தங்களின குறைகளைத் தெரிவிக்கவும் வேலை நிறுத்தத்தை ஓர் அணுகுமுறையாக மேற்கொளகின்றனர்.

இங்கிலாந்து நாட்டில் பொருளாதாரக் காரணங்களுக்காகவும் தொழிலாளர்களின் மனநிலையைப் பொறுத்தும தொழிற் தகராறுகள் ஏற்படுகின்றன. இஙகிலாநதில, தொழிலாளர்களின நிலை மற்ற நாடுகளைவிட நனறாக இருப்பினும், தொழிலாளர்கள பெற்ற கல்வியினாலும், விழிப்புணர்ச்சியினாலும் சமுதாயத்தில் தங்கள் பங்கினைப் பற்றி விவாதித்துத் தங்கள உரிமைகளை நிலைநாட்ட முற்படுகின்றனர். மேலும், முதலாளி தொழிலாளி என்கிற ஆண்டான் அடிமை உறவை இங்கிலாந்துத் தொழிலாளர்கள அறவே வெறுக்கின்றனர். இந்தியாவில் தொழில் தகராறு அரசியல் காரணங்களுக்காக ஏற்பட்டாலும் பெரும்பாலான தொழிற் தகராறுகள் பொருளாதாரக் காரணங்களுக்காக ஏறபடுகினறன. விலைவாசி உயர்வுக்கிடையே கிடைக்கும குறைந்த கூலி,சகிக்க முடியாத அளவிற்கு வேலையின் தன்மை போன்ற காரணங்கள அதிக அளவில் வேலைநிறுத்தத்தை இந்தியாவில் தோற்றுவிககினறன. தேவையற்ற சணடைகள், வேலை நீக்கம், கூலியையும், வேலைப்பாதுகாப்பையும் நிருணயிப்பதில் கூட்டு முறையில் ஒப்பந்தம் ஏற்படும் முறை இல்லாதது, தொழிலாளர்களுக்கும் நிருவாகத்தினருக்கும் நெருங்கிய தொடர்பு இல்லாதது,சில நேரங்களில் மனிதத் தன்மை மிதிபடுதல் போன்ற காரணங்களினால் தொழில் தகராறுகள்

ஏற்படுகின்றன. இத் தொழில் தகராறுகள வேலை நிறுத்தத்திலும், தொழிற்சாலை மூடுதலிலும் முடிவடைகின்றன. இதனால் நிருவாகத்தினா, தொழிலாளர்கள் மட்டுமன்றிப்பொது மக்களுடன், சமுதாயமும் பாதிப்புக்கு உட்படுத்தப்படுகின்றது மேலும், இவ் வேலை நிறுத்தம ஒரு தொழிற்சாலையை மட்டுமல்லாமல் அதோடு இணைநது உறபத்தியில் ஈடுபடும மற்றத் தொழில்களையுமபாதிக்கிறது எடுததுக காட்டாக, நிலக்கரிச் சுரங்கத்தில் ஏறபடும் வேலை நிறுத்தம், நிலக்கரியை மூலப்பொருளாகப் பயன படுத்தும் எல்லாத் தொழில்களையும் பாதிக்கிறது.

இத்தொழில் தகராறுகள பொருளாதாரத்தின் நலத்திற்கு ஊறுவிளைக்கினறன எனறு ஏ.சி. பிகு குறிப்பிட்டார். இநதியா போன்ற நாடுகளில் தொழில் தகராறுகள் தொழில வளர்ச்சியை தடைபபடுத்துகின றன. வேலை நிறுத்தத்திற்கும், தொழிற்சாலையை மூடுவதறகும் சில சட்டஙகள மூலம உரிமைகள தரப்பட்டுள்ளன. மேலும், 1947-ஆம ஆண்டு நிறைவேற்றப்பட்ட தொழில தகராறு சட்டம (Industrial Dispute Act of 1947), வேலை நிறுத்தம், தொழிற்சாலை மூடல் போனற விதிகளைப பற்றிய விளக்கஙகளை அளித்துள்ளது.

தொழிறசங்கங்கள் தொழில் தகராறுகளைத் தீர்ப்பதில் பெரும் பங்கினை வகிக்கின்றன. ஒற்றுமையுள்ள தொழிற்சங்கங்கள் சிறந்த முறையில கூலியை நிருணயிப்பதிலும், தொழிலாளர்களுககு வீடு, கல்வி, சுகாதாரம் போனற பல வசதிகளையும், பாதுகாபபையும் பெற்றுத தருவதிலும், சிறப்பாகச் செயற்பட முடியும். வருமுன் தடுத்தல் (Prevention of Industrial Dispute)எனற கொளகையை அடிப்படையாகக கொணடு நிருவாகததினரும தொழிலாளர் சட்டஙகளைப் பயன்படுத்தித தொழில தகராற்றைத் தவிாக்கலாம. ஆனால், இநதியாவில தொழில் தகராறறை வருமுன தவிர்ககும் பாங்கு சிறபபாக அமையவில்லை.

சில நாடுகளில் நிருவாகக் குழுவில தொழிலாளா களை இணைத்துத தொழில் அமைதியை உருவாக்கியுள்ளனர். இவ்வமைப்பு முறையைக கூட்டுப்பஙகுதாரர் முறை (Co-partnership) எனறுகுறிப்பிடுகிறாா கள். பணிக்குழுக்களை (Works Committee) அமைத்துத் தொழில தகராறுகளைத் தீர்க்கும் முறை அமெரிககா, இங்கிலாந்து போன்ற நாடுகளில நடைமுறைப்படுத்தப்படுகிறது. இந்தப் பணிககுழுக்கள கூட்டுறவு முறையில் விரைந்து பணியாற்றுவதறகுத் தொழிலாளர் இயக்கங்களை ஊக்குவிப்பதுடன், அன்றாடப் பணிகளின் நிருவாகத்திற்கும தொழிலாளர் களுக்கும் நட்பு முறையை உருவாககுவதைத் தலையாய கடமையாகக் கொண்டும் செயற்பட்டு வருகின் றன. தொழிற் தகராற்றைத் தீர்க்கும் முறைகளாக விசாரணை முறை, கட்டாய நடுவர் முறை(Compulsory mediation) தொழில் தகராறறைப் பேசித் தீாக் கும முறை போனறவை செயற்படுததப்படுகின றன.

இநதியாவில் கி பி. 19-ஆம் நூற்றாணடில் பெரும அளவில் வேலை நிறுத்தங்கள நடைபெறவில்லை. முதல வேலை நிறுத்தம் கி பி 1882-ஆம ஆண்டில் பமபாய்த துணியாலையில நடைபெறறது மற்றொரு மாபெரும வேலைநிறுத்தம் மீணடும பமபாயில் கி.பி. 1897-ஆம் ஆணடில் நடைபெறறது கொளளை நோய பாதிக்கப்பட்டவாகளுககு நோயக காலத்தில நாட் கூலி வழஙகபபட்டது ஆலை முதலாளிகள இம் முறையை மாறறிக கொடுத்தமையால் இவவேலை நிறுததம நடைபெற்றது. முதல உலகப் போருக்குப பின இநதியாவில் தொழில தகராறுகளின எண ணிக்கை உயர்நதது. போருக்குப் பின விலைவாசி உயர்வு ஏற்பட்டதனாலும், வாழக்கைதரம் உயர்நத தனாலும இவ்வேலை நிறுத்தஙகள் நடைபெற்றன. 1918, 19, 20ஆம் ஆணடுகளில் இரணடு பெரிய வேலை நிறுத்தங்கள 6 வாரம நடைபெற்றன. சோலாப்பூரில் (Sholapur) 1920-ஆம் ஆணடில் நடைபெற்ற வேலை நிறுத்தத்தில் 16 ஆயிரம தொழிலாளர்கள பஙகேற்றனர். பின்பு, 1922-ஆம் ஆணடில நடைபெற்ற வேலை நிறுத்தத்தில் அஞ்சல் தொழிலாளாகள், தொடாவணடித் தொழிலாளர்கள் ஆகியோர் ஈடுபட்டனர். பம்பாயில 1929-ஆம் ஆண்டில் நடைபெறற வேலை நிறுத்தத்தில் பஞசாலைத் தொழிலாளா பெருமளவில் ஈடுபட்டனர். பொதுவுடைமைக் கட்சி இநத வேலை நிறுத்தத்திற்குப பின்னால் இருந்து ஊக்குவித்தது. இவ் வேலை நிறுததங்களின காரணமாகத்தான 1929-ஆம் ஆண டில் வணிகத் தகராறு சட்டம (Trade Dispute Act of 1929) இயற்றப்பட்டது.

இரணடாம் உலகப் போரின போது (1940-45) தொழில் தகராறு மிகக் குறைவாக இருந்தது. காரணம் இநதியப் பாதுகாப்புச் சட்டததினபடி தொழில் தகராறுகள தீர்ககப்பட்டன. இந்திய விடுதலைககுப் பின பல தொழிற்சாலைகள் தொடஙகப்பட்டன. தொழிற்சாலைகள பெருகப் பெருக எண்ணிக்கைக்கு ஏற்றவாறு தொழில் தகராறுகளும் பெருகின. இந்திய அரசியல சட்டம் நலக்கொளகையை (Welfare Policy) ஏற்றுக் கொணடதனால் மத்திய மாநில அரசுகள பல தொழிற் பாதுகாப்புச் சட்டங்களை இயறறின.இச்சட்டங்கள,தொழில்தகராற்றைக்குறைபதற்குப்பயனபடுகின்றன. மேலும் பல்வேறு மாநில அவிலான தொழில் உறவுச் சட்டங்கள் உருவாயின.

ஐந்தாண்டுத் திட்டங்கள இந்தியாவில் நிறைவேற்றப பட்ட பொழுது தொழிலாளர் நலனுக்காகப் பல நடவடிக்கைகள மேற்கொள்ளப்பட்டன. பொதுத துறையில பணியாற்றும் தொழிலாளர்கள் கல்வி, சுகாதாரம், வீடு போனற வசதிகளைப் பெற்றனர். நிருவாகத்திற்கும் தொழிலாளர்களுக்கும ஏற்படும சிக்கல்களைத் தீர்ப்பதற்குப் பல தீர்ப்பு மன்றங்கள (Tribunal)உருவாக்கப்பட்டன. தொழில் தகராற்றைத் தீர்ப்பதற்கு 1948-ஆம ஆண்டு இயற்றப்பட்ட தொழிற்கூடச சட்டததினபடி நல அதிகாரிகள (Welfare Officers) நியமிக்கப்பட்டனா. இந்த நல அதிகாரிகள 500க்கு மேற்பட்ட பணியாளர் பணிபுரியும் எல்லாத் தொழிற் கூடஙகளிலும் உள்ளனர். மாநில அளவில் தொழிலாளர் ஆலோசனை வாரியங களும் (State Labour Advisory Boards) உள்ளன. இவ்வாறாகப் பலவேறு அமைப்புகளின மூலம தொழில தகராறுகளைத் தீர்க்கும் முயற்சிகள் மேற கொள்ளப்படுகின்றன. மு நா.

**துணை நூல்:**


Bhagoliwal, T.N., Economics of Labour and Social Welfare, Sahitya Bhawan, Agra, 1974.


## தொழில் தகராறு பேசித் தீர்த்தல்:

தொழில் தகராற்றினைத் தீர்ப்பதற்குப பல அணுகுமுறைகள உள்ளன. அந்த அணுகுமுறைகளுள ஒன்றுதான தொழில தகராற்றினைப் பேசித் தீர்த்தல (Arbitration) ஆகும். தொழில தகராற்றினைப் பேசித தீர்க்கும் முறையில் ஈடுபடும நடுவர் தொழிலாளர் முதலாளி இருவருக்கும் நடுநிலையாக இருந்து நேர்மையான முறையில சிக்கலைத் தீர்க்க வேண்டும. தொழில் தகராற்றினைப் பேசித் தீர்க்கும் முறையில இரு வகைகள உண்டு. தாமாக முன்வந்து பேசித தீர்க்கும் முறை (Voluntary arbitration) முதல முறையாகும். கட்டாயமாகப் பேசித் தீர்ப்பது மற்றொரு முறையாகும். பேசித் தீர்த்தலின முக்கிய குறிக்கோள, எதிர்ப்பட்டு நிற்கும் இரண்டு குழுவின ரையும அழைத்து அவநம்பிக்கையைப் போக்கி, அவர்களின சிக்கல்களை ஆராய்ந்து இருதரப்பினரும ஒப்புக்கொள்ளும் ஒரு திட்டத்தைக் கொண்டு வருவதாகும். எனவே, இத்தொழில் தகராற்றினைப பேசும நடுவர், இருதரப்பினருக்கும் நிலைமைகளை விளக்கி ஆலோசனைகள் வழங்கிப் பரிந்துரைகளைக் கூறித் தவிர்க்கக் கூடிய தகராறுகளைத் தவிர்ப்பார். தொழில் தகராற்றினைப் பேசித்தீர்த்த பின் இரு தரப்பினரும் ஏற்றுக் கொண்டு தொழில் அமைதிக்கு உறுதுணை புரிவா.

தொழிலாளர் கழகங்கள் உறுதியாக அமைந்துள்ள நாடுகளில் பெரும்பாலும் தாமாகவே முன்வந்துபேசித் தீர்க்கும் முறை கையாளப்படுகிறது. இந்திய விடுதலைப் போரில் பெரும் தலைவராக விளங்கிய மகாத்மா காந்தி இம்முறையை வலியுறுத்தினார். அகமதாபாதில் ஆலைத் தொழிலாளர்களின்வேலை நிறுத்தத்தின் போது காந்தி தாமாக முன்வந்து தொழில் தகராற்றில பேசித் தீர்க்கும் முறையை வலியுறுத்தியதனால் இம்முறை மிகவும் புகழ்பெற்றது. பல மாநிலங்கள இம்முறையை ஏற்றுக் கொண்டுள்ளன. தொழில் தகராறு சட்டத்தின் 10 (அ) பிரிவு 1947-ஆம் ஆண்டில இம்முறையை மற்றத் தொழில் தகராற்றினைப் பேசித் தீர்க்கும முறைகளோடு ஏற்றுக் கொண்டுள்ளது பின்பு, 1967-ஆம் ஆண்டு மைய அரசு தேசிய தொழில தகராறு பேசித் தீர்க்குமவாரியத்தை(National Arbitration Promotion Board) அமைத்தது இருந்தும், தாமாகவே முன்வந்து தொழில் தகராற்றினைப பேசித தீர்க்கும் முறை இந்தியாவில்வெற்றி பெறவில்லை என்பதும் உண்மை. ஏனென்றால், பேசித் தீர்க்கும் முறையில் தோல்வி ஏற்பட்டால சட்ட முறையாக இயங்கும மற்ற அமைப்புகளின மூலம் சிக்கல்களை அணுகும் வாய்ப்பு இருப்பதால இம்முறை உரிய வெற்றிகளைப் பெற முடியவில்லை. மேலும், இருவருக்கும் நம்பிக்கையான நடுவர் எளிதாகக் கிடைக்காததும், எளிமையான விதிகள இல்லாததும், மலிந்த சட்டச் சிக்கல்களும் இம்முறையின் குறைபாடுகளாகும்.

மற்றொரு முறையான கட்டாயமாகப் பேசித் தீர்க்கும முறை சட்ட முறையிலானதாகும். தொழிலாளர் கழகங்கள வலுப்பெறாமல இருக்கும் நாடுகளில இம்முறை கையாளப்படுகிறது நியூசிலாந்து, ஆசுத்திரேலியா ஆகிய நாடுகளில் இம்முறை வெற்றிகரமாகக் கையாளப்படுகிறது. சட்டத்தின மூலம் கட்டாயப்படுத்தும் இப்பேசித் தீர்த்தல் முறையில பல சிக்கல்களும் உள்ளன காரணம் இம்முடிவு துணையாகவோ கேடாகவோ அமைந்து விட்டாலும், இம முறையின மூலம் வெளிவரும் நன்மை தீமைகளைத் தொழிலாளரும் நிருவாகத்தினரும் ஏற்றுக் கொள்ள வேண்டும. இரு தரப்பினரும் பேசித் தீர்த்து ஒப்புக் கொள்ளும் (Collective Bargaining) கூட்டு முறையின் அடிப்படையில, தொழில் தகராறுகளைக் கட்டாயமாகப் பேசித் தீர்க்கும் முறையைப் பெரும்பாலான நாடுகள் ஏற்றுக்கொள்வதில்லை. மேலும் இம்முறை நீண்ட காலத் தொழில் தகராற்றிற்கும வழி வகுக்கிறது. காண்க: தொழில் தகராறு. மு.நா.

**துணை நூல்கள:**


Bhagoliwal, T N., Economics of Labour and Social Welfare, Sahitya Bhawan, Agra, 1974.

David W.Pearce, The Dictionary of Modern Economics, ELBS, Macmillan, 1985.

*தொழில் துறை*: தொழில என்பதற்கு மன நிறைவான இலக்கண வரையறை ஒன்றினை அளிப்பது எளிதன்று மனிதன் ஈடுபடும் அனைத்து நடவடிக்கைகளையும தொழில் என்று கருதுவோர் உளர். ஆனால, பொருளாதார முறையில் தொழில என்பதற்குத் தனிப் பொருள உணடு ஒரே மாதிரியான பொருளை உருவாக்கும பல நிறுவனங்களின் ஒரு தொகுதியைத்தான தொழில் துறை (Industrial sector) என்று பொருளாதார நிபுணாகள் கருதுகின்றனர். எடுத்துக்காட்டாகப் பருத்தித தொழிலைக் குறிப்பிடலாம். பருத்தியைத் தயாரிக்கும் பல நிறுவனங்கள நாட்டில உள்ளன அவைகள ஒன்றாகத் தொகுத்துக கூறப்படும்போது பருத்தித தொழில் என்று கூறப்படும்.

ஒரு நாட்டின தொழில் வளர்ச்சி, அந்நாட்டு மக்களின தேவையையும், பொருளாதார வளர்ச்சியையும் சார்ந்துள்ளது. மனிதனின் தேவைகள் குறைந்த அளவு உள்ளபோது அடிப்படைத் தொழில்களான வேளாண்மை, மீன்பிடித்தல் ஆகியவை மனிதத் தேவைகளை நிறைவு செய்கின்றன மற்றத் தொழில்கள் வளர்வதற்கு ஊக்கமோ வாயப்போ இருப்பதில்லை. ஆனால், மனிதத் தேவைகள பெருகும் போது புதிய தொழில்களை வளர்ப்பதற்கு இன்றியமையாமை ஏற்படுகிறது. இந்த நிலைதோன்றும் போது வேளாண்மையில் ஈடுபட்டிருக்கும் தேவைக்கு மேற்பட்ட உபரி உழவர்கள் புதிதாகத் தொடங்கப்படும் தொழில்களில பயன்படுத்தப்படுகின்றனா. ஒரு தொழிலின துரித வளர்ச்சி மற்றத் தொழில்களின் வளர்ச்சிக்கு வழிகோலுகிறது. எடுத்துக்காட்டாக, உந்துவண்டித் தொழிலின் வளர்ச்சி, உந்துவண்டிகளின் உபயோகத்தை மக்களிடையே பெருக்குகிறது. எனவே, வாகனங்களின் தேவை வளர்ந்து செல்கின்ற காரணத்தால் அவற்றின் உற்பத்தி பெருகுகின்றது. அதனால, வாகனங்களை உற்பத்தி செய்யத் தேவைப்படும காரணிகளான இரும்பு, கச்சாப் பொருள்கள, பாறை எண்ணெயப் பொருள்கள் ஆகியவற்றின் தேவை உயர்கின்றது அதன் விளைவாக, இரும்பு, பாறை எண்ணெய்ப் பொருள் தொடர்புடைய தொழில்களின் வளர்ச்சியும் மேம்படுகின்றது. இத்தொழில்களின் வளர்ச்சி. தொழில் நுட்ப(Technology) வளர்ச்சிக்கு வித்திடுகிறது. தொழில நுட்பம் ஒரு தொழிலிலிருந்து மற்றத் தொழிலுக்குப் பரவுகின்றது. அதனால், தொழில் வளர்ச்சியின வேகம மிகுதிப்படுகின்றது. தொழில வளர்ச்சியின் காரணமாக மக்களின் வேலை வாய்ப்பு, வருமானம, தேவை, நுகர்ச்சி, உற்பத்தி ஆகியவை மேலும பெருகுகின்றன.

பெருகிவரும தொழிலின் அமைப்பு நாட்டிற்கு நாடு வேறுபடுகிறது. 1. வேளாண்மை, வேட்டையாடுதல், காடு வளர்த்தல், மீன்பிடிக்கும் தொழில, 2. சுரங்கத் தொழில் (Mining), 3. உற்பத்தி செய (Manufacturing) தொழில், 4 கட்டுமானத் தொழில் (Construction), 5 மின்சாரம், வாயு, தண்ணீர் உற்பத்தி செய்யும் தொழில, 6. போக்குவரத்து, செய்தித் தொடர்பு தொழில, 7. மொத்த விற்பனை, சிலலறை விற்பனை, உணவு விடுதித் தொழில, 8 நீதித் தொடர்பான தொழில, 9. சமுதாய, தனியார் தேவைத் தொழில்கள. இவற்றை 1. வேளாண்மைத் துறை (Agricultural sector), 2. தொழில துறை (Industrial sector), 3. சேவைத் துறை (Serving sector) என்ற மூன்று முக்கிய பெருந் துறைகளாகப் (Sectors) பிரிககலாம்.

இததுறைகளையும் தொழில்களையும் கீழே காட்டப்பட்டுளள படத்தின மூலம் விளக்கலாம்.

**தொழில் துறை**: தொழில் துறையில் கீழ்க்காணும் தொழில்கள் அடங்குகின்றன 1 சுரங்கம், 2. உற்பத்தி செய்தல், 3. கட்டுமானத் தொழில், 4. மின்சாரம, வாயு, தண்ணீா.

**சுரங்கத் தொழில்;** சுரஙகத் தொழில் பூமியில புதைந்து கிடக்கும் கனி வளஙகளை வெளிக்



கொணர்ந்து மனிதனுக்குத் தேவைப்படும் வகையில் பணிபுரிகிறது. இத்தொழில் நாட்டின் மற்றந்தொழில்களுக்கெல்லாம் ஓர் அடிப்படைத் தொழிலாக அமைவதால், அரசாங்கம் பல சட்ட திட்டங்களால் இயற்கையின் வளங்களைப் பேணிக்காக்க முயற்சி செய கிறது. சுரங்கத் தொழிலில் குறைவான தொழிலாளர்கள் வேலை-செய்கின்றனர்.

**பண்டங்கள் உற்பத்திப் பணிகள்:** இத்தொழிலில ஈடுபட்டிருக்கும் தொழிறசாலைகள கச்சாப் பொருள்களை, இயந்திர அல்லது இரசாயன மாற்றங்களினால் முழுப்பொருள்களாக மாற்றும் பணியில் ஈடு பட்டுள்ளன. இத்தொழிற்சாலைகளிலிருந்து வெளி வரும் முழுப் பொருள்கள கச்சாப் பொருளகளின பயன்பாட்டினை விட அதிகப் பயன்பாடு உளளன வாக இருக்கும். உற்பத்தி செய்யப்படும் முழுப் பொருள்கள் மனிதநுகர்வாகவோ மற்றத் தொழிற்சாலைகளுக்குத் தேவைப்படும் உட்பொருளாகவோ பயன்படும். இத்துறையின் கீழ் அடஙகும் முக்கிய தொழில்களாவன:

1. உணவு, பானங்கள, புகையிலை, பருத்தி, சணல், உடை, தோல் பொருள்கள், தட்டுமுட்டுப் போன்ற மரப் பொருளகள.

2. காகிதம், காகிதத்தால் செய்யப்படும் பொருள்கள், அச்சிடுதல, வெளியிடுதல், இரசாயனம், பாறை எண்ணெய்ப் பொருளகள், நிலக்கரி, இரப்பர் நெகிழிப் பொருள்கள் (Plastic), ஆதார உலோகம், இயந்திரம், துணைக்கருவிகள் தயாரிக்தும் தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிற்சாலைகளும் இவ்வுற்பத்தித் தொழிலில் அடங்கும்.

**மின்சாரம், வாயு, தண்ணீர்:** இவை சமுதாயத் தேவைகளை (Social wants) ஒட்டு மொத்தமாக நிறைவு செய்ய உதவுகின்றன. எனவே, இந்த மூன்று தொழில்களும் ஒரு நாட்டின சமூகப் பொருளாதார வளர்ச்சியில் பெரும்பங்குவகிக்கின்றன. பெரும்பாலும் இவையனைத்தும் அரசின் வசம் அல்லது அரசின் கட்டுப்பாட்டுக்குள் கொணடு வரப்படும். இவற்றின் விலையை முடிவு செய்வதில் அரசு மிக முக்கிய பங்கு வகிக்கின்றது. இவை அனைத்தும் மக்களின் இன்றியமையாத தேவைகளை நிறைவு செய்வதால், அரசு இவற்றின் உற்பத்திக்குச் சலுகை விலை கூட அளிக்கலாம்.

**கட்டுமானத் தொழில்:** இத்தொழில் வளர்ந்து வரும் நாட்டில் மிக முக்கிய பங்கினை வகிக்கிறது. கட்டுமானத் தொழிலை இரு வகையாகப் பிரிக்கலாம்.ஒன்று, கட்டடங்கள் கட்டுவது-வீடுகள், வணிகக் கட்டடங்கள் கட்டுவது இதில் அடங்கும். மற்றொன்று பெருங் கட்டுமானம்-நெடுஞ்சாலைகள் அணைகள் கட்டுவது, மினசார வேலைகள செய்வது ஆகியவை இரணடாம் வகையில் அடங்கும்.

**தொழில்துறையின் சிறப்பு:** ஒரு நாட்டின் சமூக முன்னேற்றத்தில் அந்நாட்டின் தொழில்துறையும் அதன வளர்ச்சியும் சிறப்பான பங்கு வகிக்கிறது பின்தஙகிய, வளர்நதுவரும் நாடுகளில் இதன் பங்கு இன்னும் மிகுதியாக உளளது.பெரும்பாலான வளரும் நாடுகளில் தொழில் வளர்ச்சி, பொருளாதார வளர்ச்சியின ஓர் அடிப்படையான நோக்கமாகவே அமைந்துளளது. பொருளாதார வளர்ச்சிக்குத் தொழில்துறை வளர்ச்சி பினவரும் வகைகளில் உதவுகின்றது.

முதலாவதாக, நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரததை (Standard of living) உயர்த்தத் தொழில் துறை பயனபடுகிறது. வாழ்க்கைத்தரம, தனி ஆள் உண்மை வருமானத்தை (Per capita real income) அல்லது உற்பத்தி உயாவைப் பொறுத்துள்ளது. குறைந்த வளர்ச்சியுள்ள நாடுகளில் வேளாணமைத துறையை நம்பியே வாழககைத் தரமும், தனிமனிதா வருமானமும் பெரும அளவில் அமைந்துள்ளன. மக்களுக்கு மிகவும் இன்றியமையாத உணவுப் பொருளை அளிப்பதோடு, நாட்டின தேசிய வருமானததிறகு வேளாணமைததுறைபெரும்பங்கினையும் அளிக்கிறது. எனவே, மக்களின் தனிமனிதர் வருமானம் உயர்வதற்கான ஏறபாடும் முயற்சியும் வேளாண்மைவளர்ச்சியின மூலமாகத்தான் பெறப்பட வேண்டும். ஆனால, வேளாணமைத் துறையோ தொழில துறையின்வளர்ச்சியைச் சார்ந்து அமைநதுளளது ஏனெனில்,வேளாண்மை உறபத்திக்குத் தேவையான இரசாயன உரங்கள், பூசசி மருந்துகள், துணைககருவிகள், இயந்திரங்கள் ஆகியவற்றைத் தொழில துறைதான் அளிக்க முடியும். மேலும், வேளாணமைத துறையில் தேஙகிக் கிடக்கும மிகை உழைப்பாளர்களை அத்துறையிலிருந்து நீக்கி அவர்களுக்கு இலாபகரமான வேலை வாய்ப்பினைத் தொழில துறை உருவாக்கித் தருகின்றது. அதனால், வேளாணமைத் துறையில எஞ்சியிருககும்தொழிலாளர்களின் உறபத்தித் திறன அதிகரிப்பதால் மொத்த உற்பத்தியும் பெருகுகின்றது. இவவகைகளில் தொழில் துறை வேளாண்மைத்துறைக்குப் பணிபுரிந்து மக்களின் தனிமனிதா வருமானமும் வாழ்க்கைத் தரமும் மேலோங்க அடிகோலுகிறது

இரண்டாவதரக, மக்களிடையே காணப்படும் தொழில் பொருள்களுக்கானதேவையை நிறைவு செய யத்தொழில் துறை வளர்ச்சி பயன்படுகிறது. வளரும் நாடுகளில், மக்கள தங்கள் வருயானத்தின் பெரும் பகுதியை வேளாண்மை உணவுப் பொருள்களுக்குச் செலவிடுகின்றனர். ஆனால், அவர்கள் வருமானம பெருகப் பெருகத் தொழில் துறைப்பொருளகளின்மீது

அவர்களின் நாட்டம் செல்கிறது. அதனால், வருமானத்தில ஒரு பகுதியைத் தொழில் துறைப்பொருள களுக்குச் செலவிட முற்படுகின்றனர். இந்தத் தேவையை நிறைவு செய்ய வேணடுமானால் தொழில் துறை வளர்ந்து தொழில் உற்பத்தி பெருக வேணடும்.

மூன்றாவதாக, ஒரு நாட்டின வளர்ச்சி வேகம விரைவாக்கப் படவேண்டுமானால், அது தொழில் துறையின் வளர்ச்சியினால்தான் முடியும். தொழில், துறையில், மனிதன் தனது முயற்சியினாலும், மிகவும் வளர்ந்துவரும் தொழில் நுட்ப நுணுககத்தாலும் அதிக பொருளாதாரப் பொருள்களைக குறைநத நேரத்தில், குறிப்பிட்ட கால அளவில் உற்பத்தி செய்ய முடிகிறது. எனவே, நாட்டின தேசிய வருவாய் பெருகும் வாய்ப்புகள தோனறுகின்றன.

நான்காவதாக, தொழில் துறையின் மூலமாக மிக்க இலாபம் கிடைககிறது. அதனமூலம் சேமிபபும் மூலதனத் திரட்சியும் (Capital formation) உருவாகின்றன. இந்த மூலதனத் திரட்சி மேலும் பொருளாதார வளர்ச்சியை மிகுதிப்படுத்த உதவுகிறது.

இறுதியாகத் தொழில துறை முனனேறும்போது அந்நாட்டின் வாணிகம், செய்தித் தொடர்பு, நுகர்வு, நாகரிகம், ஆகியன வளர்ச்சியடைகின்றன. நகரங்கள் பெருகுகின்றன. அதனால், பல்வேறு சமூக பொருளாதார மாற்றங்கள் விரைவில் ஏற்படுகின்றன.

**இந்தியத் தொழிற்றுறை:** இந்தியா ஒரு வேளாண்மை நாடு. இருப்பினும சுதநதிரம் அடைந்ததற்குப் பிறகு இந்நாட்டினைத் தொழில மயமாக்க அரசு பல நடவடிக்கைகள மேற்கொணடு வந்துள்ளது. அதனால், இந்தியத் தொழிற றுறை இன்று உலக அரங்குகளிலே பீடு நடைபோடும் அளவிற்கு வளர்ந்துளளது. உலகத்தின முதல் நிலையில உள்ள தொழில் நாடுகளுள் ஒன்றாக இநதியா விளங்குகிறது. இநத வளர்ச்சிக்குப் பல காரணஙகள் துணையாக இருக்கினறன. வேளாண்மைத் துறையில் ஏற்பட்டிருந்த கணிசமான வளர்ச்சி, தொழில் வளர்ச்சிககுத் தேவைப் பட்ட கசசாப் பொருளகளையும், தொழிற் பொருள் களின தேவைகளையும் உருவாக்கியது. அடிப்படை வசதிகளான சாலைப போக்குவரத்து, தொடர்வண்டிப் போககுவரத்து, மினசக்தி போன்றவை அளிக்கப பட்டன. பலதிறன கொணட தொழிலாளா அளிப்பு, தொழில்நுட்பம, தொழில் முனைவோன் திறன், நன்றாக நிறுவப்பட்ட மூலதன் அஙகாடி, அரசாங்க நிதி உதவி, சுமூகமான தொழிற் கொளகை, ஏற்றுமதி இறககுமதிக்கொள்கை, தொழில் அனுமதிக் கொள்கை ஆகியவை தொழில் வளாச்சிக்கு ஊக்கமளித்தன. இந்திய ஐந்தாணடுத் திட்டஙகளும், அவற்றின மூலம் மேற்கொளளபபட்ட பணிகளும் இந்தியத தொழில வளர்சசிக்கு ஊக்கமளித்தன. ஒவ்வொரு திட்டத்திலும் தொழில் வளர்ச்சிக்கான பண ஒதுககீடு பினவரும் அட்டவணையில் காட்டப்பட்டுளளது போலப் பெருகி வநதுள்ளது.

| வரிசை எண் | ஐந்தாணடுத் திட்டம் | திட்டச் செலவு (உரூ. கோடியில்) | தொழில் துறைக்கு ஒதுக்கப்பட்ட தொகை (உரூ. கோடியில்) | சதவீதம |
|---|---|---|---|---|
| 1. | முதல் ஐந்தாணடுத் திட்டம் (1951-56) | 1960 | 78.4 | 4% |
| 2. | இரண்டாம் ஐந்தாண்டுத்திட்டம் (1956-61) | 4600 | 920.0 | 20% |
| 3. | மூன்றாம் ஐந்தாணடுத் திட்டம (1961-66) | 8577 | 1716 0 | 20% |
| 4. | ஓராணடுத் திட்டங்கள் (1966-69) | 6526 | 1656.0 | 25% |
| 5. | நான்காம் ஐந்தாண்டுத் திட்டங்கள் (1969-1974) | 15902 | 3657.0 | 23% |

| 6. | ஐந்தாம் ஐந்தாண்டுத்திட்டம (1974-79) | 39322 | 10223 0 | 26% |
|---|---|---|---|---|
| 7. | ஆறாம் ஐந்தாண்டுததிட்டம் (1980-1985) | 97500 | 15015.0 | 15% |
| 8. | ஏழாம் ஐந்தாண்டுத் திட்டம் (1985-1990) | 180000 | 22460 83 | 13% |

திட்ட முயறசிகளின் காரணமாகக் கடநத 35 ஆண்டுகளில், தொழில் துறை ஏறத்தாழப் பத்து விழுக்காடு வளர்ச்சியை அடைந்துளளது இரும்பு, எஃகு உற்பத்தியில் உலகில மூன்றாம் இடத்தை யும், சருக்கரை உற்பத்தியில் நான்காம் இடத்தை யும், சணல் உற்பத்தியில் இரணடாம் இடத்தை யும் இந்தியா பெறறுள்ளது. மேலும, உரம்,தொடர் வண்டி இயந்திரம், தொடர்வண்டிப் பெட்டி, தொலைபேசி, பாறை எணணெய், கப்பல், விமானம், பெனிசிலின் மருந்து, இழுவண்டி, கொதிகலன்கள், செய்தித் தாள்கள், அச்சிடும் காகிதம், பல்வேறு கனரக எந்திரங்கள், மின்சார விசிறி, வானொலிப் பெட்டி, மிதிவண்டி,மின்சாதனப் பொருளகள், இரசா யனப் பொருள்கள், மருந்துகள், சிமெணடு, பெரும் எந்திரங்கள், இயந்திரக் கருவிகள், சுத்திகரிக்கப் படாத பாறை எண்ணெய், மின்னணு உலோகஙகள, மண்ணெண்ணெய், சமையல் எணணெய், பூச்சிக் கொல்லி மருந்துகள், நீர் இறைக்கும் இயந்திரங்கள் போன்ற பொருள்களைத் தயாரிக்கும் தொழிற் சாலைகளும் நன்கு வளர்ந்துள்ளன.

இந்தியத் தொழிற் றுறையைப் பலகோணங் களில் பல வகையாகப் பிரித்துப் பார்க்கலாம். முத லாவதாகத் தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் பொருள்களின் அடிப்படையில் தொழிற் றுறையை மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

**1. நுகர்ச்சிப் பொருட்களைத் தயாரிக்கும் தொழில்கள்:** சருக்கரை, தேயிலை, பருததித் துணி, மிதிவண்டிகள் போன்றவை இதில் அடங்கும்.திட்டம் தொடங்கியபோது நுகர்ச்சிப்பொருள்களின் உற்பத்தி மொத்தத் தொழில் உற்பத்தியில் 68 விழுக்காடாக இருந்தது. அதன் பங்கு இப்போது 25விழுக்காடாகக் குறைந்துள்ளது.

**2. நடுத்தரப் பொருள்களைத் தயாரிக்கும் தொழில்கள்:** சக்கரக் கட்டுகள், குழல்கள், வணணங்கள மெருகிடு பொருள்கள் ஆகியவை இத்தொழிலில் அடங்கும். இதன் உற்பத்தி ஏறக்குறைய 40 விழுக் காடாக உள்ளது.

**3. மூலதனப் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்கள்** பேருந்துகள், இரு சக்கர வண்டிகள் சரக்கு வணடிகள,இயந்திரக் கருவிகள், துணைக்கருவி கள ஆகியவை இத்தொழிலில் அடங்கும் இத்தொழி லின உறபததி ஏறக்குறையத்தொழில்உறபத்தியில் 20 விழுக்காடாக அமைநதுளளது. பொதுவாகத் திட்டக் காலத்தில் நுகர்ச்சிப் பொருளகளின் பங்கு குறைந் தும, நடுததரப் பொருள்கள், மூலதனப் பொருள்கள் ஆகியவற்றின பஙகு உயர்ந்தும் வருகினறது.

இரணடாவதாக, தொழிறசாலையில் செலவிடப் பட்டுளள முதலீட்டின் அடிப்படையில் தொழிற றுறையை மூனறு வகையாகப் பிரிக்கலாம்.

**1. சிறுதொழில்கள்** (Small Scale Industries):இத் தொழில்களில முதலீடு உரூ35 இலட்சத்திற்குக்குறை வாகத்தான் இருக்கும். இத்தொழில்கள மொத்த உற்பத்தியில் 14.5 விழுக்காட்டையும், மூலதனத்தில 4.9 விழுககாட்டையும்,வேலை வாய்ப்பில 32.1விழுக் காட்டையும் பெற்றுள்ளன. பெரும்பாலும் இத் தொழிற்சாலைகள் நுகர்ச்சிப் பொருள்களையே உற் பத்தி செய்கின்றன.

**2. மத்திய தரத் தொழில்கள்** (Medium Scal Industries): இவை நாட்டின மொத்த உற்பத்தியில் 4.2 விழுக்காட்டையும 5.8 விழுக்காடு வேலை வாய்ப்பினையும அளிக்கின்றன.

**3. பெருந் தொழில்கள** (Large Scale Industries)- இவற்றில் கோடிக்கணக்கான பணம செலவிடப்பட் டுளளது. இப்போது பெரும்பாலான பெருந்தொழில் கள் அரசின்கீழ் இயங்கிவரும் பொதுத் துறையில் உள்ளன.

மூன்றாவதாக,தொழிற்சாலையின நிறுவனஅமைப் பின் அடிப்படையில இந்தியத் தொழிற்சாலைகளை எட்டுவகையாகப் பிரிக்கலாம். அவை: 1) தனி ஒருவர் நிருவாகத் தொழிற்சாலைகள் (Industrial Proprietor-ship),2) பங்குடைமைத் தொழிற்சாலைகள் (Partner-ship), 3) பொது வரையறுக்கப்பட்ட நிறுவனங்கள் (Public Limited Companies), 4) தனியார் வரை யறுக்கப்பட்ட நிறுவனங்கள (Private Limited Com-panies),5)பொது நிறுவனங்கள்(Public Corporation),

6) நிறுவனத் தொழிற்றுறை (Corporate sector) 7) கூட்டுறவுத்துறை(Co-operative sector)8) மற்றவை.

நானகாவதாகத் தொழிற்சாலையின் நிருவாக முறை அடிப்படையில் தொழிற் றுறையை மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

1. பொதுத்துறை (Public Sector): நாட்டு மக்களின் நல வாழ்வினைக் கருத்திறகொண்டு அதன மூலம் தேசிய வளர்ச்சிக்கு உதவும் தொழிலகளும், தேசிய பாதுகாப்பு உற்பததித் தொழிலகளும், பொதுத் துறையில் அரசின கட்டுப்பாட்டில் இயஙகும் இநதியாவின துரித தொழில் வளர்ச்சிக்கு ஊன்று கோலாக இருப்பதும் இந்தியப் பொதுத் துறையே ஆகும்.

2. தனியார் துறை(Private Sector): பலகாலமாக இந்தியத் தொழிறறுறை தனியார் வசமே இருந்து வந் தது. பருத்தி, சணல், சருக்கரை, காகிதம, இரும்பு எஃகு ஆகியவற்றின் தொழிற் சாலைகள தனி யார் துறையில் தான முதலில் நிறுவப்பட்டன. கலப்புப் பொருளாதாரத் துறை அறிவிக்கபபட்ட பினபும், தனியார் துறையின் பங்கு மதிக்கப்பட்டது. ஆனால், அணமைக் காலத்தில் பொதுத் துறையின வளர்சசியைவிடத் தனியார் துறையின வளாச்சி குறைந்து வருகிறது.

3. கூட்டுறவுத் துறை (Cooperative Sector): பொதுத் துறையிலும், தனியார் துறையிலும் காணப் படும குறைபாடுகளை நீக்குவதறகாகக் கூட்டுறவுத் துறையை அரசு 1970-ஆம் ஆண்டுககுப் பிறகு தொடஙகியுளளது. மு.இரா.

துணை நூல்கள்:

Government of India, CSO, Annual Survey of Industries, Tables, 1978-79.

Hoftman, W.G., The Growth of Industrial Economics, Oxford University Press, London, 1958.

Mukherji, A.K., Economics of Indian Industry, S. Chand & Company (Pvt) Ltd, New Delhi, 1985.

Planning Commission, Seventh Five Year Plan, (1985-90) Vol.II.

Ruddar Datt & Sundaram, K.P.M., Indian Economy, S. Chand & Company, (Pvt) Ltd, New Delhi, 1987.

**தொழில் நிதிக் கழகம்**: நிதி ஆதாரங்கள் தாம் ஒரு நாட்டின பொருளாதார வளாச்சியின தன்மையை நிருணயிக்கினறன. மூலதன ஆக்கம் பொருளியல் வளர்ச்சிக்கு அடிப்படையாக அமை கிறது. நிதி இல்லாமல் பொருளாதாரத்தின் எந்தத் துறையும் வளர்ச்சி பெறாது. இந்தியாவின் தொழில் வளர்ச்சி பெருமளவில் ஏற்படாததற்குக் காரணம் போதிய நிதி வசதி இன்மையேயாகும். ஆங்கிலேய ஆட்சிக் காலத்தில் இந்தியாவினுடைய தொழில் வளர்ச்சி ஏகாதிபத்தியக் கொள்கையால் முடக்கி வைக்கப்பட்டது முதல் உலகப் போர்க் காலத்தில் ஐரோப்பாவில் நடந்த போர்க் காரணமாக இந்தியா விற்கு வரவேண்டிய பொருளகள் தடைபட்டன. எனவே, ஆஙகிலேய அரசு போர்க்கால நடவடிக்கை களுக்கும், ஏகாதிபத்தியக் கொளகைக்கும் உடன்படு கிற வகையில் தனியார் துறையில் சில தொழில் களை ஊக்குவித்தது.

இரணடாம் உலகப்போரின் முடிவுக்குப்பின் நிதி உதவி பெருமளவில தொழிலகளுக்குத் தேவைப்பட் டது. போாக்காலத் தொழில்களை நாட்டின் வளர்ச் சிக்கு மாற்றுவதற்கும், தொழிற்கூடங்களிலுள்ள பல இயநதிரஙகளை மாற்றுவதற்கும, பல தொழில் களைச் சீரமைப்பதற்கும், விரிவாக்கம் செய்வதற்கும நிதி உதவி தேவைப்பட்டது. அக் காரணங்களால இநதியத தொழில் நிதி நிறுவனம் 1948-ஆம் ஆண டில் நிறுவப்பட்டது. இந நிதி நிறுவனம் பெரும் தொழில்களுக்கு நிதி உதவி செய்யும் நோக்குடன உருவாக்கப்பட்டது. இந்தியத் தொழில நிதிக் கழகம் (Industrial Finance Corporation) எந்தத் தொழில நிறுவனத்திறகு நிதியுதவி செய்யவேணடும் என்ற வரையறையும் உருவாக்கப்பட்டது. இக்கழகத்தின சட்டபபடி தொழில நிறுவனம எனபது பொதுத் துறையில பணியாற்றும் நிறுவனஙகளும், கூட்டுறவுக் கழகஙகளும ஆகும்.

இந்தியாவில் பதிவு செய்யப்பட்ட மேற்கூறிய நிறுவனங்கள, பொருள உற்பத்தியில ஈடுபடும் நிறு வனங்களாகவோ கப்பல போககுவரத்து நிறுவனங் களாகவோ சுரஙகத் தொழிலில் ஈடுபடும நிறுவனங களாகவோ மின் உறபத்திப் பங்கீட்டு நிறுவனங்களா கவோ இருககவேணடுமெனக் குறிப்பிடப்பட்டது. இக் கழகத்தின் சட்டம் 1960-ஆம் ஆண்டு திருத்தப்பட்டு மேலும பல நிறுவனஙகள் நிதியுதவி பெறத் தகுதி அளிக்கபபட்டது. சிறு தொழில்களுக்கும், தனியார் நிறுவனஙகளுககும் இந் நிதிக் கழகத்தில் நிதி அளிக் கப்படுவதில்லை. இந்தத தொழில் நிதிக் கழகம் உரூ. 10 கோடி மூலதனத்துடன் தொடஙகப்பட்டது. பின னா மூலதனம உரூ. 20 கோடியாக உயர்த்தப்பட் டது இந்தியத் தொழில் முன்னேற்ற வஙகி (Industrial Development Bank of India), காப்பீட்டுக் கழ கஙகள (Insurance Companies), முதலீட்டு நிதி நிறு வனங்கள (Investment Trust), கூட்டுறவு வங்கிகள் (Co-operative Banks), குறிப்பிட்ட அட்டவணையில் சேர்ககப்பட்ட வஙகிகள (Schedule Banks) போன்ற

நிதி அமைப்புகள் இத் தொழில் நிதிக் கழகத்துடன் பங்குதாரர்களாக உள்ளன. மத்திய அரசு மூலதனத்தைத் திருப்பிச் செலுத்துவதற்கும் வட்டியைத் திருப்பி அளிப்பதற்கும் உத்தரவாதம் தருகிறது. மேலும் இந் நிதிக் கழகம் வெளிச் சந்தையில (Open Market) பத்திரங்கள், கடன் பத்திரங்கள் ஆகியவற்றை அளிப்பதற்கு அதிகாரம் வழங்கப்பட்டது. வெளிநாட்டு நாணயங்களை உலக வங்கி, உலக நிதி நிறுவனங்களிடமிருந்து வாங்குவதற்கும் அதிகாரம் அளிக்கப்பட்டது. மைய வங்கியிலிருந்து உரு 3 கோடி கடனாகப் பெறவும் அனுமதி அளிக்கப்பட்டது. இக் கடனை 18-மாதக் கால அளவுவரை இந் நிதிக் கழகம் வைத்திருக்கலாம்.

மூன்று சிறப்பான பணிகளைச் செய்யவேணடுமென்ற எதிர்பார்ப்புடன் இந் நிதிக்கழகம் தொடஙகப்பட்டது. அவை:- 1) தொழில் நிறுவனங்களுக்குக் கடன் வழங்குதல, 2) கடன் பத்திரங்களுக்கு உத்தரவாதம் அளித்தல, 3) மூலதனச் சந்தையில் தொழில் நிறுவனங்களுக்கு உத்தரவாதம் அளித்தல்.

தொழில் நிறுவனங்களுக்குக் கடன வழஙகும் முன்கடன் மனுக்கள் பரிசீலனைக்கு உட்படுத்தப்படுகின்றன. கடன வழஙகுவதற்குச் சில அடிப்படைகள் நிருணயம் செய்யப்படுகினறன. குறிப்பாகக் கடன் வழங்கப்படும் தொழில் நிறுவனம் இந்தியப் பொருளாதார வளர்ச்சிக்கு உதவியாக உள்ளதா, தொழில நிறுவனத்தின் உற்பத்திச் செலவு, மேலாண்மைத் துறையின சிறப்பு அம்சங்கள், கடனுக்குக் கொடுக்கப்படும் பிணையம், தொழில் நுட்பத் திறனாளர், மூலதனப் பொருள்களின் அளிப்புத்தன்மை, பொருளின் தரம், உற்பத்தி செய்யப்படும் பொருள் நாட்டிறகு எவ்வகையில் பயன்படுகிறது என்பன போன்ற பல தன்மைகளும் ஆராயப்படுகின்றன.

கடந்த 40 ஆண்டுகளில் இந்தியத் தொழில் நிதி நிறுவனம் நீண்ட கால முதலீட்டு நடவடிககைகளுககுப் பயன்பட்டு வந்திருக்கிறது. வணிக வங்கிகள மற்றக் தொழில் நிதி நிறுவனங்கள் போன்ற நிதி அமைப்புகள், பாதுகாப்பான முறையில்தான் தொழில் நிறுவனஙகளுக்கு நிதியுதவி அளித்து வந்திருக்கின்றன. எனவே, பெரும் தொழில் நிறுவனஙகள எளிதான முறையில் நிதிச் சந்தையில் நிதியைப் பெற முடிவதில்லை. அக் காரணஙகளால் இந்தியத் தொழில் நிதிக்கழகம் பெருந் தொழில் நிறுவனங்களுக்குப் பெருமளவில் நிதியுதவி அளித்துள்ளது. உரத் தொழிற்சாலைகள், சிமிண்டுத் தொழிற்சாலைகள், மின் உற்பத்தி நிறுவனங்கள், காகிதஆலைகள், தொழிற்சாலைக்குத் தேவையான இயந்திரங்களை உற்பத்தி செய்யும் தொழில்கள் ஆகியன நிதி உதவி பெறுவதில் முதலிடத்தைப் பெறுகின்றன. இந்தக் கடன்கள் உள்நாட்டுப் பணத்திலும், வெளிநாட்டுப் பணத்திலும் வழஙகப்பட்டன. சர்க்கரை ஆலை, சணல் ஆலைத் தொழில்களுக்கும் நிதி உதவி அளிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு இந்தியத் தொழில் நிதிக்கழகம் இந்தியப் பொருளாதாரத்தை ஊக்குவிக்கும் அடிப்படைத் தொழிலகளுக்குக் கடன வழங்கியுள்ளது.

இந்நிதிக் கழகம் உளநாட்டுப் பணத்தில் வழங்கும் கடன்களுக்கு 11.3 விழுககாடு வட்டியையும், வெளிநாட்டுப பணத்தில் வழங்கும் கடனகளுக்கு 11.5. விழுக்காடு வட்டியையும் பெறுகிறது. இநதியத தொழில் வளர்ச்சிக் கழகத்தைப் பறறிய திறனாய்வுகளும் உளளன. வட்டி விகிதம் மிகுதி என்பதும், கடன வழங்குவதில தாமதம என்பதும் கூறப்படுகின்றன. மொத்தத்தில் உரு. 2000 கோடி அளவுக்கு 1983-ஆம் ஆணடுவரை தொழில் வளர்ச்சிக்காக இக்கழகம் கடன் வழஙகியுளளது. மு.நா.

துணை நூல்கள்:

Kuchhal, S.C,. The Industrial Economy of India, Chaitanya Publishing House, Allahabad, 1982.

**தொழில் நுட்பக்கல்வி:** தொழிற்கல்வி மனித நாகரிக வளாச்சியோடு பொருந்தி வருவது; நாகரிக வளாச்சிக்குக காரணமாவது. நாகரிக வளர்ச்சியில் மூனறு படிநிலைகளைக் காணலாம. அவை வேளாணமை நாகரிகத் தொடக்கநிலை, தொழிலவளத்தின் இடைநிலை, உயர் தொழில் நுணுககவளர்ச்சி உயாநிலை எனப்படும. இயற்கை வளம், பொருள வளம், மனித வளம் எனப் பயன்படும் வளஙகளையொட்டி இவ்வளர்ச்சி நிலைகள மாறுபடும்.

அறிவு செயற்படும்போதே பொருளுடையதாகினறது; பயனுடையதாகின்றது. பயன்படுத்தப் பெறும் அறிவை அது பயன்படும பாங்கிலேயே பெறுதல் சிறப்பு. செயல்வழியில, தொழில் வழியில் பெறும் அறிவே பயனபடும் அறிவாகும். செயலோடு, தொழிலோடு படாத அறிவு வெற்றறிவே. அறிவு செயற்படும்போது பொருளாக்கம் கூடும்; பொருள்கட்குப் புதுப்பயன் அமையும். பொருளாக்கத்தாலும் புதுப்பயனகளாலும் அவற்றின் நுகர்வாலும் நாகரிகம வளரும்.

தொழிலையொட்டியே கல்வி அமையவேண்டும் என்பது காந்தியடிகளார் கண்ட ஆதாரக்கல்வியின் முக்கிய கோட்பாடாகும். தொழிற்கல்வியே ஆதாரக் கல்வி. இப்போது கல்வி பொதுககல்வி, தொழிற்கல்வி எனப் பிரிந்து போகின்றது. தொடக்கப் பள்ளிகளில் வேலையனுபவம், சமுதாயத்திற்குப் பயனபடும் உற்

பத்தித்தொழில் என்னும் வடிவிலும், மேல்நிலைப் பள்ளி களில் தொழிற்கல்விப் பிரிவு என்னும் வடிவிலும் தொழிற்கல்வி இயங்கிவருகின்றது. பொதுக் கல்வி யோடு இவ்வாறு இணையாகவன்றித் தொழிறகல்வி தனியாகவும், தொழிற்பயிற்சிப் பள்ளிகள், தொழில் நுணுக்கப்பள்ளிகள், பொறியியற் கல்லூரிகள, பிற உயர் தொழிறகல்வி நிறுவனஙகள, தொழில் நுணுக்கப் பலகலைக் கழகங்கள எனப் பல நிலை களிலும் வழஙகப்படுகின்றது

நாட்டின் பொருளாதார வளாசசிக்குக் கல்வி ஒரு வழியாகவும் காரணமாகவும் அமைகின்றது. தொழிற் கலவிப் பெருக்கத்தின் மூலம் உணடாகும் தொழில்வளத்தால் வழியாக அமைகின்றது. புது அறிவு, புதுப்பொருள. புதுப்பயன காணபதால் காரணமாக அமைகினறது எனவேதான, பொருளா தார வளம்பெறவும் நாகரிகத்தில தனிசிறக்கவும் விழையும் நாடுகள தொழிற்கல்வி வளர்ச்சியில நாட டம் கொள்கின்றன.

இந்தியா விடுதலை பெற்றபின் தொழிற்கல்வி வளர்ச்சியில் பல்வேறு நிலைகளிலும் பெரு முன்னேற் றம் கண்டுள்ளது. தொழிற் கல்வி தரும் கல்லூரிகள 1947-48- ஆம் ஆண்டளவில 38-ஆக இருந்தவை 1985-86-இல் 236-ஆகப் பெருகியுள்ளன. தொழில நுணுக்கப் பள்ளிகள 53-இலிருந்து 1982-83இல 500 -ஆக உயர்ந்தன. தொழிற் பயிற்சிப் பளளிகள, இளையோர் தொழிறபளளிகள் போன்ற அடிநிலைத் தொழில திறன் வளர்க்கும் பளளிகளும எண்ணிககை யிற பெருகின. முறையான முழுநேரத தொழிற கல்வி தரும பளளிகள, தொழில் நுணுக்கபபளளிகள, உயர்தொழிற கல்லூரிகள, பல்கலைக் கழகங்கள் அல லாதுமுறைசாராப் பகுதிநேரத் தொழிற்கலவி தரும் நிலையங்களும் நிறுவனஙகளும் பல உளளன. சமு தாயத் தொழில் நுணுக்கப் பள்ளிகள, உழவர் அறி வியல் மையங்கள் (கிருசி விஞ்ஞான கேந்திரஙகள), நேரு இளைஞர் மையங்கள், சமூகநல நிறுவனங்கள, உழைப்புக் கல்வி நிலையங்கள இசுதமிக வித்யா பீடங்கள். (Shwtamik Vidyapet), கைததொழில வாரி யங்கள் போன்றன இப்பிரிவில் அடங்குவன. தொழில் நுணுக்கப் பள்ளிகளும், உயா தொழிற் கல்லூரிகளும் பகுதிநேரத் தொடாகலவி அளிததுவருகினறன.

பள்ளிநிலையில தொழிறகல்வி, உடல் உழைப்பில் பயிற்சி தருவதாயும, உழைப்பின் உயர்வறிந்து போற்றும் மனப்பாங்கை வளர்ப்பதாயும, ஒரு பொருளை உருவாக்குவதில் உணடாகும் மனநிறை வையும் தனனம்பிக்கையையும் வளர்த்து நலல ஆளுமை வளர்ச்சிக்கு உதவுவதாயும் அமையும். உயர் நிலைப் பள்ளியோடு கலவியை முடித்துக் கொளளு வோருக்குஅது தொழிலுக்கு வேண்டிய அடிப்படைத் திறன்களைவளாக்கக்கூடியதாய் இருத்தல்வேணடும். மேனிலைப் பள்ளிகளில் தொழிற்பிரிவு தனியொரு தொழிலுக்கான திறனை வளர்த்து தானாய்த தொழில தொடங்குவதற்கான தன்னம்பிக்கையை ஊட்டி, மாணவா இயலபாய்த் தொழில உலகு புக உதவ வேணடும். மேல் வரும் உயர் தொழில் கலவிககும் இது முன தயாரிப்பாதல் வேண்டும். உயர் தொழிலகட்கான துணைத் தொழில்களிலும் (Para Professional-Courss) தொண்டுத (Service) தொழில்களிலும் பயிறசி பெறவும்வாய்ப்புகளஅமைய வேணடும். தனித் தொழிலில்உயர்திறன வளர்ச்சிக் கும் ஆராய்ச்சிககும ஏறற தொழிற்கல்வி, உயர்கல்வி நிலையில் வழஙகப்படுகின்றது.

இந்திய நாட்டில தொழிறகலவி பொருளாதார வளர்ச்சியின் மூன்று படிநிலைகளிலும் ஒரேகாலத்தில செயறபட வேண்டியுள்ளது நாட்டின்மொத்தப்பொரு ளுற்பத்தியில்37 விழுககாடு இன்னமும் பயிர்த்தொழில விளைபொருட் பயனேயாகும. உலகில தொழிலில் சிறநத10 நாடுகளில் இந்திய நாடும் ஒன்று. உயர் தொழில நுணுககததிலும் இந்தியா பெரு முனனேற றம் கண்டுளளது. இந்திய நாட்டுப்பொருளாதார வளர்சசிக்கும தொழிற்றுறை மேமபாட்டினுககும கட்டை வணடியும் வேண்டும், 'வலவன ஏவா வான ஊர்தியும' வேணடும. எனவே, தொழிற் கல்வி, மரபுத் தொழிலகளில் புதுச் செயலமுறைகளைப் புகுத்தி உற்பததித்திறனைப் பெருககவேணடும்; புதுத் தொல்களையும் தேவைக்கேற்ப உணடாக்குதல வேணடும.

தொழிற்கலவி, கல்வியும் தொழிலும இணைய வருவது. இககலவிககான திட்டமிடுதலில் கலவியாள ரோடு தொழிற்றுறை வல்லாரும் பங்குபெறல வேணடும். தொழிற்கலவியால கல்வி உரம் பெறும்; தொழில வளம் பெறும.

கலை, அறிவியல துறைகளில பெறும் பட்டப் படிப்பு தொழில திறனை வளாப்பதாயில்லை. தொழில் செய்யப் புகுவோருக்குப் பொதுக்கல்விப் பட்டம் வேணடியதொன்றன்று. எனவே, தொழில் செய்யப் புகுவோர்க்கான தேவைகளிலிருநது பட்டப் படிபபை நீககிடல வேணடும் எனப் புதுக் கலவிக் கொளகை கருதுகின்றது. பொருளாதார அடிப்படை யில் இககருத்து ஏற்புடையதேனும் சமூக, பண் பாட்டு அடிபபடைகளில் பட்டப்படிப்பு பலரும, குறிப்பாய் முதல் தலைமுறையில் கற்போர் விரும்பிக் கொள்ளுவதாக அமைகின்றது. எனவே தொழிற்கல்வி யைப் பள்ளிப் படிப்போடிருப்பது போன்று பட்டப் படிப்போடும இணைவுபெறச் செய்தல், பட்டப்

படிப்பைத் தொழிலில் புகுவோர்க்கு நீககுவதைக் காட்டிலும் சிறந்ததாய் அமையும். தொழிற கல்வி கல்வியின் எல்லா நிலைகளிலும் பொதுக் கல்வியோடு இணைந்து செல்லவேண்டும். தனித் தொழில்திறன வளர்சசிக்காகத் தனித் தொழிற் பள்ளிகளும், கல்லூரிகளும், பல்கலைக்கழகஙகளும் ஏறபடுதல் வேண்டும். ப சி.பா

***தொழில் பாதுகாப்பு:*** ஒரு நாட்டின் வளாச சிக்கு அதன் அரசாஙகம் உறுதுணையாக இருந்து பல நல்ல பணிகளை ஆற்றுகிறது. அரசு நாட்டின் சட்டம், ஒழுங்கு ஆகியவற்றைப் பாதுகாப்பதோடு அந்நாட்டின் உற்பத்திச் சாதனங்களைச் சிறந்த முறையில் பயன்படுததி நாட்டு மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்தவும் பாடுபடுகிறது. நாட்டின் வளர்ச்சிக்குத் தேவையான தொழில் துறை வளாச்சியை மேம் படுத்துகிறது. அரசே பல ஆதாரத் தொழில்களைத் (Basic Industries) தொடங்கி ஏறறு நடத்துகிறது. தனியார் துறையிலுள்ள தொழில்களுக்கும் ஆதரவு அளித்து அவற்றின் முன்னேற்றத்திற்கும் வழிகோலு கிறது. கடன் வசதிகள், முன்பணம் அளித்தல், தொழில் நுட்பக் கல்வியைப் பெருக்குதல், இயந்தி ரங்கள், கச்சாப்பொருள்கள், மின்வசதி ஆகியவற் றைத் தடையின்றி அளித்துத் தொழில் வளர்ச்சிக்கு அரசு ஊக்கமளிக்கினறது. இந்நிலையில் நியாயமற்ற முறையில் வெளிநாட்டுப் பொருள்கள், உளநாட்டுப் பொருள்களோடு போட்டியிடும்போது அரசால் வளர்க்கப்பட்ட தொழிலதுறை பாதிக்கப்படுகிறது. இந்த வெளிநாட்டுப் போட்டியிலிருந்து உள்நாட்டுத் தொழில்களைக் காக்கவேண்டிய அவசியம் ஏற்படு கின்றது. இதையே தொழில் பாதுகாப்பு (Iindustrial Protection) என்று கூறுவர். உள்நாட்டுத் தொழில் களைக் காப்பதற்காக அரசு மேற்கொள்ளும் முறைகளுக்குத் தொழிற் பாதுகாப்பு முறைகள் எனறு பெயர்.

வளர்ச்சியுற்ற நாடுகளிலுள்ள தொழிற்சாலை கள் பல அனுகூலங்களைப் பெற்றுளளன. தொழில் நுட்பம், இயந்திரங்கள், முதலாக்கம், திறமையான தொழிலாளர், அறிவியல் வளர்ச்சி ஆகியவை மேலோங்கியிருப்பதால் அஙகுள்ள தொழிற்சாலைகள் பொருள்களை மிகச் சுலபமாகவும், குறைந்த உற்பத் திச் செலவுடனும் தயாரிக்கமுடியும். ஆனால், வளர்ச்சி குன்றிய அல்லது வளர்ந்துவரும் நாடுகளில் இம்மாதிரியான சாதகமான சூழ்நிலை இல்லாததால் உற்பத்திப் பொருள்களின் செலவும் விலையும் உயர்ந்து காணப்படுகினறன. எனவே, நுகர்வோர் கள், பொருளகளை வெளி நாட்டிலிருந்து குறைந்த விலையில் பெறுவதற்காக இறக்குமதி செய்ய விரும் புகின்றனர். வேறு காரணங்களுக்காகவும் வெளிநாட்டுப் பொருளகளின் இறககுமதி, உளநாட்டில் மலிந்து உளநாட்டுப் பொருள்களுக்கு நியாயமற்ற போட்டி யினை ஏறபடுததுகினறது. அதனால், உள்நாட்டுப் பொருள்களின் தேவை குறைந்து தொழில் உற்பததி சரிநது மநதம் ஏறபடுகிறது. அதன விளைவாக வேலைவாயபபு, வாஙகும் சக்தி, மற்றத் துறைகளில் வளர்சசிக குறைவு ஆகியவை நிகழுகின்றன. இந்த மந்த நிலையைப் போக்கி, உள்நாட்டுத் தொழில களை வெளிநாட்டுப் பொருள்களின போட்டியிலி ருந்து காப்பாறற அரசு இறக்குமதிக்குப் பல தடை களை ஏற்படுத்தி வெளிநாட்டுப் பொருள்களின விலையை உளநாட்டுப பொருளகளின விலையோடு சமமாக உயர்ததுகிறது அதனால் இரு நாட்டுப் பொருளகளின் விலையும ஒரே அளவுக்குக கொணடு வருவதுடன் வெளிநாட்டுப் பொருளகளின் தேவை குறைநது உள்நாட்டுப் பொருள்களின் தேவை அதி கரிக்குமவாய்ப்பு ஏற்படுவதால் உளநாடடுத் தொழில துறையின் வளர்ச்சி ஓஙகுகிறது.

**தொழிலுக்குப் பாதுகாப்பு அளிக்கும் முறைகள:** தொழிலைப் பாதுகாக்க அரசு பின்வரும் முறை களை மேற்கொள்கிறது அவை: 1) தீர்வை விதிப்பு (Imposition of Tariff), 2) பஙகளவு முறை (Quota System), 3) இறக்குமதியைத் தடை செய்வது, 4) மானியஙகள, கொடைகள் அளிப்பு (Subsidies and bounties), 5) வாணிக ஒப்பந்தங்கள, 6) அனுமதி முன்னுரிமை (Permit) அளிததல போனறவையாகும.

**தீர்வை விதித்தல்:** தீர்வை (Tariff) எனபது மற்ற நாட்டுப் பொருள்கள் உளநாட்டில நுழையும்போது அவற்றின் மீது விதிக்கபபடும் வரியாகும். இத் தீர்வை, விதிக்கப்படும் முறையைப் பொறுத்தும் தீர்வையின் நோக்கஙகளைப் பொறுத்தும் பல வகை யாகப் பிரிக்கப்படுகின்றது அவற்றைப் பற்றிய விவரங்களைத் தவிாத்து ஒரு தீர்வை விதிப்பு எவ் வாறு தொழிலுக்குப் பாதுகாபபு அளிக்கிறது என பதை மட்டும் எடுத்துக்காட்டின மூலம் காணலாம். இநதியாவில் 100 கிலோ கிராம் எடையுள்ள ஒரு சிமெண்டு' மூட்டையைத் தயாா செயய ஆகும் செலவு ரூ 150 எனறு வைத்துககொணடால் அதே அளவு சிமெணடைக் கொரியா நாடு ரூ 100க்கு உற் பத்தி செய்யும். அந்தச் சிமெண்டு இந்தியாவில இறக்கு மதி செய்யப்பட்டால இரண்டு நாட்டு சிமெணடிற்கும செலவு வேறுபாடு ரூ.50 ஆக இருப்பதால் இந்திய மக்கள் கொரியா சிமெணடையே வாங்குவர். இந்த வேறுபாட்டைக் குறைப்பதற்காக அரசு முழுச்செலவு வேறுபாட்டு அளவிற்கு அல்லது அதற்குக் குறை வாகக் கொரியா சிமெண்டின்மீது தீர்வையை விதிக்கலாம். அதனால் இந்திய நாட்டின் சிமெணடு உற்பத்தியும் விற்பனையும் பாதுகாக்கப்படும். எனவே, தீர்வை விதிப்பதனால் இரு நாட்டுப் பொருளகளுக்கு

மிடையே உள்ள விலை வேறுபாடு மறைந்து தேவை சீராகப் பராமரிக்கப்பட்டு உள்நாட்டுத் தொழில்கள் பாதுகாக்கப்படுகின்றன.

**பங்களவு முறை.** இறக்குமதியின மீது விதிககப படும அளவுக் கட்டுப்பாட்டுக்குப் (Quantity restriction) பஙகளவு முறை (Quota system) எனபது பெயராகும். இது ஒரு குறிப்பிட்ட காலக்கெடுவிறகுள எவவளவு பொருளை இறக்குமதி செயயலாம அல்லது எவ்வளவு மதிப்புள்ள பொருளகளை இறககுமதி செய்யலாம் எனபதைக் குறிககிறது. இம்முறையின கீழ் அரசாங்கம் வெளிநாட்டிலிருநது இறககுமதி செய்யபபடும் அளவினை நிருணயிககிறது. பினனா அபபொருளை ஏறறுமதி செய்யும் நாடுகள ஒவவொனறும் எவ்வளவு அளிகக வேணடுமெனற பஙகீட்டினைத் தீர்மானிககும். மீதியுள்ள பஙகினை உளநாட்டுத் தொழிறசாலைகளுககு ஒதுககீடு செயயும. அதனால், ஓரளவு இறக்குமதி செய்யப்படடு மற்றொரு பகுதியை உள்நாட்டுத் தொழிறசாலைகள உற்பத்தி செய்ய வேணடி இருப்பதால், இம்முறை உளநாட்டுத் தொழில்களுக்கு ஓரளவு பாதுகாப்பை அளிக்கிறது.

**இறக்குமதியைத் தடைசெய்தல்** ஒருசில சிக்கலான சூழ்நிலைகளில அரசாஙகம் இறககுமதியை முழுமையாகக் தடை செயயும். அதனால உளநாட்டுத் தொழிலகளுக்கு முழுமையான பாதுகாபபு ஏற்படுகிறது. உள்நாட்டு மக்கள் அந்த நாட்டுப் பொருளகளையே நமபியிருக்கவேணடிய ஒரு கட்டாயச் சூழ்நிலை ஏற்படுத்தபபடுவதால உளநாடடுப பொருளகளுக்குத் தேவை மிகுந்து தொழிலகள வளாச்சியடைய ஏதுவாகிறது.

**மானியங்களும் கொடைகளும் அளித்தல்:** இறக்குமதியைத் தடை செய்யாமல அரசு வெளிநாட்டுப் பொருள்களின் போட்டியைத் தவிாகக உளநாட்டு உறபத்தியாளர்களுக்குச் சில மானியஙகளை அளிக்கும் வெளிநாட்டுப பொருளகளின விலைக்கு ஈடான அளவு உள்நாட்டுப் பொருள்களின செலவு குறையாத போது அரசு மானியம் அளிக்கலாம எடுத்துக் காட்டாகக் கொரியா நாட்டுச் சிமெணடின் செலவு உரூ. 100-ஆக இருக்குமபோது இநதிய நாடடுச் சிமெண்டின் செலவு உரூ. 150-என இருப்பதாக வைத்துக்கொண்டால், அரசு கொரியா சிமெணடின இறக்குமதியைத தடை செய்யாமல் முழுப் போட்டியை ஊககுவிக்கும். ஆனால சிமெண்டு உற்பததியாளர்களைக கொரியா சிமெணடின் விலையான உரூ. 100க்கே விற்குமாறு இந்தியச சிமெணடு உறபத்தியாளர்களைக் கேட்டுக கொள்ளும. அதனால் உற்பததியாளாகளுக்கு ஏற்படும்இழப்பான உரூ.50/ஐ-அரசு மானியமாக அளிககும. இம்முறையினால் அரசு குறைந்த விலையுடைய வெளிநாட்டுப் பொருள்களினநன்மையை மக்களுக்கு அளிப்பதோடு, உளநாட்டு உறபத்தியாளர்களுககும பாதுகாப்பு அளிக்கிறது சில நேரங்களில் அரசு மொததமாகஒரு தொகையை உள நாட்டு உறபததியாளர்களுக்கு நிதிஉதவியாக அளிககும. அவற்றைத் தயாளக் கொடைகள எனறு சொல்கினறனர். இக கொடைகளும உறபததியாளாகளுககு ஊககமளிதது உறபத்தியைப் பெருககி வெளிநாட்டுப போட்டியிலிருநது தொழிலகளைப பாதுகாககினறன.

**வணிக ஒப்பந்தங்கள்.** சில சூழ்நிலைகளில தொழில பாதுகாபபுத் தேவைப்படும நாடுகள மறறநாடுகளோடு சலுகை பெறும நோக்கததோடு சில வணிக ஒப்பந்தஙகளை ஏறபடுததிக கொளளும. அவறறின பயனாகப் பாதுகாபபு வேண்டும் நாடுகள அதிகம சலுகை விரும்பும் நாடுகளாகப் (Most favoured nations) பிரிக்கபபட்டு அவற்றுக்குப பல சலுகைகள அளிககபபடும.

**தொழில் பாதுகாப்பின் இன்றியமையாமை:** ஒரு நாட்டின வளாசசிக்குத தொழில பாதுகாபபு அவசியம தேவைபபடுகிறது. அமெரிகக, செருமானிய பொருளாதார அறிஞாகள தொழிற பாதுகாபபின இனறியமையாமையை முதன்முதலாக வலியுறுத்தினா. தொழில பாதுகாபபுக்கு ஆதரவாக அளிககப படும கருததுகளைப் பினவருமாறு தொகுததுக் கூறலாம.

1) **புதிதாகத் தொடங்கப்பட்ட தொழிலகளின வளர்ச்சி** ஒரு நாட்டில புதியதாகத தொடஙகப படும தொழில்கள தொடகக காலத்தில பல சிக்கலகளை எதிாநோககியுள்ளன. பயிற்சியும திறமையும உளள தொழிலாளரைப பெறுவதற்கும, மூலதன நுகாச்சியைப் பெறுவதறகும, தொழில நுட்பம பெறுவதற்கும சிறிதுகாலம தேவைப்படுகிறது. இபபருவக காலம வருமவரை இநதத தொழிறசாலைகளினால நனறாக நிறுவபபட்ட வெளிநாட்டுத் தொழிற்சாலைகளோடு எந்தவிதத்திலும போட்டியிட முடியாது. வெளிநாட்டுத தொழிறசாலைகள நிதிவசதி போனற மற்ற வசதிகளைப் பெற்றுத் தஙகள் பொருளகளைக குறைநதவிலையில அளிக்க முனவருவதால புதிதாகத் தொடங்கப்பட்ட தொழிலகள நலிவடைகினறன. எனவே, இத்தொழிலகளைக காக்க அரசு பாதுகாபபு அளிககவேணடியுளளது

2) **தொழில்கள் முன்னேற்றம்.** ஒரு நாட்டின பொருளாதாரச் செழிப்பு அதன ஆதாரத தொழிலகளான ஊாதிகள, உழுவணடிகள் மினசார, பொறியியல இயநதிரக் கருவிகள, கனரக இயந்திரஙகள, இரசாயனஙகள, சிமெணடு, சர்ககரை, பருத்தி, நெசவாலை, கபபல, விமானப் போக்குவரத்துகள ஆகியவற்றின வளர்ச்சியைப் பொறுத்துளளது. இநதத

தொழில்களை முன்னேற்றாமல் வெளிநாட்டிலிருந்து இப் பொருள்களை இறக்குமதி செய்து உள்நாட்டுச் சந்தையில் குவித்தால் ஒரு நாட்டின் அடிப்படையே வலுவற்று விடும். எனவே, இத்தொழில்களை வளர்க்கத் தொழில் பாதுகாப்புத் தேவைப்படுகிறது.

3) **பலவித தொழில்களை மேம்படுத்துதல்.** ஒரு நாட்டின் தொழில் வளர்ச்சி எந்த ஒரு தனிப்பட்ட தொழிலையும் சார்ந்திருக்க முடியாது. நாட்டில் முழுமையான தொழில் வளர்ச்சி அடையவேண்டுமானால் அரசாங்கம் பல தரப்பட்ட உற்பத்தியையும் பெருக்குவதற்குச் சிறு தொழில்கள், நடுத்தரத் தொழில்கள், பெரிய தொழில்கள், மூலதனப் பொருள்கள் தயாரிக்கும் தொழில்கள், நுகர்ச்சிப் பொருள்கள் தயாரிக்கும் தொழில்கள் ஆகியவற்றைப் பெருக்கல் வேண்டும். அதனால் மக்களின் திறமைக்குத் தகுந்தவாறு வேலைவாய்ப்புகள் ஏற்படுத்தவும், நாடு தன்னிறைவு அடையவும் வாய்ப்பு இருக்கின்றது இந்நிலையில் பலதரப்பட்ட தொழிற்சாலைகளையும் வெளிநாட்டுப் போட்டியிலிருந்து தடுக்கத் தொழில் பாதுகாப்பு இன்றியமையாததாகிறது.

4) **நாட்டின் பாதுகாப்பு:** ஒரு நாடு தன்னைச் சுதந்திரமாகப் பாதுகாத்துக் கொள்ள வேண்டுமேயானால் அது தனக்குத் தேவைப்படும் பாதுகாப்புத் தொழில்களையும், தளவாடத் தொழில்களையும் பெருக்குதல் வேண்டும். தன் தேவைக்கு மற்ற நாடுகளை அண்டியிருந்தால் போர்க்காலங்களில் அந்நாடு பகையாளிகளிடம் சரணடைய வேண்டிய சூழ்நிலை ஏற்படும். எனவே, இத் தொழில்களை மேம்படுத்தப் பாதுகாப்பு அவசியம் தேவைப்படுகிறது.

5) **தன்னிறைவு பெறுதல்.** ஒரு நாடு தனது மக்களுக்குத் தேவையான நுகர்வுப் பொருள்கள், மூலதனப் பொருள்கள், அத்தியாவசியப் பொருள்கள் ஆகியவற்றைப் பிறநாட்டிடமிருந்து எதிர்பார்க்காமல் தானாகவே உற்பத்தி செய்து மக்களுக்கு அளிக்கும் நிலையில் அந்நாடு தனது உற்பத்தியில் தன்னிறைவு அடைகிறது. இந்நிலையை அடைவதற்குத் தொழில், வளர்ச்சியும், அத் தொழில் வளர்ச்சிக்குத் தொழில் பாதுகாப்பும் உதவுவதால் நாட்டில் வேலைவாய்ப்பு அதிகம் உருவாகிறது. இது இந்தியா போன்ற வேலையில்லாத் திண்டாட்டம் மலிந்து காணப்படும் நாடுகளுக்கு ஒரு பெரிய நிவாரணத்தை அளிக்கிறது. வேலைவாய்ப்பு உயர்வினால் வாங்கும் சக்தி, மக்களின் தேவை, தொழில் உற்பத்தி, நாட்டின் செழிப்பு, மக்களின் வாழ்க்கைத்தரம் ஆகியவை உயருகின்றன. மேலும் தொழில் பாதுகாப்பிற்காக அரசு விதிக்கும் தீர்வைகள், அரசாங்கத்திற்கு வருமான வாயில்களாக இருப்பதால், அவ்வருமானத்தை வைத்து அரசு பல தேசிய வளர்ச்சித் திட்டங்களை ஏற்படுத்தி நாட்டின் வளர்ச்சிக்கு உதவுகிறது.

**தொழில் பாதுகாப்பினால் ஏற்படும் விளைவுகள்:** ஒரு நாட்டின் தொழில் வளர்ச்சியைக் கருதி மேற்கொள்ளப்படும் தொழில் பாதுகாப்பு முறைகளினால் நாடுகளுக்கிடையே பகைமையும் எதிர்ப்பும் உருவாகும் என்பதால் உலக நாடுகள் பல குழுக்களாகப் பிரியும் நிலை ஏற்படலாம். மேலும் ஒரு நாடு மற்ற நாட்டின் வளர்ச்சியின் பயனைப் பெறமுடியாமற் போகலாம். உள்நாட்டில் தொழில் பாதுகாப்பு, உற்பத்தியாளர்களுக்குச் சிறந்த நன்மையைப் பயக்கும். ஆனால், நுகர்வோருக்கு வெளிநாட்டிலிருந்து கிடைக்கக்கூடிய தரமான, விலைகுறைந்த பொருள்களைப் பெற்று அவற்றின் நுகர்வை அனுபவிக்க முடியாமல் இழப்பையும் தொல்லையையும் ஏற்படுத்தும். மேலும் அரசாங்கம் உற்பத்தியாளர்களுக்கு அளிக்கும் சலுகைகளினால் நாட்டின் வளம் உற்பத்தியாளர்கள் வசம் குவிகிறது. வறியவர் தியாகத்தில் செலவந்தர் பலம் பெறும் நிலை ஏற்படுகிறது. பாதுகாப்பளிக்கப்பட்ட தொழில்கள் அதிக மூலதனம், வசதிகள் ஆகியவற்றைப் பெறுகின்றன. ஆனால், மற்றப் பாதுகாக்கப்படாத தொழில்கள் அவ்வசதிகளைப் பெற முடியாது. எனவே, நாட்டில் இயற்கையாக நிகழும் மூலதனப் பெயர்ச்சி நடைபெறாமல் தடைபடும். அடுத்துப் பாதுகாக்கப்பட்ட தொழில்களின் திறன் குறைந்து, வெளிநாட்டின் போட்டி இல்லாததால், இத் தொழில்கள் தங்கள் திறமையையும் உற்பத்தித் திறனையும் பெருக்கிக்கொள்ள முயலுவதில்லை. இது நீண்டகாலத்தில் வளங்களைத் திறமையான பயன்பாட்டிலிருந்து திறமையற்ற பயன்பாட்டிற்குக் கொண்டு செல்லும். இறுதியாக அரசின் தலையீடு பெரிதும் ஏற்படுவதனால் தொழில் பாதுகாப்புக் கொள்கை ஊழலுக்கு வழிவகுக்கும். இவ்வளவு விளைவுகள் இருந்தபோதிலும் தொழில் பாதுகாப்புப் பல முக்கிய நன்மைகளைப் பெற்றுள்ளதனால் அதனை வளர்ந்துவரும் நாடுகள் மேற்கொள்ளுகின்றன. எம்.இராம.

**துணை நூல்கள்**


Kuchhal, S.C The Industrial Economy of India, Chaitanya Publishing House, Allahabad, 1987.

Ruddar Dutt and Sundaram, K.P.M., Indian Economy S. Chand & Co. (Pvt). Ltd., New Delhi, 1987.

Srivastava S , International Economics, Kalyani Publishers, Ludhiana, 1985.


**தொழில் பொருத்தப்பாடு:** தொழிலில் ஈடுபடும் இளைஞர்களுக்குப் பலவிதப்பட்டறிவுகள்

உண்டாகின்றன. ஏறககுறையப் பத்தாண்டுகள (15 முதல் 25 வயதுவரை) வேலை தேடுவதில் கழிந்துவிடு கின்றன. கிடைக்கும் வேலையும் தமக்குப் பொருத்த மானதா என்பதும தெரிவதிலலை. வேறு வேலை கிடைப்பதானால் உடனே அதற்கு மாறிவிடுகினற னா. இங்கிருந்து வேறு நிறுவனத்திற்கோ புதுத தொழிலுக்கோ போகக்கூடும். இதறகெல்லாம காரணம ஊதியம் மட்டுமனறு; கனவு, ஆசை, ஆாவம் ஆகியனவுமாகும். ஆர்வமே(Interest) ஆற்றல்(Ability) ஆகிவிடாது. மெய்யான நாட்டமிருப்பின் (Aptitude) தனக்கேறற தொழில் எது எனபது உறுதியாகிவிடும். ஆர்வமும் ஆறறலும் சோந்ததுதான நாட்டம். மெய யான நாட்டமுள்ளோர் அத்துறையில சிறு பயிறசி கள கிடைப்பினும் பினனர்ச் சிறந்து விளஙகுவா

அவவாறு நாட்டததிறகேறற பணியில சேர்நது விட்டாலும் அத தொழிலில் நிலைத்திருபபதற்கான காலமும் நீளும். சிலருக்கு 10 முதல 15 ஆண்டுகளகூட ஆகிவிடும். ஏறற தொழில் இனனதெனறு உறுதியான பிறகு அத தொழிலில நுட்பம் பெறவேணடும. அதற கும் பத்து ஆணடுகள ஆகிவிடும். புதுப்புது தொழில உயா நுட்பஙகளில் பயிறசியும் படடறிவும பெற்றாக வேண்டும. இவறறைப பெறறவர்களே ஈடுபாடு கொணடு செமமையான வளர்ச்சியையும் காட்டு வார்கள்.

இநநிலையில பெருமபாலோர் தொழிலின உச்சக்கட்டததில இயங்குவா. பணியில் மனநிறைவு இருக்காதெனினும் ஓய்வு பெறுங காலம் நெருஙகு வதால (பலா இதற்குள 50 வயதை எட்டிவிடுவர்) அதறகான ஆயததஙகளில் ஈடுபடவேணடும. இல்லை யேல வீட்டிறகுவநதவுடன வசதிகளையும் நலனகளை யும் பெற்றிருந்தும் ஓயவுபெற்ற ஊழியர் ஒடுஙகிவிடு வார். திடீரென்று ஏறபட்ட செயலறற நிலையும் பழக்கப்பட்ட நணபர் குழு இலலாமற போவதும அதற்குரிய காரணஙகள ஆகும்.

**வேலை மாற்றம்:** இளம வயது, சம்பளம மட்டும வேலை மாற்றத்திற்குக் காரணஙகளாக அமைவ தில்லை. ஒரு தொழிலில் சிறநத உயாவைக் காணும் போதுகூட இளமையிலிருந்த நாட்டத்தைப் (Aptitude) பெறவே செய்கின்றனர். ஒரு நிறுவனத்தின தலைவர் பல்லாயிரக்கணக்கில் சம்பாதித்துக் கொணடிருந்தார். எனினும தமது நாறபதாம் வயதில அவ வேலையை விட்டுக் கட்டடக கலையைக் கற்கக் கல்லூரியில் முழு நேர மாணவனாகச் சேர்ந்தார். பிறகு சொநதத் திலேயே பெரும் நிறுவனத்தை ஏற்படுத்தி (தன் ஐமபதாம வயதில்) பல பொறியியல வல்லுநா களுக்கு வேலைவாய்ப்புகளை ஏற்படுத்தினார். அவ் வாறே பல்வேறு சிறு சிறு தொழில்களில் பகுதிநேரத தொழிலாளியாக இருந்த ஒரு பெண் தனது 50-ஆம் வயதில் தன் குழநதைகள எல்லாம வேலைக்குப போன நேரத்தில் தனியாகப் படிததுத் (முதுகலைப் பட்டம் பெறறுத) தமக்கு மிகவும் பிடித்த தொழிலை ஏறறுச சமூகத தொணடரானார். இவா சமூகத தொணடில் தம வட்டாரத்தில் பெருமபுகழ் பெற் றார். இவ்வாறு பல பேர் உணடு இளையவர்கள வீட்டை விட்டுச் செனறு விடுவதனால் பெரியவர்கள தம்முடைய முந்தைய நாட்டததைப் பட்டறிவாக மாற்ற விருமபுகின்றனா (எலட்டு.1977)

சிலர் ஓயவு பெறும்போது சரியான சேமிப்புக்காக மீணடும் வேலைசகுப் போகினறனர். நலலநிலையில இருநதுகொணடே வேறு தொழிலுககு மாறுவோா பொதுவாக 30-ஆம வயதைக் கடந்தவர்களே. இவர் களுக்கு முந்தைய தொழிலில சலிப்புத் தட்டி விட்டதே முககிய காரணம ஆகும் என என்டைன (Entine) கூறுகிறார்.

**பொருத்தப்பாடின்மை**: தொழிலாளிக்குத் தொழில சூழ்நிலையில் மனித-தொழில் நுட்பத்திறகிடையே ஏறபடும பொருளாதார உறவு முக்கியமானது. பெற றோரின பிடிவாதத்தாலும ஆற்றலேயில்லாமல வெறும் பரிந்துரையாலும பணியில ஈடுபடுவோரி டையே தொழில பொருத்தப்பாட்டைக் (Occupational Adjustment) காண முடியாது. தொழிற கூடம அல்லது அலுவலகத்தில பாதுகாபபினமை, உழைப பிறகேறற ஊதியம் இன்மை, நீதி இல்லாத சூழ்நிலை, வளர்சசிககு வாய்ப்பின்மை, மிரட்டும கணகாணிப்பு, படைபபுகள மெச்சப்படாமை, தொழிலைத் தன குடும்பததாரே வரவேற்காமை போனறவை உழைப் பாளியின அமைதியைக கெடுத்து அவரது படைப்பாற றலை ஒடுககிவிடுகிறது.

படிபபு முடிநததும் வேலைககுப போவோரில் சிலருக்கு அஙகிருக்கும வேலை நேரம, ஆசிரியரைப் போலச சொல்லித தருவோர் இலலாமை போனற சூழநிலையானது ஆர்வத்தைக கெடுத்துவிடுகினறது எனறு அர்னால்டு (Arnold) கூறுகிறார். தமமைப் போனறோரை விருமபுவது இயற்கை, இநத ஒருமைப் பாடு வயது, சமூகப பினனணி, சமயம். தொழில, தோற்றம், ஆாவம் போனறவற்றுடன இருக்கலாம்.

பொதுவாகத் தொழிலாளர்கள வெற்றி, பதவி, ஊதிய உயாவு பெறுவதைத்தான் குறிககோளாக எணணுகின்றனர். தொழிலில் வெறறியுடன இருப் பதை வலியுறுத்தினரே தவிர அதன பொருத்தப்பாட் டைக் கவனியாது விட்டனர். உள மகிழ்ச்சியையும் சமூக நடததையையும் ஒனறாகக் கொணடுதான தொழில பொருத்தப்பாடு. வாழககை. வேறு, தொழில் வேறு எனபதில்லை. தன்னுடைய ஆர்வங கள், ஆற்றல்கள், தேவைகள ஆகியவை வெளிப்படு

வதற்கு வாய்ப்பளித்துத் தன்னுடைய ஆளுமையை முழுமையாக வளர்த்துத் தானும மகிழ்ந்து சமூகத் திற்கும் பயனுடையவராக இருப்பதற்கு வாயப்பளிக கும் தொழில் அல்லது பணிதான பொருத்தப பாட்டை அளிக்கவலலது, ம.பெ.

**துணை நூல்கள்:**

**Arnold, H.J., and Feldman, D C., Organisational Behaviour, McGraw-Hill Book Co., New York, 1986.**

**Davis, L.E., Learning from the Design of New Organisations, Praeger, New York, 1983,**

**Olds, S W., and Papalia, E.E., Human Development, Mc-GrawHill Book Co., New Delhi, 1986.**

# பொருளடைவு

# கலைச்சொற்பட்டியல்

## தமிழ் — ஆங்கிலம்

| | | |
|---|---|---|
| அகமணம் | ... | Endogamy |
| அகழாய்வு | . | Excavation |
| அண்டவியல் | .. | Cosmology |
| அணுக் கொள்கை | .. | Atomism |
| அளவிடத்தக்க பயனபாடு | ... | Cardinal Utility |
| ஆவியுலகக் கோட்பாடு | ... | Animism |
| ஆளுமை | ... | Personality |
| இடைப்படு நாடு | . | Buffer State |
| இணையியக கொள்கை | . | Parallelism |
| இயல்பூக்கம் | ... | Instinct |
| இருமை நிலை | ... | Dualism |
| இருமை முற்றுரிமை | . | Duopoly |
| இளங்குற்ற நடத்தை | .. | Juvenile Delinquency |
| இன்பக கொள்கை | . | Hedonism |
| இனக்குழுவியல் | ... | Ethnography |
| உச்ச அளவு தன்முனைபபு | ... | Super Ego |
| உடல்சார் மானிடவியல் | . | Physical Anthropology |
| உண்மையியல | | Ontology |
| உருபன் | | Morpheme |
| உருவவியல் | ... | Iconography |
| உறவு முறை | ... | Kinship |
| எடுகோள் | . | Hypothesis |
| எதிர்பால் காமம் | ... | Hetrosexuality |
| எதிரியக்கக கொள்கை | ... | Interactionism |
| எறி ஈட்டி | .. | Harpoon |
| ஒருதுணை மணம் | . | Monogamy |
| ஒலியன் | .. | Phoneme |
| கடனீட்டுப் பத்திரங்கள் | .. | Debentures |
| கருத்துமுதற் கொள்கை | ... | Idealism |
| கருத்தெழுத்து | ... | Ideogram |

| | | |
|---|---|---|
| கல்வெட்டியல் | ... | Epigraphy |
| காலப் பொறுப்பு | ... | Time Liability |
| குடிமையியல் சட்டம் | ... | Civil Law |
| குலக்குறி | ... | Totem |
| குலம | . | Clan |
| கூட்டரசு முறை | .. | Federal Government |
| கோணமானி | ... | Protractor |
| சமய குருமார்கள் | .. | Clergy |
| சமூக சமத்துவம் | ... | Egalitarianism |
| சித்திர எழுத்து | | Pictography |
| சில்லோர் முற்றுரிமை | ... | Oligopoly |
| செழிப்புச் சடங்கு | ... | Fertility Rite |
| தகாப்புணர்ச்சி | .. | Incest |
| தடையாணை | ... | Injunction |
| தரும நியாய நீதிமன்றம் | ... | Equity Court |
| தவணை நீட்டிப்பு | .. | Moratorium |
| தற்கருத்தேற்றம் | ... | Auto-suggestion |
| தற்காதல் | .. | Narcissism |
| தற்பால காமம | .. | Homosexuality |
| தறுவாய்க கொள்கை | .. | Occasionalism |
| தன்முனைப்பு | . | Ego |
| தன்வயமாதல் | .. | Assimilation |
| தன்னுணர்வுந்துதல் | ... | Id |
| தனியரசு முறை | ... | Unitary Government |
| தனிவிலக்குரிமை | ... | Immunity |
| தாடைமானி | ... | Goniometer |
| தாமதக் கட்டணம் | ... | Demurrage |
| தாய்மாமனாட்சி | ... | Avuncupotestality |
| தாய்மை இயலூக்கம | .. | Maternal Instinct |
| தாயாட்சிக் குடும்பம் | ... | Matriarchal Family |
| திரிபுணாவு | .. | Delusion |
| திரைப்படக்கலை | ... | Cinematography |
| தீர்ப்பு மன்றம | ... | Tribune |
| தீர்வகம் | ... | Clearing House |
| தீர்வை | ... | Tariff |
| தேவைக் கோட்பாடு | ... | Theory of Demand |
| தேவைப் பொறுப்பு | ... | Demand Liability |

தொடரியல் ... Syntax
தொலலுயிரியல ... Palaeontology
தொழில் முனைவோர் ... Entrepreneur
நடுவர் தீர்ப்பு .. Arbitration
நாணயவியல் ... Numismatics
நியதிவாதம் ... Determinism
நிலமானிய முறை .. Feudalism
நிறுமம் ... Company
பங்களவு முறை Quota system
படிமலர்ச்சி ... Evolution
பணமதிப்புச்சரிவு ... Monetary panic
பயன்முறைக் கோட்பாடு .. Utilitarianism
பலதுணை மணம் ... Polygamy
பிரதிவாதி ... Defendant
புதைபடிவம் .. Fossil
புலன்கடந்த மெய்ப்பொருளியல்... Metaphysics
புறமணக் குழு ... Exogamous group
புறமணம் .. Exogamy
பெருங்கூட்டம் . Moiety
பொது நேர்மைத் தனிமன்றம் ... Chancery court
பொதுவுடைமை ... Communism
பொருண்மையியல் ... Semantics
மனிதநேயம் .. Humanism
மாறி ... Variable
மானிட உடலளவையியல் . Anthropometry
மிகை வரி ... Surtax
மின்னணு ... Electron
முகக்குறியியல் ... Physiognomy
முற்றுரிமை ... Monopoly
வணிகவியற் கொள்கை ... Mercantilism
வாணிகக் குழு .. Guild
விரயச் சடங்கு ... Potlatch

## ஆங்கிலம் — தமிழ்

| | | |
|---|---|---|
| Animism | .. | ஆவியுலகக் கோட்பாடு |
| Anthropometry | .. | மானிட உடலளவையியல் |
| Arbitration | ... | நடுவர் தீர்ப்பு |
| Assimilation | .. | தன்வயமாதல் |
| Atomism | .. | அணுக்கொள்கை |
| Auto-suggestion | ... | தற்கருத்தேற்றம் |
| Avuncupotestality | . | தாய்மாமனாட்சி |
| Buffer State | ... | இடைப்படு நாடு |
| Chancery Court | .. | பொதுநோமைத் தனிமன்றம் |
| Cinematography | .. | திரைப்படக் கலை |
| Civil Law | .. | குடிமையியல் சட்டம் |
| Clan | . | குலம |
| Clearing House | .. | தீர்வகம் |
| Clergy | .. | சமய குருமார்கள் |
| Communism | ... | பொதுவுடைமை |
| Company | ... | நிறுமம் |
| Cosmology | .. | அண்டவியல் |
| Debentures | .. | கடனீட்டுப பத்திரஙகள |
| Defendant | ... | பிரதிவாதி |
| Delusion | . | திரிபுணர்வு |
| Demand Liability | . | தேவைப் பொறுப்பு |
| Demurrage | ... | தாமதக் கட்டணம் |
| Determinism | .. | நியதிவாதம் |
| Dualism | ... | இருமை நிலை |
| Duopoly | ... | இருமை முற்றுரிமை |
| Egalitarianism | .. | சமூக சமத்துவம் |
| Ego | ... | தன்முனைப்பு |
| Electron | ... | மின்னணு |
| Endogamy | .. | அகமணம் |
| Entrepreneur | ... | தொழில் முனைவோர் |
| Epigraphy | .. | கல்வெட்டியல் |
| Equity Court | ... | தரும நியாய நீதிமனறம் |
| Ethnography | ... | இனக்குழுவியல |
| Evolution | ... | படிமலர்ச்சி |

Excavation ... அகழாய்வு
Exogamous group ... புறமணக் குழு
Exogamy புறமணம்
Federal Government ... கூட்டரசு முறை
Fertility Rite ... செழிப்புச் சடங்கு
Feudalism ... நிலமானிய முறை
Fossil .. புதைபடிவம்
Goniometer ... தாடைமானி
Guild ... வாணிகக் குழு
Harpoon ... எறிஈட்டி
Hedonism .. இன்பக் கொளகை
Hetrosexuality . எதிர்பால் காமம்
Homosexuality .. தற்பால் காமம்
Humanism . மனிதநேயம்
Hypothesis .. எடுகோள
Iconography .. உருவவியல
Id .. தனனுணாவுந்துதல
Idealism ... கருத்துமுதற் கொள்கை
Ideogram . கருத்தெழுத்து
Immunity ... தனிவிலக்குரிமை
Incest ... தகாப்புணர்ச்சி
Injunction .. தடையாணை
Instinct ... இயல்பூக்கம்
Interactionism .. எதிரியககக் கொளகை
Juvenile Delinquency ... இளங்குற்ற நடத்தை
Kinship . உறவு முறை
Maternal Instinct ... தாய்மை இயல்பூக்கம்
Matriarchal Family .. தாயாட்சிக குடும்பம்
Mercantilism ... வணிகவியற் கொளகை
Metaphysics ... புலன் கடந்த மெய்ப் பொருளியல
Moiety .. பெருங்கூட்டம்
Monetary panic ... பணமதிப்பு சரிவு
Monogamy ... ஒருதுணை மணம்
Monopoly ... முற்றுரிமை
Moratorium ... தவணை நீட்டிப்பு
Morpheme ... உருபன

| | | |
|---|---|---|
| Narcissism | | தற்காதல் |
| Numismatics | . | நாணயவியல் |
| Occasionalism | ... | தறுவாய்க் கொள்கை |
| Oligopoly | ... | சில்லோர் முற்றுரிமை |
| Ontology | . | உண்மையியல |
| Ordinal Utility | .. | மதிப்பிடத்தக்க பயன்பாடு |
| Palaeontology | ... | தொல்லுயிரியல் |
| Parallelsim | .. | இணையியக கொள்கை |
| Personality | | ஆளுமை |
| Phoneme | ... | ஒலியன |
| Physical Anthropology | .. | உடல்சார் மானிடவியல் |
| Physiognomy | ... | முககுறியியல் |
| Pictography | ... | சித்திர எழுத்து |
| Polygamy | ... | பலதுணை மணம் |
| Potlatch | ... | விரயச் சடங்கு |
| Protractor | . . | கோணமானி |
| Quota system | ... | பங்களவு முறை |
| Semantics | ... | பொருண்மையியல் |
| Super Ego | ... | உசச அளவு தனமுனைப்பு |
| Surtax | ... | மிகை வரி |
| Syntax | . | தொடரியல் |
| Tariff | ... | தீர்வை |
| Theory of Demand | . | தேவைக் கோட்பாடு |
| Time Liability | . | காலப் பொறுப்பு |
| Totem | . . | குலக்குறி |
| Tribune | .. | தீரப்பு மன்றம் |
| Unitary Government | ... | தனியரசு முறை |
| Utilitarianism | . | பயன்முறைக் கோட்பாடு |
| Variable | ... | மாறி |